மஹம்மது (Jesus and Muhammad) ஆகிய இவர்கள் பிறப்பதைப்பற்றி (அவதாரஞ் செய்யப்போவதைப்பற்றி) ஜோதிட சாஸ்திரத்தின் கிரகக் கூட்டங்களை ஆராய்ச்சி செய்து முந்தியாகவே தெரிவித்தார்.

(5) தேல்ஸ் (Thales) என்பவருடைய மாணுக்கராக விருந்த அனுக்ஸிமாண்டர் (Anaximander) என்பவர் கிறிஸ்து பிறந்ததற்கு முன்னே அறுநூருவது வருஷத்தில் (600 B.C.) லாஸிடிமான் (Lacedemon) என்ற பட்டணத்தைப் பாழாக்கிவிட்ட பூகம்பத்தைப் பற்றி (Earth-quake) ஜோதிட சாஸ்திரத்தின் உதவியால் முந்தியாகவே தெரிவித்தார்.

(6) இத்தாலி தேசத்து ஜோதிடராகிய (an Italian Astrologer) கைடோ பொனுடஸ் (Guido Bonatus) என்பவர் எர்ல் ஆப் மான்ஸ்ஸராட் (Earl of Monserrat) என்பவர் ஒரு குறித்த தினத்தின் ஒரு குறித்த மணியின் காலத்தில் யுத்த களத்தில் ஜெயம் பெறுவார் என்றும் அப்போது அவர் தன்னுடைய முழங்காலில் ஒரு காயத்தை அடைவார் என்றும் ஜோதிடத்தின் உதவியால் முந்தியே தெரிவித்தது பிரமிக்கத்தக்கதாகப் பலித்தது.

(7) ஐரோப்பா கண்டத்தில் இருந்த ஒரு புகழ்பெற்ற ஜோதிட சாஸ்திரியான வாலன்டைன் நெய்பாட் (Valentine Naibod) என்பவர் ஒரு குறித்த காலத்தில் தனக்குக் கொடுமையான தாக்குகையால் (Violence) துர்மரணம் நேரிடும் என்று முந்தியே தெரிவித்தார். இக் குறித்த காலம் நெருங்கின போது தன்னுடைய வீட்டில் தன்னை நன்ருக அடைக்கலஞ் செய்து கொண்டு வீட்டை நன்ருகவும் வலிவாகவும் மூடிக்கொண்டு அதற்குத் தகுந்த பந்தோபஸ்துக்களையும் ஏற்படுத்திக் கொண்டார். இவர் வீட்டு வழியாகச் சென்ற சில திருடர்கள் இவருடைய வீடு பந்தோபஸ்தாக மூடி இருப்பதைப் பார்த்து இதில் ஏதோ ஒரு பொக்கிஷம் இருக்கவேண்டும், அதனுல் தான் இவ்வளவு பந்தோபஸ்துக்கள் செய்யப்பட்டிருக்கின்றன என்று சந்தேகப்பட்டு இந்த வீட்டை உடைத்து உள்ளே சென்று இவரைக் கொன்று விட்டார்கள் ; இவ்விதமாக இவர் ஜோதிட சாஸ்திரத்தின் உதவியால் முந்தியாகவே தெரிவித்த பலன் நடந்தேறியது.

(8) இதைப் போலவே பெல்லாரியில் ஒரு சம்பவம் சில வருஷங்களுக்கு முந்தி நடந்ததை நாம் தினப் பத்திரிகைகள் மூலமாகப் படித்திருக்கின்ருேம். ஒரு உபாத்தியாயர் தன்னுடைய குமாரனுக்கு ஜோதிடர்கள் முந்தியாகவே உயிரைப் பற்றிய ஆபத்து நேரிடும் என்று குறித்த தினத்தில் இந்த ஆபத்தைத் தடுப்பதற்காகத் தன்னுடைய பிள்ளையைத் தன் வீட்டில் ஒரு அறையில் விட்டு அந்த அறையை மூடிவிட்டு வழக்கம் போல் தான் பள்ளிக் கூடத்திற்குப் போய்விட்டார். இந்தப் பிள்ளையினுடைய ஒரு பள்ளிக்கூட சிநேகிதர் இவனிடம் சென்று இவனை அழைக்கவே இவன் தன்னுடைய தாயாரின் உதவியால் இந்த அறையின் உள்ளே விருந்து வெளியே வந்து பிறகு, இந்தச் சிநேகிதருடன் வெளியே சென்று விளையாட ஒரு குளத்திற்குப்போய் விளையாடி இந்தக் குளத்தில் மூழ்கி இறந்து விட்டான். இந்த ஏழாவது எட்டாவதாகிய இரண்டு உதாரணங்களும் தலை விதியை யாராலும் (பெரும்பாலும்) மாற்றமுடியாது என்ற கொள்கையை ருசு படுத்துகின்றனவாகும்.

(9) மைக்கேல் ஸ்காட் (Michael Scot) என்பவர் தன்னுடைய இராஜ்யக ராகிய சக்கிரவர்த்தியான இரண்டாவது பிரடரிக் (Emperor Frederick II) என்பவர் ப்பிலாரன்ஸ் (Florence) என்ற பட்டணத்தில் இறந்து விடுவார் என்று ஜோடத்தின் மூலமாக முந்தியாகவே தெரிவித்தது பலித்துவிட்டது.

(10) இந்த மைகேல் ஸ்காட் (Michael Scot) என்பவரே தன்னுடைய விஷயத்திற்கூட தனக்கு ஒரு கல் விழுவதினால் மரணம் நேரிடும் என்று ஜோதிடத்தின் மூலமாக முந்தியே தெரிவித்திருந்தார். இவர் ஒரு மாதா கோயிலில் (Church) தன்னுடைய தேவனைப் பிராத்தித்துக்கொண்டிருந்த போது இந்தக் கோயிலின் மேற்கூரை (Roof)-யிலிருந்து ஒரு கல் இவர் மீது விழுந்து, இவர் தான் முந்தியே ஜோதிடத்தின்மூலமாகத் தெரிவித் திருந்த பிரகாரமே இறந்துவிட இவர் சொல்லியது உண்மையில் பலித்து விட்டது.

(11) பெயரை வெளிப்படுத்த நமக்கு இஷ்டமில்லாத சைதாப பேட்டையில் டிப்டி கலெக்டராயிருந்த (Deputy Collector of Saidapet) ஒருவரைப்பற்றி இவர் கிறிஸ்து பிறந்த பிறகு ஆயிரத்துத் தொள்ளாயிரத் திருபத்தெட்டாவது வருஷத்தில் (1928 A.D.) ஒரு குறித்தக் காலத்தில் ஒரு வாகனக் கருவியால் ஏற்படக்கூடிய ஒரு தற்செயல் ஆபத்தால (accident by a conveyance) இறந்து விடுவார் என்று ஒரு தென்னிந்திய ஜோதிடர் ஜோதிடத்தின் மூலமாய் முந்தியாகவே பலனைத் தெரிவித்திருந்தார். தென்னிந்தியாவில் உள்ள ஒரு ஜில்லாவில் சப்-ஜட்ஜ் (Sub-Judge)-ஆக விருந்த இவருடைய சகோதரர் மூலமாக இவருக்கு இந்த ஜோதிட சாஸ்திர பலன் முந்தியே தெரிவிக்கப்பட்டிருந்தது. சைதாப்பேட்டை ரயில் ஸ்டேஷனண்டையுள்ள ஒரு ரயில்வே கேட்டண்டை (Railway Level-Crossing) இவருடைய மோட்டார் கார் தற்செயலாய் இடித்துக்கொள்ளப்போகப்பட்ட சம்பவம் நேர்ந்த பிறகும் ஆபத்து நேரிடும் என்று குறித்த காலத்திற்குச் சில நாட்களுக்கு முந்தியும் இவர் இந்த எதிர் பார்த்திருந்த ஆபத்தைத் தடுப்பதற்காகவே தன்னுடைய மோட்டார்காரையும் விற்பனை செய்து விட்டார். இவ்விதமான ஜாக்கிரதையுடன் இவர் இருந்திருந்தும் இதே ரயில்வே கேட்டண்டை குறித்த காலத்தில் ஒரு போட் மெயில் ரயில்வே வண்டி இவர் பேரில் தற்செயலாய் ஏறி ஓடி இவர் கொல்லப்படவே ஜோதிடர் ஜோதிடத்தின் மூலமாய்ச் சொல்லப்பட்ட பலன் உண்மையில் பலித்து விட்டது.

(12) கவியாகிய டிரைடன் (Dryden, the poet) என்பவரைப்பற்றிப்பின் வருமாறு சொல்லப்பட்டிருக்கின்றது, இவர் தன்னுடைய பிள்ளையாகிய சார்லஸ் (Charles) என்பவருக்குத் தன்னுடைய எட்டாவது வயதிலும், இருபத்து மூன்ருவது வயதிலும் கெண்டங்கள் நேரிடும் என்றும், முப்பத்து நான்காவது வயதில் இறந்துவிடுவார் என்றும் முந்தியே சொல்லி இருந் தார். இரண்டு நாய்கள் ஒரு மானைத் துரத்திக்கொண்டு ஓடினபோது இவைகள் ஒரு சுவற்றின்பேரில் தாக்கவே இந்தச் சுவர் இடிந்து சார்லஸ் (Charles) என்பவரின்பேரில் இவருக்கு எட்டாவது வயதில் விழுந்து இவர் இந்தச் சுவரின் குப்பை (Debris)-யின் கீழ் அகப்பட்டுக்கொண்டார். இவருக்கு இருபத்து மூன்று வயது நடந்துகொண்டிருந்தபோது ரோமாபுரியில் (Rome)

உள்ள வாடிகன் (Vatican) என்ற ரோமன் காத்தலிக்குக் குரு (Pope) வினுடைய வாசஸ்தலமாகிய மாளிகையின் கோபுரத்திலிருந்து (Tower) கீழே விழுந்துவிட்டார். இவர் தனக்கு முப்பத்து மூன்றாவது வயது நடந்துகொண்டிருந்தபோது விண்ட்சர் (Windsor) என்ற பட்டணத்தில் ஜலத்தில் மூழ்கி இறந்துவிட்டார். இவ்விதமான மூன்று பலாபலன்களும் ஜோதிட சாஸ்திரத்தின் மூலமாய் டிரைடன் (Dryden) என்பவர் முந்தியாகவே சொல்லியிருந்த பிரகாரம் உண்மையில் பலித்துவிட்டன.

நார்மண்டி என்ற தேசத்தைச்சார்ந்த வில்லியம் என்பவர் இங்கிலாந்து தேசத்தை ஜெயித்த காலம் முதற்கொண்டு (The Conquest of England by William of Normandy) லார்டு பேகன் (Lord Bacon) காலம் வரையிலும் உள்ள காலத்தில் இருந்த பெரும்பாலும் ஒவ்வொரு புகழ் பெற்ற கணித சாஸ்திரியும், ஜோதிட சாஸ்திரத்தில் நம்பிக்கை உடையவராக விருந்திருக்கின்றார். கிறிஸ்து பிறந்த பிறகு ஆயிரத்து அறுபதாவது வருஷத்திலிருந்த (1060 A.D.) ஆலிவர் ஆப் மால்மஸ்பரி (Oliver of Malmesbury) என்ற ஒரு கணித சாஸ்திரி ஜோதிட சாஸ்திரத்தின கொள்கைகளில் நம்பிக்கையுடையவராக விருந்தார். கிறிஸ்து பிறந்து ஆயிரத்துத் தொண்ணூற்றைந்தாவது (1095 A.D.) வருஷத்திலிருந்த எர்பார்ட் ஆப் லோரைன் (Herbert of Lorraine) என்பவரும் கிறிஸ்து பிறந்த ஆயிரத்திருநூற்றிப் பதினான்காவது (1214 A.D.) வருஷத்திலிருந்த ரோஜர் பேகன் (Rojer Bacon) என்பவரும் ஜோதிட சாஸ்திரத்தில் நம்பிக்கையுடையவர்களாகவிருந்தார்கள். சர் ஐசக் நியூட்டன் (Sir Isaac Newton) என்பவருக்கு முன்னே மிகவும் அதிகமான தத்துவ சாமர்த்தியத்தை உடையவர்களுக்குள் ஒருவராகவிருந்தவரும் (One of the ablest men) கிறிஸ்து பிறந்த ஆயிரத்திருநூற்றைம்பத்தாறுவது (1256 A.D.) வருஷத்தில் இறந்தவருமாகிய ஹோலிவுட் (Holywood) என்ற ஜான் ஆப் ஹாலிபாக்ஸ் (John of Holifax) என்றவர் ஜோதிடத்தில் நம்பிக்கையை யுடையவராகவிருந்ததுமன்றி ஜோதிட சாஸ்திரத்தைப்பற்றி ஒரு புத்தகங்கூட எழுதினார். ஓராவது ரிச்சர்டு என்ற அரசர் (King Richard I) கிரகங்களினுடைய சக்தியாலுண்டாகும் பலனில் நம்பிக்கையையுடையவராகவிருந்தார். கவியாகிய ஜியோப்ரே சாஸர் (Geoffry Chaucer) ஜோதிட சாஸ்திரத்தின் நியம விதிகளில் (Rules) நம்பிக்கையையுடையவராகவிருந்தார். ஜோதிட சாஸ்திரத்தின் பலாபலன்களின் காலங்களைக் கணிதஞ் செய்வதற்காக, மிகவும் உபயோகமான ஜோதிட சாஸ்திரத்தின் வாக்கியங்களை (astrological tables to calculate directions in astrology) டியூக் ஆப் கிளொசெஸ்ட்டர் (Duke of Glouchester) என்பவர் கிறிஸ்து பிறந்த ஆயிரத்தி நானூற்றி நாற்பதாவது (1440 A.D.) வருஷத்தில் உண்டு பண்ணினார். ஆங்கில பாஷையில் முதல் முதல் அங்க கணித நூலை (Arithmetic) எழுதியவரும், முதல் முதல் ஆங்கில பாஷையில் இரேகா கணிதம் என்ற க்ஷேத்திர கணித நூலை (Geometry) எழுதியவரும், அக்ஷர கணிதம் என்ற பீஜகணிதத்தை முதல் முதல் இங்கிலாந்து (England) தேசத்திற்குக் கொண்டுவந்தவரும் ஆகிய ராபர்ட் ரெகார்டே (Robert Recorde). ஜோதிட சாஸ்திரத்தின் நியம விதிகளில் (Dogmas) நம்பிக்கையையுடையவராகவிருந்தார். செயின்ட் ஆல்பான்ஸ் (Saint Albons) என்றவரும் கீர்த்தி

பெற்ற பேகன் (Bacon Lord Verulam) என்றவரும் கிரகங்களினுடைய சக்தியால் உண்டாகும் பலனில் நம்பிக்கையுடையவர்களாகவிருந்தார்கள். இங்கிலாந்து (England) தேசத்தில் இன்டக்ட்டிவ் பிலாசபி (Inductive Philosophy) என்ற ஒரு புதிய தத்துவ சாஸ்திரம் என்ற வேதாந்த சாஸ்திரத்தை (Philosophy) உண்டாக்கியவரும் மானிட சுபாவத்தை நன்குகக் கவனித்துப் படித்தவருமாகிய பேகன் (Bacon) என்பவர் தானே ஜோதிட சாஸ்திரத்தின் தத்துவங்களையும் நியம விதிகளையும் அனுபவத்தில் பரிசோதனை செய்து திருப்தியடையாதவராயிருந்தால் ஜோதிட சாஸ்திரத்தின் கொள்கைகளில் நம்பிக்கையை வைத்திருந்திருக்கமாட்டார். அடுத்தபடியே கணித சாஸ்திரிகளுக்குள் இளவரசராக இருந்தவரும் லகுஜா கணிதத்தை (Logarithm) உண்டு பண்ணியவருமாகிய பாரன் நேபியர் (Baron Napier) என்பவரைப்பற்றிக் கவனிப்போம். ஜோதிட சாஸ்திரம் ஒரு உண்மையான சாஸ்திரம் என்று எண்ணி இவர்கூட இதில் நம்பிக்கையை வைத்திருந்தார். கிரகங்களினுடைய சலன விதிகளை (Palnetary Laws) கண்டுபிடித்தவராகிய (Kepler) என்ற வான சாஸ்திரியானவர் ஜோதிட சாஸ்திரத்தில் நம்பிக்கையையுடையவராகவிருந்ததால் இவர் ஜோதிட சாஸ்திரத்தில் உபயோகிக்கின்ற கிரகங்களின் பலவிதமான பார்வைகளைக் கண்டு பிடித்தார். இந்து தேசத்தின் ஜனங்களின் தகப்பனாராகிய மகாத்மா காந்திஜி அவர்களைப் (Mahatma Gandhiji, the Father of Indian Nation) பற்றியும் சில விஷயம் இங்கு இப்போது சொல்லப்படுகின்றது. இவர் ஜனங்களுடைய நன்மைக்காக நூற்றிருபது வயது வரையிலும் ஜீவித்திருக்க ஆசைபட்டிருந்தார். அநேக தடவைகளில் இவர் தான் நூற்றிருபது வயது வரையிலும் ஆயுளை உடையவராகவிருப்பார் என்று சொல்லிக்கொண்டும் இருந்தார். ஆனால் விக்கிரமாதித்திய அரசருடைய சபையில் பிரகாசித்துக்கொண்டிருந்த நவரத்தினங்கள் என்ற நவமணிகளில் ஒருவராகியவரும் ஜோதிட சாஸ்திரத்தில் நிபுணருமாகியவரும் ஆன சத்தியாச்சாரியார் என்ற சத்திய மஹரிஷியால் எழுதப்பட்ட துருவ நாடி ஜோதிட சாஸ்திரத்தில் மகாத்மா காந்திஜியின் ஆயுள் முடிவு காலத்தைப்பற்றி முந்தியாகவே குறிப்பிட்டிருந்த காலத்திலேயே மகாத்மா காந்திஜி இறந்துவிட்டார். இது எல்லோருக்கும் தெரிந்த விஷயமேயாகும். ஸ்ரீ ராமபிரான் காட்டிற்குப் போவதற்கு முந்தி காட்டில் வாசஞ் செய்வது மிகவும் கஷ்டமானது, ஆபத்தானது, துக்கத்தையும் துன்பத்தையும் விளைவிக்கக்கூடியது என்று தன்னுடைய பத்தினியாகிய சீதாபிராட்டியாருக்குச் சொல்லிச் சீதையை அரண்மனையிலேயே விட்டு விட்டுப் போகச் சீதையுடன் வாதாடியபோது, இந்தப் பிரசித்தமான வாதாட்டத்தில் சீதை தான் இளம்பிராயத்திருந்தகாலத்தில் தான் காட்டில் நீண்ட காலம் வாசஞ் செய்ய நேரிடும் என்று ஜோதிட சாஸ்திரிகள் தனக்கு முந்தியாகவே சொல்லுவது வழக்கமாகவிருந்தது என்று பதில் சொல்லியது எல்லோருக்கும் தெரிந்தவிஷயமாகும். இந்த விஷயத்தில்கூட ஜோதிட சாஸ்திரம் பலித்துவிட்டது என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயமாகும். சாதாரணமாக ஒருவரும் அல்லது மிகவும் நுட்பமான சூட்சுமமான புத்தியையுடையவர்கூட சீதையைப்போன்ற விவாகமான ஒரு இளவரசி காட்டில் வாசஞ் செய்ய நேரிடுமென்று கனவிலும் நினைத்திருக்கமுடியாது. ஒரு

பிள்ளை (a Pillai) அவர்கள், ஒரு ராவ் (a Rao) அவர்கள் உள்பட ஜோதிடத்தின் விரோதிகள், ஜோதிட சாஸ்திரத்தின் மூலதாரங்கள் என்ற ஜோதிட அரிச்சுவடி கூட ஒன்றுமே தெரியாத மிகவும் புத்தி கூர்மை, புத்தி சூட்சுமம் உள்ள ஒருவர் ஜோதிடத்தின் பலாபலன்களை முந்தியாகவே யூகிக்கக்கூடும், உத்தேசிக்கக்கூடும் என்றும், ஜோதிட சாஸ்திரத்தின் பலாபலன்கள் தற்செயலாய் வாய்க்கக்கூடியவைகள் (accidental hits) என்றும் இவ்விதமாகப் பலித்துவிட்ட ஒரு ஜாதகத்தின் அநேக பலாபலன்களைப் பற்றியும்கூட அடிக்கடி கூறுகின்றார்கள். இந்த விஷயத்தைப்பற்றி மேலே சீதா பிராட்டியின் வனவாசத்தைப்பற்றி புத்தி சூட்சுமம் மாத்திரம் உள்ள ஒருவர் யூகிக்கக்கூடுமா முடியாதா என்பதைப்பற்றிக் கவனிக்கவும். இந்த வனவாசம் உண்மையிலே இவ்விதமாக ஊகிக்கக்கூடிய விஷயம் அல்லவென்று எல்லோருக்கும் எளிதில் புலப்படக்கூடியதாகும்.

எப்ரஹாம் (Abraham) என்பவர் கால்டியா தேசத்தாருடைய ஜோதிட சாஸ்திரத்தில் (Chaldean astrology) மிகவும் தேர்ச்சியடைந்தவராகவிருந்தார். கால்டியா தேசத்து மாஜி என்ற புத்திசாலிகளுக்குச் சட்ட மமைக்கின்றவராகவிருந்த (The legislator of the Magi or wise man of Chaldea) ஜோராஸ்டர் (Zoroaster) என்பவர் ஜோதிட சாஸ்திரத்தைக் கையாண்டு வந்தார். மோஸஸ் (Moses) என்றவர் ஜோதிட சாஸ்திரத்தை அறிந்து கொண்டு அதை பௌஷ்யவாதம் என்ற வருங்காரிய முரைத்தல் (Predictive Art) என்ற கலையில் உபயோகப்படுத்தி வந்தார். மனிதர்களுடைய சகல விதமான கார்யங்களையும் கிரகங்கள்தான் நடத்திக்கொண்டு வருகின்றன என்ற பழைய காலத்தவருடைய அபிப்பிராயத்தை பைலோ (Philo) என்றவர் உடையவராக விருந்தார். சூரியன், சந்திரன் நட்சத்திரங்கள் ஆகிய இவைகளின் சக்தியினால் ஏற்படுகின்ற பெரிய பெரிய பூகம்பம் (Earth-quake), கொள்ளை, பெருவாரி நோய் (Pestilence), பஞ்சம் (Famine) ஆகிய இவைகளைப்பற்றி ஜீஸஸ் கிரைஸ்ட்டு என்ற ஏசுநாதர் (Jesus christ) முன்னமே தெரிவித்திருந்த வரும் காரியம் உரைத்தல் என்ற குறி சொல்லுதல் (Prophecy) ஜெருசிலம் (Jerusalem) என்ற பட்டணத்தின் அழிவால் பலித்துவிட்டது. பாரசீகத்து தேசத்தின் அரசராகிய குஸ்டாஸ்ப் (Gushtasp, king of Persia) என்பவருடைய முதல் மந்திரியும், சகோதரரும் அந்தரங்க கூட்டாளியுமான Confidant) வரும் கீர்த்திபெற்ற பாரசீக தத்துவ சாஸ்திரியுமான (Philosopher) ஜயமாஸ்பு (Gyamasp) என்றவர் ஒரு ஜோதிடராகவுங்கூடவிருந்து கிரகங்களின் கூட்ட, சம்பவங்களினால் மெஸ்ஸயா வரப்போவதை (The coming of Messiah) முன்னாடியாகவே தெரிவித்தார். கிரகங்களினுடைய அதிகாரத்தை (Influence of planets) பற்றி செனிகா (Seneca) என்பவர் நம்பிக்கையுடையவராக இருந்தார். டாசிடஸ் (Tacitus) என்பவர் ஜோதிட சாஸ்திரத்திரத்தில் நம்பிக்கையுடையவராக இருந்தார். ஒவ்வொரு மனிதனும் பிறக்கின்ற காலத்திலேயே தன்னுடைய வாழுளில் சம்பவிக்கப்போகின்ற எல்லா பலன்களும் நிர்தாரணஞ் செய்யப்பட்டு விடுகின்றன என்ற கொள்கை அல்லது அபிப்பிராயத்திலிருந்து மானிடர்களில் பெரும்பான்மையோரை விடுவிக்க முடியாது என்று தெரிவித்தார். ஜோதிட சாஸ்திரத்தைக் கையாளுகின்ற சிலருடைய அஞ்ஞானத்தால்

அறியாமையினால் (Ignorance) சில விஷயங்கள் தவறிப்போகக்கூடும். அதனால் ஜோதிடத்தை அநியாயமாகக் கண்டனஞ் செய்யக்கூடும். ஆனால், பெயர்பெற்ற சிலாக்கியமான அனேக பலித்துவிட்ட பலாபலன்களின் உதாரணங்களினால் ஜோதிட சாஸ்திரம் புகழப்படும் என்றே தெரிவித்துள்ளார். பித்தகொராஸ் (Pythagoras) என்பவர் பூமி தன்னுடைய மேரு என்ற உருவாணி அல்லது இருசு (Axis)-யைத் தினந்தோறுஞ் சுற்றி வருகிறதென்றும் சூரிய பிரபஞ்சபத்திற்கு (Solar system) மத்தியாகிய சூரியனைப் பூமி ஒரு வருஷத்திற்கு ஒரு தரம் சுற்றி வருகின்றதென்றும் தெரிந்து கொண்டிருந்தார். இவர் இவ்விதமாகக் கோபர்னிகஸ் (Copernicus) என்பவர் பின்னால் நிரூபித்து நிலைநாட்டிய வாதத்தை அல்லது கோட்பாட்டை (Theory) முன்னமே தெரிந்து கொண்டிருந்தார். இப்படிப்பட்ட மேதாவியானவர் கிரகங்களின் சக்தியால் மனிதர்களுக்கு உண்டாகும் பலாபலன்களில் நம்பிக்கையுடையவராகவிருந்தார். தூரதிருஷ்டிக் கண்ணாடியால் (Telescopes) பின்னால் கண்டு பிடிக்கப்பட்ட அநேக விஷயங்களை முந்தியே தெரிந்து கொண்டிருந்தவரும், சூரியன் ஒரு பெரிய அக்கினி கோளம் என்று தெரிந்து கொண்டிருந்தவரும், சந்திரன் பர்வதங்கள் முதலியவைகளை உடையது என்று தெரிந்து கொண்டிருந்தவருமான அனக்ஸா கோராஸ் (Anaxagoras) என்பவர் ஜோதிட சாஸ்திரத்தில் நம்பிக்கையுடையவராகவிருந்து ஒரு பெரிய நட்சத்திரக் கல்லு (Meteoric-stone) பின்னால் ஆகாயத்திலிருந்து உறுவி விழப்போவதை முன்னமே தெரிவித்தார். தேல்ஸ் (Thales) என்பவருடைய மாணாக்கராகவிருந்த அனுக்ஸிமாண்டர் (Anaximander) என்றவர் ஒரு புகழ்பெற்ற ஜோதிடராக இருந்தார். பிளினி (Pliny) என்றவர்கூட ஒரு கீர்த்திபெற்ற ஜோதிடராக இருந்து லாஸிடமன் (Laccedemon) என்ற நகரத்தை அழித்துவிட்ட பூகம்பங்களைப்பற்றி (Earth-quakes) முந்தியாகவே தெரிவித்திருந்தார். டெமாகிரைட்டஸ் (Democritus) என்றவர் பிற்காலத்தில் சில கிரகங்கள் புதியதாகக் கண்டு பிடிக்கப்படும் என்று முந்தியாக தெரிவித்திருந்தார். இந்த விஷயம் பலித்துவிட்டது. ஜோதிடத்தின் விரோதிகள் வாதஞ்செய்கின்றது போலவே ஜோதிடம் ஒரு பொய்யான சாஸ்திரமாகவிருந்தால், பித்தாகொராஸ் (Phythagoras), அனுக்ஸிமாண்டர் (Anaximander), அனக்ஸாகோராஸ் (Anaxagoras) ஆகிய இவர்களும் இவர்களுக்கு முன்னே இருந்த பலரும் ஜோதிடத்தில் நம்பிக்கையுடையவர்களாகி இதைக் கையாண்டு கொண்டு வந்தவர்கள் இதனுடைய பொய்யை அறியாதவர்களாகவிருந்திருக்கமாட்டார்கள். மேலும், இவர்கள் ஜோதிட சாஸ்திரமானது அனுபவத்தையும் உண்மையையும் அடிப்படையாக உள்ள சாஸ்திரமாகவிருந்திராவிட்டால் இந்த சாஸ்திரத்தின் மூலமாகப் பினனால் வரப்போகின்ற, நேரிடப்போகின்ற பலாபலன்களையும் சம்பவங்களையும் முன்னால் தெரிவித்திருக்கமாட்டார்கள். ஜோதிட சாஸ்திரத்தின் எதிரிகள் இந்தச் சாஸ்திர விஷயமாய்ச் செய்கின்ற கண்டனை (Tirade), நிந்தை (Invective) பழி கூறுதல் (Visuperation), தூஷணப் பிரசங்கத்தாக்குதல், (Philippic) ஆகிய இவைகளால் ஜோதிட சாஸ்திரத்தின் மூலத் தத்துவங்கள், நியம விதிகள், கொள்கைகள் ஆகிய இவைகளைத் தாங்கள் அறியாதவர்களாக

இருக்குந்தன்மையைத் தாமே பிறருக்குக் காண்பித்துக்கொள்ளுகிறார்கள். கிறிஸ்து பிறப்பதற்கு முன்னே முன்னூற்றறுபத்தெட்டாவது (368 B. C.) வருஷத்தில் பிறந்த யூடாக்ஸஸ் (Eudoxus) என்பவர் ஜோதிட சாஸ்திரம், வைத்திய சாஸ்திரம் ஆகிய இவைகளின் ஞானத்தில் அதிகப் பிரக்கியாதி யடைந்திருந்தார். ஜோதிட சாஸ்திரத்தை மிகவும் சிரத்தையுடன் படித்திருந்தவராகிய ஹிப்போகிரேட்ஸ் (Hippocrates) என்றவர் ஜோதிட சாஸ்திரத்தை அறிந்திராத ஒரு வைத்தியர் வைத்தியஞ் செய்வதற்கு லாயக்கான வர் அல்லவென்றே பிரசுரஞ் செய்தார். நமது காலத்தில் உள்ள ஒரு புகழ் பெற்ற முதலியார் வகுப்பைச் சார்ந்த வைத்தியர், ஜோதிட சாஸ்திரம் ஒரு வைத்தியருக்குத் தெரிந்திருந்தால் இதனால் இந்த வைத்தியர் அதிக நன்மையை அடையக்கூடும் என்று தெரிவித்திருக்கின்றார். ஏனென்றால் ஜோதிட சாஸ்திரத்தின் ஞானம் இந்த வைத்தியர் வியாதிகளை நிர்ணயஞ் செய்வதில் (Diganosis of Diseases) இவருக்கு அதிக உபயோகமாக விருக்கும் என்று தெரிவித்தார். சிஸிரோ (Cicero) என்பவருடைய மிகவும் ஆத்ம சிநேகிதரான நிஜடியஸ் பிகுலஸ் (Nigidius Figulus) என்பவர் அகஸ்டஸ் ஸீஸர் (Augustus Caesar) என்பவர் பிறந்த வேளையின் மணியி லிருந்து பூமியை அரசாளப்போகின்ற ஒரு அரசர் அவதரித்தார் என்று பிரசாரஞ் செய்தார். "கிரகங்களின் கூட்டத்தினாலும் பார்வையினாலும் சந்திர மண்டலத்திற்குக் கீழே பூமியிலுள்ள ஜீவராசிகளின் பேரில் உண்டா கின்ற கிளர்ச்சி (Excitement)யைப்பற்றி என்னுடைய தவறிடாத அனுபவ மானது எனக்கு இஷ்டமில்லாமல் இருந்துங்கூட எனக்கு அதில் (ஜோதிடத் தில்) நம்பிக்கையைப் பலவந்தமாக ஏற்படுத்திவிட்டது" என்று கெப்லர் (Kepler) என்றவர் யாதொரு கபடமுமில்லாமல் வெள்ளையாகப் பகிரங்க மாகத் தெரிவித்துவிட்டார். கிறிஸ்து பிறந்த ஆயிரத்தறுநூற்றெழு பத்தைந்தாவது (1675 A.D.) வருஷத்தில் ஆகஸ்ட்டு மாதத்தில் பத்தாந் தேதியன்று பகல் மூன்று மணி பதினான்கு நிமிஷத்திற்குக் கிரீன்விச் ஜோதி மண்டபம் என்ற நட்சத்திரசாலையின் (Greenwich Observatory) அஸ்திவாரக்கல்லை (Foundation Stone) நாட்டி இவ் வேளைக்கு ஒரு ஜாதகத் தைக் குறித்து இதனால் பிளாம்ஸ்டீட்டு (Flamstead) என்ற வான சாஸ்திரி தனக்கு ஜோதிட சாஸ்திரத்திலிருந்த விருப்பத்தையும், அக்கரையையும் (Interest in Astrology) தெரிவித்துவிட்டார். ஆகாயத்திலுள்ள மண்டலங் கள் (Celestial Bodies) தங்களுடைய வெளிச்சம் (Light), உஷ்ணம் (Heat) இவைகளையும் அல்லாமல் இதர சக்திகளையும் உடையனவாக விருக்கின்றன என்று நாம் ஐயமில்லாமல் இருக்கின்றோம். ஆகையால் இந்த குணங் களுக்கு ஒற்றுமையாயுள்ள "ஆஸ்ட்ராலாஜியா சானா" (Astrologia Sana) என்ற பெயரையுடைய ஒரு ஜோதிட சாஸ்திரம் மொத்தத்தில் நமக்குத் தேவையானதென்று நாம் பதிவு (Register) செய்து கொள்ளவேண்டும். என்று பேகன் (Bacon) என்பவர் பிரசுரஞ் செய்திருக்கின்றார். இந்த ஜோதிட சாஸ்திரம் பின்னால் நடக்கப்போகின்ற விஷயங்களைப்பற்றி இன்னம் அதிகமான நம்பிக்கையுடனும், முகூர்த்தங்கள் வைப்பதில் அதிகமான ஜாக்கிரதையுடனும், இவ்விரண்டு விஷயங்களிலும் கட்டுத் திட்டத்துடனும்,

(with moderation) உபயோகப்படுத்தப்படவேண்டும் என்றும் இவர் தெரிவித்திருக்கின்றார். மிலான் (Milan) என்ற பட்டணத்துப் பிரசித்திபெற்ற வைத்தியரானவரும் கிறிஸ்து பிறந்த ஆயிரத்தைந்நூற்றொன்றாவது (1501 A.D.) வருஷத்தில் பிறந்தவருமான கார்டன் (Cardan) என்பவர் ஒரு பிரக்யாதிபெற்ற ஜோதிட சாஸ்திரியாக இருந்தார். இவர் ஜெர்மனி (Germany) பிரான்ஸ், (France) ஆகிய இந்த தேசங்களின் எல்லா வைத்தியர்களேயும் பிரமிக்கும்படி ஏமாற்றிக்கொண்டும் பங்கப்படுத்திக்கொண்டும் (Baffle) வந்திருந்த வியாதியான ஆர்ச்சி பிஷப் ஆப் செயின்ட் ஆன்டுரூஸ் (Archbishop of Saint Andrews) என்பவருடைய ஒரு நோயை ஜோதிட சாஸ்திரத்தின் ஞான உதவியால் சிகிச்சை செய்து சொஸ்தப்படுத்திவிட்டார். (Cured). இத்தாலியா (Italy) தேசத்து துறவி அல்லது ஏகாங்கி (Monk)யான டைடாகஸ் பிலேஸிடியஸ் டெடைடஸ் (Didacus placidus de titus) என்பவர் பெரிய கணித சாஸ்திரியாக இருந்ததுமல்லாமல் மிகவும் பிரக்கியாதி பெற்ற ஒரு ஜோதிட சாஸ்திரியாகவுங்கூட இருந்து அவர் காலத்தில் ஐரோப்பா கண்டத்தில் இருந்த மிகவும் பிரசித்திபெற்ற முப்பது பெரிய மனிதர்களின் ஜாதகங்களேத் தன்னுடைய புத்தகமாகிய "பிரிமம் மொபிலி" (Primum mobile) என்றதில் எழுதி ஜோதிட சாஸ்திரத்தின் உண்மையை நிலே நாட்டினர். டைகோ பிராஹி (Tycho-brahe) என்ற வான சாஸ்திரியானவர் ஜோதிட சாஸ்திரியாகவுங்கூடவிருந்து கிறிஸ்து பிறந்த ஆயிரத்தைந்நூற்றெழுபத்தேழாவது (1577 A.D.) வருஷத்தில் தெரியப்பட்ட ஒரு வால் நட்சத்திரத்திலிருந்து (Comet) பின்லாந்து (Finland) என்ற தேசத்தில் இனிமேல் பிறக்கப்போகின்ற குஸ்தாவுஸ் அடால்ப்பஸ் (Gustavus Adolphus) என்பவர் ஜெர்மனி (Germany) தேசத்தை அழித்துவிட்டு கிறிஸ்து பிறந்த ஆயிரத்தறுநூற்றி முப்பத்திரண்டாவது (1632 A.D.) வருஷத்தில். இறந்துவிடுவார் என்று முன்னடியாகவே தெரிவித்திருந்தார். இந்த விஷயங்கள் எல்லாம் முந்தியே தெரிவித்தபடியே பூராகவும் நடந்தேறினவாகும். வர்ஜில் (Virgil), ஹோமர் (Homer), சாஸர் (Chaucer), மில்டன் (Milton), டிரைடன் (Dryden), பைரன் (Byron) ஆகிய இவர்களேப்போன்ற கவிகள் (Poets) ஜோதிட சாஸ்திரத்தைப்பற்றிப் புகழ்ந்து பேசி இருக்கின்றார்கள்.

ஜோதிட சாஸ்திரத்தில் நம்பிக்கையை யுடையவர்களாக விருந்தவர்களேயும், இனி வரப்போகின்ற, பௌஷ்யகால, விஷயங்களே (the future) முந்தியாகவே அறிவதற்கு ஒரு மார்க்கமாக ஜோதிட சாஸ்திரம் இருப்பதற்கு இதனுடைய உரிமையையும் அக்கையும் பற்றியும் இது வரையிலும் நான் சொல்லி வந்தவை எல்லாவற்றையும் சுருக்கிக் கீழ்க்கண்ட மேற்கோளால் (Quotation) நான் அப்படியே மாற்றுமல் தெரியப்படுத்துகின்றேன். "மேல் நாட்டில் இருந்த பூர்வீகர்களில் இப்போகிரேட்ஸ் (Hippocratus), அரிஸ்டாட்டில் (Aristotle), சிஸிரோ (Cicero) சாக்ரடீஸ் (Socrates) காலன் (Galen) பித்தா கொராஸ் (Pythagoras), கிளாடியஸ் டாலமி (Claudius Ptolemy), ஸீஸர், (Caesar), தேல்ஸ் (Thales) டெமொக்கிரைட்டிஸ் (Democritus) ஜொஷிபஸ் (Josephus) மணீலியஸ் (Manilius) ஜஸ்டினஸ் (Justinus) ஆகிய இவர்களும் இன்னம் இதர

களும் ஆவார்கள். நம்முடைய காலத்திற்கு நெருங்கியுள்ளவர்களில், பிலிப்பு மெலாங்த்தன் (Philip Melancthon,) ஸர்ஹென்றி கார்னீலியஸ் அக்ரிப்பா (Sir Henry Cornelius Agrippa), ரோஜர் பேகன் (Roger Bagon), கைடோ பொனுடஸ் (Guido Bonatus), கார்டன் (Cardon), லார்ட் வெருலம் என்ற பிரான்ஸிஸ் பேகன் (Lord Verulum-Bacon) ஆர்ச்பிஷப் யூஷர் (Archbishop Usher), வாலன்டைன் நெய்பாட் (Valentine Nailbod), பிஷப் ராபர்ட் ஹால் (Bishop Robert Hall), ஹென்றி கோலி (Henry Coly), ஜியார்ஜ் பார்க்கர் (George Parker), மைக்கேல் நாஸ்ட்ரோடாமஸ் (Michael Nostrodamus), சீயர்டி சோலிசெல் (Sieur de Soleysell), ஒராவது சார்லஸுக்கு டாக்டராகவிருந்த டாக்டர் மீட் (Dr. Meed, Physician to Charles I), டாக்டர் எபெனஷர்ஸிப்ளி (Dr. Ebenezer Sibley), ஜான் ஒர்ட்ஸ்டேல் (John Wordsdale), மெர்காட்டர் (Mercator), இலேயாஸ் ஆஷ்மோல் (Elias Ashmole), ஸர் கெனலம் டிக்பி (Sir (Kenelm Digby), நிக்கொலெஸ் குல்பெப்பர் (Nicholas Culpeper), ஹெரல் ஆப் பிரிஸ்டல் என்ற ஜியார்ஜ் டிக்பி (George Digby, Earl of Bristol), ஜான் ஹேடன் (John Heydon), ஸர் கிரிஸ்டோபர் ஹேடன் (Sir Christopher Heydon), கவிகளுக்குள் அரசனுகிய ஜான் டிரைட்டன் (Jhon Dryden Poet Laureate) டாக்டர் ஜான் பட்லர் (Dr. Jhon Butler), ஸர் ஜார்ஜ் வார்டன் (Sir George Wharton), வானசாஸ்திரியாகிய வின்ஷெண்ட் விங்கு (Vincent Wing the Astronomer) அஸ்ட்ராணமர் ராயல் போர்ட்ஸ்மத் என்ற ஜார்ஜ் விட்ச்செல் (George Witchel, Astronomer Royal Portsmouth), பஸ்ட் அஸ்ட்ராணமர் ராயல் என்ற மிஸ்டர் பிளாம்ஸ்டீட் (Mr. Flamstead, First Astronomer Royal), டைக்கோ பிராஹி (Tycho Brahe) என்ற பெரிய வான சாஸ்திரியும் கெப்லர் (Kepler) என்ற பெரிய வான சாஸ்திரியும் (the great Astronomers), ஜான் ஓர்ஸ்டேல் (Jhon Worsdale) லார்ட் லிட்டன் (Lord Lytton) ஆகிய இன்னஞ் சிலர்களும் ஆவார்கள். விசேஷ புத்தி வைபவத்தை (Talent) யுடைய இப்படிப்பட்ட சிறந்த மேதாவி களின் கூட்டமானது (Galaxy of Talent) ஜோதிட சாஸ்திரத்திற்கு உண்மையிலே ஒரு பெரிய கௌரவமான அந்தஸ்த்தையும் பிரகாசத் தையும் கொடுக்கும் என்பவதற்குச் சந்தேகமே கிடையாது! ஏனென்றால் இப்படிப்பட்ட சிறந்த புத்திவாய்ந்த மேதாவிகள் எல்லோரும் அனு பவத்திலாகிலும் (Experience) அல்லது தத்துவ ஞானத்திலாகிலும் (Philosophy) அடியாதாரங்கள் என்ற அஸ்திவாரங்களே (Foundations) உடையதாகவில்லாத ஒன்றினுல் ஏகமனதாய் (in a common consent) ஆளப்பட்டு இருப்பார்கள்அல்லது மயக்கப்பட்டிருப்பார்கள் (swayed away) என்று நினைப்பது சாமானிய லௌகிக ஞானத்திற்கு என்ற பகுத்தறி விற்கு (reason) எதிரிடையாகவிருக்கின்றது (is opposed to reason) "கிரகங்களின் கூட்டத்தினுலும் பார்வையினுலும் சந்திர மண்டலத்திற்குக் கீழே பூமியிலுள்ள ஜீவராசிகளின் பேரில் உண்டாகின்ற கிளர்ச்சி (Excitement) யைப் பற்றிய என்னுடைய தவறிடாத அனுபவமானது எனக்கு இஷ்டமில்லாமல் இருந்துங்கூட எனக்கு அதில் ஜோதிடத்தில் நம்பிக்கையைப் பலவந்தமாக ஏற்படுத்திவிட்டது" என்று நாம் முந்தியே

மேலே சொல்லியுள்ளபடி கெப்லர் (Kepler) என்றவர்கூட சொல்லியிருக்கின்றார். இங்கு சொல்லப்பட்ட மேல்நாட்டு மேதாவிகளாகிய இத்தனை பேர்களும் இந்து தேசத்து மேதாவிகளும் மகரிஷிகளும் ஜோதிடத்தில் நம்பிக்கையை உடையவர்களாகவே இருந்தார்கள் என்ற விஷயமானது ஜோதிடம் உண்மையான சாஸ்திரம் என்றே தெரிவிக்கின்றது என்பதற்கு யாதொரு சந்தேகமுங் கிடையாது என்று இது வரையிலும், சொல்லி வந்தவைகளின் கருத்தேயாகும். நான் இது வரையிலுஞ் சொல்லி வந்தவைகளில் சில விஷயங்கள் சம்மந்தப்பட்ட வரையிலும் உண்மையிலே இங்கு இருப்பது போலவே கூறியவையே மறுபடியுங் கூறுதல் (Repetition) என்ற குற்றம் இருப்பினும் இதை மன்னிக்க வேணுமாய்க் கேட்டுக்கொள்ளுகின்றேன். ஏனென்றால் பல புத்தகங்களை நான் மறுபடியும் படித்து இந்த முகவுரையை எழுதியிருப்பதால் இவ்விதமாக நேர்ந்திருக்கக்கூடும், மேலும் கூறியதை மறுபடியுங் கூறுதல் என்பது சில சமயங்களில் விஷயங்களை நன்றாக மனதில் படிவதற்காகச் சொல்லுதலாகும்.

ஒரு ஆங்கில பாஷையின் அகராதியை ஜோதிடத்தின் அர்த்தம் என்ன என்று தெரிந்து கொள்ளுவதற்காக நீர் பார்ப்பீராயின் ஜோதிடம் “ தள்ளுண்ட, கழிக்கப்பட்ட சாஸ்திரம் ” (Exploded Science) என்று சில சமயம் விளக்கப்பட்டிருப்பதை நீர் கவனிக்கலாம். இவ்விதமாக ஜோதிடத்தைக் கழித்து விடும்படியாகச் செய்து கீர்த்தி பெற்றவர் செக்ஸ்டஸ் எம்பிரிகஸ் (Sextus Empiricus) என்பவராவர். இவர் கிறிஸ்து பிறந்த இருநூறுவது (200 A.D.) வருஷத்தில் ஜோதிடத்தைப் பற்றிச் சில விஷயங்களை விரோதமாக எழுதின ஒரு வைத்திய சாஸ்திரியானவர். உதாரணமாக ஒரே நிமிஷகாலத்தில் பிறந்த ஒரு மனிதனையும் ஒரு கோவேறிக் கழுதையும் இவர் எடுத்துக்கொண்டார். ஒரு தினத்தில் அநேக மணி காலம் வரையிலும் ஒரு பளுவான திரிகை வட்டம் என்ற (Mill) மில்லைச் சுழற்றுகின்ற ஒரு கஷ்டமான வேலையில் இந்தக் கோவேறிக் கழுதை உபயோகப்படுத்தப்பட்டு வந்தது, ஆனால் இந்த மனிதனோ ஒரு அதிக பணக்காரராக விருந்துகொண்டு சுகமாகவும் சந்தோஷமாகவும் தன்னுடைய வாணாளைக் கழித்துக்கொண்டு வந்தார். இவ்விதமான உதாரணத்தினால் மேலே சொல்லப்பட்டவர் ஜோதிடம் தள்ளப்படக்கூடிய சாஸ்திரம் என்று ருசுப்படுத்தினார். இவர் செய்ததில் ஒரு தப்பிதம் உண்டு. ஒரு விவேகமுள்ள (Sensible) அல்லது நியாய யுக்தமுள்ள (Rational) ஒத்துப் பார்த்தல் என்ற தாரதம்மியம் அல்லது உவமானம் (Comparison) செய்யவேண்டுமானால் இவர் ஒரே இனத்தைச் சார்ந்த இரண்டு ஜீவராசிகளை எடுத்துக் கொண்டிருக்க வேண்டுமே தவிர ஒரு நாற்கால் பிராணியாகிய கோவேறிக் கழுதையையும் ஒரு இரண்டு கால் பிராணியாகிய மனிதனையும் ஒத்துப் பார்த்தலுக்கு எடுத்து கொண்டிருக்கக்கூடாது. எண்பத்து நான்கு கோடி ஜீவராசிகள் உலகத்தில் இருக்கின்றனவென்று நமது இந்து தேசத்து சாஸ்திரங்கள் தெரிவித்திருக்கின்றன என்ற விஷயம் எல்லோருக்குந் தெரிந்த விஷயமாகும். ஆகையால் பல இனத்தைச் சார்ந்த பல ஜீவராசிகள் ஒரே க்ஷணத்தில் பிறந்திருக்கக்கூடுமென்பது மிகவும் சகஜமான விஷயமாகும்.

ஒத்துப் பார்ப்பதற்கு ஒரே இனத்தைச் சார்ந்த இரண்டு பிராணிகள் அஃதாவது ஒரே க்ஷணத்தில் பிறந்த இரண்டு கோவேறிக் கழுதைகள் அல்லது இரண்டு மனிதர்களை உதாரணமாக அவர் எடுத்துக்கொண்டிருக்க வேண்டும், ஏனென்றால் ஒரே வகுப்பைச் சார்ந்த (Species) இரண்டு பிராணிகள் சம்பந்தப்பட்ட விஷயத்தில்கூட இவைகளின் வாழ்க்கையை உருவாக்குகின்ற (Shaping the career) வமிசப்பாரம்பரியம் என்ற ஒரு விஷயத்தையும் (Heredity) கவனிக்கவேண்டியதாக விருக்கின்றது. ஆகையால் இரண்டு வித்தியாசமான வகுப்பைச் சார்ந்த பிராணிகள் சம்மந்தப்பட்ட விஷயத்தில் வமிசப் பாரம்பரியத்தை (Heredity) இன்னம் அதிகமாகக் கவனிக்கவேண்டியதாகவே இருந்து வருகின்றது. நான்கு அறிவுள்ள பிராணியாகிய ஒரு கோவேறிக் கழுதையையும், ஐந்து அறிவுள்ள ஒரு மனிதனையும் ஒத்துப் பார்ப்பது நியாயமானதல்ல. ஜோதிடத்தைப்பற்றியும் ஜோதிட சாஸ்திரதிரிகளைப்பற்றியும் விரோதமாக வாதாடி எம்பிரிகஸ் (Empiricus) அடையப்பட்ட ஜயமானது உண்மையான ஜயமாகாது, இது போலியான கற்பிதமான ஜயமேயாகும் (Feigned Success) ; ஏனென்றால் இது கலந்து ஆபாசம் பண்ணுதல், புரட்டுதல் என்ற முகாந்தரத்தாலும் (Sophisticated method) கெட்டவிதத்தாலும் அடையப்பட்டதாகும். ஒரே க்ஷணத்தில் அல்லது கூடிய மட்டும் ஏககாலத்தில் பிறந்து ஒரே விதமான பலாபலன்களைத் தங்களுடைய வாணுட்களில் உடையவர்களை உதாரணங்களாக எடுத்துக்கொண்டு மேற்கண்ட எம்பிரிகஸ் (Empiricus) கையாண்ட வழியைக் கொண்டே ஜோதிட சாஸ்திரத்தின் தன்மையை ஸ்தாபிக்க நான் இப்போது பிரயத்தனப்படுகிறேன். கிறிஸ்து பிறந்த ஆயிரத்தெண்ணூற்றிருபதாவது (1820 A.D.) வருஷத்தில் பிப்ரவரி மாதத்தில் வெளியான பத்திரிகை பிரகாரம் செயின்ட் மார்ட்டின் லெ பீல்ட்ஸ் (Saint Martin-le-fields) என்ற விடத்தில் ஏககாலத்தில் மிஸ்டர் சாமுயல் ஹெம்மிங்ஸ (Mr. Samuel Hemmings) என்பவரும், மூன்றுவது ஜார்ஜ் அரசர் (King George III) என்பவரும் பிறந்தார்கள். மூன்றுவது ஜார்ஜ் (George III) என்பவர் பட்டந்தரித்துச் சிம்மாசனம் ஏறின காலத்திலேயே அஃதாவது கிறிஸ்து பிறந்த ஆயிரத்தெழுநூற்றறுபதாவது (1760 A.D.) வருஷத்தில் அக்டோபர் மாதத்தில் மிஸ்டர் ஹெம்மிங்ஸ் (Mr. Hemmings) என்பவர்கூட தன்னுடைய தகப்பனுரின் சொத்துக்களை உரிமை வழியாகப் பெற்றுர் (inherited). முன் சொல்லப்பட்டவர் விவாகஞ் செய்துகொள்ளப்பட்டக் காலமாகிய கிறிஸ்து பிறந்த ஆயிரத்தெழுநூற்றறுபத்தோராவது வருஷத்தில், செப்டம்பர் மாதம் எட்டாந்தேதி (8-9-1761 A.D.) யன்றே பின் சொல்லப்பட்டவரும் விவாகஞ் செய்துகொண்டார். முன் சொல்லப்பட்டவர் இறந்த காலமாகிய கிறிஸ்து பிறந்த ஆயிரத்தெண்ணூற்றிருபதாவது வருஷத்தில் ஜனவரி மாதத்தில் இருபத்தொன்பதாவது தேதியாகிய சனிக்கிழமை (Saturday, 29-1-1820 A.D.) யன்றே பின் சொல்லப்பட்டவருடைய ஆத்துமா தன்னுடைய தேகத்திலிருந்து பிறிந்துவிடவே இவருடைய உடலம் அழுந்தவிடப்பட்டது. கிறிஸ்து பிறந்த ஆயிரத்தெழுநூற்றெழுபத்தாறுவது (1776 A.D.) வருஷத்திய வருஷ ரிஜிஸ்டர் என்ற ரிக்கார்டில் ஒரே

தினத்தில் சுமார் ஏககாலத்தில் பிறந்தவர்கள் என்று இரட்டைக் குழந்தை (Twins born at about the same time on the same day)களின் ஜனனத்தின் பதிவு செய்யப்பட்டது. ஒருவர் ஆண், மற்றொருவர் பெண் ஆகும். ஆனால் இவர்கள் இருவரும் ஒரே தினத்தல் விவாகஞ் செய்துகொண்டார்கள், ஒரே தினத்தில் இறந்துவிட்டார்கள், ஒரே மசானக் குழியில் புதைக்கப் பட்டார்கள். ஒரே தினமாகிய கிறிஸ்து பிறந்த ஆயிரத்தெண்ணூற்றெழுபத்தொன்பதாவது வருஷத்தில் எப்ரல் மாதத்தில் பதினைந்தாவது தேதியில் (15-4-1879 A.D.), இரட்டைக் குழந்தைகளில் சாயந்திரம் ஐந்துமணி பத்து நிமிஷத்தில் ஒரு குழந்தையும்; மற்றொரு குழந்தை சாயந்திரம் ஐந்து மணி இருபத்திரண்டு நிமிஷத்திலுமாகப் பிறந்தன. முதற் குழந்தை கிறிஸ்து பிறந்த ஆயிரத்தெண்ணூற்றெண்பத்தோராவது வருஷத்தில் ஜூலை மாதத்தில் ஒன்பதாவது தேதியில் (9-7-1881 A.D.) இறந்துவிட்டது; மற்றொரு குழந்தை மூன்று தினங்கள் கழித்து இறந்துவிட்டது. இவ்விருவரும் பிறந்தகாலத்தில் பன்னிரண்டு நிமிஷங்கள்தான் வித்தியாசம் ஆகும். இறந்த காலத்தில் மூன்று தினங்கள்தான் வித்தியாசமாகும். மேல்நாட்டு ஜோதிட சாஸ்திரத்தில் பலாபலன்கள் நடக்குங் காலத்தைக் குறிப்பிடுவதற்காக ஒரு நாளுக்கு ஒரு வருஷகாலமாகவும், அஃதாவது நான்கு நிமிஷங்களுக்கு ஒருநாள் காலமாகவும் கணக்கிட்டு வருகின்றார்கள். இவ்விதமான கணக்குப்பிரகாரம் ஜனனகாலத்தில் வித்தியாசமான பன்னிரண்டு நிமிஷமானது மூன்றுநாள் வித்தியாசத்தையே குறிக்கும். இறந்த காலங்களில் ஏற்பட்ட வித்தியாசங்கூட இந்த மூன்றுநாளேதான் என்ற விஷயத்தை நன்றாய்க் கவனிக்கவும். இந்தக் கணக்கு விஷயமாகப் பின்னால் கீழே * குறிப்பிட்டுள்ள புத்தகங்களையும் பக்கங்களையும் பார்க்கவும். இந்த சந்தர்பத்தில் அரசாங்க நிர்வாகத்தில் தற்காலத்தில் அதிகமாகக் கலந்து கொள்ளுகின்ற தென்னிந்தியாவைச் சேர்ந்த இரட்டைப்பிறவி யாளர்களாகிய இரண்டு முதலியார்களின் விஷயங்களைக்கூட நீர் கவனிக்கலாம். அமெரிக்காவைச் சேர்ந்த (America) பிரக்கியாதிபெற்ற சங்கீத சாஸ்திரிகளாகவும், (Musicians) வாசாலக பிரசங்கிகளாகவும் (Elocutionists) இருந்த இரட்டைப் பிறவியாளர்களாகிய புகழ்பெற்ற மாறில் டிவின்ஸ (Morril Twins) என்றவர்கள் ஒரே தினத்தில் அஃதாவது கிறிஸ்து பிறந்த ஆயிரத்தெண்ணூற்றறுபத்தேழாவது வருஷத்தில் ஆகஸ்ட்டு மாதத்தில், முப்பதாந் தேதியன்று (30-8-1867 A.D.) நியூயார்க் (New york) எனற பட்டணத்தில் பிறந்தார்கள். கிறிஸ்து பிறந்த ஆயிரத்தெண்ணூற்றெழுபத்தெட்டாவது (1878 A.D.) வருஷத்தில இருவரும் நீரில் மூழ்கிவிடும் சம்பவத்திலிருந்து இவர்களுடைய சகோதரரால் காப்பாற்றப்பட்டார்கள், இவர்கள் இருவரும் தங்களுடைய பதினைன்காவது வயதுகாலத்தில் ஒரே கல்லூரி என்ற வித்தியாலயத்தில்(College) சேர்ந்து வாசித்தார்கள். இவர்கள் இருவரும் தங்களுடைய இருபதாவது வயதில் ஏககாலத்தில் கற்றுத் தேரிய பட்டம்பெற்றவர்களானார்கள் (became

---

* Vide page 179 of W. J. Simmonites "Complete Arcana of Natal Philosophy" 1890 A.D; page 189 of "A Student's Text Book of Astrology" by Vivian E Robson, B.Sc, 1925 A.D; page 223 of "the Text Book of Astrology" by "Alfred, Alfred by John Pearce" 1911, A.D.

graduates together). ஏககாலத்தில் ஷேக்ஸ்பீயர் கல்லூரி என்ற சங்கஸ்தாபனத்திலிருந்து (from Shakespearean Institute) நிதர்சன பத்திரங்கள் என்ற பட்டபத்திரங்களைப் (Diplomas) பெற்றார்கள்; தங்களுடைய மத விஷயமாகப் பிரசங்கஞ் செய்கின்ற வேலையை நடத்தும் விஷயமாகக் கிறிஸ்து பிறந்த ஆயிரத்தெண்ணூற்றெண்பத்தேழாவது வருஷத்தில் நவம்பர் மாதத்தில் இரண்டாவது தேதியன்று (2-11-1887 A.D.) லைசென்ஸ் கொடுக்கப்பட்டார்கள். இவர்கள் இருவரும் உருவ தோற்றத்திற்கூட (Physical appearance) கவனிக்கத்தக்கபடி அதிக ஒற்றுமையுடையவர்களாக விருந்தார்கள். தென்னிந்தியாவிற்கூட இரண்டு இரட்டைப் பிறவியாளர்கள் தங்களுடைய உருவ தோற்றத்தில் மிகவும் ஒற்றுமையாக விருந்ததால் இவர்களைப் பெற்றோர்கள்கூட வித்தியாசப்படுத்தித் தெரிந்துகொள்வதற்காக இலட்சுமணர் என்ற இளைய பிள்ளையின் கையில் இவர்கள் சிறியவர்களாக விருந்தபோது ஒரு வளையத்தைப்போட்டு அதன்மூலமாகத் தெரிந்துகொண்டு வந்தார்கள்; இவர்கள் பெரியவர்களாகி விவாகஞ்செய்துகொண்டு வாழ்ந்த காலத்திற்கூட இவர்கள் உருவதோற்றத்தில் மிகவும் ஒத்திருந்ததால் இவர்களுடன் இவர்களுடை மனைவிமார்கள் இவர்களை இவர்களுடைய குரல்களின் மூலம் தெரிந்து வித்தியாசத்தை அறிந்துகொள்ளுவதற்கு முந்தி இவர்களுடன் இரவுகாலங்களில் பேசத் துணியமாட்டார்கள். யார்க்ஷையர் (Yorkshire) என்ற தேசத்தில் கிறிஸ்து பிறந்த ஆயிரத்தெண்ணூற்றிருபத்தினான்காவது வருஷத்தில் ஜூன் மாதத்தில், இருபத்தெட்டாந் தேதியன்று (28-6-1824 A.D.) காலை எட்டு மணிக்கு இரட்டைக் குழந்தைகளாகப் பிறந்த சாமுயல் கிளப் (Samuel Clough) என்றவரும் ஜோஷப் கிளப் என்பவரும் இவர்களுடைய நான்காவது வயதில் ஸ்கார்லெட் பீவர் என்ற ஒருவிதமான ஜுரத்தினால் (Scarlet fever) கஷ்டப்பட்டார்கள், இவர்கள் இருவரும் விவாகஞ்செய்துகொள்ள ஸ்திரிகளிடத்தில் ஏககாலத்தில் உடன்பட்டார்கள். இந்த இரட்டைப்பிறவியாளர்களுடைய பத்தொன்பதாவது வயதில் இவர்கள் நேசித்த ஸ்திரீகள் இருவரும் ஏககாலத்தில் இறந்துவிட்டார்கள். இந்த இரட்டைப்பிறவியாளர்கள் ஒரேவிதமான ரோகமாகிய க்ஷயரோகத்தினால் (Consumption) ஒருநாள் வித்தியாசத்துக்குள்ளே இறந்துவிடவே கிறிஸ்து பிறந்த ஆயிரத்தெண்ணூற்றி நாற்பத்திரண்டாவது வருஷத்தில் ஆகஸ்ட்டு மாதத்தில் இரண்டாந்தேதியன்று (2-8-1842 A.D.) ஒரே மசான குழியில் புதைக்கப்பட்டார்கள் என்று கிறிஸ்து பிறந்த ஆயிரத்தெண்ணூற்றி நாற்பத்திரண்டாவது வருஷத்திய ஆகஸ்ட்டு மாதத்திய ஆறுந்தேதியையுடைய லீட்ஸ் பத்திரிக்கை (Leeds News of the sixth, August, 1842 A.D.) மூலமாய் தெரியவருகின்றது. கிறிஸ்து பிறந்த ஆயிரத்தெண்ணூற்றித்தொண்ணூறாவது வருஷத்தில் ஜூன் மாதத்தில் பதின்மூன்றாவது தேதியை (13-6-1890 A.D.) யுடைய 'டெயிலி கிராபிக்' (Daily Graphic) பத்திரிகை பிரகாரம் மேற்கு இங்கிலாந்தில் (Western England) பிறந்த இரண்டு ஜான்ஷன்ஸ் என்ற இரட்டைப்பிறவியாளர்கள் (Twin Johnsons) உருவத்தின் பார்வையில் அதிகமான ஒற்றுமையையுடையவர்களாக விருந்தார்கள்; இவ்விருவர்களும் ஒரே எடை, நிறை (Weight) உடையவர்களாகவும், ஒரே உயரத்தையுடையவர்களாகவும், தலை மயிர், கண்கள், தேகம் ஆகிய இவைகளின் நிறம் ஒன்றாகவே யுடையவர்களாகவும், தேகத்தின் அளவு ஒன்று

கவும், ஜீவனத்தொழில் ஒன்ருகவும், வாழ்க்கையின் அந்தஸ்து ஒன்ருக வும், விருப்பமும் வெறுப்பும் ஒன்ருகவும், மதாச்சார நம்பிக்கைகள் ஒன்ரு கவும், பிள்ளைகள், பெண்கள் ஆகிய இவர்களின் எண்ணிக்கைகள் ஒன்ரு கவும், நடை நொடி பாவனைகள் ஆகிய இவைகள்கூட ஒன்ருகவும் உடையவர் களாக விருந்தார்கள். சந்திரகலா நாடியில் பின்வரும் ஜோதிட சாஸ்திர விதிகள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஒரு ஜாதகத்தின் ஜன்ம லக்கினத்தின் திரிகோண பாவ அதிபதிகள் என்ற ஜன்ம லக்கினத்தின் ஓராவது, ஐந்தா வது, ஒன்பதாவது பாவங்களின் அதிபதிகளான கிரகங்களின் வாரங்கள் ஜாத கருக்கு எப்போதும் நல்ல வாரங்கள் என்றும் அதிருஷ்டமான வாரங்கள் என்றும் சொல்லப்படும். ஒரு ஜாதகத்தின் ஜனம லக்கினத்தின் துஸ்தா னங்கள் என்று சொல்லப்பட்ட ஆருவது, எட்டாவது, பன்னிரண்டாவது பாவங்களின் அதிபதிகளின் வாரங்கள் ஜாதகருக்கு எப்போதும் கெட்ட வாரங்கள் என்றும் துரதிருஷ்டமான வாரங்கள் என்றும் சொல்லப்படும். உதாரணமாக, ஆர்ச் பிஷப் கான்டர்பரி என்ற தாமஸ பெக்கெட் (Thomas Becket, Archbishop of Canterbury) என்பவரின் வாழ்நாளின் முக்கிய மான சம்பவங்கள் எல்லாம் செவ்வாய்க்கிழமையன்றே நடந்தேறின, சனிக்கிழமை எப்போதும் தனக்கு ஒரு அதிருஷ்டமான தினம் என்று இங்கி லாந்தைச் சேர்ந்த ஏழாவது ஹென்ரி (Henry VII of England) சொல்லு வது வழக்கமாகவிருந்தது. எட்டாவது ஹென்ரி (Henry VIII) என்பவருக்கு வியாழக்கிழமை எப்போதும் துரதிருஷ்டமான நாளாகவே விருந்தது. ஐந்தாவது போப் சிக்ஸ்டஸ் என்பவருக்கு புதன்கிழமை எப்போதும் ஒரு அதிருஷ்டமான நாளாகவே விருந்தது. ஜோதிட சாஸ்திரத்தின் சில விரோதிகள் இப்படிப்பட்ட விஷயங்களைத் தற்செயலான சம்பவங்கள் (chances) என்றும் உடனிகழ்ச்சிகள் (coincidences) என்றும் சொல்லித் தள்ளி விடுகின்ருர்கள். ஆனுல் இவ்விதமான தற்செயலான சம்பவங்களும் (chances) உடனிகழ்ச்சிகளும் (coincidences) அடிக்கடி நேரிடுமானுல் இவை களுக்கு சட்டங்களும், விதிகளும் அல்லது நியமங்களும் (laws) இருந்தே தீரவேண்டும். கிரகங்களில் இப்படிப்பட்ட நியமங்கள் ஏற்படுவதால் ஜோதிட சாஸ்திரம் இவ்விதமான நியமங்களைப்பற்றியும் தெரிவிக்கின்றது.

மேலும் தாங்கள் கண்டனஞ் செய்கின்ற விஷயத்தைப்பற்றித் தங்களுக்கு ஒன்றுமே தெரியாமலிருந்தபோதிலுங்கூட ஜோதிட சாஸ்திரத் தின் பேரில் உள்ள சுத்த வெறுப்பாலும் (Hatred), துரபிமானத்தாலும் (Prejudice) படித்துத் தேர்ந்த விஞ்ஞான சாஸ்திரிகளில் (Learned Scientists) சிலர் ஜோதிட சாஸ்திரம் பிரமை அல்லது மூடபக்தி (Superstition) அஞ்ஞானம் அல்லது அறியாமை (Ignorance) ஆகிய இவைகளாலும் விளைந்த ஒரு பயன் என்று சொல்லிக் கண்டனஞ் செய்கின்ருர்கள். இவர்கள் இந்த சாஸ்திரம் மனிதனுடைய புத்திகோளாறு என்கிற பைத்தியத்தினுல் (Aberration of human mind) உண்டான பயன் (Result) என்கின்ருர்கள்; ஆனுல் இவர்கள் உண்மையான விஞ்ஞானிகள் செய்ய வேண்டிய முறை பிரகாரம் ஜோதிட சாஸ்திரத்தின் விதிகளேயும் நியமங் களையும் பரிசோதனை செய்து பார்க்காமலேயே வெறுங் கண்மூடிகளாகக் கர்வப்பட்டுத் தங்களுடைய அபிப்பிராயத்தை எண்பித்துக் கொள்ளுகின் ருர்கள் (simply assume). “புகழ் பெற்ற விஞ்ஞானிகள் என் ஜோதிட

சாஸ்திரம் ஒரு ஏமாற்றம், மோசம், என்று சொல்லுகின்றார்கள். (Famous Scientists tell why Astrology is a Fake) என்ற தலையங்கத்துடன் (Caption) வெளிவந்த ஒரு வியாசத்தை (an article) சில வருஷங்களுக்குமுன் நான் கண்ணுற்றேன். விவாகமாகாத சிறிய பெண்கள், (Spinsters), மனவலி தளர்ந்த முதியோர்கள் (Dotards) ஆகிய இவர்கள் உள்பட எல்லா அந்தஸ்து வகுப்புக்களைச் சார்ந்த பொதுமக்களிடத்திலிருந்து பணத்தை அபகரித்துக் கொண்டும் (fleece money) அமலைசெய்துகொண்டும் நட்சத்திரங்களைக் கண் கொட்டாதபடி உற்றுப்பார்க்கின்றவர்கள் (Racketeer star-gazers) என்றும், நெஞ்சறிந்த அல்லது தாங்களே நன்றாகத் தெரிந்து கொண்ட வஞ்சகத் தன்மையுள்ள மூடர்கள் (conscious charlatans) என்றும் ஜோதிட சாஸ்திரிகளை இந்த வியாசம் (article) நிந்திக்கின்றது (Brands). சராசரி விகிதங்களைப்பற்றிய விதிகள் (Law of averages) ஜனங்களுடைய சுபாவங்கள் விஷயங்கள், உலகவழக்கு (human nature and affairs) ஆகிய இவைகளின் சாதாரணமான விஷய ஞானம் (knowledge), என்பதை அநுசரித்த சாதாரண ஊகைகளோ அல்லது உத்தேசங்களோ (simple guesses) அல்லாமல் வேறே ஒன்றுமில்லை என்று ஜோதிடர்கள் முன்தியாகவே சொல்லிப் பலித்து விட்ட பலாபலன்களைப் பற்றி இந்த வியாசம் பகிரங்கப்படுத்துகின்றது. ஜோதிட சாஸ்திரத்தின் உறுதியான, வெளிப்படையான விரோதிகள் (avowed enemies), ஜோதிட சாஸ்திரத்தை மஞ்சா காமாலை கண்களுடன் (Jaundiced eyes) அஃதாவது துரப்பிராயமுடன் பார்க்கின்றவர்கள் ஆகிய இவர்கள், அதிருப்தியுடனும் மனவேக்காடுடனும் (disgruntled) ஜோதிட சாஸ்திரத்தைக் கருதுகின்றவர்கள் ஆகிய இவர்கள் எல்லோருடைய ஆபாச மான, அறிவில்லாத, பயன்படாத ஜம்பம என்ற வீம்பு ப்பேச்சுகளையும் (empty vapourings), இறுமாப்பான, டம்பமான கோபங்களையும் தவிர வேறே ஒன்றையும் இந்த வியாசம் தெரியப்படுத்தவில்லை. இந்த நபர்கள் தங்களுக்குத் தெரிந்த வித்தைகளில் எவ்வளவோ புத்திசாலிகளாய் இருந்த போதிலுங்கூட ஜோதிட சாஸ்திர ஞானம் இவர்களுக்கு ஒன்றுமே அல்லது கொஞ்சங்கூட இல்லாத வரையிலும், இந்தச் சாஸ்திரத்தைப் பற்றி எவ்விதமான அபிப்பிராயத்தையாவது (opinion) அல்லது தீர்ப்பை யாவது (Judgment) தெரியப்படுத்துவதற்குப் பூராகவும் சக்தியற்றவர் களாகவே (thoroughly incompetent) இருக்கின்றார்கள். ஜோதிட சாஸ்திரத் தின் விரோதிகளில் பௌதிகமதவாதஸ்தர்கள் (Materialistic enemies) என்ற உலக சம்மந்தம்மான விஷயங்களையே மிகவும் அதிகமாகக் கவனிக் கின்றவர்கள் இந்தச் சாஸ்திரம் சாமான்யமான புத்தி அறிவிற்கு (common-sense) விரோதமாகவிருக்கின்றதென்று துணிந்து உறுத்திச்சொல்லுகின் றார்கள் (assert). சாமான்யமான புத்தி அறிவு (Commonsense) எனபது எப்போதும் மாறுபடாமல் இருப்பதில்லை, நிலையாகவும் இருப்பதில்லை. இதர வஸ்துக்கள் அல்லது விஷயங்கள் போலவே இதுவும் விருத்தியாகிக் கொண்டே விருக்கின்றது. ஒரு காலத்தில் (in one age) சாமான்யமான புத்தி அறிவிற்கு விரோதமாக விருந்தது, இன்னொரு காலத்தில் (in another age) பொருத்தமாகவும் ஒற்றுமையாகவும் வந்துவிடுகின்றது (is in harmony). இராமாயண யுத்தத்தில் இந்திரஜித்து மேகங்களுக்குப் பின்னல் மறைந்துகொண்டு இராமபிரானுடைய சைந்நியங்களுடன் போர் புரிந்தார்

என்று ஒரு காலத்தில் சொல்லிக்கொண்டிருந்தபோது இவ்விதமாகச் சண்டை செய்வது சாமான்னிய யுத்தி அறிவிற்கு விரோதமான பொய் (அண்டப்புளுகு, ஆகாசப்புளுகு, பிரமாண்டமான புளுகு ஆகிய இவைகளுக் குள் பிரமாண்டமான புளுகு) என்று கருதப்பட்டு வந்தது. ஆனால் இந்தப் பொய் நமது காலத்திலோ சாமான்னியமான புத்தி அறிவிற்கே ஒற்றுமை யுடையதாகவும், பொருத்தமுடையதாகவும் வந்துவிட்டது. ஆகாயம் விமானம் உண்டு பண்ணினதற்கு முன்னே, டென்னிஷன் (Tennyson) என்பவர் தன்னுடைய இன்மிமோரியம் (In memorium) என்ற யாப்புக் கவிதை என்ற செய்யுளில் (poem), பின் வரப்போகின்ற ஒரு காலத்தில் வர்த்தகம் நடமாட்டம் ஆகிய இவைகள் (commerce, traffic, etc.) ஆகாய மார்க்கமாக நடக்கப்போகின்றது என்று தெரிவித்திருந்ததை ஜனங்கள் இது ஒரு பொய் என்று இகழ்ச்சியாக எளனமும் கேலியுஞ் செய்தார்கள். (Ridiculed). இப்போது இந்த எளனமெல்லாம் சூரியனைக்கண்ட பனிபோல ஒரு சிங்கத்தைக் கண்ட யானைக் கூட்டத்தைப்போலப் பறந்தோடிப் போய் விட்டன. சுமார் ஐம்பது வருஷத்திற்கு முன்னே புதுச்சேரியிலிருந்து வாங்கி வரப்பட்ட ஒருவருடைய ஜனன ஜாதக நாடியில் இந்த ஜாதகர் "ககன மார்க்கம் பறப்பனுகும்" அஃதாவது ஆகாயத்தில் இவர் பறப்பார் என்று ஒரு பாட்டில் சொல்லியிருந்ததைச் சில ஜோதிடர்கள் எப்படிப் பறக்கமுடியும் இது அசாத்தியமான காரியம் என்று எண்ணி இது பாட்டின் பிழை என்று சொன்னார்கள். இன்னஞ் சிலர் இந்த ஜாதகர் தன்னுடைய கனவில் ஆகாயத்தில் பறப்பதைப் போல கனவு காண்பார் என்று சொன்னார்கள். அக்காலத்தில் ஊமையன் அல்லது உறங்கினவன் கண்ட கனவு போல விருந்தது. இக் காலத்தில் விழித்தவன் கண்ட உண்மை போலவாகிவிட்டது. ஆகாயத்தில் பறவைகளைப்போலப் பறப்பது சாமான்ய புத்தி அறிவிற்கு ஒற்றுமை அல்லது பொருத்தம் உடையதாக இக் காலத்திய அநுபவித்தினுல் ஏற்பட்டுவிட்டது என்ற விஷயம் குழந்தை குட்டிகளுக்குக் கூட தெரிந்த விஷயமாக வாகிவிட்டது. சக்கரங்களின் உதவியால் ஓடுகின்ற நீராவி யந்திரம் (Locomotive steam engine) மூலமாய் ஒரு மணிக்கு ஐம்பது மைல் விகிதம் பிரயாணஞ் செய்யக்கூடும் என்று நினைக்கக்கூடிய விஷயம் சுமார் நூறு வருஷங்களுக்கு முந்தி சாமான்னியமான புத்தி அறிவிற்கு விரோதமான தாகக் கருதப்பட்டுவிட்டது. இக்காலத்தில் இவ்விதமாகவும் இன்னம் ஆச்சரியப்படத்தக்க அதிகமான வேகத்துடனும் பிரயாணஞ் செய்வது சகஜ மாகிவிட்டது. ஜோதிட சாஸ்திரத்தில் அதிக நம்பிக்கையை யுடைய வர்களாக விருந்த நம்முடைய பழைய காலத்திய மஹரிஷிகள், ஞானிகள், ஞான திருஷ்டியையுடைய மேதாவிகள் (Sages and seers) ஆகிய இவர்களுடைய மனத்தின் திறமையை, புத்தியின் சாமாத்தியத்தை (Mental calibre) ஜோதிடத்தின் விரோதிகள் அடைவார்களேயானால் அப்போது இவர்கள் ஆச்சரியப்படும்படியாய் ஜோதிடத்தில் நம்பிக்கையையுடையவர்களாக மாறி விட்டு ஜோதிட சாஸ்திரம் சாமான்னிய புத்தி அறிவிற்கு விரோதமானதல்ல வென்று பறை சாற்றுவார்கள், பிரசங்கஞ் செய்வார்கள், பிரகடனஞ் செய் வார்கள். (Proclaim) என்பதற்குச் சந்தேகமே விராது.

ஒரு காலத்தில் ஜோதிட சாஸ்திரத்தைக் கண்டனஞ்செய்து தூஷித்த ஸர் டேவிட்டு புரூஸ்டர் (Sir David Brewster) என்றவர் "கிரகங்களும்

நட்சத்திரங்களும் மாத்திரந்தான் இந்தப் பிரபஞ்சத்தில் எல்லாதேசத்தா ராலும் பார்க்கப்படப்பட்டனவாகும். எல்லா ஜனங்களாலும் புகழப்பட்டு மெச்சத்தக்கனவாகும். இவைகள் நாம் பிறக்கும்போது உண்டாகும் ஜாதகங்களின் பேரில் தங்களுடைய ஆதிக்கத்தைச் செலுத்தித் தலைமைவகித்து காரியங்களை நடத்துகின்றன (presided over the horoscopes of our birth); இவைகள்தான் நாம் இறந்துபோய் மசானத்தில் பூமியின்கீழ் புதைந்து கிடக்கும்போது கூட நம்முடைய பசுமையான சபக்குழி மண்மேடுகளின் பேரில் தங்களுடைய கிரணங்களை வீசப்போகின்றன" என்று சொல்லும்படிக் கட்டாயப்படுத்தப்பட்டார். இவர் தன்னுடைய காலத்தில் ஜோதிட சாஸ்திரிகளைச் சவுக்கினால் அடிக்கின்ற ஒரு பேர்வழி (An astrological scourge) என்ற நாம தேயத்தினால் வழங்கப்பட்டு வந்தார். ஜோதிட சாஸ்திரத்தின் பேரில் குற்றஞ்சாட்டி இதை இழிவு படுத்திக் கண்டனஞ்செய்த (denounced) பன்னிரண்டு புத்தகங்களை இவர் எழுதினார். இப்படிப்பட்ட பொல்லாத பேர்வழியானவர் தன்னைப் பற்றித் தான் தன்னுடைய முப்பத்தி மூன்றாவது வயதில் இறந்து போய்விடப் போகின்ற விஷயத்தைப்பற்றி ஜோதிட சாஸ்திரிகள் முன்னமே விளம்பரப் படுத்தி யிருந்த பிரகாரமேதான் இறந்துவிடத் தான் நேரிடும் என்றும், தான் இதுவரையிலும் ஜோதிட சாஸ்திரத்தைப் பற்றித் தன்னுடைய பன்னிரண்டு புத்தகங்களில் எழுதியவைகள் எல்லாம் தான் குறித்த காலத்தில் இறந்து விடுவதால் பொய்த்துப் போகப் போகின்றன என்று தன்னுடைய மரணப் படுக்கையில் (Death-bed) இருந்த காலத்தில் தெரிந்து கொள்ளவே ஜோதிட சாஸ்திரத்தின் உண்மைகளை எல்லாம் ஒற்றுக்கொண்டு தன்னுடைய மரணப் படுக்கையில் அங்கீகாரஞ் செய்யும்படிக் கட்டாயமாக நேரிட்டுவிட்டது (he was constrained to admit the truths of astrology in his death-bed).

நான் இனிமேல் ஜோதிடத்தின் உண்மையை உங்களுக்குத் திருப்திகரமாக விளக்குவதற்காக உண்மையான அநுபவ உதாரணங்களில் சிலவற்றை எடுத்துக்காட்டி ஜோதிட சாஸ்திரத்தில் கொடுத்துள்ள விதிகள் சரியானவைகளே என்று ருஜுபடுத்தப் போகின்றேன் :—

| குரு | | ராகு | |
|---|---|---|---|
| லக்கினம் | இராசி சக்கரம் | | |
| | | | |
| | சூரியன் சந்திரன் சனி கேது | அங்காரகன் புதன் | சுக்கிரன் |

1. இங்கு மேலே கொடுக்கப்பட்டுள்ள ஆண் ஜாதகம் கிறிஸ்து பிறந்த ஆயிரத்தித் தொள்ளாயிரத்திருபத்தேழாவது வருஷத்தில் நவம்பர் மாதத்தில் இருபத்தைந்தாந் தேதியில் (25-11-1927/A. D) பிறந்து கிறிஸ்து பிறந்த ஆயிரத்தித் தொள்ளாயிரத்தி நாற்பத்தாருவது வருஷத்தில் ஆகஸ்ட்டு மாதத்தில் இருபதாந் தேதியன்று (20-8-1946./A.D.) க்ஷய ரோகத்தினுல் கிருத்திகை நட்சத்திரத்தில் இறந்துபோன ஒருவருடைய நிரயன ஜாதகமாகும். கும்ப ராசியில் லக்கினமும், மீனத்தில் குருவும், ரிஷபத்தில் ராகுவும், கன்னியில் சுக்கிரனும், துலாத்தில் அங்காரகனும் புதனும், விருச்சிகத்தில் சூரியனும், சந்திரனும், சனியும் கேதுவும் ஆகும். ஜன்ம நட்சத்திரம் கேட்டை ஆகும். ஜனன காலத்தில் புதன் தசையில் இருப்பு பதினுன்கு வருஷங்களும் ஏழு மாதங்களும் ஆகும். கீழே குறிக்கப்பட்ட பாடல் அகஸ்திய மஹரிஷியால் உண்டாக்கப்பட்டு 1899 A. D.-யில் பதிக்கப் பட்ட "மணிகண்ட கேரளம்" என்ற பெயரை யுடைய ஒரு தமிழ் புத்தகத்தில் உள்ள அறுபத்தோராவது பக்கத்தில் ஏழாவது செய்யுளாகும்.

> சீணமாய் மதி யிருக்கச் சேர்ந்திட பாபர் தானும்
> ஈனமாங் கடகந் தேளும் இடர்சுரா வாகி நின்ருல்
> ஈனமாம் ஈரா றெட்டில் இருக்கிலும் க்ஷயமே யுண்டு
> மானமே யுடைய மாதே மடிவனே க்ஷய ரோகத்தில்.

இதனுடைய அர்த்தம் பின்வருமாறு ஆகும். மதி என்ற சந்திரன் க்ஷீணமாக அஃதாவது பலவீனமாக விருந்து இவருடன் பாபக்கிரகங்கள் கூடி கடகராசியிலும் தேள் என்ற விருச்சிகராசியிலும், இடர் என்ற கஷ்டத்தை விளைவிக்கக்கூடிய சுரா என்ற மகர ராசியிலும் வலிவில்லாமல் இருந்தாலும் அல்லது லக்கினத்திலிருந்து பன்னிரண்டு, எட்டு, என்ற பாவங்களில் இருந்தாலும் மானத்தையுடைய மாதாகிய பார்வதியம்மையே! ஜாதகர் க்ஷயரோகத்தை உடையவராவர். இவர் இந்த க்ஷயரோகத்தினுல் இறந்து போய்விடுவார். இங்கு உதாரணமாகக் கொடுக்கப்பட்டுள்ள ஜாதகத்தில் சந்திரன் விருச்சிகத்தில் நீச்சமாகி அஸ்தங்கதம் அடைந்திருப்பதால் மிகவும் வலிவில்லாமல் பலவீனமாக விருக்கின்ருர். இவர் பாபக்கிரகங்களாகிய சனி, கேது, சூரியன் ஆகிய இவர்களுடன் கூடி இங்கு பாடலில் சொல்லப்பட்ட மூன்று ராசிகளில் ஒரு ராசியாகிய விருச்சிகத்திலேயே யிருக்கின்ருர். இந்தச் செய்யுள் பிரகாரம் இந்த ஜாதகர் க்ஷயரோகத்தினுல் இறந்துபோகும் தலைவிதியை அல்லது அமைப்பையுடையவராக விருக்கின்ருர். இவர் உண்மையிலே சுமார் ஒன்றரை வருஷகாலமாக க்ஷயரோகத்தினுல் அதிகத் துன்பத்தை யடைந்து இந்த க்ஷயரோகத்தினுலேயே கடைசியில் இறந்துபோய்விட்டார். தற்காலத்தில் க்ஷயரோக வைத்திய நிபுணர்கள் என்று சொல்லப்பட்ட எல்லா வைத்தியர்களைக்கொண்டு இவருடைய தாய்தகப்பனுர்கள் சுமார் ஐயாயிரம் ரூபாய் வரையிலும் செலவு செய்து இவருக்குச் சிகிச்சை செய்து பார்த்தார்கள். இந்து நிபுண வைத்தியர்கள் என்று சொல்லப்பட்ட வைத்தியர்களில் ஒரு வைத்தியர்கூட தயாதாக்ஷிண்யமற்ற தலைவிதியிலிருந்து (Inexorable fate) இந்த ஜாதகரைக் காப்பாற்றமுடியாமல் போய்விட்டது. இந்தப் பழைய காலத்திய ஜோதிட புத்தகத்திலுள்ள பாடலில் கண்டபிரகாரமே இவர் இறந்துவிட நேரிட்டது. தற்காலத்தில் ஜோதிட சாஸ்திரத்தி

நம்பிக்கையையுடைய ஒரு மிகவுஞ் சிறந்த முதலியார் வைத்தியர் (a Mudaliar Physician) இருக்கின்றார். இவர் நீடித்த வியாதிகள் (Chronic diseases) மூலமாய் ஏகாதசி, அமாவாசை, கிருத்திகை ஆகிய இவைகள் போன்ற திதி, நட்சத்திரங்கள் ஆகிய இவைகளையுடைய தினங்களில் இந்த நோய்களையுடையவர்கள் கஷ்டங்களைப் பிரத்தியேகமாக அனுபவிக்கின்றார்கள் என்று சாதாரண ஜனங்கள் அபிப்பிராயப்படுவது போலவே அபிப்பிராயத்தை யுடையவராகவேயிருக்கின்றார். இந்த ஜாதகத்திற்குரியவர் சாதாரணமாக ஜோதிட சாஸ்திரத்தில் நம்பிக்கையை யுடையவரல்ல இவர் இறந்துபோவதற்கு முந்தியதினமாகிய 19–8–1946 A. D. தேதியையுடைய தினத்தில் முன்னிரவில் கிருத்திகை நட்சத்திரம் ஆரம்பித்தபோது கிருத்திகை நட்சத்திரம் வந்துபோய்விட்டதா என்று இவர் தன்னுடைய தாய் தகப்பனார்களைக் கேட்டார். இவரை "நீ ஏன் இப்போது இதைப்பற்றி இவ்வளவு அக்கரையுடன் கேட்கின்றாய்" என்று தாய்தகப்பனார்கள் கேட்டபோது "நான் இந்த நட்சத்திரத்தைப்பற்றி மிகவும் பயந்து கொண்டிருக்கின்றேன். என்னுடைய இந்த ஒன்றரை வருஷகாலமாக வியாபத்தியுள்ள வியாதியின் அனுபவத்தினால் இந்தக் காலத்தில் நேரிட்ட கிருத்திகை வியாபித்திருந்த நாட்களில் என்னுடைய நோய் அதிகமாகி நான் அதிக துன்பத்தை அடைந்து என்னுடைய தேகசுகம் அதிகமாகக் கெட்டுப்போய் விட்டது" என்று பதில் சொல்லி கிருத்திகையைப்பற்றிய தன்னுடைய அனுபவத்தை முதல் முதல் தெரிவித்தார். தாம்பரத்தி லுள்ள க்ஷயரோக ஆஸ்பத்திரியில் (Tambaram Sanatorium) இவர் சிகிச்சைக்காக விருந்த காலத்தில் இவருக்கு ஒரு ஆப்பரேஷன் (operation) என்ற வைத்தியன் செய்யும் சஸ்திரக் கிரியையைச் செய்ய வைத்தியர்கள் எண்ணி இவருக்குத் துரதிருஷ்டமாகவும் இவர்களுக்குந் தெரியாமலும் கிருத்திகையையுடைய ஒரு தினத்தைக் குறித்தார்கள். இந்தக் குறித்ததினத்தில் இந்த ஆப்பரேஷன் கிரியைச்செய்ய எல்லாவற்றையுந் தயார் செய்துவிட்டபிறகு, ஆப்பரேஷனை ஆரம்பிக்க வைத்தியர் இந்த ஜாதகருடைய கை நாடியைப் பரிசோதனை செய்தார். இந்த வைத்தியர் ஆச்சரியப்படும்படியாயும் பயப்படப் படும்படியாயும் எதிர்பாராதபடி இந்த நோயாளியினுடைய கை நாடிகள் திடீரென்று (முந்திய தினத்திலிருந்ததைவிட) மிகவும் பலவீனமாகவும் கெடுதியாகவும் போய்விட்டன. இந்த நோயாளி இந் நிலையில் ஆப்பரேஷனைத் தாளமாட்டார் என்று எண்ணி பயந்து வைத்தியராகிய சஸ்திர வைத்தியர் ஆப்பரேஷனைச் செய்யாமல் நிறுத்தி விட்டார். இவ்விதமான காரணத்தினால் இந் நோயாளிக்கு ஆப்பரேஷனே நடக்காமலேயே போய் விட்டது. மேலும் 1877 A.D-ஆம் வருஷத்திற்குச் சரியான ஈஸ்வரஸ்ரீ வைகாசி மாதத்தில் பதிப்பிட்டதும் பிரம்மஸ்ரீ ஸ்ரீ வேதலிங்கப் பட்டர் அவர்களால் எழுதப்பட்டதுமான தமிழ் "துய்ய கேரளம்" என்ற ஜோதிட புத்தகத்தில் இரண்டாவது மூன்றாவது பக்கங்களிலுள்ள பதினாறாவது பாடல் கீழே குறிக்கப்பட்ட பாடலாகும்.

"என்னு மொன்றினிற் கோள் ஆறுமிடத்துக் கோளுடனே கூடி
உன்னிய ராகு கேது வோடொரு ஸ்தலத்தே நிற்கத்
தன் னுடல் சுகமில்லாமற் சஞ்சல மனத்த னாகி
மின்னனாய் வியாதி யத்தனா மென விளம்ப லாமே."

இதனுடைய அர்த்தம் பின்வருமாறு ஆகும். ஜன்மலக்கினம் என்ற ஓராவது வீட்டிற்குடைய கிரகம் ஆறுவது வீட்டிற்குடைய கிரகத்துடனும் இராகு அல்லது கேது என்ற கிரகத்துடனும் ஒன்ருகக் கூடிக்கொண்டு ஒரே வீட்டில் இருந்தால் ஜாதகர் தன்னுடைய தேகமானது சுகத்துடன் இல்லாமலும், இவர் கஷ்டமான அல்லது துன்பத்தை அடைந்த மனத்தை உடையவராகவும் இருந்துகொண்டு நோயாளியாக விருப்பார் என்று சொல்லக்கூடும். இந்த உதாரண ஜாதகத்தில் ஜன்ம லக்கினுதிபதியாகிய அஃதாவது ஓராவது வீட்டிற்குடையவராகிய சனி ஆறுவது வீட்டிற்குடையவராகிய சந்திரனுடனும் கேது என்ற கிரகத்துடனும் ஒன்ருகக்கூடிக்கொண்டு விருச்சிக ராசியில் ஒரே வீட்டில் இருக்கின்ருர்கள். ஆகையால் இந்த ஜாதகத்தில் இந்தப் பாடலில் சொல்லியுள்ள பிரகாரம் கிரக நிலை அமைந்திருக்கின்றது. இந்தப் பாடலில் சொல்லியுள்ள பிரகாரமே இந்த ஜாதகர் 1946 A.D-ஆம் வருஷத்தில் சுமார் ஒன்றரை வருஷகாலம் வரையிலும் விடாமல் நீடித்திருந்த க்ஷய ரோகத்தினுல் இறந்து போவதற்கு முந்தி சுமார் மூன்று நான்கு வருஷங்களாகப் பல வித ரோகங்களால் பீடிக்கப்பட்டுத் தேக சுகமில்லாமல் வியாதியஸ்தராகிக் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தார். இவர் ஒரு நல்ல வேட்டைக்காரர் (Sportsman) ஆக விருந்தார். இவர் எப்போதும் வெளியிலேயே உலாவிக்கொண்டிருக்கின்ற வாழ்க்கையில் (Outdoor life) மிகவும் பிரியமுள்ளவராக விருந்தார். இவர் இன்டர்மீடியேட் பரீட்சைக்குப் (Intermediate Examination) வாசித்துக்கொண்டிருந்தார். இப்படிப்பட்ட வாலிபர் சுமார் ஒன்றரை வருஷகாலம் கொடிய ரோகமாகிய க்ஷய ரோகத்தினுல் பீடிக்கப்பட்டு ஜெயிலிலடைப்பட்டிருந்தது போலவே இருந்ததால் இவர் எவ்வளவு மனச்சஞ்சலம், துன்பம் ஆகிய இவைகளை இந்தப் பாட்டில் சொல்லியுள்ள பிரகாரம் அடைந்திருக்கக்கூடும் என்பதை நீங்களே ஊகிக்கக்கூடும். இந்த ஜாதகம் இவ்விரண்டு செய்யுள்களால் ஜோதிட சாஸ்திரம் உண்மையான சாஸ்திரம் என்றே தெரிவிக்கின்றது.

| புதன் | சூரியன் குரு சனி | சுக்கிரன் கேது | |
|---|---|---|---|
| அங்காரகன் | இராசி சக்கரம் | | |
| | | | சந்திரன் |
| | லக்கினம் ராகு | | |

2. மேலே கொடுக்கப்பட்டுள்ள ஆண் ஜாதகம் கிருஸ்து பிறந்த ஆயிரத்தொணூற்றெண்பத்தோராவது வருஷத்தில் எப்ரல் மாதத்தில் பதினேராந்தேதியன்று(11-4-1881/A.D.) இரவு மணி 8-45 நிமிஷத்திற்குப்பிறந்து

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஐம்பத்தைந்தாவது வருஷத்தில் நவம்பர் மாதத்தில் பதினோராந் தேதியன்று சுமார் இரவு 7 மணி-30 நிமிஷத்திற்கு இறந்துபோன ஒருவருடைய நிரயன ஜாதகமாகும். விருச்சிகராசியில் ஜன்ம லக்கினமும் இராகுவும், கும்பத்தில் அங்காரகனும், மீனத்தில் புதனும், மேஷத்தில் சூரியனும் குருவும் சனியும், ரிஷபத்தில் சுக்கிரனும் கேதுவும் சிம்மத்தில் சந்திரனும் ஆகும். ஜனன நட்சத்திரம் பூரம் ஆகும். ஜனன காலத்தில் சுக்கிர மகாதசையில் இருப்பு ஒருவருஷமும் ஐந்து மாதங்களும் இருபது நாட்களும் வாக்கியபஞ்சாங்க ரீதியாய்க் குறிக்கப்பட்டிருந்தது. கிருஸ்து பிறந்த ஆயிரத்தறுநூற்றறுபத்து நான்காவது (1664 A.D) வருஷத்தில் கீரனூர் நடராஜர் என்ற ஒரு ஜோதிடரால் எழுதப்பட்டு 1902 A.D. ஆம் வருஷத்தில் அச்சிடப்பட்ட புத்தகமாகிய தமிழ் ஜாதகாலங்காரத்தில் எழுபத்தேழாவது பக்கத்திலுள்ள நானூற்றிபதின்மூன்றாவது பாடலாகும் கீழ்கண்ட பாடல்.

> "கண்ட பன்னிரண்டாம் வீட்டோன் கனத் திரிகோண மேறிக்
> கொண்ட கேந்திரத்தி னிற்க அவனோடு கூடி ராகு
> அண்டியே நிற்கப் பாபர் அவர்களைப் பார்த் திருக்க
> எண்டிசை உலகில் அங்க ஈனனாய் இருப்பன் என்னே."

இந்தச் செய்யுளின் அர்த்தம் பின்வருமாறு ஆகும் ஜன்மலக்கினத்திற்குப் பன்னிரண்டாவது வீட்டிற்குடையவர் திரிகோணபாவங்கள் என்ற ஒராவது, ஐந்தாவது, ஒன்பதாவது வீடுகளில் இருந்தாலும் அல்லது கேந்திர பாவங்கள் என்று சொல்லப்பட்ட ஒராவது, நான்காவது, ஏழாவது, பத்தாவது வீடுகளில் இருந்தாலும் அப்போது இவருடன் இராகு கூடிக்கொண்டிருந்தாலும் அல்லது இவருக்கு அருகில் இருந்தாலும், அப்போது இவர்களைப் பாபக்கிரங்கள் பார்த்திருந்தால் ஜாதகர் அங்கவீனராக விருந்து கொண்டு உலகத்தில் வாழ்வார். இங்கு உதாரணமாகக் குறிப்பிட்ட ஜாதகத்தில் ஜன்ம லக்கினத்திற்குப் பன்னிரண்டாவது வீட்டிற்குடைய சுக்கிரன் ஏழாவது கேந்திர வீட்டில் கேதுவுடன் கூடிக்கொண்டு ராகுவால் (கூடாமல்) பார்க்கப்பட்டு இருப்பதுடன் சுக்கிரனைப்பாபராகிய அங்காரகனும் பார்த்திருக்கின்றார். ஆகையால் இந்தப்பாடலில் சொல்லியுள்ள கிரக அமைப்புகள் பெரும்பாலும் ஒத்திருக்கின்றன. இந்த ஜாதகர் தன்னுடைய இடது கால் முழங்காலுக்குக் கீழே ஊனமாகவும் இடது பாதம் வளைந்து மடங்கி நொண்டியாகவும் பிறந்தார். இவர் கைக் குழந்தையாக விருந்தபோது இவருக்கு வைத்தியஞ் செய்யவே பாதம் நிமிர்ந்து படிந்து நொண்டித் தண்மை அதிகமாகச் சொஸ்தமாகி விட்டது. ஆனல் இந்த இடது கால் நேர்ந்து போய்க் கொஞ்சம் ஊனமாகவே மெலிந்து போய் இவ்விதமாகவே விருந்து விட்டது, ஆகையால் இவர் ஒரு பக்கமாகக் கொஞ்சஞ் சாய்ந்து கொண்டு நடப்பதுண்டு, இந்தப்பாடல்கூட இவ்விதமாக ஜோதிட சாஸ்திரத்தின் உண்மையை நிலை நாட்டுகின்றது. நான் பார்த்த இன்னொரு ஜாதகத்தில் ஜன்மலக்கினம் கும்பராசியாகிப் பன்னிரண்டாவது வீட்டிற் கதிபதியாகிய சனி கும்பத்தில் கேந்திரத்தில் இருந்து கொண்டு, இராகு மகரராசியில் கும்பத்திலுள்ள சனிக்கு மிகவும் அருகில் இருந்து கொண்டு, இந்தச் சனியும்

இராகுவும் பாபக்கிரகங்களால் பார்க்கப்பட்டிருக்கின்றார்கள். இந்த ஜாதகர் கூட தன்னுடைய இடது கால் நொண்டியாகப் பிறந்து இப்போது இவர் பெரியவராகியும் நொண்டியாகவே விருந்து வருகின்றார்.

3. கீழே கொடுக்கப்பட்டுள்ள ஆண் ஜாதகம் கிறிஸ்து பிறந்த ஆயிரத்துத் தொள்ளாயிரத் திருபத்தோராவது வருஷத்தில் செப்டம்பர் மாதத்தில் ஒன்று இரண்டு தேதிகளுக்குரிய இரவில் (12—9—1921/A.D.) மணி ஒன்று நிமிஷம் பதினைந்திற்குப் பிறந்து கிரிஸ்து பிறந்த ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்தெட்டாவது வருஷத்தில் ஜூலை மாதத்தில் 15, 16-ந் தேதி இரவில் மணி இரண்டு, நிமிஷம் நாற்பத்தைந்திற்கு (at 2-45 a. m. 15, 16-7-1948 A.D) முதலில் க்ஷயரோகமாகக் கண்டு கடைசியில் க்ஷயரோக மூளைநோயாக மாறின ஒரு நோயால் (tubercular Meningitis) இறந்து போய் விட்டவருடைய நிரயன ஜாதகமாகும். மிதுன ராசியில் ஜன்மலக்கினமும், கடகத்தில் சுக்கிரனும் அங்காரகனும், சிம்மத்தில் சூரியனும் சந்திரனும் புதனும், கன்னியில் குருவும், சனியும், இராகுவும். மீனத்தில் கேதுவும் ஆகும். ஜன்ம நட்சத்திரம் மகம் ஆகும். ஜனன காலத்தில் கேது தசையில் இருப்பு ஆறு மாதந்தான் ஆகும். தில்லை நாயக ஜோதிடர் என்பவரால் எழுதப்பட்டு, கிருஸ்து பிறந்த ஆயிரத்தெண்ணூற் றெண்பதாவது வருஷத்தில் (1880 A. D.) அச்சிடப்பட்ட தமிழ் ஜாதக சிந்தா மணி என்ற புத்தகத்தின் நூற்றறுபத்தாறுவது பக்கத்தில் உள்ள ஆயிரத் தெழுபத்தாறுவது பாடல் ஆகும் கீழ்க்குறித்தப் பாடல்.—

"பெருகும் அட்டமத்தோன் கேந்திரம் பெலக்கவே இலக்கினத் [தோன்
வரும் பலவீனமாக வறைந்திடின் வடிவேற் கண்ணாய்
ஒரு பன்னிரண்டே பன்னேழோ ரிருபத் திரண்டாம்
இருபத்தைந்து அல்லான் முப்பத் திரண்டினின் மரணமாமே"

| கேது | | | லக்கினம் |
|---|---|---|---|
| | இராசி சக்கரம் | | சுக்கரன் அங்கா ரகன் |
| | | | சூரியன் சந்திரன் புதன் |
| | | | குரு சனி ராகு |

இந்தப்பாட்டின் அர்த்தம் பின்வருமாறு ஆகும். ஜன்ம லக்கினத்திற்கு அஷ்டமாதிபதி என்ற எட்டிற்குடையவர் கேந்திரபாவம் என்ற ஒன்று, நான்கு, ஏழு, பத்து ஆகிய இந்த வீடுகளில் பலமாக விருந்து ஜன்ம

லக்கினாதிபதியானவர் பலவீனமாக விருந்தால் வேலாயுதத்தைப் போன்ற அழகுள்ள கண்களையுடையவளே! ஜாதகர் பன்னிரண்டாவது, அல்லது பதினேழாவது, அல்லது இருபத்திரண்டாவது, அல்லது இருபத்தைந்தாவது அல்லது முப்பத்திரண்டாவது வயதில் மரணமாவார். இவருக்கு முப்பத்தி ரண்டு வயதிற்குமேல் ஆயுள் கிடையாதென்று இந்தச் செய்யுளின் கருத் தாகும். இந்த உதாரண ஜாதகத்தில் ஜன்மலக்கினத்திற்கு எட்டாவது வீட்டிற்குடையவராகிய சனி நான்காவது கேந்திர வீட்டில் வலிவாக விருக் கின்றார். இலக்கினாதிபதியாகிய புதன் மூன்றாவது பாவத்தில் சூரியனுக்கு எட்டரைப் பாகைக்குள்ளே இருந்து கொண்டு அஸ்தங்கத மடைந்து மிகவும் பல வீனமாக விருக்கின்றார். மேலும் தெய்வக்ஞ ஸ்ரீமான் மஹாதேவ ஸர்மா என்பவரால் எழுதப்பட்டு, மத்தியபாரத் என்ற இராஜ்யத்திலுள்ள (Madhya Bharath State) ரதலாமா (Rutlam or Ratlam) என்ற பட்டணத் தில் புவனேஸ்வரி என்ற அச்சுக் கூடத்தில் 1950 A.D. ஆவது வருஷத்தில் அச்சிடப்பட்ட சமஸ்கிருத புத்தமாகிய "ஜாதக தத்வம்" என்ற கிரந்தத்தில் இருநூற்றைம்பதாவது பக்கத்திலுள்ள நாற்பத்தொன்பதாவது சுலோகம் கீழ்கண்ட சுலோகம் ஆகும். "சிம்ஹேவா கர்க்கே சந்ரார்க் கௌ க்ஷ ஹீ"

இதனுடைய அர்த்தம் பின்வருமாறு ஆகும். சூரியனும் சந்திரனும் கூடிச் சிம்மராசி அல்லது கடகராசியில் ஒன்றாக விருந்தால் ஜாதகருக்கு க்ஷய ரோகம் உண்டு. இந்த உதாரண ஜாதகத்தில் சூரியனும் சந்திரனும் கூடி இருவரும் சிம்மராசியில் இருக்கின்றார்கள். இந்தச் சுலோகமும் மேலே குறித்துள்ள செய்யுளும் இந்த உதாரண ஜாதகத்திற்குப் பொருத்த முடையனவாக விருக்கின்றன. இந்த ஜாதகர் தன்னுடைய இருபத்தேழா வது வயதில் க்ஷய ரோகத்தினால் இறந்து விட்டார். இவர் இந்தத்தமிழ் செய்யுளில் கண்டுள்ள இருபத்தைந்தாவது வருஷத்திற்கு ஒரு வருஷமும் சில்லரை மாதமும் வித்தியாசமுள்ள காலமாகிய இருபத்தாறுவது முடிந்து இருபத்தேழாவது வயதில் இறந்து விட்டார். இந்த வித்தியாசம் அவ்வள வாகப்பாராட்டக் கூடிய வித்தியாசம் அல்ல வென்று அறியவும். இந்த உதாரணத்தில் கூட இந்தச் சுலோகம், இந்தச் செய்யுள் ஆகிய இவைகளில் சொல்லியுள்ள பிரகாரமே இந்த ஜாதகர் இறந்து போய்விட்டார். ஜோதிட சாஸ்திரத்தின் உண்மையை இந்த ஜாதகங்கூட ருசு படுத்துகின்றதாகும். இந்த ஜாதகர் டூபர்குலர் மெனிஞ்டைட்டீஸ் (Tubercular Meningities) என்ற ஒரு கொடுமையான வியாதியால் கடைசியில் இறந்து போன விஷயத்தின் விவரங்களை இங்கு எடுத்துச் சொல்ல வேண்டிய ஒரு அவசியம் இருக்கின்றது. இதைத்தயவு செய்து கவனிக்கவும். இந்த ஜாதகருக்கு முதலில் க்ஷய ரோகம் என்ற நோய் ஆரம்பித்து, இந்த நோய் மொத்தத்தில் ஆறு மாதக் காலம் இருந்தது. இது ஆரம்பமான நாள் முதற்கொண்டு சென்னை யிலுள்ள முக்கியமான ஆஸ்பத்திரிகளில் ஒரு ஆஸ்பத்திரியில் ஒரு சிறந்த திறமை வாய்ந்த வைத்தியரால் சிகிச்சை செய்யப்பட்டு வந்தார். மொத்தத் தில் ஸ்ட்ரப்டோ மையோஸின் ஆப் ஹைட்ரோகுளோரைட் (Streptomyocin of hydrochloride) என்ற திராவக மருந்து குழாய்கள் எழுபது குழாய்கள் (tubes) வாங்கப்பட்டன. அந்தக் காலத்தில் ஒவ்வொரு குழாய் மருந்தும் முப்பது ரூபாய் விகிதம் அதிகமான விலை கொடுத்து 2,100 ரூபாய் கொடுத்து

எழுபது குழாய் மருந்துகள் வாங்கப்பட்டன. இவைகளில் மொத்தத்தில் அறுபத்து நான்கு குழாய்களில் உள்ள மருந்தை நாளடைவில் இந்தவைத்தியர் ஊசியினால் குத்தி உள்ளுக்கு ஏற்றினார் (injected sixty-four tubes of medicine). ஜாதகருக்கு இந்த வைத்தியரால் சுமார் இருபத்தைந்து குழாய்களிலுள்ள மருந்தை ஊசியால் குத்தி உள்ளுக்கு ஏற்றிவந்த வரையிலும் இந்த ஜாதகருக்கும் இவரைப் பெற்றோர்களுக்கும் சந்தோஷம் உண்டாகும்படி ஆச்சரியான வேகத்துடன் இந்த மருந்து நோயைக் குணப்படுத்திக் கொண்டே வந்தது. பிறகு இந்த மருந்தே விஷமாக ஆகி விட்டது. பிறகு இந்த மருந்தையே கொடுத்துக் கொண்டுவரவே ஜாதகருக்கு தலைவலி கொஞ்சங் கொஞ்சமாக உண்டாகி இது நாளடைவில் அதிகப்படவாரம்பித்து விட்டது. வைத்தியருக்குக் கவலை உண்டாகி விட்டது. இந்த வைதியர் கழுத்திற் நக் கீழ்பட்ட விடத்திலுள்ள க்ஷய ரோகத்திற்கு முந்திபோலவே தான் வைத்தியஞ் செய்வதாகவும், தலையில் ஏற்பட்ட வியாதிக்கு இதே ஆஸ்பத்திரியிலுள்ள ஒரு சிறந்த திறமைவாய்ந்த இன்னொரு வைத்தியரை சிகிட்சை செய்யும் படியாகவும் ஏற்பாடு செய்தார். இவ்விதமாக ஜாதகருடைய உடலை இரண்டு கூறாக உயிருடன் இருக்கும் போதே பங்கு போட்டுக் கொண்டு வைத்தியஞ் செய்து கொண்டு வந்தார்கள். இவ்விதமான இரண்டுவித சிகிச்சைகள் கொஞ்சகாலம் நடந்த பிறகு ஜாதகா திடீரென்று பித்தலும் பிணத்தலுஞ் செய்து சுற்றிக் கலாட்டா செய்யவாரம்பித்து விட்டார். தலையில் மூளையிலுள்ள எட்டாவது நரம்பு என்ற ஒரு நரம்பு (eighth nerve in the brain) க்ஷயரோகம் மெனிஞ்சைட்டீஸ் என்ற ஒரு ரோகமாக விருத்தியடைந்து விட்டதால் கெட்டுப்போய் விட்டதென்றுஅப்போது தான் டாக்டர்களுக்குத் தெரியவந்தது. அந்தக் காலத்தில் அமெரிக்கா தேசத்தில் இந்த மருந்தைச் கண்டனஞ் செய்து ஒரு வாக்குவாதம் (controversy) நடந்து கொண்டிருக்கின்ற தென்றும் இந்த மருந்தை இருபத்தைந்து குழாய்களுக்கு மேல் உள்ளுக்குப்பிரயோகஞ் செய்யக் கூடாது என்றும், இதற்கு மேல் அதிகமாக உள்ளுக்கு ஏற்றினால் மூளையில் மயக்கத்தையும் பாதையையும் உண்டு பண்ணுகின்ற தென்றும், கொஞ்ச நாள் பொறுத்து இந்த மயக்கம் ஸ்மரண மற்றத் தன்மையை உண்டுபண்ணுகின்ற தென்றும், பிறகு இந்த ஸ்மரணையிலிருந்து நோயாளி தெளியாமலேயே கடைசியில் இறந்து போய்விடுகின்றார் என்றும் ஒரு வைத்திய ஜர்னல் என்ற வார்த்தா பத்திரிகையில் (a medical journal) வாசித்ததாக நோயாளியின் தகப்பனாரின் வக்கீல் சினேகிதர் ஒருவர் தகப்பனாருக்குத் தெரிவித்தார். இவ்விதமாக இந்த வைக்கீல் இந்த மருந்தில் சுமார் நான்கு ஐந்து குழாய் மருந்துகள் கொடுக்கப்பட்டவுடனே தெரிவித்தார். இந்த நோயாளி கடைசி காலத்தில் பித்தலும் பினத்தலும் அடங்கி சுமார் பதினைந்து நாட்கள் வரையிலும் ஸ்மரணை இல்லாமலே இருந்து இந்த வக்கில் சிநேகிதர் எச்சரிக்கை செய்த பிரகாரமே ஸ்மரணையிலிருந்து தெளியாமல் மெனிஞ்-ஜைட்டிஸ் நோயால் இறந்து போய்விட்டார். இவ்விதமாக இரண்டு சிறந்த பெரிய வைத்தியர்கள் இக்காலத்தில் மேல் நாட்டில் இந்த மருந்தைப்பற்றி வாக்குவாதம் நடந்து கொண்டிருந்ததைத் தெரியாதவர்களாக விருந்து இந்த மருந்தை

(Streptomyocin hydrochloride) அதிகமாகக் கொடுத்துக் கொண்டே போய்க் கொண்டே இருந்தார்கள். இவ்விதமாக இவர்கள் செய்தது நோயாளியினுடைய துரதிருஷ்டமேயாகும். மேலும் இவருடைய பெற்றோர்களுடைய துர்திஷ்டமே கூடவாகும். இவ்விதமாக இவ்விரண்டும் பெரிய பெரிய வைத்தியர்கள் நோயாளியினுடைய மரணத்திற்கு முக்கியமானக் காரணமாக விருந்து விட்டார்கள். தகப்பனுருடைய பணக்கொழுப்பு கூட கொஞ்சம் காரணமாக விருந்தது. இவருக்கு வேண்டிய பணம் இல்லாமல் இருந்திருந்தால் இவ்விதமான அதிக விலையுள்ள மருந்தை வைத்தியர் பேச்சைக் கேட்டு வாங்கிக் கொடுத்திருக்க மாட்டார். இவர் இவ்விதமாகப் பணக் கொழுப்பாலும் அவாவினுலும் வாங்கிக் கொடுத்ததால் வைத்தியர்கள் இந்த மருந்தை அளவிற்கு மிஞ்சி அதிகமாகக் கொடுத்து நோயாளியைக் கொல்ல நேரிட்டு விட்டது. "விணே தான் ஒழிந்தால் ஒரு திணைப்போதும் நில்லாது இந்த உடலம்" "ஈதெல்லாம் எனையாளும் ஈசன் செயல்" என்று ஒரு தத்துவஞானி (Philosopher) சொல்லி மனிதர்களைத் திருப்தி செய்யப் பார்க்கின்றது நமது இந்து தேசத்தில் பழக்கமாக விருக்கின்றது. மேல் நாட்டில் நடந்து வந்த இந்த வாக்குவாதம் (Controversy) இரண்டு மூன்று வருஷங்களுக்குப் பிறகு சென்னை இராஜதானியில்கூட நடக்கவாரம்பித்து விட்டது. இந்த வாக்குவாதத்தில் சென்னையிலும் மதனபள்ளி ஆரோக்கியாசிரமம் (Sanatorium) என்ற ஆஸ்பத்திரியிலும் உள்ள மேதாவியான வைத்தியர்கள் கலந்து கொண்டார்கள். இந்த வாக்குவாதத்தின் பிறகு பதின்மூன்று வயதிற்கு மேற்பட்டு பத்தொன்பது வயதிற்குட்பட்ட ஒரு சிறியவனுக்கு (a boy in his teens) மதனபள்ளி ஆஸ்பத்திரியில் இதே மருந்தில் சுமார் இருபது குழாய் மருந்து வரையிலும்தான் நாளடைவில் கொடுத்து க்ஷயரோகத்தைச் திருப்திகரமாகச் சொஸ்தஞ் செய்து விட்டது எனக்குத் தெரியும். இந்த உதாரண ஜாதகத்தின் நபருக்கு மாத்திரம் மரணம் ஏற்பட்டதற்குக் காரணம் இந்த மருந்தை அளவு கடந்து அதிகமாக உபயோகப்படுத்தியதே யாகும். "வைத்தியர்கள்தான் தலைவிதிக்கு (fate) எதிராக என்ன செய்யக் கூடும், இவர்களும் மனிதர்கள் தானே, தலைவிதி என்பது இவர்களுடைய கண்களை மறைத்து விடுகின்றது, அறிவில் மிகவும் புத்திசாலிகளாயுள்ளவர்களின் புத்திகூர்மையை மழுங்கும்படி செய்து விடுகின்றது," என்று இந்த இறந்து போன நோயாளியின் பெற்றோர்கள் தங்களுடைய மனதை ஒருவாறு தேருதல் செய்து கொள்ள வேண்டியதாக விருந்து விட்டது. இந்த உண்மையைத்தான் இந்த உதாரண ஜாதகத்திற்குப் பொருத்தமாயுள்ள மேலே குறிக்கப்பட்டுள்ள ஜோதிட செய்யுளும் சுலோகமும் எடுத்துத் தெளிவாகக் காட்டுகின்றது. மனிதன் தன்னுடைய எல்லா சாமர்த்தியங்களினுலும் புத்திதனத்தாலும் விதியை வெல்லவாவது அல்லது தடுக்கவாவது பிரயத்தனஞ் செய்ய முடியுமே தவிர அதைப்பூராகவும் தடுப்பது அதிக பெரும்பாலும் அசாத்தியமான காரியமே ஒழிய சுலபமான காரியம் அல்லவேயல்ல வென்று இந்த இறந்துபோன நோயாளியின் திருஷ்டாந்தரம் (Case or instance) ஒருவாறு எடுத்துக் காட்டுகின்றது.

## ஜாதகம்

| | | | |
|---|---|---|---|
| குரு | | ராகு | |
| | இராசி | | |
| | சக்கரம் | | சுக்கிரன் |
| லக்கினம் | சந்திரன் சனி கேது | புதன் | சூரியன் அங்காரகன் |

4. மேலே கொடுக்கப்பட்டுள்ள பெண் ஜாதகம் கிறிஸ்து பிறந்த ஆயிரத்தித் தொள்ளாயிரத் திருபத்தேழாவது வருஷத்தில் அக்டோபர் மாதத்தில் இரண்டாந் தேதியன்று (2-10-1927 A.D.) பிறந்து கிறிஸ்து பிறந்த ஆயிரத்தித் தொள்ளாயிரத்து நாற்பத்தெட்டாவது வருஷத்தில் ஜூலை மாதத்தில் (July 1948 A.D.) விதவையாகிவிட்ட ஒரு ஸ்திரீயினுடைய நிரயன ஜாதகம் ஆகும். ஜனன நட்சத்திரம் கேட்டை நான்காம் பாதம் ஆகும். தனுசில் ஜன்ம லக்கினமும், மீனத்தில் குருவும், ரிஷபத்தில் இராகுவும், சிம்மத்தில் சுக்கிரனும், கன்னியில் சூரியனும் அங்காரகனும், துலாத்தில் புதனும், விருச்சிகத்தில் சந்திரனும் சனியும் கேதுவும் ஆகும். கீரனூர் நடராஜர் என்பவரால் எழுதப்பட்டு 1902 A.D. ஆவது வருஷத்தில் அச்சிடப்பட்ட தமிழ் ஜாதகலங்காரம் என்ற புத்தகத்தில் ஸ்திரீ ஜாதகமாகச் சம்மந்தப்பட்ட நூற்றைம்பத்தாறுவது பக்கத்திலுள்ள எண்ணூற்றெண்பதாவது செய்யுள் கீழ் கண்ட செய்யுள் ஆகும்.

"இடு செவ்வாய் கதிர்கூடி யெங்கே நின்றாலும்
இவளும் வாலிபந் தன்னி லமங்கலையே யாவள்"
........................................
கொடுமை யுள்ளோர் பலர் ஏழா மிடத்திருக்கிற் பார்க்கில்
கொழுநன் வாலிபத் திறப்பன்....................

இந்தச் செய்யுளின் அர்த்தம் பின்வருமாறு ஆகும். செவ்வாய் என்ற அங்காரகனும் கதிர் என்ற சூரியனும் ஒன்றாய்க் கூடிக்கொண்டு எந்த வீட்டிலாவது இருந்தாலும் ஜாதகி வாலிப வயதில் அஃதாவது தன்னுடைய இளம பிராயத்திலேயே விதவைத் தன்மையை அடைந்து விடுவாள். பல பாபக் கிரகங்கள் ஏழாவது பாவத்தில் இருந்தாலும் அல்லது இந்த ஏழாவது பாவத்தைப் பார்த்தாலும் கொழுநன் என்ற ஜாதகியினுடைய புருஷன் தன்னுடைய வாலிப வயது என்ற இளம் பிராயத்திலேயே இறந்து விடுவார். இந்த ஜாதகத்தில் இந்தச் செய்யுளில் கண்ட பிரகாரம் சூரியனும் அங்காரகனும் ஒன்றாய்க்கூடி ஒரு வீட்டில் இருக்கின்றார்கள். இந்த வீடு பத்தாவது

பாவமாகும். போக ஸ்தானமாகிய சுக ஸ்தானமாகிய நான்காவது பாவத்தைப் பத்தாவது பாவத்தில் சூரியனும் அங்காரகனும் இருந்துகொண்டு பார்க்கின்றார்கள். ஆகையால் இந்த ஜாதகி தன்னுடைய இளம் பிராயத்திலேயே உண்மையில் விதவையாகிவிட்டாள். செய்யுளில் சொல்லியிருந்ததும் ஜோதிட சாஸதிரம் உண்மையானது என்று ருசுவு செய்யப் பலித்துவிட்டது. ஜன்ம லக்கினத்தைக்கொண்டு ஜாதகங்களின் பலா பலன்களைச் சொல்லவேண்டிய வழி பிரகாரமே சந்திரன் வீட்டையும் லக்கினமாக வைத்துக்கொண்டு அஃதாவது சந்திர லக்கினத்தைக்கொண்டும் பலா பலன்களைச் சொல்லவேண்டும் என்றும் பல ஜோதிட சாஸ்திரக் கிரந்தங்களில் சொல்லியிருக்கின்றது என்ற விஷயம் எல்லோருக்கும் தெரிந்த விஷயமே யாகும். இந்த உதாரண ஜாதகத்தில் சந்திரனுக்கு அஃதாவது சந்திர லக்கினத்திற்கு ஏழாவது வீட்டில் இராகு இருக்கின்றார். இந்த ஏழாவது வீட்டைச் சனியும் கேதுவும் பார்க்கின்றார்கள். ஏழாவது வீடு என்பது புருஷனுடைய வீடு ஆகும், ஆகையால், இந்தப் பாடலில் கண்ட பிரகாரம் பல பாபக் கிரகங்கள் ஏழாவது பாவத்தைப் பார்க்கின்றார்கள். ஒரு பாபக் கிரகமும் ஏழாவது பாவத்தில் இருக்கின்றது. ஆகையால், இந்தச் செய்யுளில் சொல்லியுள்ள பிரகாரமே இந்த ஜாதகியின் புருஷன் இளம் பிராயத்திலேயே இறந்து விட்டார். இந்தப் பாடலின் பின் பாகத்தால்கூட ஜோதிடத்தின் உண்மை ருசுவு செய்யப்பட்டது.

## ஜாதகம்

| அங்காரகன் ராகு | | குரு சுக்கிரன் | சூரியன் |
|---|---|---|---|
| | இராசி சக்கரம் | | சந்திரன் புதன் |
| | | | |
| | லக்கினம் | | சனி கேது |

5. மேலே கொடுக்கப்பட்டுள்ள ஆண் ஜாதகம் கிறிஸ்து பிறந்த ஆயிரத்தெண்ணூற்றித் தொண்ணூற்றி நான்காவது வருஷத்தில் ஜூலை மாதத்தில் ஐந்தாந் தேதி (5-7-1894 A.D.) யன்று பிறந்தவருடைய நிரயன ஜாதகம் ஆகும். விருச்சிகத்தில் ஜன்ம லக்கினமும், மீனத்தில் அங்காரகனும் இராகுவும், ரிஷபத்திற் குருவும் சுக்கிரனும், மிதுனத்தில் சூரியனும், கடகத்தில் சந்திரனும் புதனும், கன்னியில் சனியும் கேதுவும் ஆகும். ஜனன நட்சத்திரம் ஆயில்யம் இரண்டாம் பாதம் ஆகும். ஒரு விருச்சிக ஜன்ம லக்கின ஜாதகத்தில் நான்காவது பாவத்திற்கு அதிபதியாகிய சனியை அங்காரகன் பார்த்தாலும் அல்லது லக்கினாதிபதியாகிய அங்காரகனைச் சனி

பார்த்தாலும் ஜாதகருடைய தாயார் நீண்ட ஆயுளை உடையவள் என்றும், ஜாதகருடைய தகப்பனார் முதலில் இறந்து விடுவார் என்றும், பிறகு தாயார் இறந்து விடுவாளென்றும், ஜாதகர் வீடு நிலங்கள் முதலியவைகளைச் சுயார்ஜிதமாகவே சம்பாதிப்பார் என்றும், இவர் மார்நோய் அல்லது உஷ்ண வாய்வு தேகத்தையுடையவர் என்றும், வாகனங்களை உடையவர் என்றும் ஜாதகருடைய வித்தைக்குத் தடங்கலுண்டாகும் என்றும், சமஸ்கிருதம் பிரியமாய்ப் பேசுவார் என்றும், ஜோதிட சாஸ்திரம் அறிந்தவரென்றும், நீச்ச அரசனிடம் உத்தியோகஞ்செய்பவர் என்றும் சுக்கிர நாடியின் சத்து அல்லது திரட்டு (Extracts from Sukra Naadi) என்று இப் பலா பலன்கள் (C.G. ராஜன் B.A, அவர்களால் எழுதப்பட்டு 1939 A. D.-ஆவது வருஷத்தில் முதலாவது பதிப்பாகப் பதிப்பிக்கப்பட்ட இராஜ மனோரஞ்சிதம் ஒராவது மலர் என்ற புத்தகத்தில் 301, 399, 321-ஆவது பக்கங்களில் முறையே 13, 44, 115-ஆவது அயிட்டங்களாகவும், 1954 A.D-ஆவது வருஷத்தில் இரண்டாவது பதிப்பாகப் பதிப்பிக்கப்பட்ட இதே புத்தகத்தில் 199, 204, 205, 212-ஆவது பக்கங்களில் முறையே 13, 44, 115-ஆவது அயிட்டங்களாகவும்) கொடுக்கப்பட்டிருக்கின்றன. இந்த உதாரண ஜாதகத்தில் ஜன்ம லக்கினாதிபதியாகிய அங்காரகனும் நான்காவது பாவாதிபதியாகிய சனியும் ஒருவரையொருவர் பார்த்துக்கொள்ளுகின்றார்கள். மேலே சொல்லியுள்ள பலா பலன்களில் ஒவ்வொரு விஷயமும் ஆச்சரியப்படத்தக்கப்படியாக இந்த ஜாதகருக்கு நடந்துவிட்டது, நடக்கின்றது. இந்த விஷயங்கள் ஆகஸ்மிகமான சம்பவங்கள் (Random shots) என்றும் அதிருஷ்டமான தாக்குகள் (Lucky hits) என்றும் சொல்லத் தகுந்தவைகள் அல்ல. ஜோதிட சாஸ்திரத்தின் விரோதிகள் பலித்துவிட்ட பலா பலன்களை இவ்விதமான ஆகஸ்மிகமான சம்பவங்கள் (Random shots) என்றும் அதிருஷ்டமான (Lucky hits) என்றும் வெகு சுலபமாகச் சொல்லித் தள்ளிவிட்டு ஜோதிடத்தை தூஷணமும் பரிகாசமுஞ் செய்வதில் இறங்கிவிடுகின்றார்கள் (Indulge in Railleries against astrology.) இவ்விதஞ் செய்வது தவறுதலான செய்கையே என்று இந்த உதாரண ஜாதகம் எடுத்துக்காட்டுகின்றது.

**ஜாதகம்**

<table>
<tr><td></td><td></td><td>குரு</td><td>லக்கினம்<br>ராகு</td></tr>
<tr><td>சூரியன்<br>சுக்கரன்</td><td colspan="2" rowspan="2">இராசி<br>சக்கரம்</td><td></td></tr>
<tr><td>புதன்</td><td></td></tr>
<tr><td>சனி<br>கேது</td><td>சந்திரன்</td><td></td><td>அங்கார<br>கன்</td></tr>
</table>

6. மேலே கொடுக்கப்பட்டுள்ள ஆண் ஜாதகம் கிறிஸ்து பிறந்த ஆயிரத்தெண்ணூற்றெழுபத்தோராவது (1871 A.D.) வருஷத்தில் பிறந்து இப்போது இறந்து விட்டிருக்கின்ற ஒருவருடைய நிரயன ஜாதகமாகும். மிதுனத்தில் ஜன்ம லக்கினமும் இராகுவும், கன்னியில் அங்காரகனும், விருச்சிகத்தில் சந்திரனும், தனுசில் சனியும் கேதுவும், மகரத்தில் புதனும், கும்பத்தில் சூரியனும் சுக்கிரனும், ரிஷபத்தில் குருவும் ஆகும். ஜன்ம நட்சத்திரம் கேட்டை நான்காம் பாதம் ஆகும். இந்த ஜாதகர் சிறிய கைக் குழந்தையாக விருந்தபோதே இவருக்குச் சுகர் நாடி (என்ற சுகர்வாக்கியம்) என்ற தமிழ் ஜோதிட நாடி சாஸ்திரத்திலிருந்து பலா பலன்கள் எழுதி வாங்கப்பட்டன. கீழே குறிக்கப்பட்டுள்ள ஒவ்வொரு விஷயமும் இந்த நாடியில் முன்னடியாக சொல்லப்பட்டிருந்த பிரகாரம் மிகவும் ஆச்சரியப் படத் தக்கபடி பலித்து விட்டன.

(1) இந்த ஜாதகர் கலியாணமாகாத ஒரு ஸ்திரீக்குப் பிறந்த வைப் பாட்டி பிள்ளையாவார் (A bastard,). இவருடைய தகப்பனுர் இந்த ஜாதகர் பிறந்தபோது கலியாணமாகாதவராக விருந்து இந்த ஜாதகர் பிறந்த பிறகு விவாகஞ் செய்து கொண்டவராவர்.

(2) இந்த ஜாதகருடைய தகப்பனுரின் விவாகமான மனைவிக்குப் பிறந்த பிள்ளைகள் தங்களுடைய தகப்பனுருடைய பிதுரார்ஜ்ஜித சொத்தைப் பகிர்ந்துக்கொண்டு பாகப் பிரிவினையைச் செய்த காலத்தில் இந்த ஜாதகர் இவர்களுக்கு மிகவும் உதவியாக இருப்பார். ஆனுல், இவருக்குத் தன்னுடைய தகப்பனுருடைய சொத்தில் ஒன்றும் இந்தப் பங்கு பாகத்திஞல் கிடைக்காது.

(3) இந்த ஜாதகர் ஜோதிட சாஸ்திரம் தெரிந்தவராகவிருப்பார்.

(4) இந்த ஜாதகருக்கு விவாகமான மனைவி ஒன்றேயாகும்; ஆனுல் இவர் சந்திர தசை காலத்தில் சிறிது காலம் மாத்திரம் ஒரு வைப்பாட்டியை வைத்துக்கொண்டிருப்பார்.

(5) குரு பன்னிரண்டாவது பாவத்தில் இருப்பதால் இந்த ஜாதகர் ஒரே ஒரு ஆண் குழந்தையை யுடையவராவர். இந்த ஆண் குழந்தையும் குழந்தைப் பருவத்திலேயே இறந்துவிடும். இந்த ஜாதகருடைய மனைவிக்கு எழு பெண் குழந்தைகளும், ஒரு ஆண் குழந்தையும் பிறக்கும், இரண்டு கர்ப்பப் பிரஷ்டங்களும் (Two abortions) நேரிடும். ஆகையால் இந்த மனைவிக்கு மொத்தத்தில் பத்து கர்ப்பங்கள் நேரிடும்.

(6) (a) ஜாதகருக்கு இருபந்தைந்தாவது வயது நடக்கும்போது சுக்கிர தசையின் பிற் பாகத்தில் தன்னுடைய விவாகமான மனைவிக்கு நீண்ட ஆயுளையுடைய ஒரு பெண் குழந்தை பிறக்கும்.

(b) உடனே கொஞ்ச காலத்திற்குள் இன்னெரு பெண் குழந்தை பிறக்கும். இந்தக் குழந்தை அற்பாயுளை உடையதாகும். இது தனக்கு விவாகமான பிறகு ஜாதகருடைய சந்திர தசையில் இறந்துபோய் விடும்.

(c) இந்த ஜாதகருக்கு முப்பதாவது வயதில் ஒரு பெண் குழந்தை பிறக்கும். இது நீண்ட ஆயுளையும் பாக்கியத்தையும் உடையதாக விருக்கும்.

(d) இந்த ஜாதகருக்கு முப்பத்திரண்டாவது வயதில் இன்னொரு பெண் குழந்தை பிறக்கும். இந்தக் குழந்தை கலியாணம் ஆகாமலே ஜாதகருடைய நாற்பத்தைந்தாவது வயதில் இறந்துபோய்விடும்.

(e) ஜாதகருக்குத் தன்னுடைய முப்பத்தைந்தாவது வயதில் இன்னொரு பெண் குழந்தை பிறக்கும். இந்தக் குழந்தை நீண்ட ஆயுளை உடையதாகும்.

(f) அடுத்த வருஷத்தில் ஜாதகருடைய மனைவிக்குக் கர்ப்பப் பிரஷ்டம் (Abortion) நேரிடும்.

(g) ஜாதகருக்குத் தன்னுடைய முப்பத்தெட்டாவது வயதில் ஏழாவது கர்ப்பத்தில் உண்டான ஒரு பெண் குழந்தை ஏழாவது குழந்தையாகப் பிறக்கும். இந்தக் குழந்தை சீக்கிரத்தில் இறந்துவிடும்.

(h) அடுத்த வருஷத்தில் அஃதாவது ஜாதகருக்கு முப்பத்தொன்பதாவது வயதில் ஒரு ஆண் குழந்தை பிறந்து சீக்கிரத்தில் (அஃதாவது ஜாதகருக்கு நாற்பதாவது வயதில்) இறந்துவிடும்-

(i) ஜாதகருக்கு நாற்பத்திரண்டாவது வயதில் ஒரு பெண் குழந்தை பிறக்கும், இது நீண்ட ஆயுளை உடையதாகவிருக்கும்.

[j] ஜாதகருடைய மனைவிக்குப் பத்தாவது கர்ப்பம் நேரிட்டு இது பிரஷ்டமாகிப் போய்விடும்.

(k) ஜாதகருக்குத் தன்னுடைய ஐந்தாவது புத்திரியினுடைய புருஷனால் அதிக நன்மைகளும் உதவிகளும் உண்டாகும். இந்த ஜாதகருக்கு ஆண் சந்ததி இல்லாத காரணத்தினால் தன்னுடைய சொத்துக்களை இந்த மருமகனுக்கு இனமாகக் கொடுத்துவிடுவார்.

(l) ஜாதகர் தன்னுடைய நாற்பத்திரண்டாவது வயதில் தெய்வீக ஸ்தலங்களுக்கு யாத்திரை செய்து புண்ணிய தீர்த்தங்களிலும் நதிகளிலும் ஸ்நானஞ் செய்வார்.

(m) ஜாதகர் தன்னுடைய நாற்பத்தேழாவது வயதிலிருந்து மிகவும் தெய்வ பக்தியுள்ளவராக மாறிவிடுவார்.

இந்த ஜாதகத்தில் முந்தியாகவே சொல்லப்பட்ட ஒவ்வொரு விஷயமும் அது சம்பவிக்கின்ற காலமும் மிகவும் ஆச்சரியகரமாகவும் உண்மையாகவும் நடந்தேறிவிட்டன. இவ் விஷயங்கள் ஆஸ்மிகமான சம்பவங்கள் (Randon shots) என்றும், அதிருஷ்டமான தாக்குகள் (Lucky hits) என்றும் அல்லது சாமான்யமான புத்தியையுடைய ஒரு சுறுசுறுப்பான மனிதனால் உத்தேசிக்கக் கூடியவைகள் என்றும் எவ்விதமான மனக் கற்பனை அல்லது கற்பனை சக்தியாலும் (by any stretch of imagination) நினைக்கக்கூடியவைகள் அல்ல. இதுவரையிலும் இங்கு கொடுக்கப்பட்ட உதாரணங்கள் ஜோதிட சாஸ்திரம் ஜனங்களுக்கு நம்பக்கூடிய ஒரு வழிகாட்டி (a reliable guide to humanity) என்று ஜோதிட சாஸ்திரத்திற்கு அநுகூலமாக ஏராளமான வரையிலும் எடுத்துக்காட்டுகின்றனவாகும். இன்னம் அநேகமான உதாரணங்களை நாம் எடுத்துக் காட்டக் கூடும். ஆனால், இவ்விதமாகச் செய்தால் விஷயங்களும் பக்கங்களும் அதிகப்பட்டுவிடும், என்ற அச்சத்துடன் இத்துடன் இதை நிறுத்தியிருக்கின்றேன்.

எல்லா விஞ்ஞான சாஸ்திரங்களையும் (Sciences), எல்லா விஷய ஞான ஏற்பாடுகளையும் (Systems of knowledge) விட ஜோதிடசாஸ்திரம் மிகவும் கஷ்டமானது என்று இப்போது ருஜுப்படுத்தப்படும். நம்முடைய பழைய காலத்து மஹரிஷிகளும், ஞானதிருஷ்டியையுடைய மேதாவிகளும் நான்கு இலட்சத்தி ஐம்பது ஆயிரம் சுலோகங்களை ஜோதிட சாஸ்திரத்தைப்பற்றி உண்டு பண்ணியிருக்கின்றார்கள் என்ற விஷயம் அடிக்கடி சொல்லப்பட்டு வருகிறது. இவர்களும் எண்ணிக்கையில் பதினெட்டு பெயர்களுக்குக் குறையாமல் இருந்து வருகின்றார்கள். இவர்கள் 1 சூரியா, 2 பிரமன், 3 நாரதர், 4 வஸிஷ்டர், 5 வியாஸர், 6 அத்திரி, 7 பராசரர், 8 காஸ்யபர், 9 கர்கர், 10 மரீஷி, 11 மனு, 12 அங்கீரஸர், 13 லோமஸர், 14 பௌலிஷர், 15 ஸ்யவனர், 16 யவனர், 17 இரண்டாவது மனு, 18 சௌனகர், ஆகபதினெண்மர் ஆவர். இந்த பதினெட்டு பூர்வீக ஜோதிட கிரந்தகர்த்தர்களின் முழு கிரந்தங்களும் குறைவில்லாமல் நாளது வரைக்கும் கிடைக்கப்படவில்லை. இங்கும் அங்கும் இவர்களுடைய கிரந்தங்களின் சில பாகங்கள்தான் கிடைக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு ஜோதிடருடைய குடும்பத்திலும் புழங்கி வருகின்ற பெயரையுடைய வராஹமிஹிரர் என்ற புகழ்பெற்ற ஜோதிட கிரந்த கர்த்தரின் காலத்திற்கு முந்தியே இவர்களால் செய்யப்பட்ட கிரந்தங்களின் பெரும்பாண்மையான பாகங்கள் இனிமேல் மீட்கமுடியாத கிடைக்கமுடியாத தன்மையில் இழந்துபோய் விடப்பட்டன அல்லது அழிந்துபோய்விட்டன. இந்த மேதாவிகளின் சிறந்த கூட்டமாகிய பதினெட்டு ரிஷிகளுக்குப் பிறகு வந்த புகழ்பெற்ற ஜோதிட வித்வான்கள் (1) தேவஸ்வாமி, 2 சித்தசேனர், 3 விஷ்ணுகுப்தர், 4 மயன், 5 மனித்தர், 6 சத்தியாச்சாரியார் முதலிய இன்னம் அநேகருடைய கூட்டம் ஆகும். இவர்கள் எல்லோரும் மேற்கண்ட பதினெட்டு ரிஷிகள் எழுதிய கிரந்தங்களை அனுசரித்துச் சிறிய ஜோதிட புத்தகங்களை எழுதியவர்களும் வராஹமிஹிராச்சாரியாருக்கு முந்திய காலத்தில் இருந்த மிகவும் படித்த ஜோதிட சாஸ்திரிகளாவார்கள். இவர்கள் எழுதிய சிறிய புத்தகங்களில் கூட அநேகம் அழிந்து போய்விட்டன. இந்தக் கிரந்த கர்த்தர்களுக்குப் பிறகு பிறந்தவராகிய வராஹமிஹிராச்சாரியார் என்பவர் தனக்கு முந்தின ஜோதிட சாஸ்திரிகளால் எழுதப்பட்ட கிரந்தங்களின் சிலபாகங்களை ஒன்றாகச் சேகரித்து ஒழுங்குபடுத்தி ஒரு மிகவும் மகத்தானதும் ஞாபகார்த்தமானதுமான கிரந்தமாகிய (Monumental work) பிருஹத் ஜாதகம் என்ற ஜோதிட கிரந்தத்தை எழுதினார். இவர் ஜோதிட சாஸ்திரத்தின் இதர பிரிவுகள் அல்லதுவகுப்புகளையும்பற்றி இதர சில புத்தகங்களையும் எழுதினார். வானசாஸ்திரத்தைப்பற்றியும் எழுதிஇருக்கின்றார். இந்த எல்லாக் கிரந்தங்களுக்கும் தேவையான விஷயங்களை தனக்கு முன்னே அநேக நூற்றாண்டு வருஷங்களில் இருந்த ஜோதிடர்கள், வானசாஸ்திரிகள் ஆகிய இவர்களுடைய கிரந்தங்களில் இருந்து சேகரித்தார். இவர் கிறிஸ்து பிறந்த ஆறாவது நூற்றாண்டில் ஜீவித்திருந்தவர் என்று பொதுவாக எல்லோரும் அபிப்பிராயப் படுகின்றார்கள். ஆனால், இப்போது இருக்கின்ற சில காலவரை நிர்ணய ஆராய்ச்சியாளர்கள் (Research scholars of chronology) இவர் கிறிஸ்து பிறப்பதற்கு முன்னே ஓராவது நூற்றாண்டில் ஜீவித்திருந்தார் என்று அபிப்பிராயப்பட்டுக் கொண்டு இவருக்கு

இன்னம் அதிகமானப் பூர்வீகத் தன்மையைக் (greater antiquity) கொடுக்கப் பார்க்கின்றார்கள். வராஹமிஹிருக்குப் பிற்காலத்தில் அநேக ஜோதிடர்கள் தோன்றினார்கள். இவர்கள் தங்களுக்கு முன்னே இருந்த அநேக பூர்வீக ஜோதிடர்களின் போதனை விஷயங்களையும், கொள்கைகளையும் தங்களுடைய புத்தகங்களில் உபயோகித்தார்கள். மேலும், இவர்கள் தங்களுடைய நுட்பமான சோதனை, ஆராய்ச்சி (Research) என்பதனாலும், சொந்தமான அநுபவத்தினாலும் (own experience) ஏற்பட்ட சில விஷயங்களையும், நம்முடைய பூர்வீகமான மூலக்கிரந்தகர்த்தர்கள் நமக்குப் பூர்வீகமான ஆஸ்தியாக விட்டுவிட்டுப்போன சோதிட சாஸ்திர ஞான நிதியுடன் (Fund of astrological knowledge) சேர்த்துக்கொண்டார்கள். காகிதம் செய்தல், அச்சிடுதல் ஆகிய இவைகளைக் கண்டுபிடித்தற்கு முந்தியுள்ள காலங்களில் சுலோகங்களை ஒரு ஜோதிடர் இன்னொரு ஜோதிடரிடமிருந்து வாய்ச்சாவாகக் கற்றுக்கொள்ளுகின்ற பரம்பறை வழக்கத்தினால் ஏற்படக்கூடிய சில குற்றங்களாலும், செல்லு அடித்துவிட்டதாலும் அல்லது காலாகால வரையாலும் கெட்டுப்போய்விட்ட பழைய ஓலைகளிலிருந்து சுலோகங்களை எழுதி நகல் எடுத்ததாலும் பூர்வீக ஜோதிட கிரந்தகர்த்தர்கள் அல்லது இவர்களுக்குப் பிந்தி வந்த கிரந்தகர்த்தர்கள் ஆகிய இவர்களுடைய ஜோதிட சாஸ்திர கொள்கைகளும், விதிகளும், போதனைகளும் சில மாறுதல்களையும் வித்தியாசங்களையும் அடையப்பட்டன. ஆகையால் தற்காலத்திய ஜோதிட சாஸ்திர புத்தகங்களுக்குள்ளே ஒன்றுக்கொன்று சில விஷயங்களில் வித்தியாசமாகவும், எதிரிடையாகவும் இருப்பது ஆச்சரியப்படத்தக்கதல்ல. இது சாதாரணமான விஷயமாகும். இப்படிப்பட்ட விஷயங்கள் சிற்சிலவாகவேதான் இருக்கின்றன, அதிகமானவையாக விருக்கவில்லை. பூர்வீகமான உண்மையான, நம்பத்தக்கக் கிரந்தங்களின் அசலுடன் பிழையான விஷயங்களை நன்றாகவும் ஜாக்கிரதையுடனும் ஒற்றுப்பார்ப்போமானால் இப் பிழைகளில் அநேகமானவற்றைத் திருத்தி விடமுடியும். மிகவும் ஜன சம்மதமுள்ள, வழக்கத்திலுள்ள (the most popular) புத்தகங்களும் மிகவும் நிலையான விலையுள்ள, மதிப்புள்ள (the most standard) புத்தகங்களும் பின்வருவனவாகும். இவைகள், 1 ஜாதகசத்தியாச்சாரீயம் என்ற சத்தியாச்சாரியாருடைய ஜாதக பஞ்ச சித்தாந்தம், 2 வராஹ மிஹிரருடைய பிருஹத் ஜாதகம், 3 கல்யாணவர்மா என்பவருடைய சாராவளி, 4 ஹோராசாரம், 5 ஜாதகாபரணம், 6 ஹோரார ரத்தினம், 7 சர்வார்த்த சிந்தாமணி, 8 ஜாதகபாரிஜாதம், 9 பல தீபிகை, 10 ஸ்ரீபதி பத்ததி, 11 பராசர ஹோரை, 12 ஜாதகசார தீபம், 13 ஜாதகதத்வம், 14 சுகப் பிரமரிஷியின் ஜாதகாலங்காரம், 15 ஜயமுனி சூத்திரம், 16 ஜாதக சந்திரிகை முதலியன ஆகும். இந்தக் கிரந்தங்கள் எல்லாம் ஒரு ஜாதகத்தின் துவாதச பாவ பலாபலன்கள் (Judicial astrology) விஷயமாகச் சமஸ்கிருத பாஷையில் உள்ள கிரந்தங்களாகும். இந்த சமஸ்கிருத கிரந்தங்களையும் இன்னம் அநேகமான இதர சமஸ்கிருத கிரந்தங்களையும் அனுசரித்து எழுதப்பட்ட அநேக தமிழ் ஜோதிட சாஸ்திர கிரந்தங்களும் இருக்கின்றன. இவைகளில் மிகவும் உபயோககரமாயும் ஜன சம்மதமுள்ளவைகளாயும் வழக்கத்திலுள்ளவைகளாயும் உள்ளவைகள், 1 கீரனூர் நடராஜர் தமிழில்

எழுதப்பட்ட ஜாதகாலங்காரம், 2 ஜாதக சிந்தாமணி, 3 அகஸ்தியரால் செய்யப்பட்ட மணிகண்ட கேரளம், 4 துய்ய கேரளம், 5 வீமேஸ்வர உள்ள முடையான், 6 குமாரஸ்வாமீயம், 7 புலிப்பாணி ஜாதகம், 8 ஜோதிடக் களஞ்சியம், 9 சுகர்வாக்கியம், 10 சங்கராச்சாரீயம், 11 மேலே முன்னமே சொல்லப்பட்ட சமஸ்கிருத கிரந்தங்களின் அசல் தமிழ்மொழி பெயர்ப்புகளாகிய தாண்டவமாலை, பலதீபிகை, சாராவளி, பிருஹத் ஜாதகம், ஹோரா சாஸ்திரம், ஜாதக பாரிஜாதம், ஜயமுனி சூத்திரம் ஆகிய முதலியவை ஆகும். இந்தச் சப்தரிஷி நாடியின் வியாக்கியானத்தில் நான் உபயோகப்படுத்தியிருக்கின்ற ஜோதிட புத்தகங்களின் ஒரு லிஸ்ட்டு என்ற ஜாபிதாவை (a list of books)த் தனியாக கொடுத்திருக்கின்றேன். இங்கு மேலேசொல்லப்பட்டுள்ள புத்தகங்களில் அநேக புத்தகங்கள் இந்த ஜாபிதாவில் காணப்பட்டிருக்கின்றன.

ஜோதிட சாஸ்திர விஷயமாக ஏற்படுத்தப்பட்ட சுலோகங்கள் முந்தியே சொல்லப்பட்ட பிரகாரம் இலட்சக்கணக்காணவைகளாக இருப்பதால் ஒருவர் எவ்வளவு பெரியவராக இருந்தபோதிலும் அல்லது, வாசித்தவராக விருந்தபோதிலும் இந்தச் சுலோகங்களை எல்லாம் மனப்பாடமாக வரப் படுத்திக்கொள்ளுவதாவது அல்லது கியாபகத்தில் வைத்துக்கொள்ளுவதாவது சாத்தியமான காரியமாகாது. ஒவ்வொரு ஆயிரம் சுலோகங்களுக்கு ஒரு புத்தகமாகப் புத்தகங்களை உண்டுபண்ணிணுலுங்கூட, மொத்த புத்தகங்களும் சுமார் நானூற்றைம்பது புத்தகங்களாகும். இந்தப் புத்தகங்களை எல்லாம் ஒரு ஜோதிடர் வாசித்திருப்பார் என்று நாம் நினைப்பது உசிதமானதல்ல. ஒரு மனிதருக்கு ஒரு ஜாதகம் இருக்கவேண்டும் என்று நாம் எண்ணுவோமானுல் உலகத்தில் ஒரு குறித்த காலத்தில் எத்தனை கோடி ஜனங்கள் இருக்கின்றுர்களோ அத்தனை கோடி ஜாதகங்கள் இருக்க வேணும். ஒவ்வொரு ஜாதகமும் ஒப்பற்ற தனிமையான ஜாதகமே (unique horoscope) ஆகும். ஆயிரத்துத் தொளாயிரத்தைம்பத்து நான்காவது (1954 A.D.) வருஷத்தில் இந்தியாவின் ஜனத்தொகை சுமார் முன்னூற்றெழுபத்தேழு (377 millions) மில்லியன்ஸ்கள் என்ற தமிழ் முப்பத்தேழு கோடிகள் ஆகும். ஒரு வருஷம் முந்நூற்றறுபத்தைந்தே கால் ($365\frac{1}{4}$ days in a year) நாட்களையுடையதென்றும், மனிதனுடைய பூரணமான வயது நூறு வருஷங்கள் அல்லது நூற்றிருபது வருஷங்கள் என்றும் பாவிப்போமானுல் ஒருநாளில் இந்தியாவில் மாத்திரம் ஒரு லக்கினத்தில் எண்ணூற்றறுபது (860 persons) அல்லது எழுநூற்றி பதினேழு (717 persons) பேர்கள் முறையே பிறந்திருக்கவேண்டும். இந்து தேசத்து நவக்கிரகங்கள், லக்கினம் ஆகிய இவைகளில் இராசி நிலைமையை மாத்திரம் கவனிப்போமானுல் 860 அல்லது 717 பேர்கள் ஒரேவிதமான ஜாதகத்தையும், ஆனுல், வெவ்வேருன பலாபலன் களையும் உடையவர்களாகவிருக்கக்கூடும். ஒவ்வொரு லக்கினத்திலும் உள்ள க்ஷணங்களை அநுசரித்து இவ்விதமான வித்தியாசங்களையுடைய ஜாதகங்கள் இருக்கக்கூடும். இவ்விதமாக அநேக ஜாதகங்கள் இருக்கும் போதும், எந்த ஜாதகம் எந்த நபருடையது என்று உனக்குத் தெரியாமல் இருக்கும்போதும், ஒரு ஜாதகருக்கு எவ்விதமாகப் பலாபலன்களைத்

தெரிந்தெடுத்துச் சொல்லமுடியும் என்று ஜோதிட சாஸ்திரத்தின் விரோதிகள் ஒரு வாக்குவாதத்தை அடிக்கடி கிளப்பிவிடுகின்றார்கள் (trot out an argument). ஜோதிட சாஸ்திரம் ஒரு ஜாதகத்தின் லக்கினத்தைப் பலவிதமான பாகங்களாகப் பங்கிடுகின்றது என்று நமக்குத்தெரியும். இவ்விதமான ஒவ்வொரு பாகமும் ஒவ்வொரு ஜாதகத்தையும் உடையவருக்குப் பொருத்தமுள்ளதாகும். சத்தியாச்சாரியாரால் செய்யப்பட்ட துருவ நாடி அல்லது சத்திய சம்ஹிதை நாடி என்பது ஒவ்வொரு லக்கினத்தையும் முன்னூற்றறுபது சூட்சுமமான பாகங்களாகப் பங்கிடுகின்றது. ஒவ்வொரு பாகமும் ஒவ்வொரு விநாடி என்ற கால அளவிற்கு அல்லது இருபத்து நான்கு செக்கண்டுகளுக்கு உரியதாகும். சுக்கிரநாடி என்பது இன்னம் அதிக துல்லிபமான பாகங்களாக ஒரு லக்கினத்தை பங்கிடுகின்றது. அஃதாவது ஒரு லக்கினத்தை அறுநூறு சூட்சுமமான பாகங்களாகப் பங்கிட்டு இவ்விதமாக வருகின்ற ஒவ்வொரு நாடி அம்சத்திற்கும் (1) விப்ர காலம் (பிராமண காலம்), (2) க்ஷத்திரிய காலம், (3) வைசிய காலம், (4) சூத்திர காலம் என்று நான்குவிதமான காலப்பெயர்களை நூற்றைம்பது நாடி அம்சங்களுக்கும் கொடுக்கின்றது. இவ்விதமாக நமது நாடி ஜோதிடர்கள் ஜோதிட சாஸ்திரத்தின் நாஸ்திகருடைய (Sceptics of Astrology) வாதங்களையும் ஆட்க்ஷேபனைகளையும் எதிர்பார்த்திருக்கின்றார்கள் என்று தெரியவருகின்றது. இவ்விதமான மிகவும் சூட்சுமமான ஜாதகங்களுக்குக்கூட பலாபலன்களைச் சொல்லுவதற்காக அதிக விஸ்தாரணமான, விரிவான விதிகளையுங் கொடுத்திருக்கின்றார்கள் நமது ஜோதிட சாஸ்திரிகள். கிரகங்களினுடைய பலாபலன்கள், இராசிகளில் இவைகளின் ஒன்றுக்கொன்றுள்ள நிலைகளையும், லக்கினத்தையும், இராசி மண்டலத்திலுள்ள நிலையான நட்சத்திரங்களின் நிலையையும், கிரகங்களின் வலிவுகளையும், பார்வைகளையும் ஆகிய இவைகள் எல்லாவற்றையும் அநுசரித்து நடக்கின்றன. ஒரு கிரகத்தினுடைய பலம் (strength of a planet) இருபத்து நான்குவித அம்சங்களை அனுசரித்திருக்கின்றது. இந்த 24 வித அம்சங்களும் ஸ்ரீபதிபத்ததி என்ற சமஸ்கிருத கிரந்தத்திலும் இதை அநுசரித்து என்னால் தமிழில் எழுதி அச்சிடப்பட்ட "ஜாதக கணிதம் என்னும் ஜோதிட கிரகசட்பலம் ஆயுள் கணிதம் பாகம் ஒன்று" என்ற புத்தகத்திலும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவ்விதமான 24 வித அம்சங்களையும் கணிக்க ஒரு நாணயமான, உண்மையான ஜோதிடருக்கு அநேகநாட்கள் செல்லும். ஆகையால் ஒரு ஜோதிடர் பலாபலன்களைச் சொல்லத் துணிவதற்கு முந்தி அநேகவிதமான மேற்சொல்லிய அம்சங்களை எல்லாம் கணித்தும் கவனித்தும் யோசனை செய்யவேண்டியது அவசியமாகவிருக்கின்றது. ஆகையால், இனிமேல் வரப்போகின்ற பலாபலன்களை ஜோதிடத்தைக்கொண்டு சொல்லுவது ஒரு கேலி, பரிகாசம் பண்ணுதல் (joke) அல்லது ஒரு சுலபமான கருமம், கிரியை அல்லது செய்கை (an easy performance) அல்ல. இது மிகவும் கஷ்டமான காரியம். ஒருவருடைய வாணுளில் இனிமேல் நடக்கப்போகின்ற ஒரு ஸ்தூலமான விஷயத்தை (broad detail of a life) க் கூட முன்னடியாகவே ஜோதிட சாஸ்திரத்தில் சொல்லியுள்ள வழிகள் பிரகாரம் சொல்லுவதற்கு அதற்குத் தேவையான கணிதங்களைச் செய்யக்

குறைந்த பட்சம் சுமார் இருபது இருபத்தைந்து நாட்கள் வரையிலும் ஒரு ஜோதிடருக்குப் பிடிக்கும். இவ்விதமாக ஸ்தூலமான விஷயத்தைக்கூட சொல்லுவதற்கு ஒரு ஜோதிடர் தன்னுடைய ஞாபக சக்தியையே மாத்திரம் பூராகவும் நம்புவதற்கில்லை (Cannot rely wholly on his memory only) இவர் அநேக ஜோதிட சாஸ்திர புத்தகங்களைப் படித்துப்பார்த்து தான் ஆராய்ச்சி செய்கின்ற ஜாதகத்தில் சில மூன்று, நான்கு முதலிய கிரகங்கள் இருக்கின்ற நிலையைப்போலவே புத்தகங்களில் கிரக நிலைகள் அகப்படுகின்றனவா என்று கஷ்டப்பட்டுத் தேடிப்பார்க்கவேண்டியதாகவிருக்கின்றது. ஏனென்றால் ஒவ்வொரு விதமான கிரகநிலையும் ஒன்றுக்கொன்று வித்தியாசமுள்ள பிரத்தியேகமான பலாபலன்களையே தருகின்றன. ஆகையால் ஒரு ஜாதகத்தைக் கொடுத்தவுடனே, இடம், காலம் ஆகிய இவைகளைக் கவனியாமல் தனக்குத் தெரிந்த சில பாடல்களைச் சொல்லிக்கொண்டு உடனே பலாபலன்களைச் சொல்ல ஆரம்பித்துவிடுகின்ற ஜோதிடரைக் கேட்பதும் நம்புவதும் புத்தியுள்ள காரியமாகாது. இந்த ஜோதிடர் பாடுகின்ற பாடல் இந்த ஜாதகத்திற்குப் பொருந்தாமலும் அல்லது கால் வாசி, அரைவாசி, அல்லது முக்கால்வாசிதான் பொருத்தமுடையதாகவுங் கூட இருக்கக்கூடும். இந்தப் பாடலில் சொல்லிய விஷயங்கள் அல்லது அம்சங்கள் எல்லாம் பூராகவும் ஆராய்ச்சி செய்கின்ற ஜாதகத்தில் இருந்தால் மாத்திரந்தான் இந்தப்பாடலிலுள்ள பலாபலன்கள் முழுவதும் இந்த ஜாதகத்திற்குப் பலிக்கும். இல்லாவிட்டால் எவ்வளவு வித்தியாசமுண்டோ அவ்வளவுக்கவ்வளவு பலன்களிலும் தவறுதல் அல்லது வித்தியாசம் ஏற்படக்கூடும்.

ஒரு ஜாதகரின் வாழ்நாளில் சம்பவிக்கக்கூடிய விஷயங்களைப்பற்றிச் சொல்லுகின்ற ஜோதிடத்தின் பாகத்திற்குப் பலபாகம் என்று சொல்லப்படும். இதற்கே நியாயஸ்தலத்துக்கடுத்த அல்லது நீதிப் பிரமாணமான ஜோதிடம் (Judicial Astrology) என்றும் சொல்லலாம், ஏனென்றால் ஒரு ஜாதகருக்கு நடக்கப்போகின்ற ஏதாவது ஒரு விஷயத்தைப்பற்றி விசாரணை செய்யும்போது ஜோதிடர் ஒரு நியாயாதிபதியைப்போலவே (a judge) இந்த ஜாதகத்தைப் பற்றி விசாரணையும் பரிசோதனையுஞ் செய்கின்றார். இங்கு கிரகங்கள் சாட்சிக்காரர்களாக விருக்கின்றார். ஜோதிடர் நியாயாதிபதியாகின்றார். எந்த விஷயத்தைப்பற்றி ஜோதிடர் விசாரணை செய்கின்றாரோ அந்த விஷயத்தைப் பற்றிய கிரகங்கள், வீடுகள் அல்லது பாவங்கள் ஆகிய இவைகள் கொடுக்கும் வாக்குமூலத்தை அல்லது சாட்சியை ஜோதிடர் கவனிக்கவேண்டியதாகவிருக்கின்றது. கிரகங்களின் வலிவு அல்லது பலம், கிரகங்களின் திருஷ்டி என்கிற பார்வை, கிரகங்களுக்குள் ஒன்றுக்கொன்று விரோதமாக அல்லது ஒற்றுமையாக நடந்துகொள்கின்ற தன்மை, இவைகளின் அநேக விதமான சமயங்கள், சேஷ்டைகள், அவஸ்தைகள், ஆகிய இவைகளையும் இன்னம் இதர அநேக அம்சங்களையும் ஜோதிடர் கவனிக்கவேண்டும், ஒரு கிரகம் கொடுக்கின்ற சாட்சியத்தைத் (Evidence of a planet) தனியே பரிசோதிக்கவேண்டும். மேலும் இந்த சாட்சியத்தையே மற்றக் கிரகங்கள் கொடுக்கின்ற சாட்சியத்துடன் ஒற்றுப் பார்க்கவேண்டும். இவ்விதமாகக் கிரகங்கள் கொடுக்கின்ற எல்லா

சாட்சியங்களையும் (pieces of evidence) ஒன்றுக்கொன்று ஒற்று பார்க்க வேண்டும். ஒரு நியாயாதிபதி எந்த சாட்சிக்காரரை நம்பலாம், எந்தச் சாட்சிக்காரரை நம்பக்கூடாது என்று யோசனை செய்து தீர்மானிப்பது போலவே ஜோதிடர் எந்தக் கிரகத்தின் சாட்சியத்தை நம்பலாம், எந்தக் கிரகத்தின் சாட்சியத்தை நம்பக்கூடாது என்று யோசனை செய்து தீர்மானிக்க வேணும். ஒரு நியாயாதிபதி தன்னுடைய கோர்ட்டில் இரு கட்சிக்காரர்களின் வக்கீல்கள் எடுத்துக்காட்டுகின்ற சட்ட புத்தகங்களின் ஆதாரங்களையும் வக்கீல்களின் வாதங்களையும் கேட்பது போலவே ஜோதிடரும் ஒரு விஷயத்தைப் பற்றி அநுக்கூலமாகவும் பிரதிகூலமாகவும் ஜோதிட புத்தகங்களில் இருக்கின்ற விதிகளையும், கொள்கைகளையும், தானே தேடிப்பார்த்து ஆராய்ச்சி செய்து யோசனை செய்யவேணும். இவ்விதமாகச் சகல அம்சங்களையும் ஜோதிடர் ஆராய்ச்சி செய்து ஒரு தீர்மானத்திற்குக் கடைசியாக வரவேணும். இவ்விதமாகத் தீர்மானத்திற்கு ஜோதிடர் வருவதற்கு இவர் ஒரு நியாயாதிபதியைப்போலவே கீழ்கண்ட யோக்கிய தாம்சங்களை (Qualifications) உடையவராகவே இருந்தே தீரவேண்டும். ஜோதிடர் ஜோதிட சாஸ்திரத்தை நன்றாகப் படித்திருந்தவராகவிருக்க வேணும். அறிவுக்கூர்மை, சூக்ஷ்மபுத்தி (Acumen) என்றதை உடையவராகவிருக்கவேணும். பகுத்தறிவு, மனக்கூர்மை (Powers of discrimination) நியாயக்கோவை, ஊகை (Powers of reasoning). தீர்க்கமான நடுத்தீர்ப்பு (Powers of sound judgment) ஆகிய இவ்விதமான சிறந்த யோக்கிய தாம்சங்களையும் ஜோதிடர் உடையவராக விருக்கவேணும். இவ்விதமான சக்திகளை ஒரு ஜோதிடர் உடையவராக விருந்தால்தான் பலிக்கக்கூடிய விதமாகப் பலாபலன்களைச் சொல்லும்படியான மிகவும் கஷ்டமான வேலையைச் செய்ய லாயக்குள்ளவராவார். ஒரு நியாயத் தீர்ப்பைச் செய்கின்ற கோர்ட்டு என்ற நியாய சபை எல்லாக் காலங்களிலும் எல்லாவிடங்களிலும் கூடித் தன்னுடைய காரியங்களை நடத்தக்கூடாது. ஆனால் இது ஒரு குறித்த காலத்திலேதான் ஒரு குறித்தவிடத்திலேதான் தன்னுடைய அலுவல்களைச் செய்யவேணும். இவ்விதமாகவே ஜோதிடருடைய கோர்ட்டும் ஒரு குறித்த காலத்திலும் ஒரு குறித்தவிடத்திலுந்தான் நடைபெற வேண்டும். ஜோதிடர் தன்னுடைய கோர்ட்டை அல்லது ஜோதிடசபையை இரவிலும், அசிங்கமான, அசுத்தமான, அருவருப்பான (Filthy, dirty and nasty) இடங்களிலும் நடத்தக்கூடாது. ஜோதிடர் அசுத்தமாகவும், அசௌக்கியமாகவும், தெய்வபக்தியில்லாதவராகவும் (Untidy, unwell, and irreligious) இருக்கக்கூடாது. நமது மகரிஷிகள் சொல்லியுள்ள நிபந்தனைகளையும், நிர்பந்தங்களையும் கட்டளைகளையும் (Restrictions and injunctions) ஜோதிடர் வெகு ஜாக்கிரதையாக அநுஷ்டித்து வருபவராக விருக்கவேணும். நமது மகரிஷிகளும் பூர்வீக ஜோதிட சாஸ்திர கிரந்த கர்த்தர்களும் ஜோதிடம் சொல்லுவதற்கு எந்தெந்த காலங்கள் எந்தெந்த விடங்கள் தகுதியுள்ளவைகள் என்று சொல்லப்பட்டிருக்கின்றனவோ அந்த வேளைகளிலும் இடங்களிலுந்தான் ஜோதிடர் பலாபலன்களைச் சொல்ல ஆரம்பிக்கவேணும். ஜோதிடர் தெய்வ பக்தியுடையவராகவிருக்கவேணும், அல்லது இவரிடத்தில் தெய்வாம்சம் என்ற தெய்வீகத் தன்மை ஒரு துளி

யாகிலும் ஒரு அணுவளவாகிலும் (An iota of divinity) இருக்கவேணும். இதுவரையிலும் மேலே சொல்லப்பட்ட குணாதிசயங்களும் யோக்யதாம்சங் களும் ஜோதிடரிடம் இருந்தே தீரவேண்டும். இவைகளை எல்லாம் ஒரு ஜோதிடர் அடைந்திருப்பது இவருக்கு மிகவும் கஷ்டமான காரியங்களாக வே தோன்றும். ஜோதிட சாஸ்திரத்தைக் கொண்டு பலாபலன்கள் சொல்லவேண்டுமானால் இவ்விதமான வழியையே அனுசரிக்கவேண்டும். தன்னுடைய ஜாதகம் விஷயமாக ஒரு ஜோதிடரைப் பலாபலன்களைப்பற்றிக் கேட்கின்றவர் இந்த ஜோதிடர் தனக்குச் சொல்லிய பலாபலன்களில் ஏதாகிலும் தவறிப்போனால் இவ்விதமான சுலபமான விஷயத்தில் ஏன் இவர் தவறிப்போகக்கூடும் என்று தன்னுடைய அறியாமைத் தன்மையால் ஜோதிடரை இவர் ஒரு உபயோகமே இல்லாதவர், இவர் ஒன்றுக்குமே உதவ மாட்டார் என்று உடனே சொல்லி இவரைக் கண்டனமும் தூஷணமும் செய்துவிடுவது சகஜமாகவிருந்து வருகின்றது. ஆனால் ஒரு பெரிய நியாயாதிபதி (A great legal judge) தவறுதலான தீர்ப்பைக் கொடுத்து விட்டு இந்தத் தீர்ப்பு அபீல் கோர்ட்டில் அஃதாவது மேல் கோர்ட்டில் தவறுதலானது என்று சொல்லித் தள்ளிவிடப் பட்டால் கீழ் கோர்ட்டு நியாயாதிபதியை ஜனங்கள் இந்தத் தீர்ப்பு வேலைக்கு இவர் லாயக்கானவர் அல்ல என்று உடனே எண்ணிச் சொல்லாமல் இவர் பக்கமாகப் பரிந்து பேசி இவர் இப்படிச் செய்தது தீர்மானத்தில் ஒரு தப்பிதமே (Error of judgment) யன்றி வேறென்றும் இல்லை என்று சொல்லி மொழுவிவிட ஜனங்கள் பார்ப்பது சகஜமாகவிருக்கின்றது. ஒரு தவறுதலான தீர்ப்பை ஒரு நியாயாதிபதி செய்வாரானால் நியாயாதிபதியைக் கண்டிக்கவேணுமே தவிற நியாய சட்டம் கண்டனப் படுத்தப்படுவதற்கு லாயக்கானதல்ல. இவ்விதமாகவே ஒரு ஜோதிடர் தவறுதல் செய்துவிட்டால் ஜோதிடரைக் கண்டிக்கவேண்டுமே தவிர ஜோதிட சாஸ்திரம் கண்டனஞ் செய்யப்படுவ தற்கு லாயக்கானதல்ல.

ஜோதிட சாஸ்திரம் பலவிதமான பாகங்களாகப் பிரிக்கப்படும். இந்தப் பாகங்களில் பலபாக ஜோதிடம் (Judicial Astrology) சேர்ந்ததாகும். இந்தப் பலபாக ஜோதிடத்தில் கூட இரண்டு வகைகள் இருக்கின்றன. ஒன்று சாதாரண ஜோதிடம் அல்லது ஹோரா சாஸ்திரம் என்று சொல்லப்படும். மற்றொன்று நாடி ஜோதிடம் என்ற நாடி சாஸ்திரம் என்று சொல்லப்படும். இவ்விரண்டு வகைகளுக்கும் முக்கியமான வித்தியாசம் பின்வருகின்றதாகும். நாடி சாஸ்திரம் என்பது நான் மேலே முன்னமே சொல்லியிருக்கின்ற பிரகாரம் ஒரு லக்கினத்தையும் இராசியையும் நூற்றைம்பது சம பாகங்களாகப் பிரித்து ஒவ்வொரு பாகத்தையும் நாடி அம்சம் என்று சொல்லுகின்றது. துருவ நாடியும் சத்திய சம்ஹிதை நாடியும் ஒவ்வொரு நாடி அம்சத்தையும் மறுபடியும் இரண்டு சமபாகங்களாகப் பங்கிட்டு இவைகளுக்கு நாடி அம்சத்தின் பூர்வபாகம் என்ற முன்பாகம் என்றும் உத்தரபாகம் என்ற பின் பாகம் என்றும் பெயரிட்டிருக்கின்றது. அறுபது நாழிகைகள் கொண்ட ஒரு தினத்தில் இராசி மண்டலத்திலுள்ள பன்னிரண்டு இராசிகள் அல்லது

லக்கினங்கள் ஒரு தடவை உதயமாகின்றன. இந்த அறுபது நாழிகைகளைப் பன்னிரண்டு லக்கினங்களுக்கும் சமமாகப் பங்கிடப்பட்டிருக்கின்றது. ஆகையால் ஒவ்வொரு லக்கினத்திற்கும் ஐந்து நாழிகை அல்லது முன்னூறு விநாடிகள் வரும். ஆகையால் மொத்தமாகவுள்ள நூற்றைம்பது நாடி அம்சங்களின் மொத்த பாகங்களாகிய முந்நூறு பாகங்களுக்கு இந்த முன்னூறு விநாடிகளும் பங்கிடப்பட்டிருக்கின்றன. இவ்விதமாகச் செய்யவே ஒவ்வொரு நாடி அம்சபாகத்திற்கும் ஒரு விநாடியாக ஏற்படும். நூற்றைம்பது நாடி அம்சங்களில் உள்ள ஒவ்வொரு நாடி அம்சத்தையுஞ் சுக்கிர நாடி நான்கு உள் பாகங்களாகப் பிரிக்கின்றது. ஒவ்வொரு உள் பாகமும், நான்கு காலங்கள் என்று சொல்லப்பட்ட விப்ரகாலம், க்ஷத்திரிய காலம், வைசியகாலம், சூத்திர காலம் என்ற காலங்களில் ஒன்றுக்கு உரியதாகும். ஆகையால் இவ்வித மான ஒவ்வொரு உள் பாகமும் ஒவ்வொரு அரைவிநாடிக்கு உரியதாகும். இவ்விதமாகவே ஒரு கிரகம் இருக்கின்ற இராசிகூட, நாடி அம்சபாகங்க ளாகப் பங்கிடப்பட்டு கிரகங்கள் இந்த இந்த, அல்லது பலான பலான நாடி அம்சங்களில் இருக்கின்றன என்று சொல்லப்பட்டு வருகின்றன. இது தான் நாடி ஜோதிடத்தின் சாதாரணமான வழி வகை உபாயம் (Scheme) ஆகும். இவ்விதமாக ஒரு லக்கினத்தை அல்லது கிரகங்கள் இருக்கும் ராசிகளை முந்நூறு அல்லது அறுநூறு நுட்பமான பாகங்களாகப் பங்கிட்டு இவைகளில் கிரகங்கள் இருப்பதால் ஏற்படக்கூடிய துல்லியமான பலாபலன் களைச் சொல்லுவதற்காக ஜோதிட சாஸ்திர விதிகள் மிகவும் விஸ்தார மாகவும் ஏராளமாகவும் ஒரு காலத்தில் இருந்திருக்க வேண்டும் என்று தோற்றுகின்றது. ஒரு ஜாதகத்தின் மிகவும் நுண்ணிய, சூட்சமமான விஷயங்கள் (Minute details of a life) இந்த துருவநாடி சுக்கிரநாடி ஆகிய இவைகளில் காரணங்களுடனும் மேற்கோள்களுடனும் சொல்லப் பட்டிருக்கின்றன. இந்தக் காரணங்களில் அல்லது மேற்கோள்களில் இருந்து மேற் சொல்லிய விதிகளின் சில உதாரணமான அல்லது மோஸ்தரான, அல்லது மாதிரியான விஷயங்கள் (Samples) புலப்படு கின்றன. இந்த நாடிகளைப்போன்ற நாடிகளின் கிரந்தகர்த்தர்கள் ஜோதிட சாஸ்த்திரத்தின் விதிகளும் அல்லாமல் இயற்கையுணர்வு, சகச ஞானம் (Intuition), உள்ளாராய்வு (Insight) ஆகிய இவைகளையும் உபயோகப்படுத்தி இந்த நாடிகளில் சொல்லியுள்ள மிகவும் நுட்பமான, நுண்ணிய, சூட்சுமமான விஷயங்களைச் சொல்லியிருக்கவேணும் என்று தோற்றுகின்றது. சத்தியமஹரிஷி அவர்களே தன்னுடைய ஜோதிட வித்தையின் உதவியாலும் இயற்கையுணர்வு, சகசஞானம் (Intution) என்றதின் உதவியாலும் பலாபலன்களைச் சொல்லப் போவதாகத் தன்னுடைய நாடியில் தெரிவித்திருக்கின்றார். நாடி ஜாதகங்களில் அடிக்கடி சொல்லப்பட்டிருக்கின்ற மிகவும் ஆச்சரியப்படத் தக்க நுண்ணிய நுட்பமான விஷயங்களை ஜோதிட சாஸ்திரத்தின் உதவி ஒன்றையே கொண்டு சொல்லுவது அசாத்தியமான காரியமே ஆகும். தற்காலத்தில் அநேகவிதமான நாடி சாஸ்திரங்கள் புழக்கத்திலிருந்து வருகின்றன. இவைகளில் மிகவும் முக்கியமானவைகளாயும் ஜன சம்மதமானவைகளா

யும் வழக்கத்திலுள்ளனவாயும் (the most important and popular) உள்ளவைகள் (1) இந்தச் சப்தரிஷிநாடி (என்ற சப்தரிஷி வாக்கியம்) (2) துருவநாடி அல்லது ஸத்யஸம்ஹிதைநாடி, (3) சுகர்வாக்கியம், (4) சுக்கிர நாடி, (5) பிருகுஸம்ஹிதாநாடி முதலியனவாகும். பரமேஸ்வரருடைய மனைவியாகிய பார்வதியம்மனின் அக்ராஸனத்தின் கீழ் நடத்தப்பட்ட சப்த ரிஷிகளின் ஜோதிட சாஸ்திர கொலுவில் இந்த சப்தரிஷிகளாலும் பார்வதி யம்மையாலும் இந்தச் சப்தரிஷி நாடி உண்டாக்கப்பட்டதாகும். அக்கிரா சனாதிபதியாகிய பார்வதியம்மையார் ஒருவருடைய ஜாதகத்தின் கிரகநிலை யையும், லக்கினத்தையும் சப்தரிஷிகளுக்கு எடுத்துச் சொல்லி இவர்களைப் பலா பலன்களைச் சொல்லும்படியாகக் கேட்கின்றார். இவ்விதமாகப் பார்வதி யம்மையார் கேட்ட உடன் ஒரு ரிஷி பலன் சொல்லவாரம்பித்து மேல்மேலும் பலாபலன்களைச் சொல்லிக்கொண்டே போகின்றார். ஜாதகருடைய மனைவியின் ஆயுள், அல்லது இவருக்கு ஆண் குழந்தை பிறத்தல், அல்லது இவருடைய ஆயுள் அல்லது இன்னம் சில விஷயங்கள் ஆகிய இவைகளைப் பற்றி அபிப்பிராயபேதம் ஏற்படுவதற்குச் சந்தர்ப்பம் உண்டாகும்போது இந்த அபிப்பிராய பேதத்தையோ அல்லது சந்தேகத்தையோ வாயுடைய ரிஷியானவர் பலாபலன்களைச் சொல்லிக்கொண்டே போகின்ற ரிஷியைத் தடுத்துக் கேள்விகளைக் கேட்கின்றார். இதன் பேரில் ரிஷிகளுக்குள் வாக்குவாதம் நடக்கின்றது. இந்த வாக்குவாதத்தில் இதர ரிஷிகளில் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட ரிஷிகள்கூட கலந்துகொள்ளுகின்றார்கள். இவர்கள் தங்கள் தங்களுடைய அபிப்பிராயங்களைத் தகுந்த காரணங்களுடன் சொல்லி வாதாடுகின்றார்கள். கடைசியாகச் சந்தேகமான விஷயத்தைப் பற்றி எல்லா ரிஷிகளுஞ் சேர்ந்து ஒரு தீர்மானத்திற்கு வருகின்றார்கள். இவர்கள் ஒருவிதமான தீர்மானத்திற்கும் வராமல் முடிவில்லாமல் வாதாடிக்கொண்டே இருந்தால் பார்வதியம்மையார் இந்த வாக்குவாதத் தில் பிரவேசித்து தன்னுடைய அபிப்பிராயத்தைக் கடைசித் தீர்மானமாகச் சொல்லி இந்த வாதத்தை நிறுத்திவிடுகின்றார். சில சமயம் அடிஸ்ஸன் (Addison) என்ற பண்டிதருடைய ஸர்ரோஜர்டி காவர்லி (Sir Roger de Coverley) என்பவர் தான் வழக்கமாய்ச் சொல்லுவதைபோல இருகட்சிக் காரர்களின் பக்கத்திலும் அல்லது சார்பிலும் அதிகமான விஷயங்கள் சொல்லக்கூடும் என்றும் பார்வதியம்மையார் சொல்லுவதுண்டு; அல்லது ஒரு சமயம் வாதஞ்செய்கின்ற ரிஷிகளுக்குள் முக்கியமாய் வாதாடுகின்ற இரண்டு ரிஷிகளுட் ஒரு விதத்தில் பலனைச் சரியாகவே சொல்லி இருக்கின் றார்கள் என்றும் பார்வதியம்மையார் சொல்வதுண்டு. உதாரணமாக "ஜாதகருக்கு ஒரு மனைவியா, இரண்டு மனைவிமார்களா என்ற விஷயத்தைப் பற்றி ரிஷிகள் முடிவிற்கு வராமல் வாக்குவாதஞ் செய்துகொண்டிருக்கும் போது இரண்டு ரிஷிகள் சொல்லுவதும் சரியானவைகளே, ஜாதகர் இரண்டு மனைவிமார்களை உடையவராவர், ஆனல் இவர்களில் ஒருத்தி சாஸ்திர விதிப் பிரகாரம் கலியாணஞ் செய்யப்பட்டவளாவள், மற்றொருத்தி வைப்பாட்டியாய் இருந்த போதிலுங்கூட விவாகஞ் செய்யப்பட்ட மனைவியைப் போலவே ஜாதகருடன் இருந்துவாழ்வாள்" என்று பார்வதியம்மையார் தன்னுடைய அபிப்பிராயத்தைத் தீர்மானமாகத் தெரிவிப்பதுண்டு.

நான் இனிமேல் இந்த நாடியைப் பற்றியும் இதன் செய்வகையைப (technique) பற்றியும் கூடியமட்டும் விரிவாகப் பரிசோதனை செய்யப் போகிறேன். ஜாதக பலாபலன்களைச் சொல்வதில் தலையிட்டுள்ள ரிஷிகளின் சங்கியையிலிருந்து இந்த நாடிக்குப் பெயர் கொடுக்கப் பட்டிருக்கின்றது. அஃதாவது ஏக காலத்தில் ஏழு ரிஷிகள் ஜாதகத்தை ஆராய்ச்சி செய்வதால் இந்த நாடிக்குச் சப்தரிஷி நாடி என்று பெயர் கொடுக்கப் டிருக்கின்றது. ரிஷிகள் அநேகம் பேர்கள் இருந்திருக்கின்றார்கள். 1935-ம்வருஷத்தில் அச்சிட்ட ஜூபிலி தமிழ்ப் பேரகராதியில் 400-ஆவது பக்கத்தில் கொடுத்துள்ள பிரகாரம் நான்கு விதமான "சப்தரிஷி கூட்டங்கள்" இருக்கின்றன. இவைகள் I (1) அத்திரி, (2) ஆங்கீரஸர், (3) கௌதமர், (4) ஸமதக்னி, (5) பரத்துவாசர், (6) வசிஷ்டர், (7) விஸ்வாமித்திரர்; II (1) அகத்தியர், (2) ஆங்கீரஸர், (3) கௌதமர், (4) காசிபர், (5) புலத்தியர், (6) மார்க்கண்டர், (7) வசிஷ்டர்; III (1) மரீசி, (2) ஆங்கீரஸர், (3) புலவகர், (4) வசிஷ்டர், (5) அத்திரி, (6) புலத்தியர், (7) கிரது; IV (1) காசிபர், (2) அத்திரி, (3) பரத்துவாசர், (4) விஸ்வாமித்திரர், (5) கௌதமர், (6) ஸமதக்னி, (7) வசிஷ்டர் ஆகும். இந்த நாடியில் கீழ்கண்ட ரிஷிகள் இந்த ஜோதிடக் கொலுவில் கூடிக்கொண்டு ஜாதகத்தின் பலாபலன்களைச் சொல்லுவதில் கலந்து கொள்ளுவதாகக் கண்டிருக்கின்றது. (1) வசிஷ்டர்—666-ஆவது பக்கம், 34 ஆவது செய்யுளைப் பார்க்கவும், (2) அகஸ்தியர்—655 ஆவது பக்கம், 2 ஆவது பாடல், (3) பராசரர்—658 ஆவது பக்கம் 13 ஆவது பாடல், (4) பிருகு—699 ஆவது பக்கம், 11 ஆவது பாடல், (5) கௌசிகர்—731 ஆவது பக்கம், 2 ஆவது பாடல், 2 ஆவது பக்கம், 2 ஆவது பாடல், (6) அத்திரி—641 ஆவது பக்கம், 15 ஆவது பாடல், (7) ஜயமுனி—613-ஆவது பக்கம், 30 ஆவது பாடல், (8) புஜண்டர்—613 ஆவது பக்கம், 30 ஆவது பாடல், (9) விருத்தர்—824 ஆவதுபக்கம், 23ஆவது பாடல், (10) அருவர்—609 ஆவது பக்கம், 18 ஆவது பாடல், (11) ஜடைமுனி—714 ஆவது பக்கம், 21 ஆவது பாடல், (12) தேவகுரு அல்லது சுரகுரு—1031 ஆவது பக்கம், 2 ஆவது பாடல் பார்க்கவும். ஆகையால் இந்த ஜோதிடக் கொலுவில் (Astrological Session) ஒன்றிற்கு மேற்பட்ட சப்தரிஷி கூட்டத்தில் சேர்ந்த ரிஷிகள் கலந்துகொண்டு பலாபலன்களைச்சொல்லுவதில் பங்கெடுத்துக்கொள்ளுகின்றார்கள் என்று தெரியவருகின்றது. இந்த சப்த ரிஷிகளினுடைய மேதாவி கூட்டத்தில் (Galaxy of Rishis), அபாரமான அநுபவங்களையும் விவேகத்தையும் (Vast experiences and knowledge) மிகவும் பிரகாசமான பெருந்திறமையுள்ள, புத்தியையும் (brilliant intellect) உடைய பல சிறந்த ரிஷி புங்கவர்கள் இருக்கின்றார்கள். இப்படிப்பட்ட ரிஷிகள்கூட, பலாபலன்களைச் சொல்லுவதில் சில கஷ்டமான, சிக்குமுக்கான விஷயங்களில் (intricate points) திணறிப்போய்த் தடுமாற்றம் அடைந்து சந்தேகமான (doubtful), இரண்டில் ஒன்றான (alternate), ஒரு ஷரத்தின்மீது நடக்கக்கூடியதான (conditional) பலாபலன்களைச் சொல்லி இருக்கின்றார்கள். இதனால் சாதாரண மனுஷனாகிய ஜோதிடர் ஒருவருடைய ஜாதகத்தின் பலாபலன்களைச் சொல்லுந் தன்னுடைய தொழிலில் தனக்கு உண்டாகின்ற பெரிய பெரிய கஷ்டங்களையும் சிக்கல்களையும் இந்த ரிஷிகளே

எடுத்துக் காட்டியிருப்பது போல இந்த விஷயம் தெரிவிக்கின்றது என்று நாம் கருதக்கூடும். இவ்விதமாகச் சந்தேகமான, இரண்டில் ஒன்றான, ஒரு ஷரத்தின்மீது நடக்கக்கூடியதான பலாபலன்கள் விஷயமாகக் கீழ் கண்டுள்ள உதாரணங்களைக் கவனிக்கவும். (1) 606 வது பக்கம், 5-வது பாடல், (2) 613-வது பக்கம், 29-வது பாடல், (3) 73-வது ஜாதகம், 19-வது பாடல், (4) 906-வது பக்கம், 14-வது பாடல், (5) 98-வது பக்கம், 11-வது பாடல், (6) 21-வது பக்கம், 30-வது பாடல், (7) 18-வது பக்கம், 17-வது பாடல், (8) 48-வது பக்கம், 28-வது பாடல் ஆகிய இவைகள் உதாரணங்களாகும். 606-வது பக்கத்தில் 5-வது பாடலில் ஜாதகருடைய தகப்பனருக்கு இன்னம் அதிகமான சகோதரர்களும் சகோதரிகளும் பிறந்தாலுங்கூட இவர்கள் சீக்கிரத்தில் இறந்து விடுவார்கள் என்றும் இந்த ஜாதகருக்கு இளைய சகோதரர்களும் இளைய சகோதரிகளும் கிடையாதென்றும், ஒரு சமயம் இவர்கள் பிறந்தாலும் இவர்கள் சீக்கிரம் இறந்து விடுவார்கள் என்றும் சொல்லி இருக்கின்றது. இது சந்தேகமான இரண்டில் ஒன்றான பலனைப்பற்றிய உதாரணமாகும். 611, 612, 613-வது பக்கங்களில் 25, 27, 29-வது செய்யுள்களில் ஜாதகருக்கு இரண்டு மனைவிமார்கள் உண்டென்றும், இந்த ஜாதகர் தன்னுடைய முற்பிறப்பில் தான் செய்த கெட்ட கர்மாவின் பயனாகவும், பாபங்களாலும், தோஷங்களாலும் இவருடைய சந்ததிகள் விருத்தியாகமாட்டார்கள் என்றும், ரிஷிகள் சொல்லியுள்ள போதனை (advice) பிரகாரம் ஜாதகர் பிராயச்சித்தங்களை, பாபநாசத்திற்கான பரிகாரங்களை (expiatory ceremonies) செய்வாராகில் இவருக்கு ஒரே ஒரு மனைவிதான் சம்பவிப்பாள், இவருடைய குழந்தைகளும், இவருடைய குடும்பத்தையும், சம்பத்தையும் பற்றிய சகலமும் விருத்தியடையும் என்றும் ரிஷிகள் அறிவித்த சாந்திகளை இவர் செய்யாவிட்டால், இவருடைய மனைவி உண்மையிலே இறந்துவிடுவாள் என்றும் இவருடைய சந்ததிகள் உண்மையாக விளங்கமாட்டார்கள், நன்றாக விருத்தியாக மாட்டார்கள் என்றும் சொல்லி இருக்கின்றது. இப்படிச் சொல்லியிருப்பது ஒரு ஷரத்தின்மீது நடக்கக்கூடியதான பலனைப் பற்றிய உதாரணமாகும்.

இந்த நாடியில் நான் இதுவரையிலும் பார்த்த ஜாதகங்களிலிருந்து, பார்வதியம்மையார் அம்சைச் சக்கரத்தில் கிரகங்கள் இருக்கின்ற நிலைகளை யாவது அல்லது வழக்கமான சோடச வர்க்கங்கள் என்று சொல்லப்பட்ட வர்கச் சக்கரங்கள் முதலியவைகளில் உள்ள கிரக நிலைகளையாவது, ரிஷிகளுகுத் தெரிவிப்பது கிடையாதென்று தோற்றுகின்றது. ஆகையால் உள்ளே அதிகமாக நுழைந்து பார்க்காமல் மேலேயே பார்த்துவிட்டு அல்லது ஆராய்ச்சி செய்துவிட்டுபோகின்ற ஒருவர், கிரகங்கள் பலவிதமான வர்க்கங்களில் இருக்கின்ற நிலைகளை அல்லது ஸ்திதிகளைக் கணிக்காமலும் அல்லது எந்த மார்க்கத்திலாகிலும் தெரிந்து கொள்ளாமலும் மிகவும் ஆச்சரியகரமான பலாபலன்களைச் சொல்லியிருக்கின்றார்கள் என்றும் அபிப்பிராயப்படுவதற்குக் காரணம் இருப்பதாகத் தோன்றுகின்றது. ஆனால் மிகவும் ஜாக்கிரதையாகவும் ஸூக்ஷமமாகவும் பரிசோதனை செய்து பார்ப்போமானால், ரிஷிகள் பலாபலன்களைச் சொல்லுவதற்காகத் தேவையான சகலவிதமானவைகளையும்

வர்க்கங்களேயும் கணிதங்கள் மூலமாகவும் அல்லது இயற்கை யுணர்வு என்ற சகச ஞானசக்தியாலும் (intuition) தெரிந்து கொண்டே பலாபலன்களைச் சொல்லி இருக்கின்றார்கள் என்று சந்தேகத்திற்கிடமில்லாத விதமாகத் தெரியவருகின்றது. உதாரணமாக 665 ஆவது, 666 ஆவது பக்கங்களில், 35 ஆவது பாடல்களில் ஜாதகர், தன்னுடைய ஐந்தாவது வயது முதல் ஐம்பதாவது வயது வரையிலுள்ள காலம் வரையிலும் அதிருஷ்ட முள்ளவராகவே (fortunate) விருப்பார் என்று அகஸ்திய முனிவர் சொல் லும் போது வசிஷ்ட முனிவர் இதனை ஆக்ஷேபித்து குருவும் சனியும்கூடி ஆறுவது பாவத்தில் இருப்பதால் ஜாதகருக்குக் கெடுதிகளும் துரதிருஷ்டமும் உண்டாகும் என்று சொல்லவே, குரு தேவலோகாம்சத்தில் இருப்பதால் நல்ல பலன்களே உண்டாகும் என்று ஆக்ஷேபணைக்குப் பதில் சொல்லி இருக்கின்றார். தேவலோகாம்சம் என்பது பலவிதமானவர்க்கங்களில் ஏழு வர்க்கங்களிலும் ஒரே இராசியில் ஒரு கிரகம் இருப்பதினால் உண்டாகின்ற ஒரு விதமான நல்ல அம்சமாகும். இது விஷயமாகச் சர்வார்த்த சிந்தாமணியில் ஓராவது அத்தியாயத்தில் இருபதாவது சுலோகம், ஜாதகபாரி ஜாதத்தில் ஓராவது அத்தியாயத்தில் நாற்பத்தாறுவது சுலோகம், ஆகிய இவைகளைப் பார்க்கவும். ஒவ்வொரு ஜாதகத்திலும் இந்த நாடியானது கீழ்கண்ட விஷயங்களைப் பற்றிப் பெரும்பாலும் தவறிடாமல் சொல்லுகின்றது.

" பெற்ற தாய் தந்தை யோகம் பேதையர் புத்திர் யோகம்
சுத்தமாய் முன்பின் ஜன்மம் செப்புவோ மிந்நூல் தன்னில் "

இதனுடைய அர்த்தம் பின்வருமாறு ஆகும். ஜாதகரைப் பெற்றெடுத்த தாயார், தகப்பனார் ஆகிய இவர்களுடைய யோகம், ஜாதகருடைய மனைவி, சந்ததிகள், ஆகிய இவர்களுடைய யோகம், முன் ஜன்மம், பின் ஜன்மம், ஆகையால் இவைகள் எல்லாவற்றையும் பற்றியும் இந்தச் சாஸ்திரத்தில் சுத்தமாகவும் பிழையில்லாமலும் சொல்லுகின்றோம். 708-வது பக்கம், 3-வது பாடல், 746-வது பக்கம், 3-வது பாடல், 759-வது பக்கம், 3-வது பாடல், 1092-வது பக்கம், 3-வது பாடல், ஆகிய இவைகளை வாசிக்கவும். இந்த விஷயங்கள் எல்லாவற்றையும், இவ்விஷயங்கள் போன்ற ஜாதகருடைய எல்லா விஷயங்களையும் சாந்திகளைப் பற்றியும், சில நோய்கள் விஷயமாய் வைத்திய முறைகளையும் ஆகிய இவைகள் எல்லாவற்றையும் இந்த நாடி சொல்லுகின்றது. முன் ஜன்மம் சம்பவித்த இடத்தைப்பற்றியும் பின்ஜன்மம் சம்பவிக்கப்போகின்ற இடத்தைப் பற்றியும் ஒரு குறிப்பாகத் தவறாமல் சொல்லிவரும்போது இந்த ஜன்மம் சம்பவித்த இடத்தை மாத்திரம் குறிப்பாகச் சொல்லாமல் விட்டுவிடுவதற்குக்காரணம் என்ன வென்று ஒரு வியப்படையக்கூடும். உதாரணங்களுக்காகப் பின்வருவன வற்றைப் பார்க்கவும். 574-வது பக்கம், 44-வது பாடல், 11-வது பக்கம், 42-வது பாடல், 12-வது பக்கம், 47-வது பாடல், 797-வது பக்கம், 10-வது பாடல், 1100-வது பக்கம், 22-வது பாடல் ஆகிய இவைகளைப் பார்க்கவும், முன் ஜன்ம இடங்களும் பின் ஜன்ம இடங்களும் பெரும்பாலும் இந்தியா தேசத்திலேயே இருக்கின்றன. உதாரணமாக இவைகள் காஞ்சீவரம், திருவண்ணாமலை, ஸ்ரீரங்கம், திருப்பதி,

திருக்கழுக்குன்றம், மதுரை, துவாரகாபுரி, தக்கோலம், குடகுநாடு, விருஞ்சி நாடு முதலியனவாகும். ரிஷிகளுக்கு விரோதமில்லாமல் இவர்களுக்கு அனுகூலமான இந்த ஜன்ம இடத்தைப்பற்றிய ஒரு காரணத்தை நான் யூகித்திருக்கின்றேன். ஆனால் இந்தக் காரணத்தைப் பற்றி எனக்குப் பூரண நம்பிக்கையில்லாமல் இன்னும் கொஞ்சம் சந்தேகம் இருப்பதால் நான் இதை இங்கு தெரிவிக்கத்துணியவில்லை. இந்த ஜன்ம இடத்தைத் தெரிவிக்காமல் ரிஷிகள் விட்டுவிடுவதற்கு இவர்கள் ஒரு காரணத்தை வைத்துக்கொண்டிருக்க வேண்டும் என்று தோற்றுகின்றது. இந்தக் காரணத்தை இந்தப் புத்தகத்தை வாசிப்பவர்களே யூகிக்கட்டும் என்று இந்த விஷயத்தை இத்துடன் விட்டுவிடுகின்றேன்.

பலவிதமான வருஷங்கள் வித்தியாசமான கால அளவுடன் இருந்து வருகின்றன. இவைகள் (1) முன்னூற்றைம்பத்து நான்கு நாட்கள் கொண்ட சாந்திரமான வருஷம், (2) முன்னூற்றறுபது நாட்கள் கொண்ட சாவன வருஷம், (3) முன்னூற்றறுபத்தைந்தேகால் நாட்கள் கொண்ட சௌரமான வருஷம் முதலியன ஆகும். ஜாதகத்தின் பலாபலன்கள் நடக்குங் காலத்தைக் குறிப்பிடுவதற்காக உபயோகப்படுத்தப்பட்டுவருகின்ற உடுமகாதசை என்ற நக்ஷத்திரத்தை அநுசரித்த தசைகளில் சாவன வருஷம் சௌரமான வருஷம் என்ற இவ்விரண்டுவித வருஷங்களில் எந்த வருஷ காலத்தை உபயோகிக்கபட்டிருக்கின்றது என்பது இப்போது ஆராய்ச்சி செய்வதற்கு ஒரு லாயக்கான கேள்வியாகும். இந்தக் கேள்வி விஷயமாகச் சுமார் முப்பது வருஷங்களுக்கு முந்தி "இந்து பத்திரிகையில்" மனவெழுச்சியான (heated) உற்சாகத்தைத் தரக்கூடிய தீவிரமான (lively) காரசாரமான ஒரு வாக்குவாதம், தர்க்கம் (controversy) நடந்தது ; இதில் வேதாரண்யத்தில் வாசஞ்செய்து கொண்டிருந்த ஸ்ரீரமண சாஸ்திரி அவர்கள், ஸ்ரீ இராகவேந்திரபட் அவர்கள், இரங்கோனில் இருந்த ஸ்ரீ பரமேஸ்வர ஐயர், ஆகிய அக்காலத்து மேதாவிகளான ஜோதிட சாஸ்திரிகள் உள்பட இன்னம் பல ஜோதிட சாஸ்திர மேதாவிகள் கலந்து கொண்டார்கள். இநத வாக்குவாதம் ஒரு முடிவிற்கும் அல்லது தீர்ப்பிற்கும் வராமலேயே அநேக நாள் இந்த "இந்து நித்திய பத்திரிகை" மூலமாக நடந்து கொண்டுவரவே பத்திரிகைக்குச் சொந்தக்காரர் இந்த வாக்குவாதத்தை நிறுத்தி விடுவதற்காகப் பத்திரிகையில் இது விதமாகப் பிரசுரஞ் செய்வதை நிறுத்தி விட்டார். இந்தக் கேள்வி அல்லது பிரச்னே (this question) இதற்குப் பிறகு பத்திரிகைகளில் பல தடவைகளிலும் சில சமயங்களில் ஜோதிட பல கலை திரட்டுகளிலும் (astrological magazine) ஜனங்களால் கேட்கப் பட்டிருக்கின்றது. ஆனால் இது இன்னம் விவாதஞ் செய்யக்கூடிய கேள்வியாகவே இருந்து வருகின்றது (this question is still a moot-point). உடுமகாதசைக்குள்ளேயே இருக்கின்ற சாக்ஷி (internal evidence) சாவன வருஷ காலத்திற்கு அனுகூலமானதாகவே இருக்கின்றது. ஏனென்றால் உடுதசையைப் புக்திகளாகவும் அந்தரங்களாகவும் பங்கிடுவதற்கு ஒரு வருஷத்தைப் பன்னிரண்டால் பெருக்கி மாதமாகவும், ஒரு மாதத்தைக் முப்பதால் பெருக்கி நாட்களாகவும் வெகு சூக்ஷ்மாகப்பங்கிட்டு இருக்கின்றது. பன்னிரண்டை முப்பதால் பெருக்க முந்நூற்றறுபது வருகிறது. இந்த முந்நூற்றறுபது நாட்கள்

தான் ஒரு சாவன வருஷத்தில் இருக்கின்றன. பலதீபிகை என்ற ஜோதிட புத்தகத்தில் பத்தொன்பதாவது அத்தியாயத்தில் நான்காவது சுலோகத்தில் சௌரமான வருஷத்தையே உடுதசை விஷயத்தில் உபயோகப் படுத்த வேண்டும் என்று ஸ்திரமாகவும் சந்தேகமறவும் சொல்லி இருக்கின்றது. இந்த ஒரு வருஷகாலம் என்பது சூரியன் ஆகாயத்தில் கிராந்தி மண்டலத்தில் (ecliptic) ஒரு குறித்த இடத்திலிருந்து புறப்பட்டு பூர்த்தியான ஒரு சுற்றைச் சுற்றி மறுபடியும் அதே குறித்த விடத்திற்கு வரச் சொல்லுகின்ற காலமே ஆகும் என்று இந்தப் புத்தகத்தின் ஆசிரியரான மந்திரேஸ்வரரால் சொல்லப்பட்டிருக்கின்றது. கிரகங்களின் ஷட்பலங்களேயும், பாவ பலங்களையும், இவைகளின் மூலமாய் ஆயுளேயும் நிர்ணயிக்கின்ற கணித வழியில் முந்நூற்றறுபது நாட்கள் கொண்ட சாவன வருஷத்தையே ஸ்ரீபதி என்றவர் தன்னுடைய ஸ்ரீபதி பத்ததி என்ற ஜோதிட கணித சாஸ்திரத்தில் அங்கீகரித்திருப்பதாகத் தோற்றுகின்றது. உடுதசை வருஷங்களுக்கு முந்நூற்றறுபத்தைந்தே கால் நாட்கள் வீதம் கணக்கிடக்கூடாது என்றும், ஆயுள் கணிதத்தில் முதலில் கணிதம் செய்யும் போதெல்லாம் கணித வகையில் ஒரு வருஷத்திற்கு முந்நூற்றறுபது நாட்கள் வீதம் கணிக்க வேண்டும் என்றும் இவ்விதமாகக் கணித்து வருகின்ற தசையின் அளவை மாத்திரம் சாதாரணமாக ஜனங்களுடைய வழக்கத்தில் இருந்து வருகின்ற முந்நூற்றறுபத்தைந்தேகால் நாட்கள் கொண்ட சௌரமான வருஷ கணக்கில் ஆயுளே அறிவதற்காகவே முந்நூற்றறுபத்தைந்தேகால் நாள் கொண்ட சௌரமான வருஷமாக மாற்ற வேணும் என்ற அபிப்பிராயத்தைத் தெரிவித்திருக்கின்றுர் என்று சிலர் அபிப்பிராயப்படுகின்றுர்கள். உடுமகா தசையை உண்டு பண்ணிய காரணங்களேப்பற்றி ஆராய்ச்சி செய்கின்ற ஆராய்ச்சியாளர்கள் (research scholars who desire to explain the rationale of udu-dasa system) முந்நூற்றறுபத்தைந்தேகால் நாட்கள் கொண்ட சௌரமான வருஷத்தையே அங்கீகரிப்பதைப் போலத் தோற்றுகின்றது. இந்த சப்தரிஷி நாடி முந்நூற்றறுபத்தைந்தேகால் நாட்கள் கொண்ட ஒரு (சௌரமான) வருஷத்தையே சந்தேகமில்லாமல் ஸ்பஸ்டமாகவும் திட்டமாகவும் (definitely) உபயோகப்படுத்தி இருப்பதாகத் தான் தெரியவருகின்றது. இதைப் பற்றி இந்தப் புத்தகத்தில் நெ. 103-வது பக்கத்தில் நாற்பத்திரண்டாவது பாடலின் கீழ் கொடுத்துள்ள வியாக்கியானத்தையும், 1136-வது பக்கத்தில் முப்பத்திரண்டாவது பாடலின்கீழ் கொடுத்துள்ள வியாக்கியானத்தையும் வாசிக்கவும். மேலும், இந்த நாடி ஒரு ஜாதகருக்கு உண்டாகக்கூடிய நோய்களின் பெயரையும், இந்த நோய்கள் நிவர்த்தியாவதற்காக உபயோகப்படுத்தவேண்டிய அல்லது பிரயோகஞ் செய்ய வேண்டிய மருந்துகளேயும், இம் மருந்துகளேச் செய்ய வேண்டிய முறைகளேயும் தெரிவிக்கின்றது. 5, 11, 12-வது பக்கங்களில் 17, 43-முதல் 47-வது வரையிலுமுள்ள பாடல்களே வாசிக்கவும். இந்தச் செய்யுள்கள் ஒரு ஷரத்தின்பேரில் உண்டாகின்ற பலன்களேப் (conditional prediction) பற்றிச் சொல்லுகின்றதற்குக்கூட உதாரணமானவைகள் என்று கருதலாம். ஏகாதசி அமாவாசை ஆகிய இப்படிப்பட்ட விரததினங்களில் ஒரு ஸ்திரீயுடன் சம்போகஞ் செய்கின்ற ஒரு புருஷன், ஸ்திரிரோகம், கிரந்திரோகம், காரக

ரோகம், மேகரோகம் ஆகிய இந்த ரோகங்களினால் தண்டிக்கப்பட்டுக் கஷ்டங்களை அநுபவிப்பார் என்று இந்த நாடி தெரிவிக்கின்றது. இதைப பற்றி ஐந்தாவது பக்கத்திலுள்ள பதினேழாவது செய்யுளைப் பார்க்கவும்.

ஜீவாத்மா அல்லது பிராணன் (soul) என்றது ஒனறு உண்டு என்றும், இதற்கு முற்பிறவிகளும் பிற்பிறவிகளும் (previous births and subsequent births) உண்டு என்றும், இதற்குப் பூர்வகர்மா (past karma) என்பது உண்டு என்றும், கர்மாவைப்பற்றியவாதம் அல்லது கோட்பாடு அல்லது விஞ்ஞானம் (Theory of Karma) என்றதைப்பற்றியும் நம்பிகையை ஜனங்களுக்கு ஊட்டுகின்ற உதாரணங்கள் இந்த நாடியில் எங்கு பார்த்தாலும் ஏராளமாக மலிந்தும் மிகுந்தும் கிடக்கின்றன. ஜீவாத்மா வைப்பற்றியும், ஜீவாத்மா ஒன்றே என்றும் அது பரமாத்மாவேயாகும் என்றும் (Monism), ஜீவாத்மாக்கள் பல உளவென்றும் (Dualism Pluralism) கர்மாவைப் பற்றிய வாதம் அல்லது விஞ்ஞானம் (Theory of Karma) ஆகிய இவைகளைப் பற்றியும் இந்து தேசத்திய வேதாந்தம், தத்துவ ஞானம் என்ற அறுவகை வேதாந்தங்களும் (Six Systems of Hindu Philosophy) ஆராய்ச்சி செய்திருக்கின்றன. ஒரு ஆத்மாவின் முதல் முதல் கர்மா என்பது எக்காலத்தில் எவ்விதத்தால் ஏற்பட்டதென்று யாராலும் எல்லோருக்கும் திருப்திகரமாய் இருக்கும்படிச் சொல்ல முடியாத விஷயம் என்று ஒரு தற்காலத்திய சிறந்த பண்டிதர் தன்னுடைய தத்துவ ஞான சாஸ்திர புத்தகத்தில் (A book on Philosophy) சொல்லியிருப்பதை நான் படித்திருக்கின்றேன். இந்த உலகத்தில் ஒரு மனிதர் தான் தன்னுடைய பூர்வ ஜன்மத்தில் அல்லது இந்த ஜன்மத்தில் செய்த கர்மத் திற்குத் தகுந்தபடியாகவே சுகத்தையும் கஷ்டத்தையும் அனுபவிக்கின்றார். ஒரு மனிதர் இரண்டு மனைவிமார்களை அல்லது ஒரு மனைவியையும் ஒரு வைப்பாட்டியையும் அடைவது ஒரு மனிதர் தனக்குப் புத்திரர்கள், சகோதரர்கள், பிதுரார்ஜித சொத்துக்கள் ஆகிய இவைகள் இல்லாம லிருப்பது, ஒரு மனிதர் தன்னுடைய மிகவும் இளம் பிராய வயதிலேயே தன்னுடைய மாதாவை இழந்து விடுவது, ஒரு மனிதர் தனக்கு ஒரு குடும்பம், வீடு இல்லாமல் ஒரு பைத்தியக்காரரைப் போலவும் நாடோடியைப் போலவும், பிச்சைக்காரனைப்போல அங்கும் இங்கும் ஓடி அலைந்து திரிவதும், ஒரு மனிதர் மிகவும் குரூரமான, பயங்கரமான ரோகத்தினால் கஷ்டப்பட்டுக் கொண்டிருப்பதும், இவைகளைப் போன்ற இன்னம் பலவிதமான கஷ்டங்களும், ஆகிய இவைகள் எல்லாம் இந்த சப்தரிஷி நாடியில் ஒருவருக்குத் தான் பெரும்பாலும் முன் ஜன்மத்தில் செய்த அல்லது அடையப்பட்ட கர்மா அல்லது பாபம் அல்லது தோஷம், அல்லது சாபம் ஆகிய இவைகளின் பயனாகவும், சிறும்பாலும் இந்த ஜன்மத்தில் கடந்துபோன வருஷங்களில் தான் செய்த அல்லது அடையப்பட்ட கர்மா அல்லது பாபம், அல்லது தோஷம் அல்லது சாபம் ஆகிய இவைகளின் பயனாகவும் உண்டா கின்றன என்றே சொல்லியிருக்கின்றது. ஒரு மனிதர் தன்னுடைய முன் ஜன்மத்தில் பாபங்களைச் செய்து சாபங்களை அடைந்த பயனாக அதே ஜன்மத்திலேயே தன்னுடைய வாழ்நாளின் கடைசி காலத்தில் கொஞ்சமாகக் கஷ்டத்தை அடைந்துவிட்டுத் தன்னுடைய தற்கால ஜன்மத்தில் அதிகமான

கஷ்டங்களை அநுபவிக்கின்றார் என்று இந்தச் சப்தரிஷி நாடியிலிருந்து சுத்த மாகத் தெரியவருகின்றது. ஒரு மனிதர் தன்னுடைய முன் ஜன்மத்தில் வழிநடை மார்க்கத்தில் வழிநடை யாளர்கள் தங்களுடைய தாகத்தைத் தீர்த்துக் கொள்ளுவதற்காகத் தண்ணீர் பந்தலை அமைத்து நீர்மோர் கொடுப்பது, கோயில்களில் தேவ கைங்கரியங்கைச் செய்தல் அல்லது ஜனங்களுக்கு இவர்களுடைய கஷ்ட காலங்களில் சேவைபுரிதல், ஒரு மனிதர் தன்னுடைய முன் ஜன்மத்தில் புண்ணிய தீர்த்தங்களுக்கும் தெய்வீக ஸ்தலங்களுக்கும் சென்று அவ்விடத்தில் புண்ணிய நதிகள், தீர்த்தங்கள் ஆகிய இவைகளில் ஸ்நானஞ் செய்தல், ஆகிய இப்படிப்பட்ட நல்ல காரியங்கள் தர்ம காரியங்கள் ஆகிய இவைகளைச் செய்தலின் பயனாக இந்த ஜன்மத்தில் உயர்ந்த குலத்தில் பிறத்தல், நல்ல அந்தஸ்தையும் உயர்ந்த பதவியை அடைதல் அதிக பாக்கியத்தையும் சம்பத்தையும் அடைதல், முன் ஜன்மத்தில் தன்னால் உதவி செய்யப்பட்டவர்களால் இந்த ஜன்மத்தில் தான் உதவி செய்யப்படுவது ஆகிய இவைகள் எல்லாம் சம்பவிக்கின்றன என்று இந்த நாடியில் இருந்து தெரியவருகின்றது. உதாரணமாக :—

(1) தன்னுடைய முன் ஜன்மத்தில் ஒரு பிராமண ஸ்திரீயையும் இவளுடைய குழந்தைகளையும் தங்களுடைய வழிநடை மார்க்கத்தில் திருடர் களிடத்தில் சிக்கிக் கொண்டு கஷ்டப்படாமல் இருக்கும்படியாகக் காப்பாற்றின ஒரு மனிதருக்கு இந்த ஸ்திரீயே இந்த ஜன்மத்தில் இரட்டைப் பிறவி சகோதரியாகப் பிறந்து இவரை ஆதரித்து வருகின்றாள். இது விஷயமாகப் பத்தாவது பக்கத்தில் 37-வது முதல் 39-வது பாடல் வரையிலுமுள்ள பாடல்களை வாசிக்கவும்.

(2) தன்னுடைய புருஷன் தன்னுடைய பூர்வ ஜன்மத்தில் இறந்து விட்டபிறகு தன்னுடைய பணத்தை ஒரு மனிதனிடம் பாதுகாப்பிற்காக கொடுத்துவைத்துப் பிறகு இந்த மனிதர் இந்தப் பணத்தை ஏமாற்றிவிட்டு தானே அநுபவித்த பயனாக இவர் தன்னுடைய மறு ஜன்மத்தில் இந்த ஸ்திரீக்கு இவளுடைய பணத்தைத் திருப்பிக் கொடுப்பதற்காக இவளை இவர் இந்த ஜன்மத்தில் விவாகஞ் செய்து கொள்ளுகின்றார். இது விஷயமாக 797-வது பக்கத்தில் 11, 12, 13-வது செய்யுள்களைப்பார்க்கவும்.

(3) ஒரு ஏழை ஸ்திரீ திக்கற்றவளாகி ஒரு மனிதரிடம் சென்று அவரிடத்தில் வேலைக்காரியாக வேலை செய்வதாக ஒப்புக் கொண்டு இவரிடத்தில் சில காலம் இருந்து பிறகு இவர் வீட்டில் இல்லாத சமயம் பார்த்து இவருடைய பணம், நகைகள் ஆகிய இவைகளை எடுத்துக் கொண்டு ஓடிப் போய் மறைந்து விடவே இவளை இவர் ஒரு விநாயகருடைய கோயிலின் முன்பாகச் சாபித்தார். இதன்பயனாக இவள் தன்னுடைய மறு பிறப்பில் இந்த மனிதருக்குத் தன்னுடைய மறு பிறப்பில் வைப்பாட்டியாக வந்து அமைகிறாள். இது விஷயமாக 1000, 1001, 1002-வது பக்கங்களில் 2 24, 25, 26–வது செய்யுள்களை வாசிக்கவும்.

(4) தன்னுடைய முன் ஜன்மத்தில் ஒரு விவாகமான ஸ்திரீ உற்சவ காலத்தில் ஒரு கோவிலுக்குத் தன்னுடைய புருஷனுடன் சென்று கடவுளைத் தரிசித்துப் பிறகு கடை வீதிக்குப்போய் ஒரு வியாபாரியினுடைய கடையில் கூட்டம் அதிகமாவிருக்கும்போது மஞ்சள், சீப்பு, குங்குமம் இவைகளை வாங்கிக்கொண்டு இவைகளின் கிரயத்தை இந்த வியாபாரிக்குக் கொடுக்காமல் ஏமாற்றி ஒரு புள்ளிமானைப் போலப் பறந்தோடி மறைந்து போய்விடவே வியாபாரி இவள் பணங்கொடுக்காமல் போய்விட்டதைப் பின்னால் தெரிந்து கொண்டு இவளைத் தேடிப்பார்த்தும் இவள் அகப்படாமல் போய்விடவே இவளை இந்த வியாபாரி சபித்து விட்டதின் பயனாக இவள் அதே ஜன்மத்தில் இவள் வாங்கின வஸ்துக்கள் செலவாகிவிடுவதற்கு முன்னமே தன்னுடைய புருஷனை இழந்து தன்னுடைய மறு ஜன்மத்தில் விதவைத்தன்மையால் கடினமாகத் தண்டிக்கப்பட்டாள். ஒரு ஸ்திரீ விதவையாவதற்கு இப்படிப் பட்ட பாபத்தை அல்லது கெட்ட கர்மத்தை தன்னுடைய முன் ஜன்மத்தில் செய்து விட்டதாக இந்த நாடியில் அடிக்கடியும் நிலையாகவும் ஒரே மாதிரியாகவும் (in a stereo-typed manner) சொல்லியிருக்கின்றது. இவள் செய்த பாபம் ஒரு சிறிய அல்லது அற்பமானதாகத் தோற்றக்கூடும்; ஆனால் இதற்கு விதித்துள்ள தண்டனையானது குற்றத்திற்கு தகுந்தபடியாக வில்லாமல் மிகவும், பெரியதாகவும், கொடுமையானதாகவும் இருப்பதைப்போல தோற்றக் கூடும். ஆனால் இந்த அற்பமானதாகத் தோற்றுகின்ற குற்றத்தைச் செய்யத் தேடிக்கண்டெடுத்த காலமானது கோயிலுக்குப் போய்த் திரும்பிவந்த உடனேயுள்ள தெய்வீக சம்மந்தமான உற்சவகாலமாக விருப்பதால் இந்தச் சிறிய குற்றமும் பெரிய குற்றமாகவே ஆய்விட்டது போலும் தோற்றுகிறது. இதைப் பற்றி (1) 39-வது ஜாதகம், 16, 17, 18-வது செய்யுள்கள், (2) 37-வது ஜாதகம், 14, 15, 16, 17, 18-வது செய்யுள்கள், (3) 787-வது பக்கம் 16, 17, 18, 19-வது செய்யுள்கள், (4) 1014-வது பக்கம் 27-வது செய்யுள், (5) 1079-வது 17-வது செய்யுள், (6) 1215-வது பக்கம் 42-வதுசெய்யுள் ஆகிய இவைகளை வாசிக்கவும்.

(5) தன்னுடைய முன் ஜன்மத்தில் ஒரு மனிதர் தன்னுடைய வீட்டில் மனைப்பாம்பாக நெடு நாளாக வாசஞ்செய்து கொண்டிருந்த ஒரு பாம்பைப் புல்லாங் குழல் மூலமாக வாத்தியத்தை உண்டாக்கி அதனைத் தான் ஒளித்துக்கொண்டிருக்கின்ற விடத்தைவிட்டு வெளியே வரும்படியாக ஏமாற்றி அதனை வாத்தியத்தியினால் மயக்கிப் பிறகு அதனை தடியால் அடித்துக் கொன்று அதனை எமலோகத்திற்கு அனுப்பிவிட்ட பாபத்தின் பயனாக இந்த மனிதருக்கு இந்த ஜன்மத்தில் குழந்தைகளில்லாமலும் அல்லது குழந்தைகள் பிறந்து நாசமடையும்படியாகவும் தோஷம் வந்து சம்பவித்து விடுகின்றது. இவ்விதமாக ஜாதகத்தில் ஐந்தாவது பாவத்தில் அல்லது வீட்டில் இராகு அல்லது கேது இருந்தாலும் அல்லது இந்த ஐந்தாவது பாவத்தை இந்தக் கிரகங்கள் பார்த்தாலும், அடிக்கக்கடி பலவிடங்களில் ஒரேமாதிரியாகவும் நிலையாகவும் (in a stereo-typed manner) சொல்லியிருக்கின்றது. இது சம்பந்தமாக (1) 48-ஆவது பக்கம் 26-வது பாடல், (2) 101-வது பக்கம், 23-வது பாடல், (3) 1042-வது பக்கம், 37-வது பாடல்,

(4) 1056-வது பக்கம், 22-வது பாடல், (5) 1057-வது பக்கம், 29-வது பாடல், (6) 1213-வது பக்கம், 34-வது பாடல், (7) 1231-வது பக்கம், 38-ஆவது பாடல், (8) 48-வது பக்கம்', 26, 27 ஆம் பாடகள், (9) 43-வது பக்கம் 24-வது பாடல் ஆகிய இவைகளை வாசிக்கவும்.

(6) தன்னுடைய முன் ஜன்மத்தில் ஒரு மனிதர் ஒரு ஸ்திரீயுடன் ஒழுங்கற்ற முறையில் சம்போகஞ் (illicit intercourse) செய்யவே இதனால் இவளுக்குக் கர்ப்பந்தரித்து இந்தக்கர்ப்பத்தை இவர் அழிக்கப் பிரயத்தனப்பட்டு மருந்தை இவளுக்குக் கொடுக்கவே இவள் இவருடைய நல்ல எண்ணத்தினாலோ அல்லது கெட்ட எண்ணத்தினாலோ இறந்துவிட்டதால் இந்தப் பாபத்தின் பயனாக இவருக்குத் தன்னுடைய இந்த ஜன்மத்தில் மனைவி மக்கள் இறந்து இவர் இதனால் கஷ்டத்தை அனுபவிக்கின்றார். இது சம்மந்தமாக (1) 1131-வது பக்கம், 24-வது செய்யுள், (2) 5-வது பக்கம், 14-வது பாடல், (3) 20-வது பக்கம், 26, 27-வது பாடல்கள், (4) 22-வது பக்கம், 26-வது பாடல், (5) 643-வது பக்கம், 21, 22-வது பாடல்கள், (6) 714-வது பக்கம், 19-வது பாடல், (7) 870-வது பக்கம், 21-வது பாடல், (8) 1133-வது பக்கம், 20-வது பாடல் ஆகிய இவைகளை வாசிக்கவும்.

(7) தன்னுடைய முன் ஜன்மத்தில் ஒரு மனிதர் தன்னுடைய பிதுரார்ஜித சொத்தைத் தன்னுடைய சகோதரர்களுடன் பாகப்பிரிவினை செய்துகொள்ளும்போது தன்னுடைய சகோதரர்களை மோசஞ் செய்து விட்டதோஷத்தின் பயனாக இவர் இந்த ஜன்மத்தில் பிதுரார்ஜிதமும் சகோதரர்களும் இல்லாமல் தண்டிக்கப்படுகின்றார். இதுவிஷயமாக (1) 611-வது பக்கம், 23-வது பாடல், (2) 1065-வது பக்கம், 9-வது பாடல் ஆகிய இவைகளை வாசிக்கவும்.

(8) தன்னுடைய முன் ஜன்மத்தில் ஒரு மனிதர் இராஜாங்கத்தில் ஒரு பொறுப்புள்ள அதிகாரமான வேலையில் அதிகாரியாக இருந்து கொண்டு நீதியைச் செலுத்தவேண்டிய நிலையில் இருந்தபோது, ஒரு ஸ்திரீயை ஒரு புருஷன் பலாத்காரமாக அல்லோகலஞ் செய்து இவளுடைய கற்பை அழித்ததனால் இவள் தன்னுடைய சகோதரர்களிடஞ் சொல்லி இவர்களுடைய உதவியுடன் இந்த அதிகாரியிடம் பிரயாது கொடுத்தபோது, இந்த அதிகாரி குற்றஞ் செய்தவரை வரவழைத்து விசாரித்து நடந்தது உண்மைதான் என்று தெரிந்துகொண்டு, குற்றவாளியிடம் லஞ்சமாகக் (கைக்கூலியாக)ப் பணத்தை வாங்கிக்கொண்டு இந்த ஸ்திரீயும் இவளுடைய சகோதரர்களும் அதிசயிக்கும்படியாக, இவளுடைய பேரிலேயே குற்றத்தைச் சாட்டிய தோஷத்தின் பலனாக இந்த அதிகாரியான இந்த மனிதர் தன்னுடைய இந்த ஜன்மத்தில் சகோதரிகள், சகோதரர்கள் இல்லாமல் தண்டிக்கப்படுகின்றார். இது விஷயமாக 572-வது பக்கம், 35, 36, 37, 38-வது பாடல்கள்; (2) 725-வது பக்கம், 15-வது பாடல் (3) 1184-வது பக்கம், 17, 18-வது பாடல்கள்; (4) 1211-வது பக்கம், 26-வது பாடல், ஆகிய இவைகளை வாசிக்கவும்.

(9) ஒரு நபர் (ஆண் அல்லது பெண்) தன்னுடைய முன் ஜன்மத்தில் தன்னிடம் ஒரு ஏழை ஸ்திரீ வந்து தன்னுடைய பசியால் துன்பப்படுகின்ற குழந்தைக்குச் சாதங் கொடு என்று கேட்டபோது இந்த ஏழை ஸ்திரீக்கு சாதத்தை கொடுக்க மறுத்து விட்டதோஷத்தின் பயனாகவும், அல்லது ஒரு தாயில்லாத கைக் குழந்தைக்காகச் சுத்தான கலப்பில்லாத பசும் பாலை விற்க மறுத்துவிட்ட பாவத்தின் பலனாகவும் அல்லது பசும்பாலுடன ஜலத்தைக் கலந்தோ அல்லதுமட்டமான அல்லது கீழ்த்தரமான இதற விதமான பாலைக்கலந்தோ ஏமாற்றின பாபத்தின் பயனாகவும் இந்த நபர் முன் ஜன்மத்தின் கடைசி காலத்தில் தன்னுடைய குழந்தைகளை இழந்தும் தன்னுடை இந்த ஜன்மத்தில் குழந்தைகள் இல்லாமலும் அல்லது பிறந்து இறந்தும் போவதால் தண்டிக்கப்படுகின்றார். இது விஷயமாக (1) 1056-ஆவது பக்கம், 25-ஆவது பாடல், (2) 1213-ஆவது பக்கம் 32-ஆவது பாடல், (3) 838-ஆவது பக்கம், 20, 21-ஆவது பாடல்கள், (4) 907-ஆவது பக்கம், 19-ஆவது பாடல் ஆகிய இவைகளை வாசிக்கவும்.

(10) ஒரு மனிதர் தன்னுடைய முன் ஜன்மத்தில் ஒரு சாதுக்கு அல்லது பரதேசிக்கு அல்லது சந்நியாசிக்கு சாப்பாடு அல்லது இரவில் தங்கியிருந்து போவதற்காக இடம் கொடுக்காமல் இவரிடத்தில் இவருடைய மனம் புண்படும்படியாக் கெட்ட விதத்தில் இந்த மனிதர் நடந்து கொண்டதால் இவரை இவர் சபிக்கவே இந்தச் சாபத்தின் பயனாக இந்த மனிதர் தன்னுடைய இந்த ஜன்மத்தில் மிகவும் அதிகமான கஷ்டங்களை அனுபவிக்கின்றார். இது விஷயமாக (1) 59 ஆவது பக்கம், 19 ஆவது பாடல்; (2) 1055-ஆவது பக்கம், 19, 20, 21-ஆவது பாடல்கள் ஆகிய இவைகளை வாசிக்கவும்.

(11) ஒரு ஸ்திரீ தன்னுடைய பூர்வ ஜன்மத்தில் தன்னுடைய புருஷனுடைய சகோதரனுடைய மனைவியின் பேரில் பொய்யாக ஒரு குற்றத்தைச் சாட்டின பாபத்தின் பயனாக இவள் இந்த ஜன்மத்தில் சகோதரிகள் இல்லாமலும் அல்லது இவர்களை இழந்தும் போவதால் தண்டிக்கப்படுகின்றாள். இது விஷயமாக (1) 751-ஆவது பக்கம், 21-ஆவது பாடல்; (2) 1084-ஆவது பக்கம், 34-ஆவது பாடல் ஆகிய இவைகளை வாசிக்கவும்.

(12) ஒரு மனிதர் தன்னுடைய ஒரு ஜன்மத்தில் புராணங்களையாவது வேதங்களையாவது வாசிக்காமலும் ஓதாமலும் இருந்ததால் அல்லது ஒரு ஸ்திரீ தன்னுடைய ஒரு ஜன்மத்தில் விரதங்களையும், தெய்வீகசம்மந்தமான சடங்குகளையும் கிரிகைகளையும் அலட்சியஞ் செய்து விட்டாலும் அல்லது சரிவர நடத்தாவிட்டாலும், இந்த நபர் தன்னுடை அடுத்த பிறப்பில் தாழ்ந்த குலத்தில்போய் ஜனிக்கும்படியாக நேரிட்டுவிடுகிறது. இது விஷயமாக 1083-ஆவது பக்கத்தில் 33-ஆவது பாடலைப் பார்க்கவும்.

(13) ஒரு ஸ்திரீ தன்னுடைய பூர்வ ஜன்மத்தில் கர்வத்தினாலாவது அல்லது இருமாப்பினாலாவது தன்னுடைய வீட்டின் பிழக்கடையிலுள்ள மரத்தின் பேரில் வாசஞ் செய்து கொண்டிருந்த ஒரு முனியேஸ்வரரைத் தொழாமலும் அல்லது இவருக்குப் பூஜைபோடாமலும் இருந்த தோஷத்

தின் பயனாக இந்த ஜன்மத்தில் கர்ப்பப்பிரஷ்டத்தினாலாவது, அல்லது குழந்தைகள் நஷ்டமாகி போவதினாலாவது. அல்லது இந்த முனீயேஸ்வரரே இவனைப் பிசாசுபோலப் பிடித்துக்கொள்வதினாலாவது தண்டிக்கப்படு கின்றாள். இது சம்மந்தமாக (1) 688-ஆவது பக்கம், 25, 26, 27, 28-ஆவது பாடல்களையும், (2) 738-ஆவது பக்கம் 20-ஆவது பாடல் (3) 907-ஆவது பக்கம், 18-ஆவது பாடல் ஆகிய இவைகளை வாசிக்கவும்.

(13) (a) ஒரு மனிதர் தன்னுடைய முன் ஜன்மத்தில் வெகு நாளாக ஒரு முனியேஸ்வரர் வாசஞ் செய்து கொண்டிருந்த ஒரு மரத்தை வெட்டிவிட்டு இதனால் இவருடைய வாசஸ்தலத்தை இவர் இழந்துவிடும்படி செய்த பாபத்தின் பயனாக இந்த மனிதர் தன்னுடைய இந்த ஜன்மத்தில் வீடில்லாமலும் குழந்தைகள் இல்லாமலும் இருக்கும்படியாகத் தண்டிக்கப்படுகின்றார். இது விஷயமாக ஆவது பக்கத்தில் ஆவது பாடலைப்பார்க்கவும்.

(14) ஒரு நபர் தன்னுடைய முன் ஜன்மத்தில் தன்னுடைய வீட்டின் எறவாணத்தில் ஒரு ஊர்க்குருவி கூண்டு கட்டி அதில் குஞ்சு பொறித்து இக்குஞ்சுகளுக்கு இரக்கை பூராகவும் முளையாமல் இருக்கும்போது இக் கூண்டை இக் குஞ்சுகளுடன் அழித்துவிடவே இந்தப் பாபத்தின் பயனாக இவர் தன்னுடைய இந்த ஜன்மத்தில் தன்னுடைய குழந்தைகள் இறந்து இதனால் தண்டிக்கப்படுகின்றார். இது விஷயமாக (1) 739-ஆவது பக்கம், 22 ஆவது பாடல்; (2) 750-ஆவது பக்கம், 20 ஆவது பாடல் ஆகிய இவைகளை வாசிக்கவும்.

(15) ஒரு மனிதர் தன்னுடைய பூர்வ ஜன்மத்தில் தன்னுடைய தாயாரின் பேரில் தன்னுடைய மனைவி செய்து கொண்ட பிரயாதின பேரில் தன்னுடைய தாயாரைக் காலால் எட்டி உதைத்தப் பாபத்தின் பயனாக இவர் தன்னுடைய இந்த ஜன்மத்தில் உதைத்தகால் நொண்டியாகப் போகும் படியாய்த் தண்டிக்கப்படுகின்றார். இது சம்மந்தமாக 790-ஆவது பக்கம், 28, 29, 30-ஆவது செய்யுள்கள்; (2) 840-ஆவது பக்கம், 25, 28-ஆவது செய்யுள்கள் ஆகிய இவைகளை வாசிக்கவும்.

(16) ஒரு மனிதர் தன்னுடைய முன் ஜன்மத்தில் வட்டி வியாபாரஞ் செய்து கொண்டு ஏழைகள் விஷயத்தில் பொய்யான கணக்கை எழுதி இவர்களை ஏமாற்றி விட்டப்பாவத்தின் பயனாக இவர் அந்த ஜன்மத்திலேயே பொருள்களை எல்லாம் இழந்து இந்த ஜன்மத்தில் கூட அதிக கஷ்டங்களை ஒருவர் கீழ் இருந்து அனுபவிக்கும்படியாய்த் தண்டிக்கப்பட்டார். இது விஷயமாக 60-ஆவது பக்கத்தில் 21, 22, 23, 24-ஆவது செய்யுள்களை வாசிக்கவும்.

(17) ஒரு மனிதர் தன்னுடைய முன் ஜன்மத்தில் ஒரு பிராமணருடன் சிநேகஞ் செய்து கொண்டு இவருக்குப் பணத்தைக் கடனாகக் கொடுத்து ஒரு பத்திரத்தை எழுதி வாங்கிக்கொண்டு பிறகு இவருடைய வீட்டிற்குப் போய்வந்து கொண்டிருக்கையில் ஒருநாள் இவருடைய மனைவியின் பேரில் காம ஆசையை, மையலை உடையவராகி இனிமையான வார்த்தைகளைச் சொல்லி அழைக்கவே இந்த ஸ்திரீ இசையாமல் இருந்துவிடவே இந்த மனிதர் கோபங் கொண்டு கோர்ட்டில் பத்திரத்தைத் தாக்கல் செய்து இந்த

பிராமணருடைய வீடு சொத்து எல்லாவற்றையும் அபகரித்துக் கொண்டு பிராமணரை வீட்டை விட்டு ஓட்டிவிடவே இந்த பிராமண ஸ்திரீ இதன் பேரில் சாபங்கொடுத்துவிடவே இந்தச் சாபத்தின் பயனுக இந்த மனிதர் தன்னுடைய முன் ஜன்மத்தின் கடைசிகாலத்தில் தன்னுடைய செல்வங்கள் எல்லாம் அழிந்து கஷ்டப்பட்டது மன்றி இந்த ஜன்மத்தில் கூட இந்த மனிதர் அநேக கஷ்டங்களை அடைந்து, திரிந்து அலைந்து மனைவியால் சுகத்தை அடையாமல் காரகநோய் ஏற்பட்டு அந்நிய தேசத்திற்குப் போய்விட்டார். இவ்விதமாக இவர் தண்டிக்கப்பட்டார். இது விஷயமாக 1066,1067, 1068-ஆவது பக்கங்களில் 12, 13, 14, 15, 16, 17-ஆவது பாடல்களைவாசிக்கவும்.

(18) ஒரு மனிதர் தன்னுடைய முன் ஜன்மத்தில் ஏழைகளுக்குக் கொஞ்சமாகப் பணத்தைக் கடனுகக் கொடுத்து இவர்களுடைய பூமிகளை அபகரித்துக் கொண்ட பாபத்தின் பயனுக இவர் இந்த ஜன்மத்தில் வீடு இல்லாமலும் வனவாசமாக விருந்து வாழவும் நேரிடும்படியாகத் தண்டிக் கப்பட்டார். இது விஷயமாக 916 ஆவது பக்கத்தில் 7, 8, 9, 10-ஆவது பாடல்களையும் வாசிக்கவும்.

(19) ஒரு ஸ்திரீ தன்னுடைய பூர்வ ஜன்மத்தில் ஒரு பூனையை வெந்நீரில் போட்டு அதைத் துன்பப்படுத்திய பாபத்தின் பயனுக இந்த ஜன்மத்தில் இவருடைய உடம்பெல்லாம் வெண்மேக நோய் உண்டாகிவிட்டது. இதன் விஷயமாக 88–ஆவது பக்கத்திலுள்ள 13, 14–ஆவது செய்யுள்களை வாசிக் கவும்.

(20) ஒரு மனிதர் தன்னுடைய முன் ஜன்மத்தில் தன்னுடைய கிராமத்திலுள்ள ஒரு நதியின் அருகில் இருந்த ஒரு அரசமரத்தின் கீழ், இங்கு விநாயகர் கோயிலும் நாகப் பிரதிஷ்டையுங்கூட இருக்கின்றன என்று கவனியாமல் இவைகளை அலட்சியஞ் செய்துவிட்டு, ஒரு விதவை ஸ்திரீயுடன் இரவில் சம்போகஞ் செய்தார். இதனுல் இவளுக்கு ஏற்பட்ட கர்ப்பத்தையும் அழித்து விட்டு இவளையும் சாகும்படிச் செய்துவிட்டார். இந்தப் பாவத்தின் பயனுக இவருக்குப் அந்த ஜன்மத்திலேயே புத்திர தோஷம் ஏற்பட்டுவிட்டது. இவ்விதமாக இவர் தண்டிக்கப்பட்டார். இது விஷயமாக 101–ஆவது பக்கத்திலுள்ள 21, 22, 23–ஆவது செய்யுள்களை வாசிக்கவும்.

(21) ஒரு மனிதர் தன்னுடைய முன் ஜன்மத்தில் ஒரு பிராமணரின் சிநேகிதராக விருந்து பணம் விஷயத்தில் பொய் கணக்கு எழுதி இந்தப் பிராமணரைக் கஷ்டப்படுத்திவிடவே இந்தப் பிராமணர் சாபங்கொடுக்கவே இந்தச் சாபத்தின் பயனுக இந்த மனிதர் இந்த ஜன்மத்தில் தன்னுடைய வீட்டை விட்டு நீங்கி எந்த வேலையைச் செய்த போதிலும் அது கத்தரித்துப் போய் கஷ்டத்தை யனுபவித்து இரண்டு மனைவிகளையும் அடைந்து விட்டார். இது விஷயமாக 1012 ஆவது பக்கத்திலுள்ள 19, 20, 21, 22 ஆவது செய்யுள்களை வாசிக்கவும்.

(22) ஒரு மனிதர் தன்னுடைய முன் ஜன்மத்தில் ஏழைகள் விஷயத்தில் கணக்கில் மோசஞ் செய்து இவர்களுக்குத் துன்பத்தை விளைவித்தப் பாபத்தின் பயனுக இந்த ஏழைகள் இந்த மனிதருக்கு இந்த ஜன்மத்தில்

குழந்தைகளாகப் பிறந்து இவருக்கு அதிக மனக்கவலையையும கஷ்டத்தையும் விளைவித்து விட்டார்கள். இது விஷயமாக 39 ஆவது ஜாதகத்தின் 28 ஆவது பாடலை வாசிக்கவும்.

(23) ஒரு மனிதன் தன்னுடைய முன் ஜன்மத்தில் ஒரு மாரியம்மன் கோயிலுக்கு இவருடைய தகப்பனார் இரண்டு விளக்குகளை ஏற்றி வைத்துத் தருமஞ் செய்து வந்ததை ஒரு விளக்கை நிறுத்திவிட்டு தர்மத்தைப் பங்கப் படுத்தின தோஷத்தின் பயனாக இந்த மனிதருக்கு இந்த ஜன்மத்தில் ஒரு கண் ஊனமாகப் போய்விட்டது. இவ்விதமாக இவர் தண்டிக்கப்பட்டார். இது விஷயமாக 38-ஆவது ஜாதகத்தின் 27,29, ஆவது-செய்யுள்களை வாசிக்கவும்.

(24) ஒரு மனிதர் தன்னுடைய முன் ஜன்மத்தில் ஒரு ஏழை விவாகஞ் செய்து கொள்வதற்காக ஒரு மங்கலியத்தை அல்லது பணத்தைக் கொடுக்கின்றேன் என்று சொல்லி விவாகம் நெருங்கின காலத்தில் இந்த ஏழையை ஏமாற்றி விட்ட தோஷத்தின் பயனாக இந்த மனிதர் மாங்கல்யம் கொடுக்காததால் முன் ஜன்மத்தின் கடைசி காலத்தில் தன் மனைவியை இழந்ததுமன்றி மாங்கல்யமும் பணமும், கொடுக்காததால் இந்த ஜன்மத்தில் இரண்டு மனைவியரை அடைய நேரிட்டு விட்டது. இது விஷயமாக 50 ஆவது ஜாதகத்தில் 26 ஆவது பாடல், 643, 644 ஆவது பக்கத்திலுள்ள 23, 24, 25, 26 ஆவது பாடல்களையும் வாசிக்கவும்.

(25) ஒரு மனிதர் தன்னுடைய முன் ஜன்மத்தில், சிவ பெருமானைப் பூஜை செய்வதற்காக ஒரு பரதேசி புஷ்பங்களைக் கொண்டு போகும்போது இவரை வழி மறித்து இந்தப் புஷ்பங்களைப் பிடுங்கிக்கொண்டு போய்த் தன்னுடைய மனைவிக்குக் கொடுத்து இவளுடன் சம்போகஞ் செய்த பாவத்தின் பயனாக முன் ஜன்மத்தின் கடைசி காலத்தில் இவர் தன் பாரியை இழந்துவிட்டதுமன்றி இந்த ஜன்மத்தில் கூட இவருக்கு முதல் மனைவி இறந்து இரண்டாவது மனைவி நேரிட்டாள். இவ்விதமாக இவர் தண்டிக்கப் பட்டார். இது விஷயமாக 50 ஆவது ஜாதகத்தில் 28, 30, ஆவது செய்யுள்களை வாசிக்கவும். மேலும் இவ்விதமாகவே மல்ர்களை வேசிக்குக் கொடுத்து விட்ட தோஷத்தினால் இரண்டு மனைவிமார்கள் ஏற்பட்டுவிட்ட விஷயமாக 611 ஆவது பக்கத்திலுள்ள 22, 23 25 ஆவது செய்யுள்களையும் வாசிக்கவும்,

(26) ஒரு மனிதர் தன்னுடைய முன் ஜன்மத்தில் தெய்வங்களுக்காகச் சுற்றி விட்டுவிடப்பட்ட ஒரு எருதை ஏரில் பூட்டி உழுத பாபத்தின் பயனாக இவருக்குத் தன்னுடைய இந்த ஜனமத்தில் புத்திர தோஷமும் களத்திர தோஷமும் ஏற்பட இது பலகாரணங்களில் ஒரு காரணமாகச் சம்பவித்து விட்டது. இது விஷயமாக 571, 572, ஆவது பக்கங்களிலுள்ள 31, 34 ஆவது செய்யுள்களை வாசிக்கவும்.

(27) ஒரு ஸ்திரீ தன்னுடைய முன் ஜன்மத்தில் கன்றுக்குட்டிக்காகப் பாலை விடாமல் எல்லாப்பாலையும் கறந்து விட்டதோஷத்தின் பயனாக இவள் தன்னுடைய முன் ஜன்மத்தில் கடைசி காலத்தில் மனத்தில் துன்பத்தையடைந்து கஷ்டங்களையும் அநுபவிக்க நேரிட்டு விட்டது. இது விஷயமாக 907 ஆவது பக்கத்திலுள்ள 19 ஆவது பாடலைப் பார்க்கவும்.

(28) ஒரு மனிதர் தன்னுடைய முன் ஜன்மத்தில் ஒரு ஸ்திரீயின் பேரில் குற்றமான வார்த்தைகளைச் சொன்ன பாபத்தின் பயனாக இவர் இந்த ஜன்மத்தில் சகோதரியில்லாதவராகத் தண்டிக்கப்பட்டார். இது விஷயமாக 941 ஆவது பக்கத்திலுள்ள 7, 8, 9 ஆவது செய்யுள்களை வாசிக்கவும்.

(29) ஒரு ஸ்திரீ தன்னுடைய முன் ஜன்மத்தில் ஒரு போஜன பந்தியில் பரிமாறுதலில் வஞ்சனை செய்த பாபத்தின் பயனாக இவள் இந்த ஜன்மத்தில் புருஷனுடைய சுகமும் மற்ற சௌக்கியங்களும் இல்லாதவளாகத் தண்டிக்கப்பட்டாள். இது விஷயமாக 1080 ஆவது பக்கத்திலுள்ள 20, 21, 22 ஆவது செய்யுள்களை வாசிக்கவும்.

(30) ஒரு மனிதர் தன்னுடைய முன் ஜன்மத்தில் அரசாங்கத்தார் முன்னிலையில் (கோர்ட்டில்) பொய் சொல்லிய பாபத்தின் பயனாக இவர் இந்த ஜன்மத்தில் புத்திர தோஷத்தையும் மனைவி தோஷத்தையும் ஆண் சகோதரங்களின் தோஷத்தை அடையும்படியாகத் தண்டிக்கப்பட்டார். இது விஷயமாக 1163, 1164 ஆவது பக்கங்களிலுள்ள 30, 31, 32 ஆவது செய்யுள்களை வாசிக்கவும்.

இவ்விதமாக இந்த நாடி சாஸ்திரம் இதில் உபயோகப்படுத்தியிருக்கும் கர்மாவைப் பற்றிய செய்வகையை (Technique of Karma) எடுத்துக்காட்டியிருக்கின்றது. சில சமயங்களில் ஒருவருடைய பூர்வ ஜன்மத்தின் பாபமானது இவரைப் பல பின் ஜன்மங்களில் உபத்திரவப்படுத்துகின்றது.

இந்த நாடி சாஸ்திரம் மதம் சம்மந்தமாகவும், நீதி சாஸ்திரம் அல்லது தர்மசாஸ்திரம் விஷயமாகவும் போதனுவிதிகளைப் புகட்டுவதில் அதிகமாகப் பயன்படக்கூடியதாக விருக்கின்றது. இதனை வாசிப்பவர்களுக்கு இது மிகவும் நல்ல மத சம்மந்தமான அல்லது நல்ல நடவடிக்கை, ஒழுக்கம், நீதிநூல் ஆகிய இவைகள் சம்மந்தமான பாடங்களைப் போதிக்கக்கூடியதாக விருக்கின்றது. ஒருவர் கடவுளைத் தொழுது இவருக்குக் கோயிலில் தொண்டு செய்து கொண்டும், சந்நியாசிகளையும், கடவுளின் சிஷ்யர்களையும் அடியார்களையும், தெய்வீகச் சம்மந்தமான மனப்பான்மையை யுடையவர்களையும் போஷித்தும், அல்லது நல்ல வாழ்க்கையை நடத்திக் கொண்டும் பொய் பேசாமல் உண்மையையே அநுசரித்துக்கொண்டும், தரும காரியங்களைச் செய்து கொண்டும், ஜனங்களுக்குச் சாப்பாடு போடுதல் முதலிய தொண்டுகளையும் சேவைகளையும் செய்து கொண்டு வந்தால் இவர் இந்த ஜன்மத்திலாவது அல்லது மறு பிறப்பிலாவது சகல சம்பத்துக்களையும், பாக்கியங்களையும், சுகங்களையும், போகங்களையும் அநுபவித்தே தீர்வார் என்ற ஒரு நம்பிக்கையை இதை வாசிப்பவருக்குப் புகட்டி மனத்தில் பதியவைக்கின்றது. இந்தச் சாஸ்திரத்தின் நோக்கத்தையும் கருத்தையும், உபயோகத்தையும் பற்றிச் சப்தரிஷிகளே பகிரங்கமாகவும் வெளிப்படையாகவும் இந் நாடியிலேயே கீழ்கண்ட செய்யுள்களில் சொல்லியிருக்கின்றார்கள்.

**நெ. 12 ஆவது ஜாதகத்தின் 31, 32 ஆவது செய்யுள்கள்.**

31. " சொற்பிதை நம்பி பாலன் சுகமுடன் செய்வானுகில்
விற்புரு வத்தாய்க் கேளும் இளமார்க் கண்டன் போலே "

32. " ஆயுளும் விருத்தியாகி அஷ்ட ஐச்வரிய முண்டாய்
நேயமாய் வாழ்வா னென்று நிகழ்த்திய மொழி குன்றுது
நாயமாம் உலகோர்க் கிந்நூல் வெளியிட யாவும் சொன்னேம்
மாயமாய் நம்பினேர்க்குக் கைலாயம் சாட்சியாமே "

சப்தரிஷிகள் சொல்லியவைகளை ஜனங்கள் நம்பி இவைகளை அநுஷ்டிப்பார்களேயானல் அல்லது இவைகள் பிரகாரம் தங்களுடைய வாணுட்களைக் கழிப்பார்களேயானல் இவர்களுக்கு உண்மையாகவே கைலாய பதவி கிடைக்கும் என்பது ஒரு சித்தாந்தமாகும். உலகத்தில் சில விஷயங்களைக் காரணங்களைக் காட்டி மனிதரால் ருசுவு செய்யக்கூடும்; ஆனல் சில விஷயங்களை இவ்விதமாக ருசுவு செய்யமுடியாது, ஆகையால் இப்படிப்பட்ட விஷயங்களில் நம்பிக்கை (Faith)யைக் கொண்டே கடைதேர வேண்டும் என்பதும் ஒரு சித்தாந்தமாகும். ஆகையால் இங்கு சப்தரிஷிகள் சொல்லிய அருள் வாக்கை நாம் நம்புவது நமக்கு நன்மையைப் பயக்கும் என்பதும் ஒரு சித்தாந்தமேயாகும்.

பிரமலிபி, தெய்வ நியமம், தலைவிதி (Fate or Destiny) என்பது எவராலும் மாற்றக்கூடாத தன்மையையுடைய தல்லவென்றும், ஒரு மனிதர் தன்னுடைய சுவேச்சை, இச்சா சக்தி பிரயோகம் (Freewill or Volition) என்பதனல் தலைவிதியை மாற்றி விடுஞ் சக்தியையுடையவர் என்றும் இந்த நாடி எடுத்துக் காட்டுகின்றதாகும். இந்த நாடி அநேக பாபங்களுக்குப் பரிகாரங்களை எடுத்துக் காட்டியிருக்கின்றது. தன்னுடைய வாணுளில் நடக்கப்போகின்ற சில விஷயங்களின் போக்கையும் கெடுதிகளையும் ஒரு மனிதர் மாற்றி விடக்கூடும், விலக்கிவிடக்கூடும் என்றும் இந்த நாடி தெரிவித்திருக்கின்றது. இது சம்பந்தமாக (1) 614 ஆவது பக்கம் 34 ஆவது செய்யுள், (2) 1041, 1043 ஆவது பக்கங்களிலுள்ள, 34, 42 ஆவது பாடல்களையும், (3) 21 ஆவது பக்கம், 29 ஆவது செய்யுளையும் வாசிக்கவும். சில விஷயங்களில் சில பாபங்கள் அல்லது தோஷங்கள் எவ்வித பரிகாரத்தாலும் மனித செயலாலும், சாந்தப்படுத்த முடியாதபடியாகவும் விலக்கப்பட முடியாதபடியாகவும் குறைக்கப்படமுடியாததாகவும் அவ்வளவு வலிவானவைகளாக விருக்கின்றன என்றும் இவைகளின் பயனை மனிதன் அநுபவித்தே தீரவேண்டுமென்றும் பகிரங்கமாகவும் வெளிப்படையாகவும் இந்த நாடி சொல்லியிருக்கின்றது. இது விஷயமாக 1134-ஆவது பக்கம் 24 ஆவது செய்யுளை வாசிக்கவும். (என் கண்களுக்கு இது வரையிலும் புலப்பட்ட வரையிலும்) ஒரு மனிதர் தன்னுடைய முன்ஜன்மத்தில் தான் செய்த பாபங்களுக்குகாகப் பரிகாரங்களையும் சாந்திகளையும் (expiatory ceremonies) செய்யவேண்டும் என்று இந்த நாடி சொல்லியிருக்கின்றதே தவிர ஒரு குறித்த கிரகத்தினுடைய கோபத்தைத் தணித்து அதைத் தனக்கு அநுக்கூலமாக விருக்கும்படியாக அதனுடையகோபத்தைத் தணிக்கவோ அல்லது அதைத் திருப்தி செய்து சாந்தப்படுத்துவோ கிரிகைளையும் சடங்குகளையும் (Propitiatory Ceremonies) சொல்லவேயில்லை. இந்தக் கிரகத்தைத் திருப்த்தி செய்ய இவ்விதமான தான்ய வகையராவை பருப்பு வகையராவை (Grains or Pulses) பலிதானத்தை (Sacrifice)கொடுக்கவேண்டும் என்று

இந்த நாடி சொல்லவில்லை. தான்ய வகையராக்களைப்பற்றி ஒரு ஜோதிடர் தன்னை வந்து பரிகாரங்கள்விஷயமாகக கேட்கின்றவர்களுக்குச் சொல்லுவது பெரும்பாலும் சகஜமாகவிருந்து வருகின்றது. ஒரு கோவிலிலுள்ள நவக்கிரக பீடத்தை இத்தனைதடவை சுற்றிவரவேண்டும் என்று ஒரு ஜோதிடர் சொல்லு வதுபோல இந்தநாடி நவக்கிரக சாந்தியைப்பற்றிச் சொல்லவில்லை. இவைகள் எல்லாம் கிரகங்கள் தங்களுடைய சக்திகளை ஒரு மனிதர் பேரில் செலுத்தி இவரை ஆட்டிவைக்கின்றனவா அல்லது நமக்குத்தெரியாத புரியாத சில கடவுள்களின் அல்லது சக்திகளின் (Unknown Gods or Powers) காரகர்கள் அல்லது செய்பவர்கள், அல்லது பிரதி புருஷர்கள் (Agents) ஆகவே மாத்திரம் நடந்துகொண்டு பலாபலன்களைத் தாங்களே உண்டு பண்ணுமற் இப்பலாபலன் கள் இவ்விதமானவை இவ்விதமானவை என்று மாத்திரம் எடுத்துக் காட்டு கின்றனவா என்று தொல்லையை அல்லது வருத்தத்தை உண்டாக்குகின்ற பிரச்னை (Vexed Question) யைப்பற்றிக் கொஞ்சம் தெரிவிக்கின்றன. இந்தப் பிரச்னை விஷயமாய் பலபத்திர ஜோதிடாசிரியர் என்பவர் தன்னு டைய "ஹோரா ரத்தினம்" என்ற சமஸ்கிருதபாஷையிலுள்ள ஜோதிடக் கிரந்தத்தில் கூடிய மட்டும் விஸ்தாரமாகச் சொல்லியிருக்கின்றார். இந்த நாடி, கிரகங்கள் பலாபலன்களை காட்டுகின்றன, தெரிவிக்கின்றனவே தவிர பலா பலன்களைத் தாங்களே உண்டு பண்ணுவது கிடையாது என்றே தெரி விக்கின்றது.

மேலும் 93-ஆவது நெம்பருள்ள ஜாதகத்தில் 1092-ஆவது பக்கத் தில் உள்ள மூன்றாவது செய்யுளிலிருந்து பின் வரும் விஷயம் தெரி வதைப் போலத் தோற்றுகின்றது. ஒரு ஜோதிடர் தெய்வீக சம்மந்த மான ஒரு விடத்தில் அல்லது தன்மையில் இருந்துகொண்டு Religi. (ous atmosphere) தெய்வத்தின் அருளால் (devine grace) அல்லது ஒரு தேவதை அல்லது ஒரு கடவுளின் பார்வையின் கீழ் (under the aegis of some God or Goddess) அல்லது ஒரு ரக்ஷணைக் கர்த்தாவாகவிருக்கின்ற தெய்வ பலத்துடனாவது (Inspiration of patron or guardian sprit) பலா பலன்களைச் சொல்லவேண்டும். ஒரு மனிதருடைய வாழ்நாளில் சம்பவிக்கப் போகின்ற ஒரு விஷயத்தையோ அல்லது சம்பவத்தையோபற்றி முந்தியே ஜோதிடத்தின் மூலமாகச் சொல்லவேண்டுமானால் அநேக ஜோதிட அம்சங் களையும் (several astrological factors or points) கவனித்து ஆராய்ச்சி செய்ய வேணும். இவ்விதமாக ஆராய்ச்சி செய்வது ஒரு ஜோதிட நிபுணருக்குக் கூட மிகவும் கஷ்டமான திகைப்பிக்கும்படியான சாஸ்திரமாக (a very (difficult and bewildering system of knowledge) ஜோதிட சாஸ்திரம் இருக்கின்றதென்று நான் முன்னமே மேலே ஒரு விடத்தில் ஒரு பகுதி யில் (a paragraph) சொல்லியிருக்கின்றேன். சில சமயங்களில் ஜாதக ருடைய ஆயுள் மனைவிமார்களின் எண்ணிக்கை, விவாக காலங்கள், ஹிந்துக்கள் மிகவும் முக்கியமானதாகப் பாராட்டி வருகின்ற இறந்தவ ருடைய கர்ம காரியங்களை (funeral obsequies) செய்ய புத்திரன் உண்டா இல்லையா என்பது, ஆகிய இவ் விஷயங்களைப்பற்றிய பிரச்னைகள் (questions) மிகவும் அனுபவமுள்ள, அல்லது நிபுணராகவுள்ள ஜோதிட

சாஸ்திரிக்குகூட மிகவும் கஷ்டமான அல்லது திகைக்கும்படியாகச் செய்கின்ற (baffling) பிரச்னைகளாக நேரிட்டுவிடுகின்றன. இப்படிப்பட்ட பிரச்னைகள் சப்த ரிஷிகளுக்குக் கூட சில சமயங்களில் மிகவும் கஷ்டத்தையும் கலக்கத்தையும் உண்டுபண்ணுகின்ற பிரச்னைகளாக நேரிட்டுவிடுகின்றன. ஆகையால் பல ரிஷிகள் இந்த நாடியில் பலவிதமான அபிப்பிராயங்களைத் தங்கள் தங்களுடைய அபிப்பிராயங்களாகத் தெரிவித்து ஒருவருடன் ஒருவர் வாதாட்டஞ்செய்ய வேண்டியதாக நேரிட்டுவிடுகிறது. இப்படிப்பட்ட அசந்தற்பமான சமயத்தில் தலைமையை வகித்துள்ள பார்வதியம்மையார் இந்த வாதாட்டத்தில் கலந்து கொண்டு தன்னுடைய அபிப்பிராயத்தை முடிவு தீர்மானமாகச் சொல்ல நேரிட்டுவிடுகின்றது. இது விஷயமாக (1) 1129-ஆவது பக்கத்தில் 15, 16-ஆவது பாடல்கள் (2) 1146-ஆவது பக்கங்களில் 18, 19, 20-ஆவது பாடல்கள் (3) 1262-ஆவது பக்கத்தில் 25, 26-ஆவது பாடல்கள், (4) 1041, 1042, 1043-ஆவது பக்கங்களில் 34 முதல் 42 வரையுள்ள பாடல்கள், (5) 1054, 1055, 1056, 1057-ஆவது பக்கங்களில் 16 முதல் 29 வரையுள்ள பாடல்கள், (6) ரிஷிகளினுடைய வாதத்தில் பார்வதியம்மையார் பிரவேசித்து கலந்து கொண்டு தன்னுடைய தீர்மானத்தைத் தெரிவிக்கும் விஷயமாக 71–ஆவது நம்பருள்ள ஜாதகத்தில் 815 ஆவது பக்கத்தில் உள்ள 21–ஆவது இருபத்தோராவது) செய்யுள், ஆகிய இவைகளை எல்லாம் வாசிக்கவும். இந்த சப்த ரிஷிகள் தாங்கள் சொல்லிய பலன்களையெல்லாம் பொய்த்துப் போகாமல் உண்மையாக நடந்தே தீரும் என்று சொல்லியிருக்கின்றார்கள். ஏனென்றால் இவைகளை இவர்கள் பார்வதியம்மையின் அருளால் அஃதாவது தேவதையின் அருளால் சொல்லியிருக்கின்றார்கள் என்பதாம். ஆகையால் ஜோதிடர் ஒருவர் ஜோதிட சாஸ்திரத்தில் மாத்திரம் நல்ல திறமையை அடைந்திருந்தால் மட்டும் போதாது, இவர் நன்னடக்கையும், ஒழுக்கத்தையும், சன்மார்க்கத்தையும், தெய்வபக்தியையும், பரிசுத்தத்தையும், உண்மை கைபிடித்தலையும் உடையவராகவுங்கூட இருந்தே தீரவேண்டும் என்று ஜனங்களுடைய பொதுவான அபிப்பிராயமாக விருந்துவருகின்றது. ஜோதிடரித்தில் ஒரு இம்மி அளவாகிலும் தெய்வீகத் தன்மை அல்லது தெய்வக் கடாக்ஷம் இருந்தே தீரவேண்டும். ஒரு ஜோதிடர் கிரகங்களினுடைய நிலைகளையும், இவைகள் ஒன்றிற்கொன்று ஒற்றுமையாகவிருப்பதையும், விரோதமாகவிருப்பதையும் இவைகளின் பலாபலங்களையும் இன்னும் வேண்டிய பலவிதமான ஜோதிட அம்சங்களையும் கவனித்துநன்ருக ஆராய்ச்சிசெய்து கிரகங்களினுடைய இராசிகளினுடைய பாவங்களினுடைய மொத்த பலங்களையும் ஒன்றுகச் சேர்த்துத் திரட்டி பலன் சொல்லத் தீர்மானிக்கும்போது இவர் ஒரு குறித்த விஷயத்தைப்பற்றித் தீர்மானத்திற்கு வருவதில் ஏதாகிலும் சந்தேகங்கள் ஏற்பட்டு இவர் திகைத்து தடுமாறி நிற்கின்ற காலத்தில் இவரிடத்திலுள்ள தெய்வீக தன்மை அல்லது தெய்வசக்தி அல்லது தெய்வ கடாக்ஷம் இவருக்கு உதவியாக வந்து நின்று இவரைச் சரியான தீர்மானத்திற்கு வரும்படித் தானே இவரையும் அறியவொட்டாமல், செய்துவிடும். இது தான் தெய்வ சக்தியின் மகிமையாகும். ஜாதகருடன் கூடப் பிறந்தவர்கள்

மொத்தம் இத்தனை பேர்கள் என்றும் இவர்களில் இத்தனை பேர் ஆண் என்றும் இத்தனை பேர் பெண் என்றும் இவர்களில் தற்காலம் இத்தனை பேர் உயிருடன் இருக்கின்றார்கள் என்றும், இத்தனை பேர் இறந்துவிட்டார்கள் என்றும் ஆகிய இவ்விஷயங்களையும் ஜாதகருடைய தகப்பனார், தாயார், மனைவி ஆகிய இவர்களுக்குக்கூட இவ்விதமான சகோதரபாவ விஷயங்களையும், இதுவரையிலும் ஜாதருக்கு நடந்தேறிவிட்ட பலாபலன்களையும் பற்றிக் கேட்பவர் மிகவும் ஆச்சரியப்படத்தக்க விதமாகப் பலாபலன்களை மிகவும் சரியாகவே இருக்கும்படியாக நடந்துவிட்ட விஷயங்களை எல்லாம் ஒரு ஜோதிடர் தெய்வசக்தி அல்லது கடாக்ஷம் அல்லது எட்சணி தேவதையின் உதவியில்லாமல் பெரும்பாலும் சொல்லவே முடியாத காரியமாகும். இவ்விதமாக ஜோதிடருக்குத் தெய்வீகத் தன்மையாவது, அல்லது தெய்வானுகூலமாவது இல்லாவிட்டாலும் ஜோதிடருக்கே காலம் நல்லபடியாகவும் அதிருஷ்டமாகவும் இல்லாவிட்டாலும் இவர் ஜாதகத்தைக் கொண்டு ஆராய்ச்சி செய்து சொல்லும் போது இவருடைய மனத்திற்குத் தவறான அபிப்பிராயங்களே ஏற்பட்டுப் பலாபலாபலன்கள் பெரும்பாலும் பலிக்காமலே போய்விட நேரிடும். இவ்விதமாகவே அதிக அனுபவமுள்ள பெரியோர்கள் ஜோதிட சாஸ்திரத்தைப் பற்றிச் சொல்லுகின்றார்கள். இரண்டுடன் மூன்றைக் கூட்டின தொகை ஐந்து என்று சொல்வதுபோலும், அல்லது ஒரே ஒரு விடையை (answer) உடைய ஒரு கணித சம்பந்தமான கணக்கைக் கணிப்பது போலும் அல்லாமல் ஜோதிடத்தில் ஒரு விஷயமாகத் தீர்மானத்திற்கு வருவது சாதாரணமாய் மிகவும் கஷ்டமானதேயாகும். மேலும் ஜோதிட பலாபலன்களைச் சொல்லுகின்ற இடமும் தகுந்த இடமாகவே அஃதாவது பரிசுத்தமான, திவ்வியமான புண்ணியமான (Sacred place) தெய்வ சம்பந்தமான (Religious place) இடமாகவே இருக்கவேண்டும். ஒரு மிகவும் அசுத்தமான அசிங்கமான, துராச்சாரமுள்ள (filthy place) விடத்திலாகிலும் அல்லது ஒரு கோயிலில் இருந்தாகிலும் மூன்றையும் ஐந்தையும் கூட்டினால் மொத்தம் எட்டே ஆகும். ஆனால் ஜோதிடம் மூலமாய் ஆராய்ச்சி செய்து ஒரு விஷயமாகத் தீர்மானத்திற்கோ அல்லது அபிப்பிராயத்திற்கோ வருவது இவ்விதமாக இடத்தை அனுசரிக்காமல் இல்லை. இது இடத்தின் பரிசுத்தத்தையும் நிலைமையையும் அனுசரித்தே இருக்கின்றது. ஆனால் இவைகளைப்பற்றிச் சொல்லும்போது நான் அதிகப்படுத்தி, அல்லது மிகைப்படுத்தி சொல்லுவது போலத் (over-shoot the point) தோன்றக்கூடும். இவைகளை நான் என்னுடைய நீண்டகால ஜோதிட அனுபவத்தையும் பழக்கத்தையுங் கொண்டே சொல்லத் துணிந்திருக்கின்றேன். இனிமேல் நடக்கப்போகின்ற அல்லது பின்னால் நிகழ்கின்ற விஷயங்கள் அல்லது பலாபலன்கள் சம்மந்தப்பட்டவரையிலும் ஜோதிட சாஸ்திரம் இரஸாயன சாஸ்திரம் (Chemistry) பௌதிக சாஸ்திரம் (Physics) கணித சாஸ்திரம் (Mathematics) ஆகிய இந்தச் சாஸ்திரங்களைப் போல ஒரு சரியான விஞ்ஞான சாஸ்திரம் (Exact science) அல்ல. இந்த மூன்று சாஸ்திரங்களிலும் ஒரு கணக்கைப் போடுவதிலோ அல்லது ஒரு விஷயத்தைப்பற்றி ஆராய்ச்சி செய்வதிலோ எப்படிப்பட்டக் கஷ்டமான நிலை

ஏற்பட்ட போதிலும் தெய்வ கடாக்ஷம் என்பது இல்லாமலேயே தானாக வே ஒருவர் அதிலிருந்து தப்பித்துக் கொண்டு நெளிந்து வரமுடியும் (Can wriggle out of any difficult position); ஆனால் ஜோதிட சாஸ் திரம் சரியான விஞ்ஞான சாஸ்திரமாகவில்லாமல் (not an exact science) இந்த சரியான சாஸ்திரத்திற்கு மிகவும் நெருங்கின நிலையில் (a very close approach to an exact science) இருப்பதால் இந்த ஜோதிட சாஸ் திரத்தின் பிரச்னையில் மிகவும் கஷ்டமான நிலை ஏற்படும் போது இரண்டு கிரகங்களுக்கு மேற்பட்ட கிரகங்களின் கூட்டக் கிரக யோகம் உள்ள ஜாதகங்கள் சம்பந்தப்பட்ட வரையில் எவ்வளவு கணிதம் செய்திருந்த போதிலும் ஒரு ஜோதிடர் தெய்வ கடாக்ஷம் என்பது இல்லாமல் தானாகவே சரியான தீர்மானத்தையோ அபிப்பிராயத்தையோ பெரும்பாலும் அடைய முடியாது என்பது அனுபவ சித்தாந்தமேயாகும்.

நாம் இனிமேல் இந்த சப்தரிஷி நாடியை உண்டுபண்ணுவதற்காகச் சப்த ரிஷிகள் தங்களுடைய சம்மேளனம் என்ற ஆலோசனைக் கூட்டத்தை (conference) எவ்விடத்தில் நடத்தினார்கள் என்ற விஷயத்தைப்பற்றிப் பரி சீலனை செய்து பார்க்கலாம். இந்த ரிஷிகள் எல்லாம் இந்து தேசத்திய ரிஷிக்கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் என்பதற்குச் சந்தேகம் ஒன்றுமே கிடையாது. " வடதிசை காஞ்சிதன்னில் வைசிய குலமே தோன்றி " என்ற வரி ஆயிரத்திருபத்தாறுவது பக்கத்திலுள்ள பதினெட்டாவது செய்யுளில் நான்காவது வரியாக இருக்கின்றது. செங்கற்பட்டு ஜில்லாவிலுள்ள காஞ்சீ வரம் தாலூக்காவின் ஒரு பெரிய பட்டணமாகிய காஞ்சீவரம் என்ற கஞ்சி அல்லது காஞ்சி என்ற நகரத்திற்குத் தெற்கிலுள்ள ஒரு இடத்தில் சபத்ரிஷி களின் சம்மேளனம் நடந்திருக்கவேண்டும் என்று இந்த வரியிலிருந்து தெரியவருகின்றது. மேலும் இந்தியாவில் அநேக பட்டணங்கள் இருந்த போதிலும் " கஞ்சியை " ஒரு குறிப்பாகத் தெரிவித்திருப்பதால் சம்மேளன இடம் இதற்கு அருகிலேயே இருக்கவேண்டும் என்று விளங்குகின்றது. பிருதுவிஸ்தலம் என்றால் கஞ்சியே யாகும். இந்த நாடியில் வெளிப்படை யாகவோ அல்லது பிருதிவிஸ்தலம் என்று சொல்லி ஊரை யூகிக்கும்படி யாகவோ கஞ்சியைப்பற்றிய குறிப்புகள் அநேகம் இருக்கின்றன, அல்லது இந்த கஞ்சியின் ஒரு சிறிய பாகம் இருக்கின்ற வேகவதி நதியைப் பற்றிய குறிப்புகள் (references) இருக்கின்றன. இவ்விதமான குறிப்புகள் இது வரையிலும் அச்சிடப்பட்ட இந்த நாடியின் பாகங்களிலும் (volumes) இனி வெளிவரப்போகின்ற பாகங்களிலும் மலிந்து கிடக்கின்றன. மேலும் இந்த நாடியில் கஞ்சியிலுள்ள வரதர்கோயில், குமரகோஷ்டம் முதலிய இன்னும் சில கோயில்களைப்பற்றிய குறிப்புகள் இருக்கின்றன. என்னுடைய சொந்த அனுபவத்தைப்பற்றி நான் இங்கு சில விஷயங்களைச் சொல்லவேண்டிய அவசியம் நேரிட்டிருப்பதால் என்னை மன்னிக்கும்படியாகக் கேட்டுக்கொள் ளுகின்றேன். இந்த விஷயங்கள், சப்தரிஷிகளின் சம்மேளனம் நடந்த இடத்தைப்பற்றி ஆராய்ச்சியைத் தற்காலத்தில் செய்கின்ற அல்லது பிற்கா லத்தில் செய்யப்போகின்ற ஆராய்ச்சியாளர்களுக்கு (Research scholars) மிகவும் உபயோகமாகவிருக்கும் என்ற எண்ணத்துடனே என்னுடைய

சொந்தமான குறிப்புகளையும் (Personal references) அநுபவங்களையும் இங்கு சொல்லியிருக்கின்றேன். என்னுடைய தகப்பனுர் ஒரு கவர்ன்மெண்டு வேலைக்காரராகவிருந்து பென்ஷன் (Pension) பெற்றவர். இவர் சென்னைப் பட்டணத்தில் வசித்திருந்தவர். இவர் ஒரு பெரிய ஜோதிட வித்தியாதுரர் என்ற ஜோதிடக் கல்விப்பிரியர் (amateur astrologer). இவர் தன்னுடைய அறுபத்தைந்தாவது வயதில் 1921 A.D-இல் இறந்துவிட்டார். இவருடைய மனைவியார் வீடு கஞ்சி ஆகும். இவருடைய சட்டகருடைய (மனைவியின் சகோதரியின் புருஷருடைய) வீடு வந்தவாசி கிராமம் ஆகும். வந்தவாசி என்ற கிராமம் கஞ்சியிலிருந்து சுமார் இருபத்துநான்கு மைல் தூரத்தி லிருக்கின்றது. இவ்விரண்டு ஊர்களுக்கும் சுமார் மத்தியில் பன்னிரண்டா வது மைலில் பெருநகர் (பென்னகர்) என்ற ஒரு பெரிய கிராமம் இருக் கின்றது. இது காஞ்சீவரம் தாலூக்காவைச் சார்ந்த உத்திரமேரூர் (உத்திரன் பேரூர்) என்ற சப்-தாலூக்காவில் இருக்கின்றது. இந்த பென் னகர் என்ற கிராமம் இந்த நாடியிற்குறித்துள்ளபடிக் கஞ்சிக்குத் தெற்கில் இருக்கின்றது. பஸ் இல்லாத காலத்தில் கஞ்சியிலிருந்து பெருநகருக்குப் போகின்ற காலாட்கள் அல்லது மாட்டுவண்டியில் செல்லுகின்ற பிரயாணிகள் இந்த பெருநகரில் தங்கித் தாங்கள் கொண்டுபோகும் கட்டுசாதத்தைச் சாப்பிட்டுவிட்டு இளைப்பாரி பிறகு தங்களுடைய பிரயாணத்தை மறுபடியும் ஆரம்பிப்பதுண்டு. என் தகப்பனுர் காஞ்சீபுரத்திலிருந்து வந்தவாசிக்கு அநேகதடவைகளில் பெருநகர் வழியாகச் சென்றிருக்கின்றார். இந்த சப்த ரிஷி நாடியின் ஓலைப்புத்தகங்களை வைத்திருந்த சொந்தக்காரராகிய பொன் னம்பல பண்டாரம் என்ற ஒரு வள்ளுவர் இந்தப் பெருநகரில் வாசஞ் செய்து கொண்டிருந்தார். இந்தப் பண்டாரத்திடம் என் தகப்பனுர் பல தடவை களில் சென்று ஜோதிட சாஸ்திரவிஷயமாகக் கலந்து பேசி இருக்கின்றார். இந்தப் பொன்னம்பலப் பண்டாரம் என்பவர் ஜோதிட சாஸ்திரத்தை நன்றாகப் படித்த ஒரு நிபுணர் (expert). இவர் " தமிழ் ஜாதகாலங்காரம், மணிகண்ட கேரளம், துய்யகேரளம், வீமேஸ்வர உள்ளமுடையவன், ஜாதக சிந்தாமணி, வள்ளுவமாலை, தாண்டவமாலை, புலிப்பாணி ஜோதிடம், குமாரசாமியம் " முதலிய ஜோதிடக் கிரந்தங்களை நன்றாகப் படித்து மனப் பாடம் பண்ணிவைத்திருந்த ஒரு சிறந்த ஜோதிடராவர். இவர் அதிகமான தெய்வபக்தியையுடையவராக விருந்தார். இவர் தன்னுடைய கிராமத்தி லுள்ள பெரிய ஏரியிலுள்ள அல்லது குளத்திலுள்ள ஜலத்தில் அனேகமணி காலம்வரையிலும் பூஜை செய்வதுண்டு. இவர் தமிழில் ஒரு வாசித்தறிந்த நல்ல பண்டிதராகவும் இருந்தார். இவர் ஒரு உபவாசியாகவும் இருந்தார். இவர் எக்ஷணிதேவதை என்ற ஒரு தேவதையைத் தனக்கு உதவியாக உபயோகப்படுத்திக்கொண்டுவந்தார். இந்தப் பண்டாரத்தினுடைய மார்பில் தொங்கிக்கொண்டிருந்த லிங்கத்தை இந்தப் பண்டாரம் ஏரியில் அல்லது குளத்தில் உள்ள ஜலத்தில் தன்கையின் உள்ளங்கையில் வைத்துக்கொண்டு ஜபம் அல்லது பூஜை செய்யும்போது இந்த லிங்கமானது உள்ளங்கையி லிருந்து தானுகவே மேலே எகிறி எகிறித் துள்ளித் தன்னுடைய உள்ளங் கையிலேயே மறுபடியும் விழுவதை என் தகப்பனுர் பலதடவைகளில் பார்த் திருந்ததாக என்னிடஞ் சொல்லியிருக்கின்றார். இவ்விதமான உபவாசியாக இந்தப் பண்டாரம் இருந்தார். மேலும் இவர் யாதொரு சிரமமுமில்

லாமலே வெகு சுலபமாகப் பாட்டுகளை நினைத்தபோது நினைத்தவிடத்திலேயே கட்டக்கூடிய வித்தையைப் படித்திருந்தவராகவும் இருந்தார். (He could compose Tamil stanzas extempore very easily). இவர் நடந்தேரிவிட்ட பலாபலன்களை (past events of a native's career) ஒரு ஜாதகத்தைப் பார்த்து மிகவும் ஆச்சரியப்படத்தக்கபடி சொல்லக்கூடிய திறமைவாய்ந்தவராகவும் இருந்தார். ஆகையால் இவருக்கு எங்குபார்த்தாலும் நல்ல பெயரும் கீர்த்தியும் இருந்தது. இவர் காஞ்சீபுரத்திலிருந்து சுமார் முப்பது மைல் தூர அரைவிட்டமுள்ள ஒரு வட்டாரத்தில் (within a circle of a radius of thirty miles) உள்ள இடங்களுக்குப் போய் ஜனங்களுக்கு ஜாதகங்களைப் பார்த்து பலாபலன்களைச் சொல்லிக்கொண்டு ஜீவனஞ்செய்துவந்தார். இவர் காஞ்சீபுரத்திற்கும் இதற்கு அடுத்தாற்போலுள்ள கிராமங்களுக்கும் இவர் அடிக்கடி போவதுண்டு. இவர் தன்னுடைய அதிக முதியவயதில் சுமார் 1912 A.D. வருஷத்தில் இறந்துவிட்டார். இவருக்குக் கனகசபை பண்டாரம் என்ற ஒரே ஒரு குமாரர் இருந்தார். இவருக்கு ஜோதிடத்தில் இவருடைய தகப்பனுருக்கு ஜோதிடத்தில் இருந்ததுபோல அவ்வளவு சிரத்தையும் வித்தையும் வாசிப்பும் கிடையாது. ஆகையால் இவர் ஒரு சிறிய மளிகை கடையை வைத்துக்கொண்டு ஜீவனஞ்செய்துவந்தார். 1881 A.D. வருஷத்தில் பிறந்து 1955. A.D. வருஷத்தில் இறந்துபோன என்னுடைய மூத்தசகோதரருடைய ஜாதகத்திற்கு என்தகப்பனுர் 1911A.D. வருஷத்தில் பொன்னம்பல பண்டாரமிடமிருந்து இந்த சப்தரிஷி நாடி பலாபலன்களை எழுதி வாங்கிக்கொண்டுவந்தார். இவ்விதமாக எழுதிக்கொண்டுவந்த ஜாதகம் "சாதாரணஹூ மாசி மாதம் 1-தேதி ஆதிவாரம், பெண்ணகரில் எழுதியது, 12–2–11" என்ற தேதி, இடம், ஆகிய இவ்விவரங்களுடன் இருக்கின்றது. இது என்னுடைய தகப்பனுருடைய கையெழுத்திலேயே இருக்கின்றது. இது என்னிடத்தில் இன்னம் இருந்துவருகின்றது. இந்தப் பொன்னம்பலப் பண்டாரம் மேற்கண்ட 1911 A.D.-ஆம் வருஷத்திற்கு பிறகு சுமார் ஒருவருஷம் பொருத்து இறந்துவிட்டார். என் தகப்பனுருக்குச் சினேகிதரும் ஜோதிடம் தெரிந்தவருமாய் இருந்த காலஞ்சென்ற பங்களூர் ஸ்ரீ இராஜூ முதலியார் என்பவர் என்னுடைய வீட்டிற்கு ஜோதிட சம்மந்தமாக அடிக்கடி வந்து திண்ணையின்மேல் உட்கார்ந்துகொண்டு தன்னுடைய ஜோதிட சம்மந்தமான வேலைகளைச் செய்துகொண்டு அதிகமான காலத்தைக் கழிப்பதுண்டு, சில சமயங்களில் இவர் என் வீட்டிலேயே சாப்பிடுவதுமுண்டு. இப்படிப்பட்ட நிலையில் என் வீட்டிற்கு வரும் தபால் காகிதங்களை இவர் போஸ்டுமென் (Post-men or Post peons) என்பவர்களுடமிருந்து வாங்கிக்கொள்ளுவதுண்டு. இவருக்கு ஜோதிடந்தவிர வேறே ஜீவனங் கிடையாது. ஆகையால் இவர் தான் ஜீவனஞ்செய்வதற்காக இந்தச் சப்தரிஷிநாடியை வாங்கிவரும்படியாக என் தகப்பனுரை அடிக்கடித் தூண்டிக்கொண்டிருந்தார். மேற்சொன்ன கனகசபை பண்டாரத்தை இவருடைய தகப்பனுர் பொன்னம்பல பண்டாரம் இறந்துவிட்ட பிறகு என் தகப்பனுர் பார்த்தபோது இவர் தனக்கு ஜோதிடத்தில் பரீட்சையும் சிரத்தையும் இல்லாமல இருந்தபடியால் இந்த நாடியை விற்றுவிடுவதாக இவர் சொல்லிக்கொண்டிருந்தார். ஆயையால் இராஜு முதலியாரின் தூண்டுதலின்பேரில் என் தகப்பனுர் பெருநகருக்குப் போய் கனகசபை பண்டாரத்

ணைக் கண்டு இந்த சப்தரிஷி நாடியை வாங்குவதற்காகச் சுமார் 200 ரூபாய்க்கு விலைபேசி தீர்மானஞ்செய்துவிட்டுத் தேவையான பணத்தை அனுப்பும்படியாகப் பெருநகரில் இருந்து என் தமயனுருக்கு கார்டை எழுதி தனக்கு பணத்தை அடுத்த வியாழக்கிழமைக்குள் அனுப்பவேண்டும் என்றும், இவ்விதமாகப் பணம் வியாழக்கிழமைக்குள் தனக்கு வந்து சேரா விட்டால் தானே சென்னைக்குவந்து பணத்தை வாங்கிக்கொண்டு மறுபடியும் பெருநகருக்கு போவதாகவும் எழுதியிருந்தார். தெருத் திண்ணையின்பேரில் உட்கார்ந்துகொண்டிருக்கும் மேற்கண்ட இராஜு முதலியார் இந்தக் கார்டை போஸ்டுமென் (Postman) இடமிருந்து வாங்கிக்கொண்டு எங்கள் வீட்டில் கொடுக்காமலும், விஷயத்தைத் தெரிவிக்காமலும் ஜோதிடம் தெரியாத சென்னையில் இருந்த ஒரு ஸ்ரீ கிருஷ்ணசாமி பிள்ளையிடம் பணம்விஷயமாய் ஏற்பாடுசெய்துகொண்டு என் தகப்பனுர் சென்னைக்கு வெள்ளிக்கிழமை திரும்பிவந்துவிட்ட விஷயத்தைத் தெரிந்துகொண்டு இந்தக் கிருஷ்ணசாமி பிள்ளையுடன் இந்த இராஜு முதலியார் பெருநகருக்குப் போய் அதிகவிலை யைக் கொடுத்து இந்த சப்தரிஷிநாடி ஓலைப்புத்தகங்களை வாங்கிக்கொண்டு சென்னப்பட்டணத்திற்குத் திரும்பி வந்து சேர்ந்துவிட்டார். இந்தவிஷயம் ஒன்றுமே தெரியாத என் தகப்பனுர் மறுபடியும் அடுத்தவாரம் பெரு நகருக்குத் தேவையான பணத்துடன் போய்க் கனகசபை பண்டாரத்தைப் பார்த்தபோது "உம்முடைய சிநேகிதராகிய இராஜு முதலியார் ஒருவருடன் கூடவந்து எல்லா ஓலைப்புத்தகங்களையும் அஃதாவது சுமார் பதின்மூன்று பெரிய புத்தகங்களையும் அதிகவிலைகொடுத்து வாங்கிக்கொண்டுபோய்விட்டார். உமக்காக ஒரு சிறிய ஓலைப்புத்தகத்தை அவர்களுக்குத் தெரியாமல் வைத் திருக்கின்றேன், இதை உமக்குக் கொடுக்கின்றேன்" என்று கனகசபை பண்டாரம் சொல்லவே என் தகப்பனுர் திகைத்துவிட்டார். பிறகு இந்த சிறிய ஒரு ஓலைப்புத்தகத்தை ரூபாய் எட்டு கொடுத்து வாங்கிக்கொண்டு திரும்பி பட்டணம் வந்து சேர்ந்துவிட்டார். இந்த சிறிய ஓலைப்புத்தகம் என்னிடம் சென்றவருஷம் வரையிலும் இருந்து பிறகு இதை நான் சென்ற வருஷம் சென்னை கவர்ன்மெண்டு ஓரியண்டல் மானஸ்கிரிப்ட்டு லைப்ரரிக்கு (Government Oriental Manuscript Library, Madras) இனமாகக் கொடுத்து விட்டேன். இந்த இராஜு முதலியாரும் இவருக்குப் பணம்கொடுத்து உதவி புரிந்த கிருஷ்ணசாமி பிள்ளையும் சென்னை ஏகாத்தா கோயில் தெருவில் கிருஷ்ணசாமி பிள்ளை குடியிருந்த வீட்டில் தெருவு பக்கத்தில் ஒரு அரையில் "சப்தரிஷி ஜோதிடநிலையம்" என்று ஒரு அலுவகத்தை (Office) ஏற்படுத்தி சுமார் ஆறுமாதகால வரையிலும் வியாபாரத்தை நடத்திவந்தார்கள். எனக்கு ஜோதிடத்தின்பேரில் கொஞ்சம் விருப்பம் இருந்ததால் இந்த ராஜு முதலியார் திண்ணையின்பேரில் உட்கார்ந்துகொண்டு இருக்கும்போது நான் இவருக்கு உதவி சிஷியனுகவிருந்து (Assistant) உதவிசெய்வதுண்டு. இவர் ஏகாத்தாகோயில் தெருவில் தன் வியாபாரத்தை நடத்திவந்தபோது நான் இவரிடம் போவதுண்டு. இவ்விதம் சென்று இந்த சப்தரிஷிநாடி ஜாதகங்க ளுக்கு இன்டெக்ஸ் என்ற அட்டவணை (Index of horoscopes) தயார்செய்த போது நான் இவருக்கு உதவிசெய்துவந்தேன். இவருடைய அனுமதியின் பேரில் அட்டவணையின் நகலை என் உபயோகத்திற்காக ஒன்று 1912 A.D.யில் தயார்செய்துகொண்டேன். இந்த அட்டவணையின் நகலைக் காப்பிசெய்து

கொள்ளும்படியாக ஓரியண்டல் மானஸ்கிரிப்ட்டு லைப்ரரிக்கு நான் சென்ற வருஷம் கொடுத்து லைப்ரரி உத்தியோகஸ்தர் ஒரு நகலைத் தயாரித்து லைப்ரரி யில் வைத்திருக்கின்றார். பெருநகரில்இருந்து ஓலைப் புத்தகங்கள் வந்தபோது ஜாதகங்கள் லக்கினவாரியாக இப்புத்தகங்களில் இல்லாமல் இருக்கவே 1912. A.D.-ல் இந்த ஜாதகங்களை லக்கினவாரியாக அடுக்கி ஒவ்வொரு லக்கி னத்திற்கும் ஒவ்வொரு புத்தகமாகப் பன்னிரண்டு புத்தகங்களாக அக்கா லத்தில் பிரித்து தயார்செய்து வைத்தோம். மேற்சொல்லிய சுமார் ஆறு மாதகாலம் பொறுத்து கிருஷ்ணசாமி பிள்ளையும் இராஜு முதலியாரும் இந்த நாடிவிஷயமாகச் சண்டைபோட்டுக்கொண்டார்கள். பிறகு கிருஷ்ண சாமிபிள்ளை இந்தப் பன்னிரண்டு சப்தரிஷிநாடி ஓலைப்புத்தகங்களை இராஜு முதலியாரிடமிருந்து பிடுங்கிக்கொண்டு சென்னை கவர்ன்மெண்டு ஓரியண்டல் மானஸ்கிரிப்ட்டு லைப்ரரிக்கு 1913-ல் அல்லது 1914 A.D. யில் விற்றுவிட்டார். இந்தநாடி பெருநகரில் இருந்து லைப்ரரிக்கு வந்து சேருகின்ற வரையிலும் இதனுடைய சரித்திரத்தை இங்கு இவ்விதமாக நான் சொல்லியிருக் கின்றேன். இந்த நாடிப் புத்தகங்களுக்கு 1912. A.D-ல் அட்டவணை தயார் செய்தகாலத்தில் இந்த நாடிப் புத்தகங்களிலுள்ள சில ஜாதகங்களையும் என்னிடத்திலிருந்த ஒரு ஓலைப் புத்தகத்திலிருந்த சில ஜாதகங்களையும் நான் சில சமயங்களில் படிப்பதுண்டு. காஞ்சீபுரத்தைப்பற்றி இந்த நாடி யில் அடிக்கடி குறிப்புகள் (References) இருக்கின்றன என்ற விஷயம் எனக்கு இவ்விதமாகத் தெரியும். பிறகு பெருநகர் கிராமம் அடங்கியுள்ள உத்திரமேரூர் சப் தாலூக்காவிற்கு நான் 1932.A.D.-யில் டிப்டி தாசில்தார ராக வந்து வேலைபார்த்தகாலத்தில் பெருநகர் கிராமத்தில் நான் முகாம் செய்வதுண்டு. இவ்விதமாக முகாம் செய்தபோது ஒருதடவை மேற்கண்ட கனகசபை பண்டாரத்தை விசாரித்தேன். இவர் என்னைவிட வயதில் பெரியவர். இவருடைய தகப்பனாகிய பொன்னம்பல பண்டாரத்தின் பந்துவும் சினேகிதருமாகிய ஒருவர் பங்களூரில் இந்த சப்தரிஷிநாடியின் அசலை அனேக ஓலைப்புத்தகங்களாக வைத்திருந்தார் என்றும், இதிலுள்ள நாட்டுச் சிறப்பு, நகரச்சிறப்பு முதலியவைகளைப் படித்துப்பார்த்துக் காஞ்சீ புரத்திற்குச் சுற்றுப்பக்கங்களிலுள்ள கிராமங்களைச் சம்மந்தப்பட்ட ஜாதகங்க ளின் நகலை மாத்திரம் இவர் தகப்பனாரும் இவரும் தயார்செய்துகொண்ட தாகவும் இவர் என்னிடம் சொன்னார். இவ்விதமாக இவர் என்னிடம் தெரிவித்தது உண்மையாகவே இருந்தால் இதுதான் இந்த நாடியில் அதிகப்படக் காஞ்சீவரத்தைப்பற்றிய குறிப்புகள் (References) இருப்பதற் குக் காரணமாகும் என்று தோற்றுகின்றது. நான் இங்கு வேணுமென்றே இவ்விஷயங்களை விவரமாகச் சொல்லியிருக்கின்றேன். இந்த நாடியின் இதற்கு முந்திய சரித்திரத்தைப்பற்றியும், இந்த நாடியில் சொல்லியுள்ள சப்தரிஷிகளின் சம்மேளனம் நடந்த இடத்தைப்பற்றியும் (Venue of conference) இனிமேல் ஆராய்ச்சி செய்கின்ற ஆராய்ச்சியாளர்களுக்கு (Research-scholars) நான் இதுவரையிலும் சொல்லிவந்த விஷயங்கள் உபயோகமாகவிருக்கும் என்று நம்பியே இவ்விஷயங்களை இங்கு தெரிவித் திருக்கின்றேன். இந்த நாடியில் இது வரையிலும் நான் பார்த்த ஜாதகங்க ளில் இரண்டு மூன்று ஜாதகங்களின் பாஷை விஷயமான நடை நொ ந பாவனைகளுக்கும் (Style of language, etc) பெரும்பான்மையான இதர

ஜாதகங்களில் உள்ள ஒரேவிதமான நடை நொடி பாவனைகளுக்கும் அதிக மான வித்தியாசங்கள் இருக்கின்றன. ஆகையால் ஜோதிட சாஸ்திரத்திலும் பாட்டு கட்டுவதிலும் கைதேர்ந்தவராகவிருந்த பொன்னம்பல பண்டாரமே இந்த இரண்டு மூன்று ஜாதகங்களையும் முதலிலிருந்து தயாரித்து எழுதி யிருக்கக்கூடுமென்று எண்ணுவதற்கு ஏற்படுகின்றது.

மேலும் நம்முடைய தேசத்தாரின் கௌரவமும் மகிமையுமான (glory of our nation) பழைய காலத்திய வித்தையையும் ஞானத்தையும் (culture and learning) காப்பாற்றுவதில் அக்கரை எடுத்துக் கொண்டிருக்கிற தயாள குணத்தையும் தரும குணத்தையுமுடைய தற்கால அரசியல் பொது மக்க ளுடைய பணத்தை மதிப்பிடத் தகுந்த அளவிற்கு நன்மார்க்கத்தில் பொது நன்மைக்காகச் செலவு செய்து அச்சிட்டு வருகின்ற இந்த சப்தரிஷி நாடியின் உபயோகத்தைப்பற்றி நான் இரண்டொரு வார்த்தைகளைச் சொல்ல விருப்பமுடையவனாக விருக்கின்றேன். இராஜ்ஜிய நிர்வாக நூலில் (Science of economics) அருமையான தன்மையும் உபயோகமும் (Rarity and utility) ஒரு வஸ்துவின் மதிப்பை நிர்ணயிக்கின்றன. இந்தச் சப்தரிஷி நாடியானது பூர்வீகமான நாடிகளிலும் அருமையான நாடிகளிலும் ஒன்றாகவும் இது சென்ற அநேக நூற்றாண்டுகளாகத் தன்னுடைய பெருமையை யுடையதாக விருந்து வருகின்றது. துருவநாடி அல்லது சுகர் நாடி அல்லது இதர எந்த நாடியாவது ஒருவருடைய விளைவு அல்லது உற் பத்தியேயாகும். ஆனால் இந்தச் சப்தரிஷி நாடியோ எழு பிரகாசமான புத்தியையுடைய மேதாவிகளின் கூட்டு உற்பத்தியேயாகும் (is the joint product of seven brilliant intellects). ஆகையால் ஒரு மனிதருடைய வாழ்க்கையில் சம்பவிக்கக்கூடிய பலாபலன்கள் விஷயமாக ஜோதிட ஆகா யத்தில் மிகவும் பிரகாசமான நட்சத்திரங்களாக விளங்குகின்ற எழு மேதாவி களின் மிகவும் உயர்ந்த, நன்றாக ஆலோசனை செய்து அறிவிக்கப்பட்ட அபிப் பிராயங்களை இந்தச் சப்தரிஷி நாடி உடையதாக விருக்கின்றது. ஆகையால் இந்த நாடியை விட இதற எந்த நாடியும் அதிகமான கௌரவத்திற்கும், மதிப்பிற்கும் லாயக்கை உடையதாக விருக்கவில்லை. இந்த நாடி சாஸ்திரத்தி லுள்ள ஒவ்வொரு ஜாதகமும் இதனுடைய சொந்தக்காரருக்கு (Native or owner of the horoscope) தன்னுடைய பிற்கால வாழ்க்கையில் ஒருவழி காட்டும் நட்சத்திரமாகவும் (a guiding-star) அல்லது தன்னுடைய இருண்ட பிற்கால வாழ்நாள் வழியை அல்லது மார்க்கத்தைப் பிரகாசப் படுத்துகின்ற ஆகாச தீபமாகவும் (a beacon light in the dark path of his future life) இருந்து கொண்டு இவருக்கு அதிகமாக உபயோகப்படக்கூடியதாகவும் மதிப் புள்ளதாகவும் இருக்கின்றது. பின்னால் நடக்கப்போகின்ற சம்பவங்களை இவருக்கு முந்தியே தெரிவித்து தன்னுடைய வாழ்நாள் பிரயாணத்தில் மிகவும் ஜாக்கிரதையாக நடக்கும்படி இந்த நாடி இவருக்கு உபயோகப்படும். இவர் தன்னுடைய பிற்காலத்திய வாழ்க்கையில் சம்பவிக்கக்கூடிய அதிருஷ் டம், தரித்திரம், சந்தோஷம், துக்கம், சுகம், கஷ்டம், ஆகிய இவைகளை முன்னடியாகவே தெரிந்து கொண்டு இவைகளுக்குத்தக்கபடி நடந்து கொள்ளவும் அல்லது இவைகளை விலக்கத்தகுந்த காரியங்களைச் செய்து கொள்ளவும் இந்த நாடி இவருக்கு மிகவும் உபயோகமுள்ளதாகும். இவருக்குப் பிற்காலத்தில் ஏதாகிலும் ஒரு கஷ்டம் நேரிடப்போவதாக

விருந்தால் இவர் இதை ஜோதிடத்தின் மூலமாக முந்தியே தெரிந்து கொண்டு இதற்காக இவர் தன்னுடைய மனதைத் திடப்படுத்திக்கொண்டு தைரியமாகவிருக்கக்கூடும். இந்த கஷ்டம் இவருக்கு உண்மையிலேயே நடக்கும்போது இந்தக் கஷ்டத்தின் கொரேமான தாக்குதலை இவருடைய மனது சகித்துக்கொள்ளுந் திறமையை அடைந்துவிடும். ஆனால் இந்தக் கஷ்டத்தில் தாக்குதல் இவருக்கு முந்தியே தெரியாமல் திடீரென்று நேரிடு மானால் இந்தத் தாககுதலை இவருடைய மனது தாங்கமுடியாத நிலையி லிருந்து மிகவும் துன்பத்தைப் பெரும்பாலும் அடையும். ஒரு மனிதர் தனக்கு இனிமேல் வரப்போகின்ற நல்ல காலத்தையும் சுகபோகங்களை யும் ஜோதிடத்தின் மூலமாக முந்தியே தெரிந்துகொண்டால், இவைகள் உண்மையில் நடக்கும்போது இவைகளால் உண்டாகும் சந்தோஷமும் சுக மும் இவைகளை இவர் எதிர் பார்த்திருந்த காரணத்தினால் பல மடங்கு அதி கப்பட்டுவிடும். இவ்விதமாக இந்த நாடி ஜாதகருக்கு அல்லது ஜனங்களுக்கு மிகவும் உபயோகாமாகவிருக்கும். ஒரு சமயம் இந்த நாடியிலுள்ள ஜாதகங் கள் இறந்து விட்டவர்களுடைய ஜாதகங்களாகவோ அல்லது இனி வரப் போகின்ற இரண்டொரு தலைமுறைக்குள்ளே பிறக்கப்போகின்றவர்களுடைய ஜாதகங்களாகவோ இருக்காமல் இருந்தாலுங்கூட ஜோதிட சாஸ்திரம் ஒரு சிறந்த கம்பீரமான (noble) அல்லது கௌரவமான, மேலான (sublime) கலையாகக் கருதி இதில் பற்றுள்ளவர்களுக்கு இந்த நாடி கீழ்க்கண்ட விதமாக மிகவும் உபயோகமுள்ளதாகவும் பயன்படக்கூடியதாகவும் இருக் கும். ஜோதிடத்தில் கெட்டிக்காரராக விருக்கின்றவர்களுக்குங்கூட அல்லது ஜோதிட சாஸ்திரத்தைக் கற்றுக் கொள்ளுகின்றவர்களுக்குங்கூட இந்த நாடியிலுள்ள ஒவ்வொரு ஜாதகமும் உதாரண ஜாதகமாக (Illustrative horoscope) உபயோகப்படும். பூர்வ நிதர்சனம், பிரமாணம், திருஷ்டாந் தம், அல்லது உதாரணம் என்ற உலகத்தில் (World of precedents or examples) நாம் ஜீவித்து வருகின்றோம். இந்த திருஷ்டாந்தங்களும் உதா ரணங்களும் ஒவ்வொரு தொழிற்றுறையிலும் செய்கைத் துறையிலும் ஜனங்களுக்கு மிகவும் பயனளிக்கக்கூடியனவாக விருக்கின்றன. உதாரண மாக ஒரு விஷயமானது அல்லது பிரசினமாவது (a problem) தனக்குப் புதியதாகவும் அல்லது தான் இதற்கு முந்தி அநுபவித்திராதபடியும் தோன்றுமானால் ஒரு கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர் அல்லது இன்னும் வேறொருவர் தன்னுடைய அறியாமையான நிலைமையில் தனக்கு வழி காட்டியாகவிருக்கின்ற பூர்வ திருஷ்டாந்தம் அல்லது உதாரணத்தை (precedent)-த் தேடிப் பார்க்கின்றார், தங்களுக்குத் தெரியாத அநேக விஷயங்களில் பூர்வ திருஷ்டாந்தம் அல்லது உதாரணம் ஜனங்களுக்கு அதிக நன்மையைச் செய்கின்றதாகும். ஜோதிட சாஸ்திரம் அநுபவித்தின் பேரில் உண்டாக்கப்பட்ட சாஸ்திரம் என்று நான் முன்னமே தெரிவித்திருக் கின்றேன். புதியதாக பரிசீலனை செய்கின்ற ஒரு ஜாதகத்தில் இரண்டு கிரகங்களின் அல்லது இரண்டிற்கு மேற்பட்ட கிரகங்களின் சம்பந்தமான ஒருவித தோற்றம் அல்லது அமைப்பு அல்லது நிலைமை (configuration) ஏற்படுமானால், இந்தத் தோற்றத்திற்கு ஒரு பூர்வ திருஷ்டாந்தம் அல்லது உதாரணம் (precedent) இருந்தால் அஃதாவது இதே விதமான தோற்றம் அல்லது அமைப்பு (similar configuration) இந்த சப்தரிஷி நாடியிலுள்ள

எந்த ஜாதகத்திலும் இருக்குமானல், இந்தத் தோற்றம் அல்லது அமைப்பிற்குச் சப்தரிஷி நாடியில் சொல்லியுள்ள பலாபலன்களை ஒரு ஜோதிடர் தான் ஆராய்ச்சி செய்கின்ற ஜாதகத்திற்குக்கூடச் சுலபமாகவும் உடனேயும் சொல்லக்கூடும். இவ்விதமாக இந்த நாடியினுல் இவருக்குச் சிரமம்குறைவு படுவதுமன்றிப் பலாபலன்களை முன்னடியாகத் தெரிவிப்பதில் நேர்மையும் பிழையின்மையும் (accuracy in prediction) அதிகப்படும். மேலும் இந்த நாடியிலுள்ள ஜாதகங்களில் உற்சாகத்தைப் புகட்டுகின்ற நற்போதனையான தர்க்கங்கள் பல உள (There are many lively and instructive discussions) ஒரு ஜோதிடர் சப்தரிஷிகளுக்குள் ஏற்படும் இந்த தர்க்கங்களின் போக்குகளையும், நோக்கங்களையும் (Trends of discussion) பரிசீலனையிலுள்ள ஒரு விஷயத்திற்கு அநுகூலமாக அல்லது பிரதிகூலமாகத் தாங்கள் சொல்லும் காரணங்களையும் இவர்கள் கடைசியாக ஒரு முடிவிற்கு வருகின்ற தீர்மானத்தையும் கவனிப்பாராகில் இவர் தான் ஜோதிட ஆராய்ச்சி செய்யும் போது தனக்குக்கூட இதே விதமான சங்கடமான நிலைமை ஏற்படுமானல், இவர் ரிஷிகள் உபயோகப்படுத்திய காரணங்களையே உபயோகப்படுத்தித் தன்னுடைய முடிவான அபிப்பிராயத்தையும் அடையக்கூடும். (1) ஒரு ஜாதகருடைய ஆயுள், (2) இவருக்கு ஏற்படக்கூடிய மனைவிமார்களின் எண், (3) இவருக்கு நிலைத்திருக்கும் குழந்தைகள், (4) இவருக்கு உண்டாகும் நல்ல அதிருஷ்டம் துரதிருஷ்டம், நல்லயோகம், கெட்டயோகம் ஆகிய இவைகள் விஷயமான பிரசினைகளைப்பற்றி இந்த நாடியில் அடிக்கடி தர்க்கங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இந்த விஷயங்கள் ஒருவருடைய வாழ்நாளில் சம்பவிக்கக்கூடிய முக்கியமான விஷயங்களாகும். ஆகையால் இவைகள் ஒவ்வொரு மனிதரும் முந்தியாகவே தெரிந்துகொள்ள அதிக அவா அல்லது ஆசை உடையவராக விருக்கின்றூர். இந்த நாடியில் நடக்கின்ற வாக்குவாதங்களை ஒரு ஜோதிடர் ஜாக்கிரதையாகவும் ஊக்கத்துடனும் கவனிப்பாராகில், இவர் அதிகமான நன்மையை அடைவார்; இவருக்கு அதிக அநுபவமுண்டாகும்; பலன் சொல்லுவதில் இவருக்கு அதிகத் திறமை ஏற்படும்; பலாபலன்களை உண்மையாகவும் சரியாகவும் சொல்லக்கூடியவர் என்ற பெயரும் கீர்த்தியும் அடைந்து இவர் ஜனங்களிடத்தில் அதிக மதிப்பை உடையவராக இவர் இந்த நாடியால் விளங்குவார். மேலும் இந்த நாடி, ஜோதிட சாஸ்திரம் தெரியாத ஜனங்களுக்கும், ஜோதிட சாஸ்திரத்தில் அக்கரையே அல்லது இச்சையே இல்லாத எல்லா பாமர ஜனங்களுக்குங்கூட இந்தச் சப்தரிஷி மிகவும் உபயோகமானதேயாகும்; ஏனென்றூல் இதில் மதச் சம்பந்தமாகவும், நீதி நூல், தர்ம சாஸ்திரம், நல்லொழுக்கும், சன்மார்க்கம் ஆகிய இவைகள் சம்பந்தமாகவும் அநேக சிறந்த மதிப்புள்ள நல்ல போதனைகள் (many valuable lessons) எவ்விடத்தில் பார்த்தாலும் மலிந்து கிடக்கின்றன. இந்த நாடியை ஒரு முறை படிக்கின்ற ஒவ்வொருவரும் மனித வாழ்க்கை விஷயமாகப் புதிய நல்ல கொள்கைகளையும் அபிப்பிராயங்களையும் அடைந்து ஒரு புதிய மனிதராகவே இந்த நாடியின் பயனுக்க் கிளம்பி வெளியே ஜனங்களுக்குத் தோற்றுவார். இந்த நாடியில் சொல்லியுள்ள நல்ல கொள்கைகளையும், போதனைகளையும் இவர் அடைந்தே தீருவார் என்பதற்குச் சந்தேகமே இராது. இந்த நாடியை வாசிப்பதால் இவர் தெய்வீகத் தன்மையை உடையவராகவும், சன்மார்க்கத்தையும் நல்

லொழுக்கத்தையும் அநுசரிப்பவராகவும், கடவுளிடத்தில் பயபக்தியுடையவ ராகவும், தயாள குணமும் தருமகுண முடையவராகவும், பிறருக்கு உப காரஞ் செய்கின்ற தன்மையையுடையவராகவும் மாறிப்போய் விடுவார். இவ்விதமாக ஜோதிடந் தெரியாத சாதாரண பாமர ஜனங்களுக்குக்கூட இந்த நாடி ஒருவித தர்ம சாஸ்திர நீதி சாஸ்திர நூலாகி இவர்களைச் சீர்திருத்தஞ் செய்கின்ற ஒரு அரிய பெரிய கருவி அல்லது சாதனம் (a great moral reform) ஆகும். இவ்விதமாக இந்த நாடி உலகத்திலுள்ள எல்லோருக்கும் போதனு விருத்தி சம்பந்தமான மதிப்பையுடையதாகும்; இதன் விஷயமாகச் சர்க்காரால் செலவு செய்யப்பட்ட பணம் நல்ல மார்க்கத் திலேயும் மேன்மையான ஒரு நல்ல விதமாகவும், சகல ஜனங்களுடைய அபி விருத்திக்காகவும் செலவு செய்ததாகவே கருதப்படுவதற்கு யாதொரு சந் தேகமும் கிடையாது என்று திண்ணமாகவும் உறுதியாகவும் சொல்லக் கூடும். இந்தச் செலவையும் ஐந்து வருஷ சீர்திருத்தத் திட்டம் (Five year plan) என்ற விஷய நோக்கத்திலேயே கூட செலவு செய்ததாகக் கருதுவ தற்கு இடந்தரும். அச்சிடுவதற்கு லாயக்கான கிரந்தங்களில் இந்த நாடி சாஸ்திரத்தைத் தேர்ந்தெடுத்த கனவான்களும் சீமான்களும் (gentlemen) இந்த சப்தரிஷி நாடியைப் பதிப்பிடுவதற்காகத் தகுந்த பதிப்பாசிரியர்களைத் தேர்ந்தெடுப்பதையும் தடுக்கக்கூடிய விலக்கக்கூடிய பிழைகள் கூடியமட்டும் இராமல் அச்சிடுவதையும், தன்னுடைய பலவிதமான, பொறுப்புள்ள கஷ்டமான அலுவல்களுக்குள்ளே, ஒரு சிறந்த அலுவலாகக் கருதி அதிக சிறத்தையும் ஊக்கத்தையும் செலுத்திய கியூரேடர் ஸ்ரீ T. சந்திரசேகர திட்சிதர் எம். எ , எல். டி. (Curator, Sri T. Chandrasekara Dikshitar, M.A.L.T.) அவர்கள், இதில் சம்மந்தப்பட்ட இன்னும் பெரிய மேல் அதிகாரி கள் முதலியோரும் விசேஷ நன்றி பாராட்டப்படத் தக்கவர்களாக விருக் கின்றார்கள். இவ்விதமாக இவர்களைப் பாராட்ட, இந்த நூலால் அதிக நன்மையை அடையப்போகின்ற பொது ஜனங்களும் கடமைப்பட்டிருக்கின்றார் களேயாகும். இந்தப் பொதுஜன உபகாரிகள் நீண்ட ஆயுளை உடையவர்க ளாகி இது போன்ற சர் காரியங்களை இன்னம் இன்னம் அதிகமாகச் செய்வ துடன், இவர்கள் தங்களுடைய வாணுட்களுக்குப் பிறகுகூட அழியாத கீர்த்தியையும் பெயரையும் நீடூழி காலம் யுடையவர்களாகவும் இருக்கக்கூட கடவுள் அருள் செய்வார் என்று பிரார்த்திக்கப்படுகின்றது. மிகவும் சிறந்த மதிப்புள்ள இந்த சப்தரிஷி நாடி நூலை அச்சிட்டு வெளிப்படுத்திய அதிகார கனவான்களின் கூட்டத்திற்கும் (coterie of official gentlemen), ஜோதிட சாஸ்திரத்தின் பூர்வீகமான கிரந்த கர்த்தர்களுக்கும் சப்தரிஷிகளுக்கும் என்னுடைய அன்பார்ந்த வந்தனத்தையும் நமஸ்காரத்தையும் (Salutation) தாழ்மையுடன் இதனுல் நான் தெரிவிக்கின்றேன்.

**C. G. ராஜன்**

**(என்ற C. கோவிந்தராஜன்)**

சென்னை, 1956-ம் வருஷம் ஜூன்மீ 24உ.

ஸ்ரீ:

# ஸப்தரிஷி நாடி.

## Vol. IV.

## கடக லக்னம்.

### ஜாதகம் 1.

1. பொன்விடை மதியும் தேளில் புகர்சாடி பூமன் மானில்
மன்புதன் ராகு கெண்டை மந்தனும் சிகியும் பெண்ணில்
துன்ரவி ஆட தாகத் துலங்கிட ஜன்மம் நண்டு
இன்னவாறு நவக்கோள் நின்ருல் இயம்புவீர் பலனைத் தானே.

| புதன் ராகு | சூரியன் | குரு | |
|---|---|---|---|
| சுக்கிரன் | இராசி சக்கரம் | | லக்கினம் |
| செவ்வாய் | | | |
| | சந்திரன் | | சனி கேது |

ஸ்வஸ்தி ஸ்ரீ ஜய வருஷம் சித்திரை மாதம் திங்கட்கிழமை பகல் நாழிகை 17-க்கு மேல் 22-க்குள் செனனம்.

### ஆங்கிலத் தேதி 23–4–1894.

நவக்கிரஹங்களின் பாதசாரம்.

அசுவினி 4-இல் சூரியன். கேட்டை 1-இல் சந்திரன். அவிட்டம் 1-இல் செவ்வாய். ரேவதி 1-இல் புதன். ரோஹிணி 1-இல் குரு. பூரட்டாதி 2-இல் சுக்கிரன். சித்திரை 2-இல் சனி. ரேவதி 1-இல் ராஹு. ஹஸ்தம் 3-இல் கேது.

நக்ஷத்திரம் கேட்டை. புத தசையில் இருப்பு வருஷங்கள் பதினாறு, மாதங்கள் ஏழு, நாட்கள் ஆறு.

1. குரு விருஷபத்திலும், சந்திரன் விருச்சிகத்திலும், சுக்கிரன் கும்பத்திலும், அங்காரகன் மகரத்திலும், புதனும், ராகுவும் மீனத்திலும், சனியும், கேதுவும் கன்னியிலும், சூரியன் மேஷத்திலும், உதய லக்கினம் கடகமுமாக இவ்வாறு நவக்கிரஹ நிலைகள் இருக்க, இச் ஜாதகபலனைக் கூறுவீர்களாக.

2. காதலி கேட்கும் போது கௌசிகர் சொல்லு கின்றார்
மேதினி லாண்பால் ஜன்மம் விளம்புமில் கீழ்மேல் வீதி
கோதிலாத் தெற்கு வாசல் குறைதலை மாரி மேற்கில்
நீதியாய்க் குணக்கில் காளி நிகழ்த்துவோ மிதுவல் லாமல்.

2. இவ்வாறு உமைதேவி கேட்கும்போது கௌசிகர் என்ற முனிவர் பதிலளிக்கின்றார். இவ்வாறு கிரஹ நிலையில் ஆண் குழந்தை ஜனிப்பான். வீதி, கிழக்கு மேற்கில் அமைந்திருக்கும். அவன் ஜனித்த வீடு தெற்கு நோக்கி இருக்கும். வீட்டிற்கு மேற்குத் திசையில் மாரியம்மன் கோயிலும், கீழ்த்திசையில் பத்திரகாளிகா தேவியின் ஆலயமுமிருக்கும். மேலும் பலன்களைச் சொல்லுகின்றோம்.

3. வடகீழ்ப் பால் கணேசன் வாசம் வடக்கினில் ஓடை காணும்
திடமுள சோலை யுண்டு தக்ஷிணம் நதியு முண்டு
அடவுடன் சிற்றூர் தன்னில் அணுகிய கூரை வீட்டில்
இடமது இரண்டு பாகம் பாலனு தித்தா னென்றோம்.

3. வட கிழக்கில் ஸ்ரீகணேசரின் ஸந்நிதியும், வடதிசையில் ஓர் ஓடையும் இருக்கும். தென் திசையில் அடர்ந்த சோலையும் ஒரு நதியும் இருக்கும். இவ்வாறு சுற்றுப்புறங்கள் அமைந்த ஒரு சிறிய கிராமத்தில் கூரை வீட்டில் இடது பக்கத்திலுள்ள இரண்டாவது அறையில் அப்பாலகன் பிறந்திருப்பான்.

4. உதிப்பனும் தீயின் வம்சம்[1] ஊமையே கேட்பாய் யோகம்
பதித்திடு தந்தை யோகம் பருகிய அன்னை யோகம்
விதித்திடு களத்ர புத்ரர் விளங்கிய முன்பின் ஜன்மம்
கதித்திடு துணைவர் யோகம் கழறுவோ மிந்நூல் தன்னில்.

4. உமாதேவியே! இப்பாலகன், வன்னிய குல க்ஷத்திரியர் என்று சொல்லப்படும் சாதியில் பிறந்திருப்பான். மேலும், இவனுடைய தந்தை, தாய், மனைவி, சந்ததி, முற்பிறவி, மறுபிறவி, ஸஹோதரர்கள் இவர்களைப் பற்றி இந்நூலில் சொல்லுகின்றோம். கேளுங்கள்.

5. தந்தையின் குணத்தை யாங்கள் சாற்றுவோம் சிவந்த மேனி
பந்தமாய் ஒடிச்சல் தேகி பாரினில் ஊகை சாலி
சந்ததம் பித்த ரோகி தாட்சிண்யன் ஊக சாலி
வந்தவர்க் கன்ன மீவன் மனவர்ம மில்லா னென்றோம்.

---

[1] உமை என்பது யாப்புநோக்கி ஊமையென நீண்டது.

5. இப்பாலகனது பிதா சிவந்தசரீரமுடையவன். அவனது உடல் மெலிந் திருக்கும். மிக்க மதியூஹம் உள்ளவன். எப்பொழுதும் பித்தரோகத்தால் கஷ்டப்படுவான். எல்லோருக்கும் நல்லவனாக நடந்து கொள்வான். தன் வீட்டிற்கு வந்தவர்களுக்கு இல்லையென்று சொல்லாமல் அன்னதானம் செய் வான். மனத்தில் ஒருவரிடத்தும் பகைமைக் கொள்ளாதவன்.

6. ஈகைவான் தனவா னாகும் எவர்க்குமே நண்ப னாகும்
நாகரி கங்க ளுள்ளான் நற்பந்து மெச்ச வாழ்வன்
பாகமாய்ப் பேச வல்லன் பாரிய ரிஷ்ட முள்ளான்
ஓகையாய்ப் பூமி சேர்ப்பன் மைத்துன னில்லா னென்றேம்.

6. அன்னதானம் தவிர, மற்ற தானங்களையும் செய்பவன். பணக் காரன். உயர்வு தாழ்வு பாராட்டாமல் எல்லோரிடத்திலும் நண்பனாகப் பழகும் சுபாவமுள்ளவன். நாகரிகமாக நடந்துகொள்வான். பந்துக்கள் கொண்டாடும்படி வாழ்க்கை நடத்துவான். அழகாகப் பேசுவான். மனைவி யினிடத்தில் அன்புள்ளவன். ஏராளமாக நிலங்களைச் சேர்ப்பான். மைத்து னன் இல்லாதவன். (அஃதாவது இப்பாலகனுக்கு மாமன் இல்லை என்பது கருத்து.)

7. ஆள்கார ருடைய னாகும் அதிகார மில்லான் நல்லன்
நீள்புவி யதிகம் சேர்ப்பன் நித்தியம் சிவத்தைப் பேணும்
சீலமு மில்லா னென்றேம் சித்தினி சாதி யாவன்
ஏலவே அற்ப வஸ்து இவனுமே விரும்பு வானும்.

7. மிக்க சேவகர்களை உடையவன். ராஜாங்க உத்யோகத்தில் இருக்க மாட்டான். பூமியைச் சேர்ப்பதில் ஊக்கமுள்ளவன். எப்பொழுதும் பரம சிவனைத் தியானிப்பான். (அஃதாவது சைவமதத்தைச் சார்ந்தவன் என்பது கருத்து.) சீலமுள்ளவன். சித்தினி என்ற ஒருவகை மனிதன். (இவன் மிருதுவான தன்மையும் நடத்தையும் வாய்ந்தவன். சண்டையிடும் குணமில்லாதவன் என்பது கருத்து.) முன்னோர்கள் கையாண்ட பொருள் மிகச் சிறியதாக இருப்பினும் அதைப் பெரியதாக எண்ணி விரும்பும் சுபாவ முள்ளவன்.

8. இன்னவன் செங்கை தன்னில் இலங்கிடு மச்ச ரேகை
மன்னவன் விரலில் தோடம் வந்திடும் இதுவல் லாமல்
சொன்னசொல் கேட்பா னாகும் துராசையு மில்லா னாகும்
பன்னியே பேச வல்லான் பார்வதி மேலுங் கேளே.

8. இப்பாலகனின் பிதாவின் கையில் மச்ச ரேகை விளங்கும். விரலில் தோஷம் ஏற்படும். பிறர் சொல்லும் வார்த்தையைச் செவி சாய்த்துக் கேட்பான். கெட்ட ஆசை யில்லாதவன். மேலும், தான் பேசவிரும்பும் விஷயத்தை நன்றாக விவரித்துப் பேசும் இயல்புள்ளவன்.

9. காரக தேக முள்ளான் கனத்தவர் நேசங் கொள்வன்
ஏருகள் விருத்தி செய்வன் இவனுக்கு மூல ரோகம்
கூறு முன் கோபம் கொஞ்சம் குடும்பத்தை விருத்தி செய்வன்
தேரிய வழியில் நிற்பான் தீரனும் தியாகி யாமே.

9. காரக தோஷமுள்ள சரீரம் வாய்ந்தவன். பெரிய மனிதர்களுடன் நட்புக் கொள்வான். ஏர்காளைகளை நன்ருக வளர்ப்பான். மூலரோகமும் இருக்கும். சிறிது முன்கோபியாவான். குடும்பத்தைப் பலத்துறைகளிலும் விருத்திசெய்வான். பழைமையான பழக்கவழக்கங்களை அனுஷ்டிப்பான். மிக்க தைரியசாலியாகவும் பிறருக்காகத் தன் சுகத்தை இழப்பவனுகவும் இருப்பான்.

10. இப்படி முனிவர் கூற ஈச்வரி கேட்க லுற்ருள்
செப்புவாய் ரோகம் வந்த சேதியைச் சொல்லு மென்ன
அப்பணி சடையோன் தேவி அருளுவோங் கேளு மம்மா
மெய்ப்புடன் முன்னூழ் தன்னில் மேவின தோஷத் தாலும் ;

10. பார்வதிதேவி கேட்கின்ருள். இவனுக்குப் பிணி வரக் காரணம் யாது ? சொல்லும், எனப் பார்வதி கேட்குங்கால், முனிவர் கூறுகின்ருர். தேவியே ! கேளுங்கள். இவனுக்கு நோய் வரக் காரணம் முன் பிறவியில் செய்த பாவத்தாலும் ;

11. இச் சென்மம் தன்னி லேதான் இலகிய வினையி ஞலும்
உச்சித பிணியும் நேரும் உரைக்கிறே மந்தச் சேதி
அச்சுதன் தங்கை யாளே அவனுடை முன்ஜன் மத்தை
மிச்சமாய்ச் சொல்லு கின்றேன் மெல்லியே மேலுங் கேளே.

11. இந்த ஜன்மத்தில் செய்த வினையாலும் உச்சிதபிணியும் (தலை யுச்சியில் ரோகம் அல்லது எச்சிலால் வரும் க்ஷயம் முதலிய நோய்) அவனுக்கு வந்திடும். முன் ஜன்மத்தைப் பற்றிய வரலாற்றைக் கூறுகின் றேன். கேளுங்கள்.

12. இன்னவன் முன்ஜன் மத்தை இயம்புவோம் தவளை தென்பால்
நன்னிய பேரூர் தன்னில் நாயகர் மிலேச்சர் வம்சம்
தன்னிலே யுதித்து மேலும் தனம் பூமி யுள்ளா ஞகி
அன்னவன் மனைவி யோடு அனேகமாய்ச் செட்டு செய்து ;

12. இவன் முன் ஜன்மத்தில் ஒரு பெரிய கிராமத்தில் மிலேச்சர் வம்சத் தில் பிறந்து, நிலமும் பணமும் உள்ளவனுக இருந்து, தன் மனைவியோடு வாழ்ந்து வந்தான். அவன் வியாபாரம் செய்து வருகையில் ;

13. பிரபல கீர்த்தி யாகிப் புத்திர ருள்ளா ஞகி
வருவோர்க்கு அன்ன மீந்து வாழ்ந்திடு நாளிலே தான்
உரிமையாய் வந்த ஊழை உரைக்கிறேம் கேளு மம்மா
பெருவயி ரோனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

13. இவன் நற்புகழ் உள்ளவனுகவும். புத்திர பாக்யம் பெற்றவனுகவும், வீடு நாடிவருபவர்களுக்கு அன்னமிடுபவனுகவும் வாழ்ந் திருக்கையில், இவனுக்கேற்பட்ட வினையைச் சொல்லுகின்றேன். விஞயகரை உலகுக்கீந்த பார்வதி தேவியே ! கேட்டருளவேண்டும்.

14. அந்நகர் கோரி[1] தன்னில் ஆளணி ல்லாத பெண்ணை
இன்னவன் போகம் துய்த்தான் இவளுக்குக் கருவு தங்கிக்
கன்னிக்குக் கர்ப்ப முற்ற காளையு மவிழ்த மீய
நன்னிய கர்ப்பம் நீங்கி நங்கையு மரண மானுள்.

14. இவன் அவ்வூரிலுள்ள கோரியில் கணவனில்லாத ஒரு பெண்ணோடு போகம் செய்ய, அவளுக்குக் கர்ப்பம் ஏற்பட, அதைக் கலைப்பதற்காக அவளுக்கிவன் மருந்து கொடுக்க, கருவும் சிதைந்தது. அந்தக் கைம் பெண்ணும் இறந்தாள்.

15. ஆகையா லந்த தோஷம் அணுகிற்று இவனுக் கம்மா
யோகமும் நீங்கிப் பின்பு உலகினில் தரித்திர ஞகி
வேகமா நதியின் பக்கல் விளங்கிய காஞ்சி தன்னில்
ஏகமா தீர்த்தம் கீழ்ப்பால் இக்குல ஆல யத்தில் ;

15. பார்வதி தேவியே ! இச்செயலால் இவனுக்கு தீய பாபமேற்பட்டது ஆகையால் அவனனுபவித்துவந்த யோகம் நீங்கி ஏழையானுன். வேகவதீ நதியின் கரையில் அமைந்துள்ள காஞ்சிமாநகரில் இவர்கள் குலத்து ஆலயத்தில் ;

16. தீபங்கள் பார்த்து வந்து திரிகாலம் ஜலம் கொணர்ந்து
கோபமில் லாத யோகம் கூறுவோர்க் களித்து வந்தான்
ஆவலாயத் தரும வேலை அவனுமே நடத்தி வந்து
பாவங்கள் சிலது நீங்கிப் பாரினில் மரண மாகி;

16. தீபங்களை ஏற்றிவைத்தும்; அங்கு நல்லுபதேசம் செய்யும் பெரியோர்களுக்குத் தண்ணீர் முதலியவை கொணர்ந்தும் வாழ்நாளைக் கழித்தான். மிக்க சிரத்தையோடும் ஆவலோடும் மற்றைய தருமவேலைகளையும் செய்து வந்தமையால் இவனது பாவங்கள் நீங்கின. சிறிதுகாலத்திற்குப் பிறகு மரணத்தை இவன் அடைந்து,

17. கஞ்சனுல் வரையப் பட்டுக் காளையு மிச்சென் மத்தில்
மிஞ்சிய சத்திரிய வம்ச மீதினி லுதித்தா னென்றோம்
தஞ்சமா யிச் சென்மத்தில் சார்ந்ததோர் வினையைக் கேளாய்
அஞ்சாமல் ஏகாதசி அமாவாசை காலம் தன்னில்,

17. இச்சென்மத்தில் மேலே சொல்லப்பட்ட வன்னியகுல க்ஷத்திரிய வமிசத்தில் பிறந்து வாழ்க்கையை நடத்துகையிலேற்பட்ட பாவத்தைச் சொல்லுகிறோம். கேட்டருளவேண்டும். ஏகாதசியிலும் அமாவாசையிலும் இவன் சிறுதும் பயமின்றி ;

[1] கோரி: பிரேதத்தைப் புதைத்த இடம், மசூதி.

18. போகங்கள் துய்த்து வந்தான் புகலிரு வினையி னாலே
மேக ரோகங்க ளுண்டு வித்தகன் தனக்கு மேதான்
பாகமாய்ச் சாந்தி தானும் பகருவோம் பின்னாலே
தோகை வாகனனைப் பெற்ற சுந்தரி யாளே கேளாய்.

18. தன் மனையாளுடன் போகங்களை யனுபவித்தான். ஆகையால் இவனுக்கு மேகரோகங்கள் ஏற்பட்டிருக்கின்றன. அந்நோய்கள் இவனை விட்டக லகுக்க சாந்தி பரிஹாரங்களைப் பிறகு கூறப்போகின்றோம். முருகக் கடவுளை பெற்ற தேவியே! மேலும் கேளுங்கள்.

குறிப்பு.—இதுவரை கடக லக்னத்தில் பிறந்த பாலகனது தந்தையைப் பற்றிக் கூறினார். இனி, இப்பாட்டினால் ஸஹோதரர்களைப் பற்றிச் சுருக்கமாகச் சொல்லுகிறார்.

19. இன்னவன் துணைவர் தம்மை இயம்புவோ மிருநான் காகும்
தன்னிலே ஆண்பா லொன்று சாற்றினோம் தீர்க்க மாகும்
உன்னித அவன் குணத்தை உரைக்கிறோ மிரண்டாம் பாகம்
மன்னுமிக் குணத்தா னுக்கு முந்தனு மாறுஞ் ஜன்மம்.

19. இந்தப் பாலகனின் ஸஹோதரர்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். எட்டு ஸஹோதரர் ஒரு ஆண் ஸஹோதரர் தீர்க்கமாவர். அந்த ஆண் ஸஹோதரனின் குணங்களை இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றோம். இந்த ஜாதகனுக்கு அவன் ஸஹோதர வரிசையில் ஆறாவதாக ஜனிப்பான்.

20. உதிப்பனோ மிவனே யென்றோம் உரைக்கிறோ மிவன்கு ணத்தை
நிதம் சுக புசிப்பா னாகும் கீழ்நிலம் விருத்தி செய்வன்
ததிநெய்பா லிஷ்ட முள்ளான் சஞ்சல மில்லா னாகும்
பதியது புதிதாய்ச் செய்வன் பாரினில் கீர்த்தி யேற்பன்.

20. இவ்வாறான கிரஹநிலையில், கடக லக்னத்தில் பிறந்த பாலகனின் குணத்தைக் கூறுகின்றோம். எப்பொழுதும் சுகத்தையனுபவிப்பான். நிலங்களை மேன்மேலும் விருத்தி செய்வான். தயிர், நெய், பால் இவைகளில் மிக்க ஆசையுள்ளவனாக இருப்பான். மனத்தில் குழப்பமில்லாதவன். தான் வசிக்கும் வீட்டைப் புதிப்பிப்பான். நற்புகழ் உள்ளவனாவான்.

21. கல்வியு முடைய னாகும் காதலி யிஷ்ட முள்ளான்
இல்லையென் றுரைக்க மாட்டான் யாரையும் சினேகம் கொள்வன்
நல்லவ னாகி வாழ்வன் நற்பசு விருத்தி யுள்ளான்
சொல்லுமெய் நெறியுள் ளோனும் சீலனும் சிவந்த மெய்யன்.

21. கல்வியறிவு உடையவன். மனையாளிடத்தில் மிக்க காதல் கொண்டவன். உதவியை நாடுபவர்களுக்கு இல்லை என்று கூறமாட்டான். எல்லோரிடத்திலும் நட்பு கொள்ளும் இயல்புள்ளவன். நல்லவன். பசுக்களை வளர்ப்பான். உண்மை பேசுபவன். சீலமுள்ளவன் அவன் தேஹம் சிவந்த நிறமுள்ளதாகும்.

22. தேகமும் ஒடிச்ச லுள்ளான் சீக்கிர நடையு முள்ளான்
போகவானு மூகை சாலி புண்ணிய மனத்த னாகும்
மோகமாய்த் தீர்த்தம் தோய்வன் மொழிகுவான் கட்டு வார்த்தை
தோகையர் மோக வானும் சுந்தரி யின்னம் கேளே.

22. மேலும், தேகம் மெலிந்திருக்கும். அவனது நடை வேகமாக இருக்கும். நற்சுகங்களை அனுபவிப்பான். ஸமயோசித புத்தி யுடையவன். மனத்தூய்மை வாய்ந்தவன். புண்ணிய தீர்த்தங்களில் ஆசையோடு நீராடுவான். அவன், பேசுகையில், அடுக்குச் சொற்களை உபயோகிப்பான். பெண்களிடத்தில் ஆசை கொண்டவன். [ஆனால் தீயசெயலில் இறங்கமாட்டான் என்பது கருத்து.]

23. இன்னன்ன இருபிறப்பு இசைத்திட்டோம் இளையோ னாகும்
கன்னலை மொழியு முள்ளான் காலனை யொத்த தேகன்
முன்னமே கோபமுள்ளான் முயற்சியா யாள்கள் சேர்ப்பன்
வன்மமு மில்லா னாகும் வண்டிவா கனமு முள்ளான்.

23. இவன் குழந்தைகளின் வரிசையில் இரண்டாமவனுவான். [அஃதாவது இவனுக்கு மூத்த ஸஹோதரி ஒருத்தி உண்டு.] சர்க்கரைப்போல் இனிய மொழிகளைப் பேசுபவன். திடமான உடலமையப் பெற்றவன். கொஞ்சம் முன்கோபி. நம்பிக்கைவாய்ந்த சேவகர்களைத் தேர்ந்தெடுப்பான். மனத்தில் பகைமை யில்லாதவன். வண்டியும், மற்றைய சாதனங்களு முள்ளவன்.

24. ஜாதகன் துணைவர் தம்மைச் சாற்றுவோ மிருமூன்றுகும்
மேதினில் ஆண் பாலுந்தான் விளங்காது என்று சொன்னேம்
தீதிலாப் பெண்பால் நான்கு தீர்க்கமாம் என்று சொன்னேம்
கோதிலாத் துணைவர் சேதி கூறுவோம் மூன்றும் பாகம்.

24. ஜாதகனின் ஸஹோதரிகள் அறுவர். ஸஹோதரன் ஒருவன். அவனுக்கு ஸந்ததி இராது. ஆறு ஸஹோதரிகளில் நால்வர் தீர்க்காயுளுடன் ஜீவித்திருப்பார்கள். இவர்களைப் பற்றிய மற்றைய வரலாறுகளை மூன்றும் பாகத்தில் சொல்லுகின்றேம்.

25. இவனுடை மணத்தின் காலம் இயம்புவோ மொரு பானுறில்
அவனியில் உள்ளூர் தன்னில் அவன் துணைவி வர்க்கந்தன்னில்
பவமுள கன்னி தன்னை பாலகன் மணமே கொள்வன்
நவனியில் புத்ர பாகம் நாட்டுவோம் கேளு மம்மா.

25. இவனது விவாஹத்தைப்பற்றிச் சொல்லுகின்றேம் இவனுடைய சொந்த ஊரிலேயே அவளும் உதித்திருப்பாள். மேலும் நல்ல அழகு வாய்ந்தவள், இவனுக்கு அந்தப்பெண் முன்பே உறவாக இருப்பாள். [ஸஹோதரியின் குடும்பத்தில் பிறந்திருப்பாள்].

26. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோம் ஆண்பா லொன்று
சத்தியும் மூன்று மாகும் சதமாகும் நான்கும் தானும்
சித்தமாய் மூன்று நஷ்டம் செப்புவோ மிவனுக் கம்மா
அத்தியைப் பெற்ற மாதே அம்பிகை யாளே கேளாய்.

26. புத்திர விருத்தியைச் சொல்லுகின்றோம். ஆண் ஒன்று. பெண்கள் மூவர். இந் நால்வரும் தீர்க்காயுளுடன் இருப்பார்கள். விநாயகக் கடவுளைப் பெற்ற பார்வதி தேவியே! இவர்களைத் தவிர மூன்று குழந்தைகள் பிறந்து இறந்துவிடும்.

27. மாதிரு குணத்தை யாங்கள் வரைகிறோ மிருநி றத்தாள்
மேதினில் ஒடிச்சல் தேகி வித்தகி பொறுமை சாலி
தீதிலா குணத்தா ளாகும் சேயர்மேல் பிரிய முள்ளாள்
சூதுக ளெண்ணு நெஞ்சம் தோகையு மதிர்ஷ்ட முள்ளாள்.

27. இப்பாட்டில் இவன துதாயைப்பற்றி சொல்லுகிறோம். கருத்த மேனியாள். மெல்லியவள். பொறுமை குணம் வாய்ந்தவள். நற்குணம் உடையவள். குழந்தைகளை பிரியமாக வளர்ப்பாள். கள்ளம் கபடம் இல்லாதவள். மிக்க அதிருஷ்டமுள்ளவளாகவுமிருப்பாள்.

28. குடும்பத்தை ஆதரிப்பாள் குற்றங்கள் எண்ணு நெஞ்சம்
அடை மொழி கூறுளாகும் அன்னங்கள் போட வல்லாள்
நடையது நல்ல தாகும் நாதனுர் பக்தி யுள்ளாள்
தடை சொல்லாள் வரனுக் கேதரன் தாய்வர்க்க மீனமுள்ளாள்.

28. தனது குடும்பத்தை சரிவர பார்த்துக்கொள்வாள். பிறர் குற்றங்களைக் கவனிக்காதவள். அழகாக சித்திரித்துப் பேசுபவள். வந்தவர்களுக்கு அன்னமிடும் இயல்புள்ளவள். நடை அழகுள்ளவள். கணவனிடத்தில் பக்தி கொண்டவள். ஆகையால் கணவன் சொன்ன வார்த்தைக்குத் தடை சொல்லாதவள். தாய் வர்க்கத்தில் வமிச விருத்தி இல்லாதவள்.

29. இன்னவள் துணைவர் தம்மை இசைகிறோம் ஆண்பா லொன்று
கன்னியு மவ்வா றுகும் கழறினே மிரண்டு தீர்க்கம்
பின்னமாம் மற்ற வைந்தும் பலக்காது என்று சொன்னோம்
உன்னித மவள் குடும்பம் உரங்கிடும் என்று சொன்னோம்.

29. இவளுக்கு ஸஹோதரன் ஒருவன், ஸஹோதரிகள் ஆறு. இவர்களில் இருவருடைய வமிசம் விருத்தியாகும். மீதி ஐவரும் வமிசமற்றவர்களாவார்கள். ஆகவே இவள் பிறந்த குடும்பம் விருத்தியடையாது.

30. ஜயமுனி எழுந் திருந்து திடுக்கென உரைக்க லுற்றார்
நவமதில் புந்தி நீச்சம் நற்கருங் கோளும் கூட
தயையுட னஷ்ட மத்தோன் சனியாகி யவரைப் பார்க்க
வியமான மாமன் தன்னை விளம்பினீர் தீர்க்க மாக.

30. "ஜயமுனி" என்பர் திடீரென தனது ஆசனத்திலிருந்து எழுந்து ஆக்ஷேபிக்கின்றார் இந்த கடக லக்னத்திலுதித்த பாலகனுக்கு மாமன் இருப்பதற்குக் காரணம் இல்லையே! ஏனெனில் மாதுலகாரகன் என்று சொல்லப்படும் புதன் ராகுவுடன்கூட ஒன்பதாமிடத்தில் நீசனுக இருக்கின்

ருன் மேலும் எட்டாமிடத்திற்கு அதிபதியான சனியினால் பார்க்கப்படு கின்ருன். ஆகவே இந்த ஜாதகனுக்கு மாமன் கிடையாதென்று சொல்ல வேண்டும். எக்காரணம்பற்றி ஆண்பால் ஒன்று எனச் சொன்னீர்கள் ?

31. எப்படிச் சொன்னீ ரையா என்றுமே கேட்கும் போது
செப்புவார் விச்வா மித்திரர் ஜாதகன் ஜனிக்கா முன்னம்
ஒப்புடன் மாமன் தானும் உரைந்தனன் சோங்கின் மேலே
மெய்ப்புடன் செல்வா ளுகும் மேவியே மரண மானான்.

31. என்றிவ்வாறு ஐயமுனிவர் ஆக்ஷேபம்செய்ய விச்வாமித்திர முனிவர் பதிலுரைக்கின்ருர். இந்த ஜாதகன் பிறப்பதற்குமுன்பே இவன் மாமன் ஒரு படகின்மேலே ஏறிச் செல்லும்போது மரணமடைந்தான். ஆகையால் ஆண்பால் ஒன்று எனக்கூறியதில் தவறு இல்லே. ஆனால் புதன் நீசனுக இருப்பதாலும் சனியினல் பார்க்கப்படுவதாலும் இவன் மாமன் இறந்தான். ஆகையால் இவன் பிறந்த குடும்பம் விளங்கவில்லே என்று கூறியதும் உண்மைதான். இவ்வாறு விசுவாமித்திர முனிவர் ரிஷிகளுக்குள் ஏற்பட்ட விவாதத்தில் தீர்மானம் செய்தார்.

32. அவனுட குடும்பச் சேதி அரைகிருேம் இல்லம் பாழாம்
நவனியில் இவனூர் செல்வர் நசித்திடும் யாவும் தானும்
பவமுள மாது வுக்கு பகருவோம் முன் சென்மத்தை
தவமுடை யோரைக் காக்கும் தயாபரி மேலுங் கேளே.

32. ஆகவே கருணையுள்ள பார்வதி தேவியே ! அந்த மாமன் அல்பாயுளுள்ளவனுக இறந்தமையால் அவன் வீடு பாழாயிற்று. சொத்துக்கள் யாவும்சிதைந்தன. ஆயினும் இவனுடைய [தாயின்] முன் ஜன்மத்தைப் பற்றி செப்புகின்ருேம். கேட்டருள்வீர்களாக.

33. சோழ நாட்டதனிலே தான் செழிப்புள்ள ஆழி தன்னில்
நேயமாய்ச் சூத்ர வம்சம் நிகரில்லா பூமி பெற்று
ஆயவே புத்திர ருண்டாய் ஐயங்கள் அதிகம் செய்து
தீயமாம் குண மில்லாமல் செல்வதி வாழ்ந்தா னென்ருேம்.

33. இவள் சோழ நாட்டில் செழிப்புள்ள ஒரு கிராமத்தில் சூத்திர வமிசத்தில் பிறந்து, ஏராளமான பூமியை அடைந்து, புத்திர பாக்கியத்தையும் பெற்று, நிறையதானங்கள் செய்து தீய குணங்களில்லாதவளாக வாழ்ந்து வந்தாள்.

34. வருவோர்க்கு அன்ன மீந்து வள்ளல்மேல் பக்தி யுண்டாய்
திருமகள் விலாசம் பூண்டு தேவியும் வாழ்ந்து பின்பு
மறுமையி லடைந்து பின்பு வந்தவ ளிவளே யென்ருேம்
அருமையாய்பின் சென்மத்தை அரைகிருேம் கேளுமம்மா.

34. வருவோர்க்கு அன்னதானம் செய்தும், கடவுளிடத்தில் பக்தி கொண்டும், லக்ஷ்மீகடாக்ஷத்தினுல் ஏராள சொத்தை அடைந்து அந்த சோழ நாட்டிலே வாழ்ந்த பிறகு இச் ஜன்மத்தில் இவனை புத்திரனுக அடைந்தாள். இவனுடைய பின் சென்மத்தைப் பற்றிக் கூறுகின்ருேம்.

35. தனிமையின் மலைக்குக் கீழ்பால் சாற்றிய பேரூர் தன்னில்
அனையவே கங்கை வம்சம் அவளுமே யுதித்து மேலும்
இனையிலா செல்வம் பெற்று இவளுமே வாழ்வா ளாகும்
கனமுடன் சாதகர்க்குக் கழறுவோம் முன் சென்மத்தை.

35. திருத்தணி மலைக்கு கீழ்புரம் உள்ளதோர் பெரிய ஊரில் கங்கை வமிசத்தில் இவள் பிறந்து பெரும் செல்வம் படைத்து சிறப்புடன் வாழ்வாள் கடகலக்ன மகனின் முன் ஜன்மத்தைப்பற்றி சொல்லுகின்றோம்.

36. சாதகன் முன் சென்மத்தைச் சாற்றுவோ மருணை கீழ்பால்
நீதியாய்ப் பேரூர் தன்னில் நிமலனு மிக் குலத்தில்
வேதனை யில்லாதாகி விளைபுல மதிகம் பெற்று
கோதிலா செட்டு செய்து குலத்துக்குத் தலைவனாகி
நீதியாய் வாழ்ந்தா னென்றோம் நிமலியே மேலுங் கேளே.

36. இச் ஜாதகன் திருவண்ணாமலைக்குக் கீழ்புறம் உள்ளதோர் நல்லூரில் இதே குலத்தில் பிறந்து, சிறிதும் கஷ்டமின்றி அதிக நிலங்களை அடைந்தும், வியாபாரம் செய்தும் வாழ்ந்து வந்தான். இவன் அவன் உதித்த குலத்திற்குத் தலைவனாகவும் விளங்கினான்.

37. மனைவி மைந்தரு முண்டாகி மகிழ்ச்சியாய் வாழு நாளில்
அனையவே ஊழி தானும் அரைகிறோ மிவனுக்கே தான்
கனமுள மார்க்கம் தன்னில் கள்ளரால் பயந்துமே தான்
வனிதையர் பிரும்ம மாது வரவவை இவனுங் கண்டு.

37. மனைவியோடும் மைந்தர்களுடனும் சுகித்து வாழ்ந்திருக்கும் காலத்தில், பாதையில் பிரம்ம மாது ஒருத்தி திருடர்களுக்கு பயந்து ஓடி வருவதைப் பார்த்து,

38. ஆதரித் தானு மந்த அதிதியும் மதலை தன்னை
வேதனை யில்லா தாகி வஸ்திரம் பொருளு மீந்து
நீதியா யுபசரித்தான் நிமலியும் சொல்லுகின்றாள்
தீதிலா மறு சென்மத்தில் துணைவியா யுதிப்பேனென்றாள்.

38. அவளையும், அவளது குழந்தையையும் கவலையில்லாதவர்களாகச் செய்து, வஸ்திரத்தையும் பொருள்களையும் அவர்களுக்குக் கொடுத்து உதவினான். இவ்வாறு உபசரிக்கப்பெற்ற அவள் மறு ஜன்மத்தில் நான் உனக்கு சகோதரியாக வருவேன் என்றாள்.

39. ஆகையா லந்தமாது அம்மொழி தப்பாமல் தான்
பாகமா யிவனின்கூட பிறந்தனளிரட்டை சென்மம்
மோகமாய் சாதகர்க்கு மொழிகிறோ மச்சென் மத்தில்
தோகைவா கனத்தோனுக்குத் திருப்பணி அனந்தம் செய்து.

39. அவளும் சொன்ன வார்த்தை தப்பாமல் இவனுடன் பிறந்தாள். அச் ஜன்மத்தில் இச் ஜாதகர் செய்த நற்காரியத்தைச் சொல்லுகின்றோம். மயில் வாஹனனாகிய ஸ்ரீ சுப்பிரமணிய பகவானுக்கு ஏராளமான கைங்கர்யம் செய்து.

40. மரணமு மாகி யேதான் வந்தவ னிவனே யென்றோம்
பெருமுனி யிவ்வாறு கூற பார்வதி கேட்க லுற்றாள்
அருமையாய்க் கரும காலம் அறிவிப்பீ ரென்று கேட்கத்
திறமையாய்ச் சொல்லு கின்றோம் தேவியே கேளு மம்மா.

40. மரணத்தை அடைந்து இப்பொழுது இங்குவந்து உதித்தான். என்றிவ்வாறு முனிவர் கூற பார்வதி வினவினாள். இவனது கருமகாலத்தைச் சொல்லுங்கள். முனிவர் கூறுகின்றார்.

41. தந்தையின் மரண காலம் சாற்றுவோம் முப்ப நான்கில்
வந்திடும் புகரிலேதான் மதிபுசிப் பதனில் கண்டம்
பிந்திய மாத்ரு வுக்குப் பேணவே முப்பா னொன்பான்
முந்திய புகரில் மந்தன் முயற்சியாய்ப் புசிக்கு நாளில்;

41. இந்த ஜாதகனின் முப்பதாவது வயதில் இவனுடைய தந்தை மரணமடைவான். இவனுக்குச் சுக்கிரதசையில் சந்திரபுக்தி நடைபெறும்போது இவன் தந்தைக்குக் கண்டம் (பெரிய ஆபத்து) ஏற்படும். இவனது 39-வது வயதில் இவன் தாய் மரணமடைவாள். அப்பொழுது இந்த ஜாதகனுக்குச் சுக்கிரதசையில் சனிபுக்தி நடைபெறும்.

42. சாதகன் மரண காலம் சாற்றுவோம் அறுபான் மூன்றில்
மேதினி லானி மாதம் வளர்பிறை சதுர்த்தி தன்னில்
கோதிலா மரண மாவன் கூறுவோ மிவன் பின்ஜன்மம்
மாதவர் போற்று கின்ற விரிஞ்சி நாடதனி லேதான்.

42. ஜாதகனின் மரண காலத்தையும் சொல்லுகின்றோம். அறுபத்து மூன்றும் வயதில் ஆனிமாதத்தில் சுக்லபக்ஷத்தில் சதுர்த்தி திதியில் இவன் மரணமடைவான். இவனது மறு ஜன்மத்தைப்பற்றியும் கூறுகின்றோம். முனிவர்கள் போற்றும் விரிஞ்சிநாட்டிலே.

43. வைசிய குலமு தித்து மனைவிமைந்தருமு ண்டாகி
அதிகமாய்ச் செட்டுச் செய்து அதிபனுமே வாழ்வா னுகும்
சதியிலா முனிவர் கூறச் சாற்றுவா ளம்மன் தாமும்
விதியினுல் தந்தை ஊழை விளம்பிபுவீர் அதற்குச் சாந்தி;

43. வைசிய சாதியில் பிறந்து, மனைவியையும் புத்திர பாக்கியத்தையும் அடைந்து, வியாபாரத்தை விசேஷமாகச்செய்து, மிக்க சுகித்து வாழ்வான். இவ்வாறு முனிவர் கூறியதும், பார்வதிதேவி வினவுகின்றாள். இவனுடைய தந்தையின் வினைகளைப்பற்றிச் சொன்னீர்கள். அவைகளுக்குத் தக்க சாந்தி பரிஹாரங்களையும் சொல்லுங்கள், என்று;

44. சொல்லுவீ ரென்று கேட்கச் செப்புவார் விச்வா மித்திரர்
இல்லத்தில் கிரஹ சாந்தி இவனுமே செய்து பின்பு
நல்லதோர் வங்க பஸ்மம் நாயகன் புசிப்பா னுகில்
நில்லாது ரோகம் தானும் நிமலியே மேலுங் கேளே.

**44.** இவ்வாறு உமாதேவி கேட்டவுடன், விசுவாமித்திரமுனிவர் கூறுகின்றார். இவன் சாஸ்திரமுறைப்படி வீட்டில் நவக்கிரஹ சாந்திசெய்து, அதற்குப்பிறகு நல்ல முறையில் செய்யப்பட்ட வங்கபஸ்பத்தை முறைப்படி உட்கொள்ளுவானாகில் இவனுக்கு முன்சொன்ன நோய்கள் நீங்கும். மேலும் சொல்லுகிறோம், கேட்டருள்வீராக.

45. மருந்துஎவ் விதங்கள் செய்யும் வகைதனைச் சொல்லு மென்ன
அறைகிறோம் வெள்வங் கத்தை அரைப்பொடி போலச் செய்து
கருஞெச்சி மூலி யாலே கஜகுழி புடங்கள் வைக்கப்
பெருமையா யவிழ்த மாகும் பின்புதான் சொல்லக் கேளாய்.

**45.** வங்கபஸ்பம் செய்யும் முறையைச் சொல்லும், என பார்வதி கேட்க, முனிவர் சொல்லுகின்றார். வெள்வங்கத்தைப் பொடியாகச்செய்து, கருஞெச்சி வேருடன் இரண்டு முழம் ஆழமுள்ள குழியில் வைத்துப் புடம் செய்தால் அது சிறந்த மருந்தாகும்.

46. சத்தியைப் பூசை செய்து சர்க்கரை யதனைச் சேர்த்துப்
பத்திய மில்லா தாகிப் பகருவாய் திங்க ளொன்று
சுத்திய வினையும் நீங்கும் சுந்தர தேக மாகும்
அத்தியைப் பெற்ற மாதே அருளுவோம் கேளு மம்மா.

**46** பிறகு சக்திதேவியைப் பூசைசெய்து, வங்கபஸ்மத்துடன் சர்க்கரையைக் கலந்து, ஒரு மாதகாலம் புசிக்கவேண்டும். இவ்வாறு செய்தால், ஸ்ரீ விநயகரைப்பெற்ற தாயே ! அவனது வினைதீர்ந்து உடல் அழகுபெறும்.

47. சொற்படி செய்யா னாகில் தொடர்ந்த நோய் விருத்தி யாகும்
சொற்படி செய்வா னாகில் தூசுபோல் வினைகள் நீங்கும்
மெய்ப்புட னிவன்பின் ஜன்மம் விளம்புவோம் தணிகை தன்னில்
உற்பன வம்சத் தில்தான் உதிப்பனு யிவனே யம்மா.

**47.** இவ்வாறு செய்யாவிடில் வியாதி வளரும். நாம் சொன்னபடி சாந்திகளைச்செய்து மருந்தையும் புசிப்பானாகில் வினைகளும் தீரும். வியாதியும் நீங்கும். இவனுடைய மறுஜன்மத்தைக் கூறுகின்றோம். திருத்தணி க்ஷேத்திரத்தில் உத்தம வமிசத்தில் பிறப்பான்.

**குறிப்பு.**—இதுவரையில் கடக லக்கின ஜாதகனின் தந்தையைப்பற்றிக் கூறிவிட்டு இனிச் சில பாசுரங்களால் கடகலக்கினத்திலுதித்த ஜாதகனின் யோக பாவங்களைப் பேசுகிறார்.

48. ஜாதகன் யோகச் சேதி சாற்றுவோம் ஜனனம் தொட்டு
மேதினில் மரண மட்டும் வளர்பிறை போல செல்வம்
கோதிலா வறுமை யில்லான் குடும்பங்கள் சுபிக்ஷ முள்ளான்
தீதான குணங்க ளில்லான் ஜனங்களுக்குதவி செய்வன்.

**48.** இந்த ஜாதகனது பிறவி முதல் மரணம் வரையிலுள்ள யோகங்களைக் கூறுகின்றோம். இவனது செல்வம் வளர்பிறைச் சந்திரன்போல வளரும்.

ஆகையால் வறுமை இல்லாதவன். இவனது குடும்பத்தில் சிறிதும் ஆபத்து நேராது. குடும்பம் செழித்திருக்கும். தீயகுணங்களில்லாதவன். பொது மக்களுக்குப் பேருதவி செய்வான்.

49. தந்தையி னாஸ்தி தன்னைத் தானவன் விருத்தி செய்வன்
சொந்தமாய் விசேஷ பூமி சுந்திரன் சேர்ப்பா னாகும்
தன்தனம் பூமி வீடு சகலமு மீராயி ரம்பொன்
எந்தையே இவனுக் குண்டாம் ஈச்வரி மேலுங் கேளே.

49. மேலும் தந்தையின் சொத்துக்களையும் விருத்தி செய்வான். தன் முயற்சியாலும் ஏராள பூமிகளைச் சேர்ப்பான். தான் சம்பாதித்த பணம்; நிலம் வீடு இவைகளின் மதிப்பு இரண்டாயிரம் பொன் [சுமார் ரூபாய் இருப தாயிரம்]. மேலும் கேளுங்கள்.

50. பிறந்தசேய் ஜனனகாலம் புதன்தசை யீரெட் டாண்டும்
நிறைந்திடு திங்கள் ஏழும் நாளது இருமூன் றாகும்
இருந்திடு பலனைக் கேளாய்ச் சித்திர வீடு செய்வன்
வரவர பூமி சேரும் வருந்துணை வர்க்கு மேதான்.

50. இவன் பிறந்த சமயத்தில் புதன்தசையில் மீதி வருஷம் 16, மாதம் ஏழு, நாள் 6. [ஆகவே கேட்டை நக்ஷத்திரத்தில் பிறந்தவன் என அறிய வேண்டும்.] இந்த புதனது தசையில் விசித்திரமான வீடு கட்டுவான். மேன் மேலும் பூமி சேரும். இவனது ஸகோதரர்களுக்கும் பூமி சேரும்.

51. சுபமுண்டு சாத கர்க்குச் சொற்பநோய் வந்து தீரும்
தவவித்தை அதிகம் நேரும் தந்தைக்கு ரோகம் காணும்
நவமணி சாந்தி யாலே நாடாது ரோகம் தானும்
அவனியில் பொருள்மூ லத்தால் அவன்பந்து விரோதம் காணும்.

51. ஜாதகனுக்கு மேன்மேலும் சுபங்கள் உண்டாகும். சிறிது நோயும் வரும். ஆனால் ஸ்திரமாக இராது. நல்ல கல்வியறிவு உடையவனாக இருப்பான். தந்தைக்கு முன் சொன்ன ரோகங்கள் நேரும். நவக்ரஹ சாந்தி செய்தால் நோய் நாடாது. ஆனால் இந்த ஜாதகனுக்கும் இவன் உறவி னர்களுக்கும் பொருள் காரணமாக கலஹமுண்டாகும்.

## ஜாதகம் 2

1. மந்திரி மதியும் வீணை மந்தனும் மேரு வாகப்
புந்திபான் சேயும் கெண்டை புகர்சாடி கருங்கோள் நீசம்
பந்தமாய்க் கேது உச்சம் பகர்ந்தது கடகம் ஜன்மம்
இந்தவாறு கிரகம் நின்றால் இயம்புவீர் பலனைத் தானே.

| | | | |
|---|---|---|---|
| புதன் சூரியன் அங்காரகன் | | ராகு | குரு சந்திரன் |
| சுக்கிரன் | இராசி சக்கரம் | | லக்கினம். |
| | | | |
| சனி | கேது | | |

ப்ரஜோத்பத்தி வருஷம் பங்குனி மாதம் 7-ஆந் தேதி திங்கட்கிழமை பகல் நாழிகை 18-க்கு மேல் 23-க்குள் ஜனனம்.

### ஆங்கிலத் தேதி 18–3–1872.

நவக் கிரஹங்களின் பாதசாரம்.

உத்திரட்டாதி 1-இல் சூரியன். புனர்வஸு 1-இல் சந்திரன். ரேவதி 2-இல் செவ்வாய். உத்திரட்டாதி 4-இல் புதன். புனர்வஸு 3-இல் குரு. அவிட்டம் 4-இல் சுக்கிரன். உத்திராடம் 1-இல் சனி. மிருகசீரிஷம் 1-இல் ராஹு, கேட்டை 3-இல் கேது.

நக்ஷத்திரம் புனர்வஸு. குருதசையில் இருப்பு வருஷங்கள் பதினைந்து, மாதங்கள் எட்டு.

1. குருவும் சந்திரனும் மிதுனத்திலும் ‘சனி தனுஸிலும், புதன் சூரியன் அங்காரகன் மீனத்திலும், சுக்கிரன் குடும்ப ஸ்தானத்திலும், ராஹு விருஷபத்திலும், கேது விருச்சிகத்திலும், லக்கினம் கடகமாகவும் இருக்க, பலனைச் சொல்லுவீர்களாக, என்று உமாதேவி வினவினாள்.

2. பாலக ருறும் ஜன்மம் பகருவோ மிவன்தனில்லம்
கோலமாய்க் கீழ்மேல் வீதி குபேரன்தன் வாடை யாகும்
மாலவன் மேற்கில் தங்கும் மாகாளி தெற்கில் நிற்கும்
சீலமா யீசன் காளி செப்புவோ முத்தி ரத்தில்.

2. இக்கிரஹ நிலையில் பிறந்தவன் ஆளுகும். வீதி கிழக்கு மேற்கில் அமைந்திருக்கும். பிறந்த வீடு வடக்கு வரிசையிலிருக்கும் (தெற்கு நோக்கி இருக்கும் என்பது கருத்து) விஷ்ணு ஆலயம் மேற்கிலும் காளிகோயில் தெற்குத் திசையிலுமிருக்கும். அவன் பிறந்த வீட்டிற்கு வடக்கில் சிவன் காளிதேவி இவர்களின் கோயில்களும் இருக்கும்.

3. நந்தியும் மாரி கன்னி தடாகமும் வடமேல் தங்கும்
இந்தவா றடையா ளத்துள் இலகிய சமவூர் தன்னில்
சந்ததம் கங்கை சேயாயத் தானவ னுதிப்பா னுகும்
வந்தவன் ஜனன யோகம் வரைகிறோம் கேளும் தாயே.

3. வடமேற்கில் பிள்ளையார், மாரியம்மன், துர்க்கை இவர்களது கோயில் களும், ஒரு குளமும் உண்டு. இவ்வாறு அடையாளமுள்ள ஓர் ஊரில் வேளாளகுலத்தில் இந்த ஜாதகன் ஜனிப்பான். இவனது யோகத்தைச் சொல்லுகிறோம். கேளுங்கள், தாயே !

4. தந்தையின் குடும்ப வர்க்கம் சாற்றுவோ மாண்பால் மூன்று
வந்திடும் கன்னி ரண்டு வரைகிறோம் தீர்க்க மாக
நொந்திடு மற்ற வெல்லாம் நுவலுவோம் பிதாகு ணத்தை
எந்தையே ஊகை சாலி இருநிறம் கிருஷி செய்வன்.

4. தந்தையின் குடும்ப வர்க்கத்தைபபற்றிச் சொல்லுகிறோம். ஆண்கள் மூவர். பெண்கள் இருவர். இந்த ஐவரும் தீர்க்காயுளுடன் வாழ்வார் கள். மற்றவர் இருக்கமாட்டார்கள். பிதாவின் குணத்தைப் பற்றிச் சொல்லுகிறோம். அவன் (தந்தை) மிகவும் மதியூஹம் வாய்ந்தவன். கருத்தமேனியான். கிருஷி செய்பவன்.

5. சிரமுகம் வடிவு முள்ளான் சேயிழைப் பிரிய னுவன்
விரைவினில் நடக்க வல்லன் விளைபுலம் விருத்தி செய்வன்
பெரியவ ருறவு கொள்வன் போஜனப் பிரிய னுகும்
நெறியுளான் கீர்த்தி மானும் நிமலியே மேலுங் கேளே.

5. அழகு வாய்ந்த வதன முள்ளவன். பெண்களிடம் அன்பு டையவன். வேகமாக நடக்கும் இயல்புள்ளவன். பெரியோர்களின் நட்புக்கொண்டவன். ஆஹாரத்தில் மிக்க விருப்பமுடையவன். விதிப்படி கடமைகளைச் செய்பவன். புகழுள்ளவனுகவும் இருப்பான். மேலும் கேளுங்கள்.

6. குடும்பத்தை வேறு செய்வன் கோவுகள் விருத்தி யுள்ளான்
திடமான குடும்பி யாகிச் சிதறிடும் பாகம் நான்காய்
உடனேதா ஜெருவன் வேருய் உறைகுவான் என்று சொன்னேம்
அடவுடன் சிலநாள் தன்னில் அவர்களும் சீர ஸிப்பார்.

6. குடும்பத்தைப் பிரிப்பான். பசுக்களே நன்ருக வளர்ப்பான். தான் ஒரு பெரிய குடும்பமுடையவனுகி, நான்காக பிரிக்கப்பட்ட சொத்தில் ஒரு பாகத்தை அடைந்து வாழ்வான். சில நாட்களுக்குப் பிறகு மற்றைய மூன்று ஸஹோதரர்களும் விளங்கமாட்டார்கள்.

இது முதல் 8 கவிகளால் சாதகனின் குணங்களேக் கூறுகின்ருர்.

7. ஜாதகன் நிறங்கு ணத்தைச் சாற்றுவோம் மால்நி றத்தன்
மேதினில் கோஞ்சை போல வித்தகன் தோன்று வானும்
ஏதவே யழுத்த நெஞ்ஜன் இனசனப் பிரிய னுவன்
............கள் தன்னில் பொருந்திடுங் குற்ற முள்ளான்.

7. ஜாதகன் கருத்த மேனியன். மிக்க அறிவாளி. பிறரால் அறிய முடியாத நெஞ்சம் படைத்தவன். உறவினர்களிடத்தில் அன்புகொண்டவன்.

குறிப்பு.—நான்காவது வரிக்கு மூலபாடம் தெளிவாக இல்லாததால் பொருள் எழுதப்படவில்லே.

8. முகமதில் வடிவு முள்ளான் முன்கோப முடைய னுகும்
வகையான வார்த்தை சொல்வன் வர்மவான் காத நெஞ்சன்
ஜகமதில் கிருஷி செய்வன் சேயிழைப் பிரிய னுவன்
பகைவரை ஜயிப்பா னுகும் பந்துவும் பகையே யாகும்.

8. முகத்தில் அழகு பொருந்தியவன். முன் கோபி. பொருத்தமான வார்த்தைகளேப் பேச வல்லான். அஞ்சாத நெஞ்சம் படைத்தவன். அவனுடைய தொழில் விவசாயம். பெண்களிடம் விசுவாசமுள்ளவன். எதிரிகளே வெல்லும் திறமைசாலி. உறவினர்களும் இவனுக்கு விரோதிகளாவார்கள்.

9. நித்திரைப் பிரிய னுவன் நீரினிற் ரேய வாஞ்சை
சத்தியம் தப்பா னுகும் சரசமாய்ப் பேச வல்லான்
உத்தம ருறவு கொள்வன் ஓங்கிடும் பூமி தானும்
பித்தசூ டுடைய தேகன் பிறர்சொல்லேக் கேட்பா னுமே.

9. நிம்மதியாக உறங்குவதில் ஆசையுள்ளவன். தீர்த்தம் ஆடுவதிலும் விருப்பங்கொண்டவன். மெய் பேசுபவன். சாதுர்யமாகவும் பேசுவான். பெரியோர்களுடைய உறவு ஏற்படும். இவனுக்கு அதிகமாக நிலம் சேரும். இவனது உடல் பித்தத்திஞலும் உஷ்ணத்திஞலும் பாதிக்கப்படும். பிறர் வார்த்தைகளேக் கேட்டு அதன்படி நடப்பவன்.

10. ருத்திர ரேகை யுள்ளான் நுவலுப தேசம் கொள்வன்
அத்திமா முகனைப் போற்றும் அரனடி யார்கள் மீதும்
பத்தியு முடைய னாகும் பாலரின் கலப்பு முள்ளான்
நித்தியம் சீல னவன் நேமியில் வசையும் கூறான்.

10. இவனது கையில் ருத்திர ரேகை இருக்கும். பெரியோர்கள் செய்யும் உபதேசங்களை மனத்தில் தரிப்பான். விநாயகரையும் பரமசிவனையும் தியானிக்கும் அடியார்களிடத்தில் பக்தியுள்ளவன். பாலர்களுடன் கலந்து பழகும் இயல்புடையவன். எப்பொழுதும் நல்ல நடத்தை உள்ளவன். பிறரைப் பழிக்கும் சுபாவமில்லாதவன்.

11. ஆவலாய்ப் பசித்தோர்க் கன்னம் அன்புட னீய வல்லன்
பூவினில் பின்னால் யோகம் பொருந்திடும் பாக்கிய முள்ளான்
தேவதா பக்தி கொள்வன் சொப்பன மரிபோல் காண்பன்
காவிய மறிய வல்லன் கணக்கினி லூகை வானும்.

11. பசித்தவர்களை அன்னமிட்டு உபசரிப்பான். இவனது பிற்கால வாழ்க்கையில் விசேஷ யோக முண்டு. தைவபக்தி யுடையவன். குதிரைபோல் கனவு காண்பான். காவியங்களிலும் கணிதத்திலும் இவனது மேதை விளங்கும்.

குறிப்பு.—குதிரைக்கனவு: கற்பனை உலகில் ஸஞ்சரிப்பது. மனத்தில் ஆகாசக் கோட்டைக் கட்டுவது.

12. துணைவர்க ளாண்பா லொன்று சோதரி அவ்வாறு தீர்க்கம்
பிணையாகு மற்ற வெல்லாம் பின்புவந் தார்க ளென்றோம்
கனமுடன் துணைவர் சேதி கழறுவோம் கல்வி மானும்
இணையிலாத் தந்திர வார்த்தை இன்பமாய்க் கூறு வானும்.

12. இந்த ஜாதகனுக்கு ஒரு ஸஹோதரன், ஒரு சகோதரி உளர். இவர்களெல்லோரும் நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள். மற்றவர்கள் நீடித்து வாழமாட்டார்கள். இவனுடைய ஸஹோதரன் சிறந்த கல்விமானாக இருப்பான். நிகரற்ற தந்திரசாலியாகவும் இனிமையாகப் பேசுகின்றவனாகவும் இருப்பான்.

13. காதக மனத்த னாகும் காதலி பட்ச முள்ளான்
தூதுகள் செல்வா னாகும் துருசான குணத்த னென்றோம்
பாதகம் செய்வா னாகும் பாவையர் மோக னவன்
மேதினில் சிலநாள் ஒன்றாய் வாழ்வன மென்று சொன்னோம்.

13. கொடிய நெஞ்சம் படைத்தவன். மனைவியிடத்தில் மோஹங் கொண்டவன். தூது செல்வான் [பிறதேசங்களுக்குத் தனது நாட்டுப் பிரதிநிதியாக நியமிக்கப்பட்டுத் தூதனாகச் செல்வான்]. கபடமான எண்ணங்கள் உடையவன். பாவங்களையும் செய்வான். பொதுவாகப் பெண்கள் பித்தன். இவ்வாறு குணம் படைத்த ஸஹோதரனும் மேற்சொன்ன கடகலக்கினத்தி லுதித்த ஜாதகனும் சிறிதுகாலம் ஒரே குடும்பமாக வாழ்வார்கள்.





14. தேகமே வலிவு முள்ளான் தீரனும் மனைவி ஒன்று
பாகமாய்ப் புத்திர பாவம் பகருவேர் மாண்பால் ரண்டு
தோகைய ரவ்வா றுரும் சொல்லுவோம் வயது தீர்க்கம்
போகவா ரிதியைப் பெற்ற புண்ணிய சாலி கேளே.

14. இந்த ஜாதகனுக்கு உடல்வலிமை பொருந்தியதாக இருக்கும். தைரியசாலி. ஒரே மனைவி. புத்திர பாவத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். ஆண்கள் இருவர். பெண்கள் இருவர். இவர்கள் எல்லோரும் நீண்ட ஆயுள் உடையவர்களாக வாழ்வார்கள்.

15. சாதகன் மணத்தின் காலம் சாற்றுவோ மிருபான் மூன்றில்
கோதிலாத் தக்ஷி ணத்தில் கோதையும் வருவா ளாகும்
மேதினில் அவள்தன் சேதி விளம்புவோ மிருநி றத்தள்
போதவே உயர மில்லாள் பொருந்துநல் மனத்த ளாகும்.

15. இந்த ஜாதகனுக்கு இருபத்து மூன்றும் வயதில் விவாஹம் நடைபெறும். இவன் ஊருக்குத் தென் திசையில் அப்பெண் ஜனித்திருப்பாள். அவளது நிறம் கருப்பு. அதிக உயரமில்லாதவள். நல்ல மனம் படைத்தவள்.

16. மனமது அழுத்த மில்லாள் மங்கைமுன் கோபி யாவள்
இனஜன மெச்ச வாழ்வள். இவள் மூலச்சூடு முள்ளாள்
வினையிலாள் அடக்க முள்ளாள் வித்தகி தர்ம சிந்தை
தனம்பணி பின்னு ளுள்ளாள் சத்தியே சேட்டி டாயே.

16. கள்ளம் கபடமில்லாத மனத்தள். சிறிது முன் கோபி. பந்துக்கள் போற்றும் வகையில் வாழ்வாள். மூலச் சூட்டு நோயுள்ளவள். பாவமில்லாதவள். பெரியோர்களிடத்தில் அடக்கமுள்ளவள். மிக்க சாமர்த்தியசாலி. தரும சிந்தை உள்ளவள். ஏ பார்வதி தேவியே! இவளுக்குச் செல்வம், நகைகள் முதலியன பிற்காலத்தில் விசேஷமாக ஏற்படும்.

குறிப்பு.—14-ஆவது பாட்டில் கூறப்பட்ட புத்திர பாவத்தை இப் பாசுரத்தில் சில காரணங்களால் ஆக்ஷேபிக்கின்றார்.

17. இன்னவாறு தனக்குப் புத்திரர் இயம்பவே பலத்தைக் காணும்
தன்னிலே உதித்தா லுந்தான் தங்காது என்று சொன்னோம்
என்ன காரணத் தினாலே இலகாது மதலை தானும்
மன்னிய அஞ்சில் கேதும் மழைக்கைந்தோன் எட்டில் நிற்க.

17. இந்த ஜாதகனுக்குப் புத்திரபாக்கியம் உண்டெனச் சொல்லக் காரணமில்லை. பிறந்தாலும் நீடித்து உயிர் வாழாது. ஏனெனில், புத்திர பாவமென்றுக் கூறப்படும் ஐந்தாமிடத்தில் கேதுவும் எட்டாமிடத்தில் சுக்கிரனும் இருப்பதால் இந்த ஜாதகனுக்குப் புத்திரர் பிறக்கக் காரணமில்லை.

குறிப்பு.—புத்திர பாவத்தைப் பரிசீலனை செய்யும்போது லக்கினம், லக்கினாதிபதி, குரு இவர்களுக்கு ஐந்தாமிடம், அவைகளுக்கு அதிபர்கள் பலம் பெற்றிருக்கவேண்டும். ஆகவே, குருவிற்கு ஐந்தாமிடத்ததிபன் சுக்கிரன் எட்டில் இருப்பது புத்திர தோஷமாகும் என்பது கருத்து.

18. மதலைகள் தோஷ மென்றோம் மாமுனி சொல்லு கின்றார்
நிதிகுரு சுகஞ்சே . . . . னெட்டில் நின்றுமே குருவும் பார்க்கப்
பதியோனும் திருஷ்டி யாகப் பஞ்சம னெண்பா னேறச்
சதமுடன் மதலை தோன்றும் ஜயமுனி சொல்லு கின்றார்.

18. இவ்வாறு புத்திரதோஷங்கள் இருப்பினும் எட்டாமிடத்தில் இருக்கும் சுக்கிரனை குரு பார்ப்பதாலும், எட்டா மிடத்ததிபனை சனி பார்ப்பதாலும், பஞ்சமாதிபதி அங்காரகன் பாக்கியஸ்தானம் என்று சொல்லபடும் ஒன்பதில் இருப்பதாலும் புத்திரர்கள் நிச்சயம் உண்டு.

ஜயமுனி முன் ஜன்மத்திலேற்பட்ட வினையைக் கூறுகின்றார் :—

19. கருமத்தோன தனக்குப் பத்தில் காரியு மிருபப தாலே
உரைக்கிறோ முன்னூழ்த் தோடம் உத்தமன் தன்னைச் சேர்ந்து
வருவதால் சுதர்கள் தோஷம் வரைகுவீ ரந்தச் சங்கை
திறமையாய்ச் சொல்லு கின்றேன் தேவியே கேட்டி டாயே.

19. கருமாதிபதி அங்காரகனுக்குப் பத்தில் சனி இருப்பதால் முன் ஜன்ம தோஷமுண்டு. அஃது என்ன வினை ? எனப் பார்வதி தேவி கேட்க, முனிவர் சொல்லுகின்றார்.

20. இச்சுதன் முன்னு டன்னில் இருந்திடம் ஜநநம் சொல்வேன்
உச்சித வடனு டன்னில் உயருவான் காஞ்சி உத்ரம்
மெச்சிடும் சிற்றூர் ஒன்றில் வியப்புறு ரெட்டி யாகி
இச்சையாய்ப் பூமி யுணடாய் எழிலுள தனங்கள் பெற்று ;

20. முன் ஜன்மத்தில் ஸ்ரீ காஞ்சிக்கு வடக்கிலுள்ள ஒரு சிறிய ஊரில் ரெட்டியார் வமிசத்தில் பிறந்து பூமியையும் பணத்தையும் அடைந்து சிறந்து விளங்குவான்.

21. ஓங்கிட வாணி பங்கன் உயர்பல வினத்தால் செய்து
தீங்கிலா தரும வானய் ஜகமதில் கீர்த்தி பெற்றுப்
பாங்கியர் மதலை யுண்டாய்ப் பாலகன் வாழு நாளில்
தாங்கியே வந்த ஊழைச் சாற்றுவோம் கேளும் தாயே.

21. பலதுறைகளிலும் வியாபாரம் செய்து, பல தரும காரியங்களையும் நடத்தி, புகழ் உள்ளவனுக இருந்தான். மனையாள் குழந்தைகள் இவர்களுடன் கூடி வாழும் நாளில் இவனுக்கேற்பட்ட ஊழ்வினையைச் சொல்லுகின்றோம்.

22. தன்னுடைக் குலத்தி லேதான் தழைத்திடுங் கன்னி ஒன்று
வின்மைமாய்ப் போகம் துய்க்க வீரியன் மனத்தி லெண்ணி
அன்னவள் தனக்கு மேதான் அன்புட னிதங்கள் கூறி
என்னைநீ சேர்வா யானல் இயல்பெலா முனக்கே யீவேன்.

22. அவ்வாறு வாழும் நாளில் இவர்கள் சாதியைச் சேர்ந்த ஓர் அழகான யுவதியைக் கண்டு, அவளிடம் இனிமையாகப் பேசி, தன்னிஷ்டத்திற்கு அவள் தாழ்ந்தாளாகில் அவளுக்கே எல்லாச் செல்வத்தையும் கொடுப்பேன், என்றும் சொன்னுன்.

**23.** என்றுமே கேட்கும் போது எழிலுள மங்கை தானும்
குன்றிய மனத்தா ளாகிக் கொண்டவன் தன்பால் சொல்ல
இன்றிவ ரிருவருக்கும் இணையிலா விரோத முற்........
....ன்றவன் தனவான் தன்னை அதிகமா யேச லுற்றான்.

**23.** இவ்வாறு மொழிந்த வார்த்தைகளைக் கேட்டவுடன் அந்த அழகி, மனம் குன்றி, தன் கணவனிடம் இவ்வரலாற்றைச் சொல்ல, அவனுக்கும் இந்த ஜாதகனுக்கும் பகைமை உண்டாகி, அவளது கணவன் இவனை வசினான்.

**24.** தனவானும் மர்ம மாகத் தானவ னிருந்தா னென்றோம்
தினமதை மனத்தி லெண்ணிச் சிலநாட்கள் கழித்துப் பின்பு
அனையவெவ் விதத்தி னாலே அவன்பேரில் வழக்குக்கொண்டு
இணையான பூமி யெல்லாம் இவனுமே பறித்துக் கொண்டான்.

**24.** வசலைக் கேட்ட இந்த ஜாதகன் கபடமாக மனத்திலேயே பகைமையை மறைத்துவைத்துக்கொண்டிருந்து, எவ்வழியாகிலும் இவனது சொத்தை அபஹரிக்க வேண்டு மென்றெண்ணி, ஏதோ ஒரு காரணத்தை முன்னிட்டு, இவன்பேரில் வழக்கு நடத்தி, பூமி எல்லாவற்றையும் கவர்ந்தான்.

**25.** பூமியும் தோற்று மேதான் புகலுவான் ஏழை தானும்
சேமமாங் குடும்பமெல்லாம் சிறுத்திடும் இதுவல் லாமல்
பூமியில் மறு ஜன்மத்தில் பிறந்துமே மனைவி மைந்தர்
தீமைக ளடையு மென்று தன்குலத் தெய்வம் தன்னை ;

**25.** இவ்வாறு பூமியை இழந்த அவன் (யுவதியின் கணவன்), ஏழை யாகி, மிக்க துயரமடைந்து, என்னைப்போல் இந்த ஜாதகனும் சீரழிந்து, மறுஜன்மத்திலும் இவனது மனைவி மக்கள் துன்பமடையமாட்டார்களா என்று எண்ணி தன் குல தெய்வத்தை ;

**26.** சதா நினைத் திட்டு மேதான் சஞ்சல வருத்த முற்றார்
இதுவன்றி யின்னு மொன்று இயம்புவோம் கேளுந் தாயே
மதிநுதல் விதவை மாதை மாரனும் சிநேகம் செய்து
நிதமுமே போகம் துய்த்து நேமியில் வாழ்ந்து வந்தான்.

**26.** எப்பொழுதும் தியானித்திருந்தான். மிக்க வருத்தத்திலாழ்ந் தான். இந்த ஜாதகன் புத்திர தோஷத்திற்கு இஃது ஒரு காரணமாயிற்று. மற்றுமோர் காரணத்தைக் கூறுகின்றோம். தாயே! கேட்கவேண்டும். இந்த ஜாதகன் முன்ஜன்மத்தில் (ரெட்டியார் வமிசத்திலுதித்திருக்கும் காலத்தில்) கைம்பெண்ணுடன் கள்ள நட்புக்கொண்டு சுகமாக வாழ்ந்து வந்தான்.

**27.** போகத்தால் கருவு நேர்ந்து பின்பதை அழிக்க வேண்டி
வாகையாய்ப் பண்டி தங்கள் அநேகமாய்ச் செய்யும் போது
தோகையும் மரண மானாள் தொடர்ந்தது இவனுக் கேதான்
யோகமும் குறைவு நேர்ந்து உண்டியும் குறைச்ச லாகி ;

27. அவ்வாறிருக்கையில் அவளுக்குக் கர்ப்பமேற்பட, அதை அழிப்பதற்காகப் பல வகைகளில் வைத்தியம் செய்யும்போது, அக்காரணம் பற்றியே அந்தப் பெண் இறந்தாள். அந்தப் பாவமும் இவனைச் சூழ்ந்தது. அந்த ஜன்மத்திலேயே இவனுக்கிருந்த யோகம் குன்றி, உணவு மின்றி ;

28. மாணமே யாகியேதான் மறலியின் பதிக்குச் சென்று
நரகதில் சின்னாள் நின்று நாற்றலைக் கஞ்சன் தம்மால்
வரையவே யிக்கு லத்தில் வந்தவ னிவனே யென்றோம்
அறைகிறோ முன்னூழ்ச் சாபம் அணுகிற்று என்று சொன்னோம்.

28. காலக்கிரமத்தில் மரணமடைந்து, யமலோகம் சென்று, அங்குச் சில நாள் நரகவேதனையை அனுபவித்து, பிரம்மாவினால் படைக்கப்பட்டு இக்குலத்தில் தோன்றினான்.

29. பாரியும் மக்க ளுக்கும் பகருவோம் தோஷம் தானும்
கூறுவோ மதற்குச் சாந்தி கோபங்கள் நீங்கு கின்ற
சீருடன் தணிகைக் கேதான் தேவியும் தானு மாக
ஈரஞ்சு கார்த்தி கைக்கு இடைவிடா சென்று வந்து

29. ஆகவே மனைவிக்கும் மக்களுக்கு மேற்பட்ட தோஷத்திற்கு சாந்தியைக் கூறுகின்றோம். பெருமை பொருந்திய திருத்தணிகை க்ஷேத்திரத்திற்கு இவனும் இவனது மனைவியும் பத்து கிருத்திகை இடைவிடாமல் போகவேண்டும்.

30. வட்டிக்கு ஒருநாள் சென்று வறுமுகர்க் கர்ச்சித் தேத்தித்
திட்டமா யிருபத் தேழு சங்கமர்க் கன்ன மீந்து
அட்டியில் லாமலேதான் அது முதல் கார்த்தி கைக்கு
இட்டமாய் விரதம் பூண்டு ஈசன்தன் அடியா ருக்கும்.

30. மேலும் ஒரு முறை திருத்தணிகைக்குச் சென்று; ஆறுமுகக் கடவுளுக்கு அபிஷேகம் அர்ச்சனை முதலியவைகளைச் செய்து, இருபத்தேழு சிவனடியார்களுக்கு அன்னமிடவேண்டும். அது முதல் கிருத்திகை விரதம் அனுஷ்டிக்க வேண்டும்.

31. மறவாமல் ஒருவ ருக்கு அன்னமும் அளிப்பா னாகில்
வருமனை தீர்க்க மாகும் மைந்தருற் பத்தி விருத்தி
குறையென்று செய்யா னாகில் குலமது சீர ணிக்கும்
பெருமையாய்ச் செய்வா னாகில் பேசுவோம் மதலை தன்னை.

31. மேலும் கிருத்திகை யன்று ஒரு சிவனடியார்க்காகிலும் அன்னமிடவேண்டும். இவ்வாறு பக்தி சிரத்தையோடு ஒருவித குற்றங்களும் நேராதபடி செய்தால் நிச்சயம் புத்திரவிருத்தி யுண்டு. மேற்சொன்ன விரதங்களைச் செய்யாவிடின் சந்ததியில்லை யென்றே சொல்லவேண்டும்.

32. ஆணது ஒன்றே தீர்க்கம் அக்கன்னி இரண்டு மாகும்
தோணவே மாதுர் சேதி செப்புவோ மினிமே லேதான்
காணவே மால்நிறத்தாள் கலவர புத்தி யுள்ளாள்
வேணுகோ பாலன் தங்கை வித்தகி கேட்டி டாயே.

32. இவனுக்கு ஆண் சந்ததி ஒன்று ஸ்திரமாக இருக்கும். பெண்கள் இருவர் ஸ்திரமாக வாழ்வார்கள். இவனது தாயின் வரலாற்றைக் கூறு கின்றோம். நாராயணன் தங்கையாகிய பார்வதியே! கேளுங்கள்.

33. முன்கோபம் பித்த தேகி மூலச்சூ டுடைய ளாகும்
தன்சொலே மேன்மை யாச் சாதிப்பாள் வாயு ரோகி
அன்னவள் கவடு கொஞ்சம் அன்புள மனத்தா ளாகும்
சொன்னசொல் தவறு ளாகும் சுந்தரி கேட்டி டாயே.

33. முன் கோபம் உடையவள். பித்த ரோகத்தால் கஷ்டப்படுவாள். மூலச் சூடும் இருக்கும். தான் சொல்லுவதே சரியென்று சாதிப்பாள். வாயுரோகமும் இருக்கும். கபடமுள்ளவள். பிறரிடம் அன்பும் கொண்டவள் தான். சொன்ன வார்த்தைப்படி நடப்பாள். மேலும் கூறுகின்றோம்..

34. அவளுடைத் துணைவர் தம்மை அறைகிறோ மாண்பால் ரண்டு
பவமுள கன்னி ஒன்று பகருவோம் தீர்க்க மாக
நவனியில் சிலவே நஷ்டம் நாட்டுவோ மிவளுக் கேதான்
கவனமாய் குடகு திக்கில் காதலி வர்க்கம் என்றோம்.

34. அவளுடைய சகோதரர்களைப்பற்றிச் சொல்லுகிறோம். ஆண் இரண்டு. பெண் ஒன்று. இதற்கு மேல் ஜனித்தாலும் நிலைத்திராது. இவள் ஜனித்த ஊர் மேற்கு திக்கில் இருக்கும்.

35. மாதுரு முன் ஜன் மத்தை வரைகிறோம் தொண்டை நாட்டில்
மேதினில் வன்னிய வம்சம் மீதினி லுதித்தா ளென்றோம்
தோதாக வாடை நெய்து தொல்புவி மீதி லீவள் [1]
தீதுக ளில்லா ளாகித் தெய்வங்கள் பக்தி கொண்டு.

35. இவளது பூர்வ ஜன்மத்தில் தொண்டை நாட்டில், வன்னிய வம்சத் தில் அப்பொழுது ஆடைகள் நெய்து விற்று, அதனால் வாழ்க்கை நடத்தி வந்தாள். ஒரு பாவத்தையும் செய்யாதவள். தெய்வபக்தியுடையவளாக வும் இருந்தாள்.

36. அந்நகர் பிடாரி மாரி ஆலயம் தீபம் வைத்து
இன்னவள் மரண மாகி இக்குல முதித்தா ளென்றோம்
தன்னிலே யவன்பின் ஜன்மம் சாற்றுவோமவ்வூர் உத்ரம்
உன்னத கருமான் வம்சம் உதிப்பளா மென்று சொன்னோம்.

36. அவ்வூரிலுள்ள பிடாரி, மாரியம்மன் இவர்கள் கோயில்களில் தீபம் வைத்து, அதன் பயனாக ஐச்வர்யம் உள்ள குலத்தில் பிறந்தாள். இவள் அடுத்த ஜன்மத்தில் இப்பொழுது வாழ்க்கைப்பட்டிருக்கும் ஊருக்கு வடக்குத் திக்கிலுள்ள ஓர் ஊரில் விச்வகர்ம வமிசத்தில் பிறப்பாள்.

---

[1] யாப்புநோக்கி இவள் என்பது ஈவள் என நீண்டது.

37. தந்தையின் முன் ஜன்மத்தைச் சாற்றுவோம் காஞ்சி கீழ்ப்பால்
முந்திய பேரூர் தன்னில் முயன்றசெங் குந்த வம்சம்
தன்னிலே யுதித்து மேலும் சகலர்க்கு நல்லோ னுகிச்
சொந்தமாய்ச் செட்டு செய்து சுதர்களு மனைவி யுண்டாய் ;

37. இந்த ஜாதகனின் தந்தை, முன் ஜன்மத்தில், காஞ்சீபுரத்திற்குக் கிழக்குத் திக்கிலுள்ள ஓர் ஊரில், செங்குந்த வமிசத்தில் பிறந்து, எல்லோருக்கும் நல்லவனுக வாழ்ந்தான். சொந்தமாக குலத்திற்கேற்ற வியாபாரம் செய்து, மனையாளுடனும் புத்திரர்களுடனும் வாழ்ந்து வருகையில் ;

38. தாகப்பந் தலு மமைத்துச் சண்முகர்க் கடிமை யாகிப்
பாகமாய் வாழ்ந்து பின்பு பக்கசூ லேகளும் கண்டு
சோகமாய் மரண மாகிச் சுருதியின் தன்னு லேத ான்
மோகமாய் வரையப் பட்டு முயன்றவ னிவனே யென்றேும்.

38. தண்ணீர்ப் பந்தல் வைத்தும், முருகக்கடவுளிடத்தில் பக்தியோடு அவருக்குப் பல தொண்டுகளேச் செய்தும் வந்தான். சிறிது காலத்திற்குப் பிறகு, பக்கசூலே கண்டதால் இவன் பரிதாபமாக மரணத்தையடைந்தான். வேதத்தில் சொல்லப்பட்ட தருமங்களே மிகவும் விருப்பத்தோடு செய்து வந்தான்.

39. பின் ஜன்மம் அவ்வூர் மேற்கில் பிறப்பனு மிக்கு லத்தில்
இன்பங்க ளதிக முண்டாய் ஈசன் மேல் பக்தி கொண்டு
அன்புடன் நல்லோ னுகி அதிகமாய்ப் பூமி பெற்றுத்
துன்பமில் லாமல் வாழ்வன் சுந்தரி கேட்டி டாயே.

39. அடுத்த ஜன்மத்தில் இவன் இப்பொழுது வசிக்கும் ஊருக்கு மேற்கில், இதே குலத்தில் பிறப்பான். அதிக இன்பங்களே அனுபவிப்பான் அந்த ஜன்மத்திலும் சிவனிடத்தில் பக்தியுடையவனுகவே இருப்பான். எல்லோருக்கும் நல்லவனுக நடந்துக்கொள்வான். அதிக பூமிகள் சேர்ந்து, கஷ்டங்களின்றிச் சுகமாக வாழ்வான்.

40. தந்தையின் மரண காலம் சாற்றுவோ மிரு பானுறில்
வந்திடு தேளின் மாதம் வரைகிறேம் கருமம் தானும்
பிந்திய அன்னேக் கேதான் பேசுவோம் முப்பா னுனில்
தந்தனுர் மாதம் தன்னில் தாய்க்குமே கருமம் செய்வான்.

40. இச் ஜாதகனின் தந்தையினுடைய மரண காலத்தைச் சொல்லுகிறேம். இந்த கடக லக்கினத்திலுதித்த இந்த மகனுக்கு 26-ஆவது வயது நடைபெறுங் காலத்தில் கார்த்திகை மாதத்தில் தந்தை மரணமடைவான். இந்த ஜாதகனின் தாய் இவனது 30-ஆவது வயது நடக்கும்போது மார்கழி மாதத்தில் மரணமாவாள்.

41. சாதகன் மரண காலம் சாற்றுவோம் அறுப தாண்டில்
மேதினில் மகர மாதம் வளர்பிறை பருவம் தன்னில்
தீதான வாயு ரோகம் சேர்ந்துமே மரண மாவான்
போதக வானே பெற்ற புண்ணிய சாலி கேளாய்,

41. ஏ பார்வதி தேவியே ஜாதகனின் மரண காலத்தைப் பற்றிக் கூறுகின்றோம். 60-வது வயதில் மகர மாதத்தில் வளர் பிறையில் வாயு ரோகத்தால் மரணமடைவான். விநாயகக் கடவுளைப் பெற்ற தாயே! கேட்பாயாக.

42. மறுஜன்ம வானைக் காவல் வைசிய குலமுதிப்பான்
பெருமையாய்ச் செட்டுச் செய்து பிசகிலா வாழ்வா னாகும்
அறைகின்றோம் குடும்பச் சேதி ஆறுவ தாண்டு மட்டும்
குறைவிலை அதற்கு மேலே குடும்பமும் வேறதாகும்

42. இந்த ஜாதகன் மறுஜன்மத்தில் திருவானைக்காவில் வைசிய குலத்திலுதிப்பான். நன்றாக வியாபாரம் செய்து ஒரு குற்றமுமில்லாமல் வாழ்வான். இந்த ஜாதகன் ஜனித்து ஆறு ஆண்டுகள் வரையில் குடும்பம் ஒன்றாக இருக்கும். பிறகு குடும்பப் பிரிவினை நேரும். பிரிவினை ஏற்பட்டாலும் இவனது குடும்பத்திற்கு க்ஷேமம் குறையாது.

43. இன்னவன் பொதுயோ கத்தை இயம்புவோம் ஜனனம் தொட்டுத்
தன்னிலே முப்பா னண்டும் சமரச யோக மென்றோம்
மன்னிய அதற்கு மேலே வளர்பிறை போல ஓங்கும்
உன்னத குடும்ப மாகும் உத்தமி கேட்டி டாயே.

43. இந்த ஜாதகனின் பொதுவான யோகத்தைச் சொல்லுகின்றோம். இவனுக்கு 30-ஆவது வயது வரை சாதாரண யோகங்களே [விருத்தியும் இல்லை குறையுமில்லை என்பது கருத்து]. அதற்குப் பிறகு வளர்பிறை சந்திரன் போல குடும்பம் விருத்தியை அடையும். உத்தமியே கேட்பாயாக.

44. பூமியு மதிகம் சேரும் பெரும் பொருள் விருத்தி யாகும்
நேமியில் சல்லிய மில்லான் நிகர்பந்து மெச்ச வாழ்வான்
தீமைகள் எண்ணு னாகும் செப்புவோம் நிதிநிட் சேபம்
காமனை யெரித்தோன் தேவி கனமுள குடும்பி யாவன்.

44. இவனுக்குப் பூமிகள் ஏராளமாகச் சேரும். இவனடையும் பொருள் அபிவிருத்தியடையும். கடன் இராது. இவனைப் பந்துக்கள் போற்றுவார்கள். பிறருக்குத் தீமைகளை நினைக்கமாட்டான். இவனுக்குப் புதையலும் கிடைக்கும். காமனை எரித்த சிவபிரானின் தேவியே! இவன் மேன்மை வாய்ந்த குடும்ப முள்ள வனுவான்.

45. அத்திரி முதலா யுள்ள அறுமுனி யிவ் வாறுகூற
வித்தகி கேட்க லுற்றாள் விளம்பினீர் நிதி நிட்சேபம்
எத்திசை எந்தக் காலம் இவனுக்கு நேரு மையா
சுத்தமாய்ச் சொல்லு மென்ன ஜயமுனி சொல்லு கின்றார்.

45. இவ்வாறு அத்திரி முதலிய முனிவர்களும் சொன்னவுடன் பார்வதி வினவுகின்றாள். இந்த ஜாதகனுக்கு நிதி கிடைக்குமென்று சொன்னீர்களே! அஃது எப்பொழுது எந்தத் திசையில் கிடைக்கும்? இவ்விஷயத்தை நிச்சயமாய்ச் சொல்லுங்கள் என. ஜயமுனி பதிலுரைக்கின்றார்.

46. தென்திசைப் புலத்திலேதான் செப்பினேம் அந்தச் சங்கை
அன்புடன் முப்பான் மூன்றில் அணுகிடும் புதையல் தானும்
இன்பங்கள் மிகவே நேரும் இடருகள் அதனால் நீங்கும்
துன்பமில் லாமல வாழ்வன் துறவிகள் சொல்தப் பாது.

46. இவனுக்கு 33-ஆவது வயது நடக்கும்போது சொந்தமாகத் தென்திசையிலுள்ள நிலத்தில் புதையல் சிறிதும் சிரமமின்றிக் கிடைக்கும். இன்பங்களை ஏராளமாக நுகர்வான். நிதி கிடைத்த பிறகு சில இடையூறுகளும் நீங்கும். கஷ்டப்படமாட்டான். துறவிகளாகிய நாங்கள் சொன்ன வார்த்தை பொய்யாகாது. தாயே!

47. காதலி கேட்க லுற்றாள் கனத்ததோர் ஞாதி பாகம்
மேதினில் சேராதோ சொல் விரயத்தில் பொன்னோன் நிற்க
தீதான சனியு மாறில் சேர்ந்ததால் பலனைக் காணேம்
மாதவர் போற்று மெங்கள் மங்கையே கேட்டிடாயே.

47. மேலும் பார்வதிதேவி கேட்கின்றாள். குரு 12-ஆமிடத்திலும் சனி 9-ஆமிடத்திலும் இருப்பதால் இவனுக்குப் பங்காளிகள் சொத்து சேராதோ? சொல்லுங்கள். முனிவர்கள் போற்றும் எங்கள் தாயே! சொல்லுகின்றேம் கேளுங்கள்.

48. ஒன்பதி லிரவி புந்தி உதிரத்தோன் சேர்ந்த தாலே
அன்புடன் ஞாதி பூமி ஆதிபம் தன்னை யீந்து
இன்பமாய்ச் சேரு மென்றேம் இதுவலால் சேரும் பூமி
துன்பமில் லாமல் சேர்ப்பன் சொன்னது தப்பா தாமே.

48. ஒன்பதாமிடத்தில் சூரியன் புதன் அங்காரகன் இவர்களிருப்பதா பங்காளிகள் தாமே இவனுக்குப் பூமியைப் பிரியமாகக் கொடுப்பார்கள். இதுவுமன்றி இவன் தனது முயற்சியால் கஷ்டமின்றிப் பூமியைச் சேர்ப்பான். இவ் வார்த்தைகள் தப்பாது நடைபெறும்.

49. பூமிகள் வீடு மாடு பூஷணம் பொருள்கள் யாவும்
நேமியி லையாயி ரம்பொன் நிகழ்த்துவோ மிவன்தன் பாகம்
தீமைக ளில்லை யம்மா சொன்னசொல் உறுதி யென்றேம்
வாமனன் தங்கை யாளே வரைகிறேம் விபரம் ரண்டில்.

49. இந்த ஜாதகனுடைய பூமி, வீடு, மாடு, நகை மற்றையபொருள்கள் இவைகளின் உத்தேச மதிப்பு ஐயாயிரம் பொன் [சுமார் ரூபாய் ஐம்பதாயிரம்] ஆகும். இவனுக்கு எவ்விதத்தீமையும் ஏற்படாது. சிறிதும் சந்தேகமில்லை. பார்வதி தேவியே! இந்த ஜாதகனைப்பற்றிய விசேஷ வரலாறுகளை இரண்டாம் பாகத்தில் உரைக்கின்றேம்.

50. பொன்தசை ஜனன காலம் புகலுவோம் பதினைந் தாண்டும்
அன்புடன் திங்க ளெட்டும் அறைகிறோம் பலனை யாங்கள்
துன்பமாம் குடும்பம் வேறு துணைவர்கள் விருத்தி யாகும்
இன்பமாய்ச் செலவ னேகம் இவனுக்கு ரோகம் வாய்க்கும்.

50. இந்த ஜாதகனுக்கு ஜனன காலத்தில் குருதசையில் 15 வருஷம் 8-மாதம் மீதமாகும் [ஆகவே இவனுக்கு ஜன்மநக்ஷத்திரம் புனர்வஸு] குடும்பத்தில் சில துன்பங்கள் நேரிடும். இந்த தசையில் சகோதர விருத்தி யுண்டு. இன்பமான செலவுகளும் [குடும்பத்தில் விவாஹம் முதலியன] நடைபெறும். இந்த சாதகனுக்கு நோயும் வரும்.

51. பந்துவில் சூத முண்டு பகைஞாதி வர்க்கம் சூதம்
இன்பமாய்ச் சுபமு முண்டு எழில்காலி சேத மாகும்
தன்னுடைத் தாய்தந்தைக்கு சஞ்சலம் பிணியு முண்டு
அன்புடன் விபர மாக அறைகிறே மிரண்டி லேதான்.

51. பந்து வருக்கத்திலும் பங்காளி வருக்கத்திலும் மரணத்தினால் தீட்டு வரும். சுபங்களும் நடைபெறும். பசுக்கள் சேதமடையும். இவனுடைய தாய் தந்தையர்க்குக் கவலைகளும் நோய்களும் ஏற்படும். இவ் விஷயங்களைப் பற்றி விபரமாக இரண்டாம் பாகத்தில் சொல்லப்போகின்றோம்.

# ஜாதகம் 3

1. மதியுமான் ராகு மீனம் மால்ரவி தெருக்கா லேற
நிதிகுரு நந்தி யாக நீர்புகர் மேருவாக
விதிசனி சிகியு மாது விளங்கிய சூரிதி தூக்கம்
அதிபனும் கடகம் ஜென்மம் வருவதால் பலன் சொல்வீரே.

| ராஹு | | குரு | |
|---|---|---|---|
| | இராசி சக்கரம் | | லக்கினம் |
| சந்திரன் | | | |
| சுக்கிரன் | புதன் சூரியன் | செவ்வாய் | சனி கேது |

விஜய வருஷம் கார்த்திகை மாதம் 1-ஆந் தேதி செவ்வாயக்கிழமை இரவு நாழிகை 10-க்கு மேல் 15-க்குள் ஜனனம்.

## ஆங்கிலத் தேதி 14–11–1893.

நவக்கிரஹங்களின் பாதசாரம்.

விசாகம் 4-இல் சூரியன். உத்திராடம் 4-இல் சந்திரன். சித்திரை 4-இல் செவ்வாய். கேட்டை 2-இல் புதன். கிருத்திகை 3-இல் குரு (வக்ரீ) பூராடம் 1-இல் சுக்கிரன். சித்திரை 2-இல் சனி. ரேவதி 3-இல் ராஹு. சித்திரை 1-இல் கேது.

நக்ஷத்திரம் உத்திராடம். சூரிய தசையில் இருப்பு மாதங்கள் ஐந்து.

**1.** சந்திரன் மகரத்திலும், ராஹு மீனத்திலும், புதன் சூரியன் விருச்சிகம் சுக்கிரன் தனுஷிலும், சனி கேது கன்னியிலும், அங்காரகன் துலாத்திலும் இருந்து லக்கினம் கடகமாகவுள்ள ஜாதகத்திற்குப் பலனைச் சொல்லுவீர்களாக என உமாதேவி கேட்டாள்.

2. புண்ணிய வதியுங் கேட்க புயண்டரும் சொல்லு கின்றார்
திண்ணமா யாணும் ஜன்மம் ஜனித்தஇல் கீழ்மே லாகி
வண்ணமாய் வடக்குவாடை வரைகிறே மெதிர்வீ டில்லை
கண்ணிய காளி யீசன் கழறுவோம் கிழக்கி லேதான்.

**2.** இவ்வாறு உமாதேவி ஆஜ்ஞாபிக்க, புயண்டர் என்ற முனிவர் ஜாதகபலன்களைக் கூறுகின்றார். இந்த கிரஹ நிலையில் ஜனித்த குழந்தை நிச்சயமாக ஆண்தான். வீதி கிழக்கு மேற்காக அமைந்திருக்கும்.

பிறந்த வீடு வடக்கு வரிசையிலிருக்கும். [தெற்கு நோக்கியதாகும்.] இவ்வீட்டிற்கு எதிரே வீடிராது. வீட்டிற்குக் கிழக்குத் திக்கில் காளி கோயிலும், சிவன் ஆலயமும் உண்டு.

3. மாலவ னக்கினி தன்னி லமைந்திடும் தென்மேல் திக்கில்
நீலியு மாரி தங்கும் நேர்தந்தி மாரி மேற்கில்
சாலவே வாச மாகும் தடாகமும் அதன்மேல் தங்கும்
கோலமாய்ச் சிற்றூர் தன்னில் கூறுவோ மாதிரு இல்லம்.

3. விஷ்ணு கோயில் தென் கிழக்கு திசையில் அமைந்திருக்கும். தென் மேற்கில் காளிகோயிலும், மாரியம்மன் கோயிலும் இருக்கும். நேர் மேற்குத் திக்கில் விநாயகர் ஆலயமும், மாரிகோயிலும் உண்டு. அவைகளுக்கும் மேற்கில் ஒரு குளம் இருக்கும். அவ்வாறமைந்த சிறிய ஊரில் ஜாதகன் தாயின் வீட்டில் ஜனித்திருப்பான். அவன் பிறந்த தாயின் வீட்டைப்பற்றிச் சொல்லுகின்றோம் கேளுங்கள், தாயே!

4. வருகுவான் கெட்டி வீட்டில் மாதிரு தந்தை யோகம்
வரும்புத்ர களத்ர யோகம் வருந்துணை முன்பின் ஜன்மம்
திருமகன் யோகம் தானும் செப்புவோ மிந்நூல் தன்னில்
அறுமுகன் தன்னைப் பெற்ற அம்மையே மேலுங் கேளே.

4. அவன் பிறந்த தாயின் வீடு திடமாக [கற்களால் கட்டப்பட்டதாக] இருக்கும். இந்நூலில் அவனுடைய தாய் தந்தை மக்கள் மனைவி சகோதரர் இவர்களுடைய யோகங்களையும், இப்பாலகனது யோகத்தையும் கூறப்போகின்றோம். அறுமுகக்கடவுளைப் பெற்றெடுத்ததாயே! மேலுங் கேளுங்கள்.

5. தந்தையின் குணத்தை யாங்கள் சாற்றுவோம் சிவந்த மேனி
சிந்தையில் கபடு மில்லான் சீலனும் பக்தி யுள்ளான்
பந்தமாய்ச் சமதே கத்தன் பாரினிலுகை சாலி
சந்ததம் குணவா னாகும் தாட்சிணியன் கனவா னாமே.

5. ஜாதகனின் தந்தை சிவந்த மேனியன், நெஞ்சில் கள்ள மில்லாதவன். நன்னடத்தையும் பக்தியும் உடையவன். கட்டான தேகம் வாய்ந்தவன். மதி நுட்பம் உள்ளவன். எப்பொழுதும் நற்குணம், தாக்ஷிண்யம், பெருமை இவைகள் உள்ளவனாகவே இருப்பான்.

6. துணைவரை ஆத ரிப்பான் சுத்தநன் மனத்த னாகும்
இணையிலாச் செல்வ முள்ளான் இன்பமாய் வார்த்தை கூறுவன்
அனையவே மாதுர் ரெண்டாம் அம்பிகை கேட்க லுற்றாள்
தனயனும் எந்த மாதுர் ஜனித்தவன் சொல்லு வீரே.

6. சகோதரர்களை ஆதரிப்பான். மனத் தூய்மை உள்ளவன். அதிகச் செல்வம் படைத்தவன். இனிமையாகப் பேசவல்லான். இவனுக்கு இரண்டு தாய்மார்களுண்டு. இவ்வாறு புயண்டர் சொன்னவுடன், இவன் எந்தத் தாய்க்கு ஜனித்தவன் சொல்லுங்களென, அம்பிகை வினவினாள்.

7. முதல்மாது தனக்குப் புத்திரர் முயலுவான் ஒருவன் என்றோம்
விதியினா லிரண்டாம் மாது விளம்பினன் இவனின் தந்தை
சதியிலா மனத்தா னாகும் சத்பாத்திரன் பெருமை யுள்ளான்
ததிநெய்பா லிட்ட முள்ளான் சத்தியே மேலுங் கேளே.

7. இவன் முதல் தாயின் புத்திரன். தலைவிதி காரணமாக இரண்டாவது தாய் ஏற்பட்டாள். இப்பாலகனது தந்தை கபடமற்ற மனத்தா னாகும். மிக்க நல்லவன். கௌரவ முள்ளவன். பார்வதி தேவியே! மேலும், இவன் தயிர், பால், நெய் முதலிய சிறந்த ஆகாரப் பொருள் களில் இஷ்டமுள்ளவன்.

8. இவனுடைத் துணைவர் தம்மை யியம்புவா மாண்பா லொன்று
நவனியில் தீர்க்க மாகும் நசித்திடு மற்ற வெல்லாம்
தவசியே இவனுக் கேதான் ஜாதகன் பிறப்பா னாகும்
அவனியில் இவன்தன் சேதி யறைகின்றோம் கேளு மம்மா.

8. இவனுடைய ஸஹோதரர்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். ஒரு ஸஹோதரன் அந்த ஸஹோதரன் தீர்க்காயுளுடன் வாழ்வான். பிறக்கும் மற்றைய சகோதரவர்க்கங்கள் எல்லாம் நிலைத்திரா. இவனுடைய வரலாறுகளைக் கூறுகின்றோம். கேளுங்கள் தாயே!

9. சிவந்திடு மேனி யாவன் தேகமும் சமம தாகும்
கவர்ந்திடான் அயலார் பொன்னைக் காரியச் சமர்த்த னாகும்
உவமையாய் வார்த்தை கூறுவன் உத்தமர்க் கினிய னவன்
தவசி களுறவு கொள்வன் சந்தேக மனத்த னாமே.

9. கடகலக்கினத்திலுதித்த இந்த மகனது மேனி சிவந்திருக்கும். உடலும் கட்டாக இருக்கும் [உயரமும் நடுத்தரமாகும்]. பிறர் பொருளில் ஆசைவைக்கமாட்டான். தன் வேலையைக் கண்ணும் கருத்துமாகக் கவனித்து நிறைவேற்றும் ஆற்றல் படைத்தவன். எவ்விஷயங்களையும் உவமை சொல்லி விளக்குவான். இவனிடம் மிக்க பெரியோர்களும் அன்புடன் நடப்பார்கள். தவசி [சன்னியாசி]களிடம் தொடர்புடையவனாக இருப்பான். இவ்வாறு குணங்கள் உள்ளவனாயினும் எதையும் சந்தேகப்படுவான். [சீக்கிரத்தில் ஒரு விஷயத்தையும் நம்பமாட்டான்].

10. பயிர்த்தொழி லுடைய னவன் பந்துவும் மெச்ச வாழ்வன்
நயம்பட வார்த்தை சொல்வன் நாயகி பட்ச முள்ளான்
ஜயம் செய்வன் தொடுத்தவேலை சீக்கிர நடையு முள்ளான்
பயமுள மனத்தனாகும் பாரினில் கீர்த்தி ஏற்பன்.

10. இவனது தொழில் பயிரிடுவதாகும். உறவினர்கள் கொண்டாடும்படி வாழ்க்கையை நடத்துவான். நயமாகப் பேசும் இயல்புள்ளவன். மனைவி யிடத்தில் அன்புள்ளவன். தான் ஆரம்பித்த வேலையில் நிச்சயமாக வெற்றியைக் காண்பான். இவனது நடை வேகமாக இருக்கும். பயப்படும் சுபாவ முண்டு. தான் வசிக்கும் ஊரில் மிக்க புகழுள்ளவனாக இருப்பான்.

11. பூமியும் சேர்ப்பா ஞகும் புத்திர ருடையனுகும்
தீமையு மெண்ணு ஞகும் சிறுத்தவர்க் குதவி செய்வன்
காமியன் பித்த தேகி கணக்கினிலூகை வாஞும்
நேமியோர் மெச்ச வாழ்வன் நிருபர்க லிஷ்ட ஞவன்.

**11.** இந்த ஜாதகன் பூமிகளைச் சம்பாதிப்பான். இவனுக்குப் புத்திரபாக்கியம் இருக்கும். பிறர்க்குத் தீமையை மனத்தாலும் நினைக்க மாட்டான். எளியவர்களுக்குத் தேவையான உதவியைச் செய்வான். காமமுள்ளவன். பித்தநோயினுல் கஷ்டப்படுவான். கணிதத்தில் மதிநுட்பம் வாய்ந்தவன். இவனை எல்லோரும் கொண்டாடுவார்கள். அரசர்களும், அரசாங்க அதிகாரிகளும் இவன் சொற்படி நடப்பார்கள். [அவர்களையும் தன் வசப்படுத்தும் வல்லமை வாய்ந்தவன்.]

12. உலகுளோர்க் குதவி செய்வன் உண்மையாய் நடக்க வல்லான்
பலவித லாப முள்ளான் பகையிலான் எவர்க்கு நண்பன்
நலமான குடும்ப முள்ளான் நாதனுர் பக்தி யுள்ளான்
விலைமாதர் விருப்பம் கொள்வன் மெல்லியே மேலுங்கேளே.

**12.** பொதுமக்களுக்கு விஷேச உதவியைச் செய்வான். மனத்தில் எண்ணியதையே வாக்கினுல் சொல்லுவான். சொன்ன சொற்படியும் நடப்பான். பல வழிகளிலும் லாபத்தை அடைவான். இவனுக்குப் பகைவர்கள் இருக்கமாட்டார்கள். மேலும் பணக்காரர், ஏழை, பண்டிதர், பாமரர் என்ற வித்தியாசமன்றி எவர்க்கும் நண்பனுக இருப்பான். குடும்ப வாழ்க்கை மிக்க நிம்மதியுடன் இருக்கும். கடவுள் பக்தி உண்டு. இவ்வாறு குணங்கள் நிறைந்தவனுக இருப்பினும், விலைமாதர்களிடமும் நேசமுள்ளவனுக ஆவான். தேவியே மேலுங்கேளுங்கள்.

13. ஜாதகன் துணைவர் தம்மை சாற்றுவோம் மூன்று விருத்தி
அவனியில் யாவும் தீதாம் அறைகிரேு மிவனுக் கேதான்
இவனுக்கு மூத்தோ ரில்லை இவனுமே ஜேஷ்ட ஞகும்
தவமுடை யோரைக் காக்கும் தயாபரி மேலுங் கேளே.

**13.** கடகலக்கினத்தில் பிறந்த இந்த மகனுடைய சகோதரபாவத்தைப் பற்றிச் சொல்லுகின்ரேும். சகோதரர் மூவராவர். அவர்கள் இவனுக்கு உதவி செய்யமாட்டார்கள். [சகோதர ஒற்றுமை இராதென்பது கருத்து.] இவனுக்கு மூத்தசகோதரன் இல்லை. இவனே மூத்தவன். தவசிகளைக் காக்கும் கருணைக்கடலே. தாயே! மேலும் சொல்லுகிரேும. கேளுங்கள்.

14. இன்னவன் ஜனன மிருப்பிட மதற்கு இசைக்கிரேும் [கடிகை தூரத்தில்
மன்னிய தென்மேல் தந்தையின் ஊராம் வரைகிரேும் [குணக்கு மேல் வீதி
தன்னிலே முந்தி வாடயாய்க் கீழ்ப்பால் தந்தியாம் தெற்கில் சலக் [கரைவயல்களுண்டே
உன்னிய மேற்கில் காளியு மீசனு றைந்திடு சோலையும் ஊழி.

**14.** இந்தக் 4-ஆவது பாட்டில் கடகலக்கின ஜாதகனது தாய் வீட்டின் அமைப்பைப் பற்றிக் கூறினர். [இம் மகன் தாய் வீட்டில் பிறந்தவனுகையால்] இப்பாசுரத்தில் அவன் தந்தையின் ஊர் வீட்டின் அமைப்பு முதலியவைகளைக் கூறுகின்றார். இம் மகனது தாய் ஊருக்குத் தென்மேற்கில் ஒரு நாழிகையில் நடந்து அடையக்கூடிய தூரத்தில் இருக்கும். கிழக்கு மேற்கில் வீதி அமைந்திருக்கும். முதல் வரிசையில் இவனது தந்தையின் வீடு கிழக்குத் திக்கில் விநாயகர் கோயில். தெற்குத் திசையில் ஒரு நீர் நிலையும் வயல்களும் இருக்கும். மேற்கு திசையில் காளிகோயில், சிவபிரான் ஆலயம். ஒரு சோலை இவைகளும் இருக்கும்.

**15.** இன்னமும் பலதே வாச மிலகிடும் சோலை யுண்டு
உன்னித சமவூர் தன்னில் உறைகுவா னிவனின் தந்தை
அன்னையும் கேட்க லுற்றாள் அவனுக்குத் துணைவர் தோஷம்
என்னகா ரணத்தி னாலே இலகாது என்று சொன்னீர்.

15. அவ்வூரில் பல கோயில்களும் சோலைகளும் விளங்கிடும். அங்கு இவனது தந்தை வசிப்பான். இவ்வாறு சொல்லி முடித்தவுடன் பார்வதி தேவி வினவினள். [8-ஆவது பாட்டில்] இவனுக்குச் சகோதர தோஷம் காரணம்பற்றி அதிக சகோதரரில்லை என்று சொன்னீர்களே. அதற்கென்ன காரணம் ? சொல்லுங்கள் என்றாள்.

**16.** கரியவன் சிகியி மூன்றில் கலந்துதா னிருப்ப தாலே
அரைகிறோம் துணைவர் தோஷம் அந்தணன் மூன்றைப் பார்க்க
விரைவினி லுதிக்கு மென்றோம் விளங்கினும் தோஷ மாகும்
குறையதைச் சொல்லு மென்ன கூறுவர் புயண்டர் தாமும்.

16. இவ்வாறு தேவி கேட்டவுடன் புயண்டர் பதிலுரைத்தார். சனியும் கேதுவும் ஆகிய இரு பாபகிரஹங்களும் சகோதர ஸ்தானம் என்று சொல்லப்படும் 3-ஆமிடத்தில் இருப்பதால், சகோதரர்களுக்கு அழிவு ஏற்படும். ஆயினும் 11-ஆமிடத்தில் இருக்கும் குருபகவான் சகோதர ஸ்தானத்தைப் பார்ப்பதால் சகோதர விருத்தி சீக்கிரத்திலேயே ஏற்படும், விளங்கவும் செய்யும். ஆயினும் அந்தப் பாவத்திற்குத் தோஷம் நிச்சயம் உண்டு. அத்தோஷத்தைச் சொல்லுங்களென பார்வதி கேட்க புயண்டர் மேலும் சொல்லுகின்றார்.

**17.** புகருமே ஆறில் நிற்கப் பூமக னுலி லேற
வகையான மாதுர் வாலே வந்திடும் துணைவர் தோஷம்
பகைதனைச் சொல்லு மென்ன பத்தினி சேதி சொல்வேன்
இகபரம் விருப்பம் கொள்வள் இவளுமே சிவந்த மேனி.

**17.** மேலும் சுக்கிரன் 6-இல் செவ்வாய் 4-இல் இருப்பதும் 4-ஆவது ஸ்தானத்தில் பாபியான அங்காரகனும், அந்த ஸ்தானாதிபதியான சுக்கிரன் 6-இலும் இருப்பதாலும், தாயால் சகோதர தோஷம் நேரிடும். அவன் [இவனுடைய தாய்] இம்மை மறுமைக்கான தருமங்களைச் செய்வதில் விருப்பமுள்ளவள். அவளது மேனி சிவந்திருக்கும்.

18. அன்னம்போல் சாய லுள்ளாள் ஆசாரம் பொறுமை யுண்டு
கன்னென வார்த்தை கூறுவள் கணவனுக் கினிய ளாவள்
இன்னவள் தந்தைக் கேதான் இயம்புவேன் தாரம் மூன்று
தன்னிலே நடுமா துக்கு ஜனித்தவ ளிவளே யென்றேம்.

18. அன்னம் போன்ற நடையழகு உடையவள். தொன்று தொட்டு வந்த பழக்க வழக்கங்களை விடாதவள். பொறுமைசாலி. அவளது வார்த்தை அமுதம் போன்றது. கணவனிடத்தில் இனிமையாக நடந்துக் கொள்ளும் இயல்புள்ளவள். இவளுடைய தந்தைக்கு மூன்று மனைவி மார்கள். அவர்களில் இரண்டாவது மனைவிக்கு ஜனித்தவளிவள்.

19. இவளுடைத் துணைவர் தம்மை இசைக்கிறே மாண்பா லொன்று
நவனியில் தீர்க்க மாகும் நாயகன் சேதி கேளாய்
அவனியி லற்பபுத்தி அற்பரை நேசம் கொள்வன்
குவலினில் நிந்தை யுள்ளான் குலத்துக்குப் பகையு மாவன்.

19. இவளுடைய சகோதரரைப்பற்றிச் சொல்லுகின்றேம். இவளுக்கு ஒரு சகோதரன் உண்டு. அவன் நீண்ட ஆயுளுடன் வாழ்ந்திருப்பான். அவளது சகோதரனின் வரலாறுகளைச் சொல்லுகின்றேம் கேளுங்கள், தாயே! அவன் மிகவும் அற்ப புத்தி உடையவன். தன்னைவிடத் தாழ்ந்தவர்களிடமே நேசம் கொள்வான். கிராமத்திலுள்ளோர் எல்லோரும் இவனைப் பழிப்பார்கள். ஆகையால் இவனால் இவனது குலத்திற்கே கேடு ஏற்படும்.

20. காமனை விருப்பங் கொள்வன் கண்ணினில் குற்ற முள்ளான்
சேமமாம் குடும்ப முள்ளான் சேட்டைக ளதிகம் செய்வன்
தீமையாம் குணத்த னாகும் செப்புமுன் கோபி யாவன்
பூமியும் விருத்தி செய்வன் பெண்களா லவமா னத்தன்.

20. காமமுள்ளவன். கண்ணில் தோஷம் [நோய்] ஏற்பட்டிருக்கும். [கண் ஊனமுள்ளவன் என்பது கருத்து] அல்லது அசூயையோடு பார்ப்பவன். இவனது குடும்பம் க்ஷேமமாக இருக்கும். தகாத செயல்களைச் செய்வான். தீய குணங்கள் உடையவன். முன் கோபியாகவும் இருப்பான். பூமியை நன்றாக அபிவிருத்தி செய்வான். பெண்களால் இவனுக்கு அவமானம் நேரிடும்.

21. இக்குண முடையோ னுக்கு இவளுமே உடன் பிறந்தாள்
மிக்கவே இவளின் ஊழை விளம்புவோம் விபர மாகத்
தக்கவே காஞ்சி தனனில் சௌராஷ்டிர குலமு தித்துத்
திக்கெலாம் பெருமை யுண்டாய்ச் சேயர்க ளுள்ளா ளாகி.

21. இப்படிப்பட்ட குணமுடையவனுக்கு இவள் சகோதரியாகப் பிறந்தவள். இவளுடைய முன்ஜன்ம வினைக்களை விஸ்தாரமாகச் சொல்லுகின்றேம். இவள் முன் ஜன்மத்தில் காஞ்சீபுரத்தில் சௌராஷ்டிர வம்சத்தில் பிறந்து பெருமையோடும் குழந்தைகளோடும் வாழ்ந்து வந்தாள்.

22. குறைவிலா வாழும் நாளில் கூறுவோ மூழி தானும்
விரைவினில் மார்ச்சா லத்தை மெல்லியு மடித்தா ளென்றேம்
துரிதமா யிடைமு றிந்து துன்பங்கள் மிகவே கொண்டு
மறலியின் பதிக்குச் செல்ல வந்தது அந்த ஆணை.

22. ஒருவிதக் குறைபாடும் இல்லாமல் வாழும் காலத்தில் ஏற்பட்ட வினையைச் சொல்லுகின்றேம். இவள் முன் ஜன்மத்தில் ஒரு பூனையைத் தடியால் அடிக்க, உடனே அதன் இடுப்பு முறிந்து, சொல்ல முடியாத துன்பங்களை அனுபவித்து, கடைசியில் யமன் உலகம் சென்றது. அந்தப் பாவம் இவளைப் பிடித்துக்கொண்டது.

23. ஆகையால் அச்ஜன் மத்தில் அந்திய காலந் தன்னில்
தோகைக்கு வாய் வாலே சோர்ந்தன கைகா லுந்தான்
பாகமாய் வியாதி யாலே பத்தினி மாண்டா ளென்றேம்
வாகையா யிச்ஜன் மத்தில் வந்தவ ளிவளே யாகும்.

23. ஆகையால், முன் ஜன்மத்திலேயே, இவள், கடைசி காலத்தில், வாயு ரோகத்தினுல் கை கால்கள் சோர்ந்து, செயலற்று, வெகு காலம் கஷ்டப்பட்டு கடைசியில் மரணத்தையும் அடைந்தாள். முன் ஜன்மத்தில் இக் குற்றம் செய்த மாதுதான் இந்த ஜன்மத்தில் நாம் சொல்லி வரும் கடக லக்கின மகனுக்குத் தாயாக வாய்த்திருக்கின்றுள்.

24. இச்சன்மம் தன்னி லேதான் இவளுக்கு முன்னும் தன்னில்
துச்சமாய் வாயு ரோகம் தோன்றிடு மிவளுக் கேதான்
கச்சணி ரோகம் தீரக் கழறுவாய் சாந்தி ஒன்று
எச்சாந்தி செய்தா லுந்தான் விலகாது வியாதி தானே.

24. அப் பாவம் மிகவும் கொடியதாகையால் இவளுக்கு இந்த ஜன்மத்திலும் அந்த வாயு நோய் தொடர்ந்து வந்து வாட்டும். இவ்வாறு புயண்டர் சொன்னவுடன் பார்வதி தேவி கேட்கின்றுள். அவளுக்கு வாத நோய் தீர, பரிகாரத்தைச் சொல்லுங்கள். எந்தச் சாந்தியைச் செய்தால் வியாதி இராது சொல்லுங்கள்.

25. மதலையும் விருத்தி தோஷம் மைந்தனும் விருத்தி யென்றீர்
விதங்களைச் சொலலு மென்ன விளம்புவார் புயண்டர் தாமும்
சதியான அஷ்ட மத்தோன் சனியாகி மூன்றில் சேர
விதியோனைக் குருவும் பார்க்க விளம்பினேம் வயது தீர்க்கம்.

25. புத்திர தோஷம் உண்டு என்றும் ஆனுல் இம் மகன் தீர்க்காயுளுடன் இருப்பான் என்றும், சொன்னீர்கள். அவைகளுக்குக் காரணத்தைச் சொல்லுங்களெனப் பார்வதி கேட்க, புயண்டர் பதில் சொல்லுகின்றுர். எட்டுக்கு உடைய சனி 3-இல் இருப்பதால் சகோதர விருத்தியில்லை. ஆயினும் குரு பார்ப்பதால் இந்த ஜாதகனுக்குத் தீர்க்காயுளுண்டு.

26. எந்தக்கா லத்தி லேதான் இவளுக்கு ரோகம் வாய்க்கும்
சந்திரன் தசையி லேதான் சடைநாகம் புசிப்பில் காணும்
அந்திய காலம் மட்டும் வாங்காது ரோகம் தானும்
முந்திய சாந்தி யொன்று மொழிகிறோம் கேளு மம்மா.

26. இந்த ஜன்மத்தில எந்தத் தசை, எந்தப் புக்தியில் இவளுக்கு வாயு ரோகம் ஏற்படும் என்று பார்வதி கேட்க, புயண்டர் சொல்லுகின்றார். சந்திர தசையில் கேது புக்தியில் இவளுக்கு வாதரோகம் ஏற்படும். இவளுடைய அந்திய காலம் வரையில் அது நீடித்திருக்கும். ஒரு சாந்தி சொல்லு கின்றோம். கேட்டருளவேண்டும், தாயே!

27. இன்னவள் தணிகைக் கேதா னீராறு மாதம் சென்று
உன்னத முருக னுக்கு உத்தமி அர்ச்சித் தேத்தி
மன்னிய மாத மோர்நாள் வருங்கார்த்தி தன்னி லேதான்
அண்ணலின் அடிமை யாயும் அவன்வேடங் கொண் டோருக்கு.

27. இவள் திருத்தணிகைக்கு ஒவ்வொரு கிருத்திகையிலும் சென்று, அங்கு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ சுப்பிரமணிய ஸ்வாமிக்கு அபிஷேகம் அர்ச்சனை முதலியவைகளைச் செய்யவேண்டும். இவ்வாறு பன்னிரண்டு கிருத்திகைகளிலும் [அதாவது ஒரு வருஷம்] பூஜை செய்யவேண்டும். மேலும் ஒவ்வொரு கிருத்திகையிலும் தான் பக்தி சிரத்தையுடன் முருகன் போல் வேஷம் பூண்ட அவனடியாராகிய,

28. அன்னங்கள் ஒருவர்க் கீய அப்பிணி சாந்த மாகும்
பிந்திய ஜன்மம் தோறும் பலக்காது வினைகள் தாமும்
சொன்னேனே யிதுவே யன்றிச் சுருதியும் வேறே யில்லை
கன்னென மொழியி னாளே கழறின மொழி குன்றாது.

28. ஒருவருக்கு அன்னதானம் செய்யவேண்டும். அவ்வாறு செய்தால் இந்தப் பிணி இந்த ஜன்மத்தில் இவளை வாட்டாது. பின் ஜன்மத்திலும் பலமாகத் தொடராது. வேறு பரிகாரங்கள் இல்லை. கரும்புபோன்ற மொழிகளைச் சொல்லுகின்ற மலைமகளே! நாங்கள் சொன்ன மொழி தவறாது.

29. ஜாதகன் மணத்தின் காலம் சாற்றுவோ மொருபா னாறில்
மாதிவள் குணக்கி லேதான் மாதுரு வர்க்கந் தன்னில்
கோதிலா வருவளாகும் கூறுவோ மவள்கு ணத்தை
வேதனை யெண்ணா நெஞ்சம் வித்தகி சிவந்த மேனி.

29. ஜாதகனுடைய விவாஹ காலத்தைச் சொல்லுகின்றோம். பதினாறு வது வயதில் விவாஹம் நடைபெறும். கிழக்குத் திசையில், இவனது மாத்ரு வர்க்கத்திலிருந்தே மனைவி வாய்ப்பாள். அவளது குணங்களைக் கூறுவோம். பிறர்க்குத் துன்பத்தை நினைக்காத நெஞ்சம் படைத்தவள். சிவந்த மேனியாள்.

30. நடையது நல்ல தாகும நளினமா யுரைப்பா ளாகும்
அடவுடன் வருவோ ருக்கு அன்னங்கள் போட வல்லாள்
........பக்தி கொள்வா ளாகும் மெல்லியும் யோக சாலி
திடமான குடும்ப முள்ளாள் செந்திரு வாச முள்ளாள்.

30. நல்ல நடையழகுடையவள். இனிமையாகப் பேசுவாள். எளிமையோடு வருபவர்களுக்கு அன்னமிடும் இயல்புள்ளவள்........பக்தி கொண்டவள். அவளுக்கு மிக நல்லயோகம் உண்டு. குடும்ப வாழ்க்கை குழப்பமின்றி நிம்மதி நிறைந்ததாயிருக்கும். மஹாலக்ஷ்மீ வாசம் பொருந்தியவள்.

31. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோ மாண்பால் ரண்டு
பத்தினி யிரண்டு மாகும் பகருவோம் நான்கும் தீர்க்கம்
சித்தமாய் மூன்று நட்டம் செப்புவோ மிவளுக் கேதான
வித்தகி தாரம் ஒன்றே விளம்புவோ மவனுக் கேதான்.

31. புத்திர பாவத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். ஆண்பால் இரண்டு, பெண்பால் இரண்டு ஆக இந் நான்கும் தீரக்காயுளுடன் விளங்கும். இவர்களைத் தவிர, மூன்று குழந்தைகள் பிறந்து இறக்கும். ஸர்வேசுவரியே! (இந்த ஜாதகனுக்கு) மனைவி ஒருத்தியே.

குறிப்பு. "மூன்று நஷ்டம்" என்று சொன்னதால், இவனுக்கே இரண்டாவது மனைவி ஏற்பட்டு அவனுக்கு மூன்று குழந்தைகள் பிறந்து நஷ்டமாகுமோ என்று ஐய முண்டாவதால் அந்த சந்தேகத்தை நீக்குவதற்காக, தாரம் ஒன்றே என்று வற்புறுத்திச் சொன்னார். ஆகவே இவனுக்கு ஏழு குழந்தைகள் பிறக்கும் என்றறியவேண்டும்.

32. இவனுடை முன்ஜன் மத்தை யியம்புவோம் சோழ நாட்டில்
அவனியில் ஆழி உத்ரம் அணுகிய பேரூர் தன்னில்
சிவமதம் சூத்ர வம்சம் ஜனித்துமே பெருமை பூண்டு
நவனியில் கிருஷி யாலே நாயகன் கீர்த்தி பெற்றான்.

32. இவனுடைய முன்ஜன்மததைக் கூறுகின்றோம். இவன் சோழ நாட்டில் வடக்கே நீர் நிலை உள்ள பெரிய ஊரில் சிவமதத்தில் சூத்திர வமிசத்தில் பிறந்திருந்தான். அப்பொழுது இவன் பெருமையுள்ளவனாகவும், விவசாயம் செய்து அதனாலே மிக்கபுகழ் உடையவனாகவுமிருந்தான்.

33. சட்டநா தருக்கு ஊழி சதாவுமே செய்து வந்து
மட்டிலா அதிதி கட்கு அன்னங்கள் அன்பாய் யீந்து
இட்டபூஞ் சோலை வைத்து இவன்பல தீர்த்தம் தோய்ந்து
கட்டமில் லாமல் வாழ்ந்து காதலி மதலை யுண்டாய்.

33. சட்டநாதருக்கு [சீகாழியில் எழுந்தருளியிருக்கும் பரமசிவனுக்கு] எப்பொழுதும் தொண்டு செய்து வந்தான். மேலும் எண்ணிக்கையற்ற விருந்தாளிகளுக்கு மனமுவந்து அன்னமளித்தும் வந்தான்.

பல பூஞ்சோலைகளை ஈசன் பூசையின்பொருட்டு நிறுவினான். புண்ணிய தீர்த்தங்களில் நீராடினான். மனைவியோடும் மக்களோடும் கஷ்டமின்றிச் சுகமாக வாழ்ந்து வந்தான்.

**34.** சுகமுடன் வாழ்ந்து பின்பு சுரத்தினால் மரண மாகித்
தகைமையாய்க் கங்கை வம்சம் தானவ னுதித்தா னென்றோம
பகையில்லை முனஜன் மத்தில் பகருவோம் தந்தை ஜன்மம்
வகையுடன் சொல்லு கின்றேன் மங்கையே மேலுங் கேளே.

**34.** இவ்வாறு சுகமாக வாழ்ந்து வருகையில், அந்திய காலத்தில் சுரம் கண்டு இவன் இறந்தான். அவன்தான் இப்பொழுது வேளாள வமிசத்தில் (கடக லக்னத்தில்) உதித்திருக்கின்றான். முன்ஜன்மத்தில் இவனுக்குப் பகைவரும் இலர். பாவமும் இல்லை. இவனது தந்தையின் முன்ஜன்மத்தை விரிவாகச் சொல்லுகின்றோம். தாயே! கேளுங்கள்.

**35.** திருப்புலி யூரிலே தான் சேடர்தன் முலமு தித்து
விருப்பமாய் நெசவு செய்து விளைபுல மில்லா னாகி
மருமமாய்ச் செட்டுச் செய்து மதலைகள் மனைவி யுண்டாய்
இருக்கிற காலந் தன்னில் இயம்புவோ மூழி தானும்.

**35.** இவனுடைய தந்தை முன்ஜன்மத்தில் திருப்பாதிரிப்புலியூரில், சேடர் குல (நெசவாளர் குல)த்தில் பிறந்து, நிலமில்லாதவனாக, நெசவுத் தொழிலையே நடத்திவந்தான். மதியூகத்துடன் வியாபாரமும் செய்து வந்தான். அவன் மனைவி மக்களோடு சுகமாக வாழ்ந்திருக்கையில் அவனுக்கேற்பட்ட வினையைச் சொல்லுகின்றோம்.

**36.** தன்னிடம் வேலைக் காரர் சார்ந்தனர் அவர்தன் பாரி
அன்னம்போ லிருந்தாள் தானும் அவள் பேரில் மோகங்கொண்டு
பொன்னையு மீந்து போகம் புக்கினான் பலவந் தத்தால்
இன்னவள் வரனும் கேட்டு இருவர்க்கு விரோதமுற்று.

**36.** வேலைக்காரர்கள் பலர் அவனை அண்டிப்பிழைத்து வந்தார்கள். அவர்களில் ஒருவனது மனைவி அன்னம்போல் மிக்க அழகு வாய்ந்தவளாக இருந்தாள். அவளிடம் இவன் (தந்தை) மோகங்கொண்டு பொற்காசுகளைக் கொடுத்தும், பலாத்காரமாகவே இன்பத்தை நுகர்ந்தான். இச்செய்தியை அறிந்த அந்தப் பெண்ணின் கணவனுக்கும் இவனுக்கும் பகைமை உண்டாயிற்று.

**37.** மனைவியைத் துரத்தி விட்டான் மங்கையு மிவன்பால் சென்று
அனையவே உன்னா லேதான் அநேகமாய் நிந்தை யாகி
இனங்களும் பகைய தாகி இருக்கின்றேன் காப்பா யென்றாள்
வனிதையும் சொல்லும் போது மன்னனும் கூறு கின்றான்.

**37.** அந்த வேலைக்காரனும் தன் மனைவியை வீட்டிலிருந்து நீக்கிவிட்டான். ஆதலால் அவள் திக்கற்றவளாக இவனிடம் வந்து உன்னால்தான் எனக்குப் பழியும், இனசனங்களின் பகையும் ஏற்பட்டன. ஆகையால்

நீ உனது குற்றத்தை நன்குணர்ந்து என்னைக் கைவிடாமல் காப்பாற்ற வேண்டு மென்று பரிதாபமாகக் கேட்கும்போது இவன் கூறியபதிலைச் சொல்லுகின்றோம்.

38. என்மனை பொல்லா ளாவள் இடருக ளதிகம் நேரும்
உன்னையே ஆத ரிக்க உடன்பட மாட்டே னென்றான்
இன்னவள் மனம்க லங்கி இயம்புவாள் சாபமே தான்
மன்னிய மறுஜன் மத்தில் மானிடராயு தித்து.

38. என் மனைவி மிகப் பொல்லாதவள். உன்னை ஏற்றுக்கொண்டால் அவளால் பல தீமைகள் நேரும். ஆதலின் உன்னை ஆதரிக்கமுடியாது என்றான். இவ்வார்த்தைகளைக் கேட்டு அவள் மனங்கலங்கிச் சாபமிட்டாள். அஃதாவது "மறுஜன்மத்தில் மனிதனாகவே பிறந்து

39. சதியின்தன் சுகமு மின்றி சஞ்சல மனத்த னாகி
விதியினால் வாழ்வா யென்று வேறொரு பக்கம் சென்றாள்
அதிபனு மச்சன் மத்தில் அந்திய காலந் தன்னில்
பதியினில் மனைவி மாண்டு பாலர்கள் விரோத முற்று.

39. மனைவியின் சௌக்கியமின்றி, மனத்தில் சஞ்சலங்களடைந்து வாழ்ந்திருப்பாய் என்று இவ்வாறு சாபமிட்டுச்சென்றாள். இவனும் அதே ஜன்மத்திலேயே அந்திய காலத்தில் மனைவியை இழந்து கஷ்டப்பட்டான். மேலும் இவனது மக்களுக்கும் இவனுக்கும் சண்டை உண்டாகி அவர்களும் இவனைக்கைவிட்டார்கள்.

40. தேசசஞ் சாரம் செய்து சென்றனன் காஞ்சி தன்னில்
பாசமாய்க் குமர கோட்டம் பதியினில் விடையும் செய்து
போசன மாலயத்தில் பெற்றுமே முருக னன்பு
நேசமாய் வைத்து மேதான் நிமலனு மரண மானான்.

40. ஆகவே இவன் வீட்டைத் துறந்து பலதேசங்களில் சுற்றி விட்டு, காஞ்சீபுரத்தில் குமரகோட்டத்தில் எழுந்தருளி யிருக்கும் முருகனுக்குத் தொண்டு செய்தான். கடவுளுக்கு நிவேதனம் செய்யப்பட்ட ஆலயப் பிரசாதத்தையே உட்கொண்டான். முருகனிடத்தில் இடைவிடாது பக்தி செய்து முடிவில் மரணத்தையும் அடைந்தான்.

41. பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தவ னிவனே யென்றோம்
அருமறை யிவ்வாறு கூற அம்பிகை கேட்க லுற்றாள்
திறமையாய் முன்ஜன் மத்தில் சேடர்தன் குலமு தித்து
பெருமையாய் மேழிச் செல்வர் பிறந்தகா ரணங்க ளென்ன.

41. பிறகு பிரம்ம தேவனால் இங்குப் பிறப்பிக்கப்பட்டான் என்று புயண்டர் சொல்ல, பார்வதிதேவி கேட்கலுற்றாள். முன் ஜன்மத்தில் சேடர் குலத்திலுதித்திருந்த இவன் இந்த ஜன்மத்தில் வேளாள வமிசத்தில் பிறக்கக் காரணம் என்னை? இவ்வாறு கேட்க, புயண்டர் பதில் சொல்லுகின்றார்.

42. கச்சியில் குமர கோட்டம் காவலன் புரிந்த புண்ணியம்
மிச்சமாய்க் கங்கை வம்ச மீதினி லுதித்தா னென்றோம்
துச்சமாய் முன்னூழ்ச் சாபம் தோன்றிற்று இச்சென் மத்தில்
நச்சுபோல் மனையா ளுக்கு நல்கிடும் ரோகம் தானே.

42. காஞ்சீபுரத்தில் குமரகோட்டத்தில் எழுந்தருளியிருக்கும் முருகப் பெருமானுக்குப் பல தொண்டுகள் செய்த புண்ணியத்தின் பயனாக வேளாளகுலத்தில் பிறந்தான். ஆயினும் முன்ஜன்மத்தில் செய்த வினையின் விளைவாக இந்த ஜன்மத்தில் இவன் மனையாளுக்கு விஷம் போல் உயிரைமாய்க்கும் நோய் ஏற்படும்.

43. பின்ஜன்மம் காஞ்சி மேல்பால் பேரூரில் வைசியச் சேயாய்த்
தன்னிலே உதித்து மேலும் தனதானியச் செட்டு செய்து
இன்னவன் கீர்த்தி மானாய் இவனுமே வாழ்வா னாகும்
அன்னையே யாங்கள் சொல்லும் அருள்மொழிகுன்றா வென்றோம்.

43. இவன் மறு ஜன்மத்தில் காஞ்சீபுரத்திற்கு மேற்கில் ஒரு பெரிய ஊரில் வைசிய குலத்தில் உதித்து, தன தானிய வியாபாரம் செய்து, மிக்க புகழ் உள்ளவனாக வாழ்வான். தாயே! நாங்கள் சொல்லுகின்ற அருள்மொழிகள் ஒரு காலும் பொய்யாகா.

44. மாதிரு பின்ஜன் மத்தை வரைகிறோ மருணை தன்னில்
நீதியாய்ச் சைவ வம்சம் நிமலியு முதித்து மேலும்
வேதனை யில்லா தாகி வேண்டிய பணிகள் பெற்றுக்
கோதிலா வாழ்வா ளாகும் கூறுவோம் மேலுங் கேளே.

44. இந்தக் கடகலக்கின மகனது தாயின் பின்ஜன்மத்தைச் சொல்லுகின்றோம். இவள் திருவண்ணாமலையில் சைவவமிசத்தில் பிறந்து, வாழ்க்கையில் எவ்வித இடைஞ்சலும் இல்லாமல், பல தருமங்களைச் செய்து வெகு காலம் சுகமாக வாழ்ந்திருப்பாள். மேலும் சொல்லுகின்றோம். கேளுங்கள், தாயே!

45. தந்தையின் மரண காலம் சாற்றுவோ முப்பா னைத்தில்
சந்ததம் துலாமா தத்தில் சாற்றினோம் கர்மம் தானும்
முந்திய அன்னைக் கேதான் முயலுவோம் முப்பான் மூன்றில்
தன்தனுர் மாதம் தன்னில் சாற்றினோம் கண்டம் தானே.

45. தந்தையின் மரண காலத்தைப்பற்றி விளம்புகின்றோம். இந்த ஜாதகனது முப்பத்தைந்தாவது வயதில் ஐப்பசி மாதத்தில் தந்தை மரணமடைவான். தாயின் மரண காலத்தைக் கேளுங்கள். இந்த மகனது முப்பத்து மூன்றாவது வயதில் மார்கழி மாதத்தில் இவனது தாய் மரணமடைவாள்.

46. ஜாதகன் மரண காலம் சாற்றுவோ மறுபா னறில்
கோதிலாச் சிம்ம மாதம் குறைபக்கம் சதுர்த்தி தன்னில்
மேதினில் சூலை யாலே வித்தக னுடலம் வாடும்
போதக வானைப்பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

46. விநாயகரைப் பெற்ற பார்வதியே! இவனது மரண காலத்தை இயம்புகின்றோம். இவன் அறுபத்தாறாவது வயதில் ஆவணி மாதத்தில் தேய் பிறைச் சதுர்த்தியில் மரண மடைவான். மரணத்திற்குக் காரண மாக சூலை நோய் காணும். அதனால் இவனது உடல் மிகவும் வாடும். அதுவே இவனுக்கு முடிவு காலமாகும்.

47. மறுஜன்மம் உள்ளூர் தன்னில் வைசிய குலமு தித்துப்
பெருமையாய்ச் செட்டு செய்து பிஞ்ஞகன் தமைத்து தித்து
இருவினை யில்லா னாகி இவனுமே வாழ்வா னாகும்
பெருவயி றோனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

47. ஸ்ரீ கணபதியைப் பெற்ற தாயே! இவன் மறு ஜன்மத்திலும் இதே ஊரில் வைசிய குலத்தில் பிறந்து, பெருமையோடு வியாபாரம் செய்து, பரமசிவனை மனத்தினால் சிந்தித்தும், வாயினால் துதித்தும், பாவமற்றவனாகச் சுகமாக வாழ்வான்.

48. ஜாதகன் யோகச் செய்கை சாற்றுவோ மூகை சாலி
மேதினில் கல்வி யுள்ளான் விளைபுலம் விருத்தி செய்வன்
போதவே பாக்கிய வானும் பிழைகளும் செய்யா னாகும்
சூதிலான் கீர்த்தி கொள்வன் சுயபந்து மெச்ச வாழ்வன்.

48. ஜாதகனுடைய யோகங்களைச் சொல்லுகின்றோம். இவன் மிகவும் மதிநுட்பம் உள்ளவன். கல்வி உடையவனாகவும் இருப்பான். நிலங்களை அபிவிருத்தி செய்வான். போதுமான அளவிற்குச் செல்வம் படைத்தவன். குற்றங்கள் செய்யாதவன். நெஞ்சில் கள்ள மில்லாதவன். புகழ் பெற்றவனாகவும், உறவினர்களால் கொண்டாடப்படுபவனாகவும் வாழ்வான்.

49. அண்டினோர்க் குதவி செய்வன் ஆள்கார ருடைய னாகும்
எண்டிசை வறுமை யில்லான் ஈகைவான் எவர்க்கு நண்பன்
குண்டைகோ விருத்தி யுள்ளான் கோவலர் நேசம் கொள்வன்
உண்டியில் சுகமுமு ள்ளான் உத்தமி மேலுங் கேளே.

49. தன்னை அண்டியவர்களுக்கு மனமுவந்து உதவி செய்வான். நம்பிக்கைவாய்ந்த சேவகர்களும் இவனுக்குக் கிடைப்பார்கள். வறுமை இல்லாதவன். எருதுகளையும் பசுக்களையும் விருத்தி செய்வான். பெண்களிடம் அன்புள்ளவன். போஜன சௌக்கியம் இவனுக்கு இருக்கும். உத்தமியே! மேலும் கேளுங்கள்.

50. பாலகன் ஜனன காலம் பிரிதியின் தசையி லேதான்
கோலமா யிருப்பு மாதம் கூறுவோ மைந்த தாகும்
சாலவே சாத கர்க்குச் சுலபமாய் ரோக முண்டு
ஏலவே தந்தைக் கேதான் இயம்பினோ மலைச்சல் தானே.

50. பாலகன் ஜனித்த காலத்தில் சூரியதசையில் பாக்கி ஐந்து மாதங்களே. [ஆகவே இவன் உத்தராடம் நான்காம் பாதத்தில் பிறந்தான் என அறிக.] இந்தத் தசையில் ஜாதகனுக்கு நோயும், இவனது தந்தைக்கு வீண் அலைச்சல்களும் ஏற்படும். இவைகளே சூரியதசையில் முக்கியபலன்கள்.

51. மதிதசை காலந் தன்னில் மாதிரு பிணியும் காட்டும்
அதிகமாய்த் துணைவர் விருத்தி அழிந்திடும் குடும்பம் வேறும்
விதியினால் மாம னுக்கு வேணது நிந்தை யுண்டு
சதியுண்டு சூதம் காணும் தன்பந்து சுபமு முண்டே.

51. அடுத்து வரும் சந்திரதசையில் தாய்க்குப் பிணி தோன்றும். சகோதர விருத்தியும் உண்டு. சகோதரர்களுக்கு அழிவும் ஏற்படும். குடும்பப் பிரிவினை நடைபெறும். இவனது மாமனுக்கு அதிக நிந்தைகள் நேரிடும். வஞ்சனையும் சண்டைகளும் உறவினர் மரணமும் ஏற்படும். பந்து வருக்கத்தில் கலியாணம் முதலிய சுப சம்பவங்களும் நடைபெறும்.

52. தந்தையின் துணை வருக்குச் சந்ததி விருத்தி யாகும்
முந்திய பூமி சேரும் முயற்சியாய்த் தான்ய மோங்கும்
இந்ததோர் சாத கர்க்கு இடறுகள் வந்து நீங்கும்
சந்ததம் செலவு மாகும் சத்தியே மேலுங் கேளே.

52. தந்தையின் சகோதரர்களுக்கு வமிச விருத்தியுண்டாகும். இவனது குடும்பத்திற்குப் பூமிகள் சேரும். செய்யப்படும் முயற்சிகள் பலிதமாகும். தானிய சேமிப்பும் வளரும். இவனுக்கு இடறுகள் தோன்றி நீங்கும். குடும்பத்தில் செலவுகளும் அதிகமாகும். தேவியே ! மேலுங்கேளுங்கள்.

53. வித்தையும் நேரு மென்றோம் விரயமாம் துணைவ ரும்தான்
சித்தமாய்த் தந்தை வர்க்கம் சூதகம் உண்டு கண்டாய்ப்
புத்தியில் விபர மாகப் புகலுவோம் இனிமே லாக
அத்தியைப் பெற்ற மாதே அம்பிகை யானே கேளாய்

53. இந்தச் சந்திரதசையில் இவனுக்குக் கல்வியில் அபிவிருத்தி உண்டாகும், சகோதரர்களுக்குச் சேதமும் நேரிடும். ஒவ்வொரு புக்திகளின் பலன்களைச் சொல்லும்போது இவைகளைப்பற்றி விஸ்தாரமாக விளம்புகிறோம். விநாயகரைப் பெற்ற தாயே ! இவனைப் பற்றிய இதரச் செய்திகளை இரண்டாம் பாகத்தில் கூறப்போகின்றோம்.

## ஜாதகம் 4

1. சந்திரன் கேது தேளில் சனிசீயம் குருவும் சாடி
புந்தியும் புகரும் மேடம் பூமகன் வீணை புக்க
நந்தியில் இரவி ராகு நல்கிடும் சென்மம் வண்டி
இந்தவாறு கிரகம் நின்றால் இயம்புவீர் பலனைத் தானே.

| | | | |
|---|---|---|---|
| | புதன் சுக்கிரன் | சூர்யன் ராகு | செவ் வாய் |
| குரு | இராசி சக்கரம் | | லக்கினம் |
| | | | சனி |
| | சந்திரன் கேது | | |

கர வருஷம் வைகாசி மாதம் 11-ம் தேதி சனிக்கிழமை பகல் நாழிகை 8-30-க்கு மேல் 14-க்குள் ஜனனம்.

### ஆங்கிலத் தேதி 23-5-1891.

நவக்கிரஹங்களின் பாதசாரம்.

கிருத்திகை 4-இல் சூரியன். விசாகம் 4-இல் சந்திரன். மிருகசீர்ஷம் 3-இல் செவ்வாய். பரணி 3-இல் புதன். பூரட்டாதி 1-இல் குரு. அசுவனி 3-இல் சுக்கிரன். பூரம் 2-இல் சனி. ரோஹிணி 2-இல் ராஹு. அனுஷம் 4-இல் கேது.

நக்ஷத்திரம் விசாகம். குரு தசையில் இருப்பு மாதங்கள் எழு, நாட்கள் பதினைந்து.

1. சந்திரன் கேது விருச்சிகத்திலும், சனி சிம்மத்திலும், குரு கும்பத்திலும், புதன் சுக்கிரன் மேஷத்திலும், செய்வாய் மிதுனத்திலும், சூரியன் ராகு விருஷபத்திலும், இருக்கக் கடக லக்கினத்திலுதித்த இந்த ஜாதகனது பலன்களைச் சொல்லுவீர்களாக, என பார்வதி தேவி வினவினாள்.

2. பார்வதி கேட்கும் போது பராசரும் கூறு கின்றார்
சீர்புக ழாண்பால் ஜன்மம் செப்புவோம் பிறந்த இல்லம்
கூறிய வடதென் வீதி குடகுதன் வாச லாகும்
ஆறுமா முகன்தன் கோஷ்ட மழிந்திடும் வடகீழ் தன்னில்

2. இவ்வாறு பார்வதிதேவி கேட்க, பராசர முனிவர் பதில் கூறுகின்றார். இந்த கிரஹநிலையில் ஆண்மகவு ஜனித்திருக்கும். பிறந்த வீட்டைப் பற்றிச் சொல்லுகின்றோம். வீதி தெற்கு வடக்கில் அமைந்திருக்கும். வீடு மேற்குத் திசையை நோக்கி இருக்கும். வீட்டிற்கு வடகிழக்கில் சிதைந்த ஆறுமுகப் பெருமானது கோயில் இருக்கும்.

3. உத்தரம் தந்தி நிற்கும் உரைக்கிறோம் தெற்கில் அம்மால்
சித்தசன் தனையெ ரித்த தேவனு மேற்கில் தங்கும்
பக்தியாய்க் கிழக்குத் தெற்கு பாதையு முண்டு கண்டாய்
வித்தகி சோலை சூழி விளங்கிடும் சிற்றூர் தன்னில்.

3. நேர் வடக்கில் பிள்ளையார் கோயிலும், தெற்கில் விஷ்ணு கோயிலும், மேற்கில் பரமசிவன் கோயிலும் இருக்கும். இவ் வீட்டிற்குக் கிழக்கிலும் தெற்கிலும் பாதை யுண்டு. அவ்வூரில் சோலைகளும் நீர்நிலைகளும் இருக்கும். இப்படிப்பட்ட ஊரில் அவன் ஜனித்திருப்பான்:

4. நதிகுலம் தனிலு திப்பான் நாயகன் ஜன்ன யோகம்
மதிநுதல் மாதிர் யோகம் அவன்தந்தை துணைவர் யோகம்
சதியிலா களத்ர புத்ரர் சாற்றுவோ முன்பின் ஜன்மம்
விதியினால் கரும சாந்தி விளம்புவோ மிந்நூல் தன்னில்.

4. இவன் வேளாள குலத்தில் உதித்திருப்பான். இந்த நூலில் இவனது யோகத்தையும். தாய் தந்தை சகோதரர் களத்திரம் புத்திரர் இவர்களைப்பற்றியும், முன்பின் ஜன்மங்களையும், சாந்திகளையும் சொல்லப் போகின்றோம்.

5. தந்தையின் வர்க்கம் தன்னைச் சாற்றுவோ மிருநான் காகும்
நொந்திடும் சிலவே தாமும் நிகரமா யாண்பால் ரண்டு
எந்தையே பெண்பா லொன்று இயம்புவோம் தீர்க்க மாக
சந்ததம் பிதாகு ணத்தைச் சாற்றுவோம் கேளும் தாயே.

5. இவனுடைய தந்தையின் சகோதரவர்க்கத்தைச் சொல்லுகின்றோம். தந்தைக்கு எட்டுசகோதர சகோதரிகள் பிறப்பார்கள். அவர்களில் இரண்டு சகோதரர்களும் ஒரு சகோதரியும் நீண்ட ஆயுளுடன் இருப்பார்கள். தாயே! தந்தையின் குணத்தைச் சொல்லுகின்றோம். கேளுங்கள்.

6. இருநிறம் சமதே கத்தன் இன்பமாய் வார்த்தை சொல்வன்
பெருமவர் நேசம் கொள்வன் பிஞ்ஞகன் தனைத்து திப்பான்
உறன்முறை மெச்ச வாழ்வன் உறுதியா மனத்த னாகும்
குறுமுனி போலே கல்வி கூறுவானாகை சாலி.

6. கருத்த மேனியன். அவயவங்கள் தக்க அளவோடு அமைந்திருக்கும். இனிமையான வார்த்தைகளைப் பேசவல்லான் பெரியவர்களின் நட்பு இருக்கும். சிறந்த சிவபக்தன். இவனது குடும்ப வாழ்க்கை, உறவினர் மெச்சும் படி இருக்கும். மனத்திடம் வாய்ந்தவன். அகத்தியமுனிபோலக் கல்வியில் சிறந்தவன். மிக்க மதியூஹம் உடையவன்.

7. பண்டிதம் ஞானம் கற்பன் பலருக்கு நல்லோ னுவன்
அண்டினோர்க் குதவி செய்வன் அனேகமாய்ப் பூமி சேர்ப்பன்
பெண்டிரால் கீர்த்தி கொள்வன் இருவித வார்த்தை சொல்வன்
துண்டமாய்ச் சொல்லு முள்ளவான் துணைவரை ஆத ரிப்பான்.

7. வைத்திய சாஸ்திரம் கற்பான். எல்லோருக்கும் நல்லவனாக நடந்து கொள்வான். தன்னையண்டி யவர்களுக்கு உதவி செய்வான். ஏராள மான பூமியைச் சேர்ப்பான். பெண்கள் மூலம் புகழைப் பெறுவான். இரண்டு பொருள்களைத் தரும் (சிலேடை) வார்த்தைகளைப் பேச வல்லவன். அவனது வார்த்தைகள் கண்டிப்பாகவும் இருக்கும். சகோதரர்களை நன்கு ஆதரிப்பான்.

8. சித்திர வீடு செய்வன் சிறுத்தவர்க் குதவு வானும்
பத்தினி நேய னாகும் பணிதி களிச்சை யுள்ளான்
உத்தமர் நேயம் கொள்வன் உடலினில் பித்தச் சூடு
குற்றங்கள் வெளியி டாதான் குணமது சீல னென்றோம்.

8. அழகான வீடு கட்டுவான். எளியோர்களுக்கு உதவி செய்வான். மனைவியிடத்தில் அன்புள்ளவன். ஆபரணங்களில் ஆசையுள்ளவன். உத்த மருடன் நேசம் கொள்வான். சரீரத்தில் பித்தச் சூட்டினால் தொந்தரவு ஏற் படும். தனது குற்றங்களையும் பிறர் குற்றங்களையும் யாரிடமும் வெளியிட மாட்டான். பொதுவாக நல்ல சீலவானாக இருப்பான்.

9. தந்தைநாள் பூமி யில்லான் தனமிலான் அலைச்ச லுள்ளான்
பிந்தியே பூமி சேர்ப்பன் புண்ணியம கொஞ்சம் செய்வன்
வந்தவர்க் கன்ன மீவன் மருமநூ லறிவா னாகும்
அந்திய காலந் தன்னில் அணுகிடும் [1] வாத சித்தி.

9. அவனுக்குப் பூர்விக நிலம் பணம் இவை இரா. பால்யத்தில் மிக்க அலைச்ச லுள்ளவனாகவும் இருப்பான். பிற்காலத்தில் தன் முயற்சி யால் நிலங்களைச் சேர்ப்பான். அன்னதானம் செய்வான். வேதாந்த நூல் களைக் கற்றறிவான். இவனுக்கு முதுமைக் காலத்தில் வாத சித்தி வந் திடும்.

10. யோகநித் திரையும் கொள்வன் உத்தரம் ஆசானாலே
போகங்க ளனுப விப்பன் புத்திர ராசை யுள்ளான்
பாகமாய்ப் பேச வல்லன் படியாள்க ளுடைய னாகும்
ஆகம நுணுக்கம் தேர்வன் அம்பிகை யாளே கேளாய்.

10. அம்பிகையே ! இவன் வட திசையில் ஒரு ஆசாரியன் மூலம் கடவுள் தியானத்தில் நன்றாக ஈடுபடுவான். இம்மையிலுள்ள சுகபோகங்களை நன்றாக அனுபவிப்பான். புத்திரர்களிடத்தில் மிக்க வாஞ்சையுள்ளவன். நன்றாகப் பேசுந் திறமையுமுண்டு. அனேக சேவகர்களை ஆதரிப்பான். மேலும் சாஸ்திரங்களின் தத்துவங்களை நன்கு அறிவான்.

---

[1]. வாத சித்தம்—வாத நோய்.

11. இக்குண முடைய தந்தைக் கிவனுமே அஞ்சாம் ஜன்மம்
மிக்கவே யுதிப்பா னாகும் விளம்புவோ மவன்கு ணத்தைச்
சிக்கின மில்லா னாகும் தேவிமேல் பிரிய னாகும்
பக்குவ மாக வார்த்தை பகருவான் கோபி யாவன்.

11. இப்படிப்பட்ட குணங்களுள்ள தந்தைக்கு இந்த ஜாதகன் ஐந்தாவது குழந்தையாக ஜெனிப்பான். இவனது குணவிசேஷங்களைச் சொல்லுகின்றோம். சிக்கன மில்லாதவன். மிக்க தாராளமாகச் செல வழிப்பான். தேவி பக்தனாக இருப்பான். கேட்பவர்கள் தன் வசமாகும்படி பேசுவான். கோபமும் உள்ளவன்.

12. மாநிறம் ஒடிச்சல் தேகி மருமவான் கல்வி கொஞ்சம்
தேன்மொழி வார்த்தை சொல்வன் தியாகியாம் கீர்த்தி யேற்பன்
ஆனவர் நேசம் கொள்வன் அவனுகி சுகிபொ சிப்பன்
மான்விழி மார்கள நேயன் அடிமைக ளுடைய னாமே.

12. மாநிறமுள்ளவன். தேஹம் மெலிந்திருக்கும். சிறிது கபடமுள்ளவன். கொஞ்சம் கல்வியறிவும் உடையவன். தேன்போல இனிமையான வார்த்தைகளைப் பேசுபவன். கொடையாளி. புகழுள்ளவன். பெரியோர்களின் நேசம் உடையவன். மிக்க மதியூக முள்ளவன். இவ்வுலகசுகங்களை நன்ருக அனுபவிப்பான். பெண்களால் விரும்பத்தக்கவனாகவும் அநேக வேலையாட்கள் உடையவனாகவும் இருப்பான்.

13. தந்தைநாள் பூமி தன்னைத் தானவன் விருத்தி செய்வன்
பிந்தியும் பூமி சேர்ப்பன் பூஷண முடைய னாகும்
கந்தன்தன் பக்தி கொள்வன் காவலர் நேசம் கொள்வன்
நந்தியா வுடைய னாகும் நாயகி பூசை பூண்பன்.

13. பிதிரார்ச்சித நிலங்களை மேன்மேலும் அபிவிருத்தி செய்வன். மேலும் சொந்தமாக நிலங்களை வாங்குவான். ஆபரணங்களை சம்பாதிப்பான். ஸ்ரீ சுப்பிரமணியஸ்வாமியிடத்தில் பக்தி உடையவன். சேவர்களிடத்தில் அன்பு உடையவன். எருதுகள் பசுக்கள் இவைகளை உடையவன். பார்வதி தேவியின் பூசையிலும் ஈடுபடுவான். [தீக்ஷை கொள்வான் என்பது கருத்து.]

14. வயித்திய வாதம் செய்வன் மானில நல்லோ னவன்
ஜயம்செய்வன் எடுத்த வேலை சீலனும் வறுமை யில்லான்
அயலாரால் பெருமை பூண்பன் அண்டினோர்த் தம்மைக் காப்பான்
பயமில்லா மனத்த னாகும் பாவத்திற் குட்ப டாதான்.

14. வைத்திய சாஸ்திரமறிந்தவன். அவன் வசிக்கும் ஊரில் நல்லவன் எனப் பெயரெடுப்பான். ஏற்றுக்கொண்ட வேலைகளில் வெற்றியைக் காண்பான். நல்ல நடத்தை உள்ளவன். ஏழ்மை இல்லாதவன். பிறரால் மிகவும் கௌரவிக்கப்படுவான். தன்னை அண்டியவர்களைக் காப்பாற்றுவான். அஞ்சாத நெஞ்சம் படைத்தவன். பாவச்செயலில் ஈடுபடமாட்டான்.

15. நெவுசக னுடைய னுகும் நேமியில் செட்டுச் செய்வன்
வசையது கூறு னுகும் மருமத்தை வெளியி டாதான்
பசையான குடும்பி யாவன் பரவுபகார னுவன்
விசையான நடையு மாவன் மேதினில் டம்ப முள்ளான்.

15. நெசவுத்தொழில் உடையவனுவன். வியாபாரம் செய்வான். [செட்டாகச் செலவு செய்வான் என்றும் சொல்லலாம்.] பிறரை நிந்திக்கமாட்டான். அந்நியர் சொன்ன ரஹஸ்யத்தை வெளியிடமாட்டான். சுபிக்ஷமான குடும்பமுள்ளவன். உபகாரம் செய்வான். வேகமாக நடக்கும் இயல்புள்ளவன். சிறிது ஆடம்பரமாகவும வாழ்க்கை நடத்துவான்.

16. இவனுடைத் துணைவர் தம்மை இசைக்கிறோம் மூத்தோர் காணும்
அவனியில்நே ரிளையோ ரில்லை அதன்பின்பு விருத்தி யென்றோம்
பவமுள ஆண்பா லொன்று பாவையு மவ்வா றுகும்
இவைகளும் தீர்க்க மாகும் இளையவன் சேதி கேளாய்.

16. பார்வதி தேவியே! இவனுடைய சகோதரர்களைப்பற்றிச் சொல்லுகிறோம். இவனுக்கு மூத்தசகோதரன் இல்லை. [இவனே மூத்தவன் என்பது கருத்து.] இவனுக்கு அடுத்துப் பிறக்கும் குழந்தையும் நீடித்திராது. அதன் பின் பிறக்கும் குழந்தை நீடித்திருக்கும். ஒரு சகோதரனும் ஒரு சகோதரியுமுண்டு. இவர்கள் தீர்க்காயுளுடன் விளங்குவார்கள். இளையவனுடைய வரலாற்றைச்சொல்லுகின்றோம். கேளுங்கள்.

17. கல்விமானுகை சாலி கட்டுவார்த் தைகளும் சொல்வன்
இல்லையென் றுரைக்க மாட்டான் எதிரியை வசியம் கொள்வன்
சொல்லுமே நெறியுள் ளோனும் துணிவான மனத்தா னுகும்
நல்லவ னுகி வாழ்வான் நடனசங் கீத மிட்டன்.

17. கல்வியறிவு உள்ளவன். சிறந்த மதிநுட்பம் வாய்ந்தவன். அடுக்கான வார்த்தைகளைப் பேசும் இயல்புள்ளவன். தன்னை அடைந்து யாசிப்பவர்களுக்கு, இல்லை என்று சொல்லாமல் கொடுப்பான். தன் எதிரிகளை வசப்படுத்தும் சக்தி வாய்ந்தவன். தருமமார்கத்தில் செல்லுவான். மிக்க தைரியசாலி. எல்லோருக்கும் நல்லவனுக நடந்துகொள்வான். மேலும் நாட்டியம், சங்கீதம் இவைகளில் விருப்பமுள்ளவன்.

(வேறு.)

18. கைமுதலு முண்டாகும் யோகி யாவன்
கனம்பெரிய குடும்பமது கனத்தோர் நேசன்
மைவிழியார் பல மாத ரின்பம் தன்னில்
மையல்கொள்வான் நவதானியம் விருத்தி செய்வான்
உய்யும்வகை பண்டிதங்கள் இருஷி யாலும்
உயர்நெசவால் மாந்தரிகம் செட்டு வாலும்
வையக மேல் பெருமை யுள்ளான் தந்தை மேலாய்
வாழ்குவான் கன்னிஜன்ம வருவா னென்றோம்.

18. கையில் ரொக்கமாகப்பணம் சேரும். யோகியாகவும் இருப்பான். மேலும் அவனது குடும்பம் மிகவும் கௌரவம் வாய்ந்ததாக இருக்கும். கன தனவான்களின் நட்பும் உடையவன். பல அழகிகளின் நேசமுள்ளவனுவான். ஏராளமான நவதானியங்களின் லாபமுடையவன். இவனது ஜீவனம், வைத்தியத்தாலும் கிருஷியாலும் நெசவாலும் மாந்திரிகத்தாலும் வியாபாரத்தாலும் நடைபெறும். மிக்க பெருமை வாய்ந்தவனுக இருப்பான். தந்தையைக்காட்டிலும் மேலாக வாழ்வான். அவனது ஜென்மலக்கினம் கன்னியாகும்.

19. வருமனை யாள் ஒன்ருகும் உத்தர மென்ருேம்
ஆண்மதலை இரண் டென்ருேம் பெண்பால் மூன்று
திருமகளும் வாசமுளான் அதிதி நேயன்
சென்றிடங்கள் பெருமை யுளான் சிறப்பாய் வாழ்வன்
அறநெறியைக் கை விடான் வாத தேகி
ஆதரிப்பான் தமை யனையே அரசு செய்வன்
இருகல்வி சிலநாட்கள் அன்னிய தேச
மேகுவான் சகடுபரி யெய்தும் தாளே.

19. அவனுக்கு மனைவி ஒருத்தியே. அவள் வடதிசையில் பிறந்திருப்பாள். அந்த தம்பதிகளுக்கு இரண்டு பிள்ளைகளும் மூன்று பெண்களும் ஜனிப்பார்கள். அவனது வீட்டில் நிரந்தரமாக லக்ஷ்மி வாசம் செய்வாள். [எப்பொழுதும் செல்வம் நிறைந்தவன் எனபதுக் கருத்து]. விருந்தாளிகளை அன்புடன் உபசரிப்பான். சென்ற விடமெல்லாம் இவனுக்கு நல்ல மரியாதைகளும் உபசாரங்களும் நடைபெறும். வாழ்க்கையைச் சிறப்புடன் நடத்துவான். தருமத்தைக் கைவிடாதவன். வாதசரீரம் வாய்ந்தவன். தமையனை [கடகலக்கின மகனை] ஆதரிப்பான். ராஜாங்க உத்தியோகம் வஹிப்பான். இருவிதமான கல்விகளில் [ஆங்கிலம், தமிழ், ஹிந்தி, அல்லது தமிழ் இவ்வாறு இருகல்விகளில்] தேர்ச்சி பெற்றவனுவான். மேலும் வெளி நாடுகளுக்கும் பிரயாணம் செய்வான்.

(வேறு.)

20. இன்னமும் விபரம் ரண்டில் இயம்புவோ மிவனுக் கேதான்
அன்னவன் மணத்தின் காலம் அறைகின்ருேம் ஒருபா னுறில்
கன்னிகை உத்த ரத்தில் காதலி மாதுர் வர்க்கம்
தன்னிலே வருவா ளாவள் சாற்றுவோ மவள்கு ணத்தை.

20. இன்னும் அதிக வரலாறுகளை இரண்டாம் பாகத்தில் சொல்லப் போகிருேம். கடகலக்கினத்தில் உதித்த நாங்கள் பலன்களைச் சொல்லுவதற்கு ஆரம்பித்திருக்கும் இம்மகனுக்கு பதினுருவது, வயதில் விவாஹம் நடைபெறும். பெண் வடதிசையில் மாதுரு வர்க்கத்தில் ஜனிப்பாள். அவளது குணங்களைச் சொல்லுகின்ருேம் கேளுங்கள்.

21. ஒடிச்சலாம் சிவந்த மேனி உரைக்குமுன் கோபி யாவள்
அடவுடன் புத்தி சாலி அலபபை உறவு கொள்ளாள்
நடக்கையும் நல்ல தாகும் நாதனுர் பக்தி பூண்பள்
விடவாககு பலித முண்டு வித்தகி மேலுங் கேளே.

21. அவளது உடல் மெல்லியதாக இருக்கும். நிறம் சிவபபு. சிறிது முன்கோபி. புத்திவன்மையும் படைத்தவள். தன்னைவிடத் தாழ்ந்தவர்களிடம் நேசம் கொள்ளமாட்டாள். நல்ல நடத்தை உடையவள். கணவனிடத்தில் விசேஷ பக்தி கொண்டவள். அவள் சொல்லும் தீங்கான சொற்கள் உண்மையாகும் [சுபவார்த்தைகள் பலிக்காது என்பது கருத்து].

22. மதலைகள் விருத்தி தன்னை வரையவே பலத்தைக் காணும்
நதிசடை முனிவர் கூற நாயகி கேட்க லுற்றுள்
எதுவிதக் கார ணத்தால் இலகாது மதலை யென்றீர்
அதுசேதி சொல்லு மென்ன அறைகிறுர் பராசர் தாமே.

22. அவளுக்குப் புத்திரவிருத்தியைச் சொல்லுவதற்குத் தக்க காரணங்களைக் காணும் என்று முனிவர் சொல்ல, பார்வதி, என்ன காரணத்தால் புத்திரவிருத்தி யில்லை. அதைப்பற்றிய விவரங்களைச் சொல்லுங்களெனக் கேட்க, பராசரமுனிவர் சொல்லுகின்றுர்.

23. அஞ்சினில் மதியும் நீசம் அவனுடன் கேது கூடித்
தஞ்சமா யிருப்ப தாலும் சேயவன் விரையம் புக்கத்
துஞ்சிடு மதலை யென்றோம் ஜயமுனி கூறுகின்றுர்
மிஞ்சிய பத்தில் வெள்ளி மதிமகன் கூடி நிற்க

23. புத்திர பாவம் என்று சொல்லப்படும் ஐந்தாவது வீட்டில் சந்திரன் நீசனுகி தனக்குத் சத்துருவாகிய கேதுவுடன் இருப்பதாலும், புத்திர பாவத்திற்குடைய செவ்வாய் 12-இல் இருப்பதாலும் புத்திர விருத்தி இல்லை என்று சொன்னேம்; என்றவுடன் ஜயமுனிவர் கூறுகின்றுர். கீர்த்தி ஸ்தானம் என்று சொல்லப்படும் பத்தாமிடத்தில் சுக்கிரனும் புதனும் இருப்பதாலும்.

24. இதுவன்றிப் பிறையோ னஞ்சி லிருப்பதால் மதலை யாலே
அதிபர்க்குக் கரும நேரும் அதற்குநேர் சுருதி சொல்வேன்
விதி நூலி லைந்தாம் பாவம் விளம்பினீர் விருத்தி யென்று
சதியினல் முன்னூழ்த் தோஷம் சார்ந்ததால் சுதர்க ஹீனம்.

24. மேலும், சந்திரன் ஐந்தாமிடத்தில் இருப்பதாலும் சாதகனுக்குப் புத்திரர்களால் ஈமச்சடங்குகள் நடக்கும். அவ்வாறே சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. விதிநூலில் ஐந்தாம்பாவத்தில் புத்திரன் ஒருவன் உண்டென்றும் சொன்னீர். ஆகவே, இங்கு எக்காரணம்பற்றிப் பிள்ளை இல்லை என்று சொல்லுகின்றீர் எனக் கேட்க, முன்ஜன்ம வினையினுல் புத்திரதோஷமுண்டு என்றுர்.

25. முன்வினை சொல்லு மென்ன மொழிகுவார் பராசர் தானும்
அன்னவ னூலங் காட்டுக் கருகினில் சிற்றூர் தன்னில்
பொன்தொழில் விஸ்வ வம்சம் பிறந்துமே மனைவி யுண்டாய்
இன்னவன் பந்து மெச்ச இவனுமே வாழு நாளில் ;

25. முன்ஜன்மத்தில் ஏற்பட்ட வினை என்ன என்று கேட்க, பராசர முனிவர் கூறுகின்றார். அவன் முன் ஜன்மத்தில் ஆலங்காடு என்கிற கிராமத்திற்கு அருகில் ஒரு சிறிய ஊரில் தங்கவேலை செய்யும் " விச்வகர்ம " சாதியில் பிறந்து, மனைவியோடு பந்துக்கள் மெச்ச வாழுங்காலத்தில் ;

26. தன்னுடை இல்லம் தன்னில் சர்ப்பமும் வாச மாகும்
மன்னிய ஓர்நாள் தன்னில் மகுடத்தால் வெளியில் செல்ல
இன்னவ னதனைக் கண்டு எமபுரம் சேர்த்து விட்டான்
தன்னிலே அந்தத் தோஷம் சார்ந்தது என்று சொன்னோம்.

26. அவனது வீட்டில் ஒரு சர்ப்பம் வாசம் செய்துவந்தது. அஃது ஒரு நாள் வெளியில் செல்லும்போது, இவன் அதைக்கண்டு அடித்து யமலோகத் திற்கு அனுப்பிவிட்டான். சர்ப்பத்தைக்கொன்ற தோஷம் உடனே இவனை வந்து அடைந்தது.

27. அந்திய காலம் தன்னில் அவன்சுத ரில்லானாகிச்
சந்ததம் மறலி பக்கல் சார்ந்துபின் மறையோ னாலே
முந்திய வரையப் பட்டு முயன்றவ னிவனே யென்றோம்
இந்தவோர் ஜன்மம் தன்னில் இவனுக்கே சுதர்கள் தோஷம்.

27. அந்த ஜன்மத்திலேயே கடைசி காலத்தில் இவன் பிள்ளைகள் இல்லாதவனாக ஆகி மிகவும் வருந்தி, கடைசியாக இறந்து, இங்கு இப்பொழுது கடகலக்கினத்தில் பிறந்திருக்கின்றான். ஆகவே இவனுக்கு இந்த ஜன்மத்தில் மாத்திரம் புத்திரதோஷமுண்டு.

28. அந்தவோர் தோஷம் தீர அருளுவோம் சாந்தி தானே
முந்திய ரசதம் தன்னால் முயற்சியாய்ப் பணியும் செய்து
கந்தம்தாம் பூலம் சேர்த்து இளர்மறை யோருக் கீந்து
தந்தியும் சூழி மேற்கில் தங்கிடும் அதற்கு இன்னோன் ;

28. அந்தத் தோஷம் நீங்க ஒரு சாந்தியைச் சொல்லுகின்றோம். வெள் ளியால் பாம்பு உருவம் செய்து, சந்தனம், தாம்பூலம், தக்ஷிணை இவை களோடு, வேதங்களை நன்கு கற்றுணர்ந்த பிராம்மணருக்குக் கொடுக்க வேண்டும். மேலும் இவன் பிறந்த ஊரில் மேற்குத் திசையில் விநாயகர் கோயில் ஒன்றுண்டு. அக்கோயிலில் எழுந்தருளி இருக்கும் விநாயகருக்கு.

29. மூவாண் டதிப மொன்று மேற்றியே வருவானாகில்
நேமியில் தோஷம் நீங்கி நேர்ந்திடும் மதலை தானும்
ஆவலா யாண்பாலொன் றுஅனுகிடும் பெண்பால் ரண்டு

**29.** மூன்று வருஷகாலம் இடைவிடாது ஒரு தீபம் ஏற்றி வருவானுகில், இவனுக்கிருக்கும் புத்திரதோஷம் நீங்கி ஒரு பிள்ளையும் இரண்டு பெண்களும் பிறப்பார்கள். ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமியின் அருளால் நாங்கள் சொன்ன வார்த்தை பொய்யாகாது.

**30.** தந்தையின் பூர்வம் தன்னைச் சாற்றுவோம் வள்ளூர் தன்னில்
முந்திய மறையோர் வம்சம் முயன்றுமே பெருமை பூண்டு
சந்தத மரசர் பக்கல் தானதி காரம் செய்து
வந்துமே மதலை யுண்டாய் வறுமைக ளில்லா னுகி ;

**30.** இவனது தந்தையின் முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவன் தந்தை, முன்ஜன்மத்தில், திருவள்ளூரில் பிராம்மண வமிசத்தில் பிறந்து, பெருமையோடு அரசரிடம் உத்யோகம்செய்து, வறுமை இல்லாமல், குழந்தைகளோடு சுகமாக வாழ்ந்துவரும் காலத்தில்,

**31.** வாதரோகத்தினுலே மரணமே யாகியே தான்
வேதனுல் வரையப் பட்டு விளங்கினு னிவனே யென்ருேம்
மாதுவும் கேட்க லுற்ருள் மறைக்குல முதித்தா னிங்கு
நீதியாய்க் கங்கை வம்சம் நேர்ந்த காரணங்களென்ன.

**31.** வாதரோகத்தினுல் கடைசியில் மரணமடைந்து, பிறகு வேளாள வமிசத்தில் பிறந்தான் என்று சொல்ல, பார்வதி கேட்கலுற்ருள். முன் ஜன்மத்தில் அந்தணசாதியில் பிறந்த இவனுக்கு, இப்பொழுது வேளாள சாதியில் பிறப்பு எக்காரணத்தினுல் நேர்ந்தது ? சொல்லுங்கள், என ;

**32.** மறைகளை விரும்பா னுகி அன்னவன் சீல மின்றி
தரைமன்னர் பக்கல் வாசம் சார்ந்ததா லிச்சென்மத்தில்
குறைந்தது ஜன்ம மென்ருேம் குலவுமிச் சென்மந் தன்னில்
மருமநூ லறிந்து மேலும் மானிலம் நல்லோனுயும்.

**32.** பிராம்மண வமிசத்தில் பிறந்தும் வேதாப்பியாசத்தில் விருப்பமில்லாதவனுகவும் நல்லொழுக்கமில்லாதவனுகவும் இருந்துகொண்டு, எப்பொழுதும் அரசர் பக்கலில் வாழ்ந்து, அவர்களுக்கே தொண்டுசெய்து வந்தான். ஆகவே முன்ஜன்மத்தில் பிராம்மணனுக இருந்தும் வேதம் ஓதாததாலும், நல்ல நடத்தை இல்லாததாலும் வேளாள வமிசத்தில் பிறந்தான். இச்சென்மத்தில் வேதாந்த நூல்களைக் கற்றறிந்தும், நல்ல நடத்தை உள்ளவனுகவும் இருப்பதாலும் ;

**33.** அரனடியார்மேல் சிந்தை ஆதலால் மறுஜன் மத்தில்
மறைக்குலம் காஞ்சி தன்னில் வந்துமே தனவா னுகி
அரனடி அர்ச்சித் தேத்தி அனுயாச மரண மேகி
அரன்பதி சேரு வானும் அம்பிகை மேலுங் கேளே.

**33.** சிவனடியார்களிடத்தில் பக்தியோடு இருப்பதாலும், மறு ஜன்மத்தில் காஞ்சியில் பிராம்மணர் குலத்தில் பிறந்து, பணக்காரனுகி, அப்

பொழுதும் பரமசிவனைப் பூசித்து, கடைசிக்காலத்தில் கஷ்டமின்றி மரணத்தை அடைந்து, சிவலோகத்திற்கு ஏகுவான். பார்வதி தேவியே! மேலும கேளுங்கள்.

34. மாதுரு சிவந்த மேனி மருமமும் மூர்க்கம் கோபி
தீதிலா குணத்தா ளாகும் தேவதா பக்தி கொள்வள்
மாதுமே வந்து பின்பு வரனுக்கு யோகம் வாய்க்கும்
போதக வானே பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

34. இவனுடைய தாய் சிவந்த மேனியாள். கபடநெஞ்சம் கொண்டவள். பிடிவாத முடையவள். கோபமுடையவள். இவைகளைத் தவிர, நற்குணங் களும் வாய்ந்தவள். தேவதைகளிடத்தில் பக்தியுள்ளவள். இவள் இக்குடும் பத்தில் வாழ்க்கைப்பட்டபிறகு குடும்பத்திற்கு நல்ல க்ஷேமங்கள் ஏற்பட்டிருக் கும். ஸ்ரீ விநாயகக்கடவுளைப்பெற்ற பார்வதியே! மேலுங் கேளுங்கள்.

35. அவளுடைத் துணைவர்தம்மை அறைகிறோ மாண்பா லொன்று
அவனியில் கன்னி யவ்வாறு நாட்டுவோம் தீர்க்க மாக
இவளுடைப் பூர்வம் தன்னை இயம்புவோம் தவளை கீழ்ப்பால்
பவமுள அருகர் வம்சம் பாவையும் உதித்தா ளென்றோம்.

35. அவளுடைய சகோதரர்களைப்பற்றிச் சொல்லுகின்றோம். ஒரு சகோ தரனும், ஒரு சகோதரியுமுண்டு. அவர்கள் தீர்க்காயுளுடன் இருப்பார்கள். இவளுடைய முன்ஜென்மத்தைப் பற்றிச்சொல்லுகின்றோம். தவளகிரி என்று சொல்லப்படும் புண்ணிய க்ஷேத்திரத்திற்குக் கீழ்த்திசையில் சமணர் வமிசத் தில் உதித்தாள்.

குறிப்பு.—தவளகிரி என்பது சுப்பிரமணிய க்ஷேத்திரங்களுள் ஒன்று.

36. சுகமது குறைச்ச லாகிச் சுதர்கள்மேல் வெறுப்புண் டாக்கி
கதிதரு கடவுள் பக்தி கருதாமல் விரத மின்றிச்
சதியான மனத்தத்ளாகித் தன்வரன் முன்னே மாண்டு
விதியவன் வறையப் பட்டு விளங்கினு ளிவளே யென்றோம்.

36. அந்தச் ஜென்மத்தில் சுகமில்லாதவளாக இருந்தாள். புத்திரர்க ளிடத்தில் வாஞ்சையில்லாதவளாகவும், நற்கதியைத் தரும் கடவுளிடத்தில் பக்தியற்றவளாகவும் இருந்து, தன் கணவன் இறப்பதற்கு முன்னமேயே இறந்து, மறுபிறவியில் இங்கு உதித்தாள்.

37. இந்தவோர்ஜன்மம் தன்னில் ஈன்றதோர்'சுதர்கள் தோஷம்
முந்தியே நேரு மென்றோம் மொழிகிறோ மிவள்பின் ஜன்மம்
எந்தையே அவ்வூர் தன்னில் இவனுடைக் குடும்பம் தன்னில்
வந்துமே மகவாய்த் தோன்றி வாழ்வளா மென்று சொன்னோம்.

37. இந்த ஜன்மத்திலும் புத்திரதோஷம் ஏற்படும் என்றோம். மேலும்; இவளுடைய பின்ஜன்மத்தைச் சொல்லுகிறோம். இந்த கடகலக்கின குமாரனது குடும்பத்தில் குழந்தையாகப் பிறந்து வாழ்வாள்.

38. அன்னையின் மரண காலம் அறைகிறோ மிருபா னறில்
கன்னியின் மாதம் தன்னில் கழறுவோம் கருமம் தானும்
பின்னையும் தந்தைக் கேதான் பேசுவோம் முப்பா னலில்
உன்னித மகர மாதம் உரைத்திட்டோம் கண்டம் தானே.

38. இந்த ஜாதகனின் தாயின் மரணகாலத்தைச் சொல்லுகின்றோம். இவனுடைய இருபத்தாறுவது வயதில் புரட்டாசி மாதத்தில், தாய் மரணத்தை அடைவாள். தந்தையின் மரணத்தைக் கூறுகின்றோம். இந்த ஜாதகனுக்கு முப்பத்துநான்காவது வயதில் தை மாதத்தில் தந்தை மரண மடைவான்.

39. ஜாதகன் மரண காலம் சாற்றுவோ மறுபா னைந்தில்
மேதினி லானி மாதம் வளர்பிறை துவா தசி
சூதான பித்த வாயு தோன்றியே உடலும் வாடும்
பூதல மளந்தோன் தங்கை புண்ணிய சாலி கேளாய்.

39. ஜாதகனின் மரணகாலத்தைச் சொல்லுகின்றோம். ஜாதகன், தனது அறுபத்தைந்தாவது வயதில் ஆனி மாதத்தில் வளர்பிறை துவாதசி திதியில் மரணமடைவான். கொடிய பித்தவாயு ரோகம் தோன்றி உடலை வாட்டும். அதுவே இவனுடைய முடிவிற்குக் காரணமாகும். விஷ்ணுவின் தங்கையாகிய பார்வதி தேவியே ! மேலும் கேளுங்கள்.

40. மறு ஜன்மம் காளத்தி தன்னில் மன்னர்தன் குலமு தித்துக்
கரிபரி யுடையா னகிக் கனத்ததோர் கீர்த்தி பெற்றுத்
திருமகள் வாசம் பூண்டு செல்வனும் வாழ்வா னகும்
அறுமுகன் தன்னைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

40. இவ்வாறு மரணமடைந்து மறுஜன்மத்தில் காளஹஸ்தி க்ஷேத் திரத்தில் க்ஷத்திரிய வமிசத்தில் பிறந்து, யானை, குதிரை முதலியவை உடையவனுவான். பெரிய புகழ் உள்ளவனுகவும், எப்பொழுதும் லக்ஷ்மீ வாசம் பொருந்தியவனுகவும் சிறந்து வாழ்வான். முருகனைப்பெற்ற பார்வதி தேவியே ! சொல்லுகிறோம் கேளுங்கள்.

41. இன்னவன் யோகச் சேதி இயம்புவோம் வறுமை யில்லான்
அன்னவன் ஜனனம் தொட்டு ஐயிரண்டாண்டு மட்டும்
தன்னிலே சல்லிய மன்றிச் சாற்றுவோ மதின் மேலாக
மன்னிய சல்லிய நீங்கும் மங்கையுங் கேட்க லுற்றாள்.

41. இந்த கடகலக்கின ஜாதகனது யோகங்களைச் சொல்லுகின்றோம். வறுமை இல்லாதவன். இவன் பிறந்து பத்து வருஷங்கள் வரையில் குடும் பத்திற்குக் கடன்கள் இருக்கும். அதற்குமேல் கடன் நீங்கும் என்று சொல்ல பார்வதி தேவி கேட்கலுற்றாள்.

42. எப்படிச் சல்லிய நீங்கும் இயம்புவீர் முனியே யென்றாள்
செப்புவேன் கேளும் தாயே சிறந்ததோர் கிருஷி யாலும்
ஒப்புடன் தொழிலி னலும் உரைக்கிறோம் ருணங்கள் தீரும்
மெய்ப்புடன் லாப மெய்தும் வித்தகி கேட்டி டாயே.

42. முனிவரே! எப்படி கடன் நீங்கும் என்று சொன்னீர்? எவ்வாறு நீங்கும் சொல்லும், எனப் பார்வதி கேட்க, முனிவர் சொல்லுகிறார். நல்ல விவசாயத்தாலும், தொழிலாலும் ஏராள வருமானம் அதிகமாகி ருணங்கள் தீரும்.

43. சல்லியம் எவ் விதத்தால் சார்ந்திடும் சொல்லு மென்ன
இல்லறத் தாலும் பூமி யிடர் தவிர்த்த தாலும் சேரும்
சொல்லுவோம் ஈரைந்தின்மேல் தொலைந்திடும் துன்பம் யாவும்
அல்லலும் அணு கிடாது அம்பிகை யாளே கேளாய்.

43. பார்வதி தேவி கேட்கலுற்றாள். எக்காரணத்தினால் இவன் குடும்பத்திற்குக் கடன் ஏற்பட்டிருக்கும்? சொல்லுங்கள், என, முனிவர் சொல்லுகின்றார். இல்லறத்தை நடத்தும்போது ஏற்படும் செலவுகளாலும், நிலங்களுக்கேற்பட்ட இடையூறுகளைத் தவிர்ப்பதற்கான செலவுகளாலும் கடன் ஏற்பட்டிருக்கும். இவன் பிறந்து பத்து வருஷங்களுக்குப் பிறகு கடன் இராது. மற்றைய தொல்லைகளும் நீங்கும். அதற்குப் பிறகு அல்லல் தொடராது.

44. தந்தையின் துணைவர் சேதி சாற்றுவீர் முனியே யென்றாள
பிந்தியே இருவர் தானும் பின்னல்போ லொன்றாய் வாழ்வர்
இந்தவாறு மன்ன னுக்கு இருபத்து மூன்றாண்டின் மேல்
சந்ததம் வேறாய்ச் செல்வர் சங்கரி கேட்டி டாயே.

44. இவனது தந்தையின் சகோதரர்களைப்பற்றிய வரலாறுகளைச் சொல்லுங்கள் எனப் பார்வதி கேட்க, பராசரமுனிவர் சொல்லுகின்றார். இவனுடைய தந்தைக்குப்பின் பிறந்த இரு சகோதரர்களுண்டு. இந்த ஜாதகனுக்கு இருபத்துமூன்றாவது வயதுவரையில் அவர்கள் எல்லோரும் மிக்க ஒற்றுமையுடன் வாழ்வார்கள். அதற்குமேல் குடும்பப் பிரிவினை ஏற்படும்.

45. இன்னமும் அவர்கள் சேதி யியம்பு வோம் விபரம் ரெண்டில்
இன்னவர் துணைவர் ஒன்றா யிருப்பர்கள் பெருமை யாக
இன்னமும் பூமி யோங்கும் எத்திசை கீர்த்தி யேற்பர்
இன்னவன் தனக்கு யோகம் எய்திடும் பிறை போலேதான்.

45. அவர்களைப்பற்றிய விவரங்களை இரண்டாம் பாகத்தில் சொல்லப் போகின்றோம். இவனுடைய சகோதரரும் ஒற்றுமையுடன் ஒரே குடும்பமாக வாழ்வார்கள். இவன் பிறந்தபொழுது இருந்த பூமியைவிட அதிக பூமி சேரும். எல்லா இடங்களிலும் இவர்களுடைய கீர்த்தி பரவும். வளர்பிறைச் சந்திரன்போல இவனது யோகங்கள் வளரும்.

46. இவன்பிதா தனக்கு வாத மெய்திடு மென்று சொன்னீர்
அவனியில் எந்தக் காலம் அறிவிப்பீர் முனியே என்றாள்
நவனியில் இருபான் ரண்டில் நல்கிடும் வாத சித்தி
தவசியில் குடகு திக்கில் சாருவான் ஆசானுக.

46 இவனுடைய பிதாவிற்கு வாதநோய் ஏற்படும் என்று சொன்னீர். அஃது எப்பொழுது வரும்? அதைச் சொல்லுங்கள் எனப் பார்வதி தேவி கேட்க, முனிவர் சொல்லுகின்றார். இந்த ஜாதகனது இருபத்திரண்டாவது வயதில் இவனுடைய தந்தைக்கு வாதநோய் வந்திடும். பிறகு தவசிபோல மேற்குத் திசையை அடைந்து ஆசானாக இருப்பான்.

குறிப்பு.—கீழ்வரும் பாட்டில் இந்த ஜாதகனது ஜனனகால தசையிருப்பையும், அத்தசையின் பொதுவான பலன்களையும் சொல்லுகின்றார்.

47. பிறந்தசேய் தனக்கு ஜனன காலம் பொன்தசை தனிலிருப்புச்
சிறந்திடு திங்க ளேழும் சேருநாள் பதினைந் தாகும்
நிரையவே செலவு முண்டு நேர்ந்திடு ரோகம் தானும்
குறையான மனங்க ளுண்டு குலத்தினில் சூதம் காணும்.

47. இவனுக்கு ஜனன காலத்தில் குருதசையில் பாக்கி மாதங்கள் ஏழும், நாட்கள் பதினைந்துமாம். இந்தத் தசையில் அதிகச் செலவுகள் ஏற்படும். நோயும் வரும். மனத்தில கவலைகளும் ஏற்படும். பந்துவர்க்கத்தில் மரணமேற்பட்டுத் தீட்டும் நேரிடும்.

[இந்த ஜாதகன் விசாகம் நான்காவது பாதத்தில் பிறந்தவன்.]

48. முடவன்தன் தசையிலே தான் எய்திடும் துணைவர் விருத்தி
அடவுடன் துணைவர் சேதம் அதிகமாய்ச் சல்லியம் நேரும்
உடன் தந்தை துணைவருக்கு உறைந்திடும் சுபமும் தானும்
உடனுடன் சுதர்கள் தோஷம் உத்தமி கேட்டி டாயே.

48. குருதசையை அடுத்து வரும் சனிதசையில் சகோதர விருத்தியுமுண்டு, சகோதர சேதமுமுண்டு. இவனது தந்தையின் சகோதரர்களுக்கு உலகவாழ்க்கையில் ஏற்படவேண்டிய சுபங்கள் ஏற்படும். அவர்களுக்கும் புத்திர தோஷமுண்டு.

[குறிப்.—"दिवार्कशुक्रौ पितृमातृसंज्ञितौ शनैश्चरेन्दू निशि तद्विपर्ययात" என்ற பிருஹஜ்ஜாதக சுலோகத்தின்படி சனியும் பித்ருகாரகனாவதுபற்றி நல்ல சனி தசையில் தந்தை சகோதரர்களுக்கு நலமேற்படும் என்று கூறப்பட்டுள்ளது.]

49. சனிதசை முன் பாகத்தில் சாற்றினோம் பலன்க ளல்பம்
சனிதசை பின் பாகத்தில் சந்திரன் போல யோகம்
இனிமையாய் ருணங்கள் தீரும் எடுத்தகாரியம் ஜயங்கள்
கனமுள பொருளும் சேரும் காரிகை புகன்றிட் டோமே.

49. சனிதசையின் 19 வருஷங்களில் முன்பாகத்தில் [அஃதாவது முதல் $9\frac{1}{2}$ வருஷங்களில்] பலன்கள் அல்பமாகவே நடைபெறும். சனிதசையின் பின் பகுதியில் வளர்பிறைச் சந்திரன் போல செல்வம் வளர்ந்து சுலபமாகக் கடன் நீங்கும். முயன்ற காரியங்கள் வெற்றியடையும். பார்வதி தேவியே! மதிப்பு வாய்ந்த பொருள்கள் சேர்ந்திடும்.

50. பலவித லாப மெய்தும் பாருகள் விளைவு மோங்கும்
கலவர புத்தி நீங்கும் காலாட்கள் விருத்தி யாகும்
நிலைமையாய்த் தொழிலு மோங்கும் நித்தியம் தனமு மெய்தும்
மலையிறை மகளே பின்பால் வரைகிறோம் சித்திரங்கள்.

50. பலவிதப் பொருள்கள் கிடைக்கும். நிலங்கள் நன்றாகப் பலனைத் தரும். கலஹம் செய்யும் மனப்பான்மை குடும்பத்தில் ஒருவருக்கும் இராது. [அஃதாவது எல்லோரும் ஒற்றுமையாக வாழ்வார்கள் என்பது கருத்து.] வேலையாட்கள் மேன்மேலும் சேருவார்கள். செய்யப்படும் தொழிலும் ஓங்கி வளரும். எப்பொழுதும் பணம் சேரும். பர்வதராஜனின் மகளே ! இவனைப்பற்றிய விவரங்களைப் பின்னால் தெரிவிக்கின்றோம்.

## ஜாதகம் 5

1. கடகமும் ஜனனமாக கதிர் புகர் புந்தி தங்க
விடராகு அரியில் புக்க வேந்தனும் சிகியும் சாடி.
முடவனு முச்சமாக மூன்றினில் குசனும் நிற்க
அடவுடன் மதியும் வீணை அறைகுவீர் பலனைத் தானே.

| | | | சந்திரன் |
|---|---|---|---|
| குரு கேது | இராசி சக்கரம் | | லக்கினம் சூரியன் புதன் சுக்கிரன் |
| | | | ராகு |
| | | சனி | செவ்வாய் |

1. பிரபவ வருஷம் ஆடி மாதம் 15-ஆந்தேதி திங்கட்கிழமை காலையில் ஜனனம்.

### ஆங்கிலத்தேதி—29–7–1867.

நவக்கிரஹங்களின் பாதசாரம்.

புஷ்யம் 4-இல் சூரியன், திருவாதிரை 3-இல் சந்தின், உத்திரம் 2-இல் செவ்வாய், ஆயில்யம் 2-இல் புதன் (வக்ரீ), சதயம் 3-இல் குரு (வக்ரீ), புனர்வஸு 4-இல் சுக்கிரன், விசாகம் 2-இல் சனி, பூரம் 4-இல் ராஹு, பூரட்டாதி 2-இல் கேது இலக்கினம் கடகம், சூரியன், புதன், சுக்கிரன், இவர்கள் கடகத்திலும், ராஹு சிம்மத்திலும், குருவும் கேதுவும் கும்பத்திலும், சனி துலாத்திலும், செவ்வாய் கன்னியிலும், சந்திரன் மிதுனத்திலும் இருந்தால் பலன்களைச் சொல்லுவீர்களாக, என்று பார்வதிதேவி வினவினுள்.

2. உத்திமி கேட்கும் போது ஓதுவார் விச்வா மித்திரர்
சித்தச னுண்பால் ஜன்மம் ஜனித்தஇல் கீழ்மேல் வீதி
பத்தியாய்த் தெற்கு வாசல் பரமனும் காளி மாயோன்
சத்தியே கீழ்ப்பால் சொன்னேம் சந்தியும் மாரி தும்பி.

2. இவ்வாறு பார்வதி தேவி கேட்டவுடன், விசுவாமித்திரர் சொல்லுகின்றுர். இவ்வாறுன கிரஹநிலையில் ஆண் குழந்தை ஜனிப்பான். ஜனித்திருக்கும் வீடு கிழக்கு மேற்காக அமைந்துள்ள வீதியில் தெற்கு நோக்கி இருக்கும். அவ் வீட்டிற்கு கீழ்த்திசையில் சிவபிரான், காளி, விஷ்ணு, சக்திதேவி இவர்கள் திருக்கோயில்கள் இருக்கும்.

3. தங்கிடும் வடமேல் திக்கில் சலக்கரை மேற்கில் நிற்கும்
பொங்மாய் நதியும் தெற்கில் போற்றுவோம் சிற்றூர் தன்னில்
மங்கையிவ் வடையா ளத்துள் மைந்தனும் பத்தாம் ஜன்மம்
பொங்கமா யுதிப்பா னாகும் புகலுவோம் பலன்கள் தாமே.

3. வடமேற்குத்திசையில் பல வீதிகள் கூடுமிடமும் மாரியம்மன் விநாயகர் இவர்களுடைய கோயில்களும் இருக்கும். மேற்குத் திசையில் ஒரு நீர் நிலை இருக்கும். தென்திசையில் ஒரு நதியும் உண்டு. இவ்வடையாளங்களமைந்த ஒரு சிறிய ஊரில் இந்த ஜாதகன் அந்தக் குடும்பத்தில் பத்தாவது குழந்தையாக ஜனிப்பான். இவனது யோகங்களைக் கூறுகின்றோம்.

4. தானவன் ஜனனயோகம் சகோதர புத்திர யோகம்
மானமாய்த் தந்தை யோகம் மாதுரு களத்திர யோகம்
பான்மையாய் முன்பின் ஜன்மம் பகருவோ மிந்நூல் தன்னில்
வானவர் துதிக்கு மெங்கள் மங்கையே கேட்டி டாயே.

4. தேவர்கள் போற்றும் தேவியே! இந்நூலில் அவனது ஜனன யோகம், சகோதரர், புத்திரர், தந்தை, தாய், மனைவி இவர்களைப் பற்றியும், முன்பின் ஜன்மங்களைப்பற்றியும் சொல்லுகின்றோம்.

கீழ் வரும் இரண்டு பாடல்களால் தந்தையின் குணத்தைச் சொல்லுகின்றார்.

5. தந்தையின் துணைவர் தம்மைச் சாற்றுவோ மாண்பா லொன்று
வந்திடும் கன்னி யவ்வாறு வழுத்திடும் தீர்க்க மாக
முந்திய பிதா குணத்தை மொழிகிறோம் சிவந்த மேனி
சந்தத மொடிச்சல் தேகி சமர்த்துளான் பொறுமை சாலி.

5. இவனது தந்தைக்கு ஒரு சகோதரனும் ஒரு சகோதரியுமுண்டு. அவர்கள் தீர்க்காயுளுடன் வாழ்வார்கள். இவனது தந்தையின் குணத்தைச் சொல்லுகின்றோம். சிவந்த மேனியான். மெலிந்த சரீரமுள்ளவன்- மிக்க சாமர்த்தியசாலி. பொறுமை குணம் நிறைந்தவன்.

6. பதமான வார்த்தை சொல்வன் பத்தினி நேய னாகும்
சதியிலா மனத்த னாகும் தந்தையி னாஸ்தி யில்லான்
மதிநுதல் மனையாள் இல்லம் வருவனும் சுகமுமுள்ளான்
ததிநெய்பா லிஷ்டம் சொல்வன் தன்தேகம் பித்த முள்ளான்.

6. நயமாகப் பேசும் இயல்புடையவன். மனைவியிடத்தில் அதிக அன்புள்ளவன். கள்ளமில்லா நெஞ்சன். பிதுரார்ஜித சொத்து இல்லாதவன். மனைவியின் பிறந்த வீட்டிற்கே வந்து ஸ்திரமாகத் தங்கி வாழ்க்கை நடத்துவான். சுகங்களை அனுபவிப்பான். தயிர், நெய், பால் முதலிய நல்ல ஆஹாரப் பொருள்களில் ஆசையுடையவன். பித்த தேகம் வாய்ந்தவன்.

7. இக்குண முடையோ னுக்கு இவனுமே யுதிப் பா னாகும்
மிக்கவே யவன்கு ணத்தை விளம்புவோம் சிவந்த மேனி
தக்கவே கல்வி கற்பன் சமதேகன் தந்திர வாதி
பக்குவ மான வார்த்தை பணத்தின்மே லிச்சை யுள்ளான்.

7. இப்படிப்பட்ட குணங்கள் உள்ளவனுக்கு இவன் புத்திரனாக உதிப்பான். இவனுடைய குணங்களையும் சொல்லுகின்றோம். சிவந்த சரீரம் வாய்ந்தவன். தகுந்த கல்வியைக் கற்பான். நடுத்தர உயர முள்ளவன். தந்திரசாலி. வார்த்தைகள் மிகவும் பக்குவமாக [நயமாக] இருக்கும். பணத்தில் ஆசையுள்ளவன்.

[பணத்தில் அதிக ஆசையுள்ளவன் என்பது கருத்து.]

8. பதநடை தரள தந்தம் பங்கய ரேகை யுள்ளான்
விதவித வார்த்தை கூறுவன் விளங்கிடும் சாயல் நேத்திரம்
அதிகமா மாசை யுள்ளான் அவன்மனம் கபடு கொஞ்சம்
சதியான சொல்லு முள்ளான் தானிய விருத்தி செய்வன்.

8. அழகிய நடை உடையவன். முத்துப்போன்ற பற்களுள்ளவன். அவனது கையில் தாமரைரேகை விளங்கும். பிறரால் கையாளப்படாத அழகிய வார்த்தைகளைப் பேசுவான். கண் நோக்குச் சாய்ந்திருக்கும். எல்லாப் பொருள்களிலும் அதிக ஆசை கொண்டவன். சிறிது கபடமுள்ளவன். ஏமாற்றத்தைத் தரும் சொற்களையும் சொல்லுவான். தானியங்களை விருத்தி செய்வான்.

9. சித்திர வீடு முள்ளான் சீலவான் தெய்வ பக்தி
பத்தினி நேய னுவன் பதார்த்தங்கள் விருப்பங் கொள்வன்
நத்தினோர்க் குதவு வானும் நவிலுவான் கட்டு வார்த்தை
அத்தியைப் பெற்ற மாதே அறைகிறோம் கேளுங்களே.

9. அழகிய வீடு கட்டுவான். நன்னடத்தை உடையவன். தெய்வ பக்தியுள்ளவன். மனையாளிடத்தில் அன்புள்ளவன். காய்கறிகளில் இஷ்டமுள்ளவன். உதவியை எதிர்பார்ப்பவர்களுக்கு உதவுவான். அடுக்குச் சொற்களைச் சொல்லும் இயல்புள்ளவன். ஸ்ரீ விநாயகரைப் பெற்ற தாயே! மேலும் சொல்லுகிறோம். கேளுங்கள்.

10. இவனுடைத் துணைவர் தம்மை யியம்புவோம் ஆண்பால் ரண்டு
அவனியில் கன்னி மூன்று அறைகிறோம் தீர்க்க மாக
நவனியில் ஆறு நஷ்ட நவிலுவோம் மிவனுக் கேதான்
கவனமாய் ஆண்பால் ரண்டும் கழறுவோம் மூத்தோ ராக.

10. இவனுடைய சகோதரர்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இரு ஆண் சகோதரர்களும் மூன்று சகோதரிகளுமுண்டு. இவர்கள் எல்லோரும் நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள். சகோதர வர்க்கத்தில் அறுவர் நஷ்டமாவர். இங்கு சொல்லப்பட்ட இரு ஆண்களும் இவனுக்குமூத்தவர்களாகவே இருப்பார்கள்.

11. மாதுரு குணத்தை யாங்கள் வரைகிறோம் சிவந்த மேனி
மேதினில் வாத தேகி விளங்கிடும் நற்கு ணங்கள்
தீதிலாக் குணத்தா ளாகும் திருமக ளொப்ப தாகும்
பாதக மெண்ணு நெஞ்சம் பந்துவுக் கினிய ளாகும்.

**11.** இப்பொழுது தாயின் குணங்களைச் சொல்லுகின்றோம். சிவந்த மேனியாள். வாததேகம் வாய்ந்தவள். ஒரு கெட்ட குணமும் இல்லாத வள். அது மாத்திரமின்றி நற்குணங்கள் நிறைந்தவள். மஹாலக்ஷ்மிக்கு ஒப்பானவள். பிறருக்குத் தீங்கு எண்ணமாட்டாள். உறவினர்களுக்குப் பிரிய மானவள்.

12. அல்பரை உறவு கொள்ளாள் ஆண்மையு முடைய ளாகும்
விற்பன விவேக முள்ளாள் மேதினில் அன்ன மீவள்
பற்பல பணிக ளுள்ளாள் பஞ்சைமே லிரக்க முள்ளாள்
நற்புக ழாகி வாழ்வாள் நற்றந்தை யில்லம் நீங்காள்.

**12.** தன்னைவிடத் தாழ்ந்தவர்களிடம் தொடர்பு கொள்ளமாட்டாள். ஆண்களைப் போல பிறரை அடக்கி ஆளும் திறமையுடையவள். கல்வி யறிவும், இயற்கையான பகுத்தறிவும் படைத்தவள். அன்னமிடும் இயல் புள்ளவள். பல விதஆபரணங்களை உடையவள். ஏழைகளிடத்தில் இரக்கமுள்ளவள். பெரும் புகழோடுவாழ்வாள். மேலும், விவாஹத்திற்குப் பிறகும் தன் கணவனுடன் தன் பிறந்தகத்திலேயே சுகமாக வாழ்வாள்.

13. அவளுடைத் துணைவர் தம்மை அறைகிறோம் நான்க தாகும்
பவமுள ஆண்பா லொன்று பருகிடும் தீர்க்க மாக
நவனியி லந்த வர்க்கம் நசித்திடு மென்று சொன்னோம்
தவநிலை யோரைக் காக்கும் தயாபரி மேலுங் கேளே.

**13.** அவளுடைய சகோதரர்களைப்பற்றிச் சொல்லுகின்றோம். கூடப்பிறந்த நான்கு சகோதரருக்குள் ஆண் ஒன்று, பெண் மூன்றாகும். அந்தச் சகோ தரன் நீண்ட ஆயுளுடன் வாழ்வான். ஆனால் அவனது சந்ததி ஓங்காது. தவசிகளைக் காக்கும் தேவியே ! கேளுங்கள்.

14. மாதுரு முன்ஜன் மத்தை வரைகிறோம் புதுவை தன்னில்
நீதியாய் வடுகர் வம்சம் நிமலியு முதித்தா ளென்றோம்
சூதுக லில்லா ளாகிச் சுதர்களு முள்ளா ளாகிப்
போதவே சுகங்க ளுண்டாய் பூஷண மதிகம் பெற்றாள்.

**14.** தாயின் முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். புது வையில் நாயகர் வமிசத்தில் உதித்திருந்தாள். அந்த ஜன்மத்தில் கள்ளம் கபடம் இல்லாதவளாகவும், குழந்தைகளிடம் அன்புகொண்டவ ளாகவும் இருந்தாள். அதிக ஆபரணங்களை அடைந்து, இம்மையில் அனு பவிக்கவேண்டிய சுகங்களை நன்றாக அனுபவித்து வாழ்ந்து வந்தாள்.

15. வரனுமே முன்னே மாண்டு விதவையா யிருந்து மேதான்
பெருமையாய்த் தக்ஷிணத்தில புண்ணிய தீர்த்தம் தோய்ந்து
மருமமா தலங்கள் சென்று மங்கையு முள்ளூர் மீண்டு
சிறுமையென் றோர்க்கு அன்னம் செல்வியு மளித்தா ளென்றோம்.

15. கணவன் இவளுக்கு முன் இறக்கவே, இவள் விதவையாகி தென் தேசத்திலுள்ள புண்ணிய தீர்த்தங்களில் நீராடி, பல புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்று யாத்திரைகளை முடித்தாள். இவள் ஏழைகளுக்கு அன்னதானம் ஏராளமாகச் செய்தாள்.

16. மரணமே யாகி யேதான் குறைதலைக் கஞ்சன் தன்னால்
வறையவே யிக்கு லத்தில் வந்தவ ளிவளே யென்றோம்
அறைகிறோ மீவள்பின் ஜன்மம் அரங்கமா நகரி லேதான்
பெருமையாய்ப்பிரம்ம சேயாய்ப்பிறப்பவளே யிவளே யென்றோம்.

16. பிறகு மரணத்தை அடைந்து, பிரமனால் படைக்கப்பட்டு மீண்டும் இக் குலத்தில் ஜனித்தாள். இவளுடைய பின் ஜன்மத்தைச் சொல்லுகின்றோம். ஸ்ரீரங்கத்தில், பெருமை வாய்ந்த பிராமண குலத்தில் பிறப்பாள்.

17. பாக்கிய முள்ளா ளாகிப் பாலர்கள் சுகமு முண்டாய்
வாக்குச்சொல் மேன்மை யாக வாழ்ந்துபின் மரண மாகி
ஆக்கவே தேவ ராக அடைவளா ளிவளே யென்றோம்
மார்க்கமாய் தந்தை பூர்வம் வரைகிறோம் கேளு மம்மா.

17. அங்கும் ஐச்வரியம் படைத்தவளாக இருப்பாள். நல்ல சந்ததியும் உண்டு. சுகங்களையும் அனுபவிப்பாள். இவளுடைய சொல்லிற்கு விசேஷப் பெருமை இருக்கும். கடைசியில் மரணத்தை அடைந்து, தேவத் தன்மையைப் பெறுவாள். தந்தையின் முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம்.

18. தந்தையின் முன்ஜென் மங்கள் சாற்றுவோம் தொண்டை நாட்டில்
வந்தனன், இக்கு லத்தில் வன்மையாய்ச் செட்டு செய்து
முந்திய தனங்கள்பெற்று முயற்சியாய்க் குடும்பி யாகிப்
பந்தமாய் வாழு நாளில் பகருவோம் ஊழி தானே.

18. தந்தை முன்ஜென்மத்தில் தொண்டை நாட்டில் இதே வைசிய குலத்தில் பிறந்து, நன்றாக வியாபாரம் செய்து, அதிகச் செல்வத்தை அடைந்து, மனைவி மக்களுடன் வாழ்ந்தான். அப்பொழுது அவனுக்கேற் பட்ட ஓர் வினையைச் சொல்லுகின்றோம்.

19. பெரியவர் ஒருவர் வந்து பலியது கேட்கும் போது
பொருளது கொஞ்சம் தானும் பரமனும் பசியை....
விரைவினி லன்னம் கேட்க வைசியன் சொல்லு கின்றான்
தருவதற் கன்ன மில்லை தனம்வாங்கிச் செல்லு மென்றார்

19. வயதான கிழவர் ஒருவர் இவனுடைய வீட்டிற்கு வந்து சிறிது ஆகாரம் கேட்டார். அந்தச் சமயத்தில் அன்னமிருந்தும் அன்னமில்லை என்று பொய் சொல்லிவிட்டு. சிறிது காசு கொடுக்கிறேன் வாங்கிச் செல்லுங்கள், என்று சொன்னான்.

20. அப்போது அதிதி தானும் அநேகமாய்க் கோபங் கொண்டு
செப்புவார் மைந்தா நீயும் செல்வங்கள் குறைவு நேர்ந்து
ஒப்புடன் இல்லம் நீங்கி உறைகுவா யென்னைப் போலே
மெய்ப்புடன் இவ்வாறு சொல்லி வேறொரு கிரகம் சென்றார்.

20. அப்பொழுது அதைக் கேட்ட அதிதி, மிக்க கோபம் கொண்டு பிள்ளாய் ! உனது செல்வமும் வீடும் நீங்கி, என்னைப் போல நீயும் ஆவாய், என்று சொல்லி வேறு வீடு சென்றார்.

21. இதுவன்றி இன்னமொன்று இயம்புவோம் லேவா தேவி
அதிபனும் செய்யு நாளில் வரைந்திட்டார் கணக்கில் சூது
சதியிலா ஏழை யோர்கள் தன்கணக் கதுபொ லிந்தார்
அதிகமாய்ப் பொருளைக் கேட்க அறைகுவார் ஏழை யோர்கள்.

21. இந்தப் பாவமுமின்றி, வேறு ஒரு பாவமும் இவனுக்கு ஏற்பட்டது. அதைச் சொல்லுகின்றோம். இவன் முன்ஜென்மத்தில் வட்டி வியாபாரம் செய்யுங் காலத்தில், ஏழைகளுடைய கணக்கில் சூது செய்து, அவர்களை அதிக பணம் கேட்க, அவர்கள் மிக்க வருத்தத்துடன் சொன்னார்கள்.

22. கணக்கினில் மோசம் செய்த கனமுள பாவிக் கேதான்
பிணக்குக எதிகம் நேர்ந்து பெரும்பொருள் யாவும் போக்கி
இணக்கமாய் ஒருவர் கீழ்பாலிருந்துமே வாழ்வா யென்றும்
அணக்கவே மறு ஜன்மத்தும் அதுபோலே யாவா மென்றும்.

22. நீ ஏழைகளின் கணக்கில் மோசடி செய்த மகாபாவி யாகையால், உனக்குப்பல கஷ்டங்கள் ஏற்பட்டு, உன்னுடைய பொருள்கள் யாவும் நஷ்டமாகி, இந்த ஜன்மத்திலேயே ஒருவருக்குக் கீழ்ப்பட்டு வாழ்வாய். அவ்வாறே மறுஜன்மத்திலும் பிறர் கையை எதிர்ப்பார்த்து வாழ்வாய், என்று ஒரு ஏழை சபித்தான்.

23. சொல்லிய ஏழை தானும் சொற்பப் பொன் தன்னை யீந்து
இல்லறம் சென்று ரென்றோம் இதுவிதத் தோஷம் தானும்
வல்லவன் தன்னைப் பற்றி வந்தது அந்தியத்தில்
புல்லியர் சொல்போ லாகி பிழைகளு மனந்த முண்டாய்.

23. இவ்வாறு சபித்த ஏழை அவன் கேட்டபடி [அவன் எழுதிய பொய்க் கணக்குப்படி] தன் கையிலிருந்த சிறிது பொன்னையும் கொடுத்துவிட்டு வீடு சென்றான். ஆகவே இவ்வித தோஷங்கள் இவனை முன் ஜன்மத் திலேயே பற்றிக்கொண்டன. ஏழை சொன்னதுபோல் ஏராளமாகப் பிழைகள் ஏற்பட்டு ;

**24.** ஒருவர்கீழ் வாழ்ந்தா னென்றோம் உத்தமன் மரணமாகி
விரைவில் பூவைசிய வம்சம் மீதினி லுதித்தா னம்மா
உரைந்தது முன்னூழ் சாபம் உத்தமன் தனக்குமே தான்
பெருமையாய் தந்தை யாஸ்தி பிழையது நேர்ந்த தென்றோம்.

**24.** பொருள்கள் எல்லாம் நஷ்டமாகி அந்திய காலத்தில் ஒருவர்கீழ் வாழ்ந்துவந்தான். கடைசியாக மரணமாகி இந்த வைசிய குலத்தில் உதித்தான். முன்வினையினால் தந்தையின் சொத்தும் இவனுக்கு இச் ஜென்மத்தில் இல்லை.

**25.** மனைவியால் பெருமை பூண்டு வாழ்குவா னிவனே யென்றோம்
அனையவே இவன்பின் சென்மம் அத்தியின் வரதர் வாழும்
கனமுள நகரம் தன்னில் கத்திரி வம்சம் தன்னில்
தனிகனு முதிப்பா னாகும் தனங்களு முள்ளா னாகி

**25.** ஆகையால் விவாஹத்திற்குப் பிறகு இவன் (தந்தை) மனையாள் பிறந்தகத்தில் [மாமனார் வீட்டில்] வாழ்வான் என்று முன்பு [6-வது பாட்டில்] சொன்னோம். மறு ஜென்மத்தில் ஸ்ரீவரதராஜஸ்வாமி எழுந்தருளியிருக்கும் பெருமை வாய்ந்த ஸ்ரீகாஞ்சியில் க்ஷத்திரிய வமிசத்தில் உதித்து பெரிய செல்வமுள்ளவனாக இருப்பான்.

**26.** இவனுமே பெருமை பூண்டு இசைகுவா னென்று சொன்னோம்
அவனியில் சாதகர்க்கு அறைகிறோம் மணத்தின் காலம்
நவனியில் இருபதாண்டில் நாயகி வருவா ளாகும்
கவனமா யவள் தன்சேதி கழறுவோம் கேளு மம்மா.

**26.** முன்சொன்ன கடக லக்கின மகன் மிக்க பெருமையுடன் வாழ்வான். அவனுடைய விவாஹ காலத்தைச் சொல்லுகின்றோம். அவனுடைய இருபதாவது வயதில் விவாஹம் நடைபெறும். மிக்க கவனத்துடன் அவனுடைய வரலாறுகளைச் சொல்லுகிறோம் கேளுங்கள் தாயே!

**27.** செவந்திடு மேனியாவாள் தேவியும் வாத தேகி
அவனியில் கோபம் கொஞ்சம் அவள் குடும்பங்கள் நாஸ்தி
நவனியில் பொருள் மேலிச்சை நன்னடை மர்ம முள்ளாள்
தவசினை உறவு கொள்ளாள் தக்கதோர் வார்த்தை யுள்ளாள்.

**27.** சிவந்த மேனியாள். வாயுதேகமும் சிறிது கோபமு முள்ளவள். அவள் பிறந்த குடும்பம் விளங்காது. எல்லாப் பொருள்களிடத்திலும் ஆசை உடையவள். நல்ல நடத்தை உடையவள். நெஞ்சம் கபடமுள்ளது. சன்னியாசிகளிடத்தில் பக்தி கொள்ளாதவள். சமயத்திற்கேற்ற வார்த்தை சொல்லும் இயல்புள்ளவள்.

**28.** துணைவர்க ளாண்பா லில்லை சுந்தரி மூவ ராகும்
கனமுட னிதன்மேல் தோன்றில் கனக்காது நசிக்கு மென்றோம்
இணையிலாவர்களாஸ்தி எய்திடும் பாதி தானும்
அனையவே யவள்தனில்லம் அறைகிறோ முத்திரத்தில்.

28. அவளுக்கு சகோதரன் இல்லை. சகோதரிகள் மூவர். இந்த எண்ணிக்கைக்கு மேல் அதிகம் தோன்றினும் நீடித்திராமல் நசிக்கும். அவளுடைய ஆஸ்தியில் பாதி இந்த ஜாதகனுக்குச் சேரும். அவர்களின் குடும்பத்தைப்பற்றி பின்பு சொல்லுகின்றோம்.

இந்தப் பாட்டிலும் அடுத்தப் பாட்டிலும் கடக லக்கின குமாரனது முன்ஜன்மத்தைச் சொல்லுகின்றார்.

29. ஜாதகன் முன்ஜென்மத்தை சாற்றுமா பலியின் பக்கல்
கோதிலா வன்னிய வம்சம் குலத்தினில் உதித்து மேலும்
மேதினில் பாக்கியம் பெற்று விளைபுல மதிக முண்டாய்
பாதக மில்லா னாகி பஞ்சைகட் குதவி யாகி

29. இந்த சாதகன் முன்ஜன்மத்தைச் சொல்லுகிறோம். இவன் மஹாபலிபுரத்தில் வன்னியகுல க்ஷத்திரிய வமிசத்தில் உதித்து பெரிய பணக்காரனாக இருந்தான். நிலங்களும் ஏராளமாக இருந்தன. சிறிதும் பாபச் செயல் செய்யாதவனாகவும் ஏழைகளுக்கு உதவி செய்பவனாகவும் வாழ்ந்துவந்தான்.

30. தானமும் தருமம் செய்து சகலர்க்கு நல்லோ னாகி
மான் மழுதரித்தோன் பூசை மகிழ்வுடன் செய்துவந்தான்
தேன்மொழி மனைவியுண்டாய் சேயர்க ளில்லானாகி
தானவன் வாழ்ந்துமே தான் சலிப்புடன் மரண மானான்.

30. ஏராளமான தான தருமம் செய்தான். நல்லவன் என்று எல்லோராலும் போற்றப்பட்டான். மான் மழு தரித்த பரமசிவனைப் பக்தி சிரத்தையுடன் பூசை செய்து வந்தான். இனிமையாகப் பேசுகின்ற மனையாளும் இருந்தாள். இவ்வளவு இருந்தும் புத்திரபாக்கியம் இல்லை. ஆகையால் மிக்க வருத்தத்துடனேயே மரணமடைந்தான்.

31. வந்தவ னிவனே யென்றோம் விரைகிறோ மிவன் பின்ஜென்மம்
பந்தமால் மலைக்கு உத்திரம் பாலகன் ரெட்டி வம்சம்
சந்தத முதிப்பா னென்றோம் தனம் பூமி யுள்ளானாகி
சிந்தையு மகிழ்வு கொண்டு செல்வனு வாழ்வா னாமே.

31. அவன்தான் இங்கு கடகலக்கினத்தில் பிறந்திருக்கிறான். இவனது பின் ஜென்மத்தையும் கூறுகின்றோம். திருவேங்கடமலைக்கு வடதிசையில் ரெட்டி வமிசத்தில் பிறந்து பணம், பூமிகள் உடையவனாக இருப்பான். மிக்க மகிழ்ச்சியுடன் வாழ்க்கை நடத்துவான்.

32. இன்னவன் தனக்குப் புத்திர ரியம்புவோம் கேளும் தாயே
மன்னிய ஆண்பால் ரெண்டு வருங்கன்னி அவ்வாறாகும்
தன்னிலே நான்கும் தீர்க்கம் தங்காது மற்ற தெல்லாம்
அன்னையே நாங்கள் சொல்லு மருள் மொழி குன்றிடாது.

32. இவனுடைய புத்திரபாவத்தைப் பற்றிச் சொல்லுகிறோம் கேளுங்கள் தாயே! பிள்ளைகள் இரண்டு பெண்கள் இரண்டு. ஆக நான்கும் நீண்ட ஆயுளுடன் விளங்கும். இதற்குமேல் பிறக்கும் குழந்தைகள் நீடித்திராது. தாயே! நாங்கள் சொன்ன அருள்மொழி பொய்யாகாது.

33. தந்தையின் மரண காலம் சாற்றுவோ மிருபான் மூன்றில்
வந்திடும் தந்தை கண்டம் வரைகிறோ மிவனுக்கே தான்
பிந்திய அன்னைக்கே தான் பேசுவோ முப்பானாலில்
பந்தமாய் கண்ட நேரும் பகருவோம் விவரம் ரெண்டில்

33. இவனது தந்தையின் மரண காலத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவனது இருபத்து மூன்றாவது வயதில் இவனுடைய தந்தை மரணமடைவான். அன்னையின் மரணகாலத்தையும் சொல்லுகின்றோம். இவனுக்கு முப்பத்துநான்காவது வயது நடக்கும்போது இவனுடைய தாய் மரண மடைவாள். விவரங்களை இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றோம்.

34. ஜாதகன் பொது யோகத்தைச் சாற்றுவோம் கிருஷி செய்வன்
சூதுகள் கொஞ்சம் செய்வன் துணைவர்க்குச் சமமாய் வாழ்வன்
மேதினில் பூமி தன்னை விரையங்கள் செய்யா னுகும்
கோதிலா சுலப ரோகங் கொண்டிடு மிவனுக் கேதான்.

34. சாதகனின் பொதுவான யோகங்களைக் கூறுகின்றோம். விவசாயம செய்வான். சூதுகளும் செய்வான். சகோதரருக்குச் சமமான அந்தஸ்தில் வாழ்க்கையை நடத்துவான் பூமியைச் செலவு செய்யமாட்டான். கொஞ்சம் நோயுமுண்டு. [அதிகமிராது.]

35. காலிகள் விருத்தி யுள்ளான் கனத்ததோர் பொருளு மில்லான்
பாலர்கள் யோக வானும் பணிதிகள் சேர்ப்பா னென்றோம்
சீலமும் கொஞ்ச முள்ளான் சிறுதீனி விருப்பங் கொள்வன்
ஞாலமேல் சுகமு முள்ளான் நாயகி மேலுங் கேளே.

35. கால்நடைகளை விருத்தி செய்வான். விலையுயர்ந்த பொருள் ஒன்றும் இவனிடம் இருக்காது. இவனுடைய புத்திரர்கள் நல்ல யோக முள்ளவர்களாக இருப்பார்கள். அனேக ஆபரணங்களை அடைவான். கொஞ்சம் நல்ல நடத்தை யுள்ளவன்தான். சிற்றுண்டியில் அதிக விருப்ப முள்ளவன். சுகங்களையும் சிறிது அனுபவிப்பான். தேவியே! மேலும் சொல்லுகிறோம். கேளுங்கள்.

36. காதகம் கொஞ்ச முண்டு காதலி தன்னால் யோகம்
மேதினில் கீர்த்தி யேற்பன் வீண பவாத முள்ளான்
ஓதுவீர் குடும்பச் சேதி உரைக்கிறோம் கேளு மம்மா
கோதிலா முப்பா னேழில் குடும்பமு வேருய்ச் செல்வன்.

36. சிறிது பாபச் செயல்களைப் புரிவான். காதலியால் நல்ல யோகமுண்டு. கொஞ்சம் புகழுமுண்டு. ஆனால் வீணான அவதூறுகளும் ஏற்படும். குடும்பத் தைப் பற்றிய செய்தியைச் சொல்லுங்களெனப்பார்வதி கேட்க, முனிவர் சொல்லுகின்றார். இவனுடைய முப்பத்தேழாவது வயதில் குடும்பம் வேறாகும்.

37. தரித்திர மில்லா னுகும் தர்க்கங்கள் அதிகம் சொல்வன்
உரைத்திட்டோம் புத்தி ன்தான் ஊரெல்லாம் கீர்த்தி வானும்
நிறையவே குடும்பி யாகி தேர்பரி யுள்ளா னுகி
குறைவிலா வாழ்வாகும் கோதையே! கேட்டி டாயே.

37. பொதுவாக வறுமை யில்லாதவன். மேன்மேலும் யுக்திவாதங்கள் சொல்லும் இயல்புள்ளவன். இவனது புத்திரன் எல்லா இடங்களிலும் புகழ்உள்ளவனுக இருப்பான். பெரிய குடும்பியாவான். தேர் குதிரை முதலிய வாஹனங்களும் அவனுக்கிருக்கும். குறைவில்லாத குடும்பியாகி, சுகமாக வாழ்ந்திருப்பான். பார்வதியே! கேள்.

38. காதலன் ஜனிக்கும் காலே கரும்பாம்பு தசையி ருப்பு
மேவிய ஆண்டு எட்டும் விளங்கிய திங்க ளொன்பான்
ஓதுவோம் பலனே யாங்கள் உறைந்திடும் துணைவர் விருத்தி
ஆவலாய்க் கலகம் கொஞ்சம் அவன்குடும் பங்கள் தன்னில்.

38. இந்த சாதகன் ஜனிக்கும் காலத்தில் ராஹு தசையில் பாக்கி இருப்பு வருஷம் எட்டு, மாதங்கள் ஒன்பது. இந்த தசையின் பலனைச் சொல்லுகின்றோம். சகோதரவிருத்தி உண்டு. குடும்பத்தில் கலஹங்களும் நேரும்.

39. தந்தையும் தாயும் நோயும் சகோதர சேத மாகும்
சொந்ததன் வர்க்கம் சூதம் தோன்றிடும் தனங்கள் சேதம்
சந்ததம் தனங்கள் சேதம் தன்தேகம். நலிவு முண்டு
பிந்திய பாகம் தன்னில் பேசுவோம் விபர மாக

39. தந்தை தாய் இவர்கள் நோயினுல் பீடிக்கப்படுவார்கள். சகோதரர்களுக்குச் சேதமும் ஏற்படும். நெருங்கிய பந்துவர்க்கத்தில் மரணம் ஏற்படும். எப்பொழுதும் பலவிதங்களிலும் பணத்திற்கு நாச முண்டாகும். இவனுடைய உடலிற்கும் நலிவு ஏற்படும். மற்றைய விபரங்களை இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றோம்.

## ஜாதகம் 6.

1. பிறைமானில் சனியு மேரு புதன்புகர் கோல ஆக
குருபானு ராகு தேளில் குசனு சீயம் சிகியும் நந்தி
வருஞ்சென்மம் கடக மாக வறைகுவீர் பலனை யென்று
அரன்மாது கேட்கும் போது அத்திரி புகலு கின்றார்.

| | | | |
|---|---|---|---|
| | | கேது | |
| | இராசி சக்கரம் | | இலக்கினம் |
| சந்திரன் | | | செவ்வாய் |
| சனி | குரு சூரியன் ராஹு | சுக்கிரன் புதன் | |

சார்வரி வருஷம் கார்த்திகை மாதம் 13-ந்தேதி செவ்வாய்க்கிழமை இரவு சுமார் பத்து நாழிகைக்கு மேல் செனனம்.

**ஆங்கிலத் தேதி 27–11–1900.**

நவக்கிரஹங்களின் பாதசாரம்.

அனுஷம் 3-ல் சூரியன். திருவோணம் 3-ல் சந்திரன். மகம் 3-ல் செவ்வாய். விசாகம் 3-ல் புதன் [வக்ரீ]. கேட்டை 3-ல் குரு. சித்திரை 4-ல் சுக்கிரன். மூலம் 4-ல் சனி. அனுஷம் 2-ல் ராஹு, கிருத்திகை 4-ல் கேது.

1. சந்திரன் மகரம், சனி தனுஸ், புதன், சுக்கிரன் துலாம், குரு, சூரியன், ராஹு இவர்கள் விருச்சிகம், செவ்வாய் சிங்கம், கேது விருஷபம், இலக்கினம் கடகம். இவ்வாறு கிரஹ நிலைகள் இருக்கப் பலன்களைச் சொல்லுவீர்களாக, எனப் பார்வதி கேட்க, அத்திரி முனிவர் கூறுகின்றார்.

**வேறு**

2. தானே ஆண்பால் செநநமுறும்
தந்தை யில்லம் தென்வாசல்
மானே கீழ்மேல் வீதியது
மருகில் சந்து நீரோடை
வானோர் புகழு மீசனுமே
வடபால் காளி தங்கிடுமே
பான்மை யாக மாரி தெற்கில்
பகர்வோம் தந்தி தென்மேற்கில்.

2. இந்தக் கிரஹ நிலையில் ஆண்குழந்தை ஜனிக்கும். ஜனித்திருக்கும் வீடு தெற்குநோக்கி இருக்கும். வீதி கிழக்கு மேற்காக அமைந்திருக்கும். சமீபத்தில், பல வீதிகள் கூடுமிடமும் ஓர் நீரோடையும் இருக்கும். வடதிசையில் தேவர்கள் போற்றும் பரமசிவனும் காளிதேவியும் எழுந்தருளியிருப்பார்கள். தெற்கில் மாரியம்மன் ஆலயமும், தென்மேற்கில் விநாயகர் கோயிலும் இருக்கும்.

3. சோலை சூழி தானுண்டு
சிற்றூர் வைசிய குலமென்றோம்
சால இரண்டாம் ஜனனமுமாய்
ஜனிப்பான் என்றோம் சங்கரியே
ஏல அன்னை தந்தைதுணை
யீன்ற சுதர்கள் மனையோகம
கால பலத்தை இந்நூலில்
கருதக் கேண்மோ காதலியே.

3. சுற்றிலும் சோலைகளுண்டு. அப்படிப்பட்ட சிறிய ஊரில் வைசிய குலத்தில் ஜனிப்பான. இவன் தன்னுடைய தாய் தந்தையர்களுக்கு இரண்டாவது பிள்ளையாவான். பார்வதிதேவியே! இவனுடைய தாய், தந்தை, சகோதரர், மனைவி, புத்திரர் இவர்களைப் பற்றிய செய்திகளை இந் நூலில் சொல்லுகின்றோம். கேளுங்கள். பார்வதியே!

4. ஈன்ற தந்தை குணங்கேளாய்
இன்பச் சொல்லன் இருநிறத்தன
குன்று மனத்தன் வறுமையிலான்
குலத்தோர் மதிப்புக் கொண்டிடுவன
கன்று காலி விருத்தியிலான்
கடவுள் பக்தி நிலம்சேர்ப்பன்
தனறி தன்னால் யோகமுறும்
சல்லியங் கொள்ளான் சங்கரியே.

4. தந்தையின் குணங்களை முதலில் சொல்லுகின்றோம். கேளுங்கள். இனிமையாகப் பேசுபவன். கருத்த மேனியன். உத்ஸாஹம் குன்றாதவன். வறுமை இல்லாதவன். தன் சாதியார் மதிப்பிற்குப் பாத்திரமானவன். கால்நடைகளை அபிவிருத்தி செய்யாதவன். கடவுளிடம் பக்தி கொண்டவன். பூமிகளைச் சேர்ப்பான். இப்படிப்பட்ட தந்தையினால் குழந்தைக்கு [இந்தக் கடக லக்கின புத்திரனுக்கு] நல்ல யோகமுண்டு. கடன் இராது. பார்வதியே!

5. சங்கை யறவே தான்புகலும்
சத்தான கட்டு வார்த்தைகளை
நங்கை மார்கள் மோகமுளான்
நாட்டில் வணிபம் தான்செய்வன்

கங்கை யணிந்தோன் தன்தொண்டு
    கடந்தோர்க் கன்ன மீவனிவன்
தங்க முதவி சிலர்க்குச்செய்வன்
    சகடு முடையன் சனிநாளில் ;

5. கேட்பவர்களின் சந்தேகங்கள் நீங்கும்படியாக அழகான வார்த்தைகளைப் பேசுவான். ஸ்திரீகளிடம் மோஹம் கொண்டவன். வியாபாரம் செய்வான். கங்கையைத் தரித்தவரான பரமசிவனுக்குத் தொண்டு செய்வான். துறவிகளுக்கு அன்னதானமும் செய்வான். சிலர்க்குப் பணம் கொடுத்தும் உதவி செய்வான். இவன் (இந்த ஜாதகன் தந்தை) சனிக்கிழமையில் ;

6. வருவான கொச்சை ராசிதனில்
    மருவும் வாத சூடென்றோம
அரிரேகையுமே கரத்திலுறும்
    அல்பர் நேசம் செய்யாதான்
மறவான் உதவி ஈகைகொஞ்சம்
    மன்னன் துணைஆண் காணும்
நெறியைக் காப்பன் பெண்ணிரண்டு
    நிகழ்த்தக் கேண்மோ நிமலியரே.

6. மேஷலக்கினத்தில் தோன்றுவான். வாதசூடான தேஹம் அமைந்தவன். கையில் விஷ்ணுரேகை அமைந்திருக்கும். அல்பர்களிடம் நட்புக் கொள்ளமாட்டான். தான் பிறரிடமிருந்து அடைந்த உதவியை மறக்காதவன். ஈகை குணமும் உண்டு. இவனுக்குச் சகோதரர் இருக்க மாட்டார்கள். இரண்டு சகோதரிகளுண்டு. தருமநெறியைத் தவறாமல் காப்பான். பார்வதி தேவியே ! மேலும் சொல்லுகிறோம் கேளுங்கள்.

**வேறு**

7. சொல்லியவிக் குணத்தானுக் கிந்தப் பாலன்
    தோன்றுவான் இவன்குணத்தைச் செப்பக் கேண்மோ
எல்லை விருத்தி செய்திடுவன் கல்வி மானும்
    இன்சொல்லன் இளைத்தோர்மேல் பிரியு முளும்
வல்லியர்கள் மோகமுளன் மறுத்துக் கூறான்
    வணிபங்கள் பலவாக மாரன் செய்வன்
இல்லமது வேறென்றாய்ச் செய்வா னாகும்
    இரணியங்கள் ரத்தினபணி யெய்து மென்றோம்.

7. மேலே சொல்லப்பட்ட குணங்கள் நிறைந்த தகப்பனுக்கு இந்தப் பாலன் பிள்ளையாகத் தோன்றுவான். இவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். நிலத்தின் எல்லைகளை விருத்தி செய்வான். [அஃதாவது நிலங்களைச் சேர்ப்பான்] கல்வி உடையவனாகவும், இன்சொல் சொல்லுபவனாகவும் இருப்பான். ஏழைகளிடத்தில் அன்புடையவன். பெண்களிடம் மோஹம்

கொண்டவன். பிறர் பேசியதை ஆக்ஷேபித்துப் பேசமாட்டான். அனேக வித வியாபாரங்களைச் செய்வான். இவன் ஜனித்த வீட்டைத் தவிர வேறு ஒரு வீட்டையும் நிர்மாணிப்பான் தங்கத்தையும் பலவித ரத்தின ஆபரணங்களையும் அடைவான்.

8. தந்தைமொழிக் கிடருரையான் உள்ளன் போடும்
சகடுடையன் சகலரையும் வசியம் கொள்வன்
வந்தவர்க் கன்னமீவன் மாமி ரெண்டு
வளர்சோலை கூவலது உண்டு செய்வன்
நிந்தையிலான் மாந்தளிர்போல் நிறத்த னாகும்
நிதம்சீலன் சிவத்தொண்டு நிமலன் செய்வன்
கந்தன்மேல் பக்தியுளன் தலங்கள் செல்வன்
கடன்கொளான் இடுக்கமிலான் காம னொப்பான்.

8. தந்தையின் சொற்படி உள்ளன்போடு நடப்பான். வண்டி முதலிய வாஹன வசதிகள் உள்ளவன். எல்லோரையும் தன் வசப்படுத்துவான். இவனை அண்டியவர்க்கு அன்னதானம் செய்வான். இவனுக்கு மாமியர் இருவராவர். சோலைகளையும் கிணறுகளையும் நிறுவுவான். இவனை ஒருவரும் பழிக்கமாட்டார்கள். மாந்தளிர் போன்ற நிறமுடையவன். எப்பொழுதும் வழுவாத நன்னடத்தை யுள்ளவன். பரமசிவனுக்குத் தொண்டுகளைச் செய்வான். ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமியிடத்தில் விசேஷ பக்தி கொண்டவன். பல புண்ணிய க்ஷேத்திரங்களுக்கு யாத்திரை செய்வான். கடனில்லாதவன் வாழ்க்கையில் இடையூறுகளும் இரா. மன்மதனைப்போல அழகுள்ளவன்.

9. தன்துணைமுன் பெண்ணொன்று தீர்க்க மாகும்
சாற்றுகிறோ மவள் குணத்தைச்சரச வார்த்தை
பொன்னிறமாம் கபடமிலாளுகை சாலி
புகழ்ந்தோரை ஆதரிப்பவள் புறஞ்சொல் லாதாள்
அன்னியர்கள் மதிக்கஉய்வள் வரனு மேற்கில்
அணுகிடுமே சுதராண்பால் மூன்று என்றோம்
கன்னிமாரிருவரென்றோம் ஐந்தும் தீர்க்கம்
காதலியும் வறுமையிலாள் கனத்த புத்தி.

9. இப்படிப்பட்ட கடகலக்கின பாலகனுக்கு மூத்த சகோதரி ஒருத்தி உண்டு. அவள் நீண்ட ஆயுளுடன் இருப்பாள். அவளுடைய குணங்களைச் சொல்லுகின்றோம். சரசமாக வார்த்தையாடுபவள். பொன்போன்ற நிறமுடையவள். கபடமில்லாதவள். மதிநுட்பம் படைத்தவள். தன்னைப் புகழ்ந்தவர்களை மிகவும் ஆதரிப்பாள். மறைவில் ஒருவருடைய குற்றங்களையும் சொல்லாதவள். பிறர் மதிக்க வாழ்வாள். அவளுக்குக் கணவன் மேற்குத் திசையில் ஜனித்திருப்பான். அவளுக்குப் பிள்ளைகள் மூவராவர் பெண்கள் இருவராவர். இவ்வைந்தும் நீடித்து வாழ்வர். அவள் சிறிதும் வறுமை இல்லாதவள். மேலும் விசால மனம் படைத்தவள்.

வேறு

10. இவன்பின்னல் துணைபெண் ணொன்று
 இயம்புவோ மாண்பா லவ்வாறு
நவனியில் தீர்க்க மெய்தும்
 நவிலுவோம் பிணபால் சேதி
அவை நிற்க உதித்தோ னுக்கே
 அறிவிப்போம் மணத்தின் காலம்
தவசியே யீரெட் டாண்டில்
 தாய்வழி குடலில் நேரும்.

**10.** இவனுக்குப் பின் பிறந்த சகோதரி ஒருத்திபுண்டு. அவ்வாறே சகோதரனும் ஒ நவன். எல்லோரும் தீர்க்காயுளுடன் வாழ்வார்கள். அவர் களைப்பற்றிய விவரங்களைப் பின்பு தெரிவிக்கின்றோம். கடக லக்கினத்தில் உதித்தவனுக்கு மணத்தின் காலத்தைச் சொல்லுகின்றோம். இவனுடைய பதினாறுவது வயதில் விவாஹம் நடைபெறும். பெண் மேற்குத்திசையில் தாய்வழி பந்துக்கள் குடும்பத்தில் ஜனித்திருப்பாள்.

வேறு

11. நேரு மாது குணம்கேளாய்
 நீண்ட புத்தி யூகைமுண்டு
தேறினோர்க் கன்னந் தானீவள்
 தீரன் மனம்போல் தானுய்வள்
வேறு நடக்கை காணாதாள்
 விரத மேற்பள் வீண்வம்பு
கூறா ளென்றோம் சொல்லடக்கம்
 குலத்தோர்க் கன்பள் கொடியிடையே.

**11.** இவன் மனைவியின் குணத்தைக் கூறுகின்றோம். தாயே! கேளுங் கள். நேர்மை உள்ளவள். சிறந்த மதியூகி. தன்னை வந்தடைந்த துறவி கட்கு அன்னமிடுவாள் மிக்க தைரியசாலி. கெட்ட நடத்தையில்லாதவள், கிருத்திகை விரதம், ஏகாதசி விரதம் போன்ற விரதங்களை அனுஷ்டிப்பாள். பிறரைப்பற்றி வம்பு பேசாதவள். அடக்கமான சொற்களைச் சொல்லுவாள். தன் உறவினருக்கு இனியவளாகவும் நடந்து கொள்வாள்.

12. இடையாட் கன்னை........கும்
 இளைத்தோர்க் கன்னம் தானீவள்
சூடியாள் தனக்குச் சுதரேழு
 தோன்று மதிலே ஆண்ரெண்டு
ஆடரம்பக் கன்னி மூன்றுமே
 ஐந்து தீர்க்க மென்றுரைப்போம்
விடமு மைந்தி லிருப்பதனல்
 விரையம் முதலி ரண்டேயாம்.

12. தரித்திரர்களுக்கு உணவு அளிப்பாள். கணவனது குறிப்பறிந்து நடப்பவள். அவளுக்குக் குழந்தைகள் ஏழு பிறக்கும். அவைகளில் ஆண்கள் இரண்டும் பெண்கள் மூன்றும் தீர்க்கமாக இருக்கும். ஐந்தா மிடத்தில் ராஹு இருப்பதால் முதலிரண்டு குழந்தைகளும் நீடித்திரா. [புத்திரபாவம் என்று சொல்லப்படும் ஐந்தாமிடத்தில் பாபகிரஹங்களிருந் தால் புத்திர தோஷமுண்டு என்பது இங்கு அறியத்தக்கது.]

### வேறு

13. அன்னைகுணம் கூறுகின்றேம் மாஞ்சி வப்பள்
அடைந்தோரை ஆதரிப்பள் அறிவோர் நேயள்
பொன்பணிக ளிச்சையுண்டு பொறுமை யுண்டு
பித்தபிணி பொருந்திடுமே வறுமை காணுள்
தன்துணைஆண் மூன்றென்றேம் கன்னி ரெண்டு
சாற்றுகிறேம் தீர்க்கமதாய்க் குடகு இல்லம்
அன்னவர் சின்னுளில் வேருய்ச் செல்வர்
அவர்பலத்தைப் பின்பாலில் அறி விப்போம்யாம்.

13. இவனுடைய தாயின் குணத்தைக் கூறுகின்றேம். மாந்தளிர் போல் சிவப்பு நிறமுள்ளவள். அண்டியவர்களை ஆதரிப்பாள். அறிவாளிகளுடன் நட்பு இருக்கும். தங்க நகைகள் ஆசை உள்ளவள். பொறுமைசாலி. பித்த நோயால் பீடிக்கப்படுவாள். வறுமை இல்லாதவள். அவளுக்குச் சகோதரர் கள் மூவர். சகோதரிகள் இருவர். அவர்களெல்லோரும் நீடித்து வாழ் வார்கள். மேற்குத் திசையில் அவள் பிறந்த வீடு. அவள் சில நாட் களுக்குப் பிறகு வேருக [தனியாக] வாழ்வாள். இந்த விவரங்களைப் பிறகு அறிவிக்கின்றேம்.

14. மாதுருதன் பூர்வமதை அறிவிப் போம்யாம்
ஆலங்காட் டதற்குக்கீழ்ப்பால் சிற்றூர் தன்னில்
நீதிலாக் கங்கைகுலம் தானு தித்துச்
சேயர்களு மனேகமதாய் அறத்தி லிச்சை
ஓதுவார் பத்தியதாய்ப் பவமில் லாமல்
ஒதுங்கினுள் காலன்பதி வரன்முன் னுக
வேதனுமே வரையவந்தாள் வைசியச் சேயாய்
வித்தகியும் வறுமையிலாள் யோக சாலி.

14. தாயின் பூர்வ ஜன்மத்தைக் கூறுகின்றேம். ஆலங்காடு என்ற கிராமத்திற்குக் கீழ்த்திசையில் சிறிய ஓர் ஊரில் வேளாள குலத்தில் உதித்திருந்தாள். பல குழந்தைகளுடன் சுகமாக வாழ்ந்து வந்தாள். தருமத்தில் பற்றுள்ளவளாக இருந்தாள். பக்தியுடன் ஈசன் நாமங்களை ஓதினுள். இவ்வாறு இருக்கையில் பாவமில்லாதவளாய்த் தன் கணவன் இறப்பதற்கு முன்பே இவள் யமன் உலகை அடைந்தாள். பிறகு பிரம்ம தேவனுல் இங்கு வைசியகுலத்தில் பிறப்பிக்கப்பட்டாள். வறுமை இல்லா தவள். மிக்க அதிருஷ்டம் வாய்ந்தவள்.

வேறு

15. பின்ஜன்மம் மதுரை தன்னில்
 பிறப்பளாம் சைவச் சேயாய்ப்
பொன்பொரு ளுடைய ளாகிப்
 புகழ்ச்சியாய் வாழ்வா ளாகும்
தந்தையின் பூர்வம் தன்னைச்
 சாற்றுவோம் பழனி தன்னில்
விந்தையாய் வடுகர் வர்க்கம்
 மேவினு னென்று சொல்வோம்.

15. இவளுடைய பின்ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றேம். மதுரை மாநகரில் சைவ வமிசத்தில் பிறப்பாள். அந்தச் ஜன்மத்திலும் பொன், வெள்ளி, புகழ் உள்ளவளாகி, சிறப்பாக வாழ்வாள். தந்தையின் முன்ஜன்மத்தைக் கூறுகின்றேம். பழனி க்ஷேத்திரத்தில் நாயக்கர் வமிசத்தில் பிறந்திருந்தான்.

16. அரசரால் தொழிலும் பெற்று அதிகார முடைய னுகி
வருமனை மதலை யுண்டாய் வளமுள குடும்பம் பெற்றுத்
திருமகன் வாழு நாளில் செப்புவோ மூழி தானும்
குறையென்றோர்க் கிடைஞ்சல் செய்தான் கூறுவா ரேழையோர்
கள்.]

16. அப்பொழுது, அரசரால் ஜீவனத்தைப் பெற்று, அரசாங்க அதிகாரியாக விளங்கினுன். சுபிக்ஷமான குடும்பத்தோடும் குழந்தைகளோடும் திருமகள் வாசம் பொருந்தி வாழும்நாளில், அவனுக்கேற்பட்ட பாவத்தைச் சொல்லுகின்றேம். அதிகாரச் செருக்கினுல் தன்னிடம் குறையிரந்து வந்த ஏழைகளுக்கு இடைஞ்சல் செய்தான். ஏழைகள் மனம் வெறுத்துப் பின்வருமாறு கூறுவர்.

17. அதிகார பலத்தினுலே அடாவடி செய்த பாவி
வதிபன்பின் ஜன்மம் தன்னில் வர்க்கமும் நாஸ்தி யாகும்
சதியாகும் துணைஆ னுந்தான் தனியாக வாழ்வா யென்று
நிதியிலார் சொல்லிச் சென்றுர் நேர்ந்தது அந்தத் தோடம்.

17. "அதிகார பலத்தினுல் நீ அட்டூழியங்களைச் செய்தாய்; ஆகையால் பாவியாகிய உனக்கு மறு ஜன்மத்தில் சந்ததி யழியும். சகோதரனும் உனக்குத் துரோஹம் செய்வான். ஆகவே, நீ அவர்களை விட்டுத் தனியாக வாழ்வாய், என்று சொல்லிச் சென்றனர். அந்தப் பாவம் இவனைச் சார்ந்தது.

18. மாரனு மந்தி யத்தில் வளமுள தலங்கள் சென்று
தீரமாய்ச் சேது புக்கித் தேறினோர்க் கன்ன மீந்து
வீரியன் மரண மாகி வேதனால் வரையப் பட்டுப்
பாரினில் வைசியச் சேயாய்ப் பிறந்தன னென்று சொன்னோம்.

18. அந்த ஜன்மத்தில் அந்திய காலத்தில் இவன் பல புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்றும், சேதுவில் நீராடியும், துறவிகளுக்கு அன்ன தானம் செய்தும் வந்தான். இறுதியில் மரண மடைந்து, பிரம்மதேவனால் படைக்கப்பட்டு இங்கு வைசிய குலத்தில் பிறந்தான்.

19. வறுமையார் சாபம் போல வரன்துணை ஆண்கா ணனும்
பெறுந்தந்தை வர்க்கம் நாஸ்தி புகலுவோம் பால னுக்குக்
குறுமுனி புகலு கின்றார் குமரனு முன்ஜன் மத்தில்
பெருநதி சேது சென்ற புண்ணிய பலத்தி னாலே.

19. ஏழைகளின் சாபத்தால் ஆண் சகோதரர் உதவி இல்லை. தந்தை வருக்கமுமில்லை. இவ்வாறு சொன்னவுடன் அகஸ்தியமுனி ஒரு சந்தேஹத்தைத் தெளிவிக்கக் கோருகின்றார். அஃதாவது, முன் ஜன்மத்தில் செய்த பாவத்திற்கு அவன் அந்த ஜன்மத்திலேயே அந்திய காலத்தில் புண்ணிய நதிகளிலும், சேதுவிலும் நீராடியதால் பரிகாரம் ஏற்பட்டிராதோ ? சொல்லுங்கள் என்பதாம்.

20. அச்சாபம் நீங்கா தோசொல் அகதியோர் சாபம் நீங்கா
மிச்சமாய்ச் சேது புண்ணியம் மேதினில் வறுமை காணன்
நச்சணி பரம ருக்கு நல்கின நிதியின் புண்ணியம்
உச்சித யோகம் வாய்க்கும் உயர்மதி போல வோங்கும்.

20. சேது ஸ்நானத்தினால் ஏற்பட்ட புண்ணியத்தின் பயனாக வறுமை இல்லாதவனாக இருப்பானே யல்லாமல், அச்சாபத்தின் கெட்ட பலனைத் தவிர்க்கமுடியாது. பரமசிவனுக்கு இவன் செல்வத்தை அர்ப்பணம் செய்தால் அந்தப் புண்ணியத்தினால் வளர்பிறைச் சந்திரன் போல இவனது யோகம் ஓங்கிவளரும்.

21. மறுஜன்மம் கலிங்க நாட்டில் மாரனும் வைசியச் சேயாய்
உறைதவன் அரசு செய்து உத்தமன் வாழ்வா னாகும்
திருமகன் இச்சென் மத்தில் சிறுத்தோரை மோசம் செய்தும்
பெரும்பொரு ளாசை வைத்தும் பலவிதச் செட்டுச் செய்தும் ;

21. இவன் மறுஜன்மத்தில் கலிங்கதேசத்தில் வைசிய குலத்தில் பிறப்பான். அரசு செய்து சிறப்பாக வாழ்வான். இந்த ஜன்மத்தில், எளியவர்களை ஏமாற்றியும், பொருள்களில் பேராசையுடன் வியாபாரம் செய்தும் ;

22. இன்னவன் வாழ்வ தாலே இனிவரும் ஜன்மம் தன்னில்
மன்னர்தங் குலமு திக்கும் வகைதனைச் சொல்லு மென்ன
அன்னவ னிச்சென் மத்தில் அரன்தொண்டு புரிந்த புண்ணியம்
தன்குல முயர்வ தாகும் சங்கரி கேட்டி டாயே.

**22.** இவன் வாழ்க்கை நடத்தி வருவதால் மறு ஜன்மத்தில் எவ்வாறு அரசு செய்யும் குலத்தில் பிறக்க முடியும்? அதன் காரணத்தைச் சொல்லும் எனப் பார்வதி கேட்க, முனிவர் பதில் கூறுகின்றார். இந்த ஜன்மத்தில் இவன் பரமசிவனுக்கு பலவிதத் தொண்டுகள் செய்து, அந்தப் புண்ணியத்தின் பயனாக, மறு ஜன்மத்தில் உயர் குலப் பிறவியை அடைவான்.

23. ஜாதகன பூர்வம் சொல்வோ தண்டகா வனத்தி லேதான்
ஓதுவார் குலமு தித்து உயர்வான குடும்பி யாகித்
தீதுளோர்க் குதவி செய்து தேவியு மதலே யுண்டாய்ச்
சூதான கால னூடு சென்றுமே பிரமன் லக்கம் ;

**23.** ஜாதகனுடைய பூர்வ ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். தண்டகவனத்தில் பிராம்மண வமிசத்தில் பிறந்து, மனைவியையும் புத்திரர்களையும் அடைந்து, சுகமாக வாழ்ந்து வந்தான். காலக் கிரமத்தில் மரணமடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு ;

24. வந்தவ னிவனே யென்றோம் மங்கையும் கேட்க லுற்றாள்
முந்தின ஜன்மம் தன்னில் உயர்மறைக் குலமு தித்தோன்
தன்குலம் தாழ்வ தாக ஜனிக்குங்கா ரணங்க ளெவ்வாறு
பந்தமா யந்தச்சேதி பகருவீர் முனியே நீர்தாம்.

**24.** இங்கு வைசிய குலமகனாகக் கடக லக்கினத்தில் பிறந்திருக்கிறான், என்று முனிவர் சொல்ல, பார்வதிதேவி கேட்கலுற்றாள். முன் ஜன்மத்தில் வேதியர் குலத்தில் பிறந்தவன் இப்பொழுது வைசிய குலத்தில் பிறக்கக் காரணமென்ன? முனிவரே ' அந்தச் செய்தியைச் சொல்லும், எனக் கேட்டாள்.

25. முனஜன்மம் வேதம் தன்னை உரையாத குற்றத் தாலே
இந்தவோர் குலத்தில் வந்தான் இயம்புவோ மிவனின் யோகம்
தந்தைமேல் வாழ்வா னாகும் தனம்பணி அதிகம் சேர்ப்பன்
விந்தையாய்ச் செட்டுச் செய்வன் வீண்பழி ஏற்கா னாகும்.

**25.** முனிவர் கூறுகின்றார். முன்ஜன்மத்தில் பிராம்மண குலத்தில் பிறந்தும் வேதமோதாத குற்றத்தால் வைசிய குலத்தில் இப்போது பிறந்திருக்கிறான். இவனுடைய யோகங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். தந்தையின் வாழ்க்கையைக் காட்டிலும் சிறப்பான வாழ்க்கையை நடத்துவான். செல்வத்தையும் ஆபரணங்களையும் மிக அதிகமாகச் சேர்ப்பான். பலர் மெச்சும்படி வாணிபம் செய்வான். கெட்ட பெயர் இவனுக்கு ஏற்படாது.

26. பிரபல பூமி சேர்ப்பன் புண்ணிய மனத்த னாகும்
அரன்தொண்டு புரிவா னாகும அவனியில் புகழு மேற்பன்
பறைபள்ளு உடைய னாகும் பசித்தோர்க்கு அன்ன மீவன்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

26. அதிகப் பூமியைச் சேர்ப்பான். மனத்தில் தூய சிந்தனை உள்ளவன். பரமசிவனுக்குப் பக்தியுடன் பணிகள் செய்வான். புகழுள்ளவனுவான். பல வேலையாட்களை உடையவன். பசித்தவர்க்கு அன்னதானம் செய்வான். ஸ்ரீவிநாயகரைப் பெற்ற தாயே! மேலும் சொல்லுகின்றோம், கேளுங்கள்.

27. முப்பது ஆறு ஆண்டில் மேடமா தத்திலே தான்
செப்புவோம் தந்தை கண்டம் குருதசை புகரின் புத்தி
ஒப்புடன் நடக்கு மென்றோம் உரைத்தது தப்பா தாமே
அப்பணி சடையோன் தேவி யருள்மொழி குன்றி டாது.

27. இவனுடைய தந்தையின் மரண காலத்தைச் சொல்லுகின்றோம். இவனுடைய முப்பத்தாறுவது வயதில் சித்திரை மாதத்தில் இவனுடைய தந்தை மரணமடைவான். அப்பொழுது இவனுக்குக் குருதசையில் சுக்கிர புக்தி நடைபெறும். பார்வதி தேவியே! நாங்கள் சொன்னமொழி தப்பாது நடக்கும்.

28. நாற்பது மூன்று ஆண்டில் [1]நற்றேளின் மாதம் தன்னில்
கூப்பிடு வானுங் காலன் குறித்ததோ ரன்னை தன்னை
ஏற்கவே குருவின் காலம் இசைந்தசுக் கிரனின் புத்தி
தீர்ப்பாக நடக்கு மென்றோம் செப்பின மொழிகுன் றுவே.

28. இவனுடைய தாய் இவனது நாற்பத்துமூன்றும் வயதில் கார்த்திகை மாதத்தில் மரணமடைவாள். முன் பாட்டில் குருதசை சுக்ர புத்தியில் தந்தை மரணமாவான் என்று சொல்லி விட்டோம். இம் மொழிகள் தப்பா.

29. இருநான்குள் தந்தை அன்னை ஏகுவாள் கால னூடு
திருமகன் தனக்குச் சொல்வேன் புந்தியின் தசையே யாகும்
அறுபது ஏழு ஆண்டில் ஆவணி மாதம் தன்னில்
குறைபக்கம் சஷ்டி தன்னில் குறிக்கிறோ மார கங்கள்.

29. ஜாதகனது எட்டு வயதிற்குள் தந்தையின் தாய் (பாட்டி) மரணமாவாள். ஜாதகனின் மரண காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். அறுபத்தேழாவது வயதில் ஆவணி மாதத்தில் கிருஷ்ண பக்ஷத்தில் ஷஷ்டி திதியில் தந்தை மரணமடைவான். அப்பொழுது இவனுக்குப் புததசை நடைபெறும்.

30. இது மட்டில் ஜாத கர்க்கு எய்தாதோ மார கங்கள்
விதவிதப் பிணியும் நேரும் வெள்ளியும் நாலில் தங்க
அதுவினை நிவிர்த்தி யாகும் அலரிமுன் பனிபோல் நீங்கும்
துதிசெய்தோர் தம்மைக் காக்கும் தோகையே கேட்டி டாயே.

[1] கார்த்திகை மாதம்.

30. ஆனுல், அதற்குமுன் மாரகம் ஒன்றும் இவனுக்கு ஏற்படாதோ? எனப் பார்வதி கேட்க, முனிவர் கூறுகின்ருர். விதவிதமான பிணிகள் தோன்றும். ஆயினும் சுக்கிரன் நான்காமிடத்தில் இருப்பதால், சூரியனைக் கண்ட பனிபோல அவைகள் சீக்ரைத்தில் நீங்கும். தோத்திரஞ் செய்ப வர்களைக் காக்கும் பார்வதி தேவியே! மேலும் கேளுங்கள்.

31. ஜனித்திடுங் காலம் தன்னில் திருவோண மூன்ரும் பாதம்
குனித்திடு மதியி ருப்புக் கூறுவோ மாண்டு நாலும்
கனமுடன் திங்க ளொன்றும் கழறுவோம் பலனை யாங்கள்
துணைவிருத்தி பூமி சேரும் சூதமாம் அன்னை வர்க்கம்.

31. இவன் ஜனித்த காலத்தில் சந்திரதசையில் இருப்பு வருஷங்கள் நான்கும், மாதம் ஒன்றுமாம். திருவோண நக்ஷத்திரம் மூன்ரும் பாதமாம். இந்தத் தசையின் பொதுப் பலன்களைக் கூறுகின்ரோம். சகோதர் விருத்தியுண்டு. பூமிகள் சேரும். தாய் வருக்கத்தில் சூதகம் (அசுபம்) நேரும்.

32. தந்தைதாய்ப் பிணியும் கொஞ்சம் ஜாதகன் தனக்கு ரோகம்
நொந்திடும் காலி தானும் நீண்டதோர் கலகம் நேரும்
பிந்திய பாகம் தன்னில் பேசுவோம் விவர மாக
இந்திர னிறைஞ்சு மாதே இதுபூர்வ பாகந் தானே.

32. தந்தைக்கும் தாய்க்கும் நோய் வரும். ஜாதகனுக்கும் ரோகங்களேற்படும், கால் நடைகளுக்குச் சேத முண்டாகும். ஒரு வழக்கு, நீண்ட காலம் நடைபெறும். பார்வதி தேவியே! இது பூர்வபாக மகையால் சுருக்கமாகச் சொல்லி இருக்கின்ரோம். பின் பகுதியில் விவரமாகக் கூறுகின்ரோம்.

## ஜாதகம் 7

1. பிறைவினை ராகு மேடம் புதன்குசன் பரிதி வண்டி
குருபுகர் கன்னி யாகக் கோலதில் கேது தங்கக்
கரியவன் மான தாகக் கடகமும் ஜன்ம மாக
உரைகுவீர் பலனை யென்று உத்தமி கேட்க லுற்றாள்.

| | | | |
|---|---|---|---|
| | ராகு | | சந்திரன் |
| | இராசி சக்கரம் | | லக்கினம் புதன் செவ்வாய் சூரியன் |
| சனி | | | |
| | | கேது | குரு சுக்கிரன் |

[1]. பவ வருஷம் ஆடி மாதம் 26-ந் தேதி ஞாயிற்றுக்கிழமை காலையில் ஜனனம்.

**ஆங்கில தேதி 9–8–1874.**

நவக்கிரஹங்களின் பாதசாரம்.

ஆயில்யம் 3-ல் சூரியன். திருவாதிரை 4-ல் சந்திரன். புஷ்யம் 4-ல் செவ்வாய். புஷ்யம் 2-ல் புதன். உத்திரம் 4-ல் குரு. உத்தரம் 3-ல் சுக்கிரன். சிரவணம் 3-ல் சனி. அசுவினி 3-ல் ராகு. சுவாதி 1-ல் கேது.

1. சந்திரன் மிதுனத்திலும் ராகு மேஷத்திலும், புதன் செவ்வாய் சூரியன் கடகத்திலும், குரு சுக்கிரன் கன்னியிலும், கேது துலாத்திலும், சனி மகரத்திலும் இருந்து, இலக்கினம் கடகமாக, இருந்தால், இவ்வாறுள்ள கிரஹ நிலையில் பிறந்த குழந்தையின் பலன்களைச் சொல்லுவீர்களாக, என்று பார்வதி கேட்டாள்.

2. அத்திரி சொல்லு கின்றார் ஆணது ஜனன மாகும்
வித்தக னில்லம் சொல்வேன் மேல்வாடை வடதென் வீதி
உத்தரம் மாயோன் வாசம் உமையவ ளீசன் கீழ்ப்பால்
பத்திர காளி மீனம்[1] பாஞ்சாலி வடமே லாகும்.

2. அத்திரி முனிவர் பலன்களைக் கூறுகின்றார். மேற்கூறியவாறுள்ள கிரக நிலையில் பிறந்த குழந்தை ஆணாகும. வீதி தெற்கு வடக்காக அமைந்திருக்கும், வீடு கிழக்கு நோக்கி இருக்கும், வட திசையில் விஷ்ணுவின் ஆலயமும் கிழக்கே பார்வதி பரமேசுவரன் கோயிலும். வடக்கே பத்திரகாளி கோயிலும் வடமேற்கே திரௌபதியம்மன் கோயிலும் இருக்கும்.

---

[1] வடக்கு.

3. இன்னமும் பலதே வாசம் இலகிய சமவூர் தன்னில்
முன்குல முதிப்பா னாகும் மொழிகிறோ மிவன்தன் யோகம்
அன்னையின் தந்தை யோகம் அவன்துணை களத்திர புத்திரர்
உன்னத முன்பின் ஜன்மம் உரைக்கிறோம் கேளும் தாயே.

3. இன்னும் பல தேவாலயங்களும் அவவூரில் உண்டு. அப்படிப்பட்ட ஊரில் பிராம்மண வமிசத்தில் உதிப்பான். தாயே! இந் நூலில் அவனுடைய தாய், தந்தை, சகோதரன், களத்திரம் புத்திரர் இவர்களின் யோகங்களைப் பற்றியும், முன் பின் ஜன்மங்களைப்பற்றியும் சொல்லு கின்றோம். கேட்டருளவேண்டும்.

4. தந்தையின் துணையண் ஒன்று சத்திமா ரிருவ ரென்றோம்
எந்தையே பிதாகு ணத்தை யியம்புவோ மாநி றத்தன்
முந்தின கல்வி கற்பன் உண்மையா மனத்த னாகும்
சிந்தையில் கபடு மில்லான் சீலவா னென்று சொல்வோம்.

4. இவனுடைய தந்தைக்குச் சகோதரர் ஒருவர், சகோதரிகள் இருவர். பிதாவின் குணத்தைச் சொல்லுகின்றோம். மா நிறமுள்ளவன். நல்ல கல்வியைக் கற்றறிந்தவன். நேர்மையான மனம் படைத்தவன். நெஞ்சில் கள்ளமில்லாதவன். நல்ல நடத்தையுள்ளவன்.

5. கல்வியல் ஜீவிப் பானும் கரமதில் கமல ரேகை
நல்லவ னாகி வாழ்வன் நயமுள வார்த்தை கூறுவன்
மல்லினில் செல்லா னாகும் மாதர்க்கு உபதே சிப்பன்
புல்லிய புத்தி யில்லான் பூமியை யளந்தோன் பத்தி.

5. தான் கற்ற கல்வியைக்கொண்டு ஜீவனத்தை நடத்துவான். கையில் பதுமரேகை இருக்கும். எல்லோருக்கும் நல்லவனாக நடந்து கொள்ளுவான. நயமான வார்த்தைகளைச் சொல்லுவான். சண்டை சச்சரவுகளில் ஈடுபட மாட்டான். மாதருக்கு உபதேசம் செய்வான். விசாலமான புத்தி உடையவன். பூமியை அளந்த திருமாலிடம் மிக்க பக்தி;

6. கொள்ளுவான் கிருஷி யில்லான் குலவுவான் தலவா சங்கள்
விள்ளவே யுரைப்பா னாகும் வேதசாத் திரங்கள் சொல்வன்
தள்ளுவான் அல்பர் தம்மைச் சதுஷ்பாதம் விருத்தி யில்லான்
நள்ளிருள் விளக்கு மெங்கள் நாயகி கேட்டி டாயே.

6. உள்ளவன். விவசாயத்தில் இஷ்டமில்லாதவன். பல புண்ணிய க்ஷேத்திரங்களில் ஆசையோடு வாசம் செய்வான். தெளிவாகப் பேசுவான். வேத சாஸ்திரங்களைப் பிறர்கேட்குமாறு எடுத்துச் சொல்லு வான். தாழ்ந்தவர்களின் சகவாசத்தை விலக்கி விடுவான். கால் நடைகளை அபிவிருத்தி செய்வதில் நோக்க மில்லாதவன். இருளில் விளக்கு போல் அஞ்ஞான இருளைப் போக்கும் தேவியே! மேலும் சொல்லுகிறோம். கேளுங்கள்.

7. சொன்னவிக் குணத்தா னுக்குச் சுதனுமே உதிப்பா னாகும்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அழகுளான் இருநி றத்தன்
பின்னமில் லாத தேகம் பூமிகள் சேர்ப்பா னாகும்
கனமனம் கபடு கொஞ்சம் கரமதில் மாலின் ரேகை.

7. இப்படிப்பட்ட குணங்கள் உள்ள தந்தைக்கு இந்த ஜாதகன் ஜனித்திருப்பான். அவனுடைய குணங்களைக் கூறுகின்றோம். அழகுள்ளவன். கருத்தமேனியான். பின்னமில்லாத சரீரம் வாய்ந்தவன். பூமிகளைச் சேர்ப்பான். கல் நெஞ்சன். மனத்தில் சிறிது கள்ளமுண்டு. கையில் விஷ்ணு ரேகை உடையவன்.

8. இருவித வார்த்தை யுண்டு இளமனம் போல காட்டும்
அரிபத்தி வேட தாரி யாரையும் நேசம் கொள்வன்
விரைவினில் நடக்க வல்லன் வெஞ்சின முன்னே காட்டும்
புரைசொல்வன் சமமாம் கல்வி போஜன வறுமை காணான்.

8. இருவிதமாகப் பொருள்படும்படியான வார்த்தைகளைச் [சிலேடை வார்த்தைகளை] சொல்லுவான். தான் மிக்க இளகிய மனம் உள்ளவன் போல் பிறருக்குத் தோற்றமளிப்பான். விஷ்ணு பக்தி உண்டென்று பிறர் எண்ணும்படி வேஷம் தரிப்பான். உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்ற வித்தியாசமின்றி எல்லாரிடத்தும் நட்புக்கொள்ளுவான். வேகமாக நடக்கும் இயல்புள்ளவன் தனது சினத்தை முதலிலேயே காட்டி விடுவான். ரகசியத்தை வெளியிட்டு விடுவான். சிறிது கல்வியறிவு உடையவன். போஜனத்திற்குக் குறைவில்லாதவன்.

9. கைமுதல் பின்னு ளுள்ளான காதலி பட்ச னவன்
சொல்லதைக் காப்பா னாகும் சுகதுக்க மிரண்டு முள்ளான்
மல்லான வார்த்தை யுண்டு மருவிடும் நாபிச் சூடு
புல்லிய புத்தி கொஞ்சம் புகலுவான் தந்திர வார்த்தை.

9. பிற்காலத்தில் இவனுடைய கையில் சிறிதுசெல்வம் சேரும். மனைவியிடத்தில் அன்புள்ளவன். சொன்ன சொற்படி நடப்பான். இவனது வாழ்க்கையில் சுகம், துக்கம் இரண்டும், நிறைந்திருக்கும். இவனது வார்த்தைகளால் கலகமுண்டாகும். நாபியில் சூடு தங்கி இருக்கும். சிறிது அல்ப புத்தியும் உள்ளவன். நயவஞ்சகமான வார்த்தைகளைப் பேசுவான்.

10. துணைவர்கள் ஐந்து தோன்றும் செப்புவோ மாண்பால் ரண்டு
கனமுடன் விருத்தி யாகும் கன்னிமார் மத்தி யத்தில்
பிணையான கால னோடு போவரே இருவ ருந்தான்
சினமிலாத் துணையாண் சேதி செப்புவோம் பின்பா கத்தில்.

10. இக்கடகலக்கின மகனுக்கு ஐந்து சகோதர சகோதரிகளாவார்கள். அவர்களில் ஆண்கள் இருவரும் பெண்கள் மூவருமாவர். சகோதரர்கள் நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள். சகோதரிகள் மூவரும் நடுத்தர வயதில் மரணமடைவார்கள். இரு சகோதரர்களைப் பற்றிய வரலாற்றைப் பின் பாகத்தில் சொல்லுகின்றோம்.

11. இருபது மூன்று ஆண்டில் எய்திடும் பாரி தானும்
வருங்கன்னி குடகு திக்கில் மாதுலன் மகளைக் கொள்வன்
திருமக ளொப்ப தாகும் செல்வியும் யோக சாலி
வருவோரை ஆதரிப்பாள் மறித்துரை கூறு ளாகும்.

11. இந்த சாதகனுக்கு இருபத்து மூன்றும் வயதில் விவாஹம் நடைபெறும். மேற்குத் திசையில் ஜனித்த மாமன் மகளை மணப்பான். அவள் மஹாலக்ஷ்மிக்குச் சமமானவள். மிக்க அதிருஷ்ட முள்ளவள். வரும் விருந்தாளிகளை உபசரிப்பாள். பிறர் சொல்லும் வார்த்தைகளை ஆக்ஷேபிக்கும் சுபாவமில்லாதவள்.

12. சீலமும் அறத்திலிச்சை தேறினோர் தமக்கு அன்பள்
காலத்தை அறிந்து ரைப்பள் கனத்தபுத் திகளு முண்டு
மால்பத்தி விரதம் பூண்பள் மாமியைக் காணு ளாகும்
தூலமாந் தேகம் பின்னல் சொற்சுகம் நாபிச் சூடு.

12. நல்ல சீலமுடையவள். தருமத்தைச் செய்வதில் ஆசைகொண்டவள். தன்னை அண்டியவர்களுக்கு இனியளாவள். இடம் பொருள் ஏவலறிந்து பேசுவாள். உதாரமனப்பான்மை கொண்டவள். திருமாலிடம் விசேஷ பக்தியுண்டு. கிருச்சிரம் சாந்திராயணம் முதலிய விரதங்களை அனுஷ்டிப்பாள். மாமியாரைக் காணமாட்டாள். [இந்த ஜாதகனின் விவாஹத்திற்கு முன்பே இவன் தாய் இறப்பாள் என்பது கருத்து.] இவளது உடல் சிறிது பருத்திருக்கும். நாபியில் சூடு உள்ளவள்.

13. சுதர்களு மறுவர் தோன்றும் செப்புவோ மாண்பா லொன்று
மதிமுகப் பெண்பால் ரெண்டு வரைகிறோம் தீர்க்க மாக
முதல்சுதர் தோஷ மெய்தும் மொழிகுவீ ரந்தச் சங்கை
மதலைதா னத்தோன் ஜன்ம மருவியே நீச்ச மாக ;

13. இவளுக்கு ஆறு குழந்தைகள் பிறக்கும். அவைகளில் ஒன்று ஆண். மற்ற இரண்டும் பெண் குழந்தைகள். இவர்கள் தீர்க்கமாக வாழ்வார்கள். முதலில் பிறக்கும் குழந்தை நசிக்கும். அதற்குக் காரணமென்ன என்று பார்வதிதேவி வினவினாள். அத்திரி முனிவர் பதில் கூறுகின்றார். புத்திரஸ்தானாதிபதியான செவ்வாய் லக்கினத்தில் நீசனாக இருப்பதாலும் ;

14. காரிக்கு ஐந்தோன் மூன்றில் கன்னியில் நீச மாகக்
கூறினோ மந்தச் சங்கை குமரன்தன் பூர்வம் கேளாய்
வீரிய காஞ்சி கீழ்ப்பால் மிகப் பெரு மூரி லேதான்
மாரன்செங் குந்த வம்சம் மரபினி லுதித்தானென்றோம்.

14. சனிக்கு ஐந்தாமிடத் ததிபனான சுக்கிரன், மூன்றா மிடமாகிய கன்னியில் நீசனாக இருப்பதாலும் புத்திர தோஷ முண்டு என்று சொன்னோம். இவனுடைய பூர்வஜன்மத்தைக் கூறுகின்றோம். இவன் காஞ்சீநகரத்திற்குக் கீழத்திசையிலுள்ள பெரிய ஓர் ஊரில் கைக்கோலர் வமிசத்தில் பிறந்திருந்தான்.

15. நெசவுக ளதிக முண்டாய் நிமலியு மதலை யுண்டாய்ப்
பசியென்றோர்க் கன்ன மீந்து பஜனைகள் மிகவே செய்து
கசிவுள மனத்த ஞகி களத்ததோர் தலங்கள் சென்று
அசைவிலா தாகப் பந்தல் அளித்துமே கால ஞடு ;

15. நெசவுத் தொழிலை விரிவாகச் செய்து, பணம் சம்பாதித்து மனைவி மக்களுடன் சுகமாக வசித்து வந்தான். பசித்தவர்களுக்கு அன்னதானம் செய்தான். பஜனைகளில் அதிகமாக ஈடுபட்டான். எல்லோரிடமும் கருணையோ டிருந்தான். பல புண்ணிய ஸ்தலங்களுக்குச் சென்ருன். நிலைத்து நடக்குமாறு ஒரு தண்ணீர்ப் பந்தலையும் நிறுவினுன். காலப் போக்கில் மரணமடைந்து ;

16. வந்துமே பிரமன் லக்கம் மறைக்குல முதிப்பா ஞகும்
இந்ததோர் ஜன்மம் தன்னில் இவன்செயல் புகலு கின்றோம்
முந்துமால் பத்தி யுண்டு உதித்தநாள் முதலா மாக
சந்தத மரண மட்டும் சந்திரன் பிறைபோல் யோகம்.

16. முன்ஜன்மத்தில் செய்த புண்ணியத்தின் பயனுக, பிராம்மண குலத்தில் பிறந்திருக்கிருன். இந்த ஜன்மத்தில் இவன் புரியும் செயல்களைக் கூறுகின்றோம். இவனுக்குத் திருமாலிடம் பக்தி யுண்டு. பிறந்த நாள் முதல் இறக்கும் வரை இவனது யோகபாலங்கள் பிறைச் சந்திரன் போல ஓங்கி வளரும்.

17. வறுமைக ளில்லா ஞகு மாதியில் அலைச்ச லுண்டு
குறைவுறும் தாய்சு கங்கள் தோகையும் வந்த பின்பு
நிறையவே குடும்ப மெய்தும் நேமிகள் சேர்ப்பா ஞகும்
நறுமலர்க் கந்த மிஷ்டன் நாட்டினில் சல்லியம் கொள்ளான்.

17. ஏழ்மை இல்லாதவன். இளமைக்காலத்தில் சிறிது சிரமப்பட்டிருப் பான். தாய் சுகம் இவனுக்கு மட்டாகவே இருக்கும். மனைவி வந்த பின், குடும்பம் பலதுறைகளில் அபிவிருத்தியடையும். அதிகப் பூமிகளைச் சேர்ப்பான். வாசனையுள்ள மலர்கள், சந்தனம் முதலிய பொருள்களில் விருப்பமுள்ளவன். இவனுக்குக் கடன் இராது.

18. முப்பது ஆண்டு மேலாய் விசேஷமாம் யோகம் என்றோம்
செப்புவோ மரசர் பேட்டி ஜயம்செய்வன் நினைத்த வெல்லாம்
ஒப்புடன் தனங்கள் சேர்ப்பன் உலகுளோர் நேசங் கொள்வன்
கப்பிய பணிகள் சேர்ப்பன் காலாள்க ளுடைய ஞகும்.

18. இவனுடைய முப்பதாவது வயதிற்குமேல் இவனுக்கு விசேஷ யோகங் கள் நடைபெறும். அடிக்கடி அரசர் தரிசனம் ஏற்படும். ஆரம்பித்த காரியம் வெற்றியடையும். அதிகப் பணத்தைச் சேர்ப்பான். பலருடைய நட்பு இவனுக்கேற்படும். நிறைந்த ஆபரணங்களையும் அடைவான். நல்ல சேவகர்களும் இவனை வந்தடைவார்கள்.

19. யோகமெவ் விதமாய்ச் சொன்னீர் உரைப்பீர்கள் முனியே நீர்தாம்
பாகமாய் நான்கு கேந்திரம் பரறியே கிரகம் நிற்க
யோகபாக் கியங்கள் பின்னுல் பெறுவனும் நிதிநிட் சேபம்
சேகரஞ் சொல்லு மென்ன செம்பொன்னும் புகரும் கூடி ;

19. யோகங்களின் காரணங்களைச் சொல்லுங்கள் எனப் பார்வதி கேட்க, முனிவர் பதில் சொல்லுகின்ருர். நான்கு கேந்திரஸ்தானங்களிலும் கிரஹங்கள் இருப்பதால் யோகங்கள் நிச்சயம் உண்டு. ஆனுல், பிற்காலத்தில்தான் ஏற்படும். புதையலும் இவனுக்குக் கிடைக்கும். அதற்கென்ன காரணம்? என்று பார்வதி வினவினுள். முனிவர் பதிலுரைக்கின்ருர். குருவும் சுக்கிரனும் சம்பந்தப்பட்டு ;

20. மூன்றினி லிருப்ப தாலே மொழிகிரேு மந்தச் சேதி
தூன்றிய [1] முடவன் [2] சக்கரம் செல்லுங்கால் அந்தம் தன்னில்
ஈன்றிடு பலன்கள் தாமும் இதுபலன் தப்பா தாகும்
சான்ருேரை ஆதரிக்கும் சங்கரி கேட்டி டாயே.

20. மூன்ருமிடத்திலிருப்பதால் நிதி நிக்ஷேபம் கிடைக்கும். சனிமகா தசை அந்திய பாகத்தில் பலன் கிட்டும். சாதுக்களை ஆதரிக்கும் தாயே! இந்த மொழிகள் தப்பா.

**தாய்க் குணம்.**

21. அன்னைமாஞ் சிவப்ப ளாகும் ஆளனுக் கினிய ளாகும்
தன்சொலு மடக்க முண்டு தன்பணி அதிகம் கவனுள்
கன்னிகை சமயோ கத்தாள் கருதிடாள் கட்டு வார்த்தை
முன்னமே கோபங் கொஞ்சம் மேவிப்பின் சாந்த முண்டு.

21. இவனுடைய தாய் மாநிறமுள்ளவள். கணவனிடத்தில் மிக்க பக்தியுடையவள். அடக்கமான சொறகளைப் பேசுவாள். தனது உடலின் சௌகர்யங்களைக் கவனிக்கமாட்டாள். யோகம் மத்யமம். கட்டு வார்த்தைகளைப் பேசுவதில் கருத்தில்லாதவள். சிறிது முன் கோபி. ஆனுல், பிறகு மிகவும் சாந்தமாவாள்.

22. இல்லமும் குடகு வென்ருேம் இவள்துணை ஆண்பா லொன்று
வல்லிமா ரவவாறு தீர்க்கம் அவர்சேதி பின்பால் சொல்வேன
தல்லியின் பூர்வம் கேளாய்ச் சட்டநா தீசர் வாழும்
நல்லதோர் நகரம் தனனில் நாயகி கங்கை சேயாய்.

22. இவள் பிறந்த வீடு மேற்குத் திசையில் என்று முன்னமேயே சொன்னேும். அவளுடைய சகோதர வருக்கத்தைச் சொல்லுகின்ருேம். சகோதரன் ஒருவன். சகோதரி ஒருத்தி. அவர்கள் நீடித்து வாழ்வார்கள். அவர்கள் செய்தியைப் பின்பாகத்தில் கூறுகின்ருேம் இவளுடைய பூர்வ ஜன்மத்தைச் சொல்லுகினருேம். சட்ட நாதர் எழுந்தருளி இருக்கும் நகரில் (சீகாழியில்) வேளாள வமிசத்தில் பிறந்திருந்தாள்.

---

[1] சனி. [2] தசை.

23. உதித்துமே மதலை யுண்டாய் உலகுக்கு நல்லோ ளாகி
மதித்திடு குடும்பி யாகி வளமுள தலங்கள் சென்று
சதியிலா மனத்த ளாகித் தன்வரன் முன்னே மாண்டு
விதியவன் வரையப் பட்டு விளங்கினுள் பிரம்ம சேயாய்.

23. ஜனித்த பிறகு குழந்தைகளைப் பெற்று, பெரிய குடும்பம் உள்ளவளாக ஆனுள். உலகத்தாரால் நல்லவளெனப் போற்றப்பட்டாள். பல புண்ணிய தலங்களுக்குச் சென்றுள். கள்ளமில்லாத மனம் படைத்தவளாகவும் இருந்தாள். அந்த ஜனமத்தில் கணவன் இறப்பதற்கு முன்னமேயே மாண்டு, பிராம்மண குலத்தில் பிறந்து இவனுக்குத் தாயாக ஏற்பட்டுள்ளாள்.

24. குருதசை காரி புத்தி குலவுவாள் கால ளுடு
மறுஜன்மம் வேங்க டத்துள் மாதுமிக் குலத்தி லேதான்
உறைகுவாள் சுகமுண் டாகி உத்தமி வாழ்வா ளாகும்
அருமறை முடிவி லாடு மம்பிகை யாளே கேளா ய்.

24. இந்த ஜாதகனுக்குக் குருதிசையில் சனிபுக்தி நடைபெறும்போது இவள் மரணமடைவாள். மறு ஜன்மத்தில் திருவேங்கட க்ஷேத்திரத்தில் பிராம்மண ஜாதியில் பிறந்து சுகமாக வாழ்வாள். உபநிஷதங்களால் போற்றப்படும் பெருமை உடைய தாயே! கேட்டருளுங்கள்.

25. தந்தையின் பூர்வம் தன்னைச் சாற்றுவோம் சோழ நாட்டில்
வந்தனன் வைசியச் சேயாய் மானலம் செட்டுச் செய்து
தன்மனை மதலை யுண்டாய்ச் சம்பத்தாய் வாழு நாளில்
பின்னமாய் வந்த ஊழைப் பேசுவோம் தாயே கேளும்.

25. தந்தையின் முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவன் சோழ நாட்டில் வைசிய குலத்தில் உதித்து, வியாபாரம் செய்து, மனைவி மக்களுடன் சுகமாக வாழ்ந்திருக்கும் காலத்தில் இவனுக்கேற்பட்ட வினையைச் சொல்லுகின்றோம். தாயே! கேளுங்கள்.

26. அந்நகர் சூத்திர சாதி அவள்பேரில் மோகம் கொண்டு
பொன்காசு அவளுக் கீயப் புதுபோக மனுப வித்துக்
கன்னிக்குக் கருவு தங்கக் கனத்தசோ ரவிழ்த மீயப்
பின்னமாய்க் கருவு நீங்கிப் பேதையு மரண மானுள்.

26. அந்த ஊரில் வசித்து வந்த சூத்திர ஸ்திரீயிடம் மோஹம்கொண்டு, அவளுக்குப் பொற்காசுகளைக் கொடுத்து இன்பத்தை அனுபவித்தான். காலக்கிரமத்தில் அவளுக்குக் கர்ப்பமேற்பட்டது. அதை அழிப்பதற்காக இவன் அவளுக்கு ஒரு கொடிய மருந்தைக் கொடுத்தான். அதனுல் கருப்பமும் சிதைந்தது. கன்னியும் மரணமானுள்.

27. அந்தவோர் தோஷம் தானும் அனுகிற்று இவனுக் கேதான்
பிந்தியு மனைவி மாண்டு புத்திரர் பகையு மாகித்
தென்திசைச் சேதுச் சென்று தேறினுர்க் கன்ன மீந்து
தன்னக ரடைந்து மேதான் சண்டன்தன் பதிக்குப் புக்கு.

27. அந்தப் பாவம் இவனைச் சார்ந்தது. ஆகையால் மனைவி மாண்டாள். புத்திரர்களுடன் பகைமை ஏற்பட்டது. பிறகு சேதுவிற்குச் சென்று, அன்ன தானம் செய்து தன்னது நகரத்தை வந்தடைந்தான். சில நாட்களுக்குப் பிறகு மரணமடைந்தான்.

28. தலைநான்கோன் வரையப் பட்டு ஜனித்தவ னிவனே யென்றோம்
உலவிடு முன்னாழ்த் தோஷம் உறும்பாரி மத்தில் மாண்டு
கலவர புத்தி யாகிக் காவலன் சிறையாய் வாழ்வன்
நிலைமையா யிவன்பின் ஜன்மம் நிகழ்த்துவோம் தாயே கேளும்.

28. நான்முகப் பிரம்ம தேவனால் இங்குப் பிறப்பிக்கப்பட்டான். முன் ஜன்மத்தில் செய்த பாவத்தினால் இந்த ஜன்மத்திலும் மனைவி, வாழ்க்கையின நடுவிலேயே மரணமடைவாள். அந்தப் பாவத்தினாலேயே இவன் புத்தி குழம்பி, சிறையிலிருப்பது போலத் தனித்து வாழ்வான். இவனது பின் ஜன்மத்தையும் சொல்லுகின்றோம். தாயே! கேளுங்கள்.

29. அரங்கமா நகரந் தன்னில் அருளுவா னிந்தப்பாலன்
பெருமையா யிக்கு லத்தில் பிறந்துமே வரசர் பக்கல்
உறைந்துமே சீவிப் பானும் உரைத்தது தப்பா தாகும்
மருமமாய்த் தவங்கள் செய்யும் மங்கையே கேட்டி டாயே.

29 ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தில் இவன் பெருமைவாய்ந்த பிராம்மண வமிசத்தில் பிறப்பான். அரசருடைய ஆதரவும் அரசாங்க அலுவலும் பெற்று ஜீவிப்பான். ஆடம்பரமற்று (பிறர் உணராதபடி) மிக்க தவத்தைச் செய்யும் பார்வதி தேவியே! இந்த மொழிகள் பொய்யாகா.

30. முப்பது மூன்றுண் டின்மேல் மேவிடும் தந்தை கண்டம்
ஒப்புடன் ஜாத கர்க்கு உரைக்கிறோ மறு பா னேழில்
மெய்ப்புடன் [1] மகரமாதம் விளம்புவோம் கண்டந் தானும்
செப்புவோ மிவன்பின் ஜன்மம் தில்லையில் இக்கு லத்தில்.

30. இந்த ஜாதகனுடைய தந்தை, இவனது முப்பத்து மூன்றாவது வயதிற்குமேல் மரணமடைவான். ஜாதகன் தனது அறுபத்தேழாவது வயதில் தை மாதத்தில் மரணமடைவான். இந்த ஜாதகன் மறுஜன்மத்தில் சிதம்பரத்தில் பிராம்மண குலத்திலேயே பிறப்பான்.

31. பிறந்துமே கடவுள் பூசை புரிவனா மென்று சொல்வோம்
அரிவையு மிவன்பின் னாலே அந்தகன் பக்கல் சேர்வள்
சிறியவன் ஜனன காலம் ஆதிரை நாலாம் பாதம்
வருந்திங்கள் ஏழே யாகும் மங்கையே கேட்டி டாயே.

31. பிறந்து, கடவுள் பூசையைத் தப்பாது செய்வான். இவனுடைய மனைவி இவனுக்குப் பிறகு மரணமாவாள். இந்த ஜாதகன் பிறந்தபொழுது திருவாதிரை நக்ஷத்திரம் நாலாம் பாதம். ஆகவே ராகுதசையில் இருப்பு மாதங்கள் ஏழுதான். பார்வதி தேவியே! மேலும் கேளுங்கள்.

---

[1] தை மாதம்.

## ஜாதகம் 8

1. சந்திரன் அரியில் புக்கச் சார்ந்ததற் கிரண்டில் ராகு
விந்தையாம் புக ந மாக வீற்றிட அலரி கோலாய்ப்
புந்தியும் பற்ப ராகப் பூமகன் கொச்சை மந்தன்
சிந்தையாம் சாடி கேது சேலதாய் அலவன் பொன்னன்.

| | | | |
|---|---|---|---|
| குரு | செவ்வாய் | | |
| சனி கேது | இராசி சக்கரம் | | இலக்கினம் |
| | | | சந்திரன் ராகு |
| | | சுக்கிரன் சூரியன் புதன் | |

1. இஃது ஒரு கற்பனை ஜாதகம். ஒவ்வொரு ஜாதகத்தின் முடிவிலும் நக்ஷத்திரமும், தசை இருப்பும் சொல்லபடுவதுபோல் இந்த ஜாதகத்திற்குத் தெளிவாக ஒன்றும் சொல்லப்படவில்லை. இஃது ஒரு காரணம். அந்த்த பாட்டில் இவ்வாறு கிரஹநிலையில் '' **பிறக்குமானால்** '' என்று சொல்லப்படுகிறது. ஆகவே பிறக்காது என்பது அறியக்கிடக்கின்றது. இஃது இரண்டாம் காரணம். மற்றைய ஜாதகங்களில் '' **பிறக்குமானால்** '' என்று சொல்லப்படாததையும் இங்கு கவனிக்கவேண்டும். சந்திரன் ராகு சிம்மத்திலும், சுக்கிரன் சூரியன் புதன் துலாத்திலும், செவ்வாய் மேஷத்திலும், சனி கேது கும்பத்திலும், குரு மீனத்திலும், இலக்கினம் கடகமாகவும் இருந்து, இவ்வாறு கிரஹ நிலைகளில் பிறந்த குழந்தையின் பலன்களைச் சொல்லுவீர்களாக எனப் பார்வதி வினவினாள்.

2. இமையவன் மகளே கோள்கள் இந்தவாறு பலத்து நிற்க
அமைமதி நிலத்தில் சேயும் அழகுடன் ஜனிக்கு மானால்
செமையுள குழவி யாகும் செப்புவோம் கீழ்மேல் வீதி
தழைபுத னோக்கா வில்லம் தரித்திடும் கணேசன் வாசம்.

2. பர்வதராஜன் மகளே! இவ்வாறு கிரக நிலையில் ஒரு குழந்தைப் பிறக்குமானால் அஃது ஆணாக இருக்கும். வீதி கிழக்கு மேற்காக அமைந் திருக்கும். வீடு, தளிர்போன்று பசுமையான புதன்திசையாகிய வடக்கு நோக்கி இருக்கும். ஸ்ரீவிநாயகரது ஆலயமும் இருக்கும்.

3. சித்தியாம் கீழ்ப்பா லீசன் தென்பா லார் பேரூரிற் ருன்
வெற்றிச ரிந்தப் பாலன் விளங்கிய பிரம்ம கோத்திரம்
பற்றிலா ஜனிப்பா னென்று பகருவோம் கோட்களாலே
அத்திமா முகனை யீன்ற அம்மையே கேட்டி டாயே.

3. அந்த வீட்டிற்குக் கீழ்த் திசையில் ஈசன் கோயிலும் தென் திசையில் ஆறு முள. இவ்வாருன பெரிய ஊரில் முதற்பாட்டில் சொல்லப்பட்ட கிரக நிலைகளாலே இக் குழந்தை பிராம்மண வமிசத்தில் பிறந்திருக்கும், ஸ்ரீவிநாயகரைப்பெற்ற தாயே! கேளுங்கள்.

4. புகலிவன் ஜனன யோகம் புனிதனும் தந்தை யோகம்
வகையுள அன்னை யோகம் வந்திடும் இவன்முன் ஜன்மம்
புகையிலாப் பலன்க ளெல்லாம் போதமா யெடுத்து ரைப்போம்
தகைமைசேர் குடும்பச் செய்கை சாற்றுவோ மினிமே லாக.

4. இவனது யோகம், தந்தை, தாய், முன்பின் ஜன்மங்கள் இவை களைப்பற்றிச் சொல்லுகிறேம். மேலும் அவனது குடும்பவாழ்க்கையைப் பற்றியும் சொல்லுகிறேம்.

5. அன்னையே தந்தை வர்க்கம் ஆண்பாலின் பலத்தைக் காணேம்
கன்னியு மொன்று நிற்கும் கனத்திடா வதுவு மாயும்
பின்னையும் பாலன் வர்க்கம் பேசுவோ மதனைக் கேளாய்
வன்னமாம் அவனின் வர்க்கம் வளமுள ஆண்பா லொன்று.

5. தாயே! இவனுடைய தந்தைக்குச் சகோதரன் இருக்கமாட்டான். ஒரு சகோதரி இருப்பாள். அவளும் நீடித்திராள். இந்தப் பாலகனுடைய சகோதர பாவத்தைப்பற்றிச் சொல்லுகின்றேம். சகோதரன் ஒருவன் நீடித்திருப்பான்.

6. தையலர் யோக மொன்றும் சாற்றிட பலம் பெருது
மெய்யதா யெடுத்துச் சொன்னேம் வார்த்தையும் பிசகி டாது
ஐயமில் நிறங்கு ணத்தை அற்புதன் தனக்குப் பார்மேல்
வையகம் புகழு மாதே வழுத்துவோம் கேட்டி டாயே.

6. சகோதரி பிறப்பதற்குக் காரணங்கள் இல்லை. இது பிசகாது. உலகம் போற்றும் மாதே! இவனுடைய நிறம் குணம் முதலியவைகளைச் சொல்லு கின்றேம் கேளுங்கள்.

வேறு

7. பாலனுமே நிறஞ்சிகப்பன் நீட்சி யுள்ளான்
பித்த மெனும் தேகி யாவன்
கோலெனவே கரங்காலும் நீண்டிருக்கும்
குணமுள்ளான் நாசியது கூர்மையாகும்

வேலெனவே விழியாகும் விவேகியாவன்
வித்தகனும் சன்மார்க்கன் தர்க்கவாதி
மாலவனின் ரேகையது கரத்திலுண்டு
மகிழ்ச்சியுளான் தீரனிவன் சாற்றினேமே.

7. பாலனின் நிறம் சிவப்பு. உயரமாக வளர்ந்தவன். பித்ததேகம் வாய்ந்தவன். கோல்போல் கை கால்கள் மெலிந்து நீண்டிருக்கும். நற்குணம் வாய்ந்தவன். நாசி கூர்மையாக அமைந்திருக்கும். வேல் போன்று ஊடுருவிப்பாயும் விழிகளை உடையவன். மிக்க பகுத்தறிவு உள்ளவன். இவன் நல்வழியில் நடப்பவன். மேன்மேலும் யுக்திவாதங் களைச் செய்து விஷயங்களை நிரூபிப்பான். இவனது கையில் விஷ்ணுரேகை இருக்கும். எப்பொழுதும் மகிழ்ச்சியோடு இருப்பான். மிக்க தைரியமும் வாய்ந்தவன்.

8, பொய்பேசான் சிக்கனன்றான் தையல்மோகன்
போசனமும் சிறுத்துண்பன் புகழாய்நிற்பன்
ஐயமிலா வார்த்தையது அறவுரைபபான்
அண்டியபேர் தமைகாப்பன் சோம்பல்கொஞ்சன்
நையுறவே சொல்கூறான் சாந்தனவன்
நானிலத்தில் பெரியோர்கள் பிரபுக்கள்பட்சன்
செய்தொழிலும் பலிதமுள்ளன் எதிரிதம்மைச்
சூட்சமமுடன் லகுவாக வெல்வன்றானே.

8. பொய் பேசமாட்டான். சிக்கனமாகவே வாழ்க்கையை நடத்துவான். பாரியையிடம் அன்புகொண்டவன. சிறிதே ஆஹாரம் உட்கொள்ளு பவன். புகழுடன வாழ்வான். சந்தேகிக்க முடியாதபடி இவன் பேச்சு மிகவும் தெளிவாக இருக்கும். அண்டியவர்களை ஆதரிப்பான். சிறிது சோம்பலுள்ளவன். பிறா வருந்தும்படி வார்த்தைகளைச் சொல்லமாட்டான். சாந்தகுணம் படைத்தவன். பெரியோர்களுடையவும், பிரபுக்களுடையவும் அன்பிறகுப் பாத்திரமானவன். பலவிதத்தொழில்களைச் செய்வான். எதிரி களைத் தனது மதிவன்மையால் சுலபமாகவே வெனறு விடுவான்.

9. குழவி யிடமிஷ்ட முள்ளோன் பாக்கியமுள்ளான்
கூர்மையுளான் எதிரிச்சொல் நுணுக்கம்தேர்வன்
பழையதொரு வாக்கியங்க ளுபமானங்கள்
பவருகனும் சொல்மிருது சாந்தவானும்
குழிவான ஞாயமதை லகுவில்தீர்ப்பன்
குற்றமிலான் பலபேர்கள் நேசமுள்ளான்
தொழுதாரு முப்பர்முதல் எவரும்போற்றும்
சுந்தரியே இன்னமதில் சொல்வோங்கேளே.

9. குழந்தைகளிடம் பேரன்பு கொண்டவன். நிறைந்த செல்வமுள்ள வன். கூர்மையான புத்தியுடையவன். எதிரிகள் சொல்லும் வார்த்தை களின் சாராம்சத்தை அறிபவன். பழமொழிகளையும் உபமானச் சொற்றொடர்

களையும் தம் கருத்துக்களைத் தெரிவிப்பதற்காகக் கையாள்வான். சொற்கள் மிருதுவாக இருக்கும். சாந்தமானவன். சண்டைகளில் நியாயங்களையும் சந்தேகங்களைச் சுலபமாகத் தெளிவிப்பான். குற்றம் செய்யாதவன். பல மனிதர்களின் நட்பு இவனுக்கு உண்டு. தேவர்களாலும் மற்றவர்களாலும் போற்றப்படும் தாயே! இவனைப் பற்றி மேலும் சொல்லுகிறோம். கேளுங்கள்.

10. பலருக்கும் உபகாரன் பெருமை யுள்ளான்
 பகரிவனின் தாய்வர்க்கம் பலத்துநிற்கும்
குலத்தொழிலில் வெறுக்கையுளான் செயல் வெறுக்கை
 கொடுமையது மிகவாடான் வித்தையுள்ளான்
சொல்லிவனும் நயமாவன் சொகுசனுகும்
 சுத்தமுளான் செழுமையுளான் தனங்கள்சேர்ப்பன்
தலையான உலகோர்க்கு நட்பாய்நிற்பன்
 தழை பெறவே வாழ்வனெனச் சாற்றினேமே.

10. பலருக்கும் இவன் உபகாரம் செய்வான். மிக்க பெருமையும் மரியாதையும் உடையவனாக இருப்பான். இவனுடைய தாய் வருக்கம் எல்லாத் துறைகளிலும் செழிப்பாக இருக்கும். குலத்தொழிலால் செல்வத்தை அடைவான். மேலும் எந்தத் தொழில் நடத்தினாலும் நஷ்டமேற்படாமல் லாப முண்டாகும். வெயில் பசி முதலியவைகளால் வாடமாட்டான். கல்வி கற்றவனாகவும் இருப்பான். மிக்க சௌக்கியத்தை நாடுவான். மனத் தூய்மைப் பெற்றவன். நயமான வார்த்தைகளைப் பேசுபவன். சரீரத்தி லும் குடும்பத்திலும் புஷ்டியுடையவன். செல்வத்தைச் சேமிப்பான். உலகிலுள்ள தலைவர்களுக்கு நண்பனாவான். இவன் நன்றாகத் தழைத்து ஓங்கி வாழ்வான்.

### வேறு

11. வித்தையும் தமிழ் தெலுங்கு வடமொழி சமமாய் நேரும்
 சத்தியே சமமாய் நிற்கும் சதியிலா யோக்கிய னுவன்
 மெத்தவே நன்ன டக்கை மேலுள கபட மில்லான்
 ஒத்தையாய் முனைச்ச லாவன் ஊக்கனும் சுகமு ளானே.

11. இவன் தமிழ், தெலுங்கு, ஸம்ஸ்கிருதம் இவைகளில் சமமான பாண்டித்யம் பெறுவான். சிறிதும் கபடமில்லாதவன். மிகவும் நம்பத் தக்கவன். உயர்ந்த நடத்தையுள்ளவன். எதையும் தான் ஒருவனாகவே முனைந்து செய்வான். எல்லா விஷயங்களிலும் ஆர்வம் கொண்டவன். சுகங்களை அனுபவிப்பவனாகவும் இருப்பான்.

12. இன்னமும் புகலக் கேளாய் இசைந்திடு எழா மாதி
 அன்னையே அஷ்ட மத்தில் அமர்ந்திடச் க்ஷீண சந்திரன்
 பின்னமா யதனை நோக்க விளம்பிது வன்றி ரண்டோன்
 மன்னிய நீச மாக மண்மக னெதிராய் நோக்கி ;

12. இவனுடைய மனைவியைப் பற்றிச் சொல்லுகின்றோம். மேலும் கேளுங்கள். ஏழாமிடத்திற்கு அதிபனாகிய சனி எட்டில் அமர்ந்திருக்க, க்ஷீணசந்திரன் அவனைப் பார்ப்பதாலும், குடும்ப ஸ்தானத்திற்கு உடைய சூரியன் நீசமாகி பூமிமகனென்றுச் சொல்லப்படும் செவ்வாயினால் பார்க்கப்பட்டிருப்பதாலும் ;

13. இந்தவாறு கோள்கள் நிற்க இயம்பிவன் மனைவி தானும்
சிந்தையா முன்ஜன் மத்தில் செப்புமார்ச் ஜாலந் தன்னைப்
பொருந்திடும் சுடுநீர் தன்னில் போட்டிட இளமை யன்னாள்
பந்தமல் வினையி னாலே பகருவன் மேனி யெல்லாம்.

13. மேலே சொல்லப்பட்ட கிரஹ நிலையில் பிறந்தவனின் மனைவி, தன் ஜன்மத்தில் பால்யப் பருவத்தில் ஒன்று மறியாத வளாகி பூனையைச் சுடு நீரில் போட்டதால் அந்தப்பாவம் இவளைச் சூழ்ந்து கொண்டது. அதன்பலனாக இந்த ஜன்மத்தில் இவளது உடலெல்லாம்.

14. சத்திரோ யிக்காலத்தில் சதியொடு வெண்மே கந்தான்
பத்தியே இருக்கு மென்று கூறினோம் தவறி டாது
வித்தகி அவளும் நல்லோள் விளக்கமாய் வாழ்வா ளாகும்
பத்தியா யிந்த நூலில் கூறினோம் மேலுங் கேளே.

14. மிகப்பொல்லாத வெண்மேக நோய் பரவியுள்ளது. அவள் மிகவும் நல்லவள்தான். சிறப்பாக வாழ்வாள். இவ்விஷயங்களை மிகவும் சிரத்தையுடன் கண்டு சொன்னோம். மேலும் சொல்லுகிறோம். கேளுங்கள்.

15. இனிமேலா யிவனின் மன்றல் இயலுட னெடுத்து ரைப்போம்
கனிவுள இருபான் மூன்றுள் கருதிய கன்னி கோணம்
தொனிவட உதித்தாள் தன்னைத் துயரிலா மணமு டிப்பன்
சினமிலா எங்கள் யாதே செப்பினோம் பிசகி டாதே.

15. இனிமேல் அவனுடைய மணத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். அவனுடைய இருபத்துமூன்றாம் வயதில் கன்னிய லக்னத்தில் பிறந்த பெண்ணை மணம் செய்துகொள்வான். பொறுமைக் கடலே! தாயே! எங்கள் சொல் தவறாது.

16. அந்தநல் மாதுக் கேதன் அருளிடும் புத்திரர் சொல்வோம்
வந்திடு மாண்பா லொன்றே வளமுள கன்னி யவ்வாறு
சிந்தையாய்த் தீர்க்க மாகும் செப்பிதின் மேலாய் வந்தால்
இந்திர னிறைஞ்சு மாதே இருநிலம் நிலைத் திடாது.

16. அப்படிப்பட்ட அந்த நல்ல பெண்ணிற்குப் புத்திரர்களைச் சொல்லுகின்றோம். ஒரு புத்திரனும் ஒரு புத்திரியும் தோன்றுவர். இவர்கள் தீர்க்காயுளுடன் இருப்பார்கள். இந்திரனாலும் போற்றப்படும் தாயே! இந்த எண்ணிக்கைக்கு மேல் பிறப்பின நிலைத்திராது.

### வேறு

முன் பாட்டில் இரு குழந்தைகளுக்குமேல் தங்காது என்று சொன்னார். அதற்கான காரணத்தை இப் பாட்டில் விளக்குகின்றார்.

17. தாயாதி சொத்ததனை வஞ்சித்த தல்லால்
சாற்றுந்த கோயிலுறும் தேவ சர்ப்பம்
ஓயாது வெகுநாளாய் இருக்க வதை
வெம்பி யிறந்திட அடித்த தோஷத்தோடு
ஓயாது பரவிஷயக்கள போகம்
உணர்ந்ததனல் வெகு கருக்கள் அழிந்த இந்த
ஆயமெனும் தோஷமெலா மிவனைப்பற்றி
அந்நாளும் போக்கிநற் செய்து வப்பால்.

17. முன் ஜன்மத்தில் இவன் பங்காளிகளின் சொத்தை ஏமாற்றி அபகரித்தான். பேலும் ஒரு தேவாலயத்தில் வெகுநாளாக வாசம் செய்து வந்த ஒரு சர்ப்பத்தை அடித்துக் கொன்றுவிட்டான். அவ்விரண்டு காரணங்களுமன்றி வேறு ஒரு காரணமும் உண்டு. பிறர் மனைவியிடம் கள்ள போகங்களை அனுபவித்து, பலருடைய கருக்களையும் அழித்ததற்க் காரணமாக இருந்தான். ஆகவே, இத்தனைப் பாவங்களும் இவனைச் சூழ்ந்து கொண்டன. நாங்கள் சொல்லப்போகும் பரிகாரங்களைச் சிரத்தையுடன் செய்தால் பாவங்கள் இவனை விட்டு நீங்கும்.

18. வீதமொடு களசனுமே இலக்கந்தாக்கி
வெளியாகி இப்புவியில் செனிக்க விட
ஜாதகனு மிவனென்றே கோட்களாய்ந்து
சாற்றின மெய்யம்மொழியுந் தவறிடாது
கோதுடனே அவ்வாறுமுன தோஷமெல்லாம்
குழந்தைக்கு இருப்பதனல் ஒழியச்சொல்வோம்
காதலுடன் மனையாளோ டிந்தப் பாலன்
கனமான சேதுக்குச் சென்றுஅங்கு ;

18. முன் ஜன்மத்தில் கொடிய பாவங்களைச் செய்த இவன், இறந்து, இப்பொழுது கடக லக்கினத்தில் பிறந்திருக்கின்றான். நவகிரஹ நிலைகளை ஆராய்ந்து பார்த்து பாவங்கள் ஒழியும் வகையைக் கூறுகின்றோம். பக்தியுடன் இவன் [மனைவியோடு] பெருமை வாய்ந்த சேதுவிற்குச் செல்ல வேண்டும். அங்கே ;

19. கடலாடி சிவன்கழலும் அர்ச்சித்தப்பால்
கரபடந்த பவங்கள்தமை அவர்க்கொப்பித்துக்
கொடிதான னேதீரென் றிருகண்ணீரும்
சூர்ந்திடவே வேதவகை தொழுதுஅப்பால்
நடையான கனகத்தால் நாகம் செய்து
நாடியதை மறையோர்க்குப் பொருளும்மே
அடைவாக ஈந்துமுன் ஊழைஒதி
அவர்பாதம் முக்காலும் வலம்வந்தேத்தி ;

19. கடலில் நீராடி, அங்கு எழுந்தருளி இருக்கும் ஸ்ரீராம நாதரின் திரு வடிகளை அர்ச்சித்து, தான் செய்த பாவங்களை அவர் முன் ஒப்புவித்து, கொடிய என் வினைகளைத் தீர்த்தருளும் என்று கண்களில் நீர் பெருக, வேத முறைப்படி பூசித்து, பிறகு அழகிய தங்கத்தால் நாகம் செய்து, அதை மற்றைய தக்ஷிணைகளுடன் வேதமோதும் பிராம்மணருக்கு மிக்க சிரத்தை யுடன் கொடுத்து, முன் ஜன்மத்தில் செய்தப் பாவங்களை அவரிடம் தெரிவித்து, அவரை மூன்று முறைப் பிரதக்ஷிணம் செய்து, அவர் பாதங் களில் வணங்கி;

20. மனையாளும் மடிபிடிக்க மறையோர்தாமும்
மனங்களித்து ஊழ்நீங்கிச் சுகங்களேற்று
இனமுடனே சுதருண்டாய்ப் புவியில்மிக்க
இன்பமுடன் வாழ்வீரென் றாசியேற்று
நனிவான பலபேர்க்கு அன்னமிட்டு
நக்கன்பால் எண்ணியொரு திங்கள்நின்று
பினையதற்குப் பின்மதுரை வந்து அன்னோர்
பூவடியை யேத்திப்பசு நெய்யால் தீபம்;

20. மனையாளும் இவனும் மடி பிடிக்க, மனங்குளிர்ந்து, பிராம்ம ணர்கள் முன் வினை நீங்கி, குழந்தைகள் பெற்றுச் சுகமாக பூமியில் வாழ்வீர் களாக என்று அருளும் ஆசிகளைப்பெற்றுக் கொண்டபின், அங்குப் பலருக்கு அன்னமிட்டு, பரமசிவன் சந்நிதியில் ஒரு மாதம் தங்கி, அதற்குப் பின் மதுரைக்கு வந்து, அங்கு எழுந்தருளியிருக்கும் சொக்கநாதரின் திருவடிகளை வணங்கி, பசுவின் நெய்யால் தீபம் ஸமர்ப்பித்து;

21. திருவுடனே ஒருநூறும் கோயிலேற்றித்
தீராத வினைதீரெனறேத் துதித்து போற்றி
அருமையுள்ள தில்லையுமே கண்டுபோற்றி
அப்பால்தன் பதிவந்து விருக்ஷமான
அரசொன்று வைததற்கு மணமுஞ்செய்து
அதன்கீழே நாகமென்றும் பிரதிஷ்டையாக்கிக்
குறைவிலா பிரதோட வுபவாசந்தான்
கூர்ந்திவனு மிரண்டாண்டு தவறு நின்று.

21. நூறு தீபங்களைக் கோயிலில் ஏற்றி, தீராத பாவங்களைத் தீர்க்கும்படி கடவுளைத் துதித்துப் பிரார்த்திக்கவேண்டும். அதன் பிறகு, பெருமை வாய்ந்த தில்லை க்ஷேத்திரத்திற்கு வந்து, நடராஜப் பெருமானைத் துதித்து வணங்கவேண்டும். அதன் பிறகு, தன் ஊருக்கு வந்து, அரசமரத்தை ஸ்தாபித்து, அதற்கு மணம் செய்வித்து, அந்த மரத்தின்கீழ் நாகத்தைப் பிரதிஷ்டை செய்யவேண்டும். எல்லா இஷ்டத்தையும் கொடுக்கவல்ல [பிரதோஷ விரதம் என்று பிரசித்தமான] பிரதோஷ உபவாசத்தை இரண்டு ஆண்டுகளுக்கு இடைவிடாமல் அனுஷ்டிக்கவேண்டும்.

22. பரனுன ஈசனுக்கு விழாவும்செய்தால்
பலமான முன்னூழு நீங்கிப்போகும்
உரமாக இந்தவிதி செய்யாவிட்டால்
உண்மையுடன் உமையவளே உரைக்கக்கேளும்
தரமான புத்திரரும் சார்ந்திடார்கள்
சங்கடமும் மனவருத்த மனேகமுண்டாம்
பரிகாச மாகவிதைக் கூறவில்லை
பகுத்தறிந்த மானிடர்க்குச் சித்தியாமே.

22. பரமசிவனுருக்கு உற்சவங்களேயும் நடத்தி வைக்கவேண்டும். இவ்வளவு பரிகாரங்களேயும் செய்தால் மிக்க பெரிதான முன் ஜன்ம வினைகள் தீரும். பக்தி சிரத்தையுடன் இவைகளேச் செய்யாவிடில் அவனுக் கேற்படும் தீங்களே சொல்லுகின்றேம். கேளுங்கள். புத்திரர்கள் தீர்க்காயு ளுடன் பிறக்கமாட்டார்கள். வாழ்க்கையில் பல சங்கடங்களும் கவலேகளும் ஏற்படும். நாங்கள் ஏதோ பரிஹாஸமாக இவைகளேச் சொன்னதாக எண்ணவேண்டாம். பகுத்தறிவு படைத்த மானிடர்களுக்குத்தான இவை களில் நம்பிக்கையுண்டாகும். அவர்களுக்குத்தான் இவைகள பலிக்கவும் செய்யும்.

வேறு

23. கேளுமே இதனே நம்பி ஞானமாய்ச் செய் வானுனல்
ஆளுமே புத்திரர் மேலாய் அருள்செல்வம் பலமாய்க் கூடும்
கோளுடன் பழிகள் நேரா குவலய மதிக்க வாழ்வன்
காளேவா கனன்றன் தேவி கருத்தேனும் எழுவர் தாமே.

23. உமாதேவியாரே ! இவைகளே நம்பி மனப்பூர்வமாகச் செய்வானுகில் மிக்க நல்ல பிள்ளேகள் தோன்றுவார்கள். கடவுள் அருளால் கிட்டப் பெற்ற செல்வமும் நீடித்திருக்கும். பழிகள் ஏற்படாமல் உலகத்தோர் மதிக்கும்படி வாழ்வான். இடபவாகனனுடைய பரமசிவனின் தேவியாரே ! இவனுக்கு ஏழு குழந்தைகள் என்று முன்னமேயே சொன்னேம்.

24. இன்னமும் யோகச் செய்கை இயம்புவோம் ருனனந் தொட்டு
மன்னிய ஈரெட் டாண்டு மகிழ்பிதா தமக்கு யோகம்
நன்னய முடனே வாய்க்கும் நாட்டிய பலவீனத்தால்
கன்னலா மொழியி ஞளே காதலி கேட்டிடாயே.

24. இன்னமும் பிறவி முதல் இவனுக்கிருக்கும் யோகங்களேச் சொல்லு கிறேம். இவன் பிறந்தபிறகு பதினறு வருஷங்கள் இவனுடைய பிதாவிற்கு விசேஷயோகங்கள் நடைபெறும். இனிய வார்த்தைகளேக் கூறும் பார் வதியே ! கேளுங்கள்.

25. மாதுரு கடவுள் கோயில் மகிழ்ந்திடு மர்ச்ச கத்தால்
கோதிலாச் சீவ னங்கள் கொள்ளுவன் பொருளு மெத்த
ஆதியே குருத்துவ மூலம் அணிபொருள் பலமாய் வாய்க்கும்
வாதிலா பலரால் நன்மை வளர்தன தானிய மேலாம்.

25. பரமசிவனுடைய சந்நிதிகளில் செய்த பல அனேக பூசைகளின் பயனாக ஏற்பட்ட குற்றமில்லாத பலவித சீவனங்களால் ஏராளமாகப் பொருளை அடைவான். இவன் பிதாவினால் பலவிதமான ஆபரணங்கள் இவனுக்குக் கிடைக்கும். மேலும் கபடமில்லாத பல நண்பர்களாலும் நன்மைகளைப் பெறுவான். தனதானிய சமிருத்தி மேன்மேலும் வளரும்.

26. இல்லமும் பலமா யோங்கும் இணையிலாச் செல்வ முண்டாம்
கல்லலும் அடைந்தி டாது கன்றுகா லிகளு முண்டாம்
நல்லதோர் பயிர்பாக் யங்கள் நாடிடும் பணிதி பாத்திரம்
சொல்லிய புகழு மேலாய் சூழ்ந்திடும் பூமி யென்னே.

26. குடும்பமும் பலதுறைகளில் அபிவிருத்தியடையும். செல்வம் நிலைத்திருக்கும். வாழ்க்கையில் இடைஞ்சல்களும் நேரிடா. கால்நடைகளும் விருத்தியாகும். பயிர்த்தொழிலாலும் இவனுக்குப் பாக்கியங்கள் கிட்டும். ஆபரணங்களும் பாத்திரங்களும் நிரம்ப இருக்கும். பூமிகளும் ஏராளமாகச் சேரும். புகழும் அதிகரிக்கும்.

27. செப்பி துள்ளாய்க் கொஞ்சம் சேர்பலன் விரைய முண்டாம்
கப்பிய அரசில் போக்குக் கண்டிடும் விருத்தி யாகும்
தப்பித மடைந்தி டாது சாற்றிய பலனுக்கே தான்
ஒப்புள கலவி மேன்மை உரைத்தது தவறி டாதே.

27. மேலேசொல்லப்பட்ட பலன்களில் சில நஷ்டமாகும். இவன் அரசியலில் ஈடுபடுவான். அதனால் மேன்மையையும் அடைவான். நாங்கள் சொன்ன பலன்கள் தபபா. கல்வியில் மேன்மேலும் விருத்தியடைவான். கல்வியில் தோல்வியை அடையமாட்டான். வெற்றியையே அடைவான். நாங்கள் கூறியது தப்பாது.

28. பளமுள தந்தை தானும் பேசிட மிகவும் நல்லோன்
குலவியே எவர்க்கும் நண்பன் குணமுளா னமைதி மேலான்
தலைமையாம் எவரும் போற்ற தான்மிக சிரேஷ்ட முள்ளான்
உலகினில் புகழுடை யோனாய் உறைந்திடும் செல்வ மேலும்.

28. இவனுடைய பிதாவைப்பற்றிப் பேசுவோமானால், அவன் மிகவும் நல்லவன். உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற வித்தியாசமின்றி எல்லோருக்கும் நண்பனாவான். நற்குணங்கள் உள்ளவன். மிகவும் சாந்த சுபாவமுடையவன். தான் வசிக்குமிடத்தில் எல்லோரையும்விட சிரேஷ்டனாகவே விளங்குவான். எல்லோராலும் கொண்டாடப்படுவான். அவனிடம் செல்வம் நிலைத்திருக்கும்.

29. குறைவற வாழ்வா னென்று கூறினே மவனின் செய்கை
அறமுற வவன் குறிப்பில் அறைந்தனம் தெளிந்து காணாய்ப்
புரியிதின் மேலா யிந்தப் பிள்ளைக்கு யோகம் சொல்வோம்
நறுமலர்க் கூந்த லாளே நங்கையே கேட்டி டாயே.

**29.** தந்தை, அவனது வாழ்க்கையில் ஒரு குறைவுமின்றிச் சுகமாக வாழ்வான் என்று அவனுடைய ஜாதகப்பலனை எழுதும் காலத்தில் தெளிவாகச் சொன்னோம். நறு மலர்கள் அணியப்பெற்றக் கூந்தலாளே ! தேவியே ! அரசனைக்காட்டிலும் அதிக யோகங்களை இவனுக்குச் சொல்லப்போகின்றோம், கேளுங்கள்.

**30.** சென்ற வவ்வாண்டின் மேலாய்ச் சேர்ந்திடு மீரே ழாண்டும்
குன்றிலாச் சமமே யாகும் கூர்ந்திடும் பலவீ னத்தால்
வென்றிகொள் பூமி பாலும் விருத்திக்கும் தன தானியங்கள்
மனதினில் சமமாய்ச் செல்வம் மருவிடும் சுகமு முண்டாம்.

**30.** முன் சொல்லப்பட்ட பதினாறு ஆண்டுகளுக்குமேல், கிரஹபலக் குறைவால் பதினான்கு ஆண்டுகளுக்குச் சமபலன்தான். அதாவது முன் நடந்தபலன்களே மேலும் தொடர்ந்து நடைபெறும். பூமியில் வெற்றி கொள்வான். தன தானியங்கள் அபிவிருத்தியடையும். மன நிம்மதிக்குறைவால் முன்போலவே இருக்கும். செல்வம் சேரும். சௌக்கியங்களும் ஏற்படும்.

**31.** தன்னுடன் பிறந்தா னோடே தானிதில் கூடி வாழ்வான்
அன்னையே சுகமும் துக்கம் அணிசமம் வெளிப்போக் காகும்
பின்னையும் தையல் மோகம் பெருகிடும் செலவு முண்டாம்
மன்னிய பிணிகள் பீடை வந்திடும் நிவிர்த்தி யாகும்.

**31.** தன் உடன் பிறந்தவனோடு இந்தப் பதினான்கு வருஷங்கள் வரையில் ஒன்றாக வாழ்வான். சுகமும் துக்கமும் சமமாகவே இருக்கும். வெளியூர்ப் பிரயாணங்களும் ஏற்படும். மேலும் பெண்கள் மோஹம் ஏற்படும். அதனால் செலவும் பெருகும். பலவித நோய்களால் உபத்திரவம் நேரும். சிறிது காலத்திற்குப் பிறகு அந் நோய்கள் நிவிருத்தியாகும்.

**32.** வரவுடன் செலவு மெத்த வந்திடாச் சமமாய்ச் செல்லும்
உறையிதின் மேல தாக உரைத்திடு மீரெட் டாண்டும்
சிறியவன் தனக்கு யோகம் சுறந்திடும் நயம தாகப்
பரிவுள வணிபத் தாலே பலபொருள் வந்து கூடும்.

**32.** பதினான்கு வருஷங்களும் வரவு செலவுகள் சமமாகவே இருக்கும். அதற்குமேல் பதினாறு வருஷங்களில் இவனுக்குச் சிறந்த யோகங்கள் வரும். விரும்பிச்செய்யும் வியாபாரத்தினால் பல பொருள்களை அடைந்து நிரம்பச் செல்வமுள்ளவனாவான்.

**33.** இல்லத்தில் கலக முண்டாய் இயல்பின ரிருவர் வேறாய்
வல்லியே சுபமாய் வாழ்வன் பருப்பனும் அதன்பின் பாகம்
நல்லதோர் பலன்கள் மேலாய் நாடிடும் தவறி டாது
மெல்லியே பலனால் நன்மை மேவிடும் இஷ்டர் நேசம்.

**33.** வீட்டில் கலகமேற்பட்டு இரு சகோதரர்களும் பிரிந்து தனித் தனியே வாழ்வார்கள். அவ்வாறுப் பிரிந்த பிறகும் இந்த ஜாதகனது யோகம் குன்றாமல் பலதுறைகளிலும் அபிவிருத்தியடையும். மேன் மேலும் நல்ல

பலன்களே இவனுக்கு ஏற்படும். இவ் வார்த்தைச் சிறிதும் தவறுது. மேலும் அப்படிப்பட்ட நன்மைகளை அடைந்த பிறகு அவைகள் காரண மாகவே பல பெரியோர்களின் நட்பும் இவனுக்குண்டாகும்.

34. அணிபெறும் செல்வ மேன்மை அணுகிடும் பணிதி பூண்கள்
கனமுள தானிய மெல்லாம் வருதிடும் கீர்த்தி மேன்மை
இனமுள பூமி சேரும் எவருமே புகழ்ந்து நிற்பர்
குணமுள சுகமும் ஒன்று கூட்டுவன் சுபமாய்த் தானே.

34. செல்வத்தின் மேன்மை விளங்கிடும். பலவித ஆபரணங்களும் இவனுக்குக் கிட்டும். பல தானியங்களும் சேரும். இவனது புகழ் விஸ்தாரத்தை அடையும். வளமான பூமிகள் சேரும். எல்லோரும் இவனைப் புகழ்ந்து வணங்கி நிற்பார்கள். நல்ல சுகந்தரும் வீடு, நிலம், தோட்டம், பசு முதலிய பொருளை சுலபமாகச் சேர்ப்பான்.

35. வித்தகி யிவ்வாண் டுள்ளாய் விளைபொருள் சிலவே சேதம்
புத்திரர் நாச முண்டாம் புகன்றனம் சூதம் நேரும்
சக்தியே கள்ள ராலே சார்சில பொருளும் நஷ்டம்
நத்திய அலேச்சல் மெத்த நாடிடும் அரசரால் போகம்.

35. தேவியே! முன் சொன்ன ஆண்டுகளுக்குள் சில கெட்டப் பலன் நேரும். அவையாவன :—விளை பொருள்கள் நஷ்டமும், புத்திர மரணமும் ஏற்படும். பந்து வர்க்கங்களில் மரணததால் தீட்டு வரும். கள்ளர்கள் இவனுடைய பொருள்களைக் கொள்ளையிடுவார்கள். வீண் அலேச்சல்களும் ஏற்படும். ஆனால், அரசாங்கத்தாரால் சிறிது சுகம் உண்டாகும்.

36. செப்பிய வெல்லா மவ்வாறு சிறப்புடன் நிவிர்த்தி யாகும்
ஒப்புடன் முன்சல் லியங்க ளூற்றிடும் இவ்வாண் டின்மேல்
கப்பிய வேறேன் புக்கு மகன்பொரு ள்மேல்மே லுண்டு
இப்பிலா பலத்த யோகம் இலகிடும் தவறி டாதே.

36. சொல்லிய சில கெட்ட பலன்கள் நீங்கும். முன் ஏற்பட்ட கடன்களும் நிவிர்த்தியாகும. சம பலனைத் தரும். பதினன்கு ஆண்டுகளுக்குமேல் பொருள் மேன்மேலும் சேரும். பலமான யோகங்கள் தவறுமல் உண்டாகும்.

37. பதிபெரும் செல்வ மிக்க பலித்திடு மன்னன் போல
நிதியது பலமாய்க் கூடும் நிலேத்திடு செல்வ மேன்மை
சதமுள ஆண்டுள் ளூற்ற சல்லிய பிணேகள் தீரும்
கோதியு மேனு நன்மை கூடிடும் சுபிட்ச மாமே.

37. அரசர்களுடைய செல்வம்போல இவனுடைய செல்வமும் ஓங்கி வளரும். அச் செல்வமும் இந்த ஜாதகனிடம் நிலேத்திருக்கும். இதற்கு முன் ஏற்பட்ட சல்லியங்களும் விலகும். நன்மைகள் இவனுடைய முயற்சி யின்றியே இவனே வந்தடையும். குடும்பம் சுபிட்சம் அடையும்.

38. இதன்மேலா யிந்தப் பாலன் இலகிய ஆயுள் மட்டும்
சதியிலாத் தொழிலு மோங்கச் சாரமதி பிறைபோல் செல்வம்
பதிவொடு பலத்து வோங்கப் பலமுடன் வாழ்வா னென்று
அதிவித இந்த நூலில் அறைந்தனம் ரிஷிக ளம்மா.

38. மேலும் இந்த ஜாதகன் ஆயுட்காலம் வரை [முப்பத்தைந்தாவது பாட்டில் சொல்லப்பட்டத் தீமைகளின்றி] தொழிலைச் சிரத்தையுடன் நடத்துவான். வளர்பிறை சந்திரன் போல இவனது தொழில் வளரும். செல்வமும் விருத்தியாகும். ஸ்திரமாகப் புகழ்பெற்று நல்ல ஆரோக்கியத்துடன் சுகமாக வாழ்வான். ரிஷிகளாகிய நாங்கள் இந்நூலில் பற்பல யோகங்களைச் சொல்லியிருக்கின்றோம். [அவைகள் பொய்யாகா என்பது கருத்து.]

39. முன்னுளின் ஊழி தீர்ந்தால் முறைப்படி நடக்கும் சொல்லும்
இன்னமேல் தந்தை கால மியம்பினோ மொருபா னேழு
வின்னமாய் மாய்வா னாகும் விளம்பிய முப்பா னேழுள்
அன்னையும் மாய்வா ளாகும் அறைந்தது பிசகி டாது.

39. முன்ஜன்ம வினைகள் நாங்கள் சொன்ன [சேதுவில் நீராடுதல், அரசமரப் பிரதிஷ்டை முதலிய] பரிகாரங்களால் நீங்கினுல் நற்பலன்களும் முறைப்படி நடைபெறும். இதற்குமேல் தந்தையின் மரணகாலத்தைக் கூறுகின்றோம். இவனது பதினேழாவது வயதில் இவனுடைய தந்தை மரண மடைவான். தாய், இவனுடைய முப்பத்தேழாவது வயதிற்குள் இறப்பாள். இவைகள் பிசகாமல் நடைபெறும்.

40. இவனுடைக் கண்ட காலம் இயம்புவோ மினி மேலாக
அவமுடன் சிறுகண் டங்கள் அணுகிடும் நிவி்த்தி யாகும்
கவலையா மிவனி னுயுள் கழறுவோம் எண்பானுண்டுள்
உவமுள பூர்வ பாகம் உரைத்திடு மதற்குத் திங்கள்.

40. இவனுடைய மரணகாலத்தைச் சொல்லுகின்றோம். இவனுக்குச் சிறிய கண்டங்கள் பல தோன்றும். ஆனுல், உடனேயே அவைகள் நிவிருத்தியாகும். இவனுடைய எண்பதாவது வயதில் கவலையைத் தரும் கண்டம் [மரணம்] ஏற்படும். உத்திராயணத்தில்,

41. சென்றிடும் தசமி யந்நாள் சேருவ னும்பர் நாடு
தோன்றிடும் இவன்பின் ஜென்மம் சொல்லுவோம் காசி பக்கல்
வென்றிகொ ளிதுவே யாக விளைசட மெடுத்து அந்நாள்
நன்றுசேர் செல்வம் ஞானம் நல்கியே வாழ்வா னுமே.

41. கிருஷ்ண பக்ஷ தசமி திதியில் இவன் சுவர்க்கலோகம் ஏகுவான். இவனுக்குப் பின் ஜன்மத்தைப் பற்றியும் சொல்லுவோம். இவன் அடுத்த ஜன்மத்தில் காசி க்ஷேத்திரத்தில் பிராம்மண குலத்திலேயே பிறந்து, நல்ல செல்வம் படைத்தவனுகவும், ஞானம் பெற்றவனுகவும் சிறப்பாக வாழ்க்கையை நடத்துவான்.

## ஜாதகம் 9.

1. அம்புலி சனியும் சீயம் அரவுசேய் நந்தி யாகப்
புந்திபான் மேடமாகப் புகர்குரு சாடி யாகப்
பந்தமாய்ச் சிகியும் தேளில் பகருவோம் கடகம் ஜன்மம்
இந்தவாறு கிரகம் நின்றால் இயம்புவீர் பலனைத் தானே.

| | | | |
|---|---|---|---|
| | புதன் சூரியன் | ராகு செவ்வாய் | |
| சுக்கிரன் குரு | இராசி சக்கரம் | | இலக்கினம் |
| | | | சந்திரன சனி |
| | கேது | | |

கர வருஷம் சித்திரை மாதம் 8-ந்தேதி ஞாயிற்றுக்கிழமை நடுப் பகலில் ஜனனம்.

### ஆங்கிலத் தேதி 19-4-1891.

நவக்கிரஹங்களின் பாதசாரங்கள்.

அச்வனி 3-ல் சூரியன். மகம் 4-ல் சந்திரன. கிருத்திகை 4-ல் செவ்வாய. கிருத்திகை 1-ல் புதன். சதயம 4-ல் குரு. பூரட்டாதி 3-ல் சுக்கிரன். பூரம் 2-ல் சனி. ரோகிணி 2-ல் ராகு. அனுஷம் 4-ல் கேது.

1. சந்திரன் சனி சிங்கத்திலும், ராகு செவ்வாய் ரிஷபத்திலும், புதன் சூரியன் மேஷத்திலும், சுக்கிரன் குரு கும்பத்திலும், கேது விருச்சிகத்திலுமிருந்து இலக்கினம் கடகமுமானல் இவ்வாறு கிரஹ நிலையில் பிறந்த குழந்தையின் பலன்களைச் சொலவீர்களாக, எனப் பார்வதி கேட்கலுற்றாள்.

2. உமையவள கேட்கும் போது உரைக்கிறார் பராசர் தாமும்
அமைந்திடு மாண்பால் ஜன்மம் அறைகிறோம் பிறந்த இல்லம்
எமனுத்திர வாடை யாகும் இந்திரன் வாச லாகும்
நவமதில் தெனகீழ் மாரி நற்காளி கணேசன் உத்திரம்.

2. உமாதேவி இவ்வாறு கேட்டதற்குப் பராசரர் பதில் கூறுகின்றார். மேலே சொன்ன கிரஹ நிலையில் பிறந்த குழந்தை ஆணாகும். வீதி தெற்கு வடக்கில் அமைந்திருக்கும். வீடு கீழ்த்திசையை நோக்கி இருக்கும். தென்கிழக்குத் திசையில் மாரியம்மன் ஆலயமும், வடதிசையில் பத்ரகாளி கோயிலும், விநாயகர் ஆலயமும் இருக்கும்.

3. மேற்கினில் ஈசன் கன்னி ரிவிலாக் கோஷ்ட முண்டு ?
தீர்க்கமா மாழி யுண்டு சிறந்ததோர் கிரியு முண்டு
ஆர்க்கவே சிற்றூர் தன்னில் அவன் கத்திரிய குலத்தி லேதான்
மார்க்கமாய்க் கூரை வீட்டில் வருவனு மென்று சொன்னோம்.

3. மேற்குத் திசையில் ஈசன் கோயிலும், இடிந்த ஸப்த கன்னிமார் ஆலயமும் ஒரு நீர் நிலையும், ஒரு மலையும் உண்டு. அப்படிப்பட்டதொரு சிறிய ஊரில் க்ஷத்திரிய குலத்தில் கூரை வீட்டில் ஜனிப்பான்.

4. தந்தைதாய் யோகம் தானும் ஜாதகன் துணைவர் யோகம்
பந்தமாய்க் களத்திர புத்திரர் பாரினில் முன்பின் ஜன்மம்
வந்தவன் யோகச் செய்கை வரைகிறே 'மிந்நூல் தன்னில்
கந்தனைப் பெற்ற மாதே கழறின மொழி குன்றுது.

4. இவனுடைய தந்தை தாய் சகோதரர்கள் களத்திரம் புத்திரர் இவர்களைப்பற்றியும், இவனது முன்பின் ஜன்மங்களைப்பற்றியும், இவனுக் கேற்படப்போகும் யோகங்களைப்பற்றியும் இந்த நூலில் சொல்லப்போகின் றோம். சுப்பிரமணியக் கடவுளைப்பெற்ற தாயே! எங்கள் வார்த்தை தப்பாது.

5. இவன்பிதா குணத்தை யாங்கள் இயம்புவோம் இருநி றத்தன்
நவனியில் சமதே கத்தான் நன்முக வடிவு முள்ளான்
அவனியில் சீல மில்லான் அதிர்ஷடவா னலைச்ச லுள்ளான்
தவமுடை யோர்க்கு அன்பன் தயாளமாங் குணத்த னுமே.

5. இந்த ஜாதகனின் தந்தையினுடைய குணங்களைச் சொல்லுகிறோம். கருத்த நிறத்தவன். சமமான தேகம் வாய்ந்தவன். முகத்தின் அமைப் பும் வெகு கவர்ச்சிகரமாக இருக்கும். அதிக நல்லொழுக்கமில்லாதவன் அதிர்ஷ்டமுள்ளவன். வீண் அலைச்சல்களும் ஏற்படும். தவமுடைய பெரி யோர்களிடத்தில் பக்தி உடையவன். தயைக் குணம் வாய்ந்தவன்.

6. பித்தகா ரகமாம் தேகம் பல முளான் மதுக்க ளிஷ்டன்
நித்தியம் சுகிபொ சிப்பன் நிதானமாய் வார்த்தை கூறுவன்
புத்திமான் செட்டுச் செய்வன் புண்ணிய மனத்த னுகும்
எத்திசைக் கீர்த்தி கொள்வன் இடறுக ளனந்த முள்ளான்.

6. சரீரம் பித்தகாரகமுள்ளது. ஆயினும் உடல் வலிமை உடையவன். மதுபானத்தில் ஆசை உள்ளவன். எப்பொழுதும் சுகங்களை அனுபவிப்பான். மிகவும் ஜாக்கிரதையாக வார்த்தைகளைச் சொல்லும் இயல் புள்ளவன். சிறந்த புத்தி வாய்க்கப் பெற்றவன். வியாபாரம் செய்வான். எல்லோருக்கும் நன்மைகளையே நினைப்பான். எல்லா இடங்களிலும் இவனுக்குப் புகழ் உண்டாகும். இவனுக்கு வாழ்க்கையில் அதிக இடையூறுகளும் ஏற்படும்.

7. ஆள்கார ருடைய னுவன் அநேகமாய் வணிபம் செய்வன்
நீள்புவி சேர்ப்பா னுகும் நிகர்பந்து மெச்ச வாழ்வன்
வாள்விழி யார்கள் நேயன் வண்டிவா கனமு முள்ளான்
காலிகள் விருத்தி யுள்ளான் காதலி மேலுங் கேளே.

7. அனேக சேவகர்களுக்கு யஜமானனுக விளங்குவான். பெரும்பாலும் இவனது ஜீவனம் வியாபாரத்தினுல் நடைபெறும். அதிக பூமிகளைச் சேர்ப் பான். உறவினர்கள் வியந்து கொண்டாடும் வகையில் வாழ்க்கையை நடத்து வான். பெண்களிடம் மோஹம் கொண்டவன். வண்டி வாஹனங்களும் இவனுக்கு இருக்கும். எருதுகளை அபிவிருத்தி செய்வான். பார்வதி தேவியே ! கேட்டருள வேண்டும்.

8. மூலநோ யுடைய னுவன் முன்கோபம் பொறுமை யுள்ளான்
பால்பாக்கிய மல்ப முள்ளான் பந்துவை ஆத ரிப்பன்
சாலவே துணைவர் தம்மைச் சாற்றவே ஆண்பால் காணும்
வேல்விழி பெண்பால் மூன்று விளங்கிடும் தீர்க்க மாகும்.

8. மூலநோய் இவனைப் பாதிக்கும். முன்கோபி. ஆனல் பொறுமைக் குணமும் இவனுக்குண்டு. சிறிது பால் பாக்கியம் உள்ளவன். உறவினர்களை ஆதரிப்பான். அவனுடைய சகோதரர்களைப்பற்றி ஆராய்ச்சி பண்ணும் காலத்தில் ஆண் சகோதரர் இல்லை என்று ஏற்படுகிறது. ஆனல் சகோதரி கள் உண்டு. அவர்கள் மூவர். அவர்கள் எல்லோரும் தீர்க்கமாக வாழ் வார்கள்.

9. துணைவிகள் சேதி தன்னைச் சொல்லுவோம் மூத்த மாதர்
கனமுட னிவனில் சென்று கன்னியும் வாழ்வா ளாகும்
அணைவரன் சுகமு மின்றி மதலைக ளில்லாளாகி
இணையிலாப் பெருமை பூண்டு இவளதி காரம் பெற்று ;

9. அந்தச் சகோதரிகளைப் பற்றிக் கூறுகின்றோம். மூத்த சகோதரி கணவன் இன்றியும், குழந்தைகள் இல்லாமலும் இவன் வீட்டிலேயே வாழ்வாள். அதிகச் செல்வமுள்ள அவள், இவன் வீட்டில் விசேஷ அதிகாரங்களைச் செலுத்திக்கொண்டு ;

10. இவனுடைக் குடும்பந் தன்னில் இன்பமாய் வாழ்வா ளாகும்
அவளுடை இளைய மாது அவளுமே இவன்பால் சென்று
கவனமாய் வாழ்வா ளாகும் கன்னிக்கு மதலைத் தோஷம்
நவனியில் அவர்க ளாலே நாயகன் யோக வானும்.

10. இவனுடைய குடும்பத்தைச் சேர்ந்தவளாக ஸ்திரமாக அங்கேயே வாழ்வாள். அவளுக்கு அடுத்த சகோதரியும், புத்திரதோஷம் இருப்பதால்; பிள்ளைகள் இல்லாதவளாய், இவனது குடும்பத்தில் ஒற்றுமையாக வாழ் வாள். அவ்விரு சகோதரிகளாலும் இவனுக்கு விசேஷ யோகங்கள் ஏற்படும்.

11. இப்படி யிருக்குந் தந்தை இவனுக்கு உதித்த பாலன்
செப்புவோம் பலனை யாங்கள் தீரமுள் மனத்த னுகும்
ஒப்புடன் கல்வி கொஞ்சம் உத்தமன் மர்ம முள்ளான்
மைப்படி கண்ணுள் மோகன் நிலம் சேர்ப்பா மானுமே.

11. இப்படிப்பட்ட தந்தைக்கு இந்தக் கடகலக்கின பாலகன் பிறந்திருக் கிருன். இப்பொழுது இந்தப் பாலனுடைய பலன்களைக் கூறுகின்றோம். கல்வி அறிவுள்ளவன். சிறிது கபடமுள்ளவன். பெண்களிடம் அதிக மோஹம் உடையவன். பெரிய நிலங்களையும் சேர்ப்பான்.

12. அடிமையா ளுடைய னுவன் அனேகமாய் வணிபம் செய்வன்
கடினமா யுரைக்க மாட்டான் காரக தேக முள்ளான்
படிமிசை போற்ற வாழ்வன் பந்துவுக் கினிய னுவன்
நடமிடு மாடு விருத்தி நவதானிய மதிகம் சேர்ப்பான்.

12. நம்பிக்கை வாய்ந்த அனேக சேவகர்களை உடையவன். தந்தையைப் போலவே இவனும் வியாபாரத்தினுல் ஜீவிப்பான். கொடிய வார்த்தைகளைப் பேசாதவன். இவனது தேஹம் காரக தோஷம் வாய்ந்தது. எல்லோராலும் கொண்டாடப் படுவான். பந்துக்களுக்குப் பிரியமானவன். கால்நடைகளை விருத்தி செய்வான். நவதானியங்களையும் சேமிப்பான்.

13. தந்தையி னுஸ்தி யில்லான் தன்தந்தை துணைவி யாலே
சந்ததம் ஆஸ்தி சேரும் பாக்கிய மிகவே சேர்ப்பன்
வந்தவர்க் கன்ன மீவன் வாக்குகள் தப்பா னுகும்
முந்திய தெய்வ பக்தி முயற்சியாய் வாழ்வா னுகும்.

13. தந்தையின் சொத்து இவனுக்கு இராது. ஆனுல் தந்தையின் சகோதரி (அத்தை) யால் எப்பொழுதும் சொத்து சேர்ந்து கொண்டே இருக்கும். மிக்க பாக்கியவானுவான். தனது வீட்டை நாடி வந்தவர்களுக்கு அன்னம் இடுவான். சொன்ன வார்த்தைகளின் படியே நடப்பான். சிறந்த தெய்வபக்தி உள்ளவன். தனது முயற்சியாலே சிறந்து வாழ்வான்.

14. நடையது சொகுசு முள்ளான் நாட்டுவோம் தரள தந்தம்
படைகளை ஜயிக்க வல்லன் பாவையர் மோக வானும்
தடமது இரண்டு முள்ளான் சந்தோஷ மனத்த னுகும்
கடினமாம் தேக முன்ளான் காதலி மேலுங் கேளே.

14. அழகிய நடையை உடையவன். முத்துக்களைப் போன்ற பற்களை உடையவன். சேனைகளை ஜயிக்கும் வல்லமை வாய்ந்தவன். பெண்களிடம் மோகம் கொண்டவன். சந்தோஷம் இவன் மனத்தை விட்டகலாது. உடல் கட்டாக இருக்கும். அன்னையே! மேலும் சொல்லுகிறேம். கேளும்.

15. இன்னவன் கரத்தி லேதான் இலகிடும் பத்ம ரேகை
தன்னிலே சுழியு முள்ளான் தயாளமாங் குணத்த னுகும்
உன்னித சித்திர வீடு உத்தமன் செய்வா னுகும்
அன்னிய ராஸ்தி சேரும் அதிகமாய் யோகம் வாய்க்கும்.

15. இப்படிப்பட்ட ஜாதகனின் கரத்தில் பதுமரேகை விளங்கிடும். கையிலே சுழியும் இருக்கும். தயைநிரம்பிய நெஞ்சம் படைத்தவன். அழகிய விசித்திரமான (புதுவிதமான) வீட்டைக் கட்டுவான். பிறர் சொத்தும் இவனை வந்தடையும். விசேஷ யோகங்களும் நடைபெறும்.

16. இவனுடைத் துணைவர் தம்மை யிசைக்கிறேம் மாண்பால் காணும்
அவனியில் பெண்பால் மூன்று அறைகிறேம் தீர்க்க மாக
நவமதில் ஒன்று நஷ்டம் நாட்டுவோம் இவனுக் கேதான்
சிவனிடைப் பாகத் தாளே செப்புவோம் கேளு மம்மா.

**16.** இவனுடைய சகோதர வருக்கத்தைப்பற்றிப் பேசுவோமானல் ஆண் சகோதரர் ஜனிப்பதற்குக் காரணமே இல்லே. ஆனல் மூன்று சகோதரிகள் ஜனிப்பார்கள். அவர்கள் நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள். ஆயினும் ஒரு சகோதரி சிறிது காலத்திற்குப் பிறகு நஷ்டமாவாள். [காணமல் போவாள் என்று சொல்லலாம்.] சிவ பிரானின் இடது பாகத்தில் விளங்கு பவளே ! கேளுங்கள்.

**17.** உதித்தவன் மன்றல் கால முரைக்கிறே மிருபா னென்றுள்
சதியிலாக் கிழக்குத் திக்கில் தாயின்தன் வர்க்கம் தன்னில்
மதிநிகர் மாது சேர்வாள் மங்கைக்குப் புத்திர பாகம்
விதியினல் முன்னூ தன்னல் விளங்காரே புத்திர ரென்றேம்.

**17.** இந்த ஜாதகனுடைய கலியாண காலத்தைச் சொல்லுகின்றோம். இருபத்தொன்ருவது வயதிற்குள் விவாஹம் நடைபெறும். பெண், கிழக்குத் திசையில் தாயின் பந்து வருக்கத்தில் ஜனித்திருப்பாள். அவளுக்கு இந்த ஜாதகனின் முன்ஜன்ம வினே காரணமாகப் புத்திரர் விளங்கமாட்டார்கள் என்று சொல்லுகிறேம்.

**18.** முனிவரிவ் விதமாய்ச் சொல்ல மொழிகுவார் விசுவா மித்திரர்
அனையவே புத்திர தோஷம் அறைந்திட்டீர் அந்தச் சங்கை
கனமுட னுரைப்பீ ரென்னக் கௌசிகர் கேட்கும் போது
இணையிலாப் பராசர் சொல்வார் ஈசுவரி கேளு மென்றார்.

**18.** பராசர முனிவர் இவ்வாறு கூறியவுடன், விச்வாமித்திரர், பராசர முனிவரே! புத்திர தோஷ முண்டு என்று சொன்னீர். அதற்கான காரணங்களைச் சொல்லுவீராக என்று கேட்டார். இவ்வாறு விசுவாமித்திரர் கேட்டதற்குப் பராசரர் பதிலுரைக்கின்றார்.

**19.** அஞ்சினில் கேது நிற்க ஆரலு மதனைப் பார்க்கத்
துஞ்சிடும தலையென்றேம் சொல்லுவோ முன்னூழ் தன்னே
தஞ்சமாய்த் தவளே தென்பால் சாற்றுவோம் பேரூர் தன்னில்
மிஞ்சிய மிலேச்ச வம்சம் வித்தக னுதித்தா னென்றேம்.

**19.** புத்திர பாவமெனப்படும் ஐந்தாமிடத்தில் கேது இருக்க, அந்த கிரஹத்தைச் செவ்வாய்ப் பார்ப்பதால் புத்திர தோஷம் உண்டு. அதற்குக் காரணமாகிய முன்ஜன்ம வினையைச் சொல்லுகின்றேம். தவளேவரத்திற்குத் தென்திசையில் பெரிய ஓர் ஊரில் இவன் முன்ஜன்மத்தில் மிலேச்ச [துருக்க] வமிசத்தில் பிறந்திருந்தான்.

**20.** ஜெனித்துமே பெருமை பூண்டு செட்டுக்க ளதிகம் பெற்று
வனிதையு முள்ளனுகி மானில மதிகம் பெற்றுக்
கனமுள தனங்கள் உண்டாய்க் கியாதியும் அதிகம் பெற்று
இனங்களே யாத ரித்து அவனுமே வாழு நாளில் ;

**20.** அப்பொழுது இவன் மிக்க பெருமைகளேயடைந்து, அதிக வியாபாரம் செய்து, மனேவியையும் அடைந்து, அதிகப் பூமிகளேயும் பெற்று தனம் உள்ளவனுகவும் விளங்கினன். தன் இனத்தார்களேயும் ஆதரித்து வந்தான். அவ்வாறு சிறப்பாக வாழும் நாளில் ;

21. அந்நகர் நதியின் பக்கல் அணுகிய அரசின் கீழே
தந்தியும் நாகம் நிற்கும் தானவர் வாச மாகும்
மந்திரம் ஓதும் வேத மறையவர் பூசை செய்வர்
இந்தவா றிடத்திலே தான் இரவினி லேது செய்தான்.

21. அந்த ஊரின் நதிக்கு அருகில் அரச மரமுண்டு. அந்த மரத்தி னடியில் ஸ்ரீவிநாயகர் வாசம் செய்தார். அங்கு நாகப் பிரதிஷ்டையும் செய்யப்பட்டிருந்தது. வேதம் ஓதும் அந்தணர்கள் பூசையும் செய்து வந்தார்கள். இப்படிப்பட்ட புனிதமான இடத்தில் இவன் என்ன பாவம் செய்தான் ; தெரியுமா ?

22. விதவையை மரத்தின் கீழே வித்தகன் போகம் துய்த்தான்
அதனாலே கருவும் தங்கி அநேகமா யவிழ்ந்த மீயச்
சதியினால் கருவு நீங்கிச் சத்தியும் மரண மானாள்
அதுவொரு தோஷ மாக அணுகிற்று அதுவல் லாமல் ;

22. கணவனற்ற ஒரு பெண்ணோடு அந்த மரத்தின் கீழே போகம் செய் தான். அதனால் அவளுக்குக் கருவேற்பட, அதை அழிப்பதற்காக இவன் மருந்தைக் கொடுக்க கருவும் அழிந்தது, அந்தப் பெண்ணும் இறந் தாள். இஃது ஒரு தோஷமாகும். இதுவு மன்றி மற்றொரு பாவமும் வற் பட்டது.

23. மற்றொரு நாளி லேதான் மனையினில் நாகம் தானும்
உற்றது அதனைக் கண்டு உத்தம னடித்தா னம்மா
குற்றங்கள் அதனா லேதான் கூறுவோம் புத்திர தோஷம்
சுற்றமாய் ஜனனந் தோறும் துலங்காது புத்திர ரென்றோம்.

23. வேறு ஒரு நாளில், இவன், தனது வீட்டில் ஒரு சர்ப்பம் இருக்கக் கண்டு, அதை அடித்தான். அந்தக் குற்றமும் இவனைச் சார்ந்தது. அவ் விரு குற்றங்களால் ஜன்மந்தோறும் அவனுக்குப் புத்திரர்கள் பிறக்க மாட்டார்கள் என்று சொன்னோம்.

24. அச்சென்மம் தன்னி லேதான் அவனுக்குப் புத்திர ரின்றி
உச்சித தக்ஷிணத்தில் உறைந்தனன் தீர்த்தம் தோய
மிச்சமாய் முசல்மா னுக்கு உயர்ச்சியாய் கந்தங் கொண்டு
இச்சையா யபிஷே கித்தான் விலசிற்று விதவை தோஷம்.

24. அந்த ஜன்மத்திலே மேற்சொன்ன தோஷத்தினால் புத்திரரின்றி தென்திசையிலுள்ள புண்ணிய தீர்த்தங்களுக்குச் சென்றுநீராடினான். கடவுளுக்கு சந்தனம், புஷ்பம், ஊதுவத்தி முதலிய வாசனை திரவியங் களைச் சமர்ப்பித்தான். அபிஷேகமும் செய்வித்தான். ஆகையால் விதவை சம்பந்தத்தினாலேற்பட்ட பாவம் விலகிற்று.

25. மறுபடி உள்ளூர் மீண்டு மிகப்பெரி யோர்க்கு அன்னம்
பெருமையா யளித்து வந்த புண்ணியன் மரண மாகித்
திறமையா யிக்கு லத்தில் ஜனித்தவ னிவனே யென்றோம்
அருமையா யிச் சென்மத்தில் அறைந்திட்டோம் புத்திர தோஷம்.

25. மறுபடி தன் ஊருக்கு வந்து, பெரியோர்களுக்குச் சிரத்தையுடன் அன்னமளித்தான். பிறகு மரண மடைந்து, முன்ஜன்மத்தின் புண்ணியத்தின் பயனாக இக்குலத்தில் ஜனித்தான். ஆகவே ஒரு பாவம் விலகினும், மற்றொரு பாவம் விலகாததால் இந்த ஜன்மத்திலும் இவனுக்குப் புத்திரதோஷமுண்டு.

26. புத்திர தோஷம் தீரப் புகலுவோம் சாந்தி ஒன்று
சித்துமா யரசின் கீழே சிறப்பான நாகம் செய்து
உத்தமர் பிராமணருக்கு உண்டியு மளிப்பா னாகில்
வெற்றியாய்ப் புத்திரர் தானும் விளங்கிடும் என்று சொன்னோம்.

26. அந்தப் புத்திர தோஷம் நீங்க ஒரு சாந்தியைச் சொல்லுகின்றோம். ஓர் அரசமரத்தின் கீழே நாகப் பிரதிஷ்டையைச் சிறப்பாகச் செய்து, உத்தம பிராமணர்களுக்கு அன்னமும் அளிப்பானாயின் மேற்சொன்ன பாவம் நீங்கிப் பிள்ளைகளும் பிறந்து, புத்திரர்களும் இவனும் சுகமாக வாழ்வார்கள்.

27. சாந்தியும் செய்யா னாகில் தரிக்காரே புத்திரர் தாமும்
சாந்தியும் செய்வா னாகில் தரித்திடும் மதலை யென்றோம்
கூர்ந்திடு மாண்பா லொன்று குறித்தனம் பெண்பால் ரண்டு
சேர்ந்திடு தீர்க்க மாகும் செல்வியே மேலுங் கேளே.

27. இவன் மேற்சொன்ன சாந்திகளைச் செய்யாவிடில் தோஷம் நீங்காது. ஆகையால் சந்ததியும் உண்டாகாது. பரிகாரங்களைச் செய்தால் பாவம் போய்ப் புத்திரர் பிறப்பார்கள். ஒரு புத்திரனும், இரண்டு புத்திரிகளுமுண்டு. அவர்கள் எல்லோரும் நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள். தேவியே ! மேலுங் கேளுங்கள்.

28. இவன்பிதா முன்ஜன் மத்தை இசைக்கிறோம் சோழ நாட்டில்
அவனியில் வன்னிய வம்சம் அவனுமே யுதித்து மேலும்
தவமுடை யோர்க்கு அன்னம் தானவ னளித்து வந்தும்
நவனியில் கீர்த்தி பெற்று நாடெலாம் கீர்த்தி கொண்டான்.

28. இந்த ஜாதகனுடைய தந்தையின் முன்ஜன்மத்தைச் சொல்லுகின்றோம். சோழநாட்டில் வன்னிய வமிசத்தில் உதித்திருந்தான். அப்பொழுது தவமுடைய பெரியோர்களுக்கு அன்னதானம் செய்து வந்தான். நல்ல புகழ்படைத்தவனாகவும் இருந்தான்.

29. மனைவிமைந் தரு முண்டாகி மகிழ்ச்சியாய் வாழு நாளில்
அனையவே ஊழி தானும் அறைகிறோ மிவனுக் கேதான்
கனமுள மார்க்கந் தன்னில் கள்ளரால் பயந்து மேதான்
வனிதையர் பிரம்ம மாது வந்தன ளிவனுங் கொண்டு ;

29. மனைவி மக்களுடன் மகிழ்ச்சியோடு வாழுங் காலத்தில் இவனுக்கேற்பட்ட தொரு நல்வினையைச் சொல்லுகின்றோம். ஒரு நாள் இரு பிராம்மண மாதர் வழி நடந்து செல்லும்போது கள்ளர்களைக் கண்டு பயந்து இவனை வந்தடைந்தார்கள். இவன் அவர்களை ஏற்றுக்கொண்டு ;

30. ஆதரித் தாளு மந்த அதிதியா மிருவரைத் தான்
வேதனை யில்லா தாகி வஸ்திரம் பொருளுந் மீந்து
நீதியா யுபச ரித்தான் நிமலியர் சொல்லு கின்றூர்
தீதிலா மறுஜன் மத்தில் துணைவியா யுதித்து மேதான் ;

30. இவன் அவ்விரு அதிதிகளுக்கும் பாதுகாப்புத் தந்து, பயத்தைப் போக்கி, வஸ்திரங்களையும் பொருள்களையும் கொடுத்து, தருமசிந்தையோடு நன்ருக உபசரித்தான். ஆகையால் அவர்கள் மனம்குளிர்ந்து சொன்ஞர்கள். அஃதாவது மறு ஜன்மத்தில் உனக்குச் சகோதரிகளாகப் பிறந்து ;

31. எங்களின் ஆயுள் மட்டும் இன்பமா யுன்பால் சென்று
துங்கமா யூழி யங்கள் செய்கிறே மென்று சொல்லித்
தங்கிய மாதுர் தானும் தக்ஷிணம் தீர்த்தம் தோய்ந்து
பங்கமில் லாம லேதான் பரங்களும் உள்ளூர் சென்றூர்.

31. எங்கள் ஆயுள்காலம் வரையில் உன்னிடமே ஸ்திரமாக வசித்து, உனக்கு வேண்டிய ஊழியங்களை அன்போடு செய்கின்றோம் என்பது தான் அது. இவ்வாறு சொல்லிவிட்டுத் தென் தேசம் சென்று, அங்குள்ள புண்ணியத் தீர்த்தங்களில் ஸ்நானம் செய்து, ஒருவித இடையூறுமின்றித் தங்கள் ஊர் திரும்பிச் சென்றனர்.

32. ஆகையா லிச்சென் மத்தில் அம்மாது ரிருவ ருந்தான்
பாகமா யிவன்பால் சென்று பாகமாய் வாழ்வராகும்
மோகமாய் முன்ஜன் மத்தில் முனிவர்கள் மனைவி யோடு
ஏகமாய்த் தீர்த்தம் தோய்ந்து ஏகினு ரென்று சொன்னேம்.

32. அவ்விரு மாதர்களும் அவனிடமிருந்து உபசாரங்களைப்பெற்று மன முவந்து சொன்னபடியே இந்த ஜன்மத்தில் இவனுக்குச் சகோதரிகளாகப் பிறந்து, இவனிடமே நிலைபெற்று வாழ்கிருர்கள். முன்ஜன்மத்தில் உபகாரத்தைப் பெற்றபடியாலேயே அவ்விரு சகோதரிகளும் இந்த ஜன்மம் முழுவதும் இவனுக்கிடைவிடாது உழைக்கின்ருர்கள். இவனுடைய முன் ஜன்மத்தில் ஓர் அரனடியாரோடு இவன் மனைவி தனியாக நீராடி வந்தாள்.

### இப்பாட்டில் இவன் சகோதரனற்றவனுக இருப்பதற்கான காரணத்தைக் கூறுகிருர்.

33. அந்தவோர் காலந் தன்னில் அம்முனி மதுபு சித்துச்
சொந்தநன் மனைவி யோடு சேர்ந்ததால் விரோத முற்று
நிந்தையு மதிகம் சொல்லி நேர்மையா யடித்தா னப்போ
மைந்தனு மவரைக் கண்டு மனமது கோபமுற்ருன்.

33 அக்காலத்தில் அந்தச் சிவனடியார் லாகிரி வஸ்துக்களைப் புசித்து, மதிமயங்கி, தன் மனைவியோடு தனித்துப் பேசிக்கொண்டிருப்பதைப்பார்த்து, இவன், மிகவும் மனம் கொந்தளித்து, அவரிடம் விரோதம் கொண்டு, அவரைப் பலவாறு நிந்தித்து, அடிக்கவும் செய்தான்.

34. பரதேசி தன்னை யேதான் பலபல நிந்தை சொல்லி
அரனடி யென்றெண் ணுமல் அடித்தனன் முனிவன் தன்னைத்
திறமையாய் முனிவர் தாமும் செப்புவார் சாபம் தானும்
உரிமையாய் மறுஜன்மத்தில் ஒண்டியா யுதித்து வாழ்வாய்.

34. அந்தப் பரதேசியை நிந்தித்தும் பரமசிவனின் அடியார் அவர் என்ற மரியாதையும் பக்தியுமில்லாமலும், அவரை அடிக்கவும் செய்தான். இவைகளால் மனங்கலங்கிய முனிவர் சாபமிட்டார். அஃதாவது, மறுஜன் மத்தில் நீ சகோதரரின்றி, தன்னந்தனியே வாழ்வாய்.

35. என்னைப்போல் மதுபு சித்து எவர்களும் நகைக்க ஜன்மம்
தன்னிலே அவமான முற்றுச் சதிருடன் வாழ்வா யென்றுர்
உன்னித முனிவர் கூறி உறைந்தனர் நகரம் விட்டுப்
பண்ணிய ஊழி தானும் பருகிற்று இச்சென் மத்தில்.

35. மேலும், நான் லாகிரிப்பொருளைப் புசிப்பது போல் நீயும் மறுஜன் மத்தில் லாகிரிப்பொருள்களைத்தின்று, எல்லாராலும் நகைக்கப்பட்டு, அவ மானமடைந்து, உயிர் வாழ்வாய். இவ்வாறு கூறிவிட்டு, அம் முனி வர் அந்த ஊரைவிட்டுச் சென்றுர். அந்தப் பாவம் இந்த ஜன்மத்தில் இவ னைப் பற்றிக்கொண்டது.

36. லாகிரி வஸ்து வாலே நலமிலாக் கீர்த்தி யெய்தும்
மாதுகள் துணைவி யாலே மைந்தனும் பெருமை கொள்வன்
பாகமாய்ப் பின்ஜன் மத்தைப் பகருவோம் காஞ்சி கீழ்பால்
தோகமால் மலைக்கு மேல்பால் தோன்றிய பேரூர் தன்னில் ;

36. அம்முனிவர் சொன்னபடியே இவனுக்கு லாகிரி வஸ்துவினுலேயே கெட்டபெயர் ஏற்படும். முன் சொன்னபடி சகோதரிகளால் இவன் செல வத்திலும், மற்றைய துறைகளிலும் மேன்மை யடைவான். இவனது பின் ஜன்மத்தைப் பகருவோம். காஞ்சீபுரத்திற்குக் கீழ்த் திசையில், திருமால் எழுந்தருளியிருக்கும் மலைக்கு மேற்கில் உள்ள தொரு பெரிய ஊரில் ;

37. வைசிய குலமு தித்து வணிபங்க ளதிகம் செய்து
திசையெலாம் கீர்த்தி பெற்றுச் செல்வனும் வாழ்வா னுகும்
அசைவிலாப் பராசர் சொல்ல அம்மனும் கேட்க லுற்றுள்
உசிதமா யிச்சென்மத்தில் உத்தமன் சீல மின்றி ;

37. வைசிய குலத்தில் பிறப்பான். வியாபாரத்தை விஸ்தாரமாகச் செய் வான். எல்லா இடங்களிலும் இவனது புகழ் பரவும். சிறப்பாக வாழ்க் கையை நடத்துவான் என்று பராசரர் கூறியவுடன், பார்வதி வினவினுள். இவன் இந்த ஜன்மத்தில் லாகிரி வஸ்துக்களைப் புசித்து உயர்ந்த சீல மின்றி ;

38. மதுமா மிசம் புசித்து வருவதால் மறுஜன் மத்தில்
உதிப்பனே வணிகச் சேயா யுதிக்கக்கா ரணங்கள் சொல்வீர்
சதியிலா இச்ஜன் மத்தில் தன்குல தெய்வத் துக்கு
மிதமிலா ஊழி யங்கள் மேன்மையாய் செய்த லாலும் ;

38. மாமிசாதிகளைத் தின்று வாழ்ந்தால் மறுஜன்மத்தில் வைசிய குலத்தில் எவ்வாறு இவன் பிறக்க முடியும் ? அதற்கான காரணங்களைச் சொல்லித் தெளிவிப்பீராக, என, பராசரர் பதில் கூறுகின்றார். இந்த ஜன்மத்தில் தன் குலதெய்வத்திற்கு அளவிட்டுக் கூறமுடியாதபடி தொண்டுகளைப் பக்தி சிரத்தையுடன் செய்திருப்பதாலும் ;

39 வருவோர்க்கு அன்ன மீந்து வண்மையாய்த் தான தர்மம்
பெருமையாய்ச் செய்ததாலும் பேசினோம் வைசிய வம்சம்
அருமறை முனிவர் சொல்ல அம்மனும் கேட்க லுற்றாள்
திறமையாய் மாதுர் சேதி சொல்லுவீ ரென்று கேட்டார்.

39. தன் வீட்டை நாடி வருபவர்களுக்கு அன்னதானம் ஏராளமாகச் செய்ததாலும், இவைகளைத்தவிற மற்றைய தான தருமங்களையும் செய்ததாலும் மறு ஜன்மத்தில் வைசியகுலத்தில் பிறப்பான்; பார்வதி தேவியார் இந்த ஜாதகனின் தாயின் செய்திகளைப்பற்றிச் சொல்லுங்க ளெனக் கேட்டாள்.

40. மாதிரு குணத்தை யாங்கள் வரைகிறோம் சிவந்த மேனி
கோதிலா மூர்க்க முள்ளாள் குணமது கபடு மில்லாள்
மேதினில் வலுவு முள்ளாள் வித்தகி ஊகை கொஞ்சம்
பாதக மெண்ணா நெஞ்சம் பந்துவுக் கினிய ளாவள்.

40. தாயின் குணங்களை நாங்கள் சொல்லுகின்றோம். அவள் சிவந்த மேனியள். பிடிவாதம் உள்ளவள். ஆனால் நெஞ்சில் கள்ளமில்லாதவள். உடல்வலிமை வாய்ந்தவள். மதிநுட்பம் உடையவள். பிறருக்குத் தீமைகளை மனத்தினாலும் எண்ணாதவள். உற்றார் உறவினர்களுக்குப் பிரியமாக நடந்து கொள்ளுவாள்.

41. அடக்கமு மொடுக்க முள்ளாள் அன்னங்கள் போட வல்லாள்
நடக்கையும் நல்ல தாகும் நாயகி அதிர்ஷ்ட முள்ளாள்
துடுக்கான வார்த்தை கூறாள் சோர்வான பாத முள்ளாள்
மடக்கொடி சொற்ப ரோகி உரைக்கிறோ மிவளுக்கே தான்.

41. மனத்திலும் சரீரத்திலும் அடக்கம் உடையவள். பிறர்க்கு அன்னமிடும் சக்தி வாய்ந்தவள். சிறந்த நடத்தை உடையவள். மேலும், அவள் மிக்க அதிர்ஷ்டமுள்ளவள். துடுக்கான வார்த்தைகளைச் சொல்லமாட்டாள். இவளுக்கு பாதங்களில் சோர்வு உண்டாகும். சிறிது நோயும் ஏற்படும்.

42. இவளுடைத் துணைவர் தம்மை இசைக்கிறோ மாண்பால் ரண்டு
அவனியில் பெண்பா லவ்வாறு அறைகிறோம் தீர்க்க மாக
நவமதில் மற்ற வெல்லாம் நஷ்டமாம் என்று சொன்னோம்
தவநிலை யோரைக் காக்கும் தயாபரி மேலுங் கேளே.

42. இவளுடைய உடன் பிறந்தவர்களைப்பற்றிக் கூறுகின்றோம். சகோதரர்கள் இருவரும் சகோதரிகள் இருவருமாவர். அவர்களெல்லோரும் நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள். இந்த எண்ணிக்கைக்கு மேல் பிறக்கும் குழந்தைகள் நீடித்திருக்கமாட்டா. தவசிகளைக் காக்கும் தயாபரியான தேவியே ! மேலும் கேளுங்கள்.

**43.** இன்னவள் முன்ஜன் மத்தை இசைக்கிரேம் விரிஞ்சி நாட்டில்
உன்னித சேடர் வம்சம் உதித்துமே மதலை யின்றி
மன்னிய வரனின் கூட மங்கைகா ளத்தி சென்று
தன்னிலே ஈசனுக்குத் தானவ ளர்ச்சித் தேத்றி.

**43.** இவளுடைய முன் ஜன்மத்தைக் கூறுகின்றேம். விரிஞ்சி நாட்டில் சேடர் [கைக்கோலர்] வமிசத்தில் பிறந்து, வாழ்க்கையை நடத்தும் காலத்தில், பிள்ளை இல்லாததால், தன் கணவனுடன் காளஹஸ்தி க்ஷேத்திரத்திற்குச் சென்று, அங்கு எழுந்தருளியிருக்கும் பரமசிவனுருக்கு அபிஷேகம் அர்ச்சனைகளைச் செய்து, அவரை மனமாரத்துதித்து.

**44.** மதலையி னுசை கொண்டு மங்கையும் தோத்த ரித்தாள்
அதிசய மாக வேதான் அசரீரி உரைக்கக் கேட்டாள்
விதியினுல் முன்னூழ் தன்னுல் விளங்காது புத்திரர் தாமும்
பதியினில் சென்று மேதான் பரங்களுக் கன்ன மீந்து.

**44.** புத்திர பாக்கியத்தில் மிக்க விருப்பம் கொண்டவளாக அங்குத் துதிதுக்கோண்டே நிற்கும்போது. ஆச்சர்யத்தை விளைவிக்கும் ஓர் அசரீரி வாக்குக் கேட்கப்பட்டது. உனக்கு முன்ஜன்ம வினையினுல் புத்திரர்கள் உதிக்கமாட்டார்கள். உனது ஊருக்குச் சென்று அகதிகளுக்கு ஏராளமாக அன்னதானம் செய்து ;

**45.** தாகப்பந் தலும மைத்தால் சதிருடனு னுனக்கு மேதான்
பாகமாய் மறுஜன் மத்தில் பாலர்கள் உண்டு என்று
மோகமாய் அசரீரி வாக்கு மொழிந்தது அகுதி போலே
தோகையு மதனைக் கேட்டுத் தூண்டில்போல் மனம் பதைத்து;

**45.** மிக்கச் சிரத்தையுடன் ஒரு தண்ணீர்ப் பந்தலும் வைத்தால், மறு ஜன்மத்தில் உனக்குப் பாலர்கள் தோன்றுவார்கள் இவ்வாறு அசரீரி வாக்கைக் கேட்டு இந்த மங்கை தூண்டிலில் அகப்பட்ட மீன்போல் துடித்து ;

**46.** தன்னுடைய ஊரைச் சேர்ந்து தனயர்க ளில்லா ளாகி
அன்புடன் தாகப் பந்தல் அகதிகட் கன்ன மீந்து
இன்பமில் லாமல் வாழ்ந்து இவளுமே மரண மாகித்
தென்புட னிக்கு லத்தில் ஜனித்தவ ளிவளே யென்றேம்.

**46.** தன்னுடைய ஊரை வந்தடைந்து, தனயர்கள் இல்லாத காரணத்தினுல், மிகவும் அன்புடன் தண்ணீர்ப் பந்தல் வைத்தாள். ஏழைகளுக்கு ஏராளமாக அன்னதானம் செய்தாள். ஆயினும், அசரீரி வாக்குப்படி பிள்ளைகள் தேகாருத வருத்தத்துடனேயே மரணமடைந்து, இக்குலத்தில் இவள் ஜனித்தாள் என்று சொன்னேம்.

**47.** மறுஜன்மம் அவ்வூர் தன்னில் வன்னிய மரபில் தோன்றித்
திருமகள் விலாசம் பெற்றுச் செல்விழி வாழ்வா ளாகும்
அருமறை முனிவர் கூற அம்மனும் கேட்க லுற்றுள்
பெருகிய கர்ம காலம் பேசுவீ ரென்று சொன்னுள்.

47. மறுஜன்மத்தில் இப்பொழுது வசிக்கும் ஊரிலேயே வன்னிய வமிசத்தில் தோன்றுவான். லக்ஷ்மிகடாக்ஷம் இவனுக்கு ஏற்பட்டுச் சிறப்பாக வாழ்வான். இவ்வாறு வேதமோதும் முனிவர் கூறியவுடன், பார்வதி தேவி கேட்கலுற்ருள். இந்த ஜாதகன் தன் தாய் தந்தையர்களுக்குக் கருமம் செய்ய நேரும் காலத்தைச் சொல்லுவீர்களாக, எனக் கேட்டாள்,

48. தந்தையின் மரண காலம் சாற்றுவோ மிருபாணுறில்
பந்தமாய்க் கண்டம் வந்து பாரினில் சுகமே யுண்டாய்ச்
சந்ததம் முப்பா னென்றில் சித்திரை மாதம் தன்னில்
முந்திய தந்தை கண்டம் மொழிகிறேம் மேலுங் கேளே.

48. தந்தையின் மரண காலத்தைப்பற்றிச் சொல்லுகின்றேம். இந்த ஜாதகனுக்கு இருபத்தாருவது வயதில் தந்தைக்கு ஒரு கண்டம் நேரிடும். ஆனல் அது நீங்கிவிடும் அதனல் மரணமேற்படாது. பிறகு இவனுக்கு முப்பத்துஒன்ருவது வயது நடை பெறும்போது சித்திரை மாதத்தில் கண்டமேற்பட்டு இவன் தந்தை மரணமடைவான்.

49. மாதிரு மரண காலம் வரைகிறே முப்பா னெட்டில்
மேதினில் கன்னி மாதம் வித்தகி மரண மாகும்
தீதிலா ஜாத காக்குச் செப்புவோ மறுபா னெட்டில்
கோதிலாக் கூனி மாதம் குறைபக்கம் ஏகாதேசி.

49. தாயின் மரண காலம் எப்பொழுது ஏற்படுமென்பதையும் சொல்லுகின்றேம். இந்த ஜாதகனுக்கு முப்பத்தெட்டாவது வயதில் கன்னி மாதத்தில் இவன் தாய் மரணமாவாள். ஜாதகனும் அறுபத்தெட்டாவது வயதில் பங்குனி மாதத்தில் தேய்பிறையில் ஏகாதசி திதியில் மரணமடைவான்.

50. பக்கசூ லேயுமே கண்டு பாரினில் மரண மாகி
மிக்கவே மறுஜன் மத்தை விளம்புவோம் காஞ்சி தன்னில்
தொக்கசத்திரிய வம்சம் தோன்றியே அரசர் பக்கல்
மிக்கவே ஜீவிப் பானும் நிமலியே மேலுங் கேளே.

50. இவனுக்குப் பக்கசூலை கண்டு கஷ்டப்படுவான். அதுவே இவனுக்கு முடிவாகும். மறு ஜனமத்தைப்பற்றி விளம்புகின்றேம். இவன் அடுத்த ஜன்மத்தில் காஞ்சீபுரத்தில் க்ஷத்திரிய வமிசத்தில் பிறந்து, அரசரிடம் அதிகாரம் பெற்று ஜீவிப்பான். பார்வதி தேவியே! மேலும் கேளுங்கள்.

51. இன்னவன் யோகச செய்கை இயம்புவோம் பூமி சேர்ப்பன்
உன்னதச் செட்டுச் செய்வன் உலகெலாம் கீர்த்தி யேற்பன்
தன்னிலே பூமி சேர்ப்பன் தனம்வீடு பூமி மாடு
பன்னிய பூஷ ணங்கள் பகர்வோமை யாயிரம் பொன்.

51. இவனுடைய யோகங்களைப் பொதுவாகக் கூறுகின்றேம். பூமிகளைச் சேர்ப்பான். பெரிய வியாபாரங்களைச் செய்வான். இவனது புகழ் உலகெலாம் பரவும். இவனுடைய பூமி வீடு கால்நடைகள், ஆபரணங்கள் முதலிய பொருள்களின் உத்தேச மதிப்பு ஐயாயிரம் பொன்னுகும். [சுமார் ஐம்பதாயிரம் ரூபாய் மதிப்பு வாய்ந்தன என்பது கருத்து.]

52. உதித்தவன் ஜனனகாலம் உயர்கேது தசையிருப்புச்
சதிருடன் திங்க ளுந்தான் சாற்றுவோம் பதினென் றுரும்
மதித்திட நாள்க ளெட்டும் பகருவோம் பலனை யாங்கள்
விதவித நோய் களுண்டு விளம்புவோம் பலன்க ளற்பம்.

52. இவன் ஜனித்த சமயம் கேது தசை இருப்பு மாதங்கள் பதினென்றும் நாட்கள் எட்டுமாம். இந்தத் தசையின் பலன்களைச் சொல்லுகின்றோம். விதவிதமான நோய்கள் வரும். பயிர், வியாபாரம் முதலியவைகளில் பலன் அல்பமாக இருக்கும்.

53. புகர்தசை யிருப தாண்டும் புகலுவோம் கல்வி நேரும்
பதியினில் மனையாள் வாய்க்கும் பசுக்களும் விருத்தி யாகும்
வகையான பூமி வாய்க்கும் வருந்துணை சுபமே யுண்டாம்,
புதிதான கிருகம் நேரும் பூஷண மிகுதி யாகும்.

53. இதற்கு அடுத்தபடியாக வரும் சுக்கிரதசை இருபதாண்டும் நடக்கப் போகும் பலன்களைக் கூறுகின்றோம். ஜாதகனுக்குக் கல்வி நன்றாக வரும். விவாஹம் நடை பெறும். கால் நடைகளும் ஏராளமாக அபிவிருத்தியடையும். நல்ல செழிப்பான பூமிகள் சேரும். பிறக்கும் சகோதரர்களுக்குப் பாலாரிஷ்டம் முதலிய தோஷமின்றி க்ஷேமங்கள் ஏற்படும். புதியதோர் கிருஹத்தை நிர்மாணிப்பான். நிரம்ப பூஷணங்களும் கிடைக்கும்.

54. மத்தியில் மாதுர் தந்தை வந்திடும் விரோதம் நோயும்
சித்தமாய்ப் பூமி நஷ்டம் சிதறிடும் பொருள்க ளெல்லாம்
உத்தமர் விரோத மாகும் உரைக்கிறோம் விபரம் ரண்டில்
அத்திமா முகனைப் பெற்ற அம்மையே மேலுங் கேளே.

54. சுக்கிரதசையின் மத்தியில் தாய்க்கும் தந்தைக்கும் விரோதம் நேரிடும். மேலும் சிறிது நோயும் வந்திடும். பூமி நிச்சயமாக நஷ்டமாகும். பொருள்களும் பலவழிகளில் சிதறி நாசமடையும். மேலோர்களுடைய பகைமையும் ஏற்படும். மற்றைய விபரங்களை இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றோம். ஸ்ரீ விநாயகரைப் பெற்ற தாயே! மேலும் கேளுங்கள்.

# ஜாதகம் 10.

1. பொன்புத னிரவி வண்டி பூமகன் சிகியும் சீயம்
மந்தனும் துலையிலேற மதிசுறு கருங்கோள் சாடி
விந்தையாய் மழைக்கோள் கன்னி மேவிய ஜன்மம் நண்டு
இந்தவாறு கோள்கள் சேரில் இயம்புவீர் பலனைத் தானே.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ராகு | இராசி சக்கரம் | | லக்கினம் குரு புதன் சூரியன் |
| சந்திரன் | | | செய்வாய் கேது |
| | | சனி | சுக்கிரன் |

1. மன்மத வருஷம் ஆடி மாதம் 21-ஆந் தேதி ஞாயிற்றுக் கிழமை காலையில் ஜனனம்.

## ஆங்கில தேதி 4–8–1895.

நவக்கிரஹங்களின் பாதசாரம்.

ஆயில்யம் 1-இல் சூரியன். உத்திராடம் 2-இல் சந்திரன். மகம் 4-இல் செவ்வாய். புஷ்யம் 1-இல் புதன். புனர்வஸு 4-இல் குரு. உத்தரம் 2-இல் சுக்ரன். சுவாதி 1-இல் சனி. பூரட்டாதி 1-இல் ராகு பூரம். 3-இல் கேது. குரு புதன் சூரியன் கடகததிலும், செவ்வாய் கேது, சிம்மத்திலும், சனி துலாத்திலும், சந்திரன், மகரத்திம், ராகு கும்பத்திலும், சுக்கிரன் கன்னியிலும் இருந்து, இலக்கினம் கடகமாகவுமானுல், இவ்வாறு கிரஹநிலையில் பலன்களைச் சொல்லுவீர்களாக, எனப் பார்வதி தேவி வினவினுள்.

2. பார்வதி கேட்கும் போது பகருவார் பராசர் தானும்
சீர்புகழ் ஆண்பால் ஜன்மம் ஜனித்தஇல் கீழ்மேல் வீதி
கூறினேம் வடக்கு வாடை குணக்கினில் காளி வாசம்
மாரியு மேற்கில் தங்கும் வடதிசை கணேசன் கோஷ்டம்.

2. இவ்வாறு பார்வதி தேவிகேட்டவுடன், பராசர முனிவர் பதில் கூறுகின்றார். மேற்சொன்ன கிரஹநிலையில் ஆண் குழந்தை ஜெனிப்பான். வீதி கிழக்கு மேற்காக அமைந்திருக்கும். வீடு வடக்கிலுள்ள வரிசையில் இருக்கும் [அஃதாவது தெற்கு நோக்கி இருக்கும்]. கீழ்த்திசையில் காளி கோயிலும், மேற்குத்திசையில் மாரியம்மன் கோயிலும், ஸ்ரீ விநாயகரது ஆலயமும் விளங்கும்.

3. தென்திசை நதியு முண்டு சிற்றூரில் கெட்டி வீட்டில்
இன்னவன் ஜனிப்பா னாகும் இவனுமே நவமாம் ஜன்மம்
தந்தை தாய் களத்திர புத்திரர் தன்துணை யோகம் தானும்
முன்பின்ஜன் மங்கள் யாவும் மொழிகிறோ மிந்நூல் தன்னில்.

3. தென்திசையில் ஒரு நதியும் இருக்கும். அவ்வாறு அமைந்த ஒரு சிறிய ஊரில் கற்களால் கட்டப்பட்டுக் கெட்டியாக இருக்கும் வீட்டில் இந்தக் குழந்தை ஜனிப்பான். அக்குடும்பத்தில் இவன் ஒன்பதாவது குழந்தை என்று சொல்லவேண்டும். இவனுடைய தாய் தந்தை, பாரியை புத்திரர் சகோதரர் இவர்களைப்பற்றியும், இவனது யோகபாவங்களைப்பற்றியும், முன் பின் ஜன்மங்களைப்பற்றியும் இந்நூலில் சொல்லப்போகின்றோம்.

4. தந்தைக்குத் தாரம் ரண்டில் தரித்திடு முதல்மா தீன்ற
நீதியாய் மைந்தன் தானும் நிகழ்த்துவோ மிவனின் தந்தை
போதவே துணைவர் தம்மை போற்றவே பலத்தைக் காணோம்
ஆதியாய்ப் பிதாகு ணத்தை அறைகிறோம் கேளு மம்மா.

4. இந்த ஜாதகனின் தந்தைக்குள்ள இரு மனைவிமார்களில்முதல் மனைவிக்குப் பிறந்தவன் இவன். இந்தக் குழந்தையின் தந்தைக்குச் சகோதரர்கள் உண்டு என்று சொல்லுவதற்குக் காரணமில்லை. ஆகவே, தந்தையின் குணங்களைப்பற்றிச் சொல்லுகின்றோம். கேட்டருளவேண்டும், தாயே!

5. மால் நிறமுடைய தேகன் மர்மவான் உயர மில்லான்
சீலமா சார னவன் சிந்தையில் கபடு முள்ளான்
வேல்விழி மனையாள் பட்சன் விசேஷமாம் குடும்ப முள்ளான்
பால்தயி ரிஷ்ட முள்ளான் பந்துவு மெச்ச வாழ்வன்.

5. அவன் தேகம் கறுத்திருக்கும். சிறிது மர்மமான நெஞ்சம் உடையவன் (கபட முள்ளவன்) உயரமானவனல்லன். சீலங்களும் நல்ல பழக்க வழக்கங் களுமுண்டு. வேல்போன்ற விழிகளை உடைய மனைவியிடத்தில் பக்ஷபாதம் உள்ளவன். பெருமைவாய்ந்த குடும்பம் உள்ளவனாக ஆவான். பால் தயிர், நெய் முதலியவைகளில் விருப்பம்கொண்டவன். உற்றார் உறவினர் மெச்சும் வகையில் வாழ்க்கையை நடத்துவான்.

6. ஆதியில் வறுமை யுள்ளான் அநேகமாய்ப் பூமி சேர்ப்பன்
மாதவர் வணக்க முள்ளான் வண்டிவா கனமு முள்ளான்
நீதிலாக் குணத்தா னாகும் சிவந்திடு நேத்திர முள்ளான்
நோதிலானு தர நோயின் குறிவடு முகத்தி லுள்ளான்.

6. பாலியத்தில் வறுமையால் கஷ்டப்பட்டிருப்பான். ஏராளமாகப் பூமிகளைச் சேர்ப்பான். தவசிகளிடம் [கடவுள் அடியார்களிடம்] பயபக்தியுடன் வணங்கி நடப்பான். வண்டி வாஹனங்களை உடையவன். நற்குணங்களைப் பெற்றவன். நேத்திரம் சிவந்திருக்கும். துக்கமில்லாதவன். வயிற்று வலியால் சிறிது பீடிக்கப்படுவான். முகத்தில் அடையாளங்கள் உடையவன்.

7. தந்தங்கள் தேய்வு முள்ளான் சாயல் நேத்திரமு ள்ளான்
வந்தவர்க் கன்ன மீவன் வாக்குகள் பலித முள்ளான்
சந்ததம் பித்த தேகி சஞ்சல மனத்த னாகும்
சொந்தமாய்க் கிருகம் செய்வன் துராசையு முடைய னாமே.

7. இவனுடைய பற்கள் சிறிது சிறிதாகத் தேய்ந்து வரும். சாய்ந்த பார்வை உடையவன். வரும் விருந்தாளிகளுக்கு அன்னமிடுவான். இவன் சொன்ன வாக்குகள் உண்மையாக நடைபெறும். பித்த தேகம் வாய்ந்தவன். மனத்தில் சிறிது சஞ்சலமும் அவ்வப்பொழுது உண்டாகும். பிதுரார்ஜிதமான வீட்டைத் தவிர சொந்தமாகவும் வீடு கட்டுவான். சிறிது கெட்ட எண்ணங்களும் உடையவன்.

8. இக்குண முடையோ னுக்கு இவனுமே உதித்த பாலன்
தொக்கவே குணத்தை யாங்கள் சொல்லுவோம் சிவந்த மேனி
நக்கன்மேல் பக்தி யுள்ளான் நாதனார் பூசை செய்வன்
சிக்கெனப் பொருளும் சேர்ப்பன் தீரமாம் மனத்த னாமே.

8. இப்படிப்பட்ட குணங்கள் உள்ள தந்தைக்கு இவன் குழந்தையாகப் பிறந்திருக்கிறான். இவனது குணங்களை நாங்கள் சொல்லுகின்றோம். பரமசிவனாரிடம் பக்தி உள்ளவன். ஈசன் பூசையை இடைவிடாது செய்வான். மிகவும் சிக்கனத்துடன் பலவிதப் பொருள்களைச் சேர்ப்பான். தைரியம் வாய்ந்த மனம் படைத்தவன்.

9. கல்வியு முடைய னாகும் கனத்தவர் நேசம் கொள்வன்
எல்லையு மதிகம் சேர்ப்பன் யாரையும் வசியம் செய்வன்
சொல்லுமெய்ந் நெறியுள் ளோனும் துண்டமும் கொஞ்ச [முள்ளான்
புல்லியர் நேசம் கொள்வன் பூஞ்சோலை துரவு செய்வன்.

9. கல்வியறிவு உடையவனாக இருப்பான். கௌரவம் வாய்ந்தவர்களின் நட்பும் இவனுக்கு இருக்கும். நிலங்களின் எல்லைகளை விஸ்தரிப்பான் [நிலங்களைச் சேர்ப்பான் எனபது கருத்து]. எல்லோரையும் தன்வசப்படுத்தும் இனிமையான சுபாவமுள்ளவன். தான் சொன்ன வார்த்தைகள்படி நடப்பான். பிறரைக் கண்டித்துப் பேசும் இயல்பும் கொஞ்சமிருக்கும். கீழ்ப்பட்டோரின் நேசமும் இவனுக்கு இருக்கும். பூஞ்சோலைகளையும் கிணறுகளையும் நிறுவுவான்.

10. சித்திர வீடு செய்வன் சிறப்பான குடும்ப முள்ளான்
எத்திசைக் கீர்த்தி கொள்வன் இவன்சுக புசிப்பு முள்ளான்
சித்தனா னைப்ப தாகும் சிலசில வணிபம் செய்வன்
நித்தியம் நெய்பா லிஷ்டன் நேமியில் கிருஷி செய்வன்.

10. விசித்திரமான வீட்டை நிர்மாணிப்பான். சிறந்த குடும்பியாவான், எல்லாத் திசைகளிலும் இவனது கீர்த்தி பரவும். எப்பொழுதும் பலவித சுகங்களை அனுபவிப்பான். மன்மதனுக்குச் சமமான அழகு வாய்ந்தவன். சிற்சில வியாபாரங்களைச் செய்வான். நெய்யிலும் பாலிலும் விருப்ப முடையவன். கிருஷி இவனுக்கு முக்கியத் தொழிலாக இருக்கும்.

11. வறுமையு மில்லா னாகும் வல்வாயன் பெருமை யுள்ளான்
திருமகள் வாச முள்ளான் சென்றிடம் பெருமை பூண்பன்
பெருமையா யாட்கள் சேர்ப்பன் பூஷண மதிக முள்ளான்
அருமறை யவர்கள் நேசன் அநேகதா னியமு முள்ளான்.

11. வறுமை இல்லாதவன். பிறரை வெல்லும் வாக்குவன்மை பெற்றவன். பெருமை உடையவனாக இருப்பான். மஹாலக்ஷ்மி வாசம் பொருந்தியவன். இவனுக்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு ஏற்படும். நல்ல சேவகர்களைத் தன்னிடத்தில் வைத்துக்கொள்வான். அதிக ஆபரணங்களைச் சேர்ப்பான். வேதமோதும் பிராம்மணர்களிடம் பக்தி கொண்டவன். பலவித தானியங்களையும் அடைவான்.

12. இன்னவன் துணைவர் தம்மை இயம்புவோம் நவம தாகும்
கன்னியு மூவர் தீர்க்கம் கனத்திடு ஆண்பா லொன்று
உன்னத நான்கும் தீர்க்கம் உரைக்கிறோம் இவனுக் கேதான்
அன்னையே யாங்கள் சொல்லு மருள்மொழி குன்றா வென்றோம்.

12. இவனுடைய சகோதர பாவத்தைப்பற்றி இப்பொழுது கூறுகின்றோம். இவனுடன் பிறந்தவர்கள் ஒன்பதின்மர்; அவர்களில் மூன்று சகோதரிகளும் ஒரு சகோதரனும் ஆக நால்வர் நீடித்து வாழ்வார்கள் அன்னையே! நாங்கள் சொன்ன அருள் மொழிகள் குன்றா.

13. துணைவன்தன் சேதி தன்னைச் சொல்லுவோம் கல்வி மானும்
கனமுடன் வாழ்வா னாகும் கணக்கினி லூகை சாலி
தனமது உடைய னவன் தயையுளன் பொறுமை யுள்ளான்
இணையிலாப் பூமி சேர்ப்பன் எதிரியை வசியம் கொள்வன்.

13. அந்தச் சகோதரனின் வரலாறுகளைச் சொல்லுகின்றோம். சிறந்த கல்வி உள்ளவன். மிக்க பெருமையுடன் வாழ்வான், கணிதத்தில் மதிநுட்பம் வாய்ந்தவன். செல்வம் உடையவனாகவும் இருப்பான். தயைக் குணமும் பொறுமைக் குணமும் வாய்ந்தவன். செழிப்பான பூமிகளைச் சேர்ப்பான். சத்துருக்களையும் தன்வசப்படுத்துவான்.

14. அன்னிய கர்மம் செய்வன் அரசரால் வணிபம் செய்வன்
உன்னத வார்த்தை கூறுவன் உயர்ந்ததோர் குடும்ப முள்ளான்
பன்னியே உரைக்க வல்லன் பலவிதச் சோலை செய்வன்
தன்னிலே ஊகை சாலி தாயாதி மெச்ச வாழ்வன்.

14. உறவினர்களில் யாருக்காகிலும் இவன் ஈமச்சடங்குகளைச் செய்வான். அரசர்களுடைய உதவியைப் பெற்று வியாபாரம் செய்வான். அர்த்தபுஷ்டியுள்ள வார்த்தைகளையே பேசுவான், பெரிய குடும்ப முள்ளவனுவான். பேசப்படும் விஷயங்களைத் தெளிவாகப் பேசுவான். பலவிதப் பூஞ்சோலைகளையும் தோப்புக்களையும் நிறுவுவான். மிக்க மதி நுட்பம் வாய்ந்தவன். பங்காளிகள் கொண்டாடும்படி வாழ்வான்.

15. முனிவரிவ் வாறு கூற மொழிகுவா ளம்மன் தாமும்
இனியவே கர்மம் வேறு இவனுமே செய்வா னென்றீர்
கனமுட றுரைப்பீ ரென்னக் கழறுவார் பராசர் தாமும்
இணையவே சிறிய [1] தாதைக் கிவனுமே கர்மம் செய்வன்.

15. பராசர முனிவர் இவ்வாறு கூறியவுடன், பார்வதி தேவி கேட்கலுற்றுள். இவன் அந்நியனுக்குக் கருமம் செய்வான் என்று சொன்னீர். யாருக்குக் கருமம் செய்வான்? அதைத் தெளிவுபடுத்திக் கூறும் என, பராசர முனிவர் கூறினார். இவன் சிறிய தகப்பனுருக்கு (அல்லது சிறிய பாட்டனுருக்கு) ஈமச் சடங்குகள் செய்ய நேரிடும்.

16. தாதைக்குப் புத்திர பாவம் சாற்றுவீ ரென்று கேட்க
மேதினி லாண்பா லுந்தான் விளங்காது என்று சொன்னேம்
கோதிலாப் பெண்பா லுந்தான் கூறுவோம் தீர்க்கம் நான்கு
மாதவர் சொல்லும் போது மங்கையும் கேட்க லுற்ருள்.

16. சிறிய தந்தையின் புத்திர பாவத்தைப்பற்றிச் சொல்லும், எனப் பார்வதி கேட்டவுடன் பராசரமுனிவர் பதில் கூறுகின்றார். அந்தச் சிறிய தந்தைக்குப் புத்திரன் பிறக்கமாட்டான், நான்கு பெண்கள் பிறப்பார்கள். அவர்கள் தீர்க்காயுளுடன் இருப்பார்கள். மறுபடியும் பார்வதிதேவி கேட்கின்றாள்.

17. தாதைக்குத் தவத்தி னாலே சாராதோ கர்ம மென்றுள்
நீதியாய்ச் சொல்லு மென்ன நிகழ்த்துவார் முனிவர் தாமும்
போதவே புத்திர ருண்டு பொருந்தாது கிரிகை தானும்
மேதினில் துணைவ னாலே விளம்பினேம் கர்மம் தானும்.

17. சிறிய தாதைக்குப் பெண்கள் உண்டு என்று சொன்னீர். அவர்களில் யாராவது ஒருவளுடைய பிள்ளையால் [தௌஹித்திரனுல்] அவனுக்குக் கருமம் செய்யப்படாதோ? அல்லது அவர்களுக்குப் பிள்ளைகள் பிறக்கமாட்டார்களா? ஆகையினாலேயே இவன் கருமம் செய்ய நேருமா? இவ் விஷயங்களைத் தெளிவாகச் சொல்லும் என, பராசர முனிவர் பதில் சொல்லுகின்றார். தாயே! பெண்களுக்குப் புத்திரர்கள் பிறக்கமாட்டார் என்பது இல்லை. அவர்களுக்குப் புத்திர சந்ததியுமுண்டு. ஆயினும் இவன் சிறிய தாதை மரணமாகும காலத்தில் அருகில் இருக்கமாட்டார்கள். ஆகவே தௌஹித்திரர் கருமம் செய்ய நேரிடாது. ஆகையினால்தான் இவன் [சாதகனின் சகோதரன்] கருமம் செய்வான் என்று சொன்னேம்.

18. ஜாதகன் மணத்தின் காலம் சாற்றுவோம் ஒருபா னலில்
மேதினில் தக்ஷி ணத்தில் விளங்கிய மாதுர் வர்க்கம்
கோதிலா வருவா ளாகும் கூறுவோம் தாரம் ஒன்று
போதக வானே பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

18. இப்பொழுது ஜாதகனுடைய கலியாணகாலத்தை விளம்புகின்றேம். இவனுக்குப் பதினுலாவது வயதில் விவாஹம் நடைபெறும். தக்ஷிணதிசையில் மாதுரு வருக்கத்தில் இவனுக்கு மனைவியாக வரப்

1. தாதை = தகப்பன், பாட்டன்.

போகும் பெண் ஜனித்திருப்பாள். இந்த ஜாதகனுக்கு மனைவி ஒருத்தி தான். [தந்தைக்கு ஏற்பட்டது போலல்ல] ஸ்ரீவிநாயகரை ஈன்ற தாயே! மேலும் கேட்டருளவேண்டும்.

19. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோ மிருநான் காகும்
சித்தமா யாண்பால் ரண்டு தேவியு மவ்வா றாகும்
உத்தமி நான்கும் தீர்க்கம் உரைத்திட்டோம் நான்கு நஷ்டம்
வித்தகன் முன் ஜன் மத்தை விளம்புவோம் கேளு மம்மா.

19. புத்திரபாவத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவனுக்குப் பிறக்கும் குழந்தைகள் எட்டாம். அவர்களில் ஆண்கள் இருவரும், பெண்கள் இருவருமாவர். ஆக நால்வர் மாத்திரமே தீர்க்காயுளுடன் வாழ்வார்கள். மற்றைய நால்வரும் நீடிக்கமாட்டார்கள். இந்தக் கடகலக்கின மகனது முன் ஜன்மத்தைக் கூறுகின்றோம். தாயே! கேளுங்கள்.

20. கொச்சிநாட் டதனி லேதான் கோவைசிய குலமு தித்து
மிச்சமாய்ச் செட்டுச் செய்து விசேஷமாய்ப் பொருள் படைத்துத்
தக்ஷிணம் தீர்த்தம் தோய்ந்து தேவியு மதலை யுண்டாய்
அச்சுதன் மதத்தா னாகி அவனுமே வாழ்ந்தா னென்றோம்.

20. கொச்சி நாட்டில், இடையர் வமிசத்தில் பிறந்து, விசேஷமான வியாபாரங்களைச் செய்து ஏராளமான பொருள்களை அடைந்தான். தக்ஷிண தேசத்திலுள்ள புண்ணிய தீர்த்தங்களில் நீராடினான். மனைவி மக்களை அடைந்து, விஷ்ணுவிடம் பக்தி பூண்டு, சிறப்பாக வாழ்ந்து வந்தான்.

21. அந்திய காலம் தன்னில் அனாயாச மரண மாகி
வந்தவ னிவனே யென்றோம் வரைகிறோம் பின்ஜன்மத்தை
முந்திய காஞ்சி தன்னில் முதுமறைக் குலத்தி லேதான்
மைந்தனு தித்பா னென்றோம் மங்கையே மேலுங் கேளே.

21. அந்திய காலத்தில் சிறிதும் கஷ்டமின்றி மரணத்தை அடைந்தான். பிறகு இந்த ஜன்மத்தில் இங்கு வந்து கடகலக்கினத்தில் பிறந்திருக்கிறான். இவனது பின்ஜன்மத்தைப் பற்றிக் கூறுகின்றோம். மறுஜன்மத்தில் காஞ்சீபுரத்தில் பிராம்மண குலத்தில் பிறப்பான், பார்வதி தேவியே! மேலும் கேளுங்கள்.

22. இவன்பிதா முன்ஜன்மத்தை இசைக்கிறோம் சிறுபா கத்தில்
அவனியில் வைசியச் சேயாய் அநேகமாய் வணிபம் செய்து
தவசிகட் கன்ன மீந்து சங்கரன் பணியும் செய்து
நவமதில் கீர்த்தி பெற்று நற்பல தீர்த்தம் தோய்ந்தான்.

22 இவனுடைய பிதாவின் முன்ஜன்மத்தைப் பற்றிக் கூறுகின்றோம். தந்தை முன்ஜன்மத்தில், வைசிய குலத்தில் பிறந்து, பலவித வியாபாரம் செய்து வந்தான். கடவுளடியார்களுக்கு அன்னதானம் செய்தான், பரம சிவனுருக்குப் பலவிதத் தொண்டுகளையும் செய்தான். அதனால் இவனுக் குப் பெரும் புகழும் ஏற்பட்டது. பல புண்ணிய தீர்த்தங்களில் நீராடினான்

23. வாழ்கிற நாளி லேதான் வரைகிறே மூழி தானும்
தாழ்வான அடைக்க லானும் தன்கூட்டில் குஞ்சை வைத்து
ஆழியி லிரைக்குச் செல்ல அந்தவோர் பக்ஷி தன்னைப்
பாழான புத்தி யாலே பாலக னடித்து விட்டான்.

23. இவ்வாறு நற்காரியங்களைச் செய்துகொண்டு வாழும் நாளில், இவனுக் கேற்பட்ட ஓர் ஊழ்வினையைக் கூறுகின்றோம். ஒரு தாய்ப் பக்ஷி, தனது குஞ்சை கூட்டில் வைத்துவிட்டு, இரை தேடுவதற்காக வெளியே சென்றது. அப்பொழுது இவன், பிறஜீவனை இம்சிக்கும் இயல்பினால் தூண்டப்பட்டவனாய், அந்தத் தாய் பக்ஷியை அடித்தான்.

24. இரைகொணர் வந்த பக்ஷி எமபதம் சேர்ந்த தென்றோம்
சிறையினி லிருக்குங் குஞ்சு தீனிக்குக் குறைவு நேர்ந்து
விரையினில் மாண்ட தென்றோம் மேவிற்றுப் புள்ளின் தோஷம்
அறைகிறே மச்சென் மத்தில் அவனுமே மரண மாகினான்.

24. தனது குஞ்சிற்காக இரை தேடுவதற்கு வெளியே சென்று கொண்டிருக்கும் பக்ஷி இவனால் அடிப்பட்டு இறந்தது. கூண்டில் இரையை எதிர் பார்த்துக்கொண்டிருக்கும்—தானே இரையைத் தேடிக்கொள்ள சக்தியற்ற—அதன் குஞ்சும் ஆகாரத்திற்குக் குறைவு நேர்ந்ததால் சீக்கிரத்திலேயே உயிரை விட்டது. ஆகவே அவ்விரு பக்ஷிகளைக் கொன்ற தோஷம் இவனைச் சார்ந்தது. பிறகு இவன் காலக் கிரமத்தில் மரணமானான்.

25. கஞ்சனால் வரையப் பட்டுக் காளையு மிச்சென் மத்தில்
மிஞ்சிய தீயின் வம்சம் மீதினில் உதித்தா னென்றோம்
தஞ்சமா யிச்சென் மத்தில் தன்தாயு மின்றி யேதான்
துஞ்சியே இளைய மாதா தோன்றிடு மென்று சொன்னோம்.

25. முன்ஜன்மத்தில் இக் கொடிய பாவத்தைச் செய்த இவன் இப்பொழுது வன்னிய வமிசத்தில் பிறந்து, இக் கடக லக்கின மகனுக்குத் தகப்பனாக அமைந்திருக்கின்றான். அந்தப் பாவத்தினால் தான் அவனுக்குச் சொந்தத் தாய் இருக்கமாட்டாள். இளைய தாய் தோன்றிடுவாள் என்று சொல்லுகின்றோம்.

26. பிதாவின் தன் பின்ஜன் மத்தைப் பேசுவோம் தொண்டை நாட்டில்]
சதமுள நீலி வாழும் சாற்றிய பேரூர் தன்னில்
மதிநகர் கங்கை வம்சம் வந்துமே அரசர் பக்கல்
நிதமுமே பெருமை பூண்டு நிமலனும் வாழ்வா னென்றோம்.

26. இந்தக் கடக லக்கினத்தில் உதித்த பாலனது தந்தையின் மறுஜன்மத்தைப் பற்றிக் கூறுகின்றோம். தொண்டை நாட்டில் பிரசித்தமான காளி கோயிலுள்ள ஒரு பெரிய ஊரில், சிறந்த வேளாள வமிசத்தில் பிறப்பான். அரசரிடம் செல்வாக்கும் பெருமையும் ஏற்பட்டு, மிகச் சிறப்பாக வாழ்வான், என்று உறைக்கின்றோம்.

27. அன்னையின் முன்ஜன் மத்தை அறைகிறோம் பாண்டி நாட்டில்
இன்னவள் சேடர் வம்சம் இலகியே பால ரின்றி
உன்னத வரனின் கூட உறைந்தனள் சேதுக் கேதான்
பன்னிய தீர்த்தம் தோய்ந்து பிராமணர் தமக்குத் தாமும்

27. தாயின் முன்ஜன்மத்தைப்பற்றிக் கூறுகின்றோம். இவள் பாண்டிய நாட்டில், சேடர் [கைக்கோலர்] வமிசத்தில பிறந்து, மணமாகி தன்னுடைய கணவனுடன் வாழ்ந்து வந்தாள். வெகு நாளாகியும் புத்திரப் பேறு இல்லாமையால் கணவனுடன் சேதுவிக்குச் சென்று அந்தப் புனித நீரில் ஸ்நானம் செய்து, பிராமணருக்குப் பலவித தானங்கள் வழங்கி.

28. ஈந்துமே உள்ளூர் மீண்டு ஏழைக்கு அன்னம் தாகம்
சாந்தமா யளித்து மேதான் சங்கரன் பணிகள் செய்து
ஏந்திழை மரண மாகி இவளுமே வந்தா ளென்றோம்
ஆய்ந்திடு மிவள்கு ணத்தை அறைகிறோம் சிவந்த மேனி.

28. தனது சொந்த ஊருக்கு வந்து, ஏழைகளுக்குச் சிரத்தையுடன் அன்னமும் தண்ணீரும் கொடுத்து, பரமசிவனுக்குப் பல பணிகளையும் செய்து வாழ்ந்து வந்தாள். கடைசியாக மரணமடைந்து, இங்குப் பிறந்து, இவனுக்குத் தாயாகி இருக்கின்றாள். இவளுடைய குணங்களை ஆராய்ந்து பார்த்துச் செல்லுகின்றோம், சிவந்த மேனியாள்.

29. அடக்கமும் பொறுமை யுள்ளாள் ஆளனுக் கினிய ளாகும்
துடுக்கென வார்த்தை கூறாள் தோகையும் பித்த தேகி
நடக்கையும் நல்ல தாகும் நாயகி வாயு ரோகி
திடமான குடும்ப முள்ளாள் செல்வியே மேலுங் கேளே

29. அடக்கமுள்ளவள். பொறுமைக் குணம் நிறைந்தவள். அகமுடையானுக்குப் பிரியமானவள். பித்த தேகம் வாய்ந்தவள். நல்ல நடத்தையுடையவள். வாயு ரோகத்தால் இவளுக்குப் பீடை உண்டாகும். குழப்பங்களும் கலவரங்களும் இல்லாமல் ஒரே நிதானமான குடும்ப வாழ்க்கை உடையவள். தாயே ! மேலும் கேளுங்கள்.

30. இவளுடைத் துணைவர் தம்மை இசைக்கிறோம் நவம தாகும்
நவனியில் ஆண்பா லொன்று அறைகிறோம் பெண்பா லொன்று
கவனமா யிரண்டும் தீர்க்கங் காலையு முதித்த பின்பு
வரவர வறுமை யுண்டாய் மாதுரு குடும்பத் துக்கே.

30. இவளுடைய சகோதர பாவத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவளுடன் பிறந்தவர்கள் ஒன்பது பேர்கள். ஆண் ஒருவனும், பெண் ஒருத்தியுமாவர். இவ்விருவரும் நீண்ட ஆயுளுடன் இருப்பார்கள். மற்றைய குழந்தைகள் நிலைத்திரா என்பது கருத்து. இவளுக்கு ஆண் சகோதரன் ஜனித்த பிறகு சிறிது சிறிதாக வறுமை அதிகரித்து அக்குடும்பம் அல்லல்படும்.

31. மாதிரு துணைவர் தம்மை வரைகின்றோம் பின்பா கத்தில்
மாதிரு பின்ஜன் மத்தை வரைகின்றோம் கச்சி தன்னில்
தீதிலா பிரம்ம சேயாய் ஜனித்துமே வாழ்வா னாகும்
போதக வானைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

31. இவனுடைய சகோதரனைப்பற்றிய வரலாற்றைப் பின் பாகத்தில் எழுதப் போகின்றோம். தாயின் பின்ஜன்மத்தைப் பற்றிக் கூறுகின்றோம். காஞ்சீபுரத்தில் மிக்க பரிசுத்தமான பிராமண குலத்தில் குழந்தையாக ஜனித்துச் சிறப்புடன் வாழ்வாள். ஸ்ரீவிநாயகரைப் பெற்ற புண்ணிய சாலியே ! கேட்டருளல் வேண்டும்.

32. தந்தையின் மரண காலம் சாற்றுவோ மிருபா னாலில்
பிந்திய அன்னை காலம் பேசுவோ முப்பா னொன்றில்
இந்தவோர் ஜாதகர்க்கு இயம்புவோம் அறுபா னொன்றில்
வந்தவோர் சிம்ம மாதம் வளர்பிறைத் தசமி தன்னில்.

32. தந்தையின் மரணகாலத்தைச் செப்புகின்றோம். இந்தக் கடக லக்கின பாலனுக்கு இருபத்துநான்காவது வயதில், தந்தை இறப்பான். அதற்குப் பிறகு அன்னையின் மரண காலத்தைச் சொல்லுகின்றோம். இந்த ஜாதகனுக்கு முப்பத்தொன்றுவது வயதில் தாய் மரணமாவாள். இந்த ஜாதகனது மரண காலத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவனுக்கு அறுபத்தொன்றுவது வயதில் ஆவணி மாதத்தில் வளர்பிறைத் தசமி திதியில் மரண மேற்படும்.

33. க்ஷயத்தினால் மரண மாவான் சாற்றுவோ மிவன்பின் ஜன்மம்
நயப்புடன் தில்லை தன்னில் நற்சைவ குலமு தித்து
ஜயமுடன் குடும்ப மாகிப் செல்வனும் வாழ்வா னாகும்
தயையுடன் யோகச் செய்கை சாற்றுவோம் கேளு மம்மா.

33. க்ஷய நோயினால் இவனுக்கு மரணமுண்டாகும். இவனது பின் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். சிதம்பர க்ஷேத்திரத்தில் நல்ல சைவ வமிசத்தில் பிறப்பான். சிறப்பான குடும்ப முள்ளவனாகிப் பெருமையுடன் வாழ்வான். இவனது இந்த ஜன்மத்து யோகங்களைக் கூறுகின்றோம். கருணையுடன் கேட்டருள வேண்டும்.

34. உதித்தவன் யோகந் தானும் உரைகின்றோம் பூமி சேர்ப்பன்
அதிபதி யாக வாழ்வன் ஆள்கார ருடைய னவன்
பதியது சித்திரம் செய்வன் பாரினில் கிருஷி செய்வன்
நதிபல தீர்த்தம் தோய்வன் நற்பந்து மெச்ச வாழ்வன்

34. கடக லக்கினத்தில் பிறந்த இவனுடைய யோகங்களைக் கூறுகின்றோம். பூமிகளைச் சேர்ப்பான். எப்பொழுதும் சமானனாகவே இருப்பான். நம்பிக்கையுள்ள சேவகர்கள் உடையவன். விசித்திரவேலைகள் அமைந்த வீட்டைக் கட்டுவான். விவசாயம் செய்வான். பல புண்ணிய நதிகளில் நீராடுவான். பந்துக்கள் மெச்சும்படி வாழ்க்கையை நடத்துவான்.

35. வண்டிவா கனமு முள்ளான் மாநிலம் கீர்த்தி கொள்வன்
அண்டினோர்க் குதவி செய்வன் அநேகபாக் கியமும் சேர்ப்பன்
கொண்டதோர் பூமி வீடு கூறிய பொருளும் யாவும்.
எண்டிசை யேழாயி ரம்பொன் இவனுமே சேர்ப்பா னாகும்.

35. வண்டி மாடுகள் இவைகளை உடையவனவன். தான் வசிக்கும் ஊரில் நல்ல கீர்த்தியுள்ளவனாக இருப்பான். தன்னை அண்டியவர்களுக்கு மனமுவந்து உதவி செய்வான். பலவித ஐச்வரியங்களைச் சேர்ப்பான். இவன் அடைந்திருக்கும் பூமி, வீடு, வாஹனம் ஆபரணம் முதலியவைகள் எல்லாம் சேர்ந்து, உத்தேசமாக, ஏழாயிரம் பொற்காசுகள் மதிப்பு வாய்ந் தன. [உத்தேச மதிப்பு ரூபாய் எழுபதாயிரமாம்].

36. பிறந்தசேய் ஜனனகாலம் பதங்கள்தன் இருப்புத் தானும்
சிறந்திடு ஆண்டு நான்கு திங்களும் மூன்ற தாகும்
குறைந்திடு குடும்பம் தானும் கூறுவோம் வேற தாகும்
உறைந்திடு சுபமு முண்டு உற்றவர் பகையே யாகும்.

36. இக் குழந்தையின் ஜனன காலத்தில் சூரியதசையில் இருப்பு வருஷங்கள் நான்கும், மாதங்கள் மூன்றுமாம். இந்தத் தசையில் குடும்பம் பல துறைகளிலும் குறைந்திடும். குடும்பப் பிரிவினையும் நடைபெறும். சில சில சுப சம்பவங்களும் நடைபெறும். உற்றவரின் (பெரும்பாலும் பங்காளி களின்) விரோத முண்டாகும். உத்தராடம் இரண்டாம் பாதம்.

37. தாய்தந்தை நலிக ளுண்டு தானியக் குறைவு நேரும்
நேயர்கள் விரோத மாகும் நிதம்மன அலேச்சலுண்டு
காயமாம் ஜாத கர்க்குக் கண்டிடும் ருணங்கள் ரோகம்
ஆயவே பலன்க ளற்பம் அவனுடைத் துணைவிக் கேதான்.

37. தாய்க்கும் தந்தைக்கும் நோய்களால் உபத்ரவம் ஏற்படும். பயிர் குறைந்து தானியக் குறைவும் உண்டாகும். நண்பர்களும் விரோதிகளாவார் கள். எப்பொழுதும் கவலை இருக்கும். மன நிம்மதி இராது. ஜாதகனுக்குச் சில கடன்கள் ஏற்படும். குடும்பத்திற்கும் கடன் நேரும். குடும்பத்தி னர் எல்லோருக்கும் ரோகம் வந்திடும். அவனுடைய சகோதரிக்கும் நல்ல பலன்கள் நடைபெரு.

38. புத்திர தோஷ மாகும் பூதப்பேய் தன்னால் பீடை
வெற்றியாய்ச் சாந்தி செய்யில் விலகிடும் தோஷம் தானும்
சித்தமாய் மதித சைக்குச் செப்புவோம் பலனை யாங்கள்
நித்திய லாப முண்டு நிகழ்த்துவோம் பூமி சேரும்.

38. இவனுக்குப் பல தோஷங்களும் ஏற்படும். பூதம், பேய், பிசாசு முதலிய துஷ்ட ஆவிகளால் பீடையுமுண்டாகும். சிரத்தையுடன் நன்றாகச் சாந்திகளைச் செய்தால் மேற்சொன்ன குற்றங்கள் விலகும். சந்திரதசை யின் பலன்களை நாங்கள் கூறுகின்றோம். எப்பொழுதும் நல்ல லாபமேற் படும். பூமிகளும் சேரும்.

39. தனதானிய மதிக மாகும் சித்திர வீடு செய்வன்
கனமுடன் துணைவ ருக்குக் கூறுவோம் சுபங்கள் கூடும்
இனமுடன் பசுக்கள் விருத்தி எதிரியை வசியம் செய்வன்
அலையவே ஞாதி பூமி அணுகிடும் என்று சொன்னோம்.

39. பணமும் பண்டமும் அபிவிருத்தியடையும். அழகிய வீடு கட்டுவான். இவனது சகோதர சகோதரிகளுக்கு க்ஷேமங்கள் நிச்சயமுண்டாகும் (வியாதி முதலியன இரா என்பது கருத்து). கால்நடைகள் நன்ருக விருத்தியாகும். எதிரிகள் இவன் வசப்படுவார்கள். பங்காளிகளின் பூமிகளும் சேரும்.

## ஜாதகம் 11.

1. பொன்தனு புகர்மால் கேது புலியினில் இரவி வண்டி
சந்திரன் ஆட தாகச் சனிகருங் கோளும் சாடி
முந்திய சேயும் மீனம் வளையலும் ஜென்ம மாக
இந்தவாறு கிரகம் நின்றால் இயம்புவீர் பலனைத் தானே.

| செவ்வாய் | சந்திரன் | | |
|---|---|---|---|
| சனி ராகு | **இராசி சக்கரம்** | | லக்கினம் சூரியன் |
| | | | சுக்கிரன் புதன் கேது |
| குரு | | | |

1. ஈசுவர வருஷம், ஆடி மாதம், 20-ஆந் தேதி வியாழக்கிழமை விடியற் காலையில் ஜனனம்.

### ஆங்கில தேதி 2–8–1877

நவகிரஹங்களின் பாதசாரம்

ஆயில்யம் 1-இல் சூரியன். அச்வனி 4-இல் சந்திரன். பூரட்டாதி 4-இல் செவ்வாய். மகம் 1-இல் புதன். மூலம் 1-இல் குரு. மகம் 4-இல் சுக்கிரன். பூரட்டாதி 3-இல் சனி (வக்ரீ), சதயம் 2-இல் ராகு. மகம் 4-இல் கேது. குரு தனுஸிலும் சுக்கிரன் புதன் கேது சிம்மத்திலும், சூரியன் கடகத்திலும், சந்திரன் மேஷத்திலும், சனி ராகுவும் கும்பத்திலும், செவ்வாய் மீனத்திலும் இலக்கினம் கடக லக்னமாகவுமிருந்தால், இவ்வாறு கிரஹநிலை உள்ள ஜாதகனது பலன் என்ன? சொல்லுங்கள், எனப் பார்வதிதேவி கேட்கலுற்றாள்.

2. அம்பிகை கேட்கும் போது அத்திரி முனிவர் சொல்வார்
செம்மையா யாண்பால் ஜன்மம் ஜனித்தஇல் கீழ்மேல் வீதி
நன்மையாய் உத்தர வாடை நாட்டுவோம் எதிர்வீ டில்லை
அம்புவி யளந்தோன் மேற்கில் உறைந்தனன் என்று சொன்னோம்.

2. இவ்வாறு அம்பிகை கேட்டதற்கு அத்திரி முனிவர் பதிலுரைக்கின்றார். இவ்வாறான கிரக நிலையில் ஜனித்தக் குழந்தை ஆணாகும். வீதி கிழக்கு மேற்காக இருக்கும். வீடு வடக்கு வரிசையில் இருக்கும். (தென்திசை நோக்கி இருக்கும்.) எதிரே வீடிராது. பூமியை அளந்தவனாகிய திருமாலின் கோயில் மேற்குத் திசையிலிருக்கும்.

3. உத்தரம் ஈசன் காளி உறைந்திடும் தக்ஷிணத்தில்
சத்தியும் நிற்கு மென்றோம் சாற்றுவோம் வடமேல் திக்கில்
அத்தியும் மாரி தங்கும் அக்கினி காளி கோஷ்டம்
வித்தகி அடையா ளத்துள் மேவிய சமவூர் தன்னில் ;

3. வடதிசையில் பரமசிவனது ஆலயமும் காளி கோயிலும் உண்டு. தென் திசையில் பார்வதியின் கோயில் இருக்கும். வடமேற்கில் ஸ்ரீ விநாயகரது கோயிலும் மாரியம்மன் கோயிலும் விளங்கிடும். தென்கிழக்கில் ஒரு காளி கோயில் இருக்கும். இப்படிப்பட்ட அடையாளமுள்ளதோர் ஊரில் ;

4. உதிப்பானும் நாலாம் ஜென்மம் உறுந்தந்தை தாயின் யோகம்
பதித்திட துணைவர் யோகம் வரும்புத்திர களத்திர யோகம்
சதிபில முன்பின் ஜன்மம் சாற்றுவோம் நவக்கோ ளாய்ந்து
விதியதைச் சொல்லு கின்றேன் வித்தகி கேட்டி டாயே.

4. இவன் உதித்திருப்பான். இவன் அக்குடும்பத்தில் நான்காவது குழந்தை. நவக்கிரகங்களைச் செம்மையாக ஆராய்ந்து பார்த்து, இவனுடைய தாய் தந்தை சகோதரர்கள் வரப்போகின்ற மனைவி புத்திரர் இவர்களைப்பற்றிய வரலாறுகளையும், இவனது யோகங்கள் முன் பின் ஜன்மங்கள் இவைகளைப்பற்றியும் இந்த நூலில் சொல்லுகின்றேன். கேட்டருளவேண்டும்.

5. தந்தையின் குணத்தைச் சொல்வேன் சமர்த்தனாய் வார்த்தை [கூறுவன்
பந்தமா யிருநி றத்தான் பாரினில் ஒடிச்சல் தேகி
சிந்தையு மர்ம முள்ளான் சிலசில செட்டுச் செய்வன்
சந்ததம் பித்த தேகி தயாளமாங் குணங்க ளில்லான்.

5. முதலில் இவனுடைய தந்தையின் குணங்களைச் சொல்லுகின்றேன். மிக்க சாமர்த்தியமாக வார்த்தைகளைப் பேசுவான். கருத்த மேனியான். மெலிந்த உடல் அமைந்தவன். அவனது மனத்தில் எப்பொழுதும் ஆலோசனைகளும், கபடமும் தங்கி இருக்கும். சிற்சில வியாபாரங்களைச் செய்வான். அடிக்கடி பித்தத்தினால் பாதிக்கப்படுவான். தயை, தாக்ஷிணியம் முதலிய குணங்கள் இல்லாதவன்.

6. ஞானங்கள் பலவும் சொல்வன் நாதனார் பத்தி பூண்பன்
தேன்குண வார்த்தை சொல்வன் சிறப்பான குடும்பி யாவன்
ஈனமாங் குணங்க ளுள்ளான் எதிரியை வசியம் செய்வன்
ஆனதோர் பூமி சேர்ப்பன் அவன்பூமி யிச்சை யுள்ளான்.

6. பலவிதக் கல்வியறிவுகளைப் பிறர் வியக்கப் பேசுவான். சிவபிரானிடம் பக்தி கொண்டவன். தேன் போல் மிக இனிமையான வார்த்தைகளைச் சொல்லுவான். அவ்வூரில் சிறந்த குடும்பஸ்தர்களில் ஒருவனாக மதிக்கப்படுவான். கீழ்த்தரமான குணங்கள் உள்ளவன். பகைவனைத் தன் வசப்படுத்துவான். நல்ல பூமிகளைச் சேர்ப்பான். மேன்மேலும் பூமிகளைச் சேர்ப்பதில் ஆசை உள்ளவனாகவும் இருப்பான்.

7. மூலச்சூ டுடைய னுகும் முன்கோபங் மூர்க்கம் கொஞ்சம்
ஞாலமேல் கிருஷி செய்வான் நவதானிய முடைய னுகும்
வேல்விழி தன்னைப் பேணுன் வீணப வாத முள்ளான்
சாலவே துணைவர் தம்மைச் சாற்றுவோம் மேலுங் கேளே.

7. மூலச்சூட்டினுல் பாதிக்கப்படுவான். சிறிது முன்கோபமும் பிடிவாதமும் இருக்கும். இவனுக்கு விவசாயம் முக்கியத் தொழிலாக இருக்கும். பல தானியங்களை உடையவன். தனது மனைவிடம் அதிக பக்ஷமில்லாதவன். இவனைப்பற்றிக் காரணமின்றியே அவதூறுகள் ஏற்படும். இவனுடைய சகோதரர்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். கேளுங்கள்.

8. துணைவர்க ளாண்பா லொன்று சொல்லுவோம் மாகப் தீர்க்கம்
பிணையாகு மற்ற வெல்லாம் பேசுவோ மிவனுக் கேதான்
அனையவிக் குணத்தா னுக்கு அவனுமே உதிப்பா னென்றோம்
கனமுட னிவனதன் சேதி கழறுவோம் கேளு மம்மா.

8. இவனுக்கு (தந்தைக்கு) ஒரு சகோதரன் இருப்பான். அவன் தீர்க்காயுளுடன் வாழ்வான். இவனுடன் பிறந்த மற்றைய குழந்தைகள் விளங்கா. இப்படிப்பட்ட குணங்கள் வாய்க்கப் பெற்ற தந்தைக்கு இக் கடக லக்கின மகன் பிறந்திருக்கிறுன். இந்த ஜாதகனது செய்திகளைக் கூறுகின்றோம். கேளுங்கள். தாயே!

9. மால்நிறம் ஒடிச்சல் தேகி மருமமும் கொஞ்ச முள்ளான்
ஈனரைச் சேரா னுகும் இன்பமாய் வார்த்தை சொல்வன்
ஆனவர் நேசம் கொள்வன் ஆள்கார ருடைய னுகும்
மானமாய் ஜீவிப் பானும் வடுவுகள் காணு மென்றோம்.

9. திருமாலின் நிறத்தவன் [கருத்த மேனியான் என்பது கருத்து]. மெலிந்த சரீரமுள்ளவன். சிறிது கபடமுள்ளவன். தன்னைவிடத் தாழ்ந்தவர்களிடம் பழகமாட்டான். இனிமையாகப் பேசுவான். பெரியோர்களின் நட்பு உடையவன். நல்ல சேவகர்களை உடையவன். மிக்க கௌரவத்தோடு ஜீவனத்தை நடத்துவான். சரீரத்தில் சில அடையாளங்களும் காணப்படும்.

10. நித்திரை சுகிப்ப னுகும் நீராடப் பிரியன் மிக்க
நத்தின பேரைக் காப்பன் நக்கன்மேல் பக்தி பூண்பன்
எத்திசைக் கீர்த்தி கொள்வன் யாவர்க்கு நல்லோ னுவன்
பத்தினி நேய னுகும் மாடுகள் (பாருகள்) விருத்தி செய்வன்.

10. நித்திரையில் பிரியமுள்ளவன். நீரில் மூழ்கி விளையாடுவதிலும் ஆசை உள்ளவன். தன்னை அண்டியவர்களைக் காப்பாற்றும் சுபாவமுள்ளவன். பரமசிவனிடத்தில் பக்தி பூண்டவன். இவனது கீர்த்தி எல்லாத் திசைகளிலும் பரவி இருக்கும். எல்லோருக்கும் நல்லவனுக நடந்து கொள்ளுவான். மனைவியாளிடத்தில் மிக்க அன்புள்ளவன். கால்நடைகளை (பூமிகளை) விருத்தி செய்வான்.

11. வண்டிவா கனமு முள்ளான் வணிபமும் செய்வா னுகும்
குண்டைகோ விருத்தி யுள்ளான் குலத்துளோர் மெச்ச வாழ்வன்
தண்டமிழ்க் கல்வி யுள்ளான் சன்மார்க்கன் வறுமை யில்லான்
துண்டமாய் வார்த்தை சொல்வன் சுந்தரி மேலுங் கேளாய்.

11. வண்டியும், மற்றைய வாஹன சாதனங்களும் உடையவன். இவன் வியாபாரமும் செய்வான். பசுக்களை விருத்தி செய்வான் [பால் பாக்கியம் உண்டு என்பது கருத்து] உற்றார் உறவினர் மெச்சும் வகையில் வாழ்க்கையை நடத்துவான். தமிழில் பாண்டித்தியம் உள்ளவன். தரும வழியிலேயே நடப்பான். ஏழ்மை இல்லாதவன். பிறர் சந்தேகிக்க முடியாத வகையில் பேச்சுகள் ஸ்பஷ்டமாக இருக்கும். தேவியே ! மேலும் கேளுங்கள்.

12. இவனுடைத் துணைவர் தம்மை இயம்பஆண் பலத்தைக் காணோம்
அவனியில் கன்னி ஒன்று அறைகிறோம் மூத்தோ ளாக
நவனியில் அவள்தன் சேதி நாட்டுவோம் நற்கு ணத்தாள்
பவமுள புத்தி சாலி பஞ்சையை ஆத ரிப்பள்.

12. இவனுடைய சகோதர பாவத்தைப்பற்றிப் பேசுவோமானால், இவனுக்கு ஆண் சகோதரன் இருக்க ஆதாரமில்லை. [சகோதரரில்லை.] ஒரு சகோதரி உண்டு. அவளும் மூத்தவளாக இருப்பாள். அவளுடைய வரலாறுகளைச் சொல்லுகின்றோம். நல்ல குணமுள்ளவள். மதிநுட்பம் வாய்ந்தவள். ஏழைகளை ஆதரிப்பாள்.

13. தனமுளாள் பொறுமை யுள்ளாள் தன்வரன் சுகம்குறைச்சல்
கனமுடன் வாழ்வா ளாகும் காதலி சஞ்சலத்தாள்
அனையவே புத்திர ரில்லாள் அல்பரை உறவு கொள்ளாள்
இனங்களை ஆத ரிப்பள் ஈச்வரி கேட்டி டாயே.

13. பணம் படைத்தவள். பொறுமைசாலி. கணவனின் ஆதரவு மட்டாகவே இருக்கும். ஆயினும் பெருமையுடன் வாழ்வாள். எப்பொழுதும் மனத்தில் கவலையுள்ளவள். புத்திர பாக்கியம் இல்லாதவள். தன்னை விடத் தாழ்ந்தவர்களிடம் நட்புகொள்ள மாட்டாள். தன் இனத்தவரை ஆதரிப்பாள். பார்வதி தேவியே ! மேலும் கேட்டருளல்வேண்டும்.

14. அவளுக்குப் புத்திர பாவம் அறைகிறோ மாண்பால் காணோம்
பவமுள பெண்பா லொன்று பருகிடும் இவளுக் கேதான்
தவசியே அந்த மாதை ஜாதகன் மணமே கொள்வன்
கவனமா யிருபான் மூன்றில் கழறினோம் மணங்கள் தாமே.

14. அவளுக்குப் புத்திரர்கள் இருப்பதற்குக் காரணமில்லை. ஆனால் ஒரு பெண் பிறப்பாள். இந்தப் பெண்ணையே இக்கடகலக்கின குமாரன் மணம் செய்து கொள்ளுவான். இவனுக்கு இருபத்துமூன்றும் வயதில் விவாஹம் நடைபெறும்.

15. மாதுவின் குணத்தைச் சொல்வேன் மங்கள வார்த்தை கூறுவள்
தீதுக ளெண்ணு நெஞ்சம் திருமக ளொப்ப தாகும்
சூதுக ளில்லா ளாகும் சிவந்திடு மேனி யாவள்
பாதக மொருவர்க் கெண்ணுள் பாலர்க ளுடைய ளாமே.

15. அந்தப் பெண்ணைப் பற்றிய வரலாறுகளைக் கூறுவேன். எப்பொழுதும் மங்களகரமான வார்த்தைகளைப் பேசுவாள். பிறருக்கு ஒருபோதும் தீமைகளை எண்ணாத நெஞ்சம் படைத்தவள். மஹா லக்ஷ்மியைப் போன்றவள். கள்ளமில்லாதவள். சிவந்த மேனியாள். பிறரது வேலைகளில் இடையூறுகளைச்செய்ய நினைக்கமாட்டாள். புத்திரப்பேறு உடையவள்.

16. அன்னம்போல் சாய லுள்ளாள் ஆளனுக் கினிய ளாகும்
உன்னத வாத தேகி உத்தமி யோக சாலி
அன்னையின் ஆஸ்தி தானே அணுகிடு மிவளுக் கேதான்
தன்னிலே சுகமு முள்ளாள் சகல பாக் கியமு முள்ளாள்.

16. அன்னம்போல் நடையழகு உள்ளவள். கணவனுக்கு மிகப் பிரியமானவள். வாததேகம் வாய்ந்தவள். விசேஷயோக முள்ளவள். தன்தாயின் சொத்துக்கள் இவளை வந்தடையும். சௌக்கியங்களுக்குக் குறைவில்லாதவள். பூமி, வீடு, தோட்டம், பணம், பசுக்கள், வஸ்திரம், ஆபரணம், புத்திரர் முதலிய எல்லா பாக்கியமும் நிறைந்தவள்.

17. பணிகளு முடைய ளாகும் பகருவோம் தெய்வ பக்தி
கணிகைய ரொப்ப தாகும் கனதன முடைய ளென்றோம்
துணிவான குணத்த ளாகும் தொல்புவி கீர்த்தி ஏற்பள்
அனையவே புத்திர பாவம் அறைகிறோம் மேலுங் கேளே.

17. ஆபரணங்களைப் பெறுவாள். தெய்வபக்தி உள்ளவள். கணவனுக்குச் சிற்றின்பத்தில் பூரண திருப்தியை உண்டாக்குவாள். மிகப் பெருந்தனமுடையவள். துணிவு உடையவள். இவளுடைய நற்பெயர் பூமியில் பரவும். இவளுடைய புத்திரபாவத்தைக் கூறுகின்றோம். கேளுங்கள்.

18. ஜாதகன் தனக்குப் புத்திரர் சாந்றுவோ மாண்பால் ரண்டு
மேதினில் கன்னி ரண்டு விருத்தியா மிவனுக் கேதான்
போதவே மூன்று நஷ்டம் போற்றுவோம் மதலை தானும்
கோதிலா இவன்தன் மேலாய்க் குழவிகள் வாழ்வ ரென்றோம்

18. இந்தத் தம்பதிகளுக்கு இரண்டு ஆண் குழந்தைகளும் இரண்டு பெண் குழந்தைகளும் பிறப்பார்கள். அவர்கள் நால்வரும் தீர்க்காயுளுடன் வாழ்வார்கள். இவர்களைத் தவிர மூன்று குழந்தைகள் பிறந்து நீடிக்கமாட்டார்கள். அந் நான்கு குழந்தைகளின் வாழ்க்கை, இக்கடக லக்கின ஜாதகனின் வாழ்க்கையைக் காட்டிலும் எல்லாத் துறைகளிலும் மேலாக இருக்கும்.

19. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அன்புளள் இருநிறத்தள்
பன்னிய ஒடிச்சல் தேகி பகையிலாள் எவர்க்கு நண்பள்
உன்னத வார்த்தை கூறுவள் உறுதியா மனத்த ளாகும்
அன்னியர் மெச்ச வாழ்வள் அவளுமே ஈகை யுள்ளாள்.

**19.** இந்த ஜாதகனுடைய அன்னையின் வரலாறுகளைக் கூறுவேன். அன்புள்ளவள். கருத்த மேனியாள். மெலிந்த சரீரம் வாய்ந்தவள். ஒருவரையும் பகைத்துக் கொள்ளமாட்டாள். எல்லோரிடத்தும் தோழமை கொண்டவள். மேலான வார்த்தைகளையே பேசுவாள். உறுதியான மனம் உடையவள். பிறர் கொண்டாடும்படி வாழ்வாள். மேலும் கொடுக்கும் குணமும் உள்ளவள்.

**20.** அடக்கமு மொடுக்க முள்ளாள் அன்னங்கள் போட வல்லாள்
நடக்கையும் நல்ல தாகும் நற்றந்தம் பெரிதாய்க் காட்டும்
துடுக்கென வார்த்தை சொல்லாள் சொல்லுவோம் பித்தச் சூடு
மடக்கொடி பக்தி பூண்பள் வரைகிறோம் துணைவர் தம்மை.

**20.** சரீரத்திலும் மனத்திலும் வணக்கமுடையவள். அன்னதானம் செய்ய ஆசை உள்ளவள். நல்ல நடத்தை உடையவள். அவளுடைய பற்கள் பெரியனவாக இருக்கும். பிறர்க்குத் திடீரென அவமானத்தை உண்டாக்கும் வார்த்தைகளைப் பேசமாட்டாள். பித்தச்சூடு உள்ளவள். தெய்வ பக்தி கொண்டவள். அவளுடைய சகோதரர்களைப்பற்றிச் சொல்லுகின்றோம்.

**21.** துணைவர்க ளாண்பால் ரண்டு சொல்லுவோம் கன்னி ஒன்று
கனமுடன் மூன்று தீர்க்கம் கனக்காது மற்ற வெல்லாம்
அணையவே உள்ளூர் தன்னில் அவளுமே வாழ்வா ளாகும்
இணையிலா இவள் முன்ஜன்மம் இயம்புவோம் மேலுங் கேளே.

**21.** இவளுக்குச் சகோதரர்கள் இருவர். சகோதரி ஒருத்தி இவர் மூவரும் நீடித்து வாழ்வார்கள். மற்றக் குழந்தைகள் நீடித்திரா. உள்ளூரிலேயே வாழ்க்கைப்பட்டு வாழ்வாள். இவளது முன்ஜென்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். கேளுங்கள்.

**22.** தவளையின் கிரிக்குத் தெற்கில் சாற்றிய பேரூர் தன்னில்
இவளுமே வன்னிய வம்சம் இலகினு ளென்று சொல்வோம்
அவனியில் பாக்கியம் பெற்று அதிகமாய்ப் பணிதி யுண்டாய்ப்
பவமுள வரனின் கூடப் பத்தினி வாழ்ந்தா ளென்றோம்.

**22.** இவள் தவளகிரி என்று பிரசித்தமான க்ஷேத்திரத்திற்குத் தென் திசையில் பெரிய ஓர் ஊரில் வன்னிய வமிசத்தில் பிறந்திருந்தாள். அந்த ஜன்மத்தில் இவள் ஏராளமான செல்வத்தைப் பெற்றும், ஆபரணம் முதலியவைகளை அடைந்து நற்குணம் வாய்ந்த தனது கணவனுடன் சிறப்புடன் வாழ்ந்தும் வந்தாள்.

**23.** சுதர்களின் விருத்தி யுண்டாய்ச் சுற்றத்தார் மெச்ச வாழ்ந்து
நிதமுமே வருவோ ருக்கு நிமலியும் தாக மீந்து
பதியினில் திருவு முண்டாய்ப் பாலகன் கலேச னுக்குச்
சதமுடன் தீபம் ஒன்று சத்தியும் வைத்தா ளென்றோம்.

23. புத்திரர்களைப் பெற்று, உற்றார் உறவினர் மெச்சும்படியும் வாழ்ந்தாள். மேலும் தன் வீடு நாடி வந்தவர்களுக்குச் சோறும் தண்ணீரும் கொடுத்து உதவினாள். அதன் பயனாக இன்னும் செல்வம் அதிகரித்து, தங்கள் குழந்தையான ஸ்ரீ விநாயகப்பெருமானுக்கு பிரதிதினம் ஒரு தீபம் சமர்ப்பித்து வந்தாள்.

24. தோகையின் வேலன் பக்தி சுந்தரி அதிகம் வைத்துப்
பாகமாய் வரனின் முன்னே பத்தினி மரண மானாள்
ஆகையால் அவர்கள் வீட்டில் அவள்குல தெய்வ மாகச்
சேகரம் செய்து வாழ்வாள் செப்பின மொழி குன்றாது.

24. அப்பொழுது இவளுக்கு ஸ்ரீசுப்பிரமணியசுவாமியிடம் பக்தியும் சிறந்து விளங்கிற்று. காலக்கிரமத்தில் இவள் கணவனுக்கு முன்னமேயே மரணமடைந்தாள். அதனால் அவள் அக்குடும்பத்தில் குலதெய்வமாகக் கொண்டாடப்பட்டுச் சிறப்பிக்கப்பட்டு விளங்குவாள். சொல்லிய வார்த்தை தவறாது.

25. கஞ்சனால் வரையப் பட்டுக் காதலி இச்சென் மத்தில்
வஞ்சியு மிக்குலத்தில் வந்தவ ளிவேளே யென்றோம்
தஞ்சமாய்க் கணேச ருக்குச் சத்தியும் தீப மொன்று
மிஞ்சியே வைத்த தாலே விளங்கிற்றுப் புத்திர னொன்றே.

25. பிறகு பிரம்மதேவனால் இவள் இந்தக் குலத்தில் பிறப்பிக்கப் பட்டாள். இவளுக்கு ஒரே ஒரு பிள்ளை பிறப்பதற்கான காரணத்தைக் கூறுகின்றோம். முன்ஜன்மத்தில் இவள் கணேசப்பெருமானுக்கு ஒரு தீபம் சமர்ப்பித்து வந்தமையால் இந்த ஜன்மத்தில் இவளுக்கு ஒரே ஒரு பிள்ளை தான் உண்டு.

26. பின்ஜன்மம் காஞ்சி தன்னில் பிராமண குலமு திப்பாள்
தன்னிலே செல்வ முண்டாய்த் தன்வர னுடனே வாழ்வள்
அன்னையும் கேட்க லுற்றாள் அவளிந்த ஜன்மம் தன்னில்
உன்னித கங்கை வம்சம் உறைந்துமே மறுஜன் மத்தில்.

26. இவள் மறுஜன்மத்தில் காஞ்சீபுரத்தில் பிராமண வமிசத்தில் பிறப்பாள். அக்காலத்திலும் இவள் அதிக செல்வம் படைத்தவளாகத் தன் கணவனுடன் சுகமாக வாழ்வாள். இவ்வாறு முனிவர் சொன்னவுடன், பார்வதி தேவி கேட்கலுற்றாள். இந்த ஜன்மத்தில் வேளாள வமிசத்தில் பிறந்த இவள் மறு பிறவியில் ;

27. மறைக்குல முதிப்ப தென்ன வறைகுவார் முனிவர் தாமும்
பெருமையா யிச்சென் மத்தில் பந்துவுக் கினிய ளாகி
வருவோர்க்குத் தாகம் அன்னம் மனமது தளர்ச்சி யாகிக்
குறைவிலா தெய்வ பக்தி கொண்டதா லுதிப்பா ளென்றோம்.

27. அந்தணர் குலத்தில் பிறப்பதற்குக் காரணம் என்னை ? சொல்லுங்கள் என முனிவர் இதற்குப் பதில் கூறுகின்றார். இந்த ஜன்மத்தில் இவள் உறவினருக்கு நல்லவளாக நடந்துகொண்டதாலும், தன் வீடு

நாடி வந்தவர்களுக்கு மனமிளகி சோறும் தண்ணீரும் அளித்ததாலும்; பரிபூரண சச்சிதானந்த சொரூபியான கடவுளிடம் எப்பொழுதும் பக்தி கொண்டிருந்தமையாலும் இவள் மறுஜன்மத்தில் பிராம்மண குலத்தில் பிறப்பாள் என்றோம்.

28. தந்தையின் முன்ஜன்மத்தைச் சாற்றுவோம் காஞ்சி தன்னில்
பந்தமாய் வைசிய வம்சம் பாலக னுதித்து மேலும்
சந்ததம் செட்டுச் செய்து தனமது பெருக்க முண்டாய்
முந்திய மனைவி மைந்தர் முபற்சியாய் வாழ்வா னென்றோம்.

28. இந்தக் கடக லக்கின குமாரனது தகப்பனாரின் முன்ஜன்மத்தைப் பற்றிக் கூறுகின்றோம். இவன் முன் பிறவியில் காஞ்சீபுரத்தில் வைசிய குலத்தில் பிறந்தான். அப்பொழுது அவன் வியாபாரம் செய்து அதிகச் செல்வத்தைப் பெற்றிருந்தான். தன் மனைவி மக்களுடன் சுகமாக வாழ்ந்து வந்தான்.

29. பித்தகுன் மத்தி னாலே பூமியில் மரண மாகி
வித்தகன் கங்கை சேயாய் விளங்கின னிவனே யென்றோம்
சித்தமா யிவன் பின்ஜன்மம் செப்புவோமவ் வூர் தன்னில்
சுத்தமா யிக்கு லத்தில் தோன்றுவா னிவனே யென்றோம்.

29. பிறகு அந்திய காலத்தில் பித்த குல்மத்தினால் கஷ்டப்பட்டு மரண மாகி, இங்கு வேளாள வமிசத்தில் பிறந்து, இக் கடகலக்கின மகனுக்குத் தந்தையாக ஏற்பட்டிருக்கின்றான். இவனது பின்ஜன்மத்தையும் சொல்லுகின்றோம். இப்பொழுது வசிக்கும் ஊரிலேயே பிறரை எதிர் பாராத வேளாள குலத்திலேயே தோன்றுவான்.

30. ஜாதகன் முன்ஜன் மத்தைச் சாற்றுவோ மருணை கீழ்ப்பால்
மேதினில் பேரூர் தன்னில் வித்தகன் சூத்திர வம்சம்
தீதிலா உதித்தா னென்றோம் தேவியும் மதலை யுண்டாய்ப்
பூதலம் குறைவ தாயும் பெரிதான செட்டுச் செய்தான்.

30. ஜாதகனுடைய முன்ஜன்மத்தைப் பற்றிக் கூறுவோம். இவன் முன் பிறவியில் திருவண்ணாமலைக்குக் கீழ்த்திசையில் ஒரு பெரிய ஊரில் சூத்திர வமிசத்தில் உதித்திருந்தான். அப்பொழுது அவன் மனைவி மக்களை அடைந்து பெரியதோர் வாணிபம் செய்து வாழ்ந்தான்.

31. பலவித தலங்கள் சென்று பிராமணர் பக்தி யுண்டாய்க்
குலவியே தான தர்மம் குணமுடன் செய்து வந்து
உலகுளோர் மெச்ச வாழ்ந்து உத்தமன் மரண மாகி
நலமுள இக்கு லத்தில் நாயகன் உதித்தா னென்றோம்.

31. பலபல புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்றான். அந்தணர் களிடம் பகைமையின்றிப் பக்தியோடிருந்தான். தானதருமங்களை மன முவந்து சிரத்தையுடன் செய்து வந்தான். உறவினர் மெச்சும் வகையில் வாழ்ந்து, பிறகு மரணமாகி இக் குலத்தில் பிறந்திருக்கின்றான் என்றோம்.

32. முன்ஜன்மம் செய்த புண்ணியம் மொழிகிறே மிச்சென் மத்தில்
தன்செல்வ மேல்மே லோங்கும் தழைத்திடும் குடும்பம் தானும்
அன்னையும் கேட்க லுற்றாள் அவன்துணை விக்குப் புத்திரர்
சொன்னீரே இல்லை யென்று சுந்தரி தனக்குக் கர்மம் ;

32. முன் பிறவியில் செய்த நற்காரியங்களின் பயனாக இந்தப் பிறவியில் இவனது செல்வம் மேன்மேலும் ஓங்கி வளரும். குடும்பம் தழைத்துப் பல கிளைகள் ஏற்பட்டுப் பரவும். இங்கு அன்னை பார்வதி கேட்கின்றாள் ; இவனுடைய சகோதரிக்குப் புத்திரப்பேறு இருக்காது என்று [பதின்மூன்றாம் பாட்டில்] சொன்னீர்கள். அவ்வாறாயின் அவளுக்கு ஈமச் சடங்குகளை ;

33. எவர்கள்தாம் செய்வார் சொல்லாய் இயம்புவோம் கேளு மம்மா
நவனியில் தவத்தி னாலே நாட்டுவோம் கிரியை தானும்
பவமுள குடும்ப மொன்றாய்ப் பாலிப்பா ளிவளே யென்றோம்
சிவன்தனைப் பூசை செய்யும் தேவியே கேட்டி டாயே.

33. யார் செய்வார்கள் ? இவ்விஷயத்தைச் சொல்லுவீர்களாக என முனிவர் பதில் கூறுகின்றார். உண்மை. அவளுக்குப் புத்திரர் இல்லை. ஆயினும் அவனுக்கு தௌஹித்திரனால் [பெண்ணின் பிள்ளையால்] ஈமச் சடங்குகள் நடைபெறும். அவள் [இந்த ஜாதகனின் மூத்த சகோதரி] தன்னுடைய பெண்ணின் குடும்பத்தையும் தனது குடும்பத்தையும் ஒன்றாகப் பாவித்துப் பரிபாலிப்பாள் என்று முன்னமேயே சொல்லியிருக்கின்றோம். சிவபிரானைப் பூசைசெய்யும் தேவியாரே! மேலுங்கேளுங்கள்.

34. தந்தைதாய் மரண காலம் சாற்றுவோ முப்பா னுண்டில்
பந்தமாய்த் தேளின் மாதம் பகருவோம் தந்தைக் கேதான்
பிந்தியு மன்னைக் கேதான் பேசுவோ முப்பா னொன்பான்
சந்ததம் தனுசு மாதம் சாற்றினோம் கண்டம் தானே.

34. இந்த ஜாதகனது தந்தை தாய் இவர்களுடைய மரண காலத்தைச் சொல்லுகின்றோம். முப்பதாவது வயதில் கார்த்திகை மாதத்தில் இவனுடைய தந்தை மரணமாவான். தாய் இவனுடைய முப்பத்து ஒன்பதாவது வயதில் மார்கழி மாதத்தில் மரணமடைவாள்.

35. இன்னவன் மரண காலம் இயம்புவோ மறுபா னலில்
தன்னிலே மேட மாதம் சதுர்த்தசி வளர்பக் கத்தில்
அன்னவன் பித்த நோயின் அவத்தையால் மரண மாவன்
உன்னத இவன்பின் ஜன்மம் உரைக்கிறோம் கேளு மம்மா.

35. இந்த ஜாதகனுக்கு அறுபத்துநான்காவது வயதில் சித்திரை மாதத்தில் வளர்பிறைச் சதுர்த்தசி திதியில் பித்த [காமாலை முதலியன] நோயினால் மரணமுண்டாகும். இவனது பின்ஜன்மத்தைப் பற்றிக் கூறுவோம். கேளுங்கள் தாயே !

36. கச்சியில் பிரம்ம சேயாய்க் காவல னுதிப்பா னாகும்
உச்சித கல்வி கற்று உத்தம னரசர் பக்கம்
மிச்சமா யதிகா ரங்கள் வித்தகன் செய்வா னாகும்
அச்சுதன் தங்கை யாளே அறைகிறோம் மேலுங் கேளே.

36. காஞ்சீபுரத்தில் பிராம்மண குலத்தில் உதிப்பான். நல்ல கல்வியைக் கற்று, அரசர்களிடம் [அரசாங்கத்தில்] விசேஷ அதிகாரத்தைப் பெற்று விளங்குவான். திருமாலின் தங்கையே! மேலும் சொல்லுகிறோம். கேளுங்கள்.

37. இன்னவன் பொதுயோ கத்தை இயம்புவோம் சுகமு முள்ளான்
தன்னிலே பூமி சேர்ப்பன் தைரியன் வறுமை யில்லான்
உன்னத மனையாளாலே உரைந்திடும் பூமி தானும்
அன்னையே பிறைபோல் யோகம் அமர்ந்திடு மென்று சொன்னோம்.

37. இவனுடைய பொதுவான யோகங்களைக் கூறுகின்றோம். மிக்க சௌக்கிய முள்ளவன். தன்முயற்சியால் பூமிகளைச் சேர்ப்பான். தைரிய சாலி. ஏழ்மை இல்லாதவன். தனது மனைவியின் மூலமும் இவனுக்குப் பூமிகள் சேரும். தாயே! இவனது யோகங்கள் வளர்பிறைச் சந்திரன் போல மேன்மேலும் வளர்ந்திடும்.

38. பாக்கிய முடைய னாகும் பலரையும் சிநேகம் கொள்வன்
வாக்குச் சொல் மேன்மை யுள்ளான் மானில மதிக்க வாழ்வன்
நீக்குவா னல்பர் தம்மை நிதானமாய் வார்த்தை கூறுவன்
யோக்கிய னாகி வாழ்வன் உறைந்திடும் திருவு தானே.

38. எல்லா வித பாக்கியமும் உள்ளவனாவான். பலரையும் சினேகம் செய்து கொள்ளுவான். பேச்சுத் திறமை உள்ளவன். எல்லோரும் கௌர விக்கும்படி சிறப்பாக வாழ்வான். தாழ்ந்தோரிடம் பழக்கம் கொள்ள மாட்டான். வெகு கவனமாகப் பேசுவான். எல்லோருடைய நம்பிக்கைக் கும் பாத்திரமானவன். லக்ஷ்மீவாசம் பொருந்தியவன்.

39. உதித்திடு காலம் தன்னில் உயர்கேது தசையி ருப்பு
விதித்திடு திங்கள் பத்தும் விளம்புவோம் பலனை யாங்கள்
சதியான ரோகம் வாய்க்கும் ஜாதகன் தனக்கு மேதான்
அதிகமாய் லாப மெய்தும் அவன்தந்தை தனக்குத் தானே.

39. இவனது ஜனனகாலத்தில் கேது தசையில் இருப்பு மாதங்கள் பத்து மாத்திரம்தான் [மக நக்ஷத்திரம் நான்காம் பாதத்தில் ஜனித்தவன்]. இந்தக் கேது தசையில் ஜாதகனுக்கு நோய் நேரும். ஆனால் இவனது தந்தைக்கு அதிக லாபங்கள் கிடைக்கும். அவனுக்கு நல்ல ஆரோக்கியமும் இருக்கும்.

40. புகர்தசை காலம் தன்னில் கனதனம் மேன்மே லோங்கும்
புவியது சேரு மென்றோம் புதிதான ஒருகம் நேரும்
நவிலுவோம் குடும்பம் தன்னில் நற்சுபம் துணைவ ருக்கு
அவனியில் பெரிய தந்தை அவன் புத்திரர்க் கதிகா ரங்கள்.

---

குறிப்பு.—இந்த ஜாதகன் குழந்தையாக இருக்கும்போது நல்ல தசைகள் வந்தால் அதனால் வரும் சில யோகங்கள் இவனுக்கு நேரடியாக நடப்பதற்கு முடியாதாகையால் பொதுவாகக் குடும்பத்திற்கும் விசேஷமாகத் தந்தைக்கும் அந்த யோகங்கள் நடைபெறும் என்று சொல்ல வேண்டும்.

40. சுக்கிரன் தசையில் ஜாதகனின் தந்தைக்குச் செல்வமும் செல்வாக்கும் மேன்மேலும் அதிகமாகும். பூமிகள் சேரும். புதியதொரு வீடு கட்டுவான். குடும்பத்தில் ஜாதகனின் சகோதரிக்கு நற்சுபங்கள் [கலியாணம் முதலியன] நடைபெறும். பெரிய தந்தையின் பிள்ளைகளுக்கு அதிகாரங்கள் வரும்.

41. நேரிடும் தானிய விருத்தி நிகர்தந்தை செட்டுச் செய்வன்
கூறுவோம் துணைகளுக்கு கொண்டவன் மரண மாவன்
நாரியே தாய்தந் தைக்குந் நற்சுதன் இவர்கட் கெல்லாம்
பாரிய ரோகம் வாய்க்கும் பருகினும் நிவிர்த்தி யாமே.

41. நவதானியம் விருத்தியடையும். தந்தைக்குச் சமமாக வியாபாரம் செய்வான். சகோதரியின் கணவன் மரணமாவான் என்றும் சொல்ல வேண்டும். தாய் தந்தை ஜாதகன் இவர்கள் எல்லோருக்கும் கொடிய நோய் வரும். ஆனால் சீக்கிரத்திலேயே நீங்கும்.

42. பூமியால் வழக்கு நேரும் புதுமனை சேரு மென்றோம்
நேமியோர் புகழ வாழ்வன் நாற்காலி விருத்தி யாகும்
சேமமாம் குடும்பம் தானும் ஜனபந்து சூதம் நேரும்
தாமத மாக ரண்டில் சாற்றுவோம் விபர மாக.

42. பூமியினால் வியாஜ்யம் நேரிடும். புதியதொரு வீடும் கட்டுவான் என்று முன்பே சொன்னோம். உலகத்தார் புகழும்படி வாழ்க்கையை நடத்துவான். கால்நடைகளை அபிவிருத்தி செய்வான். குடும்பத்தில் க்ஷேமமிருக்கும். ஆனால் பந்து வருக்கத்தில் மரணத்தினால் தீட்டு (தீங்கு) நேரும். இவனது பலன்களைப்பற்றி விவரமாக இரண்டாம் பாகத்தில் கூறப் போகின்றோம்.

43. அத்திரி முனிவர் சொல்ல அம்பிகை கேட்க லுற்றாள்
சித்தமாய்த் தந்தை மூத்தோர் சேதியைச் சொல்லு மென்னப்
பத்தியா யிரண்டில் சொல்வேன் பலன்களை விபரமாக
முத்தனை தவங்கள் செய்யும் முதல்வியே கேட்டி டாயே.

43. இவ்வாறு அத்திரி முனிவர் சொன்னவுடன் பார்வதி தேவி, இந்தச் ஜாதகனுடைய பெரிய தந்தையைப்பற்றிய செய்திகளைச் சொல்லு வீர்களாக, எனக் கேட்டாள். அத்திரி முனிவர், தாயே! பெரிய தந்தையைப்பற்றிய விபரங்களை இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றோம். மேலும் கேட்டருளல் வேண்டும்.

## ஜாதகம் 12

1. அளியது இலக்கின மாக அரிவையில் மதி சுன் நிற்க
விளிதச மரவு கேந்திரம் வெஞ்சிகி லாப மைந்தில்
களி புதன் தனத்தோ றுறில் கனகன்சேய் தரும மாகத்
தளிர்பெறும் நவக்கோ ளிவ்வாறு தங்கிட ஜனித்த சேயும்.

| | | | |
|---|---|---|---|
| குரு செவ்வாய் | ராகு | | |
| | இராசி சக்கரம் | | இலக்கினம் |
| | | | |
| புதன் சூரியன் | சுக்கிரன் | கேது | சந்திரன் சனி |

1. நந்தன வருஷம் மார்கழி மாதம் 26-ஆந்தேதி ஞாயிற்றுக்கிழமை இரவு சுமார் ஒரு நாழிகைக்கு ஜனனம்.

### ஆங்கிலத் தேதி 8–1–1893.

நவக் கிரஹங்களின் பாதசாரம்.

பூராடம் 4-இல் சூரியன். ஹஸ்தம் 1-இல் சந்திரன். உத்திரட்டாதி 4-இல் செவ்வாய். மூலம் 2-இல் புதன். ரேவதி 3-இல் குரு. கேட்டை 4-இல் சுக்ரன். ஹஸ்தம் 4-இல் சனி. அசுவினி 4-இல் ராஹு. சுவாதி 2-இல் கேது. ஜனன காலத்தில் **ஹஸ்த நக்ஷத்திரம்.** சந்திர தசையில் இருப்பு வருஷங்கள் ஒன்பது. இலக்கினம் கடகம். சந்திரன் சனி கன்னி யிலும் ராஹு மேஷத்திலும், கேது துலாத்திலும், சுக்கிரன் விருச்சிகம், புதன் சூரியன் தனுஸிலும், குரு செவ்வாய் மீனத்திலுமாக இவ்வாறு நவக்கிரகஹங்கள் நிற்க, பலன்களைச் சொல்லுவீர்களாக.

குறிப்பு.—இந்நூலாசிரியர் நக்ஷத்திரதையோ தசை இருப்பவையோ தெளிவாகச் சொல்லாவிடினும், நாம் ஒருவாறு ஊகித்தறிந்து தீர்மான மாகத் தேதி முதலியவைகளைத் தெரிவித்திருக்கிறோம். இவ்விஷயத்தை ஆராய்ந்து பார்ப்பவர்களே ரஸிப்பார்கள்.

2. காலனை யுதைத்தோன் தேவி கழறுவ தாண்பாலாகும்
சீலமவ் வீதி தானும் செங்கதிர் வாயு வாகும்
கோலமில் உத்திர நோக்கம் குறித்திடு மரனின் கோஷம்
சேலதில் இருக்கும் தென்பால் விளங்குநீ ரோட்டம் கீழ்ப்பால்.

2. யமனை உதைத்துத் தள்ளிய பரமசிவனது தேவியே! இக் கிரஹ நிலையில் உதித்த குழந்தை ஆணாகும். வீதி கிழக்கு மேற்காக அமைந்திருக்கும். வீடு வடக்கு நோக்கி இருக்கும். தென் புறத்தில் பரமசிவனுடைய கோயிலுண்டு. கீழ்த்திசையில் ஒரு வாய்க்கால் இருக்கும்.

3. மாரியும் மூக்கண் ணனும் வாசமாம் சிலையில் தந்தி
வீரிய வடபால் காளி விளங்குநீ ரோட்டம் கீழ்ப்பால்
கூறுநல் லடையா ளங்கள் குறித்தநற் சிற்றூ ரிற்றான்
[1]காராள கோத்தி ரத்தில் கணமுடன் உதிப்பா னென்றோம்.

3. கீழ்த் திசையிலேயே மாரியம்மன் கோயிலும் பரமசிவனுடைய மற்றோரு கோயிலும், விநாயகரது ஆலயமும் இருக்கும். வடதிசையில் காளி கோயிலுண்டு. அதற்குக் கீழ்ப்புறத்தில் கால்வாயும் இருக்கும். மேலே கூறப்பட்ட அடையாளங்கள் அமைந்த சிறிய ஓர் ஊரில் காராளகோத்திரத்தில் இவன் உதித்திருப்பான்.

4. எழுவரும் பதத்தைப் போற்றி இயம்பினோம் உமையே யின்னம்
குழவியின் ஜனன யோகம் குணமுள தந்தை யோகம்
வொழுமுளம் பின்ஜன் மங்கள் உரைபல மெல்லா மாய்ந்து
வழிபடு மிந்த நூலில் வகுத்திடக் கேட்டி டாயே.

4. தேவியே! உனது திருவடிகளைப் போற்றி விட்டு, எழு ரிஷிகளாகிய நாங்கள் இவனுடைய தந்தை மனைவி புத்திரர் இவர்களைப் பற்றியும், இவனுடைய யோகம் முன்பின் ஜன்மங்கள் இவைகளைப் பற்றியும் இந்த நூலில் சொல்லுகின்றோம். கேட்டருளல் வேண்டும்.

5. பொங்கிய குடும்பச் செய்கை பூவையே எடுத்துரைப் போம்
தங்கிய பிதிரின் வர்க்கம் தரித்திடும் ஆண்பால் மூன்று
இங்கித பெண்பால் யாதும் இலகிடா அவையே தீர்க்கம்
மங்கையே பாலன் வர்க்கம் வழுத்துவோம் இனிமேல் கேளே.

5. தேவியே! பால் பொங்குவது போல் பொங்கி மேன்மேலே வளரும் இவனுடைய குடும்பத்தைப்பற்றி எடுத்துரைக்கின்றோம். தந்தைக்குச் சகோதரர்கள் மூவர். சகோதரிகள் விளங்கமாட்டார்கள். அந்தச் சகோதரர்கள் மூவரும் தீர்க்காயுளுடன் வாழ்வார்கள். தாயே! இந்த ஜாதகனின் வருக்கத்தை இனிமேல் சொல்லப்போகின்றோம். செவி சாய்த்துக் கேளுங்கள்.

6. சுந்திரன் வர்க்க மாண்பால் சூழ்ந்திடு மிருவ ராகும்
எந்தையே பெண்பால் மூன்று இலகிடும் தீர்க்க மாக
வந்ததன் மேலா யுற்றால் வளமுறு தரிஷ்ட மாகும்
செந்திரு வதனத் தாளே சொன்னது தவறி டாதே.

---

[1] காராளர்=வேளாளர்.

6. இந்த கடகலக்கின பாலனுக்குச் சகோதரபாவத்தைச் சொல்லுகின்றோம். சகோதரர்கள் இருவர். சகோதரிகள் மூவர். இவர்கள் ஐவரும் நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள். இதற்குமேல் பிறக்கும் குழந்தைகள் பாலாரிஷ்டத்தினால் நீடித்து வாழா. சுந்தரவதனமுள்ள தேவியே! இவ் வார்த்தைகள் தவறா.

7. நிறங்குணம் இனிமே லாக நிகழ்த்துவோம் பால னுக்கு
உறமுள சிவந்த மேனி உடலது சமமாய் நிற்கும்
தருமுள சமவ ளர்த்தி சார்ந்திடும் உஷ்ண தேகி
குறைவிலா தரள தந்தம் கொண்டிடும் பால னுக்கே.

7. இனிமேல் இந்தப் பாலகனது நிறம் குணம் முதலியவைகளைக் கூறுகின்றோம். நன்கு சிவந்த மேனியன். கை கால் முதலிய அவயவங்கள் ஏற்றத்தாழ்வின்றி அளவுக்கேற்றபடி அமைந்திருக்கும். பொதுவாகச் சரீரமும் திட்டமாக வளர்ந்திருக்கும். இவனது உடலில் எப்பொழுதும் உஷ்ணம் அதிகரித்திருக்கும். முத்துக்கள் போன்ற அழகிய பற்களை உடையவன்.

8. அடுத்தவர்க் குதவி செய்வன் ஆண்மையு முடையான் சொல்லும்
எடுத்தநற் கர்மம் வெல்வன் எவர்களும் நல்லோ னென்பர்
கொடுப்பதில் தாட்டியுள்ளான் கொடையுளான் சூரன் சொல்லில்
தொடுத்தபேர் வழக்கு வெல்வன் தோகையர்க் கினிய னென்னே.

8. தன்னை அண்டியவர்களுக்கு உபகாரம் செய்யும் இயல்புள்ளவன். பிறரை அடக்கி ஆளும் திறமை படைத்தவன். தான் தொடங்கிய முயற்சிகளில் வெற்றியை நிச்சயமாகக் காண்பன். எல்லோரும் இவனை நல்லவன் என்று கொண்டாடுவார்கள். பிறருக்குப் பொருள்களைக் கொடுப்பதில் பேரவாக் கொண்டவன். ஆகையால் இவனைக் கொடையாளி என்று சொல்லவேண்டும். காரியங்களைத் திறம்படச் செய்வான். தொடுத்த வியாஜ்ஜியங்களில் ஜயம் பெறுவான். பெண்களால் விரும்பத்தக்கவனாகவும் இருப்பான்.

9. சகலரும் புகழ வாழ்வான் சன்மார்க்கன் துக்க வாதி
அகமதில் தெய்வ பக்தி அணுகுநல் மனத்த னாகும்
நகைமுகன் அடைக்காய்ப் பட்சன் நாவலர் தமக்கு மீவன்
சுகமுளான் ஈகை மேலான் சோர்விலா னென்று பேசே.

9. உலத்தோர் போற்ற வாழ்க்கையை நடத்துவான். தருமநெறியினின்று வழுவாதவன். ஒவ்வொரு பொருளாலும் ஏற்படும் துன்பத்தையே காண்பான். அதையே பிறர்க்கும் எடுத்துச் சொல்வான். மனத்தில் தெய்வ பக்தி நிறைந்தவன். [தனது தெய்வ பக்தியைப் பிறர் அறியக் காட்டிக் கொள்ளாதவன் என்பது கருத்து.] நல்ல மனம் படைத்தவன். எப்பொழுதும் புன்முறுவல் பூத்த முகத்தன். வெற்றிலையைச் சுவைப்பதில் சபலமுள்ளவன் வித்துவான்களுக்கும் சன்மானம் வழங்குவான். சௌக்கியங்களை அனுபவிப்பான். ஈகைக்குணம் இவனிடம் தலைதூக்கி நிற்கும். உடலிலும் மனத்திலும் சோர்வில்லாதவன். [உத்ஸாஹம் குன்றாதவன்.]

10. வித்தையும் பலமாய் நிற்கும் விளங்கிடும் தமிழ்தெ லுங்கு
சத்திய அன்னிய பாஷை சார்ந்திடும் விருத்தி யாகும்
குத்தமும் எவர்க்கும் செய்யான் குவலயம் தனதான்யங்கள்
பத்திய பூமி செல்வம் பகர்நிதி மேன்மே லுள்ளான்.

10. ஆழ்ந்த கல்வியறிவு உள்ளவன். தமிழ் தெலுங்கு இவைகளைத் தவிர வேறு ஒரு பாஷையிலும் பாண்டித்தியம் பெறுவான். பிறருக்குக் கெடுதல் செய்யாதவன். தனம் தானியம் நிலம் நிதி இவைகள் மேன் மேலும் வளரும்.

11. அன்னிய மனுக்கள் நேயன் அலங்கார முடையோ னாகும்
துண்ணிய ததிநெய் பாலில் தொடர்சிறு புளிப்பி லிச்சை
கண்ணிய முடைய னவன் கேண்மையோ ரதிக பட்சன்
நன்னிதி புவியில் மிக்க நல்கிடும் தவறி டாதே.

11. பிறசாதியாருக்கும் நண்பனுவான். தன்னை அலங்கரித்துக் கொள்ளுவதில் விருப்பமுடையவன். தயிர் பால் நெய் முதலியவை களிலும், புளிப்பிலும் ஆசை உள்ளவன். கௌரவம் வாய்ந்தவன். உறவினர்களிடம் அதிக பிரியம் வாய்ந்தவன். இவனுக்கு அதிக நிதியும் தவருமல் கிடைத்திடும்.

12. தானதர் மங்கள் மிக்க தான்மிக வருந்திச் செய்வன்
கோனவ னருளு முள்ளான் குணமுளான் தீர சித்தன்
மானமாம் பிரபுக்கள் மேலோர் மகிழ்ந்திடும் பட்ச னாகும்
நானிலம் புகழ்மேன் மேலாய் நாடிடும் இவனுக் கென்னே.

12. தன் சுகங்களைப் புறக்கணித்தும் கூடத் தான தருமங்களைச் செய்வான். அரசனுடைய அருளிற்குப் பாத்திரமாவான். நற்குணங்கள் வாய்க்கப் பெற்றவன். தைரியசாலி. பெரிய பிரபுக்களின் அன்பிற்கும் பாத்திர மாவான். இவனுடைய புகழ் மேன்மேலும் ஓங்கி வளரும்.

13. எதிரியை லகுவில் வெல்வன் இனஜன பட்ச னவன்
கதியுள பொருளும் வாய்க்கும் கேவலம் எவர்கு மாகான்
பதியிவன் ஜன்னம் பின்னல் பால்கடல் போலே யில்லம்
கதமுடன் விருத்தி யோங்கிக் களைத்திடும் கழன்றிட் டோமே.

13. சத்ருக்களைச் சுலபமாகவே வென்றிடுவான். தன்து சாதியாரிடம் அதிக அன்புள்ளவன். நற்பொருள்கள் கிடைக்கும். யாரும் இவனைத் தாழ்வாக நினைக்கமாட்டார்கள். இவன் ஜெனித்த பிறகு இவனது குடும்பம் பாற்கடல் போலே எல்லாத் துறைகளிலும் விருத்தியாகி விசாலமாகும்.

14. பாரிய அரசர் நேயன் பாங்குளான் பிரதானி யாவான்
மாறிடான் சொற்க ளம்மா மதலையும் யோக சாலி
நாரியர் இவன்மே லிச்சை நல்கியே வலிவாய்ச் சேர்வர்
கூர்விழி வேல்போ லாகும் குணமுளான் புகன்றிட் டாரே.

14. பெரிய அரசர்களுக்கும் [பெரிய அரசாங்க அதிகாரிகளுக்கும் என்று கருதவேண்டும்.] நண்பனுவன். அழகுள்ளவன். இவன் வசிக்குமிடத்தில் இவனே பிரதான மனிதனுக விளங்குவான். தான் சொற்படி நடப்பான். இவ

னுடைய குழந்தைகளும் நல்ல அதிருஷ்ட முள்ளவர்களாக இருப்பார்கள். பெண்மணிகள் இவனிடம் வேறு தூண்டுதலின்றிக் காதல் கொள்வார்கள். கண் பார்வை கூர்மையாக இருக்கும். முன் சொல்லப்பட்ட குணங்கள் தவிர, வேறு நற்குணங்களும் வாய்ந்தவன்.

15. முன்வரும் கோப முண்டு மூத்தோர்கள் வெகுபேர் நேயன்
நன்பூசை நேச முள்ளான் நக்கன்மேல் பக்தி யுள்ளான்
அனந்த பூஷணங்க ளாடை அணிகந்தப் பிரியன் சொல்லும்
தென்பாடு அனங்க னைப்போல் தேர்ச்சியாய் வாழ்வா னாமே.

15. சிறிது முன் கோபி. வயதான பெரியோர்கள் பலர் இவனுக்கு நண்பர்களாக இருப்பார்கள். பூசை செய்வதில் சிரத்தையுள்ளவன். சிவ பிரானிடம் பக்தி பூண்டவன். ஆடை ஆபரணம் சந்தனம் முதலிய வைகளில் பிரியம் உள்ளவன். மன்மதன் போல அழகு குன்றாமல் வாழ்ந்திடுவான்.

16. புண்ணியம் தருமந் தன்னால் பொருளது செலவ ழிப்பன்
நண்ணறு செய்கை யுள்ளான் நற்சுதன் மன்றல் காலம்
திண்ணமா யெடுத்து ரைப்போம் தேவிகேள் ஒருபா னைன்பால்
ஒண்ணிய வருட கோணம் உதித்தானை மணப்பா னென்றோம்.

16. இவனது செல்வம் தரும வழிகளில் செலவழிக்கப்படும். இப்படிப் பட்ட நற் செய்கைகள் உடைய இவனது கலியாண காலத்தைச் சொல்லு கின்றோம். இவனுக்கு, பத்தொன்பதாவது வயதில் திண்ணமாக மணம் நடை பெறும். தனுர்லக்கினத்தில் உதித்தவளை இவன் விவாகம் செய்துக் கொள்வான்.

17. அன்னவள் கமலை போல அழகுளாள் விவேகி யாவாள்
கன்னியாம் அவட்குப் புத்திரர் கழறுவோ மாண்பா லிரண்டு
துன்னிய பெண்பால் மூன்று துலங்கிடும் தீர்க்க மாக
வின்னமா யிதன்மேல் நேர்ந்தால் விளங்கிடா வென்று செப்பே.

17. அவள் மஹாலக்ஷ்மி போல் அழகுள்ளவள். மிகவும் பகுத்தறி வுடையவள். இந்தத் தம்பதிகளின் சந்ததியைப்பற்றிக் கூறுகின்றோம். ஆண்கள் இருவர், பெண்கள் மூவர். ஆக இந்த ஐவரும் நீண்ட காலம் வாழ் வார்கள். இந்த எண்ணிக்கைக்கு மேல் குழந்தைகள் பிறந்தால் அவை விளங்கமாட்டா.

18. விளம்பவள் தன்னா லில்லம் விருத்திக்கு மேன் மேலாகக்
களங்கமில் இவன் முன்ஜன்மம் கழறுவோம் இனிதான் கேளும்
தலம்புகழ் மதுரை நாட்டில் சார்ந்திடும் பேரூரிற்றான்
வளம்பெரு வைசிய னாக வாய்த்திவன் ஜனன மானான்.

18. இவள் இக்குடும்பத்தில் வாழ்க்கைப்பட்ட பிறகு குடும்பம் எல்லா விதங்களிலும் அபிவிருத்தியடையும். இந்த ஜாதகனுடைய முன் ஜன் மத்தைப்பற்றிக் கூறுவோம். இவன் பாண்டிய நாட்டில் மதுரைக்குச் சமீ பத்தில் ஒரு பெரிய ஊரில் வளம் பொருந்திய வைசிய குலத்தில் பிறந் திருந்தான்.

19. தன்னிலே வணிப மேலாய்ச் சார்ந்ததில் பொருள்கள் விருத்தி
பொன்னோடு பணிதி யோங்கப் புகழுமே பொருளு மிக்க
அன்னையே அறங்கள் மேலாய் அறுமுகன் கோஷ்டத் திற்கு
மன்னவ னிட்ட தன்றி மாபெரும் அகதி யோர்க்கு ;

19. பிறகு தக்க வயதில் வியாபாரத்தை ஆரம்பித்து நடத்தி, எல்லோரும் இவனைப் புகழும் வகையில் பொருள்களை விருத்தி செய்து, தங்கம் வெள்ளி ஆபரணங்கள் முதலியவைகளை அடைந்து, அதன் பயனாக பல அறங்களைச் செய்தான். ஆறுமுகக் கடவுளது ஆலயத்திற்கு ஏராளமாகத் திருப்பணிகளைச் செய்தும் வந்தான். இவைகளுமன்றிக் கூட்டம் கூட்டமாக வந்த ஏழைகளுக்கு ;

20. பூசையோ டினிதா னன்னம் புகழ்ச்சியா யளித்து நாளும்
வாசமாம் புஷ்பங் கொண்டு வளர் சிவன் தமக்க ளித்தே
மாசிலா வருகுங் காலை மருவிய வூழே தன்னில்
ஆசையும் மறையோ னன அரிவைமேல் வெகுவாய்க் கொண்டான்.

20. அவர்களைக் கௌரவித்து, மகிழ்ச்சியுடன் அன்னம் அளித்தான். பிரதி தினமும் வாசனை பொருந்திய நறுமலர்களைக் கொணர்ந்து சிவபிரானது திருவடிகளில் சமர்ப்பித்தான். இவ்வாறு மிக்க தார்மீகனாக வாழுங் காலத்தில் இவனுக்கேற்பட்ட தொரு தீய வினையைச் சொல்லுகின்றோம். ஒரு பிராமணப் பெண்ணிடம் காதல் கொண்டான்.

21. சொன்னதோர் வரனு மின்னோன் சுகமுடன் அகம்கொ ணர்ந்து
கன்னியை இனிவாய் மோகம் களையும் கொண்டு விட்டான்
மன்னவன் விதியீ தென்று மனத்தினில் நினைந்தி ருக்க
அன்னிய போகத் தாலே அணிகரு வயிற்றில் தங்க.

21. மோஹம் கொண்ட இவனது விருப்பம் நிறைவேறப் பெற்றவுடன், "இதுவும் என் தலைவிதியே, என்று எண்ணி, தனக்கேற்பட்ட பாவத்திற்கு மிகவும் வருந்தினன். அவளுக்குக் கருவும் ஏற்பட்டது.

22. பூத்தரு மணமு மின்றி பொற்கொடி யிருந்த தாலே
நேத்திய கருவு மேலாய் நிகழ்ந்திட மங்கை கண்டு
கோத்திரம் இழிவாச் சென்று கூறதை யிவன்பா லோதக்
கூத்தனைப் போல்மருந்து கொணர்ந்திட்டான் மங்கைக் கென்றோம்.

22. அவள் மணமாகாத பெண்ணாகவே இருந்தாள். அவளுக்குக் கருவேற் பட்டதை இவனிடம் சொல்ல அக் கருவைப் போக்க இவன் ஔஷதம் தந்தான். அவளுக்கு இவன் யமனாகவே ஆனான்.

23. மங்கையும் மருந்தை யேற்க மகிழ்கரு வெளியாய்ப் போகச்
சங்கையாய் அதனால் மெத்தச் சதிருடவ தோஷ முண்டாய்ப்
பொங்கிய பாவை நொந்து புலம்பியே மாய்ந்து விட்டாள்
இங்கிவன் தனையத் தோஷம் இலகிய ததுவல் லாமல்,

23. மருந்தை உட்கொண்டதால் அவதூறுக்குக் காரணம் இல்லாமல் ஆகி விட்டது. ஆயினும், அவள், தனக்கு தன் ஈனபுத்தியால் ஏற்பட்ட அவ தூறை எண்ணி எண்ணி மனம் புழுங்கி, இறந்தாள். ஆகையால் அந்தத் தோஷம் இவனைப் பிடித்துக்கொண்டது. இதுவுமின்றி இவனுக்கு வேறொரு பாவம் ஏற்பட்டதையும் சொல்கின்றோம்.

24. தாயாதி மூலந் தன்னில் தான்சில பொருள் மறைத்தான்
எயமாந் தோஷ மெல்லா மெய்திவ னன்னாள் போகி
ஓய்விலா நரகம் புக்கி உறைந்தனன் பின்னால் ஜன்மம்
நேயமாம் சைவ னாக நிகழ்ந்தவக் காலந் தன்னில்.

24. பங்காளிகளின் சில சொத்தை மறைத்து அவர்களை ஏமாற்றி அபகரித் தான். ஆகவே, அந்த ஜன்மத்தில் மரணமாகி, அவ்விருப் பாபங்களால் கொடிய நரகத்தில் நீண்டகாலம் வருந்திக்கிடந்து, பிறகு இப் பூமியில் சைவ மதத்தில் பிறந்தான். சைவனாகப் பிறந்த அந்த ஜன்மத்திலும்.

25. தரித்திரனாய்ப் பெண்டிர் மக்கள் தழைத்திடை வாழ்க்கை யுற்று
குறித்திவன் பெரியோ ரோடு கூடியே தலங்கள் தோறும்
சித்தவன் தரிச னங்கள் செய்துமே மூத்தோர் பாதம்
கருத்துடன் வணங்கிப் போற்றிக் காதலாய் போற்றி வந்தான்.

25. பெண்டிரையும் ஏராள குழந்தைகளையும் அடைந்து, அவர்களைக் காப்பாற்ற முடியாத தரித்திரனாக இருந்து, அவர்களையும் வருத்தி, தானும் வருந்தி, அந்த ஜன்மம் முழுவதும் மிகவும் கஷ்டப்பட்டான். [ஏராளமான குழந்தைகளைப்பெற்று அவர்களை அன்னம் வஸ்திரம் முதலியவைகளால் காப்பாற்றமுடியாமல் தரித்திரத்தினால் தவிப்பது மிகப் பெரிய பாபத்தின் பயனே என்ற கருத்தை ஸ்ரீமத் ராமாயணத்தில் அயோத்தியா காண் டத்தில் பரதனது சபதத்தில் காணலாம்.] கடைசியாக, சில தவசிகளுடன் கூட, அவர்கள் செல்லும் புண்ணிய ஸ்தலங்களுக்குத் தானும் சென்று, அங்கு எழுந்தருளியிருக்கும் கடவுளது மூர்த்திகளைத் தரிசித்து, அந்தத் தவசிகளுடைய பாதங்களில் விழுந்து வணங்கி அவர்களைப் போற்றி வந்தான்.

26. பவமிலா அன்னான் போக்கிப் பரனுல கடைந்து பின்னால்
உவமுள தோஷந் தீர ஊன்சட மாக்கிப் பிரம்மன்
தவறிலா மனித னாகத் தரையினில் ஜனிக்க விட்ட
அவமிலாப் பாலன் தானும் அம்மையே இவனா மென்னே.

26. அந்திய காலத்தில் யம உலகமடைந்த இவனை இவனுடைய பாவத் தைத் தீர்க்க, மறுபடியும் மனித உடலில் இங்குக் கடகலக்னத்தில் பிறப் பித்திருக்கிறன். [முன்பு மூன்றும் ஜன்மத்தில் செய்த பாவம் இன்னும் இவனை விடு நீங்கவில்லை.]

27. முன்னந்த விதமாய்த் தோஷம் மூண்டுமே யிருப்ப தாலே
இன்னய வதுவும் தீர நாட்டுவோம் கிரியை யொன்று
பன்னிவன் சேதுக் கேகி மகிழுவர் பதத்தைப் போற்றிப்
பின்னையும் மதுரை வந்து பித்தனார் பாதம் கண்டால்;

27. அந்தத் தோஷம் நீங்காது அப்படியே இருப்பதால், அவைகள் தீரப் பரிகாரங்களைச் சொல்லுகின்றோம். இவன், சேதுவிற்குச் சென்று, அங்கு எழுந்தருளியிருக்கும் சிவபிரானின் திருவடித்தாமரைகளைத்துதித்து, வணங்கி, பிறகு மதுரைக்கு வந்து, பக்தர்களிடம் பித்துக்கொண்டவன் என்று போற்றப்படும் பரமசிவனுடைய கழலைத் தரிசித்து, அங்கிருந்து ;

28. சத்தியே தில்லை வந்து சதிரவர் பதத்தைப போற்றிச
சிற்றிடை போலப் பொன்னால் செய்துமே மறையோ ருக்கு
நத்திய தனங்க ளாடை நல்லடைக் காயி னோடு
வெற்றியாய்த் தான மீந்து விளங்கிய வூழை ஒதி.

28. சிதம்பர க்ஷேத்திரத்திற்கு வந்து, நடராஜப் பெருமானின் பாதங் களைப் போற்றி, தங்கத்தினால் ஒரு பெண் உருவம் செய்து [மூன்றாம் ஜன்மத் தில் ஒரு பெண்ணின் மரணத்திற்கு அவன் காரணமானபடியால் இவ் வாறு பரிகாரம் கூறப்பட்டது.] அதை, தக்ஷிணை தாம்பூலம் வஸ்திரம் இவை களுடன் ஓர் அந்தணருக்குச் சமர்ப்பித்து, அவரிடம் தன் பாபங்களை உரக்கச் சொல்லி, மன்னிக்குமாறு பிரார்த்திக்கவேண்டும்.

29. பொருத்தமென் றவரு மாசி புகன்றிட வதனை யேற்றுக்
கருத்துடன் அகதிக் கன்னம் கனமுடன் வெகுவா மீந்து
உருத்திடும் ஆனெய் யாலே உயர்விளக் கொருநா றுந்தான்
விருத்தவர் கோஷ்ட மேற்றி விளங்கிய தன்னூர் வந்து ;

29. அவர்களும், "மன்னித்தோம், கஷ்டங்கள் தீர்ந்து இஷ்டங்கள் நிறைவேறுக" என்று மனமகிழ்ந்து அருளும் ஆசிகளைப் பெற்று, ஏழை களுக்குச் சிரத்தையுடன் அன்னமளித்து, ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி சந்நிதியில் பசுவின் நெய்யால் நூறு விளக்கேற்ற வேண்டும். பிறகு தனது ஊருக்குத் திரும்பி வந்து ;

30. சஷ்டிநோன் பாண்டி ரண்டு ஜாதகன் தவறு நோற்றால்
துஷ்டமுன் தோஷ மெல்லாம் தொடர்ந்திடா நிவிர்த்தி யாகும்
இஷ்டமாம் முத்திச் செல்வம் யேற்றிட விரிவாய்ச் சொன்னோம்
கஷ்டமென் றெண்ணி யின்னோன் கருதியே செய்யா விட்டால் ;

30. ஜாதகன் இரண்டு ஆண்டுகளுக்கு இடைவிடாது ஷஷ்டி விரதம் அனுஷ்டித்தால், மூன்றாம் ஜன்மத்திலிருந்து தொடர்ந்துவரும் பாவங்கள் தொலையும். எல்லாவிதத்திலும் க்ஷேமங்கள் உண்டாகும். இவ்வளவு பரி காரங்களைச் செய்வதால் உடல் வாடுமே ! செல்வம் போகுமே ! என்று அஞ்சி இவைகளைச் செய்யாவிடில் ;

31. பொற்கொடி மனையாள் காலி பிள்ளைகள் விருத்தி யாகார்
அற்பமாய்ப் போகும் செல்வம் ஆயுளும் விருத்தி யாகா
சொற்பிதை நம்பி பாலன் சுகமுடன் செய்வா னாகில்
விற்புரு வத்தாய் கேளு வினைமாறு கண்டன் போலே ;

31. இவனுக்கு வாய்த்திருக்கும் தங்கக்கொடிபோன்ற மனைவி நீடித் திருக்கமாட்டாள். சந்ததியும் விருத்தியாகாது. செல்வம் முழுவதும் நீங்கும். ஜாதகன் அற்பாயுளாக மரணமாவான். நாங்கள் சொன்ன

வார்த்தையை நம்பி ஜாதகன் சந்தோஷத்துடன் பரிகாரங்களைச் செய்வானுகில், வில்போல் வளைந்த புருவம் உடைய தாயே! ஏற்படும் பலன் களைச் சொல்லுகிறோம் கேளுங்கள். என்றும் பதினாறு வயது பெற்று விளங்கிய மார்க்கண்டேயனைப் போல;

32. ஆயுளும் விருத்தி யாகி அஷ்டஐச்வரிய முண்டாய்
நேயமாய் வாழ்வா னென்று நிகழ்த்திய மொழிகுன் ருது
காயமாம் உலகோர்க் கிந்நூல் வெளியிட யாவும் சொன்னோம்
மாயமாய் நம்பி னோர்க்குக் கைலாயம் சாட்சி யாமே.

32. ஆயுள் விருத்தியாகும். எட்டுவிதச் செல்வமும் நிறைந்து சந்தோஷத்துடன் வாழ்வான். இந்த வார்த்தை குன்றாது. உலகத்தோர்க்குப் புண்ணிய பாவங்களின் பயன்களை அறிவிப்பதற்காகவே இந்நூலில் முன் பின் ஜன்மங்களைப்பற்றிச் சொன்னோம். புண்ணிய பாவங்களை நம்பி அறநெறியில் செல்லுபவர்களுக்குக் கைலாயம் காட்சி யளிக்கும்.

[தெய்வத்தன்மை வாய்க்கும் என்பது கருத்து.]

33. பவமகல் கருணை யுற்ற பார்வதி யினிமே லாக
உவமுள யோகச் செய்கை உரைப்போம்யாம் கேட்பா யாக
அவமிலா இந்தப் பாலன் அணுகிய ஜனனந் தொட்டு
நவமுறு மீரெட் டாண்டு நயயோகம் பிதிருக் குண்டாம்.

33. உலகமக்களைக் கருணையால் உய்விக்கும் பார்வதி தேவியே! இனிமேல் ஜாதகனின் யோகங்களைச் சொல்லப்போகின்றோம். இவன் ஜனித்தது முதல் பதினாறு வருஷங்கள் வரை ஜாதகனின் தந்தைக்கு நல்லயோகம் உண்டாகும்.

34. பலவிதம் பூமி யாலும் பாக்கியம் பொருளு முண்டாம்
நலமிகு பூமி சேரும் நற்கீர்த்தி மேன்மே லுண்டாம்
கலன்பணி மணிக ளாடை கனத்திடும் தானிய மெல்லாம்
உலவிய கன்றுகாலி உயர்ந்திடும் பாலு முண்டாம்.

34. பூமிகளால் பலவிதத்திலும் பாக்கியமும் பொருளும் சேரும். செழிப்பான நிலங்களும் வந்திடும். இவனுடைய புகழ் மேன்மேலும் ஓங்கி வளரும். பாத்திரம் ஆபரணம் ரத்தினம் ஆடை இவைகள் எல்லாம் அதிகமாகும். தானியமும் நிறைந்திடும். கால்நடைகளும் அபிவிருத்தியடையும். பால்பாக்கியமும் விருத்தியாகும்.

35. மணமது நடக்கும் சொல்லு மனக்களிப் பதிக முண்டாம்
குணநிதி பிறைபோ லாகக் குவலயம் போற்ற வுண்டாய்ப்
பணிநிலம் மேன்மே லாக முரலிக்கும் பயிர்பாக் கியங்கள்
துணைபெரும் குடும்ப மேலாய்த் துலங்கிடும் புதிதா யில்லம்.

35. இவனுக்கு மணம் நடக்கும்போது அதைத் தொடர்ந்து இன்னும் பல சுபசம்பவங்கள் நடைபெறும். எல்லோரும் போற்றும்படி நற்குணங்கள் மேன்மேலும் சந்திரன்போல வளரும். ஆபரணங்களும் நிலங்களும் அதிகரிக்கும். நிலமும் நன்றாக விளையும். இவனது குடும்பம் பெருமையோடிருக்கும். புதியதொரு வீடும் ஏற்படும்.

36. கட்டிலும் சுகபோ கங்கள் கருதிடும் நாட்கு நாளாய்
மட்டிலா நாண யங்கள் வந்திடும் சுகங்கள் மேலாம்
சொட்டிடு மவ்வாண்டி னுள்ளாய்ச் சூழ்பலன் விரயம் கொஞ்சம்
கட்டனை பிதிர்வம் சத்தில் கனசுக முண்டா மல்லால்.

36. ஒவ்வொரு நாளும் சுகபோகங்கள் விருத்தியாகும். கணக்கிலடங் காதவாறு பணவரவு உண்டு. ஆயினும் இவ்வாண்டில் [மணமான வருஷத்தில்] கிடைத்த பலன்களிற் சில செலவாகும். பித்ருவருக்கத்தின ருக்கும் கௌரவமும் சுகங்களும் உண்டாகும்.

37. அரசதில் போக்கு முண்டாம் அன்னதால் நஷ்டங் கொஞ்சம்
செரிசுதன் தனக்குக் கண்டம் சூழ்ந்திவை யெல்லாம் தீரும்
வரிசையாய்க் கல்வி மேன்மை வந்திடும் பால னுக்கு
வரியில்லம் வெவ்வேறாக வருந்திடும் கலக மேலாய்.

37. இந்த ஜாதகன் அரசியலில் ஈடுபடுவான். அதனால் சிறிது நஷ்டங்கள் ஏற்படும். இவனுக்குச் சில ஆபத்துக்களும் நேரிடும். ஆனால் உடனே அவைகள் தீர்ந்திடும். பாலனுக்குப் படிப்படியாகக் கல்வியில் அபிவிருத்தி யுண்டு. சிறிது காலத்திற்குப் பிறகு கலகங்கள் ஏற்பட்டுக் குடும்பப் பிரிவினை நடைபெறும்.

38. சொல்லிது தவறி டாது சுகமுள தந்தை தானும்
நல்லவன் எவர்க்கு நண்பன் நங்கையற் கினிய மோகன்
வெல்லுநன் மேம்பா டுள்ளான் வாய்ச்சாலன் கபட மில்லான்
சொல்லது மிருது வாகும் சொகுசுளான் பெரியோர்க் கன்பன்.

38. மேலே சொன்ன பலன்கள் தவறா. இந்த ஜாதகனுடைய தந்தை எல்லோருக்கும் நல்லவனாகவும் நண்பனாகவும் இருப்பான். ஸ்திரீகளுக்குப் பிரியன். தனது பெருமையால் பிறரை வசப்படுத்துவான். நன்றாகப் பேசும் திறமை உள்ளவன். கபடமில்லாதவன். மிருதுவாகப் பேசுபவன். அதிக சிரமத்தைச் சகிக்காதவன். பெரியோர்களின் அன்பிற்குப் பாத்திர மானவன்.

39. வெற்றியாம் ஜயனைப் போல விளங்குவன் சமர்த்தன் சொல்லு
பத்திய கோபந் தானும் பலத்திடின் பிரசண்ட மாகும்
நந்திய யிளம னத்தான் நீனிலம் கீர்த்தி மேலான்
குத்தங்க ளணுகா னுவன் குவலய மவனும் செல்வம்.

39. அர்ஜுனனைப்போலத் தோல்வியே இல்லாதவன். மிக்க சாமர்த்திய சாலி. கோபமில்லாதவன். கோபம் ஏற்படுமாயின் சண்டமாருதம் புயற் காற்று போல் பயங்கரமாக இருக்கும். இளகியமனம் படைத்தவன். புவியில் புகழ் பெற்றவனாக இருப்பான். குற்றங்களால் அணுக முடியாதான். செல் வம் படைத்தவனாகவும் விளங்குவான்.

40. தனதானிய பூமி யோங்கத் தரணியில் எவரு மெச்ச
குணநிதி பிறைபோ லாகக் கொண்டுமே வாழ்வா னென்று
முனமவன் பிரிவில் பார்க்க வழுத்தினோம் தெளிந் துகாணய்ச்
சொன்னதன் மேலாய் யோகம் சுதனவன் றனக்கு ரைப்போம்,

40. பணம் பொருள் பூமி இவை அதிகமாகும். ஊரில் எல்லோரும் இவனைக் கொண்டாடுவார்கள். வளர்பிறைச் சந்திரன்போல இவனது குணங்கள் வளர்ந்து நிலைத்திருக்கும். இப்பொழுது சொல்லப்பட்ட இந்த ஜாதகனுக்கு இதற்கு மேலாக நடக்கப்போகும் யோகங்களைச் சொல்லு கின்றோம்.

குறிப்பு.—பலன் சொல்லும்போது "பூமிசேரும்," "செல்வம் ஓங்கும்" என்று அடிக்கடி சொல்லுவார்கள். அது "கூறியது கூறல்" என்ற குற்றமாகாது. ஏனெனில், ஒரு ஜாதகனுடைய வாழ்க்கையில் பல தடவைகளில் பூமி சேரலாம். பல சமயங்களில் செல்வம் ஓங்கலாம். ஆகவே பல சமயங்களில் நிகழும் சம்பவங்களைச் சொல்லுவதாகக் கருத வேண்டும்.

41. செப்புமூ வாண் டின் மேலாய்ச் சேர்ந்திடும் ஈரே ழாண்டும்
ஒப்புள பலத்த யோகம் உயர்ந்திடும் பலஇ னத்தால்
தப்பிலாப் பூமி யாலும் தாயேகேள் பொருள் வருத்து
வெப்பங்க ளடைந் திடாவே வேணதோர் பொருளும் சேரும்.

41. முன்னால் சொல்லப்பட்ட பதினாறு ஆண்டுகளுக்குமேல் பதினான்கு ஆண்டுகளில் பலவிதங்களிலும் பலமான யோகங்கள் வரும். பூமியின் மூல மும் யோகமேற்படும். கஷ்டங்கள் இரா. விரும்பப்பட்ட பொருள்கள் கிட்டும்.

42. இங்கித பூமி மேலாய் இலகிடும் பயிர்பாக் கியங்கள்
மங்கையே குடும்ப மேலாய் மருவிடும் மணங்க ளுண்டாம்
துங்கமாந் தனதா னியங்கள் தோன்றிடும் பணிக லங்கள்
பொங்குமெய் பலன்கள் மேலாய்ப் பொருந்திடும் பால்பாக் கியங்கள்.

42. நிலம் செழித்து விளையும். பயிரால் ஐச்வர்யம் உண்டு. குடும்பம் பெருமையை அடையும். குடும்பத்தில் அநேக மணங்கள் நடைபெறும். தனதானியங்கள் மேலாகும். புதிய ஆபரண வகைகளும் பாத்திரவகை களும் சேரும். பால் பாக்கியமும் பெருகும்.

43. அவனியி லெல்லா மோங்கு மறைந்தஇவ் வாண்டினு ள்ளாய்க்
கவலையாம் சிலபொ ருள்கள் கழறினேம் நஷ்ட முண்டாம்
உவமுடன் பிதுர்வர்க் கத்தில் உற்றிடும் சூத மம்மா
நவமுள வரசில் போக்கு நாடிடும் கலக பாதை.

43. முன் [நாற்பத்தொன்றாவது பாட்டில்] சொன்னவாறு குடும்பம் எல்லாவிதங்களிலும் குறைவில்லாமல் ஓங்கி வளரும். சில பொருள் களைப்பற்றிக் கவலை ஏற்படும். எதிர்பார்த்தபடி நஷ்டங்களும் உண்டாகும். பிதிரு வருக்கத்தில் மரணத்தினால் சூதகம் துன்பம் நேரும். அரசியலிலும் நாட்டம் செல்லும். கலகங்களால் கஷ்டங்களும் ஏற்படும்.

44. வந்திவை யெல்லாம் தீரும் வளர்பெரு மரசர் தீ மூலம்
சிந்தையாம் தொழில்மூ லத்தால் செழும்பொரு ளிவனுக் குண்[டாம்
எந்தையே யிதன்மேல் பத்தும் ஏற்றிடும் இராச யோகம்
விந்தையாம் பிறைபோல் செல்வம் விருத்தியாம் தவறி டாது.

44. முன் சொல்லப்பட்ட தீதான பலன்கள் அதிகாரம் ஓங்குகின்ற அரசாங்க ஆதரவால் நீங்கிவிடும். செய்யப்படும் தொழில்களால் மேன்மையான பொருள்கள் சேர்ந்திடும். இந்தப் பதினைந்து வருஷங்களுக்கு [முப்பது வயதிற்கு] மேல் பத்து வருஷம் ஜாதகனுக்கு ராஜயோகம் வரும். அப்பொழுது செல்வமும் வளர்பிறைச் சந்திரன்போல, தப்பாமல் விருத்தியாகும்.

45. அதிவித பணிதா னுகும் அணுகிடும் மேழிச் செல்வம்
பதியிதன் மேலா யெட்டும் பாரிய யோக முண்டாம்
கதியுள தனங்கள் வாய்க்கும் கேவல மடைந்தி டாது
துதியுள அரசர் மூலம் தொழிலது மேன்மே லாமே.

45. விசித்திரமான பூஷணங்கள் கிடைக்கும். உழுவதால் வரும் செல்வம் கிட்டும். அதற்கு (நாற்பது வருஷங்களுக்கு) மேல் எட்டு வருஷங்களுக்கும் பெரிய யோகங்கள் வாய்க்கும்-தனங்கள் சேரும். வீண் செலவாகாது. பெருமைபொருந்திய அரசர்களால் [அரசாங்க அதிகாரிகளால்] இவனது தொழில் மேன்மேலும் பெருமையை அடையும்.

46. அன்னையே இதன்மே லைந்தும் அணுகிடும் பலத்த யோகம்
கண்ணிய பலரால் நன்மை கனசன்மா னங்க ளுண்டாம்
வின்னங்க ளடைந் திடாவே விஜயனைப் போல வாழ்வான்
மன்னிய இதன்மே லிந்த மதலையு மின்னுள் மட்டும்.

46. அன்னையே! இதற்கு (நாற்பத்தெட்டு வருஷங்களுக்கு) மேல் ஐந்து வருஷங்களில் பிரபல யோகங்கள் வாய்க்கும். கௌரவம் வாய்ந்த பெரிய மனிதர்களால் நன்மைகள் ஏற்படும். அதிக சன்மானங்களையும் பெறுவான். யோகங்களுக்குப் பங்கம் ஏற்படா. அர்ஜுனனைப்போல எல்லோருக்கும் மேலாக வாழ்வான். இவ்வாறு பெருமையான வாழ்க்கைக்கு இவனுடைய ஆயுட்காலம் மட்டும் பங்கம் நேரிடாது.

47. பலமுள யோகவானுய்ப் பாரிய மனுக்கள் மெச்ச
உலகினில் வெகுவாய்ச் செல்வம் உற்றுமே விருத்தியோங்கி
நலமிக வாழ்வா னென்று கழறினேம் கோள்க ளாலே
சிலைநுதல் மேனி யானே செல்வியே மேலுங் கேளே.

47. விற்போன்ற புருவ மமைந்த சரீரமுடைய பார்வதி தேவியாரே! இவனுடைய கிரஹ நிலைகளை ஆராய்ந்து பார்த்து, இவன் யோகவான். பெரிய மனிதர்களின் பாராட்டைப் பெறுவான். இவனுடைய செல்வம் ஓங்கும். சிறப்பாக வாழ்வான் என இவை போன்ற மற்றைய பலன்களையும் சொன்னேம். மேலும் சொல்லுகிறேம் கேளுங்கள்.

48. இருமயங் குடியாய் நிற்கும் ஈசுவரி யினிமே லாகச்
சிறியவன் பொதுயோக த்தைச் செப்புவோம் தனத்தி னுலும்
புரிவெற்றி யோனே டொன்றிப் புகராறி லேறி நிற்க
விரிசுக லாப னைந்தில் வீற்றிட குருவுங் காண ;

48. தேவியே! இனிமேல் இந்த ஜாதகனின் பொது யோகத்தைக் கூறுகின்றோம். கடக லக்கினத்திற்கு சுகலாபாதிபதியான சுக்கிரன் ஐந்தாமிடத்தில் இருக்கக் அவனை குரு பார்ப்பதாலும்;

49. மன்னவன் தரும மாட்சி படரதில் பத்தோ னேற
அன்னையே ராகுபத்தில் அமர்ந்திட நவக்கோ ளிவ்வாறு
முன்னநாள் ஊழி தீர்த்தால் மூலொன்பின் மேலாய் யோகம்
மன்னெனும் ராஜ யோகம் வந்திடும் பிசகி டாதே.

49. பிருஹஸ்பதி தருமஸ்தானம் என்று சொல்லப்படும் ஒன்பதில் [மீனத்தில்] ஆட்சியுடன் இருப்பதாலும், ராஹு பத்தில் இருப்பதாலும் இந்த ஜாதகனுக்குப் பலமான தீய முன்வினை இருப்பதாகவும், ஆனால் அது பரிகாரங்களால் நீங்கக்கூடியதாகவும் அறியப்படுவதால், நாம் சொன்ன பரிகாரங்களைச் செய்தால்தான் இவனுக்கு சொல்லப்பட்ட ராஜயோகங்களும் பிசகாமல் நடைபெறும்.

50. பூமியு மேலா யோங்கும் புகழ்நிதி பிறைபோ லாகும்
காமியே அரச ராலே கனதனம் மேன்மே லாகும்
நாமியே பணிதாராவும் நற்கீர்த்தி மேன்மே லாகும்
கோதிலா மேழிச் செல்வம் சுகபோக மேன்மே லாகும்.

50. மேன்லேும் நிலங்கள் விருத்தியாகும். பணச் சேமிப்பும் அதிகமாகும். அரசர்களால் பெருமைகளும் விருதுகளும் ஏற்படும். நற்கீர்த்திகளும் பரவும். குற்றமற்ற பயிர்த்தொழிலும் பயனளிக்கும். மற்றைய சுகங்களும் இவனை அடையும்.

51. குறைவது அடைந்த போது குணமுடன் நிவிர்த்தி யாகும்
தாம்தரும் செல்வ மேலாய்த் தரித்திடும் பிரபுக்கள் பட்சம்
அரசனைப் போலே செல்வம் அணுகியே எவரும் போற்றச்
சரசமாய் வாழ்வா னென்று சாற்றினோம் ரிஷிக ளம்மா.

51. ஏதாகிலும் குற்றமேற்பட்டாலும் நிவிர்த்தியாகும். நீங்காத செல்வம் நிறைந்திருக்கும். பிரபுக்களின் அன்பும் நிலைத்திருக்கும். அரசர்களுக்கிருப்பதுபோல் பிறரால் வியக்கப்படும் செல்வம் நிலைத்து, இவன் சுகமாக வாழ்வான். தாயே! ரிஷிகளாகிய நாங்கள் சொன்ன வார்த்தை பிசகுமா?

முன்சொன்ன பலன்களையே இறுதியில் சுருக்கிக் கூறுகின்றார்.

52. மணநேரும் அரச ராலே மகிழ்தொழில் மேன்மே லாகும்
தன்னதால் செல்வ மேன்மை தரணியில் வெகுவா யுண்டாய்
வின்னங்க ளடைந்தி டாமல் விளக்கமாய் வாழ்வா னென்று
பன்னிய இந்த நூலைப் பகருவோம் எழுவ ரம்மா.

52. அரசரால் கௌரவம் வாய்க்கும். மகிழ்ந்து செய்யும் தொழிலும் விருத்தியாம். தன் முயற்சியால் ஐசுவரிய விருத்தி உண்டாகும். ஒருவித குறைவுமின்றிச் சிறப்பாக வாழ்வான். ஏழு ரிஷிகளும் இந்த நூலை (உலக நன்மைக்காக)க் கூறினோம்.

53. இனிமேலாய்த் தந்தை காலம் இயம்புவோம் முப்பா ஞறில்
கனிவுடன் மாய்வா ஞகும் நாட்டிதன் மேலா யேழுள்
இனிபுள அன்னை மாயவள் இயம்பிது தவறி டாது
தனிவுள பாலன் கண்டம் சாற்றுவோம் சிறுகண் டங்கள் ;

53. இதற்குமேல் தந்தையின் மரணகாலத்தைச் சொல்லுகின்றோம். இவனுக்கு முப்பத்தாருவது வயது நடக்கும்போது இவன் தந்தை மரண மடைவான். அதற்குப் பிறகு ஏழு வருஷங்களுக்குள் தாய் மரணமாவாள். இனி இவனுக்கு நேரும் கண்டத்தைப்பற்றியும் சொல்லுவோம். இவனுக்குச் சிறிய கண்டங்கள் ;

54. வந்திடும் பரியா யத்தால் வளமிலா நிவிர்த்தி யாகும்
எந்தையே இவனின் ஆயுள் எடுத்தினி இயம்பக் கேளும்
பந்தமா மெழுமாண் டுள்ளே பகர்கொச்சை திங்கள் தன்னில்
சிந்தையாம் பூர்வ பக்கம் செல்திதி சஷ்டி யன்னுள் ;

54. மாறி மாறி வந்திடும். ஆனல் அவைகள் அதிகமாகாமல் நிவிர்த்தி யாகும். இவனுடைய ஆயுளைக் கூறுகின்றோம். எழுபதாவது வயதில் சித்திரை மாதத்தில் வளர்பிறை ஷஷ்டி திதியில் ;

55. பற்றுல கடைவா னின்ஞேன் பாவைகேள் பிற்ஜன் மத்தை
உவமிவன் காசி பக்கல் உயர்குலம் மறை யோனுகி
விரிபெரு ஞான நூலை விளம்பியே பயிற்சி யாகிச்
சரமுடன் சிவத்தைச் சேர்வன் சாற்றினோம் ரிஷிக ளம்மா.

55. தேவலோகத்தை அடைவான் தேவியே ! இவனுடைய பின் ஜன்மத்தைக் கேளுங்கள். காசிக்கருகில் உயர்ந்த பிராமண குலத்தில் பிறந்து, பெரிய ஞான சாஸ்திர (வேதாந்தம்)த்தை நன்குக் கற்றுணர்ந்து, காலக்கிரமத்தில் சிவபிரான் திருவடிகளை அடைவான். தேவியே ! தெய்வ ஞானம் படைத்த ரிஷிகளாகிய நாங்கள் இவ் விஷயத்தைச் சொன்னேம். [மற்றவர்கள் இதில் அவநம்பிக்கை கொள்ளவேண்டாமென்பது கருத்து]

## ஜாதகம் 13

**1.** பிறைபுதன் மேரு வாகப் பொன்மானில் சேயும் சாடிக்
கரியவன் சீய மாகக் கதிர்புகா கேது தேளில்
அரவுமே நந்தி யாக அலவனும் ஜன்ம மாக
உரைகுவீர் பலனை யென்று உத்தமி கேட்கும்போது.

| | | ராகு | |
|---|---|---|---|
| செவ்வாய் | இராசி சக்கரம் | | லக்கினம் |
| குரு | | | சனி |
| புதன் சந்திரன் | சூரியன் சுக்கிரன் கேது | | |

1. விக்ருதி வருஷம் கார்த்திகை மாதம் 29-ஆந் தேதி சனிக்கிழமை இரவு ஐந்து நாழிகைக்குமேல் ஜனனம். [ஆங்கிலத் தேதி 13–12–1890] நவக்கிரஹங்களின் பாத சாரம் :—கேட்டை 4-இல் சூரியன் பூராடம், 2-இல் சந்திரன், அவிட்டம் 4-இல் செவ்வாய். பூராடம் 1-இல் புதன், சிரவணம் 3-இல் குரு. அனுஷம் 4-இல் சுக்கிரன். பூரம் 4-இல் சனி. ரோகிணி 4-இல் ராகு. கேட்டை 2-இல் கேது. நக்ஷத்திரம் பூராடம். சுக்கிர தசை இருப்பு வருஷங்கள் பதினொன்று ; மாதங்கள் ஏழு. புதன். சந்திரன் தனுஸிலும், குரு மகரத்திலும், செவ்வாய் கும்பத்திலும், சனி சிங்கத்திலும், சூர்யன் சுக்கிரன் கேது விருச்சிகத்திலும், ராகு விருஷபத்திலுமாக, லக்கினம் கடகமாக, இவ்வாறமைந்திருக்கிற கிரக நிலையில் ஏற்படும் பலன்களைச் சொல்வீர்களாக, எனப் பார்வதி கேட்கலுற்றாள்.

**2.** பிருகுமே புகலு கின்றார் பிறந்திடும் ஆண்பால் ஜன்மம்
வருமில்லம் வடபால் நோக்கம் மால்கோஷ்டம் தென்பால் நேரும்
பெருவயிறப்பன் உத்திரம் பூதவா கனத்தாள் மீனம்
அரன்கோஷ்டம் பால தாகும் அருகிய சிற்றா ராகும்.

2. இவ்வாறு தேவி கேட்டவுடன் பிருகு முனிவர் பதில் உரைக்கின்றார். இந்தக் கிரஹநிலையில் பிறந்த குழந்தை ஆண். பிறந்த வீடு வடதிசையை நோக்கி இருக்கும். [வீதி கிழக்கு மேற்கில் அமைந்தது எனக்கொள்க.]

53. இனிமேலாய்த் தந்தை காலம் இயம்புவோம் முப்பா றுறில்
கனிவுடன் மாய்வா ருகும் நாட்டிதன் மேலா யேழுள்
இனிபுள அன்னை மாயவள் இயம்பிது தவறி டாது
தனிவுள பாலன் கண்டம் சாற்றுவோம் சிறுகண் டங்கள் ;

53. இதற்குமேல் தந்தையின் மரணகாலத்தைச் சொல்லுகின்றோம். இவனுக்கு முப்பத்தாறுவது வயது நடக்கும்போது இவன் தந்தை மரண மடைவான். அதற்குப் பிறகு ஏழு வருஷங்களுக்குள் தாய் மரணமாவாள். இனி இவனுக்கு நேரும் கண்டத்தைப்பற்றியும் சொல்லுவோம். இவனுக்குச் சிறிய கண்டங்கள் ;

54. வந்திடும் பரியாா யத்தால் வளமிலா நிவிர்த்தி யாகும்
எந்தையே இவனின் ஆயுள் எடுத்தினி இயம்பக் கேளும்
பந்தமா மெழுமாண் டுள்ளே பகர்கொச்சை திங்கள் தன்னில்
சிந்தையாம் பூர்வ பக்கம் செல்திதி சஷ்டி யன்னுள் ;

54. மாறி மாறி வந்திடும். ஆனால் அவைகள் அதிகமாகாமல் நிவிர்த்தி யாகும். இவனுடைய ஆயுளைக் கூறுகின்றோம். எழுபதாவது வயதில் சித்திரை மாதத்தில் வளர்பிறை ஷஷ்டி திதியில் ;

55. பற்றுல கடைவா னின்னேன் பாவைகேள் பிறஜன் மத்தை
உவமிவன் காசி பக்கல் உயர்குலம் மறை யோனுகி
விரிபெரு ஞான நூலை விளம்பியே பயிற்சி யாகிச்
சரமுடன் சிவத்தைச் சேர்வன் சாற்றினேம் ரிஷிக ளம்மா.

55. தேவலோகத்தை அடைவான் தேவியே ! இவனுடைய பின் ஜன்மத்தைக் கேளுங்கள். காசிக்கருகில் உயர்ந்த பிராமண குலத்தில் பிறந்து, பெரிய ஞான சாஸ்திர (வேதாந்தம்)த்தை நன்குக் கற்றுணர்ந்து, காலக்கிரமத்தில் சிவபிரான் திருவடிகளை அடைவான். தேவியே ! தெய்வ ஞானம் படைத்த ரிஷிகளாகிய நாங்கள் இவ் விஷயத்தைச் சொன்னேம். [மற்றவர்கள் இதில் அவநம்பிக்கை கொள்ளவேண்டாமென்பது கருத்து]

## ஜாதகம் 13

1. பிறைபுதன் மேரு வாகப் பொன்மானில் சேயும் சாடிக்
கரியவன் சீய மாகக் கதிர்புகா கேது தேளில்
அரவுமே நந்தி யாக அலவனும் ஜன்ம மாக
உரைகுவீர் பலனை யென்று உத்தமி கேட்கும்போது.

| | | ராகு | |
|---|---|---|---|
| செவ்வாய் | இராசி சக்கரம் | | லக்கினம் |
| குரு | | | சனி |
| புதன் சந்திரன் | சூரியன் சுக்கிரன் கேது | | |

1. விக்ருதி வருஷம் கார்த்திகை மாதம் 29-ஆந் தேதி சனிக்கிழமை இரவு ஐந்து நாழிகைக்குமேல் ஜனனம். [ஆங்கிலத் தேதி 13–12–1890] நவக்கிரஹங்களின் பாத சாரம் :—கேட்டை 4-இல் சூரியன் பூராடம், 2-இல் சந்திரன், அவிட்டம் 4-இல் செவ்வாய். பூராடம் 1-இல் புதன், சிரவணம் 3-இல் குரு. அனுஷம் 4-இல் சுக்கிரன். பூரம் 4-இல் சனி. ரோகிணி 4-இல் ராகு. கேட்டை 2-இல் கேது. நக்ஷத்திரம் பூராடம். சுக்கிர தசை இருப்பு வருஷங்கள் பதினொன்று ; மாதங்கள் ஏழு. புதன். சந்திரன் தனுஸிலும், குரு மகரத்திலும், செவ்வாய் கும்பத்திலும், சனி சிங்கத்திலும், சூரியன் சுக்கிரன் கேது விருச்சிகத்திலும், ராகு விருஷபத்திலுமாக, லக்கினம் கடகமாக, இவ்வாறமைந்திருக்கிற கிரக நிலையில் ஏற்படும் பலன்களைச் சொல்வீர்களாக, எனப் பார்வதி கேட்கலுற்றாள்.

2. பிருகுமே புகலு கின்றார் பிறந்திடும் ஆண்பால் ஜன்மம்
வருமில்லம் வடபால் நோக்கம் மால்கோஷ்டம் தென்பால் நேரும்
பெருவயிறப்பன் உத்திரம் பூதவா கனத்தாள் மீனம்
அரன்கோஷ்டம் பால தாகும் அருகிய சிற்றா ராகும்.

2. இவ்வாறு தேவி கேட்டவுடன் பிருகு முனிவர் பதில் உரைக்கின்றார். இந்தக் கிரஹநிலையில் பிறந்த குழந்தை ஆண். பிறந்த வீடு வடதிசையை நோக்கி இருக்கும். [வீதி கிழக்கு மேற்கில் அமைந்தது எனக்கொள்க.]

வீட்டிற்குத் தென் திசையில் திருமாலின் கோயிலும். வடதிசையில் கணேசரது ஆலயமும் உண்டு. வட திசையில் காளி கோயில் இருக்கும். பரமசிவனது ஆலயமும் பக்கத்தில் இருக்கும். பிறந்த ஊர் மிகச் சிறியது.

3. இத்தகை யடையா ளத்து ளிப்பால னிரண்டாம் ஜன்மம்
வித்தக னுதிப்பா னாகும் விளம்புவோம வடுகர் வர்க்கம்
பெற்றதாய் தந்தை யோகம் பேதையர் புத்திர யோகம்
சுத்தமாய் முன்பின் ஜன்மம் செப்புவோ மிந்நூல் தன்னில்.

3. இத்தகைய அடையாளமுள்ள ஊரில், இவன், குடும்பத்தில் இரண்டாவது குழந்தையாக ஜனித்திருப்பான். இந்நூலில் அவனுடைய தாய் தகப்பன் மனைவி புத்திரர் சகோதரர் முதலானவர்களைப் பற்றியும், முன் ஜன்மம் பின் ஜன்மம் இவைகளைப்பற்றியும் கூறுவோமாக.

4. தந்தைக்குத் தாரம் ரண்டில் தரித்திடு மினையா ளீன்ற
நீதியாய் மைந்தன் தானும் புகலுவோ மிவனின் தந்தை
ஓதுவம் துணைஆண் ஒன்று உத்தமி அவ்வாறு தீர்க்கம்
தீதிலா வாழ்வா ராமே செப்புவோம் பிதாகு ணத்தை.

4. ஜாதகனின் தந்தைக்கு இரண்டு மனைவிமார்கள். அவர்களில் சீவித்திருக்கும் இளைய மனைவிக்குப் பிறந்தவன் இவன். இவனுடைய தந்தையின் சகோதரபாவத்தை ஆராய்ந்தால், ஒரு சகோதரனும் ஒரு சகோதரியுமுளரென அறியப்படுகின்றது. அவ்விருவரும் தீர்க்ககாலம் வாழ்வார்கள். பிதாவின் குணங்களைச் சொல்லுகின்றோம்! கேளுங்கள்.

5. அஞ்சின வார்த்தை கூறுவன் அடாவடி தன்னில் செல்லான்
தஞ்சமென் றோரைக் காப்பான் சாந்தவான் தரணி சேர்ப்பன்
பஞ்சுபோல் ரோம முள்ளான் பதர்குண மில்லா னாகும்
நஞ்சான குணமும் கொஞ்சம் நடையது துருசு மாகும்.

5. பிறர் மனம் புண்ணாகாதபடி பயந்தே பேசுவான். பிறர் விஷயங்களில் அக்கிரமமாகப் பிரவேசிக்கமாட்டான். தஞ்சம் என்று வந்தவர்களைக் காப்பான். மிக்க சாந்த குணம் உள்ளவன். பூமிகளைச் சேர்ப்பான். பஞ்சு போல் மிருதுவான கேசம் (ரோமம்) உள்ளவன். பதட்டமில்லாதவன். தீய குணங்களும் சிறிது உண்டு. வேகமாக நடக்கும் இயல்புள்ளவன்.

6. குணமது நல்ல தாகும் குறிப்பினில் கொடுமை தோன்றும்
தணிவுளான் கிருஷி செய்வன் சாராள்க ளுடைய னாகும்
நினைவதை முடிப்பா னாகும் நேர்ந்திடும் பித்தச் சூடு
பணியோர்க ளுடைய னாகும் பஞ்சைபோல் உணவு கொள்வன்.

6. நற்குணம் படைத்தவன். தோற்றத்தில் கொடியவன் போலக் காணப்படுவான். அடக்கமுள்ளவன். விவசாயம் செய்வான். நல்ல சேவர்களை உடையவன். தான் நினைத்த காரியத்தை நிறைவேற்றுவான். இவனது

சரீரத்தில் பித்தச் சூடு தங்கி இருக்கும். உயர்ந்த யோகம் உள்ளவன். பஞ்சத்தில் அடிபட்டவன் போல உணவுகளை உட்கொள்ளும் இயல்புள்ளவன்.

[பணை=வயல் , வயல்களைச் சேர்த்துப் பெரிய நிலச்சுவாந்தராக இருக்கும் யோகம் என்று சொல்லலாம்.]

7. சல்லிய பாதை யேற்பன் தரணிகள் விரயம் செய்வன்
இல்லறம் விட்டு நீங்கி ஏகுவான் வெளியூர் கீழ்ப்பால்
அல்லல்கள் மட்டில் நேரும் அடாவடி வழக்கு முண்டு
வெல்லுவான் எதிரி தன்னை வித்தையும் சமம தாகும்.

7. கடன் உபத்திரவமும் இவனுக்கிருக்கும். அதன் காரணமாகப் பூமிகளையும் செலவழிப்பான். இல்லற வாழ்க்கையை விட்டுக் கீழ்த்திசையிலுள்ள ஓர் ஊரில் தனித்து வாழ்வான். சில அல்லல்கள் சிறிதாகவே ஏற்படும். இவன்மேல் பிறர் அக்கிரமமாக வழக்குத் தொடருவார்கள். ஆயினும் அவர்கள் தோல்வி யடைவார்கள். இவன் வெற்றி யடைவான். உலக விவகாரங்களுக்கு வேண்டிய கல்வியறிவும் படைத்தவன்.

8. சொன்னவிக் குணத்தா னுக்குத் தோன்றுவா னிந்தப் பாலன்
அன்னவன் குணத்தைச் சொல்வே னிவனிரு நிறத்த னாகும்
பொன்பணி முன்னால் காணான் பெறுவனும் பின்னால் யோகம்
கன்னியர் மோக னவன் கல்வியும் சமம தாகும்.

8. இப்படிப்பட்ட குணமுள்ளவனுக்கு இந்தக் கடகலக்கின பாலன் மகனாகப் பிறந்திருக்கிறான். இந்த ஜாதகனின் குணங்களைச் சொல்லுகின்றோம். கருத்த நிறத்தவன். பொன்னாலாகிய பூஷணங்களை இவன் இளமையில் அடையமாட்டான். பிற்காலத்தில் அவைகளைப் பெறும் யோகம் இவனுக்கு உண்டு. பெண்களிடம் மோகம் கொண்டவன். இவனுடைய தந்தைக்கு இருப்பதுபோல இவனுக்கும் அதே அளவில் கல்வியறிவு இருக்கும்.

9. தரணியால் ஜீவிப் பானும் சத்துரு ஜயமே செய்வன்
இருபது ஆண்டு மேலாய் எய்திடும் யோகம் தானும்
உறன்முறை மதிக்க வாழ்வான் உறுதியில் லாத நெஞ்சன்
அரிவையும் வந்த பின்பு அம்புலி போலே யோகம்.

9. பூமியைக்கொண்டு [பயிர்த் தொழிலால்] ஜீவனத்தை நடத்துவான். எதிரிகளை வெல்வான். இருபது ஆண்டுகளுக்கு மேல் இவனுக்கு விசேஷ யோகங்கள் வாய்க்கும். பந்துக்கள் மெச்சும்படி வாழ்க்கையை நடத்துவான். உறுதி இல்லாத மனம் உள்ளவன். [தீர்மானத்தை மாற்றிக்கொண்டே இருப்பான் என்பது கருத்து.] இவனுக்கு மனைவி ஏற்பட்ட பிறகு வளர்பிறைச் சந்திரன் போல இச் சாதகனுடைய யோகங்கள் ;

10. பெருகிடும் பால னுக்குப் புண்ணிய மனத்த னாகும்
கரமதில் கத்திரி ரேகை கமலரே கையுமே யுண்டு
மருவரை விசித்தே வெல்வன் மாடுகள் விருத்தி யுண்டு
குறையென்றோர்க் குதவி செய்வன் கொம்பனை யாளே கேளாய்.

10. விருத்தியடையும் பிறர்க்கு நன்மைகளையே எண்ணும் மனத்தை உடையவன். கரத்தில் கத்திரி ரேகையும், கமல ரேகையும் அமைந் திருக்கும். எதிரிகளைப் பிரித்து, அதன் பிறகு அவர்களை வெல்லும் இயல்புள்ளவன். கால் நடைகளை விருத்தி செய்வான். தேவை உள்ளவர் களுக்கு உதவி புரிவான். தேவியே ! கேளுங்கள்.

குறிப்பு.—கமலரேகை, - வாழ்க்கையில் ஏற்படும் நன்மைகளை அறிவிக்கும் தாமரைப் புஷ்பம் போன்ற கோடுகள் எனவும், கத்திரி ரேகை வாழ்க்கையில் இடையூறுகளைத் தெரிவிக்கும் கோடுகள் எனவும், எதிரிகளைப் பிரித்து வெல்லுவது, பேதோபாயம் எனவும் சொல்லுவார்கள்.

11. சிலதுநாள் வனவா சங்கள் செய்குவா னிந்தப் பாலன
நலமது பெறுவான் பின்னால் நவிலுவீர் அந்தக காலம் .
அலரியின் தசையி லேதான் அதிகமாய்ப் பகையு மெய்தும்
நிலவுதன் தசையில் பூர்வம் நேர்ந்திடு மதிகத் துன்பம்.

11. இவன் சில நாட்கள் வனவாசம் செய்ய நேரிடும். அதற்குப் பிறகு இவனுக்கு நன்மைகள் உண்டாகும். சூரிய தசையில் பகைவர்கள் அதிக மாக ஏற்படுவார்கள். அதே போல, அதற்கடுத்து வரும் சந்திரதசை பத்து வருஷங்களில் முதல் ஐந்து வருஷங்களிலும் துன்பங்கள் பல நேரிடும்.

12. வரும்வினை எவரால் சொல்வாய் அவன்துணை யவனால் நேரும்
பெரும்பொருள் தானிய சேதம் பெருத்ததோர் கலக மாகும்
இருபது ஆண்டு மட்டும் எய்திடு மந்தச் சங்கை
திருகுளோர் உறவாம் பின்பு செலவதி கேட்டி டாயே.

12. எவர்களால் இவன் குடும்பத்திற்குத் துன்பங்கள் நேரிடும் ? சொல்லு வீர்களாக, எனப் பார்வதி கேட்க, பிருகு முனிவர் பதில் கூறுகின்றார். இந்த ஜாதகனின் தந்தை சகோதரனால் பெரிய கலகம் ஏற்படும். பொருள் களுக்கும் தானியங்களுக்கும் அதிக சேத மேற்படும். இவனுடைய இருப தாவது ஆண்டுமட்டும் அந்தத் தொந்தரவுகள் நீடித்திருக்கும். பிறகு நல்லுறவோடு வாழ்வார்கள். தேவியே ! கேளுங்கள்.

13. தன்துணை முன்பெண் ஒன்று சாற்றுவோம் தீர்க்க மாகப்
பின்துணை ஆண்பால் ஒன்று பேதையர் இருவ ராகும்
சொன்னஆண் தனசு ராசி தொல்புனர் பூச நாளில்
மன்னவ னுதிப்பா னாகும் வரைகிரு மவன குணத்தை.

13. இவனுடைய சகோதரபாவத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவ னுக்கு மூத்த சகோதரி ஒருத்தியும், இளைய சகோதரன் ஒருவனும், அவனுக் குப் பிறகு இரு சகோதரிகளும் உண்டு. இங்குச் சொல்லப்பட்ட ஆண் [சகோ தரன்] புனர்வஸு நக்ஷத்திரத்தில் தனுர்லக்னத்தில் ஜனிப்பான். அவனு டைய குணங்களைச் சொல்லுகின்றோம்.

**14.** தரித்திர மில்லா ருைகும் சந்தேக மனத்த ருைகும்
பொருத்தமாய்ப் பேசு வானும் பூமியை விருத்தி செய்வான்
வெறுத்தோர்க ளுறவு கொள்வன் வேண்டினோர்க் குதவி
[செய்வன்
கரத்தினில் மாலின் ரேகை கண்டிடு மென்று சொல்லே.

**14.** ஏழ்மை இல்லாதவன். அவன் மனம் யாரையும், எதையும் சந்தேகிக்கும். இடம், பொருள், ஏவல் இவைகளுக்குப் பொருத்தமாகப் பேச வல்லவன். பூமிகளை விருத்தி செய்வான். உலகை வெறுத்த துறவிகளிடம் நட்பை உடையவன். தன்னை நாடி வந்தவர்களுக்கு உதவி செய்வான். அவனது கரத்தில் விஷ்ணுரேகை விளங்கும்.

குறிப்பு.—விஷ்ணுரேகை வரப்பெரும் நன்மைகளை அறிவிக்கும்.

**15.** பத்தாண்டு மேலா யாகப் பதின்மூன்று ஆண்டு மட்டும்
சுற்றத்தார் பகையினாலே சிறையுடன் வாழ்வா ருைகும்
வெற்றியாம் பின்னு லென்றும் விசனங்கள் அதன்மேல் காணன்
பத்தினி ஒன்றே யாகும் பாலர்கள் ஆண்பால் ஒன்று.

**15.** பத்து ஆண்டுகளுக்குப் பிறகு மூன்று வருஷங்கள் உறவினர்களின் பகை காரணமாக இவன் சிறையிலிடப்பட்டு இருப்பான். அதற்குப்பிறகு வெற்றி பெற்றுச் சௌக்கியமடைவான். அதன் மேல் விசனங்களும் இவனுக்கேற்படா. இவனுக்கு மனைவி ஒருத்தியே. புதல்வனும் ஒருவனே.

**16.** கன்னிகை மூவ ராகும் காளையும் வயது தீர்க்கம்
தன்னுடன் கூடி வாழ்வன் சத்திமார் சேதி யாவும்
பின்பாகம் விபரம் சொல்வோம் புதவல்னின் மணத்தைக்
[கேளாய்]
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே.

**16.** பெண்கள் மூவராவர். பிள்ளை நீண்ட ஆயுளுடன் வாழ்வான். [பெண்கள் அவ்வாறு இருக்கமாட்டார்கள் எனக்கருதலாம்] பிள்ளையும் இவனுடன் இருந்து வாழ்வான். அந்தப் பெண்களின் செய்திகளைப் பின் பாகத்தில் சொல்லப்போகின்றோம். இந்த ஜாதகனுடைய மணத்தைப்பற்றிக் கூறுகின்றோம். தேவியே ! கேளுங்கள்.

**17.** இருபது இரண்டு ஆண்டில் இவனுக்குப் பாரி வாய்க்கும்
அரிவையும் கீழ்ப்பா லாகும் அரைகிறே மவள்கு ணத்தை
திருஇலா குணத்தா ளாகும் சிவந்தமெய் அடக்க வர்த்தை
நறுமல ரிஷ்டம் கொள்வள் நாயகன் மனதுக் கேத்தோள்.

**17.** இந்த ஜாதகனின் இருபத்திரண்டாவது வயதில் இவனுக்குப் பாரியை வாய்ப்பாள் [மணமாகும் என்பது கருத்து]. அவள் கீழ்த் திசையில் ஜனித்திருப்பாள். அவளுடைய குணங்களைக் கூறுகின்றோம். கெட்ட குணமில்லாதவள். சிவந்த மேனியாள் அடக்கமான வார்த்தையைச் சொல்பவள். வாசனைபொருந்திய மலர்களில் அதிக வாஞ்சை உள்ளவள். கணவனுக்கு இனியவள்.

18. மாதுவும் வந்த பின்பு வளர்பிறை போலே யோகம்
ஓதுவோம் தீர்க்க ஜீவி உரைக்கிறோம் புத்திர பாவம்
மேதினில் தவத்தால் தோன்றும் விளம்புவோ மாண்பா லொன்று
காதலி இருவ ராகும் கழறின மொழிமூன்றுது.

18. அந்தப் பெண் குடும்பத்திற்கு வந்த பிறகு யோகங்கள் வளர்பிறைச் சந்திரன் போல வளரும். புத்திர பாவத்தைப்பற்றிக் கூறுவோம். தவத்தின் பயனாகக் கிடைக்கப்பெறும் புத்திரபாக்கியத்தில் ஒரு ஆணும், இரு பெண்களுமுண்டு. அவர் மூவரும் தீர்க்க ஜீவிகளாவர். எங்கள் மொழிபொய் யாகாது.

19. அத்திரி மறுத்துச் சொல்வார் அஞ்சினில் புகர்பானு கேது
குற்றமா யிருப்ப தாலே குழவிகள் எவ்வாறு விருத்தி
பத்தினுக் குடையோன் சேயாய்ப் பத்திற்குப் பன்னொன்றில் தங்கச்
சுத்தமா யிருப்ப தாலே செப்பினேன் முனியே யானும்.

19. பிருகு முனிவர் இவ்வாறு கூறியதைக் கேட்டு, அத்திரீ முனிவர் மறுக்கின்றார். அஃதாவது :—இந்த ஜாதகத்தில் புத்திரபாவமாகிய ஐந்தாமிடத்தில் சூரியன் சுக்கிரன் கேது இருப்பதால் இவனுக்கு எவ்வாறு புத்திர விருத்தியுண்டு ?

குறிப்பு.—புத்திர ஸ்தானத்தில் பரஸ்பரம் சத்ரு கிரஹங்களோ பாப கிரஹங்களோ தங்கினால் சந்ததி உண்டாகாது என்பது சாஸ்திரம். சூரியனும் சுக்கிரனும் சத்ருக்களாவர். சூரியனும் கேதுவும் அப்படியே. மேலும் கேது இயற்கையிலேயே பாபக்கிரஹம். ஆகவே சந்ததி இருக்கக்காரணமில்லை என்பது கருத்து. இந்த மறுப்பிற்குப் பிருகு முனிவர் பதில் கூறுகின்றார். பத்தாம் ஸ்தானத்திற்கு அதிபனாகிய செவ்வாய் பத்திற்குப் பதினொன்றாமிடத்தில் சுத்தமாகப் பலத்துடன் இருப்பதால் புத்திரபாக்கியத்திற்குத் தடையில்லை.

20. பாலகன் முன்ஜன் மத்தைப் பகருவோம் பசுமரத் தூரில்
சீலமில் லாத கங்கைக் குலமதிலு தித்து மேலும்
வேல்விழி மனைவி மைந்தர் விளங்கியே சுகமாய் வாழ்ந்து
காலன்தன் னூடு சென்று கஞ்சனால் வரையப் பட்டு;

20. இப் பாலகனின் முன்ஜன்மத்தைக் கூறுகின்றோம். இவன் முன் பிறவியில், பசுமரத்தூர் என்ற ஊரில், நற்சீலம் அதிகமில்லாத வேளாள குடும்பத்தில் பிறந்து, அழகிய மனைவி மக்கள் இவர்களுடன் சுகமாக வாழ்ந்து வந்தான். கடைசியில் யமலோகம் சென்று இவன் பிரம்ம தேவனால் இங்கு படைக்கப்பட்டு;

21. பிறப்பனு மிந்தப் பாலன் பேசுவோ மிவனின் யோகம்
தரையது மூவூர் சேர்ப்பன சதுஷ்பாதம் விருத்தி யுண்டு
பெருந்தந்தை யில்லம் வாழான் பகையோரை நசிக்க வைப்பான்
இருபது ஆண்டு மேலாய் இயம்புவோம் யோகம் தானும்.

21. இக்குலத்தில் பிறந்திருக்கிருன். இவனது யோகங்களைப்பற்றிச் சொல்லப்போகின்ருேம். மூன்று ஊர்களில் நிலங்களை அடைவான். கால் நடைகளை அபிவிருத்தி செய்வான். பெரிய தகப்பனாரின் வீட்டிற்குச் சென்று வசிக்கமாட்டான். [அவர்களிடம் அன்பு இல்லாதவன் என்பது கருத்து] எதிரிகளை அழிப்பான். இருபது வருஷங்களுக்கு மேல்தான் இவனுக்கு நல்ல அதிருஷ்டமுண்டு.

22. அதுமுதல் மரணம் மட்டும் அணுகாது தரித்திரம்தான்
இதுநிற்க அன்னை சேதியியம்புவோ மினிமேலாகத்
ததிபாக்கிய முடைய ளாகும் சாதமும் குறைவிலாதான்
அதிகமாய் வார்த்தை கூருன் அழகுளான் என்று சொல்வோம்.

22. இருபத்தோருவது வயதுமுதல் ஆயுள் முடியும் மட்டும் ஏழ்மையி ளுல் கஷ்டப்படமாட்டான். இனிமேல் இவனுடைய தாயின் குணங்களைக் கூறு கின்ருேம். பால் தயிர் பாக்கியமுள்ளவன். குறைவற்ற ஆகாரப்பொருள் உடையவன். அதிகமாகப்பேசும் சுபாவமில்லாதவன். அழகு உள்ளவன்.

23. தன்துணை ஆண்பால் நான்கு சாற்றுவோம் பாவைக் கேதான்
சொன்னஆண் இருவர் தாமும் தூருவான் சமமான் பேரில்
பின்சில காலம் சென்று புகுவாரம் உள்ளூர் தன்னில்
அன்னவர் சேதி பின்பால் அறிவிப்போம் தாயே யாங்கள்.

23. அவனுக்கு நான்கு சகோதரர்களுண்டு. அவர்களில் இருவர் கப்பல் மூலம் வேறுதேசம் சென்று, வேறு ஓர் ஊரில் சிறிது காலம் வசித்து, பிறகு தங்கள் சொந்த ஊரில் வந்து வசிப்பார். அவர்களைப்பற்றிய விவரங்களைப் பின்பாகத்தில் கூறுவோம்.

24. மதுரு பூர்வம் தன்னை அறிவிப்போம் கொச்சி நாட்டில்
நீதியாய்க் கோகு லத்தில் நேர்ந்துமே வறுமை யின்றிக்
காதலி சுகமாய் வாழ்ந்து காலன்தன் நாடு சேர்ந்து
வேதனுல் வயைரப் பட்டு விளங்கினுள் என்று சொல்வோம்.

24. இந்த ஜாதகனின் தாயின் முன்ஜன் மத்தைப்பற்றிக் கூறுகின்ருேம் இவள் முன் பிறவியில் கொச்சி நாட்டில் யாதவமிசத்தில் பிறந்து, வறுமை யினுல் கஷ்டப்படாமல், சுகமாக வாழ்ந்து வந்தாள். அந்திய காலத்தில் யமனுலகம் சென்ருள். பிறகு பிரம்மதேவனுல் இங்குப் பிறப்பிக்கப்பட்டி ருக்கிறள.

25. மறுஜன்மம் பட்சி தன்னில் வருவனும் வைசியச் சேயாய்த்
திருமகன் தந்தை பூர்வம் செப்புவோம் பெண்ணே யோரம்
சிறுஊரில் வன்னிய சேயாய் ஜனித்துமே செட்டுச் செய்து
வருநாளில் வினையைச் சொல்வேன் மங்கையே கேட்டிடாயே.

25. இவனுடைய மறு சென்மத்தையும் சொல்லுகின்ருேம். பட்சி தீர்த்தம் என்று சொல்லப்படும் திருக்கழுக்குன்றத்தில் வைசிய வமிசத் தில் பிறப்பான். இப்பாலகனது தந்தையின் பூர்வஜன்மத்தைச் சொல்

லுகின்றோம். பெண்ணை நதிக்கு அருகில் சிறிய ஓர் ஊரில் வன்னிய குலத்தில் ஜனித்திருந்தான். அப்பொழுது அவன் வியாபாரம் செய்து சுகமாக வாழுங்காலத்தில் அவனுக்கேற்பட்ட ஒரு வினையைச் சொல்லுகின்றோம். கேட்பாயாக.

26. தன்துணை பாகம் தன்னைத் தராமலே மோசம் செய்தான்
பின்னவன் வருத்த முற்றுப் புகன்றசாபத்தைக் கேளாய்ப்
பொன்கடன்தந்த பாவி பிறக்குபின் ஜன்மதன்னில்
உன்னில்லம் யானு தித்து உனக்குற வாகியே தான்.

26. தன் சகோதரனுக்குச் சேரவேண்டிய சொத்தின் பாகத்தைத் தராமல் இவனே அபஹரித்துக் கொண்டான். ஆகையால் வருத்தமுற்ற அந்தச் சகோதரன் சொன்ன சாபத்தைக் கேளுங்கள். எனது சொத்தை அபகரித்த எ பாவி ! உன்னுடைய பின்ஜன்மத்தில் நானும் உன்னுடைய வீட்டில் பிறந்து உறவு கொண்டாடி.

27. தீராத பகையும் செய்துஉன் செல்வத்தை யழிப்பே னென்று
கூடறியே தெருத்தூள் விட்டான் குலவிற்று அந்தச் சாபம்
மாரனும் அந்தி யத்தில் மலர்வனம் வைததுமே தான்
ஆறுமா முகத் தோனுக்கு அம்மலர் சாத்தி வந்தான்.

27 தீராத பகையை உடையவனாக உன் சொத்துக்களை அழிப்பேன் என்று சாபமிட்டான். தெருத்தூள்களையும் இருகைகளாலும் எடுத்து ஆகாயத்தில் தூற்றி விட்டுச்சென்றான். இவனுக்கு அச்சாபம் நேர்ந்தது. இவனும் (ஜாதகனின் தந்தை) அந்திய காலத்தில் பூந்தோட்டம் வைத்து, ஆறுமுகக் கடவுளுக்கு அத்தோட்டத்தில் பூத்த பூக்களைச் சமர்ப்பித்து வந்தான். (முதலில் சகோதரனின் சொத்தை அபஹரித்தாலும் பிறகு நல்ல புத்தியினால் இப்புண்ணியத்தைச் செய்தான்.)

28. மறலியின் நாடடைந்து மலரயன் வரையப் பட்டு
தரணியி லுதித்தா னென்றோம் தங்கிடும் முன்னாழ்ச் சாபம்
மருகனாய்த் தோன்றி யேதான் வழக்குகள் பலவாய்ச் செய்து
பொருளது நஷ்டம் செய்வன் புண்ணிய சாலி கேளாய்.

28. கடைசியில் யமனுலகம் அடைந்தான். பிறகு பிரம்மதேவனால் இக்குலத்தில் பிறப்பிக்கப்பட்டான். ஆகவே முன்ஜன்ம சாபப்படி சகோதரியின் மகன் இவன் மேல் வழக்குகள் பல தொடர்ந்து இவனது பொருள்களை இப்பொழுது நாசப்படுத்தினான் (என அறியவேண்டும்).

29. தரணியும் விரய மாகிச் சார்ந்திடும் தனக்கு மேதான்
உறன்முறை உதவி யாலே பிற்காலம்பூமி சேரல்
பிறைபோலப் பின்பால் யோகம் பெறுவனும் என்று சொல்வோம்
கரிமத வாளை பெற்ற காதலி கேட்டி டாயே,

29. ஆகையால் இவனுடைய பூமிகள் வழக்குகளால் நாசமாயின. உறவினர்களால் பூமிகள் பிற்காலத்தில் சேரும். பிறைச் சந்திரன் போல் பிரதிதினம் வளர்ந்திடும் யோகங்களும் இவனுக்குண்டு என்று சொன்னோம். பார்வதி தேவியே ! மேலும் கேளுங்கள்.

30. முப்பது ஒன்ப தாண்டில் விளம்புவோம் தந்தை கண்டம்
செப்புவோ மிவன்பின் ஜன்மம் சோதி மாமலை யிலேதான்
ஒப்புவான் சைவச் சேயாய் உரைத்த இம் மொழிகுன் றாது
தப்பிதம் அன்னைக் கேதான் சாற்றுவோம் நாற்ப தாண்டில்.

30. இந்த ஜாதகனுக்கு முப்பத்தொன்பதாவது வயதில் தந்தை மரணமாவான். தந்தையின் பின்ஜன்மத்தைக் கூறுகின்றோம். சோதிமலை என்று சொல்லப்படும் திருவண்ணாமலையில் சைவ வம்சத்தில் பிறப்பான். இம்மொழி தவறாது. ஜாதகனின் அன்னையின் மரணக காலத்தைக் கூறுகின்றோம். ஜாதகனுக்கு நாற்பதாவது வயதில் தாய் மரணமாவாள்.

31. அறுபது ஐந்து ஆண்டில் ஆடிமா தத்தி லேதான்
திருயக னுடலம் ஏகும் செப்புவோ மிவன்பின்ஜன்மம்
பெருமையாய்ப் புலியூர் தன்னில் பிறப்பனு் மிக்கு லத்தில்
கரிமதவானை பெற்ற காதலி கேட்டிடாயே.

31. இவனுடைய மரண காலத்தைக் கூறுகின்றோம். அறுபத்தைந்தாவது வயதில் ஆடி மாதத்தில் இவன் வேறு உலகம் ஏகுவான். இவனது பின்ஜன்மத்தைக் கூறுகின்றோம். பார்வதி தேவியே ! பெருமை வாய்ந்த (திருப்பாதிரிப்புலியூரில்) இதே குலத்தில் பிறப்பான். ஸ்ரீ விநாயகரைப் பெற்ற தாயே ! மேலும் கேளுங்கள்.

குறிப்பு.—புலியூர் சிதம்பரம் என்றும் கொள்ளலாம்.

32. பிறந்திடு காலம் தன்னில் பூராட மிரண்டாம பாதம்
சிறந்தசுக்ச் கிரனி ருப்பு செப்புவோம் பதினோ ராண்டும்
உறைந்திடும் திங்க ளேழும் உரைத்தமை பூர்வபாகம்
அறந்துணை வளர்க்கு மெங்கள் ஆத்துமத்தாயே கேளாய்.

32. பூராடம் இரண்டாம் பாதத்தில் இந்த ஜாதகன் பிறந்திருக்கிறான், ஜனன காலத்தில் சிறந்த சுக்கிர தசையிலிருப்பு வருஷங்கள் பதினொன்று. மாதங்கள் ஏழு. இது பூர்வபாகமாகையால் சிறிதே சொல்லியிருக்கின்றோம். தருமம் செழிக்க அருள் செய்பவளே ! எங்கள் ஆன்மாவிற்குத் தாயே ! கேளுங்கள்.

---

## ஜாதகம் 14

1. கடக லக்கின மதாகக் கதிர் புதன் சென்மம் தங்க
விடம்குரு அஞ்சில் தங்க வெண் மதிநவத்திலாக
முடவனு மாறிலாக மெஞ்ஞானி சேயும் லாபம்
அடவுடன் புகர் ஈராறில் அணுகினல் பலன் எவ்வாறு.

| சந்திரன் | | கேது செவ்வாய் | சுக்கிரன் |
|---|---|---|---|
| | இராசி சக்கரம் | | லக்கினம் சூரியன் புதன் |
| | | | |
| சனி | ராகு குரு | | |

குறிப்பு.—1. சார்வரி வருஷம் ஆடிமாதம் 3-ந் தேதி செவ்வாய்க் கிழமை விடியற் காலையில் ஜனனம். [ஆங்கிலத் தேதி 17–7–1900] புனர்வசு 4-இல் சூரியன். பூரட்டாதி 4-இல் சந்திரன். ரோஹிணி 4-இல் செவ்வாய், ஆயில்யம் 2-இல் புதன். அனுஷம் 2-இல் குரு (வக்ரீ). திருவாதிரை 4 இல் சுக்கிரன் (வக்ரீ). மூலம் 3-இல் சனி (வக்ரீ). அனுஷம் 4-இல் ராஹு. ரோஹிணி 2-இல் கேது. நக்ஷத்திரம் பூரட்டாதி. குரு தசையில் இருப்பு வருஷங்கள் மூன்று, மாதங்கள் ஒன்பது. இலக்கினம் கடகம்.

1. சூரியன் புதன் கடகத்திலும், ராஹு குரு விருச்சிகத்திலும், சந்திரன் மீனம் சனி தனுஸிலும், கேது செவ்வாய் விருஷபத்திலும், சுக்கிரன் மிதுனத்திலுமாக. இவ்வாறான கிரஹ நிலையின் பலன் என்ன ? என்று உமா தேவியார் வினவினாள்.

2. மங்கையும் கேட்கும் போது வசிஷ்டரும் கூறுகின்றார்
இங்கிவன் ஆணால் ஜன்மம் இல்லமும் வடதென் வீதி
செங்கதிர் வாடை யாகும் சிங்கவா கனத்தாள் மேற்கில்
ஐங்கரன் அருகில் தங்கும் அணுகிய மார்க்கமுண்டு.

2. இவ்வாறு பார்வதிதேவியார் கேட்டதற்கு வசிஷ்ட முனிவர் பதில் கூறுகின்றார். கிரஹங்கள் இந்நிலையில் இருக்கப் பிறந்த குழந்தை ஆண். வீதி வடக்கு மேற்கில் அமைந்திருக்கும். வீடு கீழ்வரிசையிலிருக்கும் [மேற்கு நோக்கி இருக்கும்]. காளிகாதேவி மேற்கில் தங்கி இருப்பாள். ஸ்ரீவிநாயகர் கோயிலும் அருகிலுண்டு. சமீபத்தில் ஒரு பாதையும் போகும்.

3. இத்தகை யடையா ளத்துள் இலகிய சிறு வூராகும்
வித்தகன் சேஷ்டனுக விளம்புவோம் தாயே யாங்கள்
பெற்றதாய் தந்தை யோகம் பேதையர் புத்திர யோகம்
சுத்தமாய் முன்பின் ஜன்மம் செப்புவோ மிந்நூல் தன்னில்.

3. இப்படி அமைந்துள்ள சிறிய ஓர் ஊரில் இவன், குடும்பத்திற்கு மூத்த பிள்ளையாகப் பிறந்திருப்பான். தாயே ! இவனுடைய தாய் தந்தை மனைவி புத்திரர் இவர்களைப் பற்றியும், முன்பின் ஜன்மங்களைப்பற்றியும் இந் நூலில் சொல்லப் போகின்றோம்.

4. தந்தையின் துணைவர் காணுன் தனியனுய் வாழ்வா னுகும்
எந்தக் காரணத்தினுலே இயம்பினீர் அந்த சங்கை
விந்தையாய்ச் சிகிசேய் லாபம் மேவினர தனுல் சொன்னேம்
அந்தவன் குணத்தைச் சொல்வேன் அல்பமாம் கல்வி யென்றேம்.

4. தகப்பனுருக்குச் சகோதரர்கள் இருக்கமாட்டார்கள். தனியனுகவே வாழ்வான் என்று சொல்லுகிறேம். எக்காரணத்தினுல் சகோதரர் இல்லை என்று சொன்னீர் ? அதைத் தெளிவு படுத்துங்கள், எனப் பார்வதி தேவி கேட்கலுற்றுள். வசிஷ்டர் பதில் கூறுகின்றுர். செவ்வாயும் கேது வும் பதினுென்றும் இடத்தில் இருப்பதால்தான் தந்தைக்குச் சகோதரர் இல்லை என்று தெரிவித்தோம். இந்த ஜாதகனின் தந்தையின் குணத்தைச் சொல்லுகின்றேம். கல்வியறிவு சிறிதாகவே இருக்கும்.

குறிப்பு.—பிறந்த குழந்தையின் ஜாதகத்திலிருந்து தந்தைக்குச் சகோ தரர் இல்லை என்று எவ்வாறு கூறமுடியும், எனச் சந்தேகிக்கலாம். அதற்குச் சாஸ்திரங்களில் தக்க வழிகளைத் தெளிவாகக் கூறியிருகின்றுர் கள். எவ்வாறெனில், தந்தையின் குணம் நிறம் முதலியவைகளை ஆராய்ந்து சொல்ல வேண்டுமானுல் பித்ரு ஸ்தானம் என்று சொல் லப்படும் ஒன்பதாவது இடத்தையும், அதன் அதிபனின் பலத்தையும் கொண்டு சொல்லவேண்டும். தந்தையின் சகோதரபாவத்தை ஆராய வேண்டுமானுல் ஒன்பதாமிடத்திலிருந்து மூன்றுவது இடமாகிய பிறந்த குழந்தையின் ஜாதகத்தின் பதினேராமிடத்தையும், அதன் அதிபனையும் பார்த்துச் சொல்ல வேண்டும் என்று கூறியுள்ளார்கள். ஆகவே, பதினேருமிடத்தில் செவ்வாய் கேது இருப்பதாலும், சுக்கிரன் பன்னிரண டில் இருப்பதாலும் தந்தைக்குச் சகோதர விருத்தியில்லை என்பது மிகவும் பொருத்தமானது.

[இவ்வாறே மற்றைய இடங்களிலும் அறிய வேண்டும்.]

5. சிலதுநாள் வனவா சங்கள் செய்குவா னிருநி றத்தன்
கலகத்தைக் கூரு னுகும் காரிய சமர்த்த னுகும்
நலமதை எவர்க்கும் செய்வன் நாட்டினில் வறுமை காணுன்
சொலுமொழி காப்பா னுகும் தொடுசெவி மந்தமாகும்.

5. சிலகாலம் வனவாசம் செய்வான் [ஒருவராலும் அறியப்படாமல் தனித்து வாழ்வான் என்பது கருத்து.] கருநிறமுடையவன். சண்டையில் ஈடுபடமாட்டான். காரியங்களை நிறைவேற்றுவதில் வெகு சமர்த்தன்.

எல்லோருக்கும் நன்மைகளையே செய்வான். வறுமை இல்லாதவன் சொன்ன வார்த்தைப்படியே நடப்பான். இவனுக்குக் காதும் சிறிது மந்த மாக இருக்கும்.

6. தந்தையால் சுகமில் லாதான் தாய்துணை தன்பால் சின்னுள்
அந்தவன் வாழ்வா ளுகும் ஆதியில் தரித்திரம் கொஞ்சம்
பிந்தியும் ஞாதி யாரால் பூமியும் இல்லம் சேர்ப்பன்
சந்தன் மேல் பத்தி பூண்பன் காதலி கேட்டி டாயே.

6. தன்னுடையதந்தையால் சுகங்கள் இல்லாதவன். தாயின் சகோதர ரால் (மாமனால்) சிறிது காலம் ஆதரிக்கப்பட்டிருப்பான். பால்யத்தில் மாத் திரம் சிறிது வறுமையால் கஷ்டப்பட்டிருப்பான். பிற்காலத்தில் பங்காளி கள் மூலம் நிலமும் வீடும் இவனுக்கு [ஜாதகனின் தந்தைக்கு]ச் சேரும். பக்தர்களிடம் அன்பு கொண்டவளே ! உனது திருமகனாகிய கந்தனிடம் பக்தி பூண்டவன்.

7. முன்னவ னிருந்த ஜன்மம் மொழிகிறேம் தாயே கேளும்
கன்னியா குமரி தென்பால் கலந்தனன் ரெட்டி வம்சம்
அன்னையும் தந்தைமிக்க அவன்வாழ்நாள் வினையைச் [சொல்வேன்
தன்னுடை வேலைக் காரி தையல்மேல் நிந்தை சொல்லி ;

7. இவனது முன்ஜன்மத்தைக் கூறுகின்றேம். தேவியே ! கேளுங்கள். இவன் முன் பிறவியில் கன்னியா குமரிக்குத் தெற்கில் ரெட்டி வம்சத்தில் தாய் தந்தைகளுடன் சுகமாக வாழும் காலத்தில், இவனு க்கு நேர்ந்த பாவத்தைச் சொல்லுகின்றேம். தன்னுடைய வேலைக்காரியின் மேல் நிந்தைகளைச் சொல்லி ;

8. குலத்தைவிட் டோட்டும் போது கூறுவா ளந்த மாது
கலகத்தைச் சொன்ன பாவி கலக்கும்பின் ஜன்மம் தன்னில்
நிலையது விட்டு நீங்கி நேராது துணைவர் தாமும்
அலைமீது துரும்பு போல அம்மாம னில்லம் வாசம்.

8. தனது வீட்டை விட்டுத் துரத்தி விட்டான். அவளுக்குப் பிழைப்பு இல்லாமல் செய்தபடியால் மிகவும் வருத்தமடைந்த அவள் சாபமிட்டாள். கலகத்தை உண்டு பண்ணிய பாவியே ! நீ மறுஜன்மத்தில் நிலை தவறி, சகோதரர்களுமின்றி, கடல் அலையில் விழுந்த துரும்பு போலத் தத்தளித்து, மேலும் அம்மான் வீட்டில் திக்கற்று வசிப்பாய்.

9. காதுகள் மந்த மாயும் காசினி தன்னில் வாழ்வாய்
ஓதியே சென்று ளென்றேம் உரைந்தது அந்தச் சாபம்
தீதுகள் வேறு காணன் சேயனும் அந்தி யத்தில்
மாதவர் தொண்டு பூண்டு அறுமுகன் பத்தி யாயும் ;

9. உனது காதுகளும் செவிடாகி வாழ்வாய் என்று சாபமிட்டுச் சென்றாள். அந்தச் சாபம் இப்பொழுது வந்து பற்றிக்கொண்டது. [முன் ஜன்மத்தில் கோள் சொல்லி பிறர் காதைக் கெடுத்தபடியால் மறு ஜன்மத்தில் இவனுடைய காதுகள் செவிடாம் என காரியகாரணபாவங்களை அறியவேண்டும்.] வேறு தீதுகளை இவன் அடையமாட்டான். இவன் அந்திய காலத்தில் தவசிகளுக்குத் தொண்டு செய்தும், ஆறுமுகக் கடவுளிடத்தில் பக்தியுடன் இருந்தும் ;

10. காலன்தன் னுடடைந்து கஞ்சனால் வரையப் பட்டு
ஞாலமே லுதிப்பா னாகும் நல்கிடும் மாது சாபம்
ஏலவே துணையும் காணன் இரு காது மந்த மாகும்
கோலமாம் குடும்பம் பூர்வம் குறித்தவிக் குணத்தா னுக்கு

10. காலன் உலகை அடைந்தான். பிறகு பிரம்மதேவனால் இங்குப் படைக்கப்பட்டிருக்கிறான். அந்த ஏழை வேலைக்காரியின் சாபத்தால் சகோதரர் இவனுக்கு இல்லை. காதுகளும் செவிடாயின. பால்யத்தில் குடும்பமும் கஷ்டமடைந்திருந்தது. இப்படிப்பட்ட குணமுள்ளவனுக்கு ;

11. இந்தவோர் மகவு தோன்றும் இயம்புவோ மவன்குணத்தைச்
சிந்தையில் கபடு மில்லான் செய்நிலம் விருத்தி செய்வன்
பந்தணி மார்கள் மோகன் பாரபட் சங்கள் பேசான்
வந்தவர்க் கன்ன மீவன் மாடுகள் விருத்தி யுண்டு ;

11. இந்த ஜாதகன் பிள்ளையாகத் தோன்றுவான். இவனுடைய குணங்களைச் சொல்லுகிறோம். மனத்தில் கள்ளமில்லாதவன். நிலங்களை அபிவிருத்தி செய்வான். பெண்களிடம் மோகம் கொண்டவன். பக்ஷபாதம் இல்லாதவன். தன் வீட்டை அடைந்தவர்களுக்கு அன்னமளிப்பான். கால்நடைகளையும் விருத்தி செய்வான்.

12. வித்தையும் சமம தாகும் வேலவன் பத்தி பூண்பன்
சுற்றத்தார் மதிக்க வாழ்வன் சோம்பிடான் காரி யத்தில்
குற்றத்தை வெளிக்காட் டாதான் குலமதை ஆதரிப்பன்
சித்திர இல்லம் செய்வன் செய்ந்நன்றி மறவா னாகும்.

12. கல்வியும் போதிய அளவு இருக்கும். சுப்பிரமணிய சுவாமியிடம் பக்தி பூண்டவன். உற்றார் உறவினர் மதிக்க வாழ்க்கையை நடத்துவான். சோம்பல் இல்லாதவன். பிறர் குற்றத்தை ஒருவரிடமும் வெளியிட மாட்டான். தன் குலத்தை ஆதரிப்பான். அழகிய வீட்டை நிர்மாணிப்பான். பிறர் செய்த உதவியை மறக்கமாட்டான்.

13. இருநிறம் முன்கோ பத்தன் எதிரியை யிளைக்க வைப்பன்
பொருளது சேர்ப்பா னாகும் போசன வறுமை காணன்
தரை சேர்ப்பன் தந்தை மேலாய்த்தைரிய மனத்த னாகும்
தரிபடக் கூறு னாகும் சாதகன் தீர்க்க ஜீவி.

13. கருத்த நிறமுள்ளவன். சிறிது முன் கோபி. சத்துருக்களை ஒடுங்கச் செய்வான். நற் பொருள்களைச் சேர்ப்பான். போஜன சௌக்கிய முள்ளவன். தகப்பனுரைவிட அதிக நிலங்களைச் சேர்ப்பான். அஞ்சா நெஞ்சம் படைத்தவன். வெட்டெனப் பேச மாட்டான். (முன்பின் முரணுகப் பேசமாட்டான் என்றும் கொள்ளலாம்.) ஜாதகன் தீர்க்க ஜீவியாகவும் இருப்பான்.

14. தன்துணை ஆண்பால் ரண்டு சத்தியார் அவ்வாறு தீர்க்கம்
அன்னவர் சேதி பின்பால் அறிவிப்போம் தாயே யாங்கள்
மன்னவன் மணத்தின் காலம் வரைகிரேு மிருப தாண்டில்
தென்திசை பாரி வாய்க்கும் செப்புவோ மன்னே வர்க்கம்

14. இவனுக்குச் சகோதரர் இருவர். சகோதரிகளும் இருவர். உமா தேவியாரே ! அவர்கள் வரலாற்றைப் பின்பு தெரிவிப்போம். இவனுடைய மணத்தின் காலத்தை அறிவிக்கின்றோம். ஜாதகனுக்கு இருபதாவது வயதில் மணம் நடைபெறும். அந்தப் பெண் தென்திசையில் மாதுரு வருக்கத்தில் பிறந்திருப்பாள்.

15. பாரியை யின் குணத்தைக் கேண்மோ பச்சைமால் நிறத்தா ளாகும்
கூறுவாள் சுகமாய் வார்த்தை குணமது இரண்டு முண்டு
காரியச் சமர்த்த ளாகும் கட்டுரை பகரா ளாகும்
தீரமா மனத்தா ளாகும் சீலம்போல் வெளி மயக்கம்,

15. இவனுக்குப் பாரியையாக வரும் பெண்ணின் குணத்தைக் கேளுங்கள். கருத்த மேனியாள். இனிமையான வார்த்தைகளைப் பேசுவாள். நற்குணங்களும், தீய குணங்களும் உண்டு. காரியம் செய்வதில் சாமர்த்தியம் வாய்ந்தவள். அடுக்கு வார்த்தைகளைப் பேசி ஆடம்பரப்படுத்தமாட்டாள். தைரியமுள்ளவள். வெளிப்பார்வைக்கு நல்லொழுக்கமுள்ளவள் போலக் காணப்படுவாள். (உண்மையில் நல்லொழுக்க மில்லாதவள் என்பது கருத்து.)

16. அடிசிலுக் கினிய ளாகும் அடைந்தோரை ஆத ரிப்பள்
மடமயில் யோக சாலி வந்தவர்க்கன்ன மீவள்
தடபுடல் செய்கை யுண்டு சந்தேக மனத்த ளாகும்
விடம் போலக் கோபம் கொஞ்சம் வித்தகி வயது தீர்க்கம்.

16. இனிய உணவைச் சமைத்து உண்பிக்கும் இயல்புள்ளவள். தன்னை வந்தண்டியவர்களை ஆதரிப்பாள். அதிருஷ்டமுள்ளவள். அதிதிகளுக்கு அன்னமளிப்பாள். ஆடம்பரச் செய்கையில் சிறிது வாஞ்சை உள்ளவள். எதையும் சந்தேகிக்கும் மனப்பான்மை உடையவள். விஷம் போல் கடுமையான கோபமுள்ளவள். நீண்ட ஆயுள் படைத்தவள்.

17. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோம் தசமே தோன்றும்
சித்தமா யாண்பால் மூன்று செல்விமார் இருவர் தீர்க்கம்
செத்திடும் முதலில் ரண்டு செப்புவீ ரந்தச் சங்கை
குத்தமாய் ராகு அஞ்சில் கூடின பலத்தால் சென்னேும்.

**17.** புத்திர பாவத்தைச் பற்றிச் சொல்லுகின்றோம். இந்தத் தம்பதி களுக்குப் பத்துக் குழந்தைகள் பிறப்பார்கள். அவர்களில் ஆண் மூவர். பெண் இருவர். இவர்களில் ஐவர் தீர்க்கமாக வாழ்வார்கள். மற்ற ஐவரும் நீடித்து வாழமாட்டார்கள். முதலில் பிறக்கும் இரு குழந்தை களும் தங்கா. முதலில் பிறந்த குழந்தைகள் தங்கா என எக் காரணத் தினால் சொன்னீர்கள் ? எனப்பார்வதி கேட்க, வசிஷ்டர் பதில் கூறுகின்றார். புத்திரபாவத்தில் பாபக்கிரஹமாகிய ராஹு இருப்பதால் அவ்வாறு சொன்னோம்.

**18.** பாலகன் முன்ஜன்மத்தைப் பகருவோம் விரிஞ்சி தன்னில்
சீலமில் லாத கங்கைக் குலமதி லுதித்துப் பின்னாள்
ஞாலங்கள் விருத்தி செய்து நாயகி மதலை யுண்டாய்
வேலன்மேல் பத்தி பூண்டு வினையது இல்லா னானான்

**18.** ஜாதகனது முன்ஜன்மத்தைக் கூறுகின்றோம். விரிஞ்சிபுரத்தில் அதிக சீலமில்லாத வேளாளர் வீட்டில் பிறந்து, பிறகு பூமிகளை அடைந்து, மனைவி மக்களுடன் சுகமாக வாழ்ந்து வந்தான். சுப்பிரமணிய சுவாமியிடம் பக்தி பூண்டிருந்தான். ஒரு தீய வினையையும் செய்யவில்லை.

**19.** மறலியின் பதிக்குச் சென்று மால்மகன் வரையப்பட்டுத்
திருமகனு திப்பா னாகும் செப்புவோ மவன் குணத்தை
முருகன் தன்பக்தி கொள்வன் உயர்வான குடும்ப மேற்பன்
அறிவோர்கள் நேசம் கொள்வன் ஆக்களின் விருத்தி யுள்ளான்.

**19.** காலக்கிரமத்தில் யமனுலகம் சென்றான். பிறகு பிரம்மதேவனால் இங்குப் பிறப்பிக்கப்படுவான். ஜாதகனுடைய குணங்களைச் சொல்லுகின் றோம். முருகக்கடவுளிடம் பக்தி கொண்டவன். பெருமைவாய்ந்த குடும்ப முள்ளவனாவான். அறிவாளிகளின் நட்பு இவனுக்கிருக்கும். பசுக்களை அபிவிருத்தி செய்வான்.

**20.** இல்லமும் ஈரெட் டாண்டில் எய்து வான் சித்திர மாகச்
சொல்லதைக் காப்பா னாகும் துரவுகள் செய்வா னாகும்
அல்லல்கள் காணா னாகும் அவனிகள் விருத்தி செய்வன்
நல்லவ னாகி வாழ்வன் நாட்டினில் சல்லியம் காணான்.

**20.** பதினாறுவது வயதில் அழகிய வீடு நிர்மாணிப்பான். சொன்ன சொல்லைக் காப்பாறுவான் [அதன்படி நடப்பான் என்பது கருத்து]. மக்களின் நன்மைக்காகப் பல கிணறுகளைத்தோண்டி நிறுவுவான். வாழ்க்கையில் இடையூறுகள் இல்லாதவன். நிலங்களைச் சேர்ப்பான். எல்லோருக்கும் நல்லவனாகவே வாழ்வான். இவனுக்குக் கடன் தொந்தரவு இராது.

**21.** சாதகன் தனக்கு யோகம் செப்பின காரணம் சொல்
ஆதவன் புதனும் சென்மம் அந்தணன் அஞ்சில் தங்கப்
பூதல மகனும் லாபம் பொருந்தின பலத்தினாலே
சாதிப்போம் வேசியோகம் தாமரை யோகமென்றும்,

**21.** முன் சொன்ன பலன்கள் (வெகு சீக்கிரத்திலேயே) நடப்பதற்கான யோககாரணங்கள் என்னவென்று உமாதேவி கேட்க, வசிஷ்டர் சொல்லு கின்றார். சூரியனும் புதனும் இலக்கினத்தில் விளங்குவதாலும், பாக்கி யாதிபதியான குரு ஐந்தாமிடத்தில் தங்கியதாலும், புத்திர, ஜீவனாதிபதி யான செவ்வாய் லாபஸ்தானத்தில் இருப்பதாலும், நல்ல யோகங்களைச் சொன்னோம் [தருமகருமாதி பதிகளுக்குப் பரஸ்பரம் பார்வை இருப்பதால் என்பது கருத்து.] இந்த ஜாதகனுக்கு வேசி யோகமும் தாமரை யோகமும் உண்டு.

**22.** இருவித யோகத் தாலே இடரில்லா வாழ்வா னாகும்
தரையது நாட்டு நாளாய்த் தங்கிடும் என்று சொல்வோம்
பொருளது கொடுக்கல் வாங்கல் புகன்றயோ கங்க ளெல்லாம்
இருவாறு ஆண்டு மேலாய் எய்திடு மென்று சொல்வோம்.

**22.** ஆகவே இவ்விரு யோகங்களால் ஜாதகன் வாழ்க்கையில் இடையூறுகள் இல்லாதவனாவான். நிலம் சேரும். பணம்கொடுக்கல் வாங்கலும் [வட்டி வியாபாரம்] இவனுக்கு ஒரு ஜீவனோபாயமாக அமையும். பன்னிரண்டு வருஷங்களுக்குமேல் மேலே சொன்ன யோகங்கள் வாய்க்கும்.

குறிப்பு :—பன்னிரண்டு வயதுச் சிறுவனுக்குப் பூமி வீடு முதலியவை சேரும் என்று சொல்லப்படும். பலன்கள் நேரடியாக அவனுக்கு ஒவ்வாதாதலால், ஜாதகன் தந்தைக்கு அவைகள் ஏற்பட்டு அதன் மூலம் ஜாதகன் அவைகளை அனுபவிப்பான் என்று கருதவேண்டும்.

**23.** மன்னவன் தசையாம் பூர்வம் வருடமும் மூன்று மாகும்
தன்னுடன் திங்க ளென்பான் சமரச போக மெய்தும்
துன்சனி தசையின் பாகம் சுகம்பெறும் நினைத்த வெல்லாம்
உன்னத இல்லம் செய்தல் உற்றவர் மதிப்புக் கொள்ளல்.

**23.** ஜாதகன் ஜனித்த காலத்தில் குரு தசையிலிருப்பு வருஷங்கள் மூன்று, மாதங்கள் ஒன்பது. இவ்வருஷங்களில், பலன்கள் சாதாரணமாகவே நடைபெறும். அதற்மேல் சனிதசையில் சுகங்கள் ஏற்படும். நினைத்த காரியங்கள் கைகூடும். அழகிய வீடு நிர்மாணிப்பான். உறவினர்களின் மதிப்பும் ஏற்படும்.

**24.** பிறைபோலச் செல்வ மோங்கல் பூமிகள் சேர்த்த லுண்டு
வறுமையில் லாமல் வாழ்வன் மதிமகன் தசை விசேஷம்
திருமகன் மரண மட்டும் தீங்கள் காணா னாகும்
அறிவிப்போம் பின்பா கத்தில் மங்கையே கேட்டி டாயே.

**24.** பிறைச் சந்திரன் போலச் செல்வம் வளரும். நிலங்களும் சேரும். எவ்விதத்திலும் வறுமை இல்லாதவனாவான். சந்திரன் மகனாகிய புதன் தசையிலும் விசேஷ பலன்கள் உண்டாகும். ஜாதகனுடைய ஆயுள்காலம் முடியத் தீங்குகள் ஏற்படாமல் சுகமாக வாழ்வான். தேவியே! பின் பாகத்தில் விவரமாகச் சொல்லுகின்றோம். மேலும் கேளுங்கள்.

**25.** மாதுரு குணத்தைச் சொல்வேன் மாநிறம் சமதே காத்தாள்
காதக மனமும் கொஞ்சம் கட்செவி போலே கோபம்
சீதள குணத்தா ளாகும் சீலமில்லாதா ளாகும்
வேதனை யொருவர்க் கொண்ணாள் விகடங்கள கூறா ளாகும்.

**25.** ஜாதகனுடைய தாயின் குணங்களைச் சொல்கின்றோம். மாநிறம் வாய்ந்தவள். சமமான உடல்வளர்ச்சி உடையவள். பிறர்துன்புறுவதால் வருந்தாதவள். பாம்பிற்குச் சினம் வருவதுபோல் இவளுக்குச் சினம் வரும். சீதல குணமும் வாய்ந்தவள். அதிக சீல மில்லாதவள். பிறருக்குத் தீமைகளை எண்ணாதவள். பரிகாச வார்த்தைகளைப் பேசமாட்டாள்.

**26.** மங்கைபாட் டாளி யாகும் மருவிடும் பித்தச் சூடு
சங்கையா மனத்த ளாகும் தாயில்லம் தென் பா லாகும்
நங்கைக்குத் துணை ஆண் ஒன்று நல்கிடு தீர்க்க மாக
அங்கவள் குணத்தைச் சொல்வேனவனியை விருத்தி செய்வன்.

**26.** அவள் சோம்பலின்றி உழைப்பாள். பித்தச் சூடு உடலில் தங்கி இருக்கும். எதையும் சந்தேகிக்கும் மனப்பான்மை கொண்டவள். ஜாதகன் ஊருக்குத் தென்திசையில் இவளது பிறந்த ஊர் இருக்கும். அவளுக்கு ஒரு சகோதரனுண்டு. அவன் தீர்க்கமாக வாழ்வான். அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். பூமிகளைச் சீர்திருத்தி அதிகம் செய்வான்.

**27.** சுகதுக்கம் கலந்து வாழ்வள் தோகையும் ஒன்றே தீர்க்கம்
தகமையாய் வடபால் நேரும் தன்சுதர் ஆண்பால்ரண்டு
பகையிலாப்பெண்பால் ரண்டு பெருகிடும் தீர்க்க மாக
அகமது பின்னால் செய்வன் அறிவுளான் என்று சொல்வோம்.

**27.** அவனது வாழ்க்கையில் சுகதுக்கங்கள் நிரம்பக் கலந்திருக்கும். இவளுக்கு [ஜாதகனின் தாய்க்கு] ஒரு சகோதரியும் உண்டு. அவளும் நீண்ட ஆயுளுடன் வாழ்வாள். அவள், தான் பிறந்த ஊருக்கு வடதிசையில் வாழ்க்கைப்படுவாள். இது நிற்க. அவனுக்கு (ஜாதகனின் மாமனுக்கு) இரண்டு பிள்ளைகளும், இரண்டு பெண்களுமுண்டு. அந்நால்வரும் தீர்க்கமாக வாழ்வார்கள். வாழ்க்கையின் பிற்காலத்தில் அவன் வீடுகட்டுவான். அறிவாளியாகவும் இருப்பான்.

**28.** வயதுமே தீர்க்க மெய்தும் வருவோரை ஆத ரிப்பன்
நயமுள வார்த்தை சொல்வன் நாற்காலி விருத்தி யுண்டு
தயைவுளமனத்த னாகும் தசஆண்டின் மேலே யோகம்
வியமில்லா வாழ்வா னாகும் வித்தகி கேட்டி டாயே.

**28.** நீண்ட ஆயுள் உள்ளவன். தன் வீட்டிற்கு வருபவர்களுக்கு ஆதரவளிப்பான். நயமான வார்த்தைகளைப் பேச வல்லவன். கால்நடைகளை அபிவிருத்தி செய்வான். கருணை உள்ளவன். பத்துவருடங்களுக்கு மேல் அவனுக்கு யோகமுண்டாகும். ஆடம்பரச் செலவுகளைச் செய்யாமல் வாழ்வான். உமாதேவியே! மேலும் கேளுங்கள்.

**29.** அன்னையின் முன்ஜன் மத்தை அறிவிப்போம் பெண்ணையோரம்
தன்மதி செக்கான் வம்சம் தோன்றியே சுகமுள் ளோளாய்
கன்னிகை வாழு நாளில் கலந்ததோர் வினையைச் சொல்வேன்
பின்னொரு மாது பேரில் புகன்றனள் நிந்தை வார்த்தை.

**29.** தாயின் முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். முன்பிறவியில், இவள், பெண்ணையாற்றிற்கு அருகில் செட்டி குலத்தில் உதித்து, சுகமாக வாழ்ந்து வந்தாள். அப்பொழுது அவளுக்கேற்பட்ட ஒரு வினையைச் சொல்லுகின்றேன். வேறொரு பெண்ணின்மேல் தகாத நிந்தைகளைச் சொன்னாள்.

**30.** மாதுவும் திகில டைந்து வரைந்த சாபத்தைக் கேண்மோ
ஓதினாய் நிந்தை வார்த்தை உதிக்கும்பின் ஜன்மம் தன்னில்
தீதாகத் துணைப் பெண் ணுந்தான் செல்வதி நாத்தியின்றி
மேதினில் வாழ்வா யென்ன மேவிற்று அந்தச் சாபம்.

**30.** ஆகையால் நிந்தனைகளுக்குள்ளான பெண், மிகவும் பயந்தும் வருந்தியும் சொன்ன சாபத்தைக் கேளுங்கள். நீ என்மேல் தகாத நிந்தைகளைச் சொன்னதால், மறுபிறவியில் உன்னிடத்தில் பகைமைகொண்ட சகோதரியை அடைவாய். [அவளால் இவளுக்குக் கவலைகள் ஏற்படும் என்பது கருத்து.] மேலும், வாழ்க்கைப்படும் வீட்டிலும் நாத்தியின்றி [பெண் உதவியின்றி] கஷ்டப்படுவாய், என்று சாபமிட்டாள். அந்தச் சபாம் இவளைப் பிடித்துக்கொண்டது.

**31.** அந்திய காலந் தன்னில் அவளுக்கு வாய்ப்புண் கண்டு
அந்தக னகரம் சென்று அயனுமே வரையப் பட்டு
வந்தவ ளென்று சொன்னோம் மாதுமுன் சாபம் போலத்
தன்துணை கன்னி காணாள் சாராது நாத்தி தானும்.

**31.** பின் பிறவியில் அந்தியகாலத்தில் [தகாதபடி நிந்தனைசெய்ததால்] வாயில் புண்கள் ஏற்பட்டு அவஸ்தைப்பட்டு இறந்தாள். பிறகு இக்குலத்தில் பிரம்மதேவனால் பிறப்பிக்கப்பட்டாள் என்று சொன்னோம். முற்பிறவி சாபத்தினால் இப்பிறவியில் சகோதரி பிறந்திருந்தும் அவளை அடிக்கடி கண்டு பேசி மகிழ்ச்சியடையாதவளாகவே வருந்துவாள். இவளுக்கு நாத்தனாரும் இல்லை.

**32.** மறு ஜன்மம் தணிகை நாட்டில் வருவளாம் ரெட்டி வம்சம்
கருமகா லங்கள் தம்மைக் கழறுவீர் முனியே நீர் தாம்
திருகிலா முப்பா றில் செப்புவோம் தந்தை கண்டம்
உரைக்கிறே மிவன்பின் ஜன்மம் உடுக்கையி லிக்குலத்தில்.

**32.** இவள் மறு ஜன்மத்தில் திருத்தணிகைக்கு அருகில் ரெட்டி வமிசத்தில் பிறப்பாள். ஜாதகன், தன் தந்தைக்குக் கருமம் செய்யநேரும் காலத்தைச் சொல்லுவீராக, எனப் பார்வதி கேட்க, வசிஷ்டர் கூறுகின்றார். ஜாதகனுக்கு முப்பத்தாறுவது வயதில் அவன் தந்தை மரணமடைவான். மரணமடைந்த பிறகு அவன் இதே ஜாதியில் பிறப்பான்.

33. ஜனிப்பனு மரசு செய்வன் ேயனைப் பெற்ற அன்னை
கன முள நாற்ப ஞறில் காலன்தன் பதிக்குச் செல்வள்
சினமிலா எழுப தாண்டில் சிராவண மாதம் தன்னில்
வணிபன்தன் னுடலம் ஏகும் வரைகிறே மிவன்பின் ஜன்மம்.

33. பிறந்து அரசு செய்வான் [மேலான அரசாங்க உத்யோகத்தில் அமர்வான் என்பது கருத்து]. இந்த ஜாதகனைப்பெற்ற தாய் ஜாதகனுக்கு நாற்பத்தாருவது வயதில் மரணமடைவாள். ஜாதகன், தனது எழுபதாவது வயதில் ஆவணி மாதத்தில் இவ்வுலகம் விட்டு, விண்ணுலகம் ஏகுவான். இக் கடகலக்கின மகனது பின் ஜன்மத்தையும் கூறுகின்றேம்.

34. தென்திசை குற்று லத்தில் ஜனிப்பனும் வைசிய சேயாய்ப்
பொன்பல முடைய னுகிப் புதல்வனும் வாழ்வா னுகும்
அன்னவன் ஜனன காலம் அந்தணன் தசைமூன் றுண்டு
தன்னுடன் திங்க ளொன்பான் சாற்றினேம் பூர்வ பாகம்.

34. தென் திசையில் உள்ள குற்றுலத்தில் வைசிய மகனுகப் பிறப்பான். ஏராளமான பொற்காசுகளை உடையவனுகி, மனைவி மக்களுடன் சுகமாக வாழ்வான். இக்கடகலக்கின மகன் பிறந்தபொழுது குருதசையில் இருப்பு வருஷங்கள் மூன்று, மாதங்கள் ஒனபது என்று முன்னமேயே (இருபத்து மூன்றும் பாட்டிலேயே) சொன்னேம்.

---

# ஜாதகம் 15

1. மதிபுதன் வீணை யாக மந்தனும் கயிறும் வண்டி
நிதியனும் தெருக்கா லேற நீள்குஜன் பெண்ணில் தங்க
அதிரவி மழைக்கோள் புல்லம் அற்றதோர் சிசிசு ருவில்
துதிஜன்மம் வளைய லாகத் தோன்றிடு நவக்கோ ளிவ்வாறு.

| | | | |
|---|---|---|---|
| | | சூரியன் சுக்கிரன் | சந்திரன் புதன் |
| | இராசி | | லக்கினம் சனி ராகு |
| கேது | சக்கரம் | | குரு |
| | குரு | | செவ் வாய் |

சர்வதாரி வருஷம் வைகாசி மாதம் 31-ஆந் தேதி திங்கட்கிழமை காலை நாழிகை 5-30—10-30-க்குள் ஜனனம்.

### ஆங்கில தேதி 11—6—1888

நவக்கிரஹங்களின் பாதசாரம்.

மிருகசீரிஷம் 2-இல் சூரியன். திருவாதிரை 3-இல் சந்திரன் ஹஸ்தம். 4-இல் செவ்வாய். புனர்வசு 1-இல் புதன். அனுஷம் 2-இல் குரு (வக்ரீ). ரோகிணி 3-இல் சுக்கிரன். புஷ்யம் 3-இல் சனி. புஷயம் 3-இல் ராகு. சிரவணம் 1-இல் கேது.

1. சந்திரன் புதன் மிதுனத்திலும், சனி ராகு கடகத்திலும், குரு விருச்சிகத்திலும், செவ்வாய் கன்னியிலும், சூரியன் சுக்கிரன் விருஷபத்திலும், கேது மகரத்திலுமாகவும் இலக்கினம் கடகமாகவும். இவ்வாறு கிரஹ நிலைகள் அமைந்தால் பலன்களைச் சொல்லுவீர்களாக, எனப் பார்வதி வினவினாள்.

2. பிறந்தசே யாணும் ஜன்மம் பேசுவோம் வடதென் வீதி
நிரந்தர மேற்குப் பார்வை நிகழ்த்துவோ மருகில் மூத்தோன்
திரமிலாச் கோஷ்ட முண்டு செப்புவோ மதன்மேல் மாயோன்
பெருவயி றப்பன் காளி பாஞ்சாலி வாச மாமே.

2. இந்தக் கிரஹநிலையில் பிறந்தவன் ஆண். வீதி தெற்கு வடக்காக இருக்கும். பிறந்த வீடு மேற்கு நோக்கி இருக்கும் [கீழ் வரிசையில் இருக்கு மென்பது கருத்து.] வீட்டிற்கு அருகில் சீர்கேடான ஒரு விநாயகர் கோயிலு முண்டு. அதற்கும் மேல்திசையில் விஷ்ணு கோயிலும், பிள்ளையார் காளி திரௌபதியம்மன் இவர்களது ஆலயமும் இருக்கும்.

3. அருகினில் ஆழி யுண்டு அங்கனே சாலை மார்க்கம்
தெருகினில் ஓடை சூழி சாமுண்டி வாச மாகும்
குறுகினில் மூத்தோ னுண்டு குணக்கினில் மாயோன் மாரி
பருகிடு வடக்கி லேதான் பாலகன் கணேசன் வாசம்.

3. வீட்டிற்கு வெகு சமீபத்தில் ஒரு நீர் நிலையும் ஒரு பாதையும் இருக்கும். தெற்கில் ஓர் ஓடையும், சாமுண்டி [பார்வதி] தேவியின் ஆலயமும் இருக்கும். இவற்றின் எதிரில் விநாயகரது ஆலயமும், கிழக்கில் விஷ்ணு மாரியம்மன் இவர்களது கோயில்களும், வடதிசையில் உங்கள் குழந்தையான கணேசரது கோயிலும் இருக்கும்.

4. மீனத்தில் ஈசன் கோஷ்டம் விளங்கிடும் பேரூர் தன்னில்
தானமாய்த் தனித்த இல்லம் சைவனும் குலத்தில் வந்தோன்
ஜாதகன்மா துர் யோகம் சேயர்கள் தந்தை யோகம்
மான்விழி களத்திர புத்திரர் வரன்முன்பின் ஜன்மம் யோகம் ;

4. வடக்கில் சிவபிரானது ஆலயமும் உண்டு. இவ்வளவு ஆலயங்கள் நிறைந்த ஒரு பெரிய ஊரில் சைவகுலத்தில் பிறந்திருப்பான். இவனுடைய வீடு தனித்திருக்கும். இந்த ஜாதகனுடைய, தாய் தந்தை மனைவி புத்திரர் இவர்களைப்பற்றியும், இவனது பின்முன் ஜன்மங்களைப்பற்றியும்,

5. பலன்களை விபர மாகப் பகருவேன் பராசர் தாமும்
குலமது கங்கை வம்சம் குருபீட மிவனெ ன்றோது
நன்மையாய்ப் பிதாகு ணத்தை நாட்டுவோம் சிவந்த மேனி
கலைபல நூல்கள் கற்பன் காமனை யொத்த தேகன்.

5. பலன்களை விவரமாக இந்நூலில் கூறுகின்றேன் என்று பராசரர் தெரிவித்துக்கொண்டார். ஜாதகன் கங்கைவமிசம் என்று சொல்லப்படும் வேளாள வமிசத்தில் பிறந்திருக்கிறான். இவனே மூத்தவன். ஜாதகனின் தந்தையின் குணங்களைச் சொல்லுகின்றோம். சிவந்த மேனியான். பல கலை களையும் நூல்களையும் கற்றிருப்பான். மன்மதனைப்போன்ற அழகிய தேகம் வாய்ந்தவன்.

6. சுயமாகப் பாட வல்லான் சொகுசுளான் குள்ள னுவன்
நயமாக வார்த்தை கூறுவன் நாட்டினில் கீர்த்தி யேற்பன்
தயையுளான் ஏழை பேரில் தனமுளான் ஊகை வானும்
கயநடை யொத்த னுகும் காளைமுன் கோபி யாமே.

6. சுயமாகக் கவிகள் பாடக்கூடிய வல்லமை வாய்ந்தவன். சிரமங்களைச் சகிக்காதவன். அதிக வளர்ச்சி இல்லாதவன். அழகிய வார்த்தை பேச வல்லான். இவனுடைய கீர்த்தி நாட்டில் பரவும். ஏழைகளிடத்தில் கருணை கொண்டவன். அதிகச்செல்வம் படைத்தவன். மதிநுட்பம் உள்ளவன். யானைபோலக் கம்பீரமாக நடப்பவன். சிறிது முன்கோபியாகவும் இருப்பான்.

7. கரங்களில் சங்கு சக்கரம் கனதன ரேகை யுள்ளான்
இனங்களை அதிகம் வேண்டான் யாரையும் வசியம் செய்வன்
திருமகள் விலாச முள்ளான் சேர்ந்தவர் தம்மைக் காப்பன்
அரனுடைத் தொண்டு செய்வா னவன் சுகி புசிப்பா னாமே.

7. கரங்களில் சங்க ரேகை, சக்கர ரேகை, தன ரேகை இவைகள் அமைந்திருக்கும். தன்சாதி மனிதர்களை அதிகம் விரும்பாதவன். எல்லோரையும் தன்வசப்படுத்தும் இனிய சுபாவமுள்ளவன். லக்ஷ்மீவாசம் பொருந்தியவன். தன்னை அடைந்தவர்களுக்கு உதவுவான். சிவபிரானுக்கு அதிகத் தொண்டுகளைச் செய்வான். சௌகரியங்களை நன்றாக அனுபவிப்பான்.

8. பலருக்கும் உபதேசிப்பன் பத்தினி தனக்கு நேயன்
கவலையுங் கொஞ்ச முள்ளான் கனத்தவர் நேசஞ் செய்வன்
பெருவிழி தரள தந்தம் பூமியும் விருத்தி செய்வன்
மருமவான் செட்டு முள்ளான் மைந்தர்மேல் பத்தி யுள்ளான்.

8. எல்லோருக்கும் தருமங்களை உபதேசிப்பான். மனைவியிடத்தில் மிக்க அன்புள்ளவன். அவ்வப்பொழுது சிறிது கவலைப்படும் இயல்புள்ளவன். மதிப்பு வாய்ந்தவர்களின் நட்பும் இருக்கும். அகன்ற கண்களும், முத்து போன்ற பற்களுமுள்ளன. இவன் நிலங்களை அபிவிருத்தி செய்வான். சிறிது கபடமுள்ளவன். சிக்கனமாக வாழ்வான். தேவியே ! உங்கள் குழந்தைகளிடம் பக்தி பூண்டவன்.

9. வீண்செல வில்லா னாகும் மெல்லிய ரொருத்தி யுள்ளான்
ஆண்மையு முடைய னாகும் அவன்குலம் விருத்தி யாகாது
பான்மையான சுசிய னாகும் பலருக்கும் குறைவா னாகும்
வீண்சொலும் பேசா னாகும் விநோதகா ரியமே செய்வன்.

9. ஆடம்பரச் செலவுகளைத் தவிர்ப்பான். மனைவி ஒருத்திதான். அடக்கி ஆளும் சக்தி வாய்ந்தவன். அவனுடைய குலம் (வீடு) விஸ்தாரமாக இராது. நல்ல மனப்பான்மை உடையவன். பரிசுத்தன். பலரும் இவனைச் சாதாரண மனிதன் என்றே எண்ணுவார்கள். வீண் பேச்சுப் பேச மாட்டான். பல விநோத வேலைகளைச் செய்வான்.

10. இப்படி யிருக்குந் தந்தை இவனுடைய முன்ஜன் மத்தைச்
செப்புவேன் பரங்குன் றத்தில் செங்குந்த மரபில் வந்து
ஒப்பில மனைவி மைந்தர் உயர்தனம் பூமி பெற்று
அப்பணி முருக னுக்கு அநேகதர் மங்கள் செய்தான்.

10. இப்படிப்பட்ட தந்தையின் முன்ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். முன் பிறவியில் திருப்பரங்குன்றத்தில் கைக்கோலர் வமிசத்தில் பிறந்து, மனைவி மக்களுடன் சுகமாக வாழ்ந்து வந்தான். செல்வம் பூமிகளைப் பெற்றிருந்தான். முருகனுக்குப் பலவித பணிகளைச் செய்தான். மற்றும் அனேக தருமங்களையும் செய்தான்.

11. ஆலயம் தன்னில் தீபம் அநேகபூச் செடியும் வைத்துச்
சீலமாய் வருவோ ருக்குச் சினமிலா தன்ன மீந்து
கோலமாய் ரதமுஞ் செய்து குணமுடன் வாழு நாளில்
ஞாலமேல் வந்த ஊழை நாட்டுவோம் கேளு மம்மா.

11. ஆலயத்தில் தீபம் ஏற்றி வைத்தான். பலவித புஷ்பச் செடிகளை வைத்து, அம்மலர்களை ஈசனுக்குச் சமர்ப்பித்தான். தன் வீட்டை நாடி வருபவர்களுக்கு மனமுவந்து அன்னமிட்டான். அழகியதேர் செய்து ஆலயத்திற்கு அர்ப்பணம் செய்தான். இவ்வாறு பல தருமங்களைச் செய்து, மனத்தூய்மையுடன் வாழும் நாளில் அவனுக்கேற்பட்ட வினையைச் சொல்லுகின்றோம். கேளுங்கள்.

12. தன்குலத் தலைவ னாகிச் சகலர்க்கும் தீர்ப்புச் செய்து
வந்தநாள் தன்னி லேதான் மனைவிக்கும் வரனுக் கும்தான்
எந்தவோர் கார ணத்தால் இவர்முக திப்பு மாகிச்
சொந்தமா யிவர்பால் சென்று தொடுவழக் கிட்டா ரம்மா.

12. அவன், தன் குலத்தினருக்குத் தலைவனாகி, தன் சாதியருக்குள் ஏற்படும் சண்டை சச்சரவுகளில் பக்ஷபாதமின்றி நியாயம் வழங்கி வந்தான். இவ்வாறு இருக்கையில், ஒரு நாள் ஒரு மனைவிக்கும் அவள் கணவனுக்கும் ஏதோ ஒரு காரணத்தால் சண்டை ஏற்பட, அவர்கள் இவனிடம் வந்து, விசாரணை செய்து, நியாயம் வழங்கும்படி, கேட்டுக்கொண்டார்கள்.

13. நியாயங் கள் விசாரி யாமல் நற்பொருள் வாங்கிக் கொண்டு
ஓரவஞ் சனையாய்த் தீர்ப்பு உத்தமன் செய்தா னம்மா
தீரமா யந்தப் பெண் பால் செப்பினாள் சாபம் தானும்
பாரினில் வம்ச மற்றுப் பாக்கிய மற்றுப் போவாய்.

13. காரணங்களை விசாரிக்காமல் வந்த மனிதனிடம் நல்ல பொருள்களை வாங்கிக்கொண்டு, பக்ஷபாதத்துடன் அந்தப் பெண்ணிற்குப் பிரதிகூலமாகத் தீர்ப்பளித்தான். ஆகையால் மனம் வருந்திய அந்த மங்கை மிக்க உறுதியுடன் சாபமிட்டாள். நீ, இப்பிறவியிலேயே வமிசமற்றும், செல்வம் அற்றும் இருப்பாய்.

14. இப்படிச் சாபம் சொல்லி ஏந்திழை மரண மானாள்
தப்பித மாக வாங்கும் தனங்களைக் கந்த னுக்கு
ஒப்புடன் மனங் களிப்பாய் உயர்திரு விழாவுஞ் செய்தான்
செப்புவே னந்தி யத்தில் தனஞ்செல்வம் பூமி நீங்கி ;

**14.** என்று இவ்வாறு இவனைச் சபித்து அவள் சிறிது காலத்திற்குப் பிறகு மரணமடைந்தாள். அநியாயமாக வாங்கிய பணத்தை, இவன் ஸ்ரீ சுப்பிரமணியசுவாமிக்கு மனமகிழ்ச்சியுடன் சமர்ப்பித்து, உத்ஸவங்களையும் நடப்பித்து வந்தான். இப்படி நற்காரியங்களைச் செய்தானாயினும், இவன் அந்திய காலத்தில் சாபத்தினால் செல்வம் பூமி முதலியவைகள் நீங்கப்பெற்று;

**15.** அந்தஆ லயத்தி லேயே அவனுமே மரண மாகி
ஜாதகன் இச்சென் மத்தில் சைவர்தம் குலமு தித்தான்
சொந்தமாந் துணைவ ரெட்டாம் சொல்லுவேன் ஆண்பால் ஒன்று
பந்தமாய்ப் பெண்பால் நான்கு பலித்திடும் தீர்க்க மாகும்.

**15.** அந்த ஆலயத்திலேயே மரணத்தையும் அடைந்தான். பிறகு இங்கு சைவ வம்சத்தில் உதித்திருக்கிறான். அவனுக்கு உடன் பிறந்தவர்கள் எட்டுப் பேர். அவர்களில் ஒரு சகோதரனும், நான்கு சகோதரிகளும் தீர்க்காயுளுடன் வாழ்வார்கள்.

**16.** மற்றவை நஷ்டமாகும் மங்கையர் சுகமி ராது
உற்றிடு மிக்குணத்தான் உரைக்கிறேன் இவனின் தந்தை
சுத்தமாம் ஜாதகத்தின் சுகமதைச் சொல்லக் கேளாய்
நற்றவ னாகி வாழ்வன் நற்கல்வி யதிக முள்ளான்.

**16.** மற்றை குழந்தைகள் நீடித்திரா. இவனுக்கு மனைவியால் சுகம் அதிகமிராது. இப்படிப்பட்ட தந்தைக்கு இக் கடக லக்கின மகன் குழந்தையாகப் பிறந்திருக்கின்றான். ஜாதகனின் குணங்களைச் சொல்லுகின்றோம். கேளுங்கள். எல்லோருக்கும் நல்லவனாக வாழ்வான். அதிகக் கல்வியறிவு படைத்தவன்.

**17.** வித்தையும் புத்தி யுண்டு விளங்கிடும் சிவந்த மேனி
சுத்தநன் மனத்த னாகும் சுகமுளான் ஊகை வானும்
பத்தினி யொருத்தி யாகும் பந்துவு மெச்ச வாழ்வன்
நித்தியம் சுக புசிப்பன் நிதானமாய் வாழ்வானம்மா.

**17.** இவனுடைய கல்வியும், புத்தி சாதுர்யமும் உலகில் பிரசித்தி யடையும். சிவந்த நிறமுள்ளவன். தூய மனம் படைத்தவன். சௌக்யமுள்ளவன். சிறந்த மதியூகி. இவனுக்கு மனைவி ஒருத்திதான். உறவினர்கள் கொண்டாடும்படி வாழ்க்கை இருக்கும். ஒரு பொழுதும் கஷ்டப்படமாட்டான். எப்பொழுதும் குழப்பமின்றி, புத்தி நிதானத்துடன் இருப்பான்.

**18.** ரோமங்கள் நீட்சி யுள்ளான் நுவலுப தேச முள்ளான்
காமமு மதிக முள்ளான் கண்களும் பெரிதாய்க் காட்டும்
பூமியும் விருத்தி செய்வன் புண்ணிய மனத்த னாகும்
தீமையு மொருவர்க் கெண்ணான் சிறுதீனி யிச்சை யுள்ளான்.

**18.** ரோமங்கள் நீண்டிருக்கும். நல்ல உபதேசங்களைப் பெற்றிருப்பான். அதிக காம முள்ளவன். விசாலமான கண்களுள்ளவன். நிலங்களைப் பல

விதங்களிலும் மேன் மேலும் விருத்தி செய்வான். பிறர்க்குத் தீமைகளை எண்ணுமல் நன்மைகளேயே நினைப்பான். சிற்றுண்டிகளில் அதிகவிருப்பமுள்ளவன்.

19. ஆலயக் கணக்குப் பார்ப்பன் அநேகமாய்ப் பொருளைச் சேர்ப்பன்
சோலையும் செய்வன் கேணி சுவாமிமேல் பக்தி யுள்ளான்
கால்குதி பெரிதாய் நிற்கும் கரத்தினில் சங்கு சக்கரம்
சீலமாஞ் சுழியு முள்ளான் சிறப்புளான் செட்டுச் செய்வன்.

19. தேவாலயக் கணக்குகளைச் சரிபார்க்கும் அதிகாரம் வாய்ந்தவனுக இருப்பான். பலவிதப் பொருள்களைச் சேர்ப்பான். பூந்தோட்டங்களையும் கிணறுகளையும் நிறுவுவான். சுவாமியினிடம் பக்தி கொண்டவன். குதிகால் பெரியதாக இருக்கும். கையில் சங்க ரேகை, சக்கர ரேகை, நற்சுழி இவைகள் அமைந்திருக்கும். கௌரவம் வாய்ந்தவனுவான். வியாபாரமும் செய்வான்.

20. கண்களு முறுதி யாகும் கணக்கினில் ஊகை வானும்
உண்ணிய உணவின் மீதில் உறைப்புடன் புளிப்பி லிச்சை
விண்ணவர் போற்று கின்ற மெல்லியே மேலுங் கேளே
புண்ணிய மனத்த னுகும் பிதுர்வர்க்கம் அல்ப மாகும்.

20. கண்கள் நல்ல பார்க்கும் சக்தி பெற்றிருக்கும். கணிதத்தில் மதி நுட்பம் உள்ளவன். ஆகாரப் பொருள்களில் உறைப்பும் புளிப்பும் அதிகம் கலந்த பொருள்களே இவனுக்கு விருப்பமாகும். தந்தை வருக்க உறவினர் வெகு சிலரே இருப்பார்கள். தேவதைகளும் போற்றும் தேவியே ! கேளுங்கள்.

21. முன்கோபம் கொஞ்ச முண்டு மொழி வனும் சிலேடைச் சொல்லை
மன்னவன் நெய்பா லிச்சை வண்டிவா கனமு முண்டு
உன்னத தேக முள்ளோன் உயரமு யில்லா னுகும்
கன்னலின் மொழிய னுகும் கவிதைக ளனேகம் செய்வன்.

21. சிறிது முன் கோபி. இரண்டு பொருள் தரும் வார்த்தைகளைப் பேசுவான் இவனுக்கு நெய்யிலும் பாலிலும் அதிக ஆசை இருக்கும். வண்டியும் இதர வாஹனவசதிகளும் உடையவன். உடல் வலிமை வாய்ந்தவன். உயர்ந்து வளராதவன். கரும்புரசம் போல் இனிமையான வார்த்தைகளைப் பேசுவான். சுயமாக அநேக பாடல்களை இயற்றும் சக்தி உள்ளவன்.

22. ஆவுகள் விருத்தி யுள்ளான் ஆள்களு முடை யனுவன்
பாவையர் மோக வானும் பாரிக்கு நல்ல னுவன்
மாவுமே யிவனுக் குண்டு வரிசையாய்த் தரள தந்தம்
நாவுமே தவற மாட்டேன் நாதனுர் பக்தி யுள்ளான்.

22. பசுக்களை விருத்தி செய்வான். நம்பிக்கை வாய்ந்த சேவகர்களும் இவனுக்கிருப்பார்கள். பெண்களிடம் மையல் உள்ளவன். மனைவிக்கு மிகவும்

இனியவன். லக்ஷ்மீ கடாட்சம் பொருந்தியவன். முத்துப்போன்ற பற்கள் வரிசையாக அமைந்திருக்கும். சொன்னவார்த்தை தவருதவன். ஈசனிடம் பக்தி உள்ளவன்.

23. சோதர மில்லா ளுகும் சொல்லுவோ மிவன்முன் ஜன்மம்
தீதிலாக் காஞ்சி தன்னில் திகழ்கங்கை குல முதித்துத்
மேதினில் தனங்கள் பெற்று விசேஷமாய்ச் செட்டுச் செய்து
காதியு முடையோ ளுகிக் கனபூமி யதிகம் சேர்ப்பன்.

23. உடன்பிறந்தார் இல்லாதவன். இவனுடைய முன் ஜன்மத்தைப் பற்றிக் கூறுகின்றோம். பெருமைவாய்ந்த காஞ்சீபுரத்தில், வேளாள குலத்தில் பிறந்து, அதிகச் செல்வத்தை அடைந்து, வியாபாரம் செய்து வந்தான். மனைவியுடன் வாழ்க்கையை நடத்திவந்தான். புகழுடையவனுக விளங்கினுன். பூமிகளையும் சேர்த்தான்.

24. கடவுளர் தொண்டு செய்து காவலன் வந்த நாளில்
உடலினில் சுரமும் கண்டு உம்பர்தம் நாடடைந்து
திடமுடன் கஞ்சன் தன்னுல் சேரவே வரையப் பட்டு
அடவுட னிக்கு லத்தில் அவனுமே உதித்தா னம்மா.

24. பக்தியுடன் கடவுளுக்குத் தொண்டுசெய்துவரும் நாளில், சரீரத்தில் ஜுரம் கண்டு தேவலோகம் சென்றுன். பிறகு பிரம்மனுல் இக்குலத்தில் படைக்கப்பட்டிருக்கின்றுன்.

25. இப்படி உதிக்கும் பாலன் இவனுடை மாதுர் வர்க்கம்
செப்புவோம் அன்னைக் கேதான் சிறந்திடும் தாயும் ரெண்டாம்
ஒப்புடன முதல்மா துக்கே உயர்புத்திரர் ஆணே யில்லை
மைப்படி கண்ணுன் ஒன்று மந்தமும் வருந்தி ராது.

25. இவ்வாறு கடகலக்கினத்தில் உதித்திருக்கும் பாலனது தாயின் குணங்களைச் சொல்லுகின்றோம். இவன் தாய்கு இரு அன்னைகள். அவர்களில் மூத்தவளுக்கு ஆண் இல்லை. பெண் ஒருத்திதான் உண்டு. ஆண் குழந்தைப் பிறந்து அழியுமென்றும் சொல்வதற்கில்லை. [பிறக்கவே பிறக்காது என்பது கருத்து.]

26. மறுதாய்க்கு உதித்த இந்த மாதரு இவனின் தாயார்
பரிவுடன் குணமு ரைப்போம் பாரினில் கற்பு முள்ளாள்
திருமகள் விலாச முள்ளாள் சிவந்திடு மேனி யாவள்
வருமவர்க் கினிய ள வன் பந்துவு மெச்ச வாழ்வள்.

26. வேறு ஒருத்திக்குப் பிறந்தவள்தான் இவள். இவளது குணங்களைக் கூறுவோம். இவனுடைய தாய் மிகவும் கற்புள்ளவள். லக்ஷ்மி வாசம் பொருந்தியவள். சிவந்த மேனியாள். தன் வீட்டை நாடிவரும் அதிதிகளை புன்முறுவலுடன் உபசரிப்பவள். உற்றுர் உறவினர் மெச்ச வாழ்வாள்.

27. அவசர மனத்த ளாவள் அவளுமுன் கோபி யாவள்
தவமுடை யோர்க்கு அப் பள சந்ததி அதிக மில்லாள்
இவளுடைத் தந்தை யில்லம் இடருகள் அனேக முண்டு
குவலய மீதி லேதான் கூறுவோ மின்னும் கேளே.

27. மனத்தில் நிதானமில்லாதவள். சிறிது முன் கோபம் உண்டு. தவசிகளிடம் விசேஷ பக்தி உள்ளவள். அதிக சந்ததி இராது. இவள் பிறந்த வீட்டிற்கு அனேகவித இடையூறுகள் ஏற்பட்டிருக்கும். இன்னமும் கூறுகின்றோம், கேளுங்கள்.

28. மாதுரு சகோத ரங்கள் வரைகிறே மாண்பால் ரண்டு
நீதியாய்க் கன்னி ஒன்று நிகழ்த்துவோம் தீர்க்க மாக
ஆதியாய்க் குடும்பம் தானும் அலேச்சலாம் தேச வாசம்
கோதில்பின் வயசில் யோகம் கூறுவோம் மாமனுக்கு.

28. அவளுடைய சகோதர பாவத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். இரு சகோதரர்கள். ஒரு சகோதரி. அவர்கள் மூவரும் தீர்க்க ஆயுளுடன் வாழ்வார்கள். ஆதியில் அவள் பிறந்த குடும்பம் பலவித அல்லல்களுக்கு உள்ளாகி வெளியூரில் தங்கி இருக்கும். இந்த ஜாதகனின் மாமனுக்குப் பின் வயதில் நல்ல அதிருஷ்டங்கள் வாய்க்கும்.

29. இங்ஙனம் பராசர் சொல்ல இயல்செய முனிவர் சொல்வார்
பொங்கமாய்ச் சகோதர வர்க்கம் புகலுவீ ரென்று கேட்கச்
சங்கையாய் முன்னால் ஊழி தந்தைக்கு வந்த தாலே
துங்கமாய்ச் சகோத ரங்கள் தோன்றுவே இவனுக் கம்மா.

29 பராசரர் இவ்வாறு தாயைப்பற்றி சொன்னவுடன், ஜாதகனின் சகோதரபாவத்தைப் பற்றிச் சொல்லுவீராக, என ஜயமுனிவர் வினவினர். பராசரர் பதில் உரைக்கின்றார் இவனது தந்தைக்கு முன்ஜன்மத்தில் ஒரு வினை ஏற்பட்டிருப்பதாலே அவனுக்குப் புத்திர பாக்கியம் அதிகம் இல்லை. [ஆகவே இவனுக்கு (ஜாதகனுக்கு) அதிக சகோதரர்கள் இல்லை என்பது கருத்து.]

பின்வரும் பாட்டில் அதிக சகோதரம் இல்லாமைக்குக் கிரஹ நிலையைக் கொண்டு காரணத்தை விளக்கிக் காட்டுகிறார் :—

30. மூன்றினுக் குடையோ னேடே முபயத்தானு விரயத் தானும்
தோன்றியே கேந்திர கோணம் சுகமில் லாதிருப்ப தாலே
ஆன்றதோ ராணே யில்லை அணுகிடும் பெண்பா லொன்று
சான்றிடும் தீர்க்கமாகச் சத்தியே மேலுங் கேளே.

30. சகோதர ஸ்தானம் என்று சொல்லப்படும் மூன்றுமிடத்ததிபனான புதன், கேந்திரத்திலோ திரிகோணத்திலோ பலம்பெற்று விளங்கினால் தானே சகோதர விருத்தி யுண்டு என்று சொல்லலாம். புதன், முன் சொன்ன வகையில் பலம் பெற்றிராதலால் இந்த ஜாதகனுக்குச் சகோதரனே இல்லை. ஆனால் ஒரு சகோதரி உண்டு. அவள் நீண்ட ஆயுளுடன் வாழ்வாள். தேவியே! மேலும் சொல்லுகிறோம். கேளுங்கள்.

31. தந்தையின் மரண காலம் சாற்றுவேன் முப்பா னெட்டில்
தன்தனுர் மாதந் தன்னில் சதுர்த்தியாம் பூர்வ பக்ஷம்
நந்திட மரிட்ட மாகும் நாட்டுவோ மிவன் பின்ஜன்மம்
பந்தமா யவ்வூர் தன்னில் பிராமண குலமு தித்து ;

31. இந்த ஜாதகனின் தகப்பனின் மரணகாலத்தைப் பற்றிச் சொல்லு கின்றேம். ஜாதகனுக்கு முப்பத்தெட்டாவது வயது நடை பெறும்போது, மார்கழி மாதத்தில் வளர்பிறை சதுர்த்தி திதியில் ஜாதகனின் தந்தை மரண மடைவான். இவனது பின் ஜன்மத்தைக் கூறுகின்றேம். இதே ஊரிலேயே பிராம்மண குலத்தில் பிறந்து ;

32. அரனடி பூசை செய்து அவனுமே வாழ்வா னம்மா
திறமையா யன்னை காலம் செப்புவோம் நாற்பா னலில்
உறுகன்னி மாதந் தன்னில் பிரம்மனுடதனைச் சேர்வாள்
அறுமுகன் தனைப் பெற்ற அம்மையே மேலுங் கேளே.

32. பரமசிவனது பாதார விந்தங்களைப் பூசை செய்து சுகமாக வாழ் வான். ஜாதகனுடைய தாயின் மரணகாலத்தைச் சொல்லுவோம். ஜாதக னுக்கு நாற்பத்து நாலாவது வயது நடக்கும்போது, புரட்டாசி மாதத்தில் இவன் தாய் பிரம்மனதுநாட்டை அடைவாள். முருகக் கடவுளைப்பெற்ற தாயே ! கேளுங்கள்.

33. ஜாதகன் மரண காலம் சாற்றுவோம் அறுபத் தைந்தில்
தீதான விஷத்தின் மாதம் திதியமாவசை தன்னில்
கோதுறு குன்ம ரோகம் கொண்டவன் மரண மாகி
மாதவர் பாதம்போற்றி மறுஜன்மம் தில்லை தன்னில் ;

33. ஜாதகனுடைய மரண காலத்தையும் நாங்கள் சொல்லுவோம். அறு பத்தைந்தாவது வயதில் கார்த்திகை மாதத்தில் அமாவாசை திதியில் குன்ம ரோகத்தினுல் மரணமடைவான். மறுஜன்மத்தில் சிதம்பர க்ஷேத்தி ரத்தில் ;

34. அருமறைக் குலமுதித்து அரசர்பால் தொழிலுண்டாகிப்
பெரும்பொரு ளதிகம் சேர்த்துப் பிரபல கீர்த்தி பெற்று
வருமவர்க் கன்ன மீந்து வள்ளலும் வாழ்வா னம்மா
அறுமுகன் தனைப் பெற்ற அம்மையே மேலுங் கேளே.

34. வேதமோதும் பிராமண குலத்தில் பிறந்து, ராஜாங்க உத்தியோகம் செய்து, ஏராளமான பொருள்களைச் சேமித்து வாழ்வான். பெரும் புகழ் படைத்தவனுகவும் இருப்பான். தன் வீட்டை நாடிவருபவர்களுக்கு அன்ன மளிப்பான். “ வள்ளல் ” என்று எல்லோராலும் போற்றப்பட்டுச் சுகமாக வாழ்வான். தேவியே ! மேலும் சொல்லுகிறேம்.

35. இன்னவன் மணத்தின் காலம் இயம்புவோம் ஒருபா னேழில்
கன்னியும் வடக்கில் தோன்றிக் கனமுடன் வருவாளம்மா
மன்னவன் தனக்குப் புத்திரர் வகுக்கிறோம் ஆண்பால் ரண்டு
கன்னியு மவ்வா றுகும் கனத்திடும் தீர்க்க மென்றோம்.

35 இந்த ஜாதகனுடைய விவாஹகாலத்தை உரைக்கின்றோம். இவனுக்குப் பதினேழாவது வயதில் மணம் நடைபெறும். பெண் வடதிசையில் உதித்திருப்பாள். ஜாதகனின் புத்திரபாவத்தைக் கூறுகின்றோம். புத்திரர் இருவர். பெண்கள் இருவர். இந்நால்வரும் நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள்.

36. இப்படிப் பராசர் சொல்ல இயம்புவார் புசண்டர் தாமும்
செப்புநீர் தந்தைக் கேதான் சகோதரம் ஒருவ னென்றீர்
ஒப்புட னவன்கு ணத்தை உரைப்பீர்கள் என்று கேட்க
மைப்படி கண்ணாள் பக்கம் வரைகிறோம் கேளும ம்மா.

36. இவ்வாறு பராச முனிவர் சொன்னவுடன், புசண்டர் கூறினர். பராச முனிவரே! ஜாதகனின் தந்தைக்கு ஒரு சகோதரன் உண்டு எனச் சொன்னீர். அவனுடைய குணங்களைச் சொல்லுவீராக, என்று. பராசர முனிவர், தாயே! சொல்லுகின்றோம். கேட்டருளவேண்டும்.

37. செலவுக ளதிக முள்ளான் சிவந்திடும் மேனி யாகும்
உறமுளர் தமக்கு நேயன் உண்மையா மனத்த னுகும்
திருமனே யாளி ரண்டு சேர்ந்தவள் விதவை ஒன்று
பெருமவர்க் கினிய வனுவன் பிதாநிதி விரயம் செய்வான்.

37. அதிகச் செலவுகள் செய்பவன். சிவந்த மேனியான். பெரிய செல்வாக்கு உடையவர்களுக்கு நண்பனுவான். மனத்தில் வஞ்சனை எண்ணமில்லாதவன். அவனுக்கு மனைவிமார்கள் இருவர். ஒரு கைம்பெண்ணையும் இவன் மனைவியாகக் கொண்டிருப்பான். பெரியோர்களுடைய அன்பிற்குப் பாத்திரமானவன். தந்தையின் பணச்சேமிப்பைச் செல வழிப்பான்.

38. காரியச் சமர்த்த னுகும் கணக்கினில் ஊகை வானும்
தேரிய வழியில் நிற்கான் சித்தினிச் சாதி யாவன்
நாரியர் பலரைச் சேர்வன் நாட்டினில் கீர்த்தி யேற்பன்
கோரிய காரி யத்தை குணமுடன் முடிப்பா னுமே.

38. காரியங்களை நிறைவேற்றுவதில் திறமை வாய்ந்தவன். கணிதத்தில் மதிநுட்பம் பெற்றவன். எல்லோரும் செல்லும் வழியில் (ஆசாரத்தில்) செல்லமாட்டான். சித்தினி சாதியைச் சேர்ந்தவன். பல பெண்களுடன் அந்தரங்கமாகப் பழகுவான். கீர்த்தியும் உடையவன். தான் விரும்பிய காரியத்தைச் சாமர்த்தியமாகச் செய்து முடிப்பான்.

39. அற்பரை நேசஞ் செய்யான் யாவர்க்கும் நல்லனுவன்
பற்பல விதத்தி லேதான் பணமது அழிப்பா னுகும்
தற்பணம் செய்ய வேண்டி சந்ததி யில்லா னுகும்
விற்புரு வத்தி னுளே மெல்லியர் விரு யாகும்.

39. தன்னைவிடத் தாழ்ந்தவரிடம் நட்புக் கொள்ளமாட்டான். எல்லோரிடமும் நல்லவனாக நடந்து கொள்வான். பலவழிகளிலும் பணத்தை வீணாகச் செலவு செய்வான். இவனுக்குப் பிற்காலத்தில் தர்ப்பணம் செய்வதற்குப் புத்திரன் இல்லாதவனாகவே இருப்பான். விரபோன்ற புருவத்தை உடைய உமாதேவியாரே! இவனுடைய பெண்ணின் சந்ததி விருத்தியாகும்.

40. சேர்க்கையா தருக்குப் புத்திரர் செழித்திடு வனுக் கம்மா
மார்க்கமா யிவனி னாஸ்தி மைந்தனு மடைவா னம்மா
தீர்க்கமா மனைவி யாலே சிலசில நிந்தை யுண்டு
பார்க்குளே பூமி விருத்தி பாலிப்பா னென்று சொன்னோம்.

40. சேர்ந்த மாதுவிற்கு (கைம்பெண்ணிற்கு) புத்திரர் உண்டு. அவர்களும் செழிப்பாக வாழ்வார்கள். இவனுடைய சொத்துக்களை அந்தச் சந்ததியாரே அடைவார்கள். இவனுடைய சொந்த மனைவியினால் கலகங்களும் நிந்தனைகளும் ஏற்படும். இவன் பூமிகளை விருத்தி செய்து நன்றாகப் பரிபாலிப்பான்.

41. ஜாதகன் ஜன்னந் தெட்டுச் சாற்றிய வைந்தாண் டுக்கும்
வேதனை குடும்பந் தன்னில் விரோதமும் வேற தாகும்
பாதக ருணமு முண்டு பருகாது பூமி நஷ்டம்
தோதக மதிக முண்டு சுகமிலா வனவா சந்தான்.

41 ஜாதகன் பிறந்தபிறகு ஐந்து வருஷங்கள் வரையில் குடும்பத்தினருக்குப் பல வழிகளிலும் கவலைகள் ஏற்படும். அந்நிய ஜனங்களுடன் விரோதமும் ஏற்படும். கடனால் தொந்தரவுகளும் ஏற்படும். ஆயினும் நிலங்கள் இவனை விட்டு விலகா. பல அல்லல்களும் வரும். வனவாசமும் நேரும். அதிக ஆசை உள்ளவனாக இருப்பான்.

42. அதற்குமே லொருபானுண்டும் அணுகிடும் தொழிலு முண்டு
நிதலாபம் குறைவில் லாமல் நிகரிலாச் செட்டுச் செய்வன்
பதியதுசித்திர மாகும் பாரினில் கூட்டு மோங்கும்
கதிபெறத் தர்ம தானம் கனமுட னேக்கு மம்மா.

42. அதற்குப் பிறகு பத்து வருஷங்களுக்குத் தொழில் விருத்தி உண்டாகும். எப்பொழுதும் மேல்மேலும் குறைவில்லாமல் பணவருவாய் இருக்கும். பெரிய வியாபாரம் செய்வான். வீட்டைப் புதுப்பித்து அழகு செய்வான். இவன் வசிக்கும் ஊரில் நண்பர்களின் சேர்க்கையும் அதிகமாகும். நற்கதியை அளிக்கும் தானதருமங்களையும் இவன் நடத்துவான்.

43. சோலைக ளுண்டு செய்வன் துணைவியும் வருவா ளம்மா
சீலமாம் பணிதி பாத்திரம் சிறந்திடும் பந்து மேலாய்
ஏலவே ஸ்திரீக ளாலே இன்பொருள் வந்து சேரும்
ஆலிலே துயின்றோன் தங்காய் அம்மையே கேட்டி டாயே.

43. அநேக தோட்டங்களை நிறுவுவான். இவனுக்குச் சகோதரியும் பிறப்பாள். நல்ல ஆபரணங்களும் பாத்திர வகைகளும் கிடைக்கும். பந்துக்கள் குடும்பங்களைக்காட்டிலும் இவனது குடும்பம் பெருமையோடு விளங்கும். ஸ்திரீகளால் நற்பொருள்களும் இவனை நாடிவரும். ஆலிலையில் யோக நித்திரை செய்யும் ஸ்ரீமந் ! நாராயணனின் தங்கையே ; மேலுங்கள்.

44. வித்தையும் புத்தி யுண்டு விளங்கிடும் சகடு தானும்
எத்திசைக் கீர்த்தி யுண்டு யாவரும் உறவோராவர்
தத்திய பூமி சேரும் தனமது அதிக மாகும்
அத்திமா முகனைப் பெற்ற அம்மையே மேலுங் கேளே.

44. நல்ல கல்வியும், புத்தியும் பிரகாசத்தை அடையும். வண்டி முதலிய வாஹனங்கள் ஏற்படும். எல்லாத் திசைகளிலும் இவனது கீர்த்தி பரவும். எல்லோரும் இவனிடம் நட்போடு இருப்பார்கள். விநாயகரைப் பெற்ற தேவியே ! வளமான பூமிகள் சேரும். தனமும் அதிகமாக உண்டாகும்.

45. அதற்குமே லிருபா னுண்டுள் அநேகமாய் பொருளும் சேரும்
பதியினில் பணிதி சேரும் பார்த்தபேர் மெச்ச வாழ்வன்
நிதி யினுல் பூமி சேரும் நிச்சயம் சுபமே யுண்டு
விதியினுல் தந்தை வர்க்கும் விளங்காது அரிஷ்ட மாகும்.

45. முன்சொன்ன பத்து ஆண்டுகளுக்குமேல் இருபது ஆண்டுகள் மட்டும் பலவித பொருளகள் இவனுக்குக் கிடைக்கும். பலவித நகைகளும் வந்துசேரும். கண்டவர்கள் எல்லோரும் கொண்டாடும்படி இவன் வாழ்க்கையை நடத்துவான். வியாஜ்ஜியங்கள் மூலமும் நிலங்களைப் பெறுவான். இந்த இருபது ஆண்டுகளிலும் நன்மைகளே நடைபெறும். ஆனுல் தந்தையின் வருக்கம் (பங்காளிகள்) விளங்கமாட்டார்கள்.

46. கர்மங்கள் செய்வன் மேலும் கனதன தானிய மோங்கும்
தர்மதா னங்கள் செய்வன் சந்ததி விருத்தி யுண்டாம்
மர்மமு மணுகா தாகும் மாடுகள் விருத்தி யாகும்
பெருமையு முடைய தாகும் பேசுவோம் பலன னேகம்.

46. மேலும் கருமங்களை [ஈமச்சடங்குகளை அல்லது கடமையை அல்லது தொழிலை] செய்வான். தனதானியங்கள் மேன்மேலே சேர்ந்திடும். ஏராளமான தரும தானங்களைச் செய்வான். புத்திர விருத்தியுமுண்டு. வஞ்சனைகள் ஏற்படா. கால்நடைகளை அபிவிருத்தி செய்வான். பெருமையோடு சிறப்பாக வாழ்வான். பலன்களை விரிவாகப் பின்பகுதியில் தெரிவிப்போம்.

---

## ஜாதகம் 16.

1. சந்திரன் மீன மாக சனிவண்டி புகரும் நந்தி
புந்திபானு அரசன் சேயும் புதமகளீரில் தங்கப்
பந்தமாய் ராகு சாடி பற்றிய சிசியும் சீயம்
முந்திய ஜன்னம் நண்டு மொழி தவீர் பலனைத் தானே.

| சந்திரன் | | சுக்கிரன் | புதன் சூரியன் குரு செவ்வாய் |
|---|---|---|---|
| ராகு | இராசி சக்கரம் | | லக்கினம் சனி |
| | | | கேது |
| | | | |

**குறிப்பு.—1.** ரேவதி நக்ஷத்திரம் புததசை இருப்பு வருஷங்கள் பதினைன்கு, மாதங்கள் இரண்டு.

2. இந்த கிரஹநிலை நூறு வருஷங்களில் ஏற்பட்டிருப்பதாக அறியப்படவில்லை.

1. சந்திரன் மீனத்திலும், சனி கடகத்திலும், சுக்கிரன் விருஷபத்திலும், புதன் சூரியன் குரு செவ்வாய் மிதுனத்திலும், ராஹு கும்பத்திலும், கேது சிம்மத்திலும் இருந்து, இலக்கினம் கடகமாகவுமிருந்து, இவ்வாறு கிரஹ நிலைகள் இருக்க, பலனைச் சொல்லுவீர்களாக, என உமாதேவி கேட்கலுற்றாள்.

2. உதித்தசே யாணும் ஜன்மம் உதித்தஇல் கீழ்மேல் வீதி
மதித்திட உத்திர வாடை வருமில்லம் கூரை யாகும்
சதியிலாக் கீழ்மேல் தந்தி சக்கரத்தோனும் தென்மேல்
நதிசடை அணிந்தோன் காளிநல்கிடும் வடமேல் திக்கில்.

2. இவ்விதமானக் கிரஹ நிலையில் ஆண் குழந்தை ஜனித்திருக்கும். வீதி கிழக்கு மேற்காக அமைந்திருக்கும். வீடு வடக்கு வரிசையில் இருக்கும் (தெற்கு நோக்கி இருக்கும்) கூரை வீடு. கீழ்த் திசையில் விநாயகர் கோயிலும். தெற்கில் மஹாவிஷ்ணுவின் ஆலயமும் இருக்கும். பரமசிவன் காளி வடமேற்கு திசையில் எழுந்தருளி இருப்பார்கள்.

3. மாரியும் கன்னி திக்கில் மருவிடும் மேற்கில் சூழி
கூறினோம் சோலை யுண்டு குறித்தனம் சமவூர் தன்னில்
வீரிய மாது ரில்லம் வித்தக னுதிப்பா னாகும்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

3. தென் திசையில் மாரியம்மன் கோயில் இருக்கும். மேற்குத் திசையில் ஏரி குளம் போன்ற நீர்நிலை இருக்கும். அந்தத் திசையிலேயே ஒரு சோலையுமுண்டு. இப்படிப்பட்ட மத்தியமமான (சிறிதும், பெரிதுமல்லாத) ஊரில், தாயின் வீட்டில், இந்த ஜாதகன் ஜனித்திருப்பான். ஆறுமுகங்களை உடைய சுப்பிரமணியசுவாமியைப் பெற்ற தாயே! மேலும் சொல்லுகிறோம்.

(வேறு.)

4. இன்னவன் ஜனன மிருப்பிட மதற்கு
ஈரேழு கடிகைதூ ரத்தில்
மன்னிய உத்திரம் தந்தையின் ஊராம்
வகுத்துவோம் தென்வட வீதி
உன்னத மேற்கு வாசலாம் கீழ்ப்பால்
உறைந்திடும் மாலவன் கோஷ்டம்
இன்னமு மீச னருகினில் தங்கும்
எழில்காளி மாரியும் தென்கீழ்.

4. இந்த ஜாதகன் ஜனித்திருக்கும் தாயின் ஊருக்குப் பதினான்கு நாழிகை நடந்து செல்லக்கூடிய தூரத்தில் வடதிசையில் தந்தையின் ஊர் அமைந்திருக்கும். தந்தையின் வீடு, தெற்கு வடக்கில் அமைந்துள்ள வீதியில், மேற்குத் திசை நோக்கி இருக்கும். அந்த வீட்டிற்குக் கீழ்த்திசையில் விஷ்ணு கோயில் விளங்கும். வெகு சமீபத்திலேயே சிவபிரானின் ஆலயமும் இருக்கும். தென் கீழ்த்திசையில் காளி, மாரியம்மன் இவர்களது கோயிலும் இருக்கும்.

5. தென்திசை முனியும் அம்மனும் கோஷ்டம்
சூழியும் மேடையும் நிற்கும்
அனபுட னல்ப இல்லமா மென்றோம்
அதுவடை யாளங்கள் காணும்
துன்னிய தந்தை தாய்துணை யோகம்
சுதர்களும் களத்திர யோகம்
தன்னிலே முன்பின் ஜன்மங்கள் யாவும்
சாற்றுவோம் அம்பிகை கேளாய்.

5. தென் திசையில், முனீசுவரன் கோயிலும் பார்வதி அம்மன் ஆலயமும், ஒரு நீர்நிலையும் ஒரு மேடையும் (உயர்ந்த பூமிப்பரப்பு அல்லது மண மேடு) விளங்கும். தந்தையின் வீடு சிறியதாகவே இருக்கும். இவ்வாறு ஜாதகனுடைய தந்தையின் ஊருக்கு அடையாளம் சொன்னோம். தேவியே! இந்நூலில், ஜாதகனின் தந்தை தாய் சகோதரர் மனைவி புத்திரர் இவர்களைப்பற்றியும், இவனுடைய முன்பின் ஜன்மங்கள், யோகங்கள் இவற்றைப் பற்றியும் சொல்லப் போகின்றோம். கேட்டருளுங்கள்.

(வேறு.)

6. தந்தையின் துணைவர் தம்மைச் சாற்றவே ஆண்பால் காணோம்
வந்திடும் பெண்பா லொன்று வரைந்தனம் தீர்க்க மாகச்
சந்ததி அவளுக் கல்பம் தன்வரன் சுகமில் லாதாள்
எந்தையே வாத ரோகி இடருக ளனந்த முள்ளான்.

6. தந்தையின் சகோதரபாவத்தை ஆராய்ந்தால் சகோதரனில்லை என்று தீர்மான்மாகக் கூறுகின்றோம். ஒரு சகோதரிதான் உண்டு. அவள் தீர்க்ககாலம் வாழ்வாள். அவளுக்குப் புத்திரபாக்கியம் மிகவும் கொஞ்சம்தான் உண்டு. அவளுக்குக் கணவனுடைய சுகம்மட்டுதானுண்டு. அவள் வாதரோகத்தால் கஷ்டப்படுவாள். வாழ்க்கையில் இடையூறுகளும் அதிகம் உள்ளவள்.

7. பிதாகுணமிருநி றத்தான் பேச்சது இரண்டு முள்ளான்
சதாவுமே ரோகி யாவான் தன்தேக மொடிச்ச லுள்ளான்
நிதமுமே சீல னவன் நேமியில் கிருஷி செய்வன்
கதைகளும் கேட்பா னுகும் காரிய வாதி யென்றோம்.

7. தந்தையின் குணத்தைக் கூறுகின்றோம். கருத்த நிறத்தவன். சிலேடை வார்த்தைகளைப் பேசுவான். எப்பொழுதும் நோயினால் வாடுவான். மெலிந்த உடல் வாய்ந்தவன். ஒருபொழுதும் நன்னடக்கையினின்று வழுவாதவன். விவசாயம் செய்வான். புராணங்கள் கேட்பதில் விருப்ப முள்ளவன். தனது காரியத்திலேயே நோக்க முடையவன்.

8. பூமியும் பரிபா லிப்பன் புதிதான வீடு செய்வன்
நேமியோர் மெச்ச வாழ்வன் நிதானமாய் வார்த்தை சொல்வன்
சேமமாம் குடும்பி யாவன் செய்நில மதிகம் சேர்ப்பன்
தாமத குணத்த னுகும் தைரிய முடைய னுமே.

8. அடைந்த பூமிகளைத் தன்னைவிட்டு விலகாதபடியும் செழிப்பாக இருக்கும் வகையிலும் பரிபாலிப்பான். புதிதாக வீடு கட்டுவான். உலக ஜனங்கள் போற்றும்படி வாழ்க்கையை நடத்துவான். மிக்க கவனத்துடன் வார்த்தைகளைப் பேசுவான். செழுமை வாய்ந்த குடும்பியாகவும் இருப்பான். நிலங்களையும் அதிகமாகச் சேர்ப்பான். சிறிது தாமத குணமுள்ளவன். தைரியசாலியாகவும் இருப்பான்.

9. ரோமங்கள் நீட்சி யில்லான் நுவலுப தேச மில்லான்
தீமையாங் குணங்க ளில்லான் திருமகள் வாச முள்ளான்
மாமிமார் மூவ ராகும் மாடுகள் விருத்தியுள்ளான்
காமியாம் அல்ப உண்டி கரங்காலு வலிவு முள்ளான்.

9. உடலில் நீண்ட ரோமங்கள் இல்லாதவன். நல்லுபதேசங்களைக் கேட்டிருக்க மாட்டான். தீயகுணங்கள் இல்லாதவன். லக்ஷ்மீவாசம் பொருந்தியவன். இவனுக்கு மாமிமார் [அம்மான் மனைவிகள்] மூவராவர்.

னால் நடைகள் இவனிடம் வந்ததும் பலவிதங்களிலும் விருத்தியடையும். சிற்றுண்டிகளில் விருப்பமுள்ளவன். இவனுடைய கை கால்கள் திடமாக இருக்கும்.

10. இக்குண முடையோ னுக்கு இவனுமே உதிப்பா னாகும்
தொக்கவே இவன்கு ணத்தைச் சொல்லுவோ மிருநி றத்தன்
மிக்கவே ஒடிச்சல் தேகி வித்தையு முடைய னாகும்
பக்குவ மான வார்த்தை பகருவோம் தந்திர வாதி.

10. இப்படிப்பட்ட குணமுள்ள மனிதனுக்கு இந்த ஜாதகன் மகனாகப் பிறந் திருக்கிறான். இவனுடைய குணங்களைச் சொல்லுகின்றோம். கருத்த நிறத்தவன். மெலிந்த சரீரம் வாய்ந்தவன். கல்வியறிவு உடையவன். நயமாகப் பேசுவான். மேலும் தந்திரமாக (சூழ்ச்சியாக) காரியங்களை முடிப்பதில் விருப்பமுள்ளவன்.

11. வண்டிவா கனமு முள்ளான் அடிமைகள் உடைய னாகும்
குண்டைகோ விருத்தி யுள்ளான் குலத்துளோர் மெச்ச வாழ்வன்
எண்டிசைக் கீர்த்தி கொள்வன் இடருக ளில்லா னாகும்
அண்டினோர் தம்மைக் காப்பன் அலைச்சலு முடைய னென்றோம்.

11. வண்டி முதலிய வாஹனவசதிகள் உள்ளவன். பல சேவகர்களையும் உடையவன். எருதுகளையும் பசுக்களையும் விருத்தி செய்வான். தன் சாதியர் மெச்ச வாழ்வான். எல்லா இடங்களிலும் இவனுடைய கீர்த்தி பரவி இருக்கும். வாழ்க்கையில் இடையூறுகள் இல்லாதவன். தன்னை அண்டியவர்களைக் காப்பான். வீண் பிரயாசைகளும் உள்ளவன்.

12. இன்னவன் செங்கை தன்னில் இலகிடும் ருத்திர ரேகை
தன்னிலே சுழியு முண்டு தந்தங்கள் தேய் தலுண்டு
சொன்னசொல் தவறு னாகும் திருமாலின் பத்தி பூண்பன்
அன்னங்கள் போட வல்லான் அவன்செட்டுச் செய்வானென்றோம்.

12. இவன் கையில் ருத்திர ரேகையும் சுழியும் விளங்கிடும். பற்கள் தேய்ந்திருக்கும். சொன்ன சொற்படி நடப்பான். மஹாவிஷ்ணுவிடம் பக்தி பூண்டவன். பசித்தவர்களுக்கு அன்னமளிப்பதற்கும் சக்தி வாய்ந்தவன். வியாபாரமும் செய்வான்.

13. வஞ்சக வஞ்சனவன் மனமதில் கபடு கொஞ்சம்
மிஞ்சிய பேசா னாகும் விளைபுலம் விசேஷம் சேர்ப்பான்
அஞ்சிடான் எதிர்க்கேதான் யாரையும் வசியம் செய்வன்
இஞ்சுசு ரோகியாவன் கௌரவமுடையனென்றோம்.

13. [நிர்ப்பந்தம் ஏற்பட்டால்தான்] ஏமாற்றுகின்றவர்களை ஏமாற்றுவான். நெஞ்சில் கொஞ்சம் கபடமுள்ளவன். அதிகம் பேசமாட்டான். நன்றாக விளையும் நிலங்களைச் சேர்ப்பான். எதிரிகளைக் கண்டு அஞ்சாதவன். எல்லோரையும் தன் வசப்படுத்தும் சுபாவமுள்ளவன். சிற்றின்ப நோயுள்ளவன். பெருமை வாய்ந்தவனாகவும் விளங்குவான்.

14. இவனுடைத் துணைவர் தம்மை இசைக்கிறோ மிருநான் காகும்
அவனியில் பெண்பால் ரண்டு அறைந்தன மிவனுக் கேதான்
நவமதில் சிலகா லத்தில் நசிந்திடு கர்ப்ப நோயால்
பவமுள தனிய னாகப் பாலகன் வாழ்வா னாமே.

14. இவனுடைய சகோதரபாவத்தைச் சொல்லுகின்றோம். எட்டு உடன்பிறந்தார்களுண்டு. அவர்களில் இருவர் சகோதரிகள். சகோதரர் கள் அறுவர். அவர்கள் எல்லோரும் கர்ப்ப நோயால் நீடித்து வாழமாட்டார் கள். ஆகவே இவன் தனியனாகவே வாழ்வான்.

15. ஜாதகன் மணத்தின் காலம் சாற்றுவோ மிருப தாண்டில்
மேதினில் தட்சி ணத்தில் வித்தகி மாதுர் வர்க்கம்
கோதிலா வருவா ளாகும் கூறுவோ மவள்குணத்தைப்
பாதக மெண்ணா ளாகும் பாவைநன் னடக்கை யுள்ளாள்.

15. ஜாதகனுடைய விவாஹ காலத்தைச் சொல்லுகின்றோம். இவனுக்கு விவாஹம் இருபதாவது வயதில் நடைபெறும். பெண் தென் திசையில் மாத்ரு வருக்கத்தில் ஜனித்திருப்பாள். அவளுடைய குணங்களையும் கூறுகின்றோம். பிறருக்குத் தீமையை எண்ணாதவள். அதுவுமன்றி நன்னடக்கையும் உடையவள்.

16. இருநிற முடைய ளாகும் இன்பமாய் வார்த்தை கூறுவள்
பெருமவர்க் கினிய ளாகும் மதியுள்ளாள் பொறுமை யுள்ளாள்
வறுமைக ளில்லா ளாகும் வரனுக்கு நேய முள்ளாள்
திருமகள் வாச முள்ளாள் தேவியே கேட்டி டாயே.

16. கருத்த நிறமுடையவள். இனிமையான வார்த்தைகளைப் பேசுப வள். பெரியோர்களிடத்தில் பக்தியோடிருப்பாள். நல்ல புத்தி யுள்ளவள். பொறுமைக் குணமும் வாய்ந்தவள். ஏழ்மை இல்லாதவள். கணவனிடம் மிக்க அன்பு கொண்டவள். திருமகள் வாசமுள்ளவள். தேவியே! மேலும் சொல்லுகிறோம்.

17. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோ மிருநான் காகும்
சித்தமா யாண்பால் ரண்டு செல்வதி அவ்வாறு தீர்க்கம்
பற்றிய நான்கு நஷ்டம் பகருவோ மிவர்களுக் கேதான்
அத்தியைப் பெற்ற மாதே அறைந்தன மொழிகுன் றாது.

17. இவர்களுடைய சந்ததியைப்பற்றிக் கூறுகின்றோம். எட்டுக் குழந்தைகள் இவர்களுக்குப் பிறப்பார்கள். அவர்களில் இரு பிள்ளைகளும் இரு பெண்களும் தீர்க்காயுளுடன் வாழ்வார்கள். மற்றையக் குழந்தைகள் நீடித்திரா. விநாயகரைப் பெற்ற தாயே! எங்கள் மொழி பொய்யாகாது.

18. அத்திரி சொல்லும் போது அம்பிகை கேட்க லுற்றாள்
வித்தகன் தனக்குப் புத்திரர் விளம்பினீர் நஷ்ட மென்று
சுத்தமாய்ச் சொல்லு மென்ன ஜனித்திடு முதலில் மூன்று
குற்றமாம் ஆறும் ஜன்மம் குறித்தனம் நஷ்ட மென்று.

18. அத்திரி முனிவர் இவ்வாறு சொன்னவுடன், உமாதேவி கேட்க லுற்றாள். முனிவரே! நான்கு குழந்தைகள் நஷ்டமாகுமெனச் சொன்னீர்கள். எத்தனையாவது குழந்தைகள் நஷ்டமாகு மெனத் தெளிவாகக் கூறும், என. அத்திரி முனிவர் பதில் கூறினார். முதலில் ஜனிக்கும் மூன்று குழந்தைகளும் ஆறாவதாக ஜனிக்கும் குழந்தையும் நீடித்திரா.

19. அப்படி நடக்கும் சேதி யாதுகா ரணங்க ளென்னச்
செப்புவீர் முனியே யென்றாள் சேயவன் விரயம் புக்க
மெய்ப்புட னென்பா னுதி வக்கிர னுடனே கூட
தப்பித நேரு மென்றோம் தயாபரி கேட்டி டாயே.

19. அவ்வாறு கூறுவதற்குக் காரணமென்ன? என்று தேவி கேட்க, முனிவர் பதில் உரைத்தார். புத்திரபாவத்திற்குடைய செவ்வாய் பன்னிரண்டாமிடத்தில் இருப்பதாலும், பாக்கியாதிபதியான குருவும் செவ்வாயுடன் சேர்ந்திருப்பதாலும் இவ்வாறு நடைபெறும் என்று சொன்னோம். கருணைக்கடலே! மேலும் கேளுங்கள்.

20. மாதுரு குணத்தை யாங்கள் வரைகிறோ மிருநி றத்தாள்
மேதினில் ஒடிச்சல் தேகி வித்தகி அதிர்ஷ்ட சாலி
திதிலா குணத்தா ளாகும் திருமகள் வாச முள்ளாள்
மாதவர் தமைத் துதிப்பாள் வரனுக்கு நேய முள்ளாள்.

20. தாயின் குணத்தைச் சொல்லுகின்றோம். கருத்த மேனியாள். மெல்லிய சரீரம் வாய்ந்தவள். மிக்க அதிர்ஷ்டமுள்ளவள். தீய குணங்கள் இல்லாதவள். லக்ஷ்மீவாசம் பொருந்தியவள். தவசிகளை வணங்கிப் போற்றுவாள். கணவனுக்கு மிக இனியவள்.

21. அவளுடை அன்னை யாலே அநேகமாய் நிந்தை யுண்டு
இவளுடைத் துணைவர் தம்மை யியம்புவோ மாண்பா லொன்று
நவனியில் தீர்க்க மென்றோம் நாட்டுவோ மவனின் பூர்வம்
பவமுள பேரைக் காக்கும் பார்வதி கேட்டி டாயே.

21. அவளுடைய தாயால் பல விதங்களிலும் அவதூறுகள் ஏற்படும். ஜாதகனின் தாயினுடைய சகோதரர்களைப்பற்றிச் சொல்லுகின்றோம். அவளுக்கு ஒரு சகோதரன்தான் உண்டு. அவளுடைய முன் ஜன்மத்தைச் சொல்லுகின்றோம். உலகத்தாரைக் காக்கும் தாயே! கேளுங்கள்.

22. மாதுரு முன்ஜன் மங்கள் மாபலி நகர்க்கு மேல்பால்
மேதினில் சிற்றூர் தன்னில் விளங்கினாள் தீயின் வம்சம்
போதவே புத்திர ருண்டாய்ப் புகழ்ச்சியாய்க் குடும்பி யாகி
நீதியாய் நடக்கை யாகி நிமலியும் வாழ்ந்தா ளென்றோம்.

22. இவனுடைய தாய் முன்பிறவியில் மஹாபலிபுரத்திற்கு மேற்குத் திசையில் ஓர் சிறிய ஊரில் வன்னியகுலக்ஷத்திரிய வமிசத்தில் உதித்திருந்தாள். அப்பொழுது அவள் அதிகப் புத்திரப்பேற்றை அடைந்து நற்கீர்த்தியுடன் நன்னடக்கை உடையவளாக வாழ்ந்து வந்தாள்.

23. அந்நகர் கணேச ருக்கு அவளொரு தீபம் வைத்து
நன்னய பக்தி கொண்டு நாயகன் முன்னே மாண்டு
தன்னிலே பிரம்ம ஞலே தானவள் வரையப் பட்டு
உன்னத கங்கை வம்சம் உறைந்தன ளிவளே யென்றோம்.

23. அந்த ஊரில் எழுந்தருளி இருக்கும் ஸ்ரீ விநாயகருக்குச் சிறந்த பக்தியுடன் ஒரு தீபம் சமர்ப்பித்து வந்தாள். காலக்கிரமத்தில் கணவனுக்கு முன்னமேயே மாண்டு, பிரம்மதேவனுல் இப்பொழுது இங்கு வேளாள வமிசத்தில் படைக்கப்பட்டிருக்கிறாள். அவள் தான் இக்கடகலக்கின மகனுக்குத் தாயாகவும் வாய்த்திருக்கிறாள்.

24. தீபத்தின் புண்ணி யத்தால் செப்பினோம் சுதனொ ருத்தன்
மேவிய வறுமை யில்லாள் வீணப வாத மில்லாள்
தாவிய இவள்பின் ஜன்மம் சாற்றுவோம் காஞ்சி தன்னில்
நேமியில் பிரம்ம வம்சம் நேருவா ளிவளே யென்றோம்.

24. இவள் முன்பிறவியில் ஸ்ரீ கணேசருக்கு ஒரே தீபம் சமர்ப்பித்து வந்தமையால் இந்த ஜன்மத்திலும் ஒரே பிள்ளைதான் உண்டு. வறுமை இல்லாதவள். வீண் அவதூறுகள் ஏற்படாமல் நற் புகழே இவளுக்கு ஏற்படும். இவளுடைய பின்ஜன்மத்தையும் சொல்லுகின்றோம். காஞ்சி க்ஷேத்திரத்தில் பிராமணகுலத்தில் பிறப்பாள்.

25. தந்தையின் முன்ஜன் மத்தை சாற்றுவோம் சிறுபாக் கத்தில்
முந்திய வைசிய வம்சம் முயன்றுமே பெருமை பூண்டு
சந்ததம் செட்டுச் செய்து தான்வாழும் காலம் தன்னில்
வந்த ஊழதனை யாங்கள் வரைகிறோம் கேளும் தாயே.

25. ஜாதகனின் முன்பிறவியைப்பற்றிக் கூறுகின்றோம். சிறுபாக்கம் என்ற ஊரில், வைசிய குலத்தில் பிறந்து, பெருமையோடு வாழ்ந்து வந்தான். வியாபாரம் செய்து தன் ஜீவனத்தை நடத்திவரும் காலத்தில் அவனுக்கு ஏற்பட்ட ஒரு பாவத்தைச் சொல்லுகின்றோம். கேளுங்கள்.

26. கொல்லையில் கிருஷி செய்து கோவது அதனை மேயப்
புல்லிய புத்தி யாலே பிடித்துக்கால் இறுக்கி வைத்துப்
பொல்லாத கழியால் வாட்டி விரட்டின னிவனே யம்மா
தொல்லையும் பாதை நேர்ந்து துன்பமாய் நடந்த தம்மா.

26. இவன் தனது புன்செய் நிலத்தில் பயிரிட்டிருப்பதை ஒரு பசு வந்து மேய, அதைக் கண்டு தன் அல்ப புத்தியால் ஆத்திரமடைந்து, அப் பசுவின் கால்களைக் கயிற்றினுல் அழுத்தமாகக் கட்டி, ஒரு பெரிய தடியினுல் நையப் புடைத்து, பின் கால் கட்டுக்களை அவிழ்த்து விடாமலேயே துரத்தி விட்டான். ஆகையால் மிகவும் தாக்கப்பட்ட அந்தப் பசு கஷ்டப்பட்டுக் கொண்டே நடந்து சென்றது.

**27.** கால்கயிறு விலக்கா மல்தான் கஷ்டமாய்ச் செல்லும் போது
சீலமாய் உரியோன் பார்த்துச் செப்புவான் மனவெ றுப்பால்
ஞாலமேல் மறுஜன் மத்தில் நடுவது வயதி லேதான்
காலினில் குற்ற மாயும் கண்டவர் நகைக்க ஜன்மம்.

**27.** அந்தப் பசுவின் சொந்தக்காரன், கால் கயிறுகளை விலக்காமல் சிரமத்துடன் நடந்து வரும் பசுவைப் பார்த்து, மிகவும் இவனிடம்வெறுப்பு கொண்டு, ஒரு சாபமிட்டான். இவ்வாறு ஜீவஹிம்சை செய்த பாவியே! நீ, மறுபிறவியில், வாழ்க்கையின் மத்தியகாலத்தில் காலில் ஊனம் ஏற் பட்டு, பிறர் பார்த்து எளனம் செய்யும்படி வாழ்வாய்.

**28.** அடுத்திடும் துணைவர் துன்பம் என்றுமே கோமான் சொல்லி
விடுத்தனன் கயிறு தானும் மேவிற்று அந்தத் தோஷம்
திடத்துடன் அச்சென் மத்தில் செல்வங்கள் குறைவு நேர்ந்து
ஆடவன் மறலி பக்கல் உத்தமன் சேர்ந்தா னென்றோம்.

**28.** மேலும் சகோதரரால் துன்பமும் உண்டாகும். இவ்வாறு பசுவிற்கு சபித்து உடையவன் பசுவின் கட்டுக்களை அவிழ்த்துவிட்டு, தனது வீட்டிற்கு ஓட்டிச் சென்றான். பசுவை இம்சித்தப் பாவம் இவனை வந்தடைந்தது. ஆகவே அதே பிறவியிலேயே இவனுடைய செல்வம் குறைந்தது. கடைசியில் யம உலகத்தை இவன் அடைந்தான்.

**29.** நரகத்தில் பன்னாள் மூழ்கி நாற்றலைக் கஞ்சன் தன்னால்
உரமுடன் வரையப் பட்டு உதித்தவ னிவனே யென்றோம்
அறைகிறோ மிச்சென் மத்தில் அவனுக்கு யோக மில்லை
விரைவினில் மத்தி யத்தில் மேவிடும் காலில் தோஷம்.

**29.** யம உலகில் பல நாட்கள் நரகத்தில் மூழ்கிக் கிடந்தான். பிறகு நான்முக பிரம்மதேவனால் இந்தக் குலத்தில் பிறப்பிக்கப்பட்ட இவன், கடக லக்கின மகனுக்குத் தந்தையாக ஏற்பட்டிருக்கிறான். இந்த ஜன்மத்திலும் அவனுக்கு அதிக யோகமில்லை. மேலும் நடு வயதில் காலில் எதிர்பாராமல் ஊனமும் உண்டாகும்.

**30.** முனிவரிவ் விதமாய்க் கூற மொழிவளா மம்மன் தாமும்
அனையவே முதலி லேதான் அறைந்தினீர் யோகம் தானும்
கனமுடன் பின்னு லேதான் காளையும் தரித்திர னென்றீர்
இனமதைச் சொல்லு மென்ன இவன்மனை யாளால் யோகம்.

**30.** இவ்வாறு முனிவர் கூறியவுடன் அம்பிகை கேட்கலுற்றாள். முனிவரே! முற் பகுதியில் தந்தை யோகமுள்ளவன் என்று சொன்னீர். இப்பொழுது தந்தை யோகமில்லாதவன், தரித்திரன் எனக் கூறுகின்றீர். ஒன்றுக்கு ஒன்று முறண்பட்டிருப்பதால் இவ் விஷயத்தை விளக்கிச் செப்பு வீரா? என. முனிவர் பதிலுரைத்தார். தாயே! இவன் (தந்தை) பால்யத் தில் கஷ்டப்படுவான். இவனுக்கு மணமான பிறகு மனைவியால் அதிருஷ் டங்கள் வாய்க்கும். ஆகவே இவன் தரித்திரன்—பணக்காரன் என்ற இரு வார்த்தைகளும் பொருந்தும்.

31. எப்படிச் சொல்லு மென்ன இரணியன் விரயன் புக்கச்
செப்பினேம் தந்தை தானும் தரித்திர முடைய னாகும்
ஒப்புடன் நவத்தி லேதான் உதயனும் சேர்ந்த தாலே
ஒப்பவும் மனைவியாலே இவனுக்கு யோக மென்றோம்.

31. இதையும் விவரித்துக் கூறுமெனப் பார்வதி கேட்க, முனிவர், பாக்கியாதிபதியான குரு வியய ஸ்தானம் என்று சொல்லப்படும் பன்னிரண்டாமிடத்தில் தங்கியதால், இவன் பிறவியில் யோகமில்லாதவன் (தரித்திரன்). ஆயினும் உதயலக்கினாதிபதியான சந்திரன் ஒன்பதாமிடத்தில் [பாக்கியத்தில்] விளங்குவதால் மனைவியால் இவனுக்கு யோகமுண்டு. ஆகவே, விவாகத்திற்குப் பிறகு பணம் படைத்தவன் என்றார்.

32. மத்திய வயதி லேதான் வரன்காலி லூன மென்றீர்
சித்தமா யதற்குச் சாந்தி செப்புவீர் முனியே யென்றாள்
எச்சாந்தி செய்தா லுந்தான் விலகாது கோவின் தோஷம்
அத்தியைப் பெற்ற மாதே அறைந்தன மொழிகுன் றாது.

32. நடுவயதில் இவனுக்குக் காலில் ஊனமேற்படு மென்றீர். அஃது ஏற்படாமல் இருப்பதற்குத் தக்க சாந்திகளைக் கூறுவீராக, என உமாதேவி வினவினாள். ஸ்ரீவிநாயகரைப் பெற்ற தாயே! பசு இம்சை மிகக் கொடிய பாவமாகையால் இதற்குச் சாந்தியோ பரிகாரமோ கிடையாது. அந்தப்பாவத்தை இவன் அனுபவித்தே தீர்க்கவேண்டும். வேறு வழியில்லை என்றார் முனிவர்.

33. இவனுடைப் பின் ஜன்மத்தை இயம்புவோம் விரிஞ்சி நாட்டில்
அவனியில் இக்கு லத்தில் அவனுமே உதிப்பா னென்றோம்
நவனியில் பூமி யுண்டாய் நன்மனை புத்திர ருண்டாய்
அவமதிப் பில்லா வாழ்வன் அம்பிகை யாளே கேளாய்.

33. இவனுடைய அடுத்த பிறவியைக் கூறுகின்றோம். மறு ஜன்மத்தில், இவன் விரிஞ்சிநாட்டில் இதே குலத்தில் உதித்து, அதிக நிலங்களைப் படைத்தவனாகி, மனைவி மக்களுடன் அவமதிப்பு இல்லாமல் (பெருமையுடன்) சுகமாக வாழ்வான். அம்பிகையே! மேலும் சொல்லுகிறோம்.

34. ஜாதகன் முன்ஜன் மத்தில் சாற்றுவோம் தவளை கீழ்ப்பால்
மேதினி லருகிலேதான் விளங்கிய சிற்றூர் தன்னில்
கோதிலா அருகர் வம்சம் குலாவியே இந்தப் பாலன்
வேதனை யில்லா தாகி விளைபுல மதிக முண்டாய்.

34. ஜாதகனின் முன்பிறவிச் செய்தியைக் கூறுவோம். தவளகிரிக்கு அருகில் கீழ்த்திசையில் உள்ள ஒரு சிறிய ஊரில் சமண குலத்தில் பிறந்து, விளையும் நிலங்களை அதிகம் படைத்தவனாக, கஷ்டமின்றி வாழ்க்கை நடத்தி வந்தான்.

35. கல்வியால் பெருமை பூண்டு கனத்தவர் நேசம் கொண்டு
நல்லவ னாகி யேதான் நாட்டினில் கீர்த்தி பெற்று
அல்லலு மில்லா தாகி அரசர்கள் பேட்டி கொண்டு
வல்லவன் வாழும் நாளில் வரைகிறே மூழி தானே,

35. மேலும், கல்வி யறிவு உடையவனாக இருந்தான். பெருமை உடைய வனாகிப் பல பெரியோர்களுக்கு நண்பனாகவும் இருந்தான். எல்லோருக் கும் நல்லவனாக நடந்தான். புகழுடன் விளங்கினான். வாழ்க்கையில் இடையூறு அற்றவனாக வாழ்ந்தான். அரசர்களின் ஆதரவு பெற்று சிறப்புடன் வாழும் காலத்தில் இவனுக்கேற்பட்ட வினையைச் சொல்லுகின் றோம்.

36. அவ்வூர்க்கு மேற்குத் திக்கில் அரசர்கள் வாசம் கொள்வர்
ஒவ்விய இந்தப் பாலன் உரைந்தனன் அவ்வூர் தன்னில்
பவ்வமாய் மறையோன் புத்திரி பற்றியே நாணி மூந்து
நவ்வியே இருக்கும் காலே நாயகன் அவ்வீதி செல்ல ;

36. அவன் வசிக்கும் ஊருக்கு மேற்கு திசையில் அரசர்வாழ்கின்ற ஊர் ஒன்று இருந்தது. அவ்வூரில் இவன் போய்த் தங்கினான். அப்பொழுது ஒரு பிராமணப் பெண் கணவனை இழந்து வசிக்கையில் அவள் இருக்கும வீதி வழியே இவன் செல்ல ;

37. இவன்தனை மாது பார்த்து இல்லத்தில் வைத்தா ளென்றோம்
அவனுமே அங்குச் செல்ல அவள்காம முற்று மேதான்
நயமான வார்த்தை பேச நாயகன் கருத்துக் கொள்ளான்
இவனுமே வெளியில் செல்ல இயம்புவாள் மாதுதானும்.

37. அந்தப் பெண் இவனை [சமண வமிசத்தில் பிறந்திருப்பவனை]ப் பார்த்து, காதல் கொண்டு, வீட்டிற்குள் அழைத்து, தன் விருப்பத்தைத் தெரிவிக்க, இவன் அவள் சொன்ன வார்த்தைகளை ஏற்றுக்கொள்ளாமல் வெளியே சென்று விட்டான். ஏமாற்ற மடைந்த அவள் சொன்னாள்.

38. சொல்லதைத் தடுக்கா தையா சுகமில்லை உந்த னுக்கு
நல்லவ னென்று நானும் நாடினேன் கிருபை செய்யும்
வல்லியும் சொல்லும் போது மருமமாய்ச் சொல்லலுற்றான்
வில்நுதல் மாது தானும் வெறுப்பினால் புகலுகின்றாள்.

38. ஐயா ! நான் சொன்ன வார்த்தைகளை அங்கீகரிக்க வேண்டும். அவ் வாறு செய்யாவிடில், உனக்குச் சுகமிராது. நீர் நற்குண முள்ளவர் என்ற காரணத்தினால்தான் உம்மை நாடினேன். தயை செய்யும் எனக் கேட்ட தற்குக் கபடமாகப் பதில் கூறி வெளியில் சென்றுவிட்டான். ஆகையால் வெறுப்படைந்த அவள் கூறினாள்.

39. இச்சென்மம் போக்கி நீயும் இனிவரும் ஜன்மம் தன்னில்
உச்சித உதித்த இல்லம் உறைகுவேன் நானு மங்கு
மிச்சமா யுதித்து மேதான் விரைவினில் பாரி பாகி
அச்சமில் லாமல் வாழ்வேன் அறைந்துபின் அந்த மாது ;

39. இந்த ஜன்மத்தை நீர் போக்கிய பிறகு, மறு பிறவியில் எக்குலத்தில் பிறக்கின்றீரோ அதே குலத்தில் நானும் பிறந்து, உம்மையே விரைவினில் மணந்து, பயமின்றிச் சுகமாக வாழ்வேனாக, என்றாள். அம்மாது இவ்வாறு சொல்லி விட்டு ;

40. தன்னுடைக் குலதெய் வத்தைச் சதாவுமே தியானம் செய்தாள்
மன்னிய காலம் போக்கி மறலிதன் பதிக்குச் சென்று
வின்னமாய் சின்னுள் சென்று பிரமனுல் வரையப் பட்டு
அன்னவ ளிக்கு லத்தில் வந்தவ ளிவள்தன் பாரி.

40. தன் குலதெய்வத்தை எப்பொழுதும் வணங்கி, தியானித்து வந்தாள். கடைசியாக யமன் உலகம் ஏகினுள். பிரம்மதேவனுல் சிலநாட்களுக்குப்பிறகு இங்கு இக்குலத்தில் பிறப்பிக்கப்பட்டிருக்கிறுள். முன் ஜன்மத்தில் எண்ணியபடியே இவனுக்கு மனைவியாகவும் நேர்ந்திருக்கிறுள்.

41. முனிவரிவ் விதமாய்க் கூற மொழிவளா மம்மன் தாமும்
அனையவே இவன்முன் ஜன்மம் அருமறைக் குலமு தித்து
வினையிலாத் தாழ்கு லத்தில் வித்தகி உதித்த தென்னச்
சினமிலாச் சொல்லு மென்னச் செப்புவார் முனிவர் தாமும்.

41. முனிவர் இவ்விதம் கூறியவுடன், இவள் முன் பிறவியில் வேதமோதும் குலத்தில் பிறந்து, இப்பிறவியில் தாழ்ந்த குலத்தில் பிறப்பதற்குக் காரணமென்ன? சாந்த குணம் பொருந்திய முனிவரே! இவ்விஷயத்தைச் சொல்லுங்கள், எனப் பார்வதி கேட்கலுற்றுள்.

42. முன்ஜன்மம் சமணன் பேரில் மோகங்கள் துய்த்த தாலும்
அன்னவன் பின்ஜன் மத்தில் அவனையே அணவே னென்று
சொன்னசொல் குறைவு ருமல் தொடுத்தனன் பிரம்மன் தாமும்
கன்னென மொழியை யொக்கும் காரிழை புகன்றிட் டோமே.

42. முனிவர் கூறினுர். முன்பிறவியில் இவள், சமண குலத்தில் பிறந்த ஒரு வாலிபன்மேல் தனக்குத்தகாதபடி மோகம் கொண்டதாலும், அப்பிறவியில் அது நிறைவேருமல் போகவே மறு பிறவியிலாகிலும் அவனையே கணவனுக அடைய வேண்டு மென்று ஆசைப்பட்டு, தன் குலதெய்வத்தைப் பிரார்த்தித்துக் கொண்டபடியாலும், பிரம்மதேவன் அவளிஷ்டப்படியே அவளை இக்குலத்தில் பிறப்பித்தான். கரும்பு போல் இனிக்கும் மொழியினைக் கூறும் தேவியே! இவைகளையே அதற்குக் காரணமாகத் தெரிவித்துக் கொண்டோம்.

43. புத்தனும் சிலது வேளை புகலாமல் மறைகள் தம்மை
வெற்றியா யரசர் பக்கல் விளம்பியே பொய்கள் சொல்லிச்
சித்தமாய் வாழ்ந்து பின்பு சென்றனன் காலன் பக்கல்
சத்தியே கஞ்சன் தன்னுல் தானவன் வரைப் பட்டான்.

43. அச்சமண வாலிபனும், அவர்களுடைய வேதத்தைச் சிலநாட்களாக ஓதாமல் புறக்கணித்து, அரசனிடமே தங்கி, அவன் மனம் மகிழ்வதற்காகப் பல பொய்களையும் சொல்லி, அதனுல் கிடைக்கும் பொருளைக்கொண்டு இவ்வுலகில் வாழ்ந்து வந்தான். பிறகு கடைசியில் மரணமடைந்தான்; பிரம்மதேவனுல் இங்குப் பிறப்பிக்கப்பட்டிருக்கின்றுன்.

44. வந்தவ னிவனே யென்றோம் அம்பிகை கேட்க லுற்றாள்
முந்திய ஜன்மம் தன்னில் முதுமறை சொல்லாத தாலும்
சந்ததம் பொய்கள் பேசித் தானவன் வாழ்ந்தா னென்றீர்
இந்தவா றிரண்டு செய்கை இச்ஜென்மம் பலன் சொல்வீரே.

44. முந்திய ஜன்மத்தில் அவன் சமணர்களது வேதத்தை ஓதாமல் இருந்தான். அனேக பொய்களைச் சொல்லி சீவனத்தை நடத்திவந்தான் என்று சொன்னீர்கள். இவ்விரு குற்றங்களுக்கும் இந்த ஜன்மத்தில் அவன் (ஜாதகன்) அடையும் பலன்கள் என்ன? கூறுவீர்களாக, எனப் பார்வதி கேட்கலுற்றாள்.

45. துணைவர்கள் தோஷ மாகும் சுதர்களும் முதலில் பீடை
அணையவே யலைச்ச லுண்டு அவன்பந்து விரோத மாகும்
கனமுட னிதுவே யன்றிக் கழறொணா வேறு சங்கை
பனிவரை மகளாய் வந்த பார்வதி கேட்டி டாயே.

45. முனிவர் கூறுகின்றார். ஹிமாலயத்திற்கு மகளாக அவதரித்த தேவியே! அக்குற்றங்களுக்கு இவன் இந்தஜன்மத்தில் அனுபவிக்க வேண்டிய பலன்களைச் சொல்லுகின்றோம், கேளுங்கள். இவனுக்குச் சகோதரம் உண்டு. மேலும் முதலில் பிறக்கும் குழந்தைகளும் நஷ்டமாவார்கள். இவனது பல முயற்சிகள் பலனற்றுப்போகும். பந்துக்களும் விரோதிகளாவார்கள். இவைகளன்றி வேறு கெட்ட பலன்களை அனுபவிக்க மாட்டான்.

46. தந்தையின் மரண காலம் சாற்றுவோம் நாற்பா னலில்
முந்திய ஆனி மாதம் மொழிகிறோம் கருமம் தானும்
அந்தவோர் காலம் தன்னில் அலரியின் தசையி லேதான்
முந்திய முடவன் சித்திரம் மேன்மையாய் நடக்கு மென்றோம்.

46. ஜாதகனின் தந்தையின் மரண காலத்தைக் கூறுகின்றோம். ஜாதகனுக்கு நாற்பத்துநாலாவது வயது நடக்கும்போது ஆனி மாதத்தில் தந்தை மரணமடைவான். ஆகையால் ஜாதகன் தந்தைக்கு ஈமச் சடங்குகளைச் செய்வான். அப்பொழுது ஜாதகனுக்குச் சூரிய தசையில் முடவனாகிய சனியின் புத்தி நடைபெறும்.

47. எண்ணஞ்சு ஏழு ஆண்டில் இயல்கன்னி மாதம் தன்னில்
திண்ணமாய் மாதுவுக்குச் செப்புவோம் கண்டம் தானும்
வண்ணமா யிரவி தன்னில் வெள்ளியின் காலம் தன்னில்
மண்ணில் கருமம் நேரும் மங்கையே கேட்டி டாயே.

47. ஜாதகனுக்கு நாற்பத்தேழாவது வயது நடைபெறும் போது புரட்டாசி மாதத்தில் தாய்க்கு மரணம் நிச்சயமாக ஏற்படும். அப்பொழுது ஜாதகனுக்கு சூரியதசையில் சுக்கிர புக்தி நடைபெறும். ஆகவே முற் கூறியபடி சூரிய தசையில், சனி புக்தியில் தந்தைக்கும், சுக்கிர புக்தியில் தாய்க்கும் ஜாதகன் திண்ணமாகக் கருமம் செய்யநேரிடும். தேவியே! மேலும் கேளுங்கள்.

48. உதித்தவன் மரண காலம் உரைக்கிறோ மறுபா றுறில்
விதித்திடக் கருங்கோள் காலம் அவன்சுய புத்தி தன்னில்
சதியிலாத் துலாமா தத்தில் சதுர்த்தசி வளர்பக் கத்தில்
துரிதமா யுடலம் வாடும் சொல்லுவோ மிவன்பின் ஜன்மம்.

48. கடக லக்கினத்தில் பிறந்திருக்கும் இவனுடைய மரண காலத்தையும் சொல்லுகின்றோம். ஜாதகனுக்கு அறுபத்தாறுவது வயதில் ஐப்பசி மாதத்தில் வளர்பிறையில் சதுர்த்தசி திதியில் மரண மேற்படும். அப்போது இவனுக்கு ராஹுு தசையில் சுயபுக்தி நடைபெறும். இவனுடைய மறு பிறவியைப்பற்றியும் கூறுகின்றோம்.

49. கச்சிமா நகரி லேதான் கனமுள பிரம்ம சேயாய்ப்
பச்சைமால் மதத்த னாகப் பாரினி லுதிப்பா னென்றோம்
மிச்சமாய்த் தனங்கள் பெற்று மேதினில் வாழ்வா னாகும்
அச்சுதன் தங்கை யாளே அறைந்தன மொழிகுன் றாது.

49. இவன் மறு ஜன்மத்தில் காஞ்சீபுரத்தில் பெருமை பொருந்திய பிராம்மண குலத்தில் வைஷ்ணவ மதத்தில் பிறப்பான். ஏராளமான செல்வங்களைப் பெற்று, புவியில் சிறப்பாக வாழ்வான். ஸ்ரீமந் நாராயணன் தங்கையே ! தேவியே ! எங்கள் மொழி வீணாகாது.

50. பாரியின் மரண காலம் பகருவோ மிவன்பின் னாலே
கூறுவோம் தாயே கேளும் குறிக்கிறோம் யோகச் செய்கை
வீரியன் சுகமு முள்ளான் விசித்திர வீடு செய்வன்
தீரமாய் விசேஷ பூமி சேர்ப்பனு மென்று சொன்னோம்.

50. ஜாதகனின் பாரியையின் மரண காலத்தையும் சொல்லுகின்றோம். இவன் மரணமான பிறகு உடனேயே அவளும் மரிப்பாள். இவனுடைய யோகங்களைக் கூறுகின்றோம். நல்ல திறமை வாய்ந்தவன். சௌக்ய முள்ளவன். அழகிய வீட்டை நிர்மாணிப்பான். பெருமுயற்சி செய்து அதிக பூமிகளைச் சேர்ப்பான்.

51. எந்தக்கா லத்திலேதான் இவன்சித்திர வீடு செய்வன்
அந்தவோர் சேதி சொல்வாய் அறைகிறோ மொருபா னென்பான்
சந்ததம கிரகம் செய்வன் சதுஷ்பாதம் ஏர்பெ ருக்கம்
முந்தியே செட்டுச் செய்வன் எய்திடும் தனங்கள் தாமே.

51. எந்தச் சமயத்தில் இவன் விசித்திர வீட்டை நிர்மாணிப்பான். அந்த வரலாற்றைச் சொல்லுங்கள், எனப் பார்வதி கேட்க, முனிவர் பதில் கூறுகின்றார். இவன் தனது பத்தொன்பதாவது வயதில் அழகிய ஒரு வீடு கட்டுவான். கால்நடைகளை அபிவிருத்தி செய்வான். அநேக ஏர்களைக்கொண்டு விவசாயம் செய்வான். வியாபாரமும் செய்வான். அதிகச் செல்வமும் இவனை வந்தடையும்.

52. சுகமுளான் சல்லிய மில்லான் சுவாமிமேல் பக்தி பூண்பன்
வகையான குடும்பி யாவன் வண்டிவா கனமு முள்ளோன்
பகையிலான் எவர்க்கு நண்பன் பஞ்சைகட் குதவி செய்வன்
ஜகமதில் நல்லோ ஞகச் செப்புவா ரிவனை யேதான்.

52. நல்ல சுகங்களை அனுபவிப்பான். கடன்கள் இல்லாதவன். கடவுளிடம் பக்தி பூண்டவன். செல்வம் படைத்து நிலையான குடும்பம் உள்ளவனுக ஆவான். வண்டி, இதர வாகனங்கள் இவை உள்ளவனுகவும் இருப்பான். இவனுக்கு எதிரிகள் தோன்றுர்கள். எல்லோருக்கும் நண்பனுகவே நடந்து கொள்வான். ஏழைகளுக்கு உதவி புரிவான். உலகில் எல்லோராலும் நல்லவன் என்று போற்றப்படுவான்.

53. பிறையது போலே பூமி பொருந்திடு மிவனுக் கேதான்
குறையிலான் ஞாதி யில்லான் குலத்துளோர் மெச்ச வாழ்வன்
விரைவினில் நடக்க வல்லன் வீணப வாத முள்ளான்
அரிபக்தி கொஞ்ச முள்ளான் அம்பிகை யாளே கேளாய்.

53. வளர்பிறைச் சந்திரன் போல இவனுக்குப் பூமிகள் விருத்தியாகி இவனிடம் நிலைத்திருக்கும். வாழ்க்கையில் எவ்விதத்திலும் குறையில்லாதவன். பங்காளிகள் இல்லாதவன். தன் ஜாதியினர் போற்றும் படி வாழ்வான். வேகமாக நடக்கும் இயல்புடையவன். வீணுக (காரணமின்றி)ச் சில அவதூறுகளும் இவனுக்கேற்படும். மஹா விஷ்ணுவிடம் கொஞ்சம் பக்தி இருக்கும். அம்பிகையே! மேலுங் கேளுங்கள்.

54. இன்னமும் சிலது சேதி சொல்லுவோ மிரண்டி லேதான்
அன்னவன் ஜனன காலம் அருணன்றன் தசையி லேதான்
தன்னிலே யீரே ழாண்டும் சதிருள திங்கள் ரண்டும்
உன்னத பலனை யாங்கள் உரைக்கிறேம் கேளும் தாயே.

54. இவனைப்பற்றிய இன்னும் சில வரலாறுகளை இரண்டாம் பாகத்தில் சொல்லப்போகின்றேம். இந்த ஜாதகன் ஜெனனகாலத்தில் புதனுடைய தசையில் இருப்பு வருஷங்கள் பதினுன்கு, மாதங்கள் இரண்டு. இந்தத் தசையின் பலன்களைச் சொல்லுகிறேம். கேட்டருள வேண்டும். தாயே!

55. துணைவர்கள் விருத்தி யென்றேம் செப்புவோம் பூமி சேரும்
கனமுள ரோகம் தானும் கழறினேம் ஜாத கர்க்கு
தனமது பெருகு மென்றேம் தாரணியோர் நேசமத் நேரும்
இனபந்து சுபமும் சூதம் எய்திடு மென்று சொன்னேம்.

55. துணைவர்கள் பிறப்பார்கள். பூமிகளும் சேர்ந்திடும். ஜாதகனுக்குச் சில நோயும் வரும். செல்வம் ஓங்கி வளரும். ஊரில் வசிப்பவர்களின் நட்பு உண்டாகும். உறவினர்களின் குடும்பங்களில் கலியாணம் முதலிய சுபங்களும் நடைபெறும். சூதக [துன்ப]மும் நேரிடும்.

56. காலிகள் சேத மாகும் களவுகள் கொஞ்சம் போகும்
ஞாலமேல் மாது வுக்கு நவிலுவோம் ரோகம் தானும்
ஏலவே பிணிகள் தாமும் இலகினும் நிவிர்த்தி யென்றோம்
ஆலத்தை யுண்டோன் தேவி அறைகிறோம் விபரம் ரண்டில்.

56. கன்று காலிகள் நஷ்டமாகும். பொருள்கள் களவாடப்படும். அதனால் அதிக நஷ்டமேற்படாது. இந்தத் தசையில் மாதாவிற்கு நோயினால் கஷ்ட மேற்படும். இவர்களுக்குப் பிணிகள் வந்தாலும் சீக்கிரத்திலேயே நிவிருத்தியாகும். ஹாலாஹலம் என்ற கடும் விஷத்தை உண்ட சிவ பிரானின் தேவியே ! இந்த ஜாதகனைப்பற்றிய மேல் விவரங்களை இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றோம்.

---

# ஜாதகம் 17.

1. கடகமே ஜன்ம மாகக் கதிர்புதன் புகரும் வீணை
திடமதி சேயும் வண்டி சனிகன்னி சிகியும் கோலில்
அடலரு ராகு மேடம் ஆகியே நவக்கோள் நிற்க
உடன்வந்தோ ருணும் ஜன்மம் உரைக்கிறோம் பலன்கள் கேளே

| | | | |
|---|---|---|---|
| | குரு<br>ராகு | | சூரியன்<br>புதன்<br>சுக்கிரன் |
| | இராசி<br>சக்கரம் | | லக்கினம்<br>சந்திரன்<br>செவ்வாய் |
| | | | |
| | | கேது | சனி |

1. விஜய வருஷம் ஆனி மாதம் 6-ஆந் தேதி ஞாயிற்றுக்கிழமை காலையில் ஜனனம்.

**[ஆங்கிலத் தேதி 18–6–1893]**

நவக் கிரஹங்களின் பாதசாரம்

மிருக சீர்ஷம் 4-இல் சூரியன். ஆயில்யம் 3-இல் சந்திரன். புனர் வஸு 4-இல் செவ்வாய். திருவாதிரை 4-இல் புதன். கிருத்திகை 1-இல் குரு. திருவாதிரை 4-இல் சுக்கிரன். ஹஸ்தம் 2-இல் சனி. அசுவினி இல் ராஹு. சித்திரை 4-இல் கேது. ஆயில்யம் நக்ஷத்திரம். புத தசை யில் இருப்பு வருஷங்கள் பதினான்கு.

1. இலக்கினம் கடகமாகவும், சூரியன் புதன் சுக்கிரன் மிதுனத்திலும், சந்திரன் செவ்வாய் கடகத்திலும், சனி கன்னியிலும் கேது துலாத்திலும், ராஹு மேஷத்திலுமாக இவ்வாறுள்ள கிரஹநிலையில் ஆண் குழந்தை ஜனித்திருக்கும். இதன் பலன்களைச் சொல்லுகின்றோம். கேளுங்கள்.

**குறிப்பு.**—இந் நூலாசிரியர் குரு தங்கி இருக்கும் ராசியைக் குறிப் பிடவில்லை. ஆயினும் நாம் ஆராய்ந்து பார்த்து எழுதி இருக்கிறோம்.

2. இன்னவன் ஜனித்த இல்லம் இசைவோமே கீழ்மேல் வீதி
துன்னிய எமனின் வாசல் சொந்தமே யில்ல மல்ல
மன்னிய வடமேல் திக்கில் மாலவன் கோஷ்ட மாகும்
பன்னிய அருகில் சூழி பகையதா மதற்கு உத்திரம் ;

2. ஜாதகன் ஜனித்த வீடு கிழக்கு மேற்காக அமைந்துள்ள வீதியில் தென் திசையைப் பார்த்து இருக்கும். அது சொந்த வீடல்ல. வீட்டிற்கு வட மேற்குத் திசையில் விஷ்ணுவின் கோயில் உண்டு. அதற்கு அருகில் ஒரு நீர் நிலை இருக்கும். அதற்கு வடதிசையில் ;

3. அரனவன் கோவி லுண்டு அருகினில் சோலேகுண்டம்
பரையினிலுதித்த காளிபருகிடும் குணத்திலே தான்
குறைதலே மரரி மூத்தோன் கோவிலு முத்திரமாகும்
திறமிலா கூரை வீட்டில் செனித்தவனிவனேயம்மா

3. சிவ பிரான் ஆலயம் உண்டு. அந்த ஆலயத்திற்குச் சமீபத்தில் ஒரு சோலையும் இருக்கும். கீழ்த் திசையில் காளிதேவியின் கோயிலும் வடதிசையில் மாரியம்மன் கோயிலும், கணேசரது ஆலயமும் விளங்கிடும். சாதாரணமான கூரை வீட்டில் இவன் ஜனித்திருப்பான்.

4. இன்னவன் ஜனன யோகம் எழில்பெறு தந்தை யோகம்
மன்னிய மாதுர் யோகம் மாதுலன் குடும்ப யோகம்
தன்னிலே முன்பின் ஜன்மம் சாற்றுவோம் நவக்கோ ளாய்ந்து
அன்னையே யாங்கள் சொல்லு மடைமொழி தப்பா தம்மா.

4. இந்நூலில் இவனுடைய யோகங்களையும் தந்தை தாய் மாமன் களத்திரம் புத்திரர் இவர்களைப்பற்றியும், முன்பிறவி பின்பிறவி இவைகளைப்பற்றியும் நாங்கள் சொல்லப் போகின்றோம். தாயே ! நவக்கிரஹங்களை ஆராய்ந்துப்பார்த்து நாங்கள் சொல்லும் வார்த்தை பொய்யாகாது.

5. தந்தையின் குணத்தை யாங்கள் சாற்றுவோம் சிவந்த மேனி
பந்தமா யொடிச்சல் தேகி பாரினில் குள்ள னவன்
வந்தவர்க் கன்ன மீவன் மர்மவான் வெகுபேர்க் கன்பன்
தன்தன முடைய னவன் தாட்சிண்ணியன் கனவா னுமே.

5. முதலில் தகப்பனாின் குணங்களைச் சொல்லுகிறோம். அவன் சிவந்த மேனியான். மெல்லிய சரீரம் வாய்ந்தவன். அதிக வளர்ச்சி இல்லாதவன். தன் வீடு நாடி வந்தவர்களுக்கு அன்னம் அளிப்பான். சிலவிஷயங்களை மனத்தில் ஒளித்து வைக்கும் இயல்புள்ளவன். வெகு மனிதர்களுக்கு நண்பனாக இருப்பான். சொந்தமாகச் சம்பாதித்த செல்வமுடையவன். தாட்சிண்ய குணமுள்ளவன். கௌரவம் வாய்ந்தவனாகவும் இருப்பான்.

6. ஏறுகள் பூமி யுள்ளான் இனபந்து மெச்ச வாழ்வன்
பாரினில் தானிய விருத்தி பசுக்களும் ஆடு விருத்தி
கோரின காரி யத்தைக் குணமுடன் முடிக்க வல்லன்
தேரிய வழியில் நிற்பன் சிவப்புளான் ஊனை வானும்.

6. பல எருதுகளை வளர்ப்பான். பூமிகளும் உடையவன். தன் உறவினர் மெச்சும்படி நடத்துவான். தானிய விருத்தி உடையவன். பசுக்களையும் ஆடுகளையும் விருத்தி செய்வான். தான் மனத்தால் விரும்பிய காரியத்தை,

பலன் ஏற்படும் வகையில் சாமர்த்தியமாகச் செய்து முடிப்பான். எல்லோரும் கடைப்பிடித் தொழுகும் சம்பிரதாயத்திலேயே (வழக்கங்களிலேயே) நிலைத்து நிற்பான். அதினின்றும் பிறழமாட்டான். சௌக்கியங்களை அனுபவிப்பான். சிறந்த மதியூகியாகவும் விளங்குவான்.

7. கல்வியு மதிக முள்ளான் கனத்தவர் நேசம் கொள்வன்
இல்லையென் றுரைக்க மாட்டான் இவன்கூகி புசிப்ப னுகும்
தொல்லையு முடைய னுவன் சோம்பலும் கொஞ்ச முள்ளான்
நல்லவர் நேசஞ் செய்வன் நவிலுவோம் மேலுங் கேளே.

7. கல்வியறிவு அதிகம் படைத்தவன். பெருமையும் செல்வாக்கும் உள்ளவர்களிடம் நட்புக் கொண்டவன். தன்னை அடைந்து யாசிப்பவர்களுக்கு இல்லை என்ற சொல்லைச் சொல்லவேமாட்டான். சில தொந்தரவுகளும் இவனுக்கு ஏற்படும். கொஞ்சம் சோம்பலும் உள்ளவன். ஏழையாயினும் நல்லவனுக இருப்பின், அவனுடனும் நட்புக் கொள்ளுவான். மேலும் சொல்கிறேம், கேளுங்கள்.

8. ரோமங்கள் நீட்சி யுள்ளான் நுவலுப தேச மில்லான்
காமனை யொத்த தேகன் கணக்கினில் ஊக வானும்
தீமையு மெண்ணுச் சித்தன் தேகத்தில் பித்த முள்ளான்
சோமனை யணிந்தோன் தேவி சுந்தரி மேலுங் கேளே.

8. நீண்ட ரோமங்கள் உள்ளவன். நல்ல உபதேசங்களைப் பெரியோர்களிடம் கேட்காதவன். மன்மதனைப் போன்ற அழகிய சரீரம் வாய்ந்தவன். கணிதத்தில் மதிநுட்பம் பெற்றவன். ஒருவருக்கும் தீமையை எண்ணுதவன். இவனது தேகத்தில் பித்தம் தலைதூக்கி நிற்கும். பிறையைத் தலையில் அணிந்த சிவபிரானின் தேவியே ! மேலும் சொல்லுகிறேம், கேளுங்கள்.

9. பெருதன முடைய னுவன் பலமில்லான் நாபி நோயன்
கரமதில் சங்கு சக்கரம் கனதன ரேகை யுள்ளான்
திருவுமே வாச முள்ளான் ஜனங்களை ஆத ரிப்பான்
மருமமும் கொஞ்ச முள்ளான் ஆசார முடைய னுமே.

9. அதிக தனம் உடையவனுவான். உடலில் வலிமை இல்லாதவன். நாபியில் உஷ்ணத்தால் பிணியுள்ளவன். கரத்தில் சங்கம் சக்கரம் தனம் முதலிய ரேகைகள் வாய்ந்தவன். லக்ஷ்மீவாசம் பொருந்தியவன். ஏழை ஜனங்களை ஆதரிப்பான். கபடமுள்ளவன். நல்ல ஆசாரமுள்ளவனுகவும் இருப்பான்.

10. இன்னவன் துணைவர் தம்மை இயம்புவோம் ஆண்பாலொன்று
கன்னியு மவ்வாறுரும் கழறுவோ மிருவர் தீர்க்கம்
அன்னையே அதன்மேல் தோன்றியரிட்டமாம் துணைவர் தாமும்
மன்னவன் துன்ஜன் மத்தை வரைகிறேம் கேளு மம்மா.

10. இவனுடைய சகோதரபாவத்தை கூறுகின்றேம். ஒரு சகோதரனும் ஒரு சகோதரியுமுள்ளவர். இவ்விருவரும் நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள். தேவியே ! அதற்குமேல் பிறந்தால் நீடித்து வாழமாட்டார்கள். இவனுடைய முன்ஜன்மத்தைப்பற்றி சொல்லுகின்றேம், கேளுங்கள்.

11. இன்னவன் புதுவை தன்னில் இசையும்கோ வைசியனுகிப்
பன்னியே செட்டுச் செய்து பாலரும் மனைவி யோடு
நனைய குடும்பி யாகி நாடெல்லாங் கீர்த்தி பெற்றுத்
தன்னிலே வாழு நாளில் சாற்றுவேன் மேலுங் கேளே.

11. இவன் முன்ஜன்மத்தில் புதுவையில் யாதவனுக அல்லது கோமுட்டி யாகப் பிறந்து, வியாபாரம் செய்து வந்தான். நற்புகழைப்பெற்று, மனைவி மக்களை அடைந்து பெரிய குடும்பியாகி, சிறப்புடன் வாழ்ந்தான். இவன் வரலாற்றை மேலும் தொடர்ந்து கூறுகின்ருேம்.

12. வருவோர்க்கு அன்ன மீந்து மாலின்மேல் பக்தி பூண்டு
பெரியவர் நேசம் செய்து பெரும்பொரு ளுள்ளா னுகித்
திறமையாய் வாழ்ந்த பின்பு செல்வியுப் பால ரோடு
குறைவிலாச் சேதுக்கேகிக் குணமுடன் தீர்த்தம் தோய்ந்து ;

12. தன் வீட்டை நாடி வருபவர்களுக்கு அன்ன மளித்தான். மஹா விஷ்ணுவிடம் பக்தி பூண்டிருந்தான். பெரியவர்களின் நட்பிற்குப் பாத்திர மானுன். அதிகப் பொருள்களைச் சம்பாதித்து வாழ்ந்து வருங்காலத்தில், தன் மனைவியுடனும் குழந்தைகளுடனும் பாவத்தைப் போக்கி, புண்ணி யத்தைத் தரும் சேதுவிற்குச் சென்று, அங்கு நீராடி ;

13. ராமலிங் கத்தைப் போற்றி நலமுட னர்ச்சித் தேத்தித்
தீமையை விலக்கும் வைகைத் தீர்த்தமும் தோய்ந்து பின்பு
சோமனை யணிந்த சொக்கர் பாதத்தைத் தொழுது மீண்டு
பூமியில் சிறந்த ரங்க நாதனைப் பூசித் தேத்தி ;

13. அப்புனிதக் கரையில் எழுந்தருளி இருக்கும் ராமநாதரைப் போற்றி, அங்குள்ள பெரியோர்களைப் பூசித்து, பாவத்தைப் போக்கும் வைகைக்கு வந்து, அந்தப் புனித நீரிலும் ஸ்நானம் செய்து, மதுரையில் எழுந்தருளி இருக்கும் பிறைச் சந்திரனைச் சிரசில் அணிந்த ஸ்ரீ சுந்திரேசுவரருடைய பாதார விந்தங்களைத் தொழுது, அதன் பின், பூமியில் சிறந்த க்ஷேத்திரமாகிய ஸ்ரீரங்கத்திற்கு வந்து, ரங்கநாதப் பெருமாளைப் பூசித்து விட்டு ;

14. அங்குள அகதி கட்கு அநேகமாய்த் தான மீந்து
பொங்மா யுள்ளூர் மீண்டு புனிதனும் வாழு நாளில்
துங்கமா முனிவ னைப்போல் துறவியு மோர்நா ளங்குத்
தங்கியே அன்னம் கேட்கத் தனிகனும் தாரே னென்று ;

14. அங்குள்ள அகதிகளுக்குப் பலவித தானங்களைச் செய்துவிட்டு, தன் ஊருக்குத் திரும்பி வந்து, சுகமாக வாழ்வானுனன். இவ்வாறு இருக்கும் காலத்தில், ரிஷிசிரேஷ்டர் போன்ற ஒரு பெரிய துறவி இவன் வீட்டை அடைந்து அன்னம் யாசிக்க, இவன் தருகின்றேன் என்று சொல்லி ;

15. கறிவகை ரசம்கு ழம்பு கலந்துமே கையில் தந்தான்
பரதேசி மனது வெக்கிப் பகருவான் வார்த்தை தானும்
அரனடி யார்க்குச் சாதம் அளிக்கிறே னென்று சொல்லி
உரிமையா யொக்கச் சேர்த்து உருட்டியே யளித்த தாலே ;

**15.** வீட்டிற்குள் சென்று, அன்னத்தை, கறிவகை ரசம் குழம்பு இவை களுடன் கலந்து, ஓர் உருண்டையாகச் செய்து, துறவியின் கையில் வைத் தான். தன்னை உள்ளே அழைத்து, ஆசனத்தில் அமரச் செய்து, இலையில் சாதம் முதலியவைகளை முறைப்படி பரிமாறுவான் என்று எண்ணி இருந்த அந்தத் தவசி, இவன் செய்த உபசாரத்தைக் கண்டு, மனம் வருந்திச் சொன் ஞன். சிவனடியார்களுக்கு அன்ன மளிக்கிறேன் என்று சொல்லிவிட்டு, முறைதவறி அன்னத்தை உருண்டையாக உருட்டிக் கொடுத்தபடியால் ;

**16.** சூத்திர சாதி யாகத் துலங்குவாய் மறுஜன்மத்தில்
பாத்திர மின்றி யேதான் பகருவா மின்ன முந்தான்
கோத்திரந் தனிலு திப்பா யென்றுமே கூற லுற்றுர்
பூர்த்தியா யாயுள் போக்கிப் பிறந்தவ னிவனே யம்மா.

**16.** அடுத்தப் பிறவியில், சூத்திர சாதியில் பிறப்பாய். போசன கலன் இன்றி வாழ்வாய் என்று சொல்லிவிட்டு அத்துறவி ஏகிஞர். இவனும் அப்பிறவியில், மீதமுள்ள ஆயுளைக் கழித்து, மரணமடைந்து இங்குப் பிறந்து, இக்கடக லக்கின பாலனுக்குத் தந்தையாக நேர்ந்திருக்கின்றுன்.

**17.** இப்படி யிருக்குந் தந்தை இவனுக்கே யுதித்த பாலன்
செப்புவோம் பலன்கள் யாவும் சிவந்திடு மேனி யாவன்
ஒப்பவே கல்வி யுள்ளன் உறுதிவான் மனமு முள்ளான்
தப்பிதம் ஒருவர்க் கெண்ணுன் தயையுளான் பயத்த ஞகும்.

**17.** இவ்வாறு உள்ள தந்தைக்கு இந்தப் பாலகன் மகஞக உதித்திருக் கிறுன். இவனுடைய குணங்களைச் சொல்லுகின்றேம். சிவந்த மேனியான். தக்க கல்வியறிவு உடையவன். உறுதியான மனம் படைத்தவன் [மனத்தில் செய்த தீர்மானத்தை மாற்றுதவன் என்பது கருத்து]. பிறர்க்குத் தீமையை எண்ணுதவன். தயைக் குணமுள்ளவன். சிறிது அச்சமும் உடையவன்.

**18.** முன்கோபம் கொஞ்ச முண்டு முகமது வசிய முள்ளான்
தன்சொல்லே மேன்மை யாகச் சாதிப்பான் சுசீல ஞகும்
இன்பமாய்ச் சுகபுசிப்பன் ரசவர்க்கப் பிரிய முள்ளான்
அம்புவி யதிகம் சேர்ப்பன் ஆள்கார ருடைய ஞமே.

**18.** சிறிது முன்கோப முள்ளவன். முகத்தில் பிறரை வசப்படுத்தும் ஒருவிதப் பொலிவு பெற்றவன். வாக்குவாதம் ஏற்படும் பொழுது தான் சொன்ன விஷயமே சரி, என்று சாதிப்பான். நற் சீலமும் உள்ளவன். சுகங்களைச் சுவைத்து [அவைகளில் மிகவும் ஈடுபட்டு] அனுபவிப்பான். பழ ரசம், பால், தேன் முதலிய திரவமான ஆகாரப் பொருள்களில் ஆசை உள்ளவன். வளமான நிலங்களை அதிகம் சேர்ப்பான். நல்ல சேவகர்களும் இவனுக்கு இருப்பார்கள்.

**19.** தந்தையிஞ ர்ஜித்தத்தை ஜாதகன் விருத்தி செய்வன்
பந்தமாய் பொருளைச் சேர்ப்பன் பாரினில் கீர்த்தி யேற்பன்
சிந்தையில் கபடு முள்ளான் சித்தினி சாதி யாவன்
நொந்திடு பேரைக் காப்பன் நுவலுவோம் மேலுங் கேளே.

19. பிதுரார்ஜித சொத்துக்களை மேன்மேலும் அபிவிருத்தி செய்வான். தன் முயற்சியாலும் அதிகப்பொருள்களைச் சேர்ப்பான். பெரிய புகழ்பெற்ற வனாக விளங்குவான். மனத்தில் சிறிது கபடமும் உடையவன். சித்தினி சாதியைச் சேர்ந்தவன். கஷ்டப்படுபவர்களைக் காப்பாற்றுவான். மேலும் சொல்லுகின்றோம்.

20. வார்த்தையில் சமர்த்த னாகும் மானமு முடைய னவன்
தீர்த்தங் களதிகம் தோய்வன் திருமகள் வாச முள்ளான்
ஏர்த்ததோர் சூடு முள்ளான் இவனுக்கா விருத்தி யுண்டு
பார்த்திபர் நேசம் கொள்வன் பந்துவும் புகழ வாழ்வன்.

20. பேசுவதில் திறமை யுள்ளவன். கௌரவம் வாய்ந்தவன். புண்ணிய தீர்த்தங்களில் அதிகம் நீராடுவான். லக்ஷ்மீவாசம் பொருந்தியவன். இவனது சரீரத்தில் உஷ்ணம் தங்கி இருக்கும். இவனுக்குப் பசுக்களை அபிவிருத்தி செய்யும் தொழில் சுலபமாகக் கைகூடும். அரசர்களின் நட்பிற்குப் பாத்திரமானவன். உறவினர் புகழும்படி வாழ்வான்.

21. குடும்பத்தை விருத்தி செய்வன் கூவலும் தோப்பு முள்ளான்
இடும்புக ளெண்ணு சித்தன் எதிரியை நாசஞ் செய்வன்
அடைமொழி யதிகம் கூறுவன் அநேகமா தரையும் சேர்வன்
படபட நடையு முள்ளான் பார்த்திபர் மெச்ச வாழ்வன்.

21. குடும்பத்தைப் பல துறைகளிலும் வளரச் செய்வான். தோப்பு துறவுகள் உடையவனுவான். பிறருக்குத் தீங்கை எண்ணமாட்டான். எதிரிகளை நாசம் செய்வான். ஒவ்வொன்றுக்கும் அடைமொழிகளை (விசேஷணங்களை Adjectives)-ச்கூறி, பேச்சை விஸ்தரிக்கச் செய்வான். பல பெண்களிடம் நேசம் கொண்டவன். இவனது நடை படபடப்பாக (மிக்க துரிதமாக) இருக்கும். அரசர்களும் இவனைக் கொண்டாடுவார்கள்.

22. இன்னவன் துணைவர் தம்மை யியம்புவோ மாண்பால் காணோம்
கன்னியு மிருவ ராகும் கனத்திடு மிருவர் தீர்க்கம்
பின்னமா மிதன்மேல் தோன்றில் பலக்காது சகோத ரங்கள்
அன்னமே யாங்கள் சொல்லு மடைமொழி குன்றி டாது.

22. இவனுடைய சகோதரபாவத்தைக் கூறுகின்றோம். இவனுக்குச் சகோதரர் இல்லை. சகோதரிகள் இருவராவார். அவ் விருவரும் தீர்க்கமாக வாழ்வார்கள். இந்த எண்ணிக்கைக்கு மேல் தோன்றினும் நீடிக்காது. தேவியே ! நாங்கள் சொன்ன வார்த்தை பொய்யாகுமா ?

23. ஜாதகன் தனக்குப் புத்திரர் சாற்றுவோ மறுவ ராகும்
நீதியா யிரண்டே யாண்பால் நிகர்கன்னி யவ்வா றாகும்
சோதிபோல் நான்கும் தீர்க்கம் சொல்லுவோ மிரண்டு நஷ்டம்
மாதவர் யாங்கள் சொல்லும் மருமொழி குன்று தம்மா.

**23.** ஜாதகனுக்கு ஆறு குழந்தைகள் பிறப்பார்கள். இரு புத்திரர்களும் இரு பெண்களுமாக அந்நால்வரும் சந்திர சூரியர்களைப்போல வெகுகாலம் வாழ்வார்கள். இரு குழந்தைகள் நஷ்டமாகும். பெருந்தவம் பொருந்திய நாங்கள் கூறிய வார்த்தை சத்தியம். தாயே !

**24.** மாதுரு குணத்தை யாங்கள் வகுக்கிறோம் மால்நி றத்தாள்
நீதியாய்ச் சமதே கத்தாள் நிகர்பித்த தேகி யாவள்
வேதனை யொருவர்க் கெண்ணாள் விரும்புமுன் கோபம் கொஞ்சம்
நீதியா யன்ன மீவள் நிமலியே மேலுங் கேளே.

**24.** இந்த ஜாதகனின் தாயுடைய குணங்களைக் கூறுகின்றோம். கருத்த மேனியாள். சமமான வளர்ச்சி உடையவள். பித்த தேகம் வாய்ந்தவள். பிறர்க்குத் தீமையை எண்ணாதவள். சிறிது முன் கோபமுண்டு. வந்தவர்களுக்குப் பக்தி சிரத்தையுடன் அன்னமளிப்பாள். தேவியே ! மேலும் கேளுங்கள்.

**25.** அன்னம்போல் நடையு முள்ளாள் ஆள னுக் கினிய ளாவள்
துன்னிய மர்ம முள்ளாள் சோம்பிடாள் காரி யத்தில்
இன்னவள் துணைவர் தம்மை யியம்புவோ மாண்பால் ரண்டு
கன்னியு மொருத்தி யாகும் கழறுவோம் தீர்க்க மென்று.

**25.** அன்னப்பறவைபோல் அழகிய நடை உள்ளவள். தன் பர்த்தாவின் மனத்தைக் குளிரச்செய்யும் இனிமையான சுபாவம் படைத்தவள். இவளுடைய (தாயின்) சகோதரபாவத்தைச் சொல்லுகின்றோம். இரண்டு சகோதரர்களும் ஒரு சகோதரியும் உண்டு. இம் மூவரும் தீர்க்காயுளுடன் வாழ்வார்கள்.

**26.** இவளுடைத் தந்தைக் கேதான் இருதார மென்று சொன்னோம்
அவனியில் முதல்மா துந்தான் அழிந்திடும் புத்திரர் காணோம்
பவமுள மறுமா துக்குப் பிறந்தவ ளிவளே யம்மா
தவமுள முனிகள் யாங்கள் சாற்றிய மொழிகுன் றாது.

**26.** இவளுடைய தகப்பனாருக்கு இரு மனைவிமார்கள். அவர்களில் முத்தவள் சந்ததியில்லாமலே அழிந்திடுவாள். இளைய மனைவிக்குத்தான் இவளும் மற்றைய சகோதரர்களும் ஒரு சகோதரியும் பிறந்திருக்கிறார்கள். தவமுள்ள ரிஷிகளாகிய நாங்கள் சொன்ன வார்த்தைக் குன்றிடாது.

**27.** ஜாதகன் முன்ஜன் மத்தைச் சாற்றுவோம் தலங்கை தன்னில்
நீதியாய்ப் பிரம்ம சேயாய் நியமித்தா னிவனே யம்மா
வேதியர் மரபில் வந்து விளைபுல மதிக முண்டாய்
ஆதியாய்ப் பொருள னேகம் அவனுமே பெற்று வாழ்வன்.

**27.** ஜாதகனுடைய முன் பிறவியைப்பற்றிக் கூறுகின்றோம். இவன் முன்ஜன்மத்தில் ..........ல் பிராம்மண வமிசத்தில் பிறந்தான். இவ்வாறு பிராம்மணனாகப் பிறந்து, நன்றாக விளையும் நிலங்கள் அனேக

முடையவனாக இருந்தான். பலவிதப் பொருள்களைப் பெற்றுச் சுகமாக வாழ்ந்து வந்தான்.

28. வாழ்கிற நாளி லேதான் மங்கையர் மோகங் கொண்டு
தாழ்விலா அநேகம் பேரைத் தானவன் போகம் துய்த்தான்
ஊழிகள் வந்த சேதி உரைக்கிறோம் சைவன் பெண்டிர்
வேல்விழி மாதர் தன்மேல் விருப்பமும் கொண்டானம்மா;

28. ஒருவிதக் குறைவுமின்றிச் சுகமாக வாழும் காலத்தில், பல பெண்களிடம் காதல்கொண்டு, அவர்களிடம் இன்பத்தை நுகர்ந்தான். ஆயினும் ஒரு சைவப் பெண்ணால் இவனுக்கேற்பட்ட சாபத்தைச் சொல்லுகின்றோம். வேல்போன்ற விழிகளை உடைய ஒரு சைவப் பெண்ணிடம் இவன் காதல் கொண்ட சமயத்தில் ;

29. கற்புள மாது தானும் கழறுவாள் மறையோ னேகேள்
அற்பபுத் திகளை யெண்ணு யாகாது உனக்குத் தானும்
சிற்பசா ஸ்திரங்க ளனைத்தும் தெரிந்துமே வேத மோதும்
நற்புத்தி யெண்ணு மல்நீ மங்கைமேல் மோகங் கொண்டாய்.

29. கற்புக்கரிசியான அவள் வருத்தப்பட்டுச் சொன்னாள். வேதம் ஓதும் பிராம்மண குலத்தில் உதித்தவனே! கேள். நீ இவ்வாறு அல்ப எண்ணங்களைக்கொள்ளாதே! நீ அனேக சாஸ்திரங்களைக் கற்றறிந்தவன். ஆயினும் உன் மனத்தை மறைகளை ஓதுவதில் செலுத்தாமல், பிறர் பெண்டிர்மேல் மோகம் கொள்ளுவதில் செலுத்துகின்றாய்.

30. மாயத்தால் மயக்கங் கொண்டு மங்கையர் மோகங் கொண்டாய்
தாய்தங்கை யென்றெண் ணுமல் தடுமாறும் பாவியே நீ
ஆயர்பா டியில்பி றந்து அநேகமா தர்மே லாசை
நேயமாய்ச் செய்வா யென்று நியமித்தாள் கற்பு மாது.

30. பிறர் பெண்களைத் தாயாகவும் சகோதரியாகவும் நினைக்காமல், மதி இழந்து அவர்களிடம் அதருமமாகக் காதல் கொண்ட பாவியாகையால், நீ, மறுபிறவியில் இடைச்சேரியில் பிறந்து, அப்பொழுதும், மேன்மேலும் உனது அழிவைத் தேடிக்கொள்ளுவதற்காக, பல மாதர்களிடம் மையல் கொள்வாய், என்று இவ்வாறு கற்புள்ள அந்த மாது சபித்தாள்.

31. சைவன்தன் பெண்டிர் சாபம் சார்ந்துமே உடலம் வாடி
உய்யவே யிச்சென் மத்தில் உதித்தனன் கோ குலத்தில்
தையலர் மோக வானும் ததிநெய்பால் பிரிய முள்ளான்
மைவிழி நேத்திர முள்ள மங்கையே மேலுங் கேளே.

31. அந்தச் சைவப் பெண்ணின் சாபம் இவனைச் சார்ந்தது. பிறகு, காலக்கிரமத்தில் மரணமடைந்து, இந்த ஜன்மத்தில் யாதவ குலத்தில் பிறந்திருக்கிறான். பல மாதர்களிடம் மயக்கம் கொண்டவன். தயிர் நெய் பால் இவைகளில் இஷ்டமுள்ளவன். மைத்தடங் கண்ணினாய்! மேலும் சொல்லுகிறோம்.

32. இன்னவன் மணத்தின் கால மியம்புவோம் பதினே மூாண்டில்
கன்னியும் தெற்குத் திக்கில் கனத்ததோர் மாதுர் வர்க்கம்
தன்னிலே வருவா ளம்மா தாரமு மொன்றே யாகும்
அன்னிய மங்கை தானும் அனந்தம்பேர் தம்மைச் சேர்வன்.

32. இவனுக்கு மணமாகும் காலத்தைச் சொல்லுகின்றேம். பதினே மூாவது ஆண்டில் விவாஹம் நடைபெறும். கன்னிகை தெற்குத்திசையில் மாதுரு வமிசத்தில் உதித்தவளாக இருப்பாள். இவனுக்கு மனைவியும் ஒருத்திதான். அந்நிய மங்கையர் பலருடன் இவன் நட்புக்கொள்ளுவான்.

33. தந்தையின் மரண காலம் சாற்றுவேன் முப்பா னொன்பான்
பின்னையு மன்னை காலம் பேசுவோம் நாற்பா ஞேறில்
எந்தையே யிவனின் காலம் இயம்புவோ மெழுபான்ரண்டில்
பந்தமாய் மாசி மாதம் பௌர்ணமி தன்னி லுய்வன்.

33. ஜாதகனது தந்தையின் மரண காலத்தைச் சொல்லுவேன். இவனுக்கு முப்பத்தொன்பதாவது வயது நடக்கும்போது தந்தை மரண மடைவான். அதற்குப் பிறகு இவனுடைய நாற்பத்தேழாவது வயதில் தாய் மரணத்தை அடைவாள். இந்த ஜாதகனின் மரண காலத்தையும் குறிப்பிடு கின்றேம். எழுபத்திரண்டாவது வயதில் மாசி மாதத்தில் பௌர்ணமி திதியில் மரணமடைவான்.

34. மறுஜன்மம் வேங்க டத்தில் வைசிய குலமு தித்துப்
பெருநிதி யதிகம் சேர்த்துப் பிரபலச் செட்டுச் செய்து
தருமதான முமே செய்து சந்ததி மனைவி யோடு
இருவினை யில்லா தாகி யிருப்பனே யிவனே யம்மா.

34. இந்த ஜாதகன், அடுத்தபிறவியில், திருவேங்கடம் என்று சொல்லப் படும் திருப்பதியில், வைசிய குலத்தில் உதித்து, அதிகச் செல்வமுடையவ னுகி, வியாபாரத்தைப் பிரபலமாகச் செய்து, அதனுல் கிடைத்த பணத்தைக் கொண்டு, தான தருமங்கள் செய்து மனைவிமக்களுடன் சிறப்பாகவும் சுகமாகவும் வாழ்வான். அந்த ஜன்மத்தில் தீயவினை இவனுக்கு ஏற்படாது.

35. இப்படி யெழுவர் கூற ஈசுவரி கேட்கலுற்றுள்
ஒப்புடன் தந்தை ஜன்மம் உரைப்பீர்கள் என்று கேட்க
மைப்படி கண்ணுள் யாங்கள் வரைகிறேம் தந்தை ஜன்மம்
செப்பமாய்க் காஞ்சி மேல்பால் சிறந்திடுமாலின் கோஷ்டம் ;

35. இவ்வாறு மஹரிஷிகள் கூறினவுடன், இவனது தந்தையின் மறு ஜன்மத்தைக் கூறுங்கள், எனப் பார்வதி கேட்க, முனிவர்கள் சொல்லு கிறார்கள். தாயே! சொல்லுகிறேம். காஞ்சி க்ஷேத்திரத்திற்கு மேற்குத் திசையில், திருமாலின் ஆலயமுள்ள ;

36. ஊரிலே பிரம்ம சேயாய் உதிப்பனும் தந்தை தானும்
வீரிய பாட்ட ஜன்மம் விளம்புவீ ரென்று கேட்கக்
கூறுவோம் பின்னு லேதான் கோதைய ரிஷி களம்மா
காரண கம்பன் பக்கல் கதைத்திடும் மாதே யம்மா.

36. ஊரிலே பிராம்மண குழந்தையாக ஜனிப்பான். இந்த ஜாதகனின் பாட்டனின் ஜன்மத்தைக் கூறுங்கள், எனப் பார்வதி கேட்க, முனிவர்கள் கூறினார்கள். பாட்டனின் ஜன்மத்தைப் பின்பாகத்தில் தெரிவிக்கின்றோம் என.

37. இன்னவன் ஜனனந்தொட்டு இருநான்கு ஆண்டுக் குள்ளே
நன்னிய இருகம் வாய்க்கும் நற்பூமி தனிலே பொன்னும்
பின்னமில் லாமல் காணும் பலத்திடும் யோகம் வாய்க்கும்
அன்னமே யாங்கள் சொல்லு மடைமொழி குன்றி டாவே.

37. இந்த ஜாதகன் ஜனித்து எட்டு ஆண்டுகளுக்குள்ளே, அழகிய இருஹம் வாய்க்கும். இவனுடைய நல்ல பூமியில் பொன்னும் நிச்சயமாக அடையப்படும். [புதையல் கிடைக்கும் அல்லது பயிர்த்தொழில் நன்றாகப் பலனளிக்கும் என்றும் கூறலாம்.] பிரபல ராஜயோகாதிகளும் நடைபெறும், நாங்கள் சொன்ன மொழிகள் தவறு.

38. அதுமுதல் மரண மட்டும் அநேகமாய்ச் சுகமு முண்டு
பதியினில் திருவு முண்டு பாரெலா மெச்ச வாழ்வன்
ததிநெய்பா லதிக முண்டு சந்திரன் பிறைபோல் யோகம்
அதிபனும் வாழ்வானென்று வரைகிறோம் ரிஷிகளம்மா.

38. அவ்வாறு பிரபல யோகங்கள் ஆரம்பித்தபிறகு நடுவில் பங்கம் நேராமல் ஆயுள்முழுவதும் சௌக்யமாக வாழ்ந்திடுவான். மஹாலக்ஷ்மீ வாசம் பொருந்தியவனாகவும், உலகத்தோரால் கொண்டாடப்பட்டவனாகவும், விளங்குவான். தயிர் பால் நெய் இவைகள் இவன் வீட்டில் அதிகமாகும். இவனுக்கு வளர் பிறைச் சந்திரன் போல யோகங்களும் வளரும். இவனும் சுகமாக வாழ்வான். தாயே ! ரிஷிகளாகிய நாங்கள் சொன்னபடியே நடைபெறும்.

---

# ஜாதகம் 18.

1. ரவிபுகர் வளைய லாக நற்குரு ராகு கோலில்
புவிமகன் கேது மேடம் புதனரி சனியும் சன்னி
மதிநந்தி கடகம் ஜன்மம் வந்தசே யாணே யாகும்
நவிலுவோம் பலன்க ளெல்லாம் நாயகி கேட்டி டாயே.

| | | | |
|---|---|---|---|
| | செவ்வாய் கேது | சந்திரன் | |
| | இராசி சக்கரம் | | லக்கினம் சூரியன் சுக்கிரன் |
| | | | புதன் |
| | | குரு ராகு | சனி |

1. சூரியன் சுக்கிரன் கடகத்திலும் குரு ராஹு துலாத்திலும், செவ்வாய் கேது மேஷத்திலும், புதன் சிங்கத்திலும், சனி கன்னி சந்திரன் விருஷபத்திலுமாக இருந்து, இலக்கினம் கடகமாகவமைந்து, இவ்வாறு கிரஹ நிலையில் ஜனித்தவன் ஆண். இந்த ஜாதகனின் பலன்களைச் சொல்லுகின்றோம். ஈசுவரியே ! கேட்டருளல்வேண்டும்.

2. வந்தவூர் சிற்றூராகும் வாசலும் வடக்குப் பார்வை
தந்தியும் சந்தி கீழ்ப்பால் சாமுண்டி அதன்கீழ்த் தங்கும்
உந்தியில் பூத்தோன் மேல்பால் உரைத்திடும் வடமே லீசன்
நந்திடும் கோஷ்ட முண்டு நற்கங்கை அதன்மேல் தங்கும்.

2. இவன் பிறந்த ஊர் சிறியதாகும். வீடு வடக்குத் திசை நோக்கி இருக்கும். [வீதி கிழக்கு மேற்கில் இருக்கும் என்பது கருத்து]. வீட்டிற்குக் கிழக்கே ஸ்ரீவிநாயகர் கோயிலும் நான்கு வீதிகள் கூடும் சந்திப்பும் இருக்கும். அதற்குக் கீழ்த் திசையில் காளி கோயிலுண்டு. மேற்கில் திருமால் எழுந்தருளி இருப்பார். வடமேற்கில் சிதைந்த பரமசிவனது கோயிலும், அதற்கும் மேற்கில் ஒரு நதியும் உண்டு.

3. பலவித சோலை சூழும் பருகிடும் அவ்வூர் தன்னில்
இலகிய கெட்டி வீட்டில் இவனுமே வாசம் செய்வன்
நலமுடன் தந்தைக்கே தான் நாட்டுவோம் பலன்க ளெல்லாம்
கலகல வார்த்தை சொல்வன் காரிய சமர்த்த னாகும்.

3. பலவிதச் சோலைகளும் தோப்புகளும் அவ்வூரைச் சூழ்ந்திருக்கும். இவ்வாறான அடையாளத்துடன் விளங்கும் ஊரில், கெட்டியான [கற்களால் நிர்மாணிக்கப்பட்ட] வீட்டில், இவன் பிறந்து வாசம் செய்வான். ஜாதகனின் தந்தையைப்பற்றிய பலன்களைச் சொல்லுகின்றோம். கலகலப்பாக [எல்லோரிடமும் சுலபமாக] வார்த்தை சொல்ல ஆரம்பிப்பான். காரியங்களை நிறைவேற்றுவதில் வெகு சமர்த்தன்.

4. வந்தவர்க் கமுதளிப்பன் அரசர்பூ சிதனும் மேலும்
நொந்திடும் பேரைக் காப்பன் நுவலுப தேசமுள்ளான்
சிந்தையில் கபடு கொஞ்சம் தீரனன் மனத்த னாகும்
சந்ததம் தனவா னாகும் தானிய விருத்தி யுள்ளான்.

4. தன் வீட்டை நாடி வந்தவர்களுக்கு அன்னம் அளிப்பான். அரசர்களாலும் கௌரவிக்கப்பட்டவனாக வாழ்வான். கஷ்டப்படுபவர்களைக் கஷ்டத்தினின்று காப்பாற்றுவான். பெரியோர்களிடம் நல்ல உபதேசங்களைக் கேட்பான். சிந்தையில் சிறிது கள்ளமுள்ளவன். தைரியம் வாய்ந்தவன். செல்வம் படைத்தவனாகவும், தானிய விருத்தி உடையவனாகவும் இருப்பான்.

5. சிவந்திரு மேனி யாவன் தேகமு மொடிச்ச லுள்ளான்
அவமதிப் பில்லா வாழ்வன் அநேகரை ஆதரிப்பன்
நவமதில் பொய்கள் சொல்லான் நடையது துருசு முள்ளான்
சிவனையே துதிப்பா னாகும் சேயிழைப் பிரியனாவன்.

5. சிவந்த நிறமுள்ளவன். தேகம் மெலிந்திருக்கும். பிறரால் அவமதிக்க முடியாதபடி பழகுவான். உதவியை நாடும் பலரையும் ஆதரிப்பான். பொய் பேசாமல் உண்மையே உரைப்பான். அவனது நடை மிகவும் வேகமாக இருக்கும். சிவபிரானைத் தவிர மற்றைய தெய்வங்களை வழிபடமாட்டான். மனைவியிடம் மிகவும் அன்பு கொண்டவன்.

6. இப்படி யிருக்குந் தந்தை இவனுக்கு உதித்த பாலன்
செப்புவோம் பலன்கள் யாவும் தீரனன் மனத்த னாகும்
ஒப்புடன் சிலநாள் செட்டு உத்யோக மிவனும் செய்வன்
தப்பிதம் ஒருவர்க் கெண்ணான் சத்யவான் தியாகி யாவன்.

6. இவ்வாறு குணம் பொருந்திய தந்தைக்கு இவன் மகனாகப் பிறந்திருக்கிறான். இந்த ஜாதகனுடைய யோகபலன்களைச் செப்புகின்றோம். இவன் மிகவும் தைரியசாலி. சில நாட்கள் வியாபாரம் செய்வான். பிறகு உத்தியோகத்திலும் அமர்வான். பிறர்க்குக் கெடுதலை எண்ணாதவன். உண்மையையே பேசுவான். தியாக குணமும் இவனிடம் நிரம்ப விளங்கும்.

7. தேகமே வலிவு மில்லான் சித்தினி சாதி யாவன்
ஊகமது ரைப்ப னவன் உலகெலா மெச்ச வாழ்வன்
போகவான் முத்தோர் தம்மைப் புணருவான் வாயு ரோசன்
தோகையர் மணமுமில்லான் சதனில்லானென்று சொன்னோம்.

**7.** துடுப்பலமான சரீரம் வாய்ந்தவன். சித்தினி சாதியைச் சேர்ந்த வன். தக்க யோசனைகளைப் பிறர்க்குச் சொல்லுவான். உலகத்திலுள்ளோர் மெச்சும்படி நடந்து கொள்வான். நன்ருகச் சுகங்களை அனுபவிப்பான். வாயுரோகம் உடையவன். இவனுக்கு விவாஹமும் நடைபெருது. சந்ததியும் இராது.

8. இப்படி புயண்டர் சொல்ல ஈசுவரி கேட்க லுற்ருள்
மைப்படி மணமு மில்லை மைந்தரு மில்லை யென்றீர்
ஒப்புட னந்தச்சேதி யுரைப்பீர்க ளென்று கேட்க
அப்பணி சடையோன் தேவி அறிவிப்போம் கேளு மம்மா.

**8.** இவ்வாறு புயண்டர் சொன்னவுடன், பார்வதிதேவி கேட்கலுற்ருள். இவனுக்கு மணமும் இல்லை. புத்திரபாக்கியமும் இல்லை என்று சொன்னீர். அதற்கான காரணத்தை விளக்கிக் கூறுவீராக என. தாயே ! சொல்லுகின் ரேம். கேளுங்கள்.

9. இன்னவன் முன்ஜன்மத்தை இசைக்கிருேம் அருணை கீழ்ப்பான்
நன்னிய சிற்றூர் தன்னில் நலமிலா வேடர் வம்சம்
தன்னிலே யுதித்து மேலும் சதாகாலம் சிகாரி கன்னி
பின்னிய வலை வதைத்துப் பிழைத்தன னிவனே யம்மா.

**9.** இவன் முன்ஜன்மத்தில் திருவண்ணுமலைக்குக் கீழ்த்திசையிலுள்ள சிறிய ஊரில், வேடர் வமிசத்தில் உதித்து, சிகாரி கண்ணி, வலை முதலியவை களால் எப்பொழுதும் பறவைகளையும், மற்றைய மிருகங்களையும் வதைத்து, தன் வயிற்றை நிரப்பிப் பிழைத்து வந்தான்.

10. வலை கன்னி யாலேஜீவன் புட்களை பிடித்துத் தின்றும்
விலைகளுக் கீந்து மேதான் வித்தகன் வாழு நாளில்
நிலைமையாய் வந்த ஊழி நிகழத்துவோ மிவனுக் கம்மா
[......ம......

(ஈற்றடி காணப்படவில்லை)

**10.** இவன் வலைகளாலும், கண்ணிகளால் பக்ஷிகளைப் பிடித்து தான் தின்றதுமன்றி, விலைக்கும் அவைகளை விற்று ஜீவித்து வந்தான். அப் பொழுது அவனுக் கேற்பட்ட வினையைச் சொல்கின்ரேம்.

11. மற்ருெரு நாளி லேதான் மரத்திலே கூடு கட்டி
உற்றிடு புழுவைத் தானும் ஒளித்துமே கண்ணி வைத்து
வெற்றியாய்ப் புருவும் அந்த வலையினில் சிக்கிக் கொள்ளக்
குற்றமென் றெண்ணு மல்தான் கொண்டன னிவனேயம்மா.

**11.** ஒரு நாள், மரத்தில் கூடு கட்டி, அதில் புழுவை வைத்து, அதற்குப் பிறகு அவைகளைச் சுற்றிலும் கண்ணியைக் கட்டி இவன் ஒளிந்துக் கொண் டிருக்கும் போது, அந்தப் புழுவைத் தின்பதற்காக வந்த புரு, இவன் வைத்

திருந்த கண்ணியில் விழுந்து சிக்கிக்கொண்டது. தான் இவ்வாறு செய்வது மஹாபாவம் என்று சிறிதும் எண்ணுமல் அப் புருவைப் பிடித்துக் கொண்டான்.

12. அப்பட்சி தனைப் பிடித்து அதன்கைகால் தனை முறித்துச்
சிக்கடத்தில் போட்டுக் கொண்டு சிகாரியும் வந்து விட்டான்
குப்புற உயிர்போ காமல் கொண்டதால் பட்சி தானும்
மெய்புடன் மனம்கலங்கி விளம்பிற்று சாபந் தானே.

12. பிடித்த பிறகு அதன் கால்களையும் இறகுகளையும் முறித்து, கூடையில் போட்டுக் கொண்டு, இவன் இருப்பிடத்திற்கு வந்து விட்டான். அப் பக்ஷியோ வெனில், உயிருக்கு மன்றுடிக்கொண்டு, மிகவும் மனம் வருந்தி ஒரு சாபத்தைக் கூறிற்று.

13. மற்றொரு ஜன்மந் தன்னில் மணமுமைந் தருமில் லாகி
எப்பவும் என்னை யேபோல இறகுகால் முறிந்தாப் போலக்
குற்றமாய்ப் பலரும் பேசக் கூறியே மரண மாகி
இற்றது பக்ஷி தானும் விமலியே மேலுங் கேளே.

13. பாவி ! நீ மறுஜன்மத்தில் மணமில்லாமலும், மைந்தரில்லாமலும், என்னைப் போல் அங்கங்கள் குன்றி, பலராலும் நிந்திக்கப்பட்டு வாழ்வாய். இவ்வாறு சொல்லிச் சிறிது காலத்திற்குப் பிறகு அப்பக்ஷி மரணமடைந்தது. பார்வதி தேவியே ! மேலும் கேளுங்கள்.

14. அந்தவோர் சாபந் தானும் அணுகிற்று இச்சென் மத்தில்
மைந்தனும் பறையைப் போல் வாழ்குவா னென்று சொன்னேம்
பந்தமா யதற்குச் சாந்தி பகருவீ ரென்று கேட்க
எந்தச்சாந் திகள்செய் தாலும் விலகாது தோஷம் தானே.

14. அந்தப் பக்ஷி இட்ட சாபம் இப் பிறவியில் இவனைப் பிடித்துக் கொண்டது. இந்த ஜாதகனும் பக்ஷியைப் போல தன்னம் தனியனாகவும், அவயவங்கள் குன்றியும் வாழ்வான், என்று முனிவர் சொன்னவுடன், பார்வதிதேவி, எந்த பரிகாரம் செய்தால் இவனது பூர்வ ஜன்ம வினை தொலைந்து க்ஷேமமடைவான் ? அதைச் சொல்வீராக எனக் கேட்டாள். எவ்வளவு பெரிய சாந்திகளைச் செய்தாலும் அந்தப் பாவம் விலகாது என முனிவர் பதில் கூறினார்.

15. பொன்னவன் நாலில் நிற்கப் பூ மகனவரைப் பாக்கப்
பிந்திய காலந்தன்னில் பெரியவர் யோகி தன்னுல்
வந்திடு நோய்கள் மாறும் மைந்தனும் சுகமே யாவன்
கந்தனைப் பெற்ற மாதே கழறின மொழிகுன் றுது.

15. மேலும் முனிவர் கூறுகின்றார். குரு நாலாமிடத்தில் விளங்க, பத்தில் இருக்கும் செவ்வாய் அவரைப் பார்ப்பதால் பிற்காலத்தில் இந்த

ஜாதகன் ஒரு பெரிய யோகியைச் தரிசிக்க, அவருடைய கருணையால் நோய்கள் தாமாகவே தீர்ந்து சௌக்கியமடைவான். சுப்பிரமணியனைப் பெற்ற தாயே நாங்கள் சொன்ன வார்த்தை பொய்யாகாது.

16. இன்னவன் தந்தை காலம் இயம்புவோ மொருபான் மூன்றில்
மன்னிய அன்னை காலம் வரைகிறோம் நாற்பான் ரண்டில்
இன்னவன் காலந் தன்னை யியம்புவோம் நாற்பா ணொன்பான்
தன்னிலே தனுசு மாதம் சத்தமி பூர்வ பக்கம்.

16. இவனுடைய தந்தையின் மரண காலத்தைச் சொல்லுகின்றோம். இவனுக்குப் பதின்மூன்றும் வயது நடைபெறும் போது தகப்பன் மரண மடைவான். இந்த ஜாதகனின் தாயும் இவனுடைய நாற்பத்திரண்டாவது வயதில் இறப்பாள். இவனுடைய ஆயுளையும் சொல்லுகின்றோம். நாற்பத் தொன்பதாவது வயதில் மார்கழி மாதத்தில் வளர் பிறைச் சப்தமி திதியில் மரண மடைவான்.

17. மரணமே யாகிப் பின்னும் மறுஜன்மம் தில்லை தன்னில்
உரமுள வைசிய சேயாய் உத்தமன் பிறப்பா னம்மா
திருமகள் விலாசம் பூண்டு செட்டுகள் அதிகம் செய்து
வருவோர் கன்ன மீவன் மங்கையே மேலுங் கேளே.

17. மரணமாகி இவன் மறு ஜன்மத்தில் சிதம்பரக்ஷேத்திரத்தில் வளமான வைசியகுலத்தில் பிறப்பான். லக்ஷ்மிவாசம் பொருந்தியவனாக அந்த ஜன்மத்தில் பெரிய வியாபாரங்களைச் செய்து, செல்வத்தை அடைந்து, அதனால் வருபவர்களுக்கு அமுது அளிப்பான். தாயே ! மேலும் சொல்லு கிறோம்.

18. இவனுடையத் துணைவர் தம்மையியம்பு வோமாண்பால் மூன்று
நவமதில் பெண்பா லவ்வாறு நாட்டுவோம் சிலது சேதம்
தவமுடன் துணைவர் தன்னால் ஜாதகன் அரசு செய்வன்
அவனியோர் மெச்ச வாழ்வன் அம்மையே மேலுங் கேளே.

18. இவனுடைய சகோதரர்களைப் பற்றிக் கூறுகின்றோம். சகோதரர்கள் மூவரும் சகோதரிகள் மூவரும்ஆவார். இவர்களில் சிலர் நஷ்டமாவார்கள். சகோதரர்களின் ஆதரவால் இவன் அதிகாரம் செலுத்தி, பெரியவனாக விளங்குவான். உலகத்தோர் மெச்சும்படி வாழ்வான். அன்னையே ! மேலும் கேளுங்கள்.

19. பத்தினிற் குசனுங் கேது பதிந்திடப் பொன்னோன் பார்க்க
வித்தகன் பலனை நீங்கள் விபரமாய்ச் சொல்லு மென்றாள்
அத்தியை ஆத ரித்த ஐய்யர்தன் னாலயத்தை
சித்தசன் புதிதாய்ச் செய்வன் தேவியே மேலுங்கேளே.

19. காரிய ஸ்தானம் என்று சொல்லப்படும் பத்தாமிடத்தில் செவ் வாயும் கேதுவும் இருக்க, இவர்களைத் தருமாதிபனாகிய குரு பார்ப்பதால் என்ன பலன்கள் நடைபெறும் ? இவ் விஷயத்தை விவரமாகச் சொல

லுங்கள் எனப் பார்வதி கேட்க, முனிவர் பதிலுரைக்கின்றார். முன்னொரு காலத்தில் முதலையினால் பிடிக்கப்பட்டு உயிருக்குத் தவித்த கஜேந்திராழ் வானைக் காப்பாற்றிய ஆதிமூலத்திற்கு ஒரு புதிய ஆலயத்தை நிர்மாணம் செய்வான். நாங்கள் சொன்ன கிரஹ நிலையின் பலனுள் இதுவும் ஒன்று.

20. இதுவலால் அருகில் தங்கும் யானையின் ஆலயத்தை
அதிபனும் புதியதாய்ச் செய்வன் மானிலம் அதிகம் சேர்ப்பான்
எதிரியை லகுவில் வெல்வன் எப்போதும் பகையும் உண்டாம்
நதிமதி யணிந் தோன் தேவி நாயகி மேலுங் கேளே.

20. இதைத் தவிர, வேறு பலனும் உண்டு. இவன் வீட்டிற்கு அருகில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ விநாயகரின் ஆலயத்தையும் புதிதாக நிர்மாணிப் பான். அதிக நிலங்களைச் சேர்ப்பான். சத்துருக்களை எளிதில் வென்று விடுவான். ஆயினும் இவனுக்குப் பகைவர்கள் எப்பொழுதும் தோன்றிக் கொண்டே இருப்பார்கள். பிறைச் சந்திரனை அணிந்த பரமசிவ பிரானின் தேவியே! மேலும் கேளுங்கள்.

---

## ஜாதகம் 19

1. பிறைராகு சாடியாகப் புதன்புக ரிரவி பொன்னும்
விரைகட கத்தில் தங்க வேங்கையில் கேது புக்கத்
தரைமகன் மேட மாகச் சனி கோலில் அலவன் சென்மம்
உரைகுவீர் பலனையென்று உத்தமி கேட்க லுற்றாள்.

| | | | |
|---|---|---|---|
| | செவ் வாய் | | |
| சந்திரன் ராகு | இராசி | சக்கரம் | லக்கினம் புதன், சுக்கிரன் சூரியன் குரு |
| | | | கேது |
| | | சனி | |

1. துர்முக வருஷம் ஆடி மாதம் 14-ஆந் தேதி திங்கட்கிழமை காலையில் ஜனனம் [ஆங்கில தேதி 27–7–1896] புஷ்யம் 3-இல் சூரியன். சதயம் 1-இல் சந்திரன். பரணி 4-இல் செவ்வாய். புஷ்யம் 2-இல் புதன் (அஸ்தம்). ஆயில்யம் 3-இல் குரு. ஆயில்யம் 1-இல் சுக்கிரன் விசாகம். 1-இல் சனி. அவிட்டம் 3-இல் ராகு. மகம் 1-இல் கேது. நக்ஷத்திரம் சதயம். ராகு தசையில் இருப்பு வருஷங்கள் பதினாறு.

சந்திரன் ராகு கும்பத்திலும், புதன் சுக்கிரன் சூரியன் குரு கடகத்திலும் கேது சிம்மத்திலும், செவ்வாய் மேஷம், சனி துலாத்திலும் இருக்க, இலக்கினம் கடகமாகவுமுள்ள இந்த ஜாதகத்திற்குப் பலன்களைச் சொல்லுவீர்களாக, எனப் பார்வதிதேவி கேட்கலுற்றாள்.

2. அத்திரி புகலு கின்றார் ஆணது ஜன்ன மாகும்
வித்தகன் தந்தை யில்லம் விளம்புவோம் கீழ்மேல்வீதி
உத்தரம் வாடையாகும் உயரெதி ரில்லம் காணான்
பத்திர காளி கீழ்ப்பால் பரமனும் உத்தர மாமே.

2. அத்திரி முனிவர் பலன்களைச் சொல்லுகின்றார். இக்கிரக நிலையில் பிறந்தவன் ஆண். வீதி கிழக்கு மேற்கில் அமைந்திருக்கும். வடக்கு வரிசையில் வீடு (தெற்கு நோக்கி) இருக்கும். இவன் ஜனித்த வீட்டிற்கு எதிரில் வேறு இல்லம் இராது. கீழ்த் திசையில் பத்திரகாளி கோயிலும் வட திசையில் சிவன் கோயிலும் விளங்கிடும்.

3. அருகினில் மாரி கோட்டம் அதன்தெற்கில் அருகர் கோஷ்டம்
திருமாலி னதற்குத் தெற்கில் தீயஞ்சான் தங்கு மென்றேம்
குறைவுள கெடியும் தெற்கில் கூறுமிவ் வடையா ளத்துள்
பெருவூராம் செட்டு ஓங்கும் பூவைசிய குலத்தி லேதான்.

3. அருகில் மாரியம்மன் கோயிலும் அதற்கும் தென் திசையில் சமணர் ஆலயமும் உண்டு. அந்த அலயத்திற்குத் தென் திசையில் திருமாலின் ஆலயமும், அக் கோயிலுக்கும் தக்ஷிணத்தில் அனுமான் கோயிலும் தங்கிடும். இன்னும் தெற்கில் ஓர் இடிந்த கோட்டையும் இருக்கும். இவ்வாறு அடையாளமுள்ள பெரிய ஊரில் பெரிய வியாபாரத்தைச் செய்யும் வைசிய குலத்தில் உதித்திருப்பான்.

4. தோன்றுவா னிந்தப் பாலன் துணைவர்கள் களத்திர புத்திரர்
ஈன்றதாய் தந்தை யோகம் இவனுடை முன்பின் ஜன்மம்
தோன்றிய மட்டும் சொல்வோம் சுருதிநிலை யாய்ந்து யாங்கள்
சான்றோர்கள் மனத்தில் வாழும் சங்கரி கேட்டி டாயே.

4. சாதுக்களுடைய மனத்தில் திகழும் பார்வதி தேவியே! இவ்வாறு தோன்றி இருக்கும் பாலனுடைய சகோதரர்கள் மனைவி புத்திரர் தாய் தகப்பனுர் இவர்களுடைய யோகங்களையும், முன் பின் ஜன்மங்களையும், நவக் கிரஹங்களை ஆராய்ந்துப் பார்த்து, சாஸ்திரங்களை ஆதாரங்மாகக்கொண்டு இந் நூலில் சொல்லப்போகின்றேம். கேட்டருளவேண்டும்.

5. தந்தைக்குத் தாரம் ரண்டில் தரித்திடு மிளையா ளீன்ற
நீதியாய் மைந்தன் தானும் நிகழ்த்துவோ மிவனின் தந்தை
போதவே துணைவர் தம்மைப் போற்றுவா மாண்பால் காணேம்
மேதினில் பெண்பா லொன்று விளம்புவோம் தீர்க்க மாக.

5. இவனுடைய தந்தைக்கு மனைவிமார்கள் இருவர். அவர்களில் ஒருத்தி இவ்வுலகில் இல்லை. மற்றவளுடைய பிள்ளை தான் இவன். ஜாதகனுடைய தந்தையின் சகோதரபாவத்தைக் கூறுகின்றேம். அவனுக்குச் சகோதரன் இல்லை. ஒரு சகோதரி உண்டு. அவள் நீண்ட காலம் வாழ்வாள்.

6. சுதர்களும் வறுமை காணுன் சுந்தரி சுகமாய் வாழ்வள்
அதிபன்தன் தந்தை சேதி வரைகிறே மாஞ் சிவப்பன்
சதியிலா மனத்த னுகும் சந்தேகம் ஈகை கொஞ்சம்
விதவிதச் செட்டுச் செய்வன் விளைபுலம் சேர்ப்பா னுமே.

6. தனிகர்களான புத்திரர்களை அடைவான். சுகமாக வாழ்வான். மாநிறமுள்ளவன். பிறர்க்குக் கெடுதல் எண்ணுதவன். எவ் விஷயத்திலும் சந்தேகமுள்ளவன். தானம் செய்யும் மனப்பான்மையும் அவனுக்கு உண்டு. பலவித வியாபாரங்களைச் செய்வான். நன்ருக விளையும் நிலங்களைச் சேர்ப்பான்.

7. தந்திர வார்த்தை சொல்வன் தானியச் செட்டுச் செய்வன்
சிந்தையில் மர்மம் கொஞ்சம் தனத்தின் மேல் ஆசை யுள்ளான்
கந்தன்மேல் பகதி கொள்வன் கரமதில் கோதுமை ரேகை
தந்தையால் தனமும் இல்லம் தானதை விருத்தி செய்வான்.

7. தந்திரமான வார்த்தைகளைப் பேசுவான். தானிய வியாபாரமும் செய்வான். [தானியத்தை அதிகம் செலவு செய்யமாட்டான் என்றும் பொருள் கொள்ளலாம்.] நெஞ்சில் சிறிது கபடமுள்ளவன். பணத்தில் அதிக ஆசைகொண்டவன். சுப்பிரமணிய சுவாமியினிடத்தில் பக்தி பூண்டவன். கையில் கோதுமை ரேகை தானிய ரேகை இவற்றை உடையவன். தந்தையின் பணமும் வீடும் இவனுக்குக் கிடைக்கும். இவன் அவைகளை விருத்தியும் செய்வான்.

8. வித்தையும் கொஞ்ச முள்ளான் விவேகியாம் எவர்க்கும் நண்பன்
பத்தினி இருவ ராகும் பகவானின் பக்தி கொஞ்சம்
சுத்தவான வறுமை காணுன் துறவோர்கள் பக்தி பூணுன்
நத்தினோர்க் குதவி செய்வன் நற்சித்திர இல்லம் செய்வன்.

8. சிறிது கல்வி கற்றவன். கல்வி சிறிதாக இருப்பினும் பகுத்தறிவு அதிகம் படைத்தவன். எல்லோருக்கும் நண்பனுகவே நடந்து கொள்வான். இவனுக்கு இரண்டு மனைவிமார்கள். கடவுள் பக்தியிலும் சிற்சில சமயங்களில் ஈடுபடுவான். சுத்தமானவன். வறுமையே இல்லாதவன். துறவிகளிடம் அதிக பக்தி இல்லாதவன். தன்னை நாடியவர்களுக்கு உதவி புரிவான். அழகியவொரு நல்ல வீடு நிர்மாணிப்பான்.

9. மூலச்சூ டுடைய னுகும் முன்கோபம் வெளிக் காட்டா தான்
பால்தயிர் பிரிய னுகும் பந்துவும் புகழ வாழ்வன்
காலத்தை அறிந்து சொல்வன் கண்முக வசியம் கொள்வன்
சாலவே சுகபுசிப்பன் சதுஷ்பாதம் விருத்தி யல்பம்.

9. மூலச்சூடு உள்ளவனுக இருப்பான். கோபத்தை வெளிக்குக் காட்டாதவன். பால் தயிர் இவைகளில் விருப்பமுள்ளவன். உறவினர் கொண்டாடும்படி வாழ்வான். எந்தச் சமயத்தில் எதைப் பேச வேண்டுமோ அதையே பேசுவான். மதிப்பு வாய்ந்த பெரியோர்களை தன் வசப்படுத்துவான். சுகங்களை நன்ருக அனுபவிப்பான். கால்நடைகள் இவனிடம் விருத்தியாகா.

10. இந்நெறி உடையா னுக்கு இவனுமே உதிப்பா னுகும்
அன்னவன் சேஷ்ட னுக அறைகிறேம் துணைவ ருறில்
கன்னிகை யிரண்டு என்றேம் காளையும் ஒருவ னுகும்
பின்துணை பெண்பா லாகப் பேசுவோம் தீர்க்க மாக.

10. இப்படிப்பட்ட குணமுள்ள தந்தைக்கு இக்கடக லக்கின மகவு குழந்தையாகப் பிறந்திருக்கிறன். இவன் குடும்பத்திற்கு ஜ்யேஷ்டன். இவனுக்கு உடன்பிறந்தவர் அறுவர். அவர்களில் இரு பெண்கள் இவனுக்கு

அடுத்தபடியாக பிறப்பார்கள். அவர்களுக்குப் பிறகு ஒரு சகோதரன். அவனுக்குப் பிறகு ஒரு சகோதரி. ஆக இந் நால்வரும் நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள்.

11. அதற்குப் பின் சேத மெய்தும் அதன்பின்ஆண் தீர்க்க மெய்தும்
சதமாகும் பெண்பா லொன்று சாற்றுவோம் துணைவர் சேதி
பதமான வார்த்தை சொல்வன் பகையோரை வசியம் கொள்வன்.
விதவிதச் செட்டுச் செய்வன் விசேஷகல் விகளு முள்ளான்.

11. அவர்களுக்குப் பிறகு பிறக்கும் குழந்தை நீடிக்காது. அடுத்து பிறக்கும் ஓர் ஆண் குழந்தையும் அதன் பிறகு ஒரு பெண் குழந்தையும் பிறந்து தீர்க்கமாக வாழும். ஆக இந்த ஜாதகனுக்கு ஆறு உடன் பிறந்தவர்கள். நயமாக வார்த்தைகளைப் பேசுவான். எதிரிகளைத் தன் வசப்படுத்துவான். பலவித வியாபாரங்களைச் செய்வான். அதிக கல்வியை கற்பான்.

12. தந்தைக்கு மேலாய் வாழ்வன் தனமது கொடுக்கல் வாங்கல்
வந்தவர்க் கன்ன மீவன் மருமத்தை வெளிக்காட் டாதான்
முந்திய புகழு மேற்பன் முனிவதைக் காட்டா னுகும்
இந்தவ னுடனே வாழ்வன் இவன் மான் ஒன்றேயாக.

12. தந்தையின் வாழ்க்கையைவிட இவனுடைய வாழ்க்கை மிகச் சிறப்புடன் விளங்கும். வட்டி வியாபாரத்தாலும் பணம் இவனுக்குக் கிடைக்கும். வந்தவர்களுக்கு அன்னமளிப்பான். ரகசியத்தை வெளியிடாதவன். நற்புகழைப் பெறுவான். கோபத்தை வெளியிடமாட்டான்.

13. பாலர்க லாண்பா லொன்று பருகிடும் தீர்க்க மாகச
சீலம்போல் பெண்பால் ரண்டு தீர்க்கமாம் என்று சொல்வோம்
வேலுடை யானின் பக்தி விளைபுலம் விருத்தி செய்வன்
சோலைகள் துறவு செய்வன் சுந்தரன் பலனைக் கேளாய்.

13. இவனுடைய சந்ததியைப் பற்றிச் சொல்லுகின்றோம். ஓர் ஆண் குழந்தையும், இரு பெண் குழந்தைகளும் ஜனிக்கும். இம் மூவரும் நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள். சுப்பிரமணிய சுவாமியிடம் பக்தி உடையவன். விளையும் நிலங்களை அபிவிருத்தி செய்வான். தோட்டங்களையும் கிணறுகளையும் நிறுவுவான். இந்த ஜாதகனின் பலன்களை மேலும் சொல்லுகிறோம். கேளுங்கள்.

14. மாநிறம் சமதே கத்தன் மருமமில் லாதா னுகும்
தேன்மொழி கூறு வானும் தீரமில் லாத நெஞ்சம்
மனைவியின் மேலே நேயன் மருமசா வறிவா னுகும்
ஈனமாம் குணங்க ளில்லான் இடரென்றோர்க் குதவி செய்வன்.

14. மாநிறமானவன். சரீரம் ஏற்றத்தாழ்வு இன்றி வளர்ந்திருக்கும் ஒரு விஷயத்தையும் மனத்தில் மறைக்காதவன். தேன்போல இனிய மொழிகளைப் பேசுவான். பயந்த சுபாவமுள்ளவன். மனைவியிடம் மிகவும்

அன்புள்ளவன். ரஹஸ்யமான வேதாந்த நூல்களை அறிந்தவன். தீய குணங்கள் இல்லாதவன். வாழ்க்கையில் இடையூறுகளை அடைந்து கஷ்டப் படுபவர்களுக்கு உதவிசெய்வான்.

15. இனமேலாய் வாழ்வா னுகும் எதிரியை நாசம் சொள்வன்
தனமதை விருத்தி செய்வான் சான்றோர்கள் பக்தி பூண்பன்
வினையெண்ணு னொருவ ருக்கும் வீண்வம்பில் செல்லா னுகும்
கனமான செட்டு செய்வன் கரமதில் கமல ரேகை.

15. தன் சாதியினரைக் காட்டிலும் மிக்க சிறப்பாக வாழ்வான். சத்து ருக்களை அழிப்பான். செல்வத்தை விருத்தி செய்வான். நல்லவர்களிடம் மிகவும் பக்தியுடன் இருப்பான். ஒருவருக்கும் தீங்கை எண்ணமாட்டான். பயனற்ற சண்டைகளில் ஈடுபடமாட்டான். பெரிய வியாபாரத்தைத் துவக்கி நடத்துவான். இவனது கையில் கமலரேகை விளங்கிடும்.

16. தேவதா பக்தி கொள்வன் தீர்த்தயாத் திரையும் செய்வன்
தாவினோர்க் குதவிசெய்வன் தனமது கொடுக்கல் வாங்கல்
பாவத்தில் மனம்வை யாதான் பரிந்துப சாரம் செய்வன்
கொள்ளை விருத்தி யுமுள்ளான் குவலயம் கீர்த்தி யேற்பன்.

16. தெய்வங்களிடம் பக்திகொண்டவன். பல புண்ணிய தீர்த்தங்களுக்குச் சென்று நீராடுவான். உதவியை நாடுபவர்களுக்கு மனமுவந்து உதவி செய்வான். வட்டி வியாபாரமும் செய்வான். [அதுவும் இவனுக்கு ஒரு சீவனோபாயமாகும் என்பது கருத்து] பாவச்செயலில் சிறிதும் மனத்தைச் செலுத்தமாட்டான். உபசாரங்களைப் பரிவுடன் செய்யும் இயல்புள்ளவன். இவன் தான தருமங்களில் பொருள்களை ஏராளமாகச் செலவழித்தாலும் மீதமுள்ள பொருள் மிக்க விருத்தியை அடையும். நல்ல புகழ் உள்ள வனுகவும் இருப்பான்.

17. மணமது பதினே ழாண்டில் வடகீழ்ப்பால் மாதுரு வர்க்கம்
அணையவே மாது சேரும் அவன்குணம் மாநிறத் தள்
பிணையான குணமில்லாதாள் பிஞ்ஞகன் பக்திகொள்வள்
குணமதை வெளிகாட் டாதாள் சிறுத்தவர்க் குதவி செய்வள்.

17. இவனுக்குப் பதினேழாவது வயது நடைபெறும்போது விவாஹம் நடக்கும். பெண் வடகிழக்குத் திசையில் தாய்வருக்கத்தில் ஜனித்திருப் பாள். அவளுடைய குணங்களைப்பற்றிச் சொல்லுகின்றோம். மாநிறமுள்ள வள். கெட்டகுணம் இல்லாதவள். சிவபிரானிடம் பக்திகொண்டவள். தன்னிடம் உள்ள நற்குணங்களைப் பிறர் அறியாவண்ணம் நடந்துகொள் வாள். [தனது பெருமையை வெளிக்காட்டமாட்டாள் என்பது கருத்து] எளியவர்களுக்கு உதவிபுரிவாள்.

18. பால்பாக்கிய முடைய ளாகும் பகையதை மனத்தில் வையாள்
சீலவாள் வயது தீர்க்கம் ஜயமுனி கூறுகின்றார்
நீலிக ளிரண்டு என்றோம் நேருங்கா ரணங்கள் சொல்வோம்
காலூன னேழோனுகிக் கனமுள சரத்தில் நிற்க ;

18. இவன் மனைவி பால்பாக்கியமுடையவள். துவேஷபுத்தி இல்லாதவள். நற்சீலமுள்ளவள். நீண்ட ஆயுளுடன் சுகமாக வாழ்வாள். ஐய முனிவர் கூறுகின்றார். இவனுக்கு இரு மனைவிமார்கள். அதற்கான காரணங்களைச் செல்லுகின்றோம் களத்திர ஸ்தானம் என்று சொல்லப் படும் ஏழாவது வீட்டிற்கு உடையவன் சனியாகி, அவனும் சர ராசியான துலாத்தில் இருப்பதாலும்.

குறிப்பு.—ஜோதிஷ சாஸ்திரத்தில் பன்னிரண்டு ராசிகளையும், முறையே 1 சரம் 2 ஸ்திரம் 3 உபயம் எனப் பிரித்திருக்கிறார்கள். அதன்படி மேஷம் சரம், விருஷபம் ஸ்திரம், மிதுனம் உபயம். இவ்வாறே மேலும் காண வேண்டும். ஆகவே துலாம் சரராசியாகும்.

19. தரைமக னவரைப் பார்க்கச் சாற்றினோம் தாரம் ரண்டு
இருமனை நேரா தாகும் எப்படிச் சொல்லு மென்னக
குருவுடன் யிரவான் ஞலோன் கூடியே ஏழைப் பார்க்க
ஒருமனை தீர்க்க மென்றோம் உரைக்கிறே மதற்கு சாக்ஷி.

19. பூமிபுத்திரன் என்று சொல்லப்படும் அங்காரகன் அந்தச் சனியைப் பார்ப்பதாலும், இந்த ஜாதகனுக்கு மனைவிமார் இருவர். தோஷமிருப்பதால் இரு மனைவிமார்களும் நீடித்து வாழமாட்டார்கள் என்று ஏன் கூறக்கூடாது என்று பார்வதி கேட்க, முனிவர் பதில் உரைக்கின்றார். முன் சொன்ன காரணங்களால் களத்திரபாவத்திற்குத் தோஷமிருப்பினும், இலக்கினத்திலிருந்து குரு சூரியன் நான்காமிடத்திற்கு அதிபனாகிய சுக்கிரன் இவர்கள் ஏழாமிடத்தைப் பார்ப்பதால் களத்திரதோஷம் சிறிது விலகுவதால் ஒருமனைவி தீர்க்கமாக விளங்குவாள். தோஷமிருப்பதால் ஒரு மனைவி (மூத்தவள்) விளங்கமாட்டாள். குரு சூரியன் சுக்கிரன் இவர்கள் பார்க்கின்ற விசேஷத்தினால், மறுபடியும் விவாஹமாகி இரண்டாவது மனைவி நிலைத்துக் குடும்பம் ஸ்திரமாக விளங்கும் என்பது கருத்து.

(வேறு.)

20. இதற்குநே ரிடையாய் ஜாதகசுருதியிலேழாம் பாவத்தை பாரு
அதில்சொலும் பலன்கள் இரண்டேழோன் நாலோன் அவர்கள் [கேந்திரங்களி லிருக்க
மதிமுக மனைவி ஒன்றென்றே காணும் வாக்கினில் யாலுமே ஒன்று [சதமுட விருக்கத்
தாரமே ஒன்று சாற்றினோம் முனிவரே யாங்கள்.

20. முனிவர் இந்த ஜாதகனுக்கு இரு மனைவிகள் என்று சொன்னவுடன், மற்றவர்கள் இவனுக்கு ஒரு மனைவிதான் என்று சொல்லிவிட்டு, அதற்கான காரணத்தை சாஸ்திர ஆதாரத்துடன் காட்டுகிறார்கள். அஃதாவது, இரண்டாமிடத்ததிபன், ஏழாமிடத்திற்கு உடையவன் நான்காம் இடத்திற்கு உடையவன் ஆகிய இவர்கள் கேந்திரத்தில் இருந்தால், மனைவி ஒருத்திதான் என்று சோதிடவிதி சாஸ்திரத்தில் ஏழாம்பாவத்தைக் கூறும் அதிகாரத்தைப் பாரும். ஆகவே இவனுக்கு ஒரு மனைவிதான் என்பது. இஃது ஆசேஷபணைதான். அவர்களுடைய உண்மையான அபிப்பிராயம் எனக்கருதலாகாது.

21. ஆகிலும் சங்கை மனைவிக்கு இரண்டு அணுகிடும் கண்டமே யாகும்
ஏகாது என்றோம் விபரங்கள் கேளாய் இருபத்தொன் பாண்டினில் [கர்ப்பம்
பாரமாய் முப்பா னேழினில் அவ்வாறு பகருவோம் மாரகம் காணுன்
தோஷமும் கடையில் இவன்முன்னே கண்டம் தோன்றிடும் [விடைஉரைத் தனமே.

21. முனிவர் கூறுகின்றார். நீங்கள் சொன்ன விஷயம் ஒருவாறு உண்மையாயினும் இவனுடைய இருபத்தொன்பதாவது வயதில் கர்ப்பம் ஏற்பட்டு, அஃது அப்போது மாரகமாகாமல் இவனுடைய முப்பத்தேழாவது வயதில் மாரகம் ஆகும். எவ்விதத்திலும் இவனுக்கு முன்னே மனைவி மரணமடைவதால் களத்திரதோஷம் என்று சொன்னோம்.

(வேறு.)

22. சதர்களும் எழுவர் தோன்றும் சோர்ந்திடும் சிலவே என்றோம்
சதமுடன் ஆண்பால் ரண்டு தையலர் அவ்வா றுகும்
இதுநான்கும் தீர்க்க மெய்தும் இச்சுதர் இவன் மேலாக
அதிகமாய் யோக மெய்தும் அம்பிகை யாளே கேளாய்.

22. இவனுடைய புத்திரபாவத்தைச் சொல்லுகின்றோம். இவனுக்கு ஏழு குழந்தைகள் பிறப்பார்கள். அவர்களில் சில குழந்தைகள் நஷ்டமாகும். இரண்டு ஆண் குழந்தைகளும் இரண்டு பெண்களும் தீர்க்கமாக வாழ்வார்கள். ஜாதகனைக்காட்டிலும் குழந்தைகள் மிக்க அதிருஷ்டமுள்ளவர்களாக இருப்பார்கள். அவனைக்காட்டிலும் சிறப்புடன் வாழ்வர்கள்.

23. மாதுரு மால் நிறத்தாள் வாததே கத்தா ளாகும்
தீதுகள் வெளிக்காட் டாதாள் சிறப்புள குடும்பி யாவள்
வேதனை யொருவர்க கெண்ணாள் மெல்லிநன் னடக்கை யுள்ளாள்
பாதக மில்லா ளாகும் பரிந்துப சாரம் செய்வள்.

23. ஜாதகனின் தாயினுடைய குணத்தைக் கூறுகின்றோம். அவள் கருத்த மேனியாள். வாததேகம் வாய்ந்தவள். தீதுகளை (கோபம் முதலியவைகளை) வெளியிடாதவள். இவளது குடும்பம் பெருமையோடு விளங்கும். பிறர்க்குக் கெடுதலை மனத்தினாலும் எண்ணாதவள். நன்னடக்கை உடையவள். பாவம் செய்யாதவள். பிறரை மிக்கப்பரிவோடு உபசரிப்பாள்.

24. தன்துணை ஆண்பால் ரண்டு தையலு மொன்றே தீர்க்கம்
தன்னில்லம் வடகீ ழாகும் சிலதூர மென்று சொல்வோம்
அன்னவர் சேதி யாவு மறைகிறோம் விபரம் ரண்டில்
உன்னத வானைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

24. அவனுக்கு இரண்டு சகோதரர்களும் ஒரு சகோதரியுமுண்டு. அம் மூவரும் தீர்க்கமாக வாழ்வார்கள். அவன் பிறந்த வீடு ; வடகிழக்குத் திசையில் சிறிது தூரத்தில் உள்ளது. அந்தச் சகோதர வருக்கத்தின் வரலாறுகளை இரண்டாம் பாகத்தில் சொல்லப்போகின்றோம். தேவியே ! மேலும் சொல்லுகிறோம். கேளுங்கள்.

25. அவளுடைப் பூர்வம் சொல்வேன் ஆலங்காட் டதற்கு மேற்கில
நவனியில் பேரூர் தன்னில் நாயகி ரெட்டி வம்சம்
இவளுமே பிறந்து மேலும் இடறின்றி குடும்பி யாகித்
தவசிகட் கன்ன மீந்து தன்வரன் மதலை யுண்டாய்.

25. அவனுடைய (தாயின்) முன் ஜன்மத்தைச் சொல்வேன். ஆலங்காடு என்ற கிராமத்திற்கு மேற்கில் உள்ள பெரிய ஓர் ஊரில் இவள் ரெட்டி வமிசத்தில் பிறந்திருந்தாள். அப்பொழுது வாழ்க்கையில் இடையூறுகள் இல்லாமல், கணவன் மக்கள் இவர்களை உடையவளாகி, பெரிய குடும்பியாகி, தவசிகளுக்கு அன்னமிட்டும், மற்றைய தருமங்களைச் செய்தும் வாழ்ந்து வந்தாள்.

26. மனமது கபடுமின்றி மாரன்தன் முன்னே மாண்டு
கனமுள பிரம்மன் வர்க்கம் காதலீ யிக்குலத்தில்
சினமிலா வந்தா ளென்றேம் தேவியும் வறுமை காணுள்
அனையவே புருடன் வீணை அம்மக னுலில் தோன்றும்.

26. மனத்தில் கபடமில்லாமல் தூய மனப்பான்மையோடிருந்த இவள், கணவனுக்கு முன்பு மாண்டு, இக்குலத்தில் பிறந்து, சினம் முதலிய கெட்ட குணங்கள் இல்லாதவளாகவும் வறுமையற்றும் இருக்கின்றுள்.

27. இருபது எட்டு ஆண்டில் ஏறுமாதத்தி லேதான்
வருமன்னை கண்ட மென்றேம் மறலியைக் காணு ளாகும்
குருதசை மதியும்புத்தி கூடிடு மந்தக் காலம்
திருமகன் தீர்க்க மாகும் செப்புவோ முப்பா னுலில் ;

27. இந்த ஜாதகனுக்கு இருபத்தெட்டாவது வயது நடக்கும்போது விருஷப மாதத்தில் இவனது அன்னைக்கு ஒரு பெரியகண்டம் வரும். ஆனால் மரணமடையாள். அப்பொழுது இந்த ஜாதகனுக்கு குருதசையில் சந்திர புக்தி நடக்கும். அப்பொழுது அவள் சாகாமல், முப்பத்து நான்காவது வயதில் ;

28. காரியில் காரி புத்தி கார்த்திகை மாதம் தன்னில்
மாளுது என்று சொல்வோம் வயிறுவே தனையே காணும்
கூறுவோம் பின்ஜன் மத்தைக் கோகர்ண மதனி லேதான்
நாரியு மிக் குலத்தில் நல்குவாள் சுகமுள்ளோளாய்.

28. சனிதசையில் சனி புக்தி நடக்கும்போது, கார்த்திகை மாதத்தில் வயிற்றுவலியாலும், வயிற்றுப் போக்காலும் நிச்சயமாக மரணமடைவாள். இவளுடைய மறுபிறவியைக் கூறுவோம். கோகர்ணமென்ற க்ஷேத்திரத்தில் இதே குலத்தில் பிறந்து சுகமுடன் வாழ்வாள்.

29. தந்தையின் பூர்வம் சொல்வேன் சம்புகேச் வரத்தி லேதான்
வந்தனன் வைசியச் சேயாய் மாநிலம் செட்டுச் செய்து
வந்தவர்க் கன்ன மீந்து வளமுள குடும்பி யாகி
அந்தியில் சல்லிய முண்டாய் அதிகமாய் வறுமை பூண்டு ;

29. தந்தையினுடைய பூர்வஜன்மத்தைப் பற்றிக் கூறுவோம். சம்புகேசுவரத்தில் வைசியகுலத்தில் பிறந்திருந்தான். வியாபாரம் செய்து ஜீவித்தான். வந்தவர்களுக்கு அன்னதானம் செய்து, செழிப்பான குடும்பியாக இருந்தான். கடைசியில் கடனேற்பட்டு, மிகவும் வறுமைக்குள்ளாகி ;

குறிப்பு.—சம்புகேசுவரம் திருச்சிக்குச் சமீபத்திலுள்ள ஒரு சிவஸ்தலம். திருவானக்காவென்றும் கூறுவர்.

30. கடவுளைத் தியானம் செய்து கனத்ததோர் தலங்கள் சென்று
திடமுள சேது புக்கிச் சென்றனன் உள்ளூர் தானும்
உடன்ஒரு சைவன் சேயான் உதவினன் வணிபம் செய்யக்
கடனது ஈயா தாகிக் காலன்தன் பதிக்குச் சென்று ;

30. கடவுள் தியானம் செய்தும் பல புண்ணியஸ்தலங்களுக்குச் சென்று கடவுளைத்தரிசித்தும், சேதுவில் நீராடியும், தன் ஊருக்குத் திரும்பி வந்து சேர்ந்தான். உடனே ஒரு சைவன் இவனுக்கு, வியாபாரத்தை மறுபடியும் தொடங்கிச் செய்வதற்காகப் பணம் உதவினன். ஆனால் அந்தக் கடன் திருப்பிக்கொடுக்கப்படாமலிருக்கும்போதே இவன் (தந்தை) மரணமடைந்து ;

31. கஞ்சனால் வரையப் பட்டுகாவல னிச்சென் மத்தில்
மிஞ்சின குலமு தித்தான் மேதினில் வறுமை காணன்
தஞ்சமா யிருப்பானேழில் சநானரி மாதம தன்னில்
நஞ்சுபோல் பிணியு மெய்தும் நாடாது காலன்தானே.

31. பிரம்மதேவனால், சிறந்த இக்குலத்தில் இப்பொழுது பிறப்பிக்கப் பட்டிருக்கிறன். ஜாதகனுக்கு இருபத்தேழாவது வயதில்.............. இவனுக்கு (ஜாதகன் தந்தைக்கு) விஷம்போல் உயிரைப் போக்கும் கொடிய வியாதி ஒன்று தோன்றும். ஆனால் அப்பொழுது அவன் இறக்க மாட்டான்.

32. முப்பது ஒன்று ஆண்டில் மீனமா தத்தி லேதான்
செப்புவோம் தந்தை கண்டம் செம்பொன்னின்தசைகாலத்தில்
அப்பணி புத்தி காலம் அறைகிரேம் கண்டம் தானும்
தப்பித மில்லை வார்த்தை சங்கரி கேட்டி டாயே.

32. ஜாதகனுக்கு முப்பத்தொன்றுவது வயதில் மீன மாதத்தில் ஜாதகனின் தந்தை மரணமடைவான். அந்தச் சமயம் ஜாதகனுக்குக் குரு தசையில் ராகு புக்தி நடைபெறும். நாங்கள் சொன்ன வார்த்தைப்படியே நடக்கும். தேவியே! மேலுங் கேளுங்கள்.

33. மறுஜன்மம் பாண்டி நாட்டில் வளமுள கங்கை சேயாய்த்
திருமகள் விலாசம் பெற்றுச் செய்நிலம் கிருஷி செய்து
பெருமையாய் வாழ்வா னுகும் புகன்றது தப்பா தாகும்
அருமறை முடிவி லாடும்பிகையாளே கேளாய்.

33. மறுஜன்மத்தில் இவன் பாண்டிய நாட்டில் க்ஷேமம் பொருந்திய ஒரு வேளாளகுலத்தில் பிறந்து, லக்ஷ்மி வாசம் வாய்ந்தவனாக வாழ்வான். நன்றாக விவசாயம் செய்து புகழுடனும் மதிப்புடனும் விளங்குவான். அருமையான வேதங்களின் சிகரமாகிய உபநிஷதங்களில் சொல்லப்படும் பெருமையுள்ள தாயே ! மேலும் கேளுங்கள்.

34. ஜாதகன் பூர்வம் சொல்வன் சம்புகேச் வரத்தி லேதான்
போதன முடைய சைவ புதல்வனா யுதித்து இன்னோன்
மாதவர்....................வள்ளல் மேல் பக்தி பூண்டு
போதனம் சிலர்க்குத் தந்து புகலுள்ள குடும்பியாகி ;

34. ஜாதகனுடைய முன் ஜன்மத்தைச் சொல்லுகின்றோம். இவன் சம்புகேசுவரத்தில் சைவ வமிசத்தில பிறந்து, ஈசனிடம் பக்தி கொண்டு இருந்தான். சிலர்க்குக் கடனாகப் பணம் கொடுத்து உதவிபுரிந்தான். நற் புகழ் பெற்ற குடும்பியாகவும் திகழ்ந்தான்.

35. அறமன முடைய னாகி அச்சென்மம் பலமில் லாமல்
மறலியின் பதிக்குச் சென்று மறைவயன் வரையப் பட்டு
உறைந்தனனிக்கு லத்தில் உத்தமி புகலு கின்றாள்
திருமகன் முன்ஜன் மத்தில் சம்புகேச் ரவத்தி லேதான் ;

35. அச் ஜன்மத்தில் தருமத்திலேயே பற்றுள்ளவனாக வாழ்க்கை நடத்தினான். பிறகு பலனை அடையாமலேயே யமனுலகம் ஏகினான். இப்பொழுது பிரம்மதேவனால் இங்கு இக்குலத்தில் பிறப்பிக்கப்பட்டிருக் கிறான். இவ்வாறு முனிவர் சொன்னவுடன், பார்வதிதேவி கேட்கலுற் றாள். இந்த ஜாதகன் முன்ஜன்மத்தில் சம்புகேசு வரத்தில் ,

36. உதித்தனன் பவமில் லாமல் உறைந்தவ னிச்ஜன் மத்தில்
சதிசெயும் பூவைசி யனுக்கு ஜனித்தகா ரணங்க ளென்ன
நிதியது முன்ஜன் மத்தில் நேர்ந்தனன் வைசிய னுக்கு
அதுகடன் வாங்க வேண்டி அணுகினா னிவனே யென்றோம்.

36. பலனை அடையாமலேயே இறந்து, பிறகு இக் குலத்தில் பிறந்திருக்கி றான், என்று சொன்னீர்கள். இவனுக்கு (வைசியனுக்கு) மகனாகப்பிறப்ப தற்குக் காரணம் என்ன ? இவ்வாறு கேட்டதற்கு முனிவர் பதில் கூறு கின்றார், முன்ஜனமத்தில் ஒரு வைசியன் ஜம்புகேசுவரத்தில் வியாபாரம் செய்து, நஷ்டத்தை அடையவே பணம் இல்லாதவனாக இருக்கும்போது, ஒரு சைவ மகன், அவனுக்குப் பணம் கொடுத்து உதவி, வியாபாரத்தை நடத்தச் சொன்னான் என்று (முப்பதாவது பாட்டில்) சொன்னோம். கடன் வாங்கிய வைசியனே கடனை அடைக்காமலேயே இறந்தான் என்றும் சொன்னோம். முன்ஜன்மத்தில் கடன்கொடுத்த சைவன், கடன்பட்டிருந்த வைசிய னுடைய சொத்தை (கடனுக்குப் பதிலாக) அடைந்து, அனுபவிப்பதற்காகவே இந்த ஜன்மத்தில் வைசியனுக்கு (தந்தைக்கு) மகனாகப் பிறந்திருக்கிறான்.

37. வந்தவன் யோகச் சேதி வரைகிறோம் விபர மாகச்
செந்திரு லக்ஷ்மி யோகம் சேர்தள பதியோ கந்தான்
விந்தைசா மரையோ கந்தான் விளங்கிடு மூன்று யோகம்
அந்த வோர்பலனை சொல்வேன் அநேக வாணிபங்கள் செய்வன்.

37. மேலே சொன்ன காரணத்தினால் பிறந்திருக்கும் இக் கடகலக்கின மகனுடைய யோகத்தின் வரலாறுகளைச் சொல்லுகின்றோம். லக்ஷ்மி யோகம், தளபதி யோகம், சாமர யோகம் என்று மூன்று யோகங்கள் இவனுக்கு விளங்குகின்றன. அம் மூன்று யோகங்களின் பலன்களைச் சொல்லுகின்றோம். பலவித வியாபாரங்களைச் செய்வான்.

38. பலசகா யங்கள் செய்வன் பாருக ளதிகம் சேர்ப்பன்
நலமுளோர் நேசம் கொள்வன் நற்சக டுகளு முள்ளான்
விலைமாதர் விருப்பம் கொள்ளான் வீண்பழி யேற்கா னுகும்
குலவிடு மாது தானும் கூற்றனை யுதைத்தோ னுககு ;

38. பலபேருக்குதவி செய்வான். அதிக நிலங்களைச் சேர்ப்பான். நல்லவர்களுடைய நட்பு இவனுக்கு இருக்கும். சிறந்த வண்டி வாகனங்கள் உடையவனுகவும் இருப்பான். பிற பெண்டிரிடம் மனம் வைக்காதவன். இவனுக்கு வீண் அவதூறுகள் ஏற்படா. மார்க்கண்டேயனைக் காப்பதற்கு யமனை உதைத்துத் தள்ளிய சிவ பெருமானுக்கு ;

39. பணிவிடை செய்வானுகும் பலசோலை கூவல் உண்டு
தணிவான குணத்தா னுகும் சஞ்சல மடையா னுகும்
கனமுள இரண்டு இல்லம் கட்டுவன் மூவைந் தாண்டில்
வினையிலா நாற்ப தாண்டில் மேவிடும் இல்லம் தானே.

39. அநேகப் பணிகளை ஆற்றுவன். பலசோலைகளையும் கிணறுகளையும் நிறுவுவான். சாந்தகுணம் வாய்க்கப் பெற்றவன். எக் காரியத்திலும் சீக்கிரம் முடிவிற்கு வராமல் சஞ்சலப்படுவான். இவன் சிறந்த இரு வீடுகளைக் கட்டுவான். ஒன்று பதினைந்தாம் வயதில் ஏற்படும். மற்றொன்று நாற்பதாம் வயதில் வரும்.

40. அரசர்கள் பேட்டி கொள்வன் ஆறிரண் டாயிரம் பொன்
நறுமலர்க் கந்த மிஷ்டன் நற்றூசு செட்டுச் செய்வன்
திருமகள் நாற்ப தாண்டில் சாடிமா தத்திலே தான்
குறைபக்கம் துவா தசி கூற்றன் தன் பதிக்குச் செல்வன்.

40. மேன்மை தங்கிய அரசர்களின் தரிசனம் கிடைக்கும். பன்னிரண்டாயிரம் பொற் காசுகளைச் [உத்தேச மதிப்பு ரூபாய் லக்ஷத்திருபதாயிரம்] சேர்ப்பான். வாசனை பொருந்திய புஷ்பம் சந்தனம் முதலியவைகளில் விருப்பமுள்ளவன். பெரிய வஸ்திர வியாபாரம் செய்வான். இந்த ஜாதகன் மாசி மாதத்தில் தேய் பிறைத் துவாதசியில் எமனுலகம் ஏகுவான்.

41. இதுமட்டில் ஜாத கர்க்கு இலகா தோ மார கங்கள்
விதவித பணிகள் காணும் வேந்தனும் புகரும் ஜன்மம்
சதமுட னிருப்ப தாலே சாற்றிய வயது தீர்க்கம்
புதன் தசை ராகு புத்தி பொருந்திடு மந்தக் காலம்.

41. இவ்வளவு வயது வரையில் ஜாதகனுக்கு ஒரு கண்டமும் ஏற்படாதோ என பார்வதி கேட்க, முனிவர் பதில் உரைக்கின்றார். பலவித பிணிகள் தோன்றும். ஆயினும் சுபகிரஹங்களாகிய குருவும் சுக்கிரனும லக்கினத்தில் இருப்பதால் வந்திடும் கண்டங்கள் சூரியனைக் கண்ட பனி போல நீங்கி, நாங்கள் சொன்ன வயது வரையில் சுகமாக வாழ்வான். ஜாதகனுக்கு மரண மேற்படும் காலத்தில் புதன் தசையில் ராஹு புக்தி நடைபெறும்.

42. பின்ஜன்மம் காசி தன்னில் பிறப்பதும் பிரம்ம சேயாய்ச்
சந்திரன் கலை யணிந்த சங்கரன் தனைப்பூ சித்து
அன்னவன் தேவ ராக அருளுவா னிந்தப் பாலன்
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே.

42. இவனுடைய பின் ஜன்மத்தைக் கூறுகின்றோம். இவன் மறு பிறப்பில் காசியில் பிராமணக் குலத்தில் பிறந்து, சந்திரனைத் தலையில் அணிந்த பரமசிவ பெருமானை இடைவிடாது பூசித்து, கடைசியில் மரண மடைந்து, கைலாயத்தில் பூதகணங்களில் ஒருவனாக விளங்குவான். விநாயகரைப் பெற்ற தாயே! சொல்லுகிறோம் கேளுங்கள்.

43. பாலகன் ஜனிக்கும் காலே பணிதசை பதினா றுண்டும்
சாலவே பலனைச் சொல்வேன் தன்னூனை விருத்தி யாகும்
வேல்விழி அன்னை தந்தை விளங்கிய செட்டு ஓங்கும்
கோலமாய்ப் பந்து சூதம் கூறுவோம் விபரம் ரண்டில்.

43. இந்த ஜாதகன் ஜனிக்கும்போது ராஹுதசையில் பாக்கி வருஷங்கள் பதினாறு. மீதமுள்ள ராஹு தசையின் பொதுப் பலன்களைச் சொல்லுகின்றோம். சகோதர விருத்தியுண்டு. தாயும் தந்தையும் விளங்குவார்கள். நல்ல ஆரோக்கியமும் செல்வாக்கும் இருக்கும். வியாபாரம் ஓங்கி வளரும். பந்துக்கள் மரணத்தால் தீட்டும் துன்பமும் நேரிடும். இவைகளைத் தவிர மற்ற விவரங்களை இரண்டாம் பாகத்தில் சொல்லப் போகின்றோம்.

வேறு.

44. இருசனி யுச்ச பலனது எவ்வாறு
கூறுவீர் விபரமாய் முனியே
குருதசை தன்னில் மூனைந்தாண்ட தனில்
கூடிடும் பழைய நாள் பொன்னும்
பெருமையும் புகழும் அணிகிடும் என்றோம்
பேசுவோம் விபரமாய்ப் பின்பால்
அருமறை முடிவி லாடும் தாயே
அறுமுகன் கிருபையு முண்டாகும்.

44. முனிவரே! இந்த ஜாதகத்தில் சனி நான்காமிடத்தில் உச்சமாக விளங்குகிருனே! அதன் பலனை விவரமாகச் சொல்லுகள், எனப் பார்வதி கேட்டாள். முனிவர் சொல்லுகின்ருர். சனி நான்காமிடத்தில் உச்சனுக இருப்பதால் குருதசையில் பழைய காலத்துப் பொற் காசுகள் [புதையல்] இவனுக்குக் கிடைக்கும். பெருமையும் புகழும் ஏற்படும். ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமியின் கிருபையும் வாய்க்கும். மேலான வேதங்களின் சிகரங் களாகிய உபநிஷதங்களில் நர்த்தனம் செய்யும் உமா தேவியே! இவ் விஷயங்களை இரண்டாம் பாகத்தில் விவரமாகப் பேசப் போகின்ருேம்.

---

# ஜாதகம் 20

1. மதியும் குருவும் சாடியுற
   மாலும் பரிதி சீயமதில்
வீதியுள் கொச்சை புகர்கன்னி
   விடமு மானில் சேய்மேடம்
பதியும் கொண்டால் பலனெவ்வாறு
   பகர்வீர் முனியே விபரமதாய்த்
துதிசெய் வசிஷ்டர் தான்சொல்லுவார்
   தோன்று மாண்பால் ஜனனமுறும்.

|  | செவ்வாய் சனி |  |  |
|---|---|---|---|
| சந்திரன் குரு | இராசி சக்கரம் | | லக்கினம் கேது |
| ராகு | | | புதன் சூரியன் |
|  |  |  | சுக்கிரன் |

1. சந்திரன் குரு கும்பத்திலும், புதன் சூரியன் சிம்மத்திலும், சனி மேஷத்திலும் சுக்கிரன் கன்னி ராஹு மகரத்திலும், கேது கடகத்திலும், செவ்வாய் மேஷத்திலுமாக இருந்த, இலக்கினம் கடகமுமாக உள்ள இந்த ஜாதகத்தின் பலனை விவரமாகக் கூறுங்கள் என பார்வதி கேட்க, வசிஷ்ட முனிவர் சொல்லுவார். இக் கிரஹ நிலையில் ஆண் குழந்தைத் தோன்றும்.

2. அதுவே வடபால் வீதியது
   அருகன் வாடை மேல்பாலில்
துதிக்கை மாரி தான்தோன்றும்
   சிவன்கோ ஷ்டம் கீழ் ப்பால்கெடுதி
சதிராய் வடகீழ் காளியுமே
   சிற்றூ ராகும் பிரம்மகுலம்
இதுவே மூன்றும் ஜனனமுமாய்
   இயம்ப லாகும் எந்திழையே.

2. வீதி தெற்கு வடக்காக அமைந்திருக்கும். ஜனித்திருக்கும் வீட்டிற்கு மேற்குத் திசையில் சமணர் வீதி இருக்கும். கீழ்த் திசையில் விநாயகர் மாரியம்மன் பரமசிவன் இவர்களது கோயில்கள் இருக்கும். வட

கிழக்குத் திசையில் காளி கோயிலுண்டு. இவ்வாறு அடையாளமுள்ள சிறிய ஊரில் பிராம்மண ஜாதியில் இந்த சாதகன் குடும்பத்தில் மூன்றாவது குழந்தையாக ஜனித்திருப்பான்.

3. ஏந்தும் அன்னை தந்தைதுணை
எய்தும் பாரி சுதர்யோகம்
சேர்ந்த குடும்பம் யோகமெலாம்
குறிப்போ மிந்நூல் கோதையரே
வேந்தன் தந்தை குணமதனை
விளம்பும் சாந்தம் விவேகியுமாம்
சேர்ந்தோர் தம்மைக் காத்திடுவன்
தீர மனமு மில்லாதான்.

3. தேவியே! இந்த ஜாதகனின் தந்தை, அன்னை, சகோதரர், மனைவி, புத்திரர் இவர்களைப் பற்றியும், இவனது குடும்ப யோகங்களையும் இந்நூலில் சொல்லப் போகின்றோம். முதலில் ஜாதகனின் தந்தையின் குணத்தைச் சொல்லுகின்றோம். சாந்தமானவன். விவேகமுள்ளவன். தன்னை வந்தடைந்தவர்களை ஆதரிப்பான். பயந்த சுபாவமுள்ளவன்.

4. தானே யிரண்டு கல்விமிகும்
சரச வார்த்தை தயவாளி
ஈனமில்லாதான் இருசிகப்பன்
இதிகாசங்கள் தனையறிவன்
ஊன மில்லாத தேகியுமாம்
உபதேசங்கள் தான் செய்வன்
மானே கிரகம் தானறிவன்
வாக்குத் தவறான் மாடுவிருத்தி.

4. இரண்டு விதமான கல்விகளை (இரு பாஷைகளை)க் கற்றிருப்பான. நயமான வார்த்தைகளைக் கூறுவான். தயை உள்ளவன். கெட்ட குணங்கள் இல்லாதவன். மாநிறமுள்ளவன். ராமாயண மஹாபாரதங்களை அறிந்தவன். ஏற்றத் தாழ்வு இல்லாத உடல் அமைந்தவன். தருமங்களைப் பிறர்க்கு உபதேசம் செய்வான். இவனுக்குச் சோதிட சாஸ்திரமும் வரும். தான் சொன்னபடியே நடப்பான். இவனிடம் கால் நடைகள் விருத்தியடையும்.

5. விருத்தி நிலமும் சகலர்க்கு
மேன்மை சொல்லன் ஈகையுள்ளன
திருத்த மான வார்த்தையுளன்
சிலர்க்குக் கருமங்கள்செய்வன்
பெருத்த புத்தி வறுமையிலான்
பிழையென்ற வர்க்கு மெண்ணுதான
கருத்த மனத்தோர் தான்சேரான்
கடந்தோர்க்கன்னம்தானீவன்.

5. நிலங்களையும் விருத்தி செய்வான். எல்லோரைக் காட்டிலும் சிறந்தப் பேச்சாளனாக இருப்பான். தானம் செய்யும் இயல்புள்ளவன். அழுத்தம் திருத்தமாகப் பேசுவான். சிலருக்கு இவன் ஈமச் சடங்குகளைச் செய்ய நேரும். உதாரணமான மனப்பான்மை படைத்தவன். வறுமை இல்லாதவன். பிறர்க்குக் கெடுதலை எண்ணாதவன். கபடமுள்ளவர்களிடம் நட்பு வைத்துக் கொள்ளமாட்டான். வந்த விருந்தாளிகளுக்குப் பரிவுடன் அன்னமிடுவான்.

வேறு.

6. சொன்னவிக் குணத்தா னுக்குத் துணைவர் தோன்றிடும் பஞ்ச [மென்றேம்
கன்னிமார் காணுன் காளைகள் கனக்கா திருதிய மென்றேம்
மன்னிய இரண்டு விருத்தியே யாகும் வரைந்ததி லொருவனுக் [கோங்கே
பின்னமா மென்றேம் மத்தியில் அவனும் புகுவனும் காலன்தன் [பதிக்கு.

6. இப்படிப்பட்ட குணமுள்ளவனுக்கு ஐந்து சகோதரர்கள் பிறப்பார்கள். சகோதரி இல்லை. அந்த ஐவரில் மூன்று சகோதரர்கள் விருத்தியாக மாட்டார்கள். [குழந்தையாக இருக்கும்போதே இறப்பார்கள் என்பது கருத்து.] மற்றைய இருவரும் விருத்தியாகும் காலத்தில் ஒரு சகோதரன் மத்திய வயதில் இறந்துவிடுவான்.

7. மற்றொரு துணையும் சுகமுடன் சுதரும் வாழ்குவார் எனஉரைத் [தனமே
வித்தகன் பாலன் சேதியைப் புகல்வோம் மேவிடும் கல்வியு மிரண்டு
புத்திமான் பூமி விருத்தியு முடையன புவிராசர் பேட்டியும் [கொள்வன்
பற்றிடும் கிராமச் செட்டுமே யென்றேம் பண்ணுவான் புரோகிதத் [தொழிலும்.

7. ஆகவே ஒரு சகோதரன் மாத்திரம் மனைவி மக்களுடன் சுகமாக நீண்ட காலம் வாழ்வான். இப்பொழுது ஜாதகனின் யோகங்களைச் சொல்லு கின்றேம். இரு கல்விகளைக் கற்பான். மிக்க புத்திசாலியாக இருப்பான். பூமிகளை அபிவிருத்தி செய்வான். அரசர் தரிசனமும் இவனுக்கு ஏற்படும். கிராமத்தில் வியாபாரம் செய்வான். புரோகிதத் தொழிலையும் நடத்துவான்.

8. தந்தைநாள் பூமிதனை விருத்தி செய்வன் தாட்சிணியன் மனவர்மம் [கொஞ்சமுண்டு
நிந்தைகள் ஏற்கான் சல்லியமே காணுன் நினைத்தகாரிய மதை [முடிப்பன்
சந்தேக முடையன் பணையோர்கள் விருத்தி சாந்தவான் சகடுகள் [ஏற்பன்
நொந்தபேர்க் குதவி செய்திடு வானும் நிகர்முக வடிவுமே காணும்.

8. பிதுரார்ச்சிதமான நிலங்களைச் சீர்திருத்துவான். தாக்ஷிண்ய குண முள்ளவன். சிறிது கபடமுடையவன். எவரும் இவனை நிந்திக்க மாட்டார்கள். கடன் தொந்தரவும் இராது. தான் எண்ணிய காரியங்களை

நிறைவேற்றுவான். சந்தேக மனத்தனுவன். உழவுகாளைகளை விருத்தி செய்வான். சாந்தகுணமுள்ளவன். வண்டி முதலிய வாகன வசதிகள் உடையவன். கஷ்டப்படுபவர்களுக்கு உதவி செய்வான். முகத்தில் விசேஷப் பொலிவு உடையவனுகவும் இருப்பான்.

9. வாட்டடங் கண்ணியார் களின்மோகன் மனமது அலைச்சலுமுண்டு
போட்டி பொல்லாப்பு ஞாதியால் நேரும் பின்ஜயம் செய்வனும்
[தாயே.
தாட்டிக மனத்தன் சற்சன ரிஷ்டன் தன்துணை ஆணது ஒன்று
தீட்டுவோம் முன்னேன் அவன் குணம் புகல்வோம் தீரனும் வர்மமு
[முடையன்.

9. அழகிய பல பெண்களிடம் மையல் கொள்வான். மனத்தில் சஞ்சலமும் உண்டு. பங்காளிகள் இவனுடைய முயற்சிகளில் போட்டி இடுவார்கள். அவதூறும் சொல்லுவார்கள். ஆனுல் கடைசியில் இவன் வெற்றியைக் காண்பான். தாராளமான மனப்பான்மை படைத்தவன். நல்லவர்களின் அன்பிற்குப் பாத்திரமானவன். இவனுடைய சகோதரபாவத்தைச் சொல்லுகின்ரேம். சகோதரன் ஒருவன்தான் உண்டு. அவன் இந்த ஜாதகனுக்கு மூத்தவனுவன். அந்தச் சகோதரனுடைய குணத்தைச் சொல்லுகின்ரேம். மிக்க தைரியம் உள்ளவன். நெஞ்சில் சிறிது கள்ளமுடையவன்.

10. குலதொழில் புரிவான் குணமது இரண்டு
குறிப்பினில் கொடுமையே காணும்
பணையோர்கள் விருத்தி பலருக்கு நல்லன்
பத்தினி குடதிசை நேரும்
புலவன்போல் வார்த்தை புத்திர ரிரண்டு
புகலுவோம் ஆணது வரகத்
தலைவிமார் அவ்வாறு தீர்க்கமா மென்ரேம்
சந்தேக மனத்தனும் தாயே.

10. குலத் தொழிலைச் செய்வான். அவனிடம் நறகுணங்களும் கெட்ட குணங்களும் உண்டு. தோற்றத்தில் கொடியவன்போல் காணப்படுவான். உழவுக் காளைகளை நன்ருக வளர்ப்பான். பலருக்கு நல்லவனுகவே நடந்துக் கொள்வான். மேற்குத் திசையிலிருந்து அவனுக்குப் பாரியை வருவாள். புலவர்கள்போல பேசுவதில் ஆசை உடையவன். அவனுக்குப் புத்திரர்கள் இருவர். அவ்வாறே பெண்களும் இருவர். இந்நால்வரும் தீர்க்காயுளுடன் வாழ்வார்கள். எப்பொழுதும் அவன் சந்தேகப்படுவான்.

11. தாய்ப்பகை யுண்டு தரித்திரம் காணுன
தலவாசம் செல்லுவ னென்ரேம்
ஆயவே வயது தீர்க்கமா மென்ரேம்
அதற்குமுன் துணைவி பெண் ஒன்று
மாயமாய் நசிக்கும் விருத்தியும் காணுன்
மாதுரு சேதியைப் புகல்வோம்
தூயநன் மனத்தாள் சிவந்திடு மேனி
துறவிகட் கன்னமு மீவள்.

**11.** தாயிடம் பகைமையோடு இருப்பான். வறுமை இல்லாதவன். பல புண்ணிய தலங்களுக்கு யாத்திரை செய்வான். தீர்க்காயுளுடன் வாழ்வான். அவனுக்கு முன் ஒரு சகோதரி பிறந்திருப்பாள். ஆனால், அந்தப்பெண் திடீரென்று மரணமடைவாள். மேலும் சகோதரி விருத்தி இல்லாதவன். இது வரையில் ஜாதகனின் அண்ணன் செய்தியைச் சொன்னோம். இனி, தாயின் வரலாறுகளைச் சொல்லுகின்றோம். அவள் மிகவும் தூய மனம் படைத்தவள். சிவந்த மேனியாள். துறவிகளுக்குச் சிரத்தையுடன் அமுதளிப்பாள்.

**12.** பித்தநோய் கொஞ்சம் புகலுவோம் தாயே
புண்ணிய மனத்தளா மென்றும்
சுத்தமு முடையாள் தேவதா பக்தி
சிறுத்தோர்க்கு அன்னமு மீவள்
சக்திக்குத் துணையாண் இரண்டென மொழிவோம்
தையல்மார் மூவரே யாகும்
குற்றமா மற்றோர் கூறுவா மென்றோம்
குறிக்கிறோ மன்னையின் பூர்வம்.

**12.** தாயே! இவளுக்குப் பித்த நோய் சிறிது இருக்கும். புண்ணிய காரியங்களில் இவள் மனம் ஈடுபடும். உடல் சுத்தி, உள்ள சுத்தி இரண்டும் உடையவள். தெய்வங்களிடம் பக்தி பூண்டவள். ஏழைகளுக்கு அன்ன தானம் செய்வாள். இவளுக்கு இரண்டு சகோதரர்கள் உண்டு. சகோதரிகள் மூவர். இந்த ஐவரும் நீண்ட காலம் வாழ்வார்கள். இந்த எண்ணிக்கைக்கு மேல் பிறக்கும் குழந்தைகள் நீடித்திரா. இவளுடைய பூர்வஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம்.

**13.** சொக்கர்வாழ் நாட்டில் கங்கையின் குலத்தில்
தோன்றியே சுகமுடன் வாழ்ந்து
மிக்கவே சுதர்வர னுண்டாய் மாது
விளங்கினாள் ஊதனைக் கேண்மோ
தொக்கவே நாத்தி மாதுஇல் லத்தில்
சூழ்ந்திட நிந்தையால் வார்த்தை
மைக்கண்ணி மேலே மங்கையும் புகல
மனமது வாடியே சொல்வாள்.

**13.** இவள் முன்ஜன்மத்தில் சொக்கநாதர் எழுந்தருளி இருக்கும் பாண்டிய நாட்டில் வேளாள வமிசத்தில் பிறந்து, கணவனுடனும் குழந்தைகளுடன் சுகமாக வாழ்ந்துவரும் காலத்தில் அவளுக்கேற்பட்ட வினையைச் சொல்லுகின்றோம். இவனுடைய நாத்தி (கணவனின் சகோதரி) பிறந்தகத்தில் வந்து தங்கியிருக்கும்போது, இவள் (ஜாதகனின் தாய்) அவள் காதில் விழும்படி அவளைப்பற்றி நிந்தையாகப் பேசினாள். இந்த நிந்தை வார்த்தைகளைக்கேட்ட நாத்தி மிகவும் மனம் வருந்திச் சொல்லலானாள்.

வேறு

14. பெண்பழி சொன்னபாவி பிறக்கும்பின் ஜன்மம் தன்னில்
தன்சுதர் பெண்பா லின்றித் தன்வரன் மத்தில் மாண்டு
குன்றிய மனத்த ளாகிக் குவலயம் தன்னில் வாழ்வாய்
திண்ணமாய்ச் சொல்லி யேதான் தெருத்தூளைத் தூற்றிச்
[சென்ருள்.

14. குற்றமில்லாத என்னைப்பற்றி நிந்தைசொன்ன பாவி! நீ, மறு ஜன்மத்தில் பெண் குழந்தை இல்லாதவளாக இருப்பாய். உன் கணவனும் வாழ்க்கையின் மத்தியில் இறப்பான். அதற்குப்பிறகு நீ வெகுகாலம் சிதைந்த மனத்துடன் உயிரை வைத்துக் கொண்டிருப்பாய். என்றிவ்வாறு சொல்லி, தெருப்புழுதிகளைத் தூற்றிவிட்டுத் தன் கணவன் வீட்டிற்குச் சென்ருள்.

15. மங்கைக்கு அந்தச் சாபம் மருவிற்று வேறு காணுள்
துங்கமாம் சேது சென்று தேறினேர்க் கன்ன மீந்து
சங்கைகாய்க் கால ளுடு சார்ந்துமே பிரமன் லக்கம்
இங்கிவள் வந்தா ளென்றேம் இவள்வரன் தென்மேல் நேரும்.

15. இவளுக்கு அந்தச் சாபம் ஒட்டிக்கொண்டது. பிறகு அந்தப் பிறவியிலேயே, புண்ணியத்தைத்தரும் சேதுவிற்குச் சென்று நீராடி, அங்கு துறவிகளுக்கும் மற்றவர்களுக்கும் அன்னமளித்து, தனது ஊருக்குத் திரும்பி வந்தாள். காலக்கிரமத்தில் யமனுல் அவனுலகுக்குக் கொண்டு போகப்பட்டாள். பிறகு பிரம்மதேவனுல் இங்குப் பிறப்பிக்கப்பட்டு கடக லக்கின மகனுக்குத் தாயாக வாய்த்திருக்கிருள். இவள், தான் பிறந்த ஊருக்குத் தென் மேற்கில் உள்ள ஊரில், வாழ்க்கைப்பட்டிருக்கிருள்.

16. தன்சுதர் பெண்பால் தோஷம் தன்வரன் மத்தில் மாள்வன்
தன்மனச் சஞ்சலத்தால் தாயுமே வாழ்வா ளாகும்
பின்சன்மம் வேங்க டத்தில் பிறப்பாளாம் பிரம்ம சேயாய்
உன்னத வானைபெற்ற உத்தமி கேட்டி டாயே.

16. நாத்தியின் சாபத்தால் இந்த ஜன்மத்தில் இவளுக்குப் பெண் பிறக்கவில்லை. கணவனும் வாழ்க்கையின் மத்தியில் மாண்டுப் போவான். இவள் மீதமுள்ள வாழ்க்கையைத் துக்கப்பட்டே கழிப்பாள். இவளுடைய பின்ஜன்மத்தைச் சொல்லுகிறேம். திருப்பதி க்ஷேத்திரத்தில் பிராம்மணக் குழந்தையாகப் பிறப்பாள். விநாயகரைப் பெற்ற தேவியே! மேலும் சொல்லுகிறேம். கேளுங்கள்.

17. தந்தையின் பூர்வம் சொல்வேன் தாமிரபரணி தன்னில்
வந்தனன் வைசிய ளுக வளமுள குடும்பி யாகி
முந்திய கிருஷி செய்து மேலவர் பூசை பூண்டு
வந்தவர்க் கன்ன மீந்து மார்க்கத்தில் தாகம் வைத்தான்.

17. தந்தையின் பூர்வஜன்மத்தைச் சொல்லுகின்றோம். இவன் முற் பிறவியில், தாம்பரபரணி நதிக்கரையிலுள்ள ஊரில், வைசிய மகனாகப் பிறந்து, மனைவி மக்களுடன் பெரிய குடும்பியாகி, நல்ல விவசாயம் செய்து வந்தான். ஈசுவரனுக்குப் பூசை செய்துவந்தான். தன் வீடு நாடி வந்த வர்களுக்கு அமுது அளித்தான். வழி நடப்பவர்களின் தாகத்தைத் தணிப் பதற்கு மார்க்கத்தில் தண்ணீர்ப் பந்தலும் நிறுவினான்.

18. காலன்தன் னுடை டைந்து கஞ்சனால் வரையப் பட்டுச்
சீலனு மறைக் குலத்தில் ஜனித்தவ னென்று சொல்வோம்
சாலவே முன்ஜன் மத்தில் ஜனித்தனன் கங்கை சேயாய்
ஞாலமே லிச்சென் மத்தில் நான்மறைக் குலமுதித்தான்.

18. பிறகு அந்திய காலத்தில் யமனுலக மடைந்தான். இப்பொழுது பிரம்மதேவனால் வேதமோதும் பிராம்மண குலத்தில் பிறப்பிக்கப் பட்டிருக் கிறான். இவ்வாறு முனிவர் சொன்னவுடன், முற் பிறவியில் பயிர்த் தொழில் செய்யும் குலத்தில் பிறந்த இவன் இப்பிறவியில் எவ்வாறு பிராம்மண சாதியில் பிறந்தான் ?

19. காரணம் யாது என்னக் கடந்தோர்க்கு அன்ன மீந்தும்
தீரனும் தாகப் பந்தல் செய்ததோர் பலத்தி னாலும்
நீரணிக் கடவுள் பூசை நிமலனும் செய்த தாலே
பாரினில் பிரம்ம சேயாய்ப் பிறந்தனன் என்று சொல்வோம்.

19. இதன் காரணத்தைச் சொல்லுங்கள், எனப் பார்வதி தேவி கேட்க, வசிஷ்ட முனிவர் பதில் உரைக்கின்றார். இவன் முற் பிறவியில் மூன்று சிறந்த தருமங்களைச் செய்தான். எல்லோருக்கும் அன்ன மளித்தான். தண்ணீர்ப் பந்தல் வைத்தான். பரமசிவனை இடைவிடாது பூசித்து வந்தான். ஆகவே மேலான இம்மூன்று தருமங்களைச் செய்து வந்தமையால் இப் பிற வியில் பிராம்மண ஜாதியில் பிறந்திருக்கிறான்.

20. மறுஜன்மம் விரிஞ்சி தன்னில் மாரனு மிக்கு லத்தில்
உரைகுவா னென்று சொல்வோம் உயர்வான குடும்பி யாவன்
திருமகன் மணத்தின் காலம் செப்புவோ மினி மேலாக
இருபதா மாண்டுக் குள்ளே எய்திடும் பாரி தானும்.

20. இவன் (தந்தை) மறு பிறவியில் விரிஞ்சியில் இதே ஜாதியில் பிறப் பான், பிறந்து, மனைவி மக்களுடன் பெரிய குடும்பியாகவும் வாழ்வான். இப்பொழுது ஜாதகனின் விவாஹ காலத்தைச் சொல்லுகின்றோம். ஜாத கனுக்கு இருபதாவது வயது முடிவதற்குள் விவாஹம் நடைபெறும்.

21. மாதுவும் மேல்பால் நேரும் மங்கையின் குணத்தைச் சொல்வேன்
ஓதுவாள் சுகமாய் வார்த்தை உலகுக்கு நல்லோ ளாவள்
காதலி விரத மேற்பள் கடந்தபேர்க் கன்ன மீவள்
பாதக மனமில் லாதாள் பால்பாக்கிய முடைய ளாமே.

21. அந்தப் பெண் மேற்குத் திசையில் ஜனித்திருப்பாள். அவளுடைய (ஜாதகனது மனைவியின்) குணங்களைச் சொல்லுகின்றோம். காதுக்கு இனிமையான வார்த்தைகளைப் பேசுவாள். எல்லோருக்கும் நல்லவளாக நடந்துகொள்வாள். பல விரதங்களை அனுஷ்டிப்பாள். அன்னதானம் செய்வாள். பிறருக்குக் கெடுதல் எண்ணாதவள். இவளுக்குப் பால் பாக்கியமுண்டு.

22. அன்னம்போல் சாய லொக்கும் ஆளன்தன் மனம்போல் வாழ்வன்
பின்னமில் லாத தேகி பூவையும் வந்த பின்பு
தன்வரன் ராஜயோகம் சார்ந்திடும் பிறை போல்யோகம்
கன்னிக்கு வயது தீர்க்கம் கவுசிகர் மறித்துச் சொல்வார்.

22. அன்னப் பக்ஷிபோல் அழகு உள்ளவள். தன் கணவனின் மனத்தை அறிந்து அதன்படி நடப்பாள். சரீரத்தில் ஊனம் இல்லாதவள். இவள் கணவனது வீட்டிற்கு வந்தபிறகு, கணவனுக்குப் பிறைச் சந்திரன் போல ராஜயோகங்கள் மேன்மேலும் விருத்தியாகும், இந்தப் பெண்ணும் தீர்க்காயுளுடன் வாழ்வாள் என்று வசிஷ்டர் சொன்னவுடன் கௌசிகர் மறித்துப் பேசினார்.

23. எப்படி வயது தீர்க்கமிஇரண்டேழான் நீச மாயும்
தப்பித மாறில் தங்கச் சாற்றுவோம் இரண்டு தாரம்
அப்படிச் சொல்லொ ணாது அந்தணன் ஏழைப்பார்க்க
ஒப்புடன் நவத்தைக் காரி உவந்துமே பார்த்த தாலே.

23. அவளுக்கு வயது எவ்வாறு தீர்க்கமாகும் ? இரண்டுக்கு உடையவனும் ஏழுக்கு உடையவனும் நீசமாக இருப்பதால், இவனுக்கு இரண்டு தாரம் என்பது எங்கள் அபிப்பிராயம், என்று கௌசிகர் சொல்ல, வசிஷ்டர் பதில் சொல்லுகின்றார். ஆயினும் குரு ஏழாமிடத்தைப் பார்ப்பதால் ஒரே தாரம்தான்.

**குறிப்பு.**—இப்பாட்டு இப்பொழுது பேசப்படும் ஜாதகத்திற்குப் பொருந்தாது என்பது எமது அபிப்பிராயம். வாசகர்கள் நோக்குக.

24. இருமனை யனுகா தையா எய்திடும் மனைவி ஒன்றே
வருமனை யிவன்முன் னாலே மறலியின் பதிக்குச் செல்வள்
திருகாகும் காலம் சொல்வாய் செப்புவோ மறுப தாண்டில்
உறைகுவளாம் கால னூடு உத்தமி கேட்டி டாயே.

24. ஆகையால் ஜாதகனுக்கு இருமனைவிகள் ஏற்படமாட்டார்கள். ஒரே மனைவிதான். ஆனால் அந்திய காலத்தில் இந்த ஜாதகனுக்கு மரணமேற்படுவதற்கு முன்பே இவள் மரணமடைவாள். அவளுடைய மரணகாலத்தைக் குறிப்பிடுவீராக என்று கௌசிகர் கேட்க, வசிஷ்டர் பதில் உரைத்தார். ஜாதகனுக்கு அறுபதாவது வயது நடக்கும்போது இவள் மரணமடைவாள், தாயே ! கேளுங்கள்.

25. சுதர்களு மாண்பா லொன்று தோகையு மிரண்டு தீர்க்கம்
பதராகும் மூன்று என்றோம் பஞ்சமம் ரவியி னாலே
முதல்நாலு ஆறும் சேதம் மொழிந்தது தப்பா தாகும்
அதிதியை ஆத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

25. இந்தத் தம்பதிகளுக்குப் புத்திரன் ஒருவன். புத்திரிகள் இருவர். இம் மூவரும் நீண்ட ஆயுளுடன் ஜீவிப்பார்கள். இவர்களைத் தவிர மூன்று குழந்தைகள் பிறந்து இறப்பார்கள். இரண்டாவது மூன்றாவது ஐந்தா வது குழந்தைகள் நீடிக்கும். முதலாவது நான்காவது ஆறாவது குழந்தைகள் நீடித்து வாழா. பக்தர்களை ஆதரிக்கும் தாயே! நாங்கள் சொன்ன மொழி தப்பாது.

26. இன்னவன் பூர்வம் தன்னை யியம்புவோ மினிமே லாகத்
தென்திசை பழனி நாட்டில் ஜனித்தனன் வைசியச் சேயாய்ப்
பொன்னொடு பணிதி பெற்று புகழாக வணிபம் செய்து
முன்னோர்க்கு அன்ன மீந்து உயர்வான தலங்கள் சென்றான்.

26. இனிமேல் இந்த ஜாதகனின் முன் ஜன்மத்தைப்பற்றிக் கூறு கின்றோம். இவன் முற்பிறவியில் தென் திசையிலுள்ள பழனியில் வைசிய னாக பிறந்து, புகழுடன் வாணிபத்தைச் செய்து வந்தான். செல்வத்தையும் ஆபரணங்களையும் அடைந்து, சுகமாக வாழ்ந்தான். பிராம்மணர்களுக்கு அன்னதானம் செய்தான். பெருமை வாய்ந்த புண்ணிய ஸ்தலங்களுக்குச் சென்றான்.

27. அறமதி லிச்சை யுண்டாய் அந்தகன் நகர டைந்து
பிரமனால் வரையப் பட்டுப் பிறப்பனு மிந்தப் பாலன்
உரைகிறோ மிவனின் யோகம் உணவுக்குக் குறைவு றுதான்
அரசர்கள் பேட்டி கொள்வன் அதிகாரம் சிலநாள் செய்வன்.

27. மற்றைய தருமங்களையும் விரும்பிச் செய்தான். அந்திய காலத்தில் மரணமடைந்த இவன், பிரம்ம தேவனால் இங்குப்பிறப்பிக்கப்பட்டிருக்கிறான். இவனது யோகங்களைக் கூறுகின்றோம். ஆகாரத்திற்குக் கஷ்டப்படமாட்டான். [வறுமை இல்லாதவன் என்பது கருத்து.] அரசர்களைப்பேட்டி காண்பான். சிலகாலம் ராஜாங்க உத்தியோகத்தில் இருப்பான்.

28. எந்தக்கா லத்தில் நேரும் இயம்புவீர் முனியே நீர் தாம்
வந்தவ னிருபனெறு ஆண்டின் மேல் கிராமச் செட்டு
விந்தையாய் நேரு மென்றோம் விசித்திர இல்லம் தானும்
சந்ததம் முப்ப தாண்டில் செய்வனு மிந்தப் பாலன்.

28. எந்தக் காலம் வரையில் உத்தியோகம் செய்வான்? இவ் விஷயத் தைக் கூறுமெனப் பார்வதி கேட்க, முனிவர் பதில் கூறுகின்றார். ஜாதகன் இருபத்தாறாவது வயது மட்டும் உத்தியோகம் செய்வான், அதற்குமேல் கிராமத்திலேயே வியாபாரம் செய்வான். முப்பதாவது வயதில் அழகிய வீடு நிர்மாணிப்பான்.

**29.** தந்தைக்கு மேலாய் வாழ்வன் சாராள்க ளுடைய னுகும்
தன்தனம்பூமி மூலம் சார்ந்திடும் முப்பதாண்டில்
பந்துவும் மதிக்க வாழ்வன் பகவானின் பக்தி பூண்பன்
நிந்தைகள் எற்கா னுகும் நிமலியே கேட்டி டாயே.

**29.** தந்தைக்கு மேலாக (சிறப்பாக) வாழ்வான். நல்ல சேவகர்களை உடையவனுவான். முப்பதாவது ஆண்டில் பூமிகள் மூலம் இவனுக்குத் தனம் கிடைக்கும். உறவினர்கள் போற்றும்படி வாழ்வான். கடவுளிடம் பக்தி கொண்டவன். ஒருவனும் இவனைப் பழிக்க மாட்டான். நிமலியே! கேளுங்கள்.

**30.** தனமது எவ்வாறு நேரும் சாற்றுவீ ரந்தச் சங்கை
கனமுள குருவும் திங்கள் கனத்தலா பத்தில் தங்கச்
சினமிலா நேரு மென்றேம் தரணிகள் விருத்தி யுண்டு
வினையிலாக் கூவல் சோலை வித்தகன் செய்வா னுகும்.

**30.** இவனுக்குப் பூமிகள் மூலம் தனம் கிடைக்கு மென்று சொன்னீர்களே ! எந்தக் கிரகங்களைச் கொண்டு அவ்வாறு உரைத்தீர்கள் ? எனப் பார்வதி கேட்க, முனிவர் பதில் கூறினுர். பாக்கியாதிபதியாகிய குருவும் லக்கினுதிபனுகிய சந்திரனும் லாபஸ்தானத்தில் [விருஷப]த்தில் இருப்பதால் பூமிகளால் பாக்கிய விருத்தியுண்டு. பூமிகளும் சேரும். கிணறுகளையும் தோட்டங்களையும் இவன் நிறுவுவான்.

**31.** ஈரெட்டு ஆண்டுக் குள்ளே இவன்தந்தை கண்ட மெய்தும்
கூறுவோம் முப்பான் மூன்றில் குறிக்கிறே மன்னை கண்டம்
மாசனுக் கறுபான் மூன்றில் மார்கழி மாதம் தன்னில்
சேருவான் கால னுடு செல்வதி கேட்டிடாயே.

**31.** இவனுடைய பதினுருவது வயதிற்குள் இவன் தந்தைக்குக் கண்டம் ஏற்படும். [மரணமடைவான் என்பது கருத்து.] ஜாதகனுடைய முப்பத்து மூன்ருவது வயதில் அவன் தாய் மரணமடைவாள். சாதகனும், தனது அறுபத்து மூன்றும் வயதில் மார்கழி மாதத்தில் யமனுலகம் செல்லுவான். தாயே ! கேளுங்கள்,

**32.** பின்சென்மம் கலிங்கு நாட்டில் பிறப்பனு மிக்கு லத்தில்
மன்னர்பா லரசு செய்து மாரனும் வாழ்வா னுகும்
அன்னவன் சென்ற காலம் அரவுதன் தசையி லேதான்
சொன்னேனே ஆண்டு எழும் திங்களும் ஆற தாகும்.

**32.** ஜாதகனுடைய பின் பிறவியைப்பற்றிக் கூறுகின்றேம். இவன் கலிங்கநாட்டில் பிராம்மண சாதியிலேயே பிறப்பான். அரசர்களிடம் உத்தியோகம் செய்து சீவிப்பான். இவன் ஜனித்த காலத்தில் ராஹு தசையில் இருப்பு வருஷங்கள் ஏழு ; மாதங்கள் ஆறு.

33. வந்தவன் தனக்கு ரோகம் மாதுரு பிணிஅ நேகம்
தன்தனம் செலவு முண்டு சதுஷ்பாதம் சேத மெய்தும்
பந்துவால் சூத முண்டு பகர்ந்தனம் பூர்வ பாகம்
இந்திர னிறைஞ்சு மாதே இயம்பின மொழிகுன் றுது.

33. இந்த தசையின் பலன்களைச் சொல்லுகின்றோம். ஜாதகனுக்கு ரோகம் கண்டிடும். தாய்க்கும் பலவிதப் பிணிகள் வரும். வீண் செலவு களும் அதிகமாகும். கால்நடைகளுக்கும் சேதம் ஏற்படும். பந்துக்கள் மரணமடைவார்கள். இது பூர்வபாக மாகையால், சுருக்கமாகவே சொல்லி இருக்கிறோம். இந்திரனால் போற்றப்படும் தாயே ! எங்களது சொல் பொய் யாகாது.

---

## ஜாதகம் 21.

1. பொன்சனி மேரு வாகப் புதன்புகர் மான தாகச்
செந்தீயும் குடம தாகச் சந்திரன் மீனம் புக்க
மன்னிய சேயும் சீயம் மதிப்புகை தேளதாக
இன்னவாறு கிரகம் நின்று லக்கினம கடக மாக.

| சந்திரன் | | கேது | |
|---|---|---|---|
| சூரியன் | இராசி சக்கரம் | | லக்கினம் |
| புதன் சுக்கிரன் | | | செவ்வாய் |
| குரு சனி | ராகு | | |

1 சார்வாரி வருஷம் மாசி மாதம் 11-ந் தேதி வெள்ளிக்கிழமை பிற்பகல் ஜனனம். [ஆங்கிலத் தேதி 22—2—1901] நவக்கிரஹ பாத சாரம் :—சதயம் 2-இல் சூரியன். ரேவதி 3-இல் சந்திரன். மகம் 3-இல் அங்காரகன். பூரட்டாதி 3-இல் புதன். பூராடம் 1-இல் குரு. அவிட்டம் 1-இல் சுக்கிரன். பூராடம் 3-இல் சனி. அனுஷம் 1-இல் ராகு. கிருத்திகை 3-இல் கேது. நக்ஷத்திரம் ரேவதி. புததசை இருப்பு வருஷங்கள் ஏழு ; மாதங்கள் பத்து.

1. குரு சனி தனுஸிலும், புதன் சுக்கிரன் மகரத்திலும், சூரியன் கும்பத்திலும், சந்திரன் மீனத்திலும், செவ்வாய் சிம்மத்திலும், ராகு விருச்சிகத்திலும், கேது விருஷபத்திலுமிருந்து இலக்கினம் கடகமாகவு மிருந்தால், இந்த ஜாதகத்தின் பலனைச் சொல்லுவீர்களாக எனப் பார்வதி வினவினுள்.

குறிப்பு.—பாட்டில் கண்டிருக்கிற ராசியில் புதனை எழுதியிருக்கிறோம். திருக்கணித பஞ்சாங்கப்படி புதனின் பாதசாரம் மிகவும் வேறு பட்டிருக்கிறது.

2. பலன்தனைச் சொல்லு மென்று பார்வதி கேட்கும் போது
புலத்தியர் சொல்லு கின்றார் பிறந்தது ஆண்பால் ஜன்மம்
தலமது கீழ்மேல் வீதி சண்டன்தன் வாடை யாகும்
நலமுள பேரூராகும் நரிவா ஞுத்தாள் தந்தி.

2. இவ்வாறு உமாதேவி கேட்டவுடன், புலஸ்த்தியர் கூறுகின்றார் பிறந்த குழந்தை ஆண். வீதி கிழக்கு மேற்கில் அமைந்திருக்கும். வீடு தென் வரிசையில் இருக்கும். ஊரும் பெரியதாக இருக்கும். காளியும் விநாயகரும் ;

3. உத்தரம் தங்கு மென்றோம் உயர்ந்தவன் இரு பாலாகும்
வித்தகன் சேஷ்ட ளுக விளம்புவோம் வலையர் வர்க்கம்
பெற்ற தாய் தந்தையோக பின்துணை களத்திர புத்திரர்
சுத்தமாய் முன்பின் ஜன்மம் செப்புவோ மிந்நூல் தன்னில்.

3. வடதிசையில் இருப்பார்கள். இந்த ஜாதகனே அவர்கள் குடும்பத்திற்கு ஜ்யேஷ்ட புத்திரன் ஆவான். பிறந்தவன் வலையர் (செம்படவர்) சாதியைச் சேர்ந்தவன். இவனுடைய தாய் தந்தை சகோதரர் களத்திரம் புத்திரர் இவர்களைப் பற்றியும் முன்பின் ஜன்மங் களைப்பற்றியும் இந்நூலில் சொல்லப் போகின்றோம்.

4. தந்தையின் துணைவ ரேழில் ஆணது ரண்டே தீர்க்கம்
முன்பின்னாய்த் தோன்று மென்றோம் மேவுவார் வேறு கத்தான்
இந்தவன் தந்தை சேதி யிருநிறம் உளைச்ச லுண்டு
சொன்னசொல் காப்பா ளுகும் சோம்பிடான் காரி யத்தில்.

4. ஜாதகனின் சகோதரர்களைக் கூறுகின்றோம். ஏழு உடன் பிறந்தார் கள். அவர்களில் சிலர் இவனுக்கு முன்பும், சிலர் பின்பும் ஜனித்திருப் பார்கள். ஆனால் ஏழு உடன் பிறந்தார்களில் இரண்டு ஆண் சகோதரர் களே நீண்டு வாழ்வார்கள். அவர்களும் தனியாக வசிப்பார்கள். ஜாதக னின் தந்தை கருத்த மேனியான். மெல்லிய சரீர முள்ளவன். தான் சொன்ன சொற்படியே நடப்பான். காரியத்தைச் செய்வதில் சோம்பல் இல்லாதவன்.

5. வித்தையு மதிக மில்லான் வீண்வம்பில் செல்லா ளுகும்
சுத்தமு மில்லாளுகும் சொல்லதைக் கேட்பா ளுகும்
பத்தினிக் கடக்க மாவன் பார்வையும் சாயல் கொஞ்சம்
நத்தினோர்க் குதவி செய்வன் நாயகன் வெகுளி யாவன்.

5. கல்வி அதிகம் கல்லாதவன். வீண் வம்பில் சேராதவன். பரி சுத்த மில்லாதவன். பிறர் சொன்ன வார்த்தைகளைக் கேட்பான். தன் மனைவியிட்ட ஆணையை மீறாதவன். சாய்ந்த பார்வையை உடையவன். தன்னை அடைந்தவர்களுக்கு உதவிசெய்வான். கபடமில்லாதவன். [பிறர் அறியாதபடி மனத்தில் வைத்துக்கொள்ளவேண்டிய ரஹஸ்யத்தையும் வெளியிடுவான் என்பது கருத்து.]

6. சல்லியம் கொள்ளா ளுகும் சாந்தவான் வறுமை காணுன்
நல்லவன் நல்ல வர்க்கு நற்றொழில் புரியா ளுகும்
கொல்தொழில் புரிவா ளுகும் கூறுவீர் சங்கை தன்னைப்
புலகுவோம் மச்சம் தன்னை பிடிப்பனு மென்று சொல்வோம்,

6. இவன் கடன் வாங்கமாட்டான். சாந்தகுணம் வாய்ந்தவன். வறுமை இல்லாதவன். நல்லவர்களிடம் நல்லவனாகவே நடந்துக்கொள்வான். நல்ல தொழிலைச் செய்யமாட்டான். கொல்லும் தொழிலேயே தனது சீவனோபாயமாக வைத்துக் கொள்வான் என, முனிவர் சொன்னவுடன் தேவி கேட்கலுற்றாள். கொலைத் தொழிலையே ஜீவனோபாயமாக வைத்துக் கொள்வான் என்றால் அதன்பொருளை விளக்கமாகச் சொல்லவில்லையே! தெளிவாகச் சொல்லுங்கள் என, முனிவர் கூறுகின்றார். மீன்களைப் பிடித்து, அவைகளை விற்று அதனால் கிடைக்கும் பணத்தைக் கொண்டு ஜீவிப்பான்.

7. இல்லமும் செய்வா னாகும் இவன்துணை மேலாய் வாழ்வன்
தல்விதா யிஷ்ட முண்டு சம்பத்துப் பின்னால் நேரும்
வல்லியும் வர்க்கம் விருத்தி மறுத்துரை அதிகம் கூறான்
எல்லைபின் னாலே சேர்ப்பன் இடர்செய்யான் யாவ ருக்கும்.

7. புதிய வீடு கட்டுவான். இவனுடைய சகோதரர்களைவிட சிறப்பாக வாழ்வான். தாய் தந்தையர்களிடம் பக்தியோடிருப்பான். இவனுக்குச் செல்வம் பிற்காலத்தில்தான் சேரும். பெண்சாதியின் வருக்கம் செழிப்படையும். பிறர்சொல்வதை ஆக்ஷேபித்துக் கூறமாட்டான். பிற்காலத்தில் தான் நிலங்களைச் சேர்ப்பான். யாருக்கும் இடையூறுகளைச் செய்யமாட்டான்.

8. சொன்னயிக் குணத்தா னுக்குச் சுதனுமே உதிப்பா னாகும்
இன்னவன் குணத்தைக் கேளாய் இன்பச் சொல் மாஞ்சிவப்பன்
அன்னியர் மதிக்க வாழ்வன் அஞ்சிய வார்த்தை சொல்வன்
பன்னியே பேசுவானும் பல்கலை அறிவா னாகும்.

8. இப்படிப்பட்ட குணமுள்ள தந்தைக்கு இந்த ஜாதகன் மகனாகப் பிறந்திருக்கிறான். ஜாதகனின் குணங்களைச் சொல்லுகிறோம். இன்பமாகப் பேசுவான். மாந்தளிர் போன்ற நிறமுள்ளவன். பிறர்மதிக்கும் வகையில் நடந்துகொள்வான். பிறர்மனம் நோகாதவாறு பயந்தே பேசுவான். பேசப்படும் விஷயங்களை மறுபடியும் மறுபடியும் பேசிக்கொண்டே இருப்பான். பல கலைகளையும் அறிந்திருப்பான்.

9. சுயதொழில் செய்வனாகும் தோகையர் மோக வானும்
பயமிலான் எதிரிக் கஞ்சான் பாரது சேர்ப்பா னாகும்
தயையுள மனத்த னாகும் சற்பாத்திரன் பெரியோர் நேயன்
அயலார்பொன் னிச்சை யுள்ளான் அவனியில் செட்டும் செய்வன்.

9. தன் ஜாதித்தொழிலையும் செய்வான். பெண்களிடம் மையல் கொண்டவன். பயமில்லாதவன். எதிரிகளைக்கண்டும் சிறிதுகூட அஞ்சமாட்டான். பூமிகளைச் சேர்ப்பான். பிறருடைய ஆதரவிற்குப் பாத்திரமானவன். பெரியோர்களுக்கு நண்பனாவான். பிறர்சொத்தில் சிறிது ஆசை உள்ளவன். இவன் வியாபாரமும் செய்வான்.

10. தந்தைக்குத் தாழ்வு ருதரன் தனமிகப் பெருக்கம் செய்வன்
பிந்திவே றில்லம் செய்வன் பிதாவர்க்கம் நசிக்க வைப்பள்
வந்தவர்க் கன்ன மீவன் மருமமு மில்லா ருகும்
தன்துணை யெழுவர் தோன்றும் தங்காவே சிலவே என்றோம்.

10. தந்தையை விடக் கீழாக வாழமாட்டான். [தந்தை வாழ்ந்தது போலவே இவனும் வாழ்வான் என்பதுக் கருத்து.] தனத்தை அதிகமாகச் சேர்ப்பான். பிற்காலத்தில் வேறு ஒரு வீடு கட்டுவான். பங்காளிகளை ஓங்கச் செய்யமாட்டான். தன் வீடு நாடிவந்தவர்களுக்கு அன்னமளிப் பான். கபடமில்லாதவன். இவனுக்கு ஏழு உடன் பிறந்தவர்கள் ஜனிப் பர். சிலரே நீடித்து வாழ்வர். சிலர் நசிப்பர்.

11. கன்னிகை மூவ ராகும் காளையு யொன்று தீர்க்கம்
பின்துணை பெண்பால் நேரும் பேசுவோ மதன்பின் ஆண்பால்
அன்னவன் சேதி சொல்வேன் அடாவடி வார்த்தை சொல்வன்
முன்கோப மூர்க்க னுவன் மொழியது இரண்டு முண்டு.

11. மூன்று சகோதரிகளும் ஒரு சகோதரனும் நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள். அந்த மூன்று சகோதரிகளும் இந்த ஜாதகனுக்குப் பிறகு செனிப்பார்கள். அவர்களுக்குப் பிறகு ஒரு சகோதரன் பிறப்பான். [ஆக நான்கு உடன் பிறந்தவர்கள்.] அந்தச் சகோதரனின் குணங்களைச் சொல்லுவோம். விதண்டா வாதம் செய்வான். முன் கோபி. பிடிவாத முள்ளவன். சொன்ன வார்த்தைப்படி செய்யமாட்டான். பேச்சை மாற்றி மாற்றிப் பேசுவான்.

12. சுகமுள குடும்பி யாவன் சுயதொழில் புரிவா னுகும்
ஊகமாய்க் கதைகள் சொல்வன் ஒண்டொடி ஒன்று தீர்க்கம்
பகைசெய்வன் சிலருக்கு என்றோம் பாலர்கள் ஆண்பால் நான்கு
தகமையாய்ட் பெண்பால் ரண்டு சாற்றினோம் தீர்க்க மாக.

12. நிம்மதி நிறைந்த குடும்ப முள்ளவனுவான். தன் ஜாதித் தொழிலைச் செய்வான். கதைகளைக் கற்பனையோடு சொல்லும் திறமை உடையவன். ஒரு மனைவி தீர்க்கமாக வாழ்வாள். சிலரைப் பகைத்துக் கொள்வான். அவனுக்கு [ஜாதகனின் சகோதரனுக்கு]ப் பிள்ளைகள் நான்கு. பெண்கள் இருவர். இவர்கள் எல்லோரும் தீர்க்கமாக வாழ் வார்கள்.

13. சிலது நாள் ஒன்றுய் வாழ்ந்து செல்லுவான் வேறதாகத்
தலைவிமார் சேதி யாவும் சாற்றுவோம் பின் பாகத்தில்
நலமுள மணத்தின் காலம் நாட்டுவோம் பதினு ருண்டில்
குலவுவாள் அன்னை வர்க்கம் குடதிசை யென்று சொல்லும்.

13. சிலகாலம் அண்ணனோடு ஒன்றுகக் குடித்தனம் செய்து, பிறகு தனியே வாழ்வான். சாதகனின் சகோதரிகளைப் பற்றிய வரலாறுகளைப் பின் பாகத்தில் சொல்லப் போகின்றோம். ஜாதகன் விவாஹ காலத்தைக்

கூறுகின்றோம். இவனுக்குப் பதினான்காவது வயதில் விவாஹம் நடைபெறும். மணப்பெண் மேற்குத் திசையில் தாய் வருக்கத்தில் ஜனித்திருப்பாள்.

14. மாதுவின் குணத்தைச் சொல்வேன் மாரன்தன் மனம்போல் [வாழ்வள்
தீதிலாள் முன்கோ பத்தாள் செல்வியு மிரு நிறத்தாள்
மேதினில் பாட்டாளி யாகும் விரைவினில் நடக்க வல்லாள்
காதலி யோக சாலி கழறுவாள் சிலேடை வார்த்தை.

14. சாதகனின் மனைவியின் குணத்தைச் சொல்லுகின்றோம். கணவனது மனப்படி நடப்பாள். தீயகுணங்கள் இல்லாதவள். சிறிது முன்கோபம் மாத்திரம் உண்டு. கருத்த மேனியாள். ஊக்கமாக உழைப்பாள். அவளது நடை வேகமாக இருக்கும். நல்ல அதிருஷ்ட முள்ளவள். சிலேடை வார்த்தைகளைப் பேசுவாள்.

15. மாதுலன் மகவே யாகும் வருவோரை யாத ரிப்பள்
போதனம் பணிகள் சேர்ப்பள் புத்திர தோஷ மாகும்
ஓதுவீ ரந்தச் சங்கை உரகனு மஞ்சில் தங்க
ஆதவன் எட்டில் தங்க அறைந்தனம் புத்திர தோஷம்.

15. ஜாதகனுக்கு அவள் மாமனுடைய மகள் தான் மனைவி. விருந்தாளிகளை ஆதரிப்பாள். அதிக நகைகளைச் சேர்ப்பாள். புத்திர தோஷமும் உண்டு. எவ்வாறு புத்திர தோஷம்? அதைத் தெளிவாகக் கூறுமெனப் பார்வதி கேட்க, முனிவர் பதில் கூறுகின்றார். ராஹு ஐந்தில் இருப்பதாலும், குடும்பாதிபனாகிய சூரியன் எட்டில் இருப்பதாலும் புத்திர தோஷமுண்டு என்று சொன்னோம்.

16. இதுவன்றிப் பூர்வம் தன்னில் எய்திற்று வினைஅ நேகம்
அதுவினை சொல்லு மென்ன அச்சிறு பாக்கம் கீழ்ப்பால்
நதிஓரம் செக்கான் வம்சம் நல்கியே வணிபம் செய்து
அதிபதி மனைவி யுண்டாய் வாழ்நாளில் வினையைக் கேண்மோ.

16. மேலும் முற்பிறவியில் இவன் அதிக பாவங்களைச் செய்தான். எந்தெந்தப் பாவங்களைச் செய்தான் இவன்? சொல்லுங்கள் எனப் பார்வதி தேவி உத்தரவிட, முனிவர் கூறுகின்றார். இவன் முன் பிறவியில் அச்சிறு பாக்கம் என்ற ஊருக்குக் கிழக்குத் திசையில் ஆற்றங்கரையில் உள்ள ஓர் ஊரில் வாணியச் செட்டி குலத்தில் பிறந்து, வாணிபம் செய்து வந்தான். மனைவி மக்களுடன் சுகமாக வாழும் நாளில் இவன் செய்த பாவங்களைக் கேளுங்கள்.

17. நந்திமே லதிகபாரம் நாட்டினனி நந்தபாலன்
தன்னில்லம் நாகம் தன்னைத் தரிபடச் செய்தா னென்றோம்
மன்மதனுடல் செய்தான் மாதுமே நீச மென்றோம்
இந்தவாறு தோஷத் தாலே இயம்பினோமந்தச் சங்கை.

**17.** தனது காளைகளின் மேல் அதிகச் சுமையை ஏற்றி வைத்து சுமந்து செல்லும்படி அவைகளை வாட்டினான். தன் வீட்டில் வெகு நாளாக வசித்து வந்த சர்ப்பத்தைத் துண்டித்துக் கொன்றான். பல பெண்களிடம் தன் மனம் போனபடி நடந்தான். ஆக இவ்வாறான பெரிய பாவங்களால் இவனுக்கு இந்த ஜன்மத்தில் புத்திர தோஷம் ஏற்பட்டிருக்கின்றது.

**18.** முறையிலா மாது மோகம் மேவினானிவனே யென்றும்
திருமக ளந்தி யத்தில் சிறுத்தது குடும்பம் தானும்
மறவிமின் பதிக்குச் சென்று மால்மகன் வரையப்பட்டு
மலையிறை வர்க்கம் தன்னில் மருவுவா னிந்த பாலன்.

**18.** முறை இல்லாத பெண்ணிடமும் இவன் மோகம் கொண்டான். ஆகையால் அந்த ஜன்மத்திலேயே அந்திய காலத்தில் இவனது குடும்பம் செல்வமிழந்து கஷ்டமடைந்தது. பிறகு யமனுலகம் சென்ற இவன், விஷ்ணு புத்திரனாகிய பிரம்மதேவனால் இக் குலத்தில் பிறப்பிக்கப்பட்டிருக்கிறான்.

**19.** முன்ஜன்மம் நாக சாபம் மேவிடும் இச் சென்மத்தில்
தன் சுதர் தோஷமெய்தும் தனையன் முன் சென்மம் தன்னில்
உன்னத செக்கான் வம்சம் உதித்த வனிச் ஜன்மத்தில்
தன்குலம் தாழ்வ தாக ஜனிக்குங்கா ரணங்க ளெவ்வாறு.

**19.** முன் ஜன்மத்தில் சர்ப்பத்தைக் கொன்ற பாவத்தினால் இந்த சென்மத்தில் புத்திரதோஷம் உண்டு. பார்வதி கேட்கின்றாள். முன் சென்மத்தில் உயர்ந்த வாணியச் செட்டி வமிசத்தில் பிறந்த இவன் இப்பொழுது தாழ்ந்த சாதியில் ஏன் பிறந்தான்? அதன் காரணத்தை விளக்கிச் சொல்லுங்கள் எனக்கேட்டாள்.

**20.** நீசபோ கத்தினாலும் நந்திமேல் பாரம் வைத்தும்
வேசிபோல் முறைக ளன்றி வித்தகன் போகம் செய்தும்
தோசியாயிக்குலம் தான் ஜயமுனி கேட்க லுற்றார்
பேசினீர் பூர்வ தோஷம் புகல்விருத்தி யாகச் சாந்தி.

**20.** விலை மாதர்களைப்போல, கொஞ்சமும் முறையின்றிப் பெண்களிடம் ஆசை வைத்தமையாலும், காளைகள் மேல் அதிக பாரத்தை ஏற்றி, அவைகளை வருத்தியதாலும், இவன் தாழ்ந்தக் குலத்தில் பிறந்திருக்கின்றான் என்று முனிவர் பதிலுரைத்தார். ஜய முனிவர் வினவினார். புத்திர தோஷம் உண்டு என்று சொன்னீர். அந்தத் தோஷம் விலகிப் புத்திர விருத்தி ஏற்படுவதற்குத் தகுந்த சாந்திகளைச் சொல்லும் எனக் கேட்டார்.

**21.** புகலுவீர் முனியே நீர்தான் புத்திரன் மனைவி யோடு
ஜகமதினுயர்வ தான தென்திசை மலையூர்க் கேகி
மிகு சதையெலும்பு கொள்ளும் வித்தகிக் கபிஷேகித்து
தகைமையாய் வில்வம் தன்னால் சகஸ்ர அர்ச்சனையும் செய்து ;

**21.** இவன் புத்திரப்பேற்றை அடைந்து, சுகமாக இவ்வுலகில் வாழ வேண்டுமானால், தென் திசையிலுள்ள மலே ஊருக்குச் சென்று, அங்கு மாமிசங்களையும் எலும்புகளையும் உட்கொள்ளும் காளிதேவிக்கு அபிஷேகம் செய்து, வில்வதளத்தினால் சகஸ்ரநாம அர்ச்சனை பண்ணி ;

**22.** நாகமும் சிலையில் செய்து நாயகி கோஷ்டம் தன்னில்
பாகமாய் வைத்துப் பின்பு பணிவெள்ளி அதனால் செய்து
ஆகமமு முணர்ந்தோ ருக்கு ஆதிபம் தன்னைச் சேர்த்து
பாகமாய் யில்லம் செய்து எப்போதும் கார்த்தி நோன்பு ;

**22.** கல்லில் ஒரு சர்ப்பத்தைச் செய்து, அதை அக் காளி கோயிலிலேயே பிரதிஷ்டை பண்ணி, அதற்குப் பிறகு வெள்ளியினால் ஒரு சர்ப்பம் செய்து, வேதமோதும் அந்தணர்க்கு தக்ஷிணையுடன் அந்த நாகத்தைக்கொடுக்க வேண்டும். எப்போதும் இடை விடாமல் கிருத்திகை விரதம் ;

**23.** விரதமே கொள்வா னாகில் விடுகிடும் முன்னூழ்த் தோஷம்
வருஞ்சுதர் ஆண்பா லொன்று மங்கைமார் இருவர் தீர்க்கம்
திருகென்று செய்யா னாகில் ஜனிக்காது ஜனிக்கில் தீதாம்
பெருவயி றோனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

**23.** அனுஷ்டிப்பானாயின் முன்ஜன்மத்தில் செய்த பாவம் நீங்கி, புத்திரன் ஒருவனும் பெண்கள் இருவரும் ஜனித்து நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள். பரிகாரங்களைச் செய்யாவிட்டால் குழந்தைகள் பிறக்க மாட்டார்கள். பிறந்தாலும் இறப்பார்கள். விநாயகரைப் பெற்ற புண்ணிய சாலியே ! (ஜாதகனின் அன்னையின் குணங்களைச் சொல்லுகிறோம்.) கேளுங்கள்.

**24.** அன்னைமா நிறத்தா ளாகும் ஆளனுக் கினிய ளாகும்
தன் துணை ஆண்பால் நான்கு தையலர் ஒன்று தீர்க்கம்
பின்னமா மற்ற வெல்லாம் பேதையில் இடறு வென்றோம்
பன்னியே பேசு வாளாம் பாட்டாளி யென்று சொல்வோம்.

**24.** தாய் மாநிறமுள்ளவள். தன் கணவனுக்குப் பிரியமாக நடந்து கொள்வாள். அவளுக்குச் சகோதரர்கள் நால்வர். ஒரு சகோதரி. மற்றைய உடன் பிறந்தார்கள் குழந்தைப்பருவத்திலேயே இறப்பார்கள். அவள் பேசியதையே மறுபடி மறுபடி பேசுவாள். நல்ல உழைப்புள்ளவள்.

**25.** மனமது நல்ல தாகும் வருவோரை ஆத ரிப்பள்
இனமது மெச்ச வாழ்வள் இடுக்கமாம் குணமும் கொஞ்சம்
வனிதையின் பூர்வம் சொல்வேன் ஆலங்காட் டதற்குக் கீழ்ப்பால்
சினமிலா வன்னிய வம்சம் ஜனித்துமே மதலை யுண்டாய் ;

**25.** நல்ல மனம் படைத்தவள். தன் வீட்டிற்கு வந்தவர்களை நன்றாக ஆதரிப்பாள். தன் ஜாதியார்கள் கொண்டாடும்படி வாழ்பவள். சில கெட்ட

குணங்களும் உண்டு. இவளுடைய பூர்வ ஜன்மத்தைப் பற்றிச் சொல்லு கின்றேம். ஆலங்காடு என்ற கிராமத்திற்குக் கீழ்த் திசையில் உள்ள ஊரில் வன்னிய குலத்தில் பிறந்து, மணமாகி, மக்களைப் பெற்று வாழும் காலத்தில்

26. விரதாதி முட்டு செய்து வீண்பழி பெற்ரு ளென்றேம்
வரன் சொல்லைத் தடுத்து வாழ்ந்தாள் மாதுவு மந்தி யத்தில்
இருவிழி குற்ற மாயும் இருசெவி மந்த மாயும்
மறலியின் பதிக்குச் சென்று மலரயன் வரையப்பட்டு ;

26. கிருத்திகை விரதம் போன்ற நற்காரியங்களுக்கு இடையூறுகளை உண்டு பண்ணியதால் அவதூறை அடைந்து வாழ்ந்தாள். அந்தப் பாவத்தினுல் இவளுக்கு அந்தியகாலத்தில் இரு கண்களும் குருடாயின. இரு காதுகளும் செவிடாயின. பிறகு யமனுலகம் சென்ற இவள் பிரம்ம தேவனுல் படைக்கப்பட்டு ;

27. வந்தனள் வலையர் வம்சம் மாதுவும் வறுமை காணுள்
தன்தனம் பெருக்கம் செய்வள் சாற்றுவோமிவள் பின் ஜன்மம்
கந்தன்வாழ் பழனி தன்னில் கலப்பளாம் வைசியச் சேயாய்த்
தந்திமா முகனைப் பெற்ற தயாபரி கேட்டி டாயே.

27. இந்த வலையர் ஜாதியில் பிறப்பிக்கப்பட்டிருக்கின்ருள். வறுமை இல்லாதவள். தனது செல்வத்தை விருத்தி செய்வாள். இவளுடைய மறு பிறவியையும் சொல்லுகின்றேம். சுப்பிரமணிய சுவாமி எழுந்தருளி இருக்கும் பழனியில், வைசிய குலத்தில் பிறப்பாள். விநாயகரைப் பெற்ற தாயே ! கேளுங்கள்.

28. இவன்பிதா பூர்வம் தன்னை யியம்புவோ மினி மே லாகத்
தவசிவாழ் மலைநாட தனில் ஜனித்தனன் குலால வம்சம்
அவனியில் பாண்டம் செய்து யாவர்க்கும் உதவி செய்து
சிவனடி ஓர் நாள் தன்னில் சென்றுமே பாண்டம் கேட்க ;

28. ஜாதகனின் தந்தையினுடைய பூர்வஜன்மத்தைக் கூறுகின் றேம். அகஸ்திய முனிவர் வாசம் செய்யும் பொதிய மலையில், குயவர் ஜாதியில் பிறந்து, மண் பாத்திரங்களைச் செய்து, அவைகளைப் பிறர்க்குக் கொடுத்து உதவினுன். இவ்வாறு இருக்கையில் ஒரு நாள் சிவனடியார் ஒருவர் அவனிடம் சென்று ஒரு மண்பாத்திரம் யாசிக்க ;

29. குற்றமாம் பாண்டம் தன்னைக் கொடுத்தனன் அவர்கள் வாங்கிச்
சற்றினில் சமையல் செய்யத் தானது விரியக் கண்டு
அற்றவர் மனவெ றுப்பால் அறைகிருர் சாபம் தானும்
மற்றெரு ஜன்மந் தன்னில் வலையர்தம் குலமே தோன்றி ;

29. இவன் சிறிது சேதமடைந்த ஒரு பாத்திரத்தை அவர் கையில் கொடுத்து, அவரை அனுப்பிவிட்டான். நல்ல பாத்திரம் என்றே எண்ணி வாங்கிச் சென்ற அந்தச் சிவனடியார் அதை அடுப்பில் வைத்துச் சமையலுக் குத் தொடங்குகையில், அஃது உடைந்து விட்டது. உடனே இவனிடம் வெறுப் படைந்து, மறு பிறவியில், நீ, வலையர் ஜாதியில் பிறந்து ;

30. வாழ்குவா யென்று சொல்ல மருவிற்று அந்தத் தோஷம்
ஆதியில் வேறு காணன் அந்தகன் பக்கல் சென்று
தாழ்வான விக்கு லத்தில் ஜனித்தனனென்று சொல்வோம்
சூழலே வேறு ஜன்மம் செப்புவோ மினிமே லாக.

30. வாழ்வாயெனச் சாபமிட்டார். அந்த சாபம் இவனை அடைந்தது. முன்ஜன்மத்தில் வேறு பாவம் இவன் செய்தவனல்லன். ஆகவே, அந்த ஒரு பாவமே இவனை இத்தாழ்வான குலத்தில் பிறப்பித்துவிட்டது. இவனுக்கு அடுத்து வரும் ஜென்மத்தையும் இங்குக் கூறுகின்றோம்.

31. [1] சிங்க நாடதனிலேதான் ஜனிப்பனும் சைவச் சேயாய்
இங்கிவன் செய்த புண்ணியம் இயம்புவீர் முனியே நீர் தாம்
அங்கம்மை பக்தி யாயும் அறிவோர்க்கு உதவி யாயும்
துங்கமா மனத்த னுயும் செப்புவோம் சைவச் சேயாய்.

31. இவன் மறுஜன்மத்தில் சிங்கநாட்டில் சைவ குலத்தில் பிறப்பான். மறு பிறவியில் சைவ குலத்தில் பிறப்பதற்கு இந்த ஜன்மத்தில் இவன் என்ன புண்ணியம் செய்தான் என்று தேவி கேட்க, முனிவர் பதில் கூறுகின்றார். இவன் (ஜாதகனின் தந்தை) உலக மாதாவாகிய உங்களிடம் பக்தி பூண்டிருப்பதாலும், அறிவிற் சிறந்தவர்களுக்கு உதவியமையாலும், விசால மனப்பான்மையோடு விளங்கியதாலும் மறுபடி உயர்ந்த சைவ குலத்தில்தான் பிறப்பான்.

32. முப்பது ஆறு ஆண்டில் மேவுவான் கால னூடு
அப்போது ரவியின் காலம் அறைந்தனம் பால னுக்கு
செப்புவோம் தன்மே லாக ஜீவிப்பா ளன்னை தாமும்
ஒப்புடன் நாற்ப தாண்டில் உறங்குவாளென்று சொல்வோம்.

32. ஜாதகனுக்கு முப்பத்தாறுவது வயது நடக்கும்போது ஜாதகனின் தந்தை மரணமடைவான். அப்போது ஜாதகனுக்குச் சூரியதசை நடைபெறும். அதற்குப் பிறகு சில காலம் ஜாதகனின் தாய் ஜீவித்திருந்து ஜாதகனுக்கு நாற்பதாவது வயது நடக்கும்போது இறப்பாள்.

33. அறுபது ஒன்று ஆண்டில் ஐப்பசி மாதம் தன்னில்
திருமகனுடலம் ஏகும் ஜயமுனி தடுத்துச் சொல்வார்
குறை வயதென்று சொல்வோம் குருமதி கேந்திரம் நிற்க
நிறைவய தென்று சொல்வோம் நிமலியே கேட்டி டாயே.

33. அறுபத்தொன்றுவது வயதில் ஐப்பசி மாதத்தில் ஜாதகன் வேறு உலகம் ஏகுவான். இவனுக்கு இவ்வளவு நீண்ட ஆயுளுண்டு என்பதற்குக் காரணத்தைச் சொல்லுமென ஜயமுனி கேட்க புலஸ்த்திய முனி பதில் கூறுகின்றார். குருவும் சந்திரனும் ஒருவருக்கொருவர் கேந்திரத்தில் இருப்பதால் ஜாதகனுக்கு நீண்ட ஆயுளும் இருக்கும்.

[1] **குறிப்பு.**—சிங்கபுரம் என்று ஒரு நகரம் கலிங்க நாட்டில் உள்ளது. ஈண்டு, சிங்க நாடு என்பதால், சிங்கபுரம் உள்ள நாடாகிய கலிங்க நாட்டையே குறிக்கவேண்டும்.

ஜோதிட சாஸ்திரத்தில் கேந்திரம் என ஒன்றுவது, நான்காவது, ஏழாவது, பத்தாவது ஸ்தானங்களை, வழங்குவர்.

34. மறுஜன்மம் சோழ நாட்டில் வைசிய குலமு தித்துப்
பெருமையாய்ச் செட்டுச் செய்வன் பேசுவோ மிவனின் யோகம்
அறுஆண்டும் அல்ப யோகம் அதற்குப் பின் பிறைபோல் யோகம்
குறைவிலாக் குடும்ப மென்றோம் குவலயம் சேர்ப்பா ளுகும்.

34. இந்த ஜாதகன் மறுஜன்மத்தில் சோழ நாட்டில் வைசிய குலத்தில் பிறந்து, மிகவும் சிறப்பாக வியாபாரம் செய்வான். இவனுடைய இந்த ஜன்மத்தில் நிகழும் யோகங்களைச் சொல்லுகின்றோம். இவன் பிறந்து ஆறு ஆண்டுகள் வரையில் டலன்கள் மிகவும் அல்பம். அதற்குப் பிறகு பிறைச் சந்திரன்போல யோகங்கள் வளரும். எவ்விதத்திலும் குறைவில்லாத குடும்பமாகும். பூமிகளையும் சேர்ப்பான்.

35. திருஇல்லம் செய்வா னும் இரண்டாயி ரம்பொன் சேர்ப்பன்
மருமமாய் முப்பான் மேலாயவன் துணைவேறாய்ச் செல்வன்
குறைவுற குடும்பமென்றோம் கூறுவோம் பின்பால் சேதி
பெருவயி றோனைப் பெற்ற புண்ணிய சாலிகேளாய்.

35. அழகிய வீடு கட்டுவான். இரண்டாயிரம் பொற் காசுகளைச் சேர்ப்பான். [உத்தேச மதிப்பு ரூபாய் இருபதாயிரம்] ஜாதகனது முப்பத்தேழாவது வயதிற்குமேல் ஜாதகனின் சகோதரன் தனிக் குடும்பமாக வாழ்வான். இவனது குடும்பம் குறைவற்று செழிப்பாக இருக்குமென்று முன்னமேயே சொன்னோம். இவனைப்பற்றி விவரமாக இரண்டாம் பாகத்தில் சொல்லப் போகிறோம். பெரிய வயிற்றை உடைய விநாயகரைப்பெற்ற தாயே! கேளுங்கள்.

36. காவலன் ஜனிக்கும் காலே கடைநாளில் மூன்றும் பாதம்
தாவிய புதனிருப் புச் சாற்றுவோ மேழு ஆண்டும்
மேவிடும் திங்கள் பத்தும் விளம்புவோம் பலனை யாங்கள்
ஆவலாய் பூசை செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

36. ஜாதகன் ஜனிக்கும்போது ரேவதி நக்ஷத்திரம் மூன்றும் பாதத்தில் சந்திரன் சஞ்சரிக்கின்றான். ஆகவே புததசை இருப்பு வருஷங்கள் ஏழு, மாதங்கள் பத்து. இதன் பலனைச் சுருக்கமாக முன்பு சொன்னோம். பக்தர்களால் அன்போடு பூஜிக்கப்படும் தாயே! மேலும் திருவாய் மலர்ந்து எங்களைக் கேள்வி கேட்டருளவேண்டும்.

---

## ஜாதகம் 22

1. பிறைமானில் ராகு சாடி புதன்கேது பானு சீயம்
குருநண்டில் புகர்சேய் கன்னி குலவிடச் சனியும் கோலில்
வரும்ஜன்மம் கடகமாகி வரைகுவீர் பலனே யென்று
அரன்தேவி கேட்கும் போது அத்திரி புகலு கின்றார்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ராகு | இராசி | | லக்கினம் குரு |
| சந்திரன் | சக்கரம் | | புதன் கேது சூரியன் |
| | | சனி | சுக்கிரன் செவ்வாய் |

மன்மத வருஷம் ஆவணி மாதம் 18-ஆந் தேதி ஞாயிற்றுக்கிழமை இரவின் கடைசி ஜாமத்தில் ஜனனம். [ஆங்கில தேதி 1—9—1895.] நவக்கிரஹங்களின். பாதசாரங்கள் :—பூரம் 2-ல் சூரியன். சிரவணம் 4-ல் சந்திரன். உத்திரம் 2-ல் செவ்வாய். உத்திரம் 1-ல் புதன். புஷ்யம் 2-ல் குரு. ஹஸ்தம் 1-ல் சுக்கிரன் (வக்ரீ). சுவாதி 2-ல் **சனி.** பூரட்டாதி 1-ல் ராகு. பூரம் 3-ல் கேது. நக்ஷத்திரம் சிரவணம். சந்திர தசையில் இருப்பு வருஷம் ஒன்று, மாதங்கள் மூன்று.

1. சந்திரன் மகரத்திலும், ராகு கும்பத்திலும், புதன் கேது சூரியன் சிங்கத்திலும், குரு கடகத்திலும், சுக்கிரன் செவ்வாய் கன்னியிலும் சனி துலாத்திலுமிருக்க. இலக்கினம் கடகமாகவுமிருந்தால், இக்கிரஹ நிலையிலமைந்த ஜாதகனின் பலன்களைச் சொல்லுவீராக, என உமாதேவியார் கேட்கும்போது அத்திரி முனிவர் பதிலுரைக்கின்றார்.

2. இந்தசே யாணும் ஜன்மம் இல்லமும் கீழ்மேல் வீதி
தென்வாசல் வடக்கிலீசன் திருமாலும் தந்தி மேற்கில்
வல்லிமா காளி வாயு வரைகிறோம் சிற்றூர் தன்னில்
அந்தவன் சேஷ்டனாக அருளுவா னென்று சொல்வோம்.

**2.** இப்படிப்பட்ட கிரஹ நிலையில் பிறந்த குழந்தை ஆண். வீதி கிழக்கு மேற்காக அமைந்திருக்கும். வீடு வடக்கு வரிசையிலிருப்பதால் தென் திசை நோக்கி இருக்கும். வட திசையில் பரமசிவன் கோயிலும் விஷ்ணு கோயிலும் இருக்கும். மேற்கில் விநாயகர் ஆலயம் இருக்கும். வடமேற்கில் இடைச்சேரியும், காளி கோயிலும் உண்டு. இப்படிப்பட்ட சிறிய ஊரில் இந்த ஜாதகன் குடும்பத்தில் மூத்தவனுகப் பிறந்திருப்பான்.

3. அன்னையின் தந்தை யோகம் அவன்துணை களத்திர புத்திரர்
இன்னவன் யோகச் சேதி இயம்புவோ முன்பின் ஜன்மம்
தந்தையின் துணைநவத்தில் ஆண்மூன்று கன்னிநான்கு
சந்ததம் தீர்க்க மென்றேம் சடிதியில் வேருய்ச் செல்வர்.

**3.** இந்த ஜாதகனின் தாய் தகப்பனர் சகோதரர், மனைவி புத்திரர் இவர்களைப்பற்றியும், ஜாதகனுடைய யோகம், முன்பின் ஜன்மங்கள் இவைகளைப்பற்றியும் இந்த நூலில் கூறப்போகின்றேம். இந்த ஜாதகனுடைய தந்தைக்கு உடன் பிறந்தவர்கள் ஒன்பது பேராவர். அவர்களில் மூன்று சகோதரர்களும் நான்கு சகோதரிகளும் தீர்க்காயுளுடன் வாழ்வார்கள். (மற்றவர்கள் நசிப்பார்கள் என்பது கருத்து) ஆனல் எல்லாச் சகோதரர்களும் சீக்கிரத்திலேயே பிரிந்து தனிக் குடும்பமாக வாழ்வார்கள்.

4. தந்தையின் குணத்தைச் சொல்வேன் சமகல்வி சிவந்த மேனி
தன்தன மதிக மில்லான் சல்லியப் பாதை யுள்ளான்
முந்தின போகம் காணுன் மேதினில் சிலநாள் செட்டு
இந்தவன் செய்வா னென்றேம் இடருகள் அதற்கு உண்டாம்.

**4.** தந்தையின் குணத்தைச் சொல்லப்போகிறேன். போதிய அளவு கல்வி கற்றவன். சிவந்த மேனியான், பணமில்லாதவன். கடன் தொந்தரவு உள்ளவன். பால்யத்தில் சுகங்களை அனுபவிக்காதவன். இவன் சில நாட்கள் வியாபாரம் செய்வான். அதற்கு இடையூறுகள் உண்டாகும். [ஆகவே வியாபாரத்தை நிறுத்தி விடுவான் என்பது கருத்து].

5. கிருஷியும் செய்வா னுகும் கெளரவ குடும்பியாகித்
தரையினில் குறைவு நேரும் தந்தைபால் சுகமு முள்ளான்
பராசரும் சொல்லு கின்றுர் பகருவீர் தந்தை சேதி
குறையென்றேர்க் குதவி செய்வன் குவலயம் செட்டுச் செய்வன்.

**5.** விவசாயம் செய்வான். கௌரவம் வாய்ந்த குடும்பியாவான். ஆனல் சிறிது தாழ்வும் நேரிடும். தாயின் தந்தையி (பாட்ட) னல் சுகத்தை அடைவான். [அம்மான் ஆதரவும் உண்டு என்பது கருத்து]. தந்தையின் செய்தியைச் சொல்லுமென பராசர முனிவர் கேட்க, அத்திரி மஹரிஷி கூறுகின்றுர். உதவியை நாடுபவர்களுக்கு உதவிபுரிவான். வியாபாரம் செய்வான்.

6. அன்னையு மிரண்டு மாகும் அனுகிய பின்தாய்க் கின்னோன்
தன்துணை நான்கு தோன்றும் தங்கிடுமாண்பால் ரண்டு
கன்னிகை ஒன்று மாகும் காளையும் சுகமாய் வாழ்வன்
பொன்பணி பூமி சேர்ப்பன் பெருத்ததோர் குடும்பி யாவன்.

6. இவனுக்கு (சாதகனின் தந்தைக்கு) இரு தாய்மார்கள். இரண்டாவது தாய்க்குப் பிறந்தவன் இவன். இவனுக்கு நான்கு உடன் பிறந்தார்கள் தோன்றுவார்கள். அவர்களில் இரு சகோதரர்களும் ஒரு சகோதரியும் நீடித்து வாழ்வார்கள். இவனும் சுகமாக வாழ்வான். தங்கம், ஆபரணம், பூமி இவைகளைச் சம்பாதித்துச் சேமித்து வைப்பான். பெரிய குடும்பியாகவும் விளங்குவான்.

7. அவனுடைப் பூர்வம் சொல்வேன் ஆலங்காட் டதற்கு உத்ரம்
இவனுமே தீயின் வம்சம் எய்தியே சுகமாய் வாழ்ந்து
தவசிகட் கன்னமீந்து தரணியில் நல்லோ னாகிப்
பவமிலா காலன் பக்கல் பிறந்தனனென்று சொல்வோம்.

7. அவனுடைய பூர்வஜன்மத்தைக் கூறுகின்றோம். ஆலங்காடு என்ற கிராமத்திற்கு வடதிசையில் ஒரு கிராமத்தில் வன்னிய குலத்தில் பிறந்து, சுகமாக வாழ்ந்து வந்தான். துறவிகளுக்கு அன்னமளித்தான். எல்லோருக்கும் நல்லவனாக நடந்து கொண்டான். இவ்வாறு தாருமிகனாக வாழ்க்கை நடத்தி அந்தியகாலத்தில் யமனுலகம் சென்றான்.

8. வேதனால் வரையப்பட்டு விளங்கினா னிவனே யென்றோம்
மேதினில் செட்டுச் செய்வன் வெறிகொள்ளும் தொழிலும்
[செய்வன்
பாதக மென்றே லச்சம் பாரது சேர்ப்பா னாகும்
சூதமா மந்தி யத்தில் அற்பமாம் சல்லிய பாதை.

8. பிறகு பிரம்மதேவனால் இங்குப் படைக்கப்பட்டிருக்கிறான். வியாபாரம் செய்து வாழ்வான். வெறி கொள்ளும் தொழிலையும் [கள் வியாபாரத்தையும்] செய்வான். பிறர்க்குத் தீங்கு செய்வதற்கு அச்சம் கொள்வான். நிலங்களைச் சேர்ப்பான். அந்திய காலத்தில் சூதாட்டத்தில் சிறிது ஈடுபாடு ஏற்படும். கடன் உபத்திரவமும் சிறிது நேரிடும்.

9. பின்ஜன்மம் வேங்க டத்தில் பிறப்பனும் பிரம்ம சேயாய்
அன்னவன் மனைவி சேதி அறைகிறோம் சிவந்த மேனி
பொன்பணி அதிக முள்ளாள் புருடன்தன் மனம்போல் வாழ்வள்
கன்னிக்குத் துணைஆண் ஒன்று காதலி மார்கள் ரண்டு

9. இவன் மறுசென்மத்தில் திருப்பதியில் பிராம்மண சாதியில் பிறப்பான். அவனுடைய மனைவியின் (சாதகனின் தாய்) செய்திகளைக் கூறுகின்றோம். சிவந்த மேனியாள். பொன் ஆபரணங்கள் அதிகம் படைத்தவள். கணவனுடைய மனம் அறிந்து நடப்பவள். இவளுக்குச் சகோதரன் ஒருவன். சகோதரிகள் இருவர்.

10. சொன்னவர் தீர்க்க மெய்தும் தோகையும் யோக சாலி
வந்தவர்க் கன்ன மீவள் மனமது கட்டமில்லாள்
அன்னம்போல் சாய லுள்ளாள் அவளுடைப் பூர்வம் சொல்வேன்
கன்னிய குமாரி பக்கல் காதலி கோகுலத்தில் ;

10. இங்குச் சொல்லப்பட்ட மூவரும் நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள். இவள் மிகவும் அதிருஷ்ட முள்ளவள். இவள், தனது வீட்டை நாடி வரு பவர்களுக்கு அன்ன மளிப்பாள். நெஞ்சில் கபடமில்லாதவள். அன்னப் பக்ஷிபோல அழகு வாய்ந்தவள். அப்படிப்பட்டத் தாயின் பூர்வஜன் மத்தைச் சொல்லுகின்றேம். இவள் கன்னியா குமரிக்கு அருகில் யாதவ வமிசத்தில் ;

11. உதித்துமே வறுமை யின்றி உத்தமி சுகமாய் வாழ்ந்து
சதியான காலை நடு தன்வரன் முன்னே சென்று
விதியவன் வரையப் பட்டு விளங்கினு ளிவளை யென்றேம்
அதிதியே இவள்பின் ஜன்மம் அறைகிறேம் விரிஞ்சி தன்னில்.

11. பிறந்து வறுமை இல்லாதவளாகி கணவன், குழந்தைகளுடன் சுகமாக வாழ்ந்து, கடைசியில் யமனுலகம் சென்றாள். இப்பொழுது பிரம்ம தேவனால் இங்குப் படைக்கப்பட்டு இக்கடகலக்கின மகனுக்குத் தாயாக வாய்த்திருக்கிறாள். தேவியே! இவளுடைய பின் ஜன்மத்தைச் சொல்லு கின்றேம். இவள் மறு ஜன்மத்தில் விரிஞ்சி நாட்டில் ;

12. வருவளாம் க்ஷத்திரிய சேயாய் வரைந்த இக்குணத் தானுக்கு
திருமகள் தந்தை தானும் ஜனிப்பனு மென்று சொல்வோம்
அவன்சம யோக முள்ளான் அவனுடைப் பாரி யாலே
பெருமையும் குறைவு நேரும் பேசுவீர் அவன்தன் சேதி.

12. க்ஷத்திரிய வமிசத்தில் பிறப்பாள். அப்பொழுது ஜாதகனின் தந்தையே அவளுக்கு மகனாக ஜனிப்பான். அவன் (ஜாதகன்) சமமான யோகம் உள்ளவன். அவனுடைய மனைவியால் அவனுக்குப் பெருமை யும் தாழ்மையும் ஏற்படும்.

13. புத்திமான் முன்கோ பத்தாள் பின்சாந்தம் அடக்க முண்டு
குத்திர வசனம் கூறுவன் குணமது நல்ல தாகும்
சுத்தமும் அடக்க முண்டு துணைவர்கள் ஆண்பால் நான்கும்
பத்தினி மார்கள் ரண்டு பகருவோம் தீர்க்க மாக.

13. மிக்க மேதாவியாக இருப்பான். முன்கோபி. ஆனால் பிறகு சாந்த னுவான். அடக்க முள்ளவன். கெட்டவார்த்தைகளையும் பேசுவான். ஆனால் மனத்தில் கெட்ட எண்ணங்கள் இரா. சுத்தனுனவன். அவனுக்குச் சகோதரர்கள் நால்வர். சகோதரிகள் இருவர். இவர்கள் அறுவரும் தீர்க்கமாக வாழ்வார்கள்.

14. இல்லமும் உத்ர மாகும் இடருகள் தாய்க்கு டும்பம்
சொல்லுவோ மிருவர் தாமும் சோங்கின்மேல் செல்வா ராகும்
வல்லியின் பக்கல் தானும் வாழ்வனு மொருவன் தானும்
புல்குவான் சொந்த இல்லம் புக்கிப் பின் கிருஷி செய்வன்.

14. வடதிசையில் ஒரு வீடு எற்படும். தாய்க் குடும்பத்திற்குச் சில இடர்கள் வரும். நான்கு சகோதரர்களில் இருவர் ஜீவனத்திற்காகக் கப்பல் மூலம் வேறு தீவிற்குச் சென்று அங்கு வசிப்பார்கள். ஒருவன் இடைச் சேரிக்கருகில் வசிப்பான். மற்றொருவன் சொந்த வீட்டில் வசித்துக் கொண்டு விவசாயம் செய்வான்.

15. சிலநாட்கள் வறுமை யுண்டாய்ச் சேமமாம் குடும்பி யாவன்
நலமையாய்ப் பின்பா கத்தில் நாட்டுவோ மவர்கள் சேதி
தலைவியின் பூர்வம் சொல்வேன் தண்டகா வனத்தி லேதான்
குலவினுள் செக்கான் வம்சம் குறையின்றி வாழ்ந்தா
[ளென்றோம்.

15. சில நாட்கள் வறுமையினால் கஷ்டப்பட்டுப் பிறகு க்ஷேமமான குடும்பியாவான். சகோதரர்களைப் பற்றிய வரலாறுகளை பின் பாகத்தில் கூறப்போகின்றோம். ஜாதகனின் மனைவியைப்பற்றிய பூர்வஜன்ம வரலாறுகளைக் கூறுகின்றோம். இவள் முன் பிறவியில் தண்டகவனத்தில் வாணியச் செட்டி வமிசத்தில் பிறந்து, எவ்விதத்திலும் குறைவில்லாத வளாகி, சுகமாக வாழ்ந்து வந்தாள்.

16. மறவியின் பதிக்குச் சென்று மால்மகன் வரையப் பட்டு
அரிமதம் வடுகர் வர்க்கம் அனுகினு ளிந்த மாது
திருமகள் சுகம்கு றைச்சல் திருப்பணி அதிக மில்லாள்
குறையான மனத்தா ளாகும் கூறுவோமிவள்பின் ஜென்மம்.

16. காலக் கிரமத்தில் இறந்தாள். பிறகு திருமால் மகனாகிய பிரம்ம தேவனால், விஷ்ணு மதத்தைச் சேர்ந்த இந்த நாயக்கர் குலத்தில் பிறப்பிக்கப்பட்டிருக்கின்றாள். இவளுக்குச் சாமானியம் சுகம் மட்டுதானுண்டு. அதிக ஆபரணமில்லாதவள். எப்பொழுதும் மனத்தில் ஏக்கமுடையவள். அவளுடைய பின் பிறவியைக் கூறுகின்றோம்.

17. பிருதிவி தலத்திலே தான் பிறப்பாளாம் செங்குந்த வம்சம்
குறையிலா வாழ்வா ளாகும் கூறுவோம் தந்தை பூர்வம்
அருணைக்கு உத்ரத்தில் அனுகிய பேரூர் தன்னில்
உறைந்தனன் ரெட்டி வம்சம் உத்தமி மதலை யுண்டாய்.

17. இவள் மறுஜென்மத்தில் காஞ்சியில் கைக்கோளர் வமிசத்தில் பிறந்து, குறைவில்லாமல் சுகமாக வாழ்வாள். ஜாதகனின் தந்தையின் பூர்வஜென்மத்தைப்பற்றிக் கூறுகின்றோம். திருவண்ணாமலைக்கு வடக்குத் திசையிலுள்ள பெரிய ஓர் ஊரில், ரெட்டி ஜாதியில் பிறந்து, மனைவி மக்களுடன் சுகமாக வாழ்ந்திருந்தான்.

18. பவமிலா விவசா யங்கள் பாலனும் செய்து மேதான்
அவனியில் நல்லோ ளுகி அணுகினன் கால ளுடு
தவசியே பிரமன் லக்கம் சலகுலம் வடுகர் வம்சம்
இவனுமே யுதித்தா னென்றேம் இயம்புவோ மிவனின் யோகம்.

18. கெடுதல் இல்லாத விவசாயத்தைச் செய்தான். எல்லோருக்கும் நல்ல வளுக இருந்தான். கடைசியில் மரணமடைந்த இவன், பிரம்மனல் இங்கு நாயக்கர் ஜாதியில் பிறப்பிக்கப்பட்டிருக்கிறன். இவனுடைய (தந்தையி னுடைய) யோகங்களை மறுபடியும் சொல்லுகின்றேம்.

19. சல்லியப் பாதை யாலே சோங்கின் மேல் சிலநாள் செல்வன்
அல்லலாய்ப் பின்னேன் செல்வன் அங்ஙனே சுகமு ண்டாகி
இல்லறம் சேர்வா ளுகும் இரணியம் கொஞ்சம் கொண்டு
நல்லதோர் மூன்று ண்டின்மேல் நலமுள குடும்பி யாவன்.

19. இவன் கடன் உபத்திரவத்தினுல் கப்டல்மூலம் வேறு தேசத்திற்குச் செல்லுவான். மிகவும் கஷ்டப்பட்டு, அங்குள்ள தனது தம்பியை அடைந்து, சுகமாக வசிப்பான். சென்ற இடத்தில் செல்வத்தைச் சம்பாதித்துக் கொண்டு தன் வீட்டிற்குத் திரும்பி வருவான். மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு சிறப் பான குடும்பியாவான்.

20. மற்றவர் துணைவர் சேதி வரைகிறே மிரண்டி லேதான்
உற்றதோர் ஜாதகர்க்கு உரைக்கிறேம் பலனே யாங்கள்
சுத்தவான் கல்வி யுள்ளான் சொல்லது சுகமே யாகும்
வித்துவான் விஷவாக் குள்ளான் மேதினில் செட்டுச் செய்வன்.

20. இவனுடைய சகோதரர்களைப்பற்றிய வரலாறுகளை இரண்டாம் பாகத்தில் சொல்லப்போகின்றேம். இப்பொழுது ஜாதகனுடைய பலன்களைக் கூறுகின்றேம். சுத்தமானவன். கல்வியறிவு உடையவன். இவன் சொல்லும் வார்த்தைகள் செவிக்கு இனிமையாக இருக்கும். பண்டிதன். இவனுடைய அசுபவாக்குகள் பலிக்கும். வியாபாரம் செய்தும் வாழ்வான்.

21. ஈரஞ்சு ஆண்டு மேலாய் இவனுடைக் குடும்ப மேன்மை
பாருகள் விருத்தி செய்வன் பகைவரை நாசம் கொள்வன்
போரினில் செல்லா ளுகும் பிரபல புகழு மேற்பன்
தீரமில் லாத நெஞ்சம் ஜனஉப காரியாவன்.

21. பத்து ஆண்டுகளுக்கு மேல் இவனுடைய குடும்பம் மேன்மையை அடையும். நிலங்களை அபிவிருத்தி செய்வான். எதிரிகளை அழிப்பான். தானுக வலுவில் சண்டையில் ஈடுபடமாட்டான். இவனுக்கு மிகப்பெரிய புகழும் ஏற்படும். எவ்விஷயத்திலும் உறுதியான எண்ணம் இல்லாதவன். மக்களுக்கு உபகாரம் செய்வான்.

22. சொல்லதைக் காப்பா னாகும் துணைவரை ஆதரிப்பன்
இல்லறம் புதிதாய்ச் செய்வன் இருபது ஆண்டு தன்னில்
அல்லல்க ளடையா னாகும் யாவர்க்கும் நல்லோ னவன்
நல்லநாற் காலி யுண்டு நாதனுர் பக்தி பூண்டான்.

22. சொன்ன வார்த்தையைக் காப்பாற்றுவான். சகோதரர்களை ஆதரிப்பான். இருபதாவது ஆண்டில் புதிய வீடு நிர்மாணிப்பான். சிக்கல்களை அடையமாட்டான். எல்லோருக்கும் நல்லவனாக வாழ்வான். சிறந்த காளை பசு முதலிய கால் நடைகளை உடையவனாகவும், பரமசிவனிடம் பக்தி பூண்டவனாகவும் இருப்பான்.

23. தன்துணை ஆண்பால் ரண்டு தையலர் அவ்வாறு தீர்க்கம்
பின்பாகம் விபர மாகப் பேசுவோம் துணைவர் சேதி
அன்னவன் மணத்தின் காலம் அறைகிறோ மிருப தாண்டில்
கன்னிகை அன்னை வர்க்கம் கழறுவோம் குணத்தை யாங்கள்.

23. இந்த ஜாதகனுக்கு இரு சகோதரர்கள். இரு சகோதரிகள். இந் நால்வரும் தீர்க்க ஆயுளுடன் வாழ்பவர்கள். அவர்களைப் பற்றிய வரலாற்றை இரண்டாம் பகுதியில் பேசுவோம். இந்த ஜாதகனின் விவாஹ காலத்தைக் கூறுகின்றோம். இவனுக்கு இருபதாவது வயதில் மணம் நடக்கும். மண மகள் தாய் வருக்கத்தில் ஜனித்திருப்பாள். அவளுடைய குணங்களை நாங்கள் சொல்லுகின்றோம்.

24. மாநிறம் சமதே கத்தாள் மருமமில் லாதா ளாகும்
தேன்மொழி கூறு வாளாம் சிறுகான குணமில் லாதாள்
தானமும் தரும மிச்சை தன்பந்து மெச்ச வாழ்வள்
ஈனமாங் குணங்க ளில்லாள் இவளுமே யோக சாலி.

24. மாநிறமுள்ளவள். சமமான தேகக்கட்டு வாய்ந்தவள். கபடமில்லாதவள். தேன்போல இனிமையான மொழிகளைப் பேசுவாள். சண்டையிடும் குணமில்லாதவள். தான தருமங்களில் பற்றுள்ளவள். தன்னுடைய உறவினர் மெச்சும்படி வாழ்வாள். கெட்ட குணங்கள் இல்லாதவள். நல்ல அதிருஷ்டமுள்ளவளாகவும் இருப்பாள்.

25. தந்தையின் தாய்போ லொப்பள் தரணியில் வறுமை காணுள்
எந்தையே புத்திர பாவம் இயம்புவோ மாண்பால் ரண்டு
விந்தையாய்க் கன்னி மூன்று மேவிடும் தீர்க்க மாக
சந்தத மிவன் முன்ஜன்மம் சாற்றுவோம் கேளும்தாயே.

25. இவனுடைய தந்தையின் தாயின் (பாட்டி) சாயல் உள்ளவள். வறுமை இல்லாதவள். ஜாதகனுடைய புத்திரபாவத்தைக் கூறுகின்றோம். இரண்டு புத்திரர்கள். மூன்று புத்திரிகள். இந்த ஐவரும் நீண்டகாலம் வாழ்வார்கள். இந்த ஜாதகனின் முன்ஜன்மத்தைக் கூறுவோம். கேளுங்கள், தாயே!

26. தவளையின் மலைக்குத் தெற்கில் சார்ந்திடும் பேரூர் தன்னில்
பவமுள வைசியச் சேயாய்ப் பாரினில் செட்டுச் செய்து
நவனியில் மனைவி மைந்தர் நாயகன் சுகமாய் வாழ்ந்து
அவனியோர்க் குதவி செய்து அந்தகன் பக்கல் புக்கி ;

26. தவள மலைக்கு அருகில் தெற்குத் திசையிலுள்ள ஒரு பெரிய ஊரில் வைசிய குலத்தில் பிறந்து, வியாபாரம் செய்து, மனைவி மக்களுடன் சுகமாக வாழ்ந்து வந்தான். உலகத்தோருக்கு அதிக உதவிகளைச் செய்தான். அந்தியகாலத்தில் யமனுலகம் சென்று ;

27. தனை நான்கோன் வரியப்பட்டு ஜனிப்பனு மிந்தப் பாலன்
நிலைமையா யிவனின் யோகம் நிகழ்த்துவோம் ஜனனந் தொட்டு
பலவித சல்லியங்கள் பாரினில் சமம் குறைச்சல்
விலகிடும் மாதுதானும் விளம்புவோம் பத்தாண்டும்மே ;

27. நான்கு முகம் படைத்த பிரம்மதேவனால் இங்குக் கடக லக்கினத்தில் பிறப்பிக்கப்பட்டான். இவன் பிறந்தது முதல் ஏற்படும் யோகங்களைச் சொல்லுகின்றோம். பல வழிகளில் கடன்கள் ஏற்படும். நிம்மதி இல்லாமல் திண்டாடுவான். இவன் மனைவி இவனைவிட்டு விலகி விடுவாள். பத்து ஆண்டுகள் ;

28. அல்லல்கள் அதிகமுண்டு அதன் மேலாய் பிறைபோல் யோகம்
சல்லியம் நிவிர்த்தியாகும் சதுஷ்பாதம் விருத்தியாகும்
நல்லதோர் குடும்ப மெய்தும் நற்சுக போஜனங்கள்
சொல்லது மேம்பாடெய்தும் தொகுத்தது முடிப்பானும்.

28. இவ்வாறு அல்லல்கள் அதிகமாகும். அதற்குப் பிறகு பிறைச் சந்திரன்போல யோகங்கள் விருத்தியாகி கடன் நீங்கி சுகமடைவான். கால் நடைகள் விருத்தியாகும். குடும்பம் கொந்தளிப்பின்றி நிம்மதியுடன் விளங்கும். சுகமான போஜனங்களைப் புசிப்பான். இவனுடைய வார்த்தைக்கு விசேஷ மதிப்புண்டாகும். மனத்தில் எண்ணிய காரியத்தை நிறைவேற்று வான்.

29. எப்படி யோகம் சொன்னீர் இயம்புவீர் அந்தச் சங்கை
செப்புவேன் கேளும் தாயே சனி குரு உச்சமாயும்
ஒப்புடன் கேசரி யோகம் உரைக்கும் பூமால் யோகங்கள்
அப்பணி யோகமென்று அறைந்திட்டோம் மூன்று யோகம்.

29. நல்ல யோகங்கள் இவனுக்கு உண்டு என்று எக்காரணத்தினால் சொன்னீர் எனப் பார்வதிதேவி கேட்க அத்திரி ரிஷி சொல்லுவார், குரு-சனி ஆகிய இரு கிரகங்கள் உச்சமாக இருப்பதாலும், கேசரி யோகம் மாலிகா யோகம், பணியோகம் என மூன்று யோகங்கள் ஜாதகத்தில் இருப்பதாலும் இவனுக்கு மேற்சொன்ன பலன்கள் ஏற்படுமென்று திண்ணமாகச் சொல்லு கின்றோம்.

30. பலனதைப் புகலக் கேண்மோ பாரது சேர்ப்பா ளுகும்
தலமது தீர்த்தம் தோய்வன் சகடு வாகனமு முள்ளான்
நலமுளோர் நேசம் கொள்வன் நற்பணி அதிகம் சேர்ப்பன்
குலத்துளோர் மதிக்க வாழ்வன் குவலயம் செட்டுச் செய்வன்

30. இவனுக்கு ஏற்படும் பலன்களைச் சொல்லுகிறோம் கேளுங்கள் நிலங்களைச் சேர்ப்பான். புண்ணிய தீர்த்தங்களில் நீராடுவான். வண்டி முதலிய வாகன சௌக்கியங்கள் உடையவனுவான். பெரியோர்களுக்கு நண்பனுக இருப்பான். விலை யுயர்ந்த ஆபரணங்களைச் சேர்ப்பான். தன் குலத்தார் மதிக்கும்படி வாழ்வான். வியாபாரம் செய்வான்,

31. ஈராறு ஆண்டுதன்னில் இவன் தந்தை தந்தை கண்டம்
தீரமாயத் தன்மேல் மூன்றும் செப்புவோம் தந்தை யன்னை
பாரினில் முப்பாறுறில் பகருவோம் தந்தை கண்டம்
வேறொரு ஜன்மம் சொல்வேன் வித்தகி கேட்டிடாயே.

31, இவன் ஜனித்த பன்னிரண்டாவது ஆண்டில் இவனுடைய பாட்டன் மரணமடைவான். அதற்குப் பிறகு மூன்றும் ஆண்டில் பாட்டி மரணமடைவாள் ஜாதகனுடைய முப்பத்தாருவது வயதில் ஜாதகனின் தகப்பனுர் மரணத்தை அடைவான். இறந்த பிறகு தந்தைக்கு ஏற்படும் வேறு ஒரு ஜன்மத்தைக் கூறுகின்றேம் கேளுங்கள்.

குறிப்பு.—ஒன்பதாவது பாட்டில் ஒரு மறுபிறவினயச் சொன்ஞர். இங்கு மற்றொரு பிறவியைக் கூறினுர். ஆகவே இவனுக்கு வரும் இரு பிறவிகளைக் குறிப்பிட்டதாக அறியவேண்டும்.

32. ஆலங்காட்டதற்கு உத்தரம் அணுகிய சிற்றூர் தன்னில்
சாலவே வைசிய சேயாய் ஜனிப்பனுமெனறு சொல்வோம்
வேல்விழி அன்னைக்கேதான் விளம்புவோம் நாற்பான் ஒன்றில்
ஏலவே கண்டம் நேரும் இயம்பின மொழி குன்றுவே.

32. ஆலங்காட்டிற்கு வடதிசையில் உள்ள சிறிய ஊரில் வைசிய குலத்தில் செனிப்பான். ஜாதகனுடைய தாயின் மரணகாலத்தைச் சொல்லுகின்றேம். ஜாதகனுக்கு நாற்பத் தொன்றுவது வயது நடக்கும்போது அவனுடைய தாய், இறப்பாள். இவ் வார்த்தைகள் பொய்யாகா.

33. சாதகன் மரணகாலம் சாற்றுவோம் அறுபான் ரண்டில்
போதவே மகரமாதம் பின்பக்கம் துதியை தன்னில்
தீதான சூலையாலே புகலுவோம் கண்டம் தானே
ஓதுவோ மிவன் பின் ஜன்மம் உயர்காஞ்சி தன்னிலேதான்.

33. ஜாதகன் மரணமடையும் காலத்தையும் கூறுவோம். அறுபத்து இரண்டாவது வயதில் தை மாதத்தில் கிருஷ்ணபக்ஷம் துவிதியை திதியில் மரணமடைவான். அந்திய காலத்தில் இவனுக்குக் கொடிய சூலைநோய் ஏற்படும். அதனுல்தான் இவன் இறப்பான். இவனுக்கு ஏற்படும் மறு பிறவியைச் சொல்லுகின்றேம். இவன் மறு பிறவியில் காஞ்சியில்.

34. கங்கையின் குலமுதிப்பான் கனமுள செட்டு செய்வன்
இங்கிவை அத்திரி சொல்ல இயம்புவார் பராசர்தானும்
கங்கையாய் பத்தாண்டுக்குள் ஜாதகனுடல மேகும்
அங்கதை சொல்லு மென்ன அரவுமே எட்டில் நிற்க.

34. வேளாள குலத்தில் உதிப்பான். பெரிய வியாபாரங்களைச் செய்வான் என்று இவ்வாறு அத்திரி சொன்னவுடன், பராசரர் ஒரு ஆக்ஷேபத்தைச் சொல்லுகிறார். இச் சாதகன், அவன் பிறந்து பத்து ஆண்டுகளுக்குள் மரிப்பான். ஏனெனில் ராஹு ஆயுள் ஸ்தானம் என்று சொல்லப்படும் எட்டில் இருப்பதாலும் ;

35. இதுவன்றி எட்டான் நாலில் இருப்பதால் தோஷம் சொன்னோம்
எதுவித நோய்கள் வந்தும் இரணியன் சென்மம் தங்க
சதமுடன் வயது தீர்க்கம் சாற்றின மொழி குன்றாது
அதிதிகன் சொல்லும் போது அம்பிகை கேட்க லுற்றாள்.

35. எட்டுக்கு உடையவனாகிய சனி நான்காமிடத்தில் இருப்பதாலும் அவன் பத்து வருஷங்களுக்குள் இறப்பான் என அத்திரி முனிவர் இந்த ஆக்ஷேபத்திற்கு பதில் உரைத்தார். இந்த ஜாதகனுக்கு, இலக்கினத்தில் குரு இருப்பதால் எவ்வித நோய்கள் வந்தாலும், அவைகள் நீங்கி, நாம் சொன்னபடி நீண்டகாலம் சுகமாக வாழ்வான்.

36. தந்தையின் அம்மான் பேரில் சாருவன் என்று சொன்னீர்
எந்தகாலத்திலேதான் ஏகுவான் விபரம் சொல்வாய்
இந்தவன் ஆறுமாண்டில் ஏகிப்பின் பத்தாமாண்டில்
தந்தன ன்முடையனாகி சாருவன் என்று சொல்வோம்.

36. ஜாதகனின் தந்தை, அவனது அம்மான் ஆதரவில் வாழ்வான் என்று (ஐந்தாவது பாட்டில்) சூசனையாகச் சொன்னீர். அது எப்போது நிகழுமெனத் தெளிவாகக் கூறுமென்று பார்வதிகூற முனிவர் பதில் உரைக்கின்றார். இந்தச் ஜாதகன் பிறந்து ஆறும் ஆண்டில் அம்மான் ஆதரவில் வசிப்பது நிகழும். பத்தாவது ஆண்டில் தனக்குச் சொந்தமாக பணம் ஏற்பட்டு தனது வீட்டில் வசிப்பான் என்று சொல்லுகிறோம்.

37. தந்தை நாள் பூமிபின்னால் தானவன் சேர்ப்பானாகும்
முந்திய சல்லிய முண்டுவிலகிடும் பின்னாலே தான்
இந்தவன் பூமி பொன்னும் இயம்பு மீராயிரம் பொன்
கந்தனை யீன்றமாதே கழறின மொழி குன்றாது.

37. தந்தை காலத்து பூமிகளை (கடனால் விலகிய) ஜாதகன் மறுபடியும் அடைவான். வெகு நாட்களுக்கு முன் ஏற்பட்ட கடன்கள் தீரும். இவன் சம்பாதிக்கும் தங்கம் பூமி இவைகளின் மதிப்பு இரண்டாயிரம் பொற்காசுகள் (ரூபாய் இருபதாயிரம்) ஆகும். கந்தனை உலகத்திற்குத்தந்து உதவிய தாயே! எங்கள் மொழி வீணாகாது.

38. ஜனித்திடு காலம் தன்னில் சந்திரன் தசையிருப்பு
குனித்திடு ஆண்டு ஒன்றும் கூறுவோம் திங்கள் மூன்றும்
வினையுண்டு சாதகர்க்கு விளங்கும் பின் துணைகள் தாமும்
தனமது செலவு முண்டு சஞ்சலமனங்க ளெய்தும்.

38. இந்த ஜாதகனின் ஜனன காலத்தில் சந்திர தசையில் இருப்பு வருஷம் ஒன்று, மாதங்கள் மூன்று. இந்தத் தசையின் பலன்களைச் சுருக்கமாகக் கூறுகின்றோம். ஜாதகனுக்குப் பல கஷ்டங்கள் நேரிடும். சகோதர விருத்தியுண்டு. வீண் செலவுகளும் செய்யநேரும். மனத்தில் கவலைகளும் அதிகமாகும்.

## ஜாதகம் 23

**1.** கடகலக் கினமதாகக் கதிர்புதன் ஜன்மம் தங்
உடுபதி மூன்றி லாக உரகனும் நாலி லாக
முடவனு மாறி லாக வெள்ளியும் சேயீ ருறில்
அடல்குரு ஏழி லாக அறைகுவிர் பலனை யென்றாள்.

| | | | |
|---|---|---|---|
| | கேது | | சுக்கிரன் செவ்வாய் |
| | இராசி சக்கரம் | | லக்கினம் சூரியன புதன் |
| குரு | | | |
| சனி | | ராகு | சந்திரன் |

**1.** சுபகிருத் வருஷம் ஆடி மாதம் 28-ஆந்தேதி வியாழக்கிழமை இரவு கடைசி முஹூர்த்தத்தில் ஜனனம். **[ஆங்கில தேதி 7–8–1902]** நவக்கிரஹங் களின் பாதசாரம் : ஆயில்யம் 2-இல் சூரியன். ஹஸ்தம் 1-இல் சந்திரன். திருவாதிரை 4-இல் செவ்வாய். ஆயில்யம் 1-இல் புதன் (அஸ்தம்). சிர வணம் 3-இல் குரு (வக்ரீ). புனர்வஸு 2-இல் சுக்கிரன். உத்ராடம் 1-இல் சனி. சித்திரை 4-இல் ராஹு. அசுவினி 2-இல் கேது. நக்ஷத்திரம் **ஹஸ்தம்.** சந்திர தசையில் இருப்பு வருஷங்கள் ஏழு, மாதங்கள் பத்து.

இலக்கினம் கடகமாகவும், சூரியன் புதன் கடகம் சந்திரன், கன்னி ராஹு துலாத்திலும், கேது மேஷத்திம், சனி தனுஷிலும், சுக்கிரன் செவ்வாய் மிதுனத்திலும், குரு மகரத்திலுமாக அமைந்த இந்த ஜாதகத்தின் பலன் களைச் சொல்லுவீர்களாக என உமை வினவினாள்.

**2.** சங்கரி கேட்கும் போது சடைமுனி புகலுகின்றார்
இங்கிவன் ஆண்பால் ஜன்மம் இவன்தந்தை யில்லம் சொல்வேன்
தங்கிடு மேற்கு வாசல் தென்வட வீதியாகும்
சங்கையாம் வாரி கீழ்ப்பால் காணுமே கெடியும் தென்கீழ்.

**2.** இவ்வாறு பார்வதிதேவி கேட்டவுடன், சடைமுனி பலன்களைச் சொல்லு கின்றார். இக்கிரஹ நிலையில் பிறந்தக் குழந்தை ஆண். வீதி தெற்கு வடக்காக அமைந்திருக்கும். வீடு மேற்குத் திசையை நோக்கி இருக்கும். வீட்டிற்குக் கீழ்த் திசையில் ஒரு நீர் நிலையும் பாதையும் உண்டு. தென் கிழக்குத் திசையில் ஒரு கோட்டையும் இருக்கும்.

3. இந்திர நகர மொப்பாம் இரங்குமில் வடபால் நோக்கம்
அந்தஇல்...... வாடையாகும் அளகேச நகர மொப்பாம்
சந்திரன் கோகுலத்தில் தோன்றுவானிரண்டாம் ஜன்மம்
தந்தைதாய் துணைவர் யோகம் தன்மனை புத்திர யோகம் ;

3. அந்த ஊர் அழகில் இந்திர நகரத்திற்குச் சமமாக விளங்கும். குபேரன் நகரம் [அளகாபட்டணம்] போல் ஐசுவரியம் நிறைந்தது. இந்த ஜாதகன் கோகுல [யாதவவமி]சத்தில் குடும்பத்திற்கு இரண்டாவது குழந்தையாக ஜனித்திருப்பான். இவனுடைய தாய் தந்தை சகோதரர் மனைவி புத்திரர் இவர்களின் யோகங்களைப்பற்றியும் ;

4. பாலகன் யோகச்சேதி பகருவோ மிந்நூல் தன்னில்
சாலவே ......தைக் கேதான் சகோதரர் ஆண்பாலொன்று
ஏலவே தீர்க்க மெய்தும் இயம்புவோம் பின்பால் சேதி
ஞாலமேல் பிதா குணத்தை நவிலுவோம் தாயே கேளும்.

4. ஜாதகனின் யோகங்களைப்பற்றியும் இந்த நூலில் சொல்லப்போகின்றோம். ....இந்த ஜாதகனுக்குச்சகோதரன் ஒருவன்தான் உண்டு. அவன் தீர்க்காயுளுடன் வாழ்வான். அவனைப்பற்றிய செய்திகளைப் பின் பகுதியில் சொல்வோம். தாயே ! ஜாதகனுடைய தந்தையின் குணங்களைச் சொல்லுகின்றோம். கேளுங்கள்.

5. உத்தரம் மேட ராசி உதிப்பனுமால்நி றத்தன்
வித்தையு மிரண்டு கற்பன் விவேகியாம் வாத தேகி
செத்தவர்த ........ம் செய்கையு முடையனாகும்
வெற்றிசே ராசர் மூல வியாதியை நிவிர்த்தி செய்வன்
எத்திசை வாசம் செய்வன் ஏவலா ளுடைய னாகும்.

5. அவன், உத்தர நக்ஷத்திரத்தில் மேஷ லக்கினத்தில் ஜனித்திருப்பான். கருத்த மேனியான். இரு விதமான கல்விகளை [பாஷைகளை]க் கற்றிருப்பான். நிரம்ப விவேகமுள்ளவன். வாத தேகம் வாய்ந்தவன். பெருமை வாய்ந்த ஒரு அரசனுடைய மூல வியாதியை நிவிருத்தி செய்வான். பல ஊர்களில் வாசம் செய்வான். இவனுக்குக் கீழ்ப்படிந்து நடக்கும் பல சேவகர்களை உடையவனாவன்.

6. அரசரால் தொழிலு மேற்பன் யாவர்க்கு மிவன்சொல் மேன்மை
வருவோர்கள் வினையைத் தீர்ப்பன்...... வார்த்தை சொல்வன்
தறிபடக் கூறு னாகும் சர்ப்பம் போல் கோப மேற்பன்.
மருமத்தை வெளி விடாதான் மஹாதலம் செல்வா னாகும்.

6. அரசரது ஆதரவினால் தொழிலை அடைவான். மற்றவர்களுடைய வார்த்தைகளைக் காட்டிலும் இவன் வார்த்தையை உலகில் அதிகம் மதிப்பார்கள். அழுத்துமாகக் கண்டித்துப் பேசாதவன். பாம்பிற்குக் கோபம் வருவதுபோல இவனுக்கும் கோபம் வரும். ரஹஸ்யத்தை யாருக்கும் சொல்லமாட்டான். பல புண்ணிய ஸ்தலங்களுக்கு யாத்திரை செல்லுவான்.

7. பந்துவும் மதிக்க வாழ்வன் பாக்கியம் சேர்ப்பா னுகும்
விந்தையாய்ப் பேசுவானும் விமலிமார் போக வானும்
எந்திடம் பெருமை யேற்பன் ஈகையும் கொஞ்ச முண்டு
சிந்தையு மிரண்டு மாகும் செப்புவோ மிவன்பின் ஜன்மம்.

7. பந்துக்கள் மெச்சும்படி வாழ்க்கையை நடத்துவான். ஐசுவரியத்தை அதிகம் சேமிப்பான். பிறர் ஆச்சர்யப்படும் வகையில் பேசுவான். பெண்களிடம் காதல் கொண்டவன். எங்குச் சென்றுலும் பெருமையை அடைவான். சிறிது கொடுக்கும் குணமும் அவனிடம் உண்டு. மனத்தில் ஒன்றை எண்ணி, அதை வெளியிடாமல், வேறு எண்ணத்தை வாக்கினல் தெரிவிப்பான். இவனுடைய பின் ஜன்மத்தைப்பற்றியதைக் கூறுவோம்.

8. முன்னவ னிருந்த ஜன்மம் மொழிகிறேம் தணிகை கீழ்ப்பால்
பிந்திய ஊரிலே தான் பிறந்தனன் ரெட்டி வம்சம்
பொன்பொரு ளுடையா னுகிப் பூமியும் பெருக்க முண்டாய்த்
தன்மனை மதலை யுண்டாய்த் சண்முகன் பக்தி பூண்டான்.

8. இவன் முன் ஜன்மத்தில் திருத்தணி க்ஷேத்திரத்திற்குக் கீழ்த் திசையிலுள்ள ஓர் ஊரில் ரெட்டி சாதியில் பிறந்தான். பணத்தையும் பொருள்களையும் அடைந்து, பூமிகளையும் விருத்தி செய்து வந்தான். மனைவி மக்களுடன் சுகமாக வசித்தான். சுப்பிரமணிய சுவாமியிடம் விசேஷ பக்தி பூண்டிருந்தான்.

9. அதிதிசன் நேச முண்டாய் அந்தகன் நகரம் சென்று
விதியவன் வரையப்பட்டு விளங்கி னுனிவனே யென்றேம்
அதிபதி யாக வாழ்வன் அறைந்தஇக் குணத்தா னுக்கு
இதுசுத னுதிப்பா னுகும் இயம்புவோ மிவன்கு ணத்தை.

9. விருந்தாளிகளை மிகவும் அன்புடன் உபசரித்தான். அந்திய வயதில் அந்தகன் உலகம் சென்ற இவன் பிரம்மதேவனல் இங்குப் படைக்கப்பட்டிருக்கிறன். எப்போதும் யஜமானனுகவே வாழ்வான். இவ்வாறு குணம் படைத்தவனுக்கு இந்த ஜாதகன் மகனுகப் பிறந்திருக்கிறன். சாதகனுடைய குணங்களைக் கூறுகின்றேம்.

10. மாநிறம் சமதேகத்தான் வார்த்தையும் சுகமே யெய்தும்
ஈனமாம் குணமில் லாதான் இரு நிறம் கல்வி கற்பன்
ஆனவர் நேசம் கொள்வன் அரசர்கள் உறவு கொள்வன்
வானவர் பக்தி பூண்பன் வர்க்கத்தைக் காப்பா னுகும்.

10. மாநிறமுள்ளவன். சமமான உடல் வளர்ச்சி பொருந்தியவன். இவனது வார்த்தைகள் இனிமையாக இருக்கும். கீழான குணங்கள் இல்லாதவன். இரு கல்விகளில் [பாஷை]களில் நிறைந்த அறிவு உடையவனுவான். செல்வாக்குள்ள பெரியோர்களின் நட்பு இவனுக்கு உண்டு. அரசர்களுடனும் தொடர்பு உள்ளவனுக இருப்பான். தெய்வபக்தி பூண்டவன். தன்னுடைய உறவினர்களை விசேஷமாகப் பாதுகாப்பான்.

**11.** அன்னிய பாஷை மேன்மை பலவித தொழிலு முள்ளான்
பொன்பணி அதிகம் சேர்ப்பன் பிதுர்ஊரில் வாசம் செய்வன்
துன்பங்கள் ஒருவர்க் கெண்ணன் தொடுத்ததை முடிப்பா னாகும்
தன்சொல்லு மடக்க முண்டு சலித்தோர்க்கு உதவி செய்வன்.

**11.** ஆங்கிலம் போன்ற அந்நிய பாஷைகளிலும் மேன்மையை அடைவான். பல விதத் தொழில்களைச் செய்வான். தங்கத்தையும், ஆபரணங்களையும் அதிகமாகச் சேமிப்பான். தன் பிதா வசித்த ஊரிலேயே இவனும் வாசம் செய்வான். ஒருவருக்கும் தீங்கை எண்ணமாட்டான். ஆரம்பித்த வேலைகளை வெற்றியுடன் முடிப்பான். அடக்கமான வார்த்தைகளைப் பேசுவான். கஷ்டப்படுபவர்களுக்கு உதவிபுரிவான்.

**12.** பாலகன் தனக்கு யோகம் பகர்ந்தகா ரணங்கள் சொல்வாய்
நாலுகேந் திரத்தில் கோள்கள் நயப்புட னிருப்ப தாலும்
மால்பானு ஜன்மம் தங்க மருவிடு பருவதயோ கங்கள்
சாலவே மச்ச யோகம தாசி யோகங்க ளென்றும்.

**12.** இந்தப் பாலகனுக்கு நல்லயோகப்பலன்களைச் சொன்னீர்கள். அதற்கான காரணங்களையும் சொல்லுங்கள் எனப் பார்வதி கேட்க, முனிவர் பதில் உரைக்கின்றார். நான்கு கேந்திரங்களிலும் [இலக்கினத்திற்கு ஒன்று நான்கு, ஏழு பத்தாம் இடங்களிலும்] கிரஹங்கள் இருப்பதாலும், சூரியனும் புதனும் இலக்கினத்தில் இருப்பதாலும் பருவதயோகம், மச்சயோகம் வேசியோகம். ஆக .

**13.** திருதிய யோகத் தாலே ஜகராசன் தன்னால் உய்வன்
அதிகாரம் பெற்று வாழ்வன் அங்கவாகனமு மேற்பன்
பதியது மூன்று சேர்ப்பன் பாகமாம் குடும்பி யாவன்
நதிசேது பதிக்குச் செல்வன் நாதனுர் பக்தி பூண்பன்.

**13.** மூன்று யோகங்கள் இருப்பதால் அரசரது ஆதரவை விசேஷமாகப் பெற்று அதிகாரம் செய்துக்கொண்டு வாழ்வான். குதிரை முதலிய சிறந்த வாகனங்களை அடைவான். மூன்று வீடுகளைக் கட்டுவான். கௌரவம் வாய்ந்த குடும்பியாகவும் வாழ்வான். புண்ணிய நதிகளிலும் சேதுவிலும் நீராடுவான். சிவபிரானிடம் மிக்க பக்திபூண்டவன்.

**14.** சாதகன் துணைஆண் ரண்டு சத்திமார் மூவ ரென்றேம்
ஓதின ஐந்தும் தீர்க்கம் உரைக்கிறேம் பின்பால் சேதி
மாதுரு குணத்தைச் சொல்வேன் மாந்தளிர் மேனி யாவன்
சூதிலாள் அடக்க வார்த்தை சொல்லுமுன் கோபம் கொஞ்சம்.

**14.** ஜாதகனுடைய சகோதரபாவத்தைக் கூறுகின்றேம். இரண்டு சகோதரர்கள், மூன்று சகோதரிகள். இங்குச் சொல்லப்பட்ட ஐந்து உடன்பிறந்தார்களும் தீர்க்கமாக வாழ்வார்கள். இவர்களைப்பற்றிய செய்திகளை இரண்டாம் பகுதியில் சொல்லப்போகின்றேம். சாதகனின் தாயினு

டைய குணங்களைச் சொல்லுகின்றோம். மாந்தளிர்போல் சிவந்த மேனியாள். கபடமில்லாதவள். அடக்கமான வார்த்தைகளைக் கூறுவாள். அவளுக்குச் சிறிது முன்கோபமும் உண்டு.

15. அன்னம்போல் வடிவு மொக்கும் அற்புத வார்த்தை யுண்டு
அன்னமும் அன்பாயிவள் ஆளன்தன் மனதுக் கேத்தோள்
அன்னியர் குற்றம் சொல்லாள் ஆறிவுளாள் ஊகை சாலி
அன்னவள் வந்த பின்பு ஆளனுக் கதிக யோகம்.

15. அன்னம்போல் அழகு உடையவள். பிறர் வியக்கத்தக்க வார்த்தைகளைப் பேசுவாள். எல்லோருக்கும் அன்புடன் அன்னமளிப்பாள். தன் கணவனது விருப்பத்தின்படி நடப்பாள். பிறர் குற்றத்தைச் சொல்லமாட்டாள். நல்ல அறிவு படைத்தவள். மதியூகமும் வாய்ந்தவள். அவள் இக்குடும்பத்தில் வாழ்க்கைப்பட்ட பிறகு, கணவனுக்கு நல்ல அதிருஷ்டம் வாய்க்கும்.

16. அன்னையும் தீர்க்க ஜீவி மாதுரு இரண்டே யாகும்
இங்கிவளி ளையா ளுக்கு இறங்கினளென்று சொல்வோம்
அங்கிவள் துணைஆண் மூன்று அறைகிறோம் தீர்க்க மாகும்
நங்கைமார் நாச மெய்தும் நாயகி கேட்டி டாயே.

16. ஜாதகளின் தாய் தீர்க்க ஜீவியாக இருப்பாள். இவளுக்கு இரண்டு தாய்மார்கள். அவர்களில் இளையவளுக்குப் பிறந்தவள் இவள். இவளுக்கு மூன்று சகோதரர்கள். சகோதரிகள் பிறப்பினும் நீடித்திரார். தேவியே! மேலும் கேளுங்கள்.

17. மாதுமுன் ஜன்மம் தன்னை வரைகிறோம் விரிஞ்சி நாட்டில்
காதலி வைசியச் சேயாய்க் கலந்துமே சுதர்க ளுண்டாய்ப்
போதன முடையாளாகிப் புக்கதோர்......குதவி செய்து
சீதள பிறை யணிந்த தேவன்தம் பக்தியாயுள்ளாள்.

17. ஜாதகனுடைய தாயின் பூர்வ ஜன்மத்தைக் கூறுகின்றோம். இவள் முற்பிறவியில், விரிஞ்சி நாட்டில், வைசிய குலத்தில் பிறந்து, மணமாகி, கணவனுடனும். குழந்தைகளுடனும் சுகமாக வாழ்ந்து வந்தாள். அறிவும் செல்வமுமுடையவளாக இருந்தாள். குளிர்ந்த சந்திரனைத் தலையில் அணிந்த சிவபிரானிடம் பக்திகொண்டும் இருந்தாள்.

18. அறமதி லிச்சை யுண்டாய் அந்தகன் நகரம் சென்று
பிரமனால் வரையப்பட்டு பிறந்தவளென்று சொல்வோம்
குறைவிலாக் குடும்ப மேற்பள் கூறுவோ மிவள் பின் சென்மம்
திருவள்ளூர் தன்னி லேதான் ஜனிப்பளாம் சைவசேயாய்.

18. தருமம் செய்வதில் ஊக்கமுடையவளாகவும் விளங்கினள். இவ்வாறு நற்குணம் வாய்ந்த இவள் அந்திய காலத்தில் இவ்வுலகம் விட்டு விண்ணுலகம் ஏகினள். இப்பொழுது பிரம்மதேவனால் இப்புவியில் பிறப்

பட்டு, இக் கடகலக்கின மகனுக்கு தாயாகவாய்த் திருக்கின்றாள். எவ்விதத்தி லும் குறைவில்லாத [சுபிட்சமான] குடும்பத்தை நடத்துவாள். இவனுடைய மறு ஜன்மத்தையும் சொல்லுகின்றோம்: இவள் மறு பிறவியில் திருவள்ளூரில் சைவ குடும்பத்தில் பிறப்பாள்.

19. கருமகால ங்கள் தம்மைக் கழறுவீர் முனியே நீர் தாம்
குருதசை சனியின் புத்தி கூடிய காலம் தன்னில்
திருமகன் முப்பா னேழில் செப்புவோம் தந்தை கண்டம்
மறுஜன்மம் காளத்தி தன்னில் வருவனும் சைவச் சேயாய்.

19. இந்த ஜாதகன் கருமம் செய்யவேண்டிய காலத்தைச் சொல்லுவீராக எனப் பார்வதி கேட்க, மஹரிஷி கூறுகின்றார். குருதிசையில் சனி புக்தி நடைபெறும் போது, சாதகனுக்கு முப்பத்தேழாவது வயது நடக்கும். அப்போது இவனுடைய தந்தை மரணமடைவான். தந்தையின் மறு ஜன்மத்தையும் சொல்லுகின்றோம். இவன் காளஹஸ்தி க்ஷேத்திரத்தில் சைவ வமிசத்தில் பிறப்பான்.

20. இந்தவோர் ஜன்மம் தன்னில் இவன்பொ ருளிச்சையாயும்
விந்தையாய்ச் சொல்லி ரண்டு விரதங்கள் முட்டுச் செய்தும்
அந்தவன் வாழ்வ தாலே அவன்சைவ குலமெ வ்வாறு
முந்தியே புகலு மென்ன மொழிகுவார் அத்திரி தாமும்.

20. இந்தச் ஜன்மத்தில் இவன் (தந்தை) பிறர் பொருளில் ஆசை கொண்டிருந்தான். மனத்தினல் ஒன்றை எண்ணி, வாக்கினல் ஒன்றைச் சொல்லிவந்தான். [திரிகரண சுத்தி இல்லாதவன் என்பது கருத்து] பல தருமமான விரதங்களுக்கு இடையூறுகள் செய்திருக்கிறன். ஆகவே இவ்வாறு பாவங்கள் செய்தவனுக்கு உயர்ந்த சைவகுலத்தில் ஏவ்வாறு பிறக்க முடியும்? அதற்குப் பதில் சொல்லுவீராக என்று பார்வதி கேட்க, அத்திரி பதில் உரைக்கின்றார்.

21. சிலர்க்குஆ பத்தைக் காத்தும் தேவதா தலங்கள் சென்றும்
தலைவனும் வாழ்வ தாலே ஜனிப்பனும் என்று சொல்வோம்
குலவியஅன்னைக்கே தான் கூறுவோம் நாற்பா னலில்
விலகுவாள் கால னுடு விமலியே மேலுங் கேளே.

21. அவன், நீங்கள் சொன்னபடி பாவங்களைச் செய்தவனுயினும் சிலரை ஆபத்துக்களிலிருந்து காப்பாற்றி இருக்கின்றான். மேலும் பல தேவாலயங்களுக்குச் சென்று, அங்கு எழுந்தருளி இருக்கும் கடவுள் மூர்த்திகளை வணங்கி வழிப்பட்டிருக்கின்றான். ஆகையால் இந்தப் புண்ணியங்களால் உயர்ந்தஜாதியில் பிறப்பான் என்று சொன்னோம். [முன் சொன்ன பாவங்களுக்கு அப்பிறவியில் வேறு கஷ்டங்களை அனுபவிப்பான் என்பது கருத்து] ஜாதகனின் தாய், ஜாதகனுக்கு நாற்பத்து நான்காவது வயது நடக்கும் போது இறப்பாள். மேலும் கேளுங்கள். சொல்லுகிறோம்.

22. உதித்த சேய் மணத்தின் காலமுரைக்கிறோமொருபா ணென்பான்
அதிபதி மேல்பால் தோன்றும் மாதுரு வர்க்கம் தன்னில்
சதியிலா மனத்தா ளாகும் சற்பாத்திரி கல்வி மானும்
துதிசெய்வோர்க் கன்ன மீவள் தோழந்தன் மனதுக் கேத்தோள்.

22. பிறந்திருக்கும் இந்த ஜாதகனின் விவாஹ காலத்தைச் சொல்லுகின்றோம். இவனுக்குப் பத்தொன்பதாவது வயதில் விவாஹம் நடைபெறும். பெண், மேற்குத்திசையில் மாதுரு வருக்கத்தில் ஜனித்திருப்பாள், அந்தப் பெண் கபடமில்லாதவள். எல்லோருடைய அன்பிற்கும் பாத்திரமானவள். கல்வியறிவும் படைத்தவள். அவளைப்பற்றித் துதித்துப் பேசினால் மகிழ்ச்சியடைந்து அன்னமிடும் சுபாவம் உள்ளவள். பிறர் குற்றங்களைக் கவனிக்காதவள். தன்னுடைய கணவன் மனத்திற்கு உகந்தவள்.

23. பால் பாக்கிய முடைய ளாகும் பகையென்று மன தில் வையாள்
சீலமு முடையா ளாகும் சிந்தையும் நல்ல தாகும்
மால்மனையேற்பதாகும் வருவோரை ஆத ரிப்பாள்
வேல்விழி தீர்க்க ஜீவி விளம்புவோம் புத்திர பாவம்.

23. பால்பாக்கியம் உடையவள். ஒருவர் பேரிலும் பகைமை கொள்ளாதவள். நற்சீலம் உடையவள். மனத்தில் நன்மைகளையே நினைப்பாள். வீடு நிலம் முதலிய பொருள்களை அடைவாள். வீட்டிற்கு வருபவர்களை அன்புடன் ஆதரிப்பாள். அவள் தீர்க்காயுளுடன் வாழ்வாள். குழந்தைகளிடம் மிக்க அன்புகொண்டவள்.

24. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோம் எழுவர் தோன்றும்
சுத்தமாய் ஆண்பால் ரண்டு தோகையர் அவ்வாறு தீர்க்கம்
குற்றமாம் முதலும் ரண்டும். கூறுவோ மிவ்வா றென்றோம்
எத்தகை பலத்தி னாலே இயம்பினீர் அந்தச் சங்கை.

24. இந்த ஜாதகனின் புத்திர விருத்தியைப்பற்றிச் சொல்லுகின்றோம். இந்தத் தம்பதிகளுக்கு ஏழு குழந்தைகள் பிறப்பார்கள். அவர்களில் இரு பிள்ளைகளும் இரு பெண்களும் நீடித்து வாழ்வார்கள். முதலில் பிறக்கும் இரு குழந்தைகளும் நஷ்டமாகும். இவ்வாறு முனிவர் கூறியவுடன். அதற்குக் காரண மென்ன, என தேவி வினவினாள்.

25. அஞ்சினுக் குடையோன் சேயாய் அருரண்டில் புகரும் நிற்கத்
துஞ்சிடும் முதலில் என்றோம் செப்புவோ மிவன்முன் ஜன்மம்
கச்சி மாநகரம் தன்னில் கலந்தனன் வேளான் வம்சம்
மிஞ்சிய பொருள் படைத்து வேதியர் தொண்டு பூண்டான்.

25. முனிவர் பதில் உரைத்தார். புத்திரபாவத்திற்குடைய செவ்வாயும் சுக்கிரனும் பலமற்றுப் பன்னிரண்டில் தங்கியிருப்பதால் முதல் இரு குழந்தைகளும் நீடித்திரா என்று சொன்னோம். இவனது (ஜாதகனது) முன் ஜன்மத்தைக் கூறுகின்றோம். இவன் முற்பிறவியில் காஞ்சியில் வேளாள வம்சத்தில் பிறந்து, ஏராளமான செல்வம் படைத்தவனாகி, சிறப்பாக வாழ்ந்தான். பிராம்மணர்களுக்குத் தொண்டு செய்தான்.

26 முன்வினை யில்லாதாகி மேவினன் கால ரூடு
பொன்னவன் வரையப் பட்டுப் பிறப்பனு மிந்தப்பாலன்
அன்னவன் யோகம் சொல்வேன் அரசர்பூசிமுத மாவன்
மன்னரால் அதிகா ரங்கள் மருவிடும் பால னுக்கு.

26. ஒரு பாவமும் செய்யாதவனுகிய இவன் அந்திய காலத்தில் இறந்து, பின்னுல் இங்குப் பிறந்திருக்கிறுன். இவனுடைய யோகங்களைக் கூறுகின்ருேம். அரசர்களால் கௌரவிக்கப்படுவான். அரசருடைய ஆதரவினுல் இவனுக்கு அதிகாரமுள்ள பதவிகள் வந்திடும்.

27. பிறந்தவன் முதலாய் யோகம் தலைவனின் மரண மட்டும்
பிறைபோல செல்வ மோங்கும் பேசுவோம் மத்தில் சங்கை
குருநீயன் தசைபூர் வத்தில் கோள்களும் மனது துன்பம்
வருகுமே அநேக மாக மன்னவன் எழில் தங்க ;

27. இந்த ஜாதகனுக்குப் பிறந்தது முதல் மரண மட்டும் நல்ல யோகங்கள் உண்டு. பிறைச் சந்திரன் போல செல்வம் ஓங்கும். ஆனுல் குருதசை ஆரம்பத்திலும் சனிதசை ஆரம்பத்திலும் கோள்கள் சொல்லப்படுவதால் துன்பங்கள் அநேகம் நேரிடும். ஆயினும் குரு எழில்தங்கி இருப்பதால், அத்துன்பங்கள் ;

28. பரிதி முன் பனிபோல் நீங்கும் பராசருமறித்துச் சொல்வார்
திருமகன் தனக்கு ராஜயோகமும் செப்பி னீர்கள்
வருகிற காலம் சொல்வாம் மாரனுக்கிருபான் ரண்டில்
அரசகுலத் தொழிலும் வாய்க்கும் ஐம்பது ஆண்டு மட்டும்.

28. சூரியன் முன் பனிபோல, நீங்கும். முன்சொன்ன யோகங்களுக்குப் பங்கம் விளையாது. இங்கு பராசரர் சொன்னுர். இந்த ஜாதகனுக்கு ராஜயோகம் ஏற்படும் என்று சொன்னீர்கள். அந்த யோகம் எந்த வயதில் ஏற்படும் ? அதைச் சொல்லுங்கள் என, அத்திரி கூறுகின்ருர் :— ஜாதகனுக்கு இருபத்திரண்டாவது வயதில் அரச குலத்தொழில் வாய்க்கும். அஃது, ஐம்பதாவது ஆண்டு மட்டும் நீடித்து நடைபெறும்.

29. சந்திரன் பிறைபோல் யோகம் தங்கிடும் என்று சொல்வோம்
மந்திரி தசைகாலத்தில் மருவிடும் சிலது கோள்கள்
எந்தக்கோள் வந்த........எழினில் குருவும் தங்க
வந்தகோள் விலகு மென்ருேம் மன்னவன் தசைவி சேஷம்.

29. இவனுடைய யோகங்கள் வளர்பிறைச் சந்திரன் போல வளரும் என்று முன்பே சொன்ஞேம். தேவமந்திரியான குருதசை ஆரம்பத்தில் சில இடையூறுகள் ஏற்படும். ஆனுல் எழில் குரு இருப்பதால் வந்த இடையூறுகள் சுலபமாக விலகும். குருதசை மிகவும் சிறந்தது என்றும் சொன்ஞேம்.

30. காரணம் யாது சொல்வாய்க் காரியுங் குருவு மாரி
ஆறேழி லிருப்ப தாலே அவர்தசை விசேஷயோகம்
பாரில்லம் சேர்த்த லுண்டு பாக்கியம் பெருக்க மாகும்
வேறுதீங் கில்லா............வடதிசை அரசன் ஒப்பாம்.

30. வந்த இடையூறுகள் விலகும் என்று சொல்லுவதற்குக் காரணம் என்ன ? எனப் பார்வதி கேட்க, முனிவர் பதில் உரைக்கின்றார். குரு, சனி வீட்டிலும், சனி, குருவீட்டிலும் பரிவர்த்தனையாக இருப்பதால், குருதசை நல்ல பலன்களையே தரும். பூமிகளும் வீடும் சேரும். ஐசுவரியம் விருத்தி யடையும். வேறு தீங்குகள் ஏற்படா. வடதிசையிலுள்ள அரசனுக்கு [குபேர னுக்கு] நிகராக விளங்குவான்.

31. அறுபது ஆறு ஆண்டில் அணுகிய கன்னி மாதம்
திருமக னுடலம் ஏகும் செப்புவோ மிவன் பின்ஜன்மம்
பிருதிவி தலத்திலேதான் பிறப்பனும் பிரம்ம சேயாய்ப்
பொருளது பெருக்கமாகிப் புகழுடன் வாழ்வா னம்மா.

31. சாதகனுக்கு அறுபதாவது ஆண்டில் புரட்டாசி மாதத்தில் மரணம் நேரும். இவனுடைய பின் ஜன்மத்தையும் சொல்லுகின்றோம். இவன் மறு பிறவியில் பிருதிவி தலம் என்று சொல்லப்படும் காஞ்சியில் பிராம்மண குலத்தில் பிறந்து, அதிக பொருள்களை அடைந்து, புகழுடன் சிறப்பாக வாழ்வான்.

32. அன்னவன் ஜனனகாலம் அந்தநாள் முதல்பா தத்தில்
சந்திரன் தசையே யாண்டும் தங்கிடும் நவமாம் திங்கள்
முன்பாகம் விபரம் சொன்னோம் மொழிகிறோம் பின்பால் சேதி
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே.

32. இந்த ஜாதகன் ஜனித்த சமயத்தில் ஹஸ்த நக்ஷத்திரம் முதல் பாதத்தில் சந்திரன் சஞ்சரித்தபடியால், சந்திரதசை இருப்பு வருஷங்கள் ஏழு, மாதங்கள் ஒன்பது. விநாயகரைப் பெற்ற தாயே முன் பாகத்தில் பலன்களைச் சுருக்கமாகச் சொல்லி இருக்கின்றோம். இரண்டாம் பாகத்தில் விஸ்தாரமாகக் கூறப் போகின்றோம்.

## ஜாதகம் 24

1. சந்திரன் வீணையாகச் சனிரவி மீன மாகப்
புந்தியும் புகரும் மேடம் தீமகன் ராகு மானில்
மந்திரி சாடி யாக வருஞ்சிகி வண்டி யாக
இந்தவாறு கிரகம் நின்று லக்கினம் கடகமாக.

| சனி சூரியன் | புதன் சுக்கிரன் | | சந்திரன் |
|---|---|---|---|
| குரு | இராசி சக்கரம் | | லக்கினம் கேது |
| செவ்வாய் ராகு | | | |
| | | | |

பகுதான்ய வருஷம் பங்குனி மாதம் 18-ஆந் தேதி ஞாயிற்றுக்கிழமை பிற்பகல் ஜனனம் [ஆங்கில தேதி 30-3-1879] நவக்கிரஹங்களின் பாத சாரம் :—ரேவதி 1-இல் சூரியன். திருவாதிரை 2-இல் சந்திரன். சிரவணம் 3-இல் செவ்வாய். அசுவினி 2-இல் புதன். சதயம் 1-இல் குரு. பரணி 1-இல் சுக்கிரன். உத்தரட்டாதி 4-இல் சனி (அஸ்தம்). உத்தராடம் 4-இல் ராஹு. புஷ்யம் 3-இல் கேது நக்ஷத்திரம். திருவாதிரை. ராஹு தசையில் இருப்பு வருஷங்கள் பதினொன்று ; மாதங்கள் பதினொன்று.

1. சந்திரன் மிதுனத்திலும், சனி சூரியன் மீனத்திலும். புதன் சுக்கிரன் மேஷத்திலும், செவ்வா ராகு மகரத்திலும், குரு கும்பத்திலும், கேது கடகத்திலுமாக இருந்து, லக்கனம் கடகமுமாக அமைந்து இவ்வாறு உள்ள கிரஹநிலையின் பலன்களைச் சொல்லுவீர்களாக என அம்பிகை வினவினாள்.

2. பார்வதி கேட்கும் போது பிருகுமே சொல்லு கின்றார்
தீரமா யாண்பால் ஜன்மம் செப்புவோ மில்லம் தானும்
சாரியாய் வடதென் வீதி தனித்ததோர் வீட தாகும்
மாரியும் சந்தி உத்திரம் அருகினில் ஈசன் காளி.

2. இவ்வாறு பார்வதி தேவி கேட்டவுடன், பிருகு முனிவர் ஜாதகப் பலன்களைக் கூறுவார். இக்கிரஹ நிலையில் ஜனித்த குழந்தை திண்ணமாக ஆண். வீதி தெற்கு வடக்கில் அமைந்திருக்கும். இவன் ஜனித்திருக்கும்

வீடு தனித்து இருக்கும். இரு புறங்களிலும் வீடுகள் இரா. வடதிசையில் ஒரு மாரியம்மன் கோயிலும், பல தெருக்கள் கூடும் சந்திப்பும் இருக்கும். அவைகளுக்கு அருகில் சிவனாலயமும் காளி கோயிலும் உண்டு.

3. தந்தியு மார்க்க மேற்கில் சஞ்சீவி ராயன் கோஷ்டம்
செந்தியிலுதித்தோன் வாசம் சோலையும் குண்ட முண்டு
முந்திய மாலின் கோஷ்டம் மூயலுவோம் குணக்கி லேதான்
எந்தையே கீழ்ப்பால் வாசல் இலகிய சமவூர் தன்னில் ;

3. மேற்குத் திசையில் விநாயகர் ஆலயமும், ஹனுமான் கோயிலும், சுப்பிரமணிய சுவாமியின் கோஷ்டமும், ஒரு சோலையும், ஒரு குளமும் இருக்கும். கிழக்குத்திசையில் மஹாவிஷ்ணுவின் கோயிலும் இருக்கும். இவன் செனித்த வீடு கிழக்கு நோக்கி இருக்கும். இவ்வாறு அடையாளமுள்ள நடுத்தரமான ஊரில் ;

4. இவ்வித அடையா ளத்துள் இவனுமே கங்கை சேயாய்ப்
பவ்வமா யுதிப்பா னாகும் பாலகன் செந்த யோகம்
ஒவ்விய தந்தை மாதர் உறுந்துணை களத்திர புத்திரர்
திவ்விய முன்பின் ஜன்மம் செப்புவோம் கேளும் தாயே.

4. இந்தச் சாதகன் வேளாள வமிசத்தில் செனித்திருப்பான். இவனுடைய யோகங்களையும், தாய் தந்தை சகோதரர் களத்திரம் புத்திரர் இவர்களைப் பற்றியும், முன்பின் ஜன்மங்களைப்பற்றியும் இந்த நூலில் சொல்லப்போகின்றோம். தாயே ! செவிசாய்த்துக் கேளுங்கள்.

5. தந்தையின் துணைவர் தம்மைச் சாற்றுவோ மாண்பா லொன்று
நொந்திடும் சிலது நாளில் நேமியில் தனிய னவன்
எந்தையே தந்தை சேதி இயம்புவோ மிருநிறத்தான்
கந்தனும் குலதெய்வங்கள் கல்வியு மல்ப முள்ளான்.

5. தந்தையின் சகோதரர்களைப் பற்றிக் கூறுவோம். ஒரு சகோதரன் தான் உண்டு. அவனும் சில நாட்களுக்குள் நசிப்பான். ஆகையால் இவன் தனியனாகவே வாழ்வான். தாயே ! ஜாதகனின் தந்தையின் குணங்களைக் கூறுகின்றோம். கருத்த மேனியான். இவனுடைய குலதெய்வம் சுப்பிரமணிய சுவாமிதான். கல்வி யறிவும் கொஞ்சமாகவே இருக்கும்.

6. மனமது அழுத்த முள்ளான் மாநிலம் விருத்தி செய்வன்
சினமிலான் காலி விருத்தி தீரமில் லாத நெஞ்சன்
வினையது ஒருவர்க் கெண்ணான் மேலவர் பக்தி கொள்ளவன்
பிணையான வார்த்தை கூறான் பின்புத்தி உடைய னாமே.

6. இவன் மனத்தை யாரும் அறியமுடியாது. நிலங்களை விருத்தி செய்வான். கோபமில்லாதவன். கால் நடைகள் இவனிடம் விருத்தியடையும். மனத்தில் உறுதியில்லாதவன். ஒருவருக்கும் தீங்கை எண்ணா

மாட்டான். மேலானவர்களிடம் (பெரியோர்—கடவுள்) பக்தி பூண்டிருப்பான். கலஹமேற்படும் வார்த்தைகளைக் கூறமாட்டான். காரியங்கள் ஒருவாறு நிறைவேறிய பிறகு நல்ல யோசனைகள் இவனுக்குத் தோன்றும்.

7. அறமதி லிச்சை யில்லான் அல்பபோஜனத்தா னாகும்
நிரந்தர குடும்ப மாவன் ரோமங்கள் நீட்சி யில்லான்
குறையான மனத்தா னாகும் கோதைக்கு அடக்க முள்ளான்
உறைந்திடும் பித்தச்சூடு உத்தமி கேட்டி டாயே.

7. தருமம் செய்வதில் ஆசையில்லாதவன். ஆகாரத்தைக் கொஞ்சமாகவே உட்கொள்ளுவான். சஞ்சலமில்லாத, ஸ்திரமான குடும்பத்தை உடையவனாவான். நீண்ட ரோமங்கள் இல்லாதவன். எப்போதும் குறைப்படும் (ஏங்கும்) மனப்பான்மை உள்ளவன். மனைவிக்கு அடங்கி நடப்பான். இவன் உடலில் பித்தசூடு தங்கி இருக்கும். உத்தமியே! மேலும் கேளுங்கள்.

8. இக்குண முடையா னுக்கு இவனுமே சேஷ்டனாக
மிக்கவே உதிப்பா னாகும் விளம்புவோ மிவன் குணத்தைச்
சிக்கன முடையா னாகும் சமதேகன் மா நிறத்தன்
பக்கு வமாக வார்த்தை பகருவா னிவனே யென்றோம்.

8 இப்படிப்பட்ட குணமுடைய தந்தைக்கு இச் சாதகன் ஜ்யேஷ்ட புத்திரனாகப் பிறந்திருக்கிறான். சாதகனின் குணத்தைச் சொல்லுகின்றோம். அதிகச் செலவு செய்யாமல் சிக்கனமாக வாழ்வான். சமமான உடல் வளர்ச்சி உடையவன். மாநிறம் வாய்ந்தவன். பிறர் மனம் நோவாதபடி தனது வெறுப்பு கோபம் முதலியவைகளை நயமாகத் தெரிவிப்பான்.

9. தந்தையி னாஸ்தி தன்னைத் தானவன் விருத்தி செய்வன்
பிந்தியும் பூமி சேர்ப்பன் பின்புத்தி வறுமை யில்லான்
சிந்தையும் மர்மமாவன் ஜெனஉப காரியாவன்
தன்பந்து புகழ வாழ்வன் சங்கரி மேலுங் கேளே.

9. இந்தச் ஜாதகன் பிதுரார்ஜித சொத்தை அபிவிருத்தி செய்வான். அதற்கு மேலும் பூமிகளைச் சேர்ப்பான். தந்தைக்கு இருப்பதுபோல இவனுக்கும் பின் புத்திதான். வறுமை இல்லாதவன். மனத்தில் சிறிது கபடமுள்ளவன். ஜனங்களுக்கு உபகாரம் செய்வான். தனது உற்றார் உறவினர் கொண்டாடும்படி வாழ்வான். தேவியே! மேலும் கேளுங்கள்.

10. பால் பாக்கிய முடையனாவன் பனையேர்கள் விருத்தி யுள்ளான்
சீலவான் கிருஷி செய்வன் செய்ந்நன்றி மறவா னாகும்
பாலிய வறுமை யுள்ளான் பெருகிடும் மூல சூடு
காலத்தை யறிந்து வாழ்வன் காதலி கேட்டி டாயே.

10. பால் பாக்கிய முடையவன், உழும் காளைகளை அபிவிருத்தி செய்வான். நன்னடக்கை உடையவன். விவசாயம் செய்வான். தான் அடைந்த

உதவியை மறவாதவன். பாலியத்தில் சிறிது வறுமை உள்ளவன். மூலச்சூடு அதிகமாகும். காலத்திற்குத் தக்கபடி தனது வாழ்க்கையை மாற்றிக்கொள்வான்.

11. இன்னவன் துணைவர் தம்மை யியம்பவே பலத்தைக் காணேம்
தன்னிலே யுதித்தா லுந்தான் சல்தியில் நஷ்டமாகும்
இன்னவாறு முனிவர் கூற ஈசுவரி கேட்க லுற்றள்
அன்னவர் தமக்கு தோழர் அணுகாத காரணம் சொல்.

11. இவனுடைய சகோதர பாவத்தை ஆராய்ந்து பார்த்தால், சகோதர விருத்தியே இல்லை என்று அறியபடுகின்றது. சகோதரர்கள் ஜனித்தாலும் சீக்கிரத்திலேயே நஷ்டமாவார்கள். இவ்வாறு முனிவர் கூறியதைக் கேட்டுப் பார்வதி வினவினுள். சகோதரர்கள் விருத்தியாகாத தற்குக் காரணம் என்ன ? சொல்லுங்கள் என்றுள்.

12. மதியுமே விரயம் புக்க மழைகோளும் கரும மேறக்
சதியினுல் மாதுர் தானும் சீக்கிரம் மரண மேயாம்
பதியினில் இரண்டாம் தாயார் பரவுவா ளென்று சொன்ஞேம்
அதிபதி தனக்குப் புத்திரர் வரைகுவீர் முனியே நீர் தாம்.

12. மாத்ருகாரகன் என்று சொல்லப்படும் லக்கிஞதிபதியாகிய சந்திரன் பன்னிரண்டில் இருப்பதாலும், மாத்ரு பாவத்திற்குடைய சுக்கிரன் கருமஸ்தானத்தில் பத்தாமிடத்தில் இருப்பதாலும் இந்த ஜாதகனின் தாய இவன் பிறந்து சில வருஷங்களுக்குள் மரணமாவாள். ஆகையால் சகோதர விருத்தி இல்லை என்று சொன்ஞேம். இளைய தாயார் ஏற்படு வாள் என்றும் தெரிவித்துக் கொள்ளுகிரேம். அந்த விஷயம் இருக்கட்டும். இளையதாயினுடைய புத்திரபாவத்தைச் சொல்லும் என்று பார்வதி கேட்க, முனிவர் கூறுகின்றுர்.

13. சுதர்களும் காணு ளாகும் ஜனிக்கினும் தீதே யாகும்
விதங்களைச் சொல்லு மென்ன வித்தகன் துணைவர் தானம்
முதுமகன் பார்த்த தாலே எய்தாதும் துணைவ ரென்ரேம்
நதிபிறை யணிந்தோன் தேவி நவிலுவோம் மேலுங் கேளே.

13. அவளும் பிள்ளைகளைக் காணமாட்டாள். பிறப்பினும் இறக்கும். ஏனெனில், சனி சகோதரஸ்தானம் என்று சொல்லப்படும் மூன்ரு மிடத்தைப் பார்ப்பதால் இந்த ஜாதகனுக்கு இளையதாயின் மூலமும் சகோதர விருத்தி இல்லை. கங்கையையும் சந்திரனையும் தலையில் அணிந்திருக்கும் சிவபிரானின் தேவியே ! மேலுங் கேளுங்கள்.

14, இன்னவன் மணத்தின் காலம் இயம்புவோ மிருப தாண்டில்
கன்னிகை உத்தரத்தில் காதலி வருவா ளாகும்
அன்னவள் குணத்தைச் சொல்வேன் அழகுளாள் சிவந்த மேனி
பன்னியே பேச வல்லாள் பாவையும் நிந்தை யுள்ளாள்.

14. ஜாதகனுடைய விவாஹ காலத்தைச் சொல்லுகின்றோம். இருபதாவது வயதில் விவாஹம் நடைபெறும். மணப்பெண் வடதிசையிலிருந்து வருவாள். அவளது குணத்தையும் சொல்லுகின்றோம். மிக்க அழகு வாய்ந்தவள். சிவந்த மேனியாள். பேசியதையே மறுபடியும் மறுபடியும் பேசுவாள். அவளுக்கு அவதூறும் உண்டாகும்.

15. வரனுக்கு நேய முள்ளாள் மாதுவும் சமயோ கத்தாள்
சரியிலா மனத்த ளாகும் சந்தேக குணத்தளாகும்
குறையிலா வாழ்வா ளாகும் கோதைக்கு வயது தீர்க்கம்
பிருகுமே இவ்வாறு கூற புயண்டரும் சொல்லு கின்றார்.

15. கணவனிடம் மிக்க அன்பு உள்ளவள். அவள் சாதாரண அதிருஷ்டமுள்ளவள் தான். மனம் கெட்ட வழியில் செல்லும். சந்தேகப் படும் குணம் உடையவள். எவ்விதத்திலும் குறைவு இல்லாமல் வாழ் வாள். இவள் தீர்க்காயுளுடனும் இருப்பாள். இவ்வாறு பிருகு மஹரிஷி கூறியவுடன் புயண்டர் கூறுகின்றார்.

16. எப்படி மனைவி தீர்க்கம் இயம்பினீர் முனியே சொல்வீர்
செப்புவே னேமோன் தானும் செழிப்புள நவத்தில் நிற்க
ஒப்புடன் குடும்பம் தன்னை உயர்குரு பார்த்த தாலே
மெய்ப்புடன் தாரம் ரெண்டு விளம்பினே மிவனுக் கேதான்.

16. எப்படி மனைவி தீர்க்கம் ? அதன் காரணத்தைச் சொல்லும். எனக் கேட்க, பிருகு முனிவர் பதில் கூறினார். எழுக்குடைய சனி திரிகோணம் என்று சொல்லப்படும் ஒம்பதாமிடத்தில் இருப்பதாலும், எட்டில் இருக்கும் சுப கிரஹமாகிய குரு குடும்பஸ்தானத்தைப் பார்ப்பதாலும், மூத்த மனைவியும் தீர்க்கமாக வாழ்வாள். அவள் ஜீவித்திருக்கும் போதே இவனுக்கு இரண்டாம் மனைவியும் ஏற்படுவாள்.

17. வக்கிரன் ராகு எழில் வந்ததால் மனைவிக் கீனம்
ஒக்கவே இவன் முன் ஜன்ம ஊழினால் பாரிதோஷம்
மிக்கவே முன்னூழ் தன்னை விளம்புவீர் விவர மாக
நக்கனைப் பூசை செய்யும் நாயகி கேட்டி டாயே.

17. செவ்வாயும் ராகுவும் களத்திர ஸ்தானமாகிய எழில் இருப்பதால் மனைவிக்கு அபகீர்த்தி ஏற்படும் : அவ்வாறு அவளுக்குப் பெயர் கெடுவதற்கும் இவனுடைய முன்வினைதான் காரணம். அந்த வினையைச் சொல்லு கின்றோம். சிவபிரானைப் பூசிக்கும் தாயே ! கேளுங்கள்.

18. முன்ஜன்மம் சொல்லுகிறேன் முக்கூடல் தன்னிலே தான்
அன்னவன் தீயின் வம்சம் அணுகியே பூமி தன்னால்
இன்னவன் ஜீவித் தேதான் எழிலுள மனைவி புத்திரர்
தன்னிலே யுடைய னாகித் தன்பந்து புகழ் வாழுவர்.

18. இவன் முன்சென்மத்தில் முக்கூடலில் வன்னிய குலக்ஷத்திரிய வமிசத்தில் பிறந்தான். பூமியை உழுது பயிரிட்டு ஜீவித்து வந்தான். அழகிய மனைவியையும், மக்களையும் உடையவனாகி, பந்துக்கள் கொண்டாடும் வகையில் சிறப்பாக வாழ்ந்து வந்தான்.

19. அவ்வூரில் சைவன் தானும் அவனுமே நேச மாகி
பவ்வமாய் வெகுநாளாக பரிந்துமே வார்த்தை பேசி
நவ்வியே யிருக்குங் காலை நாயகன் மனைவி யான
திவ்விய மாது தன்னைச் சேரவே கருதி யேதான்.

19. அதே ஊரில் வசித்து வந்த ஒரு சைவனோடு இவனுக்கு நட்பு உண்டாகி, இருவரும் கூடி பிரதி தினம் வெகு நேரம் சம்பாஷித்து வருவார்கள். இவ்வாறு இருக்கையில் அந்தச் சைவனுடைய அழகிய மனைவியைக் கண்டு இவன், தகாத வழியில் அவளிடம் அன்புக் கொண்டான்.

20. பலவித வசனம் பேசி பாவையை வணங்கி யேதான்
சிலசில தனமும் சீலை செல்விக்கு ஈந்து பின்பு
குலவியே போகம் துய்க்கக் கோதையைக் கையைத் தொட்டான்
நலமுள சைவ மாது நாயகி ஏது சொன்னாள்.

20. இவன் அவளிடம் பலவித நயமான வார்த்தைகளைப் பேசியும், வணங்கியும் அவளுக்குப் பணத்தையும், வஸ்திரத்தையும் கொடுத்து அவளைத்தன் வசப்படுத்துவதற்காக அவளது கையைப் பற்றினான். அப்போதும் நற்குணம் பொருந்திய அந்தச் சைவமாது என்ன சொன்னாள் ? அதை நீங்கள் அறிவீர்களா ?

21. தோழன்தன் மனைவி போகம் துய்க்கவே கருத வேண்டாம்
ஆழியில் அநுப வித்தால் அதிகமாய் நரக மெய்தும்
ஏழையின் வார்த்தை கேளாய் என்றுமே சொல்லும்போது
பாழான காமத்தாலே பலாத் கார மாகச்சேர்ந்தான்.

21. உன்னை நம்பி இருக்கும் தோழனின் மனைவியை ஆசைப்பட வேண்டாம். தகாத வழியில் நீ ஆசைப்பட்டால் நீண்ட காலம் நரகத்தில் கஷ்டப்படுவாய். என்னுடைய வார்த்தையைக் கேட்டு அதன்படி நடப்பாயாக என்று சொன்னாள். ஆயினும் இவன் அவ்வார்த்தைகளைக் கேளாதவனாகவே தன் விருப்பத்தின்படி நடந்துகொண்டான்.

22. அருந்ததி யொத்த மாது அவன்வர னில்லா வேளை
பெருந்தன முடைய பாவி போகங்கள் துய்த்த தாலே
வருந்தியும் மனவெ றுப்பால் மங்கையும் சாபம் சொல்வாள்
திருந்திய இச்சென் மத்தில் செல்விதி மனைவிமாள்வள்.

22. வசிஷ்டரின் மனைவியான அருந்ததியைப் போல் கற்பில் சிறந்தவளாகிய அந்தச் சைவமாது, தன் கணவன் வீட்டில் இல்லாத காலத்தில்

பெரியதனம் படைத்த இந்தப் பாவி தன்னிடம் அவமரியாதையாக நடந்துக் கொண்டதால், வெறுப்படைந்து சாபமிட்டாள். செல்வத்துடன் சிறப்பாக வாழும் இந்த ஜன்மத்திலும் நீ உன்னுடைய மனைவியை இழப்பாய் (மனைவி இறப்பாள் என்பது கருத்து).

23. மற்றொரு ஜன்மம் தோறும் மனைவியின்தோஷமாயும்
பெற்றதாய் வர்க்க ளுஸ்தி பலபல நிந்தை யாயும்
குற்றமாய் சிலர்கள் சொல்ல கூறியே சலத்தில் வீழ்ந்து
செத்தனள் அந்த மாது சேர்ந்தது அந்த தோஷம்.

23. மறுசென்மத்திலும் உனது மனைவிகளுக்குத் தோஷம ஏற்படும். நீ செய்த பாவத்தால் தாய் வருக்கமும் அழிந்து, அவர்களால் கிடைக்கும் உப காரங்களும் இல்லாமல் கஷ்டப்படுவாய் என்று சொன்னாள். பிறகு ஊரில் உள்ளவர்கள் அவளைப்பற்றி பலவாறு நிந்தையாகப் பேசியதைக் கேட்டு அவள், மனம் நொந்து, தண்ணீரில் விழுந்து உயிரை விட்டாள். ஆகவே அந்தப் பாவம் இவனைப் பிடித்துக்கொண்டது.

24. இதுவல்லால் பின்ன மொன்று இயம்புவோம் தன்கு லத்தில்
பதிவிரதை போல்பெண் ணென்று பாவைமேல் குற்ற மாக
அதிகமாய் சிலர்கள் சொல்ல அம்மொழி அவனும் கேட்டு
சதியான தீர்ப்பு ஒன்று சாதிப்பான் கூறக் கேளாய்.

24. இதுவுமன்றி வேறொரு பாவமும் இவனுக்கு முன் பிறவியில் ஏற் பட்டது. அதையும் சொல்லுகிறோம் கேளுங்கள். இவனது குலத்திலேயே பதிவிரதையான ஒரு பெண்ணின் மேல், சிலர் வீணாகப் பழி வார்த்தை களைப் பேசினார்கள். அந்த நிந்தை வார்த்தைகளைக் கேட்டு இவன், நன்றாக விசாரித்தறியாமல், பக்ஷபாதமாக ஒரு தீர்ப்பு சொன்னான்.

25. பந்துவை விட்டு நீக்கிப் பாவையை ஓட்ட லுற்றான்
சிந்தையு மனம்க லங்கிச் செப்புவாள் சாபம் தானும்
வந்திடு மறுஜன்மத்தில் வருதுணை யில்லா தாயும்
தன்மனை நிந்தை யாயும் தாய்வர்க்கம் குற்ற மாயும் ;

25. அந்தப் பெண்ணைத் தனது உறவினனை விட்டு நீக்கித் தனியே இருக்கும்படி செய்தான். ஆகையால் மனங் கலங்கி, கவலைகள் அதிகமாகிச் சாபமிட்டாள். நீ, என்னை ஒருவித காரணமுமின்றி எனது பந்துவை விட்டுப் பிரித்தபடியால், மறுஜன்மத்தில், உடன் பிறந்தார் இன்றியும், உனது மனைவிக்கு கெட்டபெயர் ஏற்பட்டும், அவ்வாறே தாய் வருக்கத் திற்கும் குற்றம் உண்டாகியும் வருத்தத்துடன் ;

26. பூமியில் வாழ்வா யென்று பேதையும் சொல்லி யேதான்
நேமியில் செல்ல லுற்றாள் நேர்ந்தது அந்தத் தோஷம்
தீமைகள் அந்தி யத்தில் சேர்ந்துபின் மனைவி மாண்டு
காமனும் பேரூர் சென்று கந்தனை யர்ச்சி தேத்தி ;

26. உயிர் வாழ்வாய் என்று இவ்வாறு சொல்லிவிட்டு அவள் சென்றுள். அந்தச் சாபம் இவனைப் பற்றிக்கொண்டது. அந்த ஜன்மத்திலேயே அந்திய காலத்தில் பலவிதத் தீமைகள் ஏற்பட்டன. மனைவியும் மாண்டாள். பிறகு இவன் திருப்பேரூர் சென்று, அங்கு எழுந்தருளியிருக்கும் சுப்பிரமணிய சுவாமியை அர்ச்சித்து, வணங்கி.

**குறிப்பு.**—திருப்பேரூர் என்பது சிதம்பரத்திற்கு அருகிலுள்ளதொரு சுப்பிரமணிய ஸ்தலம்.

27. தாகப்பந் தலும மைத்துச் சண்டன்தன் பதிக்குச் சென்று
ஆகம நரகம் புக்கு அயனுமே வரையப் பட்டுப்
பாகமாய்க் கங்கை சேயாய்ப் பாலக னுதித்தா னென்றோம்
தோகைவா கனனைப் பெற்ற சுந்தரி யாளே கேளாய்.

27. தன் ஊருக்கு வந்து, தண்ணீர்ப் பந்தல் வைத்துச் சிறிதுகாலம் உயிருடன் இருந்தான். அதன் பிறகு யமனுலகம் சென்றான். இப்பொழுது இங்கு இக்குலத்தில் பிரம்மதேவனால் பிறப்பிக்கப்பட்டிருக்கிறான். மயில் வாஹனனைப் பெற்ற புண்ணியவதியே! மேலும் கேட்பாயாக.

28. முன்ஜன்மம் பெண்கள் சாபம் முயன்றதா லிச்சென் மத்தில்
தன் மனை தோஷ முண்டாம் சாற்றுவோம் கிரிகைக் கேதான்
அன்னவன் மனைவி யோடு அறுமுகர் தணிக்கைக் கேதான்
தன்னிலே ஏழு கார்த்தி தங்காமல் சென்று மேதான்.

28. முன் ஜன்மத்தில் இவனுக்குப் பெண்கள் சாபமேற்பட்டிருப்பதின் பயனாக இச் சென்மத்தில் இவன் மனைவிக்குத் தோஷம் ஏற்படும். [இந் நூலாசிரியர் "தோஷம்" என்பதால் சரீரத்தில் நோயையும், கற்பில் இழுக்கையும் கருதுகிறார்.] ஆகவே அஃது ஏற்படாமல் இருப்பதற்கு ஒரு சாந்தியைச் சொல்லுகின்றோம். இவன், தன் மனைவியோடு, சுப்பிரமணிய சுவாமி எழுந்தருளியிருக்கும் திருத்தணிகைக்கு இடைவிடாமல் ஏழு கிருத்திகைகளுக்கும் செல்லவேண்டும்.

29. கந்தனை அர்ச்சித் தேத்திக் கடைநாளில் மூவேழ் பேர்க்கு
இந்தவாறு மன்னன் தானும் இன்பமா யன்ன மீந்து
பொன்னினால் மதலை செயது பிராமணர் தமக்கு ஈந்து
பின்பவர் வாக்கால் ஆசி பெற்றுமே உள்ளூர் சென்று ;

29. அங்குக் கந்தனை அர்ச்சித்து வணங்கிவிட்டு, பக்தி சிரத்தையுடன் இருபத்து ஒன்று அடியார்களுக்கு அன்னமளிக்கவேண்டும். பிறகு தங்கத்தினால் குழந்தையைப்போல் பதுமை ஒன்றைச் செய்து, பிராம்மணருக்கு, அவர் மனம் மகிழும்வகையில் தக்ஷிணையோடு அதைச் சமர்ப்பிக்கவேண்டும். பின்பு அவ்வந்தணர் மகிழ்ச்சியுடன் அருளும் ஆசிகளைப் பெற்றுத் தன் ஊருக்கு வந்து ;

30. ஐங்கரன் மாரி காளி அவர்களுக் கபிஷே கிக்கச்
சங்கைகள் தோஷம் நீங்கித் தன்மனை வயது தீர்க்கம்
இங்கிவன் செய்யா ணகில் இவன்மனை அரிட்ட மாகும்
பொங்கமாய் இரண்டா மாது, புக்கிடு மென்று சொன்னோம்.

30. ஐந்து கரங்கள் உடையவனாகிய விநாயகருக்கும், மாரியம்மனுக்கும், காளிகாதேவிக்கும் அபிஷேகம் முதலியவைகளைச் செய்யவேண்டும். நாம் சொன்ன பரிகாரங்களைச் செய்தால், முன் வினை நீங்கி, இவனுடைய மனைவிக்கு ஆயுளும் நீடிக்கும். பரிகாரங்களைச் செய்யாவிடில் மனைவிக்குக் கெடுதல் ஏற்பட்டு இரண்டாவது மனைவியை மணம் செய்துகொள்ள நேரிடும்.

31. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோ மாண்பால் ரண்டு
சித்தமாய்ப் பெண்பா லொன்று செப்புவோம் தீர்க்க மாகச்
சுத்தமாய் இரண்டு சேதம் செப்புவோ மிவனுக் கேதான்
அத்தியைப் பெற்ற மாதே அறைகிறோம் மேலுங் கேளே.

31. விநாயகரைப் பெற்ற தாயே! இவனுடைய புத்திர பாவத்தைச் சொல்லுகின்றோம். இச் சாதகனுக்கு இரண்டு பிள்ளைகளும், ஒரு பெண்ணும் நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள். இவர்களைத் தவிர இரு குழந்தைகள் பிறந்து நசிக்கும். மேலும் கேளுங்கள்.

32. அன்னையு மிருநிற த்தாள் அழகுளாள் பொறுமை சாலி
உன்னதச் சூடாம் தேகி உள்மனம கபடு மில்லாள்
அன்னமு மீய வல்லள் அவள்வரன் மனம்போல் வாழ்வாள்
பின்னமில் லாத தேகி பேசுவோம் மேலுங் கேளே.

32. இச் சாதகனின் அன்னை கருத்த மேனியாள். அழகு வாய்ந்தவள். பொறுமைக் குணமுடையவள். அவளது சரீரம் அதிக உஷ்ணம் பொருந்தியது. மனத்தில் கபடமில்லாதவள். அன்னதானம் செய்யச் சக்தி உள்ளவள். அவளுடைய கணவனது மனத்தின்படி நடப்பாள். சரீரத்தில் எவ்விதத்திலும் ஊனம் இல்லாதவள். மேலும் அவளைப்பற்றிப் பேசுகிறோம். கேட்பாயாக.

33. அவள்துணை ஆண்பால் ரண்டு அவைகளும் விருத்தியாகா
நவனியில் வித்தை யுள்ளாள் தன்குல குற்றம் உண்டு
இவளுடை பூர்வம் தன்னை இயம்புவோம் விரிஞ்சி கீழ்ப்பால்
பவமுள பேரூர் தன்னில் பாவையு மிக்குல த்தில் ;

33. அவளுக்கு இரு சகோதரர்கள் உண்டு. ஆனால் அவர்கள் விருத்தியை அடையமாட்டார்கள். அவள் (ஜாதகனின் தாய்) சிறிது கல்வி யறிவு உடையவள். தான் பிறந்தக் குலத்திற்குக் குற்றம் (சந்ததி இல்லாமை) ஏற்படும். இவளுடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லு கின்றோம். இவள் முன் பிறவியில் விரிஞ்சிபுரத்திற்குக் கீழ்த்திசையிலுள்ள பெரிய ஓர் ஊரில் இப்பொழுது பிறந்திருக்கும் சாதியிலேயே பிறந்து ;

**34.** உதித்துமே சுகமுண் டாகி உள்ளூரில் வரனு முண்டாய்
அதிபதி வாழு நாளில் வரைகிறே மூழி தானும்
நிதியிலா ஏழை தானும் நிமிலிபா லணுகி யேதான்
துதிசெய்து தூசு கேட்டாள் சுந்தரி கோப முற்று ;

**34.** அதே ஊரில் பிறந்து வளர்ந்த யுவனைக் கணவனாக அடைந்து சுகமாக வாழ்ந்து வருங்காலத்தில் அவளுக்கேற்பட்ட ஒரு பாவத்தைச் சொல்லுகின்றோம். அதே ஊரில் வசித்து வந்த ஓர் ஏழைப் பெண், செல்வம் படைத்த இவளிடம் வந்துத் தனக்கு ஒரு துணி கொடுத்து உதவும்படி வேண்டினாள். அதைக் கேட்டு வீணாகக் கோபம் அடைந்த இவள்,

**35.** பலபல விரோதம் பேசிப் பாவையைத் துரத்தி விட்டாள்
தலைவியும் மனவெ றுப்பால் சாற்றுவாள் சாபம் தானும்
குலவிய பின்ஜன் மத்தில் குறியிடம் ரோக மெய்தி
நலமிலாக் காலன் பக்கல நல்குவாய் குலத்தில் குற்றம்.

**35.** பலவாறு அவளை ஏசித் துரத்திவிட்டாள். ஆகையால் மன வருத்தமடைந்த அவள் சாபமிட்டாள். நீ மறு பிறவியில் உனது மருமஸ்தானத்தில் நோய் ஏற்பட்டு இறப்பாய். மேலும் நீ பிறந்த குடும்பமும் ஆண் சந்ததி இல்லாமல் அழியும்.

**36.** [1] சொல்லியே சென்றா ளென்றோம் துறவிகள் ததாஸ்து என்றார்
அல்லல்கள் எய்தி யேதான் அந்தியம் மேக ரோகம்
வல்லிக்கு அணுகி யேதான் மறலியின் பதிக்குச் சென்று
புல்கினா ளிக்கு லத்தில் புண்ணிய வதியே கேளாய்.

**36.** இவ்வாறு சொல்லிவிட்டு அவள் சென்றாள். ஆகாயத்தில் சஞ்சரிக்கும் முனிவர்கள், ‘‘ அவ்வார்த்தைகள் ஆட்சி செய்யட்டும் ’’ [அவ்வாறே நடைபெறட்டும்] என்று அருள் புரிந்தனர். இவளும் அந்திய காலத்தில் பலவிதக் கஷ்டங்களை அனுபவித்து, மேகரோகம் கண்டு அதனால் யமனுலகம் சென்றாள். பிறகு பிரம்மன் இவளை இங்குப் படைத்திருக்கின்றான். அவளேதான் இக்கடகலக்கின மகனுக்கும் தாயாக ஏற்பட்டிருக்கின்றாள். உலகிற்கு அருள் சுரக்கும் தாயே ! மேலும் கேளுங்கள்.

**37.** அந்தவட் கேழு ஆண்டில் அல்குலில் ரோகத் தாலே
இந்தவன் மரண மெய்தும் இவன் தந்தை பூர்வம் சொல்வேன்
முந்திய அருணை கீழ்ப்பால் மொழிகிறோம் சிற்றூர் தன்னில்
இந்தவோர் குலத்தி லேதான் எய்தினன் என்று சொன்னோம்.

**37.** இந்த ஜாதகனுக்கு ஏழாவது ஆண்டு நடைபெறும்போது, முன்சொன்ன சாபத்தின்படி, மருமஸ்தானத்தில் நோய் ஏற்பட்டு இவள் (தாய்) மரணமடைவாள். சாதகனுடைய தந்தையின் பூர்வஜன்மத்தைச் சொல்லுகின்றோம். இவன் முன்பு திருவண்ணாமலைக்குக் கீழ்த்திசையிலுள்ள ஒரு சிறிய ஊரில் இதே ஜாதியில் பிறந்திருந்தான்.

---

1. இதன் விளக்கத்தை 34-ஆம் ஜாதகம் 21-ஆம் பாட்டில் காண்க.

38. உதித்தவன் கிருஷி செய்து உலகினில் வாழு நாளில்
விதிக்கின்றும் வந்த ஊழை விதைவையாம் மாதொ ருத்தி
பதியினில் வாச மாகப் பலவந்த போகம் செய்ய
இதுவிதம் சிலநாள் சென்று இவளுக்குக் கருவு தங்கி ;

38. பிறந்து வளர்ந்து அவன் விவசாயம் செய்து உலகில் சிறப்புடன் வாழ்ந்து வருகையில் அவனுக்கேற்பட்டதொரு வினையைத் தெரிவிக்கின்றோம். அந்த ஊரில் வசித்து வந்த ஒரு கைம்பெண்ணைத் தனது வீட்டிற்குக் கொண்டு வந்து தனது விருப்பத்தைப் பிடிவாதம் செய்து நிறைவேற்றிக்கொண்டான். சில நாட்களுக்குப் பிறகு அவளுக்குக் கர்ப்ப மேற்பட. அதை அழிப்பதற்காக ;

39. பலவித பண்டி தங்கள் பாவைக்குச் செய்யும் போது
குலவிய கருவு நீங்கித் தோகையும் மரண மெய்தி
நிலைமையா யந்தத் தோஷம் நேர்ந்தது இவனுக் கேதான்
தலைவனும் மரண மாகிச் சதுர்முகன் வரையப் பட்டு ;

39. பலவித மருந்துகளை அந்தப் பெண்ணுக்குக் கொடுத்தான். ஆகையால் கருவும் நீங்கியது. பெண்ணும் இறந்தாள். அந்தப் பாவம் இவனைப் பற்றிக் கொண்டது. அந்திய காலத்தில் இவன் மரண மடைந்தான். நான்கு முகம் படைத்தப் பிரம்ம தேவனால் ;

40. வந்தவ னிவனே யென்றோம் வரைகிறோ மிச்சென் மத்தில்
தன்மனை யிரண்டு மாகும் சந்ததி அல்ப மெய்தும்
பிந்திய சென்மம் தன்னைப் பேசுவோ மவ்வூர் கீழ்ப்பால்
இந்தவோர் ஜன்மம் தோன்றி இவனுமே வாழ்வா னாகும்.

40. இங்குப் பிறப்பிக்கப்பட்டிருக்கிறான். இவன் தான் இக்கடகலக்கின மகனுக்குத் தந்தையாக வாய்த்திருக்கிறான். அந்தப் பாவத்தின் பயனாக இச்சென்மத்தில் இவனுக்கு இருமனைவிமார்கள் (மூத்த மனைவி இறப்பாள் என்பது கருத்து) ஏற்படுவர். சந்ததியும் மிகவும் அல்பம். இவனுடைய பின் பிறவியையும் சொல்லுகின்றோம். அவ்வூரிலேயே அதே ஜாதியில் பிறந்து வாழ்வான்.

41. தந்தையின் மரண காலம் சாற்றுவோம் முப்ப தாண்டில்
எந்தையே தேளின் மாதம் எய்திடும் கண்டம் தானே
இந்தவாறு முனிவர் கூற ஈச்வரி கேட்க லுற்றாள்
தந்தைக்குக் கண்டம் சொன்னீர் சாராதோ மத்தி லேதான் ;

41. இப்பொழுது ஜாதகனுடைய தந்தையின் மரண காலத்தைக் கூறுகின்றோம். ஜாதகனுடைய முப்பதாவது ஆண்டில் கார்த்திகை மாதத்தில் அவன் தந்தைக்கு ஆபத்து ஏற்படும். [இறப்பான் என்பது கருத்து.] இவ்வாறு முனிவர் சொன்னவுடன் பார்வதி வினவினாள். இந்தக் கண்டம் ஏற்படுவதற்கு முன்பு அவனுக்கு வேறு கண்டங்கள் ஏற்பட்டிராவோ ? சொல்லுங்கள் என.

42. இதுமட்டில் கண்டம் நேரும் இன்பமாய்ச் சுகமே யாகும்
பொதுயோகம் சாத கர்க்குப் புகலுவோம் விபர மாக
வதிபனும் ஜனனம் தொட்டு அறுநான்கு ஆண்டு மட்டும்
சதியிலா சமயோ கந்தான் சார்ந்திடு மென்று சொன்னோம்.

42. முனிவர் பதிலுரைத்தார். உண்மை; இதற்கு முன்பும் கண்டங்கள் ஏற்பட்டிருக்கும். ஆனால் அவைகள் எளிதில் விலகி இருக்கும். இந்தக் கண்டம் விலகாது. இதுவே இவனது முடிவிற்குக் காரணம் ஆகும். ஜாதகனின் பொது யோகங்களைப் பற்றிக் கூறுகின்றோம். இவன் ஜனித்து இருபத்து நான்கு வருஷங்கள் மட்டில் சமயோகம்தான் இருக்கும். [விருத்தியும் இராது. குறைவும் இராது என்பது கருத்து.]

43. அதற்குமேல் மரண மட்டும் அம்புலி போலே யோகம்
நிதியது மிகவே சேரும் நினைத்தகா ரியங்கள் வெற்றி
அதிகமாய்ப் பூமி சேரும் அணுகிடும் பணிதி பாத்திரம்
சதுஷ்பாதம் விருத்தி யாகும் ஜனஉப காரம் செய்வன்.

43. முன்சொன்ன ஆண்டுகளுக்குமேல் மரணம்வரையில் பிறைச் சந்திரன் போல யோகம் விருத்தியாகும். நிதிகள் அதிகமாகச் சேரும். ஜாதகன் எண்ணிய காரியங்கள் இடையூறின்றி நிறைவேறும். ஏராளமாகப் பூமிகள் சேரும். வித விதமான ஆபரணங்களும் பாத்திரவகைகளும் இவனுக்குக் கிடைக்கும். கால்நடைகள் விருத்தியடையும். ஜனங்களுக்கு உபகாரம் செய்து பெருமையை அடைவான்.

44. புத்திரர் தம்மால் யோகம் பெருகிடும் பெருமை யாகக்
குற்றமில் லாமல் வாழ்வன் குலத்துளோர் உறவே யாவர்
வித்தகன் தனக்குக் காலம் விளம்புவோம் அறுபான்ரண்டில்
சுத்தமாய் மகர மாதம் துவாதசி குறைபக் கத்தில்,

44. மேலும் இந்த ஜாதகனுக்குப் புத்திரர்கள் உதித்த பிறகு அவர்கள் ஜாதகத்தின் பயனைப் பெருமைகள் மேன்மேலும் ஓங்கும். ஒருவித ஈனச் செயலும் இல்லாமல் வாழ்வான். தன் ஜாதியார்கள் எல்லோரும் அன்போடு இவனை ஆதரிப்பார்கள். ஜாதகனுடைய மரண காலத்தைக் குறிப்பிடுகின்றோம். இவன், தனது அறுபத்திரண்டாம் வயதில் தை மாதத்தில் கிருஷ்ணபக்ஷம் துவாதசி திதியில் விண்ணுலகம் ஏகுவான்.

45. முப்பது முப்பா னேழில் மொழிகிறோம் நாற்பா றுறில்
செப்புவோம் கண்டம் தானும் சண்முகர் கிருபை யாலும்
ஒப்புடன் பண்டி தத்தால் ஒதுங்கிடும் அந்தக் கண்டம்
மெய்ப்புடன் இவன்பின் ஜன்மம் வியம்புவோம் விபர மாக.

45. இவனுக்கு, முப்பத்தேழாவது வயதிலும், நாற்பத்தாறுவது வயதிலும், பெரிய கண்டங்கள் நேரிடும். ஆனால், சுப்பிரமணிய சுவாமியின் கிருபையாலும், தக்க ஔஷதங்களாலும் அவை விலகும். இவனுடைய பின் பிறவியைப்பற்றிக் கூறுகின்றோம்.

46. பிருதிவி வடமே லாகப் பேரூரில் இக்கு லத்தில்
உரைகுவான் சுகமுண் டாகி உத்தமன் வாழ்வா னுகும்
அறைகிறேம் முப்பா னெட்டில் அவன்சிறு மாத கண்டம்
பெருவயி றேனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

46. காஞ்சிக்கு வடமேற்குத் திசையிலுள்ள பெரிய ஓர் ஊரில் இதே ஜாதியில் பிறந்து சுகமாக வாழ்வான். விநாயகரைப் பெற்ற தாயே ! இச்சென்மத்திலேயே இவனுக்கு மற்ருெரு சிறிய கண்டம் முப்பத்தெட் டாவது வயதில் ஏற்படும். மேலும் சொல்லுகிறேம். கேட்பாயாக.

47. காவலன் ஜனிக்குங் காலை கரும்பாம்பு தசையி லேதான்
சீலமாய்ப் பதினே ராண்டும் திங்களு மவ்வா றுகும்
மேவிய குடும்ப லேச்சல் மாதுரு பீடை யாகும்
தாவிய சிறிய மாது தங்கிடு மிவனுக் கேதான்.

47. இச்சாதகன் ஜனிக்கும்போது ராஹுதசையில் இருப்பு வருஷங் கள் பதினொன்றும், மாதங்கள் பதினொன்று மாம். இந்தத் தசையின் பலன்களைச் சுருக்கமாகச் சொல்லுகின்றேம். குடும்பத்தில் எல்லோருக்கும் வீண் அலைச்சல்கள் ஏற்படும். தாய்க்கு ரோகங்கள் காணும். இளையதாயும் இவனுக்கு ஏற்படுவாள். [இவனுடைய சொந்தத்தாய் இவனது ஏழாவது வயதில் மரணமாவாள் என முப்பத்தேழாவது பாட்டில் சொல்லப் பட்டிருப்பதைக் காண்க.]

48. மாதுரு வர்க்கம் குற்றம் மாடுகள் சேத மாகும்
மேதினில் செலவ னேகம் வீண்பகை பந்து தன்னில்
சூதுக ளதிக முண்டு சொல்லுவோம் பிற்பா கத்தில்
மாதவர் தம்மைக் காக்கும் மங்கையே கேட்டி டாயே.

48. மாதுரு வருக்கமும் அழியும். மாடுகள் சேதமாகும். செல்வமும் வீணுகச் செலவாகும். காரணமின்றி உறவினர்களும் பகைவர்களா வார்கள். பலதுறைகளிலும் வஞ்சனைகளும் கலகங்களும் ஏற்படும். இவனைப் பற்றிய விவரங்களை இரண்டாம் பாகத்தில் கூறுகின்றேம். தவசிகளை ரக்ஷிக்கும் தேவியே ! மேலும் திருவாய் மலர்ந்து எங்களை வினவ வேண்டும்.

# ஜாதகம் 25.

1. பிறைசாடி ராகு மேடம் பொன்குசன் கேது கோலில்
பரிதியும் மேரு வாகப் பண்டிதன் புகரும் தேளில்
கரியவன் மான தாகக் கடகமும் ஜன்ம மாக
உரைகுவீர் பலனை யென்று உத்தமி கேட்க லுற்றாள்.

| | | | |
|---|---|---|---|
| | ராகு | | |
| சந்திரன் | இராசி | | இலக்கினம் |
| சனி | சக்கரம் | | |
| சூரியன் | புதன் சுக்கிரன் | கேது செவ்வாய் குரு | |

பவ வருஷம் மார்கழி மாதம் 1-ஆந் தேதி திங்கட்கிழமை இரவு 5-நாழிகைக்கு மேல் 10-நாழிகைக்குள் ஜனனம். ஆங்கிலத்தேதி 14–12–1874 நவக்கிரஹங்களின் பாதசாரம். மூலம் 1-இல் சூரியன். சதயம் 1-இல் சந்திரன். சித்திரை 4-இல் செவ்வாய். அனுஷம் 4-இல் புதன். சித்திரை 4-இல் குரு. கேட்டை 2-இல் சுக்கிரன் (வக்ரீ). சிரவணம் 3-இல் சனி. அசுவினி 1-இல் ராகு. சித்திரை 3-இல் கேது. நக்ஷத்திரம் சதயம். ராகுதசை இருப்பு வருஷங்கள் பதினைந்து, மாதங்கள் நான்கு, நாட்கள் பத்து.

1. சந்திரன் கும்பம், ராகு மேஷம், குரு செவ்வாய் கேது இவர்கள் துலாம், சூரியன் தனுஸ். புதனும், சுக்கிரனும் விருச்சிகம், சனி மகரம், இலக்கினம் கடகம், இவ்வாறான கிரஹநிலையின் பலனைச் சொல்லுவீர்களாக, எனப் பார்வதி கேட்கலுற்றாள்.

2. அத்திரி புகலு கின்றார் ஆணது ஜனனமாகும்
வித்தக னில்லம் சொல்வேன் மேல்வாடை வடதென் வீதி
சுத்தமாய் நதியு மேற்கில் தொந்தியப் பனுமே தங்கும்
அத்தியு மீசர் வர்மும் அரன்கோஷ்டம் மேல்பால் தங்கும்.

2. இவ்வாறு தேவி கேட்டவுடன் அத்திரி முனிவர் பலன்களைச் சொல்லுகின்றார். வீதி தெற்கு வடக்கில் அமைந்திருக்கும். வீடுமேற்கு வரிசையில் இருக்கும் [கிழக்கு நோக்காகும்]. மேல் திசையில் ஒரு நதியும் விநாயகர் கோயிலும் இருக்கும். அதற்கும் மேல் திசையில் வேறொரு விநாயகர் கோயிலும் பரமசிவன் ஆலயமும் தங்கும்.

3. இன்னமும் பலதே வாசம் இலகிய பேரூ ராகும்
அன்னிய நில்ல மாகும் அப்பாலன் மூன்றும் ஜன்மம்
தன்குல விச்வ சேயாய்த் தோன்றுவா னிந்தப் பாலன்
தன்னிலே குடும்பச் சேதி சாற்றுவோம் தாயே கேளு.

3. இன்னும் பல தேவாலயங்கள் விளங்கிடும். இவ்வாறு அடையாள முள்ளதொரு பெரிய ஊரில் அயலார் வீட்டில் பாலகன் ஜனித்திருப்பான். குடும்பத்திற்கு இவன் மூன்றும் குழந்தை. இவன் விசுவகுல பிராமண சாதியைச் சேர்ந்தவன். இவன் குடும்பச் செய்திகளைச் சொல்லுகின்றோம். தாயே ! கேளுங்கள்.

4. தந்தையின் துணைஆண் காணுன் சத்தியும் ஒன்றே யாகும்
அந்தவள் சேதி பின்பால் அறிவிப்போம் தாயே கேளும்
இந்தவன் தந்தை சேதி யியம்புவோ மினிமே லாகச்
சுந்தர முடைய னாகும் சோர்வுறான் வார்த்தைக் கேதான்.

4. இவனது தந்தைக்குச் சகோதரன் இல்லை. ஒரு சகோதரி உண்டு. அவனுடைய செய்திகளைப் பின்பாகத்தில் தெரிவிப்போமாக. தாயே ! தந்தை யின் வரலாறுகளைச் சொல்லுகின்றோம். கேளுங்கள். அழகுள்ளவன். பேசுவதில் சோர்வு இல்லாதவன். [எப்பொழுதும் எதையாகிலும் பேசிக் கொண்டே இருப்பான் என்பது கருத்து.]

5. கல்வியு மிரண்டு கற்பன் கனத்தவர் நேசம் கொள்வன்
இல்லையென் றுரைக்க மாட்டான் இடரென்றோர்க் குதவி செய்வன்
நல்லவ னாகி வாழ்வன் நற்றந்தை ஆஸ்தி காணுன்
தொல்லையும் சுகமு முள்ளான் துருசான நடையு மாவன்.

5. இரண்டு விதமான கல்விகளை (பாஷைகளை)க் கற்றறிவான். மதிப்பு வாய்ந்தவர்களின் நட்பை அடைவான். உதவியை நாடியவர்களுக்கு இல்லை என்று சொல்லாதவன். கஷ்டப்படுபவர்களுக்குத் தானே சென்று உதவி புரிவான். எல்லோருக்கும் நல்லவனாகவே வாழ்வான். பிதுரார்ஜித சொத்து இவனுக்கு இராது. வாழ்க்கையில் துன்பமும் இன்பமும் சமமாகவே இருக்கும். வேகமாக நடக்கும் இயல்புள்ளவன்.

6. இனத்திற்கு விருத்தி யாவன் எய்திடும் பித்த வாயு
தனமது அதிகம் காணுன் சண்முகர் பக்தி பூண்டு
சினமுண்டு வெளிக்காட் டாதான் தீரமா மனத்த னாகும்
அனைவர்க்கு இல்லம் செய்வன் அவரில்லம் வாசம் செய்வன்.

6. தன் ஜாதியாரைவிட மேலாக வாழ்வான். இவனது சரீரத்தில் பித்த வாயு தங்கி இருக்கும். அதிக பணத்தைக் காணுதவன். சுப்பிரமணிய சுவாமியிடம் பக்தி கொண்டவன். கோபமடைவது இவனுடைய இயல்பு. ஆனால் அதை வெளியாருக்குத் தெரிவிக்க மாட்டான். அஞ்சா நெஞ்சம் படைத்தவன். எல்லோருக்கும் வீடு கட்டிக் கொடுப்பான். ஆனால் இவன் சொந்த வீடு இல்லாமல் பிறர் வீட்டில் வாசம் செய்வான்.

7. முன்னவ னிருந்த ஜன்மம் மொழிகிறோம் தாயே கேளும்
தென்திசை பழனி தன்னில் சீர்மறை குலமு தித்து
அந்நகர் கிராமச் செட்டு அவனுமே செய்து வந்து
தன்மனை மதலை யுண்டாய் வாழு நாள் வினையைக் கேண்மோ.

7. இவனுடைய முன் ஜன்மத்தைக் கூறுகிறோம். தாயே ! கேளுங்கள். இவன் முன் பிறவியில் தென் திசையிலுள்ள பழனி க்ஷேத்திரத்தில் பிராம்மண குலத்தில் பிறந்து அங்கே வியாபாரம் செய்து கொண்டு ஜீவித்திருந்தான். தன் மனைவி மக்களுடன் சுகமாக அவன் வாழும் நாளில் அவனுக் கேற்பட்ட வினையைக் கேளுங்கள்.

8. கன்னிமேல் வேறொ ருத்தர் கனமான வார்த்தை சொல்லித்
தன்னுடை இடத்தை விட்டுத் தனியாக விலக்கும் போது
இன்னவன் தன்பால் மாது இயம்பினு ளந்தச் சங்கை
பொன்னதை அவரால் பெற்றுப் பேதைமேல் தோஷம்
[சொன்னான்.

8. ஒரு மனிதன் தனது மனைவியின் பேரில் அபாண்டமான நிந்தைகளைப் பேசி அவளைத் தன் வீட்டிலிருந்து வெளியேறித் தனியாகவாழும்படி துரத்தி விட்டான். காரணமின்றித் துரத்தப்பட்ட அந்தமாது மத்யஸ்தனாக இருந்து நியாயத்தை வழங்கும்படி இவனை வேண்டிக் கொண்டாள். ஆனால் இவன் என்ன செய்தான் தெரியுமா ? அந்தப் பெண்ணின் கணவனிடமிருந்து பணத்தைப் பெற்றுக்கொண்டு இவள் பேரிலேயே குற்றங்கள் இருப்பதாகத் தீர்ப்பளித்தான்.

9. மாதுவும் மனது வாடி வரைந்திட்ட சாபம் கேண்மோ
பாதகப் பொருளி னாலே பகர்ந்திட்டாய் பெண்பால் தோஷம்
மேதினில் மறு ஜன்மத்தில் விளங்கிடும் என்னைப் போல் புத்தி
தீதாகும் தந்தை ஆஸ்தி தனியனாய் வாழ்வா யென்றும் ;

9. ஆகையால் மனம் வாடிய அந்தப் பெண் சொன்ன சாபத்தைக் கேளுங்கள். புத்தியைக் கெடுக்கும் பொருளைப் பெற்றுக் கொண்டு, ஒரு பெண் மேல் காரணமின்றியே குற்றத்தைத் தீர்மானித்துச் சொன்ன நீ மறு பிறவியில், நான் இப்பொழுது இருப்பதுபோல, மனங் குழம்பி வாழ்வாய். தந்தையின் சொத்தும் உனக்கு இராது. சகோதரனின்றித் தனியனாக இருப்பாய்.

10. இல்லமு மில்லா தாகி இப்புவி தன்னில் வாழ்வாய்
வல்லியு மிவ்வாறு சொல்லி மடிந்தனள் சலத்தி லேதான்
புல்கிற்று அந்தத் தோஷம் புதல்வனு மந்தியத்தில்
தொல்லைக ளதிக முண்டாய்ச் சேர்ந்தனன் கால னூடு.

10. மேலும் தங்குவதற்குச் சொந்த வீடு இல்லாமல் வாழ்வாய். இவ்வாறு சொல்லி வருத்தத்தைச் சகிக்க முடியாதவளாகித் தண்ணீரில்

விழுந்து இறந்தாள். அந்தப் பாவம் இவனை வந்தடைந்தது. இவனும் அந்திய காலத்தில் அனேகத் தொல்லைகளை அடைந்து கஷ்டப்பட்டுக் கொண்டே யமனுலகம் சென்றான்.

**11.** பிரமனால் வரையப் பட்டுப் பிறப்பனா மிக்குலத்தில்
அரிவையின் சாபம் போல அவன்சுதர் கன்னி காணான்
குறைவான குடும்ப மெய்தும் குடியது அலைச்ச லெய்தும்
உறைந்தஇக் குணத்தா னுக்கு உதிப்பனா மிந்தப் பாலன்.

**11.** பின்பு நான்முகனால் இக் குலத்தில் படைக்கப்பட்டிருக்கின்றான். முன்ஜன்மத்தில் ஏற்பட்ட அம்மாதுவின் சாபப்படி இவனுக்குப் பெண் பிறக்காது. குடும்பம் தாழ்வாகவே இருக்கும். குடும்பம் அலைச்சலையும் அடையும். இப்படிப்பட்டவனுக்கு இந்தப் பாலன் மகனாகப் பிறந்திருக்கின்றான்.

**12.** பாலக னிறம் குணத்தைப் பகருவோம் தாயே கேளும்
சீலம்போல் வெளிம யக்கன் சிறப்பிலாக் குடும்ப முள்ளான்
கோலமாய்..........எய்திடும் குடை டைகோ விருத்தி யல்பம்
நீலிமார் மோக னவன் நிந்தைகள் சிலநாள் ஏற்பன்.

**12.** ஜாதகனது நிறம் குணம் முதலியவைகளைச் சொல்லுகிறோம். கேளுங்கள். நல்ல நடத்தை உள்ளவன் போல நடிப்பான். [உண்மையில் நன்னடக்கை இல்லாதவன் என்பது கருத்து.] மிகத் தாழ்ந்த குடும்பம். காளைகளும் பசுக்களும் இவனிடம் விருத்தியாகா. பெண்களிடம் மோகம் கொண்டவன். பல நிந்தைகளும் இவனுக்கு ஏற்படும்.

**13.** வித்தையு மல்பமாகும் வீண்வம்பில் செல்லா னாகும்
சுற்றத்தார்க் கிணக்கம் சொல்வன் சொர்ணமு மதிகம் காணான்
புத்தியில் பெரியோ னாகும் பொய்மெய்யாய்ப் புகல்வா னாகும்
சித்தினி சாதி யாவன் தீரமில் லாத நெஞ்சன்.

**13.** கல்வியறிவும் கொஞ்சமாகவே இருக்கும். வீண் சண்டைகளில் சேரமாட்டான். சுற்றத்தார்களுக்கும் அனுகூலமாகப் பேசுவான். அதிகம் பணம் இல்லாதவன். புத்திசாதுர்யம் உடையவன். பொய்யை மெய்யாக எண்ணும்படி பேசுவான். சித்தினிச் சாதியைச் சேர்ந்தவன். உறுதி இல்லாத மனம் படைத்தவன்.

**14.** தண்டிய உணவின்மீது உறைப்பொடுப் புளிப்பி லிச்சை
கண்டித முரையா னாகும் கடன்கொள்வன் செலவு செய்வன்
தண்டமிழ் நுணுக்கம் தேரான் சத்திரம் சிலர்க்குச் செய்வன்
பண்டுநாள் இல்ல மில்லான் பங்கய ரேகை யுண்டு.

**14.** உறைப்பும் புளிப்பும் கலந்த ஆகாரங்களில் மிகவும் ஆசை உடையவன். கண்டித்துப் பேசமாட்டான். கடன் வாங்கும் இயல்புள்ளவன். ஏராளமாகச் செலவு செய்வான். இனிமையான தமிழின் சுவையைச் சிறிதும் அறியாதவன். சிலருக்கே தனது தொழிலால் உதவி புரிவான். பிதுரார்ஜிதமான வீடு இல்லாதவன். கையில் தாமரைரேகை விளங்கிடும்.

15. மாந்தளிர் மேனி யாகும் மருவிடும் பித்தச் சூடு
சூர்ந்துமே வார்த்தை யுண்டு குணமது இரண்டு மாகும்
சாந்தமும் கோப முண்டு தன்துணை முன்னால் காணன்
வேந்தன்போல் ஒருவன் பின்னால் விளங்கிடும் தீர்க்க மாக.

15. மாந்தளிர் போல் சிவந்த மேனியான். இவனுடைய சரீரத்தில் பித்த சூடு தங்கி இருக்கும். கவனத்துடன் வார்த்தைகளைப் பேசுவான். வாக்கினால் ஒன்றைச் சொல்லி காரியத்தில் வேறு ஒன்றைச் செய்வான் [வாக்குச் சுத்தம் இல்லாதவன் என்பது கருத்து]. சாந்தகுணமும் கோபமும் இரண்டும் இவனிடம் உண்டு. இவனுக்கு முன்பிறந்த சகோதரன் இல்லை. இவனை அடுத்து ஒரு சகோதரன் உண்டு. அவன் அரசன் போல் விளங்குவான். நீண்ட ஆயுளுடனும் வாழ்வான்.

16. பின்துணை பெண்பால் தோஷம் பேசுவோ மிவனுக் கேதான்
மன்னவன் சேதி சொல்வேன் மாஞ்சிவப் புடைய னாகும்
கன்னென மொழியு முண்டு கல்வியு மல்ப மாகும்
சொன்னசொல் சுகமே யாகும் தொடுவழக் கதனில் செல்லான்.

16. இவனுக்குப் பிறகு பிறக்கும் பெண்குழந்தை சேதமாகும். அந்தச் சகோதரனுடைய குணங்களைக் கூறுகின்றோம். மாந்தளிர் போல் சிவந்த நிறமுள்ளவன். கரும்புபோல் இனிமையான வார்த்தைகளைப் பேசுவான். கொஞ்சமே கற்றறிந்தவன். அவன் கூறும் சொற்களின்படியே நடப்பான். வீண் வழக்குகளில் சேராதவன்.

17. தேகமே உணச்ச லுண்டு தேறின புத்தி யேற்பன்
பாகமாய்ப் பேசு வானும் பற்களும் தரள மொப்பான்
ஆகம நுணுக்கம் தேரான் அறமது சிலர்க்குச் செய்வன்
வேகமாய் நடக்க வல்லன் வெஞ்சினம் வெளிக்காட்டா தான்.

17. மெலிந்த தேகம் வாய்ந்தவன். அனுபவம் உடைய பெரியோர்களின் புத்தியைக் கேட்பான். அழகாகப் பேசுவான். பற்கள் முத்து போன்று அழகாக இருக்கும். சாஸ்திரங்களின் தத்துவங்களை அறியாதவன். சிலருக்கே தருமத்தை [உதவியை என்றும் கருதலாம்] செய்வான். நடை வேகமாக இருக்கும். கோபம் கடுமையாக வரும். ஆனால் அதை வெளியில் காட்ட மாட்டான்.

18. அறுமுகன் பக்தி கொள்வன் ஆபத்தைச் சிலர்க்குக் காப்பன்
உறன்முறை மதிக்க வாழ்வன் உண்டியும் சுகமாய்க் கொள்வன்
இருவித வார்த்தை யுண்டு யாரையும் உறவு கொள்வன்
மருமத்தை வெளிக்காட் டாதான் வாதநோ யுடைய னாமே.

18. சுப்பிரமணியசுவாமியிடம் பக்திகொண்டவன். ஆபத்திலிருந்து சிலரை மாத்திரமே காப்பான். உற்றார் உறவினர் மதிக்க வாழ்வான். பல விதப் பொருள்களைச் சமைத்துச் சுகமாக (இன்பத்துடன்) சாப்பிடுவான்.

[சாப்பாட்டிற்குக் கஷ்டமில்லாதவன் என்பது கருத்து.] முன்சொன்ன பேச்சை மாற்றியும் பேசுவான். எல்லோருடனும் உறவுகொண்டாடுவான். ரஹஸ்யத்தை வெளியிடாதவன். வாயுரோகம் உள்ளவனுகவும் இருப்பான்.

19. பாரியும் ஒன்றே யாகும் பாவையும் தென்பால் நேரும்
தீரமாய் சுதராண் ரண்டு செப்புவோம் கன்னி ஒன்று
மாரனும் ஒத்து வாழ்ந்து வேருவன் பின்ருல் சொல்வேன்
காரிய சமர்த்த ஞகும் கட்செவி கோப மேற்பான்.

19. அவனுக்கு மனைவியும் ஒருத்திதான். மணப்பெண் தென்திக்கில் ஜனித்திருப்பாள். அவனுக்கு இரண்டு பிள்ளைகளும் ஒரு பெண்ணும் பிறந்து சுகமாக வாழ்வார்கள். இவனும் (நாம் சொன்ன ஜாதகனும்) சிறிது காலம் ஒற்றுமையுடன் வாழ்ந்து பிறகு தனித்தனியே குடும்பம் செய்வார்கள். அவ்வாறு நிகழும் காலத்தைப் பிறகு கூறுகின்றோம். ஆரம்பித்த காரியத்தை நிறைவேற்றுவதில் மிகவும் சமர்த்தன். பாம்பிற்குக் கோபம் வருவது போல இவனுக்குக் கோபம் எளிதிலும் உக்கிரமாகவும் வரும்.

20. செலவுகள் செய்வா னுகும் தீரமா மனத்த னுகும்
பலர்களால் புகழு மேற்பன் பஞ்சைமே லிரக்க முள்ளான்
நலமதை கயவர்க்குச் செய்வன் நன்முக வடிவு முண்டு
தலவாசம் செல்வா னுகும் சாதிப்பன் சிலது சங்கை.

20. பல வழிகளிலும் செலவுகளைச் செய்வான். தைரியம் வாய்ந்தவனுகவும் இருப்பான். பல மனிதர்கள் மூலம் இவனுக்குப் பெருமையும் புகழும் ஏற்படும். ஏழைகளிடம் கருணை உள்ளவன். துஷ்டர்களுக்கு நன்மையைச் செய்வான். முகத்தில் விசேஷப் பொலிவு இருக்கும். பல புண்ணிய ஸ்தலங்களில் வாசம் செய்வான். எடுத்த காரியங்களை அனேகமாகச் செய்து முடிப்பான்.

21. பிறந்தசேய் மணத்தின் காலம் பேசுவோம் முப்பான் மூன்றில்
அரிவையும் தென்கீழ் நேரும் அவள்குணம் புகலக் கேண்மோ
உறன் முறைக் கினிய ளாவள் உயர்வான புத்தி யேற்பள்
நெறியதைக் காப்பா ளாகும் நீத்தோர்க்கு அன்ன மீவள்.

21. கடகலக்கின மகனுடைய விவாஹகாலத்தைப் பேசுவோம். முப்பத்து மூன்ருவது வயதில் மணம் நடைபெறும். மணப்பெண் தென்கீழ்த்திசையில் ஜனித்திருப்பாள். அவளுடைய குணத்தைக் கூறுகின்றேம். உற்ருர் உறவினருக்கு இனியவளாக இருப்பாள். மேலான புத்திப் படைத்தவள். தருமநெறியிலிருந்து வழுவாதவள். தவசிகளுக்குப் பக்தி சிரத்தையுடன் அன்னமளிப்பாள்.

22. வந்தபின் வரன்யோ கந்தான் மறுத்துரை அதிகம் கூருள்
சுந்தர முடையா ளாகும் சொல்லுமுன் கோபம் கொஞ்சம்
நொந்தபேர்க் குதவி செய்வ்ள் நீக்குவாள் அல்பர் தம்மை
இந்திர னிறைஞ்சு மாதே இவளுமே தீர்க்க சீவி.

22. அவள் வாழ்க்கைப்பட்டபின் இவனுக்கு அதிக அதிருஷ்டங்கள் ஏற்படும். பிறர் சொல்லுவதை அதிகமாக ஆக்ஷேபித்துக் கூறமாட்டாள். அழகு வாய்ந்தவள். சிறிது முன்கோபமும் உண்டு. கஷ்டப்படுபவர்களுக்கு உதவிசெய்வாள். தன்னைவிட குணத்தினால் தாழ்ந்தவர்களிடம் நட்புக் கொள்ளமாட்டாள். தேவேந்திரனால் போற்றப்படும் தாயே! இவள் நீண்ட காலம் வாழ்வாள்.

23. ஜயமுனி புகலு கின்றார் சத்தமம் சனியே நிற்க
நயமான தாரம் ஒன்று நாட்டின கார ணம்சொல்
பயமிலா பொன்னேன் நாலில் பதிந்ததால் தாரம் ஒன்றே
அயல்மாது அபிமா னந்தான் அணுகிடும் வேற தாக.

23. இவ்வாறு அத்திரி முனிவர் கூறியவுடன் ஜயமுனி ஒரு சந்தேகத்தைத் தெளிவிக்கக் கோருகின்றார். இச் சாதகத்தில் களத்திர ஸ்தானம் என்று சொல்லப்படும் ஏழாமிடத்தில் சனி இருப்பதால் இவனுக்கு ஒரு மனைவிதான் என்று எவ்வாறு சொல்வது? இச் சாதகனுக்கு ஒரு மனைவியா? அல்லது இருவரா? இவ்விஷயத்தைத் தெளிவுப்படுத்துங்கள். இதற்குப் பதில் அத்திரி கூறுகின்றார். சனி ஏழாமிடத்தில் இருப்பினும் குரு நான்காமிடத்தில் இருப்பதால் மனைவி ஒருத்திதான. ஏழில் சனி இருப்பதின் பயனாக வேறு ஒரு ஸ்திரீயின் அபிமானம் இவனுக்கு உண்டாகி அவளையும் இவன் மனைவியாகப் பாவிப்பான்.

24. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோம் ஒருவர் தோன்றும்
சுத்தமா யாண்பால் ரண்டு தோகையு மவ்வாறு தீர்க்கம்
வித்தகன் தனக்குப் புத்திரர் விளங்காது முதலி லேதான்
குத்தத்தைச் சொல்லு மென்ன குருபானு புந்தி அஞ்சில்;

24. இப்பொழுது புத்திரபாவத்தைக் கூறுகின்றோம். இவனுக்கு மொத்தம் ஐந்து குழந்தைகள் ஜனிக்கும். அவர்களில் இரு பிள்ளைகளும் இரு பெண்களும் நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள். முதலில் பிறந்த குழந்தை நீடிக்காது. அதற்கான கிரஹ தோஷம் என்னவென்று பார்வதி தேவி கேட்க, முனிவர் பதில் உரைக்கின்றார். குரு, சூரியன், புதன் ஐந்தாமிடத்தில்;

**குறிப்பு.**—ஜாதகத்தில் ஐந்தாமிடத்தில் குரு, சூரியன், புதன் இருப்பதால் இச் சாதகனுக்கு முதலில் பிறந்த குழந்தை நீடிக்காது என்று இந் நூலாசிரியர் கூறுகின்றார். ஜாதகத்தில் சுக்கிரனும் புதனும் ஐந்தாமிடத்தில் இருப்பதை வாசகர்கள் கண்டுகொள்க. ஆகையால் "குரு பானு புந்தி" என்றிருப்பது எப்பொழுதாகிலும் எழுதும் காலத்தில் ஏற்பட்ட பிழையாக இருக்கவேண்டுமென்பது எமது அபிப்ராயம்.

25. இருப்பதால் புகன்றோம் யாங்கள் இவனுடைப் பூர்வம் கேளாய்
திருப்பரங் குன்றந் தன்னில் ஜனித்தானும் வேளாள னாக
தரையினில் சீவித் தேதான் தன்மனை மதலை யுண்டாய்
பொருளது பெருக்க முண்டாய்ப் புகழுடன் வாழு நாளில்;

25. தங்கி இருப்பதால் முதலில் ஜனித்த குழந்தை நீடிக்காது என்று சொன்னோம். இவனுடைய பூர்வ ஜன்மத்தைப்பற்றிக் கூறுகின்றோம் கேளுங்கள். இவன் முன் பிறவியில் திருப்பரங்குன்றத்தில் வேளாளகுலத்தில் உதித்து இருந்தான். உழுதுபயிர் செய்து ஏராளமாகப் பொருள்களை அடைந்து, தன்மனைவி மக்களுடன், சுகமாகச் சீவித்து வந்தான். நல்ல புகழ் பெற்றவனாகவும் இருந்தான். அவ்வாறு அவன் வாழும்காலத்தில் ;

26. வந்ததோர் வினையைச் சொல்வேன் வாத்தியின் மகள்மேல் [மோகம்
இந்தவன் காதல் கொண்டு இரணியம் அவளுக் கீந்து
அந்தவள் கையைத் தொட்டான் அம்மாது இசையா ளாகி
உன்னுடை தங்கை யாச்சே உபதேசி மகளு னக்கு.

26. அவனுக்கு வந்த ஒரு வினையைச் சொல்லுகிறேன். அச்சென்மத்தில் இவனுக்கு ஆசிரியராக இருந்தவரின் மகளைக் கண்டு அவளிடம் இவன் மோகம்கொண்டு, அவளுக்குப் பொற்காசுகளைக் கொடுத்து அவளிடம் அணுகினன். சிறிதும் சம்மதிக்காத அவள், குருவின் மகளானபடியால் நான் உனக்குத் தங்கையாயிற்றே ! இவ்வாறு என்னிடம் எண்ணம் கொள்வது தருமமல்ல என்று போதித்தாள்.

27. இன்னமும் பலவாறு சொன்னாள் இவன்செவி கேளா தாகிக்
கன்னியைப் பலவந் தத்தால் காமன்தன் னூடல் செய்தான்
அன்னவள் வெட்க முற்று அறைந்தசா பத்தைக் கேண்மோ
இனிவரும் ஜன்மம் தன்னில் பெண்துணை காணா தாகி ;

27. மேலும் பல உபதேசங்களைச் செய்தாள். அவ்வளவு உபதேசமொழிகளும் இவன் காதில் பிரவேசிக்கவில்லை. ஆகையால் தன்னிஷ்டப்படியே நடந்துகொண்டான். வெட்கமடைந்து அவள் விடுத்த சாபத்தைக் கேட்பீராக. அடுத்து வரும் ஜன்மத்தில் நீ சகோதரி இல்லாதவனாகி அவளால் வரும் இன்பம் அற்றவனாக உயிர் வாழ்வாய்.

28. இல்லமு மில்லா தாகி இளைத்ததோர் குடும்பி யாகி
வல்லிவா லிபத்தி லின்றி மாநிலம் நிந்தை யுண்டாய்ச்
சொல்லியே சென்றா ளென்றோம் சேர்ந்தது அந்தத் தோஷம்
அல்லலைத் தவிர்க்கு மெங்கள் ஆத்துமத் தாயே கேளாய்.

28. சொந்த வீடும் இல்லாமல் மிகவும் க்ஷீணமான குடும்பத்தை உடையவனாக இருப்பாய். மேலும் வாலிபப்பருவத்தில் மனைவியை அடையாமல் பல நிந்தைகளையும் ஏற்பாய் என்ற அந்த சாபத்தின் பாவமும் இவனைப் பிடித்துக் கொண்டது. சங்கடங்களைப்போக்கும் எங்கள் உயிருக்குயிரான தாயே ! கேளுங்கள்.

29. மாரனு மந்தி யத்தில் வாதநோ யுடைய ளுகி
தீரனும் கால ளுடு சென்றுமே பிரமன் லக்கம்
பாரினி லுதிப்பா ளுகும் பாவையின் சாபம் போலே
நேரிடு மென்று சொல்வோம் நிமலியே கேட்டி டாயே.

29. அச் சென்மத்தின் அந்தியத்தில் வாதநோய் கண்டு இவன் காலன் நாட்டிற்குச் சென்ருன். பிறகு படைக்கும் கடவுளான பிரம்மனுல் இங்குப் பிறப்பிக்கப்பட்டிருக்கின்ருன். முற்பிறவியில் அந்தப்பெண் சபித்தபடியே இவனுக்கு இச்சென்மத்தில் ஒவ்வொன்றும் நேரிடும். நாங்கள் சொல் வதை மேலும் கேளுங்கள்.

30. வந்தவன் யோகச் சேதி வரைகிறே மினிமே லாகச்
சந்ததம் முப்பான் மூன்று ஆண்டுமேல் யோகம் வாய்க்கும்
முந்தியே சுகமும் துக்கம் மேவிடும் நினைத்த தோங்கா
பந்துவின் மதிப்பில் லாமல் பாரினில் நிந்தை யேற்பான்.

30. பிறந்திருக்கும் கடகலக்கின மகனுடைய யோகங்களைக் கூறுகின் ரோம். முப்பத்து மூன்ருவது வயதிற்குமேல் இவனுக்கு நல்ல யோக முண்டு. மேலே குறிப்பிட்ட வயதிற்கு முன்பு இவனது வாழ்க்கையில் சுகம் துக்கம் நிறைந்திருக்கும். [துக்கம் அதிகமாக இருக்கும் என்பது கருத்து.] நினைத்த காரியங்கள் நிறைவேரு. பந்துக்கள் மதிக்கமாட்டார் கள். பல நிந்தனைகளும் இவனுக்கு ஏற்படும்.

31. சிலதுநாள் ஜனங்கள் தாழ்வு சல்லிய பாதை யுண்டு
கலவர புத்தி யாகும் கழறின ஆண்டு மேலாய்க்
குலவிடு மாது தானும் குலமதிப் புடைய வாழ்வன்
தலமது செய்வா ளுமே சந்திரன் பிறைபோல் யோகம்.

31. சிலகாலம் ஜனங்கள் மத்தியில் தாழ்வுபட்டிருக்க நேரிடும். கடன் தொந்தரவும் இருக்கும். எப்பொழுதும் மனத்தில் சஞ்சலப்பட நேரும். முன் சொன்ன (முப்பத்து மூன்ரும்) வயதிற்குமேல் மணக்கப்பட்ட மனை வியின் மூலம் இவனுக்கு அதிருஷ்ட மேற்பட்டுக் குலத்தினர் மதிக்க வாழ்வன். தனக்குச் சொந்தமாக ஒரு வீடு கட்டுவான். பிறைச்சந்திரன் போல யோகங்கள் ஓங்கிவளரும்.

32. ஆருறு ஆண்டு தன்னில் அணுகிடும் நிதிநிட் சேபம்
வேறெரு இல்லம் செய்தல் வெற்றியாம் நினைத்த தெல்லாம்
பாரது சேர்த லுண்டு பலபணி உடைய ளுகும்
ஆறுமா முகத்த ளுலே யாவத்தும் கூடு மென்ரேம்.

32. முப்பத்தாருவது வயதில் புதையல் இவனுக்குக் கிடைக்கும். வேறு ஒரு வீடும் நிர்மாணிப்பான். எண்ணிய காரியங்களைச் சரிவர நிறைவேற்றி வெற்றியை அடைவான். பூமிகளைச் சேர்ப்பான். பலவிதமான ஆபரணங் களையும் அடைவான். சுப்பிரமணிய சுவாமியின் கிருபையால் மற்றைய க்ஷேமங்களும் இவனுக்குச் சுலபமாகக் கிட்டும்.

33. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அழகுண்டு பொறுமை சாலி
அன்னமு மன்பா யீவள் ஆளன்தன் மனதுக் கேத்தோள்
அன்னியர் குற்றம் சொல்லாள் ஆபத்தைச் சிலர்க்கு ஏற்பள்
அன்னவள் சமயோ கத்தாள் அடாவடி கூறு ளாகும்.

33. இப்பொழுது ஜாதகனின் தாயினுடைய குணத்தைச் சொல்லப் போகின்றோம். அவள் அழகுள்ளவள். பொறுமை வாய்ந்தவள். வந்தவர்களுக்கு அன்புடன் அன்னமிடும் இயல்பு உடையவள். தன் கணவனது மனத்தின்படி நடந்துகொள்வாள். பிறருடையக் குற்றங்களை எடுத்துச் சொல்லமாட்டாள். வேறு சிலர்க்கு நேர்ந்த ஆபத்தைத் தனக்கேற்பட்டதாக நினைப்பாள். சம அதிருஷ்டமுள்ளவள். விதண்டாவாதம் பேசமாட்டாள்.

34. பந்துவுக் கினிய ளாகும் பரிந்துப சாரம் செய்வள்
நிந்தைகள் ஏற்கா ளாகும் நேமியில் நல்லோ ளாவள்
வந்தவர் தம்மைக் காப்பள் வளவுமே தென்கீ ழாகும்
தன்துணை ஆண்பால் ரண்டு சத்திமார் ஐவ ராகும்.

34. உறவினர்களுக்கு இனியவள். பரிவுடன் எல்லோருக்கும் உபசாரம் செய்வாள். அவளுக்கு அவதூறுகள் ஏற்படா. எல்லோருக்கும் நல்லவளாக வாழ்வாள். தன்னை வந்தடைந்தவர்களைக் காப்பாள். தான் பிறந்த ஊருக்குத் தென் கீழ்த்திசையில் இவள் வாழ்க்கைப்பட்டிருப்பாள். இவளுக்குச் சகோதரர்கள் இருவர். சகோதரிகள் ஐவர்.

35. மத்தியில் சிலது சேதம் மருவிடும் பித்த வாயு
குத்தத்தை மனதில் வையாள் குறிப்பினில் கொடுமை தோன்றும்
வித்தகி பூர்வம் தன்னை விளம்புவோ மிதின்மே லாகச்
சித்தர்வா முருணை நாட்டில் ஜனித்தனள் வைசியச் சேயாய்.

35. ஆனால் மத்தியில் அச் சகோதர சகோதரிகளில் சிலர் சேதத்தை அடைவார்கள். இவளுக்கு உடலில் பித்தவாயு தங்கி இருக்கும். பிறர் குற்றங்களைக் கண்டாலும் மனத்தில் வைத்துக்கொள்ளமாட்டாள். முகத்தோற்றத்தில் கொடியவளாகக் காணப்படுவாள். [உண்மையில் கொடியவளல்லள் என்பது கருத்து]. இவளுடைய பூர்வஜன்மத்தைக் கூறுகின்றோம். இவள் முன்பிறவியில் சித்தர்கள் வாழும் திருவண்ணாமலையில் வைசிய சாதியில் பிறந்திருந்தாள்.

36. சுகமுள குடும்பி யாகி ........ அன்ன மீந்து
பகையான கால னுடு பரந்தனள் வரன்முன் னுகச்
சகபதி வரையப் பட்டு ஜனித்தனள் மயன்கு லத்தில்
தகமையாய் நாற்ப தாண்டில் தனுர்மாதம் கண்ட மென்றோம்.

36. தக்கவயதில் மணமாகிக் கணவன் குழந்தைகளுடன் சுகமாக வாழ்ந்துவந்தாள். அன்னதானம் செய்தாள். தன்கணவன் இறப்பதற்கு முன்னமேயே இவள் இறந்தாள். பிறகு பிரம்மதேவனால் இக்குலத்தில்

(விசுவகர்ம ஜாதியில்) பிறப்பிக்கப்பட்டு ஜாதகனுக்குத் தாயாக வாய்த்திருக்கின்றாள். ஜாதகனுடைய நாற்பதாவது வயதில் மார்கழி மாதத்தில் இவளுக்குக் கண்டம் ஏற்படும். அதுவே இவளுடைய முடிவாகும்.

37. மறுஜன்மம் காஞ்சி தன்னில் வருகுவாள் சௌராஷ்டர வம்சம்
பெருமையாய்க் குடும்பி யாகிப் பூவையும் வாழ்வா ளாகும்
அறிவிப்போம் மூவே ழாண்டில் அணுகிய தேளின் மாதம்
உரைக்கிறோம் தந்தை கண்டம் உத்தமி கேட்டி டாயே.

37. மறுஜன்மத்தில் இவள் காஞ்சியில் சௌராஷ்டிர ஜாதியில் பிறந்து பெருமைவாய்ந்த குடும்பம் உள்ளவளாகிச் சிறப்புடன் வாழ்வாள். ஜாதகனுடைய தந்தையின் மரணகாலத்தைச் சொல்லுகின்றோம். ஜாதகனுக்கு முப்பத்தேழாவது வயது நடைபெறும்போது கார்த்திகை மாதத்தில் தகப்பனுக்கு மரணம் ஏற்படும். தேவியே! மேலும் கேளுங்கள்.

38. பின்ஜன்மம் தணிகை தன்னில் பிறப்பனும் பிரம்ம சேயாய்
மன்னர்பால் அரசு செய்து மாரனும் வாழ்வா னாகும்
இன்னவன் மரண காலம் இயம்புவோ மறுபா னேழில்
கன்னியாம் மாதம் தன்னில் காயையி னுடலம் ஏகும்.

38. அவன், மறு ஜன்மத்தில் திருத்தணி க்ஷேத்திரத்தில் பிராம்மண ஜாதியில் பிறப்பான். அரசாங்க உத்தியோகம் செய்து வாழ்வான். ஜாதகன் மரணமாகும் காலத்தையும் கூறுவோமாக. இவனுக்கு அறுபத்தேழாவது வயது நடக்கும்போது புரட்டாசி மாதத்தில் உடலைவிட்டு உயிர் நீங்கும்.

39. பாலன்பின் ஜன்மம் சொல்வேன் பட்சியில் வேளாள னாகச்
சீலனாய்ப் பூமி யுண்டாய்ச் சிறப்புடன் வாழ்வா னாகும்
சாலவே உதிக்கும் காலே சதயநாள் முதல்பா தத்தில்
ஆலமாம் பணியி ருப்பு ஐமூன்று ஆண்டு மாகும்;

39. ஜாதகனுடைய மறுபிறவியையும் கூறுகின்றேன். இவன் அடுத்து வரும் பிறவியில் "பக்ஷிதீர்த்தம்" என்றுச் சொல்லப்படும் திருக்கழுக்குன்றத்தில் வேளாள ஜாதியில் பிறந்து மிக்க நற்சீல முடையவனாக இருப்பான். நிலங்களை அடைந்துச் சிறப்புடன் வாழ்வான். இப்பொழுது இவன் சதய நக்ஷத்திரம் முதல் பாதத்தில் பிறந்திருக்கின்றான். ஆகவே ராஹு தசையில் இருப்பு வருஷங்கள் பதினைந்து;

40. திங்களு நான்கு மாகும் தினமது பத்து என்றோம்
அங்கவன் பிணிஅ நேகம் அவன்தந்தை தாயும் நோயாம்
சங்கையாய் இல்லம் வேறு தனமூல அலைச்ச லாகும்
மங்கையே பூர்வம் சொன்னோம் வரைகிறோம் பின்பால் சேதி.

40. மாதங்கள் நான்கு, நாட்கள் பத்து என்று தெரிவித்துக்கொள்ளுகிறோம். இத்தத் தசையில் நடைபெறும் பொதுப் பலன்களைச் சுருக்கமாகக் கூறுகின்றோம். ஜாதகனுக்குப் பல நோய்கள் காணும். தாய் தந்தையர்

களுக்கும் பிணிகள் வரும். இவ்வளவு காலம் வசித்த இடத்தைவிட்டு வேறு இடத்தில் குடும்பம் செய்ய நேரும். பணத்திற்காக அலைய நேரிடும். தேவியே! இது பூர்வ பாகமாகையால் பலன்களை அதிகம் சொல்லவில்லை. இரண்டாம் பாகத்தில் பலன்களை விரிவாகச் சொல்லப்போகின்றோம்.

41. சத்தம முனிவர்
சுத்தமாய்ச் சொன்னோம்
குற்றங்கள் யாவும்
வித்தகி பொறுப்பாய்.

41. முனிவர்கான நாங்கள் எழுவரும் ஜாதகத்தை நன்கு சுத்தமாக ஆராய்ந்துப் பார்த்துப் பலன்களைச் சொன்னோம். குற்றங்கள் இருப்பின் அவைகளைத் தாங்கள் பொறுத்து அருள்வீர்களாக.

குறிப்பு.—இங்கு அத்திரி முனிவர் ஒருவரே ஜாதகப் பலன்களைச் சொல்லியிருப்பினும், மற்றைய மஹரிஷிகள் இப்பலன்களைக் கேட்டு மறுத்துக் கூறுமையால் அவர்களும் பலன்களைச் சொன்னதாகக் கருதவேண்டும். இங்கு, வடமொழியிலுள்ள “**अप्रतिषिद्धं अनुमतं भवति**” என்றப் பழமொழியைக் காண்க. ‘‘மறுக்கப்படாததொரு விஷயம் சம்மதிபெற்றதாகும்’’ என்பது இதன் பொருள்.

## ஜாதகம் 26.

1. கடகலக் கினம தாகக் கதிர்புதன் குருவு மூன்றில்
முடவனும் புகரு மஞ்சில் முழுமதி நவத்தி லேற
அடல்குசன் கேது ஈருறில் அரவுமே ஆறில் தங்க
உடன்பலன் புகலு மென்று உத்தமி கேட்க லுற்ருள்.

| | | | |
|---|---|---|---|
| சந்திரன் | | | செவ்வாய் கேது |
| | இராசி சக்கரம் | | லக்கினம் |
| | | | |
| ராகு | சனி சுக்கிரன் | | சூரியன் புதன் குரு |

விளம்பி வருஷம் புரட்டாசி மாதம் 16-ஆந் தேதி வெள்ளிக்கிழமை இரவு சுமார் 15 நாழிகைக்குச் ஜனனம். ஆங்கிலத் தேதி 30-9-1898. நவக்கிரஹங்களின் பாதசாரம். ஹஸ்தம் 2-இல் சூரியன். ரேவதி 3-இல் சந்திரன். புனர்வசு 2-இல் செவ்வாய். உத்திரம் 2-இல் புதன். சித்திரை 1-இல் குரு. விசாகம் 4-இல் சுக்கிரன். அனுஷம் 4-இல் சனி. பூராடம் 3-இல் ராஹு. புனர்வஸு 1-இல் கேது. நக்ஷத்திரம் ரேவதி. புததசை இருப்பு வருஷங்கள் ஐந்து, மாதங்கள் பதினொன்று.

1. இலக்கினம் கடகம், சூரியன் புதன் குரு இவர்கள்கன்னி, சனியும் சுக்கிரனும் விருச்சிகம், சந்திரன் மீனம், செவ்வாய் கேது மிதுனம், ராஹு தனுஸ், இக் கிரஹ நிலையின் பலன்களைச் சொல்லுவீர்களாக என, பார்வதி வினவினாள்.

2. அத்திரி புகலு கின்றார் ஆணது ஜனன மாகும்
வித்தக னில்லம் சொல்வேன் மேல்வாடை வடதென் வீதி
உத்தரம் மாயோன் மாரி செங்காளி ஈசன் தந்தி
பத்துமே மார்க்கம் உண்டு பகருவோம் சிறுஊ ராகும்.

2. அத்திரி முனிவர் பலன்களைக் கூறுகின்றார். இக்கிரஹ நிலையில் பிறந்த குழந்தை ஆண். வீதி தெற்கு வடக்கில் அமைந்திருக்கும். வீடு மேல்வரிசையில் இருக்கும். கிழக்கு நோக்கும் வடதிசையில், விஷ்ணு, மாரியம்மன், காளி, பரமசிவன், விநாயகர் இவர்கள் எழுந்தருளி இருப்பார்கள். அருகில் ஒரு பாதையுமுண்டு. ஊரும் சிறியதாக இருக்கும்.

3. வருகுவான் சேஷ்ட னுக வடுகர்தன் குலமே யாகும்
பெறுமன்னை தந்தை யோகம் பேதையர் புத்திர யோகம்
திருமகன் யோகச் சேதி செப்புவோ மிந்நூல் தன்னில்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

3. அவ்வாறு அடையாளமுள்ள ஊரில் " நாயக்கர் " குலத்தில் குடும்பத்திற்கு ஜ்யேஷ்டனுகப் பிறந்திருப்பான். இவனுடைய தாய், தந்தை, மனைவி, புத்திரர் இவர்களைப் பற்றியும், அவனுடைய யோகங்களையும் முன்பின் ஜன்மங்களையும் இந்நூலில் சொல்லப்போகின்றோம். வேதங்களின் மகுடமாகிய உபநிஷதங்களில் ஆனந்த நர்த்தனம் புரியும் தாயே ! கேட்டருளல் வேண்டும்.

4. தந்தையின் துணைஆண் தோஷம் சத்தியு மொன்றே தீர்க்கம்
அந்தவள் சேதி சொல்வேன் அன்புள மனத்த ளாகும்
நிந்தைக ளேற்கா ளாகும் நிமிஷத்தில் கோபி யாவள்
முந்துமால் நிறத்தா ளாகும் உவமையாய்ப் பேச வல்லள்.

4. இச்சாதகனின் தந்தைக்குச் சகோதரன் இல்லை. ஒரு சகோதரி தான் உண்டு. அவள் தீர்க்காயுளுடன் வாழ்வாள். அவளுடைய வரலாறுகளைச் சொல்லுகின்றோம். அன்பு நிறைந்த மனம் படைத்தவள். பிறர் நிந்தனை செய்யும்படி நடந்துகொள்ளமாட்டாள். மிகவும் முன்கோபி. திருமாலின் நிறமுடையவள் (கருத்த மேனியாள் என்பது கருத்து) ஒவ்வொரு விஷயத்தையும் உவமை சொல்லி விளக்குவாள்.

5. தரித்திர மில்லா ளாகும் தன்வரன் உள்ளூர் தென்பால்
சிறுத்தோர்க்கு உதவி செய்வள் சேயர்கள் தோன்றும் தீதாம்
பிருகுமே புகனு கின்றூர் பூவைக்குப் புத்திர தோஷம்
உரைத்தகா ரணங்க ளெவ்வாறு உரைப்பீர்கள் முனியே நீர்தாம்.

5. ஏழ்மை இல்லாதவள். தான் பிறந்த ஊருக்குத் தென்கிழக்குத் திசையில் கணவன் ஊர் இருக்கும். எளியவர்களுக்கு உதவி புரிவாள். குழந்தைகள் பிறக்கும். ஆனால் நீடித்திரா. இவ்வாறு அத்திரி முனிவர் சொன்னதைக் கேட்டு, பிருகு முனிவர், புத்திரதோஷத்திற்கு என்ன காரணம் ? அதைச் சொல்லுங்கள் என, அத்திரி முனிவர் பதில் கூறுகின்றார்.

6. முன்ஜன்மம் வினையி னலே உதித்தசேய் தோஷ மெய்தும்
என்னஊழ் செய்தா னத்தை இயம்புவீர் முனியே நீர்தாம்
கன்னிகை பூர்வம் சொல்வேன் கடையூருக் கிருகி லேதான்
சின்னஊர் தன்னி லேதான் ஜனித்தனள் வன்னிய சேயாய்.

6. முன் ஜன்மத்தில் ஏற்பட்ட பாவத்தினுல் புத்திரதோஷம் உண்டு. பிறகு முனிவர், அதென்ன தோஷம். சொல்லுங்கள். அத்திரி—இவள் முன்பிறவியில் கடையூருக்கு அருகில் உள்ள ஓர் சிறிய ஊரில் வன்னியகுல க்ஷத்திரிய வமிசத்தில் பிறந்திருந்தாள். (கடையூர்—திருக்கடையூர் என்று பிரசித்தமானது.)

7. சுகமுள குடும்பி யாகிச் சுந்தரி வாழு நாளில்
அகமதில் முனியும் வாசம் யாவரும் தோத்த ரிப்பர்
பகைபிணி விலக்கும் தெய்வம் பாவைமுன் னோர்கள் போற்றும்
உகமையில் லாபில மாது உலகினில் தொழாமல் நின்ருள்.

7. காலக் கிரமத்தில் இவள், மணமாகி, கணவனுடனும் குழந்தை களுடனும் சுகமாக வாழும் நாளில் அவளுடைய வீட்டில் ஒரு முனீசுவரன் வாசம் செய்து வந்தது. யாவரும் அதைத் துதித்து வணங்குவது வழக்கம். அது பகைவரும் பிணிகளும் இல்லாமல் செய்யும். அவ்வளவு சக்தி வாய்ந் தது அது. இவர்களுடைய முன்னோர்களும் அதைப்போற்றி வந்தார்கள். அப்படிப்பட்ட தெய்வத்தைப் பிறர் தொழுதாலும் இவள் தொழாமல் இருந் தாள்.

குறிப்பு.—" முனீசுவரன் " கண்ணிற்குப் புலப்படாத சக்தி வாய்ந்த ஒரு தாமச ஆன்மா.

8. கன்னியும் தொழாமல் நிற்கக் கருமுனி வருத்த முற்று
என்னையே தொழாத பாவி இனிவருப் ஜன்மம் தன்னில்
தன்சுதர் தம்மைக் கொல்வேன் உன்பக்கம் வாச மாவேன்
இன்னவாறு சொல்லி யேதான் ஏகிற்று வெளியி லேதான்.

8. இவள் அதைத் தொழாமல் நிற்கவே, கருநிறம் வாய்ந்த அந்த முனீசுவரன் சொல்லிற்று " என்னை நீ தொழாமல் நின்றமையால் மறு ஜன்மத்தில் நீ வசிக்கும் வீட்டில் நான் வசித்துக்கொண்டு, உனக்குப் பிறக்கும் ஒவ்வொரு குழந்தையையும் அழிப்பேன் " இவ்வாறு சொல்லி விட்டு வெளியே சென்றுவிட்டது.

9. ஆகையா லிச்சென் மத்தில் அம்முனி சாபத் தாலே
சாகுமே சுதர்கள் தாமும் தன்பக்கல் வாச மாகும்
போகிடக் கிரியை ஒன்று புகலுவீர் முனியே நீர் தாம்
பாகமாய்க் கிரக சாந்தி பண்ணியே சக்தி பீஜம் ;

9. ஆகையால் அந்தமுனீசுவரனின் சாபத்தின்படி ஒவ்வொரு குழந்தை யும் நாசமாகின்றது. அந்த முனீசுவரன் இவள் வீட்டிலே வசித்துக் கொண்டிருக்கிறது. இக்குற்றத்திற்குப் பரிகாரங்கள் சொல்லுவீர்களாக ; எனப் பார்வதி கேட்க, முனிவர் பதில் கூறுகின்ருர். முதலில் முறைப்படி நவக்கிரக சாந்தியைச் செய்யவேண்டும். அதன் பிறகு " சக்தி " பீஜத்தை ;

10. அறுகோணம் தனில மைத்து ஆயிரம் தரம்ஜ பித்துத்
திருமக ளணிந்து கொண்டு சுக்கிர வார நோன்பு
ஓராண்டு கொள்வா ளாகில் ஒதுங்கிடும் முனியின் தோஷம்
பெறுஜன்மம் ஆண்பா லொன்று பேதையு மிரண்டு தீர்க்கம்.

**10.** ஆறு கோணத்தில் எழுதி, அதில் சக்தியை ஆவாஹனம் செய்து, தூப தீப நைவேத்யங்களைச் சமர்ப்பித்து ஆயிரம் தரம் சக்தி பீஜத்தைச் ஜபித்து, சக்திபீஜம் எழுதப்பட்டிருக்கும் தகட்டை (யந்திரம் என்று சொல்லுவார்கள்) கழுத்தில் அணிந்துக் கொள்ளவேண்டும். மேலும் ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் ''சுக்கிரவார விரதம்'' ஒரு வருஷம் அனுஷ்டிக்கவேண்டும். இப்பரிகாரங்களைச் செய்தால் ஒரு பிள்ளையும் இரு பெண்களும் பிறந்து நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள்.

குறிப்பு.—சமசதுரமான தாமிரத் தகட்டிலோ அல்லது சக்திக்கேற்ற படி வெள்ளி, தங்கத் தகடுகளிலோ நாம் கீழே எழுதியுள்ளபடி ஆறு கோணங்களை அமைக்கவேண்டும். அந்த ஆறு கோணங்களிலும் நாம் எழுதியிருக்கிறபடி சக்தி பீஜத்தை '' ह्रीं '' (ஹ்ரீம்) என்ற சொல்லை தேவ நாகரி எழுத்திலோ அல்லது தமிழிலோ எழுதவேண்டும். பிறகு அத் தகட்டில் ஆவாஹனம் முதலிய பதினாறு உபசாரங்களைச் செய்து ஆயிரத் தெட்டுமுறை சக்தி பீஜத்தை ஜபித்து, பிறகு அத் தகட்டை வெள்ளி அல்லது தங்கக் கவசத்திற்குள் வைத்து கையிலோ அல்லது கழுத்திலோ தரிக்க வேண்டும். பொதுவாக இது யாருக்கும் க்ஷேமத்தைத் தரும். இவ்விஷயத்தை மேலும் அறிய விருப்பமுள்ளவர்கள் மந்திர சாஸ்திரமறிந்த பெரியோர்களிடம் வணங்கிக் கேட்டறியவும்.




**11.** சொல்லியபடி செய்யாரேல் தோன்றிய சுதர்கள் தோஷம்
வல்லியு மத்தில் ஏகும் வரைகிறோம் பின்பால் சேதி
நல்லதோர் தந்தை சேதி நவிலுவோ மினிமே லாக்
அல்லலைத் தவிர்க்கு மெங்கள் ஆத்துமத் தாயே கேளாய்.

**11.** நாங்கள் சொன்னவாறு செய்யாவிடில் பிறக்கும் குழந்தைகள் எல்லாம் நசிக்கும். இவளும் வாழ்க்கையின் மத்தியில் இறப்பாள். இவளைப்பற்றிய வரலாறுகளைப் பின் பகுதியில் விவரமாகக் கூறுகின்றோம். இதுவரையில் ஜாதகனின் அத்தையின் செய்தியைக் கூறினோம். இனி தந்தையின் செய்திகளைக் கூறுகின்றோம் கஷ்டங்களைப் போக்கும் தாயே! நாங்கள் சொல்வதைக் கேட்பீராக.

12. ரோகிணி சிம்ம ராசி நுகலுவான் தந்தை யென்றேம்
பாகமாய்ப் பேசு வானும் பரஉப காரம் செய்வன்
நாகரி கம்போல் காட்டும் நல்லோர்க்கு நல்ல னுவன்
ஆகம நுணுக்கம் தேரான் அரிநிறம் உணச்சல் நீட்சி.

**12.** இவன் (ஜாதகனின் தந்தை) ரோஹிணி நக்ஷத்திரத்தில் சிம்மலக்னத்தில் பிறந்திருப்பான். அழகாகப் பேசுவான். பிறர்க்கு உதவி புரிவான். மிக்க நாகரிக முள்ளவன் போல உலகத்தோர்க்குத் தன்னைக் காட்டிக் கொள்வான். நல்லவர்களுக்கு நல்லவனுக இருப்பான். சாஸ்திரங்களின் ரஹஸ்யத்தை அறியாதவன். கருத்த மேனியான். அவனது சரீரம் உயரமாகவும் மெல்லியதாகவும் இருக்கும்.

13. சல்லியம் கொள்ளா னுகும் தாய்தந்தைக் கிஷ்ட னுவன்
இல்லையென் றுரைக்க மாட்டான் இடர்செய்யான் யாவ ருக்கும்
நல்லதோர் கிருஷி செய்வன் நாற்காலி விருத்தி யுண்டு
எல்லைகள் சேர்ப்பா னுகும் எப்போதும் வறுமை காணுன்.

**13.** கடன் இல்லாதவன் தன் தாய் தந்தையர்களிடம் மிக்க பக்தியுடன் இருப்பான். இவனை வந்தடைந்து யாசிப்பவர்களுக்கு இல்லை என்று சொல்ல மாட்டான். பிறர்க்குத் தீங்கு செய்யமாட்டான். லாபகரமான விவசாயத்தைச் செய்வான். கால் நடைகளை அபிவிருத்தி செய்வான். பூமிகளையும் சேர்ப்பான். எந்தப் பருவத்திலும் வறுமையைக் காணுதவன்.

14. மாமிக ளிரண்டே யாகும் மால்பத்தி கொள்ளா னுகும்
தீமைக ளொருவர்க் கெண்ணுன் தீரமா மனத்த னுகும்
தாமத குணமும் கொஞ்சம் சந்தேக மனத்த னுகும்
ஆமதை வேறு செய்வன் அம்பிகை யாளே கேளாய்.

**14.** இவனுக்கு மாமிமார்கள் இருவர். திருமாலிடம் அதிக பக்தி இல்லாதவன். பிறர்க்குக் கெடுதலைச் சிறிதும் மனத்திலுைம் எண்ணுதவன். அஞ்சாத நெஞ்சம் படைத்தவன். தாமத குணம் உள்ளவன். பிறரைச் சந்தேகிப்பான். வேறு ஒரு வீட்டையும் கட்டுவான். ஆகும் காரியத்தையும் ஆகாதபடி தடுத்து விடுவான் என்றும் கொள்ளலாம். அம்பிகையே ! மேலும் கேளுங்கள்.

15. சொன்ன இக்குணத்தா னுக்குத் தோன்றுவா னிந்தப் பாலன்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அழகுளா னிருநி றத்தான்
முன்கோபி மூலச் சூடு உயர்வான புத்தி யேற்பன்
தன்சொல்லே மேன்மை யாகச் சாதிப்பான் ஈகை வானும்.

**15.** இப்படிப்பட்ட குணமுள்ளவனுக்கு இக்கடக லக்கின பாலகன் மகனுக உதித்திருக்கிறன். இப்பொழுது ஜாதகனுடைய குணங்களைச் சொல்லுகின்றேம். அழகுள்ளவன். கருத்த மேனியான். முன்கோபி. மூலச் சூடும் உடையவன். நல்ல புத்தியை (உபதேசத்தை) ஏற்றுக்கொள்வான். சில சமயங்களில் தான் சொன்னதே சரி என்று விதண்டாவாதம் செய்வான். தியாகம் செய்யும் குணமும் உண்டு.

16. உண்டியும் சுகமாய்க் கொள்வன் உறைப்பொடு புளிப்பி லிச்சை
வண்டிவா கனமு மேற்பன் மாற்றுனே லகுவில் வெல்வன்
துண்டமாய்க் கூறு வனும் தொடுத்ததை வெல்வா னும்
பண்டுநாள் பூமி தன்னைப் பாலகன் விருத்தி செய்வன்.

16. சுகமான போஜனங்களையே உட்கொள்வான். சுவைகளுக்குள் உறைப்பும், புளிப்பும் இவனுக்கு மிகவும் விருப்பமாகும். வண்டி முதலிய வாகன சௌக்கியங்கள் இவனுக்கு இருக்கும். எதிரிகளைச் சீக்கிரத்தில் சுலபமாக ஜயிப்பான். ஒருவரையும் கண்டித்துப் பேசமாட்டான். ஆரம்பித்த காரியத்தை (வியாஜ்ஜியத்தை) எளிதில் வெல்வான். பிதுரார்ஜிதமான பூமிகளை அபிவிருத்தி செய்வான்.

17. பந்துவை ஆத ரிப்பன் பல கலை உணர்வா னும்
சிந்தையும் நல்ல தாகும் சிறப்பான குடும்ப மேற்பன்
வந்தவர்க் கன்ன மீவன அடிமையோர் குடி பெருக்கம்
நொந்தபேர்க் குதவி செய்வன் நினைத்தகா ரியமு டிப்பன்.

17. உறவினர்களை ஆதரிப்பான். அநேக கலைகளைக் கற்றறிந்தவன். நல்ல மனப்பான்மை படைத்தவன். மேன்மை வாய்ந்த குடும்பம் உடையவனுவான். தன் வீட்டை நாடி வந்தவர்களுக்கு அமுது அளிப்பான். சேவகர்களுடைய குடும்பத்தையும் அதிகமாகக் காப்பாற்றுவான். கஷ்டப் படுகின்றவர்களுக்கு உதவிசெய்வான். தான் எண்ணிய காரியத்தைச் செய்து முடிக்கும் வல்லமை வாய்ந்தவன்.

18. கரமதில் விஷ்ணு ரேகை கமலரே கையுமே யுண்டு
திருமாலின் பக்தி கொள்வன் செய்நிலம் சேர்ப்பா னும்
பெரும்பொருள் பால்பாக்கி யங்கள் பேச்சது கரப்பா னும்
அரிவையர் மோக னுவன் அஞ்சிய வார்த்தை கூறுவன்.

18. அவனது கையில் விஷ்ணு ரேகையும் கமலரேகையும் விளங்கிடும். திருமாலிடம் அதிகம் பக்தி கொண்டவன். செழிப்பான நிலங்களையும் சேர்ப்பான். விலை உயர்ந்த பொருள் உடையவன். பால் பாக்கியமும் இவனுக்கு இருக்கும். தான் சொன்ன வார்த்தைப்படியே நடப்பான். பெண்களிடம் மோகம் கொண்டவன். பிறர்மனம் நோவாத படி பயந்தே வார்த்தைகளைப் பேசுவான்.

19. தன்துணை ஆண்பா லொன்று சத்திமார் நால்வ ராகும்
அன்னவர் சேதி பின்பால் அறிவிப்போம் முனியே கேளு
இன்னவன் மணத்தின் கால மியம்புவோ மினிமே லாக
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே.

19. இவனுக்கு ஒரு சகோதரன். நான்கு சகோதரிகள். அவர்களுடைய வரலாறுகளைப் பின் பாகத்தில் சொல்லுவோம். இனி மேல் இச்சாதகனின் விவாஹ காலத்தைக் கூறுகின்றேம். விநாயகரைப் பெற்ற தாயே ! கேட்பாயாக.

20. மங்களம் ஈரெட் டாண்டில் மருவிடும் வடகீழ் பாரி
அங்கவன் அம்மான் மாது அனுசிடும் குணத்தைச் சொல்வேன்
எங்கள்போல் அதிதிக் கன்ன மீவளாம் நற்கு ணத்தாள்
பொங்கிய குடும்ப மேற்பள் பொய்யது புகலா ளாகும்.

20. இவனுக்குப் பதினாருவது வயதில் விவாஹம் நடைபெறும். வட கிழக்குத் திசையிலிருந்து பெண்வருவாள். அவள் மாமன் மகளே. அவளுடைய குணங்களைச் சொல்லுகின்றோம். எங்களைப் போன்று தவசிகளான அதிதிகட்கு அன்னமளிப்பாள். நற்குணம் வாய்ந்தவள். அவளுடைய குடும்பம் மேன்மேலும் விருத்தியாகும். பொய்ப் பேசாதவள்

21. தோகைபோல் சாய லொக்கும் சொல்லது சுருக்க மாகும்
பாகமாய்ப் பேசு வாளாம் பணிந்தோரை ஆத ரிப்பள்
நாகரி கங்கள் உண்டு நாயகன் மனதுக் கேத்தோள்
போகபாக் கியங்க ளேற்பள் புண்ணிய மனத்த ளாகும்.

21. மயில் போல் அழகானவள். சுருக்கமாகப் பேசுவாள். மேலும் போதிய அளவு பொருத்தமாகப் பேசுவாள். தன் கீழ்ப்படிந்தவர்களை (சேவகர்களை) ஆதரிப்பாள். நடை உடை பாவனை இவைகள் மிகவும் நாகரிகமாக இருக்கும். கணவன் மனத்திற்கு உகப்பாக நடப்பாள். இன்பத்தைத் தரும் வீடு, தோட்டம், பசு, ஆபரணம், வஸ்திரம் முதலிய பொருள்களைப் பெறுவாள். பிறர்க்கு நன்மைகளையே எண்ணும் மனமுள்ளவள்.

22. வயதுமே தீர்க்க மெய்தும் மைந்தர்தன் குணத்தைச் சொல்வேன்
வியமிலா எழுவர் தோன்றும் விளங்காது சிலது என்றோம்
பயமிலா ஆண்பால் ரண்டு பாவையு மவ்வாறு தீர்க்கம்
ஜயமுனி தடுத்துச் சொல்வார் சனிபுகர் அஞ்சில் தங்க ;

22. அவனுடைய வயது தீர்க்கமானது. புத்திரபாவத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இந்தத் தம்பதிகளுக்கு ஏழு குழந்தைகள் பிறப்பார்கள். அவர்களில் சிலர் நஷ்டமாவார்கள். இரண்டு பிள்ளைகளும் இரண்டு பெண்களும் நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள். இங்கு ஜயமுனி மறுத்துப் பேசுகின்றார். சனியும் சுக்கிரனும் புத்திரபாவத்தில் (ஐந்தில்) இருப்பதாலும் ;

23. ஐந்தவன் விரயம் புக்க அவனுக்குச் சுதர்கள் எவ்வாறு
கொஞ்சிடும் விபரம் சொல்வாய் குளிர்மதி நவத்தி லேறத்
தஞ்சமாய்க் குருவும் பார்க்கச் சந்ததி விருத்தி யென்றோம்
நஞ்சாகும் முதலில் என்றோம் நாயகி கேட்டி டாயே.

23. அந்தப் புத்திர பாவத்திற்கு உடைய செவ்வாய் பன்னிரண்டாம் ராசியில் இருப்பதாலும், இச் சாதகனுக்கு எவ்வாறு சந்ததி உண்டு. இவ் விஷயத்தை விவரமாகச் சொல்லுங்கள். அத்திரி கூறுகின்றார். இலக்கினாதிபதியாகிய சந்திரன் பாக்கியஸ்தானத்தில் இருப்பதாலும், அவனைக்

குரு பார்ப்பதாலும் நிச்சயமாக இவனுக்குப் புத்திர பாக்கியமுண்டு. நீங்கள் சொன்ன தோஷத்தின்படி சில குழந்தைகளே சேதமாகும். ஆகவே சந்ததியுண்டு.

24. இன்னவன் முன்ஜன் மத்தை இயம்புவோம் தாயே கேளு
தென்திசை பெண்ணை யோரம் ஜனித்தனன் வைசியச் சேயாய்
அன்னையும் தந்தை மிக்க அவனியில் செட்டுச் செய்து
பொன்னொடு பணதி யுண்டாய்ப் பூமியில் நல்லோ னுகி.

24. இச் சாதகனின் முன் ஜன்மத்தைப்பற்றி கூறுகின்றோம். தாயே! கேளுங்கள். இவன் முற் பிறவியில் தென் திசையிலுள்ள பெண்ணையாற்றுக்கருகில் வைசிய குலத்தில் உதித்திருந்தான். தாய் தந்தையர்களுடன் சுகமாக வாழ்ந்து வந்தான். வியாபாரம் செய்து, செல்வத்தையும் பூஷணங்களையும் அடைந்து, எல்லோருக்கும் நல்லவனாக இருந்தான்.

25. அறமதி லிச்சை யுண்டாய் அந்தகன் பக்கல் சென்று
பிரமனல் வரையப் பட்டுப் பிறப்பனு மிந்தப் பாலன்
திருமகன் யோகச் சேதி செப்புவோ மினிமே லாகத்
தரையினல் ஜீவிப் பானும் தானியச் செட்டு செய்வன்.

25. தருமத்தில் பற்று உள்ளவனாகவும் இருந்தான். அந்திய காலத்தில் யமனுலகம் சென்றான். அவனே பிரம்ம தேவன் இங்குக் கடக லக்னத்தில் பிறப்பித்திருக்கின்றார். இனிமேல் இச்சாதகனுடைய யோகங்களைப் பற்றிக் கூறுகின்றோம். பூமியை உழுது பயிரிட்டு ஜீவிப்பான். தானிய விபாரமும் செய்வான்.

26. பலசகா யங்கள் செய்வன் பாரது விருத்தி செய்வன்
நிலமது மூன்று ஊரில் நேர்ந்திடும் பால னுக்குக்
கலகத்தைக் கூறு னுகும் கனத்த தோர் குடும்ப மேற்பன
திலகம்போல் பந்துக் கட்கு சல்லியம கொள்ளா னுகும்.

26. பலருக்குப் பல உதிவிகளைச் செய்வான். கிடைத்த நிலங்களை அபிவிருத்தி செய்வான். இவனுக்கு மூன்று ஊர்களில் நிலங்கள் சேரும். கலகத்தை உண்டு பண்ணுதவன். பெருமை வாய்ந்த குடும்பம் உள்ளவனுவான். திலகம் நெற்றிக்கு அலங்காரமாக இருப்பதுபோல் இவன், குலத்தினருக்கே அலங்காரமாக விளங்குவான். கடன் இல்லாதவனுக வாழ்வான்.

27. இல்லமும் ஈரா றுண்டில் எய்திடு மிவனுக் கென்றோம்
இல்லமும் ஆறுண் டுக்குள் இயம்புவோம் பாகங் நான்காய்
வல்லியே நவம தாண்டில் வேருகும் தரணி தானும்
தல்லியே சல்லியங் கொள்ளான் சம்பத்து உடைய னுகும்.

27. பன்னிரண்டாவது ஆண்டில் இவனுக்கு வீடு கிடைக்கும். அதன் பிறகு ஆறு ஆண்டிற்குள் அந்த வீடு நான்காகப் பிரிக்கப்படும். கொடி

போன்றவளே ! ஒன்பதாவது ஆண்டில் பூமி பிரிவினை நடக்கும். தாயே ! மறுபடியும் சொல்லுகிறோம். இவனுக்குக் கடன் ஏற்படாது. செல்வம் ஏற்படும்.

**28.** இனத்துக்கு மேலாய் வாழ்வன் இடரென்றோர்க் குதவி செய்வன்
தனம்பூமி யில்லம் யாவுர் சாற்றுமை யாயிரம் பொன்
கனமான புகழு மேற்பன் கனத்ததோர் தலங்கள் செல்வன்
வினைகளை நீக்குகின்ற வித்தகி கேட்டி டாயே.

**28.** தன் இனத்தாரைவிடச் சிறப்பாக வாழ்வான். இடர்ப்பட்டவர் களுக்கு உதவி செய்வான். இவனுக்கேற்படும் தனம், பூமி, வீடு முதலிய வைகளின் உத்தேச மதிப்பு ஐந்தாயிரம் (ரூபாய் ஐம்பதாயிரம்) பொற் காசுகளாகும். பரந்த புகழை அடைவான். பெரிய ஸ்தலங்களுக்கு யாத்திரை செல்லுவான். பாவத்தைப் போக்கும் தாயே ! மேலும் கேட்பாயாக.

**29.** அன்னையின் குணத்தைச் சொல்வேன் அன்புள மனத்த ளாகும்
தன்மனம் கபடு மில்லாள் சாந்தவள் அடக்க முள்ளாள்
பின்னமி ல்லாத தேகி பித்தரோ கத்த ளாகும்
சொன்னசொல் சுகமே யாகும் சோம்பலும் கொஞ்ச முண்டு.

29 ஜாதகனது தாயின் குணத்தைக் கூறுகின்றோம். அன்புள்ள வள். கபடமில்லாதவள். சாந்தகுணம் படைத்தவள். அடக்கமுடையவள். சரீரத்தில் எவ்வித ஊனமும் இராது. பித்தரோகத்தினுல் கஷ்டப்படுவாள். இவள் சொல்லும் வார்த்தைகள் ஜனங்களுக்கு நன்மையையே தரும். சிறிது சோம்பலுள்ளவள்.

**30.** மாதிரு இரண்டு மாகும் மருவிய முன்தாய்க் கின்னோன்
தீதிலா உதிப்பா ளாகும் செல்விக்குத் துணைஆண் ஒன்று
காதலி ஐவ ராகும் கருதின துணை ஆண் தானும்
மேதினில் சுகமுண் டாகி விரயமே யாவா னென்றோம்.

**30.** இவளுக்குத் தாய்மார்கள் இருவர். அவர்களில் மூத்தவளுக்குப் பிறந்தவள் இவள். இவளுக்குச் சகோதரன் ஒருவன். சகோதரிகள் ஐவர். நாம் இங்குச் சொன்ன சகோதரன் இவ்வுலகில் சிறிது சுகங்களை அனு பவித்து இறப்பான்.

**31.** துணைஆண்பால் சேதி சொல்வேன் சொல்லது சுகமே யாகும்
பிணையிலா வார்த்தை சொல்வன் பெற்றதாய்ச் சுகமில் லாதான்
கனமுள குடும்பம் பின்னுல் கார்நிறம் உணச்சல் தேகி
தணிவான குணத்தா னாகும் தந்தையில் வாழா னாகும்.

**31.** அவனுடைய சகோதரனின் செய்திகளைக் கூறுவேன். அவ னுடைய சொல் நல்லதாகவே இருக்கும். கலகமூட்டாத வார்த்தைகளைச் சொல்லுவான். பெற்ற தாயின் சௌக்கியத்தைக் காணாதவன். பிற் காலத்தில் பெரிய குடும்பியாவான். கருத்த மேனியான். மெலிந்த சரீர முள்ளவன். சாந்தகுண முள்ளவன். தந்தையின் வீட்டில் வாசம் செய் யாதவன்.

32. சிலதுநாள் வனவா சங்கள் செய்துபின் உள்ளூர் செல்வன்
பல்மான குடும்பம் பின்னால் பெறுவனும் பெருமை யோனும்
திலதம்போல் பந்துக் கட்டு செய்ந்நன்றி மறவா னாகும்
அலைகடல் துயன்றோன் பக்தி ஆபத்தைச் சிலர்க்குக் காப்பன்.

32. கொஞ்ச காலம் வனவாசமும் செய்வான். பிறகு தனது சொந்த ஊருக்குத் திரும்பி வருவான். பிற்காலத்தில் பெருமை வாய்ந்த குடும்பம் உள்ளவனாவான். கௌரவங்களையும் அடைவான். பந்துக்களுக்குள் திலகமாக விளங்குவான். பெற்ற உதவியை மறவாதவன். பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கும் நாராயணனிடம் பக்தி பூண்டவன். சிலரை ஆபத்திலிருந்து காப்பாற்றுவான்.

33. துணைவியால் மனைவி யாலும் சுகமிகப் பெருகு மென்றோம்
நினைப்பதை முடிப்பா னாகும் நிமலனும் வயது தீர்க்கம்
பிணையிலாப் பின்பா கத்தில் பேசுவோம் விபர மாக
அணையவே தவங்கள் செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

33. சகோதரியாலும் மனைவியாலும் அவனுக்கு அதிக சௌக்கியங்கள் உண்டாகும். நினைத்த காரியத்தை முடிக்கும் வல்லமைவாய்ந்தவன். அவனது வயதும் தீர்க்கமானது தான். பின் பாகத்தில் இதைப்பற்றிப் பேசப் போகின்றோம். பலவிதத் தவங்களைச் செய்யும் தேவியே! மேலும் கேளுங்கள்.

குறிப்பு.—பர்வதராஜனுக்குப் பெண்ணாக அவதரித்ததேவி சிவ பிரானைக் கணவனாக அடைவதற்குக் கடும் தவமிருந்தாள் என்ற கதை, ஸ்காந்த புராணத்தில் மிகவும் பிரசித்தம்.

34. மாதுரு பூர்வம் சொல்வேன் மலை நாட்டில்கர்ண சேயாய்
மேதினி லுதித்துப் புத்திரர் விளங்கியே சுகமுள் ளோளாய்
பாதக மனமில் லாமல் பரந்தனள் காலன் நாடு
வேதனால் வரியப் பட்டு விளங்கினாள் இந்த மாது

34. ஜாதகனின் தாயினுடைய பூர்வ ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். மலை நாட்டில் கர்ண வமிசத்தில் (கணக்குப் பிள்ளைசாதியில்) பிறந்து கணவனுடனும் குழந்தைகளுடனும் சுகமாக வசித்து வந்தாள். மனத்தினாலும் பாவம் செய்யாதவளாக இருந்து அந்தியத்தில் இறந்தாள். அவளைப் பிரம்மதேவன் இங்குப் பிறப்பித்திருக்கின்றான். அவளே இக் கடக லக்கின மகனுக்குத் தாய்.

35. பின்ஜன்மம் விரிஞ்சி தன்னில் பிறப்பளாம் வைசியச் சேயாய்
மன்னனுக் கேழஞ் சாண்டில் மார்கழி மாதம் தன்னில்
அன்னைக்குக் கண்ட மெய்தும் அறைந்தது தப்பா தாகும்
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே.

35. இதற்கடுத்து வரும் ஜன்மத்தில் விரிஞ்சி நாட்டில் வைசிய குலத்தில் பிறப்பாள். ஜாதகனுடைய முப்பத்தைந்தாவது வயதில் மார்கழி

மாதத்தில் இவளுக்குக் கண்டம் ஏற்படும் (இறப்பாள்). நாங்கள் சொன்ன வார்த்தை தவருது. விநாயகக் கட்வுளைப் பெற்ற தேவியே! மேலும் கேட்பீராக.

36. தந்தையின் பூர்வம் தன்னைச் சாற்றுவோம் விரிஞ்சி தன்னில்
வன்னிய குலமு தித்து மனைவியு மைந்த ருண்டாய்
முன்னோர்க்குத் தொண்டு பூண்டு மேதினில் நல்லோ னாகித்
தன்மையாய்க் காலன் நாடு சென்றுமே பிரமன் லக்கம்.

36. தந்தையின் பூர்வ சென்மத்தைக் கூறுகின்றோம். இவன் முன் பிறவியில் விரிஞ்சி நாட்டில் வன்னிய குலத்தில் உதித்திருந்தான். மண மாகிமனைவி மக்களுடன் சுகமாக வாழ்ந்து வந்தான். முன்னோர்களுக்குத் தொண்டு புரிந்தான். எல்லோருக்கும் நல்லவனாக வாழ்ந்தான். கடைசி யாக இறந்த இவன் இங்குப்பிறந்து ஜாதகனுக்குத் தந்தையாக நேர்ந்திருக் கிறான்.

37. வந்தவ னென்று சொல்வேன் வறுமைக ளில்லா வாழ்வன்
பிந்திய ஜன்மம் சொல்வேன் பெருமலை வேங்க டத்தில்
விந்தையாய் ரெட்டி வம்சம் விளங்குவா னிந்த பாலன்
கந்தனை யீன்ற மாதே கழறின மொழிகுன் றாது.

37. இவன் வறுமை இல்லாதவன். இவனுடைய பின்வரும் ஜன்மத் தையும் சொல்லுகின்றோம். சிறந்த மலையான திருப்பதியில் ரெட்டி வமி சத்தில் பிறந்து சுகமாக வாழ்வான். சுப்பிரமணியனை உலகத்தோர்க்கு உதவிய தாயே! எங்கள் மொழி தவருது.

38. முப்பது ஆறு ஆண்டில் வைகாசி மாதம் தன்னில்
செப்புவோம் தந்தை கண்டம் தந்தையின் தந்தைக் கேதான்
ஒப்புடன் யீரா றுண்டில் உரைக்கிறோம் மார கங்கள்
அப்பணி சடையோன் தேவி யணுகின மொழிகுன் றாது.

38. ஜாதகனுடைய முப்பத்தாறுவது வயதில் வைகாசி மாதத்தில் இவன் தந்தைக்குக் கண்டம் ஏற்படும். தந்தையின் தந்தைக்கு (ஜாதகனின் பாட் டனுருக்கு) ஜாதனுடைய பன்னிரண்டாவது வயதில் மரணமேற்படும். கங்கையை அணிந்த சடையையுடைய சிவபிரானின் தேவியே! எங்கள் மொழி பொய்யாகாது.

39. ஈரெட்டு ஆண்டு தன்னில் இயம்புவோம் பிதாவின் அன்னை
மாறிடா திந்த வார்த்தை மாரனுக் கறுபா னேழில்
தீரமாய்த் துலாமா தத்தில் தேய்பிறைத் தசமி தன்னில்
சேருவான் கால னூடு செப்பின மொழிகுன் றாது.

39. பிதாவின் அன்னைக்கு சாதகனடைய பதினாறுவது வயது நடக்கும் போது மரணம் ஏற்படும். ஜாதகனுக்கு அறுபத்தேழாவது வயது நடக்கும் போது ஐப்பசி மாதத்தில் கிருஷ்ண பக்ஷதசமிதிதியில் மரணம் நேரும். நாங்கள் சொன்ன வார்த்தை தவருமல் நிச்சயமாக நடைபெறும்.

40. மறுஜன்மம் கோங்கு நாட்டில் வருவனும் க்ஷத்திரிய சேயாய்ப்
பெருமையாய்க் குடும்பி யாகிப் புதல்வனும் வாழ்வா னாகும்
குறுமுனி தடுத்துச் சொல்வார் குழவிக்கு எட்டாண் டுக்குள்
மருவிடும் கண்ட மென்றோம் மாமுனி தடுத்துச் சொல்வார்.

40. சாதகன் மறுபிறவியில் கோங்கு நாட்டில் க்ஷத்திரிய குமாரனாகப் பிறந்து பெரிய குடும்பியாகிச் சிறப்புடன் வாழ்வான். இதைக் கேட்ட அகஸ்திய முனிவர் தடுத்துச் சொன்னார். ஜாதகன் பிறந்து எட்டு ஆண்டுக்குள் அவனுக்குக் கண்டம் ஏற்பட்டு இறப்பான் என நாம் சொல்வோம். அத்திரி முனிவர் அதற்குப் பதில் உரைத்தார்.

41. பொன்னவன் மூன்றி லேறப் பிறையுமே அதற்கு ஏழில்
நன்மையா யிருப்ப தாலே நாயகன் வயது தீர்க்கம்
என்னநோய் வந்த போதும் இரவிமுன் பனிபோல் நீங்கும்
அன்னையே யாங்கள் சொல்லு மருள்மொழி குன்று தென்றோம்.

41. குரு மூன்றும் இடத்தில் இருந்து கொண்டு, தான் இருக்குமிடத்திற்கு ஏழாவது ராசியில் இருக்கும் லக்கினாதிபதியான சந்திரனைப் பார்ப்பதால் ஜாதகனுக்குத் தீர்க்காயுர்யோக முண்டு. எவ்வளவு பெரிய கண்டங்கள் வந்தாலும், சூரியன் முன் பனிபோல விலகும். அன்னையே! நாங்கள் சொன்ன மொழி சத்தியம்.

42. காவலன் செனிக்கும் காலே கடை நாளில் மூன்றும் பாதம்
மேவிய புதனி ருப்பு விளம்புவோம் ஆண்டு ஐந்தும்
தாவிய பதினொரு திங்கள் தங்கிடு மென்று சொல்வோம்
ஆவலாய்த் தவங்கள் செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

42. ஜாதகன் ரேவதி நக்ஷத்திரம் மூன்றும் பாதத்தில் ஜனித்திருக்கின்றான். புததசையில் இருப்பு வருஷங்கள் ஐந்து, மாதங்கள் பதினொன்று. தேவியே! மேலும் நீங்கள் எங்களைக் கேட்டருளவேண்டும்.

## ஜாதகம் 27

1. பிறைகுசன் தெருக்கா லேறப் புதன்பணி பரிதியேயும்
கரியவன் கேதுசாடி கனகனு நந்தி புக்க
வருவது ஜன்மம் நண்டு அசுரர்மந் திரியும் தங்க
உரைகுவீர் பலனே யென்று உத்தமி கேட்க லுற்ருள்.

| | | | |
|---|---|---|---|
| | | குரு | |
| சனி கேது | இராசி | | லக்கினம் சுக்கிரன் |
| | சக்கரம் | | புதன் ராகு சூரியன் |
| | சந்திரன் செவ்வாய் | | |

விசுவாவசு வருஷம் ஆவணி மாதம் 20 ஆந் தேதி திங்கட் கிழமை இரவு 25 நாழிகைக்கு மேல் 27 நாழிகைக்குள் ஜனனம். ஆங்கிலத் தேதி 4—8—1905. நவக்கிரஹங்களின் பாதசாரம்—பூரம் 2-இல் சூரியன். அனுஷம் 1-இல் சந்திரன். அனுஷம் 4-இல் செவ்வாய். மகம் 3-இல் புதன். ரோஹிணி 2-இல் குரு. புஷ்யம் 3-இல் சுக்கிரன். அவிட்டம் 4-இல் சனி. மகம் 3-இல் ராகு. சதயம் 1-இல் கேது. நக்ஷத்திரம் அனுஷம். சனி தசை இருப்பு வருஷங்கள் பதினெட்டு, மாதங்கள் பத்து.

1. சந்திரனும் செவ்வாயும் விருச்சிகம், புதன் ராகு சூரியன் இவர்கள் சிங்கம், சனி கேது கும்பம், குரு விருஷபம், இலக்கினம் கடகம், சுக்கிரன் கடகம், இவ்வாறு அமைந்த கிரஹநிலையின் பலன்களைச் சொல்வீர்களாக, எனப் பார்வதி கேட்கலுற்ருள்.

2. அத்திரி புகலு கின்ருர் அது ஜன்மம் ஆண்பா லாகும்
வித்தக னுதித்த இல்லம் மேல்வாடை வடதென் வீதி
உத்தரம் பள்ளி வாசம் ஓங்காளி கோஷ்ட முண்டு
சித்தசன் தந்தை கீழ்ப்பால் தென்திசை கணேசன் கோஷ்டம்.

2. அத்திரி முனிவர் பலன் கூறுகின்ருர். இவ்வாறு கிரஹநிலையில் ஆண் குழந்தை பிறந்திருக்கின்ருன். வீதி வடக்குத் தெற்காக அமைந் திருக்கும். மேல்வரிசையில் வீடு இருப்பதால் கிழக்கு நோக்கி இருக்கும். வட திசையில் இடைச்சேரியும் காளி கோயிலும் உண்டு. கீழ்த்திசையில் மன்மதன் தந்தையான விஷ்ணுவின் ஆலயம் இருக்கும். தென் திசையில் விநாயகரது கோயில் விளங்கிடும்.

3. பலதேவர் அவ்வூர் வாசம் பருத்ததோர் செட்டு ஓங்கும்
குலவுவான் வடுகர் வர்க்கம் குழவியும் சேஷ்ட னாகும்
தலைவன்தன் குடும்பச் சேதி சாற்றுவோ மினிமே லாக
அலைகடல் துயின்றோன் தங்காய் அம்பிகை யாளே கேளாய்.

3. இவைகளைத் தவிர இன்னும் பலதேவாலயங்களும் அவ்வூரில் விளங்கும். அஃது ஒரு பெரிய வியாபாரம் ஸ்தலமாகவும் இருக்கும். இவன் நாயக்கர் வமிசத்தில் பிறந்தவன். குடும்பத்திற்கு மூத்தப் பிள்ளை. க்ஷீராப்தியில் சயனித் திருக்கும் மஹாவிஷ்ணுவின் தங்கையே! இனிமேல் அவனது குடும்ப வரலாறுகளைக் கூறுகிறோம். கேட்டருள்வீராக.

4. தந்தையின் துணைஆண் ஒன்று சத்தியு மவ்வாறு தீர்க்கம்
நொந்திடும் மற்ற வெல்லாம் நுகர்ந்தஆண் முன்னோ னாகும்
அந்தவன் சேதி சொல்வேன் அழகுளான் யிருசி வப்பன்
தன் மனம் கபடு மில்லான் சரசமாய் வார்த்தை யுண்டு.

4. ஜாதகனின் தந்தைக்குச் சகோதரன் ஒருவன் சகோதரியும் ஒருத்தி. இவர்கள் இருவரும் நீடித்து வாழ்வார்கள். மற்ற உடன் பிறந்தவர்கள் நசிப்பார்கள். இங்குச் சொல்லப்பட்ட ஆண் குடும்பத்திற்கு மூத்தவன் தான் [ஜாதகனுக்குப் பெரியப்பன் என்பது கருத்து.] அவனது செய்திகளைச் சொல்லுகின்றோம். அழகுள்ளவன். மாநிறமுள்ளவன். மனத்தில் கள்ள மில்லாதவன். நயமாக வார்த்தைகளைப் பேசுவான்.

5. உண்டியும் சுகமாய்க் கொள்வன் உறுதியில் லாத நெஞ்சம்
துண்டமாய்க் கூறு னாகும் தொடுவழக் கதனில் செல்வன்
வண்டணி மார்கன் மோகன் மாமிக ளிரண்டே யாகும்
பண்டுநாள் பூமி கொஞ்சம் பாலகன் விருத்தி செய்வன்.

5. சுசி ருசியான ஆகாரங்களையே புசிப்பான். உறுதியில்லாத மனமுள்ளவன். கண்டித்துப் பேச இஷ்டமில்லாதவன். தொடர்ந்து நீண்ட காலம் நடக்கும் வழக்குகளில் ஈடுபடுவான். பெண்களிடம் மையல் கொண்டவன். மாமிமார்கள் இருவர். வமிச பரம்பரையாக வரும்—சிறிதே மிகுந்திருக்கும்—நிலத்தை அபிவிருத்தி செய்வான்.

6. பாரியு மிரண்டே யாகும் பாலர்க ளாண்பால் ஒன்று
கூறுவோம் பெண்பா லொன்று குறித்தனம் தீர்க்க மாக
வீரியன் வேறுய்ச் செல்வன் வெஞ்சின மில்லா தாகிப்
பாரினில் சலவியா பாரம் பண்ணுவா னென்று சொல்வோம்.

6. இவனுக்கு (பெரிய தந்தைக்கு) மனைவிமார்களும் இருவர். ஒரு பிள்ளை. ஒரு பெண். இவர்கள் இருவரும் தீர்க்கமாக வாழ்வார்கள். இவன் வேறு குடும்பியாக ஆவான். ஆனால் குடும்பப் பிரிவினைக்குக் கோபமோ அல்லது சண்டையோ காரணமாகாது. ஊர் ஊராகச் சென்று வியாபாரங்களை இவன் செய்வான் என்றும் சொல்லுகின்றோம்.

7. முகமதில் வடிவு முள்ளான் முண்டக ரேகை யுண்டு
அகமது பின்னல் செய்வன் அபிமானம் ஒன்று சேர்ப்பன்
ஜகமதில் நல்லோ னுவன் திரிச்சலால் லாப மெய்தும்
பகையென்று மனத்தில் வையான் பகருவோம் வயது தீர்க்கம்.

7. முகத்தில் பிறரை வசப்படுத்தும் பொலிவு உள்ளவன். கையில் கமல ரேகை விளங்கும். பிற்காலத்தில் ஒரு புதிய வீடு கட்டுவான். அபிமான மனைவியாக ஒருத்தியைச் சேர்த்துக்கொள்வான். ஊரில் எல்லோருக்கும் நல்லவனுவான். [1] பிரயாணத்தால் லாபத்தை அடைவான். ஒருவரிடமும் பகைமை கொள்ளமாட்டான். அவனுக்குத் தீர்க்காயுர்யோகமுண்டு.

[1] குறிப்பு.—பல ஊர்களுக்குச் சென்று வியாபாரிகளிடம், பிரசாரம் செய்து வியாபாரத்தை விஸ்தாரப்படுத்தும் முறை. [Touring Agents என்று கருதலாம்.]

8. தந்தையின் சேதி சொல்வேன் சிவந்தமெய் உணச்சல் தேகி
தன்மனம் கபடு முண்டு சந்தேக மனத்த னுகும்
தந்தமும் தரள மொக்கும் சல........வணிபம் செய்வன்
தன்பந்துக் கிணங்கச் சொல்லான் தங்கிடும் நாபிச் சூடு.

8. இதுவரையில் ஜாதகனின் பெரிய தந்தையின் வரலாறுகளைச் சொன்னேம். இனி ஜாதகனின் தந்தையின் செய்திகளைக் கூறுகின்றேம். அவன் சிவந்த மேனியான். மெலிந்த சரீரம் வாய்ந்தவன். சிறிது கபடமுள்ளவன். யாரையும் சந்தேகிக்கும் இயல்புள்ளவன். அவனுடைய பற்கள் முத்துப்போல அழகாக இருக்கும். பிரயாணம் செய்து செய்ய வேண்டிய வியாபாரத்தைச் செய்வன். தன் பந்துக்களுக்குச் சம்மதமான விஷயத்தைப் பேசமாட்டான். இவனது நாபியில் எப்போதும் சூடு தங்கி இருக்கும்.

9. சொல்லினில் குளறு கொஞ்சம் சுருக்கமாய்ப் பேச வல்லன்
நல்லவன் சிலர்க ளுக்கு நயம்படக் கூறு வானும்
அல்லலும் சுகமு முண்டு அல்பபுத் திகளும் கொஞ்சம்
வல்லிசொல் கடவா னுகும் மால்பத்தி யுடையா னுமே.

9. சொற்களைச் சரியாக உச்சரிக்க இயலாதவனுக இருப்பான் (குளறிப் பேசுவான்.) அவனது பேச்சுக்கள் சுருக்கமாகவே இருக்கும். இவன் வெகு சிலருக்கே நல்லவனுக இருப்பான். நயமாகப் பேசுவான். இவனது வாழ்க்கையில் துன்பங்களும் இன்பங்களும் கலந்தே இருக்கும். [துன்பம் அதிகமாக இருக்கும் என்பதுகருத்து.] விசாலமான மனப்பான்மை இல்லாதவன். மனைவிக்கு அடங்கி நடப்பான். திருமாலிடம் மிக்க பக்தி கொண்டவன்.

10. கடன்கொள்வன் நிவிர்த்தி செய்வன் கடுநடை முன்கோ பத்தன்
உடன்படான் பிழைக ளுக்கு உறுதியா மனத்த னுகும்
த............பின்னல் செய்வன் தந்திர மொழியு முண்டு
இடபலக் கினமு மாகும் விசாகநாள் தோன்று வானும்.

10. இவன் கடன் வாங்க நேரிடும். ஆயினும் வாங்கப்பட்ட கடனை வெகு சீக்கிரத்தில் நிவிர்த்தியும் செய்வான். வேகமான நடை உள்ளவன். முன் கோபமும் உண்டு. தன் தவறுகளை ஒப்புக்கொள்ளமாட்டான். உறுதியான மனம் படைத்தவன். ........தந்திரமான வார்த்தைகளைச் சொல்லிக் காரியத்தை நிறைவேற்ற முயலுவான். அவன் பிறந்த லக்கினம் விருஷபம். நக்ஷத்திரம் விசாகம்.

11. சொன்னஇக் குணத்தா னுக்குத் தோன்றுவா னிந்தப் பாலன்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அழகுளான் சிவநத மேனி
பன்னியே பேசு வானும் பலகலை யுணர்வா னுகும்
தன்னினத் தவரைக் காப்பன் சகலர்க்கு நல்லோ னுவன்.

11. இப்படிப்பட்ட குணமுள்ளவனுக்கு இக் கடக லக்ன மகன் புத்திரனுகப் பிறந்திருக்கிறன். இனி அவனுடைய குணங்களைச் சொல்லுகின்றேம். ஜாதகன் மிகவும் அழகுள்ளவன். சிவந்த மேனியான். பன்னிப் பன்னிப் பேசும் இயல்புள்ளவன். பல கலைகளையும் கற்றறிந்தவன். தன் சாதியாரைக் காப்பான். எல்லோருக்கும் நல்லவனுகவே இருப்பான்.

12. அரசர்பூ சிதமு மாவன் அன்னையு மிரண்டு மாகும்
மறுஅன்னை தனக்குப் புத்திரர் வருகுவான் அவச ரத்தன்
பொருளது பெருக்கம் செய்வன் போசன வறுமை காணுன்
தரையதை விருத்தி செய்வன் தாட்சிண்ணியன் கனத்த புத்தி.

12. அரசர்களாலும் நன்கு கௌரவிக்கப்படுவான். இவனுக்கும் தாய் மார்கள் இருவர். இளைய தாய்க்குப் பிறந்தவன் இச்சாதகன். வேகமாக நடப்பவன். [சுறு சுறுப்பாக வேலை செய்வான் என்றும் கருதலாம்.] பொருள்களை அதிகப்படுத்துவான். நிரம்ப ஆகாரப் பொருள்களைப் பெற்றிருப்பான். பூமிகளை அபிவிருத்தி செய்வான். தாக்ஷிண்ய குணம் உடையவன். உதாரமனப்பான்மை வாய்ந்தவன்.

13. பலசெட்டுச் செய்வா னுகும் பாக்கிய முடைய னுகும்
தலமது சித்திரம் செய்வன் தையலர் மோக னுவன்
புலவன்போல் மொழிவா னுகும் பொய்மெய்யாய் புகல்வா னுகும்
அலைகடல் துயின்றேன் பத்தி ஆசார முடைய னுமே.

13. பலவித வியாபாரங்களைச் செய்வான். விசேஷ பாக்கியம் உள்ளவனுவான். அழகியதொரு வீடு நிர்மாணம் செய்வான். பெண்களிடம் மோகம் கொண்டவன். பெரிய பண்டிதர்போலப் பேச விரும்புவான். பொய்யை மெய்போலும் பேச வல்லவன். பாற்கடலில் பள்ளிக்கொண்டவனை மகாவிஷ்ணுவினிடம் பக்தி பூண்டவன். நல்ல ஆசாரம் உடையவன்.

14. அவனுடைத் துணைவர் தம்மை யியம்புவோ மாண்பா லொன்று
அவனியில் கன்னி ரண்டு அறைகிறேம் தீர்க்க மாகத்
தவசியே முதல்தா யார்க்குச் சந்ததி யுண்டோ சொல்வாய்
நவனியில் காணு தாகும் நாயகிகேட்டி டாயே.

14. இவனுடைய சகோதர பாவத்தைப் பேசுவோம். சகோதரன் ஒருவன். சகோதரிகள் இருவர். இம் மூவரும் நீண்ட ஆயுளுடன் வாழ் வார்கள். முனிவரே! மூத்த அன்னைக்குச் சந்ததி பிறந்திருக்குமா? சொல்லுங்கள், எனப் பார்வதி கேட்க, அத்திரி பதில் கூறுகின்றார். அவளுக்குச் சந்ததி இல்லை. தேவியே! மேலும் சொல்லுகிறோம். கேளுங் கள்.

15. மன்னவன் மணத்தின் காலம் வரைகிறோ மினிமே லாகக்
கன்னிகை தென்பால் நேரும் காளைக்குப் பதினெட் டாண்டில்
அன்னையின் வர்க்க மாகும் அவள்குணம் கூறக் கேண்மோ
உன்னத வார்த்தை சொல்வள் உறுதியில் லாத நெஞ்சம்.

15. இனி ஜாதகனின் விவாஹகாலத்தைக் கூறுகின்றோம். இவ னுக்குப் பதினெட்டாவது ஆண்டில் மணம் நடைபெறும். மணப்பெண் தென் திசையில் தாய் வருக்கத்தில் தோன்றி இருப்பாள். அவளுடைய குணத்தைக் கேளுங்கள். கம்பீரமான வார்த்தைகளைப் பேசுவாள். மனத் தில் உறுதியில்லாதவள்.

16. அறமதி லிச்சை யுண்டு ஆவுகள் பலித மாகும்
வருவோரை ஆத ரிப்பள் மயில்சாய லொப்ப தாகும்
திருகிலா நற்கு ணத்தாள் சீலியாம் பணிகள் சேர்ப்பள்
நறுமல ரிஷ்டம் கொள்வள் நாயகி தீர்க்க ஜீவி.

16. தருமம் செய்வதில் மிகவும் பற்றுள்ளவள். இவளிடம் பசுக்கள் நன்றாக விருத்தியாகும். [பால் பாக்கியம் உள்ளவள் எனவும் கருதலாம்.] தன் வீடு நாடி வருபவர்களை ஆதரிப்பாள். நல்ல குணமும் சீலமும் உடையவள். அநேக ஆபரணங்களை அடைவாள். நறுமலர்களில் மிகவும் விருப்பம் உள்ளவள். அவள் தீர்க்காயுளுடன் வாழ்வாள்.

17. சுதர்களு மாண்பா லொன்று தோகையு மூவர் தீர்க்கம்
பதராகு மிரண்டு என்றோம் பாலகன் பூர்வம் கேளாய்
சத்தரும் விரிஞ்சி தன்னில் கலந்தனன் கங்கை சேயாய்
அதிகமாய்ப் பூமி யுண்டாய் யாவர்க்கும் நல்லோ னுவன்.

17. இந்தப் பாலனுக்கு ஒரு பிள்ளையும் மூன்று பெண்களும் மாத்திரமே பிறப்பார்கள். அம்மூவரும் நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள். இரண்டா மிடத்தில் ராஹு என்று முன்னமேயே சொன்னோம். [ஆகையால் அதிக பிள்ளை சந்ததி இல்லை என்பது கருத்து.] ஜாதகனின் பூர்வஜன்மத்தைக் கூறுகின்றோம். விரிஞ்சி நாட்டில் முன் பிறவியில் இவன் வேளாள குலத் தில் உதித்திருந்தான். ஏராளமாகப் பூமிகளைச் சம்பாதித்தான். எல்லோ ருக்கும் நல்லவனாக வாழ்ந்தான்.

18. வினையது இல்லா தாகி மேவினன் கால னூடு
கனமுள பிரமன் லக்கம் கலந்தன னிந்தப் பாலன்
அனைவர்க்கு நல்லோ னுவன் ஆசாரன் அநேகர்க் கன்பன்
நினைப்பதை முடிக்க வல்லன் நிருபர்க ளிஷ்டம் கொள்வன்.

**18.** ஒரு வித பாவமும் செய்யாதவனாக இருந்தான். அந்திய காலத்தில் இறந்த இவனை, பிரம்மதேவன் கடகலக்கினத்தில் பிறப்பித்திருக்கின்றான். இவன் எல்லோருக்கும் நல்லவனாக நடந்து கொள்வன். சிறந்தப் பழக்க வழக்க முள்ளவன். அநேகருக்கு இவன் அன்பனாக இருப்பான். தான் எண்ணிய காரியத்தை முடிக்கும் ஆற்றல் படைத்தவன். அரசர்களுக்கும் இஷ்டனாவான்.

**19.** பந்துவை யாத ரிப்பன் பாருகள் அதிகம் சேர்ப்பன்
செந்திரு விலாச முண்டு சிறப்பான குடும்ப மேற்பன்
வந்தவர்க் கன்ன மீவன் அடிமைக ளுடைய னாகும்
எந்திடம் பெருமை யேற்பன் ஈச்வரி கேட்டி டாயே.

**19.** உறவினர்களை ஆதரிப்பான். அதிக பூமிகளைச் சேர்ப்பான். லக்ஷ்மீ வாசம் பொருந்தியவன். இவனது குடும்பம் பெருமை பொருந்தியதாகும். தன் வீட்டிற்கு வந்தவர்களுக்கு அன்னமளிப்பான். பல சேவகர்களை அடைந்து அவர்களால் சௌக்கியத்தைப் பெறுவான். எங்குச் சென்றாலும் இவனுக்குச் சிறப்பு ஏற்படும். சங்கரியே! மேலும் கேளுங்கள்.

**20.** பாலகன் தனக்கு யோகம் பகர்ந்தகா ரணங்கள் சொல்வாய்
மால்ரவி ரண்டி லேற மங்கலன் மதியு மைந்தில்
சீலமாம் குருவு லாபம் சுக்கிரன் ஜன்மம் தங்கச்
சாலவே நளயோ கங்கள் சாமரை யோக மொன்று.

**20.** இந்த ஜாதகனுக்கு இவ்வளவு யோகபலன் சொல்லுவதற்குக் காரணத்தை விளக்குவீர்களாக, எனப் பார்வதி கேட்க, முனிவர் பதில் உரைக்கின்றார். புதனும் சூரியனும் குடும்பத்தில் இருக்கிறார்கள். இலக்கினாதிபதியான சந்திரன், கடகலக்கினத்திற்கு ராஜயோககாரகனாகிய செவ்வாயுடன் பஞ்சமதிரிகோணத்தில் இருக்கின்றான். பாக்கியாதிபதியான குரு லாபஸ்தானத்தில் இருக்கின்றார். எல்லாவற்றிற்கும் மேலாக சுக்கிரன் இலக்கினத்தில் தங்கி மேன்மைப் படுத்துகின்றார். ஆகவே இவனுக்கு நள யோகம் ஒன்றும், சாமரயோகம் ஒன்றும் ஆக இரு யோகங்கள் உண்டு.

**21.** சொல்லிய இரண்டு யோகம் சுதனுக்கு நடக்கு மென்றோம்
வெல்லுவான் எதிரி தம்மை வீண்வழக்கோரம் சொல்வன்
இல்லறம் ஏழாண் டின்மேல் எய்திடும் தொழில்கள் மேன்மை
வல்லவன் தேடும் செம்பொன் ஆறாயி ரம்என் றோதே.

**21.** இவ் விரு யோகங்களும் இவனுக்கு மிகவும் பூர்ணமான பலன்களைத் தரும். ஆகையால் முன் சொன்னப் பலன்கள் நடப்பதுடன் இன்னும் சில பலன்களும் நடைபெறும். அவைகளைச் சொல்லுகிறோம். கேளுங்கள். எதிரிகளை எளிதில் வெல்லுவான். வீண் வழக்குகளில் சிறிது சம்பந்தப் படுவான். விவாஹமான ஏழு ஆண்டுகளுக்குப் பிறகு தொழில்கள் மேன்மையை அடையும். இவன் ஆறாயிரம் பொற்காசுகளைச் சம்பாதிப்பான்.

22. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அழகுள்ளாள் சிவந்த மேனி
அன்னமு மன்பா யீவள் ஆளன்தன் மனதுக்கேத்தோள்
அன்னியர் குற்றம் சொல்லாள் அல்பபுத் திகளு மில்லாள்
அன்னியர் மதிக்க வாழ்வள் அல்பமாம் கோப முண்டு.

22. இப்பொழுது இவனுடைய தாயின் குணத்தைச் சொல்லுகின்றோம். அவள் மிகவும் அழகுள்ளவள். சிவந்த மேனியாள். அன்புடன் அன்ன மளிக்கும் சுபாவமுள்ளவள். தன் கணவன் மனத்தின் படியே நடப்பாள். பிறர்மேல் குற்றம் சொல்லாதவள். அல்ப புத்தி இல்லாதவள். உலகத்தோர் மதிக்கும் வகையில் வாழ்க்கையை நடத்துவாள். அவளுக்குச் சிறிது கோபமும் அவ்வப்பொழுது வரும்.

23. தன்துணை ஆண்பா லொன்று சத்திமார் மூவ ராகும்
பின்னமாம் மற்ற வெல்லாம் பெற்றதா யில்லம் தெற்கு
சொன்னஆண் முன்னோ னாகும் செப்புவோ மவன்கு ணத்தைப்
பன்னியே பேசு வானும் பரஉப கார னுவன்.

23. அவளுக்கு ஒரு சகோதரன் உண்டு. மூன்று சகோதரிகள் இருப்பார்கள். மற்றைய உடன் பிறந்த குழந்தைகள் நஷ்டமாகும். இவளுக்குப் பிறந்தகம் தெற்குத் திசையில் உள்ளது. நாம் இவளுக்குச் சொன்ன சகோதரன் மூத்தவன். அவனுடையக் குணங்களைச் சுருக்கமாக இங்குச் சொல்லுகின்றோம். அவன் பன்னிப்பன்னிப் பேசும் இயல்புள்ளவன். அந்நியர்களுக்கு உபகாரியாகவும் இருப்பான்.

# ஜாதகம் 28

**வேறு.**

1. பொன்னேன் புந்தி பானுநந்தி
 பிறையு மலவன் பணிசீயம்
 மண்ணுக் குடையோன் கோலதனில்
 மந்தன் கேது சாடியுறத்
 துன்னும் புகரு மேட முற
 ஜன்மம் கடகம் பலனதனைப்
 பன்னு வீர்கள் விபர மதைப்
 பராசர் சொல்வா ராண்ஜன் மம்.

| | | | |
|---|---|---|---|
| | சுக்கிரன் | குரு புதன் சூரியன் | |
| சனி கேது | இராசி சக்கரம் | | லக்கினம் சந்திரன் |
| | | | ராகு |
| | | செவ்வாய் | |

**1.** குரு புதன் சூரியன் விருஷபம். சந்திரன் கடகம், ராகு சிம்மம், செவ்வாய் துலாம், சனி கேது கும்பம், சுக்கிரன் மேஷம், கடகம் இலக்கினம்—இந்த ஜாதகத்தின் பலன்களை விவரமாகச் சொல்லுவீர்களாக எனப் பார்வதி வினவ, பராசர முனிவர் பதில் கூறுகின்றார். இக் கிரஹ நிலையில் பிறந்த குழந்தை ஆண்.

விசுவாசு வருஷம் வைகாசி மாதம் 25-ஆந் தேதி புதன் கிழமை காலை ஆறு நாழிகைக்கு மேல் பதினோரு நாழிகைக்குள் ஜனனம். **ஆங்கிலத் தேதி—7–6–1905.** நவக்கிரஹங்களின் பாதசாரம்—மிருகசீர்ஷம் 1-இல் சூரியன். புஷ்யம் 3-இல் சந்திரன். சுவாதி 4-இல் செவ்வாய் (வக்ரீ). கிருத்திகை 3-இல் புதன். கிருத்திகை 1-இல் குரு. அசுவினி 4-இல் சுக்கிரன். சதயம் 2-இல் சனி. மகம் 4-இல் ராஹு. சதயம் 2-இல் கேது. நக்ஷத்திரம் புஷ்யம். சனி தசையில் இருப்பு வருஷங்கள் ஒன்பது. மாதங்கள் இரண்டு.

**குறிப்பு.**—இந்நூலாசிரியரது கணிதப்படி குரு கிருத்திகை 2-இல் இருக்க வேண்டும்.

2. ஜனனம் கீழ்மேல் வீதியது
தென்பால் வாசல் சிறு ஊராம்
கனமாம் காளி சலக்கரையும்
கணேசன் மேற்கில் தானமையும்
இனமே தீயின் வர்க்கமுறும்
எழிலாய்ச் சேஷ்ட பாலனுமாம்
தனயன் குடும்பச் சேதிதனைச்
சாற்றக் கேண்மோ சங்கரியே.

2. இக் குழந்தை பிறந்திருக்கும் வீதி கிழக்கு மேற்காக அமைந்திடும். வீடு தெற்கு நோக்கியிருக்கும். மேற்குத்திசையில் காளியும் விநாயகரும் இருப்பார்கள். அங்கு ஒரு நீர் நிலையும் உண்டு. இது ஒரு சிறிய ஊர். இவன் வன்னியகுல க்ஷத்திரிய ஜாதியில் பிறந்தவன். குடும்பத்திற்கு இவனே மூத்தவன். சங்கரியே ! இவனுடைய குடும்பச் செய்திகளைக் கூறுகின்றோம். கேட்டருளல் வேண்டும்.

3. அரியே தந்தை மனைமூன்றில்
அணுகும் முதல்மா துக்கேதான்
வருவான் தந்தை துணைகாணன்
மறுத்துப் பிருகு தானுரைப்பார்
நெறியா யிரண்டாம் தாய்க்குச் சுதர்
புகல்வீர் முனியே ஆறென்று
உரையும் வேறு காணும்
உற்ற மூன்றும் மனையாட்கு ;

3. தேவியே ! இவன் தந்தைக்கு மூன்று மனைவிமார்கள். அவர்களில் மூத்தமனைவிக்குப் பிறந்தவன் இவன். அவனுக்கு (ஜாதகனின் தந்தைக்கு) உடன் பிறந்தார் இல்லை. இங்குப் பிருகு முனிவர் மறுத்துக் கூறினர். அஃதிருக்கட்டும். இரண்டாவது மனைவியின் புத்திரபாவத்தைச் சொல்லும். அத்திரி கூறுகின்றார். இரண்டாவது மனைவிக்கு ஒரு பிள்ளை உண்டு. வேறு குழந்தைகள் பிறக்கமாட்டா. மூன்றும் மனைவிக்கு ;

4. கன்னி ஒன்று தீர்க்கமுறும்
கழறுவோம் தாதை குணமதனைப்
பின்ன மிலாதான் பொய்புகலான்
பூமி விருத்தி செய்திடுவன்
பொன்னு பரணம் தானுடையன்
புகழுந்தோர்க் கன்பன் பேதையிஷ்டன்
சொன்ன சொல்லைக் காத்திடுவன்
துறவோ ரிஷ்டன் சுகவானே,

4. ஒரு பெண் நீடித்து வாழ்வாள். ஜாதகனின் தந்தை குணத்தைச் சொல்லுகின்றோம். சரீரத்தில் ஊனம் இல்லாதவன். பொய்பேசாதவன். உண்மையையே பேசுவான். நிலங்களை அபிவிருத்தி செய்வான். தங்க

ஆபரணங்களை நிரம்பப் பெறுவான், தன்னைக் கொண்டாடுபவர்களுக்கு அன்பனாக இருப்பான். [தான் புகழப்படுவதைக் கேட்பதில் ஆசை யுள்ளவன் என்பது கருத்து.] மனைவிகளிடம் மிக்க அன்புள்ளவன். தான் சொன்ன சொற்படி நடப்பான். துறவிகளிடம் மிக்க பத்திகொண்டவன். வாழ்க்கையில் கஷ்டமின்றிச் சௌக்கியத்தை அனுபவிப்பான்.

5. வானோர் பக்தி கல்வியுளன்
 மாலை நிறத்தன் மாடுவிருத்தி
ஈன ருறவு கொள்ளாதான்
 ஈகை யாளன் யூகையுளன்
ஊனம் கரத்தில் மாரியினால்
 உண்மை யாளன் உண்டிசுகம்
தேன்போல் மொழிவன் தீரமுளன்
 சிறுத்தோர்க் குதவி செய்திடுவன்.

5. தெய்வங்களிடம் பக்தி பூண்டவன். கல்வியறிவு உடையவன். திருமாலின் நிறமுள்ளவன். [கருத்தமேனியான்.] மாடுகளை அபிவிருத்தி செய்வான். குணம் குறைந்தவர்களுடன் நட்புக்கொள்ளமாட்டான். தியாக குணம் படைத்தவன். சிறந்த மதியூகி. அம்மையினால் கையில் ஊனம் உடையவன். உண்மையான நடத்தை உள்ளவன். போஜன சௌக்கியம் பெற்றவன். தேன்போல் இனிக்கும் வார்த்தைகளைப் பேசுவான். தைரியம் வாய்ந்தவன். ஏழை எளியவர்களுக்கு உதவி செய்வான்.

6. இடுவன் ஏழை தமக்கன்னம்
 இடரே செய்யான் யாவருக்கும்
கடனே கொள்ளான் இல்செய்வன்
 கனத்த புத்தி கடுநடையன்
படையில் செல்லான் பலரநேயன்
 பணேயோர் விருத்தி படியாள்கள்
விடவாக் குடையன் பெருமையுளன்
 விரதம் பூண்பான் வித்தகியே.

6. தேவியே ! இவன் [ஜாதகனின் தந்தை] ஏழைகளுக்கு அன்னம் அளிப்பான். யாருக்கும் இடையூறுகளைச் செய்யமாட்டான். கடன் இல்லாதவன். புதியவீடு நிர்மாணிப்பான். உதாரபுத்தி படைத்தவன். வேகமாக நடக்கும் சுபாவமுள்ளவன். சண்டை சச்சரவுகளில் கலந்து கொள்ளாதவன். பலருக்கும் நண்பனாக இருப்பான். எருதுகளை விருத்திசெய்வான். அனேக சேவர்களுக்கு யஜமானனாக விளங்குவான். அவன் தன்வாக்கினால் தீங்குகளைச் சொன்னால் அவைகள் அப்படியே பலித்து விடும். "கிருத்திகை விரதம்" போன்ற பல விரதங்களை அனுஷ்டிப்பான்.

**வேறு**

7. சொன்ன யிந்தக் குணத்தானுக் கிந்தப்பாலன்
தோன்றுவா னிவன்கு ணத்தைச் செப்பக் கேண்மோ
கன்னெனமொழி மால்நி றத்தான் கல்வி ரண்டு
கணக்கில்வல்லன் கனத்தபுத்தி தானும் மெய்யன்
அன்னியர் மதிக்க உய்வன் அறத்திலிச்சை
ஆண்டிகள் பணேயோர்கள் அரச ரிஷ்டன்
மன்னர்க்கு இவன்மொழியும் மேன்மை யாகும்
மால்ரேகை பத்மவரி மருவு மென்றேம்.

7. நாம் சொன்னகுணம் அமைந்தவனுக்கு இக்கடகலக்கின பாலகன் மகனுகப் பிறந்திருக்கிறன். ஜாதகனின் குணங்களேச் சொல்லுகின்றேம். கேளுங்கள். கரும்புபோல் இனிமையான மொழிகளேக் கூறுவான். கருத்த நிறம் உடையவன். இருவிதக் கல்விகளேக் கற்றறிவான். கணிதத்தில் சமர்த்தன். மேலான புத்தி படைத்தவன். உண்மையே பேசுவான். உலகத்தோர் மதிக்கும் வகையில் வாழ்வான். தருமம் செய்வதில் பேரவாக் கொண்டவன். துறவிகளிடமும் அரசர்களிடமும் மதிப்பு வாய்ந்தவன். எருதுகளே வளர்ப்பதில் ஆசை உள்ளவன். இவன் கூறும் வார்த்தைகளே மன்னர்கள் போற்றி ஏற்றுக்கொள்வார்கள். இவனது கரத்தில் விஷ்ணு ரேகையும் தாமரை ரேகையும் விளங்கிடும்.

8. வந்தவரை ஆதரிப்பன் நற்குணத்தான்
வளவுசெய்வன் மாடுவிருத்தி பந்துக்கிஷ்டன்
தன்தனமும் கையிருப்பு தரும மிச்சை
தவமுனியும் மறுத்துரைப்பார் மாரனுக்கு
எந்தக்கா ரணத்திஞல் யோகம் சொன்னீர்
ஈரஞ்சோன் நாலில் நிற்க பாக்கியோன் லாபம்
கந்தனெனும் சேய்பு கருமாறி நிற்க
கருதிஞேம் மால் யோகம் மச்ச யோகம்.

8. வந்திடும் அதிதிகளே ஆதரிப்பான். நற்குணம் படைத்தவன். புதியதொரு வீடு கட்டுவான். மாடுகளேயும் அபிவிருத்தி செய்வான். உற்றூர் உறவினருக்கு இஷ்டமானவன். தான் சம்பாதித்த பணத்தைச் சேமித்து வைத்திருப்பான். தருமம் செய்வதிலும் ஊக்கமுடையவன். இவ்வாறு அத்திரி யோக பலன்களேச் சொன்னவுடன், ஒரு முனிவர் மறுத்துக் கூறிஞர். எந்தக் காரணத்திஞல் இவனுக்கு யோகங்களேச் சொன்னீர்கள்? அதைத் தெளிவாகக் கூறுங்கள். அத்திரி கூறுகின்றூர். "கார்யஸ்தானம்" என்று சொல்லப்படும் பத்தாமிடத்திற்கு அதிபஞன செவ்வாய் நான்காம் கேந்திரத்தில் இருப்பதாலும், பாக்கியாதிபதியாகிய குரு லாபஸ்தானத்தில் விளங்குவதாலும், செவ்வாய் வீட்டில் சுக்கிரனும் சுக்கிரன் வீட்டில் செவ்வாயும் பரிவர்த்தனேயாக இருப்பதாலும் இவனுக்கு "மால்" யோகமும் "மச்ச" யோகமும் உண்டு. [ஆகையால்தான் சிறப்பான பலன்களேக் கூறிஞேம் என்பது கருத்து.]

9. பலன் சொல்வேன் ஈரைந்து ஆண்டுமேலாய்ப்
பார்விருத்தி பணையோர்க ளதிக மெய்தும்
நலம்செய்வான் யாவருக்கும் ராச ரிஷ்டன்
நாற்கலி யதிகமுறும் புகழு மேற்பன்
திலகம்போல் பந்து கட்கு வறுமை காணுன்
செய்ந்நன்றி மறவாதான் தியாகி யாவன்
கலகத்தைக் கூருனும் சயன மெத்தை
கடன்கொள்ளான் காதலியே கண்டு கொள்ளே.

9. இப்பொழுது மேலும் பலன்களைச் சொல்லுகின்றேன். இவன் பிறந்து பத்து ஆண்டுகளுக்குப் பின்பு நிலங்கள் அதிகமாகும். உழவுக்கான காளை களும் விருத்தியாகும். பலருக்கும் நன்மைகளைச் செய்வான். அரசர்களுக் கும் நண்பனுவான். ஆடு, பசு, எருமை முதலியவைகள் விருத்தியடையும். இவனுக்கு நற்புகழும் ஏற்படும். தம் பந்துக்களுக்குள் திலகமாக விளங்கு வான். வறுமையின்றிச் செல்வம் வளரும். இவனையறியாமலும் கூடக் கலக வார்த்தைகள் இவன் வாக்கில் தோன்ரு. விதவிதமான ஆசனங்கள், கட்டில் மெத்தை முதலிய வசதிகளும் இவனுக்குக் கிடைக்கும். கடனும் இராது. தேவியே! இத்தகைய பலன்கள் நிச்சயம் ஏற்படுமென்று அறி வீர்களாக.

வேறு

10. தன்துணை ஆண்பால் ரண்டு சத்தியும் அவ்வாறு தீர்க்கம்
அன்னவர் சேதி பின்பால் அறிவிப்போம் தாயே யாங்கள்
இன்னவன் மணத்தின் காலம் இயம்புவோம் மிருப தாண்டில்
கன்னிகை வடமேல் நேரும் கழறுவோம் அவள்கு ணத்தை.

10. இவனுடைய சகோதர பாவத்தைப்பற்றிச் சொல்லுகின்ருேம். இவனுக்கு இரு சகோதரர்கள். சகோதரிகளும் இருவர். இந்நால்வரும் நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள். அவர்களுடைய செய்திகளைப் பின் பாகத் தில் தெரிவிப்போம். ஜாதகனுடைய மணத்தின் காலத்தைச் சொல்லுகி ருேம். இருபதாவது வயதில் இவனுக்கு மணம் நடைபெறும். மணப் பெண் வடமேல் திசையில் பிறந்திருப்பாள். இனி அவளுடைய குணத்தைக் கூறுவோம்.

11. மாந்தளிர் மேனி யாகும் மனமது கபடு மில்லாள்
ஏந்திய தனத்தா ளாகும் இடர்செய்யாள் யாவ ருக்கும்
சாந்தவாள் அடக்க வார்த்தை சந்தேக மனத்தா ளாகும்
தெரிந்தோர்போல் வார்த்தை யுண்டு தீர்க்கமாம் வயது மேற்பள்.

11. மாந்தளிர் போல் சிவந்த மேனியாள். கள்ள மில்லாத உள்ளம் படைத்தவள். அதிக செல்வம் படைத்தவள். ஒருவருக்கும் கெடுதல் செய்யாதவள். சாந்தமான குணம் உடையவள். வணக்கம் தொனிக்கும் வார்த்தைகளையே சொல்லுவாள். சந்தேகிக்கும் மனப்பான்மை உள்ளவள். தனக்குத் தெரியாத விஷயத்தையும் தெரிந்தவள்போல் பேசுவாள், தீர்க்காயுள் உடையவள்,

12. குணமது நல்ல தாகும் குறியினில் கொடுமை தோன்றும்
மணமது இஷ்டம் கொள்வள் வரன்மனம் ஏற்ற மாது
பிணைசொலாள் யாவ ருக்கும் பொருத்தமாய்ப் பேசு வாளாம்
அணையவே தவங்கள் செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

12. நற்குணம் படைத்தவள். முகத்தோற்றத்தில் கொடியவள் போல் காணப்படுவாள். தான் இவனையே (ஜாதகனையே) மணக்கவேண்டு மென்று ஆசைப்பட்டவள். அவள் இஷ்டப்படியே மணமும் நடை பெற்றது. பர்த்தாவின் கருத்துப்படியே நடப்பவள். எவர்க்கும் கெடுதலைச் சொல்லாதவள். சந்தர்ப்பத்திற்குப் பொருத்தமான வார்த்தைகளையே பேசுவாள். தேவியே! மேலும் கேட்பீராக.

13. புத்திரர் நவமே தோன்றும் போகிடும் முதலில் புத்திரர்
சுத்தமா யாண்பால் ரண்டு தோகையும் மூவர் தீர்க்கம்
மற்றவை சேத மெய்தும் வருஞ்சுதர் முதலில் தோஷம்
குற்றத்தைப் புகலு மென்னக் குசனுமே நாலில் தங்க;

13. இவனுடைய புத்திர பாவத்தைப் பற்றிக் கூறுவேன். இவனுக்கு ஒன்பது குழந்தைகள் பிறப்பார்கள். அவர்களில் இரு ஆண்களும் மூன்று பெண்களும் தீர்க்கமாக வாழ்வார்கள். மற்றைக் குழந்தைகள் நீடிக்க மாட்டா. முதலில் பிறக்கும் குழந்தைகள்தான் நீடிக்கமாட்டார்கள். அதற்கென்ன காரணம் என்று பார்வதிதேவி கேட்க, புத்திரபாவாதிபதியாகிய செவ்வாய், [புத்திரஸ்தானமாகிய ஐந்தாமிடத்திற்குப் பன்னிரண்டில்] நான்காம் இடத்தில் தங்கி இருப்பதாலும்;

14. மந்தனு மைந்தைப் பார்க்க மருவாது புத்திரர் தாமும்
இந்தவன் பூர்வம் சொல்வேன் இருடிவாழ் அருணை தன்னில்
விந்தையாய் வணிபம் செய்யும் வைசிய குலமு தித்துத்
தன்தன முடைய னாகிச் சகலோர்க்கு நல்லோ னன்.

14. சனியும் புத்திர பாவத்தைப் பார்ப்பதாலும் முதலில் பிறக்கும் சில குழந்தைகள் சேதமாகும். ஜாதகனுடைய பூர்வ ஜன்மத்தைக் கூறுவேன், மஹரிஷிகள் வாசம் செய்யும் திருவண்ணாமலையில் வியாபாரத்தையே சீவனமாகக் கொண்ட வைசிய குலத்தில் பிறந்து தனிகனாக வாழ்ந்து வந்தான். எல்லோருக்கும் நல்லவனாக இருந்தான்.

15. அறமதி லிச்சை யுண்டாய் அதிதிகட் கன்ன மீந்து
வருமார்க்கம் தாகம் வைத்தும் வினையது இல்லா தாகி
மறலியின் நாடு சேர்ந்து மறையவன் வரையப் பட்டுத்
திருமக னுதிப்பா னாகும் செப்புவோ மிவனின் யோகம்.

15. தருமத்தில் ஆசை உள்ளவனாகவும் இருந்தான். விருந்தாளிக்கு அன்புடன் (பாவம் சம்பவிக்காதவாறு) அன்னமளித்தான். வெகு சனங்கள் நடக்கும் மார்க்கத்தில் தண்ணீர்ப்பந்தல் நிறுவினான். ஒரு பாவத்தையும் செய்யாதவனாகவும், மேற் சொன்ன புண்ணியங்களைச் செய்தவனாகவும் விளங்கிய இவன் பிரம்மதேவனால் இங்குப் படைக்கப்பட்டிருக்கிறான்.

16. இந்திர யோக மொன்று எழில்வேசி யோக மொன்று
அந்தவோர் பலனைச் சொல்வேன் அடாவடி கூறு ளுகும்
பந்தினர் மதிக்க வாழ்வன் பகரமாம் குடும்ப மேற்பன்
சிந்தையும் நல்ல தாகும் சிலேடையாய்ப் பேசு வானும்.

16. இவனுக்கு இந்திரயோகமும், வேசியோகமும் உண்டு. இந்த இரு யோகங்களின் பலன்களைச் சொல்லுகின்றேன். வீண் பிடிவாதமாக வார்த்தைகளைக் கூறமாட்டான். உறவினர்கள் மெச்ச வாழ்வான். இவனுடைய குடும்பம் பெருமை வாய்ந்ததாகத் திகழும். மனத்தில் கெட்ட எண்ணங்களே இல்லாதவன். சிலேடையான வார்த்தைகளைப் பேசுவான்

17. இல்லமும் வேறு செய்வன் ஏவலா ளதிகம் சேர்ப்பன்
நல்லவ னுகி வாழ்வன் நாதனுர் பக்தி பூண்பன்
வெல்லுவான் எதிரி தம்மைவிளைபுல மதிகம் சேர்ப்பன்
சல்லியம் கொள்ளா னுகும் தனமது பெருக்க மாகும்.

17. வேறு ஒரு வீட்டையும் நிர்மாணிப்பான். அதிக சேவகர்களை நியமிப்பான். [இவனுடைய தொழில் அவ்வளவு விரிவாகும் என்பது கருத்து.] எல்லோருக்கும் நல்லவனுக வாழ்வான். சிவபிரானிடம் பக்தி கொண்டவன். எதிரிகளை எளிதில் வெல்லுவான். செழிப்பான நிலங்களை அதிகம் சேர்ப்பான். இவனுக்குச் சிறிதும் கடன் இராது. இவனுடைய செல்வம் மேன்மேலும் பெருகும்.

18. மாதுரு குணத்தைச் சொல்வேன் மனமது கபடு மில்லாள்
ஓதுவாள் சுகமாய் வார்த்தை உரகம்போல் கோப மேற்பள்
சூதிலாள் புத்தி சாலி சோர்வோர்க்குத் தாக மீவள்
பாதக மனமில் லாதாள் பர்த்தாவுக் கினிய ளாகும்.

18. இனி ஜாதகனுடைய தாயின் குணத்தைச் சொல்வேன். உள்ளத்தில் கபடமில்லாதவள். காதுக்கு இனிமையாகப் பேசுவாள். பாம்புபோல் கோபமுள்ளவள். வஞ்சனைப் புத்தி இல்லாதவள். புத்தி சாதுர்யம் வாய்ந்தவள். சோர்வுற்றவர்களுக்குத் தண்ணீரும் அன்னமுமளிப்பாள். ஒருவருக்கும் கெடுதலை நினைக்காதவள். தன் புருஷனுக்கு மிக இனியவள்.

19. பித்ததே கத்தா ளாகும் பிறர்குற்றம் புகலா ளாகும்
சுத்தமும் கொஞ்ச முண்டு துணைவர்கள் ஆண்பா லொன்று
வித்தகி மார்கள் முன்று விளங்கிடும் தீர்க்க மாகப்
பெத்ததா யில்லம் வாயு பேதையே கேட்டி டாயே.

19. பித்த தேகம் வாய்ந்தவள். பிறர் குற்றத்தை வெளியில் சொல்லாதவள். கொஞ்சம் சுத்தமாகவும் இருப்பாள். அவளுக்கு ஒரு சகோதரனும் மூன்று சகோதரிகளும் உண்டு. அவர்கள் எல்லோரும் தீர்க்கமாக வாழ்வார்கள். இவள் பிறந்த ஊர் வடமேற்குத் திசையில் உள்ளது. தேவியே ! மேலும் கேளுங்கள்.

20. இவளுடைப் பூர்வம் சொல்வேன் ஏகம்பன் வாழு மூரில்
பவமிலாச் சாலிய வம்சம் பிறந்துமே நல்லோ ளாகி
அவமதிப் பில்லா வாழ்ந்து அரனடி தொண்டு பூண்டு
சிவனடி யார்க்கு அன்னம் தேவியு மீந்து வந்தாள்.

20. இவளுடைய பூர்வ ஜன்மத்தைக் கூறுகின்றோம். இவள் முன் பிறவியில் காஞ்சியில் "குயவர்" சாதியில் பிறந்து எல்லோருக்கும் நல்ல வளாக வாழ்ந்தாள். உலகத்தார் இவளைக் கௌரவித்தார்கள். இவள் சிவபிரானுக்குத் தொண்டுகள் செய்து வந்தாள். அவனடியார்களுக்கு அமுதும் அளித்தாள்.

குறிப்பு.—"சாலியர்" என்று ஒரு சாதியார் உண்டு. அவர்கள் பெரும்பாலும் பட்டுநூல் நெசவுத் தொழில் செய்வார். அவ்வகுப்பில் பிறந்ததாகவும் கொள்ளலாம்.

21. வினையது இல்லா தாகி மேவினள் கால னுடு
கனமுள பிரமன் லக்கம் கலந்தன ளிக்கு லத்தில்
வனிதையும் வந்த பின்பு வளர்பிறை போலே யோகம்
சினமதை வெளிக்காட் டாதாள் தேவியே கேட்டி டாயே.

21. பாவமே செய்யாதவளாக இருந்த இவள் அந்திய காலத்தில் இறந்து பிரம்மதேவனால் இக்குலத்தில் பிறப்பிக்கப்பட்டிருக்கிறாள். இவள், இக்குடும்பத்தில் வாழ்க்கைப்பட்ட பிறகு கணவனுக்கு யோகங்கள் பிறைச் சந்திரன் போல வளரும். கோபத்தை வெளியில் காட்டாதவள். தேவியே! மேலும் கேளுங்கள்.

22. மறுஜன்மம் கலிங்கு நாட்டில் வருகுவா ளிக்கு லத்தில்
பொருளது பெருக்க மாகிப் புண்ணிய மனத்த ளாகி
அரிவையும் வாழ்வா ளாகும் அறைந்தன மொழிகுன் றாது
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

22. இவள் மறு ஜன்மத்தில் கலிங்க தேசத்தில் இதே சாதியில் பிறப்பாள். அதிகச் செல்வத்தை அடைவாள். புண்ணிய மனம் உள்ளவளாக கவும் வாழ்வாள். நாங்கள் சொன்ன மொழி தவறாது. விநாயகரைப் பெற்ற தாயே! மேலும் கேட்பீராக.

23. தந்தையின் பூர்வம் தன்னைச் சாற்றுவேன் ஊற்றுக் காட்டில்
வந்தவ னிக்கு லத்தில் மானிலம் விருத்தி செய்து
அந்தவன் வாழு நாளில் அணுகிய வினையைக் கேண்மோ
பந்தியில் வஞ்சம் செய்தான் பற்றிற்று அதுவோர் தோஷம்.

23. இனி ஜாதகனுடைய தகப்பனின் முன்பிறவியைக் கூறுகின்றோம். இவன் பூர்வ ஜன்மத்தில் ஊற்றுக்காடு என்ற ஊரில் இதே சாதியில் பிறந்தான். அதிக நிலங்களைச் சம்பாதித்து அவைகளை அபிவிருத்தியும் செய்தான். அவ்வாறு சுகமாக அவன் வாழும் நாளில் அவனுக்கேற்பட்ட ஒரு

வினையைச் சொல்லுகின்றோம். கேளுங்கள். பலரும் பந்தியாக உட்கார்ந்து சாப்பிடும் காலத்தில் சிலருக்குப் பரிமாறிச் சிலருக்குப் பரிமாறுமல் பந்தி வஞ்சனை செய்தான். அந்தப் பாவம் இவனைப்பற்றிக் கொண்டது.

24. ஏழையாம் மாதுக் கேதான் இன்பமாய் வார்த்தை சொல்லிப்
பாழான காமம் செய்து பணமது தராமல் சென்முன்
தோழியும் வருத்த முற்றுச் செப்புவாள் சாபம் தானும்
ஆழியில் மறுஜன் மத்தில் அன்னையின் சுகமு மின்றி ;

24. வேறு ஒரு பாவமும் ஏற்பட்டது. ஓர் ஏழை மாதை, நயமான வார்த்தைகள் பேசிக் கெடுத்தான். பணமும் தராமல் ஏமாற்றி விட்டுச் சென்றுன். மிகவும் வருந்திய அந்த ஏழைமாது சாபமிட்டாள். மறு ஜன் மத்தில் நீ தாய் சுகமின்றித் தவிப்பாய்.

25. துணைவரு மில்லா னுகித் தன்கரம் ஊன மாயும்
பொன்னது இல்லா தாகிப் பூமியில் வாழ்வா யென்னத்
துன்மையாய் ஏழைச் சாபம் சேர்ந்தது பால னுக்கு
அந்திய காலம் தன்னில் அறுமுகன் பக்தி கொண்டான்.

25. சகோதரனில்லாதவனுகவும் பணமற்றவனுகவும் வாழ்வாய். மேலும் உனது கரத்தில் ஊனம் ஏற்படும். இந்தச் சாபம் இவனைப் பற்றிக்கொண் டிருந்தது. பிறகு இவன், அந்திய காலத்தில் சுப்பிரமணிய சுவாமியிடம் பக்தி உடையவனுகி இறந்தான்.

26. மறலியின் நாடு சேர்ந்து மறையவன் வரையப் பட்டு
அரசர்தம் குலமு தித்தான் அணுகிடும் ஏழைச் சாபம்
பெறுமன்னை சுகமில் லாதான பிறப்புமே காணு னுகும்
இருகரம் ஊனம் கொஞ்சம் எய்திடும் என்று சொல்வேன்.

26. அவனைப் பிரம்மதேவன், இத்தகைய அரச குலத்தில் பிறப்பித் திருக்கிறுன். முன்ஜன்ம சாபத்தின்படியே இவன் பெற்ற அன்னையின் சுகமில்லாதவன். உடன் பிறந்தாரும் இவனுக்கில்லை. அந்தச் சாபத்தின் காரணமாகவே இரு கரங்களிலும் ஊனம் ஏற்படும் என்று நிச்சயமாகச் சொல்வேன்.

27. அறுமுகன் கிருபை யாலே அன்னமும் குறைவு றுதான்
பொருளது பெருக்க மில்லான் புகலுவோ மிவன்பின் ஜன்மம்
திருத்தணி தன்னி லேதான் ஜனிப்பனும் ரெட்டி வம்சம்
தரைதனம் அதிக முண்டாய்த் தான்வாழ்வா னென்று சொல் [வோம்.

27. சுப்பிரமணிய சுவாமியின் கிருபையால் ஏராள ஆகாரப்பொருள்களைப் பெறுவான். ஆனுல் பொருள்களை அபிவிருத்தி செய்யான். இவனது பின் ஜன்மத்தைக் கூறுவோம். இவன் வரும் பிறவியில் திருத்தணிகையில் ரெட்டி வமிசத்தில் பிறப்பான். அதிக பூமிகள் உள்ளவனுகி மிகவும் சிறப்பாக வாழ்வான்.

28. ஆறுறு ஒன்று ஆண்டில் ஐப்பசி மாதம் தன்னில்
கூறுவோம் தந்தை கண்டம் கோதைக்கு நாற்பான் மூன்றில்
தீரமாய்த் தனுசு மாதம் செல்லுவாள் அன்னை தாமும்
பாரினில் தவங்கள் செய்யும் பார்வதி கேட்டி டாயே.

28. தந்தையின் மரண காலத்தைக் கூறுவோம். சாதகனுடைய முப்பத் தேழாவது வயதில் ஐப்பசி மாதத்தில் தந்தை மரணமடைவான். ஜாதக னுக்கு நாற்பத்து மூன்றும் வயது நடை பெறும்போது மார்கழி மாதத்தில் தாய் மரணத்தை அடைவாள். தேவியே! மேலும் கேளுங்கள்.

29. மைந்தனின் மரண காலம் வரைகிறோம் அறுபா னலில்
தன்தனுர் மாதம் தன்னில் சஷ்டியின் திதியி லேதான்
அந்தவ னுடலம் ஏகும் அறைகிறே மிவன்பின் ஜன்மம்
செந்திரு மனையி லேதான் ஜனிப்பனும் சைவச் சேயாய்.

29. ஜாதகனின் மரண சமயத்தையும் தெரிவிப்போம். அவனுடைய அறுபத்து நான்காம் வயதில் மார்கழி மாதத்தில் ஷஷ்டி திதியில் அவன் வேறு உலகம் ஏகுவான். இவனது மறு பிறவியையும் சொல்லுகின்றோம். செல்வம் படைத்த சைவ குடும்பத்தில் பிறப்பான்.

30. இதுமட்டில் ஜாதகர்க்கு எய்தாதோ மார கங்கள்
விதவிதப் பிணியும் நேரும் வெண்மதி ஜனனம்தங்க
விதியவன் எட்டி லாக வெய்யவன் பனிபோல் நீங்கும்
அதிதியை ஆத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

30. ஜாதகனுக்கு அறுபத்து நான்காம் வயதுவரையில் யாதொரு மாரக மும் ஏற்பட்டிராதோ என்று தேவிகேட்க, முனிவர் கூறுகின்றார், பலவித பிணிகள் வரும். ஆயினும் இலக்கினாதிபதி சந்திரன் ஸ்வக்ஷேத்திரத்தில் இலக்கினத்தில் இருப்பதாலும், ஆயுள் ஸ்தானாதிபதியான சனியும் ஸ்வக்ஷேத்திரமான எட்டில் இருப்பதாலும், சூரியன் முன் பனிபோல். வத்திடும் பிணிகள் விலகிடும். அன்னபூர்ணாதேவியே! மேலும் கேளுங்கள்.

31. பிறந்திடு காலந் தன்னில் பூசத்தில் மூன்றும் பாதம்
கரியவன் தசைஒன் பாண்டும் கலந்திடும் திங்கள் ரண்டும்
திருமகன் பிணிஅ நேகம் சேத்திரம் செய்த லுண்டு
வருந் ணை சிறுதந் தைக்கு மனைவியும் வாய்க்கு மென்றேம்.

31. ஜாதகன் புஷ்ய நக்ஷத்திரம் மூன்றும் பாதத்தில் ஜனித்திருக் கிறான். ஆகவே ஜனன காலத்தில் சனி தசையில் இருப்பு வருஷங்கள் ஒன்பது, மாதங்கள் இரண்டு. இந்தத் தசையின் பலன்களைக் கூறுவோம், ஜாதகனுக்குப் பலவித நோய்கள் காணும். வீடும் கட்டுவான். சகோதர விருத்தியுண்டு. சிறிய தகப்பனுருக்கு விவாஹமும் நடைபெறும்.

32. அவன்குணம் கூறக் கேண்மோ அற்புத வார்த்தை யுண்டு
தவனியில் உய்வா னாகும் நாதனுர் பக்தி கொஞ்சம்
தவசிக ளுறவு கொள்ளான் தந்திர மொழியு முண்டு
பவமுள மில்லான் நல்லான் பாரினில் வறுமை காணுன்.

32. அந்தச் சிறிய தந்தையின் குணத்தைச் சொல்லுகின்றோம். அற்புதமாகப் பேசுவான். சிறப்பாக வாழ்வான். பரமேசுவரனிடம் பக்தி பூண்டவன். தவசிகளிடம் தொடர்பு இல்லாதவன். தந்திர வார்த்தைகளையும் பேசுவான். நல்ல மனம் படைத்தவன் தான். எல்லோருக்கும் நல்லவனாக இருப்பான். வறுமையையே காணுதவன்.

33. சிலதுநாள் ஒன்ருய் வாழ்ந்து செல்லுவான் வேற தாகத்
தலைவியும் ஒன்றே யாகும் தன்சுதர் ஆண்பால் மூன்று
நலமுள கன்னி ரண்டு நவிலுவோம் தீர்க்க மாகக்
கலகத்தைக் கூறு நெஞ்சன் காதலன் வயது தீர்க்கம்.

33. சில காலம் ஒன்ருகக் குடும்பம் செய்து அதன் பிறகு தனிக் குடும்ப வாழ்க்கை நடத்துவான். அவனுக்கு மனைவியும் ஒருத்திதான். அவனுக்கு மூன்றுபிள்ளைகள், இரண்டு பெண்கள். இந்த ஐவரும் தீர்க்காயுளுடன் வாழ்வார்கள். கலக வார்த்தைகளையும் சிறிது பேசுவான். அவனும் தீர்க்காயுளுடன் வாழ்வான்.

34. ஈரெட்டு ஆண்டு தன்னில் இல்லமும் பிரிதல் செய்வன்
வேறதா யில்லம் செய்தல் வேண்டினேர்க் குதவி யாகும்
காரிய சமர்த்த ஞகும் கட்செவி போலே கோபம்
தீரமா மனத்தா ஞகும் செப்புவோம் பின்பால் சேதி.

34. ஜாதகன் ஜனித்துப் பதினறுவது ஆண்டில் குடும்பப் பிரிவினை செய்துகொண்டுத் தனியாக வாழ்வான். வேறு வீடும் கட்டுவான். உதவியை நாடுபவர்களுக்கு உதவி புரிவான். காரியங்களைச் செய்வதில் சமர்த்தன். பாம்பிற்குக் கோபம் வருவதுபோல் இவனுக்குக் கோபம் வரும். உறுதியான மனம் படைத்தவன். இவனைப்பற்றிய வரலாறுகளை விவரமாகப் பின் பகுதியில் சொல்லப்போகின்றோம்.

## ஜாதகம் 29

1. மதியும் ராகும் சீயமுற
   மன்னன் கேது சாடியாக
விதியன் கோலில் சேய்கன்னி
   வெய்யோன் வெள்ளி புதனலவன்
இதுவே கிரகம் தானின்று
   எழிலாய் உயிரும் கடகமுற
அதுவே பலன்கள் தானுரைப்பீர்
   அறைகுவார் பிருகு ஆண்ஜன்மம்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| குரு கேது | இராசி | சக்கரம். | லக்கினம் சூரியன் சுக்கிரன் புதன் |
| | | | சந்திரன் ராகு |
| | | சனி | செவ்வாய் |

பிரபவ வருஷம் ஆடி மாதம் 19-ஆந் தேதி வெள்ளிக்கிழமை இரவு 27 நாழிகைக்குமேல் ஜனனம். ஆங்கிலத் தேதி—2-8-1867. ஆயில்யம் 1-இல் சூரியன். பூரம் 4-இல் சந்திரன். உத்திரம் 2-இல் செவ்வாய். ஆயில்யம் 1-இல் புதன் (வக்ரீ). சதயம் 3-இல் குரு வக்ரீ. புஷ்யம் 1-இல் சுக்கிரன். விசாகம் 2-இல் சனி. பூரம் 4-இல் ராகு. பூரட்டாதி 2-இல் கேது. நக்ஷத்திரம் பூரம். சுக்கிர தசை இருப்பு வருஷங்கள் நான்கு, மாதங்கள் நான்கு.

1. சந்திரனும் ராகுவும் சிம்மம், குரு கேது கும்பம், சனி துலாம், செவ்வாய் கன்னி, சூரியன் சுக்கிரன் புதன் இவர்கள் கடகம், இலக்கினமும் கடகம். இச் சாதகத்தின் பலன்களைச் சொல்லுவீராக எனப் பார்வதி கேட்க, பிருகு முனிவர் கூறுகின்றார். இக்கிரஹ நிலையில் பிறந்த குழந்தை ஆண்.

2. இல்லம் வடபால் வாசலுமே
   யாளி யூர்தி வட கீழ்ப்பால்
பொல்லா மாரி தன்வாயு
   புகன்றேம் சிறுஊர் கூரையில்லம்

சொல்லும் ஏழாம் ஜன்மமுமாம்
ஜனிப்பான் பிரம்ம குலமதனில்
வல்லோன் குடும்பச் சேதிதனை
அறிவிப் போமே இந்நூலில்.

2. இவன் பிறந்திருக்கும் வீடு வடக்கு நோக்கி இருக்கும். [வீதி கிழக்கு மேற்காக அமைந்திருக்கும். வீடு தென் வரிசையில் உள்ளது என்பது கருத்து.] வட கிழக்குத் திசையில் காளி கோயில் உண்டு. வடமேற்கில் மாரி யம்மன் ஆலயம் இருக்கும். இந்த அடையாளமுள்ளதொரு சிறிய ஊரில் கூரை வீட்டில் பிராம்மண ஜாதியில், குடும்பத்தில், ஏழாம் குழந்தையாகப் பிறந்திருப்பான். இந்நூலில் அவனுடைய குடும்பச் செய்திகளை அறிவிப் போம்.

3. தந்தை துணைகள் சில தோன்றும்
தங்கா தென்றேம் சங்கரியே
தந்தை சேதி யூகையுளன்
சரச வார்த்தை கபடில்லான்
தந்தை மொழிக்கு இடருரையான்
சாற்றுன் கட்டு வார்த்தைகளைத்
தந்தை தமக்கு அருளீந்த
சாமி பக்தி கொண்டிடுவன்.

3. ஜாதகன் தந்தைக்குச் சில உடன் பிறந்தார்கள் தோன்றுவர். ஆனால் நீடிக்கமாட்டார்கள். தந்தையின் குணத்தைக் கூறுகின்றேம். மதியூகம் வாய்ந்தவன். அழகிய வார்த்தைகளைப் பேசுவான். கபடமில்லா தவன். அவனுடைய தந்தையின் மொழியை மறுத்துக் கூறுதவன். அடுக்குச் சொற்களைப் பேசுவதில் விருப்பமில்லாதவன். தனது தந்தைக்கும் பிரணவத்தின் பொருளை உபதேசித்தச் சுப்பிரமணிய சுவாமியிடம் பக்தி பூண்டவன்.

4. இடுவன் எழை தனக்கன்னம்
இடரே செய்யான் யாவருக்கும்
படையில் செல்லான் கிருஷி யுள்ளன்
பால்பாக் கியங்கள் விருத்தியுண்டு
நடையும் கடினன் மெலிதே கன்
நல்லோ னென்று புகழ்ந்திடுவர்
விடவாக் குடையன் பித்த பிணி
மேவும் சூடு மெல்லரசே.

4. ஏழைகளுக்கு அன்னமளிப்பான். ஒருவருக்கும் இடையூறுகளைச் செய்யாதவன். சண்டை சச்சரவுகளில் சேரான். கிருஷி செய்வான். பால் பாக்கியம் விருத்தியடையும். வேகமாக நடப்பவன். மெலிந்த தேகம் வாய்ந்த வன். உலகத்தோர் இவனை " நல்லவன் " என்று புகழ்வார்கள். இவன் வாக்கினுல் கெடுதல்களைச் சொன்னுல் சொன்னபடியே நடைபெறும். பித்தப் பிணியினுல் கஷ்டப்படுவான். சூடும் இவனது உடலில் தலை தூக்கிநிற்கும்.

5. அறவே பாலன் குணம் சொல்வேன்
அஞ்சா நெஞ்சன் அறிவாளி
பெரியோ ருறவு கொண்டிடுவன்
பெரியதாய் தலங்கள் தான்செய்வன்
கரியைச் சுரண்டும் தொழில் சிலநாள்
காசு சேர்ப்பன் காலுள்ளன்
நெறியைக் காப்பன் மாஞ்சிவப் பன்
நினைத்த படியே தான் முடிப்பன்.

5. இனி ஜாதகனின் குணத்தைக் கூறுவோம். அஞ்சா நெஞ்சன். அறிவாளி. பெரியோர்களின் நட்பு உடையவன். பெரிய புண்ணிய ஸ்தலங்களுக்கும் யாத்திரை செல்லுவான். சில காலம் கரியைச் சுரண்டும் தொழிலைச் செய்வான். கஷ்டப்பட்டுக் காசுகளைச் சேர்ப்பான். பலம் பொருந்திய கால்கள் வாய்ந்தவன். தொன்று தொட்டு வந்த சம்பிரதாயத்தைக் கடைப்பிடிப்பான். மாநிறம் வாய்ந்தவன். தான் நினைத்தபடியே காரியங்களை நிறைவேற்றுவான்.

6. தந்தைக் கினியன் தாய்பகையும்
தரணியும் பின்னால் சேர்த்திடுவன்
விந்தை மொழிகள் பகர்ந்திடுவன்
மெல்லியர் மாரால் செலவதிகம்
சிந்தை கலக்கம் முன்னேனால்
செல்வான் உத்திர தேசத்தில்
விந்தை யாகப் பரிசார
வேலை செய்வன் வித்தகியே.

6. தந்தையினிடம் விசேஷ பக்தி கொண்டவன். தாயைப் புறக்கணிப்பான். ஆனால் பிற்காலத்தில் தாயினிடம் அன்புகொண்டு அவளை வந்தடைவான். பிறர் வியக்கும்படி வார்த்தைகளைப் பேசுவான். பெண்களால் செலவதிகமாகும். தமையனால் மனத்தில் கலக்கமேற்படும். வடதிசையிலுள்ள புண்ணிய ஸ்தலங்களுக்குச் சென்று சமையற்கார வேலையைச் செய்வான்.

7. ஏகா தசியாம் துணைமுன்பின்
இடரே யாகும்......மென்றேம்
ஜாதகன் ஒருவன் முன்தீர்க்கம்
சகடு நாளாம் நந்தி ஜன்மம்
பாக மாகப் பேசிடுவன்
பதரில் செல்லான் பார்சேர்ப்பன்
தோகை சொல்லைக் கடவாதான்
துணைவன் பகையும் சுதர்தம்மால் ;

7. இவன் குடுபத்திற்கு ஏழாவது குழந்தையாக இருப்பினும் மூத்தவர்கள் இல்லாதவன். ஆனால் இவனுக்கு முன் பிறந்தான் மாத்திரம் மூத்த சகோதரன் ஒருவனே ஜீவித்திருப்பான். அவன் விருஷப லக்னத்தில் பிறந்திருப்பான். ரேவதி நக்ஷத்திரம். பக்குவமாகப் பேசுவான். சச்சரவு

களில் சேராதவன். பூமிகளைச் சேர்ப்பான். மனைவியின் சொல்லை மீறி நடக்கமாட்டான். சகோதர விஸ்வாசம் இல்லாதவன். அவனுக்குப் பிள்ளைகள் மூலம் ;

8. தனமும் நேரும் பின்சுகமாம்
தரணி சேர்ப்பன் தனவிரயம்
வினையை எவர்க்கு மெண்ணுதான்
மேவு வானும் பெரிதலங்கள்
கனமாம் வேத மறியாதான்
கபடு மில்லான் கடுநடையன்
அனையும் பாரி ஒன்றேயாம்
அருள்வோம் சுதர்கள் பலமதனை.

8. பணம் சேரும். பிற்காலத்தில் சுகமடைவான். பூமிகளைச் சேர்ப்பான். அவன் தனத்தைச் செலவழிப்பான். ஒருவருக்கும் கெடுதலை எண்ணமாட்டான். பெரிய புண்ணிய ஸ்தலங்களுக்கு யாத்திரை செல்வான். வேதம் ஓதாதவன். நெஞ்சில் கபடமில்லாதவன். வேகமாக நடப்பவன். அவனுக்கு (ஜாதகனின் தமையனுக்கு) மனைவி ஒருத்திதான். அவனுடைய புத்திர பாவத்தைக் கூறுவோம்.

9. கன்னிகை அளவாய் நான்குறுமே
காளை பின்னால் தாமொருவன்
பின்னால் கன்னி ஒன்றேயாம்
பேசும் பின்பால் சேதிதனை
அன்னோன் வயது தீர்க்கமுறும்
அன்னையைக் காப்பன் வறுமையிலான்
பின்னோன் தன்னைப் பிரிதல்செய்வன்
பெரிதாய்க் குடும்பம் பின்பெறுவன்.

9. அவனுக்கு நான்கு பெண்கள் பிறப்பார்கள். மூன்று பெண்களுக்குப் பிறகு ஒரு பிள்ளை பிறப்பான். அவனுக்குப் பிறகு ஒரு பெண். ஆக நான்கு பெண்கள். ஒரு பிள்ளை. இவர்களைபற்றிய செய்திகளைப் பின் பாகத்தில் தெரிவிப்போம். அவனுடைய (ஜாதகன் அண்ணனுடைய) வயது தீர்க்கமாகும். தன் அன்னையை நன்றாகக் காப்பான். வறுமை இல்லாதவன். அவன் ஜாதகனைத் தனியாகப் பிரிந்து வாழும்படி செய்வான். அவனுடைய குடும்பம் மிகப் பெரியதாக விளங்கும்.

10. ஆறு ருண்டில் பாலனுக்கு
அணுகும் மணங்கள் உள்ளூரில்
பாரி குணத்தைத் தான்சொல்வேன்
பதரில் செல்லாள் பணிசேர்ப்பள்
மாரன் மனத்துக் கேத்தவளாம்
மகிழ உரைப்பள் உணச்சலுள்ளாள்
வேறு நடக்கை யில்லாதாள்
மேலோர் பக்தி கொண்டிடுவள்.

**10.** ஜாதகனுக்கு முப்பத்தாருவது வயதில் மணம் நடக்கும். அதுவும் தன் சொந்த ஊரிலேயே நடைபெறும். ஜாதகனுடைய மனைவியின் குணத்தைக் கூறுகின்றோம். சண்டையில் ஈடுபடாதவள். அதிக ஆபரணங்களை அடைவாள். ஜாதகனுடைய மனத்தின்படியே நடந்து கொள்வாள், எல்லோரும் மகிழும்படி பேச வல்லவள். மெலிந்த சரீரம் உடையவள். தீயகுணம் இல்லாதவள். தெய்வ பக்தி பூண்டவள்.

**11.** பால்பாக் கியம்தா னுடையவளாம்
பணிந்தோர் தம்மைக் காத்திடுவள்
சீல முடையாள் தெய்வ பக்தி
தீர்க்க வயது தான்பெறுவள்
சால பராசர் தாம்சொல்வார்
தார மிரண்டு தான்புகல்வோம்
வல்லி யிரண்டு வருவதென்றீர்
விளம்பு வீர்கள் அச்சங்கை.

**11.** பால் பாக்கியம் உடையவள். பணிந்தவர்களைக் காப்பாள். நற்சீல முடையவள். தெய்வ பக்தி பூண்டவள். தீர்க்காயுர்யோகமுள்ளவள். இவ்வாறு பலனைக் கேட்டவுடன் பராசார முனிவர் கூறுகின்றார். இவனுக்கு இரு களத்திரம் என்று சொல்வோம். அதற்கான காரணங்கள் என்ன என்று பிருகு ரிஷி கேட்க, பராசரர் காரணம் கூறுகின்றார்.

**வேறு**

**12.** சனியவ னேழோ னாகிச் சரத்தினில் தனியாய் நிற்க
வனிதை யரிருவ ரென்றோம் மாமுனி தடுத்துச் சொல்வார்
கனமுள மதியும் ரண்டில் கவிமகன் ஜன்மம் தங்க
அனையவே பாரி ஒன்று அறைகிறோம் தீர்க்க மாக.

**12.** சனி ஏழாம் பாவத்திற்கு உடையவனாகி ''சர'' ராசியாகிய துலாத்தில் இருப்பதால் இவனுக்கு மனைவிகள் இருவர் என்று சொல்லவேண்டும், பிருகு முனிவர் தடுத்துக்கூறினார். இலக்கினாதிபதியான சந்திரன் குடும்பஸ்தானத்திலும், சுக்கிரன் இலக்கினத்திலும் இருப்பதால் இவனுக்கு மனைவி ஒருத்தி தான். அவளும் தீர்க்காயுளுடன் வாழ்வாள்.

**வேறு**

**13.** இதற்குமே ரிடையாய் ஜாதக சுருதி
யிதில் ஏழாம் பாவத்தில் பாராய்
அதில் சொல்லும் விபரம் இரண்டேழோன் கேந்திர
மாகினும் கோணத்தி லிருக்க
அதிபதி ஒன்றே வரைந்தனம் தீர்க்கம்
வரைகிறோம் சங்கைக ளொன்று
சதியாகு மிருபத் தெட்டாண்டுள் நடக்கில்
சாற்றின மொழி குன்றுது.

13. இதற்கு ஆதாரமாக சோதிட சாஸ்திரத்தில் ஏழாம்பாவத்தைப் பார்ப்பீர்களாக. இரண்டுக்கும் ஏழுக்கும் உடையவன் கேந்திரத்திலோ திரிகோணத்திலோ தங்கினால் ஜாதகனுக்கு ஒரே மனைவிதான். அவளும் தீர்க்கமாக வாழ்வாள். ஆனால் இவனுக்கு இருபத்தெட்டாவது வயதில் ஒரு மாது அபிமான மனைவியாகச் சேரலாம். நாங்கள் சொன்னமொழி குன்றாது.

வேறு.

14. புத்திர விருத்தி புகலுவோ மினிமேல்
பிறந்திடும் பஞ்சமி யாக
சுத்தமா யாண்பால் இரண்டென தீர்க்கம்
தோகையும் அவ்வித மாகும்
வித்தகன் பூர்வம் விளம்புவோ மினிமேல்
வேலன்வாழ் உடுக்கைமா நகரில்
சித்தசன் போலே கங்கையின் குலத்தில்
ஜனித்துமே கிருஷிகள் செய்தான்.

14. இனி புத்திரபாவத்தைக் கூறுவோம். இவனுக்கு ஐந்து குழந்தைகள் பிறப்பார்கள். அவர்களில் இரு ஆண்களும் இரு பெண்களும் தீர்க்கமாக வாழ்வார்கள். ஜாதகனின் பூர்வ ஜன்மத்தைப்பற்றி விளம்புவோம். இவன் முற்பிறவியில் சுப்பிரமணிய சுவாமி வாசம் செய்யும் உடுக்கை நகரில் வேளாள குலத்தில் மன்மதன்போல் அழகுள்ளவனாகப் பிறந்திருந்தான். விவசாயம் செய்துவந்தான்.

வேறு.

15. [1] கிராமாதி காரம் செய்து கௌரவ குடும்பி யாகி
மாரனு வாழு நாளில் மருவிய வினையைக் கேண்மோ
காரிழை விதவை மாது கணவனு மின்றி யேதான்
தீரமா யன்னை யில்லம் சேர்ந்துமே வாழு நாளில்.

15. கிராம ஆட்சி முதலிய உத்தியோகம் செய்து இவன் பெருமை வாய்ந்த குடும்பமுள்ளவனாக வாழும் நாளில் இவனுக்கேற்பட்ட வினையைக் கூறுகின்றோம். அவ்வூரில் ஒரு பெண் கணவனை இழந்து தன் தாய்வீட்டில் வசித்துவந்தாள்.

16. அன்னவன் அவள்மேல் மோகம் அற்புத வார்த்தை சொல்லக்
கன்னிகை இசையா ளாகிக் கார்க்கோடன் போலே சீறப்
பின்னையும் ஓர்நாள் தன்னில் பேதையும் தனியாய்ச் செல்ல
அன்னவள் பின்னால் சென்று அரிவையைப் பலவந் தத்தால் ;

16. இவன் அதருமமாக அவள்மேல் மோகங்கொண்டு அவளிடம் நயமான வார்த்தைகளைப் பேசினான். இவைகளைக் கேட்ட அந்தப் பெண் பாம்புபோல் சீறினாள். வேறு ஒரு சமயத்தில் அவள் தனிமையில் போய்க் கொண்டிருக்கும்போது இவன் அவளைப் பின் தொடர்ந்து சென்று ;

---

[1] சிராமாதிகாரம், கிராம நாட்டாண்மை, மணியம், கர்ணம் முதலியன.

17. போகமே செய்யும் போது பேதையும் திகில டைந்து
வேகமா யில்லம் சென்று விளம்பினுள் துணைவ ரோடு
நாகம்போல் கோப முற்று நவின்றனர் அதிகாரி பக்கல்
தோகையின் வார்த்தை கேட்டு துடுக்குகள் செய்தோன் தன்னை ;

17. தன் விருப்பத்தை நிறைவேற்றிக்கொண்டான். அந்தப்பெண் பயமடைந்தவளாகவும் வருத்தமுற்றவளாகவும் தன் வீட்டிற்குச் சென்றுத் தன் சகோதரர்களிடம் சொல்ல, அவர்கள் இதைக் கேட்டு நாகம்போல் சீறி, அதிகாரிகளிடம் இவ்விஷயத்தைத் தெரிவித்தார்கள். அவ் வதிகாரி, அந்தப் பெண்ணையும், தகாத காரியம் செய்த இவனையும் ;

18. வினவவும் அவன்பால் தன்னில் வெள்ளியும் பெற்றுக் கொண்டு
வனிதைமேல் விரோதம் சொல்ல மாதுவும் திகில டைந்து
துணைவிபோலே என்னைஎண்ணுமல் சொர்ணத்தால் சொன்ன [பாவி
இனிவரும் ஜன்மம் தன்னில் இடக்காலு மூன மாகும்.

18. விசாரித்துவிட்டு, இவனிடம் வெள்ளியைப் பெற்றுக்கொண்டு இவனுக்கு அனுகூலமாகவும், அந்தப்பெண்ணிற்கு பிரதிகூலமாகவும் தீர்ப்பளித்தான். ஆகையால் வருத்தமடைந்த அந்தப் பெண் சொல்லலாளுள். தங்கையைப்போல் என்னை எண்ணுமல் பணத்தைக்கொடுத்து நியாயத்தைவாங்கிய பாவியாகிய உனக்கு மறு ஜன்மத்தில் இடதுகாலில் ஊனம் ஏற்படும்.

19. எனைப்போலே துணைப்பெண் ணின்றி ஏகுவாய் வெளிதே சத்தில்
பிணையாகும் துணைவர் மாதா பேதையும் பலவாறு சொல்லி
மேதினி லுதிப்பா ளுகும் மேவிடும் மாது சாபம்
காதலி துணைப்பெண் காணுன் கனமிலாக் குடும்பம் பூர்வம்.

19. சகோதரி அற்றவனுக இருப்பாய். வெளி தேசங்களில் பரதேசிகளைப் போல் திரிவாய். சகோதரனும் தாயும்கூட உனக்குப் பகைவர்களாவார்கள் என்று பலவாறு சொல்லிச் சென்ருள். அந்தச் சாபம் இவனைப் பிடித்துக்கொண்டது. ஆகையினுல்தான் இவனுக்குச் சகோதரி இல்லை. முன்பு சிறுமையுற்ற குடும்பம் உள்ளவனுகவும் ஆனுன்.

20. சிலதுநாள் வனவா சங்கள் செய்வனு மிடக்கா லூனம்
நலமுள பராசர் கேள்வி நாயகன் முன்ஜன் மத்தில்
தலமதி லுயர்வ தான சேதுவிற் சென்ற புண்யம்
விலகாதோ அந்தச் சாபம் விதவையும் திகில டைந்து.

20. அவள் சாபத்தின்படி சிலகாலம் வனவாசம் போன்று தனியனுகப் பலதேசங்களில் ஆதரிப்பாரின்றித் திரிந்தான். இடது காலில் ஊனமும் உண்டு. பராசர மஹரிஷி சொன்னுர் :—இவன் பூலோகத்தில் சிறந்த க்ஷேத்திரமான சேதுவில் நீராடி இருக்கின்றுனே ! ஆகையால் முன் ஜன்ம வினை தீராதோ ! சொல்லும்.

21. செப்பின சாபம் நீங்கா தேறின குலம் எவ்வாறு
ஒப்புடன் உதித்த சேதி உரைப்பீர்கள் முனிவ ரேநீர்
மெய்ப்புடன் சேது புண்யம் மேன்மையாய்க் குலமே யாகும்
தப்பிதம் தப்பி தம்தான் சங்கரி கேட்டி டாயே.

21. மேலும் அவ்வாறு சேது ஸ்நானத்தினால் வினை நீங்கி இராவிடின், முற்பிறவியில் வேளாள குலத்தில் பிறந்திருந்த இவன், இப்பிறவியில் உயர் குலத்தில் எவ்வாறு உதித்திருக்கின்றான்? ஆகையால் அப்பாவம் சேது நீராட்டத்தால் நீங்கி இருக்கும். பிருகு மஹரிஷி இவ்விஷயத்தைத் தெளிவாக விளக்கினார். தருமத்திற்குப் பலன் வேறு. அதருமத்திற்குத் தனியே வேறு பலன். இதுதான் நியதி. செய்த தருமம் அதருமத்தின் பலனை வராதபடி தடுக்காது. தருமத்தின் பயனும் தனியாக வந்தேதீரும். அதருமத்தின் விளைவும் தனியேவரும். ஆதலால் சேதுஸ்நான தருமத்தின் பலன் உயர்குலப் பிறப்பு. செய்த அதருமத்தின் பலன் கால் ஊனம் முதலியவை.

**குறிப்பு.**—இத்தரும ஸூக்ஷ்மத்தை, ஸ்ரீமத் ராமாயணம், சுந்தர காண்டத்தில் ஹனுமான் ராவணனுக்கு உபதேசம் செய்யும் சர்க்கத்தில் காணலாம்.

22. மாதுவின் குணத்தைச் சொல்வேன் மாநிறம் உணச்சல் தேகி
தீதிலா குணத்தா ளாகும் தீங்கதை ஒருவர்க் கெண்ணாள்
காதலி அடக்க வார்த்தை காகுத்தன் பக்தி பூண்டு
வேதனை யொருவர்க் கெண்ணாள் வீண்பழி யில்லா ளாகும்.

22. இனி ஜாதகனின் தாய்க்குணத்தைக் கூறுவேன். மாநிறமுள்ளவள். மெலிந்த சரீரம் உள்ளவள். வணக்கம் தோன்றும் வார்த்தைகளையே பேசுவாள். கெட்ட குணம் சிறிதும் இல்லாதவள். ஸ்ரீராமபிரானிடம் விசேஷ பக்தி பூண்டவள். ஒருவருக்கும் கெடுதலை எண்ணாதவள். யாராலும் நிந்திக்கப்படாதவளாகவும் இருப்பாள்.

23. தன்துணை ஆண்பால் ரண்டு தங்கிடும் கன்னி ஒன்று
சொன்னஆண் ஒன்று மட்டும் சோர்வுறும் என்று சொல்வோம்
அன்னவன் குடும்ப லைச்சல் அறைகிறோம் தாய்முன் ஜன்மம்
பொன்முகரி யாற்றி னோரம் பிறந்தனள் சுந்தரி சேயாய்.

23. அவளுக்கு இரு சகோதரர்கள். ஒரு சகோதரி. அவர்களில் ஒரு சகோதரன் சிறிதுகாலமே வாழ்வான். சகோதரனுடைய குடும்பம் அல்லல்படும். இவளுடைய முன்ஜன்மமதைக் கூறுகின்றோம். பொன் முகரி (ஸ்வர்ணமுகி) நதிக்குச் சமீபத்திலுள்ள ஓர் ஊரில் பிறந்திருந்தாள்.

24. சுகமுள குடும்பி யாகிச் சுந்தரி வாழ்ந்து மேதான்
ஜகமதி லுயர்வ தான சேதுவின் பதிக்குச் சென்று
மிகுதவம் புரிவோருக்கு வித்தகி தொண்டு பூண்டு
பகையான கால னூடு பரவியே பிரமன் லக்கம்.

**24.** நல்ல சுகம் உள்ள குடும்பியாகி உலகில் சிரேஷ்டமான சேதுவிற்குச் சென்று அங்கு எழுந்தருளி இருக்கும் தவசிகளுக்குத் தொண்டுசெய்து கடைசியாக அந்தியகாலத்தில் யமனுலகம் சென்றாள்.

**25.** வந்தவ ளென்று சொல்வோம் வரைகிறோம் இவள் பின் ஜன்மம்
முந்திய [1] கூடல் தன்னில் உதிப்பளா மிக்கு லத்தில்
தந்தையின் பூர்வம் சொல்வேன் தாம்பிர பர்ணி தன்னில்
வந்தவன் வன்னிய சேயாய் மறையவர் க்ருஷி செய்து ;

**25.** அவள்தான் இங்குப் படைக்கப்பட்டிருக்கிறாள். இவளுடைய பின் ஜன்மத்தைப் பற்றியும் கூறுகின்றோம். முக்கூடல் என்ற க்ஷேத்திரத்தில் இதே ஜாதியில் பிறப்பாள். தந்தையின் பூர்வஜன்மத்தைச் சொல்வேன். இவன் முன்ஜன்மத்தில் தாம்பிரபர்ணி நதிக்கரையில் ஓர் ஊரில் வன்னிய குலத்தில் பிறந்து அந்தணர்களுக்காக விவசாயம் செய்து ;

**26.** பாரியும் மதலை யுண்டாய்ப் பகரமாம் குடும்பி யாகித்
தீரனு வாழு நாளில் செய்ததோர் வினையைக் கேண்மோ
காரிழை ஒருத்தி தன்மேல் காணாத வார்த்தை சொல்ல
நேரிழை வருத்த முற்று நுகர்ந்தசா பத்தை கேண்மோ.

**26.** மனைவி மக்களுடன் பெரிய குடும்பியாகி வாழு நாளில் இவனுக்கேற்பட்ட வினையைக் கேளுங்கள். ஒரு பெண்ணின் மேல் அபாண்டமான பழியைச் சொன்னான். ஆகையால் அவள் வருத்தமுற்றுச் சொன்ன சாபத்தைக் கேட்பீராக.

**27.** பெண்பழி சொன்ன பாவி பிறக்கும்பின் ஜன்மம் தன்னில்
அண்ணன்தம் பிகளு மின்றி அழகான குடும்பி யாகி
வண்ணமாய்ப் புத்திரி யின்றி வாழ்குவாய் மறுஜன் மத்தில்
திண்மையாய்ச் சொல்லும் போது சேர்ந்தது அந்தச் சாபம்.

**27.** நிரபராதியான ஒரு பெண்ணின்மேல் நீ வீணாகப் பழியைச் சொன்னதால் மறுபிறவியில் அண்ணன் தம்பிகளின்றியும், பெண் இல்லாமலும் நீ வாழ்ந்திடுவாய். அந்தச் சாபம் இவனை வந்தடைந்தது.

**28.** இன்னமும் பலவாறு சொன்னாள் எய்திற்று அந்தச் சாபம்
மன்னவ னந்தி யத்தில் மஹாதலம் சேது சென்று
துன்மையாய்க் கால னோடு சேர்ந்துமே பிரமன் லக்கம்
முன்குல முதித்தா னென்றோம் வசிஷ்டரும் புகலு கின்றார்.

**28.** இன்னும் பல வார்த்தைகள் சொன்னாள். அவைகள் எல்லாம் இவனுக்கு ஏற்பட்டிருக்கின்றன. அந்த ஜன்மத்தில் அந்தியத்தில் உலகிலேயே மிகப் பெரிய புண்ணியஸ்தலமாகிய சேதுவிற்குச் சென்று நீராடினான். பிறகு காலக்கிரமத்தில் இறந்த இவன், பிரம்ம தேவனால் இப் பிராம்மண ஜாதியில் பிறப்பிக்கப்பட்டிருக்கிறான். இதைக் கேட்டவுடன் வசிஷ்டர் சொல்லுகின்றார்.

---

[1] முக்கூடல் என்றும் திருமுக்கூடல் என்றும் இந்த விஷ்ணு க்ஷேத்திரத்தைக் கூறுவார்கள். இது காஞ்சிக்கு அருகிலுள்ளது.

29. வன்னிய குலமு தித்தோன் மருவுமிச் சென்மம் தன்னில்
முன்குல முதித்த வண்ணம் மொழிகுவீர் முனியே நீர் தாம்
மன்னிய சேது புண்ணியம் மருவிய புண்ணி யத்தால்
தன்மறை குலமு தித்தான் செப்புவோம் இவன்பின் ஜன்மம்.

29. முற்பிறவியில் வன்னிய குலத்தில் பிறந்த இவன் இப்பொழுது பிராம்மண ஜாதியில் பிறக்கக் காரணம் யாது? பிருகு முனிவர் கூறுகின்றார். முன் பிறவியில் அந்திய காலத்தில் பெருமை வாய்ந்த சேதுவிற்கு சென்று நீராடிய புண்ணியத்தால் இவன் வேதமோதும் அந்தணர் வமிசத்தில் பிறந்தான். இவனுடைய பின் பிறவியையும் கூறுகிறோம்.

30. வடதிசை பிரயாகை தன்னில் மருவுவான் இக்கு லத்தில்
திடமுள குடும்பி யாகிச் செல்வனும் வாழ்வா னாகும்
அடவுள பத்தா யாண்டுள் அந்தகன் நாட்டைச் சேர்வன்
தடவரை மகளே யாங்கள் சாற்றிய மொழிகுன் றாது.

30. வடதிசையில் உள்ள பிரயாகை க்ஷேத்திரத்தில் இதே ஜாதியில் பிறப்பான். சிறப்பான குடும்பியாகி வாழ்வான். ஆனால் குடும்பியான பத்தாவது ஆண்டுக்குள் யமனுலகம் அடைவான். பர்வதராஜ புத்திரியே! நாங்கள் சொன்ன மொழி தவறாது.

31. எண்ணஞ்சு ஒன்று ஆண்டில் எகுவாள் அன்னை தாமும்
திண்ணமாய் ஜாத கர்க்குச் செப்புவோம் எழுப தாண்டில்
வண்ணமாய் மீன மாதம் வரைகிறோம் துதியை தன்னில்
கண்ணன்தன் பட்சம் தன்னில் காவலன் மறிப்பா னாகும்.
(அண்ணலை பூசை செய்யு மம்பிகை யாளே கேளாய்.)

31. இப்பொழுது ஜாதகனுடைய தாயின் மரணகாலத்தைக் கூறுகின்றோம். இவனுடைய நாற்பத்தொன்றாவது வயதில் தாய் மரணமாவாள். ஜாதகன், தனது எழுபதாவது வயதில் பங்குனி மாதத்தில் கிருஷ்ண பக்ஷத்தில் த்விதீயை திதியில் மரணமடைவான். சிவபிரானை வழிபடும் தேவியே! மேலுங் கேளுங்கள்.

32. மறுஜன்மம் துவாரை தன்னில் வருவனு மிக்கு லத்தில்
குறுமுனி தடுத்துச் சொல்வார் குமரனு மிக்கு லத்தில்
பெருமன்னை பகையு மாயும் பகவானின் பக்தி யின்றிப்
பொருளது ஆசை யாயும் பூமியில் வாழ்வ தாலே;

32. ஜாதகன் மறு ஜன்மத்தில் துவாரகையில் பிராம்மண ஜாதியிலேயே பிறப்பான். அகஸ்தியர் தடுத்துக் கூறினார். ஜாதகன் இச் சென்மத்தில் அன்னையிடத்தில் பகைமை கொண்டும், கடவுளிடம் பக்தியின்றியும் பொருள்களில் பேராசை படைத்தவனாகவும் வாழ்வதால்;

33. எப்படி உதிப்பான் சொல்வாய் இடரென்றோர்க் குதவி செய்தும்
ஒப்புடன் தலங்கள் சென்று முத்தமன் வாழ்வ தாலே
மெய்ப்புடன் உதிப்பா னுகும் விளம்புவோம் தாயே கேளு.
(ஈற்றடி காணப்படவில்லை.)

33. எவ்வாறு பிராம்மண சாதியில் பிறப்பான் ? பிருகு முனிவர் பதில் உரைக்கின்றார். இடர்ப்பட்டவர்களுக்கு உதவி செய்தமையாலும் பெரிய புண்ணிய ஸ்தலங்களுக்கு யாத்திரை சென்றமையாலும் இவன் மறு ஜன்மத்தில் உயர்குலத்தில் நிச்சயமாகப் பிறப்பான்.

34. வந்தவன் யோகச் சேதி வரைகிறோம் தாயே கேளும்
சொந்தமாய்ப் முப்பான் ரண்டில் செப்புவோ மில்லம் வேறு
பிந்தியு நாற்ப தாண்டில் புரப்பனும் இல்லம் தானும்
சொந்தமாய்ப் பூமி சேர்ப்பன் தொல்புவி வறுமை காணன்.

34. இவ்வாறு கடகலக்கினத்தில் உதித்திருக்கும் பாலகனது யோகச் செய்திகளைக் கூறுகின்றோம். அன்னையே ! கேட்பீராக. முப்பத்தி இரண்டாவது வயதில் இவன் சொந்தமாக வீடு கட்டுவான். பிறகு நாற்பதாவது வயதில் அந்த வீட்டை விற்றுவிடுவான். தனது முயற்சிகளால் பூமிகளைச் சேர்ப்பான். வறுமையால் கஷ்டப்படமாட்டான். [முப்பத்தி ரண்டாவது வயதிற்குப் பின் வறுமை இல்லாதவன் எனக் கருத வேண்டும்.]

35. நாற்பது ஆண்டு மேலாய் நல்கிடும் பூமி தானும்
ஏற்கவே நாற்பா னலில் எய்திடு நிதிநிட் சேபம்
ஆர்க்கவே குடும்ப மேன்மை அணுகிடும் வேறோ ராஸ்தி
தீர்ப்பாகப் பின்பா கத்தில் செப்புவோம் தாயே கேளும்.

35. நாற்பதாவது வயதிற்கு மேல் இன்னும் அதிக பூமிகள் சேரும். நாற்பத்து நாலாவது வயதில் புதையல் இவனுக்குக் கிடைத்திடும். இவனது குடும்பம் மேன்மையை அடையும். வேறு ஒரு சொத்தும் இவனைச் சேரும். அது யாருடைய சொத்து ? எவ்வாறு இவனை வந்தடையும் ? என்ற விவரங்களைப் பின் பாகத்தில் சொல்லப் போகின்றோம்.

36. இன்னமும் விபர மாக இயம்புவோம் பின்பா கத்தில்
அன்னவன் ஜனன காலம் அசுரர்மந் திரியி லேதான்
உன்னத ஆண்டு நாலும் உரைக்கிறோம் திங்கள் நாலும்
பன்னுவோம் பலனை யாங்கள் பார்வதி கேட்டி டாயே.

36. இவனுடைய மற்றைய செய்திகளையும் இரண்டாம் பாகத்தில் தான் கூறப்போகின்றோம். தசை இருப்பைத் தெரிவிக்கின்றோம். இவன் பூர நக்ஷத்திரம் நான்காம் பாதத்தில் ஜனித்திருக்கின்றான். ஆகவே அசுரர்களுக்கு மந்திரியான சுக்கிர தசையில் இருப்பு வருஷங்கள் நான்கு, மாதங்கள் நான்கு. இத்தசையின் பலன்களை (பின் பாகத்தில்) கூறுவோம். பார்வதி தேவியே ! மேலும் எங்களைக் கேட்டருளவேண்டும்.

## ஜாதகம் 30.

1. கலையது கன்னி யாகக் கரும்பாம்பு புதனும் சீயம்
நிலமகன் தேள தாக நீத்தோனும் காரி சாடி
குலகுரு நந்தி யாகக் குருடனும் வீணை யாகத்
தலமது கடக மாகச் செங்கதிர் ஜன்மம் தங்க ;

| | | | |
|---|---|---|---|
| | | குரு | சுக்கிரன் |
| கேது<br>சனி | இராசி<br>சக்கரம் | | லக்கினம்<br>சூரியன் |
| | | | ராகு<br>புதன் |
| | செவ்வாய் | | சந்திரன் |

1. விசுவாவசு வருஷம் ஆடிமாதம் 20–ஆந்தேதி வெள்ளிக்கிழமை இரவு 26 நாழிகைக்குமேல் ஜனனம். ஆங்கிலத் தேதி 4–8–1905. ஆயில்யம் 1–ல் சூரியன். உத்திரம் 4–இல் சந்திரன். விசாகம் 3–இல் செவ்வாய் பூரம் 1–இல் புதன். ரோஹிணி 1–இல் குரு. மிருகசீர்ஷம் 4-இல் சுக்கிரன். சதயம் 1-இல் சனி வக்ரீ. மகம் 3–இல் ராஹு. சதயம் 1–இல் கேது. நக்ஷத்திரம் உத்திரம். சூரிய தசையில் இருப்பு மாதங்கள் எட்டு.

குறிப்பு.—இந்நூலாசிரியர் கருத்தின்படி விசாகம் நான்கில் செவ்வாய். சந்திரன் கன்னி, ராகு புதன் சிங்கம், செவ்வாய் விருச்சிகம், கேது சனி கும்பம், குரு விருஷபம், சுக்கிரன் மிதுனம். இலக்கினம் கடகம். கடகத்தில் சூரியன்.

2. பலனதைப் புகலு மென்று பார்வதி கேட்கும் போது
நலமுள வசிஷ்டர் சொல்வர் நாயகன் ஜனன மாகும்
தலமது கீழ்மேல் வீதி சண்டன்தன் வாச லாகும்
நலமிலாச் சிறுவூ ராகும் நற்றெதிர் இல்ல மில்லை.

2. இக்கிரஹ நிலையின் பலனைச் சொல்லுவீர்களாக எனப் பார்வதி தேவி கேட்கும்போது, வசிஷடர் பலன்களைக் கூறுகின்றார். இந்தக்கிரஹ நிலையில் ஜனித்தக் குழந்தை ஆண். வீதி கிழக்கு மேற்காக அமைந் திருக்கும். வீடு தெற்கு நோக்கி இருக்கும். இவன் ஜனித்த வீட்டிற்கு எதிரில் வீடு இராது. அது மிகச்சிறிய ஊராகும்.

3. மாரியும் தந்தி மேல்பால் மாகாளி தென்மே லாகும்
கூறிய அடையா ளங்கள் குறித்தனம் தந்தை யில்லம்
பாரினில் குடும்பச் சேதி பகருவோ மிந்நூல் தன்னில்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

3. மேற்குத்திசையில் மாரியம்மனும் விநாயகரும் வீற்றிருப்பார்கள். தென்மேற்குத்திசையில் பத்திரகாளி கோயில் உண்டு. இத்தகைய அடையாள முள்ள ஊரில் ஜனித்திருப்பான். ஆறுமுகனைப் பெற்றதாயே! இந்நூலில் அவனுடைய குடும்ப வரலாறுகளையும் யோகம் முதலியவைகளையும் கூறுகின்றோம். கேட்பீராக.

4. தந்தையின் துணைஆண் ஒன்று சாற்றுவோம் தீர்க்க மாக
முந்தின துணைவ ராக மொழிகிறோம் தாயே கேளும்
அந்தவன் சேதி சொல்வேன் யானையின் ஒத்த தேகம்
சுந்தர முடைய னாகும் சோம்பிடான் காரி யத்தில்.

4. ஜாதகனின் தந்தைக்கு ஒரு சகோதரன்தான். அவனும் மூத்தவனாக இருப்பான். அந்தச் சகோதரனுடைய செய்திகளைக் கூறுவேன். யானை போல் மிகவும் பருத்த சரீரம் வாய்ந்தவன். ஆயினும் அழகுள்ளவன். காரியத்தைச் செய்வதில் சோம்பல் இல்லாதவன். உத்ஸாஹம் உடையவன்.

5. மனமது கபடு கொஞ்சம் மாநிலம் அதிகம் சேர்ப்பன்
இனமது மெச்ச வாழ்வன் இல்லமும் சித்திரம் செய்வன்
நினைவதை முடிப்பா னாகும் நேத்திரம் சாயல் கொஞ்சம்
சினமுண்டு வெளிக்காட் டதான் சேயிழை சொல்தட் டாதான்.

5. மனத்தில் கொஞ்சம் கபடமுடையவன். நிலங்களை அதிகமாகச் சேர்ப்பான். தன் சாதியார் கொண்டாடும்படி வாழ்க்கையை நடத்துவான். அழகியதொரு வீடு கட்டுவான். தான் நினைத்தக் காரியத்தைச் செய்து முடிக்கும் ஆற்றல் படைத்தவன். சிறிது சாய்ந்த கண் பார்வை உடையவன். அடிக்கடி கோபம் வரும். ஆனால் வெளியில் காட்டாதவன். தன்மனைவியின் சொற்படியே நடப்பான்.

6. ஊகைவான் நுணுக்கம் தேர்வன் உபாயமாய் வார்த்தை சொல்லான்
ஆகம மறிவா னாகும் அடாவடி கொஞ்ச முண்டு
தோகையு மொன்றே தீர்க்கம் சுதராண்பா லொருவ னென்றோம்
போகபாக் கியங்க ளுள்ளான் பிரிதல் சேர்ப்பானு மில்லம்.

6. சிறந்த மதியூகி. சாஸ்திரங்களின் நுணுக்கங்களை [சூக்ஷ்மங்களை] அறிந்தவன். பேசும் திறமை அதிகம் வாய்க்கப் பெற்றவன் அல்லன். ஆகமத்தை அறிந்தவன். சிற்சில சமயங்களில் விதண்டா வாதமும் செய்வான். களத்திர தோஷம் இல்லாதவன். ஆகையால் மனைவி ஒருத்திதான். ஒரு புத்திரனுண்டு. வாழ்க்கையில் சுகத்தைத் தருவதும் சௌகர்யத்தை உண்டு பண்ணுவதுமாகிய விதவிதமான பொருள்களை அடைவான். குடும்பப் பிரிவினைக்குப் பிறகு ஒரு வீட்டை நிர்மாணம் செய்வான்.

7. மூலச் சூ டுடைய னாகும் முண்டக ரேகை யுண்டு
சீலம்போல் வெளிம யக்கம் சிந்தையு மிரண்டு முண்டு
மாலின்மேல் பக்தி கொள்வன் மாத்தானை லகுவில் வெல்வன்
காலநா டதனைச் சேர்வன் கலைதசை தன்னி லேதான்.

7. மூலச்சூடு உடையவன். கையில் கமல ரேகை விளங்கும். தான் நல்ல சீலம் உள்ளவன் போல் உலகத்தோர்க்குத் தோற்ற மளிப்பான். [ஆனால் உண்மையில் சீலமில்லாதவன் என்பது கருத்து.] மனத்தினால் ஒன்றை எண்ணி வாயினால் ஒன்றைப் பேசுவான். திருமாலிடம் பக்தி பூண்டவன். எதிரிகளைச் சுலபமாக ஜயிப்பான். ஜாதகனுக்குச் சந்திர தசை நடை பெறும் போது இவன் (ஜாதகனின் பெரிய தந்தை) மரண மாவான்.

8. தந்தையின் சேதி சொல்வேன் தந்தமும் தாளம் தேய்வு
தந்தைசொல் கடவா னாகும் சதுஷ்பாதம் விருத்தி யுண்டு
தந்திபோ லொத்த தேகன் சரசமாய் வார்த்தை யுண்டு
தன்பந்து மதிக்க உய்வன் தைரிய மில்லா நெஞ்சம்.

8. இனி, ஜாதகனுடைய தந்தையின் குணத்தைக் கூறுவோம். இவனு டைய பற்கள் முத்துப்போல் பிரகாசிக்கும். சிறிது தேய்வுற்றிருக்கும். தந்தை யின் உத்தரவை மீறமாட்டான். கால்நடைகளை அபிவிருத்தி செய்வான். யானைபோல் பருத்த சரீரம் வாய்ந்தவன். ரசமாகப் பேச வல்லவன். தன் உறவினர் மெச்சும் வகையில் சிறப்புடன் வாழ்வான். பயந்த சுபாவம் உள்ளவன்.

9. மாரியால் வடுவு மேற்பன் வாததே கத்தா னாகும்
பாரது விருத்தி செய்வன் பாரபட் சங்கள் பேசான்
பேரது கிராம பூமி வீடும் சல்லியம் காணன்
போர்தன்னில் செல்லா னாகும் புண்ணிய மனத்தா னாகும்.

9. அம்மையினால் முகத்தில் சில அடையாளங்கள் ஏற்பட்டிருக்கும். வாததேகம் வாய்ந்தவன். நிலங்களை அபிவிருத்தி செய்வான். பக்ஷபாத மின்றி நியாயங்களைப் பேசுவான். அதிக நிலங்களைச் சேர்ப்பான். பெரிய வீட்டை நிர்மாணிப்பன். கடன் இல்லாதவன். சண்டைசச்சரவுகளில் ஈடு படான். புண்ணிய மனம் படைத்தவன்.

10. இருவிழி ஊன முண்டு யாரையும் வசியம் கொள்வன்
பெருமையும் புகழு முண்டு போஜன வறுமை காணன்
திருமாளி செய்வா னாகும் ஜனஉப காரி யாகும்
அரிபோல கோப முண்டு அடைந்தோரை ஆத ரிப்பன்.

10. இருவிழிகளிலும் ஊனம் இருக்கும். உதாசீனமாக இருப்பவர் களையும் வசியம் செய்வான். பெருமையும் நற்கீர்த்தியும் இவனுக்கேற் படும். ஆகார சௌக்கிய முள்ளவன். அழகிய புதியதொரு வீடு கட்டுவன். ஜனங்களுக்கு உதவி புரிவான். சிங்கம் போல் சினமுள்ளவன். தன்னை அண்டியவர்களை ஆதரிப்பான்.

**11.** முன்னவ னிருந்த ஜன்மம் மொழிகிறேம் கொங்கு நாட்டில்
வன்னிய குலமு தித்து மனைவிமைந் தருமுண் டாகி
அந்நகர் மாரி கோஷ்டம் அர்ச்சக னுகி யின்னேன்
தன்னிலே வாழு நாளில் சார்ந்ததோர் வினையைக் கேண்மோ.

**11.** முற்பிறவியில் இவன் கொங்கு நாட்டில் வன்னிய குலத்தில் உதித்திருந்தான். மனைவி மக்களுடன் சுகமாக வாழும் நாளில், அந்த ஊரில் மாரியம்மன் கோயில் பூசை செய்யும் தொழிலையும் எற்றுக் கொண்டான். அப்பொழுது அவனுக் கேற்பட்ட பாவத்தைக் கூறுகின்றேம். கேளுங்கள்.

**12.** மாரிக்குச் சிலர்கள் செய்த மலர்களை மோசம் செய்தான்
வேறுஓர் ஆவி நெய்யை விளக்கிற்குத் தந்த போது
சாரியா யில்லம் கொண்டான் சார்ந்தது அது ஓர் தோஷம்
கூறுவோம் வேறு ஒன்று கோதைமே லடாத வார்த்தை ;

**12.** மாரியம்மனுக்குச் சாத்துவதற்காகப் பக்தர்கள் கொடுத்த நறுமலர்களைத் தேவிக்குச் சமர்ப்பிக்காமல் மோசம் செய்தான். வேறு குற்றமும் செய்தான். ஒரு பக்தன் ஆலயத்தில் தீபம் எற்றுவதற்கு நல்ல பசும் நெய்யைக் கொண்டு வந்து கொடுக்க அதை வீட்டிற்கு எடுத்துச் சென்றுன். இஃது இரண்டாவது தோஷம். ஒரு பெண்மேல் தகாத நிந்தனை வார்த்தைகளைச் சொல்ல ;

**13.** சொல்லவும் இனத்தோர் கேட்டுத் தோகையை விலக்கும் போது
வல்லியும் மனது வாடி வரைந்திட்ட சாபம் கேண்மோ
அல்லல்கள் செய்த பாவி அனுகும்பின் ஜன்மம் தன்னில்
நில்லாது சோதி தானும் நேராது என்னைப் போல.

**13.** அதைக் கேட்டு " உண்மை ' என்று எண்ணிய அவளுடைய உறவினர்கள் அவளை வீட்டைவிட்டு விலக்கினுர்கள். இவ்வாறு தகாத நிந்தனை கூறியது மூன்றும் குற்றம். அப்பொழுது மனம் வருந்திய அவள் சொன்ன சாபத்தைக் கேளுங்கள். எனக்கு அல்லல்களைக் கொடுத்த பாவியாகிய நீ, மறுஜன்மத்தில் புத்திரப் பேறு அடையமாட்டாய். சகோதரியும் பிறக்கமாட்டாள்.

**14.** இன்னமும் பலவாறு சொன்னுள் எய்திற்று அந்தச் சாபம்
தென்திசைக் கால னூடு சென்றுமே பிரமன் இலக்கம்
அன்னவ னுதித்தா னென்றேம் அம்மாரி தோஷ மொன்று
கன்னிகை சாப மொன்று கலந்திடு மிச்சென் மத்தில்.

**14.** வருத்தத்தினுல் இன்னமும் பலவாறு சொன்னுள். அந்தச் சாபம் இவனை வந்தடைந்தது. பிறகு அந்திய காலத்தில் யமனுலகம் சென்ற இவன் பிரம்ம தேவனுல் இங்குப் படைக்கப்பட்டிருக்கிறுன். அம் மாரியம்மனுக்குச் செய்த அபசாரமும் அந்தப் பெண் இட்ட சாபமும் இச்ஜன்மத்தில் இவனுக்குப் பலனைக் கொடுக்கும்.

15. நேத்திரம் ஊன மாகும் நிமலிகள் துணைகள் காணுன்
காத்திர குடும்ப மெவ்வாறு கலந்தகா ரணங்க ளெவ்வாறு
மாத்தின ஜன்மம் தன்னில் மாரிக்கு அரிச்சித்த புண்யம்
நீத்தோர் களுறவு கொண்டும் நிமலனும் வாழ்ந்த தாலே.

15. முற்பிறவியில் கோயில் விளக்கேற்றுவதற்குக் கொடுத்த நெய்யை இவன் உபயோகித்துக் கொண்டதால் இந்தப் பிறவியில் இவனுக்குப் பால் யத்தில் அம்மை கண்டு கண் ஊனமாயிற்று. அப் பெண்ணின் சாபப்படி துணையும் இவனுக்கில்லை. தேவி கேட்கலுற்ருள். முப்பிறவியில் பாவங் களைச் செய்த இவன் இப்பிறவியில் எவ்வாறு செல்வம் நிறைந்த பெரிய குடும்பம் உள்ளவனுன் ? வசிஷ்டர் கூறுகின்ருர். முற்பிறவியில் அம்ம னுக்கு அர்ச்சித்த புண்ணியத்திலுைம் சன்னியாசிகளிடம் பக்தியோடிருந் தாலும் செல்வம் நிறைந்த குடும்பியானுன்.

16. பொறுமையும் வறுமை காணுன் பேசின குணத்தா னுக்குத்
திருமக னுதிப்பா னுகும் செப்புவோ மிவன் குணத்தை
அரிமக னெப்ப தாகும் அழகிய வார்த்தை கூறுவன்
கரைமனம் கல்வி மானும் காலிகள் விருத்தி யுண்டு.

16. இவன் (ஜாதகனின் தந்தை) பெருமை படைத்தவன். வறுமை இல்லாதவன். நாம் சொன்ன குணமுள்ளவனுக்கு இக் கடக லக்கின மகன் புத்திரனுகப் பிறந்திருக்கிருன். இனி இவனது குணத்தைக் கூறு வோம். இவன் அழகில் விஷ்ணு புத்திரனுகிய மன்மதனுக்கு ஒப்பாவான். அழகிய வார்த்தைகளைப் பேசுவான். இளகிய மனம் படைத்தவன். கல்வி யறிவுடையவன். கால் நடைகள் இவனிடம் விருத்தியடையும்.

17. அன்னிய பாஷை மேன்மை அரசர்பூ சிதமு மாவன்
பொன்பணி சேர்ப்பா னுகும் புகழது ஏற்பா னுகும்
தன்னினத் தவரைக் காப்பான் சாராள்க ளுடைய னுகும்
பின்னமில் லாத தேகி பெரிதான கருமம் செய்வன்.

17. அன்னிய பாஷைகளில் மேன்மையை அடைவான். அரசர்களா லும் கௌரவிக்கப்படுவான். பல சுவர்ண ஆபரணங்களைச் சம்பாதிப்பான். இவனுடைய கீர்த்தி எங்கும் பரவும். தன் இனத்தாரை மிக்க அன்புடன் காப்பான். அதிக வேலையாட்களை உடையவனுவான். ஊனம் இல்லாத உடல் வாய்ந்தவன். அரிய பெரிய காரியங்களை நிறைவேற்றுவான்.

18. உண்டியும் சுகமாய்க் கொள்வன் உவப்பொடு புளிப்பி லிச்சை
வண்டிவா கனமு மேற்பன் மாநில மதிகம் சேர்ப்பன்
துண்டமாய்க் கூறு னுகும் தோகையர் மோக னுவன்
பண்டுநாள் பூமி விருத்தி பண்போர்க்கு அன்ன மீவன்.

18. சுகமான ஆகாரங்களையே புசிப்பான். புளிப்பை மிகவும் விரும்பு வான். வண்டி முதலிய வாகன சௌக்கியங்கள் உடையவன். செழிப்பான நிலங்களை அதிகம் சேர்ப்பான். வெட்டினுற் போலப் பேச விரும்பாதவன்.

பெண்களிடம் அதிக அன்பு கொண்டவன். பிதுரார்ஜித நிலங்களை மேன் மேலும் அபிவிருத்தி செய்வான். படித்தவர்களை அன்ன வஸ்திரம் இவை களால் ஆதரிப்பான்.

19. கடன்படான் இடுக்க மில்லான் காரிய சமர்த்த னாகும்
உடன்படான் பிழைக ளுக்கு உண்மையா மனத்த னாகும்
தடபுடல் செய்கை யுண்டு சத்தான வயது சேஷ்டன்
துடையினில் வடுவு மேற்பன் தேவதா தலங்கள் செல்வன்.

19. கடன்படாதவன். வாழ்க்கையில் இடையூறுகள் இல்லாதவன். காரியங்களை நிறைவேற்றுவதில் சமர்த்தன். குற்றங்களைச் செய்யச் சிறிதும் விரும்பாதவன். மனத் தூய்மை பெற்றவன். சிறிது ஆடம்பரச் செய்கை இவனிடம் காணப்படும். இவனது தொடையில் வடுவு காணப்படும். கடவுள் கோயில்கொண்டு எழுந்தருளி இருக்கும் பல ஸ்தலங்களுக்கு யாத்திரை செல்லுவான்.

20. இல்லமு மிரண்டு செய்வன் எதிரியை நாசம் செய்வன்
தொல்லைகள் ஆஸ்தி ஏற்பன் சோம்பல்க ளில்லா னாகும்
எல்லைகள் முன்மார் சேர்ப்பன் எய்திடும் பித்தச் சூடு
தொல்லையில் லாமல் வாழ்வன் தோகையே கேட்டி டாயே.

20. இரண்டு வீடுகள் கட்டுவான். எதிரிகளை அழிப்பான். வழக்கி லுள்ள சொத்துக்களை அடைவான். சிறிதும் சோம்பல் இல்லாதவன். கை யை விட்டு விலகிய முன்னோர்களின் சொத்துக்களை மறுபடியும் இவனே அடைவான். பித்தச்சூடு இவனது உடலில் இருக்கும். வாழ்க்கையில் எவ் விதத் தொந்தரவும் இல்லாமல் வாழ்வான். தேவியே ! மேலும் கேளுங்கள்.

21. தன்துணை முன்பெண் ரண்டு சாற்றுவோம் தீர்க்க மாகப்
பின்துணை தீதே யாகும் பேசுவீ ரந்தச் சங்கை
துன்மையாய் மூன்றே னேடு சுகமிலா ராகு கூடப்
பின்னமாம் துணைவ ரென்றேம் பேதையே கேட்டி டாயே.

21. இவனுக்கு உடன் பிறந்தார்கள் மூவர். அவர்களில் இருவர் மூத்த சகோதரிகள். அவர்கள் இருவரும் நீண்ட ஆயுளுடன் வாழ்வார் கள். இவனுக்குப் பின்னால் பிறக்கும் குழந்தைகள் நீடித்து வாழா. அதற்கென்ன காரணம் என்று பார்வதி கேட்க, வசிஷ்டர் கூறுகின்றார். சகோதரபாவதிபதியாகிய புதன் ராஹுவுடன் இருப்பதால் இவனுக்கு அடுத்துப்பிறக்கும் குழந்தை நீடிக்காது என்று சொன்னோம்.

22. மங்களம் பதினெட் டாண்டில் மருவிடும் கீழ்மேல் பாரி
அங்கவள் குணத்தைச் சொல்வேன் அரிமனை யொப்ப தாகும்
எங்கள்போ லதிதிக் கன்னம் ஈவளுள் நற்கு ணத்தாள்
பங்கய முகத்தா ளாகும் பரிந்துப சாரம் செய்வள்.

22. இவனுக்குப் பதினெட்டாவது வயதில் மணம் நடை பெறும். மணப் பெண் கீழ்த் திசையில் ஜனித்திருப்பாள். அவளுடைய குணத்தைக் கூறுவோம். அவள் மஹாலக்ஷிமிக்கு ஒப்பானவள். எங்களைப் போன்ற தவசிகளான அதிதிகளுக்குச் சிரத்தையுடன் அமுது அளிப்பாள். நற்குணம் வாய்ந்தவள். அவளுடைய வதனம் கமலம் போல் விளங்கும். வீட்டை நாடினவர்களுக்குப் பரிவுடன் உபசாரம் செய்வாள்.

23. பால்பாக்கிய முடையா ளாகும் பர்த்தாவின் மனம்போல் வாழ்வள்
சீலியாம் முன்கோ பத்தள் சிறுத்தோர்க்கு உதவி செய்வள்
காலத்தை அறிந்து ரைப்பள் காதலி வயது தீர்க்கம்
சாலவே வசிஷ்டர் சொல்லச் சடாமுனி புகலு கின்றார்.

23. பால்பாக்கியமுடையவள். கணவன் மனம்போல் நடப்பாள். சீலத்தில் சிறந்தவள். முன் கோபமும் உண்டு. எளியவர்களுக்கு உதவி செய்வாள். இடம், பொருள், ஏவல் இவைகளுக்குத் தக்கபடி பேசுவாள். நீண்ட ஆயுள் யோகமுள்ளவள். என்றிவ்வாறு வசிஷ்டர் சொன்னவுடன் ஜடாமுனிவர் கூறுகின்றார்.

24. சத்தமத் தோனு மெட்டில் சிகியுடன் கூடி நிற்க
வித்தகி மார்கள் ரண்டு விளம்பலாம் பால னுக்கு
அத்திரி தடுத்துச் சொல்வார் அந்தணன் ஏழைப் பார்க்கப்
பத்தினி தானத் தோனைப் பார்மகன் பார்ப்ப தாலே ;

24. களத்திரபாவாதிபனாகிய சனி, கேதுவுடன் எட்டாமிடத்தில் இருப்பதால் இவனுக்கு இரு மனைவிமார்கள் என்று சொல்லவேண்டும். ஆகவே மனைவி தீர்க்காயுர்யோகமுள்ளவள் என்று எவ்வாறு சொல்லக் கூடும். அத்திரி முனிவர் பதில் உரைத்தார். பதினோராம் இடத்தில் இருக்கின்ற சுபனாகிய குரு " ஒன்பதாவது பார்வை " யால் களத்திரபாவத்தைப் பார்ப்பதாலும் களத்திர ஸ்தானாதிபதியான சனியை ராஜயோக காரனாகிய செவ்வாய் பார்ப்பதாலும் ;

25. பாரியு மொன்றே யாகும் பாலர்கள் பலத்தைச் சொல்வேன்
தீரமா யாண்பால் ரண்டு செல்விமா ரவ்வாறு தீர்க்கம்
வீராது முதலி லென்றோம் விளம்புவீ ரந்த சங்கை
ஆரனு மைந்தி லேற அலகியு மைந்தன் பார்க்க ;

25. மனைவி ஒருத்திதான். புத்திரபாவத்தைக் கூறுவேன். இரு பிள்ளைகள். இரு பெண்கள். இந் நால்வரும் ஸ்திரமாக வாழ்வார்கள். முதலில் பிறக்கும் குழந்தை நிலைத்திராது என்று வசிஷ்டர் சொன்னவுடன், அதற்கான காரணத்தைச் சொல்லுமெனப் பார்வதி கேட்க, வசிஷ்டர் கூறலானார். செவ்வாய் ஐந்தாமிடத்தில் இருக்க, அவனைச் சனி பார்ப்பதால் ;

26. முதல்சுதர் தோஷ மெய்தும் மொழிகிறே மிவனின் பூர்வம்
அதிதிவாழ் பழனி தன்னில் அருமறைக் குலமு தித்து
நிதிமிக உடையா ஞகி நேமியில் செட்டுச் செய்து
வதிபதி மதலை யுண்டாய் மறலியின் பதிக்கு சென்று ;

26. முதலில் பிறக்கும் குழந்தை அரிஷ்டத்தை அடையும். இச் சாதக னின் பூர்வஜன்மத்தைக் கூறுகின்றேன். இவன் முன் பிறவியில் பழனி க்ஷேத்திரத்தில் வேதமோதும் அந்தணர் குலத்தில் பிறந்து அதிகச் செல்வத்தைப் படைத்தவனுகி வியாபாரத்தைச் செய்துவந்தான். மனைவி மக்களுடன் வெகுகாலம் சுகமாக வாழ்ந்து அந்தியத்தில் மரணத்தை அடைந்தான்.

27. பிறப்பனு மிந்தப் பாலன் பராசரும் மறுத்துச் சொல்வார்
மறைக்குல முன்ஜன் மத்தில் வந்தவ னிச்சென் மத்தில்
குறைவுறு ரெட்டி வம்சம் குறிக்குங்கா ரணங்கள் சொல்வாய்ப்
பெருமையாய் வேதம் தன்னைப் பேசாத குறைவு மொன்று.

27. அவன்தான் இங்கு "ரெட்டி" ஜாதியில் பிறந்திருக்கிறுன். பராசர முனிவர் ஒரு சந்தேகத்தை வினவினுர். முன் பிறவியில் பிராம்மண குலத்தில் ஜனித்த இவன் இப்பொழுது "ரெட்டி" ஜாதியில் பிறக்கக் காரணம் என்னே ? வசிஷ்டர் விடையளிக்கின்றுர். அதற்கு இரு காரணங்கள் உண்டு. வேதம் ஓதுவதற்கு வாய்ப்புப்பெற்ற ஜாதியில் பிறந்தும் பெருமைவாய்ந்த வேதத்தை ஓதாமல் இருந்தான். இதுவுமொரு காரணம்.

28. மறை சொலு மொழிபோல தன்னை அனுஷ்டாமல் நின்ற தாலே
குறைவுள குலமு தித்தான் கூறுவோ மிவனின் யோகம்
இரவிக்கீ ராறில் வெள்ளி இருப்பதால் வேசி யோகம்
புரவியோன் தனக்கு ரண்டில் புதன்நிற்கச் சாமரை யோகம்.

28. அது கிடக்கட்டும். வேதம் ஓதாவிடினும் வேதத்தில் பிராம்மண னுக்கிட்ட கட்டளைப்படி கடமைகளை இவன் செய்யாமலும் ஒழிந்தான். இஃது இரண்டாவது காரணம். இவ்விரு காரணங்களால்தான் இந்த வமிசத்தில் பிறந்திருக்கின்றுன். இனி இவனது யோகத்தைக் கூறுவேன். சூரியனுக் குப் பன்னிரண்டாமிடத்தில் சுக்கிரன் இருப்பதால் இவனுக்கு "வேசி" யோக முண்டு. சூரியனுக்கு இரண்டாமிடத்தில் புதன் இருப்பதால் "சாமர" யோகமும் உண்டு.

29. பலன்தனைப் புகல்வேன் தாயே பாரது அதிக விருத்தி
குலமதிப் புடைய வாழ்வன் குடியிரண் டாண்டில் வேறு
நலமுள வேறு இல்லம் நல்கிடு மூன்று மாண்டில்
பலமுள குடும்ப மேற்பன் பெரிதான கருமம் செய்வன்.

29. மேற்சொன்ன இரு யோகங்களின் பலன்களைத் தெரிவிப்பேன். அதிக நிலங்களைச் சம்பாதிப்பான். இவன் தன் குலத்தினர் மதிக்க வாழ்வான்.

இவன் பிறந்த இரண்டாவது ஆண்டில் குடும்பப் பிரிவினை நடைபெறும். அதற்கு அடுத்த வருஷம் புதிய வீடு ஏற்படும். இவனது குடும்பம் மிகப் பெரியதாக விளங்கும். பிறரால் சாதிக்கமுடியாத காரியத்தைச் செய்வான்.

30. தந்தைக்கு மேலாய் வாழ்வன் தனமிகப் பெருக்கம் செய்வன்
இந்திர போக மேற்பன் ஏவலா ளுடைய னாகும்
சுந்திர கட்டில் மெத்தை தொல்லுல கோர்ம திக்க
மைந்தனும் வாழ்வா னாகும் மாநிதி யுடையா னவன்.

30. தந்தையைவிடச் சிறப்புடன் வாழ்வான். செல்வத்தை மிகவும் அபிவிருத்தி செய்வான். இந்திர போகத்தை அனுபவிப்பான். பலபணி யாட்கள் இருப்பார்கள். அழகிய கட்டில், ஆசனம் மெத்தை முதலிய போக்கிய வஸ்துக்களை அடைவான். அதிகம் செல்வச் சேமிப்பு உடையவனாகி, உலகத்தாரால் கொண்டாடப்பட்டு வெகுகாலம் சுகமாக வாழ்வான்.

31. உதித்தநாள் முதல யாக ஒருமூன்று ஆண்டு மட்டும்
சதியான ரோகம் வாய்க்கும் சஞ்சல மனம்தந் தைக்கு
பதிவேறு மோச முண்டு பகர்ந்தஆண் டதன்மே லாக
மதிபிறை போல யோகம் வளர்ந்திடு மரண மட்டும்.

31. இவன் பிறந்த பிறகு மூன்று ஆண்டுகள் வரையில் ஜாதகனுக்குக் கொடிய நோய்கள் காணும். அநேக கவலைகள் தந்தையை வாட்டும். வஞ்சனைகளும் ஏற்படும். மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு ஆயுள் காலம் முடிய வளர்பிறைச் சந்திரன்போல் யோகங்கள் வளர்ந்திடும்.

32. பிறைதசை மத்தில் ரோகம் புகன்றிடும் பால னுக்கு
மறலியைக் காண னாகும் மந்தன்தன் தசைகா லத்தில்
திருமக னுடலம் ஏகும் தந்தைக்குப் பணியின் காலம்
வரைகிறேம் கரும காலம் உத்தமி கேட்டி டாயே.

32. சந்திர தசை மத்தியிலும் ஜாதகனுக்குக் கொடிய நோய் வரும். ஆனால் இறக்கமாட்டான். இவனுக்குச் சனிதசையே மாரகமாகும். தேவியே! கேளுங்கள். ஜாதகன் தனது ராஹு தசையில் தன் தந்தைக்கு ஈமச்சடங்கு களைச் செய்வான். (தந்தை இறப்பான் என்பது கருத்து.)

33. பெற்றமா தாவின் சேதி புகலுவோம் சிவந்த மேனி
சுற்றமும் கோப முண்டு சொல்லது சுருக்க மாகும்
சத்திய மென்றால் லக்கம் சாதிப்பாள் சிலது சங்கை
வித்தகி யோக சாலி வீண்வம்பு புகலா ளாகும்.

33. ஜாதகனின் தாயினுடைய குணத்தை இப்பொழுது சொல்வேன். அவள் சிவந்த மேனியாள். சிறிது கோபம் உடையவள். பேச்சு சங்கிரக மாகவே இருக்கும். உண்மையைச் சொல்லுவோமானால் இவள் லக்ஷம் காரியங்களையும் சாதிப்பாள். சில காரியங்களே தவறும். மிகவும் அதிருஷ்ட முள்ளவள். வம்புபேச்சில் ஈடுபடாதவள்.

34. பாக்கிய முடையா ளாகும் பந்துவுக் கினிய ளாகும்
போக்கிய முடையா ளாகும் உறுதியில் லாத நெஞ்சம்
வாக்கது காப்பா ளாகும் மறுவிடும் பித்தச் சூடு
சாக்கிரதை குணத்தா ளாகும் தரித்திர மில்லா ளென்றேம்.

34. செல்வம் நிறைந்த செல்வி. உறவினர்க்கு நல்லவளாக் நடந்து கொள்வாள். போக்கியம் (பொருள்) பெற்றவள். உறுதியில்லா உள்ளம். காற்றில் விடாத வார்த்தை. பித்தச் சூட்டினல் பீடை. கண்ணும் கருத்து மான குணம். ஏழ்மையை ஏற்காதவள்.

35. மங்கைக்குத் துணை ஆண் ரண்டும் மறுவிடும் கன்னி ஒன்று
அங்கவர் தென்கீ ழாகும் அவர்பலன் பின்பால் சொல்வேன்
தந்தையின் பூர்வம் சொல்வேன் நவபா ஷாணம் தன்னில்
கங்கையின் குலமு தித்துக் கௌரவ குடும்பி யானுன்.

35. இவளுக்கு உடன் பிறந்தவர்களில் இரு ஆண்கள். ஒரு பெண். இவள் பிறந்த ஊர் தென்கிழக்கில் உள்ளது. அந்த உடன் பிறந்தார்களின் பலன்களைப் பின்பாகத்தில் சொல்லுவேன். தந்தையின் பூர்வஜன்மத்தைச் சொல்லுகின்றேன். இவன் முன் பிறவியில் நவபாஷாணத்தில் வேளாள வமிசத்தில் பிறந்து, கௌரவம் வாய்ந்த குடும்பியானுன்.

36. வறுமைக ளில்லா வாழ்ந்து மறலியின் பதிக்குச் சென்று
பிரமனல் வரையப் பட்டுப் பிறந்தவ னென்று சொல்வோம்
சிறுமைக ளில்லா வாழ்வன் செப்புவோம் இவன்பின் ஜன்மம்
பிருதிவி தலத்தி லேதான் பிறப்பானும் சௌராஷ்ட்ர வம்சம்.

36. வறுமை இல்லாமல் வாழ்ந்து காலக்கிரமத்தில் இறந்த இவன் இக் குலத்தில் பிறந்து ஜாதகனுக்குத் தந்தையாக வாய்ந்திருக்கின்றுன். இப்பொழுதும் சிறுமை இல்லாமல் சிறப்புடன் வாழ்வான். இவன் மறு பிறவியில் காஞ்சியில் சௌராஷ்டிர ஜாதியில் உதிப்பான்.

37. மந்திரி தசைகா லத்தில் அவன்சுய புத்தி தன்னில்
பந்தணி மாதுர் கண்டம் பாலகன் முப்பான் ரண்டில்
நந்தியின் மாதம் தன்னில் நமன்பதி செல்வா ளாகும்
தந்தியை வளர்த்த எங்கள் தயாபரி கேட்டி டாயே.

37. குருதசை காலத்தில் சுயபுக்தியிலேயே ஜாதகனுக்கு முப்பத்திரண்டாவது வயது நடைபெறுகையில் வைகாசி மாதத்தில் தாய் மரணமாவாள். விநாயகரைப் பெற்ற தாயே ! கருணைக்கடலே ! மேலும் கேளுங்கள்.

38. இரவியின் தசையில் கண்டம் கூறுவோம் தந்தைக் கேதான்
மறலியைக் காணு னுகும் மலைப்பாம்பு தசையி லேதான்
அருணனின் தூதவன் புத்தி அணுகிடும் கண்டம் ஒன்று
அறிவிப்போம் மூவைந் தாண்டில் மரணமே யாகா தாகும்.

38. ஜாதகனுக்குச் சூரிய தசை நடக்கும்போது இவனது தந்தைக்குக் கண்டம் ஒன்று நேரும். ஆனால் அது மரணத்திற்குக் காரணமாகாது. ராகுதசையில் புதபுக்தியில் ஒரு கண்டம் நேரும். அதே போல் பதினைந் தாவது வயதிலும் தந்தைக்கு ஆபத்து நேரும். அதனாலும் இறக்க மாட்டான்.

39. இருபது ஏழு ஆண்டில் யெய்திடும் தனுசு மாதம்
குறியது தப்பா தாகும் கூறுவோ மிவன் பின் ஜன்மம்
அருணையின் கீழ்ப்பா லாக அணுகிய பேரூர் தன்னில்
உறைகுவான் மறைக்கு லத்தில் உத்தமி கேட்டி டாயே.

39. இவனது இருபத்தேழாவது வயதில் மார்கழி மாதத்தில் ஜாதகனின் தந்தை மரணமாவான். இது தவறாமல் நிச்சயமாக நடைபெறும். [அப்பொழுது ஜாதகனுக்கு ராஹுதசையில் புதபுக்தி நடைபெறும் என் பதை முன் பாட்டில் அறிவித்திருக்கின்றார்]. தந்தையின் மறுசென்மத்தை யும் கூறுவோம். இவன் மறுபிறவியில் திருவண்ணாமலைக்குக் கீழ்த் திசையிலுள்ளதொரு பெரிய ஊரில் பிராம்மண குலத்தில் ஜனிப்பான்.

40. தந்தையின் ஜன்மம் தன்னில் செய்தபுண் ணியங்க ளென்ன
நொந்தபேர் தம்மைக் காத்தும் நிகர்தல வாசம் சென்றும்
நிந்தைசொல் யில்லா தாலும் விகடங்கள் பேசா தாலும்
அந்தவ ரிடத்தி லிச்சை அருமறைக் குலமு திப்பான்.

40. இப்பொழுது ரெட்டி வம்சத்தில் பிறந்த இவன் மறு பிறவியில் அந்தணர் குலத்தில் ஜனிக்கக் காரணம் என்ன என்றுப் பார்வதி கேட்க, முனிவர் பதில் கூறுகின்றார். கஷ்டப்படுகின்றவர்களுக்கு உதவி செய்த தாலும், புண்ணிய ஸ்தலங்களுக்கு யாத்திரை செய்ததாலும், யாரையும் நிந்திக்காததாலும், பிறர் மனம் புண்ணாகும்படி பரிகாச வார்த்தைகள் பேசாததாலும், தவசிகளிடம் பக்திகொண்ட பிராம்மணகுலத்தில் ஜனிப் பான்.

41. அன்பது எட்டு ஆண்டில் ஆடிமா தத்தி லேதான்
முன்பக்கம் துவா தேசி முதல்வனின் உடலம் ஏகும்
பின்ஜன்மம் வள்ளூர் தன்னில் பிறப்பனும் சைவச் சேயாய்
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே.

41. ஜாதகனுடைய மரண காலத்தைக் கூறுவோம். இவனுக்கு ஐம் பத்தெட்டாவது வயதில் ஆடி மாதத்தில் சுக்கிலபக்ஷம் துவாதசி திதியில் மரணம் ஏற்படும். இவன் மறு பிறவியில் திருவள்ளூர் க்ஷேத்திரத்தில் சைவ குலத்தில் உதிப்பான். விநாயகனைப்பெற்ற தேவியே ? மேலும் கேளுங்கள்.

42. இதுமத்தில் ஜாத கர்க்கு எய்தாதோ மார கங்கள்
மதிதசை சுயமாம் புத்தி மருவிடும் பிணி அனேகம்
அதுபலன் செய்யா தாகும் அவ்வாண்டில் கண்ட மொன்று
சதியிலா பதினா றுண்டு சங்கைய ரிருபா னைந்து.

42. பார்வதி, இது மத்தியில் ஜாதகனுக்கு மாரகங்கள் வாராவோ என்று கேட்க, முனிவர் விடை அளித்தார். சந்திரதசை சுயபுக்தியில் பல பிணிகள் தோன்றும். ஆனால் அவைகள் மாரகங்கள் ஆகா. அந்த சுயபுக்திக் குள் ஒரு பெரிய கண்டமும் ஏற்படும். அதே போல பதினாறுவது வயதிலும் இருபத்தைந்தாவது வயதிலும் கண்டங்கள் நேரும்.

43. இந்தவோர் ஆண்டி லேதான் எய்திடு சிலவாம் நோய்கள்
தென்திசை காலன் நாடாம் செப்பின ஆன்பா னெட்டும்
சந்ததம் தீர்க்க மென்றோம் தன்மனை யவன்பின் கண்டம்
தந்தியை வளர்த்த எங்கள் தயாபரி கேட்டி டாயே.

43. மேலே சொன்ன ஆண்டில் பல பிணிகளும் தோன்றும். எவ்வளவு பிணிகள் தோன்றினும், எவ்வளவு கண்டங்கள் வந்திடினும் ஐம்பத்தெட் டாவது வயது வரையில் இவனுக்கு மரணம் ஏற்படாது. இவனுடைய மரணத்திற்குப் பிறகு இவன் மனைவி மரணமடைவாள். விநாயகரைப்பெற்ற கருணைக் கடலே! மேலும் சொல்லுகிறோம்.

44. உதித்திடும் காலம் தன்னில் உத்தரம் கடைபா தத்தில்
கதிரவன் தசையி ருப்புக் கழ றுவோம் திங்க ளெட்டும்
முதல்பாகம் புகன்றோம் யாங்கள் மொழிகிறோம் விவரம் பின்னால்
அதிதியை ஆத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

44. இவன் உத்தரம் நாலாம் பாதத்தில் பிறந்திருக்கின்றான். ஆகை யால் சூரியதசையில் இருப்பு மாதங்கள் எட்டு. இது முதல் பாகமாகையால் சுருக்கமாகவே பலன்களைக் கூறினோம். இரண்டாம் பாகத்தில் விவரமாகக் கூறுவோம். அதிதி தேவியை ஆதரிக்கும் அம்பிகையே! மேலும் எங்களைக் கேட்டருள வேண்டும்.

## ஜாதகம் 31

1. கலைசனி கலையி லாகக் கனகனும் சாடி யாகப்
புலவனும் புதனும் நந்தி புகர்மனை காளி சேயும்
கன்னியில் கடக மாகச் சாற்றுவீர்பலனை என்று
மால்மலை மகளும் கேட்க வசிஷ்டரும் புகலு கின்றார்.

| கேது | | சூரியன் புதன் சுக்கிரன் | சந்திரன் சனி |
|---|---|---|---|
| குரு | இராசி சக்கரம் | | லக்கினம் |
| | | | |
| | | | ராகு செவ்வாய் |

1. நக்ஷத்திரம் திருவாதிரை. ராஹுதசையில் இருப்பு வருஷங்கள் மூன்று மாதங்கள் இரண்டு.

சந்திரன் சனி மிதுனம், குரு கும்பம், சூரியன் புதன் சுக்கிரன் விருஷபம், ராஹு செவ்வாய் கன்னி, கேது மீனம், இலக்கினம் கடகம் இக்கிரஹ நிலையின் பலன்களைச் சொல்லுவீர்களாக எனப் பார்வதி கேட்க, வசிஷ்டர் கூறுகின்றார்.

2. இந்தசேய்ப் பெண்பால் ஜன்மமிவன் தந்தை யில்லம் சொல்வேன்
தென்வாடை கீழ்மேல் வீதி........யீன வத்திரம்
சிந்துபாஞ் சாலி மாயோன் மூஷிகன் வடமே லாகும்
அத்திரி கீழ்ப்பா லாகும் அணுகிய சிறுவூ ராகும்.

2. இக்கிரஹ நிலையில் பிறந்த குழந்தை பெண். தந்தையின் வீட்டைப் பற்றிச் சொல்வேன். வீதி கிழக்கு மேற்காக அமைந்திருக்கும். வீடு தென் வரிசையில் இருக்கும். வடமேற்கில் ஒரு நதியும், திரௌபதி கோயிலும், விஷ்ணு ஆலயமும் உண்டு. வடமேற்கில் விநாயகர் ஆலயம் விளங்கிடும். கிழக்குத் திசையில் ஒரு மலை இருக்கும். அவள் பிறந்த ஊர் மிகச் சிறிய தாகும்.

3. இத்தகை அடையா ளத்துள் இயம்பிறேம் தந்தை யில்லம்
சத்தியும் செட்டி என்றேம் தாய்தந்தை துணைவர் யோகம்
பர்த்தாவின் புத்திர யோகம் பகருவோம் முன்பின் ஜன்மம்
சுத்தமாய் இந்நூல் தன்னில் செப்புவோம் தாயே கேளும்.

3. இத்தகைய அடையாளமுள்ளதோர் ஊரில் "செட்டி" சாதியில் ஜனித்திருப்பாள். இந்த நூலில் அவளுடைய தந்தை தாய் சகோதரர் பர்த்தா, புத்திரர் இவர்களைப்பற்றியும், முன்பின் ஜன்மங்களைப் பற்றியும் தெளிவாகச் சொல்லப்போகின்றோம். தாயே! கேளுங்கள்.

4. கன்னிகை ஜன்ன காலம் கனமுள தந்தைக் கேதான்
கன்னிகை யொருத்தி தீர்க்கம் கழறுவோ மவள் குணத்தைத்
தன்மனம் கபடு கொஞ்சம் சந்ததி யரையு மாகும்.
முன்கோபம் சுதராண் ரண்டு மொழிகிறேம் தீர்க்க மாக.

4. இந்தப்பெண் பிறப்பதற்கு முன் ஒரு கன்னிகை பிறந்திருக்கிறாள். அவளும் தீர்க்கமாக வாழ்வாள். அவளுடைய குணத்தைக் கூறுகின்றோம். கொஞ்சம் கபடமுள்ளவள். அவளுக்குக் கர்ப்பச் சேதம் ஏற்படும். முன் கோபி. இரண்டு பிள்ளைகள் பிறப்பார்கள். அவ்விருவரும் நீண்டகாலம் வாழ்வார்கள்.

5. அவர்களும் தன்னி லத்தில் அனேகநாள் வாச மெய்தித்
தபசிபோல் வேறாய்ச் செல்வர் சல்லிய பாதை முன்னல்
நவனிக ளதிகம் சேர்ப்பர் நாடாத சல்யம் பின்னல்
பவமன மில்லா வாழ்வர் பகருவோம் பின்பால் சேதி.

5. அவர்கள் பாட்டனார் வீட்டில் அநேகநாட்கள் வாசம் செய்வார்கள். பிறகு தவசிகளைப் போல, பந்துக்கள் ஆதரவின்றித் தனித்து வாழ்வார்கள். பால்யத்தில் அவர்களுக்குக் கடன் உபத்திரவம் இருக்கும். பிற்காலத்தில் அது நீங்கும். பூமிகளையும் சேர்ப்பர். ஒருவித கெடுதலுமின்றி வாழ்வர். பின் பகுதியில் அவர்களைப்பற்றிய செய்திகளைக் கூறப்போகின்றோம்.

6. மாதுவின் துணையாண் பக்கல் மருவியே வாழ்வா ளாகும்
ஓதுவேன் பின்பால் சேதி உரைக்கிறேம் பிதா குணத்தை
நீதிமான் பொறுமை சாலி நீலமே கத்தா னாகும்
காதியு முடைய னாகும் கடவுளர் பக்தி பூண்பன்.

6. அவள் [ஜாதகியின் மூத்த சகோதரி] தாயின் சகோதரனுடைய புத்திரன் வீட்டில் வாழ்வாள். அவனைப்பற்றிய வரலாறுகளை இரண்டாம் பாகத்தில் சொல்லப்போகின்றோம். தந்தையின் குணத்தைச் சொல்லுவேன். தீய குணங்கள் இல்லாதவன். பொறுமைக் குணமுள்ளவன். நீருண்ட மேகம் போல் கருத்த மேனியான். கியாதி பெற்றவனாகவும் இருப்பான். கடவுளின் மூர்த்திகளிடத்தில் பக்திபூண்டவன்.

7. நல்லவன் நல்ல வர்க்கு வண்டர்க்கு மிண்ட னுவன்
எல்லைக ளதிகம் சேர்ப்பன் ஏவலா ளுடைய னுகும்
சல்லிய மில்லா னுகும் தந்தையார்க் கிதத்தைப் போக்கும்
புல்லிய புத்தி யில்லான் புகழ்ந்தோரை ஆத ரிப்பன்.

7. நல்லவர்களுக்கு நல்லவனுக இருப்பான். துஷ்டர்களுக்குத் துஷ்டனுக ஆவான். அதிக பூமிகளைச் சேர்ப்பான். அநேக பணியாட்களை நியமிப்பான். கடன் இல்லாதவன். ஆனால் பிதுரார்ஜித சொத்து இவனிடம் இராது. அல்ப புத்தி இல்லாதவன். தன்னைக் கொண்டாடியவர்களையே ஆதரிப்பான். [தன் புகழைக் கேட்பதில் விருப்பமுள்ளவன் என்றும் கருதலாம்.]

8. சொல்லிடு யூர்தி யெல்லாம் சுத்தமாம் சொகுசு பூண்பன்
வெல்லுவான் எதிரி தம்மை வீண்வழக் கோரம் சொல்லான்
அல்லல்க ளடையா னுகும் ஆவுகள் பணைவர் விருத்தி
வல்விக்கு இஷ்ட னுகும் வாக்கதைக் காப்பா னுகும்.

8. வண்டி முதலிய வாகன வசதிகள் பெற்றவன். சுத்தமானவன். கஷ்டங்களைச் சகிக்காதவன், [உடலைச் சிரமப்படுத்த இஷ்டமில்லாதவன்] எதிரிகளை ஜயிப்பான். வீண் சண்டைகளில் சிறிதும் ஈடுபடாதவன். வாழ்க்கையில் இடையூறுகள் இல்லாதவன். பசுக்களையும் எருதுகளையும் அபிவிருத்தி செய்வான். மனைவியினிடம் மிக்க அன்புகொண்டவன். தான் சொன்ன சொற்களைக் காப்பாற்றுவான்.

9. தந்தைநாளூரை விட்டுச் சாடுவான் கீழ்பால் தன்னில்
தந்தையோ டொத்துச் செல்வன் சகலர்க்கு நல்லோ னுவன்
தந்தநோய் உடைய னுகும் சாதமும் குறவு ருதான்
தன்பந்து மதிக்க உய்வன் சார்ந்திடும் மாமி ரண்டு

9. இவனுடைய தந்தை வாழ்ந்த ஊரைவிட்டு அதற்குக் கீழ்த்திசையிலுள்ளதோர் ஊருக்குத் தந்தையுடனேயே சென்று வசிப்பான். தந்தநோய் (பல்வலி முதலியன) இவனுக்கு வரும். ஏராள ஆகாரப்பொருள் உடையவன். தன் உறவினர் மதிக்க வாழ்வன். இவனுக்கு மாமிமார் இருவர். [இவனுக்கு இரு மனைவிகள் என்பது கருத்து.]

10. மாலவன் நாமம் கொண்டான் வளவுமே சித்திரம் செய்வன்
சீலம்போல் வெளிம யக்கன் ஜனஉப காரி யாகும்
ஞாலங்கள் மேன்மேல் சேர்ப்பன் நற்பந்தை ஆத ரிப்பன்
ஆலம்போல் பகைவ ருக்கு அவனுமே கருட னுவன்.

10. இவன் திருமாலின் பெயரைக் கொண்டவன். அழகிய வீடு கட்டுவான். நற்சீலமுள்ளவன் போல் தோற்றமளிப்பான். மக்களுக்குத் தேவையான உதவியையும் செய்வான். பூமிகளை மேன்மேலும் சம்பாதித்து அபிவிருத்திசெய்வான். தன் உறவினர்களை ஆதரிப்பான். எதிரிகளாகிய சர்ப்பங்களுக்கு அவன் கருடன். [இவன் பெயரைக் கேட்டால் எதிரிகள் பயமடைந்து அடங்குவார்கள் என்பது கருத்து.]

11. சொன்னஇக் குணத்தா னுக்குத் தோகைய ரிருவர் தம்மில்
பின்மனை யாளுக் கின்னாள் பிறப்பாளாம் என்று சொல்வோம்
அன்னவள் குணத்தைச் சொல்வேன் அரிமனை யொப்ப தாகும்
தன்மனம் கபடு மில்லாள் தானிரு நிறத்தா ளாகும்.

11. இத்தகைய குணமுள்ளவனுக்கு இரு மனைவியர். இவள் இளைய மனைவிக்குப் பிறந்தவள். [மூத்த மனைவிக்குப் பிறந்தப் பெண்ணைப்பற்றி 4, 5, 6-ஆவது பாட்டுக்களில் சொல்லியிருக்கின்றார்.] இந்த ஜாதகியின் குணத்தைச் சொல்வேன். இவள் மஹாலக்ஷ்மி போன்றவள். மனத்தில் கபட மில்லாதவள். கருத்த மேனியாள்.

12. கல்விமான் கடவுள் பக்தி கண்முகம் வசிய முண்டு
இல்லையென் றுரைக்க மாட்டாள் இடர்செய்யாள் யாவ ருக்கும்
சொல்லதைக் காப்ப ளாகும் துன்பங்க ளெவர்க்கு மெண்ணாள்
நல்லவ ளாகி வாழ்வள் நன்மனம் கபடு மில்லாள.

12. கல்வியறிவு உடையவள். கடவுள் பக்தி பூண்டவள். முகத்தில் பொலிவு உடையவள். யாசிப்பவர்களுக்கு இல்லை என்று சொல்லாதவள். பிறருக்கு இடையூறுகளைச் செய்யாள். தான் சொன்ன வார்த்தைப்படியே நடப்பாள். யாருக்கும் தீமைகளை நெஞ்சிலும் எண்ணாதவள். எல்லோருக்கும் நல்லவளாக வாழ்வாள். கள்ளமில்லாதவள்.

13. தீரமில் லாதா ளாகும் சிறுத்தோர்க்கு உதவி செய்வள்
காரிய சமர்த்த ளாகும் கட்டுரை பகரா ளாகும்
மாரன் தன் மனத்துக் கேத்தோள் வருவோரை ஆத ரிப்பள்
பாரினில் வறுமை காணாள் பால்பாக்கிய முடைய ளாமே.

13. தைரிய மில்லாதவள். தன்னைப் புகழ்ந்தவர்களுக்கே, மனமிளகி உதவி புரிவாள். காரியம் செய்வதில் கெட்டிக்காரி. அடுக்கு வார்த்தைகளைப் பேச விருப்பமில்லாதவள். தன்கணவனுடைய உள்ளமறிந்து அதன்படி நடப்பாள். வரும் விருந்தாளிகளை ஆதரிப்பாள். வறுமையினால் கஷ்டப்படாதவள். அவளுக்குப் பால்பாக்கியம் உண்டு.

14. தன்துணை கன்னி ஒன்று சாற்றுவோம் ஆண்பா லொன்று
அன்னவர் தீர்க்க மென்றேம் அவர்பலன் பின்பால் சொல்வேன்
முன்தாயொன்றென்று சொன்னீர் மொழிகுவீர் அவர்கட்குப் (புத்திரர்
தன்சுதர் காணா ளாகும் சண்டன்தன் பதிக்குச் செல்வாள்.

14. இவளுக்குச் சொந்த சகோதரி ஒருத்தி. சகோதரன் ஒருவன். அவ்விருவரும் தீர்க்காயுளுடன் வாழ்வர். அவர்களுடைய பலன்களைப் பின் பகுதியில் சொல்வேன். மூத்த அன்னைக்கு ஒரு மகள் உண்டு என்று சொன்னீர்கள். அந்த மூத்த அன்னைக்கு வேறுபிள்ளைகள் உண்டோ ? சொல்லுங்கள் எனப் பார்வதி கேட்க முனிவர் பதில் கூறுகின்றார். அவளுக்கு வேறு சந்ததி கிடையாது. பிள்ளை முகத்தைப் பாராதவளாகவே யமனுலகம் சென்றாள்.

15. மாதுரு குணத்தைச் சொல்வேன் மாந்தளிர் மேனி யாகும்
ஓதுவாள் சுகமாய் வார்த்தை உள்மனம் கபடு மில்லாள்
பாதக மனமில் லாதாள் பர்த்தாவின் மனதுக் கேத்தோள்
தீதுகள் ஒருவர்க் கெண்ணுள் தேங்கினோர்க்குத் தாக மீவள்.

15. இனி தாயின் குணத்தைக் கூறுவேன் .மாந்தளிர் போன்ற மேனி படைத்தவள். சுகமாகப் பேசுவாள். கபடமில்லாதவள். பிறருக்குத் தீங்கை நினைக்காதவள். பர்த்தாவின் மனத்திற்கு ஏற்றபடி நடந்துகொள்வாள். ஒருவருக்கும் கெடுதலைச் செய்யாதவள். தன் வீட்டை அடைந்தவர்களுக்கு அன்னம், தண்ணீர் அளிப்பாள்.

16. சுகமுள வார்த்தை சொல்வள் சொல்லுமுன் கோபம் கொஞ்சம்
பகையதை மனத்தில் வையாள் பஞ்சைமே லிரக்கம் மாகும்
உகமையாய்ப் பேசு வாளாம் உறுதியில் லாத நெஞ்சம்
தகமையாய்ப் பித்தச் சூடு சார்ந்திடு மென்று சொல்வோம்.

16. நல்ல வார்த்தைகளையே பேசுவாள். சிறிது முன்கோபம் உண்டு. ஏதேனுமொரு காரணத்தினால் பகைமை ஏற்படினும் அதை நீடித்தகாலம் மனததில் வைத்துக்கொள்ளாதவள். எளியவர்களிடம் கருணை கொண்டவள். கேட்பவர்கள் மனம் உகக்கும் வகையில் பேசுவாள். நெஞ்சில் உறுதி இல்லாதவள். இவளது சரீரத்தில் பித்தச் சூடு தங்கி இருக்கும்.

17. இல்லமும் வடபா லாகும் இவன்துணை ஆண்பால் ரண்டு
வல்லியு மொருத்தி யென்றேமவர்பலன் பின்பால் சொல்வேன்
தல்லியின் பூர்வம் சொல்வேன் தண்டகா வனத்தி லேதான்
புல்கினாள் கவரைச் சேயாப் புத்திர ரதிக மூண்டாய் ;

17. இவள் பிறந்த வீடு வடதிசையில் உள்ளது. இவளுக்குச் சகோதரர் இருவர். சகோதரி ஒருத்தி. அம் மூவரின் பலன்களையும் பின்பாகத்தில் சொல்லப்போகின்றேன். தாயின் பூர்வ ஜன்மத்தைக் கூறுவேன். முற் பிறவியில் இவள் தண்டகவனததில் "கவரை நாயக்கர்" வமிசத்தில் பிறந்திருந்தாள். அதிகப் புத்திரர்களைப் பெற்றுத் ;

18. சுகமுள குடும்பி யாகிச் சுந்தரி வாழ்ந்து மேதான்
பகையான கால னூடு பரவியே பிரமன் லக்கம்
தகைமையா யுதித்தா ளென்றேம் சற்பாத்திரி வறுமை காணாள்
மிகுதவம் புரியு மெங்கள் வித்தகி கேட்டி டாயே.

18. பெரிய குடும்பியாகி, சுகமாக வாழ்ந்து, அந்திய காலத்தில் காலன் நாடு சென்றாள். இவளைப் பிறகு பிரம்மதேவன் இங்குப் படைத்தான். அவள்தான் இக்கடக லக்கின மகளுக்குத் தாயாக வாய்த்திருக்கின்றாள். மதிப்பிற்குத் தக்கவள். வறுமை இல்லாதவள். அருமையான மிகு தவத்தைச் செய்யும் தேவியே! மேலும் கேளுங்கள்,

19. தந்தையின் பூர்வம் தன்னைச் சாற்றுவோம் சிறுபாக் கத்தில்
பந்தமாய் வன்னிய சேயாய்ப் பிறந்துமே கிருஷி செய்து
அந்தவன் மனைவி மைந்தர் அணுகியே வாழு நாளில்
நிந்தைகள வாது செய்து கழறுவோம் தாயே கேளும்.

19. இவளது தகப்பன் பூர்வஜன்மத்தைக் கூறுவேன். இவன் முற்பிறவியில் சிறுபாக்கம் என்ற கிராமத்தில் வன்னிய குலத்தில் உதித்து விவசாயம் செய்து ஜீவித்தான். மனைவி மக்களுடன் சுகமாக வாழும் நாளில், இவனுக்கேற்பட்ட அவதூற்றையும், இவன் வேண்டுமென்றே செய்த வஞ்சனையையும் சொல்லுகின்றோம். தாயே! கேளுங்கள்.

20. விதவையைப் போகம் துய்த்து வித்தகி க்ருவு தங்க
அதம்செய்தான் பண்டி தத்தால் அம்மாது மரண மானாள்
இதுஒரு தோஷ மாச்சு இயம்புவோம் வேறு ஒன்று
சதிசெய்தான் துணைவன் பாகம் தராமலே மோசம் செய்தான்.

20. இவன் முன்பிறவியில் கணவனற்ற ஒரு கைம்பெண்ணுடன் கள்ள நட்புக் கொண்டிருந்தான். அவளுக்கேற்பட்ட கருவை ஔஷதங்களால் அழித்தான். ஆதலால் அவளும் இறந்தாள். இதுவொரு தோஷமிருக்க, மற்றொரு பாவமும் ஏற்பட்டது. தன் சகோதரனுக்குச் சேரவேண்டிய பாகத்தைத் தராமல் ஏமாற்றினான்.

21. பின்துணை வருத்த முற்றுப் புகன்றசா பத்தைக் கேண்மோ
பொன்கடன் தந்த பாவி பிறக்கும்பின் ஜன்மம் தன்னில்
அண்ணன்தம் பிகளு மின்றி அணுகிய மனைவி மாண்டு
தன்னிலே வாழ்வா யென்ன சதகால மென்று சொன்னான்.

21. ஆதலால் இவன் தம்பி வருத்தமடைந்து சொன்ன சாபத்தைக் கேளுங்கள். எனது செல்வத்தை வஞ்சனையால் அபகரித்த கடங்காரப் பாவி! நீ மறு பிறவியில் சகோதரரின்றியும் மனைவியைப் பறி கொடுத்தும் உயிர் வாழ்வாய் என்றான்.

22. அதுசாபம் நேர்ந்த தென்றோம் அச்சென்மம் வறுமை காணான்
மதிபூண்டோன் பசனை செய்து சண்டன்தன் பதிக்குச் சென்று
இதுகுல முதித்தா னாகும் முப்பதிடு ...... காவின் தோஷம்
அதிபதியி ரண்டே யாகும் வருந்துணை சாபத் தாலே.

22. அந்தச் சாபம் இவனைப் பிடித்துக் கொண்டது. அச் சென்மத்தின் கடைசியில் சிவபிரானைப் பஜனை செய்து வந்தான். காலக்கிரமத்தில் இறந்தான். பிறகு இக் குலத்தில் பிறந்திருக்கின்றான். முன் பிறவியில் ஏற்பட்ட பாவத்தினாலும் சாபத்தினாலும் இவனுக்கு இச் சென்மத்தில் சகோதர சகோதரிகளும் இல்லை. மூத்த மனைவி இறக்க, மறு மனைவியும் ஏற்பட்டாள்.

23. அண்ணன்தம் பிகளும் தோஷம் அறைகுவார் பராசர் தாமும்
கண்ணிய குடும்ப மெவ்வாறு சேதியைப் புகலு மென்ன
திண்ணமாய் முன்ஜன் மத்தில் திருமாலின் பூசை யாலே
வண்ணமாய்க் குடும்ப மேற்பன் அம்பிகை யாளே கேளாய்.

**23.** ஆகையால் இவனுக்கு அண்ணனும் இல்லை. தம்பியும் இல்லை. முன் ஜன்மத்தில் பாவத்தைச் செய்த இவனுடைய குடும்பம் இப்பிறவியில் எவ்வாறு சிறிது செல்வம் உள்ளதாக நிலைத்து இருக்கின்றது ? என்று பராசரர் கேட்க, வசிஷ்டர் பதிலளிக்கின்றார். முற் பிறவியில் திருமாலுக்குப் பக்தி சிரத்தையுடன் விடாது பூசை செய்து வந்தமையால், பாவங்களின் பலனை இவன் அனுபவித்துக் கொண்டிருப்பினும் குடும்பத்திற்குக் குறைவு ஏற்படாமல் இருக்கின்றது.

**24.** ஜாதகி மணத்தின் காலம் சாற்றுவோம் பதினோ ராண்டுள்
காதலன் உள்ளூர் தன்னில் கலப்பனும் குணத்தைச் சொல்வன்
பாதக மனமில் லாதான் பகருவான் சிலேடை வார்த்தை
தீதுகள் ஒருவர்க் கெண்ணான் தீரனு மூகை சாலி.

**24.** ஜாதகியின் விவாஹ காலத்தைக்கூறுவோம். இவளுக்குப் பதினோராவது ஆண்டுக்குள் மணம் நடைபெறும். மணமகன் சொந்த ஊரிலேயே ஜனித்திருப்பான். அவனுடைய குணங்களையும் சொல்லுகின்றோம். மிருதுவான மனம் படைத்தவன். சிலேடை வார்த்தைகளைப் பேசுவான். யாருக்கும் தீமைகளை எண்ணாதவன். தைரியம் உள்ளவன். சிறந்த மதி யூகியாகவும் இருப்பான்.

**25.** இருநிறம் உணச்சல் தேகி இடரென்றோர்க் குதவி செய்வன்
வருவனும் தனசுமூல நாளினி லுதிப்பா னாகும்
திருகாகு மில்லம் தானும் சீலனாய் வாழ்வன் என்றோம்
வரும்துணை ஆண்பாலொன்று வரைகிறோம் தீர்க்க மாக.

**25.** கருத்த மேனியன். சரீரம் மெலிந்திருக்கும். வாழ்க்கையில் இடர்ப்பட்டவர்களுக்கு உபகாரம் செய்வான். அவன தனுர்லக்கினத்தில் மூல நக்ஷத்திரத்தில் பிறந்தவன். சீலமுள்ளவனாக வாழ்வான். சொந்த வீடு இவனை விட்டு நீங்கும். அவனுக்கு ஒரு சகோதரன் உண்டு. அவன் தீர்க்காயுளுடன வாழ்வான்.

**26.** பெரிதான குடும்பம் பின்னால் பெறுவனு மென்று சொல்வேன்
அரிவைக்குச் சுதராண் ரண்டு அம்பிகை அவ்வாறு தீர்க்கம்
திருகிலாத் தீர்க்க மெய்தும் சேயர் யோகங்கள் சொல்வேன்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

**26.** இவன் (கணவன்) பிற்காலத்தில் பெரியகுடும்பம் உடையவனாக ஆவான். இந்தத் தம்பதிகளுக்கு இரண்டு பிள்ளைகளும் இரண்டு பெண்களும் பிறப்பார்கள். இந்நால்வரும் ஸ்திரமாக வாழ்வர். அவர்கள் மிக்க அதிருஷ்ட முள்ளவர்களாகவும் இருப்பார்கள். விநாயகரைப்பெற்ற தாயே ! மேலும் கேட்பீராக.

**27.** மாதுவின் பூர்வம் சொல்வேன் வடதிசை தணிகை தன்னில்
சூதிலாக் கோகு லத்தில் ஜனித்துமே வறுமை யின்றிப்
பாதக மனங்க ளின்றிப் பஞ்சைக்குத் தாக மீந்து
வேதனை யில்லா தாகி மேவினன் கால னாடு.

**27.** மாதாவின் முன் பிறவியைக் கூறுவேன். முன்ஜன்மத்தில் இவள் வடதிசையிலுள்ள திருத்தணிகை க்ஷேத்திரத்தில் கள்ளம் கபட மற்ற இடையர் ஜாதியில் ஜனித்து வறுமையின்றி வாழ்ந்தாள். மென்மை யான உள்ளம் உடையவளாக இருந்து, எளியவர்களுக்கு அன்னமும் தண்ணீரும் அளித்தாள். கவலையற்றவளாக வெகுகாலம் வாழ்ந்து கால னுடைய நாட்டிற்குச் சென்றாள்.

**28.** சிரநான்கோன் வரையப் பட்டு ஜனித்தவ ளென்று சொல்வோம்
அரிவையும் வறுமை காணாள் அதிகமாய்ப் பணிகள் சேர்ப்பள்
பொருளது பெருக்கம் செய்வள் புண்ணிய மனத்தா ளாகும்
அறந்தனை வளர்க்கு மெங்கள் ஆத்துமத் தாயே கேளாய்.

**28.** பிரம நான்குமுகமுள்ள கடவுளால் இங்குப் படைக்கப்பட்டிருக் கிறாள். அவள்தான் இக்கடகலக்கின மகளுக்குத் தாய். இவள் இச் சென் மத்திலும் வறுமை இல்லாதவள். அதிக ஆபரணங்களை அடைவாள். இவளுடைய வீட்டில் எல்லாப்பொருள்களும் மேன்மேலும் பெருகும். புனிதமனம் படைத்தவள். தருமத்தை வளர்க்கும் எங்கள் உயிருக்கு யிராய் நிற்கும் தாயே ! மேலும் கேட்பீராக.

**29.** இருபது ஒன்ப தாண்டி லியம்புவோம் தந்தை கண்டம்
வரும்ஜன்மம் துவாரகை தன்னில் வருவனும் கோகு லத்தில்
குறுமுனி புகலு கின்றார் குமரனின் சென்மம் தன்னில்
மருவின புண்ணிய மென்ன மறிவிப்பீர் முனியே நீர் தாம்.

**29.** ஜாதகிக்கு இருபத்தொன்பதாவது வயது நடக்கும் போது தந்தை மரணமடைவான். அவன் மறுஜன்மத்தில் துவாரகையில் யாதவ குலத்தில் பிறப்பான். இவன் துவாரகையில் பிறப்பதற்கான புண்ணியம் என்ன செய்திருக்கின்றான் என, அகஸ்த்திய முனிவர் வினவினார்.

**30.** அறமதி லிச்சை யாயும் யாவர்க்கு நல்லோ னாயும்
வருவோரை ஆத ரித்தும் வாக்கதைக் காத்த லாலும்
சிறியோரா பத்தைக் கார்த்தும் தீரமாய் வாழ்வ தாலே
உறைவனும் துவரை தன்னில் உத்தமி கேட்டி டாயே.

**30.** வசிஷ்டர் காரணங்களை விளக்கிக் கூறுகின்றார். தருமம் செய்வதில் பேரவாக்கொண்டிருந்தான். ஒருவருடைய மனமும் புண்படாதபடி நல்லவனாக வாழ்ந்தான். தன் வீட்டிற்கு வந்தவர்களை நன்கு உபசரித்தான். தனது வார்த்தையைக் காப்பாற்றினான். [உண்மையே பேசி வந்தான் என்பது கருத்து.] சிறியோர்களுக்கேற்பட்ட ஆபத்தை நீக்கி அவர்களை ரக்ஷித்தான். புலனடக்கத்துடனும் வாழ்ந்தான். இக்காரணங்களால் பாரத பூமியில் மஹா க்ஷேத்திரமான துவாரகையில் பிறப்பான். உத்தமியே ! மேலும் கேளுங்கள்.

31. எண்ணஞ்சு நாலு ஆண்டி லியம்புவோ மன்னே கண்டம்
திண்ணமாய் அன்பா ளுலில் செப்புவோம் வரனும் கண்டம்
வண்ணமாய் ஜாத கிக்கு அன்பது மூன்ப தாண்டில்
அண்ணலின் மகர மாதம் அறைகிறோம் கண்டம் தானே.

31. ஜாதகிக்கு நாற்பத்து நாலாவது வயதில் தாய் மரணமடைவாள். இவளுடைய ஐம்பத்து நான்காது வயதில் கணவன் மரணமடைவான். ஜாதகி தனது ஐம்பத்தொன்பதாம் வயதில் தைமாதத்தில் மரணமடைவாள்.

32. பின்ஜன்மம் காஞ்சி தன்னில் பிறப்பளாம் சைவச் சேயாய்ப்
பொன்பொரு ளுடைய ளாகிப் பூமியில் வாழ்வா ளாகும்
கன்னிகை ஜனன காலம் கரும்பாம்பு தசைமூன் றுண்டும்
தன்னுடன் திங்கள் ரண்டும் சாற்றினேம் பூர்வ பாகம்.

32. அடுத்து வரும் பிறவியில் காஞ்யில் சைவ குலத்தில் பிறப்பாள். தங்கம் வெள்ளி வஸ்திரம் வீடு முதலியவைகளை அடைந்து சுகமாக வாழ்வாள். இவள் பிறக்கும்போது ராஹு தசையில் இருப்பு வருஷங்கள் மூன்று. மாதங்கள் இரண்டு.

## ஜாதகம் 32

1. குருசனி சேல தாக குசன்புதன் மேரு வாகக்
பரிதியு மானில் தங்கப் பார்க்கவன் சாடி யாக
அரியினில் மதியும் நிற்க அலவனும் ஜன்மம் கேது
உரிமையாய் நவக்கோளிவ்வா றுறைந்ததால் பலன்சொல் வீரே.

| | | | |
|---|---|---|---|
| குரு சனி | | | |
| சுக்கிரன் | இராசி சக்கரம் | | லக்கினம் கேது |
| சூரியன் ராகு | | | சந்திரன் |
| செவ்வாய் புதன் | | | |

1. நக்ஷத்திரம் மகம். கேது தசை இருப்பு வருஷம் ஒன்று, மாதங்கள் ஆறு, நாட்கள் பத்து.

குரு சனி , மீனம் ; செவ்வாய் புதன் தனுஸ் ; சூரியன் மகரம்; சுக்கிரன் கும்பம ; சந்திரன் சிம்மம் ; கேது கடகம் ; ராகு மகரம் ; இலக்கினம் கடகம். இவ்வாறு நவக்கிரஹ நிலையின் பலன்களைச் சொல்லுவீர்களாக எனப் பார்வதி தேவி கேட்கலுற்றாள்.

2. உமையவள் கேட்கும் போது உரைக்கிறார் புயண்டர் தாமும்
அமைந்திடு மண்பால் ஜன்மம் அறைகிறோம் கீழ்மேல் வீதி
நவமதில் உத்தர நோக்கம் நாட்டுவோம் மேற்கில் சோலை
பவமுள சூழி உண்டு பகருவோம் தெற்கி லேதான்.

2. உமாதேவி இவ்வாறு கேட்டவுடன் புயண்டர் பலன்களைச் சொல்லுகின்றார். இக்கிரஹ நிலையில் பிறந்த குழந்தை ஆண். வீதி கிழக்கு மேற்காக அமைந்திருக்கும். வீடு வடக்கு நோக்கி இருக்கும். மேற்குத் திசையில் ஒரு சோலையுண்டு. தென் திசையில் ஒரு நீர் நிலையும் இருக்கும்.

3. ஓடையும் வயல்க ளுண்டு உத்தரம் ஆழி காணும்
தேடுதற் கரிய ஈசன் க்ஷேத்திரம் முசல்மான் உண்டு
நாடிய கீழக்கி லேதான் நாற்சந்தி கணேசன் கோஷ்டம்
கூடிய அக்கினி தன்னில் குறைதலை மாரி யுண்டே.

3. வட திசையில் நீர் ஓடையும் வயல்களும், நீர் நிலையும் உண்டு. மேலும் அத்திசையிலேயே பரமசிவன் கோயிலும் முசல்மான்களின் மசூதியும் இருக்கும். கீழ்த் திசையில் நான்கு தெருக்களின் சந்திப்பும் விநாயகரது ஆலயமுமுண்டு. தென் கிழக்கில் மாரியம்மன் கோயில் த்ங்கும்.

4. இதுவலால் சமவூர் தன்னில் இலகிய கூரை வீட்டில்
அதிபனு முதிப்பா னென்றேம் அவன்தந்தை தாயின் யோகம்
சதியிலாத் துணைவர் புத்திரர் தன்மனை யாளும் யோகம்
கதியிலா முன்பின் ஜன்மம் சாற்றுவோ மிந்நூல் தன்னில்.

4. இவைகளைத் தவிர வேறு ஆலயங்களும் அவ்வூரில் உண்டு. இத் தகைய அடையாள முள்ள ஒரு நடுத்தரமான ஊரில் கூறை வீட்டில் இக் கடகலக்கின மகன் பிறந்திருக்கிறுன். நாம், அவனுடைய தாய் தந்தை சகோதரர் மனைவி குழந்தை இவர்களைப்பற்றியும் முன்பின் ஜன்மங் களையும் இந்நூலில் சொல்லப்போகின்றேம்.

5. தந்தையின் குணத்தை யாங்கள் சாற்றுவோம் மால்நி றத்தான்
சிந்தையில் கட்டுக் கொஞ்சம் சீலனும் ஊக சாலி
பந்தமாய் ஒடிச்சல் தேகி பாரினில் செட்டுச் செய்வன்
வந்தவர்க் கன்ன மீவன் மறுமொழி அதிகம் கூறுவன்.

5. முதலில் தந்தையின் குணத்தைக் கூறுகின்றேம். கருத்த நிற முள்ளவன். மனத்தில் கபடமுண்டு. நற்சீலமுள்ளவன். மதியூகமுண்டு. அவனது உடல் மெலிந்திருக்கும். வியாபாரம் செய்து ஜீவிப்பான். வந்தவர்களுக்கு அன்னமளித்து உபசாரம் செய்வான். எதையும் ஆக்ஷேபித்துப் பேசும் இயல்புள்ளவன்.

6. நடையது சொகுசு முள்ளான் நன்முக வடிவு முள்ளான்
மடையரை மனத்தி லெண்ணுன் வஞ்சனை மனத்த னாகும்
விடவாக்குச் சிவந்த கண்ணன் மெல்லியர் மோக வானும்
தடபுடல் செய்கை யுள்ளான் சத்திய விருப்பம் கொள்வன்.

6. அவனது நடை அழகியதாகும். வதனத்தில் பிறரை வசியம் செய்யும் பொலிவு உள்ளவன். அறிவிலிகளிடம் சிறிதும் தொடர்பு வைத்துக்கொள்ள மாட்டான். வஞ்சக மனப்பான்மை படைத்தவன். அவன் கூறும் தீங்கு வார்த்தைகள் பலிக்கும். சிவந்த கண்ணன். பெண் களிடம் மோகம் கொண்டவன். ஆடம்பரச் செய்கையும் உண்டு. சத்தியம் சொல்வதில் விருப்பமுள்ளவன்.

7. காரக தேக முள்ளான் கல்வியு சமம தாகும்
பாரிய நிருவ ராகும் பலவித வார்த்தை யுள்ளான்
சீரிய குணத்தா னாகும் தினம்சுகி புசிப்பு முள்ளான்
தேரிய வழியு முள்ளான் சிறுத்தவர்க் குதவி செய்வன்.

7. காரகதேகம் வாய்ந்தவன். உலக விவகாரங்களுக்குத் தேவையான கல்வியறிவு படைத்தவன். இவனுக்கு மனைவிமார் இருவர். பலவித வார்த்தைகளைப் பேசுவான். சீரிய குணங்கள் நிறைந்தவன். தினமும் சௌக்கியங்களை அனுபவிப்பான். எல்லோரும் அனுஷ்டித்த சம்பிரதாயத்தையே இவனும் அனுஷ்டிப்பான். [பழைய பழக்க வழக்கங்களிலிருந்து பிறழாதவன் என்பது கருத்து.] எளியவர்க்கு உபகாரம் செய்வான்.

8. இவனுடைத் துணைவர் தம்மை யினசக்கிறேம் மூவராகும்
அவனிபால் பெண்பால் ரண்டு அரிட்டமாம் ஆண்பா லொன்று
நவனியில் தீர்க்க மாகும் நாயக னிளையோ னாகும்
சிவனிட பாகத் தாளே செல்வியே மேலுங் கேளே.

8. இவனுடைய சகோதர பாவத்தைப்பற்றிக் கூறுகின்றோம். இவனுக்கு இரு சகோதரிகளும் ஒரு சகோதரனும் உண்டு. இம் மூவரும் நீண்ட காலம் வாழ்வார்கள். இவன் அவர்களுக்கு இளையவன். சிவபிரானின் இடது பாகத்தைப் பெற்ற செல்வியே ! மேலும் கேளுங்கள்.

9. இப்படி யிருக்குந் தந்தை யிவனுக்குத் தாரம் ரண்டில்
ஒப்புட னிளையா ளுக்கு உதித்தவ னிரண்டாம் ஜன்மம்
செப்புவோ மிவன்கு ணத்தைத் திருமகள் வாச முள்ளான்
தப்பித மெண்ணா நெஞ்சன் தைரிய மனத்தா னாகும்.

9. இவ்வாறு குணம் வாய்ந்த தந்தைக்கு இரு மனைவிகள் உண்டு. அவர்களில் இளைய மனைவிக்கு இரண்டாம் குழந்தையாக இக் கடக லக்கின மகன் பிறந்திருக்கிறான். இனி ஜாதகனுடைய குணத்தைக் கூறுவோம். லக்ஷ்மீ வாசம் பொருந்தியவன். யாருக்கும் தீங்கை எண்ணாமல் நட்புடன் இருப்பான். தைரியம் படைத்தவன்.

10. மாநிற முடைய தேகம் மர்மவான் கல்வி யுள்ளான்
ஈனமாம் குணத்த னாகும் எதிரியை வசியம் செய்வன்
தேன்மொழி கூறு வானும் சேயினில் அதிகம் சேர்ப்பன்
ஆனதோர் துணைவர் தீர்க்கம் ஆள்கார ருடைய னாமே.

10. மாநிற முள்ளவன். பிறர் அறியாதபடி வேலைகளைச் செய்வான். சில கீழான குணங்களும் இருக்கும். எதிரிகளைத் தன் வசப் படுத்துவான். தேன் போன்று இனிய மொழிகளையே பேசுவான். இவனுடைய பாலிய பருவத்தில் அதிக சொத்துக்கள் சேரும். இவனுடைய சகோதர சகோதரிகள் நீண்ட காலம் வாழ்வார்கள். இவனுக்குப் பல பணியாட்களும் இருப்பார்கள்.

11. தனதானிய விருத்தி யுள்ளான் சகலரு முறவு கொள்வன்
இனங்களு மெச்ச வாழ்வன் இவன்தந்தை ஆஸ்தி யில்லான்
மணங்களு மிரண்டு முள்ளான் மாதுல னதிக முள்ளான்
ஜனமுடன் வாழ்வா னாகும் காதலி மேலுங் கேளே.

11. இவன் வீட்டில் தன தானியங்கள் விருத்தியடையும். எல்லோரிடமும் நடபுக் கொள்வான். தன் ஜாதியர் மதிக்க வொழுக்கை நடத்துவான். இவனுக்குத் தந்தை சொத்து இராது. இவனுக்கும் இரு மணங்கள் நடைபெறும். அம்மான்மார்கள் அநேகர். உலகத்தோர் கௌரவிக்கும் வகையில் ஜீவிப்பான்.

12. சித்திர வீடு செய்வன் தபசிக ளுறவு கொள்வன்
நித்தியஞ் சுகிபு சிப்பன் நிதானமாய் வார்த்தை கூறுவன்
புத்திமான் சகடு முள்ளான் பூஷணம் சேர்ப்பா னாகும்
வித்தகன் நெய்பா லிஷ்டன் விருத்தியாம் கோவு தானே.

12. அழகிய வீடு கட்டுவான். தபசிகளுடன் சிரத்தையோடு தொடர்பு உள்ளவன். எப்பொழுதும் சுகங்களை நுகர்வான். மிக்க விழிப்புடன் வார்த்தைகளைச் சொல்லுவான். புத்திவன்மை படைத்தவன். வண்டி முதலிய வாஹன வசதிகள் உடையவன். பல ஆபரணங்களைக் சம்பாதிப்பான். நெய் பால் இவைகளில் மிகவும் விருப்பமுள்ளவன். இவனிடம் பசுக்கள் நன்றாக விருத்தியாகும்.

13. உரோமங்கள் நீட்சி யுள்ளான் நுவலுப தேச முள்ளான்
சேமமாம் குடும்ப முள்ளான் செட்டுக்கள் பலவும் செய்வான்
தாமத குணத்தா னாகும் தைரியன் சூது முள்ளான்
காமியன் கனத்த புத்தி காவலர் நேசங் கொள்வன்.

13. உரோமங்கள் நீண்டிருக்கும். பெரியோரிடம் நல்லுபதேசங்களைக் கேட்டவன். சுபிக்ஷமான குடும்பமுடையவன். பல வியாபாரங்களைச் செய்வான். தாமச குணம் வாய்ந்தவன். தைரியம் வாய்ந்தவன். கபடமும் உண்டு. பெண்களிடம் காதல் கொண்டவன். பெரும்புத்தி படைத்தவன். அரசர்களின் நட்பும் இவனுக்கு இருக்கும்.

14 இன்னவன் துணைவர் தம்மை யிசைகிறே மாண்பா லொன்று
கன்னியு மூன்று முண்டு கனத்திடு நான்கும் தீர்க்கம்
அன்னமே எழுவர் நஷ்டம் அவர் பலன் மூன்றில் சொல்வேன்
கன்னெனு மொழியு முள்ள காதலி மேலும் கேளே.

14. இவனுடைய உடன் பிறந்தாரைக் கூறுவோம். ஒரு சகோதரன். மூன்று சகோதரிகள். இந் நால்வரும் நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள். இவர்களைத் தவிர எழுவர் பிறந்தும் சேதமாவார்கள். அவர்களைப்பற்றிய விவரங்களை மூன்றும் பாகத்தில் சொல்லுகின்றோம். கரும்பு போல் இனிய மொழியாளே ! தாயே ! கேளுங்கள்.

15. புயண்டரிவ் வாறுய்க் கூறப் புகலுவார் முனிவர் தாமும்
தயமுடன் ஜாதகர்க்கு நாட்டினீர் தாரம் ரண்டாய்
வியமுண்டோ சாந்தி யுண்டோ விளம்புவீ ரந்தச் சேதி
தயையுடன் சொல்லு மென்னச் சாற்றுவார் புயண்டர் தாமே.

15. ரிஷிபுயண்டர் இவ்வாறு கூறியவுடன், ஒரு முனிவர் ஜாதகனுக்கு இரு மனைவிகள் என்று சொன்னீர்கள். மூத்த மனைவி நிச்சயமாக இறந்து, அதன் பிறகு இவன் மறு மணம் செய்து கொள்வானா ? அல்லது மூத்த மனைவியின் ஆயுள் விருத்திக்கு ஏதாகிலும் சாந்திகள் உண்டோ ? இவ் விஷயங்களைக் கருணையுடன் தெளிவுபடுத்திக் கூறுங்கள் என்று வினவினர். முனிவரான புயண்டர் பதிலளித்தார்.

வேறு.

16. சத்தமம் தன்னில் மங்கலன் கருங்கோள்
சார்ந்திடச் சனியனும் பார்க்க
வித்தகன் தனக்கு முன்வினை தன்னால்
விளம்பினேம் தாரமே ரண்டாய்ச்
சுத்தமுன் வினையைச் சொல்லுவீ ரென்னத்
துறவியே யிவனின் முன் ஜன்மம்
குத்தமில் லாத தோக்கு மேல்பால்
குறித்தனம் அருகினில் சிற்றூர்.

16. களத்திர பாவ [ஏழாமிட] த்தில் செவ்வாயும் ராஹுவும் தங்கி இருக்க, அவ்விரு கிரஹங்களையும் சனி பார்ப்பதால் இச் சாதகனுக்கு முன்ஜன்ம வினையினால் இரு மனைவிகள் உண்டு என்று சொன்னோம். அவ்வினையைச் சொல்வீர்களாக என்று வினவ, புயண்டர் பதிலுரைத்தார். முனிவர்களே ! இவன் முன் பிறவியில் புனிதமான தோகைக்கு அருகில் சிறிய ஓர் ஊரில் ;

" தோகை " மதுரைக்கு அருகிலுள்ளதொரு சுப்பிரமண்யஸ்தம்.

குறிப்பு.—ஏழாமிடத்தில் " மங்கலன் " தங்க என்கிறார் இந்த நூலாசிரியர். ஆனால் ஏழ மிடத்தில் சூரியனும் ராஹுவும் இருக்கிறார்களே. தவிர, செவ்வாய் இல்லை. ஆறுமிடத்தில் (தனுவில்) இருக்கும் செவ்வாயை, சனி பத்தாவது பார்வையால் பார்க்கிறான். ஆனால் இந்நூலாசிரியர் சொல்லுகிறபடியே அஃது இரு தாரத்திற்கு காரணமாகாது.

வேறு

17. வைசிய குலமு தித்து வணிபங்கள் தீர்க்கம் செய்து
விஷேசமாய்த் தனங்கள் பெற்று மேதினில் கீர்த்தி யுண்டாய்
வகையிலா மனைவி மைந்தர் மாநில மதிகம் பெற்று
இகையுடன் வாழு நாளில் இசைக்கிறேம் ஊழி தாமே.

17. வைசிய குலத்தில் பிறந்து வியாபாரம் நீண்ட காலம் செய்து அதிக செல்வத்தையும் புகழையும் பெற்றிருந்தான். ஏராளமான பூமிகளைச் சம்பாதித்தான். இவ்வாறு சகல சௌகர்யங்களும் நிறைந்த இவன் மனைவி மக்களுடன் சுகமாக வாழுங்காலத்தில் இவனுக்கேற்பட்ட வினையைச் சொல்லுகின்றேம்.

18. அவ்வூரில் சைவன் தானும் அவனுமே நேச மாகிப்
பவ்வமாய் வெகு நாளாகப் பரிந்துமே வார்த்தை பேசி
நவ்வியே யிருக்கும் காலே நாயகன் மனைவி யான
திவ்விய மாது தன்னைச் சேரவே கருதி யே தான்.

18. அவ்வூரில் ஒரு சைவன் வசித்து வந்தான். அவன் இவனுக்கு நண்பனுன். இவ்விருவரும் சந்தோஷமாக அளவளாவி வருவார்கள். இவ்வாறு இருக்கையில் இவன், தன் நண்பனுடைய அழகிய மனைவியைச் சேரத் தீர்மானித்தான்.

19. பலவித வசியம் பேசிப் பாவையை வணங்கி யேதான்
சிலசில தனமும் சேலே செல்விக்கு ஈந்து பின்பு
குலவிய போகம் துய்க்கக் கோதைதன் கையைத் தொட்டான்
நலமுள சைவன் பெண்டிர் நாயகி ஏது செய்தாள்.

19. பலவித வசிய வார்த்தைகளைப் பேசியும் அவள் காலில் விழுந்தும், அவளுக்குப் பணத்தையும் வஸ்திரத்தையும் கொடுத்தும் அவளைத் தன் வசப்படுத்தியதாக எண்ணிக்கொண்டு, அவள் கையைத் தொட்டான். உடனே அந்தச் சைவப்பெண் கோபம் அடைந்து சொன்னுள்.

20. தோழன்தன் மனைவி போகம் துய்க்கவே கருத வேண்டாம்
ஆழியில் அனுபோ கத்தால் அதிகமாய் நரக மெய்தும்
ஏழையின் வார்த்தை கேளாய் என்றுமே வார்த்தை சொல்லப்
பாழான காமத் தாலே பலாத்கார மாகச் சேர்ந்தான்.

20. உன்னுடைய தோழனின் மனைவியை இவ்வாறு எண்ணுவது சரியல்ல. நீ, எண்ணிய காரியத்தால் அநேக நாள் நரகவாசம் செய்வாய். பரிதாப நிலையிலிருக்கும் என்னுடைய சொல்லைக் கேட்டு அதன்படி நடப்பாயாக. அவன் இவ்வுபதேசங்களைக் காதில் வாங்காதவனுகப் பாவம் புரிந்தான்.

21. அருந்ததி யொத்த மாது அவள்வர னில்லா வேளை
பெருந்தன முடைய பாவி போகங்கள் துய்த்த தாலே
வருந்தியு மனவெ றுப்பால் மங்கையு சாபம் சொல்வாள்
திருந்திய இச்சென் மத்தில் செல்வ மனைவியு மாள்வாள்.

21. கற்பில் சிறந்த அருந்ததி தேவிக்குச் சமமான அந்த நங்கையை, அவள் கணவன் இல்லாத சமயத்தில், அதிகச் செல்வம் படைத்த இவன் கெடுத்ததால், அவள் வருந்திச் சாபமிட்டாள். இச்சென்மத்தில் உனது மனைவி வயதின் மத்தியத்திலேயே இறப்பாள்.

22. மற்றொரு ஜன்மம் தன்னில் மனைவிகள் தோஷமாகிக்
குத்தமே அடைவா யென்று கூறியே ஜலத்தில் வீழ்ந்து
செத்தனள் அந்த மாது சொல்லிய சாபம் தானும்
பத்தியே அச்சென் மத்தில் பத்தினி மாண்டா ளென்றோர் .

22. மேலும், மறுபிறவியில் களத்திர தோஷத்தோடு பிறப்பாய் என்றும் சொல்லி நீரில் வீழ்ந்து மாண்டாள். அந்த மாது சொன்ன சாபத்தால் முன்பிறவியில் இவனுடைய மனைவி மத்தியிலேயே இறந்தாள்.

23. மனைவியும் மாண்டா ளென்று மைந்தனும் அரங்கம் புக்கிக்
கனமுட னரங்கர் பாதம் களிப்புட னருச்சித் தேத்திச்
சினமிலா தில்லை சென்று செங்கண்மால் பாதம் போற்றித்
தனிகனும் தோகை சென்று சண்முக னடிப ணிந்து ;

23. மனைவி மாண்ட பிறகு இவன் ஸ்ரீரங்கக்ஷேத்திரத்திற்குச் சென்று அங்கு எழுந்தருளி இருக்கும் ஸ்ரீரங்கநாதருடைய திருவடித்தாமரைகளை மிக்க மகிழ்ச்சியுடன் அர்ச்சித்து வாழ்த்தி விட்டு, அதன்பின் சிதம்பரக்ஷேத்திரத்துக்கு வந்து அங்கு எழுந்தருளி இருக்கும் ஸ்ரீகோவிந்த ராஜப்பெருமானின் பாதங்களை வணங்கி அங்கிருந்து புறப்பட்டுத் தோகைக்குச் சென்று அங்குக்கோயில் கொண்டு எழுந்தருளி இருக்கும் ஸ்ரீசுப்பிரமணிய சுவாமியை வணங்கி ;

24. பேதியால் மரண மாகி பிரமனால் வரையப் பட்டுத்
தீதிலாத் தீயின் வம்சம் ஜனித்த னிவனே யென்றோம்
கோதிலா முனிவர் சொல்லக் கூறுவா ளம்மன் தாமும்
மாதவர் இவன்முன் ஜன்மம் வைசிய குலமு தித்தான்.

24. வாழ்ந்து வரும் காலத்தில் பேதியினால் மரண மடைந்தான். பிரம்மதேவன் அவனை வன்னிய வமிசத்தில் பிறப்பித்து இருக்கின்றான். இவ்வாறு முனிவன் கூறியவுடன் அம்பிகை கேட்கலுற்றாள். முன்ஜன்மத்தில் இவன் வைசிய குலமுதித்திருந்தான் என்று சொன்னீர்கள்.

25 மாலிவன் பதத்தைப் போற்றி வந்ததா லிச்சென் மத்தில்
சீலமாய்ச் செப்பு கோத்திரம் செறிந்தகா ரணங்க ளென்ன
வேலன்தன் ஆல யத்தில் வித்தகன் மரண மான
ஞாலமேல் புண்ணி யத்தால் நயப்புட னுதித்தா னென்றோம்.

25. மேலும் அப்பிறவியில் திருமாலிடம் பக்தி பூண்டிருந்தான். அப்படிப்பட்டவன் இக்குலத்தில் பிறக்கக் காரணம் என்ன ? முனிவர் பதில் கூறுகின்றார் :—சுப்பிரமணியசுவாமியின் கோயிலில் மரணமானதால் இச்சாதியில் பிறந்தான். ஆனால் பூர்வபுண்ணியத்தின் பயனாகச் செல்வமுடையவனாக இருக்கின்றான்.

26. சினேகன்தன் மனைவி யான செல்வியைப் புணர்ந்த தோஷம்
அனையவா லயங்கள் சென்று அரங்கனைத் துதித்த தாலே
கனமான தோஷம் போக்கிக் காதலி சாபத் தாலே
சினமுண்டு இச்சென் மத்தில் தேவிக்குத் தோஷ மாகும்.

26. தனது தோழன் மனைவியிடத்தில் அதருமமாக நடந்து கொண்டதால் இவனுக்கு அவளால் ஏற்பட்ட சாபம் ஸ்ரீரங்கம் முதலிய க்ஷேத்திரங்களுக்கு யாத்திரை சென்றதால் சிறிதுதான் தணிந்து இருக்கிறது. ஆகையால் அவள் சாபத்தின்படி மனைவிக்குத் தோஷம் நிச்சயம் உண்டு.

27. அந்தவோர் தோஷம் தீர அறைகிறோம் கிரியை ஒன்று
மைந்தனு மனைவி யோடு வடதிசை தணிகை சென்று
சந்தமும் முருகன் பாதம் தான்வ ணர்ச்சித் தேத்தி
இந்தவா றைந்து கார்த்தி யிருவரும் சென்று மேதான்.

27. அந்தப் பாவமும் நீங்க ஒரு சாந்தி கூறுகின்றோம். இவன் தன் மனைவியுடன் வடதிசையிலுள்ள திருத்தணி க்ஷேத்திரத்திற்கு ஐந்து கிருத்திகை சென்று அங்கு எழுந்தருளி இருக்கும் சுப்பிரமணிய சுவாமியின் திருவடிகளுக்கு ஆர்ச்சனை செய்து, அத்திருவடித்தாமரைகளை வாழ்த்தி வணங்கிவரவேண்டும்.

28. ரஜதத்தால் மதலை செய்து நலமுடன் அடைக்காய்க் கெந்தம்
உசிதமாய் மறையோர்க் கீந்து ஊழியை யவர்க்கு ஓதி
வகையது பெற்றே னென்று மறையவர் சொல்லக் கேட்டு
அகைவிலா மட த்தி லேதான் ஐந்துபேர் அதிதி கட்கு ;

28. மேலும் வெள்ளியினால் குழந்தையின் பதுமை ஒன்றைச் செய்து அதைத் தாம்பூலம் சந்தனத்துடன் ஒரு வேதமோதும் அந்தணர்க்குச் சமர்ப்பித்து, அவரிடம் தனது பாவத்தை யாவரும் அறிய விண்ணப் பிக்கவேண்டும். "பாவம் தீர்ந்து உய்யும் வழியைப் பெற்றாய்" என்று அவர் அருளும் ஆசியைப் பெற்றுக்கொண்டு, புனித மடத்திலே தங்கி இருக்கும் ஐந்து சிவனடியார்களுக்கு ;

29. அன்னங்க ளீந்து பின்பு அன்புட னுள்ளூர் மீண்டு
உன்னித மாத மோர்நாள் உற்றதோர் கார்த்தி கைக்குப்
பன்னுமோர் பரத்துக் கன்னம் பாலக னளித்து வந்தால்
சொன்னதோர் மனைவி தீர்க்கம் சுந்தரி மேலுங் கேளே.

29. அன்புடன் அன்னமளிக்கவேண்டும். பிறகு தன் ஊருக்குத் திரும்பிவந்து ஏதாகிலும் ஒரு மாதத்தில் கிருத்திகை நக்ஷத்திரத்தன்று உறவினர்களுக்கும் மற்றவர்களுக்கும் அமுதளிக்கவேண்டும். இவ்வாறு செய்வானாகில் முன்ஜன்ம வினை நீங்கி மனைவி சுகமாக நீண்டகாலம் வாழ்வாள். சுந்தரியே ! மேலும் சொல்லுகிறோம்.

30. சொற்படி செய்யா னாகில் சுந்தரி தோஷ முண்டாம்
மெய்யுடன் செய்வா னாகில் விருத்தியாம் மனைவி தானும்
கற்புள மாதுரு சேதி கழறுவோ மிருசி வப்பள்
அற்பமாம் குணங்க ளில்லாள் அதிஷ்டவா ளென்று சொல்வோம்.

30. நாங்கள் சொன்னபடி செய்யாவிடில் மனைவியின் ஆயுளுக்குக் கெடுதல் ஏற்படும். மெய்யான மனத்துடன் யாம் விதித்த பரிகாரங்களைச் செய்தால் மனைவிக்கு ஆயுள் விருத்தி ஏற்படும். இவனுடைய தாயின் செய்தியைக் கூறுவோம். அவள் கருத்தவளுமல்லள். சிவந்தவளுமல் லள். கருஞ்சிவப்பாக இருப்பாள். ஈனகுணங்கள் இல்லாதவள். மிக்க அதிருஷ்டசாலி என்றும் கூறுவோம்.

31. அடக்கமு மொடுக்க முள்ளாள் அன்னங்கள் போட வல்லாள்
துடுக்கென வார்த்தை கூறுவள் சொல்லுமுன் கோபம் கொஞ்சம்
நடக்கையு நல்ல தாகும் நற்பந்து விரோதி யாகும்
படபட நடையு முள்ளாள் பார்வதி மேலும் கேளே.

31. மனத்திலும் சரீரத்திலும் அடக்க முள்ளவள். அன்னதானம் செய்யவல்லவள். வெட்டினாற்போல வார்த்தைகளைப் பேசுவாள். முன் கோபமும் உண்டு. நன்னடக்கை உள்ளவள். உறவினர்களே இவளுக்கு விரோதியாவார்கள். நடை படபடப்பாக (வேகமாக) இருக்கும். பர்வத ராஜகுமாரியே! மேலும் கேளுங்கள்.

32. இன்னவள் துணைவர் தம்மை யிசைக்கிறோ மாண்பால் நான்கு
கன்னியு மிரண்டு தீர்க்கம் கனக்காது இதன்மேல் தோன்றில்
பின்னமா மரிட்ட மாகும் பேசுவோ மிவளுக் கேதான்
அன்னமே யாங்கள் சொல்லும் அருள்மொழி குன்று தென்றோம்.

32. இத்தகைய குணமுள்ளவளின் துணைவர்களைப் பற்றிக்கூறுகின்றோம். சகோதரர்கள் நால்வர். சகோதரிகள் இருவர். இவர்கள் எல்லோரும் ஸ்திரமாக வாழ்வார்கள். இந்த எண்ணிக்கைக்கு மேல் இவளுக்குத் துணைவர்கள் பிறப்பினும் பாலாரிஷ்டத்தினால் இறப்பார்கள். தேவியே! நாங்கள் கூறிய அருள் மொழி வீணாகாது என்று உறுதி கூறுகின்றோம்.

33. மாதுரு முன்ஜன்மத்தை வரைகிறோம் கொங்கு நாட்டில்
தீதான கர்ண வமிசம் ஜனித்துமே பொருளும் பெற்று
மேதினில் மைந்த ரின்றி வித்தகி வரனின் கூட
போதவே தீர்த்தம் தோய்ந்து புக்கினள் மதுரை தன்னில்

33. இவனுடைய தாயின் முன் ஜன்மத்தைக் கூறுகின்றோம். கொங்கு நாட்டில் " கர்ண " வமிசத்தில் பிறந்து விரும்பிய பொருள்களை எல்லாம் பெற்றிருந்தாலும் மக்கட்பேறு இல்லாதவளாகி, தன் கணவனுடன் பல புண்ணிய தீர்த்தங்களில் நீராடி மதுரையை அடைந்தாள்.

34. சொக்கரைத் தரிச்சித் தேத்திச் சுவாமிதன் மலைக்குச் சென்று
முக்கிய தீர்த்தம் தோய்ந்து முருகனை அருச்சித் தேத்தித்
திக்கெலாம் தலங்கள் தோய்ந்து சென்றனள் காஞ்சி தன்னில்
நக்கன்மால் குமரன் காளி நாயகி பாலன் போற்றி.

34. அந்த க்ஷேத்திரத்தில் எழுந்தருளி இருக்கும் சொக்க நாதப் பெருமானைத் தரிசித்தும் அதற்குச் சமீபத்தில் உள்ளத் திருப்பரங்குன்றத்தில் கோயில் கொண்டிருக்கும் சுப்பிரமணிய சுவாமியை அர்ச்சித்தும் வணங்கியும், இன்னும் பல புனித தீர்த்தங்களில் நீராடியும் காஞ்சிக்கு வந்தாள். அங்கு எழுந்தருளி இருக்கும் சிவபிரான், விஷ்ணு, சுப்பிர மணியன், காளி, பார்வதி, விநாயகர் இவர்களையும் சேவித்துப் போற்றிவிட்டு;

35. தன்னுடை ஊரைச் சேர்ந்து செல்வியும் சிலநாள் சென்று
உன்னித மரண மாகி உதித்தவ ளவளே யென்றேம்
மன்னிய இவள்பின் ஜன்மம் வரைகிறேம் காஞ்சி கீழ்ப்பால்
அன்னவள் பேரூர் தன்னில் அருமறைக் குலத்தி லேதான் ;

35. தன்னுடைய ஊருக்கு வந்து சிலகாலம் வாழ்ந்து அந்திய காலத்தில் மரணமடைந்தாள். அவ்வாறு புண்ணியங்களைச் செய்தவள் தான் இக் கடக லக்கின மகனுக்குத் தாயாக வாய்த்திருக்கின்றாள். இவனுடைய பின் ஜன்மத்தையும் கூறுகின்றேம். காஞ்சிக்குக் கீழ்த்திசையிலுள்ள ஒரு பெரிய ஊரில் பிராம்மண வமிசத்தில் ;

36. உதிப் பவளவளே யென்றேம் உறுந்தந்தை முன்ஜன் மத்தை
விதிக்கிறேம் அருணை நாட்டில் வேளாள குலமு தித்துப்
பதியினில் திருவு முண்டாய்ப் பாலர்கள் மனைவி யோடு
அதிகமாய்த் தனங்கள் பெற்று அவனுமே வாழு நாளில் ;

36. ஜனிப்பாள். ஜாதகனுடைய தந்தையின் முன் பிறவியைக் கூறுகின்றேம். இவன் முன் ஜன்மத்தில் திருவண்ணுமலையில் வேளாள குலத்தில் பிறந்து லக்ஷ்மீவாசம் பொருந்தியவனாக அதிக தனங்களைப் பெற்று மனைவி மக்களுடன் வாழ்ந்து வரும் காலத்தில் ;

37. பஞ்சையாய் ஸ்திரீயும் ஓர்நாள் பாக்கியன் வீட்டி லேதான்
கெஞ்சியே அன்னம் கேட்கக் கிளிமொழி வார்த்தை சொல்லி
வஞ்சிக்குச் சாத மீந்து மருவவே வேண்டு மென்று
மிஞ்சியே கைப்பி டித்தான் மெல்லியும் எது செய்வாள்.

37. மிக்க ஏழையான ஸ்திரீ ஒருத்தி ஒரு நாள் செல்வம் படைத்த இவனுடைய வீட்டை அடைந்து கொஞ்சம் அன்னம் கொடுக்குமாறு கெஞ்சினாள். இவனும் அவளிடம் நயமான வார்த்தைகளைப் பேசி, அவளுக்கு அன்னமிட்டு ஈன எண்ணத்துடன் அவளது கையைப் பற்றினான். அந்தப் பெண் என்ன செய்வாள் ? பாவம் !

38. ஏழையாய் என்னை நீயுமின்பங்கள் துய்க்க வேண்டித்
தாழ்வான வார்த்தை சொன்னாய்ச் சதிருட னுந்த னுக்கு
வாழ்மனை யிரண்டு மாகி வந்திடும் ஜனனம் தோறும்
ஆழியில் மாத ராலே அனேகமாய்த் துன்பம் நேரும்.

38. என்னை ஏழை என்ற காரணத்தால் அவமதித்து அதரும சிந்தையுடன் எனது கையைப் பற்றினாய். தாழ்வான வார்த்தைகளையும் பேசினாய். ஆகையால் நீ மறு பிறவியில் முதல் மனைவியை இழந்து கஷ்டப்பட்டு அதன் பிறகு மறு மனைவியை மணப்பாய். ஆயினும் மாதர்களால் உனக்குப் பல துன்பங்கள் நேரும் என்றும் சபித்தாள்.

39. என்றுமே சாபம் தந்து ஏழையும் நீங்க லுற்றாள்
அன்றுமே அச்சென் மத்தில் அவன்மனை யாளு மாண்டு
குன்றிய மனத்த னாகிக் கூத்தன்தன் பதிக்குச் சென்று
வந்தவ னிவனே யென்றேம் வரைகிறே மிச்சென் மத்தில்.

**39.** என்று சாபம் விடுத்து அந்த ஏழைப்பெண் விலகினாள். அதே ஜன்மத்தில் இவனுடைய மனைவி மாண்டாள். ஆகையால் இவன் அந்திய காலத்தில் மிகவும் மனம் குன்றியவனாக இறந்தான். அவ்வாறு சபிக்கப்பட்ட இவன் இங்குப் பிறந்து இச் சாதகனுக்குத் தந்தையாக அமைந்திருக்கிறான்.

**40.** மனைவிக்குத் தோஷ முண்டாய் மறுமனை யாட்கு புத்திரர்
தனயனு முதித்தா னென்றோம் சாற்றுவோ மிவன்பின் ஜன்மம்
இணையிலா வள்ளூர் தன்னில் இவன்சைவ குலமு தித்து
அனையவே வாழ்வா னாகும் அம்மையே மேலும் கேளே.

**40.** இச் சென்மத்தில் முதலில் மணந்த மனைவி இறந்தாள். பிறகு இவன் மணம் செய்து கொண்டு இச் சாதகனை இளைய மனைவியினிடத்தில் புத்திரனாக அடைந்திருக்கிறான். இவனது (தந்தையின்) பின் சென்மத்தையும் சொல்வேன். அடுத்து வரும் ஜன்மத்தில் இவன் திருவள்ளூரில் சைவகுலத்தில் பிறந்துச் சுகமாக வாழ்வான். அம்பிகையே! மேலும் கேளுங்கள்.

**41.** ஜாதகன் மணத்தின் காலம் சாற்றுவோ மொருபா னென்பான்
மேதினில் தென்கீழ் தன்னில் வித்தகி வருவா ளாகும்
கோதிலாப் புத்திர பாவம் கூறுவோ மாண்பால் ரண்டு
மேதினில் கன்னி நான்கு செப்புவோ மிவனுக் கேதான்.

**41.** ஜாதகனுடைய விவாஹகாலத்தைக் கூறுவேன். இவனுடைய பத்தொன்பதாவது வயதில் மணம் நடைபெறும். மணப்பெண் தென் கிழக்குத் திசையில் ஜனித்திருப்பாள். இவனுடைய புத்திரபாவத்தைச் சொல்லுகின்றோம். இவனுக்கு இரண்டு பிள்ளைகளும் நான்கு பெண்களும் பிறப்பார்கள்.

**42.** ஆறுமே தீர்க்க மாகும் அரிட்டமாம் மற்ற வெல்லாம்
கூறுவோம் தந்தை காலம் குறிக்கிறோ முப்பான் மூன்றில்
சீரிய கலையி லேதான் சனிபொ சிப்பதனி லேதான்
வீருடன் கண்ட முண்டாம் மெல்லியே மேலுங் கேளே.

**42.** இந்த ஆறு குழந்தைகளும் தீர்க்காயுளுடன் வாழ்வார்கள். இந்த எண்ணிக்கைக்கு மேல் பிறக்கும் குழந்தைகள் நசிப்பார்கள். இவனுடைய தந்தையின் மரண காலத்தைக் குறிக்கிறோம். இவனுக்கு முப்பத்து மூன்றாவது வயது நடைபெறும் போது தந்தை மரணமடைவான். அப்பொழுது இவனுக்குச் சந்திர தசையில் சனி புக்தி நடக்கும். மெல்லியே! மேலும் கேட்பீராக.

**43.** மாதிரு மரண காலம் வரைகிறோ முப்பா னெட்டில்
தீதிலா ஆனி மாதம் திங்கள்தன் தசையி லேதான்
கோதிலா ரவிபு சிப்பில் கூறுவோம் கண்டம் தானும்
ஆதியாய் மறையைக் காக்கும் அம்மணி மேலுங் கேளே.

43. ஜாதகனுடைய தாயின் மரண சமயத்தையும் அறிவிப்போம். இவனுடைய முப்பத்தெட்டாவது வயதில் ஆனி மாதத்தில் தாய் மரண மடைவாள். அந்தச் சமயம் இவனுக்குச் சந்திரதசையில் சூரியபுக்தி நடைபெறும். ஆதியான வேதங்களைக் காப்பாற்றும் எங்கள் அன்னையே! கேளுங்கள்.

44. ஜாதகன் மரண காலம் சாற்றுவோ மறுபா னுறில்
மேதினில் கூனி மாதம் வளர்பிறைத் தசமி தன்னில்
கோதிலாப் பித்த நோயால் கூறிய பகலி லேதான்
மாதவன் பாதம் சேர்வன் மங்கையே மேலுங் கேளே.

44. மரணத்தைத் தெரிவிக்கும் தொடர்ச்சியில், ஜாதகனுடைய மரண காலத்தையும் தெரிவிக்கின்றோம். இவனுக்கு அறுபத்தாறுவது வயது நடைபெறும்போது பங்குனி மாதத்தில் வளர்பிறையில் தசமிதிதியில் பகலில், இவன் திருமாலின் திருவடிகளை அடைவான். அந்திய காலத்தில் பித்த நோய்காணும். அதுவே இவனுக்கு முடிவாகும். உத்தமியே! மேலும் சொல்லுகிறோம்.

45. பின்ஜன்மம் புதுவை தன்னில் பிராமண குலமு தித்து
மன்னவர் பக்கல் தன்னாலதிகார முள்ளா னுகிப்
பொன்னொடு பணிதி பெற்றுப் புகழ்ச்சியாய் வாழ்வா னென்றோம்
உன்னத வானை பெற்ற உத்தமி மேலுங் கேளே.

45. இவன் மறுபிறவியில் புதுவையில் பிராம்மண ஜாதியில் பிறந்து, அரசர்களின் ஆதரவால் அதிகாரஸ்தானம் வஹித்து, பொன் ஆபரணம் வீடு முதலியவைகளைப் பெற்று, புகழுள்ளவனுகச் சிறப்புடன் வாழ்வான். விநாயகரைத் தோற்றுவித்த அன்னையே! மேலும் கேளுங்கள்.

46. ஜாதகன் தொழிலை யாங்கள் சாற்றுவோம் வணிபத் தாலும்
மேதினில் பூமி யாலும் விசேஷமாய்ப் பொருளைச் சேர்ப்பான்
கோதிலா வாயி ரம்பொன் குணமுடன் சேர்ப்பா னுகும்
பூதல மளந்தோன் தங்காய் புண்ணிய சாலி கேளாய்

46. ஜாதகனுடைய தொழிலைக் கூறுவோம். இவன் வாணிபமும் செய்வான். விவசாயமும் செய்வான். ஆகவே இத்தொழில்களால் இவனுக்குப் பொருள்கள் சேரும். ஆயிரம் பொன்களைச் சேமித்துவைப்பான். முன் ஒரு காலத்தில் தனது திருவடியால் பூமியை அளந்த திருமாலின் தங்கையே! கேட்பீராக.

47. உதித்தவன் ஜனன காலம் உயர்கேது இருப்பு மேதான்
மதித்திட ஆண்டு ஒன்று வரும்திங்க ளிருமூன் றுகும்
சதியிலா நாட்கள் பத்தும் சாற்றுவோம் பலனை யாங்கள்
விதியினுல் தேக பீடை மெல்லியாள் ரோக முண்டே.

47. இவன் மக நக்ஷத்திரம் நான்காம் பாதத்தில் பிறந்திருக்கின்றான். ஆகையால் கேதுதசையில் இருப்பு வருஷம் ஒன்று, மாதங்கள் ஆறு, நாட்கள் பத்து. இந்தத் தசையின் பலன்களைத் தெரிவிப்போம். பாலக னுக்குத் தேக பீடை உண்டாகும். ஜாதகனின் அன்னைக்கும் பல நோய் களால் தொந்தரவு ஏற்படும்.

48. செலவுக ளதிகம் நேரும் சினேகிதர் பகையு முண்டாம்
பலவிதத் துன்ப மாகும் பளிங்கவன் தசையி லேதான்
குலவிடும் செல்வ மெல்லாம் குண்டைகோ விருத்தி யுண்டு
நலமான பூமி சேரும் நல்லதோர் க்ஷேத்திரம் நேரும்.

48. வீண் செலவுகள் அதிகம் ஆகும். நண்பர்களும் பகைவர்களாவர் பலபல துன்பங்களும் தோன்றும். இதற்கடுத்து வரும் சுக்கிரதசையில் செல்வம் ஓங்கும். காளைகளும் பசுக்களும் விருத்தியடையும். செழிப்பான நிலங்களும் சேரும். மிகச் சிறப்பான (உலகத்தோரால் மெச்சப்பட்ட) நிலமும் கிடைக்கும். [நல்லதொரு புண்ணிய க்ஷேத்திரத்தில் வாசம் நேரும் என்றும் கொள்ளலாம்].

49. பலவித வணிபத் தாலும் பாக்கிய மிகவே சேரும்
இலகிய துணைவர் விருத்தி இராசர்கள் பேட்டி யுண்டாம்
உலகத்தோர் வணங்க வாழ்வன் உற்றதோர் சுபமே யுண்டாம்
தலமது பேத மாகும் சகோதரி சுபமே யுண்டு.

49. பல வியாபாரங்களால் பாக்கிய விருத்தியுண்டு. சகோதரர்களும் ஜனிப்பார்கள். அரசபேட்டியும் கிடைக்கும். எல்லா மனிதர்களும் வணங்கும்படிச் சிறப்பாக வாழ்வான். ஒரு சுப சம்பவம் (விவாஹம்) நடைபெறும். வேறு ஒரு சொந்த வீட்டில் வாசம் செய்ய நேரும். சகோதரிக்கும் சுபம் நடைபெறும்.

50. மதுதொழில் விருத்தி யாகும் வரும்பிணி யாவும் நீங்கும்
பதியினில் திருவும் வாசம் பந்துபூ சிதமு முண்டு
சதிருடன் புயண்டர் சொல்லச் சாற்றுவார் பராசர் தாமும்
நதியவன் விரயத் தோனாய் நிலவுமே பார்த்த லாலே;

50. "மது" (கள், சாராயம்) தொழிலால் இவனுக்குச் செல்வம் விருத்தியாகும். முன்பு வந்த பிணிகள் நீங்கும். வீட்டில் லக்ஷ்மீ வாசம் விளங்கும். உறவினர்களால் கௌரவிக்கப்படுவான். இவ்வாறு புயண்டர் கூறியவுடன், பராசர முனிவர் வினவினார். நான்காம் பாவாதிபதியான சுக்கிரன் எட்டில் இருக்க, அவனை இலக்கினாதிபதியாகிய சந்திரன் பார்ப்பதால்;

51. சொல்லுவீர் பலனை யென்றார் சுயபந்து விரோத மாகும்
புல்லரால் கலகம் நேரும் புகல்வாக்கில் ரோக முண்டாய்
நல்லதோர் துணைவர் சேதம் நாற்காலி சேத மாகும்
வல்லிதன் வர்க்கம் தன்னில் வந்திடும் சூதகங்கள்.

51. ஏற்படும் பலனைச் சொல்லுவீர்களாக. புயண்டர் பதிலளித்தார். பந்துக்களின் விரோதம் உண்டாகும். அல்பர்களுடன் சண்டையிட நேரும். வாக்கில் ரோகம் (பல்வலி) வரும். ஒரு நல்ல சகோதரன் மரணமடைவான். கால்நடைகளுக்கும் சேதமுண்டாகும். மனைவி வருக்கத்தில் உறவினர் இறப்பதால் சூதகமும் வரும்.

52. இராசரால் விரோத முண்டு நன்கூட்டுச் சேர்ந்து நீங்கும்
பாசமாய்த் தொழிலால் பேதம் பகர்ந்திட்டோ மிதுவல் லாமல்
நேசமாய்க் குடும்பத் தார்க்கு நித்திய ரோகம் காணும்
பாசமாய் யாவும் நீங்கும் வரைகிறே மிரண்டில் நேராய்.

52. அரசர்களுடனும் விரோதமேற்படும். கூட்டுத்தொழில் ஆரம்பிக்கப்பட்டு சிறிது காலத்திற்குள் நின்றுவிடும். தொழில்களில் போட்டியும் பேதமும் ஏற்படும். இவைகளைத் தவிர இன்னும் சில பலன்களையும் சொல்லுகின்றேம். குடும்பத்தில் எல்லோருக்கும் எப்பொழுதும் ரோகத்தினுல் தொந்தரவு ஏற்பட்டுக்கொண்டிருக்கும். ஆனுல் வரும் கஷ்டங்கள் எல்லாம் சுலபமாக நீங்கும். இரண்டாம் பாகத்தில் இவைகளை விவரித்துப் பேசுவோமாக.

53. சுடர்தசை ஆறுண் டிற்கும் சொல்லுவோம் பலனை யாங்கள்
தடம்பூமி அதிகம் சேரும் சந்ததி விருத்தி யுண்டாம்
திடமான லாபம் காணும் சித்திர வீடு செய்வன்
அடல்பணி ரத்தி னங்கள் ஆள்கார ருண்டு கண்டாய்.

53. சுக்கிரதசைக்கு அடுத்துவரும் சூரிய தசை ஆறு ஆண்டுகளில் நடைபெறும் பலன்களை யாம் சொல்லுவோம். பூமிகள் அதிகமாகச் சேரும். சந்ததி விருத்தியும் இருக்கும். கணிசமான லாபத்தை அடைவான். அழகியதொரு வீடு கட்டுவான். பல ஆபரணங்களையும், வஜ்ர வைடூர்ய கோமேதகம் முதலிய இரத்தினங்களையும் சம்பாதிப்பான். பல சேவகர்களுக்கு யஜமானனுகத் திகழுவான்.

54. தேவதா பக்தி யுண்டு திருமகள் வாச மாகும்
பூமியும் தனதா னியங்கள் பொருந்திடு மிவனுக் கென்றேம்
தீமையும் பகையும் வெல்லும் சென்றிடம் பெருமை காணும்
ஆவுமே விருத்தி யாகும் அம்மணி மேலுங் கேளே.

54. கடவுள்பக்தி மேன்மேலும் ஓங்கிவளரும். லக்ஷ்மீவாசம் பொருந்தியவனுக விளங்குவான். பூமிகளும், அதன் மூலம் தனதானியங்களும் இவனுக்குச் சேரும். கொடிய எதிரிகளையும் வென்று இடையூறின்றி வாழ்வான். சென்றவிடம் எல்லாம் இவனுக்குச் சிறப்பு ஏற்படும். பசுக்களும் நோயின்றி அபிவிருத்தியடையும். அன்புள்ள தாயே ! மேலும் கேட்பீராக.

55. ஜயமுனி எழுந்தி ருந்து திடுக்கென உரைக்க லுற்றுர்
நயமிலா அஷ்ட மத்தில் லக்கினத் தோனும் கூடிப்
பயமுட னிருப்ப தாலே பகருவீ ரந்தச் சேதி
புயண்டரும் சொல்லு கின்றுர் பரிதியின் தசையில் தானே ;

55. இவ்வாறு புயண்டர் கூறிக்கொண்டு வருகையில் ஜய முனிவர் திடுக்கென்று எழுந்திருந்து, இலக்கினாதிபனாகிய சந்திரன் தசாநாதனாகிய சூரியனுக்கு எட்டாமிடத்தில் இருப்பதால் என்ன பலன்கள் ஏற்படும்? அந்தச் செய்திகளையும் சொல்லுவீர்களாக எனக் கேட்கலுற்றார். புயண்டர் பதிலுரைத்தார்.

### வேறு : வெண்பா

56. பானு திசைக்கீழ் பசுநஷ்டம் தந்தைநோய்
தீமைகளும் தான்பெருகும் செப்பவே—இந்நாள்
கோள்கலகம் தானுண்டு கோதையரால் பாதையுண்டு
நீள்புவியால் விரோதம் வருநேர்.

56. சூரிய தசையின் ஆரம்பத்தில் கால் நடைகள் சேதமடையும். தகப்பனுக்கு நோய்காணும். அநேகதீமைகள் வந்திடும். அதிகமுமாகும். இவனைப்பற்றிக் கோள் சொல்லப்படுவதால் கலகங்கள் விருத்தியடையும். ஸ்திரீகளால் தொந்தரவுகள் நேரும். மேலும், நிலங்களைப் பற்றிய சண்டைகளும் நிகழும்.

57. கண்ணோய் சுரம்திரிச்சல் கனத்தசெட்டுப் பேதகமாம்
மண்ணால் வழக்கு வந்து—வசியமாம்
விண்ணுளோர் பகையுண்டு பின்பு செயம்
இரண்டிலே வகையாகச் சொல்வே னவர்க்கு.

57. மேலும், கண்வலி சுரம் வீண் அலேச்சல் இவை நேரும். இவன் செய்து வரும் பெரிய வியாபாரம் பங்கமாகும். நிலத்தின் மூலம் வழக்கு வரும். இவனுக்கு அனுகூல மாகும். தேவர்களின் கோபத்திற்கு ஆளாவான். ஆனால் பிறகு இவனுக்கு அவர்களாலேயே நன்மை உண்டாகும். இரண்டாம் பாகத்தில் பலன்களை விவரமாகச் சொல்லுவேன்.

### வேறு

58. மதிதிசை ஒருபா னுண்டும் வரும்பலன் கூறு கின்றோம்
நிதநித லாப முண்டு நினைத்தகா ரியங்க ளாகும்
மதிபோலே செல்வ மோங்கும்........ன் பூடணங்க ளுண்டாம்
பதியினில் தானியம் சேரும் பாலர்க ளுண்டா மென்னே.

58. சந்திரதசை பத்து வருஷங்களில் நடைபெறும் பலன்களை இனி அறிவிப்போம். இவன் செய்யும் தொழிலில் ஒவ்வொரு நாளும் ஏராள லாபம் கிடைக்கும். இவன் நினைத்த காரியங்கள் கைகூடும். வளர் பிறைச் சந்திரன் போல இவனது செல்வம் வளர்ந்திடும். பல பூஷணங்களை அடைவான். நவதானிய விருத்தியுண்டு. அதிருஷ்டமுள்ள ஆரோக்கியம் வாய்ந்த குழந்தைகளும் ஜனிப்பார்கள்.

59. அன்னங்கள் விரைய மாகும் அனேககா ரியங்கள் கூடும்
சொர்ணங்கள் சேரு மென்றோம் சுகமது மிகவே காணும்
அன்னையும் தந்தை கண்டம் ஆள்கார ரதிக மாகும்
பின்னங்க ளொன்று மில்லை பேசுவோ மிதற்கு மேலே ;

59. இவனது வீட்டில் பல விருந்து பசாரங்கள் நடை பெறும். அனேக முயற்சிகள் பலிதமாகும். தங்கம் சேரும். மிக்க சௌக்கியத்தை அனுபவிப்பான். தாயாருக்கும் தகப்பனருக்கும் கண்டங்கள் ஏற்படும். நல்ல சேவகர்கள் கிடைப்பார்கள். எவ்வகையிலும் குறைவின்றிச் சுகமாக வாழ்வான். இதற்கு அடுத்து வரும் ;

60. மங்கலன் தசையி லேதான் வந்திடும் தேக பாதை
இங்கித ரிணங்க ளுண்டு இவன்பாரி தனக்குக் கண்டம்
பங்கமாய் முருக னாலே போகிடும் ரோகம் தானே
திங்களைப் போலே லாபம் செறிந்திடு மென்று சொன்னோம்.

60. செவ்வாய்த் தசையில் சரீர பீடையும் கடனும் ஏற்படும். மனையாளுக்கும் ஒரு கண்டம் வரும். ஆயினும் முருகப் பெருமானது திருவருளால் நோய்கள் நீங்கிச் சௌக்கிய மடைவாள். மேலும், வளர்பிறைச் சந்திரன் போல லாபங்கள் வளரும். [கடனும் தீரும் என்பது கருத்து.]

61. குடும்பத்தில் குறைவு மில்லை குலவிடும் பலம னேகம்
உடன்பிறந் தோர்க ளுக்கு உரைக்கிறோம் சுபமே யுண்டாம்
கடலுளோர் மெச்ச வாழ்வன் கனத்தவர் நேச மாகும்
படைவேலும் செட்டு ஓங்கும் பார்வதி மேலுங் கேளே.

61. குடும்பத்தில் எவ்விதத்திலும் குறைவு இராது. அனேக முயற்சிகளின் பயன்கள் கிட்டும். இச்சாதகனுடைய சகோதரர்களுக்குச் சுபசம்பவங்கள் நடைபெறும். உலகத்தார் இவனை மிகவும் கொண்டாடுவார்கள். பெருமை வாய்ந்த பிரபுக்களின் நட்பு உண்டாகும். வியாபாரம் மேன்மேலும் வளரும். பார்வதி தேவியே ! மேலும் கேளுங்கள்.

62. அதற்குமேல் கருங்கோ ளாண்டு அறைகிறோம் ஈரொன் பானும்
சதியிலாப் பூமி சேரும் சகலரும் வணங்க வாழ்வன்
விதவித செட்டால் லாபம் வண்டிவா கனமு முண்டு
அதிகமாய்த் தீர்த்த யாத்திரை ஆள்கார ரனந்தம் சேரும்.

62. அதற்கு மேல் ராஹு தசை பதினெட்டு வருஷங்களுக்கும் பலன்களைக் கூறுகின்றோம். செழுமை வாய்ந்த நிலங்கள் சேரும். சகலரும் இவனை வணங்கி நிற்பார்கள். பலவித வியாபாரங்கள் செய்வான். வண்டி குதிரை முதலிய வாகன சௌக்கிய முள்ளவனாக ஆவான். பல புண்ணிய தீர்த்தங்களுக்கு யாத்திரை சென்று நீராடுவான். எண்ணிக்கையற்ற சேவகர்கள் இவனுக்குத் தொண்டு செய்வார்கள்.

63. இரத்தின பூஷ ணங்கள் நல்கிடு மிவனுக் கென்றோம்
புத்திர விருத்தி யாகிப் போய்விடு மதலை தானும்
எத்திசைக் கீர்த்தி யுண்டு ஏழையை ஆத ரிப்பன்
வித்தக ரால யங்கள் விரைதிருப் பணியும் செய்வன்.

**63.** நவரத்தினங்களால் செய்யப்பட்ட பூஷணங்களையும் அடைவான். புத்திரவிருத்தியும் அழிவும் உண்டாகும். இவனது கீர்த்தி எல்லாத் திசைகளிலும் பரவும். ஏழைகளை ஆதரிப்பான். பல பழைய தேவாலயங் களைப் புதுப்பித்துச் சீர்திருத்திக் கும்பாபிஷேகம் முதலிய புண்ணியச் சடங்குகளை நிறைவேற்றி வைப்பான்.

**64.** பொன்தசை தன்னி லேதான் போய்விடு முடலம் தானும்
இன்னமும் விவர மாக இயம்புவோ மிரண்டாம் பாகம்
சொன்னசொல் தப்பா வம்மா துறவிகள் வாக்கு தானும்
கன்னலென மொழியி னாளே காதலி மேலுங் கேளே.

**64.** ராஹு தசைக்கு அடுத்துவரும் குருதசையில் இவன் தேகவியோக மடைவான். இன்னும் பல விவரங்களை இரண்டாம் பாகத்தில் சொல்லு வோம். தவம் செய்யும் துறவிகளாகிய நாங்கள் சொன்ன சொற்கள் தவறு. கரும்பு போன்ற இனிய மொழியினளே! மேலும் எங்களைக் கேட்டருள வேண்டும்.

# ஜாதகம் 33

1. கடகலக் கினம தாகக் கலைகுரு கேது ரண்டில்
சுடரவன் புதனு மூன்றில் சுக்கிரன் சனியு நாலில்
விடமெட்டில் சேய்வி யத்தில் விளம்புவீர் பலனை யென்று
மடமயில் கேட்கும் போது வசிஷ்டரும் கூறு கின்றார்.

| | | | செவ்வாய் |
|---|---|---|---|
| ராகு | இராசி சக்கரம் | | லக்கினம் |
| | | | சந்திரன் குரு கேது |
| | | சுக்கிரன் சனி | சூரியன் புதன் |

1. துர்முக புரட்டாசி மாதம் 20-ஆந் தேதி ஞாயிற்றுக்கிழமை இரவு 20 நாழிகைக்கு ஜனனம். ஆங்கிலத் தேதி 4-10-1896 நவக்கிரஹங்களின் பாதசாரம். ஹஸ்தம் 3-இல் சூரியன். பூரம் 3-இல் சந்திரன். மிருகசீர்ஷம் 3-இல் செவ்வாய். உத்தரம் 2-இல் புதன் (அஸ்தம்). மகம் 3-இல் குரு. சுவாதி 3-இல் சுக்கிரன். விசாகம் 2-இல் சனி, அவிட்டம் 2 இல் ராஹு ஆயில்யம் 4-இல் கேது. நக்ஷத்திரம் பூரம். சுக்கிரதசையில் இருப்பு. வருஷங்கள் ஏழு, மாதங்கள் பத்து.

குறிப்பு.—இந் நூலாசிரியர் கருத்தின்படி அவிட்டம் 3-இல் ராகு, மகம் 1-இல் கேது.

இலக்கினம் கடகம் சந்திரன் குரு கேது சிம்மம், சூரியன் புதன் கன்னி சுக்கிரன் சனி துலாம் ராஹு கும்பம் செய்வாய் மிதுனம். இவ்வாறான கிரஹ அமைப்பின் பலன்களைச் சொல்லுவீர்களாக என உமா தேவி கேட்கும் போது, வசிஷ்ட முனிவர் பதில் உரைக்கின்றார்.

2. இந்தசேய் ஆணும் ஜன்ம மில்லமும் கீழ்ப்பால் நோக்கம்
தென்வட வீதி யாகும் சிறுவூராம் கூறை யில்லம்
அந்தரி கணேசன் மேற்கில் அருகினில் நதியு முண்டு
வந்திடு மார்க்க முண்டு வரைந்தஇவ் வடையா ளத்துள்;

2. இக்கிரஹ நிலையில் பிறந்தக் குழந்தை ஆண். வீடு கீழ்த்திசை நோக்கி இருக்கும். வீதி தெற்கு வடக்கில் அமைந்திடும். அது சிறிய ஓர் ஊர். கூறை வீடு. மேற்குத்திசையில் காளி கோயிலும் விநாயகர் ஆலயமும் விளங்கும். சமீபத்தில் ஒரு நதியும் உண்டு. ஜன நடமாட்டம் உள்ள ஒரு மார்க்கமும் இருக்கும். நாங்கள் சொன்ன இவ்வடையாள முள்ள கிராமத்தில்.

3. பாலகனி ரண்டாம் ஜன்மம் பகருவோ மிவனின் யோகம்
வேல்விழி அன்னை தந்தை வித்தகி மனைவி யோகம்
சாலவே புத்திர யோகம் சாற்றுவோ முன்பின் ஜன்மம்
ஆலத்தை யுண்டோன் தேவி அறிவிப்போ மிந்நூல் தன்னில்.

3. குடும்பத்தில் இரண்டாம் குழந்தையாக ஜெனித்திருக்கின்றான். தேவியே! நாங்கள் இந்நூலில் இவனுடைய யோகங்களையும், தாய், தந்தை, மனைவி, புத்திரர், இவர்களைப் பற்றியும், முன்பின் ஜன்மங் களைப்பற்றியும் அறிவிக்கப்போகின்றோம்.

4. தந்தையின் துணைஆண் ஒன் று சத்திமா ரிருவ ராகும்
அந்தஆண் இளையோ னாகும் அவன் குணம் கூறக் கேண்மோ
நொந்திடு மனத்தா னாகும் நேமியில் ஜீவிப் பானும்
கந்தன்மேல் பத்தி பூண்பன் காலிகள் விருத்தி யல்பம்.

4. ஜாதகனுடைய தந்தைக்கு ஒரு சகோதரன். இரு சகோதரிகள். சகோதரன் இவனுக்கு இளையவன், தந்தை. சகோதரனுடைய குணத்தைக் கூறுகின்றோம் கேளுங்கள். எப்பொழுதும் கவலைப்படும் மனமுள்ளவனாக ஜீவிப்பான். சுப்பிரமணிய சுவாமியிடம் பக்தி பூண்டவன். எருது பசு முதலிய கால்நடை பிராணிகள் இவனிடம் விருத்தியை அடையா.

5. சிலதுநாள் ஒன்றாய் வாழ்ந்து செல்வனும் வேற தாக
நலமதை யெவர்க்கும் செய்வான் நாயகி ஒன்றே தீர்க்கம்
நிலமதைக் காப்பா னாகும் நேர்ந்திடும் சுதர்ஆண் ரண்டு
தலைவியுமி ரண்டேயாகும் தனமது மில்லா னாகும்.

5. அவன் தனது அண்ணனுடன் (ஜாதகனின் தந்தையுடன்) சில காலம் ஒரே கூறையில் ஒன்றாகக் குடும்பம் செய்து பிறகு தனிக் குடும்பத்தை ஏற்பான். எல்லோருக்கும் நன்மைகளையே செய்வான். அவனுக்கு மனைவியும் ஒருத்திதான். அவளும் தீர்க்காயுளுடன் வாழ்வாள். தனக்குள்ள நிலத்தைப் பரிபாலிப்பான். அவனுக்கு இரு பிள்ளைகளும் இரு பெண்களும் உண்டு. அவன் பணம் படைக்காதவனாக இருப்பான்.

6. சுகதுக்கம் கலந்து வாழ்வன் சிலசேதி பின்பால் சொல்வேன்
தகைமையாய்ப் பிதாவின் சேதி ஜன்ம நாள் கேட்டை யாகும்
அகமது கடக மாகும் அல்பமாம் கோபி யாகும்
பகைமோசம் துணையைச் செய்வன் பத்தினிக் கிஷ்ட னாகும்.

6. அவனுக்குச் சுகங்களும் துக்கங்களும் கலந்தே வரும். (அதிக துக்கம் உள்ளவன் என்பது கருத்து). அவனைப்பற்றிய விவரங்களைப் பின் பகுதியில் சொல்லுகின்றோம். ஜாதகனின் பிதா குணங்களைத் தெரிவிப் போம். அவன் கேட்டை நக்ஷத்திரத்தில் பிறந்தவன். அவனுக்கும் ஜன்மலக்கினம் கடகம். சிறிது கோபமுள்ளவன். சகோதரனைப் பகைத் தும் கொள்ளுவான். அவனை மோசமும் செய்வான். தன்மனைவியிடத் தில் மிக்க அன்பு கொண்டவன்.

7. மாநிறம் சம தேகத்தன் வடிவுகள் மெய்யில் காணும்
தானென கருவம் கொஞ்சம் சந்தேக மனத்த னாகும்
பான்மையாய்ப் பேசு வானும் பாரது விருத்தி செய்வன்
ஊனமில் லாத தேகி உறுதியா மனத்த னாகும்.

7. மாநிறம் வாய்ந்தவன். சமமான தேகவளர்ச்சி உடையவன். புண்ணால் ஏற்பட்ட சில அடையாளங்கள் சரீரத்தில் காணப்படும். தான் என்ற அகம்பாவம் கொண்டவன். சந்தேகப்படும் இயல்புள்ளவன். அழகாகப் பேசுவான். பூமிகளை அதிகப்படுத்துவான். இவனது உடலில் எந்தவித ஊனமும் இராது. உறுதியான மனம் படைத்தவன்.

8. இல்லமும் பின்னால் செய்வன் எதிரிக்கு அஞ்சா னாகும்
சொல்லது சுருக்க மாகும் சோம்பிடான் காரி யத்தில்
புல்லிய புத்தி கொஞ்சம் போஜன வறுமை காணான்
தல்லியை காப்பா னாகும் தனரேகை கரத்தில் தோன்றும்.

8. பிற்காலத்தில் சொந்தமாகத் தனி வீடு கட்டுவான். எதிரிக்குப் பயப்படாதவன். இவனுடைய வார்த்தை சுருக்கமாகவே இருக்கும். வேலை செய்வதில் சோம்பல் இல்லாதவன். சிறிது தாழ்ந்த புத்தியும் இருக்கும். ஆகாரத்திற்குக் கஷ்டப்படாதவன். தாயை அன்புடன் உபசரிப்பான். இவனது கையில் தனரேகை விளங்கும்.

குறிப்பு.—தனரேகை—இது பணவரவை அறிவிக்கும் கோடு.

9. உரோமங்கள் நீட்சி யில்லான் நுவலுப தேசம் கொள்ளான்
காமனை விருப்பம் கொள்வன் கட்செவி போலக் கோபம்
நேமங்கள் தவறுதல் செய்வன் நிஷ்டூர வசனம் கூறுவன்
தாமத குணமும் கொஞ்சம் சங்கரி கேட்டி டாயே.

9. உரோமங்கள் நீண்டிரா. பெரியோர்களிடம் நல்லுபதேசம் கேளாதவன். அதிக ஆசை உடையவன். சர்ப்பம் போல சினம் உள்ளவன். சம்பிரதாயமாக வந்த நியமங்களைப் பின்பற்றுதவன். கடூரமான வார்த்தை களைப் பேசுவான். தாமத குணமும் உள்ளவன். சிவபிரானின் தேவியே! மேலும் கேளுங்கள்.

10. இந்நெறி யுடையா னுக்கு இவனுமே ஜனிப்பா னாகும்
அன்னவன் குணத்தைச்சொல்வேன் அழகுளான் மால்நி றத்தான்
பன்னியே பேச வல்லன் பற்களும் தரள மொக்கும்
பொன்பணி பின்னால் சேர்ப்பன் பூமியை விருத்தி செய்வன்.

10. இத்தகைய குணமுள்ளவனுக்கு இக்கடகலக்கின மகன் ஜனித்திருக்கின்றான். இனி ஜாதகனுடைய குணங்களைக் கூறுவோம். அழகு வாய்ந்தவன். கருத்த மேனியான். பன்னிப் பன்னிப்பேசும் இயல்புள்ளவன். பற்கள் முத்துப்போன்றிருக்கும். பிற்காலத்தில் பொன்னாலாகிய ஆபரணங்கள் இவனுக்குக் கிடைக்கும். நிலத்தை அபிவிருத்தி செய்வான்.

11. கல்வியும் சமம தாகும் காலிகள் விருத்தி யுண்டு
மல்லிற்கு முன்செல் லாதான் மருமமு மில்லா னாகும்
இல்லை யென்றுரைக்க மாட்டான் யீகைவான் நல்லோ னாவன்
சொல்லதைக் காப்பானாகும் துர்வழக்க தனில் செல்லான்.

11. போதிய அளவு கல்வியறிவு படைத்தவன். கால்நடைகள் இவனிடம் புஷ்டியை அடையும், சண்டையில் ஈடு படான். மனத்தில் ஒன்றையும் ஒளிக்காதவன். உதவியை யாசிப்பவர்களுக்கு இல்லை என்று சொல்லாதவன். தியாக குணம் வாய்ந்தவன். எல்லோருக்கும் நல்லவனாக நடப்பான். தனது வார்த்தையைக் காப்பாற்றுவான். அதர்ம வழிகளில் சேரான்.

12. இன்னவன் செங்கை தன்னி லிலகிடும் பத்ம ரேகை
கன்னியர் மோக னாவன் கண்முகம் வசிய முண்டு
அன்னியர் மதிக்க வாழ்வன் அடைந்தோரை ஆத ரிப்பன்
பின்னமில் லாத தேகி பூவையே கேட்டி டாயே.

12. இவனுடைய சிவந்து அழகிய கையில் பதும ரேகை திகழும். பெண்களிடம் மோகம் கொண்டவன். முகத்தில் பிறரை வசப்படுத்தும் பொலிவு வாய்ந்தவன். உலகத்தோர் கௌரவிக்கும் வகையில் வாழ்வான். தன்னை அண்டியவர்களை ஆதரிப்பான். சரீரத்தில் குறைவு இல்லாதவன். தேவியே! மேலும் கேளுங்கள்.

குறிப்பு.—பதும ரேகை, மலர்ந்த தாமரைப் புஷ்பம் போல் அமைந்துள்ள கோடு. இது, வாழ்க்கையில் இடையூறின்றி அரசனாக வாழ்வான் என்பதை அறிவிக்கும். இந்தக் கோடு தாமரைரேகை கமலரேகை முதலிய பரியாய பதங்களாலும் சொல்லப்படும்.

13. தன்துணை முன்னோர் நஷ்டம் தங்கும்பின் கன்னி ரண்டு
மன்னன்போல் ஆண்பா லொன்று மங்கையும் ஒன்று தீர்க்கம்
முன்துணை தோஷ மெவ்வாறு மொழிகு வீரந்தச் சங்கை
கன்னியில் கேது தங்கக் கழறினோம் தோஷம் தானே.

13. இவனுக்கு முன் பிறந்த சகோதரன் நீடித்து வாழான். இச்சாதகனுக்குப் பிறகு பிறக்கும் இரு சகோதரிகளும் அரசன் போன்ற ஒரு சகோதரனும், அவனுக்குப் பின்பு ஜனிக்கும் ஒரு பெண்ணும் தீர்க்கமாக வாழ்வார்கள். முன் பிறந்த சகோதரன் தங்கமாட்டான் என்பதற்குக் காரணத்தைச் சொல்லுங்கள் எனப் பார்வதி கேட்க, முனிவர் கூறுகின்றார். குடும்பபாவம் என்று சொல்லப்படும் இரண்டாமிடத்தில் சந்திரனுடன் கேது இருப்பதால் இவனுக்கு முன் சகோதரன் பிறந்து நஷ்டமாகி இருக்கவேண்டும்.

14. மாதுரு குணத்தைச் சொல்வேன் மாநிறம் நீட்சி யாகும்
ஓதுவாள் சுகமாய் வார்த்தை உயர்வான புத்தி யேற்பள்
காதலி யோக சாலி கணவன்தன் மனதுக் கேத்தோள்
தீதுகள் ஒருவர்க் கெண்ணுள் தீரமாம் குணமில் லாதாள்.

14. தாயின் குணத்தைக் கூறுவோம். மாநிறம் வாய்ந்தவள். சரீரம் உயரமாக இருக்கும். சுகமாகப் பேசுவாள். மேலான புத்தி படைத்தவள். மிக்க அதிருஷ்டமுள்ளவள். தன் கணவனது விருப்பப்படி நடப்பாள். ஒருவருக்கும் தீமைகளை நினைக்கமாட்டாள். தைரிய மில்லாதவள்,

15. இல்லமும் வட கீழாகும் இவள்துணை ஆண்பால் ரண்டு
வல்லியு மொருத்தி தீர்க்கம் அவர்சேதி பின்பால் சொல்வேன்
தல்லியின் பூர்வம் கேளாய் தக்கோலம் தன்னிலேதான்
புல்கினுள் செங்குந்த சேயாய்ப் புத்திர ருடைய ளாகி.

15. இவள் பிறந்த வீடு வடகிழக்குத் திசையில் உள்ளது. இவளுக்குச் சகோதரர்கள் இருவர். சகோதரி ஒருத்தி. இம்மூவரும் நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள். அவர்களைப்பற்றி வரலாறுகளைப் பின்பாகத்தில் சொல்லப்போகிறோம். இவளுடைய பூர்வஜன்மத்தைக் கூறுகின்றோம். கேட்பீராக. இவள் முன் பிறவியில் தக்கோலத்தில் நெசவாளர் குலத்தில் பிறந்து, கணவன் குழந்தைகள் இவர்களுடன் சுகமாக வாழ்ந்து வந்தாள்.

16. அறுமுகன் பக்தி கொண்டு அறமதி லிச்சை யாயும்
திருமகள் வினையில் லாமல் சென்றனள் கால னூடு
பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தவ ளென்று சொல்வோம்
தரையினில் வறுமை காணுள் சங்கரி சேட்டி டாயே.

16. ஆறுமுகக் கடவுளிடம் பக்தி பூண்டிருந்தாள். தருமம் செய்வதில் சிரத்தை உடையவளாகித் தருமத்தைச் செய்துவந்தாள். எவ்வித பாவமும் செய்யாதவளாகி அந்தியத்தில் யமனுலகம் சென்ற இவளைப் பிரம்மதேவன் இங்கு பிறப்பித்திருக்கிறான். தனது ஆயுள்காலம் முடிய வறுமையைக் காணுதவள். உமாதேவியாரே! மேலுங் கேளுங்கள்.

17. மறுஜன்மம் கொங்கு நாட்டில் வருவளாம் வைசிய சேயாய்த்
திருமகள் விலாசம் பெற்றுச் செல்வதி வாழ்வா ளாகும்
உறைக்கிறோம் தந்தை பூர்வம் உயர்காஞ்சி தன்னிலேதான் ;
மிகச் செய்யும் வைசிய சேயாய் நேருவா ளென்று சொன்னோம்.

17. இவள் மறுபிறவியில் கொங்குநாட்டில வைசிய குலத்தில் பிறப்பாள். லக்ஷ்மீவாசம் பொருந்தியவளாகச் சிறப்புடன் வாழ்வாள். ஜாதகனுடைய தந்தையின் முன் பிறவியைக் கூறுவேன். இவன் முன் பிறவியில் மேலான க்ஷேத்திரமாகிய காஞ்சியில் எப்பொழுதும் பொருளைச் சேமிக்கும் சுபாவமுள்ள வைசிய குலத்தில் பிறந்து, வியாபாரத்தைச் செய்து ;

18. சுகதுக்கம் உடைய ஞாலம் சென்றனன் கால் னூடு
தகைமையாய்ப் பிரமன் லக்கம் ஜனித்தன னென்று சொல்வோம்
வகையுட னிவன்பின் ஜன்மம் மறுவூரில் முத்திரிய சேயாய்
வகையாக உதிப்பா னாகும் பராசரரும் மறுத்துச் சொல்வர்.

18. உலகில் இன்ப துன்பங்களை அனுபவித்து, காலனது நாட்டை அடைந்தான். பிறகு இங்குப் பிறந்திருக்கிறான். இவனுடைய மறுஜன்மத்தையும் கூறுவோம். அடுத்தப் பிறவியில் இவன் மறுவூரில் முத்திரிய குலத்தில் பிறப்பான் என்று சொன்னவுடன், பராசரர் குறுகிட்டுச் சொன்னார்.

குறிப்பு.—"முத்திரியர்" "முத்திரையர்" "தலையாரி" போன்ற கீழ்த்தர கிராமசேவகர்.

19. இந்தவோர் ஜன்மம் தன்னில் இவன் செய்த கொடுமை யென்ன
தன்துணை மோசம் செய்து தந்தையும் வாழ்வ தாலே
அந்தவோர் குலமு திப்பான் அறிகுவீர் கரும காலம்
செந்தீயின் திசையி லேதான் செப்புவோம் தந்தை கண்டம்.

19. மறு பிறவியில் தாழ்ந்த குலத்தில் பிறப்பதற்கான என்ன பாவத்தை இவன் இப்போழுது செய்திருக்கிறான்? வசிஷ்டர் பதிலுரைத்தார். இவன் தன் சகோதரனை ஏமாற்றிச் செல்வத்தை அபகரித்து வாழ்ந்தானுகையால் மறுபிறவியில் நிச்சயமாகத் தாழ்ந்த ஜாதியில்தான் ஜன்மத்தை அடைவான். ஜாதகன் தாய் தந்தையர்களுக்கு ஈமச் சடங்குகள் செய்ய நேரிடும் காலத்தைக் கூறுவேன். ஜாதகனுக்குச் சூரியதசை நடக்கும் போது தந்தைக்குக் கண்டம் ஏற்படும்.

20. இருபது ஒன்ப தாண்டில் எழிலானி மாதம் தன்னில்
திருமகன் தந்தை கண்டம் சேயனைப் பெற்ற அன்னை
வருங்கண்ட மீரா றாண்டில் மறலியைக் காணா ளாகும்
நெறியதாய் முப்பா னேழில் நீங்கிடும் உடலம் தானே.

20. ஜாதகனுக்கு இருபத்தொன்பதாவது வயது நடைபெறுகையில் ஆனி மாதத்தில் தந்தை மரணமடைவான். தாய்க்கு இவனுடைய பன்னிரண்டாவது வயதில் ஒரு கண்டம் நேரும். ஆனால் அப்பொழுது அவள் இறக்க மாட்டாள். இவனுடைய முப்பத்தேழாவது வயதில் தாய் நிச்சயம் இறப்பாள்.

21. பத்தொன்ப தாண்டு தன்னில் பகருவோம் பிதாவி னன்னை
வித்தகன் மணத்தின் காலம் விளம்புவோ மிரண்டாண் டுள்ளே
பத்தினி வடகீழ் தன்னில் பாவைய ரன்னை வர்க்கம்
சத்தியும் வருவா ளாகும் சாற்றுவோ மவள்கு ணத்தை.

21. இவனுடைய பத்தொன்பதாவது வயதில் தந்தையின் தாய்க்கு மரணம் நேரிடும். ஜாதகனின் விவாஹ காலத்தை அறிவிப்போம். பாட்டி மரணமாகி இரண்டாண்டிற்குள் இவனுக்கு மணம் நடைபெறும். மணப்பெண் வடகிழக்கில் மாதுருவருக்கத்தில் ஜனித்திருப்பாள். அவளுடைய குணங்களைத் தெரிவிப்போம்.

22. மாந்தளிர் மேனி யாகும் மனமது பார்க ளுண்டு
கூர்ந்துமே வார்த்தை சொல்வள் புன்சிரிப் புடைய ளாகும்
சாந்தமும் கோப மேற்பள் சாதமு மன்பா யீவள்
போதிய தனத்தா ளாகுமிடர் செய்யாள் யாவ ருக்கும்

22. அவளது மேனி மாந்தளிர் போல் திகழும். விசாலமனம் படைத்தவள். கூர்ந்து கவனித்து வார்த்தைகளைப் பேசுவாள். எப்பொழுதும் புன் சிரிப்பு முகத்தில் விளங்கும். கோபம் சாந்தம் இவ்விரு குணங்களும் அவளுக்குண்டு. அன்புடன் அன்னமளிப்பாள். தேவையான அளவிற்குச் செல்வம் படைத்தவள். யாருக்கும் இடையூறுகளைச் செய்யாள்.

23. மங்கையும் வயது தீர்க்கம் மாமுனி தடுத்துச் சொல்வர்
சங்கையாய் ஏழோன் தானும் சரத்தினில் வெள்ளி கூட
நங்கைய ரிருவ ராகும் நாரதர் தடுத்துச் சொல்வர்
திங்களும் குருவும் ரண்டில் தனத்துளோன் மூன்றில் தங்க ;

23. இவளுக்கு வயது தீர்க்கம். என்று இவ்வாறு வசிஷ்டர் கூறியவுடன் ஒரு மஹரிஷி ஆக்ஷேபித்தார். களத்திர பாவத்திற்கு அதிபனான சனி, சுகிரனுடன் சரராசியாகிய துலாத்தில் இருப்பதால் இவனுக்கு மனைவிமார் இருவர் என்று சொல்ல வேண்டுமல்லவா ? இந்த ஆக்ஷேபத்திற்கு நாரதர் பதில் கூறினார். சந்திரனும் குருவும் " குடும்ப" ஸ்தானத்தில் இருப்பதாலும், அந்த ஸ்தானத்திற்குடையோன்—சூரியன் (குடும்பத்திற்குக் குடும்பமாகிய) மூன்றுமிடத்தில் இருப்பதாலும் ;

24. இருமனை அணுகா தாகும் ஏழிடம் சேயும் பார்க்க
அரிவையாய்ப் பிரமன் கூட அணுகிடு மவர் பலத்தால்
வருங்காலம் சொல்லு மென்ன ஆறஞ்சு ஆண்டு நேரும்
அரிவைதன் குலத்து மாது ஆயுசுமட்டும் தங்கும்.

24. இவனுக்கு இரு மனைவிமார்கள் ஏற்படமாட்டார்கள். ஆனால் பன்னிரண்டாமிடத்தில் இருக்கும் செவ்வாய் எட்டாம் பார்வைபாக எட்டாமிடத்தைப் பார்ப்பதாலும் சனி, சுக்கிர சம்பந்தத்தாலும் வேறு ஒரு மாது இவனைக் கணவனாகத் தீர்மானித்து வந்தடைவாள். அவளையும் இவன் மனைவியாக அங்கீகரிப்பான். அம்மாதும் இவன் சாதியைச் சேர்ந்தவளே. இச் சம்பவம் இவனுடைய முப்பதாவது வயதில் நிகழும்.

25. ஜாதகன் தனக்குப் புத்திரர் சாற்றும்வாம் நவமே தோன்றும்
தீதாகும் சிலவே என்றோம் தீரமாயாண்பால் மூன்று
மாதுவு மிரண்டு தீர்க்கம் வரைகிறோம் தன்பால் சேதி
போதக வானை பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

25. ஜாதகனுடைய புத்திரபாவத்தை அறிவிப்போம். இவனுக்கு ஒன்பது குழந்தைகள் உதிப்பார்கள். சில குழந்தைகள் நீடித்திரா. மூன்று பிள்ளைகளும் இரண்டு பெண்களும் தீர்க்கமாக வாழ்வார்கள். அவர்களைப் பற்றிய வரலாறுகளைப் பிறகு அறிவிப்போம். விநாயகரைப் பெற்ற கருணைக்கடலே மேலும் கேளுங்கள்.

**26.** எந்தமா துக்குப் புத்திரர் அழிவரா மந்தச் சங்கை
வந்திடு மாதுக் கேதான் மைந்தர்கள் பலமு றுவே
சொந்ததோர் மாதுக்கேதான் செப்பினேம் புத்திரர் தாமும்
கந்தனைப் பெற்ற மாதே கழறின மொழி குன்றுது.

**26.** சில குழந்தைகள் அழியும் என்று சொன்னீர்கள். சொந்த மனை யாளின் மகவுகள் அழியுமா ? அல்லது அபிமான மனைவியின் குழந்தைகள் அழியுமா ? இதைத் தெளிவுப்படுத்துங்கள். என ஒரு முனிவர் கேட்க, வசிஷ்டமுனிவர் பதில் உரைத்தார். அபிமானித்த மாதுவின் குழந்தைகள் நீடித்து வாழா, சொந்த மனைவியிடம் உதித்தக் குழந்தைகள் ஸ்திரமாக வாழும். சுப்பிரமணியனை ஈன்ற தாயே ! எங்கள் மொழி பொய்யாகாது.

**27.** முன்னவ னிருந்த ஜன்மம் மொழிகிறோம் தோகை தன்னில்
நன்னிய செக்கான் வம்சம் நண்ணியே வணிபம் செய்து
அன்னையும் தந்தை மிக்க அவன்மனை புத்திர ருண்டாய்
இன்னவன் வாழு நாளி லியம்புவோம் ஊழி தானே.

**27.** இவனுடைய முன் பிறவியைக் கூறுகின்றோம். முன் பிறவியில் இவன் "செக்குவாணியன்" வமிசத்தில் பிறந்து வியாபாரத்தைச் செய்து கொண்டு, மனைவி மக்கள் தாய் தந்தையர் இவர்களுடன் சுகமாக வாழுங் காலத்தில் இவனுக்கேற்பட்ட ஒரு கருமத்தொடர்பைக் கூறுகின்றோம்.

**28.** தனமது இல்லா ஏழை சாதமும் குறைவுண் டாகி
இனம்விட்டு மாரன் பக்கல் இயம்புவாள் வார்த்தை யொன்று
வினைசெய்வேன் உன்னில் லத்தில் மேவுவாய் சாத மென்னத்
தனயனும் அதற்கி சைந்து தங்கைபோல் காத்து வந்தான்.

**28.** ஒரு ஏழைப்பெண், பசியைத் தணிப்பதற்கு ஆகாரமில்லாமல், தனது உறவினர்களையும் துறந்து, இவனிடம் வந்து உனது வீட்டில் இட்ட வேலைகளைச் செய்கிறேன் ; எனக்கு அன்னம் அளிப்பாயாக என்று வேண்டி ஞள். இவனும் மனமிளகி அவளைத் தனது தங்கைபோல் பாவித்து அன்னமிட்டுக் காப்பாற்றி வந்தான்.

**29.** பின்சில நாளி ருந்து பொருளது களவு கொண்டு
கன்னிகை மானைப் போலே கடந்தனள் வேறூர் தானும்
மன்னவன் பின்னுள் பார்த்து மாதுவைக் காணுகித்
தன்மனச் சஞ்ச லத்தால் தந்தியின் கோஷ்ட முன்பால் ;

**29.** சிலநாள் சென்றவுடன் அந்தப்பெண், இவனது வீட்டிலுள்ள பொருள்களைத் திருடிக்கொண்டு, மான்போல, வேறு ஒரு கிராமத்திற்குள் ஓடி மறைந்தாள். இவன், சிறிதுகாலம் அவளை எதிர்பார்த்தும் வராததால் மனம் குழம்பி விநாயகர் கோயிலுக்குச்சென்று .

## வேறு

30. முன்கட னுயின்கடனே அறிவன்பானு
மூப்பொருள் நீயறிவாய் யென்று சொல்லித்
தன்கரத்தால் தெருத்தூளைத் தூற்றிச் சென்றான்
சார்ந்ததுவே அச்சாபம் தையலுக்கு
மன்னவனும் வினையின்றி மரணமாகி
மறையவனும் வரையவந்தான் இச்சென்மத்தில்
முன்கடனைத் தீர்ப்பதற்கு அபிமான பருள
மேவுவாள் முப்பதா மாண்டு தன்னில்.

30. நான் அவளுக்குப்பட்ட கடனுக இருப்பின் அதைச் சூரிய நாராயண னும் அறிவான். உலகிற்கு ஆதிகாரணமாகவுள்ள நீயும் அறிவாய் என்று சொல்லி, தனது இரு கரங்களாலும் தெருத்தூளை எடுத்து ஆகாயத் தில் தூற்றி விட்டுச் சென்றான். இவன் கொடுத்த சாபம் அந்தப் பெண்ணைப் பிடித்துக்கொண்டது. வேறு பாவமின்றி இவன் மரணமடைந்து இப்பொழுது இக்கடகலக்கினத்தில் படைக்கும் கடவுளால் பிறப்பிக்கப்பட்டிருக்கின்றான். முன் பிறவியில் இவனிடம் உதவிபெற்றவளும் அவனது பொருளைத்திருடிச் சென்றவளுமாகிய அந்தப்பெண் தனது கடனைத் தீர்ப்பதற்காக இவனிடம் அபிமானமனைவியாக சாதகனுடைய முப்பதாம் வயதில் சேர்ந்திருக்கின் றாள்.

## வேறு

31. வந்தவன் யோகச்சேதி வரைகிறோம் இனிமே லாக
விந்தையாய் வனவாசங்கள் மேவிடும் பதின்மூன் றாண்டும்
தந்தையின் துணையும் வேறு சார்ந்திடும் ஒன்ப தாண்டுகள்
அந்தவன் வனவா சங்கள் அணுகிடும் நினைத்த தோங்க.

31. இஃது இருக்கட்டும். இனி ஜாதகனுடைய யோகங்களைக்கூறுகின் றோம். பதின்மூன்று ஆண்டுகளுக்கு இவன் வனவாசம் செய்வான். இவன் ஜனித்து ஒன்பது ஆண்டிற்குள் குடும்பப்பிரிவினை நடைபெறும். வன வாசமும் நினைத்தகாரியம் ஈடேறுவதற்கு அனுகூலமாக அமையும்.

32. ஈராறு அண்டின் மேலாய் இல்லமும் செய்தானுண்டு
பாரது சேர்த்தலுண்டு பசுக்களும் விருத்தி யாகும்
தீர்மா மனமு மெய்தும் ஜனபந்து மதிக்க வாழ்வன்
ஆறுமா முகத்தோன் அன்பால் யாவத்தும் கூடு மென்றோம்.

32. பன்னிரண்டு வருஷங்களுக்குமேல் புதிய வீடு கட்டுவான். நிலங்கள் சேரும். பசுக்கள் விருத்தியடையும். மனவுறுதி ஏற்படும். உறவினர் மெச்ச வாழ்வான். ஆறுமுகக்கடவுளின் அருளால் எல்லா முயற்சிகளும் இவனுக்குக் கைகூடும்.

33. நாட்டிய கோள்க ளேழும் நாலுரா சியிலே நிற்க
இட்டும்கே தார யோகம் இதன் பலன் கூறக் கேண்மோ
திட்டுவே ளாண்மை யுள்ளோன் ஜகந்தனி லுள்ளூர்க் கெல்லாம்
ஜனஉப காரியாவன் கோத்திரம் திலக மொப்பாம்.

33. குரு கேது சந்திரன் சூரியன் புதன் சுக்கிரன் சனி ஆகிய ஏழு கிரஹங்கள் லக்கினம் முதல் நாலாம் இடத்திற்குள் இருப்பதால் இவனுக்குக் "கேதார" யோகமுண்டு. இந்த யோகத்தின் பலன்களைத் தெரிவிக்கின்றோம், கேளுங்கள். பயிர்த்தொழில் நன்றாகப் பலிதமாகும். ஊரில் உள்ள எல்லா ஜனங்களுக்கும் உபகாரம் செய்திடுவான். தனது வமிசத்திற்குத் திலகம் போல் விளங்குவான்.

34. தந்தைநாள் பூமிகொஞ்சம் தான்சேர்ப்பன் சிலது பூமி
சுந்தர முடையா னாகும் துறவிகள் நேசம் கொள்வன்
பிந்திநாள் போகம் வாய்க்கும் போஜன வறுமை காணன்
சந்தத மிருபாண்டின் மேல் சந்திரன் பிறைபோல் யோகம்.

34. பிதுரார்ஜிதமான பூமிகொஞ்சம் இவனுக்குண்டு. தனது முயற்சியாலும் சில நிலங்களைச் சம்பாதிப்பான். அழகுவாய்ந்தவன். துறவிகளிடம் பக்தி யுடையவன். பிற்காலத்தில்தான் இவனுக்கு நல்ல யோகம் வாய்க்கும். போஜன சௌக்கியமுள்ளான். இருபதாவது வயதிற்குமேல் இவனுடைய யோகங்கள் சுக்கிலபக்ஷ சந்திரன்போல் வளரும்.

35. சல்லிய பாதை யேற்கான் சாராள்கள் சேர்த லுண்டு
புல்லிய ருறவு கொள்ளான் பின்துணை நாற்ப தாண்டில்
செல்லுவான் வேறதாகச் செப்புவோம் பின்பால் சேதி
அல்லலைத் தவிர்க்கு மெங்கள் ஆத்துமத் தாயே கேளாய்.

35. கடன் இல்லாதவன். பல சேவகர்களை ஆதரிப்பான். கெட்டவர்களின் நட்புக் கொள்ளாதவன். இவனுடைய சகோதரன், இவனுக்கு நாற்பதாவது வயது நடைபெறுகையில், குடும்பப்பிரிவினை செய்துக்கொண்டு தனிக் குடும்பம் நடத்துவான். அவனைப்பற்றிய செய்திகளைப் பின் பாகத்தில் தெரிவிப்போம். எங்கள் கஷ்டங்களை நிவிருத்தி செய்யும் தாயே! மேலும் கேளுங்கள்.

36. நாற்பது நாலு ஆண்டில் நல்கிடும் கண்ட மொன்று
ஏற்கவே அன்பின் எட்டில் யெழில் மீன மாதம் தன்னில்
கூப்பிடு வானும் காலன் குறித்ததோர் பாலன் தன்னைத்
தீர்ப்பாக இவன்பின் ஜன்மம் செப்புவோம் தாயே கேளும்.

36. ஜாதகனுக்கு நாற்பத்து நாலாவது வயதில் ஒரு பெரிய கண்டம் வரும். ஆனால் அஃது இவனுக்கு முடிவாக ஆகாது. ஐம்பத்தெட்டாம் வயதில் பங்குனி மாதத்தில் யமன் இச் சாதகனைத் தன்னுட்டிற்கு அழைப்பான். இவனுடைய பின்ஜன்மத்தைப்பற்றித் தீர்மானித்துக் கூறுவோம் அன்னையே! கேட்பீராக.

37. உத்தரம் திருமால் பேரில் உதிப்பனும் ரெட்டி வம்சம்
மெத்தெனகுடும்பி யாகி வித்தகன் வாழ்வா னுகும்
சித்தசன் ஜனன காலம் சுக்கிரன் தசையே ழாண்டும்
பத்துமா தங்க ளென்றும் கூறினம் பூர்வ பாகம்.

37. வடதிசையிலுள்ள திருப்பதிக்கு அருகில் ரெட்டிவமிசத்தில் பிறந்து மதிப்புவாய்ந்த குடும்பமுள்ளவனுகிச் சிறப்புடன் வாழ்வான். சாதகன் பூரம் மூன்ரும் பாதத்தில் ஜனித்திருக்கின்ருன். ஆகையால் சுக்கிர தசையில் இருப்பு வருஷங்கள் ஏழு, மாதங்கள் பத்து. இவ்வாறு பூர்வ பாகம் முற்றிற்று.

# ஜாதகம் 34

1. மதிகாரி கோல தாக மர்க்கயறு மகனி லாகப்
புதன்புகர் பரிதி கேது புக்கிடம் சீய மாக
நிதிகுரு கடக மாக நிலமகன் நந்தி யாக
இதுவிதக் கோளு நின்று . . . வளைபா லாக

| | | | |
|---|---|---|---|
| | | செவ்வாய் | |
| ராகு | இராசி | சக்கரம் | லக்கினம் குரு |
| | | | புதன் சுக்கிரன் சூரியன் கேது |
| | | சந்திரன் சனி | |

1. துர்முக ஆவணி மாதம் 27-ஆந்தேதி வியாழக்கிழமை இரவு 25 நாழிகைக்கு ஜனனம். ஆங்கிலத்தேதி 10-9-1896. நவக்கிர ஹங்களின் பாதசாரம்—பூரம் 4-இல் சூரியன். சுவாதி 3-இல் சந்திரன். ரோஹிணி 4-இல் செவ்வாய். ஹஸ்தம் 4-இல் புதன். மகம் 2-இல் குரு. ஹஸ்தம் 2-இல் சுக்கிரன். விசாகம் 1-இல் சனி. அவிட்டம் 3-இல் ராகு. மகம் 1-இல் கேது. நக்ஷத்திரம் சுவாதி. ராகு தசையில் இருப்பு வருஷங்கள் நான்கு, மாதங்கள் பதினொன்று.

குறிப்பு.—இந்நூலாசிரியரின் கருத்தின்படி, புதன் குரு சுக்கிரன் இவர்களின் சாரம் வித்தியாசமடைகின்றது.

சந்திரன், சனி துலாம், ராகு கும்பம், புதன் சுக்கிரன் சூரியன் கேது சிம்மம், குரு கடகம், செவ்வாய் விருஷபம். இலக்கினம் கடகம். இவ்வாறு நவக்கிரஹங்கள் நிற்க, பலன்களைச் சொல்லுவீர்களாக எனப் பார்வதி தேவி வினவினாள்.

2. சங்கரி கேட்கும் போது சடைமுனி புகலு கின்றார்
இங்கிவை ஆண்பால் ஜன்ம மில்லமும் கீழ்மேல் வீதி
தங்கிடும் வடதென் வாசல் தந்திமா காளி மேற்கில்
முந்துமால் வடமே லாகும் முக்கண்ணி மாரி கீழ்ப்பால்.

2. இவ்வாறு உமாதேவி கேட்டவுடன், சடைமுனி பலன்களைத் தெரிவிக்கின்றார். இக்கிரஹ நிலையில் பிறந்த குழந்தை ஆண். வீதி கிழக்கு மேற்காக அமைந்திருக்கும். வீடு வடக்கு வரிசையில் இருப்பதால் தென் திசையை நோக்கும். விநாயகர் ஆலயமும், காளி கோயிலும் மேற்குத் திசையில் தங்கிடும். வடமேற்கில் விஷ்ணு கோயில்கொண்டிருப்பார். கீழ்த்திசையில் ஒரு காளி கோயிலும் மாரியம்மன் கோயிலும் இருக்கும்.

3. சொல்லிய அடையா ளத்துள் தோன்றுவான் மூன்றும் ஜன்மம்
தல்லியின் இல்ல மாகும் தந்தைதாய் துணைவர் யோகம்
வல்லவன் குடும்பச் சேதி வரைகிறே முன்பின் ஜன்மம்
அல்லலில் லாமல் சொல்வோம் அம்பிகை யாளே கேளாய்.

3. மேலே சொல்லப்பட்ட அடையாளங்கள் அமைந்த ஊரில் குடும்பத்திற்கு மூன்றும் மகவாக ஜனித்திருப்பான். இவன் ஜனனம் தாயின் வீட்டில் நிகழ்ந்திருக்கும். ஜாதகனின் தாய், தந்தை, சகோதரர், மனைவி, புத்திரர் இவர்களைப்பற்றியும், யோகம், முன்பின் ஜன்மம், இவைகளையும் இந்நூலில் நாங்கள் இனிமையாகக் கூறுவோம். அன்னையே! கேட்டருளல் வேண்டும்.

4. இவன் பிதாகு ணத்தைச் சொல்லுவேன் யிடரான புத்தி யில்லன்
தவசிக ளுறவு கொள்வன் சந்தேக மனத்த னாகும்
அவனியோர்க் கிணக்கம் சொல்லான் அடாவடி கூற னாகும்
பவமன மில்லா னாகும் பணிந்தோ ரை ஆத ரிப்பன்.

4. ஜாதகனின் தந்தை குணத்தைச் சொல்வேன். இவன் கெட்ட புத்தி இல்லாதவன். துறவிகளிடம் பக்தி கொண்டவன். சந்தேக மனப் பான்மை வாய்ந்தவன். உலகத்தோர்க்கு அனுகூலமாகவோ பிரதிகூலமாகவோ பேசாதவன். தீய எண்ணமில்லாதவன். கீழ்ப்படிந்தவர்களைக் காப்பான்.

5. சுகப்புசிப் பிலிச்சை யுண்டு சுந்திர முடையா னாகும்
ஜகமதில் நல்லோ னுவன் சேயிழை யில்லம் வாசம்
அகமது பின்னால் செய்வன் அரிரேகை யுடையா னாகும்
உகமையாய்ப் பேசு வானும் உறுதியில் லாத நெஞ்சம்.

5. சுகமாக ஆகாரங்களைச் சாப்பிடுவதில் அதிக சிரத்தை காட்டுவான், அழகு வாய்ந்தவன். எல்லோரிடமும் நல்லவனாகப் பழகும் இயல்புள்ளவன். தன் மனைவியின் வீட்டில் வாசம் செய்வான். பிற்காலத்தில் தனி வீடு கட்டுவான். கையில் விஷ்ணு ரேகை திகழும். எல்லோரும் கேட்டு உகக்கும் வகையில் இனிமையாகப் பேசுவான். உறுதி இல்லாத நெஞ்சம் உடையவன்.

6. வலப்புறம் மச்ச முண்டு வெண்மேகம் பின்னால் காணும்
புலவன்போல் மொழிவா னாகும் பொருளது விரயம் செய்வன்
குலத்துளோர்க் கிணக்கம் சொல்லான் கூடாத தந்தை யில்லம்
சரத்தொழில் சிலநாள் செய்வன் சல்லிய பாதை ஏற்பன்.

6. உடலில் வலது புறத்தில் மச்சமிருக்கும். பிற்காலத்தில் இவனுக்கு வெண்மேகம் வரும். மிகப் பெரிய பண்டிதன் போலப் பேசுவான். [உண்மையில் பண்டிதல்லன் என்பது கருத்து.] பொருள்களை அதிகமாகச் செலவு செய்வான். தன் ஜாதியருக்கு அனுகூலமாகப் பேசாதவன். பிதாவின் வீட்டில் இவனுக்கு வாசம் நேரிடாது. சஞ்சாரம் செய்து (Travelling Agency முதலியன) ஜீவிப்பான். இவனுக்கு கடனும் ஏற் படும்.

7. இருவித குணத்தா னுகும் யாரையும் வசியம் கொள்வன்
தனமது விரயம் செய்வன் சாமரை ரேகை யுண்டு
வறுமைகள் மத்தில் நேரும் மாநிறம் உயர மில்லாள்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

7. நற்குணங்களும் தீயகுணங்களும் இவனிடம் இருக்கும். எல்லோரை யும் தன் வசப்படுத்தும் சுபாவமுள்ளவன். பணத்தை அளவிற்கு மீறிச் செலவு செய்வான். கையில் சாமர ரேகை திகழும். ஆயுளின் மத்திய காலத்தில் ஏழ்மையால் கஷ்டப்படுவான். மாநிறம் வாய்ந்தவன். உயர்ந்து வளராதவன். பெருமை வாய்ந்த வேதங்களின் சிகரமாகிய உப நிடதங்களில் விளங்கிடும் அன்னையே! மேலும் கேளுங்கள்.

8. துணைவர்கள் எழுவர் தோன்றும் சோர்வுறும் ஒருவ னென்றேும்
கன்னிகையர் மூவ ராகும் காளையு மவ்வா றென்றேும்
சினமில்லா வேறுய்ச் செல்வர் செப்புவோம் பின்பால் சேதி
அணையவே யவன்தன் பூர்வம் அறிவிப்போ மினிமே லாக.

8. இவனுக்கு எழு உடன் பிறந்தார்கள் தோன்றுவர். அவர்களில் ஒருவன் இறப்பான். ஆகவே மூன்று சகோதரர்களும் தீர்க்க காலம் வாழ் வார்கள். சில காலத்திற்குப்பின் அம்மூன்று சகோதரர்களும், எவ்வித கோபதாபமுமின்றி, தனி குடும்பம் ஏற்பர். பின் பாகத்தில் விவரமாகத் தெரிவிப்போம். இவனுடைய பூர்வ ஜன்மத்தைக் கூறுவோம்.

9. தென்திசை ஆழி தன்னில் ஜனித்தனன் வன்னிய சேயாய்
முன்னேர்க்குத் தொண்டு பூண்டு முதல்வனு வாழு நாளில்
வென்னீரை மார்ஜா ரன்மேல் தம்மாய்த் தெளித்தா னென்றேும்.

9. தென் திசையிலுள்ள ஆழியில் இவன் வன்னிய குலத்தில் பிறந் திருந்தான். பெரியோர்களுக்குத் தொண்டுசெய்து நல்லவனுக வாழும் நாளில் வெந்நீரை ஒரு பூனையின்மேல் தெளித்தான்.

10. அதனுலே தேகம் பொங்கி அடைந்தது காலனுடு
அதிபனு மந்தி யத்தில் மகுடங்கள் கொண்டு மேதான்
கதியான காலனுடு சார்ந்துமே பிரமன் லக்கம்
இதுகுலம் தனிலு தித்தான் எய்திடும் முன் னூழ்த் தோஷம்.

10. இவன் செய்த காரியத்தினால் பூனையின் உடல் முழுவதும் வெந்து காலக்கிரமத்தில் இறந்தது. இவனும் அந்திய காலத்தில் எல்லோரும் கடைசியில் அடைகின்ற யமனுலகம் சென்று பிறகு இப்பொழுது இக் குலத்தில் பிறந்திருக்கின்றான். முன் ஜன்ம வினையின் பயன் இந்தப் பிறவியில் இவனுக்கு நேரிடும்.

11. மத்திய வயதி லேதான் மருவிடும் வெண்மே கங்கள்
வித்தகன் தனக்குப் பாலன் விளங்குவா னென்று சொல்வேன்
புத்திரன் குணத்தைச் சொல்வேன் பொய்யது வழுத்தா னாகும்
அத்தவா னருநி றத்தன் சுந்திர முடைய னாகும்

11. மத்திய வயதில் இவனுக்கு வெண்மேகம் வந்திடும். முன்சொன்ன குணங்கள் அமைந்த மனிதனுக்கு நம் கடகலக்கினமகன் புத்திரனாகத் தோன்றி இருக்கின்றான். இனி சாதகனுடைய குணங்களைச் சொல்லுவேன். பொய் பேசாதவன். சுத்தமானவன். கருத்தமேனியான். அழகு வாய்ந்தவன்.

12. வித்தையும் சமம தாகும் வெகுளியாம் பொறுமை சாலி
நத்தினோர்க் குதவி செய்வன் நாற்காலி பணைவர் விருத்தி
சத்துரு வணங்க வாழ்வன் தரணியைச் சேர்ப்பா னாகும்
பத்தினி சொல்தட் டாதான் பரிந்துப சாரம் செய்வன்.

12. மத்தியமாக வித்தை கற்றவன். மனத்தை ஒளிக்காதவன். பொறுமை உடையவன். நாடியவர்களுக்கு உபகாரம் செய்யும் சுபாவ முள்ளவன். கால்நடைகள் விருத்தியாகும். எதிரிகளை வெல்லுவான். நிலங்களைச் சேர்ப்பான். மனைவிக்கு எதிர்த்துப் பேசாதவன். எல்லோருக்கும் அன்புடன் உபசாரம் செய்வான்.

13. தந்தையி னார்ஜி தத்தைத் தானவன் விருத்தி செய்வன்
பந்துவும் மதிக்க வாழ்வன் பாரபட் சங்க ளில்லான்
சிந்தையில் தெய்வ பத்தி சித்தினி ஜாதி யாகும்
வந்தவர்க் கன்ன மீவன் மருவிடும் பித்தச் சூடு.

13. பிதுரார்ஜித சொத்தை இவன் விருத்திசெய்வான். உற்றார் உறவினர் கௌரவிக்கும் வகையில் வாழ்வான். பக்ஷபாதம் இல்லாதவன். மனத்தில் தெய்வபக்திகொண்டவன். இவன் "சித்தினி" ஜாதியைச் சேர்ந்தவன். அதிதிகளுக்குச் சிரத்தையுடன் அமுதளிப்பான். இவனது உடலில் பித்தச் சூடு நிலைத்திருக்கும்.

14. இவனுடைத் துணைவர் தம்மை யியம்புவோம் முன்பெண் ரண்டு
தவசியே பின்பெண் ரண்டு சார்ந்திடு மாண்பா லொன்று
அவனியில் துணைவன் சேதி நாட்டுவோ மாநி றத்தான்
கவனங்கள் செய்வா னாகும் கல்வியு மிரண்டு முண்டு.

14. இவனுடைய சகோதர பாவத்தைச் சாற்றுவோம். இவனுக்கு மூத்த சகோதரிகள் இருவர். இளைய சகோதரிகள் இருவர். ஓர் இளைய

சகோதரனும் உண்டு. அந்தச் சகோதரனின் வரலாற்றைக் கூறுவோம். மாநிறம் வாய்ந்தவன். சுயமாகப் பாடல்களை இயற்றும் சக்தி உள்ளவன். இருவிதக் கல்விகளைக் கற்றவன்.

15. அரசால் தொழிலு மேற்பன் அடாவடி கொஞ்ச முண்டு
பரிவண்டி உடையா னாகும் பகைத்தோரை நசிக்க வைப்பன்
குறைவிலாக் குடும்ப மேற்பன் குலமதிப் புடனே வாழ்வன்
நெறியதைக் காப்பா னாகும் நினைத்ததை முடிக்க வல்லன்.

15. அரசருடைய ஆதரவால் இவனுக்கு ஜீவனம் நடைபெறும். விதண்டா வாதம் செய்வான். குதிரை வண்டி முதலிய வாகன வசதிகள் உடையவன். எதிரிகளை அழிப்பான். குடும்பத்தைக் குறைவில்லாதபடி நடத்துவான். குலத்தினர் மதிக்கும் வகையில் வாழ்வான். அறநெறியிலிருந்து வழுவாமல் இருப்பான். தான் நினைத்த காரியத்தை நிறைவேற்றும் ஆற்றல் படைத்தவன்.

16. பாரியு மொன்றே யாகும் பாலர்கள் ஆண்பால் ரண்டு
நாரிமார் நால்வ ராகும் நல்கிடும் வேறு மாது
மாரனும் தீர்க்க ஜீவி மானிலம் சேர்ப்பா னாகும்
காரிய சமர்த்த னாகும் கட்செவி போலே கோபம்.

16. இவனுக்கு மனைவி ஒருத்திதான். இரு பிள்ளைகளும் நான்கு பெண்களும் இவனுக்கு உதிப்பார்கள். ஜாதகன் தீர்க்காயுளுடன் வாழ்வான். செழுமை வாய்ந்த நிலங்களைச் சேர்ப்பான். காரியத்தில் சமர்த்தன். பாம்பிற்குக் கோபம் வருவதுபோல் இவனுக்குக் கோபம்வரும்.

17. சிலதுநாள் வெளிதே சங்கள் செல்லுவான் தொழிலின் மூலம்
பலர்களால் பொருளும் ஏற்பன் பலதல வாசம் செய்வன்
சொல்மொழி காப்பா னாகும் தும்பியின் கோஷ்டம் செய்வன்
மலையிறை மகளே யாங்கள் வழுத்தின மொழிகுன் றாது.

17. தொழில் காரணமாக சில நாள் வெளி தேசத்திற்குச் செல்லுவான். பலராலும் இவனுக்குப் பொருள்சேரும். பல ஸ்தலங்களில் வசிப்பான். தான் சொன்ன மொழியைக் காப்பான். விநாயகர் ஆலயத்தை நிர்மாணம் செய்வான். பர்வத ராஜ குமாரியே! நாங்கள் சொன்ன மொழி பொய்யாகாது.

18. பெண்துணை சேதிதன்னைப் பேசுவோம் பின்பா கத்தில்
அன்னையின் குணத்தைச் சொல்வே னல்பமாம் கோபம் கொஞ்சம்
பின்னமில் லாத தேகி பித்ததே கத்தா ளாகும்
அன்னியர்க் கிணக்கம் சொல்லாள் அவசர மனமும் கொஞ்சம்.

18. இவனது உடன்பிறந்தாளின் செய்தியைப் பின்பாகத்தில் பேசப் போகின்றோம். இப்பொழுது ஜாதகனுடைய தாயின் குணத்தை அறிவிப்போம். கொஞ்சம் கோப முள்ளவள். குறைவில்லாத தேகம் உடையவள்.

இவளது சரீரத்தில் பித்தம் தலை தூக்கி நிற்கும். பிறர் சொன்ன வார்த்தையை ஆக்ஷேபித்துப் பேசாதவள். தான் எண்ணியதை நன்றாக யோசிக்காமல், சடுக்கென்று பேசிடுவாள். அவ்வாறே செய்கையிலும் இறங்குவாள்.

19. சுகமுள வார்த்தை யுண்டு துணைஆண்பால் காணு ளாகும்
தகமையாய்ப் பெண்பா லொன்று சாற்றுவோம் தீர்க்க மாக
அகமதை விட்டு நீங்காள் அறைகிறே மிவள்முன் ஜன்மம்
சுகமதி லுயர்வ தான வாலவா யூரிலேதான்.

19. சுகமான வார்த்தைகளைக் கூறுவாள். இவளுக்குச் சகோதரன் இல்லை. ஒரு சகோதரி உண்டு. அவள் தீர்க்காயுளுடன் வாழ்வாள். தான் பிறந்த வீட்டிலேயே மணமான பிறகும், குடும்பம் செய்வாள். [புருஷன், இவள் பிறந்த வீட்டிற்கே வந்து, நிரந்தரமாக வாழ்வான் என்பது கருத்து.] இவளுடைய முன் ஜன்மத்தைக் கூறுகின்றோம். இன்பத்தைத் தரும் க்ஷேத்திரங்களுக்குள் உயர்ந்த க்ஷேத்திரமாகிய மதுரையில் ;

குறிப்பு.—இந் நகரை வட மொழியில் "ஹாலாஸ்யநகரம்" என்ற பெயரால் குறிப்பிடுவதைக் காண்க.

20. தென்னர்தம் குலமு தித்து மைந்தர்க ளதிக முண்டாய்ப்
பொன்னொடு பணிவீடு பூவையும் வாழு நாளில்
தன்வரன் தம்பி பேரில் சிலேடையாய் வார்த்தை சொல்ல
அன்னவன் மனங்க லங்கி அடைந்திட்ட சாபம் கேண்மோ.

20. பாண்டியர்களின் பரம்பரையில் பிறந்து, கணவன் குழந்தைகளோடு பொன் ஆபரணம் வீடு முதலிய பொருள்களை அடைந்து சுகமாக வாழும் காலத்தில் மரியாதைக் குரிய தனது மைத்துனனைச் சிலேடை வார்த்தைகளைச் சொல்லி பரிகசித்தாள். அதனால் மனம் புண்பட்டவனாகிய அவன் சொன்ன சாபத்தைக் கேளுங்கள்.

21. துன்மைகள் எந்தன் பேரில் செப்பின பாவிக் கேதான்
பின்வரும் ஜன்மம் தன்னில் பேசொணுத் துணைஆ ணும்தான்
அன்னையி னில்லம் நீங்கா அறைந்தனன் என்று சொல்வோம்
முன்னோர்கள் ததாஸ்து என்ன மேவிற்று அந்தச் சாபம்.

21. என்மேல் தீமைகள் சொல்லாதவள் போல் நடித்து, உண்மையில் தீமைகளைச் சொல்லி என் மனத்தை வருந்திய நீ, மறு பிறவியில், சகோதரன் முகம் கண்டு அவனோடு பேசி ஆனந்தம் அடைவதற்கு வாய்ப்பில்லாதவளாக வாழ்வாய். [சகோதரன் பிறக்கமாட்டான் என்பது கருத்து] மேலும் கணவன் வீட்டிற்குச் சென்று வாழும் பெருமை இல்லாமல் இருப்பாய். இச் சந்தர்ப்பத்தில் ஆகாயத்தில் சஞ்சரிக்கும் மஹரிஷிகள் "ததாஸ்து" என்று கூறவே, அவன் சொன்ன வார்த்தைகள் சாபமாயின. அச் சாபம் இவளைப் பற்றிக்கொண்டது.

குறிப்பு.—இரு மஹரிஷிகள் எப்பொழுதும் " ததாஸ்து ", " ததாஸ்து " [அவ்வாறே ஆகட்டும் ; அவ்வாறே ஆகட்டும்] என்று சொல்லிக் கொண்டே ஆகாயத்தில் சஞ்சரிக்கின்றார்களாம். நன்மையோ தீமையோ நடைபெற வேண்டுமென்று விரும்பி நாம் சொல்லும் வார்த்தைகளின் முடிவில் அவர்கள் " ததாஸ்து " வாய்த்துவிட்டால் நாம் எண்ணியபடி நன்மையோ தீமையோ நிகழ்ந்துவிடும். ஆகவே இந்த மைத்துனனுக்குச் சாபமிடுவதற்கு வேண்டிய தவத்தின்சக்தி இல்லாவிடினும், அவன் சொன்ன வார்த்தைகளின் முடிவில் மஹரிஷிகளின் " ததாஸ்து " என்பது சேர்ந்தபடியால் அவ் வார்த்தைகள் சாபமாயின, என்று இந் நூலாசிரியர், " முன்னோர்கள் ததாஸ்து என்ன " என்ற வரியில் காரணத்தைக் குறிப்பாகக் காட்டி இருக்கின்றார். இவ்வாறே மற்றைய சாப வரலாறுகளிலும் காண்க.

22. ஆகையா லிச்சன் மத்தில் அவள்துணை ஆண்பால் தோஷம்
தோகையின் ஜன்மம் சொல்வேன் ஜனிப்பாளாம் காஞ்சி தன்னிற்
பாகமாய்ச் சௌராஷ்டிர வமிசம் பாக்கிய முடையா ளாகிப்
போகவா ரியைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

22. ஆகையினால் இச் சென்மத்தில் இவளுக்குச் சகோதரன் இல்லை. இவளுடைய மறு பிறவியையும் சொல்லுவேன். இவள் காஞ்சியில் சௌராஷ்டிர வமிசத்தில் பிறந்து ஐச்வரிய உடையவளாக வாழ்வாள். விநாயகரைப் பெற்ற தாயே ! மேலும் கேளுங்கள்.

23. நாற்பது மூன்று ஆண்டில் நற்றுலா மாதம் தன்னில்
கூப்பிடு வானம் காலன் குதித்ததோர் அன்னை தன்னை
ஏர்க்கவே முப்பா னேழி லிரிடபமா தத்தி லேதான்
தீர்ப்பாகத் தந்தை கண்டம் செப்பின மொழிகுன்றுவே.

23. ஜாதகனுக்கு நாற்பத்து மூன்றும் வயதில் ஐப்பசி மாதத்தில் இவன் மரணமடைவாள். ஜாதகனுடைய முப்பத்தேழாவது வயதில் வைகாசி மாதத்தில் தந்தை மரண மாவான் இம் மொழிகள் தவறு.

24. மறுஜன்மம் காஞ்சி கீழ்ப்பால் வளமுள பேரூர் தன்னில்
உறைவனும் செங்குந்த வம்சம் உயர்வான குடும்பி யாகித்
திருமகள் விலாசம் பெற்றுச் செல்வனும் வாழ்வா னுகும்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

24. தந்தை மறு பிறவியில் காஞ்சிக்குக் கீழ்த் திசையில் அருகிலுள்ள செழிப்பான பெரிய ஊரில் செங்குந்த வமிசத்தில் பிறந்து மனைவி மக்களுடன் சுகமாக வாழ்வான். திருமகள் வாசம் நிறைந்திருக்கும் தாயே ! மேலும் கேட்பீராக.

25. பால்கன் மணத்தின் காலம் பகருவோம் பத்தொன்பா ண்டில்
நீலியும் தந்தை வர்க்கம் நேருவாள் குணத்தைச் சொல்வேன்
சீலியாம் சிவந்த மேனி ஜனஉப காரி யாவள்
காலத்தை அறிந்து வாழ்வள் கசடரை உறவு கொள்ளாள்.

**25.** ஜாதகனுடைய விவாஹ காலத்தைக் குறிப்பிடுகின்றோம் பத்தொன்பதாவது வயதில் இவனுக்கு விவாஹம் நடைபெறும். மணப் பெண் தந்தை வருக்கத்தில் பிறந்திருப்பாள். அவளுடைய குணத்தை சொல்லுகின்றோம். நற் சீலம் உள்ளவள். சிவந்த மேனியாள். ஜனங்களுக்கு உபகாரம் செய்வாள். காலத்திற்குத் தக்கப்படி வாழ்க்கையை அமைத்துக் கொள்வாள். கெட்டவர்களுடன் நட்புக் கொள்ளாள்.

**26.** பால்பாக்கிய முடையா ளாகும் பசித்தோர்க்குத்தாக மீவள்
பாலகன் மனதுக் கேத் தோள் பாரினில் வறுமை காணாள்
சீலமும் கொஞ்ச முண்டு தேவதா பத்தி பூண்பள்
வேலனை யீன்ற மாதே வித்தகி தீர்க்க ஜீவி.

**26.** பால்பாக்கியம் உடையவள். பசித்தவர்களுக்கு அன்னமும் தண்ணீரும் கொடுத்து உதவுவாள். கணவனின் மனத்திற்கேற்றபடி நடந்துக் கொள்வாள். வறுமைக்கு ஆளாகாதவள். நல்ல பழக்கம் உடையவள். கடவுள் பக்தி பூண்டவள். சுப்பிரமணிய சுவாமியைப் பெற்றதாயே! அவள் தீர்க்காயுளுடன் வாழ்வாள்.

**27.** சுதர்களும் ஆண்பால் ரண்டு தோகையும் மூன்று என்றேம்
இதுஐந்தும் தீர்க்க மெய்தும் இடராகு மிரண்டு என்றேம்
அதிபன்தன் பூர்வம் சொல்வேன் மலைநாட்டில் இக்கு லத்தில்
நிதிமிக உடையா னாகி நேமியில் வணிபம் செய்தான்.

**27.** இவர்களுக்கு இரண்டு பிள்ளைகளும் மூன்று பெண்களும் பிறப்பார்கள். இந்த ஐவரும் நீண்டு வாழ்வார்கள். இவர்களைத் தவிர பிறந்த இரு குழந்தைகள் சேதமாகும். ஜாதகனுடைய முன் பிறவியைத் தெரிவிக்கின்றோம். இவன் முன் ஜன்மத்தில் மலை நாட்டில் இதே குலத்தில் பிறந்து அதிக செல்வமுடையவனாகி வியாபாரத்தைச் செய்து வாழ்ந்து வந்தான்.

**28.** அறுமுகன் பத்தி கொண்டு அந்தகன் நகரம் சென்று
பிரமனால் வரையப் பட்டுப் பிறப்பனு மிந்தப் பாலன்
உரைக்கிறே மிவனின் யோகம் ஒருபதின் மூன்றாண் டுக்குள்
குறைவுள குடும்ப மாகும் குணமது அலைச்ச லெய்தும்.

**28.** சுப்பிரமணிய சுவாமியிடம் பக்தியோடு இருந்தான். அந்தியத்தில் யமனுலகம் சென்ற இவனைப் பிரம்மதேவன் இங்குப் படைத்திருக்கின்றான். இனி இவனுடைய யோகபலன்களைக் கூறுவோமாக. இவன் பிறந்து பதின் மூன்று ஆண்டுகள் மட்டில் குடும்பத்தில் நஷ்டமேற்படும். வீண் அலைச்சல் நேரும்.

**29.** சல்லியப் பாதை யாகும் தரணிசள் பலித மல்பம்
இல்லதில் களவு முண்டு இடராகும் கன்று காலி
நல்லவர் விரோத மாகும் நற்பந்து கலக மாகும்
புல்கின ஆண்டின் மேலேய்ப் பிறைபோல யோகம் வாய்க்கும்.

29. கடன் உபத்திரவமும் ஏற்படும். பூமிகள் அல்பமாகவே பலனைத் தரும். வீட்டில் பொருள் களவாடப்படும். கன்றும் பசுக்களும் சேதமடையும். நல்லவர்களும் இவனுக்கு விரோதியாவார்கள். உறவினர்களுடன் சண்டை செய்ய நேரும். பதின்மூன்று ஆண்டுகளுக்குமேல் வளர்பிறைச் சந்திரன்போல யோகங்கள் வளர்ந்திடும்.

30. சல்லியப் பாதை நீங்கும் தரணிகள் சேர்த லுண்டு
நல்லஇல் லங்கள் செய்தல் நாற்காலி விருத்தி யுண்டு
அல்லல்க ளதன்மேல் காணுன் அணுகிடும் நிதிநிட் சேபம்
சொல்லது மேன்மை யாகும் செய்தொழில் மேன்மே லோங்கும்.

30. கடன் தொந்தரவு நீங்கும். பூமிகளும் சேரும். அழகிய வீடுகள் கட்டுவான். கால்நாடைகள் நோயின்றி விருத்தியடையும். முன் சொன்ன பதின்மூன்று வருஷங்களுக்கு மேல் இடையூறுகளும் அலைச்சல்களும் ஏற்படா. பணசேமிப்பும் (புதையலும்) கிடைக்கும். இவனுடைய வார்த்தைக்கு விசேஷ மதிப்புண்டாகும். செய்யும் தொழிலும் மேன்மேலும் ஓங்கி வளரும்.

31. முப்பது ஆண்டு மேலாய் மேவிடும் சிலது பொன்னும்
தாவினோர்க் குதவி செய்தல் சார்ந்திடும் சகடு தானும்
தேவியும் கேட்க லுற்றாள் செப்பினீர் யோகம் எவ்வாறு
ஆவலாய்ப் பிறகு சொல்வேன் அம்பிகை யாளே கேளாய்.

31. மூப்பது ஆண்டுகளுக்குப் பிறகு கொஞ்சம் தங்க சேமிப்பும் ஏற்படும். அடைந்தவர்களுக்கு உதவி செய்யும் பாக்கியம் இவனுக்குக் கிடைக்கும். வண்டி முதலிய வாகனவசதிகளும் உண்டாகும். இவ்வாறு நல்ல யோக பலன்களைச் சொன்னவுடன், உமாதேவி, இவனுடைய ஜாதகத்தின் நற்பலனைச் சொல்வதற்கான காரணங்கள் என்ன இருக்கின்றன? என்று கேட்கலுற்றாள். முனிவர் பதில் சொன்னார். தேவியே! கேளுங்கள்.

32. பொன்னவன் காரி உச்சம் புரவியோ னாட்சி யாக
மன்னவ னுக்கி ரண்டில் மாலவன் கூடி நிற்கச்
சந்திரன் நாலி லேறச் சாமர யோக முண்டு
மன்னுகே சரியோகங்க ளற்புத யோக மொன்று.

32. குரு கடகத்திலும் சனி துலாத்திலும் உச்சமாக இருக்கின்றார்கள். சூரியன் ஆட்சியுடன் இருக்கின்றான். மேலும், சுக்கிரனும் புதனும் குருவிற்கு இரண்டாமிடத்தில் இருக்கிறார்கள். லக்கினாதிபதியாகிய சந்திரனே நாலில் விளங்குகிறான். ஆகையால் இவனுக்கு "சாமர", "கேசரி", "அற்புதம்" என்று மூன்று யோகங்களுண்டு.

33. இந்தவோர் யோகத்தாலே யியம்பினோம் பெருமையாகச்
செந்திரு விலாசம் பெற்றுச் செல்வனும் வாழ்வா னாகும்
பிந்திய துணையி னாலே பொருளது அதிகம் சேர்ப்பன்
கந்தனை யீன்ற மாதே கழறின மொழிகுன் றாது.

33. இவ்வளவு யோகங்கள் இருப்பதால் விசேஷ பலன்களை அறிவித்தோம். லக்ஷ்மீவாசம் பொருந்தியவனுகச் சுகமாக வாழ்வான். தம்பியினல் இவனுக்கு அதிக பொருள் சேரும். சுப்பிரமணிய சுவாமியை பெற்ற தாயே! நாங்கள் சொன்ன வாக்கு உண்மையாகும்.

34. அறுபது ஐந்து ஆண்டில் ஐப்பசிமாதம் தன்னில்
குறைப்க்கம் துவா தேசி குழவியி னுடலம் ஏகும்
மறுஜன்மம் தணிகை தன்னில் வருகுவான் சைவச் சேயாய்
அரசரால் தொழிலு மேற்பன் அம்பிகை யாளே கேளாய்.

34. அறுபத்தைந்தாவது ஆண்டில் ஐப்பசி மாதத்தில் கிருஷ்ண பக்ஷ துவாதசியில் இவன் மரணமடைவான். இவன்மறு பிறவியில் திருத்தணிகையில் சைவகுலத்தில் பிறப்பான். அரசரால் தொழிலைப் பெறுவான். [அரசாங்க உத்தியோகம் செய்வான் என்பது கருத்து.] ஈசுவரியே! மேலும் கேளுங்கள்.

35. சுதனுமே ஜனிக்கும் காலே சுவாதியின் மூன்றும் பாதம்
ததிகயிறு தசையிருப்புப் சதுராண்டும் பதினேர் திங்கள்
விதவிதப் பிணிசு தர்க்கு மேவிடும் செலவ னேகம்
அதிதியே பூர்வம் சொன்னேம் அம்பிகை யாளே கேளாய்.

35. ஜாதகன் சுவாதியின் மூன்றும் பாதத்தில் ஜனித்திருக்கின்றன். ஆகையால் ராஹு தசை இருப்பு வருஷங்கள் நான்கு, மாதங்கள் பதினென்று. இந்தத் தசையின் பலன்களை சுருக்கமாகச் சொல்லுகின்றேம். ஜாதகனுக்குப் பலவிதப் பிணிகள் வரும். குடும்பத்தில் பலவழிகளிலும் செலவு ஏற்படும். இந்திரனுக்குத் தாய் போன்றவளே! இப்பொழுது பூர்வபாகத்தைத்தான் சொல்லியிருக்கிறேம். அன்னேயே! திருவாய் மலர்ந்து மேலும் எங்களைக் கேட்டருளல்வேண்டும்.

## ஜாதகம் 35

1. பிறைநந்தி ராகு வீணை பொன்கட கத்தில் தங்கப்
பரிதியும் புதனும் வெள்ளி பற்றிடம் சீய மாகத்
தரைமகன் கேது மேரு சனிசாடி கடகம் ஜன்மம்
உரைகுவீர் பலனை யென்று உத்தமி கேட்கும் போது ;

| | | | |
|---|---|---|---|
| | | சந்திரன் | ராகு |
| சனி | இராசி சக்கரம் | | லக்கினம் குரு |
| | | | சூரியன் புதன் சுக்கிரன் |
| செவ்வாய் கேது | | | |

1. பிலவங்க வருஷம் ஆவணி மாதம் 16-ந் தேதி சனிக்கிழமை இரவு 52 நாழிகைக்கு மேல் 57 நாழிகைக்குள் ஜனனம். ஆங்கிலத்தேதி 31–8–1907 நவக்கிரஹங்களின் பாதசாரம்—பூரம் 1-இல் சூரியன். மிருக சீர்ஷம் 1-இல் சந்திரன். பூராடம் 2-இல் செவ்வாய். மகம் 3-இல் புதன் (அஸ்தம்). புஷ்யம் 3-இல் குரு. மகம் 4-இல் சுக்ரன் (அஸ்தம்). பூரட் டாதி 3-இல் சனி. புனர்வஸு 3-இல் ராகு. உத்தராடம் 1-ல் கேது. நக்ஷத் திரம் மிருகசீர்ஷம். செவ்வாய் இருப்பு வருஷங்கள் ஐந்து மாதங்கள் ஐந்து.

சந்திரன் விருஷபம், ராகுமிதுனம், குரு கடகம், சூரியன், புதன் சுக்கிரன் சிம்மம், செவ்வாய் கேது தனுஸ் சனி கும்பம், இலக்கினம் கடகம், இவ்வாறான கிரஹநிலையின் பலன்களைச் சொல்லுவீர்களாக என உத்தமியான பார்வதி வினவும்போது ;

2. அத்திரி புகலுகின்றார் ஆணது ஜனனமாகும்
வித்தக னில்லம் சொல்வேன் வடவாடை கீழ்மேல் விதி
உத்தரம் மாரி தங்கும் உயரானை முகத்தோன் கீழ்ப்பால்
பத்திர காளி தென்மேல் பெருவயி றப்பன் மேல்பால்.

2. அத்திரி முனிவர் பதில் உரைக்கின்றார். இக்கிரஹ நிலையில் பிறந்த மகவு ஆணாகும். வீதி கிழக்குமேற்காக இருக்கும். வீடு தென் திசை நோக்கும். வடதிசையில் மாரியம்மன் கோயில் இருக்கும். கீழ்த்திசை யில் விநாயகரது ஆலயம் விளங்கும். தென்மேற்குத் திசையில் பத்திர காளி கோயிலும், மேற்குத்திசையில் மற்றொரு விநாயகர் கோயிலும் உண்டு.

3. இன்னமும் பலதே வாசமிலகிய பேரூ ராகும்
அன்னவன் நான்காம் ஜன்மம் அவனும்கோ வைசிய னாக
மன்னவன் யோகச்சேதி மாதுரு தந்தை யோகம்
முன்பின்ஜன் மங்கள் யாவு முரைக்கிறோ மிந்நூல் தன்னில்.

3. இன்னும் பல தேவாலயங்கள் அவ்வூரில் திகழும். இவ்வாறு அடையாளமுள்ள ஒரு பெரிய ஊரில் இடையர் வமிசத்தில் குடும்பத்திற்கு நான்காம் குழந்தையாக இச் சாதகன் ஜனித்திருக்கிறான். இவனுடைய யோகங்களையும், தாய் தந்தை மனைவி புத்திரர் இவர்களைப் பற்றியும், முன் பின் ஜன்மங்களையும் இந்நூலில் தெரிவிப்போமாக.

4. தந்தையின் துணைவ ரெட்டில் ஜனிக்கும் கால் கன்னி ஒன்று
அந்தவள் விருத்தி யென்றோம் அழகான குடும்பி யாவள்
பிந்திய பாகம் தன்னில் பேசுவோம் விவர மாக
இந்தவன் தந்தை சேதி யியம்புவோ மினிமே லாக.

4. ஜாதகனுடைய தந்தைக்கு எட்டு உடன் பிறந்தார்கள். அவர்களில் ஒருத்திதான் சகோதரி. அவள் விருத்தியடைவாள். அழகான குடும்பம் உடையவளாவாள். அவளைப்பற்றி விவரமாகப் பின் பாகத்தில் சொல்லு வோம். இனி, தந்தையின் வரலாறுகளைக் கூறுவோம்.

5. குடம்ராசி முடவன் நாலில் உதிப்பானும் தந்தை தானும்
தடபுடல் செய்கை கொஞ்சம் சங்கீதப் பிரிய னாகும்
படைதன்னில் செல்லா னாகும் பரஉப கார னாகும்
மடயரை நேசங் கொள்ளான் வாணிபங்கள் செய்வா னாகும்.

5. அவன் கும்பராசியில் ஜெனித்தவன். நாலில் சனி இருப்பான். தந்தை ஆடம்பரச் செயலுள்ளவன். சங்கீதத்திலும் பிரியமுள்ளவன். சண்டையில் ஈடுபடாதவன். பிறர்க்குத் தன்னால் சாத்தியமான உபகாரத் தைச்செய்வான். மதியீனர்களை நேசம் கொள்ளாதவன். பலவித வியாபாரங்களையும் செய்வான்.

6. கடன்கொள்வன் நிவிர்த்தி செய்வன் கஞ்சமாம் ரேகை யுண்டு
உடன்படான் பிழைகளுக்கு உண்மையா மனத்த னாகும்
விடவாக்கன் மா நிறத்தன் மெல்லியர் மோக னவன்.
திடமதாய்க் குடும்பம் பின்னால் செய்ந் நன்றி மறவா னாகும்

6. கடன் வாங்குவான். சீக்கிரத்திலே அதை நிவிர்த்தி செய்து விடு வான். இவனது கையில் தாமரை ரேகை விளங்கும். பிழைகளைச் செய் யாதவன். உண்மையான உள்ளம் படைத்தவன். [கள்ளமில்லாதவன் என்பது கருத்து] இவன் வாக்கினால் கெடுதல்களைச் சொன்னால் பலித மாகும். மாநிறம் வாய்ந்தவன். பெண்களிடம் மையல் கொண்டவன். பிற்காலத்தில் இவனது குடும்பம் ஸ்திரமான சுபிக்ஷமுள்ளதாகும். நன்றி மறவாதவனாகவும் இருப்பான்.

7. உண்டியும் வறுமை காணுன் உறைப்பொடு புளிப்பி லிச்சை
கண்டித முரையா ளுகும் காலிகள் விருத்தி யுண்டு
அண்டினேர் தம்மைக் காப்பான் அவன்பந்து பகையு மெய்தும்
எண்டிசை நல்லோ னுவன் யீகைவான் ஊகை சாலி.

7. போஜன சௌக்கியமுடையவன். காரமும் புளிப்பும் இவனுக்கு உகந்த ருசிகளாகும். ஒருவரையும் கண்டித்துப் பேசாதவன். கால் நடைகள் இவனிடம் புஷ்டியை அடையும். தன்னை அண்டியவர்களுக்கு ஆதரவளித்துக் காப்பான். உறவினர்கள் பகைவராவர். எல்லாத் திசைகளிலும் " நல்லவன் " என்ற கீர்த்தி பரவும். தியாக குணம் வாய்ந்தவன். சிறந்தமதியூகியாகவும் இருப்பான்.

8. சொன்னவிக் குணத்தானுக்குத் தோன்றுவா னிந்தப் பாலன்
அன்னவன் குணத்தைக் கேண்மோ அரிமக னெப்பதாகும்
பின்னமில் லாத தேகி பெரும்பொரு ளிச்சை யுண்டு
உன்னதச் செட்டுச் செய்வன் உயர்வோர்கள் நேசம் கொள்வன்.

8. நாம் மேலே சொன்ன குணமுள்ள மனிதனுக்கு இக்கடகலக்கின மகன் புத்திரனுகத் தோன்றி இருக்கிறுன். இனி ஜாதகனுடைய குணங்களை அறிவிப்போம். கேளுங்கள். அழகில் விஷ்ணு புத்திரனுகிய மன்மதனுக்கு ஒப்பானவன். சரீரத்தில் சிறிதும் ஊனமில்லாதவன். உயர்ந்த பொருள்களிலேயே இவனது மனம் செல்லும். மேலான வியாபாரத்தையே செய்வான். மேம்பாடுடையவர்களுக்கு நண்பனுவான்.

9. ஆதியில் அன்னம் குறைச்சல் அற்புத வார்த்தை சொல்வன்
தீதிலான் பொறுமை சாலி நிலேயதைக் காப்பா னுகும்
சாதிப்பான் சிலது சங்கை தரணிகள் சேர்ப்பானுகும்
வேதனே ஒருவர்க் கெண்ணுன் வெஞ்சினம் வெளிக்காட் டாதான்.

9. பால்யத்தில் இவன் ஆகாரத்திற்கு கஷ்டப்பட்டிருப்பான். பிறர் வியக்கும் வகையில் பேசுவான். கெட்ட குணங்கள் இல்லாதவன். பொறுமை வாய்ந்தவன். தனக்கு ஏற்பட்ட கௌரவ நிலேயை பாதுகாப்பான். தான் எண்ணிய காரியங்களைத் திறமையுடன் பெரும்பாலும் நிறைவேற்றுவான். மிகச் சில காரியங்களில் தான், செய்யும் வகையறியாமல், திகைப்படைவான். பூமிகளைச் சேர்ப்பான். பிறர்க்குத் தீமைகளை எண்ணுதவன். கொடிய சினம் வரும். ஆனல் அதைத் தோற்றத்தில் காட்டிக்கொள்ளமாட்டான்.

10. தந்தைமேல் வாழ்வா னுகும் சத்தான வேலே செய்வான்
தன்பந்து மதிக்க வாழ்வன் சதுஷ்பாதம் விருத்தி யுண்டு
தந்தமும் தரள மொக்கும் சாதமும் குறைவு றுதான்
தந்தனம் கொடுக்கல் வாங்கல் தனிகர்கள் உறவு கொள்ளல்.

10. தந்தையைவிடச் சிறப்பாக வாழ்வான். நல்ல பயன்களைக் கொடுக்கும் வேலேகளையே செய்வான். இவனுடைய உறவினர்கள் இவனைக் கொண்டாடுவார்கள். பசு காளை முதலியவைகளை அபிவிருத்தி செய்வான். பற

களும் முத்துப்போல் விளங்கும். பிற்காலத்தில் ஆகார சௌக்கிய முள்ளவ னுவான். தன் பணத்தைக் கொண்டு வட்டி வியாபாரம் செய்வான். தனிகர்க ளுடன் உறவு ஏற்படும்.

11. பலருக்கும் பந்தினர்க்கும் பரிந்துப சாரம் செய்வன்
கலகத்தைக் கூறு னுகும் கடவுளர் பத்தி பூண்பன்
நலமதை யெவர்க்கும் செய்வன் நற்சீலன் பொய்கள் சொல்லான்
ஜலம்தோய்வன் சல்லியம் கொள்ளான் சமர்த்தான வார்த்தை
[சொல்வன்.

11. தன் ஜாதியார்களுக்கும் மற்றவர்களுக்கும் அன்புடன் உபசாரம் செய் வான். கலகத்தை உண்டுபண்ணும் வார்த்தைகளைச் சொல்லான். கடவுள் பக்தி கொண்டவன். எல்லோருக்கும் நன்மைகளையே செய்வான். நற்சீல முடையவன். உண்மைகளையே பேசுவான். புண்ணிய தீர்த்தங்களில் நீராடு வான். கடன் இல்லாதவன். சாமார்த்தியமாகப் பேசுவான்.

12. தன்துணை முன்பெண் மூன்று சாற்றுவோ மளவாய்த் தீர்க்கம்
பின்துணை ஆண்பா லொன்று பேதையு மவ்வாறு தீர்க்கம்
அன்னவர் பலன்கள் பின்னுல் அறிவிப்போ முனியே யாமும்
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே.

12. இவனுக்கு முன் பிறந்த சகோதரிகள் மூவர். இவனுக்குப் பின் பிறந்த சகோதரன் ஒருவன். அவனுக்குப் பிறகு ஒரு சகோதரி. இந்த ஐவரும் தீர்க்காயுளுடன் வாழ்வார்கள். முனிவர்களே! அவர்களைப் பற்றிய பலன்களைப் பின்னுல் தெரிவிப்போம். விநாயகரைப் பெற்ற தேவியே! மேலும் கேளுங்கள்.

13. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அழகுளாள் மாநி றத்தாள்
அன்னம்போல் வடிவு மொக்கும் அயல்குற்றம் புகலா ளாகும்
அன்னியர் மதிக்க வாழ்வள் ஆளன்தன் மனதுக் கேத்தோள்
அன்னமு மன்பா யீவள் அடிசிலுக் கினியா ளாகும்.

13. ஜாதகனின் தாயினுடைய குணங்களை இனிமேல் பேசுவோம். நல்ல அழகு வாய்ந்தவள். மாநிறமுள்ளவள். தோற்றம் அன்னம் போன் றிருக்கும். பிறர் குற்றத்தைப் பேசாதவள். அந்நியர் கௌரவிக்கும்படி வாழ்வாள். தன் கணவன் மனத்தின்படியே நடப்பாள். தன் வீடு நாடி வந்தவர்களுக்கு அன்புடன் அமுதளிப்பாள். தன் கணவனுக்கு எத்தகைய உணவு உகப்பானதோ அத்தகைய உணவைச் சமைத்துக் குறிப்பறிந்து பரிமாறி அவனது மனம் குளிரச் செய்வாள்.

14. பால்பாக்கிய முடையா ளாகும் பகையொன்று மனத்தில் வையாள்
சீலியாம் விரத மேற்பள் விதவித இல்லம் மேற்கில்
பாவைக்குத் துணைஆண் காணுள் பாவையு மொன்றே தீர்க்கம்
நீலிக்குத் துணைஆண் தோஷம் நுகலுவீ ரந்தச் சங்கை.

**14.** பால் பாக்யமுடையவள். மனத்தில் பகைமை நீடித்து வைத்துக் கொள்ளமாட்டாள். நீண்ட காலம் வாழ்வாள். பலவிதமான விரதங்களை அநுஷ்டிப்பாள். இவள் பிறந்த வீடு மேற்குத் திசையிலுள்ளது. இவளுக்குச் சகோதரனில்லை. ஒரு சகோதரி உண்டு. அவள் தீர்க்கமாக வாழ்வாள். இவளுக்குச் சகோதரன் ஏன் இல்லை ? அதன் காரணத்தைச் சொல்வீர்களாக எனப் பார்வதி வினவினுள்.

15. மங்கலன் கேது ஆறில் மருவின பலத்தால் சொன்னோம்
அங்கவள் முன்ஜன் மத்தை அறிவிப்போம் தாயே கேளும்
சிங்கள நாட்டி லேதான் ஜனித்தனள் கங்கை சேயாய்ப்
பொங்கிய குடும்பி யாகி பூவையும் வாழு நளில் ;

15. "சகோதரகாரகன்" என்று சாஸ்திரங்களில் கூறப்படும் செவ்வாய் கேதுவுடன் ஆறுமிடத்தில் தங்கி இருப்பதால் ஆண் சகோதர விருத்தி இல்லை. அவ்வாறு கிரஹங்கள் அமைவதற்கும் முன்ஜன்ம வினைதான் காரணம். அந்த முன்வினையைத் தெரிவிக்கின்றோம். தாயே ! கேளுங்கள். இவள் முன் பிறவியில் சிங்கள நாட்டில் வேளாள வமிசத்தில் பிறந்து, மணமாகி, குழந்தைகளைப் பெற்று மேன்மேலும் க்ஷேமத்தை அடைந்து வரும் குடும்பத்தைச் சிறப்புடன் நடத்திவரும் காலத்தில் ;

16. வரனுடை தம்பி பேரில் வருணித்தாள் சிலேடை வார்த்தை
குறையான மனத்தானாகிக் கூறுவான் சாபம் தானும்
திருகான வார்த்தை என்மேல் செப்பின பாவிக் கேதான்
மறுஜன்மம் துணைஆண் இன்றி வளவுமே யில்லா தாகி ;

16. கணவனுடைய தம்பியின் பேரில் குத்தலான வார்த்தைகளைச் சொன்னாள். அத்னால் வருந்திய அவன், என்பேரில் துடுக்கான வார்த்தைகளைப் பேசியதால் உனக்குச் சகோதரனால் ஏற்படும் மகிழ்ச்சி ஏற்பட வேண்டாம். மேலும் பிறந்து வளர்ந்து பழகின வீட்டிலேயே, வேறு புக்கிடம் இல்லாமல் ;

17. சுகமின்றி வாழ்வா யென்ன சேர்ந்தது அந்தச் சாபம்
தகைமையாய் வேறு ஒன்று சார்ந்தது புகலக் கேண்மோ
அகமதி லடைக்க லானும் அடைந்துமே வாழு நாளில்
பகையாக அதை கலைத்தாள் பற்றிற்று அந்தத் தோஷம்.

17. கணவனுடன் (கணவன் வீட்டிற்குச் சென்று வாழும்) சுகமின்றி வாழ்வாய் என்று சபித்தான். அந்தச் சாபம் இவளைப் பிடித்துக்கொண்டது. இதைத் தவிர வேறு ஒரு பாவமும் இவளுக்கேற்பட்டது. அதைச் சொல்லுகின்றோம் ; கேளுங்கள். இவள் வசித்த வீட்டில் ஊர்க்குருவி வசித்து வந்தது. அதற்கு இம்சை செய்யவேண்டுமென்ற எண்ணத்துடன் அதைத் துரத்திவிட்டாள். அந்தப் பாவமும் இவளைப் பற்றிக்கொண்டது.

18. மாதுவு மந்தி யத்தில் வாய்ப்புண்ணால் மரண மாகி
வேதனால் வரையப் பட்டு விளங்கினு ளிந்த மாது
தீதான மைத்துனன்சா பத்தா லாண் தோஷ மெய்தும்
மேதினில் வறுமை காணுள் வித்தகி கேட்டி டாயே.

18. முன்பிறவியில் இவள் அந்தியத்தில் வாயில் புண்தோன்றிக் கஷ்டப்பட்டு மரணமடைந்தாள். இவளைப் பிறகு பிரம்மதேவன் இங்குப் படைத்திருக்கின்றான். முன்ஜன்மத்தில் மைத்துனன் சாபத்தால் இப் பிறவியில் சகோதரன் இவளுக்கு இல்லை. வறுமை இல்லாதவள். தேவியே! மேலும் கேளுங்கள்.

19. பின்ஜன்மம் விரிஞ்சி தன்னில் பிறப்பாளாம் வைசியச் சேயாய்ப்
பொன்னொடு பணிதி பெற்றுப் புகழ்ச்சியாய் வாழ்வா ளாகும்
தந்தையின் பூர்வம் சொல்வேன் தலமதி லுயர்வ தான
முந்தின பிருதிவி தன்னில் உதித்தனன் செக்கான் வம்சம்.

19. இவள் விரிஞ்சிபுரம் என்ற ஊரில் வைசிய வம்சத்தில் பிறப்பாள். சுவர்ணம் ஆபரணம் முதலியவைகளைப் பெற்று எல்லோரும் கொண்டாடும் படி வாழ்வாள். தந்தையின் முன்ஜன்மத்தைக் கூறுவோம். இவன் முன் பிறவியில் புண்ணிய க்ஷேத்திரங்களில் சிறந்த காஞ்சியில் வாணியச் செட்டி வமிசத்தில் பிறந்திருந்தான்.

20. பாரிய மதலை யுண்டாய்ப் பலவணி பங்கள் செய்து
தீரனு வாழு நாளில் சேர்ந்ததோர் வினையைச் சொல்வேன்
வேறுபெண் போகம் துய்த்து நற்கரு வழித்த தொன்று
கூறுவோ மடியா ருக்குக் குறைகளும் செய்த தொன்று.

20. மனைவி மக்களுடன் கூடியவனுகிய இவன் பல வியாபாரங்களைச் செய்து ஜீவித்து வரும் காலத்தில் இவனுக்கேற்பட்ட பாவத்தைக் கூறு கின்றோம். வேறு பெண்ணிடம் மோகம் கொண்டு அவளுக்குக் கரு ஏற்பட்டதால் அதை அழித்தான். இது முதல் பாவம். சிவனடியாரிடத் தில் அபசாரப்பட்டான். இஃது இரண்டாவது பாவம்.

21. அரனடி வருத்தமுற்று அறைந்தசா பத்தைக் கேண்மோ
வரும்ஜன்மம் துணைவர் தோஷம் மனைவிபோல் நாஸ்தி யாகும்
உறன்முறை பகையு மாயும் உலகினில் வாழ்வா யென்ன
மருவிற்று அந்தச் சாபம் மங்கையே கேட்டி டாயே.

21. அந்த அரனடியார் வருத்தமுற்றுச் சொன்ன சாபத்தைக் கேளுங் கள். மறுபிறவியில், உனது மனைவிக்குச் சகோதர விருத்தி இல்லாதது போல் உனக்கும் சகோதர விருத்தி இல்லை. மேலும் உறவினரும் பகைவ ராவர். அவரிட்ட சாபம் இவனை இப்பிறவியில் பின் தொடர்ந்து வந்திருக் கிறது. தாயே! மேலும் கேளுங்கள்.

22. அந்திய காலம் தன்னில் அவன்செல்வம் குறைவு நேர்ந்து
தென்திசை கால னூடு சென்றுமே பிரமன் லக்கம்
வந்தவ னென்று சொல்வோம் அரனடி சாபத் தாலே
தன்துணை ஆண்பால் தோஷம் தன்பந்து பகையு மெய்தும்.

22. அந்த ஜன்மத்திலேயே கடைசிக் காலத்தில் இவனுடைய செல்வம் குறைந்து இவன் மிகவும் கஷ்டப்பட்டு இறந்தான். அவனைப் பிரம்மதேவன் இங்குப் பிறப்பித்திருக்கிறான். அரனடியார் சாபத்தால் சகோதரனும் இல்லை, தன் பந்துக்களும் பகைவர்களாக இருக்கிறார்கள்.

23. கருவதை அழித்த தோஷம் காணமுன் துணைவ ருக்கு
உரிமைசெய் துணைவர் தோஷம் உரைக்கிறோ மிவன்பின் ஜன்மம்
பெருமையாய்க் காஞ்சி தன்னில் பிறப்பனு மிக்கு லத்தில்
பொருளது பெருக்க மாகிப் புகழுடன் வாழ்வான் மாதே.

23. கருவை அழித்த தோஷத்தால் முன் பிறந்த சகோதரர்களும் இல்லை. இவனுடைய பின் ஜன்மத்தையும் கூறுவோம். இவன் மறு பிறவியில் காஞ்சியில் இதே குலத்தில் பிறந்து பொருள்களை விருத்தி செய்து புகழுடன் சுகமாக வாழ்வான்.

24. இருபது மூன்று ஆண்டி லெய்திடும் தந்தை கண்டம்
மறலியைக் காணு னுசும் அதற்குமேல் மூன்று ஆண்டில்
திருகிலா ஆனி மாதம் செப்புவோம் தந்தை கண்டம்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

24. ஜாதகனுடைய இருபத்து மூன்ருவது வயதில் தந்தைக்கு ஓர் ஆபத்து நேரும். ஆனுல் மரணமடையான். அதற்குப் பிறகு மூன்ரும் ஆண்டில் ஆனி மாதத்தில் கண்டமேற்பட்டுத் தந்தை இறப்பான். விநாயகரைப்பெற்ற தாயே! மேலும் கேளுங்கள்.

25. நாற்பது மூன்று ஆண்டில் நற்றுலா மாதம் தன்னில்
கூப்பிடு வானும் காலன் குறித்ததோர் அன்னை தம்மை
ஏற்கவே ஆண்டிற் குள்ளே யிவன்தந்தை அன்னை கண்டம்
திரியாக நேரு மென்ருேம் செப்பின மொழிகுன்ருது.

25. ஜாதகனுக்கு நாற்பத்து மூன்ருவது வயது நடைபெறுகையில் ஐப்பசி மாதத்தில் தாய் மரணமடைவாள். ஜாதகன் பிறந்த ஒரு வருஷத்திற்குள் தந்தையின் தாய் மரணமடைவாள். நாங்கள் சொன்ன மொழி தப்பாது நடைபெறும்.

26. பால்கன் மணத்தின் காலம் பகருவோம் பதினே ழாண்டுள்
நீலியும் மேல்பால் நேரும் நுவலுவோ மவள்கு ணத்தைச்
சீலியாம் விரத சாலி தேரின புத்தி யுண்டு
காலத்தை அறிந் துரைப்பள் கணவனுக் கினியளாகும்.

26. ஜாதகனின் விவாஹ காலத்தைக் கூறுவோம். பதினேழாவது வயதிற்குள் இவனுக்கு விவாஹம் நடைபெறும். இவனுடைய மனைவியின் குணத்தைக் கூறுவோம். சீலமுள்ளவள். விரதங்களை அனுஷ்டிப்பாள். பக்குவ மடைந்த புத்திபடைத்தவள். காலத்திற்கு உசிதமான வார்த்தைகளையே பேசுவாள். கணவனுக்குப் பிரியமானவள்.

27. தோகைபோல் நிறத்தா ளாகும் சுந்தரி யோக சாலி
பாகமாய்ப் பேசு வாளாம் பதர்குண மில்லா ளாகும்
நாகம்போல் கோபம் கொஞ்சம் நன்னடை யுடையா ளாகும்.
ஆகம முணர்ந்தோர்க் கன்ன மவளீவ ளன்பாய்த் தானே,

27. மயில் போல் நிறம் வாய்ந்தவள். நல்ல அதிருஷ்ட முள்ளவள். அழகாக வகுத்துப் பேசுவாள். பரபரப்பு இல்லாதவள். சர்ப்பம் போல் கோப முள்ளவள். நன்னடக்கை உடையவள். சாஸ்திரம் கற்ற பெரியார்களுக்குப் பக்தியுடன் அமுதளித்து உபசாரம் செய்வாள்.

28. சுதர்களு மாண்பால் ரண்டு தோகையு மவ்வாறு தீர்க்கம்
அதிபன்தன் பூர்வம் சொல்வேன் மாயூரம் தன்னிலேதான்
நிதிமிக உடையா லுக்கு நேர்ந்தனன் ரெட்டி வமிசம்.
அதிதிகள் க்கன்ன மீந்து வறுமுகன் பத்தி பூண்டான்.

28. இந்தத் தம்பதிகளுக்கு இரண்டு பிள்ளைகள். இரண்டு பெண்கள். அந்நால்வரும் தீர்க்கமாக வாழ்வார்கள். ஜாதகனுடையபூர்வ ஜன்மத்தைக் கூறுவேன். இவன் முன் பிறவியில் மாயூரத்தில் அதிகச் செல்வம் படைத்த ஒரு ரெட்டி குடும்பத்தில் பிறந்து, விருந்தாளிகளுக்கு அன்ன மளித்து, சுப்பிரமணிய சுவாமியிடம் பக்தி பூண்டும் வாழ்ந்து வந்தான்.

29. மறலியின் பதிக்குச் சென்று மறயவன் வரையப் பட்டு
நிறைசெயும் கோவைசியச் சேயாய் நேருவா னென்று சொல்வோம்
உரைக்கிறே மிவனின் யோகம் உதித்தநாள் முதலா மாகப்
பிறைபோலே யோக மெய்தும் பலவிதச் செட்டு ஓங்கல்.

29. காலக்கிரமத்தில் யமனுலகம் சென்ற இவனைப் பிரம்மதேவன் பசுக்கள் மேய்த்துச் ஜீவிக்கும் யாதவகுலத்தில் பிறப்பித்திருக்கின்றான். இவனுடைய யோகங்களைச் சொல்லுவோம். இவன் பிறந்தது முதல் வளர் பிரைச்சந்திரன் போல யோகங்கள் விருத்தியாகும். பலவித வியாபாரங்களைச் செய்வான்.

30. தன்தன மதிக மாகும் சஞ்சலம் நிவிர்த்தி யாகும்
இனமதிப் புடனே வாழ்த லிடுக்கமில் லாதா னென்றோம்
நினைவது முடிக்க வல்லான் நிருபர்க ளுறவு கொள்வன்
கனமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

30. பண சேமிப்பும் அதிக மாகும். கவலைகள் நீங்கும். இவனுடைய இனத்தார்களை விட மேலாக வாழ்வான். வாழ்க்கையில் இடுக்கண் இராது. தான் நினைத்த காரியங்களை முடிக்கும் ஆற்றல் படைத்தவன். அரசர்களுடைய நட்பு இவனுக்கு இருக்கும். கணேசனைப் பெற்ற தாயே ! மேலும் கேட்பீராக.

31. அறுபது ஆறு ஆண்டில் அணுகிய மகர மாதம்
திருமக னுடலம் ஏகும் ஜயமுனி மறுத்துச் சொல்வர்
இருஆண்டுக் குள்ளே பாலனுக்கு எய்திடும் கண்ட மென்றோம்
பிருகுமே மறுத்துச் சொல்வார் புக்கிடு மனேகபாதை.

31. இவனுடைய அறுபத்தாறுவது வயதில் தை மாதத்தில் ஜாதகனுக்கு மரண மேற்படும். இவ்வாறு சொன்னதைக் கேட்ட ஜயமுனிவர், இவன் பிறந்த இரண்டு ஆண்டிற்குள்ளாகவே இவனுக்குக் கண்டம்

வந்திடும் என்று நாம் கருதுகின்றோம் என மறுத்துக் கூறினர். பிருகு முனிவர் இந்த ஆக்ஷேபத்திற்குப் பதிலுரைத்தார். உண்மை. இவனுக்கு அநேக ஆபத்துக்கள் நேரிடும்.

32. பொன்னவன் ஜன்மம் தங்கப் புதல்வனுக் கனேக் பாதை
பின்மையாய் வந்த போதும் பரிதிமுன் பனிபோல் நீங்கும்
சொன்னதோர் வயது தீர்க்கம் செப்புவோம் இவன்பின் ஜன்மம்
கன்னமா புரியி லேதான் கலப்பனும் பிரம்ம சேயாய்.

32. ஆயினும் குரு, ஜன்ம லக்கினமாகிய கடகத்தில் தங்கி இருப்பதால், சூரியன் முன் பனிபோல, எல்லாக் கண்டங்களும் நிவிருத்தியாகும். ஆகையால் நாம் சொன்ன வயது வரையில் நீடித்து வாழ்வான். இவனுடைய பின் ஜன்மத்தையும் கூறுவோம். மறுபிறவியில் இவன் கன்னமாபுரியில் பிராம்மண ஜாதியில் பிறப்பான்.

33. மாரனும் ஜனிக்கும் காலே மாந்தலே முதல்பா தத்தில்
பார்மகன் தசைஐந் தாண்டும் பருகிடும் திங்க ளைந்தும்
கூறுவோம் பவனே யாங்கள் குழவிக்குப் பிணி அனேகம்
தீரமாய் அன்னை நோயும் செல்லுவாள் பிதாவின் அன்னே.

33. இவன் மிருக சீர்ஷ நக்ஷத்திரம் முதல் பாதத்தில் ஜனித்திருக்கின்றான். ஆகையால் செவ்வாய்த் தசை இருப்பு வருஷங்கள் ஐந்து, மாதங்கள் ஐந்து. இந்தத் தசையின் பலனேச் சொல்லுவோம். ஜாதகனுக்குப் பல நோய்கள் வரும். இவனுடைய தாயும் பிணிகளால் துன்பப்படுவாள். பிதாவின் அன்னே மரணமடைவாள்.

34. தரணிகள் சேர்த லுண்டு செட்டுக்கள் பலமே யாகும்
பொருள்சேரும் செலவு முண்டு பெற்றதாய் வர்க்கம் சூதம்
அரிவையர் சுபமு மீண்டு அறிவித்தோம் பூர்வ பாகம்
கரிமத வானே பெற்ற காதலி கேட்டி டாயே.

34. பூமிகள் சேரும். பலவித வியாபாரங்களும் ஓங்கி வளரும். புதிய புதிய பொருள்கள் கிடைக்கும். செலவுகளும் நடை பெறும். தாயின் வருக்கத்தில் சூதகம் நேரிடும். சகோதரிகளுக்கு நன்மைகள் ஏற்படும். இப்பொழுது பூர்வபாகத்தைத்தான் சொல்லியிருக்கிறோம். ஐங்கரனைப் பெற்ற சங்கரியே ! மேலும் எங்களைக் கேட்டருளல் வேண்டும்.

## ஜாதகம் 36

1. திங்களும் மேட மாகச் சேய் நந்தி கேது வீணை
பங்கயன் பளிங்கு புத்தி பர்வையில் ராகு மேரு
துங்கமாம் குருவும் சாடி சனிமீனம் கடகம் ஜன்மம்
இங்கிவை கிரகம் நின்று லியம்புவீர் பலனைத் தானே.

| சனி | சந்திரன் | செவ்வாய் | கேது |
|---|---|---|---|
| குரு | இராசி சக்கரம் | | லக்கினம் |
| | | | |
| ராகு | | | சூரியன் சுக்கிரன் புதன் |

1. பிரமாதி வருஷம் புரட்டாசி மாதம் 19-ஆந் தேதி வெள்ளிக்கிழமை 17-நாழிகைக்கு மேல் 22 நாழிகைக்குள் ஜனனம். ஆங்கிலத் தேதி 3-10-1879. நவக்கிரஹங்களின் பாதசாரம்—ஹஸ்தம் 3-இல் சூரியன். கிருத்திகை 1-இல் சந்திரன். கிருத்திகை 4-இல் செவ்வாய். ஹஸ்தம் 3-இல் புதன் (அஸ்தம்) சதயம் 1-இல் சுக்கிரன் (வக்ரீ). ரேவதி 2-இல் சனி (வக்ரீ). உத்தராடம் 1-இல் ராஹு. புனர்வஸு 3-இல் கேது. நக்ஷத்திரம் கிருத்திகை. சூரிய தசையில் இருப்பு வருஷங்கள் ஐந்து, மாதங்கள் ஐந்து.

சந்திரன் மேஷம். செவ்வாய் விருஷபம். கேது மிதுனம். சூரியன் சுக்கிரன் புதன் கன்னி. ராஹு தனுஸ். குரு கும்பம். சனி மீனம். இலக்கினம் கடகம் இவ்வாறு நின்றிடும் கிரஹங்களின் பலன்களைச் சொல்லுவீர்களாக எனப் பார்வதி வினவினாள்.

2. உமையவள் கேட்கும் போது உரைக்கிறார் பிருகு தாமும்
அமைந்திடு ஆண்பால் ஜன்மம் அறைகிறே மில்லம் தானும்
மன்வாடை கீழ்மேல் வீதி யீசனும் காளி மாரி
தவசியே வடபா லாகும் சக்கரத் தோனும் மேல்பால்.

2. உமா தேவி இவ்வாறு வினவியவுடன் பிருகு முனிவர் பலன்களைச் சொல்லத் தொடங்குகிறார். இக்கிரஹ நிலையில் பிறந்த குழந்தை ஆண்,

வீதி கிழக்கு மேற்காக அமைந்திருக்கும். தென் வரிசையில் வீடு நிற்கும். வட திசையில் பரமசிவன் காளி மாரியம்மன் இவர்களின் ஆலயம் இருக்கும். சக்கராயுதத்தைத் தரித்த விஷ்ணுவின் கோயில் மேற்குத் திசையில் உண்டு.

3. அக்கினி காளி தன்பால் அணுகிய பேரூர் தன்னில்
வருவனு னிந்தப் பாலன் சுருதியின் குலத்தில சிரேஷ்டன்
மிக்கவே அன்னை தந்தை வித்தன் துணைவர் யோகம்
தக்கவே முன்பின் ஜன்மம் சாற்றுவோ மிந்நூல் தன்னில்.

3. தென் கிழக்குத் திசையில் மற்றொரு காளி கோயிலும் விளங்கும். இவ்வடையாளங்கள் வாய்ந்த பெரிய ஓர் ஊரில் பிராம்மண ஜாதியில் இந்தப்பாலன் ஜனித்திருக்கின்றான். தேவியே! நாங்கள், இவனுடைய யோகத்தையும், தாய் தந்தை சகோதரர் மனைவி புத்திரர் இவர்களைப் பற்றியும், முன்பின் ஜன்மங்களைப் பற்றியும் இந்த நூலில் கூறப்போகின்றோம். கருணையுடன் கேட்பீராக.

4. தந்தையின் துணைஆண் காணன் சத்தியர் மூவ ராகும்
பிந்தியும் சிலவே சேதம் பேசுவோம் பின்பால் சேதி
இந்தவன் தந்தை சேதி யியம்பு வோமிருசி வப்பன்
சிந்தையும் நல்ல தாகும சிலேடையாய்ப் பேசு வானும்.

4. ஜாதகனுடைய தந்தைகுச் சகோதரன் இல்லை. சகோதரிகள் மூவர். இம் மூவரைத் தவிர வேறு சிலர் பிறந்து அழிவார்கள். அந்த வரலாற்றைப் பின் பகுதியில் பேசுவோம். தந்தையின் குணத்தைச் சொல்லுவேன். மாநிற முள்ளவன். நல்ல எண்ண முள்ளவன். சிலேடைவார்த்தைகளைப் பேசுவான்.

5. தரணியை விருத்தி செய்வன் சாதமும் குறைவு றுதான்
பொருளது அதிகம் காணன் எம்மானின் பத்தி பூண்பன்
திருகான குணமில் லாதான் தேரின புத்தி யேற்பன்
குறையென்றோர்க் குதவி செய்வன் கொடுமையை எவர்க்கு
[மெண்ணான்.

5. பூமிகளை மேன் மேலும் அபிவிருத்தி செய்வான் ஆகார சௌக்கியம் உடையவன். இவனிடம் பணம் அதிக மிராது. சிவபிரானிடம் பக்தி கொண்டவன். கெட்ட குண மில்லாதவன். அனுபவம் வாய்ந்த பெரியோர்களின் உபதேசங்களை ஏற்றுக்கொண்டு அதன்படி நடப்பான். குறைப்பட்டவர்களுக்கு உபகாரம் செய்வான். யாருக்கும் தீங்கை எண்ணாதவன்.

6. தன்துணை ஆண்பால் தோஷம் சாற்றுவீர் முனியே நீர்தாம்
ஒன்பதில் காரி தங்க உரைத்திட்டோ மந்தச் சங்கை
அன்னியர்க் கிணக்கம் சொல்லான் அணுகும்கா ரகதே கங்கள்
பின்னமில் லாத தேகி பொய்யது வழுத்தா னாகும்.

6. இவனுக்குச் சகோதரன் இல்லை என்று சொன்னீர்களே ? அதற்கென்ன காரணம் ? எனத் தேவி கேட்க, பிருகு முனிவர் பதிலுரைத்தார். சனி ஒன்பதாமிடத்தில் தங்கி இருப்பதால் தந்தைக்குச் சகோதர பாவமாகிய விருஷபத்தைப் பார்ப்பதால் என்பது கருத்து. அவனுக்கு ஆண் சகோதர விருத்தி இல்லை. இவ்வாறு முனிவர் பதில் சொல்லி விட்டு அவனுடைய குணத்தை மேலும் தொடர்ந்து கூறுகின்றார். பிறர் பேசியதை ஆக்ஷேபிக்க மாட்டான். ஊனமில்லாத சரீரம் வாய்ந்தவன். பொய் பேசாதவனாகவும் இருப்பான்.

7. சொன்னஇக் குணத்தா னுக்குத் தோன்றுவா னிந்தப் பாலன்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் யாவர்க்கும் நல்லோ னவன்
தன்சொல்லு மடக்க முண்டு தரணியில் உய்வா னாகும்
பொன்னது அதிகம் காணான் புறஞ்சொல்லா னிருநி றத்தான்.

7. நாம் சொன்ன குணங்கள் வாய்ந்த மனிதனுக்கு இந்தப்பாலன் தோன்றி இருக்கின்றான். இனி ஜாதகனுடைய குணங்களைக் கூறுவோம். எல்லோருக்கும் நல்லவனாக இருப்பான். அவனுடைய வார்த்தைகளில் வணக்கம் ஊடுருவி ஒலிக்கும். உலகில் பாவம் செய்யாதவனாக வாழ்வான். இவனுடைய செல்வம் நாணய உருவத்தில் இராது. பிறரைப் பற்றி மறைவில் தூஷணைகள் சொல்லான். கருத்த மேனியான்.

8. கல்வியும் சமம தாகும் கருதிடான் கட்டு வார்த்தை
யில்லையென் றுரைக்க மாட்டா னிதிகாச மறியா னாகும்
சொல்லது சுருக்க மாகும் தோன்றிடும் பித்தச் சூடு
மல்லுக்கு முன்செல் லாதான் வாக்கதைக் காப்பா னாகும்.

8. மத்திய தரமான கல்வி கற்றவன். அடுக்குச் சொற்களைப் பேசுவதில் விருப்ப மில்லாதவன். உதவியை நாடியவர்களுக்கு " இல்லை " என்று சொல்லான், புராண இதிஹாஸங்களை அறியாதவன். அதிகமாகப் பேசாதவன். பேச்சு மிகவும் சுருக்கமாகவே இருக்கும். இவனது உடலில் பித்தச் சூடு உயர்ந்திருக்கும். சண்டைகளில் ஈடுபடான். தனது வாக்கைக் காப்பாற்றுவான்.

9. கரமதில் மாலின் ரேகை கஞ்சமாம் ரேகை யுண்டு
தரையதை விரயம் செய்யான் சதுஷ்பாதம் விருத்தி யல்பம்
பெரியதோர் தலங்கள் செல்வன் பின்புத்தி யுடைய னாகும்
அரிபத்தி பூண்பா னாகும் அயல்குற்றம் புகலா னாகும்.

9. இவனது கையில் விஷ்ணு ரேகை விளங்கிடும். பதுமரேகையும் திகழும். இவன் தனுக்குச் சொந்தமாக உள்ள பூமியை இழக்கமாட்டான். கால்நடைகள் இவனிடம் விருத்தியாகா. புண்ணிய ஸ்தலங்களுக்குச் செல்லுவான். இவன் ஆரம்பித்த வேலை ஒருவாறு முடிந்தபின் நல்ல யோசனைகள் இவனுக்குத் தோன்றும். இவன் விஷ்ணு பக்தன். அயலார் குற்றங்களை வெளிப்படுத்தாதவன்.

10. இவனுடைத் துணைவர் தம்மை யியம்புவோம் மூவ ராகும்
அவனியில் இரண்டு சேதம் நாயகி ஒன்றே தீர்க்கம்
தவசியே அவள்கு ணத்தைச் சாற்றுவோம் சிவந்த மேனி
பவமன மில்லா ளாகும் பணிந்தோரை ஆத ரிப்பள்.

10. இவனுக்கு மூன்று உடன் பிறந்தார்கள். அவர்களில் இருவர் நீடித்து வாழ்ரார்கள். ஆகவே, ஒரு சகோதரிதான் தீர்க்காயுளுடன் வாழ் வாள் தேவியே ! அவளுடைய குணங்களையும் கூறுகின்றோம். சிவந்த மேனியாள். கெட்டமனமில்லாதவள். கீழ்ப்பட்டவர்களை ஆதரிப்பாள்.

11. அன்னம்போல் வடிவு மொக்கும் ஆசார முடையா ளாகும்
கன்னென மொழியு முண்டு கபடிலாள் முன்கோ பத்தாள்
பொன்பணி சேர்ப்பா ளாகும் புருடனும் தென்பால் நேரும்
கன்னிகை யோக சாலி கணவன்தன் மனதுக் கேத்தாள்.

11. அன்னம்போல் அழகுடையவள். நல்ல ஆசாரமுள்ளவள். கரும்புபோன்ற இனிய மொழிகளைப் பேசுவாள். கபடமில்லாதவள். முன் கோபமுண்டு. தங்க ஆபரணங்களை அதிகம் அடைவாள். தென்திசையில் இவள் வாழ்க்கைப்படுவாள். மிக்க அதிர்ஷ்டமுள்ளவள். கணவனுடைய இஷ்டப்படியே நடப்பாள்.

12. சுதர்களு மாண்பால் ரண்டு தோகையு மவ்வாறு தீர்க்கம்
பதராகு மென்று சொன்னோம் பாவையும் தீர்க்க சீவி
சதியிலா மனத்தா ளாகும் சாதமு மன்பா யீவள்
ததிபாக்கிய முடையா ளாகும் சாற்றின மொழி குன்றுது.

12. அவளுக்கு இரு பிள்ளைகள். பெண்களும் இருவர். இந்நால்வரும் தீர்க்கசீவிகள். இவர்களைத் தவிர சில குழந்தைகள் பிறக்கும். ஆனால், நீடித்திரா. இவளும் தீர்க்காயுளுடன் வாழ்வாள். பிறர்க்குக் கெடுதல் எண்ணுத மனமுள்ளவள். அன்புடன் அன்னதானம் செய்வாள். பால், தயிர் பாக்கியமுள்ளவள். நாங்கள் சொன்ன இவ் வார்த்தை பொய்யாகாது.

13. மாதுரு குணத்தைச் சொல்வேன் மாந்தளிர் மேனி யாகும்
ஓதுவாள் சுகமாய் வார்த்தை உள்மனம் கபடு மில்லாள்
பாதக மனஞ்செல் லாதாள் பகையென்று மனதில் வையாள்
மேதினில் நல்லோ ளாவள் விகடங்கள் கூறு ளாகும்.

13. ஜாதகனுடைய தாயின் குணத்தைக் கூறுவோம். மாந்தளிர் போன்ற நிறம் உடையவள். இனிமையாகப் பேசுவாள். அவளுக்குச் சிறிதும் கபடமிராது. பிறர்க்குத் தீமைகளையும் எண்ணுதவள். பகைமையை உடனே மறந்து விடுவாள். எல்லோருக்கும் நல்லவளாக விளங்குவாள். பிறர் மனம் புண்ணுகும்படி பரிகாசங்கள் செய்யாள்.

14. முன்கோபம் பின்பு தாழ்வு மூலச்சூடுடைய ளாகும்
தன்துணை ஆண்பால் மூன்று தையலர் ஐவ ராகும்
பின்னமாம் சிலவே பின்னுல் பெற்றதா யில்லம் ஆவள்
மன்னவன் மனதுக் கேத்தோள் மறுத்துரை அதிகம் கூறுள்.

**14.** முன்கோபமுண்டு. ஆனால், பச்சாதாபமடைந்து தணிந்துவிடுவாள். மூலச் சூடு உடையவள். அவளுக்கு மூன்று சகோதரர்கள். ஐந்து சகோதரிகள். பிற்காலத்தில் இங்குச் சொல்லப்பட்ட உடன் பிறந்தார்களில் சிலர் நஷ்டமாவார்கள். தாயின் வீட்டிலேயே கணவனுடன் வாழ்வாள். பர்த்தாவின் மனம்போல் நடப்பாள். யாரிடமும் அதிகம் ஆக்ஷேபித்துப் பேசாதவள்.

**15.** வாதநோ யுடைய ளாகும் வரைகிறே மிவள்தன் பூர்வம்
பாதகம் விலக்கும் தில்லை பிறந்தனள் சைவச் சேயாய்த்
தீதென்றோர்க் குதவி செய்து செழிப்பான குடும்பி யாகிச்
சேதுவின் பதிக்குச் சென்று தீவினை யில்லா ளாகி ;

**15.** வாத நோயினால் கஷ்டப்படுவாள். இவளுடைய பூர்வ ஜன்மத்தைக் கூறுவோம். எல்லாப் பாவங்களையும் நாசம் செய்யும் சிதம்பர க்ஷேத்திரத்தில் சைவ குலத்தில் பிறந்து, கஷ்டப்படுபவர்களுக்கு உதவி செய்த புண்ணியத்தினால் சிறந்த குடும்பமுள்ளவளாகி, சேதுவிற்குச் சென்று, அங்கு நீராடி, சிறிதும் பாவமில்லாதவளாய் ;

**16.** மங்கையும் மரண மாகி மறையவன் வரையப் பட்டுத்
துங்கமாம் குலமு தித்தாள் தொல்புவி வறுமை காணாள்
அங்கவள் பின்ஜன் மங்கேள் அழகர் [1] வாழ் பாண்டி தன்னில்
சங்கையில் லாமல் தோன்றும் சதுர்மறைக் குலத்தி லேதான்.

**16.** தன் அந்திய காலத்தில் மரணமடைந்தாள். பிறகு பிரம்மதேவன் அவளை இங்குப் படைத்திருக்கின்றான். அவள் இக்கடக லக்கின மகனுக்குத் தாயாக வாய்த்திருக்கின்றாள். இவளுடைய பின்ஜன்மத்தையும் கூறுவோம். இவள் மறு பிறவியில் அழகர் எழுந்தருளி இருக்கும் பாண்டிய நாட்டில், நிச்சயமாக, வேதமோதும் பிராம்மண வம்சத்தில் தோன்றுவாள்.

**17.** தந்தையின் பூர்வம் சொல்வேன் தாம்பிர பரணி தன்னில்
பிந்திய குலமு தித்துப் பேதையும் மதலை யுண்டாய்
விந்தையாய்ச் செட்டுச் செய்து வித்தகன் வாழு நாளில்
பிந்தினோர்க் கிடைஞ்சல் செய்து பூமியைத் தன்கைக் கொண்டான்.

**17.** ஜாதகனுடைய தந்தையின் பூர்வஜன்மத்தைக் கூறுவோம். இவன் முன்ஜென்மத்தில் தாம்பிரபரணி நதிக் கரையில் உள்ளதோர் ஊரில் ஜனித்து, மனைவி மக்களை அடைந்து, நன்றாக வியாபாரம் செய்து சுகமாக ஜீவித்து வந்தான். அவ்வாறு இவன் வாழ்ந்துவரும் காலத்தில் ஏழைகளின் பூமிகளை அக்கிரமாகத் தன் வசப்படுத்திக்கொண்டான்.

---

[1]. திருமாலிருஞ்சோலையில் கோயில்கொண்டு எழுந்தருளி இருக்கும் விஷ்ணுவிற்கு "அழகர்" என்றும் "கள்ளழகர்" என்றும் திருநாமமாகும். "திருமாலிருஞ்சோலை" மதுரைக்கு அருகிலுள்ளதொரு விஷ்ணு ஸ்தலம்.

18. ஏழையோர் வருத்த முற்று இயம்புவார் சாபம் தானும்
தாழ்படச் செய்த பாவி தங்காது உந்த ஸ்திதி
ஆழியில் பின்ஜன் மத்தில் அன்னவன் அநுஜனின்றி
வாழ்குவா யென்று சொல்ல மருவிற்று அந்தச் சாபம்.

18. அதனால் வருத்தமடைந்த ஏழைகள் சாபமிட்டார்கள். எங்களுடைய சொத்துக்களை அபகரித்துக்கொண்டு எங்களைத் தாழ்வுறச் செய்த மகா பாவியாகிய நீ, இப்பிறவிலேயே உனது சொத்துக்களை இழப்பாய். மேலும், வரும் ஜன்மத்தில் தம்பிகளின்றி வாழ்வாய். இவ்விரு சாபங்களும் அவனைப் பற்றிக் கொண்டன.

19. அந்திய காலம் தன்னில் அவன்செல்வம் குறைவு நேர்ந்து
தென்திசைக் கால னூடு சென்றுமே பிரமன் லக்கம்
முந்தின குலமு தித்தான் மேவிடு மேழைச் சாபம்
தன்துணை ஆண்பால் தோஷம் தனியனாய் வாழ்வா னாகும்.

19. பிறகு அந்திய காலத்தில் ஏழைகள் சாபத்தின்படி இவன் தனது சொத்துக்கள் எல்லாவற்றையும் இழந்து அவர்கள் போலவே ஏழையாகி இறந்தான். பின்பு பிரம்மன் அவனை இங்குப் பிராம்மண ஜாதியில் படைத்திருக்கின்றான். அவனே ஜாதகனுடைய தந்தை. முன்ஜன்ம சாபத்தின் படியே இவன் சகோதரனற்றுத் தனியனாக உயிர் வாழ்வான்.

20. மூவேழு ஆண்டு தன்னில் விளம்புவோம் கண்டம் தானும்
ஆவலாய் முன்பின் ஜன்மம் அரங்கமா நகர முத்திரம்
தாவிய சிறுஊர் தன்னில் ஜனிப்பனும் க்ஷத்திரிய சேயாய்
மேவிய தவங்கள் செய்யும் வித்தகி கேட்டி டாயே.

20. ஜாதகனுடைய இருபத்தோராவது வயதில் இவனுக்கு (தந்தைக்கு) கண்டம் ஏற்படும். இவனுடைய பின்ஜன்மத்தையும் கூறுவோம். இவன் ஸ்ரீரங்கத்திற்கு வடக்கிலுள்ளதொரு சிறிய கிராமத்தில் க்ஷத்திரிய குடும்பத்தில் பிறப்பான். சீரிய தவங்களைச் செய்யும் தேவியே! மேலும் கேட்பீராக.

21. அத்திரி மறுத்துச் சொல்வார் அந்தணர் குலமு தித்தோன்
க்ஷத்திரிய குலத்தில் நேரும் சங்கையைச் சொல்லு மென்ன
வித்தக னிச்சென் மத்தில் மேல்பூச அருணத்த னும்
சித்தமே கறுப்பு மாயும் சொல்லதைத் தவிர்த்த தாலும்;

21. இங்கு அத்திரி மஹரிஷி ஒரு சந்தேகத்தைத் தெளிவிக்கவேண்டினார். அஃதாவது; இச் சென்மத்தில் அந்தணர் குலத்தில் பிறந்த இவன் மறு பிறவியில் க்ஷத்திரிய வம்சத்தில் உதிக்கக் காரணம் என்ன? என்பது. இதற்கு வசிஷ்டர் பதில் கூறுகின்றார். இவன் இந்தப் பிறவியில் வெளித் தோற்றத்தில் நல்லவன்போல் வேஷம் தரித்து உள்ளத்தில் கள்ளம் கொண்டவனாக இருப்பதாலும், தான் சொன்ன வார்த்தைப்படி நடவாத தாலும்;

22. உதிப்பனு மென்று சொல்வோம் உயர்வான குடும்பி யாவன்
சதியிலா நாற்ப தாண்டில் தாய்க்குறும் கண்டம் சொல்வேன்
அதுகாலம் பித்த நோயால் அடைகுவா வென்று சொல்வோம்
துதிசெய்தோர் தம்மைக் காக்கும் துறவியே கேட்டி டாயே.

22. அடுத்து வரும் பிறவியில் தாழ்ந்த ஜாதியில்தான் பிறப்பான். ஆனால், அதிக ஐசுவரியம் படைத்துப் பெருமை வாய்ந்த குடும்பம் உள்ளவனுவான். ஜாதகனுடைய நாற்பதாம் ஆண்டில் அவனுடைய தாய்க்குப் பித்தநோய் காணும். அந் நோயினாலேயே கடைசியாக இறப்பாள். துதி செய்தவர்களைக் காப்பாற்றும் முனியே ! மேலும் கேட்பீராக.

23. பாலகன் மணத்தின் காலம் பகருவோ மிருபா னென்பான்
சாலவே ஆண்டு தன்னில் தங்கிடும் குடதில் பாரி
யேலவே குணத்தைச் சொல்வேன் யாவர்க்கும் நல்லோ ளாவள்
காலத்தை அறிந்து ரைப்பாள் கணவனுக் கினிய ளாகும்.

23. இனி, ஜாதகனுடைய விவாஹ காலத்தைக் குறிப்பிடுவோம். இருபத்தொன்பதாவது வயதில் இவனுக்கு மணம் நடைபெறும். மணப் பெண் மேற்குத் திசையில் ஜனித்திருப்பாள். அந்தப் பெண்ணின் குணத்தைக் கூறுவோம். ஒருவரையும் பகைத்துக் கொள்ளாதவள். காலத்தை அறிந்து அதற்கேற்றபடி பேசுவாள். கணவனுக்கினியாள்.

24. புத்திமான் பொறுமை சாலி புண்ணிய மனத்தா ளாகும்
சித்தமே கறுப்பு மில்லாள் தீங்கதை ஒருவர்க் கெண்ணாள்
பத்தினி வந்த பின்பு பிறைபோலே யோகம் வாய்க்கும்
சுத்தமு முடையா ளாகும் சுந்தர மென்று சொல்வோம்.

24. புத்தி சாதுர்யமுள்ளவள். பொறுமைக் குணம் வாய்ந்தவள். தூய மனம் படைத்தவள். கபடமில்லாதவள். ஒருவருக்கும் தீங்கை எண்ணாதவள். இவள் இக் கடக லக்கின மகனுக்கு வாழ்க்கைப்பட்ட பிறகு, வளர்பிறைச் சந்திரன்போல அவனது யோகங்கள் வளரும். மிக்க பரிசுத்த மானவள். அழகு வாய்ந்தவளாகவும் இருப்பாள் என்று கூறுவோம்.

25. வருவோரை ஆத ரிப்பள் வரன்மனம் போல வாழ்வள்
திருமக ளொப்ப தாகும் செய்நன்றி மறவா ளாகும்
பெருமையும் புகழு மேற்பள் பெரிதான விரத மேற்பாள்
அரிவையும் தீர்க்க சீவி அம்பிகை யாளே கேளாய்.

25. வீட்டிற்கு வந்தவர்களைப் புன்முறுவலுடன் வரவேற்று உபசரிப்பாள். கணவன் மனத்தை அறிந்து அதற்கு ஏற்றபடி வாழ்க்கை நடத்துவாள். லக்ஷ்மிக்குச் சமானமானவள். தான் பெற்ற உபகாரத்தை மறவாதவள். பெருமையும் புகழும் இவளை நாடிவரும். அதிகப் பொருள் செலவு செய்து நீண்ட காலம் அனுஷ்டிக்க வேண்டிய விரதங்களைச் சிரத்தையுடன் செய்து முடிப்பாள். தீர்க்காயுள் வாய்ந்தவள். தேவியே ! மேலும் கேளுங்கள்.

26. புத்திர விருத்தி சொல்வேன் பெண்ணது இரண்டு தீர்க்கம்
சித்தசன் போலாண் ஒன்று செப்புவோம் தீர்க்க மாகப்
புத்திரன் இவன்மே லாகப் போற்றுவோம் யோகம் தானும்
அத்தியை வளர்த்த எங்கள் ஆத்துமத் தாயே கேளாய்.

26. இவர்களுடைய புத்திர பாவத்தைக் கூறுவோம். இவர்களுக்கு இரு பெண்களும், மன்மதனைப் போல் அழகுள்ள ஒரு பிள்ளையும் பிறப்பார்கள். இம்மூவரும் தீர்க்க காலம் சுகமாக வாழ்வார்கள். இச் சாதகனைக் காட்டிலும் இவன் மகன் மிகப் பெரிய யோகங்கள் வாய்ந்தவனாகச் சிறப்புடன் வாழ்வான். கணேசனைப் பெற்ற தாயே! மேலும் கேட்பீராக.

27. முன்னவ னிருந்த ஜன்மம் மொழிகிறோம் தில்லை தன்னில்
வன்னிய குலமு தித்து மனைவிமைந் தருமுண் டாசி
இன்னவர் வாழு நாளி லெய்தின வினையைக் கேண்மோ
கன்னிகை யொருத்தி பேரில் கா...த வார்த்தை சொன்னான்.

27. ஜாதகனது முன்ஜன்மத்தைக் கூறுகின்றோம். இவன் சிதம்பர க்ஷேத்திரத்தில் வன்னிய குலத்தில் பிறந்து, மனைவி குழந்தைகளுடன் சுகமாக வாழுங் காலத்தில் இவனுக்கேற்பட்ட பாவத்தைச் சொல்லுகின்றோம். இவன் ஒரு பெண்ணின்மேல் காரணமில்லாமல் அவதூறுகளைக் கற்பித்து எல்லோரிடமும் அவைகளைச் சொல்லிவந்தான்.

28. இனமதை விட்டு நீக்க யேகின மாது சொல்வாள்
வினையான வார்த்தை யென்மேல் விளம்பின பாவிக்குத் தான்
துணைவரு மில்லா தாகித் தோன்றும்பின் ஜன்மம் தன்னில்
தனியனாய்த் தாழ்கு டும்பம் சஞ்சல மனமாய் வாழ்வாய்

28. மேலும் அந்தப் பெண்ணின கணவனும், மற்றைய உறவினர்களும் அவளை வீட்டை விட்டு நீக்குவதற்கு இவனே காரணமானான். ஆகையால் மிகவும் வருந்திய அந்த மாது, ஒருவிதக் குற்றமும் இல்லாத என்னைப் பிரித்த பாவியாகிய நீ மறுபிறவியில், சகோதரர்களற்றும், தாழ்ந்த குடும்ப முள்ளவனாகவும், எப்பொழுதும் மனத்தில் கவலை கொண்டவனாகவும் வாழ்வாய் என்று சொன்னாள்.

29. இன்னமும் பலவாறு சொல்லி ஏகின ளந்த மாது
துன்மைகள் சேர்ந்த தென்றோம் சுதனுமே அந்தி யத்தில்
அந்நக ரால யத்தில் அவன்தீபம் பார்த்து வந்து
முன்னோர்க்குத் தொண்டு பூண்டு மேவினன் கால னாடு.

29. இன்னும் பலவாறு சொல்லிவிட்டு அவள் சென்றாள். அத்துன்பங்கள் எல்லாம் இவனைப் பற்றிக் கொண்டன. ஆயினும் இவன் அந்திய காலத்தில் நல்ல புத்தியை அடைந்து, அந் நகரிலுள்ள ஆலயத்தில் தீப மேற்றியும், பெரியோர்களுக்குத் தொண்டு செய்தும் காலத்தைக் கழித்து, கடைசியில் மரணத்தை அடைந்தான்.

30. பிரமனால் வரையப் பட்டுப் பிறப்பினு மிந்தப் பாலன்
அரிவையாள் சாபத் தாலே அவன்துணை ஆண்பால் தோஷம்
வறுமையும் சுகமு மேற்பன் மாமுனி தடுத்துச் சொல்வர்
திருமகன் முன்ஜன் மத்தில் தீயின்தன் குலமு தித்தோன் ;

30. இவனைப் பிரமதேவன் இக் கடகலக்கினத்தில் பிறப்பித்திருக்கிறான். அந்தப் பெண்ணின் சாபத்தால் இவனுக்குச் சகோதரனில்லை. இவனது வாழ்க்கையில் வறுமையும் சுகமும் நிறைந்திருக்கும். ஒரு மா முனிவர் சந்தேகித்தார் :—முன் ஜன்மத்தில் வன்னிய குலத்தில் பிறந்த இவன் ;

31. மறைக்குல முதிக்கும் வண்ணம் அறிவிப்பீர் முனியே நீர்தாம்
அரனுடை ஆலயத் தில் அணுகின திப்புண்ணிய மாம்
மறை யோர்க்குத் தொண்டு பூண்டு வந்ததா லுதிப்பா னுகும்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

31. பிராமணக் குலத்தில் எவ்வாறு பிறந்தான் ? அதன் காரணத்தை விளக்கிக் கூறுவீராக. வசிஷ்டர் பதில் கூறுகின்றார். முன் பிறவியில் இவன் சிவபிரான் ஆலயத்தில் தீபம் சமர்ப்பித்து வந்தமையாலும் அந்தணர்களுக்குத் தொண்டு செய்துவந்ததாலும் இத்தகைய உயர் குலத்தில் பிறந்தான். விநாயகரை பெற்ற தாயே ! மேலும் கேளுங்கள்.

32. அறுபது எழு ஆண்டில் அணுகிய தேளின் மாதம்
குறைபக்கம் ஏகா தேசி குழவியி னுடலம் ஏகும்
மறுஜன்மம் வள்ளுர் தன்னில் வருகுவா ணிக்கு லத்தில்
அரசரால் தொழிலும் பெற்று அவனுமே வாழ்வான் மாதே.

32. அறுபத்தேழாவது ஆண்டில் விருச்சிக மாதத்தில் கிருஷ்ண பக்ஷத்தில் ஏகாதசி திதியில் இவன் தேக வியோக மடைவான். இவன் மறுபிறவியில் பிராம்மணஜாதியிலேயே பிறப்பான். அரசாங்க உத்தியோகம் பெற்றுச் சுகமாக வாழ்வான்.

33. வந்தவன் பொதுயோ கத்தை வரைகிறே மினிமே லாகத்
தன்மனை வந்த பின்பு சந்திரன் பிறைபோல் யோகம்
சிந்தையும் கலக்கம் நீங்கும் செய்நிலம் சேர்த்த லுண்டு
தன்தனம் இருப்புக் காணும் சல்லிய பாதை யில்லான்.

33. இனிச் சாதகனுடைய யோகத்தைக் கூறுவோம். விவாஹத்திற்குப் பிறகு இவனுடைய அதிருஷ்டம், வளர்பிறைச் சந்திரன் போல, ஓங்கும். இவ்வளவு காலமாக இருந்த கவலைகள் நீங்கும். செழிப்பான நிலங்களும் சேரும். செல்வங்கள் வீண்வழியில் செலவாகாமல் இவனிடம் தங்கி விருத்தியடையும். கடன் தொந்தரவும் விலகும்.

34. பந்துவு மதிக்க வாழ்வன் பகரமாம் குடும்ப மேற்பன்
முந்தினோர் வாச மெய்தும் வேவுகார் சேர்த்த லுண்டு
எந்திடம் பெருமை யேற்பன் ஏகின பூமி சேரல்
விந்தைக ளனேக மெய்தும் விளம்புவோம் பின்பால் சேதி.

**34.** உற்றுர் உறவினர் மதிக்கும் வகையில் இவனது அந்தஸ்து உயரும். மேன்மை வாய்ந்த குடும்பமாகும். இவனுக்குப் பெரியோர்க் ளுடன் வாசம் ஏற்படும்- நம்பிக்கைவாய்ந்த சேவகர் வாய்ப்பர். எல்லா இடங்களிலும் இவனுக்குப் பெருமையுண்டாகும். கையைவிட்டு விலகிய பூமி மறுபடியும் இவனேவந்தடையும். பல வித ஆச்சர்யமான மேன்மை கள் இவனுடைய வாழ்க்கையில் நிகழும். இன்னுமுள்ள விவரங்களே இரண்டாம் பாகத்தில் தெரிவிப்போமாக.

35. காவலன் ஜனிக்கும் காலே கார்த்திகை முதல்பா தத்தில்
ஆதவன் திசைஐந் தாண்டும் அதனுடன் திங்க ளேந்தும்
ஓதினேம் பூர்வ பாகம் உரைக்கிறேம் பின்பால் சேதி
போதக வானே பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

35. ஜாதகன் கிருத்திகை நக்ஷத்திரம் முதல் பாதத்தில் உதித்திருக் கின்றுன். ஆதலால் சூரிய தசையில் இருப்பு வருஷங்கள் ஐந்து, மாதங்கள் ஐந்து. இவ்வாறு பூர்வபாகத்தை விண்ணப்பித்துக் கொண் டோம். மற்றைய விவரங்களேப் பின்பாகத்தில் தெரிவிப்போம். விநாய கரைப் பெற்ற கருணைக்கடலே ! மேலும் எங்களேக் கேட்டருளவேண்டும்.

## ஜாதகம் 37

1. கலைபுதன் பருதி நந்தி காரியும் வீணை யாக
நிலமகன் பணியும் சீயம் நீர்புக ருமே பலிக
குருகுல கன்னி யாகக் கேதுவும் சாடி யாகப்
பலன்தனைச் சொல்லுமென்று பார்வதி கேட்கும் போது ;

| | | | |
|---|---|---|---|
| | சுக்கிரன் | சந்திரன் புதன் சூரியன் | சனி |
| கேது | இராசி | சக்கரம் | லக்கினம் |
| | | | செவ்வாய் ராகு |
| | | | குரு |

விய வருஷம் வைகாசி மாதம் 21-ம் தேதி புதன் கிழமை காலை 7 நாழிகைக்கு மேல் 12-நாழிகைக்குள் ஜனனம். ஆங்கிலத் தேதி 2–6–1886. நவக்கிரகஹங்களின் பாதசாரம்—ரோஹிணி 3-இல்சூரியன் ரோஹிணி 2-இல் சந்திரன். பூரம் 4-இல் செவ்வாய். கிருத்திகை 4-இல் புதன் [அஸ்தம்] உத்திரம் 4-இல் குரு அசுவினி 2-இல் சுக்கிரன். திருவாதிரை 3-இல் சனி. பூரம் 2-இல் ராஹு. சதயம் 4-இல் கேது.

நக்ஷத்திரம் ரோஹிணி. சந்திர தசையில் இருப்பு வருஷங்கள் ஏழு, மாதங்கள் ஐந்து, நாட்கள் இறுபத்தாறு. சந்திரன் புதன் சூரியன் இவர்கள் விருஷபம், சனி மிதுனம், செவ்வாயும் ராஹுவும் சிம்மம், குரு கன்னி, சுக்கிரன் மேஷம், கேது கும்பம், இலக்கனம் கடகம். இவ்வாறுன கிரஹ நிலையின் பலன்களைச் சொல்லுவீர்களாக எனப் பார்வதி வினவும் போது ;

2. அத்திரி புகலு கின்றார் ஆணது ஜனன மாகும்
வித்தக னில்லம் சொல்வேன் வடவாடை கீழ்மேல் வீதி
முத்தின ஊரே யாகும் முக்குடைச் செல்வன் தென்கீழ்
உத்தரம் மாயோன் வாசம் உயர்ந்ததோர் கெடியும் வாயு.

2. இவ்வாறு பார்வதிதேவி கேட்டவுடன் அத்திரி முனிவர் பலன்களைச் சொல்லுகின்றார். இக் கிரஹ நிலையில் பிறந்த மகவு ஆண். வீதி கிழக்கு மேற்காக அமைந்திருக்கும். வீடு, வடக்கு வரிசையில் இருப்பதால், தென்

திசையை நோக்கி இருக்கும். அது பழைய பெரிய ஊராகும். தென் கிழக்கில் ஜைனர் கோயில் இருக்கும. வடக்குத் திசையில் விஷ்ணு ஆலயம் உண்டு. வட மேற்கில் ஒரு கோட்டையும் தங்கிடும்.

3. இன்னமும் பல தே வாசம் இலகிய இல்ல மாகும்
அன்னவன் சைவச் சேயாய் அணுகுவா னிந்தப் பாலன்
மன்னவன் யோகச் சேதி மாதுரு தந்தை யோகம்
தன்துணை களத்திர புத்திரர் சாற்றுவோ முன்பின் ஜன்மம்.

3. இன்னும் பல ஆலயங்களும் அவ்வூரில் விளங்கும். இவ்வடையாளமுள்ள ஊரில் சைவ குலத்தில் பிறந்திருப்பான். இவனுடைய யோகங்களையும் தாய் தந்தை சகோதரன் மனைவி புத்திரர் இவர்களைப் பற்றியும், முன்பின் ஜன்மங்களையும் இந் நூலில் நாங்கள் கூறுவோம்.

4. தந்தையின் துணைஆண் ரண்டு சாற்றுவோம் தீர்க்க மாக
அந்தவ னொருவன் தானும் அடைகுவான் வேறோ ராஸ்தி
விந்தையாய்த் தாயும் நேரும் விளம்புவோம் பின்பால் சேதி
இந்தவன் தந்தை சேதி யியம்புவோ மினிமே லாக.

4. ஜாதகனின் தந்தைக்கு இரு சகோதரர்களுண்டு. அவர்களிருவரும் தீர்க்கமாக வாழ்வார்கள். அவ்விருவர்களில் ஒருவன் வேறு ஒருவனுடைய சொத்துக்களை அடைவான். அவ்வாறு சொத்துக்களைப் பெறுவதற்குக் காரணம் என்னவென்றால், அவன் ஸ்வீகாரப் புத்திரனாக ஆவான் என்பதுதான். இவர்களைப்பற்றிய வரலாறுகளைப் பின் பகுதியில் சொல்லுகிறோம். இனி, தந்தையின் குணங்களைக் கூறுவோம்.

5. கல்விமான் கடவுள் பக்தி கருதிடான் கட்டு வார்த்தை
புல்லிய ருறவு கொள்ளான் பூமியை விருத்தி செய்வன்
நல்லவர் பலபேர் நேயன் நயம்படக் கூறு வானும்
தொல்லைகள் ஏற்கா னாகும் சோம்பிடான் காரி யத்தில்.

5. கல்வியறிவு படைத்தவன். கடவுளிடம் பக்தி பூண்டவன். அடுக்குச் சொற்களைக் கூறி ஆடம்பரப்படுத்த விரும்பாதவன். அறிவிலிகளோடு நட்புக் கொள்ளான். பூமியைப் பலவகையிலும் அபிவிருத்தி செய்வான். சாதுக்களுக்கு நண்பனுவான் நயமாகப்பேச வல்லவன். கஷ்டங்களைச் சகிக்காதவன். ஆனால் தன் காரியங்களில் சோம்பலுள்ளவனுமல்லன்.

6. மாந்தளிர் உணைச்சல் நீட்சி மருவிடும் வாயு கொஞ்சம்
தேன்மொழி கூறு வானும் சீலனும் பொறுமைசாலி
வானவர் பூசை பூண்பன் வண்மையாய்க் குடும் பமேற்பன்
தானெனக் கருவம் கொஞ்சம் சல்லியம் கொள்ளா னாகும்.

6. மாந்தளிர் போன்ற நிறமுள்ளவன். மெலிந்து உயர்ந்து இருக்கும் அவனது உடல். அவனுக்கு வாயு ரோகம் உண்டு. தேன்போல் இனிய மொழிகளைக் கூறுவான். நற்சீலம் வாய்ந்தவன். பொறுமை உடையவன்.

தேவர்களுடைய பூஜையை மேற்கொள்வான். திறமையுடன் குடும்பத்தை நடத்துவான். சிறிது அகம்பாவமும் அவனுக்கு உண்டு. கடன் இல்லாத வனாகவும் வாழ்வான்.

7. கன்னியின் துணைகள் காணான் கழறுவீ ரந்தச் சங்கை
பொன்னனுக் கெட்டில் வெள்ளி பொருந்தியும் சனிவி யத்தில்
துன்மையா யிருப்ப தாலே துலங்காது துணைபெண் ணுந்தான்
இன்னவாறு குணத்தா னுக்கு இப்பால னுதிப்பா னாகும்.

7. இவனு (தந்தை)க்குச் சகோதரிகள் இருக்கமாட்டார்கள். இதற் கென்ன காரணம் என்று ஒரு முனிவர் கேட்க, அத்திரி முனிவர் பதிலுரைத் தார். குருவிற்கு எட்டாமிடத்தில் சுக்கிரனிருப்பதாலும், சனியும் பன்னி ரண்டாமிடத்தில் இருப்பதாலும் இவனுக்குச் சகோதரிகள் இல்லை. இப்படிப் பட்ட குணமுள்ளவனுக்கு இக்கடக லக்கின மகன் புத்திரனாகப் பிறந்திருக் கின்றான்.

8. பாலகன் நிறம்கு ணத்தைப் பகருவோம் சிவந்த மேனி
சீலம்போல் வெளிம யக்கன் செட்டுக்கள் செய்வா னாகும்
ஞாலங்கள் விருத்தி செய்வன் நளினமாய் வார்த்தை கூறுவன்
ஆலம்போல் பகைவ ருக்கு அவனுமே கருட னாவன்.

3. ஜாதகனுடைய நிறம் குணம் முதலியவைகளைக் கூறுவோம். இவன் சிவந்த மேனியான். நற்சீல முள்ளவன் போல் உலகத்தோருக்குத் தோற்று வான். வியாபாரம் செய்வான். பூமிகளை அபிவிருத்தி செய்வான். சரச மாகப் பேசுவான். பகைவர்களாகிய சர்ப்பங்களுக்கு இவன் கருடனா வான். [அவர்களை அழிப்பான் என்பது கருத்து.]

9. ததிநெய்பா லிஷ்டம் கொள்வன் சதுஷ்பாதம் விருத்தி யுண்டு
பதரினில் செல்லா னாகும் பாக்கியம் விருத்தி செய்வன்
சதியிலா மனத்தா னாகும் சாதமும் குறைவு றுதான்
அதிதிகட் கன்ன மீவன் ஆபத்தைச் சிலர்க்குக் காப்பன்.

9. தயிர் நெய் பால் இவைகளில் அதிக விருப்பமுள்ளவன். கால் நடை களை விருத்தி செய்வான். வீண் காரியங்களில் ஈடுபடமாட்டான். ஐசுவரி யத்தை அதிகப்படுத்துவான். பிறர்க்குக் கெடுதல்களையோ சூழ்ச்சிகளையோ நினைக்காதவன். நிறைய ஆகார வசதிகள் வாய்ந்தவன். வந்த விருந்தாளி களுக்கு அமுதளிப்பான். சிலருக்கு ஆபத்தில் சகாயம் செய்து காப்பாற்று வான்.

10. உரோமங்க ளதிக மில்லான் நுவலுப தேசம் கொள்வன்
தீமையை யொருவர்க் கெண்ணான் சஞ்சல மனத்தா னாகும்
தாமத குணமும் கொஞ்சம் சந்தேக மனத்தா னாகும்
நேமிநா தனுர்பால் பத்தி நிஷ்டூர வசனம் கூறுன்.

10. உடலில் உரோமங்கள் இல்லாதவன். கற்றறிந்த பெரியோர்களிடம் நல்லுபதேசங்களைக் கேட்பான். யாருக்கும் தீமையை எண்ணாதவன். மனத்தில் உறுதி இல்லாதவன். தாமத குணமும் உண்டு. சந்தேகிக்கும் இயல்புள்ளவன். சிவபக்திச் செல்வன், புண்படுத்தும் வார்த்தைகளைக் கூற மாட்டான்.

11. கரமதில் மாலின் ரேகை சஞ்சமாம் ரேகை யுண்டு
விரைவினில் நடக்க வல்லன் வீண்வம்பு புகலா னாகும்
நறுமல ரிஷ்டம் கொள்வன் நங்கையர் மோக னாவன்
பொருளது சல்லியம் கொள்ளான் பூவையே கேட்டி டாயே.

11. இவனது கையில் விஷ்ணு ரேகையும், கமலரேகையும் விளங்கும். இவனது நடை வேகமாக இருக்கும். வீண் வம்பு பேசாதவன். வாசனை பொருந்திய மலர்களில் ஆசை உடையவன். பெண்களிடம் மையல் கொண்ட வன். இவனுக்கு கடனும் இராது. தேவியே ! கேட்பீராக.

12. தன்துணை ஆண்பால் காணான் சத்திமார் மூவர் தீர்க்கம்
சொன்னதில் மூத்தோன் தானும் சுகமுண்டாய்ச் சுகமு மின்றி
மன்னவ னிற்றி யேதான் மருவுவாள் தன்பால் தன்னில்
பின்னிரு மாதர் தாமும் பிழையின்றிச் சுகமாய் வாழ்வர்.

12. இவன் சகோதரர்களைக் காணாதவன் [சகோதரர்கள் இவனுக்கு இல்லை என்பது கருத்து]. மூன்று சகோதரிகள் உண்டு. அம்மூவரும் தீர்க் காயுளுடன் வாழ்வார்கள். இச்சாதகன் அந்த மூன்று சகோதரிகளுக்கும் மூத்தவன். அம்மூவரில் ஒருத்தி சிறிது காலம் கணவனுடன் சுகமாக வாழ்ந்து, பிறகு கணவனை இழந்தும், சுகமின்றியும் இவனிடமே வந்து பிற் காலத்தைக் கழிப்பாள். மற்றைய இரு சகோதரிகளும் ஒருவித குறைபாடு மின்றிக் கணவன்மார்களோடு சுகமாக வாழ்வர்.

13. இருவரும் சுகமாய் வாழ ஏங்கின மனமாய் முன்சென்
உரையும்கா ரணங்க ளெவ்வாறு உத்தமி பூர்வம் தன்னில்
மருவாது சிலது துன்பம் மாரனும் மரித்து வாழ்வன்
தெரிவிப்பார் பூர்வம் தன்னைத் திருசெந்தூர் தனிலு தித்தாள்.

13. அந்த ஒரு சகோதரி தன் கணவனுடன் சுகமாக வாழுங் காலத் தில் அவள் கணவனை திடீரென இழந்து தன் தமையன் வீட்டில் வந்து வாழும்படியான பாவம் என்ன முன் பிறவியில் செய்தாள் என மஹரிஷி கேட்க, அத்திரி முனிவர் காரணத்தைக் கூறுகின்றார். இவள், முன்பிறவி யில், திருச்செந்தூர் என்ற புண்ணிய க்ஷேத்திரத்தில் உதித்திருந்தாள்.

14. பிறந்தனள் விச்வச் சேயாய்ப் பெரிதானா குடும்பி யாகி
வரனுண்டாய் மதலை யுண்டாய் வாழ்நாளில் வினையைச் [சொல்வேன்
அரன்கோஷ்டம் விசேஷ காலம் இம்மாது சென்று மேதான்
திருவருள் பாதம் போற்றித் திரும்பினாள் கடைவீ திக்கு.

14. விச்வகரும் குலத்தில் பிறந்து, பெரிய குடும்பம் உடையவளாகி தன் கணவனுடனும் குழந்தைகளுடனும் சுகமாக வாழுங் காலத்தில் இவளுக்கேற்பட்ட பாவத்தைச் சொல்வேன். இவள் அவ்வூரில் எழுந்தருளி இருக்கும் சிவபிரானுக்கு உத்சவம் நடைபெறும்போது ஒரு நாள் சிவபிரான் ஆலயத்திற்குச் சென்று, அவரது திருவடிகளை அர்ச்சித்துப் போற்றி வீடு திரும்புகையில் கடைவீதிக்குச் சென்றாள்.

15. குங்குமம் சிகப்புச் சீப்புக் கோதையும் வாங்கிக் கொண்டு
தங்கமு மீயா ளாகிச் சவரிமான் போல்ம றைந்தாள்
அங்கவன் வணிபன் பார்த்து அம்மாதைக் காணு ளுகிச்
சங்கையா மனத்தா ளுகிச் சாற்றுவான் சாபம் தானே.

15. அங்கு, சீப்பு, குங்குமம் இவைகளை ஒரு கடையில் வாங்கிக்கொண்டு, அவைகளுக்குப் பணம் கொடாமல் அங்கிருந்து புறப்பட்டு மான்போல் ஓடி மறைந்தாள். அந்த ஏழை வியாபாரியும், இவள் பணம் கொடாமல் மறைந்ததை அறிந்து, தனக்கேற்பட்ட நஷ்டத்தை எண்ணி வருந்தி ஒரு சாபமிட்டான்.

16. மணமது ஆகா முன்னம் ஏகுவாகணவன் தாமும்
வனிதைபின் ஜன்மம் தன்னில் மாரனு மத்தில் மாண்டு
வினைமன மாக வாழ்வாய் விளம்பியே தெருத்தூள் விட்டான்
சினமுடன் அந்தச் சாபம் சேர்ந்தது பாவைக் கேதான்.

16. வாசனை பொருந்திய இந்த மஞ்சள் குங்குமங்கள் ஆவதற்குமுன் கணவன் மரிப்பான். மறு பிறவியில் வாழ்க்கையின் மத்தியில் கணவனை இழந்து [மஞ்சள் குங்குமம் தரிக்க முடியாதவளாகி] கவலை கொண்டவளாகவே மீதமுள்ள ஆயுளைக் கழிப்பாய், என்று சொல்லித் தெருப்புழுதியையும் ஆகாயத்தில் இறைத்தான். அவன் மனம் வருந்திச் சொன்ன சாபம் அவ்வாறே பலித்து விட்டது.

17. மங்கைக்கும் அந்த ஆண்டில் மாரனும் மரண மாகிச்
சங்கையா மனத்தா ளாகிச் சேதுவின் பதிக்குப் புக்கித்
நங்கையும் மரண மாகி நாற்றலை வரயப் பட்டு
இங்கிவ ளுதித்தா ளென்றே மெய்திடும் வணிபன் சாபம்.

17. இவ்வாறு பணம் கொடாமல் குங்குமத்தை எடுத்துச் சென்ற வருஷத்திலேயே இவளுடைய கணவன் இறந்தான். பிறகு கவலையில் மூழ்கிய இவள், மனச் சாந்திக்காகச் சேதுவிற்குச் சென்று நீராடி ஊருக்குத் திரும்பி வந்து, சிறிது காலத்திற்குப்பின் மரணமடைந்தாள். அவளைத் தான் இங்கு பிரம்மதேவன் ஜாதகனின் சகோதரிகளில் ஒருத்தியாகப் பிறப்பித்திருக்கின்றான்.

18. மணமுண்டாய் மதலை யின்றி மங்கிலிய மற்று வாழ்வள்
குணமது நல்ல தாகும் கொடுமைமய யெவர்க்கு மெண்ணுள்
தணிவான குணத்தா ளாகும் சாதமு மன்பா யீவள்
கணிகைதா யில்லம் வாசம் காதலி கேட்டி டாயே.

18. மணமாகி, குழந்தைகளின்றி, முன்ஜன்ம பாவத்தினால் சிறிது காலத்திற்குள் கணவனையும் இழந்து கவலைப்பட்டு வாழ்வாள். ஆனால் இவள் நல்ல குணமுள்ளவள் தான். ஒருவருக்கும் தீங்கை எண்ணாதவள். யாரிடமும் தாழ்மையுடனே நடந்து கொள்வாள். வருபவர்களுக்கு அன்புடன் அமுதளிப்பாள். இவள் ஆயுட்காலம் முடிய, தாய் வீட்டிலேயே வசிக்க நேர்ந்து விட்டது. தேவியே ! மேலும் கேளுங்கள்.

19. சுதரொன்று தோன்றும் தீதாம் செப்புவோ மிவன்பின் ஜன்மம்
பதியினி லுயர்வ தான பிருதுவி தலத்தி லேதான்
(நிதிமிக) உடையா னுக்கு நேருவாள் வைசியச் சேயாய்
அதிதியை ஆத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

19. இவளுக்கு ஒரு குழந்தை தோன்றி அழியும். இவளுடைய பின் ஜன்மத்தைக் கூறுவோம். புண்ணிய க்ஷேத்திரங்களுக்குள் மிகச் சிறந்த காஞ்சியில் அதிக நிதி படைத்த ஒரு வைசியனுக்கு மகவாகத் தோன்றிச் சுகமாக வாழ்வாள். தேவர்களை ஆதரிக்கும் தேவியே ! மேலும் கேளுங்கள்.

20. பாலகன் மணத்தின் காலம் பகருவோ மிருபான் மூன்றுள்
நீலியும் தென்மேல் திக்கில் நேருவாள் குணத்தைச் சொல்வேன்
காலத்தை அறிந்து ரைப்பள் கண்முகம் வசிய முண்டு
ஞாலமேல் நல்லோ ளாவள் நயம்படக் கூறு வாளாம்.

20. ஜாதகனுடைய விவாஹ காலத்தைச் சொல்லுவோம். இருபத்து மூன்றுவது வயதிற்குள் மணம் நடைபெறும். மணப்பெண் தென்மேற்குத் திசையில் தோன்றி இருப்பாள். இடம் பொருள் ஏவலை அறிந்து அழகாகப் பேசுவாள். முகமும், கண்களும் பிறர் வியக்கத்தக்க பொலிவுடன் திகழும். பூமியில் நல்லவள் என்று கீர்த்தி பெறுவாள். நயமாகவும் பேசுவாள்.

21. பால்பாக்கிய முடையா ளாகும் பரஉப காரி யாகும்
சீலியாம் விரத சாலி சிவதேவன் பத்தி பூண்பள்
மால்மனை யொப்ப தாகும் வருவோரை ஆத ரிப்பள்
வேலனையீன்ற மாதே வித்தகி தீர்க்க சீவி.

21. பால் பாக்கியம் உண்டு. பிறர்க்கு உபகாரம் செய்யும் இயல் புள்ளவள். நல்ல பழக்கமுடையவள். விரதங்களையும் அனுஷ்டிப்பாள். சிவபிரானிடம் பக்தி பூண்டவள். அழகில் லக்ஷ்மீதேவிக்குச் சமமாவாள். வீட்டிற்கு வரும் அதிதிகளை ஆதரிப்பாள். சுப்பிரமணிய சுவாமியைப் பெற்ற தாயே ! இவளுடைய ஆயுளும் தீர்க்கம்.

22. ஜயமுனி யிதனைக் கேட்டுச் செப்புவார் முனிவ ருக்கு
வியமதில் காரி தங்க விடம்சேயு மிரண்டில் தங்கப்
பயமிலாத் தார மொன்று பகருவீ ரந்தச் சங்கை
நயமுடன் பத்தோன் லாபம் நாலினுக் குடையோன்பத்தில்;

**22.** அத்திரி முனிவர் தீர்க்கஜீவி என்று சொல்லக்கேட்ட ஜய முனிவர் ஆக்ஷேபிக்கின்றார். களத்திரபாவாதிபதி பன்னிரண்டில் இருக்கின்றான். மேலும் அசுப கிரஹங்களாகிய செவ்வாயும் ராஹுவும் குடும்ப பாவத்தில் இருக்கிறார்கள். ஆகவே ஜாதகனுக்கு, முதல் மனைவி இறந்து மறு மணம் நேரும். ஆகையால் இவனை, எவ்வாறு தீர்க்க ஜீவி என்று சொல்லமுடியும் ? அத்திரி இதற்குப் பதில் கூறுகின்றார். பத்துக்குடையவன் லாபத்தில் இருப்பதாலும், நான்காமிடத்திற்குடைய சுக்கிரன் பத்தாமிடத்தில் விளங்குவதாலும் ;

குறிப்பு.—என்று இந்நூலாசிரியர் சொல்லுவது பொருந்தவில்லை. ஆகையால் வேறு "பாடம்" இருக்கவேண்டுமென்பது எமது அபிப்பிராயம்.

**23.** இருப்பதால் தாரம் ஒன்றே யியம்புவோம் முனியே யாமும்
திருகிலா பிதாக்குப் பிதாக்கு நேரும் ஜாதக சுருதியாக
வருமனை ஒன்றே தீர்க்கம் வரைந்தது தப்பா தாகும்
பெருவயி றோனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

**23.** இவனுக்கு மனைவி ஒருத்திதான். நீங்கள் சொன்ன களத்திர தோஷம் இவனுக்குமில்லை. இவன் தந்தைக்குமில்லை. ஆனால் அத் தோஷம் தந்தையின் தந்தைக்கு ஏற்பட்டிருக்கும். ஆகவே இவனுக்கு வரும் மனைவி தீர்க்காயுள் படைத்தவள்தான். கணபதியைப் பெற்ற தாயே ! கருணைக் கடலே ! மேலும் கேட்பீராக.

**24.** சுதர்களு மருகில் தோன்றும் தீர்க்கமாம் ஆண்பால் ரண்டு
சதமுடன் பெண் பால் ரண்டு சாற்றுவோம் பால னுக்கு
வதிபன்தன் பூர்வம் சொல்வேன் மலைநாட்டில் வைசியச் சேயாய்
நிதியது செட்டுச் செய்து நிமலனும் வாழு நாளில் ;

**24.** இவர்களுக்கு இரு பிள்ளைகளும் இரு பெண்களும் தோன்று வார்கள். இந்நால்வரும் நீடித்து வாழ்வார்கள். ஜாதகனுடைய பூர்வ ஜன்மத்தைக் கூறுவோம். இவன் முன் பிறவியில் மலை நாட்டில் வைசிய குலத்தில் உதித்து, வியாபாரம் செய்து வாழும் காலத்தில் ;

**25.** ஏழைக்குக் கணக்கில் மோசம் எழுதினு னிவனே யென்றேும்
தாழ்வுளோர் வருத்த முற்றுச் சாற்றுவார் சாபம் தானும்
தாழ்வாகப் பொன்னை யீந்து சதிசெய்தாய்க் கணக்கி லேதான்
சூழும்பின் ஜன்மம் தன்னில் துணைஆணு மில்லா தாகி ;

**25.** இவன் பேராசையால் ஏழைகளுடைய கணக்கில் வேண்டு மென்றே பல தவறுகளை எழுதி, தருமமாக இவனுக்குச் சேரவேண்டிய பொற்காசுகளை விட அதிகமாக அவர்களிடம் வசூல் செய்தான். ஆகையால் மனம் நொந்த அவர்கள், மோசக்கணக்கு எழுதி எங்களை வஞ்சித்துப் பொருள்களைப் பெற்ற பாவியாகிய நீ, மறுஜன்மத்தில் சகோதரனற்றும் ;

26. பெண்துணை குந்த மாயும் பூமியில் வாழ்வா யென்றும்
இன்னமும் பலவாறு சொன்னுர் யெய்திற்று அந்தச் சாபம்
வண்ணமா யந்தி யத்தில் வளமுள சேது சென்று
திண்ணமாய்க் கால ஞடு சேர்ந்துமே பிரமன் லக்கம் ;

26. சகோதரிகள் இருப்பினும், ஒரு சகோதரிக்குக் குறைவு ஏற்பட, அதனுல் மனம் நொந்து வாழ்வாய் என்றனர். இதே போன்ற இன்னும் பல சங்கடங்கள் ஏற்படவேண்டுமென்றும் அவர்கள் சொல்லிச் சென்றனர். அவர்கள் இட்ட சாபம் இவனைச் சூழ்ந்து கொண்டது. பிறகு இவன் கடைசி காலத்தில் சேதுவிற்குச் சென்று நீராடி, தன் ஊருக்கு வந்து சில காலம் கழித்து, காலன் நாடு சென்றான். அவனைத்தான் பிரம்ம தேவன் ;

27. உதிப்பனு மிந்த பாலன் உறைந்திடு முன்னூழ்ச் சாபம்
சதியுண்டு துணைஆ ணும்தான் சஞ்சல மனம்கன் னிக்கு
வதிபன் தன் யோகச் சேதி வரைகிறோ மினிமே லாக
விதவிதச் செட்டுச் செய்வன் மேதினி விருத்தி யுண்டு.

27. இப்பொழுது கடக லக்கினத்தில் பிறப்பித்திருக்கின்றான். அச் சாபத்தின்படி இவனுக்குச் சகோதரனும் இல்லை. ஒரு சகோதரியும் வாழ்க்கையில் குறைவை அடைந்தாள். ஜாதகனுடைய யோகங்களை இனிக் கூறுகின்றோம். பலவித வியாபாரங்களைச் செய்வான். இவனுக்கு அதிக பூமிகள் சேரும்.

28. ஐயைந்து ஆண்டு மேலாய் அற்புத யோகம் வாய்க்கும்
வையமேல் புகழு மேற்பன் மா நிலம் சேர்த லுண்டு
கைமுத லதிக மாகும் கனத்திடும் செட்டுத் தானும்
மைவிழி மனைவி வந்து வளர்பிறை போலாம் செல்வம்

28. இவனுடைய இருபத்தைந்தாவது வயதிற்கு மேல் ஆச்சர்யமான யோகங்கள் நிகழும். இவனது கீர்த்தி எங்கும் பரவும். பெரிய நிலங்கள் சேரும். கையிலுள்ள பணத்தின் தொகை வளரும். வியாபாரமும் நல்ல லாபத்துடன் விஸ்தாரத்தை அடையும். ஜாதகனின் மனைவி இவன் வீட்டிற்கு வந்த பிறகு வளர்பிறைச் சந்திரன் போல் யோகங்கள் வளரும்.

29. யோக மெவ்விதமாய்ச் சொன்னீர் உரைப்பீர்க ளந்தச் சங்கை
பாகனும் பருதி திங்கள் பதினொன்றி லிருப்ப தாலும்
ஆகமன் புதனைப் பார்க்க வியத்திலே வெள்ளி தங்கப்
போகனு யிருப்ப தாலே எழில்வேசி யோக முண்டு.

29. யோகத்திற்குக் காரணம் என்ன இருக்கின்றது என்று பார்வதிதேவி கேட்க, முனிவர் பதிலுரைக்கின்றார். மூன்று பன்னிரண்டுகளுக்கு உடைய புதன், தனஸ்தானத்திற்கு உடைய சூரியன் இவர்கள் இலக்கினுதிபதியுடன் கூடி பதினொன்றில் இருப்பதாலும், புதன் முதலியவர்களுக்குப் பாக்கியாதி பதியாகிய குருவின் வீக்ஷணம் இருப்பதாலும் இவனுக்குச் செல்வம் விருத்தியடைந்துகொண்டே இருக்கும். மேலும் சூரியன் நின்ற ராசிக்குப் பன்னிரண்டாமிடத்தில் சுப கிரஹமாகிய சுக்கிரன் இருப்பதால் இவனுக்கு வேசியோகம் என்ற ஒரு யோகமு முண்டு.

30. இந்திர யோக மொன்று இயம்பினேம் இரண்டு யோகத்
செந்திரு கடாட்ச முண்டு தீரனும் வறுமை காணுன்
எந்திடம் பெருமை யேற்பன் ஏவலா ளதிக முண்டு
வந்தவர்க் கன்ன மீவன் அடிமையோ குடிபெ ருக்கம்.

30. இந்திரயோகமென்ற ஒரு யோகமும் உண்டு. ஆகவே இவ்விரு யோகங்களாலும் இவனுக்கு எப்பொழுதும் லக்ஷ்மீ கடாக்ஷம் இருக்கும். தீரனாகிய இவன் வறுமையை அறியாதவனாக விளங்குவான். பல தேசங்களிலும் இவனுக்குப் பெருமை உண்டாகும். பணியாட்களும் அதிகமிருப்பார்கள். வந்தவர்களுக்கு அன்னதானம் செய்து புண்ணியத்தையும் சேமிப்பான். இவனது குடும்பம் மேன்மேலும் பெருகும்.

31. கடன்கொளான் இடுக்க மில்லான் காரிய சமர்த்த னாகும்
உடன்படான் பிழைக ளுக்கு உறுதியில் லாத நெஞ்சன்
விடவாக்கன் தெய்வ பத்தி மேன்மக்க ளுறவு கொள்வன்
தடமது இரண்டு செய்வன் சங்கரி கேட்டி டாயே.

31. கடன் இல்லாதவன். வாழ்க்கையில் இடுக்கண் இராது. காரியத்தை நிறைவேற்றுவதில் சமர்த்தன். தவறான காரியங்களில் ஈடுபடமாட்டான். சஞ்சலமான நெஞ்சம் உள்ளவன். இவன் தீமைகள் நேரப் போவதாகச் சொன்னால் பலித்துவிடும். கடவுளிடம் பக்தி பூண்டவன். மேலானவர்களின் நட்பு இவனுக்கு இருக்கும். இரண்டு வீடுகள் நிர்மாணிப்பான். சங்கரியே ! மேலும் கேட்பீராக.

32. தரணிபொன் பணியில் லங்கள் சேர்ப்பன்முப் பாயிரம் பொன்
அறிவிப்போம் அன்னை சேதி அழகுளாள் பித்த தேகி
இருவித குணத்தா ளாகும் இடர்செய்யாள் யாவ ருக்கும்
வரன்மன மொத்த மாது மாதுவும் யோக சாலி.

32. இவன் சம்பாதிக்கும் பூமி, பொன், ஆபரணங்கள், வீடு முதலியவைகளின் உத்தேச மதிப்பு முப்பதாயிரம் பொற்காசுகள். இனி, தாயின் குணத்தை அறிவிப்போம். அவள் நல்ல அழகு வாய்ந்தவள். பித்த தேகி. [நல்ல, தீய] இரண்டு வித குணங்களும் அவளிடம் இருக்கும். ஒருவருக்கும் கெடுதியைச் செய்யாதவள். கணவனின் மனம்போல் நடப்பாள். நல்ல அதிருஷ்டம் உடையவள்.

33. சிவதேவன் பத்தி பூண்பள் சீலியாம் கோபம் கொஞ்சம்
துணைவர்க.... ளாகும் தோன்றினு மரிதே யாகும்
வனிதைக்குத் துணைவர் தோஷம் அறிவீப்பீர் அந்தச் சங்கை
கனமுடன் நவத்தோன் மூன்றில் காரிசேய் நவத்தைப் பார்க்க ;

33. சிவனிடமும் பக்தி கொண்டவள். நல்ல சீலமும் உண்டு. கொஞ்சம் கோபமும் இருக்கும். இவளுக்கு உடன் பிறந்தார்கள் தோன்றினும் அழிவார்கள் என்று அத்திரி சொன்னவுடன், ஒரு முனிவர் அதற்கான காரணத்தைச் சொல்லுமெனக் கேட்க, அத்திரி முனிவர்

காரணத்தை விளக்கிக் கூறுகின்றார். ஒன்பதிற்குடைய குரு மூன்றில் இருப்பதாலும், அந்த ஒன்பதாவது ஸ்தானம் சனியினால் பத்தாவது பார்வையாலும், செவ்வாயால் எட்டாவது பார்வையாலும் பார்க்கப்பட்டிருப்பதாலும் ;

34. சொல்லினோம் துணைவர் தோஷம் தோகையின் பூர்வம் கேளாய்
அல்லலை விலக்கு கின்ற அப்புவின் தலத்தி லேதான்
நல்லதோர் கங்கை சேயாய் நாயகி உதித்து மேதான்
தொல்லைக ளின்றி மாது சுகமுடன் வாழு நாளில் ;

34. இவளுக்குச் சகோதர விருத்தி இல்லை. இவளுடைய (ஜாதகன் தாயின்) பூர்வஜன்மத்தைக் கூறுவேன். இப்புவியின்கண் மானிடர்களின் துன்பங்களைப் போக்கி இன்பங்களை அருள்வதற்குச் சிவபிரான் நீர்லிங்க சுரூபத்தில் எழுந்தருளி இருக்கும் ஜம்புகேசுவரத்தில் இவள் நல்லதொரு வேளாள குடும்பத்தில் பிறந்து, கணவன் குழந்தைகளுடன் சுகமாக வாழும் காலத்தில் ;

35. மைத்துனன் மனைவி பேரில் வரைந்தனள் சிலேடை வார்த்தை
பத்தினி மனவெ றுப்பால் பகர்ந்தசா பத்தைக் கேண்மோ
குத்தமில் லாத என்மேல் குறைவார்த்தை சொன்ன பாவி
சுத்தமாய்ப் பின்ஜன் மத்தில் துணைவர்க ளில்லா தாயும் ;

35. தன் மைத்துனின் மனைவியைக் குறித்துச் சிலேடை வார்த்தைகள் [அவமதிப்பையே உட்பொருளாகக்கொண்ட சொற்கள்] சொல்ல, அதனால் அவள் மனம் புண்பட்டவளாகச் சொன்ன சாபத்தைக் கேளுங்கள். காரணமின்றிக் குத்தலான வார்த்தைகளைச் சொல்லி மனம் நோகும்படி செய்த பாவியாகிய நீ, மறு பிறவியில் உடன் பிறந்தவர்கள் இல்லாமலும்,

36. நாத்திக ளில்லா தாயும் நாயகி வாழ்வா யென்ன
கூத்தன்போல் அந்தச் சாபம் குலவிற்றுப் பாவைக் கேதான்
வேத்தொரு வினைகள் காணாள் வித்தகி அந்தி யத்தில்
கேத்திரம் சேது சென்று தேறினோர்க் கன்ன மீந்து ;

36. வாழ்க்கைபடும் வீட்டிலும் நாத்திமார்கள் இல்லாமலும் கஷ்டப்படுவாய். யமன்போல் கொடியதான அந்தச் சாபம் இவளை அடைந்தது. வேறு பாவங்கள் இவளுக்கு ஏற்படவில்லை. அந்திய காலத்தில் சிறந்த புண்ணிய தீர்த்தமாகிய சேதுவிற்குச் சென்று ஸ்நானம் செய்து அங்குள்ள துறவிகளுக்கு அன்னமளித்து ;

37. மறலியின் நாடு சென்று மறையவன் வரையப் பட்டு
அருகர்தம் குலமு தித்தாள் அணுகிடு மாது சாபம்
வருந்துணை காணா ளாகும் வரனுக்கும் துணைபெண் காணாள்
உரைகுவோ மிவள்பின் ஜன்மம் உயரும்கா லாத்தி தன்னில் ;

37. தன் ஊருக்குத் திரும்பி வந்து கொஞ்ச காலத்திற்குப்பின் மரணமடைந்த இவளைச் சதுர்முகன் இக்குலத்தில் பிறப்பித்திருக்கிறான். முன்

பிறவியில் ஏற்பட்ட சாபத்தின்படி இவளுக்கும் சகோதரிகள் இல்லை. இவளது கணவருக்கும் சகோதரிகள் இல்லை. இவளுடைய பின்ஜன்மத்தையும் கூறுவோம். காளஹஸ்தி க்ஷேத்திரத்தில் ;

38. சீலமாம் சைவச் சேயாய் ஜனிப்பளா மென்று சொல்வோம்
பாலன்தன் தந்தை பூர்வம் பகருவோ மினிமே லாகச்
சாலவே கடையூர் தன்னில் ஜனித்தனன் வைசியச் சேயாய்ப்
பாலிகை மதலை யுண்டாய்ப் பகரமாம் குடும்பி யாகிப்.

38. நற்குணம் வாய்ந்தவளாகச் சைவ குலத்தில் உதிப்பாள். இனி, ஜாதகனின் தந்தையின் பூர்வஜன்மத்தைக் கூறுவோம். இவன் முற் பிறவியில் திருக்கடையூரில் வைசிய குலத்தில் பிறந்து மனைவி மக்களுடன் பெரிய குடும்பியாகி வாழ்ந்து வந்தான்.

39. வினையது இல்லா னாகி மேலான தலங்கள் சென்று
சினமான கால னாடு சென்றுமே பிரமன் லக்கம்
கனமுள உதித்தா னென்றோம் கழறுவோ மிவன்பின் ஜன்மம்
அனையவே காஞ்சி தன்னில் அக்குல முதிப்பா னென்றோம்.

39. இவனது வாழ்க்கையில் ஒருவித பாவச் செயலும் நேரவில்லை. பல புண்ணிய ஸ்தலங்களுக்கு யாத்திரையும் சென்றான். அந்திய காலத்தில் யமனது நாடு சென்றான். பிரம்மதேவனால் அவன்தான் இங்குப் படைக்கப் பட்டு கடக லக்கின மகனுக்குத் தந்தையாக வாய்த்திருக்கின்றான். இவன் மறு பிறவியில் காஞ்சியில் வைசியகுலத்திலேயே உதிப்பான்.

40. இருபது நாலு ஆண்டில் இயம்புவோம் தந்தை கண்டம்
அரிவைக்கு இருபா னேழில் அறைகிறோம் மார கங்கள்
திருமகன் தனக்குச் சொல்வேன் சனிதசை அந்தம் தன்னில்
அறுபது ஏழு ஆண்டில் அணுகிய ரிடப மாதம்;

40. ஜாதகனுடைய இருபத்து நாலாவது வயதில் அவன் தந்தை மரண மடைவான். தாயும், ஜாதகனுக்கு இருபத்தேழாவது வயது நடைபெறு கையில் இறப்பாள். ஜாதகனுக்கும் மரண காலத்தைக் குறிக்கின்றோம். சனி தசையில் கடைசி பாகத்தில், அறுபத்தேழாவது வயதில் வைகாசி மாதத்தில் ;

41. சதுர்த்தசி வளர்பக் கத்தில் ஜாதக னுடலம் ஏகும்
அதிபன்பின் ஜன்மம் சொல்வேன் மலைநாட்டில் சத்திரிய சேயாய்
நிதிமிக உடையா னுக்கு நேருவா னிந்தப் பாலன்
அதிதியை ஆத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

41. சுக்கில பக்ஷ சதுர்த்தசி திதியில் இவனுக்குத் தேக வியோகம் ஆகும். ஜாதகனது பின் பிறவியையும் கூறுவோம் மலை நாட்டில் க்ஷத்திரிய வமிசத்தில் பிறந்து, அதிகச் செல்வம் படைத்தவனாகத் திகழ்வான்! அதிதியை ஆதரிக்கும் தாயே ! மேலும் கேளுங்கள்.

42. ஜாதகன் ஜனிக்கும் காலை சகடுநா ளிரண்டாம் பாதம்
மதிதசை ஆண்டு ஏழும் மருவிடும் திங்க ளைந்தும்
அதனுடன் இருபா ணுறும் அறிவித்தோம் பூர்வ பாகம்
நதிசடை யணிந்தோன் மாதே நவின்றனம் பூர்வ பாகம்.

42. ஜாதகன் ரோஹிணி நக்ஷத்திரம் இரண்டாம் பாதத்தில் ஜனித்திருக்கிறான். ஆகவே சந்திரதசையிலிருப்பு வருஷங்கள் ஏழு, மாதங்கள் ஐந்து, நாட்கள் இருபத்தாறு. கங்கையைச் சடையில் அணிந்த மகா தேவனின் தேவியாரே ! இவ்வாறு பூர்வபாகத்தைக் கூறினோம்.

## ஜாதகம் 38.

1. கலைதேளில் காரி மேரு கனகனு மான தாகப்
புலவனும் பானு நந்தி பூமகன் கேது மேடம்
கயருமே கோல தாக வெள்ளியும் மீனம் புக்க
அலவனும் ஜன்மமாக அறிவிப்பீர் பலனைத் தானே.

| சுக்கிரன் | செவ்வாய் கேது | புதன் சூரியன் | |
|---|---|---|---|
| | இராசி சக்கரம் | | லக்கினம் |
| குரு | | | |
| சனி | சந்திரன் | ராகு | |

1. சந்திரன் விருச்சிகம், சனி தனுஸ், குரு மகரம், புதனும் சூரியனும் விருஷபம், செவ்வாய் கேது மேஷம், ராஹு துலாம், சுக்கிரன் மீனம் இலக்கினம் கடகம் இவ் வாறான கிரஹ நிலையின் பலன்களைச் சொல்லு வீர்களாக என உமாதேவி கேட்கலுற்றாள்.

2. இந்தச்சேய் ஆண்பால் ஜன்மம் இல்லமும் கீழ்மேல் வீதி
தென்பார்வை வாச லாகும் தந்தியின் கோஷ்டம் கீழ்ப் பால்
அந்தரிகாளி உத்ரம் அரன்கோஷ்டம் வடகீ ழாகும்
தென்மேல்பால் குருனின் கோட்டம் செப்புவோம் தாயே கேளும்.

2. இக் கிரஹநிலையில் பிறந்த மகவு ஆண். வீதி கிழக்கு மேற்காக அமைந்திருக்கும். வீடு தென் திசை நோக்கும். கீழ்த்திசையில் விநாயகர் எழுந்தருளி இருப்பார். வடதிசையில் அந்தரி என்றழைக்கப்படும் காளிகாதேவி விளங்குவாள். வடகிழக்கில் சிவபிரான் அருள் செய்து கொண்டிருப்பார். தென் மேற்கில் மசூதி திகழும். இவ்வாறு அடையாளங்களை இப்பாட்டில் சொன்னோம். தாயே! மேலும் கேளுங்கள்.

3. இத்தகை யடையா ளத்துள் இவனுடை ஜனன மாகும்
வித்தகன் மூன்றும் ஜன்மம் விளம்புவோ மவர்தன் வம்சம்
பெத்ததாய் தந்தை யோகம் பேரயர் புத்திரர் யோகம்
சுத்தமாய் முன்பின் ஜனமம் செப்புவோம் தாயே யாங்கள்.

3. இத்தகைய சின்னங்கள் உடைய ஊரில் இவன் ஜனித்திருப்பான். இவன் தனது குடும்பத்திற்கு மூன்றும் குழந்தையாவன். இவனுடைய யோக ங்களைப்பற்றியும், தாய் தந்தை சகோதரர் மனைவி புத்திரர் இவர்களைப் பற்றியும், முன்பின் ஜன்மங்களையும் இந்நூலில் நாங்கள் உரைக்கப் போகின்றோம்.

4. தந்தையின் குணத்தைச் சொல்லவே னவகரு நிறத்தா னாகும்
தந்தையி னில்லம் வாழான் தான்வேறு யில்லம் வாழ்வன்
தன்தன முடையா னாதும் தரணியைச் சேர்ப்ப னாகும்
தந்தமும் தரள மொக்கும் தன்பந்து மதிக்க வாழ்வன்.

4. முதலில் தந்தையின் குணங்களைச் சொல்வோம். கருத்த மேனி யான். அவனது தந்தையின் வீட்டில் அவன் வாசம் செய்யான். வேறு வீட்டில் தனியாக வசிப்பான். தன் முயற்சியால் பணத்தைச் சம்பாதித்துத் தனியாகவே வைத்திருப்பான். பூமிகளைச் சேர்ப்பான். முத்துப் போன்ற பற்களை உடையவன். தனது உறவினர் மெச்சும் வகையில் வாழ்க்கை நடத்துவான்.

5. பலதொழில் புரிவா னாகும் பாரினில் சல்லியம் காணன்
நிலம்கிணறு சோலை சேர்ப்பன் நினைத்ததை முடிக்க வல்லன்
நலமதை எவர்க்கும் செய்வன் நற்கரம் சங்கு சக்கரம்
சொனுமொழி பிசகா னாகும் சொல்லதைக் கேட்பா னாமே.

5. பலவித தொழில்களை நடத்துவான். கடன் இல்லாதவன். நிலம் கிணறு சோலைகள் (தோப்பு) முதலியவைகளைச் சம்பாதிப்பான். தான் நினைத்த காரியத்தை முடிக்கவல்லவன். எல்லோருக்கும் நன்மைகளையே செய்வான். அவனது கரங்களில் சங்க சக்கரரேகைகள் திகழ்ந்திடும். தான் சொன்ன மொழிகளிலிருந்து சிறிதும் பிறழ மாட்டான். பிறர் சொல்வதையும் சிரத்தையுடன் கேட்பான்.

6. ஈகையு முடையா னாகும் இடர்செய்யான் யாவ ருக்கும்
ஆகம நுணக்கம் தேறான் அவன்துணை ஆண்பா லொன்று
தோகையு மூன்று என்றோம் சோர்வுறும் இரண்டு தாமும்
பாகமாய்த் துணைவன் சேதி பகருவோம் தாயே கேளும்.

6. தியாக இயல்புண்டு. இவனால் யாருக்கும் இடையூறு ஏற்படாது. சாஸ்திரங்களின் நுணுக்கங்களைக் கேட்டறியாதவன். அவனுக்கு ஒரு சகோதரன் உண்டு. சகோதரிகள் மூவர். அவர்களில் இருவர் சேதமாவார் கள். [மற்றவர் தீர்க்கஜீவிகள் என்பது கருத்து]. சகோதரனின் வரலாறு களைக் கூறுவோம். தாயே ! கேளுங்கள்.

7. பார்தொழில் புரிவா னாகும் பரஉப காரம் செய்யான்
நயமுள வார்த்தை கூர்வன் நற்றந்தை யில்லம் வாசம்
அயலார்பொன் இச்சை யுண்டாம் அவன்தந்தை பின்பு தானும்
வியமுள மனத்தா னாகும் விரயமாம் பூமி யென்றோம்.

7. விவசாயம் செய்வான். பிறர்க்கு உபகாரம் செய்வதில் ஈடுபடான். நயமான வார்த்தைகளையே பேசுவான். தந்தை வாசம் செய்த வீட்டிலேயே இன்னும் வாசம் செய்வான். அயலார் பொருள்களில் ஆசையுள்ளவன். அவன் தந்தை ஜீவித்திருக்கும் வரையில் பூமிகளை விரயம் செய்யமாட்டான். அதன் பின் நிலங்களைச் செலவு செய்வான்.

8. டாரியு மொன்றே யென்றோம் பாலர்க ளாண்பால் ரண்டு
நாரியு மவ்வாறு தீர்க்கம் நாயகன் வேறுய்ச் செல்வன்
கூறுவீர் காலம் தன்னைக் குழவியு முதிக்கா முன்னம்
வேறதாய் உணவு கொள்வன் மேவிய மூன்று மாண்டில் ;

8. அவனுக்கு மனைவி ஒருத்திதான். அவனுக்கு இரண்டு பிள்ளைகள். இரண்டு பெண்கள். அவன் [ஜாதகனின தந்தையின் சகோதரன்] தனிக் குடும்பம் செய்வான். குடும்பப் பிரிவினைக் காலத்தைச் சொல்லுமென ஒருவர் வினவ, ரிஷி பதிலுரைக்கின்றார். ஜாதகன் ஜனிப்பதற்கு முன்னமையே தனிக் குடும்பத்தைச் செய்யத் துவங்குவான். ஜாதகன் பிறந்த மூன்று ஆண்டுகள் கழித்துப்பின் ;

9. நிலம்தனம் பிரிந லாகும் நிகழ்த்துவோம் பின்பால் சேதி
பாலகன் தந்தை பூர்வம் பகருவோ மினிமே லாக
ஞாலமேல் பாண்டி நாட்டில் நல்கினன் வைசியச் சேயாய்
ஏலவே செட்டுச் செய்து யாவர்க்கும் உதவி செய்தான்.

9. நிலம் பணம் இவைகளையும் விபாகம் செய்து கொள்ளுவான். இதைப் பற்றிய செய்திகளை இரண்டாம் பாகத்தில் தெரிவிப்போம். ஜாதகனுடைய தந்தையின் பூர்வஜன்மத்தைக் கூறுவோம். இவன் முன் பிறவியில் பாண்டிய நாட்டில் வைசிய குலத்தில் பிறந்து வியாபாரம் செய்து ஜீவித்தான். எல்லோருக்கும் உதவியும் புரிந்து வந்தான்.

10. பெரிதான தலங்கள் சென்று பிராமணர் தொண்டு பூண்டு
திருமகன் வாழு நாளில் தேவியும் கங்கை மாது
வரனின்றித் தனியாய் வாழ்ந்து மங்கையின் பொருளை யெல்லாம்
நெறியதைக் காத்து லாபம் நிகழ்த்துவா யென்று சொல்லி.

10. பெரிய புண்ணிய ஸ்தலங்களுக்குச் சென்றான். பிராமணர்களுக்குத் தொண்டும் புரிந்தான். இவ்வாறு அவன் வாழுங்காலத்தில் ஒரு வேளாள மாது கணவனின்றிச் சொத்துக்களை மாத்திரம் வைத்துக் கொண்டிருந்தாள், அவள் தனது சொத்துக்களை இவனிடம் ஒப்படைத்து " நீ இவைகளால் லாபத்தை அடைவாயாக " என்று சொல்லிச் சென்றாள்.

11. வைத்துபின் லீயம் வாங்கி மாதுவும் யோசித்து வந்து
வித்தகி சிலநாள் சென்று மேவினள் காலன் னூடு
சித்தசன் மரண மாகிச் சிரநான் கோன் வரையப் பட்டு
உத்தம னுதித்தா னென்றோம் உதித்தவிக் குணத்தா னுக்கு ;

11. ....அவள் சிறிது காலத்திற்குப் பிறகு மரணமடைந்தாள். இவனும் அந்தியத்தில் மரணமாகி இங்குப் பிறந்திருக்கின்றான். இவ்வாறு உதித்திருக்கும் இவனுக்கு ;

12. பாரியார் இருவர் தம்மில் பிறப்பனும் மறு மனைக்குக்
கூறுவோம் இவன்கு ணத்தைக் குஞ்சர நடையு மாவன்
பாரது விருத்தி செய்வன் பலசெட்டுச் செய்வா னாமே
மாறிடான் பெரியோர் வார்த்தை மாந்தளிர் மேனி யாவன்.

12. மனைவிமார்கள் இருவர். அவர்களில் இளைய மனைவிக்கு இச் சாதகன் மகனாகப் பிறந்திருக்கிறான். ஜாதகனுடைய குணங்களைக் கூறுவோம். யானைபோல் கம்பீரமாக நடப்பான். நிலங்களை அதிகம் செய்வான். பெரியோர்களின் வார்த்தையை மீறுதவன். மாந்தளிர் போன்ற மேனியான்.

13. வித்தையு மிரண்டு கற்பன் வீண்வம்பு புகலா னாகும்
புத்தியில் பெரியோ னாவன் புகழான குடும்ப மேற்பன்
சத்திய மென்று லச்சம் சாற்றுமுன் கோபி யாவன்
வெத்திச் சொல் லுடைய னாகும் விசேஷவா ணிபங்கள் செய்வான்.

13. இரண்டு விதமான கல்விகளைக் கற்றறிந்தவன். வீண் பேச்சுகளில் ஈடுபடான். புத்தியில் சிறந்தவன். இவனது குடும்பம் மிகவும் பிரசித்தியை அடையும். சத்தியத்திற்குப் பயந்தவன். சிறிது முன்கோபமுடையவன். இவனது வார்த்தைக்கு விசேஷ கௌரவம் ஏற்படும். வியாபாரங்களை விஸ்தாரமாக நடத்துவான்.

14. பலவூரில் செல்லா னாகும் பஞ்சைபோல் உணவு கொள்வன்
பலமுள தேகி யாகிப் பால்பசு விருத்தி யுண்டு
நலமுளோர் தம்மைச் சேர்வன் நாயகி இஷ்டம் கொள்வன்
தலம்திருப் பணியும் செய்வ ன் சங்கரி கேட்டி டாயே.

14. பல ஊர்களுக்குச் செல்வதில் விருப்பமில்லாதவன். பரம ஏழைபோல் உணவை உட்கொள்ளுவான். கட்டான சரீரம் வாய்ந்தவன். பிற்காலத்தில் இவனிடம் பசுக்கள் விருத்தியடையும். இவனுக்கு நன்மையைக் கோருபவர்களிடமே இவன் நெருங்கிப் பழகுவான். [வஞ்சகர்களைச் சீக்கிரத்தில் அறிந்து விலக்கி விடுவான் என்பது கருத்து.] தன்மனைவியிடம் மிகவும் அன்புள்ளவன். புண்ணியஸ்தலங்களில் உள்ள கோயில்களைப் புனர் நிர்மாணம் செய்வான். தேவியே! மேலும் கேளுங்கள்.

15. இன்னவன் துணைவர் தம்மை இயம்புவோம் முன்ஆண் ஒன்று
கன்னிகை அவ்வாறு தீர்க்கம் கழறுவோ மிவன்பின் னாலே
மன்னிய ஆண்பா லொன்று மங்கையு மிருவ ராகும்
சொன்னது ஐந்தும் தீர்க்கம் துறவியே கேட்டி டாயே.

15. இவனுடைய உடன்பிறந்தார்களைக் கூறுவோம் இவனுக்கு மூத்த சகோதரன் ஒருவன் ; மூத்த சகோதரி ஒருத்தி. இவனுக்குப் பின் பிறந்தவர்களில் ஓர் ஆண். பெண்கள் இருவர். ஆக இவ்வைவரும் தீர்க்காயுளுடன் வாழ்வார்கள். பற்றற்றவளே ! மேலும் கேளுங்கள்.

16. முன்மாதா ஒன்று என்றீர் மொழிகுவீர் அவட்குப் புத்திரர்
கன்னிகை இருவர் தீர்க்கம் காளையு மொன்று என்றேம்
அன்னவன் தீர்க்க சீவி அவன்குணம் பெருமை யுண்டு
பின்னமில் லாத தேகி பேதையு மிளம னத்தாள்.

16. இச் சாதகனுக்கு மூத்த தாய் ஒருத்தி உண்டு என்று சொன்னீர்கள். அவளுடைய சந்ததியைப் பற்றிச் சொல்லுங்களெனக் கேட்க, முனிவர் பதில் கூறுகின்றார். அவளுக்கு இரு பெண்களும் ஒரு பிள்ளையும் உண்டு. அந்தப் பிள்ளையும் தீர்க்க சீவியாவான். உத்தம குணங்கள் வாய்ந்தவன். சரீரத்தில் சிறிதும் ஊனமில்லாதவன். ஜாதகனுடைய மூத்த அன்னையும் இளகிய மனம் வாய்ந்தவள்.

17. பெரிதான புத்தி யேற்பள் பேதையும் வந்த பின்பு
வரனுக்கு யோக மென்றேம் வருவோரை ஆத ரிப்பன்
அரிவைக்குத் துணைஆண் ரெண்டு அம்பிகை ஒன்று என்றேம்
திருகிலா வாழ்வா ளாகும் செல்வநி கேட்டி டாயே.

17. உதார மனப்பான்மை கொண்டவள். அவள் இக்குடும்பத்தில் வாழக் கைப்பட்ட பிறகு அவள் கணவனுக்கு (ஜாதகனின் தந்தைக்கு) விசேஷ அதிருஷ்டங்கள் ஏற்பட்டிருக்கும். அவள் தன் வீட்டிற்கு வந்தவர்களை நன்றாக உபசரித்து ஆதரிப்பாள். அவளுக்குச் சகோதரர்கள் இருவர் சகோதரி ஒருத்தி. அவள் கஷ்டமில்லாமல் சுகமாக வாழ்வாள். ஈசுவரியே! மேலுங் கேளுங்கள்.

18. அவள்தீர்க்க வயதாய் நிற்க அணுகினள் வேறு மாதா
இவன்தாயார் வந்த சேதி யியம்புவீர் முனியே நீர்தாம
பவமுள முன்ஜன் மத்தில் பாக்கியம் தந்த தாலே
நவனியில் பணத்தைக் காக்க நல்கினு ளிந்த மாது.

18. மூத்ததாய் சுகமாக வாழ்ந்து கொண்டிருக்கும் போதே ஜாதகனுடைய தாயும் இவனுக்கு [ஜாதகனின் தந்தைக்கு] மனைவியாக நேர்ந்தாள். என்றிவ்வாறு சொல்லக்கேட்ட பார்வதி தேவி, அவள் இளைய மனைவியாக வரக் காரணம் என்னை ? சொல்லும், எனக் கேட்க, முனிவர் பதில் கூறுகின்றார். முன்ஜன்மத்தில் ஒரு மாது தன் சொத்துக்களை இவனிடம் ஒப்படைத்துப் பிறகு அவைகளைத் திரும்பப் பெறுமலேயே இறந்தாள் என்று சொன்னேம். (பதினென்றுவது பாட்டில் காண்க.) ஆகையால் அம்மாது இவனிடமிருந்து, அன்னம் வஸ்திரம் ஆபரணம் முதலியவைகள் மூலம் அச் சொத்துக்களைத் திரும்பப் பெறுவதற்காக இவனுக்கு மனைவியாக வாய்த்திருக்கின்றாள்.

19. மாதுவின் குணம்எவ் வாறு அறிவிப்பீர் முனியே நீர்தாம்
சூதிலாள் முன்கோ பத்தாள் துறவிகட் கன்ன மீவள்
ஓதுவாள் நல்ல வார்த்தை உத்தமி நடக்கை நன்னம்
பாதக மனமில் லாதாள் பர்த்தாவின் மனம்போல் வாழ்வள்.

19. ஜாதகனுடைய தாயின் குணத்தைச் சொல்லு மெனப் பார்வதி கேட்க, முனிவர் கூறுகின்றார். அவள் கள்ளமில்லாதவள். ஆனால் முன் கோபமுண்டு. துறவிகளுக்குச் சிரத்தையுடன் அமுதளிப்பாள். நல்ல வார்த்தைகளையே பேசுவாள். நல்ல நடத்தையும் உடையவள. ஒருவருக் கும் கெடுதலை எண்ணாள். கணவன் மனம்போல் நடப்பாள்.

20. அவள்துணை ஆண்பால் ரண்டு அரிவையும் மூன்று என்றோம்
நவணியில் வடமேல் இல்லம் நாயகி பூர்வம் சொல்வேன்
தவசிவாழ் பாண்டி தன்னில் ஜனித்தனள் கங்கை சேயாய்
இவள்பாக்கிய முடையா ளாகி இவள்வரன் மரணமா னான்.

20. அவளுக்கு இரு சகோதரர்கள். சகோதரிகள் மூவர். வடமேற்கில் அவள் பிறந்தவீடு உள்ளது. இவளுடைய பூர்வ ஜன்மத்தைக் கூறு வேன். தவசிகள் அன்புடன் வாசம் செய்யும் பாண்டிய நாட்டில் இவள் வேளாள குலத்தில் பிறந்து அதிக ஐசுவரியம் பெற்றவளாகக் கணவனோடு சுகமாக வாழுங் காலத்தில் இவளுடைய கணவன் இறந்தான்.

21. பெரியோர்கள் தொண்டு பூண்டு பேதையு மரண மாகி
மறையவன் வரையப் பட்டு வந்தவ ளிவளே யென்றோம்
வரும்ஜன்மம் காளத்தி தன்னில் வருகுவாள் சைவச் சேயாய்ப்
பெருவயி றோனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

21. பிறகு பெரியோர்களுக்குத் தொண்டு செய்து காலத்தைக் கழித்து இறந்தாள். [இவ்வரலாறு 10, 11, பாடல்களில் கூறப்பட்டிருப்பினும் இங்குத் திரும்பச் சொல்லுவதற்கு வாய்ப்பு ஏற்பட்டதால் மறுபடியும் தெரிவித்தார் என்று அறிக] அவள இங்கு இக் கடக லக்கின மகனுக்குத் தாயாக வாய்த்திருக்கின்றாள். இவளுடைய மறு பிறவியையும் கூறுகின் றோம். காளஹஸ்தி க்ஷேத்திரத்தில் சைவ குலத்தில் இவள் பிறப்பாள். கணபதியைப் பெற்ற கௌரியே ! மேலும் கேளுங்கள்.

22. முப்பது ஒன்று ஆண்டில் விளம்புவோம் தாதை கண்டம்
செப்புவோ மதன்பின் னாகச் செய்குவான் நாற்பா னாண்டில்
அப்போது அன்னை கண்டம் அறைந்தது தப்பா தாகும்
ஒப்புடன் தவங்கள் செய்யும் உத்தமி கேட்டி டாயே.

22. ஜாதகனுக்கு முப்பத்தொன்றாவது வயது நடக்கும்போது அவன் தந்தை மரணமாவான். அதற்குப் பிறகு நாற்பதாவது வயதில் தாய் மரணமடைவாள். இந்நிகழ்ச்சிகள் தவறாமல் நடைபெறும். உலகத் தோரின் தவப்படிப்பினைக்குத் தவம் செய்து காட்டும் தேவியே ! கேட்பீராக.

23. இருபது ஆறு ஆண்டில் இல்லமும் வேற தாகும்
மருவிப்பின் முப்பா னேழில் வருந்துணை வேறாய்ச் செல்வன்
திருகிலா வாழ்வா னாகும் செப்பினா மொழிதன் றாது
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

23. ஜாதகன் தனது இருபத்தாறுவது வயதில் தனியாகக் குடும்பம் செய்வான். முப்பத்தேழாவது வயதில் இவனிடமிருந்து இவன் சகோதரன் தனியாகப் பிரிந்து குடும்பம் செய்வான். ஜாதகன் குடும்பப் பிரிவினைக்குப் பிறகு குறைவு அடையாமல் சிறப்பாக வாழ்வான். தவசிகளாகிய நாங்கள் சொன்ன மொழி தவறாது. வேதங்களின் சிகரமாகிய உபநிஷதங்களால் போற்றப்படும் மஹிமை உடைய தாயே! மேலும் கேளுங்கள்.

24. ஜனித்தவன் மணத்தைச் சொல்வேன் சிறப்புறும் பதினெட் [டாண்டில்
வனிதையும் மேல்பால் நேரும் வரைகிறே மவள் குணத்தை
சதியிலா மனத்தா ளாகும் சான்றோர்போல் வார்த்தை சொல்வள்
நிதிமிக உடையா ளாகும் நிமலிக்கு வயது தீர்க்கம்.

24. ஜாதகனின் விவாஹ காலத்தைக் கூறுவோம். பதினெட்டாவது ஆண்டில் மணம் நடைபெறும். மணப்பெண் மேற்குத்திசையில் ஜனித்திருப்பாள். அவளுடைய குணத்தையும் தெரிவிப்போம். களங்கமற்ற மனம் படைத்தவள். சாதுக்கள் போல நல்ல வார்த்தைகளையே பேசுவாள். மிகவும் செல்வம் உடையவள். தீர்க்காயுளுடன் வாழ்வாள்.

25. சுதர்களும் எழுவர் தோன்றும் சோர்வுறும் முதலி லேதான்
சதமுடன் ஆண்பால் ஒன்று தையலு மிரண்டு என்றேம
ஏதுகா ரணத்தால் புத்திரர் இலகாது யென்று சொன்னீர்
மதியுமே அஞ்சில் நீசம் மங்கல னுடனே கேது;

25. இந்தத் தம்பதிகளுக்கு ஏழுகுழந்தைகள் பிறப்பார்கள். அவர்களில் முதலில் பிறக்கும் நான்கு குழந்தைகள் சேதமாவார்கள். ஒரு பிள்ளையும் இருபெண்களும் எஞ்சி இருப்பார்கள். இம்மூவரும் ஸ்திரமாக வாழ்வார்கள். எக்காரணத்தினால் முதலில் பிறக்கும் குழந்தைகள் விளங்கா என்று கேட்க, முனிவர் கிரஹரீதியில் காரணத்தைக் கூறுகின்றார். புத்திரபாவத்தில் சந்திரன் நீசமாக இருப்பதாலும், புத்திரபாவத்திற்குடைய செவ்வாய் பாபகிரஹமாகிய கேதுவுடன் இருப்பதாலும்;

26. இருப்பதால் புகன்றேம் யாங்கள் இவனுடை முன்ஜன் மத்தில்
விரிஞ்சியின் மேல்பா லாக விளங்கினன் ரெட்டி வமிசம்
தரையினில் சீவித்தான் தான் வாழ்நாள் வினையைக் கேண்மோ
குறையான ஏழை மாது குழவிக்கு அன்னம் வேண்ட.

26. முதலில் பிறக்கும் சுதர்களுக்குத் தோஷமென்றேம். இவன் முன் பிறவில் ரெட்டி வமிசத்தில் பிறந்து பூமிகளைக் கிருஷிசெய்து ஏராள தானியங்களை உடையவனாக வாழுங்காலத்தில் அவனுக்கேற்பட்ட வினையைக் கேளுங்கள். மிக ஏழையான மாது ஒருத்தி தன் குழந்தைக்காக இவனிடம் அன்னம் வேண்டினாள்.

27. அரிபோலகோப முற்று அணுகாது அன்ன மென்னத்
திருகிலா ஏழை மாது செப்புவாள் சாபம் தானும்
மறுஜன்மம் சுதர்கள் தோன்றி மறலியின் பதிக்கு ஏகும்
உரைத்துப்பின் சென்ருளன்ரேும் உறைந்தது அந்தத் தோஷம்.

27. உடனே இவன் சிங்கம்போல் சீறி, அன்னம் கிடையாது ; என்னை அணுகவேண்டாம் ; செல், என்று கடிந்தான். கதியற்ற அந்தமாது வருந்தி, மறு ஜன்மத்தில், குழந்தைகளின் கஷ்டமறியாத பாவியாகிய உனக்குக் குழந்தைகள் தோன்றி அழியும் என்று சாபமிட்டுச் சென்ருள். அந்தச் சாபம் இவனிடம் தங்கிற்று.

28. இதுவின்றி வேறு காணுன் இவனுமே தலங்கள் சென்று
சதியான கால ருடு சார்ந்துமே பிரமன் லக்கம்
அதிபனு முநிப்பா ருகும் வரைகிறே முன்னூழ்ச் சாபம்
சுதர்களு முதலில் நான்கு சீரணம் என்று சொல்வோம்.

28. இதுவன்றி வேறு பாவம் செய்தவனல்லன். அந்த ஜன்மத்தில் பலபுண்ணியஸ்தலங்களுக்கு யாத்திரை செய்தான். அந்தியத்தில் இறந்து, பிரம்மனுல் இங்குக் கடகலக்கினத்தில் படைக்கப் பட்டிருக்கிருன். முன்ஜன்மத்தில் ஏற்பட்ட சாபத்தினுல் முதலில் நானகு மகவுகள் நாச மாகும்.

29. வினையது நிவிர்த்தி செய்ய வினம்புவீர் சாந்தி யென்று
அதுசாந்தி செய்தாலும்தான் இடாது வந்தே தீரும்
கனமுள இவனின் யோகம் கழுறுவோ மினிமேலாக
அனையவே பூமி யாலும் அல்பமாம் பொருளி ஞலும்.

29. அந்தப்பாவத்தை நிவிருத்தி செய்ய பரிகாரம் சொல்லு மெனப் பார்வதி தேவி கேட்க, முனிவர் பதில் உரைத்தார். அந்த வினை எவ்வித சாந்திகள் செய்தாலும் விலகாது. அந்த வினையின் பலன் இவன் அனுபவித்தே ஆகவேண்டும். இனி இவனுடைய யோகத்தைச் சுருக்க மாகத் தெரிவிப்போம். முக்கியமாக இவன் பூமியாலும், சேமித்து வைத்த பணத்திஞலும் அல்பமாகப் பலனை அடைந்து சீவிப்பான்.

## ஜாதகம் 39

1. திங்கள்சேய் கேது வாகச் செம்பொன்னும் கன்னி யாகப்
பங்கயன் புதனு சீயம் பளிங்கனு கோல தாகத்
துங்கமாம் காரி தேளில் தனுசினில் ராகு தங்க
இங்கிவை கிரகம் நின்று லக்கினம் கடக மாக ;

| | | | சந்திரன் செவ்வாய் கேது |
|---|---|---|---|
| | இராசி | | லக்கினம் |
| | சக்கரம் | | சூரியன் புதன் |
| ராகு | சனி | சுக்கிரன் | குரு |

1. விளம்பி வருஷம் ஆவணி மாதம் 25-ந்தேதி வியாழக்கிழமை இரவு நாழிகை 21-க்கு மேல் 26-க்குள் ஜனனம்.

**ஆங்கிலத் தேதி 8-9-1898.**

நவக்கிரஹங்களின் பாதசாரம் :—பூரம் 4-ல் சூரியன். மிருகசீர்ஷம் 4-இல் சந்திரன். திருவாதிரை 2-இல் செவ்வாய். பூரம் 2-இல் புதன் (அஸ்தம்) ஹஸ்தம் 4-ல் குரு. சுவாதி 2-இல் சுக்கிரன். அனுஷம் 4-இல் சனி. பூராடம் 3-இல் ராஹு. புனர்வஸு 1-இல்கேது. நக்ஷத்திரம் மிருகசீர்ஷம். செவ்வாய் தசை இருப்புவருஷம் ஒன்று, மாதங்கள் ஐந்து.

சந்திரன் செவ்வாய் கேது இவர்கள் மிதுனம், குரு கன்னி, சூரியன் புதன் சிம்மம், சுக்கிரன் துலாம் சனி விருச்சிகம், ராஹு தனுஸ், இலக்கினம் கடகம், இவ்வாறு நவக்கிரஹங்கள் விளங்க ;

2. பலன்தமைச் சொல்லு மென்று பார்வதி கேட்கும் போது
குலகுரு வசிஷ்டர் சொல்வர் குறித்தது ஆண்பால் ஜன்மம்
தலமது கீழ்மேல் வீதி சண்டன்தன் வாடை யாகும்
அலைகடல் துயின்றோன் மேற்கில் அரன்கோஷ்டம் மருகில் தங்கும்.

2. பலன்களைச் சொல்லுங்கள் என்று பார்வதிதேவி கேட்கும்போது சூரிய குலத்திற்கு ஆசார்யனுகிய வசிஷ்ட முனிவர் பதில் கூறுகின்றார். இக்கிரஹநிலையில் பிறந்த மகவு ஆண். வீதி கிழக்குமேற்காக அமைந்

திருக்கும். வீடு தென் வரிசையில் இருக்கும். பாற்கடலில் பையத்துயிலு கின்ற விஷ்ணுவின் கோயில் மேற்குத்திசையில் விளங்கும். அக்கோயி லுக்கு அருகில் சிவபிரானது ஆலயமும் திகழும்.

3. சிங்கவா கனத்தாள் தென்மேல் சிரமற்றேன் தென்பா லாகும்
துங்கமாம் நந்தி மேற்கில் செப்பின அடையா ளத்துள்
இங்கிவன் வன்னியச் சேயாய் இறங்குவா னிரண்டாம் ஜன்மம்
அன்னவன் குடும்பச் சேதி அறைகிறோம் தாயே கேளும்.

3. சிங்கத்தைவாஹனமாகக் கொண்ட துர்க்கையின் ஆலயம் தென்மேற் கில் இருக்கும். தெற்கில் விநாயகர் கோஷ்டம் தங்கும். மேற்குத்திசையில் நந்திகேசுவரரும் எழுந்தருளி இருப்பார். இவ்வாறு அடையாளமுள்ள கிராமத்தில் வன்னிய குலத்தில், குடும்பத்திற்கு இரண்டாம் குழந்தையாக ஜனித்திருக்கின்றான். அவனுடைய குடும்பம் முதலியவைகளின் வரலாறுகளை இந்நூலில் கூறுகின்றோம் அன்னையே! கேட்டருளல் வேண்டும்.

4. தந்தைக்குத் தாரம் ரண்டில் தரித்திடு மிளையா ளீன்ற
இந்தவோர் மைந்த னென்றேம் இவன்தந்தை சேதி கேளாய்
முந்துமால் நிறத்தா னுகு முயர்வான குடும்ப மேற்பன்
தன்தன முடையா னுகும் தரணியை விருத்தி செய்வன்.

4. இவனுடைய தந்தைக்கு இருமனைவிமார்களில் ஜீவித்திருக்கும் இளைய மனைவிக்கு இவன் உதித்திருக்கின்றான். ஜாதகனின் தந்தையினுடைய வரலாற்றைச் சொல்லுகின்றோம். திருமாலின் நிறம் உடையவன் [கருத்த மேனியான் என்பதுகருத்து]. பெரிய குடும்பத்தை ஏற்பான். தன்முயற்சியால் சம்பாதித்த பணம் உடையவன். நிலங்களை மேன்மேலும் அபிவிருத்தி செய்வான்.

5. வண்டிவா கனமு முண்டு அடிமைக ளுடைய னுகும்
குண்டைகோ விருத்தி யுண்டு குலமதிப் புடைய னுகும்
தண்டமிழ் நுணுக்கம் தேரான் சல்லியம் கொள்ளானுமே
கண்டித முடையா னுகும் காதலி கேட்டி டாயே.

5. வண்டி வாஹனங்கள் உடையவன். அநேக சேவகர்களையும் படைத்த வன். எருதுகளும் பசுக்களும் இவனிடம் விருத்தியடையும். தன் குலத் தினர் மெச்ச வாழ்வான். இனிய தமிழின் சுவையை அறியாதவன் [படிப் பில்லாதவன் என்பது கருத்து]. இவனுக்குக் கடன் இராது. சொன்ன வார்த்தைப்படி எல்லோரும் நடக்கவேண்டுமென வற்புறுத்துவான். தேவியே! மேலும் கேளுங்கள்.

6. இவனுடைத் துணைவர் தம்மை யியம்புவோம் நால்வ ராகும்
அவனியில் யாவும் மரிப்பு ஆணது ஒன்றே தீர்க்கம்
நவனியில் மூத்தோ னுக நாட்டுவோம் தாயே யாங்கள்
பவமுள அவன்கு ணத்தைப் பகருவோ மினிமே லாக.

6. இவனுடைய சகோதரபாவத்தைக் கூறுவோம். இவனுக்கு நான்கு உடன் பிறந்தார்கள் தோன்றுவர். இப்பூமியில் தோன்றும் நால்வரில் ஸ்திர மான ஒரு ஸஹோதரனைத் தவிர மற்றெல்லோரும் மரிப்பர். அவன் மூத் தவன் என்றும் நாங்கள் அறிகிறோம். அவனுடைய [ஜாதகனின் பெரிய தந்தையின்] குணத்தை இனிச் சொல்லுகிறோம்.

7. மால்நிறம் சமதேகத்தோன் மருமமில் லாத நெஞ்சம்
ஊனமில் லாத தேகி உயர்வோர்கள் நேசம் கொள்வன்
பான்மையாய்ப் பேச வல்லன் பாருகள் விருத்தி செய்வன்
தானமும் தரும மீகை ஷண்முகன் பத்தி பூண்பன்.

7. இவனும் கருத்தமேனியான். சமவளர்ச்சி உடையவன். நெஞ்சில் கபடமில்லாதவன். சரீரத்தில் சிறிதும் பின்னமில்லாதவன். பெரி யோர்களின் நட்பு உவனுக்கு இருக்கும். பக்குவமாகப் பேசுவான். நிலங்களை அபிவிருத்தி செய்வான். தான தருமங்களில் பற்று உண்டு. ஆறுமுகக்கடவுளிடம் பக்தி பூண்டவன்.

8. தாதையின் பெயரைக் காப்பன் சகடுவா கனமு முண்டு
பாவத்தில் மனம்செல் லாதான் பத்தினி மார்கள் ரண்டு
மேவுவாள் கால முடு மூத்தவ ளொன்று சொல்வோம்
ஆவலாய்ச் சுதர னேகம் அணுகிடும் அவையும் தீதாம்.

8. தந்தைக்கேற்ற தனயன் எனப் புகழை அடைவான். வண்டி முதலிய வாஹனவசதிகளும் இருக்கும். பாவத்தில் செல்லாதவன். அவனுக்கு இரு மனைவிமார்கள். மூத்த மனைவி முன்னமேயே மரண மடைவாள். அவளுக்குப் பலபிள்ளைகள் தோன்றினும் சந்ததி இல்லாத வளாகவே இறப்பாள்.

9. பின்மனை ஒன்று தோன்றும் புதல்வர்கள் ஆண்பால் ரண்டு
கன்னியர் மூவ ராகும் கழறுவோம் மூதற்பெண் விருத்தி
அன்னவன் ஒன்றாய் வாழ்ந்து ஆதரிப் பானு மென்றோம்
பன்னுவோம் வறுமை காணான் பஞ்சைமே லிரக்க மாவன்.

9. அதற்குப்பிறகு மணம்செய்துகொள்வான். அந்த இளைய மனைவிக்கு இரு பிள்ளைகளும் மூன்று பெண்களும் தோன்றுவார்கள். முதற் பெண் விருத்தியடையும். அவன், ஜாதகனின் தந்தையுடன் ஒன்றாக வாழ்ந்து அவனை ஆதரிப்பான். வறுமை இல்லாதவன். வறுமையுற்ற வர்களிடம் கருணை கொண்டவன்.

10. ஜாதகன் நிறம் குணத்தைச் சாற்றுவோ மிருநி றத்தான்
மேதினில் உணர்ச்சல் நீட்சி விவேகியாம் கல்வி யுண்டு
வேதனை ஒருவர்க் கெண்ணான் விளைபுலம் விருத்தி செய்வன்
சூதிலான் பூமி விருத்தி துணைவரை ஆத ரிப்பன்.

**10.** இனி ஜாதகனின் குணத்தைக் கூறுவாம். இவன் கறுப்பு நிறம் வாய்ந்தவன். இவனது சரீரம் மெலிந்தும் உயர்ந்தும் இருக்கும். நல்ல விவேகம் உடையவன். கல்வியறிவும் உண்டு. பிறர்க்குக் கெடுதலை நெஞ்சிலும் நினைக்காதவன். விளையும் நிலங்களில் சிரத்தையுடன் உழைப்பான். உள்ளத்தில் கள்ளமில்லாதவன். இவனுக்குப் பூமிகள் சேரும். உடன் பிறந்தார்களை அன்புடன் ஆதரிப்பான்.

**11.** ஆறுமுகன் பத்தி பூண்பன் அண்டின பேரைக் காப்பன்
சிறுமையோர்க் குதவி செய்வன் செய்நன்றி மறவா னாகும்
தரையினால் சீவிப் பானும் சதுஷ்பாதம் விருத்தி யுண்டு
பெருமையும் புகழு மேற்பன் போஜன வறுமை காணான்.

**11.** ஷண்முகக் கடவுளிடம் பக்தி பூண்டவன். அண்டினோரை ஆதரித்துக் காப்பாற்றுவான். எளியவர்களுக்கும் உதவி புரிவான். பிறர் செய்த உபகாரத்தை மறவாதவன். பூமியை உழுது ஜீவிப்பான். கால் நடைகள் இவனிடம் விருத்தியடையும். இவனுக்கு எல்லா இடங்களிலும் கௌரவமும் புகழும் உண்டாகும். போஜன சௌக்கியம் வாய்ந்தவன்.

**12.** தன்துணை முன்பெண் ஒன்று சாற்றுவோம் தீர்க்க மாகப்
பின்துணை ஆண்பா லொன்று பேசுவோம் பாலனுக்கு
முன்மாதா ஒன்று என்றீர் மொழிகுவீர் அவட்குப் புத்திரர்
பின்னமா யிரண்டு தோன்றும் பேதையு மரண மாகும்.

**12.** இச் சாதகனுக்கு முன் பிறந்த சகோதரி ஒருத்தி உண்டு. இவனுக்குப் பிறகு ஒரு சகோதரனும் பிறப்பான். இவ்விருவரும் தீர்க்காயுளுடன் வாழ்வார்கள். இப்பாலன் இளையாளுக்குத் தோன்றியவன் என்று சொன்னீர்கள். மூத்த அன்னைக்குச் சந்ததி உண்டா? எனப் பார்வதியே கேட்க, வசிஷ்டர் பதில் கூறுகின்றார். அவளுக்கு இரு குழந்தைகள் பிறக்கும். அவைகளும் இறக்கும். அவளும் இறப்பாள்.

**13.** அதற்குப்பின் இவனின் தாயார் அறைந்தனம் துணைவர் ரண்டு
உதவாது அதன்பின் னாக உரைப்பீர்க ளந்தச் சங்கை
விதியது முடியும் தந்தை விளம்புவோ மூன்று மாண்டில்
துரிதமாய்ப் பேதி யாலே செல்லுவான் கால னூடு.

**13.** மூத்தமனைவி மரணமடைந்தபிறகு ஜாதகனின் தந்தை மறுமணம் செய்து கொண்டான். அந்த மாதிற்குப் பிறந்தவன்தான் இக் கடகலக்கின மகன். ஜாதகனுக்கு இரு உடன் பிறந்தார்கள் உண்டு என்று முன்பாட்டில் சொன்னோம். அதற்குப் பிறகு உடன் பிறந்தார்கள் தோன்றார்கள், எனச் சொல்லக் கேட்ட பார்வதி, ஏன் பிறக்கமாட்டார்கள்? என்று வினவ, முனிவர் பதில் உரைத்தார். இவன் (ஜாதகன்) பிறந்த மூன்றுமாண்டில் இவன் தந்தை, வெகு சீக்கிரத்தில் பேதிநோய் கண்டு, இறந்து விடுவான்.

14. காரணம் யாது என்னக் காவலன் அன்னை யாலே
பாரிய வினைகள் செய்தாள் படர்ந்தது என்று சொல்வோம்
கூறுவார் மாதூர் சேதி கோபமும் மூர்க்க முண்டு
மாறியே வார்த்தை சொல்வள் மனமது கபடு மில்லாள்.

14. அவ்வாறு வாழ்க்கையின் மத்தியில் அவன் திடீரென மரண மடைவதற்கு யார், என்ன, பாவம் செய்தார்கள் என உமையவள் கேட்க, வசிஷ்டர் விடையளித்தார். இவனுடைய [ஜாதனது] அன்னை செய்த பாவத்தினால் அவன் அல்பாயுளாக மரணமடைந்தான். அவனுடைய [தாயின்] வரலாற்றைக் கூறுவோம். கோபமும் பிடிவாதகுணமும் உண்டு. முன் சொன்னவார்த்தையை மாற்றிப் பேசுவாள் [பொய் சொல்ல அஞ்சாதவள் என்பது கருத்து]. மனத்தில் கபடமில்லாதவள்.

15. ஒருவர்சொல் கேட்கா ளாகும் உடன்துணை ஆண்பா லொன்று
இருகன்னி துணைவ ரென்றே மில்லமும் கீழ்ப்பா லாகும்
அரிவைமுன் ஜன்மம் சொல்வேன் ஆலங்கா டதனி லேதான்
திருகிலா இக்குலத்தில் ஜனித்தவ ளென்று சொல்வோம்.

15. யார் சொல்லையும் மதித்துக் கேட்கமாட்டாள். அவளுக்குச் சகோதரன் ஒருவன். சகோதரிகள் இருவர். அவள் பிறந்த வீடு கிழக்குத் திசையில் உள்ளது. அவளுடைய முன் ஜன்மத்தைச் சொல்லுகின்றோம். ஆலங்காடு என்கிற கிராமத்தில் இதே ஜாதியில் பிறந்தாள்.

16. மாரனு மதலை யுண்டாய் வளமுள குடும்பி யாகி
நாரியும் வாழு நாளில் நல்கின வினையைக் கேண்மோ
கூறுவோம் தணிகைக் கேதான் கொண்டவ னுடனே சென்று
ஆறுமா முகனைப் போற்றி அணுகினாள் கடைவீ திக்கு.

16. கணவன் குழந்தைகளுடன் பெரிய குடும்பம் உடையவளாகி அவள் வாழுங்காலத்தில் அவளுக்கேற்பட்ட வினையைச் சொல்லுகின்றோம் கேளுங்கள். அவள், தன் கணவனுடன், ஒரு நாள் திருத்தணி க்ஷேத்திரத்திற்குச் சென்று அங்கு எழுந்தருளியிருக்கும் ஆறுமுகக்கடவுளைத் தரிசித்துப் போற்றிவிட்டு, கடைவீதிக்குச் சென்றாள்.

17. குங்குமம் மஞ்சள் சீப்புக் கோதையும் வாங்கிக் கொண்டு
தங்கமு மீயா ளாகிச் சவுரிமான் போலே சென்றாள்
துங்கமாம் செட்டி யீந்து தோகையைக் காணு னாகிச்
சிங்கம்போல் கோப முற்றுச் செப்புவான் சாபம் தானே.

17. அங்கு, மஞ்சள் குங்குமம் சீப்பு முதலிய மங்களதிரவியங்களை வாங்கிக் கொண்டு அவைகளுக்காகத் தரவேண்டிய பணத்தை வியாபாரியிடம் தராமல் மான் போல் ஒரு நிமிஷத்தில் ஓடி மறைந்தாள். வியாபாரியோ இவளைத் தேடிப்பார்த்தும் காணாதவனாய்ச் சிங்கம்போல் மிகவும் சினமடைந்து சாபத்தை விடுத்தான்.

18. குங்கும மாகா முன்னம் கொழுநனு மரண மாவான்
சங்கையாய்ப் பிறஜன மத்தில் தனவரன் மத்தில் மாண்டு
பங்கமா யில்லம் பாழாய்ப் பலரும் வசையும் சொல்ல
வங்கமே எடுப்பா யென்று சொல்லியே தெருத்தூள் விட்டான்.

18. "விலை கொடாமல் என்னை ஏமாற்றி வாங்கிச் சென்ற இந்தக் குங்குமம் ஆவதற்கு முன்னமேயே அவள் தன் கணவனை இழப்பாளாக; மேலும் மறுமையிலும் வாழ்க்கையின் மத்தியில் இவள் கணவனையிழந்தவளாவாள். ஆகையால் குடும்பம் சிதைந்து பலரும் நிந்திக்க வாழ்வாள்" என்றிவ்வாறு சொல்லித் தெருத்துகளைக் கைகளால் வாரியிறைத்தான்.

19. மாதுவுக் கந்தச் சாபம் மருவிற்று ஆண்டில் மாரன்
தீதான காலனுடு சென்றுமே வருத்த முறுக்
காதலி நிந்தை பெற்றுக் காலன்தன் பதிக்குப் புக்கி
வேதனால் வரையப் பட்டு விளங்கினு ளென்று சொல்வோம்.

19. அந்த ஏழை வியாபாரி இட்ட சாபம் அவ்வாறே பலித்தது. வஞ்சனையால் அடையப்பெற்ற குங்குமம் ஆவதற்குமுன் அந்த ஆண்டில் அவள் கணவன் இறந்தான். இவள் வருத்த மடைந்தும், இவளுடைய துரதிருஷ்டத்தினால் அவன் இறந்தான்" என்ற அவச்சொல்லைக் கேட்டும் அந்திமத்தில் அவள் மரணமடைந்தாள். பிரம்மதேவன அவ்வாறு பாவம் செய்தவளைப் பூலோகத்தில் படைத்திருக்கின்றான்.

20. வணியன்தன் சாபம் தானும் மருவிடு மிச்சென் மத்தில்
கன்னிக்கு மத்தில் மாரன் காலன்தன் பத்திக்குச் செல்வன்
பிணையாகும் குடும்பம் தானும் பேதையா லனேக துன்பம்
வினையது நெருங்கு மென்றேம் மெல்லிக்குக் கலகம் சொல்வோம்.

20. அந்த வியாபாரி சாபமிட்டபடி இச் சென்மத்திலும் இவளுடைய கணவன், வாழ்க்கையின் மத்தியில் மூன்று குழந்தைகள் பிறந்த பிறகு, இறந்தான். அந்த மூன்று குழந்தைகளில் ஜாதகனும் ஒருவன். ஆதலால் அக் குடும்பம் அல்லலடைந்தது, பல துன்பங்களை அனுபவித்தது. எல்லாவற்றிற்கும் காரணம் ஜாதகனுடைய தாய் செய்த பாவமதான்.

21. செப்புவீர் முனியே நீர் தாம் சேயிவன் முன்னோன் மாரன்
தப்பிதம் நேரு மென்றீர் தரணியை நீசம் செய்வன்
மெய்ப்புடன்.......... ங்கள் தானும் விளைவிப்பான் பால னுக்கு
அப்பனின் முன்னோன் தன்னால் அவனையே காப்பா னுகும்.

21. "முனிவரே! நீங்கள் ஜாதகனின் முன்னோன் பிழை செய்வான் என்று சொன்னீர்கள். என்ன பிழை?" என்று வினவ, பூமியை விரயம் செய்வான். ஆனால் ஜாதகனின் பெரிய தந்தை ஜாதகனையும் மற்றைய குழந்தைகளையும், அவன் தாயையும் காப்பாற்றுவான்.

22. ஈரொன்ப தாண்டு மட்டும் இரணியம் பூமி ஒன்றும்
மாறும லிருக்கு மென்றேம் மாறிடும் போசனம்தான்
கூறுவார் காலம் தன்னைக் குறிக்கிறேறு மாறு மாண்டில்
காரிகை தன்னுல் நேரும் காதலி கேட்டி டாயே.

22. ஜாதகன் பிறந்து பதினெட்டு வருஷங்கள் வரையில பணம் பூமி இவைகள் எல்லாம் ஒன்றுகவே இருக்கும். ஆனுல் இங்குச் சொன்ன வருஷங்களுக்கு முன்னமேயே "சமையல்" வேறுக ஆரம்பிக்கப்படும். அதுவும் ஜாதகன் பிறந்து ஆறுவது ஆண்டில் நடைபெறும். பெண்கள் முக்கியமாக [ஜாதகனின் தாய்] தான் அவ்வாறு பிரிவதற்கும் காரணமாக இருப்பார்கள். உமாதேவியே ! மேலும் கேளுங்கள்.

23. நிலம்தனம் பாகம் செப்பில் நிலைக்காது பால னுக்குச்
செலவுக ளாகு மென்றேம் செப்புவோம் பின்பால் சேதி
தலைவியின் ஜன்மம் சொல்வேன் தண்டகா வனத்தி லேநான்
குலவுவா னிக்கு லத்தில் கோமளி கேட்டி டாயே.

23. நிலம் பணம் இவைகளின் பிரிவினையைப்பற்றி ஆராய்ந்தால் சாதகனுக்கு நிலமும் பணமும் நிலைக்காமல் செலவாகிவிடும். இதைப்பற்றிய விவரங்களைப் பின் பாகத்தில் தெரிவிப்போம். ஜாதகனுடைய தாயின் மறுமையைக் கூறுவோம். தண்டகாவனத்தில் இதேகுலத்தில் பிறப்பாள். மென்மையான திருமேனியுடையாளே ! மேலும் கேட்பாயாக.

24. பாலகன் மணத்தைச் சொல்வோம் பதினுலு ஆண்டு தன்னில்
வேல்விழி கீழ்ப்பால் நேரும் விளம்புவோ மவள்கு ணத்தைப்
பால்பாக்கிய முடையா ளாகும் பசித்தோர்க்கு அன்ன மீவள்
ஞாலமேல் நல்லோ ளாவள் நாயகி யிருசி கபபள்.

24. ஜாதகனுடைய மணத்தின் காலத்தைக் கூறுவோம். பதினுன்காவது வயதில் விவாஹம் நடைபெறும். மணப்பெண் கீழ்த்திசையில் உதித்திருப்பாள். அவள் குணத்தைக் கூறுவோம. பால் பாக்கியமுடையவள். பசித்தவர்களுக்கு அமுதமளிப்பாள். இவள் வசிக்கும் ஊரில் "நல்லவள்" என்று பெயர் பெறுவாள். அவள் கருஞ்சிவப்புநிறமுள்ளவளாக இருப்பாள்.

25. சொல்லது சுபமே யாகும் துருசான நடையு மாவள்
வல்விக்கு வயது தீர்க்கம் மருவிடும் நாபிச் சூடு
சொல்லுவோம் புத்திர பாவம் தோன்றிடும ஆண்பால் ரண்டு
வல்லியர் மூவ ரென்றேம் மங்கையே கேட்டி டாயே.

25. மங்களமான வார்த்தைகளைப் பேசுவாள். துரிதமான நடையுள்ளவள். தீர்க்காயுள் வாய்ந்தவள். நாபியில் சூடு உடையவள். புத்திர பாவத்தைச் சொல்லுகின்றேம். இத் தம்பதிகளுக்கு இரு பிள்ளைகளும் மூன்று பெண்களும் பிறப்பார்கள். தேவியே ! மேலும் கேட்பீராக.

26. பாலகன் பூர்வம் தன்னைப் பகருவோ மினிமே லாக
வேலன்வாழ் பழனி நாட்டில் விளங்கினான் வைசியச் சேயாய்ச்
ஞாலமேல் செட்டுச் செய்து நாயகி மதலை யுண்டாய்ச்
சாலவே வாழு நாளில் தங்கின வினையைக் கேண்மோ.

26. ஜாதகனுடைய முன் பிறவியைத் தெரிவிப்போம். சுப்பிரமணிய சுவாமி எழுந்தருளியிருக்கும் பழனி க்ஷேத்திரத்தில் வைசிய சாதியில் பிறந்து, வியாபாரங்களைச் செய்து, பணம் படைத்தவனாக, மனைவி மக்களுடன் வாழும் காலத்தில் இவனுக்கேற்பட்ட வினையைக் கேளுங்கள்.

27. மாரியின் கோஷ்டத் திற்கு மணிவிளக் கிரண்டு வைத்துக்
கோருவர் இவனின் தந்தை குமாரனும் ஒன்று வைத்துத்
தீரமாய் தொழுது வந்தான் சேர்ந்தது அந்தத் தோஷம்
வேறொருக் குற்றம் சொல்வேன் வித்தகி கேட்டி டாயே.

27. அவ்வூரிலுள்ள மாரியம்மன் கோயிலுக்கு அச் சென்மத்தில் இவனுக்கேற்பட்டிருந்த தந்தை இரு மணி விளக்குகளைச் சமர்ப்பித்து வந்தான். தந்தை செய்த தருமத்தை இவன் தொடர்ந்து நடத்த வேண்டியது இவனுடைய கடமையாக இருக்க, அவ்வாறு செய்யாமல் சிறிதும் அச்சமின்றி ஒரு விளக்கையே சமர்ப்பித்துத் தொழுது வந்தான். தொடர்ந்து நடந்த—நடை பெறவேண்டிய—தருமத்தை நிறுத்திய பாவம் இவனைச் சார்ந்தது. வேறு ஒரு பாவமும் இவனுக்கு நேர்ந்தது. அதையும் சொல்லுகிறோம். கேளுங்கள்.

दापपालनयोर्मध्ये दानात् श्रेयोऽनुपालनम् ।
दानात् स्वर्गमवाप्नोति पालनादच्युतं पदम् ॥

குறிப்பு.—என்ற மஹா பாரத சுலோகத்தைக் காண்க.

இதன் கருத்து :—" புதிய தொரு தருமத்தை நிறுவுவதை விட முன்பே ஆரம்பிக்கப்பட்டு நடந்துவரும் தருமத்தைச் சரிவரப் பரிபாலித்து நடத்தி வருவதே மேல். புதிய தருமத்தை ஸ்தாபித்தால் அநித்யமான ஸ்வர்கம் தான் கிடைக்கும். தருமத்தைப் பரிபாலிப்பதால் அழிவற்ற உலகமாகிய மோக்ஷத்தை அடையலாம் " என்பதாம். இங்குத் தரும பரிபாலனத்திற்கு அதிக பலன் கூறி இருப்பதால், தொடர்ந்து வரும் தருமத்தை நிறுத்திவிடின் அதிகபாவம் என்பது அறியப்படும்.

28. சிறியோர்க்குக் கணக்கில் மோசம் செய்தனன் என்று சொல்வோம்
வரைகிறார் ஏழை யோர்கள் மறுஜன்மம் மகவாய்த் தோன்றிக்
குறைமனம் ஆதி காலம் கோதையால் வறுமை யுண்டாய்ப்
பெரித ன குடும்பம் தாழ்ந்து முடிவினில் வாழ்வா யென்று.

28. ஏழைகளுடைய கணக்கில் மோசம் செய்து அதிகப் பணம் வசூல் செய்தான். அதனால் வருத்தமடைந்த ஏழைகள், " நாங்கள் மறுபிறவியில் உனக்குக் குழந்தைகளாகப் பிறந்து மனக்குறைவை [நிம்மதியின்மையை] உண்டுபண்ணுவோம். முடிவில் ஸ்திரீயினால் உனக்கு ஏழ்மையேற்பட்டு, குடும்பம் தாழ்ந்து வாழ்வாய் " என்று சொன்னார்கள்.

29. இன்னமும் பலவாறு சொன்னார் எய்திற்று அந்தத் தோஷம்
துன்னிய கால னோடு சென்றுமே பிரமன் லக்கம்
இன்னிய குலமே தோன்றும் மாரியின் துன்பத் தாலே
தன்னேத்திரம் ஒன்று ஊனம் சிறியோர்கள் சாபத் தாலே ;

29 மேலும் பலவாறு சொல்லிவிட்டுச் சென்றார்கள். அந்தப்பாவம் இவனைச் சார்ந்தது. பிறகு இவன் இறந்தான். அவனைச் சதுர்முகபிரம்ம தேவன் இங்குப் படைத்திருக்கின்றான். முற்பிறவியில், மாரியம்மனுக்குச் செய்த அபசாரத்தால் இச் சென்மத்தில் ஒரு கண் ஊனமாகும். ஏழைக ளின் சாபத்தால் ;

30. ஆதியில் குடும்ப லேச்சல் அன்னையால் நேரு மென்றோம்
மாரியின் தோஷத் திற்கு வரைகுவீர் சாந்தி தானும்
கூறவே மாட்டோம் யாங்கள் குழவியின் யோகம் சொல்வேன்
பார்விருத்தி பெரிய தந்தை பண்ணுவான் பால னுக்கு.

30. ஆதியில் குடும்பத்திற்குப் பல அல்லல்கள் அன்னையால் ஏற்படும். மாரியம்மன் தோஷத்திற்குப் பரிகாரமாக ஏதாகிலும் சாந்தி சொல்வீர்க ளாக, எனப் பார்வதி தேவி கேட்டவுடன், முனிவர், நாங்கள் அந்தப் பாவத் திற்குப் பரிகாரம் கூறவே மாட்டோம். அவ்வளவு பெரியது அது. எவ்வித சாந்தியாலும் அது விலகாது. அவன் அப்பாவத்தின் பலனை அனுபவித்தே யாகவேண்டுமென்று சொல்லிவிட்டு, ஜாதகனின் யோகத்தைக் கூறுகின்றார். பெரிய தந்தையினால் ஜாதனுக்கு நிலங்கள் சேரும்.

31 அன்னையால் வறுமை நேரும் அவனியில் சல்லியம் காணான்
கன்றுகா லிகளும் விருத்தி கட்டுவான் தானி யங்கள்
பொன்பணி சேர்த்த லுண்டு போஜன வறுமை காணான்
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே.

31. அன்னையால் வறுமை ஏற்படும். ஆனால் கடன் இராது. கால் நடைகள் விருத்தியாகும். தானியங்களைக் களஞ்சியங்களில் சேமித்து வைப்பான். பொன்னாபரணங்களைச் சம்பாதிப்பான். ஆகார சௌக்கிய முடையவன். கணேசரைப் பெற்ற உத்தமியே ! மேலும் கேளுங்கள்.

32. தந்தையின் பூர்வம் கேளாய்த் திருச்செந்தூர் நகரம் தன்னில்
வந்தனன் கோகு லத்தில் வளமையாய்க் குடும்பி யாகி
மைந்தரும் மனைவி யுண்டாய் ஆவுகள் தம்மைக் காத்துச்
சந்ததம் பவமில் லாமல் சண்டன்தன் பதிக்குப் புக்கி.

32. ஜாதகனின் தந்தையின் முன்ஜன்மத்தைக் கூறுவோம். அவன் திருச்செந்தூரில் யாதவகுலத்தில் பிறந்து வளமுள்ள குடும்பம் வாய்ந்த வனாகி, மனைவிமக்களுடன் சுகமாக வாழ்ந்து வந்தான். தனது சாதித் தொழிலை—பசுக்களைப் பரிபாலிப்பதை—நடத்தி வந்தான். சிறிதும் பாவ மின்றி வாழ்க்கையை நடத்தி, கடைசியில் யமனுலகம் சென்றான்.

33. மால்மகன் வரையப் பட்டு வந்தவ னிவனே யென்றேம்
சாலவே மூன்று மாண்டில் செல்லுவான் கால னோடு
ஏலவே இவன்பின் ஜன்மம் இயம்புவோம் விரிஞ்சி தன்னில்
சீலமாம் கங்கை சேயாய் ஜனிப்பனு மென்று சொல்வோம்.

33. திருமாலின் மகனுகிய பிரம்ம தேவன் அவனே இக்குலத்தில் படைத்திருக்கின்றுன். ஜாதகன் ஜனித்த மூன்றும் ஆண்டில் இவன் (தந்தை) மரணமடைவான். இவனுடைய பின்ஜன்மத்தையும் கூறுகின்றேம். விரிஞ்சி புரத்தில் வேளாள வமிசத்தில் பிறப்பான்.

34. அன்னைக்கு முப்பான் ரண்டிலறைந்தனம் கண்டமென்றேம்
தென்முனி புகலு கின்றுர் செப்புவோம் ஒன்பா னுண்டு
துன்னிய வயிற்று நோயால் செப்புவோம் கண்ட மொன்று
சின்னங்கள் காணு தாகும் செப்பின வயது தீர்க்கம்.

34. ஜாதகனுடைய தாய்க்கு, அவனுக்கு முப்பத்திரண்டாம் வயது நடைபெறும் போது, மரணமேற்படும். தென் திசையில் வாசம் செய்கின்ற அகஸ்தியர், ஜாதகனுடைய ஒன்பதாம் வயதில் அவனுக்குக் கண்டம் மேற்படும் என்று நாங்கள் எண்ணுகிறேம் என்ற ஆக்ஷேபத்தைத் தெரிவிக்க, வசிஷ்டர், உண்மை ; வயிற்று நோயால் அவனுக்கு மரணத்திற்குச் சமமான கண்டம் ஏற்படுமே தவிர அதுவே அவனுக்கு முடிவாகாது. நாம் சொன்ன வருஷங்கள் வரையில் நிச்சயமாக உயிர்வாழ்ந்திருப்பான் என்று பதிலளித்தார்.

35. அறுபது ஏழு ஆண்டில் அணுகிய மகர மாதம்
உரைக்கிறேம் பாலன் கண்டம் உதித்திடும் பித்த பாண்டால்
மறுஜன்மம் காஞ்சி தன்னில் வருகுவான் செங்குந்த னுகப்
பெருவயி றேனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

35. அறுபத்தேழாவது வயதில் தைமாதத்தில் பித்தபாண்டு நோயால் ஜாதகன் மரணமடைவான். இவன் மறுபிறவியில் காஞ்சியில் செங்குந்த வமிசத்தில் பிறப்பான். விநாயகரைப்பெற்ற கருணைக் கடலே! மேலும் கேட்பீராக.

36. இருபது ஒன்ப தாண்டில் இவனுடையப் பெரிய தந்தை
திருமகன் ஜனன மாகச் சேய்தசை ஆண்டு ஒன்றும்
மருவிடும் திங்க ளைந்தும் வரைகிறேம் பால னுக்கு
அருமறை முடிவி லாடும் அம்பிகை புகன்றிட் டோமே.

36. ஜாதகனுடைய இருபத்தொன்பதாவது வயதில் இவனது பெரிய தந்தை இறப்பான். ஜாதகன் மிருகசீரிஷநக்ஷத்திரம் நான்காம்பாதத்தில் ஜனித்திருக்கின்றுன். ஆகவே செவ்வாய்த் தசையில் இருப்பு வருஷம் ஒன்று, மாதங்கள் ஐந்து. அரிய வேதங்களின் மகுடத்தில்—உபநிஷதங்களில்—விளங்கும் தத்துவமாகிய தேவியே! இவ்வாறு இச்சாதகத்தின் பலன்களைத் தெரிவித்தோம்.

# ஜாதகம் 40

1. பொன்குடம் ராகு நந்தி புகர்குசன் பருதி நண்டில்
துன்சனி புதனும் சீயம் சிகிதேளில் மதியும் கன்னி
இன்னவாறு கிரகம் நின்று லக்கினம் கடக மாகப்
பன்னுவீர் பலனை நீங்கள் பராசரும் புகலு கின்றூர்.

| | | | |
|---|---|---|---|
| | | ராகு | |
| குரு | இராசி சக்கரம் | | லக்கினம் சுக்கிரன் செவ்வாய் சூரியன் |
| | | | சனி புதன் |
| | கேது | | சந்திரன் |

கர வருஷம் ஆடிமாதம் 26-ஆந் தேதி ஞாயிற்றுக்கிழமை இரவு 26 நாழிகைக்கு மேல் ஜனனம்.

ஆங்கிலத் தேதி 9-8-1891.

நவக்கிரஹங்களின் பாதசாரம்:—ஆயில்யம் 3-இல் சூரியன். ஹஸ்தம் 4-இல் சந்திரன். ஆயில்யம் 2-இல் செவ்வாய் (அஸ்தம்). பூரம் 3-இல் புதன். பூரட்டாதி 2-இல் குரு (வக்ரீ). பூசம 4-இல் சுக்கிரன். பூரம் 4-இல் சனி. கிருத்திகை 4-இல் ராஹு. அனுஷம் 2-இல் கேது. நக்ஷத்திரம் ஹஸ்தம். சந்திரதசையில் இருப்பு மாதங்கள் இரண்டு.

1. குரு கும்பம் ராஹு விருஷபம், சுக்கிரன் செவ்வாய் சூரியன் கடகம், சனி புதன் சிம்மம், கேது விருச்சிகம், சந்திரன் கன்னி, இலக்கினம் கடகம். இக்கிரஹ நிலையின் பலன்களைச் சொல்லுவீர்களாக என உமாதேவி கேட்க பராசர முனிவர் கூறுகின்றூர்.

2. இந்தச் சேய் ஆணும் ஜன்ம மில்லமும் கீழ்மேல் வீதி
தென்வாசல் தந்தி கீழ்ப்பால் சலகரை மேல்பால் தங்கும்
மன்னர்கள் வாச மாகும் வடபாலில் குண்ட முண்டு
உன்னத நகர மாகும் உயர்குலம் வைசிய சேயாய்.

2. இக் கிரஹ நிலையில் பிறந்த இவன் ஆண். வீதி கிழக்கு மேற்காக இருக்கும். வீடு, வடவரிசையில் இருப்பதால் தென்திசையை நோக்கும். கீழ்த்திசையில் விநாயகர் விளங்குவார். மேற்குத்திசையில் ஒரு நீர்நிலை உண்டு. அந்த ஊர் மன்னர்கள் வசிக்கு மிடமாகும். வடதிசையில் ஒரு குளமும் உண்டு. அது ஒரு பெரிய நகரம். உயர்ந்த வைசிய குலத்தில் பிறப்பான்.

3. ஜனிப்பனும் சேஷ்ட னுகச் செப்புவோ மிவனின் யோகம்
வனிதையர் அன்னை தந்தை மைந்தர்கள் துணைவர் யோகம்
கனமுள முன்பின் ஜன்மம் கழறுவோம் சாந்தி தானும்
சினமிலா நவநூ லாய்ந்து செப்புவோம் கேளு மென்னே.

3. இவன் குடும்பத்திற்கு மூத்தவனுக ஜனிப்பான். நாங்கள் இந் நூலில் இவனுடைய யோகங்களேயும், தாய் தந்தை சகோதரர் மனைவி புத்திரர் இவர்களைப்பற்றியும், முன்பின் ஜன்மங்களைப்பற்றியும், சாந்தி பரிகாரங்களேயும் சோதிட சாஸ்திரங்களை நன்கு ஆராய்ந்துச் சொல்லப் போகின்றேம். தாயே! கேளுங்கள்.

வேறு

4. தந்தைதுணை ஆண்காணுன் பெண்பால் ரண்டு
சாற்றுகிறேம் தீர்க்கமதாய் முன்பெண் சேதி
சிந்தையது கலக்கமுண்டு வறுமை காணுள்
சேயர் ஆண் ஒன்றுமே கன்னி அவ்வாறு
அந்தவளா மத்தியத்தில் கயிறி ழப்பாள்
அப்பாவம் பூர்வவினை அணுகிற் றென்றேம்
பிந்திதுணை கீழ்ப்பாலில் வரனு மேவும்
பாலயினம் நொய்குடியாம் சுதர்கள் தோஷம்.

4. ஜாதகனுடைய தந்தைக்குச் சகோதரன் இல்லை. சகோதரிகள் இருவர். இவ்விருவரும் தீர்க்காயுளுடன் வாழ்வார்கள். முன் சகோதரியின் செய்திகளைத் தெரிவிப்போம். மனத்தில் கலக்க முள்ளவள். வறுமை இல்லாதவள். அவளுக்கு ஒரு பிள்ளையும் ஒரு பெண்ணும் பிறப்பார்கள். அவள் வாழ்க்கையின் நடுவில் மாங்கல்யத்தை இழப்பாள். அதற்குக் காரணம் அவள் முன்பிறவியில் செய்த பாவம்தான். பின் சகோதரி கீழ்த் திசையில் வாழ்க்கைப்படுவாள். தரித்திரமுள்ள குடும்பமாகும். அவள் சந்ததி தோஷமுள்ளவளாகவும் இருக்கின்றுள்.

5. முனிசாபம் நேர்ந்ததனுல் சொன்னேம் யாங்கள்
மொழிவதற்குக் கருமசாந்தி முறைபோல் செய்யில்
தணிவாகும் சுதராண்பால் ஒன்று தீர்க்கம்
சாற்றுகிறேம் பின்பால்சேதி விவர மாகக்
கனிவான தந்தைகுணம் மால் நிறத்தன்
கடந்தோர்கள் நேசமுளன் கல்வி மேன்மை
இனமதிப்புக் கொண்டிடுவன் ஊக வானும்
இருஇல்லம் செய்திடுவன் இடுக்க மில்லான்.

5. இளையசகோதரிக்கு முனிவர்கள் சாபமிருப்பதால் புத்திர தோஷ முண்டு. முன்வினைப் பரிகாரமாக நாங்கள் சொல்லும் சாந்தியைச் சாஸ்திர முறைப்படி செய்தால் தீர்க்காயுளுடன் ஒரு பிள்ளை பிறப்பான். இவைகளைப் பற்றிய வரலாறுகளைப் பின் பாகத்தில் அறிவிக்கின்றோம். ஜாதகனின் தந்தையின் குணத்தைக் கூறுகின்றோம். கருத்த மேனியான். நல்ல அனுபவம் வாய்ந்தவர்களின் நட்புக் கொண்டவன். மேலான கல்வியைக் கற்றவன். தன் இனத்தாரர்களின் மதிப்பிற்குப் பாத்திரமானவன். மதியூகம் வாய்ந்தவன். இரண்டு வீடுகள் கட்டுவான். செய்யும் காரியங்களில் இடையூறுகள் இல்லாதவன்.

6. நவநூலைத் தானுணர்வன் தலங்கள் செல்வன்
நற்புத்தி தூசுச்செட்டு நயப்பாய்ச் செய்வன்
கவனங்கள் செய்திடுவன் கமல ரேகை
கரத்திலுறும் பொறுமையுளன் கடனே கொள்ளான்
பவமிலான் தரணிவிருத்தி பால்மோ ரிஷ்டன்
பதர்சொல்லான் சகடுடையன் பரிந்த சொல்லன்
உவமைசொல்வன் பலர்நாயம் உரைப்பா னுகும்
உறுதியா மனமுடையன் உணவு இஷ்டன்.

6. புதிய சித்தாந்த நூல்களைக் கற்றுணர்ந்தவன். பல புண்ணியஸ்தலங்களுக்கும் யாத்திரை செல்வன். நல்ல புத்தி வாய்ந்தவன். உத்ஸாஹத்துடன் வஸ்திர வியாபாரத்தை மேற்கொள்வன். சுயமாகப் பாடல்கள் இயற்றும் ஆற்றல் படைத்தவன். கையில் கமல ரேகை விளங்கும். பொறுமை சாலி. சிறிதும் கடன் வாங்காதவன். பாவத்தொழிலிலும் ஈடுபடாதவன். பூமிகளை மேன்மேலும் அபிவிருத்தி செய்வான். பால், மோர் போன்ற பொருள்களில் விருப்பம் கொண்டவன். வீண் வார்த்தைகளைப் பேசான். வண்டி வாஹனங்கள் உடையவன். அன்பு கனியப் பேசுவான். உவமை சொல்லி விளங்க வைக்கும் இயல்புடையவன். பலருக்கும் தருமமாக நீதி வழங்குவான். உறுதியான உள்ளம் படைத்தவன். சுகமாகப் புசிப்பதில் பேரவாக் கொண்டவன்.

7. தன்துணையாண் காணுத வண்ணம் சொல்வீர்
சலக்கோளு மிச்சனுடன் சார்ந்த தோஷம்
பின்னமென்றோம் உதித்தவன்தன் குணத்தைக் கேளாய்ப்
பொய்பகரான் பிறர்குற்றம் புகலா னுகும்
அன்னியர்க் குதவிசெய்வன் அற்ப உண்டி
அடுத்தவரை காக்கும்குணம் அறிவுள் ளோனும்
பண்ணுவான் இருகல்வி மேன்மை யாகப்
பலசெட்டுச் செய்திடுவன் பாரும் விருத்தி.

7. இவன் [தகப்பன்] சகோதரனற்று இருப்பதற்குக் காரணம் என்ன? அதைச் சொல்லுவீராக என ஒரு முனிவர் கேட்க, பராசர முனிவர் பதிலுரைக்கின்றார். சலக்கோள் என்று சொல்லப்படும் சுக்கிரன் சூரியனுடன்

சேர்ந்திருப்பதால் சகோதரர் இல்லாதவன். இனிக் கடகலக்கினத்திலுதித்தவனுடைய குணங்களைக் கூறுவாம். பொய் பேசாதவன். பிறர் குற்றத்தையும் எடுத்துச் சொல்லான். அந்நியருக்கு உதவி புரிவான். சிறிதே உணவுட்கொள்வான். தன்னை அண்டியவர்களுக்கும் உதவி சிறிது செய்வான். சிறந்த அறிவாளியாகவும் திகழ்வான். இருவிதக் கல்விகளைச் சிறப்பாக அப்பியாசம் செய்வான். பலபல வியாபாரங்களைச் செய்வான். நிலங்களையும் அபிவிருத்தி செய்வான்.

8. சொல்மேன்மை துறவிகட் கன்ன மீவன்
தொடுத்ததையே வென்றிடுவன் மாஞ்சி வப்பன்
நல்லவனைப் புகழேற்பன் அரசரிஷ்டன்
நற்றலவா சம் செய்வன் நடையும் நன்மை
அல்லலிலான் முன்கோபி தந்தை மேலாய்
அவனிதனில் புகழேற்பன் ஆவு விருத்தி
மல்லில் செல்லான் மர்மநூ லறிவா னுகும்
மாரனைப்பான் தீரமன மங்கை மோகன்.

8. இவனுடைய வார்த்தைகளுக்கு விசேஷ கௌரவம் இருக்கும். துறவிகளுக்கும் மற்றைய பெரியோர்களுக்கும் பக்தி சிரத்தையுடன் அமுதளிப்பான். தான் ஆரம்பித்த காரியத்தை முழுவதும் நிறைவேற்றுவான். மாநிறம் வாய்ந்தவன். நல்லவன் என்ற கீர்த்தியைப் பெறுவான். அரசர்களுக்கும் நண்பனுவான். நல்ல புண்ணிய ஸ்தலங்களில் வாசம் செய்வான். நல்ல நடக்கை உடையவன். வாழ்க்கையில் இடையூறுகள் இல்லாதவன். சிறிது முன்கோபமுண்டு. தந்தையைக் காட்டிலும் அதிகம் புகழ் பெற்றவனுக விளங்குவான். கால்நடைகளும் இவனிடம் மிகவும் அபிவிருத்தியை அடையும். சண்டை சச்சரவுகளில் ஈடுபடாதவன். வேதாந்தநூல்களைக் கற்றறிந்தவன். அழகில் மன்மதனுக் கொப்பானவன். தீரமான மனம் படைத்தவன். மங்கைகளிடம் மையல் கொண்டவனுகவும் இருப்பான்.

9. தன்துணைஆண் தோஷமுறும் கன்னி ரண்டு
சாற்றுகிறேம் தீர்க்கமதாய் இரண்டு சேதம்
என்னகா ரணத்தினுலே துணைஆண் தோஷம்
இயம்புவீர் எட்டோனுய்ச் சனியு மாகி
உன்னுபுதன் முன்றேனுய்க் கூடி யேதான்
ஒருமூன்று ஈராறில் உறைந்த தாலே
பின்னமாம் ஆண்துணைகள் பேசி னேமே
பிறைமூன்றி லிருப்பதாலே பெண்பால் விருத்தி.

9. இவனுக்குச் சகோதரன் தோன்றுன். இரு சகோதரிகள்தான் உண்டு. அவர்கள் நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள். இவர்களைத் தவிர இரு சகோதரிகள் தோன்றி அழிவார்கள். என்ன காரணத்தினுல் சகோதரன் இல்லை? இதைத் தெளிவுபடுத்துங்கள், என இவ்வாறு பார்வதி கேட்க, முனிவர் பதிலுரைக்கின்றூர். மூன்றுமிடத்திற்கு அதிபதியான புதன், அஷ்டமாதி

பணுகிய சனியுடன் இரண்டாமிடத்தில்—சிம்மத்தில்—இருப்பதால் ஆண் துணைவர்களில்லை. இதே காரணத்தால் பெண்துணைவிகளும் இருக்க மாட்டார்களன்றோ! இரு பெண்துணைவிகள் மாத்திரம் உண்டு என்று எவ்வாறு கூறலாம்? அதற்குக் காரணம் என்ன? என ஒரு முனிவர் ஆக்ஷேபிக்க, பராசரர் சமாதானம் சொல்லுகிறார். ஸ்திரீக்ரஹம் என்று சோதிட சாஸ்திரத்தில் வகுத்துக் கூறப்பட்ட சந்திரன்—வளர்ந்து வருபவன்—இலக்கினாதிபதி—மூன்றாமிடத்தில் இருப்பதால், ஸ்த்ரீதுணை—சகோதரிகள் விருத்தியாவார்கள்.

10. உதித்தவன்தன் மணம்சொல்வோன் பதின்மூன் றில்தான்
    உறைகுவாள் அதன்மேல்பால் பாரி வாய்க்கும்
மதிமுகத்தாள் நடைநன்மை மயில்போல் சாயல்
    மாநிறத்தாள் அடக்கமுளாள் வருவோர்க் கன்னம்
துதிசெய்து தானீவள் விரத மேற்பள்
    சொல்லுலகில் நல்லவளாய்ச் செப்ப லாகும்
பதிபாக்கிய முடையவளாம் யோக சாலி
    சான்றோர்கள் பத்திமிகும் வயது தீர்க்கம்.

10. ஜாதகனின் விவாஹகாலத்தை அறிவிப்போம். பதின்மூன்றாவது வயதிற்கு மேல் விவாஹம் நடை பெறும். அவளுடைய குணம் நிறம் முதலியவைகளைத் தெரிவிப்போம். சந்திரன் போன்ற முகமுள்ளவள். நன்னடக்கை உடையவள். மயில்போன்ற அழகிய தோற்றம் வாய்ந்தவள். மாநிறமுள்ளவள். அடக்க முடையவள். தன் வீட்டை நாடிவந்தவர்களுக்கு, முகமன் கூறி, அமுதளிப்பாள். பலவிரதங்களைச் சிரத்தையுடன் அனுஷ்டிப்பாள். எல்லோரும் இவளை நல்லவள் என்று போற்றிக் கொண்டாடுவார்கள். பால், தயிர் பாக்கிய முடையவள். மிக்க அதிருஷ்டசாலி. நல்லொழுக்கம் திகழும் பெரியோர்களிடம் பக்தி பூண்டவள். இவள் [ஜாதகனின் மனைவி] தீர்க்காளுயுடன் வெகுகாலம் சுகமாக வாழ்வாள்.

**வேறு.**

11. புத்திர விருத்தி தன்னைப் புகலவே பலத்தை காணோம்
சித்தமாய் உதித்தா லும்தான் தீங்காகு மென்று சொல்வோம்
அத்திரி தடுத்துச் சொல்வார் அறையுநீர்ப் புத்திர சங்கை
குத்தத்தைச் சொல்லு மென்னக் கூறுவார் பராசர் தாமும்.

11. இத்தம்பதிகளின் புத்திரர்களைப்பற்றி ஆராய்வோமானால் இவர்களுக்குப் பிள்ளைகள் தோன்றார்கள் என்றே சொல்ல வேண்டும். தோன்றினும் அழிவார்கள். இவ்வாறு சொல்லக் கேட்ட அத்திரி மறுத்துச் சொல்லுகின்றார். புத்திரதோஷத்திற்கான காரணங்களை விவரித்துக் கூறுவீராக என, பராசரர் அடுத்த பாட்டில் விளக்குகின்றார்.

12. அஞ்சினில் கேது தங்க அஞ்சவன் நீச மாகத்
தஞ்சமாய்ப் பாக்கி யத்தோன் தனக்குமே விரயம் புக்கத்
துஞ்சிடு மதலை யென்றேம் சேயன்முன் ஜன்மம் தன்னில்
மிஞ்சிய வினை அனேகம் மேவிற்றுப் பாலனுக்கு.

12. புத்திர பாவம் என்று சொல்லப்படும் ஐந்தாமிடத்தில் பாப கிரஹமாகிய கேது தங்கி இருப்பதாலும், ஐந்துக்குடைய செவ்வாய் கடகத்தில் நீசமாக இருப்பதாலும், புத்திர காரகனாகிய குரு, பாக்கியத்திற்கு—விரய ஸ்தானம் என்று ஜோதிட சாஸ்திரத்தில் கூறப்படும் எட்டாமிடத்தில் பலமற்று இருப்பதாலும் இச்ஜாதகனுக்கு ஆண் சந்ததி விருத்தி இல்லை. இவ்வாறு கிரஹங்கள் அமைந்திடுவதற்கும் காரணம் என்ன என்றால் முன்பிறவியில் இவன் ஏராளமாகச் செய்த பாவங்கள்தான் என்று அறிகிறோம்.

13. வினையதைப் புகல்வீரையா மேல்நாட்டில் வெளிகேர ளத்தில்
சினகுல மதிலு தித்துச் சேயர்கள் பாரி யுண்டாய்க்
கனமுள குடும்பி யாகிக் காதலி வாழு நாளில்
பிணையாக வந்த ஊழைப் பேசுவோம் முனியே கேளும்.

13. அவனுக் கேற்பட்ட வினைகளைச் சொல்லுவீர்களாக என ஒரு முனிவர் கேட்க, பாராசர முனிவர் பதில் உரைத்தார். இவன் முன்பிறவியில் மேல் நாட்டில் கேரள தேசத்தில் பிறந்து மனைவி மக்களுடன் பெரிய குடும்பியாக வாழும் காலத்தில் இவனுக்கேற்பட்ட பாவங்களைப் புகலுகின்றேன். முனியே ! கேளும்.

**வேறு.**

14. ஆலயம் தன்னில் மாதுவின்போகம் அனுகினன் அதுவோர்தோஷம்
சாலவே இல்லம் சடைவிஷம் வாசம் தான்மகு டத்தினால் வெளியில்
ஏலவே செல்ல அரங்க மெய்தும் ஏகாமல் மயங்கி நிற்கக்
காலன்தன் பதிக்குச் செலுத்தினனென்றோம் கலந்தது அவ்வினை
[தானே.

14. தேவாலயத்தில் இவன் ஒரு மாதோடு போகத்தை அனுபவித்தான். இ∴து ஒரு பெரிய பாவமல்லவா ? மற்றொரு பாவத்தையும் கூறுகின்றேன். இவன் வசித்துவரும் வீட்டில் நெடு நாளாக வாசம் செய்து வரும் பாம்பு ஒன்று தன் தலையை நீட்டிக் கொண்டு வெளியே செல்லும் போது, இன்னும் வேகமாகச் செல்லும்படி அதை இவன் துரத்த, அது புத்திகலங்கி நிற்கையில், இவன் அதை அடித்து யமனுலகம் அனுப்பிவிட்டான். அந்தப் பாவமும் இவனைப் பிடித்துக்கொண்டது.

**வேறு.**

15. மறையவர் சாபம் மருவிற்று என்றோம்
மைந்தனும் அந்தியம் தன்னில்
உறும்சுதர் நீங்கிப் பிணியினால் மாண்டு
உதிப்பன மிக்குலம் தன்னில்
வரும்சுதர் தோஷம் மருவிடு மென்றோம்
வரைகிறோம் வினைதீரச் சாந்தி
அரவுமே சிலையில் நீர்க்கரை வடபால்
அரசின்கீழ் விதிபோலே செய்து;

15. வேதமோதும் அந்தணர்களிடமும் இவன் அபசாரப்பட்டதால் அவர்களுடைய சாபமும் இவனுக்கு நேரிட்டது. ஆகையால் அந்தியத்தில் பிள்ளையற்றவனாக மாண்டான். அவனே இங்குக் கடகலக்னத்தில் பிறந்திருக்கின்றான். முன்ஜென்ம வினை இவனைச் சூழ்ந்துக் கொண்டிருப்பதால் புத்திர தோஷமுண்டு. ஆனால் அவ்வினை தீர்ந்து சந்ததி ஏற்படுவதற்கு ஒரு சாந்தியைச் சொல்லுகின்றோம். சிலையில் ஒரு நாகத்தைச் செய்து அதை, ஆறு குளம் முதலிய நீர் நிலையின் வடகரையிலுள்ள அரசமரத்தின் அடியில் சாஸ்திர முறைப்படிப் பிரதிஷ்டை செய்து;

16. அக்கினி இருக்கி பாரியும் தானும்
 அனுகியே தீர்த்தமும் தோய்ந்து
தக்கவே கிரியை வலமதாய் வந்து
 சங்கரர்க் கரிச்சித்து மேலும்
மூக்கிய மறையோர் மூவொன்பான் பேர்க்கு
 முதவுவாய் அன்னமு மென்ன
வக்கிரம் நீக்கிச் சுதராண்பால் ஒன்று
 மங்கைமார் மூவரும் தீர்க்கம்.

16. தானும் மனைவியும் தீர்த்தத்தில் நீராடி பிரதிஷ்டை செய்யப்பட்ட சர்ப்பத்தையும் அசுவத்த நாராயணனையும் [அரச மரத்தையும்] வலம் வந்து, அதன் பிறகு சிவபிரானுக்கு அபிஷேகம், அர்ச்சனை, நைவேத்யம் முதலியவைகளைச் சமர்ப்பித்து, பிறகு வேதமோதி ஆசார சீலர்களான இருபத்தேழு பிராம்மணோத்தமர்களுக்குப் பக்தி சிரத்தையுடன் அமுதளிப்பானாகில் இவனுடைய பாவம் நீங்கி ஓர் ஆண் குழந்தை பிறக்கும். இவனைத் தவிர மூன்று பெண்களும் பிறப்பார்கள். ஆக இந்நால்வரும் நீண்ட ஆயுளுடன் சுகமாக வாழ்வார்கள்.

17. மாதுரு குணத்தை வரைகிறோ மினிமேல்
 மாநிற முடையவ ளாகும்
ஓதுவாள் சுகமாய் வரனுக் கொத்தோள்
 உதித்தஇல் தென் திசையாகும்
காதலி யோகசாலியே யாகும்
 கடவுளர் பத்தியே பூண்பள்
பாதக மிலாள் துணைஆண்பா லொன்று
 பருகிடும் பூர்வமே பகர்வோம்.

17. இனி ஜாதகனின் தாயின் குணத்தைக் கூறுவோம். மாநிறமுள்ளவள். இனிமையாகப் பேசுவாள். தன் கணவன் இஷ்டப்படி நடப்பவள். அவள் பிறந்த வீடு தென்திசையில் உள்ளது. மிகவும் அதிருஷ்டமுடையவள். கடவுள் (மூர்த்தி) களிடம் வேற்றுமையின்றிப் பக்திபூண்டவள். பாவத்தில் சிறிதும் ஈடுபடாதவள். அவளுக்கு ஒரு சகோதரன் உண்டு. இவளுடைய பூர்வஜன்மத்தைக் கூறுவோம்.

வேறு.

18. சேதுவில் தீயின் வமிசம் ஜனித்துமே வறுமை யின்றிக்
காதலன் வறுமை யுண்டாய்க் கடந்தபேர்க் கன்ன மீந்து
மேதினில் பவமில்லாமல் மேவினுள் கால னூடு
மாதவன் வரையப் பட்டு வந்தவளிவளே யென்றேம்.

18. இவள் முன்பிறவியில் சேதுவில் வன்னியகுலத்தில் ஜனித்து, வறுமை இல்லாதவளாக வாழ்ந்து வந்தாள். கணவனை இழந்து அந்தியத்தில் பெரியோர்களுக்கு அமுதளித்தாள். ஒருவித பாவத்திலும் ஈடுபடாதவளாகவும் இருந்தாள். அந்தியத்தில் இறந்த இவளைப் பிரம்மதேவன் இங்குப் பிறப்பித்திருக்கின்றான். அவள்தான் ஜாதகனுக்குத் தாயாக நேர்ந்திருக்கிறாள்.

19. மறுஜன்மம் கொச்சி தன்னில் மருவுவாள் சௌராஷ்டர வமிசம்
திருமகள் விலாசம் பெற்றுச் செல்வதி வாழ்வா ளாகும்
உரைக்கிறேம் தந்தை பூர்வம் உயர்மலை பழனி தன்னில்
திருகிலாக் கங்கை சேயாய் ஜனித்துமே கிருஷி செய்தான்.

19. இவளுடைய மறுஜன்மத்தையும் கூறுவோம். இவள் மறுபிறவியில் கொச்சியில் சௌராஷ்டிர வமிசத்தில் பிறந்து லக்ஷ்மீகடாக்ஷம் பெற்றுச் சுகமாக வாழ்வாள். தந்தையின் முன்ஜன்மத்தைக் கூறுவோம். இவன் முன்பிறவியில் சிறந்த மலைக்ஷேத்திரமாகிய பழனியில் குற்றமற்ற வேளாள வமிசத்தில் பிறந்து விவசாயம் செய்து ஜீவித்து வந்தான்.

20. வெறுத்தபேர்க் குதவி செய்து மார்க்கத்தில் தாகப் பந்தல்
சாதித்துச் சேது சென்று சண்டன்தன் பதிக்கு புக்கிப்
புத்தியாய்ச் செப்பு வோம்யாம் இவன்பின் ஜன்மம் தன்னை
சத்தியாய்ப் பிரயாகை தன்னில் ஒப்புடன் பிரம்ம சேயாய்
(உறைகுவானென்று சொல்வோம்).

20. உலக சுங்களைத் துறந்து சந்நியாசம் பூண்ட பெரியோர்களுக்குத் தொண்டுபுரிந்தான். ஜனங்களின் நன்மைக்காகப் பாதையில் தாகப் பந்தல்களை நிறுவினான். க்ஷேத்திரங்களுள் சிறந்த சேதுவிற்குச் சென்று நீராடினான். கடைசி வயதில் மரணமடைந்து இப்பொழுது கடக லக்கின மகனுக்குத் தந்தையாக வாய்த்திருகின்றான். இவன் மறு பிறவியில் பிரயாகை க்ஷேத்திரத்தில் பிராம்மண குலத்தில் பிறப்பான்.

21. இந்தவோர் ஜன்மம் தன்னி லிவன்செய்த புண்ணிய மென்ன
முந்தவே கூறு மென்ன மேதினில் நல்லோ ருயும்
சிந்தையும் நல்ல தாயும் தேறின புத்தி யாயும்
கந்தன்மேல் பத்தி யாயும் கனத்ததோர் தலங்கள் சென்றான்.

21. மறு பிறவியில் பிராம்மண குலத்தில் பிறப்பதற்கான புண்ணியம் இப்பொழுது என்ன செய்திருக்கிறான். சொல்லுங்கள் என ஒரு முனிவர் கேட்க, பராசரர் பதில் உரைக்கின்றார். இவன் இப்பிறவியில் எல்லோருக்கும்

நல்லவனாக நடந்து கொண்டான். மனத்தில் தூய்மையுடன் வாழ்ந்தான். நல்ல விவேகம் படைத்திருந்தான். சுப்பிரமணியசுவாமியிடம் அதிக பக்தி பூண்டிருந்தான். பெரிய புண்ணிய ஸ்தலங்களுக்கு யாத்திரை சென்றான்.

22. அறமதி லிச்சை யாயும் அவனுமே வாழ்வ தாலே
உறைகுவான் முதல்கு லத்தில் உரைக்கிறேன் மன்னே கேதான்
மர்மமாய் நாற்ப தாண்டில் மடிவனே அன்னைத் தானும்
குருதசை ராகு புத்தி கூடிடு மந்தக் காலம்.

22. தருமம் செய்வதில் ஆர்வமுள்ளவனாகவும் வாழ்வதால் பிறவியில் இவன் நிச்சயமாகப் பிராம்மண குலத்தில் பிறப்பதற்கு தகுதி வாய்ந்தவன். ஆகையால் பிராம்மண குலத்தில்தான் பிறப்பான். ஜாதகனுடைய அன்னையின் மரண காலத்தை அறிவிக்கின்றேம். ஜாதகனுக்குக் குரு தசையில் ராகு புத்தி நடைபெறும்போது இவனுடைய நாற்பதாவது வயதில் ஜாதகனின் தாய் மரணமடைவாள்.

23. அறுபது ஒன்ப தாண்டில் அழகிய கன்னி மாதம்
திருமக னுடலம் ஏகும் ஜயமுனி தடுத்துச் சொல்வர்
அரவுதன் தசையி லேதான் அணுகிடும் மார கங்கள்
வருமாறு சொல்லு மென்ன மதிக்குமே ஆறில் பொன்னேன் ;

23. அறுபத்தொன்பதாவது வயதில் புரட்டாசி மாதத்தில் இக் கடக லக்கின மகன் தேக வியோகமடைவான். பராசர முனிவர் இவ்வாறு தீர்க் காயுளைச் சொல்லக்கேட்ட ஜயமுனிவர் மறுத்துக் கூறினர். ஜாதகனுக்கு ராகு தசை நடைபெறுகையில் [ஏழு வயதிற்கு மேல் இபத்தைந்து வயதிற் குள்] பல மாரகங்கள் நேர்ந்திருக்குமே! [அவைகளில் ஏதாகிலும் ஒன்றிற்குப் பலியாகி இருப்பான் என்பது கருத்து] ஏனெனில் இலக்கினாதிபதி யாகிய சந்திரனுக்கு ஆறுமிடத்தில் குரு தங்கி இருப்பதால் ;

24. இருப்பதால் கண்ட தோஷ மியம்பினேம் முனியே யாங்கள்
கருமத்தோன் புகரி னேடும் கலந்துமே ஜன்மம் தங்க
அருணனு மிரண்டில் தங்க அந்தண னிரண்டைப் பார்க்க
உருமகள் தாய்தந் தைக்கு உத்தமன் செய்வா டனாகும்.

24. இவனுக்குப் பல கண்டங்கள் வரும். இந்த ஆக்ஷேபத்திற்குப் பராசர முனிவர் வேறு காரணங்களைக் கொண்டு "இவன் தீர்க்காயுள் வாய்ந்தவன் தான்'' எனச் சமாதானம் கூறுகின்றார். இவன் தன் தாய் தந்தையர்களுக்குத் தன் கையினால் ஈமச் சடங்குகள் செய்வதற்குப் பாக்கியம் பெற்றவனாக இருக்கின்றான். அஃதெவ்வாறு எனில், கருமாதிபதியாகிய செவ்வாயும் நான்காமிடத்திற்கதிபதியாகிய சுக்கிரனும் லக்கினத்தில் தங்கி இருப்பதாலும், விரயஸ்தானாதிபதியாகிய புதன் குடும்பத்தில் இருக்க அவனைப்பாக்கியத்தோன் பார்ப்பதாலும் இவன் தன் கையால் தாய்தந்தையர்

களுக்குக் கருமம் செய்வான். ஆகையால் ராகுதசையில் ஏற்படும் கண்டங்களால் இறக்கமாட்டான். நாம் சொன்ன ஆயுள் வரையில் நிச்சயமாக வாழ்வான்.

25. தீர்க்கமாம் வயது முண்டு செப்புவோ மிவன்பின் ஜன்மம்
ஏற்கவே காளாத்தி தன்னி லிறங்குவா னிக்குலத்தில்
ஆர்க்கவே யிவனின் யோகம் அம்புலி போலே யோங்கும்
நாற்பதா யிரம்பொன் சேர்ப்பன் நடத்துவான் பரியும் வண்டி.

25. ஆகையால் தீர்க்காயுளுடன் வாழ்வான். இவனுடைய பின் பிறவியையும் கூறுவோம். இவன் மறு பிறவியில் காளஹஸ்தி க்ஷேத்திரத்தில் இதே ஜாதியில் பிறப்பான். ஜாதகனுடைய யோகம் ஒவ்வொருநாளும் வளர்பிறைச் சந்திரனைப்போல ஓங்கி வளரும். இவன் நாற்பதாயிரம் பொற்காசுகள் சம்பாதிப்பான். குதிரைவண்டி முதலிய வாஹன வசதிகள் உடையவனாகவும் ஆவான்.

26. பலவித வாணிபம் செய்வன் பரவுப காரம் செய்வன்
நிலையது மூன்று செய்வன் நிருபர்கள் மெச்ச வாழ்வன்
தலம்திருப் பணியும் செய்வன் சாற்றின மொழிகுன் றுவே
மலையிறை மகளே பின்பால் வழுத்துவோம் விவரம் தன்னே.

26. பலவித வியாபாரங்களைச் செய்வான். பிறர்க்கு உபகாரம் செய்து புகழையும் புண்ணியத்தையும் சம்பாதிப்பான். மூன்று வீடுகள் கட்டுவான். அரசர்கள் மதிக்கும் வகையில் வாழ்வான். புண்ணிய க்ஷேத்திரங்களில் கோயில்களுக்குத் திருப்பணி செய்வான். நாங்கள் சொன்ன மொழிகள் தவறா. பர்வதராஜனின் மகளே! பின்பகுதியில் இன்னும் அதிக விவரங்களைச் சொல்லுவோம்.

27. அன்னவன் ஜனன காலம் அத்தனுள் கடைபா தத்தில்
சந்திரன் தசையி ருப்புத் தங்கிடும் திங்கள் ரண்டும்
சொன்னனே பூர்வ பாகம் தோகைக்கு பிணியு மெய்தும்
கன்னன மொழியை யொக்கும் காதலி கேட்டிடாயே.

27. ஜாதகன் ஹஸ்த நக்ஷத்திரம் நான்காம்பாதத்தில் ஜெனித்திருக்கின்றான். ஆகவே சந்திர தசையில் இருப்பு மாதங்கள் இரண்டுதான். இந்த இரண்டு மாதங்களில் ஜாதகனுடைய தாய்க்குச் சிறிது நோய் காணும். கரும்பு போல் இனிய மொழிகளைக் கூறும் தேவியே! மேலும் எங்களைக் கேளுங்கள்.

## ஜாதகம் 41

1. அலவனும் ஜனன மாக அந்தணன் சேயும் தங்கப்
புலவனும் பானுரண்டில் புகர்மூன்றில் கேது ஐந்தில்
கலேஏழில் காரி ஆறில் கார்க்கோடன் லாபம் தங்கப்
பலனதைப் புகலு மென்று பார்வதி கேட்க லுற்ருள்.

| | | ராகு | |
|---|---|---|---|
| | இராசி சக்கரம் | | லக்கினம் குரு செவ்வாய் |
| சந்திரன் | | | புதன் சூரியன் |
| சனி | கேது | | சுக்கிரன் |

1. குரு செவ்வாய் கடகம், புதன் சூரியன் சிம்மம், சுக்கிரன் கன்னி, கேது விருச்சிகம், சந்திரன் மகரம், சனி தனுஸ், ராகு விருஷபம். இக்கிரக நிலேயின் பலன்களேச் சொல்லுவீர்களாக எனப் பார்வதிதேவி கேட்க லுற்ருள்.

2. பிருகுமே புகலு கின்ருர் பலன்களே மகனின் ஜன்மம்
வருமில்லம் வடதென் வீதி வாசலு மிந்திர நோக்கம்
அரன்கோஷ்டம் கீழ்ப்பா லாகும் யானேயின் கோஷ்ட மேற்கில்
நரிவாக னத்தாள் மஸ்தான் நல்கிடும் வடபா லாக.

2. பிருகு மஹரிஷி பலன்களேக் கூறுகின்ருர். இவன் பிறந்த வீதி வடக்குத் தெற்காக அமைந்திருக்கும். வீடு மேல்வரிசையில் இருப்பதால் கிழக்குத் திசையை நோக்கும். கீழ்த்திசையில் சிவபிரான் ஆலயம் திகழும். மேற்கில் யானேமுகத்தோனின் கோஷ்டம் விளங்கிடும். வட திசையில் காளிகோயிலும் மசூதியும் தங்கி இருக்கும்.

3. இன்னமும் பலதே வாசம் இலகிய சமஊ ராகும்
அன்னவன் செங்குந்த வமிசம் அருளுவா னென்று சொல்வோம்
தன்துணை களத்திரப்புத்திரர் தாய்தந்தை யுதித்தோன் யோகம்
முன்பின்ஜன் மங்கள் யாவும் உரைக்கிறோ மிந்நூல் தன்னில்.

3. இன்னும் பல தேவாலயங்களும் அவ்வூரில் விளங்கும். அஃது ஒரு நடுத்தர ஊராகும். இச்சாதகன் செங்குந்த வமிசத்தில் பிறந்தவன். தேவியே! இந் நூலில், ஜாதகனுடைய யோகத்தைப்பற்றியும், தாய் தந்தை சகோதரர் மனைவி புத்திரர் இவர்களைப்பற்றியும், முன்பின்ஜன்மங்களை யும் நாங்கள் தெரிவிக்கப்போகின்றோம்.

4. இவன்பிதா குணத்தைச் சொல்வே னின்பச்சொல் மாநி றத்தான்
தவனிலை யோர்க்கு நேயன் தரித் தொழில் புரிவா னாகும்
பவமன மில்லான் நல்லன் பரிந்துப சாரம் செய்வன்
நவனியில் பொய்கள் சொல்லான் நாயகி யிஷ்ட னவன்.

4. ஜாதகனின் தந்தையின் குணத்தைக் கூறுவேன். இவன் (தந்தை) இனிமையாகப் பேசுபவன். மாநிறம் வாய்ந்தவன். தவசிகளிடம் பக்தி கொண்டவன். நெசவுத் தொழிலைச் செய்து ஜீவிப்பான். கபடமில்லாதவன். மிகவும் சாது. வந்தவர்களுக்குப் பரிவுடன் உபசாரம் செய்வான். பொய் பேசாதவன். மனைவியிடத்தில் மிகவும் அன்புள்ளவன்.

5. அறுமுகன் பத்தி கொள்வன் அவசர மனத்த னாகும்
குருஉப தேசம் கொள்ளான் குணமது இரண்டு முண்டு
வரும்துணை ஆண்பால் தோஷம் மங்கையு மொருத்தி தீர்க்கம்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

5. ஆறுமுகனிடம் விசேஷ பக்தி பூண்டவன். முன் பின் யோசியாமல் அவசரப்பட்டுப் பேசுவான். செயலிலும் இறங்குவான். பெரியோர்களிடம் உபதேசம் கேளாதவன். நற்குணங்களும் சிறிது தீயகுணங்களும் உண்டு. இவனுக்குச் சகோதரன் இல்லை. ஒரு சகோதரி நீண்ட ஆயுளுடன் வாழ்வாள். கணேசரைப்பெற்ற தேவியே! மேலும் கேளுங்கள்.

6. இந்நெறி உடையா னுக்கு இப்பால னுதிப்பானாகும்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அவனிரு நிறத்தா னாகும்
தன்னுடல் மெலின முண்டு ஷண்முகன் பத்தி பூண்பன்
பின்னமில் லாத தேகி பிதாசுக மில்லானாகும்.

6. இவ்வாறு குணங்கள் அமைந்த மனிதனுக்கு இந்த ஜாதகன் மகனாகப் பிறந்திருக்கின்றான். ஜாதகனுடைய குணத்தைக் கூறுகின்றேன். கறுத்த மேனியான். மெலிந்த உடலுடையவன். சுப்பிரமணிய சுவாமியிடம் பக்தி உடையவன். சிறிதும் ஊனமில்லாத சரீரமுடையவன். தந்தையினால் சுகமடையாதவன்.

7. கல்விமானுகை யுண்டு கசடரை யுறவு கொள்ளான்
நல்லவ னுகி வாழ்வன் நவின்றிடான் கட்டு வார்த்தை
அல்லல்கள் அதிகம் உண்டு அவசர மனத்த னுகும்
தல்லிபால் பெருமை யேற்பன் தறித்தொழில் புரிவா னுகும்.

7. கல்வியறிவு உள்ளவன். சிறந்த மதியூகியாக இருப்பான். துஷ்டர் களின் நட்புக் கொள்ளாதவன். எல்லாருக்கும் நல்லவனுக வாழ்வான். அடுக்குச்சொற்களைப் பேசாதவன். வாழ்க்கையின் முற்பகுதியில் பல கஷ்டங் களை அனுபவிப்பான். அவசர மனம் படைத்தவன். தாயினுல் பெருமையை அடைவான். இவனும் நெசவுத்தொழிலேயே நடத்தி ஜீவிப்பான்.

8. தரணியைச் சேர்ப்பா னுகும் சஞ்சல மனத்த னுகும்
விரைவினில் நடக்க வல்லன் வெஞ்சமர் தன்னில் செல்லான்
குறையென்றோர்க் குதவி செய்வன் கொடுமையை வெளிக்காட்
[டாதான்
திருமாலின் நாமம் கொள்வன் சிலசில வாணிபம் செய்வன்.

8. அதிக பூமிகளைச் சம்பாதிப்பான். உறுதியில்லாமல் சஞ்சலப்படும் மனம் படைத்தவன். இவனது நடை துரிதமாக இருக்கும். கெட்டவழியில் செல்லாதவன். எளியவர்களுக்கு உதவிபுரிவான். கோபம் தோன்றிடி னும் வெளிக்காட்டாதவன். விஷ்ணுவின் பெயர் கொண்டவன். சிற்சில வியாபாரங்களையும் செய்வான்.

9. கடன்கொள்வன் நிவர்த்தி செய்வன் கரமதில் கமல ரேகை
விடவாக்குச் சங்கு சக்ரம் மேவிடும் வெளிம யக்கன்
உடன்துணை ஆண்பா லொன்று உரைக்கிறோம் தீர்க்கமாக
மடமயில் பெண்பா லொன்று மத்தியில் நசிக்கு மென்றோம்.

9. கடன் ஏற்பன். ஆனுல் நிவருத்தி செய்வான். கையில் கமலரேகை வாய்ந்தவன். இவனது வாக்கால் தீமைகளைக்கூறினுல் பலிதமாகும். சங்கு சக்கரரேகைகளும் கைகளில் திகழும். ஆடம்பரப்படுத்தும் இயல்புள்ளவன். இவனுக்குத் தீர்க்காயுளுடன் வாழும் சகோதரன் ஒருவன் உண்டு. ஒரு சகோதரியும் இருப்பாள். ஆனுல்அவள் வாழ்க்கையின் மத்தியில் இறப்பாள்.

10. சொல்லிய ஆண்பா லும்தான் சுதனுக்கு இளையோ னுகும்
வல்லிவன் தந்திர வார்த்தை மர்மத்தை வெளிக்காட் டாதான்
புல்லிய புத்தி கொஞ்சம் பேதையர் மோக னுவன்
வெல்லும்சொல் வெகுளி யாவன் வித்தையும் சமம தாகும்.

10. நாம் சொன்ன சகோதரன் ஜாதகனுக்கு இளையவன். அவன் தந்திர வார்த்தைகளைப் பேசுவான். ரஹஸ்யத்தை வெளியிடமாட்டான். சிறிது கீழான புத்தியுள்ளவன். பெண்களிடம் மோகம் வாய்ந்தவன். இவன், பேச்சினுலேயே காரியத்தைச் சாதிப்பான். ஆனுல் தன் மனத்தில் தோன்றிய எண்ணங்களை ஒளிக்காமல் சொல்லுவான். உலக வியவகாரங் களுக்குப் போதுமான கல்வியறிவு உடையவன்.

11. குலத்தொழில் புரிவா ருைகும் குண்டைகோ விருத்தி யற்பம்
விலைமாதர் மோகம் கொள்ளான் மேதினி விருத்தி செய்வன்
கலகத்தைக் கூறு நெஞ்சம் கண்முகம் வசிய முண்டு
நிலையதைக் காப்பா ருைகும் நினைத்ததை முடிக்க வல்லன்.

11. குலத்தொழிலாகிய நெசவுத்தொழிலால் ஜீவிப்பான். பசு காளை கள் இவனிடம் அதிகம் விருத்தியடையா. வேசிகளிடம் மையல் கொள் ளாதவன். பூமிகளை அபிவிருத்தி செய்வான். சிறிது கலகமூட்டும் வார்த்தையுண்டு. பிறரை வசப்படுத்தும் கண்களும் முகமும் வாய்ந்தவன். பிதுரார்ச்சிதமான வீட்டை அபிமானத்துடன் பாதுகாப்பான். தான் எண்ணிய காரியங்களை நிறைவேற்றும் ஆற்றல் படைத்தவன்.

12. பாரியு மொன்றே யாகும் பாலர்கள் ஆண்பால் ரண்டு
கூறுவோம் பெண்பா லவ்வாறு குறிக்கிறோம் தீர்க்க மாக
மாரனே டொத்து வாழ்ந்து விலகுவான் வேற தாக
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

12. அவனுக்கு மனைவி ஒருத்திதான். அவளுக்கு இரு பிள்ளைகளும் இரு பெண்களும் பிறப்பார்கள். அந் நால்வரும் தீர்க்கமாக வாழ்வார்கள். அவன் (தம்பி) ஜாதகனுடன் சிறிதுகாலம் ஒன்ருக வாழ்ந்து, பிறகு தனிக் குடும்ப மேற்பன். சுப்பிரமணிய சுவாமியைப் பெற்ற அன்னையே ! மேலும் கேளுங்கள்.

13. இன்னவன் மணத்தின் கால மியம்புவோ மிருபான்மூன்று
கன்னிகை உள்ளூர் கீழ்ப்பால் கலப்பளாம் குணத்தை சொல்வேன்
தன்னினத் தவரைக் காப்பள் தயவாளி யின்ம னத்தள்
முன்கோபம் உடனே தாழ்வு உயர்வான புத்தி யேற்பள்.

13. ஜாதகனுடைய மணத்தின் காலத்தைக் கூறுவோம். இருபத்து மூன்ருவது வயதில் விவாகம் நடைபெறும். மணப்பெண் இவன் வசிக்கும் ஊரிலேயே கிழக்கில் ஜனித்திருக்கின்ருள். அவளுடைய குணத்தையும் தெரிவிக்கின்றேன். தன் ஜாதியாரை அன்புடன் ஆதரிப்பாள். எல்லோ ரிடமும் கருணைகொண்டவள், இளகியமனம் படைத்தவள். முன்கோப முள்ளவள். ஆனல் உடனே சாந்தியடைவாள். உதாரபுத்தி உடையவள்.

14. அடக்கமும் புத்தி மேன்மை அடைந்தோரை ஆத ரிப்பள்
நடக்கையும் நல்ல தாகும் நளினமாய் வார்த்தை கூறுவள்
தடைசொலாள் வரனுக் கேதான் சார்ந்திடும் நாபிச் சூடு
கொடியிடை யோக சாலி கோதைக்கு வயது தீர்க்கம்.

14. மனத்தில் அடக்கம் வாய்ந்தவள். மதிநுட் பம் உடையவள். தன்னை அண்டியவர்களை ஆதரிப்பாள். நன்னடக்கை உடையவள். இனி மையாகப் பேசுவாள். தன் கணவனின் உத்தரவுப்படியே நடப்பாள். நாபி சூடு உடையவள். அவள் மிகவும் அதிருஷ்டமுடையவள். நீண்ட ஆயு ளுடனும் வாழ்வாள்.

15. புத்திர விருத்தியில்லாள் புகழ்ச்சியாய் உதித்தா லும்தான்
தீங்காகு மென்று சொல்வோம் குற்றத்தைச் சொல்லு மென்னக்
கேதுவு மஞ்சில் தங்கப் பத்தினுக் குடையோன் நீசம்
பதிந்ததால் சொன ஞேம் யாங்கள்சந்ததி இல்லை யென்று.

15. புத்திரபாவத்தைப்பற்றி ஆராய்ந்தால் புத்திரபாக்கியம் தோன்றுது என அறிகின்றேம். புத்திரர்கள் உதிப்பினும் நீடித்து வாழார்கள் என்று உறுதியாகச் சொல்லுவோம். அதற்கென்ன காரணமெனக் கேட்க, பிருகு முனிவர் கூறுகின்றர். ஐந்தாமிடத்தில் பாபகிரஹமாகிய கேது இருக்கின்றுன். ஐந்தாவது பத்தாவது ஸ்தானங்களுக்கு உடையவனுகிய செவ்வாய் நீசமாக இருக்கின்றுன். ஆகையால் இவனுக்குச் சந்ததி இல்லை.

16. இதுவின்றிப் பூர்வம் தன்னிலிவன்சில கொடுமை செய்தான்
அதனலே புத்திர தோஷம் அறிவிப்பீ ரந்தச் சங்கை
அதிபன்முன் ஜன்மம் சொல்வேன் மாயூரமருகில் கீழ் பால்
நதிகுலம் தனிலு தித்து ாயகி மதலே யுண்டாய்.

16. இவ்வாறு கிரஹங்கள் அமைவதற்குக் காரணம், இவன் முன் பிறவியில் சில கொடுமைகள் செய்ததேயாம். ஆகையால் கிரஹங்கள் மேலே சொன்னவாறு அமைந்து இவனுக்குச் சந்ததியின்மையைத் தெரிவிக்கின்றன. ஒரு முனிவர், அவனுக்கேறபட்ட வினையைச் சொல்லும்படி கேட்க, பிருகுரிஷி சொல்லுகின்றர். இவன், முன்பிறவியில் மாயூரத்திற்கு அருகில் கீழ்த்திசையில் ஓர் ஊரில் வேளாள வமிசத்தில் பிறந்து, மனைவி மக்களுடன்;

17. பெரிதான குடும்பி யாகிப் பூமியால் ஜீவித் தேதான்
வரு நாளில்வினையைச் சொல்வேன் மறையோர்க்குப்பொருளை யீந்து
முறியொன்று திட்டிக் கொண்டு வேந்தர்பால் அதனைக் காட்டித்
தரையதைத் தன்னக் கொண்டான் சதுர்மறை யோர் வெறுப்பான்
(சொல்லுவார் சாபம் தானும் தோன்றும்பின் ஜன்மம் தன்னில்.)

17. பெரிய குடும்பியாகி பூமிகளை உழுது பயிரிட்டு ஜீவித்துவந்தான். அவ்வாறு வாழும் நாளில் இவன் வேதபோதும் அந்தணர்களுக்குப் பொருளைக் கொடுத்து பத்திரம் தானே எழுதிக்கொண்டு அதை அரசரிடம் காண்பித்து அந்தப் பிராம்மணர்களுடைய நிலங்களை அபகரித்துக்கொண்டான். காரணமின்றி நிலத்தை இழந்த பிராம்மணர்கள் வருத்தமடைந்து சாபமிட்டனர்.

## ஜாதகம் 42

1. சந்திரன் மேகு வாகச் சனிகுரு மான தாகப்
புந்திபான் நந்தி யாகப் பூமகன் கேது மேடம்
மந்தரக்கயிறு கோலாம் மழைக்கோளு மீன மாக
இந்தவாறு கிரகம் நின்று லக்கினம் கடக மாக.

| | | | |
|---|---|---|---|
| சுக்கிரன் | செவ்வாய் கேது | புதன் சூரியன் | |
| | இராசி சக்கரம் | | லக்கினம் |
| சனி குரு | | | |
| சந்திரன் | | ராகு | |

1. சுபகிருத் வருஷம் வைகாசி மாதம் 12-ஆந் தேதி ஞாயிற்றுக்கிழமை பகல் நாழிகை 9-க்கு மேல் 14-க்குள் ஜனனம்.

**ஆங்கிலத் தேதி 25-5-1902.**

நவக்கிரஹங்களின் பாதசாரம்:—ரோஹிணி 1-இல் சூரியன். மூலம் 4-இல் சந்திரன். கிருத்திகை 1-இல் செவ்வாய் மிருகசீர்ஷம் 3-இல் புதன். அவிட்டம் 1-இல் சனி. ரேவதி 4-இல் சுக்கிரன். உத்தராடம் 3-இல் சனி. சுவாதி 2-இல் ராகு. அசுவினி 4-இல் கேது.

நக்ஷத்திரம் மூலம். கேது தசையில் இருப்பு வருஷம் ஒன்று, மாதம் ஒன்று.

**குறிப்பு.**—இந்நூலாசிரியர் கருத்தின்படி மிருகசீர்ஷம் 2-இல் புதன். சந்திரன் தனுஸ், சனி குரு மகரம், புதன் சூரியன் விருஷபம், செவ்வாய் கேது மேஷம், ராகு துலாம், சுக்கிரன் மீனம். இலக்கினம் கடகம். இவ்வாறு கிரஹங்கள் நின்றால் என்ன பலன்? சொல்லுவீர்களாக எனப் பார்வதி வினவினள்.

2. சொல்லுவீர் பலனை என்று சுந்தரி கேட்கும் போது
வல்லவர் வதிஷ்டர் சொல்வர் ஆணது ஜனன மாகும்
இல்லமும் கீழ்மேல் வீதியமன்பார்வை கீழ்ப்பால் காளி
அல்லலை அகற்று கின்ற யானையின் கோஷ்டம் மேல்பால்.

2. இவ்வாறு பரமேசுவரி கேட்கும்போது தபோமகிமைவாய்ந்த வசிஷ்ட முனிவர் கூறுகின்றார். இக்கிரஹ நிலையில் பிறந்தவன் ஆண், வீதி கிழக்கு மேற்காக அமைந்திருக்கும். வீடு தென் திசையை நோக்கி இருக்கும். கிழக்குத்திசையில் பத்திரகாளி கோயில் உண்டு. மேற்குத் திசையில் விக்கினங்களைப் போக்குகின்ற விநாயகரது ஆலயமுண்டு.

3. நேரிடும் சிலநாள் சென்று நிகழ்த்துவோம் சிறுஊர் தன்னில்
ஆறுவது ஜனன மாகும் அக்கினி குலமே யென்றோம்
மாரன் தன் குடும்பச் சேதி கூறுகிறோ மிந்நூல் தன்னில்
தீரமாய நதவங்கள செய்யும் செல்வதி கேட்டி டாயே.

3. இச்சாதகன் பிறந்த சிலநாட்களுக்குப் பிறகு ஸ்தாபிதமாகும். பிறந்த ஊர் சிறியதாகும். வன்னியகுலம். இவன் குடும்பத்திற்கு ஆறுவது குழந்தை. தேவியே! நாங்கள் இந்நூலில் அவனது குடும்ப வரலாறுகளை எல்லாம் தெரிவிக்கப்போகின்றோம். கேட்பீராக.

வேறு

4. தந்தைதுணை கூறுகின்றோம் தசமே யாகும்
சாற்றுகிறோம் ஆண்பால்ரண்டு கன்னி அவ்வாறு
இந்நவாறு தீர்க்கமெய்தும் ஆண்பா லும்தான்
இளையவனுய்த் தான்புகல்வோம் ஒன்றாய் வாழ்ந்து
பிந்தியு நாலாண்டதனில வேறாய்ச் செல்வர்
பாகமது மூன்றாகும் தாதை அவ்வாறு
அந்தவர்கள் சேதியெல்லாம் பின்பா கத்தில்
அறிவிப்போம் விவரமதாய் அம்மை கேளாய்.

4. முதலில் தந்தையின் சகோதரபாவத்தைக் கூறுகின்றோம். அவனுக்குப் பத்து உடன் பிறந்தார்கள் தோன்றுவார்கள். அவர்களில் இரண்டு சகோதரர் களும் இரண்டு சகோதரிகளும் நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள். சகோதரர் கள் இளையவர் என்றும் சொல்லுவோம். அவர்கள் எல்லோரும் ஒன்றாகவே குடும்பத்தை நடத்துவார்கள். இச்சாதகன் பிறந்து நான்காவது ஆண்டில் குடும்பப் பிரிவினை செய்துகொண்டு தனித் தனியே வாழ்வார்கள். சொத்துக் களும் மூன்று பாகமாகப் பிரிக்கப்படும். அவர்களைப்பற்றிய விவரங்களைப் பின் பாகத்தில் சொல்வோம். அன்னையே! கேளுங்கள்.

5. அம்மையே தந்தைகுணம் மாஞ்சி வப்பன்
அறிவோர்கள் நேசமுறும் சீல னவன்
நம்பினோ தம்மைக் காப்பன் கிருஷி செய்வன்
நற்கல்வி ஊகமுளன் அடக்க மாவன்
செம்மையாய்க் குடும்பமதை தாதை நாளில்
சிலுகுண்டு அதனபிறகு சயயோ கம்தான்
வெம்புமனம் நிதிகாணன் பழியு மேற்பன்
வேல்முருகன் பக்திகொள்வன் வீரனுமே.

5. இப்பொழுது தந்தையின் குணத்தைக் கூறுவோம். மாந்தளிர் போல் சிவந்தவன். சிறந்த அறிவாளிகளுடன் நேசம் கொள்வன். நற்சீலம் வாய்ந்தவன். அவனை நம்பினவர்களைக் கைவிடாமல் காப்பாற்றுவான். ஊக்கத்துடன் விவசாயம் செய்வான். சிறந்த கல்வி கற்றவன். மதிநுட்பம் வாய்ந்தவன். அடக்கமுள்ளவன். அவன் தந்தை உயிரோடு இருக்கும் வரையில் குடும்பம் செழிப்புடன் விளங்கும். அதன் பிறகு சமமான நிலைதான். சிற்சில சமயங்களில் மனக்கவலையும் ஏற்படும். பண மில்லாதவனுவான். சில அவதூறுகளும் ஏற்படும். வேலாயுதம் தாங்கிய முருகனிடம் விசேஷபக்தி கொண்டவன். வீரம் பொருந்தியவனாகவும் திகழ்வான்.

**வேறு**

6. ஆன துணைவர் தலேம்மா அலேச்சல் குடியும் வேருகும்
போமே தந்தம் மத்திப்பிணி தோன்றி நீங்கும் புண்ணியவான்
தீமை யெவர்க்கு மெண்ணுதான் செய்வான் தந்தி கோஷ்டமது
மாமன்னர்கள் மெச்ச உய்வன் மறையோர் நேசம் தான் கொள்
[வன்.

6. இவனுடைய ஐந்து சகோதரர்களால் அலேச்சல் ஏற்படும். குடும்பப் பிரிவினைக்கும் அவர்கள் தான் காரணமாவார்கள். இவனுடைய பற்கள் றுப்போகும். நோய் கண்டு நீங்கும், ஒருவருக்கும் தீமை எண்ணுதவன். விநாயகருக்கு ஒரு கோயில் நிருமாணம் செய்வான். அந்தணர்களுடைய நட்பும் இவனுக்கு இருக்கும். அரசர்களும் கொண்டாடும்படி வாழ்வான்.

**வேறு**

7. கொள்ளவும் விற்க வல்லவன் சமர்த்தன்
கொடியிடை மனதுபோல் நேசன்
கள்ளமு மில்லான் கட்டுரை பகரான்
கடந்தோர்க்கு அன்னமு மீவன்
விள்ளவே யுரைப்பன் பூமியும் சேர்ப்பன்
மேன்மையாய்க் கூவலும் செய்வன்
தள்ளிடான் பெரியோர் வார்த்தைகள் தன்னை
சங்கரி கேட்டிடு வாயே.

7. பொருள்களை வாங்குவதிலும் விற்பதிலும் கெட்டிக்காரன் [பொருள்களின் மதிப்பை நன்கறிந்தவன் என்பது கருத்து.] தன் மனைவியின் இஷ்டப்படி நடந்துகொள்வான். கள்ளமில்லாதவன். அடுக்குச் சொற்களைப் பேசுவதில் விருப்பமில்லாதவன். துறவிகளுக்குச் சிரத்தையுடன் அமுதளிப்பான். பிறர் சந்தேகிக்க முடியாதபடி தெளிவாகப் பேசுவான். பூமிகளைச் சம்பாதிப்பான். பெரிய கிணறு தோட்டம் முதலியவைகளை நிறுவுவான். பெரியோர்கள் வார்த்தைகளை அவமதிக்காமல் அவைகளின்படியே நடப்பான். ஈசுவரி ! மேலும் கேளுங்கள்.

வேறு.

8. சொன்னஇக் குணத்தா னுக்குத் தோன்று வானிந்தப் பாலன்
அன்னவன் குணத்தைச் சொல்வேனஅழகுளான் சிவந்த
[மேனி
உன்னதக் கல்வி கற்பன் உண்மையா மனத்த னுகும்
மன்னர்க ளுறவு கொள்வன் மாநிலம் விருத்தி செய்வன்.

8. நாம் இப்பொழுது சொன்ன குணமுள்ள மனிதனுக்கு இக் கடகலக்கின மகன் புத்திரனுகத் தோன்றி இருக்கின்றுன். இனி ஜாதக னுடைய குணங்களைக் கூறுவேன். இவன் அழகு வாயந்தவன். சிவந்த மேனியான். மேன்மையான கல்வி கற்பான். உண்மையான உள்ளம் படைத்தவன். அரசர்களுடைய நட்புக் கொண்டவன். சிறந்த நிலங்களை மேன்மேலும் அபிவிருத்தி செய்வான்.

9. பலவிதச் செட்டுச் செய்வன் பணிந்தோரை ஆத ரிப்பன்
குலத்துளோர் மதிக்க வாழ்வன் கோவுகள் விருத்தியுண்டு
நலமதை எவர்க்கும் செய்வன் நாட்டினில் சல்லியம் காணுன்
தலமது வேறு செய்வன் சகடுவா கனமு மேற்பன்.

9. பலவித வியாபாரம் செய்வான். தாழ்ந்தவர்களை [சேவகர்களை] ஆதரிப்பான். தன் குலத்தினர் மதிக்க வாழ்வான். [அவர்கள் வாழ்வதை விட மேலாக வாழ்வான்.] பசுக்களையும் அபிவிருத்தி செய்வான். எல்லோருக்கும் இவன் நன்மைகளையே புரிவான்; கடன் இராது. புதியதொரு வீடுகட்டுவான். வண்டி முதலிய வாஹன சௌக்கியங்களும் இருக்கும்.

10. தந்தைமேல் வாழ்வா னுகும் சாராள்கள் சேர்பபா னுகும்
தந்தையின் தந்தை போலே தான்வாழ்வான் ஊக சாலீ
தந்தமும் தரள மொக்கும் சம்பத்து முடைய னுகும்
தந்தைசொல் கடவா னுகும் ஜயமுனி புகலு கின்றுர்.

10. தந்தையைக் காட்டிலும் சிறப்பாக வாழ்ந்திடுவான். அதிகப் பணியாட்களை அடைவான். இவனுடைய வாழ்க்கை பாட்டனுர் வாழ்க்கை போலச் சிறப்பாக இருக்கும். மிக்க மதியூகியாகவும் இருப்பான். பற்கள் முத்துப் போல் பிரகாசிக்கும். ஐசுவரியம் உடையவனுகவும் விளங்குவான். தந்தையின் சொல்லை மீருதவன். இவ்வாறு விசேஷப் பலன்களைச் சொல்லக் கேட்ட ஜயமுனிவர் கூறுவார்.

11. யோகமெவ் விதமாய்ச் சொன்னீர் உரைப்பீர்க ளந்தச் சஙகை
பாகனும் பருதி லாபம் பார்மகன் ஆட்சி யாக
மோகமாய்ப் புகரு முச்சம் உயர்குரு சனியு மேழில்
ஆகவே யிருப் பதாலே அளகேச யோக முண்டு.

**11.** யோக பலன்களைச் சொல்லுவதற்குக் காரணம் என்ன? அதை விளக்குவீர்களாக என, பிருகு முனிவர் பதில் தெரிவிக்கின்றார். குடும்பாதிபனாகிய சூரியனும்புதனும் லாபத்தில் இருக்கிறார்கள். ராஜயோக காரகனாகிய செவ்வாய் பத்தாமிடத்தில் ஆட்சியாக இருக்கின்றான். சுகலாபாதிபதியான சுக்கிரன் உச்சன். சனியும் குருவும் ஏழாவது கேந்திரத்தில் விளங்குகிறார்கள். இவ்வாறு கிரஹங்கள் அமைந்திருப்பதால் இவனுக்கு குபேர யோகமுண்டு.

வேறு.

**12.** சுனபா யோக மொன்றுண்டு செப்பும் பலன்கள் விசேஷமதாய்க்
கனமாம் புகழும் செட்டுமிகும் கனத்த புத்தி கடவுள்பக்தி
இனமும் மெச்சும் எதிரிகளும் இறக்க மாகும் என உரைததோம்
அன்னம் ஈவன் அதிதிகட்கு அடைந்தோர் தம்மை ஆதரிப்பன்.

**12.** ஸுனபா என்ற ஒரு யோகமும் இவனுக்கிருக்கிறது. ஆகையால் விசேஷ பலன்களைச் சொன்னோம். இன்னும் சில பலன்களையும் தெரிவிக்கின்றோம். கேளுங்கள். இவனுக்குப் பெரிய புகழ் உண்டாகும். வியாபாரம் ஓங்கி வளரும். உதார மனப்பான்மை வாய்ந்தவன். கடவுள் பக்தி பூண்டவன். இனத்தார்களும் இவனைக் கொண்டாடுவார்கள். பகைவர்களும் இவனுககுப் பணிவார்கள். தாயே! இவன் அதிதிகளுக்கும் மற்றவர்களுக்கும் விசேஷமாக அன்னதானம் செய்வான்.

**13.** தன்துணை முன்பெண் ரெண்டு தங்கிடும் தீர்க்க மாக
பின்துணை ஆண்பா லொன்று பேதையு மவ்வாறு தீர்க்கம்
அன்னவர் சேதி யாவும் அறிவிப்போம் பின்பால் சேதி
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே.

**13.** இவனுக்கு மூத்த சகோதரிகள் இருவர். அவர்கள் தீர்க்கமாக வாழ்வார்கள். இவனுக்குப் பின் பிறந்த ஒரு சகோதரனும் ஒரு சகோதரியும் உண்டு. அவர்களும் நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள். அவர்களுடைய வரலாறுகளைப் பின் பாகத்தில் அறிவிப்போம். கணேசரை ஈன்ற அன்னையே! மேலும் கேளுங்கள்.

**14.** அன்னையின் குணத்தை சொல்வே னழகுளாள் முன்கோ
பத்தாள்
தன்சொலே மேன்மை யாகச் சாதிப்பாள் சமயோ கத்தள்
பின்புத்தி யுடையா ளாகும் பூவையும் தீர்க்க சீவி
பன்னியே பேசு வாளாம் பணிந்தோரை ஆத ரிப்பள்

**14.** இனி ஜாதகனுடைய தாயின் குணங்களைக் கூறுவோம். அவள் மிகவும் அழகு வாய்ந்தவள். முன் கோபமுண்டு. தான் சொன்னதே சரி என்று பிடிவாதம் செய்வாள். சமயோகம உடையவள்தான். பின்புத்தியுள்ளவள் தீர்க்காயுள் வாய்ந்தவள். பன்னிப் பன்னிப் பேசும் இயல்புள்ளவள். பணிந்தவர்களுக்கு ஆதரவளிப்பாள்.

15. மாந்தளிர் மேனி யாகும் மாதுரு இல்லம் தெண்மேல்
ஏந்திழை துணை ஆண் ரண்டு எய்திடும் கன்னி அவ்வாறு
சேர்ந்திடும் மற்ற தெல்லாம் தோகையின் பூர்வம் கேளாய்ச்
சாந்திநா தீசர் வாழுமந் நகர் தன்னி லேதான்.

15. மாந்தளிர் போன்ற மேனியாள். அவள் பிறந்த வீடு தென் திசையில் உள்ளது. அவளுக்கு இரு சகோதரர்களும், இரு சகோதரிகளும் உண்டு. மற்றைய உடன் பிறந்தார்கள் சேதமாவார்கள். இவளுடைய முன் பிறவியைச் சொல்லுகின்றேன். இவள் முன் ஜன்மத்தில் சாந்தி நாதீசர் எழுந்தருளி இருக்கும் புண்ணிய நகரில் ;

16. பிறந்தனள் செங்குந்த வம்சம் பேதைக்கு மதலை யுண்டாய்
சிறந்ததோர் குடும்பி யாகித் தேவிக்குப் பவமில் லாமல்
மறலியின் பதிக்குப் புக்கி மலாயன் வரையப்பட்டு
திருகிலா இக் குலத்தில் ஜனித்தன ளென்று சொல்வோம்.

16. செங்குந்த வமிசத்தில் பிறந்து கணவன் குழந்தைகளுடன் பெரிய குடும்பமுள்ளவளாக வாழ்ந்தாள். சிறிதும் பாவத்தைச் செய்யாமல் வாழ்க்கையை நடத்தி இறந்த இவள் இக்குலத்தில் பிறந்து இப் பாலகனுக் குத் தாயாக நேர்ந்திருக்கின்றாள்.

17. மறுஜென்மம் வள்ளூர் கீழ்பால் மருவிய பேரூர் தன்னில்
உறைகுவா ளிக்கு லத்தில் உயர்வான குடும்ப மேற்பள்
பெரும் தந்தை பூர்வம் சொல்வேன் பட்சியின் மலையி லேதான்
திருகிலா பிரம்ம சேயாய் ஜெனித்துமே கிருஷி செய்து

17. இவள் மறு பிறவியில் திருவள்ளூருக்குக் கீழ்த்திசையிலுள்ளதொரு பெரிய ஊரில் இதே ஜாதியில் பிறப்பாள். பெரிய குடும்பியாகவும் விளங்கு வாள். ஜாதகனுடைய தந்தையின் முன் பிறவியைக் கூறுகின்றேன். பக்ஷி தீர்த்தம் என்று சொல்லப்படும் திருக்கழுக்குன்றத்தில் பிராம்மண குலத் தில் விவசாயம் செய்து ஜீவித்து வந்தான்.

18. பாரியு மதலை யுண்டாய் பாக்கிய முடையா னாகித்
தீரனும் வாழு நாளில் தந்தை சொல் தடுத்து வாழ்ந்தவன்
காரிகை ஒருத்தி பேரில் காணாத வார்த்தை சொன்னான்
நாரியும் மனவெ றுப்பால் நவின்றிட்ட சாபம் கேண்மோ.

18. மனைவி மக்களுடன் ஐசுவரியம் படைத்தவனாக வாழுங் காலத்தில் இவன் தன் தந்தையின் சொல்லைத் தடுத்தும், மீறியும் நடந்தான். ஒரு பெண் பேரில் அபாண்டமான பழிகளைச் சொல்லி அவளுக்கு அபகீர்த்தியை உண்டுபண்ண, அதனால் வருந்திய அவள் இட்ட சாபத்தைக் கேளுங்கள்.

19. நிந்தைகள் சொன்ன பாவி நேரும் பின்ஜென்மம் தன்னில்
தந்தங்கள் குறைவதாயும் சல்லிய பாதை யாயும்
முன் சுதர் முதலில் பீடை ஓங்கிடு மென்று சொன்னாள்
பின்னமா யந்தச் சாபம் புக்கிற்று இச் ஜென்மத்தில்.

19. காரணமின்றி என்பேரில் நிந்தைகளைச் சொன்ன பாவியாகிய நீ மறு பிறவியில் பற்கள் உடைந்தவனாகவும், கடன் தொந்தரவுகள் உள்ளவனாக வும், முன் ஜனித்த குழந்தைகளால் கஷ்டத்தை அடைந்தவனாகவும் வாழ் வாய் என அவள் விடுத்த சாபம் இச் சென்மத்தில் இவனைப் பிடித்துக் கொண்டது.

20. தரளமும் குறைவ தாயும் தனமது இல்லா தாயும்
திருகாக வாழ்வா னென்றோம் ஜயமுனி தடுத்துச் சொல்வார்
மறைக்குல முதித்தோ னிங்கு வன்னிய குலத்தே தோன்ற
உறைகுவீ ரந்த சங்கை உரைக்கிறோம் முனியே கேளும்.

20. ஆகையால் பற்கள் தேய்ந்தன. பணமில்லாமல் கஷ்டப் டுவான் என்று முன்னமேயே சொன்னோம். முன் பிறவியில் பிராம்மண குலத்தில் பிறந்த இவன் இப் பிரவியில் வன்னிய குலத்தில் உதிப்பதற்குக் காரணம் என்ன '' என்று ஜெயமுனி கேட்க பிருகு முனிவர் பதில் உரைக்கின்றார்.

21. முன்குலம் தனிலு தித்து வேதங்கள் ஓதா தாலும்
வன்னிய குலத்தில் வந்தான் வரைகிறே மிவன்பின் ஜன்மம்
பின்ஜன்மம் குமரி தன்னில் கலப்பனும் பிரம்ம சேயாய்
அன்னவ னிச்சென் மத்தில் அடைந்தபுண்ணியங்க ளென்ன.

21. முதல் குலமாகிய பிராம்மண குலத்தில் உதித்தும் வேதமோதாமல் இருந்தான். ஆகையால் வன்னிய குலதகில் பிறந்திருக்கின்றான். இவனுடைய பின் பிறவியைக் கூறுவோம். மறுஜன்மத்தில் இவன் கன்னியா குமரியில் பிராம்மண ஜாதியில் பிறப்பான் எனச் சொல்லக்கேட்ட முனிவர்கள், அதற்கென்ன காரணம் என்று வினவினர்.

22. அறுமுகன் பத்தி யாயும் யானையின் கோஷ்டம் செய்தும்
சிறியோர்கட் குதவி செய்தும் செய்நன்றி மறவா தாலும்
தருமமாம் குணத்த னுயும் தரணியில் வாழ்வ தாலே
மறைக்குல முதிப்பானு கும் மங்கையே கேட்டி டாயே.

22. சுப்பிரமணிய சுவாமியிடம் பக்தி பூண்டும் விநாயகருக்கு ஓர் ஆலயம் நிர்மாணம் செய்தும் எளியவர்க்கு உதவி புரிந்தும் நன்றியுடனும் இவை களைத் தவிர நற்குணங்கள் வாய்ந்தவனாகவும் வாழ்வதால் மறு பிறவியில் பிராம்மண குலத்தில் உதிப்பான் தேவியே ! மேலும் கேட்பீராக.

வேறு

23. வந்தவர் மணத்தின் காலமதை
வரையக் கேண்மோ இருபதினில்
தென மேல் பாரி அன்னவர்க்கம்
சேர்வாள் குணத்தைத் தான் புகல்வோம்
கன்னல் மொழியும் ஈகையுண்டு
கடந்தோர்க் கன்னம் தானீவள்
சொன்ன மொழியும் சுகமாகும்
சிவந்த மேனி பொறுமை யுணடு.

23. ஜாதகனுடைய விவாஹ காலத்தை அறிவிக்கின்றோம்; கேளுங்கள். இருபதாவது வயதில் இவனுக்கு விவாஹம் நடைபெறும். மணப்பெண் தென் மேற்கில் தாய் வர்க்கத்தில் ஜனித்திருப்பாள். அவளுடைய குணத்தைக் கூறுகின்றோம். கரும்புபோல் இனிமையான வார்த்தைகளைப் பேசுவாள். தியாக குணம் படைத்தவள். தவசிகளுக்கும் மற்றவர்களுக்கும் அமுதளிப்பாள். சுகமாகப் பேசுபவள். சிவந்த மேனியாள். பொறுமை உடையவளாகவும் இருப்பாள்.

24. பெரிதாய்க் குடும்பி யில்பாக்கியம்
பெறுவள் அழகிற் கினியாளாம்
அறிவோர் புத்தி வறுமையில்லாள்
ஆளன் மனதுக் கேற்றவளாம்
திருமா தொபபாம் வயது தீர்க்கம்
செப்பு மதலை தான்மதித்து
உரைப்பர் அத்திரி பாலனுக்கு
உள்ளபடியே தார மிரண்டு.

24. பெரிய குடும்பியாவாள். அதிக பாக்கியத்தையும் பெறுவாள். அழகிகளில் சிறந்தவள். அறிவாளிகளின் புத்தியை ஏற்றுக்கொள்வாள். வறுமை இல்லாதவள். தன் கணவன் மனத்திற்கேற்றபடி நடப்பாள். லக்ஷ்மிபோன்றவள். தீர்க்காயுள் வாய்ந்தவள். இவ்வாறு சொல்லகேட்ட அத்திரி பாலனுக்கு இரு மனைவிகள் ஏற்படுவார்கள் என்று நாங்கள் சொல்வோம்.

25. இருதார மணுகும் காரணம் புகல்வீர்
ஏழிடம் குருசனி யிருக்க
சரராசி யாக நீச்சனுய்ப் பொன்னும்
சர்ப்பமும் நாலிலே தங்க
வருமனை யிரண்டு வரைந்தனம் தாயே
வசிஷ்டரும் தடுத்துமே புகல்வார்
பருதியும் லாபம் பார்க்கவன் பாக்கியம்
பணிமதி நடப்ப தாயிருக்க.

25. இரு மனைவிகள் ஏற்படுவார்கள் என்பதற்குக் காரணம் என்னவென்றால் களத்திர ஸ்தானத்திற்கு உடைய சனி சர ராசியாகிய மகரத்தில் இருப்பதாலும் அங்கு நீச கிரஹமாகிய குரு இருப்பதாலும், சுக ஸ்தானத்தில் அசுபக் கோளாகிய ராகு இருப்பதாலும் இவனுக்கு இரு மனைவிகள் உண்டு. இவ்வாறு அத்திரி சொன்னவுடன் வசிஷ்டர் சொன்னார். குடும்பாதிபதி சூரியன் லாபத்திலும், சுகாதிபதியான சுக்கிரன் பாக்கியத்திலும் [உச்சனாக] இருப்பதால்,

---

குறிப்பு.—மூத்த மனைவி இறந்து மறு மனைவி ஏற்படுவாள் என்பது கருத்து.

26. மறுமனை காணுன் மாதுக்கு இருபத்தாறுண்டில்
மங்கிலிய மணிகுவா னென்றேம்
வருயாறு புகல்வீர் சோரரால் சொறிந்து
மறுமுத்திரை அணிகுவா ருகும்
திருகாகும் காலம் செப்புவீர் முனியே
ஜாதகன் முப்பத்தா றுண்டில்
குறைவுறு மென்றேம் தாரமே ஒன்று
கூறின மொழிகள் குன்றுவே.

26. மூத்த மனைவி இறந்து மறு மனைவி ஏற்படமாட்டாள். ஆனாலும், மூத்த மனைவியின் இருபத்தாருவது வயதில் இவனை வேறு ஒரு மனைவி வந்து அடைவாள். அவளையும் இவன் இஷ்ட மனைவியாகக் கொண்டு விடுவான். மணம் நடைபெறாது. அந்நிகழ்ச்சியும் ஜாதகனுடைய முப்பத்தாருவது வயதில் நடைபெறும். ஆகவே, சாஸ்திர முறைப்படி மணந்துகொண்ட மனைவி இவனுக்கு ஒருத்திதான்.

27. இதற்குநே ரிடையாய்ச் சாதக சுருதியி
லேழாம்பா வத்தினில் பாரு
அதில்சொல்லும் விவரம் இரண்டே ழோன்கேந்திரம்
ஆகினும் கோணம் லா பத்தில்
சதிருட னிருக்கத் தாரமு மொன்றே
சாற்றினேம் விவரமாய்க் காண்பாய்
அதுவின்றி வர்கில் பரவுமே ஒன்று
அறைந்தனம் தாரமும் தீர்க்கம்.

27. இதற்கு அனுகூலமான ஆதாரத்தைச் சோதிட சாஸ்திரத்தில் ஏழாம்பாவத்தைப் பற்றி ஆராயும் அத்தியாத்தில் காண்க. அஃதென்ன வெனில் இரண்டாம் பாவத்திற்கும் ஏழாம் பாவத்திற்கும் உடையவர்கள் கேந்திரத்திலோ திரிகோணத்திலோ லாபஸ்தானத்திலோ இருப் பார்களேயானுல், மேலே கூறப்பட்ட ஸ்தானங்கள் சரமாக இருப் பினும் தாரம் ஒன்றுதான் என்பதாம். ஆகையால் நாம் சொன்னபடி தாரம் ஒன்றுதான். அவளும் தீர்க்கமாக வாழ்வாள். அபிமான மனைவி ஒருத்தி சேருவாள்.

வேறு

28. சுதர்களு மிருநான் காகத் தோன்றிடு மதிலாண் ரண்டு
அதிபதி மூன்று மாகும் வந்துமே தீர்க்க மெய்தும்
முதல்நான்கும் ஏழும் சேதம் மொழியது தப்பா தாகும்
அதிதியை ஆத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

28. இத்தம்பதிகளுக்கு எட்டுக் குழந்தைகள் பிறப்பார்கள். அவர்களில் இரு ஆண்களும் மூன்று பெண்களும் தீர்க்கமாக வாழ்வார்கள். முதலாவது நான்காவது ஏழாவது குழந்தைகள் நாசத்தை அடையும். நாங்கள் சொன்னவார்த்தைகள் தவருு. தேவர்களை ஆதரிக்கும் அன்னையே! மேலும் கேட்பீராக.

29. முன்னவ னிருந்த ஜன்மம் மொழிகுறோம் திருவா ரூரில்
அன்னவன் வடுக ஞக அனுகியே மனைவி மைந்தர்
மன்னனால் அதிகா ரங்கள் மருவியே அறத்தி லிச்சை
உன்னத தலங்கள் சென்று உறைந்தனன் கால ஞடு.

29. ஜாதகனுடைய பூர்வஜன்மத்தைக் கூறுகின்றோம். இவன் முன் பிறவியில் திருவாரூரில் நாயக வமிசத்தில் பிறந்து மனைவிமக்களுடன் சுகமாக வாழ்ந்தான். அரசர்களால் அதிகார ஸ்தானங்களைப் பெற்று இருந்தான். தான தருமங்களில் பற்றுள்ளவனுய்ப் பல புண்ணிய ஸ்தலங்களுக்கு யாத்திரை சென்று கடைசியாக இறந்தான்.

30. சிரநான்கோன் வரையப் பட்டு ஜனிப்பனு மிக்கு லத்தில்
உறைகிறோ மிவனின் யோகம் ஒராறு ஆண்டு மேலாய்ப்
பிறையது போலே போகம் பூமியும் தனதானி யங்கள்
மருவிடும் வறுமை காணுன் வளவுமே அதன் மேலாகும்

30. நான்முகம் படைத்த பிரம்மதேவனுல் இக்குலத்தில் பிறப்பிக்கப் பட்டிருக்கின்றான். இவனுடைய யோகத்தைக் கூறுகின்றோம். இவன் பிறந்து ஆறு ஆண்டுகளுக்குமேல், வளர்பிறைச் சந்திரன்போல யோகம் வளரும். பூமிகள், தனம், தானியம் இவைகள் பெருகும். வறுமை இல்லாதவனுகவும் இருப்பான். முன் சொன்ன வருஷங்களுக்குப் பிறகு இவனுக்கு வீடு ஏற்படும்.

31. அந்நகர் வாசத் தோர்க்கு அவனுமேல வாழ்வா னுகும்
பொன்பூமி பணிகள் யாவும் போயிற்று மூவாயி ரம்பொன்
அன்னவன் தேடு வானும் அறைந்தது தப்பா தாகும்
உன்னத தவங்கள் செய்யும் உத்தமி கேட்டி டாயே.

31. அநநகரில் வாழ்பவர்களை விட இவனே சிறப்புடனும் புகழுடனும் வாழ்வான். இவன் சம்பாதிக்கும் பொன், பூமி, ஆபரணங்கள் இவை களின் உத்தேசமதிப்பு மூவாயிரம் பொற்காசுகள். [மதிப்பு ரூபாய் முப்ப தாயிரம்.] நாங்கள் சொன்ன மொழிகள் தவறு. சிறந்த தவம் புரியும் தேவியே ! மேலும் கேளுங்கள்.

32. ஆருறு இரண்டு ஆண்டில் அனுக்கிடு மன்னைகண்டம்
கூறுவோம் நாற்ப தாண்டில் குறித்தனம் தந்தை கண்டம்
மாரனுக் கறுபா னைந்தில் மார்கழி மாதம் தன்னில்
சேருவான் கால னுடு செப்புவோ மிவன்பின் ஜன்மம்.

32. ஜாதகனுடைய முப்பத்தாறுவது வயதில் இவன் தாய்க்குக் கண்ட மேற்பட்டு இறப்பாள். ஜாதகனுக்கு நாற்பதாவது வயது நடைபெறுகை யில் தந்தை மரணமடைவான். ஜாதகனும் அறுபத்தைந்தாவது வயதில் மார்கழி மாதத்தில் யமனுலகை அடைவான். ஜாதகனுடைய பினஜன்மத் தைக் கூறுவோம்.

33 உத்தரம் துவாரை பக்கல் உதிப்பனும் சைவச் சேயாய்
மெத்தனக் குடும்பி யாகி வித்தகன் வாழ்வா னாகும்
சத்தமா யெட்டா மாண்டில் சோருவார் தாயின் தந்தை
பத்தாண்டில் தந்தை அன்னை பகருவோம் நிரியா ணங்கள்.

33. வடதிசையிலுள்ள துவாரகை என்ற க்ஷேத்திரத்தில் சைவகுடும்பத்தில் பிறந்து பெருமை வாய்ந்த குடும்பியாகி வாழ்வான். ஜாதகனுடைய எட்டாவது வயதில் அவனுடைய தாயின் தந்தை மரணமடைவான். பத்தாவது வயது நடைபெறுகையில் தந்தையின் தாய் மரணமடைவாள்.

34. இன்னவன் ஜனன காலம் எழில்மூலம் கடைப்பா தத்தில்
துன்கேது தசையிருப்பு செப்புவோ மாண்டு ஒன்று
மன்னிய திங்க ளொன்று வலரந்தனம் பூர்வ பாகம்
கன்னென மொழியை யொக்கும் காதலி கேட்டி டாயே.

34. இந்த ஜாதகன் மூலநக்ஷத்திரம் நாலாம்பாதத்தில் ஜனித்திருக்கின்றான். ஆகையால் கேது தசையிலிருப்பு வருஷம் ஒன்று, மாதம் ஒன்று. இவ்வாறு பூர்வபாகத்தைத் தெரிவித்தோம். கரும்புபோல் இனிமையான மொழிகளை மொழிகின்ற உமாதேவியே! மேலும் எங்களைக் கேட்டருள வேண்டும்.

## ஜாதகம் 43

1. சந்திரன் கன்னி யாசச் செய்துலாம் சிகியும் தேளில்
மந்தனும் மான தாக மழை கோளு மேட மாகப்
புந்திபானு பணியும் நந்தி பொன்சீயம் கடகம் ஜன்மம்
இந்தவாறு கோளு நின்றால் இயம்புவீர் பலனைத் தானே.

| | | | |
|---|---|---|---|
| | சுக்கிரன் | புதன் சூரியன் ராகு | |
| | இராசி சக்கரம் | | லக்கினம் |
| சனி | | | குரு |
| | கேது | செவ் வாய் | சந்திரன் |

1. ஸ்ரீமுகவருஷம் வைகாசி மாதம் 26-ஆந்தேதி வெள்ளிக் கிழமை காலை நாழிகை 6-க்குமேல் 11-க்குள் ஜனனம்.

**ஆங்கில தேதி 6–6–1873.**

நவக்கிரஹங்களின் பாதசரம் :—மிருகசீர்ஷம் 2-இல் சூரியன், சித்திரை 2-இல் சந்திரன், சித்திரை 4-இல் செவ்வாய். ரோஹிணி 4-இல் புதன். மகம் 1-இல் குரு. பரணி 2 ல் சுக்கிரன். உத்திராடம் 3-இல் சனி. கிருத்திகை 2-இல் ராகு விசாகம் 4-இல் கேது. நக்ஷத்திரம் சித்திரை. செவ்வாயின் தசை இருப்பு வருஷங்கள் நான்கு, மாதங்கள் பத்து.

சந்திரன் கன்னி ; செவ்வாய் துலாம் ; கேது ; விருச்சிகம் ; சனி மகரம் ; சுக்கிரன் மேஷம் ; புதன் ; சூரியன், ராகு விருஷபம் ; குரு சிம்மம் ; இலக்கினம் கடகம். இவ்வாறு கிரஹநிலைகள் இருக்கப் பலன்களைச் சொல்லுவீர்களாக எனப் பார்வதிதேவி வினவினாள்.

2. சங்கரி கேட்கும் போது ஜயமுனி கூறு கின்றார்
இங்கிவை ஆண்பா லாகும் இல்லமும் தென்பால் நோக்கம்
செங்கதிர் வீதி யாகும் திருமாலின் கோஷ்டம் மேற்கில்
மங்கின கெடியு முண்டு மன்னவர் வாச மாகும்.

2. இவ்வாறு சங்கரி கேட்டவுடன் ஜயமுனிவர் பலன்களைச் சொல்லுகின்றார். இக்கிரஹநிலையில் பிறந்தவன் ஆண். வீதி கிழக்கு மேற்காக அமைந்திருக்கும். வீடு தென்திசையை நோக்கி இருக்கும். மேற்கில் திருமாலின் ஆலயம் விளங்கிடும். இடிந்தவொரு கோட்டையுமிருக்கும். அஃது அரசர்கள் வாழும் ஊராகும்.

3. பலஜாதி அவ்வூர் வாசம் பருத்ததோர் செட்டு ஓங்கும்
சொலுமிந்த அடையா ளத்துள் சுதனுமே சேஷ்ட னாகக்
குலவுவான் வைசியச் சேயாய்க் குழவியின் குடும்பச் சேதி
நிலையதைப் புகலு கின்றேன் நிமலியே கேட்டி டாயே.

3. அவ்வூரில் பலஜாதியினர் வாழ்ந்திடுவார்கள். அந்த ஊர் ஒரு பெரிய வியாபார ஸ்தலமாகும். இவ்வாறு அடையாளங்கள் அமைந்த ஊரில் இக் கடகலக்கின மகன் வைசிய குலத்தில் குடும்பத்திற்கு மூத்தபிள்ளையாக உதிப்பான். இப்பாலகனின் குடும்ப வரலாறுகளை இந்நூலில் தெரிவிக்கின்றோம். தாயே ! கேளுங்கள்.

4. தந்தையின் வர்க்கம் தன்னைச் சாற்றுவோ மாண்பால் நான்கு
வந்திடும் கன்னி ரண்டு வரைகிறோம் தாயே யாங்கள்
பிந்தியும் வேறாய்ச் செல்வர் புகலுவோம் பின்பால் சேதி
இந்தவன் தந்தைக் கேதான் இயம்புவோம் பலனை யாங்கள்.

4. ஜாதகனுடைய தந்தையின் சகோதரவருக்கத்தை கூறுகின்றோம். இவனுக்குச் சகோதரர்கள் நால்வர். சகோதரிகள் இருவர். இந்தச் சகோதரர்கள், இந்த ஜாதகன் பிறந்தபிறகு, தனித்தனியே குடும்பத்தை நடத்துவார்கள். அவர்களுடைய வரலாறுகளைப் பின்பகுதியில் தெரிவிக்கின்றோம். ஜாதகனின் தந்தையினுடைய பலன்களை இப்பொழுது தெரிவிக்கின்றோம்.

5. மா நிறம் சமதேகத்தான் மருமமும் கொஞ்ச முண்டு
தென்மொழி கூறு வானும் செட்டுக்கள் செய்வா னாகும்
வானவர் பூசை பூணன் அரசர்க ளுறவு கொள்ளான்
ஊனமில் லாத தேகி உரகன்போல் கோப மேற்பன்.

5. மாநிறம் வாய்ந்தவன். சமமான தேக வளர்ச்சி யுடையவன். சிறிது கபடமுள்ளவன். தேன்போல் இனிய மொழிகளைக் கூறுவான். வியாபாரம் செய்து ஜீவிப்பான். தேவபூசையில் ஈடுபடாதவன். [தெய்வபக்தி இல்லாதவன் எனபதுக்கருத்து.] அரசர்களின் நட்பும் இவனுக்கிராது. ஊனமடையாத சரீரம் வாய்ந்தவன். கோபத்தினால் பாம்புபோல் சீறுவான்.

6. இல்லமும் விட்டு நீங்கி ஏகுவான் குடகி லேதான்
அல்லலாய் வாழ்வா னாகும் ஆதியில் சுகமு மேற்பன்
மல்லில்முன் செல்வா னாகும் வனவாச மாக வாழ்வன்
நல்லவர் நேசம் கொள்வன் நாற்காலி விருத்தி யில்லான்.

6. தனது வீட்டை விட்டு நீங்கி மேற்குத்திசையில் கஷ்டமடைந்து வாழ்வான். பால்யத்தில் சுகமாக வாழ்வான். சண்டை சச்சரவுகளில் ஈடுபட்டு முன் நிற்பான். வனவாசமாகவும் [ஒருவருடனும் தொடர்பு இல்லாமல்] வாழ்வான். சாதுக்களின் நட்பைக்கொண்டவன். கால்நடைகளின் அபிவிருத்தி இல்லாதவன்.

7. பின்வய தினிலே யோகம் பொருந்தாது சிறையாய் வாழ்வன்
பொன்னிலான் மனத்தில் துக்கம் போஜன வறுமை யேற்பன்
தன்துணை மோசத் தாலும் சந்தேக மனத்தி னாலும்
உன்னத இல்லம் நீங்கி ஒதுக்கமாய் வாழ்வா னாகும்.

7. பின் வயதில் சிறிதும் யோகமேற்படாமல் சிறைப்பட்டவன் போல் வாழ்ந்திடுவான். தனமில்லாதவன். மனத்தில் கவலை உள்ளவன். போஜனத்திற்குக் கஷ்டப்படுவான். இவன், சகோதரர்கள் செய்த வஞ்சனையாலும், ஒருவரையும் நம்பாத இயல்பினாலும் சிறந்த தனது வீட்டை விட்டு வேறு ஓர் இடத்தில் ஒதுங்கி வாழ்வான்.

8. இந்நெறி உடையா னுக்கு இவனுமே யுதிப்பா னாகும்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அரிநிறம் உயர மில்லான்
தன்மனம் கபடு மில்லான் ஜனித்த இல் விட்டு நீங்கிக்
கன்னிதா யூரில் வாசம் கனமிலாக் குடும்ப மேற்பன்.

8. இவ்வாறான மனிதனுக்கு இச்சாதகன் மகனாகப் பிறந்திருக்கிறான். இனி ஜாதகனுடைய குணத்தைக் கூறுகின்றோம். திருமாலின் நிறம் வாய்ந்தவன். உயர்ந்து வளராதவன். [குள்ளன் என்பது கருத்து.] மனத்தில் கபடமில்லாதவன். தான் ஜனித்த வீட்டை விட்டு நீங்கி மனைவியின் தாயின் ஊரில் வசித்து வருவான். குடும்பமும் பெருமை இல்லாததாகும்.

9. வித்தையும் சமம தாகும் வாணிபங்கள் செய்வா னாகும்
குத்தத்தை மனத்தில் வையான் கொடுமையை எவர்க்கு மெண்ணான்
சத்தியம் தவறா னாகும் சந்தேக மனத்த னாகும்
புத்தியும் சபல மாகும் பிதாவிற்குத் தாழ வாழ்வன்.

9. கல்வியும் நடுத்தரமானது. வியாபாரம் செய்வான். பிறர்குற்றங்களை மனத்தில் வைத்துக் கொள்ளாமல் உடனே மறந்து விடுவான். யாருக்கும் கெடுதலை எண்ணமாட்டான். உண்மையிலிருந்து வழுவாதவன். சந்தேக மனம் வாய்ந்தவன். சபல புத்தி உடையவன். பிதாவைவிட இவன் தாழ்வாகவே வாழ்ந்திடுவான்.

10. சல்லியப் பாதை ஏற்பன் தன்கரம் கத்திரி ரேகை
சொல்லது சுருக்க மெய்தும் சுற்றத்தார்க் கிணக்கம் செய்வன்
இல்லையென் றுரைக்க மாட்டான் இளம்பிறை போல்த ரித்திரம்
அல்லலாய் வாழ்வா னாகும் அம்பிகை யாளே கேளாய்.

10. கடன் தொந்திரவு இவனுக்கிருக்கும். இவனது கையில் கத்திரி ரேகை உண்டு. சுருக்கமாகவே பேசுவான். உறவினர் இஷ்டப்படியே நடப்பான். உதவியை நாடுபவர்களுக்கு இல்லை என்று சொல்லாதவன். நாளுக்குநாள் வறுமை அதிகமாகும். மிகவும் அல்லல்பட்டு வாழ்வான். அன்னையே! மேலும் கேளுங்கள்.

11. அத்திரி புகலு கின்றார் அவனுக்கு வறுமை சொன்னீர்
எத்தனை நாள்வ ரைக்கும் இடரான குடும்ப மேற்பன்
சுத்தமாய் சொல்லு மென்னச் சுதனுக்கு ஐந்தின் மேலாய்க்
குத்தமா யிருநான் காண்டும் கூடாது நினைத்த வெல்லாம்.

11. அத்திரிமுனிவர் கூறுவார். அவன் வறுமை முதலியவைகளால் துன்பமடைவான் என்று சொன்னீர்கள். எவ்வளவு நாள் அக்கஷ்டங்கள் நீடிக்கும்? தெரிவிப்பீராக என, ஜயமுனி பதிலுரைத்தார். இவன் ஜனித்து ஐந்தாண்டிற்குமேல் எட்டு ஆண்டுமட்டும் முன் சொன்ன துன்பங்கள் இருக்கும். தான் நினைத்த காரியங்கள் நிறைவேறா.

12. சஞ்சல மனமு மெய்தும் சல்லியப் பாதை ஏற்பன்
அஞ்சின வார்த்தை யுண்டு அல்பமாம் உணவு தானும்
தஞ்சமா யதன்மேல் தானும் சந்திரன் பிறைபோல் யோகம்
கொஞ்சுவாள் மாது தானும் குலத்துளோர் மதிக்க வாழ்வன்.

12. மனத்தில் கவலைகள் அதிகமாகும். கடன் உபத்திரவமும் இருக்கும். பயத்துடன் பேச நேரிடும். உணவு வசதிகளும் அல்பமாகும். நாம் சொன்ன வருஷங்களுக்குமேல் யோகம் வளர்பிறைச் சந்திரன் போல் வளரும். ஸ்திரீகள் மனம் குளிரும் [குடும்பக் கஷ்டங்கள் நீங்கும் என்பது கருத்து]. இவன் ஜாதியினர் இவனை மிகவும் மதிப்பார்கள்.

13. அதுமுதல் மரண மட்டும் அணுகாது வறுமை தானும்
நிதிமிகப் பெருக்க மாகும் நினைத்தது முடியு மெனாரும்
சதியுளோர் உறவே யாகும் சஞ்சலம் நிவிர்த்தி யாகும்
விதவிதச் செட்டு ஓங்கும் வித்தகி கேட்டி டாயே.

13. அதுமுதற் கொண்டு மரணம் வரையில் வறுமையைக் காணமாட்டான். பணம் பெருகும் நினைத்த காரியங்கள் நிறைவேறும். பகைவர்களே நண்பர்களாக மாறுவார்கள். மனக்கவலை நீங்கும். பலவித வியாபாரங்களைச் செய்வான். அவ்வியாபாரங்களும் மேன்மேலும் ஓங்கும். தேவியே! மேலும் கேளுங்கள்.

14. தன்துணை ஆண்பா லொன்று தங்கிடும் தீர்க்க மாக
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அடைந்தோரை ஆத ரிப்பன்
பன்னியே பேசு வானும் பலவித வாணிபம் செய்வன்
தன்மனம் கபடு முண்டு தந்திர வார்த்தை ஏற்பன்.

14. ஜாதகனுக்குச் சகோதரன் ஒருவன் நீண்ட ஆயுளுடன் வாழ்வான். அச்சகோதரனின் குணத்தைக் கூறுவோம். தன்னை அண்டியவர்களை ஆதரிப்பான். பன்னிப் பன்னிப் பேசுவான். அநேகவித வியாபாரங்களைச் செய்வான். கபடமுள்ளவன். ஆகையால் தந்திரமாகவும் பேசுவான்.

15. அரசர்க ளுதவி யாலே நிமலனும் ஜீவிப் பானும்
காசுகள் செலவு செய்யான் கண்முகம் வசிய முண்டு
கூசிடான் வார்த்தைக் கேதான் குலமதிப் புடனே வாழ்வன்
போஜன சுகிய முளும் பிதாபகை யாகி வாழ்வன்.

15. அரசர்கள் ஆதரவினுல் ஜீவனத்தை நடத்துவான். [அரசாங்க உத்தியோக மேற்பன் என்பது கருத்து.] பணத்தை அதிகம் செலவு செய்யும் சுபாவம் இல்லாதவன். கண்களிலும் முகத்திலும் பிறரைத் தன்வசப்படுத் தும் பொலிவு உள்ளவன். தைரியமாகப் பேசுவான். குலத்தினரால் மதிக்கப்பட்டு வாழ்வான். போஜன சௌக்கியம் உடையவன். தந்தையே இவனுக்குப் பகைவனுவான்.

16. சுகதுக்கம் கலந்து வாழ்வன் தோழனுல் பெருமை யேற்பன்
பகையோரை உறவு கொள்வன் பாக்கியம் பின்னுல் சேர்ப்பன்
தகைமையாய் மனைவி ஒன்று சாற்றுவோம் தீர்க்க மாக
மிகுதவம் புரியு மெங்கள் வித்தகி கேட்டி டாயே.

16. இவனது வாழ்க்கையில் சுகங்களும் துக்கங்களும் அடிக்கடி மாறி மாறி நிகழும். தோழனுல் இவனுக்குப் பெருமைகளும் அநுகூலங்களும் ஏற்படும். எதிரிகளையும் தன் வசப்படுத்தி நட்புக் கொண்டாடுவான். பிற் காலத்தில் ஐசுவரியத்தைச் சம்பாதிப்பான். இவனுக்கு மனைவியும் ஒருத்திதான் [களத்திர தோஷ மில்லாதவன் என அறியவேண்டும்]. உலகத்தோர்க்குத் தவமுறையை போதிக்க தவம் செய்துகாட்டும் தேவியே! மேலும் கேட்பீராக.

17. சுதர்களும் ஆண்பால் ரண்டு தோகையு மொன்று தீர்க்கம்
அதிபனும் சிலநாள் ஒன்றுய் மருவிப்பின் வேறுய்ச் செல்வன்
பதியது வேறு செய்வன் பசித்தோரை ஆத ரிப்பன்
ததிநெய்பால் பிரிய னுகும் சங்கரி கேட்டி டாயே.

17. அவனுக்கு இரு பிள்ளைகள். ஒரு பெண். இம்மூவரும் நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள். இவனும் ஜாதகனும் ஒன்றுக வாழ்ந்து பிற் காலத்தில் வெவ்வேறு குடும்பத்தினராவர். இவன் புதிய வீடு நிர்மாணம் செய்வான். பசித்தவர்களுக்கு [எளியவர்களுக்கு] அமுதளிப் பான். தயிர் நெய் பால் இவைகளில் மிகவும் விருப்பமுள்ளவன். சங்கரியே! மேலும் கேட்டருள வேண்டும்.

18. ஜாதகன் மணத்தின் காலம் சாற்றுவோம் மூவெட் டாண்டில்
காதலீ நேரு மென்றேம் கழறுவார் அத்திரி தாமும்
தீதாகு மந்தக் காலம் செப்புவோ மதன்மே லைந்தில்
ஓதுவேன் மணமு மென்றேம் உயரன்னே வர்க்கம் தன்னில்.

18. இனி ஜாகனுடைய விவாஹ காலத்தை அறிவிப்போம். இருபத்து நாலாவது வயதில் விவாஹம் நடைபெறும். அத்திரி முனிவர், நீங்கள் சொன்ன காலம் தீமையாக இருப்பதால் அதற்குமேல் ஐந்தாவது ஆண்டில் [இருபத்தொன்பதாவது வயதில்] நடைபெறு மென்று சொல்ல, ஜயமுனி உண்மை; இருபத்து நான்காவது வயதில் தாய் தந்தையர்களின் மனத் தில் நிச்சயமாகும். இருபத்தொன்பதாவது வயதில் மணம் நடைபெறு மென்றுர். மேலும் ஜயமுனிவர் கூறுகின்றுர். மணப்பெண் ஜாதகனுடைய தாய் வருக்கத்தில் தோன்றியவள்.

19. பாலிகை நேரு மென்றேம் பகருவோ மவள்கு ணத்தை
ஞாலமேல் நல்லோ ளாவள் நயம்படக் கூறு வாளாம்
ஆலம்போல் கோப முண்டு அடாவடி தன்னில் செல்லாள்
காலத்தை அறிந்து ரைப்பள் கணவனுக் கினியளாமே.

19. அவளுடைய குணத்தைச் சொல்லுவேன். எல்லோருக்கும் நல்லவ ளாவாள். நயமாகப் பேசுவாள். விஷம்போல் உக்கிரமான கோபமுண்டு. ஆனல் வீண் பிடிவாதக்காரி யல்லள். காலத்தை அறிந்து அதற்குத் தக்க படி பேசுவாள். கணவனுக்கு இனியவள்.

20. தோகைபோல் நிறத்தா ளாகும் சுந்தரி யோக மில்லாள்
பாகமாய்ப் புத்திர பாவம் பஞ்சமா யுதிக்கு மென்றேம்
ஏகுமே முதலி லேதான் இருகன்னி ஆண்பா லொன்று
சாகாது எனஉ ரைத்தோம் சங்கரி கேட்டி டாயே.

20. மயில் நிறம் வாய்ந்தவள். இவள் அதிக அதிருஷ்ட மில்லாத வள். இனி புத்திரபாவத்தைக் கூறுவோம். இவர்களுக்கு ஐந்து குழந்தைகள் பிறப்பார்கள். அவர்களில் முதலில் பிறந்த இரு குழந்தைகள் நீடித்து வாழா. இரு பெண்களும் ஒரு பிள்ளையும் தீர்க்காயுளுடன் வாழ்வார்கள். பரமேசுவரியே! மேலும் கேளுங்கள்.

21. என்னகா ரணத்தி னலே இவன்சுதர் முதலில் பீடை
முன்னமே கூறு மென்ன மெய்ஞ்ஞானி அஞ்சில் தங்கப்
பின்னமாம் முதலில் புத்திரர் பூர்வத்தைப் புகலக் கேண்மோ
கன்னமா புரியி லேதான் கலந்தனன் ரெட்டி வர்க்கம்;

21. என்ன காரணத்தினல் இவ்வாறு இவனுக்குப் புத்திர தோஷம்? அதைச் சொல்லுவீர்களாக என ஒரு முனிவர் கேட்க, ஜயமுனி காரணத்தைக் கூறினர். கேது புத்திரபாவத்தில் இருப்பதால் புத்திரபாவத்தில் தோஷ முண்டு. இவனுடைய முன் வினையைக் கூறுகின்றேம். முன் ஜன்மத்தில் இவன் கன்னமா நகரில் ரெட்டி ஜாதியில் பிறந்து;

22. சுகமுள குடும்பி யாகித் தோகையும் மதலை யுண்டாய்த்
தகமையாய் வாழு நாளில் தங்கின வினையைக் கேண்மோ
பகைசெய்தான் ஏழை யோர்க்குப் பகர்ந்ததோர் சாபம் கேளாய்
அகமது அலேச்ச லாயும் அன்னமும் குறைவுண் டாயும்;

22. மனைவி மக்களுடன் சுபிக்ஷமான குடும்ப முள்ளவனுகிச் சிறப்புடன் வாழும் நாளில் இவனுக்கேற்பட்ட வினையைக் கேளுங்கள். இவன் ஏழைகளுக்குத் தீமையைச் செய்தான். அதனல் ஏழைகள், நீ, அல்லல்படும் குடும்பமுள்ளவனுகவும், ஆகாரத்திற்குக் கஷ்டப்படுபவனுக வாழ்வாய்;

23. பின்வரும் சென்மம் தன்னில் புகழது இல்லா னுயும்
தன்தந்தை பகையு மாயும் தரித்திர முடைய னுயும்
பொன்பணி குறைவ தாயும் பூமியில் வாழ்வா யென்று
மண்வாரி தூற்றிச் சென்றுர் மறுவிற்று அது ஓர் தோஷம்.

23. பின்வரும் ஜன்மத்தில் புகழ் அற்றவனுகவும், தாய் தந்தையைப் பகைத்துக்கொண்டும், ஏழ்மையுடனும் பணம் ஆபரணம் இல்லாதவனுகவும் உயிர்வாழ்வாய் என்று சொல்லித் தெருத் தூளியை வாரி இறைத்துச் சென்றனர். அந்தச் சாபம் இவனை வந்தடைந்தது.

24. இல்லத்தில் வெகுநா ளாக இருந்தது நாக மொன்று
அல்லலாய் மருடத் தாலே அதுமுற்றம் தன்னில் தோன்ற
வல்லவன் அரங்கம் செய்து வாட்டினுன் கழியி னுலே
புல்கிற்றுக் கால னுடு புக்கிற்று அந்தத் தோஷம்.

24. இவன் வசித்துவந்த வீட்டில் வெகு நாளாக ஒரு சர்ப்பம் வசித்தது. அஃது ஒருநாள் முற்றத்தில் தோன்ற, அதைத் தடியினுல் அடித்து யமனுலகம் அனுப்பினுன். அந்தத் தோஷம் இவனைப் பிடித்துக் கொண்டது.

25. மாரனு மந்தி யத்தில் மைந்தர்கள் தோஷ மாயும்
தீரமில் லாமல் நெஞ்சம் சென்றனன் கால னுடு
ஆரியன் வரையப் பட்டு அணுகுவா னிக்கு லத்தில்
கூறுவோம் ஏழைச் சாபம் குடியது வறுமை காணும்.

25. அந்தியத்தில் இவனுடைய சந்ததிக்குத் தோஷம் ஏற்பட்டது. மிகவும் கவலைப்பட்டு இவனும் இறந்தான். பிறகு பிரம்மதேவன் அவனை இங்குப் படைத்திருக்கிறுன். ஏழைகளின் சாபத்தினுல் இவனது குடும்பம் வறுமையால் துன்பமடையும்.

26. இல்லமு மலைச்ச லாகும் இடரு்கள் அனேக முண்டு
செல்லாது செல்லு மேதான் தந்தையும் சிறையாய் வாழ்வன்
நில்லாது முதலில் புத்திரர் நிதமனச் சஞ்ச லங்கள்
அல்லலாய் வாழ்வா னுகும் அம்பிகை யாளே கேளாய்.

26. பலவிதத்திலும் அலைச்சல்கள் ஏற்படும். அநேக இடையூறுகளையும் அடைவான். தந்தையும் சிறைப்பட்டவன் போலத் தனித்து வாழ்வான். முதலில் பிறக்கும் குழந்தைகளும் நிலைத்திரா. எப்பொழுதும் மனக் கவலை இருக்கும். பல வழிகளிலும் அல்லல்பட்டு வாழ்வான்.

27. முப்பது மூன்றுண் டின்மேல் விளம்புவோம் பிறைபோல் [யோகம்
தப்பித மணுகா தாகும் தனம்விருத்தி செட்டு ஓங்கல்
ஒப்புவார் வார்த்தை தானும் உயர்வரா லுதவி யாகும்
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழிகுன் றுது.

27. முப்பத்து மூன்றுவது வயதிற்கு மேல் வளர்பிறைச்சந்திரன்போல யோகம் வளரும். ஒருவிதத்திலும் பிழைகள் ஏற்படா. தனம் விருத்தியடையும். வியாபாரமும் விஸ்தாரமடையும். இவனுடைய வார்த்தைகளை எல்லோரும் மதித்து ஏற்றுக் கொள்ளுவார்கள். பிரபுக்களால் உதவியை அடைவான். கங்கையைச் சடையில் தரிக்கும் சிவபிரானின் தேவியாரே! நாங்கள் சொன்ன மொழி குன்றுது.

28. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அன்புள மனத்த ளாவள்
சொன்னசொல் சுபமே யாகும் சுருக்கினில் கோப மேற்பள்
பொன்பணி அதிகம் காணுள் புருடனும் பகையே யாகும்
பன்னியே பேசு வாளாம் பலவீனம் கொஞ்ச முண்டு.

28. ஜாதகனுடைய தாயின் குணத்தை இனிக் கூறுவோம். அவள் எல்லோரிடமும் அன்புகொண்டவள். சுபமான வார்த்தைகளைப் பேசுவாள். வெகுசீக்கிரத்தில் கோபத்தை அடைவாள். அதிக பொன்னுபரணங்களைப் பெறுதவள். அவளுடைய கணவனும் பகைவனுவான். பன்னிப்பேசும் சுபாவம் உடையவள். தேகவலிமை இல்லாதவள்.

29. துணைவர்கள் ஆண்பால் மூன்று தோகையு மிருவ ராகும்
பதராகு மற்ற வெல்லாம் பகைவர்கள் ஊரா ராகும்
உதவியும் கொஞ்ச முண்டு உரைக்கிறே மிவளின் பூர்வம்
சதிதரும் தில்லை தன்னில் கலந்தனள் சேடர் வமிசம்.

29. அவளுக்குச் சகோதரர்கள் மூவர். சகோதரிகள் இருவர். இந்த ஐவரும் நீண்டகாலம் வாழ்வார்கள். மற்றைய குழந்தைகள் நீடித்திரா. ஊரார் எல்லோரும் இவளுக்குப் பகைவர்களாவர். அவர்களிடமிருந்து சிறிது உதவியையும் அடைவாள். இவளுடைய முன் பிறவியைக் கூறுகின்றேம். அவள் பூர்வசென்மத்தில் சிதம்பர க்ஷேத்திரத்தில் சேடர் வமிசத்தில் உதித்திருந்தாள்.

30. வரனுமே மதலை யுண்டாய் வாழ்நாளில் வினையைச் சொல்வேன்
வரனுடை தாயின் பேரில் வருணித்தாள் சிலேடை வார்த்தை
அரிவையும் மனது வாடி அறைகுவாள் சாபம் தானும்
குறைவார்த்தை யென்மேல் சொன்ன கொடும்பாவி தனக்கு [மேதான் ;

30. கணவன் குழந்தைகளுடன் சுகமாகவாழும் காலத்தில் அவளுக்கு உண்டான பாவத்தைச் சொல்வேன். அவள், தன்கணவனுடைய தாயின் [மாமியார்] மனத்தைக் கொடிய வார்த்தைகளால் புண்படுத்தினுள். ஆகையால் மனம் நொந்த அவள், என்மனத்தைக் காரணமின்றித் துன்பப் படுத்திய பாவியான நீ ;

31. பின்வரும் ஜன்மம் தன்னில் பெண்சுத ரில்லா ளாயும்
தன்வரன் பகையு மாகிக் கஞ்சமா மனத்தா ளாகி
அன்னமும் வறுமை யாகி அன்னைபால் வாழ்வா யென்றுள்
துன்மையாய் அந்தச் சாபம் சார்ந்தது பாவைக் கேதான்.

31. பின்வரும் ஜன்மத்தில் பெண் சந்ததியற்றவளாகவும், கணவன் பகைவனுகியும், கவலை கொண்ட மனத்தோடு உண்பதற்கு உணவின்றியும், தாயின் வீட்டிலேயே உயிர் வாழ்வாய் என்று சாபமிட்டாள். அந்தச் சாபம் இவளுக்கு நேர்ந்தது.

32. காலன்தன் பதிக்குப் புக்கிக் கஞ்சனல் வரையப் பட்டுச்
சீலமாம் வைசியச் சேயாய் ஜனித்தன னென்று சொல்வேன்
ஆலம்போல் மாது சாபம் அணுகிடு மிச்சென் மத்தில்
ஞாலமேல் சிறையாய் வாழ்வள் நற்சுதர் பெண்பால் காணுள்.

32. பிறகு கடைசிகாலத்தில் யமனுலகம் சென்ற இவனேச் சதுர்முகன் இங்கு வைசியகுலத்தில் பிறப்பித்திருக்கின்றுன். முன் ஜன்மத்தில் மாமியாரால் இடப்பட்ட சாபம் விஷம்போல் இவனேப்பற்றிக் கொண்டது. ஆகையால் சிறைப்பட்டவள்போல், கணவன் உயிரோடிருந்தும் அவனுல் சுகமின்றியும், பெண் சந்ததி அற்றவளாகவும் வாழ்வாள்.

33. பின்ஜன்மம் காஞ்சி தன்னில் பிறப்பளா மிக்கு லத்தில்
பொன்பணி யுடையா ளாகிப் பூவையும் வாழ்வா ளாகும்
தந்தையின் பூர்வம் சொல்வேன் சட்டநா தீசர் வாழும்
அந்தவான் நகரம் தன்னில் அருளினன் வன்னிய சேயாய்.

33. இவள் மறுபிறவியில் காஞ்சியில் வைசியகுலத்தில் ஜனிப்பாள். பொன்னுபரணங்கள் வஸ்திரம் முதலியவைகளே அடைந்து சுகமாக வாழ்வாள். ஜாதகனுடைய தந்தையின் முன்பிறவியைத் தெரிவிப்பேன். இவன், முன்பிறவியில் சட்டநாதர் எழுந்தருளி இருக்கும் சீர்காழியில் வன்னியகுலத்தில் பிறந்திருந்தான்.

34. தரணியில் சீவித் தேதான் வாழுநாள் வினேயைக் கேண்மோ
மறையவன் தொண்டு செய்து அவர்பணி களவு கொண்டான்
உறைகுவார் சாபம் தானும் உதிக்கும்பின் ஜன்மம் தன்னில்
வறுமைகள் மிகவுண் டாகி வனவாச மாக வாழ்வாய்.

34. பூமியை உழுது பயிரிட்டு ஜீவனத்தை நடத்திவரும் காலத்தில் அவனுக்கு ஏற்பட்ட பாவத்தைக் கேளுங்கள். இவன் ஓர் அந்தணருக்குத் தொண்டு செய்து கொண்டிருக்கையில் அவருடைய ஆபரணத்தில் ஆசை கொண்டு அதைக் களவுகொண்டான். ஆகையால் அவர், நீ மறுபிறவியில் கொடிய வறுமையால் கஷ்டப்பட்டு வனவாசம்போல் மனேவிமக்களே விட்டுத் தனித்து வாழ்வாய் ;

35. இன்னமு மனேகம் சொன்னுர் எய்திற்று அந்தச் சாபம்
அன்னவ னந்தி யத்தில் அரன்தொண்டு மிகவே செய்து
துன்மையாய்க் கால னுடு சென்றுமே பிரமன் லக்கம்
துன்மதி வணிகர் வர்க்கம் தோன்றின னிவனே யம்மா.

35. இவ்வாறு இன்னும் பல இன்னல்கள் ஏற்படவேண்டுமென்று சபித்தார். அந்தச் சாபம் இவனேவந்தடைந்தது. அவன் அந்தியகாலத்தில் பரமசிவனுக்குப் பலதொண்டுகளேச் சிரத்தையுடன் செய்து இறந்தான். அவனேப் பிரம்மன் வைசிய வமிசத்தில் இங்குப் படைத்தான். அவன்தான் நம் கடகலக்கின பாலனுக்குத் தந்தையாக வாய்த்திருக்கின்றுன்.

36. வைத்ததோர் சாபத் தாலே மெல்லியாள் பகையு மாகும்
பாதக மனத்தா னாகிப் பலர்பாலில் உய்வா னாகும்
ஓதுவே னிவன்பின் ஜன்மம் உயர்வாயு தலத்தி லேதான்
சூதிலாக் கங்கை சேயாய் ஜனிப்பனு மென்று சொல்வோம்.

36. அந்தப் பிராம்மணர் இட்டசாபத்தாலே மனைவியும் பகையாளுள். மனம் நொந்தவனாகி அநேகருடைய தயையினால் பிழைப்பான். இவன் பின் ஜன்மத்தையும் சொல்லுகின்றோம். இவன் மறுபிறவியில் வாயுஸ்தலம் என்று சொல்லப்படும் காளஹஸ்தி க்ஷேத்திரத்தில் மிகப்பரிசுத்தமான வேளாள வமிசத்தில் ஜனிப்பான்.

37. ஆறாறு ஒன்று ஆண்டில் அணுகிடும் தந்தை கண்டம்
தீரமாய் முப்பா னெட்டில் செல்லுவா ளன்னை தானும்
மாரனுக் கறுபா னைந்தில் மார்கழி மாதம் தன்னில்
நேருவான் கால னூடு அதிபதி கேட்டி டாயே.

37. ஜாதகனுக்கு முப்பத்தாறுவது வயது நடைபெறுகையில் இவன் தந்தை மரணமடைவான். முப்பத்தெட்டாவது வயதில் தாய் மரணமடைவாள். சாதகன், தனது அறுபத்தைந்தாவது வயதில் மார்கழி மாதத்தில், காலன் நாட்டிற்குச் செல்லுவான். எங்கள் நாயகியே! மேலும் கேட்பீராக.

38. பின்ஜன்மம் காஞ்சி தன்னில் பிறப்பனும் விச்வச் சேயாய்
அன்னவன் ஜனன காலம் ஆரல்தன் தசையி ருப்பு
மன்னிய ஆண்டு நாலும் மாதமும் ஈரைந் தாகும்
முன்பாகம் விவரம் சொன்னோம் முதல்வியே கேட்டி டாயே.

38. ஜாதகன் மறுபிறவியில் காஞ்சியில் விச்வகர்ம குலத்தில் பிறப்பான். இவன் சித்திரை நக்ஷத்திரத்தில் பிறந்திருக்கின்றான். ஆகையால் செவ்வாய் தசையில் இருப்பு வருஷங்கள் நான்கு, மாதங்கள் பத்து. இவ்வாறு முதல் பாகத்தைக் கூறினோம். உலகிற்கு மூலமான தேவியே! இன்னும் எங்களைக் கேட்டருளுங்கள்.

# ஜாதகம் 44

1. கலைகலை புகரும் சாடி கதிர்புதன் காரி பொன்னேனை
குலவிடம் மீன மாகக் குஜன்கேது வீணை யாக
மலைகயிறு மேரு வாக அலவனும் உதய மாகப்
பலன்தனைப் புகலு மென்று பார்வதி கேட்க லுற்றாள்.

| சூரியன் புதன் சனி குரு | | | செவ்வாய் கேது |
|---|---|---|---|
| சுக்கிரன் | இராசி சக்கரம் | | லக்கினம் |
| சந்திரன் | | | |
| ராகு | | | |

1. பிரமாதி வருஷம் பங்குனி மாதம் 24-ஆந்தேதி ஞாயிற்றுக்கிழமை பகல் நாழிகை 15-க்குமேல் 20-க்குள் ஜனனம்.

**ஆங்கிலத்தேதி 4–4–1880.**

ரேவதி 2-இல், சூரியன். சிரவணம் 3-இல் சந்திரன். மிருகசீர்ஷம் 4-இல் செவ்வாய். உத்தரட்டாதி 3-இல் புதன். உத்தரட்டாதி 2-இல் குரு. பூரட்டாதி 2-இல் சுக்கிரன். ரேவதி 3-இல் சனி (அஸ்தம்). பூராடம் 2-இல் ராகு. திருவாதிரை 4-இல் கேது. நக்ஷத்திம் சிரவணம். சந்திரதசையில் இருப்பு வருஷங்கள் மூன்று, மாதங்கள் ஆறு.

சந்திரன் மகரம், சுக்கிரன் கும்பம் சூரியன் புதன் சனி குரு மீனம், செவ்வாய் கேது மிதுனம் ராகு தனுஸ் இலக்கினம் கடகம். இந்த ஜாதகத்தின் பலன்களைச் சொல்லுவீர்களாக எனப் பார்வதி கேட்கலுற்றாள்.

2. அத்திரி புகலு கின்றார் அதுஜன்மம் ஆண்பா லாகும்
வித்தக னில்லம் சொல்வேன் மேல்வாசல் வடதென் வீதி
பத்தினி மாரி தென்மேல் பாரளந் தோனு மேற்கில்
சத்திமா காளி உத்ரம் சாற்றிய சிறுவூ ராகும்.

2. அத்திரி முனிவர் கூறுகின்றார். இக்கிரஹ நிலையில் பிறந்த குழந்தை ஆண். செனித்த வீடுமேற்கு நோக்கும். வீதி தெற்கு வடக்காக இருக்கும். மாரியம்மன் தென் மேற்கில் தங்கிடுவாள். பூமிகளைத் தன் திருவடிகளால் அளந்த விஷ்ணுவின் ஆலயம் மேற்குத் திசையில் இருக்கும். வடக்கில் காளி கோயில் விளங்கும். அஃது ஒரு சிறிய ஊராகும்.

3. பாலகன் வடுகர் வர்க்கம் பிறப்பனும் சைவ மில்லான்
சாலவே அன்னை தந்தை தன்துணை களத்திர புத்திரர்
ஆலவே முன்பின் ஜன்மம் இயம்புவோம் யோகச் சேதி
ஆலத்தை யுண்டோன் தேவி அறைகிறோ மிந்நூல் தன்னில்.

3. இச்சாதகன் நாயக்கர் வமிசத்தில் பிறந்தவன். சைவனல்லன். [வைணவன் என்பது கருத்து]. ஹாலா ஹலம் என்ற கொடிய விஷத்தை யுண்ட சிவபிரானின் தேவியாரே ! நாங்கள் இந்நூலில் ஜாதகனுடைய யோகங்களைப் பற்றியும், தாய் தந்தை சகோதரர் மனைவி புத்திரர் இவர்களைப் பற்றியும் முன்பின் ஜன்மங்களைப் பற்றியும் கூறப்போகின்றோம்.

4. தந்தையின் துணைவர் தம்மைச் சாற்றுவோ மொருவன் தீர்க்கம்
அந்தவ னிளையோ னாக அறைகிறோம் அவன்கு ணத்தைச்
சிந்தையில் கபடு கொஞ்சம் சிலேடையாய் வார்த்தை கூறுவன்
சந்ததம் கிருஷி செய்வன் சல்லியம் கொஞ்ச மேற்பன்.

4. தந்தையின் சகோதரபாவத்தைக் கூறுகின்றோம். அவனுக்கு ஒரு சகோதரனுண்டு. அவன் தீர்க்காயுளுடன் வாழ்வான். அவன் இவனுக்கு [ஜாதகனின் தந்தைக்கு] இளையவனாவான். அவனுடைய குணத்தைக் கூறுகின்றோம். மனத்தில் கபடமுள்ளவன். சிலேடை வார்த்தைகளைக் கூறுவான். எப்பொழுதும் வியவசாயம் செய்வதில் நோக்கமுள்ளவன். கொஞ்சம் கடன் தொந்தரவும் இருக்கும்.

5. பாரியு மொன்றே யாகும் பாலர்க ளாண்பா லொன்று
கூறுவோம் பெண்பால் ரண்டு குமரிதான் மூன்றும் தீர்க்கம்
வீரியன் ஒன்றாய் வாழ்ந்து வேறாகச் செல்வா னாகும்
பாரினில் இருப தாண்டில் பகருவோம் வறுமை காணான்.

5. அவனுக்கு மனைவி ஒருத்திதான். ஒரு பிள்ளையும் இரு பெண்களும் உண்டு. அம்மூவரும் தீர்க்கமாக வாழ்வார்கள். அவன் சில காலம் ஒன்றாகத் தமயனுடன் வாழ்ந்து, பிறகு இருபதாவது ஆண்டிற்கு மேல் வேறாய்க் குடித்தனம் நடத்துவான்.

6. பித்தச்சூ டுடைய னாகும் பேச்சதைக் காப்பா னாகும்
சித்தினி ஜாதி யாவன் சிவந்தமெய் உணச்சல் தேகி
பத்தினிக் கிஷ்ட னாகும் பாருகள் விருத்திச் செய்வன்
சுத்தமில் லாதா னாகும் சோம்பிடான் காரி யத்தில்.

6. எப்பொழுதும் பித்தச்சூடு உடையவன். தான் சொன்ன வார்த்தையைக் காப்பாற்றுவான். இவன் சித்தினி ஜாதியைச் சேர்ந்தவன். சிவந்த மேனியன். மெலிந்த சரீரம் வாய்ந்தவன். மனைவிக்கு மிகவும் இஷ்டன். நிலங்களை வெகு பிரயாசையுடன் சீர்திருத்தம் செய்து அபி விருத்தி செய்வான். வேலைகளைச் செய்வதில் சோம்பல் இல்லாதவன்.

7. இன்னமும் சிலது சேதி யியம்புவோம் பின்பா கத்தில்
அன்னவன் தந்தை சேதி அறிவிப்போம் இருசி கப்பன்
தன்னுடல் மெலிவு நீட்சி சல்லியம் கொள்ளா னாகும்
உன்னத வார்த்தை சொல்வன் உறையுமுன் கோபி யாவன்.

7. இன்னும் இவனுடைய சில குணங்களைப் பின் பாகத்தில் சொல்வோம். ஜாதகனுடைய தந்தையின் வரலாறுகளைத் தெரிவிப்போம். கருஞ்சிவப்பு நிறமுள்ள மேனியான். அவனுடைய உடல் மெலிந்து உயர்ந்து இருக்கும். கடன் இல்லாதவன். நற்கருத்துக்கள் நிறைந்த சொற்களைப் பேசுவான். முன் கோபமுடையவன்.

8. நாபிச்சூடுடைய னாகும் நல்லோர்க்கு நல்ல னவன்
ஆவுகள் விருத்தி முன்னால் அடைந்தோரை ஆத ரிப்பன்
தாவினோர்க் குதவி செய்வன் தரணியை விரயம் செய்வன்
பாவத்தில் மனது வையான் பகரமாம் குடும்பி யாவன்.

8. நாபிச்சூடு உள்ளவன். நல்லோர்களிடத்தில் நல்லவனாக நடப்பான். [துஷ்டர்களிடம் துஷ்டனாக இருப்பான் என்பதும் கருத்து]. வாழ்க்கையின் ஆரம்பத்தில் பசுக்கள் இவனிடம் அபிவிருத்தி யடையும். தன்னை அண்டிய வர்களுக்கு ஆதரவளிப்பான். துறவிகளுக்கு உதவிபுரிவான். நிலங்களைச் செலவு செய்வான். பாவத்தொழிலில் ஈடுபடாதவன். பெரிய குடும்பியா கவும் ஆவான்.

9. செலவுகள் செய்யா னாகும் சித்தினி சாதி யாவன்
கலகத்தைக் கூறு நெஞ்சம் கரமதில் ருத்திர ரேகை
புலவன்போல் மொழிவா னாகும் போஜன வறுமை யில்லான்
நலமதை எவர்க்கும் செய்யான் நாயகி கேட்டி டாயே.

9. அதிகச் செலவு செய்யாமல் சிக்கனமாக வாழ்வான். இவனும் சித்தினி ஜாதியைச் சேர்ந்தவன்தான். சிறிது கலகமூட்டும் இயல்புள்ளவன். கையில் உருத்திரரேகை விளங்கும். பெரிய பண்டிதன் போல் பேசுவான் போஜனத்திற்குக் கஷ்டப்படாதவன். பிறர்க்கு நன்மை செய்வதில் சிரத்தை கொள்ளாதவன். தேவியே! மேலும் கேளுங்கள்.

10. இந்நெறி யுடையா னுக்கு இவனுமே யுதிப்பா னாகும்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அவனுமே சிவந்த மேனி
தன்னுடல் மெலிவு நீட்சி சகலர்க்கு நல்லோ னவன்
உன்னதச் செட்டுச் செய்வன் உரைக்குமுன் கோபம் கொஞ்சம்.

10. இத்தகைய குணங்கள் வாய்ந்தவனுக்கு இச்சாதகன் புத்திரனாகப் பிறந்திருக்கின்றான். இனி ஜாதகனின் குணத்தைக் கூறுவேன். ஜாதகன் சிவந்த மேனியான். மெலிந்து உயர்ந்த உடல் வாய்ந்தவன். எல்லோருக்கும் நல்லவனாக இருப்பான். மேலான வியாபாரத்தைச் செய்வான். முன் கோபியாகவும் இருப்பான்.

11. நடையது துருசு முண்டு நளினமாய்ப் பேசு வானும்
தடைசொலான் பெரியோர் வார்த்தை தந்தைசொல் தடுத்து [வாழ்வன்
கடனது நிவிர்த்தி பின்னுல் காலாள்கள் சேர்ப்பா னுகும்
படையின்முன் செல்லா னுகும் பாரது விருத்தி செய்வன்.

11. நடை வேகமாக இருக்கும். நயமாகப் பேசுவான். பெரியோர் வார்த்தைகளை மறுத்துக் கூறுதவன். ஆனுல் தந்தையின் சொல்லைக் கேளாதவன். முதலில் கடன் உள்ளவன். பிறகு கடன் நிவிருத்தியாகும். அதிக சேவகர்களையும் அடைவான். சண்டை சச்சரவுகளில் ஈடுபடாதவன். நிலங்களை அபிவிருத்தி செய்வான்.

12. வித்தையும் சமம தாகும் விகடங்கள் கூறு னுகும்
பத்தினிநேய னுகும் பரிந்துப சாரம் செய்வன்
சுத்தவான் வெளிம யக்கன் சோம்பலும் கொஞ்ச முண்டு
சித்தமே கறுப்பு மில்லான் சிறிதான புத்தி கொஞ்சம்.

12. நடுத்தரமாகக் கல்வி கற்றவன். பரிஹாச வார்த்தைகள் பேசாதவன். மனைவியிடத்தில் மிகவும் அன்பு கொண்டவன். வீட்டை அடைந்தவர்களுக்குப் பரிவுடன் உபசாரம் செய்வான். சுத்தமானவன். உலகத்தோருக்குப் பகட்டாக நடந்துகொள்வான். சிறிது சோம்பலுடையவன். மனத்தில் கபடமில்லாதவன். சிறிது அற்ப புத்தியுமுள்ளவன்.

13. கரமதில் மச்ச ரேகை கஞ்சமாம் ரேகை யுண்டு
மருவிடும் பித்தச் சூடு வணிபர்கள் தொழிலும் செய்வன்
அரிபத்தி கொஞ்ச முண்டு ஆபத்தைச் சிலர்க்குக் காப்பன்
குறிமுக முடைய னுகும் கோதையே கேட்டி டாயே.

13. இவனது கையில் மச்சரேகையும் கமலரேகையும் திகழும். பித்தச் சூடு உள்ளவன். வியாபாரத்தையும் பிறதொழிலையும் செய்து ஜீவிப்பான். விஷ்ணுவிடம் சிறிது பக்தி பூண்டவன். சிலருக்கு ஆபத்து காலத்தில் சகாயம் செய்து பாதுகாப்பளிப்பான். முகத்தில் வடுக்கள் உடையவன். தேவியே ! மேலும் கேளுங்கள்.

14. தன்துணை ஆண்பா லொன்று தங்கிடும் கன்னி ரண்டு
பின்னமாம் மற்ற வெல்லாம் பேசின துணைவ ரும்தான்
சின்னவ ரென்று சொல்வோம் செப்புவோ மினியோன் சேதி
முன்கோபி தந்திர வார்த்தை மேதினில் தன்னு லுய்வன்.

14. இவனுடைய சகோதரபாவத்தைப்பற்றிக் கூறுவோம். இவனுக்கு ஒரு சகோதரனும் இரண்டு சகோதரிகளும் நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள். மற்றைய உடன் பிறந்தார் நீடித்து வாழார். நாம் முன் சொன்ன உடன்பிறந்தார்கள் இவனுக்கு இளையவர்கள். அந்தச் சகோதரனைப் பற்றிக் கூறுவோம். முன்கோப முடையவன். தந்திர வார்த்தைகளைப் பேசுவான். தன் முயற்சியால் விருத்தியடைவான்.

15. செலவுகள் செய்யா னாகும் தந்தையோ டொத்து வாழ்வன்
சலம்தோய்வன் வறுமை காணான் சதுஷ்பாதம் விருத்தி யுண்டு
நலம்படக் கூறு வானும் நாயகன் பஜகயு மெய்தும்
விலைமாதர் மோக முண்டு வயதுமே தீர்க்க மென்றோம்.

15. சிக்கனமாக வாழ்வான். தந்தையோடு ஒற்றுமையுடன் இருப்பான். புண்ணிய தீர்த்தங்களில் நீராடுவான். வறுமை இல்லாதவன். கால்நடைகளை அபிவிருத்தி செய்வான். பிறர்க்கு நன்மை ஏற்படும் வகையில் பேசுவான். வேசிகள் மோகம் கொண்டவன். தீர்க்காயுளுடன் வாழ்வான்.

16. பாரியு மொன்றே யாகும் பாலர்க ளாண்பால் ரண்டு
காரிகை மார்க ளவ்வாறு கழறுவோம் தீர்க்க மாக
மாரனோ டொத்து வாழந்து வேறுவன் காலம் சொல்வாய்க்
கூறுவோ மிருபத் தாறு ஆண்டினில் குடிபே தங்கள்.

16. மனைவி ஒருத்திதான். அவனுக்குப் பிள்ளைகள் இருவர்; பெண்களும் இருவர். இந்நால்வரும் நீடித்து வாழ்வார்கள். இவன் கடக லக்கின ஜாதகனுடன் ஒன்றாக வாழ்ந்து இருபத்தாறுவது வயதில் வேறு குடும்பம் நடத்துவான்.

17. பின்பாகம் விவரம் சொல்வேன் பேதைமார் சேதி யாவும்
இன்னவன் மணத்தின் காலம் இயம்புவோ மிருபான் மூன்றுள்
கன்னிகை வடபால் நேரும் கழறுவோ மவள்கு ணத்தைப்
பொன்னிறம் சுகமாய் வார்த்தை புருடன்தன் மனதுக் கேத்தோள்.

17. இன்னும் சில விவரங்களைப் பின்பாகத்தில் சொல்வேன். அவ்வாறே ஜாதகனின் சகோதரிகளைப் பற்றியும் இரண்டாம் பாகத்தில் சொல்லப் போகின்றோம். ஜாதகனின் விவாஹ காலத்தைக் கூறுவோம். இருபத்து மூன்றாவது வயதில் விவாஹம் நடைபெறும். மணப்பெண் வடதிசையிலுதித்திருப்பாள். அவளுடைய குணங்களைக் கூறுகின்றோம். பொன்நிறம் வாய்ந்தவள். இனிமையாகப் பேசுவாள். தன் கணவன் மனத்திற்கேற்றபடி நடப்பாள்.

18. மாந்தளிர் மேனி யாகும் வருவோரை ஆதரிப்பள்
சாந்தமும் கோப முண்டு சலித்தோர்க்கு உதவி செய்வள்
சாந்தம்போல் புத்தி யேற்பள் கண்முகம் வசிய முண்டு
சேர்ந்தோர்க்குத் தாக மீவள் தொல்புவி வறுமை காணாள்.

18. மாந்தளிர் போல் மென்மையான மேனியாள். வீடு நாடி வருபவர்களை அன்புடன் ஆதரிப்பாள். சாந்தகுணமும் கோபமும் இவளுக்குண்டு. எளியவர்களுக்கு உதவி புரிவாள். மனத்தில் சாந்தமுடையவள் போல் காணப்படுவாள். கண்களும் முகமும் பிறரை வசப்படுத்தும் பொலிவு வாய்ந்தவைகளாக இருக்கும். தன்னை நாடியவர்களுக்கு அன்னமும் தண்ணீரும் அளிப்பாள். வறுமை இல்லாதவள்.

19. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோம் ஆண்பால் ரண்டு
சத்திமார் மூவ ராகும் தங்காது இரண்டு என்றேம்
சுத்தமாய் முதலில் பெண்பால் தோன்றிடு மதன்பின் ஆண்பால்
பத்திடு மளவா யென்றேம் பார்வதி கேட்டி டாயே.

19. இத் தம்பதிகளின் புத்திரபாவத்தைக் கூறுவோம். இவர்களுக்கு இரு பிள்ளைகளும் மூன்று பெண்களும் தோன்றுவார்கள். பெண்களில் இருவர் நிலைத்து வாழமாட்டார்கள். முதலில் பெண்கள் பிறப்பார்கள். அதற்குப் பிறகு பிள்ளைகள் ஜனிப்பார்கள். ஆகவே இவர்களுக்கு ஒரு பிள்ளையும் ஒரு பெண்ணும் தீர்க்கமாக வாழ்வார்கள். பார்வதி தேவியே! மேலும் கேளுங்கள்.

20. மாதுரு குணத்தைச் சொல்வேன் மாஞ்சிவப் புடையா ளாகும்
ஓதுவாள் சுகமாய் வார்த்தை உறுதியில் லாத நெஞ்சம்
தீதான குணமு முள்ளாள் செறிந்திடும் பித்தச் சூடு
காதலி யோக சாலி கணவன்தன் மனதுக் கேத்தோள்.

20. ஜாதகனின் தாயினுடைய குணத்தைக் கேளுங்கள். அவள் மாநிறம் வாய்ந்தவள். இனிமையாகப் பேசுவாள். மனத்தில் உறுதி இல்லாதவள். தீயகுணங்களும் அவளுக்கு இல்லை. பித்தச்சூடு உடலில் தங்கி இருக்கும். மிக்க அதிருஷ்டமுள்ளவள். கணவன் மனத்திற்கேற்றவளாகவும் இருப்பாள்.

21. தன்துணை ஆண்பால் தோஷம் சத்திமா ரிருவ ராகும்
அன்னையில் உத்திர மாகும் அவன்பூர்வம் புகலக் கேண்மோ
தென்திசை பெண்ணை யோரம் சிறுஊரில் ரெட்டி வமிசம்
இன்னவ ளுதித்து மேலும் எழிலான குடும்பி யாகி ;

21. அவளுக்குச் சகோதரர் இல்லை. இரு சகோதரிகள் உண்டு. அவள் பிறந்த வீடு வடதிசையில் உள்ளது. அவளுடைய பூர்வஜன்மத்தைக் கூறுவோம் ; கேளுங்கள். தென்திசையில் பெண்ணையாற்றின் கரையிலுள்ள சிறிய ஓர் ஊரில் ரெட்டி வமிசத்தில் இவள் பிறந்து கணவன் மக்களுடன் சிறப்பான குடும்பம் உள்ளவளாகி ;

22. அறமதி லிச்சை யுண்டாய் அந்தகன் நகர டைந்து
பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தவ ளென்று சொல்வோம்
வரும்ஜன்மம் புதுவை தன்னில் வருகுவாள் வைசியச் சேயாய்த்
திருமகள் விலாசம் பெற்றுச் செல்வதி வாழ்வா ளாகும்.

22. தருமத்தில் பற்றுள்ளவளாகி [தருமத்தைச் செய்து] வாழ்ந்தாள். அந்திய காலத்தில் அந்தகன் அருகிற்குச் சென்ற இவளை இங்கு பிரம்மதேவன் படைத்திருக்கின்றான். இவள் மறு பிறவியில் புதுவையில் வைசிய குலத்தில் பிறந்து, லக்ஷ்மீகடாக்ஷம் பெற்றவளாகிச் சுகமாக வாழ்வாள்.

23. தந்தையின் பூர்வம் தன்னைத் தன்னெடுத் தியம்பக் கேண்மோ
கந்தன்வாழ் பழனி நாட்டில் கலந்தனன் முத்திரிய னாக
வந்திடும் மனைவி மைந்தர் மானிலம் விருத்தி செய்து
அந்தவன் வாழு நாளில் அணுகின வினையைக் கேண்மோ.

23. ஜாதகனுடைய தந்தையின் முன் பிறவியையும் கேளுங்கள். இவன் முன் பிறவியில் சுப்பிரமணியசுவாமி எழுந்தருளி இருக்கும் பழனி க்ஷேத்திரத்தில் முத்திரிய குலத்தில் பிறந்து, மனைவி மைந்தர்களுடன் வாழ்ந்து வந்தான். நிலத்தைப் பயிரிட்டு ஜீவித்தான். அவ்வாறு வாழுங் காலத்தில் அவனுக்கேற்பட்ட பாவத்தைக் கேளுங்கள்.

24. வரனின்றி மாது தானும் மாதுரு இல்லம் வாழ
அரிவைமேல் வேறொருத்தன் ஆசையாய்க் காதல் பேசத்
திருமக ளிசையா ளாகித் தேவியு மோர்நாள் தன்னில்
ஒருத்தியும் தனியாய்ச் செல்ல ஒளித்துமே பின்னால் சென்று;

24. கணவனை இழந்த ஒரு பெண் தன் தாயின் வீட்டில் வாழ்ந்து வரும் காலத்தில் அவள்பேரில் வேறு ஒருவன் காதல்கொண்டு அவளிடம் பேச, அவள் அதற்கு இசையாதவளானாள். இவ்வாறு இருக்கையில் அந்தப்பெண் தனியளாகச் சென்றுகொண்டிருக்கும்போது, தகாத வழியில் காதல் கொண்ட அந்த வாலிபன் ஒளிந்து, அவளைப் பின் தொடர்ந்து;

25. பலவந்த போகம் செய்து பாவையும் வெட்க முற்றுத்
தலம்சென்று துணைவ ரோடு சாற்றினாள் அந்தச் சங்கை
புலிபோலக் கோப முற்றுப் புகன்றனர் இவன்பால் தானும்
கலகத்தைச் செய்தோன் தன்னைக் கண்டிதம் கூறு மென்ன.

25. தனது விருப்பத்தை ஒருவாறு நிறைவேற்றிக்கொண்டான். ஆகையால் வெட்கத்தையும் வருத்தத்தையும் அடைந்த அக்கன்னிகை வீட்டிற்குச் சென்று தன் சகோதரர்களிடம் இதைத் தெரிவிக்க, அவர்கள், புலிபோலக் கோபங்கொண்டு, இவனிடம் [முத்திரிய குலத்தில் பிறந்த இவனிடம்] சென்று குற்றம் செய்தவனைத் தண்டியுங்கள் என வேண்டிக் கொண்டனர்.

26. தனமது அவனால் பெற்றுத் தையல்மேல் குற்றம் சொல்ல
வனிதையும் திகில டைந்து வரைகிறாள் சாபம் தானும்
இனமதை விசாரி யாமல் இயம்பினான் என்மேல் தோஷம்
துணைப்பெண்பா லில்லா னாகித் தோன்றும்பின் தன்னில் [ஜன்மம்.

26. அப்பொழுது மத்தியஸ்தனாக இருந்து நியாயம் வழங்கவேண்டிய இவன் என்ன செய்தான்? தெரியுமா? அக்குற்றவாளியிடமிருந்து பணத்தை வாங்கிக்கொண்டு, இந்தப் பெண்ணின்மேல் குற்றம் என்று தீர்ப்பளித்தான். இதைக் கேட்டு மனம் முறிந்த பெண், குற்றத்தைச் சரிவர விசாரியாமல் என்மேல் பழியைச் சுமத்திய பாவியான உனக்கு மறு பிறவியில் சகோதரிகள் இருக்கமாட்டார்கள்.

27. தன்துணை பெண்பா லின்றிச் சந்ததிப் பகையு மாகி
உன்சுதர் பெண்ணால் நிந்தை உலகினில் நேரும் பின்பு
அந்திய காலம் தன்னில் அதிகசல் லியங்க ளுண்டாய்
வெந்தணல் மேரு போலே மேவிடும் க்ஷயரோ கங்கள்.

27. மேலும் சகோதரியின்றி மனம் வருந்துவதுடன், உன்னுடைய சந்ததியும் உனக்குப் பகைவனுவான். உனக்கு உன் பெண்ணால் நிந்தையும் ஏற்படும். அந்திய காலத்தில் கடன் ஏற்பட்டு கஷ்டப்படுவாய். மேலும் எரிகின்ற மலைபோல எரிக்கின்ற க்ஷயநோயால் வாட்டப்பட்டு மாள்வாய் என்று சபித்தாள்.

28. இன்னமும் பலவாறு சொல்லி யிறைத்தனள் தெருமண் வாரி
துன்மையா யந்தச் சாபம் தோன்றிற்று என்று சொல்வோம்
அன்னவ னந்தி யத்தில் அதிகமாய் ரோகம் கண்டு
தென்திசை கால னூடு சென்றுமே பிரமன் லக்கம்.

28. இன்னும் இவ்வாறு பலமொழிகளைக் கூறி தெருப்புழுதியை வாரி இரைத்துச் சென்றாள். அந்தப் பெண் இட்ட சாபம் இவனைப் பற்றிக் கொண்டது. அந்தியத்தில் ரோகம் கண்டு யமனுலகம் சென்றான்.

29. வந்தவ னென்று சொல்வோம் மருவிடு மாது சாபம்
தன்துணை பெண்பால் தோஷம் தன்சுதர் பகையு யாகும்
துன்மையாய் ரோக மந்தம் தோன்றிடு மென்று சொல்வோம்
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே.

29. அவனைப் பிரம்மதேவன் இங்குப் படைத்திருக்கின்றான். அவன் தான் இக் கடக லக்கின மகனுக்குத் தந்தையாக வாய்த்திருக்கின்றான். இவனுக்கு முன்ஜன்மத்தில் ஏற்பட்ட சாபத்தின்படி சகோதரியைக் கண்டு களிக்கும் வாய்ப்பு இல்லை. தன் புத்திரனும் பகைவனுவான். அந்தியத்தில் கொடிய நோயும் காணும் விநாயகரைப் பெற்ற தேவியே! மேலும் கேளுங்கள்.

30. இருபது எட்டாண் டிற்குள் ஏகுவான் தந்தை தானும்
வரும்ஜன்மம் அவ்வூர் மேற்கில் வளமுள பேரூர் தன்னில்
தரித்தொழில் செயும்கு லத்தில் சார்வனு மென்று சொல்வோம்.
அருமறை முடிவி லாடு மம்பிகை யாளே கேளாய்.

30. ஜாதகனுடைய இருபத்தெட்டாவது ஆண்டிற்குள் அவன் தந்தை மரணமடைவான். அடுத்த பிறவியில் இப்பொழுது வசிக்கும் ஊருக்கு மேற்கிலுள்ள வளம் பொருந்திய ஒரு பெரிய ஊரில் தரித்தொழில் செய்யும் குலத்தில் பிறப்பான். சிறந்த வேதங்களின் சிகரத்தில்—உபநிடதங்களில்—ஆனந்த நர்த்தனம் புரியும் தேவியே! மேலும் தெரிவிக்கின்றோம்.

31. அன்னைக்கு முப்பா னெட்டில் அணுகிடும் மார கங்கள்
இன்னவன் பூர்வம் சொல்வே னெழில்பட்சி தன்னி லேதான்
துன்மதி வணிக னுகத் தோன்றியே செட்டுச் செய்து
தன்மனை மதலை யுண்டாய்ச் சான்றோர்கட் கன்ன மீந்தான்.

31. ஜாதகனுடைய முப்பத்தெட்டாவது வயதில் அவன் தாய் இறப்பாள். ஜாதகனுடைய பூர்வஜன்ம வரலாறுகளைக் கூறுவேன். இவன் முன் பிறவியில் பக்ஷிதீர்த்தத்தில் [திருக்கழிக்குன்றத்தில்] வைசிய வமிசத்தில் பிறந்து, வியாபாரம் செய்து, மனைவி மக்களுடன் சுகமாக வாழ்ந்து வந்தான். பெரியோர்களுக்குச் சிரத்தையுடன் அமுதளித்தான்.

32. வினையது இல்லா னாகி மேவினன் கால னோடு
சினமிலா பிரமன் லக்கம் ஜனிப்பானு மென்று சொல்வோம்
கனமுள இவனின் யோகம் கழறுவோம் ஜனனம் தொட்டு
மனையிலா இருப தாண்டு பூமியில் வறுமை காணான்.

32. வேறு எவ்வித பாவம் ஏற்படாதவாறு வாழ்க்கையை நடத்தி கடைசியில் இறந்த இவனை இங்கு கடக லக்னத்தில் பிரமன் பிறப்பித்திருக்கின்றான். இவன் பிறவி முதல் உள்ள யோக பலனைக் கூறுவோம். இவன் பிறந்து இருபதாண்டு வரையில் வறுமை இல்லாதவனாக வாழ்வான்.

33. அதற்குமேல் பத்தாண் டிற்கும் அதிகமாய் வறுமை யுண்டு
குதர்க்கங்கள் குடும்பம் தன்னில் குலவிடும் சல்லியப் பாதை
விதவித விரோத மெய்தும் மேதினில் விரய மாகும்
நிதமுமே மனது துக்கம் நேர்ந்திடு மென்று சொல்வோம்.

33. அதற்குப் பிறகு பத்தாண்டு வரையில் [முப்பது வயது வரையில்] வறுமையினால் மிகவும் கஷ்டப்படுவான். குடும்பத்தில் கலகங்கள் ஏற்படும். கடனால் பல துன்பங்களும் நேரிடும். பல வழிகளிலும் சண்டை சச்சரவுகள் உண்டாகும். வீண் செலவுகள் அதிகமாகும். எப்பொழுதும் மனக்கவலை இருக்கும்.

34. சொல்லிய ஆண்டின் மேலாய் சந்திரன் பிறைபோல் யோகம்
அல்லல்க ளடையா னாகும் அதிகமாய்ச் செட்டு ஓங்கும்
சல்லியம் காணா னாகும் தனதானிய விருத்தி யென்றோம்
நல்லவர் நேசத் தாலே நற்புகழ் பெருக்க மாகும்.

34. நாம் முன்சொன்ன ஆண்டுகளுக்குப் பிறகு வளர்பிறைச் சந்திரன் போல யோகங்கள் வளர்ந்திடும். முன் ஏற்பட்ட துன்பங்கள் நீங்கும். வியாபாரம் நன்றாகச் செழித்து ஓங்கும். கடன் ஏற்படாது. தனதானியங்களின் சேமிப்பு அதிகமாகும். நல்லவர்களின் நட்பால் நற்புகழும் பெருமைகளும் உண்டாகும்.

35. சித்திர இல்லம் செய்தல் சிலபூமி சேர்த்த லுண்டு
சத்தியின் வருக்கத் தாரால் தனமது பெருக்க முண்டு
வித்தக னறுபா னெட்டில் விருச்சிக மாதம் தன்னில்
குத்தமாய்க் கால னோடு கூடுவா னென்று சொல்வோம்.

35 புதியதொரு வீடு கட்டுவான். சிறிது பூமிகளும் சேரும். பெண் ஜாதி வருக்கத்தினரால் இவனது தனம் பெருக்கமடையும். ஜாதகன் தனது அறுபத்தெட்டாவது வயதில் கார்த்திகை மாதத்தில் யமனுலகம் செல்வான் என்று சொல்வோம்.

**36.** பின்ஜன்மம் காஞ்சி தன்னில் பிறப்பனும் சைவச் சேயாய்
மன்னனால் அதிகா ரங்கள் மருவிடு மென்று சொல்வோம்
தென்முனி மறுத்துச் சொல்வார் செப்பினீர் வயது தீர்க்கம் ;
பின்னங்கள் இதற்குள் ளாகப் பொருந்தாதோ விவரம் சொல்வாய்.

36. ஜாதகன் மறுபிறவியில் காஞ்சியில் சைவகுலத்தில் பிறந்து அரசனால் ஆதரவுபெற்று அதிகார முள்ள உத்யோகம் செய்து வாழ்வான் என்றும் சொல்லுகிறோம். இவ்வாறு சொல்லக்கேட்ட அகஸ்தியமுனிவர் மறுத்துக் கூறினார். ஜாதகனுக்கு அறுபத்தெட்டு வயது வரையில் ஆயுர்பாவம் என்று சொன்னீர்கள். அதற்குள் அநேக மாரகங்கள் ஏற்பட்டு மரண மடையானோ ? சொல்லும் என ;

**37.** மந்திரி நவத்தி லேற மறுவினை யனேக முண்டு
எந்தநோய் வந்த போதும் இரவிமுன் பனிபோல் நீங்கும்
அன்னவன் ஜனன காலம் அம்புலி தசையி ருப்புச்
சொன்னனே ஆண்டு மூன்று திங்களு மாற தாகும்.

37. தேவமந்திரியாகிய குரு பாக்கியத்திலிருப்பதால் 'எவ்வித நோய்கள் நேர்ந்தாலும் சூரியன்முன் பனிபோல விலகும். ஆகவே நாம் சொன்ன ஆயுள் வரையில் ஜீவித்திருப்பான். இவன் சிரவண நக்ஷத்திரம் மூன்றாம் பாதத்தில் ஜனித்திருக்கின்றான். ஆகையால் சந்திரதசை பாக்கி வருஷங்கள் மூன்று, மாதங்கள் ஆறு.

**38.** வந்தவன் பிணியு மெய்தும் மாடுகள் சேத மாகும்
பிந்திய துணையும் விருத்தி பூமியும் பலித முண்டு
பந்தினர் மதிக்க வாழ்வன் பரஉப காரம் செய்வான்
இந்திர னிறைஞ்சு மாதே இதுபூர்வ பாக மாமே.

38. இந்தத்தசையின் பலன்களைக் கூறுகின்றோம். பலபிணிகள் காணும். கால்நடைகள் சேதமடையும். பின் உடன் பிறந்தார்கள் விருத்தியடைவார்கள். பூமி நன்றாக விளையும். பந்துக்கள் கௌரவிப்பார்கள். பிறருக்கு உபகாரம் செய்து புகழையும் புண்ணியத்தையும் அடைவான். இந்திரனும் போற்றி வணங்கும் தாயே ! இது பூர்வபாக மாகையால் சுருக்கமாகவே பலன்களைத் தெரிவித்திருக்கின்றோம்.

## ஜாதகம் 45

1 கலைகட கத்தில் தங்கக் கதிர்புதன் புகரு மேரு
நிலமகன் கன்னி யாக நீலனும் குருவு மானில்
மலைபபாம்பு கோல தாக அலவனும் ஜன்ம மாக
பலனதைப் புகலு மென்று பார்வதி கேட்க லுற்றாள்.

| | | | |
|---|---|---|---|
| | கேது | | |
| | இராசி சக்கரம் | | லக்கினம் சந்திரன் |
| சனி குரு | | | |
| சூரியன் புதன் சுக்கிரன் | | ராகு | செவ்வாய் |

1. சுபகிருது வருஷம் மார்கழி மாதம் 4-ந் தேதி வியாழக்கிழமை இரவு நாழிகை 5-க்குமேல் 10-க்குள் ஜனனம்.

ஆங்கிலத் தேதி 18-12-1902

நவக்கிரகங்களின் பாதசாரம் :—1 மூலம் 2-இல் சூரியன். ஆயில்யம் 1-இல் சந்திரன். உத்தரம் 1-இல் செவ்வாய். மூலம் 3-இல் புதன் (அஸ்தம்). சிரவணம் 4-இல் குரு. மூலம் 3-இல் சுக்கிரன் (அஸ்தம்). உத்தராடம் 3-இல் சனி. சித்திரை 2-இல் ராகு. ரேவதி 4-இல் கேது. நக்ஷத்திரம் ஆயில்யம். புததசையில் இருப்பு வருஷங்கள் பதின்மூன்று, மாதங்கள் எட்டு.

**குறிப்பு.**—இந்நூலாசிரியர் கணிதப்படி சித்திரை 3-இல் ராகு. அசுவினி 1-இல் கேது.

சந்திரன் கடகம். சூரியன் புதன் சுக்கிரன் தனுஸ். செவ்வாய் கன்னி. குரு சனி மகரம். ராகு துலம். கேது மேஷம். இலக்கினம் கடகம். இந்த ஜாதகத்தின் பலன்களைச் சொல்லுவீர்களாக என உமாதேவி கேட்கலுற்றாள்.

2. அத்திரி புகலு கின்றார் ஆணது ஜனன மாகும்
வித்தக னில்லம் சொல்வேன் மேற்குமே வாச லாகும்
உத்தரம் தென்பால் வீதி உயர்வான நகர மாகும்
அத்தியும் அவ்வூர் வாசம் அரசர்கள் நேச மாகும்.

2. அத்திரி முனிவர் பலன்களைச் சொல்லுவார். இக்கிரஹ நிலையில் பிறந்த குழந்தை ஆண். வீதி தெற்கு வடக்கில் அமைந்திருக்கும். வீடு மேற்கு நோக்கி இருக்கும். அவன் ஜனித்த இடம் பெரிய நகரமாகும். அங்கே பிரசித்தி பெற்ற விநாயகர் ஆலயமுண்டு. அந்நகர் அரசர்கள் வாசஸ்தலமாகும்.

3. அந்தரி கன்னி உத்ரம் அருகினில் தடாக முண்டு
தென்திசை யீசன் கோஷ்டம் செப்பின வடையா ளத்துள்
இந்தவன் ரேஷ்ட ளுக இறங்குவான் வடுகர் வர்க்கம்
கந்தனை யீன்ற மாதே கழறின மொழிகுன் றுது.

3. வடதிசையில் பத்திரகாளி கோயில் இருக்கும். அருகில் ஒரு குள முண்டு. தென் திசையில் சிவபிரான் ஆலயம் விளங்கிடும். இத்தகைய அடையாளமுள்ள ஊரில் இச்சாதகன் நாயக்கர் வமிசத்தில் குடும்பத்திற்கு ஜ்யேஷ்டனுக பிறந்திருக்கின்றுன். சுப்பிரமணிய சுவாமியைப்பெற்ற கருணைக்கடலே ! நாங்கள் சொன்ன மொழி குன்றுது.

4. தந்தையின் துணைஆண் ஒன்று சத்தியு மவ்வா றென்றேம்
நொந்திடும் மற்ற வெல்லாம் நுகர்ந்தஆ ணிளையோ னுகும்
அந்தவன் சேதி சொல்வேன் அழகுளான் சிவந்த மேனி
சிந்தையில் கபடு முண்டு சிலேடையாய் வார்த்தை சொல்வன்.

4. ஜாதகனின் தந்தைக்கு ஒரு சகோதரனும் ஒரு சகோதரியும் பிறந்து சுகமாக வாழ்வார்கள். மற்றைய உடன்பிறந்தார்கள் நஷ்டமாவார்கள். நாம் கூறின சகோதரன் இவனுக்கு [ஜாதகனின் தந்தைக்கு] இளையவன். அவனுடைய வரலாறுகளைத் தெரிவிப்போம். அழகு வாய்ந்தவன். சிவந்த மேனியான். மனத்தில் கபடமுள்ளவன். சிலேடைவார்த்தைகளைக் கூறுவான்.

5. தரித்தொழில் புரிவா னுகும் சாற்றுமுன் கோபி யாவன்
இருமனை யனுகு மென்றேம் இவனுடன் கூடி வாழ்வன்
பெரும்சுதர் ஆண்பால் ரண்டு பேசுவோம் கன்னி மூன்று
திருகிலா தீர்க்க மெய்தும் செல்லுமே மற்ற வெல்லாம்.

5. நெசவுத்தொழில் செய்து ஜீவிப்பான். முன்கோபியாவன். அவனுக்கு இரண்டு மனைவிமார்கள் உண்டு. அண்ணனுடன் ஒற்றுமையாக வாழ்வான். அவனுக்கு இருபிள்ளைகளும் மூன்று பெண்களும் ஜனிப்பார்கள். அந்த ஐவரும் தீர்க்காயுளுடன் வாழ்வார்கள். பிறக்கும் மற்றைய மகவுகள் நீடித்திரா.

6. எந்தமா துக்குப் புத்திரா இயம்பினீர் விவரம் சொல்வாய்
முந்திய மாதுக் கேதான் மொழிகிறேம் கன்னி ஒன்று
பிந்திய மாதுக் கேதான் பேசுவோம் மற்ற வெல்லாம்
சுந்தர முதல்மா தும்தான் தீர்க்கமோ விரய மோசொல்.

6. அவனுக்கு இரு மனைவிமார்கள் என்று சொன்னீர்கள். அவர்களில யாருக்குச் சந்ததி உண்டு? அந்த விவரத்தைச்சொல்லுவீராக எனப் பார்வதிதேவி கேட்க, அத்திரிமுனிவர் சொல்லுவார். மூத்தமனைவிக்கு ஒருமகள்தான் ஜனிப்பாள். இளையமனைவிக்கு மற்றைய குழந்தைகள் உதிப்பார்கள். மூத்தமனைவி இறந்தபிறகு இரண்டாம் மனைவி ஏற்படுவாளா? அல்லது முன்மனைவி வாழும்போதே இளையவளை மணப்பனு? சொல்லும்.

7. இடுக்கமாம் வார்த்தை யாலே எகுவார் நீரா லேதான்
மடக்கொடி உடனே சேர்வாள் மாரனும் வறுமை காணன்
நுடுக்கிலான் தந்திர வார்த்தை சோம்பலும் கொஞ்ச முண்டு
நடக்கையும் நல்ல தாகும் நாயகன் வயது தீர்க்கம்.

7. முனிவர் கூறுவார். வார்த்தைகளால் கலகங்கள் ஏற்பட்டுப் பிரிவுண்டாகும். அவன் சமுத்திர பிரயாணத்தால் வேறு ஊர் சென்று உடனே அங்கு இளைய மனைவியை மணப்பான். வறுமை இல்லாதவன். கர்வமில்லாதவன். தந்திர வார்த்தைகளைப் பேசுவான். சிறிது சோம்பலுள்ளவன். நன்னடக்கை உடையவன். தீர்க்காயுளுடன் வாழ்வான்.

8. தந்தையின் குணத்தைச் சொல்வேன் சாந்தவான் சிவந்த மேனி
நந்தியும் ராசி யாகும் நல்குமூஆ யில்யம் தோன்றும்
சிந்தையும் நல்ல தாகும் சேர்ந்தோரை ஆத ரிப்பன்
முந்துமால் பக்தி கொள்வன் உயர்வான குடும்ப மேற்பன்.

8. இனி ஜாதகனுடைய தந்தையின் குணத்தைக் கூறுவேன். மிகவும் சாந்தகுணம் வாய்ந்தவன். சிவந்த மேனியான். விருஷப லக்கினத்தில் பிறந்தவன். அவனது நக்ஷத்திரம் ஆயில்யம். நல்ல எண்ணம் படைத்தவன். தன்னை அண்டியவர்களுக்கு ஆதரவு அளிப்பான். விஷ்ணுபக்தி பூண்பான். பெருமைவாய்ந்த குடும்பம் உடையவனுவான்.

9. பஞ்சைகட் கன்ன மீவன் பாருளோர் மதிக்க உய்வான்
கஞ்சமாம் ரேகையுண்டு கனத்தபுத் திகளு மேற்பன்
அஞ்சிடான் எதிரிக் கேதான் அடைந்தோரை ஆத ரிப்பன்
வஞ்சியர் வகைபு மாவன் வஸ்திரத் தொழிலும் செய்வன்.

9. எளியவர்களுக்கு அன்னதானம் செய்வான். உலகத்தோர் மதிக்க வாழ்ந்திடுவான். கையில் கமலரேகை விளங்கும். உதார மனப்பான்மை படைத்தவன். எதிரிகளைக்கண்டு அஞ்சாதவன். அடைந்தவர்களை ஆதரிப்பான். பெண்களுக்கு இஷ்டனுகவும் இருப்பான். வஸ்திரத்தொழிலை நடத்துவான்.

10. அறமதி லிச்சை யுண்டு ஆதியில் வறுமை யுண்டு
பெருமன்னை துணைவன் பக்கல் பேணியே உய்வா னுகும்
திருகுக ளவனல் நேரும் செலவுக ளதிக மெய்திப்
பெருமையும் பின்னல் நேரும் டலமுள குடும்ப மேற்பள்.

10. தருமத்தைச் செய்வதில் பேரவாக்கொண்டவன். பால்யத்தில் வறுமையால் கஷ்டப்படுவான். தன்னைப்பெற்ற தாயின் சகோதரனிடம் சென்று தொழில் செய்து உய்வான். அவனுல் சில இடையூறுகள் நேரும். அதிகச் செலவுகள் ஏற்பட்டுத் தாழ்வு உண்டாகி, பின்பு பெருமை இவனை வந்தடையும். பிரபல குடும்பமுள்ளவனுகவும் வாழ்வாள்.

11. தேவதா தலங்கள் செல்வன் தேறினார்க் கன்ன மீவன்
மாமிக ளிரண்டே யாகும் வஞ்சனை யொருவர்க் கெண்ணான்
பூமியும் பின்னால் சேர்ப்பன் புகழ்திருப் பணியும் செய்வன்
தாமத குணத்தா னாகும் ஜனஉப காரி யாமே.

11. கடவுள் பல மூர்த்திகொண்டு எழுந்தருளி இருக்கும் எல்லாப் புண்ணிய ஸ்தலங்களுக்கும் யாத்திரை செல்வான். தவசிகளுக்கு அமுதளிப்பான். இவனுக்கு மாமிமார்கள் இருவர். பிறரை வஞ்சிக்கும் இயல்பில்லாதவன். வாழ்க்கையின் பிற்காலத்தில் பூமிகளைச் சேர்ப்பான். கோயில்களுக்குத் திருப்பணியும் செய்திடுவான். தாமதகுணம் உடையவன். மக்களுக்கு உபகாரம் செய்வான்.

12. சொன்னவிக் குணத்தா னுக்குத் தோகைய ரிருவர் தம்மில்
பின்மனை யாளுக் கின்னோன் பிறப்பனு மென்று சொல்வோம்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அரிமக னொப்ப தாகும்
பன்னியே பேசு வானும் பலகலை யறிவா னாகும்.

12. நாம் சொன்ன குணங்கள் பொருந்திய மனிதனுக்கு இரு மனைவிமார்கள் என முன்னமேயே சொன்னோம். அவர்களில் இளையாளுக்குப் பிறந்தவன் இச்சாதகன். இனி ஜாதகனுடைய குணத்தைச் சொல்வேன். விஷ்ணுபுத்திரனாகிய மன்மதன்போல் அழகுவாய்ந்தவன். பன்னிப்பேசும் இயல்புள்ளவன். பல கலைகளைக் கற்றறிந்தவன்.

13. தந்தைக்கு மேலாய் வாழ்வன் தடமது மூன்று நேரும்
விந்தையாய் வார்த்தை கூறுவன் விளைபுலம் மூன்று ஊரில்
இந்தவன் சேர்ப்பா னாகு மெழிலான குடும்ப மேற்பன்
வந்தவர்க் கன்ன மீவன் பலவணி பங்கள் செய்வன்.

13. தந்தையைக் காட்டிலும் சிறப்பாக வாழ்வான். மூன்று வீடுகளை நிருமாணம் செய்வான். பிறர் ஆச்சர்யப்படும் வகையில் பேசுவான். மூன்று கிராமங்களில் இவன் நிலங்களைச் சம்பாதிப்பான். கௌரவம் வாய்ந்த குடும்பமுள்ளவனுவான். அதிதிகளுக்கு அன்புடன் அமுதளிப்பான். பல வியாபாரங்களைச் செய்வான்.

14. பலரையும் வசியம் கொள்வன் பால்பாக்கிய முடைய னவன்
நிலையிலார்க் குதவி செய்வன் நினைத்ததை முடிக்க வல்லன்
புலவன்போல் மொழிவா னாகும் பொய்யது வழுத்தா நெஞ்சம்
கலகத்தைக் கூறா னாகும் கரமதில் கோதுமை ரேகை.

14. பலரையும் தன் வசப்படுத்துவான். பால்பாக்கியமுள்ளவன். எளியவர்க்கு உதவி செய்வான். தான் எண்ணியதை முடிக்கும் ஆற்றல் படைத்தவன். நன்குக் கற்றறிந்த பண்டிதன்போல் பேசுவான். உண்மை பேசுவான். கலகப்படுத்தும் சொற்களைக் கூறாதவன். கையில் கோதுமை ரேகை விளங்கும்.

15. எப்படி யோகம் சொன்னீர் இயம்புவீ ரந்தச் சங்கை
ஒப்புடன் குருவுக் கேழில் உயர்மதி யிருப்ப தாலே
செப்புமகே சரியோ கங்கள் சதுர்கேந்திரம் கிரகம் நிற்க
மெய்ப்பும்பர் வதயோ கங்கள் விளம்பினேம் பால னுக்கு.

15. இவனுக்கு எக்காரணத்தினல் யோகம் சொன்னீர்? சொல்லும் எனக் கேட்க, முனிவர் பதில் கூறினர். சந்திரனுக்கு ஏழாமிடத்தில் குரு இருப்பதால் இவனுக்குக் கேசரி யோகம் உண்டு. மேலும் நான்கு கேந்திரங்களிலும் கிரஹங்கள் இருப்பதால் பர்வத யோகமும் இவனுக் குண்டு. ஆகையால் மேலான பலன்களைச் சொன்னேம்.

16. அதுபலன் ஆருண் டின்மேல் அம்புலி போலே யோகம்
நிதியது பெருக்க முண்டு நேமியோர் மதிப்புக் கொள்ளல்
விதவித லாப மெய்தும் மேன்மையாய்த் தொழிலு மோங்கும்
அதிதியை ஆத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

16. இவன் பிறந்து ஆருவது ஆண்டிற்குப் பிறகு வளர்பிறைச் சந்திரன் போல யோகங்கள் விருத்தியாகும். தனம் பெருகும். உலகத்தாரால் கௌரவிக்கபடுவான். பலபல பொருள்கள் கிடைக்கும். செய்யும் தொழிலும் ஓங்கும். அன்னையே! மேலும் கேளுங்கள்.

17. தன்துணை ஆண்பா லொன்று தையலர் அவ்வாறு தீர்க்கம்
நொந்திடு மிரண்டு என்றேம் நுகர்ஜய முனிவர் சொல்வர்
முந்தின மாதர் ஒன்று மொழிந்தீர்கள் அவட்குப் புத்திரர்
சந்ததம் சொல்லு மென்னச் சாற்றுவார் அத்திரி தாமும்.

17. இவனுக்கு ஒரு சகோதரனும் ஒரு சகோதரியும் உண்டு. அவர்கள் தீர்க்காயுளுடன் வாழ்வார்கள். இரு உடன் பிறந்தார்கள் சேதமாவார்கள் என்று அத்திரி முனிவர் சொல்லக் கேட்ட ஜய முனிவர், இச் சாதக னுக்கு மூத்த தாய் உண்டெனச் சொன்னீர்கள். அவளுடைய சந்ததியைத் தெரிவிப்பீர்களாக என்று கூறினர்.

18. முதல்மாதா சுதர்கள் காணுள் மேவும்கா ரகநோய் தானும்
அதுவே மரண மாகும் அதற்குப்பின் இவனின் தாயார்
அதிபதி குணம்எவ் வாறு அறிவிப்பீர் விவர மாகத்
துதிசெய்தோர்க் குதவு வாளாம் சொல்லுமுன் கோபி யாவள்.

18. அத்திரி சொல்லுவார். முதல் மாதாவிற்குச் சந்ததி இல்லை. அவளுக்குக் காரகநோய் காணும். அதுவே அவளுக்கு முடிவாகும். அதற்குப் பின் இந்தஜாதகனுக்குத் தாயாக நேர்ந்திருப்பவளைத் தந்தை மணம் செய்துகொள்வான். அவளுடைய குணத்தைக் கூறுவோம். தன்னைப் புகழ்ந்தவர்களுக்குத்தான் உதவி புரிவாள். முன்கோபியாகவும் இருப்பாள்.

19. வரனுக்குப் பகையு மெய்தும் மாஞ்சிவப் புடைய ளாகும்
அரிவையும் போக சாலி அவளுநன் னடக்கை யுண்டு
சதியிலா மனத்தா ளாகும் சற்றாத்திரி நிந்தை யேற்பள்
பொறைசொலாள் இளம னத்தாள் பூமகட்கு வயது தீர்க்கம்.

19. தன் கணவனுடன் பகைமை உடையவள். மா நிறம் வாய்ந்தவள். அவள் அதிருஷ்டமுள்ளவள். நன்னடத்தை உடையவள். சூதில்லாத மனமுள்ளவள். எல்லோருடைய ஆதரவிற்கும் பாத்திரமானவள். நிந்தனையும் இவளுக்கு ஏற்படும். கோள் சொல்லாதவள். இளகிய மனம் படைத்தவள். அவள் தீர்க்காயுளுடனும் வாழ்வாள்.

20. தன்துணை தோஷ மெய்தும் தனியளாய் வாழ்வாளாகும்
என்னகா ரணத்தி னாலே இவள்துணை தோஷம் சொன்னீர்
சந்திரன் தனக்கு மூன்றில் சேயுமே யிருப்ப தாலே
பிணைமாம் துணைவ ரென்றோம் பேதைமுன் வினையாம் தாயே.

20. அவளுக்கு உடன் பிறந்தார்கள் இல்லை. தனியளாக வாழ்வாள். என்ன காரணமெனில் ஜாதகத்தில் சந்திரனுக்கு மூன்றாமிடத்தில் செவ்வாய் இருப்பதுதான். ஆகையால் துணைவர்கள் தோன்றி அழிந்திருப்பார்கள். அவ்வாறு கிரஹம் அமைவதற்கும் காரணம் இவளுக்கு முன் ஜன்மத்தில் ஏற்பட்ட பாவம்தான்.

21. செய்தவோர் வினைக ளென்ன செப்புவீர் முனியே நீர்தாம்
தையல்முன் ஜென்மம் சொல்வேன் சட்டநா தீசர் வாழும்
துய்யமா நகரி லேதான் செனித்தனள் சேடர் வமிசம்
வையமேல் மதலை யுண்டாய் வாழ்நாளில் வினையைக்கேண்மோ.

21. அவ்வினையைக் கூறுவோம். இவள் முன் பிறவியில் சட்டநாதர் எழுந்தருளி இருக்கும் சீர்காழிநகரில் சேடர் வமிசத்தில் பிறந்து கணவன் மக்களுடன் வாழ்ந்து வரும் காலத்தில் அவளுக்கேற்பட்ட வினையைக் கேளுங்கள்.

22. இறப்பினில் கூடு கட்டி யிருக்கிற பட்சி தன்னைக்
குறிப்பாகக் கலைத்து விட்டாள் குலவிற்று அதுஓர் தோஷம்
சிறுமையோன் இரவி லேதான் சென்றனனிவளில் லத்தில்
அரிவையும் கோப முற்று அணுகாது சாகை யென்றாள்.

22. இவள் வீட்டுக் கூறையில் ஒரு பக்ஷி கூடுகட்டி வசித்துவந்தது. இவள் அக்கூட்டைக் கலைத்து அப்பக்ஷியைத் துரத்திவிட்டாள். அஃது ஒரு பாவம். மற்றொரு பாவத்தையும் கூறுகின்றோம். ஓர் இரவில் எளியவர்கள் இவள் வீட்டில் தங்குவதற்காகச் சென்றனர் உடனே கோபமுற்று அவர்களையும் அங்குத் தங்கச் சம்மதிக்காமல் துரத்திவிட்டாள்.

23. பஞ்சையு மனைவெ றுப்பால் பகருவார் சாபம் தானும்
வஞ்சியின் ஜன்மம் தன்னில் வளவுமே அலைச்ச லாயும்
கொஞ்சிய துணைவ ரின்றிக் கோதையும் தனியாய் வாழ்வாய்
நஞ்சுபோல் சொல்லிச் சென்றான் நல்கிற்று அந்தத் தோஷம்.

23. ஆகையால் மனம் வருந்திய ஏழை சாபம் கொடுத்தான். மறு ஜன்மத்தில் உன்னுடைய குடும்பம் பலகஷ்டங்களுக்கும் இலக்காகும். உடன்பிறந்தார்களின்றித் தனித்து வாழ்ந்து கஷ்டப்படுவாய். விஷம் போன்ற இவ்வாறு கொடிய சாபத்தைக் கொடுத்துச் சென்றனன். அந்தச் சாபம் இவனைச் சார்ந்தது.

24. மாதுவு மந்தி யத்தில் வாயுவால் மரண மாகி
வேதியன் வரையப் பட்டு விளங்கினு ளிக்கு லத்தில்
தீதாகப் பட்சி தோஷம் திகைத்தோனின் சாபம் தானும்
காதலிக் கடைந்த தாலே கழறினேம் துணைவர் தோஷம்.

24. அந்தியகாலத்தில் அவள் வாயுவினால் கஷ்டப்பட்டு இறந்தாள். அவளையே இங்குப் பிரம்மதேவன் படைத்திருக்கின்றான். பக்ஷிக்குச் செய்த பாவமும், ஏழைகள் இட்ட சாபம் இவளை வந்து அடைந்திருப்பதால் இந்த ஜென்மத்தில் துணைவர்கள் இல்லை.

25. மறுஜன்மம் அவ்வூர் தன்னில் வருகுவாள் சௌரஷ்ட்ர வமிசம்
உரைக்கிறோம் தந்தை பூர்வம் உயர்வான அரங்கம் தன்னில்
திருகிலா கங்கை சேயாய் ஜனித்துமே கிருஷி செய்து
அரிவையு மதலை யுண்டா யவன்வாழ்நாள் வினையைக்
[கேண்மோ.

25. மறுபிறவியில் இவள் அதே ஊரில் சௌராஷ்டிர வமிசத்தில் பிறப்பாள். தந்தையினுடைய முன்பிறவியைத் தெரிவிப்போம். அவன் முன் பிறவியில் சிறந்த க்ஷேத்திரமாகிய ஸ்ரீரங்கத்தில் குற்றமில்லாத வேளாள குலத்தில் பிறந்து விவசாயம் செய்து, மனைவி குழந்தைகளுடன் சுகமாக சீவித்து வரும்போது அவனுக்கேற்பட்ட பாவத்தைச் சொல்லுகின்றோம். கேளுங்கள்.

26. ஏழையோன் மணத்துக் காக இவனைமாங் கல்யம் கேட்கத்
தாழ்விலாத் தாரே னென்று தைரியம் அவர்க்கு ஓத
ஆழியில் சேக ரித்து அடுத்தநாள் முத்திரை கேட்கப்
பாழான திரிச்ச லாலே பணிசெய்ய மறந்தே னென்ன.

26. ஓர் ஏழை மணத்தைத் தீர்மானித்து இவனிடம் மாங்கல்யத்தை வேண்ட, இவனும் தருகிறேன் என்று சொல்லி அவனுக்குத் தைரியம் உண்டுபண்ணவே, அவ்வேழை கலியாணத்திற்குத் தேவையான மற்றைய எல்லா ஏற்பாடுகளையும் செய்து, கடைசியாக மாங்கல்யத்தைக் கேட்க, மனிதர்களைப் பாழாக்கும் கபடகுணத்தால் அவனைத் திண்டாடச் செய்ய வேண்டுமென்ற எண்ணங்கொண்டவனாய் இவன் 'ஐயோ! மறந்தேன்! இன்னும் மாங்கல்யத்தைச் செய்யவில்லையே' என்று சொல்லி அவன் மனத்தைக் கலங்கவைத்தான்.

27. வேறொரு முத்திரை வாங்கி வித்தகர் மணமுடித்துக்
கூறுவார் சாடம் தானும் குறிக்கும் பின் ஜன்மம் தன்னில்
பாரிபு இருவ ராயும் பாவையர் பகையு மாகும்
கூறியே சென்று ரெண்ட்ரேம் குலவிற்று அந்தத் தோஷம்.

27. திகைப்பை அடைந்த அந்த ஏழை என்ன செய்வான்? பாவம்! வேறு ஒரு மாங்கல்யத்தை வாங்கி மணத்தை ஒருவாறு செய்து முடித்தான். இவ்வாறு கஷ்டத்திற்கு ஆளான அந்த ஏழை "இல்லற வாழ்க்கையின் அடிப்படையான மணத்திற்கு இடையூறு செய்த பாவியான உனக்கு மறு பிறவியில் முதல் மனைவி இறந்து இளைய மனைவி ஏற்படுவாளாக; வரும் மனைவிகளும் சத்துருக்களாவர்'' என்று சாபம் விடுத்தான்.

28. அந்திய காலம் தன்னில் அவன்மனை மரண மாகித்
தன்மனச் சஞ்ச லத்தால் சண்டன்தன் பதிக்குப் புக்கிப்
பொன்னவன் வரையப் பட்டுப் பிறப்பனு மென்று சொல்வோம்
முன்ஜன்மம் ஏழைச் சாபம் மேவின பலத்தி னாலே;

28. அதீத ஜன்மத்தில் அந்திய காலத்தில் இவன் மனைவியை இழந்து கஷ்டப்பட்டு இறந்தான். அவன் தான் இங்குப் பிறந்து கடகலக்ன மகனுக் குத் தந்தையாக வாய்த்திருக்கிறான். முன் ஜன்மத்திலேற்பட்ட சாபத் தினால்;

29. மனைவியு மிரண்டு என்றேம் வளமிலாக் குடும்பம் பூர்வம்
சினமிலா இவன்பின் ஜன்மம் செப்புவோம் தில்லை தன்னில்
கனமுள பிரம்ம சேயாய்க் கலப்பனு மென்று சொல்வோம்
தனயனிச் ஜென்மம் தன்னில் செய்தபுண் ணியங்க ளென்ன.

29. இவனுக்கு இரு மனைவிமார்கள் ஏற்பட்டனர். குடும்பமும் முதலில் சுபிக்ஷமில்லாததாக ஆயிற்று. இவனுடைய பின்ஜன்மத்தையும் கூறுவோம். மறுபிறவியில் சிதம்பர க்ஷேத்திரத்தில் பிராம்மண சாதியில் பிறப்பான். பிராம்மணகுலத்தில் பிறப்பதற்கு இவன் இப்பிறவியில் என்ன புண்ணியம் செய்திருக்கிறான் என்றால்;

30. அறமதி லிச்சை யாயும் ஆபத்தைச் சிலர்க்குக் காத்தும்
பெருமையாய்த் தலங்கள் சென்றும் பலமிலர்க் கன்ன மீந்தும்
திருமகன் வாழ்வ தாலே ஜனிப்பனும் மறைக்கு லத்தில்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

30. அறம் செய்வதில் பேரவாக் கொண்டிருந்தான். சிலர்க்கு ஏற்பட்ட ஆபத்தை விலக்கிக் காப்பாற்றினான். பலபுண்ணியஸ்தலங்களுக்கு யாத்திரை செய்தான். ஏழைகளுக்கு அன்னமளித்தான். ஆகவே இந்நான்கு தருமங்களைக் கடைபிடித்து இப்பொழுது வாழ்ந்து வந்தமையால் மறை ஓது வதற்கு அதிகாரம் பெற்ற பிராம்மண குலத்தில் ஜனிப்பான். விநாயகரைப் பெற்ற தேவியே! மேலும் கேளுங்கள்.

31. பாலகன் மணத்தின் காலம் பகருவோம் பதினெட் டாண்டில்
வேல்விழி மாது நேரும் விளம்புவோ முள்ளூ ராகும்
நீலியின் குணத்தைச் சொல்வேன் நிமலன்தன் மனத்துக்
[கேத்தோள்
பால்பாக்கிய முடையா ளாகும் பசித்தோருக் கன்ன மீவள்.

31. இனி ஜாதகனின் விவாஹ காலத்தைக் கூறுவோம். பதினெட்டாவது ஆண்டில் இவனுக்கு விவாஹம் நடைபெறும். மணப்பெண் சொந்த ஊரிலேயே ஜனித்திருப்பாள். அவள் குணத்தைக் கூறுவாம். பர்த்தாவின் மனத்திற்கேற்றவள். பால் பாக்கியமுடையவள். பசித்தவர்களுக்கு அன்ன மளித்து அவர்களுடைய பசிப்பிணியை நீக்குவதலன்றி மன நிம்மதி யடையாதவள்.

32. மங்கைக்கு வயது தீர்க்கம் மாமுனி தடுத்துச் சொல்வர்
இங்கிவன் தனக்குத் தாரம் இரண்டென மொழிய லாகும்
சங்கையைச் சொல்லு மென்ன சனிகுரு சரத்தில் நிறக
நங்கைய ரிருவ ரென்றேம் நாரதர் தடுத்துச் சொல்வார்.

32. அவள் தீர்க்காயுளுடன் வாழ்வாள். உடனே ஒரு மஹரிஷி மறுத்து இல்லை; இவனுக்கு மனைவிமார் இருவர்; ஏனெனில் சனியும் குருவும் சர ராசியான மகரத்தில் இருக்கிறார்கள் என்று சொல்ல, நாரதர் இதைத் தடுத்து கூறினார்.

33. சத்தமத் தோன்தன் வீட்டில் சந்திரன் பார்வை யாலே
பத்தினி ஒன்றே தீர்க்கம் பார்ப்பானு மேழில் தங்கச்
சுத்தமாய் அபிமா னம்தான் கூடிடும் முப்பா ணாண்டில்
வித்தகி தன்கு லத்தில் விளம்புவோம் சுதாகள் காணாள்.

33. சப்தமஸ்தானாதிபதியாகிய சனி சரராசியில் இருப்பினும், அந்த ராசி தன் வீடாக நேர்ந்திருப்பதாலும் இலக்கினாதிபதியான சந்திரனால் பார்க்கப்படுவதாலும் எல்லாப் பாவத்தையும் நிவிருத்தி செய்யும் குருவும் அங்கு விளங்குவதாலும் இச் சாதகனுக்குக் களத்திரம் ஒன்றுதான். அவளும் தீர்க்காயுளுடன் வாழ்வாள். ஆயினும் சனி சரத்தில் இருப்பதன் பயனாக இவன் குலத்தில் உதித்த ஒருமாது இஷ்ட மனைவியாக வாய்ப்பாள். ஜாதகனுடைய முப்பதாவது வயதில் இந்நிகழ்ச்சி நடைபெறும். அந்த அபிமான மனைவிக்குச் சந்ததி இராது.

34. புதல்வர்கள் சுயம னைக்குப் பொருந்திடு மாண்பா லொன்று
மதிமுகப் பெண்பால் ரண்டு வரைகிறேம் தீர்க்க மாக
அதிபன்தன் பூர்வம் தன்னை வரைகிறேம் கொச்சி தன்னில்
சதியிலா வன்னிய சேயாய் ஜனித்துமே கிருஷி செய்து ;

34. ஜாதகனின் தரும பத்தினிக்குத்தான் சந்ததி உண்டு. ஒரு பிள்ளையும் இரு பெண்களும் உதிப்பார்கள். இம் மூவரும் தீர்க்காயுளுடன் வாழ்வார்கள். ஜாதகனின் முன் பிறவியைக் கூறுவோம். முன் ஜன்மத்தில் இவன் கொச்சி நாட்டில் வைசிய சாதியில் பிறநது கிருஷி செய்து ;

35. மைந்தரும் மனைவி யுண்டாய் வருவோருக் கன்ன மீந்து
கந்தன்மேல் பக்தி யாகிக் கனத்ததோர் குடும்பி யாகி
அந்தவன் பவமில் லாமல் அணுகினன் கால னூடு
சந்ததம் பிரமன் லக்கம் ஜனிப்பனு மென்று சொல்வோம்.

35. மனைவியுடனும் குழந்தைகளுடன் சுகமாக வாழ்ந்து வந்தான். தன் வீட்டை நாடி வருபவர்களுக்கு அமுதளித்தான். சுப்பிரமணிய சுவாமியிடம் பக்தி பூண்டிருந்தான். ஒரு வித பாவமும் செய்யாமல் வாழ்க்கையை நடத்தி இறந்த இவனைப் பிரம்மதேவன் இங்குக் கடகலக்கினத்தில் பிறப் பித்திருக்கின்றான் என்று தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

36. வந்தவன் யோகச் சேதி வரைகிறோ மினிமே லாகத்
தன்தனம் அதிகம் சேர்ப்பன் சல்லியம் கொள்ளா னுகும்
பந்துவு மதிக்க வாழ்வன் பாரது விருத்தி செய்வன்
எந்திட மிவன்சொல் மேன்மை ஈசுவரன் பக்தி பூண்பன்.

36. இனி ஜாதகனுடைய யோக வரலாறுகளைப் பேசுவோம். தன் முயற் சியால் அதிக தனத்தைச் சேமிப்பான். கடன் ஏற்படாதவாறு வாழ்க்கையை நடத்துவான். உற்றார் உறவினர் மதிக்க வாழ்ந்திடுவன். பூமிகளை அபி விருத்தி செய்வான். எல்லா இடங்களிலும் இவனுடைய வார்த்தைக்கு மதிப்புண்டாகும். சிவபிரானிடம் பக்தி பூண்டு வாழ்வான்.

37. இருபது எழு ஆண்டில் இவன்தந்தை கண்ட மெய்தும்
உரைக்கிறோம் நாற்ப தாண்டில் உத்தமி அன்னை கண்டம்
திருகிலா எட்டாண் டிற்குள் செப்புவோம் பிதாவின் அன்னை
மருமமாய் முப்பா னெட்டில் மடிவனே சிறிய தந்தை.

37. ஜாதகனுடைய இருபத்தேழாவது வயதில் இவன் பிதா மரணமடை வான். ஜாதகனின் நாற்பதாவது வயதில் தாய் மரணமடைவாள். ஜாத கன் பிறந்து எட்டாவது ஆண்டு முடிவதற்குள் தந்தையின் தாய் இறப்பாள். ஜாதகனுக்கு முப்பத்தெட்டாவது வயது நடைபெறுகையில் இவன் சிறிய தந்தை மாள்வான்.

38. ஜாதகன் மரண காலம் சாற்றுவோ மறுபா னைந்தில்
கோதிலாக் கடக மாதம் குறைபக்கம வுதரித் தோன்
பித்தபாண்டால் ....தேகமும் வாடு மென்றோம்
ஓதுவேன் பின்ஜன் மத்தை உயர்வான கூடல் தன்னில்;

38. சாதகனுடைய மரண காலத்தை அறிவிப்போம். அறுபத்தைந் தாவது வயதில் ஆடிமாதத்தில் கிருஷ்ண பக்ஷத்தில் ஏகாதசி திதியில் பித்தபாண்டு நோயினால் உயிர் நீப்பான். ஜாதகனின் பின்ஜன்மத்தை யும் கூறுகின்றோம். சிறந்த புண்ணிய க்ஷேத்திரமாகிய முக்கூடலில் :

39. கங்கையின் குலமு திப்பான் கனத்ததோர் குடும்ப மேற்பன்
இங்கிவன் ஜனன காலம் எழில்புதன தசையி ருப்புத்
தங்கிடும் பதின்முன் றுண்டும் சார்ந்திடும் திங்க ளெட்டும்
துங்கமாம் பூர்வ பாகம் செப்பினேம் தாயே யாங்கள்.

39. வேளாள வமிசத்தில் பிறந்து சிறப்பான குடும்பியாவான். ஜாதகன் ஆயில்யம் முதல் பாதத்தில் பிறந்திருக்கின்றான். ஆகையால் புததசையில் இருப்பு வருஷங்கள் பதின்மூன்று, மாதங்கள் எட்டு. அன்னையே! இவ்வாறு சுருக்கமாகப் பூர்வபாகத்தை, தவசிகளாகிய நாங்கள் விண்ணப்பித்தோம்.

40. சத்தம முனிவர்
சுத்தமாய்ச் சொன்னேம்
குத்தங்கள் யாவும்
வித்தகி பொறுப்பாய்.

40. எழு மஹரிஷிகளாகிய நாங்கள் சோதிட சாஸ்திரங்களை ஆராய்ந்து பார்த்துப் பலன்களைச் சுத்தமாகச் சொன்னேம். குற்றங்கள் இருப்பின் பொறுப்பது உங்கள் கடமை.

## ஜாதகம் 46

1. சந்திரன் சீய மாகச் சனிமேடம் குஜனும் வீணை
மந்திரி கேது நந்தி வெள்ளியும் கன்னி யாகப்
புந்தியும் இரவி கோலில் புக்கிட ராகு தேளில்
வந்தது கடகம் ஜன்மம் வரைகுவீர் பலனைத் தானே.

| | | | |
|---|---|---|---|
| | சனி | குரு கேது | செவ்வாய் |
| | இராசி சக்கரம் | | லக்கினம் |
| | | | சந்திரன் |
| | ராகு | புதன் சூரியன் | சுக்கிரன் |

1 விருஷ வருஷம் ஐப்பசி மாதம் 4-ந் தேதி செவ்வாய்க் கிழமை இரவு நாழிகை 15-க்கு மேல் 20-க்குள் ஜனனம்.

**ஆங்கிலத் தேதி 18-10-1881**

நவக்கிரஹங்களின் பாதசாரம் :—சித்திரை 4-இல் சூரியன் பூரம் 3-இல் சந்திரன். திருவாதிரை 4-இல் செவ்வாய். விசாகம் 3-இல் புதன். கிருத்திகை 2-இல் குரு (வக்ரீ). உத்தரம் 3-இல் சுக்கிரன். பரணி 2-இல் சனி (வக்ரீ). கேட்டை 1-இல் ராகு. ரோஹிணி 3-இல் கேது.

நக்ஷத்திரம் பூரம். சுக்கிரதசை. இருப்பு வருஷங்கள் பன்னிரண்டு, மாதம் ஒன்று.

சந்திரன் சிம்மம், சனி மேஷம், செவ்வாய் மிதுனம், குரு கேது விருஷபம். சுக்கிரன் கன்னி. சூரியன் புதன் துலாம். ராகு விருச்சிகம். லக்கினம் கடகம். இவ்வாறு கிரஹ நிலையின் பலன்களைச் சொல்லுவீர்களாக என்று பார்வதி தேவி கேட்கலுற்றாள்.

2. பார்வதி கேட்கும் போது புயண்டரும் சொல்லு கின்றார்
தீரமாய்ப் பெண்பா லாகும் ஜனித்த இல் வடதென் வீதி
கூறுவோம் மிந்திர நோக்கும் குணக்கினில் இந்திரன் கோஷ்டம்
மாரியு மாயோனை தென்கீழ் மாகாளி தந்தி நிற்கும்.

2. இவ்வாறு பார்வதி கேட்டவுடன் புயண்டர் பலன்களைச் சொல்லுகின்றார். இந்தக் கிரஹ நிலையில் பிறந்த குழந்தை பெண். வீதி தெற்கு

வடக்காக இருக்கும். வீடு கிழக்கு நோக்கும். மேற்றிசையில் இந்திரனது ஓர் ஆலயம் உண்டு. தென்கிழக்கில் மாரியம்மனும் விஷ்ணுவும் தங்கிடுவார்கள். அவர்கள் கோயிலுக் கருகில் விநாயகர் ஆலயமும் காளி கோஷ்டமும் உண்டு.

### வேறு

3. ஆடுதின்னு முனிதெற்கி லம்மன் நிற்பாள் ஆருகினிலே
 மாரியுண்டு ஆ ......................
நீடியதோர் நதியுண்டு சோலை யுண்டு
 நேர்கிழக்கில் துருவச் சக்கர மோடு
ஆடவர் தன் வரத்தில் வந்த ஆழியுண்டு
 அணுகிய வோர் சமவூரிலிந்தப் பாவை
நாடிவந்தாளிவள் பலத்தை விவர மாக
 நாட்டுவோம் முனிநாங்கள் நவ நூ லாயந்து.

3. தெற்கில் ஆடு தின்னும் முனீசுவரன் தங்கி இருக்கும். அதற்கும் அருகில் வேறு ஒரு காளி கோயிலும் மாரியம்மன் கோயிலும் இருக்கும். அங்கு நீண்ட ஒரு நதியும் சோலையும் விளங்கும். வீட்டிற்கு நேர் கிழக்கில் ஒரு துருவ சக்கிரமும் இயங்கிக் கொண்டிருக்கும்......ஒரு நீர் நிலையும் விளங்கும். இவ்வாறு அமையாள முள்ள நடுத்தரமானதொரு கிராமத்தில் இந்தப் பெண் பிறந்திருப்பாள். இவளது ஜாதகத்தின் பலன்களை நவக்கிரஹங்களை ஆராய்ந்துக் கூறும் சோதிட சாஸ்திரத்தை ஆதாரமாகக் கொண்டு தெரிவிக்கின்றோம்.

4. தந்தையின் துணைஐந்து ஆண்பால் தீது
 சாற்றுவோம் பெண்ரண்டு தங்கு மென்றோம்
பிந்தியும் அதிலொன்று பிசகு நேரும்
 பேசுவோம் தந்தைக்குத் தாயார் ரண்டு
பிந்தியதாய்க் கிவள் தந்தை பிறந்தா னென்றோம்
 பேசுவோ மிவள் தந்தைக் கிரண்டு மாது
வந்திடுவ ளிளையோளுக் கிந்த மாது
 வருகுவளாம் நாலாம் ஜன்மம் வரையக் கேளாய்.

4. இவளுடைய தந்தைக்கு ஐந்து உடன் பிறந்தார்கள். அவர்களில் சகோதரர்கள் மூவர். சகோதரிகள் இருவர். அம் மூன்று சகோதரர்களும் நீடித்து வாழார்கள். இரு சகோதரிகளில் ஒருத்திதான் தீர்க்காயுளுடன் வாழ்வாள். மற்றொருத்தி வாழ்க்கையின் மத்தியில் இறப்பாள். இந்த ஜாதகியின் தந்தைக்குத் தாய்மார்கள் இருவர். அவர்களில் இளைய தாய்க்குப் பிறந்தவன் ஜாதகியின் தந்தை. இவனுக்கும் இரு மனைவிமார்கள் வாய்ப்பார்கள். அவர்களுக்குள் இளைய மனைவிக்குப் பிறந்தவள் இந்த ஜாதகி. இவள் குடும்பத்திற்கு நான்காவது குழந்தையாவாள்.

**வேறு**

5. கேளுமத் தாய்தன் தந்தையின் குணத்தைக்
கிஞ்சுக ரோகவான் சிவப்பன்
நாளுக்கு நாளாய் யோகமே உடையன்
நாட்டினில் கீர்த்தியு மேற்பன்
........யொப்பான் கிராமாதி காரன்
விளைபுலம திகமாய்ச் சேர்ப்பன்
வாள்விழி மாதர் மோகவா னென்றோம்
மாநிலம் கம்பமாய்த் திரிவன்

5. தந்தையின் குணத்தைக் கூறுகின்றோம். அதிக இன்பத்தை நுகர்ந்து அதனால் நோய்க்கு ஆளானவன். சிவந்த மேனியான். ஒவ்வொரு நாளும் இவனுக்கு அதிருஷ்டம் ஓங்கும். இவனுக்கு நாட்டில் நற்கீர்த்தி ஏற்படும். கிராமாதிகாரம் செய்வான். செழிப்பான அதிக பூமிகளைச் சம்பாதிப்பான். அழகிகளிடம் மோகம் கொண்டவன். மனத்தில் சஞ்சலத்துடன் நாடுமுழுவதும் சஞ்சரிப்பான்.

6. திரிச்சனு மதிக சுகபுசிப் புடையான்
தந்தங்கள் விலத்திய முடையான்
குருஉப தேசம் கொள்வன் தனவான்
குலத்தினில் நிந்தையு முடையான்
பெருமவர் நேயன் ஏழையைக் காப்பன்
புகலுமுன் புன்சிறிப் புடையன்
விரைவினில் நடப்பன் பண்ணையு முடையன்
விசித்திர வீடுமே செய்வன்.

6. அதிக அலைச்சல் உடையவன். சுக போசனம் உட்கொள்ளுவான். பற்கள் விலத்தியாக இருக்கும். அதிகப் பணம் படைத்தவன். தன் சாதியாரால் நிந்தையும் இவனுக்கு ஏற்படும். பெருமை வாய்ந்த மனிதர்களுக்கு நண்பனுவான். ஏழைகளைக் காப்பாற்றுவான். புன்முறுவல் செய்து பேசுவான். நடை வேகமாகவே இருக்கும். பெரிய பண்ணையை நடத்துவான். அழகிய வீட்டையும் நிருமாணம் செய்வான்.

7. செய்நன்றி மறவான் பொருளின்மே லிச்சை
நிந்தையும் மறவான் நிபுணன்
வையமேல் புகழ்வோர்க் கன்னமு மீவன்
மனைவிமே லாசையு முள்ளான்
கரத்தினில் பத்ம ரேகையு முள்ளான்
கனத்திடு மேருகள் தாமும்
தையல்தன் குணத்தைக் கூறுவோம் இனிமேல்
தவம்செயும் சங்கரி கேளாய்.

7. பிறர் செய்தஉதவியை மறக்கமாட்டான். பொருள்களைச் சம்பாதிப்பதில் பேராசைக்கொண்டவன். தனக்கேற் பட்டப் பழிகளை மறவாதவன். மிக்க

ஆற்றல் படைத்தவன். தன்னைப் போற்றுகின்றவர்களுக்கே சோறிட்டு ஆதரவளிப்பான். மனைவியினிடம் மிகவும் அன்புகொண்டவன். இவனுடைய கரத்தில் கமலரேகை நிகழும். எருதுகள் இவனிடம் விருத்தியடையும். இனிச் சாதகியின் குணத்தைக் கூறுவோம். தவம் செய்யும் சங்கரியே! கேட்டருளல் வேண்டும்.

8. இருநிறம் உணச்சல் தேகியா மென்றோம்
இன்பமாய் வார்த்தையு முள்ளாள்
திருகது சொல்லாள் சாயல்நேத் திரமாம்
தேவிக்கு மாமிமா ரிரண்டு
பெருந்தந்தை தாயார் சுகமுடை யவளாம்
பிறந்திடும் வாசமே யுண்டாம்
வறுமைக ளில்லாள் பணிகளு முடையாள்
வயிற்றுநோ யுடையவ ளென்றோம்.

8. கரு நிறம் வாய்ந்தவள். மெலிந்த சரீரமுள்ளவள். இனிமையாகப் பேசுவாள். கலகவார்த்தைக் கூருதவள். கண்பார்வை சிறிது சாய்ந்திருக்கும். இவளுக்கு மாமியார்கள் இருவர். [இவளுடைய கணவனுக்கு இரு தாய்மார்கள் என்பது கருத்து]. பெற்ற தாய்தந்தையர்களால் அதிக சுகங்களையும் நன்மைகளையும் அடைவாள். பிறந்த வீட்டிலேயே வாழ்க்கை [கணவனுடன்] நடத்துவாள். வறுமை இல்லாதவள். அதிக ஆடை ஆபரணங்களை உடையவள். வயிற்று நோயால் இவளுக்குத் தொந்தரவும் உண்டாகும்.

9. துணைவர்க ளேழாம் மூத்தவ னுண்பால்
தோன்றினும் சேதமாம் பெண்பால்
கனமுட னென்றும் விருத்தியாம் இளையோர்
காளைகள் இரண்டுமே தீர்க்கம்
நினைவுடன் துணைவி சேதியைச் சொல்வேன்
நிந்தையு முடையளாம் சிவப்பள்
வினையிலாப் புத்தி னன்நடை யுடையாள்
விசனமில் லாதவ ளென்றோம்.

9. இவளுக்கு ஏழு உடன் பிறந்தார்கள். அவர்களில் இவளுக்கு மூத்தவனாக ஒரு சகோதரன் தோன்றுவான். ஆனால் அவன் நீடித்து வாழான். சகோதரிகள் விருத்தியடைவார்கள். இவளுக்குப் பின் பிறந்த இரு சகோதரர்களும் தீர்க்காயுளுடன் வாழ்வார்கள். ஜாதகியின் சகோதரியின் வரலாறுகளைக் கூறுகின்றேன். அவளுக்கு ஏர்படும் நிந்தைகளைப் பொருட்படுத்தாதவள். சிவந்த மேனியாள். பிறர்க்குத்தீங்கு எண்ணாத நெஞ்சம் படைத்தவள். நன்னடக்கை வாய்ந்தவள். சிறிதும் கவலையில்லாதவள்.

10. அவள்வர னுள்ளூர் அணுகியே வாழ்வள்
அறைந்திடு .... புத்திர விருத்தி
இவளுக்கு ஆண்பா லொன்றுமே என்றோம்
இதுவின்றிப் பெண்களு மிரண்டு

நவனியில் மூன்று தீர்க்கமா யிவர்க்கு
நாட்டுவோம் பிரதமமாம் புத்திரி
பலமுள இவள்பின் வந்தவன் சேதி
பகருவோம்................

10. அவள் உள்ளூரிலேயே வாழ்க்கைப்பட்டு அருகிலேயே இருந்து வாழ்வள். அவளுடைய புத்திரபாவத்தைச் சொல்லுகின்றோம். ஏழு பிள்ளைகளும் இரு பெண்களும் பிறந்து தீர்க்காயுளுடன் வாழ்வார்கள். முதலில் பெண்தான் பிறப்பாள். இனி ஜாதகிக்குப் பின் பிறந்த பாலகனின் வரலாற்றைக் கூறுவோம்.

**வேறு**

11 முன்னவ னாரும் ஜன்மம் மொழிகிறோம் கல்வி மானும்
தன்னிலே ஊக சாலி தயாளவான் பொறுமை யுண்டு
அன்னவன் யோக வானும் அரசர்பூ சிதவா னென்றோம்
உன்னத கிராமச் செட்டு உத்தமன் செய்வா னாமே.

11. குடும்பத்திற்கு இவன் ஆறுவது குழந்தை. [ஐந்தாவது குழந்தை சீவிக்கவில்லை என்பது கருத்து]. இவன நல்ல கல்வியறிவு உடையவன். சிறந்த மதியூகம் வாய்ந்தவன். எளியவர்களிடம் கருணை உடையவன். பொறுமைக் குணம் படைத்தவன். அதன் மிகவும் அதிருஷ்ட முள்ளவன். அரசர்களாலும் கௌரவிக்கப்பட்டவன். கிராமத்தில் உயர்ந்த வியாபாரத்தைச் செய்வான்.

12. இவன்பிதா தனக்கு மேலா யியம்புவோம் யோகம் தானும்
அவனியில் மனைவி ஒன்று ஆணது ஒன்று தீர்க்கம்
நவனியில் பெண்பால் ரண்டு நாட்டுவோ மவனுக் கேதான்
பவமுள இவன்பின் வந்தோன் பலன்தனைக் கூறக் கேண்மோ.

12. இவன், பிதாவின் வாழ்க்கையை விட மேலாக வாழ்வான். தந்தையைவிட அதிருஷ்டம் வாய்ந்தவன். அவனுக்கு மனைவி ஒருத்தி தான். ஒரு பிள்ளையும் இரு பெண்களும் பிறந்து ஸ்திரமாக வாழ்வார்கள். இனி இவனுக்குப் பின் பிறந்தவனுடைய பலன்களைக் கூறுகின்றோம். கேட்பீராக.

13. மாநிறம் தந்திர வாதி வல்வாயன் ஒருவர்க்க ஞ்சான்
தேன்மொழி வார்த்தை சொல்வன் செய்நிலம் விருத்தி செய்வன்
ஈனமாம் குணங்க ளில்லான் இர சுபர வசியம் கொள்வன்
ஊனமில் லாத தேசன் உரைக்கிறோம் எட்டாம் ஜன்மம்.

13. மாநிறமுள்ளவன். தந்திரவார்த்தைகளைப் பேசுவான். மேலும் தான் சொன்னதை ஸ்தாபிப்பான். யாருக்கும் அஞ்சாதவன். தேன் போல் இனிமையான சொற்களைச் சொல்லுவான். நிலங்களை அபி

விருத்தி செய்வான். கெட்ட குணங்கள் இல்லாதவன். அரசர்களை [அரசாங்க அதிகாரிகளை] தன்வசப்படுத்துவான். பின்னமில்லாத சரீரம் வாய்ந்தவன். குடும்பத்திற்கு இவன் எட்டாவது குழந்தை.

14. வாகன முடைய னாகும் வருமனும் ஏர்பெ ருக்கம்
நாகரீ கங்க ளுள்ளான் நாற்காலி விருத்தி யுள்ளான்
தேகமும் வலிவு முள்ளான் சிறுத்தவர்க் குதவி செய்வன்
போகவான் ஒன்றாய் வாழ்வான் பிரபல குடும்பி யாவன்.

14. வண்டி முதலிய வாகனங்கள் உடையவன். கபடமும் உள்ளவன். ஏர்களை அதிகப்படுத்துவான். [வியவசாயத்தொழிலை அதிகம் செய்வான் என்பது கருத்து.] இனிய பழக்க வழக்கங்கள் உடையவன். கால்நடைகளை அபிவிருத்தி செய்வான். உடல் வலிமை வாய்ந்தவன். எளியவர்களுக்கு உதவிபுரிவான். மேலான சுகங்களை அனுபவிப்பவன். ஒற்றுமையுடன் வாழ்ந்து பிரபல குடும்பியாவான்.

15. பாரியை ஒன்றே யாகும் பகருவோம் புத்திர பாவம்
தீரமாய் ஆண்பா லொன்று செப்புவோம் தீர்க்க மாக
வேறது இல்லா தாகும் விளம்பினோம் துணைவர் சேதி
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

15. அவனுக்கு மனைவி ஒருத்திதான். புத்திரபாவத்தைப் பற்றிக் கூறுகின்றோம். இவனுக்கு ஒரு பிள்ளை பிறந்து தீர்க்காயுளுடன் வாழ்வான். வேறு சந்ததி இல்லை. இவ்வாறு ஜாதகியின் துணைவர்களைப் பற்றிய செய்திகளைச் சொன்னோம். ஆறுமுகக் கடவுளைப்பெற்ற அன்னையே! மேலும் கேளுங்கள்.

16. ஜாதகி மணத்தின் காலம் சாற்றுவோம் பதினோ ராண்டில்
மேதினில் வடகீழ் தன்னில் விளங்குவான் வரனே யென்றோம்
போதவே துணைவர் தம்மைப் புகலவே பலத்தைக் காணோம்
நீதியாய் வரனுக் கேதான் நிகழதுவோம் தாயார் ரண்டு.

16. ஜாதகியின் விவாஹ காலத்தை அறிவிப்போம். பதினோராவது ஆண்டில் விவாஹம் நடைபெறும். மணமகன் வட-கிழக்குத்திசையில் இருக்கின்றான். அவனுக்குத் துணைவர்கள் இருப்பதற்கு ஆதாரத்தைக் காணோம். ஆனால் அவனுக்கு இரு தாய்மார்கள் உண்டு.

17. முந்தின மாதா வுக்கு உதித்தன னிவனே யென்றோம்
பிந்திய மாதா வொன்று பேசினோ மிவனுக் கேதான்
தந்தையி னாஸ்தி தன்னில் தானவன் வாழா னாகும்
இந்தவாறு பெண்ணின் பக்கல் இருப்பனேயிவனே யென்றோம்.

17. மூத்த அன்னைக்குப் பிறந்தவன் இந்தச் சாதகியின் கணவன். இவனுக்கு இளையதாயாரும் உண்டென்று முன்னமேயே சொன்னோம்.

இவன் தன்தகப்பனின் சொத்தை அடைந்து, அதனால் ஜீவிக்கமாட்டான். இவனுடைய [மனைவியின்] வீட்டில் ஆதரிக்கப்பட்டு வாழ்வான் என்றும் சொல்லுகிறோம்.

18. வரன்குணம் கல்வி கொஞ்சம் மாநிறம் மர்ம முள்ளான்
குறையான மனத்தா னாகும் குணமது இரண்டு முள்ளான்
வருமனை தனக்க டக்கம் வஞ்சியால் பெருமை யுள்ளான்
கரங்களும் வலிவு முள்ளானென்றுதான் புகன்றிட் டோமே.

18. இனி அவனுடைய குணத்தைச் சொல்லுவோம். சிறிது கல்வி கற்றவன். மாநிறமுள்ளவன், கபடமுடையவன். எப்பொழுதும் குறைபடும் மனப்பான்மை வாய்ந்தவன். தீயகுணங்களும் நற்குணங்களும் இவனிடம் இருக்கும். மனைவியின் மனத்தின்படி நடப்பான். அவளால் விசேஷ பெருமைகளை அடைவான். பலம் பொருந்திய தோள்கள் வாய்ந்தவன். என்று இவ்வாறு சொன்னோம்.

19. புயண்டரிவ் விதமாய்ச் சொல்லப் புகலுவார் பராசர் தாமும்
நயமான மனைவி யாலே நாட்டினீர் யோக மென்று
வியமதைச் சொல்லு மென்ன வித்தகன் முன்ஜன் மத்தில்
பயமிலாப் பழிகள் செய்து பல கால தோஷ மென்றோம்.

19. புயண்டர் இவ்வாறு சொன்னவுடன் பராசரமுனிவர் கூறுவார். இவனுக்கு மனைவியினால் யோகம் உண்டு; மனைவியின் வீட்டில்தான் வாழ்வான்; என்று சொன்னீர்கள். இவன் தனது தந்தையின் சொத்தை அடைந்து பிறரை எதிர்பாராமல் ஏன் சீவிக்கக்கூடாது? தந்தையின் சொத்து இவனுக்கு ஏன் கிடைக்கவில்லை? இதன் காரணத்தைச் சொல்லும் என, புயண்டர் கூறுவார். இவைகளுள் எல்லாவற்றிற்கும் காரணம் முன் ஜன்ம வினைதான்.

20. முன்ஜன்மம் வினைக ளென்ன மொழிகுவீர் முனியே நீர்தாம்
அன்னவன் முன்ஜன் மத்தில் அறுமுகர் தணிகை சீழ்ப்பால்
இன்னவன் ரெட்டி யாகி யிவன்துணை களத்திர ருண்டாய்
பன்னிய பூமி யுண்டாய்ப் பூமியில் வாழு நாளில்.

20. முன்ஜன்ம வினையைச் சொல்லுமெனக்கேட்க புயண்டர் கூறுகின்றார். இவன் முன்பிறவியில் சுப்பிரமணியர் எழுந்தருளி யிருக்கும் திருத்தணி க்ஷேத்திரத்திற்குக் கீழ்த்திசையிலுள்ளதோர் ஊரில் ரெட்டி வமிசத்தில் பிறந்து சகோதரர் மனைவி குழந்தை இவர்களுடன் அதிக நிலங்களை உடையவனாக வாழுங் காலத்தில்;

21. ஞாதிகள் தமக்குப் பாகம் நல்காமல் மோசம் செய்தான்
ஓதினார் ஞாதி தாமும் உதித்திடும் பின்ஜன் மத்தில்
போதவே தந்தை ஆஸ்தி பொருந்தாமல் வேட்ட கத்தில்
நீதியாய் வாழ்வாய் என்று ஞாதிகள் சாபமிட்டார்.

21. சகோதரர்களுக்குச் சேரவேண்டிய பாகத்தைத் தராமல் மோசம் செய்து வாழ்ந்தான். ஆகையால் அவர்கள் மனங்கொதித்து, சகோதரர்களை ஏமாற்றின பாவியாகி நீ, வரும் பிறவியில் தந்தையின் சொத்தை அடையாமல், மனைவியின் வீட்டில் அவர்கள் உதவியை எதிர்பார்த்து உயிர் வாழ்வாயாக எனச் சபித்தனர்.

**குறிப்பு.**—தன் முயற்சியால் சீவிப்பது உத்தமம்; தந்தை சொத்தினால் சீவிப்பது மத்திமம்; சகோதர வருக்கத்தினரின் பொருள்களால் சீவிப்பது அதமம்; வேட்டகத்தில் சீவிப்பது மிகவும் அதமம் என்னும் கருத்துள்ள சுலோகத்தைக்காண்க. ஆகவே மனைவியின் ஆதரவில் உயிர் வாழ்வது யாருக்கும் ஒருவித தண்டனையேயாம்.

22. இவர்பந்து முன்மண் வாரி யிறைத்தனர் அதுவோர் தோஷம்
நவனியில் ஏழை யோரை நசித்துப்பின் பூமி தன்னை
இவனுமே பறித்துக் கொண்டான் ஏழையோர் மனவெ றுப்பால்
பவமுள பின்ஜன்மத்தில் பிறந்தபா ரில்லா தாகி.

22. இவ்வாறு சொல்லி அவர்கள் மண்ணை வாரி இறைத்தனர். இது ஒரு காரணம். வேறு ஒரு காரணத்தையும் தெரிவிக்கின்றோம். இவன் ஏழைகளுக்குத்தொந்தரவை உண்டுபண்ணி அவர்களை வருத்தி அவர்கள் நிலங்களை அபகரித்துக் கொண்டான். ஆதலால் மிகவும் வருந்திய ஏழைகள் "மறு பிறவியில் நீ பிதுரார்ச்சித வீடு இல்லாமலும்;

23. அன்னையால் சுகமில் லாமல் அவன் தந்தை ஆஸ்தி யின்றிப்
பின்னையும் தலத்தை விட்டுப் பொருந்துவாய் மனைவி பக்கல்
இன்னவாறு ஏழை சொல்லி ஏகினர் இல்லம் விட்டு
தன்னிலே அந்தத் தோஷம் பற்றிற்றுஇது யிவனுக் கேதான்.

23. பெற்ற தாயின் சுகமின்றியும், தந்தையின் சொத்தைப் பெறுமலும், இதுவுமன்றி தந்தையின் வீட்டில் வாழ முடியாதவனாகி மனைவி வீட்டில் உயிர் வாழ்வாய், என்று சபித்தனர் இவ்வாறு சொல்லி அவர்கள் சென்றனர். அந்தச் சாபம் இவனைச் சார்ந்தது. இஃது இரண்டாம் காரணம்.

24. இங்கிவர் சாபம் தானும் இவனுக்குச் சேர்ந்த தாலே
பொங்கிய குடும்பம் .......... பிழைகளும் நேர்ந்த தென்றோம்
சங்கையா யந்தி யத்தில் சல்லிய மிகவே நேர்ந்து
மங்கையே வாயு நோயால் மறலியின் பதிக்குச் சென்றான்.

24. இவ்விரு சாபங்களும் இவனுக்கு முன் பிறவியில் நேர்ந்தமையால் பொங்கி வளர்ந்த இவனது குடும்பத்திற்குப் பல இன்னல்கள் ஏற்பட்டு, கடனும் அதிகம் நேர்ந்தது. பார்வதி தேவியாரே! கடைசியில் வாயுரோகத்தினால் கஷ்டப்பட்டு இறந்தான்.

25. வந்தவ னிவனே யென்றே மவன்ஜாதி சாபம் போமே
முந்தியே நேரு மென்றேம் மொழிகிறே மிவன்பின் ஜன்மம்
எந்தைதன் காஞ்சி தெற்கில் இலகிய சிற்றூர் தன்னில்
சந்தத மிக்குலத்தில் தானவ னுதிப்பா னென்றேம்.

25. அவன்தான் இங்குப் பிறந்து, இக் கடகலக்கின மகளுக்கு நாயகனுக வாய்ப்பான். பங்காளிகளின் சாபம்போல் மனைவி வீட்டில் வாழ்வான். இவனுடைய பின் ஜென்மத்தையும் கூறுகின்றேம், இவன் மறு பிறவியில் காஞ்சிக்குத் தெற்கிலுள்ளதொரு சிறிய ஊரில் இதே குலத்தில் உதிப்பான் என்று தெரிவிக்கின்றேம்.

26. ஜாதகி தனக்குப் புத்திரர் சாற்றுவோ மாண்பால் ரண்டு
மேதினில் பெண்பா லவ்வாறு விருத்தியா மிவளுக் கேதான்
மாதவர் புயண்டர் சொல்ல மங்கையும் கேட்க லுற்றுள்
மேதினில் புத்திரர் தாமும் விளங்காது என்று ரைப்போம்.

26. ஜாதகியின் புத்திரபாவத்தைக் கூறுவோமாக. இவளுக்கு இரு பிள்ளைகளும் இரு பெண்களும் தோன்றுவார்கள். அந்நால்வரும் ஸ்திரமாக வாழ்ந்திடுவர். இவ்வாறு பெரிய தவசியான புயண்டர் சொல்ல, பார்வதிதேவி சொல்லலுற்றுள். இச்சாதகிக்குப் புத்திரதோஷமுண்டு என யாம் உரைப்போம்.

27. எதுகா ரணத்தி லே இவளுக்குப் புத்திர தோஷம்
நீதியாய் ஏழோன் தானு மரஞ்சிலே நீச்சமாகத்
தீதான அஞ்சில் ராகு செறிந்துமே யிருப்ப தாலே
சூதினுல் புத்திர தோஷம் செப்புவோ மிவளுக் கேதான்.

27. இவளுக்கு என்ன காரணத்தினுல் புத்திர தோஷமென்று முனிவர் கேட்க, ‘‘ ஏழாம் பாவத்திற்கு உடைய சனி, பத்தில் நீசம் பெற்று இருப்ப தாலும், புத்திர பாவமான ஐந்தாமிடத்தில் பாபக் கிரஹமான ராஹு இருப் பதாலும் இவளுக்குப் புத்தர தோஷமுண்டு ’’ என்று சொல்லுவோமெனப் பார்வதி தேவி காரணத்தைத் தெளிவாகக் கூறினுள்.

28. ஜயமுனி யே .......... தேவியைப் பார்த்துச் சொல்வார்
பயமிலாக் குருவு மேழை பஞ்சமாம் தன்னைப் பார்க்க
தயையுட னிரண்டில் சந்திரன் தங்கியே இருப்பதாலே
வியமிலாச் சுதர்கள் தோன்றும் வித்தகி கேட்டி டாயே.

28. ஜயமுனிவர் உமாதேவியைப் பார்த்துக் கூறினுர். நீங்கள் சொன்ன குறைகள் மாத்திரமிருப்பின் புத்திரதோஷ முண்டெனக் கூறலாம். அவைகளைப் பரிகரிக்கும் குணங்களும் இருக்கின்றன. அவையென்ன வென்றல், பாக்கியஸ்தானத்தில்–ஸ்வக்ஷேத்திரத்தில்–தங்கி விளங்கிடும் புத்திரகாரகனுகிய–குரு ஐந்தாமிடத்தைப் பார்ப்பதாலும், இலக்கினுதி பதியான சந்திரன் குடும்பத்தில் இருப்பதாலும் இவளுக்குப் புத்திர விருத்தி யுண்டு. எல்லாமறிந்த தேவியே ! மேலும் கேட்பீராக.

29. இவன்பிதா முன்ஜென் மத்தைக் கூறுவோம் காஞ்சி தன்னில்
நவனிபால் பிரம்ம சேயாய் ராசபூ சிதமுள் ளானாய்
அவனியில் வாழு நாளில் அமங்கலை மாது மோகம்
பவமுள போகம் துய்த்துப் பாவையை விலக்கி விட்டான்.

29. இவனுடைய பிதாவின் முன் ஜென்மத்தைக் கூறுவோம். அவன் முன் பிறவியில் காஞ்சியில் பிராமண குலத்தில் பிறந்து அரசர்களாலும் பூசிக்கப்பட்டவனாக வாழுங்காலத்தில், கணவனையிழந்த ஒரு மாதுமேல் மோகம்கொண்டு போகம் நுகர்ந்து சிறிது காலத்திற்குப்பின் அவளை விலக்கி விட்டான்.

30. மாதுவும் மனங் கலங்கி வரைகுவாள் சாபம் தானும்
நீதியாய் மறுஜென் மத்தில் நேர்ந்திடும் மனைவி
தீதுண்டு குலத்தில் குற்றம் செப்பினாள் விதவை மாது
போதவே அந்தி யத்தில் புக்கிற்று வாயு பாதை.

30. இவனை நம்பி மோசம்போன அந்த மாது மனங்கலங்கி, நம்பிக்கைத் துரோஹம் செய்து நட்டாற்றில் கைவிட்ட பாவியாகிய நீ, வாழ்க்கை நடுவில் மனைவியை இழந்து தத்தளிப்பாய். இரண்டாவது மனைவியை மணப்பாய். குலத்திற்குத் தோஷங்களும் ஏற்படும் எனச் சபித்தாள். அச்சென்மத்தின் அந்திய காலத்தில் வாதரோகத்தினால் கஷ்டப்பட்டு ;

31. காலன்தன் பதிக்குச் சென்று கஞ்சனால் வரையப் பட்டு
ஞாலமேல் கங்கை வம்சம் நாயக னுத்தித்தா னென்றோம்
கோலமா யிவன்பின் ஜென்மம் கூறுவோம் காசி தன்னில்
சாலவே பிரம்ம சேயாய்த் தானவ னுதிப்பா னென்றோம்.

31. இறந்தான். அவனைக் கமலாசனத்தில் வீற்றிருக்கும் பிரம்மதேவன் இங்கு வேளாள குலத்தில் பண்டைத்திருக்கின்றான். இவனுடைய பின் ஜென் மத்தைப் பற்றியும் அறிவிக்கின்றோம். இவன் மறு பிறவியில் காசியில் பிராம்மண குலத்தில் உதிப்பான்.

32. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அழகுளாள் சிவந்த மேனி
பன்னியே பேச வல்லாள் பந்துவும் புகழ வாழ்வாள்
முன்னமே கோபம் கொஞ்சம் முயற்சியாய்க் குடும்பி யாவள்
இன்னவ ளதிருஷ்ட சாலி இவள்துணை பதினொன் றாகும்.

32. இவளுடைய (சாதகியின் கணவனுடைய) தாயின் குணத்தைச் சொல்லுகின்றோம். அவள் அழகு வாய்ந்தவள். சிவந்த மேனியாள். பன்னிப் பேசும் இயல்புடையவள். உற்றார் உறவினர் மதிக்க வாழ்ந்திடுவாள். சிறிது முன்கோபி. தன் முயற்சியால் சிறப்பாகக் குடும்பத்தை நடத்துவாள். அதிருஷ்டம் வாய்ந்தவள். இவளுடைய உடன் பிறந்தார்கள் மொத்தம் பதினொன்று.

33. அவளுடைப் பூர்வம் சொல்வேன் அவ்வூரில் மேற்குப் பேரூர்
பவமுள கணக்கர் வம்சம் பாவையு முதித்து மேலும்
இவளுமே வறுமை யின்றி யாவர்க்கு நல்லோளாகி
நவனியில் மதலை யுண்டாய் நாயகி சுகமாய் வாழ்வள்.

33. அவளுடைய முற்பிறவியைக் கூறுவேன். இவள் முற்பிறவியில் இப்பொழுது இருக்கும் ஊருக்கு மேற்குத் திசையில் ஒரு பெரிய ஊரில் உயர்ந்தோர் "கணக்கன்" வமிசத்தில் பிறந்து, வறுமையில்லாதவளாகி, கணவன் குழந்தைகளுடன் சுகமாக வாழ்ந்து வந்தாள். எல்லோருக்கும் நல்லவளாக இருந்தாள்.

34. பித்தரோ கத்தி னாலே பூமியில் மரண மாகி
வித்தகி யிக்கு லத்தில் மேவின ளிவளே யென்றோம்
சுத்தமா யிவள்பின் ஜன்மம் சொல்லுவோம் காஞ்சி தன்னில்
சித்தமாய் வைசியச் சேயாய் ஜனிப்பளா மென்று சொல்வோம்.

34. அந்தியத்தில் பித்தரோகம் கண்டு மரணமடைந்து இக்குலத்தில் பிறந்திருக்கின்றாள். இவளுடைய பின் பிறவியையும் தெளிவாகச் சொல்லுகின்றோம். இவள் மறுபிறவியில் காஞ்சியில் வைசிய குலத்தில் ஜனிப்பாள்.

35. மாதுரு மரண காலம் வரைகிறோம் நாற்பா னொன்றில்
மேதினில் கடக மாதம் விளம்புவோ மிதுவல் லாமல்
போதவே முப்பா னெட்டில் புகழ்கார்த்தி மாதம் தன்னில்
தீதுண்டு தந்தைக் கேதான் செப்பிய மொழிகுன் றாவே.

35. ஜாதகியினுடைய மாதாவின் மரணகாலத்தைக் கூறுவோம். ஜாதகிக்கு நாற்பத்தொன்றாவது வயது நடைபெருங்கால் ஆடி மாதத்தில் இவள் தாய் மரணமடைவாள். மேலும் இவளுக்கு (ஜாதகிக்கு) முப்பத்தெட்டாவது வயது நடக்கும்போது கார்த்திகை மாதத்தில் தந்தைக்குக் கண்டம் ஏற்பட்டு இறப்பான். முனிவர்களாகிய நாங்கள் சொன்ன மொழிகள் தவறா.

36. ஜாதகி முன்ஜன்மத்தைச் சாற்றுவோம் காஞ்சி கீழ்ப்பால்
மேதினில் பேரூர் தன்னில் விளங்கினாள் செங்குந்த வமிசம்
போதவே தனங்க ளுண்டாய்ப் புத்திர ருள்ளா ளாகி
ஆதியாய் முருகர் பாதம் அவளுமே உச்ச ரித்தாள்.

36. இனி ஜாதகியின் முன்பிறவியைத் தெரிவிப்போம்; காஞ்சிக்குக் கீழ்த்திசையிலுள்ள ஒரு பெரிய ஊரில் செங்குந்த வமிசத்தில் உதித்து, அதிகச் செல்வத்தைப் படைத்து, கணவன் குழந்தைகளுடன் சுகமாக வாழ்ந்து வந்தாள். ஆதிப் பொருளாகிய சுப்பிரமணிய சுவாமியின் நாமங்களை ஜபித்தும், அவன் பாதங்களைப் போற்றியும் வந்தாள்.

37. மரணமே யாகி யேதான் வந்தன ளிவளே யென்றோம்
அறைகிறோ மன்பான் ரண்டில் ஆவணி மாதம் தன்னில்
வரனுமே மரண மாகி மங்கையு மறுப தாண்டில்
மறலியின் பதிக்குச் சேர்வள் ஆவணி மாதம் பூர்வம்.

37. கடைசியில் இறந்து இப்பொழுது கடகலக்னத்தில் பிறந்திருக்கிறாள். இவளுடைய மரணகாலத்தைக் கூறுவோம். இவளுடைய ஐம்பத்திரண்டாம் வயதில் ஆவணி மாதத்தில் ஜாதகியின் கணவன்இறப்பான். அறுபதாவது வயதில் ஆவணி மாதத்தில் சுக்கில பக்ஷத்தில் ஜாதகி இறப்பாள்.

38. பின்ஜன்மம் அவ்வூர் தன்னில் பிறப்பளா மிக்குலத்தில்
அன்னவள் குடும்பச் சேதி அறைகிறோ முப்பா னேழில்
இன்னவள் வேறாய்ச் செல்வள் இவளுக்குத் தந்தை யாலே
உன்னத வீடு பூமி உறைந்திடு மென்று சொன்னோம்.

38. இவள் அடுத்து வரும் ஜன்மத்தில் அவ்வூரில் பிறப்பாள். அவளுடைய குடும்ப வரலாறுகளைக் கூறுவோம். இவள் முப்பத்தேழாம் வயது வரை தாய் தந்தையர்களுடன் வசித்து, அதன்பின் தன் கணவனுடன் மாத்திரம் தனிக்குடும்பம் நடத்துவாள். இவளுக்குத் தன் தந்தை மூலம் பெரிய ஒரு வீடும், பூமிகளும் கிடைக்கும்.

39. வறுமைக ளில்லா வாழ்வள் வருஞ்சுதர் யோக முள்ளாள்
குறைவிலாக் குடும்பி யாவள் கூறுவோம் சிலவே சங்கை
வரன்சொலே தடுத்துச் சொல்வாள் மதிப்பிலா வாழ்வளாகும்
அரன்தனைப் பூசை செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

39. வறுமை இல்லாமல் வாழ்வாள். பிறக்கும் பிள்ளைகளாலும் மேலான அதிருஷ்டமுண்டாகும். எவ்விதத்திலும் குறை வில்லாத குடும்பம் உடையவளாவாள். சில குற்றங்களும் இவளிடம் உண்டு. கணவன் சொல்லை மறுத்துப் பேசும் இயல்புள்ளவள். பிறருடைய மதிப்புப் பெறாமல் வாழ்வாள். சிவபிரானைப் பூசை செய்யும் தேவியே ! மேலும் கேளுங்கள்.

40. பிறந்தவள் ஜனன காலம் புகர்தசை யொருபான் ரண்டு
சிறந்திடு திங்க ளொன்று செப்புவோ மிவளுக் கேதான்
விரைவினில் துணைவர் விருத்தி மிக்கதோர் பூமி சேரும்
உறவினில் சூத முண்டு உத்தமி கேட்டி டாயே.

40. இவள் பூரநக்ஷத்திரம் இரண்டாம் பாதத்தில் ஜனித்திருக்கின்றாள். ஆகையால் சுக்கிரதசையில் இருப்பு வருஷங்கள் பன்னிரண்டு, மாதம் ஒன்று. இந்தத் தசையின் பலன்களைக் கூறுகின்றோம். வெகு விரைவில் சகோதர விருத்தி ஏற்படும். அதிக பூமிகள் சேரும். பந்துக்கள் மரணத்தால் தீட்டும் வரும். ஈசுவரியே ! மேலும் கேளுங்கள்.

41. அன்னையின் வர்க்கம் சூதம் அன்புளோர் கலகம் கொஞ்சம்
பன்னிய ரோகம் வாய்க்கும் பலபல மனக் கலக்கம்
இன்னமும் விவர மாக இயம்புவோ மிரண்டி லேதான்
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே.

41. தாய் வருக்கத்து உறவினர் இறப்பதாலும் சூதகம் நேரும். நண்பர்களுடனும் சண்டையிட நேர்ந்திடும். நோய்களும் வரும். பல வழிகளிலும் கவலைகள் ஏற்படும். இந்த ஜாதகத்தைப் பற்றிய விவரங்களை இரண்டாம் பாகத்தில் கூறுவோம். விநாயகரை பெற்ற கருணைக்கடலே ! எங்களை மேலும் கேட்டருள வேண்டும்.

# ஜாதகம் 47

## வேறு

1. மதியும் குஜனும் சீயமுற
   மாலும் கன்னி குறமானில்
   வேதியன் தனுசு ரவிபணியும்
   வெள்ளி கோலில் சிகிமேடம்
   பதியும் நண்டு பலானவர் வசீர்
   வீசர் முனியே விவரமதாய்
   இதுவே ஆண்பால் ஜனனமுறும்
   இல்லம் வடதென் வீதியது.

| | | | |
|---|---|---|---|
| | கேது | | |
| | இராசி சக்கரம் | | லக்கினம் |
| சனி | | | சந்திரன் செவ்வாய் |
| குரு | சூரியன் ராஹு சுக்கிரன் | | புதன் |

சுபகிருத் ஹூ ஐப்பசி மீ 10-ஆம் உ ஞாயிற்றுக்கிழமை இரவு 15 நாழிகைக்கு மேல் 20-க்குள் ஜனனம்.

### ஆங்கிலத் தேதி—26-10-1902

நவக்கிரஹங்களின் பாதசாரம்.—சுவாதி 2-இல் சூரியன், பூரம் 1-இல் சந்திரன், மகம் 3-இல் செவ்வாய், சித்திரை 2-இல் புதன் (வக்ரீ), சிரவணம் 2-இல் குரு, சித்திரை 3-இல் சுக்கிரன் (அஸ்தம்), உத்தராடம் 1-இல் சனி, சித்திரை 3-இல் ராஹு, அசுவினி 1-இல் கேது. நக்ஷத்திரம் பூரம், சுக்கிரதசை இருப்பு வருஷங்கள் பதினெட்டு. நூலாசிரியர் கணிதப்படி உத்தராடம் 1-இல் குரு, உத்தராடம் 2-இல் சனி.

1. சந்திரனும் செவ்வாயும் சிங்கம், புதன் கன்னி, சனி மகரம், குரு தனுஸ், சூரியன் ராஹு சுக்கிரன் துலாம், கேது மேஷம், இலக்கினம் கடகம். முனிவர்களே ! இஜ் ஜாதகத்தின் பலனைச் சொல்லு வீராக, எனப் பார்வதி கேட்க, முனிவர் பலனைச் சொல்லுகின்றார். இக் கிரஹ நிலையில் பிறந்த குழந்தை ஆண். வீதி தெற்கு வடக்காக அமைந் திருக்கும்.

2. அதுதான் கீழ்ப்பால் வாசலது
யானை முகத்தோன் காளிஉத்திரம்
நதியை அணிந்தோன் வடகீழ்ப்பால்
நாட்டும் சமவூர் தாயில்லலம்
அதிப னிரண்டாம் ஜனனமுமாய்
வருவாய் வைசிய குலமென்றேம்
சுதன்தன் யோகம் அன்னைதந்தை
துணைவர் புத்திரர் களத்திரமும் ;

2. வீடு கீழ்த் திசை நோக்கி இருக்கும். யானை முகக் கடவுள் ஆலயமும் காளி கோயிலும் வடக்கில் விளங்கிடும். வடகிழக்கில் நதியைச் சடையில் அணிந்த சிவபிரானது கோஷ்டம் உண்டு. அஃது ஒரு நடுத்தரமான ஊராகும். ஜாதகன் தாய் வீட்டில் பிறந்திருக்கிறன். இவன் குடும்பத்திற்கு இரண்டாம் குழந்தை. வைசிய குலம். தேவியே ! நாங்கள் இந் நூலில் ஜாதகனது யோகத்தையும், தாய் தந்தை சகோதரர் களத்திரம் புத்திரர் இவர்களைப் பற்றியும் ;

3. முன்பின் ஜன்மம் தான்புகல்வே
னுதித்தோன் தந்தை துணை யாண்பால்
ஒன்றே தீர்க்கம் கன்னிகையும்
ஒரா றென்றேம் அதிலொன்று
பின்ன மாகும் ஆண்பாலும்
பிரிதல் வேருய்ச் சென்றிடுவன்
இன்னுன் குணத்தைத் தான்புகல்வேன்
இன்பச் சொல்லன் பகையாளன்.

3. முன் பின் ஜன்மங்களையும் சொல்வோம். கடக லக்கினத்தில் பிறந்திருக்கும் இப் பாலனுடைய தந்தைக்கு ஒரு சகோதரனும் தோன்றுவான். ஆறு சகோதரிகள் தோன்றுவார்கள். ஆனல் ஒரு சகோதரிக்குச் சேதம் ஏற்படும். ஆகவே ஒரு சகோதரனும் ஐந்து சகோதரிகளும் தீர்க்கமாக வாழ்வார்கள். சகோதரனும் சீக்கிரத்திலேயே குடும்பப் பிரிவினை செய்துக் கொண்டு வேறு குடும்பம் நடத்துவான். தந்தையின் குணத்தைச் சொல்வேன். பகைமையை நீடித்து மனத்தில் வைத்துக்கொள்வான். இனிமையாகப் பேசுவான்.

4. சொல்லைக் காப்பன் மாநிறத்தன்
சுத்த மனத்தன் சமதேகன்
தொல்லையுடை யோர்க் குதவிடுவன்
சோம்பில் செல்வன் வெளிநாட்டில்
இல்லை யென்று தான்புகலான்
எதிரிக் கஞ்சான் இரணியங்கள்
நல்ல செட்டுத் தான்செய்வன்
நாட்டில் வறுமை காணுதான்.

4. தான் சொன்ன வார்த்தையைக் காப்பாற்றுவான். மாநிற முள்ளவன். தூய மனமுள்ளவன். தேகம் சமமாக வளர்ந்திருக்கும். கஷ்டங்களை அடைந்தவர்களுக்கு உதவி செய்வான். கப்பல் மூலம் வெளி நாடுகளுக்குச் செல்வான். உதவியை நாடுபவர்களுக்கு இல்லை என்று சொல்லாதவன். எதிரிகளுக்குப் பயப்படாதவன். தங்கத்தின் மூலம் நல்ல வியாபாரத்தையும் செய்வான். வறுமையினால் கஷ்டப்படாதவன்.

**வேறு**

5. தேவதா தலங்கள் செல்வன் செய்நன்றி மறவா னாகும்
பாவத்தில் மனம்வை யாதான் பரவுப காரி யாவன்
தாவின பேரைக் காப்பன் ஷண்முகன் பக்தி பூண்பன்
மாமிக ளிரண்டே யாகும் மால்கரம் பத்ம ரேகை.

5. பல புண்ணிய ஸ்தலங்களுக்கு யாத்திரை செல்வான். நன்றி மறவாதவன். பாவச் செயலில் ஈடுபடாதவன். பரோபகாரம் செய்வான். எளியவர்களைக் காப்பான். சுப்பிரமணிய சுவாமியிடம் பக்தி கொண்டவன். இவனுக்கு மாமியார்கள் இருவர். [இரு மனைவிகள் என்பது கருத்து.] கையில் விஷ்ணுரேகையும் கமலரேகையும் திகழும்.

6. உரோமங்க ளதிக மில்லான் நுவலுப தேசம் கொள்வன்
சேமமாம் குடும்பி யாவன் சல்லியம் கொள்ளா னாகும்
பாவத்தில் மனம்வை யாதான் பரிந்துப சாரம் செய்வன்
தாமத குணத்தா னாகும் சங்கரி கேட்டி டாயே.

6. அதிக உரோமங்கள் இல்லாதவன். பெரியோர்களிடம் நல்லுப தேசங்களைப் பெறுவான். சுபிக்ஷமான குடும்ப முடையவனாவான். கடன் இல்லாதவன். கெட்ட எண்ணமில்லாதவன். வீடு நாடி வந்தவர்களுக்குப் பரிவுடன் உபசாரம் செய்வான். சிறிது தாமத குணமுள்ளவன். ஈசுவரியே ! மேலும் கேளுங்கள்.

7. சொன்னவிக் குணத்தா னுக்குச் சுதனுமே யுதிப்பா னாகும்
அன்னவன் குணத்தைச் சொல்வே னதிகமாய்க் கல்வி கற்பன்
முன்னமே கோபி யாவான் மேதினில் நல்லோ னவன்
பொன்பணி வணிபம் செய்வன் புகழ்ந்தோரை ஆத ரிப்பன்.

7. நாம் சொன்ன இத்தகைய குணமுள்ள மனிதனுக்கு இக் கடக லக்கின மகன் புத்திரனாக உதித்திருக்கின்றான். இனி ஜாதகனுடைய குணங் களைத் தெரிவிப்போம். மேலான கல்வியைக் கற்பான். சிறிது முன் கோபி யாவான். எல்லோருக்கும் நல்லவனாக நடந்துக் கொள்வான். பொன் நகைவியாபாரம் செய்வான். தன்னைப் புகழ்ந்தவர்களுக்கு ஆதரவளிப் பான். [தனது புகழைக் கேட்பதில் விருப்பம் கொண்டவன் என்பது கருத்து.]

8. பந்துவும் புகழ வாழ்வன் பாரது விருத்தி செய்வன்
கந்தனைப் பூசைப் பூண்பான் காணாத வார்த்தை சொல்வன்
நிந்தைக ளேற்கா னாகும் நீர்தோய்வன் வறுமை காணான்
முந்துற மெழுத் வல்லன் சிறப்பான குடும்பி யாவன்.

8. இவனது வாழ்க்கை உற்றார் உறவினர் மெச்சும்படி இருக்கும். பூமிகளை அபிவிருத்தி செய்வான். சுப்பிரமணிய சுவாமியை எப்பொழுதும் வழிபடுவான். தான் நேரில் காணாத விஷயங்களைப்பற்றி நேரில் கண்டவன் போல் பேசுவான். ஆயினும் நிந்தனைகள் இவனுக்கேற்படா. புண்ணிய தீர்த்தங்களில் நீராடுவான். வறுமை இல்லாதவன். சீக்கிரமாக எழுதும் வல்லமை படைத்தவன். சிறப்பான குடும்ப முடையவனாகவும் இருப்பான்.

9. பொய்யுரை பகரா னாகும் புத்திநல் லறிவு முண்டு
ஐயமே லிச்சை யுண்டு அவன் துணை முன்னாண் ஒன்று
பையவே அவன்கு ணத்தைப் பகருவோம் ஊகை வாணும்
தையலுக் கினிய னாவன் சந்ததம் வெகுளி யாவன்.

9. பொய்யான வார்த்தைகளைப் பேசாதவன். நல்ல அறிவு உடையவன். ஏழைகளுக்கு ஐயமிடுவதில் விருப்பம் கொண்டவன். அவனுககு மூத்த சகோதரன் ஒருவன் உண்டு. அவனுடைய குணத்தையும் சிறிது பேசுவோம். அவன் சிறந்த மதியூகி. மனைவிக்கு இனியவன். மனத்தில் மறைக்க வேண்டியவற்றை மறைப்பதற்கு அறியாதவன்.

10. சத்யமும் தனுசு ராசி ஜனிப்பனும் சல்லியம் கொள்ளான்
இதமுன் வார்த்தை சொல்வன் இரணிய வணிபம் செய்வன்
கதைகாவி யங்கள் கேட்பன் கடவுளார் பக்தி பூண்பன்
நதிதலம் சேது செல்வன் நல்லோர்க்கு நல்ல னாவன்.

10. அவன் பிறந்த நக்ஷத்திரம் சதயம். இலக்கினம் தனுஸ். கடன் வாங்காதவன். நன்மைப் பயக்கும் வார்த்தைகளைப் பேசுவான். இவனும் பொன் வியாபாரமே செய்வான். இதிஹாஸ புராணங்களைக் கேட்பதில் பேரவாக் கொண்டவன். கடவுளின் பல மூர்த்திகளிடமும் பேதமின்றி பக்தி செய்பவன். புண்ணிய நதிகளிலும் சேதுவிலும் நீராடுவான். நல்லவர்களிடம் நல்லவனாகவே பழகுவான்.

11. திருப்பணி செய்வா னாகும் தேறினோர்க் கன்னன் மீவன்
பொறை சொலான் யிளம னத்தன் பெரிதான செட்டுச் செய்வன்
மறுமமில் லாதா னாகும் அரசர்கள் பேட்டி பூண்பன்
வறுமனை ஒன்றே தீர்க்கம் மைந்தர்கள் ஆண்பால் ரண்டு.

11. கோயில்களைப் புதுப்பித்தல் முதலிய திருப்பணிகளைச் செய்வான். தவசிகளுக்கு அமுதளிப்பான். கோள் சொல்லாதவன். இளகிய மனமுள்ளவன். பெரிய வியாபாரம் செய்வான். கபடமில்லாதவன். அரசர்களின் தரிசினம் இவனுக் கேற்படும். இவனுக்கு மனைவி ஒருத்திதான். புத்திரர்கள் இருவர் தோன்றுவார்கள்.

12. கன்னிகை ஒன்றே தீர்க்கம் காதலன் வயது தீர்க்கம்
பின்துணை மூன்று தோன்றும் பெண்ணது இரண்டு தீர்க்கம்
அந்தவர் சேதி யாவும் அறைகிறேம் பின்பால் சேதி
இன்னவன் மணத்தின் காலம் இயம்புவோம் தாயே கேளும்.

12. ஒரு பெண் பிறந்து அவளும் தீர்க்காயுளுடன் வாழ்வாள். இவனுடைய [ஜாதகனின் அண்ணனுடைய] வயதும் தீர்க்கமாகும். பின் உடன் பிறந்தவர்கள் மூவர் தோன்றுவர். அவர்களில் இரு பெண்கள் ஸ்திரமாக வாழ்வார்கள். அவர்களுடைய செய்திகள் எல்லாவற்றையும் பின்பாகத்தில் தெரிவிப்போம். ஜாதகனின் விவாஹ காலத்தைச் சொல்லுகிறேம். அன்னையே கேட்பீராக.

13. பாரியு மீரொன் பாண்டில் பகரன்னே வர்க்கம் தன்னில்
நேரிடும் குணத்தைச் சொல்வேன் நிதம்சீலி மாஞ்சி வப்பள்
தேறின புத்தி யுண்டு தேவதா பக்தி பூண்பள்
தீரமில் லாத நெஞ்சம் ஜன உப காரி யாமே.

13. இவனுக்குப் பதினெட்டாம் வயதில் மணம் நடை பெறும். மணப் பெண் தரய் வருக்கத்தில் பிறந்தவள். மண மகளின் குணம் நிறம் முதலியவைகளை அறிவிடபோம். எப்பொழுதும் நற்சீலம் பொருந்தியவள். மாநிறமுள்ளவள். நல்ல அனுபவம் வாய்ந்தவள். கடவுள் பக்திபூண்டவள். உறுதியில்லாத உள்ளம் உடையவள். வித்தியாசம் பாராட்டாமல் எல்லோருக்கும் உதவி புரிவாள்.

14. அன்னம்போல சாய லொக்கு மாளன் தன்மனம்போல் வாழ்வள்
கன்னிகை யோக காலி காலிகள் விருத்தி யுண்டு
பன்னியே பேச வல்லாள் பாவைக்குச் சுதராண் ஒன்று
மன்னிய பெண்பால் ரண்டு மறுவிடும் தீர்க்க மாக.

14. அன்னம் போன்ற அழகுள்ளவள். தன் கணவன் மனத்தின்படி நடப்பவள். மிகவும் அதிருஷ்டசாலி. கன்று காலிகள் விருத்தியடையும் மிக்க விரிவாகப் பேசும் இயல்புள்ளவள். இந்தத் தம்பதிகளுக்கு ஒரு பிள்ளையும் இரு பெண்களும் பிறப்பார்கள். அம் மூவரும் தீர்க்காயுளுடன் வாழ்வர்.

15. மற்றது மூன்று சேதம் அறிவிப்பீர் விவரம் தன்னைச்
சுத்தமாய் மூன்றும் நாலும் ஷஷ்டமும் சேத மெய்தும்
வித்தகன் முதலி லாண்பால் மேவிடும் தீர்க்க மாக
அத்தியைப் பெற்ற மாதே அறைந்தது தப்பா தாகும்.

15. இன்னும் மூன்று குழந்தைகள் பிறந்து இறக்கும். எத்துணையாவது குழந்தைகள் இறக்கும்? அதை அறிவிப்பீர்களாக எனப் பார்வதி கேட்க, முனிவர் பதில் கூறுகின்றார். மூன்ருவது நான்காவது ஆருவது குழந்தைகள் சேதத்தை அடையும். முதலில் பிறந்த ஆண் மகவு தீர்க்கமாக வாழ்வான். விநாயகப் பெருமானுக்குத் தாயானவளே! நாங்கள் சொன்ன மொழி பிழையாகாது.

16. அன்னைமாஞ் சிவப்பா ளாகும் அன்புள மனத்த ளாகும்
முன்கோபம் மூலச் சூடு மொழியது சுபமே யாகும்
பொன்பணி யிச்சை யுண்டு புகழ்ந்தோரை ஆத ரிப்பள்
தன்துணை ஆண்பால் ரெண்டு தையலர் முன்பு தீர்க்கம்.

16. ஜாதகனின் அன்னை மாஞ்சிவப்பு நிறம் வாய்ந்தவள். அன்பு நிறைந்த மனம் படைத்தவள். முன் கோபி. மூலச்சூடு உடையவள். நல்ல வார்த்தைகளையே பேசுவாள். பொன்னுபரணங்களில் ஆசை கொண்டவள். தன்னைப் போற்றியவர்களை ஆதரிப்பாள். அவளுக்கு இரு சகோதரர்களும் இரு சகோதரிகளும் உண்டு. சகோதரிகள் இவளுக்கு மூத்தவர்கள். அவர்கள் எல்லோரும் தீர்க்ககாலம் ஜீவிப்பார்கள்.

17. இல்லமும் உள்ளூ ராகும் இவன்பூர்வம் சொல்லக் கேண்மோ
அல்லலை விலக்கு கின்ற அருணைக்கு மேல்பா லாக
வல்லியும் வடுகர் வர்க்கம் வந்தனள் சுகமுள் ளோளாய்
நல்லவ ளாகி வாழ்ந்து நாயகி மதலை யுண்டாய்.

17. அவளுடைய தாய் வீடும் அதே ஊரில் தான் உள்ளது. இவளுடைய பூர்வ ஜன்மத்தைக் கூறுவோம்; கேளுங்கள். இவள் முன் பிறவியில் மானிடர்களின் வாழ்க்கைத் துன்பங்களைப் போக்கும் திருவண்ணுமலைக்கு மேற்குத் திசையிலுள்ள ஓர் ஊரில் நாயக்கர் வமிசத்தில் பிறந்து கணவன் குழந்தைகளுடன் சுகமாக வாழ்ந்தாள். "நல்லவள்" என்ற பிரசித்தியை அடைந்தாள்.

18. அறமதி லிச்சை யுண்டாய் அதிதிகட் கன்ன மீந்து
மறலியின் பதிக்குச் சென்று மறையவன் வரையப் பட்டுத்
திருமகன் வைசிய சேயாய் ஜனித்தனள் என்று சொல்வோம்
வறுமைகள் காணு ளாகும் மாதுநன் னடக்கை யுண்டு.

18. தருமங்களைச் சிரத்தையுடன் செய்தாள். விருந்தாளிகளுக்கு அன்புடன் அமுதளித்தாள். இவ்வாறு நல்ல வாழ்க்கையை நடத்தி அந்தியத்தில் இறந்த இவளை மறையவன் இங்கு வைசிய குலத்தில் பிறப்பித்திருக்கின்ருன். அவள் வறுமையை அறியாதவள். நன்னடக்கை உடையவள்.

19. பின்ஜன்மம் காளத்தி தன்னில் பிறப்பாளாம் கங்கை சேயாய்ப்
பொன்பொரு ளுடைய ளாகிப் புகழ்ச்சியாய் வாழ்வா ளாகும்
தந்தையின் பூர்வம் சொல்வேன் தாமிர பரணி தன்னில்
முந்தின குலமு தித்து வுயர்வான குடும்பி யானுன்.

19. இவள் மறு பிறவியில் காளத்தி ஷேத்திரத்தில் வேளாள குலத்தில் ஜனித்து, பொன்னையும் மற்றைய பொருள்களையும் பெற்று, புகழுடன் சுகமாக வாழ்வாள். ஜாதகனுடைய தந்தையின் முன் பிறவியைக் கூறுவேன். முன் ஜன்மத்தில் இவன் தாமிரபர்ணி நதிக்கரையில் பிராம்மண குலத்தில் உதித்து, மேலான குடும்பியாக விளங்கினுன்.

20. புத்திரர் மனைவி யுண்டாய்ப் பூமியால் சீவித் தேதான்
குத்தமாம் கால ளுடு குலவியே பிரமன் லக்கம்
வித்தக னுதித்தா னென்றேும் விருத்தரும் தடுத்துச் சொல்வார்
முந்தின குலமு தித்தோன் மேவுமிச் சென்மம் தன்னில் ;

20. மனைவி புத்திரர்களுடன், பூமியை உழுது பயிரிட்டு ஜீவித்து வந்தான். கடைசி காலத்தில் இறந்து இப்பொழுது பூலோகத்தில் மறுபடியும் பிறந்து ஜாதகனுக்குத் தந்தையாக ஏற்பட்டிருக்கின்றான். முன் ஜன்மத்தில் பிராம்மண குலமுதித்த இவன் ;

21. குலம்தாழ்வா யுதிப்ப தென்னக் கூறுவீர் முனியே நீர் தாம்
நலமுள வேதம் தன்னை நாயகன் விரும்பாத தாலே
உலவினுன் குலம்தாழ் வாக உதித்தனூர் லாபம் காணுன்
அலைகடல் சென்று இன்னேன் அதிகப் பொன் சேர்ப்பா ளுகும்.

21. இப்பொழுது வைசிய ஜாதியில் பிறக்கக் காரணம் என்னை ? சொல்லுங்கள், எனப் பராசரர் கேட்க, முனிவர் பதில் கூறுவாராணுர். நன்மையைப் பயக்கும் வேதத்தை இவன் விரும்பி ஓதாமல் இருந்தமையால் இச் சென்மத்தில் தாழ்வான குலத்தில் பிறந்திருக்கின்றான். இவன் [ஜாதகனின் தந்தை] சொந்த ஊரில் சம்பாதித்துச் சீவிக்க முடியாதவனுய்த், திரை கடலோடித் திரவியம் சேமித்து வாழ்வான்.

22. மறுஜன்மம் பிருதிவி தன்னில் மறைக்குல முதிப்பா ளுகும்
திருமக னிச்சென் மத்தில் தனத்தின்மே லாசை வைத்து
இருவித வார்த்தை யாயும் இவனுமே வாழ்வ தாலே
மறைக்குல முதிக்கும் வண்ண மறிவிப்பீர் விவர மாக.

22. மறு பிறவியில் இவன் காஞ்சியில் அந்தணர் குலத்தில் உதிப்பான்- இதைக் கேட்டப் பார்வதி, இப் பிறவியில் இவன் பேராசைகொண்டவனுகவும் இருவித வார்த்தைகளைப் பேசுபவனுகவும் இருப்பதால் இவன் எவ்வாறு பிராம்மண குலத்தில் பிறக்க அருகதை உடையவன் ? இவ்விஷயத்தை விவரமாகத் தெரிவிப்பீராக என வினவினுள்.

23. பலவித வினைகள் செய்தும் பஞ்சைமே லிரக்க மாயும்
தலம்தீர்த்தம் தோய்ந்த தாலும் தன்மனம் வெகுளி யாயும்
கலகத்தைக் கூறுத தாலும் கடவுள்தம் பக்தி பூண்டும்
தலைவனும் வாழ்வ தாலே ஜனிப்பனும் மறைக்கு லத்தில்.

23. முனிவர் பதிலுரைத்தார். பல வித புண்ணியங்களைச் செய்திருக்கிறான். ஏழைகளிடம் கருணை கொண்டு வாழ்ந்தான். பல புண்ணிய ஸ்தலங்களுக்குச் சென்று கடவுளைத் தரிசித்தான். அநேக புண்ணிய தீர்த்தங்களில் நீராடினுன். மனத்தில் கள்ளமில்லாமல் தூய்மையோடு இருந்தான். ஒருவருக்கொருவரிடம் கோள் சொல்லிக் கலகத்தை உண்டு பண்ணினுனல்லன். எல்லாவற்றிற்கும் சிகரமாக, கடவுளிடம் மிக்க பக்தி பூண்டிருந்தான். நாம் சொன்ன இவ்வளவு காரணங்களால் இவன் பிராம்மண ஜாதியில்தான் ஜனிப்பான்.

24. ஜாதகன் பூர்வம் சொல்வேன் தோகைமா மலைக்குக் கீழ்ப்பால்
மேதினில் பேரூர் தன்னில் விளங்கினன் ரெட்டி வமிசம்
போதன முடைய னாகிப் புண்ணிய மனத்த னாயும்
மாதவர்க் கன்ன மீந்து மார்க்கத்தில் தாகப் பந்தல் ;

24. இனி ஜாதகனுடைய முன் பிறவியைத் தெரிவிப்பேன். இவன் தோகை மலைக்குக் கீழ்த் திசையிலுள்ளதொரு பெரிய ஊரில் ரெட்டி வமிசத்தில் பிறந்து, தனம் படைத்தவனாகி, சுகமாக வாழ்ந்து வந்தான். புண்ணிய மனம் வாய்ந்தவனாக ஆனான். தவசிகளுக்குச் சிரத்தையுடன் அமுதளித்தான். மார்க்கத்தில் தண்ணீர்ப் பந்தல் நிறுவினான்.

25. வைத்துமே முருகர் தொண்டு மாநிலம் நல்லோ னாயும்
வித்தகன் பவமில்லாமல் மேவினன் கால னாடு
சுத்தமாய்ப் பிரமன் லக்கம் ஜனிப்பனும் வைசியச் சேயாய்
அத்தியைப் பெற்ற மாதே அறைகிறே மிவனின் யோகம்.

25. சுப்பிரமணிய சுவாமிக்குப் பக்தியுடன் தொண்டு புரிந்தான். சிறிதும் பாவம் செய்யாமல் நல்லவனாக வாழ்ந்து இறந்தான். அவனைத்தான் பிரம்ம தேவன் வைசிய குலத்தில் கடக லக்கினத்தில் பிறப்பித்திருக்கின்றான். விநாயகரைப் பெற்ற தாயே ! இனி ஜாதகனுடைய யோகங்களைக் கூறுவோம்.

26. இந்திர யோக மொன்று இசைந்திடும் பேரி யோகம்
அந்தவோர் பலத்தைச் சொல்வேன் அதிகவா ணிபங்கள் செய்வன்
தன்தனம் அதிகம் சேர்ப்பன் தந்தைக்கு மேலாய் வாழ்வன்
சுந்தரன் கட்டில் மெத்தை புரவிவா கனமு முள்ளோன்.

26. இவனுக்கு "இந்திர யோகமும்" "பேரி யோகமும்" இருக்கின்றன. அவைகளின் பலன்களை அறிவிப்போம். அதிக வியாபாரங்களைச் செய்வான். தன் முயற்சியால் அதிக தனத்தைச் சம்பாதிப்பான். தந்தையைக் காட்டிலும் எல்லா வகையிலும் சிறந்து வாழ்வான். ஜாதகன், கட்டில், மெத்தை, பலவித ஆசனங்கள் இவற்றைப் பெற்றவனாகவும், குதிரை முதலிய வாஹனங்களை உடையனாகவும் ஆவான்.

27. திருப்பணி செய்வா னாகும் தேவதா தலங்கள் செல்வன்
தரைமிகத் தேடு வானும் தானிரு வில்லம் செய்வன்
பெருமைநற் புகழு மேற்பன் புவிராசர் மெச்ச வாழ்வன்
மருவிடும் கல்வி ரண்டு ஆறுயிரம் பொன்னும் சேர்ப்பன்.

27. கோயில்களுக்குத் திருப்பணி செய்வான். பல புனித ஸ்தலங்களுக்குச் செல்வான். பூமிகளை அதிகம் சேர்ப்பான், இவன் சொந்தமாக இரு வீடுகள் நிர்மாணம் செய்வான். பெருமையும் நற்புகழும் இவனை நாடி வரும். உலகில் அரசர்கள் மெச்ச வாழ்ந்திடுவான். இரு வித கல்விகளில் இவன் மேன்மை அடைவான். ஆறுயிரம் பொற்காசுகளைச் சேர்ப்பான்.

28. இருபது ஆறு ஆண்டில் இயல்மீன மாதம் தன்னில்
பெரும்தந்தை கண்ட மென்றோம் பேசுவோம் முப்பான் ரண்டில்
அரிமாதம் அன்னை கண்டம் அறைந்தது தப்பா தாகும்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

28. ஜாதகனுக்கு இருபத்தாறுவது வயது நடை பெறுங்கால் மீன மாதத்தில் இவனது தந்தைக்குக் கண்டம் ஏற்பட்டு அவன் இறப்பான். ஜாதகனுடைய முப்பத்திரண்டாவது வயதில் ஆவணி மாதத்தில் இவனுடைய தாய் மரணமடைவாள். முனிவர்களாகிய நாங்கள் சொன்ன வாக்குத் தப்பாமல் நடை பெறும். கணேசரைப் பெற்ற தாயே! மேலும் கேட்பீராக.

குறிப்பு.—" அரிமாதம் " மார்கழி மாதம் என்றும் கூறலாம். 'मासानां मार्गशीर्षोऽहं' என்ற பகவத் கீதை சுலோகத்தைக் காண்க. " மாதங்களுக்குள் மார்கழி மாதமாக நான் இருக்கின்றேன் " என்பது அதன் பொருள். ஆகவே அரிமாதம் " விஷ்ணு மாதம் " (மார்கழி).

[கீதை, அத். 10, சுலோகம் 35].

29. உதித்தவன் மரண காலம் உறைகிறோம் அறுபா நாலில்
நதிகுட மாதம் தன்னில் நாயக னுடலம் ஏகும்
வசிஷ்டரிவ் விதமாய்ச் சொல்ல விருத்தரும் தடுத்துச் சொல்வார்
சதியான சகடை தோஷம் சார்ந்தது ஆண்டுள் கண்டம்.

29. இனி ஜாதகனுடைய மரண காலத்தை அறிவிப்போம். இவனுடைய அறுபத்து நான்காம் வயதில் மாசி மாதத்தில் ஜாதகன் தேக வியோக மடைவான். இவ்வாறு வசிஷ்டர் சொல்லக் கேட்ட விருத்தராகிய பராசர முனிவர் சொல்வார். இச் சாதகனுக்குத் தீங்கு விளைவிக்கும் " சகடயோகம் " இருப்பதால் இவன் பிறந்து ஓர் ஆண்டிற்குள் கண்டம் ஏற்பட்டிராதோ ? [ஆகையால் ஒரு வயதிற்குள் இறப்பான் என்பது கருத்து.]

30. நேரிடும் பால னுக்கு நிகர்முனி தடுத்துச் சொல்வார்
தீரமா யேழில் பொன்னோன் சுக்கிரன் நாலில் தங்க
மாரனும் வயது தீர்க்கம் மருவிடும் பிணியநேகம்
கூறினோம் மார கங்கள் கோமளி கேட்டி டாயே.

30. வசிஷ்டர் பதில் கூறினர். சகட யோகமிருப்பினும் ஏழாவது கேந்திரத்தில் குரு இருப்பதாலும் [இலக்கினாதிபதியைப் பாராவிடினும் இலக்கினத்தைப் பார்ப்பதால் என்பது கருத்து.] சுக்கிரன் நான்காம் கேந்திரத்தில் இருப்பதாலும் ஜாதகனுக்கு தீர்க்காயுள்யோகமுண்டு. சகடயோகத்தின் பயனாக பல பிணிகள் காணும். ஆனால் அவைகளால் மரணமடையான்.

31. பிறந்திடு காலம் தன்னில் பூரத்தின் முதல்பா தத்தில்
சிறந்தசுக் கிரனி ருப்புச் செப்புவோம் பதினெட் டாண்டும்
உறைந்திடும் துணைபின் விருத்தி உதித்தோனும் பிணியு மாகும்
பறந்திடும் தந்தை வேறூர் பாக்ய மிகவே சேரும்.

31. இவன் பூர நக்ஷத்திரம் முதல் பாதத்தில் ஜனித்திருக்கின்றான். ஆகையால் சுக்கிர தசையிலுருப்பு வருஷங்கள் பதினெட்டு. இத்தசையின் பலன்களைக் கூறுவோம். சகோதர விருத்தியுண்டு. ஜாதகனுக்குப் பல நோய்கள் வரும். தந்தை சீவனத்திற்காக வேறு ஊருக்குச் செல்லுவான். அதிக ஐசுவரியமும் சேரும்.

32. சத்தம முனிவர்
சுத்தமாய்ச் சொன்னோம்
குத்தங்கள் யாவும்
வித்தகி பொறுப்பாய்.

32. ஏழு மஹ ரிஷிகளாகிய நாங்கள் இச்சாதகத்தின் பலன்களை ஆராய்ந்து பார்த்துச் சொன்னோம். குற்றமிருப்பின் எல்லாமறிந்த தாங்கள் மன்னிக்க வேண்டுகின்றோம்.

## ஜாதகம் 48

1. கடகலக் கினம தாகக் காரிதேள் ராகு மேரு
அடவுடன் புகர்சேய் பொன்னும் அருணனும் கோல தாகத்
திடமுள மதியு மானில் சிகிவீணை பரிதி கன்னி
உடன்நவக் கோளு மிவ்வா றுறைந்ததால் பலன் சொல்வீரே.

| | | | கேது |
|---|---|---|---|
| | இராசி சக்கரம் | | லக்கினம் |
| சந்திரன் | | | |
| ராகு | சனி | சுக்கிரன் செவ் புதன் குரு | சூரியன் |

விகாரி ஆ புரட்டாசி மீ 28உ வியாழக்கிழமை இரவு 15-நாழிகைக்கு மேல் 20-க்குள் ஜனனம்.

### ஆங்கிலத் தேதி—12-10-1899.

நவக்கிரஹங்களின் பாதசாரம்.—சித்திரை 2-இல் சூரியன், உத்தராடம் 3-இல் சந்திரன், விசாகம் 2-இல் செவ்வாய், சித்திரை 4-இல் புதன் (அஸ்தம்), சுவாதி 4-இல் குரு, சித்திரை 4-இல் சுக்கிரன் (அஸ்தம்), கேட்டை 4-இல் சனி, மூலம் 1-இல் ராகு, மிருகசீர்ஷம் 3-இல் கேது. நக்ஷத்திரம் உத்தராடம். சூரிய தசையில் இருப்பு வருஷங்கள் இரண்டு.

1. இலக்கினம் கடகம், சனி விருச்சிகம், ராகு செவ்வாய் குரு, புதன் துலாம், சந்திரன் மகரம், கேது மிதுனம், சூரியன் கன்னி. இவ்வாறுள கிரஹநிலையின் பலன்களைச் சொல்லுவீர்களாக எனப் பார்வதி கேட்டலுற்றாள்.

2. காதலி கேட்கும் போது கௌசிகர் கூறு கின்றார்
மேதினி லாண்பால் ஜன்மம் வந்தஇல் தனிய தாகும்
நீதியாய் அருகி லாறு நிகழ்சோலை மலாய்தே சத்தில்
ஆதியாய் மஸ்தான் வம்சம் அனுகுவான் சேட்ட னாக.

2. இவ்வாறு பார்வதி வினவிய பொழுது, கௌசிக முனிவர் பலன்களைக் கூறுவாருனர். இக்கிரஹ நிலையில் ஜனித்த மகவு ஆண். பிறந்த

வீடு தனித்து நிற்கும். வீட்டிற்கு அருகில் ஆறு உண்டு. பிறந்த ஊர் மலாய் தேசத்திலுள்ளது. இக்குழந்தை முஸல்மான் ஜாதியில் பிறந்திருக கிறது. குடும்பத்திற்கு இவனே ஜ்யேஷ்டன்.

3. வந்தவன் யோகம் சொல்வேன் அவன்தந்தை துணைத சத்தில்
நொந்திடும் யாவும் தானே நுரைப்பது ஆண்பா லொன்று
அந்தவன் வெளிநா டுய்வன் அவன்சேதி பின்பால் சொல்வேன்
எந்தையே தந்தை சேதி யியம்புவேன் கல்வி மானும்.

3. இக்கடகலக்கினத்தில் பிறந்தவனுடைய யோகம் முதலியவைகளைக் கூறுவேன். ஜாதகனின் தந்தைக்கு உடன் பிறந்தார்கள் எல்லோரும் சேதமடைவார்கள். ஆனால் ஒரு சகோதரன் மாத்திரம் விருத்தியடைவான். அவன் வெளிநாட்டிற்குச் செல்வான். அவனைப்பற்றிய செய்திகளைப் பின் பகுதியில் கூறுவோம். தாயே! தந்தையின் வரலாறுகளை இப்பொழுது அறிவிப்போம். அவன் கல்வியைக் கற்றவன்.

4. ஊகவான் உணச்சல் தேகி உண்மையா மனத்தா னாகும்
பாகமாய்ப் பேச வல்லன் பரவுப காரி யாவன்
நாகரி கங்க ளுள்ளான் நாயகன் சிவந்த மேனி
தோகைசொல் கடவா னாகும் சொல்லது சுகமே யெய்தும்.

4. மதிநுட்பம் வாய்ந்தவன். மெலிந்த சரீரமும் உண்மை மனமும் படைத்தவன். நன்றாகப் பேசும் திறமை உடையவன். பிறர்க்கு உபகாரமும் செய்வான். பழக்கவழக்கங்களும் இனிமையாக இருக்கும். மேனி சிவந்திருக்கும். மனைவியின் வார்த்தையை மீறுதவன். அவனது சொல்லும் நயமாக இருக்கும்.

5. அரசரால் தொழிலு மேற்பன் அடைந்தோரை ஆத ரிப்பன்
பெருமையும் புகழு மேற்பன் போஜன வறுமை காணான்
வரவுக்குச் செலவ னேகம் வாணிபத் தொழிலும் செய்வன்
கரைமனம் பித்த தேகி கடவுளர் தொண்டு பூண்பன்.

5. அரசர்களுடைய ஆதரவு ஏற்பட்டுத் தொழில் செய்வான். தன்னிடம் உதவியை நாடுபவர்களுக்கு ஆதரவளிப்பான். இவனுக்குக் கௌரவங்களும் நற்புகழும் ஏற்படும். ஆகாரத்திற்குக் கஷ்டப்படாதவன். கையில் கிடைக் கும் பணத்தைப் பலவழிகளிலும் செலவு செய்வான். வியாபாரம் இவனது ஜீவனமாகும். இளகிய மனம் உள்ளவன். பித்ததேகம் வாய்ந் தவன். கடவுளுக்குப் பல பணிகளையும் ஆற்றுவான்.

6. கரமதில் சங்கு சக்கரம் கண்முகம் வசிய முள்ளான்
அறிவோர்கள் நேயம் கொள்வன் அற்பரை உறவு கொள்ளான்
நறைமலர்க்கந்த மிஷ்டன் நற்றந்தை ஆஸ்தி காணான்
விரைவினில் நடக்க வல்லன் வீண்பழி ஏற்கா னாமே.

6. கரத்தில் "சங்க", "சக்கர" ரேகைகள் விளங்கும். முகத்தில் பிறரை வசப்படுத்தும் ஒருவித காந்தி பொருந்தியவன். அறிவாளிகளுக்கு நண்பனுவான். தாழ்ந்த மக்களிடம் பழகாதவன். நல்ல மலர்களிலும், வாசனை பொருந்திய மற்றைய சந்தனம் முதலிய பொருள்களிலும் விருப்ப முள்ளவன். தந்தையின் சொத்து இவனுக்கிராது. நடை துரிதமாக இருக்கும். வீண் அவதூறுகளும் இவனுக்கு ஏற்படா.

7. இந்நெறி யுடையோ னுக்கு இவனுமே யுதிப்பா னுகும்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அழகுளான் சிவந்த மேனி
சொன்னசொல் சுகமே யாகும் தொடுத்ததை வெல்வா னுகும்
மன்னர்பா லரசு செய்வன் வண்டிவா கனமு முள்ளான்.

7. இத்தகைய குணங்கள் வாய்ந்த மனிதனுக்கு இக்கடக லக்கின மகன் புத்திரனுகப் பிறந்திருக்கின்றுன். ஜாதகனின் குணங்களைச் சொல்வேன். அழகு உடையவன். சிவந்தமேனியான். இனிமையாகப் பேசுபவன். ஆரம்பித்த காரியத்தை வெற்றியுடன் நிறைவேற்றுவான். அரசர்களிடம் அதிகாரம் பெற்று ஆட்சி புரிவான். வண்டி முதலிய வாஹன வசதிகளும் உடையவன்.

8. வித்தையும் மூன்று கற்பன் விவேகியாம் பொறுமை சாலி
உத்தம குணத்தா னுகும் உயர்வான குடும்பி யாவன்
பத்தினி நேய னுவன் பாருகள் சேர்ப்பா னுகும்
சுற்றத்தார் மதிக்க வாழ்வன் சோம்பிடான் காரியத்தில்

8. மூன்றுவித கல்விகளை [இங்குக் "கல்வி" பாஷையைக் குறிக்கும்] கற்றறிந்தவன். விவேகம் உடையவன். பொறுமைக் குணம் வாய்ந்தவன். இவைகளைத் தவிர மற்றைய நற்குணங்களும் இவனிடம் விளங்கும். பெருமை வாய்ந்த குடும்பியாவன். பத்தினியிடம் மிகவும் அன்பு உடையவன். பூமிகளையும் சம்பாதிப்பான். உற்றார் உறவினர் மதிக்க வாழ்ந்திடுவான். வேலைகளில் சோம்பல் இல்லாதவன்.

9. இல்லமும் மூன்று செய்வன் எதிரியை நசிக்க வைப்பன்
மல்லுக்குச் செல்லா னுகும் அரசர்கள் மதிக்க வாழ்வன்
சொல்லதைக் காப்பா னுகும் துணைவரை ஆத ரிப்பன்
வல்லியர் மோகம் கொள்வன் வஞ்சக வஞ்ச னுவன்.

9. மூன்று வீடுகளைக் கட்டுவான். எதிரிகளை ஒடுக்குவான். சண்டையில் ஈடுபடாதவன். அரசர்களும் போற்றும்படி வாழ்வான். தான் சொன்ன வார்த்தையின்படி நடப்பான். சகோதரர்களை ஆதரிப்பான். பெண்களிடம் மோகம் கொண்டவன். ஏமாற்றும் எண்ணம் கொண்டவர்கள் இவனிடம் ஏமாந்து விடுவார்கள்.

10. இவனுடைத் துணைவர் தம்மை யியம்புவே னுண்பால் ரண்டு
அவனியில் கன்னி ஒன்று நாட்டுவோம் தீர்க்க மாகத்
தவசியே யிணையாண் ஒன்று சரற்றுவோ மவன்கு ணத்தைப்
பவமான மில்லா னுகும் பரிகாச வசனம் கூறுவன்.

10. இவனுடைய உடன் பிறந்தார்களை அறிவிப்பேன். இரு சகோதரர்களும் ஒரு சகோதரியும் உண்டு. இம்மூவரும் தீர்க்காயுளுடன் வாழ்வார்கள். இவனுக்கு அடுத்துப் பிறந்த ஒரு சகோதரனுடைய குணத்தைக் கூறுவேன். கெட்டமனம் இல்லாதவன். பரிகாசம் செய்யும் இயல்புள்ளவன்.

1. பின்புறம் மச்ச முண்டு பிரபல கல்வி யுண்டு
மன்னர்பால் அதிகா ரங்கள் மருவிடும் சிவந்த மேனி
பொன்பல மிகவே சேர்ப்பன் புத்திநல் லறிவு முண்டு
அன்னியர் மதிக்க வாழ்வன் ஆவுகள் விருத்தி யுண்டு.

11. முதுகில் மச்சமிருக்கும். மேலான கல்வி கற்றவன். அரசர்களிடம் அதிகாரம் பெறுவான். சிவந்த மேனியான். அதிக பணத்தைச் சேமிப்பான். நல்வழியில் செல்லும் புத்தி படைத்தவன். உலகத்தார் மதிக்கும் வகையில் வாழ்ந்திடுவான். பசுக்களை விருத்தி செய்வான்.

12. தராதர மறிய வல்லன் சம்பத்து முடைய னாகும்
துராசையு முடையா னாகும் துறவிக்கு அன்ன மீவன்
முராரிபோல் புகழு மேற்பன் மேவிடும் பாரி ஒன்று
நராதிபர் மெச்ச வாழ்வன் நற்சுதர் ஆண்பால் மூன்று.

12. மனிதர்களின் அல்லது பொருள்களின் உயர்வு தாழ்வை அறியும் ஆற்றல் உடையவன். ஐசுவரியம் படைத்தவன். பிறர் பொருள்களில் ஆசை கொண்டவன் தவசிகளுக்கு அன்ன மளிப்பான். விஷ்ணுபோல் கீர்த்தியுடையவன். இவனுக்கு மனைவி ஒருத்திதான். அரசர்களும் இவனைக் கொண்டாடுவார்கள். இவனுக்கு பிள்ளைகள் மூவர்.

13. கன்னிகை அவ்வாறு தீர்க்கம் காணாது வறுமை தானும்
அன்னவன் வயது தீர்க்கம் அவன்வேறுயச் செல்லு வானும்
பின்துணை பெண்பா லொன்று பேசுவோம் தீர்க்க மாகக்
கன்னிபின் ஆண்பா லொன்று கழறுவோம் பால னுக்கு.

13. இவனுக்கு ஒரு பெண்ணும் பிறப்பாள். இந்த நால்வரும் தீர்க்கமாக வாழ்வார்கள். இவன் [ஜாதகனின் அடுத்துப் பிறந்தவன்] நீண்ட ஆயுளுடன் வாழ்வான். சிலகாலம் ஜாதகனுடன் வாழ்ந்து பிறகு வேறாகக் குடும்பம் நடத்துவான். இவனுக்கு அடுத்தது ஒரு பெண். அவளுக்குப் பின் ஒரு சகோதரன். இவர்கள் எல்லோரும் ஸ்திரமாக வாழ்வார்கள்.

14. உதித்தவன் மணத்தின் காலம் உரைக்கிறோம் பதினே ழாண்டில்
அதிபதி வருவா ளாகும் அவள்குணம் சிவந்த மேனி
ததிபாக்கிய முடையா ளாகும் சம்பத்தாய் வாழ்வா ளாகும்
அதிதிகட் கன்ன மீவள் ஆளனுக் கினிய ளாவள்.

14. ஜாதகனுடைய மணத்தின் காலத்தைக் கூறுவோம். பதினேழாம் ஆண்டில் விவாஹம் நடைபெறும். அவள் சிவந்த மேனியாள். பால் தயிர் பாக்கிய முடையவள். சம்பத்துடன் வாழ்வாள். வரும் விருந்தாளிகளுக்கு அன்னம் அளிப்பாள். கணவனுக்கு இனியவள்.

15. நன்னடை மிருது வார்த்தை நாட்டினில் வறுமை காணுள்
தன்சுத ராண்பால் ரண்டு தையலர் மூன்று என்றேம்
இன்னவாறு முனிவர் கூற இயம்புவார் பராசர் தாமும்
தொன்சனி ஐந்தில் தங்கச் சுதர்தோஷம் சொல்ல லாமே.

15. நன்னடக்கை உடையவள். மிருதுவான வார்த்தை பேசுவாள். வறுமை இல்லாதவள். இவளுக்கு இரு பிள்ளைகளும் மூன்று பெண்களும் பிறப்பார்கள். இவ்வாறு முனிவர் கூறியவுடன் பராசர், அஷ்டமாதிபதி யான சனி புத்திர பாவத்தில் இருப்பதால் ஜாதகனுக்குச் சந்ததி தோஷம் உண்டென்றுர்.

16. காரியும் அஞ்சில் தங்கக் காவலன் தனக்குச் சேஷ்டர்
நேரிடும் பெண்பா லாக நிலைக்காது அவர்ப லத்தால்
தீரமா யதன்பின் விருத்தி தீர்க்கமா மென்று சொல்வோம்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

6. முனிவர் பதில் உரைத்தார். சனி புத்திரபாவத்தில் இருப்பதால் ஜாதகனுக்கு முதலில் ஒரு பெண் பிறந்து அக்குழந்தை நிலைக்காததாகும். சனி ஐந்தா மிடத்தில் இருப்பதன் பலன் அவ்வளவு தான். ஆகவே அக்குழந்தைக்குப்பின் ஜனிக்கும் மகவுகள் நீடித்து வாழும். சுப்பிர மணிய சுவாமியை ஈன்ற தாயே! மேலும் கேட்பீராக.

17. அன்னையும் சிவந்த மேனி அன்புள மனத்தா ளாமே
முன்கோபம் பின்பு சாந்தம் உயர்வான குடும்ப மேற்பள்
தன்துணை ஆண்பா லொன்று தங்கிடும் கன்னி சேதம்
அன்னவர் குடும்ப லேச்சல் அறைகிறேம் கேட்டி டாயே.

17. ஜாதகனின் அன்னையினுடைய சரீரம் சிவப்புநிறமுள்ளது. எல்லோ ரிடமும் அன்பு கொண்டவள். முன்கோபி. ஆனுல் பின்பு சாந்தமாவாள். உயர்ந்தகுடும்பமுள்ளவளாவாள். அவளுக்குச் சகோதரன்ஒருவன். சகோதரி பிறப்பாள். ஆனுல் சேதமாவாள். அந்தச் சகோதரனின் குடும்பம் பலக் கஷ்டங்களுக்கு உள்ளாகும். தேவியே! மேலும் கேளுங்கள்.

18. மாதுரு பூர்வம் சொல்வேன் அரக்கர்வாழ் இலங்கைத் தீவில்
தீதிலாக் கங்கை சேயாய் ஜனித்துமே சுகமுள் ளோளாய்
காதலி வாழு நாளில் கழறுவோ மூழி தானும்
தீதாக நாத்தி பேரில் செப்பினுள் சிலேடை வார்த்தை.

18. ஜாதகனின் தாயினுடைய முன் பிறவியைக் கூறுவேன். இவள் அரக்கர்கள் வாழ்ந்திருந்த இலங்கைத் தீவில் வேளாள வமிசத்தில் ஜனித்து கணவன் குழந்தைகளுடன் வாழுங்காலத்தில் இவளுக்குண்டான பாவத்தைக் கூறுவோம். எவ்வித குற்றமும் செய்யாத நாத்தூணங்கை பேரில் பரிகாசமாகவும் குத்தலாகவும் பேசினுள்.

19. கன்னிகை வருத்த முற்றுக் கழறுவாள் சாபம் தானும்
பின்னமாய் என்மேல் குற்றம் புகன்றவிப் பாவிக் கேதான்
பின்வரும் ஜன்மம் தன்னில் பெண்துணை தோஷ. மாயும்
தன்வரன் வேறு சாதி சார்ந்திடு மென்று சொன்னாள்.

**19.** அதனால் வருந்திய அந்தப்பெண், "அகாரணமாக என்மேல் குற்றம் சொன்னபாவியாகிய நீ, வரும் ஜன்மத்தில் சகோதரி அற்றவளாக இருப்பாய். மேலும் உன் கணவன் ஓர் ஊரிலும் நீ வேறு ஓர் ஊரிலும் பிறந்து வாழ்வீர்கள், "கணவனும் வேறுஜாதியில் பிறந்தவனுவான்" என்றாள்.

20. தெருத்தூளைத் தூற்றிச் சென்றாள் சேர்ந்திடு மந்தத் தோஷம்
மற்றொன்று சொல்லக் கேண்மோவறுமையோர்க் கிடைஞ்சல் [செய்தாள்
சிறுமையோர் சொல்லும் சாபம் ஜனித்தஇல் பாழ தாகும்
உரைத்துமே சென்றா ரென்றோம் உத்தமி கேட்டி டாயே.

**20.** இவ்வாறு சொல்லிவிட்டுத் தெருத்துகளைவாரி இறைத்தாள். அந்தப் பாவம் இவளைச் சார்ந்தது. மற்றொன்றும் இவளுக்குச் சம்பவித்தது. வறுமையினால் கஷ்டப்படுபவர்களுக்கு இவள் மேலும் கஷ்டத்தை உண்டு பண்ணினாள். ஆகையால் அவர்கள், "நீ பிறந்த வீடு பாழாகக்கடவது" என்று சொல்லிச் சென்றனர்.

21. மாதுவு மந்தி யத்தில் வாயுவால் மரண மாகி
மேதினில் பிரமன் லக்கம் மேவினாள் மலாய் தேசத்தில்
காதலி நாத்தி சாபம் கலந்திடு மிச்சென் மத்தில்
வேதனை வாயு பீடை மேவிடும் கன்னிக் கேதான்.

**21.** இவள் கடைசி காலத்தில் வாயுவினால் வேதனைப்பட்டு மரணமடைந்தாள். பிரம்மன் இவளை மலாய் தேசத்தில் படைத்தான். முன் சென்மத்தில் விடுத்த சாபம் இச் சென்மத்தில் இவளுக்குப் பலித்திடும். மேலும் வாயு ரோகத்தினால் கஷ்டப்படுவாள் என்றும் அறிவிக்கின்றோம்.

22. மறுஜன்மம் அன்னாள் தன்னில் மருவுவாள் போகர் வர்க்கம்
திருமகள் விலாசம் பெற்றுச் செல்வதி வாழ்வா ளாகும்
பெரும்தந்தை பூர்வம் சொல்வேன் புலியூரில் வைசியச் சேயாய்ப்
பிறந்தன னிவனே யென்றோம் பூமியில் செட்டு செய்து;

**22.** மறு ஜன்மத்தில் அவள் "போகர்" குலத்தில் பிறந்து, லக்ஷ்மீ கடாக்ஷம் பொருந்தியவளாகி, சிறப்புடன் வாழ்வாள். இனி, தந்தையினுடைய பூர்வ ஜன்மத்தைக் கூறுவேன். திருப்பாதிரிப் புலியூரில் வைசிய குலத்தில் பிறந்து வியாபாரம் செய்து;

23. சுகமுள குடும்பி யாகித் தோகையர் மதலை யுண்டாய்
வகையுடன் வாழு நாளில் வரைந்தனன் கணக்கில் மோசம்
தகைமையா யேழைச் சாபம் ஜனித்தவூர் தன்னை விட்டுப்
பகையாக வேறு நாடு பாவியே வாழ்வாய் நீயும்.

23. சுகமாக மனைவி மக்களுடன் பெரிய குடும்பியாகி வாழும் காலத்தில் ஏழைகளுடைய கணக்கில் மோசம் செய்தான். ஆதலால் அவர்கள் " நீ மறு பிறவியில் ஜனித்த ஊரில் சிறிதும் சீவிக்கமுடியாமல் வேறு ஊருக்கு ஓடிப்போய் உயிர் வாழ்வாய் " என்று சொன்னார்கள்.

24. அன்னிய ஜாதி மாதை அணைத்துமே வாழ்வாய் நீயும்
மன்னர்பா லரசு செய்து மத்தியில் நீங்கி வாழ்வாய்
இன்னவாறு சொல்லிச் சென்றார் எய்திற்று அந்தத் தோஷம்
பின்னையும் வேறு காணன் புக்கினன் கால னூடு.

24. மேலும் வேறு சாதியில் பிறந்த மாதை மனைவியாகக் கொண்டு வாழ்வாய். முதலில் அரசர்களின் ஆதரவால் அதிகாரம் பெற்று, பிறகு அவ்வதிகார பதவியை விட்டு நீங்கி வாழ்வாய். அந்தப் பாவமும் இவனுக் கேற்பட்டிருந்தது. இவைகளைத் தவிர வேறு பாவங்கள் செய்யாதவனாக வாழ்ந்து கடைசியில் காலன் நாட்டிற்கு ஏகினான்.

25. சிரநான்கோன் வரையப் பட்டு ஜனித்தவ னிவனே யென்றோம்
மருவிடும் ஏழைச் சாபம் மறுநாடு வாச மாகும்
வருமனை வேறு ஜாதி மன்னர்பா லரசு செய்து
திருகாகுமென்று சொல்வோம் ஜயமுனி தடுத்துச் சொல்வார்.

25. நான்முகப்பிரம்ம தேவனால் இங்குப் பிறப்பிக்கப் பட்டிருக்கிறான். அந்த ஏழைகளின் சாபத்தினால் வேறு நாடு சென்று ஜீவிப்பான். வரும் பாரியையும் வேறு ஜாதியில் பிறந்தவளாவள். அரசர்களால் உத்யோகம் பெறுவான். ஆனால் அப்பதவியும் இவனுக்கு நிலைக்காது ஒழியும். இவ்வாறுசொல்லக் கேட்ட ஜயமுனிவர் சொல்லுவார்.

26. எந்தக் காலத்தில் குற்றம் எய்திடும் விவரம் சொல்வாய்
வந்தவன் மூன்று மாண்டில் மருவிடும் மரசு நீங்கும்
பிந்தியும் நாலா மாண்டில் பெறுவனும் ராஜ யோகம்
சந்ததம் இருபா னாண்டும் செப்புவோ மரசு தானே.

26. எந்தக் காலத்தில் அரசாங்க உத்யோகம் இவனை விட்டு நீங்கும் ? இதை விவரமாகச் சொல்லுங்களென, முனிவர் கூறுவார். ஜாதகன் ஜனித்த மூன்றுமாண்டில் அரசாங்க பதவி நீங்கும். அதன்பின் நான்காமாண்டில் மறுபடியும் " அரசு " பெறுவான். இருபது வருஷங்களுக்கு அப்பதவியில் இவன் இருப்பான்.

27. மத்தியில் குற்றம் நேரும் வகைதனைச் சொல்லு மென்னச்
சத்தியற் றோர்கள் சாபம் சார்ந்தது இதுவல் லாமல்
குத்தமாய்ச் சனியின் தோஷம் கூறுமவ முரையாண் டாகும்
இத்தகை யாலே துன்பம் எய்திடு மற்பத் தாலே,

27. இவ்வாறு மதியில் என் குற்றம் நேரவேண்டுமெனக் கேட்க, முனிவர் பதிலுரைத்தார். ஏழைகள் சாபம்தான் காரணம். இதற்குச் சரியாக "ஏழரை வருஷ" சனியும் இவனைப் பிடித்துக் கொள்வான். ஆகையால் அல்ப காரணத்தினுல் பல துன்பங்களை அனுபவிப்பான்.

28. மதிதசை ராகு புத்தி மருவும்கா லங்கள் நேரும்
அதுமுதல் சேயின் காலம் அரசுமே ஓங்கு மென்றேம்
பதியது இரண்டு நேரும் பாருளோர் வசிய மாகும்
அதிதியை ஆத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

28. இந்நிகழ்ச்சிகள் ஏற்படும்போது ஜாதகனுக்கு சந்திரதசையில் ராஹு புக்தி நடைபெறும். அதன் பின் சந்திரதசை குருபுக்தி ஆரம்பித்து "ராஜ யோகம்" விருத்தியடையும். இரு வீடுகள் ஏற்படும். உலகத்தினர் இவனுக்கு அனுகூலம் செய்வார்கள். அதிதியை ஆதரிக்கும் அன்னையே! மேலும் கேளுங்கள்.

குறிப்பு—

"दशेशात्रीः अरिगेह भाजः लग्नेश शत्रोरथवापि भुक्तौ ।
शत्रोर्भयं स्थान लयः तदास्य स्निग्धोऽपिशत्रुत्वमुपैतिनूनम् ॥"

என்ற பலதீபிகை சுலோகத்தைக் காண்க. [அத் 20 சுலோகம் 28 இதன் கருத்து "தசாநாதனுக்குச் சத்ருவான புக்திநாதன், சத்ரு வீட்டில் இருக்கும் கிரஹம், லக்னாதிபதிக்கு விரோதியான கிரஹம், இவைகளுடைய புக்தி நடைபெறும்போது, ஜாதகனுக்கு எதிரிகளால் பயம், பதவி நாசம் நண்பர்களுடனும் பகைமை இவைகள் ஏற்படும். இவ்விதி எல்லா சாதகங் களுக்கும் பொருந்தும்.

29. பின்ஜன்மம் இலங்கைத் தீவில் பிறப்பனும் சைவச் சேயாய்
மன்னர்பா லரசு செய்வன் வறுமைகள் காணு னுவன்
........................
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே.

29. இவன் மறு பிறவியில் இலங்கைத்தீவில் சைவ குலத்தில் பிறந்து அரசாங்க உத்யோகம் செய்து வாழ்வான். வறுமை இல்லாதவனுகவும் ஆவான். விநாயகரைப் பெற்ற தாயே! மேலும் கேட்பீராக.

30. ஜாதகன் முன்ஜன் மத்தைச் சாற்றுவோம் பாண்டி நாட்டில்
தீதிலாச் சைவ சேயாய்ச் ஜனித்துமே கிருஷி செய்து
மாதவர் பத்தி பூண்டு மார்க்கத்தில் தாகப் பந்தல்
மேதினில் தலங்கள் சென்று வினையது இல்லா னுகி

30. இனி சாதகனுடைய முன் சென்மத்தைக் கூறுவோம். இவன் முன் பிறவியில் பாண்டிய நாட்டில் பரிசுத்தமான சைவ குலத்தில் பிறந்து; விவசாயம் செய்து சீவித்து வந்தான். தவசிகளிடம் பக்தி கொண்டு

இருந்தான். பலரும் நட ந்துசெல்லும் பாதையில் தாகப்பந்தல் நிறுவினுன். பல புனித ஸ்தலங்களுக்கும் யாத்திரை சென்றுன். ஒருவித பாவமும் செய் யாதவனுக வாழ்ந்து;

**31.** மறலியின் பதிக்குப் புக்கி மால்மகன் வரையப் பட்டுத்
திருமகன் மலாய்தே சத்தில் ஜனிப்பஞ மிந்தப் பாலன்
உரைக்கிறே மிவனின் யோகம் உலகிற்கு நல்லோ ஞவன்
பரிவண்டி யுடையா ஞகும் பார்மன்னர் மெச்ச வாழ்வன்.

**31.** யமனுலகம் சென்ற இவனைப், படைக்கும் தேவன் மலாய் தேசத்தில் பிறப்பித்திருக்கின்றுன். இச் சாதகனுடைய யோகத்தைக் கூறுவோமாக. எல்லோருக்கும் நல்லவனுவான். குதிரை வண்டி முதலிய வாஹன வசதிகள் உடையவன். மன்னர்களும் கௌரவிக்கும் வகையில் சிறப்பாக வாழ்வான்.

**32.** ஈரொன்ப தாண்டு மேலாய் எய்திடும் ராஜ யோகம்
கூறுவோம் நாற்பா னெட்டும் கோவலர் தன்னு லுய்வன்
மாரி ய அதன்மே லாவி மரணமட் டவரால் உய்வன்
சேருமூ வேழாயி ரம்பொன் செல்வதி கேட்டி டாயே-

**32.** பதினெட்டு ஆண்டுகளுக்கு மேல் "ராஜ யோகம்" இவனுக்கு ஏற் படும். நாற்பத்தெட்டாவது வயது வரையில் அரசர்களின் ஆதரவால் அதி காரம் பெற்று வாழ்வான். அதன்பின் சிறிது மாறுதலேற்பட்டு மறுபடி யும் அவர்களாதரவினுல் ஆயுள் வரையில் வாழ்வான். இவன் இருபத் தோராயிரம் பொற்காசுளைச் சம்பாதிப்பான். அன்புள்ள அன்னையே! மேலும் கேளுங்கள்.

**33.** முப்பது ஆறு ஆண்டில் முயல்மேட மாதம் தன்னில்
செப்புவோம் தந்தை கண்டம் சென்றுபின் நாற்ப தாண்டில்
ஒப்புடன் மகர மாதம் உரைக்கிறே மன்னை கண்டம்
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழிகுன் றுது.

**33.** ஜாதகனுடைய முப்பத்தாரும் வயதில் சித்திரை மாதத்தில் தந்தைக்குக் கண்டம் ஏற்பட்டு அவன் இறப்பான். நாற்பதாம் வயது நடை பெறுகையில் தைமாதத்தில் ஜாதகனின் தாய் மரணமடைவாள். கங்கையைச் சடையில் அணிந்த சிவபிரானின் தேவியாரே! நாங்கள் சொன்ன மொழி குன்றுது.

**34.** அறுபது ஒன்று ஆண்டில் ஆவணி மாதம் தன்னில்
திருமகனுடலம் ஏகும் செப்புவோம் பின்ஜன் மத்தைப்
பெருநதி சேது தன்னில் பிறப்பஞ மிக்கு லத்தில்
குறைவிலாக் குடும்பி யாவன் கோமளி கேட்டி டாயே

**34.** ஜாதகன், தனது அறுபத்தோரும் ஆண்டில் ஆவணி மாதத்தில் தேக வியோகமடைவான். இவன் பின் ஜன்மத்தையும் சொல்லுகின்றோம். இவன் வரும் பிறவியில் சேதுவில் இதே குலத்தில் பிறந்து குறைவில்லாத குடும்பியாகி வாழ்ந்திடுவான். மேன்மையான மேனி வாய்ந்தவளே! மேலும் கேட்பீராக.

**35.** உதித்திடு ஜனன காலம் உத்தராடம் மூன்றும் பாதம்
கதிர்தசை யிருப்பு ரண்டு ஆண்டுமே கழறு வோம்யாம்
மதிதலம் நேர லாகும் மன்னனும் பிணியால் வாடும்
அதிதியை ஆதரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

**35.** ஜாதகன் உத்தராடம் மூன்றும் பாதத்தில் ஜனித்திருக்கின்றான். ஆகையால் சூரிய தசையில் இருப்பு வருஷங்கள் இரண்டு. இத்தசையின் பலனைக் கூறுவோம். வேறு இடத்தில் வாசம் செய்ய நேரிடும். ஜாதகன் பல பிணிகளால் துன்பமடைவான். அதிதி தேவிக்கு அருள்புரியும் அன்னையே! மேலும் எங்களைக் கேட்டருளல் வேண்டும்.

# ஜாதகம் 49

1. பிறைதனு புதனும் சாடி புகர்பரி யோனு மீனம்
கரியவன் மேட மாகக் கனகனும் கேது நந்தி
தரைமகன் வீணை புக்கச் சர்ப்பமும் பரப்பி லேற
வருவது ஜன்மம் நண்டு வரைகுவீர் பலனைத் தானே.

விருஷஷூ பங்குனிமீ 2-ஆம் வ செவ்வாய்க்கிழமை பகல் நாழிகை 20-க்கு மேல் 25-க்குள் ஜனனம்.

**ஆங்கிலத் தேதி 14-3-1882.**

நவக்கிரஹங்களின் பாத சாரம்.

பூரட்டாதி 4-இல் சூரியன், பூராடம் 4-இல் சந்திரன், திருவாதிரை 2-இல் செவ்வாய், அவிட்டம் 4-இல் புதன், கிருத்திகை 2-இல் குரு, உத்தரட்டாதி 2-இல் சுக்கிரன், பரணி 2-இல் சனி, அனுஷம் 3-இல் ராஹு, ரோஹிணி 1-இல் கேது, நக்ஷத்திரம் பூராடம். சுக்கிரதசை இருப்பு வருஷங்கள் நான்கு, மாதம் ஒன்று.

| சுக்கிரன் சூரியன் | சனி | குரு கேது | செவ்வாய் |
|---|---|---|---|
| புதன் | இராசி சக்கிரம் | | லக் கினம் |
| | | | |
| சந்திரன் | ராஹு | | |

1. சந்திரன் தனுஸ், புதன் கும்பம், சுக்ரன் சூரியன் மீனம், சனி மேஷம், குரு கேது விருஷபம், செவ்வாய் மிதுனம். ராஹு விருச்சிகம். இலக்கினம் கடகம். இக் கிரஹ நிலையின் பலன்களைச் சொல்லுவீர்களாக எனப் பார்வதிதேவி வினவினாள்.

2. குறுமுனி புகலு கின்றார் குறித்தது ஆண்பால் ஜன்மம்
வருமில்லம் வடக்குப் பார்வை மாதுக்கு இல்ல மாகும்
பெருநகர் கீழ்மேல் வீதி பெருவயி றப்பன் மேற்கில்
நரிவாக னத்தா ளுத்திரம் நன்னதி கீழ்ப்பா லாகும்.

2. இவ்வாறு உமையவள் கேட்க, அகஸ்த்திய முனிவர் பலன்களைக் கூறுவாராஞர். இக்கோள் நிலையில் ஜனித்த மகவு ஆண். வீதி கிழக்கு மேற்காக அமைந்திடும். இல்லம் வடதிசை நோக்கும். தாயின் கிருஹத்தில்

ஜனித்திருக்கின்றான். ஊர் பெரிய நகரமாகும். மேற்கில் கணபதி வாசம் செய்வார். காளிதேவி வட திசையில் தங்குவார். கீழ்த்திசையில் ஒரு புனித நதி பெருகும்.

3. இத்தகைய மாடி சூழ்ந்த இளவனும் ஜனன மாகும்
பெத்ததாய் தந்தை யோகம் பின்துணை களத்திர புத்திரர்
சுத்தமாய் முன்பின் ஜன்மம் சாந்தியு மிந் நூல் தன்னில்
சத்தியே சொல்லு கின்றோம் தந்தையின் வர்க்கம் கேளாய்.

3. இத்தகைய மாடிகள் சூழ்ந்த ஊரில் ஜாதகன் ஜனித்திருக்கின்றான். ஜாதகனுடைய தாய் தந்தை சகோதரர் மனைவி புத்திரர் இவர்களைப் பற்றியும், முன்பின் ஜன்மங்கள் சாந்திகள் இவைகளைப் பற்றியும் இந்நூலில் சொல்லப் போகின்றோம். முதலில் தந்தை வருக்கத்தைக் கூறுவோம்; கேட்பீராக.

4. ஆணது மூன்று என்றோம் அவ்வாறே கன்னி யாகும்
நாணிடும் மற்ற வெல்லம் நாயகன் வேறாய்ச் செல்வன்
பூணுவோம் பாகம் நான்காய்ப் போகிடு மொருவன் தானும்
காணாது சுதர்கள் தாமும் கண்டித மிருவர் விருத்தி.

4. ஜாதகனின் தந்தைக்கு மூன்று சகோதரர்கள். அவ்வாறே மூன்று சகோதரிகள். மற்றைய குழந்தைகள் நீடித்திரா. மொத்த சொத்துக் கள் நான்காகப் பிரிக்கப்படும். ஜாதகனின் தந்தை தனியாக வாழ்வான். இரு சகோதரர்களின் குடும்பம் விருத்தியடையாது. மற்ற இரு சகோதரர் களின் குடும்பம் விருத்தியடைந்து இவ்வுலகில் ஸ்திரமாக விளங்கிடும்.

5. எந்தக்கா லத்தில் செல்வர் இயம்புவீர் முனியே நீர் தாழ்
வந்தவ னிவன்வ ழாண்டில் வரைந்தன மந்தச் சங்கை
பிந்திய பாகம் தன்னில் பேசுவோம் விவர மாகச்
சந்ததம் பிதாகு ணத்தைச் சாற்றுவோம் தாயே கேளும்.

5. எந்தக் காலத்தில் குடும்பப் பிரிவினை ஏற்படும்? அதை விவரமாகச் சொல்லுமெனக் கேட்க, அகஸ்தியர் கூறுவார். ஜாதகன் பிறந்து ஏழாவது ஆண்டில் அந்நிகழ்ச்சி நடைபெறும். பின்பாகத்தில் இவ்விஷயத்தை விவரமாகத் தெரிவிப்போம். இனி தந்தையின் குணத்தைப் பேசுவோம். அன்னையே! கேளுங்கள்.

6. சீலவான் சிவந்த மெய்யன் தேகமு முணச்சல் நீட்சி
காலத்தை அறிந்து வாழ்வன் கட்டுரை பகரா னாகும்
ஞாலங்க ளதிக மில்லான் நன்மொழி கல்வி கொஞ்சம்
பால்பாக்கிய மில்லா னாகும் பண்டு போர்க்கு உதவி செய்வன்.

6. நற்சீல முள்ளவன். சிவந்த மேனியான். சரீரம் மெலிந்து உயர்ந் திருக்கும். காலத்திற்கேற்றபடி தன் வாழ்க்கையை மாற்றிக் கொள்வான். அடுக்கு வார்த்தைகளைப் பேச விருப்ப மில்லாதவன். பூமிகள் அவனுக்கு

அதிக மிரா. கொஞ்சம் கல்வியறிவும் உடையவன்தான். பால்பாக்கிய மில்லாதவன். நல்ல டண்பு படைத்த பெரியோர்களுக்குச் சிரத்தையுடன் உதவிபுரிவான்.

7. சுகதுக்க முடையா னுகும் தூசுகள் தன்னு லுய்வன்
பகையென்று மனத்தில் எண்ணுன் பரிந்துப சாரம் செய்வன்
அகமது வேறு செய்வன் அடக்கமாம் வார்த்தை யுண்டு
செகமதில் நல்லோ னுவன் செலவுளன் சல்லிய முள்ளான்.

7. இவனுடைய வாழ்க்கையில் சுகதுக்கங்கள் அடிக்கடி மாறி மாறி வரும். வஸ்திர வியாபாரத்திஞல் ஜீவிப்பான். பகைமையை மனத்தில் நிலைத்து வைத்திருக்காதவன். வருமவர்களுக்குப் பரிவுடன் உபசாரம் செய்வான். வேறு புதியதொரு வீடு கட்டி வாழ்வான். வணக்கம் தொனிக்கும் வார்த்தைகளைப் பேசுவான். எல்லோரிடமும் நல்லவனுகப் பழகுவான். அதிகச் செலவு செய்பவன். ஆகையால் கடனும் வாங்குவான்.

8. இக்குண முடையா னுக்கு இவனுமே சேஷ்ட னுக
மிக்கவே யுதிப்பா னுகும் விளம்புவோ மிவன்கு ணத்தைத்
தக்கவே கல்வி கற்பன் தறித்தொழில் புரிவா னுகும்
சிக்கன மில்லா னுகும் சிவந்தமெய் யுடைய னுகும்.

8. இத்தகைய குணம் உடையவனுக்கு இப்பாலன் மகனுகப் பிறந்திருக்கின்றுன். இவன் குடும்பத்திற்கு ஜ்யேஷ்டன். தக்க வித்தையைக் கற்றவன். தறித்தொழிலை ஜீவனத்திற்காக நடத்துவான். அதிகச் செலவுகள் செய்பவன். சிவந்த மேனியுடையவனுவான்.

9. ஊகைவா னுணச்சல் தேகி உண்மையா மனத்தா னுகும்
ஆகமம் அதிகம் காணுன் அடைந்தோரை ஆத ரிப்பன்
போகபாக் கியங்கள் பின்னுல் பெறுவனும் வறுமை காணுன்
தோகையர் வந்த பின்பு செப்புவோம் யோகம் தானே.

9. மதியூகம் உடையவன். மெலிந்த சரீரம் வாய்ந்தவன். உண்மையான மனம் படைத்தவன். சாஸ்திர தத்துவங்களை அதிகம் அறியாதவன். தன்னை அண்டியவர்களை ஆதரிப்பான். பிற்காலத்தில் போக்கியப் பொருள்களைப் பெறுவான். வறுமை இல்லாதவன். இவனுக்கு மணமான பிறகு யோகங்கள் விருத்தியாகும்.

10. எப்படி யோகம் சொல்வீர் இயம்புவீ ரந்தச் சங்கை
ஒப்புடன் தனத்தோன் லாபம் ஒன்பதி லிருப்ப தாலும்
மெய்ப்புடன் லாபம் தன்னில் மெய்ஞ்ஞானி பொன்னேன் சேரச்
செப்பினேன் யோகம் தானும் ஜனித்தவ னந்தி யத்தில் ;

10. இவனுக்கு எவ்வாறு யோகங்கள் உண்டு ? அதன் காரணத்தைச் சொல்லுவீர்களாக எனப் பார்வதி தேவி கேட்க, அகஸ்தியர் பதிலுரைக்

இன்றுர். தனுதிபதியான சூரியன் பாக்கியத்தில் இருப்பதாலும், பாக்கியாதி பதியான குரு பதினேராமிடத்தில் [லாபத்தில்] கேதுவோடு இருப்பதாலும் இச்சாதகனுக்கு யோக முண்டு. அந்தியகாலத்தில் ;

11. பிறைபோலே யோகம் வாய்க்கும் பூமியில் தரியா லும்தான்
உறைந்திடும் லாபம் தானும் உலகினில் சல்லியம் காணுன்
வருந்துணை ஆண்பால் நான்கு மாதுவு மிரண்டு தீர்க்கம்
உரைக்கிறேம் பின்பால் சேதி உத்தமி கேட்டி டாயே.

11. வளர்பிறைச் சந்திரன் போல யோகங்கள் வளர்ந்திடும், இவனுக்குப் பூமிகளாலும் தரித்தொழிலாலும் லாபங்கள் கிடைக்கும். கடன் இல்லாதவன். இவனுக்குச் சகோதரர்கள் நால்வர் ; சகோதரிகள் இருவர். இந்த ஆறு உடன் பிறந்தவர்களும் தீர்க்கமாக வாழ்வார்கள். இவர்களைப்பற்றிய வரலாறுகளைப் பின்பாகத்தில் தெரிவிப்போம். ஜாதகனுடைய வரலாறுகளை மேலும் கேளுங்கள்.

12. பாரியு மிருபான் ரண்டில் பகருவோ மன்னே வர்க்கம்
நாரியும் உள்ளூ ராகும் நவிலுவோ மவள்கு ணத்தைத்
தீரமில் லாத நெஞ்சம் சிலகது ஒருவர்க் கெண்ணுள்
தேரினேர்க் கன்ன மீவள் சீக்கிர கோபி யாவள்.

12. ஜாதகனுக்கு இருபத்திரண்டாம் வயதில் மணம் நடைபெறும். மணமகள் உள்ளூரில் தாய் வருக்கத்தில் ஜனித்திருப்பாள். அவளுடைய குணங்களைக் கூறுவோம். உறுதியில்லாத உள்ளம் படைத்தவள். ஒருவருக்கும் கெடுதலை எண்ணுதவள். பெரியோர்களுக்குச் சிரத்தையுடன் அமுதளிப்பாள். வெகு சீக்கிரத்தில் இவளுக்குச் சினம் தோன்றும்.

13. உடன்படாள் பிழைக ளுக்கு உத்தமி நடக்கை நன்மை
அடல்மிகு செய்கை யுண்டு கணவனுக் கினியா ளாகும்
அடவுடன் வயது தீர்க்கம் அத்திரி தடுத்துச் சொல்வார்
விடமைந்தில் எழோ னீச்சம் விரயத்தில் சேயும் தங்க.

13. குற்றங்களில் ஈடுபடாதவள். நன்னடக்கை உடையாள். கொஞ்சம் பிடிவாத குணமுண்டு. கணவனுக்கினியவள். அவள் தீர்க்காயுர்யோகம் வாய்ந்தவள். இவ்வாறு சொல்லக் கேட்ட அத்திரி மறுத்து உரைப்பார். ராஹு ஐந்தாமிடத்தில, ஏழாம் பாவத்திற்கு உடைய சனி நீசம். செவ்வாயோ பன்னிரண்டாமிடத்தில் இருக்கின்றுன்.

14. இருமனே யனுகு மென்றேம் இயம்புவார் பராசர் தாமும்
பரிதியு மிரண்டோ னுகிப் பாஸ்கரன் கூடி யேதான்
தருமதா னத்தில் தங்க ஜனித்திடு புரத்தில் நல்லோர்
பெருமையா யிருபப தாலே பேசொணுத் தாரம் ரண்டு.

14. ஆகவே ஜாதகனுக்கு இருமனைவி உண்டு. [இவளுக்கு வயது தீர்க்கமென்று சொல்லக் கூடாதென்பது கருத்து.] இதற்கு முனிவா பராசரர்

பதில் கூறுவார். குடும்பாதிபதியான சூரியன் தரும ஸ்தானத்தில் இருப்ப தாலும், பலம் பொருந்தியவர்களாக இருப்பதாலும் ஜாதகனுக்கு மனைவி ஒருத்திதான். இருமனைவிமார்கள் என்று சொல்லுவது யுக்த மன்று.

### வேறு

15. இதற்குநே ரிடையாய் ஜாதக சுருதியில்
 ஏழாம்பா வத்தினில் பாரு
 அதில்சொல்லும் விவரம் இரண்டேழோன் கேந்திரம்
 ஆகிலும் கோணத்தில் இருக்கச்
 சதமுடன் மனைவி ஒன்றென மொழிந்தோம்
 சங்கைகள் சிலதுமே யுண்டு
 வதிபதி யன்னை தந்தையர் தமக்கு
 மாதுரு இரண்டுமே வரைவோம்.

15. இதற்காதாரமாக சோதிட சாஸ்திரத்திரத்தில் களத்திர பாவத்தைச் சொல்லும் அத்தியாயத்தைப் பார்ப்பீர்களாக. அந்த அத்தியாயத்தில் என்ன சொல்லப்பட்டிருக்கிற தென்றால், ஏழாம் பாவத்திற்கு உடையவன் ; அல்லது குடும்பபாவத்திற் குடையவன் ; இவர்கள் கேந்திரத்திலோ, திரி கோணத்திலோ இருப்பார்களாயின் அச் சாதகனுக்கு ஒரே மனைவிதான் உண்டு என்பது. செவ்வாய் பன்னிரண்டிலிருப்பதாலும், சனி நீசம் பெற்று இருப்பதாலும் ஜாதகனுக்குப் பிற மாதின் தொடர்பு தகாத வழியில் ஏற்படுமேயன்றி இரண்டாவது மனைவி நிச்சயமாக ஏற்படமாட்டாள். ஜாதக னுடைய தாயின் தந்தைக்கு இரு மனைவிமார்கள் உண்டு.

### வேறு

16. சுதர்களும் காணு தாகும் தோன்றினும் நீதே யாகும்
 எதுவித கார ணத்தால் இயம்பினீ ரந்தச் சங்கை
 புதல்வர்தா னத்தில் ராகு பொருந்தியே சேய்விர யத்தில்
 விதியவ னீச மாக விளம்பினேம் தாயே யாங்கள்.

16. இச் சாதகனுக்குச் சந்ததி தோன்றுது. தோன்றினும் அழியும். அதற்கென்ன காரணம் ? அதை விளக்குவீராக எனப் பார்வதி கேட்க, முனிவர் பதில் கூறுவார். புத்திரபாவம் என்று சொல்லப்படும் ஐந்தா மிடத்தில் ராஹு இருப்பது ஒரு காரணம். அந்தப் பாவத்திற்கு உடைய செவ்வாய், பன்னிரண்டில் இருப்பது மற்றொரு காரணம். சனி நீசனுக இருப்பதும் மூன்றுவது காரணமாகும்.

17. முன்ஜன்மம் வினைய னேகம் மேவிற்றுப் பால னுக்கு
 என்னவூழ் செய்தா னத்தை யியம்புவீர் முனியே நீதான்
 தென்திசை நவபா ஷாணத் தீர்த்தமா நகரி லேதான்
 பின்குல மதிலுதித்துப் பேதையர் மதலே யுண்டாய்.

17. ஆகவே முன் ஜென்மத்தில் பெரிய பாவத்தைச் செய்திருக்கின்றான். அது இவனைப் பற்றிக்கொண்டது. என்ன பாவம்? சொல்லுங்கள் என உமாதேவி வினவ, முனிவர் சொல்லுகின்றார். தென் திசையிலுள்ள நவபாஷாணம் என்ற க்ஷேத்திரத்தில் பின் குலத்தில் பிறந்து பாரியை மகவுகளுடன்;

18. இல்லத்தில் வெகுநா ளாக இருந்தது நாக மொன்று
அல்லலாய் மருடத் தாலே அதுபுத்த மதனில் செல்ல
வல்லவ னரங்கம் செய்து வாட்டினன் கழியி னாலே
புல்கிற்றுக் கால னூடு புக்கிற்று அந்தத் தோஷம்.

18. முன் பிறவியில் இவனது இல்லத்தில் ஒரு பாம்பு வசித்து வந்தது. அது ஒரு நாள் வெளியே செல்லும்போது அதை இவன் தடியால் அடித்துக் கொன்றுவிட்டான். அந்தப் பாவம்தான் இவனைப் பிடித்துக்கொண்டிருக்கிறது.

19. மறுவினை காண னாகும் மாரனும் அந்தி யத்தில்
உறும்சுதர் யாவும் நீங்கி உலகமேல் சஞ்ச ரித்து
மறலியின் பதிக்குப் புக்கி மால்மகன் வரையப் பட்டுத்
திருமக னுதிப்பா னாகும் சேர்ந்திடு முன்னூழ் தோஷம்.

19. வேறுபாவம் ஒன்றும் இவன் செய்தவனல்லன். கடைசியில் தன் பிள்ளைகள் எல்லாரையும் இழந்து உலகில் திரிந்து முடிவில் இறந்தான். அவனை, விஷ்ணுவின் மகனாகிய பிரம்மதேவன் இப்பொழுது கடக லக்னத்தில் பிறப்பித்திருக்கின்றான். முன்ஜன்ம பாவம் இவனைத் தொடர்ந்து வருகின்றது.

20. மதலைகள் தோஷ மெய்தும் வரைகிறேம் கிரியை தானும்
அரவுமே சிலையால் செய்து அரசின்கீழ் வைத்து இன்னோன்
முருகர்தம் விரதம் கொள்ள மூண்டவூழ் விலகி யேதான்
பிறந்திடும் சுதர்கள் தீர்க்கம் புண்ணிய சாலி கேளாய்.

20. ஆகையால் புத்திரர் தோன்றினும் அழிவார்கள். அவ்வினைகள் நீங்க ஒரு சாந்தி கூறுவோம். சிலையில் ஒரு நாகத்தைச் செய்து அதை அரச மரத்தின் கீழ் பிரதிஷ்டை செய்து கிருத்திகை விரதமும் இருப்பானாகில், தொடர்ந்து வரும் வினை நீங்கும். புத்திரர்களும் உதிப்பார்கள். தீர்க்காயுளுடன் வாழ்வார்கள். கருணைக்கடலே! மேலும் கேட்பீராக.

21. சொற்படி செய்யா னாகில் துலங்காரே சுதர்கள் தாமும்
சொற்படி செய்வா ராகில் தோன்றிடு மாண்பா லொன்று
மைப்படி விழியாள் ரெண்டு வரைந்தனன் தீர்க்க மாக
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழிகுன் றுது.

21. முனிவர்களாகிய நாங்கள் சொன்னபடி செய்யானாகில் சந்ததி விளங்காமல்போகும். நாம் சொன்னபடி சாந்திகளைச் சிரத்தையுடன்

செய்வானுகில் ஒரு பிள்ளேயும் இரண்டு பெண்களும் பிறந்து தீர்க்காயுளுடன் வாழ்வார்கள். கங்கையைச் சடையில் அணிந்த சிவபிரானின் தேவியாரே! நாங்கள் சொன்ன மொழி தவருது நிச்சயமாக நடைபெறும்.

22. அன்னேமாஞ் சிவப்ப ளாகும் அன்புள மனத்த ளாகும்
கன்னென மொழியே சொல்வாள் கடந்தோர்கட் கன்ன மீவள்
நன்னடை துணையாண் ரண்டு நாயகி ஒன்றே தீர்க்கம்
கன்னிதா யில்ல முள்ளூர் கழறுவோம் மாமன் சேதி.

22. ஜாதகனின் அன்னே மாநிற முள்ளவள். அன்பு நிறைந்த மனம் படைத்தவள். கரும்பு போல் இனிய மொழிகளேப் பேசுவாள். பெருந் தவசிகளுக்கு அமுதளிப்பாள். நல்ல நடத்தை உடையவள். இவளுக்கு இரு சகோதரர்களும் ஒரு சகோதரியுமுண்டு. இவள் பிறந்த ஊரிலேயே வாழ்க்கைப்பட்டிருக்கின்ருள். ஜாதகனுடைய மாமன் வரலாறுகளேப் பேசுவோம்.

23. முன்னவன் ஊகை சாலி மொழியதைக் காப்பா ளுகும்
பொன்பொரு ளுடைய ளுகும் புகழ்ந்தோரை ஆத ரிப்பன்
பன்னுவான் ஞான நூலேப் பாரினில் வறுமை காணுன்
தன்மனே ஒன்றே தோன்றிச் சத்திபால் துன்ப மெய்தி;

23. இரு மாமன்மார்களில் மூத்தவன் மதி நுட்பம் வாய்ந்தவன். தன் வார்த்தையைக் காப்பாற்றுவான். பொன்னேயும், மற்றைய பொருள் களேயும் அடைவான். தன்னேப் புகழ்ந்தவர்களே ஆதரிப்பான். வேதாந்த நூலேக் கற்பான். வறுமை இல்லாதவன். தான் ஒருத்தியை மணம் செய்து கொண்டு அவளால் துன்பத்தை அடைந்து;

24. மறுமனே நேரும் தாயே மைந்தராண் இரண்டு தீர்க்கம்
அரிவைமார் நான்கு என்றேும் அவனுக்கு வயது தீர்க்கம்
சிறியவன் சேதி கேளாய்ச் சிறுகான குணத்த ளுகும்
தரித்தொழில் தந்திர வார்த்தை சல்லியம் கொள்ளா னுமே.

24. வேறு மாதை மணப்பான். அன்னேயே! இரு பிள்ளேகளும் நான்கு பெண்களும் தோன்றி நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள். அவனும் தீர்க்காயுள்யோகம் உடையவன். இனி, சிறிய மாமனின் செய்தியைக் கூறு வோம். கீழ்த்தரமான குணங்கள் உள்ளவன். தரித் தொழிலேச் செய் வான். தந்திர வார்த்தைகளேச் சொல்லுவான். கடன் இல்லாதவன்.

25 வறுமைஎப் போதும் காணுன் மனேவியு மொன்றே தீர்க்கம்
பெரும்சுதர் உதிக்கும் தீதாம் பேசுவீர் விவர மாக
அரிவைசெய் கொடுமை யாலே அச்சுதர் தோஷ மெய்தும்
அறிவிப்பீர் முனியே நீர்தாம் மாதுவின் பூர்வம் கேளாய்.

25. எந்த வயதிலும் வறுமை இல்லாதவன். இவனுக்கு மனேவி ஒருத்தி தான். பெறப்படும் பிள்ளேகளுக்குக் கஷ்டங்கள் ஏற்படும். அதற் கென்ன காரணமெனக் கேட்க, அகஸ்திய முனிவர், அவன் மனேவி முன்

ஜன்மத்தில் செய்த வினைதான் காரணமென்று கூற, மற்றைய மஹரிஷிகள் அவ்வினையை தெரிவிக்குமாறு வேண்ட, அகஸ்திய முனிவர், சொல்லு கிறேன், கேளுங்கள், என்றார்.

26. தோகையின் மலைக்கு மேல்பால் தோன்றியே சிறுவூர் தன்னில்
பாகமாய் ரெட்டி வமிசம் பாவையு தித்தா ளென்றோம்
போகபாக் கியங்க ளுண்டாய் புத்திரர் அதிக மாகி
சாகையில் கொல்லே தன்னில் தங்கிற்றுச் கறுப்பான் தானும்.

26. இவள் முன்ஜென்மத்தில் தோகை மலைக்கு மேற்குத்திசையில் உள்ளதொரு சிறிய ஊரில் ரெட்டி வமிசத்தில் பிறந்து, போக போக்கியங்கள் உடையவளாக, தன் கணவனுடனும் அநேக குழந்தைகளுடனும் சுகமாக வாழ்ந்திருக்கும் காலத்தில், புழக்கடையிலுள்ள ஒரு மரத்தில் கருப்பன் என்று சொல்லப்படும் காற்று உருவத்தில் சஞ்சரிக்கும் ஒரு ஆன்மா வாசம் செய்தது.

27. முன்னோர்கள் தெய்வ மாக முனைந்துமே தோத்த ரிப்பார்
கன்னிகை வணக்க மின்றிக் கருதாமல் நின்று ளென்றோம்
தொன்முனி புகலும் சாபம் செப்புவோம் தாயே கேளும்
உன்னுடைச் சுதர்கள் யாவும் உனக்குத வாமல் செய்வேன்.

27. அந்தக் கருப்பனை இவளுடைய முன்னோர்கள் தெய்வமாகப் போற்றி வழிபட்டுவந்தனர். அவ்வாறு இருக்க இவள் மாத்திரம் அந்த முனீசுவரனைத் தெய்வமாக நினைக்காமலும் வழி படாமலும் நின்றொழிந் தாள். ஆகையால் கோபமடைந்த அந்த ஆன்மா கூறியதைக் கேளுங்கள். தாயே ! உனக்குப் பிறக்கும் மகவுகளைத் தங்காமல் செய்வேன்.

28. மறுஜன்மம் தோன்றி நீயும் மைந்தர்கள் யாவும் கொல்வேன்
உரைத்துமே வேறு சாகை ஒதுக்கிற்று முனியும் தானும்
திருமக ளச்சென் மத்தில் சேயர்கள் யாவும் போக்கி
மறலியின் பதிக்குச் சென்றாள் மங்கையே கேட்டி டாயே.

28. மறு ஜன்மத்திலும் தோன்றும் பிள்ளைகளைச் சம்ஹாரம் செய் வேன், என்று சொல்லி, வேறு மரத்தில் ஒதுங்கி வாசம் செய்தது. அச் சாபத்தின்படி இவள் அந்தப் பிறவியில் எல்லாச் சந்ததியையும் இழந்தாள். அந்தியத்தில் யமனுலகம் சென்றாள். தேவியே ! மேலும் கேட்பீராக.

29. வேதனால் வரையப் பட்டு விளங்கின ளிந்த மாது
சூதான முனியின் சாபம் சேர்ந்தது இச்சென் மத்தில்
தீதாகும் சுதர்கள் என்றோம் செப்புவீ ரதற்குச் சாந்தி
நீதியாய்க் கரும சாந்தி நிமலிக்குச் செய்ய நீங்கும்.

29. பிரம்மதேவனால் இங்குப் பிறப்பிக்கப் பட்டிருக்கின்றாள், அவள் இக் கடக லக்கின மகனுக்குப் பாரியையாக வந்திருக்கின்றாள். அந்த முனியும் இச் சென்மத்திலும் ஒட்டி வந்திருக்கின்றது. ஆகையால்

பிறக்கும் குழந்தைகளுக்குத் தீங்கு உண்டாகும். இவ்வாறு அகஸ்திய முனிவர் சொன்னவுடன், அதற்குப் பரிகாரம் சொல்லுவீராக எனப் பார்வதிதேவி கேட்க, சாஸ்திர முறைப்படி சாந்தியைச் செய்தால் வினை நீங்கும், பிள்ளைகளும் தங்கும் என்று கூறி, பரிகார முறையை அடுத்த பாட்டில் விவரிப்பார்.

30. சாந்தியின் விவரம் எவ்வாறு சாற்றுவீர் விவர மாகக்
கூர்ந்துமே கலச மொன்பான் கூர்நவ சமித்து தான்யம்
அந்திய கலச மாடை யெய்தியே யிவளை முன்பாய்ச்
சாந்தமாய் மூலம் மந்தில் சாற்றிய மொழிபோல் கூறி.

30. ஒன்பது கலசங்களை ஒன்பது வித தானியங்களைப் பரப்பி அவைகளின் மேல் வைத்துக் கடைசி கலசத்தின் முன்பு இவளை நிறுத்தி ........

31. கூஷ்மாண்டம் பலியும் தந்து குளிச்சமும் தங்க ரேக்கும்
தாழ்விலாச் சத்தி பீஜம் தானதை வரைந்து மேதான்
தோழியு மணிந்து பின்பு சுக்கிர வார நோன்பு
சூழவே சாபம் நீங்கிச் சுதர்விருத்தி தீர்க்க மெய்தும்.

31. கூஷ்மாண்டத்தில் வைத்து நைவேத்தியம் செய்து பலியிட்டும், அதன்பின் தங்கத் தகட்டில் ஹ்ரீம் (ह्रीं) என்ற சக்தி பீஜத்தை ஆறு கோணங்களில் எழுதி இந்த மாது அணிந்துக்கொள்ளவேண்டும். மேலும் சுக்கிரவார விரதமிருக்கவேண்டும். இவ்வாறு செய்தால் அச்சாபம் நீங்கி ஜனிக்கும் குழந்தைகள் தீர்க்காயுள் பெற்றுவாழும்.

குறிப்பு.—சக்தி பீஜத்தை ஆறுகோணங்களில் எழுதி பூசை செய்து அணியவேண்டிய முறையை முன்பகுதியில் [ஜாதகம் இருபத்து மூன்று வதில்] தெரிவித்து இருக்கின்றோம்.

32. செய்பவர் எவர்கள் சொல்வாய் சாஸ்திர மறிவோ ராலே
ஐயமில் லாமல்செய்ய அணுகிடும் சுதராண் மூன்று
மைவிழி பெண்பாலொன்று உரைந்தனம் தீர்க்க மாகப்
பொய்யிலா விந்த வார்த்தை புண்ணிய சாலி கேளாய்.

32. இந்தப்பரிகாரத்தைச் செய்பவர்கள் யாவர்? எனப் பார்வதி கேட்க, முனிவர் சுருக்கமாக பதில் கூறுகின்றார். நன்கு மந்திர சாஸ்திரங்களைக் கற்றுணர்ந்த பெரியோர்கள் இச் சாந்தியை முறைப்படி செய்வார்கள்.

[குறிப்பு.—இவ்வாறு ஒரு ஆக்ஷேப சமாதானத்தைச் செய்து கொண்ட இந் நூலாசிரியர் பொதுவாக எல்லாப் பரிகாரங்களையும் நன்கு கற்றுணர்ந்த பெரியோர்கள் மூலமே செய்துக்கொள்ளல் வேண்டுமெனக் கருதி வற்புறுத்துகின்றார் எனக் காண்க.] இச் சாந்தியைச் செய்தால் மூன்று பிள்ளைகளும் ஒரு பெண்ணும் தீர்க்காயுளுடன் வாழ்வார்கள். எங்கள் வார்த்தை பொய்யாகாது. கருணைக் கடலே! மேலும் கேட்பீராக.

33. மாதுரு பூர்வம் தன்னை வரைகிறோம் கொங்கு நாட்டில்
தீதிலாக் கங்கை சேயாய் ஜனித்துமே சுதர்க ளுண்டாய்ப்
பாதக மனங்க ளின்றிப் பகவானின் பத்தி பூண்டு
தீதான கால ளுடு சேர்ந்துமே பிரமன் லக்கம் ;

33. ஜாதகனுடைய தாயின் பூர்வஜன்மத்தைக் கூறுவோம். இவள் முன்பிறவியில் கொங்கு நாட்டில் மிகப் பரிசுத்தமான வேளாள வமிசத்தில் ஜனித்து கணவன் மக்களுடன் சுகமாக வாழும்போது, ஒரு வருக்கும் தீங்கு நினைக்காதவளாகவும் கடவுளிடம் பக்தி பூண்டவளாகவும் இருந்து அந்தியத்தில் இறந்தாள். அவள்தான் பிரம்மதேவனால்;

34. வந்தனள் ஜௌரி வர்க்கம் வரைகிறோ மிவள்பின் ஜன்மம்
முந்தின தலத்தி லேதான் உதிப்பளாம் சௌராஷ்டர வமிசம்
செந்திரு கடாக்ஷம் பெற்றுச் செல்வதி வாழ்வா ளாகும்
தந்திமா முகனைப் பெற்ற தயாபரி கேட்டி டாயே.

34. இங்குப் படைக்கப்பட்டிருக்கின்றாள். இவளுடைய வரும் பிறவியையும் அறிவிப்போம். பிருதிவிலிங்கஸ்வரூபியாகச் சிவபிரான் எழுந்தருளி இருக்கும் காஞ்சியில் சௌராஷ்டிரவமிசத்தில் பிறந்து, லக்ஷ்மீ கடாக்ஷம் பெற்று இவள் வாழ்வாள். யானைமுகம் படைத்த விநாயகரைப் பெற்ற கருணைக் கடலே! மேலும் கேட்பீராக.

35. தந்தையின் பூர்வம் தன்னைத் தானெடுத் தியம்பக் கேண்மோ
தென்திசைப் பாண்டிக் கீழ்பால் சிறப்புறும் பேரூர் தன்னில்
விந்தையாய்க் கோகு லத்தில் விளங்கியே குடும்பி யாகி
மைந்தர்கள் மனைவி யுண்டாய் ஆவுகள் பெருக்க மாக.

35. ஜாதகனுடைய தகப்பனின் பூர்வஜன்மத்தைச் சொல்லுவேன். தென் திசையிலுள்ள பாண்டிய தேசத்திற்குத் தலைநகரான மதுரைக்குக் கீழ்த்திசையிலுள்ளதொரு பெரிய ஊரில் யாதவவமிசத்தில் பிறந்து, பெருமைவாய்ந்த குடும்பியாகி மனைவி மக்களுடன் சுகமாக வாழ்ந்து வந்தான். தன் ஜாதிச்செல்வமான பசுக்களை விருத்திசெய்து ஜீவித்து வந்தான்.

36. வருவோர்க்குத் தாக மிந்து வினையது யில்லா தாகி
மறவியின் பதிக்குப் புக்கி மால்மகன் வரையப் பட்டு த்
திருமகன் வர்க்கம் தன்னில் ஜனித்தவ னிவனே யென்றோம்
வரும்ஜன்மம் வள்ளூர் தன்னில் மறைக்குல முதிப்ப னாகும்.

36. தன் வீடு நாடிவருபவர்களுக்குச் சோறும் தண்ணீரும் அளித்து வந்தான். சிறிதும் பாவமில்லாமல் வாழுந்து கிழப்பருவத்தில் யமனுலகம் அடைந்தான், விஷ்ணுபுத்திரனாகிய பிரம்மதேவன் அவனை இங்குப் படைக்க, ஜாதகனுக்குத் தந்தையாக வாய்த்திருக்கின்றான். இவனது வரும் ஜன்மத்தையும் குறிக்கின்றோம். இவன் அடுதத பிறவியில் திருவள்ளூரில் வேதமோதும் அந்தணர் குலத்தில் ஜெனிப்பான்.

37. இந்தவோர் ஜன்மம் தன்னில் இவன்செய்த புண்ணிய மென்ன
முந்தவே கழரு மென்ன மொழியதைக் காத்த லாலும்
நொந்தபேர்க் குதவி செய்து நிதம்சீலம் கடவுள் பக்தி
நிந்தைக ளில்லா வாழ்ந்தும் நின்மலன் பத்தி யாயும்.

37. இவ்வாறு அகஸ்திய முனிவர் சொல்லக் கேட்ட பார்வதி, உயர் குலத்தில் பிறப்பதற்கு இவன் இப்பிறவியில் என்ன புண்ணியம் செய்திருக்கின்றான் ? என வினவினாள். முனிவர் காரணங்களைக் கூறுவார். இவன் தான் சொன்ன மொழிகளைக் காப்பாற்றினான். [உண்மையே பேசினான் என்பதுக் கருத்து] நொந்தவர்களுக்கு உதவி புரிந்தான். எப்பொழுதும் நற்சீலம் உடையவனாக வாழ்ந்தான். கடவுள் பக்தி கொண்டொழுகினான். இவனுடைய வாழ்க்கையில் சிறிதும் மாசு ஏற்படவில்லை.

38. இருப்பதால் பிரம்ம சேயா யெய்துவா னிவனே யென்றோம்
கருமகா லங்கள் சொல்வேன் கரும்பாம்பு தசைகா லத்தில்
பெருமையாய் முப்பா னெட்டில் பேசுவோம் தந்தை கண்டம்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

38. இத்தகைய காரணங்களால இவன் மறு பிறவியில் பிராம்மண குலத்தில் பிறப்பான் எனத் தெரிவித்தோம். ஜாதகன் தன் தாய் தந்தையர்களுக்கு ஈமச்சடங்குகள் செய்யநேரிடும் காலத்தைக் கூறுவோம். ராகுதசை நடைபெறும்போது முப்பத்தெட்டாம் வயதில் தந்தைக்குக் கண்டம் ஏற்படும். வேதசிகரங்களான உபநிஷதங்களில் ஆனந்தநர்த்ததனம் புரியும் அன்னையே ! மேலும் கேளுங்கள்.

39. நாற்பது இரண்டு ஆண்டில் ராகுவின் தசையி லேதான்
கூப்பிடு வானும் காலன் குறித்ததோர் அன்னை தன்னை
ஏர்க்கவே எழுப தாண்டில் எழில்தனுர் மாதம் தன்னில்
தீர்ப்பாக ஜாத கர்க்குச் செப்புவோம் மார கங்கள்.

39. அதே ராகுதசையில் ஜாதகனுக்கு நாற்பத்திரண்டாவது வயது நடைபெறுங்கால் ஜாதகனின் தாயைக் காலன் தன் நாட்டிற்கு அழைத்துக் கொள்வான். ஜாதகன் எழுபதாம் வயது நடைபெறுங்கால் மார்கழி மாதத்தில் நிச்சயமாக விண்ணுலகம் ஏகுவான்.

40. பின்ஜன்மம் அவ்வூர் தன்னில் பிறப்பனு மிக்கு லத்தில்
பொன்பொரு ளுடைய ளுசிப் புதல்வனும் வாழுவா னுகும்
திண்ணமா மிந்த வார்த்தை ஜயமுனி தடுத்துச் சொல்வர்
பொன்னனுக் கெட்டில் திங்கள் பொருந்தியே யிருப்ப தாலும்;

40. ஜாதகன் மறுபிறவியில் அதே ஊரில் இக்குலத்திலேயே பிறப்பான். பொன் பொருள்களைப் பெற்றுச் சிறப்புடன் வாழ்வான். இந்த வார்த்தையைக் கேட்ட ஜயமுனிவர் மறுத்துக் கூறுவார். இலக்கினாதிபதியான சந்திரன், குருவிற்கு எட்டாமிடத்தில் இருப்பதாலும் ; [குரு கடாக்ஷம் பெருமையால் என்பது கருத்து.]

41. சனியுமே எட்டேனுகித் தசமத்தி லிருப்ப தாலே
கணமான எழுப தாண்டு கழறினீர் விவரம் சொல்வாய்
வினையாக ஏழோ னெட்டோன் விடமதாய்ச் சனியே யாகிப்
பிணையாகு மவர்கா லத்தில் புகலுவோம் மார கங்கள்.

41. ஆயுற்பாவாதிபதியான சனி பத்தாமிடத்தில் நீசனுக இருப்ப தாலும் இவன் எழுபதாண்டு வரையில் ஜீவித்திருப்பானென எவ்வாறு கூறலாம்? என, முனிவரான அகஸ்தியர் சமாதானம் அறிவிப்பார். சனி எட்டாமிடத்திற்கு மாத்திரம் உடையவனல்லன். அவன் ஏழுக்கு உடையவனுகவும் ஆவதுடன் பாவியாகவும் இருப்பதுபற்றி அவனுடைய தசை யில்தான் மாரகங்கள் ஏற்படும்.

42. ஜாதகன் பொதுயோ கத்தைச் சாற்றுவோம் ஜனனம் தொட்டு
மேதினில் ஐயைந் தாண்டும் விளம்பொணு யோகம் தானும்
ஓதுவேன் அதன்மேல் யோகம் உயர்மதி பேரலே நேரும்
தீதிலா மூவாயி ரம்பொன் சேர்ப்பனு மென்று சொல்வோம்.

42. ஜாதகனுடைய ஜனனகாலம் முதல் ஏற்படும் பொதுவான யோகத்தைச் சாற்றுவோம். இவன் பிறந்து இருபத்தைந்து ஆண்டுகள் மட்டில் சொல்லமுடியாத கஷ்டங்களைக் கொடுக்கும் தீயயோகங்கள்தான் நடைபெறும். அதன்பின் நல்லயோகங்கள், வளர்பிறைச்சந்திரன்போல் வளர்ந்திடும். மூவாயிரம் பொற்காசுகளை இவன் சம்பாதிப்பான்.

43. தந்தைபின் குடும்பம் வேறு சாற்றுவோம் பாகம் நான்காய்
அந்தகன் பக்கல் ஒன்று அணுகிடும் பின்பால் சொல்வேன்
இந்தவன் ஜனன காலம் இருபதாம் நாளில் அந்தம்
சந்ததம் புகரில் நான்கும் தங்கிடும் திங்க ளென்றேம்.

43. தந்தைக்குப் பின் சொத்துக்கள் நான்காகப் பிரிக்கப்படும். அவர் களில் ஒருவன் அந்தகன உலகம் செல்வான். அவனைப்பற்றி இரண் டாம் பாகத்தில் கூறுவேன். இவன் பூராடநக்ஷத்திரத்தில் நான்காம் பாதத்தில் ஜனித்திருக்கின்றுன். ஆகையால் சுக்கிரதசையில் இருப்பு வருஷங்கள் நான்கு, மாதம் ஒன்று.

44. தலமும்பே தங்க ளெய்தும் தன்துணைபின்னுல் விருத்தி
இன்னல்கள் கலகம் நேரும் இவனன்னை வர்க்கம் சூதம்
மான்விழி தனக்கு ரோகம் வரவுக்குச் செலவ மனகம்
உன்னத மனங்க ளெய்தும் உரைத்தனம் பூர்வ பாகம்.

44. இந்தத் தசையின் பலனைக் கூறுவோம். வாசஸ்தலம் அடிக்கடி மாறும். சகோதரவிருத்தி யுண்டு. பல இன்னல்களும் கலகங்களும் நேரும். இவனுடைய தாய்வருக்கத்தில் சூதகம் ஏற்படும். தாய்க்கும் ரோகம் காணும். வரவிற்குமேல் செலவுகள் ஏற்படும். பெருந்தன்மை வாய்ந்த மனேபாவம் உண்டாகும். இவ்வாறு பூர்வபாகத்தைச் சுருக்க மாகத் தெரிவித்தோம்.

## ஜாதகம் 50

1. சந்திரன் பானு நந்தி சனிகன்னி கேது கோலாம்
புன்திசை புகரு வீணை புன்ராகு மேட மாக
இந்தவாறு கிரகம் நின்று லக்கினம் கடக மாக
அந்தவோர் பலன்கள் எவ்வாறு அறிவிப்பீர் முனியே நீர்தாம்.

| குரு | ராகு<br>புதன் | சந்திரன்<br>சூரியன் | சுக்கிரன் |
|---|---|---|---|
| | இராசி<br>சக்கரம் | | லக்கினம் |
| செவ்வாய் | | | |
| | | கேது | சனி |

நந்தனஞு வைகாசிமீ 15-ம் உ வியாழக்கிழமை பகல் 8 நாழிகைக்குமேல் 13-க்குள் ஜனனம்.

**ஆங்கிலத் தேதி—26—5—1892.**

நவக்கிரஹங்களின் பாதசாரம்.

ரோஹிணி 1-இல் சூரியன், ரோஹிணி 1-இல் சந்திரன், சிரவணம் 2-இல செவ்வாய், பரணி 2-இல் புதன், ரேவதி 3-இல் குரு, புனர்வஸு 2-இல் சுக்கிரன், உத்திரம் 2-இல் சனி, பரணி 4-இல் ராகு, விசாகம் 2-இல் கேது. நக்ஷத்திரம் ரோஹிணி. சந்திர தசையில் இருப்பு வருஷங்கள் ஒன்பது, மாதங்கள் இரண்டு.

1. செவ்வாய் மகரம், சந்திரன் சூரியன் விருஷபம், சனி கன்னி, கேது துலாம், புதன் மேஷம், குரு மீனம், சுக்கிரன் மிதுனம், ராகு மேஷம். இலக்கினம் கடகம். இவ்வாறு கிரஹ நிலை இருப்பின் பலன்கள் என்ன? முனிவர்களே! தெரிவிப்பீர்களாக, எனப் பார்வதிதேவி கேட்கலுற்றாள்.

2. உமையவள் கேட்கும் போது உரைக்கிறார் பராசர் தாமும்
அமைந்திடு மாண்பால் ஜனமம் அறைந்திடு இல்லம் தானும்
எமனுத்திர வாடை யாகும் இந்திர நோக்கம் வாசல்
உரையவ னீசன் மாயோன் உரைக்கிறோம் கீழ்பா லாக.

2. இவ்வாறு உமையவள் கேட்டவுடன் முனிவரான பராசரர் பலன் கூறு வார். இக்கிரஹ நிலையில் பிறந்த மகவு ஆண். வீதி தெற்கு வடக்காக அமைந்திருக்கும். ஜனித்த இல்லம் கீழ்த்திசை நோக்கும். வீட்டிற்குக் கிழக்கில் சிவபிரான் ஆலயமும் விஷ்ணு ஆலயமும் விளங்கிடும்.

3. அருகினில் சந்து முண்டு யானையின் கோஷ்டம் தென்பால்
மறுமமாய் மஸ்தான் உத்ரம் மாரியு மதன்கீழ்த் தங்கும்
பெருமையாய்ச் செட்டு ஓங்கும் பேரூராம் இந்தப் பாலன்
வருகுவான் நான்காம் ஜன்மம் வரைகிறேம் யோகச் சேதி.

3. அருகில் பல வீதிகள் கூடும் சந்திப்பு உண்டு. தெற்கில் விநாயகர் எழுந்தருளி இருப்பார். வடக்கில் ஒரு மசூதியும் இருக்கும். அதற்குக் கீழ்த் திசையில் மாரியம்மன் கோயிலும் உண்டு. அத்தகைய பெரிய ஊரில் வியாபாரம் விசேஷமாக நடைபெறும். இவன் குடும்பத்திற்கு நான்காம் குழந்தையாவன். இவனது யோகம் முதலியவைகளைக் கூறுவோமாக.

4. தந்தையின் துணைவர் நான்கில் ஆணென்று கன்னிரண்டு
சந்ததம் விருத்தி யென்றேம் சாற்றுவோ மாண்பால் சேதி
முந்தின துணைவ னாக மொழிகிறேம் ஊகை சாலி
சந்ததம் சலத்தால் செட்டுத் தானவன் செய்வா னுமே.

4. ஜாதகனின் தந்தைக்கு உடன்பிறந்தார்கள் நால்வர். அவர்களில் ஒரு சகோதரனும் இரு சகோதரிகளும் விருத்தியடைந்து வாழ்வார்கள். அந்தச் சகோதரனும் ஜாதகனின் தந்தைக்கு மூத்தவன். அவன் மிகவும் மதி நுட்பம் வாய்ந்தவன். எப்பொழுதும் வெளி தேச வியாபாரம்—ஏற்றுமதி, இறக்குமதி—செய்வான்.

5. போஜன வறுமை காணன் பாரியு மிரண்டே யாகும்
நேசர்க ளதிகம் கொள்வன் நினைத்தது முடிக்க வல்லன்
பாசமாம் சுதராண் மூன்று பாவையு மிரண்டு தீர்க்கம்
ஆசையா யொன்றாய் வாழ்வன் அவனுமே மகத்தில் ஈவன்.

5. ஆகாரத்திற்குக் குறைவில்லாதவன். அவனுக்கு இரு மனைவிகள். நண்பர்களும் அநேகர். தான் எண்ணிய காரியத்தை முடிக்க ஆற்றல் படைத்தவன். அவனுக்கு மூன்று பிள்ளைகளும் இரண்டு பெண்களும் ஸ்திரமாக வாழ்வார்கள். தன் தம்பியுடன் அன்போடு குடுத்தனம் செய் வான். அவன் மகநக்ஷத்திரத்தில் பிறந்தவன்.

6. பாரியு மவ்வா றாகும் பகருவோம் பின்பால் சேதி
மாரன்தன் தந்தை சேதி வரைகின்றேம் தாயே கேளு
போர்செலான் சுவாதி கோலாம் பிழையது ஒருவர்க் கெண்ணன்
காரிய சமர்த்த னாகும் கார்நிறமீகை வானும்.

6. இவனுடைய மனைவியும் நற்குணம் வாய்ந்தவள். அவளைப்பற்றிய செய்திகளை இரண்டாம் பாகத்தில் கூறுவோம். இனி ஜாதகனுடைய தகப்ப னின் வரலாறுகளைத் தெரிவிப்போம். அன்னையே! கேளுங்கள். எவ்வித

சண்டைகளிலும் ஈடு படாதவன். அவன் பிறந்த நக்ஷத்திரம் சுவாதி. லக்இனம் துலாம். யாருக்கும் கெடுதலே எண்ணுதவன். காரியத்தை நிறைவேற்றுவதில் சமர்த்தன். கருத்த மேனியான். தியாககுணம் வாய்ந்தவன்.

7. உண்டியும் சுகமாய்க் கொள்வன் உறைப்பொடு புளிப்பி லிச்சை
குண்டுணி கூரு ருகும் குலத்திற்கு நல்லோ ருவன்
தண்டமிழ் நுணுக்கம் தேர்வன் சலத் தொழில் செய்வா ருகும்
பண்டுநாள் பூமி கொஞ்சம் பாலகன் விருத்தி செய்வன்.

7. சுகமான போசனத்தையே உட்கொள்ளுவான். உறைப்பிலும் புளிப்பிலும் அதிக விருப்பம் கொண்டவன். கோள் சொல்லிக் கலகப்படுத்தாதவன். தன் குலத்தினரால் நல்லவனுகக் கருதப்படுவான். இனிய தமிழின் சுவையை நன் கறிந்தவன். ஆங்காங்குச் சென்று நடத்தவேண்டிய வியாபாரத்திஞல் ஜீவிப்பான். பிதுரார்ஜிதமான பூமியும் சிறிது உண்டு. அதை மேலும் அபிவிருத்தி செய்வான்.

8. பந்துவை ஆத ரிப்பன் பாக்கிய மதிக மில்லான்
முந்துமால் பக்தி கொள்வன் முனிவுண்டு வெளிக்காட் டாதான்
வந்தவர்க் கன்ன மீவன் வாயுநோ யுடைய ருகும்
சிந்தையும் நல்ல தாகும் சீக்கிர நடையு மாவன்.

8. உறவினர்களே ஆதரிப்பான். அதிக செல்வம் இல்லாதவன். திருமாலிடம் பக்தி பூண்டவன். சினமுள்ளவன். ஆனுல் வெளித்தோற்றத்தில் காட்டாதவன். வந்த விருந்தாளிகளுக்கு அமுதளிப்பான். வாயு நோயிஞல் பீடிக்கப்படுவான். ஒருவருக்கும் தீங்கு எண்ணுதவன். துரிதமான நடை உள்ளவன்.

9. சமயோகம் வறுமை காணுன் தாக்ஷிண்யன் கனத்த புத்தி
உவமையாய் வார்த்தை சொல்வன் ஒருவர்பா லடங்கி உய்வன்
சுமைதாங்கி போலே காப்பன் தீரமில்லாத நெஞ்சம்
அமைந்திடும் பின்பால் யோகம் அம்மாமி யிரண்டு நேரும்.

9. சமமான அதிருஷ்டம் உடையவன். வறுமை இல்லாதவன். ஒருவரையும் பகைத்துக் கொள்ளாதவன். உதார மனப்பான்மை வாய்ந்தவன். பேசும்போது அடிக்கடி உபமானங்களேக் கூறுவான். ஒருவரிடத்தில் வேலேப் பார்த்து ஜீவிப்பான். சுமைத்தாங்கிகற்பாறைபோல் ஏராள பாரத்தை (பொறுப்பு)த் தாங்கி நிற்பான். உறுதியில்லாத நெஞ்சம் படைத்தவன். இவனுக்குப் பிற்கால வாழ்க்கையில் நல்ல யோகங்கள் வந்திடும். மாமிமார்களும் இவனுக்கு இருவர். [மனேவிகள் இருவர் என்பது கருத்து.]

10. இந்நெறி யுடையா னுக்கு இவனுமே யுதிப்பா ருகும்
அன்னவன் துணேமுன் மூன்று ஆணது தீர்க்க மாகும்
பின்னமா மிரண்டு என்றேும் பேசின துணேவன் சேதி
பொன்மகம் தனசு ராசி பிறப்பானு மென்று சொல்வோம்.

10. இத்தகைய குணமுள்ளவனுக்கு இக் கடகலக்கின மகன் புத்திரனாகப் பிறந்திருக்கின்றான். இவனுக்கு மூத்த உடன் பிறந்தார்கள் மூவர். அம் மூவரில் ஆண் ஒருவனே தீர்க்கமாக வாழ்ந்திடுவான். அவன் பிறந்த நக்ஷத்திரம் மகம். தனுர்லக்கினம் என நாங்கள் அறிகின்றோம்.

11. வித்தையும் சமம தாகும் விவேகியாம் மாஞ்சி வப்பன்
குத்தத்தை மனத்தில் எண்ணான் குறிப்பினில் கொடுமை
[தோன்றும்
சுத்தவான் கர்ணம் மந்தம் சோம்பலும் கொஞ்ச முண்டு
நத்தினோர்க் குதவி செய்வன் நல்லோர்க்கு நல்ல னாவன்.

11. அவன் நடுத்தரமான கல்வியறிவு படைத்தவன். பிறர்குற்றங்களை மனத்தில் ஏற்றுக்கொள்ளாதவன். அவன் தோற்றத்தில் கொடியவன் போல் காணப்படுவான் பரிசுத்தமானவன். காது மந்தமாக இருக்கும். சிறிது சோம்பலும் உண்டு. தன்னை நாடி வந்தவர்களுக்கு உதவி புரிவான். நல்லவர்களிடம் நல்ல வனாகவே நடந்துக் கொள்வான்.

12. முன்கோப முடைய னாகும் மொழியதைக் காப்பா னாகும்
தன்சொலே மேன்மை யாகச் சாதிப்பன் ஈகை யுண்டு
அன்னியர்க் குதவி செய்வன் அவன்தந்தை மேலாய் வாழ்வான்
மன்னவ ருறவு கொள்வன் மாநிலம் விருத்தி செய்வன்.

12. முன்கோபமுள்ளவன். தன்னுடைய வார்த்தைகளைக் காப்பாற்றுவான். தான் சொன்ன விஷயங்களே சரி யெனப் பிடிவாதம் செய்வான். தியாககுணமும் உண்டு. முன் அறியப்படாதவர்களுக்கும் உதவி புரிவான் தந்தையைவிடச் சிறப்பாக வாழ்வான். அரசர்களுடைய நட்பும் இவனுக்கு இருக்கும். நிலங்களை அபிவிருத்தி செய்வான்.

13. பலவித வணிபம் செய்வான் பரஉப காரி யாகும்
சொல்மொழி காப்பா னாகும் தோகையு மொன்றே யென்றோம்
அலைகடல் துயின்றோன் பத்தி அவனுமே கொள்வா னாகும்
பலமுள குடும்பம் பின்னால் பின்துணை சொல்தட் டாதான்.

13. பலவித வியாபாரங்களைச் செய்வான். எல்லோருக்கும் உபகாரம் செய்வான். தான் சொல்லும் வார்த்தைகள்படியே நடப்பான். அவனுக்கு மனைவியும் ஒருத்திதான். திருபாற்கடலில் பள்ளிகொண்டிருக்கும் திருமாலிடம் பக்தி பூண்டவன். பிற்காலத்தில் பிரபல குடும்பமுள்ளவனாவன். தன் தம்பியின் [ஜாதகனின் தந்தை] வார்த்தையை மறுத்துப் பேசாதவன்.

14. சுதர்களும் ஆண்பா லொன்று தோகையு மூன்று என்றோம்
இதுநான்கும் தீர்க்க மெய்தும் இடருண்டு இரண்டு என்றோம்
அதிபன்தன் உடனே வாழ்வன் அறிவிப்போம் பின்பால் சேதி
இதுநிற்க ஜனித்தோன் சேதி யியம்புவோம் தாயே கேளு.

14. அவனுக்கு ஒரு பிள்ளையும் மூன்று பெண்களும் தோன்றுவார்கள். இந்நால்வரும் நீண்ட ஆயுளுடன் விளங்குவார்கள். இவர்களைத் தவிர இரு குழந்தைகள் பிறந்து அழியும். ஜாதகனுடனேயே ஒற்றுமையாக வாழ்வான். இவனைப்பற்றிய செய்திகளை இரண்டாம் பாகத்தில் அறிவிப்போம். இனி ஜாதகனின் குணம் முதலியவைகளைத் தெரிவிக்கின்றோம். அன்னையே! கேளுங்கள்.

15. இருநிறம் சமதேகத்தான் இன்பமாய் வார்த்தை சொல்வன்
மருமவான் தந்திர வார்த்தை மறுத்துரை அதிகம் சொல்வன்
பொருளது செலவு செய்யான் புகழ்ந்தோரை ஆத ரிப்பன்
அரிபத்தி கொஞ்ச முண்டு ஆதியில் வறுமை யுண்டு.

15. கருத்த மேனியான், சம வளர்ச்சி உடையவன். இனிமையாகப் பேசுவான். சிறிது கபடமுள்ளவன். தந்திரமாகவும் வார்த்தை சொல்வான். பிறர் பேசுவதை மறுத்தே பேசும் இயல்புடையவன். கிடைத்த பொருளைச் செலவு செய்யான். தன்னைப் போற்றுகின்றவர்களை ஆதரிப்பான். விஷ்ணுவிடம் சிறிது பக்திகொண்டவன். பால்யத்தில் வறுமையினால் கஷ்டப்படுவான்.

16. பகைவரை உறவாய் வெல்வன் பலவித வணிபம் செய்வான்
அகமது புதிதாய்ச் செய்வன் அடாவடி வார்த்தை சொல்வன்
நகைசெய்வன் எதிரி தன்னை நாற்காலி சகடு முண்டு
உவமைக ளனேகம் சொல்வன் உறுதியா மனத்த னுமே.

16. எதிரிகளை அடுத்து வெல்லுவான். பலவித வியாபாரங்களைச் செய்வான். புதியதொரு வீடு நிர்மாணம் செய்வான். பிடிவாத வார்த்தைகளையும் கூறுவான். எதிரிகளைப் பரிகசிப்பான். [அவர்களைப் பரிகசிக்கப்படும் தன்மையில் தாழ்த்துவான் என்பது கருத்து] பசு காளை குதிரை முதலியவைகளும் வண்டியும் இவனுக்கு உண்டு. இவனது பேச்சில் உபமானங்கள் நிறைந்திருக்கும். மனத்தில் உறுதி வாய்ந்தவன்.

17. இன்னவன் செங்கை தன்னில் இலங்கிடும் பதும ரேகை
சொன்னசொல் இரண்டு முண்டு சோம்பிடான் காரி யத்தில்
கன்னியர் மோக னுவன் கழறுமுன் கோபி யாவன்
பொன்பூமி சேர்ப்பா னுகும் பின்துணை சேத மெய்தும்.

17. இவனுடைய சிவந்த கரத்தில் பதுமரேகை திகழும். தான் சொன்ன வார்த்தைகளைத் தன் சௌகர்யத்திற்கேற்றபடி மாற்றிவிடுவான். முன் கோபமும் உண்டு. வேலைகளில் சோம்பல் இல்லாதவன். பெண்களிடம் மோகம் கொண்டவன். பொன்னையும் பூமிகளையும் சம்பாதிப்பான். இவனுக்கு அடுத்துப் பிறக்கும் குழந்தை சேதத்தை அடையும்.

18. என்னகா ரணத்தி னாலே யியம்பினீர் துணைவர் தோஷம்
மன்னிய மூன்றில் சேயும் வந்ததால் சொன்னேம் யாங்கள்
அன்னையு மவ்வா றுகும் அணுகிடும் பின்தா யொன்று
சொன்னனே நாலா மாண்டில் சுதனன்னை மரண மாகும்.

18. அடுத்து உடன் பிறந்தவன் சேதமடைவதற்குக் காரண மென்ன வென்றால், செவ்வாய் "சகோதர பாவம்" என்று சொல்லப்படும் மூன்று மிடத்தில் இருப்பதுதான். அவ்வாறே இவனைப் பெற்றதாயும் இவனுடைய நான்காம் வயதில் மரணமடைவாள். அதன்பின் இவனுக்கு இளைய தாய் ஏற்படுவாள்.

19. பின்மாதா குடகு தன்னில் பொருந்திடும் சுதராண் ஒன்று
கன்னிகை யிரண்டு என்றேம் கழறின மூன்றும் தீர்க்கம்
அன்னவள் குணமெவ் வாறு அறைகுவீர் முனியே நீர்தாம்
பொன்னிறம் நீட்சி யாவள் பொருத்தமா யுரைப்பா ளாகும்.

19. இளைய தாய் மேற்குத்திசையில் பிறந்தவள். அவளுக்கு ஒரு பிள்ளையும் இரு பெண்களும் தோன்றுவார்கள். நாம் சொன்ன மூவரும் நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள். பார்வதிதேவி "முனிவரே! அவளுடைய குணத்தைச் சொல்லுவீர்களாக" எனக் கேட்க, பராசரர் கூறுவார். அவள் பொன்னிறம் வாய்ந்தவள். உயரமாக வளர்ந்தவள். இடம் பொருள் ஏவலை அறிந்து அவைகளுக்குப் பொருத்தமான வார்த்தைகளையே பேசுவாள்.

20. சந்தேக மனத்தா ளாகும் சலிப்புளோர்க் கன்ன மீவள்
பந்துவுக் கினிய ளாகும் பாவையும் சமயோ கத்தாள்
சிந்தையும் நல்ல தாகும் சீக்கிர கோபி யாவள்
சந்ததம் பித்த தேகி சாற்றுவோம் பின்பால் சேதி.

20. எதையும் சீக்கிரத்தில் நம்பாதவள். களைத்தவர்களுக்கு அமுதளிப் பாள். உறவினர்களுக்கு இனியவள். அவள் சமயோகம் வாய்ந்தவள். எல்லோரிடத்திலும் நல்ல எண்ணம் கொண்டவள். சீக்கிரத்தில் சினம் தோன்றும். இவளது உடலில் பித்தம் தலை தூக்கி நிற்கும். இவளைப் பற்றிய வேறு வரலாறுகளை இரண்டாம் பாகத்தில் பேசுவோம்.

21. இவன்தனை யீன்ற அன்னை இவள்சேதி சொல்லு மென்னத்
தவசிகட் கன்ன மீவள் தன்வரன் மனம்போல் வாழ்வள்
நவனியில் பொய்கள் சொல்லாள் நாயகி மாஞ் சிவப்பள்
அவனியில் நல்லோ ளாவள் அவளிலம் உத்ர மாமே.

21. இஃதிருக்கட்டும்; ஜாதகனைப் பெற்றதாயின் குணங்களைச் சொல்லுவீர் களாக எனப் பார்வதி வினவ, மஹரிஷியான பராசரர் பதில் கூறுவார். அவள் தவசிகளுக்குச் சிரத்தையுடன் அமுதளிப்பாள். கணவன் மனத்தின் படி நடப்பாள். பொய் சொல்லாதவள். மாநிற முள்ளவள். எல்லோருக்கும் நல்லவளாக நடப்பாள். அவள் பிறந்த வீடு வடதிசையி லுள்ளது.

22. தனதுணை ஆண்பால் மூன்று சத்தியு மொன்றே யாகும்
சொன்னஆண் ஒருவ னுக்குச் சுதர்காணன் வெகுளி யாவன்
பிந்திய பாகம் தன்னில் பேசுவோ மவர்கள் சேதி
அன்னையின் பூர்வம் தன்னை அறைகிறேம் தாயே கேளு.

22. அவளுக்கு மூன்று சகோதரர்களும் ஒரு சகோதரியும் உண்டு. அம் மூன்று சகோதரர்களில் ஒருவன் சந்ததி இல்லாதவன். கபடம் உடையவனு முல்லன். இரண்டாம் பாகத்தில் அவர்களைப்பற்றிய வரலாறுகளைப் பேசுவோம். ஜாதகனுடைய தாயின் முன் ஜன்மத்தைக் கூறுவேன். அன்னையே! கேளுங்கள்.

23. சொக்கர்வாழ் பாண்டி நாட்டில் ஜனித்தனள் கர்ண சேயாய்த்
தக்கவே குடும்பி யாகித் தன் வரன் மதலை யுண்டாய்
நக்கன்தன் அடியா ருக்கு நாயகி அன்ன மீந்து
துக்கமாம் கால னூடு சென்றனள் வரன்முன் னாக.

23. இவள் முன்பிறவியில் சொக்கநாதர் எழுந்தருளியிருக்கும் பாண்டிய நாட்டில் கர்ண ஜாதியில் பிறந்து, கணவன் குழந்தைகளுடன் பெரிய குடும்பியாகி, சிவனடியார்களுக்கு அமுதளித்து, புனித வாழ்க்கை நடத்தி கடைசியில் தன் கணவன் இறப்பதற்கு முன்னமேயே இவள் இறந்தாள்.

24. சிரநான் கோன் வரையப் பட்டு ஜனித்தனள் வடுகர் வர்க்கம்
வரும்ஜன்மம் வள்ளூர் தன்னில் மாதுவும் வைசியச் சேயாய்
உறைகுவாள் வறுமை யின்றி உத்தமி வாழ்வா ளாகும்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

24. பிறகு நான்முக பிரம்மதேவனால் இந்த நாயக்கர் வமிசத்தில் படைக்கப்பட்டாள். மறுபிறவியில் இவள் திருவள்ளூரில் வைசிய குலத்தில் பிறந்து, வறுமை இல்லாதவளாக வாழ்வாள். உபநிஷதங்களால் போற்றப் படும் பெருமை வாய்ந்த தேவியே! அன்னையே! மேலும் கேட்பீராக.

25. தந்தையின் பூர்வம் தன்னைச் சாற்றுவோம் பழனி நாட்டில்
முந்தின குலமு தித்து மேதினி விருத்தி செய்து
வந்திடு மனைவி மைந்தர் வளமுள குடும்பி யாகி
இந்தவன் வாழு நாளில் இயம்புவோ மூழி தானே.

25. இனி தந்தையினுடைய பூர்வஜன்மத்தைக் கூறுவேன். இவன் முன்பிறவியில் பழனியில் பிராம்மண குலத்தில் பிறந்து, நிலங்களைப் பயிரிட்டு மனைவி மகவுகளுடன் சிறப்பான குடும்பியாகி வாழும் காலத்தில் இவனுக் கேற்பட்ட பாவத்தை அறிவிப்போம்.

26. ஏழையோன் மணத்திற் காக இவனைமங் கலியம் கேட்கத்
தாழ்விலாத் தாரே னென்று தைரியம் அவர்க்கு ஓத
ஆழியில் சேக ரித்து அடுத்தநாள் முத்திரை கேட்கப்
பாழான தொழிலி னாலே பகை செய்ய மறந்தே னென்ன.

26. ஓர் ஏழை மணம் செய்து கொள்வதற்காக இவனிடம் மாங்கல்யம் வேண்ட, இவனும் தருகின்றேன் என்று உறுதியாகச் சொன்னான். இவனை நம்பி அவ்வேழை கலியாணத்திற்குத் தேவையான மற்றைய ஏற் பாடுகளைச் செய்துவிட்டு, கலியாணம் நடைபெறவேண்டிய தினத்திற்கு முதல்

நாள் இவனிடம் வாங்கிப்போக வந்து நின்றபோது இவன், இன்னும் மாங்கல்யம் செய்யவில்லை, மறந்துவிட்டேன் என்று சொல்லி அவ்வேழையைத் திண்டாடவைத்தான்.

27. வேறொரு முத்திரை வாங்கி வித்தகன் மணமு டித்துக்
கூறுவார் சாபம் தானும் குறித்திடும் பின்ஜன் மத்தில்
பாரியும் ரெண்டு மாயும் பாரினில் வாழ்வா யென்று
கூறியே தெருத்தூள் விட்டான் குலவிற்று அந்தத் தோஷம்.

27. இவ்வாறு கஷ்டத்திற்குள்ளான ஏழை வேறு மாங்கல்யத்தை வாங்கி ஒருவாறு மணம் செய்து கொண்டான். பிறகு அவன், தனக்கு இவனால் ஏற்பட்ட சங்கடத்தை எண்ணி வருந்தியவனுகச் சபித்தான். வரும் பிறவியில் உனக்கு இரு மனைவிகள் ஏற்படுவார்களாக. [முதல் மனைவியை இழப்பாய் என்பதுக்கருத்து] என்று கூறி, தெருத்தூளை வாரி இறைத்துச் சென்றுன். அந்தத் தோஷம் ஒன்று இவனைப் பற்றிக்கொண்டது.

28. இது வன்றி வேறு சொல்வேன் ஈசன்தன் பூசைக் காக
அதிதியும் மலர்கள் கொண்டு அரன் கோஷ்டம் செல்லும் காலை
அதிபனும் அதை மடக்கி யதனையே மனைவிக் கீந்து
மன்மதன் ஊடல் செய்தான் மருவிற்று அதுவோர் தோஷம்.

28. இதுவன்றி மற்றொரு பெரிய பாவமும் இவனுக்குச் சம்பவித்தது. ஒரு பக்தன் சிவபிரானுக்குப் பூசை செய்ய நறுமலர்களைச் சிவாலயத்திற்குக் கொண்டுபோகும்போது, இவன் அவனை வழியில் மறித்து அம்மலர்களை அபகரித்துத் தன் மனைவிக்குச் சூட்டி அவளுடன் இன்பங்களை அனுபவித்தான். இஃது ஒரு பெரிய சிவாபசாரமன்றே!

29. இன்னமும் சிலது தோஷ மெய்திற்றுப் பால னுக்கு
அன்னவ னந்தி யத்தில் அவன்மனை மரண மாகித்
தன்மனச் சஞ்ச லத்தால் சண்டன்தன் பதிக்குச் சென்று
பொன்னவன் வரையப் பட்டுப் பிறந்தவ னிவனே யென்றேம்.

29. இன்னும் சில பாவங்களும் இவனை அடைந்தன. ஆகவே அவன் முன் பிறவியின் அந்திய காலத்தில் மனைவியை இழந்தான். பல கவலைகளால் துன்பமடைந்து யமனுலகம் சென்றுன். பிறகு படைக்கும் கடவுள் அவனை இங்குப் பிறப்பித்திருக்கின்றுன். அவன்தான் இக் கடக லக்கின மகனுடைய தந்தை.

30. பஞ்சைகள் சாப மொன்று பரமன்தன் புட்ப தோஷம்
நஞ்சுமே சேர்ந்த தென்றும் நல்கிடும் பாரி ரண்டு
தஞ்சமாய்த் துணைக்கு அவ்வாறு சாற்றுவோம் தாயே யாங்கள்
கொஞ்சிய முன்ஜன் மத்தில் குலமது மறையோ னென்றீர்.

30. ஏழை விடுத்த சாபத்தாலும் சிவபிரானை அர்ச்சிப்பதற்கான புஷ்பத்தை அபகரித்த பாவத்தாலும் இதர தீய வினைகளாலும் இவன் முதல் மனைவியை இழந்து மறுமனைவியை மணப்பான். இவன் அண்ணனுக்கு

அவ்வாறே இரு மனைவிகள் ஏற்படுவார்கள். முன் ஜன்மத்தில் இவன் [ஜாதகனின் தந்தை] பிராம்மண குலத்தில் பிறந்தான் என்று சொன்னீர்கள்.

31. இந்தவோர் ஜன்மம் தன்னில் இக்குல முதிப்ப தென்ன
அந்ததோர் சேதி சொல்வாய் அருமறை யோதாத தாலும்
வந்தவ னிக்கு லத்தில் வரும்ஜன்மம் வள்ளூர் தன்னில்
முந்தின குல முதித்து உயர்வான குடும்பி யாவன்.

31. இப்பிறவியில் இவ்வடுகர் வமிசத்தில் பிறக்கக் காரணம் என்னே? என்று உமையவள் கேட்க, பராசரர் முனிவர் தெரிவிப்பார். பிராம்மண ஜாதியில் பிறந்தும் மேலான வேதத்தை ஓதாமல் ஒழிந்தான். ஆதலால் தாழ்வான குலத்தில் பிறந்திருக்கின்றான். வரும் பிறவியில் இவன் திருவள்ளூரில் பிராம்மண ஜாதியில் பிறப்பான். பெருமைவாய்ந்த குடும்பியாகவும் விளங்குவான்.

32. அத்திரி சொல்லு கின்றார் அவனுமிச் சென்மம் தன்னில்
குத்தமாய் அற்பச் செட்டுக் குறைவுள அளவு செய்தும்
முந்தினோர்க் கிடைஞ்சல் செய்தும் மொழியது தவறுவ தாலும்
சுத்தமாய்ப் பிரம்மச் சேயாய்த் தோன்றும்கா ரணங்க ளெவ்வாறு.

32. இதைக் கேட்ட முனிவர் கூறுவார். அவன் இந்த ஜன்மத்தில் பல குற்றங்களைச் செய்து வியாபாரத்தை நடத்தி ஜீவித்து வருகின்றான். பெரியோர்களுக்கு இடையூறுகளையும் உண்டுபண்ணினான். தான் சொன்ன படி நடந்தவனுமல்லன் [பொய் பேசினவனென்பது கருத்து]. ஆகவே இவன் மறுபிறவியில் எவ்வாறு பிராம்மண குலத்திலுதிப்பான்? அதன் காரணங்களைத் தெரிவிப்பீர்களாக.

33. பலவித வினைகள் செய்தும் பரவுப காரி யாயும்
தலவாசம் சென்ற தாலும் சாலஆ பத்தைக் காத்தும்
அலைகடல் துயின்றோன் பத்தி அவன்மனம் கபடு மின்றி
நிலையிலார்க் கன்ன மீந்தும் நிருபனும் வாழ்வ தாலே.

33. பராசரர் மஹரிஷி காரணம் கூறுவார். பல நல்வினைகளையும் இவன் செய்திருக்கின்றான். பிறர்க்கு உதவி புரிந்தான். புனித ஸ்தலங்களுக்கு யாத்திரை சென்று அங்குக் கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கும் கடவுள் மூர்த்திகளைத் தரிசித்தான். சிலரை, அவர்களுக்கேற்பட்ட பேராபத்திலிருந்து காப்பாற்றினான். பாற்கடலில் பையத் துயிலுகின்ற பரமனடிகளில் பக்தி பூண்டான். உள்ளத்தில் கள்ளமின்றி வாழ்ந்தான். ஊரூராகச் சென்று பிச்சை எடுத்து உயிர்வாழும் ஏழைகளுக்கு அன்னமளித்து உதவினான்.

34. உதிப்பனு மெனறு சொல்வோ முதித்தவன் மணத்தைச் [சொல்வேன்
சதியிலா இருப தாண்டில் சத்திதான் அன்னை வர்க்கம்
அதிபதி வருவா ளாகும் மாதுவின் குணத்தைச் சொல்வேன்
அதிகமாய் வார்த்தை கூர்வள் அம்மைபோல் சாய லொக்கும்.

**34.** இவ்வாறு பல நற்காரியங்களையும் செய்து வாழ்வதால் பிராம்மண குலத்தில் ஜனிப்பான். இனி ஜாதகனுடைய மணத்தின் காலத்தைச் சாற்றுவேன். இருபதாம் வயதில் விவாஹம் நடை பெறும். மணப் பெண் தாய் வருக்கத்தில் பிறந்திருக்கிறாள். அப்பெண்ணின் குணத்தைக் கூறுவோம். அதிகமாகப் பேசுபவள். அன்னம்போல் தோற்றமுள்ளவள்.

**35.** முன்கோபி சிவந்த மேனி மொழியதைக் காப்பா ளாகும்
கன்னிக்கு வயது தீர்க்கம் கழறுவார் அத்திரி தாமும்
துன்னிய கேது ஏழில் சுக்கிரன் மூன்றில் தங்க
இன்னவன் தந்தைக்குத் தார மியம்புவே னிரண்டே யாக.

**35.** முன்கோபம் உண்டு. சிவந்த மேனியாள். தான் சொன்ன வார்த்தைகளை நிறைவேற்றுவாள். இவ்வாறு சொல்லக் கேட்ட அத்திரி கூறுவார். கேது ஏழாமிடத்தில் இருப்பதாலும் களத்திரகாரனாகிய சுக்கிரன் மூன்றுமிடத்தில் நீசனாக இருப்பதாலும் இவனுக்கு இரு மனைவிகள் என்று நாம் சொல்லுவோம்.

**36.** குறுமுனி சொல்லு கின்றார் குழவிக்குத் தாரம் ரண்டு
மறுவாது ஒன்றே தீர்க்கம் மதிரண்டில் பொன்னோன் ஜன்மம்
இருப்பதால் தார மொன்றே ஏழில்கேது இருந்த தோஷம்
அரிவையர் அனேகம் சேர்வர் அவைகளால் நிந்தை யேற்பன்.

36. குடத்தில் அவதரித்த முனிவரான அகஸ்த்தியர் பதில் கூறுவார். இவனுக்கு இரண்டு மனைவிகள் ஏற்படமாட்டார்கள். ஏனெனில் இலக்கனாதிபதியான சந்திரன் குடும்பத்தில் இருக்கின்றான். மேலும் எல்லாத் தீயவினைகளைப் போக்கும் குரு லக்கினத்தில் விளங்குகிறார். [ஏழாமிடத்தைப் பார்க்கிறார் என்பது கருத்து] ஆகவே தாரம் ஒன்றுதான். ஏழாமிடத்தில் கேது இருப்பதால் பல மாதர்களுடன் இவன் தகாத முறையில் நட்புக்கொள்வான். ஆதலால் இவனுக்கு பல நிந்தனைகளும் உண்டாகும்.

குறிப்பு.—இவ்விரு பாடல்களும் ஐம்பதாவது ஜாதகத்திற்குப் பொருந்தாததை வாசகர்கள் காண்க.

**37.** குலமிலா மாதைச் சேர்வன் கூறின தாரம் ஒன்றே
புதல்வர்கள் சேதி சொல்வாய்ப் பிறந்திடும் நவம தாக
அதுகளில் ஆண்பால் மூன்று அம்பிகை மார்க ளவ்வாறு
சதமுடன் தீர்க்க மென்றேம் சாற்றும்பா லன்முன் ஜன்மம்.

**37.** சமகுலத்தில் ஜனிக்காத மாதர்களை அடைவான். ஆயினும் சாஸ்திரப்படி மணந்த மனைவி ஒருத்திதான். புத்திர பாவத்தைச் சொல்லுவீர்களாக என உமாதேவி கேட்க, முனிவர் கூறுகின்றார். இவனுக்கு ஒன்பது குழந்தைகள் பிறப்பார்கள். அவர்களில் மூன்று பிள்ளைகளும் மூன்று பெண்களும் நீண்ட ஆயுளுடன் வாழ்வார்கள். இனி ஜாதகனுடைய முன் ஜன்மத்தைச் சொல்வேன்.

38. தோகைமா மலைக்குக் கீழ்ப்பால் தண்டகா வனத்தி லேதான்
பாகமாய் ரெட்டி வமிசம் பிறந்துமே கிருஷி செய்து
ஆகம முணர்ந்தோர் கட்கு அமுதீந்து புகழும் பெற்றுப்
போகபாக் கியங்க ளுண்டாய்ப் புத்திரர் மனைவி யாகி.

38. தோகைமலைக்குக் கீழ்த் திசையிலுள்ள தண்டகா வனத்தில் ரெட்டி வமிசத்தில் தோன்றி, விவசாயம் செய்து, களத்திரர் புத்திரர்களுடன் சுகமாக வாழ்ந்து வந்தான். சாஸ்திர மறிந்த பெரியோர்களுக்கு அமுதளித்து ஆதரித்தான். நற்கீர்த்தியும் இவனுக்கேற்பட்டது. இவ் வுலகில் சுகங்களைத் தரும் பொருள்களை அடைந்து எல்லாச் சுகங்களையும் அனுபவித்தான்.

39. பவமது இல்லா தாகிப் பாவினன் கால னூடு
நவனியில் பிரமன் லக்கம் நாயக னுதிப்பா னாகும்
தவசியே யிவனின் யோகம் சாற்றுவோம் பன்னி ரண்டில்
அவனியில் சேர்ப்பா னாகும் அம்புலி போலே யோகம்.

39. பாவம் சிறிதும் செய்யாதவனாகி அந்தகன் உலகை அடைந்தான். அவன் பிரம்மனது உலகமும் சென்று இங்கு இக் கடக லக்கினத்தில் தோன்றி இருக்கின்றான். முனிவர்காள்! இனி ஜாதகனின் யோகங்களைக் கூறுவேன். பன்னிரண்டாவது வயதில் பூமிகளைச் சேர்ப்பான். அதன் பின் சுக்கில பக்ஷ சந்திரன்போல யோகங்கள் அதிகரிக்கும்.

40. ஈரெட்டு ஆண்டு தன்னில் எய்திடும் நிதிநி க்ஷேபம்
மாறிடா திந்த வார்த்தை மங்கலன் தசையந்த த்தில்
கூறுவோம் ஞாதி மேலாய்க் குபேரசம் பத்து ஏற்பன்
பாரினில் அரசர் மூலம் பலவிதச் செட்டுச் செய்வன்.

40. பதினாறும் வயது நடைபெறும்போது நிதி கிடைக்கும். நாங்கள் கூறின இவ் வார்த்தைத் தவறாது. செவ்வாய்த் தசையின் அந்திய பாகத்தில் குபேரனுக்குச் சமமான ஐசுவரியத்தை அடைந்து, தன் குலத்தினருக்கு மேலாக வாழ்வான். அரசர்களுடைய ஆதரவினால் பலவித வியாபாரங்களை நடத்துவான.

41. இல்லமும் இரண்டு செய்வன் இவன்துணை காப் பானாகும்
சொல்லது மேன்மை யாகும் தொடுத்ததை வெல்வா னாகும்
வல்லியும் வந்து பின்பு வளர்பிறை போலே யோகம்
நல்லதோர் சேதுசெல்வன் நல்குமை மாயி ரம்பொன்.

41. இரு வீடுகளை நிர்மாணம் செய்வான். தன் சகோதரனை ஆதரிப் பான். இவனுடைய பேச்சிற்கு விசேஷ கௌரவம் உண்டாகும். தான் ஆரம்பித்த காரியத்தை வெற்றியுடன் நிறைவேற்றுவான். இவனுக்கு, மணத்திற்குப் பின், வளர் பிறைச் சந்திரன்போல அதிருஷ்டம் இன்னும் அதிகமாகும். சிறந்த புண்ணியஸ்தலமான சேதுவிற்குச் சென்று நீராடு வான். இவன் எழாயிரம் பொற்காசுகளைச் சம்பாதிப்பான். [உத்தேச மதிப்பு ரூபாய் எழுபதாயிரம்].

42. தந்தைமுன் துணைவர் வேறு செய்குவான் பதினே ழாண்டில்
பிந்திதாய்ச் சுதனை வேறு பிரிப்பனும் முப்ப தாண்டில்
தந்தைக்கு இருபா னேழில் சாற்றுவோம் கண்டம் தானும்
முந்துமால் அருளு மோங்கு முயர்வான குடும்ப மேற்பன்.

42. இவனது பதினேழாவது ஆண்டில், தந்தையின் மூன் துணைவன் தனிக்குடும்பம் நடத்துவான். ஜாதகன் தனது முப்பதாவது வயதில் தன் இளைய தாய்க்குப் பிறந்த சகோதரனைத் தனித்துக் குடும்பம் நடத்தச் செய்வான். இவனது இருபத்தேழாவது வயதில் தந்தைக்குக் கண்டம் ஏற்படும்; இறப்பான். ஜாதகனுக்குத் திருமாலின் கிருபையும் உண்டாகும். உயர்ந்த குடும்பி யாவான்.

43. அற்பசா தியரால் பொன்னும் அணுகிடும் பதின்ரே ராண்டில்
சொற்பம்கோள் வந்து நீங்கும் துன்பங்கள் அணுகா வாகும்
பற்பல விதத்தால் லாபம் பகருவோம் சேயின் காலம்
விற்பன வேந்த ருனும் மேவிடும் தனம னேகம்.

43. பதினோராவது ஆண்டில் தாழ்ந்த குலத்தினரால் இவனுக்குப் பொன் கிடைக்கும். சிலர் இவனுக்கு எதிராகக் கோள் சொல்லுவார்கள். ஆயினும் அதனால் ஒரு தீங்கும் ஏற்படாது. பல வழிகளில் லாபம் இவனுக்கு வரும். செவ்வாய்த் தசையின் பலனைக் கூறுவோம். அறிவாளியான அரசர்கள் மூலம் அதிக தனம் கிடைக்கும்.

44. அன்பது நாலு ஆண்டில் அழகிய ரிடப மாதம்
இன்னவ னுடலம் ஏகும் இயம்புவோ மிவன்பின் ஜன்மம்
தென்திசை சேது தன்னில் ஜனிப்பனும் க்ஷத்திரிய சேயாய்
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே.

44. ஐம்பத்துநான்காவது ஆண்டில் வைகாசி மாதத்தில் ஜாதகன் இம் மண்ணுலகம் நீங்கி விண்ணுலகம் ஏகுவான். இவன் மறு பிறவியில் தென் திசையிலுள்ள சேது க்ஷேத்திரத்தில் க்ஷத்திரிய வமிசத்தில் பிறப்பான். விநாயகரைப் பெற்ற தாயே! மேலும் கேட்பீராக.

45. பாலகன் ஜனிக்கும் காலே பண்டிவார் முதல்பா தத்தில்
ஏலவே ஆண்டு ஒன்பான் எய்திடும் திங்கள் ரண்டும்
சாலவே அன்னை கண்டம் சார்ந்திடும் வேறு மாதா
கோலமாம் தந்தை முன்னோன் கோதையு மரணமெய்தும்.

45. ஜாதகன் ரோஹிணி நக்ஷத்திரம் முதல் பாதத்தில் ஜனித்திருக்கிறன். ஆகையால் சந்திர தசையில் பாக்கி வருஷங்கள் ஒன்பது, மாதங்கள் இரண்டு. இந்தச் சந்திர தசையில் ஏற்படும் முக்கிய பலன்களைச் சொல்லுவேன். இவனைப் பெற்ற தாய்க்குக் கண்டம் ஏற்பட்டு இறப்பாள். அவ்வாறே ஜாதகனின் பெரிய தந்தையின் மனைவியும் மரணமடைவாள்.

46. தந்தையின் ஞாதி சூதம் சஞ்சல மனமு மெய்தும்
இந்தவன் தனக்கு ரோக மெய்திடும் பலவா றுகத்
தன் தனம் செலவே யுண்டு சாற்றுவோம் பின்பால் சேதி
இந்திர னிறைஞ்சு மாதே யிதுபூர்வ பாக மாமே.

46. தந்தையின் பங்காளி வருக்கங்களிலும் சூதகமேற்படும். கவலைகள் அதிகமாகும். ஜாதகனுக்கும் பல ரோகங்களால் உபத்திரவம் நேரும். பணம் பல வழிகளிலும் செலவாகும். இந்திரனும் போற்றி வணங்கும் தேவியே! இது பூர்வபாகமாகையால் சுருக்கமாகத் தெரிவித்தோம். இரண்டாம் பாகத்தில இச் செய்திகளை விவரமாக அறிவிப்போமாக.

# ஜாதகம் 51

1. மதிவீணை கேது லாபம் மந்தனும் விரயம் புக்கப்
புதன்ரவி வெள்ளி ஏழில் பொன்குஜ னிரண்டில் தங்கச்
சதியிலா ராகு ஐந்தில் சந்திரர்க் கிரண்டாம் ஓரை
பதியது ஜன்ம மாகப் பகருவீர் பலனைத் தானே.

| | | | |
|---|---|---|---|
| | | கேது | சந்திரன் சனி |
| | இராசி சக்கரம் | | லக்கினம் |
| புதன் சூரியன் சுக்கிரன் | | | குரு செவ்வாய் |
| | ராகு | | |

நக்ஷத்திரம் திருவாதிரை ராகு தசை இருப்பு வருஷங்கள் பதினறு, மாதங்கள் எட்டு.

1. சந்திரன் மிதுனம், கேது விருஷபம், சனி மிதுனம், புதன் சூரியன் சுக்கிரன் மகரம் குரு செவ்வாய் சிங்கம், ராகு விருச்சிகம். லக்கினம் கடகம். இக் கிரஹ நிலையின் பலன்களைச் சொல்லுவீர்களாக என உமையவள் வினவினுள்.

2. உமையவள் கேட்கும் போது உரைக்கிறார் வசிட்டர் தாமும்
அமைந்திடு மாண்பால் ஜன்மம் அறைகிறே மில்லம் தன்னை
எமனுத்திரம் வாடை யாகும் இந்திரன் வாச லாகும்
ஜமதக்கினி மாயன் கீழ்ப்பால் செப்புவோம் தன்கீழ் ஈசன்.

2. இவ்வாறு உமையவள் கேட்கும்போது வசிஷ்டர் பதிலுரைப்பார். நவக்கோள்களின் இத்தகைய நிலையில் பிறந்த குழந்தை ஆண். வீதி தெற்கு வடக்காக அமைந்திடும். ஜனித்த வீடு கீழ்த்திசையை நோக்கி இருக்கும். வீட்டிற்குக் கிழக்குத் திசையில் ஜமதக்னி கோயிலும் விஷ்ணு ஆலயமும் விளங்கும். அக் கோயில்களுக்கும் கீழ்ப்புறத்தில் சிவபிரான் கோஷ்டமும் உண்டு.

**குறிப்பு.**—ஜமதக்னி முனிவர் ரேணுகா தேவியின் கணவனுவார். மாரி யம்மனுக்கு ரேணுகாதேவி என்ற பெயருமுண்டு. இப் பாட்டில் மாரியம்மன் கோயிலுண்டு என்று சொல்லுவதற்கு மாருக ஜமதக்னி, கோயில் உண்டென இந் நூலாசிரியர் புதிய முறையில் கூறினுர். கிழக்குத் திசையில் மாரியம்மன் கோயில் உண்டென்பது கருத்து.

3. அக்கினி காளி தந்தி அறைந்தனம் நதியும் தெற்கில்
மிக்கவே யீசன் கோஷ்ட மறைந்திடு மிதுவல் லாமல்
நக்கனைப் பூசை செய்யும் நாயகி அருகில் தங்கும்
தக்கவே புத்த ருத்திரம் தானடை யாளத் துள்ளே ;

3. தென் கிழக்குத் திசையில் காளி கோயிலும் விநாயகராது ஆலயமும் இருக்கும். தெற்கில் ஒரு நதியும் உண்டு. அங்குச் சிவபிரான் ஆலயம் ஒன்றும் விளங்கும். கைலாயநாதனைப் பூசை செய்யும் பார்வதி தேவியின் கோஷ்டமும் இருக்கும். வடதிசையில் புத்தர் விஹாரமும் விளங்கும். இத்தகைய அடையாளமுள்ள ஊரில் ;

4. பலவித சோலை சூழி பகருவோம் சஊர் தன்னில்
இலகிய கங்கைச் சேயா யிவனுமே யுதிப்பா னாகும்
குலவிய தந்தை மாதா குமரர்கள் மனைவி யோகம்
நலமுள துணைவர் யோகம் நாட்டுவோ மிந்நூல் தன்னில்.

4. பலவித சோலைகளும் நீர்நிலைகளும் உண்டு. அவ்வாறான நடுத்தர மான கிராமத்தில் வேளாள குலத்தில் இச்சாதகன் பிறந்திருக்கின்றான். தேவியே! நாங்கள் இந்நூலில் ஜாதகனின் தாய் தந்தை, சகோதரர் மனைவி களத்திரம் இவர்களைப்பற்றியும், முன்பின் ஜன்மம், யோகம் இவைகளையும் அறிவிப்போம்.

5. தந்தையின் துணைவர் தம்மைச் சாற்றுவோம் மூவ ராகும்
அந்தவர் வேறுய்ச் செல்வர் அறைகிறோம் பிதாகு ணத்தை
முந்தவே மால்நி றத்தான் முன்கோபம் பின்பு சாந்தம்
தன்தன முடையா னாகும் தைரியனாகை சாலி.

5. ஜாதகனின் தந்தைக்குச் சகோதரர்கள் மூவர். அம்மூவரும் தனித் தனியே வாழ்வார்கள். பிதாவின் நிறம் குணம் முதலியவைகளைத் தெரி விப்போம். திருமால் நிறம் பொருந்தியவன். [கருந்தமேனியான் என்பது கருத்து.] முன் கோபமுள்ளவன். ஆயினும் உடனே சாந்தமுடையவன். தன் முயற்சியால் பணத்தைச் சம்பாதிப்பான். மிக்க தைரியம் வாய்ந்தவன். மதிநுட்பம் உடையவனாகவும் இருப்பான்.

6. உரோமங்கள் நீட்சி யில்லான் நுவலுப தேசம் கொள்ளான்
தீமைக ளொருவர்க் கெண்ணான் ஜனஉப கார னவன்
தாமத குணத்தா னாகும் சகலருக்கு நல்ல னவன்
நேமியில் அல்ப வஸ்து நுகருவான் சூடு முள்ளான்.

6. ரோமங்கள் நீண்டிரா. நல்லவர்களிடம் உபதேசம் கேளாதவன். யாருக்கும் தீமைகளை மனத்தினாலும் எண்ணாதவன். ஜனங்களுக்கு உதவி புரிவான். தாமத குணமுள்ளவன். எல்லோரிடமும் நல்லவனாகப் பழகுவான். அற்ப வஸ்துக்களிலும் ஆசைகொண்டவன். இவனது உடலில் உஷ்ணம் அதிகரித்திருக்கும்.

7. மூலநோ யுடைய னவன் முன்கரம் ருத்திர ரேகை
சாலவே கிருஷி செய்வன் தயையுளன் சுக புசிப்பன்
ஞாலமேல் பகைவ ரில்லான் நளினமாய் வார்த்தை சொல்வன்
வேல்விழி மனையாள் பட்சம் வித்தகி கேட்டி டாயே.

7. மூலரோகம் உடையவன். கரத்தில் உருத்திர ரேகை விளங்கும். மிகச் சிரத்தையுடன் விவசாயம் செய்வான். எல்லோரிடமும் கருணை கொண்டவன். சுகங்களை நன்றாக அனுபவிப்பான். எதிரிகள் இல்லாதவன். நயமாகப் பேசுவான். மனைவியிடத்தில் மிக்க பக்ஷபாதம் உடையவன். ஸர்வவல்லமை வாய்ந்த ஈசுவரியே ! மேலும் கேட்பீராக.

8. பூமியும் விருத்தி செய்வன் புண்ணியம் செய்ய இச்சை
சாமிமேல் பக்தி கொள்வன் சகடுக ளுடைய னாகும்
காமனை விருப்பம் கொள்ளான் கடனிலான் பந்து நேயன்
தேன்மொழி மாதே யாங்கள் செப்பின மொழி குன்றாது.

8. நிலங்களை அபிவிருத்தி செய்வான். புண்ணிய காரியங்களில் விருப்பங்கொள்வான். சுப்பிரமணிய சுவாமியிடம் பக்தி பூண்டவன். வண்டி முதலிய வாஹன வசதிகள் உடையவன். அதிக ஆசை இல்லாதவன். கடன் இல்லாதவன். பந்துக்களிடம் அன்பு உடையவன். தேன் போன்ற இனிய மொழிகளைக் கூறும் தாயே ! நாங்கள் சொன்ன மொழி குன்றாது.

9. இப்படி யிருக்கும் தந்தை யிவனுமே மூன்றும் ஜன்மம்
மெய்ப்புட னுதிப்பா னாகும் விளம்புவோ மிவன்கு ணத்தை
ஒப்புடன் கல்வி கொஞ்சம் உறுதியா மூர்க்க முள்ளான்
தப்பித மொருவர்க் கெண்ணா தான்கரு நிறத்தா னென்றோம்,

9. இத்தகைய குணங்கள் வாய்த்தவனுக்கு இக் கடகலக்கின மகன் புத்திரனாகப் பிறந்திருக்கின்றான். இனிச் ஜாதகனின் குணத்தைக் கூறுவோம். சிறிது கல்வி கற்றவன். பிடிவாத முள்ளவன். அதுவும் ஸ்திரமாக இருக்கும். பிறர்க்குக் கெடுதல்களை எண்ணாதவன். அவன் கருநிறம். வாய்ந்தவன்.

10. அவசர மனத்த னாகும் அவன்தேக மொடிச்ச லுள்ளான்
அவனியில் பொய்கள் சொல்லான் நன்முக வடிவு காணும்
தவசிக ளுறவு கொள்ளான் தன்தேகம் பித்த சூடு
அவனியோர் புகழவாழ்வான் அருந்துவான் அல்ப வஸ்து.

10. அவசரமனம் வாய்ந்தவன். [காரியத்தின் விளைவுகளை யோசிக்காமல் திடீரென அவைகளில் இழிவான் என்பதுகருத்து.] மெலிந்த சரீரம் உடையவன். பொய்சொல்லாதவன். அவனது முகத்தில் வடுக்கள் காணப்படும். பெரியோர்களுடன் தொடர்பு கொண்டவன். பித்தச்சூடு உடையவன். உலகத்தினர் புகழும் வகையில்வாழ்க்கை நடத்துவான். அல்பவஸ்துக்களையும் உட்கொள்ளுவான். [இதற்குக் கள்குடிப்பான் என்றும் பொருள் கொள்ளலாம்.]

11. தந்தைக்கு மேலாய் வாழ்வன் தன்துணை ஆதரிப்பன்
முந்திய துணைவர் காணுன் முருகன்மேல் பக்தி கொள்வன்
பிந்திநே ரிளையோ ரில்லான் பலமுளான் நாபிநோயன்
சந்ததம் வறுமை யில்லான் சகலர்க்கு நல்லோ னவன்.

11. தந்தையைவிட சிறப்புடன் வாழ்வான். தன் சகோதரர்களை ஆதரிப்பான். இவனுக்கு மூத்த உடன்பிறந்தார்கள் இல்லை. சுப்பிரமணிய சுவாமியிடம் பக்தி கொண்டவன். பின் பிறந்த சகோதரிகள் இல்லாதவன். [சகோதரர்கள் உண்டென்பது கருத்து.] நல்ல சரீர பலம் வாய்ந்தவன். நாபியில் நோய் உடையவன். எப்பருவத்திலும் வறுமை இல்லாதவன். எல்லோருக்கும் நல்லவனுவான்.

12. தரளத்தோ டொத்த தந்தம் பங்கய ரேகை யுள்ளான்
இதமான வசனம் சொல்வன் ஈகைவான் கிருஷி செய்வன்
விதவிதச் செட்டுச் செய்வன் விசித்திர வீடு செய்வன்
நதிபல தீர்த்தம் தோய்வன் நாயகி கேட்டி டாயே.

12. பற்கள் முத்துக்கள் போல் விளங்கும். கரத்தில் கமல ரேகை திகழும். நன்மையைத்தரும் வார்த்தைகளைப் பேசுவான், பொருள்களைத் தியாகம் செய்வதில் ஆசை உடையவன். விவசாயம் செய்து ஜீவிப்பான். பலவிதமான வியாபரங்களையும் செய்வான். அழகிய வீடு கட்டுவான். பல புண்ணிய நதிகளில் ஸ்னனம் செய்வான். எங்கள் ஈச்வரி! மேலும் கேட்பீராக.

13. இவனுடைத் துணைவர் தம்மை யியம்புவோம் மூத்தோர்
காணேம் அவனியில் இளையோ னுண்டு ஆணது ரண்டு தீர்க்கம்
நவனியில் மாது நஷ்டம் நாட்டுவோ மிவனுக் கேதான்
கவனமா யிளையோன் சேதிகூறுவோம் தாயே கேளு.

13. இவனுடைய துணைவர்களைப் பற்றி பேசுவோம். இவனுக்கு முன் பிறந்தாரகளில்லை. இளைய சகோதார் இருவருண்டு. அவர்கள் தீர்க்காயுளுடன் வாழ்வர். ஆனல் இவனுடைய சகோதரிகள் நீடித்து வாழார்கள். இளையவனுடைய வரலாறுகளைச் சொல்லுகின்றேன். அன்னையே! கேளுங்கள்.

14. யானையின் திறத்தா னுகும் அதிகமாய் வார்த்தை சொல்வன்
மான்விழி மனையாள் பட்சன் மருமவான் மூர்க்கமுள்ளான்
ஈனமாம் குணங்க ளில்லான் எதிரிக்கு அஞ்சா னுகும்
கானக முடைய னுகும் காதலி கேட்டிடாயே.

14. யாணைபலம் பொருந்தியவன். அதிகமாகப் பேசுவான். மனைவியிடத்தில் மிகவும் அன்புள்ளவன். கபடமும் உண்டு. மூர்க்கன். ஆனல் கெட்ட குணங்கள் இல்லாதவன். எதிரிகளைக் கண்டு அஞ்சாதவன். தோப்புகளும் தோட்டங்களும் உடையவன். பார்வதி தேவியே! கேளுங்கள்.

15. துருசான நடையு மாவன் துண்டமாய்ப் பேச வல்லவன்
திருமகன் வாச முள்ளான் தீரனும் வலிவு முள்ளான்
அறைகிறேம் தாரம் ஒன்றே அவனுக்குச் சுதர்ஆண் ரண்டு
மருவிய பெண்பால் மூன்று வரைந்தனம் தீர்க்க மாக.

15. வேகமாக நடப்பான். கண்டிப்பாகப் பேசுவான். லக்ஷ்மீ வாசம் பொருந்தியவன். தைரியம் உடையவன். சரீரவலிமை பொருந்தியவன். அவனுக்கு மனைவி ஒருத்திதான். அவர்களுக்கு இரு பிள்ளைகளும் மூன்று பெண்களும் பிறந்து தீர்க்காயுளுடன் வாழ்வார்கள்.

16. அதற்குப்பின் சேத மாகும் அதன்பின்னால் வருவோன் சேதி
நிதியுளான் கருநி றத்தான் நிமிஷத்தில் கோபி யாவன்
சதியான மனத்தா னாகும் சமர்த்தாக வார்த்தை சொல்வன்
பதியது புதிதாய்ச் செய்வன் பார்வதி கேட்டி டாயே.

16. அவைகளுக்குப் பின் பிறக்கும் குழந்தைகள் சேதத்தை அடையும். நிற்க, ஜாதகனுடைய இரண்டாவது சகோதரனைப் பற்றிக் கூறுவோம். அவன் செல்வம் படைத்தவன். இருண்ட மேனியான். வெகு சீக்கிரத்தில் கோபி யாவான். கபடமனம் உடையவன். சாதுர்யமாகப் பேசுவான். புதிய வீடு கட்டுவான். பார்வதி தேவியே! மேலும் கேட்பீராக.

17. தன்மன மழுத்த முள்ளான் ஜனங்களும் நல்லோ னென்பர்
கனமன முடையோன் போலே கழறுவோம் பலத்தி லாறு
பின்னையும் குழவி போலே பேசியே எதிரி பொன்னை
தன்னய மாக வாங்க நற்சமத் துடைய னாமே.

17. மன அழுத்தம் உடையவன். ஜனங்கள் இவனை நல்லவனென்றே கொண்டாடுவார்கள். உதாரமனம் படைத்தவன் [பணத்தைப் பொருட்படுத் தாதவன்] போல முதலில் பழகி பின்பு குழந்தைப்போலக் கொஞ்சிப் பேசிப் பிறருடைய பொன் முதலிய பொருள்களைத்தன் வசப்படுத்தும் ஒரு வித ஆற்றல் படைத்தவன் என்று யாம் அறிவோம். [சுருங்கச்சொல்லின் வஞ்சகன் என்பது கருத்து.]

18. இவனுடை செங்கை தன்னிச் லிலகும்பூ மகளின் ரேகை
கவனமா யிருக்கு மென்று காட்டினேன் தெளிந்து காண்பாய்
நவமணி சலங்கள் முற்றும் நல்கிடு மிவனுக் கென்றேன்
பவமது மணுகி டாமல் பாலகன் வாழ்வ னாமே.

18. இவனுடைய சிவந்த கரத்தில் செவ்வாய் ரேகை அல்லது தானிய ரேகை விளங்கும். ஆகையால் இவனுக்கு நவதானிய சமிருத்தி இருக்கும். வாழ்க்கையில் எவ்விதக் கெடுதலும் இல்லாமல் சிறப்பாக வாழ்ந்திடு வன்.

19. தந்தைதாய்ப் பட்ச னவன் சாற்றினே னரசர் நேயன்
விந்தையா யெதிரிக் கஞ்சான் வேண்டிய மாதைச் சேர்வன்
சுந்தரன் கரங்கால் தானும் சோர்விலாச் சமமென் றேது
விந்தையா யபிமா னப்பெண் மேவிடு மொருத்தி யென்றேம்.

19. தாய் தந்தையர்களிடம் பக்திகொண்டிருப்பான். அரசர்களுக்கும் இவன் நண்பனுவான். எதிரிகளைக் கண்டு பயப்படாதவன். தான் விரும்பிய மாதர்களிடம் பழக்கமுள்ளவனுவான். கைகால் முதலிய அவயவங்கள் சமமாக வளர்ந்து அழகாக விளங்கும். சோர்வில்லாதவன். இவன். ஓர் அபிமான மனைவியையும் அடைவான்.

20. மனைவியு மொன்றே யாகும் வரும்சுத ராண்பா லொன்று
கனமுடன் விருத்தி யென்றேம் கழறினேம் துணைவர் சேதி
அனையவே சிலநாள் சென்று அவர்களும் வேறுய்ச் செல்வர்
சினமிலா அந்தி யத்தில் செப்புவோம் விவர மாக.

20. சாஸ்திரமுறைபடி மணமான மனைவி ஒருத்திதான். அவளுக்கு ஒரு பிள்ளை பிறந்து நீண்ட ஆயுளுடன் வாழ்வான். ஜாதகனும் அவளுடைய இரு சகோதரர்களும் சிலகாலம் ஒன்றுகக் குடும்பம் செய்து, அதன் பின் வேறுகச் செல்வர். இவ்வாறு ஜாகதனின் துணைவர்களின் விருத்தாங்தங்களைச் சொன்னேம். இன்னும் விவரமாக இரண்டாம் பாகத்தில் கூறுவோம்.

21. இந்நல முடையா னுக்கு இயற்றுவோ மணத்தின் காலம்
சொன்னதோர் பதினெட் டாண்டில் துலங்கிய உத்திர திக்கில்
தன்னிலே உதித்த மாதைத் ஜாதகன் மணமே கொள்வன்
அன்னவள் மாதுர் வர்க்கம் அறைந்தன மொழிகுன் றுது.

21. இனி ஜாதகனின் விவாஹ காலத்தைச் சொல்லுவேன். இவனுக்கு பதினெட்டாம் வயதில் மணம் நடைபெறும். மணப்பெண் வடதிசையில் அன்னை வருக்கத்தில் பிறந்திருக்கின்றுள். நாம் சொன்ன மொழி தவருது நடைபெறும்.

22. கொண்டிடும் அம்மா னுக்குக் குழவிக ளாண்பால் ரண்டு
வண்குழல் கன்னிரண்டு மருவிடும் தீர்க்க மாக
விண்டிடா மூன்று நஷ்டம் வசிட்டரும் சொல்லும் போது
கண்டித விசுவா மித்திரர் கழறுவார் அதிலோர் சங்கை.

22. அந்தத் தம்பதிகளுக்கு இரு பிள்ளைகளும் இரு பெண்களும் பிறந்து தீர்க்கமாக வாழ்வார்கள். இவர்களைத் தவிர மூன்று குழந்தைகள் சேதமாகும். வசிஷ்டர் இவ்வாறு சொல்லக் கேட்ட விசுவாமித்திரர் ஓர் ஆக்ஷேபத்தைக் கூறினுர்.

23. அஞ்சினுக் குடையோ னீசம் அரிமக னைந்தைப் பார்க்கத்
துஞ்சிடு மதலை யென்றேம் சுரர்குரு உச்ச மாகத்
தஞ்சமா யஞ்சைப் பார்க்க ஜனித்திடும் குழவி யென்றேம்
மஞ்சனின் பூர்வம் தன்னை வரைகிறேம் கேளும் தாயே.

23. புத்திரபாவத்திற்கு உடையவன் நீசம். அரிமகனும் ஐந்தாமிடத்தைப் பார்க்கின்றுன். ஆகையால் இவனுக்குச் சந்ததியே இராது இவ்வாக்ஷேபத்திற்கு வசிஷ்டர் பதில் உரைப்பார். தேவகுரு உச்சம்

பெற்று ஐந்தாமிடத்தைப் பார்ப்பதால் நிச்சயமாக ஜாதகனுக்குப் புத்திர பாக்கியமுண்டு. இவனுடைய பூர்வஜன்மத்தைக் கூறக் கேளுங்கள் தாயே!

## வேறு

24. பாலகனின் முன்ஜன்மம் பத்திநிற்கும் காளாத்தி
சீலமுமுள குன் றின்பால் சென்றித்தே
சாலவருள் மதுசைவனுக வாகாக அவ்வூரில்
சீலமீலா செயலனேகம் சென்றே.

24. ஜாதகன் முன்பிறவியில் காளஹஸ்தி க்ஷேத்திரத்திற்கு அருகிலுள்ளதொருமலையை அடுத்துள்ள ஊரில் சைவகுலத்தில் பிறந்திருந்தான். நற்சீலத்திற்குப் பொருந்தாத பல செயல்களைச் செய்தான்.

25. கணிதவேலைக் குரிய காரணத்தைத் தானேற்றான்
மாணமுதலில் அரன்செலவு வாங்குதலும்—தனமுடைய
வாணிபத்தால் தான்வருகும் பொய்க் கணக்கும் கைமுதலும்
பேணும் பெரியதனம் பார்.

25. கணிதவேலைக்குரிய யோக்கியதையை அடைந்து, முதலில் சிவபிரான் பூசைக்கு என்று பணத்தை வாங்கி, பொய்க்கணக்கு எழுதி அதைக் கொண்டு வியாபாரம் செய்து அதிக பணம் சம்பாதித்தான்.

## வேறு

26. அந்நகர் க்ஷத்திரிய வமிசம் மனமில் லாத பெண்ணை
இன்னவன் பலவந் தத்தால் ஆலய போகம் துய்த்தான்
கன்னிக்குக் கருவு தங்கிக் கனத்தபண்டிதங்கள் செய்ய
உன்னக் கருவு நீங்கி உத்தமி உடலை நீத்தாள்.

26. இவ்வாறு இருக்கையில் இவன் அந்த ஊரிலுள்ள ஒரு க்ஷத்திரிய பெண்ணைப் பலாத்காரமாகக் கெடுத்தான். அவளுக்குக் கர்ப்பம் ஏற்பட்டவுடன் பல மருந்துகளைக் கொடுத்து அதை நீக்கினான். அதனால் அந்தப் பெண்ணும் உயிர் நீத்தாள்.

27. அந்தவோர் தோஷம் தானும் அணுகிற்று அவனுக் கேதான்
வந்திடு மந்தி யத்தில் வாயுவால் பாதை கண்டு
சுந்தரன் மருண மாகியால் சுநிதியின் வரையப் பட்டு
வந்தவ னிவனே யென்றோம் மங்கையே கேட்டி டாயே.

27. அந்தப் பாவம் இவனை வந்தடைந்தது. பிறகு இவன் அந்திய காலத்தில் வாதரோகத்தினால் கஷ்டப்பட்டு இறந்தான். அவனைத்தான் இங்குப் பிரம்மதேவன் படைத்திருக்கின்றான். தேவியே! மேலும் கேளுங்கள்.

28. முந்திய தோஷம் தீர முயலுவோம் சாந்தி தானும்
மைந்தனும் மனைவி யோடு வறுமுகர் தலங்கள் சென்று
சந்ததம் வில்வம் தன்னால் ஷண்முகர்க் கச்சித் தேத்தி
எந்தையே மாதம் தோறும் இன்பமாய்க் கார்த்தி கைக்கு ;

28. முன்ஜன்மத்திலேற்பட்ட பாவம் தீர்ந்து குழந்தைகள் உய்ய ஒரு சாந்தி சொல்லுகிறோம். இச் சாதகன், தன் மனைவியுடன் சுப்பிரணிய சுவாமி எழுந்தருளி இருக்கும் அநேக புண்ணிய ஸ்தலங்களுக்குச் சென்று அவரை வில்வத்தால் பக்தியுடன் அர்ச்சித்துப் போற்றவேண்டும். மேலும் ஒவ்வொரு மாதமும் கிருத்திகை தினத்தில் ;

29. அரனடி ஒருவர்க் கன்னம் அன்புட னீவா னாகில்
வரும்சுதர் விருத்தி யென்றோம் வளர்பிறை போலே யோகம்
பெருகிடு மிவனுக் கேதான் பேசின மொழிகுன் றாது
அறுமுகன் தன்னைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

29. ஓர் அரனடியார்க்கு அன்புடன் அமுதளிக்கவேண்டும். இவ்வாறு செய்தால் ஜனிக்கும் குழந்தைகள் விருத்தியடையும். ஜாதகனுக்கும் யோகங்கள், வளர்பிறைச் சந்திரன்போல வளர்ந்திடும். நாங்கள் சொன்ன வார்த்தை தவறாது. ஆறுமுகக் கடவுளைத் தந்த தாயே! மேலும் கேளுங்கள்.

30. அன்னையு மிருநி றத்தாள் அவளுமே ஒடிச்சல் தேகி
தன்னிலே பித்தச் சூடு தங்கிடும் சீல மில்லாள்
உன்னத அழகில் லாதாள் உறுதியா மனத்த ளாகும்
இன்னவ ளதிர்ஷ்ட சாலி இவள்குலக் குற்ற முள்ளாள்.

30. ஜாதகனுடைய தாய் கருத்தமேனியாள். மெலிந்த சரீரம் வாய்ந்தவள். பித்தச்சூடு உடையவள். நற்சீல மில்லாதவள். அவளது தோற்றமும் அழகியதன்று. உறுதியான மனம் படைத்தவள். அதிருஷ்ட முடையவள். இவள் பிறந்த குலத்தில் தோஷங்கள் ஏற்பட்டிருக்கும்.

31. வறுமைக ளில்லா ளாகும் வரனுக்கு நேய முள்ளாள்
அறைகிறோம் துணைவர் தம்மை ஆணொன்று பெண்ணு மவ்வாறு
இருவரும் விருத்தி யென்றோம் இலகாது மற்ற வெல்லம்
நிறையதாய்த் தந்தை வர்க்கம் நிகழ்த்துவோம் தாரம் ரண்டே.

31. வறுமை இல்லாதவள். கணவனிடத்தில் மிக்க பக்தி கொண்டவள். அவளுக்கு ஒரு சாகோதரனும் ஒரு சகோதரியும் உண்டு. அவ்விருவரும் விருத்தியடைவார்கள். மற்றைய உடன் பிறக்கும் குழந்தைகள் விருத்தியாகா. இவனுடைய தகப்பனுக்கு மனைவிமார்கள் இருவர்.

32. அன்னையின் பூர்வம் தன்னை அறைகிறோம் தணிகை தெற்கில்
தன்னிலே பேரூர் தன்னில் சதுர்குலம் தனிலு தித்து
மன்னிய குடும்பி யாகி வாழ்கிற நாளி லேதான்
இன்னவன் தனக்கு வந்த இடரதைச் சொல்லு கின்றோம்.

**32.** ஜாதகனுடைய அண்ணையின் பூர்வஜன்மத்தைக் கூறுவேன். இவள் முன்பிறவியில் திருத்தணி க்ஷேத்திரத்திற்குத் தெற்கில் உள்ளதொரு பெரிய ஊரில் வேளாள குலத்தில் பிறந்து பெரிய குடும்பியாகி வாழ்ந்துவரும் காலத்தில் இவனுக்கேற்பட்ட பாவத்தை நாங்கள் கூறுகின்றோம்.

**33.** சேவலின் அண்டம் தன்னை சிறையில்............
வியக்............பின்னம்................
தாவிய ஐந்து குஞ்சு தானது மாண்ட தென்றோம்
பாவங்க ளிவளைப் பற்றிப் பகருவோம் கேளும் தாயே.

**33.** ஒரு தாய்க்கோழியை சிறையிலடைக்க, தனித்திருந்த முட்டைகளி லிருந்து ஜனித்த ஐந்து கோழிக்குஞ்சுகள் சேதத்தை அடைத்தன. அந்தப் பாவங்கள் இவளைத் தானே சாரும்! தாயே! மேலும் கேளுங்கள்.

**34.** முன் ஜன்மம் போன தோஷம் முயன்றதா லிச்சென் மத்தில்
இன்னவள் தனக்குப் புத்திர ரேகிடு மெமன்ப திக்குப்
பன்னிய ஐந்து தோஷம் பகர்ந்தன மிவளுக் கேதான்
பின்னையும் ஜன்மம் தன்னை யியம்புவோ மவ்வூர் கீழ்ப்பால்
(தன்னிலே யிக்கு லத்தில் தானவள் வருவா ளாமே.

**34.** முன்ஜன்மத்திலேற்பட்ட பாவத்தால் இப்பிறவியில் இவளுடைய குழந்தைகளில் ஐவர் சேதத்தை அடைவர். பின்ஜன்மத்தையும் சொல்லு கின்றேன். இப்பொழுது வசிக்கும் ஊருக்குக் கீழ்த்திசையில் உள்ள தொரு கிராமத்தில் இதே ஜாதியில் பிறப்பாள்.

**35.** தந்தையின் பூர்வம் தன்னைச் சாற்றுவோம் காஞ்சி தென்கீழ்ச்
சந்ததம் கலகம் காத்த வாதரீஸ் வரர்தன் னூட்டில்
அந்தவோர் வணிக னுக்கு அருமக வாகத் தோன்றி
மூந்தியே செட்டுச் செய்து முயற்சியாய்க் குடும்பி யாகினான்.

**35.** ஜாதகனுடைய தகப்பனின் முன்ஜன்மத்தைச் சாற்றுவேன். காஞ்சிக்குத் தென் கிழக்கில் கஷடங்கங்களைக் காத்த வாதபுரீச்வரர் எழுந் தருளி இருக்கும் ஊரில் ஒரு வணிகனுக்கு மகவாகப் பிறந்து வளர்ந்து வியாபாரம் செய்து மனைவி மக்களுடன் பெரிய குடும்பியாகி வாழ்ந்து வந்தான்.

**36.** தானமும் தரும மின்றித் தனத்தின்மே லிச்சை யாகித்
தேன்மொழி தனை உரைத்து ஜனஉப கார னாகி
மானமாய் ஜீவித் தேதான் மறலிதன் பதிக்குச் சென்று
ஆனதோர் பிரமன் லக்கம் வரையிலே வந்தா னென்றோம்.

**36.** தான தருமங்களைச் செய்தான். பணத்தில் ஆசை கொண்டவனாகவும் இருந்தான். [மேன் மேலும் பணம் சம்பாதித்துத் தான தருமங்கள் செய்தான் என்பது கருத்து.] கொடூர வார்த்தைகளைப் பேசாமல் தேன் போன்ற வார்த்தைகளையே பேசி வந்தான். [இதுவும் ஒரு முக்கிய தருமம்

எனக் கொள்ளல் வேண்டும்.] ஜனங்களுக்கு உதவி புரிந்தான். இவ்வாறு நல்ல வாழ்க்கை நடாத்தி அந்தியத்தில் இறந்து'' பிரம்மன் உலகமும் சென்று அங்கிருந்து இப்புவியில் பிறந்திருக்கிறுன்.

37. பின்ஜன்மம் துவாரை தன்னில் பிறப்பனே கோகு லத்தில்
அன்னையும் கேட்க லுற்ருள் அவனிந்த ஜன்மம் தன்னில்
என்னபுண்ணி யங்கள் செய்தா ரியம்புவீர் முனியே யென்ருள்
அன்னவ னிச்சென் மத்தில் யாவர்க்கு நல்லோ ணுகி ;

37. வரும் ஜன்மத்தில் துவாரகையில் யாதவ வமிசத்தில் பிறப்பான். பார்வதி தேவி கேட்கலுற்ருள். புண்ணிய ஸ்தலமான துவாரகையில் பிறப்பதற்கான புண்ணியம் இச்சென்மத்தில் என்ன செய்திருக்கின்ருன் ? முனிவரே ! சொல்லுங்கள் என, முனிவர் பதில் சொல்லுவார். அவன் இப்பொழுது யாவர்க்கும் நன்மைகளைச் செய்திருக்கின்ருன். ஆகையால் இவனுக்கு நல்லவன் என்ற பெயரும் தானுகவே ஏற்பட்டது.

38. அறந்தனி லிச்சை வைத்து அறுகுணன் பத்தி பூண்டு
வருவதால் பின்ஜன் மத்தில் வருகுவான் நந்த ணுகத்
திறமுட னிவர்கள் காலம் செப்புவீர் முனியே என்ருள்
நெறியுடன் சொல்லு கின்றேன் நிமலியே கேட்டி டாயே.

38. மேலும் தருமத்தைச் சிரத்தையுடன் செய்தான். விஷ்ணு பக்தி பூண்டிருந்தான். ஆகையால் வரும் பிறவியில் துவாரகையில் யாதவ குலத்தில் பிறப்பான். ஜாதகனுடைய தாய் தந்தையர்களின் ஆயுட் காலத்தை வரையறுத்துக் கூறுங்கள் எனப் பார்வதி கேட்க, முனிவர் கூறுவார்.

குறிப்பு.—இங்கு அறுகுணன் என்ற சொல் விஷ்ணுவைக் குறிக்கும். கடவுளின் ஆறு குணங்களாவன : ஐசுவரியம், வீர்யம், புகழ், திரு, ஞானம் வைராக்கியம்.

39. தந்தையின் மரண காலம் சாற்றுவோ முப்பா ணுலில்
அந்தையே மகர மாதம் இயம்புவோம் கர்மம் தானும்
முந்திய முப்பான் மூன்றில் உயர்கன்னி மாதம் தன்னில்
வந்திடு மாதுர் கண்டம் மங்கையே கேட்டி டாயே.

39. ஜாதகனுக்கு முப்பத்து நான்காவது வயதில் தை மாதம் வரையில் இவன் தந்தை உயிர் வாழ்ந்திருப்பான். ஜாதகனின் முப்பத்து மூன்ரும் வயதில் புரட்டாசி மாதம் வரையில் இவன் அன்னை உயிரோடு இருப்பாள். தேவியே ! மேலும் கேளுங்கள்.

40. இன்னவர் மரண காலம் இயம்புவோ மறுப தாண்டில்
உன்னித மிதுன மாத முயர்பக்கம் சதுர்த்தி தன்னில்
தன்னிலே மார்பு நோயால் சண்டன்தன் பதிக்குச் செல்வன்
அன்னவன் பின்ஜன் மத்தை அறைகிரேம் கேளும் தாயே.

40. ஜாதகனுடைய மரண காலத்தையும் இயம்புவேன். அறுபதாவது வயதில் ஆனி மாதத்தில் சுக்கிலபக்ஷத்தில் சதுர்த்தி திதியில் மார்பு நோய் [மாரடைப்பு] கண்டு விண்ணுலகம் ஏகுவான். அவனுடைய மறு பிறவியையும் தெரிவிக்கின்றேன்.

41. திருப்பனங் காட்டூர் தன்னில் செல்வனு மருகர் வமிசம்
பெருமையாய்க் குடும்பி யாகிப் பிரபல கீர்த்தி பெற்று
வறுமைக ளில்லா வாழ்வன் வரைகிறோம் யோகச் சேதி
ஆறுமுகன் தன்னைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

41. திருப்பவனங்காடு என்னும் ஊரில் இவன் சைன சாதியில் பிறந்து பெருமை வாய்ந்த குடும்பியாகி, பிரபல புகழையும் பெற்று, வறுமை இல்லாதவனாக வாழ்வான். இவனுடைய பொதுயோக வரலாறுகளைக் கூறுவேன். ஆறுமுகனைப் பெற்ற தாயே! கேட்பீராக.

42. தன்தன மதிகம் சோப்பன் தன்குல மெச்ச வாழ்வன்
சொந்தமாய்ப் பணிதி பாத்திரம சுகம்பெறு கிருஷி யுண்டு
சிந்துரு சகட முண்டு சித்திர வீடு செய்வன்
சொந்தநல் ஆஸ்தி விருத்தி சுந்தரி கேட்க லுற்றாள்.

42. தன் முயற்சியினால் அதிக தனத்தைச் சம்பாதிப்பான். ஆபரணம், பலவகைப் பாத்திரங்கள் முதலியவைகளும் ஏற்படும். விவசாயம் நன்றாகப் பலிதமாகும். குதிரை வண்டி முதலிய வாகன வசதிகள் உண்டாகும். அழகியதொரு வீடு கட்டுவான். சொந்த முயற்சிகளால் ஏராள சொத்துக்களைச் சம்பாதிப்பான். பார்வதி தேவி வினவினாள்.

43. எந்தக்கா லத்தி லேதான் இவன்சித்திர வீடு செய்வான்
அந்தவோர் காலம் சொல்வாய் ஐமூன்று ஆண்டின் மேலே
அந்தையே கிரகம் செய்வன் இதுவன்றி யின்னும் கேளு
முந்திய முட்பா னலில் மொழிந்திட்டோம் குடும்பம் வேறு.

43. எந்தக் காலத்தில் இவனுக்கு அழகிய வீடு ஏற்படும்? சொல்லுங்கள் என, ஜாதகனுடைய பதினைந்தாவது வயதிற்குமேல் வீடு கட்டுவான். இதுவுமன்றி மேலும் கேளுங்கள். முப்பத்துநான்காவது வயதில் குடும்பப் பிரிவினை நடை பெறும்.

44. எவ்விதம் குடும்பம் வேறு இயம்புவீர் முனியே யென்றாள்
பவ்வமாய்ப் பெண்க ளாலே பகர்ந்தனம் குடும்பம் வேறு
ஒவ்விய பாகம் மூன்றாய் உறைந்திட்டோ மிவனுக் கேதான்
திவ்விய மாதே யாங்கள் சொலுமொழி குன்றி டாது.

44. முனிவரே! எக்காரணத்தினால் குடும்பப் பிரிவினை நடைபெறும்; தெரிவிப்பீர்களாக என உமையவள் கேட்க, முனிவர் வசிஷ்டர் பதில் கூறுவார். குடும்பம் வேறுவதற்கு ஸ்திரீகள்தான் காரணமாவார்கள். மொத்தச் சொத்துக்கள் மூன்று பாகமாகப் பிரிக்கப்படும். எங்கள் தாயே! நாங்கள் சொன்ன மொழி பொய்யாகாது.

45. அந்தவோர் காலம் தன்னில் அவனுக்கு வாயு பீடை
முந்திய கைகால் வாயு மொழிகிறோ மதற்குச் சாந்தி
விந்தையாய் முருக ருக்கு வித்தக னர்ச்சித் தேத்தி
எந்தையே ஔடதத்தால் ஏகிடும் ரோகம் தானே.

45. குடும்பப் பிரிவினைக் காலத்தில் இவனுக்கு வாயுவினால் பீடை ஏற்பட்டுக் கை கால்கள் முடக்கப்படும். அதற்குத் தக்கதொரு சாந்தி கூறுவோம். சுப்பிரமணிய சுவாமிக்கு அபிஷேக அர்ச்சனைகளை நடத்தி அதன் பின் ஔஷதங்களைச் சேவித்தால் ரோகம் நீங்கிச் சௌக்கியத்தை அடைவான்.

46. பாலகன் ஜனிக்கும் காலம் பணிதசை பதினா றுண்டும்
கோலமா யெட்டுத் திங்கள் கூறுவோம் பலனை யாங்கள்
ஞாலமேல் துணைவர் விருத்தி நற்சித்திர வீடு செய்வன்
சாலவே கிருஷி ஓங்கும் தன்துணை சேத மாமே.

46. இச்சாதகன் திருவாதிரை நக்ஷத்திரம் முதல் பாதத்தில் ஜனித்திருக்கின்றான். ஆகவே ராஹு தசையில் இருப்பு வருஷங்கள் பதினாறு, மாதங்கள் எட்டு. இதன் பலன்களை யாங்கள் கூறக் கேண்மோ. சகோதர விருத்தி யுண்டு. அழகிய திடமானதொரு வீடு கட்டுவான். விவசாயம் நன்கு ஓங்கி வளரும். சகோதர வருக்கத்திற்குச் சேதமும் உண்டு.

47. தந்தை தாய் ரோக மெய்தும் தன்பந்து சூத முண்டு
நிந்தையும் பெண்க ளாலே நேரிடும் குலவினோம் யாம்
தன்தனம் செலவே யாகும் தன்மனச் சஞ்ச லங்கள்
பிந்திய பாகம் தன்னில் பேசுவோம் விவர மாக.

47. தாய் தந்தையர்களுக்குப் பிணிகள் நேரும். தன் உறவினர்களின் மரணத்தால் தீட்டு நேரிடும். ஸ்திரீகளால் நிந்தைகளும் வரும். பணம் அதிகமாகச் செலவழியும் என்றோம். மனத்தில் எப்பொழுதும்கவலைகள்குடி கொண்டிருக்கும். அன்னையே! இரண்டாம் பாகத்தில் இவ்வரலாறுகளை விவரமாகத் தெரிவிப்போம்.

## ஜாதகம் 52

1. சந்திரன் புந்தி பொன்னும்[1] சல்லியன்[2] மாதை[3] புக்கக்
கந்தனும்[4] பானும்[5] கோலில்[6] காரியும்[7] தேள தாக[8]
மந்தரக் கயிறு[9] மானில்[10] மற்றசெம் பாம்பு[11] வண்டு[12]
சுந்தர அலவன்[13] ஜன்மம் தோன்றினல் பலன்சொ ல்வீரே,

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசி சக்கரம் | | லக்கினம் கேது |
| ராகு | | | |
| | சனி | செவ்வாய் சூரியன் | சந்திரன் புதன் குரு சுக்கரன் |

சித்திரை 1-ங் கால் அ. தசை ஷூ 6–10–10.

1. சந்திரனும் புதனும் குருவும் சுக்கிரனும் கன்னியிலும் அங்காரகனும் சூரியனும் துலாத்திலும், சனி விருச்சிகத்திலும், ராகு மகரத்திலும், கேது கடகத்திலும் இருந்து, கடக லக்கினத்தில் ஜனன மானல் பலன்களைச் சொல்லுவீர்கள் என்று பார்வதியம்மை சப்த ரிஷிகளைக் கேட்டார்.

**குறிப்பு.**—இந்த ராசிச் சக்கிர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கிரக் கிரக நிலை பொருத்தமுடையதாகும். மேஷத்தில் குருவும் சுக்கிரனும், கடகத்திற் சனி, சிம்மத்திற் சந்திரன், கன்னியிற் புதன் கேது, தனுசிற் சூரியன், மீனத்தில் அங்காரகன் ராகுவும் ஆகும்.

2. சுந்தர னுதித்த வீதி சொல்லுவோம் கீழ்மேல் வீதி
வந்தஇல் வடக்கு வாடை வாசலு மிந்திர[14] நோக்கம்
தந்தியும்[15] வடகீழ் தங்கும் சாமுண்டி துர்க்கை மாரி
விந்தையாய் மேற்கில் தங்கும் மேவுபா ஞ்சாலி தென்கீழ்.

2. ஜாதகர் ஜெனனமான வீதியின் அமைப்பைச் சொல்லுவோம். அது கிழக்கு மேற்கு வீதியாகும். ஜனனமான வீடு வடவண்டை வாடை. வாயிற்கால் கிழக்குத் திக்கைப் பார்க்கும். ஆண் யானை முகத்தோன் என்ற

[1] குரு. [2] சுக்கிரன். [3] கன்னி. [4] அங்காரகன்.
[5] சூரியன். [6] துலாம். [7] சனி.
[8] விருச்சிகம். [9] மலைக்கயிறு என்ற ராகு. [10] மகரம்.
[11] கேது. [12] பூசம் உள்ள கடகம். [13] கடகம்.
[14] கிழக்கு. [15] ஆண்யானை.

விநாயகக் கடவுளின் கோயில் வடகிழக்குத் திக்கிலும், சாமுண்டீச்வரி என்ற பார்வதி, தூர்க்கை என்ற காளி, மாரியம்மன் இவர்களின் கோயில்கள் மேற்குத் திக்கிலும், பாஞ்சாலி என்ற துரோபதையம்மன் கோயில் தென் கிழக்குத் திக்கிலும் இருக்கும்.

3. இயமத்தான் தென்மேல்தங்கு மிவ்வித அடையா ளத்துள்
சேமமாம் சிற்றூர் தன்னில் தீபடு மில்லந் தன்னில்
நாமமோ செக்கா ளுக நல்கிடு மாண்பால் ஜன்மம்
காமனே யெரித்தோன் தேவி கழறுவோம் மேலுங் கேளே.

3. எமனுடைய கோயில் தென் மேற்குத் திக்கில் இருக்கும். இங்குச் சொல்லப்பட்ட அடையாளங்கள் உள்ள க்ஷேமகரமாய் நல்ல ஸ்திதியிலுள்ள சிறிய கிராமத்தில் நெருப்புப்பட்ட வீட்டில் ஜாதகர் ஜனித்தார். ஜாதகர் செக்கு ஆடும் ஜாதியார் என்று சொல்லப்பட்ட செட்டியார் ஜாதியில் ஆண் பிள்ளையாகப் பிறந்தார். மன்மதனை எரித்தப் பரமசிவனுடைய மனைவியாகிய பார்வதி யம்மையே! நாங்கள் இன்னும் மேலுஞ் சொல்லுவதைக் கேட்பீராக.

4. இன்னவன் ஜனனயோகம் யெழில்பெரும் தந்தை யோகம்
மன்னிய அன்னை யோகம் வருந்துணை புத்திர யோகம்
தன்னிலே களத்திர யோகம் சாற்றுவோம் முன்பின் ஜன்மம்
பின்னையும் சாந்தி தானும் பேசுவோ மிந்நூல் தன்னில்.

4. இந்த ஜாதகருடைய ஜனன காலம் முதல் நடக்கும் யோகங்களையும், அழகும் வலிமையுமுள்ள தகப்பனுடைய யோகங்களையும், பெருமை வாய்ந்த தாயாருடைய யோகங்களையும், கூடப் பிறந்தவர்கள் பிறக்கப் போகிறவர்கள் இவர்களுடைய யோகங்களையும், சந்ததிகளின் யோகங்களையும், தனக்கு வந்து வாய்க்கும் மனைவியின் யோகங்களையும், ஜாதகர் தாய் தந்தையர் முதலானவர்களின் முன்ஜன்ம பலன்களையும், பின் ஜன்ம பலன்களையும் சொல்லுவோம்; மேலும் சாந்திகளைப் பற்றியும் இந்த சாஸ்திரத்தில் நாங்கள் சொல்லப்போகிறோம்.

5. தந்தையின் துணைவர் தம்மைச் சாற்றுவோ மாண்பா லொன்று
சந்ததம் தீர்க்க மாகும் சாற்றுவோம் மற்ற வெல்லாம்
நொந்திடு மென்று சொன்னோம் நுவலுவோம் பிதாகு ணத்தை
எந்தையே சிவந்த மேனி யின்பமாய் வார்த்தை சொல்வன்.

5. ஜாதகருடைய தகப்பனுடன் பிறந்தவர்களைப் பற்றிச் சொல்லுகிறோம். தகப்பனுருக்கு ஆண் சகோதரர் ஒன்று உண்டு. அந்தச்சகோதரர் நீண்ட ஆயுளுள்ளவர். மற்றச் சகோதரர்கள் எல்லாம் நொந்து க்ஷீணித்துப் போய்விடும், இறந்து போய்விடும் என்று சொல்லுகிறோம். இனிமேல் ஜாதகருடைய தகப்பனுடைய குணாதிசயங்களைச் சொல்லுகிறோம், எங்களுடைய தாயாராகிய பார்வதியே! கேளும். தகப்பனர் சிவந்த நிறமுள்ள தேகமுடையவர், இனிப்பாய்ப் பேசுவார்.

6. கீர்த்தியு முடைய னாகும் கௌரவ குடும்பி யாவன்
துரைமிகத் தேட வல்லன் சகலர்க்கு நல்லோ னுவன்
மரமாட்டுத் [1] தொழிலு முள்ளான் வாக்குக்கள் தவறு னாகும்
தீரமாம் காரி யத்தைச் செய்வனிவனே யென்றோம்.

6. ஜாதகருடைய தகப்பனூர் கீர்த்தியும் நல்ல பெயருமுடையவர். கௌரவமான குடும்பத்தையுடையவராவர். அதிகார முடையவராயும், மேன்மையான மகனுயும் அதிகமான செல்வத்தைத் தேடக்கூடியவராயும், எல்லோருக்கும் நல்லவராயும் இருப்பார். மரம் ரசம் தேன் இவைகள் சம்மந்தமானத் தொழிலே (அஃதாவது மரச்செக்கு ஆடி ரசம், எண்ணெய், தேன் முதலியவைகளை உண்டாக்கும் தொழிலே) உடையவர். சொன்ன சொல்லைத் தவறுமல் காப்பாற்றுவார். மனத்தைரியமுள்ள பலமானக் காரியங்களைச் செய்வார் என்று சொல்லுகிறோம்.

7. உண்டியும் சுகமாய்க் கொள்வன் உரைக்கிறோம் பித்தச் சூடு
குண்டனி செய்யா னாகும் கூறுவான் சுகமாய் வார்த்தை
அண்டினோர் தம்மைக் காப்பன் அவன்தெய்வ பக்தி யுள்ளான் *
தண்டமி முடைய னாகும் தன்கரம் ருத்திர ரேகை.

7. ஜாதகருடைய தகப்பனூர் சுகத்தைத் தரக்கூடிய நல்ல உணவைச் சாப்பிடுவார். பித்தச்சூடான தேகமுள்ளவர். கோள் சொல்லாதவர். வார்த்தைகளை நயமாகவும் இனிமையாகவும் சொல்லிப் பேசுவார். தன்னை வந்து அண்டித் தன் உதவியைக் கோருபவர்களைக் காப்பாற்றுவார். தெய்வ பக்தி யுள்ளவர். வணக்கம் உடையவர். இனிமையான தமிழைப் பேசுவார். தன்னுடைய உள்ளங்கையில் ருத்திரரேகை என்ற ஒரு விதமான ரேகையை உடையவர் ஆவர்.

குறிப்பு.—* ஒன்பதாவது பாவம் பிதுர்ஸ்தானம். பிதுர் ஸ்தானமாகிய மீனத்தை குரு சுக்கிரன் புதன் சந்திரன் ஆகிய நால்வரும் பார்ப்பதைக் கவனிக்கவும்.

8. தந்தைக்குத் தாரம் மூன்றில் தரித்திடும் இளையா ளீன்ற
நீதியாய் மைந்தன் தானும் நிகழ்துவோ மிவனே யம்மா
மாதவ [2] ருறவு கொள்வன் மவன்சித்திர வீடு செய்வன்
தீதிலா நற்கு ணத்தான் தீங்கதை எண்ணு னாகும்.

8. ஜாதக ருடைய தகப்பனூர், தன்னுடைய தகப்பனுருக்கு வந்து வாய்த்த மூன்று மனைவியர்களுக்குள் இளையவளான இரண்டாவது மனைவி பெற்றெடுத்த நீதியானப் பிள்ளை என்று, அம்மையே ! நாங்கள் சொல்லுகின்றோம். இவர் முனிவர்களுடைய சினேகிதத்தை அடைவார். இவர் சித்திர வேலைகள் அமையப்பெற்ற அழகான வீடு கட்டுவார். கெடுதி இல்லாத நல்ல குணங்களையுடையவர். பிறருக்குத் தீங்கு செய்ய எண்ணவே மாட்டார்.

குறிப்பு.—பிதுர் பாட்டனுருக்கு மூன்று தாரம். ஜாதகருடைய தகப்பனூர் ராசி மீனம். இந்த மீனத்திற்குத் தகப்பனூர் ராசி விருச்சிகம். ஆகையால் விருச்சிகம் பிதுர்பாட்டன் ராசி. விருச்சிகத்திற்கு லாபாதிபதியாகிய புதனும் களத்திராதிபதியாகிய சுக்கிரனும் கூடி இருப்பதைக் கவனிக்கவும்.

---

[1] தேன். [2] முனிவர்.

"கொள்ளும் லாபாதி களத்திராதி கூடினுலும்பார்த்தாலும்
தெள்ளும் பலவானுகி இவர் திரிகோணத்திருந்திடினும்
உள்ள விவாகம் மூன்றென்றே உரைப்பர் கணித வல்லோர்கள்"
ஜாதக அலங்காரம் பாட்டு நெம்பர் 689.

9. துணையவன் சேதி கேளாய் துருசான[1] நடையு மாவன்
வினையான[2] மனத்தா னுகும் விரும்புவா னடிசில்[3] தானும
பிணையான[4] வார்த்தை சொல்லான் பேசுமுன் கோபம் கொஞ்சம்
அணையவே பகையும் கொஞ்சம் அம்பிகை யாளே கேளாய்.

9. ஜாதகருடைய தகப்பனுருடைய சகோதரனது குணுதிசயங்களை இனிமேல் சொல்லுகிருர். இவர் குற்றமான நடையையுடையவர். குற்றமான நடவடிக்கையுடையவர். வஞ்சகமான, கள்ளத்தனமான மனதை உடையவர். சாப்பாட்டின்பேரில் பிரியமுள்ளவர். ஆசையான விரும்பத்தக்கப் பேச்சுகளைப் பேசமாட்டார். பேசுவதற்கு முந்தியே சிறிது கோபமுடைய முன்கோபியாவர். இவருடன் சேர்ந்து பழகுபவர்களிடம் இவர் சிறிதுகோபங்கொள்வார். பார்வதியே ! கேட்பீராக.

10. மனமது மர்ம்ம முள்ளான் மாநிலம் விருத்தி செய்வன்
இனமாதால் பெருமை பூண்பன் இடருகள் வந்து நீங்கும்
தன் சொலேதட்டானுகும் சமர்த்தான வார்த்தை சொல்வன்
கன முள குடும்பி யாவன் கண்டிடும்[5] மூல சூடு.

10. ஜாதகருடைய தகப்பனுருடைய சகோதரர் மர்மமான மனதுடையவர். பெரிய பூமியைப் பயிர் செய்து விருத்தி செய்வார். தன்னுடைய இனத்தைச் சேர்ந்த ஒரு பெண் பாலால் பெருமையை அடைவார். இவருக்குக் கெடுதிகள் வந்து நீங்கும், இவருக்குப் பேசும்போது வார்த்தைகள் தடைபடாமல் வரும். இவர் சாமர்த்தியமாய்ப் பேசுவார். இவர் பெரிய குடும்பமுள்ளவராவர். இவருக்கு மூலச்சூடு என்ற ஒரு நோய் ஓரளவு இருக்கும்.

11. மாநிற முடைய னுவன் மாடுகள் விருத்தி யுள்ளான்
ஆண்டவர் நேசம் கொள்வன் அவன் மாதுகு லமும் வேறும்
தேன் மொழி கூறு வானும் சேயிழை பிரிய னுவன்
வானவர் பத்தி பூண்பன் வாக்குகள் தப்பானுமே.

11. ஜாதகருடைய தகப்பனுருடைய சகோதரர் மானிறமான தேகமுடைவர். அவருக்கு ஆடுமாடுகள் விருத்தியாகும். அவர் முப்பது வயதிற்கு மேற்பட்டு நாற்பத்தெட்டு வயதிற்கு உட்பட்ட ஆண்மக்களிடத்தில் நட்புமுள்ளவர். அவருடைய மனைவியின் ஜாதி குலம் வேறுனதாகும், புதியதாகும். அவர் தேன் போன்ற இனிப்பான வார்த்தைகளைச் சொல்லுவார். பெண், ஆபரணம் இவைகளின் பேரில் ஆசையுள்ளவர். தேவர்கள், தெய்வங்கள் இவர்களிடத்தில் பக்தி உள்ளவர். தான் சொன்ன வாக்கைத் தவறிடாமல் கார்ப்பாற்றுவார்.

---

[1] குற்றமான. [2] வஞ்சகயான. [3] சோறு.
[4] ஆசையான. [5] ஓரளவு.

12. மனைவியு மொன்றேயாகும் மைந்தரு மாண்பா லிரண்டு
கனமுடன் பெண்பா லொன்று கழறுவோம் தீர்க்கமாக
பிணையாகும் மூன்று தாமும் பிரியாம லொன்ருய் வாழ்வன்
சினமிலாத் தவங்கள் செய்யும் தேவியே கேட்டிடாயே.

12. ஜாதகருடைய தகப்பனுருடைய சகோதரருக்குத் தாரம் ஒன்றே ஆகும். இவருக்குச் சந்ததிகள் இரண்டு ஆண்களும் ஒரு பெருமை வாய்ந்தப் பெண்ணும் நீண்ட ஆயுளுடன் இருப்பார்கள் என்று சொல்லு கிறோம். இந்த மூன்று சந்ததிகளும் ஒன்றுக்கொன்று பிரியாமல் இருந்து கொண்டு தங்களுடைய தகப்பனுருடனும் கூடி வாழ்வார்கள். நாங்கள் சொல் வதைக் கோபமில்லாமல் தவங்கள் செய்யும் பார்வதியம்மையே ! கேட்பீராக.

13. இத்தகை யுடையா னுக்கு இவனுமே யிரண்டாம் ஜன்மம்
மிக்கவே யுதிப்பா னுகும் விளம்புவோ மிவன்குணத்தைத்
தக்கவே கல்வி கற்பன் தைரியன் சிவந்த மெய்யன்
சிக்கன மில்லா னுகும் தேவியே கேட்டிடாயே.

13. இதுவரையிலும் ஜாதருடைய தகப்பனுருடைய விஷயங்களை யும், தகப்பனுருடன் பிறந்தவருடைய விஷயங்களையும் சொல்லிவந்தார். இனிமேல் ஜாதகருடைய விஷயங்களைச் சொல்லுகிறுர். மேலே இதுவரையி லும் சொல்லிவந்த விஷயங்களையுடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகர் இரண் டாவது கர்ப்பமாக ஜெனனமானுர். ஜாதகருடைய குணுதிசயங்களை இனி மேல் சொல்லுகிறோம். ஜாதகர் தகுந்த கல்வியை அடைவார். தைரிய முள்ளவர். சிவந்த நிறமான தேகமுடையவர். சிக்கனமாய் இல்லாமல் செல வாளியாயிருப்பார். பார்வதியம்மையே ! நாங்கள் சொல்வதைக் கேட் பீராக.

14. வருவோரை ஆதரிப்பன் வாக்குகள் சுத்த முள்ளான்
திருமகள்[1] வாச முள்ளான் சித்திர வீடு செய்வான்
பெருமவர் நேசம் கொள்வன் பலமான குடும்பி யாவன்
விரைவினில் நடக்க வல்லன் மேதினியில் சேர்ப்பா னென்றோம்.

14. ஜாதகர் தன்னிடம் வருபவர்களின் மேல் அன்பு வைத்து அவர்களுக்கு உதவி செய்வார். சுத்தமான நல்ல வார்த்தைகளை உபயோகிப் பார். தன்வீட்டில் இலக்ஷ்மி வந்து வாசஞ் செய்வாள். செல்வப் பெருக் குண்டாகும். அழகான சித்திர வீட்டை உண்டாக்குவார். பெருமை வாய்ந்த வர்களுடைய சினேகிதத்தை அடைவார். வலிவான பெரிய குடும்பத்தை உடையவர். வேகமாயும் சீக்கிரமாகவும் நடக்கும் வல்லமை உடையவர். பூமி யில் தனம் முதலியவைகளைச் சேர்த்துவைப்பார் என்று சொல்லுகிறோம்.

15. வண்டியும் நந்தி யெய்தும் வழக்கது சொல்லா னுகும்
கண்டவர்க் கீத லுண்டு காரிய சமர்த்த னுகும்
அண்டின பேருக் கெல்லாம் அருநிதி உதவி செய்வன்
துண்டமாய்ப் பேசவல்லன் துராசையு மில்லா னென்றோம்.

[1] இலக்ஷ்மி

15. ஜாதகருக்கு வண்டியும் மாடும் வந்து சேரும். இவர் வழக்கு உண்டாகும்படியாய்ப் பேசி வீண்வாதஞ் செய்யமாட்டார். தன்னை வந்து பார்த்தவர்களுக்குத் தன்னிடத்திலுள்ளதைத் தருமஞ்செய்வார். எடுத்தக் காரியத்தை முடிப்பதில் சாமர்த்தியமுள்ளவர். தன்னை வந்து அண்டிக் கேட்டவர்களுக்கெல்லாம் அருமையான தனத்தைக் கொடுத்து உதவி செய்வார். சுருக்கமாகவும் கண்டித்தும் பேசுந் திறமை வாய்ந்தவர். கெட்ட ஆசையும் இல்லாதவர் என்று சொல்லுகிறோம்.

16. குலத்திற்குச்சிரேஷ்ட னுவன் குணமது இரண்டு மாகும்
நிலையான பூமி சேர்ப்பன் நேமியில் சல்லியம்[1] கொள்ளான்
உலகிற்கு உதவி செய்வான் உண்டியும் சுகமாய்க் கொள்வான்
தலமதில் தீர்த்தம் தோய்வன்* தன்கரம் பத்ம ரேகை.

16. ஜாதகர் தன்னுடைய குலத்தில் சிரேஷ்டராகவிருப்பார், இருவித குணங்களுமுடையவராவர். நீடித்த காலம் இருக்கும்படியான பூமியைச் சேர்ப்பார். பூமியில் கடன் இல்லாதவர். உலகத்தோருக்கு உதவியைச் செய்பவர். சுகமான நல்ல உணவைச் சாப்பிடுபவர். புண்ணிய ஸ்தலங்களுக்குச் சென்று அவ்விடத்தில் தீர்த்த ஸ்நானஞ் செய்து கடவுளை தரிசிப்பார். தன்னுடைய உள்ளங்கையில் பத்ம ரேகை என்ற ஒருவித ரேகையை உடையவர்.

**குறிப்பு.**—* இவருடைய ஜாதகத்தில் ஒன்பதாமிடமாகிய மீன ராசியைக் குரு, சுக்கிரன், புதன், சந்திரன் இவர்கள் பார்ப்பதைக் கவனிக்கவும். "ஆன பொன் (குரு), புகர் (சுக்கிரன்), மால் (புதன்), இந்து (சந்திரன்) ஆக இந் நான்கு பேரும் தானம் ஒன்பதிலே நின்றால் தர்மராஜாவே என்பர்". துய்ய கேரளம், ஒன்பதாம் பாவம் 27-வது பாடலைப் பார்க்கவும். மேலும் குரு, சுக்கிரன், புதன் இவர்கள் மூவரும் ஒன்பதாம் பாவத்தைப் பார்ப்பதைப்பற்றித் துய்ய கேரளம் ஒன்பதாம் பாவம் 11-வது பாடலையும் பார்க்கவும். குரு, சுக்கிரன், புதன், சந்திரன் இவர் கூடி ஒன்பதில் இருப்பதும் பார்ப்பதும் விஷயமாகச் சாராவளி முப்பத்திரண்டாவது அத்தியாயம் 103, 104-வது சுலோகங்களைப் பார்க்கவும்.

17. இவனுடைத் துணைவர் தம்மையியம்புவோ மாண்பா லிரண்டு
அவனியில் கன்னி மூன்று அறைகிறோம் தீர்க்கமாக
நவனியில் இரண்டு நட்டம் நவிலுவோ மிவனுக்கேதான்
தவசியை ஆதரிக்கும் தயாபரியே மேலும் கேளே.

17. ஜாதகருடைய கூடப்பிறந்தவர்களைப் பற்றிச் சொல்லுகிறோம். ஜாதகருக்கு ஆண் சகோதரர்கள் இருவரும், பெண் சகோதரர்கள் மூவரும் பூமியில் நீண்ட ஆயுளையுடையவர்களாக விருப்பார்கள் என்று நாங்கள் சொல்லுகிறோம். இவருக்குச் சகோதரங்களில் இரண்டு சகோதரர்கள் நஷ்டமாவர் என்று சொல்லுகிறோம். தபசு செய்பவர்களின் பேரில் அன்பு வைத்து உதவி செய்யுங் கிருபையுடைய பார்வதியம்மையே! நாங்கள் இன்னும் மேலே சொல்லப்போவதைக் கேட்பீராக.

---

[1] கடன், இக்கட்டு.

18. இன்னவன் மணத்தின் கால மியம்புவோ மொருபா னெட்டில்
கன்னிகை மேற்குத் திக்கில் கலப்பளாமவள் வசீகரமாகும்
அன்னம்போல் வடிவுமாகும் அவள்குணம் இருநி றத்தாள்
உன்னத வார்த்தை சொல்வாள் உரைக்குமுன் கோபியாமே.

18. ஜாதகருக்கு விவாகக் காலத்தை இனிச் சொல்லுவோம். இவருக்குப் பதினெட்டாவது வயதில் மனைவி மேற்குத் திக்கிலிருந்து வந்து வாய்ப்பாள். அவள் புருஷனை வசியப்படுத்துந் தன்மையுடையவள். அன்னத்தைப் போன்ற அழகான வடிவம் உள்ளவள். அவள் தேகம் இரண்டு நிறங்களுங் கலந்த நிறமான மாநிறமுள்ளதாகும். அவள் உன்னதமான மேன்மை யான வார்த்தைகளைச் சொல்லுவாள். அவள் பேசுவதற்கு முன்னே கோபத்தை யுடையவளாகி முன்கோபியாயிருப்பாள்.

குறிப்பு.—வயது வருஷம் 17-0-0 முதல் வருஷம் 18-0-0 வரையில் ராகு தசையில் புதன், கேது புத்திகள் நடக்கின்றன. ராகு களத்திர ஸ்தானத்தி லிருந்து களத்திர ஸ்தானாதிபதியாகிய சனியால் பார்க்கப்படுவதால் விவாகத் திற்கு யோகமுண்டு.

19. அடக்கமும் பெருமை யுள்ளாள் அன்னமும் போட இச்சை
நடக்கையும் நல்ல தாகும் நாயகி வயது தீர்க்கம்
திடமான புஜண்டர் சொல்ல ஜயமுனி கூறுகின்றார்
மடமனை தீர்க்க மென்று வகுத்திட்டீர் முனிவ ரேநீர்.

19. ஜாதகருடைய மனைவி அடக்கமும் பெருமையு முடையவள். அன்னம் அளிப்பதில் ஆசையுள்ளவள். அவளுடைய நடவடிக்கையும் நல்லதாக விருக்கும், அவளுக்கு வயது தீர்க்கமானது என்று உறுதியாய்ப் புஜண்ட ரிஷியானவர் சொல்ல, ஜயமுனியானவர் அவரைத் தடுத்து, முனிவரே ! நீர் ஜாதகருடைய மனைவி தீர்க்கமான ஆயுளை உடையவள் என்று சொல்லி விட்டீரே.

20. ஏதுகார ணத்தி னாலே யியம்புவீர் எந்த னுக்கு
ஓதுவேன் கேளு மையா உயரேழோன் அஞ்சில் நிற்கப்
போதவே குருவு மேழை பொரிந்தியே பார்த்த தாலே
மேதினில் தார மொன்று விளம்புவோம் முனியே கேளாய்.

20. என்ன காரணத்தினால் நீர் அப்படிச் சொன்னீர் ? அதை எனக்குச் சொல்லும் என்று கேட்க, அதற்குப் புஜண்டர் நான் காரணத்தைச் சொல்லுகின்றேன் ; நீர் அதைக் கேளும் ஐயா. ஏழாம் பாவாதிபதியாகிய சனி ஐந்தாம் பாவத்திலிருக்க, அந்த ஏழாம் பாவத்தைக் குரு பார்ப்பதால் ஜாதகருக்கு ஒரே தாரம் என்று நான் சொல்லுகிறேன், முனிவரே ! கேளும்.

21. அப்படிச் சொல்லொ ணாது அரவுமே [1] ஏழில் நிற்க
ஒப்புடன் குசனும் [2] காரி [3] ஓரேழைப் பார்த்த தாலே
செப்புவோம் ஜாத கர்க்குத் தேவிக ளிரண்டே யாகும்
இப்படி யிருவர் சொல்ல ஈச்வரி சொல்லு கின்றாள்.

---

[1] இராகு [2] அங்காரகன் [3] சனி

21. அதன் பேரில் ஜயமுனி சொல்லுகின்ருர். அவ்விதமாகச் சொல்லக்கூடாது, ராகு ஏழாவது பாவத்திலிருப்பதாலும், அங்காரகனும் சனியும் ஏழாம் பாவத்தைப் பார்ப்பதாலும் ஜாதகருக்கு இரண்டு மனைவிகள் என்று நான் சொல்லுகிறேன். இவ்விதமாக இரண்டு முனிவர்களும் தர்க்கித்து வாதஞ் செய்யும் போது பார்வதி பிரவேசித்துச் சொல்லுகிருர்.

22. இருவர்கள் வார்த்தை தானு மியம்பினீர் சரியே யப்பா
வருமவன் தனக்குத் தாரம் வரைகிறேன் ஒன்றே யாகத்
திறமையாய் வேறு மாது செப்புவோ மபிமானம் தான்
மருமமாய்த் தந்தை தாய்போல் வந்திடு மபிமானம் தான்.

22. நீங்கள் இருவரும் சரியான வார்த்தையைச் சொல்லியிருக்கின்றீர்கள். ஜாதகருக்குத் தாரம் ஒன்றே என்று நான் சொல்லுகின்றேன். ஆனுல் அவருக்கு இன்னொரு பெண் அபிமான மனைவியாக ரகசியமாக விருப்பாள். அவள், ஜாதகரை அவருடைய தாய் தகப்பனுரைப் போல ஆதரிப்பாள்.

23. எந்தக்கா லத்தில் தான்நீரியம்பினீ ரந்தச் சங்கை
முந்தவே கூறு மென்ன முப்பது ஆண்டி லேதான்
சந்தத முத்தி ரத்தில் சைவமாம் குலத்து மாது
வந்திடும் பணிதி பொன்னு மவளுக்குப் புத்திரர் சொல்வீர்.

23. ஜாதகருக்கு எந்த வயதில் அந்த அபிமான மனைவியின் சம்மந்தம் ஏற்படும் என்ற விஷயத்தைச் சீக்கிரம் சொல்லுவீர் என்று கேட்க. ஜாதகருக்கு முப்பதாவது வயதில் இவ்விதம் நேரிடும். அந்த அபிமான மனைவி சைவ குலத்தைச் சேர்ந்தவள். அவள் வடக்குத் திக்கிலுள்ளவள். அவளுக்குச் சொத்துக்களும் ஆபரணங்களுமுண்டு. இனிமேல் நீங்கள் ஜாதகருக்குச் சந்ததி விஷயத்தைப் பற்றி சொல்லுவீர்களாக.

**குறிப்பு.**—வயது ஷ 29–0–0 முதல் ஷ 30–0–0 வரையிலும் குரு தசையில் சனி புதன் புக்திகள் நடக்கின்றன. குரு இரண்டாவது களத்திர ஸ்தானமாகிய ஒன்பதிற்கு உடையவராய் ஏழையும், ஒன்பதையும் பார்க்கின்ருர். அவர் ஆறுக்கும் உடையவர். லக்கினுதிபதிக்கும் ஒன்பதிற்குடையவருக்கும் சம்மந்த முண்டானுல் இரண்டாவது தாரயோக முண்டென்பர். குரு ஆறுக்குடையவராதலால் அந்தத் தாரம் பங்கமுள்ளதாகும் என்பர்.

24. மதலைக ளில்லா தாகும் மலடியா யிருப்பா ளென்ருேம்
சுதர்களு முதல்ம னைக்கு ஜனிக்குமே யென்று சொன்னேம்
விதங்களைச் சொல்லு கின்றேன் மேவிடு மாண்பா லொன்று
சதியிலா பெண்பா லவ்வாறு ஜனித்திடும் தீர்க்க மாக.

24. ஜாதகருடைய அபிமான மனைவி சந்ததி இல்லாமல் மலடியாயிருப்பாள் என்று சொல்லுகின்ருேம். முதல் மனைவிக்குப் பிள்ளைகள்

பிறக்குமென்று சொல்லுகிறேம். அதன் விவரத்தை சொல்லுகிறேம், ஆண் சந்ததி ஒன்றும், அவ்வாறே குற்றமில்லாத பெண் சந்ததி ஒன்றும் பிறந்து நீண்ட ஆயுளுள்ளவர்களாகவிருப்பார்கள்.

25. அஞ்சினில் [1] காரி நிற்க அஞ்சவன் நாலில் நிற்கத்
[2] துஞ்சிடும் மதலை [3] யென்றேம் சுரர்குரு [4] விற்கஞ்சில் ராகு
தஞ்சமா [5] யிருப்ப தாலே ஜனிக்கினும் தீதே தேயாகும்
கொஞ்சிய பராசர் சொல்லக் [6] குறுமுனி கூறுகின்றார்.

25. இலக்கினத்திற்கு ஐந்தில் சனி இருந்து ஐந்திற்குடைய அங்காரகன் நாலில் இருப்பதால் ஆண் குழந்தைகள் இறந்து போய்விடுமென்று சொல்லுகின்றேம். தேவ குருவாகிய குருபகவானுக்கு ஐந்தாவது பாவத்தில் இராகு வலிவாய் இருப்பதால் ஆண் குழந்தைகள் பிறந்தாலும் அவை நிதானமாக, அஃதாவது, அந்தியத்தில் பிறக்கும் என்று பராசர் குற்றமாகச் சொல்ல, குறுமுனியாகிய அகஸ்தியர் சொல்லப் போகிறார்.

26. கருமத்தோன் நாலில் நிற்கக் ஊகனும் [3] நவத்தைப் பார்க்க
உருமங்கள் [4] செய்ய வேண்டி உறைந்திடும் புத்திரர் தானும்
வரும்சுதர் முதலில் பீடை வரைகிறே மிவனுக் கேதான்
பெருவயிரோனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

26. கர்மாதிபதியாகிய அங்காரகன் நான்காவது பாவத்திலிருப்பதாலும், குரு ஒன்பதாவது பாவத்தைப் பார்ப்பதாலும் ஜாதகருக்குக் கர்மங்கள் செய்யும்படியான அமைப்பு இருப்பதால் புத்திரன் உண்டு என்று சொல்லுகிறேன். ஜாதகருக்கு முந்தி பிறக்கும் பிள்ளைகள் பீடையை யுடையனவாகி இறந்து போய்விடும் என்று நான் சொல்லுவதைப் பெரிய வயிற்றையுடைய விநாயக கடவுளைப் பெற்றெடுத்த புண்ணியவதியாகிய பார்வதி யம்மையே! கேட்பீராக.

27. மதலைகள் [7] வரைந் தீட்டீர் முனியே நீர்தாம்
விதங்களைச் [8] சொல்லுமென்ன வித்தகன் [9] முன் ஜன் மத்தில்
அதிகபா வங்கள் செய்தான் அத்தோஷ கார ணத்தால்
சுதர்களு முதலில் பீடை சொல்லு வாயந்தச் சங்கை.

27. ஜாதகருக்குப் பிள்ளைகள் பிறக்கும் என்று சொன்னீரே முனிவரே! அந்த அதிசயமான விஷயங்களைச் சொல்லும் என்று கேட்க, சாமார்த்திய முள்ளவரும் பொருளைக் கொடுப்பவருமான ஜாதகர், தன்னுடைய முன்ஜன்மத்தில் அதிகப் பாபங்களைச் செய்திருக்கிறார். அந்தத் தோஷங்களின் காரணத்தால் அவருக்கு முந்திப் பிறக்கும் பிள்ளைகளுக்குப் பீடை உண்டாகும் என்று சொல்ல, அந்த விஷயங்களை விபரமாகச் சொல்லுவீர் என்று கேட்கிறார்.

---

[1] சனி [2] இறக்கும் [3] ஆண் குழந்தை [4] தேவ குரு
[5] பெருமையாய்; வலியாய் [6] அகஸ்தியர்
[8] குரு [9] கர்மங்கள்

[7] ஆண் குழந்தைகள் [8] அதிசயமான விஷயங்கள்
[9] சாமர்த்தியமுள்ளவனும் பொருளைகொடுப்பவனுமான ஜாதகர்

**வேறு**

28. அவனியிலே காஞ்சிநகர் தென்மே லாக
அருகினிலே சமணகுலம் வந்தான் பாலன்
தவநிலை உடையானுய் கடவுள் பக்தித்
தான்பணிந்து பணைவர்கள் பெருக்க முண்டாய்
நவனியிலே தனிகனுய்ச் செட்டுச் செய்து
நாயகனும் வாழுநாளில் வந்த ஊழை[1]
[2] உவமையாய்ச் சொல்லுகின்றேன் தாயே கேளும்
ஊர்க்கணக்கன் மனைவிமே லிச்சை கொண்டான்.

28. பூமியிலே காஞ்சிமா நகரத்திற்கு அருகில் தென் மேற்கிலுள்ள ஒரு கிராமத்தில் சமணர்கள் குலத்தில் இந்த ஜாதகர் முன் ஜன்மத்தில் பிறந்தார். அவர் தவங்கள் செய்யும் நிலைமையையடைந்து கடவுள் பக்தி பூண்டு, கடவுள் தொண்டு செய்து, வேலைக்காரர்கள் அதிகம் உடையவராயும், பூமியில் செல்வம் உடையவராய் வியாபாரங்களைச் செய்துகொண்டும் வாழ்ந்து கொண்டிருந்த காலத்தில் நேர்ந்த ஊழ்வினையாகிய முன் ஜன்மத்தின் கர்மத்தைப் பொருத்தமாகக் சொல்லுகிறேன், பார்வதியம்மையே! கேட்பீராக. கிராமக் கணக்கனுடைய மனைவியின் பேரில் ஆசைப்பட்டார்.

29. இச்சை கொண்டு போகித்து வாழுந் நாளில்
இதை வரனும் தானறிந்து மனைவி பேரில்
நிச்சய மதாய்க் கோபித்து விரோதம் பேச
வித்தகியும் சமணன் மேல் ஆசை கொண்டு
உச்சரித்தாள் வரன் சேதியாவும் தானும்
உன் கணவர் பக்கலிலே வேண்டா மென்று
நிச்சயமாய் என் பக்கல் வருவாய் நீயும்
நேமிதனில் அம்மொழி போல் நின்றுள் மாது.

29. ஆசை மேலிட்டு அவளிடம் சேர்ந்து சுகித்து வாழுகின்ற காலத்தில் அவளுடைய புருஷன் இந்த விஷயத்தைத் தெரிந்துகொண்டு தன் மனைவியாகிய அவளிடத்தில் உண்மையாகவே கோபங்கொண்டு விரோதமாகப் பேசி அவளைக் கண்டிக்கச் சாமர்த்தியமுள்ள அவள் சமண ஜாதியைச் சேர்ந்தவன் பேரில் ஆசை மேலிட்டு, தன்னுடைய புருஷன் தன்னிடத்தில் நடந்து கொண்ட சங்கதி எல்லாவற்றையும் அந்தச் சமணக் கள்ள புருஷனிடஞ் சொன்னுள். அதன் பேரில் அந்தச் சமணன் நீ இனி மேல் உன் புருஷனிடம் இருக்கவேண்டாம், உண்மையில் என்னிடம் வந்து சேர்ந்துவிடு என்று சொல்லவே, அவள் இப் பூமியில் சமணன் சொல்லிய வார்த்தை பிரகாரம் அவனிடம் சென்று நிலைத்துவிட்டாள்.

30. இன்பமில்லாக் கணக்கனுக்கு இரண்டாம் மாது
இவன்விலக்கக் கருணிகன் வருத்த முற்று
என்மனைவி தனைக்கெடுத்த பாவிக் கேதான்
இப்பிறப்பில் ஆண்சுதர்கள் யெய்தா ராகிப்

---

[1] வினையை பூர்வகர்மத்தை [2] பொருத்தமாக

பின்ஜனன வமிசங்கள் தோஷ மாகிப்
புத்திர ருதிக்கில் நஷ்டம் செய்வாயீசா
தென்புலத்தார்[1] தனைநோக்கி வருத்த முற்றான்
சேதியெனும் பாவமது சேர்ந்த தம்மா.

30. அவள் பேரில் ஆசையில்லாத அந்தக் கணக்கனுக்கு அவள் இரண்டாவது தாரமானவள், அவள் தன் புருஷனை விட்டு விலகிப் போகவே கணக்கன் வருத்தங்கொண்டு, என்னுடைய மனைவியைக் கெடுத்து விட்ட பாவியாகிய சமணனுக்கு இந்த ஜன்மத்தில் ஆண் குழந்தைகள் விருத்தியாகாமலும், மறு ஜன்மத்திலும் கூடத் தன் சந்ததிகளுக்குத் தோஷம் நேரிட்டும் புத்திரர்கள் பிறந்தால் அவர்கள் இறந்துவிடும்படியும் செய்வாயாக, ஈசுவரனே! என்று சொல்லி வேண்டிக்கொண்டு தன்னுடைய பிதுர்வர்க்கங்களை நினைத்து வருந்தினான். இப்போது சொல்லி வந்த விஷயங்களாகிய பாவம் இந்த ஜாதகரை வந்து அணுகியது, பார்வதி அம்மையே! என்று சொன்னார்.

**வேறு.**

31. கடவுளர் தமக்கு விட்ட காளையை ஏரில் கட்டி
அடவுடன் உழுதா னென்றோம் அதுஒரு தோஷ மாச்சு
திடமுடன் தாய்தந் தைக்கே செப்பினான் விரோத வார்த்தை
தொடர்ந்தது அந்தத் தோஷம் சுந்தரி[2] கேட்டி டாயே.

31. ஜாதகர் முன்ஜன்மத்தில் தெய்வங்களுக்காகச் சுற்றி விட்டு விடப்பட்ட எருதை ஏரில் பூட்டி உழுதான் என்கிறோம். இஃது ஒரு தோஷமாயிற்று. மேலும் ஜாதகர் தாய் தந்தையர்களிடம் விரோதமான வார்த்தைகளைச் சொன்னார். அதுவும் ஒரு தோஷமாக இந்த ஜன்மத்தில் அவனைத் தொடர்ந்து வந்திருக்கிறது. அழகு பொருந்திய பார்வதி அம்மையே! கேட்பீராக என்று சொன்னார்.

32. கருணிக மாதுக் கேதான் கலந்தது கர்ப்பம் தானும்
உரிமையாய்ப் பண்டி தங்கள் உத்தமன் செய்தா னென்றோம்
கருவுமே விலகி யேதான் காதலி மரண மாகி
உரிமையாய்க் காஞ்சி தன்னில் உதித்தனள் தீயின் வம்சம்.

32. அந்தக் கணக்க ஜாதிப் பெண்ணுக்குக் கர்ப்பம் உண்டாகவே, ஜாதகர் தன் முன்ஜன்மத்தில் இஷ்டத்துடனும் உரிமையுடனும் அவளுக்குத் தகுந்த வைத்தியங்களைச் செய்யவே, கர்ப்பம் பிரஷ்டமாகி வெளி வந்துவிட, அந்த ஆசை மேலிட்டுள்ள பெண் இறந்து, காஞ்சிமா நகரத்தில் வன்னியர் குலத்தில் தன் இஷ்டம் போல் வந்து பிறந்தாள்.

33. பின்னையும் மரண மாகிப் பிறப்பளே சைவ வமிசம்
அன்னவள் முப்பா னுண்டில் அபிமான மாகச் சேர்வள்
இன்னவன் சமணன் தானும் எமன்பதி நரகம் புக்கித்
தன்னிலே வைசிய னாகத் தானவன் வந்தா னென்றோம்.

---

[1] பிதுர்க்கள் [2] பார்வதி

33. இப்படிப் பிறந்த அவள் மறுபடியும் இறந்து சைவ குலத்தில் பிறந்தாள். இந்தச் சமணரும் எமபட்டணத்தில் நரகத்திற்குச் சென்று வைசியனாக வந்து பிறந்தார். இவ்விதமாய்ப் பிறந்த இந்த ஜாதகருக்குத் தன்னுடைய முப்பதாவது வயதில் அவள் அபிமான மனைவியாக வந்து நேருவாள்.

34. இந்தமூ விதபா பத்தா லியம்பினோம் புத்ராதி தோஷம்
தன்குலம் குற்ற மெய்தும் தந்தையின் பூர்வம் சொல்வேன்
உன்னத வள்ளூர் மேல்பால் உறைந்திடும் சிற்றூர் தன்னில்
அன்னவன் மறையோ னாக அவனுமே வந்தா னென்றோம்.

34. இந்த மூன்றுவித பாபங்களாலே ஜாதகருக்குப் புத்திர தோஷத்தையும் களத்திர தோஷத்தையும் நாங்கள் சொன்னோம். இனி மேலாகத் தகப்பனாருடைய பூர்வ ஜன்ம விஷயத்தைச் சொல்லுகிறேன். மேன்மை தங்கிய வள்ளூருக்கு மேற்கிலிருக்கிறது என்று சொல்லக் கூடிய ஒரு சிறு கிராமத்தில் பிராமணக் குலத்தில் ஜாதகருடைய தகப்பனார் வந்து பிறந்தார்.

35. கல்வியு முடையா னாகிக் கனராசர் பக்கம் சேர்ந்து
நல்லதி காரம் பெற்று நாயகன் வாழுந் நாளில்
வல்லியும் [1] விதவை தானும் வந்தனள் சலங்கள் கொள்ளப்
புல்லிய [2] புத்தி கொண்ட புருடனும் அவள்பால் சென்று ;

35. ஜாதகருடைய தகப்பன் தன்முன் ஜன்மத்தில் கல்வி கற்றுப் பெரிய அரசரிடம் நல்ல அதிகாரமுள்ள ஒரு வேலையிலமர்ந்து வாழுங் காலத்தில் ஒரு விதவையான பெண் ஜலத்தைக் கொண்டுபோக வந்தாள். அவளிடம் இழிவான அற்பப் புத்தியுள்ளவன் சென்று ;

36. சிலசில வேறு வார்த்தை தேவிபால் சொல்லும் போது
நலமுள மாது தானும் நவின்றதுக் கிசையா ளாகிப்
பலமதாய் அவள்க ரத்தைப் பற்றினான் அவள் வெகுண்டு
குலவிய இல்லம் சென்று கூறினாள் துணைவ ரோடு.

36. அவன் அந்தப் பெண்ணிடம் சென்று குற்றமானச் சில வார்த்தைகளைச் சொல்ல அந்த நற்குணமுள்ளப் பெண் அவன் சொல்லிய வார்த்தைகளுக்கு இணங்காமல் போகவே, அவளுடைய கையைப் பலாத்காரமாகப் பிடித்தான். அதன் பேரில் அவள் கோபங் கொண்டு தன் வீட்டிற்குச் சென்று தன்னுடைய சகோதரர்களிடம் நடந்த விஷயத்தைச் சொன்னாள்.

37. அங்ஙனே கோப முற்று அதிகாரி மறையோன் பக்கல்
சங்கையைச் சொல்லும்போது சதிசெய்தோன் தனையழைத்துச்
சிங்கம்போல் கோபம் கொள்ளத் தீரன்பால் பொருளை வாங்கி
மங்கைமேல் குற்றம் சாட்ட வரைகு வாளந்த மாது.

[1] பெண் [2] இழிவான்

**37.** அதன் பேரில் சகோதரர்கள் கோபமுடையவராய் உடனே அதிகாரியாயுள்ள மேற் சொல்லிய பிராமணரிடஞ் சென்று நடந்த விஷயங்களைச் சொல்லவே, அந்தப் பிராமண அதிகாரி குற்றஞ் செய்தவனை வரவழைத்து அவன் பேரில் தான் ஒரு சிங்கத்தைப் போல அதிகமாகக் கோபித்துக்கொள்ள, அதன்பேரில் அந்தக் குற்றவாளியானவன் கொடுத்தப் பொருளை அந்தப் பிராமணர் வாங்கிக்கொண்டு, அந்தப் பெண் பேரிலேயே குற்றத்தைச் சாட்ட, அந்தப் பெண் பின்வருமாறு சொல்லு கிருள்.

**38.** என்பேரில் குற்றம் சொல்லி எதிரிபால் பொருள் பறித்தான்
பின்வரும் ஜன்மம் தன்னில் பெற்றதாங் குற்ற மாயும்
தன்பந்து இல்லா தாயும் ஜன நிந்தை யுடையனுயும்
அன்புடன் வாழ்வா யென்று அறைந்தன ளந்த மாது.

**38.** அந்த விதவைப் பெண், " என் பேரிலேயே குற்றத்தைச் சாட்டி விட்டு எதிரியினிட மிருந்து பொருளைப் பிடுங்கிக் கொண்டவனுன பிராமணன், தன்னுடைய மறு ஜன்மத்தில் தன்னைப் பெற்ற தாயாருக்குக் குற்றம் நேர்ந்தும் தன்னுடைய பந்துக்கள் இல்லாதவனுயும் ஜனங்க ளுடைய நிந்தையை யுடையவனுயும் இருந்து வாழவேண்டும் " என்று சொன்னுன்.

**குறிப்பு.**—எட்டாவது செய்யுளில் தகப்பன் இளையாளுக்குப் பிறந்தவன் என்பதையும், பாட்டனுக்கு மூன்று தாரம் என்று சொல்லி இருப்பதையும் கவனிக்கவும். தகப்பனுடைய தாய் இரண்டாவது மனைவியாகி இறந்து விட்டிருக்கவேண்டுமென்று ஊகிக்கலாம்.

**39.** அந்திய காலம் தன்னில் அவனுக்கு வாயு நோயால்
அந்தகன்[1] பக்கல் சேர்ந்து அரிமகன்[2] வரையப் பட்டு
வந்தவ னிவனே என்றேம் மங்கையும் கேட்க லுற்றுள்
முன் ஜன்மம் மறையோ னுக முயன்றவ னிச்சென் மத்தில் ;

**39.** அந்தப் பிராமணன் தன்னுடைய கடைசிக் காலத்தில் வாயு நோய்க் கண்டு இறந்து எமனை அடைந்து பிரம்மாவால் எழுதப் பட்டு ஜாதகருடைய தகப்பனுராக இந்த ஜன்மத்தில் வந்து பிறந்தார் என்று சொல்லுகிறேம். அதன் பேரில் பார்வதியம்மையார் பின்வரு மாறு கேட்கின்றுர்—" முன் ஜன்மத்தில் பிராமணராகப் பிறந்தவர் இந்த ஜன்மத்தில் ;

**40.** இக்குல முதிப்ப தென்ன இயம்புவீர் முனியே நீர்தாம்
மிக்கவே முன்ஜன் மத்தில் மறைகளை ஓதா னுகித்
தக்கவே பொருளி லிச்சை தானவன் வைத்த தாலே
செக்கனன் வைசியச் சேயாய் தேவியே கேட்டி டாயே.

[1] எமன் [2] பிரம்மா

40. இந்த வைசிய குலத்தில் பிறந்ததற்குக் காரணம் என்ன அதை, முனியே! நீர் சொல்வீர்'' என்று கேட்க, ''முன் ஜன்மத்தில் பிராமணராயிருந்தும் வேதங்களை ஓதாமல் பணத்தின் பேரில் ஆசை யுடையவராகி யிருந்ததால் செக்கை ஓட்டுகிற வைசியக் குலத்துப் பிள்ளையாய்ப் பிறந்தார் என்று சொல்லுகிறேன். பார்வதியம்மையே! கேட்பீராக.

41. அன்னையின் குணத்தைச் சொல்வேனன்புள மனத்தாளாகும்
இன்னவ ளிரு நிறத்தாள் யாவர்க்கு நல்லோ ளாவள்
பின்னையும் துணைவ ரில்லாள் புருடன்தன் மனம்போல் வாழ்வள்
தன்குலக் குற்ற முள்ளாள் சங்கரி மேலும் கேளே.

41. இனிமேல் தாயாருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகிறேன். அவள் அன்புள்ள மனத்தையுடையவள். இருநிறங்கள் கலந்துள்ள மாநிறமுள்ள தேகமுடையவள். எல்லோருக்கும் நல்லவளாயிருப்பாள். மேலும், தன்னுடன் பிறந்தவர்க ளில்லாதவள். தன்னுடைய புருஷ னுடைய மனத்திற்கு ஒத்தாப் போல் நடந்து கொள்ளுவாள். தன்னுடைய குலத்திற்குக் குற்ற மிருக்கும். பார்வதியம்மையே! மேலுங் கேட்பீராக.

42. அவளுடைப் பூர்வம் சொல்வேன் அறுமுகன் தணிகை கீழ்ப்பால்
இவளுமே கோகு லத்தி லெய்தினுள் வறுமை யின்றி
அவனியில் ஆடு மாடு அதிகமு முடையா ளாகி
நவனியில் வாழு நாளில் நாட்டுவோ மூழிதானே.

42. அவளுடைய பூர்வ ஜன்மத்தைச் சொல்லுகிறேன். ஆறுமுகக் கடவுளாகிய கந்தர் வசிக்கின்ற திருத்தணிகையின் கிழக்குத் திக்கில் இடையர் ஜாதியில் பிறந்து, வறுமையில்லாமல் பூமியில் ஆடுமாடுகள் அதிகம் உள்ளவளாகி வாழுகின்ற காலத்தில் வந்து சம்பவித்த ஊழ் வினையைச் சொல்லுகின்றேன்.

43. அரனுடை அபி ஷேகத்திற் கவள்மேதி பாலைத் தந்தாள்
உறைந்தது அந்தத் தோஷம் உத்தமி அந்தி யத்தில்
பெரும்பிணி குன்ம நோயால் புக்கினள் மறலி [1] பக்கல்
பிறமனால் வரையப் பட்டுப் பிரந்தனள் கங்கை [2] வமிசம்.

43. சிவபெருமானுடைய அபிஷேகத்திற்காக எறுமைப் பாலைக் கொடுத்தாள். அதனால் தோஷம் வந்து நேர்ந்தது. தன்னுடைய கடைசிக் காலத்தில் பெரிய நோயாகிய குன்ம நோயால் இறந்து எமனுடைய பக்கத்திற்குச் சென்று பிரம்மாவால் எழுதப்பட்டு வேளாண்மைத் [3] தொழிலைக் கைக்கொண்ட குலத்தில் பிறந்தாள்.

44. பின் ஜன்மம் அருணை [3] தன்னில் பிறப்பனே சைவ வமிசம்
தன்னிலே சுகமாய் வாழ்வள் தந்தையின் பின்ஜன் மங்கள்
மன்னிய வேங்க டத்துள் [4] மறைக் குல முதிப்பா னுகும்
சொன்ன சொல் குன்றிடாது சுந்தரி மேலுங் கேளே

---

[1] எமன் [2] வேளாள குலம்
[3] அருணை ஜலம் என்ற திருவண் மலை [4] திருப்பதியில

**44.** இவள் மறு ஜன்மத்தில் திருவண்ணமலை க்ஷேத்திரத்தில் சைவ குலத்தில் பிறப்பாள். இந்த விடத்தில் சுகமாய் வாழ்வாள். ஜாதகருடைய தகப்பனருடைய மறு ஜன்மம் திருப்பதியில் பிராமணர் குலத்தில் நேரிடும். நான் சொல்லிய விஷயங்கள் குறைவு படாமல், தவறிடாமல் நடக்கும். அழகு பொருந்திய பார்வதியம்மையே! நான் மேலுஞ் சொல்வதைக் கேட்பீராக.

45. தந்தையின் மரண காலஞ் சாற்றுவோ மிருபா னெட்டில்
பிந்திய கூனி[1] மாதம் பேசுவோம் கண்டந் தானும்
சந்தத மன்னைக்கே தான் சாற்றுவோ முப்பா னேழில்
முந்திய தனுசு மாதம்[2] மொழிகிறோம் மார கங்கள்.

**45.** ஜாதகருடைய தகப்பனருடைய மரண காலத்தைச் சொல்லு கிறேன். ஜாதகருக்கு இருபத்தெட்டாம் வயதில் பங்குனி மாதத்தில் அவரு டைய தகப்பனருக்குக் கண்டம் நேர்ந்து தகப்பனர் இறந்து விடுவார். ஜாதகருடைய தாயாருக்கு மரண காலத்தைச் சொல்லுகிறேன். ஜாதக ருக்கு முப்பத்தேழாவது வயதில் மார்கழி மாதத்தில் தாயாருக்கு மரணம் நேரிடும் என்று சொல்லுகிறோம்.

**குறிப்பு.**—(1) வயது ஷ 27–0–0 முதல் ஷ 28–0–0 வரையில் குரு தசையில் சனி புக்தி ஆகும். குரு பிதுர்ஸ்தானதிபதியாகி பிதுர் மாரக ஸ்தானமாகிய மூன்றில் இருப்பதைக் கவனிக்கவும்.

(2) வயது ஷ 36–0–0 முதல் ஷ 37–0–0 வரையில் குரு தசையில் சூரிய சந்திர புத்திகளாகும். மாதுர் ஸ்தானமாகிய துலாத்திற்கு 1–8-க்குடைய சுக்கிரனுடன் குரு சம்மந்தப்பட்டு 4-க்கு 12-ல் இருப்பதை கவனிக்கவும். துய்ய கேரளம் எட்டாம் பாவம் 20-வது பாட்டைப் பார்க்க வும். "சாவதாம் எட்டோ னேடும் தனித்த லக்கினத்தோடும் ........ என்பாரே."

46. ஜாதகன் நிரியா ணத்தைச் சாற்றுவோ மன்பா நாலில்
மேதினில் மேட மாதம் மேவிய பருவம் தன்னில்
தீதான சுரத்தி னலே தேகமே வாடு மென்றேம்
போதவே பின்ஜன் மத்தைப் போற்றுவோம் கேளும் தாயே.

46. ஜாதகருடைய மரண காலத்தைச் சொல்லுகிறோம். அவர் தமது ஐம்பத்து நான்காம் வயதில் சித்திரை மாதத்தில் பருவ திதியில் கொடுமையான ஜுரத்தால் தேகம் கெட்டுப்போய் இறந்து விடுவார் என்று சொல்லுகிறோம். இனிமேல் ஜாதகருடைய பின் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறோம். தாயாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

**குறிப்பு.**—வயது ஷ 53–0–0 முதல் ஷ 54–0–0 வரையில் சனி தசையில் சந்திர அங்காரக புக்திகள் ஆகும். சனி தசை நாலாந் தசை யாகும். சனிக்குச் சந்திர லக்கினதிபத்தியமாவது, பாக்கியாதி பத்திய

[1] பங்குனி மாதம். [2] மார்கழி மாதம்.

மாவது வரவில்லை. லக்கினத்திற்கு 1, 8, 10 யை நைசர்கிக சுபர் யாரும் பார்க்கவில்லை. இது மத்திம ஆயுள் அமைப்பும், சனி தசையில் மாரக அமைப்பும் வாய்ந்த ஜாதகம் என்று சொல்லக்கூடியதாம்.

47. மறுஜன்மம் காஞ்சி தன்னில் அவனுமே சௌராஷ்டர வமிசம்[1]
பெருமையா யுதித்து மேலும் பிரபலச் செட்டுச் செய்து
திருமகள் விலாசம் பூண்டு செல்வனும் வாழ்வா னுகும்
கரிமுகன் தன்னைப் பெற்ற காதலி[2] கேட்டி டாயே.

47. ஜாதகர் மறு ஜன்மத்தில் காஞ்சீபுரத்தில் பட்டுநூல்காரக் குலத்தில் பெருமையாயுள்ள குடும்பத்தில் பிறந்து பிறகு பிரபலமாய் வியாபாரஞ் செய்து லக்ஷ்மி அவருடைய வீட்டில் விளையாடி வாசஞ் செய்யும் செல்வாக்குடன் வாழ்வாராகும். யானையின் முகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றவளும், சிவபெருமானுடைய மனைவியுமாகிய தலைமை வகித்த பார்வதியம்மையே! கேட்பீராக.

48. இன்னவன் பொதுயோ கத்தை யியம்புவோம் சல்லிய மில்லான்
துன்னில பொருளுஞ் சேர்ப்பன் தொல்புவிக் குதவி செய்வன்
பின்னையும் நாலாண் டின்மேல் பேசுவோம் சேஷ யோகம்
உன்னத பிறைபோல் செல்வம் ஓங்கிடு மிவனுக்கே தான்.

48. ஜாதகருடைய யோகத்தை இனிமேல் சொல்லப்போகிறோம். ஜாதகர் கடன்பட மாட்டார். பூமி செல்வம் சேரும். உலகத்தாருக்கு உதவி செய்வார். மேலும் இவருக்கு நான்கு வயதிற்கு மேல் (பிதாவிற்குச்) சேஷ யோகம் என்ற ஒருவித யோகத்தைச் சொல்லுகிறோம். ஜாதகருக்குச் சந்திர பிறையைப் போல வளர்ந்து கொண்டே யிருக்கின்ற மேன்மையான செல்வம் ஓங்கித் தழைத்து நிற்கும்.

குறிப்பு.—பத்திற்குடையவர் நான்கில் இருந்தால் சேஷயோகம் (களத்திர யோகம்) என்று ஒருவாறு சொல்லக் கூடும்.

49. ஜனித்திடு காலம் தன்னில் சேய்[3]த்த சையிருப்புத் தானும்
குணித்தி டுமாண்டு மாறும் கூர்திங்களீரஞ் சாகும்
தினமது பத்த தாகும் செப்புவோம் பலனை யாங்கள்.
வினையான ரோகம் வாய்க்கும் விரயங்கள் மிகவே யுண்டு.

49. ஜனனகாலத்தில் அங்காரகனுடைய தசை கணிதம் பிரகாரம் ஆறு வருஷமும், பத்து மாதங்களும், பத்து நாட்களும் ஆகும். இதற்கு நாங்கள் பலனைச் சொல்லுகிறோம். வினையை அனுசரித்த ரோகம் ஜாதகருக்கு உண்டாகும், அவருடைய தகப்பனுருக்கு அதிகச் செலவுகள் உண்டாகும்.

---

[1] பட்டுநூல்கார ஜாதி. [2] மனைவி, தலைவி.

[3] அங்காரகன்.

50. கடனென்று காலி[1] சேதம் கலவர புத்தி யாகும்
அடவுடன் துணைவர் விருத்தி அவனில்லம் களவு போகும்
திடமுடன் சுபமு முண்டு திரும்பின சல்லியங்கள்
வடவரை[2] மகளே பின்பால் வழுத்துவோம் விவரம் யாவும்

50 ஜாதகருடைய தகப்பனாருக்கு ஒரு கடன் நேரிடும். மாடு இறந்து போய்விடும், கலவரமான சபல புத்தி உண்டாகும். ஜாதகருக்குச் சகோதரர் உண்டாகி விருத்தியாவார். வீட்டில் திருட்டு போகும். குடும்பத்தில் பெரிய சுபகர்மங்கள் நடக்கும், மறுபடியும் கடன்கள் ஏற்படும். இவைகளின் விவரங் களை எல்லாம் பின்பாகங்களில் சொல்லுகிறோம், வடக்கே உயர்ந்த மலையாகிய இமயமலைக்கதிபதியாகிய பர்வதராஜனுடைய மகளாகிய பார்வதியம்மையே! கேளும்.

---

[1] பசுக்கூட்டம்   [2] வடக்கே உயர்ந்த மலை

## ஜாதகம் 53

| புதன் சுக்கிரன் | சூரியன் | | கேது |
|---|---|---|---|
| | இராசி சக்கரம் | | லக்கினம் அங்காரகன் |
| | | | சந்திரன் |
| சனி ராகு | | குரு | |

பூரம் 1–ங் கால் சு. தசை இருப்பு 16–4–0.

1. சந்திரன் சிம்ம ராசி சனிராகு தனுசு வாகப்
புந்தியும் புகரும்[1] மீனம் பூமகன்[2] கடக மாக
மந்திரி[3] கோல தாக[4] மேடத்தி லிரவி[5] யாக
இந்தவாறு கோளும் நின்றுஇலக்கினம் வளைய லாக[6] ;

1. சந்திரன் சிம்ம ராசியிலிருந்து, சனியும் ராகுவும் தனுசிலிருந்து புதனும் சுக்கிரனும் மீனத்திலிருந்து, அங்காரகன் கடகத்திலிருந்து, குரு துலாத்திலிருந்து, சூரியன் மேஷத்திலிருந்து, இவ்விதமாகக் கிரகங்கள் இருந்து லக்கினம் கடக ராசியானால் ;

குறிப்பு.—இந்த ராசிச்சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கிரக் கிரக நிலை பொருத்த முடையதாகும்.—மேஷத்தில் சுக்கிரனும் சனியும், மிதுனத்தில் சூரியன், கடகத்தில் ராகு, சிம்மத்தில் சந்திரன், துலாத்தில் அங்காரகன், மகரத்தில் கேது, கும்பத்தில் புதனும், குருவும் ஆகும்.

2. பலன்தனைச் சொல்லு மென்று பார்வதி கேட்கும்போது
குலவிய பராசர் சொல்வர் குழவியு மாண்பால் ஜன்மம்
தலைவாசல் உத்தர மாகும் சாற்றுவோம் கீழ்மேல் வீதி
நீலமாய்த் தந்தி யீசன் நிகழ்த்துவோம் கீழ்ப்பா லாக

2. பலன்களைச் சொல்வீர் என்று பார்வதி கேட்கும்போது, பராசர முனிவர் சந்தோஷித்துச் சொல்லுகின்றார். ஆண் குழந்தை ஜெனனமாகும். வீதி கிழக்கு மேற்காகும். பிறந்த வீட்டின் முதன்மையான வாசற்படி வடக்கிலுள்ள தென்று சொல்லுவோம். கறுத்த ஆண் யானை முகத்தோனாகிய விநாயகக் கடவுள், சிவன் இவர்கள் கோயில்கள் கிழக்கில் இருக்கும் என்று சொல்லுகிறோம்.

---

[1] சுக்கிரன் [2] அங்காரகன் [3] குரு
[4] துலாம் [5] சூரியன் [6] நண்டுவளை என்ற கடகம்

3. சிங்கவா கனத்தாள் தெற்கில் தீபாஞ்சாலி[1] அருகில் தங்கும்
அங்கமா மாரி மேற்கில் சொல்லுமிவ் வடையா ளத்துள்
சங்கைாய்ச் சிற்றூர் தன்னில் தந்தையி னில்லம் சொன்னோம்
கங்கையின் குலத்தி லேதான் காவல னுதிப்பா னாகும்.



3. துர்க்கையம்மன் கோயில் தெற்கிலும், அக்கினி தேவன் துரோபதையம்மன் இவர்கள் கோயில்கள் பிறந்த வீட்டிற் கருகிலும், அங்காளம்மை மாரியம்மை இவர்கள் கோயில்கள் மேற்கிலும் இருக்கும். இப்படிச் சொன்ன அடையாள முள்ளத் தகப்பனாருடைய வீட்டில் ஒரு சிறிய கிராமத்தில் வேளாள ஜாதியில் இந்த ஜாதகர் பிறந்தார் என்று சொல்லுகிறோம்.

4. உதித்தவன் யோகச் சேதி உறைகிறோ மினிமே லாக
மதித்திட அன்னை யோகம் அவன்தந்தை துணைவர் யோகம்
பதியினில் மனைவி புத்திரர் பகருவோம் முன்பின் ஜன்மம்
விதியினால் நவக்கோ ளாய்ந்து விளம்புவோ மிந்நூல் தன்னில்.

4. ஜாதகருடைய யோக விஷயங்களை இனிமேல் சொல்லுகிறோம். ஜாதகருடைய தாய், தகப்பன், சகோதரர், மனைவி, புத்திரர்கள் இவர்களுடைய யோகங்களையும், முன் ஜன்மம், பின் ஜன்மம் இவைகளையும், நவக்கிரகங்களை ஆராய்ச்சி செய்து இந்தச் சாஸ்திரத்தில் விதிப்பயனைச் சொல்லுகிறோம்.

5. தந்தையின் துணைவர் தம்மைச் சாற்றுவோ மைவ ராகும்
எந்தையே ஆண்பா லொன்று எழிலுள கன்னி அவ்வாறு
சந்ததம் தீர்க்க மாகும் சாற்றுவோம் மற்ற வெல்லாம்
நொந்திடு மென்று சொன்னோம் நிமலியே மேலுங் கேளே.

5. ஜாதகருடைய தகப்பனாருடைய சகோதரவர்க்கத்தைப் பற்றிச் சொல்லுகிறோம். தகப்பனாருடன் பிறந்தவர்கள் ஐந்துபேர் ஆகும். பார்வதியம்மையே! ஓர் ஆண் சகோதரமும் ஒரு பெண் சகோதரமும் நீண்ட ஆயுளுடையவர்களாவர். மற்றச் சகோதரர்களெல்லாம் இறந்து போய்விடுவர் என்று சொல்லுகிறோம். பார்வதியம்மையே! இன்னும் நாங்கள் மேலே சொல்லப் போவதைக் கேட்பீராக.

**குறிப்பு.**—இந்த ஆண் சகோதரர் மூற்ற சகோதரராவர், 39-ஆவது பாடலைப் பார்க்கவும்.

6. இருநிற முடைய னாகும் ஈகைவான் தந்திர வாதி
பெருமவர் நேசம் கொள்வான் பின்புத்தி யுடையா னாகும்
வறுமைகளி ல்லா னாகும் மானிலம் குறைவு செய்யான்
திருமாலிரண்டு பாகம் சித்திர வீடு செய்வன்.

6. ஜாதகருடைய தகப்பனார் இரண்டு நிறங்களுங் கலந்த மானிறமுள்ள தேகமுடையவர். கொடையாளி. தந்திர முள்ளவர். பெருமை வாய்ந்தவர்களுடைய சினேகத்தை யுடையவர். பின்புத்தியுள்ளவர். கஷ்டமும்

[1] துர்க்கை.

தரித்திரமு மில்லாதவர். பூமியைக் குறையும்படி செய்யமாட்டார். பூமியில் குழிகளைச் செய்யமாட்டார். விஷ்ணுவின் கிருபையால் இரண்டு பங்குடையவர். அழகான சித்திரங்களடங்கிய இரண்டு கட்டு வீட்டைக் கட்டுவார்.

7. பகையுமே கொஞ்ச முள்ளான் பரமனும் பித்த தேகி
ஆகம மறியா னாகும் அரனுப தேசம் கொள்ளான்
வேகமாய் நடக்க வல்லான் வீண்செல வுகளும் செய்யான்
தோகையர் மோக வானும் சொல்லது இரண்டு முள்ளான்.

7 அவர் பகைவர்களைக் கொஞ்சமாயுடையவர். பித்தவாய்வுள்ளத் தேகத்தை யுடையவர். ஆகம சாஸ்திரத்தைப் படிக்காதவர். சிவனுடைய மந்திர உபதேசத்தை அடையாதவர். சீக்கிரமாயும், வேகமாயும் நடக்குஞ் சாமர்த்திய முள்ளவர். வீணுகச் செலவுகள் செய்யமாட்டார். பெண்களின் பேரில் மோகம் உடையவர். இரண்டு விதமாய்ப் பேசுந் தன்மையுடையவர். நல்லதையுங் கெட்டதையுஞ் சொல்லுவார்.

8. கைமுத லதிக மில்லான் கரமதில் கத்தரி ரேகை
செய்தொழில் கிருஷி யென்றோம் தீரமா நெஞ்சு மாவன்
வையகம் நல்லோ னவன் வழக்கினில் செல்லா னாகும்
பொய்யுரை அதிகம் பேசான் புகலுவோம் சம யோகம் தான்

8. இவர் கையிருப்புத் தொகை அதிக மில்லாதவர். இவர் தன் உள்ளங்கையில் கத்தரி ரேகையை யுடையவர். இவர் விவசாயத் தொழிலைச் செய்வார் என்கிறோம். இவர் தீரமான, தைரியமான மனதுடையவர். பூமியில் நல்லவரென்று பேரெடுப்பார். வழக்கு வியாஜ்ஜியங்கள் செய்ய மாட்டார். பொய் வார்த்தைகளை அதிகமாய்ச் சொல்ல மாட்டார். சமமான நடுத்தரமான யோகத்தை யுடையவர் என்று சொல்லுகிறோம்.

9. இக்குண முடையா னுக்கு இவனுமே அஞ்சாம் ஜன்மம்
மிக்கவே யுதிப்பா னாகும் விளம்புவோ மவன்குணத்தைத்
தக்கவே யிருசி கப்பன் சன்மார்கன் கோபியாவன்
திக்கெலாங் கீர்த்தி யேற்பன் தீரமா நெஞ்ச னவன்.

9. இவ்விதமான குணங்களையுடைய தகப்பனுக்கு இந்த ஜாதகர் ஐந்தாவது கர்ப்பத்தில் பிறந்தவர். இவருடைய குணாதிசயங்களை இனிமேல் சொல்லுகிறோம். இவர் இரண்டு நிறங்கள் கலந்த மாநிறமான தேகத்தை யுடையவர். நல்லொழுக்க முடையவர். கோபமுள்ளவர். எல்லாத் திக்குகளிலும், கீர்த்தியும் பெருமையும் அடைவர். தைரியமான நெஞ்சு படைத்தவர்.

10. வஞ்சக வஞ்ச னவன் வார்த்தையு மதிகம் சொல்வன்
செஞ்சொலும் நுணக்கம் தேர்வன் சிறந்ததோர் கல்வி கற்பன்
அஞ்சிடான் எதிரி கட்கு ஆவுகள் விருத்தி செய்வன்
தஞ்சமென் றோரைக் காப்பன் தனையும் பெருமை யோனே.

10. இவர் கபடருக்குள் கபடராவர். அதிகமாகப் பேச வல்லவர். இவர் உபயோகப்படுத்தும் வெளிபடையான சொற்கள், அஃதாவது உரிய பொருளை யுணர்த்துஞ் சொற்கள் நுட்பமானவைகளாகும். இவர் மேன்மையான உயர்ந்த வித்தையைக் கற்றவர். எதிரிகளுக்குப் பயப்பட மாட்டார். பசுக்களை வைத்து விருத்தியாக்குவார். தன்னிடம் வந்து அடைக்கலம் புகுந்தவர்களைக் காப்பாற்றுவார். தயையும், பெருமையும் உள்ளவர்.

11. சங்கீதம் பாடு வானும் தரணிக ளதிகம் சேர்ப்பன்
பொங்கிய குடும்பி யாவன் போசன சுகி யென்றோம்
நங்கையர் மோக வானும் நினைத்த காரியம் முடிப்பன்
பங்கய [1] ரேகை யுள்ளான் பணிதிபாத் திரமும் சேர்ப்பன்.

11. ஜாதகர், சங்கீதம் பாட்டு இவைகளைப் பாடுவார். பூமியை அதிகமாகச் சேர்ப்பார். பெருமையுள்ள பெரிய குடும்ப முடையவராவர். நல்ல, சுகமான போஜனத்தைச் சாப்பிடுவார். சிறந்தப் பெண்களின் மேல் ஆசையுடையவர். தான் எண்ணிய காரியத்தைச் செய்து முடிப்பார். தன் உள்ளங்கையில் கமல ரேகை என்ற தாமரைரேகை யுடையவர். ஆபரணங்களையும், உண் கலன்கள் உள்பட சகல பாத்திரங்களையும் சேகரித்து வைப்பார்.

12. தந்தைநாள் பூமி கொஞ்சம் தன்காலம் விசேஷ முண்டு
தன்தன மதிக முண்டு சகடுக ளெய்து மென்றோம்
நொந்தவர் தம்மைக் காப்பன் நீர்தனில் தோய வல்லன்
சிந்தையு மர்ம மில்லான் திருப்பணி செய்வா னுமே.

12. ஜாதகருடைய தகப்பனருடைய வாழ்நாளில் பூமி கொஞ்சமாக விருக்கும். ஜாதகருடைய வாழ்நாளில் பூமிகள் அதிகப்படும். வீட்டு மனைகளும் அதிகமாகும். வண்டிகளும் வந்து சேரும். ஜாதகர், செல்வத்தில் நொந்து வறுமையுடையவர்களைக் காப்பாற்றுவார். ஜலத்தில் முழுகுவதில் கெட்டிக்காரர், அஃதாவது நீஞ்சலில் வல்லவர் அல்லது புண்ணியத் தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்வார். கபடமான மனதில்லாதவர். கோயில் வேலைகளையும், திவ்விய தெய்வீகத் தொண்டுகளையும் செய்வார்.

13. இவனுடைத் துணைவர் தம்மை யியம்புவோ மெழுவ ராகும்
அவனியில் ஆண்பால் காணன் நாயகி யிரண்டு என்றோம்
பவமுள முன்னால் ஒன்று பாலகன் பின்னு லொன்று
இவைகளும் தீர்க்க மெய்துமீச்வரி கேட்டி டாயே.

13. இனிமேல் ஜாதகருடைய சகோதரர்களின் விஷயத்தைச் சொல்லுவோம். உடன் பிறந்தவர்கள் ஏழுபேர் ஆவர். ஆண் சகோதரர் இல்லை. பெண் சகோதரங்கள் இருவராகும். இவர்களில் ஒருத்தி தமக்கையாவள். மற்றொருத்தி தங்கையாவள். இவர்கள் இருவரும் நீண்ட ஆயுளுள்ளவர்களாவார்கள். பார்வதியம்மையே கேட்பீராக.

---

[1] கமலம்

14. ஏதுகா ரணத் தினுலே யிவன்துணை ஆண்பால் காணுன்
ஓதுவீர் முனியே நீர்தாம் ஒருமூன்ருேன் நீச மாயும்
தீதான ஆறில் ராகு செறிந்ததால் துணைஆண் தோஷம்
போதக வானைப்[1] பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

14. என்ன காரணத்தினுலே ஜாதகருக்கு ஆண் சகோதரர் கிடை யாது என்றீர் ? அந்த விபரத்தை முனியே சொல்லுவீர் என்று பார்வதி கேட்க, மூன்றும் பாவாதிபதியாகிய புதன் மீனராசியில் நீசமாயிருப்ப தாலும், கெட்ட பாவமாகிய ஆருவது பாவத்தில் ராகு சகோதரரை அழிக்குந் தன்மையுடையவராயிருப்பதாலும் ஆண் சகோதரர் தோஷமா கும்: யானை முகத்தோனுகிய விநாயக் கடவுளைப் பெற்றப் புண்ணியவதியாகிய பார்வதியம்மையே ! கேட்பீராக.

குறிப்பு.—6-இல் ராகு இருப்பதைப்பற்றிக் கீரனூர் நடராஜர் அருளிச் செய்த தமிழ் ஜாதகாலங்காரம் என்ற புத்தகத்தில் 525-ஆவது பாடலைப் பார்க்கவும். "ஆரு மிடத்திலாய கருங்கோள்........நேமி யோரறிய."

இதே புத்தகத்தில் 633-ஆவது பாடலையும் பார்க்கவும். "கோளினிற் கரிய நாகங் கூறுமா றிடத்தி னிற்கில்........திடவானுமே."

15. மணமது பதினெட் டாண்டில் வடதிசை மனைவி தோன்றும்
குணமுளாள் கோபி யாவள் குலத்துளோர் மெச்ச வாழ்வள்
வினையான வார்த்தை சொல்லாள் பின்புத்தியுடை யாளாகும்
வினையதை மனத்தி லெண்ணுள் வினம்புவோ மிருநிறத்தாள்.

15. ஜாதகருக்கு விவாகம் பதினெட்டாவது வயதில் நடக்கும். வடக்குத் திக்கிலிருந்து மனைவி வருவாள். அவள் நல்ல குண முள்ளவள். கோபமுடையவளா யிருப்பாள். தன் குலத்தைச் சார்ந்தவர்கள் அவளைப் போற்றும்படியாக அவள் வாழுவாள். பிறரை வறுத்தும் வார்த்தை களைச் சொல்லமாட்டாள். பின்புத்தி யுள்ளவளாகும். கெட்டதைத் தன் மனத்தில் நினைக்கமாட்டாள். இரண்டு நிறங்கள் கலந்த நிறமாகிய மானிற முள்ள தேகத்தை யுடையவள் என்று சொல்கிருேம்.

குறிப்பு.—ஜாதகருக்கு வயது ஷ்ஃ 17—0—0 முதல் ஷ்ஃ 18—0—0 வரையிலும் சூரிய தசையில் சந்திரன் அங்காரகன் ராகுபுத்திகள் நடக்கின் றன. விவாகத்துக்குச் சம்மந்தமுள்ள இரண்டாவது பாவாதிபதி யாகிய சூரியன் போகஸ்தானத்திலுள்ள குருவால் பார்க்கப்படுகிருர். போகக் காரனுகிய ராகு சனியுடன் இருக்கிருர். ஆகையால் சூரிய தசையில் இராகு புத்தியில் விவாக யோகமுண்டு.

16. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோம் மெழுவ ராகும்
சித்தமா யாண்பால் ரண்டு செப்புவோம் பெண்பால் மூன்று
சுத்தமாய் ஐந்து தீர்க்கம் சோர்ந்திடு மிரண்டு தாமும்
பத்தியாய் முதலில் தோஷம் பகருவோ மிவனுக் கேதான்.

---

[1] இளமையான யானை, (யானைக் கன்று.)

16. ஜாதகருக்குப் புத்திரபாவத்தைப்பற்றி இனிமேல் சொல்லு கிறோம். இவருக்குச் சந்ததிகள் ஏழுபேர் ஆவர். ஆண் சந்ததிகள் இரண்டும், பெண் சந்ததிகள் மூன்றும், ஆக இவ்வைந்து சந்ததிகளும் தீர்க்க ஆயுளை யுடையவர்களாவார்கள். இரண்டு சந்ததிகள் இறந்துவிடும். இவருக்கு முதலில் பிறந்த சந்ததிகள் இறந்து விடுவார்கள் என்று சொல்லுகிறோம்.

17. என்ன காரணத்தி னாலே இவன்சுதர் முதலில் பீடை
தன்னிலே சொல்லு மென்னச் [1] சேயவ னஞ்சோ னாகிப்
பின்னமாய் நீச்ச மாகப் புகலுவோ மந்தத் தோஷம்
இன்னவன் முன்ஜன் மத்தி லெய்திற்று அந்தத் தோஷம்.

17. ஜாதகருக்கு முதலில் பிறக்கும் சந்ததிகள் எந்தக் காரணத் தினால் இறந்து போய்விடும் என்பதைச் சொல்லுவீரென்று பார்வதி கேட்க, புத்திர ஸ்தானமாகிய ஐந்தாம் பாவத்திற் கதிபதியான அங்காரகன் கடக ராசியில் நீசமடைந்து பலங் குறைந் திருப்பதால் இந்தத் தோஷத்தைச் சொல்லுகிறோம். இந்தத் தோஷமும் இவருடைய முன் ஜன்மத்தில் நேர்ந்ததாகும்.

**குறிப்பு.**—சந்திர லக்கினத்திற்குப் புத்திர ஸ்தானமாகிய ஐந்தாமிடத்தில் சனியும் ராகுவும் சேர்ந்திருப்பதையும், குரு சந்திரனுக்கு மூன்றில் இருப்பதையுங் கவனிக்கவும்.

18. வினையதைச் சொல்லு மென்ன வித்தகன் பூர்வம் தன்னில்
கனமுள காஞ்சி மேல்பால் கருதிய பனங்காட் டூரில்
அனையவே வைசியச் சேயாய் அவனுமே யுதித்து மேலும்
தனையனும் செட்டுச் செய்து தன்மனை புத்திரு ண்டாய்.

18. ஜாதகருக்குத் தன்னுடைய முன்ஜன்மத்தில் சம்பவித்த பாவத்தைச் சொல்லுவீரென்று பார்வதி கேட்க, காஞ்சிமா நகரத்திற்கு மேற்குத் திக்கிலுள்ள பனங்காட்டூர் என்றக் கிராமத்தில் இவர் வைசிய குலத்திற் பிறந்து, வியாபாரஞ் செய்து, தன்னுடைய மனைவிக்குப் புத்திரர் கள் பிறந்து, அவர்களுடன்;

19. இன்னவன் வாழுந் நாளி லிவனுடைச் சிறிய அன்னை
உன்னத பணிதி ஒன்று உறுதின இவன்கை யீந்து
தன்னுடை நகரம் சார்ந்து தானவள் கொள்ளை யிட்டாள்
இவனிவை தெரிந்து மாது எழில்பணி வாங்க வந்தான்.

19. இந்த ஜாதகர் வாழுகின்ற காலத்தில், இவருடைய சிறிய தாயார் விலை யுயர்ந்த ஓர் ஆபரணத்தை இவரிடம் கொடுக்க, இவர் அதைப் பத்திரமாய் வைத்திருக்கிறேன் என்று உறுதிமொழி சொல்ல, அவள் தன் னுடைய பட்டணத்திற்குச் சென்று அவள் திருடினாள். இதை இந்த ஜாத கர் தெரிந்துகொண்டு அழகிய ஆபரணங்களை அவளிடமிருந்து வாங்கப் போனார்.

---

[1] அங்காரகன்

20. வந்தவன் தன்னை நோக்கி வந்திடும் பணிதி கேட்கத்
தந்ததோர் பணியும் வாங்கித் தன்னில்லம் வைத்தே னம்மா
தந்திர உபாயம் கற்றுச் சண்டாள னெவனோ வந்து
அந்தர மாகி யில்லத் தரும்பொருள் கவர்ந்து போனான்.

20. அவளிடம் சென்ற இந்த ஜாதகரைப் பார்த்து தான் இவரிடங்கொடுத்து வைத்திருந்த ஆபரணத்தைக் கேட்க, இவர் , நீர் கொடுத்த ஆபரணத்தை வாங்கி நான் வீட்டில் வைத்தேனம்மா. தந்திரமும், உபாயமுமறிந்த யாரோ ஒரு துரோகியான திருடன் ஆகாயத்தைப் பார்க்கின்ற, அஃதாவது பந்தோபஸ்தில்லாத என்னுடைய வீட்டிற்குள் நுழைந்து, அந்த அருமையான விலையுயர்ந்த ஆபரணத்தைத் திருடிக்கொண்டு போய் விட்டான் என்று சொன்னார்.

21. இன்னவாறு அன்னவன் சொல்ல இவளுமே திகிலடைந்து
உன்னிடம் வைத்து வைத்த உயர்நிதி பணியைக் கேட்க
என்னையும் வருத்தம் கொள்ள எத்தனை நாளி ருந்தாய்த்
தன்மக ளில்லா தாகித் தரித்திரம் யில்லா வாழ்ந்தான்.

21. ஜாதகர் இவ்விதமாய்ப் பதிலளிக்க, அவள் பயந்து நான் உன்னிடம் பந்தோபஸ்துக்காகக் கொடுத்து வைத்த அதிக திரவியம் பெறக்கூடிய ஆபரணத்தைத் திருப்பிக்கொடு என்று கேட்க, "நீ எனக்கு வருத்தம் உண்டாகும் படியாய் இப்படிப் பதிலளிக்க நீ எத்தனை நாள் கார்த்திருந்தாய்" என்று சொல்லிச் சாபித்தாள். இவர் முன் ஜன்மத்தில் தனக்குப் பெண் இல்லாமலும், தரித்திரம் இல்லாமலும் வாழ்ந்தார்.

22. மறுஜன்மம் தோன்றிய தான மைந்தனும் தனிய னாகிப்
பெறும்சுதர் முதலில் பீடை புக்கிடு மென்று சொல்லி
மறுஅன்னை சொல்லி யேதான் வந்தனள் இல்லம் தன்னில்
திருமக னந்தி யத்தில் சென்றனன் காஞ்சிக் கேதான்.

22. இவ்விதமாக இந்த ஜன்மத்தை அடைந்த இந்த ஜாதகரைப் பார்த்து "நீ, ஆண் சகோதர மில்லாமல் தனியாக இருந்து கொண்டு நீ முதலில் பெற்றிடும் பிள்ளைகள் இறந்தும் வாழ்வாயாக", என்று சிறிய தாயார் முன்ஜன்மத்தில் சொல்லிவிட்டுத் தன் வீட்டிற்குப் போய்ச் சென்றாள். இந்த ஜாதகர் முன் ஜன்மத்தில் அந்திய காலத்தில் காஞ்சிமா நகரத்திற்குச் சென்றார்.

**குறிப்பு.**—முன்பு 14-ஆவது பாடலில் ஜாதகருக்கு ஆண் சகோதரன் கிடையாது என்று சொல்லியிருப்பதை இங்குக் கவனிக்கவும்.

23. அறுமுகன் குமர கோஷ்டம் அதிகமாய் ஊழி செய்து
திருவிளக் கதிகம் வைத்து சிலருக்கு அன்ன மீந்து
குறைவிலா உள்ளூர் சென்று குறிப்புற காசத்தாலே
மறலி [1] யின் பதிக்குச் சென்று மால்மகன் [2] வரையப் பட்டு;

[1] எமன் [2] பிரம்மா.

23. ஜாதகர் முன் ஜன்மத்தில் கடைசி காலத்தில் காஞ்சீபுரத்திலுள்ள ஆறுமுகக் கடவுள் எழுந்தருளியுள்ள குமாரகோஷ்டம் என்ற கோயிலுக்குச் சென்று, விளக்குகளை அநேகமாகவும் அழகாகவும் வைத்து ஏற்றியும், சிலருக்குச்சாப்பாடு போட்டும், பிறகு தன் கிராமத்திற்குச் சென்று குறைவில்லாமல் வாழ்ந்து, கடைசியில் காச நோயால் இறந்து, எமபட்டணத்திற்குப் போய்ப் பிரமாவினால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு ;

24. வந்தவ னிவனே என்றோம் மங்கைமுன் சாபம் தானும்
தங்கிடு மிவனுக் கேதான் தனியனாய் வாழ்வா னாகும்
முந்திய புதல்வர் தோஷ மெய்திடு மென்று சொன்னோம்
கந்தனை யீன்ற மாதே கழறின மொழி குன்றாது.

24. (இ-ள்) இந்த ஜன்மத்தில் வந்து பிறந்தவர் ஜாதகர் என்று சொல்லுகிறோம். முன் ஜன்மத்தில் தன் சிறிய தாயார் கொடுத்தச் சாபம் இந்த ஜன்மத்தில் இவருக்கு வந்து சம்பவிக்கும். இவர் ஆண் துணை இல்லாமல் ஒண்டியாய் வாழ்வார். இவருக்கு முதலில் பிறக்கும் பிள்ளைகள் தவறாமல் இறந்து போய்விடும் என்று சொல்லுகிறோம். குமரக் கடவுளைப் பெற்ற பார்வதி யம்மையே ! நரங்கள் சொல்லும் வார்த்தைதவறா தாகும்.

25. அன்னையின் குணத்தைச் சொல்வேன் ஆளனுக் கினிய ளாகும்
தன்சொல்லே மேன்மை யாகச் சாதிப்பாள் கோப முண்டு
பின்புமே சாந்த முண்டு பித்தச் சூடுடைய ளாகும்
கன்னன மொழியே சொல்வாள் காதலி ஈகை கொஞ்சம்.

25. ஜாதகருடைய தாயின் குணாதிசயங்களை இனிமேல் சொல்லுகிறேன். அவள் தன்னுடைய புருஷனுக்கு இஷ்டமானவள். தான் சொல்லுகிற வார்த்தையே மேன்மையானதென்று சொல்லிச் சாதிக்குந் தன்மை வாய்ந்தவள். முன்னால் கோபமுடையவள். பின்னால் அந்தக் கோபந் தணிந்து சாந்தமடைவள். பித்தச் சூட்டு தேகமுடையவள். இனிப்பான வார்த்தைகளையே பேசுவாள். பிறருக்குக் கொடுக்குந் தன்மையுடையவள்.

26. அவள் ஆற தாகும் ஆண்துணை யில்லா தாகும்
பவமுள கன்னி மூன்று பருகிடு மிவளுக் கேதான்
அவனியில் துணைஆண் சேதம் நாட்டினீர் ஏது சொல்வீர்
தவசியே ஆறில் ராகு சார்ந்ததால் துணைஆண் தோஷம்.

26. இவள் ஆறும் பிறவியாகும். இவளுக்கு ஆண் சகோதரம் கிடையாது. மேன்மையான மூன்று சகோதரிகள் உண்டு. இவளுக்கு பூமியில் ஆண்துணை இறந்து போகும் என்று சொன்னீரே, அதற்குக் காரணத்தைச் சொல்வீர், என்று பார்வதியம்மை கேட்க, தவங்களைச் செய்யும் அம்மையே ! ஆறுவது பாவத்தில் ராகு இருப்பதால் இவளுக்கு ஆண் சகோதரம் இறந்துவிடும் என்று சொன்னோம்.

**குறிப்பு.**—மாதுர்ஸ்தானம் நான்காம் வீடாகிய துலாம். இந்தத் துலாத்திற்குச் சகோதர ஸ்தானமாகிய தனுசு ராசியில் ராகு இருக்கிறார். இந்தத் தனுசு, லக்கினத்திற்கு 6-ஆவது பாவமாகிறது என்பதைக் கவனிக்கவும்.

27. இல்லமும் எதிர்வீ டாகும் இவள்பூர்வம் சொல்லக் கேளாய்
அல்லலை விலக்குங் காஞ்சி அதன்கீழ் பால் பேரூர் தன்னில்
நல்லசெங் குந்த வமிசம் நாயகி உதித்து மேலும்
தொல்லையு மில்லா தாகிச் சுகமுடன் வாழ்ந்தா ளென்றோம்.

27. ஜாதகருடைய தாயின் வீடு ஜாதகருக்கு எதிர்த்த வீடாகும். இவளுடைய முன் ஜன்மத்தைச் சொல்லுகின்றேன், கேளுமம்மா. இவள் துன்பத்தையும் பாபத்தையும் நிவிர்த்தி செய்யுந் தன்மையுடைய காஞ்சிமா நகரத்தின் கிழக்குத் திக்கிலுள்ள ஒரு பெரிய கிராமத்தில் செழித்திருந்த ஒரு செங்குந்த ஜாதி என்னும் கைக்கோளர் ஜாதியில் பிறந்து, கஷ்டங்க ளில்லாமல் சுகமாக வாழ்ந்தாள் என்று சொல்லுகிறோம்.

28. அவ்வூரில் வரனுண் டாகி அழகிய மதலை யுண்டாய்
பவ்வமாய் வாழுந் நாளில் பகருவோ மூழி தானும்
ஒவ்விய சோலை தன்னில் உற்றோர்கள் கூடி வேலை
திவ்விய மாது செய்யச் சேர்ந்தவூழ் சொல்லக் கேளாய்.

28. அவளுக்கு அந்தக் கிராமத்திலே புருஷன் ஏற்பட்டு, அழகான குழந்தைகளைப் பெற்று, நல்ல பருவமுடையவளாய் வாழ்கின்ற காலத்தில், அவளுக்கு வந்து நேர்ந்த ஊழ்வினையாகிய பாபத்தைச் சொல்லுகிறோம். இன்பத்தைத் தரக்கூடிய ஒரு தோப்பில், தன் பந்துக்களுடனும் சிநேகிதர் களுடனும் இந்த மேன்மை தங்கிய பெண் ஓர் ஆளாக வேலையைச் செய்யும்போது வந்து நேர்ந்தப் பாவத்தைச் சொல்லுகிறோம், கேட்பீராக.

29. குக்கல்கள் குற்றம் செய்யக் கோலினால் அடித்தா ளென்றோம்
துக்கமாய்க் கூச்ச லிட்டுச் சேர்ந்தது ஒன்று தானும்
முக்கிய மரண மெய்து முடிந்தது விதியு மென்றோம்
குக்கலின் தோஷம் தானும் குமரியை அணுகிற் றேதான்.

29. அப்போது நாய்கள் குற்றமானக் காரியங்களைச் செய்ய, இவள் ஒரு தடியினால் அவைகளை அடித் தோட்டினாள். அவைகள் துன்பமடைந்து கூச்சலிட்டு ஓடின. அவைகளில் சிறந்ததான ஒரு நாய் தனக்கு ஆயுள் முடியவே இறந்து விட்டது என்று சொல்லுகிறோம். இந்த நாயினுடைய தோஷமானது இவளை இச் சென்மத்தில் வந்து அடைந்தது.

30. இதுவன்றி வேறு இல்லை யிவளுமே அந்தி யத்தில்
பெரும்பித்த பாண்டு வாலே புக்கினள் காலன் பக்கல்
சிரநான்கோன் வரையப் பட்டு ஜனித்தவ ளிவளே யென்றோம்
உறைந்தது குக்கல் தோஷம் ஒன்றொடு ஆணின் தோஷம்.

30. இந்தத் தோஷம் தவிர வேறு தோஷங் கிடையாது. இவள் முன் ஜன்மத்தில் தன்னுடைய கடைசிக் காலத்தில் பெரிய பலத்த பித்த பாண்டு நோய்கண்டு இறந்து, எமனிடம் சென்று, நான்கு சிரசுகளையுடைய நான்முகக் கடவுளாகிய பிரமாவினால் எழுதப்பட்டு, இச் சென்மத்தில்

வந்து இவள் பிறந்தாள் என்று சொல்லுகிறோம். முன்ஜன்மத்தின் நாய் தோஷம் இவளை இந்த ஜன்மத்தில் வந்து தாக்கியது. ஆண்களுக்குத் தோஷமுண்டாகும். பிரகாசமான வளையல்களை அணிந்த பார்வதி யம்மையே! கேட்பீராக.

குறிப்பு.—26-ஆவது பாடலில் ஆண்துணை இல்லை என்று சொல்லியதைக்கவனிக்கவும்.

31. சுதர்களு முதலில் பீடை சேர்ந்திடு மென்று சொன்னோம்
விதியினு லிவள்பின் ஜன்மம் விளம்புவோம் விவர மாக
நதிபிறை அணிந்தோன் வாழும் ஆலங்காட் டதனிலே தான்
நதிருவு முதிப்பா ளாகும் நாயகி சுகமாய் வாழ்வாள்.

31. இவளுக்கு முதலில் பிறக்கும் ஆண்குழந்தைகள் இறந்துவிடும் என்று சொல்லுகிறோம். இனிமேல் இவளுக்கு வினையால் சம்பவிக்கின்ற மறுஜன்மத்தை விவரமாகச் சொல்லுகிறோம். கங்கா தேவியையும், சந்திர பகவானையும் அணிந்த சிவபெருமான் வாழ்கின்ற திருவாலங்காடு என்ற திவ்விய க்ஷேத்திரத்தில் இவள் மறுஜன்மத்திற் பிறந்து சுகமாய் வாழ்வாள்.

32. தந்தையின் பூர்வம் தன்னைச் சாற்றுவோம் வள்ளூர் தன்னில்
எந்தையே வைசியச் சேயா யிவனுமே யுதித்து மேலும்
முந்தியே செட்டு செய்து முயற்சியாய்க் குடும்பி யாகி
வந்தவர்க் கன்ன மீந்து மாநிலம் நல்லோ னாகி;

32. இனிமேல் ஜாதகருடைய தகப்பனுருடைய முன்ஜன்மத்தைச் சொல்லுகிறோம். இவர் வள்ளூர் என்ற கிராமத்தில் வைசிய குலத்தில் பிறந்து, எங்கள் தாயாராகிய பார்வதியம்மையே! மேலும் நாங்கள் சொல்வதைக் கேட்பீராக, மேல் மேலும் விருத்தியான வியாபாரஞ் செய்து, ஒரு குடும்பியாக இருந்து, தன்னை வந்து அண்டினவர்களுக்குச் சாப்பாடு போட்டு, இந்தப் பெரிய பூமியில் நல்லவர் என்று பெயரெடுத்து;

33. தேவதா பக்தி கொண்டு தீமையாய்க் காலன் பக்கல்
மேவியே கஞ்ச[1] னாலே விண்ணினில் வரையப் பட்டுத்
தாவிய கங்கை சேயாய்த் தானவ னுதித்தா னென்றோம்
தீவினை யிவன்பின் ஜன்மம் செப்புவோம் கேளும் தாயே.

33. தெய்வ பக்தி உடையவராய்க் கஷ்டத்தை யடைந்து இறந்து எமனிடஞ் சென்று தெய்வ லோகத்தில் பிரமாவினால் எழுதப்பட்டு வேளாண்மைத் தொழிலையுடைய குலத்தில் ஆண்பிள்ளையாய்ப் பிறந்தார் என்று சொல்லுகிறோம். மேலும் கெட்ட வினைப்பயனாக உண்டாகும் இவருடைய மறுஜன்மத்தைச் சொல்லுகிறோம். எங்கள தாயாராகியப் பார்வதி யம்மையே! கேட்பீராக.

---

[1] பிரமதேவர்.

34. தணிகையின் மேல்பா லாகச் சார்ந்ததோர் நகரம் தன்னில்
கனமுன ரெட்டி யாகிக் கனத்ததோர் பூமி யுண்டாய்
அனையவே மனைவி புத்திரர் அதிகமாய்க் கீர்த்தி பெற்றுச்
சினமிலா வாழ்வா னுகும் செல்வியே மேலுங் கேளே.

34. தணிகை என்ற திருத்தணிக்கு மேற்குத் திக்கில் அதை அடுத்துள்ள ஒரு பட்டணத்தில் பெருமையும் செல்வமுமுள்ள ஒரு ரெட்டியாராகப் பிறந்து, அதிகமான பூமியுண்டாகி, மனைவி புத்திரர்கள் அதிகக் கீர்த்தி இவைகளை யடைந்து, கோபமில்லாமல் வாழ்வார் என்று சொல்லுகிறோம். ஐசுவரியத்தையுடைய பார்வதியம்மையே ! இன்னுங் கேட்பீராக.

35. ஜாதகன் யோகச் சேதி சாற்றுவோ மீரெட் டாண்டுகள்
மேதினில் பிறைபோல் யோகம் விளங்கிடும் வறுமை யில்லான்
தீதுக ளடையா னுகும் சதுஷ்பாதம் விருத்தி யாகும்
மாதவர்க் கன்ப னுகு மதிகபாக் கியமும் சேர்ப்பன்.

35. இனிமேல் ஜாதகருடைய யோக விஷயங்களைச் சொல்லுகிறோம். இவருக்குப் பதினாறும் வயது வரையிலும் பூமியில் வளர் பிறைச் சந்திரனைப் போல யோகம் விருத்தியாகும். இவர் தரித்திரம், கஷ்டம் இவைகளில்லாதவர். இவருக்கு நாற்கால் ஜீவன்கள் அதாவது கால்நடைகள் விருத்தியடையும். இவர் ரிஷிகளிடம் அன்பும் சினேகமு முடையவராவர், அதிக தனத்தையுஞ் சேர்த்து வைப்பர்.

36. ஈரெட்டு ஆண்டு மேலே யெய்திடும் நிதிநி க்ஷேபம்
பாரிய குடும்பி யாவன் பலருக்கும் சகாயம் செய்வன்
ஊரெல்லாம் வசியம் கொள்வன் உலகிற்கு நல்லோ னுவன
தீரனுய் வாழ்வா னுகும் செல்வியே மேலுங் கேளே.

36. இவருக்குப் பதினாறு வயதிற்குப் பிறகு தனமும் புதையலும் வந்து சேரும். இவர் பெரிய குடும்ப முடையவராவர். அனேக ஜனங்களுக்கு உதவி செய்வார். கிராமங்களிலுள்ள எல்லோரும் இவருக்கு வசியமாயும் அனுகூலமாகவும் இருப்பார்கள். இவர் உலகிலுள்ளவர்களுக்கு நல்லவராக விருப்பார். தைரியமாயும் வலுத்த குடியாயும் வாழ்வார். ஐசுவரியமுடைய பார்வதியம்மையே ! தலைவியே ! இன்னும் நாங்கள் சொல்லுவதைக் கேட்பீராக.

37. மாதுரு வர்க்கத் தாலே வந்திடும் சிலது பூமி
நீதியாய்ப் பணியும் செய்வன் நிகர்சோலை துரவு செய்வன்
ஏதுகா ரியம் செய் தாலும் இன்பமே யடைவா னுகும்
சூதினுல் ஜயமே செய்வன் சொல்லது தப்பா தாமே.

37. ஜாதகருக்கு தன் தாயாரைச் சார்ந்தவர்கள் மூலமாகச் சில பூமிகள் வந்து சேரும். நியாயமாய்க் கோவில் வேலைகளையும் திவ்வியத் தொண்டுகளையும் இவர் செய்வார். பெருமை வாய்ந்த சோலை, தோப்பு,

துரவு இவைகளை உண்டாக்குவார். இவர் எந்தக் காரியத்தையுஞ் செய்ய எத்தனித்தாலும் அந்தக் காரியத்தைச் செய்து முடித்து இன்பத்தை அனுபவிப்பார். உபாயத்தால் ஜயத்தை அடைவார். தான் சொல்லுகிற வார்த்தையைத் தவறிடாமல் காப்பாற்றுவார்.

38. தந்தையின் மரண காலம் சாற்றுவோ மிருபா னொன்றில்
வந்திடும் கண்ட மென்றே மறுமுகன் தன்னால் நீங்கும்
பிந்தியே யிருபா னென்பான் புரட்டாசி மாதம் தன்னில்
எந்தையே கண்டம் நேரு மிம்மொழி தப்பா தாமே.

38. ஜாதகரின் தகப்பனாருடைய மரண காலத்தை இனிமேல் சொல்லுகிறோம். இவருக்கு இருபத்தோராவது வயதில் இவர் தகப்பனாருக்குக் கண்டம் நேரிடும் என்று சொல்லுகிறோம். ஆறுமுகக் கடவுளின் அருளால் இந்தக் கண்டம் நிவிர்த்தியாகும். பிறகு இருபத்தொன்பதாவது வயதில் புரட்டாசி மாதத்தில் தகப்பனாருக்குக் கண்டம் உண்டாகி மரணம் நேரிடும். எங்கள் தாயாகிய பார்வதியம்மையே ! நாங்கள் சொல்லிய இந்த வார்த்தைகள் தவறாதாகும்.

குறிப்பு.—இந்தக் காலத்தில் ஜாதகருக்குச் சந்திர தசையில் புதன்புக்தி நடக்கின்றது. சந்திரன் பிதுர்ஸ்தானமாகிய மீனத்திற்குக் கண்டஸ்தானமாகிய சிம்மத்தில் இருக்கின்றார். புதன் பிதுர் ஸ்தானத்திற்கு மாரகஸ்தானமாகிய கன்னிக்கு அதிபதியாகி, பிதுர்லக்கினத்தில் இருக்கிறார். இவைகளைக் கவனிக்கவும்.

39. அன்னைக்கு முப்பான் மூன்றில் ஆனிமா தத்தி லேதான்
பின்னமாய்க் காலன் பக்கல் புக்குவா ளென்று சொன்னோம்
இன்னவாறு முனிவர் கூற ஈச்வரி கேட்க லுற்றாள்
தன்தந்தை மூத்தோ னுக்குச் சாற்றுவீர் நிரியா ணத்தை.

39. ஜாதகருடைய தாயார் தனது முப்பத்து மூன்றாவது வயதில் ஆனிமாதத்தில் * நோய்வாய்ப் பட்டுப் பின்னமடைந்து, இறந்து, எமனிடம் போய்ச் சேருவாள் என்று சொல்லுகிறோம். இவ்விதமாக இந்த முனிவர் சொல்ல, பார்வதியம்மையார் கேட்கின்றார். ஜாதகருடைய தகப்பனுடைய மூத்தச் சகோதரனது † மரணத்தைச் சொல்லுவீர்.

*குறிப்பு.—இந்தக் காலத்தில் ஜாதகருக்குச் சந்திர தசையில் சூரிய புக்தி நடக்கின்றது. சந்திரன் மாதுருகாரகனாகி மாதுரு ஸ்தானமாகிய துலாத்திற்கு மாரகஸ்தானமாகிய 11-இல் சிம்மத்தில் இருக்கின்றார். கர்மஸ்தானமாகிய 10-இல் சூரியன் இருந்து மாதுருஸ்தானத்தைப் பார்க்கின்றார். இவைகளைக் கவனிக்கவும்.

†குறிப்பு.— 5-வது பாடலைப் பார்க்கவும்.

40. அவர்பலனிரண்டில் சொல்வேன் யாவத்தும் விவர மாக
இவனுக்கு அறுப தாண்டில் எய்திடும் கூனி மாதம்
வளர்பிறைத் துவா தசி வந்திடும் கண்டம் தானே
சிவந்தனை பூசை செய்யும் செல்வதி [1]கேட்க லுற்றாள்.

[1] ஐசுவரிய முடையவள், தலைவி

40. அவருடைய (பெரியப்பனுடைய) பலனை விவரமாக இரண்டாவது பாகத்தில் சொல்லுகிறேன். ஜாதகருக்கு அறுபதாவது வயதில் பங்குனி மாதத்தில் வளர் பிறையில் துவாதசி திதியில் மரணம் நேரிடும் என்று முனிவர் சொல்ல, சிவ பெருமானைப் பூஜை செய்யும் ஐசுவரிய முடையவளும் தலைவியுமாகியப் பார்வதியம்மையார் பின்வருமாறு கேட்கிறார்.

குறிப்பு.— இந்தக் காலத்தில் ஜாதகருக்குக் குரு தசையில் சனி புக்தி நடக்கின்றது. குரு ஆறுவது பாவாதிபதியாகி நான்கில் இருக்கின்றார். சனி மாரகஸ்தானங்களாகிய 7, 8-க்குடையவராய் 6-ஆவது பாவத்திலிருக்கின்றார். இவைகளைக் கவனிக்கவும். சிலசமயம் 6-ஆவது பாவாதிபதி கூட மாரகஞ் செய்து விடுவார். இங்கு, குரு [1]மாரகஸ்தானமாகிய 2-க்குடைய சூரியனைப் பார்க்கின்றார். சம்ஸ்கிருத ஜாதக சந்திரிகை 26ஆ-வது சுலோகத்தையும், தமிழ்த் தாண்டவமாலை 25-ஆவது பாடலையும் வாசிக்கவும்.

41. இதுமத்தில் ஜாத கர்க்கு எய்தாதோ மார கங்கள்
பொதுமையாய்ச் சொல்லுகின்றேன் பிறந்தாண்டில் மூன்றில் [எட்டில்
சதியினால் பத்தொன்பாண்டில் சார்ந்திடும் சிலது கண்டம்
எதுவித ரோகம் வந்து இலகாது என்று சொன்னோம்.

41. இந்த அறுபது வயதிற்கு முன்னே ஜாதகருக்குக் கண்டங்கள் நேரிடாவோ என்று பார்வதி கேட்க பொதுவாகச் சொல்லுகிறார். பிறந்த வருஷத்திலும் மூன்றாவது வயதிலும் கட்டியால் கண்டம் நேரிடும். மனைவி மூலமாய்ப் பத்தொன்பதாவது வயதில் சில கெண்டங்கள் நேரிடும். எந்தவிதமான நோய் வந்த போதும் அது பலக்காது என்று சொல்லுகிறோம்.

42. எப்படிப் பிணிகள் தீரும் இயம்புவீர் முனியே நீர் தாம்,
செப்புவேன் கேளு மம்மா சதுர்த்தகேந் திரத்தில் பொன்னோன்
ஒப்புட னிருப்ப தாலே உத்த மன் வயது தீர்க்கம்
தப்பிதம் வராது கண்டாய்ச் சடை முனி வாக்குதானே.

42. எந்தக் காரணத்தினால் இடையில் வருகின்ற நோய்கள் தீர்ந்து விடும் என்று சொல்லுகின்றீர், அதைச் சொல்லும், முனிவரே நீர்! என்று பார்வதியம்மையார் கேட்க, சொல்லுகிறோம், பார்வதியம்மையே! அதைக் கேட்பீராக என்று முனிவர் சொல்லுகிறார். லக்கினத்திற்கு நான்காவது கேந்திரத்தில் குரு இருப்பதால் உத்தமரான ஜாதகருக்குத் தீர்க்கமான வயதுண்டு. ஜடைமுனியாகிய நான் சொல்லுகிற வார்த்தைகள் தவறிப் போகா, பார்வதியம்மையே! நீர் இதைக் சோதித்துப் பார்ப்பீராக.

குறிப்பு.—" மணிகண்ட கேரள ஜோதிடம் " என்ற அகஸ்தியர் அருளிச் செய்த ஜோதிட புத்தகத்தில் அரிஷ்டகாண்டம் 18-ஆவது பாடலைப்பார்க்கவும். " உலகினில் உதித்த பேர்கட் கொளிர்மதி........சாகவு மொட்டார் மாதே"

---

[1]. குரு

மேலும் " பிரதி அரிஷ்ட காண்டம், 40-ஆவது பாடலைப் பார்க்கவும் " பூரண பலத்தி னோடு புண்ணியர் சுபமே யாகிற்.........கொல்லுவார் கொஞ்ச நாளில். " மேலும் சூரியனுக்கு ஐந்தில் சந்திரன் இருக்கின்றார். புலிப்பாணி மகா முனிவர் செய்த "சோதிடம் முந்நூறு" என்ற புத்தகத்தில் 102-ஆவது பாடலைப் பார்க்கவும். மேலும் ஆயுள்விஷயமாய்ப் பத்தாவது பாவத்தைக் கூட கவனிக்கவேண்டும். இந்தப் பத்தாவது பாவமாகிய மேஷத்தைக் குரு நாலிலிருந்து பார்க்கின்றார். துய்ய கேரளம் எட்டாம் பாவம் 5-வது பாடலைப் பார்க்கவும். " நிலைவரம் பத்தோ னெட்டோன். ... என் பாரே. " ஆகையால் குரு நான்கில் இருப்பதைக் குறித்திருக்கின்றார்.

43. பின் ஜன்மம் வேங்க டத்துள்[1] பிறப்பனும் பிரம்ம சேயாய்
அன்னையும் கேட்க லுற்றாள் அவனிந்த ஜன்மம் தன்னில்
என்னபுண் ணியம்செய்தானும் இயம்புவீர் என்று கேட்கக்
கன்னன உமையே கேளாய் காவல னிச்சென் மத்தில்;

43. ஜாதகர் மறுஜன்மத்தில் வேங்கடம் என்று சொல்லப்பட்ட திருப்பதி க்ஷேத்திரத்தில் பிராமணராகப் பிறப்பார். அதன் பேரில் தாயாகிய பார்வதியம்மையார் பின் வருமாறு கேட்கின்றார். ஜாதகர் பிராமண குலத்திற் பிறப்பதற்கு இந்த ஜன்மத்தில் என்ன புண்ணியஞ் செய்தார் ? அதைச் சொல்லும், என்று பார்வதி கேட்கவே, இன்பத்தைத் தருகின்ற பார்வதியம்மையே ! நான் சொல்லுவதைக் கேட்பீராக, தன்னை அண்டினவரைக் காப்பாற்றுபவனாகிய இந்த ஜாதகர், இந்த ஜன்மத்தில் ;

44. தேவதா பக்தி கொண்டும் திருப்பணி வேலை செய்தும்
தாவிய வருவோ ருக்குத்தாகமு மன்ன மீந்தும்
ஆவலா யிருப்ப தாலே அவன்மறை குலமுதிப்பான்
நேமமாய்த் தவங்கள் செய்யும் நிமலியே கேட்டி டாயே.

44. தெய்வ பக்தியுடன் கோயில் வேலைகளையும் திவ்விய தொண்டுகளையும் செய்து, தன்னை நோக்கி வருபவர்களுக்குத் தாகமும் அன்னமும் கொடுத்து அவர்களிடம் ஆசையாயிருப்பதால், ஜாதகர் மறுஜன்மத்தில் பிராமணர் ஜாதியில் பிறப்பார். நியமமாய்த் தவங்களைச் செய்கின்ற சுத்தமான பார்வதியம்மையே ! கேட்பீராக, என்று முனிவர் சொல்லுகிறார்.

குறிப்பு.—12-ஆவது பாடலைப் பார்க்கவும்.

45. பிறந்தசேய் ஜனன காலம் புகர்[2]தசை தனிலிருப்புச்
சிறந்திடு பதினா றாண்டும் திங்களும் நான்க தாகும்
நிரந்தரம் குடும்ப மோங்கும் நேர்ந்திடும் துணைவர் தாமும்
விரைவினில் பூமி சேரும் வித்தகி கேட்டி டாயே.

45. இந்த ஜாதகர் பிறந்த காலம் சுக்கிரதசை ஆகும். அதில் இனிச் செல்ல வேண்டியது வருஷம் பதினாறு, மாதம் நான்கு ஆகும்.

[1]. திருப்பதி. [2]. சுக்கிரன்.

இவருடைய குடும்பம் எப்போதும் விருத்தியாகும். இவருக்குச் சகோதரர்கள் பிறப்பார்கள். சீக்கிரத்தில் பூமி வந்து சேரும். ஞானமுடையவளாகிய பார்வதியம்மையே ! நரங்கள் சொல்லுவதைச் கேட்பீராக.

46. அன்னையின் துணைவர் சேதம் அவன்தந்தை வர்க்கம் சூதம்
பின்னமாம் காலி தானும் பேசுவோம் களவு கொஞ்சம்
அன்னையின் தந்தை பீடை அறைகிறோம் விவரம் ரண்டில்
இந்திர னிறைஞ்சு மாதே யியம்பின மொழிகுன் றுவே.

46. இந்தச் சுக்கிரமகா தசை காலங்களில் ஜாதகருடைய தாயாருடைய சகோதரர்கள் மரணமடைவார்கள். ஜாதகருடைய தகப்பன் வர்க்கத்தில் சூதகம் வந்து நேரிடும். பசுக் கூட்டங்களுக்குக் கெடுதி நேரிடும். திருட்டு சிறிது நேரிடும், தாயாருடைய தகப்பனுக்குக் கஷ்டமும் நோயும் வரும். மற்றவைகளை விவரமாக இரண்டாவது பாகத்தில் சொல்லுகிறோம், தேவேந்திரன் வணங்கித் தொழுகின்ற பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும்.

# ஜாதகம் 54

1. கடகலக் கினம தாகக் கேதுவு மிரண்டிலேற
உடுபதி[1] புகர்[2] பொன்[3] னாறில் உதயனும்[4] புதனு மேழில்
முடவனும்[5] ராகுமெட்டில் மங்கலன்[6] அஞ்சி லேற
அடவுடன் பலன்க ளெவ்வாறு அறிவிப்பீர் முனிவரேநீர்.

|  |  |  |  |
|---|---|---|---|
|  |  |  |  |
| சனி ராகு | இராசி சக்கரம் |  | லக்கினம் |
| சூரியன் புதன் |  |  | கேது |
| குரு சுக்கிரன் சந்திரன் | அங்காரகன் |  |  |

மூலம் - 3 - ஆம் பாதம் கேது தசை 2-8-0.

1. ஜன்ம லக்கினம் கடகமாகிக் கேது இரண்டிலும், சந்திரன், சுக்கிரன், குரு இவர்கள் மூவரும் ஆறிலும், சூரியனும் புதனும் ஏழிலும் சனியும் ராகுவும் எட்டிலும், அங்காரகன் ஐந்திலும் இருந்தால், பலன்கள் எவ்விதமாகும் என்பதை முனிவரே, நீர் சொல்லுவீராக.

குறிப்பு.—இந்த ராசிச் சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும்—மேஷத்தில் குரு, சுக்கிரன், ராகுவும், மிதுனத்தில் சந்திரனும், சிம்மத்தில் அங்காரகனும், துலாத்தில் கேதுவும், விருச்சிகத்தில் சனியும், மகரத்தில் சூரியனும், மீனத்தில் புதனும் ஆகும்.

2. பிருகுவுமே புகலு கின்றார் பிறந்திடு மாண்பால் ஜன்மம்
வருமில்லம் வடதென் வீதி வாசலு மேல்பால் நோக்கம்
அரன்கோஷ்டம் மேல்பா லாகும் ஆதியில் வடமேல் தங்கும்
நரிவாக னத்தா ளுத்திரம் நல்கிய பேளூர் தன்னில்

2. பிருகுமகாரிஷி சொல்லுகின்றார்; பிறந்திடுங் குழந்தை ஆணாக ஜனிக்கும். பிறந்த வீடு வடக்குத் தெற்குத் தெருவிலுள்ளது, அதனுடைய வாயிற்படி மேற்குத் திக்கைப் பார்த்திருக்கும். சிவன் கோயில் மேற்கே

1 சந்திரன். 2 சுக்கிரன். 3 குரு.
4 சூரியன். 5 சனி. 6 அங்காரகன்.

இருக்கும். ஆதி தேவனுகிய விஷ்ணுவின் கோயில் வடமேற்கிலிருக்கும். துர்க்கையின் கோயில் வடக்கிலிருக்கும். இப்படிப்பட்ட அடையாளமுள்ள விடத்தில் ஒரு பெரிய கிராமத்தில் ;

3. உதிப்பனு மிந்தப் பாலன் உத்தம யோகச் சேதி
மதிநுத லன்னே யோகம் அவன்துணே களத்திர யோகம்
சதியிலா முன்பின் ஜன்மம் சாற்றுவோ மிந்நூல் தன்னில்
அதிதி[1] யை ஆத ரிக்கும் அம்பிகை யாளே[2] கேளாய்.

3. இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய நல்ல யோக விஷயங்களேயும் சந்திரனேப் போன்ற நெற்றியையுடைய தாயினுடையவும் இவருடைய சகோதரங்களுடையவும் யோகங்களேயும், இவருடைய களத்திரத்தின் யோகத்தையும் இவருடைய முன் ஜென்மம், பின்ஜென்மம் இவைகளேயும் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகிறேம், பரதேசிகளேக் காப்பாற்றும் பார்வதி யம்மையே ! கேட்பீராக.

4. தந்தைக்குத் தாரம் ரண்டில் தரித்திடு மினேயா ளீன்ற
நீதியாய் மைந்தன் தானும் நிகழ்துவோ மிவனின் தந்தை
ஓதுவேன் துணேவர் தம்மை உண்மையா யாண்பால் ரண்டு
காதலி மார்க ளவ்வாறு கழறுவோம் கனியே கேளும்.

4. இந்த ஜாதகர், தன்னுடைய தகப்பனுருடைய இரண்டு மனேவிகளில் இரண்டாவது மனேவிக்குப் பிறந்தவராவர். இவருடைய தகப்பனுருடைய விஷயங்களேச் சொல்லுகிறேம். தகப்பனுருடன் பிறந்தவர்களேச் சொல்லுகிறேம். அவர்கள் இரண்டு ஆண்களும், அவ்வாறே அஃதாவது இரண்டு பெண்களும் ஆவார்கள் என்று சொல்லுகிறேம். பார்வதி யம்மையே ! கேட்பீராக.

5. மற்றவை சேத மெய்தும் வரைகிறேம் பிதாகு ணத்தைக்
குற்றத்தை மனத்தில் வைய்யான் கொடுமையை எவர்க்கு [மெண்ணுன்
சுத்தவா னிரு நிறத்தான் தொல்புவி கிருஷி செய்வன்
சத்திய மென்ரு லச்சம் தையரிய மனத்தா னுமே.

5. மற்றச் சகோதரங்கள் இறந்து போய்விடும். தகப்பனுடைய குணுதிசயங்களேப்பற்றிச் சொல்லுகிறேம், அவர் கெட்ட விஷயங்களே மனத்தில் நினேக்கமாட்டார். கொடூரமானக் காரியங்களே எவருக்குஞ் செய்ய எண்ண மாட்டார். பரிசுத்தமானவர். இரண்டு நிறங்கள் கலந்த மாநிறமான தேகத்தை யுடையவர். பழைய பூர்விகமானப் பூமிகளேப் பயிரிடுபவர். சத்தியத்தின் பேரிலே நோக்கமுடையவர். தைரியமான மனத்தையுடையவர் ஆவார்.

6. மனேவியால் பெருமை யேற்பன் வரு வோரை ஆதரிப்பன்
சினமுண்டு உடனே தாழ்வு சதுஷ்பாதம் விருத்தி செய்வன்
கனமுள குடும்ப மேற்பன் கஞ்சமாம்[3] ரேகை யுண்டு
துணேவரைப் பிரிதல் செய்வன் தோகையில் வாழ்வா னுகும்.

---

[1] பரதேசி. [2] பார்வதி. [3] கமலம், தாமரை.

6. தகப்பனூர் தன்னுடைய மனைவியால் நல்ல அந்தஸ்தையும் பெருமையையும் அடைவார். தன்னிடம் வந்து அண்டினவர்களைக் காப் பாற்றுவார். இவருக்குக் கோபம் வரும். ஆனால் அது உடனே தணிந்து அடங்கிவிடும். இவர் நாற்கால் ஜீவன்களாகிய ஆடு மாடுகளை விருத்தியாக்கு வார். பெரிய குடும்பத்தையுடையவர், தன் உள்ளங்கையில் கஞ்சரேகை என்ற கமலரேகையை உடையவர். தன்னுடைய சகோதரர்களிடமிருந்து பாகப் பிரிவினை செய்து கொண்டு, அவர்களை விட்டுப் பிரிந்து, தன்னுடைய மனைவியின் வீடுபோய் சேர்ந்து, அவ்விடத்தில் வாழ்வார்.

7. சொன்னஇக் குணத்தா னுக்குத் தோன்றுவா னிந்தப் பாலன்
அன்னவன் குணத்தைக் கேண்மோ அழகுளான் மா நிறத்தான்
தன்னுடல் சமமாம் நீச்சி தரணியால் உய்வ னாகும்
பின்ன மில்லாத தேஹ பொருத்தமா யுரைப்பா னாகும்.

7. நாங்கள் இப்போது சொல்லிய இப்படிப்பட்ட குணங்களை யுடைய தகப்பனுக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய குணத்தைச் சொல்லுகிறோம். கேட்பீராக. இவர் அழகுள்ளவரா யிருப்பார். மா நிறமுள்ள தேக முடையவர். நடுத்தரமான உயரமுடையவர். பூமியால் ஜீவிப்பார், அங்கவீன மில்லாத தேக முடையவர். பொருத்தமாகப் பேசுவார்.

8. முகமதில் வடுவு காணும் முன்கோபி மூலச் சூடு
அகமது மிரண்டுண் டாகும் அன்னையால் லாப மெய்தும்
இருபூமி பின்னால் சேர்ப்பான் முயர்வான குடும்ப மேற்பன்
ஜகமதில் நல்லோ னவன் செய் நன்றி மறவானாகும்.

8. ஜாதகருடைய முகத்தில் அடையாளங்களுண்டு. இவர் முன் கோப முடையவர். மூலச்சூடு என்ற நோயையுடையவர். இவருக்கு இரண்டு வீடுகள் கிடைக்கும். இவருடைய தாயாரால் இவருக்கு அனுகூலங்களுண்டு. பொருளுண்டு. இரண்டு பூமிகளைத் தன் பிற்காலத்தில் அடைவார். பெருமையுள்ள குடும்ப முடையவர். உலகத்தில் நல்லவரென்று பெயரெடுப் பார். தனக்குப் பிறர் செய்த நன்றியை மறக்கமாட்டார்.

9. கல்வியும் சமம தாகும் கடந்தோர் மேல்பிரிய மில்லான்
இல்லையென் றுரைக்க மாட்டான் எதிரியை லகுவில் வெல்வன்
வெல்லும் சொல் உடைய னாகும் வீண்வம்பு கலாபனாகும்
சல்லியம் கொள்ளா னாகும் சங்கையான மனத்தா னென்றோம்.

9. ஜாதகருக்கு நடுத்தரமான வித்தை யுண்டு, இறந்து விட்டவர் களைப்பற்றி நினைக்கமாட்டார். தன்னை மீறி நடந்தவர்களிடம் ஆசையில்லாத வர். தன்னை வந்து கேட்டவர்களுக்கு இல்லை என்று சொல்லமாட்டார். தன் எதிரியைச் சுலபமாக வென்று விடுவார். பிறரைத் தன வசப்படுத்தும்படி யான இன்பமான சொற்களை உபயோகப்படுத்துவார். வம்பு, சண்டை முதலியவைகளை விளைவிக்கக்கூடிய வீண் வார்த்தைகளைச் சொல்லமாட்டார், கடன் வாங்கமாட்டார், சந்தேகமான, அச்சமான, மனத்தை உடையவர் என்று சொல்லுகிறோம்.

10. சிறுத்தவர்க் குதவி செய்வன் சிறுதீனிப் பிரிய னாகும்
பொறுத்தமாய்ப் பேசு வானும் புகலுவான் கட்டு வார்த்தை
துரிதமாய் நடக்க வல்லன் சோலைகள் கூவல்[1] செய்வன்
மர்மமு முடையா னவன் மங்கையர் மோக னவன்.

10. சிறியர்களுக்கும் ஏழைகளுக்கும் ஜாதகர் உதவி செய்வார். அவர் சிற்றுண்டியில் ஆசையுள்ளவர். பொருத்தமாகப் பேசுவார். புனைந்த வார்த்தைகளையும் பொய்யையும் சொல்லுவார். வேகமாக நடக்குஞ் சக்தியுள்ளவர். சோலைகள், தோப்புக்கள், கிணறுகள் இவைகளை உண்டாக்குவார். மர்மமான மனதுடையவர். பெண்களின் பேரில் ஆசையுடையவர்.

11. தன்துணை ஆண்பால் ஒன்று சத்திமார் மூவ ராகும்
பின்பாகம் அவர்கள் சேதி பேசுவோம் கனியே கேளும்
இன்னவன் மணத்தின் கால மியம்புவோமீ ரொன் பானில்
கன்னிகை உத்திரத்தில் கலப்பளாம் குணத்தைச் சொல்வேன்.

11. ஜாதகருக்குச் சகோதரர்களில் ஆண் ஒன்றும், பெண்கள் மூன்றும் உண்டு. இவர்களுடைய விஷயங்களைப்பற்றிப் பின்னால் சொல்லப் போகிற பாகத்தில் சொல்லுவோம். பார்வதியம்மையே! கேட்பீராயாக, இனிமேல் ஜாதகருடைய விவாகம் நடக்குங் காலத்தைப் பற்றிச் சொல்லுகிறோம். ஜாதகருக்குப் பதினெட்டாவது வயதில் மனைவி வடக்குத் திக்கிலிருந்து வந்து வாய்ப்பாள். அவளுடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகிறேன்.

**குறிப்பு.**—ஜாதகருக்கு வயது ஷூ 17-0-0 முதல் ஷூ 18-0-0 வரையிலும் சுக்கிர தசையில் சனி புக்தி நடக்கிறது. களத்திரத்திற்குச் சம்பந்தமான பாவங்கள் 2-7-9-11. களத்திரகாரகனும் போகஸ்தானமாகிய நாலாம் பாவத்திற் கதிபதியுமாகிய சுக்கிரன் 11-க்குடையவராய் லக்னாதிபதியாகிய சந்திரனுடன் சம்பந்தம், சனி ஏழுக்குடையவராய்ப் போக்காரகனாகிய ராகுவுடன் சம்பந்தம். ஆகையால் இக்காலத்தில் விவாக யோகமிருக்கிறது. எழிலிருக்கும் புதன் வடக்குத் திக்கிற்கு அதிபதியாகும்.

12. மாந்தளிர் மேனி யாகும் மறுத்துரை அதிகம் கூறாள்
சாந்தவாள் முன் கோபத்தாள் சரசமாய் வார்த்தை யுண்டு
சேர்ந்தவர் தம்மைக் காப்பாள் சீலியாம் பித்த தேகி
யேந்திழை[2] யோகசாலி யிடரான புத்தி யில்லாள்.

12. ஜாதகருடைய மனைவி மாந்துளிர் என்னும் இளமையான மாவிலையின் நிறம்போன்ற ஒரு வகைச் சிகப்பு நிறமுள்ளவள். மறுத்துத் தவறான வார்த்தைகளை அதிகமாகச் சொல்லமாட்டாள். சாந்தமானவள், முன் கோபமுள்ளவள். இனிமையான வார்த்தைகளைச் சொல்லுவாள். தன்னிடம் வந்து அண்டினவர்களைக் காப்பாற்றுவாள். நற்குணங்களுடையவள். பித்த தேகமுடையவள். யோகமுடைய பெண், துன்பத்தை, ஆபத்தை விளைவிக்கக் கூடிய கெட்ட புத்தியில்லாதவள்.

---

[1] கூபம், கிணறு. [2] பெண்.

13. பால்பாக்கிய முடையா ளாகும் பசித்தோர்க்கு அன்ன மீவள்
மால்மனை[1] வாச மெய்தும் வாக்குச்சொல் காப்பா ளாகும்
ஞாலம் மேல் நல்லோ ளாவள் நாயகன் மனத்துக் கேத்தோள்
காலத்தை அறிந்து வாழ்வள் காதலி தீர்க்க ஜீவி.

13. ஜாதகருடைய மனைவி பால்பாக்கிய முடையவளாவாள். பசி என்று சொல்லிவந்து கேட்பவர்களுக்குச் சாப்பாடு போடுவாள். விஷ்ணுவின் மனைவியாகிய இலக்ஷ்மி இவளிடம் வாசஞ் செய்வாள். இவள் தான் சொன்ன வாக்கைப் காப்பாற்றுவாள். பூமியில் நல்லவளாயிருப்பாள். தன் புருஷனுடைய மனத்திற் தகுந்தபடி நடந்து கொள்வாள். காலங்களை அறிந்து அந்த அந்தக் காலத்திற்குத் தகுந்தபடி நடந்து கொள்வாள். இந்த அன்புடைய மனைவி நீண்ட ஆயுளை யுடையவள்.

14. ஜயமுனி யிதனைக் கேட்டுச் செப்புவார் சங்கை யொன்று
வியமாகு முதல் மனைதான் மேவிடு மிரண்டாம் பாரி
பயமிலா சொன்ன சங்கை பகருவீர் விவரம் தன்னை
நயமிலா ஏழோ னெட்டில் ராகுவும் கூடி நிற்க;

14. இவ்விதமாக மனைவிக்கு ஆயுள் தீர்க்கம் என்று சொன்னதைக் கேட்ட ஜயமுனி என்பவர் ஒரு சந்தேகத்தைச் சொல்லுவார். ஜாதகருக்கு முதல் மனைவி விரையமாகிவிடும். அதன் பேரில் இரண்டாவது மனைவி நேரிடும். நீர் பயமில்லாமல், அஃதாவது சந்தேகமில்லாமல் சொல்லிய விஷயத்தைப்பற்றி விவரமாகச்சொல்லுவீர் என்று கேட்க ஜயமுனி சொல்லுவார். ஏழாம் பாவத்திற்குடைய சனி ராகுவுடன் எட்டில் நன்மையைச் செய்யக் கூடாதவராய்ப் பலவீனமாயிருப்பதாலும் ;

15. ஆரனும்[2] அவரைப் பார்க்க அறைந்தனம் தாரம் ரண்டு
கூறுவார் பராசர் தாமும் கூரியன்[3] ரவியு [4]மேழில்
பாருளோன்[5] ஆட்சி யாகப் பற்றுது தாரம் ரண்டு
நாரி[6]க்குச் சிலது நோய்கள் நல்கிப் பின் நிவிர்த்தி யாகும்.

15. அந்தச் சனியை அங்காரகன் பார்ப்பதாலும் ஜாதகருக்கு இரண்டு தாரம் என்று ஜயமுனி சொல்ல, பராசர முனிவர் சொல்லுகிறார், கூர்மையான புத்தியையுடையவராகிய புதனும் சூரியனும் ஏழில் இருப்பதாலும் அங்காரகன் ஆட்சியாய் இருப்பதாலும் ஜாதகருக்கு இரண்டு மனைவி கிடையாது. ஆனால் மனைவிக்குச் சில நோய்கள் வந்து பிறகு அவைகள் நிவிர்த்தியாகிவிடும்.

16. குழவிக ளுதிக்கும் காலே கோதைக்குப் பிணிஅ னேகம்
மருவிப்பின் நிவிர்த்தி யாகும் மறலியைக் காணு ளாகும்
அரிவை[7]மாரனேகம் பேரை அவனுமே போகம் செய்தான்
வரனின்றி மாதுவும் தாழ்ந்து மாதரைப் போகம் செய்வன்.

---

[1] இலக்ஷ்மி. [2] அங்காரகன். [3] புதன்.
[4] சூரியன். [5] அங்காரகன். [6] பெண்.
[7] இருபத்தைந்து வயதன்ன பெண்.

16. ஜாதகருடைய மனைவிக்குப் பிரசவங்கள் நேரிடுகின்ற காலங்களில் அநேக நோய்கள் கண்டு, பிறகு அவைகள் நிவிர்த்தியாகும். ஆனால் அவள் எமனைத் தரிசிக்கமாட்டாள். அதாவது அக்காலங்களில் இறக்க மாட்டாள். ஜாதகர் இருபத்தைந்து வயதுள்ள அனேகப் பெண்களிடம் சம் போகஞ் செய்வார். புருஷன் இல்லாததால் சம்மதிக்கும் பெண்களிடம் சம்போகம் செய்வார்.

17. சுதர்களு மிருநான் காகத் தோன்றிடும் முதலில் சேதம்
சதமுட னாண்பால் ரண்டு சத்திமார் மூவர் தீர்க்கம்
எதுவிதக் கார ணத்தால் லியம்பினீர் முதலில் தோஷம்
புதல்வர்தா னத்தில் சேயும்[1] பொருந்தியும் காரி[2] பார்க்க ;

17. ஜாதகருக்கு எட்டுக் குழந்தைகள் பிறக்கும். முதலில் சில குழந்தைகள் இறந்துவிடும். ஆண் குழந்தைகள் இரண்டுபேரும், பெண் குழந்தைகள் மூன்றுபேரும் தீர்க்கமான ஆயுளுடையவர்களாயிருப்பார்கள். எந்தக் காரணத்தினாலே முதலில் பிறக்குங் குழந்தைகளுக்குத் தோஷ முண்டென்று சொன்னீர்? என்று கேட்கப், புத்திரஸ்தானமாகிய ஐந்தில் அங்காரகன் இருப்பதாலும், அவரைச் சனி பார்ப்பதாலும்.

18. சொல்லினோ மந்தச் சங்கைச் சுதனுட பூர்வம் கேளாய்
எல்லையி லுயர்வதான எழில் கொங்கு நாட்டிலேதான்
நல்லதோர் வைசிய னாக நாயக னுதித்து மேலும்
மெல்லியும்[3] மதலை யுண்டாய் வணிபங்கள் பலமாய்ச் செய்து ;

18. அச்சத்தை விளைவிக்கக்கூடிய இந்தத் தோஷத்தைச் சொன்னோம். இனிமேல் ஜாதகருடைய முன்ஜென்மத்தைப்பற்றிச் சொல்லு கிறோம். அதைக் கேட்பீராக. பூமியில் மேன்மைதங்கிய அழகிய கொங்கு தேசத்தில் நல்ல ஒரு வைசியனாக ஜாதகர் பிறந்து, மனைவியையும் குழந்தை களையும் உடையவராகி வியாபாரங்களை அதிகமாகச் செய்து.

19. தேவதா பத்தி யாகித் தேடினோர்க் கன்ன மீந்து
இல்லத்தில் மனம் வையாமல் பரவுப கார னாயும்
தாவினான் கால னாடு சதுர்முகன் வரையப் பட்டு
ஆவலா யிக்கு லத்தில் அணுகினான் என்று சொல்வோம்.

19. தெய்வபக்தியுடையவராகித் தன்னைத் தேடிவந்தவர் களுக்குச் சாப்பாடுபோட்டுத் தன் குடும்பத்தின்பேரில் நோக்கமில்லாமல் பிறருக்கு உபகாரஞ் செய்பவராய் வாழ்ந்து இறந்து எமபட்டணம் போய்ச் சேர்ந்து, நான்கு முகங்களுடையவராகிய பிரமாவினால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு ஆசையாய் இந்த ஜாதியில் வந்து பிறந்தார் என்று சொல்லுகிறோம்.

20. வந்தவன் யோகச் சேதி வரைகிறோம் தாயே கேளும்
முந்திநாள் யோக மில்லான் மேதினில் வறுமை காணான்
பிந்திநாள் பிறைபோல் யோகம் பொருந்திடும் நிதியும் பூமி
கந்தன்தன் அருளி னாலே கலக்கங்கள் காணா னாகும்.

[1] அங்காரகன். [2] சனி. [3] பெண், மனைவி.

20. இவ்விதமாக வந்த ஜாதகருடைய யோக விஷயங்களைப்பற்றி இனிமேல் சொல்லுகிறோம். தாயாகிய பார்வதியம்மையே கேட்பீராக, இவருடைய வாழ்நாளில் முற்பாகத்தில் இவருக்கு யோகம்கிடையாது. ஆனால் வறுமை என்ற தரித்திரமும் கிடையாது. பிற்பாகத்தில் இவருக்கு யோகம், அஃதாவது செல்வம் வளர்பிறைச் சந்திரனைப்போல நாளுக்கு நாள் அதிகப்படும். தனமும் பூமியும் அதிகப்படும். முருகருடைய கிருபையால் ஜாதகர் கஷ்டங்களையும், துன்பங்களையும் அடையமாட்டார்.

21. மால்மனை கணேசன் போலே மருவுவா னிந்தப் பாலன்
சாலவே அன்னை ஆஸ்தி சார்ந்திடு மென்று சொல்வோம்
மூலமாம் பொருளு நேரும் மொழிகுவீர் காலம் தன்னைப்
பாலனுக் கெண்ணன் காண்டில் பற்றுமே நிதிநிட் சேபம்.

21. ஜாதகர் மகாவிஷ்ணுவின் வீட்டிற்கு அவர் மருமகனாகிய விநாயகக் கடவுள் போவது போலத் தன் மாமியார் வீட்டிற்குப் போய்க் கலந்துவிடுவார். இவருக்குத் தாயாருடைய ஆஸ்தி வந்தடையும் என்று சொல்லுகிறோம். மூலாதாரமானச் சொத்துகளும் பொருள்களும் வந்து அடையும் என்று சொல்ல, அவைகள் வந்து நேரக்கூடிய காலத்தைச் சொல்லுமென்று கேட்க, ஜாதகருக்கு முப்பத்திரண்டாவது * வயதில் தனமும், புதையலும் வந்துசேரும்.

* குறிப்பு.—ஜாதகருக்கு வயது வருஷம் 31 முதல் வருஷம் 32 வரையிலும் சந்திர தசையில் ராகு குரு இவர்களுடைய புக்திகள் நடக்கின்றன. லக்கினத்திற்கு 6–7-ல் நைசர்க்கிக சுபர்கள் இருப்பதால் இது "லக்கினாதி யோக ஜாதகமாகும். ஆனால் அங்காரகன் 5-இல் இருப்பதால் ஜாதக சந்திர ஹோரை என்னும் சந்திரகலா நாடி-தேவகேரளத்திற் சொல்லியபடி அதியோகம் சிறிது குறைவுபடும். இந்த யோகத்திற் சம்மந்தப்பட்டக் கிரகங்களில் சுக்கிரன் மாதுருஸ்தானாதிபதியாகும், சந்திரன் மாதுருகாரகன், குரு பாக்கியாதிபதி ஆகும். இவைகளைக் கவனிக்கவும். இதற்குக் கேசரி யோகமும் இருக்கிறது. ஜாதக அலங்காரம் 274–276-ஆவது பாடலையும், ஜாதக பாரிஜாதம் 7-ஆவது அத்தியாயம் 114, 115, 116, 117-ஆவது சுலோகங்களையும், கஜகேசரியோகம், லக்கினாதியோகம் இவைகளைப் பற்றிப் பார்க்கவும்.

22. காரணம் யாது என்னக் காரி[1] சேய்[2] பொன்னேன்[3] தானும்
சிரமாய் நான்கு வீட்டில் சேர்ந்ததோர் கிரகத் தாலே
கூறுகேதார யோகம் குலமதிப் புடனே வாழ்வன்
பாரினில் புகழு மேற்பன் பார்வதி கேட் டிடாயே.

22. என்ன காரணம் என்று கேட்க சனி அங்காரகன், குரு இவர்களும் மற்றக் கிரகங்களும் நான்கு வீட்டிற்குள் வரிசையாய்ச் சேர்ந்தாப் போல் இருப்பதால் "கேதாரயோகம்" என்ற ஒருவித யோகம் உண்டு

[1] சனி. [2] அங்காரகன். [3] குரு.

என்று சொல்லுகிறோம். ஆகையால் ஜாதகர் தன் குலத்தோர்கள் மதிக்கும் படி வாழ்வார். பூமியில் கீர்த்தியை யடைவார். பார்வதியம்மையே! கேட்பீராக.

**குறிப்பு.**—"கேதாரயோகம்" என்பது எல்லாக் கிரகங்களும் (அஃதாவது ராகுகேது தவிரமற்ற எல்லாக் கிரகங்களும்) நான்கு ராசிகளிலிருப்பதாகும். சம்ஸ்கிருத சதயோகமஞ்சரியில் 92-ஆவது யோகமாகும். தமிழ் ஜாதகாலங் காரம் 321-ஆவது பாடலையும், தமிழ் ஜாதக சிந்தாமணியில் 2042-ஆவது பாடலையும் பார்க்கவும். இந்த யோகம் லக்னத்தைப்பற்றி ஒன்றுஞ் சொல்லாதயோகமாகும். சமஸ்கிருத சாராவளி என்ற கிரந்தத்தில் 21-ஆவது அத்தியாயத்தில் 19-ஆவது, 49-ஆவது சுலோகங்களையும் பார்க்கவும். ஜாதக சாரதீபம் 62-ஆவது அத்தியாயம், 35-ஆவது சுலோகத்தையும் பார்க்கவும்.

23. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அவளிரு நிறத்தா ளாகும்
தன்னுடல் பித்தவாயு தங்கிடும் கோப மேற்பள்.
அன்னியர் குற்றம் சொல்லாள் அடைந்தோரை ஆத ரிப்பள்
அன்னமு மன்பா யீவள் அணுகிடும் தந்தை நோயும்.

23. ஜாதகருடைய தாயின் குணாதிசயங்களைச் சொல்லுகிறேன். அவள் இரண்டு நிறங்கள் கலந்த மானிறமான தேகமுடையவள். பித்தவாயு உள்ளவள். கோபமுள்ளவள். பிறர்பேரில் குற்றமான வார்த்தைகளைச் சொல்லமாட்டாள். அவளை வந்து அண்டினவர்களைக் காப்பாற்றுவாள். சாதமும் பிறருக்குச் சந்தோஷமாய்க் கொடுப்பாள். அவளுடைய தகப்பனுடைய நோய் அவளுக்கு வந்து நேரும்.

24. அன்னையி னூர்ஜிதங்கள் அணுகிடும் பாவைக் கேதான்
தன்துணை ஆண்பால் ரண்டு தங்காது ஒன்று தானும்
கன்னிகை ஒருத்தி தீர்க்கம் காளைகள் ஆணுக் கில்லை
முன்துணைபாரி[1] யாகும் வித்தகி கேட்டி டாயே.

24. இவளுக்குத் தன்னுடைய தாயாருடைய ஆஸ்திகள் வந்து சேரும். இவளுடன் கூடப் பிறந்தவர்கள் ஆண் இரண்டு. இதில் ஓர் ஆண் இறந்துவிடும். ஒரு பெண் தீர்க்க வயதுள்ளவளாயிருப்பாள். ஆண் சகோதரத்திற்கு ஆண் குழந்தைகள் கிடையா. இவளுக்கு முந்திய சகோதரன் பெரியோன் ஆவன். ஞானத்தையுடைய பார்வதியம்மையே! கேட்பீராக.

25. மாதுரு பூர்வம் சொல்வேன் வடமலை[2] கீழ்ப் பாலாகக்
காதலி ரெட்டி வமிசம் கலந்துமே வறுமை யின்றிப்
போதன மதிக[3] முண்டாய்ப் புண்ணிய மதிக மின்றிக்
காதலி வாழ்ந்து மேதான் கணவன்முன் மரண மாகி ;

[1] பெரியோன். [2] திருப்பதி, இமயமலை. [3] அறிவு.

**25.** ஜாதகருடைய தாயின் பூர்வ ஜென்மத்தைச்சொல்லு கிறேன். இவள் திருப்பதிக்குக் கிழக்கில் ஒரு ரெட்டியார் ஜாதியில் பிறந்து தரித்திரம் இல்லாமல் அறிவு அதிகமுண்டாகி அதற்கேற்றப் புண்ணியம் அதிகமில்லாமல் வாழ்ந்து, தன் புருஷனுக்கு முந்தி இறந்து.

26. வந்தவ ளென்று சொல்வோம் மாதரு இல்லம் வாழ்வள்
பிந்திய ஜன்மம் சொல்வோம் பிருதிவி [1] தன்னி லேதான்
இந்ததோர் குல முதித்து எழிலான குடும்பி யாகி
அந்தவள் வாழ்வா ளாகும் அம்பிகை யாளே கேளாய்.

**26.** இந்த ஜன்மத்தில் வந்து பிறந்தவள் என்று சொல்லு கிறோம். இவள் தன்னுடைய தாய் வீட்டிலேயே வாழ்ந்து காலத்தைக் கழிப் பாள். இவளுக்கு மறு ஜன்மத்தைச் சொல்லுகிறேன். பிருதிவிஸ்தலமாகிய காஞ்சிமாநகரத்தில் இந்த ஜாதியில் பிறந்து மேன்மையான குடும்பமுடைய வளாய் வாழ்வாள் என்று சொல்லுகிறோம். பார்வதியம்மையே ! கேட் பீராக.

27. தந்தையின் பூர்வம் சொல்வேன் செந்தி மா [2] மலைநாட் டன்னில்
வந்தனன் வன்னிய சேயாய் மனைவி மைந்தரு முண் டாகி
முந்தினோர் தொண்டு பூண்டு மேதினில் கிருஷி செய்து
நொந்தபேர்க் கன்ன மீந்து நிமலனும் பவமில் லாமல்;

**27.** ஜாதகரின் தகப்பனுருடைய முன் ஜென்மத்தைப்பற்றிச் சொல்லு கிறேன். திருச்செந்தூரை அடுத்தப் பெரிய நாட்டில் வணிகர் குலத்தில் பிறந்து மனைவி பிள்ளைகளை உடையவராகித் தேவர்களையுந் தெய்வங்களையும் பூஜைசெய்து பூமியில் விவசாயத் தொழில் செய்து ஏழைகளுக்குச் சாப்பாடு போட்டுச் சுத்தமாயிருந்த இந்த ஜாதகர் பாவஞ் செய்யாமல் வாழ்ந்து;

28. காலன்தன் நாட டைந்து கஞ்சனுல் [3]வரையப் பட்டுச்
சீலமாம் கங்கை சேயாய் ஜனிப்பனும் மென்று சொல்வோம்
ஞாலத்தா லுய்வா னுகும் நமன்பதி அறுபா னென்றுள் *
ஆலம்போல் பிணியால் மாள்வன் அறைகிறோ மிவன்பின் ஜன்மம்.

**28.** இறந்து எமபட்டணம் அடைந்து பிரமாவால் எழுதப் பட்டுச் சுத்தமான வேளாண்மைத் தொழிலையுடைய குலத்தில் இந்த ஜன்மத்தில் ஆண் குழந்தையாகப் பிறந்தார் என்று சொல்லுகிறோம். பூமியினுல் இவர் ஜீவிப்பார். இவர் அறுபத்தோராம் வயதில் விஷம்போன்ற ஒரு கொடிய நோயால் இறப்பார். இவருடைய பின் ஜன்மத்தைச் சொல்லு கிறேன்.

* **குறிப்பு.**—ஜாதகருக்கு வயது ௵ 60 முதல் 61 வரையிலும் ராகு தசை யில் சுக்கிர சூரிய புக்திகள் நடக்கின்றன. ராகு பிதுர்ஸ்தானமாகிய ஒன்பதா மிடத்திற்குப் பன்னிரண்டாமிடமாகிய லக்கினத்திற்கு 8-இல் இருக்கின்றார். ஆகையால் பிதுருக்கு மரண யோகமுண்டு. புலிப்பாணி ஜோதிடம்

[1] பூமிஸ்தமாகிய காஞ்சி. [2] திருச்செந்தூர். [3]. பிரமா.

முந்நூறில் 65-ஆவது பாடலைப் பார்க்கவும். "ஆச்சப்பா பத்தெட்டில் கோள்கள் நிற்க........பிதுரைத் தேடிக் கொற்றவனே சண்டனுமே வருவான்." மேலும் சுக்கிரன் பிதுர்ஸ்தானத்திற்கு திரிதீய அஷ்டமாதிபதியாகிப் பிதுர்லக்கினுதிபதியாகிய குருவுடன் சம்மந்தம். ஆகையால் பிதுருக்குக் கண்டயோகமுண்டு. துய்யகேரளம், எட்டாம் பாவம், 14-ஆவது, 20-ஆவது பாடல்களைப் பார்க்கவும். "அஷ்டமராகு பிதுர்மாரகம்" ஆனகாரி ஈராறு ஜாதகர்மாரகம்..என்ற வசனம் பிரகாரமுங் கூட பிதுர்மாரகமாகும்.

29. குடதிசை [1] கொச்சி தன்னி லுதிப்பனும் வைசியச் சேயாய்த்
திடமுள குடும்பம் பெற்றுச் செல்வனுமாகி வாழ்வன்
விடவிழி அன்னைக் கேதான் விளம்புவோம் நாற்பதாண்டில் *
திடீரென்று மரண மெய்தும் செல்வதி கேட்டி டாயே.

29. ஜாதாரின் தகப்பனுர் மேற்குத் திக்கில் கொச்சியில் வைசிய குலத்தில் ஆணுகப் பிறந்து பெரிய குடும்பமுண்டாகிச் செல்வவானுக வாழுவார். ஜாதகருடைய தாயாருக்கு மரணத்தைச் சொல்லுகிறோம். நாற்பதாவது வயதில் அவளுக்கு எதிர்பாராமல் திடீரென்று மரணம் வந்து சம்பவிக்கும். செல்வமுடைய தலைவியாகியப் பார்வதியம்மையே கேட்பீராக.

*குறிப்பு.—ஜாதகருக்கு வயது வருஷம் 39 முதல் வருஷம் 40 வரையில் அங்கார தசையில் அங்காரகன் ராகு இவர்களுடைய புக்திகள் நடக்கின்றன. அங்காரகன் மாதுர்ஸ்தானமாகிய நான்கிற்கு 2–7-க்குடையவராய் லக்கினத்திற்குக் கர்மாதிபதியாயும் வருகிறார். ஆகையால் மாதுர் மாரகயோக மிருக்கின்றது.

30. அறுபதுஐந்து ஆண்டில் ஆடிமா தத்தி லேதான்
திருமக னுடலம் ஏகும் செப்பு வோ மிவன்பின்ஜன்மம்
கரியூருக் கருகி லேதான் கலப்பனும் க்ஷத்திரிய சேயாய்
பெருவயி றேனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்ப்

30. அறுபத்தைந்தாவது வயதில் ஆடி மாதத்தில் ஜாதகருக்கு மரணம் சம்பவிக்கும். இவருடைய மறு ஜன்மத்தைச் சொல்லுகிறோம். கரியூருக்கு அருகில் க்ஷத்திரிய குலத்தில் ஆண் குழந்தையாய்ப் பிறப்பார். பெரிய வயிற்றையுடைய விநாயக்கடவுளைப் பெற்றப் புண்ணியவதியாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

குறிப்பு.—ஜாதகருக்கு வயது வருஷம் 64 முதல் வருஷம் 65 வரையில் குரு தசையில் குருபுத்தி நடக்கிறது. குரு ஆறும் பாவத்திற்குடையவராகி லக்னுதிபதியாகிய சந்திரனுடன் கூடி ஆறிலேயே இருக்கின்றார். ஜாதகருக்கு மாரகயோகம் இருக்கின்றது. துய்யகேரளம் எட்டாம் பாவம், 20-ஆவது பாடலையும், சமஸ்கிருத ஜாதக சந்திரிகை சுலோகம் 26-ஐயும் தாண்டவ மாலை பாடல் நெம்பர் 25-ஐயும் பார்க்கவும்.

---

[1] மேற்கு.

31. உதித்திடுங் காலம் தன்னில் மூலமும் மூன்றும் பாதம்
அதிதியின்[1] தசையி ருப்பு அருளுவோ மாண்டு ரண்டு
சதியிலா திங்க ளெட்டும் சாற்றினோம் பூர்வ பாகம்
நதிசடை யணிந்தோன் தேவி நவின்றது தப்பா தாகும்.

31. ஜாதகர் ஜனனமாகுங்காலத்தில் மூல நட்சத்திரத்தின் மூன்றும் பாதம் ஆகும். கேதுவின் தசை அப்போது இருப்பு வருஷம் இரண்டும். மாதம் எட்டும் என்று சொல்லுகிறோம். இதுவரையிலும் முதலாவது பாகத்தைச் சொன்னோம். கங்காதேவியைத் தன் ஜடையில் அணிந்துள்ள பரமசிவத்தின் மனைவியாகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லியது தவறாமல் நடக்கும்.

---

1. கேது.

# ஜாதகம் 55

1. நண்டதனில் [1] ரவி [2] பு கரும் [3] காரி [4] ராகு
நாலில் மதி [5] குசனி [6] ருக்க ருசிதா [7] னைந்தில்
கொண்டசிகி [8] சப்தமத்தில் புதனும் வீணை [9]
கூர்க்கடகம் ஜனித்தவர்க்குப் பலன்கள் கூறக்
கண்டசிறு மதலையது ஆண்பா லாகும்
காஞ்சிக்குத் தென்பாகம் கரியூ ருக்கு
அண்டியேகுணக்கது [10] வாம் தெற்குத் திக்கில்
அரன் கோஷ்டம் சீரிநிற்கும் அம்மை யேகேள்.

| | | | |
|---|---|---|---|
| | | | புதன் |
| | இ ரா சி<br>ச க் க ர ம் | | லக்கினம்<br>சூரியன்<br>சுக்கிரன்<br>சனி, ராகு |
| கேது | | | |
| | குரு | அங்கார<br>கன்<br>சந்திரன் | |

1. கடகத்தில் சூரியனும் சுக்கிரனும் சனியும் ராகுவும் இருந்து, நான்கில் சந்திரனும் அங்காரகனும் இருந்து, குரு ஐந்திலும் கேது ஏழிலும், புதன் மிதுனத்திலும் இருந்து, கடக லக்கினத்தில் ஜனித்தவருக்குப் பலனைச் சொல்லுவோம். ஜனனமான சிறிய குழந்தை ஆண் குழந்தையாகும். காஞ்சிமாநகரத்திற்குத் தெற்குப் பாகத்தில் கரியூருக்கு அடுத்தும் கிழக்கிலும் உள்ள விடத்தில் ஜனனம். தெற்குத் திக்கில் சிவன் கோயிலும் கள்ளி மரங்களும் இருக்கும். பார்வதியம்மையே ! கேட்பீராக.

குறிப்பு.—இந்த ஜாதகத்திற்குஜன்ம நட்சத்திரமாவது அல்லது ஜனன கால தசையாவது குறிக்கப்படவில்லை. ஆயினும் சந்திரன் துலாத்திலிருப்பதால் ஜனன நட்சத்திரம் சித்திரை 3-ஆம் பாதம் முதல் விசாகம் 3-ஆம் பாதம் முடியும் வரையிலும் இருக்கவேண்டும். ஜனனகாலம், லக்கினத்தில் சூரியனிருப்பதால், சூரிய உதையத்திற்குச் சமீபத்தில் இருக்க வேண்டும். கிரக நிலையை அனுசரித்துப் பார்க்க ஜனனம் சுவாதி அல்லது விசாகத்தில் இருக்கவேண்டும் என்று தோற்றுகிறது. மேலும் ஜாதகருடைய

[1] கடகம் [2] சூரியன் [3] சுக்கிரன்
[4] சனி [5] சந்ர [6] அங்காரகன்குரு
[7] ருசிதான் = குரு [8] கேது [9] மிதுனம் [10] கிழக்கு

மரணகாலம், அவர் தாய் தந்தையர் மரணகாலம் இவைகளை யோசிக்குமிடத்து, ஜென்ம நட்சத்திரம் விசாகம் இரண்டாம் பாதமாக விருக்கலாமென்று தோற்றுகிறது. இந்த ராசிச்சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரகநிலை பொருத்தமுடையதாகும் :—கடகத்தில் சுக்கிரனும், சிம்மத்தில் குருவும் சூரியனும், கன்னியில் ராகும், தனுசில் அங்காரகனும் சனியும், மீனத்தில் புதனும், ரிஷபத்தில் சந்திரனும் ஆகும். சுவாதியாகில் சூரியன் கடகத்திலும், சந்திரன் மகரத்திலும், புதன் கும்பத்திலும், மற்றக் கிரகங்கள் மேற்சொல்லியபடியும் பொருந்தும்.

2. இதுமத்தில் பேரூராம் ஜனித்த வீடு
இசைகுவோம் வடதென்பால் வீதி யாகும்
மதியணிந்த யீசன்குடி மீன மாகும்
வடக்கினிலே யானைமுகன் வடமேல் திக்கில்
கதிகொடுக்கும் சாமுண்டி பாஞ்சாலி கோவில்
காரிகையேசூழியுண்டு குடகு திக்கில்
துதியப்பன் மாலின்குடி யிருக்கு மென்றே
சொல்லுகிறோம் தெற்கினிலே மூத்தோ னுண்டு.

2. இவ்விதமான எல்லைக்குள்ளே ஒரு பெரிய கிராமத்தில் ஜனனமான வீடு இருக்கும். தெரு வடக்குத் தெற்காக விருக்கும். சந்திரனைத் தன் சடையில் வைத்திருக்குஞ் சிவபெருமானுடைய கோயில் வட கிழக்குத்திக்கிலிருக்கும். வடக்கே யானைமுகத்தையுடைய விநாயக் கடவுளின் கோயிலும் ஐசுவரியத்தையும் மோக்ஷத்தையுந் தருகின்ற பார்வதியம்மன் கோயிலும். திரௌபதியம்மன் கோயிலும் வட மேற்குத் திக்கிலும் இருக்கும். அம்மையே ! மேற்குத் திக்கில் கடல் இருக்கும், துதிக்கப் படுகின்ற விஷ்ணுவின் கோயிலுமிருக்கும். தென்திக்கில் விநாயகக் கடவுளின் கோயிலிருக்கும் என்று சொல்லுகிறோம்.

3. அம்மையவள் மிதுனத்தி லிருப்பாள் பாரு
அதுவல்லால் பலதேவர் அவ்வூர் வாசம்
செம்மையாய் ஜனித்த யில்லம் கெட்டியாகும்
செங்கதிரோன் வாஸ்துவாம் சேஷ்ட னில்லான்
கொம்மையனு மாதுரு தன்வீட்டில் வந்தோன்
குலமதுவே காராளர் குலத்தில் வந்தோன்
துன்மையாம் பிறந்த வில்லம் மர்மமில்லை
சுந்தரிக்கு மாதுருவும் தொலைந்து போமே.

3. பார்வதியம்மன் கோயில் மேற்குத் திக்கிலிருக்கும். இவைகளுமல்லாமல் இந்தப் பெரிய கிராமத்தில் பல தெய்வங்களின் கோயில்களும் இருக்கும். ஜாதகர் பிறந்தவீடு வலிவான செழுமையாயுள்ள பலத்த வீடாகும். கீழண்டைவாடையிலுள்ளது. ஜாதகர் அழகான தாயார் வீட்டில் பிறந்தவர். வேளாளர் குலத்தில் பிறந்தவர். பிறந்தவீட்டில் துன்மைகளும் கெடுதிகளுமுண்டு. ரகசியமானது கிடையாது. தாயாருக்குத் தாய் இறந்து விடுவாள். ஜாதகருக்கு மூத்த சகோதரரில்லை.

வேறு

4. இன்னவன் ஜனன யோகம் எழில் பெரும் தந்தை யோகம்
மன்னிய அன்னை யோகம் மருவிய யிவன்முன் ஜன்மம்
பன்னுமிப் பலன்க ளெல்லாம் பகருவோ மிந்நூல் தன்னில்
கன்னலா மொழியி னாளே கழறு வோம் கேளும் மாதே.

4. ஜாதகருடைய ஜனனகாலம் முதல் யோகங்களையும் வல்லமையும் பெருமையுமுள்ளத் தகப்பனுடைய யோகத்தையும் பெருமையுள்ளத் தாயின் யோகத்தையும் ஜாதகருடைய முன்ஜன்மத்தையும் இவைகளைப் பற்றிய பலாபலன்கள் எல்லாவற்றையும் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகின்றோம். கேட்பீராக.

5. தந்தையின் சகோதரர்கள் சாற்றுவோ மாண்பா லொன்று
பிந்திய கன்னி அவ்வாறு பேசுவோம் தீர்க்க மாகும்
எந்தையே இதற்கு மேலா யிலகினு மரிட்ட மாகும்
சுந்தரி தனக்குத் தோழர் தோன்றிடா ரரிஷ்ட மாமே.

5. ஜாதகருடைய தகப்பனுடன் பிறந்தவர்களைப் பற்றிச் சொல்லுகிறோம். ஆண் சகோதரம் ஒன்றுகும். பின்னால் அவ்விதமாகவே ஒரு பெண் சகோதரம் நீண்ட ஆயுளையுடையதாக விருக்கும் என்று சொல்லுகிறோம். எங்கள் தாயாராகிய பார்வதியம்மையே! இவர்களுக்கு மேல் சகோதரங்கள் அதிகமாகப் பிறந்தாலும் இறந்துவிடுவார்கள். இந்தப் பெண்ணிற்குப் பிறகு பிறக்கும் சகோதரர்கள் கிடையாது. பிறந்தாலும் இறந்துவிடும்.

6. இனிதந்தை நிறம்கு ணத்தை யியம்புவேன் சிவந்த மேனி
கனிவுள குறுகி மெய்யன் கன்னியர் மோகவா னும்
வனிதை யிருவ ராகும் வள்ளல்மேல் பக்தி யுள்ளான்
சினமிலான் ஈகை யாளன் சிறந்திடும் சமதே கத்தன்.

6. இனிமேலாகத் தந்தையின் நிறத்தையும் குணாதிசயங்களைப் பற்றியும் சொல்லுகின்றேன். இவர் சிவப்பான தேகத்தையுடையவர் குட்டையான தேகத்தையும் அன்புள்ள மனதையும் உடையவர். பெண்களின் பேரில் ஆசையுடையவர். இவருக்கு இரண்டு மனைவிகளாகும். இவர் அளவில்லாமற் கொடுக்கின்ற கடவுளின் பேரில் பக்தியுள்ளவர். கோபமில்லாதவர். பிறருக்குக் தானஞ் செய்யுந்தன்மையுள்ளவர். மேன்மையான, சமமான தேகமுடையவர்.

7. பலபேர்க்கும் பந்தி நிற்கும் பகரிவன் நண்பாய் நிற்பன்
சொல்மொழி பிசகா னாகும் சோம்பிடான் காரி யத்தில்
கல்வியு மல்ப முள்ளான் கனத்தவர் நேசம் செய்வன்
வலிவுளன் வணிபம் செய்வன் மனதினில் வர்ம முள்ளான்.

7. இவர் அனேகர்களிடம் ஒழுங்காய் நடந்துகொண்டு கீர்த்தியுடன் இருப்பார். சினேகமாகவிருப்பார். தான் சொன்னவார்த்தையைத் தவருமல் காப்பாற்றுவார். காரியங்களைச் செய்வதில் சோம்பலில்லாதவர்.

சிறிதான வித்தையுடையவர். பெரிய மனிதர்களுடைய சினேகத்தை அடைவார். வலிவுள்ளவர். வியாபாரஞ் செய்வார். தன்னுடைய மனத்தில் வைராக்கிய முடையவர்.

8. முகமது பள்ள முள்ளான் முனியுளன் வடிவு முள்ளான்
அகமது கலக்க முள்ளான் அண்டின பேரைக் காப்பன்
ஜகமதில் கீர்த்தி யேற்பன் சிவபூசை யுடைய னுவன்
தகைமையாய் எதிரிக் கஞ்சான் சத்தியம் தப்பா னுமே.

8. இவர் (ஜாதகருடைய தகப்பனுர்) தன் முகத்தில் பள்ளத்தை யுடையவர். கோபமும் வெறுப்பு முள்ளவர். அடையாளங்கள் உள்ளவர். கலக்கமுள்ள தூன்பமுள்ள மனத்தையுடையவர். தன்னைவந்து அண்டினவர்களைக் காப்பாற்றுவார். பூமியில் கீர்த்தியையுடையவர். சிவபெருமானைப் பூஜை செய்வார். ஒழுங்கான குணமுடையவராகி எதிரிக்குப் பயப்படாமலிருப்பார், சத்தியமாக நடந்து கொள்வார்.

9. தந்தைதாய்க் கன்ப னுவன் தளமொடு செல்வ முண்டாம்
நந்தியா உடைய னுவன் நவதானியத் தொழிலும் செய்வன்
சிந்தையில் கபடு முள்ளான் சித்திர வீடு முள்ளான்
வந்தவர்க் கன்ன மீவ னடிமையா ளுடைய னுமே.

9. இவர் தன்னுடைய தாய் தந்தையர்களுக்குப் பிரியமானவர். இவருக்கு வீடு நிலம் தனம் முதலிய சம்பத்துக்களுண்டு. இவ எருது பசு இவைகளையுடையவர். நவதானிய வியாபாரஞ் செய்வார். மனதில் கபட மில்லாதவர். அழகான வீடு உடையவர். தன்னை வந்து கேட்பவர்களுக்குச் சாப்பாடு கொடுப்பார். வேலையாட்களையு முடையவர்.

10. இப்படி யிருக்கும் தந்தை யிவனுடை முன்ஜன் மத்தை
மெய்ப்புடன் சொல்வோம் யாங்கள் மேலைகோட் டதனில் கீழ்ப் பால்
மெய்ப்புள கள்ள ஜாதி உற்றன னிவனின் ஜன்மம்
அப்படி யுதித்தோ னுக்கு ஆண்மையும் வலிவு முண்டாய்.

10. இவ்விதமாயிருக்கக்கூடிய தகப்பனுருடைய முன் ஜன்மத்தைப் பற்றி மெச்சிக்கொள்ளும்படியாயும் உண்மையாயும் நாங்கள் சொல்லுகிறோம் இவர் மேலைக் கோட்டையில் கிழக்குத் திக்கில் மேன்மையாயுள்ள கள்ளர் ஜாதியில் பிறந்தார். இவ்விதமாய்ப் பிறந்தவருக்கு ஆண்தன்மையும் மனத்திடமும் தேகவலிவும் உண்டாகியிருந்தன.

11. பூமியு மதிக முண்டு புத்திரர் மனைவி யுண்டாய்
நேமியோர் மெச்ச வாழ்ந்து நிற்கின்ற காலம் தன்னில்
நாமினி தனக்கு ஊழி நாட்டுவோ மினிமே லாக
காமனை எரித்தோன் பக்கல் கனத்திடு மம்மை யேகேள்.

11. இவருக்குப் பூமியும் அதிகமாக விருந்தது. இவர் மனைவி புத்திரர்கள் இவர்களையுடையவராய்ப் பூமியில் மெச்சும்படியாக வாழ்ந்து கொண்டிருக்கின்ற காலத்தில் இவருக்கு வந்து நேர்ந்த ஊழ்வினையை இனி

மேலாக நாங்கள் சொல்லுகிறோம். காமனை எரித்தக் கடவுளாகிய சிவ பெருமானுடைய பக்கத்தில் வலிமையாயுள்ள பார்வதியம்மையே ! கேட்பீராக.

வேறு

12. அந்தக்கா லத்தில் இனத்துடன் சேர்ந்து
அங்கவர் களவுக்கு ஏக
பந்தமாய்த் திருடும்கா லத்தி லேதான்
பத்தினி மாங்கலிய வாங்கச்
சிந்தையும் நொந்து அவளிட்ட சாபம்
செப்புவோம் பின்ஜன்மம் தன்னில்
வந்திடு மனையாள் மாண்டிடு மென்றாள்
மங்கையே கேட் டிடாயே.

12. அவ்விதமாக அவர் வாழுங்காலத்தில் அவர் தன்னுடைய குலத்தாருடைய கூட்டத்திற் சேர்ந்து கொண்டு திருடப்போய்த் தன் உறவினருடன் ஏற்பாட்டின்பிரகாரம் திருடுங்காலத்தில் ஒரு கற்புடையவளுடைய மாங்கல்லியத்தைத் திருடிக்கொள்ள, அவள் தன்னுடைய மனது நொந்து கொடுத்தச் சாபத்தைச் சொல்லுகிறோம். "உனக்குப் பின் ஜன்மத்தில் வந்து வாய்க்கும் உன்னுடைய மனைவி இறந்து விடுவாள்" என்று சாபங் கொடுத்தாள், பார்வதியம்மையே ! கேட்பீராக.

வேறு

13. ஆகையாலிச் சென்மத்தில் அவன்மனை யாளைக் கொண்டு
மோகங்க ளனுப வித்து மொழிகிறேன் பாலர் தோன்றி
ஆகவே இவனின் பாரி அடைகுவாள் பரனின் பாதம்
பாகமா யிரண்டா மாது பாரினில் வருவாளம்மா.

13. ஆகையால் அவர் இந்த ஜன்மத்தில் மனைவியை அடைந்து அவள் பேரில் மோகங்கொண்டு அவளை அனுபவித்து அவளிடம் குழந்தைகள் பிறந்த பிறகு அவருடைய பாரியாள் கடவுளின் பாதங்களை அடைவாள் அஃதாவது இறந்து விடுவாள் என்று சொல்லுகிறேன். அதன் பிறகு அவருக்கு இப் பூமியில் இரண்டாவது மனைவி வந்து சேருவாள். பார்வதி அம்மையே !

14. ஆகையால் பின்ஜன் மத்தில் அருணைநா டதற்கு மேல்பால்
வாழ்க்கையாய்ச் சிற்றூ ரொன்றில் வைசியனாய் ஜனித்துச் செட்டுப்
பாகமாய்ச் சேஷம் செய்து பாரியு மகவு முண்டாய்ச்
சாரசி தனக்கு மெத்தச் சந்தோஷ மடைவானுமே.

14. அவர் மறு ஜன்மத்தில் திருவண்ணாமலைக்கு மேற்கேவளம் பொருந்திய ஒரு சிறிய கிராமத்தில் வைசிய குலத்தில் பிறந்து வியாபாரத்தைப் பாகமாகவும் பக்குவமாகவும் கொஞ்சமாகவுஞ் செய்து மனைவியையுங் குழந்தைகளையு மடைந்து பரிகாசக்காரன் அடையும் சந்தோஷத்தை விட அதிக சந்தோஷத்தை அடைவார்.

15. ஜாதகன் குணத்தை யாங்கள் சாற்றுவோ மிருசி கப்பன்
போதனைக் கல்வி வாசம் புகழ்ச்சியாய்ப் பூமி சேர்ப்பன்
சாதனை யுடையன் காமி சந்ததி விருத்தி யுள்ளான்
மாதவர் தம்மைப் பேணுன் வம்சத்தைக் காப்பா னாகும்.

15. ஜாதகருடைய குணதிசயங்களைச் சொல்லுகிறோம். இவர் இரண்டு நிறங் கலந்த மாநிறமான தேகத்தையுடையவர். ஞானமும் கல்வியும் அடைந்து புகழுடன் வாழ்வார். பூமிகளைச் சேகரிப்பார். பிடிவாதஞ் செய்பவர். காமமுடையவர். இவருக்குக் குழந்தைகள் விருத்தியாகும். முனிவர்களைப் போற்றுதவர். தன்னுடைய வம்சத்தைக் காப்பாற்றுவார்.

16. நடையது சொகுச னுவன் நவில்புளிப் பதனி லிச்சை
விடை யுமா விருத்தி யுண்டு வேணது பொருளும் சேர்ப்பன்
அடைமொழி பேச வல்லன் அண்டினபேரைக் காப்பன்
குடமெனும் தனத்தாள் பாரி கொள்வனு மிரண்டு என்றே.

16. இவருடைய நடவடிக்கைகள் ஒழுங்குள்ளதாகவிருக்கும். இவருக்குப் புளிப்பான வஸ்துக்களின் பேரில் ஆசையிருக்கும் என்று சொல்லுகிறோம். இவருக்கு எருதும் பசுவும் விருத்தியாகும். இவர் அனேகப் பொருள்களைச் சேர்ப்பார். பகுத்தறிந்து பேசுந்திறமையுடையவர். தன்னை வந்து அண்டினவர்களைக் காப்பாற்றுவார். கும்பராசியில் பிறந்து தனத்தையுடைய மனைவியை அடைவார். இவருக்கு இரண்டு மனைவிகளுண்டு என்று சொல்லுகிறோம்.

17. முகமது வசிய மாகும் முன்கையில் மச்ச ரேகை
அகமதில் லட்சுமி வாசம் அழகுளாள் உரோம நீட்சி
ஜகமதில் கீர்த்தி யேற்பள் சிவந்தமெய் உடைய ளாவள்
தகைமையாய்க் கோபி யாவள் தயாளமு முடைய ளாமே.

17. இவருடைய மனைவியின் முகம் அழகாகவும் வசீகரமாகவும் இருக்கும். இவளுடைய உள்ளங்கையில் மச்சரேகை என்ற ஒருவித ரேகையிருக்கும். இவளுடைய வீட்டில் லக்ஷ்மி வாசஞ் செய்வாள். இவள் அழகுள்ளவள். நீண்ட மயிருடையவள். பூமியில் கீர்த்தியையும் பெருமையையும் அடைவாள். சிவப்பானத் தேகத்தையுடையவள். ஒழுங்கும் கோபமுமுடையவள். தயாளமான குணத்தையு முடையவளாவள்.

18. இப்படி அறுவர் கூற இயம்புவார் புயண்டர் கேள்வி
மெய்ப்படி கண்ணுள் ரெண்டு வழுதித்தினீர் உரைசொல் என்னச்
செப்பமா யறுவர் தாமும் சொல்லுவார் எழில் கேது
[1] கொப்பென ஏழோன் காரி [2] கொண்டதோர் சரத்தி லேற.

18. இவ்விதமாக அறுவர் என்ற முனிவர் சொல்ல, புஜண்டர் என்ற ரிஷி ஒரு கேள்வி கேட்கின்றார். விசுவாசத்தைக் காட்டிக்கொள்ளுகின்ற மனைவியர் இருவர் என்று சொன்னீரே! அதற்குக் காரணத்தைச் சொல்லும்

[1] கௌள்ளை. [2] ச்னிட.

என்று கேட்க, அதற்கு இணங்கி அறுவர் என்ற முனிவர் செவ்வையாகச் சொல்லுகிறார். ஏழாவது பாவத்தில் கேது இருந்து, கொண்டையையுடைய வளாகிய மனைவியைக் குறிக்கும் ஏழாவது ராசிக்குடையவராகிய சனி கடக மாகிய சர ராசியிலிருக்கிறார்.

**குறிப்பு.**—ஏழாம் பாவத்திற்குடையவர் சர ராசியிலிருந்தால் இரண்டு தார யோகமுண்டு. தமிழ் ஜாதகாலங்காரம் 648-ஆவது பாடலைப் பார்க்க வும். "ஏழ் வீட்டினிற் கதிபன் சரத்தினிற்கில் இரு மனைவி ........"

19. இப்படி யிருக்கும் போது யியம் புவோம் தாரம் ரண்டு
செப்பமாய் முன்னு ளூழி திவினை அணுகினத் தாலே
அப்படி முதல் பாரிக்கு அழகுடன் கர்ப்ப முண்டாய்க்
கொப்பனே பாதை யாலே கொண்டதோர் தாரம் நஷ்டம்

19. இவ்விதமாகக் கிரகங்கள் இருப்பதாலே ஜாதகருக்குத் தாரம் இரண்டு என்று சொல்லுகிறோம். வழிவழியாய் முன் ஜன்மத்தில் ஏற்பட்ட ஊழ்வினையாகிய கெட்டவினை ஜாதகரை இந்த ஜன்மத்தில் வந்து அடைந்ததால் முதல் மனைவிக்கு அழகுமேற்பட்டுக் கர்ப்பமுண்டாகிப் பிறகு சீக்கிரத்தில் அதிக நோயுண்டாகி முதல் தாரமாக வந்து வாய்த்த மனைவி இறந்து விடுவாள்.

20. தாரமே நஷ்ட மென்று சாற்றினீர் முனிவரே கேள்
தீரமாய் முன்னு ளூழி செப்பு வீரென்று கேட்கப்
பாரினில் அறுவர் தாமும் பார்வதி முகத்தை நோக்கி
கூறுவோ கேளு மம்மா குடகினி லிவன்முன் ஜன்மம்.

20. ஜாதகருக்குத் தாரம் நஷ்டமாகிவிடும் என்று சொன்னீரே முனிவரே! நான் சொல்லுவதைக் கேளும். முன் ஜன்மத்திலேற்பட்ட ஊழ் வினையைத் தைரியத்துடன் சொல்லுவீரென்று கேட்க, அறுவர் என்ற முனிவர் பார்வதியம்மையின் முகத்தைப் பார்த்து, பார்வதியம்மையே! சொல்லுகிறோம், கேட்பீராக. ஜாதகருடைய முன்ஜன்மம் குடகு தேசத் தில் சம்பவித்தது.

21. அந்தணர் குலத்தில் வந்து அருந்தவ முனிவர்க் கன்னம்
சிந்தையில் மகிழ்ச்சி யாகச் செய்தவ னிவனே யம்மா
பிந்தியு மனையாள் மக்கள் பெரும்பூமி கன்று காலி
சந்ததம் தனமு மோங்கி சலிப்பிலா திருக்கு நாளில்.

21. ஜாதகர் முன்ஜன்மத்தில் பிராமணர் ஜாதியில் வந்து பிறந்து சிறந்த தவத்தைச் செய்கின்ற ரிஷிகளுக்குச் சாப்பாட்டைத் தன்னு டைய மனத்தில் சந்தோஷத்துடன் கொடுத்து வந்தவர் இந்த ஜாதகர் ஆவார். பார்வதியம்மையே! பிறகு ஜாதகர் மனைவி குழந்தைகள் அதிகமான பூமி பசுக்கூட்டம் கன்று எப்போதுமுள்ள தனம் ஆகிய இவைகளுண்டாகி மனத் திற்குத் துக்கம் நேரிடாமல் செழித்தோங்கி வாழுகின்ற காலத்தில்;

22. வந்தஊழ் வினையைச் சொல்வேன் வளமிலா ஈச னுக்குச்
சந்ததம் புஷ்பம் கோர்த்துத் தான்கொண்டு வருகும் போது
இந்தவாறு மைந்தன் கண்டு யிவைகளை மடக்கி வாங்கிக்
கொந்தளி குழலி யார்க்குக் கொண்டுபோய்த் தந்து விட்டான்.

22. ஜாதகருக்கு வந்து சம்பவித்த ஊழ்வினையைச் சொல்லு கிறேன். செல்வமில்லாத ஒரு சிவன் கோயிலுக்காக எப்போதும்போல புஷ்பங்களைக் கோத்துக் கட்டி எடுத்துக்கொண்டு ஒரு ஸ்திரீ வரும்போது, இப்படி வருபவளை இந்த ஜாதகர் வழியில் பார்த்து அவளை வழிமடக்கி அந்தப் புஷ்ப மாலைகளையும் சரங்களையும் வாங்கிக்கொண்டுபோய்ச் கூந்தலையுடைய ஹீனமடைந்தப் பெண்ணாகிய ஒரு வேசிக்குக் கொடுத்து விட்டார்.

23. அம்மாது வேசி வாங்கி அணிந்தனள் அதுஓர் தோஷம்
செம்மையாய் நேசம் செய்து சினேகிதன் பொருள் கவர்ந்து
வம்புபோல் விரோதம் செய்து வந்ததோ ஷம்தா னென்று
தம்பிக்குப் பாகம் தன்னில் தானவன் மோசம் செய்து ;

23. வேசியாகிய அவள் அந்தப் புஷ்பங்களைப் பெற்றுக்கொண்டு முடித்துக்கொண்டாள். இவ்விதமாக ஜாதகருக்கு ஒரு தோஷம் நேர்ந்தது. ஜாதகர் ஒருவரிடம் பெருமையாயும் ஒழுங்காயும் சிநேகஞ் செய்துகொண்டு பிறகு அவருடைய பொருளைத் திருடி அவரிடம் விரோதமடைந்து சண்டை போட்டதால் வந்து சம்பவித்தது இன்னொரு தோஷம். மேலும் ஜாதகர் தன்னுடைய தம்பியுடன் பாகப் பிரிவினையைச் செய்து கொள்ளுவதில் மோசம் செய்தார்.

24. இவ்வித தோஷத் தாலே யிருபிறப் பாள னுக்குக் [1]
கவ்விற்று அச்சா பங்கள் காளைதுன் மரண மாகி
வெவ்விய இச்சென் மத்தில் விளங்கின இந்தப் பாலன்
திவ்விய மாதே நாங்கள் சொல்லுமிம் மொழி குன்றுவே.

24. இவ்விதமான மூன்றுவித தோஷங்களாலே இரு பிறப்பாளர் என்று சொல்லப்பட்ட பிராமணர் குலத்திலுதித்த அந்தப் பிராமணருக்குத் தோஷங்கள் நேர்ந்தன. அவர் இளம் வயதிலே அகால மரணமடைந்து இந்த ஜன்மத்தில் இந்த ஜாதகர் வந்து பிறந்தார் என்று மேன்மை தங்கிய சிறந்த பார்வதியம்மையே ! நாங்கள் சொல்லுகிறோம். எங்களுடைய வார்த்தைகள் தவறிடாதவையாகும்.

25. ஆகையா லந்தப் பாவம் அணுகிற்று இவனுக் கேதான்
தோகை யாிரண்டு முண்டு சொல்லுவேன் குடும்ப மலைச்சல்
பாகமும் வேற தாகும் பாரில் மாதுரு நஷ்டம
போகமாய்ப் புத்திர தோஷம் மொழிந்தன மிவனுக் கேதான்.

25. ஆகையால் மேற்சொல்லிய தோஷங்கள் இந்த ஜாதகருக்கு வந்து சம்பவித்தன. ஜாதகருக்கு இரண்டு தாரமாகும். தன்னுடைய குடும்

[1] பிராமணர்.

பம் துன்பத்தை அடையும். பாகப் பிரிவினை ஏற்பட்டுவிடும். தாய் இறந்து விடுவாள். ஆசைமேலிட்டுப் பிறந்த குழந்தைகளுக்குத் தோஷமுண்டாகும் என்று நாங்கள் சொல்லுகிறோம்.

26. அந்ததோர் சாபம் தீர அருளுவோம் கிரியை யொன்று
தந்திமா முருகன் கோயில் தட்சிணம் தன்னில் செய்து
வந்தவர்க் கன்னிமீந்து வளமையாய்த் தீபம் வைத்தால்
முந்திய வூழி தீரும் மொழிகிறோம் மேலும் கேளே.

26. மேற்சொல்லிய முன் ஜன்மத்தின் பாபங்கள் நீங்குவதற்காக நாங்கள் ஒரு சாந்தி சொல்லுகிறோம். ஆண் யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளின் கோயிலைத் தெற்கில் உடனே கட்டி, தன்னிடம் வந்தவர்களுக்குச் சாப்பாடுபோட்டு அந்தக் கோயிலில் தீபங்களை மாட்சிமை யடையும்படியாய் வைத்து வந்தால் முன் ஜன்மத்திய ஊழ்வினைகள் தீர்ந்துவிடும் என்று சொல்லுகிறோம். பார்வதியம்மையே! நாங்கள் இன்னும் சொல்லுவதைக் கேட்பீராக.

27. மாதமோர் கார்த்தி கைக்கு வந்தவோர் பரத்துக் கன்னம்
நீதியா யளிப்பா னாகில் நில்லாது பாவ தோஷம்
மேதினி லதிக கீர்த்தி விளங்கிடும் தாரம் ஒன்றே
காதலர் விருத்தி யாகும் கனமுட னுரைத்தோ மம்மா.

27. மேலும் ஒவ்வொரு மாதத்திலும் கிருத்திகை தினத்தில் வந்த ஒரு பரதேசிக்குச் சாப்பாடு நீதி சாஸ்திரத்தில் சொல்லியபடி ஒழுங்காயும் பக்தியுடனும் போடுவாராகில் முன் ஜன்மத்திய பாவங்களும் தோஷங்களும் நீடிக்காமல் விலகிவிடும். பூமியில் ஜாதகருக்கு நல்ல கீர்த்தியும் பெருமையும் உண்டாகும். தாரம் ஒரு தாரமாகவே யிருந்துவிடும். ஆகையால் பிறக்கும் பிள்ளைகள் விருத்தியடைவார்கள் என்று தைரியமாகவும் திடமாகவுஞ் சொல்லுகிறோம். பார்வதியம்மையே!

28. புகலிவன் சகோத ரர்கள் போற்றுவே னண்பா லொன்று
வகையுட னதன்மே லில்லை திருமணக் காலம் சொல்வேன்
சுகமுட னிருப தாண்டில் தட்சிணம் அயலூர் தன்னில்
தகைமையாய் மாது வந்து சேருவா ளிவனுக் கம்மா.

28. ஜாதகருடைய சகோதரர்களைப் பற்றிச் சொல்வோம். இவருக்கு ஓர் ஆண் சகோதரந்தானுண்டு. அதற்குமேல் இவருக்கு உடன் பிறந்தார் கிடையாது. ஜாதகருக்கு இனிமேல் விவாகம் நடக்குங்காலத்தைப்பற்றிச் சொல்லுகிறேன்: ஜாதகருக்கு இருபதாவது வயதில் தெற்கே அருகிலுள்ள அயலூரிலிருந்து ஓர் அழகிய பெருமை வாய்ந்த பெண் மனைவியாய் வந்து அமைவாள். பார்வதியம்மையே!

**குறிப்பு.**—ஜன்ம நட்சத்திரம் விசாகம் இரண்டாம் பாதமானால் ஜாதகருக்கு வயது ஷை 19-0-0 முதல் 20-0-0 வரையிலும் சனி தசை நடக்கிறது. சனி ஏழுக்குடையவராகிக் களத்திரகாரராகிப் போகஸ்தானமாகிய நான்காம்

பாவத்திற்கு அதிபதியாகிய சுக்கிரனுடனும், போககாரகனாகிய ராகுவுடனும் இருந்துகொண்டு ஏழாம் பாவத்தைப் பார்க்கின்றார், ஆகையால் விவாஹ யோகமுண்டு. பல கிரந்தங்களில் போகஸ்தானம் நாலாமிடம் என்றும், சில கிரந்தங்களில் மூன்றுமிடம் என்றும் கண்டிருக்கிறது.

29. சொற்படி முன்னால் ஊழி சுந்தரன் செய்யா னாகில்
மெய்ப்படி மனையாள் மாயும் மைந்தரும் விருத்தி யாகா
மெய்ப்புடன் பெண்ணி ரண்டு உலகினில் விருத்தி யாகார்
ஒப்புடன் செய்வா னாகில் ஓங்கிடும் செல்வ மேலாய்.

29. நாங்கள் முந்தியே சொல்லியுள்ள பிரகாரம் ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்திய பாவங்களையும் தோஷங்களையும் நிவிர்த்தி செய்யச் சாந்திகள் செய்யாமலிருந்தால் உண்மையாகவே மனைவி இறந்து விடுவாள். பிள்ளைகளும் விருத்தியாகமாட்டார்கள். உண்மையாகவே இரண்டு பெண்களும் விருத்தியடையமாட்டார்கள். நாங்கள் சொல்லிய சாந்திகளைச் சம்மதத்துடன் பொருத்தமாகச் செய்வாரானால் எல்லாச் செல்வங்களும் மேன் மேலாய் ஓங்கி வளர்ந்துவரும்.

30. இவ்வித மிருவர் கூற இயல்ஜய முனிவர் சொல்வார்
நல்லிய மூன்றோன் புந்தி லக்கின விரைய மேற
அவ்விதப் பால னுக்கு ஆணொன்று சோதர மென்றீர்
திவ்விய அவனின் சேதி செப்புவீர் நூலை ஆய்ந்து.

30. இவ்விதமாக இரண்டு முனிவர்கள் சொல்லிவரவே, நல்ல குணத்தையுடைய ஜயமுனிவர் கேட்கிறார், நன்மையைச் செய்யக்கூடிய மூன்றும் பாவத்தின் அதிபதியாகிய புதன் லக்கினத்திற்கு விரய ஸ்தானமாகிய பன்னிரண்டாம் பாவத்தில் இருக்கிற ஜாதகருக்கு ஓர் ஆண் சகோதரம் உண்டு என்று சொன்னீர்கள். இந்தச் சாஸ்திரத்தை ஆராய்ச்சி செய்து அந்தச் சகோதரனுடைய பலாபலன்களைச் சொல்லுவீராக.

31. ஆதியில் தரித்திர முண்டு அவனுண்டி குறைவு முண்டு
நீதியாய் ரோகி யாவன் நித்தியம் தோஷ முண்டு
கோதிலா மூன்று ண்டின்மேல் கூறுவோம் பலன்கள் யாவும்
தீதிலாக் குணவா னாகும் தீரனும் சொல்லுக் கஞ்சான்.

31. இனிமேல் ஜாதகருடைய சகோதரனுடைய பலாபலன்களைச் சொல்லுகிறார். சகோதரனுக்கு இளமையில் தரித்திரம் இருக்கும். சாப்பாடும் குறைவுபட்டிருக்கும். அவர் நோயாளியாயிருப்பார். தினந்தோறும் அவருக்குக் கஷ்டங்களுண்டு. மூன்று வயதிற்குமேல் பலன்களெல்லாம் குற்றமில்லாமலிருக்கும் என்று சொல்லுகிறோம். சகோதரர் கெட்டகுணங்களில்லாதவராயிருப்பார். தைரியமுள்ளவர். பேசுவதற்குப் பயப்படாதவர்.

32. வல்லியே வித்தை புத்தி வந்திடு மிவனுக் கம்மா.
மெல்லென வார்த்தை கூறுவன் மேதினில் கீர்த்தி எற்பன்
சொல்லிய கோப முள்ளான் சோம்பிடான் காரி யத்தில்
நல்லதோர் பலன்கள் மேலாய் நாடிடும் பெரியோர் நட்பே.

32. பார்வதியம்மையே! இவருக்கு வித்தையும் அறிவும் வருமம்மா, இவர் மெதுவாகப் பேசுவார். பூமியில் பெருமையை யடைவார். பேசும்போது கோபமுடையவர். ஒரு காரியத்தைச் செய்யும்போது சோம்பலில்லாமல் அதைச் செய்வார். இவருக்கு நல்ல பலன்கள் மேல் மேலாய் உண்டாகும். பெரிய மனுஷர்களுடைய சினேகங்கள் உண்டாகும்.

33. தனபதியாகி வாழ்வன் சத்தியம் தவரு நெஞ்சன்
கனபூமி யதிகம் சேர்ப்பன் காளைக்குப் புத்திர ரில்லை
இனத்துக்கு சிரேஷ்ட னவன் இவனெங்கும் செல்வாக் குள்ளான
மனஞ்சலிப் பில்லா வாழ்வன மங்கையே மேலுங் கேளே.

33. இவர் செல்வமுள்ளவராகவிருந்து வாழ்வார். உண்மையைத் தவருமல் பேசும் மனமுடையவர். மேன்மையான பூமிகளை அதிகமாகச் சேர்ப்பார். இவருக்குப் பிள்ளைகள் கிடையா. தன்குலத்திற்கு இவர் பெரியவராவார். எங்கேபோனாலும் செல்வாக்குடையவராவர், மனதிற்குக் கஷ்டம் நேரிடாமல் வாழ்வார். பார்வதியம்மையே ! நாங்கள் இன்னும் சொல்வதைக் கேட்பீராக.

34. பலபல நோய்கள் வந்து பருகிடும் நாலாண் டிற்குள்
நிலைமையாய்க் கிரக சாந்தி நிகழ்த்தினல் தோஷம் போகும்
நலமுடன் செய்யா விட்டால் நாயகன் தோஷ முண்டு
குலவிய மாதே யாங்கள் கூறிய மொழி குன்றுவே.

34. இவருக்கு நான்கு வயதிற்குள்ளே அனேகவிதமான நோய்கள் வந்து சம்பவிக்கும், உறுதியாய்க் கிரகதோஷ பரிகாரத்திற்காகச் சாந்திகளைச் செய்தால் தோஷங்கள் போய்விடும். சாந்திகளை நன்றுகச் செய்யாவிட்டால் இவருக்குத் தோஷங்கள் ஏற்பட்டுவிடும். எங்களுடன் சஞ்சரிக்கும் பார்வதியம்மையே ! நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும்.

35. தந்தையின் காலம் யாங்கள் சாற்றுவோ மூப்பா னைந்தில்
எந்தையே மாதுரு வுக்கு இருநான்கில் கண்ட முண்டு
மைந்தனு அறுபத் தொன்பான் வளர்பிறை ரிஷபமாதம்
முந்தின தசமி தன்னில் முத்தியாம் பதவி சேர்வன்.

35. ஜாதகருடைய தகப்பனுருக்கு மாரககாலத்தை இனிமேல் சொல்லுகிறேம். தகப்பனர் ஜாதகரது முப்பத்தைந்தாவது * வயதில் இறந்து போவார். எங்கள் தாயாகிய பார்வதியம்மையே ! ஜாதகருடைய தாயாருக்கு எட்டாவது † வயதில் கண்டமுண்டாகி அவள் இறந்துவிடுவாள். ஜாதகரும் தனது அறுபத்தொன்பதாவது †† வயதில் வளர்பிறையில் ரிஷப மாதமாகிய வைகாசி மாதத்தில் தசமி திதியின் முற்பாகத்தில் எல்லோருக்கும் முந்தியாயுள்ள கடவுளின் பதவியை அடைவார், அ·.தாவது இறந்துவிடுவார்.

* குறிப்பு.—ஜாதகருக்கு வயது ௵ 34 முதல் ௵ 35 வரையில் புத தெசை நடக்கிறது. புதன் பிதுர்ஸ்தானத்தின் ஏழாமிடமாகிய கன்னிக்கு

அதிபதியாகியிருப்பதால் (அ:.தாவது பிதுர்கர்மஸ்தானங்களில் ஒன்றாகிய மூன்றுக்குடையவராகி யிருப்பதால்) பிதுர் மாரகத்திற்கு யோகமுண்டு.

† குறிப்பு.—ஜாதகருக்கு வயது ஷ 7 முதல் ஷ 8 வரையிலும் குரு தசை நடக்கிறது. குரு மாதுருஸ்தானத்திற்கு 3–6–க்குடையவராகி இரண்டில் இருக்கிறார். ஆகையால் மாதுருக்கு மாரகயோகமிருக்கிறது. ஒரு பாவத்தில் அந்தப் பாவகாரகர் இருந்தால் அந்தக் காரகத்திற்குத் தோஷமுண்டு. இங்கு மாதுருஸ்தானத்தில் மாதுருகாரகராகிய சந்திரன் இருக்கின்றார். ஆகையால் மாதுருக்குத் தோஷமுண்டு. சம்ஸ்கிருத பலதீபிகை என்ற புத்தகத்தில் 15-வது அத்தியாயத்தில் 26-வது சுலோகத்தைப் பார்க்கவும். மேலும் அங்காரகன் நான்காவது பாவத்திலிருப்பதுடன் சந்திரனுடன் கூடியிருக்கின்றார். ஆகையால் மாதுருக்குத் தோஷம் அதிகமாக விருக்கின்றது.

†† குறிப்பு.—ஜாதகருக்கு வயது ஷ 68 முதல் ஷ 69 வரையில் சுக்கிர தசை நடக்கின்றது. சுக்கிரன் கடக லக்கினத்திற்குப் பலத்த மாரகாதிபதியாகி லக்கினத்தில் அஷ்டமாதிபதியாகிய சனியுடன் கூடியிருக்கின்றார். ஜாதகருக்கு மாரகயோகம் உண்டு. துய்யகேரளம் 8-ஆம் பாவம், 20-ஆவது பாடலைப் பார்க்கவும்.

36. பின்வரு மிவனின் ஜன்மம் பேசுவோம் கடையூர் பக்கல்
தென்புடன் பிரம்ம சாந்தி தெலுங்கனு யுதிப்பா னம்மா
நண்புள செல்வம் ஞானம் நல்கியே சிவனுக் கன்பாய்
நின்குரு வாழ்வான் யென்று இயம்பினோம் ரிஷிக ளம்மா.

36. இவருக்குப் பின்னால் நேரிடுகின்ற மறுஜன்மத்தைச் சொல்லுகிறோம். இவர் திருக்கடையூருக்குப் பக்கத்தில ஆசையுடன் ஓமஞ்செய்யும் தெலுங்கு பிராமணராகப் பிறப்பார், பார்வதியம்மையே, பிறந்து, நட்பு செல்வம் அறிவு இவைகளை அடைந்து பரமசிவனிடம் அன்பாய் இருந்து ஹோமக்கிரிகைகளைச் செய்யுங் குருவாகவிருந்து வாழ்வார் என்று ரிஷிகளாகிய நாங்கள் சொல்லுகிறோம். பார்வதியம்மையே!

## ஜாதகம் 56.

1. புந்தி[1]ரவி[2]மீனத்தில் கேதுமேஷம் பொன்னவனும்[3]
தெருக்காலில்[4] மதியும்[5] வில்லில்[6]
மந்தனுமே[7]கன்னியில் ராகுகோலில்[8] வான்புகரும்[9]
கும்பமதில் மகரம் செவ்வாய்ப்
பந்தமாய்ஜனனமது கடகமாகப் பகருவோம்
மாண்பாலாம் ஜனன மாகும்
வந்ததொருஇல்லமது கீழ்மேல்வீதி வாசலுமே
தெற்காகும் வழுத்து வோமே.

| சூரியன் புதன் | கேது | | |
|---|---|---|---|
| சுக்கிரன் | இராசி சக்கரம். | | லக்கினம் |
| அங்காரகன் | | | |
| சந்திரன் | குரு | ராகு | சனி |

1. புதனும் சூரியனும் மீனத்திலும், கேது மேஷத்திலும், குரு விருச்சிகத்திலும், சந்திரன் தனுசிலும், சனி கன்னியிலும், ராகு துலாத்திலும், ஆகாயத்தில் சஞ்சரிக்கின்ற சுக்கிரன் கும்பத்திலும், அங்காரகன் மகரத்திலும் இவ்விதமாகக் கிரகங்கள் அழகாய் வரிசையாக விருந்து ஜனனம் கடகராசியில் நேர்ந்தால் குழந்தை ஆணாக ஜனிக்கும் என்று சொல்லுகிறோம். பிறந்த வீதி கிழக்கு மேற்குத் தெருவாகும். தெருவாயிற் படி மேற்கிலிருக்கும் என்று சொல்லுகிறோம்.

குறிப்பு.—இந்த ஜாதகத்திற்கு ஜன்ம நட்சத்திரமாவது அல்லது ஜனனகால தசையாவது குறிக்கப்படவில்லை. ஆயினும் சந்திரன் தனுசில் இருப்பதால் ஜனன நட்சத்திரம் மூலம், பூராடம், உத்திராடம். 1-ஆம் பாதம் முடியும் வரையிலும் இருக்கவேண்டும். ஜனன லக்கினத்தை யோசிக்குமிடத்து ஜனன நட்சத்திரம் மூலம் 4-ஆம் பாதம், அல்லது பூராடம் 1-ஆம் பாதம் 4-ஆம் பாதம், உத்தராடம் 1-ஆம் பாதம் இவைகளில் ஒன்றாக

---

[1] புதன். [2] சூரியன். [3] குரு. [4] விருச்சிகம். [5] சந்திரன். [6] தனுசு. [7] சனி. [8] துலாம். [9] சுக்கிரன்,

இருக்கக்கூடும். இங்குக் கொடுத்துள்ள ராசிச்சக்கர அமைப்பிற்குப் பின் வரும் அம்சச்சக்கர கிரகநிலை பொருத்தமுடையதாகும். மிதுனத்தில் ராகுவும், சிம்மத்தில் அங்காரகனும், கன்னியில் குருவும் சனியும், தனுசில் சூரியனும் கேதுவும், கும்பத்தில் புதனும், மீனத்தில் சுக்கிரனும், சந்திரன் மேற்குறித்த நட்சத்திரப்பாகத்திற்காகிய அம்சராசியிலும் ஆகும். இந்த ஜாதகம் லக்கினத்தை உள்ளடக்கியிராத ஒருவித கிரகமாலிகா யோக ஜாதகமாகும்.

2. வடக்கில்பாஞ் சாலி காளி வரநதி சூழி யுண்டு
குடகினில் அனுமான் சாலை கூறு வோம் கிழக்கில் மாயோன்
இடத்துக்குத் தெற்கிலே தான் படர்ந்ததோர் சமணன் கோஷ்டம்
தடத்துக்கு அருகில் மூத்தோன் சலகரை ஓடை யாமே.

2. வடக்குத் திக்கில் தூரௌபதி யம்மன் கோயிலும் காளிகோயிலும், நதியும், குளமும், மேற்குத்திக்கில் அனுமார் கோயிலும் சாலையும் வெளி மண்டபமும், கிழக்குத்திக்கில் விஷ்ணு கோயிலும், பிறந்தவிடத்திற்குத் தெற்குத்திக்கில் சமணர்களுடைய கோயிலும், பிறந்தவிடத்திற்கு அருகில் விநாயகர் கோயிலும் நீர்க்கரையும் ஒடையும் இருக்கும் என்று சொல்லுகிறோம்.

3. இவ்வித அடையாள த்துள் இலகிய பேரூர் தன்னில்
நவ்விய சைவ ஜாதி நாட்டுவோம் சிவம தங்கள்
கவ்விய பலன்கள் யாவும் கழறுவோ மிந்நூல் தன்னில்
திவ்விய மாதே யாங்கள் சொலுமொழி குன்றி டாது.

3. இவ்விதமான அடையாளங்களுள்ள, பெருமைகுறைந்த ஒரு பெரிய கிராமத்தில் அழகும் பெருமையும் வாய்ந்த சிவமதங்களை அனுஷ்டிக்கும் ஒரு சைவ குலத்தில் ஜாதகர் பிறந்தார் என்று சொல்லுகிறோம். பலவிதமான பலாபலன்கள் எல்லாவற்றையும் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகிறோம். மேன்மைதங்கிய பார்வதியம்மையே ! நாங்கள் சொல்லுகிற வார்த்தைகள தவறிடாமல் நடக்கும்.

4. தந்தையின் குணத்தை யாங்கள் சாற்றுவோம் சிவந்த மேனி
பந்தமாய் யொடிச்சல் தேகி பாரினில் கீர்த்தி யுள்ளான்
சிந்தையில் கபடு மில்லான் செலவுளான் காமி யாவன்
தன்தன மில்லா னுகும் தாரங்க ளனேக முண்டு.

4. தகப்பனுருடைய குணாதிசயங்களைப்பற்றி இனிமேல் சொல்லுகிறோம். இவர் சிவப்பு நிறமுள்ள தேகமுடையவர். அழகுபொருந்திய ஒல்லியான தேகமுடையவர். உலகில் பெருமையுடையவர். தன்னுடைய மனத்தில் கபடமில்லாதவர். செலவு செய்பவர். காமமுடையவர். தான் சம்பாதித்தச் சொத்தில்லாதவர். அனேகத் தாரங்கள் உள்ளவர்.

5. லாகிரி அதிகம் கொள்வன் நடனசங் கீத முள்ளான்
வாகன முடைய னுவன் மைந்தரு மதிக முள்ளான்
போகவான் சுகபு சிப்பன் புண்ணிய மனத்தா னுகும்
தியாகியா மொருவர்க்கஞ்சான் ஜனங்களுக் குதவி யாவன்.

5. லாகிரி வஸ்துக்களை அதிகமாய்ச் சாப்பிடுவார். நாட்டியம், கூத்து, சங்கீதம் இவைகளை அனுபவிப்பார். வண்டி மாடுகள் உள்ளவர், அனேகக் குழந்தைகளையுடையவர். போகங்களை அனுபவிப்பவர். சுகமான ஆகாரத்தைச் சாப்பிடுவார். புண்ணியமான காரியங்களைச் செய்ய ஆசையுள்ள நல்ல மனத்தையுடையவர். கொடையாளியாயிருப்பார். யாருக்கும் பயப்பட மாட்டார். ஜனங்களுக்கு உதவி செய்வார்.

6. அகசிய மதிகம் சொல்வன் அண்டின பேரைக் காப்பன்
பகைவரை ஜயிக்கவல்லான் பந்துவு மதிகமில்லான்
ஜகமதில் பூமி சேர்க்கான் ஜனப்பகை ரோக முள்ளான்
வகைக்கரு மருத்தி னுலே மைந்தனும் ஜீவிப் பானே.

6. சிரிப்பை உண்டாக்கக்கூடிய வேடிக்கையான வார்த்தைகளை அதிகமாய்ச் சொல்லுவார். தன்னை வந்து அடைந்தவர்களைக் காப்பாற்று வார். எதிரிகளை வெல்லுஞ் சாமர்த்தியமுள்ளவர். அதிகமான பந்துக்களில் லாதவர், உலகத்தில் பூமியைச் சேர்க்காதவர். ஜனங்களுடைய பகையை உடையவர். நோயுள்ளவர். நல்ல தரமுள்ளக் கருமருது என்ற கருப்பு மருத மரத்தினுல் இவர் ஜீவனஞ் செய்வார்.

7. கோபவான் மூர்க்க னுகும் குசித்த மதிகம் சொல்வன்
பாபங்க ளனேகம் செய்வன் படைத்திடு மாதர் மூன்று
தீமையு மொருவர்க் கெண்ணுன் சித்தினி ஜாதி யாவன்
நேமியில் நினைத் தவேலை நிகருடன் முடிப்பா னுமே.

7. இவர் கோபமுள்ளவர், ஆங்காரமும் கோபத்தினுல் மூடத் தன்மையும் உடையவர். குற்றமுள்ள தந்திரமான வார்த்தைகளை அதிக மாகச் சொல்லுவார். அனேக பாபகாரியங்களைச் செய்வார். இவர் மூன்று மனைவிமார்களை* அடைவார். யாருக்குங் கெடுதியைச்செய்ய நினைக்க மாட்டார். சித்தினி ஜாதியைச் † சேர்ந்த பெண்களின் குணத்தையுடையவர். பூமியில்தான் எண்ணிய வேலையை நன்றுகவும் பிறருக்குப் பிரகாசிக்கும்படி யாகவும் செய்து முடிப்பார்.

* **குறிப்பு**.—இந்த ஜாதகத்திற்குப் பிதுர் பாவமாகிய மீனத்திற்குக் களத் திரபாவமாகிய கன்னியில் மீனத்திறகு 11-12-க்குடைய சனி இருக்கின்ருர். மீனத்திற்கு 7-க்குடைய புதன் அஸ்தங்கதமும் நீசமும் அடைந்து இருக் கின்ருர். புதனும் சனியும் மீனத்திற்கு 7 11-க்குடையவர்களாய் ஒருவரையொருவர் பார்க்கின்ருர்கள். மீனத்திற்கு 2-இல் கேதுவும் 12-இல் சுக்கிரனும் இருக்கின்ருர்கள். ஆகையால் தகப்பனுருக்கு மூன்று களத்திர யோகமுண்டு. தமிழ் ஜாதகாலங்காரம் 689-ஆவது பாடலைப் பார்க்கவும். "கொள்ளும் லாபாதி களத்ராதி கூடினுலும் பார்த்தாலும்......விவாகம் மூன்றெண்றே யுரைப்பர்".

† **குறிப்பு**.—சித்தினி ஜாதியைப்பற்றி 58-ஆவது ஜாதகம், 33-ஆவது பாட்டில் பார்க்கவும்.

8. இப்படி யிருக்கும் தந்தை யிவனுக்கே உதித்த பாலன்
செப்புவேன் பலன்கள் யாவும் தியாகியா மிருநிறத்தான்
மைப்படி மனையாள் ஒன்று வழுத்திட்டோம் சம தேகத்தன்
தப்பிதமொருவர் கெண்ணான் சாந்தவான் கல்வி கல்லான்.

8. இவ்விதமான குணங்களையுடைய தகப்பனுக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இந்த ஜாதகருடைய பலாபலன்கள் எல்லாவற்றையும் சொல்லுகிறேன். இவர் உபகாரி. கொடையாளி. இரண்டு நிறங்கள் கலந்த மாநிறமான தேகமுடையவர். ஒரு கறுப்பான மனைவியை யுடையவர் என்று சொல்லுகிறோம். சமமான அளவுள்ள தேகமுடைவர். ஒருவருக்கும் கெடுதிகளை நினைக்கமாட்டார். சாந்தமான குணமுடையவர். வித்தையில்லாதவர்.

9. புண்ணிய மனத்தா னாகும் புத்திர விருத்தி யுள்ளான்
கண்ணிய முடைய னாவன் கேவல மணுகாச் சித்தன்
அன்னிய ருறவு கொள்வன் அவன்பித்த வாய்வு முள்ளான்
சொன்ன சொல்தப்பா னாகும் சுந்தரி மேலுங் கேளே.

9. புண்ணியமானத் காரியங்களைச் செய்ய எண்ண முள்ள மனத்தை யுடையவர். துன்பம் அணுகாத மனத்தையுடையவர். அயலாருடைய சினேகத்தையடைவார். இவருக்குக் குழந்தைகள் விருத்தியாவார்கள். இவர் பெருமை உடையவர். பித்தவாயு தேகமுடையவர். தான் சொல்லிய வார்த்தைப்படி தவறிடாமல் நடந்து கொள்ளுவார், பார்வதியம்மையே! நாங்கள் இன்னமும் சொல்லுவதைக் கேட்பீராக.

10. உரோம ங்களதிக முள்ளான் நுண்ணிய நீட்சி யில்லான்
தாமத குணத்தா னாகும் தைரிய மதிக மில்லான்
காமியாம் வாயு பாதை கை காலில் உண்டுகண்டாய்
தீமையாய்க் குணமு முள்ளான் சிறுத்தவர் தம்மைக் காப்பன்.

10. ஜாதகர்தன் உடம்பில் மயிர் அதிகமாகவுடையவர். மிகவும் நீண்டு நுட்பமாயுள்ள தேகமில்லாதவர். தாமதமான சாந்தகுணமுடையவர். அதிக தைரியமான மனமில்லாதவர். காமமுடையவர். காலிலும் கையிலும் மேகவாயுபாதை உள்ளவர்; கெட்ட குணமுமுடையவர். நொந்தவர்களையும் ஏழைகளையும் காப்பாற்றுவார். இவரிடம் இப்படிப்பட்ட குணங்கள் இருப்பதை, பார்வதியம்மையே! நீர் பார்ப்பீராக.

11. மச்சங்கள் வடிவு முள்ளான் மனையாளுக் கினிய னாவன்
பச்சைக ளனேக முள்ளான் நாட்டினின் கீர்த்தி கொள்வன்
மிச்சமாம் செலவு முள்ளான் விதவையைச் சேர்வ னம்மா
அச்சுதன்[1] தங்கை யாளே அவன்பூமி அதிகம் சேர்ப்பன்.

[1] விஷ்ணு.

11. ஜாதகர் தன் உடம்பில் மச்சங்களும் வடுக்களும் உடையவர். இவர் தம்முடைய மனைவிக்கு இஷ்டமானவர். வெட்கம் அச்சம் இவை களை அதிகமாக வுடையவர். பூமியில் பெருமையை அடைவார். மிச்சப்படும் படியாகச் செலவு செய்வார். விதவைகளிடம் சம்போகஞ் செய்வாரம்மா. பூமிகளை அதிகமாகச் சேர்ப்பார். விஷ்ணுவின் சகோதரியாகிய பார்வதி யம்மையே! கேட்பீராக.

12. வண்டிவா கனமு முண்டு மனதினில் மர்மம் முள்ளான்
அண்டின பேரைக் காப்பன் அவன்பித்த தேக வானும்
குண்டனி கலகம் செய்வன் குணமிலாச் செட்டுச் செய்வன்
தண்டமிழ் அல்ப முண்டு சகோதர ருறவு கொள்வான்.

12. ஜாதகருக்கு வண்டிகளும் வாகனங்களு முண்டு. இவர் மனதில் கபடமுடையவர். தன்னைவந்து அடைந்தவர்களைக் காப்பாற்றுவார். பித்த முள்ள தேகத்தை உடையவர். கோள் சொல்லுவார். கலகத்தை உண்டு பண்ணுவார். மேன்மையாயில்லாத வியாபாரத்தைச் செய்வார். இனிய தமிழ் கொஞ்சமாயறிவர். தன் சகோதரர்களிடம் சினேகமாயிருப்பார்.

13. இன்னவன் செங்கை தன்னிலி லிலகிடு மச்ச ரேகை
உன்னத சூழி [1] யுண்டு உலகெலா மதிக்க வாழ்வன்
பின்வய ததனில் செல்வம் பலத்திடு தனங்கள் சேர்ப்பன்
அன்னிய ஊரில் வாசம் அதனாலே சுகமு முண்டு.

13. ஜாதகருடைய கையில் மச்சரேகை என்ற ஒருவித ரேகை உண்டு. உயர்ந்த நெற்றியையுடையவர். உலகத்தோரெல்லோரும் இவரை மதிக்கும்படியாக வாழ்வார். இவருடைய வாழ்நாளில் பிற்பாகததில் செல் வம் அதிகப்படும். பணத்தைச் சேர்த்துவைப்பார். பிறந்த கிராமத்தி லல்லாமல் வேறே கிராமத்தில் வாசஞ்செய்வார். அதனால் இவருக்கு சுகமுண்டு.

14. கருமரு ததனால் யோகம் கனத்திடு மிவனுக் கம்மா
பெருமையாய்ப் பூமி யோங்கும் புத்திர விருத்தி யாகும்
சிறுமையாய் முன்னு னுண்டு செல்வங்கள் பின்னு னுண்டு
உரிமையாய்ச் சித்திர வீடு உரைக்கிறே மிவனுக் கம்மா.

14. இவருக்குக் கருமருது என்ற கருப்பு மருதமரத்தால் அதிக யோகமுண்டாகும். பார்வதியம்மையே! பூமிகள் மேன்மையான பலனைக் கொடுத்து ஓங்கி செழித்து வரும். சந்ததிகள் விருத்தியையடையும். இவருக்குத் தன் ஆயுளின் முற்பாகத்தில் வறுமைகளும் தரித்திரமுமுண்டு. பிற்பாகத்தில் செல்வம் உண்டாகும். இவருக்குத் தனக்குப் பாத்தியதை யுடையதான ஓர் அழகிய சித்திரங்களுள்ள வீடு உண்டாகும் என்று பார்வதியம்மையே! நாங்கள் சொல்லுகிறோம்.

---

[1] நெற்றி.

15. ஜாதகன் துணைவர் தம்மைச் சாற்றுவோமீரைந் தாகும்
போதவே ஆண்பால் நாலு புகல்கன்னி மூன்று மாகும்
நீதியாய்த் தீர்க்க மாகும் நிலைக்காது மற்ற தெல்லாம்
சோதித்துக் கண்டு யாங்கள் சொலுமொழி குன்றி டாது.

15. ஜாதகருக்குச் சகோதரர்களைப்பற்றிச் சொல்லுகிறோம். இவருக்குப் பத்து சகோதரர்களுண்டு, ஆண் சகோதரர்கள் நால்வர் பெண் சகோதரர்கள் மூவர் நீண்ட ஆயுளையுடையவராக விருப்பார்கள் மற்றச் சகோதரர்களெல்லாம் நிலைத்திராமல் இறந்துவிடுவர். நாங்கள் ஜாதகத்தை நன்றாக ஆராய்ச்சி செய்து பார்த்துச் சொல்லுகின்ற வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும்.

16. இப்படிப் புயண்டர் சொல்ல யியல்முனி பராசர் சொல்வார்
ஒப்புடன் சகோதரங்கள் உறுநான்கு என்றுசொல்வர்
செப்பமா யவர்குணத்தைச் சொல்லுவீ ரென்று கேட்க
மெய்ப்புடன் புயண்டர் சொல்வர் விளங்கிடு முத்தோ னுககு ;

16. இவ்விதமாகப் புஜண்டர் என்ற ரிஷி சொல்ல, குணமுள்ள பராசர முனிவர் சொல்லுகிறார். பொருத்தமுள்ளச் சகோதரர்கள் மிகுதியாக நான்கு இருப்பார்கள் என்று சொன்னீர். அவர்களுடைய குணநிசயங்களைச் செவ்வையாகச் சொல்லுவீரென்று கேட்க, உண்மையாகப் புஜண்டர் சொல்லுகின்றார். ஜாதகருடைய பெரிய அண்ணனுக்கு ;

17. அலைச்சலு மதிக மாகும் அவனுக்குப் புத்திர ருண்டு
நிலைக்கவே மாட்டா னெங்கும் நித்திய தரித்திர முள்ளான்
கவலையு மதிக முள்ளான் கடினமாய் வார்த்தை கூறுவன்
தலைச்சனும் புத்திர னில்லான் சத்தியை அதிகம் கொள்வன்.

17. அலைச்சல் திரிச்சல் அதிகமாக விருக்கும். அவருக்குச் சந்ததிகள் உண்டாகும். எந்த விடத்திலும் நிலையாக விருக்கமாட்டார். அவருக்கு எக்காலமும் தரித்திரம் இருக்கும். கவலைகள் அதிகமாக விருக்கும். கடுமையான, அஃதாவது வருத்தத்தை யுண்டுபண்ணக்கூடிய சொற்களைச் சொல்லுவார். முதலில் பிறக்கும் பிள்ளை இல்லாதவர். பெண்கள் அதிகமாக வுடையவர்.

18. தந்தையின் தொழிலைச் செய்வன் செலவுளன் தயையுமுள்ளன்
பிந்திய யிளையோன் சேதி பேசுவோம் பொறுமை யுள்ளான்
சந்ததம் தனங்கள் சேர்ப்பன் சந்ததி யுடைய னுவன்
சொந்தமாய்ப் பூமி சேர்ப்பன் சித்திர வீடுமுள்ளான்.

18. அவர்தன் தகப்பனுருடைய தொழிலைச் செய்பவர். அதிகச் செலவு செய்பவர். தயையை யுடையவர். அடுத்த இளைய சகோதரனுடையசங்கதியைச் சொல்லுகின்றோம். இவர் பொறுமையுடையவர். எபபோதும் பணத்தைச் சேர்த்துவைப்பார். குழந்தைகளை யுடையவர். தான் சொந்தமாகப் பூமிகளைச் சேர்ப்பார். சித்திரங்களுள்ள அழகிய வீட்டையுமுடையவர்.

19. மனதினில் கபடு முள்ளான் மர்மவான் தந்திர வாதி
அனைவரு மெச்சவாழ்வன் அவன் குலத் தொழிலு முள்ளான்
சினமிலான் செலவு செய்வன் ஜகமெலாம் வசியம் செய்வன்
இனங்களை ஆதரிக்கான் இவன்பாரி குற்ற முள்ளாள்.

19. இவர் தன்னுடைய மனதில் கபடமுடையவர். உண்மையைச் சொல்லாமல் மர்மமாக விருப்பார். தந்திரமுள்ளவர். உபாயமுள்ளவர். எல்லோரும் இவரைப் பெருமைபாராட்டும்படியாக வாழ்வார். தன்னுடைய குலத்தொழிலைச் செய்வார். கோபமிலாதவர். செலவு செய்வார். உலகத்திலுள்ளவர்களைத் தன்பக்கம் வசப்படுத்திக் கொள்ளுவார். தன் பந்துக்களைக் காப்பாற்ற மாட்டார். இவருடைய மனைவி தோஷத்தை யுடையவள். பழுதுடையவள்.

20. அதிஷ்டவான் நடைக்கு அஞ்சான் யாவரு முறவு கொள்வன்
பதியது சொந்த முள்ளான் பாலர் களதிக முள்ளான்
ததி நெய்பால் பிரிய முள்ளான் ஜாதகன் தீர்க்க முள்ளான்
நிதிபணி பூஷ ணங்கள் நேர்ப்பா மனேக மாக.

20. இவர் அதிர்ஷ்ட முடையவர். நடப்பதற்குப் பயப்படாதவர். எல்லோரையுஞ் சினேகஞ் செய்து கொள்வார். சொந்தமான வீடு பூமி உள்ளவர். அதிகமான குழந்தைகளையுடையவர். தயிர் நெய் பால் இவைகளின் பேரில் ஆசையுள்ளவர். பிறரைத்தனக்கு வசப்படுத்திக் கொள்வார். காரியசித்தியுடையவர். நீண்ட ஆயுளுள்ளவர். தனம், வேலையாட்கள், ஆபரணம் இவைகளை அதிகமாகயடைவார்.

21. அவனுக்கு யிளையோன் தானும் அதிர்ஷ்டவான் ஊக முள்ளான்
தவமிலான் வித்தை யில்லான் சத்துருக் கடங்கான் மேலும்
கவனமாய் வேலை செய்வன் காளைக்குப் புத்திர ருண்டு
[1]நவமதில் தனமும் பூமி நாயகன் சேர்ப்பானென்றோம்.

21. இவருக்கு இளைய சகோதரன் அதிர்ஷ்டமுடையவர். புத்திசாலி. புண்ணியத்தைச் செய்யாதவர். இரஜஸ்ஹுண மில்லாதவர். கல்வியில்லாதவர். சத்துருக்களுக்குத் தோற்கமாட்டார். மேலும் கருத்துடனும் சீக்கிரமாகவும் வேலையைச் செய்வார். இவருக்குப் பிள்ளைக ளுண்டு. பூமியில் பணத்தையும் சொத்துக்களையும் இவர் சேர்ப்பார் என்று சொல்லுகிறோம்.

22. ஆயுசு அற்ப மாகும் அவனும் துன்மரண மாகும்
நேயமாய் யிவனுக் கேதான் நிதானமாய்வாழ்வா னம்மா
தூயவே யிவன் பின் வந்தோன் துருசாக நடப்பன் காமி
ஈகுவான் பெண்களுக்கு இவன் பொருளென்று சொன்னோம்.

22. இவருக்கு அற்பாயுசாகும். இவர் அகாலமான கெட்ட மரணத்தை அடைவார். இவர் ஜாதகருக்குச் சினேகமாய் இருந்து கொண்டு நிதானத்துடன் ஜாதகருக்குத் தாழ்ந்த நிலையில் வாழ்வார். பார்

[1] பூமி.

வதியம்மையே ! இவருடைய இளைய சாகோதரர் வேகமாக நடப்பார். காம முடையவர். தன்னுடைய பொருள்களை ஸ்திரீகளுக்குக் கொடுத்துவிடுவார் என்று சொல்லுகிறோம்.

**23.** தனங்களை அதிகம் சேர்ப்பன் செலவுளான் நிதான மில்லான்
மனையாளை விரோதம் செய்வன் மற்றொரு பெண்ணைக் கொள்வன்
இனத்துக்கு விரோதி யாவன் ஏகுவா னன்னிய தேசம்
கனமுடன் யோகம் வாய்க்கும் காலையின் வயதி லேதான்.

**23.** இவர் பொருள்களையும் பணத்தையும் அதியமாகச் சேர்ப்பார். செலவு செய்பவர். சாந்தமில்லாதவர். தன்னுடைய மனைவியை விரோதித்துக் கொள்ளுவார். இன்னொரு ஸ்திரீயை வைத்துக் கொள்வார். பந்துக்களுக்கு விரோதியாக விருப்பார். வெளிதேசம் போவார். இவருக்குத் தன்னுடைய ஆயுளின் பிற்பாகத்தில் பெரியயோகம் வந்து சம்பவிக்கும்.

**24.** ஜாதகன் மணத்தின் காலம் சாற்றும் வேளிருபா னென்றில்
போதவே ஆண்டி லேதான் புகர்[1] திக்கிலுதித்த மாதை
மேதினில் கொள்வனந்த மெல்லியாள்[2] குணத்தைச் சொல் [வேன்
தீதலா மனத்தா ளாகும் தீங்குமுன் கோபி யாவள்.

**24.** ஜாதகருடைய விவாக காலத்தைச் சொல்லுகிறேன். இவருக்கு இருபத்தோராவது வயதில் சுக்கிரனுக்குரிய திக்காகியத் தென்கிழக்குத் திக்கில் பிறந்தப் பெண்ணை இந்தப் பூமியில் இவர் விவாகஞ் செய்து கொள்வார். அந்தப் பெண்ணின் குணதிசயங்களை இனிச் சொல்லுகிறேன். அவள் தீங்கில்லாத, அஃதாவது நல்ல மனத்தை யுடையவள். கெடுதியை விளைவிக்கக் கூடிய முன்கோபத்தை யுடையவள்.

**25.** உண்டியும் சுருக்க மாகும் உயர்சீல மாவள் மேலும்
அண்டின பேரைக் காப்பள் ஆளனை உறவு கொள்வள்
கண்டித மொழியு முள்ளாள் காளையு மாண்பால் ரெண்டு
பெண்டுகள் ரெண்டும் தீர்க்கம் பேசினே மிவனுக் கம்மா

**25.** அவள் உணவைக் கொஞ்சமாகச் சாப்பிடுவாள். மேன்மையான நற்குணங்களுடையவள். தன்னை வந்து அடைந்தவர்களைக் காப்பாற்றுவாள் புருஷனைத் தன் வசப்படுத்திக் கொள்வாள். கண்டிதமான திட்டமான வார்த்தைகளை யுடையவள். இவளுக்கு இரண்டு ஆண் குழந்தைகளும் இரண்டு பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளையுடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகிறோம் பார்வதியம்மையே!

**26.** இவனுடை முன்சன் மத்தை எடுத்து முரைக்கக் கேளாய்நாத்
தவசிறு பாக்கம் தன்னில் தனவைசிய னுகிப் பின்னும்
மனைவியும் மக்க ளோடு மைந்தனும் செட்டு செய்து
அவமதிப் பில்லா னுகி அவனுமே வாழுந் நாளில் ;

---

[1] சுக்கிரன். [2] பெண்.

26. ஜாதகருடைய முன் ஜென்மத்தைப் பற்றி நாங்கள் சொல்லு கிறோம், கேட்பீராக. புண்ணிய முள்ள சிறுபாக்கம் என்ற கிராமத்தில் செல்வமுள்ள வைசியனுகப் பிறந்து, பெண்சாதி பிள்ளைகளை யுடையவராகி ஜாதகர் வியாபாரஞ் செய்து, கெட்ட மதிப்பு, கெட்ட பெயரில்லாமல் வாழு கின்ற காலத்தில் ;

27. வந்ததோர் ஊழி தன்னை வரைகிறே னிவனுக் கேதான்
சொந்தமாய்த் தர்மம் தானம் சுயமாகச் செட்டு செய்து
வந்தவர்க் கன்ன மீந்து மைந்தனும் வாழும் போது
அந்தஊர் நதியின் பக்கல் அணுகிய அரசு தன்னை ;

27. ஜாதகருக்கு வந்து சம்பவித்த ஓர் ஊழ்வினைப் பாவத்தைச் சொல்லுகிறேன். இவர் சொந்தமாகத் தானம், தர்மம் செய்து தன்னிச்சை போல் சொந்த வியாபாரஞ் செய்து கொண்டு, தன்னை வந்து அண்டினவர் களுக்குச் சாப்பாடு போட்டு, ஜாதகர் வாழுகின்ற காலத்தில், அந்தக் கிராமத் திலுள்ள நதியின் கரைப் பக்கத்தில் இருந்த ஓர் அரசமரத்தை ;

28. பாலகன் வெட்டி விட்டான் பாபங்க ளிச்சென் மத்தில்
கோலமா யணுகி யேதான் குடும்பத்தில் தனிய னுவன்
ஏலவே தந்தை காலமி யம்புவே யிருபா னுலில்
ஆலமுண் டவனின்[1] பாதம் அடைகுவா னென்று சொன்னோம்.

28. இந்த ஜாதகர் வெட்டி விட்டார். மரத்தை வெட்டின தோஷங்கள் சனியனுக இவரை இப்பிறப்பில் வந்து சார்ந்ததால் இவர் தன்னுடைய குடும்பத்தில் தனியனுக விருப்பார். முன்னே, நாங்கள், தகப்பன் இறந்து போகுங் காலத்தைச் சொல்லுகிறோம். ஜாதகருக்கு இருபத்திநான்காவது வயதில் தகப்பனுர் சிவலோகபதவியை அடைவார், அஃதாவது இறந்து விடுவார் என்று சொல்லுகிறோம்.

29. அன்னையின் காலம் தன்னை அறைகிறேன் முப்பா னென்றில்
இன்னவன் மரண கால மிசைகிறே னெழுப தாண்டில்
கன்னியின் மாதம்[2] தன்னில் கனமுட னம்மா வாசை
மன்னவன் வயிற்றுநோயால் மரணமே யாவான் சொன்னோம்.

29. ஜாதகருடைய தாயின் மரண காலத்தைச் சொல்லுகிறேன். இவருடைய தாய் இவருக்கு முப்பத்தொன்றுவது வயதில் இறந்து விடுவாள். ஜாதகருடைய மரண காலத்தைச் சொல்லுகிறேன். இவர் தனக்கு எழுபதாவது வயதில் புரட்டாசி மாதத்தில் கடுமையான ஒரு வயிற்று நோயால் இறந்து விடுவார் என்று சொல்லுகிறோம்.

30. மறுஜன்மம் காஞ்சி நாட்டில் வைசிய குலமு தித்துப்
பொருள்களு மனேகம்பெற்றுப் பிற்பல செட்டு செய்து
வருவோர்க்குத் தானதர்மம் மன்னவன் செய்வா னுகும்
அறுமுகன் தன்னைப் பெற்ற அம்மையே மேலுங் கேளே.

---

[1] சிவபெருமான். [2] புரட்டாசி மாதம்.

**30.** ஜாதகர் அடுத்த ஜன்மத்தில் வைசிய ஜாதியில் பிறந்து அனேக பொருள்களையும் செல்வத்தையும் அடைந்து பிரபலமான பெரிய வியாபாரஞ் செய்து தன்னிடம் வருபவர்களுக்குத் தானமும் தர்மமும் செய்வார். ஆறுமுகங்களையுடைய முருகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! நாங்கள் இன்னும் சொல்லுவதைக் கேட்பீராக.

**31.** இன்னவன் ஜனனம் தொட்டு இருபது ஆண்டுக் குள்ளே
தன்னிலே அதிக யோகம் தானமும் சுகமு முண்டாம்
பின்னங்க ளணுகா தம்மா பேசுவோ மதன்மேல் தானும்
நன்னிய முப்பான் மூன்றுள் நங்கையே பலனைக் கேளாய்.

**31.** ஜாதகர் பிறந்த காலம் முதல் இருபது வயதிற்குள்ளே தன்னுடைய குடும்பத்தாருக்கு அதிக யோகமுண்டாகும். செல்வமும் குடும்பத்தாருக்கும் தனக்கும் சுகங்களுமுண்டாகும். யாதொரு குறைவும் நேரிடாது பார்வதியம்மையே! இருபது வயதிற்கு மேல் முப்பத்துமூன்று வயதிற்குள் நடக்கும் பலன்களைச் சொல்லுகிறோம். பார்வதியம்மையே! கேட்பீராக.

**32.** அதிகமே செலவு நேரும் அவன்செயல் பலித்திடாது
பதியினில் கலக்க மாகும் பாரினி லபவா தங்கள்
விதனமு மதிக முண்டாம் விளம்புவோம் கடனுண் டாகும்
துதிபெறு சகோத ரர்கள் துன்பமாம் நஷ்ட மாகும்.

**32.** ஜாதகருக்கு அதிகமான செலவுகள் ஏற்படும். இவர் செலவு செய்து செய்யுங் காரியங்களினால் நல்ல பலனுண்டாகாது. வீட்டில் கஷ்டங்கள் நேரிடும். பூமியில் இவருக்குக் கெட்ட பெயரும் குற்றச்சாட்டுகளும் அதிக மனத்துயரங்களும் மனவேதனையும் உண்டாகும். கடன்களும் ஏற்படும் என்று சொல்லுகிறோம். இவரைப் போற்றுகின்ற சகோதரர்களுக்குத் துன்ப முண்டாகும். மரணமு முண்டாகும்.

**33.** தேகத்தில் பாதை யுண்டு திரிச்சலு மதிக மாகும்
ஆகவே சுபமு முண்டு ஆகாது நினைத்த வெல்லாம்
பாகமா யதன்மேல் நாற்பான் பகையில்லை சுகமு முண்டு
போகமு மயலூர் தன்னில் பிரபல லாப முண்டே.

**33.** ஜாதகருக்குத் தன்னுடைய உடம்பில் பாதைகள் ஏற்படும். இவருக்குத் திரிச்சலும் அதிகமாக விருக்கும். இப்படியிருந்தும் சுப காரியங்களும் நடைபெறும். நினைத்த காரியங்களெல்லாம் கை கூடிவரா. இவருக்கு வயது முப்பத்துமூன்றுக்கு மேல் நாற்பது வயது வரையிலும் கெடுதியில்லை. எதிரிகளில்லை, சுகம் ஏற்படும். அயலூரில் சுகபோகங்களும் அதிகமான லாபங்களுமுண்டாகும்.

**34.** குலத்தொழில் தன்னால் லாபம் கூறுவோ மதிக மாக
நலமான பூமி யுண்டு நன்மைந்தர் விருத்தி யாகும்
பலவிதத் தொழிலால் லாபம் பகைமனத் திடரும் தீரும்
நிலைவர மாக வாழ்வன் நிகழ்த்துவோ மிதற்குள் ளாக;

**34.** ஜாதகருக்குத் தன்னுடைய குலத்துத் தொழிலால் அதிக லாப முண்டாகும். நல்ல பலனைத் தரக்கூடிய பூமிகள் உண்டாகும். நல்ல பிள்ளைகள் விருத்தியடைவார்கள். பலவிதமான தொழில்களால் லாபம் ஏற்படும். பகைவர்கள் ஒழிவார்கள். மனத்திலுண்டான கஷ்டங்களும் நிவிர்த்தியாகும். ஓர் உறுதியான நிலையில் இருந்து வாழ்வார் என்று சொல்லுகிறோம். இந்தக் காலத்திற்குள்ளே ;

**35.** உரோகமுங் கொஞ்சமுண்டு நீங்கிடு முருகர் தம்மால்
சாகிற வரைக்கு மேதான் சஞ்சல மணுகி டாது
ஆகவே உள்ளூர் தன்னில் அவனுக்குப் பலன் கிட்டாது
பாகமாய் அயலூர் தன்னில் பாலர்க்குச் சுகமு முண்டாம்.

**35.** ஜாதகருக்கு சிறிது நோய் ஏற்படும். முருகருடைய அருளால் அது நீங்கி விடும். இவருக்குத் தான் இறக்கின்றவரையிலும் கஷ்டங்கள் உண்டாகா. ஆனால் இவருக்குத் தனது கிராமத்தில் பலன்கள் கூடிவரா. அன்னிய கிராமத்தில்தான் சுகங்கள் ஏற்படும்.

**36.** கருமருத தன்னைச் செய்து கனதன லாபம் பெற்றுப்
பெரும்பணி பூஷ ணங்கள் பூமியும் சேர்ப்பா னம்மா
திருவுமே வாச மாகும் சித்திர வீடு செய்வன்
பெருமத வானை பெற்றப் புண்ணிய சாலி கேளாய்.

**36.** ஜாதகர் கருமருது என்ற கருப்பு மருதமர வியாபாரஞ் செய்து அதிக லாபத்தை அடைந்து அதிகமான வேலையாட்களையும் ஆபரணங்களையும் பூமியையும் சேர்ப்பார். பார்வதியம்மையே! லக்ஷ்மி இவரிடத்தில் வாசஞ் செய்வாள். சித்திரங்களுடைய அழகிய வீட்டைக் கட்டுவார். பெருமை பொருந்திய மதயானையின் முகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றப் புண்ணிய சாலியாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

# ஜாதகம் 57.

1. ஜன்மமும் கடக மாக சேயவன்[1] மீன மாகப்
புந்தியும் வீணை யாகப்[2]புகர்[3]ரவி[4] புல்ல[5] மாக
மந்தனும்[6] துலேயி லாக[7] மதி[8]தேளில்[9]ராகு கும்பம்
பந்தமாய்க் குருவும் வண்டி[10] பகர்சிகி[11] சிம்மமாக;

| | | | |
|---|---|---|---|
| அங்காரகன் | | சூரியன் சுக்கிரன் | புதன் |
| ராகு | இராசி சக்கரம் | | லக்கினம் குரு |
| | | | கேது |
| | சந்திரன் | சனி | |

1. ஜன்ம லக்கினம் கடகமாகி அங்காரகன் மீனத்திலும், புதன் மிதுனத்திலும், சுக்கிரனும் சூரியனும் ரிஷபத்திலும், சனி துலாத்திலும், சந்திரன் விருச்சிகத்திலும், ராகு கும்பத்திலும், மேன்மையாய்க் குரு கடகத்திலும், ஈனமுள்ள கேது சிம்மத்திலும், இருந்து ;

குறிப்பு.—இந்த ஜாதகத்திற்கு ஜன்ம நட்சத்திரம் அல்லது ஜனனகால தசை குறிக்கப்படவில்லை. ஆயினும் சந்திரன் விருச்சிகத்தில் இருப்பதால் ஜனன நட்சத்திரம் விசாகம் 4-ஆம் பாதம், அனுஷம், கேட்டை முடியும் வரையிலும் இருக்கவேண்டும். ஜனன லக்கினத்தை யோசிக்குமிடத்து ஜனன நட்சத்திரம் விசாகம் 4-ஆம் பாதம், அனுஷம் 1-ஆம் பாதம், கேட்டை 1-ஆம் பாதம் இவைகளில் ஒன்றாக இருக்கக்கூடும். இங்குக் கொடுத்துள்ள ராசிச் சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சச் சக்கர கிரக நிலை பொருத்த முடையதாகும் :—மேஷத்தில் அல்லது ரிஷபத்தில் சூரியனும், மேஷத்தில் சனியும், மிதுனத்தில் புதனும்கேதுவும், துலாத்தில் அல்லது விருச்சிகத்தில் குருவும், துலாத்தில் அங்காரகனும், தனுசில் ராகும், மகரத்தில் சுக்கிரனும் ஆகும். சந்திரன் விசாகம் 4-இல் அனுஷம் 1-இல் இருந்தால் சூரியன் மேஷத்திலும் குரு துலாத்திலும் பொருந்தும். சந்திரன் கேட்டை 1-இல் இருந்தால் சூரியன் ரிஷபத்திலும் குரு விரிருச்சிகத்திலும் பொருந்தும். சந்திரன் மேற்குறித்த நட்சத்திரப் பாதத்திற்குரிய அம்சை ராசியிலும் ஆகும்.

---

[1] அங்காரகன். [2] மிதுனம். [3] சுக்கிரன். [4] சூரியன்.
[5] ரிஷபம். [6] சனி. [7] துலாம். [8] சந்திரன்.
[9] விருசிகம். [10] பூசம் உள்ள கடகம். [11] கேது.

2. இப்படிக் கிரகம் நின்று லிதன்பலன் சொல்லு மென்றுள்
ஒப்புடன் புயண்டர் தாமும் உரைப்பார்க ளாண்பால் ஜன்மம்
மெய்ப்புடன் கீழ்ப்பால் வீதி விளம்புவோம் உத்தர வாசல்
செப்புவோம் மேற்கி லேதான் சிறந்திடு மடமும் சாலே.

2. இவ்விதமாகக் கிரகங்கள் இருந்தால் பலனைச் சொல்லுவீ ரென்று பார்வதியம்மை கேட்கப் புஜண்டர் என்ற ரிஷி சம்மதித்துச் சொல்லு கிறர். ஆண் குழந்தை பிறக்கும். பிறந்த வீதி கிழக்கு மேற்குத் தெரு வாகும். பிறந்த வீடு வடவண்டை வாடையாகும், என்று உண்மையாய்ச் சொல்லுகிறேம். மேன்மைதங்கிய மடமும் வெளி மண்டபமும் விருட்சங் களடங்கிய பாதையும் மேற்கில் இருக்குமென்று சொல்லுகிறேம்.

3. சோலேயும் குண்ட முண்டு சொல்லுவோம் வடக்கி லேதான்
நீலியும் மாரி தந்தி நிர்மல னீசன் தங்கும்
சீலமாம் சிற்றூர் தன்னில் ஜனிப்பனே கூரை வீட்டில்
பாலகன் சௌரி வமிசம் பண்புடன் ஜனிப்பா னென்றேம்.

3. மேலும் தோப்பும் குளமும் கிணறும் மேற்கில் இருக்கு மென்று சொல்லுகிறேம். வடக்குத் திக்கில் துர்க்கையம்மன் கோயில், மாரி யம்மன் கோயில், ஆண் யானே முகத்தை யுடையவரான விநாயகர் கோயில், மாசில்லாத பரமசிவன் கோயில் இவை இருக்கும். இவ்விதமான எல்லேகளே யுடைய நல்லொழுக்க முள்ளவர்களேயுடைய அழகிய ஒரு சிறிய கிராமத்தில் கூரை வீட்டில் ஜாதகர் பிறப்பார். இவர் ஒரு விஷ்ணு குலத்தில் தகுதியாகப் பிறப்பார் என்று சொல்லுகிறேம்.

4. இன்னவன் ஜனன யோக மெழில்மாது தந்தை யோகம்
மன்னிய முன்பின் ஜன்மம் வரும்துணே மனேயாள் யோகம்
உன்னிய புத்திர யோகம் உரைக்கிறேம் மிந்நூல் தன்னில்
அன்னேயே யாங்கள் சொல்லும் அடைமொழி[1] குன்றி[1]டாது.

4. ஜாதகருடைய ஜனன காலத்திய யோகத்தையும் வல்லமை பொருந்திய தாய் தந்தையர்களுடைய யோகங்களேயும், பெருமை பொருந் திய முன் ஜன்மத்தையும் பின் ஜன்மத்தையும் ஜாதகருடைய சகோதரர்கள் மனேவி இவர்களுடைய யோகங்களேயும், அவர் தமக்குப் பிறக்கும் புத்திரர் புத்திரிகள் இவர்களின் யோகங்களேயும் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகிறேம். எங்கள் தாயாராகிய பார்வதியம்மையே ! நாங்கள் சொல்லுகின்ற நன்மை தீமையைப் பகுத்தறியக் கூடிய வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும்.

5. தந்தையின் குணத்தை யாங்கள் சாற்றுவோ மிருசி வப்பன்
பந்தமாய் யொடிச்சல் தேகி பாரினில் ஊக சாலி
சந்ததம் தியாகி மோகி சன்மார்க்கன் ஊக முள்ளான்
வருமவர்க் கன்ன மீவன் மறுமனே யார்கள் மோகன்.

---

[1] விசேடண மொழி.

5. ஜாதகருடைய தகப்பனுடைய குணாதிசயங்களைப் பற்றி இனிச் சொல்லுகிறோம். இவர் இரண்டு நிறங்களையுடைய மாநிறமான தேகத்தை யுடையவர். அழகிய மெல்லிய தேகத்தை யுடையவர். பூமியில் யுக்திசாலி, விவேகி. எப்போதும் பிறருக்குக் கொடுக்குந் தன்மையுடையவர். மோக முடையவர். நல்ல நடவடிக்கைகளையுங் குணங்களையு முடையவர். ஊகிக் குஞ் சக்தியுள்ளவர். தன்னிடம் வருகிறவர்களுக்குச் சாப்பாடு போடுவார். அயலாருடைய மனைவிகளின்பேரில் ஆசையுடையவர்.

6. தல்லியும் மற்ப ணுரும் கணக்கினில் ஊகை சாலி
நல்லவர் பலர்க ளாலே நாட்டினில் கீர்த்தி யேற்பன்
இல்லையென் றுரைக்க மாட்டான் யாரையும் நேசங் கொள்வன்
தொல்லையு முடையவ ணுவன் சோம்பலும் கொஞ்ச முள்ளான்.

6. தகப்பனுருடைய தாயாருக்குத் தோஷம் நேர்ந்து சீக்கிரம் இவர் தாயாரில்லாதவராவார் *. கணக்கில் கெட்டிக்காரர். இவர் அனேக நல்லவர்களால் பூமியில் பெருமையை யடைவார். யாருக்கும் இல்லை என்று சொல்லமாட்டார். எப்படிப்பட்டவரையும் சினேகஞ் செய்து கொள்வார். தொந்தரவும் கடனுமுடைவர். சிறிது சோம்பலு முள்ளவர்.

குறிப்பு.— * பிதுர்ஸ்தானம் மீனம். இதற்கு மாதுர்ஸ்தானம் மிதுனம். இதை அங்காரகனும் கேதுவும் பார்க்கின்றுர்கள். மிதுனத்திற்கு ஆறில் சந்திரன் நீசமாய் இருக்கிறர். ஆகையால் மாதுருக்குத் தோஷமிருக் கின்றது.

7. பித்தச் சூடுடைய ணுவன் பிறர்பணை விருப்ப முள்ளான்
நத்தின பேரைக் காப்பன் நன்முக வடிவு முள்ளான்
பத்தினி யிஷ்ட ணுவன் பாலர்க ளதிக மில்லான்
குத்தமு மெண்ணுச் சித்தன் கூறுவோம் மேலும் கேளே.

7. ஜாதகருடைய தகப்பனர் பித்தச் சூட்டை யுடையவர். பிறருடைய மருதநிலம், வயல்கள் இவைகளின்பேரில் ஆசையுள்ளவர். தன்னை விரும்புகிறவர்களைக் காப்பாற்றுவார். நல்ல முகத்தையும் அழகிய வடிவத்தையும் உருவத்தையும் உடையவர். மனைவியின்பேரில் ஆசை யுடையவர். குழந்தைகள் அதிகமாக இல்லாதவர். பிறருக்குக் கெடுதியை நினைக்காத மனத்தையுடையவர். இன்னம் சொல்லுகிறோம், கேட்பீராக.

8. தந்தையின் ஆஸ்தி யில்லான் தன்சுயஆஸ்தி யில்லான்
பந்தமாய் மாதுரு ஆஸ்தி பாலக னடையா னென்றோம்
முந்தவே துணைவர் தம்மை மொழிகின்றே மாண்பால் காணுன்
சிந்தையாய்க் கன்னி நான்கு செப்புவோம் தீர்க்க மாக.

8. ஜாதகருடைய தகப்பனுக்கு பிதுரார்ஜித சொத்து கிடையாது, சுயார்ஜித சொத்து கிடையாது, தன்னுடைய தாயாருடைய சொத்தையும் இவர் முறையாக அடையமாட்டார் என்று சொல்லுகிறோம். இவருடன்

பிறந்தவர்களைப்பற்றி முன்னே சொல்லுகிறோம். இவருக்குச் சகோதரன் கிடையாது. நான்கு சகோதரிகள் நீண்ட ஆயுளுடையவர்களாய் இருப்பார்கள் என்று சொல்லுகிறோம்.

**குறிப்பு.**—ஜாதகருடைய பிதுர் லக்கினம் மீனம். இதற்கு மூன்றில் ரிஷபத்தில் மூன்றுக் குடையவராகிய சுக்கிரன் சூரியனுடன் இருக்கின்றார். ஆகையால் பின் ஆண்துணைக்குத் தோஷம், சூரியன் மூன்றில் இருப்பதால் மூத்த துணைவனுக்குத் தோஷம். மணிகண்ட கேரளம் சகோதர காண்டம் 6-ஆவது பாடலையும், சமஸ்கிருத சம்புஹோராப் பிரகாசா என்ற புத்தகத்தில் சகஜபாவம் 58-ஆவது சுலோகத்தையும் பார்க்கவும்.

9. இப்படி யிருக்கும் தந்தை யிவனுக்கு உதித்த பாலன்
செப்புவோம் பலன்கள் யாவும் தீரநன் மனத்த னாகும்
மெய்ப்புடன் சிவந்த மேனி வித்தைக ளதிகம் கற்பன்
தப்பித மொருவர்க் கெண்ணன் தயாளவான் வாயு தேகன்

9. இவ்விதமா யிருக்கக் கூடிய தகப்பனுக்கு இந்த ஜாதகர் ஜனனமானார். இந்த ஜாதகருடைய எல்லாப் பலன்களையும் நாங்கள் சொல்லுகிறோம். இவர் தைரியமான நல்ல மனத்தை யுடையவர். மேன்மையான சிவப்பு நிறமுள்ள தேகத்தையுடையவர். கல்வி அதிகமாக வுடையவர். யாருக்கும் கெடுதிகளை நினைக்கமாட்டார். கிருபை இரக்கம், தயை இவைகளை யுடையவர். வாய்வான தேகத்தையுடையவர்.

10. சொன்னசொல் தவறு னாகும் சோம்பிடான் காரியத்தில்
கன்னென மொழியு முள்ளான் காளைமுன் கோபி யாவன
இன்னவன் சுகபுசிப்பன் யாரையும் நேசம் கொள்வன்
மண்ணின்மேல் செட்டு செய்வன் வண்டிவா கனமு முள்ளான்

10. ஜாதகர் தான் சொல்லிய வார்த்தைகளைத் தவறாமல் காப்பாற்றுவார். தான் செய்யுங் காரியத்தில் சோம்பலில்லாதவர். இனிமையான வார்த்தைகளையுடையவர். முன் கோபத்தையுடையவர். சுகமான நல்ல போஜனத்தைச் சாப்பிடுவார். எல்லோரையுஞ் சினேகஞ் செய்து கொள்வார். பூமியில் வியாபாரஞ் செய்வார், வண்டியும் வாகனமும் உடையவர்.

11. பூமியு மதிகம் சேர்ப்பன் புத்திர விருத்தி யுள்ளான்
நேமியோர் மெச்ச வாழ்வன் நிதானமாய் வார்த்தை கூறுவன்
சேமமாம் குடும்ப முள்ளான் திருமகள் வாச முள்ளான்
காமிகன் மூர்க்க னுவன் கசடர்களுறவு கொள்ளான்.

11. ஜாதகர் பூமிகளை அதிகமாகச் சேர்ப்பார், இவருக்குக் குழந்தைகள் விருத்தியாகும். பூமியிலுள்ளவர்கள் இவரைப் போற்றும் படியாகப் பெருமையாக வாழ்வார். நிதானமாகவும் சாந்தமாகவும் வார்த்தைகளைச் சொல்லுவார். இவருடைய குடும்பம் க்ஷேமமாயும்

சௌக்கியமாயு மிருக்கும். லக்ஷிமி இவருடைய வீட்டில் வாசஞ் செய்வாள். காமமுடையவர், கோபமும் ஆங்காரமு முடையவர். கீழ் மக்கள் குற்ற முள்ளவர்கள் ஆகிய இவர்களுடைய சினேகித்தை யுடையவர்.

12. மாதுரு ஆஸ்தி தன்னை மன்னவ னடைவா னென்றோம்
கோதிலா தந்தை ஆஸ்தி குணமுட னில்லை யென்றோம்
மேதினில் துணைவர் தன்னை விளம்புவோம் மாண்பால் காணோம்
தீதிலா பெண்பால் ரெண்டு செப்புவோ மிவனுக் கேதான்.

12. ஜாதகர் தன்னுடைய தாயாருடைய சொத்துக்களை அடைவார் என்று சொல்லுகிறோம். இவருக்குக் குற்றமில்லாத தந்தையினுடைய நல்ல சொத்து கிடையாது. இவருக்குச் சகோதரர்களைப்பற்றிச் சொல்லுகிறோம். இவருக்கு ஆண் சகோதரரில்லை,* இவருக்கு குற்றமில்லாத பெண் சகோதரிகள் இருவர் என்று சொல்லுகிறோம்.

* குறிப்பு.—மூன்றிற்குடையவரான புதன், கேது அங்காரகன் இவர்களால் பார்க்கப்பட்டுப், பன்னிரண்டில் மறைந்திருக்கின்றார். இளைய சகோதர ஸ்தானமாகிய மூன்றை அந்தப் பாவகாரராகிய அங்காரகன் பார்க்கின்றார். ஆகையால், இளைய சகோதரனுக்குத் தோஷமிருக்கிறது. மூத்த சகோதர ஸ்தானமாகிய பதினொன்றில் சூரியன் மூத்த சகோதர ஸ்தானாதிபதியாகிய சுக்கிரனுடன் இருக்கின்றான். ஆகையால் மூத்த சகோதரனுக்குத் தோஷமிருக்கிறது. சம்ஸ்கிருத பலதீபிகை 15-ஆவது அத்தியாயம் 26-ஆவது சுலோகம், சம்புஹோராபிரகாசிகா இவைகளைப் பார்க்கவும். சம்ஸ்கிருத நாரதீயம் மூன்றும் பாவம் 4-ஆவது சுலோகத்தையும் பார்க்கவும்.

13. ஜாதகன் மணத்தின் காலம் சாற்றுவோம் ஒருபா னாறில்
தீதிலாத் தந்தை வர்க்கம் ஜனித்திடு மாது தன்னை
மேதினில் கொள்வா னம்மா வித்தகன் தனக்குப் புத்திரர்
நீதியாய் உரைப்போம் யாங்கள் நிமிலியே கேட்டி டாயே

13. ஜாதகருக்கு விவாக காலத்தைச் சொல்லுகிறோம். இவருக்குப் பதினாறு வயதில் தன் தகப்பனாருடைய வர்க்கத்தைச் சேர்ந்த ஒரு கெடுதியில்லாத குடும்பத்தில் பிறந்த பெண்ணை இவர் விவாகஞ் செய்து கொள்வார். பார்வதியம்மையே ! அறிவும் செல்வமுமுள்ள ஜாதகருக்குப் பிறக்குங் குழந்தைகளைப்பற்றி நாங்கள் நியாயமாகச் சொல்லுகிறோம், பார்வதியம்மையே ! கேட்பீராக.

14. புத்திர ராண்பா லொன்று புகலுவோம் பெண்பால் ரண்டு
வித்தகர் முனிவர் கூற விளம்புவா ளம்மை தாமும்
பத்தினி மாதுர் வமிசம் பகருவீ ரென்று கேட்கக்
தீதிலா முனிவர் தாமும் சிறப்புடன் சொல்லலுற்றார்.

14. ஜாதகருக்கு ஆண் குழந்தை ஒன்றும், பெண் குழந்தைகள் இரண்டும் உண்டு என்று சொல்லுகிறோம் இவ்விதமாக அறிஞராகிய

முனிவர் சொல்ல, பார்வதியம்மை சொல்லுகிறுர். மாதுரு வம்சத்தை பற்றிச் சொல்லுவீர், என்று பத்தினியாகியப் பார்வதியம்மை கேட்கக் குற்றமில்லாத முனிவரும் பெருமையுடன் சொல்லுகிறுர்.

15. மாதுரு துணைவர் தம்மை வழுத்தவே பலத்தைக் காணேம்
மேதினில் தனிய ளாவள் வித்தகி ஒடிச்ச லுள்ளாள்
சீதள முகத்தா ளாகும் செப்புமுன் கோபி யாவாள்
பாதக மொருவர்க் கெண்ணுள் பந்துவு மெச்ச வாழ்வள்.

15. ஜாதகருடைய தாயோடு கூடப் பிறந்தவர்களைப் பற்றிச் சொல்ல வலிவு கிடையாது. தாய் பூமியில் கூடப்பிறந்தவர்களில்லாமல் ஒருத்தியாக வாழ்வாள். மெலிந்த தேகமுடையவள், குளிர்ந்த முகத்தை யுடையவள். பேசுவதற்கு முன்னே கோபமுடையவள். எவருக்குங் கெடுதியை நினைக்கமாட்டாள். பந்துக்கள் மெச்சும்படியாகப் பெருமையாய் வாழ்வாள்.

16. அடக்கமு மொடுக்க முள்ளாள் ஆளனுக் கினிய ளாவள்
படகங்க ளெண்ணு நெஞ்சம் யிவள்பித்த சூடாம் தேகம்
நடக்கையும் நல்ல தாகும் நன்மன முடையளாகும்
மடக்கொடி யோக சாலி மர்மமும் கொஞ்ச முள்ளான்.

16. ஜாதகருடைய தாயார் அடக்கம் ஒடுக்கம் உள்ளவள். புருஷனுக்கு இஷ்டமானவள். கலகங்களை யுண்டு பண்ணுகிற எண்ண மில்லாதவள். இவள் அதிக சூடான தேகமுள்ளவள், இவளுடைய நட வடிக்கைகள் நல்லதாக விருக்கும். நல்ல மனதை யுடையவளாவாள். இவள் யோகமுள்ள பெண்ணுகவிருப்பாள். கொஞ்சம் இரகசியமுள்ளவள்.

17. இப்படி முனிவர் கூற ஈச்வரி கேட்க லுற்றுள்
மெய்ப்புடன் தந்தை ஜன்மம் விளம்புவீ ரென்று கேட்க
ஒப்புடன் முனிவர் தாமும் உரைப்பார்கள் சோழ நாட்டில்
செப்பமாய்ச் சூத்திர ஞகிச் செய் நில முள்ளா ஞகி;

17. இவ்விதமாக முனிவர் சொல்லப் பார்வதியம்மை கேட்கின்றுர். உண்மையாய்த் தகப்பனுருடைய முன்பின் ஜன்மங்களைப் பற்றிச் சொல்லுவீர் என்று கேட்க சம்மதத்துடன் முனிவரும் சொல்லு கின்றுர். தகப்பன் தன் முன் ஜன்மத்தில் சோழ தேசத்தில் ஒழுங்கான ஒரு சூத்திரனுகப் பிறந்து செய்கால் பூமிகள் உள்ளவராகி

18. மனைவி மைந்தரு முண்டாகி வாழ்ந்துமே யிருக்கும் காலம்
அனையவே வந்த ஊழ் அறைகிறேும் கேளு மம்மா
துணையவர் தமக்குப் பாகம் சுதனுமே கொடுக்கா மல்தான்
தனையனும் தன்கைக் கொண்டான் தன்துணே சாபம் சொன்னுன்,

18. மனைவி குழந்தைகள் இவர்கள் உண்டாகி வாழ்ந்து கொண்டிருக்கிற காலத்தில், இவரை வந்தடைந்த ஊழ் வினையைச் சொல்லுகிறோம், கேளும், பார்வதியம்மையே ! இவர் தன்னுடைய சகோதரர் களுக்குப் பாகம் கொடுக்காமல் எல்லாச் சொத்தையும் தானே எடுத்துக் கொண்டார். அதன்பேரில் அவருடைய சகோதரர்கள் இவருக்குச் சாபங் கொடுத்தார்கள்.

19. மற்றொரு ஜன்மம் தன்னில் வரும்துணை ஆஸ்தி யின்றி
உற்றதோர் தனிய ராகி ஊரெலாம் திரிச்ச லாகிப்
பெற்றிடு பூமி யில்லாப் பின்னொரு ஊரிலே தான்
பற்றியே வாழ்வா ராகும் பாவையால் சுகமு ண்டாகி;

19. பின் ஜன்மத்தில் உனக்குச் சகோதரர்களும் சொத் தும் இல்லாமல் ஒருவனுயிருந்து எல்லாக் கிராமங்களிலும் திரிந்து அலைந்து கொண்டு தனக்கு வந்தடையும்படியான பூமிகள் இல்லாமல் வேறொரு கிராமத்தில் வாழ்வாயாக, என்று சொல்லி இவர்களுக்கு மனைவியால் சுகங்கள் ஏற்பட்டு,

20. சாபங்கள் சொல்லி யேதான் தனையர்கள் கூறி பின்பு
கோபமாய் மறுதே சங்கள் கொண்டனர் துணைவர் தாமும்
பாபத்தா லச்சென் மத்தில் பாவையும் பாலர் நீங்கிக்
கோபத்தால் தில்லை ஏகி சுந்தரன் மரண மாகி ;

20 சாபங்களைக் கொடுத்துவிட்டுச் சகோதர்களான இவர்கள் பின்னால் கோபத்துடன் அன்னிய தேசங்களுக்குப் போய்ச் சேர்ந்தார்கள். இவ்விதமான பாபத்தால் ஜாதகருடைய தகப்பன் முன் ஜன்மத்தில் மனைவியையும் பிள்ளைகளையும் விட்டுப் பிரிந்து கோபத்தால் சிதம்பரத்திற்குச் சென்று அவ்விடத்தில் இறந்து ;

21. இச்சென்மம் தன்னி லேதான் இவனுமே உதித்துப் பின்பு
லச்சைக ளதிகம் பட்டு நாயகன் திரிச்சலாகி
அச்சுதன் தமைத் துதித்து அவனற்ப ஜீவ னத்தால்
இச்சையாய்த் தந்தை ஆஸ்தி யிவனுக்கு யில்லை யென்றோம்.

21. இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றார். இவர் பிறகு நாணமும் வெட்கமும் அதிக முண்டாகித் திரிச்சலும் அலைச்சலு முடைய வராகி ஓர் அற்பத் தொழிலால் தழைத்து இருக்கிறார். இவருக்குத் தன் தகப்பனாருடைய சொத்து கிடையாது என்று சொல்லுகிறோம்.

22. தந்தையின் பின்ஜன் மத்தைச் சாற்றுவோம் காஞ்சி தன்னில்
பந்தமாய்க் கருணீகர் வமிசம் பாலகன் பிறந்து மேலும்
முந்தவே மாலின் கோஷ்டம் முயற்சியாய்க் கணக்கு பார்த்துச்
சந்ததம் வாழ்வா னென்றோம் சத்தியே மேலுங் கேளே.

22. தகப்பனுடைய மறு ஜன்மத்தைச் சொல்லுகிறோம். காஞ்சிவரத்தில் ஓர் ஒழுங்குள்ள கருணீகர் குலத்தில் இவர் பிறந்து மேன்மையான ஒரு விஷ்ணு கோயிலில் கணக்குப் பார்க்கும் வேலையாளாக அமர்ந்து எப்போதும் வேலையிலிருந்து வாழ்வார் என்று சொல்லுகிறோம். பார்வதியம்மையே ! இன்னும் கேட்பீராக.

23. ஜாதகன் முன்ஜன் மத்தைக் கூறுவோம் காஞ்சி மேல்பால்
மேதினில் பேரூர் தன்னில் விளங்கிய வன்னிய னுகி
நீதியாய் மனைவி மைந்தர் நீள்நில மதிக முண்டாய்
ஆதியாய் வாழ்ந்து பின்பு அறைகிறோம் மேலும் கேளே.

23. ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தில் காஞ்சீபுரத்திற்கு மேற்கிலுள்ள ஒரு பெரிய கிராமத்தில் வளம் பொருந்திய ஒரு வன்னியராகப் பிறந்து நல்லொழுக்கத்துடன் மனைவி குழந்தைகள் இவர்களை யடைந்து நிலங்களை அதிகமாக வடைந்து பரதேசியைப் போலத் தெய்வபத்தியுடையராகவாழ்ந்தார். பின்னல் அவருக்கு நடந்தவைகளை மேலேசொல்லுகிறோம். பார்வதியம்மையே ! கேட்பீராக.

24. சாலையின் மார்க்கம் தன்னில் தாகப் பந்தலும மைத்துக்
கோலமாய் வருவோர்க் கன்னம் குணமுட னீந்து பின்பு
ஞாலமேல் மரண மாகி நாற்றிசை களுச்சம் தன்னால்
காலனால் வரையப் பட்டு தித்தவ னிவனே யம்மா.

24. மரங்களடர்ந்த வழிப்பாட்டையில் தாகவிடாய்த் தீர்க்க ஒரு பந்தல் ஏற்படுத்திக் கஷ்டத்துடன் வருபவர்களுக்குச் சாப்பாடு நல்ல மனத்துடன் கொடுத்துப் பின்னல் பூமியில் இறந்து எல்லாத்திக்குகளிலும் தன்னால் கீர்த்தி ஏற்படச் செய்து எமனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டுப் பிறகு பிறந்தவர் இந்த ஜாதகராவார். பார்வதியம்மையே !

25. இச்சென்மம் தன்னி லேதான் இவன்யோகம் சொல்லக் கேளாய்
மிச்சமாய்ச் செட்டு செய்வன் விளைபுல மதிகம் சேர்ப்பன்
உச்சித பொருள்கள் சேர்ப்பன் உறவெலாம் உதவி செய்வன்
கச்சணி [1]மாதே யாங்கள் கழறின மொழிகுன் றுவே.

25. இந்த ஜன்மத்தில் இந்த ஜாதகருடைய யோகங்களைச் சொல்லுகிறோம். கேட்பீராக. லாபம் ஏற்படும்படியாய் வியாபாரஞ் செய்வார். நல்ல பலிதம்தரக்கூடிய நிலங்களை அதிகமாகச் சேர்ப்பார். அரிய உயர்ந்தப் பொருள்களைச் சேர்ப்பார். எல்லாப் பந்துக்களுக்கும் சினேகிதர்களுக்கும் உபகாரஞ் செய்வார். பார்வதியம்மையே ! நாங்கள் சொல்லுகிற வார்த்தைகள் தவறுமல் நடக்கும்.

26. வண்டிவா கன மு முள்ளா னரசர்கள் பேட்டி கொள்வன்
குண்டைகோ விருத்தி யுள்ளான் குறைவிலாச் செல்வ முள்ளான்
எண்டிசைக் கீர்த்தி கொள்வன் எதிரியை நாசம் செய்வன்
கண்டித வார்த்தை யுள்ளான் கழறுவோம் மேலுங் கேளே.

---

[1] இரவிக்கை அணிகின்ற

26. ஜாதகர் வண்டியும் வாகனங்களு முள்ளவர். இவருக்கு இராஜாக்களுடைய தரிசனம் கிடைக்கும். எருது பசு இவைகள் இவருக்கு விருத்தியாகும். குறைவுபடாத சொத்துக்களை யுடையவர். எல்லாத் திசைகளிலும் பெருமையையும் புகழையும் அடைவார். தன்னுடைய சத்துருவை அழித்து விடுவார். உறுதியான திட்டமானச் சொற்களை உபயோகிப்பார். இன்னும் சொல்லுகிறோம், கேட்பீராக.

27. இவனுடைப் பிற்சென் மத்தை யியம்புவோ மரங்கம் தன்னில்
அவனியில் வைசியச் சேயாய் அவருமே உதித்து மேலும்
அவனியில் செட்டு செய்து நாடெலாம் கீர்த்தி பெற்றுச்
சிவனுடை அடியார்க் கெல்லாம் செல்வனும் நேய மாவர்.

27. ஜாதகருடைய மறு ஜன்மத்தைச் சொல்லுகிறோம். அரங்கம் என்று சொல்லப்பட்ட ஸ்ரீரங்கம் என்ற க்ஷேத்திரத்தில் ஒரு வைசியராக ஜாதகர் பிறந்து வியாபாரஞ் செய்து தேசமெல்லாம் பெருமையையும் புகழையும் அடைந்து; சிவபெருமானுடைய பக்த்தர்கள் தொண்டர்கள் எல்லோருக்கும், செல்வத்தையுடைய இந்த ஜாதகர், சினேகமாகவும் அன்புள்ளவராகவுமிருப்பார்.

28. இவ்வித முனிவர் கூற ஈச்வரி கேட்க லுற்றாள்
பவ்வமாய் ஜாதகன் தான் பரசமே விடங்க ளொன்று
திவ்விய மாது கேட்க ஜயமுனி கூற லுற்றார்
நவ்விய மாதுரு ஆஸ்தி நாயக னடைவா னென்றோம்.

28. இப்படி முனிவர் சொல்ல பார்வதியம்மை கேட்கின்றார். ஜாதகர் தன்னுடைய நல்ல பருவமான வயதில் தனத்தை அடையும்படியான விடங்களைச் சொல்லுவீர் என்று கேட்க, ஜயமுனி சொல்லுகின்றார். நன்மையை விளைவிக்கக் கூடிய தாயாருடைய சொத்துக்களை ஜாதகர் அடைவார் என்று சொல்லுகிறோம்.

29. இவனுடைத் தந்தை கால மியம்புவோ மிருபா னெட்டில்
அவனியில் மாதுரு காலம் அறைகிறோ மதன்மேல் நான்கும்
நவமதி லிவனின் காலம் நாட்டுவோ மறுபா னைந்தில்
கவனமாய்க் கணித்த மாதம் கனத்தப்பா னையி லேதான்.

29. ஜாதகருடைய தகப்பனுருடைய மரண காலத்தைச் சொல்லுகிறோம். தகப்பனார் ஜாதகருக்கு இருபத்தெட்டாவது வயதில் மரணமடைவார். ஜாதகருடைய தாயார் தகப்பனுக்குப் பிறகு நான்காவது வருஷத்தில், அஃதாவது ஜாதகருக்கு முப்பத்திரண்டாவது வயதில் இறந்து விடுவாள். ஜாதகருடைய மரணகாலத்தைச் சொல்லுகிறோம். ஜாதகர் தனக்கு அறுபத்தைந்தாவது வயதில் மாசி மாதத்தில்

30. மரணமே யாகியே தான் மறுஜனனம் வேங்கடத்தில்
பெருமையாய் க்ஷத்திரிய னாகிப் பிரபல வணிபம் செய்து
திறமையாய் வாழ்வா னென்றோம் ஜயமுனி கூறும் போது
அருமறை மாது சொல்வாள் அவன்மனை காலம் சொல்வீர்.

30. இறந்து பிறகு மறு பிறப்பில் வேங்கடம் என்று சொல்லப் படும் திவ்ய திருப்பதி க்ஷேத்திரத்தில் பெருமை வாய்ந்த ஒரு க்ஷத்திரிய குலத்தில் ஆணுகப் பிறந்து பிரபலமான பெரிய வியாபாரஞ் செய்து சாமர்த்தியமாய் வாழ்வார் என்று சொல்லுகிறோம். இவ்விதமாக ஜய முனிவர் சொல்லும் போது பார்வதியம்மை சொல்லுகிறார். ஜாதகருடைய மனைவியின் மரண காலத்தைச் சொல்லுவீர்.

31. இவன்பின்னால் மரண மாவள் இதுவல்லால் ஜனனம் தொட்டு
அவனியில் நாலாண் டுக்குள் அனேகமாய்த் துன்பம் வாய்க்கும்
நவமதில் மாதுரு தந்தை நாயகன் தனக்கு ரோகம்
பவமுளவிரைய முண்டாய்ப் பிறந்ததோர் அலைச்ச லாகும்.

31. ஜாதகருடைய மனைவி இவருக்குப் பின்னால் இறந்து விடுவாள். இதுவுமல்லாமல் ஜாதகருக்குத் தன்னுடைய ஜனன காலம் முதல் நான்கு வயதிற்குள் துன்பங்கள் அதிகமாக உண்டாகும். ஒன்பதாவது வயதில் தாயாருக்கும் தகப்பனருக்கும் தனக்கும் ரோகங்கள் உண்டாகி அழிவை உண்டாக்கக் கூடிய அதிகச் செலவு ஏற்பட்டுப் பிறந்தது முதல் அலைச்சலு முண்டாகும்.

32. அதற்குமேல் மரண மட்டும் அணுகாவே தரித்தி ரங்கள்
குதர்க்கங்க ளொன் றுமில்லை குணமுடன் பாக்கியம் சேரும்
நிதநித லாபம் உண்டாம் நீள்நில மதிகம் சேரும்
சதமான சித்திர வீடு ஜாதகன் செய்வா னென்றோம்.

32. ஜாதகருக்குத் தன்னுடைய ஒன்பது வயதிற்கு மேல் தன் மரண காலம்வரையிலும் தரித்திரங்கள் கிடையாது. கெடுதிகளுங் கிடையாது. நல்ல செல்வங்கள் வந்து சேரும். தினந்தோறும் லாப முண்டாகும். பெரிய பூமிகளை அதிகமாகச் சேர்ப்பார். நீடித்த காலமிருக்கும்படியான சித்திரங் களையுடைய அழகிய வீட்டைக் கட்டுவார்.

33. பலவித லாப முண்டாம் பாக்கிய மதிகம் சேரும்
நிலவுபோல் யோகம் வாய்க்கும் நினைத்தகா ரியங்கள் கூடும்
உலகினில் செட்டு ஓங்கும் ஊரெலாம் நேய மாகும்
மலையினில் தவங்கள் செய்யும் மங்கையே மேலும் கேளே.

33. ஜாதகருக்குப் பலவிதமான லாபங்கள் கிடைக்கும். செல்வம் அதிகமாக வந்து சேரும். வளர் பிறை சந்திரனைப் போல யோகம் விருத்தி யாகும். தான் நினைத்தக் காரியங்க ளெல்லாம் கைக்கூடி வரும். பூமியில் வியாபாரம் தழைத்து ஓங்கும். கிராமத்தார் எல்லோரும் ஜாதகருக்குச் சினேகிதர்களாவார்கள். இமயமலையில் தவங்களைச் செய்கிற பார்வதி அம்மையே ! இன்னும் நாங்கள் சொல்லுவதைக் கேட்பீராக.

## ஜாதகம் 58

1. மந்திரி[1] மீன தாக வாண்புக[2] ரிரவி[3]வண்டி[4]
சந்திரன் புந்தி[5] வீணை[6] சனித்தெறுக் காலி[7] லேற
முந்திய கயிறு[8] சீயம்[9] வக்ரன்[10] விடையி[11] லாக
பந்தமாய்ச் சாடி[12] கேது பகர் ஜன்மம் வளைய[13] லாக;

| | | | |
|---|---|---|---|
| குரு | | அங்காரகன் | சந்திரன் புதன் |
| கேது | இராசி சக்கரம் | | லக்கினம் சூரியன் சுக்கிரன் |
| | | | ராகு |
| | சனி | | |

திருவாதிரை 1-ஆம் பாதம், இராகு தசை ஞ்ப 15–7–0

1. குரு மீனத்திலும், ஆகாயத்திலுள்ள சுக்கிரன் சூரியன் கடகத்திலும், சந்திரனும் புதனும் மிதுனத்திலும், சனி விருச்சிகத்திலும், இராகு சிம்மத்திலும், அங்காரகன் ரிஷபத்திலும், அழகாய்க் கும்பத்தில் கேதுவும் இருந்து ஜன்ம லக்கினம் கடகமாக விருந்து ;

**குறிப்பு.**—இந்த ராசிச் சக்கர அமைப்பிற்குப் பின் வரும் அம்சைச் சக்கிரக் கிரகநிலை பொருத்த முடையதாகும். ரிஷபத்தில் ராகுவும், கடகத்தில் அங்காரகனும் சனியும், சிம்மத்தில் சூரியனும், துலாத்தில் சுக்கிரனும், விருச்சிகத்தில் கேதுவும், தனுசில் சந்திரனும், மகரத்தில் குருவும், கும்பத்தில் புதனும் ஆகும்.

2. இவ்விதக் கோளும் நின்று லியம்புவீர் பலனை யென்றாள்
ஒவ்விய ஆணும் ஜன்மம் உறையில்லம் வடதென் வீதி
நவ்விய மேற்கு வாசல் நாட்டுவோம் கூரை யாகும்
பவ்வமாய் மேற்கில் சோலை பகருவோம் சூழி யுண்டு.

2. இவ்விதமாகக் கிரகங்கள் இருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மை கேட்டார். பிறந்த குழந்தை ஆண்

[1]குரு [2]சுக்கிரன் [3]சூரியன் [4]பூசம் உள்ள கடகம்
[5]புதன் [6]மிதுனம் [7]விருச்சிகம் [8]இராகு [9]சிம்மம்
[10]அங்காரகன் [11]ரிஷபம் [12]கும்பம் [13]கடகம் [14]மீன்-மீனம்

குழந்தையாகும். வசிக்கின்ற வீடு வடக்குத் தெற்குத் தெருவில் மேலண்டை வாடையில் கூரை வீடாக விருக்கும் என்று சொல்லுகிறோம். மேற்கில் அழகாய்த் தோப்பும் குளமும் இருக்கும் என்று சொல்லுகிறோம்.

3. மீனத்திலீசன் கோஷ்டம் விளங்கிடு மருகில் காளீ
ஆனதோ ரக்கினி தன்னில் அறைகிறோம் முசல்மான் கோஷ்டம்
பான்மையாய்ச் சந்தி யப்பன் பருகிடு மாழி[1] யுண்டு
ஈனமாம் மாயோன் கோஷ்ட யிலகாது என்று சொன்னோம்.

3. வடகிழக்குத் திக்கில் பரமசிவன் கோயிலும் அதற்கு அருகில் காளிகோயிலும் தென் கிழக்கில் முஸ்லிம் மசூதியும் மேன்மையான சந்திதேவதைகளும் விநாயகர் கோயிலும் இருக்கும். மேலும் தென்கிழக்கில் கிலமாயுள்ள விஷ்ணுகோயில் இருக்கும். இந்தக் கோயில் பிரகாசிக்காத கோயிலாக விருக்கும் என்று சொல்லுகிறோம்.

4. தெற்கினில் வயல்க ளோடை செப்புவோம் சமவூர் தன்னில்
உரைக்கிறோம் சைவச் சேயாய் உதிப்பனு மிந்தப் பாலன்
வரைகிறோம் தந்தை மாதா வரும்துணை களத்திர புத்திரர்
தெரியவே முன்பின் ஜன்மம் செப்புவோ மிந்நூல் தன்னில்.

4. தெற்கில் வயல்களும் ஓடையும் இருக்கும் என்று சொல்லுகிறோம். இப்படிப்பட்ட எல்லைகளையுடைய ஒரு நடுத்தரமான கிராமத்தில் ஒரு பிரபல சைவ குலத்தில் ஜாதகர் பிறப்பார். ஜாதகருடைய தகப்பன் தாய் கூடபிறந்தவர் மனைவி பிள்ளைகள் முன்ஜன்மம் பின்ஜன்மம் ஆகிய இவைகளை இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகிறோம்.

5. தந்தையின் குணத்தைக் கேளாய்ச் சமதேகன் சிவந்த மேனி
சிந்தையில் கபடு மில்லான் சீலனும் கல்வி யுள்ளான்
பந்தமாய்ப் பித்த தேகி பரமன்தன் பூசை செய்வன்
வந்தவர்க் கன்ன மீவன் ஆதியில் வறுமை யுள்ளான்.

5. ஜாதகருடைய தகப்பனுருடைய குணாதிசயங்களைப் பற்றிக் கேட்பீராக. இவர் சமமான தேகத்தை யுடையவர். சிவப்புநிற முடையவர். மனத்தில் கள்ளம் கபடு இல்லாதவர். நல்லகுணத்தை யுடையவர். நல்லொழுக்க முடையவர். வித்தையுடையவர். பித்ததேக முடையவர். சிவ பெருமானைப் பூஜிப்பார். தன்னிடம் வந்தவர்களுக்குச் சாப்பாடு போடுவார். முதலில் தரித்திரமும் கஷ்டமும் உள்ளவர்.

6. சகலர்க்கு நண்ப னுவன் தாட்சிண்யன் கனத்த புத்தி
தகைமையாய் வார்த்தை கூறுவன் சற்சன ருறவு கொள்வன்
பகையிலான் பொறுமை யுளான் பந்துபூ சிதனும் நேயன்
வகையான பூமி சேர்ப்பன் மர்மசாஸ் திரங்கள் கற்பன்.

---

[1] கடல், யானைக்கை நுனி

6. ஜாதகருடைய தகப்பன் எல்லோருக்கும் சினேகிதனுகவிருப்பார். தயை தாட்சிண்யமுள்ளவர். பெரும் புத்தியுடையவர். பொருத்த மாகவும் தகுந்தபடியாகவும் வார்த்தைகளைச் சொல்லுவார். நல்ல குணங்களுடையவர்களுடைய சினேகிதத்தை அடைவார். எதிரிகளில் லாதவர். சாந்தமுடையவர். பந்துக்கள் இவரைப் போற்றுவார்கள், நேசிப் பார்கள். இவர் மேன்மையான நல்ல பூமிகளைச் சேர்ப்பார். மர்ம சாஸ்திரத் தையும் படிப்பார்.

7. சஞ்சல மனத்தா னுகும் சல்லிய மில்லா னென்றேம்
வஞ்சிபால் பெருமை யுள்ளான் வாக்குகள் சுத்த முள்ளான்
அஞ்செலன் றடைந்ததோர் தம்மை ஆதரிப் பானும் மேலும்
நொஞ்சினர்மே லிரக்க முள்ளான் நிமலியே மேலும் கேளே.

7. ஜாதகருடைய தகப்பனுர் சஞ்சலமான மனத்தையுடையவர். அவருக்குக் கடன்கள் ஏற்படா என்று சொல்லுகிறேம். பெருமையை யுடையவர். சுத்தமான நல்ல வாக்கு உள்ளவர். பயந்து தன்னிடம் வந்து அடைந்தவர்களைக் காப்பாற்றுவார். வறுமையுள்ளவர்களிடத்தில் இரக்க முள்ளவர். பார்வதியம்மையே! இன்னும் நாங்கள் சொல்லுவதைக் கேட்பீராக,

8. இவனுடைத் துணைவர் தம்மை மியம்புவோ மாண்பால் ரண்டு
அவனியில் [1] கன்னி ரண்டு அறைகிறே மிவனுக் கேதான்
நவனியி [2] லிவர்கள சேதி நாட்டுவோ மிரண்டி லேதான்
கவனமிக் குணத்தா னுக்குக் காவலன் பிறப்பா னென்றேம்.

8. ஜாதகருடைய தகப்பனுருடன் பிறந்தவர்களைப் பற்றிச் சொல்லு கிறேம். இவருக்கு ஆண் சகோதரங்கள் இருவர். பெண் சகோதரங்கள் இருவர் உண்டு என்று சொல்லுகிறேம். இந்தச் சகோதரர்களைப்பற்றி இரண்டாவது பாகத்தில் சொல்லுகிறேம். இவ்விதமான குணங்களையுடைய தகப்பனுக்கு இந்த ஜாதகர் பிறப்பார் என்று சொலலுகிறேம்.

9. ஜாதகன் குணத்தை யாங்கள் சாற்றுவோம் சிவந்த மேனி
மேதினில் சமதே கத்தன் வித்தையு முடையா னுகும்
பாதக மொருவர்க் கெண்ணுன் பந்துவும் மெச்ச வாழ்வன்
வேதனை யில்லா னுகும் விளைபுலம் விருத்தி செய்வன்.

9. ஜாதகருடைய குணுதிசயங்களை இனிமேல் சொல்லுகிறேம். இவர் சிவப்பு நிறமுள்ள தேகமுடையவர். சமமான தேகமுடையவர். கல்வி யுடையவராகும். எவருக்குங் கெடுதிகளை நினைக்கமாட்டார். பந்துக்கள் இவ ரைப் போற்றும்படியாகப் பெருமையாக வாழ்வார். துன்பங்கள் இல்லாதவ ராவர். பயிரிடும் பூமிகளை விருத்தியாக்குவார்.

---

[1] பூமியில் [2] ஈதுகையாகும்

10. மால்மக[1] னொப்ப தாகு மவன்சுக போச னத்தன்
சீலமா சார முள்ளான் சிந்தையில் கபடு மில்லான்
ஞாலம் மேல் வறுமை யில்லான் நற்புத்தி நாபி நோயன்
வேலுடைக் கடவுள் பேரில் விருப்பங்கள் கொள்வா னென்றோம்.

10. ஜாதகர் மாகாவிஷ்ணுவின் குமாராகிய பிரமதேவனுக்குச் சமானமானவர். இவர் சுகமான நல்லபோஜனத்தைச் சாப்பிடுவார். நல்ல ஒழுக்கமும் நல்ல ஆச்சாரமும் குணமுமுள்ளவர். மனத்தில் கபடமும் வஞ்சகமும் இல்லாதவர். பூமியில் தரித்திரமும் கஷ்டங்களும் இல்லாதவர், நல்ல புத்தியுடையவர். தொப்புளில், அதாவது வயிற்றில் நோயுடையவர். வேலாயுதக் கடவுளாகிய முருகர் பேரில் பக்தியுள்ளவர் என்று சொல்லுகி றோம்.

11. சித்திர வீடு செய்வன் சிறப்பான குடும்ப முள்ளான்
பத்தினிக் கிஷ்ட னுவன் பலருக்கு நேய முள்ளான்
சுத்தநன் மனத்தா னுகும் சுகமுளான் அலேச்ச லுள்ளான்
சக்தியை வெறுக்கா னென்றோம் தாமதக் குணத்தா னென்றோம்.

11. ஜாதகர் சித்திரங்க ளடங்கிய வீட்டைக் கட்டுவார். மேன்மை யான பெருமையுள்ள குடும்பத்தை யுடையவராவர். தன்னுடைய மனைவிக்கு இஷ்டமானவர். எல்லோருக்கும் சினேகமாயிருப்பார். பரிசுத்தமான நல்ல மனத்தையுடையவர். சுகத்தை யனுபவிப்பவர். ஆனுல் அலேச்சலேயுடைய வர். உலக மாதாவாகிய சங்கரியினிடம் வெறுப்பில்லாதவர், அஃதாவது பார்வதியிடம் பக்தியுள்ளவர், தாமதமான சாந்தமான குணத்தையுடைய வர் என்று சொல்லுகிறோம்.

12. கரமதில் கமல ரேகை கனத்திடு சுழியு முள்ளான்
திறமையாய்ப் பேச வல்லன் சொன்னசொல் தப்பா னுகும்
உறன்முறை மெச்ச வாழ்வன் உறைந்திடு பித்தச் சூடு
விரைவினில் நடக்க வல்லன் விசேஷமாய்ப் பூமி சேர்ப்பான்.

12. ஜாதகருடைய உள்ளங்கையில் கமலரேகை என்ற ஒரு விதமான தாமரை ரேகை உண்டு. இவருக்குப் பெரிய சுழியுமுண்டு. இவர் தன் பந்துக் கள் தன்னேப்போற்றும்படியாகப் பெருமையுடன் வாழ்வார். இவருக்குப் பித்தச்சூடு உண்டு. வேகமாகவும் சீக்கிரமாகவும் நடக்குஞ் சக்தியை உடையவர். இவர் பூமியை அதிகமாகச் சேர்ப்பார்.

13. தந்தையின் ஆஸ்தி தன்னே ஜாதகன் விருத்தி செய்வன்
வந்தவர்க் கன்ன மீவன் மனைவிக ளிரண்டே யாகும்
இந்தவாறு முனிவர் கூற ஈஸ்வரி கேட்க லுற்றுள்
பந்தமாய் ஜாத கர்க்குப் பகரினீர் தாரம் ரண்டாய்.

---

[1] பிரமதேவன்

**13.** ஜாதகர் தன்னுடைய தகப்பனுடைய ஆஸ்தியை விருத்தியாக்கு வார். தன்னிடம் வருபவர்களுக்குச் சாப்பாடு போடுவார். இவருக்கு இரண்டு மனைவிகள் உண்டு. இவ்விதமாக முனிவர் சொல்ல, பார்வதியம்மை கேட்கின்றார். நீர் ஜாதகருக்குத் தாரம் இரண்டு என்று சொன்னீர்.

**14.** ஏது காரணங்க ளத்தை யியம்புவீ ரென்று கேட்க
மாதவர் சொல்லு கின்றார் வாக்கினில் கருங்கோள் தங்கத்
தீதான சனியும் பார்க்கச் செப்பினேம் தாரம் ரண்டாய்
ஓதுவார் புயண்டர் தாமும் உத்தமன் குருவே யாகி ;

**14.** காரணங்கள் என்ன ? அவைகளைச் சொல்லுவீரென்று கேட்க, பெரிய தவங்களைச் செய்கின்ற முனிவர் சொல்லுகின்றார். வாக்கு ஸ்தானமாகிய இரண்டாவது வீட்டில் இராகு இருப்பதாலும் இந்த வீட்டைக் கொடிய பாபியாகியச் சனி பார்ப்பதாலும் இரண்டு தாரம் என்று சொன்னேம் அதன்பேரில் புஜண்டர் சொல்லுகின்றார். குரு நல்லவராகி,

**குறிப்பு.**—களத்திரத்தின் நிலைமையை அறியவேண்டுமானால் 2, 7, 9, 11-ஆம் பாவங்களையும், இந்தப்பாவாதிகளையும் லக்கினாதிபதியையும் சுக்கி ரனையும் ஆராய்ச்சி செய்யவேண்டும். ஆகையால் இந்தப் பாட்டில் இரண்டாவது பாவத்தைப் பற்றிச் சொல்லுகிறார்.

**15.** இரண் டேழோன் தன்னை யின்பமாய்ப் பார்த்த தாலும்
திறமையாய் ஏழோன் தானும் திரத்தினி லிருக்க நீரும்
அறைந்திடாதீர் தாரம் ரண்டு அத்திரி முனிவர் சொல்வார்
[1] மறையவனு ரேனாகி மைந்தனு [2] மெட்டோ னாகி ;

**15.** இரண்டாம் பாவத்திற்குரிய சூரியனையும் ஏழாம் பாவத்திற்குரிய சனியையும் பார்ப்பதாலும், ஏழாம் பாவாதிபதியாகிய சனி ஸ்திர ராசி யாகிய விருச்சிகத்திலிருப்பதாலும் நீர் இரண்டுதாரம் என்று சொல்லாதீர் என்று சொல்ல, அத்திரி என்ற முனிவர் சொல்லுகிறார். குரு ஆறுவது பாவாதிபதியாகியும், சனி எட்டாவது பாவாதிபதியாகியும் இருப்பதாலும் ;

**குறிப்பு.**—ஏழாம் பாவாதிபதி ஸ்திர ராசியில் இருப்பது களத்திரத் திற்கு நல்லதாகும். ஜாதகாலங்காரம் 648-ஆவது பாடலைப் பார்க்கவும். இரண்டாவது பாவத்தை 6–7-ஆவது பாவாதிபதிகள் பார்த்தாலும் இப்பாவத் தில் இருந்தாலும் களத்திரத்திற்குத் தோஷமுண்டாகும். பலதீபிகை 15-ஆவது அத்தியாயம், 5-ஆவது சுலோகத்தையும், ஜாதக பாரிஜாதம் 11-ஆவது அத்தியாயம் 4-ஆவது சுலோகத்தையும் பார்க்கவும், இவைகள் கிரகங்கள் இருப்பதைப் பற்றிக் குறிக்கின்றன, பார்ப்பதையும் எடுத்துக் கொள்ளலாம்.

**16.** துதியத்தோன் சுகத்தோன் சேர்ந்து துன்பமாய்ப் பகையும் பெற்றுப்
பதிக்குமே விரய மாகப் பகர்ந்தனம் மனைவி ரண்டு
வதிஜய முனிவர் சொல்வர் மனைவிக ளிரண்டு என்றீர்
அதமுண்டோ தீர்க்க முண்டோ அறைகுவீர் விவர மாக.

---

[1] குரு [2] சனி

16. இரண்டாம் பாவத்திற்குரிய சூரியனும் சுகஸ்தானம் என்ற நான்காவது வீட்டிற் கதிபதியாகியச் சுக்கிரனும் ஆகிய இவர்கள் இருவரும் ஒன்றுய்க் கூடிப் பகையாகி இரண்டாம் வீட்டிற்கு விரயஸ்தானமாகிய பன்னிரண்டாவது வீட்டிலிருப்பதால் இரண்டு தாரம் என்று சொன்னேம். அதற்குமேல் ஜயமுனிவர் கேட்கின்றுர். இரண்டு மனைவிகள் என்று சொன்னீரே! இந்த இரண்டு மனைவிகளில் ஒருத்தி இறந்து விடுவாளோ அல்லது இரண்டு மனைவிகளும் நீண்ட ஆயுளை உடையவர்களோ! இதை விபரமாகச் சொல்லுவீர் என்று கேட்டார்.

17. முன்ஜன்மம் வினையி னுலே முயலாது முதல்ம னைதான்
பிந்திய மனைவி தீர்க்கம் பேசுவோ மிவனுக் கேதான்
அன்னையும் கேட்க லுற்றுள் அம்முதல் மனைவி எவ்வாறு
துன்பங்க ளடைவாள் நீங்கள் சொல்லுவீர் முனியே என்றுள்.

17. ஜாதகருடைய முன்ஜன்மத்திய ஊழ்வினைப் பாபத்தால் முதல் மனைவி நீடித்திருக்கமாட்டாள். இரண்டாவது மனைவி தீர்க்காயுளை உடையவள் என்று சொல்லுகிறேம். அதன்பேரில் பார்வதியம்மையார் கேட்கின்றுர் அந்த முதல் மனைவி எவ்விதமாக இறந்து விடுவாள் என்பதை முனியே நீங்கள் சொல்லுவீர் என்று கேட்டாள்.

18. அஞ்சினில் காரி [1] நிற்க அவளுக்குக் கருவு தங்கித்
துஞ்சிடு மனைவி என்றேம் சொல்லுவார் புயண்டர் தாமும்
வஞ்சியும் [2] எந்தக் காலம் வருகுவாள் சொல்வாயதைத்
தஞ்சமாய்ச சொல்லு மென்னச் சாற்றுவா ரத்திரி தாமும்.

18. ஐந்தாவது பாவத்தில் சனி இருப்பதால் ஜாதகருடைய முதல் மனைவிக்குக் கர்ப்பம் உண்டாகி அதனுல் இந்த மனைவி இறந்து விடுவாள் என்று சொல்லுகிறேம். அதன் பேரில் புஜண்டர் கேட்கின்றுர். முதல் மனைவி ஜாதகருக்கு எந்த வயதில் வந்து நேரிடுவாள்[1] எந்த வயதில் இறந்து விடுவாள் என்பதைத் தயையுடன் சொல்லும் என்று கேட்க அத்திரி முனிவர் சொல்லுகின்றுர்.

19. ஐயைந்து ஆண்டி லேதான் அணுகிடும் மனைவி தானும்
உய்யுவா ளைந்து ஆண்டு உரைக்கிறே மூப்பா னுண்டில்
தையலு மரண மாகிச் சடுதியில் இரண்டா மாது
வையமேல் வருவா ளென்றேம் மங்கையும் கேட்க லுற்றுள்.

19. ஜாதகருக்கு இருபத்தைந்தாவது வயதில் முதல் மனைவி வந்து நேரிடுவாள். அவள் ஐந்து வருஷம் உயிருடன் இருந்து வாழ்வாள். ஜாதகருக்கு முப்பதாவது * வயதில் இவள் இறந்து விடுவாள். உடனே இரண்டாவது மனைவி வந்து வாய்ப்பாள்* என்று சொல்லுகிறேம். அதற்கு மேல் பார்வதி யம்மையார் கேட்கின்றுர்.

---

[1] சனி [2] பெண்

**குறிப்பு.**—ஜாதகருக்கு வயது ஷூ 24-0-0 முதல் ஷூ 25-0-0 வரையில் குரு தசையில் சுக்கிரபுக்தி நடக்கிறது. வயது ஷூ 29-0-0 முதல் ஷூ 30-0-0 வரையில் குரு தசையில் அங்காரகன் ராகு இவர்களுடைய புக்திகள் நடக்கின்றன. குரு இரண்டாவது தார பாவமாகிய மீனத்திற்கு அதிபதியாகிச் சுக்கிரனையும் லக்கினத்தையும் பார்ப்பதைக் கவனிக்கவும். ராகு இரண்டி லிருப்பதையுங் கவனிக்கவும்.

20. வினையென்று சொன்னீ ரத்தை விளம்புவீ ரென்று கேட்கக்
கனமுடன் முன்ஜன் மங்கள் காவலன் அருணை உத்திரம்
அனையவே பிரம்ம சேயாய் அவனுமே உதித்து மேலும்
இணையிலாச் செல்வம் பெற்று அரசரால் அரசு செய்து ;

20. இது ஜாதகருக்கு மூன் ஜன்மவினைப் பயன் என்று சொன்னீர். அதை விவரமாகச் சொல்லும் என்று கேட்க, மூன் ஜன்மத்தைச் சொல்லுகின்றோம். ஜாதகர் அருணை என்ற திருவண்ணாமலைக்கு வடக்கில் பிராமணராகப் பிறந்து ஒப்பில்லாத அதிகச் செல்வமுடையவராகி அரசாங்கத்தில் வேலையில் அமர்ந்து ஆட்சி செய்து கொண்டு ;

21. வாழ்கிற நாளி லேதான் வந்தஊழ் தன்னைச் சொல்வேன்
ஆழியில் தமையன் பெண்டு அவளுமே விதவை யாகித்
தாழ்வுட னிருக்கும் போது தானவன் மோகம் கொண்டு
பாழான காமத் தாலே பலாத்கார மாகச் சேர்ந்தான்.

21. வாழ்ந்து வருகின்ற காலத்தில் இந்த ஜாதகருக்கு வந்து சம்பவித்த ஊழ்வினைப் பாவத்தைச் சொல்லுகிறேன். ஜாதகருடைய அண்ணன் மனைவி விதைவையாகித் தன்னுடைய அந்தஸ்து குறைந்து இருக்கும்போது அவள் பேரில் இவன் ஆசைகொண்டு பாவத்தை விளைவிக்கக்கூடிய காமத்தால் அவளிடம் பலாத்காரமாய்ப் புணர்ச்சி செய்தான்.

22. அப்படிச் சிலநாள் சென்று அவளுக்குக் கருவு தங்கிச்
செப்புவேன் பண்டி தத்தால் சிலசில அவிழ்த மீய
ஒப்புடன் கருவு நீங்கி உத்தமி மாண்டா ளென்றோம்
மெய்ப்புடன் அந்தத் தோஷம் மேவிற்று இவனுக் கேதான்.

22. இவ்விதமாகச் சில நாட்கள் சென்றதும் அவளுக்குக் கர்ப்பம் உண்டாகவே அவளுக்குச் சில மருந்துகளைக் கொடுத்து வைத்தியஞ் செய்யக் கர்ப்பங் கலைந்து பிரஷ்டமாகி அவள் இறந்து விட்டாள். இந்தத் தோஷம் உண்மையிலே ஜாதகருக்கு வந்து சம்பவித்தது.

23. இதுவலால் இன்னும் வேறு இயம்புவோ மிவனுக் கேதான்
நிதியிலா ஏழை யோனும் நிமலன்பால் சென்று மேதான்
துதிசெய்து மணங்கள் வேண்டச் சொர்ணங்கள் கேட்க லுற்றான்
அதிபனும் தாரே னென்றான் மனமது களிப்புக் கொண்டு ;

23. இந்த தோஷமு மில்லாமல் ஜாதகருக்கு இன்னொரு தோஷம் நேர்ந்தது என்று சொல்லுகிறோம். பணமில்லாத ஏழை ஒருவன் ஜாதகரிடம் சென்று அவரைப் போற்றி விவாகத்திற்காகப் பணத்தைக் கேட்டான். ஜாதகராகிய பிராமணர் அப்படியே கொடுக்கின்றேன் என்று சொல்ல, அவன் மனத்தில் சந்தோஷ முண்டாகி ;

24. வந்ததோர் ஏழை தானும் மணங்களும் நிச்ச யித்து
இந்தவாறு மறையோன் பக்க லியம்பினன் பொருளை யேதான்
சொந்தமாய்த் தாரே னென்றேன் சொல்லிய முடிவி லேதான்
தன்தன மீயா னுகிச் சாற்றுவார் சாபம் தானும்.

24. சென்ற அந்த ஏழையானவன் விவாகத்தை நிச்சயஞ் செய்து விட்டு மறுபடியும் பிராமணரிடஞ் சென்று பணத்தைக் கொடுங்கள் என்று கேட்கத் தன்னுடைய சொந்தமானப் பணத்தைக் கொடுக்கின்றேன் என்று சொல்லிவிட்டப் பிராமணர் கடைசியில் கொடுக்காததால் அந்த ஏழை சாபத்தைச் சொல்லுகின்றார்.

25. இச்சைகள் சொல்லி யேதான் ஈயாத பாவிக் கேதான்
மிச்சமாய் ஜன்மம் தோறும் மெல்லிய ரிரண்டு மாகி
லச்சை களதிக முண்டாய் நாட்டினில் வாழ்வா யென்று
உச்சித சாபம் சொல்லி உதாசீன மாகச் சொல்லி ;

25. இனிமையான வார்த்தைகளைச் சொல்லிக் கடைசியில் பணம் கொடுக்காத பாபி, இனிவரும் ஒவ்வொரு ஜன்மத்திலும் இரண்டு மனைவிகளை அடைந்து வெட்கமும் அச்சமும் அதிகமாகிப் பூமியில் வாழ்வாய் என்று தகுந்ததானச் சாபத்தைக் கொடுத்துவிட்டுத் தூஷணம் பேசி விட்டு ;

26. இப்படிச் சொல்லி யேதான் ஏழைக்கு வேறொ ருத்தர்
ஒப்பிய தனங்க ளீய உத்தேச முடித்தா னென்றோம்
செப்புவே னந்தத் தோஷம் சேயனைப் பற்றின தாலே
இப்பிறப் பினிலே தார மியம்பினே மிரண்டு மாக.

26. இவ்விதமாகச் சொல்லிவிட்டுப் போன ஏழைக்கு இன்னொருவர் சம்மதப்பட்டுத் தகுதியான பணத்தைக் கொடுக்க அந்த ஏழை தான் எண்ணிய காரியங்களை முடித்துவிட்டான் என்று சொல்லுகிறோம். இந்தத் தோஷமானது இந்த ஜாதகரைத் தொடர்ந்ததால் ஜாதகருக்கு இந்த ஜன்மத்தில் இரண்டு தாரம் என்று சொன்னோம்.

27. முனிவரிவ் விதமாய்க் கூற மொழிகுவா ளம்மன் தானும்
அனையவே ஜாதகர்க்கு அறைகுவீர் சுதர்க ளென்றார்
கனமுடன் சொல்லு கின்றேன் காளைக ளில்லை யம்மா
வினையதைச் சொல்லுமையா விளம்புவார் முனிவர் தாமே.

**27.** இவ்விதமாக முனிவர் சொல்ல, பார்வதியம்மை, ஜாதக ருக்குச் சந்ததிகளைப்பற்றிச் சொல்லுமென்று முனிவரைக் கேட்க, உறுதி யாகச் சொல்லுகிறேன். ஜாதகருக்கு ஆண் சந்ததி கிடையாது. பார்வதி யம்மையே! என்று முனிவர் சொல்ல, பார்வதியம்மை சூழ்வினையைச் சொல்லும் என்று கேட்க; முனிவர் சொல்லுகின்றார்.

**28.** காரி[1] யு மைந்தில் நிற்கக் கழறினோம் புத்திர தோஷம்
மாறியே சொல்லு கின்றார் மறையவ [2]னைந்தைப் பார்க்கத்
தேறிய கருமத் தோனும் சேயாகி [3] லாப மேற
வீரிய மதலை யுண்டாம் விளம்புவார் புயண்டர் தாமும்.

**28.** சனி ஐந்தாவது பாவத்திலிருப்பதால், புத்திர தோஷத்தைச் சொன்னோம் என்று சொல்ல, இதற்கு மாறுபாடாகப் புஜண்டர் சொல்லுகிறார். குரு ஐந்தாவது பாவத்தைப் பார்ப்பதாலும், கர்மாதிபதி யாகிய அங்காரகன் லாபமாகிய பதினோராவது பாவத்திலிருப்ப தாலும், வலிவுள்ள ஆண் குழந்தை உண்டு என்று சொல்லுகிறோம்.

**29.** பிறக்கினும் தீதாய்ப் போகும் பூர்வதோஷத்தி னாலே
உரைக்கிறோ மதற்குச் சாந்தி உத்தமன் மனைவி யோடு
திறமையாய் ஏழுகார்த் திக்குத் திருத்தணி சென்று மேதான்
ஆறுமுகர்க் கர்ச்சித்தேத்தி அவனுமே உள்ளூர் மீண்டு;

**29.** அதற்கு மேல் பலன் சொல்லிவந்த முனிவர் சொல்லுகிறார். ஆண் குழந்தை ஒரு சமயம் பிறந்தாலும் முன் ஜென்ம பாபத்தால் இறந்து விடும். அதற்குச் சாந்தி சொல்லுகிறோம். ஜாதகர் தன்னுடைய மனைவியுடன் ஏழு கார்த்திகை வரையிலும் ஒவ்வொரு கார்த்திகை தினத்திலும் மனதிடத்துடன் திருத்தணிக்குச் சென்று ஆறுமு கடவுளுக்கு அர்ச்சனை செய்து விளக்கு வைத்து ஏற்றித் தன் கிராமத்திறகுத் திரும்பி வந்து;

**30.** ஓராண்டு சஷ்டி நோன்பு உத்தன் விரதம் கொள்ளக்
கூறினோம் மதலை தீர்க்கம் குறையென்று செய்யா னாகில்
வீறுது மதலை யென்றோம் வித்தகி கேட்க லுற்றாள்
பாரியை எந்தத் திக்குப் பகருவாய் முனியே என்றாள்.

**30.** ஒரு வருஷம் வரையிலும் ஜாதகர் சஷ்டி தினம் நோன்பு நோற்று விரதம் இருந்தால் ஆண் குழந்தை நீண்ட ஆயுளுடன் இருக் கும் என்று சொல்லுகிறோம். நாம் சொல்லுவது தப்பிதம் என்று எண்ணி நாம் சொல்லிய பிரகாரம் செய்யாவிட்டால் அந்த ஆண் குழந்தை விளங்காது, பிழைத்திராது என்று சொல்லுகிறோம். அதற்கு மேல் பார்வதியம்மை கேட்கின்றார். ஜாதகருக்கு மனைவி எந்தத் திக்கி லிருந்து வருவாள் என்பதை முனியே நீர் சொல்லுவீர் என்று பார்வதி யம்மை கேட்டார்.

---

[1] சனி [2] குரு [3] அங்காரகன்

31 உத்திரத் திக்கிலே தான் உதித்திடு மிரண்டு மாது
சித்தமாய் மூத்தா ளுக்குத் தீங்காகு மதலே யென்றேம்
வித்தகி யிளையா ளுக்கு விளங்கிடு மாண்பா லொன்று
பத்தினி யிரண்டு என்றேம் பகருவோம் தீர்க்க மாக.

**31.** ஜாதகருக்கு இரண்டு மனைவிகளும் வடக்குத் திக்கிலிருந்து வந்து தோன்றும். முதல் மனைவிக்குக் குழந்தை தீங்கை, அஃதாவது மரணத்தை உண்மையாக உண்டு பண்ணு மென்று சொல்லுகிறேம். இரண்டாவது மனைவிக்கு ஆண் குழந்தை ஒன்றும், பெண் குழந்தைகள் இரண்டு என்று சொல்லுகிறேம். இவைகள் நீண்ட ஆயுளையுடையன வென்று சொல்லுகிறேம்.

குறிப்பு.—முதல் மனைவி ஸ்தானமாகிய மகரத்திற்குப் புத்திரஸ்தான மாகிய ரிஷபத்தில் அங்காரகன் இருப்பதையும், ரிஷபத்தைச் சனி பார்ப்ப தையும், ரிஷபத்திற்கு அதிபதியாகிய சுக்கிரன் களத்திரஸ்தானத்திற்கு அஷ்டமாதிபதியாகி சூரியனுடன் கூடி அஸ்தங்கதம் அடைந்திருப்பதையுங் கவனிக்கவும். இவ்விதமாக முதல் தாரத்திற்குப் புத்திர தோஷம் அதிக மாக விருப்பதைக் கவனிக்கவும். மேலும் சனி ஐந்தாவது பாவத்தி லிருந்து குருவால் பார்க்கப்பட்டால் ஜாதகர் இரண்டு மனைவி யுடையவர். முதல் தாரத்திற்குப் பிள்ளை இல்லை, இரண்டாந் தாரத்திற்குப் பிள்ளை யுண்டு என்று பிருகு சூத்திரம் என்ற புத்தகத்தில் 7ஆவது அத்தியாயத் தில் 5 அவது சுலோகத்தில் சொல்லியிருப்பதைப் பார்க்கவும்.

32. இன்னவன் துணைவர் தமை யியம்புவோம் முத்தோர் காணேம்
உன்னத யிளையோ ருண்டு உரைக்கிறே மாண்பா லொன்று
கன்னியு மவ்வா ருகும் கழறுவோ மிவனுக் கேதான்
அன்னமே யிளையோன் சேதி அறைகிறேம் கேளு மம்மா.

**32.** ஜாதகருடன் பிறந்தவர்களைப் பற்றிச் சொல்லுகிறேம். இவருக்கு முன்னே பிறந்தவர்கள் கிடையாது. பின்னுல் பிறந்தவர்களுண்டு. அவர்கள், ஆண் சகோதரர் ஒன்றும், பெண் சகோதரம் ஒன்றும் என்று சொல்லுகிறேம். இளைய சகோதரனுடைய விஷயங்களைச் சொல்லுகிறேம். பார்வதியம்மையே! கேட்பீராக.

33. சிவந்திடு மேனி யாவன் சித்தினி சாதி யாவன்
நயம்படக் கூரு ருகும் நாட்டினில் கிருஷி செய்வன்
அயலார்பொன் னிச்சை யில்லான் அவன்பித்த தேகி யாவன்
பவமுள சமமாம் கல்வி பகருவான் கட்டு வார்த்தை.

**33.** ஜாதகருடைய இளைய சகோதரன் சிவப்பான தேகத்தையுடை யவர். சித்தினி ஜாதியைச் சேர்ந்த பெண்களின் குணத்தை உடையவர். இனிமையாகவும் நயமாகவும் பேசமாட்டார். கிராமத்தில் விவசாய வேலையைச் செய்வார். பிறருடைய சொத்துக்களின்பேரில் ஆசை யில்லாத வர். பித்த தேக முடையவர். நடுத்தரமான படிப்புள்ளவர். புனைந்த வார்த்தைகளையும் பொய்யையும் பழமொழிகளையும் சொல்லுவார்.

**சித்தினி ஜாதி.**—(1) பத்மினி ஜாதி, (2) சித்தினி ஜாதி, (3) சங்கினி ஜாதி, (4) ஹஸ்தினி ஜாதி என்ற நால்வகை ஜாதி ஸ்திரீகளில் ஒருவகை. சித்தினி ஜாதி ஸ்திரீயானவள் ஷஷ்டி, அஷ்டமி, தசமி, துவாதசி ஆகிய இந்தத் திதிகளில் சம்போகத்தை அடைந்தால் அவள் காமப்பீரிதியை யடைவாள். ஸ்ரீசிவசுப்பிரமணியக் கடவுள் அகஸ்தியருக்குத் திருவாய் மலர்ந்தருளிய சாமுத்திரிகாலட்சண நூலில் கடைசியில் பார்க்கவும். சித்தினி ஜாதி ஸ்திரீயானவள் தாமரை மலர்போன்ற முகத்தையுடையவள், மான்விழியாள், மழ மழப்பான அழகிய சரீர முடையவள், உயர்ந்த கொங்கைகளை யுடையவள், சிறந்த அவயவங்களை யுடையவள், குயில் போன்ற குரலை யுடையவள், யானையைப் போன்ற கம்பீரமான நடையை யுடையவள், சங்கீதம் சிற்பம் அறிந்த வள் முதலியனவாகும்.

34. காரிய சமர்த்த னாகும் கனத்தவர் நேசம் கொள்வன்
மாறியே சொல்வா னாகும் மறுமவான் நற் குணத்தான்
கூறுவோம் தரித்திர மில்லான் குணமுடன் தந்திர வாதி
வீரிய மனைவி புத்திரன் விளம்புவோ மிரண்டி லேதான்.

34. காரியங்களைச் செய்து முடிப்பதில் வல்லவர். பெரிய மனுஷர்களுடைய சினேகிதத்தை யடைவார். ஒன்றை மற்றொன்றாக மாற்றிச் சொல்லுவார். மர்மமாயிருப்பார். நல்ல குணங்களுடையவர், தரித்திர மில்லாதவர் என்று சொல்லுகிறோம். நல்ல குணமுடைய உபாயமுள்ளவாவர், இவருடைய மனைவி சந்ததிகளைப்பற்றி இரண்டாவது பாவத்தில் சொல்லுகிறோம்.

35. செத்திரு ரோம முள்ளான் சிலுத்து சொல்லா னாகும்
பன்னியே உரைக்க வல்லன் பந்துவுக் கினிய னவன்
அன்னிய ரிஷ்டம் கொள்வன் அழகுளான் விரோத மில்லான்
தன்னுளே மாதுர் சேதி சாற்றுவோம் கேளு மம்மா.

35. லக்ஷ்மிகரமான ரோமத்தையுடையவர். துன்பத்தை விளைவிக்கக் கூடிய தப்பிதமான வார்த்தைகளைச் சொல்லமாட்டார். சொன்னதையே சொல்லிச் சொல்லிப் பேசுந் திறமையுடையவர். பந்துகளுக்கு இஷ்டமானவர். அயலாருடைய சினேகத்தை யடைவார். அழகானவர். பகைவரில்லாதவர். பிறரிடத்தில் கோப மில்லாதவர். ஜாதகருடைய தாயாருடைய விஷயங்களைச் சொல்லுகிறோம். பார்வதியம்மையே! கேட்பீராக.

36. மாதுவின் நிறம்சி வப்பாம் வாயுவாம் பாதை யுள்ளாள்
தீதிலாக் குணத்தா ளாகும் தீங்கதை எண்ணு நெஞ்சம்
சோதிபோல் முகத்தா ளாகும் துராசையு மில்லா ளாகும்
மாதவர் தன்னைத்து திப்பாள் வரனுக்கு நேய முள்ளாள்.

36. ஜாதகருடைய தாயார் சிகப்பு நிறமுள்ளவள், வாய்வுநோய்ப் பாதையை யுடையவள், கெட்ட குணமில்லாதவள், பிறருக்குக் கெடுதி செய்ய

நினைக்காதவள். பிரகாசமான முகத்தை யுடையவள். கெட்ட ஆசை யில்லாதவள். முனிவர்களைத் தொழுவாள். தன்னுடைய புருஷனுக்கு இஷ்டமானவள்.

37. காலதுணை ஊன முள்ளாள் காதலி அதிர்ஷ்ட சாலி
சீலமாம் அன்ன மீவள் ஜனங்களும் மெச்ச வாழ்வாள்
ஞாலம்மேல் பொறுமை யுள்ளாள் நாதனுர் பக்தி பூண்பள்
வேலனைப் பயின்ற மாதே விளம்புவோம் மேலுங் கேளே.

37. தன்னுடன் பிறந்த சகோதர தோஷமுடையவள். அதிர்ஷ்டமுடையவள், நல்லொழுக்க முடையவள், பிறருக்கு அன்னத்தைக் கொடுப்பவள். ஜனங்கள் இவளைப் போற்றும்படியாக மேன்மையாக வாழ்வாள். பொறுமையான சாந்தமான குணமுடையவள். கடவுளின்பேரில் அன்புடையவள். முருகரைப் பெற்றப் பார்வதியம்மையே! இன்னும் நாங்கள் சொல்வதைக் கேட்பீராக.

38. அவளுடைத் துணைவர் தம்மை அறைகிறோ மாண்பால் ரண்டு
நவனியில் கன்னி அவ்வாறு நாட்டுவோ மிவளுக் கேதான்
தவசியே மாமன் மார்க்குத் தாரமே துதிய மென்றோம்
பவமுள குடும்ப மேழை பகருவோம் கேளு மம்மா

38. ஜாதகருடைய தாயாரின் கூடப் பிறந்தவர்களைப் பற்றிச் சொல்லுகிறோம். ஆண் சகோதரர்கள் இருவரும், பெண் சகோதரங்கள் இரண்டும் இவளுக்கு உண்டு என்று சொல்லுகிறோம். ஜாதகருடைய அம்மான்மார்களுக்குத் தாரம் இரண்டு என்று சொல்லுகிறோம். அவர்களுடைய குடும்பம் ஏழைக் குடும்பமாகும் என்று சொல்லுகிறோம். பார்வதியம்மையே! கேட்பீராக.

39. எப்போதும் வறுமை யாக யிருப்பாரோ க்ஷேம முண்டோ
செப்புவீர் முனியே என்றாள் ஜாதகன் தனக்கு மேதான்
ஒப்புடன் முப்பா னைந்தில் மேலேதான் உறையும் யோகம்
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழிகுன் றுவே.

39. ஜாதகருடைய அம்மான்மார்கள் எப்போதும் தரித்திர மான நிலையில் இருப்பார்களா அல்லது அவர்களுக்கு க்ஷேம முண்டாகுமா என்பதை, முனிவரே! சொல்லும் என்று பார்வதியம்மை கேட்க, ஜாதகருக்கு முப்பத்தைந்து வயதான பிறகு அவர்களுக்கு யோக முண்டாகும். ஜடையில் பாம்பையுடைய பரமசிவனின் மனைவியாகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லும் வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும் என்று முனிவர் சொல்லுகிறார்.

40. தந்தையின் முன்ஜன் மத்தைச் சாற்றுவோம் தில்லை மேல்பால்
பந்தமாய்ப் பேரூர் தன்னில் பாலகன் பிரம்ம சேயாய்
வந்துமே மனைவி மைந்தர் வளமுள விசேஷ பூமி
தன்தன முள்ளானகித் தரணியில் வாழுந் நாளில்;

40. ஜாதகருடைய தகப்பனுருடைய முன்ஜன்மத்தைச் சொல்லு கிறேம். சிதம்பரத்திற்கு மேற்கில் அழகான ஒரு பெரிய கிராமத்தில் அவர் பிராமணராகப் பிறந்து, மனைவி பிள்ளைகளை உடைய வராகி நல்ல வளமான பயிரிடும் பூமிகளையும் தன்னுடைய சொந்தச் செல்வத்தையும் உடைய வராகி, பூமியில் வாழ்கின்ற காலத்தில் ;

41. சங்கைக ளொன்று உண்டு சாற்றுவோம் கேளு மம்மா
திங்களை அணிந்தோன் போலே தவசியு மிவன்பால் சென்று
மங்கள வார்த்தை கூறி வயிற்றிற்கு அன்னம் கேட்க
இங்கிவன் இல்லை என்று ரியம்புவார் முனிவர் தாமும்.

41. அச்சமான சந்தேகமான ஒரு சம்பவம் இருக்கிறது. அதைச் சொல்லுகிறேம், கேளும், பார்வதியம்மையே ! சந்திரனைத் தன் ஜடையில் தரித்துள்ள பரமசிவனைப் போல் ஒரு தபசி இவரிடம் போய்ச் சுபகர மான நல்ல வார்த்தை சொல்லித் தன்னுடைய வயிற்றிற்காகச் சாப்பாட் டைக் கேட்க, இவர் போஜனம் இல்லை என்று சொல்ல, அந்தப் பசியுள்ள முனிவர் சொல்லுகிறுர்.

42. மனைவிமைந் தர்மே லிச்சை வைத்துமே எனக்கு அன்னம்
கனமுட னில்லை என்றீர் காதலி மரண மாகித்
தனங்களும் நிவிர்த்தி யாகிச் சஞ்சல மனத்தா னுகி
இனத்துக்குப் பகையுமாக இருப்பீர்க ளென்று சொல்லி ;

42. மனைவி பிள்ளைகள் இவர்கள்பேரில் நீர் ஆசையை வைத்துக் கொண்டு எனக்குச் சாப்பாடு கிடையாது என்று தைரியமாயும் உறுதி யாயும் சொல்லிவிட்டீர். ஆகையால் உன்னுடைய மனைவி மரணமாகி உன்னுடைய தனங்களும் உன்னைவிட்டுப் போய் நீர் மனத்தில் துன்ப மடைந்து உம்முடைய பந்துக்களுக்கும் நீர் விரோதியாய் இருப்பீர் என்று சொல்லி ;

43. அப்புறம் செல்ல லுற்றுர் அம்முனிசாபம் நேர்ந்து
செப்புவோ மந்திய காலம் செல்வியு மரண மாகி
ஒப்புடன் மார்ப்பு நோயால் உத்தமன் மரண மாகி
மெய்ப்புட னிக்கு லத்தில் மேவினு னிவனே யென்றேம்.

43. அவனைவிட்டு விலகிப் போய்விட்டார். அந்த ரிஷியின் சாபம் ஜாதகருடைய தகப்பனுரை வந்து அடைந்தது. அவருடைய கடைசிக் காலத் தில் அவருடைய மனைவி மரண மடைந்து பிறகு அவரும் மார்நோயால் மாண்டு மெய்யாக இந்தக் குலத்தில் வந்து இவர் உதித்தார் என்று சொல் லுகிறேம்.

44. முன் ஜன்மம் பிரம்ம சேயாய் முயன்றவ னிச்சென் மத்தில்
அன்புட னிக்கு லத்தில் அணுகும்கா ரணங்க ளென்ன
மன்னவன் முன்ஜன் மத்தில் மறைகளை விரும்பா னுகித்
தன்னிலே உதித்தா னென்றேம் சத்தியே மேலும் கேளே.

**44.** முன் ஜன்மத்தில் பிராமணராகப் பிறந்தவர் இந்தஜன்மத்தில் இக் குலத்தில் பிறந்ததற்குக் காரணம் என்ன என்று பார்வதி கேட்க முனிவர் சொல்லுகிருர். இவர் முன் ஜன்மத்தில் வேதங்களை விரும்பாமல் இருந்து இந்த ஜன்மத்தில் பிறந்தார் என்று சொல்லுகிறேம். பார்வதியம்மையே! இன்னும் நாங்கள் சொல்லுவதைக் கேட்பீராக.

**45.** பின்ஜன்மம் காஞ்சி தன்னில் பிராமண குலமு தித்து
அண்ணலுக் கர்ச்சித் தேத்தி அதிகமாய்ச் செல்வம் பெற்றுத்
தன்னிலே வாழ்வா ளுகும் தாயின்தன் முன்ஜன் மத்தை
அன்னயே சொல்லு கின்றேம் ஆலங்காட் டதற்குக் கீழ்பால்;

**45.** ஜாதகருடைய தகப்பன் மறு ஜன்மத்தில் காஞ்சீபுரத்தில் பிராமணராகப் பிறந்து சிவபெருமானுக்கு அர்ச்சனை செய்து விளக்கு வைத்து அதனுல் அதிகமான செல்வத்தைப் பெற்று வாழ்வார். ஜாதகருடைய தாயின் முன் ஜன்மத்தைச் சொல்லுகிறேம். பார்வதியம்மையே! இவள் திருவாலங்காட்டிற்குக் கிழக்கே ஒரு கிராமத்தில்;

**46.** வன்னிய மரபில் தோன்றி மைந்தர்களு முள்ளா ளாகிச்
சொர்ணமும் அதிகம் பெற்றுத் துறவிகட் கன்ன மீந்து
மன்னவன் தனக்கு முன்னே மரணமே யாகி யேதான்
பன்னிய பிரம்மன் தன்னுல் பாரினில் வரையப் பட்டு;

**46.** வன்னியர் ஜாதியில் பிறந்து பிள்ளைகளைப் பெற்றுத் தனத்தையும் அதிகமாக அடைந்து இல்லறத்தைவிட்டு நீங்கியவர்களுக்குச் சாப்பாடு கொடுத்துத் தன் புருஷனுக்கு முன்னே மரணமடைந்து பிரமதேவனுல் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்தப் பூமியில் வந்து;

**47.** உதித்த வளிவளே யென்றேம் உரைக்கிறேம் பின்ஜென் மத்தை
விதிக்கிறேம் அருணை உத்திரம் மேவிய பேரூர் தன்னில்
சதியுள வைசிய வமிசம் தன்னிலே உதிப்பா ளாகும்
அதிபதி யாக வாழ்வள் அம்பிகை யாளே கேளாய்.

**47.** இவள் பிறந்தாள் என்று சொல்லுகிறேம். இவளுடைய மறு ஜன்மத்தைச் சொல்லுகிறேம். திருவண்ணுமலைக்கு வடக்கே ஒரு பெரிய கிராமத்தில் வைசிய குலத்தில் பிறப்பாள். தன் வீட்டில் தலைவியைப் போல இருந்து வாழ்வாள். பார்வதியம்மையே! கேட்பீராக.

**48.** தந்தைதாய் மரண காலம் சாற்றுவோ மீரே ழாண்டில்
வந்திடு மாதுரு கண்டம் வரைகிறேம் நாற்பா னைன்பான்
எந்தையே தந்தை கண்ட மிவனுக்கு அறுபா னைன்பான்
முந்திய ஆனி மாதம் மூலநாள் தன்னில் உய்வன்.

**48.** ஜாதகருடைய தகப்பனுர் தாயார் இவர்களுடைய மரணகாலங்களைச் சொல்லுகிறேம். ஜாதகருக்குப் பதினன்காவது வயதில் தாயார் மரணமடைவாள். ஜாதகருக்கு நாற்பத்தொன்பதாவது வயதில் தகப்பனுர் மரண

மடைவார். பார்வதியம்மையே! ஜாதகர் அறுபத்தொன்பதாவது வயதில் ஆனி மாதத்தில் முதல் பாகத்தில் மூல நட்சத்திரத்தில் இறந்து விடும்படியாக ஜிவித்திருப்பான்.

**குறிப்பு.**—ஜாதகருக்கு வயது ஷ்டு 13-0-0 முதல் ஷ்டு 14-0-0 வரையிலும் ராகு தசையில் சூரிய சந்திர புக்திகள் நடக்கின்றன. மாதுருஸ் தானம் துலாம். இதற்கு லக்கினுதிபதியாகிய சுக்கிரன் கடகத்தில் பகை பெற்றுத் தனக்குப் பகைவராகிய சூரியனுடன் கூடி அஸ்த மடைந்திருப்பதையும் எட்டில் அங்காரகன் இருப்பதையும் எட்டைச் சனி பார்பதையும், மாதுருக்கு ஆயுள் ஸ்தானுதிபதியாகிய சுக்கிரன் மேற்சொன்னபடி இருப்பதையும் சந்திரனே ராகு பார்ப்பதையுங் கவனிக்கவும். ஆகையால் தாய் ஜாதகருக்கு நீண்டகாலம் இருப்பதற்கு ஹேது கிடையாது. இங்கு சுக்கிரன் வக்கிர கதியில் சூரியனுக்குப் பின் நான்கு பாகைக்குள் இருக்கின்றுர். சூரியன் மாதுரு லக்கினத்திற்கு ஒன்று எட்டிற் குடைய சுக்கிரனுடன் இருக்கின்றுர். ஆகையால் துய்யகேரளம் எட்டாம் பாவம் 20-ஆவது பாட்டில் சொல்லிய பிரகாரம் சூரியனுக்கு மாதுருவை மார்கஞ்செய்ய அதிகாரம் இருக்கிறது. ஜாதக சந்திரிகை 12-ஆவது சுலோகத்தில் சொல்லியபடி ராகுவுக்குச் சூரியனுக்கு வந்த மாரகத்தை ஏற்றுக்கொள்ள அமைப்பு இருக்கிறது.

**பிதுர் மரணம்**—ஜாதகருக்கு வயது ஷ்டு 40-0-0 முதல் 41-0-0 வரையிலும் சனிதசையில சுக்கிரபுக்தி நடக்கிறது. பிதுர்ஸ்தானம் மீனம். மீனலக்கினத்திற்குச் சனி மாரகாதிபதி என்று ஜாதக சந்திரிகை 67-ஆவது சுலோகத்திலும் பராசரஹோரையிலும் சொல்லி இருக்கிறது. சுக்கிரன் பிதுர்லக்கினத்திற்குத் திரிதியை அஷ்டமாதிபதியாக இருக்கின்றுர்.

* **ஜாதகர் விஷயம்.**—ஜாதகருக்கு வயது ஷ்டு 68-0-0 முதல் ஷ்டு 69-0-0 வரையிலும் கேதுதசையில் சுக்கிரபுக்தி நடக்கின்றது. கடக லக்கினத்திற்குப் பராசரஹோரை பிரகாரம் சனி மாரகனுகின்றுர். கேது எட்டில் இருக்கின்றுர். இவர் ஜாதகசந்திரிகை 12-ஆவது சுலோகப் பிரகாரம் சனியினுடைய மாரக அதிகாரத்தை ஏற்றுக் கொள்ளும் அமைப்பு உள்ளவராயிருக்கின்றுர். பராசரஹோரைப் பிரகாரம் கடகலக்கினத்திற்குச் சுக்கிரன் பாபியாகி மாரகாதிபதியுமாகிறுர். இவர் கேதுவுக்கு ஆறில் லக்கினத்திலிருப்பதைக் கவனிக்கவும்.

49. இன்னவன் யோகச்சேதி யியம்புவோம் ஜனனம் தொட்டு
மன்னவன் மரண காலம் வழுத்திநேம் யோகம் தானும்
தன்னிலே பிறைபோல் யோகம் தழைத்திடு மிவனுக்கே தான்
சொன்னனே கிருஷி யாலும் சுந்தரன் ஜீவிப் பானும்.

49. ஜாதகருடைய யோகங்களைப்பற்றிச் சொல்லுகிறேம். இவர் பிறந்தது முதல் இறக்கும் வரையிலும் இவருக்கு யோகமுண்டு என்று சொல்லுகிறேம். இவருக்கு யோகம் வளர்பிறை சந்திரனைப்போலத் தழைத்து ஓங்கும். விவசாயத்தால் ஜாதகர் ஜீவிப்பார்.

50. சல்லிய மில்லா னுகும் தனம்பூமி சேர்ப்பா னுகும்
சொல்லுமே நெறியுள் ளோனும் சுகமுளான் அன்ன மீவன்
இல்லையென் றுரைக்க மாட்டான் யாரையும் உறவு கொள்வன்
அல்லலு மில்லா னவன் அவன்சித்திர வீடு செய்வன்.

50. இவர் கடன் படாதவர். பணம் பூமிகள் இவைகளைச் சேகரிப்பார், இவர் நல்ல குணமும் நன்மார்க்கமு முடையவர். சுகமாக வாழ்வார். பிற ருக்குச் சாப்பாடு போடுவார். யாருக்கும் இல்லை யென்று சொல்லமாட்டார். எல்லோரையும் சினேகஞ் செய்து கொள்ளுவார். கஷ்டங்கள் இல்லாதவர். இவர் சித்திரங்களடங்கிய அழகிய வீட்டைக் கட்டுவார்.

51. எந்தக்கா லத்தி லேதான் இவனுமே கிருகம் செய்வன்
அந்ததோர் காலம் சொல்வீர் அவன்முப்பான் ரண்டின் மேலாய்
சொந்தமாய்க் கிருகம் செய்வன் சுகமுடன் வாழ்வா னுகும்
சந்தத மிவன்பின் ஜன்மம் சாற்றுவோம் கேளு மம்மா.

51. ஜாதகர் எப்போது வீட்டைக்கட்டுவார் என்பதைச் சொல்லு வீர் என்று பார்வதியம்மை கேட்க, ஜாதகர் தனது முப்பத்திரண்டாவது வயதில் தனக்குச் சொந்தமாக ஒரு வீட்டைக் கட்டுவார். சுகமாக வாழ்வார். இவருடைய பின் ஜன்மத்தைச் சொல்லுகிறோம். பார்வதியம்மையே! கேட்பீராக.

52. தணிகைக்கு உத்தரத்தில் க்ஷத்திரிய குலத்தி லேதான்
இணையிலாச் செல்வம் பெற்று இவனுமே யுதிப்பா னுகும்
அணையவே குடும்பச் சேதி அறைகிறோ மிரண்டி லேதான்
கனமுடன் தவங்கள் செய்யும் காதலி மேலுங் கேளே.

52. ஜாதகர்பின் ஜன்மத்தில் திருத்தணிக்கு வடக்கில் ஒரு கிராமத்தில் க்ஷத்திரிய ஜாதியில் மிகவும் அதிக செல்வமுள்ள குடும்பத்தில் பிறப்பார். இவருடைய குடும்பத்தின் விஷயங்களைப் பற்றி இரண்டாவது பாகத்தில் சொல்லுகிறோம். மேன்மையான பெரிய தவங்களைச் செய்யும் பார்வதி யம்மையே! இன்னும் நாங்கள் சொல்லுவதைக் கேட்பீராக.

53. உதித்திடு காலம் தன்னில் உயர்ராகு திசையி ருப்புப்
பதித்திடப் பதினைந் தாண்டும் வளர்திங்க ளேழு மாகும்
விதிக்கிறோம் பலனை யாங்கள் விடாயங்கள் துணைவர் விருத்தி
சதியினுல் பூமி வாய்க்கும் தன்தேக நலிக ளுண்டு.

53. ஜாதகர் பிறக்கும்போது ராகு தசை இருப்பு பதினைந்து வருஷமும் ஏழு மாதமும் ஆகும். இதற்குப் பலாபலன்களைச் சொல்லுகிறோம். ஆசை களும் சகோதரர்களும் விருத்தியாகும். பார்வதியம்மையின் அருளினுல் பூமிகள் வந்து சேரும். தன்னுடைய தேகத்திற்கும் நோய்கள் வரும்.

54. தந்தையின் துணைவர் கெண்டம் தன்தாயும் *சேத மாகும்
முந்திய கலக முண்டு முயற்சியாம் நினைத்த வெல்லாம்
வந்திடும் விரோதம் நீங்கும் வரைகிறோம் விவரம் ரண்டில்
சந்ததம் சிலது சேதி தானதைச் சொல்லு கின்றோம்.

54. தகப்பனுருடைய சகோதரர்களுக்குக் கண்டங்களும் மரணமும் நேரிடும். ஜாதகருடைய தகப்பனுருடைய தாயாரும் இறந்துவிடுவாள். முதலில் கலகங்கள் ஏற்படும். நினைத்த காரியங்களை எல்லாம் முயன்று முடிப்பார். பகைவர் ஒழிந்து விடுவார்கள். மற்ற விவரங்களை எல்லாம் இரண்டாம் பாகத்தில் சொல்லுகிறோம். ஆனால் சில விஷயங்களை மாத்திரம் இப்போது இந்தப் பாகத்தில் சொல்லிவிடுகிறோம்.

* **குறிப்பு.**—இங்கு ராகுதசை இருப்பாகிய 15 வருஷம் 7 மாதம் ஆகிய இந்தக் காலத்திற்குள் நடக்கும் பலனைச் சொல்லிவருவதாலும், முன்னமே 48-ஆவது பாடலில் ஜாதகருடைய தாயாரின் மரணத்தைச் சொல்லிவிட்டதாலும், தகப்பனுடைய விஷயங்களைச் சொல்லிவருவதாலும் "தன்தாயும் சேதமாகும். என்பது தகப்பனுருடைய தாயைப் பெரும்பாலும் குறிக்குமே யன்றி ஜாதகருடைய தாயாரைக் குறிக்காது என்று அறியவும். மீனம் பிதுர்ஸ்தானம். இதற்கு ஆறில் ராகு இருப்பாதல் ஜாதகாலங்காரம் 525-ஆவது பாடலில் சொல்லிய பிரகாரம் தகப்பனுருடைய சகோதரர்களுக்குக் கண்டம் நேரிடும். "ஆறுமிடத்திலாய கருங்கோள் . . . . . . . .அவன் தசைபேராய்வரினும் பலமுள்ளச் சகோதரம் நீறாய் உயிர் விடும். . " *பிதுருக்கு மாதுருஸ்தானம் என்பது 9-க்கு 4-ஆமிடமாகிய மிதுனம் ஆகும். மிதுனத்திற்கு மூன்றிற்குடைய சூரியன் பராசரஹோரைப் பிரகாரம் மாரகாதிபதி, இவர், மாரகஸ்தானமாகிய இரண்டில் இருக்கின்றார். ராகு, பராசரஹோரைப்பிரகாரமும், சூரியனுடைய பலனைக் கொடுக்கவேண்டும். ஆகையால் இராகு பிதுருவின் தாயாருக்குத் தன் தசையில் மரணத்தைக் கொடுக்கக்கூடும்,

55. மந்திரி[1] தசை கேளாய் வரும்சுபம் தானியம் சேரும்
சந்ததம் மனைவி வாய்க்கும் சகலரும் நேச மாவர்
முந்திய பூமி சேரும் முயற்சியாம் குடும்பம் தானும்
எந்தையே கிருஷி ஓங்கும் இடருகள் வந்து நீங்கும்.

55. குருதசையின் பலனைச் சொல்லுகிறோம், கேட்பீராக. சுபங்கள் நடக்கும். தானியம் வந்துசேரும். ஜாதகருக்கு மனைவிவந்து நேரிடுவாள். எல்லாரும் ஜாதகருக்குச் சினேகிதராவார். மேன்மையான பூமிகள் வந்து சேரும். குடும்பத்தில் முயற்சிகள் செய்வார்கள். பார்வதியம்மையே! விவசாயம் விருத்தியாகும். கஷ்டங்கள் வந்து நீங்கிவிடும்.

56. காலிகள் விருத்தி யுண்டாம் கனத்திடு மாள்கள் தாமும்
ஞாலம் மேல் பெருமை யுண்டாம் நாதனுர் பூசை கொள்வன்
சாலவேத னங்கள் சேரும் தன்மனை † கண்டமாகும்
வேல்விழி யிரண்டாம் மாது மேவுவா ளென்று சொன்னோம்.

---

[1] குரு

**56.** கால்நடைகள் விருத்தியாகும். வேலையாட்கள் அதிகப்படுவார்கள் பூமியில் ஜாதகருக்குப் பெருமையும் புகழும் உண்டாகும். கடவுளை பூஜிப்பார். பணம் அதிகமாக வந்து சேரும். தன்னுடைய மனைவி இறந்து விடுவாள். வேலைப்போன்ற கண்களையுடைய பெண் இரண்டாந் தாரமாக வந்து வாய்ப்பாள் என்று சொல்லுகிறோம்.

† **குறிப்பு.**—"*தன்மனை*" என்பது ஜாதகருடைய மனைவி ஆகும். முந்தியே 19-ஆவது பாடலில் ஜாதகருடைய முதல் மனைவி, ஜாதகருக்கு முப்பதாவது வயதில் இறந்துவிடுவாள் என்று சொல்லியிருப்பதைக் கவனிக்கவும். அப்போது குருதசை நடக்கிறது.

**57.** துணைவர்க்குச் சுபமே யுண்டு சுற்றத்தார் பகையு முண்டு
இணையிலாச் சூத கங்கள் இலகிடும் காலி சேதம்
கனமுடன் அலைச்சல் காணும் கதித்தவர் உருவு மாறும்
அனையவே விவிரம் ரண்டில் அறைகிறோம் கேளு மம்மா.

**57.** ஜாதகருடைய சகோதரர்களுக்குச் சுபங்கள் நடக்கும். பந்துக்களுடைய விரோதமும் ஏற்படும். பெரிய சூதகங்கள் வந்துநேரிடும். கால்நடைகள் நஷ்டமாகும். அலைச்சல்கள் அதிகமாக விருக்கும். அவருடைய பிரகாசமான வடிவம் மாறுதலை அடையும். மற்ற விஷயங்களை இரண்டாவது பாகத்தில் சொல்லுகிறோம், பார்வதியம்மையே! கேட்பீராக.

# ஜாதகம் 59

1. சந்திரன் ராகு வெளளி[1] சேய்[2] துலாம் ஞானி[3] மேடம்
மந்திரி[4] காரி[5] மேரு[6] மால்[7] ரவி[8] மாதை[9] யாக
இந்தவாறு கிரகம் நின்று லக்கினம் கடக மாக
அந்தஹோர் பலன்கள் எவ்வாறு அறிவிப்பீர் முனியே நீர்தாம்.

| | | | |
|---|---|---|---|
| | கேது | | |
| | இராசி சக்கரம். | | லக்கினம் |
| | | | |
| சனி குரு | | ராகு அங்காரகன் சந். சுக். | சூரியன் புதன் |

சுவாதி 3-ஆம் பாதம் : ராகு தசை 5–10–0.

1. சந்திரனும் ராகுவும் சுக்கிரனும் அங்காரகனும் துலாத்திலும், கேது மேஷத்திலும், குருவும் சனியும் தனுசிலும், புதனும் சூரியனும் கன்னியிலும் இருந்து, இவ்விதமாகக் கிரகங்களெல்லாம் அமைந்து, கடகலக்கினத்திற் பிறந்த ஜாதகருக்குப் பலாபலன்கள் எவ்வித மாக யிருக்கும் மென்பதை, முனிவரே ! நீர் சொல்லுவீராக.

**குறிப்பு.**—இந்த ராசிச்சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கரகிரகநிலை பொருத்த முடையதாகும் :—மேஷத்தில் அங்காரகனும், ரிஷபத்தில் ராகுவும், கிழக்கே அஸ்தமனத்திலுள்ள புதனும், கடகத்தில் குருவும், சிம்மத்தில் சனியும், விருச்சிகத்தில் சுக்கிரனும் கேதுவும், மகரத்தில் சூரியனும், கும்பத்தில் சந்திரனும் ஆகும்.

2. குறுமுனி புகலு கின்றார் குறித்தது ஆண்பால் ஜன்மம்
பெருந்தந்தை யில்லம் சொல்வேன் பேரூராம் கீழ்மேல் வீதி
மறலியின் வாடை யாகும் மால்சிவன் தந்தி மேற்கில்
அரிவாக னத்தாள் வாயு அனேகமாய் மஸ்தா னுண்டு.

2. குறுகிய முனியாகிய அகஸ்திய முனிவர் சொல்லுகிறார். குறித்துக் கேட்ட குழந்தை ஆண் குழந்தையாக ஜனிக்கும். பிறந்த வீடு தகப்பனார் வீடு என்று சொல்லுகிறேன். இது பெரிய ஊரில் கிழக்கு

---

[1] சுக்கிரன் [4] குரு [7] புதன்
[2] அங்காரகன் [5] சனி [8] சூரியன்
[3] கேது [6] தனுசு [9] கன்னி

மேற்கு வீதியில் தென்னண்டை வாடையிலிருக்கும். விஷ்ணுகோயில் சிவன்கோயில், விநாயகர்கோயில் இவைகள் மேற்கிலும், காளியம்மன் கோயில் வடமேற்குத் திக்கிலும் உண்டு. அனேகம் பைத்தியக்காரர்களும் இவ்வூரிலுண்டு.

3. உத்தரம் கெடியு முண்டு உறங்கிடு மென்று சொல்வோம்
வெற்றியா மரசர் வாசம் விசேஷமாய்ச் செட்டு ஒங்கும்
இத்தகை யடையா ளங்கள் இவனுமே நான்காம் ஜன்மம்
சித்தசன்[1] கங்கை சேயாய் செப்பலா மாதே யாங்கள்.

3. வடக்குத்திக்கில் கோட்டையுமுண்டு. அதில் வேலையில்லாமல் அது தூங்கிக்கொண்டிருக்கும் துர்க்கைக் கோயிலுமுண்டு. அரசாங்கத்தார் அந்தப் பெரிய ஊரில் வாசஞ் செய்துகொண்டிருப்பார்கள். வியாபாரங்கள் அதிகமாக நடந்து கொண்டு விருத்தியாகிவரும். இப்படிப்பட்ட அடையாளங்களும் எல்லைகளுமுள்ள ஒருபெரிய பட்டணத்தில் ஜாதகர் மன்மதனைப்போல அழகுள்ள நான்காவது குழந்தையாக வேளாளர் தொழிலுள்ள சைவ குலத்தில் உதிப்பார் என்று நாங்கள் சொல்லக் கூடும், பார்வதியம்மையே!

4. வந்தவன் குடும்பச் சேதி வரைகிறே மினிமே லாக
தந்தையின் துணை ஆண் ஒன்று சத்திமார்ரெண்டு தீர்க்கம்
பிந்திய துணைஆ ணுக பேசுவோம் தாயே யாங்கள்
அந்தவன் சேதி சொல் வோம் அற்பமாம் கல்வி யென்றேம்.

4. ஜாதகருடைய குடும்பத்தின் விஷயங்களைப்பற்றி இனிமேல் சொல்லுகிறேம். தகப்பனுருடன் பிறந்தவர்கள் ஆண் ஒருவரும், பெண்கள் இருவரும் நீண்ட ஆயுளையுடையவர்களாக இருப்பார்கள். பார்வதியம்மையே! பிந்திய சகோதரர் ஆண் சகோதரர் என்று நாங்கள் சொல்லுகிறேம். இந்த இளைய சகோதரனைப்பற்றிச் சொல்லுகிறேம். இவருக்கு வித்தை குறைவாகவிருக்கும் என்று சொல்லுகிறேம்.

5. பயிர்த் தொழில் புரிவா னுகும் பாலகன் மாநி றத்தன்
அயலார்பொன் இச்சை யுண்டு அவசர மனத்த னுகும்
பயமிலான் எதிரிக் கஞ்சான் பகருவான் தந்திர வார்த்தை
ஜயம்செய்வ னெடுத்த வேலை ஜனித்தநாள் முதலாய்த் துன்பம்.

5. விவசாயத்தொழிலைச் செய்வார். மாநிறமுள்ள தேகத்தையுடையவர். பிறருடைய சொத்தின்மேல் ஆசையுள்ளவர். அவசரமாகச் சீக்கிரமாக எண்ணக் கூடியவர். பயமிலாதவர். பகைவர்களுக்குப் பயப்படமாட்டார். தந்திரமாகவும் உபாயமாகவும் பேசக்கூடியவர். தான் ஆரம்பித்தக்காரியத்தைப் பூர்த்தி செய்வர், பிறந்த காலம் முதல் இவருக்குக் கஷ்டங்களுண்டு.

---

[1] மன்மதன்

6. சல்லியப் பாதை நேரும் சதுஷ்பாதம் நாச மாகும்
இல்லமும் தூறு மென்றே மிடருக வந்த மெய்தும்
பில்லிகள் வைத்த தென்று புகலுவார் சிலருந் தாமும்
எல்லைகள் சேத மெய்து மிடுக்கமாம் குடும்ப மென்றேம்.

6. இவருக்குக் கடனால் துன்பங்கள் ஏற்படும். கால்நடைகள் நஷ்ட மடையும். வீடும் இலமாகும். கடைசியில் கெடுதிகள் வந்து நேரும். சூனியம் வைத்து விட்டார்கள் என்று சில ஜனங்கள் சொல்லுவார்கள். பூமிகள் நாசமாகும். குடும்பம் கஷ்டத்தை யடைந்து ஒடுங்கிவிடும் என்று சொல்லுகிறோம்.

7. தரித்திர முடைய னாகும் சங்கையைப் பின்னால் சொல்வேன்
அரிவையும் ஒன்றே யாகும் அணுகிடும் வடபாலாகப்
பெரும்சுதர் ஆண்பால் மூன்று பேதையு மவ்வாறு தீர்க்கம்
மருவிப்பின் வேறாய்ச் செல்வர் வகுக்குகிறோம் புத்திர பாவம்.

7. இவர் தரித்திரமுடையவர். காரணங்கள் முதலியவைகளைப் பின்னால், அஃதாவது பின் பாகத்திற் சொல்லுகிறேன். இவருக்கு ஒரே மனைவியாகும். அவள் வடக்குத்திக்கிலிருந்து வருவாள். இவருக்கு மூன்று பிள்ளைகளும் மூன்று பெண்களும் உண்டு. இவர் முதலில் குடும்பத்தில் ஒற்றுமையாகவிருந்து பின்னால் குடும்பத்தைவிட்டுப் பிரிந்துபோய் விடுவார். இவருடைய புத்திரர்களின் விஷயங்களைப் பின்னால் சொல்லுகிறோம்.

8. தந்தையின் குணத்தைச் சொல்வேன் சகலர்க்கும் நல்லோ னவன்
சிந்தையும் நல்ல தாகும் சிறப்புள குடும்பம் முன்னால்
பிந்தியும் நசிக்கு மென்றோம் பயிர்த்தொழில் புரிவா னாகும்
நொந்திடும் வலிய நெல்லும் நேருவான் மாநி றத்தான்.

8. ஜாதகருடைய தகப்பனுடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் எல்லோரிடத்திலும் நல்லவராக விருப்பார். நல்ல எண்ணமுடையவர். முன் பாகத்தில் இவருடைய குடும்பம் க்ஷேம மாயும் மேன்மையாயும் இருக்கும். ஆனால் பிற்காலத்தில் குடும்பம் நொந்துபோய்விடும் என்று சொல்லுகிறோம். இவர் விவசாயத்தொழிலைச் செய்வார், வளமுள்ள நெற்பயிர் பூமிகளும் செழிப்பில் குறைவு அடையும். இவர் மாநிறமுள்ள தேகத்தை யுடையவராவார்.

9. கல்வியு சமம தாகும் கருதிடான் கட்டு வார்த்தை
இல்லையென் றுரைக்கமாட்டா னிடரெண்ணான் யாவ ருக்கும்
மல்லில்முன் செல்லா னாகும் மறித்துரை கூறா னாகும்
எல்லையால் சீவிப் பானும் பாதக முடைய னாமே.

9. இவருக்கு வித்தை நடுத்தரமானது. புனைந்த வார்த்தைகளை யும் பொய்வார்த்தைகளையும் உபயோகிக்க எண்ணமாட்டார். யாருக்கும் இல்லை யென்று சொல்லமாட்டார். யாருக்குந் தீங்குகளை நினைக்கமாட்டார். சண்டையில் முன்னே போகமாட்டார். தடுத்துப் பதில் சொல்லமாட்டார். பூமியால் ஜீவனஞ் செய்வார். துரோக முடையவராவர்.

10. கடன்கொள்வன் நிவிர்த்தி செய்வன் காதலி யிஷ்ட ருவன்
உடன்படான் ஏழை யோர்க்கு உறுதியில் லாதா னுகும்
தடபுடல் செய்கை யுண்டு சகடுவா கனமும் சேர்ப்பன்
மடையரை உறவு கொள்ளான் மனமது சஞ்ச லத்தான்.

10. இவர் கடன் வாங்குவார். அதைத் தீர்த்துவிடுவார். மனை விக்கு இஷ்டமாயிருப்பார். ஏழைகளிடத்தில் சம்மதித்து நடந்து கொள்ள மாட்டார். அவர்களுக்கு உதவி செய்யமாட்டார். நிலையான மனதில்லாதவர். தடபுடலாயும் டம்பமாயும் காரியங்களைச் செய்வார். வண்டி சவாரிசெய்யும் பிராணிகள் இவைகளைச் சேர்ப்பார். மூடர்களிடத்தில் சினேகஞ் செய்ய மாட்டார். துன்பமுள்ள மனத்தை யுடையவர்.

11. இந்நெறி யுடையா னுக்கு இவனுமே யுதிப்பா னுகும்
அன்னவன் குணத்தைக் கேண்மோ அழகுளான் மாஞ்சிவப்பன்
உன்னதக் கல்வி கற்பன் உயர்வான குடும்ப மேற்பன்
கன்னென மொழியே சொல்வன் கணக்கினில் ஊக வானே.

11. இப்படிப்பட்ட குணங்களையுடைய தகப்பனுக்கு இந்த ஜாதகர் பிறப்பார். ஜாதகருடைய குணுதிசயங்களைச் சொல்லுகிறோம் கேட்பீராக. இவர் அழகுள்ளவர். மாமரத்தின் துளிரைப்போன்ற ஒருவிதமான சிவப்பு நிறமுள்ளவர். உயர்ந்த மேன்மையான வித்தையை யடைவார். மேன்மை யான குடும்பத்தை யுடையவர். இனிமையான வார்த்தைகளைச் சொல்லு வார். கணிதத்தில் புத்திக் கூர்மை யுள்ளவர். கெட்டிக்காரர்.

12. பலவிதச் செட்டுச் செய்வன் பரஉப காரி யாவன்
நிலமது சேர்ப்பா னுகும் நினைத்தது முடிக்கவல்லன்
புலவன்போல் மொழிவா னுகும் புகழ்ந்தோரை ஆத ரிப்பன்
தலவாசம் செல்வா னுகும் சதுஷ்பாதம் விருத்தி யுண்டு.

12. ஜாதகர் பல விதமான வியாபாரங்களைச் செய்வார். பிறருக்கு உதவி செய்வார். பூமிகளைச் சேகரிப்பார். நினைத்த காரியத்தைச் செய்து முடிக்குஞ் சக்தியுள்ளவர். பண்டிதனைப் போல் பேசுவார். தன்னைப் புகழ்ந்து பேசுபவர்களைக் காப்பாற்றுவார். புண்ணிய க்ஷேத்திரங்களுக்குப் போவார். கால்நடைகள் விருத்தியாகும்.

13. தந்தைபோல் வாழ்வா னுகும் சந்தேக மனத்தா னுகும்
சூதினுல் நீங்கும் பூமி சேர்ப்பானும் வறுமை காணுன்
பாதக மனட்செல் லாதான் பராசரும் தடுத்துச் சொல்வார்
ஓதினீர் யோகம் எவ்வாறு உறைப்பீர்க ளந்தச் சங்கை.

13. ஜாதகர் தன் தகப்பனுரைப்போல வாழ்வார். சந்தேகமான மனத்தையுடையவர். சூதுமார்க்கத்தில் தன்னைவிட்டு விலகிப்போகும் பூமி களை மறுபடியும் சேர்ப்பார். தரித்திரமும் கஷ்டமுமில்லாதவர். கெட்ட வழிகளில் தன்மனதைச் செல்ல விடமாட்டார். இவ்விதமாகச் சொல்லிவர பராசர முனிவரானவர் தடுத்துக் கேட்கிறுர், ஜாதகருக்கு எவ்விதமாக யோகத்தைச் சொன்னீர் ? அந்தக் காரணத்தைச் சொல்லுவீர்கள்.

14. மதி[1]புகர் [2] சேயும் [3] நாலில் மால்[4] ரவி [5] மூன்றில் தங்க
அதுபலன் யோக மெய்தும் ஐந்தாண்டு முதலா மாக
நிதிபூமி கன்று காலி நிலம்செய்தல் யாவும் நன்மை
அதிதியை ஆத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

14. சந்திரன் சுக்கிரன் அங்காரகன் இவர்கள் நான்காம் பாவத்திலும், புதனும் சூரியனும் மூன்றுவது பாவத்திலும் இருப்பதால், ஜாதகருக்கு ஐந்து வயது முதல் யோகமுண்டாகும். தனம், பூமி, கால் நடைகள் இவைகள் எல்லாம் ஜாதகருக்கு உண்டாகி நிலைத்துவிடும். சீர் பட்டும் விடும். எல்லா விதத்திலும் நன்மையுண்டாகும். பரதேசிகளைக் காப் பாற்றும் பார்வதி யம்மையே ! கேட்பீராக.

**குறிப்பு.**—சூரியனும் புதனும் கூடி யிருப்பதைப்பற்றி சாராவளி 15-ஆவது அத்தியாயம் 4-ஆவது சுலோகத்தையும், ஜாதகபாரிஜாதம் 8-ஆவது அத்தியாயம் 1-ஆவது சுலோகத்தையும், பிருஹத்ஜாதகம் 14-ஆவது அத்தியாயம் 1-ஆவது சுலோகத்தையும், ஜாதகதத்துவம் 11-ஆவது விவேகா, 87-ஆவது சுலோகத்தையும் பார்க்கவும். சந்திரன் அங்காரகன் சுக்கிரன் இவர்கள் கூடியிருப்பதைப்பற்றி இந்தப் புத்தகங்களையும் பார்க்க லாம். மேலும் கூட்டக் கிரகங்களைப்பற்றி கர்கஜாதகம், பலபத்திரஹோராரத்தி னம் பலதீபிகை இவைகளையும் பார்க்கலாம். இங்கு, சந்திரன் அங்காரகன் சுக்கிரன் இவர்களில் சந்திரன் லக்கினாதிபதியாயும், அங்காரகன் ஐந்திற்குப் பத்திற்குடைய யோககாரகனாகவும், சுக்கிரன் நான்கு பதினொன்றிற்குடைய வராகவும் அமைந்து கேந்திரத்தி லிருக்கின்றார்கள்.

15. தன்துணை முன்னோர் சேதம் தங்காது யாவும் தானே
என்னகா ரணங்கள் சொல்வாய் லாபத்தைச் சேயும் [3] பார்க்கச்
சொன்னனே துணைவர் தோஷம் சுதன்பின்னு ஆண்பா லொன்று
சத்திமா ரிரண்டு தீர்க்கம் பின்பாகம் விவரமாகப் பேசுவோம
[வர்கள் சேதி.

15. ஜாதகருக்கு முன்னே பிறந்தவர்கள் எல்லோரும் இறந்து விடுவார்கள். என்ன காரணம் அதைச் சொல்லுவீர் என்று கேட்க, லாபம் என்ற பதினோராவது பாவத்தை அங்காரகன் பார்ப்பதால் சகோதரர்களுக் குத் தோஷம் * என்று சொன்னேன். ஜாதகருக்குப் பின்னால் ஆண் சகோ தரர் ஒன்றும் பெண் சகோதரங்கள் இரண்டும் நீண்ட ஆயுளுள்ளவர்க ளாக விருப்பார்கள். அவர்களுடைய விஷயங்களைப்பற்றி விவரமாகப் பின் பாகத்தில் சொல்லுகிறேன்.

* **குறிப்பு.**—சூரியன் மூன்றுவது பாவத்தில் இருந்தால் மூத்த இளைய சகோதரர்களுக்குத் தோஷம் உண்டு. சம்புஹோராபிரகாசர, சகோதர பாவம் 58-ஆவது, 57-ஆவது சுலோகங்களைப் பார்க்கவும். மேலும் மூத்த சகோதர காரகராகிய குரு லக்னத்திற்கு ஆறிலும் பதினொன்றிற்கு எட்டி லும் சனியுடன் கூடி இருப்பதால் மூத்த சகோதரர்களுக்குத் தோஷ முண்டு.

---

[1] சந்திரன் [2] சுக்கிரன் [3] அங்காரகன் [4] புதன் [5] சூரியன்

16. ஈரெண்ப தாண்டு தன்னி லிவனுக்குப் பாரி வாய்க்கும்
நாரியும் உத்தர திக்கில் நவிலுவோ மன்னே வர்க்கம்
காரிழை குணத்தைச் சொல்வேன் கபடிலாள் மாநி றத்தாள்
தேறினோர்க் கன்ன மீவள் சீலியாம் முன்கோ பத் தாள்.

16. ஜாதகருக்குப் பதினெட்டாவது வயதில்* மனைவி வந்து வாய்ப்பாள். மனைவி மாதுருவர்க்கத்தைச் சேர்ந்தவள். இவள் வடக்குத் திக்கிலிருந்து வருவாள் என்று சொல்லுகிறோம். இவளுடையக் குணாதி சயங்களைப் பற்றிச் சொல்லுகிறேன். இவள் கபட மில்லாதவள். மாநிறமுள்ள தேகத்தை யுடையவள். தன்னிடம் வந்து சேர்ந்தவர்களுக்குச் சாதங்கொடுப் பாள். நல்லொழுக்கமும் நல்ல நடவடிக்கையும் உள்ளவள். முன்கோப முடையவள்.

* குறிப்பு.—ஜாதகருக்கு வயது ஸ்ரீ 17–0–0 முதல் ஸ்ரீ 18–0–0 வரையி லும் குரு தசையில் சந்திர புக்தியும் அங்காரக புக்தியும் நடக்கின்றன. குரு களத்திர ஸ்தானாதிபதியாகிய சனியுடன் சம்பந்தப்பட்டவர். அங்காரகன் போகஸ்தானமாகிய நான்கில் போககாரகனாகிய ராகுவிற்கு மிகவும் நெருக் கத்தில் இருந்துகொண்டு ஏழைப் பார்க்கின்றார். ஆகையால் குருவிற்கும் அங்காரகனுக்கும் ஜாதகருக்கு விவாகஞ் செய்துவைக்க அதிகாரம் இருக் கின்றது என்பதைக் கவனிக்கவும்.

17. புத்திமான் வறுமை காணாள் பொய்யது வழுத்தா நெஞ்சம்
நந்தினோர்க் குதவி செய்வள் நடைநன்மை வயது தீர்க்கம்
அத்திரி தடுத்துச் சொல்வார் அவனுக்குத் தாரம் ரண்டு
குத்தத்தைச் சொல்லு மென்ன குருவுடன் காரி[1] சேர்ந்து;

17. இவள் அறிவுள்ளவள். தரித்திரமும் கஷ்டமுமில்லாதவள். பொய் பேசும் எண்ணமில்லாத மனதுடையவள். தன்னை வந்தடைந்தவர் களுக்கு உதவியைச் செய்வாள். நல்ல நடவடிக்கை யுள்ளவள். இவளுக்கு வயது தீர்க்கமானது. இவ்விதமாக முனிவர் சொல்ல, அத்திரி ரிஷி மறுத்துச் சொல்லுகிறார். ஜாதகருக்கு இரண்டு தாரம் நேரிடும் என்று சொல்லக் காரணத்தைச் சொல்லுமென்று கேட்க, குருவுடன் சனி கூடி ;

18. ஆறிட மிருப்ப தாலே அறைந்தனம் தாரம் ரண்டு
மாறியே முனிவர் சொல்வார் மதி[2]புகர்[3] நாலில் தங்கக்
கூறுணாத் தாரம் ரண்டு கோதையர் அனேக மாகச்
சேருவா னிந்தப் பாலன் சேயிழை ஒன்றே தீர்க்கம்.

18. ஆறாமிடத்தில் *இருப்பதால் ஜாதகருக்கு இரண்டு தாரம் என்று சொல்லுகிறோம் என்று அத்திரி ரிஷி சொல்ல, முன்பு சொல்லி வந்த முனிவர் தடுத்துச் சொல்லுகின்றார். சந்திரனும் சுக்கிரனும் நாலா வது பாவத்தில் இருப்பதால் இரண்டு தாரம் என்று சொல்லக்கூடாது. ஆனால் ஜாதகர் அநேகம் பெண்களைச் சேருவார். ஆனால் இவருக்கு மனைவி ஒன்றேயாகும். அவள் நீண்ட ஆயுளை யுடையவள்.

---

[1] சனி [2] சந்திரன் [3] சுக்கிரன்

* **குறிப்பு.**—சனி இங்கு முதலாவது, களத்திர ஸ்தானாதிபதி. குரு இங்கு இரண்டாது களத்திர ஸ்தானமாகிய ஒன்பதிற்கும், ரோக ஸ்தானம் துஸ்தானமாகிய ஆறும் பாவத்திற்கும் உடையவர். ஆகையால் முதல் தாரத்திற்குத் தோஷமுண்டு. (சிலர் இரண்டு அல்லது எட்டு இரண்டாவது களத்திர ஸ்தானம் என்றும் சொல்லுவார்கள்.) நான்காமிடம் காம விஷய போக ஸ்தானமாகும் (மூன்றுமிடம் போகஸ்தானம் என்று சிலர் சொல்லுவர். அது காமம் தவிர உள்ள மற்ற விஷய போகஸ்தானமுமாகும்.) நான்காமிடத்தில் சந்திரனும் சுக்கிரனும் லக்னாதி பதியாகவும் போகாதிபதியாகவும் இருந்து கூடியிருக்கின்றார்கள். ஆகையால் ஜாதகருக்கு போகத்திற்குக் குறைவு கிடையாது. ஆனால் ராகுவும் அங்காரகனும் கூடியிருப்பதால் கெட்ட விஷயத்தில் போகம் ஏற்படும் என்று இங்குச் சொல்லியிருக்கிறது. இவ்வித தோஷத்தால் தாரம் ஒன்று என்று கண்டிருக்கிறது.

19. சுதர்களும் நவமே தோன்றும் சோர்வுறும் சிலது என்றோம்
சதமுடன் ஆண்பால் மூன்று சத்தியு மிரண்டு தீர்க்கம்
முதல்ரண்டு ஐந்து ஒன்பான் வீருது பாலர் தாமும்
அதுகுற்றம் சொல்லு மென்ன ஆறலும் [1] நாளில் தங்க ;

19. ஜாதகருக்கு ஒன்பது குழந்தைகள் பிறக்கும். இவைகளில் சில குழந்தைகள் இறந்துவிடும் என்று சொல்லுகிறோம். ஆண் குழந்தைகள் மூன்றும் பெண் குழந்தைகள் இரண்டும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். முதலில் பிறக்கும் இரண்டு குழந்தைகளும், ஐந்தாவது ஒன்பதாவது குழந்தைகளும் விளங்காமல் இறந்துவிடும். இந்தத் தோஷத்திற்குக் காரணம் சொல்லுவீரென்று கேட்க, அங்காரகன் நான்காவது பாவத்தில் இருப்பதாலும்

20. பொன்னவன் [2]ஆறி லேற போற்றினோ மந்தச் சங்கை
அன்னையின் குணத்தைச் சொல்வேன் ஆளனுக் கினியளாகும்
பன்னுமுன் கோபி யாவள் பாட்டாளி பதரில் செல்லாள்
கன்னிகை சமயோ கத்தாள் கண்முகம் வசிய முண்டு.

20. குரு ஆறுவது பாவத்தில் இருப்பதாலும் *இந்தத் தோஷத்தைச் சொன்னோம். ஜாதகருடைய தாயாரின் குணாதிசயங்களைச் சொல்லுகிறேன். இவள் தன் புருஷனுக்கு இஷ்டமானவள். சொல்லுவதற்கு முன்னே கோபத்தை யடையக்கூடிய முன்கோபியாயிருப்பாள். கஷ்டப்பட்டு வேலையைச் செய்யக்கூடியவள். நன்றாக உழைப்பவள். அற்பமான பலனற்றக் காரியங்களில் பிரவேசிக்கமாட்டாள். இவள் சமமான நடுத்தரமான யோகத்தை யுடையவள். கண்களும் முகமும் அழகாகவும் கவருந் தன்மையை யுடையனவாகவும் இருக்கும்.

* **குறிப்பு.**— புத்திரதோஷ விஷயம், புத்திர ஸ்தானமாகிய ஐந்திற்குரிய அங்காரகன் இந்த ஐந்தாம் வீட்டிற்கு விரய ஸ்தானமும் மறைவிடமுமாகிய நான்காவது வீட்டில் இருப்பது தோஷமாகும். புத்திரகாரகனும்

[1] அங்காரகன் [2] குரு

இன்னொரு புத்திர ஸ்தானமாகிய ஒன்பதாம் வீட்டிற்கு அதிபதியுமாகிய குரு லக்கினத்திற்கு மறைவிட ஸ்தானமாகிய ஆறில் சனியுடன்கூடி ராகுவால் பார்க்கப்பட்டிருப்பதும் சந்ததிக்குத் தோஷத்தை விளைவிக்கக் கூடியதாகும்.

21. உத்தர மில்ல மாகும் ஒருதுணை ஆண்பால் தீர்க்கம்
குத்தாமா மொருவன் தானும் கோதைக்குத் துணைப் பெண் [தோஷம்
பெத்தகா ரணத்தை நீங்கள் பேசுவீர் முனியே நீர்தாம்
சித்தமாய் மதிக்கு [1] மூன்றில் சனியுமே யிருப்ப தாலே.

21. தாயாரின் வீடு வடக்கே யுள்ளதாகும். இவளுக்கு ஒரு சகோதரன் தீர்க்க ஆயுளை யுடையவனுயிருப்பான். இன்னொரு சகோதரன் இறந்துவிடுவான். சகோதரிக்குத் தோஷமுண்டு. இந்தத் தோஷத்திற்குக் காரணத்தை, முனியே நீர் சொல்லுவீர் என்று கேட்க, சந்திரனுக்கு மூன்றுவது பாவத்தில் சனி இருப்பதால் ; *

*குறிப்பு.—சந்திரன் இருக்கின்ற ராசியையே தாயாருடைய லக்கினமாகப் பாவித்து அதைக்கொண்டு தாயாருடைய சகோதர பலன் முதலிய சகல பாவப் பலாபலன்களையும் சொல்லவேண்டும் என்ற ஒரு கொள்கையும் உண்டு. இந்தக் கொள்கைக்கு ஆதாரமாகப் பலதீபிகை கிரந்தத்தில் 15-ஆவது அத்தியாயம் 22, 23, 24, 25-ஆவது சுலோகங்களைப் பார்க்கவும். இங்குச் சந்திரன் இருக்கின்ற ஸ்தானமும் மாதுருஸ்தானமும் ஒரே ராசியாகிய துலாராசியாக அமைந்திருக்கிறது. சந்திரனுக்கு மூன்றும் வீடாகிய தனுசு தாயின் சகோதரஸ்தானமாக விருக்கின்றது. இந்தத் தனுசில் சனி இருக்கின்றார். இதனால் சகோதர தோஷம் தாயாருக்கு உண்டு என்று இங்கு சொல்லி இருக்கின்றது. சகோதரஸ்தானமாகிய மூன்றில் சனி இருந்தால் முன் சகோதரன், பின் சகோதரன் ஆகிய இருசகோதரர்களுக்கும் தோஷம் உண்டென்று சம்புஹோராபிரகாசா என்ற கிரந்தம் சகஜபாவம் 58-ஆவது சுலோகத்தில் சொல்லி இருப்பதைக் கவனிக்கவும்.

22. செப்பினேம் துணைப்பெண் தோஷம் செல்வதி பூர்வம் தன்னில்
தப்பிதம் மதிகம் செய்தாள் சாற்றுவீ ரந்தச் சங்கை
ஒப்புடன் பூர்வம் சொல்வேன் ஓதுறு தல்த்தி லேதான்
மெய்ப்புடன் வன்னிய சேயாய் மேவியே மதலை யுண்டாய்;

22. பெண் சகோதரத்திற்குத் தோஷமுண்டு என்று சொல்லுகிறேம். இவள் தன்னுடைய முன் ஜன்மத்தில் அதிகமான பாவங்களைச் செய்தாள் என்று சொல்ல, அந்த விஷயங்களைச் சொல்லுவீரென்று கேட்க, இவளுடைய பூர்வஜன்ம விஷயங்களைச் சொல்லுகிறேன், வேதங்களை ஓதுகின்ற சிதம்பர க்ஷேத்திரத்தில் மேன்மையான வன்னியர் குலத்தில் பிறந்து குழந்தைகளை உடையவளாகி ;

---

[1] சந்திரன்

23. சுகமுடன் வாழுந் நாளில் செய்த ஊழ் தன்னைக் கேண்மோ
மிகுபழி ஒருத்தி பேரில் விளம்பினு ளிந்த மாது
பகையுண்டாய் மாது சொல்வாள் பதர்வார்த்தை சொன்ன பாவி
தகைமையாய்ப் பின்ஜன்மத்தில் தன்துணைப் பெண்பா லின்றி ;

23. சுகத்துடன் வாழ்கின்ற காலத்தில் இவள் செய்த பாவத்தைக் கேட்பீராக. இவள் ஒரு பெரிய பழியாகிய குற்றத்தை ஒருத்தி பேரில் சொன்னாள். அவள் கோபமடைந்து சொன்னதாவது—" திடுக்கிடும்படியான, நடுங்கும்படியான வார்த்தைகளைச் சொன்ன பாவியே, தன்னுடைய மறு ஜென்மத்தில் தனக்குச் சகோதரி இல்லாமல் ;

24. சுதர்களும் தோஷ மெய்தும் சுகமிலாக் குடும்பி யாயும்
பதியினில் வறுமை யுண்டாய்ப் பஞ்சைபோல் வாழ்வா யென்று
விதவித வார்த்தை சொல்லி வித்தகி தெருத்தூள் விட்டாள்
சதியாக அந்தச் சாபம் சார்ந்தது பாவைக் கேதான்.

24. தனக்குப் பிறக்கும் பிள்ளைகளுக்கும் தோஷ முண்டாகி, சுகமில்லாத குடும்பத்தை யுடையவளாகி, பூமியில் தரித்திரத் துடனும் கஷ்டத்துடனும் தரித்திரியைப் போல வாழ்வாய் " என்று பலவிதமான வார்த்தைகளைச் சொல்லி, தெருவிலுள்ள மண்ணை எடுத்துத் தூற்றினாள். அந்தச் சாபமானது வினையாக இவளை வந்தடைந்தது.

25. இன்னமு சிலது தோஷ மெய்திற்றுப் பாவைக் கேதான்
தன் சுதர் அந்த மாண்டு சஞ்சல மனத்தாளாகி
அன்னவள் தந்தி தோஷம் அணுகினாள் தீபம் தானும்
முன்னோர்க்கு அன்ன மீந்து மேவினாள் காலன் னாடு.

25. இதுவுமின்றி இன்னும் சில பாபங்கள் இவளை வந்து அடைந்தன. இவளுடைய முன்ஜன்மத்தில் இவளுக்கு கடைசி காலத்தில் தன்னுடைய பிள்ளை இறந்து துன்பத்தை யடைந்து பிறகு அந்தச் சாபங்களை நிவிர்த்தி செய்ய ஒரு விநாயகர் கோயிலுக்குப் போய் அவ்விடத்தில் விளக்கு ஏற்றிவைத்துப் பழைய மனிதர்களாகிய வயது சென்றவர்களுக்குச் சாப்பாடு போட்டுப் பிறகு இறந்து எமனுடைய பட்டணத்திற்குச் சென்று அவ்விடத்தில் ;

26. சிரநான்கோன் வரையப் பட்டு ஜனித்தன ளிந்த மாது
அரிவைமுன் சாபம் தானும் அணுகிடு மிச்சென் மத்தில்
வறுமையும் துணைவர் தோஷம் மதலைகள் தோஷ மெய்தும்
பெரு வயிறப்பன் கோஷ்டம் புகன்றதோர் தீப புண்யம்;

26. நான்கு தலைகளையுடைய பிரமதேவனால் எழுதப்பட்டு இவள் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றாள். இவளுடைய முன் ஜென்மத்திய சாபங்கள் இவளை இந்த ஜென்மத்தில் வந்து அடையும், இவளுக்குத் தரித்திரமும் கஷ்டங்களுமுண்டு. இவளுடைய சகோதரர்களுக்குத்தோஷம் உண்டாகும். இவளது குழந்தைகள் இறந்துவிடும். பெரிய வயிற்றையுடைய விநாயகக் கடவுளின் கோயிலில் தீபம்வைத்துப் புண்ணியத்தின் ;

27. பலனதைச் சொல்லு மென்ன பாலர்கள் பின்னால் விருத்தி
நலமுறும் அந்தம் தன்னில் நவிலு வோம் இவள்பின் ஜன்மம்
தலமதி லுயர்வ தான சேதுவின் பதியி லேதான்
குலவுவாள் வன்னிய சேயாய்க் கோமளி கேட்டி டாயே.

27. பலனைச் சொல்லுவீரென்று கேட்க, சொல்லுகிறார். பின்னே பிறக்கும் குழந்தைகள் விருத்தியடையார்கள். கடைசியில் சுகத்தை அடைவார்கள். இவளுடைய பின்ஜன்மத்தைச் சொல்லுகிறோம். ஸ்தலங்களில் மேன்மை பெற்ற ஸ்தலமாகிய சேதுஸ்தலத்தில் வணிகர் குலத்தில் இவள் பிறப்பாள், பார்வதியம்மையே ! கேட்பீராக.

28. தந்தையின்தன் பூர்வம் சொல்லுவேன் தக்கோல மருகில் உத்ரம்
பிந்திய ஊரி லேதான் பிறந்தனன் வைசியச் சேயாய்ச்
சந்ததம் செட்டுச் செய்து சகலர்க்கும் நல்லோ னாயும்
நிந்தைக ளில்லா னாகி நேர்ந்தனன் காலன் னாடு.

28. ஜாதகருடைய தகப்பனாரின் முன்ஜன்மத்தைச் சொல்லுகிறேன். தக்கோலத்திற்கு வடக்கே அதற்கு அருகிலுள்ள ஒரு பின்னேற்ற முள்ளக் கிராமத்தில் வைசியராகப் பிறந்தார். இவர் வியாபாரஞ் செய்து கொண்டு எல்லோருக்கும் நல்லவராக இருந்து அபவாதங்களும் தோஷங்களுமில்லாதவராகி இறந்து எமபட்டணத்திற்குச் சென்றான்.

29. சிரநான் கோன் வரையப்பட்டு ஜனித்தவனிவனே யென்றோம்
வரும்ஜன்மம் வான்மீ யூரில் வருகுவான் சைவ சேயாய்
பிறந்தவன் தனக்குப் பூர்வம் சொல்வேன் பிருதிவி தலத்திலே [தான்
சிறந்ததோர் சௌராஷ்ட்ர வம்சம் ஜனித்தவனென்று [சொல்வோம்.

29. அவ்விடத்தில் நான்கு தலைகளையுடைய பிரமதேவனால் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் இவர் வந்து பிறந்திருக்கின்றார் என்று சொல்லுகிறோம். இவர் மறு ஜன்மத்தில் திருவான்மியூரில் சைவராகப் பிறப்பார். ஜாதகருடைய முன் ஜென்மத்தைச் சொல்லுகிறேன். இவர் பிருதிவி ஸ்தலமாகிய காஞ்சீபுரத்தில் பெருமையும் பிரக்யாதியுமுள்ள ஒரு சௌராஷ்டிர வம்சம் என்கிற பட்டுநூல்கார வம்சத்தில் பிறந்தார் என்று சொல்லுகிறோம்.

30. வினையொன்று மில்லா னாகி மேவினான் காலன் னாடு
கனமுள பிரமன் லக்கம் கலப்பனா மிக்கு லத்தில்
சினமிலா யோகம் சொல்வேன் ஜனித்தநாள் முதலா மாக
அனையவே யாண்டி ரண்டுள் அல்ப்பமாம் குடும்ப மெய்தும்.

30. ஜாதகர் முன்ஜென்மத்தில் யாதொரு பாபமுமில்லாமல் இறந்து எமபட்டணத்திற்குச் சென்று பெருமை பொருந்திய பிரமதேவனால் எழுதப்பட்டு இந்த ஜென்மத்தில் இக் குலத்தில் வந்து பிறந்திருக்கின்றார்.

இவருக்கு யோகத்தைச் சொல்லுகிறேன். இவர் பிறந்தது முதல் இரண்டு வருஷத்திற்குள் குடும்பம் அற்பமாக விருக்கும். கொஞ்சம் சுகத்தையுடைய தாக விருக்கும்.

31. பந்துவுக் கிணக்கமா மாகும் பலபல துன்ப மெய்தும்
நஞ்சுபோல் மனமு மெய்தும் நாட்குநாள் பிறைபோல் யோகம்
நிந்தைக ளதிகமெய்தும் நிமலனும் பிணியால் வாடும்
சந்ததம் அதின்மேலாகத் தங்கிடும் பிறைபோல் யோகம்.

31. இவருடைய குடும்பம் பந்துக்களுக்கும் ஒற்று அடங்கியிருக்கும் பலவிதமானக் கஷ்டங்களை அடையும். விஷத்தைச் சாப்பிட்ட ஒருவருடைய மனம் எப்படித் துன்பத்தை யடையுமோ அவ்விதத் துன்பத்தை இவருடைய குடும்பம் அடையும். அதற்குமேல் நாளுக்கு நாளாய் வளர் பிறைச்சந்திரனைப்போல யோகம் உண்டாகும். நிந்தனைகளும் பழிகளும் அதிகமாக இவர் குடும்பத்திற்கு வந்து சேரும். இவரும் நோயால் குன்றிவிடுவார். அதற்குமேல் வளர்பிறைச் சந்திரனைப்போல் யோகம்அதிகரிக்கும்.

32. சமரச யோக மெய்தும் சகடுகள் நேரு மென்றேம்
நிலங்களும் நிவிர்த்தி கொஞ்சம் நிதனமாய்க் குடும்ப மெய்தும்
சுமைதாங்கி போலே கஷ்டம் செய்குவன் சல்லியப்பாதை
அவனியால் லாப மெய்தும் நாலாண்டு வறுமை யெய்தும்.

32. சமமான யோகம் நடந்து வரும். வண்டிகள் வந்து கிடைக்கும். நிலங்கள் கைவிட்டுப் போய்விடும். குடும்பம் தரித்திரமான நிலையில் நடந்துவரும். தனக்கு யாதொரு நன்மையுமில்லாமல் சுமைதாங்கிபோலப் பொறுப்பாளியாக இருந்து உதவி செய்து அதனால் கஷ்டப்படுவார். கடனால் உபத்திரவமுண்டாகும். பூமியால் லாபமுண்டாகும். நான்கு வயதிற்குள் தரித்திரமும் கஷ்டங்களும் உண்டாகும்.

33. ஐந்தாண்டு முதலா மாக அம்புலி போலே யோகம்
வந்திடும் பால னுக்கு ஊர்ந்திடும் தனதான்யங்கள்
எந்திடம் பெருமை யேற்ற லெய்திடு மில்லம் தானும்
முந்திய சல்லியம் நீங்கும் முயற்சியாய்க் குடும்ப மேற்கும்.

33. ஜாதகருக்கு ஐந்து வயது முதற்கொண்டு வளர்பிறை சந்திரனைப்போல யோகம் விருத்தியாகும். தனமும் தான்யங்களும் அதிகப்படும். எந்த இடம் போனாலும் ஜாதகருக்குப் பெருமை உண்டாகும். வீடு கிடைக்கும். பழைய கடன்கள் நிவிர்த்தியாகும். நல்ல முயற்சியால் குடும்பம் மேலுக்குமேல் விருத்தியாகும்.

34. அது முதல் அன்பா னண்டும் அணுகாது வறுமை தானும்
வதிஷ்டரும் தடுத்துச் சொல்வார் வரைந்ததுநீர் யோகம் எவ்வாறு
கதிர்மகன்[1] பொன்னு[2] மாறில் கலந்ததால் குறைவாம் யோகம்
நிதிகுரு ஆட்சி யாக நீலனும்[3] ஆறதாக;

---

[1] சனி. [2] குரு. [3] சனி.

34. அந்தக் காலம் முதல் ஜாதகருக்கு ஐம்பது வயது வரைக்கும் தரித்திரமும் கஷ்டங்களும் கிடையா. இவ்விதமாக முனிவர் சொல்லிவர வசிஷ்டரிஷி மறுத்துக் கேட்கிருர். நீர் எந்தக் காரணத்திஞல் ஜாதகருக்கு யோகத்தைச் சொன்னீர்? சனியும் குருவுங் கூடி இருப்பதாலே யோகம் குறைவுபடுமே என்று வசிஷ்டர் சொல்ல, செல்வத்தைக் கொடுக்கக்கூடிய குரு தன் ராசியாகிய தனுசில் ஆட்சியாக விருப்பதாலும் சனியும் கூடியிருப்ப தாலும்;

35. தேவலோ காம்சம் தன்னில் செறிந்ததால் தசைகா லத்தில்
மேவிடும் யோகமென்ருேம் விளம்புவோம் புத்திர பாக்கியம்
ஆவலாய் முப்பான் ரண்டில் அறைந்தனம் தந்தை கண்டம்
தாவிய நாற்ப தாண்டில் தாய்க்குமே உடல்ம் ஏகும்.

35. தேவலோகாம்சத்தில் † இருப்பதாலும் இவர்களுடைய தசாகாலங் களில் யோகம் விருத்தியாகும் என்று சொல்லுகிருேம் என்று முனிவர் சமாதானம் சொல்லுகிருர். இனிமேல் ஜாதகருக்குப் புத்திர பாக்கியத்தையும் சொல்லுகிருேம். ஜாதகருக்கு முப்பத்திரண்டாவது வயதில் தகப்பனர் இறந்து விடுவார். ஜாதகருக்கு நாற்பதாவது வயதில் * தாயார் இறந்து விடுவாள் என்று சொல்லுகிருேம்.

† **குறிப்பு.**—தேவலோகாம்சம் என்பது பாரிஜாதாம்சம் முதலிய பதின் மூன்று வர்க்கங்களில் ஒன்று ஆகும். ஏழு வர்க்கங்கள் சேர்ந்திருப்பது தேவலோகாம்சம் ஆகும். சர்வார்த்தசிந்தாமணி 1-ஆவது அத்தியாயம் 20-ஆவது சுலோகத்தைப் பார்க்கவும். ஜாதகபாரிஜாதகம் 1-ஆவது அத்தி யாயம் 46-ஆவது சுலோகத்தையும் பார்க்கவும். குருவும் சனியும் கூடி கெட்டவிடத்தில் இருந்தால் கெட்ட பலனையும் நல்ல இடத்திலிருந்தால் நல்ல பலனையுங் கொடுப்பார்கள் என்று சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறது. தேவகேரளம் என்ற சுக்கிரநாடியிலும் யோகசாராவளி என்ற கிரந்தத்திலும் கீழ்க்கண்டபடி சொல்லி இருப்பதாகக் கண்டிருக்கிறது. "எப்பொழுது சனிஸ்வர வர்க்கத்தில் பலமுள்ளவனுயும், யோகாம்சத்தில் குரு வோடு கூடினவனுயும் இருக்கிருனே அப்பொழுது ஜாதகர் பணம் புத்தி கீர்த்தி இவைகள் உள்ளவராயும், ஆசை நிறைந்தவராயும் அரசர்களின் காரியத்தை முடித்து வைக்கச் சாமர்த்தியமுள்ளவராயும் இருப்பார்.

**தகப்பனர் விஷயம்.**—ஜாதகருக்கு வயது ௵ 31-0-0 முதல் வருஷம் 32-0-0 வரையில் சனி தசையில் சுக்கிர புக்தி சூரிய புக்திகள் நடக்கின்றன. பிதுர் லக்கின மீனம். பராசர ஹோரை ஜாதக சந்திரிகை பிரகாரம் மீனலக் கினத்திற்குச் சனி மாரகாதிபர். இவர் பிதுர்லக்னுதிபதியாகிய குருவுடன் கூடியிருப்பதுடன் பிதுர்காரராகிய சூரியனைப் பார்க்கின்ருர். துய்யகேரளம் 8-ஆம் பாவம் 20-ஆவது பாடல் பிரகாரம் சனி பிதுருக்கு மாரகாதிபதி ஆகிருர். மேலும் சூரியன் பிதுர்ஸ்தானத்திற்கு ஆறுக்குடையவராகி மாரக ஸ்தானமாகிய ஏழில் இருக்கின்ருர். இவர் பிதுர்ஸ்தானத்தைப் பார்ப்பது பலதீபிகை 15-ஆவது அத்தியாயம் 26-ஆவது சுலோகப் பிரகாரம் பிதுருக்குத் தோஷத்தை உண்டுபண்ணும். ஆகையால் சுக்கிரனைவிட சூரியனுக்குப் பிதுரை மாரகஞ் செய்ய அதிக அதிகாரம் இருக்கிறது. ஆகை யால் இங்கு 31-ஆவது வயதில் பிதுர்மாரகம் சொல்லியிருக்கிறது.

* **மாதுரு விஷயம்.**—ஜாதகருக்கு வயது 39-0-0 முதல் வருஷம் 40-0-0 முடியும் வரையிலும் சனிதசையில் குரு புக்தி நடக்கிறது. மாதுரு லக்னம் துலாம், பராசர ஹோரை ஜாதக சந்திரிகைகளின்பிரகாரம் குரு மாதுருக்கு மார காதிபதியாகிருர். மூன்றும் வீடுகூட ஒரு மாரகஸ்தானமாகும். மாரக ஸ்தானத்தில் உள்ளவரும் மாரகாதிபதியாகிய குருவுடன் சம்மந்தப்பட்ட வருமான சனி ஜாதக சந்திரிகை 27-ஆவது சுலோகப் பிரகாரம் தனக்கு முன்னும் பின்னும் வருகிற மாரகர்களைத் தள்ளிவிட்டுத் தானே மாரகஞ் செய்ய அதிகாரம் பெற்றிருக்கின்ருர். ஏற்கெனவே குரு மாரகாதிபதியாகி இருக்கின்ருர். ஆகையால் இங்கு, சனி தசையில் குருபுக்தியில் மாதுருக்கு மாரகஞ் சொல்லியிருக்கின்ருர்.

36. அறுபது நாலு ஆண்டில் ஐப்பசி மாதம் தன்னில்
திருமக னுடலம் ஏதும் செப்புவோ மிவன்பின் ஜென்மம்
அருணைக்கு வடபா லாக அனுகிய பேரூர் தன்னில்
நிறைசேயும் வைசிய சேயாய்ச் நேருவா னென்று சொல்வோம்.

**36.** ஜாதகர் தமது அறுபத்துநான்காவது வயதில் † ஐப்பசி மாதத்தில் இறந்து விடுவார். இவருடைய மறுஜென்மத்தைச் சொல்லுகிருேம். திருவண்ணுமலைக்கு வடக்குத் திக்கிலுள்ள ஒரு பெரிய கிராமத்தில் வைசிய குலத்தில் இந்த மாட்சிமை தங்கிய ஜாதகர் பிறப்பார் என்று சொல்லுகிருேம்.

† **குறிப்பு.**—ஜாதகருக்கு வயது வருஷம் 64-10-0 முடியும் வரையிலும். கேதுதசையில் சனிபுக்தி, புதன்புக்தி நடக்கின்றன. அங்காரகன் லக்கிஞதிபதியாகிய சந்திரனுடன் சம்பந்தப்பட்டுச் சுக்கிரனைவிட குறைந்த பல முடையவராயிருக்கின்ருர். ஆகையால் துய்பகேரளம் 8-ஆம் பாவம் 20-ஆவது பாடல் பிரகாரம் மாரகராகிருர். கேது அங்காரகன் வீட்டிலிருந்து கொண்டு லக்கிஞதிபதியாகிய சந்திரனைப் பார்ப்பதுடன் எட்டாவது பாவத்தையும் பார்க்கின்ருர். ஆகையால் ஜாதகசந்திரிகை 12-ஆவது சுலோகப் பிரகாரம் அங்காரகனுடைய மாரகத்தைத்தான் ஏற்றுக்கொள்ளுகின்ருர். சனி கடக லக்கினத்திற்கு, பராசரஹோரை ஜாதகர்சந்திரிகைகளின் பிரகாரம் மாரகாதிபதியாகிருர். ஆறிலும் இருக்கின்ருர். ஜாதகசந்திரிகை 27-ஆவது சுலோகப் பிரகாரம் புதனைத் தள்ளிவிட்டு தானே மாரகஞ் செய்ய அதிகாரம் பெற்றிருக்கிருர். ஆகையால் இங்கு கேதுதசை சனி புக்தியில் வயது ௬௩ 63-1-இல் ஐப்பசி மாதத்தில் ஜாதகருக்கு மாரகஞ்சொல்லி யிருக்கின்ருர்.

37. ஜனித்திடுங் காலம் தன்னில் சுவாதியின் மூன்றும் பாதம்
வினைராகு திசையி ருப்பு விளம்புவோ மாண்டு ஐந்து
கனமுடன் திங்கள் பத்தும் கழறுவோம் பலனை யாங்கள்
அனையவே தவங்கள் செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

**37.** ஜாதகர் ஜனிக்கும்போது சுவாதி நக்ஷத்திரத்தின் மூன்றும் பாதமாகும். இதற்குரிய ராகுமகாதசை இருப்பு வருஷம் ஐந்தும், மாதம் பத்தும் ஆகும் என்று சொல்லுகிருேம். பலனைச் சொல்லுகிருேம். தவங்களைச் செய்கின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

# ஜாதகம் 60

1. மதி[1] தனுஸ் காரி[2] குடம்[3] மன்னன்[4] ராகு மானதிலே[5]
புதன் சேய்[6] புகர்[7] பான்[8] கோல்[9] தன்னில் பின்பாம்[10] பலவன்[11]
கடகமுயிர்]
இதுவே கிரகம் தானின்றுலி யியம்பும் பலன்க ளெவ்வாறு
அதுவே ஆண்பால் ஜனன முறும் அறைவோம் கீழ்மேல்
[வீதியதே.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| சனி | இராசி சக்கரம் | | லக்கினம் கேது |
| ராகு குரு | | | |
| சந்திரன் | | புதன் சுக்கிரன் அங்காரகன் சூரியன் | |

1. சந்திரன் தனுசிலும், சனி கும்பத்திலும், குருவும் ராகுவும் மகரத்திலும். புதனும் அங்காரகனும் சுக்கிரனும், சூரியனும் துலாத்திலும், கேது கடகத்திலும் இருந்து, ஜன்ம லக்கினம் கடகமாக விருந்தால் பலா பலன்கள் எவ்விதமிருக்கும் என்பதைச் சொல்லுவீர். இந்தக் குழந்தை ஆண் குழந்தையாக ஜனிக்குமென்று சொல்லுகிறோம். ஜனனமான இடம் கிழக்கு மேற்குத் தெருவில்.

குறிப்பு.—இந்த ராசிச் சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர நிலை பொருத்தமுடையதாகும். ரிஷபத்தில் சந்திரன், புதன், ராகுவும், மிதுனத்தில் சனியும், துலாத்தில் அங்காரகனும், விருச்சிகத்தில் சுக்கிரனும் கேதுவும், கும்பத்தில் சூரியனும், மீனத்தில் குருவும் ஆகும். இந்த ஜாதகத்தில் ஓர் அபூர்வமான சம்பவம் இருக்கிறது. அஃதாவது ஜாதகர் ஒரே மனைவிக்கு இரண்டு தடவை தாலி கட்டுவதால் இரண்டுதார தோஷம் நிவிர்த்தியாகிறது. மூலம்2-ஆம் பாதம் கேது தசை வருஷம் 3, மீ 6. இஃது ஒரே மனைவிக்கு இரண்டு தாலி கட்டும் ஜாதகம் ஆகும்.

---

[1] சந்திரன் [2] சனி [3] கும்பம் [4] குரு [5] மகரம்
[6] அங்காரகன் [7] சுக்கிரன் [8] சூரியன் [9] துலாம் [10] கேது
[11] கடகம்

2. தென்பால் வாடை கூரையில்லம் திருமால் காளி உத்திரத்தில்
அன்னை மாரி மேற்கினுறும் அரன்கோஷ்டங்கள் வடகீழ்ப்பால்
மன்னு தீயில் பிறந்தவளாம் வடமேல் திக்கில் சமமூரில்
இந்த அடையா ளத்தினிலே யெய்து மிந்தப் பாலகனும்.

2. தென்னண்டை வாடையில் ஒரு கூரை வீடு ஒன்று சொல்லுகிறோம். வடக்குத் திக்கில் விஷ்ணு கோயிலும் காளியம்மன் கோயிலும், மேற்குத் திக்கில் பார்வதியம்மன் கோயிலும் மாரியம்மன் கோயிலும், வடகிழக்குத் திக்கில் பரமசிவன் கோயில்களும் அக்கினியில் பிறந்த தேவதையான திரௌபதியம்மன் கோயில், வடமேற்குத் திக்கிலும் இருக்கும். இவ்வித மான அடையாளங்களும் ஜெக்பந்தியும் உள்ள நடுத்தரமான கிராமத்தில் இந்த ஜாதகர் பிறப்பார்.

3. பாலன் தந்தை யோகமுமே பாலர் மனைவி துணையோகம்
சாலன் முன்பின் ஜன்மங்கள் சாற்றக் கேண்மோ இந்நாலில்
ஞாலம் தந்தை குணம் சொல்வேன் இனிதாய் வார்த்தை மன்ன வர்முன்]
சீல முடையான் விவசாயம் தேவி பட்சம் துணை காணான்.

3. ஜாதகருடைய யோகம், தகப்பனுருடைய யோகம் குழந்தைகள் மனைவி சகோதரர், முன்ஜன்மம் ஆகிய இவைகளை இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகிறோம். கேட்பீராக. ஜாதகருடைய தகப்பனுடைய குணாதிசயங்களைச் சொல்லுகிறேன். இனிமையான வார்த்தைகளை உபயோகப்படுத்துவார். அரசர்கள் முன்னிலையில் நல்லொழுக்கமுடையவர். பயிரிடுந் தொழிலைச் செய்வார், மனைவியிடத்தில் அன்புடையவர். கூடப் பிறந்தவர்கள் இல்லாதவர்.

4. கான வார்த்தை தானுரைப்பன் கனத்தோர் நேசன் கல்வியுளன்
தானே யென்று பேருடையன் தலவா சங்கள் தான் செல்வன்
தேனே வார்த்தை யீகையுளன் சிறுத்தோர்க் குதவி தீர நெஞ்சன்
வானோர் பூஜை தான் செய்வன் மருமம் வெளியில் காட்டா தான்.

4. இனிமையான வார்த்தைகளைச் சொல்லுவார். பெரிய மனிதர்களுடைய சிநேகத்தையுடையவர். வித்தையுள்ளவர். தானஞ் செய்பவர் என்ற நல்ல பெயருடையவர். புண்ணிய க்ஷேத்திரங்களுக்குப் போவார். தேனைப் போன்ற இனிமையுள்ள வார்த்தைகளையுடையவர். தயையுள்ளவர். கொடுக்குந் தன்மையுடையவர். வறுமையுடையவர்களுக்கு உபகாரஞ் செய்வார். தைரிய முள்ளமனத்தையுடையவர். தேவர்களையுங் கடவுளையும் பூஜை செய்வார். இரகசியத்தை வெளியிடாதவர்.

5. நடையும் கடியன் சுகபுசிப்பன் நல்லோ ரிஷ்டன் பெண்மோகன்
படையில் செல்லான் கரமதிலே பத்ம ரேகை பரிந்துரைப்பன்
விடவாக் குடையன் சமதேகன் மேவும் நாபிச் சூடு என்றோம்
கடனே கொள்வன் செலவுளனும் காலரள் உடையன் காதலியே.

5. கடுமையாக நடந்துகொள்ளுபவர். சுகமாகப் புசிப்பவர். நல்லவர்களுக்கு இஷ்டமானவர். பெண்களின்மேல் காம ஆசையுடையவர். சண்டைக்குப் போகமாட்டார். தன்கையில் பத்மரேகை என்ற கமல ரேகையை யுடையவர். அன்புடன் இரக்கங்கொண்டு பேசுவார். விஷமான கெட்டவாக் குடையவர். சமமான அளவுள்ள தேகமுடையவர். தொப்புளில் வயிற்றில் கணைச்சூடுள்ளவர் என்று சொல்லுகிறோம். கடன் வாங்குவார். அதிகம் செலவு செய்பவர். கால் நடைக்காரர்கள் உள்ளவர் என்று சொல்லுகிறோம், பார்வதியம்மையே !

6. என்றே னுக்கு இப்பால னெய்தும் துணை ஆணி ரண்டென்றோம்
கன்னி மூவர் தீர்க்கமுறும் கழறு மாண்பா லிரண் டென்றேன்
முன்னோன் குணத்தைத் தான் சொல்வேன் புலவன் [1]ராசி [நாள் பூசம்
முன்னாள் உதிப்பன் தலையுளனும் மூலச் சூடு முடையவனே.

6. இவ்விதமான குணங்களையுடையவனென்று சொல்லப்பட்ட தகப்பனுக்கு இந்த ஜாதகர் பிறப்பார். ஜாதகருக்கு ஆண் சகோதரர்கள் இருவரும், பெண் சகோதரர்கள் மூன்றும் நீண்ட ஆயுளை யுடையவர்க ளென்று சொல்லுகிறோம். ஆண் சகோதரர்கள் இருவர் என்று சொன் னேனே அவர்களுடைய குணாதிசயங்களைப்பற்றிச் சொல்லுகிறேன். ஒரு சகோதரன் புதனுடைய ராசிலக்கினமாகவும், பூசத்திற்கு முந்திய புனர் பூசம் ஜன்ம நக்ஷத்திரமாகவும் ஜனனமாவர். தலையுள்ளவர். மூலச் சூட்டு நோயுடையவர்.

7. இடப்பால் மச்சம் பொறுமை யுளன் இனிதா யில்லம் தான் [செய்வன்
கடனே கொள்வன் நிவிர்த்தி யுளன் கருதான் கட்டு வார்த் [தைகளைப்
படையில் செல்லான் விவசாயம் பண்ணும் வாத தேகியுமாம்
படிபோல் மனைவி ரண்டாகும் சுதராண் ரண்டு பெண் மூன்றே.

7. இடதுபக்கம் மச்சமுண்டு. சாந்தமானவர். அழகான வீடு கட்டுவார். கடன் படுவார். அதனை நிவிர்த்திச் செய்துவிடுவார். பொய்யான வார்த்தைகளையும் புனைந்த வார்த்தைகளையும் விரும்பமாட்டார். நினைக்க மாட்டார். சண்டைக்குப் போகமாட்டார். பயிர்த்தொழிலைச் செய்வார். வாயு வான தேகத்தையுடையவர். இவருக்கு ஒன்றன்பின்னொன்றாக இரண்டு மனைவிமார்கள் நேரிடுவார்கள். இவருக்கு ஆண் குழந்தைகள் இருவரும், பெண் குழந்தைகள் மூவரும் பிறப்பார்கள்.

8. முன்னோள் பாரி தனக்குச் சுதர்மேவும் கன்னி ஒன்றுமே
அன்னோள் கர்ப்பிணி யாகவே அடைவாள் காலன் பக்கலிலே
பின்னோள் தனக்கு ஆணிரண்டு பேதை அவ்வாறு தீர்க்கமுறும்
சொன்னேன் வயது தீர்க்கமுமே துணையோ டொத்து தான்வாழ் [வன்.

---

[1] புதன்.

8. முதல் மனைவிக்குக் குழந்தை பிறக்கும். ஒரு பெண் குழந்தைதான் உண்டு. இவள் கர்ப்பிணியாகவே இறந்து எமனிடம் போய்ச் சேருவாள். இரண்டாவது மனைவிக்கு இரண்டு ஆண் குழந்தைகளும் இரண்டு பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளையுடையவர்களாக விருப்பார்கள். இவருக்கு நீண்ட ஆயுள் உண்டென்று சொல்லுகிறேன். இவர் தம்முடைய சகோதரர்களுடன் கூட இருந்து ஒத்து வாழ்வார்.

9. அவன்பின் சேதி தானுரைப்பேன் அனுகும் நாபிச் சூடுடையன்
தவமே புரிவன் விடை[1] ஜன்மம் பாரில் உத்த ராடம் தோன்றும்
தவமே புரிவோர் தான்சேர்வான் தக்கோர் நேயன் சாதிப்பான்
நவனி விருத்தி செய்திடுவன் நட்பாய்ச் சொல்லும் செலவாளி.

9. இவருக்குப் பின்னால் பிறந்த சகோதரனுடைய விஷயத்தைச் சொல்லுகிறேன். இவர் தொப்புளில், வயிற்றில் சுணைச்சூடு உடையவர். தபசுகளையும் யாகங்களையுஞ் செய்வார். இவர் ரிஷபலக்கினத்தில் உத்தராட நக்ஷத்திரத்தில் ஜனனமாவார். தபசு செய்கிறவர்களிடம் சேருவார். மேலோர்களுடைய, பெரியோர்களுடைய சினேகத்தை அடைவார். பூமியைப் பயிரிட்டு விருத்திசெய்வார். சினேகமாகவும் ஆசையுடனும் பேசுவார். அதிகமாகச் செலவு செய்வார்.

10. பாரிவட கீழ்தா னனுகும் பாவை தன்னால் சுகமெய்தும்
நாரி யில்லம் சிலகாலம் நல்கு மென்றோம் நாயகியே
தீரன் பெண்கள் மோகமுகன் சிறப்பாய்க் குடும்பி சிவந்தமெய்யன்
போரே புரிவன் முகவடிவன் பொருந்தும் பித்த தேகனுமே.

10. இவருக்கு மனைவி வட கிழக்குத்திக்கிலிருந்து வந்து நேருவாள். இவளால் இவருக்குச் சுகமுண்டு. இவர் சிலகாலம் மனைவியின் வீட்டில் வசிப்பார் என்று சொல்லுகிறோம். பார்வதியம்மையே! இவர் தைரியமுள்ளவர். பெண்கள் மோகிக்கக்கூடிய அழகான முகமுடையவர். மேன்மையான சிறப்புள்ள குடும்பத்தையுடையவர். சிவப்பான தேகத்தையுடையவர். சண்டைபோடுஞ் சக்தியுடையவர். முகம் வடிவுள்ளதாக விருக்கும். இவருடைய தேகம் பித்த முள்ள தேகமாகும்.

11. வறுமை காணன் மனத்தீரன் மைந்த ராண்பா லொன்றுமே
அரிவை யிரண்டு தானெய்தும் அல்ப மாகு மூன்றென்றோம்
குறியோம் தந்தை ஆஸ்திதனைக் குலவு வானும் மனைவிபக்கல்
நெறியோன் வயது தீர்க்கமுறும் நிகழ்த்து வோமே யிவன்குணத்
[தை.

11. இவர் தரித்திரமுங் கஷ்டங்களுமில்லாதவர். மனத்தைரியமுள்ளவர். இவருக்கு ஆண் குழந்தை ஒன்றும் பெண் குழந்தைகள் இரண்டும் ஜீவித்திருக்கும். மூன்று குழந்தைகள் அற்பாயுளுள்ளதாகும் என்று சொல்லுகிறோம். இவருக்குத் தந்தை ஆஸ்தி கிடையாதென்கிறோம்.

---

[1] ரிஷபராசி.

மனைவி வீட்டிற்குப் போய்விடுவார். நல்ல நெறியும் நடத்தையுமுடையவர். இவருக்கு நீண்ட ஆயுளுண்டு. ஜாதகருடைய குணத்தை இனிமேல் சொல்லு கிறோம்.

12. பதருன் வார்த்தை உபகாரி பாரில்லூகி பலர்நேயன்
துதிசெய் தோர்க்கு அன்பனுமாம் சுகமாம் வித்தை சொல் [சோரான்
ததிநெய் யிஷ்டன் கல்வியினுல் சாரும் லாபம் சமத்துடையன்
அதிதி போலே வார்த்தையுளன் அடைந்தோர்க் கன்பன் அரசுடை [யன்.

12. நிடுக்கிடும்படியான, நடுக்கமுண்டுபண்ணக்கூடிய பதங்களை அவசரப்பட்டுச் சொல்லமாட்டார். பிறருக்கு உதவிசெய்வார். புத்திசாலி சினேகமாகவிருப்பார். தன்னைப் போற்றுபவர்களிடம் பிரியமாயிருப்பார். சுகத்தை விளைவிக்கக்கூடிய நல்ல கல்வியுடையவர். பேசுவதில் தளர்ச்சி யடையமாட்டார். தயிர் நெய் இவைகள்மேல் ஆசையுடையவர். படிப்பினுல் இவருக்கு லாபமுண்டாகும். சாமர்த்தியமுடையவர். பரதேசிகளைப்போல, தெய்வ பக்தியுடையவர்களைப்போல வார்த்தைகளை உபயோகிப்பார். தன்னை வந்தடைந்தவர்களிடம் ஆசையுள்ளவர். இராஜாங்க வேலைகளைச் செய்வார்.

13. கல்வி சிலர்க்குப் போதிப்பன் கிராமச் செட்டும் தானனுகும்
நல்லோர் பலரால் புகழேற்பன் நங்கை மார்கள் மோகமுளன்
சொல்லு நெறியோன் சுகமுடையன் துறவோர் பக்தி தான்கொள் [வன்
இல்லை யென்றோ ரிடர்தீர்ப்பன் யின்பமாக உரைத்திடுவன்.

13. இவர் சிலருக்கு வித்தையைக் கற்றுக்கொடுப்பார். கிராமத் திய வியாபாரமுஞ் செய்வார். அனேக நல்லவர்களால் புகழப்படுவார். பெண்களின்மேல் காம ஆசையுடையவர். தான் சொல்லுகிற வார்த்தை களைக் காப்பாற்றும்படியான நல்ல நீதிமுறையையுடையவர். சுகங்களை அனுபவிப்பவர். முனிகளிடத்திலும் இல்லறத்தை விட்டுவிட்ட பரதேசிக ளிடத்திலும் அன்புடையவர். தனமும் சத்தியும் இல்லை என்று சொல்லித் தன்னிடம் வருகிறவர்களின் கஷ்டங்களை நிவிர்த்தி செய்வார். இனிமையான நல்ல வார்த்தைகளைச் சொல்லுவார்.

14. இடுவன் ஏழை தமக் கன்ன மினிதாய்ப் பூமி விருத்திசெய்வன்
திடமாம் குடும்பி தானுவன் ஜயமே செய்வன் எடுத்ததையே
மடையோ ருறவு கொள்ளாதான் மன்னர் நேயன் மறுத்துரை [யான்
தடைசொ லில்லான் துணைவருக்குச் சாந்த கோப முடையவனே.

14. ஏழைகளுக்கு இவர் சாப்பாடு போடுவார். பூமிகளைச் சந்தோ ஷத்துடன் விருத்திபண்ணுவார். வலிவான குடும்பத்தையுடையவராவர். தான் எடுத்த காரியத்தை ஜயமுண்டாகும்படியாய்ச் செய்து முடிப்பார். புத்தியில்லாதவர்களிடத்தில் சினேகஞ் செய்யமாட்டார். அரசர்களுக்கு

இஷ்டமானவர். தடுத்தும் எதிர்த்தும் பேசமாட்டார். தடுக்கும்படியான வார்த்தைகளைச் சொல்லமாட்டார். தன்னுடைய சகோதரர்களிடத்தில் கோப முண்டாகி உடனே சாந்தத்தையடையுந் தன்மையுடையவராவார்.

15. விலைக்கு அரசு தான்பெறுவன் விளம்பும் அன்னை தான் குணத்தை
நிலையில் லார்மேல் பிரிய முள்ளள் நீத்தோர்க் கன்பள் நீதம்சீலி
தலைவன் மனம்போல் தான்வாழ்வள் சத்தியினில்லம் வடகீழ்ப் [பால்
குலவும் துணைவர் ஆண்மூன்று கோதை அவ்வாறு தீர்க்கமுறும்.

15. இவர் அரசுசெய்யுந் தொழிலையுடையவர். ஜாதகருடைய தாயின் குணதிசயங்களைச் சொல்லுகிறோம். அந்தஸ்து அல்லது தனம் அல்லது தொழிலில்லாதவர்களிடத்தில் அன்புள்ளவள். துறவிகளிடத்தில் பிரியமுள்ளவள். நீதியும் நன்னெறியும் பாக்கியமு முடையவள். நல்லொழுக்கத்தையுடையவள். தன்னுடைய புருஷனுடைய மனதிற்கு ஒத்தாப் போல் வாழ்வாள். இவளுடைய தாயார் வீடு வடகிழக்குத்திக்கிலிருக்கும். இவளுக்கு உடன்பிறந்த மூன்று ஆண்களும் மூன்று பெண்களும் நீண்ட ஆயுளையுடையவர்களாக விருப்பார்கள்.

16. பித்த தேகி சிவந்திடுவள் பேசிடுவள்தன் பூர்வத்தை
முத்தும் கன்னியா குமரியினில் உதித்தாள் சைவ குலமதனில்
பத்தி னோர்க்கு அன்னமீந்து பகவான்பத்தி மிகப் பூண்டு
சுத்த மனதாய்த் தான்வாழ்ந்து சேர்ந்தா ளவளும் காலனுடு.

16. ஜாதகருடைய தாயார் பித்தமுள்ள தேகத்தையுடையவள். சிவப்பான நிறமுடைய தேகத்தை உடையவள். இவளுடைய முன்ஜன்மத்தைச் சொல்லுகிறோம். கன்னியாகுமரியில் ஒரு சைவ ஜாதியில் முன் ஜென்மத்தில் பிறந்தாள். கடவுளிடம் தொண்டு செய்பவர்களுக்கு உணவு கொடுத்து, கடவுளிடத்தில் அதிகமாகத் தொண்டுசெய்து, சுத்தமான மனமுடையவளாய்த் தான் வாழ்ந்து இறந்து எமனை அடைந்தாள்.

17. விதியன் வரையப் பிரம்மகுல மேவினள் காணே இம்மாது
சதியா யிவள்பின் ஜன்மத்தைச் சாற்றக்கேண்மோ துவரை [தன்னில்
இதுவே குலத்தில் தான்தோன்றி யிடரென் றோர்க்கு அன்னமீந்து
பதியில் வறுமை யில்லாமல் பாவை வாழ்வள் பார்வதியே.

17. பிரமதேவனால் எழுதப்பட்டுப் பிராமணர் குலத்தில் வந்து இவள் இப்பிறப்பில் பிறந்தாள். இவளுடைய மறுஜன்மத்தைச் சீக்கிரம் சொல்லுகிறோம். கேட்பீராக. இவள் மறுஜென்மத்தில் துவாரகையில் இப்போது பிறந்துள்ள பிராமண ஜாதியில் பிறந்து கஷ்டத்தை அடைந்திருக்கின்றோம் என்று சொல்லுபவர்களுக்குச் சாதம் கொடுத்து, தன்னுடைய புருஷன்வீட்டில் தரித்திரமும் கஷ்டங்களும் இல்லாமல் வாழ்வாள், பார்வதியம்மையே!

வேறு

18. தந்தையின் பூர்வம் தன்னைச் சாற்றுவோம் பெண்ணை ஓரம்
பிந்திய ஊரிலேதான் பிறந்தனன் கங்கை சேயாய்
வந்திடு மனைவி மைந்தர் வளமுள குடும்பி யாகி
நொந்தவர்க் கன்ன மீந்து நேர்ந்தனன் சேது தீர்த்தம் ;

18. ஜாதகருடைய தகப்பனாரின் முன்ஜன்மத்தைச் சொல்லுகிறோம். இவர் பெண்ணையாற்றின் கரை ஓரத்தில் ஒரு சிறிய வளமில்லாத கிராமத்தில் வேளாளர் தொழிலையுடைய குலத்தில் பிறந்து, மனைவி மக்கள் இவர்களைப் பெற்று, செழிப்பான ஒரு குடும்பமுடையவராகி, ஏழைகளுக்கும் கஷ்டமடைந்தவர்களுக்கும் சாதம் கொடுத்து, சேதுஸ்தலத்திற்குச் சென்று தீர்த்தமாடி ;

19. பலவித தலங்கள் சென்று பவமது யில்லா னாகிக்
குலவினன் காலன் பக்கல் குறைதலை வரையப் பட்டு
நலமுள பிரம்ம சேயாய் நாயக னுதித்தா னென்றோம்
தலைவன்பின் ஜன்மம் சொல்வேன் சங்கரி கேட்டி டாயே.

19. பிறகு இன்னும் அனேக புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்று, பாவம் ஒன்றுமில்லாதவராகி, இறந்து, எமனிடஞ்சென்று, தலையில் பிரமனால் எழுதப்பட்டு, இந்த ஜன்மத்தில் சௌக்கியமுள்ள பிராமண குலத்தில் பிறந்திருக்கின்றார் என்று சொல்லுகிறோம். இவருடைய மறு ஜன்மத்தைச் சொல்லுகிறேன், பார்வதியம்மையே ! கேட்பீராக.

20. பிருதிவி தலத்தி லேதான் பிறப்பனும் பிரம்ம சேயாய்
அரசரால் தொழிலும் பெற்று அதிகார முடைய னாகி
இருவினை யில்லா வாழ்வ னியம்பின மொழி குன்றாது
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

20. பிருதிவி ஸ்தலம் என்று சொல்லப்பட்ட காஞ்சீபுரத்தில் பிராமண குலத்தில் பிறப்பார். இராஜாங்கத்தில் ஒரு வேலையில் அமர்ந்து அதிகாரமுள்ளவராகி இருவினை என்ற நல்வினை தீவினையாகிய புண்ணியம், பாவம் இவைகள் இல்லாமல் வாழ்வார். நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும். அருமையான வேதங்களின் முடிவு என்ற உபநிஷத்துக்களில் விளங்குகின்ற பார்வதியம்மையே ! கேட்பீராக.

21. ஈரேழு ஆண்டு தன்னி லியம்புவோம் தந்தை கண்டம்
தீரமாய் முப்பா னைந்தில் செப்புவோ மன்னை கண்டம்
நாரியே அன்பா னைந்தில் நவின்றனன் துணைவன் சேஷ்டன்
மாரிபின் இரண்டு ஆண்டில் மரிப்பனும் பின்னோன் தானும்.

21. ஜாதகருடைய தகப்பனார் ஜாதகரது பதினான்காம் வயதில் * இறந்து விடுவார் என்று சொல்லுகிறோம். ஜாதகரது முப்பத்தைந்தாவது வயதில்

இவருடைய தாயார் இறந்து விடுவாளென்று சொல்லுகிறோம். பார்வதி யம்மையே! ஜாதகருக்கு ஐம்பத்தைந்தாவது வயதில் * மூத்த சகோதரன் இறந்துவிடுவார். இதற்குப் பிறகு இரண்டாவது வருஷத்தில் பின் சகோதரன் இறந்து விடுவார்.

**குறிப்பு.**—ஜாதகருக்கு வயது ஷ 13–0–0 முதல் ஷ 14–0–0 முடியும் வரையில் சுக்கிர தசையில் ராகுபுக்தி குருபுக்தி இவை நடக்கின்றன. பிதுர் லக்கினமாகிய மீனத்திற்கு மூன்றிற்கும் எட்டிற்கும் உடையவராகி சுக்கிரன் எட்டில் பிதுர்காரகனுகிய சூரியனுடன் கூடியிருக்கின்றார். ஆகையால் பராசரஹோரை ஜாதகசந்திரிகை 67-ஆவது சுலோகப் பிரகாரம் சுக்கிரன் மாரகனுகிறார். மேலும் குரு ஒன்பதிற் குடையவராகி, அஃதாவது பிதுர் லக்கினுதிபதியாகி, பிதுர்லக்கினத்திற்கு மாரகஸ்தானமாகிய பதினொன்றில் இருக்கின்றார். இவருக்கும் சுக்கிரனுக்கும் விரோதமுண்டு. ஆகையால் சுக்கிர தசையில் குருபுக்தியில் பிதுருக்குக் கண்டம் இருக்கிறது.

* **தாயார் விஷயம்.**—ஜாதகருக்கு வயது ஷ 34–0–0 முதல் ஷ 35–0–0 முடியும் வரையில் சந்திர தசையில் சனிபுக்தி நடக்கிறது. மாதுரு லக்கினமாகிய துலாத்திற்குப் பராசாரஹோரை ஜாதகசந்திரிகை 56-ஆவது சுலோகப் பிரகாரம் குரு மாரகனுகின்றார். குருவுடைய வீட்டிலும் மாரகஸ்தானமாகிய மூன்ருவது வீட்டிலும் சந்திரன் இருக்கின்றார். ஆகையால் பராசரஹோரை ஜாதகசந்திரிகை 25-ஆவது, 24-ஆவது சுலோகப் பிரகாரம் மாரகாதிபதி வீட்டிலிருக்கிற மாரகனுகிய சந்திரன் மாரகாதிபதியாகின்றார். மேலும், சந்திரன் மாதுருகாரகனுகி மாதுரு ஸ்தானத்திற்கு மூன்றில் இருப்பதால் மாதுருக்குத் தோஷத்தை யுண்டு பண்ணக் கூடியவராய் இருக்கின்றார். சனி துலாத்திற்கு மாரக ஸ்தானங்களாகிய இரண்டு ஏழாவது வீடுகளாகிய விருச்சிகத்தையும் மேஷத்தையும் பார்க்கின்றார். ஆகையால் சந்திர தசையில் சனிபுக்தியில் மாதுருக்கு மரணயோகமிருக்கிறது. **மூத்த சகோதரரின் விஷயம்:**—ஜாதகருக்கு வயது ஷ 54–0–0 முதல் ஷ 55–0–0 முடியும் வரையில் ராகுதசையில் சனிபுக்தி, புதன்புக்தி இவைகள் நடக்கின்றன. மூத்தோர் ஸ்தானம் 11-ஆவது பாவமாகிய ரிஷபம். ரிஷப லக்கினத்திற்குக் குரு மாரகனுக, பராசரஹோரை, ஜாதக சந்திரிகை 46-ஆவது சுலோகப் பிரகாரம் ஏற்படுகின்றார். இவர் 8-11-க்கு உடையவராகி மாரகாதிபதியாகவும் ஆகின்றார். இவர் நீசமடைந்திருக்கின்றார். மேலும் குரு எல்லோருக்கும் மூத்த சகோதரக்காரர். இவருடன் ராகு சம்மந்தப்பட்டிருப்பதால் ஜாதகசந்திரிகை 12-ஆவது சுலோகப் பிரகாரம் குருவுடைய மாரகத்தை ராகு ஏற்றுக்கொண்டு குருவின் பலனைக் கொடுப்பார். துய்ய கேரளம் 8-ஆம் பாவம் 20-ஆவது பாடலையும் பார்க்க, எட்டிற்குடையவருடன் சம்மந்தப்பட்ட ராகு மாரகனுக நேரிடுகிறார். புதன் இரண்டிற்குடையவராய் ரிஷபலக்கினத்திற்கு மாரகனுகிறார். இவர் லக்கினுதிபதியாகிய சுக்கிரனுடன் கூடி இருப்பதால் மேற்கண்ட துய்யகேரளப் பாடல் பிரகாரம் மாரகனுகிறார். ஆகையால் ராகுதசையில் புதபுக்தியில் மூத்த சகோதரனுக்கு மாரகயோகமிருக்கின்றது. மேலும் வயது 56–0–0 முதல் 57–0–0 வரையிலும் ராகுதசையில் புதபுக்தியே நடக்கின்றது.

22. உதித்தவன் மணத்தின் காலம் உரைக்கிறே மிருபா னைந்தி
லதிபதி வடகீழ் தன்னில் வருவளாம் குணத்தைச் சொல்வேன்
சதியிலா மனத்த ளாகும் சாதிப்பாள் சிலது சங்கை
துதிசெய்தோர்க் கன்ன மீவள் சொல்லது சுகமே யெய்தும்.

22. ஜாதகருடைய கலியாணமாகுங் காலத்தைச் சொல்லுகிறோம். இவருக்கு இருபத்தைந்தாவது வயதில் * மனைவி வடகிழக்குத் திக்கிலிருந்து வந்து வாய்ப்பாள். இவளுடைய குணாதிசயங்களைச் சொல்லுகிறேன். வஞ்சனையில்லாத மனமுடையவள். சில காரியங்களைச் செய்து முடிப்பாள். தன்னையோ கடவுளையோ தோத்திரஞ் செய்பவர்களுக்குச் சாதம் கொடுப்பாள். சுகமான வார்த்தைகளை உபயோகிப்பாள்.

* குறிப்பு.—ஜாதகருக்கு வயது ஷ 24-0-0 முதல் 25-0-0 முடியும் வரையில் சூரியதசையில் சந்திரன், அங்காரகன் ராகு இவர்கள் புக்திகள் நடக்கின்றன. களத்திரவிஷயத்தில் சம்மந்தமுள்ள இரண்டாம் பாவாதிபதியாகிய சூரியன் போகஸ்தானமாகிய நான்கில் களத்திரகாரனாகிய சுக்கிரனுடன் சம்மந்தப்பட்டிருக்கின்றார். அங்காரகன் ஐந்து பத்துக்குடையவராய்ச் சூரியனுடனும் சுக்கிரனுடனும் கூடி போகஸ்தானமாகிய நான்கிலிருந்துகொண்டு ஏழைப் பார்க்கின்றார். ஆகையால் சூரியதசையில் அங்காரகபுக்தியில் ஜாதகருக்கு விவாகயோக அமைப்பு இருக்கிறது.

23. வரன்மனம் போல வாழ்வள் மாதுநன் னடக்கை யுண்டு
திருமக ளொப்ப தாகும் செல்விக்கு வயது தீர்க்கம்
குறுமுனி யிவ்வாறு சொல்லக் கூறுவார் பராசர் தாமும்
இருமனை அணுகு மென்றே மெப்படிச் சொல்லு மென்ன ;

23. இவள் தன்னுடைய புருஷனுடைய மனதிற்கிசைந்தாப் போல வாழ்வாள். இவள் நல்ல நடவடிக்கையுடையவள். இலக்ஷ்மியைப் போலவிருப்பாள். இவளுக்கு வயது தீர்க்கமானது. இவ்விதமாக அகஸ்திய முனிவர் சொல்ல, பராசர முனிவர் சொல்லுகிறார். ஜாதகருக்கு இரண்டு மனைவிகள் வந்து நேரிடும் என்று சொல்லுகிறோம். எந்தக் காரணத்தினால் இவ்விதமாகச் சொல்லுகின்றீர் என்று கேட்க ;

வேறு.

24. சப்தமந் தன்னில் ராகுவு மிருக்கச் சனியனு மெட்டில் சேர
வித்தகன் தனக்கு மனைவிய ரிரண்டு மேவிடு மென் கருத்தையா
அத்திரி புகல்வார் ஏழுமிடத் தோனும் ஆட்சியா யிருப்ப தாலும்
பத்திய நாலோ ன்றுனும் பத்தோ னொன்றாய்ப் பரவியே யிருப்பத னாலும் ;

24. ஏழாவது பாவத்தில் ராகு இருப்பதாலும், சனி எட்டில் இருப்பதாலும் ஜாதகருக்கு இரண்டு மனைவி என்பது என்னுடைய அபிப்பிராயமையா என்று சொல்ல, அத்திரி ரிஷி சொல்லுகிறார். ஏழுக்குடையவர் ஆட்சியாய் இருப்பதாலும், நான்கிற்குடையவரும் பத்திற்குடையவரும் ஒன்றாய்ச் சேர்ந்திருப்பதாலும் ;

25. மறுமனம் காணன் மனைவியு மொன்றே வரைந்தனம் அம்மாது தனக்கு
உரைத்திடு முத்திரை யிரண்டென மொழிவோம் உறையுங்கா ரணங்களைப் புகல்வாய்
அறைகிறேம் முப்பா னெட்டினில் சோர ரவர்களால் முத்திரை நீங்கி
விரைவினில்வேறு முத்திரை நேரும் விளம்புவோ மிரண்டினில் விவரம்

25. ஜாதகருக்கு மறுபடியும் விவாகம் உண்டாகாது. மனைவி ஒருத்தி தான் என்று சொல்லுகிறேம். ஆனல் அந்த ஒரே மனைவிக்கு இரண்டு தாலி உண்டாகும் என்று சொல்லுகிறேம். காரணங்களைச் சொல்லுவீர் என்று கேட்க, ஜாதகருக்கு முப்பத்தெட்டாவது வயதில் * திருடர்களால் மனைவியிடமிருந்து தாலி விடுவிக்கப்பட்டு, உடனே சீக்கிரத்தில் இன்னொரு தாலிகட்டும்படி வந்து நேரிடும் என்று சொல்லுகிறேம். இதனுடைய விவரத்தை இரண்டாவது பாகத்தில் சொல்லுகிறேம்.

குறிப்பு.—ஜாதகருக்கு வயது (ஞு) 37–0–0 முதல் 38–0–0முடிவு வரையிலும் சந்திர தசையில் கேதுபுக்தி, சுக்கிரபுக்தி இவைகள் நடக்கின்றன. களத்திர லக்கினம் மகரமாகும். மகர லக்கினத்திற்குச் சந்திரன் பராசரஹோரை ஜாதகசந்திரிகை சுலோகம் 62, 63-ப்படி மாரகனுகின்ருர். மகர லக்கினத்திற்கு மாரக ஸ்தானமாகிய ஏழாவது வீட்டில் கேது இருக்கின்ருர். கேதுவுக்கும் சந்திரனுக்கும் விரோதமுண்டு. கேதுவும் சந்திரனும் ஒருவருக்கொருவர் ஆருவது எட்டாவது வீடுகளில் இருக்கின்ருர்கள். ஆகையால் கேது சந்திரதசையில் கெட்ட பலனைக் கொடுக்கக்கூடியவர். மேலும் சந்திரன் மகரலக்கினத்திற்கு மாரகனுய் ஏற்கனவே வருவதுமன்றி, பன்னிரண்டில் இருக்கின்ருர். ஆகையால் சந்திரதசையில் கேதுபுக்தியில் மனைவிக்குக் கண்டம் முதலிய கஷ்டங்கள் நேரிட அமைப்பு இருக்கிறது. இங்கு மனைவிக்கு மரணத்தைச் சொல்லாமல் அவளுடைய மாங்கல்யத்தைத் திருடன் அறுத்துக்கொண்டு போய்விடுவான். அதனல் அவளுக்கு பங்கம் நேரிட்டு அவள் இன்னொரு தரம் வேறு தாலியை அதே புருஷனுல் கட்டிக்கொள்ள நேரிடும் என்கிருர். இங்கு குரு ஆறுக்குடையவராய் ஏழில் நீசமாகவிருக்கின்ருர். அங்காரகன் ஏழைப் பார்க்கின்ருர். ஆகையால் திருடர் அக்கினி இவைகளால் மனைவிக்குக் கஷ்டம் நேரிட அமைப்பு இருக்கிறது. இரண்டு தாலி கட்டும்படியான அமைப்புள்ள இன்னொரு ஜாதகம் மிதுனலக்கின வால்யூம் என்ற புத்தகத்தில் இருபதாவது ஜாதகமாகும். இவ்விரண்டு ஜாதகங்களையும் ஒத்துப் பார்க்கவும்.

26. சுதர்களு மிருநான் காகத் தோன்றிடும் சிலது சேதம்
சதமுட னண்பா லொன்று தங்கிடும் பெண்பால் ரண்டு
இதுமூன்றும் தீர்க்க மெய்தும் ஏகிடும் முதலாம் நான்கும்
அதுவின்றி ஆறு ஏழும் அந்தமும் சேத மாமே.

26. ஜாதகருக்கு எட்டு சந்ததிகள் உண்டாகும். சில குழந்தைகள் இறந்துவிடும். ஆண் குழந்தை ஒன்றும் பெண் குழந்தைகள் இரண்டும் நிலைக்கும். இந்த மூன்று குழந்தைகளும் நீண்ட வயதையுடையவர்களாக விருப்பார்கள். முதற் குழந்தையும் நான்காவது குழந்தையும் இறந்துவிடும். இதுவுமல்லாமல் ஆறாவது ஏழாவது குழந்தைகளும் கடைசி குழந்தையாகிய எட்டாவது குழந்தையும் இறந்துவிடும்.

**குறிப்பு.**—புத்திர தோஷம் விஷயம்.—புத்திரஸ்தானம் ஐந்தாவது ஒன்பதாவது பாவமாகும். ஐந்திற்குடையவரான அங்காரகன் ஐந்திற்குப் பன்னிரெண்டில் சூரியனுடன் கூடி அஸ்தமடைந்திருக்கிறார். மேலும் இவர் சந்ததிக்குத் தோஷத்தை விளைவிக்குந் தன்மையுடையவரும் பகைவருமான புதனுடன் கூடி இருக்கின்றார். ஐந்தாவது பாவத்தையும் ஒன்பதாவது பாவத்தையும் ராகு பார்க்கின்றார். ஐந்தாவது பாவத்தைச் சனி ஏழுக்குடையவரும் எட்டிற்குடையவருமாகிப் பார்க்கின்றார். ஏழுக்குடையவர் அல்லது எட்டிற்குடையவர் புத்திர ஸ்தானத்தைப் பார்த்தால் புத்திர தோஷமுண்டு என்பர். புத்திரகாரகனாகிய குரு பாபக்கிரகமாகிய சனியின் வீட்டில் நீசமடைந்து ராகுவுடன் கூடி இருக்கின்றார். குரு ஒன்பதாம் அதிபதியாகவும் இருக்கின்றார். ஆகையால் புத்திர தோஷம் அதிகமாகவிருக்கின்றது.

27. முன்னிவ னிருந்த ஜன்மம் மொழிகிறோம் தாயே கேளும்
பன்னிய மலைநாட தன்னில் வைசிய குலமே தோன்றிப்
பொன்னொடு பணிதி உண்டாய்ப் புகழான குடும்பி யாகித்
தன்னினத் தவர்க்கு மேலாய்த் தரணியில் செட்டுச் செய்து ;

27. ஜாதகருடைய முன் ஜன்மத்தைச் சொல்லுகிறோம். எங்கள் தாயாராகிய பார்வதியம்மையே கேட்பீராக. நெருங்கிய மலைகளுள்ள மலை நாட்டில் வைசிய குலத்தில் பிறந்து, தனம் ஆபரணம் இவைகளை அடைந்து, பெருமையான குடும்பியாகித் தன்னுடைய பந்துக்களைவிட அதிக பெருமையுடனும் செல்வாக்குடனும் பூமியில் அதிகமான வியாபாரஞ் செய்து ;

28. சேதுவின் பதிக்குச் சென்று தேறினோர்க் கன்ன மீந்து
தீதென்றோர்க் குதவி செய்து திருமாலின் பக்தி கொண்டு
மாதவர்க் குதவி யாகி மார்க்கத்தில் தாகப் பந்தல்
சூதான காலன் பக்கல் சேர்ந்தன னென்று சொல்வோம்.

28. சேது ஸ்தலத்திற்குப் போய் சுத்தமான மனத்தையுடையவர்களுக்கும் பரதேசிகளுக்கும் சாதம் போட்டும், கஷ்டத்தை அடைதிருக்கின்றோம் என்று சொன்னவர்களுக்கு உபகாரஞ் செய்தும், மகாவிஷ்ணுவின் மேல் பக்தியுடையவராகி, முனிவர்களுக்கும் தபசிகளுக்கும் உதவி செய்தும், ஜனங்கள் போக்கு வரத்து வழிகளில் தாக விடாயைத் தீர்க்கத் தண்ணீர் பந்தல்களை ஏற்படுத்தியும், பிறகு இறந்து எமனிடம் போய்ச் சேர்ந்தாரென்று சொல்லுகிறோம்.

29. கஞ்சனால் வரையப் பட்டுக் காளையு மிச்சென் மத்தில்
முந்திய குலமு திப்பான் விருத்தரும் கேட்க லுற்றார்
தஞ்சமாய் முன்சென்மத்தில் தனவைசிய குலத்தில் வந்தோன்
கொஞ்சிய பிரம்ம சேயாய்க் குலவும்கா ரணங்க ளென்ன ;

29. பிரம தேவனால் எழுதப்பட்டு இவர் இந்த ஜன்மத்தில் மேன்மையான முதற் குலமான பிராமணர் குலத்தில் பிறப்பார். இதன் மேல் விருத்தர் என்ற முனிவர் கேட்கின்றார். முன்ஜன்மத்தில் பிராமணர் குலத்தைவிடத் தாழ்ந்த குலமாகிய வைசிய குலத்தில் தனமுடையவராகப் பிறந்தவர் மேன்மையான பிராமண குலததில் இந்த ஜன்மத்தில் பிறந்ததற்குக் காரணங்களைச் சொல்லுவீர் என்று கேட்க ;

30. முன்ஜன்மம் மாலின் பக்தி முயர்வோர்க்கு அன்ன மீந்து
உன்னத சேதுச் சென்றும் உயர்தாகப் பந்தல் வைத்தும்
அன்னவன் வாழ்ந்த தாலே அருளுவவான் பிரம்ம சேயாய்
உன்னத யானை பெற்ற உத்தமி கேட்டிடாயே.

30. ஜாதகர் தன்னுடைய முன்ஜன்மத்தில் மகாவிஷ்ணுவின் மேல் பக்தி உடையவராய் பெரியோர்களுக்கும் உயர்ந்த குணங்களை யுடையவர்களுக்கும் சாப்பாடு போட்டு, மேன்மையான சேது ஸ்தலத் திற்குப் போய் சிறப்பாகத் தாகவிடாய் தீர்க்கும் தண்ணீர்ப் பந்தலை ஏற்படுத்தி வாழ்ந்து வந்ததால், அருளைப் பெற்று இந்த ஜன்மத்தில் பிராமணராகப் பிறந்தார். மேன்மையான யானை முகத்தையுடைய விநாய கரைப் பெற்றெடுத்த உத்தமியாகிய பார்வதியம்மையே ! கேட்பீராக.

31. வந்தவன் தனக்குச் சேதி வரைகிறோம் தாயே யாங்கள்
விந்தையாய்க் கல்வி யாலும் விளங்கிடும் கிராமச் செட்டுத்
தன் தனம் செலவு செய்து தானவன் கொள்வா னாகும்
தந்தைநாள் பூமி விருத்தி தானுமே செய்வா னாகும்

31. இந்த ஜாதகருடைய விஷயங்களை நாங்கள் சொல்லுகிறோம், பார்வதியம்மையே ! ஆச்சரியமாய் வித்தையைக் கற்று அதனால் தன் னுடைய கிராமத்தின் வியாபாரத்தைத் தன்னுடைய பணத்தைச் செலவு செய்து அடைவார். மேலும் தன்னுடைய தகப்பனாருடைய காலத்தி லிருந்து வருகிற பூமிகளைப் பயிரிட்டு விருத்தி செய்வார்.

32. இல்லமும் புதிதாய்ச் செய்வ னீரொன்ப தாண்டு தன்னில்
நல்லக விகளால் லாபம் நயப்புறும் பெரியோ ராலே
சொல்லுவே னிருபா னைந்துள் தொடர்ந்திடும் கிராமச் செட்டு
வல்லியே நாற்பா னாண்டில் வரைந்தன மரசு தானே.

32. ஜாதகர் பதினெட்டாவது வயதில் புதிய வீட்டைக் கட்டு வார். இவருக்குப் பதினெட்டாவது வயதில் மேன்மையான படிப்புக் களாலும் அன்புள்ள பெரிய மனுஷர்களின் உதவியாலும் லாபம் உண்டாகும். இவர் இருபத்தைந்து வயதிற்குள் தன்னுடைய கிராம

வியாபாரத்தை ஆரம்பித்து விடுவார். இவருக்கு நாற்பது வயது வரையிலும் இராஜாங்க வேலை உண்டு என்று சொல்லுகிறோம், பார்வதியம்மையே !

33. குடும்பத்தின் சேதி தன்னைக் கூறுவோம் நாலாண்டு
திடமதாய் விளங்கு மென்றோம் செப்புவோம் தன்மேல் வேறு
அடவுடன் பதினே மூாண்டில் அக்கினி யில்லம் நேரும்
தடவரை மகளே பின்பால் சாற்றுவோம் விவர மாக.

33. ஜாதகருடைய குடும்பத்தின் விஷயங்களைச் சொல்லுகிறோம். இவருக்கு நான்கு வயது வரையிலும் குடும்பம் வலிவாக ஓங்கி வளரும். அதற்கு மேல் வேறு விதமாக் விருக்கும். இவருக்குப் பதினேமூாவது வயதில் தென் கிழக்குத் திக்கில் ஒரு வீடு வந்து சம்பவிக்கும். விசாலமான இமய மலையின் அரசனாகிய பர்வத ராஜனுடைய மகளாகிய பார்வதியம்மையே ! விவரமாகப் பலன்களைப் பின்னால் அடுத்த பாகத்தில் சொல்லுகிறோம்.

34. ஜனித்திடும் காலம் தன்னில் சிகி[1] தசை ஆண்டு மூன்றும்
குனித்திடு திங்க ளாறும் கூறுவோம் பலனை யாங்கள்
வினைவரும் ஜாத கர்க்கு மிக்கநாற் காலி பீடை
துணைவரும் விருத்தி யாகும் செப்புவோம் விவரம் ரண்டில்.

34. ஜாதகர் பிறக்குங் காலத்தில், துக்கத்தை விளைவிக்கக் கூடிய கேது தசை வருஷம் மூன்று மாதம் ஆறும் ஆகும். இதற்குப் பலனை நாங்கள் சொல்லுகிறோம். ஜாதகருக்குக் கெடுதிகள் சம்பவிக்கும். அதிகமான கால்நடைகளுக்கு நோயுண்டாகும். சகோதரங்கள் விருத்தியாவார்கள். மற்ற விவரங்களை இரண்டாவது பாகத்தில் சொல்லுகிறோம்.

---

1 கேது

## ஜாதகம் 61

| | | | |
|---|---|---|---|
| குரு | ராகு | | |
| | இராசி சக்கரம். | | லக்கினம் |
| அங்காரகன் | | | சுக்கிரன் |
| சந்திரன் | | சூரியன் புதன் கேது | சனி |

மூலம் 2-ஆம் பாதம் : கேது தசை இரு 4—4—0

1. திங்களும் [1] தனசுவாகச் சேய் [2] மானில் [3] குருவு மீனம்
அங்கையன் [4] புந்தி [5] ஞானி [6] பகர்த் துலை [7] காரி [8] கன்னி
துங்கமாம் வெள்ளி [9] சீயம் [10] ஜன்மமும் கடக மாக
இங்கிவை கிரகம் நின்றாலி யியம்புவீர் பலனைத் தானே.

1. சந்திரன் தனுசிலும், அங்காரகன் மகரத்திலும், குரு மீனத்திலும், சூரியன், புதன், கேது, இவர்கள் துலாத்திலும், சனி கன்னியிலும், பெருமையுள்ள சுக்கிரன் சிம்மத்திலும், ராகு மேஷத்திலும், ஜன்ம லக்கினம் கடகமும் ஆகி, இவ்விதமாக கிரக நிலைகள் இருந்தால் பலனைச் சொல்லுவீர் என்று;

குறிப்பு.—இந்த ராசிச் சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்தமுடைய தாகும்: மேஷத்தில் புதனும், ரிஷபத்தில் சந்திரனும் சனியும், சிம்மத்தில் ராகுவும் கன்னியில் அங்காரகனும் தனுசில் சுக்கிரனும், மகரத்தில் சூரியனும், கும்பத்தில் கேதுவும் மீனத்தில் குருவும் ஆகும்.

2. சுந்தரி கேட்கும போது செயமுனி புகலுகின்றார்
வந்தது ஆணும் ஜன்மம் வடவாசல் கீழ்மேல்வீதி
இந்திர நகர மாகும் இராசர்கள் வாசமாகும்
அந்தஇல் வாடையாகும் யானையின் முகத்தோன் மேற்கில்.

2. பார்வதியம்மை கேட்கும் போது ஜய முனிவர் சொல்லுகின்றார். வந்து பிறந்த குழந்தை ஆண் குழந்தையாகும். பிறந்த வீதி கிழக்கு மேற்குத் தெருவாகும். வீடு வடவண்டை வாடையாகும். பிறந்த ஊர்

[1] சந்திரன் [2] அங்காரகன் [3] மகரம்
[4] சூரியன் [5] புதன் [6] கேது
[7] துலாம் [8] சனி [9] சுக்கிரன் [10] சிம்மம்

தேவேந்திரபட்டணம் போல விருக்கும். அரசர்கள் அவ்வூரில் வாசஞ் செய் வார்கள். பிறந்த வீட்டின் வாடையில் மேற்குத் திக்கில் யானையின் முகத் தையுடைய விநாயகக் கடவுளின் கோயில் இருக்கும்.

3. இன்னமும் பலதே வாசமி வ்வித அடையாளத்துள்
அன்னவ னுதிப்பா னுகும் அவன்தந்தை தாயின் யோகம்
தன்துணை களத்திர புத்திரர் சாதகன் யோக சேதி
முன்பின்ஜன் மங்கள் யாவு முரைக்கிறே மிந்நூல் தன்னில்.

3. இன்னமும் பல தேவர்கள் அந்தப் பட்டணத்தில் வாசஞ் செய்வார்கள். இவ்விதமான அடையாளங்களுள்ள விடத்தில் ஜாதகர் பிறப் பார். இவருடைய தகப்பனுர் தாயார் இவர்களுடைய யோகம், இவருடைய சகோதரங்கள் மனைவி புத்திரர்கள் இவருடைய யோகவிஷயங்கள், முன் ஜன்மம், பின் ஜன்மம் ஆகிய இவைகள் எல்லாவற்றையும் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகிறோம்.

4. தந்தையின்துணை ஆண் ஒன்று சாற்றுவோம் தீர்க்க மாகப்
பிந்தின துணைவனுகப் பேசுவோம் தாயேகேளும்
நொந்திடும் மற்றதெல்லாம் நுவலுவோம் பிதாகுணத்தைச்
சிந்தையும் நல்ல தாகும் சிவந்த மெய் வாத தேகி.

4. ஜாதகருடைய தகப்பனுக்கு ஒரு ஆண் சகோதரர்தான். அவர் நீண்ட ஆயுளை உடையவர் என்று சொல்லுகிறோம் இந்தச் சகோ தரன் இளைய சகோதரன் என்றும் சொல்லுகிறோம். பார்வதியம்மையே! கேட்பீராக. மற்றச் சகோதரர்கள் எல்லாம் இறந்து விடுவார்கள். ஜாதகருடைய தகப்பனுருடைய குணதிசயங்களைச் சொல்லுகிறோம்: அவருக்கு நல்ல எண்ணங்களுண்டு. அவர் சிவப்பு நிறமாயுள்ள தேகமுடையவர். வாதசரீர முடையவர் ஆவா.

5. அன்னையும் பகையு மெய்தும் அல்பவஸ் துக்களு மிஷ்டன்
மன்னர் பால் ஜீவிப்பானும் மருவிடும் கல்வி ரெண்டு
அன்னிய பாஷை மேன்மை அவன்தந்தை ஆஸ்திகாணுன்
கன்னென மொழியே சொல்வன் காவலர் நேசம் கொள்வன்.

5. அவருக்குத் தாயார் விரோதியாக விருப்பார். அவருக்கு அற்பமான வஸ்துக்களின்மேல் ஆசையுண்டு. அரசர்களிடத்தில் தொழிலை யுடையவர். இரண்டுவித கல்வி உண்டு. அன்னிய பாஷை மேன்மையாகத் தெரியும். அவருக்குப் பிதுரார்ஜித சொத்து கிடையாது: இனிமையான வார்த்தைகளைப் பேசுவார். அரசர்களுடைய சினேகிதத்தை அடைவார்.

6. சொந்தமா யில்சேர்ப் பானுகும் செம்பஞ்சு கட்டில் மெத்தை
வந்தவர்க் கன்ன மீவன் மனைவியால் பெருமை எற்பன்
நிந்தைகள் தாயால் நேரும் நிதம்சுகி போச னத்தான்
முந்துமால் பத்தி கொஞ்சம் முனிவுண்டு பின்னுல் தாழ்வன்.

6. அவர் சொந்தமாக வீட்டை அடைவார். கட்டில் மேன்மையான பஞ்சுமெத்தை இவைகளை அடைவார். தன்னிடம் வந்தவர்களுக்குச் சாப்பாடு போடுவார். மனைவியால் அவருக்கு மேன்மையும் பெருமையுமுண்டாகும். அவருக்குத் தன்னுடைய தாயாரால் கெட்ட பெயர் உண்டாகும். அவருக்குத் தினந்தோறும் சுகமான சாப்பாடு உண்டு. முதலில் அவருக்கு மகாவிஷ்ணுவின்மேல் கொஞ்சம் பக்தியும் நம்பிக்கையும் உண்டாகும். கோபமுண்டாகும், பின்னால் அது குறைந்துவிடும்.

7. கரமதில் சங்குச் சக்கரம் கனத்தப்புத் திகளு முண்டு
உறன்முறை மெச்சவாழ்வன் ஊகைவான் கணக்கில் தேர்வன்
நெறியதைத் தவறுதல் செய்யான் நீரின்மேல் பிரிய ருவன்
குறையென்றோர்க் குதவி செய்வன் கொம்பனை யாளே கேளாய்.

7. அவருடைய கையில் சங்கு சக்கர ரேகைகளுண்டு. பெரும் புத்திகளையுடையவர். பந்துக்கள் அவரை மெச்சும்படியாக மேன்மையாக வாழ்வார். யுக்தி உள்ளவர். கணக்குப் போடுவதில் கெட்டிக்காரர். நல்ல ஒழுக்கம் சன்மார்க்கம் இவைகளைத் தவறாமல் உடையவர். ஜலத்தைக் கண்டால் அதிக ஆசையுடையவர். கஷ்டமுள்ளவர்களுக்கும் ஏழைகளுக்கும் உபகாரஞ் செய்வார். மேன்மையான பார்வதியம்மையே! கேட்பீராக.

8. இந்நெறி யுடையா னுக்கு யிவனுமே யிரண்டாம் ஜன்மம்
அன்னவ தினுப்பா னாகும் அறைகிறே மவன் குணத்தைத்
தன்தேகம் உணச்சல் நீட்சி சாரும்பின் வயதில் வாயு
உன்னத கலைகள் கற்பன் உயர்வான தொழிலு மேற்பன்.

8. இப்படிப்பட்ட குணங்களையுடைய தகப்பனுக்கு ஜாதகர் இரண்டாவது குழந்தையாகப் பிறப்பார். ஜாதகருடைய குணாதிசயங்களைச் சொல்லுகிறோம். இவருடைய தேகம் ஒல்லியாகவும் நீண்டும் இருக்கும். பிந்தியவயது காலத்தில் இவரது தேகம் வாயு தேகமாகப் பருத்துவிடும். உயர்ந்த வித்தைகளைக் கற்றுக்கொள்ளுவார். உயர்ந்த மேன்மையான வேலையை அடைவார்.

9. அரசரால் தொழிலு மேற்பன் அற்பரை உறவு கொள்ளான்
பரிவண்டி யுடைய னாகும் பகை யென் றுமனத்தில் வைய்யான்
பெருமையா யதிகாரத்தைப் பேணுவான் போஜன சுகிய னுவன்
நறைமலர் இஷ்டம் கொள்வன் நாயகி மார்கள் மோகன்.

9. அரசர்களிடத்தில் வேலையில் இருப்பார். தாழ்ந்தவர்களிடத்தில் சிநேகமில்லாதவர். குதிரை வண்டி உடையவர். தன்னுடைய மனதில் விரோதமில்லாதவர். மேன்மையான அதிகமான அதிகாரத்தின்மேல் ஆசையுடையவர். சுகமான போஜனத்தை யுடையவர். வாசனையுடைய புஷ்பங்களில் ஆசையுள்ளவர். பெண்களின்பேரில் காம ஆசை உடையவர்.

10. நல்லவன் நல்ல வர்க்கு லண்டர்க்கு மிண்ட னுவன்
புல்லிய புத்தி யில்லான் புண்ணிய மனத்தா னுவன்
தொல்லேஅல் லல்களில்லான் யாரையும் உறவு கொள்வன்
எல்லேக ளதிகம் சேர்ப்பன் ராஜபூஜிதனு மாவன்.

10. ஜாதகர் நல்லவர்களுக்கு நல்லவராக விருப்பார். முரடர்களுக்கும் முட்டாள்களுக்கும் வலிவுடையவனுகவும் சலிக்காதவனுகவும் இருப்பான். தாழ்ந்த புத்தியில்லாதவர். புண்ணியத்தைச் செய்யக்கூடிய நல்ல மனத்தை யுடையவர். கஷ்டங்களேயும் தொந்தரவுகளேயும் அடையாதவர். எல்லோரையுஞ் சினேகஞ் செய்துகொள்வார். அதிகமான பூமிகளேச் சேகரிப்பார் அரசர்களால் போற்றக் கூடியவருமாவார்.

11 தன்துணே முன்னுேர் காணுன் தங்காது பின்னு மவ்வாறு
மன்னிய ஆணும் ஜன்மம் மீனராசி அஸ்த நாளாம்
அன்னவன் வருவா னுகும் அவன்குணம் சிவந்த மெய்யன்
பொன்பணி சேர்ப்பா னுகும் புயபல முடைய னுமே.

11. ஜாதகருக்கு முன்னே பிறந்த சகோதரங்கள் கிடையாது, பிறந்தாலும் உயிருடன் இருக்காது. பின்னுல் பிறக்குஞ் சகோதரம் ஆண் சகோதரமாகும். இந்த இளேய சகோதரன் மீன ராசி லக்கினத்தில் அஸ்த நட்சத்திரத்தில் பிறப்பார். இவருடைய குணுதிசயங்களேச் சொல்லுகிறேம். இவர் சிவப்பு நிறமுள்ள தேகத்தை யுடையவர். தனமும் ஆபரணங்களும் சேர்த்து வைப்பார். தோள்வலிவுடையவர்.

12. அரசர்பூசிதமெய்தும் அன்னிய கல்வி யாலே
பெருமையும் தொழிலும் வாய்க்கும் பூமியில் சல்லியம் காணுன்
மறுவரைவசித் தேவெல்வன் வண்டிவாகனமு முள்ளான்
திருமகள் வாசமுள்ளான் சென்றிடும் பெருமை யேற்பன்.

12. அரசர்கள் இவரைப் போற்றுவார்கள். அன்னிய பாஷை வித்தையால் இவருக்குப் பெருமையும் உத்தியோகமும் கிடைக்கும். இவருக்குக் கடன்கள் கிடையாது. பகைவரை மயக்கியோ அல்லது வசியஞ் செய்தோ வென்று விடுவார். வண்டியையும் வாகனத்தையு முடையவர். இலக்ஷிமி இவரிடம் வாசஞ் செய்வாள். இவர் கீர்த்தியையும் பெருமையையும் அடைவார்.

13. வஞ்சக வஞ்ச னுவன் வசனமும் சுகமு மெய்தும்
அஞ்சிடான் யாவருக்கும் அரிபக்தி பூண்பா னுகும்
மிஞ்சிய வார்த்தைசொல்வன் மெல்லியும் மொன்றே யாகும்
நஞ்சாகும் சுதர்க ளென்றேம் நல்காது என்று சொல்வோம்.

13. கபடமுள்ளவர்களுக்குக் கபடமுள்ளவராக விருப்பார். சுகமாகவும் இனிப்பாகவும் வார்த்தைகளே உபயோகிப்பார். யாருக்கும் பயப்படாதவர். மகாவிஷ்ணுவின்மேல் பக்தியுடையவர். வார்த்தைகளே அத்து

மீருமல், அ.:.தாவது கொஞ்சமாகச் சொல்லுவார். இவருக்கு ஒரே பெண் குழந்தையுண்டு. பிள்ளைகள் தீமையை அடைந்து விடுவார்கள், அஃதாவது இறந்து விடுவார்கள்.

14. மறுபாரி ஒன்று தோன்றும் அவளுக்குச் சுதராண் ஒன்று
அரிவைமா ரிரண்டு என்றோம் அவன்சிலநாட்கள் ஒன்றுய்ப்
பரவிப்பின் வேருய்ச் செல்வன் பகருவோம் பின்பால் சேதி
பெருவயி ரோனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

14. இவருக்கு இன்னொரு மனைவி ஏற்படும். இவளுக்கு ஓர் ஆண் குழந்தையும் இரண்டு பெண் குழந்தைகளும் இருக்கும் என்று சொல்லுகிறோம். இவர் சிலகாலம் ஜாதகருடன் ஏககுடும்பத்தில் ஒன்றுக விருந்து பின்னுல் குடும்பத்தை விட்டுப் பிறிந்து போய்விடுவார். இவருடைய மற்ற விஷயங்களைப் பின்னுல் பின் பாகத்தில் சொல்லுகிறோம். பெரிய வயிற்றையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றப் புண்ணியவதியாகிய பார்வதி யம்மையே ! கேட்பீராக.

15. பின்துணை பெண்பா லொன்று பேசுவோம் தீர்க்க மாக
அன்னவள் சேதி பின்பால் அறிவிப்போம் தாயே யாங்கள்
இன்னவன் மணத்தின் காலமி யம்புவோ மீரோன் பானில்
கன்னிகை மேல்பால் நேரும் கழறு வோமவள் குணத்தை.

15. ஜாதகருக்கு இளைய சகோதரி ஒருத்தி நீண்ட ஆயுளை யுடையவள். அவளுடைய விஷயங்களைப் பின்னுல் பின்பாகத்தில் நாங்கள் சொல்லுகிறோம் எங்கள் தாயாராகிய பார்வதியம்மையே, ஜாதகருடைய விவாக காலத்தைச் சொல்லுகிறோம். இவருக்குப் பதினெட்டாவது வயதில் † மனைவி மேற்குத் திக்கிலிருந்து வருவாள். அவளுடைய குணதிசயங்களைச் சொல்லுகிறோம்.

**குறிப்பு.**— † ஜாதகருக்கு வயது ஸ்ரீ 17-0-0 முதல் ஸ்ரீ 18-0-0 முடியும் வரையிலும் சுக்கிரதசையில் குருபுக்தி சனிபுக்தி இவைகள் நடக்கின்றன. களத்திர சம்மந்தமான இரண்டாவது வீட்டில் போகஸ்தானமாகிய நான்காம் பாவத்திற்குரிய சுக்கிரன் இருப்பதால் இவருக்கு விவாகஞ் செய்துவைக்க அதிகாரம் இருக்கிறது. சனி களத்திரம் சம்மந்தமான ஏழாம்பாவத்திற்கு அதிபதியாகிச் சுக்கிரனுக்கு இரண்டில் குருவின் பார்வையை அடைந்து இருக்கின்றுர். ஆகையால் சனிக்கு விவாகம் செய்யும் அதிகாரம் இருக்கிறது.

16. புத்திமான் சிவந்த மேனி புகலுமுன் கோபி யாவள்
சித்தமே கறுப்பு மில்லாள் தேவியும் யோக சாலி
நத்தினோர்க் குதவிசெய்வள் நாயகன் மனம் போல் வாழ்வள்
வித்தகி சீல மாவள் வீண்வம்பில் செல்லா ளாமே.

16. இவள் புத்திசாலியாயிருப்பாள். சிவப்பான நிறமுடைய தேகத்தையுடையவள். முன்கோபத்தை யுடையவள். இவளுடைய மனது களங்கமில்லாமல் இருக்கும். இவள் யோக முடையவளாக விருப்பாள். தன்

விடம் வந்தடைந்தவர்களுக்கு உபகாரஞ் செய்வாள். புருஷனுடைய மனத்திற்கு ஒத்தாப்போல் வாழ்வாள். இவள் அறிவுடையவள். நல்லொழுக்கமுடையவள். வீண்சண்டைக்குப் போகமாட்டாள்.

17. அறமதி லிச்சை யுண்டு அணுகிடும் பித்தச் சூடு
திருமக ளொப்ப தாகும் தீரமா மனத்தா ளாகும்
அறைகிறோம் புத்திர பாவம் ஒன்பது தோன்று மென்றோம்
திறமாக ஆண்பால் ரண்டு செல்விமார் மூன்று என்றோம்.

17. இவள் தர்மஞ் செய்வதில் ஆசையுள்ளவள். பித்தச் சூடான தேகமுடையவள். இலக்ஷ்மியைப்போல விருப்பாள். தைரியமான மனத்தையுடையவள். இவளுக்குப் புத்திர பாவத்தைப்பற்றிச் சொல்லுகிறோம். இவளுக்கு ஒன்பது குழந்தைகள் பிறப்பார்கள் என்று சொல்லுகிறோம். இரண்டு ஆண் குழந்தைகளும், மூன்று பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளையுடையவர்கள் என்று சொல்லுகிறோம்.

18. மற்றவை சேத மெய்தும் மாதுரு குணத்தைச் சொல்வேன்
சுத்த மும் சிவந்த மேனி சொல்லாத சுகமுமெய்தும்
பத்தினி நடக்கை நன்மை பெருந்தந்தம் முன்கோ பத்தாள்
வித்தகி வந்த பின்பு வரனுக்கு யோகம் வாய்க்கும்.

18. மற்றக் குழந்தைகள் இறந்து விடுவார்கள். ஜாதகருடைய தாயின் குணாதிசயங்களைச் சொல்லுகிறேன். இவள் சுத்தமான சிவப்பான தேகத்தை யுடையவள். சொல்லொணச் சுகங்கள் இவளுக்குத் தானே வந்து நேரும். இவள் கற்புடையவள். நல்ல நடவடிக்கையும் ஒழுக்கமும் உடையவள். பெரிய பற்களை யுடையவள். முன்கோபமுடையவள். இவள் தன்னுடைய புருஷனை வந்தடைந்த பிறகு புருஷனுக்கு யோகமுண்டாகும்.

19. சொல்லது அதிக மெய்தும் துணைஆண்பால் தோஷ மெய்தும்
வல்லிமா ரிருவர் தீர்க்கம் மரித்திடு நான்கு என்றோம்
புல்லிய புத்தி யில்லாள் பணிகளும் அதிகம் சேர்ப்பள்
அல்லல்பேர்க் குதவி செய்வள் அன்புள மனத்தா ளாமே.

19. இவள் அதிகமாகப் பேசுவாள். இவளுக்கு ஆண் சகோதரர்கள் தோஷத்தை அடைவார்கள், இறந்துவிடுவார்கள். இரண்டு சகோதரிகள் நீண்ட ஆயுளை உடையவர்கள். நான்கு சகோதரர்கள் இறந்துவிடுவார்கள் என்று சொல்லுகிறோம். தாழ்ந்த புத்தியில்லாதவள். ஆபரணங்களை அதிகமாகச் சேர்த்துவைப்பாள். துன்பத்தை யடைந்தவர்களுக்கு உபகாரஞ் செய்வாள். விசுவாசமுள்ள மனத்தையுடையவள் ஆவாள்.

20. வந்ததோர்வினையைச் சொல்வேன் விரதத்தில் விரோதம் செய்தாள்
முந்தினோர்க் கிடைஞ்சல் செய்தாள் மொழியதைத் தடுத்து வாழ்ந்தாள்
பந்தியில் வஞ்சம் செய்தாள் படர்ந்தது அந்தத் தோஷம்
அந்திய காலம் தன்னில் அற்பமாம் குடும்பி யாகி;

20. இவளுக்கு வந்து சம்பவித்தப் பாவத்தைச் சொல்லுகிறேன். இவள் விரதங்களைச் செய்வதில் விரோதமாகவும் குற்றமாகவும் நடந்து கொண்டாள். பழைய காலத்து மனுஷர்களுக்கும் வயது சென்றவர்களுக்கும் பிராமணர்களுக்கும் இக்கட்டுகளையும் கெடுதிகளையுஞ் செய்தாள். தன் புருஷனுடைய வார்த்தைகளைத் தடுத்து அதற்கு மாறுபாடாக நடந்து வாழ்ந்து வந்தாள். ஜனங்களுடைய சபையில் கூட்டத்தில் வஞ்சனையாக நடந்து கொண்டாள். இந்த தோஷங்கள் எல்லாம் இவளை வந்து அணுகின. இவள் தனக்குக் கடைசி காலத்தில் குடும்பம் நொந்து சிறுத்துப்போய்;

21. அன்னையின் பூர்வம் சொல்வேன் அருணைக்குத் தென்பா லாகச்
சின்னஊர் தன்னி லேதான் ஜனித்தனள் மறைக்குலத்தில்
பொன்பணி யுடையா ளாகிப் புகழ்ந்தோர்க் குதவிசெய்து
தன்சுதர் அனேகமுண்டாய்த் தையலும் வாழும் நாளில் ;

21. ஜாதகருடைய தாயின் முன்ஜன்மத்தைச் சொல்லுகிறேன். இவள் திருவண்ணாமலைக்குத் தெற்கில் ஒரு சிறிய கிராமத்தில் பிராமண குலத்தில் பிறந்தாள். தனமும் ஆபரணமும் உடையவளாகித் தன்னைப் புகழ்ந்து பேசினவர்களுக்கு உபகாரஞ் செய்து, தனக்கு அனேகம் குழந்தைகள் பிறந்து வாழ்கின்ற காலத்தில் ;

22. காரகப் பிணியு மாகிக் காலன்தன நாட டைந்து
தீரமாய்ப் பிரமன் லக்கம் தேவியும் வந்தாளென்றேம்
நாரியும் முன்ஜன் மத்தில் நன்மறைக் குலமு தித்தோள்
பாரினில் குலம்தாழ் வாகப் பிறந்தகா ரணங்கள் சொல்வீர்.

22. இவள் காரக ரோகத்தால் இறந்து, எமப் பட்டணத்திற்குச் சென்று, வலிவாய்ப் பிரமதேவனால் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றாள். இவள் முன்ஜன்மத்தில் நல்ல பிராமண குலத்தில் பிறந்து, பூமியில் இந்த ஜன்மத்தில் தாழ்ந்த குலத்தில் வந்து பிறந்ததற்குக் காரணங்களைச் சொல்லுவீர்.

23. விரதங்கள் குறைவு செய்தும் வாய்த்ததோ ரிடைஞ்சல் செய்தும்
அரிவையும் வாழ்ந்த தாலே அணுகினாள் குலம்தாழ் வாக
வரன்சொல்லைத் தடுத்த தோஷம் மைந்தர்கள் தோஷ மெய்து
உறையில்லம் பாழ தாகும் உறும்துணை ஆண்பால் தோஷம்.

23. இவள் முன் ஜன்மத்தில் விரதங்களைக் குறைவுடனும் தோஷங்களுடனும் செய்தும், பெரிய இக்கட்டுகளைச் செய்தும் வாழ்ந்து வந்ததால் இந்த ஜன்மத்தில் தாழ்ந்த ஜாதியை அடைந்தாள், முன் ஜன்மத்தில் தன்னுடைய புருஷனுடைய வார்த்தைகளை மீறி நடந்த தோஷத்தால், ஆண் குழந்தைகளுக்குத் தோஷமுண்டாகும். தான் வசிக்கின்ற வீடு பாழாகும். இவளுக்கு ஆண் சகோதரர்கள் தோஷங்களை அடைவார்கள்.

24. வந்துபின் பிறைபோல் யோகம் வானுக்கு நேரு மென்றோம்
பிந்திய ஜன்மம் சொல்வேன் பிருதிதி தன்னி லேதான்
பிந்திய குலமு திப்பாள் பேதையே கேட்டி டாயே
தந்தையின் பூர்வம் தன்னைச் சாற்றுவோ மினிமே லாக.

24. இவள் புருஷனை வந்து அடைந்த பிறகு புருஷனுக்கு யோகம் வளர்பிறைச் சந்திரனைப்போல விருத்தியடையும் என்று சொல்லுகிறோம். இவளது மறுஜன்மத்தைச் சொல்லுகிறேன். பிருதிவி ஸ்தலமாகிய காஞ்சீ புரத்தில் தாழ்ந்த குலத்தில் வந்து பிறப்பாள். பார்வதியம்மையே! கேட்பீராக. ஜாதகருடைய தகப்பனுடைய முன்ஜன்மத்தை இனிமேல் சொல்லுகிறோம்.

25. தில்லையில் வைசியச் சேயாய் ஜனித்துமே செட்டுச் செய்து
வல்லியும் மதலை யுண்டாய் வளமுள குடும்பி யாகித்
தொல்லையில் லாமல் வாழ்ந்தாள் சூழ்ந்ததோர் வினையைச் [சொல்வேன்
கொல்லையில் கருப்பன்[1] வாசம் குலதெய்வ மென்று சொல்லி.

25. ஜாதகருடைய தகப்பன் சிதம்பரத்தில் வைசிய குலத்தில் ஆணாகப் பிறந்து வியாபாரஞ் செய்துகொண்டு மனைவி மக்களை யுடையவராகி மேன்மை தங்கிய செழிப்பாயுள்ள ஒரு குடும்பத்திற்கு அதிபதியாகிக் கஷ்டங் களும் கடன்களும் இல்லாமல் வாழ்ந்துவந்தார். அப்போது அவருக்கு வந்து சம்பவித்த ஒரு பாவத்தைச் சொல்லுகிறேன். அவருடைய கொல்லையில் வீட்டுப் புழக்கடையில் ஸ்திரீகளின் கர்ப்பப்பையிலுள்ள கருவுகளை நாசஞ் செய்யுங்காரணத்தால் கருமுனி என்று சொல்லப்படுகிற ஒரு முனீச்வரன் வாசஞ் செய்துகொண்டு வந்தார். இவரைத் தங்களுடைய குல தெய்வம் என்று சொல்லிப் பாவித்து.

26. முன்னோர்கள் தோத்த ரிப்பார் முனிவாழும் விருக்ஷம் தன்னைத்
தன்வேலை புரிய வேண்டித் தரித்தானும் இவனும் என்றோம்
இல்லறம் போன பின்பு ஏகிற்று வேறு இல்லம்
துன்முனி புகலு கின்ற தோஷத்தைச் சொல்வேன் கேளாய்.

26. ஜாதகருடைய தகப்பனுடைய முன்னோர்களாகிய மூதாதை கள் துதித்து வந்தார்கள். இந்த முனீசுவரன் வாசஞ்செய்துகொண் டிருந்த வாசஸ்தலமாகிய ஒரு மரத்தை இந்தத் தகப்பன் தன்னுடையதனது காரியம் முடிவு பெறுவதற்காக வெட்டிவிட்டார். பிறகு இந்த முனீசு வரன் தன்னுடைய இல்லமாகிய, வாசஸ்தலமாகிய விருக்ஷம் போய்விட்ட பிறகு இன்னொரு வாசஸ்தலத்துக்குப் போய்விட்டார். இந்தத் துன்ப மடைந்த முனீசுவரன் சொல்லுகின்ற சாபத்தைச் சொல்லுகிறேன். பார்வதியம்மையே! கேட்பீராக.

---

[1] முனீச்வரன்.

27. இருப்பிட மழித்த பாவி இனிவரும் ஜன்மம் தன்னில்
பிறக்குமிவ் வில்லம் நீங்கிப் பேணுவாய் வெளியூர் தன்னில்
சிறக்காது தந்தை ஆஸ்தி ஜனித்தசேய் யிரண்டு பங்கு
மரிக்குமே என்று சொல்லி வசனித்து முனியும் தானும்.

27. "என்னுடைய வாசஸ்தலத்தை அழித்துவிட்ட பாபியாகிய நீ, மறு ஜன்மத்தில் உன்னுடைய பிறந்த வீட்டை விட்டு வெளியூருக்குப் போய்விடுவாய். உனக்கு உனது தகப்பனுருடைய சொத்து விருத்தி யாகாது. உனக்குப் பிறக்கும் குழந்தைகளில் (மூன்றில்) இரண்டு பங்கு குழந்தைகள் இறந்துவிடும்" என்று இவன் தகப்பனைப் பார்த்து அந்த முனீசுவரன் விவரமாகச் சொல்லிற்று.

28. கருமுனி சாபம் தானும் கலந்திடு மிச்சென் மத்தில்
பெருந்தந்தை யில்ல மின்றிப் பிறக்குமசேய் மூன்றி லிரண்டு
மறலியின் பதிக்குச் சேரும் மன்னனும் சுகமாய் வாழ்வன்
வறுமைக ளில்லா வாழ்வன் மருமத்தைச் சொல்லு மென்ன ;

28. இந்த முனீசுவரனுடைய சாபமானது தகப்பனுரை இந்த ஜன்மத்தில் வந்து அடையும். ஆகையால் தகப்பன் தன்னைப் பெற்றத் தகப்பனுடைய வீடு இல்லாமலும் தனக்குப் பிறக்கும் குழந்தை களில் மூன்று பங்கில் இரண்டு பங்கு குழந்தைகள் இறந்தும் இவர் சுகமாய் வாழ்வார். தரித்திரமும் கஷ்டங்களும் இல்லாமலும் வாழ்வார். இதற்கு ரகசியமான காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்க.

29. மந்திரி[1] ஒன்பா னிற்க மங்கலன்[2] உச்ச மாக
இந்திர போக முண்டு இராஜபூ சிதமு மெய்தும்
முந்துமா லருளி னுலே யுயர் வான குடும்பி யாவன்
பிந்திய பாகம் தன்னில் பேசுவோம் விவர மாக.

29. குரு ஒன்பதாம் பாவத்தில் இருப்பதாலும், அங்காரகன் மகரத்தில் உச்சமாக விருப்பதாலும், ஜாதகருடைய தகப்பனுருக்கு இந்திர போகமுண்டாகும். தகப்பனுர் இராஜாங்கத்தில் போற்றப்பட்டவர். முன் ஜன்மத்திய மகாவிஷ்ணுவினுடைய கிருபையினுல் மேன்மையான குடும்ப முடையவராவார். பிந்திய பாகத்தில் விபரங்களை விஸ்தாரமாகச் சொல்லுகி ரேம்.

30. மறுஜன்மம் மலைநா டன்னில் மன்னர்தம் குலமு திப்பான்
கரிபரி யுடையா னுகிக் காவலன் வாழ்வா னுகும்
திருமக னிச் சென்மத்தில் தாய்ப்பகை அல்ப வஸ்து
அருந்தியும் பொருள்மே லிச்சை அரிபக்தி கொஞ்ச மாயும் ;

30. தகப்பனுர் மறு பிறப்பில் மலை நாட்டில் அரசர் குலத்தில் பிறப்பார். யானை குதிரை இவைகளை யுடையவராகி வாழ்வார். இவர் இந்த

[1] குரு. [2] அங்காரகன்.

ஜன்மத்தில் தாயாரைப் பகைத்துக்கொண்டும், அற்பமான வஸ்துக்களைச் சாப்பிட்டும், பொருள்களின்பேரில் ஆசையுடையவராகி விஷ்ணு பக்தியுடையவராயும் ;

31. கொண்டவன் மறுபி றப்புக் கோவலர் குலமு திக்கும்
கண்டிதம் சொல்லு மென்னக் கழறுவோம் முனியே கேளும்
குண்டுணி கூறு தாலும் கதியிலார்க் குதவி செய்தும்
துண்டமாய் வார்த்தை யின்றி துறவோர்க்கு அன்ன மீந்தும் ;

31. இருந்தவருக்கு மறு ஜன்மத்தில் அரசர்களுடைய குலத்தில் பிறப்பதற்குக் காரணத்தைக் கண்டிப்பாய்ச் சொல்லுமென்று கேட்க சொல்லுகிறோம், முனியே ! கேட்பாயாக. இவர் கோள் சொல்லாமலிருந்ததாலும், ஏழைகளுக்கும் வசதியில்லாதவர்களுக்கும் உபகாரஞ் செய்ததாலும், கடினமான வார்த்தைகளை உபயோகிக்காமல் துறவிகளுக்கும் பரதேசிகளுக்கும் சாதம் கொடுத்ததாலும் ;

32. நல்லதோர் தலங்கள் சென்றும் நாயகன் வாழ்வ தாலும்
புல்கினன் அரசர் வர்க்கம் பிறப்பனு மென்று சொல்வோம்
சொல்லுவேன் உதித்தோன் பூர்வம் திருவானைக் காவல் தன்னில்
கொல்லன்தன் குலமு தித்து குவலய நல்லோனாகி ;

32. திவ்வியமான புண்ணிய க்ஷேத்திரங்களுக்குச் சென்று வாழ்ந்ததாலும் இராஜ வம்சத்தில் பிறப்பார் என்று சொல்லுகிறோம். ஜாதகருடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறேன். திருவானைக்காவல் என்ற க்ஷேத்திரத்தில் கம்மாளர் குலத்திற் பிறந்து பூமியில் நல்லவனாகவிருந்து ;

33. அறுமுகன் பக்தி கொண்டு அறமதி லிச்சை யுண்டாய்
வருமார்க்கம் தாகப் பந்தல் வைத்துமே அதிதிக் கன்னம்
குறையென்றோர்க் குதவி செய்தும் கூற்றன்தன் பதிக்குச் சென்று
பிரமனால் வரையப் பட்டுப் பிறப்பனும் வடுகர் வமிசம்.

33. முருகர்மேல் பக்தி உடையவராகி, தருமத்தில் ஆசையுண்டாகி, ஜனங்கள் போக்குவரத்து வழியில் தாகவிடாயைத் தீர்க்கத் தண்ணீர் பந்தல் வைத்து, பரதேசிகளுக்குச் சாப்பாடு போட்டு, கஷ்டத்தையும் வறுமையையும் அடைந்திருக்கின்றோம் என்று சொன்னவர்களுக்கு உபகாரஞ் செய்தும், பிறகு இறந்து, எமனுடைய பட்டணத்திற்குச் சென்று பிரமதேவனால் எழுதப்பட்டு, இந்த ஜன்மத்தில் வடுகர் குலத்திற் பிறந்தார்.

34. வந்தவன் பொதுயோ கத்தை வரைகிறோம் ஜனனம் தொட்டு
இந்தவன் மரண மட்டும் இளம்பிறை போலே யோகம்
தன்தனம் நாட்கு நாளாய்ச் சேர்ந்திடும் கல்வி மேன்மை
இந்திர போக முண்டு இல்லமும் இரண்டு நேரும்.

34. ஜாதகருடைய பொதுவான யோக பலாபலன்களைச் சொல்லுகிறோம். இவருடைய ஜெனனகாலம் முதற்கொண்டு இவருடைய மரணகாலம் வரையிலும் வளர்பிறை சந்திரனைப் போல யோகம் விருத்தியாகும். இவருக்கு நாளடைவில் தனம் வந்து சேரும். வித்தை விருத்தி

யாகும், மேன்மையை அடையும். இவருக்குச் சகல இந்திரியங்களுக்கும் சுகமும் இன்பமும் உண்டாகக்கூடிய அமைப்பு, அதாவது தேவேந்திர போக அமைப்பு இருக்கிறது; இவருக்கு இரண்டு வீடுகள் கிடைக்கும்.

35. கேசரி யோக மொன்று கேதார யோக மொன்று
பேசுவோம் பலன்கள் தம்மைப் பிரபல புகழு மேற்பன்
காசுக ளதிகம் சேர்ப்பன் காலாள்க ளுடைய னுகும்
பேசினில் சோரா னுகும் பெரிதான தொழிலு மேற்பன்.

35. இவருக்குக் கேசரி யோகம் என்ற ஒரு யோகமும், கேதார யோகம் என்ற இன்னொரு யோகமும் இருக்கின்றன. இந்த யோகங்களின் பலன்களைச் சொல்லுகிறோம். இவருக்குப் பிரபலமான கீர்த்தியும் பெருமையும் உண்டாகும். தனம் அதிகமாக வந்து சேரும். இவருக்கு வேலைக்காரர்கள் உண்டு. இவர் பேசுவதில் சளைக்கமாட்டார், இளைக்கமாட்டார். பெரிய உத்தியோகத்தை அடைவார்.

குறிப்பு.—கேசரியோகம்—சந்திரனும் குருவும் ஒருவருக்கொருவர் கேந்திரத்தில் இருப்பதால் கேசரியோகம் இருக்கிறது. இது விஷயமாக ஜாதக அலங்காரம் என்ற தமிழ்ப் புத்தகம் 274, 276-ஆவது பாடல்களையும், ஜாதக பாரிஜாதம் 7-ஆவது அத்தியாயம் 116-ஆவது சுலோகத்தையும், பலதீபிகை 6-ஆவது அத்தியாயம் 10-ஆவது சுலோகத்தையும் பார்க்கவும். கேதார யோகத்தைப்பற்றிக் கீரனூர் நடராஜர் செய்த தமிழ் ஜாதக அலங்காரம் 321; 372—376-ஆவது பாடல்களையும், சாராவளி 21-ஆவது அத்தியாயம் 19—49-ஆவது சுலோகங்களையும், ஜாதகசிந்தாமணி 1970, 2042-ஆவது பாடல்களையும், பலதீபிகை 8-ஆவது அத்தியாயம் 35-ஆவது சுலோகத்தையும், பிருஹஜ்ஜாதகம் 12-ஆவது அத்தியாயம் 10-ஆவது சுலோகத்தையும், ஜாதக கணிதம் 2-ஆம் பாகம் 6-ஆவது அத்தியாயம் 88-ஆவது அயிட்டத்தையும், பிருகுசம்ஹிதாந்தர்கத யோகாவளி என்ற கிரந்தத்தையும் பார்க்கவும். பிருகுசம்ஹிதைப் பிரகாரம் நைசர்க்கிகபாபியாகிய சனி மூன்றில் இருப்பதால் (6- 8- 12-இல் பாபிகள் இல்லை) கேதாரயோகம் ஜாதகருக்கு இருப்பதாகத் தோற்றுகிறதே தவிர, ஜாதக கணிதம் தவிர மற்றக் கிரந்தங்கள் ரீதியாய்க் கேதார யோகம் ஜாதகருக்கு இருப்பதாகத் தோற்றவில்லை. சந்திர ரீதியாய்ப் பிதுர்ஸ்தானம் சிம்மம். இந்தச் சிம்மலக்கினத்திற்குப் பிதுருக்கும் பிருகு சம்ஹிதாப் பிரகாரமும் ஜாதக கணிதப் பிரகாரமும் கேதாரயோகம் இருப்பதாகத் தோற்றுகிறது. ஜாதகலங்காரம் 376-ஆவது பாடல் பிரகாரமும் பிதுர் லக்கினமாகிய சிம்மத்திற்குக் கேதார யோகம் இருப்பதாகத் தோற்றுகிறது. இதற்குப் புதன் சந்திரனுக்குப் பதினொன்றிலிருக்க வேண்டும் என்றும், ஜன்மாதி " நோக்கமுற " என்பதற்குப் பதிலாகக் கூடி இருக்க என்றும் பாவிக்க வேண்டும்.

36. நினைத்ததை முடிக்க வல்லன் நிருபர்களிஷ்டம் கொள்வன்
கனத்தபுத் திகளு மூண்டு கட்டுரை பகரா னுகும்
வினையெண்ணுன் யாவ ருக்கும் விருந்தினர்ப் பிரிய னுவன்
துணைவனை ஆத ரிப்பன் சொல்லதைக் காப்பா னுமே.

36. இவர் நினைத்த காரியத்தைச் செய்து முடிக்குஞ் சக்தியுடையவர். அரசர்களுடைய சினேகமும் அன்பும் இவருக்கு உண்டு. இவருக்குப் பெருமை, மேன்மையான புத்தியுண்டு. புனைந்த வார்த்தைகளையும் பொய்யான வார்த்தைகளையும் சொல்லமாட்டார். யாருக்கும் கெடுதியையும் துன்பத்தையும் நினைக்கமாட்டார். விருந்தாளிகளிடம் விசுவாசமாக விருப்பார். தன்னுடைய சகோதரனைக் காப்பாற்றுவார். தான் சொல்லும் வார்த்தைகளைத் தவறிடாமல் நிறைவேற்றுவார்.

37. அன்னையின் குடும்பம் வேறு அணுகிடும் பாலனுக்குக்
கன்மநாள் சொல்லு மென்னக் காவலன் முப்பா னென்பான்
பின்தனில் தந்தை கண்டம் சென்றுபின் மூன்று ஆண்டில்
அன்னைக்குத் தோஷ மெய்தும் அறைந்தது தப்பா தாமே.

37. தாயாருடைய குடும்பமும் ஜாதகரை வந்து அடையும். தாய் தந்தையர்களுக்குக் கர்மம் எப்போது நேரிடும் என்பதைச் சொல்லுவீர் என்று கேட்க, ஜாதகருக்கு முப்பத்தொன்பதாவது வயதில் பின் பாகத்தில் தகப்பனருக்கு மரணம் நேரிடும். இதற்குப் பிறகு மூன்ருவது வருஷத்தில் தாயாருக்கு மரணமுண்டாகும். நாங்கள் சொல்லுவது தவறிடாமல் நடக்கும்.

குறிப்பு.—தகப்பன் விஷயம்—ஜாதகருக்கு வயது ஷூ 38-0-0 முதல் ஷூ 39-0-0 முடியும் வரையிலும் சந்திர தசையில் கேதுபுக்தி சுக்கிரபுக்தி இவைகள் நடக்கின்றன. ஒரு பாவாதிபதி தன்னுடைய தசாபுத்தி காலங்களில் அந்தப் பாவத்தால் குறிக்கப்பட்டவர்களுக்கு மரணத்தை உண்டு பண்ணக்கூடும் என்று சாஸ்திரங்கள் சிலவற்றில் சொல்லப்பட்டிருக்கின்றது. இங்கு குரு பிதுர்பாவாதிபதி. இதற்கு இவர் கேந்திராதிபதி தோஷத்தை அடைகிறார். சில கிரந்தங்களில் குரு மீனலக்கினத்திற்கு அசுபர் என்றும் சொல்லி இருக்கிறது. இவருடைய வீட்டில் சந்திரன் இருக்கின்றார். சந்திரன் பிதுர்ஸ்தானத்திற்குப் பத்தில் இருக்கின்றார். மேலும், சந்திரன் கேதுவினுடைய நக்ஷத்திரமாகிய மூலத்தில் இருக்கின்றார். கேது மீனத்திற்கு மாரகஸ்தானமாகிய எட்டில் இருந்து கொண்டு சந்திரனைப் பார்க்கின்றார். ஆகையால் சந்திரனுக்குப் பிதாவை மாரகஞ் செய்ய அதிகாரம் வருகிறது. மீனத்திற்கு எட்டில் கேது இருப்பதால் கேதுவுக்குப் பிதாவைமாரகஞ் செய்ய அதிகாரம் உண்டு என்று மேலே சொன்னோம். சுக்கிரன் மீனத்திற்கு 3, 8-க்குடையவராய் இருந்து ஆறில் இருப்பதால் சுக்கிரனுக்குக்கூட பிதாவை மாரகம் செய்ய அதிகாரம் இருக்கிறது. கேது சுக்கிரன் இவர்களில் கேது தன் அதிகாரத்தைச் சந்திரனுக்கு மாற்றிவிடுவதால் கேதுவிற்குச் சுக்கிரனை விடப் பிதுருக்குத் தன் புக்தியில் மாரகஞ் செய்ய அதிகாரம் இருப்பதாகத் தெரியவில்லை. ஆகையால் சுக்கிரனுக்குத் தன் புத்தியில் மாரகஞ் செய்ய அதிக அதிகாரம் இருப்பதாகத் தெரிகிறது.

தாய் விஷயம் :—மாதுருஸ்தானம் துலாம். துலா லக்கினத்திற்குப் பராசரஹோரை சில பதிப்பிலும், ஜாதக சந்திரிகை 56-ஆவது சுலோகம் பிரகாரம் அங்காரகன் மாரகனல்ல. குருவும் சூரியனும் மாரகர்கள். ஜாத

கருக்கு வயது ௵ 41-0-0 முதல் 42-0-0 வரையிலும் அங்காரக தசையில் அங்காரகன், ராகு, குரு இவர்களுடைய புக்திகள் நடக்கின்றன. ஆகையால் அங்காரகதசையிலேயே இங்கு மாதுருக்கு மாரகம் என்று சொல்லி இருக்கின்றது. பம்பாயில் லக்ஷ்மீ வேங்கடேசுவர பிரசில் சாலிவாகன சகம் 1845-ஆவது வருஷத்தில் பதிப்பித்த பராசரஹோரையில் துலாலக்னத்திற்குச் செவ்வாய் மாரகனுகின்றுன் என்று சொல்லி இருக்கிறது. ராகு துலாத்திற்கு மாரகஸ்தானமாகிய ஏழிலும், சந்திரனுக்கு துர்ஸ்தானமாகிய மீனத்திற்கு இரண்டிலும் மாரகஸ்தானத்திலும் இருப்பதாலும், அங்காரகபுக்தி, ராகு புக்தி இவைகளில் ராகு புக்தி அதிகமான அதிகாரத்தை யுடையதாகவிருக்கிறது.

38. அறுபது ஏழு ஆண்டில் ஆடிமா தத்திலேதான்
திருமக னுடலம் ஏகும் தடுத்துமே பராசர் சொல்வர்
இருநான்கு ஆண்டுக் குள்ளே யிவனுடை உடலம் ஏகும்
உறைகுவீர் அந்தச் சங்கை உதையத்தில் கேது சக்கரம் ;

38. ஜாதகருக்கு அறுபத்தேழாவது வயதில் ஆடி மாதத்தில் மரணமுண்டாகும் என்று சொல்ல, பராசர முனிவர் மறுத்துச் சொல்லுகின்றுர். எட்டு வயதிற்குள்ளே ஜாதகர் இறந்து விடுவார் என்று பராசர் சொல்லி, அதற்குக் காரணங்களைச் சொல்லும் என்று கேட்கின்றுர். அதற்கு முதலாவது தசையாகக் கேது தசை ;

குறிப்பு.—ஜாதகருக்கு வயது ௵ 66-0-0 முதல் ௵ 67-0-0 வரையிலும் குரு தசையில் குரு புக்தி நடக்கின்றது. இங்குக் குரு தசையில் தான் ஜாதகருக்கு மாரகம் என்று சொல்லி இருக்கின்றது. கடக லக்கினத்திற்குக் குரு ஆறுவது பாவாதிபதியாகி, புதனுடைய நட்சத்திரமாகிய ரேவதியில் இருக்கின்றுர். கடக லக்கினத்திற்குப் புதன் மாரகர். இவர் தன்னுடைய அதிகாரத்தைத் தன் நட்சத்திரத்திலுள்ளக் குருவுக்கு மாற்றி விடவே குரு மாரகாதிபதியாக ஏற்படுகின்றுர். குமாரசாமி யத்தில் ஆறுமாதிபதிகூட மாரகராகின்றுர்.

39. நடப்பதால் கண்டம் நேரும் நவின்றனம் முனியே நாங்கள்
அடவுடன் பொன்னே[1] னென்பான் அரவுமே[2] தசத்தில் நிற்கத்
திடமுடன் வயது தீர்க்கம் செங்கதிர் முன்பனிப் போலே
உடன்பிணி நீங்கி யேதான் உத்தமன் தீர்க்க ஜீவி.

39. (இ-ள்) நடப்பதால் ஜாதகருக்கு மரணம் நேரிடும் என்று, முனிவரே! நாங்கள் சொல்லுகிறோம். அதற்குக் குரு ஒன்பதாமிடத்தில் இருப்பதாலும், இராகு பத்தாமிடத்தில் இருப்பதாலும், ஜாதகருக்கு நீண்ட ஆயுளுண்டு, சூரியனைக் கண்ட பனிபோல ஜாதகருக்கு நேரிடும் நோய்கள் உடனே நிவர்த்தியாகி ஜாதகர் தீர்க்க ஜீவியாய் இருப்பார் என்று முனிவர் சொல்லுகிறுர்.

குறிப்பு.—ஜாதகருக்கு வயது விஷயம்—லக்கினத்தைக் குரு பார்க்கின்றுர். நைசர்க்கி சுபர்களாகிய குரு ஒன்பதிலும், சுக்கிரன் இரண்டிலும்

[1] குரு. [2] ராகு.

புதன் நான்கிலும் இருப்பது ஆயுளுக்கு அனுகூலமானது. மணிகண்ட கேரளம் " அரிஷ்காண்டம்—பாலாரிஷடம் " 18-ஆவது பாடலையும், " பிரதி அரிஷ்டகாண்டம் " 40-ஆவது பாடலையும் பார்க்கவும். கேந்திரங்களில் நைசர்க்கிக பாபிகள் இருப்பது ஆயுளுக்குப் பிரதிகூலமானது. சூரியன் நான்கிலும், அங்காரகன் ஏழிலும் இருப்பதைப்பற்றி மணிகண்டகேரளம் அரிஷ்டகாண்டம் பாலரரிஷ்டம் 11-ஆவது பாடலைப் பார்க்கவும். பாபிகள் கேந்திரங்களில் இருப்பதைப்பற்றிப் பிருஹஜ்ஜாதகம் 6-ஆவது அத்தியாயம் 7-வது சுலோகத்தையும், ஜாதகபாரிஜாதம் பலதீபிகை இவைகளையும் பார்க்க வும். ஆயுள் சம்பந்தமான லக்கினுதிபதியான சந்திரன் 6-இலும் எட்டிற் குடைய சனி 3-இல் குருவின் பார்வையுடனும், பத்திற்குடைய அங்காரகன் உச்சமாயும் இருக்கின்றுர்கள். சந்திரன் தவிர மற்றவர்கள் இப்படியிருப்பது ஆயுளுக்கு அனுகூலமானது. துய்யகேரளம் 8-ஆம்பாகம்4-ஆவதுபாடல்களைப் பார்க்கவும். ஆகையால் ஜாதகருக்கு " மத்திமாயுளில் பூர்ணுயுள் " என்ற 66⅔ வருஷம் ஆயுள் யோக அமைப்பு இருக்கிறது. மேலும் எட்டிற்குடைய வர் எட்டிற்கு எட்டாகிய மூன்றில் இருப்பது ஆயுள் விருத்திக்கு அனுகூல மானது என்றும் சில கிரந்தங்களில் சொல்லியிருக்கின்றது. ஆயுள் காரக ருகிய சனி மூன்றில் இருப்பது ஆயுள் தீர்க்கத்திற்கு அனுகூலமானது. புலிப்பாணி ஜோதிடம் முன்னூறில் 50-ஆவது பாடலைப் பார்க்கவும்.

**40.** பின்ஜன்மம் துவரை தன்னில் பிறப்பனும் பிரம்ம சேயாய்ப்
பொன்பொரு ளுடைய ருகிப் புகழான குடும்பம் பெற்று
இன்னவன் வாழ்வா ருகு மியம்பின மொழிகுன் ருது
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே.

**40.** ஜாதகர் தன்னுடைய மறு ஜன்மத்தில் துவாரை என்று சொல்லப்படுகிற துவாரகையில் பிராமண குலத்தில் பிறப்பார். இவர் தன மும் சொத்துகளும் உடையவராகி, பெருமையான குடும்பத்தை அடைந்து வாழ்வார். நாங்கள் சொல்லும் வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும். சிறந்த யானை முகத்தையுடைய விநாயகரைப் பெற்றெடுத்த பார்வதி யம்மையே ! கேட்பீராக.

**41.** அரவுமே[1] தசமம் நின்று அந்தணன்[2] ஒன்பான் திறக
உறைகுவீர் பலனை நீங்கள் உதித்தவன் தருமம் செம்பொன்
அறுமூன்று யிரம்பொனெ ன்றேம் அவன் திருப்பணியும் [செய்வன்
பெரிதான திகிரி செய்து போகுவான் இந்தப் பாலன்.

**41.** இராகு பத்தாவது பாவத்தில் இருப்பதாலும், குரு ஒன்ப தாவது பாவத்தில் இருப்பதாலும் நீங்கள் பலனைச் சொல்லுவீர்கள். ஜாதகர் பதின்மூன்றுயிரம் பொன்கள் செலவு செய்து தருமஞ் செய்வார் என்று சொல்லுகிறேம். கோயில் வேலைகளைச் செய்வார், ஒரு பெரிய தேர் செய்து வைத்து, பிறகு இந்த ஜாதகர் இறந்து விடுவார்.

---

[1] இராகு. [2] குரு.

42. உதித்தபின் ஸ்திரமா மில்லம் உறைந்திடும் பால னுக்கு
நிதியினால் வேறு இல்லம் நேர்ந்திடும் மூவா றுண்டில்
பதியது உப்ப ரிக்கை பண்ணுவ னென்று சொல்வோம்
அதிதியை ஆத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

42. ஜாதகர் பிறந்த பிறகு நிலையான ஒரு வீடு உண்டாகும். இவருக்குப் பதினெட்டாவது வயதில் பணம் செலவு செய்து இன்னொரு வீடு வந்து சேரும். தான் வாசஞ் செய்யும் வீட்டை உப்பரிகையாக, மெத்தை வீடாக மாற்றிவிடுவார் என்று சொல்லுகிறோம். பரதேசிகளையும் யாசகர்களையும் காப்பாற்றுகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

43. முப்பது இரண்டாண் டுக்கும் விளம்பினோம் தந்தை யோகம்
ஒப்புடன் மரண மட்டும் உதவியாம் அரசர் தம்மால்
எப்போதும் வறுமை காணன் இயம்பின மொழிகுன் றுது
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழிகுன் றுது.

43. ஜாதகருக்கு ப்பத்திரண்டு வயது வரையிலும் தன்னுடைய தகப்பனுருக்கு யோகமுண்டு என்று சொல்லுகிறோம். ஜாதகர் இறந்து போகும் வரையிலும் இவருக்கு அரசர்களால் உதவி உண்டாகும். எந்தக் காலத்திலும் இவருக்குத் தரித்திரமும் கஷ்டங்களும் கிடையா. நாங்கள் சொல்லுகின்ற வார்த்தைகள் தவறிப்போகாமல் நடக்கும். பாம்பைத் தன்னுடைய சடையில் தரித்துள்ள பரமசிவனுடைய மனைவியாகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லுகின்ற வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும்.

44. இருபது நாலாண் டின்மேல் இவனுக்கு ராஜயோகம்
பெருகிடும் அன்பா றுறும் பிரபல புகழு மெய்தும்
திருகது நேரா தாகும் செப்பின மொழிகுன் றுது
அருமறை முடிவி லாடும் அம்பிகை புகன்றிட் டோமே.

44. ஜாதகருக்கு இருபத்துநான்கு வயதிற்குமேல் ஐம்பத்தாறு வயது வரையிலும் ராஜயோகம் உண்டாகி அதிகப்பட்டுக்கொண்டே வரும். அதிகமான பலமான கீர்த்தியும் பெருமையும் உண்டாகும். இதற்கு மாறுபாடாக, பிணக்காக ஒன்றும் நேரிடாது. நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும். அருமையான வேதங்களின் முடிவு என்ற உபநிஷத்துக்களில் விளங்குகின்ற பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிவிட்டோம்.

45. ஜனித்திடும் காலம் தன்னில் செம்பாம்பு தசையி ருப்புக்
குனித்திடு ஆண்டு நாலும் கழறுவோம் திங்கள் நாலும்
வினைவரும் ஜாத கர்க்கு மேவிடும் துணையின் விருத்தி
கனமுடன் இல்லம் சேரும் கழறுவோம் பின்பால் சேதி.

45. ஜாதகர் பிறந்த காலத்தில் கேது தசையில் இருப்பு கணிதப் பிரகாரம் நான்கு வருஷமும் நான்கு மாதமும் என்று சொல்லுவோம். ஜாதகருக்குக் கஷ்டங்கள் இக்காலத்தில் வந்து நேரிடும். பிறகு விலகிவிடும். இளைய சகோதரம் உண்டாகி விருத்தியாகும். மேன்மையுடன் வீடு வந்து நேரிடும். மற்ற விஷயங்களைப் பின்னால் பின்பாகத்தில் சொல்லுகிறோம்.

# ஜாதகம் 62

1. திங்களும்[1] தேள[2] தாகச் சனிமானில்[3] பணியுங்[4] கன்னி
கனமெனக் கதிர்[5]சேயும்[6] மேடம் பளிங்கன் [7]பொன் [8]கேது மீனம்
பொங்கிய புதனும் நந்தி[9] பேசுவோம் ஜன்மம் நண்டு[10]
இங்கிவை கிரகம் நின்று லியம்புவீர் பலனைத் தானே.

| | | | |
|---|---|---|---|
| சுக்கிரன் குரு கேது | சூரியன் அங்காரகன் | புதன் | |
| | இராசி சக்கரம் | | லக்கினம் |
| சனி | | | |
| | சந்திரன் | | ராகு |

அனுஷம்—1-ஆம் பாதம், சனி தசை ௵ 16–6–0.

1. சந்திரன் விருச்சிகத்திலும், சனி மகரத்திலும், இராகு கன்னியிலும். வலிவுள்ள சூரியனும் அங்காரகனும் மேஷத்திலும், சுக்கிரன் குரு கேது மீனத்திலும், வலிவானப் புதன் ரிஷபத்திலும் இருக்க, ஜன்மலக்கினம் கடகம் என்று சொல்லுகிறோம். இவ்விதமான கிரக அமைப்புகள் இருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீராக.

**குறிப்பு.**—இந்த ராசிச் சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரகநிலை பொருத்தமுடையதாகும் :—சந்திரன் கேது சனி சிம்மத்திலும், சூரியன் கன்னியிலும், அங்காரகன் விருச்சிகத்திலும், புதன் மகரத்திலும், குருவும் ராகுவும் கும்பத்திலும், சுக்கிரன் மீனத்திலும் ஆகும்.

2. அத்திரி புகலு கின்றார் ஆணது ஜனன மாகும்
வித்தக னுதித்த இல்லம் விரும்புவோம் கீழ்மேல் வீதி
உத்தரம் வாடை யாகும் உருவற்ற மாரி தென்பால்
பத்திர காளி உத்தரம் பரமனும் கீழ்மே லாகும்.

---

[1] சந்திரன். [2] விருச்சிகம். [3] மகரம்.
[4] இராகு. [5] சூரியன். [6] அங்காரகன்.
[7] சுக்கிரன். [8] குரு. [9] ரிஷபம் [10]. கடகம்.

2. ஆண் குழந்தை ஜனனமாகும் என்று அத்திரி மகாரிஷி சொல்லுகின்றார். ஜாதகர் பிறந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் வட வண்டை வாடையில் உள்ளது என்று சொல்லுகிறோம். ரூபமில்லாத மாறி யம்மன் தெற்கிலும், பத்திர காளியம்மன் கோயில் வடக்கிலும், பரமசிவன் கோயில் கிழக்கிலும் மேற்கிலும் இருக்கும்.

3. மாலவன் மேல்பா லாகும் மருவிய சமனூ ராகும்
சாலயில் வடையா ளத்துள் ஜனிப்பனு மெட்டாம் ஜன்மம்
பாலகன் வடுகர் வர்க்கம் பகருவோம் குடும்பச் சேதி
ஏலவே தந்தைக் கேதா ளியம்புவோ மன்னை ரெண்டு.

3. விஷ்ணு கோயில் மேற்கிலிருக்கும். பிறந்த ஊர் சமமான கிராமமாகும். இப்படிப்பட்ட நல்ல அடையாளங்களும் எல்லைகளும் உள்ள விடத்தில் எட்டாவது கர்ப்பத்தில் ஜாதகர் பிறப்பார். இவர் வடுகர் என்ற ஒரு தெலுங்கு ஜாதியில் பிறப்பார். இவருடைய குடும்பச் சங்கதிகளைச் சொல்லுகிறோம். தகப்பனுருக்கு இரண்டு தாயார் என்று முன்னே சொல்லு வோம்.

குறிப்பு.—பிதுர் ஸ்தானம் மீனம். இதற்குப் பிதுர்ஸ்தானம் விருச்சிகம். இந்த விருச்சிகம் பிதுர்பாட்டன் லக்கினமாகும். இதற்குக் களத்திர ஸ்தானமாகிய ஏழாம் வீடாகிய ரிஷபத்தில் எட்டிற்கும் பதினொன்றிற்கு முடைய புதன் இருக்கின்றார். ரிஷபத்தைக் கேது பார்க்கின்றார், களத்திரா பதியும் களத்திரகாரகனுமாகிய சுக்கிரன் குருவுடனும் கேதுவுடனும் இருக் கின்றார். சுக்கிரன் இருக்கிற மீனராசி உபயராசி. சுக்கிரனைச் சனியும் பார்க் கின்றார். ஆகையால் ஜாதகருடைய தகப்பனுருக்கு இரண்டு தாயார் யோக மிருக்கிறது.

4. பின்மாதா ஈன்ற தந்தை பேசுவோம் துணை ஆண் ரண்டு
கன்னிகை காணு னுகும் காதலர் வேருய்ச் செல்வர்
முன்மாதா தனக்குப் புத்திரர் விளங்காது ஏகுவாளா
மன்னிய தந்தை சேதி வரைகிறே மினிமே லாக.

4. ஜாதகருடைய தகப்பனுரானவர் தன்னுடைய தகப்பனுருககு இரண்டாவது மனைவியின் பிள்ளை என்று சொல்லுவோம். இவருக்கு ஆண் சகோதரர்கள் இருவராகும். இவருக்குச் சகோதரிகள் கிடையாது. இவரு டைய சகோதரர்கள் வேறு குடும்பமாகப் பிரிந்து போய்விடுவார்கள். இவரு டைய பெரிய தாயார் பிள்ளைகள் இல்லாமல் இறந்து விடுவாள். நிலைத் திருந்த தகப்பனுருடைய விஷயங்களை இனிமேல் சொல்லுகிறோம்.

5. மாநிறம் உணைச்சல் தேகி மருமமில் லாதா னுகும்
ஈனமாம் குணமில் லாதான் இடரென்றோர்க் குதவி செய்வன்
ஊனமாம் தந்த மென்றே மூகவான் ஈகை யாளன்
தானமும் தரும மிச்சை தந்தையால் சுகமில் லாதான்.

5. தகப்பனார் மாநிறமான தேகத்தையுடையவர். மெலிந்த தேக முடையவர். இரகசியமில்லாதவர். தாழ்ந்த குண மில்லாதவர். கஷ்டத்தை அடைந்திருக்கிறோம் என்று சொல்பவர்களுக்கு உபகாரஞ் செய் வார். இவருக்குப் பற்கள் கெட்டுப்போய் இருக்கும். இவர் புத்திசாலி. தயாள குணமுள்ளவர். தானமும் தருமமும் செய்ய ஆசையுள்ளவர். இவருக்குத் தன்னுடைய தகப்பனாரால் சௌக்கியங் கிடையாது.

6. தந்தையி னில்லம் வாழான் தான்வேறு ஊரில் வாசம்
நிந்தைக ளேற்பா னாகும் நீத்தோர்க்கு அன்ன மீவன்
தன் தனம் கொடுக்கல் வாங்கல் சல்லியம் மென்று லச்சம்
சொந்தமாய் வணிபம் தூசு சுய தொழில் செய்வா னாகும்.

6. தகப்பனார் தன்னுடைய பிதாவின் வீட்டில் வாசஞ் செய்ய மாட்டார். இவர் வேறே ஒரு கிராமத்தில் வசிப்பார். பழிகளையும் இகழ்ச்சியையும் அடைவாராகும். துறவிகளுக்கும் பரதேசிகளுக்கும் சாப்பாடு போடுவார். தன்னுடைய பணத்தைப் பிறருக்குக் கொடுப்பார். திருப்பி வாங்கிக் கொள்ளுவார், அஃதாவது பணத்தில் லேவாதேவி செய் வார். கடன் வாங்குவதென்றால் இவருக்கு நாணமும் வெட்கமும் ஏற்படும். சொந்தமாய்த் துணி வியாபாரத்தையும், தன்னுடைய குலத்தொழிலையும் செய்வார்.

7. சில்து நாள் பாரி யூரில் செல்லுவான் வனவா சங்கள்
நிலைவிட்டு அதற்கு உத்தரம் நிலைப்பனு மென்று சொல்வோம்
அலைச்சல்கள் வந்த தென்ன அறிவிப்பீ ரந்தச் சங்கை
குலவிற்று பூர்வ தோஷம் கூறுவீ ரந்தச் சங்கை.

7. ஜாதகருடைய தகப்பனார் சில காலம் வனத்தில் திரிவது போல ஒரு பெரிய ஊரில் திரிந்து அலைந்து கொண்டிருப்பார். அதன் பிறகு அந்த ஊரை விட்டு விட்டு அதற்கு வடக்கிலுள்ள ஓர் ஊருக்குச் சென்று அவ்விடத்தில் நிலைத்து விடுவார் என்று சொல்லுகிறோம். இவருக்கு இப்படிப்பட்டத் அலைதல்களும் தொந்தரவுகளும் வந்து சம்பவித்ததற்குக் காரணங்கள் என்ன என்ற விஷயத்தைச் சொல்லுவீர், என்று கேட்க, முன் ஜன்மத்திய தோஷங்கள் இந்த ஜன்மத்தில் இவரை வந்து அடைந்தன, என்று சொன்னார். அதற்குமேல் அந்தத் தோஷங்களைச் சொல்லுவீர் என்று கேட்டார்.

8. முன் ஜன்மம் திருச்செந் தூரில் லுதித்தனன் மறை குலத்தில்
தன்மனை மதலை யுண்டாய்த் தரணியால் சீவித் தேதான்
இன்னவன் வாழுந் நாளில் இசைந்ததோர் வினையைக் கேண்மோ
அன்னிய மாது பேரில் அடா நிந்தை சொல்லும் போது ;

8. ஜாதகருடைய தகப்பனார் தன்னுடைய முன் ஜன்மத்தில் திருச் செந்தூரில் பிராமண குலத்திற் பிறந்து மனைவி குழந்தைகள் இவர்களை அடைந்து விவசாயத் தொழிலைச் செய்து கொண்டு வாழ்ந்து

வந்தக் காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்தப் பாபத்தைச் சொல்லு கிறேன், கேட்பீராக. ஓர் அயல் ஸ்திரியின் மேல் ஒரு தகாத பழியை, நிந்தனைய இவர் சொல்லும் போது ;

9. மங்கையும் திகிலடைந்து வரைகிருள் சாபம் தானும்
பங்கமாம் வார்த்தை சொன்னப் பாவிக்கு மறுஜன் மத்தில்
தங்காது துணைப் பெண்ணும்தான் தன்சுதர்க் கன்னி யின்றிப்
பொங்கிய குடும்பம் விட்டுப் போகுவாய் வெளிதே சத்தில்.

9. அந்த ஸ்திரீ பயந்து சாபத்தை இவருக்குக் கொடுக்கின்றாள்— "என் மேல் அவமானமும் ஈனமும் எனக்கு நேரிடும்படியாய்க் குற்றமான வார்த்தைகளைச் சொன்ன பாவியாகிய உனக்குப் பின் ஜன் மத்தில் சகோதரி நிலைத்து ஜீவித்திருக்க மாட்டாள். உனக்குப் பிள்ளை யும் பெண்ணும் இல்லாமல் பெரிய குடும்பத்தைக் கோபத்துடன் விட்டு விட்டுப் பிரிந்து வெளிதேசத்திற்குப் போய்விடுவாய்" என்று அவள் இவரைப் பார்த்துச் சொன்னாள்.

10. இன்னமும் பலவாறு சொன்னு ளெய்திற்று அந்தச் சாபம்
துன்னிய காலன் னூடு சேர்ந்துமே பிரமன் லக்கம்
அன்னவன் வருவா னுகும் அம்மாது சாபத்தாலே
கன்னிகை யில்லம் விட்டு ஏகும்தன் துணைப் பெண் தோஷம்.

10. அவள் இன்னும் இவருக்கு அநேகவிதமாகச் சாபத்தைக் கொடுத்தாள். அந்தச் சாபங்கள் இவரை வந்து அடைந்தன. இவர் முன் ஜன்மத்தில் தீமையையும் துன்பத்தையும் விளைவிக்கக்கூடிய எமப் பட்டணத்திற்குச் சென்று பிரமதேவனால் எழுதப்பட்டு இந்த ஜன் மத்தில் வந்து பிறந்திருக்கின்றார். அவளுடைய சாபத்தால் இவருடையப் பெண் வீட்டைவிட்டு வெளியே தாண்டிப் போய்விடுவாள். இவருடைய சகோதரிக்குத் தோஷம் உண்டாகும்.

11. பிருகுமே புகலு கின்றார் புனிதன்முன் ஜன்மம் தன்னில்
மறைக்குல முதித்தா னென்றீர் வடுகர்தன் குலம்எவ்வாறு
உறையும்கா ரணங் ளெவ்வாறு உத்தமன் முன்ஜன் மத்தில்
பெருமையாய் வேதம் தன்னைப் பேசாமல் நின்ற தோஷம் ;

11. "இவர் முன் ஜன்மத்தில் பிராமணக்குலத்தில் பிறந்து சுத்தமானவராக இருந்தார் என்று நீர் சொன்னீரே இவர் எந்தக் காரணத்தினால் இந்த ஜன்மத்தில் வடுகர் என்ற தெலுங்கர் குலத்திற் பிறந்தார். அந்தக் காரணங்களைச் சொல்லுவீரென்று பிருகு மஹாரிஷி யானவர் கேட்க, முன் ஜென்மத்தில் உத்தமராகவிருந்த இவர் வேதங்களைப் பெருமையுடன் சொல்லாமல் சும்மாய் விருதாவாக இருந்தத் தோஷத்தாலே ;

12. இந்ததோர் குலமு தித்தா னிக்குண முடையோ னுக்கு
விந்தையாய்ப் பாலன் தோன்றும் விளம்புவோ மிவன்கு [ணத்தைச்
சுந்தர முடையா னுகும் ஜகராசர் பேட்டி கொள்வன்
முந்துமால் பக்தி கொள்வ னுயர்வான குடும்ப மேற்பன்.

12. இந்த ஜன்மத்தில் இந்த வடுகர் வம்சத்தில் வந்து பிறந்தார் என்று சொன்னுர். இப்படிப்பட்ட குணமுடையவருக்கு இந்த ஜாதகர் ஆச்சரியமாகப் பிறப்பார். ஜாதகருடைய குணுதிசயங்களை இனிமேல் சொல்லுகிறோம். இவர் அழகுள்ளவர். பெரிய அரசர்களுடைய தரிசனத்தை அடைவார். சீக்கிரம் மகா விஷ்ணுவின்மேல் பக்தி உடையவராய் இருப்பார். மேன்மையான குடும்பத்தை உடையவராவர்.

13. வித்தையு மூன்று கற்பன் விவேகியா மெவர்க்கும் நேயன்
சித்திர இல்லம் செய்வன் செம்பொன்னு மதிகம் சேர்ப்பன்
குற்றத்தை மனத்தில் வையான் கொடுமையே எவர்க்கு மெண் [ணுன்
புத்தியில் பெரியோ னுவன் பிறைபோலே யோக மெய்தும்.

13. இவர் மூன்று விதமான வித்தைகளையும் பாஷைகளையும் கற்றுக் கொள்வார். புத்தியுள்ளவராயிருப்பார். எல்லோரிடமும் சிநேகமாயி ருப்பார். சித்திரங்களையுடைய அழகான வீட்டைக் கட்டுவார். மேன்மையான தனத்தை அதிகமாகச் சேர்த்து வைப்பார். பிழைகளை யும் தீங்குகளையும் தன்னுடைய மனத்தில் வைத்துக் கொள்ளமாட்டார். கெடுதிகளை எவருக்கும் நினைக்கமாட்டார். அறிவில் சிறந்தவ ரென்றும் பெரியவ ரென்றும் கருதப்படுவார். அவருக்கு வளர்பிறைச் சந்திரனைப் போல யோகம் விருத்தியாகும்.

14. அன்னிய பாஷை மேன்மை அதிகார முடைய னுகும்
தன்துணை ஆண்பால் மூன்று தங்கிடும் தீர்க்க மாக
இன்னவன் தன்னுல் யோக மெய்திடு மவர்க ளுக்கு
மண்ணின்மேல் வறுமை காணுன் மன்னர்க்கு இவன்சொல் [மேன்மை.

14. இவருக்கு அன்னிய பாஷை மேன்மையாகவும் அதிகமாக வும் வரும். இவர் அதிகாரங்களையும் செல்வாக்கையும் உடையவர். இவருக்கு ஆண் சகோதரர்கள் மூன்று பேர் நீண்ட ஆயுளையுடையவரா யிருப்பார்கள். இந்த மூன்று சகோதரர்களுக்கும் ஜாதகரால் யோக முண்டாகும். ஜாதகருக்கு இந்தப் பூமியில் கஷ்டங்களும் தரித்திரமும் கிடையா. இவருடைய வார்த்தைகள் அரசர்களால் மேன்மையாகப் பாவிக்கப்படும்.

15. எந்தக் காலத்தி லில்லம் எகிடும் விவரம் சொல்வாய்ச்
சாந்தமா மாருருமாண்டில் சார்ந்திடு வடபா லில்லம்
பந்துவு மதிக்க வாழ்வன் பலவிதச் செட்டு மோங்கும்
கந்தனை யீன்ற மாதே கழறின மொழி குன்றுவே.

15. ஜாதகருக்கு எப்போது வீடு வந்து நேரிடும் என்ற விவரத்தைச் சொல்லுவீர் என்று கேட்க, முப்பத்தாறுவது வயதில் வடக்குத்திக்கில் வீடு உண்டாகும். தன்னுடைய பந்துக்கள் இவரை மதித்துப் போற்றும்படியாக இவர் வாழ்வார். இவருக்குப் பலவிதமான வியாபாரங் கள் ஓங்கி விருத்தியாகும். முருகக்கடவுளைப் பெற்றெடுத்தப் பார்வதி யம்மையே! நாங்கள் சொல்லும் வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும்.

**குறிப்பு.—வீடு கட்டும் விஷயம்.**—13-ஆவது பாடலில் ஜாதகர் சித்திர வீட்டைக் கட்டுவார் என்று சொல்லியிருப்பதைக் கவனிக்கவும். இவருக்கு வயது ஞ 35-0-0 முதல் ஞ 36-0-0 முடியும் வரையிலும் கேது தசையில், சுக்கிரன் சூரியன் சந்திரன் இவர்களுடைய புக்திகள் நடக்கின்றன. வீடு விஷயமான பாவம் நான்காம் பாவமும், கிரகம் சுக்கிரனும் ஆகும். சுக்கிரன் நான்கிற்கும் பதினொன்றிற்கும் உடையவ ராய் ஒன்பதில் இருக்கின்றார். ஒன்பதாவது பாவத்தில் சுக்கிரன் இருந் தால் ஜாதகர் வீடு மாளிகைக் கட்டி வாழ்வார் என்று பிருகுசம்ஹிதை யிலும், ஜாதக கணிதம் 2-ஆம் பாகம் 3-ஆவது அத்தியாயம் 79-ஆவது அயிட்டத்திலும் சொல்லி இருப்பதைக் கவனிக்கவும்.

16 அன்னையின் குணத்தைச் சொல்வே னன்புள மனத்தா ளாகும்
முன்கோப முடனே தாழ்வு மேதினில் நல்லோ ளாவள்
தன்துணை ஆண்பால் மூன்று சத்திமா ரிவ்வாறுகும்
முன்னமே குடும்ப மென்றே முதிப்பாளா மவ்வூர் தன்னில்.

16. ஜாதகருடைய தாயாருடைய குணதிசயங்களைப் பற்றிச் சொல்லு கிறேன். இவள் விசுவாசமுள்ள மனத்தை உடையவள். இவளுக்குக் கோபம் முன்னே வந்து உடனே அடங்கித் தணிந்துவிடும். இவள் பூமி யில் நல்லவளாக இருப்பாள். இவளுக்குக் கூடப்பிறந்தவர்கள் ஆண்கள் மூவரும், பெண்கள் மூவரும் ஆவார்கள். இவளுடைய குடும்பம் மேன்மையையும் முன்னேற்றத்தையும் உடையதாகும். இவள் ஜாதகர் பிறந்த ஊரிலேயே பிறந்தவள் என்று சொல்லுகிறோம்.

**குறிப்பு.**—மாதுருஸ்தானமாகிய நான்காம் பாவமாகிய துலாத் திற்கு மூன்றிற்குடைய குரு மீனத்தில் சுக்கிரனுடன் ஆட்சியாய் இருப்பதையும், பதினொன்றிற்குடைய சூரியன் மேஷத்தில் உச்சமாகி அங்காரகனுடன் இருப்பதையும் தாயின் சகோதரங்கள் விஷயமாய்க் கவனிக்கவும்.

17. மாதுரு பூர்வம் சொல்வேன் மைலத்தில் ரெட்டி வமிசம்
போதன முடையா னுக்குப் பிறந்தன ளிந்த மாது
மாதவர்க் கன்ன மீந்து மங்கைக்கு வினையில் லாமல்
தீதான காலன் னுடு சேர்ந்துமே பிரமன் லக்கம் ;

17. தாயின் முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறேன். இவள் மைலம் என்ற க்ஷேத்திரத்தில் ரெட்டியார் குலத்தில் பணக்காரர்

ஒருவருக்குப் பிறந்தாள். இவள் முனிவர்களுக்கும் பரதேசிகளுக்கும் சாப்பாடுபோட்டு யாதொரு பாபமும் தோஷமு மில்லாமல் துன்பத்தையும் கெடுதிகளேயும் விளேவிக்கக்கூடிய எம பட்டணத்திற்குச் சென்று பிறகு பிரம தேவனுல் எழுதப்பட்டு;

18. வந்தவ ளென்று சொல்வோம் வரைகிறே மிருபா னேழில
இந்தவள் மார கங்க ளியம்புவோ மிவள்பின் ஜன்மம்
சந்தத மாலங் காட்டில் சக்கான்தன் குலமே தோன்றிச்
சிந்தையும் நல்ல தாகிச் சிறப்புடன் வாழ்வா ளென்றேம்.

18. இந்த ஜன்மத்தில் வந்து பிறந்தாள் என்று சொல்லுகிறேம். இவளுக்கு ஜாதகருக்கு இருபத்தேழாவது வயதில் மரணம் நேரிடும். இவளுடைய மறு ஜன்மம் திருவாலங்காடு என்ற க்ஷேத்திரத்தில் செக்காட்டி என்னும் வைசியர் குலத்தில் நேரிட்டு, இவள் நல்ல மனதை உடையவளாகி, மேன்மையுடனும் பெருமையுடனும் வாழ்வாள் என்று சொல்லுகிறேம்.

**குறிப்பு.—தாய் மரணம்.—** ஜாதகருக்கு வயது ஷ 26–0–0 முதல் ஷ 27–0–0 முடியும் வரையிலும் புதன் தசையில் ராகு புத்தி நடக்கின்றது. புதன் துலாத்திற்குப் பன்னிரண்டிற்குடையவராய் எட்டில் இருக்கின்றார். சந்திரனேயும் பார்க்கின்றார். சுக்கிரன் துலாத்திற்கு எட்டிற்கும் ஒன்றிற்கும் உடையவராதலால் துய்யகேரளம் எட்டாம் பாவம் 14-ஆவது பாடல் பிரகாரம் மாரகராகிறர். இவர் வீட்டிலுள்ள புதன் ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகப்பிரகாரம் அதிக மாரகராகிறர். ராகு துலாத்திற்குப் பன்னிரண்டில் இருந்து கொண்டு சந்திரனேயும், மாதுரு லக்கினுதிபதியாகிய சுக்கிரனேயும் பார்க்கின்றார். ஆகையால் ராகுவுக்கு மாதாவை மாரகஞ் செய்ய அதிகாரம் உண்டாகின்றது. (துய்ய கேரளம் எட்டாம் பாவம் 20-ஆவது பாடலேயும் பார்க்கவும். இங்கு 1—8-க் குடைய சுக்கிரனுடன் ராகு கூடியிருப்பதற்குப் பதிலாகப் பார்க்கின்றார்.)

19. பாலகன் மணத்தைச் சொல்வேன் பதினெட்டு ஆண்டில் நேரும்
நீலியு மன்னே வர்க்கம் நேருவாள் குணத்தைச் சொல்வேன்
காலத்தை அறிந்து ரைப்பள் கணவனுக் கினிய ளாகும்
மால்மனே யொப்ப தாகும் வருவோரை ஆத ரிப்பள்.

19. ஜாதகருடைய விவாகம் நடக்குங் காலத்தைச் சொல்லுகிறேன். இவருக்குப் பதினெட்டாவது வயதில் விவாகம் நடக்கும். மனேவி தன்னுடைய தாயார் வர்க்கத்திலிருந்து வருவாள். அவளுடைய குணுதிசயங்களேச் சொல்லுகிறேன். அப்போதைக்கப்போது நடந்து வருகின்ற காலத்திற்குத் தகுந்தாற்போலப் பேசுவாள். புருஷனுக்கு இஷ்டமானவளாக விருப்பாள். மகாவிஷ்ணுவின் மனேவியாகிய இலக்ஷ்மியைப் போல விருப்பாள். தன்னிடம் வருபவர்களேக் காப்பாற்றுவாள்.

**குறிப்பு.—விவாககாலம்—**ஜாதகருக்கு வயது ஷ 17–0–0 முதல் ஷ 18–0–0 முடியும் வரையிலும் புததசையில் புத புக்தி

நடக்கிறது. முதல் களத்திரம் சம்மந்தமான பாவங்கள் 7–2 ஆகும். போக ஸ்தானமாகிய 4-ஆவது வீட்டிற்கு அதிபதியும் களத்திரகாரகனுமாகிய சுக்கிரன் வீட்டில் சந்திரனுக்கு எழில் 2-ஆவது வீட்டிற்குடைய சூரியனுடைய நக்ஷத்திரமாகிய கிருத்திகை நக்ஷத்திரத்தில் புதன் இருக்கிறான். ஆகையால் புதனுக்கு விவாகஞ் செய்யும் அதிகாரம் ஏற்படுகிறது.

(சிலர் மூன்றாமிடம் போகஸ்தானம் என்பர். அது சாதாரண நல்ல விஷய போகங்களை அனுபவிக்கும் ஸ்தானமாகும். நான்காமிடம் காமவிஷயமான போகஸ்தானமாகும்.)

**20.** அன்னம்போல் சாய லொக்கும் அடாவடி கூறா ளாகும்
அன்னமும் அன்பா யீவள் ஆளன்தன் மனதுக் கேத்தோள்
அன்னியர் குற்றம் சொல்லான் அவள்சுத ராண்பா லொன்று
கன்னிகை மூன்று என்றோம் காதலி கேட்டிடாயே.

**20.** இவள் உருவத்தில் அன்னத்தைப்போல விருப்பாள். அநியாயமாகவும் முரட்டுத்தனமாகவும் பேசமாட்டாள். சாப்பாட்டை ஆசையுடன் போடுவாள். தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தபடி நடந்து கொள்ளும் தன்மையுடையவள். பிறருடைய குற்றங்களையும் தோஷங்களையும் எடுத்துக்காட்டிச் சொல்லமாட்டாள். அல்லது பிறர்மேல் குற்றங்களைச் சாட்டமாட்டாள். இவளுக்கு ஓர் ஆண் குழந்தையும் மூன்று பெண் குழந்தைகளும் உண்டு என்று சொல்லுகிறோம். பார்வதியம்மையே! கேட்பீராக.

**21.** மைந்தனின் பூர்வம் சொல்வேன் மாயூரம் தன்னி லேதான்
தன்தன முடை யானுக்கு ஜனித்தனன் ரெட்டி வமிசம்
முன்னோர்க்கு அன்ன மீந்து மேதினில் புகழும் பெற்றுத்
தென்திசை சேதுச் சென்று சென்றனன் காலன் னூடு.

**21.** ஜாதகருடைய முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறேன். இவர் மாயவரத்தில் ரெட்டியார் குலத்தில் ஒரு பணக்காரருக்குப் பிறந்தார். பழைய கால மனிதர்களுக்கும் வயது சென்றவர்களுக்கும் பிராமணர்களுக்கும் சாப்பாடு போட்டுப் பூமியில் கீர்த்தியும் பெருமையும் அடைந்து தெற்குத் திக்கிலுள்ள சேது என்ற ஸ்தலத்திற்குப் போய்ப் பிறகு இறந்து எமபட்டணத்தை அடைந்தார்.

**22.** வேதனல் வரையப் பட்டு விளங்கு வானிக்கு லத்தில்
ஓதுவே னிவனின் யோகம் உதயனும்[1] புகரு முச்சம்[2]
மதலன்[3] சனிசே[4] யாட்சி வந்ததால் ராஜயோகம்
ஆதவன்[5] போலே கீர்த்தி அரசரால் உய்வ னாகும்

**22.** பிரமாவால் எழுதப்பட்டு ஜாதகர் இந்த ஜன்மத்தில் இந்தக் குலத்திற் பிறப்பார். இவரது யோகத்தைச் சொல்லுகிறேன். சூரியனும் சுக்கிரனும் உச்சமாக விருக்கின்றார்கள். மதலன் என்ற மதலையாகிய

---

[1] சூரியன். [2] சுக்கிரன். [3] குரு. [4] அங்காரகன். [5] சூரியன்.

பிள்ளைக்கு அதிபதியாகிய குருவும் சனியும் அங்காரகனும் ஆட்சியாய் இருப்பதாலும், ஜாதகருக்கு இராஜயோகம் ஏற்படுகின்றது. ஆகையால் ஜாதகர் சூரியன் பிரகாசிப்பதுபோலப் பிரசித்தியையும் பெருமையையும் அடைவார். இராஜாக்களால் ஜீவனம் செய்வார்.

**குறிப்பு.—இராஜயோக விஷயம்**—கடகலக்கின ஜாதகருக்குப் பராசர் ஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் குருவும் அங்காரகனும் யோககாரர்கள், சுபர்கள். தர்மகர்மாதிபதிகளாகிய குருவும் அங்காரகனும் ஆட்சியாய் இருக்கின்றார்கள். ஆகையால் தர்மகர்மயோகம் இருக்கின்றது. ஏழு கிரகங்களும் கேந்திர கோணாதிபர்களும் கேந்திர கோணத்தில் இருப்பதால் சந்திர கலாநாடி—தேவகேரளம் இவற்றின் பிரகாரம் சிறிது மத்தமாதங்கயோகம் இருக்கிறது. ஆனால் லக்கினாதிபதியாகிய சந்திரன் நீசத்திலிருப்பதால் இந்தமத்த மாதங்கயோகம் பங்கமடைகிறது. சுக்கிரன் உச்சத்திலிருப்பதால், சந்திரகலாநாடி—தேவகேரளம் இவற்றின் பிரகாரம் மாளவியயோகம் ஏற்படுகிறது. ஆனால் குருவைச் சனி பார்ப்பதாலும், சுக்கிரனுடன் கேது சம்மந்தப்பட்டிருப்பதாலும் இந்த மாளவியயோகம் சந்திரகலாநாடி—தேவகேரளம் ரீதியாச் சிறிது பங்கம் அடைகிறது. மூன்று கிரகங்கள் சுய க்ஷேத்திரத்தில் நல்ல வீட்டிலிருப்பதைப்பற்றி இந்த சந்திரகலாநாடி — தேவகேரளத்தையே பார்க்கவும். இதனால் ஜாதகருக்குச் சுகமும் நல்ல ஜீவனமும் உண்டாகும். பொதுவாய், 10, 9, 5, 11, 2, 4-க்குடையவர்கள் நல்ல விடங்களில் இருப்பது யோகத்தைக் கொடுக்கும். மணிகண்டகேரளம் தனகாண்டம் தனலாபம் என்பதில் 1-ஆவது பாடலைப்பார்க்கவும்.

23. தந்தைக்கு மேலாய் ஜாதகன் வாழ்வா னாகும்
பந்துவை ஆத ரிப்பன் பாருக ளதிகம் சேர்ப்பன்
விந்தையாய் மூன்று இல்லம் வித்தகன் தேடு வானும்
தந்தியை வளர்த்த மாதே சாற்றின மொழி குன்றாது.

23. ஜாதகர் தன்னுடைய தகப்பனாரைவிட அதிக யோகமுடையவராய் வாழ்வார். * தன்னுடைய பந்துக்களைக் காப்பாற்றுவார். பூமிகளை அதிகமாக சேர்ப்பார். ஆச்சரியமாக மூன்று வீடுகளை, அறிஞராகிய சாமர்த்தியமுள்ள, இந்த ஜாதகர் சம்பாதிப்பார். யானை முகத்தையுடைய விநாயக் கடவுளைக் காப்பாற்றிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும்.

* **குறிப்பு.**—சந்திரன் முதல் சூரியன் உள்ள ராசிவரையிலும் மும்மூன்றாக எண்ணி வர மூன்று வருவதால் ஜாதகர் தன் தகப்பனாரைவிட அதிக யோக முள்ளவர் என்று ஜாதகாலங்காரம் 441-ஆவது பாடல் பிரகாரம் ஏற்படுகிறது. "தேவர்களமுத சந்திரன் முதலாய்ச் செங்கதிரளவு மட்டெண்ணி......பூவின் மூன்றிற பிதாவினுக்கதிகம் புத்திரர்கென்ற றிந்திடுமே." (இதற்குச் சந்திரனுக்கு 3,6,9,12-ல் சூரியன் இருக்க வேண்டும்.)

24. இருபது இரண்டு ஆண்டிலி வன் பிதா மரண மென்றோம்
வரும்ஜன்மம் காஞ்சி தன்னில் வருகுவான் செங்குந்த னாகப்
பொருளது பெருக்க முண்டாய்ப் பூமியில் வாழ்வா னாகும்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்

24. ஜாதகருக்கு இருபத்திரண்டாவது வயதில் தன்னுடைய தகப்பனார் இறந்துவிடுவார் என்று சொல்லுகிறோம். இவருடைய பிதா மறு ஜன்மத்தில் காஞ்சீபுரத்தில் செங்குந்தர் என்னும் கைக்கோளர் ஜாதியில் பிறப்பார். செல்வம் அதிகமுண்டாகி, பூமியில் வாழ்வார். அருமையான வேதங்களின் முடிவாகிய உபநிஷதங்களில் விளங்குகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

**குறிப்பு.—பிதாவின் மரண காலம்.**—ஜாதகருக்கு வயது ஷை 21-6-0 முதல் ஷை 22-0-0 முடிகிறவரையிலும் புத தசையில் சுக்கிர புக்தி நடக்கிறது. பிதுர்பாவம் மீனம். மீனலக்கினத்திற்குப் பராசர ஹோரை ஜாதக சந்திரிகை 67- ஆவது சுலோகப் பிரகாரம் புதன் மாரகாதிபதியாகிறார். இவர் மாரகஸ்தானமாகிய ஏழிற்குடையவராகி மாரகஸ்தானமாகிய மூன்றில் திரிதிய அஷ்டமாதிபதியாகிய சுக்கிரனுடைய வீட்டில் இருக்கின்றார். ஜாதகருடைய லக்கினத்திற்கு மூன்றாவது வீடு, பிதுர்ஸ்தானத்திற்கு ஏழாவது வீடாகையால் பிதுருகர்மஸ்தானம் என்று சொல்வதும் வழக்கமுண்டு. ஆகையால் புதன் பிதாவுக்கு மாரகஞ் செய்ய அதிகார முடையவராய் இருக்கின்றார். சுக்கிரன் பிதுர்லக்கினதிற்கு மூன்று எட்டிற்கு முடையவராய் இருக்கின்றார். குருவுடன் கூடி பிதுர்ஸ்தானத்திலேயே இருக்கின்றார். இங்கு குரு பிதுர் லக்கினாதிபதியாகின்றார். ஆகையால் துய்யகேரளம் எட்டாம்பாவம் 20-ஆவது பாடல் பிரகாரங்கூடச் சுக்கிரன் மாரகாதிபதி ஆகிறார். ஆகையால் சுக்கிரபுக்தியில் பிதிரு மாரகத்திற்கு அமைப்பு இருக்கிறது.

25. மைந்தனின் மரண காலம் வரைகிறோம் அன்பா னெட்டில்
முந்திய ஆனி மாதம் விளம்புவோம் மார கங்கள்
பிந்திய ஜன்மம் சொல்வேன் புதுவையில் பிரம்ம சேயாய்
இந்தவ னுதிப்பா னாகும் மீச்வரி கேட்டிடாயே.

25. ஜாதகருடைய மரணகாலத்தைச் சொல்லுகிறோம். இவருக்கு ஐம்பத்தெட்டாவது வயதில் ஆனிமாதத்தின் முதல் பாகத்தில் மரணம் நேரிடும் என்று சொல்லுகிறோம். இவரது மறு சென்மத்தைச் சொல்லுகிறேன். இவர் புதுச்சேரியில் பிராமணர் குலத்தில் பிறப்பார். பார்வதியம்மையே! கேட்பீராக.

**குறிப்பு.**—இங்கு இந்த ஜாதகருக்கு ஷை 33⅓ க்குமேல் ஷை 66⅔-க்குட்களாகவுள்ள மத்திம ஆயுளைச் சொல்லி இருக்கிறதைக் கவனிக்கவும். லக்கினாதியாகியச் சந்திரன் நீசமாயும் அஷ்டமாதிபதியாகிய சனி 7-ஆவது கேந்திரத்திலும் இருப்பதால் சாதக சிந்தாமணி எட்டாம்பாவம் 1076-ஆவது பாடல் பிரகாரம் அற்பாயுள் யோக முண்டு. ஆனால் சந்திரனைக் குரு பார்ப்பதாலும் லக்கினத்தைக் குருவும் சனியும் பார்ப்பதாலும் ஆயுள் விருத்தியுண்டு.

சந்திரனையும் லக்கினத்தையும் அங்காரகனும் ராகுவும் பார்ப்பது ஆயுளுக்குப் பிரதிகூலமாகும். சந்திரனைப் புதன் பார்ப்பது, மணிகண்ட கேரளம் பிரத்தியோக காண்டம் கெண்டயோகம் 218-ஆவது பாடல் பிரகாரம் ஆயுளுக்குப் பிரதிகூலமானது. இங்கு 1–8–10-க் குடையவர்களில் சந்திரன் நீசம். சனி ஆட்சி. அங்காரகன் ஆட்சியாயும் அஸ்தம் அடைந்தும் இருக்கின்றார்கள். ஆகையால் தூய்ய கேரளம் எட்டாம்பாவம் 4-ஆவது 5-ஆவது பாடல்கள் பிரகாரம் ஜாதகருக்கு மத்திம வயதிற்குமேல் வயது கிடையாது. ஜாதகருக்கு வயது ஷூ 57–0–0 முதல் ஷூ 58–0–0 வரையிலும் சுக்கிரதசையில் புதபுக்தி நடக்கின்றது. கடக லக்கினத்திற்குப் பராசர ஹோரை ஜாதகசந்திரிகை 50-ஆவது சுலோகம் பிரகாரம் சுக்கிரனும் புதனும் மாரகாதிபதிகள். சுக்கிரன் மாரகஸ்தானமாகிய பதினொன்றிற் குடையவர். இந்திரஜித்திற்குக் கடக லக்கனமாகி 11-க்குடைய சுக்கிரன் மாரகஞ் செய்து விட்டபடியால் கடக லக்கினத்திற்குச் சுக்கிரன் பெருத்த மாரகர் என்று சொல்லுவது வழக்கமுண்டு. புதன் 3–12-க்குடையவராகி 11-ல் இருக்கிறார். ஆகையால் சுக்கிரதசையில் புதபுக்தியில் ஜாதகருக்கு மாரக அமைப்பு இருக்கிறது.

26. ஜனித்திடுங் காலம் தன்னில் சனிதசை பதினாறுண்டும்
குனித்திடுந் திங்க ளாறும் குழவிக்குக் கண்ட மெய்தும்
துணைவர்க்குப் பிணியு மெய்துமுறுவான் வெளியூர் தன்னில்
கனதனம் பெருக்க மெய்தும் கடனது வருகு மெனறோம்.

26. ஜாதகர் பிறக்கும் போது சனிதசையில் பதினாறு வருஷமும் ஆறு மாதமும் ஜனன கால தசை இருப்பு கணிதம் பிரகாரம் ஏற்படுகிறது. இந்தத் தசையில் ஜாதகருக்குக் கெண்டம் நேரிடும். இவருடைய சகோதரங்களுக்கு நோய்கள் உண்டாகும். இவர் அயலூருக்குப் போய் அவ்விடத்தில் நிந்திக்கப்பட்டுச் சிதறுண்டு கஷ்டப்படுவார். பெருமையும் செல்வமும் அதிகமாகும். ஆனால் கடனும் வந்து சம்பவிக்கும் என்று சொல்லுகிறோம்.

27. பாக்கியம் வெள்ளி பொன்னும் பதிந்ததால் ஜாத கற்கு
வாக்குச் சொல் மேன்மை யாகும் மணிபணி வீடு யாவும்
தாக்குவோம் மூவேழா யிரம்பொன் சார்ந்திடு மென்று சொல் வோம்
நாக்கது காப்பனுகும் நவின்ற னம் பூர்வ பாகம்.

27. சுக்கிரனும் குருவும் பாக்கியம் என்று சொல்லப்பட்ட ஒன்பதாவது பாவத்தில் இருப்பதால் ஜாதகருக்குத் தன்னுடைய வாயிலிருந்து வருஞ் சொல் பெருமையுடையதாகும். மதிக்கப்படுவதாகும். நவரத்தினங்களும் ஆபரணங்களும் வீடுகளும் இருபத்தோராயிரம் பொன்னும் ஜாதகருக்கு ஆஸ்தியாக விருக்கும் என்று சொல்லுகிறோம். இவர் தான் சொல்லுஞ் சொல்லைக் காப்பாற்றுவார். இவ்விதமாகப் பூர்வ பாகமாகிய முதலாவது பாகத்தைச் சொன்னோம்.

## ஜாதகம் 63

| ராகு | | | |
|---|---|---|---|
| | இராசி சக்கரம் | | லக்கினம் சந்திரன் சுக்கிரன் |
| சனி | | | சூரியன் புதன் |
| அங்காரகன் | | குரு | கேது |

புனர்பூசம் 4-ஆம் பாதம் குருதசை 1–00.

1. கடகலக் கினமதாகக் கலை[1]புகர்[2] ஜன்மம் தங்கச்
சுடரவன்[3] புதனும் ரண்டில் செம்பாம்பு[4] மூன்றி லாக
அடல்குரு நான்கி லாக ஆரனு[5] மாறில் தங்க
முடவனு[6] மேழிலாக முழுவிஷம்[7] நவத்தி லாகா ;

1. சொன்ன லக்கினம் கடக ராசியாகி சந்திரனும் சுக்கிரனும் ஜன்ம லக்னத்திலும், சூரியனும் புதனும் லக்கினத்திற்கு இரண்டிலும், கேது மூன்றிலும், வலிவான குரு நான்கிலும், அங்காரகன் ஆறிலும், சனி ஏழிலும், இராகு ஒன்பதிலும் இருந்தால் ;

குறிப்பு.—இந்த ராசிச் சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும்.— மிதுனத்தில் கேதுவும் கடகத்தில் சூரியனும் சந்திரனும் அங்காரகனும் சனியும், விருச்சிகத்தில் புதனும், தனுசில் குருவும் ராகுவும், மீனத்தில் சுக்கிரனும் ஆகும்.

2. சொல்லுவீர் பலனை என்று சுந்தரி கேட்கும் போது
வல்லவர் வதிஷ்டர் சொல்வாராணது ஜனன மாகும்
இல்லமும் கீழ்மேல் வீதி யெமன்வாடை மேல்பால் குண்டம்
வல்லிமா காளி யீசன் வடதிசை தங்கு மென்றேம்.

2. பலாபலன்களைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மை கேட்கும்போது, வல்லமை பொருந்தியவரான வசிஷ்ட மகாரிஷி சொல்லுகிறார். பிறந்த குழந்தை ஆண் குழந்தையாகும். ஜனனமான வீடு கிழக்கு மேற்

[1] சந்திரன் [2] சுக்கிரன் [3] சூரியன் [4] கேது
[5] அங்காரகன் [6] சனி [7] இராகு

குத் தெருவில் தென்னண்டை வாடையாகும். மேற்குத் திக்கில் குளமும் கிணறு முண்டு. பெரிய மாகாளியம்மன் கோயிலும் பரமசிவன் கோயிலும் வடக்குத் திக்கில் இருக்கும் என்று சொல்லுகிறோம்.

3. இத்தகை அடையா ளத்துளிலகிய சிறுஊர் தன்னில்
வித்தகன் வடுகர் வர்க்கம் விளங்கு வானிந்தப் பாலன்
பெத்ததாய் தந்தை யோகம் பேதையர் புத்திர யோகம்
சுத்தமாய் முன்பின் ஜன்மம் செப்புவோ மிந்நூல் தன்னில்.

3. இவ்விதமான அடையாளங்கள் உள்ள இடத்தில் ஒரு சிறிய கிராமத்தில் அறிவும் சாமர்த்தியமும் உள்ள இந்த ஜாதகர் வடுகர் என்ற தெலுங்கர் குலத்தில் வந்து பிறப்பார். இவரைப் பெற்றெடுத்தத் தாயார், தகப்பனர், இவர்களுடைய யோகங்களையும், இவருடைய மனைவி குழந்தைகள் ஆகிய இவர்களுடைய யோகங்களையும், சுத்தமாக முன் ஜன்மத்தையும் பின் ஜன்மத்தையும் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லு கிறோம்.

4. தந்தையின் குணத்தைச் சொல்வேன் சரசமாய் வார்த்தையுண்டு
தந்தமும் தரள மொக்கும் தரணியில் புகழு மேற்பன்
தன்பந்து மதிக்க உய்வன் சகடுவாகனமு மேற்பன்
தன்சொல்லு மேன்பா டாகும் தரணிகள் பலவூர் சேர்ப்பன்.

4. ஜாதகருடைய தகப்பனருடைய குணதியங்களைச் சொல்லு கிறேன். இவர் இனிமையான வார்த்தைகளை உபயோகிப்பார். இவருடைய பற்கள் முத்தைப் போல வெளுப்பாயும் அழகாயுமிருக்கும். இவர் பூமியில் பெருமையையும் கீர்த்தியையும் அடைவார். தன்னுடைய பந்துக்கள் இவரை மதிக்கும்படியாக இவர் வாழ்வார். வண்டியும் வாகனமும் உள்ள வர். இவருடைய வார்த்தைகள் பெருமை பாராட்டக்கூடியதாக விருக்கும். இவர் அனேக கிராமங்களில் பூமிகளைச் சேர்ப்பார்.

5. பலருக்கும் பந்தி னர்க்கும் பரிந்துப சாரம் செய்வன்
நலமதை யெவர்க்கும் செய்வன் நல்லோர்க்கு நல்ல னுவன்
தலமதுதிருப் பணியும் செய்வன் சாராள் களதிக முண்டு
விலைமாதர் மோகம் கொள்ளான் வெஞ்சினம் வெளிக் கட்டாதான்.

5. இவர் அனேகருக்கும் பந்துக்களுக்கும் முன் வந்து ஆசையுடன் உபசரணையையும் மரியாதையையும் பண்ணுவார், உபகாரஞ் செய்வார். எல்லோருக்கும் நல்லதைச் செய்வார். நல்லவர்களுக்கு நல்லவராக விருப் பார். க்ஷேத்திரங்களில் கோயில் வேலைகளைச் செய்வார். இவருக்குத் தன் பக்கம் சேர்ந்த மனுஷர்கள் அனேகம் பேர் உண்டு. அனேக வேலையாட்களு முண்டு. இவருக்குத் தாசிகளின்மேல் காம ஆசைகிடையாது. கடுங் கோபத்தை வெளியே காட்டமாட்டார்.

6. அறமதி லிச்சை யுண்டு யாவர்க்கும் உதவி செய்வன்
நறைமல ரிஷ்டம் கொள்வன் நாற்காலி விருத்தி யுண்டு
நிலையதைக் காப்பா னுகும்நினைத்தகாரி யம்முடிப்பன்
பொறைசொலா னிளம னத்தன் புகழ்ந்தோரை ஆத ரிப்பன்

6. தகப்பனுருக்குத் தர்மஞ் செய்வதில் ஆசையுண்டு. எல்லோ ருக்கும் உபகாரஞ் செய்வார். வாசனையுள்ள புஷ்பங்களின்மேல் ஆசை யுண்டு. கால்நடைகள் விருத்தியாகும். இவர் தன்னுடைய அந்தஸ்தை யும் நிலைமையையும் குணத்தையும் தொழிலையும் காப்பாற்றிக்கொள்ளு வார். தான் எண்ணின காரியத்தைச் செய்து முடிப்பார். குற்றமான, சுமையைச் சாற்றும்படியான வார்த்தைகளைச் சொல்லமாட்டார். இளகும் படியான தயாளமான மனத்தையுடையவர். தன்னைப்பற்றிப் புகழ்ந்து பேசுகிறவர்களைக் காப்பாற்றுவார்.

7. செலவுக ளதிக முண்டு சல்லியப் பாதை ஏற்பன்
கலகத்தைக் கூறு னுகும் காரிய சமர்த்த னுகும்
குலவிடும் பித்தவாயு கோதைய ரிஷ்டம் கொள்வன்
சலம்தோய்வன் சீல னுவன் சாமர ரேகை யுண்டு.

7. இவருக்கு அதிகமான செலவுகள் ஏற்படும். இவர் கடனுல் துன்பத்தை அடைவார். கலகத்தை உண்டு பண்ணக் கூடிய வார்த்தை களைச் சொல்லமாட்டார். காரியங்களைச் செய்து முடிப்பதில் சாமர்த்திய முள் ளவர். இவருக்குப் பித்தவாயுநோய் உண்டாகும். இவர் பெண்களின் மேல் ஆசையுடையவர். புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்வார், நல் லொழுக்க முடையவராவர். இவர் கையில் சாமரரேகை என்ற ஒரு ரேகை உண்டு.

8. தன்துணை ஆண்பா லைந்து சத்திமா ரிருவ ராகும்
அன்னவ ரொன்றுய் வாழ்வர் அலைகடல் போல் குடும்பம்
பின்னவர் வேறுய்ச் செல்வர் பேசுவோம் பின்பால் சேதி
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே.

8. தகப்பனுருக்குச் சகோதரர்கள் ஐந்து பேரும், சகோதரிகள் இரண்டு பேரும் உண்டு. இவர்களெல்லோரும் ஏக குடும்பமாய் இருந்து வாழ்வார்கள். இவருடைய குடும்பத்தார்கள் அலைகடலைப்போல அலைந்து கொண்டும் திரிந்து கொண்டும் இருப்பார்கள். பிறகு சகோதரர்கள் குடும் பத்தை விட்டுப் பிரிந்து போய் விடுவார்கள். அவர்களுடைய விஷயங்களைப் பற்றிப் பின்னுல் சொல்லுகிறேம். மேன்மையான. சிறந்த யானை முகத் தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த உத்தமியாகிய பார்வதியம் மையே! கேட்பீராக.

9. சொன்னஇக் குணத்தா னுக்குத் தோன்றுவா னிந்தப் பாலன்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் மூகுளான் உணைச்சல்தேகி
உன்னத தேகி யாவன் உயர்வான புத்தி யேற்பன்
சொன்னசொல் காப்பா னுகும் சோம்பிடான் காரி யத்தில்.

9. இதுவரையிலும் சொல்லிவந்த இவ்வித குணங்களையுடைய தகப்பனாருக்கு இந்த ஜாதகர் பிறப்பார். ஜாதகருடைய குணாதிசயங்களைச் சொல்லுகிறேன். இவர் அழகான தேகத்தை யுடையவர். மெலிந்த தேகத்தை யுடையவர். மேன்மையான சிறந்த உயரமான தேகத்தை யுடையவர். நல்ல பெரிய புத்தியை யுடையவர். இவர் தான் சொன்ன வார்த்தைகளைத் தவறிடாமல் காப்பாற்றுவார். தான் எடுத்தக் காரியத்தில் சோம்பலை அல்லது தாமதத்தைக் காட்டமாட்டார்.

10. தேவதா பக்தி பூண்பன் சிறுத்தோர்மேல் பிரிய னவன்
ஆவலா யடுத்துச் செய்வன் உடன்படான் பிழைக ளுக்கு
உறுதியில் லாத நெஞ்சன் தட புடல் செய்கை யுண்டு
சாராள்க ளுடைய னாகும் படைசெல்லான் பெரியோர் நேயன்
பங் கய ரேகை யுண்டு.

10. ஜாதகர் தெய்வபக்தி யுடையவர். ஏழைகளின்மேலும் வறுமையை யடைந்தவர்கள்மேலும் அன்பைக் காட்டுவார். தான் எந்தக் காரியத்தையும் ஆசையுடனும் விடாமலும் செய்வார். தவறான காரியங்களைச் செய்ய சம்மதிக்க மாட்டார். நிலையான ஸ்திரமான மன மில்லாதவர். டம்பமாகவும் அவசரமாகவும் படாடோபமாகவும் காரியங்களைச் செய்வார். இவருக்குத் தன் பக்கம் சேர்ந்த மனுஷர்களும் வேலையாட்களும் உண்டு. சண்டைக்குப் போகமாட்டார். பெரியோர்களுடைய சினேகிதத்தையுடையவர். இவர் கையில் பங்கய ரேகை என்ற ஒரு வித கமலரேகை உண்டு.

11. பாலகன் துணைஆண் தோஷம் பாவையர் நால்வ ராகும்
பாலகன் துணைஆண் தோஷம் பகருவீ ரந்தச் சங்கை
சாலவே சேயு[1] மாறில் சிகி[2] மூன்றி லிருப்ப தாலே
ஏலவே துணைஆண் தோஷ மியம்புவோம் பால னுக்கு.

11. ஜாதகருடைய ஆண் சகோதரர்களுக்குத் தோஷம் இருக்கிறது. பெண் சகோதரர்கள் நான்கு பேர் இருப்பார்கள். ஜாதகருடைய சகோதரர்களுக்குத் தோஷம் உண்டு என்று சொன்னீரே. அதற்குக் காரணத்தைச் சொல்லுவீர். அங்காரகன் ஆறாவது வீட்டிலும், கேது மூன்றாவது பாவத்திலும் இருப்பதால் ஜாதகருடைய ஆண் சகோதரர்களுக்குத் தோஷம் இருக்கிறது என்று சொல்லுகிறோம்.

குறிப்பு.—இளைய ஆண் சகோதர விஷயம்.—மூன்றாவது பாவத்தில் கேது இருக்கிறார். மூன்றிற்குடையவரான புதன் சூரியனுடன் கூடி அஸ்தமடைந்து தன் வீட்டிற்கு விரயத்திலிருக்கின்றார். அங்காரகன் ஆறில் இருக்கின்றார். மணிகண்டகேரளம் சகோதரகாண்டம் 6-ஆவது பாடல் பிரகாரம் "டரிதியு முன்றேன் கூடிற் பாலன்பின் னில்லை மாதே". மேலும் சந்திரனைக் கேது பார்க்கின்றார். சந்திரனுக்கு ஏழில் சனி இருக்கின்றார். இந்தப் பாடல் பிரகாரமே இளைய சகோதரர்களுக்குத் தோஷம்

[1] அங்காரகன். [2] கேது

இருக்கிறது. இந்தப் பாடலுக்கு அடுத்த பாடலாகிய 6-ஆவது பாடலின் 2-ஆவது வரிப் பிரகாரம் கூட பின் ஆண் சகோதரத்திற்குத் தோஷம் இருக்கின்றது.

**மூத்த ஆண் சகோதர விஷயம்.**—பதினோராம் வீட்டதிபதியாகிய சுக்கிரன் தன் வீட்டிற்கு மூன்றில் இருக்கின்றார். இவரைச் செவ்வாயும் கேதுவும் சனியும் பார்க்கின்றார்கள். பதினொன்றை ராகு பார்க்கின்றார். மூத்த ஆண் சகோதரகாரகராகிய குரு பதினொன்றிற்கு ஆறுவது வீட்டில் பகை ராசியில் இருக்கின்றார். சகோதரகாரகராகிய அங்காரகன் 11-க்கு 8-இல் இருக்கிறார். ஆகையால் மூத்த ஆண் சகோதரர்களுக்குத் தோஷம் இருக்கிறது. மேலும் சந்திரனை மூன்று நைசர்க்கிகபாபிகளாகிய கேது சனி அங்காரகன் பார்க்கின்றார்கள். சந்திரனைச் சுபர்கள் யாரும் பார்க்க வில்லை. ஆனால் சுக்கிரன் ஒரே வீட்டில் இருக்கின்றார். இந்தச் சுக்கிரன் கூட சந்திரனுக்கு வெகு தூரத்தில், அஃதாவது சந்திரனுக்கு ஒன்பதாவது பாவத்தில் இருக்கின்றார். சம்புஹோரா பிரகாசா என்ற கிரந்தத்தில் (சகஜ) சகோதர பாவத்தில் 58-ஆவது சுலோகத்தில், சந்திரன் மூன்று பாபி களால் பார்க்கப்பட்டுச் சுபர்களால் பார்க்கப்படாமல் இருந்தால் ஜாதகருடைய சகோதரர்கள் எல்லோரும் மரணமடைவார்கள் என்று சொல்லி இருக் கிறது. இந்தச் சுலோகம் சந்திரன் ஒரு ராசியில் இருக்கின்ற சுமார் இரண் டேகால் நாளிற்குள் பிறந்த எல்லோருக்கும் பொருந்துமாயினும், இது சந்திரலக்கின ரீதியாய்ப் பார்க்கும்போது பொருந்துமாதலால் இதையுங் கூட மற்றக் காரணங்களுடன் கவனிப்பது நல்ல தாகும்.

12. மங்களம் மூவெட் டாண்டில் மறுவிடும் வடபால் பாரி
அங்கவள் குணத்தைச் சொல்வேன் அரிமனை யொப்ப தாகும்
திங்கள்போல் வதன மொக்கும் சீலியாம் விரத மேற்பன்
எங்கள்போ லதிதிக் கன்னமீவளா நற்கு ணத்தான்.

12. ஜாதகருக்கு விவாகம் இருபத்துனான்காவது வயதில் நடக் கும். மனைவி வடக்குத் திக்கிலிருந்து வருவாள். இவளுடைய குணதிசயங் களைச் சொல்லுகிறேன். இவள் மகாவிஷ்ணுவின் மனைவியாகிய இலட்சு மிக்குச் சமானமானவளாயிருப்பாள். சந்திரனைப் போன்ற அழகான முகத்தை யுடையவள். நல்லொழுக்கமும் நல்ல நடவடிக்கையு முடையவள். விரதங்களைப் அனுஷ்டிப்பவள். எங்களைப்போன்றவர்களுக்கும் பரதேசி களுக்கும் சாப்பாடு போடுவாள். நல்ல குணமுடையவள்.

13. மங்கையும் தீர்க்க ஜீவி மாமுனி தடுத்துச் சொல்வார்
இங்கிவன் தனக்குத் தார மிரண்டென மொழிவோம் யாங்கள்
சங்கையைச் சொல்லு மென்னச் சத்தமத் தோன் சரத்தில்
பொங்கமா யிருப்பதாலே புகன்றனம் தாரம் ரண்டு.

13. இவளுக்குத் தீர்க்க வயதுண்டு என்று சொல்லும்போது, பெரிய முனியான வசிஷ்டர் தடுத்துச் சொல்லுகிறார். ஜாதகருக்கு இரண்டு மனைவிகள் உண்டு என்று நாங்கள் சொல்லுகிறோம். காரணத்தைச்

சொல்லுவீரென்று கேட்க, ஏழாம்பாவாதிபதியான சனி சரராசியாகிய மகரத்தில் வலிவாய் இருக்கின்றதாலே இரண்டு மனைவிகள் என்று சொல்லுகிறோம்.

**குறிப்பு.**—மனைவி விஷயம்—இங்கு ஜன்ம லக்கினமும் சந்திரலக்கினமும் ஒன்றாக விருக்கிறதைக் கவனிக்கவும். லாபாதிபதியாகிய சுக்கிரனும் களத்திராதிபதியாகிய சனியும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ளுகிறார்கள். ஏழிற்குடையவராகிய சனி சரராசியில் இருக்கின்றார். ஆகையால் தமிழ் ஜாதகாலங்காரம் 689-ஆவது பாடல் பிரகாரமும், 648-ஆவது பாடல் 1, 2, 6, 7, 8 வரிகள் பிரகாரமும் இரண்டு மூன்று மனைவிகள் யோகமிருப்பது மன்றிப் பல இதர ஸ்திரீகள் யோகமு மிருக்கிறது. மேலும் லக்கினாதிபதியாகிய சந்திரனும் சுக்கிரனும் கூடியிருப்பது தோஷமாகும். களத்திர காரகனாகிய சுக்கிரனை அங்காரனும் கேதுவும் பார்க்கின்றார்கள். ஏழாவது பாவத்தையும் சனியையும் ராகு பார்க்கின்றார். ஆகையால் முதல் தாரத்திற்கு அதிக தோஷமிருக்கின்றது. மேலும் இரண்டாந்தாரத்திய பாவம் ஒன்பதாவது பாவமாகும். அதில் ராகு இருக்கின்றார். அதைச் சனியும் அங்காரகனும் பார்க்கின்றார்கள். ஒன்பதிற்குரிய குரு ஒன்பதிற்கு எட்டில் பகைவீட்டில் இருந்து கொண்டு சனியால் பார்க்கப்படுகின்றார். ஆகையால் இரண்டாந்தாரம் கூட நல்ல தேக நிலையுடன் ஜீவித்திருப்பது சந்தேகம் ஆகும். இந்தத் தமிழ் ஜாதகாலங்காரம் என்ற புத்தகம் கீரனூர் நடராஜர் அவர்களால் சமஸ்கிருத பிருஹஜ்ஜாதகம், சாராவளி, பராசரஹோரை, சர்வார்த்தசிந்தாமணி, கேரளம், ஜம்பு நாதம், ஹோராசாரம், பலதீபிகை முதலிய இன்னும் சில கிரந்தங்களை அனுசரித்து எழுதப்பட்டப் புத்தகமாகும்.

14. இருமனை தீர்க்க மாமோ யேகுமோ விவரம் சொல்வாய்
மரலியின் நாட்டை முன்னோள் முந்துவான் கர்ப்பத் தாலே
திருநாகும் காலம் தன்னைச் செப்புவீர் விவர மாக
அறுஅஞ்சு மூன்று மாண்டில் அந்தகன் பக்கல் சேர்வள்.

14. இரண்டு மனைவிகளும் நீண்ட ஆயுளையுடையவர்களாக விருப்பார்களா அல்லது இறந்து விடுவார்களா என்ற விபரத்தைச் சொல்லுவீரென்று கேட்க, முதல் மனைவிக்குக் கர்ப்பந்தரித்து அவள் எமபட்டணத்திற்குப் போய்ச் சேருவாள் என்று பதில் சொல்ல, மறுபடியும் முதல் மனைவி இறந்து போகுங் காலத்தை விவரமாகச் சொல்லுவீர் என்று கேட்க, ஜாதகருக்கு முப்பத்து மூன்றாவது வயதில் முதல் மனைவி இறந்து எமனிடம் போய்ச் சேருவாள் என்று சொல்லுகிறார்.

**குறிப்பு.**—முதல் மனைவி விஷயம்.—ஜாதகருக்கு வயது ஷூ 32–0–0 முதல் ஷூ 33–0–0 முடியும் வரையிலும் புதத்தசையில் ராகு புக்தியும் குரு புக்தியும் நடக்கின்றன. புதன் லக்கினத்திற்கு திருதிய விரயாதிபதியாகி முதல் களத்திரத்திற்குச் சம்மந்தப்பட்ட இரண்டாவது பாவத்தில் குடும்ப ஸ்தானத்தில் இரண்டிற்குடைய சூரியனுடன் அஸ்த மடைந்து இருக்கின்றார். மேலும் முதல் தாரபாவமாகிய ஏழாம் வீட்டிற்கு, அஃதாவது

மனைவியின் லக்கினத்திற்கு எட்டில் ஆறுக்குடையவராகி எட்டிற்குடைய வராகிய சூரியனுடன் சம்மந்தப்பட்டிருக்கின்றார். ஆகையால் துய்யகோளம் எட்டாம்பாவம் 20-ஆவது பாடல் பிரகாரம் புதன் மனைவிக்கு மாரகாதி பதியாகிறார். மேலும் ராகு மகரத்திற்கு மாரக ஸ்தானமாகிய மூன்றில் இருந்து கொண்டு மகரத்தையும் மனைவி லக்கினாதிபதியாகிய சனியையும் பார்க்கின்றார். மேற் சொல்லிய பாடல் பிரகாரமே (லக்கினாதிபதியாகிய சனியோடு கூடாமல் அவரைப் பார்ப்பதால்) மனைவிக்கு மாரகஞ் செய்ய ராகுவுக்கு அதிகாரம் இருக்கிறது.

15. அந்தவோர் ஆண்டுதன்னில் அணுகிடும் மேல்பால் பாரி
பந்தனி குணத்தைச் சொல்வேன் பாரபட் சங்கள் பேசாள்
நிந்தைக ளேற்கா ளாகும் நேமியில் நல்லோ ளாவள்
வந்தவர்க் கன்ன மீவள் மாரன்தன் மனத்துக் கேத்தோள்.

15. அந்த வருஷத்திலேயே ஜாதகருக்கு மேற்குத் திக்கி லிருந்து இரண்டாவது மனைவி வந்து நேரிடுவாள். இந்த ஸ்திரீயினுடைய குணத்தைச் சொல்லுகிறேன். இவள் ஓரவஞ்சனையாக ஒரே பக்கமாகப் பேச மாட்டாள். பழி பாவங்களை அடைய மாட்டாள். பூமியில் நல்லவளாக விருப் பாள். தன்னிடம் வருபவர்களுக்குச் சாப்பாடு போடுவாள்; தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தபடி நடந்து கொள்ளுந் தன்மையுடைய வள் ஆவாள்.

குறிப்பு.—இரண்டாவது மனைவி விஷயம்.—ஜாதகருக்கு அப்போது மேலே 14-ஆவது பாடலிற் சொல்லிய பிரகாரம் குருபுக்தி நடக்கின்றது. குரு இரண்டாந்தார பாவமாகிய ஒன்பதாம் வீட்டிற்கு அதிபதியாகி, போக ஸ்தானமாகிய நான்காவதுபாவத்தில் இருப்பதால் இரண்டாவது மனைவியைக் கொடுக்கக் குருவிற்கு அமைப்பு இருக்கிறது.

16. பால்பாக்கிய முடையா ளாகும் பஞ்சைமே லிரக்க முண்டு
நீலிக்கு வயது தீர்க்கம் நிதானமாய் வார்த்தை யுண்டு
மால்மனை யொப்ப தாகும் மருவிடும் கோபம் கொஞ்சம்
காலத்தை அறிந்து ரைப்பள் கழறுவோம் புத்திர பாவம்.

16. இவள் பால் பாக்கியம் உடையவளாவள். ஏழைகளின்மேல் பரிதாபம் இவளுக்குண்டு. இவளுக்கு நீண்ட ஆயுளுண்டு. இவள் சாந்த மாய் வார்த்தைகளைச் சொல்லுவாள். இவள் மகாவிஷ்ணுவின் மனைவியாகிய இலட்சுமிக்குச் சமானமானவளாயிருப்பாள். இவளுக்குச் சிறிது கோப முண்டாகும். அப்போதுக்கப்போதுள்ள காலத்தை அறிந்து அதற்குத் தகுந்தபடி பேசுவாள். இவளுக்குச் சந்ததியைப் பற்றிச் சொல்லுகிறோம்.

17. சுதர்களு மறுவர் தோன்றும் சோர்வுறும் சிலது என்றோம்
சதமாகும் ஆண்பால் ரண்டு சத்திமார் மூவர் தீர்க்கம்
ஏதுவித மாதுக்கே தான் யியம்பினீர் புத்திர சங்கை
முதல்மனைக் கிரட்டை தோன்றும் மேவாது நஷ்ட மெய்தும்.

17. ஜாதகருக்கு ஆறு ஆண் குழந்தைகள் பிறக்கும். இவை களில் சில குழந்தைகள் இறந்து போய் விடும். இரண்டு ஆண் குழந்தை களும் மூன்று பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளை உடையவர்களாய் இருப்பார்கள். எந்த மனைவிக்கு இந்தப் புத்திரபாவத்தைச் சொன்னீர் கள் என்று கேட்க, முதல் மனைவிக்கு இரண்டு குழந்தைகள் பிறக்கும். ஆனால் இவைகள் இறந்து விடும்.

18. பின்மனை தனக்குப் புத்திரர் பேசினோம் முனியே யானும்
இன்னவன் பூர்வம் தன்னை யியம்புவோம் தோலகை தன்னில்
அன்னவன் சினகு லத்தில் அணுகியே வாழுந் நாளில்
துன்மைகள் ஏழை யோர்க்குச் செய்தனன் அதுளர் தோஷம்.

18. இரண்டாவது மனைவிக்குத்தான், நான் பிள்ளைகளைச் சொன் னேன். ஜாதகருடைய முன் ஜன்மத்தைச் சொல்லுகிறோம். இவர் தோகை என்ற ஊரில் வைஷ்ணவகுலத்தில் பிறந்து வாழ்கின்ற காலத்தில் ஏழை மக்களுக்குக் கெடுதிகளைச் செய்தார். அதனால் ஒரு தோஷம் ஏற்பட்டது.

19. வரனின்றி மாது போகம் மருவியே கருவு தங்கத்
திருமகன் பண்டி தங்கள் செய்யவே கருவு நீங்கி
அரிவையும் மாண்டா ளென்றோம் அணுகிற்று அதுளர் தோஷம்
பொருள்மோசம் சிலர்க்குச் செய்தான் புக்கிற்று பால னுக்கு.

19. இவர் புருஷனில்லாத ஒரு ஸ்திரீயிடம் சம்போகஞ் செய்து, அவளுக்கு அதனால் கர்ப்ப முண்டாக, அவளுக்கு வைத்தியம் செய்ய, அந்தக் கர்ப்பம் கலைந்து போய் அவளும் இறந்து விட்டாள் என்று சொல்லுகிறோம். அதனால் இவருக்கு இன்னொரு தோஷம் ஏற்பட்டது. இவர் பண விஷயத் தில் சிலரை ஏமாற்றினார். இதனால் இவருக்கு இன்னொரு தோஷம் நேர்ந்தது.

20. அந்திய காலம் தன்னில் அதிகமாய் வறுமை யுண்டாய்த்
தென்திசைக் காலன் னூடு சென்றுமே பிரமன் லக்கம்
இந்ததோர் குலமு திப்ப னெய்திடு மேழைச் சாபம்
தானுமே தனிய னுவன் தனமோசம் செய்த தோஷம்.

20. ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தின் கடைசி காலத்தில் தரித்திரத்தையுங் கஷ்டங்களையும் அடைந்து இறந்து தெற்குத் திக்கி லுள்ள எமபட்டணத்திற்குப் போய்ப் பிரமதேவனால் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் ஏழைகள் கொடுத்தச் சாபத்தால் இந்த ஜன்மத்தில் இவர் தனியாக விருப்பார். முன் ஜன்மத்தில் பணத்தை மோசஞ் செய்த தோஷத்தால் ;

21. சல்லிய பாதை நேரும் தரணிகள் சேத மெய்தும்
வல்லியின் கருவின் தோஷங் மனைவிய ரிருவ ராகும்
சொல்லுவோ மிவனின் யோகம் சிலபூமி விரயம் செய்து
சல்லியப் பாதை நீங்கும் சடைமுனி புகலு கின்றார்.

**21.** இந்த ஜன்மத்தில் கடனால் உபத்திரவம் ஜாதகருக்கு ஏற்படும். பூமிகள் நஷ்டமாகும். முன் ஜன்மத்தில் ஒரு ஸ்திரீயின் கர்ப்பத்தைக் கலைத்த தோஷத்தால் ஜாதகருக்கு இந்த ஜன்மத்தில் இரண்டு தாரம் உண்டாகும். இவருடைய யோகங்கள் விஷயமாய் இனிமேல் சொல்லுகிறோம். இவர் சில பூமிகளை விற்றுக் கடன் தொந்தரவை நிவிர்த்தி செய்து கொள்ளுவார் என்று சொல்ல, ஜடை முனிவர் கேட்கின்றார்.

22. எந்தக்கா லத்தில் நீங்கு மியம்புவீர் முனியே நீர்தாம்
வந்தவன் முப்பா னாலில் விலகிடும் பூமி யாலே
பிந்தியும் முப்பா னொன்பான் ஆண்டினில் நிதிநிட் சேபம்
சொந்தமாய் நேரு மென்றோம் அந்தநாள் முதலா மாக
அவனியில் சல்லியம் காணான் இவனுமே என்று சொன்னோம்.

**22.** எந்தக்காலத்தில் ஜாதகருடைய கடன் நிவிர்த்தியாகும் என்பதை, முனிவரே! நீரே சொல்லுவீர் என்று ஜடைமுனிவர் கேட்க, ஜாதகருக்குத் தன்னுடைய முப்பத்துநான்காவது † வயதில் பூமிமூலமாகக் கடன் நிவிர்த்தியாகிவிடும். பிறகு முப்பதொன்பதாவது வயதில் தனமும் புதையலும் ஜாதகருக்குச் சொந்தமாக வந்து சேரும் என்று சொல்லுகிறோம். அந்தக்காலம் முதற்கொண்டும் அதற்குப் பிறகு இவருக்குக் கடன் ஏற்படாது.

† குறிப்பு.—**கடன் நிவிருத்திவிஷயம்.**—ஜாதகருக்கு வயது ஷ்ஷ 33–0–0 முதல் ஷ்ஷ 34–0–0 முடிவுவரையிலும் புத தசையில் குரு புக்தியில் பெரும்பாலும் பின் பாகம் நடக்கிறது. கடனிற்குரிய பாவம் ஆறும் பாவமாகும். குரு 6–9-க்குடையவராய் நான்கில் பூமிஸ்தானத்தில் இருக்கிறார். 9-ஆவது வீட்டை பூமி ஆதிபத்தியமுடைய அங்காரகன் பார்க்கின்றார். ஆகையால் குருவுக்கு ஆறும் ஆதிபத்தியத்தைச் சார்ந்தக் கடனை 9-ஆம் ஆதிபத்தியத்தைச் சேர்ந்த பாக்கியத்தால் 4-ம் ஆதிபத்தைச் சேர்ந்த பூமி மூலமாய் நிவிர்த்தி செய்ய அதிகாரம் இருக்கிறது. புதன் இரண்டிலிருந்து அவர் தசை நடந்தால் அதில் ருண நிவிர்த்தி என்று தசாபுக்தி பலனைச் சொல்லுகிற ஜாதக சிந்தாமணி என்ற கிரந்தத்திலும் தெசாபுக்தி சிந்தாமணி என்ற புத்தகத்திலும் சொல்லி இருக்கிறது.

23. மனமது தீர னாகும் வஞ்சனை எவர்க்கு மெண்ணான்
தரையினால் சீவிப் பானும் தந்தைக்குத் தாழ்வாய் வாழ்வன்
பெருமையும் புகழு முண்டு புண்ணிய மனத்தா னாகும்
குறையிலா வாழ்வா னாகும் கொல்லரு மதிக்க உய்வன்.

**23.** ஜாதகர் தைரியமான மனதையுடையவர். யாருக்குங்கெடுதியை நினைக்கமாட்டார். பூமியினால் ஜீவிப்பார். தன்னுடைய தகப்பனாரைவிட கீழான அந்தஸ்திலிருந்து வாழ்வார். இவருக்குப்பெருமையும் கீர்த்தியு முண்டாகும். புண்ணியஞ் செய்கிற மனத்தை உடையவர். யாதொரு கஷ்டமும் இல்லாமல் சுகமாய் வாழ்வார். கம்மாளர் தன்னை மதிக்கும்படியாக வாழ்வார். அஃதாவது கம்மாளர்களால் ஆபரணங்களைச் செய்துகொள்வார்.

24. மாதுரு குணத்தைச் சொல்வேன் மாந்தளிர் மேனி யாகும்
ஓதுவாள் சுகமாய் வார்த்தை உவமையாய்ப் பேசு வாளாம்
காதலி நடக்கை நன்மை கணவன்தன் மனதுக் கேத்தோள்
சீதள குணத்தா ளாகும் தீங்கதை ஒருவர்க் கெண்ணுள்.

24. ஜாதகருடைய தாயின் குணநிசயங்களைச் சொல்லுகிறேன். இவள் மாமரத்தின் துளிரின் நிறத்தைப்போல ஒருவிதமான சிவப்பு நிறமுள்ள தேகத்தையுடையவள். இனிமையான நல்ல வார்த்தைகளைச் சொல்லுவாள். சந்தோஷமாகவும் மகிழ்ச்சியாகவும் பேசுவாள். நல்ல நடவடிக்கையும் ஒழுக்கமும் உள்ள மனைவியாக விருப்பாள். தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற்போல நடந்து கொள்ளுவாள். சீதளமான குணமுடைய தேகத்தையுடையவள். யாருக்கும் கெடுதியை நினைக்கமாட்டாள்.

25. துணைவர்க ளில்லா வாழ்வள் செப்புவோ மிவள்முன் ஜன்மம்
கனமுள வேங்க டத்தில் கலந்தனள் மறை குலத்தில்
அணைவான மதலை யுண்டாய் அவள்வாழ்நாள் வினையைக் [கெண்மோ
சினையுடன் அடைக்க லான்தன் சித்திர இல்லம் வாசம்.

25. இவள் தன்னுடன் பிறந்த சகோதரர்கள் இல்லாமல் தனியாய் வாழ்வள். இவளுடைய முன்ஜன்மத்தைச் சொல்லுகிறோம். பெருமையான திருப்பதி க்ஷேத்திரத்தில் பிராமண குலத்தில் முன்ஜன் மத்தில் பிறந்தாள். இவள் தனக்கு உதவியானப் பிள்ளைகளையுடைய வளாய் வாழ்கின்ற காலத்தில் இவளுக்கு வந்து நேர்ந்தப் பாவத்தைக் கேளுங்கள். ஓர் அடைக்கலாங்குருவி என்ற ஊர்க்குருவி தன்னுடை அழகான கூண்டில் முட்டை குஞ்சுகளுடன் வாசஞ் செய்து கொண்டிருக்கும் போது ;

26. கூடுவைக் கலைக்கும் போது குஞ்சுகள் மாண்ட வென்றோம்
கேடுகள் நேர்ந்த தென்றோம் கோதைக்கு அந்தி யத்தில்
நாடிய துணைக ளின்றி நமன்பதிக் காளா யின்னோள்
தேடியே இக்கு லத்தில் ஜனித்தன ளென்று சொல்வோம்.

26. அவள் அந்த ஊர்க்குருவியின் கூண்டைக் கலைத்து அழிக்கும் போது அதன் குஞ்சுகள் இறந்துவிட்டன என்று சொல்லுகிறோம். அதனால் இவளுக்குக் கடைசி காலத்தில் கெடுதிகள் உண்டாயின என்று சொல்லுகிறோம். இவள் தன்னுடைய சகோதரர்கள் இல்லாமல் இறந்து எமபட்டணம் போய்ச் சேர்ந்தாள். பிறகு இந்த ஜாதியில் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கிறாள் என்று சொல்லுகிறோம்.

27. அத்திரி மறுத்துச் சொல்வார் அருமறை குலமு தித்தாள்
குத்தமாய்க் குலம்தாழ் வாகக் குலவும்கா ரணங்கள் சொல்வாய்
வித்தகி பூர்வம் தன்னில் விரதங்கள் முட்டுச் செய்து
சுத்தமு மில்லாத தாலே ஜனித்தளா மென்று சொல்வோம்.

**27.** அத்திரி ரிஷி என்பவர் அதன்மேல் தடுத்துக் கேட்கின்றார். அருமையான வேதங்களை ஓதுகின்ற பிராமண குலத்தில் முன் ஜன்மத்தில் பிறந்தவள். இந்த ஜன்மத்தில் குறைந்த ஒரு தாழ்ந்த ஜாதியில் பிறந்ததற்குக் காரணங்களைச் சொல்லுவீரென்று கேட்க, செல்வமும் அறிவும் பெற்றிருந்த இவள் தன்முன் ஜன்மத்தில் விரதங்களை அனுஷ்டிப்பதில் குற்றங்களையும் குறைவுகளையும் செய்தாள். சுத்தமாயில்லாததாலும் இந்த ஜன்மத்தில் இந்தக் குலத்திற் பிறந்தாளென்று சொல்லுகிறோம்.

**28.** மறுஜன்மம் வான்மி யூரில் வருகுவாள் சைவச் சேயாய்ப்
பெருமையும் புகழும் பெற்றுப் பூவையும் வாழ்வா ளாகும்
இருபது ஐந்து ஆண்டி லேகுவாள் காலன் றூடு
கரிமத வானை பெற்றக் காதலி கேட்டி டாயே.

**28.** இவள் பின்ஜன்மத்தில் திருவான்மியூரில் சைவ குலததில் வந்து பிறப்பாள். இவள் பெருமையையும் கீர்த்தியையும் அடைந்து வாழ்வாள். ஜாதகருக்கு இருபத்தைந்தாவது† வயதில் இவள் இறந்து எமபட்டணம் போய்ச்சேருவாள். கருப்பு மதம்பிடித்த யானை முகத்தை யுடைய விநாயக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! கேட்பீராக.

† குறிப்பு.—மாதுரு மரணவிஷயம்.—ஜாதகருக்கு வயது ஷூ 24-0-0 முதல் ஷூ 25-0-0 முடியும் வரையில் புதன் தசையில் சுக்கிர புக்தி நடக்கின்றது. இங்கு மாதுரு லக்கினம் துலாமாகும். இதற்குப் பராசர ஹோரை, ஜாதகசந்திரிகா 56-ஆவது சுலோகப் பிரகாரம் சூரியன் மாரகாதிபதியாகிறார். இவருடன் மாரகஸ்தானமாகிய பதினொன்றில் புதன் கூடி இருக்கின்றார். ஆகையால் தாண்டவமாலை 22-ஆவது பாடல், சந்திரகாவியம் 9-ஆவது பாடல், ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரம் புதனுக்குச் சூரியனைவிட அதிக மாரகாதிபத்தியம் தாயைக் கொல்ல நேரிடுகிறது. சுக்கிரன் ஒன்றிற்கும் எட்டிற்கும் உடையவராய்ச் சந்திரனுடன் கூடியிருக்கின்றார். ஆகையால் துய்யகோளம் எட்டாம் பாவம், 14-ஆவது பாடல் பிரகாரம் 10, 8, 1-க்குடையவர், சனி இவர்களில் மிகவும் பலவீனமானவரான சுக்கிரன் மாரகாதிபதியாகின்றார். இங்குச் சந்திரனும் சனியும் ஆட்சி. சுக்கிரன் பகை வீட்டில் இருக்கிறார். ஆகையால் சுக்கிரன்தான் மிகவும் பலவீனமானவர்.

**29.** தந்தையின் பூர்வம் சொல்வேன் சத்தியின் தலத்தி லேதான்
விந்தையாய்க் கோகு லத்தில் விளங்கியே பெருமை பூண்டு
வந்தவர்க் கன்ன மீந்து மார்க்கத்தில் தாகம் வைத்து
முன் வினை யில்லாதாகி ஒதுங்கினான் காலன் றூடு.

**29.** ஜாதகருடைய தகப்பனாரின் முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறேன். இவர் மலையத்துவஜ பாண்டியன் அரசுசெய்த காலத்தில் இவருக்குப் பார்வதியம்மை பெண்ணாய் வந்து பிறந்து அரசு செய்த ஸ்தலமாகிய மதுரையில் ஆச்சரியமாக ஓர் இடையர் குலத்தில் பிறந்து

பெருமையை யடைந்து தன்னிடம் வந்தவர்களுக்குச் சாப்பாடுபோட்டு ஜனங்கள் போக்குவரத்து பாட்டையில் நீர்மோர் பந்தல் வைத்து முன் ஜன்மத்திய பாவம் ஒன்றும் இல்லாமல் இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்தார்.

30. பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தவ னென்று சொல்வோம்
மறு ஜன்மம் வேதாரண்யம் வருகுவான் பிரம்ம சேயாய்க்
கருமகா லங்கள் தன்னைக் கழறுவோ முப்பா னொன்றில்
உறைகுவான் காலன் னூடு உத்தமி கேட்டி டாயே.

30. இவர் பிறகு பிரமதேவனால் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றார் என்று சொல்லுகிறோம். இவர் பின் ஜன்மத்தில் வேதாரண்யம் என்னும் க்ஷேத்திரத்தில் பிராமணக்குலத்தில் வந்து பிறப்பார். இவருக்கு மரணகாலத்தைச் சொல்லுகிறோம். இவர் ஜாதகருக்கு முப்பத்தோராவது † வயதில் இறந்து எமபட்டினத்திற்குச் சென்று அங்குச் சிலகாலம் வசிப்பார் என்று சொல்லுகிறோம். பார்வதியம்மையே! கேட்பீராக.

† குறிப்பு.—பிதுர் மரணவிஷம்.—ஜாதகருக்குவயது ஷ 30–0–0 முதல் ஷ 31–0–0 முடியும் வரையிலும் புத தசையில் ராகுபுக்தி நடக்கின்றது. இங்கு பிதுர்லக்கினம் மீனம். இதற்குப் பராசரஹோரை, ஜாதகசந்திரிகை பிரகாரம் புதன் மாரகாதிபதியாகின்றார். இந்தப் புதன் மாரகஸ்தானமாகிய ஏழாம் ராசியாகிய கன்னிக்கு அதிபதியாகி ஆறுவது வீட்டில் பிதுர்காரகனாகிய சூரியனுடன் கூடி இருக்கின்றார். ஆகையால் புதன் பிதாவை மாரகஞ் செய்ய அதிகாரமுடையவராயிருக்கின்றார். மேலும் மீனலக்கினத்திற்குச் சனி கூட மாரகாதிபதியாகின்றார். அவரை ராகு பார்க்கின்றார். இராகு பிதுர்லக்கினத்திலேயே இருக்கின்றார். ஆகையால் ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரம் (கூடாமல் ராகு சனியைப் பார்ப்பதால்) ஜாதகருடைய பிதாவைத் தன் புக்தியில் மாரகஞ்செய்ய இராகுவுக்கு அதிகாரம் இருக்கிறது

31. பாலகன் மரண காலம் பகருவோ மறுபான் ரண்டில்
சாலவே தனசு மாதம் தசமியாம் வளர்பக் கத்தல்
ஏலவே உடலம் ஏகு மியம்புவோம் பின்ஜன் மத்தைச்
சீலமா மலைநா டன்னில் ஜனிப்பனும் ரெட்டி வமிசம்.

31. ஜாதகருடைய மரணகாலத்தைச் சொல்லுகிறோம். இவர் அறுபத்திரண்டாவது † வயதில் மார்கழி மாதத்தில் வளர் பிறையில் தசமி திதியில் இறந்துவிடுவார். இவருடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறோம். சுத்தமாயுள்ள மலை நாட்டில் ஓர் ஊரில் ரெட்டியார் குலத்திற் பிறப்பார்.

குறிப்பு.—ஜாதகருடைய மரணகால விஷயம்.—ஜாதகருக்கு வயது ஷ 61–0–0 முதல் ஷ 62–0–0 முடியும் வரையிலும் சுக்கிரதசையில் புதன் புக்தி நடக்கின்றது. துய்யகேரளம் எட்டாம் பாவம் 4-ஆவது, 5-ஆவது பாடல்கள்

பிரகாரம் வயது ஷ்ஷ 66⅔-க்குள் முடிவு பெருகின்ற மத்திம ஆயுளாகும் கடகலக்கினுத்திற்குப் பராசரஹோரை, ஜாதகசந்திரிகை 50-ஆவது சுலோகம் பிரகாரம் சுக்கிரனும் புதனும் மாரகர்களாகின்றார்கள். இந்திரஜித்தின் கடகலக்கின ஜாதகத்திற்குப் பதினொன்றிற்குடைய சுக்கிரன் மாரகஞ் செய்து விட்டபடியால் கடகலக்கினத்திற்குச் சுக்கிரன் பெரியமாரகர் என்று சொல்லுவது வழக்க முண்டு. இங்கு, சுக்கிரன் லக்கினுதிபதியாகிய சந்திர னுடன் கூடியிருப்பதுடன் அஷடமாதிபதியாகிய சனியையும் பார்க்கின்றார். ஆகையால் துய்யகேரளம்'எட்டாம் பாவம் 20-ஆவது பாடல் பிரகாரம் சுக்கிர னுக்கு ஜாதகரை மாரகஞ்செய்ய அதிகாரம் ஏற்படுகிறது. புதன் மேற் சொல்லியபடி மாரகாதிபதி. இவர் மாரகஸ்தானமாகிய இரண்டாமிடத்தில் அஸ்தமடைந்திருக்கின்றார். ஆகையால் புதனுக்குத் தன்புக்தியில் ஜாத கரை மாரகஞ்செய்ய அதிகாரம் இருக்கின்றது.

32. குழவியின் ஜனன காலம் குருதசை ஆண்டு ஒன்று
தழைத்திடும் செல்வ மேன்மை சனிதசை விசேஷ யோகம்
நழுவிடும் பூமி தானும் நலமாகப் பண்ணை செய்வன்
நதிபிறை சடையோன் தேவி நவின்றது குன்று தாகும்.

32. ஜாதகருடைய ஜனனகாலத்தில் குருதசை இருப்பு ஒரு வருஷமாகும். இந்தக்காலத்தில் செல்வமும் பெருமையும் ஓங்கி வளரும். பிறகு சனிதசாகாலத்தில் அதிகயோகமுண்டாகும். ஆனால் சில பூமிகள் கையைவிட்டுப்போய்விடும். இவர் விவசாயத்தொழிலை அனுக்கூலத்துடன் செய்துவருவார். கங்காதேவியையும் சந்திரனையும் தன் சடையில் வைத்துள்ள பரமசிவனுடைய மனைவியாகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும்.

## ஜாதகம் 64

1. சந்திரன் கெண்டை[1] யாகச் சேய்[2] கேது வீணை[3] புக்கப்
புந்தியும்[4] சீய மாகப்[5] பொன்[6] பானு[7] கன்னி யாக
மந்தனும்[8] புகருந்[9] தேளில்[10] மலைநாகம்[11] தனசு வாக
இந்தவாறு கோளும் நின்று லக்கினம் கடக மாக ;

| | | | |
|---|---|---|---|
| சந்திரன் | | | அங்காரகன் கேது |
| | இராசி சக்கரம் | | லக்கினம் |
| | | | புதன் |
| ராகு | சனி சுக்கிரன் | | சூரியன் குரு |

ரேவதி-4ஆ-ம் பாதம், புதன் தசை இரு 4-0-0.

1. சந்திரன் மீனத்திலும், அங்காரகனும் கேதுவும் மிதுனத்திலும், புதன் சிம்மத்திலும், குருவும் சூரியனும் கன்னியிலும், சனியும் சுக்கிரனும் விருச்சிகத்திலும், இராகு தனுசிலும் ஆக, இவ்விதமாகக் கிரகங்கள் இருந்து லக்கினம் கடகமாக விருந்தால் பலனைச் சொல்லுவீரென்று ;

**குறிப்பு.**—இந்த ராசிச்சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும்.—மேஷத்தில் கேதுவும், ரிஷபத்தில் சூரியனும் அங்காரகனும், கடகத்தில் சுக்கிரனும், கன்னியில் குருவும், துலாத்தில் ராகுவும், விருச்சிகத்தில் சனியும், தனுசில் புதனும் மிதுனத்தில் சந்திரனும் ஆகும்.

2. மங்கையும் கேட்க்கும் போது மாமுனி புகலு கின்றார்
இங்கிது பெண்பால் ஜன்ம மில்லமும் வடபால் நோக்கம்
கங்கையாம் வாரிகீழ்ப் பால் கஜமுண்டு கெடியு முண்டு
துங்கமா மறவர் வாசச் சேத்திரம் வாடை யாகும்.

---

[1] மீனம் [2] அங்காரகன் [3] மிதுனம் [4] புதன் [5] சிம்மம்
[6] குரு [7] சூரியன் [8] சனி [9] சுக்கிரன் [10] விருச்சிகம் [11] இராகு.

2. பார்வதியம்மை கேட்கும்போது வசிஷ்ட மாமுனிவர் சொல்லு கின்றார். இந்தக் குழந்தை பெண் குழந்தையாகப் பிறக்கும். பிறந்த வீடு வடக்குத்திக்கைப் பார்த்திருக்கும். கங்கையம்மன் கோயிலும், கடலும் அல்லது யானைத் தொழுவமும், யானையும், கோட்டையும் கிழக்குத் திக்கில் இருக்கும். மலையும், பெருமைவாய்ந்த படைவீரர்கள் வசிக்கும் இடமும் வடக்குத்திக்கில் இருக்கும்.

3. இந்திர நகர மொப்பாமிப்பாவை விச்வச் சேயாய்
முந்தியே உதிப்பாளாகும் மொழிகிறே மிவளின் யோகம்
தந்தைதாய்த் துணைவர் யோகம் தன்வரன் புத்திர யோகம்
முன்பின்ஜன்மங்கள் யாவும் உரைக்கிறே மிந்நூல் தன்னில்.

3. ஜாதகி பிறந்த ஊர் தேவேந்திரப்பட்டணத்திருச் சமான மாகும். இவள் விச்வகர்ம கம்மாள ஜாதியில் முன்னே பிறப்பவள் ஆகும். இவளுடைய யோகத்தைச் சொல்லுகிறோம். இவளுடைய தகப்பனார் தாயார் சகோதரர்கள் ஆகிய இவர்களுடைய யோகங்களையும், இவளுடைய புருஷன் சந்ததிகள் ஆகிய இவர்களின் யோகங்களையும், முன் ஜன்மம் பின் ஜன்மம் ஆகிய இவைகள் எல்லாவற்றையும் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகிறோம்.

4. தந்தையின் துணைவர் நஷ்டம் தனியனாய் வாழ்வா னம்மா
தந்தையின் சேதி சொல்வேன் துலாராசி அம்மி நாளில்[1]
வந்தவன் மாநி றத்தன் வர்ணித்தோர்க் குதவி செய்வன்
நிந்தையு மிரண்டு மாகும் செம்பொன்னு வேலை செய்வன்.

4. தகப்பனுடன் பிறந்தவர்கள் இறந்து விடுவார்கள். இவர் தனியாக இருந்துவாழ்வார் என்று சொல்லுகிறோம். பார்வதியம்மையே! இவருடைய விஷயங்களைச் சொல்லுகிறேன். இவர் துலாராசி லக்கினத்தில் ஆயில்ய நட்சத்திரத்தில் பிறந்தவர். மாநிறமுள்ள தேகத்தையுடையவர், தன்னைப்பற்றிப் பெருமையாய்ப் புகழ்ந்து பேசினவர்களுக்கு உபகாரஞ் செய்வார். நல்லதையுஞ் செய்வார். கெட்டதையுஞ் செய்வார். தட்டார பொன்வேலை செய்வார்;

5. செலவுக ளதிக முள்ளான் தந்தையூர் வாழா னாகும்
நலமதை எவர்க்கும் செய்வன் நல்லோர்க்கு நல்ல னவன்
பலர்களை நேசம் கொள்வன் பகவானின் பக்தி கொஞ்சம்
தவமது இல்லா னாகும் தைரிய மனத்தா னாகும்.

5. இவர் அதிகமான செலவு செய்வார். தன்னுடைய தகப்பனார் ஊரில் வாசஞ்செய்யமாட்டார். எல்லோருக்கும் நல்லதைச் செய்வார். நல்லவர்களுக்கு நல்லவராக நடந்து கொள்ளுவார். அனேகர்களைச் சினே கஞ் செய்துகொள்ளுவார். கடவுகளின் மேல் கொஞ்சம் பக்தியுடையவர். தபசு, நோன்பு முதலிய புண்ணிய காரியங்களைச் செய்யமாட்டார். தைரியமான மனதையுடையவர் ஆவார்.

---

[1] ஆயில்யம்

6. மங்கைமார் தம்மால் துன்பம் மறுவிடும் வாத தேகி
சிங்கம்போல் கோபம் சாந்தம் சென்னியா ருடையான் பத்தி
அவசரம் கொள்ள ளுரும் யாரையு முறவு கொள்வன்
சங்கையன் றேரைச் சாரான் தைரிய மனத்தா னுகும்.

6. இவருக்கு ஸ்திரீகளால் உபத்திரவங்களும் கஷ்டங்களும் உண்டாகும். இவருக்கு வாத தேகமுண்டு. இவருக்குக் கோபம் சிங்கத்திற்கு வருவதைப் போல வந்து உடனே சாந்தமாகிவிடும். இவருக்குச் சங்கீதம் பாடிப் புகழ்பவர்களின் பேரில் ஆசையுண்டு, அல்லது பாட்டுகளுக்கு அதிபதியாகிய பாமகள் என்ற சரஸ்வதியின்பேரில் இவர் பக்தியுடையவர். அவசரமாக விருக்கமாட்டார். அஃதாவது நிதானமாகவிருப்பார். எல்லோரையும் சினேகஞ் செய்துகொள்ளுவார். கோபக்காரர்களுடன் அல்லது பயங்காளிகளுடன் சேரமாட்டார். தைரியமான மனத்தையுடையவர்.

7. சொன்ன இக்குணத்தா னுக்குத் தோகையரிருவர் தம்மில்
பின்மனை யாளுக் கின்னேள் பிறப்பளா மிந்தப் பாவை
கன்னியின் குணத்தைச் சொல்வேன் கல்வியாள் ஊக சாலி
மன்னவன் மனத்துக் கேத்தோள் வருவோரை ஆத ரிப்பள்.

7. இப்படிப்பட்ட குணங்களையுடைய தகப்பனுருக்கு முதலிலுள்ள இரண்டு மனைவிகளில் இரண்டாவது மனைவிக்கு இந்தப் பெண் குழந்தை பிறக்கும். ஜாதகியினுடைய குணுதிசயங்களைச் சொல்லுகிறேன். இவள் வித்தையையுடையவள். புத்திசாலி. தன்னுடைய புருஷனது, மனதிற்குத் தகுந்தாற்போல் நடந்துகொள்ளுபவள். தன்னிடம் வருகிறவர்களைக் காப்பாற்றுவாள்.

8. சுகமுள வார்த்தை சொல்வள் சொல்வோர்க்குத் தாக மீவள்
பகையென்று மனத்தில் வைய்யாள் பகரமாம் குடும்பி யாவள்
உவமையாய்ப் பேசு வாளாம் உண்மையாம் மனத்தா ளாகும்
அகமதை விட்டு நீங்காள் அம்பிகை புகன்றி டோமே.

8. இவள் இனிமையான நல்ல வார்த்தைகளைச் சொல்லுவாள். தன்னிடம் வந்து தாகவிடாய் இருக்கின்றது என்று சொல்லுகிறவர்களுக்குத் தாகந்தீர ஜலம், மோர் முதலியவைகளைக் கொடுப்பாள். தன்னுடைய மனத்தில் விரோதத்தை வைத்துக் கொள்ளமாட்டாள். பிரகாசமான, செழிப்பான குடும்பத்தையுடையவள். ஒன்றேடொன்றை ஒத்திட்டு அழகாகப் பேசுவாள். உண்மையைப் பேசுகின்ற நல்ல மனதுடையவள். தான் பிறந்த வீட்டைவிட்டுப் புருஷன் வீட்டிற்குப் போகாமல் (பின்னுல் வருகின்ற இருபத்திரண்டாவது பாடலில் கண்டுள்ள பிரகாரம் தன்னுடைய வீட்டிலேயே தன்னுடைய புருஷனுடன்) இருந்து வாழ்வாள் என்று, பார்வதியம்மையே! நாங்கள் சொல்லுகின்றோம்.

9. தண்துணை மூன்று தோன்றும் தங்காது என்று சொல்வோம்
என்னகா ரணத்தி னாலே யியம்பினீர் அந்தச் சங்கை
மந்தனும்[1] புகரு[2] மஞ்சில் மறுவின பலத்தால் சொன்னோம்
அன்னையு மெட்டா மாண்டில் அந்தக னுலகம் சேர்வள்.

9. ஜாதகியுடன் மூன்றுபேர் பிறப்பார்கள். அவர்கள் இறந்து விடுவார்கள் என்று சொல்லுகிறோம். இவ்விதமான விஷயத்தை எந்தக் காரணத்தினால் நீர் சொன்னீர் என்று கேட்க, சனியும் சுக்கிரனும் ஐந்தாமிடத்தில் † இருக்கின்ற வலிவை யனுசரித்துச் சொல்லுகிறோம். ஜாதகியினுடைய தாயாரும் இவருக்கு எட்டாவது வயதில் இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்து விடுவாள்.

† குறிப்பு—**சகோதர விஷயம்.**—மூத்த சகோதர ஸ்தானம் பதினோராமிடம். இதற்குரிய சுக்கிரன் சனியுடன் கூடி இருக்கிறார். சனி பதினொன்றைப் பார்க்கின்றார். இது மூத்தோருக்குத் தோஷத்தை விளைவிக்கக் கூடியதாகும். மேலும் இளைய சகோதரபாவமாகிய மூன்றில் சூரியன் இருப்பதால் முன்னே பிறந்த சகோதரர்கள் இறப்பார்கள் என்றும் ஜாதகிக்கு எத்தனை சகோதரர் பிறந்தாலும் அத்தனையும் இறந்துவிடும் என்றும் சம்புஹோராபிரகாசா என்ற புத்தகத்தில் சகோதரபாவத்தில் 57ஆ-வது சுலோகத்தில் சொல்லி இருக்கின்றது. மூன்றுவது பாவத்தை அங்காரகனும் பார்த்திருப்பது அந்தப் பாவத்திற்குப் பலதீபிகை 15-ஆவது அத்தியாயம் 26-ஆவது சுலோகப் பிரகாரம் அனுகூலமான தல்ல.

**மாதுருபாவம்.**—லக்கினத்திற்கு மாதுருஸ்தானாதிபதியாகிய சுக்கிரன் சனியுடன் கூடி இருக்கின்றார். சந்திரலக்கினத்திற்கு மாதுருஸ்தானத்தில் அங்காரகனும் கேதுவும் இருக்கின்றார்கள். மாதுரு ஸ்தானாதிபதியாகிய புதனைக்கேதுவும் சனியும் பார்க்கின்றார்கள். ஆகையால் மாதாவுக்குத் தோஷம் அதிகமாக விருக்கின்றது. அங்காரகனுடன் சம்மந்தப்பட்ட கேது தன்தசையில் மாதாவுக்கு மாரகஞ் செய்ய அதிகாரமுடையவராகின்றார். ஜாதகருக்கு வயது ஷ்டி 7–0–0 முதல் ஷ்டி 8–0–0 வரையிலும் கேது தசையில் ராகு, குரு புக்திகள் நடக்கின்றன ராகு 4-ஆவது பாவத்தைப் பார்த்திருப்பதாலும் மாரகாதிபதியாகிய குரு வீட்டிலிருப்பதாலும் ஜாதக சந்திரிகா 56, 23-ஆவது சுலோகப் பிரகாரம் ராகுமாரகாதிபதியாகின்றார்.

10. மூன்மாதா ஒன்று என்றீர் மொழிகுவீர் அவட்குப் புத்திரர்
கனம்புத் திரனுமே காணுள் காதலி தீர்க்க ஜீவி
மன்னவன் மனம்போல் வாழ்வாள் மறுஅன்னை பதின்மூன்[றுண்டில்
சொன்னனே குடகில் நேரும் சுதர்களின் விருத்தி சொல்வோம்.

10. ஜாதகிக்குப் பெரிய தாயார் ஒருத்தி உண்டு என்று சொன்னீரே. அவளுக்குப் புத்திரர்கள் எத்தனை என்பதைச் சொல்லுவீர் என்று கேட்க, அவளுக்கு நிலையான புத்திரர் கிடையாது. அவள் நீடித்த ஆயுளையுடையவள். அவள் தன்னுடைய புருஷனுடைய மனதிற்குத் தகுந்தபடி

1 சனி. 2 சுக்கிரன்.

நடந்துகொள்ளுவாள். ஜாதகிக்கு இன்னொரு தாயார் தனது பதின்மூன்றுவது † வயதில் குடகிலிருந்து அல்லது மேற்குத்திக்கிலிருந்து வருவாள். அவளுக்குக் குழந்தைகள் பிறந்து விருத்தியாகும்.

† குறிப்பு மூன்றுவது தாயின் விஷயம்.— ஜாதகிக்கு வயது ஷ 12–0–0 முதல் ஷ 13–0–0 முடியும் வரையில் சுக்கிரதசையில் சுக்கிர புக்தி நடக்கிறது. தகப்பனுருக்கு மூன்றுவது தாரபாவம் மீனத்திற்குப் பதினோராவது பாவமாகிய மகரம் ஆகும். மகரத்திற்குரிய சனியுடன் கூடிய சுக்கிரதசை சுக்கிர புக்திகாலத்தில் ஜாதகியின் பிதாவுக்கு மூன்றுவது விவாகம் நடக்க அமைப்பு இருக்கின்றது.

**தகப்பனுருக்கு மூன்று தாரவிஷயம்.**—பிதுர் லக்கினம் மீனம். இதற்கு ஏழாம் வீட்டு அதிபதியாகிய புதன் மறைவிடஸ்தானமாகிய ஆறில் தன் வீட்டிற்குப் பன்னிரண்டில் இருந்துகொண்டு லாபாதிபதியாகிய சனியால் பார்க்கப்படுகின்றுர். சனியுடன் களத்ரகாரகனுகிய சுக்கிரன் ஸம்பந்தப்பட்டிருக்கிறுர். அங்காரகன் ஏழாவது பாவத்தைப் பார்க்கிறுர். ஆறுக்குடைய சூரியன் ஏழில் இருக்கின்றுர். களத்திரசம்மந்தமான பாவமாகிய இரண்டிற்குடைய அங்காரகன் கேதுவுடன் கூடியிருக்கின்றுர். லாபாதிபதியாகிய சனி ஏழாமதிபதி யாகிய புதனைப் பார்ப்பதால் ஜாதகாலங்காரம் 689-ஆம் பாடல் பிரகாரம மூன்று மனவி யோகமுண்டு. சுக்கிரனும் சனியும் கூடியிருப்பதால் அனேக ஸ்திரீ சம்மந்த யோகமுண்டு. பிதுர் லக்கினுதிபதியாகிய குருவை இரண்டாந்தார பாவமாகிய விருச்சிகத்திற்குடைய அங்காரகன் பார்ப்பதால் இரண்டாந்தாரம் வரக்கூடிய யோகமுண்டு. ஆகையால் பிதாவுக்கு மூன்று தார யோக அமைப்பு இருக்கிறது. முதல் தார பாவமாகிய கன்னியில் குரு இருப்பதால் முதல் மனைவி நீண்ட ஆயுளையுடையவளாவாள். இரண்டாந்தார பாவமாகிய ஒன்பதாம் வீடாகிய விருச்சிகத்தின் அதிபதி விருச்சிகத்திற்கு எட்டில் கேதுவுடன் இருப்பதாலும் இந்த விருச்சிகத்தில் சனி இருப்பதாலும் இரண்டாந் தாரத்திற்கு அதிக ஆயுள் கிடையாது மூன்றுந் தார பாவமாகிய பதினோராவது வீடாகிய மகரத்திற்குரிய சனி மகரத்திற்குப் பதினொன்றில் சுக்கிரனுடன் கூடி வலுவாய் இருப்பதுடன் மகரத்தையே பார்க்கின்றுர். மேலும் குருவும் மகரத்தைப் பார்க்கிறுர். ஆகையால் மூன்றுவது மனைவி நீண்ட ஆயுளை அடைவதற்கு அமைப்புள்ளவளாக இருக்கின்றுள்.

11. மதலைகள் ஆண்பால் ரண்டு மங்கை மொருத்தி யாகு
மதிபதி வயது தீர்க்கம் வரனுக்கு ஏற்றமாது
இதுநிற்க அன்னைசேதி யியம்புவோம் நற்குணத்தாள்
சதியிலா மனத்தா ளாகும் சாதமு மன்பா யீவள்.

11. ஜாதகியின் மூன்றுவது தாயாருக்கு இரண்டு ஆண் குழந்தைகளும் ஒரு பெண் குழந்தையும் இருக்கும். மூன்றுவது தாய்க்கு நீண்ட ஆயுளுண்டு. அவள் தன்னுடைய புருஷனுக்குத் தகுந்த மனைவியாக விருப்பாள். இனிமேல் ஜாதகியைப் பெற்றத் தாயாருடைய குண

திசயங்களைச் சொல்லுகிறோம். இவள் உயர்ந்த குணத்தையுடையவள். வஞ்சனை இல்லாத மனத்தை உடையவளாவாள். சாப்பாடும் ஆசையுடன் போடுவாள்.

12. மாரன்தன் மனதுக் கேத்தோள் மங்கைக்குத் துணைஆண் நஷ்டம்
காரிழை ஒன்றே தீர்க்கம் கழறுவோ மிவள்முன் ஜன்மம்
பாரினி லுயர்வ தான பட்சியின் நகரம் தன்னில்
ஆரிய குலமு தித்து அருமையாய்க் குடும்பி யாகி ;

12. ஜாதகியின் தாயார் தன்னுடைய புருஷனுடைய மனதிற்குத் தகுந்தபடி நடந்து கொள்ளுவாள். இவளுக்கு ஆண் சகோதரன் இறந்து விடுவான். ஒரு சகோதரி நீண்ட ஆயுளை உடையவளாக விருப்பாள். தாயாருடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறோம். பூமியில் சிறந்ததான பட்சிதீர்த்தம் என்று சொல்லப்படுகிற திருக்கழுக்குன்றத்தில் பிராமண குலத்திற் பிறந்து சிறந்த குடும்பம் உடையவளாகி ;

13. இருவினை யில்லாளாகி ஏகினாள் காலன் னாடு
பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தவ ளென்று சொல்வோம்
வரும்ஜன்மம் வான்மீ யூரில் வருவளா மிக்குலத்தில்
கரிமத வானை பெற்றக் காதலி கேட்டி டாயே.

13. இருவினையாகியப் பாவம் புண்ணியம் இவைகள் இல்லாதவளாகி இறந்து எமபட்டணத்திற்குச் சென்று பிரமதேவனால் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றாள் என்று சொல்லுகிறோம். இவள் பின் ஜன்மத்தில் திருவான்மியூரில் இந்த ஜன்மத்திலும் பிறந்த குலத்திலேயே பிறப்பாள். கறுப்பு மதயானை முகத்தை யுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே ! கேட்பீராக.

14. தந்தையின் முன்ஜன்மத்தைச் செப்புவோம் விரிஞ்சி தன்னில்
அந்தவன் வேளான் வம்ச மணுகியே அரசு செய்து
முந்திய பூமி உண்டாய் மேதினில் வாழுந் நாளில்
வந்ததோர் வினையைச் சொல்வேன் மங்கையே கேட்டி டாயே.

14. ஜாதகியின் தகப்பனுருடைய முன் ஜன்மத்தைச் சொல்லுகிறோம். விரிஞ்சிபுரத்தில் வேளாளர் குலத்திற் பிறந்து இராஜாங்கத்தில் உத்தியோகஞ் செய்து இராஜாங்க அதிகாரத்தைச் செலுத்தி மேன்மையான சிறந்த பூமிகளை யுடையவராகிப் பூமியில் வாழுகின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்த ஒரு பாவத்தைச் சொல்லுறேன். பார்வதியம்மையே ! கேட்பீராக.

15. அன்னிய விதவை மாது அணுகினாள் தாயில் லத்தில்
துன்குண முடைய வேறோன் தோழிமேல் மோகம் கொள்ளக்
கன்னிகை யிசையா ளாகிக் காதலி வாழுந்நாளில்
இன்னவள் தனியாய் ஓர்நாள் ஏகினள் என்று சொல்வோம்.

15. அன்னிய ஜாதியைச் சேர்ந்த ஒரு விதவை ஸ்திரீ தன்னுடைய தாயார் வீட்டிற்கு வந்திருந்தாள். கெட்ட குணமுடைய ஒரு அன்னியன் அந்த ஸ்திரீயின் மேல் மோகிக்க அவள் அவனுக்கிசையாதவளாகி ஒழுங்காக வாழ்கின்ற காலத்தில் அவள் ஒரு நாள் தனியாகப் போனுள் என்று சொல்லுகிறேம்.

16. மாதுமேல் மோகம் கொண்டோன் மறைதலால் பின்னுல் சென்று
காதலால் பலவந் தத்தால் கணவன்போல் போகம் துய்த்தான்
வேதனை மனத்தா ளாகி விளம்பினுள் துணைவர் பக்கல்
நாரியின் மொழியைக் கேட்டு உரகன்போல் உரைத்தான் சேதி

16. அவள் மேல் மோகங்கொண்டவன் மறைவாக அவள் பின்னுல் போய் அவளைப் பலவந்தப்படுத்தி அவளுடைய புருஷனைப் போல் அவளிடத்தில் சம்போகஞ் செய்தான். அவள் துன்பத்தை அடைந்தமனமுடையவளாகி நடந்த சங்கதியைந் தன்னுடைய சகோதரனிடஞ் சென்று சொன்னுள். அவளுடைய வார்த்யைதைக்கேட்டு நெஞ்சுறைப்புள்ளவன் போல் தைரியமாய் முன் ஜன்மத்தில் அரசு செய்திருந்த ஜாதகியினுடைய தகப்பனுரிடத்தில் சொன்னுள்.

17. பாதகம் செய்தோன் தன்னைப் பக்கமாய் வரவ ழைத்து
சொர்ணமும் அவனுல் பெற்றுத் தோகைமேல் தோஷம் சொல்ல
வரைந்தனம் மாதுர் சேதி சரியான மனத்த ளாகிச்
செப்புவாள் சாபம் தானும் சங்கரி கேட்டி டாயே.

17. அதன் மேல் ஜாதகியினுடைய தகப்பன் குற்றஞ் செய்தவனை தன்னிடம் வரவழைத்து விசாரித்தார். பிறகு அவனிடம் பணத்தை லஞ்சமாகப் பெற்றுக்கொண்டு அவள் பேரிலேயே குற்றத்தைச் சாட்டிவிடவே அவள் சொன்ன விஷயத்தை நாங்கள் சொல்லுகிறேம். அவள் ஒரு நிலையான மனதுடையவளாகிச் சாபத்தைச் சொன்னுள், பார்வதியம்மையே! கேட்பீராக.

18. பெண்பழி சொன்ன பாவி பிறக்கும்பின் ஜன்மம் தன்னில்
உன்னைப் போல் துணையு மின்றி யெய்தாது தந்தைஆஸ்தி
உன்யனை மூவ ருகும் உலகினில் வாழ்வா யென்ன
துன்மையா யந்தச் சாபம் தோன்றிற்று என்று சொல்வோம்.

18. ஒரு ஸ்திரீயின்மேல் பழியைச் சாற்றின பாபியாகிய உனக்குப் பின் ஜன்மத்தில் உன்னைப்போன்ற துணை, அஃதாவது ஆண் சகோதரன் இல்லாமலும், உனக்கு உன்னுடைய தகப்பனுருடைய சொத்து இல்லாமலும், உனக்கு மூன்று மனைவிகள் ஏற்பட்டும் உலகத்தில் நீ வாழக்கடவாய் என்று சாபங்கொடுத்தாள். இந்தச் சாபம் ஜாதகியினுடைய தகப்பனுருக்கு இந்த ஜன்மத்தில் கெடுதியாக வந்து சம்பவித்தது என்று சொல்லுகிறேம்.

19. ஆகையால் முன்னூழ்சாபம் அனுசிடுமிச் சென் மத்தில்
தோகையர் மூவ ராகும் துணைவரும் நஷ்ட மெய்தும்
ஏகிடும் தந்தை ஆஸ்தி யில்லமும் இல்லா னாகும்
போகவாரிதியைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

19. ஆகையால் ஜாதகியினுடைய தகப்பனாருக்கு முன் ஜன்மத்திய பாபங்களும் சாபங்களும் இந்த ஜன்மத்தில் வந்துநேரும். இவருக்கு மனைவிமார் மூன்று பேராவர். இவருக்குச் சகோதரர்கள் இறந்து விடுவார்கள். தகப்பனாருடைய சொத்துக்களை இவருக்குக் கிடைக்காமல் போய் விடும். இவருக்கு வீடும் கிடையாது. ஆனந்தத்தை விளைவிக்கக்கூடிய கடலையும் நாகலோகத்தையும் உடைய பூமிதேவியைப் பெற்றெடுத்தப் புண்ணிய மாதாவாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

20. மறுஜன்மம் தணிகை தன்னில் வருகுவான் மறை குலத்தில்
கருமகா லங்கள் தம்மை மக் கழறுவீர் முனியே நீர்தாம்
பிருகு[1] தன் தசையிலேதான் புகலுவோம் தந்தை கண்டம்
அரிவைக் குமிருபானெட்டில் அணுகிடும் தந்தை கண்டம்
கரிமதவானை பெற்ற காதலி கேட்டி டாயே.

20. ஜாதகியின் தகப்பனார் பின் ஜன்மத்தில் திருத்தணிகை க்ஷேத்திரத்தில் பிராமண குலத்தில் வந்து பிறப்பார். இவருக்கு மரண காலத்தைச் சொல்லுவீர் முனியே நீர்தாம் என்று கேட்க, சுக்கிர தசையில் ஜாதகியினுடைய தகப்பனாருக்கு மரணம் நேரிடும் என்று சொல்லுகிறோம், அஃதாவது ஜாதகிக்குத் தன்னுடைய இருபத்தெட்டாவது வயதில் தன்னுடைய தகப்பனாருக்கு மரணம் சம்பவிக்கும். கருப்பான மதயானை முகத்தையுடைய விநாயக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! கேட்பீராக.

**குறிப்பு.—பிதுர் மரண விஷயம்.**—ஜாதகிக்கு வயது வருஷம் 27 முதல் வருஷம் 28 முடியும் வரையில் சுக்கிர தசையில் புத புக்தி நடக்கின்றது, பிதுர் லக்கினம் மீனம். இதற்கு மாரகாதிபதியாகிய சனியுடன் சம்மந்தப்பட்ட சுக்கிரன், பராசரஹோரை ஜாதகசந்திரிகை 67-ஆவது, 23-ஆவது சுலோகப் பிரகாரம் அதிக மாரகாதிபதியாகியும் மூன்று எட்டிற்குடையவராயும் இருப்பதால் சுக்கிரன் பிதுர்மாரகம் செய்ய அதிகாரமுடையவராயிருக் கின்றார். புதன் மீன லக்கினத்திற்கு மேற்கண்ட கிரந்தங்கள் ரீதியாய்ப் பிதுர் மாரகாதிபதியாகி இருக்கின்றார். இவர் வீட்டில் பிதுர் லக்கினாதிபதி யாகிய குரு இருக்கின்றதால் புதனுக்குப் பிதுர் லக்கினாதிபதியினுடைய சம்மந்தமும் ஏற்படுகின்றது. ஆகையால் புதனுக்குத் தன்னுடைய புக்தியில் பிதாவை மாரகஞ் செய்ய அதிகாரம் ஏற்படுகின்றது.

21. மங்கைக்குப் பதினாறுண்டுள் மங்களம் நேரு மென்றோம்
அங்கவன் குணத்தைச் சொல்வேன் அறிவுளா னாகை சாலி
துங்கமாம் மனத்தா னாகும் சொல்லதைக் காப்பானாகும்
சங்கையென் றோரைச் சாரான் தந்தையரர் ஜிதத்தை வேண்டான்.

---

[1] சுக்கிரன்.

21. ஜாதகிக்குப் பதினாறு வயதிற்குள்ளே விவாகம் நடக்கும் என்று சொல்லுகிறோம். இவளுடைய புருஷனுடைய குணாதிசயங்களைச் சொல்லுகின்றேன். அவன் கல்வி புக்தி இவைகளையுடையவன். விவேகமுள்ளவன். மேன்மையான உயர்ந்த மனத்தையுடையவன். தன்னுடைய வார்த்தையைக் காப்பாற்றுவான். கோப முடையவர்களை அல்லது பயங்கொள்ளிகளை அல்லது சந்தேகமான மனத்தையுடையவர்களைச் சினேகஞ் செய்து கொள்ளமாட்டான். தன் தகப்பனாருடைய ஆஸ்தியைவேண்டாம் என்று சொல்லிவிடுவான்.

குறிப்பு.—விவாக விஷயம்.— ஜாதகிக்கு வயது வருஷம் 15 முதல் 16 முடியும் வரையிலும் சுக்கிரதசையில் சூரியபுக்தி சந்திரபுக்தி ஆகிய இந்தப் புக்திகள் நடக்கின்றன. சுக்கிரன் காம போகஸ்தானமாகிய நான்கிற்கு அதிபதியாகி ஐந்தாவது பாவத்தில் புருஷ ஸ்தானாதிபதியாகிய சனியுடன் கூடி இருப்பதால் சுக்கிரனுக்கு ஜாதகிக்கு விவாகஞ் செய்துவைக்க அதிகாரம் இருக்கின்றது. சந்திரன் லக்கினாதிபதியாகிப் பெரும்பாலும் பூர்ண சந்திரனுமாகி லக்கினத்திற்கு ஒன்பதிலும் சுக்கிரனுக்கு ஐந்திலும் இருந்துகொண்டு குரு சூரியன் இவர்களால் பார்க்கப்படுவதால் ஜாதக சிந்தாமணி, தசாபுக்திசிந்தாமணி, விருத்த பாராசர்யம், ஜயமுனிசூத்திரம், தசாபுக்திபலன் என்ற புத்தகங்களின் பிரகாரம் சூரியனைவிடச் சந்திரனுக்கு ஜாதகிக்கு விவாகம் செய்துவைக்க அதிகாரம் இருக்கிறது.

22. மாதுபா லனுகிவாழ்வன் வளமான குடும்ப மேற்பன்
காதலன் தீர்க்க ஜிவி காளைகள் பலத்தைச் சொல்வேன்
மேதினில் ஆண்பா லொன்று மெல்லிமார் மூவர் தீர்க்கம்
ஓதுவே னிவள்முன் ஜன்மம் உத்தமி கேட்டிடாயே.

22. ஜாதகியின் புருஷன் ஜாதகியின் வீட்டிற்கு வந்துசேர்ந்து அவளுடன் அவள் வீட்டில் வசித்துக்கொண்டு இருப்பார். அவர் செழிப்பான குடும்பத்தையுடையவராவார். அவர் நீண்ட ஆயுளையுடையவர். அவருக்குப் புத்திர பாவத்தைப்பற்றிச் சொல்லுகிறேன். பூமியில் ஆண் குழந்தை ஒன்றும் பெண் குழந்தைகள் மூன்றும் அவருக்குத் தீர்க்கவயதுடையவர்களாய் இருப்பார்கள். ஜாதகியினுடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறேன். பார்வதியம்மையே! கேட்பீராக.

23. பிருதிவி தலத்தி லேதான் பிறந்தனள் வைச்சியப் சேயாய்ச்
பெரிதான குடும்பி யாகிப் பேதையும் வாழுந் நாளில்
வரன்தம்பி மனைவி பேரில் வருணித்தான் சிலேடை வார்த்தை
அரிவையும் மனது வாடி அறைந்தசா பத்தைக் கேண்மோ.

23. ஜாதகி பிருதிவிஸ்தலமாகிய காஞ்சீவரத்தில் வைசிய குலத்திற் பிறந்தாள். இவள் பெரிய குடும்பமுள்ளவளாகி வாழுகின்ற காலத்தில் தன்னுடைய புருஷனுடைய இளைய சகோதரனின் மனைவியின் மேல் கெட்ட எண்ணத்துடன் இரண்டுவித அர்த்தங்களைத் தரக்கூடிய வார்த்தைகளைத் தனக்குப் பெருமையாகவும் அவளுக்கு இகழ்ச்சியாகவும் விவரித்துச் சொன்னாள். அவள் தன் மனது புண்ணாகிச் சொல்லிய சாபத்தைக் கேட்பீராக.

24. தங்கையென் றெண்ணுப் பாவி செப்பினள் நிந்தை வார்த்தை
மங்கைக்குப் பின்ஜன் மத்தில் மருவாது துணைவர் தாமும்
சங்கையாய்த் தாய்ச்சுகங்கள் சாராவே யென்று சொல்லத்
தங்கிற்று அந்தச் சாபம் சங்கரி கேட்டி டாயே.

24. அவள் என்னைத் தன்னுடைய தங்கை என்று எண்ணுமல் பாவியாகி என்மேல் அபவாதமான பழியான வார்த்தைகளைச் சொன்னுள். அவளுக்குப் பின் ஜென்மத்தில் சகோதரங்கள் இல்லாமலும் தாயினுல் அவளுக்குச் சுகம் இல்லாமலும் இருக்கக்கடவது என்று ஜாதகியின் புருஷனின் தம்பியின் மனைவி சொல்ல அந்தச் சாபமானது ஜாதகியை வந்து சேர்ந்தது. பார்வதியம்மையே! கேட்பீராக.

25. மாதுவு மந்தி யத்தில் வரன்முன்னுல் மரண மாகி
வேதனுல் வரையப் பட்டு விளம்புவா ளிவளே யென்றேம்
காதலிக் கன்பா னெட்டில் கணவனு மரிப்பா னுகும்
போதக வானைப் பெற்றப் புண்ணிய சாலி கேளாய்.

25. ஜாதகி தன்னுடைய முன் ஜென்மத்தில் கடைசி காலத்தில் தன்னுடைய புருஷனுக்கு முந்தியே இறந்து பிரமதேவனுல் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்தாள் என்று சொல்லுகிறேம். இவளுக்கு ஐம்பத்தெட்டாவது வயதில் இவளுடைய புருஷன் இறந்து விடுவார். இளம் யானையின் முகத்தையுடைய விநாயக்கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! கேட்பீராக.

**குறிப்பு.—புருஷன் மரணம்.**—ஜாதகிக்கு வயது வருஷம் 57 முதல் வருஷம் 58 முடியும் வரையிலும் இராகு தசையில் குருபுக்தி நடக்கிறது. புருஷன் லக்கினம் மகரமாகும். மகரத்திற்கு, பராசரஹோரை, ஜாதக சந்திகை 62–63-ஆவது சுலோகப் பிரகாரம் குருமாரகராகின்றுர். குருவின் வீட்டிலுள்ள ராகு பராசரஹோரை ஜாதகசந்திரகை 23-ஆவது சுலோகப் பிரகாரம் மாரகராகின்றுர். மேலும் இந்த ராகு மாங்கில்யஸ்தானமாகிய எட்டாமிடமாகிய குடும்பத்தைப் பார்க்கின்றுர். ஆகையால் ராகுவுக்கு ஜாதகியின் புருஷனை மாரகஞ்செய்ய அதிகாரம் வருகிறது. குரு மேற்சொல்லிய பிரகாரம் ஏற்கனவே புருஷனுக்கு மாரகாதிபதியாக வருகிறுர். இந்தக் குரு மகரத்திற்கு அஷ்டமாதிபதியாகிய சூரியனுடன் சம்மந்தப்பட்டிருக்கிறுர். ஆகையால் துய்யகேரளம் எட்டாம் பாவம் 20-ஆவது பாடல் பிரகாரம் குருவுக்கு ஜாதகியின் புருஷனை மாரகஞ்செய்ய அதிகாரம் தன் புக்தியில நேரிடுகிறது. மேலும் இரண்டில் புதன் இருந்தபோதிலும் இரண்டைச் சனியும் கேதுவும் பார்ப்பதால் ஜாதகிக்கு அந்தியகாலத்தில் விதவைத் தன்மை நேரிட அமைப்பு இருக்கிறது.

26. அறுபது ஒன்று ஆண்டில் ஐப்பசி மாதம் தன்னில்
திருமக ளுடலம் ஏகும் செப்புவோ மிவள்பின் ஜன்மம்
பிருதிவி தலத்தி லேதான் பிறப்பளாம் வேளான் வமிசம்
கரிமதவானை பெற்றக் காதலி கேட்டி டாயே.

26. ஜாதகிக்கு அறுபத்தோராவது வயதில் ஐப்பசி மாதத்தில் மரணம் நேரிட்டு இவள் தேகம் அழிந்துவிடும். இவளுடைய மறு ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறோம். இவள் காஞ்சீபுரத்தில் வேளாள குலத்தில் வந்து பிறப்பாள். கறுப்பு மதயானை முகத்தை உடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! கேட்பீராக.

**குறிப்பு.—ஜாதகியின் வயது விஷயம்:—** ஜாதகிக்கு வயது வருஷம் 60 முதல் வருஷம் 61 முடியும் வரையிலும் ராகு தசையில் சனி புக்தி நடக்கின்றது. கடகலக்கினத்திற்குப் பராசரஹோரை, ஜாதகசந்திரிகை 50-ஆவது சுலோகப்பிரகாரம் புதன் சுக்கிரன் சனி இவர்கள் மாரகராகிறார்கள். சூரியன் சில கிரந்தங்களில் மாரகன் என்றும் சிலவற்றில் மாரகன் அல்லவென்றும் சொல்லி இருக்கிறது. பத்திற்குடைய அங்காரகன் பன்னிரண்டில் கேதுவுடன் இருந்து பலவீனமடைந்திருப்பதால் துய்ய கேரளம் எட்டாம் பாவம் 4–5-ஆவது பாடல் பிரகாரம் ஜாதகிக்கு மத்திம ஆயுளாகும். மத்திம ஆயுள் என்பது வருஷம் 33–1/3 முதல் 66–2/3 வருஷம் வரையிலும் ஆகும். இங்கு ராகு தசை வயது 54 முதல் வயது 72 வரையிலும் இருக்கின்றது. மாரகர்களாகிய சனி புதன் சுக்கிரன் இவர்களுடைய தசை வருஷம் 33–1/3-க்குமேல் வருஷம் 66–2/3-க்குள் வரவில்லை. ஆகையால் வருஷம் 66–2/3-கருள்ளே நடக்கிற ஆறிலுள்ள ராகுதசை பராசரஹோரை ஜாதக சந்திரிகை 26–23-ஆவது சுலோக பிரகாரம் ஜாதகிக்கு மாரகஞ் செய்ய அதிகாரமுடையதாக விருக்கிறது. அதாவது 6-க்குடையவரான குருவிற்கு 26-ஆவது சுலோகப் பிரகாரம் வந்த மாரக அதிகாரத்தை அவர் 23-ஆவது சுலோகம் பிரகாரம் ராகுவிற்குக் கொடுத்துவிடுகிறார். மேலும் குரு சில கொள்கைபடி இரண்டிற்குடையவராய் மாரகாதிபதியாகி இருக்கிற சூரியனுடன் சேர்ந்திருப்பதால் 23-ஆவது சுலோகம் பிரகாரம் குரு சூரியனுடைய மாரகத்தை ஏற்றுக்கொண்டு ராவுகுக்குக் கொடுத்துவிடுகிறார். இதுவுமன்றி இந்த ராகு ஆயுள் ஸ்தானமாகிய எட்டைப் பார்த்திருக்கின்றார். ஆகையால் ராகு மாரகாதிபதி ஆகின்றார். ஏற்கனவே சனி மாரகாதிபதி யாகின்றார். ஆகையால் ஜாதகிக்கு ராகுதசையில் சனிபுத்தியில் மாரகம் நேரிடுகிறது.

27. காதலி ஜனிக்கும் காலை கடைநாளில் கடைப் பாதத்தில்
தூதுவன் திசைநா லாண்டும் செப்பினேம் பூர்வபாகம்
ஓதுவேன் பின்பால் சேதி உமைய வளருளி னாலே
மாவர் தம்மைக் காக்கும் மங்கையே கேட்டி டாயே.

27. ஜாதகி பிறக்கின்ற காலத்தில் ரேவதி நட்சத்திரத்தில் நான்காவது பாதம் ஆகும். இதற்குரிய புதமகாதசையில் நான்கு வருஷம் இருப்பு என்று சொல்லி முதல் பாகத்தைச் சொல்லி முடிக்கிறோம், பின்னால் அடுத்த பாகத்தில் மற்ற விஷயங்களை, பார்வதி தேவியாகிய உம்முடைய கிருபையாலே சொல்வேன். முனிவர்களைக் காப்பாற்றும் பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகம் 65

1. சந்திரன் மேடமாகச் சனிவீணை[1] கேது கெண்டை[2]
மந்திரி[3] புகரும்[4] சீயம்[5] மால்[6] பணி[7] பானு[8] கன்னி
செந்தீயும்[9] கோல[10] தாக ஜன்மமும் கடகமாக
இந்தவாறுகோளும் நின்றுலி யம்புவீர் பலனைத்தானே.

| கேது | சந்திரன் | | சனி |
|---|---|---|---|
| | இராசி சக்கரம் | | லக்கினம் |
| | | | குரு சுக்கிரன் |
| | | அங்காரகன் | சூரியன் புதன் ராகு |

அசுவினி 1-ஆம் பாதம், கேது தசை வருஷம் 6.

1. சந்திரன் மேஷத்திலும், சனி மிதுனத்திலும், கேது மீனத்திலும், குருவும் சுக்கிரனும் சிம்மத்திலும். புதனும் ராகுவும் சூரியனும் கன்னியிலும், அங்காரகன் துலாத்திலும் இருந்து ஜென்ம லக்கினம் கடகமாகவிருந்து இவ்விதமாகக் கிரகநிலை இருந்தால் பலாபலன் களைச் சொல்லுவீர்.

குறிப்பு.—இந்த ராசிச்சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரகநிலை பொருத்தமுடையதாகும். மேஷத்தில் சந்திரனும், ரிஷபத்தில் அங்காரகனும், குருவும் சுக்கிரனும், கடகத்தில் சூரியனும் ராகுவும், துலாத்தில் சனியும், மகரத்தில் கேதுவும், கும்பத்தில் புதனும் ஆகும்.

2. காதலிகேட் கும்போது கௌசிகர் கூறு கின்றார்
மேதினில் ஆண்பால் ஜன்மம் விளம்புவோம் தந்தை யில்லம்
ஆதவன் குடக்கு வீதி அந்தகன்வாடை யாகும்
சீதளபிறைஅணிந்தோனவனும் வடகீழாகும்.

2. இவ்விதமாகப் பார்வதியம்மையார் கேட்கும்போது, கௌசிக முனிவர் சொல்லுகின்றார். இந்தக் குழந்தை பூமியில் ஆண் குழந்தையாகப் பிறக்கும், இதன் தகப்பனுருடைய வீட்டைப்பற்றிச் சொல்லு

---

[1] மிதுனம். [2] மீனம். [3] குரு. [4] சுக்கிரன். [5] சிம்மம். [6] புதன். [7] ராகு. [8] சூரியன். [9] அங்காரகன். [10] துலாம்.

கிடும். வீடு கிழக்கு மேற்குத் தெருவில் தென்னண்டைவாடையில் இருக்கும். குளிர்ச்சியான சந்திரனைத் தன்னுடைய ஜடையில் அணிந்துள்ள சிவபெருமானுடைய கோயில் வடகிழக்குத் திக்கில் இருக்கும்.

3. மாரியும் வடமே லாகும் மாகாளிவதன்மே லாகும்
வாரணம் கோஷ்டம் மேற்கில் மாரியும் கீழ்ப்பா லாகும்
கூறின அடையா ளத்துள் குழவியும் சேஷ்டனாக
வீரியன் வன்னிய சேயாய் விளங்குவானிந்தப் பாலன்.

3. மாரியம்மன் கோயில் வடமேற்குத் திக்கில் இருக்கும். மாகாளியம்மன் கோயில் அதற்கு மேற்கில் இருக்கும். யானைத்தொழுவம் முருகர் கோயில் விஷ்ணு கோயில் ஆகிய இவைகள் மேற்கிலும், மாரியம்மன் கோயில் கிழக்குத் திக்கிலும் இருக்கும். இங்குச் சொல்லிய அடையாளங்கள் உள்ள இடத்தில் ஜாதகர் ஜேஷ்ட குமாரனாகப் பிறப்பார். இவர் வலிவான வன்னிய குலத்தில் வந்து பிறப்பார்.

4. தந்தையின் துணையாண்காணுன் சத்திமா ரிருவ ராகும்
அந்தவர் சேதி சொல்வேன் அயல்சுகமடையாராகும்
நிந்தைகள் எற்கா ராகும் நுவலுவோம் பின்பால் சேதி
இந்தவன் தந்தை சேதி யியம்புவோ மினிமே லாக.

4. ஜாதகருடைய தகப்பனுருக்கு ஆண் சகோதரங்கள் கிடையாது, இரண்டு சகோதரிகள் இருப்பார்கள். அவர்களுடைய விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். அவர்கள் அன்னிய விடத்தில் சுகத்தை அடைய மாட்டார்கள். பழி இகழ்ச்சி நிந்திப்பு இவைகளை அடையமாட்டார்கள். அவர்களுடைய இதர விஷயங்களைப் பின்னுல் சொல்லுகிறேன். ஜாதக ருடைய தகப்பனுரின் விஷயங்களை இனிமேல் சொல்லுகிறேன்.

5. மால்நிறம் வாத தேகி வடிவினில் குள்ள னுவன்
சீலம்போல் வெளி மயக்கன் சித்திர வேலை செய்வன்
காலிகளற் பமெய்தும் கட்டுவன் சிலர்க்கு இல்லம்
வேலன்மேல் பக்தி பூண்பன் வித்தையு மற்ப மெய்தும்.

5. ஜாதகருடைய தகப்பனுர் மகாவிஷ்ணுவின நிறமாகிய நீல் மேக நிறத்தையுடைய தேகத்தையுடையவர். வாதகுண முடைய தேகத்தை யுடையவர். இவர் உருவத்தில் குள்ளமாக இருப்பார். வெளிக்கு நல்லொழுக் கமும் நல்ல குணமும் உடையவர்போலத் தோன்றி மயக்குவார். அழகான சித்திர வேலைகளைச் செய்வார். இவருக்குக் கால்நடைகள் அற்பமாகவிருக் கும். இவர் சிலருக்கு வீட்டைக் கட்டிக்கொடுப்பார். முருகர்மேல் பக்தி யுள்ளவர். இவருக்குக் கல்வி கொஞ்சமாகவிருக்கும்.

6. உரோமங்களதிகமில்லான் நுவலுப தேசம் கொள்வன்
தீமையை ஒருவர்க்கெண்ணுன் ஜனசகாயங்கள் செய்வன்
தாமத குணத்தா னுகும் தைரிய மில்லா நெஞ்சம்
நேமங்களில்லா னுகும் நினைத்தகா ரியமு டிப்பன்.

6. ஜாதகருடைய தகப்பனார் தன்னுடைய தேகத்தில் மயிர் அதிகமாகவில்லாதவர். சொல்லிக்கொள்ளக்கூடிய அளவு உபதேசம் பெற்றுக்கொள்ளுவார். யாருக்கும் கெடுதிகளை நினைக்கமாட்டார். ஜனங்க ளுக்கு உபகாரஞ்செய்வார். சாந்தமான குணமுடையவர். இவர் தைரியமான மனத்தையுடையவரல்லர். இவருக்கு நியமம் தூய்மை நல்லமுறைமை நல்லநடத்தை இவைகள் இடையா. இவர் தான் எண்ணின காரியத்தைச் செய்துமுடிப்பார்.

7. தரணிகள் அற்ப மாகும் சந்தேக குணத்தா னாகும்
விரைவினில் நடக்க வல்லன் விமலிசொல் கடவா னாகும்
உரைக்கிறே மிவன்முன் ஜன்மம் ஓதுருதலத்தி லேதான
வரநதி குலமுதித்து மாநிலம் கிருஷி செய்து ;

7. ஜாதகருடைய தகப்பனுருக்கு பூமிகள் கொஞ்சமாக விருக்கும். இவர் சந்தேகமான மனத்தை யுடையவர். வேகமாக நடக்குஞ் சாமர்த்திய முள்ளவர். தன்னுடைய மனைவியின் வார்த்தையை மீறி நடந்து கொள்ள மாட்டார். இவருடைய முன் ஜன்மந்தைச் சொல்லுகிறோம். இவர் சிதம்பர க்ஷேத்திரத்தில் கங்கை குலம் என்று சொல்லப்படுகிற வேளாளர் குலத்திற் பிறந்து பெரிய விசாலமான பூமிகளைப் பயிரிட்டு வாழ்கின்ற காலத்தில் ;

8. வந்ததோர் வினையைச் சொல்வேன் மறைமாது கற்பு முள்ளாள்
அந்தவள் பேரில் நிந்தை அடாமொழி சொல்லும் போது
நிந்தையும் கலக்க முற்றுச் செப்புவாள் சாபம் தானும்
எந்தன்மேல் வீணாய் நீந்தையியம்பினப் பாவிக்கே தான்.

8. இவருக்கு வந்து சம்பவித்த பாபத்தைச்சொல்லுகிறேன். ஒரு பிராமண ஸ்திரீ கற்புடையவளாக விருந்தாள். அவள்மேல் இவர் பழியான ஒரு தகாதவார்த்தையைச் சொல்லும்போது நிந்திக்கபபட்ட அவள் தன் மனதும் கலக்க முடையவளாய்ச் சாபத்தைச் சொல்லுகிறாள். என் மேல் வீணாகப் பழியைச் சாற்றின பாவியாகிய உனக்குத்தான் ;

9. பின்வரும் ஜன்மம் தன்னில் பெண்சு தரில்லா தாயும்
அண்ணன்தம்பிகளு மின்றி அம்பிகை மாத ராலே
சொன்னசொல் அடைவாய் நீயும் செப்பியே தெருதூள் விட்டாள்
கன்னிகை கற்பின் சாபம் கலந்தது பால னுக்கு.

9. உன்னுடைய மறு ஜன்மதில் பெண் குழந்தைகள் இல்லாம லும், தமயனும் தம்பிகளும் இல்லாமலும் எனக்குள்ள பார்வதியின் கிருபை யாலே நான் சொல்லியபடி என்னுடைய சாபத்தை நீ அடைந்து வாழக் கடவாய் என்று சொல்லித் தெருவிலுள்ள மண்ணை எடுத்துத் தூற்றினாள். அந்தப் பதிவிரதையான பிராமண ஸ்திரீயின் சாபம் இவருக்கு வந்து நேர்ந்தது.

10. ஆகையா லிச்சென் மத்தில் அவள்சுதர் கன்னி காணுன்
தோகையாம் துணைவ ராலே சின்னச் சொலலுண்டு பின்னும்
ஏகனாய் வாழ்வா னாகும் எழிலான குடும்பமில்லான்
போகவாரிதியைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

10. ஆகையால் ஜாதகருடைய தகப்பனுருக்கு இந்த ஜன்மத்தில் பெண் குழந்தை கிடையாது. இவருடைய சகோதரிகளால் இவருக்கு இகழ்ச்சியான வார்த்தைகளும் அவமானமும் நேரிடும், பின்னால் இவர் தனியாக விருந்து வாழ்வார். இவர் அழகான குடும்பத்தை யுடையவராவார். ஆனந்தத்தை விளைவிக்கக்கூடிய கடலையும் நாகலோகத்தையும் உடைய பூமி தேவியைப் பெற்றெடுத்தப் புண்ணிய மாதாவாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

11. சொன்னஇக் குணத்தா னுக்குச் சுதனுமே உதிப்பா னாகும்
அன்னவர் குணத்தைச் சொல்வேன் யானையின் நிறத்தா னாகும்
பன்னியே பேசு வானும் பலகலை அதிக மில்லான்
உன்னத வார்த்தை சொல்வன் உண்மையாம் மனத்தானாகும்.

11. இது வரையிலும் சொல்லப்பட்டக் குணங்களையுடைய தகப்பனுக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய குணதிசயங்களைச் சொல்லுகிறேன். இவர் யானையினுடைய நிறமாகிய ஒருவித கறுப்பு நிறமுள்ள தேகத்தையுடையவர். சாமர்த்தியமாகவும் சுறுக்கமாகவும் பேசுவார். பலவிதமான சாஸ்திரங்களை அதிகமாகப் படித்தவரல்லர். மேன்மையான சிறந்த வார்த்தைகளைச் சொல்லுவார். நேர்மையான கபடில்லாத மனத்தை யுடையவராகும்.

12. தந்தைபோல் தொழிலும் செய்வன் தரணிகள் அற்ப மெய்தும்
பந்தினர் மதிக்க வாழ்வன் பலசகா யங்கள் செய்வன்
முந்தின கோப மேற்பன் மொழியதைக் காப்பானாகும்
விந்தையாய் வார்த்தை யுள்ளான் விகடங்கள் கூறா னாகும்.

12. ஜாதகர் தன்னுடைய தகப்பனுரைப் போலவே அவருடைய வேலையைச் செய்வார். இவருக்குப் பூமிகள் கொஞ்சமாக விருக்கும். இவர் தன்னுடைய பந்துக்கள் தன்னை மதிக்கும்படியாக வாழ்வார். பிறருக்குப் பலவிதமான உதவிகளைச் செய்வார். முன் கோபத்தையுடையவர். தன்னுடைய வார்த்தைகளைத் தவறாமல் காப்பாற்றுவார். ஆச்சரியமான நூதனமான வார்த்தைகளை உபயோகிப்பார். வேடிக்கையான வார்த்தைகளை உபயோகிக்கமாட்டார்.

13. அன்னமும் குறைவு றாதான் அவன்கரம் பத்ம ரேகை
தன்துணை காணு னாகும் சாற்றுவீ ரந்தச் சங்கை
துன்மையாய் மூன்றில் ராகு தொடந்ததால் சொன்னோம் யோகங்கள்
கன்னென மொழியை யொக்கும் காதலி கேட்டி டாயே.

13. ஜாதகருக்குச் சாப்பாடு குறைவு ஏற்படாது. இவருடைய கையில் தாமரை ரேகை என்ற ஒருவித ரேகை உண்டு. இவருக்குச் சகோதரர்கள் கிடையாது. இதற்குக் காரணங்களைச் சொல்லுவீர் என்ற கேட்க, மூன்றுவது பாவத்தில் இராகு கெடுதியை விளைவிக்கக்கூடியவராயிருப்பதால் * நாங்கள் இவ்விதபலனைச் சொன்னோம். சர்க்கரைக்குச் சமானமான இனிமையான வார்த்தைகளை உபயோகிக்கின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

**குறிப்பு.—சகோதர விஷயம்**—மூன்றுவது பாவத்தில் சூரியன் இருப்பதால் சம்பு ஹோராப்பிரகாசா 58-ஆவது சுலோகப் பிரகாரம் மூத்த சகோதரர்களுக்குத் தோஷமுண்டு. 57-ஆவது சுலோகப் பிரகாரம் எத்தனை சகோதரர்கள் பிறந்தாலும் அத்தனையும் இறந்துவிடும். மூன்றுமதிபதியாகிய புதனுடன் சூரியன் கூடியிருப்பதால் மணிகண்டகேரளம் சகோதரகாண்டம் 9-ஆவது பாடல் பிரகாரம் பின் சகோதரத்திற்குத்தோஷமுண்டு. மூத்த சகோதரஸ்தானமாகிய பதினோராவது வீடாகிய ரிஷபத்தைக் கேதுவும் அங்காரகனும் பார்க்கின்றார்கள். பதினொன்றுக்குடைய சுக்கிரனைச் சனி பார்க்கிறார். மூத்தோர் காரகராகிய குரு தனக்கு விரோதியாகிய சுக்கிரனுடன் கூடிச் சனியால் பார்க்கப்பட்டிருக்கின்றார். மேலும் இங்கு இப்பாடலில் சொல்லியபடி ராகுவும் மூன்றில் இருக்கின்றார். ஆகையால் சகோதரர்களுக்கு அதிகமான தோஷங்கள் இருக்கின்றன.

14. மங்கள மீரெட்டாண்டில் மருவிடும் வடபால் மாரி
அங்கவள் குணத்தைச் சொல்வேன் அறிவுளாள் அவசரத்தாள்
சங்கையா மனத்தா ளாகும் சாதமு மன்பாயீவள்
தங்கீடும் நாபி நோயுஞ் சிலவேளை யென்றுரைப் போம்

14. ஜாதகருக்கு விவாகம் பதினாறுவது * வயதில் மாரியம்மன் உள்ள வடக்குத்திக்கில் மழை காலத்தில் நேரிடும். மனைவியின் குணத்தைச் சொல்லுகின்றேன். இவள் புத்திசாலியானவள். அவசரமாக விருப்பாள். அச்சமான சந்தேகமான மனத்தையுடையவள். பிரியத்துடன் சாப்பாடு போடுவாள். அவளுக்கு வயிற்றில் ரோகம் சில சமயங்களில் உண்டாகும் என்று சொல்லுகிறோம்.

* **குறிப்பு.—விவாக விஷயம் :**—ஜாதகருக்கு வயது ஷ 15–0–0 முதல் ஷ 16–0–0 முடிகிறவரையிலும் சுக்கிரதசையில் ராகு புக்தி நடக்கின்றது. பத்திற்குடையவராகிய அங்காரகனும் லக்கினுதிபதியாகிய சந்திரனும் ஒருவரையொருவர் பார்த்துக் கொள்ளுகிறார்கள். மேலும் கீர்த்தி ஸ்தானம் என்ற பத்தாவது ஸ்தானத்திற்கு அதிபதியாகிய அங்காரகனும் சனியும் லக்கினத்திற்கு நான்கு ராசிக்குள்ளே இருக்கின்றார்கள். அஃதாவது அங்காரகன் முன்னே நான்கு ராசிக்குள்ளும் சனி பின்னே நான்கு ராசிக்குள்ளுமான பன்னிரண்டிலும் இருக்கின்றார்கள். ஆகையால் ஜாதகசிந்தாமணி 974-ஆவது பாடல் பிரகாரம் ஜாதகருக்கு வாலிபத்தில் விவாகமுண்டு. சுக்கிரன் போகஸ்தானமாகிய நான்கிற்குடையவராகியும், களத்திரக்காரகனுமாகியும் ஒன்பதிற்குடைய குருவுடன் சம்மந்தப்பட்டு இரண்டில் களத்திரஸ்தானுதிபதியாகிய சனியால் பார்க்கப்பட்டுமிருக்கின்றார். ஆகையால்

ஜாதகருக்கு விவாகஞ் செய்துவைக்க இவருக்கு அதிகாரம் இருக்கிறது. போககாரகனுகிய ராகு களத்திர விஷயத்தில் சம்ந்தப்பட்ட இரண்டாவது பாவத்திற்குரிய சூரியனுடன் கூடி மூன்றுக்குடையவரான புதனுடனும்கூடி இருக்கின்றூர். ஆகையால் ராகுவுக்கு விவாகஞ் செய்து வைக்க அதிகாரம் இருக்கின்றது. [சிலர் கீர்த்திஸ்தானம் லக்கினம் என்றும் போகஸ்தானம் மூன்று என்றும் சொல்லுவார்கள். இப்படியானுலும் 974-ஆவது பாடல் பொருந்தும்.]

15. பொய்யது புகலா ளாகும் புண்ணிய மனத்தா ளாகும்
வையமேல் நல்லோ ளாவள் மாந்தளிர் மேனி யாவள்
நையவே கூறு ளாகும் நாயசன் மனதுக் கேத்தோள்
ஐயமே லிச்சை யுண்டு அவளுக்கு வயது தீர்க்கம்.

15. ஜாதகருடைய மனைவி பொய் சொல்லமாட்டாள். இவள் புண்ணியத்தைச் செய்யும்படியான மனத்தை உடையவள். பூமியில் நல்லவள் என்று பெயரெடுப்பாள். மாமரத்தின் துளிரின் நிறத்தைப் போன்ற ஒருவித மான சிவப்பு நிறமான தேகத்தையுடையவள். இகழ்ச்சியும் துன்பமும் உண்டாகும்படியாய் அல்லது பரிகாசமாய்ப் பேசமாட்டாள். இவள் தன்னுடைய புருஷனுடைய மனதிற்குத் தகுந்தாற்போல நடந்து கொள்ளுவாள். பிச்சை கொடுப்பதில் ஆசையுடையவள். இவள் நீண்ட வயதுடையவளாவாள்.

16. ஜெயமுனி கூறு கின்றூர் சேயனுக் கிரண்டு தாரம்
நயமாக நேரு மென்றேம் நவிலுவீ ரந்தச் சங்கை
வியமதில் காரிதங்க விளம்பினேம் தாரம் ரண்டு
கயல்விழி முதல்மா தும்தான் கனக்குமோ நசிக்குமோ.

16. ஜெயமுனி என்பவர் மறுத்துச் சொல்லுகின்றூர். ஜாதகருக்கு இரண்டு தாரங்கள் நன்மைக்காக நேரிடும் என்று சொல்லுகிறேம் அதற்குக் காரணத்தைச் சொல்வீர் என்று கேட்க, விரயஸ்தானமாகிய பன்னிரண்டாமிடத்தில் சனி இருப்பதால் ஜாதகருக்கு இரண்டு மனைவிகள் உண்டு என்று சொல்லுகிறேம் என்று சொல்ல, கெண்டைமீனின் கண் களைப் போன்ற அழகான கண்களையுடைய முதல் மனைவி தீர்க்க வயதுள்ளவளாக விருப்பாளா அல்லது இறந்து விடுவாளா என்பதைச் சொல்லுவீர் என்று கேட்கிறூர்.

* குறிப்பு.—மனைவி விஷயம்—களத்திரஸ்தானமாகிய ஏழாமிடத்திற் குரிய சனி லக்கினத்திற்குப் பன்னிரண்டிலும் தன் வீட்டிற்கு ஆறிலும் இருக் கின்றூர். அங்காரகன் ஐந்திற்குடையவராய்ப் புத்திரஸ்தானுதிபதியாகி ஏழாவது பாவத்தை பார்க்கின்றூர். கேதுவும் ஏழாவது பாவத்தைப் பார்க் கின்றூர். முதல் தார விஷயமாய்ச் சம்மந்தமுள்ள இரண்டாம் பாவத்திற் குறிய சூரியன் மூன்றில் இராகுவுடன் கூடி இருக்கின்றூர். இரண்டாம் வீட்டைச் சனியும் பார்க்கின்றூர். லாபாதிபதியாகிய சுக்கிரனை ஏழுக்குடைய

[1] சனி

வராகிய சனி பார்க்கின்ருர். இந்தக் காரணத்திஞலும் மேலே முந்தி சொல்லப்பட்ட காரணங்களாலும் ஜாதகாலங்காரம் 689-ஆவது பாடல் பிரகாரமும் ஜாதகருக்கு ஒன்றுக்கு மேற்பட்ட மனைவிமார்கள் ஏற்படும் யோகம் இருக்கிறது.

17. முதல்மாதும் தீர்க்க மெய்தும் உத்தமி யிருக்க வேறு
வதிபதி வருகும் சேதி வறிவீப்பீர் முனியே நீர்தாம்
புதல்வர்க ளின்றி வேறு பேதையும் வருவா ளாகும்
இதுகாலம் புகலு மென்ன இருபத்தே ழாண்டுள் நேரும்.

17. ஜாதகருடைய முதல் மனைவி தீர்க்கமான வயதுடைய வளாயிருப்பாள் என்று சொல்ல, முதல் மனைவி உயிருடன் இருக்கும்போது இன்னொரு மனைவி நேரிடுவதற்குக் காரணத்தைச் சொல்லுவீர். முனிவரே ! என்று கேட்க ஜாதகருக்கு முதல் மனைவியால் குழந்தைகள் இல்லாததால் இன்னொரு மனைவி வந்து நேரிடுவாள் என்று சொல்லுகிருேம். * இந்த இரண்டாது மனைவி வந்து சம்பவிக்கின்ற காலத்தைச் சொல்லுவீர் என்று கேட்க, ஜாதகருக்கு இருபத்தேழாவது வயதில் இரண்டாவது மனைவி ஏற்படுவாள்.

*குறிப்பு.—மனைவி விஷயம்—16-ஆவது பாடலின்கீழ் சொல்லிய காரணங் களை இன்னொரு தடவை வாசித்து விட்டு அவைகளுடன் பின் வருங் காரணங் களையும் சேர்த்து வாசிக்கவும். இரண்டாவது தாரபாவம் ஒன்பதாவது வீடாகிய மீனம். இதற்குரியவரான குரு லக்கிஞதிபதியாகிய சந்திரனைப் பார்க்கின்ருர். இந்தக் காரணத்திஞலும் இரண்டாவதுதார அமைப்பு இருக்கிறது. மேலும் முதல்தாரபாவ அதிபதியாகிய சனி உபயராசியில் மிதுனத்தில் இருக்கின்ருர். ஆகையால் தமிழ் ஜாதகலங்காரம் 648-ஆவது பாடல் 3-ஆவது 4-ஆவது வரிகள் பிரகாரம் ''மாதர் சாவின்றிப் பலருளராம்''. முதல் தாரத்திற்குச் சம்மந்தப்பட்ட சூரியனை நைசர்க்கிக புதன்கூடியும் சுக்கிரனைநைசர்க்கிக, ஆதிபத்திய சுபராகிய குருவும் கூடி இருக்கின்ருர்கள். ஆகையால்முதல்தாரத்திற்கு நீடித்தஆயுள் இருக்க அமைப்பு இருக்கின்றது. முதல்தார பாவமாகிய ஏழாவது வீட்டைப்புத்திரபாவாதிபதியாகிய அங்கார கன் பார்க்கின்ருர். ஏழுக்குடையவரும் ஐந்திற்குடையவரும் கூடிஞலும் ஒருவரை மற்றொருவர் பார்த்தாலும் ஒருவர் வீட்டில் மற்றொருவர் இருந் தாலும் புத்திரதோஷமும் களத்திரதோஷமும் உண்டென்று சாஸ்திரங்களில் சொல்லி இருக்கின்றது. இங்கு அங்காரகன் ஏழைப்பார்ப்பதால் சந்ததியால் தரத்திற்குப் பங்கமும் தோஷமும் உண்டு. ஜாதகாலங்காரம் 566-ஆவது பாடலைப் பார்க்கவும். ஆகையால் பிள்ளையில்லாததால் இரண்டாவது தாரம் நேரிடுகிறது.

18. உத்தர திசையில் நேரும் உரைக்கிருேம் புத்திர பாவம்
சுத்தமா யாண்பால் ரண்டு தோகையு மவ்வாறு தீர்க்கம்
சத்தியாம் முதல்மனைக்குச் சந்ததி காணுறுதண்ணம்
மத்ததைச் சொல்லு மென்ன கோதை யின்வினையாம் தாயே.

18. ஜாதகருக்கு இரண்டாவது மனைவி வடக்குத்திக்கில் இருந்து வந்து நேரிடும். இவளுக்குச் சந்ததியைப் பற்றிச் சொல்லுகிறோம். ஆண் குழந்தைகள் இரண்டும், பெண் குழந்தைகள் இரண்டும் குற்றமில்லாதவர்களாய்ப் பிறந்து தீர்க்காயுளுடையவர்களாயிருப்பார்கள். முதல் மனைவியாகிய அந்த ஸ்திரீக்குக் குழந்தைகள் இல்லாமல் இருப்பதற்குக் காரணங்களைச் சொல்லுவீரென்று கேட்க, அவள் தன்னுடைய முன் ஜென்மத்தில் செய்த பாவத்தாலே பார்வதியம்மையே! அவளுக்குச் சந்ததி கிடையாது.

**குறிப்பு.—முதல் மனைவி விஷயம்:—(1)** முதல் மனைவி ஸ்தானம் ஏழாமிடமாகிய மகரம். இந்த மகரலக்கினத்திற்குப் புத்ரஸ்தானாதிபதியாகிய சுக்கிரன் மகரத்திற்கு எட்டில் இருந்துகொண்டு சனியால் பார்க்கப்படுகின்றார். புத்திர காரகராகிய குரு மகரத்திற்கு எட்டில் மறைந்து சனியால் பார்க்கப்பட்டிருக்கிறார். மகரலக்கினத்திற்குப் புத்திரஸ்தானமாகிய லாபத்தை அங்காரகனும் கேதுவும் பார்க்கின்றார்கள். ஆகையால் முதல் மனைவிக்குச் சந்ததிகிடையாது.

**(2) இரண்டாவது மனைவி விஷயம்:—** ஜாதகருக்கு இருபத்தேழாவது வயதில் 2-வது மனைவி நேரிடும் என்று 17-ஆவது பாடலில் சொல்லி இருக்கிறது. ஜாதகருக்கு வயது ஷை 26–0–0 முதல் ஷை 27–0–0 முடியும் வரையிலும் சூரிய தசையில் சந்திர–அங்காரக புக்திகள் நடக்கின்றன. இரண்டாந் தாரபாவம் ஒன்பதாவதுவீடாகிய மீனமாகும். இந்தவீட்டிற்கதிபதியாகிய குரு சூரியனுடைய வீட்டிலிருக்கின்றார். சூரியன் ஒன்பதைப் பார்த்திருக்கின்றார். ஆகையால் சூரியனுக்குத் தன் தசையில் இரண்டாவது தாரத்தைக்கொடுக்க அதிகாரம் இருக்கிறது. லக்கினாதிபதியாகிய சந்திரனைக் குரு பார்ப்பதால் தனக்குண்டான இரண்டாந்தார அதிகாரத்தைக் குரு மேலே, முன்னே சொல்லியுள்ள பிரகாரம், கொடுக்கவே, சந்திரனுக்குத்தன் புக்தியில் இரண்டாந்தாரத்தைக் கொடுக்க அதிகாரம் வருகிறது.

19. என்ன ஊழ் செய்தா ளத்தை யியம்புவீர் முனியே நீர்தாம்
கன்னியின் பூர்வம் சொல்வேன் கஞ்சனைப் பூசை செய்து
உன்னத பட்சி தன்னில் உதித்தன ளிக்கு லத்தில்
முன்னமே குடும்பி யாகி முதல்வியும் வாழுந்நாளில்

19. ஜாதகருடைய மனைவி என்ன பாவத்தைச் செய்தாளோ; அதைச் சொல்லுவீர், முனிவரே! நீங்கள், என்று கேட்க, முனிவர் அவளுடைய பூர்வ ஜன்மத்தைச் சொல்லுகிறார். அவள் பிரமதேவனைப் பூஜை செய்து மேன்மையான சிறந்த பக்ஷிஸ்தலம் என்று சொல்லப்படுகிற திருக்கழுக்குன்றத்தில் இந்த ஜன்மத்தில் சிறந்த குலமாகிய வன்னிய ஜாதியில் பிறந்து மேன்மையான குடும்பத்தில் முதன்மையானவளாகவிருந்து வாழுகின்ற காலத்தில்;

20. தன்னுடக் கொல்லை தன்னில் தங்கிற்றுக் கருப்பான் சாமி
முன்னோர்கள் தோத்த ரிப்பார் முதல்குல தெய்வ மென்று
கன்னியும் கருவத்தாலே கருமுனி தனைத்தொ ழாமல்
மௌனமாய் நின்று ளென்றோம் மாமுனி புகலும் சாபம்.

**20.** அவளுடைய வீட்டின் கொல்லையில் வாசஞ் செய்து கொண்டிருந்த பெண்களின் (கர்ப்பப்பையிலுள்ள கருவை நாசஞ் செய்வதால் கருப்பான் **சாமி** என்று சொல்லப்பட்ட) முனீசுவரனை அவளுடைய முன்னோர்களாகிய பெரியோர்கள் தங்களுடைய முதன்மை யானக் குலதெய்வமென்றுக் கருதிப் பூஜை செய்து வந்தார்கள். அவள் தன்னுடைய அகங்காரத்தினு லும் இறுமாப்பினுலும் இந்தக் கருமுனியாகிய முனீசுவரனைப் பூஜை செய் யாமல் சும்மா இருந்து விட்டாள் என்று சொல்லுகிறோம். அந்தப் பெரிய முனீசுவரனும் சாபத்தை அவளுக்குக் கொடுக்கின்றார்.

> **21.** என்னையே தொழாத பாவி யீன்றதோர் சுதரைக் கொல்வேன்
> வரும்ஜன்மம் தன்னில் புத்திரர் உதிக்காத வண்ணம் நானும்
> உன்பக்கல் வாசமாவேன் உரைத்து வேறுசாகை செல்லத்
> துன்மைகள் நேர்ந்த தென்றோம். வேறு ஒன்று செப்புவோம்

**21.** என்னைக் கும்பிடாமலும் வணங்காமலும் இருக்கின்ற பாபி யாகிய நீ பெற்ற பிள்ளைகளை நான் கொன்று விடுவேன். இதுவுமன்றி உன்னுடைய மறு ஜன்மத்தில் நான் உன்னைப் பிடித்துக் கொண்டு உன்னுடன் கூடவே இருந்து வாசஞ் செய்து கொண்டு உனக்குப் பிள்ளைகள் பிறக்காதபடியும் செய்து விடுவேன் என்று அவளைப் பார்த்து அந்த முனீசுவரன் சொல்விட்டு வேறே ஓர் இடத்திற்குப் போய்விடவே, அந்தச் சாபத்தால் அவளுக்குக் கெடுதிகள் இந்த ஜன்மத்தில் உண்டாயின என்று சொல்லுகிறோம். இதுவுமன்றி இன்றொரு சாபத்தைச் சொல்லு கிறோம்.

> **22.** இறப்பினில் கூடு கட்டி யிருக்கிற பட்சி தன்னைக்
> குறிப்பாக அதைக் கலைத்தாள் குஞ்சுகள் மாண்ட வென்றோம்
> மறுவிற்று அதுஒர் தோஷம் மைத்துனன் மதலைக்காக
> அரிவைவஞ் சனையும் செய்தாள் அடைந்தது அதுஒர் தோஷம்.

**22.** வீட்டிறப்பிலும் இறவாணத்திலும் கூண்டு கட்டி வசித்திருந்த ஒரு பக்ஷியின் கூட்டை வேண்டுமென்றே அவள் கலைத்து விடவே அதிலிருந்த அதனுடைய குஞ்சுகள் இறந்தன. இதனாலுண்டான இன்னொரு சாபம் அவளை வந்து அடைந்தது. இதுவுமன்றி அவள் தன் னுடைய புருஷனுடைய சகோதரனின் குழந்தைக்குக் கொடுமைகளைக்கபட மாகச் செய்தாள். இதனால் அவளுக்கு இன்னொரு சாபம் வந்து நேர்ந்தது.

> **23.** ஆகையால் மூன்று தோஷம் அடைந்தது பாவைக் கேதான்
> பாவைக்குச் சுதர்கள் தோஷம் செய்தனூழ் விலக்க வேண்டி
> பாகமாய்க் கிரியையொன்று பகருவீர் முனியே நீர்தாம்
> நாகம்போல் முனிதோ ஷத்திற்கு நவிலுவோம் கிரியை யொன்று.

**23.** ஆகையால் அவளுக்கு மேற்சொல்லிய மூன்று விதமான சாபங்கள் வந்து சேர்ந்தன. அதனால் அவளுக்குப் புத்திர தோஷம் ஏற்பட்டு விட்டது. அவள் தன்னுடைய முன்ஜன்மத்தில் செய்த பாவங்களை நிவிர்த்தி செய்வதற்காகத் தகுந்த ஒரு சாந்தியை முனிவரே! நீரே

சொல்லுமென்று கேட்கவே, நாகப்பாம்பின் கொடிய விஷத்தைப் போன்ற முனீசுவரனுடைய கொடிய சாபத்தை நிவிர்த்திசெய்ய ஒரு சாந்தி சொல்லுகிறோம்.

24. கருமசாந் திகளும் செய்து காதலி பீசம் தன்னைக்
கருவங்க ரேக்கில் கீறிக்காதலி பூசை வைத்துத்
திருமக ளணிவா ளாகில் சேயர்கள் விருத்தியாகும்
திருகென்று செய்யா ளாகில் சுதர்காணுள் முனியும் வாசம்.

24. அவள் பூர்வகர்மங்களை விலக்குவதற்குரிய சாந்திகளைச் செய்து ஒரு காரீயத் தகட்டில் பீஜாக்ஷரத்தை எழுதி அதைப் பூசையில் வைத்து அதை அவள் அணிந்து கொள்ளுவாளாகில் அவளுக்குக் குழந்தைகள் உண்டாகி விருத்தியாவார்கள். வஞ்சனையாலும் கள்ளத்தாலும் அவள் இவ்விதமாகச் செய்யாவிட்டால் அவளுக்குக் குழந்தைகள் உண்டாக மாட்டார்கள். மேலும் அவளிடத்தில் முனீசுவரன் வாசஞ் செய்து கொண்டிருப்பார்.

25. ஜாதகன் முன்ஜன் மத்தைச் சாற்றுவோம் தவளை தென்பால்
மேதினில் பேரூர் தன்னில் விளங்கினன் மிலேச்ச னாகக்
காதலி மதலை யுண்டாய்க் கனமுடன் வாழுந் நாளில்
தீதுகள் ஏழைக்கேதான் செய்தனன் என்று சொல்வோம்.

25. ஜாதகருடைய பூர்வ ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறோம். தவளை என்றதற்குத் தெற்கு திக்கில் பூமியில் உள்ள ஒரு பெரிய கிராமத்தில் மிலேச்ச ஜாதியில் பிறந்து மனைவி குழந்தைகள் இவர்களை உடையவராகிப் பெருமையுடன் வாழ்கின்ற காலத்தில் இவர் ஏழைக்களுக்குக் கெடுதிகளைச் செய்தார் என்று சொல்லுகிறோம்.

26. ஏழைகள் மனவெ றுப்பா லியம்பின சாபம் கேண்மோ
தாழ்படச் செய்த பாவிதங்கும்பின் ஜன்மம் தன்னில்
சூழாது துணைவர் தாமும் சுதருமே தோஷ மெய்தும்
பாழ்மனை யிரண்டு மாயும் மானிலம் தன்னில் வாழ்வாய்.

26. ஏழை ஜனங்கள் மனம் நொந்து வெறுத்துக் கொடுத்தச் சாபத்தைக் கேட்பீராக. எங்களுக்குந் தாழ்ந்த நிலைமையும் இகழ்ச்சியும் நேரும்படியாகக் கெடுதிகளைச் செய்த பாவியாகிய உனக்குப் பின் ஜன்மத்தில் சகோதரர்கள் கிடையா. குழந்தைகளுக்குத் தோஷமுண்டாகக்கடவது, உனக்குக் கெட்ட மனைவிகள் இருவர் உண்டாகி நீ இந்தப் பெரிய பூமியில் வாழக் கடவாய் என்று ஏழைகள் இவரைப் பார்த்துச் சொன்னார்கள்.

27. இன்னமும் பலவாறு சொன்னா ரெய்திற்று அந்தச் சாபம்
மன்னனு மந்தி யத்தில் மறையோருக் குதவி செய்து
தென்திசை காலன் பக்கல் சென்றுமே பிரமன் லக்கம்
இந்நிலந் தனிலு திப்பா னெய்திடு மேழைச்சாபம்.

27. அந்த ஏழை ஜனங்கள் இன்னமும் பலவிதமாகச் சொல்லி இவருக்குச் சாபங் கொடுத்தார்கள். அந்தச் சாபங்கள் இவரை இந்த ஜன்மத்தில் வந்து அடைந்தன. ஜாதகர் முன் ஜன்மத்தில் கடைசி காலத்தில் பிராமணர்களுக்கு உபகாரஞ் செய்து இறந்து தெற்குத் திக்கி லுள்ள எமனிடஞ் சென்று பிரமதேவனுல் எழுதப்பட்டு இந்த ஜன்மத் தில் இந்தப் பூமியில் வந்து பிறந்தார். அந்த ஏழை ஜனங்களின் சாபம் இவரை வந்து அணுகும்.

28. தன்துணை காணு ருகும் சந்ததி அற்ப மாகும்
பின்மனை நேரு மென்றேம் பேசுவோ மிவனின் யோகம்
இன்னவன் ஜனனம் தொட்டு இருபது யேழாண் டுக்கும்
பொன்பூமி அல்ப மெய்தும் புகழிலா குடும்ப மென்றேம்.

28. ஜாதகருக்குச் சகோதரர்கள் கிடையா. குழந்தைகளும் கொஞ்சமாக விருக்கும். இரண்டாவது மனைவியும் ஏற்படுவாள். இவரு டைய யோகங்களைப் பற்றிச் சொல்லுவோம். இவருடைய ஜனனகாலம் முதற்கொண்டு இருபத்தேழு வயது வரையிலும் தனம் பூமி இவைகள் கொஞ்சமாக ஏற்படும். குடும்பம் மேன்மையானதாக விருக்காது என்று சொல்லுகிறேம்.

29. சொன்னதோர் ஆண்டு மேலாய்த் தொல்புவி சேர்த்த லுண்டு
பொன்சேர்க்கை பலரும் நேசம் பூர்வமாம் பொருளும் சேரும்
அன்னியர் மதிக்க வாழ்வான் ஆண்மையாய்க் குடும்ப மெய்தும்
இன்னமும் விவர மாக இயம்புவோம் பின்பா கத்தில்.

29. ஜாதகருக்கு முந்தி சொல்லியுள்ள இருபத்தேழு வயதிற்கு மேலே பூமி வந்து சேரும். தனம் வந்து சேரும். அனேகர் சினேகமாவார் கள். பூர்வீகமான பொருளும் வந்து சேரும். அயலார்கள் இவரை மதிக்கும் படியாகப் பெருமையுடன் வாழ்வார். இவருடைய குடும்பமும் மேன்மை யாகவும் சிறப்புடையதாகவும் இருக்கும். பின் பாகத்தில் விஷயங்களை அதிக விபரமாகச் சொல்லுகிறேம்.

30. மாதுரு குணத்தைச் சொல்வேன் மனமது தளர்ச் சியுண்டு
சூதிலாள் பித்த தேகி சொல்லது சுருக்க மாகும்
பாதக மன மில்லாதாள் பர்த்தாவுக் கினியளாகும்
வேதனை கொஞ்ச முண்டு வித்தகி தீர்க்க ஜீவி.

30. ஜாதகருடைய தாயின் குணதிசயங்களைச் சொல்லுகிறேன். இவள் இளகிய மனத்தையுடையவள். கபடமில்லாதவள். பித்ததேகத்தை யுடையவள். இவள் கொஞ்சமாகப் பேசுவாள். கெட்ட மனமில்லாதவள். புருஷனுக்கு இஷ்டமானவள். இவளுக்குக் துன்பங்கள் கொஞ்சம் இருக்கும். இவள் நீண்ட ஆயுளையுடையவள்.

31. தன்துணை ஆண்பால் ரண்டு சத்திமா ரவ்வாறு தீர்க்கம்
இன்னவள் முன்ஜன் மத்தை யியம்புவோம் காரைக் காலில்
அன்னவன் மறவர் வமிசம் அணுகியே சுதர்க ளுண்டாய்
முன்வினை யில்லா தாகி யொதுங்கினள் காலன்னாடு.

31. ஜாதகருடைய தாயாருக்கு இரண்டு ஆண் சகோதரர்களும் இரண்டு பெண் சகோதரர்களும் உண்டு. இவளுடைய முன் ஜன்மத்தைச் சொல்லுகிறோம். இவள் காரைக்காலில் மறவர் குலத்திற் பிறந்து குழந்தைகளை யுடையவளாகவும் முன் ஜன்மத்திய பாவம் இல்லாதவளாகவும் இறந்து எமபட்டணத்திற்குச் சென்றாள்.

32. வேதனால் வரைப் பட்டு விளங்கி னளிந்த மாது
ஓதுவே னிவள்பின்ஜன்மம் உம்பர்வாழ் அருணை தன்னில்
போதன முடையா னுக்குப் பிறப்பளாம் வேளாள் வமிசம்
பாதியாய் வடிவு கொண்ட பார்வதி கேட்டி டாயே.

32. இவள் பிரமதேவனால் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்தாள். இவளுடைய மறு ஜன்மத்தைச் சொல்லுகின்றேன், தேவர்கள் வசிக்கின்ற திருவண்ணாமலையில் அறிவில் சிறந்த ஒரு வேளாளனுக்குப் பிறப்பாள். சிவபெருமானுடைய தேகத்தில் பாதிபாகத்தையுடைய பார்வதியம்மையே! கேட்பீராக.

33. எண்ணஞ்சு நாலா மாண்டி லியம்புவோம் தந்தை கண்டம்
திண்ணமா யிவன்பின் ஜன்மம் திருகச்சூர் தன்னிலேதான்
வண்ணமாய்ச் சைவச் சேயாய் வருகுவா னென்று சொல்வோம்
அண்ணலைப் பூசை செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

33. ஜாதகருக்குப் நாற்பத்துநான்காவது வயதில் இவருடைய தகப்பனார் இறந்துவிடுவார். தகப்பனார் தன்னுடைய மறு ஜன்மத்தில் திருக்கச்சூரில் அழகான வடிவமுள்ள ஒரு சைவராக வந்து பிறப்பார் என்று சொல்லுகிறோம். சிவபெருமானைப் பூஜை செய்கின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

**குறிப்பு.**—தகப்பனாருடைய மரணகால விஷயம்.—ஜாதகருக்கு வயது ௵ நாற்பத்து மூன்று முதல் ௵ நாற்பத்திநான்கு முடிகிற வரையிலும் அங்காரக தசையில் ராகு-குரு-புக்திகள் நடக்கின்றன. பிதுர்ஸ்தானம் ஒன்பதாமிடமாகிய மீனம் ஆகும். இதற்கு இரண்டிற்கும் ஒன்பதிற்கும் உடையவரான அங்காரகன் பிதுர்லக்கினத்திற்கு எட்டில் இருக்கின்றார். மீனலக்கினத்திற்கு அங்காரகன் கொல்லமாட்டார் என்று பராசரஹோரை ஜாதக சந்திரிகை 66-ஆவது, 67-ஆவது சுலோகங்களில் சொல்லியிருந்தும் இங்கு அங்காரகன் தன் தசையில் பிதாவைமாரகஞ் செய்து விடுவார் என்று சொல்லி இருக்கின்றதைக் கவனிக்கவும். பொதுவாய் ஜாதகருக்கு மூன்றிற்குடையவரும் பத்திற்குடையவரும் பிதுர்கர்மாதிபதிகள் என்று சொல்லுவது வழக்கமுண்டு. ஏனென்றால் பிதுர் ஸ்தானமாகிய ஒன்பதிற்கு மாரகாதிபதிகளாகிய இரண்டிற்கும் ஏழிற்கும் உடையவர் பத்திற்கும் மூன்றிற்கும் உடை

யவராவர். இங்கு அங்காரகன் பத்திற்குடையவராக நேரிடுகின்றார். இந்தக் காரணத்தைக்கொண்டு அங்காரகன் பிதுர்மாரகன் என்று சொல்லி இருக்கிற தைப்போலத் தோற்றுகிறது. மீனலக்கினத்திற்கு புதன் மாரகாதிபதி என்று மேற்கண்ட சுலோகங்களில் கன்டிருக்கின்றது. இராகு புதன் வீட்டில் இருக்கி ன்றார். புதனுடனும் பிதுர்காரனாகிய சூரியனுடனும் சம்பந்தப்பட்டு மீனத் திற்கு ஏழாவது மாரகஸ்தானத்தில் இருக்கின்றார். ஜாதகச் சந்திரிகை 23-ஆவது, 12-ஆவது சுலோகப் பிரகாரம் பிதாவுக்கு மாரகத்தைச் செய்யக் குருவைவிட அதிக அதிகாரம் உடையவராக இராகு இருக்கின்றார்.

34. அதற்குமே லாறு ஆண்டில் அன்னைக்குக் கண்ட மெய்தும்
இதுநிற்க உதித்தோ னுக்கு இயம்புவோ மறுபா னெட்டில்
சதிதரும் தேளின் மாதம் காலன்தன் பக்கல் சேர்வ
னதிபன்பின்ஜன்மம் தன்னை வரைகிறேம் தாயே கேளும்.

34. ஜாதகனுக்கு நாற்பத்துனன்கு வயதிற்குமேல் ஆறுவது வருஷ மாகிய ஐம்பதாவது வயதில் தன்னுடைய தாயாருக்கு மரணமுண்டாகும். ஜாதகருக்கு மரணகாலத்தைச் சொல்லுகிறோம். இவர் தனக்கு அறுபத் தெட்டாவது வயதில் கெடுதியையுண்டாக்குகின்ற கார்த்திகை மாதத்தில் ஜாதகர் இறந்து எமனிடம் போய்ச் சேருவார். இவருடைய மறு ஜன் மத்தைச் சொல்லுகிறோம். எங்கள் தாயாராகிய பார்வதியம்மையே! கேட்பீ ராக.

குறிப்பு.—(1) தாய் மாரக விஷயம்.—ஜாதகருக்கு வயது ஷ 49 முதல் ஷ 50 முடியும் வரையிலும் இராகு தசையில் ராகுபுக்தி நடக் கின்றது. தாயாருடைய லக்கினமாகிய துலாத்திற்குப் பராசாஹோரை ஜாதகசந்திரிகை 56-ஆவது சுலோகப் பிரகாரம் சூரியன் மாரகராகின்றார். துலாத்திற்குப் பன்னிரண்டில் சூரியனுடன் இருக்கின்ற ராகு ஜாதக சந்திரிகை 23-ஆவது 12-ஆவது சுலோகப் பிரகாரம் மாதாவை மாரகஞ் யும் அதிகாரத்தைச் சூரியனிடமிருந்து வாங்கிக் கொள்ளுகிறார்.

(2) ஜாதகர் மாரக விஷயம்.—ஜாதகருக்கு வயது ஷ 67 முதல் 68 முடியும் வரையிலும் குருதசையில் குருபுக்தி நடக்கின்றது. கடக லக்கினத் திற்குச் சுக்கிரன் மாரகர். இவருடன் சம்பந்தப்பட்ட குரு ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரம் மாரகராகிறார். மணிகண்டகேரளம் அரிஷ்ட காண்டம் 18-ஆவது பாடல், பிரதிஅரிஷ்டகாண்டம் 40-ஆவது பாடல், துய்ய கேரளம் எட்டாம் பாவம் 4, 5-ஆவது பாடல் பிரகாரமும் அட்டமன் 12-இல் இருந்தால் வயது தீர்க்கம என்ற விதிபிரகாரமும் இந்த ஜாதகம் பூர்ணயுள் ஜாதகமாகும். அதனால் சுக்கிரதசையில் மாரகம் நேரிடாமல் குருதசையில் மாரகம் நேரிட அமைப்பு இருக்கிறது.

35 உத்தரம் தனிகை தன்னில் உதிப்பனும் க்ஷத்திரிய சேயாய்
மெத்தனக் குடும்பி யாகி வித்தகன் வாழ்வா னுகும்
புத்திரன் ஜனனகாலம் புரவிநாள் முதல்பா தத்தில்
சுத்தமாய்க் கேதா ருண்டுர் செப்பினேம் பூர்வ பாகம்.

35. ஜாதகர் வடக்குத் திக்கில் திருத்தணிகை க்ஷேத்திரத்தில் க்ஷத்திரிய குலத்தில் பிறந்து மேன்மையான குடும்பமுடையவராகி வாழ் வார். ஜாதகர் பிறக்குங்காலத்தில் அசுவினி நட்சத்திரத்தில் ஒராவது பாத மாகும். இதற்குரிய கேதுமகா தசையில் இருப்பு ஆறு வருஷமாகும். இதுவரையிலும் பூர்வபாகமாகிய முதல் பாகத்தைச் சொன்னோம்.

36. முன்மனை தனக்குச் சாந்தி மொழிந்திட்டீர் ஒருவர்க் கன்னம்
புத்திர னுண்டாமோ காணுதோ தேவியும் சொல்வாய்
சொன்னதோர் சாந்தி செய்யில் சுதர்தோன்றும் சந்தே கம்தான்
பின்பாகம் விவரம் சொல்வேன் பேதையே கேட்டி டாயே.

36. முதல் மனைவிக்குச் சாந்திகள் நீங்கள் சொன்னீர்கள். ஒருவருக்கு அன்னதானம் செய்துவந்தால் புத்திரன் பிறப்பானே அல்லது கிடையாதோ என்ற விஷயத்தைச் சொல்லுவீர் என்று பார்வதி கேட்கும்போது, முனிவர் சொல்லுகிறார். நாங்கள் சொல்லிய சாந்திகளைச் செய்தால் குழந்தைகள் பிறக்கும். செய்யாவிட்டால் குழந்தைகள் பிறப்பது சந்தேகமானதாகும். இதனுடைய விவரத்தைப் பின் பாகத்தில் சொல்லுகிறேன். பார்வதி யம்மையே ! கேட்பீராக.

குறிப்பு.—24-ஆவது பாடலைப் பார்க்கவும்.

# ஜாதகம் 66

1. கடகலக் கினம தாகக் கனகனும் [1] ஜன்மம் தங்க
முடவனும் [2] நவத்தி லாக மெய்ஞ்ஞானி [3] ஆறி லாகச்
சுடரவன் [4] புதனு மெட்டில் சேய் [5] புகர் [6] தசம மாக
உடுபதி [7] ராகு வீராறு உரைப்பீர்கள் பலனை என்று ;

| | | | |
|---|---|---|---|
| சனி | அங்காரன் சுக்கிரன் | | சந்திரன் ராகு |
| சூரியன் புதன் | இராசி சக்ரம் | | லக்கினம் குரு |
| | | | |
| கேது | | | |

1. லக்கினம் கடகமாகி, ஜன்ம லக்கினதில் குருவும், ஒன்பதில் சனியும், ஆறில் கேதுவும், எட்டில் சூரியனும் புதனும், பத்தில் அங்காரகனும் சுக்கிரனும், பன்னிரண்டில் சந்திரனும் ராகுவும் இருந்தால், பலாபலன் களைச் சொல்லுவீரென்று ;

**குறிப்பு.**—இந்த ராசிச் சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரகநிலை பொருத்தமுடையதாகும் :—மேஷத்தில் சுக்கிரனும், மிதுனத்தில் சூரியனும், சிம்மத்தில் சனியும், கன்னியில் அங்காரகனும் கேதுவும், துலாத்தில் சந்திரனும், விருச்சிகத்தில் குருவும், தனுசில் புதனும், மீனத்தில் ராகுவும் ஆகும்.

மிருக சீரஷம் 3-ம் பாதம் அங்-தசை ஷூ 2-8-0.

2. சங்கரி கேட்கும் போது ஜயமுனி கூறுகின்றார்
இங்கிவை ஆண்பால் ஜன்மம் இல்லமும் கீழ்ப் பால் நோக்கம்
ஐங்கர னீச னுத்தரம் ஆளிவா கனத்தோன் மீனம்
சங்குச்சக் கரனும் தென்மேல் தணல்காளி அதன்மேல் தங்கும்.

2. பார்வதியம்மை கேட்கும் போது ஜயமுனிவர் சொல்லுகிறார். இந்தக் குழந்தை ஆண் குழந்தையாக ஜனனமாகும். பிறந்த வீடு கிழக்குத் திக்கு பார்த்ததாக விருக்கும். வடக்குத் திக்கில் விநாயகர்

---

[1]குரு [2]சனி [3]கேது [4]சூரியன் [5]அங்காரகன் [6]சுக்கிரன் [7]சந்திரன்

கோயிலும் வடகிழக்குத் திக்கில் சிவன் கோயிலும் தென் மேற்குத் திக்கில் மகாவிஷ்ணுவின் கோயிலும் இதற்கு மேற்கில் காளியம்மன் கோயிலும் இருக்கும்.

3. இத்தகை அடையா ளத்து ளிலகிய கூரை யில்லம்
வித்தக னிரண்டாம் ஜன்மம் விளங்குவான் கங்கை சேயாய்ப்
பெத்ததாய் தந்தை யோகம் பேதையர் புத்திர யோகம்
சுத்தமாய் முன்பின் ஜன்மம் செப்புவோ மிந்நூல் தன்னில்.

3. இப்படிப்பட்ட அடையாளங்கள் உள்ளவிடத்தில் ஒரு கூரை வீட்டில் ஜாதகர் இரண்டாவது பிள்ளையாக வேளாளர் குலத்தில் வந்து பிறப்பார். இவருடைய தாய் தகப்பன் இவர்களுடைய யோகங்களையும், மக்கள் இவர்களுடைய யோகங்களையும், முன் ஜன்மம் மறு ஜன்மம் ஆகிய இவைகளெல்லாவற்றையும் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகிறோம்.

4. தந்தையின் துணைஆண் மூன்று சத்திமா ரவ்வா ருரும்
அந்தஆண் வேருய்ச் செல்வர் அவர்பலன் பின்பால் சொல்வேன்
இந்தவன் தந்தை சேதி யியம்புவோ மீகை யாளன்
கந்தன்தன் நாமம் கொண்டோன் கார்நிறம் சமதே கத்தன்.

4. தகப்பனுருடன் பிறந்தவர்கள் ஆண் மூன்றும் பெண் மூன்றும் ஆகும். இந்த ஆண் சகோதரர்கள் இவரை விட்டுப் பிரிந்து வேருக விருந்து வாழ்வார்கள். இவர்களுடைய பலாபலன்களைப் பின்னுல் சொல்லுகிறேன். ஜாதகருடைய தகப்பனின் விஷயங்களைக் சொல்லுகிறோம். தகப்பனுர் தயாளகுணமுடையவர். கொடையாளியாக விருப்பார். முருகருடைய பெயரையுடையவர். கறுப்பு நிறமுள்ளவர். நடுத்தரமானத் தேகத்தையுடையவர்.

5. பயிர்த் தொழில் புரிவா னுகும் பாரு களற்ப மென்றோம்
நயம்படக் கூறு வானும் நாற்காலி பலித மில்லான்
அயலார்பொன் னிச்சை யில்லான் யாவர்க்கும் நல்லோ னுவன்
தயையுள மனத்த னுகும் தனமது பெருக்க முள்ளான்.

5. ஜாதகருடைய தகப்பனுர் விவசாயத் தொழிலைச் செய்வார். பூமிகள் கொஞ்சமாக விருக்கும் என்று சொல்லுகிறோம். இனிமையாகப் பேசுவார். இவருக்குக் கால் நடைகள் விருத்திகிடையாது. இவர் பிறருடைய சொத்தில் ஆசையில்லாதவர். எல்லோருக்கும் நல்லவராக விருப்பார். தயாளகுணமுள்ள மனத்தையுடையவர். பணமும் சம்பத்தும் அதிகமாகுந் தன்மையுடையவர்.

6. உரோமங்க ளதிக முள்ளான் நுவலுப தேசம் கொள்வான்
காமனை விருப்பம் கொள்வன் கட்டுரை புகலா னுகும்
தீமையாங் குணமில் லாதான் ஜனசகா யங்கள் செய்வன்
தாமத குணமும் கொஞ்சம் சந்தேக மனத்தா னுகும்.

6. ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய தேகத்தில் மயிர் அதிகமாக வுடையவர். சொல்லுதற்குரிய, அஃதாவது மதிப்பிடத்தக்க உபதேசங் களைப் பெறுவார். மன்மதன் மேல் அதிக ஆசையுள்ளவர். அஃதாவது இவர் அதிக காமமுடையவராக விருப்பார். கட்டு வார்த்தைகளைப், பொய் வார்த்தைகளைச் சொல்லமாட்டார். கெட்ட குணமில்லாதவர். ஜனங்களுக்கு உதவி செய்வார். நிதானமான சாந்தமான குணமும் கொஞ்சம் இருக்கும். சந்தேகமான மனத்தை உடையவர்.

7. பித்ததே கத்தா னுகும் பேச்சதைக் காப்பா னுகும்
சுத்தவான் அடக்க வார்த்தை க்ஷேத்திரம் பொன்னுல் செய்வன்
நத்திஞேர்க் குதவி செய்வன் நாயகி வர்க்கம் நாஸ்தி
சுத்தம்போல் வெளிம யக்கன் செப்புவோ மிவன்முன்ஜன்மம்.

7. ஜாதகருடைய தகப்பனுர் பித்தமான தேகத்தையுடையவர். தான் சொல்லிய வார்த்தைகளைக் காப்பாற்றுவார். சுத்தமாக விருப்பார். சாந்தமான வார்த்தைகளை உடயோகிப்பார். பணம் சம்பாதித்து வீட்டைக் கட்டுவார். தன்னிடம் வந்து எதையாகிலும் விரும்பினர்களுக்கு உபகாரஞ் செய்வார். இவருடைய மனைவியின் பந்துக்கள் நாசமடைவார்கள். தான் பரி சுத்தமாய் இருப்பதைப் போலக் காட்டிப் பிறரை மயங்கும்படியாய்ச் செய் வார். இவருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறேம்.

8. பிருதிவி தலத்துக் கீழ் பால் பேரூரில் செங்குந்த சேயாய்
உறைந்துமே நெசவு செய்து ஓராறு முகத்தோன் பத்தி
அரனடி தொண்டு பூண்டு அடைந்தோரை ஆத ரித்து
மறலியின் நாடு சென்று மறையவன் வரையப் பட்டு ;

8. காஞ்சீபுரத்திற்குக் கிழக்குத் திக்கில் ஒரு பெரிய ஊரில் செங் குந்தர் என்று சொல்லப்பட்டக் கைக்கோள ஜாதியில் பிறந்து நெசவுத் தொழிலைச் செய்து ஆறுமுகங்களையுடைய முருகக் கடவுளின் மேல் பக்தி யுடையவராய் சிவபெருமானுடைய பாதங்களையும் தொண்டர்களையும் பூஜை செய்து தன்னிடம் வந்தவர்களைக் காப்பாற்றிப் பிறகு இறந்து எமபட்டணத் திற்குச் சென்று பிரமதேவனுல் எழுதப்பட்டு.

9. வந்தவ னென்று சொல்வோம் வரைந்தஇக் குணத்தா னுக்கு
இந்தவ னுதிப்பா னுகு மியம்புவோ மிவன்கு ணத்தை
முந்தின கோப மேற்பன் மொழியதைக் காப்பா னுகும்
சிந்தையும் நல்ல தாகும் ஜனசகா யங்கள் செய்வன்.

9. இந்த ஜன்மத்தில் வந்து பிறந்தார் என்று சொல்லுகிறேம். இப்படிப்பட்டக் குணங்களையுடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய குணுதிசயங்களைச் சொல்லுகிறேம். இவர் முன்கோப முடை யவர். தன்னுடைய வார்த்தைகளைக் காப்பாற்றுவார். நல்ல மனத்தை யுடையவர். ஜனங்களுக்கு உதவிசெய்வார்,

10. அஞ்சின வார்த்தை கூறான் அடாவடி கொஞ்ச முண்டு
வஞ்சியர் மோக னுவன் மாடுகள் பணையேர் விருத்தி
பஞ்சுபோல் ரோம முள்ளான் பதர்குண மில்லா னுகும்
கஞ்சமாம் ரேகை யுள்ளான் கந்தன்மேல் பத்தி பூண்பன்.

10. ஜாதகர் பயத்தை உண்டு பண்ணக்கூடிய வார்த்தைகளைச் சொல்ல மாட்டார். முரட்டுத்தனமாகவும் அவசரமாகவும் கொஞ்சம் நடந்து கொள்ளுவார். பெண்களின் மேல் காம ஆசையுடையவர். இவருக்கு மாடுகளும் பயிர் செய்யும் உழவு மாடுகளும் ஏர்களும் நிலங்களும் விருத்தியாகும். மிருதுவான மயிரை உடையவர். அவசரமான குணமில்லாதவர். தன்னுடைய கையில் தாமரை ரேகையை உடையவர். முருகர் மேல் பக்தி உடையவர்.

11. கல்வியு முடைய னுகும் காலிகள் விருத்தி யுண்டு
நல்லவன் நல்ல வர்க்கு நடையது துருசு முண்டு
சல்லியம் பூர்வ மேற்பன் சடிதியில் நிவிர்த்தி செய்வன்
எல்லையில் வேறூர் சேர்ப்பனேகுவான் தலவா சங்கள்.

11. ஜாதகர் வித்தையுடையவராவர். இவருக்குக் கால்நடைகள் விருத்தியாகும். இவர் நல்லவராக நடந்து கொள்ளுவார். வேகமாக நடக்கக் கூடியவரல்ல. இவர் முதலில் கடன் வாங்குவார். அதைச் சீக்கிரத்தில் கொடுத்துவிடுவார். இதர கிராமங்களில் பூமியைச் சேர்ப்பார். தீர்த்த யாத்திரைகளைச் செய்வார். தெய்வஸ்தலங்களுக்குப் போவார்.

12. உண்டியில் வறுமை காணுன் உறுதியா மனத்தா னுகும்
பண்டுநாள் பூமி கொஞ்சம் பாலகன் விருத்தி செய்வன்
அண்டர்கள் பூசை பூண்பன் ஆள்கார ருடைய னுவன்
வண்டிவா கனமு மேற்பன் மாற்றுனை உறவு கொள்வன்.

12. ஜாதகர் தன்னுடைய போஜன விஷயத்தில் கஷ்டம் அனுபவிக்காதவர். தைரியமான, நிலையான மனதைத்யுடையவர். பழைய காலத்திய பூமிகளைக் கொஞ்சம் விருத்தி செய்வார். தேவர்களைப் பூஜை செய்வார். வேலையாட்களை உடையவர். வண்டியும் வாகனமும் உடையவர். பகைவரைச் சிநேகஞ் செய்து கொள்ளுவார்.

13. தன்துணை முன்பெண் ஒன்று சாற்றுவோம் பால னுக்குக்
கன்னியின் சேதி சொல்வேன் கசடற மொழிவா ளாகும்
பின்ன மில்லாத தேகி பொய்யது புகலா ளாகும்
அன்னியர் மதிக்க வாழ்வள் ஆளன்தன் மனத்துக் கேத்தோள்.

13. ஜாதகருக்கு மூத்த சகோதரி ஒருத்தி உண்டு என்று சொல்லுகிறோம். இவளுடைய குணாதிசயங்களைச் சொல்லுகிறேன். இவள் குற்றமில்லாமல் சுத்தமாகப் பேசுவாள். யாதொரு பங்கமும் குறைவுமில்லாத தேகத்தை யுடையவள். இவள் பொய் சொல்லமாட்டாள். பிறர் இவளை மதிக்கும்படியாக வாழ்வாள். தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தபடி நடந்து கொள்ளுவாள்.

14. சொல்லது சுகமே யாகும் சுத்தமு முடையா ளாகும்
வல்லியும் வறுமை காணுள் வரனுமே தென்பால் நேரும்
தல்லிபோல் ஆத ரிப்பாள் சாதமு மன்பா யீவள்
அல்லலில் லாமல் வாழ்வள் அம்பிகை'யாளே கேளாய்.

14. இவள் சுருக்கமாகப் பேசுவாள். சுத்தமாக விருப்பாள். தரித்திரமும் கஷ்டமும் அடையாதவள். இவளுக்குப் புருஷன் தெற்குத் திக்கிலிருந்து வருவார். இவள் தாயாரைப் போலக் காப்பாற்றுவாள். இஷ்டத்துடன் சாப்பாடு போடுவாள். கஷ்டங்களில்லாமல் வாழ்வாள். பார்வதியம்மையே! கேட்பீராக.

15. மங்கைக்குச் சுதர்கள் தோஷம் மாமுனி சாபத் தாலே
தங்கிடு மென்று சொல்வோம் ஷண்முக னருளி னாலே
அங்கது வினைகள் நீங்கி அணுகிடும் சுதர்கள் தாமும்
சிங்கம்போல் ஆண்பா லொன்று செல்விமா ரிருவர் தீர்க்கம்.

15. இவளுக்குச் சந்ததிகள் தோஷத்தை அடையும். பெரிய முனியாகிய முனீசுவரனால் இவளுக்குப் புத்திர தோஷமுண்டாகும் என்று சொல்லுகிறோம். ஆனால் இந்தத் தோஷம் முருகக்கடவுளின் கிருபையால் நிவிர்த்தியாகி இவளுக்குக் குழந்தைகள் உண்டாகும். சிம்மத்தைப்போல வீர்யத்தையுடைய ஓர் ஆண் குழந்தையும் இரண்டு பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளையுடையவர்களாக விருப்பார்கள்.

16. மாதுக்குச் சிலது துன்பம் மருவிடும் பின்பால் சொல்வேன்
காதலன் பின்பெண் ணண்டு காளையு மொருவன் தீர்க்கம்
ஓதுவேனவர்கள் சேதி உத்தர பாகம் தன்னில்
போதக வானை பெற்ற புண்ணி சாலி கேளாய்.

16. இவளுக்குச் சில கெடுதிகள் உண்டாகும். இவைகளைப் பின்னால் சொல்லுகிறேன். ஜாதகருக்கு இளைய சகோதரிகள் இருவரும் இளைய சகோதரன் ஒருவனும் நீண்ட ஆயுளையுடையவர்களாக விருப்பார்கள். இவர்களுடைய விஷயங்களைப் பின் பாகத்தல் சொல்லுகிறேன். இளம் யானையின் முகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்தப் புண்ணிய மாதாவாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

17. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அரிபோலே கோப மேற்பள்
மன்னவன் மனதுக் கேத்தோள் மாநிறம் பித்தச் சூடு
கன்னென மொழியு முண்டு கலவர புத்தி யேற்பள்
சொன்னசொல் சுகமே யெய்தும் சோர்வோர்க்குத் தாக மீவள்.

17. ஜாதருடைய தாயின் குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகிறேன். இவள் சிங்கத்தைப் போலக் கோபத்தையுடையவள். தன்னுடைய புருஷனுடைய மனதிற்குத் தகுந்தாற்போல நடந்து கொள்ளுவாள். மாநிறமுள்ளவள். பித்தச்சூடான தேகத்தையுடையவள். இனிமையான மதுரமான பேச்சையுடையவள். கலக்கமான நிலையில்லாத புத்தியையுடையவள்.

இவள் பேசுகிற வார்த்தைகள் சுகத்தையுண்டாக்கக் கூடியனவாகவிருக்கும். களைத்தவர்களுக்கும் இளைப்புற்றவர்களுக்கும் தாகவிடாய்த் தீர தாகங் கொடுப்பாள்.

18. தன்துணை காணு ளாகும் ஜனிக்கினு மதுதீ தாகும்
என்ன்கா ரணத்தி னாலே யிவள்துணை தோஷம் சொன்னீர்
சந்திரன் ராகு ஈராறில் தங்கின பலத்தால் சொன்னோம்
அன்னவன் முன்ஜன் மத்தை அறிவிப்போம் தாயே யாங்கள்.

18. ஜாதகருடைய தாயாருக்குக் கூடப் பிறந்தவர்கள் கிடையாது. ஒரு சமயம் பிறந்திருந்தாலும் அவர்கள் இறந்துவிடுவார்கள். அல்லது துன் பத்தை அடைவார்கள். எந்தக் காரணத்தினால் இவளுடைய சகோதரர்களுக் குத் தோஷத்தைச் சொன்னீர்? சந்திரனும் இராகுவும் பன்னிரண்டாவது வீட்டில் பலமாயிருப்பதால் இவ்விதமாகச் சொன்னோம்*. எங்களுடைய தாயாராகிய பார்வதியம்மையே! இவளுடைய முன் ஜன்மத்தை நாங்கள் சொல்கிறோம்.

* குறிப்பு.—மாதுர் லக்கினம் துலாம். இதற்கு இளைய சகோதர ஸ்தான மாகிய மூன்றுவது பாவத்தில் கேது இருக்கின்றார். ராகு இந்த பாவத்தைப் பார்க்கின்றார். மூன்றிற்குடைய குரு மூன்றிற்கு எட்டாவது பாவத்திலும் அம் சையில் மூன்றிற்குப் பன்னிரண்டில் வக்கிரமாகவும் இருக்கின்றார். இந்தக் குருவை அங்காரகன் தனுசிற்கு விரயாதிபதியாகிப் பார்க்கின்றார். மூத்த சகோதர பாவமாகிய பதினொன்றிற்குடைய சுக்கிரன் இந்தப் பாவலக்கினத் திற்குப் பன்னிரண்டில் அங்காரகனுடன் இருக்கின்றார். பதினோராவது பாவத் தைச் சனி மூன்றுவது பார்வையுடன் பார்க்கின்றார். மூத்த ஆண் சகோதர காரகனாகிய குரு மூத்த சகோதர ஸ்தானத்திற்கு மூன்றில் இருக்கின்றார். இவரை மூத்த சகோதர ஸ்தானத்திற்கு விரயாதிபதியாகிய அங்காரகன் பார்க்கின்றார். ஆகையால், மாதாவின் இளைய, மூத்த சகோதரர்களுக்கு அதிக தோஷங்கள் இருக்கின்றன.

19. தவளையின் மலைக்கு மேல்பால் சார்ந்ததோர் சிறுவூர் தன்னில்
இவளுமே செக்கான் வமிச மெய்தியே மதலை யுண்டாய்
நவனியில் வறுமை யின்றி நாயகி வாழுந் நாளில்
தவசியே வந்த ஊழைச் சாற்றுவோம் தாயே கேளும்.

19. திருவண்ணாமலைக்கு மேற்கில் அதற்கு அடுத்த ஒரு சிறிய கிராமத் தில் ஜாதகருடைய தாயார் செக்காட்டியின் குலத்தில் வந்து பிறந்து குழந்தைகளை உடையவளாகித் தரித்திரமும் கஷ்டங்களும் இல்லாமல் வாழு கின்ற காலத்தில் இவளுக்கு வந்து சம்பவித்த பாவத்தைச் சொல்லுகிறோம். தபசு செய்கின்ற எங்கள் தயாராகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

20. இறப்பினில் கூடு கட்டி யிருக்கிற பட்சி தன்னைக்
குறிப்பாக அதைப் பிடித்துக் கூடுவைக் கலைத்தா ளென்றோம்
சிறகுக ளில்லாக் குஞ்சு சென்றது காலன் னூடு
மருவிற்று அந்தத் தோஷம் வரைகிறோம் வேறு ஒன்று.

20. ஜாதகருடைய தாயார் வீட்டின் கூறையை அடுத்துள்ள இற வானத்தில் கூண்டு கட்டியிருந்த ஒரு பக்ஷியை வேண்டுமென்றே ஒரு நோக்கத்துடன் பிடித்து அந்தக் கூண்டைக் கலைத்து விட்டாள் என்று சொல்லுகிறோம். அதனால் இறகுகள் இல்லாமல் இருந்த குஞ்சுகள் இறந்து விட்டன. ஆகையால் இந்தத் தோஷம் இவளை வந்து அணு கிற்று. இதுவுமன்றி இன்னொரு தோஷத்தைச் சொல்லுகிறோம்.

21. மைத்துனன் மனைவி தன்னை வஞ்சனை வார்த்தை சொல்லிச்
சித்தமே கலங்க வைத்தாள் சேடியும் மனது வாடிக்
குத்தங்கள் என்மேல் சொன்ன கோதைக்கு மறு ஜன்மத்தில்
சுத்தமாய்த் துணையு மின்றி தொல்புவி தன்னில் வாழ்வாள்.

21. ஜாதகருடைய தாயார் தன்னுடைய மைத்துனனுடைய பெண்சாதி யின் மேல் கபடமாக ஒரு பொய்யான வார்த்தையைச் சொல்லி அவளுடைய மனத்தைக் கலங்கும்படியாகச் செய்தாள். அவள் தன்னுடைய மனது நொந்து என் பேரில் பழிகளைச் சாட்டிய ஸ்திரீ அவளுடைய மறு ஜன்மத்தில் கொஞ்சங்கூடச் சகோதரர்கள் இல்லாமல் இந்தப் பழமையான பூமியில் வாழக் கடவது என்று சொன்னாள்.

22. இன்னமும் பலவாறு சொன்ன ளெய்திற்று அந்தச் சாபம்
கன்னிகை அந்தி யத்தில் கனமிலாக் குடும்பி யாகித்
தென்திசைக் காலன் னுடு சிரநான்கோன் வரையப் பட்டு
இந்நிலம் தனிலு தித்தா ளெய்திடும் பூர்வ தோஷம்.

22. அவள் இன்னமும் அநேக விதமாகச் சாபங் கொடுத்தாள். அந்தச் சாபம் ஜாதகருடைய தாயாரை வந்து அடைந்தது. இவள் மூன் ஜன் மத்தில் தன்னுடைய கடைசி காலத்தில் பெரிய குடும்பியாகவில்லாம லிருந்து இறந்து தெற்குத் திக்கிலுள்ள எமபட்டணத்திற்குச் சென்று நான்கு சிரசுகளையுடைய பிரம தேவனால் எழுதப்பட்டு இந்த ஜன்மத் தில் இந்தப் பூமியில் வந்து பிறந்தாள். இவளைப் பூர்வ சாபங்கள் வந்து அடையும்.

23. துணைகளு மில்லா ளாகும் செப்புவோ மிவள்பின் ஜன்மம்
வினைதீர்க்கும் மறைகட் கீசன் மேவிய நகரம் தன்னில்
சினமிலாக் குலத்தில் வந்து ஜனித்துமே வறுமை யின்றி
வனிதையும் வாழ்வா ளாகும் மங்கையே கேட்டி டாயே.

23. ஜாதகருடைய தாயாருக்குச் சகோதரர்கள் கிடையாது. இவளு டைய மறு ஜன்மத்தைச் சொல்லுகிறோம். வினைகளை ஒழிக்கின்ற வேதங் களுக்கு அதிபதியான பரம சிவன் எழுந்தருளிய சிதம்பரம் என்னும் பட்டணத்தில் கோபமில்லாத ஒரு குலத்தில் இவள் பிறந்து தரித்திரமும் கஷ்டங்களும் இல்லாமல் வாழ்வாள் என்று சொல்லுகிறோம். பார்வதி யம்மையே! கேட்பீராக.

24. ஆறஞ்சு ஆண்டு தன்னில அன்னைக்குக் கண்ட மெய்தும்
கூறெண்ணு மார கங்கள் குறிக்கிறோம் முப்பா னேழில்
தீரமா யுடலம் ஏகும் செப்பின மொழி குன்றாது
பாரினில் தவங்கள் செய்யும் பார்வதி கேட்டி டாயே.

24. ஜாதகருக்கு முப்பதாவது வயதில்* இவருடைய தாயாருக்குக் கண்டம் வந்து சம்பவிக்கும். ஆனால் அவளுக்கு மரணம் நேரிடாது. அவள் ஜாதகருக்கு முப்பத்தேழாவது வயதில்* இறந்து அவளுடைய தேகம் மறைந்து போய்விடும். நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறாமல் நடக்கும். பூமியில் தவங்கள் செய்கின்ற பார்வதியம்மையே ! கேட்பீராக.

* **குறிப்பு.—மாதுர் விஷயம்:**—மாதுர் லக்கினம் துலாம். இந்தத் துலா லக்கினத்திற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகை 56-ஆவது சுலோகம் பிரகாரம் குருவும் சூரியனும் மாரகராகின்றார்கள். ஜாதகருக்கு வயது ஷ௵ 29–0–0 முதல் ஷ௵ 30–0–0 முடியும் வரையிலும் குரு தசையில் சுக்கிரபுத்தி நடக்கின்றது. குரு மேற் சொல்லியபடி மாரகராகின்றார். சுக்கிரன் மாரகஸ்தானமாகிய எட்டாமிடத்திற்கு உடையவராகி மாரக ஸ்தானங்களாகிய இரண்டு ஏழு இவைகளுக் குடையவராகிய அங்காரகனுடன் கூடியிருக்கின்றார். மாதுர்லக்கினத்தையும் அங்காரகன் பார்க்கின்றார். ஆகையால் குருதசையில் சுக்கிர புத்தியில் மாதாவுக்குக் கண்ட அமைப்பு இருக்கிறது. சுக்கிரன் லக்னாதிபதியாகி லக்கினத்தைப் பார்ப்பதால் மாரகஞ் செய்வதற்கு அமைப்பு இல்லை. ஜாதகருக்கு வயது ஷ௵ 36–0–0 முதல் ஷ௵ 37–0–9 முடியும் வரையிலும் குருதசையில் ராகுபுத்தியும் சனிதசையில் சனிபுத்தியும் நடக்கின்றது. ராகு புதன் வீட்டில் சந்திரனுடன் இருக்கின்றார். புதன் மாரகராகிய சூரியனுடன் கூடியிருக்கின்றார். ஆகையால் ராகு ஜாதகசந்திரிகை 12, 23-ஆம் சுலோகங்கள் பிரகாரம் மாரகராகின்றார். குரு தசையில் ராகு புத்தியில் மாதாவுக்கு மாரக அமைப்பு இருக்கிறது. சனிதசையில் மாரக அமைப்பு இல்லை.

25. முப்பது மூன்று ஆண்டில் விளம்புவோம் தந்தை கண்டம்
செப்புவோ மிவன்பின் ஜன்மம் திருக்கழுக் குன்றம் தென்பால்
ஓப்புடன் பாலை ஓரம் உதிப்பனும் வைசியச் சேயாய்
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழி குன்றாது.

25. ஜாதகருக்கு முப்பத்துமூன்றாவது வயதில் அவருடைய தகப்பனார் இறந்து விடுவார். தகப்பனாருடைய மறு ஜன்மத்தைச் சொல்லுகிறோம். இவர் திருக்கழுக்குன்றத்திற்குத் தெற்கில் சமுத்திரக் கரை ஓரத்தில் வைசியராய்ப் பிறப்பார். பாம்பைத் தன்னுடைய ஜடையில் தரித்துக் கொண்டிருக்கின்ற சிவ பெருமானுடைய மனைவியாகிய பார்வதியம்மையே ! நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும்.

* **குறிப்பு.—தகப்பன் மாரகம்.**—தகப்பனாருடைய ஸ்தானமாகிய ஒன்பதாவது பாவமாகிய மீனம் பிதுர்லக்கினமாகும். இந்த லக்கினத்திற்குப்

பராசரஹோரை ஜாதக சந்திரிகை பிரகாரம் சனி புதன் சூரியன் இவர்கள் மாரகராகின்றார்கள். சனி பிதுர்லக்கினத்திலிருக்கின்றார். குரு இவரைப் பார்க்கின்றார். ஒரு பாவத்திற்கு அந்த பாவ அதிபதி அந்தப் பாவகாரர் இவர்களுடைய தசை புத்தி நடக்கின்ற காலத்தில் அந்தப் பாவத்திற்குரிய மனுஷ ஜன்மத்திற்கு மாரகம் நேரிடும் என்றும் சில நாடி சாஸ்திரங்களில் சொல்லியிருக்கின்றது. இவ்விதக் காரணங்களாலே குரு பிதாவுக்கு மாரகஞ் செய்ய அமைப்பு உடையவராக ஆகின்றார். ஜாதகருக்கு வயது ஸு 32 முதல் ஸு 33 வரையிலும் குருதசையில் சூரிய சந்திர புக்திகள் நடக்கின்றன. ஏற்கனவே மீனலக்கினத்திற்குச் சூரியன் கூட மாரகர் என்று முந்தி சொல்லியிருக்கின்றோம். ஆகையால் குருதசையில் சூரிய புக்தி கடைசியில் பிதாவுக்கு மாரக அமைப்பு இருக்கின்றது.

26. மன்னவன் மணத்தின் காலம் வரைகிரே மிருபான் ரண்டில்
கன்னிகை மேல்பால் நேரும் கழறுவோ மவள்கு ணத்தை
அன்னியர் மதிக்க வாழ்வள் அற்புத வார்த்தை சொல்வள்
பொன்பணி சேர்ப்பா ளாகும் பொய்யது புகலா ளாகும்.

26. ஜாதகருடைய விவாகம் நடக்குங் காலத்தைச் சொல்லுகிறோம். இவருக்கு இருபத்திரண்டாவது வயதில் * மனைவி மேற்குத் திக்கிலிருந்து வந்து சம்பவிப்பாள். இவளுடைய குணதிசயங்களைச் சொல்லுகிறோம். பிறர் இவளை மதிக்கும்படியாக இவள் வாழ்வாள். ஆச்சரியமான வார்த்தைகளைச் சொல்லுவாள். தனத்தையும் ஆபரணங்களையும் சேர்த்து வைப்பாள். பொய் சொல்லமாட்டாள்.

* குறிப்பு.—மனைவி விஷயம்.—ஜாதகருக்கு வயது ஸு 21-0-0 முதல் ஸு 22-0-0 முடியும் வரையிலும் குருதசையில் குருபுத்தி நடக்கின்றது. இந்தக் குரு ஒன்பதிற்குடையவராய் ஏழாவது பாவமாகிய களத்திர பாவத்தையும் களத்திர ஸ்தானாதிபதியாகிய சனியையும் பார்க்கின்றார். ஆகையால் குருதசையில் குரு புத்தியில் ஜாதகருக்கு விவாகம் நடக்கும் அமைப்பு இருக்கின்றது.

27. சீலமு டையா ளேழைக் கூணுந் தோர்க்கு அன்ன மீவள்
காலத்தை அறிந்து ரைப்பள் கட்செவி போலே கோபம்
பாலிகை வயது தீர்க்கம் பகரமாம் குடும்பி யாவள்
மால்மனை யொப்ப தாகும் வருவோரை ஆத ரிப்பாள்.

27. ஜாதகருடைய மனைவி நல்ல ஒழுக்கங்களையுடையவள். ஏழைகளுக்குச் சாப்பாடு போடுவாள். காலத்திற்குத் தகுந்தாற் போலப் பேசுவாள். இவளுக்கு நல்ல பாம்பிற்கு வருவதைப் போலக் கோபம் வரும். இவளுக்கு நீண்ட ஆயுளுண்டு. அலங்காரமான குடும்பத்தை யுடையவள். மகா விஷ்ணுவின் மனைவியாகிய இலக்ஷிமிக்குச் சமான மானவள். தன்னிடம் வருபவர்களைக் காப்பாற்றுவாள்.

28. சுதர்களு மாண்பா லைந்து தோகையு மொருத்தி தீர்க்கம்
இதுநிற்க உதித்தோன் பூர்வ மியம்புவோம் பெண்ணை யோரம்
சதியிலாப் பேரூர் தன்னில் ஜனித்தனன் வன்னிய சேயாய்
நிதிமிக உடைய னாகி நிமிலியு மதலை யுண்டாய் ;

28. ஜாதகருக்கு ஐந்து ஆண் குழந்தைகளும் ஒரு பெண் குழந்தையும் நீண்ட ஆயுளை உடையவர்களாயிருப்பார்கள். இனி மேல் ஜாதகருடைய பூர்வ ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறோம். பெண்ணை நதிக்கரையிலுள்ள அழிவிலாத ஒரு பெரிய ஊரில் வன்னிய குலத்தில் பிறந்து அதிகச் செல்வமுடையவராகியும் மனைவியையும் குழந்தைகளை யும் உடைவராகியும் ;

29. அறமதி லிச்சை யுண்டாய் அதிதிக்கு அன்ன மீந்து
முருகர்தம் பக்தி யாயும் மூஷிகன் பூசை செய்து
மறையவர் தொண்டு பூண்டு மறலியின் நாடு சென்று
பிரமனால் வரையப் பட்டுப் பிறப்பனு மிந்தப் பாலன்.

29. தருமஞ் செய்வதில் ஆசையுடையவராகிப் பரதேசிகளுக் குச் சாப்பாடு போட்டும் முருகக் கடவுளின் மேல் பக்தியுடையவராகியும் பெருச்சாளி வாகனத்தையுடைய விநாயகக் கடவுளைப் பூஜை செய்தும் முனிவர்களையும் பிராமணர்களையும் பூஜை செய்து தொழுது பிறகு இறந்து எமபட்டணத்தையடைந்து பிரமதேவனால் எழுதப்பட்டு ஜாதகர் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்தார்.

30. வந்தவன் யோகச் சேதி வரைகிறோ மினிமே லாக
ஐந்தாண்டு முதலா மாக அம்புலி போலே யோகம்
சிந்தையும் கலக்கம் நீங்கும் செய்நிலம் பலிதம் விருத்தி
விந்தையா யில்லம் செய்தல் விளம்புவோம் சல்லியம் காணான்.

30. ஜாதகருடைய யோக விஷயங்களை இனிமேல் சொல்லு கிறோம். இவருக்கு ஐந்து வயது முதற் கொண்டே வளர்பிறைச் சந்திரனைப் போல யோகம் விருத்தியாகும். மனத்திலுள்ள கஷ்டங்கள் நிவிர்த்தி யாகும். பயிரிடுகின்ற பூமிகள் நல்ல பலிதத்தைத் தரும், விருத்தியாகும். இவர் ஆச்சரியமாக ஒரு வீட்டைக் கட்டுவார். கடன்கள் இவருக்குக் கிடையாது.

31. தனமது கையி ருப்புச் சதுஷ்பாதம் விருத்தி யுண்டு
இனமதிப் புடைய வாழ்வ னெய்திடும் சென்னி பூமி
நினைவது நேரு மென்றோம் நேராது சல்லியப்பாதை
கனமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

31. ஜாதகர் தன்னுடைய கையில் பணத்தைச் சேர்த்து வைத் திருப்பார். இவருக்குக் கால்நடைகள் விருத்தியாகும். பந்துக்கள் இவரை மதிக்கும்படியாக இவர் வாழ்வார். வாழைமரம் வளரும்படியான நஞ் சை பூமிகள் வந்து சேரும். ஞாபகக்குறிப்பு ஏற்படுத்தப்படும். இவருக்கு

கடனால் உண்டாகும் உபத்திரவம் கிடையாது. மேன்மை தங்கிய மத யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்தப் பார்வதி யம்மையே! கேட்பீராக.

32. பாலகன் தனக்கு யோகம் பகர்ந்தகா ரணங்கள் சொல்வாய்
ஞாலத்தோன் [1]புகரும்[2]பத்தில் நவத்தோனு முச்ச மாக
மாலவன் [3] தனக்கு அஞ்சில் மதி[4]நிற்க கேது ஆறில்
சாலவே இருப்ப தாலே செப்பினோம் பேரி யோகம்.

32. ஜாதகருக்குச் சொல்லிய யோகங்களுக்குக் காரணங்களைச் சொல்லு வீர். அங்காரகனும் சுக்கிரனும் பத்திலும், ஒன்பதிற் குடையவரான குரு கடகத்தில் உச்சமாகவும், புதனுக்கு ஐந்தில் சந்திரனும், கேது ஆறிலும் இருப்பதால் பேரியோகம் என்ற ஒருவிதயோகம் உண்டென்று சொல்லு கிறோம்.

* குறிப்பு:—பேரியோக விஷயம்—இந்த யோகத்தைப்பற்றிப் பராசரஹோரை 22-ஆவது அத்தியாயம் ஜாதகபாரிஜாதம் 7-ஆவது அத்தியாயம், ஜாதக சிந்தாமணி 2125 முதல் 2131 வரையிலுள்ள பாடல்கள், ஜாதகாலங் காரம் 342-ஆவது பாடல் ஆகிய இவைகளைப் பார்க்கவும். இங்கு அங்காரக னுக்குக் கேந்திரத்தில் சுக்கிரனும் குருவும் இருந்து சுக்கிரன் வலுத் திருப்பதால் ஜாதகசிந்தாமணி 2125-ஆவது பாடல் 5- ஆவது 6-ஆவது வரிகள் பிரகாரம் பேரியோக அமைப்பு இருக்கிறது. குரு கேந்திரத்திலிருப்பதால் பராசரஹோரைப் பிரகாரம் கூட பேரியோகமிருக்கிறது. குருவுக்கு எட்டில் சூரியன் இருப்பதால் ஜாதகசிந்தாமணி 2126-ஆவது பாடல் பிரகாரம் பேரி யோக அமைப்பு இருக்கிறது.

33. இந்திர யோக மொன்று இருவகை யோகத் தாலே
செந்திரு விலாசம் பெற்றுச் செல்வனும் வாழ்வா னாகும்
பிந்திய பாகம் தன்னில் பேசுவோம் சிலது சேதி
கந்தனை யீன்ற மாதே கழறினமொழிகுன் றுது.

33. இந்திரயோகம் * என்ற இன்னொரு யோகம் இருக்கிறது. இந்த இரண்டுவித யோகங்களாலே ஜாதகர் இலக்ஷ்மியின் அழகும் பிரகாச மும் தன் வீட்டில் குடியிருப்பும் அடைந்து வாழ்வாராகும். சில விஷ யங்களைப் பின் பாகத்தில், அஃதாவது இரண்டாவது பாகத்தில் சொல்லு கிறோம். முருகக் கடவுளைப் பெற்றெடுத்தப் பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறிப்போகாமல் நடக்கும்.

* குறிப்பு—இந்திர யோக விஷயம்:—இந்த யோகத்தைப்பற்றி ஜாதகபாரி ஜாதம் 7-ஆவது அத்தியாயம் 68-ஆவது சுலோகம், ஜாதகசிந்தாமணி 1987-ஆவது 1994-ஆவது பாடல்களையும், ஜாதகாலங்காரம் 333-ஆவது, 362-ஆவது பாடல்களையும் பார்க்கவும். இங்குப் பதினொன்றிற்குடையவரான சுக்கிரனும் ஐந்திற்குடையவரான அங்காரகனும் பரிவர்த்தனை அடையாமல் கூடியிருப்பதால் இந்திரயோகம் ஏற்படுகிறது.

---

[1]. அங்காரகன் [2]. சுக்கிரன் [3]. புதன் [4]. சந்திரன்

34. அன்பத்து மூன்று ஆண்டில் ஆனிமா தத்தி லேதான்
இன்னவ னுடலம் வகு மியம்புவோ மின்பின் ஜன்மம்
சன்னமா யூரத்தி லேதான் கலப்பனும் கோகு லத்தில்
பொன்மிக உடையா னாகிப் புகழுடன் வாழ்வா னம்மா.

34. ஜாதகர் தனக்கு ஐம்பத்து மூன்ருவது வயதில் * ஆனி மாதத்தில் இறந்து இவருடைய தேகம் அழிந்துவிடும். இவருடைய மறு ஜன்மத்தைச் சொல்லுகிருேம். நேர்த்தியான அழகான மாயவரத்தில் யாதவர் வமிசத்தில் வந்து பிறந்து, அதிக தனவானுகவிருந்து கீர்த்தி யுடன் வாழ்வார் என்று சொல்லுகிருேம். பார்வதியம்மையே!

* குறிப்பு:—ஜாதகருக்கு வயது ஷூ 52-0-0 முதல் ஷூ 53-0-0 வரையில் சனிதசையில் ராகு புத்தி நடக்கின்றது. கடக லக்கினத்திற்குப் பராசர ஹோரை 14-ஆவது அத்தியாயம், ஜாதக சந்திரிகை 50-ஆவது சுலோகம் பிரகாரம் சனி மாரகராகின்ருர். சனிதசை நான்கவாது தசையாக வருகிறது. சனிக்குச் சந்திரலக்னுதிபத்தியம் வரவில்லை. அஃதாவது சனி வீட்டில் சந்திரனிருக்கவில்லை. ஆகையால் ஜாதகாலங்காரம் 975-ஆவதுபாடல் பிரகாரமும் துய்யகேரளம் எட்டாம் பாவம் 14-ஆவது பாடல் பிரகாரமும் சனி தசை மாரகஞ் செய்ய அமைப்பு உடையதாகவிருக்கின்றது. கடகலக்கினத்திற்குப் புதன்கூட மகராதிபதியாவர், இவர் எட்டில் இருக்கின்ருர். இவர் வீடாகிய மிதுனத்தில் ராகு லக்கினுதிபதியாகிய சந்திரனுடன் கூடி பன்னிரண்டில் இருக்கின்ருர். ஆகையால் ஜாதகசந்திரிகை 12-ஆவது 23-ஆவது சுலோகம் பிரகாரமும் துய்யகேரளம் எட்டாம் பாவம் 20-ஆவது பாடல் பிரகாரமும் ராகுவுக்குத் தன்புக்தியில் மாரகஞ் செய்ய அதிகாரம் ஏற்படுகிறது.

35. அத்திரி மறுத்துச் சொல்வார் அவனுக்குச் சகட தோஷம்
குத்தமா யிருப்ப தாலே கூறினீர் வயது தீர்க்கம்
சுத்தமாய் நாலாண் டுக்குள்[1] சேயற்க்குக் கண்ட மென்ருேம்
வித்தகர் பராசர் சொல்வார் வேந்தனும் ஜன்மம் தங்க;

35. அத்திரி முனிவர் தடுத்துச் சொல்லுகின்ருர். ஜாதகருக்குச் சகட தோஷம் இருக்கின்றதே! நீர் எவ்விதமாக அவருக்கு வயது தீர்க்கம் என்று சொல்லுகின்றீர்? ஜாதகருக்கு நான்கு வயதிற்குள் கண்டம் வந்து ஜாதகர் இறந்து விடுவார் என்று நான் சொல்லுகிறேன், என்று அத்திரி முனிவர் சொல்ல அறிஞராகிய பராசர முனிவர் சொல்லுகிருர். குரு ஜன்ம லக்கினத்தில் இருப்பதாலே;

குறிப்பு.—சகட தோஷம்.—சகடயோகத்தைப்பற்றி ஜாதகபாரிஜாதகம் 7-ஆவது அத்தியாயம் 108-ஆவது சுலோகம், பலதீபிகை 6-ஆவது அத்தியாயம் 10-ஆவது சுலோகம், பிருஹஜ்ஜாதகம் 12-ஆவது அத்தியாயம் 3-ஆவது சுலோகம், சாராவளி 21-ஆவது அத்தியாயம் 15-ஆவது சுலோகங்களைப் பார்க்கவும். இங்கு குரு கேந்திரத்தில் இருப்பதால் குருவுக்குப் பன்னிரண்டில் சந்திரனிருக்கும் சகட யோகம் பங்கப்படுகிறது.

---

[1] குரு

36. என்னநோய் வந்த போது மிரவிமுன் பனிபோல் நீங்கும்
மன்னவன் ஜனன காலம் மான்தலை[1] மூன்றும் பாதம்
துன்சேயின்[2] தசைரண்டாகும் திங்களும் எட்டுமாகும்
இன்னவன் தனக்கு ரோக மெய்திடும் விசேஷ மாக.

36. ஜாதகருக்கு எவ்விதமான நோய்கள் வந்த போதிலும் அவைகள் சூரியனுக்கு எதிரில் பனி பறந்து போய் விடுவது போல நிவிர்த்தியாகிவிடும். ஜாதகர் பிறக்கும்போது மிருகசீர்ஷ நட்சத்திரத்தில் மூன், றும் பாதம் ஆகும். அப்போது அங்காரகனுடைய தசை இரண்டு வருஷமும் எட்டு மாதங்களும் இருப்பு ஆகும். ஜாதகருக்கு இந்தத் தசை காலத்தில் அதிக ரோகங்கள் உண்டாகும்.

37. செலவுக ளதிக முண்டு ஜனபந்து சூத மெய்தும்
நலமிலாகாலி யென்றும் நல்கிடும் தந்தை நோயாம்
குலவினோர் பகையு மாகும் கொடுமையே சுகமி ராது
மலையிறை மகளே யாங்கள் வழுத்துவோம் பின்பால் சேதி.

37. செலவுகள் அதிகமாக நேரிடும், பந்து ஜனங்களுக்குள் சூதகங்கள் வந்து நேரிடும். கால்நடைகள் விருத்தியாகா. ஜாதகருடைய தகப்பனுருக்கு நோய் வந்து சம்பவிக்கும். சிநேகிதர்கள் விரோதிகளாவார்கள். எல்லாம் கெடுதியாகவே நடக்கும். எதிலும் சுகம் இருக்காது. பர்வத ராஜனுன இமயமலையின் மகளாகிய பார்வதியம்மையே ! மற்ற விஷயங்களைப் பின்னுல் இரண்டாவது பாகத்திற் சொல்லுகிறேம்.

---

[1] மிருகசீரஷம் [2] அங்காரகன்

# ஜாதகம் 67

1. கடகலக் கினமதர்கக் கலை[1]ரண்டில் ராகு நாலில்
சுடரவன்[2] புதன்சேய்[3] ஆறில் சுக்கிரன் அஞ்சி லாக
முடவனும்[4] கேது பத்தில் மந்திரி[5] யிருக்க வீராறில்
முடனுகம்[6] நாலாம் பாதம் மொழிகுவீர் பலனை யென்று ;

| | | | |
|---|---|---|---|
| | சனி<br>கேது | | குரு |
| | இராசி<br>சக்கரம் | | லக்கினம் |
| | | | சந்திரன் |
| சூரியன்<br>புதன்<br>அங்கா<br>ரகன் | சுக்கரன் | ராகு | |

மகம் 4-ஆம் பாதம்

கேதுதசை இரு 0-0-20 நாள்

1. கடகம் ஜன்ம லக்கினமாகிச் சந்திரன் இரண்டிலும், ராகு நான்கிலும் சூரியன் புதன் அங்காரன் இவர்கள் ஆறிலும், சுக்கிரன் ஐந்திலும், சனியும் கேதுவும் பத்திலும், குரு பன்னிரண்டிலும் இருந்து, மகம் நான்காவது பாதத்தில் ஜனம் நேரிட்டால் பலனைச் சொல்லுவீர் என்று ;

குறிப்பு—இந்த ராசிச் சுக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரகநிலைபொருத்த முடையதாகும்:—ரிஷபத்தில் ராகுவும், கடகத்தில் சந்திரனும் அங்காரகனும், சிம்மத்தில் சூரியனும், துலாத்தில் குருவும் சனியும், விருச்சிகத்தில் சுக்கிரனும் கேதுவும், தனுசில் புதனும் ஆகும். அங்காரகன் அஸ்தமன மாகவும், குரு சுக்கிரன் சனி இவர்கள் வக்கிர மாகவும் இருக்கின்றார்கள்.

2. சுந்தரி கேட்கும் போது அத்திரி முனிவர் சொல்வார்
இந்தச்சேய் ஆணும் ஜன்ம மில்லமும் கீழ்ப்பால் வாடை
தென்வட வீதி யாகும் சிங்கவா னத்தாள் கீழ்ப்பால்
நந்திவா கனத்தோன் மாரி நல்கிடும் வடபா லாக.

---

[1] சந்திரன் [2] சூரியன் [3] அங்காரகன்
[4] சனி [5] குரு [6] மகம்

2. பார்வதியம்மையார் கேட்கும்போது அத்திரி முனிவர் என்பவர் சொல்லுகின்றார். ஜனனமான இந்தக் குழந்தை ஆண் குழந்தையாகும். பிறந்த வீடு வடக்குத் தெற்கு வீதியில் கிழக்குத் வாடையில் இருக்கும். சிம்ம வாகனத்தையுடைய காளியம்மன் கோயில் கிழக்குத் திக்கிலும் ரிஷப வாகனத்தையுடைய சிவபெருமானுடைய கோயிலும் மாரியம்மன் கோயிலும் வடக்குத் திக்கிலும் இருக்கும்.

3. இத்தகை அடையா ளத்து ளியம்பினேம் தந்தை யில்லம்
வித்தகன் கங்கை சேயாய் விளங்குவா னென்று சொல்வோம்
பெத்ததாய் தந்தை யோகம் பேதையர் புத்திர யோகம்
சுத்தமாய் முன்பின் ஜன்மம் செப்புவோமிந் நூல் தன்னில்.

3. இவ்விதமான அடையாளங்கள் உள்ள இடத்தில் தகப்பனுருடைய வீட்டில் இந்த ஜாதகர் வேளாளர் குலத்தில் வந்து பிறப்பார் என்று சொல்லுகிறேம். இவரைப் பெற்றெடுத்த தாயார் தகப்பன் இவர்களுடைய யோகங்களையும், இவருடைய மனைவி மக்கள் இவர்களுடைய யோகங்களையும், முன் ஜன்மம், பின் ஜன்மம் ஆகிய இவைகளையும் இந்தச் சாஸ்திரத்தில் சுத்தமாகச் சொல்லுகிறேம்.

4. தந்தையின் வர்க்கம் தன்னைச் சாற்றவே பலமு முது
தந்தையும் தனியா மென்றேம் சாற்றுவீ ரந்தச் சங்கை
மந்தனும் [1] கேது பத்தில் மறுவின பலத்தால் சொன்னேம்
இந்தவன் தந்தை சேதி யியம்புவோ மினிமே லாக.

4. ஜாதகருடைய தகப்பனுருடைய வர்க்கத்தார் என்ற சகோதர சகோதரிகள் முதலானவர்கள் அதிகமாக விருக்க மாட்டார்கள். தகப்பனுர் தனியாக விருப்பார் என்று சொல்லுகிறேம், இதற்குக் காரணத்தைச் சொல்லுமென்று கேட்க சனியும் கேதுவும் பத்தில் இருக்கின்ற பலத்தினுலே இவ்விதமாகச் சொன்னேம். இனிமேல் ஜாதகருடைய தகப்பனுரின் விஷயங்களைப்பற்றிச் சொல்லுகிறேம்.

குறிப்பு.—பிதுர் வர்க்க விஷயம்—பிதுர் லக்கினம் ஒன்பதா மிடமாகிய மீனம் ஆகும். இதற்குக் குடும்பஸ்தானமாகிய மேஷத்தில் இரண்டு பாபிகளாகிய சனியும் கேதுவும் இருப்பதால் பிதுர்வமிசம் பலமில்லை என்று சொல்லியிருக்கின்றார்.

5. கல்விமான் மாநி றத்தன் கார்நிறம் உணச்சல் தேகி
நல்லவ னுகி வாழ்வன் நற்புத்தி யுடைய னுகும்
தொல்லையும் சுகமு மேற்பன் சோம்பலும் இல்லா னென்றேம்
தல்லிபோல் ஆத ரிப்பன் தரணியா லுய்வ னுகும்

5. தகப்பனுர் வாசித்தவர். மாநிறமானவர், மேகத்தின் நிறத்தைப் போன்ற ஒருவிதமான நிறத்தை யுடைய ஒல்லியான தேகத்தை யுடையவர், நல்லவராக விருந்து வாழ்வார். நல்ல குணங்களை யுடையவர். கஷ்ட.

[1] சனி

ங்களேயும் சுகங்களேயும் ஆக இவ் விரண்டையும் உடையவர். சோம்பலில் லாதவர் என்று சொல்லுகிறோம். தாயைப் போலக் காப்பாற்றுபவர். பூமி யால் ஜீவிப்பார்.

6. பித்தச்சூ டைய னுகும் பிறர்குற்றம் புகலா னென்றோம்
நத்தினேர்க் குதவி செய்வன் நாதனுர் பக்தி பூண்பன்
சித்தமே கறுப்பு மில்லான் தீங்கதை எவர்க்கு மெண்ணுன்
சுத்தவான் சொல்காப்பானும் தோகைக்கு மிஷ்ட னுவன்.

6. தகபபனுர் பித்தச் சூடான தேக முடையவர். அயலார் மேல் குற்றங்களேச் சாட்டமாட்டார். தனக்குக் கெடுதலேச் செய்தவர்களுக் கும் உபகாரஞ் செய்வார். கடவுளின் மேல் பக்தியை யுடையவர். மனத்தில் யாதொரு களங்கமும் குற்றமும் இல்லாதவர். யாருக்குங் கெடுதியை நினைக்க மாட்டார். பரிசுத்தமானவர். மனேவிக்குப் பிரியமானவர்.

7. முன்னவ னிருந்த ஜன்மம் மொழிகிறோம் தாயே கேளும்
பெண்ணேயி னேரம் தன்னில் பேரூரில் முத்திரிய னுக
அன்னவ னுதித்து மேலும் அழகான குடும்பி யாகி
துன்னுமால் நாமம் கொண்டு செட்டுகள் செய்து வின்னேன் ;

7. தகப்பனுருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகி றோம். எங்கள் தாயாராகிய பார்வதியம்மையே! கேட்பீராக. பெண்ணே யாற்றின் கரையின் ஓரத்திலுள்ள ஒரு பெரிய ஊரில் இவர் முத்திரியனுகப் பிறந்து அழகான மேன்மையான குடும்ப முடையவராகி மகாவிஷ்ணுவினு டைய பெயரைப் பெற்று வியாபாரங்கள் செய்து கொண்டு இவர்.

8. சுகமுடன் வாழுந் நாளில் துணைவனே விரோதம் பேசி
அகமது பிரிதல் செய்து அத்தமு மீயா னுகி
பகைசெய்தான் இவனே யென்றோம் பின்துணே வருத்த முற்றுத்
தகமையாய்ப் பாக மீயாச் சண்டாளப் பாவிக் கேதான்.

8. சுகமாக வாழ்ந்து கொண்டிருக்கின்ற காலத்தில் இவர், அஃதாவது தகப்பனுர் தன்னுடைய சகோதரனுடன் விரோதமான வார்த் தைகளேச் சொல்லி வீட்டை அபகரித்துக்கொண்டு அவனுக்குப் பாகம் ஒன்றுங் கொடுக்காமல் அவனிடம் பகைத்துக் கொண்டார் என்று சொல்லுகிறோம். இவருடைய இளேய சகோதரன் வருத்தத்தை யடைந்து தகுந்தப்படி ஒழுங் காய்ப் பாகத்தைக் கொடுக்காதச் சண்டாளனுன உனக்கு.

9. பின்வரும் ஜன்மம் தன்னில் பொருந்தாது துணேகள்யாவும்
பொன்கடன் உடைய னுகிப் பூமியில் வாழ்வா யென்ன
அன்னவன் சாபம் தானும் அணுகிற்று என்று சொல்வோம்
உன்னத வானே பெற்ற உத்தமி கேட்டி டாயே.

9. பின்னுல் நேரிடப் போகின்ற ஜன்மத்தில் உனக்கு எல்லாச் சகோதரர்களும் இல்லாமலும் பணத்தைக் கடன் வாங்கி அதனுல் கடன் காரனுகவிருந்து பூமியில் வாழக்கடவாய் என்று சொல்லவே, அவனுடைய

அந்தச் சாபம் வந்து தகப்பனுரை அடைந்தது என்று சொல்லுகிறேம். மேன்மையான யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த உத்தமியாகிய பார்வதியம்மையே ! கேட்பீராக.

10. மாரனுக் கந்தி யத்தில் வளவு¹மே தினியில் போக்கித்
தீரமில் லாதா ளுகி ஷண்முகன் பக்தி கொண்டு
பாரினில் மரண மாகிப் பிரம்மனுல் வரையப் பட்டுப்
பாரினில் உதிப்பா னுகும் பற்றுவோம் துணையின் சாபம்.

10. தகப்பனுர் தன்னுடைய முன் ஜன்மத்தில் கடைசி காலத்தில் பூமியில் வீடு¹ கொல்லை இவைகளை இழந்து அதனுல் தைரியமில்லாதவராக விருந்து முருகக் கடவுளின் பேரில் பக்தியுடையவராயுமிருந்து பிறகு இறந்து பிரமதேவனுல் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் இப் பூமியில் வந்து பிறந்தார். இவருடைய முன் ஜன்மத்திய சகோதரனுடைய சாபம் இவரை இந்த ஜன்மத்தில் வந்தடையும் என்று சொல்லுகிறேம்.

11. தனியனுய் வாழ்வா னுகும் செப்பின குணத்தா னுக்கு
வினையிலா இவ னுதிப்பான் விளம்புவோ மிவள்கு ணத்தைச்
சினமுண்டு உடனே தாழ்வு தேகமும் உணச்சல் நீட்சி
கனமிலாக் குடும்ப பூர்வம் கார்நிற முடைய னுகும்,

11. தகப்பனுர் தனியாக விருந்து வாழ்வார். இப்படிப்பட்ட குணங்களுடைய தகப்பனுருக்கு யாதொரு பாபமுமில்லாத இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய குணதிசயங்களைச் சொல்லுகிறேம். இவருக்குக் கோபம் வரும். ஆனுல் அ·து உடனே அடங்கிப்போகும். இவருடைய தேகம் நீண்டு மெலிந்திருக்கும். முன்னே இவருடைய குடும்பம் மேன்மையானதாக விருக்காது. இவர் மேகத்தின் நிறத்தைப் போன்ற ஒரு விதமான கறுப்பு நிறமுடையவர்.

12. வித்தையும் கொஞ்ச முண்டு வீண்வம்பு புகலா னுகும்
சத்தியம் கூரு னுகும் தரணியா லுய்வா னுகும்
சித்தமே கறுப்பு மில்லான் தீங்கதை யெவர்க்கு மெண்ணுன்
நந்திஞேர்க் குதவி செய்வன் நாற்காலி பவித மற்பம்.

12. ஜாதகருக்குப் படிப்பு கொஞ்சமாகவிருக்கும். வீணுக உபயோகமில்லாத சண்டையை விளைவிக்கக் கூடிய கெட்ட சொற்களைச் சொல்ல மாட்டார். சத்தியம் செய்கிறேன் என்று சொல்லமாட்டார். பூமியால் ஜீவனஞ் செய்வார். மனத்தில் யாதொரு களங்கமும் குற்றமு மில்லாதவர். யாருக்கும் கெடுதியை நினைக்க மாட்டார். தனக்குக் கெடுதலைச் செய்தவர்களுக்கு உபகாரஞ் செய்வார். கால்நடைகளின் பலன் கொஞ்சமாக விருக்கும்.

¹வீடு, கொல்லை.

13. கரமதில் விஷ்ணு ரேகை கமலரே கையுமே யுண்டு
பொருள்பின்னால் சேர்ப்பா னாகும் பூமியை விருத்தி செய்வன்
அறுமுகன் பக்தி பூண்பன் அற்பபுத் திகளும் கொஞ்சம்
நெறியதைத் தவறுதல் செய்வன் நிமிலியே கேட்டி டாயே.

13. ஜாதகருடைய உள்ளங்கையில் விஷ்ணுரேகையும், தாமரை ரேகையும் இருக்கும். இவர் பிற்காலத்தில் சொத்தைச் சேர்த்து வைப்பார். பயிரிடும் பூமிகளை விருத்தியாக்குவார். முருகக் கடவுளின் மேல் பக்தியை யுடையவர். தாழ்ந்த புத்தியுங் கொஞ்சமுடையவர். நல்ல நடவடிக்கை நல்லொழுக்கம் இவைகளிலிருந்து சில சமயம் தவறி விடுவார். பார்வதி யம்மையே! நாங்கள் சொல்லுவதைக் கேட்பீராக.

14. பாரியும் வந்த பின்பு பாலகன் தனக்கு யோகம்
கூறுவோம் தாயே யாங்கள் கோதையும் எந்தக் காலம்
நேருவாள் விவரம் சொல்வாய் நிமலனுக் கிருபா னாளுட்
சேருவாள் வடபால் தன்னில் செல்வதி அன்னை வர்க்கம்.

14. ஜாதகருக்கு மனைவி வந்து சேர்ந்த பிறகு யோகம் உண்டு என்று எங்கள் தாயாராகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லுகிறோம். ஜாதகருக்கு மனைவி எந்த வயதில் வருவாள் என்ற விவரத்தைச் சொல்லு வீர் என்று கேட்க, ஜாதகருக்கு இருபத்துநான்கு வயதிற்குள் வடக்குத் திக்கிலிருந்து மனைவி வந்து சேருவாள். இவள் ஜாதகருடைய வம்சத்தைச் சேர்ந்தப் பணக்காரியாய் இருப்பாள்.

**குறிப்பு.—விவாக விஷயம்**—ஜாதகருக்கு வயது ஷெ 23–0–0 முதல் ஷெம் 24–0–0 வரையிலும் சூரிய தசையில் சனி புதன் இவர்கள் புக்தி கள் நடக்கின்றன. 2, 7, 9, 11, மனைவி விஷயமாய்ச் சம்மந்தப்பட்ட வீடுகள் ஆகும். சூரியன் இரண்டிற்குடையவராய் ஒன்பதிற்குடைய குருவாலும் போககாரகராகிய ராகுவாலும் பார்க்கப்பட்டிருக்கின்றார். சனி ஏழிற்குடைய வராயிருக்கின்றார். இவரையும் போககாரகனாகிய ராகு பார்த்திருக்கின்றார். ஆகையால் சூரிய தசையில் சனிபுக்தியில் விவாஹமாக அமைப்பு இருக்கிறது.

15. அவள்குணம் புகலக் கேண்மோ அழகுளாள் சிவந்த மேனி
பவமன மில்லா ளாகும் பஞ்சைமே லிரக்க முண்டு
உவமையாய் வார்த்தை சொல்வள் உறுதியா மனத்தா ளாகும்
நவநீதம் விருத்தி யுண்டு நாகம்போல் கோப முண்டு.

15. ஜாதகருடைய மனைவியின் குணாதிசயங்களைச் சொல்லக் கேட்பீராக. அவள் அழகுள்ளவள். சிவந்த நிறமுள்ள தேகத்தையுடையவள். பாப மான மனத்தை உடையவளல்ல. ஏழைகளின்மேல் பச்சாதாபம் அன்பு இவைகளையுடையவள். உபமானம் உபமேயம் இவைகளை உபயோகப்படுத்தி அலங்காரமாகவும் இனிமையாகவும் பேசுவாள். திடமான நிலையான மனத்தையுடையவள். நல்ல வெண்ணெயைத் தருகின்ற பசுக்கள் விருத்தி யாகும். இவளுக்குப் பாம்பிற்கு வருவதைப்போலக் கோபம் வரும்.

16. சீலமும் கொஞ்ச முண்டு ஜனஉப காரி யாகும்
காலத்தை அறிந்து சொல்வள் கணவன்தன் மனதுக் கேத்தோள்
பாலிகை வயது தீர்க்கம் பராசரும் மறுத்துச் சொல்வார்
நீலனும்[1] எழோ னுகி நின்றிடம் தசம மாக;

16. ஜாதகருடைய மனைவி சிறிது நல்லொழுக்கமுள்ளவளாக இருப்பாள். ஜனங்களுக்கு உபகாரஞ் செய்வாள். அப்போதைக்கப்போதுள்ள கால நிலைமையை அனுசரித்து அதற்குத் தகுந்தாற்போல பேசுவாள். தன்னுடைய புருஷனுடைய மனதிற்குத் தகுந்தபடி நடந்து கொள்ளுவாள். இவளுக்கு நீண்ட ஆயுளுண்டு என்று சொல்ல, பராசர முனிவர் தடுத்துச் சொல்லுகிறார். சனியும் எழுக்குடையவராகிப் பத்தாவது பாவத்தில் இருப்பதால்.

17. எப்படி வயது தீர்க்க மியம்புவீர் முனியே நீர்தாம்
செப்புவேன் மதியின் காலம் சிலகண்டம் கர்ப்பத் தாலே
தப்பிதம் நேரு மென்றும் சண்டனைக் காணு ளாகும்
அப்பணி சடையோன் தேவி அவளுமே தீர்க்கஜீவி.

17. இவளுக்கு எவ்விதமாக நீண்ட ஆயுளுண்டு ? முனிவரே! நீரே அதைச் சொல்லுவீர் என்று கேட்க, சந்திர தசை காலத்தில்* கர்ப்பத்தால் சில கண்டம் நேரிட்டுக் குற்றங்கள் நேரிடும். ஆனால், இவள் எமனைத் தரிசிக்கமாட்டாள், அஃதாவது அப்போது இறக்கமாட்டாள். அழகிய பாம்பைத் தன்னுடைய ஜடையில் தரித்துக்கொண்டுள்ள பரமசிவனுடைய மனைவியாகிய பார்வதியம்மையே! இவள் தீர்க்கஜீவியாய் இருப்பாள்.

*குறிப்பு.—மனைவியின் கண்ட விஷயம்:—மனைவியின் லக்கினம் ஏழாம் பாவமாகிய மகரமாகும். இந்த மகர லக்கினத்திற்குப் பராசர ஹோரை 13-ஆவது அத்தியாயப் பிரகாரமும் ஜாதகசந்திரிகை 62-ஆவது 63-ஆவது சுலோகங்கள் பிரகாரமும் அங்காரகன் சந்திரன் குரு இவர்கள் மாரகராகின்றார்கள். இங்குச்சந்திரதசை காலத்தில் மனைவிக்குக் கண்டம் சொல்லியிருக்கின்றார். மகரத்திற்குச் சந்திரன் ஏழிற்குடையவராகி எட்டில் இருக்கின்றார். ஆகையால் மனைவிக்குக் கண்டத்தைக் காட்டச் சந்திரனுக்கு அதிகாரம் இருக்கின்றது. பெண்களுக்குப் புத்திர ஸ்தானம் ஒன்பதாமிடமும் ஐந்தாமிடமும் என்கிறார்கள். மகரத்திற்கு ஒன்பதிற்குடையவரான புதனுடன் கூடிய அங்காரகன் சந்திரனுடைய வீடாகியக் கடகத்தைப் பார்ப்பதால் சந்திரதசையில் கர்ப்பத்தால் மனைவிக்குக் கஷ்டம் என்று இங்கு கண்டிருக்கிறது.

18. சுதர்களும் தவத்தால்தோன்றும் சுக்கிரன் அஞ்சினில் நிற்கப்
புதல்வர்கள் விருத்தி தோஷம் பிசாசுகள் குற்றத் தாலே
அதற்கொரு கிரியை சொல்வேன் ஆளிவா கனத்தாளுக்கு
அதிபதி விரதம் கொண்டு வாரமும் வலமாய் வந்து;

---

[1]. சனி

18. சுக்கிரன் ஐந்தாவது பாவத்தில் இருப்பதால் சந்ததிகள் † தவம் செய்வதால் உண்டாகும். பிசாசு பேய் முதலியவற்றின் செய்கையால் பிள்ளைகள் விருத்தியாவதற்குத் தோஷங்கள் ஏற்படும். அதற்காக ஒரு சாந்தியைச் சொல்லுகிறேன். ஆளிவாகனத்தாளாகிய துர்க்கை, காளி இவர்களைப் பூஜித்து விரதமிருந்து ஒருவார காலம் சுற்றி வந்து கடைசி தினத்தில் இந்த அம்மனுக்கு அபிஷேகம் முதலியவை செய்து சுக்கிர வார விரதத்தை.

†குறிப்பு—சந்ததிகள் விஷயம்—சந்ததி சம்மந்தமான வீடுகளும், கிரங்களும் 5, 7, 9, இந்த வீடுகளும், இந்த வீடுகளுக்குடையவர்களும் குருவுமாவார்கள். ஐந்தில் பெண் கிரகமாகிய சுக்கிரன் இருக்கின்றார். ஐந்திற்குடைய அங்காரகன் ஆறில் தனக்குப் பகைவராகிய, சந்ததி விஷயத்தில் இடைஞ்சல் செய்யக்கூடிய புதனுடன் இருக்கின்றார். குரு பன்னிரண்டில் மறைந்து இருக்கின்றார். ஆனால், அங்காரகனைப் பார்த்திருக்கின்றார். ஏழாவது வீட்டைச் சனி பார்த்திருக்கின்றார். ஆகையால் புத்திர தோஷம் அதிகம் இருக்கின்றது.

19. கடைநாளில் அபிஷேகித்துக் காதலி சுக்கிர வாரம்
அடவுடன் விரதம் கொள்ள அக்காற்று விலகி யேதான்
உடன்சுதர் தோன்று மென்றேம் உரைக்கிறே மாண்பால் ரண்டு
விடவிழி பெண்பால் ரண்டு விருத்தியாம் பால னுக்கு.

19. கடைசி தினத்தில் இந்தக் காளி தேவதைக்கு அபிஷேகம் முதலியவை செய்து சுக்கிரவார விரதத்தை அனுஷ்டித்து வந்தால் அந்தப் பேய் பிசாசுகள் விலகி உடனே குழந்தைகள் பிறக்கும் என்று சொல்லுகிறேம். ஆண் குழந்தைகள் இரண்டும் விஷக்கண்களையுடைய பெண் குழந்தைகள் இரண்டும் ஜாதகருக்கு விருத்தியாகி வருவார்கள் என்று சொல்லுகிறேம்.

20. இன்னவன் முன்ஜன் மத்தை எடுத்துநானுரைக்கக் கேளாய்
பொன்முக ராற்றி னோரம் பேரூரில் வன்னிய சேயாய்
அன்ன வனுதித்து மேலும் ஆண்மையாய்க் குடும்பி யாகித்
தன்னிடம் வருபவரைக் காத்து தருமத்தி லிச்சை யுண்டாய்.

20. ஜாதகருடைய முன் ஜன்மத்தைப்பற்றி நான் எடுத்துச்சொல்லுகிறேன். நீர் அதைக் கேட்பீராக. பொன்முகராறு என்ற ஆற்றின்கரையோரத்திலுள்ள ஒரு பெரிய ஊரில் வன்னியராக இவர் பிறந்து மேன்மையான வலிவுள்ள ஒரு குடும்பஸ்தராகவிருந்து தன்னிடம் வருபவர்களைக் காப்பாற்றிக்கொண்டு தர்மத்தில் ஆசையுடையவராகி.

21. அறுமுகன் பக்தி யாகி அந்தக லனுலக டைந்து
பிரமனல் வரையப் பட்டுப் பிறப்பனு மிந்தப் பாலன்
உரைக்கிறே மிவனின் யோகம் உலகினில் வறுமை காணன்
தரைசேர்ப்பன் சல்லியம் கொள்ளான் சாதமும் குறைவு றுதான்.

**21.** முருகக் கடவுளின்மேல் பக்தியுடையவராகி வாழ்ந்து பிறகு இறந்து எமனுடைய பட்டணத்திற்குச் சென்று பிரமதேவனால் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் இந்த ஜாதகர் வந்து பிறந்திருக்கின்றார். இவருடைய யோகத்தைச் சொல்லுகின்றோம். பூமியில் இவருக்குக் கஷ்டங்களும் தரித்திரமும் உண்டாகா. பூமிகளைச் சேர்ப்பார். கடன் வாங்கமாட்டார். எப்போதும் சாப்பாட்டிற்குக் குறைவு கிடையாது.

**22.** இல்லமும் முப்பாண் டின்மே லெய்துவான் சித்திர மாக
எல்லைகள் வேறூர் நேரு மிடுக்கங்கள் அதன்மேல் காணன்
சல்லிய மில்லா வாழ்வன் தானியம் பெருக்க மாகும்
அல்லலைத் தவிர்க்கு மெங்கள் ஆத்துமத் தாயே கேளாய்.

**22.** ஜாதகருக்கு முப்பது வயதிற்குமேலே அழகான சித்திரங்கள் உள்ள வீடு வந்து நேரிடும், இவர் வேறு கிராமத்திலே பூமிகளை வாங்குவார். இதற்குமேல் இவருக்குக் கஷ்டங்கள் கிடையா, கடன்படாமல் வாழ்வார். தானிய வகைகள் அதிகப்படும். எங்களுடைய கஷ்டங்களை நிவிர்த்தி செய்கின்ற எங்களுடைய ஆத்துமாவைப்போல' அருமையான தாயாராகிய பார்வதியம்மையே ! கேட்பீராக.

**23.** தன்துணை ஆண்பால் மூன்று சத்தி மா ரிருவர் தீர்க்கம்
அன்னவர் சேதி யாவும் அறிவிப்போம் பின்பா கத்தில்
இன்னவன் அன்னை சேதி யியம்புவோ மிக்கு ணத்தாள்
முன்கோபம் கொஞ்ச முண்டு மொழியது சுகமே யாகும்.

**23.** ஜாதகருக்குக் கூடப் பிறந்த ஆண் மூன்று பேரும், பெண்கள் இரண்டு பேரும் நீண்ட ஆயுளை உடையவராக விருப்பார்கள். அவர்களுடைய விஷயங்கள் எல்லாவற்றையும் பின்பாகத்தில் சொல்லுகிறோம். ஜாதகருடைய தாயின் விஷயங்களைச் சொல்லுகிறோம். இவளுடைய குணதிசயங்கள் எப்படிப்பட்டவையென்றால் இவளுக்கு முன் கோபங் கொஞ்சம் இருக்கும். இவளுடைய வார்த்தைகள் இன்பமாகவும் சுகமாகவும் இருக்கும்.

**24.** பாரினில் நல்லோ ளாவள் பதர்குண மில்லா ளாகும்
மாரன்தன் மனதுக் கேத்தோள் வருவோரை ஆத ரிப்பள்
தீரமா மனத்தா ளாகும் தேவிக்குத் துணைஆண் ரண்டு
நாரிகள் நால்வ ராகும் நவிலுவோ முத்தர மில்லம்.

**24.** ஜாதகருடைய தாயார் பூமியில் நல்லவளாக அவசரமான படபடப்பான குணமில்லாதவள். தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தபடி நடந்து கொள்ளுவள். தன்னிடம் வருகின்றவர்களைக் காப்பாற்றுபவள். திடமான உறுதியான மனத்தையுடையவள், இவளுக்குச் சகோதரர்கள் இரண்டு ஆண்களும் நான்கு பெண்களும் உண்டு. இவளுடைய வீடு வடக்குத்திக்கில் இருக்கும்.

25. மாதுலன் ஒருவ னுக்கு மனைவிக ளிருவ ராகும்
வேறதாய் வேட்ட கத்தில் மேவுவா னென்று சொல்வோம்
தீரமாய்ப் பின்பா கத்தில் செப்புவோ மவர்கள் சேதி
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

25. ஜாதகருடைய அம்மான் ஒருவனுக்கு இரண்டு மனைவிகளுண்டு. இவர் தன்னுடைய குடும்பத்தை விட்டுப் பிரிந்து மாமியார் வீட்டிற்குப் போய்ச்சேர்ந்து விடுவார் என்று சொல்லுகிறோம். இவர்களுடைய விஷயங்களைப் பின்பாகத்தில் வலிவாயும் விபரமாகவும் சொல்லுகிறோம். ஆறு பெரிய முகங்களையுடைய முருகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே ! கேட்பீராக.

26. மாதுரு முன்ஜன் மத்தை வரைகிறோ மில்லம் மேற்கில்
மேதினில் பேரூர் தன்னில் விளங்கினள் அருகர் வம்சம்
காதலி சுகமாய் வாழ்ந்து காலன்தன் பதிக்குச் சென்று
வேதனல் வரையப் பட்டு விளங்கின ளிவளே யென்றோம்.

26. ஜாதகருடைய தாயின் முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம், மேற்குத் திக்கிலுள்ள ஒரு பெரிய ஊரில் சமணர் குலத்தில் பிறந்து இவள் சுகமாக வாழ்ந்து இறந்து எமபட்டணத்திற்குப்போய் பிரமதேவனால் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றாள் என்று சொல்லுகிறோம்.

27. பின்ஜன்மம் வாழை நாட்டில் பிறப்பளா மிக்கு லத்தில்
கன்மகா லங்கள் தம்மைக் கழறுவீர் முனியே நீர் தாம்
மன்னனு முப்பா னெட்டில் மாதுரு கண்ட மெய்தும்
தென்முனி புகலு கின்றார் சந்திரன் தசைமுற் பாகம் ;

27. ஜாதகருடைய தாயார் மறு ஜன்மத்தில் வாழை நாட்டில் இந்த ஜன்மத்திற் பிறந்த குலத்திலேயே அஃதாவது வேளாளர் குலத்திலேயே பிறப்பாள். முனிவரே ! நீர் ஜாதகருக்குத்தாயார் தந்தை கர்ம காலங்களைச் சொல்லுவீர் என்று கேட்க, ஜாதகருக்கு முப்பத்தெட்டாவது வயதில்* தன் தாயார் இறந்து விடுவாள். இதற்கு அகஸ்தியர் சொல்லுகின்றார். சுக்கிரனுடைய தசையில் முதல் பாகத்தில் ;

*குறிப்பு.—தாய்மாரக விஷயம்—தாயின் லக்கினம் துலாம். ஜாதகருக்கு வயது வருஷம் 37–0–0 முதல் வருஷம் 38–0–0 வரையிலும் அங்காரக தசையில் ராகு, குரு இவர்களுடைய புக்திகள் நடக்கின்றன. தாயின் லக்கினம் துலாம். இதற்கு அங்காரகன் மாரகன் என்று பராசரஹோரையின் சில பதிப்புகளில் சொல்லி இருக்கின்றது. அங்காரகன் இரண்டிற்கும் ஏழிற்கும் உடையவராகி மூன்றில் இருக்கின்றார். இவர் துலாத்திற்கு மாரக ராகிய சூரியன் குரு இவர்களுடைய சம்பந்தமும் பார்வையும் அடைந்திருக்கின்றார். ஜாதகசந்திரிகை 23 ஆவது சுலோகப் பிரகாரம் அங்காரகனுக்குத் தாயை மாரகஞ்செய்ய அமைப்பு இருக்கின்றது. ராகு மாதுர்லக்கினத்

திலேயே இருந்துகொண்டு சந்திரனைப் பார்ப்பதால் இவருக்குத் தன் புத்தியில் தாயாருக்கு மாரகஞ்செய்ய குருவைவிட அதிகமான அதிகாரம் இருக்கின்றது.

28. இருபது எட்டு ஆண்டி லெய்திடும் கண்ட மொன்று
வரும்வினை நிவிர்த்தியாகி ஆறஞ்சு ரண்டு ஆண்டில்
அரிவைக்குக் கண்டம் நேரும் அக்காலம் நமனைக் காணுள்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

28. ஜாதகருக்கு இருபத்தெட்டாவது வயதில்* தாயாருக்கு ஒரு கண்டம் வரும். இந்தக் கண்டம் நிவர்த்தியாகி மறுபடியும் இன்னொரு கண்டம் ஜாதகருக்கு முப்பத்திரண்டாவது வயதில்* தாயாருக்கு நேரிடும். ஆனால், அப்போது அவள் எமனைத் தரிசிக்கமாட்டாள். அதாவது இறந்துவிட மாட்டாள். கருப்பு மதயானை முகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்தப் பார்வதியம்மையே! கேட்பீராக.

† குறிப்பு.—தாயாருக்குக் கண்ட விஷயம்—ஜாதகருக்கு வயது வருஷம் 27-0-0 முதல் வருஷம் 28-0-0 வரையிலும் சந்திர தசையில் அங்காரகன் ராகு இவர்களுடைய புக்திகள் நடக்கின்றன. ராகு மாதுருஸ்தானத்திலிருந்துகொண்டு சந்திரனைப் பார்ப்பதால் மாதாவுக்குக் கண்டம் நேரிட அமைப்பு இருக்கின்றது. மேலும் வயது வருஷம் 31-0-0 முதல் 32-0-0 முடியும் வரையிலும் சந்திர தசையில் சனிபுக்தி, புதன்புக்தி இவை நடக்கின்றன. சனி ஏழில் இருந்துகொண்டு மாதுருலக்கினத்தைப் பார்ப்பதால் சனிபுக்தியில் மாதாவுக்கு ஒரு கண்ட அமைப்பு இருக்கின்றது.

29. ஆருறு ஒன்று ஆண்டில் அணுகிடும் தந்தை கண்டம்
வேறு ஜன்மத்தைச் சொல்வேன் விருஞ்சிநாடதற்கு உத்தரம்
பேரூரில் இக்குலத்தில் பிறப்பனு மென்று சொல்வோம்
தீரமாய்த் தவங்கள் செய்யும் செல்வதி கேட்டி டாயே.

29. ஜாதகருக்கு முப்பத்தேழாவது வயதில் அவருடைய தகப்பனுர் இறந்து விடுவார். தகப்பனுரின் மறு ஜன்மத்தைச் சொல்லுகிறேன் விருஞ்சிநாட்டிற்கு வடக்கில் ஒரு பெரிய ஊரில் இந்த ஜன்மத்திற் பிறந்த குலத்தில், அஃதாவது வேளாளர் குலத்தில் பிறப்பார் என்று சொல்லுவோம். வலிவாயும் தைரியமாயும் தவங்களைச் செய்கின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

† குறிப்பு—தகப்பனுருடைய மரண விஷயம்—ஜாதகருக்கு வயது வருஷம் 36-0-0 முதல் வருஷம் 37-0-0 வரையிலும் சந்திரதசையில் சூரிய புக்தி கொஞ்ச நாளும், அங்காரக தசையில் அங்காரக புக்தியும் ராகுபுக்தியும் நடக்கின்றன. பிதுர்லக்கினம் மீனம். பராசரஹோரை பிரகாரம் சந்திரன் மீன லக்கினத்திற்கு மாரகனல்ல. மீன லக்கினத்திற்கு மாரகர்கள் சனி, புதன், சூரியன, சுக்கிரன் இவர்கள் ஆவார். அங்காரகன் ஏற்கெனவே மாரகன் அல்ல. ஆனால், இவர் மாரகருடைய சமமந்தம் அடைந்து பிதுர்ஸ்தானத்தைப்பார்ப்பதுடன் பிதுர்ஸ்தானுதிபதியாகிய குருவையும் பார்க்கின்ருர்.

இதுவுமன்றி பிதுர்காரகனுகிய சூரியனுடனும் சம்பந்தப்பட்டிருக்கின்ருர். ராகு பிதுர்மாரகனுகிய சுக்கிரன் வீட்டில் இருந்துகொண்டு பிதுர்காரகனுகிய சூரியனேயும் பார்க்கின்ருர். ஆகையால், அங்காரக தசையில் ராகு புக்தியில் பிதாவுக்கு மாரகஞ்செய்ய அமைப்பு இருக்கின்றது.

30. உதித்த ேய் எழுப தாண்டில் உயர்கூனி மாதம் தன்னில்
விதியது முடியு மென்ருேம் விளம்புவோம் பின்ஜன் மத்தைச்
சதியிலா தணிகைக் கீழ்ப்பால் சிறுவூரில் ரெட்டி வமிசம்
நிதிமிக உடையா னுக்கு நேருவ னென்று சொல்வோம்.

30. ஜாதகருக்கு எழுபதாவது வயதில்* பங்குனி மாதத்தில் ஆயுள் முடிந்துவிடும் என்று சொல்லுகிருேம். இவருடைய மறுஜன்மத்தைச் சொல்லுகிருேம். குற்றமில்லாத திருத்தணிகைக்குக் கிழக்குத் திக்கில் ஒரு சிறிய கிராமத்தில் ரெட்டியாருடைய குலத்தில் தனம் அதிகமாக வுடையவருக்கு வந்து பிறப்பார் என்று சொல்லுகிருேம்.

**குறிப்பு.—ஜாதகருக்கு மாரக விஷயம் :—**ஜாதகருக்கு வயது ௵ 69-0-0 முதல் ௵ 70-0-0 முடியும் வரையிலும் குருதசையில் சுக்கிரபுக்தி நடக்கின்றது. கடக லக்கினத்திற்குப் பராசரஹோரை 13-ஆவது அத்தியாயம் பிரகாரம் புதன், சுக்கிரன், சனி இவர்கள் மாரகராகின்ருர்கள். குரு ஏற்கனவே மாரகாதிபதி அல்ல. ஆனுல் இவர் மாரகாதிபதியாகிய புதன் வீட்டில் இருந்து கொண்டு லக்கினத்திற்குப் பன்னிரண்டாவது வீட்டில் இருக்கின்ருர். ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரம் குருவுக்கு மாரகாதிபத்திய அமைப்பு நேரிடுகிறது. ஏற்கனவே கடகத்திற்குச் சுக்கிரன் பெரிய மாரகராகின்ருர். ஆகையால் குருதசையில் சுக்கிர புத்தியில் ஜாதகருக்கு மாரகம் நேரிட அமைப்பு இருக்கின்றது.

31. ஜனித்திடு காலம் தன்னில் சிகிதசை யிருபா னுளும்
குனித்தனம் பூர்வ பாகம் கூறுவோம் அதன்மேல வெள்ளி
வினையிலா பூர்வம் சொல்வோம் விளம்புவோம் பின்பால் சேதி
கனமத வானே பெற்ற காதலி கேட்டி டாயே.

31. ஜாதகர் பிறக்குங் காலத்தில் கேதுதசையில் இருபது நாளாகும். இதுவரையிலும் பூர்வபாகமாகிய முதல் பாகத்தைச் சொன்னேம். கேது தசைக்குப் பிறகு சுக்கிரதசை நடைபெரும். பாபங்கள் ஒன்றுமில்லாத பூர்வ பாகத்தைச் சொன்னேம். இனிமேல் மற்ற விஷயங்களேப் பின் பாகத்தில் சொல்லுகிருேம். மேன்மை பொருந்திய மதயானே முகத்தை யுடைய விநாயகக் கடவுளேப்பெற்றெடுத்தப் பார்வதியம்மையே ! கேட்பீராக.

## ஜாதகம் 68

| | | | |
|---|---|---|---|
| | | | சந்திரன் |
| | இராசி சக்கரம் | | லக்கினம் சனி ராகு |
| சூரியன் புதன் கேது | | | |
| சுக்கிரன் | குரு | அங்காரகன் | |

புனர் பூசம்—3-ம் பாதம். குரு தசை இரு 7-7-0.

1. கடகலக் கினம தாகக் காரியும்[1] ராகு தங்க
உடுபதி[2] யீரா றுக ஒருகண்ணேன்[3] ஆறி லாகச்
சுடரவன்[4] புதனும் கேது சப்தமமாம் பொன்னு[5] மஞ்சில்
அடவுடன் சேயு[6] நாலில் அணுகினல் பலன் னெவ்வாறு ;

1. ஜன்ம லக்கினம் கடகமாகி, அதில் சனியும் ராகுவும் சந்திரன் பன்னிரண்டிலும், சுக்கிரன் ஆறிலும், சூரியன் புதன் கேது இவர்கள் ஏழிலும், குரு ஐந்திலும், அங்காரகன் நான்கிலும் இருந்தால், எவ்வித மான பலாபலன்கள் உண்டாகும் என்று ;

குறிப்பு :—இந்த ராசிச்சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும் :—ரிஷபத்தில் சூரியனும் சுக்கிரனும், மிதுனத்தில் சந்திரனும் கேதுவும், சிம்மத்தில் புதனும், துலாத்தில் குருவும், சனியும், அங்காரகனும், தனுசில் ராகுவும் ஆகும். சனி வக்கிரமாக விருக்கின்றார்.

2. மங்கையும் கேட்கும் போது மாமுனி புகலு கின்றார்
இங்கிவை ஆண்பால் ஜன்ம மில்லமும் கீழ்ப்பால் நோக்கம்
தங்கிடும் தென்பால் சந்து சங்கரன் கோஷ்டம் கீழ்ப்பால்
ஐங்கரன் மேல்பால் தங்கும் ஆளிவா கனத்தாள் நிற்கும்.

2. பார்வதி அம்மையார் கேட்கும்போது மாமுனியாகிய வசிஷ்டர் சொல்லுகின்றார். இப்படிப்பட்ட கிரக அமைப்பிற்கு ஆண்குழந்தை ஜனனமாகும். பிறந்த வீடு கிழக்குத் திக்கைப் பார்த்திருக்கும்.

---

[1] சனி. [2] சந்திரன். [3] சுக்கிரன். [4] சூரியன். [5] குரு. [6] அங்காரகன்.

தெற்குத் திக்கில் ஒரு சந்து இருக்கும். கிழக்குத் திக்கில் பரமசிவன் கோயிலும், மேற்குத் திக்கில் விநாயகக் கடவுளின் கோயிலும் இருக்கும். காளியம்மன் கோயில் மேற்குத் திக்கிலிருக்கும்.

3. இன்னமும் பலதே வாசம் மிலகிய பேரூ ராகும்
அன்னவன் பிரம்ம சேயாய் அருளுவா னென்று சொல்வோம்
மன்னவன் குடும்பச் சேதி வரைகிறே மிந்நூல் தன்னில்
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே.

3. இவைகளுமன்றிப் பிறந்த ஊரில் அனேக தேசத்தார்கள் வாசஞ் செய்வார்கள். இந்த ஊர் ஒரு பெரிய பட்டணமாகும். ஜாதகர் பிராமண குலத்திற் பிறப்பார் என்று சொல்லுகிறோம். இவருடைய குடும்பத்தின் விஷயங்களை இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகிறோம். மேன்மை யான யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்தப் பார்வதி யம்மையே! கேட்பீராக.

4. தந்தையின் துணைஆண் ஒன்று சாற்றுவோம் தீர்க்க மாக
அந்தஆண் முன்னோ னாகும் அறைகிறே மவன்கு ணத்தைச்
சிந்தையும் நல்ல தாகும் சிவந்தமெய் வாத தேகி
நந்தியும் பனையோர் விருத்தி நவின்றிடான் கட்டு வார்த்தை.

4. ஜாதகருடைய தகப்பனுருக்கு ஓர் ஆண் சகோதரரும் நீண்ட ஆயுளையுடையவர் என்று சொல்லுகிறோம். இந்தச் சகோதரன் மூத்த சகோதரனாகும். இவருடைய குணாதிசயங்களைச் சொல்லுகிறோம். இவர் நல்ல மனத்தையுடையவர். சிவப்பு நிறமுள்ள தேகத்தையுடையவர். வாத தேகத்தையுடையவர். ரிஷபம் பசு பயிரிடும் நிலங்கள் பயிர் செய்யும் ஏர் ஆகிய இவைகள் விருத்தியாகும். பொய் வார்த்தைகளையும் புனைந்த வார்த்தைகளையும் சொல்லமாட்டார்.

5. சிவாலய பூசை பூண்பன் சிலர்க்குப தேசம் செய்வன்
தவசிக ளுறவு கொள்ளான் தன்கட னில்லா னாகும்
அவனியோர் மதிக்க வாழ்வன் அறுமுக நாமம் கொண்டோன்
நவனியில் பாரி ஒன்று நற்சுதர் காணா னாகும்.

5. இவர் சிவன் கோயிலில் பூஜை செய்யும் தொழிலையுடையவர். சிலருக்கு உபதேசத்தைச் செய்து வைப்பார். முனிகளுடைய சினேகத்தை அடையமாட்டார். கடன்படமாட்டார். பூமியிலுள்ளவர்கள் இவரை மதிக்கும் படியாக வாழ்வார். முருகக் கடவுளின் பெயரை உடையவர். இவருக்கு மனைவி ஒருத்தியாகும். பிள்ளைகள் கிடையாது.

6. உடன்கூடி வாழ்வா னாகும் உரைக்கிறோம் தந்தை சேதி
விடவிழி மார்கள் மோகன் விமலனை பூசை செய்வன்
தடபுடல் செய்கை யுண்டு சல்லியப் பாதை காணன்
உடன்துணை சொல்தட் டாதான் உண்மையை வெளிகாட் டாதான்.

6. ஜாதகருடைய தகப்பனருடன்கூடவிருந்து வாழ்வார். இனிமேல் தகப்பனருடைய விஷயங்களைச் சொல்லுகிறோம். இவர் விஷக்கண்களை யுடைய பெண்களின்மேல் காம ஆசையுடையவர். சிவபெருமானைப் பூஜை செய்யுந் தொழிலை யுடையவர். இடம்பமாகவும் அவசரமாகவும் படாடோப மாகவும் காரியங்களைச் செய்வார். கடனால் ஏற்படும் துன்பமில்லாதவர். தன்னுடைய சகோதரனுடைய வார்த்தைக்குத் தவறி நடக்கமாட்டார். உண்மையை வெளியே காண்பிக்காமலும் சொல்லாமலும் ரகசியமாய் வைத்திருப்பார்.

7. அரவனும் நாமம் கொண்டோன் ஆசாரன் வெளிம யக்கன்
தரையதை விருத்தி செய்வன் தன்மனம் கபடு முண்டு
இருநிறம் அந்தம் வாயு எய்திடும் சோதி குற்றம்
பொருளாசை சொல்புரட்டன் புயங்கம்போல் கோப முண்டு.

7. தகப்பனர் பாம்பின் பெயரை உடையவர். ஆச்சாரமும் நல்லொழுக்க மும் உடையவர். வெளிப் பார்வைக்கு மயக்குந் தன்மையுடையவர். பூமியை விருத்தி செய்வார். கபடமானமனத்தை யுடையவர். இரண்டு நிறங்கள் கலந்துள்ள மாநிறமான அழகான தேகத்தை யுடையவர். வாயு நோய் வந்து அணுகும். நாக்குப்பூச்சியால் தோஷமும் துன்பமும் உண்டாகும். இவருக்குப் பொருள்களின்மேல் ஆசையுண்டு. சொன்ன பேச்சைப் புரட்டி விடுவார். இவருக்கு பாம்பிற்குக் கோபம் வருவதைப் போலக் கோபமுண்டாகும்.

8. தீரமில் லாத நெஞ்சம் ஜனஉப காரி யாவன்
காரிய சமர்த்த னுவன் கஞ்சமாம் ரேகை யுண்டு
கூறின குணத்தா னுக்குக் குழவியும் குவல யத்தில்
மாரன்தன் குணத்தைச் சொல்வேன் மால்நிற முடைய னுகும்.

8. இவருக்குத் திடமான உறுதியான மனது கிடையாது. இவர் ஜனங்களுக்கு உபகாரஞ் செய்வார். காரியங்களைச் செய்து முடிப்பதில் சாமர்த்தியமுள்ளவர். இவருடைய உள்ளங்கையில் கமலரேகை என்ற ஒருவித தாமரைரேகை இருக்கின்றது. இங்கு சொல்லப்பட்ட குணங்களை யுடைய தகப்பனுக்கு இந்தப் பூமியில் ஜாதகர் பிறப்பார் என்று சொல்லு கிறோம். ஜாதகருடைய குணகுணங்களைச் சொல்லுகின்றேன். மகா விஷ்ணுவின் நிறமாகிய நீலமேகவர்ணம் என்ற ஒருவிதமான நீலமும் கறுப்பும் கலந்த நிறமுடையவர்.

9. இருவிதக் கல்வி கற்பன் யாவர்க்கும் நல்லோ னுவன்
அறிவுளான் சீல னுவன் அஞ்சின வார்த்தை கூறுன்
குறைசொ லான் பொருள்மே லிச்சை பொய்யது பேசா னுகும்
தரையதை விருத்தி செய்வன் சாதிப்பான் சிலது சங்கை.

9. ஜாதகருக்கு இரண்டுவிதமான படிப்பு உண்டு. எல்லோருக்கும் நல்லவராக விருப்பார். புத்தியுள்ளவர். நல்லொழுக்கமும் நல்ல நடவடிக்கையுமுடையவர். பயப்படும்படியாக வார்த்தைகளைக் சொல்ல

மாட்டார். பிறர் மேல் குற்றங்களைச் சொல்லமாட்டார். பொருளின்மேல் ஆசை யுடையவர். பொய் சொல்ல மாட்டார். பூமியைப் பயிரிட்டு விருத்தி செய்வார். சில விஷயங்களில் ஒரே பிடிவாதஞ் செய்து வெல்லுவார்.

10. அன்னமும் குறவு ருதான் அரனபூசை செய்வா னுகும்
அன்னியர் மதிக்க வாழ்வன் அடாவடி கூறு னுகும்
அன்னியர்க் குதவி செய்வன் அற்பரை உறவு கொள்ளான்
அன்னவன் யோக சாலி அயல்குற்றம் புகலா னுகும்.

10. ஜாதகருக்கு எப்போதும் சாப்பாட்டுக் குறைவு ஏற்படாது. சிவ பெருமானைப் பூஜை செய்யுந் தொழிலையுடையவர். பிறர் இவரை மதிக்கும்படியாகப் பெருமையாக வாழ்வார். அடாவடியாக முரட்டுத்தன மாகப் பேசமாட்டார். பிறருக்கு உபகாரஞ் செய்வார். தாழ்ந்த குண முடையவர்களுடன் சினேகஞ் செய்யமாட்டார். இவர் யோகமுடையவர். பிறர்மேல் குற்றங்களைச் சாட்டமாட்டார்.

11. தன்துணை ஆண்பால் ரண்டு சத்தியு மவ்வாறு தீர்க்கம்
சொன்னஆண் முன்னே ராகும் செப்புவோம் முன்னோன் சேதி
கன்னென மொழியு முண்டு கல்விமா னீகை யாளன்
பின்னமில் லாத தேகன் பேச்சதை அதிக மேற்பன்.

11. ஜாதகருடன் பிறந்த இரண்டு ஆண் சகோதரர்களும் இரண்டு பெண் சகோதரங்களும் நீண்ட ஆயுளையுடையவர்களாக விருப்பார்கள். இந்த இரண்டு ஆண் சகோதரர்களும் ஜாதகருக்கு மூத்த சகோதரர்களாகும். முதல் மூத்த சகோதரனுடைய விஷயத்தைச் சொல்லுகிறோம். இவர் இனிமையாகப் பேசுவார். படித்தவர். பிறருக்குக் கொடுக்குந் தன்மை யுடையவர். உடம்பில் யாதொரு அங்கவீனமுமில்லாதவர். அதிகமாக பேசக் கூடியவர். வார்த்தையின்மேல் அதிகமான மதிப்பை வைக்கக் கூடியவர்.

12. வறுமைஎப் போதும் காணன் வள்ளலைப் பூஜை பூண்பன்
இருபாரி அனுகு மென்றோம் ஏவலா ளுடைய னுகும்
பெரும்சுத ராண்பால் ரெண்டு பேதைய ரவ்வாறு தீர்க்கம்
திருகிலா ஒன்றுய் வாழ்வன் தீர்க்கமாம் வயது முண்டு.

12. ஜாதகருடைய முதல் மூத்த சகோதரன் கஷ்டங்களும் தரித்திர மும் எப்போதும் இல்லாதவர். கடவுளைப் பூஜை செய்வர். இவருக்கு இரண்டு மனைவிமார்கள் உண்டு என்று சொல்லுகிறோம். இவருக்கு வேலைக்காரர்களுண்டு. இரண்டு ஆண் குழந்தைகளும் இரண்டு பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள். கள்ளமும் வஞ்சனையுமில்லாமல் ஜாதகருடன் கூடவிருந்து வாழ்வார். இவருக்கு நீண்ட ஆயுளுண்டு.

13. அத்திரி முனிவர் சொல்வர் அறைந்திளீர் புத்திர விருத்தி
வித்தகி யெம்மா துக்கு மேவிடும் விவரம் சொல்வீர்
சத்தியா முதல் மாதும்மே சந்ததி யின்றி மாள்வள்
பத்தினி யிளையா ளுக்குப் பகருவோம் விருத்தி தானே.

13. நீங்கள் இவருக்குப் புத்திர விருத்தியைப்பற்றிச் சொன்னீரே! இவ்விதமாக எந்த மனைவிக்குச் சந்தானம் உண்டாகும் என்ற விவரத்தைச் சொல்லுவீர் என்று அத்திரி முனிவர் கேட்க, முதல் மனைவி குழந்தைகளைப் பெறுமலேயே இறந்து விடுவாள். இரண்டாவது மனைவி குழந்தைகளைப் பெறுவாள் என்று சொல்லுகிறோம்.

14. அதற்குப்பின் துணைவன் தானும் அறிவுளான் கல்விமானும்
குதர்க்கமாய்ப் பேசா னாகும் குணமது நல்ல தாகும்
சதியிலா மனத்த னாகும் தாட்சிண்யன் கனத்த புத்தி
பிதுராஸ்தி அடையா னாகும் பூமியில் வறுமை காணான்.

14. ஜாதகருடைய இரண்டாவது மூத்த சகோதரர் புத்திசாலியா யிருப்பார். படித்தவராவர். முறைகெட்ட தர்க்கத்துடன், அஃதாவது அநியாயமாய்க் காரணங்கள் இல்லாமல் வாதாடமாட்டார். நல்ல குணங்களை யுடையவர். கெட்ட மனதில்லாதவர். தயையுள்ளவர். பெரும் புத்தி யுடையவர். பிதாவின் சொத்தைத் தான் அடையமாட்டார். பூமியில் கஷ்டங்களையும் தரித்திரத்தையும் அனுபவிக்கமாட்டார்.

15. அன்னியர் ஆர்ஜி த்தை அனுசரித் திவனும் வாழ்வன்
கனம்புத்திர னில்லா னாகி காளையு மவன்பால் சென்று
பொன்பணி பூமி யாவும் பெறுவானும் வயது தீர்க்கம்
மன்னவன் தனக்குப் பாரி மருவிடும் ஒன்றே யாக.

15. பிறருடைய சொத்தை அடைந்து அனுபவித்து இவர் வாழ்வார். புத்திரனில்லாத ஒருவருக்கு இவர் சுவீகாரபுத்திரனாகச் சென்று அவருடைய தனம் ஆபரணம் பூமி இவைகளை அடைவார். இவருக்குத் தீர்க்க ஆயுளுண்டு. இவருக்கு ஒரே மனைவிதான் உண்டு.

16. சுதர்களும் ஆண்பா லொன்று தோகையர் மூவர் தீர்க்கம்
பதராகு மற்ற வெல்லாம் பகரமாம் குடும்ப மேற்பன்
இதுவிவ ரங்க ளெல்லாம் விளம்புவோம் மறுபா கத்தில்
அதிதியை ஆத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

16. இவருக்கு ஓர் ஆண்குழந்தையும் மூன்று பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளையுடையவர்களாக விருப்பார்கள். மற்றக்குழந்தைகள் எல்லாம் உபயோகம் இல்லாமல் போய்விடும். இறந்துவிடும். அலங்காரமான மேன்மையான குடும்பத்தை யுடையவர். இந்த விஷயங்களை எல்லாம் இன்னொரு பாகத்திற் சொல்லுகிறோம். முனிவர்களையும் பரதேசிகளையும் காப்பயற்றுகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

17. பாலகன் மணத்தின் காலம் பகருவோம் பதினே ழாண்டில்
வேல்விழி மேல்பால் நேரும் விளம்புவோ மவன்கு ணத்தைக்
காலத்தை அறிந்து ரைப்பள் கண்முக வசிய முண்டு
மால்மனை யொப்ப தாகும் மங்கள வார்த்தை யுண்டு.

17. ஜாதகருக்குக் கலியாணம் நடக்குங் காலத்தைப்பற்றிச் சொல்லுகிறோம். இவருக்குப் பதினேழாவது வயதில் * வேலைப்போன்ற கண்களையுடைய அழகிய மனைவி மேற்குத்திக்கிலிருந்து வந்து நேருவாள். இவளுடைய குணாதிசயங்களைப்பற்றிச் சொல்லுகிறேன். அந்த அந்தக்காலத்திற்குத் தகுந்தாற்போலப் பேசுவாள். கண்களும் முகமும் வசீகரமாகவும் அழகாகவும் இருக்கும். மகாவிஷ்ணுவின் மனைவியாகிய லக்ஷ்மியைப்போல விருப்பாள். நல்ல சுபகரமான வார்த்தைகளையே உபயோகிப்பாள்.

* குறிப்பு.—ஜாதகருடைய விவாகம்—ஜாதகருக்கு வயது ௵ 16-0-0 முதல் ௵ 17-0-0 வரையிலும் சனிதசையில் சுக்கிரபுக்தி நடக்கின்றது. சனி ஏழாம் பாவமாகிய களத்திர பாவத்திற்குடையவராகி லக்கினத்தில் போககாரகனாகிய ராகுவுடன்கூடி குடும்பாதிபதியாகிய சூரியனாலும் குருவாலும் பார்க்கப்பட்டிருக்கின்றார். சுக்கிரன் போகஸ்தானமாகிய நான்கிற்குடையவராகவும் களத்திரகாரகனாகவும் இருக்கின்றார். ஆகையால் சனிதசையில் சுக்கிரபுத்தியில் விவாக அமைப்பு இருக்கின்றது.

18. தோகைபோல் சாய லொக்கும் சொல்லது சுருக்க மாகும்
நாகரிகங்க ளுண்டு நடைநன்மை யோக சாலி
தாகமென் றோர்க்குமீவள் தன்வரன் மனதுக் கேத்தோள்
போகபாக் கியங்க ளேற்பள் பூவையும் தீர்க்கஜீவி.

18. ஜாதகருடைய மனைவி மயிலைப்போன்ற ரூபமுடையவள். சுருக்கமாகப் பேசுவாள். நாகரிகங்களையுடையவள். நல்ல நடவடிக்கை யுள்ளவள். யோகத்தையுடையவள். தாகவிடாய் இருக்கின்றது என்று சொல்லுகிறவர்களுக்குத் தாகந் தீர நீர்மோர் கொடுப்பாள். தன்னுடைய புருஷனுடைய மனதிற்குத் தகுந்தபடி நடந்துகொள்ளக்கூடியவள். போகங்களையும் செல்வங்களையும் அடைவாள். இவள் நீண்ட ஆயுளை உடையவள்.

19. சுத்தம அஷ்ட மத்தோன் சனியாகி பொன்னோன் [1] பார்க்கப்
பத்தினி ஒன்றே தீர்க்கம் பகரொணா தாரம் ரண்டு
வித்தகி யவன்முன் னாலே மேவுவாள் காலன் னாடு
சுத்தமாம் தாரம் ஒன்றே செப்பினோ மவர்க்கிவ் வாறு.

19. ஏழிற்கும் எட்டிற்கும் உடையவர் சனியாகி இவர் குருவால் பார்க்கப்படுவதால் ஜாதகருக்கு ஒரே மனைவிதான். அவள் தீர்க்க ஜீவியாயிருப்பாள்*. இவருக்கு இரண்டு தாரம் நேரிடும் என்று சொல்லக்கூடாது. மனைவி ஜாதகருக்கு முந்தியே இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேருவாள். குற்றமில்லாமல் இவருக்கு ஒரேதாரம் என்று சொல்லுகிறோம்.

[1] குரு.

* குறிப்பு.—மனைவி விவரம்—முதல் மனைவி சம்பந்தமான பாவங்களும் கிரகங்களும் இந்த ஜாதகத்திற்கு 7-ஆவது, 2-ஆவது பாவங்களும், சனியும் சூரியனும் சுக்கிரனும் முறையே ஆகும். சனி லக்கினத்தில் ராகுவுடன்கூடி சூரியன் புதன் கேது குரு இவர்களால் பார்க்கப்பட்டிருக்கின்றார். சனி சரராசியில் இருப்பது முதல் களத்திரத்திற்குப் பிரதிகூலமானது. இரண்டாவது களத்திரபாவமாகிய ஒன்பதிற்குடைய குரு லக்கினாதிபதியாகிய சந்திரனைப் பார்க்காமல் லக்கினத்தைப் பார்த்திருக்கின்றார். குருவிற்கு இரண்டாந்தாரத்தைக் கொடுக்கும் அமைப்பு கொஞ்சமாக வந்திருக்கின்றது. புதன் திரிதிகை விரயாதிபதியாகிச் சூரியனுடன் சேர்ந்து ஏழில் இருக்கின்றார். 7-ஐ அங்காரகன் பார்க்கின்றார். ஆகையால் ஜாதகருக்குக் கொஞ்சம் தாரதோஷமிருக்கின்றது. அதனால் தாரம் ஜாதகருக்கு முன்னே இறந்துவிடுவாள் என்று இங்கு சொல்லி இருக்கின்றது. ஜாதகருக்கு வயது ௵ 43–7–0 முதல் ௵ 50–7–0 வரையிலும் கேது தசை நடக்கின்றது. கேது தசையில் மனைவிக்கு மரணம் நேரிடலாம். ஜாதகருக்குப் பூர்ணாயுள் ௵ 62 ஆகும். நான்கில் அங்காரகன் போகஸ்தானத்தில் இருப்பதாலும் குரு 9-க்குடையவராய் லக்கினத்தைப் பார்ப்பதாலும் விவாகமான இரண்டாந்தாரம் ஏற்படாமல் ஒரு ரகசியமான சேர்க்கைஸ்திரீ ஏற்படலாம்.

20. சுதர்களு மாண்பால் மூன்று தோகையு மிருவர் தீர்க்கம்
இதுநிற்க இவன்முன் ஜன்மம் மியம்புவோ நவபா ஷாணம்
அதுநகர் தன்னில் வேளாண் அணுகியே கிருஷி செய்து
நிதிமிக உடையா னாகி நீத்தோர்க்கு அன்ன மீந்து;

20. ஜாதகருக்கு மூன்று ஆண்குழந்தைகளும் இரண்டு பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளை யுடையவர்கள். இப்படியிருக்க இனிமேல் ஜாதகரின் முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறோம். இவர் நவபாஷாணம் என்ற பட்டணத்தில் வேளாளர் குலத்திற் பிறந்து விவசாயஞ் செய்து அதிகப் பணமுடையவராகி ஏழைகளுக்கும் உலகப்பற்றை விட்டுவிட்டப் பரதேசிகளுக்கும் சாப்பாடுபோட்டு ;

21. பலதல வாசம் சென்று பவமது மில்லா தாகிக்
குலவினன் காலன் னாடு குறைதலை வரையப் பட்டுத்
தலைவனு முதிப்பா னாகும் ஜயமுனி மறுத்துச் சொல்வார்
நிலம்விருத்தி செயுங்கு லத்தில் நேர்ந்தனன் பூர்வ மென்றீர்.

21. பலவிதமான, அநேகவிதமான திவ்ய க்ஷேத்திரங்களுக்குப் போய் பாவம் ஒன்றும் இல்லாதவராகி இறந்து எமபட்டணத்திற்குச் சென்று பிரமதேவனால் எழுதப்பட்டு ஜாதகர் இந்த ஜன்மத்தில் வந்து பிறப்பார் என்று சொல்ல, ஜயமுனிவர் தடுத்துக்கேட்கின்றார். முன்ஜன்மத்தில் ஜாதகர் வேளாளர் குலத்தில் பிறந்தவர் என்று சொன்னீர்.

22. இந்ததோர் ஜன்மம் தன்னி லீசனைப் பூசை செய்யும்
முந்தின குலம் எவ்வாறு உதித்தகா ரணங்கள் சொல்வாய்
அந்தவன் முன்ஜன் மத்தில் அதிதிக்கட் கன்ன மீந்து
விந்தையாய்த் தலங்கள் சென்று வித்தகன் வாழ்ந்த தாலே ;

22. ஜாதகர் இந்த ஜன்மத்தில் பரமசிவனைப் பூஜைசெய்யும் படியான முதன்மையான குலமாகிய பிராமண குலத்தில் வந்து பிறப்பதற்குக் காரணம் என்ன என்பதைச் சொல்லுவீர் என்று கேட்க, ஜாதகர் முன் ஜன்மத்தில் பணக்காரனாக இருந்து பரதேசிகளுக்கும் ஏழைகளுக்கும் சாப்பாடுபோட்டு ஆச்சரியமாக அனேக ஸ்தலங்களுக்குப்போய் அறிஞராக இருந்து வாழ்ந்ததால் ;

23. உதித்தன னென்று சொல்வோம் உரைக்கிறே மிவனின் யோகம்
மதித்திடக் குடும்பி யாவன் மாநிலம் விருத்தி செய்வன்
நிதிமிக பெருக்கம் செய்வன் நேமியில் வறுமை காணான்
பதியது வேறு செய்வன் புதன்தசை தன்னி லேதான்.

23. ஜாதகர் இந்த ஜன்மத்தில் இவ்விதமாகப் பிராமண குலத்திற் பிறந்தார் என்று சொல்லுகிறோம். இனிமேல் இவருடைய யோகங்களைப்பற்றிச் சொல்லுகிறோம். இவரைப் பிறர் மதிக்கத்தகுந்த குடும்பமுடையவராவர். பெரிய பூமிகளைப் பயிர்செய்து விருத்திசெய்வார். செல்வத்தை மிகவும் அதிகமாக்குவார். பூமியில் கஷ்டங்களையும் தரித்திரத்தையும் அனுபவிக்கமாட்டார். புதன்தசை காலத்தில் வேறு ஒருவீடு கட்டி அதில் வாசஞ்செய்வார்.

24. ஜாதகன் தனக்கு யோகம் சார்ந்தகா ரணங்கள் சொல்வாய்
ஆதவன் [1]தனக்கீ ராறு அசுரர்மந் திரியும் [2] நிற்க
மாதவன் [3]அஞ்சில் தங்க மங்கலன் [4]நாலிலாகப்
போதவே வேசி யோகம் புரந்தரன் யோக மொன்று.

24. ஜாதகருக்கு யோகங்கள் உண்டாவதற்குக் காரணங்களைச் சொல்லுவீர் என்று கேட்க, சூரியனுக்குப் பன்னிரண்டில் சுக்கிரன் இருப்பதாலும், குரு ஐந்தில் இருப்பதாலும், அங்காரகன் நான்கில் இருப்பதாலும் வேசியோகம் * என்ற ஒரு யோகமும் இந்திரயோகம் என்ற ஒருவித யோகமும் இருக்கின்றது.

* குறிப்பு.—யோக விஷயங்கள்—(1) வேசியோகம்.—சூரியனுக்குப் பன்னிரண்டில் சுக்கிரன் இருப்பதால் வேசியோகம் ஏற்படுகிறது என்று சொல்லுகிறார். இந்த யோக விஷயமாக ஜாதகாலங்காரம் 277-ஆ-வது பாடல், ஜாதகசிந்தாமணி 2049-ஆவது 2050-ஆவது பாடல்கள், பலதீபிகை அத்தியாயம் 6, சுலோகம் 8, ஜாதகசாரதீபிகை 51-ஆவது அத்தியாயம். 1-ஆவது சுலோகம், ஜாதக பாரிஜாதம் 7-ஆவது அத்தியாயம் 121-ஆவது சுலோகம்

---

[1] சூரியன். [2] சுக்கிரன்.
[3] குரு-தவம் என்ற 9-க்குடையவர். [4] அங்காரகன்.

ஆகிய இவைகளைப் பார்க்கவும். (சில புத்தகங்களில் வேசியோகத்தையும் வாசியோகத்தையும் ஒன்றிற்கொன்று மாற்றிப்போட்டிருப்பதையுங் கவனிக்கவும்.)

(2) இந்திர யோகம்.—இந்த யோகவிஷயமாய் ஜாதகாலங்காரம் 333-ஆவது, 362-ஆவது பாடல்கள், ஜாதகபாரிஜாதம் 7-ஆவது அத்தியாயம் 68-ஆவது சுலோகம், ஜாதகசிந்தாமணி 1994-ஆவது, 1987-ஆவது பாடல்கள் இவைகளையும் பார்க்கவும். இந்த ஜாதகத்தில் நான்காவது பாவத்தில் அங்காரகன் இருப்பதால் ஜாதகாலங்காரம் 333-ஆவது பாடலை அனுசரித்து இந்திரயோகம் இருப்பதாகச் சொல்லி இருப்பதைப்போலத் தோற்றுகிறது.

25. கமலயோ கங்க ளொன்று கழறினேம் மூன்று யோகம்
அமைந்திடும் பூமி பொன்னும் அணுதியாம் பொருளும் நேரும்
இமையவர் போலே வாழ்வன் ஏகமாம் தாரம் தானும்
சிவன்தனைப் பூசை செய்யும் செல்வதி மேலுங் கேளே.

25. கமலயோகம் * என்ற ஒருவித யோகமும் இருக்கின்றது. ஆகையால் மூன்றுவிதமான யோகங்கள் இருக்கின்றன என்று சொல்லுகிறேம். ஜாதகருக்குப் பூமிகளும் தனமும் வந்து சேரும். அணுதியான பொருளும் வந்துசேரும். தேவர்களைப்போல வாழ்வார். இவருக்கு ஒரே தாரந்தான் உண்டு. சிவபெருமானைப் பூஜைசெய்கின்ற பார்வதியம்மையே! இன்னும் நாங்கள் சொல்லப்போகிறதைக் கேட்பீராக.

* குறிப்பு.—கமலயோக விஷயம்—இந்த யோக விஷயமாய் ஜாதக சிந்தாமணி 2035-ஆவது பாடலைப் பார்க்கவும். இந்தப்பாடல் பிரகாரம் லக்கினத்திற்குக் கேந்திரஸ்தானங்களாகிய ஒன்று நான்கு ஏழு பத்து இந்தப் பாவங்களில் இராகு கேது நீங்கலாகவுள்ள மற்ற ஏழு கிரகங்களும் இருந்தால் கமலயோகம் ஏற்படுகிறது. ஆனால் இங்கு சனி அங்காரகன் சூரியன் புதன் ஆகிய நான்கு கிரகங்கள்தான் கேந்திரங்களில் இருக்கின்றன. இதைக்கொண்டு கமலயோகம் இருப்பதாகச் சொல்லி இருப்பதைப் போலத் தோற்றுகிறது. ஐந்திலுள்ள குருவைப்பற்றியும் மூன்றுவித யோகங்களைப்பற்றிப் பேசும்போது சொல்லியிருப்பதையுங் கவனிக்கவும்.

26. மாதுரு குணத்தைச் சொல்வேன் மாந்தளிர் மேனி யாகும்
சாதிப்பாள் சிலது சங்கை சந்தேக மனத்தா ளாகும்
ஓதுவாள் சுகமாய் வார்த்தை உரகம்போல் கோபம் கொஞ்சம்
மேதினில் நல்லோ ளாவள் விசனமே காணு ளாகும்.

26. ஜாதகருடைய தாயின் குணுதிசயங்களைச் சொல்லுகிறேன். மாமரத்தின் துளிரின் நிறம்போன்ற ஒருவிதமான சிகப்பு நிறமுடையவள். சில காரியங்களைச் செய்துமுடிப்பாள். சந்தேகமான மனத்தை யுடையவள். இனிமையாக வார்த்தைகளைச் சொல்லுவாள். பாம்பைப்போலக் கொஞ்சம் கோபம் திடீரென்று வந்து சீறுவாள். பூமியில் நல்லவளாக விருப்பாள், துன்பமே அடையாதவளாவள்.

27. இல்லமும் மேல்பால் என்றே மிவள்துணை ஆண்பால் ரண்டு
சொல்லுவோம் தீர்க்க மாகத் தோகையின் பூர்வம் கேளாய்
எல்லையா லுயர்வ தான எழில்கொங்கு நாட்டி லேதான்
புல்கினள் செக்கான் வமிசம் பெரிதான குடும்பி யாகி.

27. ஜாதகருடைய தாயாரின்வீடு மேற்குத்திக்கிலிருக்கும் என்று சொல்லுகிறேம். இவளுடன் கூடப்பிறந்தவர்கள் இரண்டு ஆண் சகோதரர்கள் நீண்ட ஆயுளையுடையவர்களாக விருப்பார்கள். இவளுடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறேம். கேட்பீராக. உயரமான பூமியையுடைய மேன்மை தங்கிய அழகில் கொங்குநாட்டில் செக்காடுவர் குலத்தில், அஃதாவது ஒரு செட்டியார் வமிசத்தில் பிறந்து ஒரு பெரிய குடும்பஸ்தளாகி ;

28. அறமதி லிச்சை யுண்டாய் அச்சேது திக்குச் சென்று
சிறியோர்க்கு அன்ன மீந்து சென்றனள் காலன் னூடு
பிரமனல் வரையப் பட்டுப் பிறந்தவ ளென்று சொல்வோம்
பராசரும் மறுத்துச் சொல்வார் பாவைமுன் செக்கான் வமிசம்.

28. தருமத்தில் ஆசையுடையவளாகிச் சேதுஸ்தலத்திற்குப்போய் ஏழைகளுக்குச் சாப்பாடுபோட்டுப் பிறகு இறந்து எமபட்டணத்திற்குச் சென்று பிரமதேவனல் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றாள் என்று சொல்லுகிறேம். பராசரமுனிவர் தடுத்துக்கேட்கின்றார். இவள் முன்ஜன்மத்தில் செக்காடும் செட்டியார் குலத்தில்.

29. வந்தவளிச் சென் மத்தில் மறை குல முதிப்ப தென்ன
முனஜன்மம் சேது புண்ணியம் மேவின ளிக்கு லத்தில்
பின்ஜன்மம் தில்லை தன்னில் பிறப்பளா மிக்கு லத்தில்
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே. .

29. பிறந்தவள் இந்த ஜன்மத்தில் பிராமணஜாதியில் பிறந்ததற்குக் காரணம் என்ன என்று கேட்க, இவள் தன்னுடைய முன்ஜன்மத்தில் சேதுஸ்தலத்திற்குப்போன புண்ணியத்தினல் இந்த ஜன்மத்தில் பிராமணகுலத்தில்வந்து பிறந்திருக்கின்றாள். மறுஜன்மத்தில் சிதம்பரத்தில் இதே பிராமண குலத்தில்வந்து பிறப்பாள். மேன்மையான யானை முகத்தையுடைய விநாயகக்கடவுளைப் பெற்றெடுத்தப் பார்வதியம்மையே ! கேட்பீராக.

30. தந்தைமுன் ஜன்மம் சொல்வேன் தாம்பிர பரணி தன்னில்
பிந்திய குலமு தித்துப் பெரிதான செட்டுச் செய்து
வந்தவர்க் கன்ன மீந்து வினையது யில்லா தாகித்
தென்திசை நாடு சென்று சிரநான்கோன் வரையப் பட்டு ;

30. ஜாதகருடைய தகப்பனரின் முன்ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறேன். தாம்பிரபரணியில் தாழ்ந்த ஒரு குலத்திற் பிறந்து பெரிய வியாபாரஞ் செய்து வந்தவர்களுக்குச் சாப்பாடு போட்டுப் பாவம் ஒன்றும் இல்லாதவராகி இறந்து தெற்குத்திக்கிலுள்ள எமபட்டணத்திற்குப்போய் நான்கு முகங்களையுடைய பிரமதேவனல் எழுதப்பட்டு ;

31. வந்தவ னென்று சொல்வோம் வினையின்றி வந்தோ னுக்கு
அந்திய காலம் தன்னில் அவன்சோதி ஒப்ப தாயும்
விந்தையாய் வாயு மாதை மேலான காரணம் சொல்
பந்தனை வேசி சாபம் பற்றிற்று என்று சொல்வோம்.

31. இந்த ஜென்மத்தில் வந்து பிறந்தவரென்று சொல்லுகிறோம். முன் ஜன்மத்திய பாபம் ஒன்றும் இல்லாமல் வந்து பிறந்தவருக்குக் கடைசி காலத்தில் நாக்குபூச்சியைப் போன்ற ஒருவித கிரிமியால் ஆச்சரியமாய் வாயு ரோகம் ஏற்படும். இதற்குத் தகுந்த உயர்ந்த காரணத்தைச் சொல்லு மென்று கேட்க, ஒரு வேசி மகளுடைய சாபம் இவரை வந்து அடைந்தது என்று சொல்லுகிறோம்.

குறிப்பு.—ஏழாவது பாடலை வாசிக்கவும். அவ்விடத்தில் "சோதி குற்றத்தால்" வாயு ரோகம் வரும் என்று சொல்லி இருக்கிறதைக் கவனிக்கவும்.

32. மூவேழு ஆண்டு தன்னில் மேவிடும் தந்தை கண்டம்
சேவலன் அருளி னாலே செப்புவோம் பின்ஜன் மத்தை
ஆவலாய்த் தக்கோ லத்தில் அருளுவான் க்ஷத்திரிய சேயாய்
மேவியே செட்டுச் செய்வன் வித்தகி கேட்டி டாயே.

32. ஜாதகருக்கு இருபத்தோராவது வயதில் இவருடைய தகப்பனார், இறந்து விடுவார். முருகக் கடவுளின் கிருபையால் தகப்பனாருடைய மறு ஜன் மத்தைச் சொல்லுகிறோம். ஆசையுடன் தக்கோலத்தில் க்ஷத்திரிய வமிசத் தில் வந்து பிறப்பார். மேலான வியாபாரத்தைச் செய்வார். பார்வதி யம்மையே! கேட்பீராக.

குறிப்பு.—பிதுர் மாரகவிஷயம்—ஜாதகருக்கு வயது ஷ 20–0–0 முதல் ஷ 21–0–0 முடியும் வரையிலும் சனி தசையில் சந்திர புக்தி, அங்காரகன் புத்திகள் நடக்கின்றன. பிதுர் லக்கினம் மீனம். மீன லக்கினத்திற்குப் பராசர ஹோரை 13-ஆவது அத்தியாயம், தாண்டவமாலே, சந்திரகாவியம், ஜாதக சந்திரிகை 67-ஆவது சுலோகம் இவைகள் பிரகாரம் சனிமாரகராகின்றார். இவர் பிதுர் காரகனாகிய சூரியனைப் பார்க்கின்றார். ஆகையால் இவருக்குப் பிதாவை மாரகஞ்செய்ய அதிகாரம் இருக்கின்றது. அங்காரகன் இரண்டிற் கும் ஒன்பதிற்கும் உடையவராகி மாரகஸ்தானமாகிய எட்டாவது வீட்டில் மீன லக்கினத்திற்குப் பராசரஹோரை பிரகாரம் மாரகாதிபதியாகிய சுக்கிர னுடைய வீட்டில் இருக்கின்றார். ஆகையால் ஜாதக சந்திரிகை 23-ஆவது சுலோகப்பிரகாரம் சந்திரனைவிட அங்காரகனுக்கும் பிதாவை மாரகஞ் செய்ய அதிகாரம் இருக்கின்றது. தாண்டவமாலே, சந்திரகாவியம், ஜாதக சந்திரிகை இவைகள் எல்லாம் பிருஹத்பராசரஹோரை என்ற பராசாஹோ ரையை அனுசரித்து எழுதிய கிரந்தங்களாகும்.

33. முப்பது ஆறு ஆண்டில் விளம்புவோ மன்னை கண்டம்
செப்புவோம் ஜாத கர்க்குச் சுக்கிரன் தசையில் கண்டம்
அப்போது அறுபான் ரண்டில் ஆனிமா தத்தி லேதான்
ஒப்புவான் கால னுடு உத்தமி கேட்டி டாயே.

**33.** ஜாதகருக்கு முப்பத்தாறுவது வயதில் இவருடைய தாயாருக்கு மரணம் நேரிடும். ஜாதகருக்குச் சுக்கிரதசையில் மாரகம் நேரிடும். இவருக்கு அறுபத்திரண்டாவது வயதில் ஆனி மாதத்தில் மரணம் நேரிட்டு இவர் எமபட்டணம் போய்ச் சேருவார். பார்வதியம்மையே கேட்பீராக.

**1. குறிப்பு.—தாய்மாரக விஷயம்**—ஜாதகருக்கு வயது ஷூ 35-0-0 முதல் ஷூ 36-0-0 முடியும்வரையிலும் புத தசையில் சந்திரபுக்தி அங்காரக புக்திகள் நடக்கின்றன. மாதுரு லக்கினம் துலாம். துலாத்திற்குப் பராசர ஹோரை ஜாதகசந்திரிகை பிரகாரம் சூரியன் மாரகாதிபதி. புதன் பன்னிரண்டிற்குடையவராகிச் சூரியனுடன் கூடி இருக்கின்றார். ஆகையால் ஜாதக சந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரம் புதனுக்குத் தாயாரை மாரகஞ் செய்ய அதிகாரம் இருக்கிறது. துலாத்திற்கு அங்காரகன் மாரகஸ்தானங்களாகிய இரண்டு ஏழிற்குடையவராகி லக்கினத்திலேயே இருக்கின்றார். இவர் எட்டாம் பாவமாகிய ரிஷபத்தையும் பார்த்திருக்கின்றார். சில கிரந்தங்களில் அங்காரகன் துலாலக்கினத்திற்கு மாரகஞ் செய்வார் என்று கண்டிருக்கின்றது.

**2. ஜாதகர் மாரகம்.**—ஜாதகருக்கு வயது ஷூ 61-0-0 முதல் ஷூ 62-0-0 முடியும் வரையிலும் சுக்கிர தசையில் குருபுக்தி நடக்கின்றது. கடகலக்கினத்திற்குப் பராசஹோரை ஜாதகசந்திரிகை 50-ஆவது சுலோகப் பிரகாரம் சுக்கிரன் மாரகராகின்றார். இந்திரஜித்து கடகலக்கினத்திற் பிறந்து அவரைச் சுக்கிரன் மாரகஞ் செய்துவிட்டபடியால் கடகலக்கினத்திற்குச் சுக்கிரன் பெரும் மாரகராகக் கருதப்பட்டு வருகின்றார். இவர் ஆறில் இருந்து கொண்டு லக்கினாதிபதியாகிய சந்திரனையும் பார்க்கின்றார். ஆகையால் இவர் துய்யகேரளம் எட்டாவது பாவம் 20-ஆவது பாடல் பிரகாரமும் (சந்திரனைப் பார்ப்பதாலும்) மாரகராகின்றார். மேலும் குரு ஆறுக்குடையவராய் அனுஷநட்சத்திரத்தில் சனியின் காலில் இருந்து கொண்டு லக்கினத்தையும் அஷ்டமாதிபதியாகிய சனியையும் பார்க்கின்றார். ஆகையால், துய்யகேரளம் எட்டாவது பாவம் 20-ஆவது பாடல் பிரகாரம் (பார்ப்பதால்) குரு மாரகராக ஆகின்றார். குரு ஆறுக்குடையவ ராகையால் குமாரசாமியம் பிரகாரங்கூட மாரகராகின்றார்.

34. பின்ஜன்மம் தணிகை உத்திரம் பேரூரில் க்ஷத்திரிய சேயாய்
மன்னனு முதித்து மேலும் வாரணம் புரவி யோடு
அன்நக ரரசு செய்வனறைந்த மொழிகுன் றுது
கன்னென மொழியி னுளே காளைபோல் ஜனன காலம்.

**34.** ஜாதகர் மறு ஜன்மத்தில் திருத்தணிகைக்கு வடக்குத் திக்கிலுள்ள ஒரு பெரிய ஊரில் க்ஷத்திரிய குலத்திற் பிறந்து யானை குதிரை இவைகளை வைத்துக்கொண்டு அந்தப் பட்டணத்தை அரசாளுவார். நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும். இனிமையான வார்த்தையையுடைய பார்வதியம்மையே! ரிஷபத்தைப்போல ஆண்மையுடன் பிறந்த இந்த ஜாதகருக்கு ஜனனகாலத்தில்;

35. பொன்[1]தசை ஆண்டு ஏழும் புகழ்திங்க ளவ்வா றென்றேம்
இன்னவன் பிணிஅ னேகம் இனஞ்சூதம் காலி பீடை
முன்பாகம் விவரம் சொன்னேம் மொழிகிறேம் பின்பால் சேதி
மன்னிய பத்தோன் நாளில் வந்ததால் பலனெவ் வாறு.

35. குருதசை இருப்பு ஏழு வருஷமும் ஏழு மாதமும் ஆகும். இந்தக் காலத்தில் ஜாதகருக்கு அநேக ரோகங்கள் வரும். இனத்தில் சூதகங்கள் நேரிடும். கால் நடைகளுக்குக் கஷ்டங்கள் வந்து சம்பவிக்கும். இது வரையிலும் முன் பாகத்தின் விவரங்களைச் சொன்னேம். இதர விஷயங்களைப் பின்னால் சொல்லுகிறேம். பத்திற்குடையவராகிய அங்காரகன் நாலில் வந்திருப்பதால் என்ன பலன் நேரிடும் என்று கேட்க ;

36. பூர்வமாம் பொருளும் நேரும் புகலுவீர் காலம் தன்னைத்
தீரமாய்ப் புந்தி காலம் செப்புவோம் முப்பான் மேலாய்
வேறொரு பாகம் தன்னில் விளம்புவோ மந்தச் சங்கை
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

36. ஜாதகருக்குப் பூர்விகமான முன்னேர்களுடைய சொத்துவந்து சேரும் என்கிறார். இந்தச் சொத்து வருங்காலத்தைச் சொல்லுவீர் என்று கேட்க, புதன்தசை காலத்தில் முப்பது வயதிற்குமேல் நேரிடும் என்று உறுதியாய்ச் சொல்லுகிறேம். இந்த விஷயங்களை இன்னொரு பாகத்தில் சொல்லுகிறேம். ஆறு பெரிய முகங்களையுடைய முருகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே ! கேட்பீராக.

[1]. குரு.

## ஜாதகம் 69

1. கடகலக் கினம் தாகக் கதிர்[1]மூன்றில் கேது பத்தில்
விடம்[2] புகர்[3] புதன்சேய்[4] நாலில் வெண்மதி[5] யெட்டி லாக
முடவனும்[6] குருவு மாறில் மேவிய கிரகம் நின்ருல்
அடவுடன் பலன்க ளெவ்வாறு அறிவிப்பீர் முனியே நீர்தாம்.

| | | | |
|---|---|---|---|
| | கேது | | |
| சந்திரன் | இராசி சக்கரம் | | லக்கினம் |
| | | | |
| குரு சனி | | புதன் சுக்கிரன் அங்கார. ராகு | சூரியன் |

சதயம் 1-ஆம் பாதம். ராகு தசை ஞ்ப 15-6-26.

1. ஜன்ம லக்கினம் கடகமாகிச் சூரியன் மூன்றிலும், கேதுபத்தி லும், இராகு சுக்கிரன் புதன் அங்காரகன் இவர்கள் நான்கிலும், வளர் பிறைச் சந்திரன் எட்டிலும், சனியும் குருவும் ஆறிலும் இருந்தால், பலா பலன்கள் எவ்விதமாக உள்ளன! முனிவரே! நீர் சொல்லுவீர் என்று கேட்க;

**குறிப்பு.**—இந்த ராசிச் சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரகநிலை பொறுத்தமுடையதாகும்—ரிஷபத்தில் அங்காரகனும் ராகுவும், கடகத்தில் குருவும், சிம்மத்தில் சனியும், துலாத்தில் புதனும், விருச்சிகத் தில் சுக்கிரனும் கேதுவும், தனுசில் சந்திரனும், மீனத்தில் சூரியனும் ஆகும்.

2. பிருகுவும் புகலு கின்ருர் பிறந்திடு மாண்பால் ஜன்மம்
வருமில்லம் வடதென் வீதி வாசலும் மேல்பால் நோக்கம்
திருமாலும் மேல்பா லாகும் சிவனுமே அதின்மேல் தங்கும்
முருகன்தன் கோஷ்டம் வாயு மோதக ஹஸ்தன் தென்கீழ்.

2. பிருகுமஹாரிஷி சொல்லுகின்ருர். ஜனனமான குழந்தை ஆண் குழந்தையாகப் பிறக்கும். பிறந்த வீடு வடக்குத் தெற்குத் தெருவில் இருக்கும். தெரு வாயில் மேற்குத் திக்கைப் பார்த்திருக்கும். மகா

---

1. சூரியன். 2. ராகு. 3. சுக்ரின். 4. அங்காரகன். 5. சந்திரன். 6. சனி.

விஷ்ணுவின் கோயில் மேற்குத் திக்கிலிருக்கும். இதற்கு மேற்கில் சிவன் கோயில் இருக்கும். வடமேற்குத் திக்கில் முருகருடைய கோயில் இருக்கும். விநாயகருடைய கோயில் தென்கிழக்குத் திக்கில் இருக்கும்.

3. பலஜாதி அவ்வூர் வாசம் பெரியதோர் நகர மாகும்
தலைவனு மைந்தாம் ஜன்மம் ஜனிப்பன்செங் குந்த சேயாய்
நலமுள அன்னை தந்தை நாயகன் துணைவர் யோகம்
குலவிய முன்பின் ஜன்மம் கூறுவோ மிந்நூல் தன்னில்.

3. ஜாதகர் பிறந்த ஊரில் அனேக ஜாதியார்கள் வாசஞ் செய்வார்கள். அந்த ஊர் ஒரு பெரிய பட்டணமாகவிருக்கும். ஜாதகர் ஐந்தாவது கர்ப்பத்தில் பிறப்பார். இவர் செங்குந்தர் ஜாதி என்ற கைக்கோலர் ஜாதியில் பிறப்பார். இவருடைய தாயார் தகப்பனுர் சகோதரர் ஆகிய இவர்களுடைய யோகங்களையும், முன் ஜன்மம் பின் ஜன்மம் ஆகிய இவைகளையும் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகிறோம்.

4. தந்தையின் துணைதே சத்தில் ஆணொன்று கன்னி அவ்வாறு
இந்தவாறு விருத்தி யென்றே மியம்பின ஆண்பெண் ணும்தான்
பிந்திய துணைவனுகப் பேசுவோ மவன்கு ணத்தைச்
சிந்தையும் நல்ல தாகும் சிறப்பான கல்வி கற்பன்.

4. ஜாதகருடைய தகப்பனுரின் சகோதரர்களில் பூமியில் ஆண் ஒன்றும் பெண் ஒன்றும் ஆகும். இவர்கள் நீண்ட ஆயுளை உடையவர்கள் என்று சொல்லுகிறோம். இவர்கள் தகப்பனுருக்கு இளையவர்களாவார்கள். இளைய சகோதரனின் குண குணங்களைப்பற்றிச் சொல்லுகிறோம். இவருக்கு மனது நல்ல மனதாகும். மேன்மையான வித்தையைப் படிப்பார்.

5. தந்தையால் சுகமில் லாதான் தரித்திரம் பூர்வ மாகும்
தந்தையி னுஸ்தி காணுன் தனமது பெருக்க மில்லான்
தன்பந்து மதிக்க வாழ்வன் சகலர்க்கு மிவன்சொல் மேன்மை
தந்தமும் தரள மொக்கும் தார்மிக குணத்தானுகும்.

5. இவருக்குத் தன்னுடைய தகப்பனுரினுல் சுகங்கள் கிடையாது. முன் வயதில் இவருக்குத் தரித்திர நிலைமையுண்டு. தகப்பனுருடைய சொத்து இவருக்குக் கிடையாது. அதிகச் செல்வமில்லாதவர். தன்னுடைய பந்துக்கள் இவரை மதிக்கும்படியான அந்தஸ்துடன் வாழ்வார். எல்லோருக்கும் இவருடைய வார்த்தைகள் மேன்மையாகவும் பாராட்டத்தக்கனவாகவும் இருக்கும். பற்கள் முத்தைப்போல வெண்மையாகவும் அழகாகவும் இருக்கும். புண்ணியமான நல்ல குணமுடையவராவார்.

6. கல்வியும் சிலர்க்குச் சொல்வன் கருதிடான் கட்டு வார்த்தை
இல்லையென் றுரைக்க மாட்டா னிடர்செய்யான் யாவ ருக்கும்
நல்லவ னுகி வாழ்வன் நாயகி ஒன்றே தீர்க்கம்
சொல்லது சுருக்க மாகும் சுதர்முன்னுல் நஷ்ட மெய்தும்.

6. இவர் சிலருக்கு வித்தையைக் கற்றுக் கொடுப்பார். பொய்யான வார்த்தைகளையும் புனைந்த வார்த்தைகளையும் எண்ணி உபயோகிக்க மாட்டார். யாருக்கும் இல்லை யென்று சொல்லமாட்டார். யாருக்குங் கெடுதிகளைச் செய்யமாட்டார். நல்லவன் என்று பெயரெடுத்து வாழ்வார். இவருக்கு ஒரே மனைவி தீர்க்காயுளுடையவளாயிருப்பாள். இவர் சுருக்கமாகவும் கொஞ்சமாகவும் பேசுவார். முன்னால் பிறக்கும் குழந்தைகள் இறந்து விடும்.

7. பின்சுதர் விருத்தி தீர்க்கம் பேசுவோம் ஆண்பா லொன்று
கன்னிமா ரிருவர் தீர்க்கம் கழறுவோம் பின்பால் சேதி
தன்தந்தை குணத்தைச் சொல்வேன் தருமமாம் குணத்தா னுகும்
ஊகவான் நுணுக்கம் தேர்வன உயர்வான கல்வி கற்பன்.

7. பின்னால் பிறக்குங் குழந்தைகள் நீண்ட ஆயுளையுடையனவாக விருக்கும். ஓர் ஆண் குழந்தையும் இரண்டு பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளை உடையனவாக விருக்கும். இவர்களுடைய விஷயங்களைப் பின்னால் சொல்லுகிறோம். ஜாதகருடைய தகப்பனாரின் குணாதிசயங்களை இனிமேல் சொல்லுகிறேன். இவர் தருமஞ் செய்யுங் குணமுடையவர். இவர் புத்திசாலி. மிகவும் நுட்பமானவைகளை அறியும் கூர்மையான புத்தியை யுடையவர். மேன்மையான உயர்ந்த கல்வியைக் கற்றறிந்தவர்.

8. பாகமாய்ப் பேசு வானும் பதர்குண மில்லா னுகும்
நாகரிகங்க ளுண்டு நடைநன்மை பொறுமை யுண்டு
தாகமென் றோர்க்கு மீவன் ஷண்முகன் பத்தி பூண்பன்
ஆதியில் வறுமை யுண்டு அலைமீது துரும்பு போல.

8. இவர் பக்குவமாகவும் திறமையாகவும் பேசுவார். அற்பமான குணமில்லாதவர். நாகரிகங்களுடையவர். நல்ல நடவடிக்கையை யுடையவர். பொறுமையாக விருப்பார். தாகவிடாய் இருக்கின்றது என்று சொல்லுகிறவர்களுக்கு நீர் மோர் கொடுப்பார். முருகக் கடவுளின்மேல் பக்தியுடையவர். முன்வயதில் கஷ்டங்களும் தரித்திரமும் உண்டு. இவர் சமுத்திரத்தின் அலையில் அகப்பட்டுக்கொண்டு தத்தளிக்கும் துரும்பைப் போல் முன் வயதில் அதிக கஷ்டப்படுவார்.

9. பாதியின் வயது மேலாய்ப் பகருவோம் யோகம் தானும்
போதிப்பான் சிலர்க்கு ஞானம் பெரியோர்க ளுறவு கொள்வன்
பாதியாய் வடிவு கொண்ட பார்வதி கேட்டி டாயே.
.. .. .. .. .. ..

9. இவருக்குப் பாதி வயதிற்கு மேலே யோகமுண்டென்று சொல்லுகிறோம். இவர் சிலருக்கு ஞானத்தை உபதேசிப்பார். பெரிய மனிதர்களின் சினேகிதத்தை அடைவார். சிவபெருமானின் தேகத்தில் பாதி வடிவமாயுள்ள பார்வதியம்மையே ! கேட்பீராக.

10. சொன்னஇக் குணத்தா னுக்குத் தோன்றுவா னிந்தப் பாலன்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அழகுளா னிருநி றத்தன்
உன்னதக் கல்வி கற்பன் உயர்வான புத்தி யேற்பன்
தன்சொல்லே மேன்மை யாகச் சாதிப்பா னென்று சொல்வேன்.

10. இது வரையிலும் சொல்லிவந்த குணங்களையுடைய தகப்பனுக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய குணாதிசயங்களை இனிமேல் சொல்லு கிறேன். இவர் அழகுள்ளவர். இரண்டு நிறங்கள் கலந்த மாநிறமுள்ள தேகத்தையுடையவர். மேன்மையான, உயர்ந்த வித்தையை யுடையவர். உயர்ந்த புத்தியுடையவர், தான் சொல்லும் வார்த்தையே உயர்ந்தது மேன்மையானது என்று சொல்லி பிடிவாதஞ் செய்து வெல்வார் என்று சொல்லுகிறேன்.

11. தந்தையால் சுகமில் லாதான் தறிபடக் கூறு னுகும்
பிந்திய தந்தை யாலே புதல்வனும் உய்வா னுகு
மெந்திடம் பெருமை யேற்பன் இருவிதக் கல்வி யுண்டு
மந்தன்[1]போல் ஒருகால் ஊனன் வயதுமே தீர்க்க மெய்தும்.

11. ஜாதகருக்குத் தன்னுடைய தகப்பனுரால் சுகம் கிடையாது. இவர் வெட்டி வெட்டிப் பேசமாட்டார். தன்னுடைய சிறிய தகப்பனுரால் ஜீவனஞ் செய்வார். எந்த இடம் போனுலும் இவருக்கு மதிப்பும் பெருமையுமுண்டு. இரண்டுவிதமான வித்தையுடையவர். சனி பகவானைப் போல ஒரு கால் குறைவாயுள்ளவர் * இவருக்கு நீண்ட ஆயுளுண்டு.

* குறிப்பு.—ஒருகால் விஷயம்.—பின்னுல் வருகின்ற 28-ஆவது 30-ஆவது பாடல்களைப் பார்க்கவும்.

12. தன்துணை முன்பெண் ரண்டு தங்கிடும் தீர்க்க மாக
பிந்திய துணைகள் காணுன் பேசுவீ ரந்தச் சங்கை
மந்தனும்[1] மூன்றைப் பார்க்க மார்த்தாண்டன்[2] மூன்றி லாக
இந்தவாறுபலத்தி னுலே யியம்பினோம் துணையும் காணுன்.

12. ஜாதகருக்கு இரண்டு மூத்த சகோதரிகள் நீண்ட ஆயுளை யுடைய வர்களாக விருப்பார்கள். பின் சகோதரங்கள் கிடையா. இதற்குக் காரணங்களைச் சொல்லுவீர் என்று கேட்க, சனி மூன்றுமிடத்தைப் பார்ப்ப தாலும், சூரியன் மூன்றில் இருப்பதாலும்* இவ்விதமான கிரக பலத் தாலும் பின் சகோதரர்கள் கிடையா என்று சொன்னோம்.

* குறிப்பு.—சகோதர விஷயம்—சூரியன் மூன்றில் இருந்தாலும் மூன்றைப் பார்த்தாலும் முன்னே பின்னே பிறந்தச் சகோதரர்களுக்கு நாச முண்டு என்று சம்புஹோராபிரகாசாவில் சகோதரபாவவிசாரத்தில் 57-ஆவது 58-ஆவது சுலோகங்களில் கண்டிருப்பதைப் பார்க்கவும்.

---

1. சனி 2. சூரியன்

13. இதுவலால் ஆண்டுக் குள்ளே ஏகுவான் தந்தை தானும்
ததிகயிறு[1] திசையி லேதான் சிகண்டியின்[2] புத்தி தன்னி
லதிபன்தன் தந்தை கண்டம் வரைந்தஇம் மொழி குன்றுது
அதிதியை ஆத ரித்த அம்பிகை யாளே கேளாய்.

13. இதுவுமன்றி ஜாதகர் பிறந்த ஒரு வருஷத்திற்குள்ளே இவருடைய தகப்பனுர் இறந்துவிடுவார். இராகு தசையில் குரு புக்தியில் தகப்பனுர் இறந்து விடுவார் என்று சொல்லுகிறேம். நாங்கள் சொல்லுகின்ற வார்த்தை தவறிடாது, பரதேசிகளைக் காப்பாற்றுகின்ற பார்வதியம்மையே ! கேட்பீராக.

* குறிப்பு.—தகப்பனுர் விஷயம்—ஜாதகருக்கு வயது ஷு 0-3-8 முதல் ஷு 2-8-2 வரையிலும் இராகுவில் குரு புக்தி நடக்கின்றது. பிதுர்ஸ்தானம் ஒன்பதாமிடமாகிய மீனம் ஆகும். ஒன்பதிற்குடைய குரு ஆறில் சனியுடன்கூடி அவருக்கு மிகவும் நெருக்கத்தில் இருக்கின்ருர். குரு மூலம் நான்கிலும் சனி பூராடம் ஒன்றிலுமாக மிகவும் நெருங்கி இருக்கின்ருர்கள். பிதுர்காரணுகிய சூரியனையும் சனி பார்க்கின்ருர். சூரியன் மூன்றில் மறைந்து இருப்பது பிதாவுக்குத் தோஷமானது. சூரியன் ஒன்பதைப் பார்ப்பதும் பிதாவுக்குத் தோஷமானது. பிதாவுக்கு ஆயுள் ஸ்தானமாகிய துலாத்தில் அங்காரகன் ராகு இருப்பது பிதாவுக்குத் தோஷம். பிதுர் லக்கின மாகிய மீனத்திற்கு எட்டில் ராகு இருப்பதுடன் எட்டிற்குடையவராகிய சுக்கிரனுடன் கூடியும் பிதுர் லக்கினுதிபதியாகிய குருவையும் பார்க்கின்ருர். ஆகையால் பாராசரஹோரைப் பிரகாரமும், ஜாதகசந்திரிகை பிரகாரமும், துய்யகேரளம் எட்டாம் பாவம் 20-ஆவது பாடல் பிரகாரமும் ராகு பிதாவுக்கு மாரகஞ் செய்ய அதிகாரமுடையவராகின்ருர்.

14. அன்னையின் குணத்தைச் சொல்வே ணடக்கமாம் வார்த்தை [யுண்டு
அன்னமு மனபா யீவள் அயல்குற்றம் புகலா ளாகும்
அன்னியர் மதிக்க வாழ்வள் ஆளன்தன் மனதுக் கேத்தோள்
அன்னவள் வந்த பின்பு ஆளனுக் கதிக யோகம்.

14. ஜாதகருடைய தாயின் குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகிறேன். இவள் அடக்கமாகவும் அமைதியாகவும் பேசுவாள். சாப்பாடு ஆசையுடன் போடுவாள். பிறர் மேல் குற்றமான வார்த்தைகளைச் சொல்லமாட்டாள். பிறர் இவளை மதிக்கும்படியான நிலையிலிருந்து வாழ்வாள். தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தபடி நடந்துகொள்வாள். இவள் தன்னுடைய புருஷனிடம் வந்த பிறகு புருஷனுக்கு அதிக யோகமுண்டாகும்.

15. இல்லமும் தென்பா லாகும் இவன்துணை ஆண்பால் நான்கு
வல்லிமா ரிருவ ராகுமாண்துணை சிலது சேதம்
சொல்லுவோம் பின்பால் சேதி தோகைமுன் ஜன்மம் கேளாய்
எல்லையி லுயர்வ தான எழில் கொங்கு நாட்டி லேதான்.

1. இராகு 2. குரு

**15.** இவளுடைய வீடு தெற்குத் திக்கிலிருக்கும். இவளுடன் கூடப் பிறந்த சகோதரர்கள் ஆண் சகோதரர்கள் நான்கும் பெண் சகோதரங்கள் இரண்டுமாகும். ஆண் சகோதரர்களில் சிலர் இறந்துவிடுவார்கள். இவர்களுடைய விஷயங்களைப்பற்றிப் பின்னுல் சொல்லுகிறோம், இவளுடைய, அஃதாவது தாயாருடைய முன் ஜன்மத்தைச் சொல்லுகிறோம். கேட்பீராக. பூமியில் மேன்மையானதும் உயரமானதுமான அழகிய கொங்கு தேசத்தில் ;

**16.** பிறந்தனன் செக்கான் வமிசம் பெரிதான குடும்பி யாகி
அரிவையும் வாழுந் நாளில் ஆளனும் தானு மாகப்
பெரிதான தலங்கள் சென்று பெம்மானின் அடிப ணிந்து
திருமகள் கடைவீ திக்குச் சென்றன ளென்று சொல்வோம்.

**16.** செக்காடும் செட்டியார் குலத்தில் பிறந்தாள். பெரிய குடும்ப முடையவளாகி இவள் வாழுகின்ற காலத்தில் இவளும் இவளுடைய புருஷனும் இருவருமாக பெரிய ஸ்தலங்களுக்குப்போய்ச் சிவனையும் திருமாலையும் தரிசித்துத் தோத்திரஞ் செய்துவிட்டுப் பிறகு கடைத்தெருவுக்குப் போனுர் என்று சொல்லுகிறோம்

**17.** குங்குமம் மஞ்சள் சீப்பு கோதையும் வாங்கிக் கொண்டு
தங்கமு மீயா தாகிச் சர்வமான் போல்ம றைந்தாள்
அங்கவன் வணிபன் பார்த்து அம்மாதைக் காணு னுகி
மங்கின மனத்தா னுகி வரைகிறுன் சாபம் தானும்.

**17.** இவள் அஃதாவது தாயார் குங்கும மஞ்சள் சீப்பு இவைகளை வாங்கிக்கொண்டு இவைகளின் கிரயத்தைக் கடைக்காரனுக்குக் கொடுக்காமல் மானைப்போல வேகமாகச் சென்று சீக்கிரம் மறைந்துவிட்டாள். அவ்விடமிருந்த வியாபாரி இவளைத் தேடிப் பார்த்து இவள் கண்ணிற்குப் புலப்படாமல் போய்விடவே வியாபாரி தன்னுடைய மனத்தில் விசனமடைந்து சாபத்தைக் கொடுக்கிறுன்.

**18.** இனமது ஆகா முன்னம் ஏகுவான் வரனு மேதான்
வனிதை பின் ஜன்மம் தன்னில் மாரனு மத்தில் மாண்டு
தினமன சஞ்ச லத்தால் தேவியும் வாழ்வா யென்னக்
கனமன மாகச் சொல்ல மேவிற்று அந்தச் சாபம்.

**18.** தகுதியான காலத்திற்கு முன்பே உன்னுடைய புருஷன் இறந்துவிடக்கடவது. உன்னுடைய பின் ஜன்மத்தில் உன் புருஷன் மத்திய வயதில் இறந்து நீ தினந்தோறும் மனச் சஞ்சலத்துடன் இருந்து வாழக்கடவாய் என்று சொல்லி இவளுக்கு அந்த வியாபாரி சாபங் கொடுத்தான். இவ்விதமாக அவன் தன்னுடைய மனப் பூர்த்தியாகச் சொல்லவே அந்தச் சாபம் இவளை வந்து அணுகிற்று.

**19.** மாதுவுக் கந்த ஆண்டில் மாரனும் மரித்து மேதான்
வேதனை மனத்த ளாகி மேவினுள் காலன் றுடு
விரதவன் வரையப் பட்டு வந்தன னென்று சொல்வோம்
காதலீ முன்னூழ்ச் சாபம் கலந்திடு மிச்சென் மத்தில்.

**19.** இவளுடைய முன் ஜன்மத்தில் அதே வருஷத்தில் அதாவது குங்கும மஞ்சள் சீப்பு இவைகளைக் கிரயம் கொடுக்காமல் வாங்கின வருஷத்தில் இவளுடைய புருஷன் இறந்து மனம் நொந்தவளாகி இறந்து எமபட்டணத்திற்குப் போய் பிரமதேவனால் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றாள் என்று சொல்லுகிறோம். இவளுடைய முன் ஜன்மத்திய பாபங்களும் சாபமும் இந்த ஜன்மத்தில் இவளை வந்து அடையும்.

20. மத்திய வயதில் மாரன் மரிப்பனு மென்று சொல்வோம்
வித்தகி மனது வாடி விசனமாய் வாழ்வா ளாகும்
சத்தபின் ஜன்மம் சொல்வேன் தக்கோல நகரி லேதான்
சுத்தமாய் வேளாண் வமிசம் தோன்றுவா ளென்று சொல்வோம்.

**20.** ஆகையால் ஜாதகருடைய தாயாருக்குத் தன் புருஷன் மத்திய வயதில் இறந்துவிடுவான் என்று சொல்லுகிறோம். அதன் பிறகு இவள் மனது நொந்து துக்கமடைந்து காலத்தைக் கழிப்பாள். இவளுடைய பின் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறேன். தக்கோலம் என்ற பட்டணத்தில் நல்லொழுக்கமுள்ள ஒரு வேளாளர் குலத்தில் வந்து பிறப்பாள் என்று சொல்லுகிறோம்.

21. தந்தையின் முன்ஜன் மத்தைச் சாற்றுவோம் தணிகை தன்னில்
முந்தின ரெட்டி வமிச முதித்துமே பெருமை பூண்டு
இந்தவன் வாழுந் நாளில் எய்தின வினையைச் சொல்வேன்
பிந்தினோர் கற்ப மாகப் பொருளதை யீந்து யின்னோன் ;

**21.** ஜாதகருடைய தகப்பனாரின் முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறோம். இவர் திருத்தணிகையில் மேன்மையான ஒரு ரெட்டியார் குலத்தில் பிறந்து பெருமையை யடைந்து வாழுகின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்த பாவத்தைச் சொல்லுகிறேன். இவர் தன்னுடைய இளைய சகோதரர்களுக்குக் கொஞ்சமாகப் பணத்தைக் கொடுத்துவிட்டு ;

22. தரணியைப் பிரித்துக் கொண்டான் சாற்றுவார் சாபம் தானும்
பொருளதை அற்ப மீந்து பூமியைப் பறித்த பாவி
வரும்ஜன்மம் தந்தை ஆஸ்தி மருவாமல் வனவா சங்கள்
தரித்திர முடையா னாயும் ஜனித்தபா லடையா தாயும் ;

**22.** தன்னுடைய தகப்பனாருடைய சொத்துக்களாகிய பூமியைப் பாகம் பிரித்துக்கொண்டார். அந்த இளைய சகோதரர்கள் இவருக்குச் சாபத்தைக் கொடுக்கின்றார்கள். கொஞ்சமாகப் பணத்தைக் கொடுத்து விட்டுப் பூமியை அபகரித்துக்கொண்ட பாவியாகிய உனக்குப் பின் ஜன்மத்தில் உன்னுடைய தகப்பனாருடைய ஆஸ்தி உனக்குக் கிடைக்காமல் வனவாசங்களை அடைந்து திரிந்தும், தரித்திரமுடையவராகியும், தாய் பால் ஜனித்த இடம், பங்கு இவைகளை அடையாமலும் ;

23. உலகினில் வாழ்வா யென்ன உறைந்தது அந்தச் சாபம்
தலைவனு மந்தி யத்தில் ஷண்முகன் பக்தி பூண்டு
குலவினன் காலன் றூடு குறைதலை வரையப் பட்டு
நிலமதி னுதித்தா னென்றோம் நேர்ந்திடு மேழை சாபம்.

23. நீ உலகத்தில் வாழக்கடவது என்று சொல்லவே, அவர்களுடைய சாபம் இவரை வந்து அடைந்தது. இவர் முன் ஜென்மத்தில் கடைசி காலத்தில் முருகக் கடவுளின்மேல் பக்தியுடையவராகி இறந்து எமபட்டணத்திற்குச் சென்று பிரமதேவனால் எழுதப்பட்டு இந்த ஜென்மத்தில் இந்தப் பூமியில் வந்து பிறந்தார் என்று சொல்லுகிறோம். ஏழைகளாகிய சகோதரர்கள் கொடுத்தச் சாபம் இவரை வந்தடையும்.

24. ஆதியில் வறுமை ஏற்பன் அவன் தந்தை யில்லம் நாஸ்தி
பாதியின் வயது மேலாய்ப் படைப்பனு மில்ல மென்றோம்
ஓதுவே னிவன்பின் ஜன்மம் உத்தரம் காளத்தி தன்னில்
சூதிலா சைவச் சேயாய்த் தோன்றுவா னிவனே யென்றோம்.

24. இவர் முதலில் கஷ்டங்களையும் தரித்திரத்தையும் அடைவார். இவருடைய தகப்பனாரின் வீடு பாழாகிப் போகிவிடும். இவருக்குப் பாதி வயதிற்கு மேற்பட்டு ஒரு வீட்டை இவர் அடைவார் என்று சொல்லுகிறோம் இவருடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறேன். வடக்குத் திக்கில் காளஹஸ்தியில் கள்ளங்கபடில்லாத ஒரு சைவராக இவர் பிறப்பார் என்று சொல்லுகிறோம்.

25. பாலகன் மணத்தின் காலம் பகருவோம் பத்தொன் பாண்டில்
காதலி தென்பால் நேரும் கழறுவோ மவள்கு ணத்தை
வேதனை ஒருவர்க் கெண்ணாள் விகடவார்த் தைகளும் கூறாள்
சூதிலாள் கோபம் கொஞ்சம் துறவிபோல் வார்த்தை யுண்டு.

25. ஜாதகருக்கு விவாகம் நடக்கின்ற காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்குப் பத்தொன்பதாவது வயதில் மனைவி தெற்குத் திக்கிலிருந்து வந்து நேருவாள். இவளுடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகிறோம். யாருக்கும் தீங்குகளை நினைக்கமாட்டாள். விகடமான, அஃதாவது தொந்தரவை உண்ணுபண்ணக்கூடிய வார்த்தைகளைச் சொல்லமாட்டாள். கபடமும் வஞ்சனையு மில்லாதவள். கொஞ்சங் கோபமுள்ளவள். துறவிகளைப் போல உலகப் பற்றில்லாதவர்களைப் போலப் பேசுவாள்.

**குறிப்பு—விவாக விஷயம்**—ஜாதகருக்கு வயது ஷை 18–0–0 முதல் ஷை 19–0–0 முடியும் வரையிலும் குரு தசையில் சனிபுக்தி நடக்கின்றது. குரு ஒன்பதிற்குடையவராகி களத்திரஸ்தானாதிபதியாகிய சனியுடன்கூடி போககாரனாகிய ராகுவால் பார்க்கப்பட்டிருக்கின்றார். சனி களத்திராதிபதியாகிப் போககாரனாகிய ராகுவால் பார்க்கப்பட்டிருக்கின்றார். ஆகையால் குருதசையில் சனிபுக்தியில் ஜாதகருக்கு விவாகம் நடக்க அமைப்பு இருக்கின்றது. சுக்கிரனுடன் சம்மந்தப்பட்ட அங்காரகன் ஏழைப் பார்ப்பதால் மனைவி அங்காரகனுக்குரிய தென்திக்கிலிருந்து வரக்கூடும்.

26. சீலியாம் விரத மேற்பாள் ஜனஉப காரி யாகும்
பாதக மனமில் லாதாள் பர்த்தாவுக் கினிய ளாகும்
வேல்விழி வந்த பின்பு வித்தகன் தனக்கு யோகம்
நீலியும் தீர்க்க ஜீவி நிமலிநன் நடக்கை யுண்டு.

26. ஜாதகருடைய மனைவி நல்லொழுக்கமும் நல்ல நடவடிக்கையும் உடையவள். விரதங்களை அனுஷ்டிப்பாள். ஜனங்களுக்கு உதவி செய்வாள். கெட்ட மனமில்லாதவள். தன்னுடைய புருஷனுக்கு இஷ்டமாயுள்ளவள். வேலைப்போன்ற அழகிய கண்களையுடைய இவள் தன்னுடைய புருஷனிடம் வந்து சேர்ந்த பிறகு புருஷனுக்கு யோகம் வரும். இவள் நீண்ட ஆயுளை யுடையவள். இவள் நல்ல நடவடிக்கைகளை யுடையவள்.

27. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோ மாண்பால் ரண்டு
சத்தியு மவ்வா றுகும் செப்புவோ மிவன்மூன் ஜன்மம்
சித்தர்வாழ் அருணை தன்னில் ஜனித்தனன் வடுகச் சேயாய்
முந்தின குடும்பி யாகி முதல்வனும் வாழுந் நாளில் ;

27. ஜாதகருக்குச் சந்ததியைப் பற்றிச் சொல்லுகிறோம். இவருக்கு ஆண் குழந்தைகள் இரண்டும் பெண் குழந்தைகள் இரண்டும் உண்டு. இவருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறோம். சித்தர்கள் வசிக்கின்ற திருவண்ணாமலையில் தெலுங்கர் குலத்தில் உதித்து மேன்மையான குடும்பஸ்தராகி வாழ்கின்ற காலத்தில் ;

28. தன்மனை வார்த்தை கேட்டுத் தாயதை எத்தும் போது
அன்னவள் வருத்த முற்று அறைந்தசா பத்தைக் கேண்மோ
துன்மைகள் செய்த பாவி தோன்றும்பின்ஜன்மம் தன்னில்
உன்காலி லூன மாயும் உன்தந்தை சுகமு மின்றி ;

28. ஜாதகர் தன்னுடைய மனைவியின் பேச்சைக் கேட்டுத் தன் தாயாரை வஞ்சனையுடன் உதைக்கும் போது, அவள் தன் மனது நொந்து விசன மடைந்து சொல்லிய சாபத்தைக் கேட்பீராக. எனக்குக் கெடுதிகளை விளைவித்த பாவியாகிய உனக்கு உன் மறு ஜன்மத்தில் காலில் ஊனம் ஏற்பட்டும், உன்னுடைய தகப்பனுருடைய சுகம் உனக்கு இல்லாமலும் ;

29. தரணியில் வாழ்வா யென்னத் தாய் சாபம் சேர்ந்த தென்றேம்
திருமகன் அந்தி யத்தில் செல்வமும் குறைவு நேர்ந்து
வறுமைக ளுடைய னுகி மரலியின் பதிக்குப் புக்கிப்
பிரமனுல் வரையப் பட்டுப் பிறப்பனு மிந்தப் பாலன்.

29. நீ பூமியில் வாழக் கடவாய் என்று தாயார் சொல்ல, இந்தத் தாயாருடைய சாபம் ஜாதகரை வந்தடைந்தது என்று சொல்லுகிறேம். ஜாதகர் தன்னுடைய முன்ஜன்மத்தில் கடைசி காலத்தில் தன்னுடைய செல்வங்கள் குறைவுபட்டு தரித்திரத்தையுங் கஷ்டங்களையு மடைந்து பிறகு இறந்து எமபட்டணதிற்குச் சென்று பிரமதேவனுல் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்தார்.

30. ஆகையால் தாயின் சாபம் அணுகிடு மிச்சென் மத்தில்
போகிடு மொருகா லூனம் பிதா மொழிகாணு ருகும்
தோகைபோ லிவனின் யோகம் செப்புவோம் கல்வியாலும்
பாகமாய் வார்த்தை யாலும் பாலகன் ஜீவிப்பானும்

30. ஆகையால் ஜாதகருக்கு இந்த ஜன்மத்தில் முன்ஜன்மத்தில் தன் தாய் கொடுத்தச் சாபம் வந்து சம்பவிக்கும். ஜாதகருக்கு ஒரு கால் † ஊனமாகப் போய் விடும். தன்னுடைய தகப்பனருடைய வார்த்தையைக் கேட்டு ஆனந்திக்கும் அமைப்பு இல்லாதவராவர். இறகைப்போல வளருகின்ற இவருடைய யோகங்களைச் சொல்லுகின்றோம். இவர் தன்னுடைய படிப்பாலும், பக்குவமான சாமர்த்தியமான பேச்சுக்களாலும் ஜீவனஞ் செய்வார்.

† குறிப்பு—கால் ஊனமாகும் விஷயம்—முந்தி சென்ற பதினோராவது பாடலைப் பார்க்கவும். தமிழ் ஜாதகாலங்காரத்தில் 413-ஆவது பாடல் பின் வருமாறு ஆகும்.

"கண்ட பன்னிரண்டாம் வீட்டோன் கனத்திரி கோணமேறிற்,
கொண்டகேந் திரத்தி னிற்க வவனோடு கூடி ராகு,
அண்டியே நிற்கப்பாவ ரவர்களைப் பார்த்திருக்க,
எண்டிசை யுலகி லங்க வீனனு யிருப்பனென்னே."

இதன் பொருள் :—பன்னிரண்டாவது வீட்டிற் குடையவர் கேந்திர கோணங்களில் இருந்து ராகுவுடன் கூடி இவர்களைப் பாபர் பார்க்க ஜாதகர் அங்கவீன முள்ளவர். இந்த ஜாதகத்தில் பன்னிரண்டிற் குடையவரான புதன் நான்காவது கேந்திரத்தில் இராகுவுடன் கூடியிருந்து இவர்களிருவருடனும் நைசர்க்கிக பாபராகிய அங்காரகன் கூடியிருக்கின்றார். ஆகையால் ஜாதகாலங்கார பாடல் பிரகாரம் ஜாதகருக்கு அங்கவீனம் நேரிடும் அமைப்பு இருக்கின்றது. பின்வருகின்ற உதாரண ஜாதகத்தைக் கவனிப்போம் :—லக்கினம் விருச்சிகம். நாலில் அங்காரகன். ஐந்தில் புதன். ஆறில் சூரியன் சனி குரு, எழில் சுக்கிரன் கேது. பத்தில் சந்திரன். லக்கினத்தில் ராகு. இந்த ஜாதகத்தில் பன்னிரண்டிற் குடையவரான சுக்கிரன் ஏழில் கேதுவுடன் கூடி ராகுவாலும், அங்காரகனாலும் பார்க்கப்பட்டிருக்கின்றார். இவருக்கு இடது பாதம் பிறக்கும்போது மடங்கிக் கோணலாகவிருந்து தைல வைத்தியம் செய்து உறுவவே பாதம் படிந்து விட்டது. ஆனால் பாதம் இளைத்து நேர்ந்து சப்பையாய்ப் போய் ஊனமாகி விட்டது. இவர் உயிருடன் இருக்கின்றார். இவருக்கு இப்போது வயது எழுபத்து மூன்று நடக்கிறது. இவ்விரண்டு ஜாதகங்களிலும் சனி பன்னிரண்டைப் பார்ப்பதைக் கவனிக்கவும். பன்னிரண்டா மிடம் இடது பாதமாகும்.

31. பின்தந்தை உதவி யாகும் போஜன வறுமை காணன்
பொன்பூமி சேர்ப்பா னுகும் பொன்தசை தன்னிலே தான்
அன்னைக்கு முப்பான மூன்றில் அணுகிடும் கண்ட மென்றேய
உன்னத வாணிபெற்ற உத்தமி கேட்டி டாயே,

**31.** ஜாதகருக்குச் சிறிய தகப்பனாால் உதவி ஏற்படும், இவர் சாப்பாட்டு விஷயத்தில் கஷ்டத்தை அடைய மாட்டார். தனம் பூமிகள் இவைகளைக் குருமகாதசையில்சேர்ப்பார். இவருடைய தாயாருக்கு மூப்பத்து மூன்றுவது வயதில் மரணம் நேரிடும். மேன்மையான யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதி யம்மையே! கேட்பீராக.

† குறிப்பு.—தாய் மாரக விஷயம்—ஜாதகருக்கு வயது ௵ 32–0–0 முதல் ௵ 33–0-0 வரையிலும் சனிதசையில் சனிபுத்தி நடக்கின்றது. மாதுரு லக்கினம் துலாம். துலாத்திற்கு மாரகாதிபதி பராசரஹோரை ஜாதக சந்திரிகைகளின் பிரகாரம் குரு ஆகின்றார். சனி குருவுடன் கூடியிருப்பதுமன்றி மாதுர்காரகராகிய சந்திரனையும் பார்க்கின்றார். ஆகையால் ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரம் சனி மாதாவுக்கு மாரகாதிபதியாகின்றார்.

**32.** பாலகன் கண்டம் சொல்வேன் புததசைக் கால மாகும்
சாலவே அறுபா னைந்தில் தனுர்மாதம் உடலம் ஏகும்
வேலன்பின் ஜன்மம் சொல்வேன் வேள்விசெய் பட்சி தன்னில்
ஞாலங்கள் விருத்தி செய்யும் நற்குல முதிப்பா னம்மா

**32.** ஜாதகருக்கு மரண காலத்தைச் சொல்லுகிறேன். புததசை காலத்தில் மரணம் நேரிடும். அறுபத்தைந்தாவது வயதில் மார்கழி மாதத்தில் † ஜாதகர் இறந்து அவருடைய தேகம் அழிந்து விடும். இவருடைய மறு ஜன்மத்தைச் சொல்லுகிறேன். யாகங்களைச் செய்கின்ற பக்ஷி ஸ்தலமாகிய திருக்கழுக்குன்றத்தில் பூமியைப்பயிரிட்டு விருத்தி செய்கின்ற வேளாளருடைய நல்ல குலத்திற் பிறப்பார். பார்வதியம்மையே! கேட்பீராக.

† குறிப்பு.—ஜாதகர் மாரக விஷயம் :—ஜாதகருக்கு வயது ௵ 64–0–0 முதல் ௵ 65–0–0 வரையிலும் புததசையில் குருபுக்தி சனிபுத்திகள் நடக்கின்றன. மார்கழி மாதத்தில் குருபுக்திதான் நடக்கின்றது. கடகலக்கினத்திற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகை தாண்டவமாலை இவைகள் பிரகாரம் புதன் சுக்கிரன் சனி இவர்கள் மாரகாதிபதிகளாகின்றார்கள். மாரகாதிபதியும் அஷ்டமாதிபதியு மாகிய சனியுடன் குரு சம்பந்தப்பட்டு லக்கினத்திற்கு ஆறில் இருப்பதால் ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகம் பிரகாரம் புததசையில் குருபுக்தியில் ஜாதகருக்கு மாரக அமைப்பு இருக்கிறது.

**33.** அத்திரி புகலு கின்றார் ஆரனும் [1]நாலில் தங்க
வித்தகர் பலனெவ் வாறு விளம்புவீர் முனியே நீர்தாம்
வெத்திவேல் தனைப் பூசிப்பன் வைத்தியம் மந்திரம் செய்வன்
அத்துவித மறிவா னாகும் அரசருக்கு இவன்சொல் மேன்மை.

**33.** அத்திரி முனிவர் கேட்கின்றார். அங்காரகன் நான்கில் இருப்பதால் எவ்விதமான பலாபலன்கள் நடக்கும் என்பதை முனிவரே! நீர் சொல்லுவீர் என்று கேட்க, ஜாதகர் முருகக் கடவுளைப் பூஜை செய்வார்.

---

[1] அங்காரகன்

வைத்தியமும் மாந்திரீக வேலையும் செய்வார். அத்துவைதம் அறிவார். அஃதாவது பரமாத்துமாவும் ஜீவாத்துமாவும் ஒன்றென்ற கொள்கையை அறிவார். அரசர்களிடத்தில் இவருடைய வார்த்தை மேன்மையாகவும் மதிக் கத்தக்க தாகவும் இருக்கும்.

34. தேறின புத்தி யுண்டு திகைத்தோர்க்குத் தாக மீவன்
பூர்வமாம் பொருளும் நேரும் பொன்னவன்[1] தசையி லேதான்
திறவான வறுமை காணன் செல்வனும் தீர்க்க ஜீவி
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

**34.** இவருக்கு உயர்ந்த, தேர்ச்சியடைந்த புத்தியுண்டு. ஏழை களுக்கும் இரப்போர்களுக்கும் தாகவிடாய் தீர நீர்மோர் கொடுப்பார். இவருக் குப் பூர்வீகச் சொத்தும் குருதசையில் வந்து சேரும். பெரிய கஷ்டங்களை யும் தரித்திரத்தையும் அனுபவிக்கமாட்டார். இவர் நீண்ட ஆயுளையுடைய வர். ஆறு பெரிய முகங்களையுடைய முருகக்கடவுளைப் பெற்றெடுத்தப் பார்வதி யம்மையே ! கேட்பீராக.

35. ஜனித்திடுங் காலம் தன்னில் செக்கு[2] நாள் முதல்பா தத்தில்
பணி[3]தசை மூவைந் தாண்டும் பகருவோம் திங்க ளாறும்
தினமது இருபா னாறும் செப்பினோம் பூர்வ பாகம்
கனமத வரனை பெற்ற காதலி கேட்டி டாயே.

**35.** ஜாதகர் பிறக்குங் காலத்தில் சதய நட்சத்திரத்தில் முதல பாதமாகும். இதற்குரிய ராகுதிசை இருப்பு பதினைந்து வருஷமும் ஆறு மாதமும் இருபத்தாறு நாள்களும் ஆகும், இவ்விதமாக முன்பாகத்தைச் சொன்னோம். மேன்மை தங்கிய மதயானை முகத்தை யுடைய விநாயக் கடவுளைப் பெற்றெடுத்தப் பார்வதியம்மையே ! கேட்பீராக.

---

[1] குரு. [2] சதையம். [3] ராகு.

# ஜாதகம் 70

1 பொன்[1] மேடம் சேயும்[2] வீணை[3] புதன்புகர்[4] பரிதி[5] நண்டில்[6]
சந்திரன் தேள தாகச்[7] சனிமானில்[8] ராகு சீயம்[9]
இன்னவாறு கிரகம் நின்றால் லக்கினம் கடக மாகப்
பண்ணுவீர் பலனை யென்று பார்வதி கேட்கலுற்றாள்.

| | | | |
|---|---|---|---|
| | குரு | | அங்கா ரகன் |
| கேது | இராசி | சக்கரம் | லக்கினம் சூரியன் புதன் சுக்கரன் |
| சனி | | | ராகு |
| | சந்திரன் | | |

விசாகம். 4-ஆம் பாதம். குரு தசை ஞு 1-6-0.

1. குரு மேடத்திலும், அங்காரகன் மிதுனத்திலும், புதன் சுக்கிரன் சூரியன் இவர்கள் கடகத்திலும், சந்திரன் விருச்சிகத்திலும், சனி மகரத்திலும், ராகு சிம்மத்திலும் ஆகக் கிரகங்கள் இருந்து லக்கினம் கடகமானல் பலா பலன்களைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்கின்றார்.

**குறிப்பு.**—இந்த ராசிச் சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்த முடையதாகும்—மேஷத்தில் அங்காரகனும், மிதுனத்தில் குருவும் கேதுவும், கடகத்தில் சந்திரனும், சிம்மத்தில் சூரியனும் சனியும், துலாத்தில் சுக்கிரனும், தனுசில் புதனும் ராகுவும் ஆகும். புதனும் சுக்கிரனும் அஸ்தமனமாக விருக்கின்றார்கள். சனி வக்கிரகதியில் இருக்கின்றார்.

2. பிருகுமே புகலு கின்றார் பிறந்திடு மாண்பால் ஜன்மம்
வருமில்லம் வடக்கு வாடை வாசலு மெமனின் பார்வை
பெருவயி றப்பன் கீழ்ப்பால் புலிவாக னத்தா ளுத்ரம்
அரன்கோஷ்ட மதற்குத் தென்கீழ் ஆதிமால் அதற்குத் தென்மேல்.

---

[1]. குரு. [2] அங்காரகன். [3] மிதுனம்.
[4] சுக்கிரன். [5] சூரியன். [6] கடகம்.
[7] விருச்சிகம். [8] மகரம். [9] சிம்மம்.

2. பிருகு மகாரிஷி சொல்லுகின்றார். பிறக்கும் குழந்தை ஆண் குழந்தையாகும். பிறந்த வீடு வடவண்டை வாடையில் தெற்குப் பார்த்த வாயிலை யுடைய தாகும். விநாயக் கடவுளின் கோயில் கிழக்குத் திக்கில் இருக்கும். காளியம்மன் கோயில் வடக்குத் திக்கிலிருக்கும். இதற்குத் தென் கிழக்கில் சிவன் கோயில் இருக்கும். இதற்குத் தென் மேற்கில் மகா விஷ்ணுவின் கோயில் இருக்கும்.

3. இன்னமும் பள்ளி வாச லிலிடும் தென்மேல் திக்கில்
சொன்னஇவ் வடை யாளத்துள் தோன் றுவான் நான்காம் ஜன்மம்
அன்னவன் மிலேச் சனகை அருளுவா னென்று சொன்னோம்
உன்னத வானைபெற்ற உத்தமி கேட்டி டாயே.

3. மேலும் மகா விஷ்ணு சயனித்திருக்கும் கோயிலும் மண்டபமும் பள்ளிக்கூடங்களும் இடைச்சேரியும் தென் மேற்குத் திக்கில் இருக்கும். இங்கு சொல்லப்பட்ட அடையாளங்களுள்ள விடத்தில் ஜாதகர் நான்காவது கர்ப்பமாகப் பிறப்பார். இவர் மிலேச்சனுகை, அஃதாவது தாழ்ந்த குலத்தில் வந்து பிறப்பார் என்று சொல்லுகிறோம். மேன்மையான யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! கேட்பீராக.

4. தந்தையின் துணைவ ராறி லாண் ஒன்று கன்னி மூன்று
இந்தவாறுவிருத்தி யென்றே மியம்பின ஆண்பா லும்தான்
பின்னவ னுகச் சொல்வோம் பேசுவோ மவன்கு ணத்தைத்
தன்னுடல் மெலிந்து நிற்கும் ஜனித்தநான் வேறாய்ச் செல்வன்

4. ஜாதகருடைய தகப்பனாரின் ஆறு சகோதரர்களின் ஆண் சகோதரர் ஒருவரும், பெண் சகோதரிகள் மூவரும் நீண்ட வயதுடையவர்களாகி விருத்தியாவார்கள். இங்குச் சொல்லப்பட்ட ஆண் சகோதரர் இளைய சகோதரராகும் என்று சொல்லுகிறோம். இந்த இளைய சகோதரனின் குணாதிசயங்களைப்பற்றிச் சொல்லுகிறோம். இவருடைய உடம்பு ஒல்லியாக விருக்கும். பிறந்ததும் வேறாகப் போய் ஜீவிப்பார்.

5. சுகம்துக்கம் கலந்து வாழ்வன் தொல்புவி கிருஷி செய்வன்
அகமதை விட்டு நீங்கல் அடாவடி கொஞ்ச முண்டு
உகமையாய் வார்த்தை சொல்வன் உறுதியா மனத்தா னுகும்
ஜகமதில் தந்திர வாதி தீரனு மீகை கொஞ்சம்.

5. இவர் சுகங்களையும் துக்கங்களையும் கலந்தாற் போல அனுபவிப்பார். பழைய பூமிகளைப் பயிரிட்டு ஜீவனஞ் செய்வார். இவர் வீட்டை விட்டு வெளியே போய் விடுவார். அடாவடியாக, அஃதாவது காரணங்களில்லாமல் முரட்டுத்தனமாய்க் கொஞ்சம் நடந்து கொள்ளுவார். உபமானம் உபமேயம் இவைகளை உபயோகப்படுத்தி அலங்காரமாக வார்த்தைகளைச் சொல்லுவார். நிலையான கெட்டியான மனத்தை யுடையவர். பூமியில் உபாயங்கற்ற சாமர்த்திய மானவர். தைரிய முடையவர். கொடுக்குந் தன்மை கொஞ்சம் உள்ளவர்.

6. தந்தை யினுர்ஜி தத்தைத் தானவன் விரயம் செய்வன்
வந்திடு மனைவி யென்றேம் மாந்தரு மாண்பால் ரண்டு
சந்ததம் பெண்பால் ரண்டு சாற்றுவோம் தீர்க்க மாகத்
தந்தைநாள் மட்டும் யோகம் தரித்திரம் அதன்மே லாக

6. இவர் தகப்பனுருடைய சொத்தை எல்லாம் ஒழித்து விடுவார். இவருக்கு மனைவிவந்து வாய்ப்பாள் என்று சொல்லுகிறேம். இவருக்குக் குழந்தைகளில் ஆண் இரண்டும் பெண் இரண்டும் நீண்ட வயதுடையவர்கள் என்று சொல்லுகிறேம். தகப்பனுர் உயிருடன் இருக்கின்றவரையிலும் இவருக்கு யோக முண்டு. அதற்கு மேல் தரித்திரம் ஏற்படும்.

7. இன்னமும் சிலது சேதி யியம்புவோம் பின்பா கத்தில்
தந்தையின் குணத்தைச் சொல்வேன் தானிள மனத்தா ஞகும்
விந்தையாய் வார்த்தை கூறுவன் விளைபுலம் சேர்ப்பா ஞகும்
பந்துவு மதிக்க உய்வன் பலவிதச் செட்டுச் செய்வன்

7. இன்னமும் சிலவிஷயங்களைப் பின் பாகத்தில் சொல்லுகிறேம். இனிமேல் ஜாதகருடைய தகப்பனுரின் குண குணங்களைப்பற்றிச் சொல்லுகி றேன். இவர் இளகிய, அஃதாவது தயாளமான மனத்தை யுடையவர். ஆச்சரியப்படும்படியாக வார்த்தைகளைச் சொல்லுவார். விளைகின்ற பூமிகளைச் சேர்த்துவைப்பார். பந்துக்கள் இவரை மதிக்கும்படியான நிலையில் வாழ்வார். பலவிதமான வியாபாரங்களையும் செய்வார்.

8. இருநிறம் சமதே கத்தான் இன்பச் சொலீகை வானும்
திருகிலாக் குணத்தா ஞகும் தேவிமா ரிரண்டு என்றேம்
பொருளது சேர்ப்பா ஞகும் புண்ணிய மனத்தா ஞகும்
பரைபள்ளு சேர்ப்பா ஞகும் பகவானின் பக்தி பூண்பன்.

8. இவர் இரண்டு நிறங்கள் கலந்துள்ள மாநிறமான தேகத்தை யுடையவர். தாட்டியும் ஒல்லியுமில்லாத நடுவான தேகத்தையுடையவர். இனிமையான வார்த்தைகளை உபயோகப்படுத்துவார். கொடுக்குந்தன்மை யுடையவர். கள்ளம் கபடம் வஞ்சனை இவைகளில்லாத குணமுடையவரா வர். இவருக்கு மனைவிகள் இருவர் நேருவர் என்று சொல்லுகின்றேம். சொத்தைச் சேர்த்து வைப்பார். புண்ணியஞ் செய்கின்ற நல்ல குணமுடைய வர். தானியங்களையும் தோப்புகளையும் ஆள்களையும் சேர்ப்பார். கடவுளின் மேல் பக்தியுடையவராவார்.

9. வடிவினில் குள்ள ஞவன் மாமிச வணிபம் செய்வன்
தடபுடல் செய்கை யுண்டு சகடுவா கனமு மேற்பன்
படிமிசை நல்லோ ஞவன் பசித்தோர்க்கு அன்ன மீவன்
விடவாக் குடைய ஞவன் வீண்வம்பில் செல்லா ஞகும்.

9 இவர் உருவத்தில் குள்ளராக விருப்பார், மாமிச வியாபாரஞ் செய்வார். டம்பமாகவும் அவசரமாகவும் பட்டாடோபமாகவும் காரியங் களைச் செய்வார். வண்டியும் வாகனங்களும் உடையவர். பூமியில் எல்லோ

ருக்கும் நல்லவனுக விருப்பார். பசியோடு இருப்பவர்களுக்குச் சாப்பாடு போடுவார். விஷமான வாக்கையுடையவர், அஃதாவது இவர் ஏதாகிலும் சொன்னுல் அது பலித்துவிடும். வீண் சண்டைக்குப் போகமாட்டார்.

10. முன்னவ னிருந்த ஜன்மம் மொழிகிறேும் மதுரை நாட்டில்
நன்னிய சிறுவூர் தன்னில் நல்கினுன் வைசியச் சேயாய்
உன்னதச் செட்டுச் செய்து உயர்வோர்கள் பக்தி யுண்டாய்த்
தென்திசை சேது சென்று தேறினேர்க் கன்ன மீந்து ;

10. ஜாதகருடைய தகப்பனுரின் முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறேம். மதுரையில் ஒரு சிறிய நல்ல பேட்டையில் வைசிய குலத்தில் ஆணுகப் பிறந்து மேன்மையான வியாபாரஞ் செய்து பெரிய மனுஷர்களின் மேல் விசுவாசமாகவிருந்து தெற்குத் திக்கிலுள்ள சேதுஸ்தலத்திற்குப் போய்ச் சுத்தமானவர்களுக்கு, அஃதாவது பரதேசிகளுக்குச் சாப்பாடு போட்டு ;

11. இருக்கிற காலம் தன்னி லெய்தின வினையைக் கேண்மோ
அரிவையும் கங்கை மாது அவளுமே விதவை யாகிப்
பொருளது விசேஷ முண்டு பாதுகாத் தருள்வா யென்று
உரைத்தனள் வணிகன் தன்பால் உன்மனம் போலே செய்வேன் ;

11. வாழுகின்ற காலத்தில் இவருக்குச் சம்பவித்த பாபத்தைக் கேட்பீராக. ஒரு வேளாள குலத்திற் பிறந்த ஸ்திரீயானவள் விதவையான பிறகுத் தன்னுடைய அதிகமான சொத்தை இவரிடஞ் சென்று காப்பாற்றித் தருவாய் என்று சொல்ல உண்மையாய் அவ்விதமாகவே செய்கிறேன்.

12. என்றுமே செட்டி சொல்ல ஈந்தனள் பொருளை எல்லாம்
அன்றுநாள் முதலா மாக அம்மாது லாபம் வாங்கித்
தின்றுமே வந்து பின்பு தேவியும் ஆண்டின் மேலாய்க்
குன்மநோய் பேதி யாலே கூற்றன்தன் பதிக்குச் செல்ல ;

12. என்று இந்தச் செட்டியாரும் சொல்லவே, அவள் எல்லாச் சொத்துக்களையும் இவரிடம் கொடுத்து வைத்தாள். அதுமுதற்கொண்டு அவள் லாபமோ வட்டியோ வாங்கிக்கொண்டு ஜீவனஞ் செய்துவந்து பிறகு ஒரு வருஷத்திற்குப் பிறகு குன்மரோகத்தாலும் பேதியாலும் இறந்து பிறகு எமபட்டணத்திற்குப் போய்

13. வேதனல் வரையப் பட்டு விளங்கி னளிக்கு லத்தில்
போதனம் வாங்க வேண்டி பின்பாரி யாகத் தோன்றும்
சூதான வசியம் தோன்றும் தீவினை யில்லா தாகித்
தீதான காலன் னுடு சென்றுமே பிரமன் லக்கம் ;

13. பிரமதேவனுல் இந்த ஸ்திரீ எழுதப்பட்டு இந்தக் குலத்தில் வந்து பிறந்தாள். இவள் தான் முன் ஜன்மத்தில் கொடுத்து வைத்த பெரிய செல்வத்தைத் திரும்பி வாங்கும் நிமித்தமாக இவருக்கு இரண்டா

வது மனைவியாக வந்து நேரிடுவாள். சூதாகவும் இவள் இவரைத் தன்வச மாகச் செய்து கொள்ளுவாள். இவர் முன்ஜன்மத்தில் கெட்ட வினைகள் இல்லாமல் இறந்து கெடுதியை விளைவிக்கக்கூடிய எமபட்டணத்திற்குச் சென்று பிரமதேவனால் எழுதப்பட்டு ;

14. வந்தவ னிவனே யென்றேம் மருவிடு மிரண்டு தாரம்
இந்தவாறு மன்ன னுக்கு இவனுமே வுதிப்பா னாகும்
அந்தவன் குணத்தைச் சொல்வேன் அழகுளான் சிவந்த மேனி
தன்சொல்லே மேன்மை யாகச் சாதிப்பான் உணச்சல் நீட்சி.

14. இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றார் என்று சொல்லுகிறேம். ஆகையால் இவருக்கு இரண்டு மனைவிகள் வந்து நேரு வார்கள். இப்படிப்பட்ட குணத்தையுடைய தகப்பனாருக்கு இந்த ஜாதகர் வந்து பிறப்பார். இவருடைய குணாதிசயங்களை இனிமேல் சொல்லுகிறேன். இவர் அழகானவர். சிவப்பான நிறமுடைய தேகத்தையுடையவர். தான் சொல்லுகின்ற வார்த்தைகளே மேன்மையானவை, உண்மையானவை என்று வாதஞ்செய்து சொல்லி வெல்லுந்தன்மை உடையவர். நீண்ட மெலிந்த தேகமுடையவர்.

15. வித்தையு மிரண்டு நேரும் வேந்தனால் ஜீவனங்கள்
உத்தமன் செய்வானாகும் உயர்வான குடும்ப மேற்பன்
பத்தினி மார்கள் நேயன் பரஉப கார னவன்
சுத்தத்தார் மதிக்க உய்வன் துருசான கோபி யாவன்.

15. ஜாதகர் இரண்டு விதமான படிப்பு உள்ளவர். அரசர் மூல மாக ஜீவனஞ் செய்வார். மேன்மையான குடும்பத்தையுடையவர். மனைவி களிடத்தில் பிரியமாயிருப்பார். மனைவிகளும் இவரிடத்தில் ஆசையாயிருப் பார்கள். பிறருக்கு உதவிசெய்வார். பந்துக்கள் இவரை மதிக்கும்படியான நிலையில் இவர் வாழ்வார். சீக்கிரத்தில் கோபத்தை அடையக்கூடியவரா வார்.

16. தந்தையின் பூமி மேலாய்த் தானவன் சேர்ப்பா னாகும்
தன்தனம் சேர்ப்பா னாகும் சதுஷ்பாதம் விருத்தி செய்வன்
தந்தைசொல் கடவா னாகும் சகராசர் பேட்டி கொள்வன்
இந்திர போக மேற்ப னில்லமு மிரண்டு செய்வன்.

16. ஜாதகர் தன்னுடைய தகப்பனார் வைத்த பூமியைவிட அதிக மான பூமிகளைச் சேர்ப்பார். தன்னுடைய பணத்தையுஞ் சேர்த்து வைப்பார். கால்நடைகளை விருத்தியாக்குவார். தகப்பனாருடைய வார்த்தைக்கு அத்து மீறி நடக்க மாட்டார். பெரிய அரசர்களுடைய தரிசனத்தை அடைவார் தேவர்களுடைய போகத்தையுஞ் சுகத்தை அடைவார். இரண்டு வீடுகளைக் கட்டுவார்.

17. இவனுடைத் துணைவர் தம்மை யியம்புவோம் முன்ஆண் ஒன்று
நவனியில் கன்னி ஒன்று நாட்டுவோம் தீர்க்க மாகத்
தவசியே முன்னோன் சேதி சாற்றுவோ மிருசிவப்பன்
அவனியோர் மதிக்க வாழ்வன் அவனுக்குச் சமமாம் கல்வி.

17. ஜாதகருடைய சகோதரர்களைப்பற்றி இனிமேல் சொல்லு கிறோம். இவனுக்கு முன்னே ஓர் ஆணும் ஒரு பெண்ணும் நீண்ட ஆயு ளுடையவர்களாய் இருப்பார்கள் என்று சொல்லுகிறோம். பார்வதியம் மையே! ஜாதகருடைய மூத்த சகோதரருடைய விஷயங்களைச் சொல்லுகிறோம். இவர் இரண்டு நிறங்கள் கலந்த மாநிறமுள்ள தேகத்தையுடையவர். பூமியில் உள்ளவர்கள் இவரை மதிக்கும்படியான நிலையிலிருந்து வாழ்வார். இவருக்கு அதிகமும் குறைவும் இல்லாத நடுநிலைமையான வித்தை யுண்டு.

18. பலவணி பங்கள் செய்வன் பாரது விருத்தி யுண்டு
பலமுள குடும்ப மேற்பன் போஜன வறுமை காணான்
நிலையதைக் காக்க வல்லன் நிமிஷத்தில் கோபி யாவன்
விலைமாதர் மோகம் கொள்ளான் வீண்பழி ஏற்கா னுமே.

18. இவர் பலவிதமான வியாபாரங்களைச் செய்வார். பூமி விருத்தி யாகும். நல்ல பலிதத்தைத் தரும். பெரிய மேன்மையான குடும்பத்தை உடையவர். சாப்பாட்டு விஷயத்தில் கஷ்டப்படமாட்டார். தன்னுடைய அந்தஸ் தையும் ஜீவனத்தையுங் காப்பாற்றிக்கொள்ளுவார். வெகு சீக்கிரத்தில் கோபத்தை அடைந்துவிடுவார். வேசிகளிடத்தில் காம ஆசையில்லாதவர். வீணான குற்றங்களை அடையமாட்டார், செய்யவும்மாட்டார்.

19. வயதுமே தீர்க்க மெய்தும் மனைவியு மொன்றே யாகும்
பயமிலான் எதிரிக் கஞ்சான் பாலர்கள் ஆண்பால் மூன்று
வியமிலாப் பெண்பால் ரண்டு விளம்புவோம் சல்லியம் கொள் [ளான்
செயம்செய்வ னெடுத்த வேலை செல்வதி கேட்டி டாயே.

19. இவருக்கு நீண்ட ஆயுளுண்டு. ஒரே மனைவி உண்டு. இவர் பயப்படாதவர். சத்துருவிற்கு பயப்படமாட்டார். இவருக்கு ஆண் கள் மூன்றும் பெண்கள் இரண்டும் நிலையாக இருக்கும் என்று சொல்லு கிறோம். கடன் வாங்கமாட்டார். தான் ஆரம்பித்துச் செய்யுங் காரியங்களைப் பூர்த்திசெய்து ஜயிப்பார். பார்வதியம்மையே! கேட்பீராக.

20. பின்துணை ஆண்பா லொன்று பேதையு மவ்வாறு தீர்க்கம்
அன்னவர் சேதி யாவும் அறிவிப்போம் பின்பா கத்தில்
இன்னவாறு பிறகு சொல்ல இயம்புவார் பராசர் தாமும்
அன்னையு மிரண்டு என்றீர் அறிவிப்பீர் அவள்தன் சேதி ;

20. ஜாதகருக்கு இளைய சகோதரன் ஒருவனும் இளைய சகோதரி ஒருத்தியும் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள். இவர்களுடைய விஷயங்கள் எல்லாவற்றையும் பின்பாகத்தில் சொல்லுகிறோம். இவ்வித

மாகப் பிருகு மஹாரிஷி சொல்லவே பராசர முனிவர் கேட்கின்றார். ஜாதக ருக்குத் தாய்மார்கள் இரண்டு பேர் என்று சொன்னீரே அவளுடைய விஷ யங்களைச் சொல்லுவீர் என்று கேட்க ;

**21.** குணமது நல்ல தாகும் குரூரத்தை வெளிக்காட் டாதாள்
பிழைசெய்யாள் யாவருக்கும் புருடன்தன் மனம் போல் வாழ்வள்
துணைவர்கள் ஆண்பால் ரண்டு தோகையர் மூன்று என்றோம்
சினமிலா வாழ்வா ளாகும் தேவியில் வட மேலாகும்.

21. (பெரிய) தாயார் நல்ல குணமுடையவள். தன்னுடைய கொடுமையான குணத்தைக் வெளிக்குக் காண்பித்துக் கொள்ளமாட்டாள். யாருக்குங் கெடுதிகளைச் செய்யமாட்டாள். தன்னுடைய புருஷனுடைய மனத் திற்குத் தகுந்தபடி நடந்துகொண்டு வாழ்வாள். இவளுக்குக் கூடப்பிறந்த வர்கள் ஆண்கள் இருவரும், பெண்கள் மூவரும் என்று சொல்லு கிறோம். கோபமில்லாமல் வாழ்வாள். இவளுடைய வீடு வடக்குத் திக்கில் இருக்கும்.

**22.** சுதர்களும் ஆண்பால் ரண்டு தோகையு மிரண்டு என்றோ
மதிபனு முதிக்கா முன்னம் ஆணொன்று கன்னி ஒன்று
இதுவிரண்டும் தீர்க்க மெய்து மிவன்பின்னு லிரண்டு தீர்க்கம்
பதர்மற்ற மூன்று மென்றோம் பகர்ந்தனம் தாயே யாங்கள்.

22. இவளுக்குக் குழந்தைகள் ஆண் இருவரும் பெண் இருவரும் என்று சொல்லுகிறோம். ஜாதகர் பிறப்பதற்கு முன்னே பெரிய தாயாருக்கு ஓர் ஆண் குழந்தையும் ஒரு பெண் குழந்தையும் பிறந்து நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். ஜாதகர் பிறந்த பிறகு பெரிய தாயாருக்கு இரண்டு குழந்தைகள் நீண்ட ஆயுளையுடையவர்களாகவிருப்பார்கள். மூன்று குழந்தைகள் பதரைப்போல உபயோகமில்லாமல் இறந்துபோய் விடுவார்கள் என்று சொல்லுகிறோம். எங்களுடைய தாயாகிய பார்வதி யம்மையே ! நாங்கள் சொல்லுகிறோம்.

**23.** இருபது நாலாண் டின்மே லிவர்களும் வேறுய்ச் செல்வர்
அதுபலன் பின்பால் சொல்வேன் அம்பிகை யாளே கேளாய்த்
திருமகள் அன்னை சேதி செப்புவோ மினிமே லாகக்
குறையென்றோர்க் குதவி செய்வள் குணமது நல்ல தாகும்.

23. ஜாதகருக்கு இருபத்து நான்கு வயதிற்குமேலே பெரிய தாயாரும் அவளுடைய குழந்தைகளும் வேறு குடும்பமாகப் பிரிந்துபோய் வாழ்வார்கள். இந்த விஷயத்தைப்பற்றிப் பின்னல் சொல்லுகிறேன் பார்வதியம்மையே ! கேட்பீராக. ஜாதகருடைய தாயாருடைய விஷயங்களைப் பற்றி இனிமேல் சொல்லுகிறேன். கஷ்டமாகவிருக்கின்றதென்று சொல்லிக் கொள்ளுபவர்களுக்கும் தேவை இருக்கிறது என்று சொல்லிக்கொள்ளுப வர்களுக்கும் இவள் உதவி செய்வாள். நல்ல குணமுடையவள்.

24. முன்கோபி வெளிக்காட் டாதாள் மாதுவும் வந்த பின்பு
சந்திரன் பிறைபோல் யோகம் தன்வான் தனக்கு இஷ்டம்
அன்னியர் குற்றம் சொல்லாள் ஆளனுக்கினியாளாகும்
தன்மனம் கபடு மில்லாள் சலித்தோர்க்குதவி செய்வள்.

24. இவள் முன்கோபமுடையவள். மனத்தில் உள்ளதை வெளியே காண்பித்துக் கொள்ளமாட்டாள். இவள் தன்னுடைய புருஷனிடம் வந்து சேர்ந்த பிறகு புருஷனுக்கு வளர்பிறைச் சந்திரனைப் போல யோகம் நேரிட்டு அதிகரிக்கும். பிறர்மேல் குற்றத்தைச் சாட்டமாட்டாள். இவள் தன்னுடைய புருஷனுக்கு இஷ்டமானவள். தன்னுடைய மனத்தில் கள்ளம் வஞ்சனை முதலியவைகள் இல்லாதவள். ஏழைகளுக்கும் இளைத்தவர்களுக்கும் துக்கப் படுபவர்களுக்கும் உதவி செய்வாள்.

25. இல்லமும் மேல்பால் என்றே மிவள்துணை ஆண்பால் ரண்டு
வல்லியும் ஒன்று தீர்க்கம் வரைகிறோம் தாயே கேளும்
அல்லலில்லாமல் வாழ்வள் யாவர்க்கு நல்லோ ளாவள்
சொல்லது சுபமே யாகும் செப்புவோ மிவள்தன்பூர்வம்.

25. இவளுடைய வீடு மேற்குத் திக்கில் இருக்கும் என்று சொல்லுகிறோம். இவளுடன் கூடப்பிறந்தவர்கள் இரண்டு ஆண்களும் ஒரு பெண்ணும் நீண்ட ஆயுளை உடையவர்கள் என்று சொல்லுகிறோம். எங்கள் தாயாகிய பார்வதியம்மையே! கேட்பீராக. இவள் கஷ்டங்கள் இல்லாமல் வாழ்வாள். எல்லோருக்கும் நல்லவளாக இருப்பாள். இவள் சுபகரமாகப் பேசுவாள். இவளுடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறோம்.

26. பிருதிவி கீழ்ப்பா லாகப் பேரூரில் செங்குந்த வமிசம்
அரிவையும் உதித்து மேதான் ஆண்மையாய் குடும்பி யாகி
வருவோரை ஆத ரித்தும் மாரனும் மதலை யுண்டாய்
முருகன்தன் பத்தி கொண்டு மேதினில் பவமில் லாமல்;

26. இவள் காஞ்சீபுரத்திற்குக் கிழக்குத் திக்கிலுள்ள ஒரு பெரிய ஊரில் செங்குந்தர் வமிசம் என்ற கைக்கோலர் குலத்தில் வந்து பெண்ணாகப் பிறந்து மேலான வலிவு பொருந்திய ஒரு குடும்பஸ்தையாகித் தன்னிடம் வந்தவர்களைக் காப்பாற்றிப் புருஷனையும் பிள்ளையையும் உடையவ ளாகி முருகக்கடவுளின் மேல் பக்தியையுடையவளாகிப் பூமியில் யாதொரு பாபமுமில்லாதவளாகி.

27. காலன்தன் நாடடைந்து கஞ்சனால் வரையப்பட்டு
ஞாலம்மேல் மஸ்தான் வமிசம் நாயகி உதித்துமேலும்
ஏலவே வறுமை காணா ளியம்புவோ மிவள்பின் ஜன்மம்
சாலவே விரிஞ்சிதன்னில் ஜனிப்பளாம் சைவச் சேயாய்.

27. இறந்து எமபட்டணத்திற்குப் போய் பிரமதேவனால் எழுதப் பட்டு இந்தப் பூமியில் மஸ்தான் வமிசத்தில் வந்து பிறந்து கஷ்டங்களும் தரித்திரமும் இல்லாமல் வாழ்வாள். இவளுடைய மறு ஜன்மத்தைச் சொல்லுகிறோம். விரிஞ்சிபுரத்தில் சைவகுலத்தில் இவள் பிறப்பாள்.

28. பாலகன் மணத்தின் காலம் பகருவோம் பதினு ருண்டில்
வேல்விழி மேல்பால் தன்னில் மேவுவா ளான்னே வர்க்கம்
நீலியின் குணத்தைச் சொல்வேன் நிலையதைக் காப்பா ளாகும்
பாலிகை யோக சாலி பால்பாக்கிய முடைய ளாகும்.

28. ஜாதகருடைய விவாக காலத்தைச் சொல்லுகிறோம். இவருக்குப் பதினுருவது வயதில் * வேலைப்போன்ற அழகிய கண்களையுடைய மனைவி தன்னுடைய தாயார் வமிசத்திலிருந்து மேற்குத் திக்கிலிருந்து வந்து நேருவாள். இவளுடைய குணத்தைச் சொல்லுகிறேன். தன்னுடைய அந்தஸ்தைக் காப்பாற்றிக் கொள்ளுவாள். இவள் யோகமுடையவள். பால் பாக்கியமுடையவள் ஆகும்.

* குறிப்பு.—விவாக விஷயம்—ஜாதகருக்கு வயது வருஷம் 15-0-0 முதல் வருஷம் 16-0-0 முடிகிறவரையிலும் சனிதசையில் அங்காரக புக்தி, ராகு புக்திகள் நடக்கின்றன. சனி களத்திரஸ்தானுதிபதியாகி களத்திரகாரகனுகிய சுக்கிரனுலும் குடும்பாதிபதியாகிய சூரியனுலும் பார்க்கப்படுகின்றார். ராகு போககாரகனுகிக் குடும்ப ஸ்தானத்தில் இருக்கின்றார். ஆகையால், சனி தசையில் இராகு தன்புக்தியில் அங்காரகனைவிட ஜாதகருக்கு விவாகம் செய்து வைக்க அதிக அதிகாரமுடையவராக விருக்கின்றார்.

29. முப்பது ஆண்டு தன்னில் மெல்லியும் கர்ப்பத்தாலே
தப்பாத காலனுடு சாருவா ளென்று சொல்வோம்
மைப்படி வேறு மாது மருவுவாள் அந்த ஆண்டில்
ஒப்பான வயது தீர்க்கம் உரைத்தன மந்த மாது.

29. ஜாதகருடைய மனைவி ஜாதகருக்கு முப்பதாவது வயதில்* கர்ப்பமாகி அதனுல் தவருமல் இறந்து எமபட்டணம் போய்ச் சேருவாள் என்று சொல்லுகிறோம். அதே வருஷத்தில் இன்னொரு மனைவி ஜாதகருக்கு வந்து நேருவாள். இந்த இரண்டாவது மனைவிக்கு நீண்ட ஆயுள் உண்டு என்று சொல்லுகிறோம்.

* குறிப்பு.—மனைவியின் மரண விஷயம்.—இதைப் பற்றி பின்னுல் வருகின்ற அடுத்த பாடலின் கீழ் பார்க்கவும்.

30. இருமனை அணுகும் போதுசேதி யியம்புவீர் முனியே நீர்தாமம்
கரியவன் [1] ஏழில் தங்கக் கரும்பாம்பு [2] இரண்டில் மேவ
உரைத்திட்டோம் தாரம் ரண்டு உத்தமன் பூர்வம் தன்னில்
மறுவிற்று வினைகள் தாமும் வரைகுவீ ரந்தச் சங்கை ;

30. இரண்டு மனைவிகள் * வந்து நேரிடுவதற்குக் காரணங்களை நீர் சொல்லுவீர் என்று கேட்கும்போது, சனி ஏழில் இருப்பதாலும், இராகு இரண்டில் இருப்பதாலும் ஜாதகருக்கு இரண்டு மனைவிகள் உண்டு என்று சொல்லுகிறோம். ஜாதகருக்குத் தன்னுடைய முன் ஜென்மத்தில் வந்து சம்பவித்த பாவங்களும் தோஷங்களும் உண்டு. அந்த விஷயங்களைச் சொல்லுவீர் என்று கேட்க ;

---

[1] சனி. [2] இராகு.

* குறிப்பு.—இரண்டு மனைவிகள் விஷயம்—முதல் மனைவி விஷயமாக ஏழாவது பாவம், இரண்டாவது பாவம் இந்த பாவங்களின் அதிபதிகள் சுக்கிரன் இவர்களைக் கவனிக்கவேண்டும். ஏழுக்குடைய சனி ஏழிலேயே ஆட்சியாய் இருக்கின்றார். இவர் சரத்திலிருப்பதால் ஜாதகாலங்காரம் 648-ஆவது பாடல் பிரகாரம் இரண்டு மனைவியோகம் இருக்கின்றது. சனியை விரோதியும் குடும்பாதிபதியுமாகிய சூரியனும், திருதிய விரயாதிபதியாகிய புதனும் பார்க்கின்றார்கள். இது முதல்தாரத்திற்குப் பிரதிகூலமானது. சுக்கிரனும் சனியும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொள்வது பல ஸ்திரீகளின் சம்மந்தத்தை உண்டுபண்ணக் கூடியதாகும். மேலும் களத்திராதிபதியாகிய சுக்கிரனும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொள்வதால் ஜாதகாலங்காரம் 689-ஆவது பாடல் ஜாதகசிந்தாமணி 984-ஆவது பாடல் ஆகிய இவைகள் பிரகாரம் மூன்று மனைவி யோகமிருக்கின்றது. மேலும் சனியையும் ஏழையையும் அங்காரகன் பார்க்கின்றார். இரண்டில் ராகு இருக்கின்றார். இரண்டிற்குடைய சூரியன் தன் பாவத்திற்குப் பன்னிரண்டில் திருதிய விரையாதிபதியாகிய புதனுடன் கூடி இருக்கின்றார். இவரைச் சனியும் பார்க்கின்றார். இவைகள் பிரதிகூலமானவை. இரண்டாவது மனைவி பாவமாகிய ஒன்பதாவது பாவத்திற்குடைய குரு இரண்டாவது பாவத்தைப் பார்க்கின்றார். ஆகையால் ஜாதகருக்குத் தார தோஷம் அதிகமாகவிருக்கின்றது. சனி ஆட்சியாய் இருப்பதாலும், விரயாதிபதி புதனாகவிருப்பதாலும், ஒன்பதிற்குடையவர் குருவாகி இரண்டைப் பார்ப்பதாலும் உடனே இரண்டு தாரங்கள் நேரிடாமல் சில வருஷங்கள் கழித்து இரண்டுதாரம் நேரிடும் அமைப்பு இருக்கின்றது. ஜாதகருக்கு வயது வருஷம் 29-0-0 முதல் வருஷம் 30-0-0 வரையிலும், புதன்தசையில் அங்காரக ராகு புக்திகள் நடக்கின்றன. அங்காரகன் புத்திரஸ்தானாதிபதியாகிச் சனியைப் பார்த்திருக்கின்றார். ஆகையால் இந்தக் காலத்தில் கர்ப்பவேதனையால் முதல் மனைவி இறந்துவிடுவாள் என்று முன்னே சென்ற 29-ஆவது பாடலில் சொல்லி இருக்கிறது. போககாரகராகிய ராகு புக்தியில் இரண்டாவது மனைவி வருவாள் என்றும் கண்டிருக்கின்றது.

31. ஜாதகன் பூர்வம் தன்னைத் தானெடுத் தியம்பக் கேண்மோ
மாதவர் போற்று கின்ற மதுரைமா நகர்க்கு மேல்பால்
மேதினில் சிறுவூர் தன்னில் விளங்கினன் வடுக னகப்
போதவே தனங்கள் பெற்றுப் புகழ்ச்சியாய் வாழுந் நாளில் ;

31. இனிமேல் ஜாதகருடைய பூர்வ ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுவதைக் கேட்பீராக. பெரிய தவசிகளும் முனிவர்களும் போற்றிப் புகழ்கின்ற மதுராபுரிபட்டணத்திற்கு மேற்குத் திக்கில் பூமியில் ஒரு சிறிய கிராமத்தில் ஜாதகர் தெலுங்கர் குலத்தில் பிறந்தார், இவர் செல்வத்தை அடைந்து பெருமையாய் வாழுகின்ற காலத்தில் ;

32. வந்தனூழ் தன்னைச் சொல்வேன் மாதுவும் விரோத முற்றுத்
தன்துணை மோசத் தாலே தன்னிடம் நீதி சொல்ல
இந்தவன் அந்த மாதுக் கிடுக்கங்கள் நிவிர்த்தி செய்து
விந்தையாய்ப் போகம் துய்த்து மெல்லியின் பொருளைப் பறித்து ;

32. ஜாதகருக்கு வந்து சம்பவித்தப் பாவத்தைப் பற்றிச் சொல்லு கிறேன். ஒரு ஸ்திரீயானவள் தன்னுடைய சகோதரத்திஞல் ஏமாந்து விரோதத்தை யடைந்து ஜாதகரிடம் சென்று நியாயஞ் சொல்லுமென்று கேட்க, ஜாதகர் அந்த ஸ்திரீக்கு நேர்ந்த துன்பங்களைப் போக்கிப் பிறகு அவளிடம் ஆச்சரியமாய்ச் சிநேகஞ் செய்துகொண்டு அவளிடத்தில் சம்போ கஞ் செய்துகொண்டு அவளுடைய சொத்தை அபகரித்துக்கொண்டு ;

33. இருக்கின்ற காலம் தன்னி லிவன்பாரி அதை யறிந்து
திருகுக ளனந்த மாகச் செய்தனள் அந்த மாது
வரனிடம் சொல்லும் போது மாரனும் கேட்கா னின்ருன்
அரிவையும் மனவெ றுப்பால் அறைவளாம் சாபம் தானும்.

33. வாழுகின்ற காலத்தில் ஜாதகருடைய மனைவி இதைத் தெரிந்துகொண்டு கபடமாகவும் வஞ்சனையாகவும் அனேக விதமான கஷ்டங் களை உண்டு பண்ணிஞள். அந்த ஸ்திரீ இதை ஜாதகரிடம் சொல்லவே, இவர் இது விஷயமாய் ஒன்றுங் கேட்காமலும் கவனியாமலும் இருந்ததால் அந்த ஸ்திரீ மனம் நொந்து கஷ்டப்பட்டுச் சாபத்தைக் கொடுத்தாள்.

34. நயமுள வார்த்தை சொல்லி நற்பொருள் பரித்துப் பாவி
தயையிலா விருந்தாய் நீயும் ஜனிக்கும்பின் ஜன்மம் தன்னில்
வியமாகும் முதல்ம னைதான் மேவிடு மிரண்டாம் பாரி
பயமன தாகச் சொல்லிப் பாவையும் காலத்தால் மாண்டாள்.

34. இனிமையாக வார்த்தைகளைச் சொல்லி நல்ல சொத்துக்களை அபகரித்துக் கொண்ட பாவியாகிய நீ என்மேல் கிருபையும் இரக்கமும் இல் லாமல் இருந்துவிட்டாய். ஆகையால் நீ இனிமேல் பிறக்கும் மறு ஜன்மத் தில் உனக்கு முதல் மனைவி இறந்து போய் இரண்டாவது மனைவியை நீ அடையக்கடவாய் என்று அந்த ஸ்திரீ ஜாதகரைப் பார்த்துப் பயந்த நொந்த மனமுடையவளாகச் சொல்லிவிட்டு நாளடைவில் இறந்து விட்டாள்.

35. அந்ததோர் தோஷம் தானும் அணுகிற்றுப் பால னுக்குத்
தென்திசை காலன்ஞடு சேர்ந்துமே மறையோன் பக்கம்
இந்ததோர் குலமு திப்பா னெய்திடும் மாது சாபம்
விந்தையாய்ப் பாரி ரண்டு விளம்புவோம் பால னுக்கு.

35. ஆகையால் அந்த ஸ்திரீயின் சாபம் ஜாதகருக்கு இந்த ஜன்மத்தில் வந்து சம்பவிக்கும். ஜாதகரும் முன் ஜன்மத்தில் இறந்து தெற்குத் திக்கிலுள்ள எமபட்டணத்திற்குப் போய் பிரதேவஞல் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் இந்தக் குலத்தில் பிறந்தார். அந்த ஸ்திரீயினுடைய சாபம் ஜாதகருக்கு வந்து சம்பவிக்கும், ஆகையால் ஆச்சரியமாக ஜாதகருக்கு இரண்டு மனைவிகள் வந்து நேரிடுவார்கள் என்று சொல்லுகிருேம்.

36. புத்திர னிருநான் காகப் புவித்திடு மென்று சொல்வோம்
செத்திடும் சிலது தானும் தீர்க்கமாம் ஆண்பா லொன்று
வித்தகிமார்கள் மூன்று விளப்புவோம் தீர்க்க மாக
அத்தியைப் பெற்ற மாதே அறைந்தவை தப்பா வாமே

**36.** ஜாதகருக்குச் சந்ததிகள் எட்டுபேர் உண்டாவார்கள் என்று சொல்லுகிறோம். இவர்களில் சிலபேர் இறந்துபோவார்கள். ஓர் ஆண் பிள்ளையும் மூன்று பெண்களும் நீண்ட ஆயுளை உடையவர்களாக இருப்பார்கள். சிவபக்தர்களை உண்டாக்கிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லியவைகள் தவறிடாமல் நடக்கும்.

**37.** எந்தமா துக்குப் புத்திர ரியம்பினீர் விவரம் சொல்வாய்
முந்தின மாதுக் கேதான் மொழிந்தனம் பெண்பா லொன்று
பிந்தின மாதுக் கேதான் பேசுவோம் மற்ற தெல்லாம்
இந்திர னிறைஞ்சு மாதே யியம்பின மொழி குன்றாது.

**37.** எந்த மனைவிக்குச் சந்ததிகளைச் சொன்னீர். அதை விவரமாகச் சொல்லுவீர் என்று கேட்க, முதல் மனைவிக்கு ஒரு பெண் குழந்தை இருக்கும் என்று சொன்னோம். இரண்டாவது மனைவிக்கு மற்றக் குழந்தைகளைச் சொல்லுகின்றோம். இந்திரன் வணங்கிப் பூஜை செய்கின்ற பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும்

**38.** ஜாதகன் யோகச் சேதி சாற்றுவோம் தாயே கேளும்
கியாதியு மதிக மேற்பன் ஜனராசர் தன்னா லுய்வன்
நீதியா யிருபான் ரண்டில் நேர்ந்திடு மரசு தானும்
சூதிலா அன்பானாறும் செய்குவன் ராச யோகம்.

**38.** ஜாதகருடைய யோகங்களைப் பற்றிய விஷயங்களைச் சொல்லுகிறோம். எங்களுடைய தாயாராகிய பார்வதியம்மையே! கேட்பீராக. ஜாதகர் அதிக கீர்த்தியை அடைவார். பெரிய அரசர்களால் ஜீவனஞ் செய்வார். நியாயமாய் இவருக்கு இருபத்திரண்டு வயதில்* இராஜாங்கத்தில் அரசாளும் வேலை கிடைக்கும். ஐம்பத்தாறு வயது வரையிலும் குற்றமில்லாமலும் உபாயமாகவும் வேலை செய்வார். இவருக்கு ராஜயோகம் இருக்கிறது.

* **குறிப்பு.—வேலை விஷயம்—**பத்தாவது பாவத்தில் குருவும், லக்கினத்தில் சூரியனும், பத்திற்குடையவர் அங்காரகனுமாகவும், லக்கினத்தைச் சனியும் பார்த்தும் இருக்கின்றார். குரு, சூரியன், அங்காரகன், சனி, இவர்கள் இராஜாங்க சம்மந்தமான கிரகங்களாகும். ஆகையால் ஜாதகருக்கு இராஜாங்க சம்மந்தமான ஜீவனம் ஏற்படும் அமைப்பு இருக்கின்றது. இவருக்கு வயது வருஷம் 21-0-0 முதல் வருஷம் 22-0-0 முடியும் வரையில் புததசையில் புத புக்தி நடக்கிறது. புதன் சூரியனுடன் கூடி இருக்கின்றார், புதன் வீட்டில் பத்துக்குடைய அங்காரகன் இருக்கின்றார். லாபத்தை உண்டுபண்ணக் கூடிய சுக்கிரன் புதனுடன் கூடி இருக்கின்றார். ஆகையால் புதன் புக்தியில் ஜீவன லாபம் ஏற்பட அமைப்பு இருக்கிறது. பிருஹஜ்ஜாதகத்தில் 23-ஆவது அத்தியாயம் 14-ஆவது சுலோகத்தில் சூரியன் சந்திரன் அல்லது குரு இவர்களில் யாராகிலும் ஒருவர் சந்திரனுடைய நவாம்சாதிபதியாகி இவர்களில் ஒருவர் நீசராசிப் பகைராசியில் அல்லது தங்களுடைய ராசியில் இருந்தால் ஜாதகர் பிறரிடத்தில் வேலை செய்வார் என்று சொல்லி இருக்கிறது. இங்குச் சந்திரனுடைய நவாம்சாதிபதியாகிய சந்திரனே இராசிச்சக்கரத்தில் விருச்சி

கத்தில் நீசமடைந்திருக்கிறார். ஆகையால் இந்தச் சுலோகத்திற் சொல்லிய பிரகாரம் ஜாதகர் ஒருவரிடத்தில் வேலை செய்யும் அமைப்பு இருக்கிறது. ஜாதகருக்கு வயது வருஷம் 55-0-0 முதல் வருஷம் 56-0-0 வரையிலும் சுக்கிர தசையில் குரு புக்தி நடக்கின்றது. ஏழிற்குடையவர் பன்னிரண்டிற்குடையவர் இவர்களுடைய தசாபுக்தி காலங்களிலும் இவருடன் சம்மந்தப்பட்டவர் களின் தசாபுக்திகளிலும் வேலையை விட்டுப் பென்ஷனோ சன்மானமோ ஜாதகர் அடைவார் என்று ஜோதிட சாஸ்திரத்தில் சொல்லியிருக்கின்றது. இங்கு சுக்கிரன் பன்னிரண்டிற்குடைய புதனுடன்கூடி ஏழிற்குடைய சனியால் பார்க்கப்பட்டிருக்கின்றார். குருவினுடைய வீடாகிய மீனத்தையும் சுக்கிர னுடைய வீடாகிய துலாத்தையும் சனி பார்க்கின்றார். ஆகையால் சுக்கிரதசை யில் குருபுக்தியில் சன்மானம்பெறும் அமைப்பு இருக்கின்றது.

39. ஐந்தாண்டில் வேறு இல்லம் அணுகிடும் பால னுக்குத்
தந்தைநாள் பூமி மேலாய்ச் சேர்ப்பனும் சோலை கூவல்
இந்தவன் தேடும் செம்பொ னியம்புவோ மையாயிரம்பொன்
சுந்தரன் தனக்குச் சொன்னோம் தோகையே கேட்டி டாயே.

39. ஜாதகருக்கு ஐந்து வயதில் இன்னொரு வீடு கிடைக்கும். இவர் தன்னுடைய தகப்பனார் சம்பாதித்த பூமியைவிட அதிகமான பூமியைச் சம்பாதிப்பார். தோப்புகளையும் கிணறுகளையும் உடையவராவர். இவர் சம்பா திக்கின்ற தனம் ஐயாயிரம் பொன் ஆகும் என்று சொல்லுகிறோம். இந்த ஜாதகருக்கு இப்பலாபலன்களை நாங்கள் சொல்லுகிறோம். பார்வதி யம்மையே! கேட்பீராக.

40. இருபது ஒன்ப தாண்டி லியம்புவோம் தந்தை கண்டம்
வரும் ஜன்மம் தென்பால் நாகூர் மருவுவா னிக்குலத்தில்
பெருமையாய்த் தனமும் சேர்த்துப் பிரபல முடனே வாழ்வன்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

40. ஜாதகருக்கு இருபத்தொன்பதாவது வயதில் † இவருடைய தகப்பனார் இறந்து விடுவார். தகப்பனார் பின் ஜன்மத்தில் தெற்குத் திக்கி லுள்ள நாகூரில் இந்த ஜன்மத்திற் பிறந்த ஜாதியிலேயே பிறந்து பெருமையுடன் வாழ்ந்து செல்வத்தை அடைந்து அதிக கீர்த்தியையும் அடைவார். அருமையான வேதங்களின் முடிவு என்ற உபநிஷத்துக்களில் விளங்குகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

† குறிப்பு.—பிதுர் மாரக விஷயம்—ஜாதகருக்கு வயது வருஷம் 28-0-0 முதல் வருஷம் 29-0-0 வரையிலும் புததசையில் சந்திர புக்தி நடக்கின்றது. பிதுர் லக்கினம் ஒன்பதாவது பாவமாகிய மீனம் ஆகும். மீனலக்கினத் திற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகை தாண்டவ மாலை சந்திரகாவியம் இவைகள் ரீதியாய் சனி புதன் சுக்கிரன் இவர்கள் மாரகராகின்றார்கள். புதன் மீனத்திற்கு மாரகஸ்தான மாகிய ஏழிற்குடையவராய்ப் பிதுர் காரகனாகிய சூரியனுடன் கூடி இருக்கின்றார். மேலும் பிதாவுக்கு அஷ்ட மாதிபதியாகிய சுக்கிரனுடன் கூடி இருக்கின்றார். ஆகையால் துய்யகேரளம்,

எட்டாம்பாவம், 20-ஆவது பாடல் பிரகாரம் அஷ்டமாதிபதியுடன் கூடிய புதன் பிதாவுக்கு மாரகாதிபதியாகின்றூர். சந்திரன் நீச்சமாகி பிதுர் லக்கிஞதி பதியாகிய குருவினுடைய காலாகிய விசாகத்தில் குருவிற்கு எட்டில் இருப்பதால் இவருக்குப் பிதாவை மாரகஞ் செய்ய அதிகாரம் வருகிறது.

41. முப்பது ஒன்ப தாண்டில் விளம்புவோ மன்னே கண்டம்
செப்புவோம் ஜாதகர்க்குச் சிறுகண்டம் ஒன்று ரண்டு
ஒப்புடன் ஆண்டில் நேரும் உயர்குரு தசமம் நிற்கத்
தப்பிதம் நிவிர்த்தி யாகிச் சாற்றுவோ மறுபா னேழும்,

41. ஜாதகருக்கு முப்பத் தொன்பதாவது வயதில் இவருடைய தாயார் இறந்து விடுவாள் என்று சொல்லுகிறேம். மேலும் ஜாதகருக்குச் சிறிய கண்டங்கள் ஒராவது இரண்டாவது வயதுகளில் உண்டாகும், ஆனல் குரு பத்தில் இருப்பதால் குற்றங்களும் தோஷங்களும் விலகி ஜாதகர் அறுபத்தேழுவயது வரையிலும் ஜீவித்து இருப்பார் என்று சொல்லுகிறேம்.

42. கும்பமாதத்தி லேதான் குழவி னுடலம் வாடும்
பின்ஜன்மம் அவ்வூர் தன்னில் பிறப்பனும் பௌத்திர ஞக
அன்னவன் ஜனன காலம் அந்தணன் தசை யிருப்புச்
சொன்னனே ஆண்டு ஒன்றும் திங்களும் ஆறுமாகும்

42. ஜாதகர் அறுபத்தேழாவது வயதில் மாசி † மாதத்தில் இறந்து இவருடைய தேகம் மறைந்து போய் விடும். இவர் மறுஜன்மத்தில் அதே ஊரில் பௌத்த மதத்திற் பேரஞகப் பிறப்பார். இவருடைய ஜனன காலத்தில் குரு தசையில் இருப்பு ஒரு வருஷமும் ஆறு மாதமும் என்று சொல்லுகின்றேம்.

† **குறிப்பு.—ஆயுள் விஷயம்**—ஜாதகருக்கு வயது (கும்பமாதமாகிய மாசி மாதம் முடியும் வரையிலும்) அறுபத்தேழாவது வயது நடக்கும் போது சுமார் 66 வருஷமும் எட்டுமாதமும் ஆகிறது. அப்போது சூரிய தசையில் குருபுக்தி நடக்கின்றது. லக்கிஞதிபதியாகிய சந்திரன் வளர் பிறையாகி ஐந்தில் இருக்கின்றூர். விருச்சிகம் சந்திரனுக்கு நீசவீடாகும் அம்சையில் ஆட்சியாய் இருக்கின்றூர். பலதீபிகையில் ஏழாவது அத்தியாயத்தில் நீசபங்கத்தைப் பற்றிப் பல விதிகள் சொல்லப்பட்டிருப்பதில் 29-ஆவது சுலோகம் பிரகாரம் சந்திரன் உச்சமாகும் ராசியாகிய ரிஷபத்திற்குரிய சுக்கிரன் லக்கின கேந்திரத்தில் இருப்பதால் நீசபங்க மேற்படுகிறது, இது யோக விஷயமான போதிலும் சந்திரன் ஒருவாராகக் கொஞ்சம் பலத்துடன் இருப்பதாகக் கருதக்கூடும். நைசர்க்கிக சுபர்களாகிய குருவும் சுக்கிரனும் லக்கின கேந்திரத்தில் இருக்கின்றூர்கள். புதனும் லக்கின கேந்திரத்தில் இருக்கின்றூர். லக்கிஞதிபதியாகிய சந்திரனும் கோணத்திலிருக்கின்றூர். இவைகள் ஆயுளுக்கு அனுக்கூல மானவை. எட்டிற்குடையவரான சனி ஏழில் இருப்பதால், "அட்டமன் நாலு பத்து ஏழ் வயதுமே அற்பமாகும்"

என்ற விதிப்படி ஆயுளுக்குப் பிரதிகூலமான போதிலும், இப்படிப்பட்ட 4, 7, 10-இல் உள்ள அஷ்டமாதிபதியை 5, 9-க்குடையவர் பார்த்தால் ஆயுளுக்கு அநுகூலமானது என்று சொல்லி இருப்பதாலும், 5-க்குடைய அங்காரகன் சனியைப் பார்ப்பது ஆயுளுக்கு அநுகூலமானது ஆகும். கேது எட்டிலிருப்பது ஆயுளுக்குப் பிரதிகூலமானது. சூரியனுக்கு ஐந்தில் சந்திரன் இருந்தால் ஆயுள் எழுபத்தெட்டு என்று புலிப்பாணி ஜோதிடத்தில் 102-வது பாடலில் சொல்லி இருக்கிறது. மணிகண்டகேரளம் அரிஷ்டகாண்டம் 18-ஆவது பாடல், பிரதிஅரிஷ்டகாண்டம் 40-ஆவது பாடல் பிரகாரமும் மேற் சொல்லிய காரணங்களாலும் ஜாதகருக்குப் பூர்ணயுள் உண்டு. பராசர ஹோரை சில பதிப்புப் பிரகாரமும் ஜாதகசந்திரிகைபிரகாரமும் புதன் மாரகாதிபதி ஆகின்றூர். குரு ஆறுக்குடையவராகிச் சந்திரனுக்கு ஆறில் அசுவினியில் கேது காலில் இருக்கின்றூர். குருவிற்குத் தன்புக்தியில் மாரகஞ் செய்ய அதிகாரம் இருக்கிறது. ஆனல் சனிக்குத் தன் புக்தியில் மாரகஞ் செய்ய அதிக அதிகாரம் இருக்கின்றது.

43. பலவிதப் பிணியு முண்டு பந்துவில் சூத முண்டு
நிலமது பலிதம் நஷ்டம் நினைத்தகா ரியங்க ளாகும்
குலவிடும் வழக்குக் கொஞ்சம் கூறினேம் பூர்வ பாகம்
மலையிறை மகளே யாங்கள் வழுத்தின மொழிகுன் றுது.

43. இந்தக் காலத்தில் ஜாதகருக்குப் பலவிதமான நோய்கள் வரும். பந்துக்களில் சூதகங்கள் நேரிடும். பூமிகள் நல்ல பலனைக் கொடாமல் நஷ்டத்தை உண்டு பண்ணும். நினைத்த காரியங்கள் (தகப்பனுருக்குக்) கூடி வரும். வியாஜ்யம் கொஞ்சம் வந்து நேரிடும். இதுவரையிலும் பூர்வ பாகமாகிய முதல் பாகத்தைச் சொன்னேம். இமயமலைக்கு அரசனகிய பர்வ ராஜனுடைய மகளாகிய பார்வதியம்மையே! நாங்கள் இதுவரையிலும் சொல்லி வந்த வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும்.

# ஜாதகம் 71

1. சந்திரன் சனியும் தேளில்[1] சல்லியன்[2] பருதி[3] வீணை[4]
மந்திரி[5] மேட மாக மங்கலன்[6] சீய[7] மாகப்
புந்தியும் [8]நந்தி யாகப் [9]பிலராகு கடகம் புக்கப்
பிந்திய இரியு[10]மானில் [11]பேசுவோம் கடகம் ஜன்மம்.

| | | | |
|---|---|---|---|
| | குரு | புதன் | சூரியன் சுக்கிரன் |
| | இராசி | | லக்கனம் ராகு |
| கேது | சக்கரம் | | அங்காரகன் |
| | சந்திரன் சனி | | |

கேட்டை 4-ஆம் பாதம். புத தசை சுமார் ௵ 2.

1. (இ-ள்.) சந்திரனும் சனியும் விருச்சிகத்திலும், சுக்கிரனும் சூரியனும் மிதுனத்திலும், குரு மேஷத்திலும், அங்காரகன் சிம்மத்திலும், புதன் ரிஷபத்திலும் பலமான ராகு கடகத்திலும், கேது மகரத்திலும் இருந்தால் ஜன்ம லக்கினம் கடகம் என்று சொல்லுவோம். (எ-று.)

குறிப்பு.—இந்த ராசிச்சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்த முடைய தாகும் :—மேஷத்தில் சுக்கிரனும், மிதுனத்தில் கேதுவும், சிம்மத்தில் புதனும், துலாத்தில் குருவும் அங்காரகனும், விருச்சிகத்தில் சனியும், தனுசில் சூரியனும், புதனும் ராகுவும், மீனத்தில் சந்திரனும் ஆகும்.

2. வந்தசேய் ஆணும் ஜன்மம் வந்தஇல் கீழ்மேல் வீதி
தென்வாடை கீழ்ப்பால் மாயோன் தேவிமா காளி தங்கும்
விந்தையாய் அனுமான் தென்கீழ் விளம்புவோம் நதியும் தெற்
[கில்
சந்ததம் பலதே வாசம் சாற்றிய பேரூர் தன்னில்;

---

[1] விருச்சிகம் [2] சுக்கிரன் [3] சூரியன்
[4] மிதுனம் [5] குரு [6] அங்காரகன்
[7] சிம்மம் [8] புதன் [9] ரிஷபம்
[10] கேது [11] மகரம்

2. பிறந்த குழந்தை ஆண் குழந்தை ஆகும் பிறந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் தென்வாடையில் இருக்கும். கிழக்குத் திக்கில் மகா விஷ்ணுவின் கோயில் இருக்கும். காளியின் கோயிலும் இருக்கும். தென் கிழக்குத்திக்கில் ஆச்சரியமான அனுமார் கோயிலும் இருக்கும். தெற்குத் திக்கில் ஒரு நதி ஓடும். பல தேசத்தவர்கள் வாசஞ் செய்கின்ற ஒரு பெரிய பட்டணத்தில் ;

3. உதிப்பனுமவனே யம்மா உறும்தந்தை தாயின் யோகம்
மதித்திட அவனின் யோகம் வரும்துணை களத்திர புத்திரர்
சதியிலா முன்பின் ஜன்மம் சாற்றுவோம் நவக் கோ ளாய்ந்து
அதிதியை ஆத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்

3. ஜாதகர் ஜனன மாவார். பார்வதியம்மையே! தாயார் தகப்பனுர் இவர்களுடைய யோகங்களையும் ஜாதகருடைய யோகம், சகோதரர்கள் மனைவி சந்ததிகள் ஆகிய இவர்களின் யோகங்களையும், முன் ஜன்மம் பின்ஜன்மம் ஆகிய இவைகள் யெல்லாவற்றையும் ஒன்பது கிரகங்களைப் பரிசீலனையும் ஆராய்ச்சியும் செய்து சொல்லுவோம். பரதேசிகளைக் காப்பாற்றுகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

4. தந்தையின் குணத்தைச் சொல்வேன் சன்மார்க்கன் பொறுமை [சாலி
சிந்தையு மற்பனுவன் சீலவா னிருநி றந்தான்
தன்தன மதிகம் சேர்ப்பன் தரணிக ளதிகம் சேர்ப்பன்
நிந்தையு மில்லா னுகும் நேமியில் செட்டுச் செய்வன்.

4. ஜாதகருடைய தகப்பனுரின் குணுதிசயங்களைப் பற்றிச்சொல்லுகிறேன். நல்ல குணத்தையும் நடவடிக்கையையும் உடையவர். சாந்தமானவர். ரகசியத்தை உடைய மனத்தையுடையவர். நல்ல ஒழுக்க முடையவர். இரண்டு நிறங்கள் கலந்துள்ள மாநிறமுள்ள தேகத்தை யுடையவர். தானே பணத்தை அதிகமாகச் சம்பாதித்துச் சேர்த்துவைப்பார். அதிகமான பூமிகளையும் சேர்த்துவைப்பார். கெட்டபெயர் நிந்தனை இகழ்ச்சி இவைகளை அடையாதவராகும். பூமியில் வியாபாரஞ் செய்வார்.

5. உரோமங்க ளதிக மில்லான் நுவனுப தேசம் கொள்வன்
சேமமாம் குடும்பி யாவன் செய்நன்றி மறவா னுகும்
தாமத குணத்தா னுகும் சாந்தமுன் கோப முண்டு
பூமிகள் விருத்தி செய்வன் பிதுராஸ்தி கொஞ்ச முள்ளான்.

5. ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய தேகத்தில் அதிகமாக மயிரில்லாதவர். உபதேசஞ் செய்து கொள்வார். க்ஷேமமான சுகமான குடும்பஸ்தராவார். பிறர் செய்த நன்றியை மறவாதவராகும். நிதானமான குணத்தை யுடையவர். முன் கோபமுண்டு, ஆனல் அஃது உடனே சாந்தமாகிவிடும். பூமிகளைப் பயிரிட்டு விருத்தியாக்குவார். கொஞ்சமான தந்தையின் சொத்தை யுடையவர்.

6. ஆதியில் துணைவர் வேறாய் அனுகிடு மொருவர் தானும்
நீதியாய்த் தன்னோ டொற்று நேமியில் செட்டுச் செய்வன்
போதன முடையா னாகும் புதுமனை இருகம் செய்வன்
ஆதியில் வறுமை கொஞ்சம் அனுகிடு மென்று சொல்லே.

6. முதலில் தகப்பனாருடைய சகோதரர்கள் வேறாக ஜீவிப்பார்கள். ஒரு சகோதரர் இவருடன் ஒற்றுமையாயிருந்து பூமியில் வியாபாரஞ் செய்வார். அறிவையும் செல்வத்தையு முடையவர். புதிய மனையில் ஒரு வீட்டைக் கட்டுவார். முதலில் இளம்பிராயத்தில் கஷ்டங்களும் தரித்திரமும் சம்பவிக்கும் என்று சொல்ல வேண்டும்.

7. பிந்திநாள் யோகம் வாய்க்கும் புகலுமிக் குணத்தா னுக்குத்
தன்துணை ஆண்பா லைந்து தையலர் ஒருத்தி யாகும்
பின்னையும் சிலநாள் தன்னில் போய்விடும் சிலது என்றோம்
சொன்ன இக் குணத்தா னுக்குச் சுந்தர னுதிப்பா னாமே.

7. தகப்பனாருக்குப் பிந்திய வயதில் யோகம் வந்து சம்பவிக்கும். இப்படிப்பட்ட குணங்களை யுடையவர்களுக்குக் கூடப் பிறந்தவர்கள் ஐந்து ஆண் சகோதரர்களும், ஒரு பெண் சகோதரியும் ஆகும். இவர்களில் சிலர் கொஞ்சகாலம் கழித்து இறந்து விடுவார்கள் என்று சொல்லுகிறோம். இங்குச் சொல்லப்பட்ட குணங்களையுடைய தகப்பனாருக்கு இந்த ஜாதகர் பிறப்பார்.

8. பாலக னிரு சிகப்பன் பற்றிய சமவ ளர்த்திச்
சீலவான் அன்ன மீவன் ஜனஉப காரி யாகும்
ஞாலங்கள் விருத்தி செய்வன் நற்கல்வி விவேகி யாவன்
கோலமாம் தைரி யத்தன் குஞ்சர நடையு மாவன்.

8. ஜாதகர் இரண்டு நிறங்கள் கலந்துள்ள மாநிறமுள்ள தேகத்தை யுடையவர். சமமான நடுத்தரமான வளர்ச்சியை யுடைய தேக முள்ளவர். நல்லொழுக்கமும் நல்ல நடவடிக்கையு முடையவர். ஜனங்களுக்குச் சாப்பாடு போடுவார். ஜனங்களுக்கு உதவி செய்வார். பூமிகளைப் பயிரிட்டு விருத்தியாக்குவார். நல்ல படிப்புள்ளவர். புத்திசாலியானவர். தைரியமுள்ளவர். யானையைப் போன்ற கம்பீரமான நடையை உடையவர்.

9. சித்திர வீடு முள்ளான் சேயிழைப் பிரிய னாகும்
உத்தம னாகி வாழ்வன் ஓங்கிய செல்வ முள்ளான்
நித்திரை கொஞ்ச முள்ளான் நீர்தனில் தோய வல்லன்
ஜனித்தநாள் முதலாமாகக் குலவிடும் யோகம் என்றோம்.

9. ஜாதகர் சித்திரங்கள் அமைந்த அழகான வீட்டையுடையவர். மனைவியின்மேல் ஆசையுடையவர். நல்ல உத்தமான குணமுடையவராக விருந்து வாழ்வார். அதிகரிக்கும்படியான அதிக செல்வ முடையவர். கொஞ்சமாகத் தூங்குபவர். நல்ல க்ஷேத்திரங்களிலுள்ள தீர்த்தங்களில் நீராடுவார். பிறந்தகாலம் முதற்கொண்டு இவர் இறக்கும் வரையிலும் இவருக்கு யோகம் உண்டாகும்.

10. வறுமைக ளில்லா ளாகும் வாக்குகள் தவறு னென்றோம்
திருமகள் வாச முள்ளான் சேர்ப்பனும் காலாள்தானும்
மறையவ ருறவு கொள்வன் மாலின்மேல் பத்தி யாவன்
பெருமையாய்க் குடும்பி யென்றோம் பேசுவோம் துணைவர் தம்மை.

10. ஜாதகர் கஷ்டங்களும் தரித்திரமும் இல்லாதவராவர். தான் சொன்ன வார்த்தைகளைத் தவறாமல் காப்பாற்றுவார் என்று சொல்லு கிறோம். இலக்ஷ்மீ தன்னுடைய வீட்டில் குடி இருந்து வருவாள். கால்நடைக்காரர்களை வேலையாட்களாக வைத்திருப்பார். பிராமணர் களுடைய சினேகிதத்தை யுடையவர். மகாவிஷ்ணுவின்மேல் பக்தியுடைய வர். மேன்மையும் பெருமையும் உடைய குடும்பஸ்தராவர் என்று சொல்லு கிறோம். இவருடைய சகோதரர்களைப்பற்றி இனிமேல் சொல்லுகிறோம்.

11. ஆண்துணை யிரண்டு மாகும் அக்கன்னி ஒன்றே யாகும்
பூணுவோம் மூன்றும் தீர்க்கம் போயிவிடு மிரண்டு என்றோம்
காணவே மூத்தோன் சேதி கழறுவோம் மாஞ்சி வப்பன்.
தோன்றின முதலா மாகத் தொடர்ந்திடும் யோகம் தானே.

11. ஜாதகருடன் பிறந்த ஆண் சகோதரர்கள் இருவரும் பெண் சகோதரம் ஒருத்தியு மாக இம்மூவரும் நீண்ட ஆயுளை உடையவர் கள் ஆவார்கள். இவர்களில்லாமல் இரண்டு சகோதரர்கள் இறந்து விடு வார்கள் என்று சொல்லுகிறோம். இவருடைய மூத்த சகோதரருடைய விஷயங்களைச் சொல்லுகின்றோம். இவர் மாநிறமுள்ளவர். இவர் பிறந்த நாள் முதற் கொண்டு இவருக்கு யோகம் தொடர்ந்தாற் போல உண்டாகும்.

12. நன்னடை மிருது வார்த்தை நற்றந்தை தாய்மேல் இஷ்டம்
பன்னியே பேச வல்லான் பாரினில் கீர்த்தி யேற்பன்
அன்னவன் தனக்குப் பாரி அனுகிடு மொன்றே யாகும்
தன்னிலே சுதர்ஆண் ஒன்று சாற்றுவோம் கன்னி ரண்டு.

12. இவர் நல்ல நடவடிக்கை யுடையவர். மெதுவாகவும் இனி மையாகவும் வார்த்தைகளைச் சொல்லுவார். இவருக்குத் தாயார் தகப்பனர் இவர்களின்மேல் ஆசையுண்டு, சாமர்த்தியமாகவும் சுருக்கமாகவும் பேசும் திறமை உள்ளவர். பூமியில் புகழும் பெருமையும் அடைவார். இவருக்கு ஒரே ஒரு மனைவி தான் நேரிடும். இவருக்கு ஓர் ஆண் குழந்தையும் பெண் குழந்தைகள் இரண்டும் உண்டென்று சொல்லுகிறோம்.

13. இருசுதர் தோன்றி யேதான் யமபதம் சேரு வானும்
இருசுதர் பெண்பாலாக எய்திடும் சுகமாயாக
மறுதுணை யிவன் பின் ளாக வந்தவ னிவனின் சேதி.
உறைகிறே மிருசி வப்பன் உள்மனம் கபடு கொஞ்சம்.

13. இவர் இரண்டு குழந்தைகள் பிறந்த பிறகு இறந்து எமனு டைய நாட்டையும் பதத்தையும் அடைவார். இந்த இரண்டு குழந்தை களும் பெண்குழந்தைகளாகவும் சுகமாகவும் பிறக்கும். இன்றொரு சகோ

தரன் ஜாதகருக்கு இளைய சகோதரனாகும். இவருடைய விஷயங்களைச் சொல்லுகிறோம். இவர் இரண்டு நிறங்கள் கலந்த மாநிறமுள்ள தேகத்தையுடையவர். இவருடைய மனத்தின் உள்ளே கொஞ்சம் கபடமும் வஞ்சனையும் உண்டு.

14. கல்விமான் ஊகை வானும் கண்முகம் வசிய முள்ளான்
நல்லவன் நல்ல வர்க்கு நலமறிந் துரைக்க வல்லன்
சொல்லதைக் காப்பா னாகும் சோம்பலும் கொஞ்ச முள்ளான்
புல்லியர் நேசம் கொள்ளான் புகலுமுன் கோபி யாவன்.

14. இவர் வித்தையுடையவர். புத்திசாலியானவர். இவருடைய கண்களும் முகமும் பிறரை வசியப்படுத்தக் கூடிய கவர்ச்சியோடு கூடிய தன்மையுடையனவாகும். இவர் நல்லவர்களுக்கு நல்லவராக நடந்து கொள்ளுவார். நல்லதைத் தெரிந்துகொண்டு பேசுந்திறமை உள்ளவர். தான் சொன்ன வார்த்தைகளைத் தவறிடாமல் காப்பாற்றுவார். கொஞ்சம் சோம்பலான குணத்தையுடையவர். தாழ்ந்தவர்களுடைய சினேகத்தை அடையமாட்டார். பேசுவதற்கு முன்னே கோபத்தை உடையவராவர். அஃதாவது முன்கோபம் உடையவர் என்று சொல்லுகிறோம்.

15. தந்தைநாள் பூமி தன்னைத் தானவன் விருத்தி செய்வன்
சந்ததம் வணிப மோங்கும் சகலரும் வசியம் கொள்வன்
கந்தன்மேல் பக்தி கொள்வன் காலாள்கள் உடைய னாகும்
விந்தையாய்ப் பேசவல்லன் மெல்லியர் மோக வானும்.

15. இவர் தன்னுடைய தகப்பனுருடைய காலத்திய நிலங்களைப் பயிரிட்டு விருத்தியாக்குவார். எப்போதும் வியாபாரம் ஓங்கிவளர்ந்துவரும். எல்லோரையும் தன் வசமாக்கிக் கொள்ளுவார். முருகக்கடவுளின்மேல் பக்தி உடையவர். கால்நடையாட்களை வேலைக்காரர்களாக உடையவர். ஆச்சரியகரமாய்ப் பேசுந்திறமையுடையவர். ஸ்திரீகளின்மேல் காம ஆசை உடையவர்.

16. மனைவியு மொன்றே யாகும் மைந்தர்கள் ஆண்பால் ரண்டு
கனமுள பெண்பா லவ்வாறு கழறுவோம் தீர்க்க மாகப்
பிழையாகும் நான்கு என்றோம் பிரியாமல் ஒன்றாய் வாழ்வன்
தனயன்சொல் தட்டா னாகும் சந்திரன் பிறைபோல் யோகம்.

16. இவருக்கு ஒரே மனைவிதான் உண்டு. குழந்தைகள் இரண்டு ஆண் குழந்தைகளும் இரண்டு பெண்குழந்தைகளும் நீண்ட ஆயுளை உடைய வர்களாய் இருப்பார்கள் என்று சொல்லுகிறோம். நான்கு குழந்தைகள் இறந்துவிடும் என்று சொல்லுகிறோம். இவர் பாகம் பிரித்துக் கொள்ளாமல் ஒன்றாக ஏககுடும்பமாக விருந்து வாழ்வார். அண்ணன் பிள்ளை களுடைய வார்த்தைகளுக்குத் தடை ஒன்றுஞ் சொல்லமாட்டார். இவருக்கு வளர்பிறை சந்திரனைப் போல யோகம் விருத்தியாகிக் கொண்டுவரும்.

17. பெருகிடும் சுகமாய் வாழ்வன் பேசுவோ மணத்தின் காலம்
இருபது ஒன்று ஆண்டு எய்திடு முள்ளூர் கீழ்ப்பால்
வரும்பாரி சிவந்த மேனி மாதுவும் மெலிந்த தேகி
மருமமும் கொஞ்ச முள்ளாள் அவள்பித்தச் சூடாம் தேகி.

17. விருத்தியாகிக் கொண்டுவரும். சுகமாகவும் சௌக்கிய மாகவும் வாழ்வார். இனிமேல் ஜாதகருடைய விவாக காலத்தைப் பற்றிச் சொல்லுகிறோம். இருபத்தோராவது வயதில் † விவாகம் நடக்கும். மனைவி உள்ளூரிலேயே கிழக்குத்திக்கிலிருந்து வந்து சேருவாள். இவள் சிவப்பு நிறமுள்ள தேகத்தையுடையவள். மெல்லிய ஒல்லிய தேகத்தையுடைவள். கொஞ்சம் இரகசியமுள்ளவள். பித்தச்சூடான தேகத்தை உடையவள் ஆவள்.

† குறிப்பு.—விவாக விஷயம்—ஜாதகருக்கு வயது ஷ 20-0-0 முதல் ஷ 21-0-0 முடியும் வரையிலும் சுக்கிரதசையில் குருபுக்தி நடக்கின்றது. போகஸ்தானமாகிய நான்காவது வீட்டிற்குச் சுக்கிரன் அதிபதியாகி குடும் பாதிபதியாகிய சூரியனுடன் கூடியிருக்கின்றார். குரு ஒன்பதிற்குடையவராகி நான்காவது பாவத்தைப் பார்க்கின்றார். ஆகையால் சுக்கிரதசையில் குரு புக்தியில் விவாகம் நடக்க அமைப்பு இருக்கின்றது.

18. சோம்பலும் கொஞ்ச முண்டு துணைவிக ளிருவ ராகும்
தாம்பூலப் பிரிய முள்ளாள் ஜனபந்து புகழ வாழ்வள்
தேம்பிய மனத்தா ளாகும் சிறியோர்க்கு அன்ன மீவள்
பாம்புபோல் குண முள்ளாளாம் பாவைக்கு வயது தீர்க்கம்.

18. மனைவி கொஞ்சம் சோம்பலான குணத்தை உடையவள். இவளுடன் கூடப்பிறந்த சகோதரிகள் இருவராகும். வெற்றிலைபாக்கின் மேல் அதிக ஆசையுடையவள். தன்னுடைய ஜனங்களும் பந்துக்களும் இவளைப் போற்றும்படியான நிலையிலிருந்து வாழ்வாள். இளகிய இரக்க முள்ள மனத்தை உடையவள். ஏழைகளுக்கும் சிறியவர்களுக்கும் சாப்பாடு போடுவாள். பாம்பைப்போல குணத்தையுள்ளவள் இவளுக்கு நீண்ட ஆயுளுண்டு.

19. அத்தரி சொல்லும் போது அறைகிறார் புயண்டர் தாமும்
சுத்தமாய்த் தாரம் ரண்டு செப்பலா மிவனுக் கேதான்
சத்திக ளிரண்டு என்று சாற்றினீர் காரணம் சொல்
குத்தமா யேழில் கேது குலவியே சனியும் பார்க்க.

19 இவ்விதமாக அத்திரிமகாரிஷி அவர்கள் சொல்லும்போது புஜண்டமகரிஷி சொல்லுகிறார். ஜாதகருக்கு இரண்டுதாரம் என்று உண்மையாய்ச் சொல்லலாம். மனைவிகள் இரண்டுபேர் என்று நீர் சொன்னீர். அதற்குக் காரணங்களைச் சொல்லுவீர் என்று புஜண்ட மகரிஷியைக் கேட்க, ஏழாவது பாவத்தில் கேது இருக்கின்ற தோஷத் தாலும், இவரைச் சனியும் பார்ப்பதாலும்;

20. உரைத்தனம் தாரம் ரண்டு உயர்குறு முனிவர் சொல்வார்
நிறைந்திடும் குருவும் பத்தில் நேர்த்தியாய் நாலைப் பார்க்கச்
சிறந்திடு மனைவி யொன்று ஜயமுனி கூறு கின்றார்
விரத்திலி ரண்டோன் நாலோன் இருவரும் விரயம் புக்க. ;

20. இரண்டுதாரம் என்று சொல்லுகிறோம் என்று புஜண்டமக ரிஷி சொல்லுகிறார். குரு பத்தாவது பாவத்தில் இருந்து கொண்டு நான் காவது பாவத்தைப் பார்ப்பதால் ஜாதகருக்கு மேன்மையான ஒரே ஒரு மனைவி உண்டு. இவ்விதமாக அகஸ்திய மகரிஷி சொல்லவே, ஜயமுனி சொல்லு கின்றார். இரண்டிற்குடையவரும் நான்கிற்குடையவரும் விரய மடைந்து பன்னிரண்டில் இருப்பதால்;

21. இருமனை அனுது மென்று எண்ணங்காண என்று சொல்லத்
திருமுக மாது சொல்வாள் திருகுகள் வேண்டாமையா
வருமனை யொன்றே யாகும் அவளோந்தி போலாய் வாழ்வள்
உறைகுவீர் புத்திர பாவம் உரைக்கிறார் புத்திரர் தம்மை.

21 இரண்டு மனைவிமார்கள் நேரிடுவார்கள் என்பது என் னுடைய அபிப்பிராயமாகும் என்று ஜயமுனிவர் சொல்ல பார்வதியம்மை சொல்லுகின்றார். வஞ்சனை கள்ளம் கபடு கோபம் இவைகள் ஒன்றும் தேவையில்லை. ஜாதகருக்கு ஒரே ஒரு மனைவிதான் நேரிடும். ஆனால் அவள் ஒளவையைப்போல் வாழ்வாள். இவ்விதமாகப் பார்வதியம்மையார் சொல்லிவிட்டுப் புத்திரபாவத்தைப் பற்றிக்கேட்க பதில் சொல்லுகின்றார்.

22. புத்திரர் விருத்தி தன்னைப் புகலுவோமா ண்பா லொன்று
சித்தமாய்ப் பெண்பால் ரண்டு செப்புவோம் தீர்க்க மாக
இத்தகை முனிவர் கூற இயம்புவார் பராசர் தாமும்
வித்தகன் தனக்குப் புத்திரர் விளங்காது என்று சொன்னோம்.

22. புத்திரவிருத்தியைப் பற்றிச் சொல்லுகிறோம். ஓர் ஆண் குழந்தையும் இரண்டு பெண்குழந்தைகளும் நீண்ட ஆயுளை உடையவர்கள் என்று உறுதியாய்ச் சொல்லுகிறோம். இவ்விதமாக முனிவர் சொல்லவே பராசரர் மறுத்துச் சொல்லுகின்றார். ஜாதகருக்குப் புத்திரர்கள் விருத்தி யாக மாட்டார்கள் என்று சொல்லுகின்றார்.

23. காரணம் யாது என்ன காரியும்[1] மதியு[2] மஞ்சில்
தீரமா யிருப்ப தாலே தோன்றுது சுதர்கள் தாமும்
மாறியே புயண்டர் சொல்வார் மதிமகன்[3] மதியை பார்க்கப்
பாரிய குருவும் சேயை[4] பார்த்ததால் சுதராண் ஒன்று ;

23. காரணங்களைச் சொல்லுவீர் என்று கேட்க, சனியும் சந்திரனும் ஐந்தாவது பாவத்தில் வலுவாய் இருப்பதால் குழந்தைகள் பிறக்கா. இவ்விதமாகச் சொல்ல புஜண்டமகரிஷி மறுத்துச் சொல்லுகிறார். புதன் சந்திரனைப்பார்ப்பதாலும், குரு அங்காரகனைப்பார்ப்பதாலும் ஓர் ஆண் குழந்தை ;

---

[1] சனி [2] சந்திரன் [3] புதன் [4] அங்காரகன்

24. தோன்றிடும் முப்பான் மேலே ஜயமுனி கூறு கின்றார்
அறைந்ததோர் புதனும் ஐந்தை அணுகியே பார்த்த தாலே
சார்ந்திடு மாயோ னாலே ஜனித்திடும் சுதர்களென்றோம்
ஆன்றவன்முன்னூழ்த் தோஷம் அணுகிற்றுச் சுதர்தோஷங்கள்.

24. ஜாதகருக்கு முப்பதுவயதிற்கு மேலே உண்டாகும். ஜய முனிவர் சொல்லுகின்றார். புதன் ஐந்தாவது வீட்டைப் பார்த்ததாலே மகா விஷ்ணுவின் கிருபையாலே குழந்தைகள் பிறக்கும் என்று சொல்லுகிறோம். ஜாதகருக்கு முன் ஜன்மத்திய வினையாலும் பாவத்தாலும் புத்திர தோஷங்கள் ஏற்பட்டிருக்கின்றன.

25. முன்வினை சொல்லு மென்ன மொழிகிறார் முனிவர் தாமும்
அன்னவன் கடையூர் தன்னில் அருகர்தம் குலமு தித்து
உன்னத மனைவி மைந்தர் உயர்வான பூமி யுண்டாய்த்
தன்னிலே வாழுந் நாளில் சாற்றுவோ மூழி தானே.

25. ஜாதகருடைய முன் ஜன்மத்திய வினைகளையும் பாவங்களை யும் சொல்லுவீர் என்று கேட்க, முனிவரும் சொல்லுகின்றார். ஜாதகர் முன் ஜன்மத்தில் திருக்கடையூரில் சமணர்குலத்திற் பிறந்து மேன்மை யான மனைவி, பிள்ளைகள், உயர்ந்த நிலங்கள் இவைகளை உடையவராகி வாழ்கின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்த பாவத்தைச் சொல்லு கிறோம்

குறிப்பு :—மீதி பாடல்கள் கிடைக்கவில்லை.

# ஜாதகம் 72

1, மதி[1]மேடம் குருவும் மேரு[2] மழைக்கோளுங்[3] கேது சீயம்[4]
புதன்ரவி[5] வளையலாகப்[6] பூமகன்[7] கருங்கோள்[8] மைந்தன்[9]
நதிகுடம்[10] தன்னில் புக்க லக்கினம் கடக மாக
இதுவிதக் கிரகம் நின்று லியம்புவீர் பலனைத் தானே.

| | | | |
|---|---|---|---|
| | சந்திரன் | | |
| சனி அங்காரகன் ராகு | இராசி சக்கரம் | | லக்கினம் சூரியன் புதன் |
| | | | சுக்கிரன் கேது |
| குரு | | | |

அசுவினி–1–ஆம் பாதம். கேது தசை இரு 6–7–0

1. சந்திரன் மேஷத்திலும், குரு தனுசிலும், சுக்கிரனும் கேதுவும் சிம்மத்திலும், புதனும் சூரியனும் கடகத்திலும், அங்காரகனும் ராகுவும் சனியும் கும்பத்திலும் இருந்து லக்கினம் கடகமாகி இவ்விதமாகக் கிரகங்கள் இருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று;

**குறிப்பு.**—இந்த ராசிச்சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கிரகநிலை பொருத்த முடையதாகும் :—மேஷத்தில் சந்திரனும் குருவும், ரிஷபத்தில் அங்காரகனும், மிதுனத்தில் சுக்கிரனும் சனியும், கடகத்தில் கேதுவும், தனுசில் சூரியனும், மகரத்தில் ராகுவும், மீனத்தில் புதனும் ஆகும்.

2. மங்கையும் கேட்கும் போது அத்திரி சொல்லு கின்றார்
இங்கிவை ஆண்பால் ஜன்ம மில்லமும் கீழ்மேல் வீதி
துங்கமாம் வடக்கு வாடை தென்மேல்பால் சந்து முண்டு
சிங்கவா கனத்தாள் மேல்பால் தந்தியும் தங்கு மென்றோம்.

2. பார்வதியம்மையார் கேட்கும்போது அத்திரி மகாமுனிவர் சொல்லுகின்றார் : இந்தக் குழந்தை ஆண்குழந்தையாக ஜனனமாகும். பிறந்த

[1] சந்திரன் [2] தனுசு [3] சுக்கிரன்
[4] சிம்மம் [5] சூரியன் [6] கடகம்
[7] அங்காரகன் [8] இராகு [9] சனி [10] கும்பம்

வீடு கிழக்குமேற்குத் தெருவில் வடவண்டைவாடையில் இருக்கும். தென்மேற்குத்திக்கில் ஒரு சந்து இருக்கும். காளியம்மன் கோயில் மேற்குத் திக்கில் இருக்கும். இந்த மேற்குத்திக்கிலேயே விநாயகக் கடவுளின் கோயிலும் இருக்கும் என்று சொல்லுகிறோம்.

3. மாலவன் மேற்கில் தங்கும் மங்கைபா ஞ்சாலி தெற்கில்
சாலவே பேரூர் தன்னில் சாற்றுவோம் பலதே வாசம்
ஏலவிவ் விடையா ளத்துள் ஏழிலுள கங்கை சேயாய்
ஞாலம் மே லுதிப்பா னாகும் நாயகி கேட்டி டாயே.

3. மகாவிஷ்ணுவின் கோயில் மேற்குத்திக்கில் இருக்கும். திரௌபதியம்மன் கோயில் தெற்குத்திக்கில் இருக்கும். பிறந்த ஊர் ஒரு பெரிய ஊர் ஆகும். இதில் அனேக தேசத்தவர்கள் வாசஞ் செய்வார்கள். சொன்ன இந்த அடையாளங்கள் உள்ள இடத்தில் அழகிய வலுவான வேளாள குலத்தில் ஆண்குழந்தையாய்வந்து இந்தப் பூமியில் இந்த ஜாதகர் பிறப்பார். பார்வதியம்மையே! கேட்பீராக.

4. தந்தையின் துணைவர் தம்மைச் சாற்றுவோ மாண்பா லொன்று
எந்தையே தீர்க்க மெய்து மிதுவன்றி மற்ற வெல்லாம்
நொந்திடு மென்று சொன்னோம் நுவலுவோ மவன்கு ணத்தை
நிந்தையு முடைய னாகும் நிருபர்க ளிஷ்டம் கொள்வான்.

4. ஜாதகருடைய தகப்பனோடு கூடப் பிறந்தவர்களைப்பற்றிச் சொல்லுகிறோம். ஓர் ஆண் சகோதரர் நீண்ட ஆயுளையுடையவராக விருப்பார். இவரல்லாமல் மற்றச் சகோதரங்கள் எல்லாம் இறந்து விடுவார்கள் என்று சொல்லுகிறோம். இந்தச் சகோதரனுடைய குண குணங்களைப் பற்றிச் சொல்லுகிறோம். இவர் நிந்தனை, பழி, இகழ்ச்சி, இவைகளை அடைவார். அரசர்களுடைய விசுவாசம் உள்ளவர்.

5. மாநிறம் உணச்சல் தேகி வாயுரோ கத்தா னாகும்
தேன்மொழி கூறு வானும் தேவியர் மோக னவன்
பான்மையாய்ப் பேச வல்லான் பரஉப காரி யாவன்
ஈனமாம் குணங்க ளில்லா னிகபர மன்பு பூணன்.

5. இவர் மாநிறமுள்ள மெலிந்த, ஒல்லியான தேகத்தை யுடையவர். வாயுரோகத்தையுமுடையராவர். தகுதியாகவும், தன்மை யாகவும் பேசுந்திறமை யுடையவர். பிறருக்கு உதவி செய்பவராவர். தாழ்ந்த இழிவான குணங்களில்லாதவர். பூலோக பரலோக வனுபவம் உள்ளவர். ஆசை தயை இவைகள் இல்லாதவர்.

6. கல்வியும் கொஞ்ச முள்ளான் காலினில் வாயுப் பீடை
சொல்லது சுகமே யாகும் தந்தமும் குறைவு முண்டு
வல்லியு மொருத்தி யாகும் மைந்தராண் காணு னாகும்
புல்லிடும் பெண்பால் ரண்டு புகலுவோ மிவனுக் கேதான்

6. இவர் கொஞ்சமான வித்தையை யுடையவர். காலில் வாயு ரோகமுள்ளவர். இனிமையாகவும் சுகமாகவும் பேசக்கூடியவர், பற்கள் குறைவாக உள்ளவர். இவருக்குத் தாரம் ஒன்றேயாகும். இவருக்கு ஆண் குழந்தை கிடையாது. இரண்டு பெண் குழந்தைகள் இருக்கும் என்று சொல்லுகிறோம்.

7. தந்தையின் குணத்தைச் சொல்வேன் சன்மார்க்கன் பொறுமை [சாலி
வந்தவர்க் கன்ன மீவ னரசரால் பெருமை பூண்பன்
தன்தனம் அதிகம் சேர்ப்பன் தரணிகள் சேர்ப்பா னாகும்
சிந்தையில் கபடு முள்ளான் சீலனு மூகசாலி.

7. இனிமேல் தகப்பனுருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகி றோம். இவர் நல்லொழுக்கமும் ஞானமார்க்கமும் உள்ளவர். பொறுமை யுள்ளவர். சாந்தமானவர். தன்னிடம் வந்தவர்களுக்குச் சாப்பாடு போடுவார். அரசர்களால் பெருமையையும் கௌரவத்தையும் அடைவார். தன்னுடைய சுயார்ஜிதப் பொருளை அதிகமாகச் சேர்த்து வைப்பார். நிலங் களைச் சேர்த்து வைப்பார். மனத்தில் கள்ளம் வஞ்சனை இவைகளை உடையவர். நல்லொழுக்கமும் நல்ல நடவடிக்கையு முள்ளவர். அறிவுள்ளவர். புத்தி சாலி.

8. இருவிதக் கல்வி கற்பன் ராஜபூ ஜிதனு மாவன்
பெறுமவர் நேசம் கொள்வன் பூமியில் கீர்த்தி யேற்பன்
குறுமுனி போலே செய்கை கூறுவோம் வறுமை யில்லான்
அரன்பத்தி கொள்வா னாகும் அணுகிடும் மாமி ரண்டு.

8. (தகப்பனுர்) இரண்டு விதமான வித்தைகளைப் படித்தவர், தெரிந்தும் கொள்ளுவார். அரசர்களால் போற்றப்பட்டவரும் பூஜிக்கப்பட்டவரு மாவார். பெரிய மனிதர்களுடைய சினேகத்தையுடையவர். பூமியில் புகழை அடைபவர். அகஸ்திய முனிவரைப் போலவே காரியங்களைச் செய் வார் என்று சொல்லுகிறோம். கஷ்டமும் தரித்திரமும் இல்லாதவர். சிவ பெருமானின்மேல் பக்தியுடையவர். இரண்டு மாமியார்களை அடைபவர் ஆவார்.

9. சுகபுசிப் புடைய னாகும் சூழ்வினை நிவிர்த்தி செய்வன்
சிறுமைஎன் றோரைக் காப்பன் சேர்ந்திடு மூலச் சூடு
நறுமலர்க் கந்த மிஷ்டன் நல்லோர்க்கு நல்ல னவன்
மறுமமும் வெளிக்காட் டாதான் மாநிறம் யோக சாலி.

9. (தகப்பனுர்) சுகமான போஜனத்தையுடையவராவர். தன்னை வந்து அடைகின்ற பாவங்களை நிவிர்த்தி செய்து கொள்ளும் சக்தியுடையவர். கஷ்டங்கள், தரித்திரம் இவைகள் இருக்கின்றன வென்று சொல்கின்றவர் களைக் காப்பாற்றுபவர். இவரை மூலச்சூட்டு வியாதி அணுகும். வாசனையுள்ள புஷ்பம், சந்தனக் குழம்பு, வாசனைத்திரவியம் இவை களின்மேல் ஆசையுடையவர். நல்லவர்களுக்கு நல்லவராக நடந்து

கொள்ளுவார். தன்னுடைய மனத்திலுள்ள ரகசியங்களைப் பிறருக்குத் தெரியும்படியாய் வெளியே காண்பித்துக் கொள்ளாதவர். மாநிறமான தேகத்தையுடையவர். யோகமுள்ளவர் ஆவார்.

10. இந்நெறி யுடையா னுக்கு இருதார மிளையா ளுக்கு
அன்னவ னுதிப்பா ளுகும் அவள்துணை ஆண்பாலொன்று
முன்னவனுகச் சொல்வேன் மொழிகுவண் அவன்கு ணத்தைப்
பின்னமில் லாத தேகன் பெருமுனி போலே வாழ்வன்.

10. இப்படிப்பட்டக் குணங்களை யுடையவரான தகப்பனருக்கு இரண்டு மனைவிகள் நேரிடும். ஜாதகர் சிறிய மனைவிக்குப் பிறந்தவராகும். இளைய மனைவிக்கு ஓர் ஆண் சகோதரன் உண்டு. இந்தச் சகோதரன் மூத்த வனுவான். இவருடைய குணதிசயங்களைச் சொல்லுகிறேன். இவருக்கு அவய வக் குறைவு ஒன்றும் இல்லையாது. வசிஷ்ட மகாமுனிவரைப் போலவே இவர் வாழ்வார்.

11. அரசரால் ஜீவிப்பாளும் ஆசாரன் பலபேர் நேயன்
மறுமமும் பொறுமை யுண்டு வறுமுகன் பத்தி கொள்வன்
இருவிதக் கல்வி யுள்ளா னிருடிகள் போல வாழ்வன
பெரும்பொரு ளிச்சை யுள்ளாள் புண்ணிய மனத்தாளுமே.

11. இவர், அஃதாவது ஜாதகருடைய அம்மான் இராஜாங்கத்தா ரால் ஜீவனஞ் செய்து வருவார். ஆசாரம் நெல்லொழுக்கங்கள் இவை களை உடையவர். அநேகரிடத்தில் விசுவாசமுள்ளவர். இவர்களும் இவரி டத்தில் பிரியமாயிருப்பார்கள். இவர் தன்னுடைய மனத்தில் ரகசியத்தை யுடையவர். சாந்தமானவர். முருகக் கடவுளின் மேல் பக்திபுடையவர். இரண்டு விதமான வித்தையை யுடையவர், ரிஷிகளைப் போலவே வாழ்வார். பெரிய செல்வத்தின் மேல் ஆசையுடையவர். புண்ணியமான நல்ல மனத்தை யுடையவராவர்.

12. குருவுப தேச முள்ளான் குவலய நல்லோ னுவன்
மறுமனை விரும்பா ளுகும் மனைவியுமொன்றே யாகும்
பெரும்சுதர் ஆண்பால் ரண்டு பெண்ணது மவ்வா ருகும்
திரமாம் நான்கு தாமும் நிலைக்காவே மற்ற வெல்லாம்.

12. ஜாதகருடைய அம்மான் குருவிடத்தில் உபதேசம் பெற்றுக் கொண்டவராவர். பூமியில் நல்லவராக விருப்பார். இன்னெரு மனைவியை அடையாதவர். இவருக்கு ஒரே மனைவிதான் நேரும். இவருக்கு இரண்டு ஆண் குழந்தைகளும் இரண்டு பெண் குழந்தைகளும் உண்டு. இவர்கள் நான்குபேரும் நீண்ட ஆயுளை உடையவராவர், மற்றக் குழந்தை நிலைத்திராமல் இறந்துவிடும்.

13. ஜாதகன் குணத்தை யாங்கள் சாற்றுவோ மிருசி வப்பன்
மேதினில் உணச்சல் தேகி வித்தையு மிரண்டு கற்பன்
காதியு முடைய ளுகும் கனராசர் பேட்டி கொள்வன்
நீதிநன் னடக்கை யுள்ளான் நிந்தைகள் ஏற்கா ளுகும்.

13. ஜாதகருடைய குணாதிசயங்களைப்பற்றி நாங்கள் சொல்லுகிறோம். இவர் இரண்டு நிறங்கள் கலந்த நிறமான மாநிறத்தையுடையவர். பூமியில் மெலிந்த ஒல்லியான தேகத்தையுடையவர். இரண்டு விதமான கல்வியைக் கற்றுக்கொள்ளுவார். கீர்த்தியும் பெருமையும் உள்ளவராவர். பெரிய அரசர்களுடைய தரிசனத்தை அடைபவர். நீதி உள்ளவர். நல்ல ஒழுக்கமும் நடவடிக்கையும் உடையவர். நிந்தனை பழி இகழ்ச்சி இவைகளை அடையாதவராவார்.

14. கல்வியால் பெருமை பூண்பன் கனத்தவர் நேசம் கொள்வன்
நல்லவன் நல்ல வர்க்கு லண்டர்க்கு மிண்ட னுவன்
சொல்லது காப்பா னுகும் துறவிமேல் விருப்ப முள்ளான்
இல்லறம் புதிதாய்ச் செய்வன் இன்பமாய் வார்த்தை கூறுவன்.

14. ஜாதகர் தன்னுடைய வித்தை மூலமாய்ப் பெருமையையும் புகழையும் அடைவார். பெரிய மனிதர்களுடைய விசுவாசத்தை அடைவார். நல்லவர்களுக்கு நல்லவராகவும் நல்லபடியாகவும் நடந்து கொள்ளுவார். முரடர்களுக்குத் திண்ணியராகவும் வலிவுடையவராகவும் ஆவார். தான் சொன்ன வார்த்தைகளைத் தவறிடாமல் காப்பாற்றுவார். இல்லறத்தைத் துறந்தவர்களிடத்திலும் பரதேசிகளிடத்திலும் அன்புள்ளவராவார். ஒரு வீட்டைப் புதியதாய்க் கட்டுவார். இனிமையாக வார்த்தைகளைச் சொல்லுவார்.

15. தந்தைநாள் பூமி தன்னைத் தானவன் விருத்தி செய்வன்
சிந்தையும் மர்ம முள்ளான் சிலேடையாய் வார்த்தை சொல்வன்
முந்திய கல்வி ரண்டு மெய்திடும் தீர நெஞ்சம்
தன்தன முடையா னுகும் தக்கோர்கள் நேசம் கொள்வன்.

15. ஜாதகர் தன்னுடைய தகப்பனுருடைய நிலங்களைப் பயிரிட்டு விருத்தி செய்வார். தன்னுடைய மனத்தில் இரசியமானதை உடையவர், அலங்காரமாகவும் இரண்டு அர்த்தங்கள் உண்டாகும்படியாகவும் வார்த்தைகளைச் சொல்லுவார், மேன்மையான இரண்டு விதமான வித்தையையுடையவர். தைரியமான மனத்தை யுடையவர். தன்னுடைய சுயார்ஜிதமான பணத்தையுடையவர். தகுந்தவர்கள் பெரியோர்கள் இவர்களுடைய சிநேகத்தை அடைவார்.

16. வித்தையில் புராண நூலில் மிகுதியாய் கற்பா னுகும்
சித்தமாய் அரசர் மூலம் ஜீவன முடைய னுகும்
பத்தினி நேய னுகும் பத்மரேகையு முள்ளா னுகும்
புத்திமா னுக சாலி பூமியோர் மெச்ச வாழ்வன்.

16. ஜாதகர் படிப்பில் புராணங்கள் முதலிய சாஸ்திரங்களை அதிகமாகப் படிப்பார் நிச்சயமாய் அரசர்கள் மூலமாகத் தொழிலையுடையவராவர். மனைவியின் மேல் ஆசையுடையவர். மனைவியும் இவர்மேல் ஆசையுடையவளாகும். இவருடைய கையில் பத்மரேகை என்ற கமலரேகை

தாமரைரேகை உடையவராவர். புத்தியுள்ளவர். நுட்பமான அறிவுள்ள வர். பூமியிலுள்ளவர்கள் போற்றும்படியாகவும் கொண்டாடும்படியாகவும் வாழ்வார்.

17. நடையது சொகுசு முள்ளான் நற்றத்தை மேலாய் வாழ்வன்
அடைமொழி அதிகம் கூறுவன் அதிகார முடைய னுகும்
விடவுரை பக்கம் ராகும் விஷவாக்கு விவேகியாவன்
கடன்கொள்ளான் காலிவிருத்தி கட்டுவார்த் தைகளும் சொல்வன்.

17. ஜாதகர் அழகான நல்ல நாகரிகமுள்ள நடவடிக்கையுடைய வர். தன்னுடைய தகப்பனுருக்கு மேலான நிலைமையில் அந்தஸ்தில் இருந்து வாழ்வார். விசேஷ குணங்களைத் தெரிவிக்கக்கூடிய பண்புச் சொற்களை அதிகமாக உபயோகப்படுத்துவார். அதிகாரமும் செல்வாக்கும் உடையவராவார். இராகு என்ற பாம்பைப் போலவே விஷவார்த்தைகளை தன்னுடைய பக்கத்தில் உள்ளவரின்மேல் உபயோகப்படுத்துபவர். நுட்பமான புத்தியையுடையவராவார். கடன்வாங்கமாட்டார். கால்நடைகளின் விருத்தி யுள்ளவர். பொய்யான வார்த்தைகளையும் புனைந்த வார்த்தைகளையும் சொல்லுவார்.

18. மந்திரம் பண்டி தங்கள் வாரங்க ளறிவா னுகும்
இந்திர ஜாலம் கற்ப னெதிரியை மயக்கம் செய்வன்
தந்திர வாதி யாகும் சாதமும் லகுவா யுண்பான்
கந்தனும் குலதெய் வங்கள் கருத்தினில் கொள்வா னென்றேம்.

18. ஜாதகர் மந்திரங்கள் வைத்தியம் பாண்டித்துவம் நாடக வகைகள் தெய்வப்பாடல் இவைகளை அறிந்தவராகும். இந்திர ஜாலங் களைக் கற்றுக்கொள்ளுவார். தன்னுடைய எதிரியை மயங்கும்படியாகச் செய்து விடுவார். தந்திரமும் உபாயமும் சாமர்த்தியமும் உள்ளவர். ஆகாரத்தைக் கொஞ்சமாகவும் சீக்கிரமாகவும் சாப்பிடுவார். முருகரைத் தன்னுடைய குடும்ப தெய்வமாக எண்ணி நடந்து கொள்ளுவாராகும்.

19. இன்னவன் மணத்தின் கால மியம்புவோ மிருபா னுலில்
கன்னிகை வடகீழ் தன்னில் காதலி மாதுர் வர்க்கம்
அன்னவள் வருவா ளாகும் அவள்குணம் மெலிந்த தேகி
உன்னத மிருசிவப்பள் உள்மனம் கபடு முண்டு.

19. ஜாதகருக்கு விவாகம் நேரிடுங்காலத்தைப்பற்றிச் சொல்லு கிறேம். இவருக்கு இருபத்துநான்காவது வயதில் தாயார் வர்க்கத்திலி ருந்து வடகிழக்குத் திக்கிலிருந்து மனைவி வந்து சம்பவிப்பாள். இவளு டைய குணுதியங்களைப் பற்றிச் சொல்லுகிறேம். இவள் மெலிந்த இளைத்த தேகத்தையுடையவள். இரண்டு நிறங்கள் கலந்துள்ள உயர்ந்த மாநிறமான நிறத்தை உடையவள். மனதிற்குள்ளே இரகசியமான வஞ்சக முள்ளவள்,

**குறிப்பு—விவாக விஷயம்.**—ஜாதகருக்கு வயது ஷ 23 முதல் ஷ 24 முடியும் வரையிலும் சுக்கிரதசையில் புதன்புக்தி இருக்கின்றது. சுக்கிரன் போகஸ்தானமாகிய நான்கிற் குடையவராகியும் களத்திரகாரகனுமாகிக் குடும்பஸ்தானத்தில் இருந்துகொண்டு களத்திர ஸ்தானமாகிய ஏழிற் குடைய சனியாலும் போககாரகனாகிய ராகுவாலும் பார்க்கப்பட்டிருப்பதாலும் விவாகஞ் செய்து வைக்கச் சுக்கிரனுக்கு அதிகாரம் இருக்கிறது. புதன் குடும்பாதிபதியாகிய சூரியனுடன் சம்பந்தப்பட்டுச் சந்திரனுக்குப் போகஸ்தானமாகிய நான்கில் இருக்கின்றார். ஆகையால் புதனுக்குத் தன்னுடைய புக்தியில் விவாகஞ் செய்து வைக்க அதிகாரமிருக்கின்றது.

20. வித்தையள் புத்தி மானும் வீணப வாத மில்லாள்.
குத்தமில் லாதா ளாகும் கோபமும் பின்னல் தாழ்வு
பத்தினி வந்த பின்பு பாலனும் யோக மாவன்
சுத்தமு முடையா ளாகும் சொல்லது தவறு ளென்றேம்.

20. மனைவி வாசித்தவளும் அறிவுடையவளுமாவாள். அனுவசியமான பழி பாவங்கள் இல்லாதவள். தவறுகளையும் பாவங்களையும் செய்யாதவளாவாள். முன்னே கோபம் வரும். உடனே அது தணிந்து குறைந்துவிடும். மனைவி ஜாதகரிடம் வந்து சேர்ந்த பிறகு ஜாதகருக்கு யோகமுண்டாகும். சுத்தமாக மனைவி இருப்பாள். தன்னுடைய வார்த்தைகளைத் தவறிடாமல் காப்பாற்றிக் கொள்ளுவாள்.

21. மனைவியும் வந்த பின்பு வந்திடும் ராஜயோகம்
கனமுள குடும்பி யாவள் கனத்ததோர் பணியும் சேர்ப்பள்
வினையான புத்தி யில்லாள் வீண்வம்பில் செல்லா ளாகும்
மனமது இரக்க முள்ளாள் மங்கையே மேலும் கேளே.

21. மனைவி தன்னிடம் வந்து சேர்ந்த பிறகு ஜாதகருக்கு இராஜயோகம் உண்டாகும். இவர் மனைவி பெரிய குடும்பஸ்தையாவாள். உயர்ந்த ஆபரணங்களைச் சேர்த்து வைப்பாள். கெடுதியான புத்தியில்லாதவள். வீண் சண்டைச் சச்சரவுகளில் தலையிடமாட்டாள். தன்னுடைய மனம் இரக்கமும் தயையையும் உடையதாகும். பார்வதியம்மையே ! நாங்கள் இன்னம் அதிகமாகச் சொல்லுவதைக் கேட்பீராக.

**குறிப்பு.**—ஜாதகருடைய மனைவியின் வயதைப்பற்றியும் ஜாதகருக்கு ஒரு மனைவியா இரண்டு மனைவியா என்ற விவரத்தைப்பற்றியும் வெளிப்படையாகச் சொல்லாததால் இந்த சாஸ்திரப் பிரகாரம் ஒரே தாரந்தான் என்று கருதவேண்டியதாகவிருக்கிறது.

22. மதலைகள் ஆண்பா லொன்று மங்கையு மிரண்டு மாகும்
சதமாகு மிரண்டு தாமும் ஜயமுனி கூறு கின்றார்
பதிக்குமுக் கரத்தோ[1] னெட்டில் பணி[2] சனி யுடனே கூடச்
சுதர்களெவ் விதங்களில் தீர்க்கம் சொல்லுவீர் முனியே நீர்தாம் ;

---

[1] அங்காரகன் [2] இராகு

22. ஜாதகருக்குக் குழந்தைகளில் ஆண் ஒன்றும், பெண்கள் இரண்டும் ஆகும். இவர்களில் இரண்டு பேர் நீண்ட ஆயுளையுடையவர்களாய் நிலைத்திருப்பார்கள். இவ்விதமாகச் சொல்லவே ஜய முனிவர் சொல்லுகின்றார். புத்திரஸ்தானாதிபதியாகிய அங்காரகன் லக்கினத்திற்கு எட்டில் இராகு சனி இவர்களுடனே சேர்ந்திருப்பதால் குழந்தைகள் எவ்விதமாக நீண்ட ஆயுளையுடையவர்களாகும்! அதற்குக் காரணத்தை, முனிவரே! நீரே சொல்லுவீர் என்று கேட்க :

23. ஐந்தினுக் குடையோ னெட்டு ஆட்சிமாருடனே கூட
விந்தையாய்ச் சுதர்கள் தோன்றும் விருத்தரும் சொல்லு கின்றார்
முந்திய சுதர்கள் ரண்டும் மேவிடும் எமப திக்கு
எந்தவாறு சொல்லு மென்ன இரணிய[1] னாறில் நிற்க ;

23. ஐந்தாவது வீட்டிற்குடையவரான அங்காரகன் இருக்கின்ற வீட்டிற்குடையவரான சனி எட்டில் ஆட்சியாய் இருந்துகொண்டு அங்காரகனுடனே கூடியிருப்பதால் குழந்தைகள் ஆச்சரியமாய்ப் பிறப்பார்கள். இவ்விதமாகச் சொல்ல, விருத்தர் என்பவர் சொல்லுகின்றார். முதல் இரண்டு குழந்தைகளும் இறந்து எமபட்டணம் போய்ச் சேர்ந்துவிடும். இதற்குக் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்க, குரு ஆறில் இருப்பதாலும் ;

24. அதற்கு ஒன்பானில் வெள்ளி[2] அணுகியே கேது தங்கக்
குதர்க்கங்கண் முதலில் தோஷம் கூறுவோ மிவனுக் கேதான்
மதிக்குமே[3] ஒன்பான் தன்னில் மன்னவ[4] னிருப்பதாலே
சுதரொன்று பெண்ணி ரண்டு தோன்றிடும் தீர்க்கமாக.

24. குருவிற்கு ஒன்பதில் சுக்கிரன் இருந்துகொண்டு இவருடன் கேது கூடியிருப்பதாலும் முதலில் பிறக்குங் குழந்தைகளுக்குத் தோஷம் உண்டு என்று சொல்லுகிறோம். ஜாதகருக்குச் சந்திரன் இருக்குமிடத்திலிருந்து ஒன்பதாவது வீட்டில் குரு இருப்பதால் ஆண் குழந்தை ஒன்றும் பெண் குழந்தைகள் இரண்டும் நீண்ட ஆயுளையுடையவர்களாக விருப்பார்கள்.

25. அன்னையின் குணத்தைச் சொல்லே னழகுளாள் பொறுமை சாலி
தன்சொலே மேன்மை யாகச் சாதிப்பாள் கோபம் கொஞ்சம்
பன்னியே பேச வல்லாள் பஞ்சைமே லிரக்க முள்ளாள்
கன்னென மொழியே சொல்வள் காதலி யோக சாலி.

25. இனிமேல் ஜாதகருடைய தாயாரின் குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகிறேன். இவள் அழகுள்ளவள். பொறுமையை உடையவள். தான் சொல்லும் வார்த்தைகளே உயர்ந்தவைகள் என்றும் உண்மை என்றும் சொல்லி வாதாடி ஜயிக்குந் தன்மையுடையவள். இவளுக்

---

[1] குரு [2] சுக்கிரன் [3] சந்திரன் [4] குரு

குக் கொஞ்சங் கோபமுண்டு. சுறுக்கமாகவும் திறமையாகவும் பேசுஞ் சக்தியும் சாமர்த்தியமும் உள்ளவள். ஏழைகளிடத்தில் தயையும் இரு பையும் உடையவள். இனிமையான வார்த்தைகளையே சொல்லுவாள். இவள் யோகத்தையுடையவளாவாள்.

26. பாக்கிய முடையளாகும் பஞ்சைமே லிரக்க மாவள்
நாக்குகள் தவறு ளாகும் நனிமாய் வார்த்தை சொல்வள்
தீக்குண மில்லா ளாகும் திருமக ளொப்ப தாகும்
சீக்கிர நடையு மாவள் தேவியு மிளமனத்தாள்.

26. தாயார் செல்வத்தை யுடையவளாவாள். ஏழைகளிடத்தில் இருபையையும் தயையையும் உடையவள். தான் சொல்லுகின்ற வார்த்தைகளைத் தவறிடாமல் காப்பாற்றுவாள். இனிமையாய் வார்த்தைகளைச் சொல்லுவாள். கெட்டகுணமில்லாதவளாவாள். இவள் இளகிய மிருது வான மனத்தையுடையவளாவாள்.

27. அவள்துணை ஆண்பால் ரண்டு அம்பிகை ஒருத்தி தீர்க்கம்
இவளுடைய பூர்வம் தன்னை யியம்புவோ மினிமே லாகத்
தவசிகள் வாழு கின்ற தண்டகா ரண்யத்தில் தோன்றிப்
பவமுள வைசியச் சேயாய் பரவையும் பிறந்தா ளென்றோம்.

27. தாயாருடன் கூடப் பிறந்த இரண்டு ஆண்களும் ஒரு பெண்ணும் நீண்ட ஆயுளையுடையவர்கள். இவளுடைய முன் ஜன் மத்தைப் பற்றி இனிமேல் சொல்லுகிறோம. தவஞ் செய்கின்ற ரிஷிகள் வசிக்குமிடமாகிய தண்டகாரண்யத்தில் பாவத்தையுடைய வைசிய ஸ்திரீயாய்ப் பிறந்தாள் என்று சொல்லுகிறோம்.

28. வரனுமே அதற்கு உத்தரம் வாலங்கா டதனில் தோன்றிப்
பெருமையும் புகழு முண்டாய்ப் புத்திர ரில்லா ளாகித்
திருமகள் வாழுந் நாளில் செய்தஊழ் வினையைக் கேண்மோ
அரன்கோயில் விஷேச காலம் அனேகரும் வருகும் போது;

28. இவளுடைய புருஷன் இவளுடைய ஊருக்கு வடக்கில் ஆலங் காட்டில் பிறந்தும் இவள் பெருமையும் கீர்த்தியும் உண்டாகிக் குழந் தைகள் இல்லாமல் வாழுகின்ற காலத்தில் இவள் செய்த பாவத்தைச் சொல்லுகின்றோம். கேட்பீராக. ஒரு விசேஷமான உற்சவ காலத்தில் சிவபெருமானுடைய கோயிலுக்கு அநேக ஜனங்கள் போகின்ற காலத் தில்.

29. வரனுடன் செல்லும் போது மஞ்சள்குங் குமங்கள் சீப்புப்
பெருமையாய் வாங்கிக் கொண்டு பொருளது மீயா ளாகி
விரைவினில் சென்று ளென்றோம் விளம்புவான் வைசியன் தானும்
தருபொரு ளீயாப் பாவி ஜனித்திடும் மறு ஜன் மத்தில்;

29. இவளும் தன்னுடைய புருஷனுடன் போகின்றபோது மஞ்சள் பலவித வர்ணங்களுள்ள குங்குமம் சீப்பு இவைகளைப் பெருமையாக ஒரு வர்த்தகனிடமிருந்து விலைக்கு வாங்கிக் கொண்டு அவைகளுக்காகக் கிரைய பணத்தைக் கொடுக்காமல் ஏமாற்றிவிட்டு வேகமாகப் போய் மறைந்துவிட்டாள் என்று சொல்லுகிறோம். வர்த்தகராகிய செட்டி யார் தேடிப் பார்த்துவிட்டுச் சொல்லுகின்றார். கொடுக்க வேண்டிய பணத் தை கொடுக்காமல் போய்விட்ட பாபியானவள் தான் பிறக்கின்ற பின் ஜன் மத்தில் ;

30. மறுமனை யாகத் தோன்றி மத்திய வயதில் மஞ்சள்
திருமுத்திரை விலகு மென்று செப்பினான் வைசியன் தானும்
உறைந்திடு மந்தத் தோஷம் உத்தமி அந்தி யத்தில்
வரன் மாண்டு பின்னால் சென்று மலரயன் வரையப் பட்டு.

30. இரண்டாவது மனைவியாகவமைந்து தனக்கு மத்திய வயது காலத்தில் தன்னுடைய மாங்கலியத்தையும் மஞ்சளையும் இழந்து விதவையாக வாழக்கடவள் என்று சொன்னார். இந்தச் சாபத்தாலே இவள் முன் ஜன்மத்தின் கடைசி காலத்தில் இவளுடைய புருஷன் இறந்து அதன் பிறகு இவளும் இறந்து பிரம தேவனால் எழுதப்பட்டு ;

31. வந்தவளிவளே யென்றோம் வைசியின் சாபம் தானும்
பிந்தியு நேரு மென்றோம் புகலுவோ மறும ணம்தான்
விந்தையாய் மத்தியத்தில் அமங்கலி யாகவாழ்வாள்
கந்தனை யீன்ற மாதே கழறின மொழி குன்றாது.

31. இந்த ஜன்மத்தில் இவள் வந்து பிறந்தாள் என்று சொல்லு கிறோம். முன் ஜன்மத்திய செட்டியாருடைய சாபம் இவளை வந்து அணுகும் என்று சொல்லுகிறோம். இவள் இரண்டாவது மனைவியாக வாய்ப்பாள் என்று சொல்லுகிறோம். இவள் ஆச்சரியமாக மத்திய வயது காலத்தில் விதவையாக விருந்து வாழ்வாள், முருகக் கடவுளைப் பெற் றெடுத்த பார்வதியம்மையே ! நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறிப் போகாமல் நடக்கும்.

32. மறுஜன்மம் வேலன் காட்டில் மாதுவு மிக்கு லத்தில்
உறைகுவாள் சுகமுண் டாகி உத்தமி வாழ்வாளாகும்
பெருமையாய்க் குடும்பி யாகிப் பூஷண மதிகம் பெற்றுத்
திருமக ளொப்பதாகத் தேவியும் வாழ்வா ளாமே.

32. இவள் பின் ஜன்மத்தில் வேலன் காட்டில் இந்த ஜன் மத்திற் பிறந்த வேளாள குலத்தில் வந்து பிறப்பாள். சுகங்களை உடைய வளாகி வாழ்வாள். மேன்மையான குடும்பம் உடையவளாகி ஆபரணங் களை அதிகமாக வடைந்து இலட்சுமிக்குச் சமமானவளாகவிருந்து இவள் வாழ்வாள்,

33. தந்தையின் பூர்வம் தன்னைச் சாற்றுவோம் விரிஞ்சி கீழ்பால்
முந்திய சிற்றூர் தன்னி லுதித்தனன் வடுகர் வமிசம்
அந்தவன் கிராமச் செட்டு அதிகார முடைய னுகித்
தன்தன மதிக முண்டாய்த் தரணியில் வாழுந் நாளில்

33. ஜாதகருடைய தகப்பனுரின் முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறேம். விரிஞ்சிபுரத்திற்குக் கிழக்கில் மேன்மையான ஒரு சிறிய கிராமத்தில் தெலுங்குகாரர் குலத்தில் பிறந்து தன் கிராமத்திய வியாபாரத்தைச் செய்து கொண்டு கிராம அதிகாரங்கள் உடையவராகி தன்னுடைய சுயார்ஜித சொத்து அதிகமாகவடைந்து பூமியில் வாழ்ந்த காலத்தில்

34. வேறொரு விதவை மாது மேவினுள் தாயினில் லத்தில்
நாரியும் சலங்கள் கொள்ள நடந்தனன் அந்தக் காலம்
வீரனும் ஒருவன் சென்று மெல்லி மேல் மோகங் கொண்டு
கூறினன் சிலேடை வார்த்தை கோதையு மிசையாளாகி

34. இன்னெரு ஜாதியைச் சேர்ந்த ஸ்திரி தன்னுடைய தாயார் வீட்டிற்கு வந்திருக்குங் காலத்தில் ஜலம் கொண்டுவர வெளியே சென்றபோது தைரியமான ஒருவன் அவளிடம் போய் அவளிடதில் காம ஆசையுடையவனுகி அலங்காரமான இரண்டு அர்த்தங்களையுடைய வார்த்தைகளாகிய சிலேடையான வார்த்தைகளைச் சொன்னுன், அந்த ஸ்திரி அதற்குச் சம்மதிக்காதவளாகவே

35. அதற்கவன் பலவந்தத்தால் அவளையே போகம் துய்தான்
மதிமுக மாது தானும் வரைந்தனள் துணைவரோடு
அதிகமாய்க் கோபமுற்று அதிகாரியுடனே சொல்லச்
சதிசெய் தோன் தனைய ழைத்துத் தனமதை யவனுற் பெற்று ;

35. இவன் பலவந்தஞ் செய்து அவளிடத்தில் போகஞ் செய்தான். அதற்கு மேல் அந்த அழகிய ஸதிரீ நடந்த விஷயங்களைத் தன்னுடைய சகோதரர்களிடத்தில் சொன்னுள். பிறகு சகோதரர்கள் அதிக கோபம் உடையவர்களாகி அதிகாரியிடம் சொல்லவே, இந்த அதிகாரியாகிய ஜாதகருடைய தகப்பன் குற்றஞ் செய்தவனை வரவழைத்து அவனிடமிருந்து பொருளை லஞ்சம் வாங்கிக்கொண்டு;

36. மாதுமேல் குற்றம் சாட்ட மங்கையும் மனம் கலங்கி
ஓதுவாள் சாபம் தானும் உற்றதை விசாரி யாமல்
அநீதியாய்ப் பொருள்கைக் கொண்டு நிமலிமேல் குற்றம் சொன் [னுய்
போதவே மறு ஜன் மத்தில் பெண்துணை யில்லா தாகி

36. அந்தவிதவை ஸ்திரீயின் பேரிலேயே குற்றத்தைச் சாட்டிவிடவே, அவள் தன்னுடைய மனம் கலக்கமடைந்து, நொந்து, சாபத்தைச் சொல்லுகின்றுள். உண்மையை நன்றுய் விசாரித்துத் தெரிந்து

கொள்ளாமல் அநியாயமாய்ப் பொருளை லஞ்சமாகக் கையில் வாங்கிக் கொண்டு ஒரு ஸ்திரீயின் பேரில் அபவாதத்தைச் சொன்னாய் நீ. ஆகையால் நீ உன்னுடைய பின் ஜன்மத்தில் உனக்குச் சகோதரியில்லா மலும்.

37. மனைவியு மிரண்டு மாகி மங்கைபுத் திரியு மின்றி
வினையான வாயு நோயால் மேதினில் மரண மாவாய்
சினமுடன் மாது சொல்லி ஜலத்தினில் மாண்டா ளென்றோம்
கனமுட னந்தத் தோஷம் கலந்தது அவனுக் கேதான்.

37. இரண்டு மனைவிமார்களை யடைந்து, ஸ்திரீயும், புத்திரியும் இல்லாமலிருந்து, முன் பாபத்தினாலுண்டான வாயு நோயினால் பூமியில் நீ இறந்துவிடக் கடவாய் என்று கோபத்துடன் அந்த விதவை ஸ்திரீ சொல்லிவிட்டுப் பிறகு ஜலத்தில் விழுந்து முழுகி இறந்துவிட்டாள் என்று சொல்லுகிறோம். வலுவான இந்தத் தோஷம் இவருக்கு (தகப்பனாருக்கு) வந்து சம்பவித்தது.

38. அந்திய காலம் தன்னில் அனாயாச மரண மாகிச்
சந்ததம் பிரம னாலே தரணியில் வரையப் பட்டு
வந்த வனிவனே யென்றோம் வரைகிறோம் பின் ஜன் மத்தை
கந்தன்வாழ் தணிகை தன்னில் காதலன் க்ஷத்திரிய சேயாய்

38. தகப்பனார் தன்னுடைய முன் ஜன்மத்தின் கடைசிக்காலத்தில் இறந்து பிரமதேவனால் எழுதப்பட்டு இந்தப் பூமியில் வந்துபிறந்தார் என்று சொல்லுகிறோம். இவருடைய மறு ஜன்மத்தைப்பற்றிச் சொல்லு கிறோம். முருகக்கடவுள் எழுந்தருளி இருக்கும் திருத்தணியில் இவர் க்ஷத்திரியராக.

39. உதிப்பனா மிவனே யென்றோம் உரைக்கிறோ மீரைந்தாண்டில்
சதிசெயும் காலன் பக்கல் சாருவா னென்று சொன்னோம்
மதிமுக மாதுரு க்கு வாறஞ்சு ஆண்டு தன்னில்
விதியது முடியு மென்றோம் விளம்பின மொழி குன்றாது.

39. பிறப்பார் என்று சொல்லுகிறோம். இவர் ஜாதகருக்குப் பத்தாவது வயதில் * இறந்து எமனிடம் போய்ச் சேருவார் என்று சொல்லுகிறோம். அழகான தாயாருக்கு ஜாதகருடைய முப்பதாவது வயதில் மரணம் நேரிடும் என்று சொல்லுகின்றோம். நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறி டாமல் நடக்கும்.

* குறிப்பு.—தகப்பனார் மரணவிஷயம்—ஜாதகருக்கு வயது ௵ 9–0–0 முதல் ௵ 10–0–0 வரையிலும் சுக்கிர தசையில் சுக்கிரபுக்தியும் சூரிய புக்தியும் நடக்கின்றன. பிதுர்ஸ்தானம் ஒன்பதாமிடமாகிய மீனம். சனி யும் அங்காரகனும் மீனத்தை மிகவும் நெருங்கி இருக்கின்றார்கள். ஒன்பதிற்குடைய பிதுர்ஸ்தானாதிபதியாகிய குரு லக்கினத்திற்கு ஆறில் இருந்துகொண்டு ராகுவால் பார்க்கப்படுகிறார். பிதுர்காரகனாகிய சூரியன் விரயாதிபதியாகிய புதனுடன் கூடியிருக்கின்றார். பிதுர் ஸ்தானாதிபதியாகிய

குருவும் பிதுர்காரகனாகிய சூரியனும் ஒருவருக்கொருவர் ஆறெட்டில் இருக்கின்றார்கள். ஆகையால் பிதாவுக்குத் தோஷம் இருக்கிறது. ஜாதகருடைய இளம்பிராயத்திலேயே தகப்பனார் இறந்துவிடும் அமைப்பு இருக்கிறது. மீனலக்கினத்திற்குச் சுக்கிரன் புதன் சூரியன் இவர்கள் பராசரஹோரை, ஜாதகச்சந்திரிகை, தாண்டவமாலை இவைகளின் பிரகாரம் மாரகாதிபர்கள். சுக்கிரன் மூன்றிற்கும் எட்டிற்கும் உடையவராகி ஆறில் இருக்கின்றார். ஆகையால் சுக்கிரன், தன் தசையில் பிதுரை மாரகஞ்செய்ய அதிகாரமுடையவராய் இருக்கின்றார். மீனத்திற்குச் சூரியனும் மாரகாதிபதியாகி பிதுர் காரகனாகவே இருக்கின்றார். ஆகையால் தன் புக்தியில் பிதாவுக்கு மாரகஞ் செய்ய சூரியன் அதிகார முடையவராக விருக்கின்றார். ஆகையால் பிதாவுக்குச் சுக்கிர தசையில் சூரிய புத்தியில் மாரகம் நேரிட அமைப்பு இருக்கின்றது.

குறிப்பு:—தாயார் மரணவிஷயம்—ஜாதகருக்கு வயது ௵ 29-0-0 முதல் ௵ 30-0-0 முடியும் வரையிலும் சூரிய தசையில் குரு புக்தியும் சனிபுக்தியும் நடக்கின்றன. மாதுருலக்கின மாகிய துலாத்திற்குச் சூரியனும், குருவும் பராசரஹோரை, ஜாதகசந்திரிகை, சந்திர காவியம் இவைகளின் பிரகாரம் மாரகாதிபதிகளாகின்றார்கள். சூரியன் மாதுர்காரகனாகிய சந்திரனுடைய வீட்டில் இருக்கின்றார். குரு மாதுர்காரனாகிய சந்திரனையும், மாதுர் ஸ்தானாதிபதியாகிய சுக்கிரனையும் பார்க்கின்றார். சனிகூடச் சந்திரனையும் சுக்கிரனையும் பார்கின்றார் ஆனால் இவர் துலாத்திற்கு நான்கு ஐந்திற்குடையவராய் ஐந்தில் இருக்கின்றார். ஆகையால் இவரை விட குருவுக்கு மாதாவுவை மாரகஞ் செய்ய அதிக அதிகாரம் இருக்கிறது. ஆகையால் சூரிய தசையில் குரு புக்தியில் மாதாவுக்கு மரணம் நேரிட அமைப்பு உண்டு.

40. ஜாதகன் முன் ஜன் மத்தைச் சாற்றுவோ மிவ்வூர் கீழ்பால்
மேதினில் பேரூர் தன்னில் விளங்கினன் செங்குந்த னாகப்
போதவே தனங்கள் பெற்றுப் புத்திரர் மனைவி யுண்டாய்
நீதியாய்ச் செட்டுச் செய்து நேர்ந்திடு மார்க்கம் தன்னில்.

40. ஜாதகருடைய பூர்வ ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறோம். இவர் இந்த ஜென்மத்திற் பிறந்த ஊருக்குக் கிழக்கே பூமியில் ஒரு பெரிய ஊரில் செங்குந்தர் என்ற கைக்கோளர் ஜாதியில் பிறந்தார், செல்வத்தை யடைந்து புத்திரர் மனைவி இவர்களை யுடையவராகி நியாயமார்க்கத்தில் வியாபாரஞ் செய்து, போக்கு வரவு வழியில்.

41. தாகப்பந் தலும மைத்து ஜனஉப கார னையும்
தோகைவா கனத்தோன் பத்தி சுந்தரன் கொண்டு மேதான்
ஆகம மறிந்து இன்னோன் அந்தகன் பக்கல் சென்று
பாகமாய்ப பிரம னாலே பாரினில் வரையப் பட்டு

41. ஜனங்களுடைய தாக விடாயைத் தீர்ப்பதற்காக நீர்மோர்ப் பந்தலை ஏற்படுத்தி ஜனங்களுக்கு உதவி செய்பவராகி, மயில் வாகனத்தை யுடையவராகிய முருகக்கடவுளின் மேல் பக்தியுடையவராகி ஆகம

சாஸ்திரங்களை நன்றாக இவர் தெரிந்து கொண்டவராகி பின்னால் இறந்து எமனிடத்திற்குச் சென்று அதன் பிறகு பிரமதேவனால் பக்குவமாக எழுதப் பட்டு இந்தப் பூமியில்

42. வந்தவ ; னிவனே யென்றோம் வரைகிறோ மிவனின் யோகம்
அந்தணர் நேச முள்ளான் அரசர் பூசிதமு மாவன்
நொந்திடும் பேரைக் காப்பன் நேமிக ளதிகம் சேர்ப்பன்
முந்திய கீர்த்தி யேற்பன் முதல்வியே மேலுங் கேளே.

42. ஜாதகர் வந்து பிறந்தார் என்று சொல்லுகிறோம். இவ ருடைய யோகங்களைப் பற்றிச் சொல்லுகிறோம். இவர் பிராமணர்களுடைய விசுவாசத்தை உடையவர். இராஜாக்கள் இவரைப் போற்றுவார்கள், மதிப் பார்கள். செல்வத்தில் நொந்து கெட்டுப்போனவர்களைக் காப்பாற்றுவார். நிலங்களை அதிகமாகச் சேகரிப்பார். மேன்மையான புகழை அடைவார். தலைவியாகிய பார்வதியம்மையே! நாங்கள் இன்னும் சொல்லப் போவதைக் கேட்பீராக,

43. ஐயந்து ஆண்டு மேலாய் அரசரால் ஜீவிப் பானும்
நையவே கூறு னகும் நல்கிடும் சகடு தானும்
தையலர் மோகவானும் சாத்மீக குணத்தானாகும்
வையமேல் அன்ன தானம் மனங்களிப்பு டனே செய்வன்.

43. ஜாதகர், தனக்கு இருபத்தைந்து வயதிற்கு மேலே இராஜாக்கள் மூலமாக ஜீவன முடையவராவர். துன்பத்தை உண்டு பண்ணும்படியாகப் பேசமாட்டார். வண்டி இவருக்குத் தானாகவே வந்து சேரும். ஸ்திரீ களிடம் காம ஆசையை யுடையவராவார். சாத்விக குணம் என்று சொல்லப்பட்ட எட்டுவிதமான நல்ல மேன்மையான குணங்களையுடைய வர். பூமியின் மேல் சந்தோஷமான மனத்துடன் அன்னதானஞ் செய்வார்.

44. சித்திர வீடு செய்வன் ஜய முனி கேட்க லுற்றூர்
எத்திசை எந்தக் கால மிவன்சித்திர வீடு செய்வன்
சுத்தமாய்ச் சொல்லு மென்னச் சுதனுக்கு இருபா னேழில்
சித்தமாய் வீதி மேற்கில் சேர்ந்திடும் கிருகம் தானே.

44. ஜாதகர், சித்திரங்க ளுள்ள அழகான வீட்டைக் கட்டுவார். இவ்விதமாகச் சொல்ல ஜயமுனிவர் கேட்கின்றார். எந்த வயதில் எந்தத் திசையில் இவர் வீட்டைக் கட்டுவார் என்பதை உண்மையாகச் சொல்லும் என்று கேட்க இவருக்கு இருபத்தேழாவது வயதில் தனது தெருவின் மேற்குத் திக்கில் வீடு வந்து சம்பவிக்கும்.

குறிப்பு—வீடுகட்டும் விஷயம்—ஜாதகருக்கு வயது ஷ 26–0–0 முதல் ஷ 27–0–0 முடியும் வரையிலும் சுக்கிர தசையில் கேது புக்தியும், சூரிய தசையில் சூரிய சந்திர புக்திகளும் நடக்கின்றன. வீடு விஷயமாய் நான்காம் பாவத்தைக் கொண்டும் சுக்கிரனைக்கொண்டும் சொல்லவேண்டும் நான்கிற்குடையவராகிய சுக்கிரன் இரண்டில் இருந்து கொண்டு ஐந்திற்கும் பத்திற்குமுடைய அங்காரகனாலும் ஒன்பதிற்குடைய குருவாலும் பார்க்கப்படு

கின்றார். கேது சுக்கிரனுடன் கூடி நான்காவது பாவத்தைப் பார்ப்பதுமின்றி குரு அங்காரகன் இவர்களாலும் பார்க்கப்படுகின்றார். ஆகையால் சுக்கிர தசைகேது புக்தியில் ஜாதகருக்கு வீடு வந்து சேரக் கூடிய அமைப்பு இருக்கிறது.

45. இதுவன்றி அன்னிய தேசமேகுவான் சிலது காலம்
நதிபல தீர்த்தம் தோய்வன் நராதிபர் தம்மால்யோகம்
துதிசெய்தோர் தம்மைக்காப்பானும் சோலைகள் துறவு செய்வன்
பாதிபானில் திருவுமோங்கும் பகைவரை வசியம் கொள்வன்.

45. இதுவுமல்லாமல் ஜாதகர் சில காலம் வெளிதேசம் போய் இருப்பார். அநேக ஸ்தலங்களுக்குச் சென்று பலவித தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்வார். இராஜாக்களால் ஜாதகருக்கு யோகம் உண்டாகும். தன்னைப் போற்றினவர்களை ஜாதகர் காப்பாற்றுவார். தோப்புக்களையும், கிணறுகளையும் இவர் உண்டு பண்ணுவார். சூரிய தசையின் பாதி பாகத்தில் செல்வம் அதிகமாகும். இவர் எதிரிகளைத் தன்பக்கமாக வசியப் படுத்திக்கொள்ளுவார்.

46. ஐம்பது ஒன்பா ஞண்டில் அழகிய தேளின் மாதம்
பின்பக்கம் துதியை தன்னில் புகலுவோம் காலன் பக்கல்
இன்பமாய்ப் பின்ஜன் மத்தை யியம்புவோ மவ்வூர் தன்னில்
மூன்குல முதிப்பா ஞகும் முதல்வியும் கேட்க லுற்றாள்.

46. ஜாதகர் தனது ஐம்பத் தொன்பதாவது வயதில்* கார்த்திகை மாதத்தில் தேய்பிறையில் துதியைத் திதியில் இறந்து எமனிடத் திற்குப் போய்ச் சேருவார். இவருடைய சுகமான மறுஜென்மத்தைப் பற்றிச் சொல்லுகிறோம். இவர் அதே கிராமத்தில் பிராமணர் ஜாதியில் வந்து பிறப்பார். இவ்விதமாகச் சொல்லவே, தலைவியாகிய பார்வதியம்மையார் கேட்கின்றார்.

* குறிப்பு.—ஜாதகர் மரணம்—ஜாதகருக்கு வயது ஷு 58–0–0 முதல் ஷு 59–0–0 முடியும் வரையிலும் ராகுதசையில் புதன் புக்தி நடக்கிறது. கார்த்திகை முடியும் வரையிலும் வயது சுமார் ஷு 58–4½ மீ ஆகிறது. கடக லக்கினத்திற்குச் சுக்கிரன் சனி புதன் இவர்கள் பராசரஹோரை, ஜாதகசந்திரிகை, தாண்டவமாலை, சந்திரகாவியம் இவைகளின் பிரகாரம் மாரகராகிறார்கள். ராகு எட்டில், எட்டிற்குடைய சனியுடன் கூடி இருந்து லக்கினாதிபதியாகிய சந்திரனைப்பார்க்கின்றார். ஆகையால் ஜாதகசந்திரிகை 12-ஆவது 23-ஆவது சுலோகப் பிரகாரமும் துய்யகேரளம் எட்டாம் பாவம் 20-ஆவது பாடல் பிரகாரமும் இராகு தன் தசையில் ஜாதகருக்கு மாரகஞ் செய்ய அதிகாரமுடையவராகின்றார். புதன் கடக லக்கினத்திற்கு ஏற்கனவே மாரகாதிபதியாகி மூன்று பன்னிரண்டிற்குடையவராகி லக்கினத்தில் உயிரா திபதியாகிய சூரியனுடன் இருப்பதால் இவருக்குத் தன்னுடைய புக்தியில் ஜாதகருக்கு மரணத்தைக் கொடுக்கும் அதிகார அமைப்பு இருக்கிறது. ஆகையால் ஜாதகருக்கு இராகு தசையில் புதன் புக்தியில் மாரகஞ் செய்ய அமைப்பு ஏற்படுகிறது.

47. இச்சென்மம் தன்னிலே தானிவன் பொரு ளிச்சை வைத்தும்
மிச்சமாய்க் கட்டு வார்த்தை வினையான மனத்தா னுயும்
கச்சணி மாது மேலே கனத்ததோர் மோகம் கொண்டும்
நச்சணி கண்டன் பத்தி நாயகன் கொள்ளா ததாலும் ;

47. ஜாதகர் இந்த ஜன்மத்தில் பொருள்களின் மேல் ஆசையுடைய வராயும், பொய்யான வார்த்தைகள் புனைந்த வார்த்தைகள் ஆகிய இவைகளைக் கொஞ்சமாக உபயோகப்படுத்தியும், கெட்ட மனத்தையுடையவ ராயும், ரவிக்கையை அணிந்து கொள்ளும்படியான ஸ்திரீகளின் மேல் அதிகக் காம ஆசையுடையவராகியும், விநாயகக் கடவுளின் மேல் ஆசை யுடையவராகி அவரைத் தொழாமலிருந்ததாலும், ஜாதகர் இவ்விதமான கெட்ட குணங்களையுடையவராயிருந்தும் ;

48. மறைக் குல முதிப்பா னென்றீர் வருகும்காரணங்க ளென்ன
உறைகுவீர் விவர மாக உத்தம னிச்சென் மத்தில்
மறையவன் நேசம் கொண்டு வாக்குகள் தப்பாத தாலும்
திருப்பணி அனந்தம் செய்தும் தீரனு மறத்தி லிச்சை ;

48. பின்ஜன்மத்தில் பிராமணர் ஜாதியில் பிறப்பார் என்று சொன்னீரே, இதற்குக் காரணங்களை விபரமாகச் சொல்லுவீர் என்று கேட்க, ஜாதகர் இந்த ஜன்மத்தில் பிராமணர்களின் மேல் ஆசை யுடையவராகி தன்னுடைய வார்த்தைகளைத் தவறி நடக்காமலிருந்ததா லும், அநேகவிதமான தெய்வத்தொண்டுகளைச் செய்ததாலும் தைரியமாய்த் தர்மத்தின் மேல் ஆசையை ;

49. வைத்ததால் மறுஜன் மத்தில் மறை குல முதிப்பா னுகும்
வித்தகன் ஜனன காலம் மேவுசெம் பாம்பு தன்னில்
சுத்தமா யாண்டு ஆறும் சேர்ந்திடுந்திங்க ளேழும்
சித்தசன் தனக்கு ரோகம் செறிந்துபின் நிவிர்த்தி யாகும்.

49. உடையவராய் இருந்ததாலும் பின்ஜன்மத்தில் பிராமணர் குலத்தில் பிறப்பார் என்று சொல்லுகிறோம். இந்த அறிவுடையவர் பிறந்த காலத்தில் கேது தசையில் நிச்சயமாய் ஆறுவருஷங்களும், ஏழு மாதங் களும் இருப்பு இருந்தன. இந்தக் காலத்தில் இவருக்கு நோய்கள் சம்பவித்துப் பிறகு நிவிர்த்தியாகிவிடும்.

50. தந்தைதாய் தனது ரோகம் சகோதரி துன்பம் சூதம்
தன்தனம் செலவு நேரும் சஞ்சல புத்தி யாகும்
பந்துவின் சூதகம் நேரும் பகருவோம் விவரம் ரண்டில்
இந்திர னிரைஞ்சு மாதே யிப்பலன் தப்பா தாமே.

50. ஜாதகருடைய தகப்பனுருக்கும் தாயாருக்கும் நோய்கள் உண்டாகும். சகோதரர்க்குக் கஷ்டம் ஏற்படும். சூதகங்கள் நேரிடும். தன்னுடைய பொருள் செலவாகும். மனக்கவலை ஏற்படும். பந்துக்களில் சூதகங்கள் உண்டாகும். மற்ற விவரங்களை இரண்டாவது பாகத்தில் சொல்லுகிறோம். இந்திரன் வணங்கித் தொழுகின்ற பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய இந்தப் பலன்கள் தவறிப்போகாமல் நடக்கும்.

## ஜாதகம் 73

1. சந்திரன் நந்தி யாகச்[1] சனிசுரா[2] புகரும்[3] வில்லு[4]
புந்தியும்[5] கேது கோலில்[6] பொன்[7] குசன்[8] கன்னி யாக
விந்தையாய் ராகு மேடம் விருச்சிக மிரவி[9] நீற்க
வந்த இச் சென்மம் நண்டு[9] வரைகுவீர் பலனைத் தானே.

| | | | |
|---|---|---|---|
| | ராகு | சந்திரன் | |
| | இராசி சக்கரம் | | லக்கினம் |
| சனி | | | |
| சுக்கிரன் | சூரியன் | புதன் கேது | குரு அங்காரகன் |

கிருத்திகை 4-ஆம் பாதம் சூரியதசை இருப்பு 0–6–0.

1. சந்திரன் ரிஷபத்திலும், சனி மகரத்திலும், சுக்கிரன் தனுசிலும், புதனும் கேதுவும் துலாத்திலும், குருவும் அங்காரகனும் கன்னியிலும், ராகு மேஷத்திலும், சூரியன் விருச்சிகத்திலும், இருந்து ஜன்ம லக்கினம் கடகமாகப் பிறந்தவருக்குப் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று ;

**குறிப்பு.**—இந்த ராசிச் சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்த முடையதாகும் :—மேஷத்தில் சனியும், ராகுவும், மிதுனத்தில் அங்காரகனும் சுக்கிரனும், கன்னியில் சூரியனும் குருவும், துலாத்தில் கேதுவும், மீனத்தில் சந்திரனும் புதனும் ஆகும்.

2. உமையவள் கேட்கும் போது உரைக்கிறார் புயண்டர் தாமும்
அடைந்திடு மாண்பால் ஜன்மம் அந்தகன் வாடை யாகும்
இமைவர் கோன்கு டக்குவீதி யாளியின் கோஷ்டம் தெற்கில்
நவமதில் மாயோன் மேற்கில் நாட்டுவோம் மஸ்தா னுண்டு.

2. பார்வதியம்மையார் கேட்கும்போது புஜண்ட மகரிஷி சொல்லுகிறார். பிறந்த குழந்தை ஆண்குழந்தையாகும். பிறந்த வீடு தெற்கு வாடையில் இருக்கும். தேவர்களுக்கு அரசனாகிய தேவேந்திரனுடைய திக்காகிய கிழக்குத் திக்கிலும், குடகுத் திக்கு என்ற மேற்குத்திக்கிலும் தெருவு

---

[1] ரிஷபம் [2] மகரம் [3] சுக்கிரன்
[4] தனுசு [5] புதன் [6] துலாம்
[7] குரு [8] அங்காரகன் [9] சூரியன்

ஒடும், அஃநாவது பிறந்த வீதி கிழக்கு மேற்கு வீதியாகும். யானைத் தொழுவம் தெற்கிலுண்டு. மகா விஷ்ணுவின் கோயில் மேற்கிலுண்டு. முஸ்லிம் மசூதியுமுண்டு.

3. சாலையு மோடை தெற்கில் சங்கரன் கந்தன் கீழ்ப்பால்
சோலைகள் அருகில் தங்கும் செப்புவோம் சமவூர் தன்னில்
வேலனும் ஆறும் ஜன்மம் விளம்புவோமிவனே யென்றோம்
கோலமா யின்னோன் யோகம் கூறுவோ மிந்நூல் தன்னில்.

3. மரங்களின் சாலையும் ஓடையும் தெற்கிலுண்டு. சிவபெருமானுடைய கோயிலும் முருகனுடைய கோயிலும் கிழக்குத் திக்கில் இருக்கும். தோட்டங்கள் அருகில் இருக்கும். பெரியதும் சிறியதுமல்லாத ஒரு சமமான நடுத்தரமான ஊரில் ஆறுவது கர்ப்பத்தில் ஜாதகர் பிறப்பார் என்று சொல்லுகிறோம். இவருடைய யோகவிஷயங்களைப்பற்றி இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகிறோம்.

4. தந்தையின் வர்க்கம் தன்னைச் சாற்றஆண் பலத்தைக் காணோம்
வந்திடும் கன்னி ரண்டு வரைகிறோம் தீர்க்க மாக
அந்தவள் உள்ளூர் தன்னில் அணுகியே வாழ்வா ளாகும்
எந்தையே தந்தை சேதி யியம்புவோ மினிமே லாக.

4. ஜாதகருடைய தகப்பனாரின் வர்க்கம் என்ற பந்துக்களைப்பற்றிப் பேசுங் காலத்தில் ஆண் சகோதரர்கள் கிடையா. இவருக்கு இரண்டு சகோதரிகள் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள். இவர்கள் உள்ளூரிலேயே புருஷன்மார்களை விவாகஞ் செய்துகொண்டு வாழ்ந்து வருவார்கள். இனிமேல் தகப்பனாருடைய விஷயங்களைப் பற்றிச் சொல்லுகிறோம்.

5. வித்தையு மல்ப மாகும் வீண் வம்பில் செல்லா னாகும்
உத்தம னாகி வாழ்வான் உள்மனம் கபடு மில்லான்
அதிதிபோல் நடையு மாவன் யாவர்க்கு நல்லோ னவன்
சித்தினி சாதி யாவன் செய்நன்றி மறவா னாகும்.

5. தகப்பனாருக்குக் கல்வி கொஞ்சமாகவிருக்கும். அனாவசிய மாகச் சண்டை சச்சரவுகளில் தலையிடமாட்டார். நல்ல மார்க்கத்தில் இருந்து வாழ்வார். தன்னுடைய மனதிற்குள்ளே கள்ளம், வஞ்சனை இவைகள் இல்லாதவர். பரதேசிகளைப்போலச் சன்மார்க்கக் குணத்தை யுடையவர். எல்லோருக்கும் நல்லவராவர். நால்வகைப் பெண்களுள் பதுமினிவகைப் பெண்ணிற்கு அடுத்தவகைப் பெண்ணாகிய சித்தினி * ஜாதிப் பெண்ணின் குணங்களை ஜாதகர் உடையவராவார். தனக்குப் பிறர் செய்த உபகாரத்தை மறக்கமாட்டார்.

* **குறிப்பு.—சித்தினி ஜாதி விஷயம் :—**இது விஷயமாய் நெம்பர் 58-வது ஜாதகம் 33-வது பாடல், நெம்பர் 56-வது ஜாதகம் 7-வது பாடல் இவைகளின்கீழ் கொடுத்துள்ள வியாக்கியானத்தை வாசிக்கவும்.

6. ஆதியில் வறுமை யுள்ளான் அணுகிடும் பின்னல் வாயு
நீதியாய் நடக்கை யுள்ளான் நிதானமாய் வார்த்தை சொல்வன்
பத்தினி வயதின் மேலாய்ப் பாக்கிய முடைய னுவன்
மாதவர் தம்மைப் பேணுன் மனைவியால் பெருமை யுள்ளான்.

6. தகப்பனுர் முதலில், அஃதாவது இளம் பிராயத்தில் தரித்திர மும் கஷ்டங்களுமுடையவர். பின்வயதில் வாயு ரோகம் வந்து சம்பவிக்கும். நியாயமான நடவடிக்கை யுள்ளவர். நல்லொழுக்கமுள்ளவர். கொஞ்ச மாகவும் சுருக்கமாகவும் பேசுவார். தனக்கு மனைவி வந்த வயதிற்குப் பிறகு செல்வமுடையவராவார். முனிவர்களை விரும்பவும் மாட்டார். தொழவும் மாட்டார். மனைவி மூலமாகப் பெருமையையும் மேன்மையையும் அடைவார்.

7. பலருக்கும் பந்தி னர்க்கும் பாலகன் வணங்கி வாழ்வன்
நலமாகக் கூறு வானும் நற்றந்த ரோகி யாவன்
கலகங்கள் கூறு னுகும் காதலி பட்ச முள்ளான்
விலைமாதர் விருப்பம் கொள்ளான் வித்தகி கேட்டி டாயே.

7. ஜாதகரின் தந்தை அநேகரையும் பந்துக்களையும் வணங்கி மதித்து வாழ்ந்து வருவார். இனிமையாகவும் நன்மையாகவும் பேசுவார். பல் நோய் உடையவராவார். சண்டை சச்சரவை உண்டுபண்ணக்கூடிய வார்த்தைகளைச் சொல்லமாட்டார். மனைவியின்மேல் ஆசையுடையவர். போகஸ்திரீகளின் மேல் ஆசையில்லாதவர். பார்வதியம்மையே ! கேட்பீராக.

8. இந்நெறி யுடையா னுக்கு இவனுமே யுதிப்பா னுகும்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அழகுளான் சிவந்த மேனி
பன்னியே பேச வல்லான் பாருகள் சேர்ப்பா னுகும்
உன்னத கல்வி கொஞ்சம் உள்மனம் கபடு முண்டு.

8. இப்படிப்பட்ட குணுதிசயங்களை யுடைய தகப்பனுருக்கு ஜாதகர் பிறப்பார். இவருடைய குணுகுணங்களைச் சொல்லுகிறேன். இவர் அழகுள்ள வர். சிவப்பான தேகத்தையுடையவர். சுருக்கமாகவும் திறமையாகவும் பேசுஞ் சாமர்த்தியமுள்ளவர். நிலங்களைச் சேகரிப்பார். மேன்மையான வித்தை கொஞ்சமாகவிருக்கும். மனத்திற்குள்ளே கள்ளமும் வஞ்சனையும் இருக்கும்.

9. போஜனம் கொஞ்ச முண்டு பதார்த்தங்கள் அதிகம் கொள்வன்
காசுமே லாசை யுள்ளான் காதலி மார்கள் மோகன்
பேசினில் சோரா னுகும் பித்ததே கத்தா னென்றேம்
பாசமா யெவர்க்கும் நேயன் பந்துவை ஆதரிப்பன்.

9. ஜாதகர் கொஞ்சமாகச் சாப்பிடுவார். பதார்த்தங்களை அதிகமாகச் சாப்பிடுவார். பணத்தின்பேரில் ஆசையுடையவர். ஸ்திரீகளின் மேல் காம ஆசையுடையவர். பேசுவதில் இளைப்பு அடையாதவர். பித்தமான தேகத்தையுடையவர் என்று சொல்லுகிறேம். இவரிடத்தில் எல்லோரும் சினேகிதமாய் இருப்பார்கள். தன்னுடைய பந்து ஜனங்களைக் காப்பாற்றுவார்.

10. தந்திர வாதி யாகும் தைரிய னூகவானும்
நிந்தையு முடைய னாகும் நுவலுவான் கட்டு வார்த்தை
தந்தையி னார்ஜிதத்தைத் தானவன் விருத்தி செய்வன்
சொந்தமாய்ப் பூமி சேர்ப்பன் துணைவரை ஆத ரிப்பன்.

10. ஜாதகர் தந்திரம் உபாயம் இவைகளை யுடையவராவர். தைரிய முள்ளவர். நுட்பமான புத்தியை யுடையவ்ர். பழி நிந்தனை இவைகளை அடைவார். பொய்யான வார்த்தைகளையும் புனைந்த வார்த்தைகளையும் சொல்லுவார். பிதுரார்ஜித சொத்தை விருத்தியாக்குவார். சுயார்ஜிதமாகப் பூமிகளைச் சேகரிப்பார். தன்னுடன் கூடப் பிறந்தவர்களைக் காப்பாற்றுவார்.

11. இவன்துணை எழுவ ராகும் இவைகளில் ஆண்பா லொன்று
பவமுள கன்னி ஒன்று பகருவோம தீர்க்க மெய்தும்
நவனிபால் துணைவர் சேதி நாட்டுவோம் சிவந்த மேனி
பவமுள உணச்சல் தேகி பஞ்சமே விரக்க மில்லாள்.

11. ஜாதகருடைய சகோதரர்கள் ஏழுபேராவார்கள். இவர்களில் ஓர் ஆண் சகோதரனும், ஒரு பெண் சகோதரியும் நீண்ட வயதுடையவர்களாக இருப்பார்கள் என்று சொல்லுகிறோம். சகோதரர்களின் விஷயங்களைப் பற்றிச் சொல்லுகிறோம். சகோதரி சிவப்பான நிறமுள்ள தேகத்தையுடையவள். மெலிந்த ஒல்லியான தேகத்தை யுடையவள். ஏழைகளின் மேல் தயை இல்லாதவள்.

12. அஞ்சின வார்த்தை சொல்லாள் அதிகபாட் டாளி யாகும்
வஞ்சிக்கு பாலன் மேற்கு வரைந்தனம் சுதராண் மூன்று
தஞ்சமாய்த் தீர்க்க மெய்தும் சுகதுக்க மிரண்டு முள்ளாள்
நஞ்சுண்டோன் பாகத் தாளே நாயகி கேட்டி டாயே.

12. சகோதரி பிறர் பயப்படும்படியான வார்த்தைகளைச் சொல்ல மாட்டாள். அதிகமாகக் கஷ்டப்பட்டு வேலை செய்யக்கூடியவள். தான் விரும்பின புருஷன் தனக்கு மேற்குத் திக்கிலிருந்து வருவார். இவளுக்கு மூன்று ஆண் பிள்ளைக் குழந்தைகள் நீண்ட ஆயுளை யுடையவர்களாயிருப்பார்கள். இவள் சுககஷ்டம் ஆக இரண்டையும் சேர்த்து அனுபவிக்கக்கூடியவள். ஆலகால விஷத்தைச் சாப்பிட்ட பரமசிவனுடைய இடது பாகத்தைப் பெற்றவராகிய பார்வதி யம்மையே ! கேட்பீராக.

13. ஆண்துணை சேதி சொல்வேன் அவனிரு நிறத்தா னாகும்
தேன்மொழி கூறு வானும் தீரனு மூக சாலி
மானனை யார்க்கு நேயன் மாநிலம் விருத்தி செய்வன்
இளமனம் குணமில்லா தானிருவிதக் கல்வி கற்பன்.

13. ஜாதகருடைய சகோதரனின் விஷயங்களைப் பற்றிச் சொல்லுகிறேன். இவர் இரண்டு நிறங்கள் கலந்துள்ள மாநிறமுள்ள தேகத்தை யுடையவராவார். இன்பமான வார்த்தைகளைச் சொல்லுவார். தைரிய முள்ளவர். நுட்பமான அறிவை யுடையவர். மானைப் போன்றவர்களாகிய

ஸ்திரீகளுக்கு இஷ்டமானவர். பெரிய நிலங்களைப் பயிரிட்டு விருத்தியாக்கு வார். இளகிய இரக்கமான மனத்தையும் குணத்தையும் உடையவரல்லர். இரண்டு வகையான வித்தையைக் கற்றுக்கொள்ளுவார்.

14. சுயம்தொழில் விருத்தி செய்வன் சாயல்நேத் திரமு மாவன்
அயலார் பொனிச்சை யில்லான் அறம்செய்வன் பூமி சேர்ப்பன்
கயவரைச்சேரா னாகும் கண்முகம் வசிய முள்ளான்
ஜெயம்செய்வ னெடுத்த வேலை சிறப்பான குடும்பி யாவன்.

14. ஜாதகருடைய சகோதரன் நல்ல தொழிலைச் செய்து அதில் விருத்தியடைவார். சாயலான கண்ணை யுடையவர். அஃதாவது ஒன்னரைக் கண்ணன் ஆவார். பிறருடைய சொத்தின் மேல் ஆசையில்லாதவர். தருமங் களைச் செய்வார். நிலங்களைச் சேகரிப்பார். கீழ் மக்களுடனும் தாழ்ந்தவர்க ளுடனும் சேரமாட்டார். இவருடைய கண்களும் முகமும் பிறரைக் கவரத் தக்கனவாகவும் அழகாகவும் இருக்கும். தான் ஆரம்பித்துச் செய்யும் வேலையைப் பூர்த்திசெய்து ஜயத்தை அடைவார். மேன்மையான, பெருமை யான குடும்பஸ்தனாக ஆவார்.

15. நினைத்தது முடிக்க வல்லன் நிதானமாய் வார்த்தை சொல்வன்
சினமது முன்னாலுண்டு சுகபுசிப் புடைய னாகும்
இனமதற் கிசைவ னாகும் எளியோரை ஆத ரிப்பன்
தனமது சேர்ப்பா னாகும் சல்லியம் கொள்ளா னென்றோம்.

15. ஜாதகருடைய சகோதரர் தான் எண்ணின காரியத்தைச் செய்து முடிக்குஞ் சாமர்த்தியத்தை யுடையவர். சாந்தமாகவும் மெதுவாக வும் வார்த்தைகளைச் சொல்லுவார். முன்கோபத்தை யுடையவர். சுகமான போஜனத்தைச் சாப்பிடக்கூடியவர். பந்துக்களுடன் ஒத்துத் தாழ்ந்து போகக் கூடியவர். எழைகளையும் சக்தியற்றவர்களையுங் காப்பாற்றுவார். செல்வத் தைச் சேகரிப்பார். கடன் வாங்கமாட்டார் என்று சொல்லுகிறோம்.

16. வடதிசை மனைவி வாய்க்கும் வரைகிறோம் புத்திர பாவம்
திடமதாய் ஆண்பால் ரண்டு தேவியு மவ்வாற தீர்க்கம்
அடவுடன் துணைவ ரோடு அணுகியே வாழ்வா ராகும்
கடல்போலே குடும்பி யாவன் காதலி கேட்டி டாயே.

16. ஜாதகருடைய சகோதரனுக்கு வடக்குத் திக்கிலிருந்து மனைவி வந்து சேருவாள். இவரது புத்திரபாவத்தைச் சொல்லுகிறோம். இவருக்கு இரண்டு ஆண் குழந்தைகளும் இரண்டு பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக இருப்பார்கள். இவர் தன்னுடைய சகோதரனுடன் கூடி ஏக குடும்பமாக இருந்து வாழ்வார். சமுத்திரத்தைப் போலப் பெரிய குடும்பஸ்தராவார். பார்வதியம்மையே ! கேட்பீராக.

17. அன்னையும் சிவந்த மேனி அழகுளாள் வாத தேகி
பின்னமில் லாதா ளாகும் புருஷனுக் கினிய ளாகும்
அன்னையு மிரண்டு மாகும் அவள்வந்த பின்பு யோகம்
அன்னவள் மூர்க்கம் கொஞ்சம் அவசர மனத்தா ளாமே.

17. ஜாதகருடைய தாயார் சிவப்பான தேகமுடையவள். அழகுள்ளவள். வாத தேகத்தை யுடையவள். அவயவத்தில் யாதொரு பங்கமும் குறைவும் இல்லாதவள். தன்னுடைய புருஷனுக்கு இவள் இஷ்டமானவளாவாள். இவளுக்கு இரண்டு தாய்மார்கள் உண்டு. இவள் புருஷனிடம் வந்து சேர்ந்த பிறகு அவனுக்கு யோகமுண்டாகும். இவள் கொஞ்சம் முறட்டுக்குணத்தையுடையவள். அவசரமான குணத்தையுமுடையவளாவள்.

18. புத்திர ஆசை யுள்ளாள் பூஷண மதிக மில்லாள்
நத்திஞேர்க் குதவி செய்வள் நலமறிந் துரைக்க வல்லாள்
வித்தகி அறம்செய் யாதாள் விளம்புமுன் கோபி யாவள்
பத்தினி யல்ப ரோகி பார்வதி கேட்டி டாயே.

18. ஜாதகருடைய தாயார் குழந்தைகளின் மேல் ஆசையுள்ளவள். ஆபரணங்கள் அதிகமாக வில்லாதவள். தன்னிடம் வந்தடைந்தவர்களுக்கு உபகாரத்தைச் செய்வாள். நல்லதைத் தெரிந்துகொண்டு பேசுந் திறமையுடையவள். தருமங்களைச் செய்யமாட்டாள். முன் கோபத்தையுடையவள் என்று சொல்லுகிறேம். இவளுக்குக் கொஞ்சம் ரோகமுண்டு. பார்வதியம்மையே ! கேட்பீராக.

19. துணைவர்கள் காணு ளாகும் தோன்றினும் தீதே யாகும்
அணையவே அவள்தன் பூர்வம் அறைகிறேம் கேளும் தாயே
தணிகையின் மலைக்கு மேற்கில் சார்ந்திடும் சிற்றூர் தன்னில்
மிணிகொளு முத்திரியவமிசம் ஜனித்தன ளிவளேயம்மா.

19 ஜாதகருடைய தாயாருக்குச் சகோதார்கள் கிடையாது. பிறந்தாலும் இறந்துபோய்விடும். இவளுடைய முன் ஜன்மத்தைச் சொல்லுகிறேம், எங்கள் தாயாராகிய பார்வதியம்மையே ! கேட்பீராக. திருத்தணி மலைக்கு மேற்குத்திக்கில் அதை அடுத்தாற்போலுள்ள ஒரு சிறிய கிராமத்தில் ஒரு மேன்மையான முத்திரிய ஜாதியில் இவள் வந்து பிறந்தாள். பார்வதியம்மையே ! கேட்பீராக.

20. வரன்சு தருள்ளா ளாகி வாழ்கிற நாளி லேதான்
உறைந்தவூழ் தன்னைச் சொல்வே னுயர்குல மறையோன் [பெற்ற
வரும்சேய்க்குப் பாலில் லாமல் மங்கைபால் ஆவின் பாலைத்
தருகென்று வினவும் போது சத்தியும் மனவெ றுப்பால்.

20. ஜாதகருடைய தாயார் புருஷன் குழந்தைகள் இவர்களையுடையவளாகி வாழுகின்ற காலத்திலே இவளுக்கு வந்து சம்பவித்த பாவத்தை, வினையைச் சொல்லுகின்றேன். முதற்குலமாகிய பிராமண குலத்திற் பிறந்தவர் ஒருவர் தன்னுடைய குழந்தைக்குப் பால் இல்லாமல் இவளிடஞ்சென்று பசுவின் பாலைக் கொடு என்று கேட்கும்போது இவள் இஷ்டமில்லாமல் மனக் கஷ்டத்துடன் ;

**21.** இருந்துமே தராமல் விட்டா ளியம்புவார் மறையோர் தாமும்
பெரும்சுதர் தன்பா லீயாப் பாவிக்கு மறுஜன் மத்தில்
பெறுந்தாயு மில்லா தாகிப் பூமியில் வாழ்வா யென்று
மறையவர் சொல்லி யேதான் வந்தன ரில்லம் தன்னில்.

21. பால் இருந்தும் அதைக் கொடாமல் சும்மாய் இருந்து விட்டாள். அதன் மேல் இந்தப் பிராமணர், நான் பெற்றப் பிள்ளைக்குப் பால் கொடுக்காத பாவியாகிய உனக்குப் பின் ஜன்மத்தில் உன்னைப்பெற்றெடுத்தத் தாயார் உயிருடன் இல்லாதவளாகி நீ பூமியில் வாழக்கடவாய் என்று பிராமணர் சொல்லி விட்டுத் தன் வீட்டிற்குப் போய்ச் சேர்ந்தார்.

**22.** அதுவன்றி வேறு தோஷம் அறையவே மாட்டோ மம்மா
அதிபதி வரன்முன் னேதான் வயிறுநோய் தன்னால் மாண்டு
குறைதலை கஞ்சன் தன்னால் முயற்சியாய் வரையப் பட்டு
விறைவினில் வடுகர் வமிசம் விளங்கின னிவனே யென்றோம்.

22. இந்தத் தோஷம் இல்லாமல் இன்னொரு தோஷத்தை நாங்கள் சொல்லமாட்டோம். பார்வதியம்மையே! இவள் தன்னுடைய புருஷனுக்கு முன்னால் வயிற்று நோயால் இறந்து எமனிடஞ் சென்று பின்னால் பிரமதேவனால் எழுதப்பட்டுச் சீக்கிரத்தில் தெலுங்கர் குலத்தில் வந்து பிறந்தாள் என்று சொல்லுகிறோம்.

**23.** இந்ததோர் ஜன்மம் தன்னில் இவன்தாய்க்குத் தோஷ மெய்தும்
பிந்திய ஜன்மம் தன்னைப் பேசுவோம் காஞ்சி தன்னில்
சிந்தையாய்ச் சௌராஷ்ட்ர வமிசம் ஜனிப்பாளாம் சுகமுள் ளாளா[ய்த்
தந்தியைப் பெற்ற மாதே தயாபரி மேலுங் கேளே.

23. இந்த ஜன்மத்தில் இவளுடைய தாயாருக்குத் தோஷம் உண்டாகும், அஃதாவது தாயார் இறந்துவிடுவாள். இவளுடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறோம். இவள் காஞ்சீபுரத்தில் சௌராஷ்டிரர் குலத்தில் வந்து மனக் கலக்கத்துடன் பிறப்பாள். சுகத்தை அடைவாள். யானை முகத்தையுடைய விநாயகக்கடவுளைப் பெற்றெடுத்தவரும், கிருபை யுடையவருமாகிய பார்வதியம்மையே! இன்னும் கேட்பீராக.

**24.** தந்தையின் முன்ஜன் மத்தைச் சாற்றுவோம் பட்சி தன்னில்
இந்தவன் தீயின் வமிச மெய்தியே கிருஷி யாலே
சந்ததம் சீவித் தேதான் தன்மனைமதலை யுண்டாய்
விந்தையாய் வாழுந் நாளில் விளம்புவோ மூழி தானே.

24. ஜாதகருடைய தகப்பனாரின் பூர்வ ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறோம். பட்சி ஸ்தலமாகிய திருக்கழுக்குன்றத்தில் வன்னியர் குலத்திற் பிறந்து விவசாயத் தொழிலைச் செய்துகொண்டு மனைவி மக்களுடையவராய் வாழுகின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்தப் பாவத்தைச் சொல்லுகிறோம்.

25. மனையவள் வார்த்தை கேட்டு அன்னையை யிகழ்ச்சி பேசிப்
பிணையாகக் காலால் எத்தப் புகலுவா ளன்னை தாமும்
இனிவரும் ஜன்மம் தன்னி லிடைநாளின் நடுவில் காலில்
பிணிகண்டு தநதம் பாழாய்ப் போய்விடு மென்று சொல்லி ;

25. தகப்பனார் தன்னுடைய மனைவியின் பேச்சைக் கேட்டுத் தன்னுடைய தாயாரைத் தூஷித்து இழிவாகப் பேசிவிட்டுப் பின்னால் சமூதையைப் போலத் தன்னுடைய காலால் அவளை எட்டி உதைக்க, அவள் சொல்லுகிருள், உனக்குப் பின்னால் வரப்போகின்ற ஜன்மத்தில் மத்திய காலத்தில் நடுவில் காலில் ரோகமுண்டாகியும், உன்னுடைய பற்கள் கெட்டுப்போயும் விடும் என்று சொல்லி ;

26. மனவெறுப் பதனால் சொல்ல மறுவிற்று அந்தத் தோஷம்
வினையாக வேறு ஒன்று விளம்புவோம் கேளும் தாயே
அனையவே ஆல யத்தில் அர்ச்சனை மலரை யின்னோன்
துணிவுடன் மிதித்தா னம்மா சேர்ந்தது அதுவோர் தோஷம்.

26. மனக் கஷ்டத்துடன் சொல்லவே, அவளுடைய சாபம் ஜாதகரை வந்து இந்த ஜன்மத்தில் வந்து அடைந்தது. இன்னொரு பாவத்தையும் சொல்லுகிறோம். எங்கள் தாயாராகிய பார்வதியம்மையே! கேட்பீராக. ஒரு கோயிலில் கடவுளுக்கு அர்ச்சனை செய்த புஷ்பத்தை ஜாதகர் வேண்டுமென்றே தைரியத்துடன் துணிச்சலாக மிதித்தார். பார்வதியம்மையே! இந்த ஒரு பாபமும் ஜாதகரை வந்து அணுகிற்று.

27. அந்திய காலம் தன்னில் அவன்தரித் திரனே யாகிப்
பிந்தியும் வேதம் கோஷ்டம் பிரியமாய்த் தீபம் பார்த்துக்
கந்தமா மலரெ டுத்துக் கடவுளர்க் களித்து வந்து
அந்தகன் பக்கம் சென்று அயனுமே வரையப் பட்டு ;

27. ஜாதகர் முன் ஜன்மத்தில் கடைசி காலத்தில் ஏழையாகிப் போய்ப் பிறகு வேதங்களை ஓதுகின்ற ஒரு கோயிலில் ஆசையுடன் விளக்கு வைத்து ஏற்றிப் பார்த்து வாசனையுடைய புஷ்பங்களைக் கொண்டு வந்து கடவுள்களுக்கு அர்ச்சனைக்காகக் கொடுத்துவந்து பின்னால் இறந்து எமனிடஞ் சென்று பிரமதேவனால் எழுதப்பட்டு ;

28. வந்தவ னிவனே யென்றோம் வரைகிறோ மிச்சென் மத்தில்
பிந்திய வயதி லேதான் புக்கிடும் காலில் பீடை
தந்தங்கள் குற்ற முண்டாம் சடைமுனி புயண்டர் சொல்லக்
கந்தனை யீன்ற மாது காதலி கேட்க லுற்றாள்.

28. இந்த ஜன்மத்தில் வந்து ஜாதகர் பிறந்தார் என்று சொல்லுகிறோம். இந்த ஜன்மத்தில் நடக்கும் விஷயத்தைச் சொல்லுகிறோம் இவருக்குக் கடைசி வயது காலத்தில் தன்னுடைய காலில் ரோகம் உண்டாகும். பற்கள் கெட்டுப்போய்விடும் என்று ஜடைமுனிவர் புஜண்டர் சொல்ல, முருகக் கடவுளைப் பெற்றெடுத்தவராகிய பார்வதியம்மையார் கேட்கின்றார்.

29. வரும்வினை நீங்கு தற்கு வரைகுவீர் சாந்தி ஒன்று
மறுமமாய் மாதுர் சாபம் வந்ததால் நீங்கா தம்மா
குறையது குறையே யாகும் குறித்ததும் தப்பா தாகும்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

29. ஜாதகருக்கு இவ்விதமாக வரப்போகின்ற பாவத்தைத் தடுக்க ஒரு சாந்தியைச் சொல்லுவீர் என்று கேட்க, இரகசியமாகத் தாயாருடைய சாபம் பிள்ளைக்கு வந்து நேர்ந்ததால், இந்தச் சாபம் நீங்கிப் போகாத சாபமாகும். பார்வதியம்மையே! தோஷங்கள் தோஷமாகவே வந்து நேரிடும். காலில் ரோகமும்* பற்களில் கெடுதிகளும் வந்தே தீரும். நாங்கள் சொல்லியதும் தவறிடாமல் நடந்தே தீரும். அருமையான வேதங்களின் முடிவு என்ற உபநிஷத்துக்களில் விளங்குகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

* **குறிப்பு.—காலில் பீடை விஷயம்** :—பன்னிரண்டாமிடமாகிய மிதுனம் கால் ஆகும். பன்னிரண்டிற்குடைய புதன் நான்கில் கேந்திரத்தில் கேதுவுடன் இருந்து கொண்டு ராகுவால் பார்க்கப்பட்டு எட்டிற்குடையவராகிய முடவனுகிய சனியால் பார்க்கப்பட்டிருப்பதாலும் பன்னிரண்டாம் வீட்டை ராகு பார்ப்பதாலும் ஜாதகருக்குக் காலில் ஊனம் நேரிட கீழ்க்கண்ட ஜாதகாலங்காரம் 413-ஆவது பாடல் பிரகாரம் அமைப்பு இருக்கிறது. இது சனி தசையில் நேரிடும்.

"கண்ட பன்னிரண்டாம் வீட்டோன் கனத்திரி கோணமேறிக்
கொண்ட கேந்திரத்தி னிற்க வவனேடு கூடி ராகு
அண்டியே நிற்கப்பாவ ரவர்களைப் பார்த்திருக்க
எண்டிசை யுலகிலங்க வீனனுயிருப்ப னென்னே."

30. மறுஜன்மம் அவ்வூர் தன்னில் மைந்தர்க்கு மைந்த னுயும்
உறைகுவ னிவனே யென்றேம் உரைக்கிறே மிவர்கள் காலம்
இருபது ஒன்ப தாண்டில் ஆவணி மாதம் தன்னில்
பெறும்தந்தை கண்ட மென்றேம் புண்ணிய வதியே கேளாய்.

30. ஜாதகர் பின் ஜன்மத்தில் அதே ஊரில் பிள்ளைக்குப் பிள்ளையாகப் பிறப்பார் என்று சொல்லுகிறோம். இனிமேல் தகப்பனுர் தாயார் இவர்களுடைய மரண காலத்தைச் சொல்லுகிறோம். தகப்பனுர் ஜாதகருக்கு இருபத்தொன்பதாவது வயதில்† ஆவணி மாதத்தில் இறந்து விடுவார் என்று சொல்லுகிறோம். புண்ணியம் செய்தவராகிய பார்வதியம்மையே கேட்பீராக.

† **குறிப்பு.—பிதுர் மரணம்**:—ஜாதகருக்கு வயது வருஷம் 28-0-0 முதல் வருஷம் 29-0-0 முடியும் வரையிலும் ராகு தசையில் கேது புக்தி நடக்கின்றது. பிதுர் லக்சினம் மீனம், மீன லக்கினத்திற்கு சனி புதன் சுக்கிரன் சூரியன் ஆகிய இவர்கள் பராசரஹோரை, ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் மாரகர்கள் ஆவார்கள். இராகு கர்ம ஸ்தானமாகிய பத்தில் மீனத்திற்கு மாரகஸ்தான மாகிய இரண்டில் இருக்கின்றார். கேது மீனத்திற்கு எட்டில் மாரகாதிபதி யாகிய சுக்கிரன் வீட்டில் மாரகாதிபதியாகிய புதனுடன்கூடி மாரகாதிபதியாகிய சனியால் பார்க்கப்பட்டிருக்கின்றார். ஆகையால், ராகு கேதுகளுக்குப் பிதாவை மாரகஞ் செய்ய அமைப்பு இருக்கின்றது.

**31.** மாதுரு மரண காலம் வரைகிறேம் முப்ப தாண்டில்
மேதினில் ஆடி மாதம் விளம்புவோம் கண்டம் தானும்
ஓதுவேன் மணத்தின் காலம் உரைக்கிறே னினிமே லாகப்
பூதல மணிந்தோன் தேவி புகன்றது தப்பா தாமே.

**31.** ஜாதகருடைய தாயின் மரணகாலத்தைச் சொல்லுகிறேம். ஜாதகருக்கு முப்பதாவது வயதில்* ஆடி மாதத்தில் தாயாருக்குப் பூமியில் மரணம் நேரிடும் என்று சொல்லுகிறேம். இனிமேல் ஜாதகருடைய விவாக காலத்தைப் பற்றிச் சொல்லுகிறேம். பூமியை அணிந்துள்ள பரமசிவ னுடைய மனைவியாகிய பார்வதி யம்மையே! நரங்கள் சொல்லிய வார்த்தை கள் தவறிடாமல் நடக்கும்.

* குறிப்பு.—மாதுர் மாரகம்:—ஜாதகருக்கு வயது வருஷம் 29-0-0 முதல் வருஷம் 30-0-0 முடியும் வரையிலும் இராகு தசையில் கேதுபுக்தி சுக்கிரபுக்தி நடக்கின்றது. ஆடி மாதத்தில் சுக்கிர புக்தி மாத்திரம் நடக்கின்றது. மாதுரு லக்கினம் துலாம். இராகு கர்ம ஸ்தானத்தில்—மாரகஸ்தானமாகிய ஏழில் இருக்கின்றார். பராசரஹோரைப் பிரகாரம் சூரியனும் குருவும் துலாத்திற்கு மாரகராகின்றார்கள். பராசரஹோரையின் சில பதிப்புப் பிரகாரம் அங்காரகன் கூட மாரகராகின்றார். இந்த அங்காரகன் வீட்டில் இராகு இருக்கின்றார். சுக்கிரன் எட்டிற்குடையவராகி மாரகாதிபதியாகிய குருவின் வீட்டில் இருக் கின்றார். சுக்கிரனே மாதுருஸ்தானதிபதியாகவும் வருகின்றார். ஜாதக சந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரம் இராகுவுக்கும் சுக்கிரனுக்கும் தாயாரை மாரகஞ் செய்யும் அமைப்பு இருக்கின்றது.

**32.** மணமது யிருபத் தேழில் மருவிடும் மனைவி தானும்
கனமுடன் வடபா லாகக் கழறுவோ மிவனுக் கேதான்
அணையவே வடபா லாக அணுகாது மனைவி தானும்
பிணையிலா மேற்குத் திக்கில் புகலுவோ மிவனுக் கேதான்.

**32.** ஜாதகருக்கு இருபத்தேழாவது வயதில்* விவாகம் நடக்கும். மனைவி வடக்குத் திக்கிலிருந்து வருவாள் என்று சொல்லுகிறேம். இவ்வித மாகப் புஜண்டர் சொல்லவே, இன்னொரு முனிவர் ஜாதகருக்கு மனைவி வடக்குத் திக்கிலிருந்து நேராது. மேற்குத் திக்கிலிருந்து வருவாள் என்று சொல்லுகிறார்.

**33.** எப்படிச் சொல்லு மென்ன ஏழினில் சனியு மாட்சி
ஒப்புட னிருப்ப தாலே உரைத்திட்டோம் மனைவி மேற்கு
மெய்ப்புடன் புதனும் கோலி லேழிடம் குருவும் பார்க்கச்
செப்புவோம் வடபா லாகத் தேவியும் புகலு கின்றார்.

**33.** எந்தக் காரணத்தினால் இவ்விதமாக நடக்கும் என்பதைச் சொல்லுவீர் என்று கேட்க ஏழாவது பாவத்தில் சனி ஆட்சியாகிப் பலத்துடன் இருப்பதாலே மனைவி மேற்குத் திக்கிலிருந்து வருவாள் என்று சொல்லு கிறேம் என்றார். புதன் துலாத்தில் இருப்பதாலும், ஏழாவது பாவத்தைக்

குரு பார்ப்பதாலும் மனைவி உண்மையில் வடக்குத் திக்கிலிருந்துதான் வருவாள் என்று சொல்லுகிறோம். இவ்விதமாகச் சொல்ல பார்வதியம்மையார் சொல்லுகிறார்.

34. இருவர்சொல் சரியே யையா ஏழிற்கோ னாட்சியாயும்
 ஈரிய'வ னாகி நிற்கக் களத்திரம் வடக்கே யாகும்
 வருமணம் ஒன்றே யாகும் வரைகுவீர் புத்திர விருத்தி
 பெருவயி றோனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

34. நீங்கள் இருவரும் சொல்லியது சரிதான். ஏழிற்குடையவர் சனியாகி ஆட்சியாய் இருப்பதால் ஜாதகருக்கு மனைவி வடக்குத் திக்கிலிருந்துதான் வருவாள். இவருக்கு ஒரே விவாகந்தான் நடக்கும். புத்திரர்கள் உண்டாவதைப் பற்றிச்சொல்லுவீர் என்று கேட்க, முனிவர் சொல்லுகிறார். பெரிய வயிற்றையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த, புண்ணியவதியாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

குறிப்பு.—மனைவியின் திக்கு :—சனியின் திக்கு மேற்கு. புதனின் திக்கு வடக்கு. குருவின் திக்கு வடகிழக்கு. மகரத்தின் திக்கு வடக்கு அல்லது தென்மேற்கு ஆகும். களத்திரஸ்தானம் ஏழாமிடமாகிய மகரம். போகஸ்தானம் நான்காமிடமாகிய புதனுள்ள துலாம் ஆகும். மகரத்தின் திக்காகிய வடக்கையும் புதனின் திக்காகிய வடக்கையும் எடுத்துக்கொண்டு வடக்கு என்று சொல்லி இருப்பதாகத் தோன்றுகிறது.

35. புத்திர னொண்பா லொன்று பெண்ணது இரண்டு மாகும்
 சுத்தமாய் மூன்றும் தீர்க்கம் சோர்ந்திடு மூன்று தானும்
 வித்தகன் தனக்கு மேலாய் விளம்புவோம் புத்திரர் யோகம்
 அதிதியைப் பெற்ற மாதே அறைந்தஇம் மொழிகுன் றாது.

35. ஜாதகருக்கு ஆண் குழந்தை ஒன்றும், பெண் குழந்தைகள் இரண்டும் ஆக இந்த மூன்று குழந்தைகளும் நீண்ட ஆயுளையுடையவர்களாக இருப்பார்கள். இவைகளன்றி மூன்று குழந்தைகள் பிறந்து இறந்துவிடுவார்கள். புத்திரர்களுக்கு யோகம், ஜாதகருடைய யோகத்தைவிட அதிகமானதாக விருக்கும். தேவர்களைப் பெற்றவளையும் பரதேசிகளையும் பெற்றெடுத்தத் தாயாராகிய பார்வதியம்மையே! நாங்கள் சொன்னோம் எங்களுடைய வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும்.

36. முன்னவ னிருந்த ஜன்மம் மொழிகிறோம் விவர மாகப்
 பெண்ணையாம் நதிவ டக்காய்ப் பேரூரில் வைசியச் சேயாய்
 அன்னவ னுதித்து மேலும் அனேகமாம் வணிபம் செய்து
 தன்மனை மதலை யுண்டாய் தனிமனை வாழ்ந்து மேதான் ;

36. ஜாதகருடைய முன்ஜன்மத்தைப் பற்றி விவரமாகச் சொல்லுகிறோம். பெண்ணை நதி என்ற ஆற்றிற்கு வடக்கிலுள்ள ஒரு பெரிய ஊரில் வைசியராக ஜாதகர் பிறந்து அநேக வியாபாரங்களைச் செய்து மனைவி மக்களையுடையவராகித் தனியான குடும்பமாக வாழ்ந்து ;

---

[1] சனி

37. பலவிதத் தலங்கள் சென்று பஞ்சைமே லிரக்க மாகிப்
பிலமிலாக் காலன் பக்கல் நாயகன் சென்று மேதான்
அலைகடல் துயின்றோன் மைந்தன் அவன்லக்கம் வரையப் பட்டுக்
குலவினுன் காஞ்சி கீழ்ப்பால் கோமளி மேலுங் கேளே.

37. அநேகவிதமான புண்ணிய ஸ்தலங்களுக்குப்போயும், ஏழை களின் மேல் தயையும் இருபையும் உடையவராகிப் பிறகு இறந்து எமனி டஞ்சென்று, அலைகளையுடைய கடலில் நித்திரை செய்யும் மகாவிஷ்ணுவின் பிள்ளையாகிய பிரமதேவனால் எழுதப்பட்டுக் காஞ்சீபுரத்திற்குக் கிழக்கி லுள்ள ஓர் ஊரில் ஜாதகர் பிறந்தார். பார்வதியம்மையே! நாங்கள் இன்னுஞ் சொல்லுவதைக் கேட்பீராக.

38. இன்னவன் யோகச் சேதி யிம்புவோம் வறுமை யில்லான்
சந்திரன் பிறைபோல் யோகம் தங்கிடு மிவனுக் கேதான்
அன்னவன் சல்லியம் கொள்ளான் ஆளடியார்க ளுள்ளா னுகும்
தன்பொருள் சேர்ப்பா னுகும் சம்பத்து முடைய னுமே.

38. ஜாதகருடைய யோகவிஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் கஷ்டமும் தரித்திரமும் இல்லாதவர். வளர்பிறைச் சந்திரனைப் போல இவருக்கு யோகம் வளர்ந்து விருத்தியாகும். இவர் கடன் வாங்கமாட்டார். அடிமையாட்களும் சேவகர்களும் உடையவராவர். தான் சம்பாதித்த சுயார் ஜிதப் பொருளைச் சேகரித்துவைப்பார். செல்வமுடையவராவார்.

39. பூமியும் பரிபா லிப்பன் புதுமனை வேறு செய்வன்
தீமையை ஒருவர்க் கெண்ணுன் ஜனபந்து மெச்ச வாழ்வன்
நேமியில் செட்டு ஓங்கும் நிருபர்க ளுறவு கொள்ளான்
சாமிமேல் பக்தி பூணுன் சத்தியே மேலுங் கேளே.

39. நிலங்களை வைத்துக்கொண்டு ஆண்டு வருவார். வேறே ஒரு புதிய வீட்டைக் கட்டுவார். யாருக்கும் கெடுதியைத் தன் மனத்தில் நினைக்க மாட்டார். ஜனங்களும் தன்னுடைய பந்துக்களும் இவரைப் போற்றும்படி யாக வாழ்வார். பூமியில் இவருக்கு வியாபாரம் விருத்தியாகும். அரசர் களுடைய சினேகமில்லாதவர். கடவுளின்மேல் பக்தி இல்லாதவராவார். பார்வதியம்மையே! நாங்கள் இன்னமும் சொல்லுவதைக் கேட்பீராக.

40. ஆருறு ஆண்டு தன்னில் அவன்துணை வேருய்ச் செல்வன்
நாரியால் விரோத முற்று விநாயகர் பகையு மாவார்
பாரினில் பூமி வீடு பணம்பணி இவைக ளெல்லாம்
கூறுமெ ண்ணுயி ரம்பொன் குறித்தன மிவனுக் கேதான்.

40. ஜாதகர் தன்னுடன் கூடப்பிறந்தவரை முப்பத்தாருவது வயதில் ஸ்திரீகளால் விரோதம் ஏற்பட்டு வேறு குடும்பமாகப் பிரிந்து வாழும்படியாய்ச் செய்வார். விநாயகக் கடவுளுக்கு விரோதியாகவுமாவார். பூமியில் வீடு நிலம் தனம் ஆபரணம் இவைகள் எல்லாம் சேர்ந்து மொத் தத்தில் மதிப்பு எண்ணுயிரம் பொன் உள்ள சொதது இவருக்கு ஏற்படும்.

41. அறுபது நாலு ஆண்டில் அமூசிப ரிடப மாதம்
குறைபக்கம் நவமி தன்னில் குறித்தனம் ஜாத கர்க்கு
மறுசன்மம் புதுவை தன்னில் வைசிய குல முதித்துப்
பெருமையாய்ச் செய்து வந்து புண்ணியன் வாழ்வா னாகும்.

41. ஜாதகருக்கு அறுபத்துநான்காவது வயதில் வைகாசி மாதத்தில் தேய்பிறையில் நவமிதிதியில் மரணம் நேரிடும் என்று சொல்லுகிறோம். இவர் பின்ஜன்மத்தில் புதுச்சேரியில் வைசிய குலத்தில் பிறந்து பெருமையுடனும் மேன்மையுடனும் புண்ணியவானாகவிருந்து வாழ்வார்.

குறிப்பு.—வயது விஷயம்:—ஜாதகருக்கு வயது ஸ்ரீ 63—0—0 முதல் ஸ்ரீ 64—0—0 முடியும் வரையிலும் சனிதசையில் சந்திரபுக்தி நடக்கின்றது. கடகலக்கினத்திற்குச் சனி சுக்கிரன் புதன் இவர்கள் பராசரஹோரை ஜாதகசந்திரிகை தாண்டவமாலை இவற்றின் பிரகாரம் மாரகர்கள், சனி மாரகஸ்தானங்களாகிய ஏழு எட்டிற்குடையவராகி ஏழில் இருந்துகொண்டு லக்கினத்தைப் பார்க்கின்றார். மேலும் சனிதசை ஆறாவது தசையாக வருகிறது. சனிக்கு மாரகஞ்செய்ய அமைப்பு இருக்கின்றது. சந்திரன் லக்கினாதிபதியாகி மாரகஸ்தானமாகிய பதினொன்றில் மாரகாதிபதியாகிய சுக்கிரனுடைய வீட்டில் இருக்கின்றார். ஆகையால் ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகம் பிரகாரமும் துய்யகேரளம் எட்டாம் பாவம் அடியிற்குறித்த 14-ஆவது பாடல் பிரகாரமும் சந்திரன் இலக்கினாதிபதியாய் இருந்தபோதிலும் தன் புத்தியில் மாரகஞ்செய்ய அமைப்பு உள்ளவராய் இருக்கின்றார்.

"தையலே பத்தோ னெட்டோன் தனித்தலக் கினத்தோன் காரி,
மெய்யரிந் நான்கு பேரில் வெகு பல வீன மாரோ,
தொய்யுமக்கோளை நோக்கிச் சூழ்திசை யபகாரத்தில்,
வைய கந்தனிலே பெற்ற மதலை சாவாகு மாதே."

42. பாலகன் பிறக்கும் காலை பரிதியின் தசையிலே தான்
சாலவே திங்க ளாறும் சாற்றுவோம் பலனை யாங்கள்
ஏலவே தாய்தந் தைக்கு எய்திடும் பிணியும் தானும்
ஆலத்தை உண்டோன் தேவி அறைகிறோம் விவரம் ரண்டில்.

42. ஜாதகர் பிறக்கும் காலத்தில் சூரிய மகாதசையில் இருப்பு ஆறு மாதந்தான் என்று சொல்லுகிறோம். இந்தக் காலத்தின் பலாபலன்களை நாங்கள் சொல்லுகிறோம். தாயாருக்கும் தகப்பனுருக்கும் நோய்கள் வரும். விஷத்தைச் சாப்பிட்ட சிவபெருமானுடைய மனைவியாகிய பார்வதியம்மையே! மற்றவிவரங்களை இரண்டாவது பாகத்திற் சொல்லுகிறோம்.

## ஜாதகம் 74

1. மதி[1] மேடம் கேது சிம்மம் மங்களன் [2] குருவும் மேரு [3]
புதன்புகர் [4] மான [5] தாகப் பரிதியு [6] முடவன் [7] ராகு
சதியிலாச் சாடி [8] புக்க ஜென்மமும் வளைய லாக [9]
இதுவிதக் கோளு நின்று லியம்புவீர் பலனைத் தானே.

| | | | |
|---|---|---|---|
| | சந்திரன் | | |
| சனி<br>சூரியன்<br>ராகு | இராசி<br>சக்கரம் | | லக்கினம் |
| சுக்கிரன்<br>புதன் | | | கேது |
| குரு<br>அங்கா<br>ரகன் | | | |

அசுவினி 3-ஆம் பாதம். கேது தசை இருப்பு 3—5—0.

1. சந்திரன் மேஷத்திலும், கேது சிம்மத்திலும், அங்காரகனும் குருவும் தனுசிலும், புதனும் சுக்கிரனும் மகரத்திலும், சூரியனும் சனியும் ராகுவும் கும்பத்திலும், ஜன்மலக்கினம் கடகத்திலும் ஆகி இவ்விதமாகக் கிரகங்கள் இருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று

**குறிப்பு.**—இந்த ராசிச் சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரகநிலை பொருத்தமுடையதாகும் :—மேஷத்தில் அங்காரகனும் புதனும், மிதுனத்தில் சந்திரனும் குருவும் சுக்கிரனும், கன்னியில் கேதுவும், தனுசில் சூரியனும், மகரத்தில் சனியும், மீனத்தில் ராகுவும் ஆகும்.

2. பார்வதி கேட்கும் போது பராசரும் புகலு கின்றார்
சீர்புக ழாண்பால் ஜன்மம் ஜனித்தஇல் கீழ்மேல் வீதி
கூறுவோம் தெற்கு வாடை குறித்தனம் கீழ்ப்பால் மாயோன்
மாருதி தென்கீழ் தங்கும் மாகாளி வடகீழாமே.

2. பார்வதியம்மையார் கேட்கும்போது பராசரமகரிஷி சொல்லுகின்றார். பெருமையும் கீர்த்தியுமுள்ள ஆண் குழந்தை பிறக்கும். பிறந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் தென்னண்டை வாடையில் இருக்கும்

---

[1] சந்திரன் [2] அங்காரகன் [3] தனுசு [4] சுக்கரன் [5] மகரம் [6] சூயேன் [7] சணி [8] கும்பம் [9] கடகம்

என்று சொல்லுகிறேம். மகாவிஷ்ணுவின் கோயில் கிழக்குத் திக்கில் இருக்கும் என்று சொல்லுகிறேம். அனுமார் கோயில் தென்கிழக்குத் திக்கில் இருக்கும். காளியம்மன் கோயில் வடகிழக்குத் திக்கில் இருக்கும்.

3. உத்தர மோடைக் கம்மான் உரைத்த இவ் வடையா ளத்துள்
அந்தியு மவ்வூர் வாசம் அரிநகர் வணிப மோங்கும்
பத்தினி பூஜை செய்யும் பிருதிவி தலமே யாகும்
வித்தக ளுரும் ஜன்மம் விளம்புவோ மிவனே யம்மா.

3. வடக்குத் திக்கில் ஓடைபோகும் வாராவதி உண்டு. இப்படிப் பட்ட அடையாளங்கள் அவ்வூரில் உண்டு. மேலும் இந்த ஊரில் மாலைக்காலத்தில் தெருக்களில் காவலாகத் திரியும் ஒரு தேவதையும் வாசஞ் செய்யும். இது வைஷ்ணவ ஸ்தலமுமாகும். அநேக வியாபாரங்கள் நடந்து விருத்தியாகி வரும். பத்தினியாகிய பார்வதியம்மையார் பூஜை செய்கிற பிருதிவி ஸ்தலம் என்று சொல்லப்பட்ட காஞ்சிமா நகரமாகும். ஜாதகர் ஆறவது கர்ப்பத்தில் பிறப்பார் என்று சொல்லுகிறேம். பார்வதியம்மையே!

4. இன்னவன் ஜனன யோகம் எழில்பெரும் தந்தை யோகம்
மன்னிய அன்னை யோகம் வரும்புத்திர களத்திர யோகம்
தன்னிலே முன்பின் ஜன்மம் சாற்றுவோம் நவக்கோ ளாய்ந்து
உன்னத வானைபெற்ற உத்தமி கேட்டி டாயே.

4. ஜாதகருடைய ஜனன காலத்திய யோகத்தையும், தகப்பனு ருடைய யோகத்தையும், தாயாருடைய யோகத்தையும் இனி வரப்போகின்ற மனைவி மக்கள் இவர்களுடைய யோகங்களையும், முன் ஜென்மம், பின் ஜன்மம் ஆகிய இவைகளையும், ஒன்பது கிரகங்களையும் பரிசீலனை செய்து சொல்லுகிறேம். மேன்மையான யானைமுகத்தையுடைய விநாயகக் கட வுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! கேட்பீராக.

5. தந்தையின் துணைஆணைந்து பெண் ணென்று சாற்ற லாகும்
பின்னையும் சிலது சேதம் பேசுவோ மிரண்டி லேதான்
அன்னவன் தந்தை சேதி அறைகிறே மிருநி றத்தான்
உன்னத வார்த்தை சொல்வன் உயரமில் லாதா னுகும்.

5. ஜாதகருடைய தகப்பனுருடன் கூடப்பிறந்தவர்கள் ஆண்கள் ஐந்துபேரும் பெண் ஒருவரும் என்று சொல்லுகிறேம். பிறகு இவர்களில் சிலர் இறந்து போவார்கள். இவர்களுடைய விஷயங்களைப்பற்றி இரண்டா வது பாகத்தில் சொல்லுகிறேம். ஜாதகருடைய தகப்பனுரின் விஷயங் களைப் பற்றிச் சொல்லுகிறேம். இவர் இரண்டு நிறங்களும் கலந்த மாநிற முள்ள தேகத்தை யுடையவர். மேன்மையான சிறந்த வார்த்தைகளைச் சொல்லுவார். உயரமில்லாதவராக விருப்பார்.

6. ஆதியில் வறுமை யுள்ளான் அதன் பின்னுல் யோக முள்ளான்
நீதிவான் செட்டால் பாக்கியம் நேர்ந்திடும் பலவூர் பூமி
வேதனை ஒருவர்க் கெண்ணுன் வீண்வம்பில் செல்லா னுகும்
காதியு மதிக முள்ளான் காலாள்க ளுடைய னுமே.

6. தகப்பனார் இளம்பிராயத்தில் கஷ்டமும் தரித்திரமு முள்ள வர். அதற்குமேலே யோகமுடையவர், நீதியை உடையவர். வியாபாரத்தி னால் தனம் உண்டாகும். பல கிராமங்களில் நிலங்கள் வந்துசேரும். யாருக்கும் இவர் கெடுதிகளை மனத்தில் நினைக்கமாட்டார். வீணான சண்டை சச்சரவுகளில் தலையிடமாட்டார். அதிகமான கீர்த்தியையும் புகழையும் உடையவர். கால்நடைகளையும் வேலைக்காரர்களையும் உடையவராவார்.

7. கல்விமான் கணக்கிலாகி கரமதில் பத்ம ரேகை
நல்லவ னாகி வாழ்வன் நற்சித்திர வீடு செய்வன்
புல்லிய புத்தி யில்லான் பூமிக ளதிக முள்ளான்
சொல்லதைக் காப்பானாகும் துணைவரால் பெருமை பூண்பன்.

7. தகப்பனார் வித்தையை யுடையவர், நுட்பமான புத்தியுடைய வர். தன்னுடைய உள்ளங்கையில் பத்மரேகை என்ற ஒரு விதமானத் தாமரைரேகையை யுடையவர், நல்லவராகப் பெயரெடுத்து வாழ்வார். நல்ல அழகிய சித்திரங்கள் அடங்கிய வீட்டைக் கட்டுவார். தாழ்ந்த ஈன மான புத்தியில்லாதவர். அநேக நிலங்களையுடையவர். தான் சொன்ன வார்த்தைகளைத் தவறாமல் காப்பாற்றுவார். தன்னுடைய சகோதரர்களால் மேன்மையையும் சிறப்பையும் பெறுவார்.

8. இளமன துடைய னாகு மீகைவான் பொறுமை சாலி
கலவர புத்தியுள்ளான் கட்டுவார்த்தை களும் சொல்வன்
அளகேச னுடையன் நாட்டினில் கீர்த்தியும் பெருமை வற்பன்
தளர்விலா குடும்பி யாவன் தங்கிடும் பித்தச் சூடு.

8. தகப்பனார் இளகிய இரக்கமுள்ள மனத்தையுடையவர். பிறருக் குக் கொடுக்குந் தன்மையையுடையவர். சாந்த மானவர். கலக்கமும், சந் தேகமுமுளுள்ள புத்தியையுடையவர். பொய்யான வார்த்தைகளையும் புனைந்த வார்த்தைகளையும் சொல்லுவார். குபேரன், அஃதாவது செல்வத்தை யுடையவர். பூமியில் புகழையும் பெருமையையும் அடைவார். குறைவு படாத இளைக்காத குடும்பஸ்தராவார். இவருக்குப் பித்தச்சூடு தேகத்தில் இருந்து கொண்டேவிருக்கும்.

9. ஆதியில் துணைவர் வேறாய் அணுகிடும் ஒருவன் தன்பால்
நீதியாய்ச் செட்டுச் செய்து நிதானமாய் வாழ்வா னாகும்
ஓதுவன் பின்னால் சேதி உரைக்குமிக் குணத்தா னுக்குச்
சோதிபோல் தோன்று வானும் சொல்லுவோம் மிவன்குணத்தை.

9. முதலில் தகப்பனாருடைய சகோதரர்கள் இவரை விட்டுப் பிரிந்து போய் வேறே குடும்பமாக விருப்பார்கள். இவர் ஒருவருடன் கூட பாகமாகவிருந்து நிதானமாக வியாபாரஞ் செய்து ஜீவிப்பார். இவருடைய மற்ற விஷயங்களைப்பற்றிப் பின்னால் சொல்லுகிறேன். இப்படிப்பட்ட குணங்களுடைய தகப்பனாருக்கு இந்த ஜாதகர் ஒரு பிரகாசமான விளக்கைப் போல, குலதீபத்தைப் போலப் பிறப்பார். இவருடைய குணாதிசயங்களைப் பற்றி இனிமேல் சொல்லுகிறோம்.

10. பொய்யது பகரான் மிஞ்சி புத்திமான் பலபேர் நேயன்
தையலுக் கினிய னாகும் தன்முகம் வடிவு முள்ளான்
ஐயமென் றோரைக் காப்பன் அருமறை நேசம் கொள்வன்
மெய்யது சிவந்த மேனி விளைபுலம் விசேஷ முள்ளான்.

10. ஜாதகர் பொய்யைச் சொல்லமாட்டார். அதிகமான நல்ல புத்தியை யுடையவர். அநேகருக்குச் சிநேகமாகவிருப்பார். மனைவிக்குப் பிரியமானவர். தன்னுடைய முகத்தில் அம்மை முதலிய அடையாள முடையவர். பிச்சை என்று சொல்லிக் கேட்பவரையும் ஏழையையும் காப்பாற்றுவார். அருமையான பிராணர்களுடைய சிநேகத்தை அடைவார். அருமையான சாஸ்திரங்களையும் படிப்பார். இவருடைய தேகம் சிவந்த நிற முடையது. பயிரிடுகின்ற நல்ல விளைவுள்ள நிலங்கள் இவருக்கு அதிகமாக உண்டு.

11. உரோமங்கள் நீட்சி யுள்ளான் நுண்ணிய புத்தி யுள்ளான்
சேமமாம் குடும்பி யாவன் தீரமா மனத்த னாகும்
காமனை யொத்த தேகன் கட்டுவார்த் தைகளும் சொல்லான்
நேமங்கள் கொஞ்ச முண்டு நிதானங் ளறிய வல்லன்.

11. ஜாதகர் தன்னுடைய தேகத்தில் நீண்டிருக்கின்ற மயிரை யுடையவர். நுட்பமானதும் சூரியதுமான புத்தியை உடையவர். சௌக்கிய மான குடும்பத்தை யுடையவராவார். தைரியமான மனத்தையுடையவராவார். காமனுடைய தேகத்தைப்போல உள்ள அழகும் கவர்ச்சியும் பொருந்திய தேகத்தையுடையவர். பொய்யான வார்த்தைகளையும் புனைந்த வார்த்தைகளையும் சொல்லமாட்டார். நியமங்களும் தெய்வ வழிபடுதலும் இவருக்குக் கொஞ்சம் உண்டு. உண்மையையும், மெய்யையும் ஆதி காரணங்களையும் தெரிந்து கொள்ளக்கூடிய சக்தியையும் சாமர்த்தியத்தையும் உடையவர்.

12. உண்டியும் சுகமாய்க் கொள்வன் உதாசீனம் சொல்லா னாகும்
பண்டுபண்டார முள்ளான் பணிதிகள் சேர்ப்பா னாகும்
அண்டர்கோன் முருகன் பத்தி அவனுமே கொள்வா னாகும்
யெண்டிசை புகழு மேற்பன் எதிரியை நாசம் செய்வன்.

12. ஜாதகர் சுகமான நல்ல சாப்பாட்டைச் சாப்பிடுவார். தூஷண மானதும் கெட்டதுமான வார்த்தைகளைச் சொல்லமாட்டார். பழமையான வஸ்துக்களையும் பல பண்டங்களையும் பொக்கிஷத்தையும் துரைத்தனத்தையும் சிவனடியார்களையும் உடையவராவார், ஆபரணங்களைச் சேகரிப்பார். சிவபெருமான்மேலும் முருகக் கடவுள்மேலும் பக்தியுடையவர். எட்டுத்திக்குகளிலும் எவ்விடத்திலும் கீர்த்தியையும் பெருமையையும் அடைவார். தன்னுடைய எதிரியை அழித்து விடுவார்.

13. பந்துவும் புகழ வாழ்வன் பரஉப காரி யாவன்
நந்திஆ வுடைய னாகும் நரைமலர்க் கந்த மிஷ்டன்
வந்தவர்க் கன்ன மீவன் வாக்குநா ணயங்க ளுள்ளான்
நொந்திடும் பேரைக் காப்பன் நீங்காத செல்வ னுவன்.

**13.** ஜாதகர் தன்னுடைய பந்துக்கள் தன்னைப் போற்றும்படியாகப் பெருமை யுடன் வாழ்வார். பிறருக்கு உதவியைச் செய்வார். ரிஷபமும் பசுவும் உடையவராவார். வாசனையையுடைய புஷ்பங்களின்மேலும் சந்தனக் குழம்பின் மேலும் ஆசையுடையவர். தன்னிடம் வந்தவர்களுச் சாப்பாடு போடுவார். தன்னுடைய வாக்கைத் தவருமல் காப்பாற்றுவார். நொந்து போனவர்களேயும் ஏழைகளேயும் காப்பாற்றுவார். அழியாத செல்வமுடையவராவார்.

**14.** இவன்துணை ஆண்பால் ரண்டு இலகிய கன்னி ஒன்று
நவமதில் விருத்தி யென்றோம் நசித்திடு மற்ற வெல்லாம்
பவமுள துணைஆண் முன்னோர் பகருவோம் மூத்தோர் சேதி
கவணங்கள் செய்வா ருகும் கல்விமான் கபடு மில்லான்.

**14.** ஜாதகருடன் கூடப்பிறந்தவர்கள் மொத்தம் ஒன்பது பேரில் ஆண்கள் இரண்டு பேரும், பெண் ஒருவரும் நீண்ட ஆயுளேயுடையவர்களாக இருப்பார்கள். மற்றச் சகோதரர்கள் எல்லாம் இறந்து விடுவார்கள். இந்த ஆண் சகோதரர்கள் ஜாதகருக்கு மூத்த சகோதரர்களாவார்கள். மூத்த சகோதரர்களுடைய விஷயங்களேப்பற்றி இனிமேல் சொல்லுகிறோம். எல்லோருக்கும் மூத்த சகோதரன் மருந்துகளேயும், மருந்து வகையராவில் சேர்ந்த காயக்கட்டுகளேயும் செய்பவராவார். வித்தை யுடையவர். மனத்தில் கள்ளம் வஞ்சனே இவைகள் இல்லாதவர்.

**15.** பலபேர்க்கும் பந்தி னர்க்கும் பரிந்துப சாரம் செய்வன்
சொல்மொழி பிசகில் லாதான் துணேவரை ஆத ரிப்பன்
பலமுள யோக மெய்தும் பிறந்தநாள் முதலாமாக
நிலமையாய்ப் பாரி ஒன்று நிகழ்துவோ மிவனுக் கேதான்.

**15.** ஜாதகர் அநேகருக்கும் பந்துக்களுக்கும் ஆசையுடன் உபசாரணே உபகாரம் சேவை இவைகளேச் செய்வார். தான் சொல்லுகின்ற வார்த்தையில் குற்றங்களில்லாதவர். தான் சொல்லும் வார்த்தைகளேத் தவறிடாமல் காப்பாற்றுபவர். தன்னுடைய சகோதரர்களேக் காப்பாற்றுவார். தான் பிறந்தகாலம் முதற்கொண்டு வலுவான பெரிய யோகத்தையுடையவர். இவருக்கு நிலேயாக ஒரு மனேவி இருப்பாள் என்று சொல்லுகிறோம்.

**16.** புத்திரர் ஆண்பா லொன்று பெண்ணது அவ்வா ருகும்
சுத்தமா யிரண்டும் தீர்க்கம் செப்புவோ மிவனுக் கேதான்
மத்திம வயதி லேதான் மரலிதன் பதிக்குச் செல்வன்
வித்தகன் சென்ற பின்பு விரோதங்கள் குடும்பம் தன்னில் ;

**16.** ஜாதகருடைய மூத்த தமையனுருக்குச் சந்ததிகளில் ஆண் ஒன்றும் பெண் ஒன்றும் ஆகிய இவ்விரண்டு பேர்களும் நீண்ட ஆயுளே யுடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகிறோம். இவர் தனக்கு நடு வயதில் இறந்து எமபட்டணம் போய்ச் சேருவார். இவர் இறந்து போன பிறகு குடும்பத்தில் விரோதங்களும் கலகங்களும் ;

17. நேரிடு மென்று சொன்னோம் நிமலியும் கேட்க லுற்றாள்
ஆரினால் விரோத மெய்தும் அதுதனை விவரம் சொல்வாய்
மாரன்தன் தந்தை ஞாதி மைந்தர்தன் பாரி யாளால்
கூறுவோம் பகையு மெய்து குடும்பமு மலைச்ச லெய்தும்.

17. உண்டாகும் என்று சொல்லுகிறோம். பார்வதியம்மையார் கேட்கின்றார். எவரால் கலகங்களும் விரோதங்களும் உண்டாகும் என்பதை விவரமாகச் சொல்லுவீர் என்று கேட்கவே, இவருடைய பங்காளி என்ற தகப்பனாரின் சகோதரரின் புத்திரனுடைய மனைவியால் விரோதங்களும் கலகங்களும் குடும்பத்தில் உண்டாகிக் குடும்பம் கஷ்டங்களையும் அலைச்சல் திரிச்சல்களையும் அடையும்.

18. தனமது செலவே யுண்டு ஜயமின்றி மனது துக்கம்
இனமது பகையு மெய்தும் ராஜகோ பங்க ளுண்டு
வன்னிதையா லிவ்வாறு நேரும் வந்துபின் மங்கை சாவாள்
சினமிலா அந்த ஆஸ்தி சேர்ந்திடு மிவனுக் கேதான்.

18. சொத்து செலவாகிவிடும். ஜயம் இல்லாமல் தோல்வியை யடைவார். மனதிற்குத் துன்பமும் கஷ்டமும் ஏற்படும். பந்துக்கள் விரோதிகளாகி விடுவார்கள். அரசாங்கத்தாருடைய கோபமும் நேரிடும். அந்த ஸ்திரீயால் இவ்விதமான கஷ்டங்கள் உண்டாகும். இவ்விதமான கஷ்டங்கள் நேரிட்ட பிறகு அந்த ஸ்திரீ இறந்து விடுவாள். அவளுடைய சொத்துக்களும் ஜாதகருக்கே வந்து சேர்ந்துவிடும்.

19. எந்தக் காலத்தி லேதா னிவ்வினை தன்னால் மாள்வள்
அந்ததோர் சேதி சொல்வாய் ஐயந்து ஆண்டு மேலாய்
வந்திடு கருவினாலே மங்கையும் சேத மெய்தும்
பிந்தியும் கலக்கம் நீங்கும் புயண்டரும் கேட்க லுற்றார்.

19. எந்த வயதில் இவ்விதமான கஷ்டங்கள் ஏற்பட்டுப் பிறகு அந்த ஸ்திரீ இறந்து விடுவாள் என்ற விஷயத்தைச் சொல்லுவீர் என்று கேட்க, ஜாதகருக்கு இருபத்தைந்தாம் வயதிற்குப் பிறகு கர்ப்பம் தறித்து அதனால் அந்த ஸ்திரீ இறந்து விடுவாள். அதன் பிறகு குடும்பத்திலுள்ள கலகங்கள் நீங்கிவிடும் என்று சொல்ல, புஜண்ட மகரிஷியானவர் கேட்கின்றார்.

20. அவள்சுதர் தமக்கு அந்த ஆஸ்திகள் சேரா தோசொல்
நவனியில் மதலை காணாள் நாயகன் மரண மாவான்
இவளுமே சொன்ன ஆண்டுடின் மேலேதான் மரண மாவள்
தவமுனி பராசர் சொல்ல ஜயமுனி கேட்க லுற்றார்.

20. அந்த ஸ்திரீயினுடைய பிள்ளைகளுக்கு அந்தச் சொத்துக்கள் போய்ச் சேராதா ? என்ற விஷயத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவே, அவளுக்குச் சந்ததிகள் இல்லையா. அவளுடைய புருஷன் இறந்து விடுவான்.

இவளும் முன்னே சொல்லிய வயதிற்குப் பிறகு தான் இறந்து போவாள் என்று தவங்களைச் செய்கின்ற முனிவராகிய பராசர முனிவர் சொல்ல, ஜயமுனிவர் கேட்கின்றார்.

21. என்னகோள் குற்றத் தாலே இவ்வினை நடக்கும் சொல்வாய்
பொன்னவன்[1] குஜ்னு[2] மாறில் பொருந்தியே யிருப்ப தாலே
இன்னவாறு தோஷம் சொன்னோமிரவியின் தசைமுன் பாதி
முன்சொன்ன பலன்கள் எய்து மொழிந்தது தப்பா தாமே.

21. எந்தக் கிரகத்தின் தோஷத்தால் இப்படிப்பட்ட செயல்கள் நடக்கும் என்பதைச் சொல்வீர் என்று கேட்க, குருவும் அங்காரகனும் கூடி ஆறில் இருப்பதால் இவ்வித தோஷங்களைச் சொன்னோம். சூரியனுடைய தசையின் முற்பாதியில் முன்னே சொல்லப்பட்ட பலாபலன்கள் நடக்கும். நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறிவிடாமல் நடக்கும்.

22. ஆறினில் குஜனும்[2] சேர அப்பகை தன்னை வென்று
தீரமா யிவன்பின் சேரும் செப்பின மொழிகுன் றாது
கூறுவோம் விவரம் ரண்டில் கோதையின் சேதி யாவும்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

22. ஆறுவது வீட்டில்* அங்காரகன் இருப்பதால் அந்த எதிரியை ஜயித்து அந்தச் சொத்துக்கள் இவரை உறுதியாக வந்து அடையும். நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறாமல் நடக்கும். அந்த ஸ்தீரீயினுடைய விஷயங்கள் எல்லாவற்றையும் விவரமாக இரண்டாவது பாகத்தில் சொல்லுகிறோம். ஆறுமுகங்களையுடைய முருகக் கடவுளைப் பெற்றெடுத்தப் பார்வதியம்மையே ! கேட்பீராக.

* குறிப்பு.—ஞாதி விஷயம் : குருவும் அங்காரகனும் ஆறில் இருப்பதால் குடும்பத்தில் கலகங்களும் விரோதமும் ஏற்பட்டு அபஜயமும் ஜயமும் ஏற்படும் என்று 16, 17, 18, 19, 20, 21, 22-ஆவது பாடல்களில் சொல்லி இருக்கிறது. பிதுர் லக்கினம் மீனம், இதற்கு இளைய சகோதர ஸ்தானம் ரிஷபம். இந்த ரிஷபத்திற்குப் புத்திர ஸ்தானம் கன்னி. இந்தக் கன்னிக்குக் களத்திர ஸ்தானம் மீனம், இந்த மீனத்திற்குடையவர் குருவாகின்றார். மேலும் பிதுர் லக்கினமாகிய மீனத்திற்கு மூத்த சகோதர ஸ்தானம் மகரம். மகரத்திற்குப் புத்திர ஸ்தானம் ரிஷபம். ரிஷபத்திற்குக் களத்திர ஸ்தானம் விருச்சிகம். விருச்சிகத்திற்கு அதிபதி அங்காரகனாகின்றார். ஆகையால் ஜாதகருடைய தகப்பனாரின் சகோதரனின் புத்திரனுடைய மனைவியின் அதிபதிகள் குருவும் அங்காரனும் ஆகின்றார்கள். இவர்களைப் பற்றித் தான் கலகங்கள் சொல்லி இருக்கின்றன. ஜாதகாலங்காரத்தில் ஆறுவது பாவத்தில் 1-ஆவது பாடலாகிய 629-வது பாடலிலும் அதற்கு அடுத்தமூன்று பாடல்களிலும் சொல்லியுள்ள பிரகாரம் ஞாதிகளால் வழக்குண்டாகி முதலில் அபஜயம் ஏற்பட்டுக் கடைசியில் ஜயமும் அனுக்கூலமும் குருவும் சனியும்அங்காரகனும் ஆறில் இருப்பதால் உண்டாகும் என்று கண்டிருக்

[1] குரு [2] அங்காரகன்

கிறது. ஞாதி வீடு ஆறும் வீடாகிய தனுசு. ஞாதிகாரகன் அங்காரகனுகும். சூரிய தசையில் மூன்று வருஷம் செல்லுவதற்குள் அதாவது ஷ்ரூ 23-5-0-க்கு மேல் ஷ்ரூ 26-5-0-க்குள் இப்பலன்கள் நடக்குமென்று இங்கு 21-ஆவது பாடலில் சொல்லி இருக்கிறது. மேலும் இங்கு 19-ஆவது பாடலில் இருபத்தைந்து வயதிற்கு மேல் நடக்கும் என்று சொல்லி இருக்கிறது. ஆகையால் வயது ஷ்ரூ 25-க்கு மேல் ஷ்ரூ 26-5-0-க்குள் நடக்கும் என்று ஏற்படுகிறது. இக்காலத்தில் சூரிய தசையில் இராகு குரு சனி புக்திகள் நடக்கின்றன. சூரியன் குடும்பாதிபதியாகிய எட்டிற்குடையவரான சனியுடனும் ராகுவுடனும் கூடி எட்டில் இருப்பதால் குடும்பத்தில் வியாஜ்யம் ஏற்பட அமைப்பு இருக்கிறது.

23. மற்றொரு துணைவன் சேதி வரைகிறோம் தாயே கேளும்
குற்றமில் லாத நெஞ்சன் கூறுவான் சுகமாய் வார்த்தை
சுற்றுவான் விஷம முள்ளான் தோகைவா கனத்தோன் பத்தி
சித்தமாய்க் கொள்வா னுகும் செனஉப காரியாவான்.

23. ஜாதகருடைய இரண்டாவது மூத்த சகோதரருடைய விஷயங்களைப் பற்றிச் சொல்லுகிறோம். எங்கள் தாயாராகிய பார்வதியம்மையே கேட்பீராக. இவர் கள்ளங் கபடு வஞ்சனைகள் இல்லாத மனத்தையுடையவர். சுகமாகவும் இன்பமாகவும் வார்த்தைகளைச் சொல்லுவார். பந்துக்களையுடையவர். வைராக்கிய முடையவர் மயில்வாகனத்தையுடைய முருகக் கடவுளின் மேல் பக்தியை உண்மையாயுடையவர். ஜனங்களுக்கு உதவியைச் செய்பவராவார்.

24. வித்தையும் புத்தி மானும் வியாபாரம் தொழிலே செய்வன்
நத்தினோர்க் குதவி செய்வன் நலமறிந் துரைக்க வல்லன்
பத்திலா தவர்க்கு நேயன் பாவைய ரிஷ்டம் கொள்வன்
உத்தரம் பேசா னுகும் கோமளி மேலுங் கேளே.

24. இவர் படிப்பையும் அறிவையும் உடையவராவார். வியாபாரத் தொழிலேயே செய்து ஜீவிப்பார். தனக்குக் கெடுதியைச் செய்தவர்களுக்குக் கூட உதவி செய்வார். நல்லது கெட்டது அறிந்து பேசுந் திறமையும் சக்தியும் உடையவர். உலகப் பற்றில்லாதவர்களுக்கும் பரதேசிகளுக்கும் சினேகமானவர். ஸ்திரீகளின் மேல் ஆசையுள்ளவர். தன்னையே உயர்த்திப் பேசமாட்டார். பலமாகவும் வலிவாகவும் பேச மாட்டார். பார்வதியம்மையே ! நாங்கள் இன்னும் சொல்லுவதைக் கேட்பீராக.

25. நந்தியும் பணிசெயில்லம் நற்பணியுடைய னுவன்
நொந்திடும் பேரைக் காப்பன் நீங்காத செல்வ முள்ளான்
இந்தவ னுடனே கூடி யிசைகுவான் விரோத மெண்ணுன்
அன்னவன் தசைக்குப் பாரி அறைந்தனம் மொன்றே யாகும்.

25. கால் நடைகளும், பண்ணையாட்களும், பண்ணை நிலங்களும் பிள்ளைகளும் நல்ல ஆபரணங்களும் ஆகிய இவைகளை எல்லாம் உடையவராவார். நொந்து போனவர்களையும் ஏழைகளையும் காப்பாற்று

வார். குறைவுபடாத தனத்தையுடையவராவார். ஜாதகருடன் கூடி வாழ்வார். விரோதங்களை மனத்தில் வைக்கமாட்டார். இவருக்கு மனைவி ஒருத்தியேயாகும் என்று சொல்லுகிறோம்.

26. பாரியு முள்ளூராகும் பாலர்கள் ஆண்பா லொன்று
தீரமாய்ப் பெண்பால் ரண்டு செப்பலாம் தீர்க்கமாகப்
பாரினில் இரண்டு சேதம் பகருவோ மிவனுக் கேதான்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை புகன்றிட் டோமே.

26. இவருக்கு மனைவி தன் ஊரிலிருந்தே வந்து சம்பவிப்பாள். இவருக்குக் குழந்தைகள் ஆண் ஒன்றும் பெண்கள் இரண்டும் நீண்ட ஆயுளையுடையவர்கள் என்று உறுதியாய்ச் சொல்லுகிறோம். இவருக்கு இரண்டு குழந்தைகள் இறந்து போய்விடும் என்று சொல்லுகிறோம். ஆறு முகங்களையுடைய முருகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே. நாங்கள் இவ்விதமாகச் சொல்லுகிறோம்.

27. ஜாதகன் மணத்தின் காலம் சாற்றுவோ மிருபான் மூன்றில்
காதலி தெற்குத் திக்கில் கலந்திடு மென்று சொல்வோம்
ஓதுவேன் அவள்கு ணத்தை உண்மையாம் மனத்தா ளாகும்
சூதுகள் கொஞ்ச முண்டு தோகையு மாஞ்சி வப்பள்.

27. ஜாதகருடைய விவாக காலத்தைச் சொல்லுகிறோம். இவருக்கு இருபத்து மூன்றுவது வயதில் * மனைவி தெற்குத் திக்கிலிருந்து வந்து நேரிடுவாள் என்று சொல்லுகிறோம். இவளுடைய குணதிசயங்களைச் சொல்லுகிறேன். இவள் உண்மையான நல்ல மனத்தை உடையவள். கொஞ்சம் வஞ்சனைகளும் கபடமும் உண்டு. இவள் மாந்துளிரின் நிறத்தைப் போல ஒரு விதமான சிவப்பு நிறத்தை உடையவளாவாள்.

* **குறிப்பு.—விவாக கால விஷயம்:** ஜாதகருக்கு வயது ௵ 22–0–0 முதல் 23–0–0 முடியும் வரையிலும் சுக்கிர தசையில்புதன்புக்தி கேதுபுக்திகள் நடக்கின்றன. சுக்கிரன் போகஸ்தானமாகிய நான்கிற்குடையவராகியும் களத்திர காரனாகியும் ஏழில் களத்திர ஸ்தானத்தில் இருக்கின்றார். ஆகையால் விவாகம் செய்துவைக்க இவருக்கு அமைப்பு இருக்கின்றது. கேது குடும்ப ஸ்தானமாகிய இரண்டில் இருந்துகொண்டு குடும்பாதிபதியாகிய சூரியனாலும் களத்திர ஸ்தானாதிபதியாகிய சனியாலும் பாக்கியாதிபதியாகிய குருவாலும் பார்க்கப்பட்டிருக்கின்றார். ஆகையால் இவருக்குத்தன் புக்தியில் விவாகஞ் செய்து வைக்கப் புதனைவிட அதிக அமைப்பு இருக்கிறது. ஆகையால் ஜாதகருக்குச் சுக்கிரதசையில் கேதுபுக்தியில் விவாகம் நடக்கும் அமைப்பு இருக்கிறது.

28. பொன்பணி அதிகம் சேர்ப்பள் புருடனுக் கினிய ளாகும்
தன்சொலு மடக்க முண்டு தருமமாம் குணத்தா ளாகும்
அன்னியர் மெச்ச வாழ்வாள் ஆசாரம் யோக சாலீ
புன்னியே பேசு வாளாம் பார்வதி கேட்டி டாயே.

**28.** ஜாதகருடைய மனைவி தனம் ஆபரணம் இவைகளை அதிகமாகச் சேர்த்து வைப்பாள். புருஷனுக்கு இஷ்டமானவளாவாள். அடக்கமாகவும் சாந்தமாகவும் பொறுமையாகவும் பேசுவாள். தருமஞ் செய்யுங் குணத்தையுடையவளாகும். பிறர் இவளைப் போற்றும்படியாகவும் மதிக்கும் படியாகவும் வாழ்வாள், நல்லொழுக்கமுடையவள், யோகமுடையவள். சுறுக்கமாகவும் திறமையாகவும் பேசுவாள். பார்வதியம்மையே! கேட்பீராக.

**29.** சுதர்களு மிருநான் காகும் தோன்றிடும் பெண்பால் ரண்டு
சுதமுட னுண்பா லவ்வாறு தீர்க்கமாம் நான்கு தானும்
அதமுமாம் நான்கு தானும் அது வின்றி முதலில் பீடை
விதங்களைச் சொல்லு மென்ன விளம்புவார் பராசர் தாமும்.

**29.** ஜாதகருக்கு எட்டுக் குழந்தைகள் பிறக்கும். இரண்டு பெண் குழந்தைகளும் இரண்டு ஆண் குழந்தைகளும் ஆக நான்கு குழந்தை களும் நீண்ட ஆயுளை உடையவர்களாவார்கள். நான்கு குழந்தைகள் இறந்துவிடுவார்கள். முதலில் பிறக்கும் குழந்தைகளுக்குத் தோஷமுண்டு. இதற்குக் காரணங்களைச் சொல்லுவீர் என்று கேட்க பராசர முனிவர் பதில் சொல்லுகிறார்.

**30.** அஞ்சினுக் குடையோ னாறில் அந்தண ருடனே கூட
துஞ்சிடு முதலில் புத்திரர் சுதனுமுன் ஜன்மம் தன்னில்
கொஞ்சமாம் வினையும் செய்தான் குழவிகள் தோஷ மெய்தும்
தஞ்சமாய் வந்த ஊழைச் சாற்றுவீர் விவரமாக ;

**30.** ஐந்திற்குடையவரான அங்காரகன் ஆறுவது வீட்டில் குருவுடனே கூடியிருப்பதால் முதலில் பிறக்குங் குழந்தைகள் இறந்து போய்விடும். ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தில் கொஞ்சமான பாவத்தைச் செய்தார். அதனால் குழந்தைகளுக்குத் தோஷம் உண்டாகும். ஜாதகருக்குத் துணையாக வந்த முன் ஜன்மத்திய வினையை விவரமாக சொல்லுவீர் என்று கேட்க;

**குறிப்பு.—புத்திர தோஷம் விஷயம் :** புத்திர ஸ்தானமாகிய ஐந்தா வது வீட்டை ஏழிற்கும் எட்டிற்கும் உடையவரான சனி பார்த்திருக்கின் றார். குருவை இராகு பார்க்கின்றார். இன்னொரு புத்திர ஸ்தான மாகிய ஒன்பதாவது வீட்டை அங்காரகன் பார்க்கின்றார். இவைகளா லும் புத்திர தோஷம் ஏற்படும்.

**31.** முன்ஜன்மம் காஞ்சி கீழ்ப்பா லுதித்தனன் பேரூர் தன்னில்
அன்னவன் வடுகர் வமிசம் அணுகியே செட்டுச் செய்து
தன்மனை மதலை யுண்டாய்த் தரணியில் வாழுந் நாளில்
நன்னய மறையோன் பெற்ற நற்சுதர் வயது சென்று ;

**31.** ஜாதகர் பூர்வ ஜன்மத்தில் காஞ்சீபுரத்திற்குக் கிழக்குத் திக்கி லுள்ள ஒரு பெரிய ஊரில் தெலுங்கர் வமிசத்திற் பிறந்து வியாபாரஞ் செய்துகொண்டு வருகிற காலத்தில் ஒரு நல்ல பிராமணர் தான் பெற்ற நல்ல ஒரு பிள்ளைக்கு தகுந்த வயது வந்துவிடவே ;

32. முப்புரி நூல்கள் செய்ய முதலின்றி இவன்பால் சென்று
செப்புவார் எந்தன் சேய்க்குச் சபதப மில்லாதாலே
கைப்பொரு ளுதவி செய்தால் கருத்ததை முடிப்பே னென்ருர்
இருபிறப் பாளர் கேட்கத் தருகிறே னென்று சொல்லி ;

32. அப்பிளளைக்கு உபநயம் செய்து பூணுல் கலியாணம் செய்யப் பணம் இல்லாமல் ஜாதகரிடம் போய், என்னுடைய பிள்ளைக்கு உப நயனம் செய்யாமலிருப்பதால் நீர் உம்முடைய கையிலுள்ள பணத்தை எனக்குக் கொடுத்து உதவி செய்தால் என்னுடைய எண்ணமாகிய உப நயனத்தை முடித்து விடுவேன் என்று சொல்லி அந்தப் பிராமணர் ஜாதகரைக் கேட்க பணத்தைக் கொடுப்பதாகச் சொல்லி ,

33. காரிய காலம் தன்னில் கைதனை விரித்தா னென்ருேம்
பாரினில் கோப முற்றுப் பகருவார் மறையோ ருந்தான்
தீரமாய்த் தாரே னென்று செப்பின பாவிக் கேதான்
வெறொரு ஜன்மம் தன்னில் விளங்காரே சுதர்கள் தாமும் ;

33. உபநயநகாலம நெருங்கிவிட்ட போது ஜாதகர் பணம் தன்னிடம் கிடையாது என்று சொல்லிக் கையை விரித்துவிட்டார் என்று சொல்லு கிருேம். அதன் மேல் அந்தப் பிராமணர் கோபமுடையவராய்ச் சொல்லுகின்ருர். பணத்தைத் தருகிறேன் என்று உறுதியாய்ச் சொன்ன பாவிக்கு இன்னொரு பிறப்பில் பிள்ளைகள் விருத்தியாக மாட்டார்கள் ;

34. வேதத்தோன் சொல்லிச் சென்ருன் மேவிற்று அந்தத் தோஷம்
மாரனு மந்தி யத்தில் மனைவிதன் னுடனே சித்து
பாரிய சேதுச் சென்று பலதீர்த்தம் தோய்ந்து இன்னேன்
சிறியோர்க் கன்ன மீந்து தேவதா தலங்கள் சென்று ;

34 (என்று) அந்தப் பிராமணர் சொல்லி விட்டுப் போய்விட்டார். அந்தச் சாபமானது ஜாதகரை வந்தடைந்தது. ஜாதகர் முன் ஜன்மத்தில் கடைசி காலத்தில் தன்னுடைய மனைவியுடன் பெரிய ஸ்தலமாகிய சேது ஸ்தலத திற்குப் போய் அநேக தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்து ஏழைகளுக்குச் சாப்பாடு போட்டுத் தெய்வ ஸ்தலங்களுக்குப் போய் ;

35. மறுபடி உள்ளூர் மீண்டு மலர்வனம் வைத்துப் பின்பு
அரனடி தொண்டு செய்து அந்தகன் பக்கல் சென்று
பிரமனல் வரையப் பட்டுப் பிறந்தனன் காஞ்சி தன்னில்
உறைந்தது முன்னூழ்த் தோஷம் உதிக்குஞ்சேய் முதலில் பீடை.

35. மறுபடியும் தன்னுடைய ஊருக்குச் சென்று பூந்தோட்டம் வைத்துப் பிறகு சிவபெருமானுக்குத் தொண்டு பூஜை இவைகளை செய்து பிறகு இறந்து எமனிடஞ் சென்று பிரமதேவனல் எழுதப்பட்டுக் காஞ்சீபுரத் தில் பிறந்தார். முன் ஜன்மத்திய வினையும் சாபமும் ஜாதகரை வந்து அடைந்தது. அதனல் முதலில் பிறக்குங் குழந்தைகளுக்குத் தோஷ முண்டாகும்.

36. பின்சுதர் விருத்தி யென்றோம் பேதையும் கேட்க லுற்றாள்
முன்மறைச் சாபத் தாலே உதித்தசேய் தீதா காதோ
அன்னவன் முன்ஜன் மத்தில் அரனடி தொண்டு செய்தும்
உன்னத சேது புண்யம் உறைந்ததால் தோஷம் நீங்கி.

36. பின்னால் பிறக்குங் குழந்தைகள் விருத்தியாகும் என்று சொல்லு கிறோம். அதன்மேல் பார்வதியம்மையார் கேட்கின்றார். முன் ஜன்மத்தில் பிராமணர் கொடுத்த சாபத்தால் ஜாதகருக்குப் பிறக்குங் குழந்தைகள் எல்லாம் இறந்துவிடாதோ ! சொல்லுவீர் என்று கேட்க, ஜாதகர் முன் பிறப்பில் சிவபெருமானுடைய அடிகளில் தொண்டு செய்தும், பூஜை செய்தும், மேன்மையான சேது ஸ்தலத்திற்குச் சென்று புண்ணியத்தை அடைந்தும் இருந்ததாலும் அந்தத் தோஷம் விலகி ;

37. கங்கையின் குலமு தித்துக் காளைபின் விருத்தி தீர்க்கம்
துங்கமா மறைசா பத்தால் சுதர்முதல் பீடை யாகும்
தங்கிடும் பின்னால் விருத்தி சாற்றிய மொழி குன்றாது
நங்கையே மாதுர் சேதி நவிலுவோம் கேளும் தாயே.

37. இந்த ஜன்மத்தில் வேளாளர் குலத்தில் வந்து பிறந்தார். இவருக்குப் பின்னால் பிறக்குங் குழந்தைகள் நீண்ட ஆயுளையுடைய வர்களாவார்கள். பிராமணருடைய பெரிய சாபத்தால் முதலில் பிறக் குங் குழந்தைகள் இறந்து போய்விடும். பின்னால் பிறக்குங் குழந்தை கள் உயிருடன் நிலைத்திருக்கும். நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும், பார்வதியம்மையே ! இனிமேல் தாயாருடைய விஷ யங்களைப்பற்றிச் சொல்லுகிறோம். எங்களுடைய தாயாராகிய பார்வதியம் மையே ! கேட்பீராக.

38. அன்னையும் சிவந்த மேனி அழகுளாள் பெருமை சாலி
பொன்பணி உடையா ளாகும் பஞ்சைமே லிரக்க மாவள்
தன்னில்லம் உள்ளூ ராகும் சாந்தமும் கோப மூண்டு
அன்னவள் அல்ப ரோகி ஆளனுக் கினிய ளாமே.

38. ஜாதகருடைய தாயார் சிவப்புநிறமுள்ள தேகமுடையவள். அழகானவள். பெருமையையுடையவள். தனமும் ஆபரணங்களும் உள்ள வளாவாள். ஏழைகளின் மேல் கிருபையும் தயையும் உள்ளவளாவாள். இவளுடைய வீடு உள்ளூரிலேயே இருக்கும். பொறுமையையுடையவள். சில சமயம் கோபத்தையுமுடையவள். கொஞ்சம் நோயுடையவள். தன் னுடைய புருஷனுக்கு இஷ்டமானவளாவாள்.

39. அவள்துணை ஆண்பாலொன்று அறைந்தனம் தீர்க்க மாகப்
பவமுள அதன்மே லாக பருகாது நசிக்கு மென்றோம்
இவளுடைப் பூர்வம் சொல்வே னினிமையாய் வேலங் காட்டில்
நவமதில் வன்னிய வமிசம் நாயகி உதித்தா ளென்றோம்,

39. தாயாரின் சகோதரர்களில் ஓர் ஆண் சகோதரர் நீண்ட ஆயுளை யுடையவர். மற்ற அதிகமான சகோதரர்கள் நிலைக்காமல் இறந்து விடுவார்கள் என்று சொல்லுகிறோம். இவளுடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறேன். இனிமையை உண்டாக்குகின்ற திருவாலங் காட்டில் ஒரு நல்ல வணிக குலத்தில் இவள் பிறந்தாள் என்று சொல்லு கிறோம்.

40. தேவதா பத்தி கொண்டு சிறுத்தவர்க் கன்ன மீந்து
தாவிய பேரைக் காத்தும் சகலர்க்கு நல்லோ ளாயும்
பூவினில் ஊழில் லாமல் புக்கினன் காலன் பக்கல்
மேவின பிரம ஞலே மேதினில் வரையப் பட்டு ;

40. தாயார் தெய்வபக்தியையுடையவளாகி ஏழைகளுக்குச் சாப்பாடு போட்டுத் தன்னிடம் வந்தடைந்தவர்களைக் காப்பாற்றியும் எல்லோருக்கும் நல்லவளாகவிருந்தும் பூமியில் வினையும் பாவமும் இல்லாதவளாகி இறந்து எமனிடம் போய்ப் பிறகு பிரமதேவனுல் எழுதப் பட்டுப் பூமியில் ;

41. பிருதிவி தலத்தி லேதான் பிறந்த வளிவளே யென்றோம்
திருமகள் விலாசம் பெற்றுச் செல்வதி சுகமாய் வாழ்வள்
அறைகிறோ மிவள்பின் ஜன்மம் அக்காஞ்சி தன்னி லேதான்
உறைகுவாள் மறையோர் வமிசம் உத்தமி சுகமாய் வாழ்வள்.

41. பிருதிவி ஸ்தலம் என்று சொல்லப்பட்ட காஞ்சீபுரத்தில் இவள் வந்து பிறந்தாள் என்று சொல்லுகிறோம். இலட்சுமி இவளிடத்திலும் இவள் வீட்டிலும் வாசஞ் செய்ய, இவள் சுகமாகவும் செல்வமுள்ள வளாகவும் வாழ்வாள். இவளுடைய மறு ஜன்மத்தைச் சொல்லுகிறோம். இந்தக் காஞ்சீபுரத்திலேயே பிராமணர் குலத்தில் பிறப்பாளாகும். பிறந்து இவள் நல்லவளாகவிருந்து சௌக்கியத்துடன் வாழ்வாள்.

42. இவன்பிதா பூர்வம் சொல்வேன் இக்காஞ்சி தென்பா லாக
நவனியில் சிற்றூர் தன்னில் நாயகன் சூத்திர ஞக
அவனியி லுதித்து மேலும் ஆளடி பணையேர் உண்டாய்த்
தவசிகர்க் கன்ன மீந்து தன்மனை மதலை யுண்டாய் ;

42. ஜாதகருடைய தகப்பனரின் முன் ஜன்மத்தைச் சொல்லுகிறேன். இந்தக் காஞ்சீபுரத்திற்குத் தெற்கில் ஒரு சிறிய கிராமத்தில் இவர் சூத்திர ஜாதியில் பிறந்து அடிமையாட்களும் பயிரிடும் நிலங்களும் ஏர் முதலியவை களும் உள்ளவராய் வாழ்ந்து முனிவர்களுக்கும் தவம் செய்பவர்களுக்கும் சாப்பாடு போட்டுத் தன்னுடைய மனைவிகுழந்தைகள் இவர்களையுடையவராகி;

43. தென்திசை கேது புக்கிச் சென்றனன் உள்ளூர் தன்னில்
அன்னவன் மறித்துப் பின்பு அயனுமே வரையப் பட்டு
உன்னத காஞ்சி தன்னில் உதித்தனன் சுகமு ண்டாகிப்
பின்ஜன்மம் அவ்வூர் தன்னில் பிறப்பனும் பிரம்ம சேயாய்.

**43.** தெற்குத் திக்கிலுள்ள சேது ஸ்தலத்திற்குப் போய்ப் பிறகு தன்னுடைய கிராமத்திற்குத் திரும்பி வந்து பிறகு இறந்து பிறகு பிரம தேவனால் எழுதப்பட்டு மேன்மையான சிறந்த காஞ்சீபுரத்தில் வந்து பிறந்தார். சுகத்துடனிருப்பார். இவருடைய மறு ஜன்மம் இதே ஊரில் நேரிடும். பிராமணர் குலத்தில் பிறப்பார்.

**44.** அத்திரி சொல்லு கின்றார் இவனுமுன் ஜன்மம் தன்னில்
பெத்தபுண் ணியங்க ளென்னப் பேசுவீர் விவர மாக
வித்தகன் முன்ஜன் மத்தில் மேவினன் சேதுக் கேதான்
சுத்தமாய் மைந்து புண்ணியச் சிறப்புடன் செய்து மல்லால் ;

**44.** அத்தரி மகரிஷி கேட்கின்றார். ஜாதகருடைய தகப்பனார் முன் ஜன்மத்தில் அடைந்த புண்ணியங்கள் என்னவென்பதைப்பற்றி விவரமாகச் சொல்லுவீர். இவர் முன் பிறப்பில் சேது ஸ்தலத்திற்குப் போய் அவ்விடத்தில் நல்லதான ஐந்துவிதப் புண்ணிய கார்யங்களைச் சிறப்பாகவும் விமரிசையாகவும் செய்ததுமல்லாமல் ;

**45.** இந்ததோர் ஜன்மம் தன்னில் யாவர்க்கும் நல்லோ னுயும்
கந்தன்மேல் பத்தி கொண்டும் காவலன் வாழ்ந்த தாலே
முந்திய குலமு திப்பான் மொழியது தப்பா தாகும்
இந்திர னிறைஞ்சு மாதே யியம்புவோம் கரும காலம்.

**45.** இந்தப் பிறப்பில் எல்லோருக்கும் இவர் நல்லவராக விருந்தும் முருகக்கடவுளின் மேல் பக்தியை உடையவராகியும் வாழ்ந்ததால் முதன்மையான குலமாகிய பிராமணர் குலத்திற் பிறப்பார். நாங்கள் சொல்லுகின்ற வார்த்தைகள் தவறிப் போகாமல் நடக்கும். தேவேந்திரன் வணங்கிப் பூஜை செய்யும் பார்வதியம்மையே ! இனிமேல் கர்ம காலங்களைப் பற்றிச் சொல்லுகிறோம்.

**46.** முப்பான் மூன்றில் மார்கழி
மாதம் மெய்திடும் தந்தை கண்டம்
செப்புவோம் முப்பத்தாறு ஆண்டினிலே
சேல் மாதம் அன்னைக்குத் தோஷம்
ஒப்புடன் உதித்தோன் அறுபத்து
இரண்டில் உயர் மேட மாதத்திலே தான்
மெய்ப்புடன் நவமிகுறை பக்கம்
தன்னில் விளம்புவோம் முடலம் வாடும்.

**46.** ஜாதகருக்கு முப்பத்து மூன்றாவது வயதில் † இவருடைய தகப்பனார் மார்கழி மாதத்தில் இறந்து விடுவார். ஜாதகருக்கு முப்பத் தாறுவது வயதில் ‡ பங்குனி மாதத்தில் இவருடைய தாயார் இறந்து விடுவாள் என்று சொல்லுகிறோம். ஜாதகர் தனக்கு அறுபத்திரண்டாவது வயதில் * மேன்மையான சிறந்த சித்திரை மாதத்தில் தேய் பிறையில் நவமி திதியில் நிச்சயமாக இறந்து இவருடைய தேகம் அழிந்து போய்விடும்.

† குறிப்பு.—(1) பிதுர் மாரகம் : ஜாதகருக்கு வயது ௵ 32–0–0 முதல் ௵ 33–0–0 முடியும் வரையிலும் சந்திர தசையில் ராகு குரு புக்திகள் நடக்கின்றன. மார்கழி மாதத்தில் குரு புத்தி நடக்கிறது. பிதுர் லக்கின மாகிய மீனத்திற்கு இரண்டில் சந்திரன் மாரக ஸ்தானத்தில் இருந்து கொண்டு எட்டாவது வீடாகிய துலாத்தைப் பார்க்கின்றார். பிதுர் ஸ்தானாதிபதி யாகிய குரு சந்திரனைப் பார்க்கின்றார். சந்திரனுக்குப் பிதாவை மாரகஞ் செய்யும் அமைப்பு ஏற்படுகிறது. குரு பிதுர் ஸ்தானாதிபதியாகி மீனத்திற் குப் பத்தில் பத்திற்குடையவராயும் இருக்கின்றார். ஆகையால் துய்யகேரளம் எட்டாம் பாவம் 14-ஆவது பாடல் பிரகாரம் குரு தன் புக்தியில் பிதாவுக்கு மாரகஞ் செய்ய அமைப்பு இருக்கிறது.

‡ (2) மாதுர் மாரகம் :—ஜாதகருக்கு வயது ௵ 35–0–0 முதல் ௵ 36–0–0 முடியும் வரையிலும் சந்திர தசையில் சனி புத புக்திகள் நடக்கின்றன. பங்குனி மாதத்தில் சனி புக்தி நடக்கின்றது. மாதுரு லக்கினம் துலாம். இதற்குப் பராசரஹோரை சில பதிப்புப் பிரகாரம் அங்காரகன் சூரியன் குரு இவர்கள் மாரகராகின்றார்கள். சந்திரன் அங்காரகனுடைய வீட்டில் மாதுர்லக்கினத்திற்கு ஏழில் மாரக ஸ்தானத்தில் இருந்துகொண்டு மாரகாதிபதியாகிய குருவால் பார்க்கப்பட்டிருக்கின்றார். மேலும் சந்திரன் மாதுர்காரகாதிபதியாகி அவர் தசையே நடைபெறுகிறது. ஆகையால் மாதாவைச் சந்திரன் மாரகஞ் செய்ய அமைப்பு இருக்கிறது. மாரகாதிபதியாகிய சூரியனுடன் சனி கூடிக்கொண்டு சந்திரனையும் பார்க்கின்றார். ஆகையால் ஜாதகசந்திரிகை 23-ஆவது 27-ஆவது சுலோக ங்களின் பிரகாரம் சந்திர தசையில் சனி புக்தியில் மாதாவுக்கு மரணம் நேரிட அமைப்பு இருக்கிறது.

* (3) ஜாதகர் மராகம் :—ஜாதகருக்கு வயது ௵ 61–0–0 முதல் ௵ 62–0–0 முடியும் வரையிலும் ராகு தசையில் சூரிய சந்திர புக்திகள் நடக்கின்றன. 61-ஆவது வயது முடிந்து 62-ஆவது வயதில் சித்திரை மாதத்தில் சூரிய புக்திதான் நடக்கின்றது. கடக லக்கினத்திற்குச் சனி பராசரஹோரை ஜாதகசந்திரிகை தாண்டவமாலை சந்திரகாவியம் இவைகளின் பிரகாரம் மாரகாதிபதி ஆகின்றார். ராகு இவருடன் கூடி எட்டாவது மாரகஸ்தானத்தில் இருந்துகொண்டு லக்கினாதிபதியாகிய சந்திரனைப் பார்க்கின்றார். சூரியன் எட்டாவதான மாரக ஸ்தானத்தில் மாரகாதிபதியாகிய சனியுடன் கூடி இருக்கின்றார். ஆகையால் ஜாதகசந்திரிகை 12-ஆவது, 23-ஆவது சுலோகங்களின் பிரகாரமும் துய்ய கேரளம் எட்டாம் பாவம் 20-ஆவது பாடல் பிரகாரமும் ராகு தசையில் சூரிய புக்தியில் ஜாதகருக்கு மரண அமைப்பு இருக்கிறது.

**வேறு.**

47. மறுஜன்மம் கோகர்ணம் மாநகர் தன்னில்
திருமகன் போன்ற க்ஷத்திரிய குலத்தில்
கரிபரி யுடையாய்க் காவலன் உதிப்பன்
பெருமையாய் வாழ்வன் பொய்யிலா சொன்னோம்,

47. ஜாதகர் பின் ஜன்மத்தில் கோகர்ணம் என்னும் ஒரு பெரிய பட்டணத்தில் இலக்ஷ்மியைப்போல செல்வத்தையும் யானையையும் குதிரையையும் உடைய ஒரு க்ஷத்திரிய குலத்திற் பிறப்பார். பெருமை யுடனும் கீர்த்தியுடனும் வாழ்வார். நாங்கள் சொல்லியது பொய்யாகாது.

**வேறு.**

48. பொதுயோக மிவனுக் கேதான் போற்றுவோம் கேளும் தாயே
சதியிலாத் தரும கருமர் சார்ந்துமே ஆறில் நிற்க
மதிபிறை போலே யோகம் வளர்ந்திடு மிவனுக் கேதான்
விதியது முடியு மட்டும் விளம்புவோம் வறுமை காணன்.

48. ஜாதகருக்குப் பொதுவாக யோகத்தைச் சொல்லுகிறோம். எங்கள் தாயாராகிய பார்வதியம்மையே! கேட்பீராக. குற்றமில்லாத தர்ம கர்மாதிபர்களான குருவும் அங்காரகனும் கூடி ஆறுவது பாவத்தில் இருப்பதால் வளர் பிறைச் சந்திரனைப் போல யோகம் நாளுக்கு நாள் இவருக்கு விருத்தியாகும். இவர் தன்னுடைய ஆயுளுள்ளவரையிலும் கஷ்டங்களும் தரித்திரமும் இல்லாமல் வாழ்வார் என்று சொல்லுகிறோம்.

49. கடனில்லான் உதவி செய்வன் கருதின முடிக்க வல்லான்
திடமுள குடும்பி யாவன் திருப்பணி யிச்சை யுள்ளான்
உடன்படான் பிழைக ளுக்கு ஓராறு முகத்தோன் பக்தி
அடவுடன் கொள்வா னுகும் அவனாலே யாவும் நன்மை.

49. ஜாதகர் கடன்படமாட்டார். பிறருக்கு உபகாரஞ் செய்வார். தான் நினைத்த காரியத்தைச் செய்து முடிக்கும் சக்தியும் சாமர்த்தியமும் உடையவர். கெடுதியான காரியங்களைச் செய்வதற்குச் சம்மதிக்கமாட்டார். ஆறுமுகங்களையுடையவரான முருகக் கடவுளின் மேல் பக்தியுடையவர். இக் கடவுளின் அருளால் ஜாதகருக்குச் சகல நன்மைகளும் உண்டாகும்.

50. பொன்பொருள் பூமி வீடு புகழ்நாற்பதாயி ரம்பொன்
அன்னவ னடைவா னுகும் ஐம்பது மூன்றுமாண்டில்
தன் துணை பாகம் வேண்டி சார்ந்திடும் குடும்பம் வேறு
இன்னமும் விவர மாக இயம்புவோ மிரண்டி லேதான்.

50. ஜாதகர் தனம் இதரப் பொருள்கள் நிலங்கள் வீடு இவைகள் எல்லாம் மொத்தம் நாற்பதாயிரம் பொன் பெறக்கூடிய சொத்தைச் சம்பாதித்து வைப்பார். இவருக்கு ஐம்பத்து மூன்றுவது வயதில் * இவருடைய சகோதரர்கள் பங்கு பிரித்துக்கொள்ளவேண்டும் என்று எண்ணங்கொள்வர். அதனால் குடும்பம் வேறாகப் பிரிந்து போய்விடும். மற்ற விஷயங்களை விவரமாக இரண்டாவது பாகத்தில் சொல்லுகிறோம்.

* குறிப்பு.—பாகப்பிரிவினை விஷயம் :—ஜாதகருக்கு வயது ஷ 52–0–0 முதல் ஷ 53–0–0 முடியும் வரையிலும் இராகு தசையில் சனி புக்தி நடக்கின்றது. குடும்பாதிபதியாகிய சூரியனும் அஷ்டமாதிபதியும் ஏழுக் குடையவருமான சனியும் ராகுவும் எட்டில் இருந்துகொண்டு குடும்பத்தைப் பார்ப்பதால் குடும்ப பாகப் பிரிவினை ஏற்பட அமைப்பு இருக்கிறது.

**51.** ஜனித்திடுங் காலம் தன்னில் செம்பாம்பு தசையிருப்புக்
குனித்திடும் ஆண்டு மூன்று கூறிய திங்களை ந்தும்
வினையுண்டு ஜாத கர்க்கு மிக்கதாய் நலிக ளுண்டு
அனையவே சூத முண்டு அறைகிறோம் விவரம் ரெண்டில்.

**51.** ஜாதகர் பிறக்குங் காலத்தில் கேது தசையின் இருப்பு கணிதப் பிரகாரம் வருஷம் மூன்றும் மாதம் ஐந்தும் ஆகும். இவருக்கு இந்தத் தசையில் கஷ்டங்கள் ஏற்படும். பெரிய நோய்களும் உண்டாகும். சூதகங் களும் நேரிடும். மற்ற விஷயங்களை விவரமாக இரண்டாவது பாகத்தில் சொல்லுகிறோம்.

# ஜாதகம் 75

**1.** பிறை[1] அரி [2]பொன்னேன்[3] கோலில்[4] புயங்கனும்[5] காரி[6] [மேரு[7]
தரைமகன்[8] கடக மாகச் சல்லியன்[9] புதனு மீனம்
இரவியும்[10] மேட மாக லக்கினம் கடக மாக
உரைகுவீர் பலனை யென்று உத்தமி கேட்க லுற்றாள்.

| சுக்கிரன் புதன் | சூரியன் | | கேது |
|---|---|---|---|
| | இராசி சக்கரம் | | லக்கினம் அங்காரகன் |
| | | | சந்திரன். |
| சனி ராகு | | குரு | |

**1.** சந்திரன் சிம்மத்திலும், குரு துலாத்திலும், இராகுவும் சனியும் தனுசிலும், அங்காரகன் கடகத்திலும், சுக்கிரனும் புதனும் மீனத்திலும், சூரியன் மேஷத்திலும் இருந்து ஜன்ம லக்கினம் கடக மானல் பலாபலன்களைச் சொல்லுவீர்களென்று பார்வதியம்மையார் கேட்கிறார்.

**குறிப்பு.**—இந்த ராசிச் சக்கர அமைப்பிற்குப் பின் வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்த முடையதாகும். மேஷத்தில் சனியும், மிதுனத்தில் சூரியனும், கடகத்தில் சுக்கிரனும் ராகுவும், சிம்மத்தில் சந்திரனும், துலாத்தில் அங்காரகனும், மகரத்தில் கேதுவும், கும்பத்தில் குருவும் புதனும் ஆகும்.

**2.** பிருகுமே புகலு கின்றார் பிறந்திடு மாண்பால் ஜன்மம்
வருமில்லம்கீழ் மேல் வீதி வாசலும் வடக்குப் பார்வை
அரன்கோஷ்டம் தந்தி கீழ்ப் பால் அனல்காளி தென்பா லாகும்
நரிவாக னத்தாள் தோன்றும் நன்மாரி மேல்பால் தங்கும்.

---

[1] சந்திரன். [2] சிம்மம். [3] குரு.
[4] துலாம். [5] இராகு. [6] சனி. [7] தனுசு.
[8] அங்காரகன். [9] சுக்கிரன். [10] சூரியன்

2. பிருகு மகரிஷி சொல்லுகின்ருர். பிறக்கும் குழந்தை ஆண் குழந்தை ஆகும். பிறந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் தெரு வாயிற் படி வடக்குத் திக்கைப் பார்த்திருக்கும். சிவபெருமானுடைய கோயிலும் விநாயகக் கடவுளின் கோயிலும் கிழக்குத் திக்கிலும், உஷ்ணத்தையுடைய காளியம்மன் கோயில் தெற்குத் திக்கிலும், திரௌபதியம்மன் கோயில் தெற்கிலும், நல்ல மாரியம்மன் கோயில் மேற்குத் திக்கிலும் இருக்கும்.

3. இத்தகை அடையாளத்து ளிறங்குவான் ஐந்தாம் ஜன்மம்
வித்தகன் கங்கை சேயாய் மேவுவா னென்று சொல்வோம்
பெத்ததாய்த் தந்தை யோகம் பேதையர் புத்திர யோகம்
சுத்தமாய் முன்பின் ஜன்மம் செப்புவோமிந் நூல் தன்னில்.

3. இப்படிப்பட்ட அடையாளங்கள் உள்ள ஊரில் ஜாதகர் ஐந்தாவது கர்ப்பத்தில் வேளாளர் குலத்தில் பிறப்பார் என்று சொல்லு கிரேம். இவரைப் பெற்றெடுத்த தாயார் தகப்பனர் இவர்களுடைய யோகங்களையும், மனைவி மக்கள் இவர்களுடைய யோகங்களையும், முன் ஜன்மம், பின் ஜன்மம் இவைகளையும் உண்மையாய் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகிரேம்.

4. தந்தையின் துணைஆண் ஒன்று சத்தியு மவ்வா ருகும்
முந்திய துணைவ ளுக விளம்புவோமவன் குணத்தை
விந்தையாய் மனைவி யாலே நிகர்கிராமச் செட்டுச் செய்வன்
சந்ததம் கிருஷி யுண்டு தன் சுதராண்பால் ரண்டு.

4. ஜாதகருடைய தகப்பனருடன் கூடப்பிறந்தவர்கள் ஆண் ஒருவரும் பெண் ஒருவரும் ஆவார்கள். இந்த ஆண் சகோதரர் மூத்த சகோதரராவார். இவருடைய குணதிசயங்களைப்பற்றிச் சொல்லுகிரேம். இவர் ஆச்சர்யமாய் மனைவி மூலமாகச் சிறப்பான கிராம வியாபாரம் செய்வார். இவருக்கு எப்போதும் விவசாயத் தொழிலும் உண்டு. இவருக்கு இரண்டு ஆண் பிள்ளைகள் உண்டு.

5. அவைகளும் கரங்கால் குற்றம் அறைகிரேம் பின்பால் சேதி
விதிக்கிரேம் பிதாகு ணத்தை விளைபுலம் விருத்தி செய்வன்
பதியது புதிதாய்ச் செய்வன் பாரினில் வறுமை காணன்
சதியிலா மனத்தா ளுகும் தந்திர மொழியே கூறுவன்.

5. இந்த இரண்டு பிள்ளைக்கும் கைகால்கள் ஊனமாக விருக்கும்.* இனி மேல் ஜாதகருடைய தகப்பனரின் குணதிசயங்களைச் சொல்லுகிரேம். விளைகின்ற நிலங்களைப் பயிரிட்டு விருத்தியாக்குவார். வீட்டைப்புதியதாகக் கட்டுவார். கஷ்டங்களும் தரித்திரமும் பூமியில் இல்லாதவர். வஞ்சனை கபடு கள்ளம் இவைகள் இல்லாத மனத்தையுடையவர். பக்குவமாகவும் உபாயமாகவும் சாமர்த்தியமாகவும் வார்த்தைகளைச் சொல்லுவார்.

* **குறிப்பு.**—பிதுர் மூத்த சகோதர ஸ்தானமாகிய பதினேராம் வீடாகிய மகரத்திற்குப் புத்திர ஸ்தானமாகிய ஐந்தாம் வீடாகிய ரிஷபத்திற்கு அதி

பதியான சுக்கிரன் மூன்றில் 6-க்குடைய புதனுடன்கூடி மீனத்தில் உச்சமாகிச் சனி மகரத்திற்கு 9.ஆவது பாவமாகிய கன்னியைப்பார்க்கின்றார். மேலும் மூத்தசகோதரகாரகனாகிய குருவிற்குப் புத்திர ஸ்தானமாகிய ஐந்தாம் பாவமாகிய கும்பத்திற் குடைய சனி இராகுவுடன் கூடியிருக்கிறார். கும்பத்தை ராகுவும் அங்காரகனும் பார்க்கின்றார்கள். ஆகையால் மூத்த சகோதரனுடைய பிள்ளைகள் சுகமாக விருக்கமாட்டார்கள்.

6. புனர்பூசம் நந்தி ராசி பிறப்பனும் சல்லியம் கொள்ளான்
இனமதற் கினிய னாகும் இடரென்றோர்க் குதவி செய்வன்
சினமொன்றும் வெளிக் காட்டாதான் தேவியால் லாப முள்ளான்
மனதீர முடைய னாகும் மங்கையே கேட்டி டாயே.

6. ஜாதகருடைய தகப்பனார் புனர்பூச நட்சத்திரத்தில் ரிஷப ராசியில் பிறந்தவராயிருப்பார். கடன்பட மாட்டார். பந்துக்களுக்குப் பிரிய மானவர். கஷ்டப்படுகிறோம் என்று சொல்லுகிறவர்களுக்கு உபகாரஞ் செய்வார். கோபத்தை பிறருக்குத் தெரியும்படியாய் வெளியே காட்டிக்கொள்ளமாட்டார். இவருக்குத் தன்னுடைய மனைவியால் லாப முண்டாகும். தைரியமான மனத்தையுடையவர். பார்வதி யம்மையே! கேட்பீராக.

7. உண்டியில் வறுமை காணான் உண்மையாம் மனத்தா னாகும்
தண்டமிழ் நுணுக்கம் தேரான் சதுஷ்பாதம் விருத்தி யுண்டு
பண்டுநாள் பூமி விருத்தி பதர்சொல்லான் பெரியோர் நேயன்
துண்டமாய்க் கூறா னாகும் திருப்பணி வேலை செய்வன்.

7. தகப்பனார் சாப்பாட்டு விஷயத்தில் கஷ்டப்படாதவராவார். உண்மையான நல்ல மனத்தையுடையவர். தமிழ்ப்பாஷையின் புத்தி நுட்பமான விஷயங்களை அறியாதவர். கால்நடைகளின் விருத்தி யுடையவர். பழைய காலத்திய நிலங்களைப் பயிரிட்டு விருத்தியாக்குவார். பலனில்லாததையும், அற்பமானதையும், அறிவீனமானதையும் சொல்ல மாட்டார். பெரிய மனுஷர்களுடைய சிநேகத்தையுடைவராவார். கண்டிப்பாய் வெட்டி கடினமாய்ப் பேசமாட்டார். கோயில்களில் கடவுளுடைய வேலைகளையும் தொண்டுகளையும் செய்வார்.

8. சொல்லிய குணத்தா னுக்குச் சுதனுமே யுதிப்பா னாகும்
வல்லவன் குணத்தைச் சொல்வேன் வாக்கது சுத்த முண்டு
வெல்லும்சொல்லுடைய னாகும் வித்தையு மதிகம் கற்பன்
தல்லியால் பெருமை யேற்பன் தனமிக வுடையனாகும்.

8. இங்கு சொல்லப்பட்ட குணங்களையுடைய தகப்பனுக்கு ஜாதகர் பிள்ளையாகப் பிறப்பாராகும். இனிமேல் இவருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகிறேன். சுத்தமான நல்ல வார்த்தைகளைச் சொல்லுவார். தான் சொல்லுவதையே உண்மை என்று நிரூபித்து ஜயிக்குந் தன்மை யுடையவராவார்; அல்லது பிறரைத் தன் வசப்படுத்திக் கொள்ளும்படியாகப் பேசுந்திறமை யுடையவர். அதிகமான கல்வியைப் படிப்பார். தாயாரால் மேன்மையையும் சிறப்பையும் அடைவார். அதிக செல்வம் உடையவராவார்.

9. நினைத்தகா ரியமுடிப்பன் நிஷுடூர் வசனம் கூறான்
வினைசெய்யான் யாவருக்கும் விளைபுலம் விருத்தி செய்வன்
கனமுள குடும்ப மேற்பன் கணக்கினிலூகை வானும்
பணையோர்கள் விருத்தி செய்வன் பரவுபகார னுமே.

9. ஜாதகர் தான் செய்ய எண்ணின காரியத்தைப் பூர்த்தி செய்து முடிப்பார். விரோதத்தை உண்டு பண்ணக்கூடிய கொடுமையான இடையூறான வார்த்தைகளைச் சொல்லமாட்டார். யாருக்கும் கெடுதியைச் செய்யமாட்டார். நன்றாய் விளைகின்ற நிலங்களைப் பயிரிட்டு விருத்தியாக்குவார். மேன்மையான குடும்பத்தையுடையவராவார். கணித வித்தையில் நுட்பமான புத்தியை யுடையவர். பயிரிடும் நிலங்கள் ஏர்வகையராக்கள் ஆகிய இவைகளை அதிகப்படுத்துவார். பிறருக்கு உதவி செய்யுந் தன்மை யுடையவராவார்.

10. இவனுடைத் துணைவர் தம்மை யியம்புவோ முன்பெண் ஒன்று
நவனியில் தீர்க்க மெய்தும் நவிலுவோ மவள்கு ணத்தைத்
தவசிகட் கன்ன மீவள் சத்பாத்திரி யோக சாலி
சிவதொண்டு புரிவா ளாகும் சீக்கிர கோபம் கொஞ்சம்.

10. ஜாதகருடைய சகோதரங்களைப் பற்றிச் சொல்லுகிறோம். இவருக்கு முன்னே ஒரு பெண் சகோதரி பூமியில் நீண்ட ஆயிளையுடையவளாக விருப்பாள். இவளுடைய குணங்களைப் பற்றிச்சொல்லுகிறோம். தவம் செய்கிறவர்களுக்கும் பரதேசிகளுக்கும் சாப்பாடுபோடுவாள். நன்றாகத் தகுதியாக ரட்சிக்கக்கூடியவள். யோகமுடையவள். சிவபொருமானுக்கும் சிவனடியார்களுக்கும் பக்தியுடன் தொண்டு செய்வாள். இவளுக்குக் கொஞ்சங் கோபம் சீக்கிரத்தில் உண்டாகும்.

11. பால்பாக்கிய முடையா ளாகும் பணிதிபாத் திரங்கள் சேர்ப்பள்
ஞாலம்மேல் நல்லோ ளாவள் நலிந்தோரை ஆத ரிப்பள்
சீலியாம் விரத மேற்பள் சிறப்புள குடும்பியாவள்
காலத்தை அறிந்து ரைப்பள் காதலி கேட்டி டாயே.

11. ஜாதகருடைய மூத்த சகோதரி பால் பாக்கிய முடையவளாவாள், அஃதாவது இவளுக்குப் பசுக்கள் விருத்தியாகும். ஆபரணங்களையும் பாத்திர சாமான்களையும் சேகரிப்பாள். பூமியில் நல்லவளாக விருப்பாள். ஏழைகளையும் மெலிந்தவர்களையும் காப்பாற்றுவாள். நல்லொழுக்கமும் நல்ல நடவடிக்கையும் உடையவள். விரதங்களை அனுஷ்டிப்பவள். மேன்மையான கௌரவான குடும்பத்தையுடையவள். காலத்தைத் தெரிந்து கொண்டு அதற்குத் தகுந்தாற்போல பேசுவாள். பார்வதியம்மையே கேட்பீராக.

12. மங்கையும் போன பின்பு வரனுக்கு யோக மெய்தும்
பொங்கிய குடும்ப மெய்தும் புருடனும் மேல்பால் நேரும்
நங்கைக்குச் சுதர்கள் சொல்வேன் நல்கிடு மாண்பால் ரண்டு
பங்கைய முகத்தாள் மூன்று பருகிடும் தீர்க்க மாக.

**12.** இவள் தன்னுடைய புருஷனிடம் போய்ச் சேர்ந்தபிறகு புருஷனுக்கு யோகமுண்டாகும். தன்னுடைய குடும்பம் நாளுக்கு நாள் விருத்தியாகி மேன்மையை அடையும். இவளுக்குப் புருஷன் மேற்குத் திக்கி லிருந்து வருவான். இவளது சந்ததிகளைப்பற்றிச் சொல்லுகிறேன், ஆண் குழந்தைகள் இருவரும் தாமரை மலரைப்போல் அழகான முகத்தை யுடைய பெண்கள் மூன்று பேரும் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள்.

13. மாதுக்கு வயது தீர்க்கம் மைந்தன் பின்கன்னி ஒன்று
தீதிலா ஆண்பாலொன்று செப்புவோம் தீர்க்கமாக
ஓதுவேன்பின் பால் சேதி உதித்தவன் மணத்தின் காலம்
மேதினில் மூவைந்தாண்டில் மேல்திசை பாரி வாய்க்கும்.

**13.** இவளுக்கு நீண்ட ஆயுளுண்டு. ஜாதகருக்குப் பின்னால் ஒரு பெண் சகோதரமும் குற்றமில்லாத ஓர் ஆண் சகோதரமும் நீண்ட ஆயுளை யுடையவர்களாய் இருப்பார்கள் என்று சொல்லுகிறோம். இவர்களுடைய விஷயங்களைப்பற்றிப் பின்னால் சொல்லுகிறோம். ஜாதகருக்கு விவாகம் நடக்கின்ற காலத்தைச் சொல்லுகிறோம். இவருக்குப் பதினைந்தாவது வயதில் மேற்குத் திக்கிலிருந்து மனைவி வந்து நேரிடுவாள்.

**குறிப்பு.—விவாக காலம்.** ஜாதகருக்கு வயது 14-0-0 முதல் ஷை 15-0-0 முடியும் வரையிலும் சுக்கிர தசையில் சனி புதன் புக்திகள் நடக்கின்றன. நைசர்க்கிக சுபக் கிரகங்கள் கேந்திர கோணங்களிலும். சந்திரன் இரண்டிலும் இருப்பதால் இளம் பிராயத்தில் விவாகம் நடக்கக்கூடிய அமைப்பு இருக்கிறது. போக ஸ்தானமாதிய நான்கிற் குடையவரும் களத்திரகார கனுமாகிய சுக்கிரன் ஒன்பதில் இருக்கின்றார். ஆகையால் விவாகம் செய்து வைக்கும் அமைப்பு இவருக்கு இருக்கின்றது. சனி ஏழிற் குடையவராகி போககாரகனுகிய ராகுவுடன் கூடி இருக்கின்றார். ஆகையால் சனிக்குத் தன் புக்தியில் ஜாதகருக்கு விவாகஞ் செய்துவைக்கும் அமைப்பு இருக்கிறது.

14. கன்னிகை குணத்தைச் சொல்வேன் கணவனுக்கினிய ளாகும்
பன்னியே பேச வல்லாள் பர்த்தாவின் மனத்துக் கேத்தோள்
பொன்பணி யிச்சை யுண்டு பொய்யது வழுத்தா நெஞ்சம்
பின்னமில் லாததேகி பெரியோர் போல் வார்த்தை சொல்வள்.

**14.** ஜாதகருடைய மனைவியின் குணதிசயங்களைப் பற்றிச் சொல் லுகிறேன். இவள் தன்னுடைய புருஷனுக்கு இஷ்டமானவள். சுருக்கமாகவும் திறமையாகவும் பேசுஞ் சாமர்த்திய முள்ளவள். புருஷனுடைய மனத் திற்குத் தகுந்தபடி நடந்து கொள்ளக் கூடியவள். தனம் ஆபரணம் இவை களின் மேல் இவளுக்கு ஆசையுண்டு. பொய்யானதைச் சொல்லக்கூடாத மனத்தை உடையவள். தன்னுடைய தேகத்தில் யாதொரு அவயவ பங்கமும் குறைவும் இல்லாதவள். பெரிய மனுஷர்களைப்போல வார்த்தைகளைச் சொல்லுவாள்.

15. மாநிறம் உலேச்சல் தேகி வருவோரை ஆத ரிப்பள்
இன்னலருறவு கொள்ளா ளிடரென்ரோர்க் குதவி செய்வள்
மானமாய்ச் ஜீவிப்பா ளாம் வயதுமே தீர்க்க மென்ரேம்
பான்மையாய்ப் பிருகு சொல்லப் பராசரும் தடுத்துச் சொல்வார்.

15. மனைவி மாநிறமுள்ள மெலிந்த ஒல்லியான தேகத்தையுடையவள். தன்னிடம் வருபவர்களைக் காப்பாற்றுவாள். தீமையையும் துன்பத்தையும் உண்டு பண்ணுகிறவர்களிடம் சினேகஞ்செய்து கொள்ளமாட்டாள். கஷ்டங்கள் இருக்கின்றன வென்று சொல்லுகிறவர்களுக்கு உபகாரஞ் செய்வாள். மானத்தைக் காப்பாற்றிக்கொண்டு ஜீவனம் செய்து வருவாள். இவளுக்கு நீண்ட ஆயுள் உண்டு என்று சொல்லுகிரேம். இத்தன்மையாகப் பிருகுமக ரிஷி சொல்ல, பராசரமுனிவரும் தடுத்துச் சொல்லுகின்ருர்.

16. எப்படி வயது தீர்க்க மியம்புவீ ரந்தச் சங்கை
மெய்ப்புன் மதியும்[1] ரெண்டில் வேந்தனும்[2] நாலில் தங்கச்
செப்பினேன் வயது தீர்க்கம் ஜயமுனி தடுத்துச் சொல்வார்
அப்படிச் சொல்லொ ணுது அவனுக்குத் தாரம் ரெண்டு.

16. மனைவிக்கு எந்த விதத்தில் நீண்ட ஆயுள் உண்டு. அந்தக் காரணங்களைச் சொல்லுவீர் என்று கேட்க, மெச்சிக் கொள்ளக்கூடியதாய், அ.'.தாவது வலுவாய்ச் சந்திரன் இரண்டில் இருப்பதாலும் குருவும் நாலில் இருப்பதாலும் மனைவிக்கு நீண்ட ஆயுள் உண்டு என்று சொன்னேன் என்று பிருகுமகரிஷியானவர் சொல்ல, அதற்கு ஜயமுனிவர் தடுத்துச் சொல்லுகின்ருர். அவ்விதமாகச் சொல்லச்சாத்தியப்படாது. ஜாதகருக்கு இரண்டு மனைவிகள் ஏற்படுவார்கள்.

17. காரணம் யாது என்னக் காரியும்[3] ஏழோ ணுகி
ஆறினி லிருப்ப தாலே அவனுடன் பணியும்[4] கூடிப்
பார்மகன்[5] ஏழைப் பார்க்கப் பகர்ந்தனம் தாரம் ரண்டு
தீரமாய் இரண்டு தாரம் தீர்க்கமோ விரயமோ சொல்.

17. இதற்குக் காரணங்கள் என்ன என்று கேட்க, சனி ஏழாம் பாவாதிபதியாகி ஆருவது வீட்டில் இருப்பதாலும் இந்தச் சனியுடன் இராகுவும் கூடி இருப்பதாலும் அங்காரகன் ஏழாவது வீட்டைப் பார்ப்பதாலும் ஜாதகருக்கு இரண்டு மனைவிகள் நேரிடுவார்கள் என்று சொல்லுகிரேம் உறுதியாய்ச் சொல்லுகின்ற இவ்விரண்டு மனைவிமார்களும் நீண்ட ஆயுளையுடையவர்களாவார்களா அல்லது இறந்து விடுவார்களா என்பதைச் சொல்லுவீர்.

18. முதல்மனை கர்ப்பத் தாலே மடிவளாமடுத்த மாது
சதமுடன் தீர்க்க மென்ரேம் சாற்றுவீர் காலம் தன்னைச்
சுதனுக்கு முப்ப தாண்டில் சோர்வுறும் முதல்ம னைத்தான்
ஆறுண்டில் வேறு மாது அணுகிடுமென்று சொல்வோம்.

---

1. சந்திரன். 2. குரு.

குறிப்பு.—3 சனி; 4 இராகு; 5 அங்காரகன்.

18. ஜாதகருக்கு முதல் மனைவி கர்ப்பந்தரித்து அதனால் அவள் இறந்து விடுவாள். இரண்டாவது மனைவி நீண்ட ஆயுளையுடையவள் என்று சொல்லுகிறோம் என்று சொல்லவே, இவ்விதமாக நடக்குங்காலத்தைச் சொல்லுவீரென்று கேட்க, ஜாதகருக்கு முப்பதாவது வயதில் முதல் மனைவி இறந்து விடுவாள். பிறகு ஆறுவது வருஷத்தில் இன்னொரு மனைவி வந்து சம்பவிப்பாள் என்று சொல்லுகிறோம்.

குறிப்பு.- முதல் மனைவி மரண விஷயம்.—ஜாதகருக்கு வயது ஷ்டு 29-0-0 முதல் ஷ்டு 30-0-0 வரையிலும் சந்திர தசையில் சனிபுக்தி நடக்கின்றது. முதல் மனைவி லக்கினம் ஏழாவது வீடாகிய மகரம் ஆகும். இதற்குப் பராசரஹோரை ஜாதக சந்திரிகைகளின் பிரகாரம் சந்திரன் மாரகாதிபதி ஆகிறார். இந்தச் சந்திரன் மகரத்திற்கு மாரக ஸ்தானமாகிய எட்டாவது வீட்டில் இருக்கின்றார். சனி மகரத்திற்கு இரண்டிற்குடையவராகி பன்னிரண்டாவது வீட்டில் ராகுவுடன்கூடி மூல நட்சத்திரத்தில் பாபியான கேது காலில் இருக்கின்றார். மேலும் இவர் களத்திரத்திற்கு லக்கினாதிபதியாகிறார். ஆகையால் துய்யகோளம் எட்டாவது பாவம் 14-ஆவது பாடல் பிரகாரம் சனி தன் புக்தியில் மாரகஞ் செய்ய அமைப்பு உள்ளவராக விருக்கின்றார். ஐந்திற்கு, அஃதாவது புத்திரஸ்தானத்திற்கு அதிபதியான அங்காரகன் ஏழை பார்ப்பதால் கர்ப்பத்தால் மனைவிக்குக்கஷ்டம் நேரிடும் அமைப்பு இருக்கிறது. இரண்டாவது மனைவி லக்கினம் மீனம் ஆகும். மீனத்திற்குடைய குருவையும் போகஸ்தானமாகிய நான்கையும் அங்காரகன் பார்ப்பதால் 36-ஆவது வயதில் அங்கார தசையில் குரு புத்தியில் இரண்டாவது மனைவி வருவாள்.

19. பின்மாது குடகில் நேரும் பேசுவோம் சுதர்ப லத்தைக்
கன்னிகை மூன்று மாகும் காளைகள் ளிரண்டு என்றோம்
முன்மனை தனக்குப் புத்திரர் மொழிகிறோம் கன்னி ஒன்று
சொன்னது ஆறும் தீர்க்கம் துறவியே கேட்டி டாயே.

19. ஜாதகருக்கு இரண்டாவது மனைவி மேற்குத் திக்கிலிருந்து வருவாள். இனிமேல் புத்திரபலத்தைப்பற்றிச்சொல்லுகிறோம். இரண்டாவது மனைவிக்கு மூன்று பெண் குழந்தைகளும் இரண்டு ஆண் குழந்தைகளும் உண்டாவார்கள் என்று சொல்லுகிறோம். முதல் மனைவிக்குக் குழந்தைகளைச் சொல்லுகிறோம். இவளுக்கு ஒரு பெண் குழந்தை உண்டு. முதல் மனைவிக்கு ஒரு குழந்தையும் இரண்டாவது மனைவிக்கு ஐந்து குழந்தைகளும் ஆக மொத்தம் ஆறு குழந்தைகளும் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள். பார்வதியம்மையே ! கேட்பீராக.

20. பாலகன் பூர்வம் தன்னைப் பகருவே னினி மேலாக
வேலங்காட் டதனிலேதான் மேவினான் இக்கு லத்தில்
ஞாலங்கள் விருத்தி செய்து நாயகி மதலை யுண்டாய்ச்
சாலவே வாழுந் நாளில் தங்கின வினையைக் கேண்மோ.

20. இனிமேல் ஜாதகருடைய முன்ஜன்மத்தைப் பற்றிச்சொல்லுகிறேன். திருவாலங்காட்டில் இந்த ஜன்மத்திற் பிறந்த வேளாளர் குலத்திலேயே இவர் பிறந்தார். நிலங்களைப் பயிரிட்டுக்கொண்டு மனைவி மக்கள் இவர்களை

யுடையவராகி நன்ருக வாழ்ந்து வருகின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்த பாபத்தைச் சொல்லுகிறேம், கேட்பீராக.

21. தன்பாரி தங்கை தானும் தன்வரன் மாண்டு மேதான்
தன்னில்லம் விரவும் போது மாதுமேல் மோகங் கொண்டு
கன்னிகை போகம் செய்யக் கலந்தது கருவு தானும்
பின்னங்கள் செய்தா னென்ரேம் பேதையும் கருவால் மாண்டாள்.

21. ஜாதகருடைய மனைவியின் தங்கை தன்னுடைய புருஷன் இறந்துவிட, ஜாதகருடைய வீட்டில் வந்து தங்கி இருக்கும்போது அவள் மேல் காம ஆசையை உடையவராகி இவர் அவளிடத்தில் சம்போகஞ் செய்தார். அதன்மேல் அவளுக்குக் கர்ப்பம் நேரிட்டது. அதனுல் இவர் அந்தக் கர்ப்பத்திற்குக் கெடுதிகளைச் செய்தார் என்று சொல்லுகிறேம். அதனுல் அவளும் கர்ப்பத்தாலே இறந்துபோய்விட்டாள்.

22. அது ஒரு தோஷ மாச்சு அறைகிறேம் வேறு ஒன்று
சதிசெய்தான் ஏழையோரைச் சாற்றுவார் சாபம் தானும்
நிதியது கொஞ்சம் தந்து நேசத்தைப் பரித்த பாவி
உதவாது உன்தன் பாரி உதிக்கும்பின் ஜன்மம் தன்னில்.

22. அஃது ஒரு தோஷமாகும். இன்னெரு தோஷத்தைச் சொல்லு கிறேம். ஜாதகர் ஏழை ஜனங்களுக்குக் கெடுதியையும் மோசத்தை யுஞ் செய்தார். அவர்கள் சாபத்தைக் கொடுத்தார்கள். பணம் கொஞ்ச மாகக் கொடுத்து அன்பை அபகரித்த பாவியாகிய உனக்கு மறு ஜன்மத்தில் உன்னுடைய மனைவி உனக்கு உதவமாட்டாள், உயிருடன் இருக்க மாட்டாள்.

23. இருமனை நேரு மென்ரேம் இனமதில் நிந்தை வார்த்தை
பெருகுடும்ப மென்று சொல்லிப் பேசினர் அதாலர் தோஷம்
இருவித தோஷம் தானும் இவன்தனைப்பற்றி யேதான்
மரலியின் நாடடைந்து மறையவன் வரையப்பட்டு.

23. உனக்கு இரண்டு மனைவிகள் ஏற்படுவார்கள் என்று சொல்லு கிறேம். எங்களுடைய பந்துக்களிடத்தில் நீ பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவர் என்று பொய்யான வார்த்தையைச் சொன்னீர் என்று சொல்லி அவர்கள் சாபங்கொடுத்தார்கள். அஃது இன்னெரு தோஷமாகும். இந்த இரண்டு வித சாபங்களும் தோஷங்களும் இவரை வந்தடைந்து பிறகு இவர் இறந்து எமபட்டிணத்திற்குப் போய்ப் பிரமதேவனுல் எழுதப்பட்டு.

24. உதிப்பனு மென்று சொல்வோம் உறைந்திடு மென்று சொல்வோம்
சதிசெய்த கருவின் தோஷம் தங்காது முதல்ம னைதான்
அதுதீரச் சாந்தி யொன்று அறிவீப்பீர் முனியே நீர்தாம்
துசாந்தி செய்தா லும்தான் விலகாது என்று சொல்வோம்,

**24.** ஜாதகர் பிறந்தார் என்று சொல்லுகிறோம். முன் ஜன்மத்தில் கருவைக்கெடுத்தத் தோஷம் இந்த ஜன்மத்தில் வந்து இவரை அடையும் என்று சொல்லுகிறோம். அதனால் இவருக்கு முதல் மனைவி தங்கி இராமல் இறந்துபோய் விடுவாள். இந்தத் தோஷம் நிவர்த்தியாவதற்கு ஒரு சாந்தியை, முனிவரே! நீர் சொல்லுவீர் என்று கேட்கவே, எந்த விதமான சாந்தியைச் செய்தாலும் அந்தத் தோஷமானது இவரைவிட்டு நீங்கிப் போகாது என்று சொல்லுகிறோம்.

**25.** வந்தது வந்தே தீரும் மறுமனை தீர்க்க ஜீவி
இந்தவன் யோகச் சேதி யியம்புவோ மினிமே லாகத்
தந்தைக்குத் தாழ்வு ருதான் தனமது பெருக்கம் செய்வன்
சொந்தமாய்ப் பூமி சேர்ப்பன் துரைராசர் பேட்டிகொள்வன்.

**25.** இவரை வந்து அடைந்த தோஷமானது இவருக்கு நேரிடுமே தவிர இவரைவிட்டு விலகாது. இரண்டாவது மனைவி நீண்ட ஆயுளையுடையவள். ஜாதகருடைய யோக விஷயங்களைப்பற்றி இனிமேல் சொல்லுகிறோம். இவர் தன்னுடைய தகப்பனுருக்குக் குறைந்த அந்தஸ்துடையவராயிருந்து வாழமாட்டார். செல்வத்தை அதிகப்படுத்துவார். சுயார்ஜிதமாய்ப் பூமிகளைச் சேகரிப்பார். பெரிய மனுஷர்கள், அரசர்கள் இவருடைய தரிசனத்தை அடைவார்.

**26.** பிரபல புகழு மேற்பன் புண்ணிய மனத்தா னுகும்
பொருள்சிலர்க் குஉ தவிசெய்வன் புண்ணிய மனத்தா னுகும்
அரன்பத்தி தொண்டு செய்வன் அவன்தந்தை புகழ இன்னேன்
திருமகன் தனக்கு யோகம் செப்பின காரணம் சொல்.

**26.** ஜாதகர் அதிகப் பரவலான கீர்த்தியையும் பெருமையையும் அடைவார். புண்ணியஞ் செய்கின்ற நல்ல மனதையுடையவராவார். சிவ பெருமான்மேல் பக்தி உடையவராய் அவருக்குத் தொண்டும் பணியும் செய்வார். இவருடைய தகப்பனுர் இவரைப்பற்றிப் புகழ்ந்து பேசுவார். இவருக்கு யோகத்தைச் சொல்லியதற்குக் காரணங்களைச் சொல்லுவீர்.

**27.** பானுவும்[1] புகரு[2] முச்சம் பாக்கியம் தசமம் தன்னில்
கரன்முடவன்[3] ராகு ஆறில் கலைமதி[4]யிரண்டில் தங்கப்
பான்வியாய் பர்வத யோகங்கள் பகர்ந்தனம் பால னுக்குத்
தேன்மொழி மாது சேர்வள் தேடுவான் மூவாயி ரம்பொன்.

**27.** சூரியனும் சுக்கிரனும் உச்சமாகிப் பத்திலும் பாக்கிய ஸ்தானமாகிய ஒன்பதிலும், சனியும் ராகுவும்கூடி ஆறுவது பாவத்திலும், வளர்பிறைச் சந்திரன் இரண்டாவது பாவத்திலும் இருப்பதால் ஜாதகருக்குப் பர்வத யோகங்களைச்* சொல்லுகிறோம், தேனைப்போல இனிமையான வார்த்தைகளைச் சொல்லுகிற ஒரு ஸ்திரீ ஜாதகரிடம் வந்து சேருவாள். இவர் மூவாயிரம் பொன் மதிப்புள்ள தனத்தைச் சம்பாதிப்பார்.

---

[1] சூரியன். [3] சனி.
[2] சுக்கிரன். [4] சந்திரன்.

***குறிப்பு—பர்வதயோகம்.**—இந்த யோக விஷயமாய் ஜாதக பாரிஜாதம் 7-ஆம் அத்தியாயம் 128-ஆவது சுலோகத்தையும், பலதீபிகை 6-ஆவது அத்தியாயம் 31-ஆவது, 32-ஆவது சுலோகங்களையும், ஜாதகசாரதீபிகை 62-ஆவது அத்தியாயத்தையும், ஜாதகாலங்காரம் 297-ஆவது, 303-ஆவது, 304-ஆவது பாடல்களையும், ஜாதக சிந்தாமணி 2150-ஆவது, 2151-ஆவது, 2152-ஆவது பாடல்களையும், சதயோகமஞ்சரியையும் பார்க்கவும். இங்கு லக்கினாதி பதியாகிய சந்திரன் இருக்கின்ற சிம்மத்திற்கு அதிபதியாகிய சூரியன் உச்சமாயிருப்பதாலும் கேந்திரத்தில் இருப்பதாலும் பர்வத யோகமுண்டு. லக்கினாதி பதியாகிய சந்திரன் இருக்கிற அம்சாதிபதியாகிய சூரியன் கேந்திரத்தில் இருப்பதாலும் யோகமுண்டாகிறது. மூன்று கேந்திரங்களில் அங்காரகன் குரு சூரியன் இருப்பதாலும் இந்த யோகம் உண்டாகிறது. (சில கிரந்தங்களில் நான்கு கேந்திரங்களிலும் . . . . கிரகங்கள் என்றிருக்கிறது.) தனாதி பதியாகிய சூரியனும் லாபாதிபதியாகிய சுக்கிரனும் உச்சமாயிருப்பதால் இந்த யோகமுண்டாகிறது.

28. எதிர்த்தோரை நசிக்க வைப்பனிரு இல்லம் செய்வா னுகும்
மதிமுக மாதுர் சேதி யறிப்போ மினிமே லாகத்
துதிசெய்தோர்க் குதவி செய்வள் சோம்விடாள் காரி யத்தில்
சதியிலா மனத்தா ளாகும் தாயாஸ்தி கொஞ்சம் நேரும்.

28. ஜாதகர் தன்னுடைய எதிரிகளைத் தோற்றுப்போகும்படியாய்ச் செய்வார். இரண்டு வீடுகளைக் கட்டுவார். இனிமேல் சந்திரனைப்போல அழகான முகத்தையுடைய தாயாரின் குணாதிசயங்களைப்பற்றிச் சொல்லுகிறோம். இவள் தன்னைப் போற்றிப் பேசினவர்களுக்கு உபகாரஞ் செய்வாள். தான் செய்யுங்காரியங்களில் சோம்பலும் தளர்ச்சியும் இல்லாதவள். வஞ்சனை கபடம் கள்ளம் இவைகளில்லாத மனத்தையுடையவள். இவளுக்குத் தன்னுடைய தாயார் சொத்து கொஞ்சம் வந்து சேரும்.

29. இல்லமும் உள்ளூர் உத்தரம் இவன்துணை ஆண்பால் நஷ்டம்
வல்லிமார் மூவர் தீர்க்கம் வரைகிறோம் பின்பால் சேதி
தல்லியின் பூர்வம் சொல்வேன் தண்டகா வனத்தி லேதான்
புல்கினள் விச்வச் சேயாய்ப் புருடனும் மதலை யுண்டாய்.

29. ஜாதகருடைய தாயாரின் வீடு உள்ளூரிலேயே வடக்கில் இருக்கும். இவளுக்கு ஆண் சகோதரர்கள் பிறந்து இறந்து விடுவர். மூன்று சகோதரிகள் நீண்ட ஆயுளையுடையவர்களாக விருப்பார்கள். இவர்களுடைய விஷயங்களைப்பற்றிப் பின்னால் சொல்லுகிறோம். இவருடைய, அஃதாவது ஜாதகருடைய தாயாரின் முன்ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறேன். தண்டகாரண்ணியத்தில் விச்வகர்மர் குலத்தில், அஃதாவது கம்மாள ஜாதியில் பிறந்தாள். இவள் புருஷனையும் மக்களையும் அடைந்து.

30. அறத்தினி லிச்சை யுண்டாய் அந்தகன் நகரம் புக்கிப்
பிரமனுல் வரையப் படடுப் பிறந்தன ளென்று சொல்வோம்
அரிவையும் வறுமை காணுள் ஆண்மையாய்க் குடும்பி யாவள்
திருகிலா குணத்தா ளாகும் அல்பமாம் பித்த வாயு.

30. தருமஞ் செய்வதில் ஆசையுடையவளாகி இறந்து எமனுடைய பட்டணத்திற்குப் போய்ப் பிறகு பிரமதேவனால் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்தாள் என்று சொல்லுகிறோம். இவள் கஷ்டங்களையும் தரித்திரத்தையும் அடையமாட்டாள். மேன்மையானதும் வலுவானதுமான குடும்பஸ்தையாவாள். கள்ளம், வஞ்சனை, கபடம் இவைகள் இல்லாத குணமுடையவளாவாள். பித்தவாயு கொஞ்சம் உடையவள் ஆவாள்.

31. கோபமும் கொஞ்ச முண்டு கோதை பின் ஜன்மம்கேளாய்
பாவங்கள் விலக்கு கின்ற பட்சியின் நகரம் தன்னில்
தாவுவான் பிர்ம்ம சேயாய்த் தடுத்துமே அத்திரி சொல்வார்
பாவையு மிச்சென்மத்தில் பகருமுன் கோபி யாயும்.

31. ஜாதகருடைய தாயார் கொஞ்சம் கோபத்தையுடையவள். இவளுடைய மறு ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறேன். கேட்பீராக. பாவங்களைப்போக்கடிக்கின்ற பட்சி ஸ்தலம் என்கிற திருக்கழுக்குன்றத்தில் கடவுளுக்கு அடிமையாளாக விருந்த இவள பிராமணர் குலத்தில் போய்ப் பிறப்பாள். அத்திரி மகரிஷி தடுத்துக் கேட்கின்றார். இவள் இந்த ஜன்மத்தில் முன்கோபியாகவும்.

32. வரனுக்குச் சிலது வேளை மறுத்துமே சொல்வ தாலும்
பொருளின்மே லதிக இச்சை பேதையும் கொண்ட தாலும்
மறைக்குல முதிக்கு வண்ண மறீவிப்பீர் அந்தச் சங்கை
முருகன்தன் பத்தி யாயு முயர்வோர்க்கு அன்ன மீந்தும்.

32. சில சமயம் தன்னுடைய புருஷனுடைய சொல்லைத் தடுத்துப் பேசுவதாலும் பணத்தின்மேல் அதிக ஆசையை இவள் வைத்திருப்பதாலும் இவள் பிராமணர் ஜாதியில் பிறக்கும் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்க, இவள் முருகக் கடவுளின்மேல் பக்தியுடையவளாகிப் பெரியவர்களுக்கும் மேதாவிகளுக்கும் பரதேசிகளுக்கும் சாப்பாடுபோட்டு ;

33. மனமது கெடுதி யின்றி மங்கையும் வாழ்வ தாலே
கனமுள பிரம்ம சேயாய்க் கலப்பளா மென்று சொல்வோம்
சினமிலாத் தந்தை பூர்வம் செப்பு வோமினிமே லாக
வினைநீக்கும் வேளூர் தன்னில் மேவினன் வைசியச் சேயாய்.

33. கெடுதியான மனமில்லாதவளாகியும் இவள் வாழ்ந்து வருவதால் மேன்மையாள பிராமண குலத்திற்போய்ப் பிறப்பாள் என்று சொல்லுகிறோம். கோபமில்லாத தகப்பனாருடைய முன் ஜன்மத்தைப்பற்றி இனிமேல் சொல்லுகிறோம். இவர் பாவங்களை நிவிர்த்தி செய்கின்ற வேளூர் என்கிற ஊரில் வைசிய குலத்தில் பிள்ளையாகப் பிறந்தார்.

34. பலவணி பங்கள் செய்து பாருளோர்க் குதவி செய்து
குலவினன் காலன் றூடு குறைதலை வரையப் பட்டு
நலமுள இக்கு லத்தில் நல்கினன் வறுமை காணன்
தலைவன்பின் ஜன்மம் சொல்வேன் தனிகையில் க்ஷத்திரிய
[சேயாய்.

34. இவர் அநேக வியாபாரங்களைச் செய்து பூமியில் உள்ளவர்களுக்கு உபகாரஞ் செய்து இறந்து எமபட்டணம் போய்ச்சேர்ந்து பிரமதேவனுல் எழுதப்பட்டு நன்மையான இந்த வேளாளர் ஜாதியில் வந்து பிறந்தார். இவர் கஷ்டமும் தரித்திரமும் இல்லாதவர். இவருடைய மறு ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறேன். இவர் திருத்தணிகையில் க்ஷத்திரிய குலத்தில் ஆண் குழந்தையாக.

35. வருகுவா னென்று சொல்வோம் மாரக காலம் கேளாய்
இருபது ஒன்ப தாண்டில் லேகுவான் தந்தை யென்றும்
மர்மமாய் முப்பா ஞறில் மறலியின் பதிக்கு அன்னை
உறைகுவா ளென்று சொல்வோம் உத்தமி கேட்டி டாயே.

35. பிறப்பார் என்று சொல்லுகிறோம். மாரக காலங்களைப் பற்றிச் சொல்லுகிறோம், கேட்பீராக. ஜாதகருக்கு இருபத்தொன்பதாவது* வயதில் தகப்பனர் இறந்து போவார் என்று சொல்லுகிறோம். தயார் ஜாதகருக்கு முப்பத்தாருவது† வயதில் திடீரென்று இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேருவாள் என்று சொல்லுகிறோம். பார்வதியம்மையே! கேட்பீராக.

* **குறிப்பு—தகப்பனர் மரண விஷயம்.**—ஜாதகருக்கு வயது வருஷம் 28 முதல் வருஷம் 29 முடியும் வரையிலும் சந்திர தசையில் குரு சனி புக்திகள் நடக்கின்றன. பிதுர் லக்கினமாகிய மீனத்திற்குச் சூரியன் சனி புதன் சுக்கிரன் இவர்கள் பராசரஹோரை பிரகாரம் மாரகராகின்றார்கள். சந்திரன் ஆறில் சூரியனுடைய வீட்டில் இருக்கின்றார். சனி பதினொன்றிற்கும் பன்னிரண்டிற்கும் உடையவராகி மாரகாதிபதியாகிப் பிதுர்ஸ்தானத்திற்குப் பத்தில் இருக்கின்றார். ஆகையால் ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரம் சந்திரனுக்கு மாரக அமைப்பு வருகிறது. சனிக்கும் தன் புக்தியில் மாரகஞ் செய்ய அமைப்பு இருக்கிறது.

† **தாயார் மாரக விஷயம்.**—ஜாதகருக்கு வயது வருஷம் 35 முதல் வருஷம் 36 முடியும் வரையிலும் அங்காரக தசையில் ராகு குரு புக்திகள் நடக்கின்றன. மாதுர் லக்கினமாகிய துலாத்திற்குப் பராசரஹோரை சில பதிப்புப் பிரகாரம் அங்காரகனும், மற்றப் பதிப்புகள் பிரகாரம் குருவும் சூரியனும் மாரகராகின்றார்கள். அங்காரகன் மாரகஸ்தானங்களாகிய 2, 7-க்குடையவராய்ப் பத்தில் இருக்கின்றார். குரு 3–6-க்குடையவராய் மாதுர் லக்கினத்திலேயே இருக்கின்றார். ஆகையால் அங்கார தசையில் குரு புக்தியில் மாதாவுக்கு மாரக அமைப்பு இருக்கிறது. குமாரசாமியத்தையும் பார்க்கவும்.

36. அறுபது ஒன்று ஆண்டில் அழகிய மீன மாதம்
திருமகனுடலம் ஏகும் செப்புவோ மிவன்பின் ஜன்மம்
அருணைக்குத் தென்பா லாக அணுகிய சிறுவூர் தன்னில்
வருகுவான் சைவச்சேயாய் மங்கையே கேட்டி டாயே.

36. ஜாதகருக்கு அறுபத்தோராவது* வயதில் அழகான பங்குனி மாதத்தில் மரணம் நேரிட்டு இவருடைய தேகம் அழிந்துவிடும். இவருடைய

பின் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறோம். திருவண்ணாமலைக்குத் தெற்குத் திக்கில் அதை அடுத்தாற்போலுள்ள ஒரு சிறிய கிராமத்தில் சைவ குலத்தில் ஆண் குழந்தையாகப் பிறப்பார். பார்வதி யம்மையே! கேட்பீராக.

* **குறிப்பு—ஜாதகருடைய மரண விஷயம்.**—ஜாதகருக்கு வயது வருஷம் 60 முதல் வருஷம் 61 வரையிலும் குருத்தசையில் குருபுக்தி நடக்கின்றது. பங்குனி மாதத்தில்கூட குருபுக்தி நடக்கிறது. கடக லக்கினத்திற்குப் பராசர ஹோரா, ஜாதகசந்திரிகை, தாண்டவமாலை, சந்திரகாவியம் இவைகளின் பிரகாரம் சுக்கிரன் சனி புதன் இவர்கள் மாரகாதிபதிகளாகின்றார்கள். குரு, சுக்கிரன் வீட்டில் இருக்கின்றார். மாரகாதிபதிகளாகிய சனியும் புதனும் குரு வீட்டிலேயே இருக்கின்றார்கள். ஆகையால் குருவிற்குத் தன் தசையில் சுயபுக்தியில் ஜாதகருக்கு மாரகஞ்செய்ய அமைப்பு இருக்கிறது.

37. பிறந்திடுங் காலம் தன்னில் பூரத்தின் முதல்பா தத்தில்
சிறந்தசுக் கிரனி ருப்புச் செப்புவோ மீரொன் பதாண்டும்
உறைந்திடும் திங்கள் நாலும் உணரக்கிறோம் பலனே யாங்கள்
கருமமும் பெரிய தந்தை காதலி தன்னால் நிந்தை.

37. ஜாதகர் ஜெனனமாகுங்காலத்தில் பூரநட்சத்திரத்தின் முதலாவது பாதம் ஆகும். இதற்குரிய மேன்மையான சுக்கிரதசையில் இருப்பு நின்றது பதினெட்டு வருஷமும் நான்குமாதமும் ஆகும் என்று சொல்லு கிறோம். இந்தக்காலத்தின் பலாபலன்களைச் சொல்லுகிறோம். பெரிய தகப்பனாரின் கர்மம் நேரிடும். மனைவியால் பழி அவமானம் இவைகள் நேரிடும்.

38. முன்துணை ஜயமு மாகும் மேதினி விருத்தி யாகும்
தன்துணை பின்னால் விருத்தி சல்லியம் கொஞ்ச மெய்தும்
அன்னைபின் மனைசு பங்கள் அவனுக்குப் பிணிஅ னேகம்
இன்னமும் விவர மாக இயம்புவோம் புத்திர பாவம்.

38. மூத்த சகோதரனுக்கு ஜயம் கிடைக்கும், நிலங்கள் விருத்தி யாகும். நல்ல பலனைத்தரும். ஜாதகருக்குச் சகோதரர்கள் பின்னால் உண்டாகும். விருத்தியாகும். கடன் கொஞ்சம் வந்து நேரும், முதலில் தாயருக்கும், பின்னால் மனைவிக்கும் சுபங்கள் உண்டாகும், ஜாதகருக்கு அநேக விதமான. நோய்கள்வரும், இனிமேல் புத்திரபாவத்தைப் பற்றி இரண்டாவது பாகத்தில் விபரமாகச் சொல்லுகிறோம்.

சத்தம முனிவர்
சுத்தமாய்ச் சொன்னோம்
குத்தங்கள் யாவும்
வித்தகி பொறுப்பாய்.

சப்தரிஷிகளாகிய நாங்கள் சுத்தமாகவும் உண்மையாகவும் பலாபலன் களைச் சொல்லி இருக்கிறோம். நாங்கள் சொல்லியதில் ஏதாகிலும் தப்பிதங் கள் இருந்தால் அவைகள் எல்லாவற்றையும் பார்வதியம்மையே! பொறுத் தருளுவீராக.

# ஜாதகம் 76

1. சந்திரன் மேட மாகச் சனி ராகு யிரவி[1] சாடி[2]
மந்திரி[3] மேரு[4]வாக மால்[5]புகர்[6] மான[7] தாகச்
செந்தீயும்[8] தேள்[9] தாகச் செம்பாம்பு[10] அரியில்[11] புக்க
இந்தவாறு கோள்கள் நின்று லக்கினம் வளைய லாக[12].

| | | | |
|---|---|---|---|
| | சந்திரன் | | |
| சூரியன் சனி ராகு | இராசி | | லக்கினம் |
| சுக்கிரன் புதன் | சக்கரம் | | கேது |
| குரு | அங்காரகன் | | |

அசுவினி 3-ஆம் பாதம். கேதுதசை ஞு 3-5-0

1. சந்திரன் மேஷத்திலும், சனி ராகு சூரியன் இவர்கள் கும்பத்திலும், குரு தனுசிலும், புதனும் சுக்கிரனும் மகரத்திலும், அங்காரகன் விருச்சிகத்திலும், கேது சிம்மத்திலும் இருந்து இவ்விதமாகக் கிரகங்கள் இருந்து லக்கினம் கடகமாக விருந்தால்.

**குறிப்பு.**—இந்த ராசிச்சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச்சக்கர கிரக நிலை பொருத்த முடையதாகும். மேஷத்தில் புதனும், மிதுனத்தில் சந்திரனும், குருவும், சுக்கிரனும், கன்னியில் கேதுவும், தனுசில் சூரியனும், மகரத்தில் சனியும், மீனத்தில் அங்காரகனும் ராகுவும் ஆகும். மேலும் இந்த ஜாதகம் நெ. 74-வது ஜாதகத்தைப் பெரும்பாலும் ஒத்திருப்பதைக் கவனிக்கவும். செவ்வாய் ஒன்றுதான் வித்தியாசப்படுகிறது. அஃதாவது இரண்டு ஜாதகரும் பிறந்தவேளையில் சில விநாடிதான் வித்தியாசம் இருக்கிறது. இருப்புத்தசைகூட முழுமாதம் வரையிலும் ஒன்றுய்த்தான் இருக்கிறது. ஒரு மாதத்திற்குட்பட்ட நாட்களில்தான் அஃதாவது சொச்ச நாட்களில் தான் வித்தியாசம் இருக்கக்கூடும்.

---

[1] சூரியன் [2] கும்பம் [3] குரு
[4] தனுசு [5] புதன் [6] சுக்கிரன்
[7] மகரம் [8] அங்காரகன் [9] விருச்சிகம்
[10] கேது [11] சிம்மம் [12] கடகம்

2. சொல்லுவீர் பலனை யென்று சுந்தரி கேட்கும் போது
புல்குவார் பராசர் தானும் பிறந்தது ஆண்பா லாகும்
இல்லமும் கீழ்மேல் வீதி யெமன்வாடை மேற்கில் தந்தி
அல்லலை யகற்றும் மாயோன் அணுகிடும் கீழ்ப் பாலாக.

2. பலாபலன்களைச் சொல்லுவீர் என்று பார்வதி கேட்கும்போது பராசர முனிவர் சொல்லுகிறார். ஜனனமான குழந்தை ஆண்குழந்தை யாகும். பிறந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் தென்னண்டை வாடை யில் இருக்கும். மேற்குத்திக்கில் விநாயக்கடவுளின் கோயில் இருக்கும். கஷ்டங்களையும் தொல்லைகளையும் நிவிர்த்தி செய்கின்ற மகாவிஷ்ணுவின் கோயில் கிழக்குத்திக்கில் நெருங்கி இருக்கும்.

3. வடதிசை ஓடை சுட்மான் மலையெடுத் தோனும் தென்கீழ்
திடமுள பேரூ ராகும் ஜகராஜர் வாச மாகும்
அடவுட னந்தி வாசம் அனேகசெட் டுகளு மோங்கும்
மடமுண்டு சோலை யுண்டு மஹாதீர்த்த மதிக முண்டு.

3. வடக்குத்திக்கில் ஓர் ஓடையின் வாராவதி இருக்கும். தென் கிழக்குத்திக்கில் அநுமார் கோயில் இருக்கும். பிறந்த ஊர் ஒரு முக்கிய மான சிறந்த பெரிய பட்டணமாகும். அதில் பெரிய அரசர்கள் வாசஞ் செய்வார்கள். அதில் மாலைக்காலத்தில் தெருக்களில் காவலாகத் திரியும் ஒரு தேவதை வசித்துக்கொண்டிருக்கும். பலவிதமான வியாபாரங்களும் நடந்துகொண்டும் விருத்தியாகிக் கொண்டுமிருக்கும். அதில் ஒரு மடமும் தோப்பும் இருக்கும். பெரிய தீர்த்தங்கள் அநேகமிருக்கும்.

4. இன்னமும் பலதே வாச மியம்புவோம் பிருதிவிதன்னில்
அன்னவனுதிப்பா னுகும் அவன்தந்தை தாயின் யோகம்
தன்துணை களத்திர புத்திரர்சாற்றுவோம் முன்பின் ஜன்மம்
கன்னென மொழியினுளே காதலி கேட்டி டாயே.

4. இவைகளுமல்லாமல் அந்தப்பட்டணத்தில் அநேக தேசத்தார் கள் வாசஞ் செய்வார்கள். அது பிரிதிவிஸ்தலம் என்று சொல்லப்பட்ட காஞ்சீபுரம் ஆகும். அதில் ஜாதகர் பிறப்பார். இவருடைய தகப்பனுர் தாயார் இவர்களுடைய யோகங்களைப் பற்றியும், இவருடைய சகோதரர்கள், மனைவி மக்கள் இவர்களைப்பற்றியும், முன்ஜன்மம், மறுஜன்மம் இவை களைப்பற்றியும் சொல்லுகிறோம். இனிமையான வார்த்தைகளை உபயோகப் படுத்துகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

5. தந்தையின் துணைவர் ஒன்பான் சாற்றினே மாண்பா லைந்து
வந்திடும் கன்னி ரண்டு வரைந்தனம் தீர்க்க மாக
அந்தவர் வேருய்ச் செல்வர் அவர்களில் ஒருவன் ஒன்றுய்த்
தந்தைபா லுடனி ருந்து தானவன் வேருய்ச் செல்வன்.

5. ஜாதகருடைய தகப்பனுரின் சரோதரர்கள் ஒன்பது பேர் என்று சொல்லுகிறோம். இவர்களில் ஆண் சகோதரங்கள் ஐந்துபேரும் பெண்

சகோதரங்கள் இரண்டுபேரும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். அவர்களில் நான்கு சகோதரர்கள் வேறு குடும்பமாகப்போய் வசிப்பார்கள். ஒரு சகோதரன் மாத்திரம் தகப்பனுருடன் கூட சிறிது காலம் இருந்து பின்னல் பிரிந்துபோய் வேருக விருந்து ஜீவிப்பான்.

6. அவனுடைய சேதி யெல்லா மறைகிறோம் பின்பா கத்தில்
இவன்தந்தை குணத்தைச் சொல்வே னிருநிற முடைய னுவன்
நவனியி லூகை சாலி நயம்படக் கூறு வானும்
தவசிக ளுறவு கொள்ளான் தானவ னுயர மில்லான்.

6. அவருடைய விஷயங்களைப் பற்றி அடுத்த பாகத்தில் சொல்லுகிறோம். ஜாதகருடைய தகப்பனுரின் குண குணங்களைப் பற்றிச் சொல்லுகிறோம். இவர் இரண்டு நிறங்கள் கலந்த நிறமுள்ள தேகத்தை யுடையவராவார். பூமியில் இவர் புத்திநுட்பமுடையவர். இனிமையாகப் பேசுவார். முனிவர்களுடையவும் தவத்தைச் செய்பவர்களுடையவும் சினேகிதத்தை அடையமாட்டார். இவர் உயரமாய் இருக்கமாட்டார்.

7. நல்லோர்க்கு நல்ல னுவன் நற்கல்வி யடக்க முள்ளான்
அல்லலென் றோரைக் காப்பன் அவனியில் கீர்த்தி ஏற்பன்
இல்லறம் புதிதாய்ச் செய்வ னின்பமாய் வார்த்தை சொல்வன்
சொல்லதைக் காப்பா னுகும் தொல்புவி அதிகம் சேர்ப்பன்.

7. தகப்பனுர் நல்லவர்களுக்கு நல்லவராக நடந்து கொள்ளுவார். நல்லபடிப்பு உள்ளவர், அடக்கமாக விருப்பார். துன்பத்தை அடைந்திருக்கின்றோம் என்று சொல்லிக் கொள்ளுபவர்களைக் காப்பாற்றுவார். பூமியில் புகழை அடைவார். வீட்டைப் புதியதாய்க் கட்டுவார். இனிமையாக வார்த்தைகளைச் சொல்லுவார். தான் சொல்லிய வார்த்தைகளைத் தவருமல் காப்பாற்றுவார். பழைய நிலங்களை அதிகமாகச் சேகரிப்பார்.

8. வண்டிவா கனமு முள்ளான் வணிபங்கள் செய்வா னுகும்
துண்டமாம் குணங்க ளில்லான் துராசையுங் கொஞ்ச முள்ளான்
குண்டுணி கலகர் கொஞ்சம் கூறுவான் வறுமை யில்லான்
பண்டுநாள் வறுமை யுள்ளான் பந்தினர் மெச்ச வாழ்வன்.

8. ஜாதகருடைய தகப்பனுர் வண்டி முதலிய வாகனம் இவைகளை உடையவராவார். வியாபாரங்களைச் செய்வார். கடினமாயும் கண்டிப்பாயும் வெட்டி வெட்டிப் பேசுங்குணங்கள் இல்லாதவர். கொஞ்சங் கெட்ட ஆசையை யுடையவர். கொஞ்சங் கோள் சொல்லுவார். கொஞ்சங் கலகத்தையுண்டு பண்ணக் கூடிய வார்த்தைச் சொல்லுவார். கஷ்டங்களையும் தரித்திரத்தையும் அடையாதவர். பழைய காலத்தில், அஃதாவது இளம்பிராயத்தில் கஷ்டத்தையும் தரித்திரத்தையும் அடைந்தவர். பந்துக்கள் இவரைப் போற்றும்படியான நிலைமையிலிருந்து மேன்மையாக வாழ்வார்.

9. சொன்ன இக்குணத்தா னுக்குச் சுந்தரனு திப்பா னாகும்
அன்னவன் துணைஆண் ஒன்று அதுவின்றிக் கன்னி அவ்வாறு
இன்னவாறு விருத்தி யென்றே மிவன்துணை மூத்தோ னாகும்
தன்னிலே அவன்கு ணத்தைச் சாற்றுவோம் கேளும் தாயே.

9. இங்கு சொல்லப்பட்ட குணங்களையுடைய தகப்பனுக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவருக்குச் சகோதரர்களில் ஆண் சகோதரம் ஒருவரும் பெண் சகோதரம் ஒருத்தியும் நீண்ட ஆயுளையுடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகிறோம். இவருடைய சகோதரன் மூத்த சகோதரராவார். இந்த மூத்த சகோதரருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகிறோம். பார்வதியம்மையே! கேட்பீராக.

10. கல்விமா னூகசாலி கனத்ததோர் புத்தி யுள்ளான்
இல்லையென் றுரைக்க மாட்டானீ கைவான் வெகுளி யாவன்
நல்லவன் நல்ல வற்கு நற்றெய்வ பத்தி மானும்
மல்லுக்குச் செல்லா னாகும் மாநிலம் விருத்தி செய்வன்.

10. மூத்த சகோதரர் படித்தவர். நுட்பமான புத்தியையுடையவர். பெருந்தன்மையான புத்தியையுடையவராவர். யாருக்கும் இல்லை என்று சொல்லமாட்டார். பிறருக்குக் கொடுக்குந்தன்மையுடையவர். கோபத்தை யுடையவராவார். நல்லவர்களுக்கு நல்லவராக நடந்து கொள்ளுவார். நல்ல தெய்வபக்தியுடையவராவார். சண்டைக்குப் பேகமாட்டார். பெரிய நிலங்களைப் பயிரிட்டு விருத்தியாக்குவார்.

11. செட்டுகள் பலவாய்ச் செய்வன் செய்ந்நன்றி மறவா னாகும்
துட்டமாம் குணங்களி ல்லான் துறவிபோல் வாழ்வா னாகும்
கட்டங்க ளடைவா னாகும் காலாள்களுடைய னாகும்
இட்டகாள் அதிக முள்ளா யெதிரிக்கு அஞ்சா னாகும்.

11. மூத்த சகோதரர் அனேகவிதமான வியாபாரங்களைச் செய்வார். பிறர் தனக்குச் செய்த உபகாரத்தை மறக்காதவராவர். கெட்ட குணங்களில்லாதவர். எல்லாவற்றையும் துறந்து விட்டவரைப் போலவும் சந்நியாசிகளைப்போலவும் வாழ்வாராவர். துன்பங்களை அனுபவிக்கமாட்டார். கால் நடைக்கார வேலையாட்களையுமுடையவராவார். சிநேகிதர்கள் அதிகமாக வுள்ளவர். தன்னுடைய விரோதிக்குப் பயப்படமாட்டார்.

12. பாரியை ஒன்றே யாகும் பாவையு மவ்வூ ராகும்
நாரிக்குப் புத்திர தோஷம் நவலுவோம் பெண்பால் ரெண்டு
தீராமய் விருத்தி யென்றேம் சேயனும் ஒன்றாய் வாழ்வன்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

12. மூத்த சகோதரருக்கு ஒரே ஒரு மனைவியுண்டு, அவள் உள்ளூரிலேயே இருந்து வருவாள். இவளுக்குப் புத்திரதோஷம்† உண்டு; இரண்டு பெண் குழந்தைகள் நீண்ட ஆயுளையுடையவர்கள் என்று உறுதி

யாய்ச் செல்லுகிறேம். மூத்த சகோதரன் ஏககுடும்பமாக விருந்து வாழ்வார். ஆறுமுகங்களையுடைய முருகக்கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே ! கேட்பீராக.

† குறிப்பு.—மூத்த சகோதர ஸ்தானம் ரிஷபம். ரிஷபலக்கினத்தில் பிறந்தவர்களுக்குப் பொதுவாய்ப் புத்திர தோஷம் ஜாதகாலங்காரம் 592-ஆவது பாடல் பிரகாரம் உண்டு. அஃதாவது "எருது கும்பம் வித்தகையோரை யார்க்கு மகவில்லை விளம்புங் காலே". ரிஷபத்திற்கு ஐந்திற்குடைய புதன் ஒன்பதில் பெண்கிரகமாகிய சுக்கிரனுடன் கூடி இருக்கிறுர். புத்திரகாரகனுகிய குரு, ரிஷபத்திற்கு எட்டில் மறைந்துபோய் இருக்கிறுர். மேலும் மூத்தோர் காரகனுகிய குருவிற்கு ஐந்தாம் வீட்டில் பெண் கிரகமாகிய சந்திரன் இருக்கிறுர். இந்த ஐந்திற்குடைய அங்காரகன் குருவிற்கும் பன்னிரண்டில் மறைந்து இருக்கிறுர். ஐந்தை ராகுவும் சனியும் மூன்றும் பார்வையுடன் பார்க்கிறுர்கள். ஆகையால் ஆண் சந்ததிக்குத் தோஷம் இருக்கிறது.

13. உதித்தவன் குணத்தைச் சொல்வேன் உயர்வான குடும்பியாவன்
நதிபல தீர்த்தம் தோய்வன் நாயகன் சிவந்த மேனி
ததிநெய்பா லிஷ்டம் கொள்வன் சமர்த்தாக வார்த்தை [சொல்வன்
அதிதிகள் பத்தி கொள்வன் அனேகவா ணிபங்கள் செய்வன்.

13. ஜாதகருடைய குணுகுணங்களைப்பற்றிச் சொல்லுகிறேன். மேன்மையான குடும்பஸ்தராக இவர் இருப்பார். அநேக நதிதீர்த்தங்களில் ஸ்நாணஞ் செய்வார். இவர் சிவப்பு நிறமுள்ள தேகத்தையுடையவர். தயிர், நெய் பால் இவைகளின்மேல் ஆசையுடையவர். சாமர்த்தியமாகவும் திறைமயாகவும் வார்த்தைகளைச் சொல்லுவார். பரதேசிகளிடத்தில் பக்தியும் பிரீதியும் உள்ளவர். பலவிதமான வியாபாரங்களைச் செய்வார்

14. கல்வியு மிரண்டு கற்பன் கதித்த தோர் புத்தி மானும்
அல்லல்க ளுடைய னுகும் யாரையு முறவு கொள்வன்
சொல்லது மேன்பா டாகும் தோகையர் மோகவானும்
புல்லியோர்க் குதவு வானும் போஜன சுகிய னென்றேம்.

14. ஜாதகர் இரண்டு விதமான வித்தையைக் கற்றுக்கொள்ளுவார். அதனுல் மகிழ்ச்சியை அடைவார். புத்தியுள்ளவராய் இருப்பார். துன்பங்களையும் உடையவர். எல்லோரையும் சினேகஞ்செய்து கொள்ளுவார். தன்னுடைய பேச்சு வார்த்தைகள் மேன்மையுடையனவாக விருக்கும் ஸ்திரீகளின்மேல் காமஆசை உடையவராவார். ஏழைகளுக்கும் கீழ் மக்களுக்கும் உதவி செய்வார். சுகமான நல்ல போஜனத்தைச் சாப்பிட்டு அனுபவிக்கக் கூடியவர் என்று சொல்லுகிறேம்.

15. தண்டமிழ் நுணுக்கம் தேர்வன் தன்பந்து புகழ வாழ்வன்
குண்டைகோ விருத்தி யுள்ளான் குவலய மதிகம் சேர்ப்பன்
பண்டுநாள் பூமி தன்னைப் பாலகன் விருத்தி செய்வன்
அண்டர்கோன் மருகன் பத்தி அவனுமே கொள்வா னுமே.

**15.** ஜாதகர் இனிமையான தமிழின் நுட்பங்களில் தேர்ச்சியு டையவர், அஃதாவது தமிழில் புத்திக் கூர்மையுடையவர். தன்னுடைய பந்துக்கள் இவரைப் போற்றும்படியாகவும் மேன்மையாகவு மிருந்து வாழ்வார். ரிஷபங்களும் பசுக்களும் இவருக்கு விருத்தியாகும். நிலங் களை அதிகமாகச் சேகரிப்பார். பழைய காலத்திய நிலங்களை இவர் பயிரிட்டு விருத்தியாக்குவார். மகாவிஷ்ணுவினுடைய மருமகனாகிய முருகக் கடவுளின் மேல் பக்தியையுடையவராவார்.

**16.** குருவுப தேசம் கொள்வன் குவலயம் சீல னுவன்
மர்மமும் கொஞ்ச முள்ளான் மன்னர்க ளிஷ்டம் கொள்வன்
திருமகள் வாச முள்ளான் ஜனஉப காரியாவன்
பிறந்தநாள் மரண மட்டும் பிறைபோலே யோகமுள்ளான்.

**16.** ஜாதகர் தன்னுடைய குருவிடத்தில் உபதேசம் பெற்றுக் கொள்ளுவார். பூமியில் நல்லொழுக்கத்தையும் நல்ல நடவடிக்கையும் உடையவராவார். கொஞ்சம் ரகசியமான மனத்தையுடையவர். அரசர்களு டைய சிநேகத்தை அடைவார். இலட்சுமி இவரிடத்தில் வாசஞ்செய்து கொண்டிருப்பாள். அஃதாவது செல்வமுடையவர். ஜனங்களுக்கு உதவியைச் செய்வார். இவர் தான் பிறந்தகாலம் முதல் தான் இறக்குங்காலம் வரை யிலும் வளர்பிறைச் சந்திரனைப் போல விருத்தியாகிக்கொண்டே வருகிற யோகத்தை யுடையவராவார்.

**17.** இன்னவன் மணத்தின் காலமியம்புவோ மிருபான் ரெண்டில்
கன்னிகை தெற்குத் திக்கில் கழறுவோ மவளில் லத்தில்
இன்னவன் சுபமு டிப்பா னியம்புவோ மவள்கு ணத்தை
உன்னத வார்த்தை சொல்வள் உரைக்குமுன் கோபி யாவள்.

**17.** ஜாதகருக்கு இருபத்திரண்டாவது வயதில் விவாகம் நடை பெறும். மனைவி தெற்குத் திக்கிலிருந்து வருவாள். இவருக்கு மனைவி யின் வீட்டில் விவாகம் நடக்கும். இவளுடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகிறோம். மேன்மையான சிறப்பான வார்த்தைகளைச் சொல்லு வாள். பேசுவதற்கு முன்னே கோபத்தை உடையவளாவாள்.

**குறிப்பு—ஜாதகருடைய விவாகம்.**—ஜாதகருக்கு வயது ஷை 21 முதல் ஷை 26 முடியும் வரையிலும் சுக்கிரதசையில் புதன் புக்தி நடக்கின்றது. சுக்கிரன் போகஸ்தானமாகிய நான்கிற் குடையவராகிக் களத்திர ஸ்தான மாகிய ஏழில் இருக்கின்றார். இவர் சந்திரனுக்கும் ஏழிற் குடையவராய் இருக்கின்றார். புதன் ஏழில் களத்திரகாரகனும் போககாரகனுமான சுக்கிரனுடன் கூடியிருக்கின்றார். ஆகையால் இவர்கள் காலத்தில் விவாக நடக்க அமைப்பு இருக்கிறது.

**18.** நன்னடை மாஞ்சி வப்பள் நாயகன் மனம்போல் வாழ்வள்
பன்னியே பேசு வாளாம் பாவையும் யோக சாலி
பின்னமில் லாத தேகி பித்தநே கத்தா ளென்றோம்
அன்னமு மன்பா யீவள் அவசர மனத்தாளாமே.

**18.** இவள் நல்லொழுக்கமும் நன்னடிக்கையும் உடையவள். மாந்துளிரின் நிறத்தைப் போன்ற ஒரு விதமான சிவப்பு நிறமுடையவள். தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற்போல ஒற்றுமையுடன் இருந்து வாழ்வாள். சுறுக்கமாகவும் திறமையாகவும் பேசுவாள். இவள் யோகத்தை யுடையவள் யாதொரு அவயவத்திலும் குற்றமும் பங்கமும் இல்லாத தேகத்தையுடையவள், பித்ததேகத்தை உடையவளாவாள் என்று சொல்லுகிறேம். சாப்பாட்டை இஷ்டத்துடன் போடுவாள். காரியங்களை அவசரத்துடன் செய்கின்ற தன்மையையுடைய மனத்தை யுடையவளாவாள்.

**19.** சுதர்களு மிருநான் காகத் தோன்றிடும் ஆண்பால் மூன்று
மதிநுதல் பெண்பால் ரெண்டு வரைகிறே மைந்தும் தீர்க்கம்
முதலிலே சேத மெய்தும் முனிவரிவ் விதமாய்க் கூற
அதிபதி கேட்க லுற்றாள் வரும்சுதர் முதலில் தோஷம்.

**19.** இவளுக்குக் குழந்தைகள் எட்டுப்பேர் பிறப்பார்கள். அவர்களில் ஆண் குழந்தைகள் மூன்று பேரும் சந்திரனைப்போல அழகான முகத்தையுடைய பெண்கள் இரண்டு பேரும் ஆக மொத்தம் ஐந்து பேரும் நீண்ட ஆயுளையுடையவர்கள் என்று சொல்லுகிறேம். முதலில் சில குழந்தைகள் இறந்துபோகும். இவ்விதமாக முனிவர் சொல்லும் போது பார்வதியம்மையார் கேட்கின்றார். முன்னே பிறக்கும் குழந்தைகள் இறந்து விடும் என்று சொன்னீர்.

**20.** காரணம் யாது என்ன ப்பூமகன்[1] அஞ்சில் நிற்கக்
காரியும்[2] பார்த்த தாலே கழறினே மந்தச் சங்கை
மாறியே புயண்டர் சொல்வார் மனையது இரண்டு என்றேம்
கூறினீர் விவரம் சொல்வாய் அனலனும்[3] பணியு[4] மெட்டில் ;

**20.** அதற்குக் காரணம் என்ன என்று கேட்க, அங்காரகன் ஐந்தில் இருப்பதாலும், அவரைச் சனி பார்த்ததாலும் இந்தத் தோஷத்தைச் சொன்னேம். இவ்விதமாகச் சொல்ல, புஜண்ட மகாரிஷி எதிர்த்துச் சொல்லுகின்றார். ஜாதகருக்கு இரண்டு மனைவிமார்கள் நேரிடுவார்கள் என்று சொல்லுகிறேம். இவ்விதமாகச் சொன்னீரே அதற்குக் காரணங்களை விவரமாகச் சொல்லுவீர் என்று கேட்க, சூரியனும் இராகுவும் எட்டில் இருப்பதாலும் ;

**21.** புந்தியு[5] புகரு[6] மேழில் பொருந்தியே யிருப்ப தாலே
வந்திடு மனைவிரெண்டு அதற்குமே மறித்துச் சொல்வார்
செந்தீயும்[7] சனியு மாட்சி திவாகர[8] னிரண்டோ னுகி ;

.....................

**21.** புதனும் சுக்கிரனும் ஏழில் கூடி இருப்பதாலும் இரண்டு மனைவி மார்கள் நேரிடுவார்கள் என்று சொல்ல, இதைத் தடுத்துச் சொல்லுகின்றார். அங்காரகனும் சனியும் ஆட்சியாய் இருப்பதாலும் சூரியன் இரண்டிற்குடையவராகி ;

---

[1] அங்காரகன், [2] சனி, [3] சூரியன், [4] ராகு, [5] புதன், [6] சுக்கிரன், [7] அங்கராகன், [8] சூரியன்.

22. அதற்கேழில் இருப்ப தாலும் அலவனும்[1] தசம மேறி
விதியனும்[2] குருவும் பார்க்க வேறுமுத் திரைகள் வேண்டான்
அதிபன்தன் மரண காலம் மனைவியு முன்னே மாண்டு
உதித்தவன் பின்னுல் மாள்வன் உடலற்றோ[3] னிரண்டில் நிற்க ;

22. இரண்டிற்கு ஏழில் இருப்பதாலும்; கடகத்திற்குரிய சந்திரனும் பத்தில் இருந்து கொண்டு சனி குரு இவர்களால் பார்க்கப்படுவதாலும் இன்னொரு தாலி தரித்த மனைவியை, அஃதாவது விவாகம் செய்த மனைவியை ஜாதகர் அடையமாட்டார். ஆனால் ஜாதகர் இறந்து போவதற்கு முன்னமே மனைவி இறந்து போய் இவர் இவளுக்குப் பின்னுல் இறந்து போவார். கேது இரண்டாவது பாவத்தில் இருப்பதால் ;

23. அதுபலன் சொல்லு மென்ன அறைகிறார் பராசர் தாமும்
மதிமுக மாது வேறூர் மருவிடுமே பிமா னந்தான்
எதுகாலம் சொல்லு மென்ன இருபது ஏழாண் டின்மேல்
சுதரில்லா வடுக மாது தோன்றிடு மென்று சொன்னோம்.

23. அதனால் உண்டாகும் பலனைச் சொல்லுவீர், என்று கேட்கப் பராசரமுனிவரும் சொல்லுகின்றார். சந்திரனைப் போன்ற அழகான முகத்தையுடைய ஒரு ஸ்திரீ இன்னோர் ஊரில் ஜாதகருக்கு அபிமான மனைவியாக வந்து சம்பவிப்பாள் என்று சொல்ல, எந்தக் காலத்தில் இவ்விதமாக நேரும் என்று கேட்க, ஜாதகருக்கு இருபத்தேழாவது வயதிற்கு மேலே பிள்ளையில்லாத ஒரு தெலுங்க ஜாதி ஸ்திரீ ஜாதகருக்கு அபிமான மனைவியாக வந்து சேருவாள் என்று சொல்லுகிறோம்.

**குறிப்பு.—அபிமான மனைவி**—இரண்டாவது தாரத்தின் வீடு ஒன்பதாவது வீடாகிய மீனம். இதற்கு அதிபதியாகிய குரு லக்கினாதிபதியாகிய சந்திரனைப் பார்ப்பதால் ஜாதகருக்கு இரண்டாவது மனைவியை அடையும் அமைப்பு இருக்கிறது. குரு ஆறாவது பாவத்திற்கும் அதிபதியாய் இருப்பதாலும் இந்தக் குருவை ராகு பார்ப்பதாலும் இந்த இரண்டாவது மனைவி பங்கமுடையதாகும், அஃதாவது அபிமான மனைவியாகும். ஜாதகருக்கு இருபத்தேழாவது வயதில் சூரியதசையில் குருபுக்தியும் 72-க்கு மேல் சனி புக்தியும் நடக்கின்றது. இவர்களது புக்தியில் அபிமான மனைவி நேரிட அமைப்பு இருக்கின்றது. பின்னால் வருகின்ற 30-ஆவது பாடலில் 27-ஆவது வயதில் அபிமான ஸ்திரீ வருவாள் என்று சொல்லியிருப்பதையும் கவனிக்கவும்.

24. என்னகா ரணத்தி னாலே யெய்திடு மந்த மாது
முன்மனை தன்னால் சேரும் மொழிகுவீ ரந்தச் சங்கை
இன்னவன் முன்ஜன் மத்தை யியம்புவோ மவ்வூர் கீழ்ப்பால்
தன்னிலே பேரூர் தன்னில் தனவைசிய குலமு தித்து ;

24. இந்த அபிமான ஸ்திரீ என்ன காரணத்தில் வந்து சேருவாள் என்பதைத் தெரிவிப்பீர் என்று கேட்க, முதல் மனைவியால் அவள் வந்து சேருவாள் என்று சொல்ல, அது விஷயமாய்ச்சம்பந்தப்பட்டவைகளைச்

[1] சந்திரன், [2] சனி, [3] கேது.

சொல்லுவீர் என்று கேட்க, ஜாதகருடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறேன். இந்த ஊருக்குக் கிழக்குத் திக்கில் உள்ள ஒரு பெரிய ஊரில் ஜாதகர் பணமுடைய செட்டியார் குலத்திற் பிறந்து ;

25. பெருமையாய்ச் செட்டுச் செய்து புத்திரர் மனைவி யுண்டாய்
வருவோர்க்கு அன்ன மீந்து மஹாநதி சேது சென்று
ஒருமையாய்த் தீர்த்தம் தோய்ந்து உதவின தான மீந்து
அருமறை தமக்கு அன்னம் அளித்துமே மதுரை புக்கி ;

25. மேன்மையாய் வியாபாரஞ் செய்து மனைவி மக்களையுடைய வராகி தன்னிடத்திற்கு வருகிறவர்களுக்குச் சாப்பாடுபோட்டுப் பெரிய புண்ணிய தீர்த்தங்களுக்கும் சேது ஸ்தலத்திற்கும் போய் ஒரு மனதுடன் தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்து உபயோகமான தானமும் உதவிகளும் செய்து, அருமை யானவர்களும் மேன்மையானவர்களுமான சிறந்த பிரமாணர்களுக்குச் சாப்பாடுபோட்டு மதுரைக்குச் சென்று ;

26. பலவித தலங்கள் சென்று பாலக னுள்ளூர் மீண்டு
நிலமையாய் வாழுந் நாளில் நிகழ்த்துவோ மூழி தானே
நலமுள மறையோன் மாது நாயகன் தன்மேல் மோகம்
பலநாளாய் மனதி லெண்ணி பாவையு மோர்நாள் தன்னில் ;

26. பிறகு அனேக விதமான ஸ்தலங்களுக்குப் போய் பிறகு தன்னூருக்குத் திரும்பி வந்து நிலையாக விருந்து வாழுகின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்த வினையைப்பற்றிச் சொல்லுகிறோம். ஒரு நல்ல பிராமண ஸ்திரீ இவர்மேல் காம ஆசையை வெகுநாளாய்த் தன்னுடைய மனத்தில் உடையவளாகி ஒரு நாள் இவள் ;

27. இவனிடம் சென்று காதலி இனிமையாய்ப் பேச லுற்றாள்
அவனதுக் கிசையா னாகி அம்மறை மாது சொல்வாள்
நவனியில் மறுஜன் மத்தில் நாட்டிய பெண்போல் உன்பால்
அவனியில் வாழ வென்று அம்மாது கூறி யேதான் ;

27. இவரிடம் போய்க் காமம் மேலிட்டு இவரிடத்தில் இனிமையான காமப் பேச்சுகளைச் சொல்ல ஆரம்பித்துப் பேசினாள். இவர் இவளுடைய சொல்லிற்குச் சம்மதிக்காததால் இந்தப் பிராமண ஸ்திரீ சொல்லுகிறாள் " பூமியில் மறுஜன்மத்தில் நான் உன் மேல் நாட்டங்கொண்டவளும் காம ஆசையுடையவளுமான ஒரு ஸ்திரீயைப் போல உன்னிடம் இருந்து நான் வாழ்வேன் " என்று சொல்லிவிட்டு ;

28. தன்குல தெய்வம் தன்னைத் தானவள் தோத்த ரித்து
அன்னவள் சென்றா ளென்றோம் அவனுமே அந்தி யத்தில்
குன்மநோய் தன்னாலேதான் கூற்றன் தன் பதிக்குச் சென்று
நன்னிய பிரம னாலே நாட்டினில் வரையப் பட்டு ;

28. அவள் தன்னுடைய குலதெய்வத்தை நினைத்துத் தோத்திரஞ் செய்து போய்விட்டாள் என்று சொல்லுகிறோம். ஜாதகர் கடைசி காலத்தில் குன்ம ரோகத்தால் இறந்து எமபட்டணம் போய் நல்லவரான பிரம தேவனால் அவருடைய தேகத்திலேயே எழுதப்பட்டு ;

29. வந்தவ னிவனே யென்றார் விருத்தரும் கேட்க லுற்றார்
முன்ஜன்மம் வைசியச் சேயாயு தித்துமே வினையில் லாமல்
அன்னவன் வாழ்ந்த தாலே அவனு மிச்சென்மம் தன்னில்
சந்ததம் கங்கை சேயாய் ஜனித்த காரணங் களென்ன ;

29. இந்த ஜன்மத்தில் அவர் ஜாதகராக வந்து பிறந்து இருக்கின்றார் என்று சொன்னார். அதன் மேல் விருத்தர் என்ற ரிஷி கேட்கின்றார். இவர் முன்ஜன்மத்தில் வைசியராகப் பிறந்து பாவம் இல்லாமல் வாழ்ந்து வந்ததாலே இவர் இந்த ஜன்மத்தில் வேளாளர் குலத்திற் பிறந்ததற்குக் காரணங்களைச் சொல்லுவீர் என்று கேட்க ;

30. சேதுவின் பலத்தி னாலே ஜனித்தனன் கங்கை வமிசம்
ஓதுவே னிச்ஜன் மத்தில் உறைந்திடு மந்த மாது
மேதினில் பணிக ளுண்டாய் வித்தகி யிருபா னேழில்
காதலி வருவா ளாகும் காணது புத்திரர் தான்.

30. இவர் சேதுஸ்தலத்திற்குச் சென்ற புண்ணிய பலத்தினால் இந்த ஜன்மத்தில் வேளாளர் குலத்திற் பிறந்தார். முன் ஜன்மத்திய அந்தப் பிராமண ஸ்தீரீ இந்த ஜன்மத்தில் ஜாதகரை வந்தடைவாள். அந்த ஸ்திரீ பூமியில் ஆபரணங்களையுடையவளாகி ஜாதகருக்கு இருபத்தேழாவது வயதில் இவரிடம் வந்துசேருவாள். ஆனால் இவளுக்குப் புத்திரர் இருக்கமாட்டார்.

**குறிப்பு.—அபிமானமனைவி விஷயம்.**—முன்னேயுள்ள 23-ஆவது பாடலின் கீழுள்ளக் குறிப்பைப் பார்க்கவும்.

31. அன்னையும் சிவந்த மேனி அழகுளாள் பொறுமை சாலி
தன்சொல்லு மடக்க முள்ளாள் தன்மனம் கபடு மில்லாள்
பின்னமில் லாத தேகி புண்ணிய மனத்தா ளாகும்
தன்னில்லம் உள்ளூ ராகும் தன்துணை நவமே யென்றோம்.

31. ஜாதகருடைய தாயார் சிவப்பு நிறமான தேகத்தையுடையவள். அழகுள்ளவள். பொறுமையான குணத்தையுடையவள். அடக்கமாகவும் சாந்தமாகவும் பேசக் கூடியவள். தன்னுடைய மனத்தில் கள்ளம், வஞ்சனை இவைகளில்லாதவளாவாள். யாதொரு அவயவதோஷமும் பங்கமும் இல்லாத தேகத்தை யுடையவள். புண்ணியத்தைச் செய்யுந் தன்மையுள்ள மனத்தையுடையவள். இவளுடைய தாயார் தகப்பனார் வீடு உள்ளூரிலேயே இருக்கும். இவளுடன் கூடப் பிறந்த சகோதரர்கள் ஒன்பது பேர் என்று சொல்லுகிறோம்.

32. மங்கையின் முன்ஜன் மத்தை வரைகிறேம் வேலங் காட்டில்
துங்கமாம் கௌரி வமிசம் தோன்றியே சுகமுள் ளாளாய்
எங்களுக் கன்பா ளாகி எழில்பல தீர்த்தம் தோய்ந்து
சங்கையாய் வருவோர்க்குச் சாதங்க ளளித்து யின்னேள் ;

32. தாயாருடைய பூர்வ ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறேம். இவள் திருவாலங்காட்டில் வேளாளர் குலத்தில் பிறந்து சுகத்யைுடையவளாகி முனிவர்களிடம் பிரீதியுள்ளவளாகி அனேக திவ்ய தீர்த்தங்களுக்குப் போய் அவற்றில் ஸ்நரனஞ் செய்து வயிறுசுண்டி களேப்புடன் வருபவர்களுக்குச் சாப்பாடு போட்டு ;

33. காலன்தன் பதிக்குச் சென்று கஞ்சனல் வரையப் பட்டுச்
சாலவே காஞ்சி தோன்றிச் சார்ந்தனள் அவ்வூர் தன்னில்
கோலமாயிச்ஜன் மத்தில் கூறுவோம் அற்ப ரோகி
சீலமாய் வந்த போது செப்புவோம் யோகம் தானே.

33. இறந்து எமபட்டணத்திற்குப் போய் பிரமதேவனல் எழுதப் பட்டு காஞ்சீபுரத்தில் நன்மையுடன் பிறந்து அந்த ஊரிலேயே இருந்தாள். இந்த ஜன்மத்தில் கொஞ்சம் ரோக முள்ளவளாவாள். நல்லொழுக்கத் துடன் இருந்த போது இவளுக்கு யோகத்தைப் பற்றிச் சொல்லுகிறேம்.

34. மறுஜன்மம் அவ்வூர் தன்னில் மறைக் குலம் தனிலு தித்துப்
பெருமைக ளில்லா தாகி வாழ்வளாமென்று சொன்னேம்
பெருந்தந்தை பூர்வம் தன்னைப் பேசுவோம் காஞ்சி தெற்கில்
சிறுவூரில் சூத்திர வமிசம் தோன்றின ளிவளே யம்மா.

34. ஜாதகருடைய தாயார் பின் ஜன்மத்தில் அதே ஊரில் பிராமணர் குலத்திற் பிறந்து அகங்காரம் கர்வம், இறுமாப்பு இவைகள் இல்லாத வளாகி வாழ்வாள் என்று சொல்லுகிறேம். ஜாதகருடைய தகப்பனரின் முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறேம். இவர் காஞ்சீபுரத்திற்குத் தெற்குத் திக்கிலுள்ள ஒரு சிறிய கிராமத்தில் சூத்திர ஜாதியில் பிறந்தார். பார்வதியம்மையே !

35. கிருஷியால் ஜீவித் தேதான் கௌரவ குடும்பி யாவன்
அரனடி யார்க்குத் தொண்டு அன்னங்க ளளித்து வந்தும்
பெருநதி சேதுசென்று புண்ணிய தீர்த்தம் தோய்ந்து
உறைந்தனர் உள்ளூர் தன்னில் ஊழ்வினை யில்லா தாகி ;

35. தகப்பனர் விவசாயத் தொழிலைச் செய்து ஜீவித்து கௌர வமான குடும்பஸ்தனனர். சிவனடியார்களிடத்தில் பக்தியுடையவராகி அவர்களுக்குச் சேவகஞ் செய்து அவர்களுக்குச் சாப்பாடு போட்டுப் பெரிய நதீ தீரங்களுக்கும் சேதுஸ்தலத்திற்கும் போய் அவ்விடங்களில் புண்ணிய தீர்த் தங்களில் ஸ்நானஞ் செய்து திரும்பித் தன்னூருக்கு வந்து யாதொரு பாவத் தையும் அடையாமல் ;

36. மறலியின் பதிக்குச் சென்று மால்மகன் வரையப் பட்டுப்
பிருதிவி தலத்தி லேதான் பிறந்தனன் கங்கை வமிசம்
இருபது எட்டாண் டின்மே லிவனுக்கு யோகம் வாய்க்கும்
மறுஜன்மம் தில்லை தன்னில் மறைக் குல முதிப்பா னாகும்.

36. இறந்து எமபட்டணத்திற்குப்போய் மகாவிஷ்ணுவின் மகனாகிய பிரமதேவனால் எழுதப்பட்டுப் பிருதிவிஸ்தலம் என்று வழங்கப்பட்ட காஞ்சீபுரத்தில் வேளாளர் குலத்திற் பிறந்தார். இவருக்குத் தன்னுடைய இருபத்தெட்டு வயதிற்குமேலே யோகம் உண்டாகும். பின் ஜன்மத்தில் இவர் சிதம்பரத்தில் பிராமணர் குலத்தில் பிறப்பாராகும்.

37. இந்ததோர் ஜன்மம் தன்னில் என்னபுண் ணியங்கள் செய்தான்
முந்திய குலமு திக்க முயலுவீர் முனியே நீர் தாம்
அந்தவ னிச்சன் மத்தில் யாவர்க்கும் நல்லோ னாயும்
சந்ததம் தெய்வ பத்தி சத்தான மனத்தானாயும் ;

37. இவர் மறு ஜன்மமதில் முதல் குலமாகிய பிராமணர் குலத்தில் பிறக்கும்படியாய் இந்த ஜன்மத்தில் என்ன புண்ணிய காரியங்களைச் செய்தார் என்பதை, முனிவரே ! நீரே சொல்லுவீர் என்று கேட்க, இவர் இந்த ஜன்மத்தில் எல்லோருக்கும் நல்லவராக விருந்தும் எப்போதும் கடவுளின்மேல் பக்தியுடையவராகியும், நல்ல மனத்தையுடையவராகியும் ;

38. வருவதால் மறைக்கு லத்தில் வருவானா மென்று சொன்னோம்
திருமகன் முப்பான் மூன்றில் தனுர்மாதம் தந்தை கண்டம்
அறைகிறோம் மாது ருக்கு ஆறுறு ஆண்டு தன்னில்
குறைவிலாக் கூனி மாதம் கூறுவோம் கண்டம் தானே.

38. இருப்பதால் பிராமணர் குலத்திற் பிறப்பார் என்று சொல்லுகிறோம். ஜாதகருடைய முப்பத்து மூன்றாவது † வயதில் மார்கழி மாதத்தில் தகப்பனார் இறந்து போவார். தாயாருக்குக் கண்டகாலத்தைச் சொல்லுகிறோம். ஜாதகருக்கு முப்பத்தாறாவது வயதில் குறைவில்லாத பங்குனி மாதத்தில் மரணம் நேரிடும் என்று சொல்லுகிறோம்.

† **குறிப்பு.—தகப்பனார் மரண விஷயம்.**—ஜாதகருக்கு வயது ஸு 33—0—0 முடியும் வரையிலும் சந்திர தசையில் ராகு குரு புக்திகள் நடக்கின்றன, மார்கழி மாதத்தில் குரு புக்தி நடக்கிறது. பிதுர்லக்கினமாகிய மீனத்திற்கு இரண்டில் சந்திரன் மாரகஸ்தானத்தில் இருந்து கொண்டு எட்டாவது வீடாகிய துலாத்தைப் பார்க்கின்றார். பிதுர்ஸ்தானாதிபதியாகிய குரு சந்திரனைப் பார்க்கின்றார். சந்திரனுக்குப் பிதாவை மாரகஞ் செய்யும் அமைப்பு ஏற்படுகிறது. குரு பிதுர்ஸ்தானாதிபதியாகி மீனத்திற்குப் பத்தில் பத்திற்குடையவராயும் இருக்கின்றார். ஆகையால் துய்யகேரளம் எட்டாம்பாவம் 14 ஆவது பாடல் பிரகாரம் குரு தன் புக்தியில் பிதுருக்கு மாரகஞ் செய்ய அமைப்பு இருக்கிறது.

**2. மாதுர் மரணவிஷயம்.**—ஜாதகருக்கு வயது ஷூ 35—0—0 முதல் ஷூ 36—0—0 முடியும்வரையிலும் சந்திர தசையில் சனி புத புக்திகள் நடக்கின்றன. பங்குனி மாதத்தில் சனி புக்திப் நடக்கின்றது. மாதுர்லக்கினம் துலாம்; இதற்குப் பராசரஹோரை சில பதிப்புப் பிரகாரம் அங்காரகன் சூரியன் குரு இவர்கள் மாரகராகின்றூர்கள். சந்திரன் அங்காரகனுடைய வீட்டில் மாதுர்லக்கினத்திற்கு ஏழில் மாரகஸ்தானத்தில் இருந்துகொண்டு மாரகாதிபதியாகிய குருவால் பார்க்கப்பட்டிருக்கின்றூர். மேலும் சந்திரன் மாதுர்காரகாதிபதியாகி அவர் தசையே நடைபெறுகின்றது. ஆகையால் மாதாவைச் சந்திரன் மாரகஞ் செய்ய அமைப்பு இருக்கிறது. மாரகாதிபதி யாகிய சூரியனுடன் சனி கூடிக்கொண்டு சந்திரனையும் பார்க்கின்றூர். ஆகையால் ஜாதகசந்திரிகை 23-ஆவது, 27-ஆவது சுலோகங்கள் பிரகாரம் சந்திரதசையில் சனி புக்தியில் மாதாவுக்கு மாரகம் நேரிட அமைப்பு இருக்கிறது.

* **3 ஜாதகர் மரணவிஷயம்.**—ஜாதகருக்கு வயது ஷூ 61—0—0 முதல் ஷூ 62—0—0 முடியும் வரையிலும் ராகு தசையில் சூரிய சந்திர புக்திகள் நடக்கின்றன. 61-ஆவது வயது முடிந்து 62-ஆவது வயதில் சித்திரை மாதத்தில் சூரிய புக்திதான் நடக்கின்றது. கடக லக்கிணத்திற்குச் சனி பராசர ஹோரை, ஜாதக சந்திரிகை, தாண்டவமாலை, சந்திரகாவியம் இவைகளின் பிரகரம் மாரகாதிபதி ஆகின்றூர். ராகு இவருடன் கூடி எட்டாவது மாரக ஸ்தானத்தில் இருந்துகொண்டு லக்கினுதிபதியாகிய சந்திரனைப் பார்க்கின்றூர். ஆகையால் ஜாதகசந்திரிகை 12-ஆவது 23-ஆவது சுலோகங்கள் பிரகாரமும் துய்யகேரளம் எட்டாம்பாவம் 20-ஆவது பாடல் பிரகாரமும் ராகு தசையில் சூரிய புக்தியில் ஜாதகருக்கு மாரக அமைப்பு இருக்கிறது.

39. ஜாதகன் மரண காலம் சாற்றுவோ மறுபான் ரண்டில்
கோதிலா மேட மாதம் குறைபக்கம் நவமி தன்னில்
தீதான சூலை யாலே தேகமும் வாடு மென்றேம்
ஏத்தவே பின்ஜன்மத்தைப் புகலுவோம் கேட்டி டாயே.

39. ஜாதகருடைய மரணகாலத்தைப்பற்றிச் சொல்லுகிறோம். இவருக்கு அறுபத்திரண்டாவது * வயதில் குற்றமில்லாத சித்திரை மாதத்தில் தேய்பிறையில் நவமிதிதியில் கொடிய சூலைநோயால் இறந்து தேகம் அழிந்து போய்விடும் என்று சொல்லுகிறோம்.

40. உத்தரப் துவாரை தனனிலு திப்பனும் சத்திரிய வமிசம்
அத்தியு மசுவமு முடையோனுகி இவனுமே வாழ்வா னுகும்.
இத்தகை முனிவர் கூற ஈச்வரி கேட்க லுற்றாள்
வித்த கனிச்ஜன் மத்தில் விபரீத வார்த்தை சொல்லி;

40. ஜாதகர் வடக்குத் திக்கிலுள்ள துவாரகா புரியில் க்ஷத்திரிய குலத்தில் பிறப்பார். இவர் யானை, குதிரை இவைகளை உடையவராகி வாழ்வாராவார். இவ்விதமாக முனிவர் சொல்ல பார்வதியம்மையார் கேட்கின்றூர். அறிவுடையவரான ஜாதகர் இந்த ஜன்மத்தில் பிரதிகூலமான வார்த்தைகளையும் சொல்லியும்;

**41.** பொருளது இச்சை யாயும் பேதையர் மோக மாயும்
திருகுகள் சிலர்க்குச் செய்து சேயனும் வாழ்வ தாலே
மறுஜன்மம் க்ஷத்திரிய சாதி வருகும் காரணங்க ளென்ன
திருமக ளிச்ஜன்மத்தில் ஜனஉப காரியாயும் ;

**41.** பொருள்களின் மேல் ஆசையுடையவராயும், ஸ்திரீகளின் மேல் காம ஆசையுடையவராயும், சிலருக்கு வஞ்சனைகளைச் செய்தும் இவர் வாழ்வதால் இவருக்கு அடுத்த ஜன்மத்தில் க்ஷத்திரிய குலத்தில் பிறவி நேரிடுவதற்குக் காரணங்கள் என்ன என்று கேட்கவே, இவர் இந்த ஜன்மத்தில் ஜனங்களுக்கு உதவி செய்பவராயும் ;

**42.** அறமதி லிச்சை வைத்தும் அறுமுகன் தனைப்பூ ஜித்தும்
மறையவர் நேசம் கொண்டும் மகாதல தீர்த்தம் தோய்ந்தும்
வருவதா லுதிப்பா னென்றோம் வரைகிறோம் யோக ச்சேதி
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

**42.** தருமம் செய்வதில் ஆசையுடையவராயும், ஆறுமுகங்களை யுடைய முருகக்கடவுளைப் பூஜை செய்தும் பிராமணர்களின் மேல் ஆசை யுடையவராயும் பெரிய ஸ்தலங்களிலுள்ள தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்தும் வருவதால் மறு ஜன்மத்தில் இவர் க்ஷத்திரிய குலத்திற் பிறப்பார் என்று சொல்லுகிறோம். இவருடைய யோக விஷயங்களைப்பற்றிச் சொல்லுகிறோம். மேன்மையான வேதங்களின் முடிவு என்ற உபநிஷத்துக் களில் விளங்குகின்ற பார்வதியம்மையே ! கேட்பீராக.

**43.** ஜனித்தநாள் முதலாமாகச் சேயன்தன் மரண மட்டும்
தனமது மென்மே லோங்கும் சல்லியம் காணு னுகும்
இனத்துக்கு மேலாய் வாழ்வன் இளம்பிறை போலே யோகம்
வினையிலா வாழ்வா னுகு மியம்புவோ மதிலோர் சங்கை.

**43.** ஜாதகருக்குத் தான் பிறந்தநாள் முதற்கொண்டு தன்னு டைய மரணகாலம் வரையிலும் செல்வம் நாளுக்கு நாள் விருத்தியாகிக் கொண்டே வரும். இவர் கடன் வாங்கமாட்டார். பந்துக்களைவிட அதிகமான அந்தஸ்துடையவராக விருந்து வாழ்வாராகும் இங்கு ஒரு விசேஷத்தைச் சொல்லுகிறோம்.

**44.** இருபது ஆண்டு மேலாய் இவன்தந்தை துணைவ னுலே
வரும்பகை யதிக முண்டு மன்னனுல் சுகமு மாகும்
பிரிதாகும் குடும்பம் தானும் பேதை பால் பகையு முண்டு
மருமமாய்ப் பூமி கொஞ்சம் விலகிடு மென்று சொல்வோம்.

**44.** ஜாதகருக்கு இருபது வயதிற்குப் பிறகு இவருடைய தகப்பனு ருடைய சகோதரனுல் விரோதங்கள் அதிகமாக வந்து நேரும். அரசனுல் இந்த விரோதம் நீங்கி களிப்பும் சந்தோஷமும் உண்டாகும். குடும்பம் பிரிந்து போய்விடும். ஆனுல் பெண்களுக்குள்ளே விரோதம் இருந்து கொண்டிருக்கும். ரகசியமாய்க் கொஞ்சம் பூமி இவரை விட்டு நீங்கிப் போய் விடும் என்று சொல்லுகிறோம்.

45. நீங்கின பூமிபின்னுல் நேர்ந்திடு மிவனுக் கேதான்
பாங்கியால் வந்து சேரும் பின்பாகம் விவரம் சொல்வேன்
ஆங்கவன் செட்டு ஓங்கும் அரசர் பூஜிதமு மாவன்
நீங்காத செல்வ முள்ளான் நிகர்திருப் பணியும் செய்வன்.

45. ஜாதகரை விட்டு விலகிப்போன நிலம் பின்னுல் இவருக்கே தோழியால் வந்து சேரும், விவரங்களை எல்லாம் பின்பாகத்தில் சொல்லு கிறேன். இவருடைய வியாபாரம் நாளுக்கு நாள் விருத்தியாகும். அரசர் கள் இவரை மதிப்பார்கள். எப்போதும் இவரை விட்டுப் போகாததும் குறைவு படாததுமான செல்வத்தை உடையவ ராவார். மேன்மை யானவையும் அழகானவையுமான, ஆபரணங்களையும் செய்வார்.

46. அண்டினேர் தம்மைக் காப்பன் அதிகபூ மிகளும் சேர்ப்பன்
எண்டிசை புகழ வாழ்வ னெதிரியை வசியம் கொள்வன்
கண்டனம் பூமிவீடு கனதனம் பணிகள் யாவும்
விண்டுவன் முப்பதாயி ரம்பொன் வித்தகன் கொள்வா னுகும்.

46. ஜாதகர் தன்னிடம் வந்து சேர்ந்தவர்களைக் காப்பாற்றுவார். நிலங்களை அதிகமாகச் சேகரிப்பார். எட்டுத் திக்குகளிலும் எவ்விடத்திலும் கீர்த்தியை யுடையவராய் இவர் வாழ்வார். தன்னுடைய சத்துருக்களைத் தன் வசப்படுத்திக் கொள்ளும் சாமர்த்திய முடையவர். நிலங்கள் வீடு பெரிய செல்வம் ஆபரணங்கள் ஆகிய இவைகள் எல்லாம் முப்பதாயிரம் பொன் பெறக் கூடியதாக விருக்கும்.

47. ஜனித்திடுங் காலம் தன்னில் செம்பாம்பு தனிலி ருப்புக்
குனித்திடு ஆண்டு மூன்று கூறிய திங்களைந்தும்
வினையுண்டு ஜாத கர்க்கு மிக்கதாய் நலிக ளுண்டு
அனையவே பந்து சூதம் அறைகிறோம் விவரம் ரண்டில்.

47. ஜாதகர் பிறக்கும் காலத்தில் கேது தசையில் இருப்பு கணி தப்பிரகாரம் மூன்று வருஷங்களும் ஐந்து மாதங்களும் ஆகும். இந்தக் காலத்தில் ஜாதகருக்குக் கஷ்டங்கள் நேரிடும். இவருக்கு அதிகமான நோய் கள் ஏற்படும். நெருங்கின பந்துக்களில் சூதகம் ஏற்படும். மற்ற விஷயங் களை இரண்டாவது பாகத்தில் சொல்லுகிறோம்.

## ஜாதகம் 77.

1. பிறை[1] குரு கேது வில்[2]லில் புகர்[3] ராகு மிதுன மாகப்
பருகுசேய்[4] அலரி[5] புந்திப்[6] புக்கிடம் கடக மாக
அம்பின நண்டு[7] ஜன்மம் அந்தகன்[8] சீயம்[9] தங்க
அம்பிகை யாளும் கேட்க அத்திரி புகலு கின்றார்.

| | | | |
|---|---|---|---|
| | | | சுக்கிரன்<br>ராகு |
| | இராசி<br>சக்கரம் | | லக்கினம்<br>சூரியன்<br>புதன்<br>அங்காரகன் |
| | | | சனி |
| குரு<br>சந்திரன்<br>கேது | | | |

பூராடம் 4-ம் பாதம்
சுக்கிரதசை இருப்பு 3–9–0

1. சந்திரன் குரு கேது தனுசிலும், சுக்கிரன் ராகு மிதுனத்திலும், அங்காரகன் சூரியன் புதன் கடகத்திலும் ஜலத்தையுடைய கடகம் ஜன்ம லக்கின மாகவும், சனி சிம்மத்திலும் இருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்கும் போது அத்திரி மகரிஷியானவர் சொல்லுகிறார்.

**குறிப்பு.**—இந்த ராசிச் சக்கர அமைப்பிற்குப் பின் வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்த முடையதாகும். மேஷத்தில் சனியும், மிதுனத்தில் குருவும், கன்னியில் அங்காரகனும் கேதுவும், விருச்சிகத்தில் சந்திரனும், மகரத்தில் சுக்கிரனும், கும்பத்தில் சூரியனும் புதனும், மீனத்தில் ராகுவும் ஆகும்.

2. இந்தச்சேய் ஆணும் ஜன்மம் இல்லமும் கீழ்ப் பால் நோக்கம்
தென்வட வீதி யாகும் சிங்கவா கனத்தாள் கீழ்ப்பால்
நந்தியும் இல்லம் உத்திரம் அணல்காளி மாரி மாயோன்
தென்மேல்பால் தங்கு மென்றோம் சிறு வூராமிந்தப் பாலன் ;

---

[1] சந்திரன். [2] தனுசு. [3] சுக்கிரன். [4] அங்காரகன் [5] சூரியன், [6] புதன். [7] கடகம். [8] சனி. [9] சிம்மம்.

2. பிறந்த இந்தக் குழந்தை ஆண் குழந்தையாகும். பிறந்த வீடு வடக்குத் தெற்குத் தெருவில் இருக்கும். தெரு வாசற்படி கிழக்குத் திக்கைப் பார்த்திருக்கும். துர்க்கையின் கோயில் கிழக்குத் திக்கிலும் சிவ பெருமான் கோயில் வீட்டிற்கு வடக்கிலும் காளியம்மன் கோயில் மாரியம் மன் கோயில் மகாவிஷ்ணுவின் கோயில் இவை தென் மேற்குத் திக்கி லும் இருக்கும் என்று சொல்லுகிறோம். ஒரு சிறிய கிராமத்தில் இந்த ஜாதகர்.

3. உதிப்பனு மிரண்டாம் ஜன்மம் உயர்கங்கை குலமே யாகும்
மதிநுதல் அன்னை தந்தை வருந்துணை களத்திர புத்திரர்
சதியிலா முன்பின் ஜன்மம் சாற்றுவோ மிந்நூல் தன்னில்
அதிதியை ஆத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

3. இரண்டாவது கர்ப்பத்தில் வந்து பிறப்பார். மேன்மையான வேளாளர் குலத்திற் பிறப்பார். சந்திரனைப் போல அழகான நெற்றி புருவம் இவைகளையுடைய தாயார் தகப்பனுர் சகோதரங்கள் மனைவி மக்கள் முன் ஜன்மம் பின் ஜன்மம் ஆகிய இவைகளை இந்த சாஸ்திரத்தில் சொல்லுகிறோம். பரதேசிகளைக் காப்பாற்றுகின்ற பார்வதியம்மையே ! கேட்பீராக.

4. பாலகன் தந்தைக் கேதான் பகருவோம் துணை யாண்ணொன்று
வேல்விழி இரண்டு தீர்க்கம் விளம்புவோம் ஒன்றாய் வாழ்வர்
சாலவே பிதாகு ணத்தைச் சாற்றுவோம் மாஞ்சி வப்பன்
ஞாலங்கள் விருத்தி செய்வன் நயப்புறு வார்த்தை யானே.

4. ஜாதகருடைய தகப்பனுருக்குக் கூடப் பிறந்த ஆண் ஒருவரும் வேலைப் போல கண்களையுடைய பெண்கள் இருவரும் நீண்ட ஆயுளை யுடையவர்களென்று சொல்லுகிறோம். இவர்கள் ஏக குடும்பமாய் இருந்து வாழ்வார்கள். தகப்பனுருடைய குணதிசயங்களைப்பற்றிச் சொல்லுகிறோம். இவர் மாந்துளிரைப் போல ஒருவிதமான சிவப்பு நிறமுடைய தேகத்தை யுடையவர். நிலங்களைப் பயிரிட்டு விருத்தியாக்குவார். நயமானவும் இனிப் பானவுமான வார்த்தைகளைப் பக்குவமாக உபயோகப்படுத்துவார்.

5. இந்திரக் குடும்ப மொப்பா மேவலா ளுடைய னுகும்
நிந்தைக ளேற்கா னுகும் நவிலுவோ மிவன்முன் ஜன்மம்
தென்திசை தில்லை தன்னில் ஜனித்தனன் இக்கு லத்தில்
பொன்பூமி யுடையா னுகிப் புகழான குடும்ப மேற்று ;

5. மேன்மையான குடும்பத்தைஇவர் குடும்பம் ஒத்திருக்கும், வேலை யாட்களை யுடையவராவர். இகழ்ச்சி அவமானம்பழி இவைகளை அடையாதவ ராவார். இவருடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறோம். தெற்குத் திக்கிலுள்ளத் தில்லை என்று சொல்லப்படும் சிதம்பரத்தில் இந்த ஜன்மத்திய குலமாகிய வேளாளர் குலத்தில் பிறந்தார். தனம் நிலம் இவைகளை யுடையவராகிக் கீர்த்தி பெற்ற மேன்மையான குடும்பத்தை யடைந்து ;

6. முன்வினை இல்லா தாகி மொதுங்கினன் காலன் னுடு
முன்னவன் வரையப் பட்டுப் பிறந்தவ னென்று சொல்வோம்
இந்நெறி யுடையா னுக்கு இப்பால னுதிப்பா னாகும்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அழகுளான் யிருசி வப்பன்.

6. முன் ஜன்மத்திய பாவம் ஒன்றும் இல்லாதவராகி இறந்து எம பட்டணத்திற்குப் போய் பிரம தேவனால் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றனர் என்று சொல்லுகிறோம். இப்படிப்பட்ட குணங் களையுடைய தகப்பனுக்கு இந்த ஜாதகர் பிறப்பார். ஜாதகருடைய குண குணங்களைப்பற்றிச் சொல்லுகிறேன். அழகான தேகமுடையவர். இரண்டு நிறங்கள் கலந்துள்ள நிறமாகிய தேகத்தையுடையவர்.

7. தந்தையால் சுகமில் லாதான் சர்ஜனர் உறவு கொள்வன்
பிந்திய தந்தை யாலே பெறுவனும் கல்வி தானும்
அந்தவன் மந்திரம் சொல்வான் அவனியில் செட்டுச் செய்வன்
தன்குல தாதை பக்கல் சார்ந்துமே ஜீவிப் பானும்.

7. ஜாதகர் தகப்பனார் மூலமாய்ச் சௌக்கியத்தை அடையாதவர். நல்ல ஜனங்களுடைய சிநேகிதத்தை அடைவார். சிறிய தகப்பனார் உதவி யால் இவர் வித்தையை அடைவார். இவர் மந்திரங்களைச் சொல்லுவார். பூமியில் வியாபாரஞ் செய்வார். தன்னுடைய குலத்தை சேர்ந்தத் தந்தை பாட்டனார் இவர்களுடைய சந்ததியார்களை அடைந்து ஜீவனஞ் செய்வாராகும்.

8. தந்தையி னார்ஜி தத்தைத் தானவன் விரும்பா னாகும்
முந்தின பொருளும் சேர்ப்ப னுயர்வான குடும்பி யாவன்
எந்திடம் பெருமை யேற்பன் இலக்குமி வாசம் இந்நாள்
பிந்தியும் சொந்த இல்லம் பெறுவனும் பணியின் காலம்

8. ஜாதகர் தன்னுடைய தகப்பனாரின் சொத்தின் மேல் ஆசை இல்லாதவராவார். மேன்மையான சொத்துக்களைச் சேகரிப்பார். முயற்சி செய்கின்ற குடும்பஸ்தராவார். எந்தவிடத்திலும் இவருக்குப் புகழும் மேன்மையுமுண்டு. இவரிடத்தில் லட்சுமி இந்தக் காலத்தில் வாசஞ் செய் வாள். பின்னால் ராகு தசைக் காலத்தில் * சொந்தமாக ஒரு வீட்டை அடை வார்.

* குறிப்பு.—ஜாதகருக்கு வயதுஞூ 26-9-0-க்கு மேல் இராகு தசை வந்து ஞூ 44-9-0 வரையிலும் இருக்கின்றது. இராகு, வீட்டிற்குரிய நான்கா வது பாவமாகிய துலாத்திற்குடைய சுக்கிரனுடன் கூடிப் பன்னிரண்டில் இருந்துகொண்டு, பாக்கியாதிபதியும், சந்திரனுக்கு நான்கிற்குடைய வருமானகுருவாலும், லக்கினாதிபதியாகிய சந்திரனாலும் பார்க்கப்படுவதால் வீட்டை அடையும் அமைப்பு இருக்கிறது.

9. சிலதுநாள் கூட்டுச் செட்டுச் செய்து ஜீவிப் பானும்
நலமதை யெவர்க்கும் செய்வன் நாட்டினில் புகழு மேற்பன்
பலர்களால் பெருமை யேற்பன் பதர்குண மில்லா னாகும்
பொருள்பின்னால் பெருக்கம் செய்வன் புண்ணிய மனத்தா னாகும்.

**9.** ஜாதகர் கொஞ்ச காலம் வியாபாரத்தைக் கூட்டாக இன்னொருவருடன் சேர்ந்து செய்து ஜீவனஞ் செய்வாராகும். எல்லோருக்கும் நல்லதையே செய்வார். தன் ஊரில் கீர்த்தியையும் பெருமையையும் அடைவார். அநேகரால் பெருமையாகப் பாராட்டப்படுவார். அற்பமான தாழ்ந்த குணமில்லாதவர். இவர் தன் பின் வயதில் சொத்துக்களை அதிகப் படுத்துவார். புண்ணியமான காரியங்களைச் செய்யக்கூடிய மனத்தை யுடையவராவார்.

10. தன்துணை முன்நாரி மங்கும்முன் ஆண்பா லொன்று
அன்னவன் தீர்க்க ஜீவி அதன்பின்னால் தோன்றும் தீதாம்
பின்துணை ஆண்பால் சேதி பேசுவோம் மால்நி றத்தன்
பன்னியே பேசு வானும் பாரது விருத்தி செய்வன்.

**10.** ஜாதகருக்கு முன்னே பிறக்கும் பெண் சகோதரம் இறந்து போய்விடும். மூத்த சகோதரன் ஒருவர் நீண்ட ஆயுளையுடையவர். அவருக்குப் பிறகு ஜாதகருக்கு முன்னே பிறப்பவர்கள் இறந்து போய் விடுவார்கள். ஜாதகருக்குப் பின்னால் உண்டான ஆண் சகோதரனின் விஷயங்களைப்பற்றிச் சொல்லுகிறோம். இவர் மகா விஷ்ணுவின் நிறமான மேகவர்ண நிறத்தையுடையவர். சுறுக்கமாகவும் திறமையுடனும் உறுதி யாகவும் பேசுவார். நிலத்தைப் பயிரிட்டு விருத்தி செய்வார்.

11. கடன்படான் இடுக்க மில்லான் கருதிடான் கட்டு வார்த்தை
உடன்துணை சொல்தட் டாதான் உறுதியில் லாத நெஞ்சம்
தடபுடல் செய்கை யுண்டு தாட்சிண்யன் கனத்த புத்தி
அடவிலாப் பாரி ஒன்று மருவிடும் தீர்க்க மாக.

**11.** ஜாதகருடைய இளையசகோதரர் கடன் வாங்கமாட்டார். கஷ்டங் கள் இல்லாதவர். பொய்யான வார்த்தைகளையும் புனைந்த வார்த்தை களையும் சொல்லமாட்டார். தன்னுடைய சகோதரனுடைய பேச்சைத் தள்ளி அதற்கு மாறுபாடாக நடந்து கொள்ளமாட்டார். நிலையான மனமில்லாத வர். சபல புத்தியுள்ளவர். டம்பமாகவும் அவசரமாகவும் முரட்டுத்தன மாகவும் காரியங்களைச் செய்வார். தாட்சிண்யமுடையவர். தயாள குண முடையவர். பெரிய புத்தியையுடையவர். மேன்மையான மனைவி ஒருத்தி வந்து இவருக்கு வாய்ப்பாள். அவள் நீண்ட ஆயுளையுடைவளாவாள்.

12. சுதர்களு மாண்பால் ரண்டு தோகையு மவ்வாறு தீர்க்கம்
அதிபனும் தீர்க்க ஜீவி வறுமையெப் போதும் காணான்
அவன்பிதா பின்னோன் தன்பால் ஒத்து பிரியாமே வாழ்வான்
அதிதியை ஆத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

**12.** ஜாதகருடைய இளைய சகோதரருக்கு ஆண் குழந்தைகள் இரண்டு பேரும் பெண் குழந்தைகள் இரண்டு பேரும் நீண்ட ஆயுளை யுடையவர்களாகவிருப்பார்கள். இவரும் நீண்ட ஆயுளையுடையவர்களாக விருப்பார். கஷ்டங்களையும் தரித்திரத்தையும் எப்போதும் அடையமாட்டார்.

இவர் தன்னுடைய தகப்பனுருடைய இளைய சகோதரனை அடுத்து அவருடன் ஒற்றுமையாய்ப் பிரியாமல் இருந்து வாழ்வாராகும். பரதேசி களைக் காப்பாற்றுகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

13. பாலகன் மனத்தின் காலம் பகருவோ மிருபான் ரண்டுள்
நீலியும் வடகீழ் நேரும் நிகர்கங்கை வர்க்கம் தன்னில்
வேல்விழி குணத்தைச் சொல்வேன் விரதங்களுள்ளா ளாகும்
பால்பாக்கிய முடையா ளாகும் பசித்தோர்க்குத் தாக மீவள்.

13. ஜாதகருக்கு விவாகம் நடகின்ற காலத்தைத் தெரிவிக்கின்றோம். இவருக்கு இருபத்திரண்டு வயதிற்குள்ளே * மனைவி வடகிழக்குத் திக்கில் வேளாளர் குலத்திலிருந்து வந்து நேரிடுவாள். இவளுடைய குண குணங்களைப்பற்றிச் சொல்லுகிறேன். விரதங்களைச் செய்யாமல் விட்டு விடமாட்டாள், பால் பாக்கியம் உடையவளாவாள். பசியோடுள்ளவர்களுக்கு நீர் மோர் முதலியவைகளைக் கொடுப்பாள்.

* குறிப்பு.—**விவாக விஷயம்.**—ஜாதகருக்கு வயது ௵ 21–0–0 முதல் 22–0–0 முடியும் வரையிலும் அங்கார தசையில் ராகுபுக்தி குருபுக்தி இவைகள் நடக்கின்றன. அங்காரகன் ஐந்திற்கும் பத்திற்கும் உடைய வராய் லக்கினத்திலிருந்து கொண்டு களத்திர ஸ்தானமாகிய ஏழாவது வீட்டையும் போகஸ்தானமாகிய நான்காவது வீட்டையும் பார்ப்பதுடன் குடும் பாதிபதியாகிய சூரியனுடனும் சந்திரனுக்கு ஏழிற்குடைய புதனுடனும் கூடி யிருக்கின்றார். ராகு களத்திரகாரகனும் போகஸ்தானாதிபதியுமாகிய சுக்கிர னுடனும் கூடிச் சந்திரனுக்கு ஏழில் இருக்கின்றார். ஆகையால் அங்கா ரகன் தசையில் ராகு புக்தியில் விவாகம் ஏற்பட அமைப்பு இருக்கிறது.

14. மங்கையும் தீர்க்க ஜீவி வருவோரை ஆத ரிப்பள்
மங்கையும் வந்த பின்பு நாயகன் தனக்கு யோகம்
பொங்கின குடும்ப மேற்பள் புவிதனில் நல்லோ ளாவள்
அங்கவள் தீர்க்கசீவி அம்பிகை யாளே கேளாய்.

14. ஜாதகருடைய மனைவி நீண்ட ஆயுளையுடையவள். தன்னிடம் வருகின்றவர்களைக் காப்பாற்றுவாள். இவள் தன்னுடைய புருஷனிடம் வந்து சேர்ந்த பிறகு புருஷனுக்கு யோகமுண்டாகும். விருத்தியாகின்ற மேன்மையான குடும்பத்தை அடைவாள். பூமியில் நல்லவளாக இருப்பாள். இவளுக்கு நீண்ட ஆயுளுண்டு. பார்வதியம்மையே! கேட்பீராக.

15. மதலைகள் ஆண்பால் மூன்று மங்கையு மிருவர் தீர்க்கம்
அதிபன்தன் முன்ஜன்மத்தை வரைகிறோம் புதுவை தன்னில்
நிதிமிக உடையா னுக்கு நேர்ந்துமே செட்டுச் செய்து
விதவித தலங்கள் சென்று வினையதைக் புகலக் கேண்மோ.

15. ஜாதகருக்கு மூன்று ஆண் குழந்தைகளும் இரண்டு பெண் குழந்தை களும் உண்டு. அவர்கள் நீண்ட ஆயுளையுடையவர்களாகவிருப்பார்கள். ஜாதக ருடைய பூர்வஜன்மத்தைச் சொல்லுகிறோம். இவர் புதுச்சேரியில் அதிகப்

பணக்காரனுக்குப் பிறந்து வியாபாரஞ் செய்து பலவிதமான புண்ணிய ஸ்தலங்களுக்குப் போயும் இவருக்கு வந்து சம்பவித்த பாபத்தைச் சொல்லுகிறேம், கேட்பீராக.

16. கன்னிமேல் கலகம் சொல்லிக் கணவனை விட்டு நீக்க
அன்னவள் வருத்த முற்று அறைந்தசா பத்தைக் கேண்மோ
பெண்பழி சொன்ன பாவி பிறக்கும்பின் ஜன்மம் தன்னில்
என்னைப்போல் மனைவி யின்றி யீன்றதாய்ச் சுகமு மின்றி ;

16. இவர் ஓர் இளம் பிராயமான ஸ்திரீயின் மேல் கலகத்தை உண்டு பண்ணக்கூடிய விபரீதமானதும் குற்றமானதுமான வார்த்தைகளைச் சொல்லி அவளை அவளுடைய புருஷனைவிட்டு நீக்கிவிடவே அவள் துன்பத்தையும் மனக்கவலையையுமடைந்து கொடுத்த சாபத்தைக் கேட்பீராக. ஒரு ஸ்திரீயின் மேல் பழியைச் சாட்டின பாவியாகிய உனக்கு உன்னுடைய மறு ஜன்மத்தில் என்னைப் போல மனைவி இல்லாமலும் பெற்றத் தாயாருடைய சுகங்கள் இல்லாமலும் ;

17. இல்லமும் விட்டு நீங்கி யேகுவாய் வெளியூர் தன்னில்
வல்லியும் சொல்லிச் சென்ருள் மருவிற்று அந்தச் சாபம்
நல்லதோர் தலங்கள் சென்று நமன்பதிக் காளா யின்றேன்
புல்குவா னிக்கு லத்தில் பூர்வமாம் சாபத் தாலே ;

17. நீ உன்னுடைய வீட்டை விட்டு வெளியூருக்குப் போய்விடக் கடவாய் என்று இவரைப் பார்த்துச் சொல்லிவிட்டுப் போய்விட்டாள். அவளுடைய சாபம் ஜாதகரை அணுகிற்று. ஜாதகர் முன் ஜன்மத்தில் நல்ல புண்ணிய ஸ்தலங்களுக்குப் போய் இறந்து எமனிடத்திற்குச் சென்று இந்த ஜன்மத்தில் இந்த வேளாளர் குலத்திற் பிறந்தார். பூர்வ ஜன்மத்திய சாபத்தாலே ;

18. தந்தைதாய்ச் சுகமில் லாதான் தன்துணை கன்னி காணுன்
ஆயவே தந்தை யில்ல மடையாமல் வேறூர் வாசம்
நேயன்தன் குலத்தோ ருலே நிமலனும் ஜீவிப் பானும்
தீயரைச் சம்ம ரிக்கும் தேவியே கேட்டி டாயே.

18. ஜாதகர் தன்னுடைய தாயார் தகப்பனுர் இவர்களால் சுகமடையாதவர். தன்னுடன் கூடப்பிறந்த சகோதரிகளும் இல்லாதவர். தன்னுடைய தகப்பனுருடைய வீட்டைத் தான் அடையாமல் இன்னொரு ஊருக்குப் போய் அவ்விடத்தில் வாசஞ் செய்வார். இவர் தன்னுடைய குலத்தைச் சேர்ந்த ஒருவரால் ஜீவனஞ் செய்வார். கெட்டவர்களைச் சம்மாரம் செய்கின்ற பார்வதியம்மையே ! கேட்பீராக.

19. மாதுரு நற்கு ணத்தாள் மனமது கபடு மில்லாள்
தீதான புத்தி யில்லாள் ஜனஉப காரி யாகும்
மேதினில் நல்லோ ளாவள் வறுமைஎப் போதும் காணுள்
பாதக மில்லா ளாகும் பர்த்தாவுக் கினிய ளாகும்.

**19.** ஜாதகருடைய தாயார் நல்ல குணமுடையவள். வஞ்சனை கள்ளம் இவைகள் இல்லாத மனத்தை உடையவள். கெட்டபுத்தியில்லாதவள். ஜனங்களுக்கு உதவியைச் செய்பவளாவாள். பூமியில் நல்லவளாகவிருப்பாள். கஷ்டங்களையும் தரித்திரத்தையும் எப்போதும் அடையமாட்டாள். கெடுதியான மனத்தை உடையவளல்லள். தன்னுடைய புருஷனுக்கு இஷ்டமானவளாவாள்.

20. இல்லமும் வடபா லாகும் இவள்துணை ஆண்பால் ஒன்று
வல்லியு மில்லா ளாகும் வரைகிறே மிவளின் பூர்வம்
எல்லையில் உயர்வ தான எழில்பட்சி தன்னி லேதான்
புல்லினுள் வன்னிய சேயாய்ப் புகழான குடும்பி யாகி ;

**20.** இவளுடைய வீடு வடக்குத்திக்கில் இருக்கும். இவளுடன் கூடப் பிறந்தவர்கள் ஆண் சகோதரர் ஒருவராவர். இவளுக்குச் சகோதரி கிடையாது. இவளுடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறோம். பூமியில் உயரமாயுள்ளதும் மேன்மையாயுள்ளதுமான அழகியப் பட்சிஸ்தலம் என்று சொல்லப்பட்ட திருக்கழுக்குன்றத்தில் வணிகர் குலத்தில் பெண்ணாகப் பிறந்து புகழும் பெருமையுமுள்ள ஒரு குடும்பஸ்தையாகி ;

21. அறமதி லிச்சை யுண்டாய் அந்தகன் நகரம் சென்று
பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தன ளென்று சொல்வோம்
வரும்ஜன்மம் விரிஞ்சி தன்னில் வருவளாம் வணிபன் வம்சம்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

**21.** தருமஞ்செய்வதில் ஆசையுடையவளாகி இறந்து எமபட்டணத்திற்குப்போய் பிரமதேவனால் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்தாள் என்று சொல்லுகிறோம். இவள் மறுஜன்மத்தில் விரிஞ்சிபுறத்தில் வணிகர் குலத்தில் வந்து பிறப்பாள். கறுப்பு மதயானை முகத்தையுடைய விநாயகக்கடவுளைப் பெற்றெடுத்தப் பார்வதியம்மையே ! கேட்பீராக.

22. பரிதியின் தசையி லேதான் பகருவோம் தந்தை கண்டம்
திருமகன் தன்னைப் பெற்ற தேவியவ் வாண்டில் மாள்வள்
உரைக்கிறோ மேழா மாண்டில் உறங்குவார் தந்தை தாயும்
வரும்ஜன்மம் தந்தைக் கேதான் வரைகிறோம் தாயே கேளும்.

**22.** ஜாதகருடைய தகப்பனாருக்குச் சூரியதசையில் மரணம் நேரிடும் என்று சொல்லுகிறோம். தகப்பனார் இறந்துபோகும் வருஷத்திலேயே ஜாதகருடைய தாயாரும் இறந்துபோவாள். ஜாதகருக்கு ஏழாவது வயதில் * தகப்பனாரும் தாயாரும் இறந்துவிடுவார்கள். தகப்பனாருடைய மறுஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறோம். பார்வதியம்மையே ! கேட்பீராக.

***குறிப்பு.—தகப்பனார் தாயார் மாரகங்கள்.**—ஜாதகருக்கு வயது ஷ 6 முதல் ஷ 7 முடியும் வரையிலும் சூரியதசையில் குருபுக்தி சனி புக்திகள் நடக்கின்றன. பிதுர்ஸ்தானமாகிய ஒன்பதிற்குடைய குரு ஆறுவது வீட்டில் கேதுவுடனும் சந்திரனுடனும் கூடி இருக்கின்றார். பிதுர்காரகனாகிய சூரியன் அங்காரகனுடனும் விரையாதிபதியாகிய புதனுடனும்

கூடி இருக்கின்றார். பிதுர்ஸ்தானாதிபதியாகிய குருவும் பிதுர்காரகனாகிய சூரியனும் ஒருவருக்கொருவர் ஆறு எட்டில் இருக்கின்றார்கள். இவைகள் தோஷத்தை விளைவிக்கக்கூடியவை. சந்திரனுக்கு ஒன்பதில் சனியும் சந்திரனுக்குப் பிதுர்ஸ்தானத்திற்குரியவரும் பிதுர் காரகனுமான சூரியன் எட்டில் விரையாதிபதியாகிய அங்காரகனுடனும் இருக்கின்றார். சந்திர னுக்கு ஒன்பதாவது வீட்டை ராகுவும் பார்க்கின்றார். இவைகயெல்லாம் பிதாவுக்குத் தோஷத்தை உண்டுபண்ணக்கூடியவையாகும். ஆகையால் ஜாதகருக்கு தகப்பனார் நீண்டகாலம் உயிருடன் இருக்கமாட்டார். மீன லக்கினத்திற்குச் சனி புதன் சூரியன் சுக்கிரன் இவர்கள் பராசரஹோரை ஜாதகசந்திரிகை பிரகாரம் மாரகாதிபர்கள் ஆகையால் சூரியதசையில் சனிபுக்தியில் பிதுர்மரணம் நேரிட அமைப்பு இருக்கிறது. மாதுர் லக்கினம் துலாம். இதைச் சனி அங்காரகன் கேது இவர்கள் பார்க்கின்றார்கள். துலாத்திற் குடைய சுக்கிரன் லக்கினத்திற்குப் பன்னிரண்டில் ராகுவுடன் மறைந்துபோய் இருக்கின்றார். சந்திரன் கேதுவுடன் இருக்கின்றார். சந்திர னுக்கு நான்கிற் குடையவரான குரு கேதுவுடன் கூடி இருக்கின்றார். மீனத் திற்கு ஆயுள் ஸ்தானாதிபதியாகிய சுக்கிரன் ராகுவுடன் கூடி இருக்கின்றார். இந்த ஆயுள் ஸ்தானத்தை அங்காரகனும் கேதுவும் பார்ப்பது பிரதிகூல மானது. சனி பார்ப்பது இந்த விதத்தில் அனுகூலமானது. ஆகையால் ஜாதகரின் மாதா வெகுகாலம் இருக்க அமைப்பு கிடையாது. துலாத்திற்கு மாரகாதிபதிகள் சூரியன் குரு (பராசரைஹோரை சில பதிப்புபிரகாரம்) அங்காரகன் ஆகின்றார்கள். சூரியன் அங்காரகனுடனும் கூடி இருக்கின்றார். சனி துலாத்திற்குப் பதினொன்றில் இருந்துகொண்டு மாதுர் லக்கினத்தை யும் பார்க்கின்றார். ஆகையால் சூரியதசையில் சனிபுக்தியில் மாதவுக்கு மாரகஞ் செய்ய அமைப்பு இருக்கின்றது. ஜன்மலக்கினத்திற்கு பிதுர்ஸ் தானமும் சந்திரனுக்கு மாதுர்ஸ்தானமும் ஒன்றாக நேரிடுவதைக் கவனிக் கவும். மாதுர்ஸ்தானாதிபதி மாதுர்காரகன் பிதுர்ஸ்தானாதிபதி இவர் களுக்குச் சம்மந்தம் இருப்பதையுங் கவனிக்கவும்.

23. சிறுபாக்கம் தன்னி லேதான் ஜனிப்பனும் ரெட்டி வமிசம்
பொருள்பூமி அதிக முண்டாய்ப் பெரிதான குடும்பி யாகி
உறைகுவா னென்று சொல்வோம் உரைத்தனம் மொழிகுன்றுது
அருமறை முடிவிலாடும் அம்பிகை யாளே கேளாய்.

23. சிறுபாக்கம் என்ற ஊரில் ரெட்டியாருடைய குலத்தில் ஜாதகருடைய தகப்பனார் மறுஜன்மத்தில் பிறப்பார். தனமும் நிலமும் அதிகமாக உடையவராகிப் பெரிய குடும்பஸ்தராகி வாழ்வார் என்று சொல்லு கிறோம். நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறிப்போகாமல் நடக்கும். அருமையான வேதங்களின் தீர்மானம் என்ற உப நிஷத்துக்களில் விளங்கு கின்ற பார்வதி யம்மையே! கேட்பீராக.

24. அன்பது எட்டு ஆண்டில் அணுகிய மகர மாதம்
இன்னவ னுடலமேகும் மியம்புவோ மிவன்பின் ஜன்மம்
பொன்முக ராற்றி னோரம் பேரூரில் வைசியச் சேயாய்
அன்னவ னுதிப்பா னாகும் அம்பிகை யாளே கேளாய்.

24. ஜாதகர் தனக்கு ஐம்பத்தெட்டாவது வயதில் தைமாதத்தில் * இறந்து இவருடைய தேகம் அழிந்துபோய்விடும். இவருடைய மறு ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறோம். பொன்முகராற்றின் கரையோரத்தில் ஒரு பெரிய ஊரில் வைசியகுலத்தில் ஆண் குழந்தையாய்ப் பிறப்பார் என்று சொல்லுகிறோம், பார்வதியம்மையே ! கேட்பீராக.

* குறிப்பு.—ஜாதகர் மரணம்—வயது ஞ 57-0-0 முதல் ஞ 58-0-0 முடியும் வரையிலும் குருதசையில் சந்திர அங்காரக புக்திகள் நடக்கின்றன. தைமாதத்தில் அங்காரகபுக்தி நடக்கின்றது. ஆயுள்பாவத்தை ஆராய்ச்சி செய்யுங்கால் லக்கினாதிபதியாகிய சந்திரன் ஆறில்மறைந்துவிட்டார். எட்டிற்குடைய சனி இரண்டில் குருபார்வையையும் ராகு பார்வையையும் அடைந்து இருக்கின்றார். சனி பகைவீட்டில் இருக்கின்றார். பத்திற்குடையவரான அங்காரகன் லக்கினத்தில் நீசமாக விருக்கின்றார். பத்தைக் குரு பார்க்கின்றார். லக்கினத்தில் நைஸர்கிக பாபிகளாகிய சூரியனும் அங்காரகனும் இருக்கின்றார்கள். புதனும் இருக்கின்றார். நைஸர்கிக சுபர்களாகிய குருவும் சுக்கிரனும் மறைந்துவிட்டார்கள். சந்திரனும் மறைந்துவிட்டார். எட்டைக் கேதுவும் சனியும் அங்காரகனும் பார்க்கின்றார்கள். ஆகையால் மணிகண்டகேரளம் அரிஷ்டகாண்டம் 18-ஆவது பாடல், பிரதி யரிஷ்டகாண்டம் 40-ஆவது பாடல், துய்யகேரளம் எட்டாம் பாவம் 4-ஆவது, 5-ஆவது பாடல்கள் பிரகாரம் ஜாதகருக்கு மத்திமாயுளில் பூர்ணயுளாகும். அஃதாவது 55⅓ முதல் 66⅔ஞ வரையிலும் ஆகும். குருதசை ஆறுவது தசையாக வருகிறது. ஆறுவது தசை குருதசையாக வந்தால் மாரகஞ்செய்யும் என்பது ஜாதகாலங்காரம் 975-ஆவது பாடல் பிரகாரமுள்ள ஒரு கொள்கையாகும். குருவிற்கு தனுசு சந்திர லக்கினாதிபத்தியம் வந்ததால் அந்த வீட்டைச் சார்ந்த தசையின் முற்பாதியில் மாரகஞ்செய்ய அதிகாரம் கிடையாது. கடகலக்கினத்திற்குப் பராசர ஹோரைப் பிரகாரம் புதன் சுக்கிரன் சனி இவர்கள் மாரகாதிபர்கள். குரு லக்கினாதிபதியான சந்திரனுடன்கூடி எட்டிற்குடையவரான சனியையும் மாரகாதிபதியான சுக்கிரனையும் பார்க்கின்றார். ஆகையால் குரு துய்ய கேரளம் எட்டாம் பாவம் 20-ஆவது பாடல் பிரகாரம் மாரகராகின்றார். அங்காரகன் மாரகாதிபதியாகிய புதனுடன்கூடி நீசமாகி லக்கினத்திலிருந்து கொண்டு எட்டைப் பார்ப்பதால் மாரகாதிபதி யாகின்றார்.

25. பிறந்திடுங் காலம் தன்னில் பூராடம் கடைப்பாதத்தில்
சிவந்தசுக் கிரனி ருப்புத் திரிதிய ஆண்டு மாகும்
உரைந்திடு திங்க ளொன்பான் உரைத்தனம் பூர்வ பாகம்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

25. ஜாதகர் ஜெனித்த காலம் பூராட நட்சத்திரத்தில் கடைசி பாதமாகிய நான்காவது பாதமாகும். அதற்குரிய சுக்கிர மகா தசையில் செல்லுப்போய் இருப்பு நின்ற வருஷம் மூன்றும் மாதம் ஒன்பதுமாம் என்று சொல்லுகிறோம். இவ்விதமாகப் பூர்வபாகமாகிய முதல்பாதத்தைச் சொன்னோம். கறுப்பு மதயானை முகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்தப் பார்வதியம்மையே ! கேட்பீராக.

26. ஆருண்டிலி லில்லம் வேறு அறைகிறோம் தாதை ஆஸ்தி
தீரமாய்ப் பாகம் ரண்டாய்ச் செப்புவோம் பால னுக்குப்
பாருக ளதிகம் சேர்க்கை பந்துவின் மதிப்புக்கொள்ளல்
கூறுவோம் பின்பால் சேதி கோமளி கேட்டி டாயே.

26. ஜாதகருக்கு ஆருவது வயதில் இவர் வேறே ஒரு வீட்டிற்குப் போய்விடுவார். தகப்பன் பாட்டனுர் இவர்களுடைய சொத்தில் இரண்டு பாகத்தில் ஒருபாகம் ஜாதகருக்கு வந்து சேரும். இவருக்கு நிலங்கள் அதிகமாக வந்துசேரும். பந்துக்கள் இவரை மதிப்பார்கள். மற்ற விஷயங் களைப் பின்னுல் பின்பாகத்தில் சொல்லுகிறோம். பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகம் 78

1. சந்திரன் ராகு மீனம் சல்லியன்[1] புதனும் வீணை[2]
பொன்[3]கோலில்[4] சேயும்[5] மேரு[6] புரவியோன்[7] அலவன்[8] புக்க
மந்தனும்[9] மான[10] தாக வண்டியும்[11] ஜனன மாக
இந்ததோர் பலன்க ளெவ்வாறு இயம்புவீர் முனியே நீர்தாம்.

| | | | |
|---|---|---|---|
| சந்திரன் ராகு | | | சுக்கிரன் புதன் |
| | இராசி சக்கரம் | | லக்கினம் சூரியன் |
| சனி | | | |
| அங்காரகன் | | குரு | கேது |

உத்தரட்டாதி 4-ஆம் பாதம். சனி தசை 1-2-0

1. சந்திரனும் ராகுவும் மீனத்திலும், சுக்கிரனும் புதனும் மிதுனத்திலும், குரு துலாத்திலும், அங்காரகன் தனுசிலும், சூரியன் கடகத்திலும், சனி மகரத்திலும் இருந்து ஜன்ம லக்கினம் கடகமானல் பலாபலன்கள் எவ்விதமாகவிருக்கும் என்பதை, முனிவரே ! நீர் சொல்லுவீராக.

**குறிப்பு.**—இந்த ராசிசக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரகநிலை பொருத்தமுடையதாகும்:—மேஷத்தில் புதனும், மிதுனத்தில் அங்காரகனும் கேதுவும், சிம்மத்தில் சனியும், கன்னியில் சூரியனும், விருச்சிகத்தில் சந்திரனும் குருவும், தனுசில் ராகுவும், மீனத்தில் புதனும் ஆகும். அங்காரகனும் சனியும் வக்கிரகதியில் இருக்கின்றார்கள்.

2. பிருகுவும் புகலு கின்றார் பிறந்தது மாண்பால் ஜன்மம்
வருமில்லம் கீழ்மேல் வீதி வாசலு உத்தர நோக்கம்
பெருவயி றப்பன் கீழ்ப்பால் பிரிதிவி தலமே யாகும்
முருகன்தன் கோஷ்ட முத்தரம் முக்கண்ண னருகில் தங்கும்.

---

[1] சுக்கிரன். [2] மிதுனம். [3] குரு. [4] துலாம். [5] அங்காரகன். [6] தனுசு. [7] சூரியன். [8] கடகம். [9] சனி. [10] மகரம். [11] கடகம்.

2. பிருகு மகரிஷி சொல்லுகின்றார் பிறந்த குழந்தை ஆண் குழந்தை ஆகும். பிறந்தவீடு கிழக்கு மேற்குத் தெருவில் இருக்கும். தெரு வாயிற்கால் வடக்குத்திக்கைப் பார்த்தாற்போல் இருக்கும். பெரிய வயிற்றையுடைய விநாயகக்கடவுளின் கோயில் கிழக்குத்திக்கில் இருக்கும். பிரிதிவிஸ்தலம் என்று சொல்லப்பட்ட காஞ்சீபுரம் பிறந்த ஊராகும். முருகக் கடவுளுடைய கோயில் வடக்குத்திக்கில் இருக்கும். பரமசிவனுடைய கோயில் அருகாமையில் இருக்கும்.

3. இன்னமும் பலதே வாசம் அரசர்கள் தென்பால் தங்கும்
சொன்னயிவ் வடையா ளத்துள் தோன்றுவான் தசம ஜன்மம்
அன்னவன் வைசியச் சேயாய் ஆயிரம் கோத்தி ரத்தில்
மன்னனும் வருவா னாகும் வரைகிறோம் குடும்பச் சேதி.

3. இன்னமும் அனேக தேவர்கள் தேசத்தார்கள் இந்தப்பட்டணத்தில் வாசஞ் செய்வார்கள். அரசர்கள் தெற்குத்திக்கில் இருப்பார்கள். இங்குச் சொல்லப்பட்ட அடையாளங்களுக்குள்ளுள்ளவிடத்தில் ஜாதகர் பத்தாவது கர்ப்பத்தில் பிறப்பார். இவர் வைசியகுலத்தில் ஆயிரம்கோத்திரம் என்னும் கோத்திரத்தில் வந்து பிறப்பாராகும். இவருடைய குடும்பத்தின் விஷயங்களைச் சொல்லுகிறோம்.

வேறு.

4. தந்தைகுணம் மாநிறத்தான் சமதேகத்தான்
சமர்த்தாக வார்த்தைசொல்வன் வணிபம் செய்வன்
சிந்தையினில் கபடமில்லான் ஜனசகாயன்
செய்நன்றி மறவாதான் தீர்க்க நெஞ்சம்
கந்தன்மேல் பத்தியுள்ளான் பூமி சேர்க்கான்
கட்டுரையான் மனைவியிஷ்டன் காம னொப்பான்
அந்தவன் பூசநாளாம் தேளின்[1] ராசி
அனுகுவான் துணைதோஷம் அறிவித் தோமே.

4. ஜாதகருடைய தகப்பனாரின் குணாதிசயங்களைப்பற்றிச் சொல்லுகிறோம். இவர் மாநிறமான சமமான தேகத்தையுடையவர். இவர் சாமர்த்தியமாக வார்த்தைகளைச் சொல்லுவார். வியாபாரஞ்செய்வார். மனத்தில் கள்ளம் வஞ்சனை இவைகள் இல்லாதவர். ஜனங்களுக்கு உதவியைச் செய்வார். பிறர் இவருக்குச்செய்த உதவியை மறந்துவிடாதவர். திடமான உறுதியான மனத்தை யுடையவர். முருகக்கடவுளின்மேல் பக்தியையுடையவர். நிலங்களைச் சேகரிக்கமாட்டார். பொய்வார்த்தைகளையும் புனைந்த வார்த்தைகளையும் சொல்லமாட்டார். மனைவியின்மேல் ஆசையையுடையவர். மன்மதனைப்போல அழகாகவிருப்பார். இவர் பூச நட்சத்திரத்தில் விருச்சிக ராசியில் பிறப்பார். இவருக்குச் சகோதரதோஷம் உண்டு என்று சொல்லுகிறோம்.

---

[1] விருச்சிகம்.

## வேறு.

5. மரமாட்டும் தொழிலுடையான் வருவோரை
ஆதரிப்பன் வெகுளி யாவன்
குருவுபதேசம் கொள்வன் குணமிரண்டு
வாயுநோய் குலவும் கொஞ்சம்
விரைவில்நடை செலவுசெய்வன் வெஞ்சினத்தை
வெளிக்காட்டாதான் விருந்தோர் நேயன்
கரமதனில் பிர்ம்மவரி காணுமென்றோம்
சகடுமுளான் கடந்தோர் புத்தி.

5. தகப்பனார் மரத்தைக் கடாவுதல் என்ற தொழிலைச் செய்பவ ராவார். தன்னிடம் வருபவர்களைக் காப்பாற்றுவார். கோபத்தையுடையவர். குருவிடத்தில் உபதேசத்தைப் பெற்றுக்கொள்ளுவார். நல்லகுணம் கெட்ட குணம் ஆகிய இரண்டுவிதமான குணங்களை யுடையவர். இவருக்குக் கொஞ் சம் வாயுரோகமிருக்கும். சீக்கிரமாகவும் வேகமாகவும் நடப்பார், செலவு செய்பவர். கடுமையான கோபத்தைப் பிறர் தெரிந்து கொள்ளும்படியாக வெளியில் காட்டிக் கொள்ள மாட்டார். விருந்தாளிகளிடத்தில் நேசமாக விருப்பார். தன்னுடைய உள்ளங்கையில் பிரம்மரேகை என்ற ஒருவிதமான ரேகையை யுடையவ ரென்று சொல்லுகிறோம்.

6. இந்நெறி யுடையா னுக்கு இவனு யுமே யுதிப்பா னாகும்
அன்னவன் குணத்தைக் கேண்மோ அழகுளான் சிவந்த மேனி
தன்சொலு மடக்க முண்டு தானிள மனத்தா னாகும்
அன்னிய ருறவு கொள்ளான் அடாவடி தன்னில செல்லான்.

6. இப்படிப்பட்ட குணங்களை யுடையவருக்கு இந்த ஜாதகர் பிறப் பாராகும். இவருடைய குணாதிசயங்களைச் சொல்லுகிறோம். கேட்பீராக. இவர் அழகானதும், சிவப்பானதுமான நிறமுடைய தேகத்தை யுடையவர். தன் னுடைய வார்த்தைகளை அடக்கமாகவும், சாந்தமாகவும் சொல்லுந் தன்மையை யுடையவர். இளகியதும் தயைக் குண முடையதுமான மனதையுடையவராவார். பிறருடைய சினேகதத்தை அடையக்கூடியவ ரல்ல. அநியாயமாகவும், முரட்டுத்தனமாகவும் நடந்து கொள்ளமாட்டார்.

7. தந்தையி னார்ஜிதத்தில் தானவன் வாசம் செய்யான்
கந்தன் மேல் விருப்பம் கொள்வன் கண்முகம் வசியமுள் [ளான்
அந்தவ னுத்தரத்தில் அணுகியே வாழ்வா னாகும்
விந்தையாய்ச் செட்டுச் செய்வன் விலைமாதர் மோகம் கொள்ளான்.

7. ஜாதகர் தன்னுடைய தகப்பனாருடைய சொத்தாகிய வீட்டில் வாசஞ் செய்யமாட்டார். முருகக் கடவுளின் மேல் பத்தியையுடையவர். ஜாதருடைய கண்களும் முகமும் பிறரை வசியஞ் செய்து கொள்ளும் படியானவைகளாகவும் கவர்ச்சிக்கும்படியான தன்மையை யுடையவை

வாகவுமிருக்கும். இவர் வடக்குத் திக்கில் போய் வாழ்வாராகும். ஆச்சரியமாச் வியாபாரஞ் செய்வார். பணத்திற்கு ஆசைப்பட்டுவருகின்ற ஸ்திரீகளாகிய தாசிகளின் மேல் காம ஆசை இல்லாதவராவார்.

8. பலருக்கும் பந்தி னர்க்கும் பரிந்துப சாரம் செய்வன்
நிலையதைக் காப்பா னாகும் நிதம்சீலன் பெருமை யுண்டு
தலம்தீர்த்தம் தோய்வா னாகும் சார்ந்திடு மாமி மூன்று
நலமதை யெவர்க்கும் செய்வன் நற்கரம் பத்ம ரேகை.

8. ஜாதகர் பலருக்கும், பந்துக்களுக்கும் முன்வந்து ஆசையுடன் உபசரணை உபகாரம் ஊழியம் இவைகளைச் செய்வார். தன்னுடைய அந்தஸ்தையும் தொழிலையும் காப்பாற்றிக்கொள்ளுவார். எப்பொழுதும் நன்னடக்கையும் நல்லொழுக்கமும். கீர்த்தியும் உடையவர். புண்ணிய ஸ்தலத்திலுள்ள தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்வார். இவருக்கு மூன்று மாமிமார்கள் இருப்பார்கள். எல்லோருக்கும் நல்லதையே செய்வார். தன்னுடைய அழகான நல்ல கையில் பத்மரேகை என்ற தாமரை ரேகையை உடையவர்.

9. சிலது நாள் வெளிதே சத்தில் சென்றுபின் உள்ளூர் சேர்வன்
விலகுநாள் சொல்லு மென்ன வித்தகனீரெட் டின்மேல்
குலவுவான் ஆறு றின்மேல் குடியினில் வாசம் செய்வன்
மலையிறை மகளே யாங்கள் வழுத்தின மொழிகுன்றாது.

9. ஜாதகர் வெளி தேசத்திற்குக் கொஞ்சநாள் போயிருந்து பின்னால் மறுபடியும் தன்னூருக்கு வந்து சேருவார். இவ்விதமாக நேருகின்ற காலத்தைச் சொல்லுவீரென்று கேட்க, பதினாறு வயதிற்குமேல் வெளியூருக்குப் போய் அவ்விடமிருந்து முப்பத்தாறுவது வயதிற்கு மேல் உள்ளூருக்குத் திரும்பி வந்து தன்வீட்டில் வாசஞ்செய்வார். இமய மலைக்கு அரசனாகிய பர்வதராஜனுடைய மகளாகிய பார்வதியம்மையே ! நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறிப்போகாமல் நடக்கும்.

10. அன்னியர் உதவி யாலே அவனுமே ஜீவிப் பானும்
பொன்பொருள் அலைச்சல் நேரும் புகழது ஏற்பா னாகும்
தன்னினத் தவரு மெச்ச ஜாதகன் வாழ்வா னாகும்
பின்னமில் லாத தேகி பிறர்குற்றம் புகலா னாமே.

10. ஜாதகர் பிறருடைய உதவியால் ஜீவனஞ்செய்வார். தனமும் சொத்துக்களும் உண்டாகும். திரிச்சல்களும் கஷ்டங்களும் உண்டாகும். இவருக்குக் கீர்த்தி உண்டாகாது. தன்னுடைய பந்துக்கள் இவரைப் போற்றும்படியான நிலையிலிருந்து வாழ்வாராகும். அவயவக் குற்றங்களும் பங்கமும் இல்லாத தேகத்தையுடையவர். அன்னியர்களின் மேல் குற்றத்தையும் பழியையும் சொல்லாதவ ராவார்.

11. தன்துணை தசமே தோன்றும் தவறிடும் கன்னி நான்கும்
அந்தவர் சிலவே துன்பம் அறிவிப்போம் பின்பால் சேதி
அன்னவன் துணைஆண் தோஷம் அறிவிப்பீர் முனியே நீர்தாம்
உன்னத மூன்றில் கேது உறைந்ததுமே சேயு [1] மாறில்;

11. ஜாதகருக்குச் சகோதரர்கள் பத்துப்பேர் பிறப்பார்கள். இவர்களில் நான்கு சகோதரிகள் இறந்துவிடுவார்கள். இருப்பவர்களில் சிலருக்குக் கஷ்டங்கள் நேரிடும். இவர்களுடைய விஷயங்களைப் பற்றிப் பின்னால் சொல்லுகிறோம். ஜாதகருடைய ஆண் சகோதரங்களுக்குத் தோஷமுண்டு என்று சொல்லுகின்றீரே! அதற்குக் காரணங்களை, முனிவரே! நீரே சொல்லுமென்று கேட்க, மூன்றாவது பாவத்தில் கேது வலுவாய் இருப்பதாலும், அங்காரகன் ஆறாவது வீட்டிலும்;

12. இருப்பதால் துணைஆண் தோஷ மியம்பினோம் முனியே கேளும்
திருமகன் மணத்தின் காலம் செபுவோ மூவெட் டாண்டில்
அறிவையும் உள்ளூர் கீழ்ப்பால் அணுகிடும் குணத்தைச் சொல்வேன்]
மருமமில் லாதா ளாகும் மாநிறம் கபடு மில்லாள்.

12. இருப்பதால் ஜாதகருடைய ஆண் சகோதரர்களுக்குத் தோஷத்தைச் சொல்லுகிறோம். முனிவரே! கேட்பீராக. ஜாதகருக்குக் கலியாணமாகுங் காலத்தைப் பற்றிச் சொல்லுகிறோம். இவருக்கு இருபத்துநான்காவது * வயதில் உள்ளூரிலேயே கிழக்குத் திக்கிலிருந்து மனைவி வந்து சம்பவிப்பாள். இவளுடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகிறேன். இரகசியத்தைத் தன் மனத்தில் வைத்துக்கொண்டிருக்க மாட்டாள். மாநிறமுள்ள தேகத்தையுடையவள். வஞ்சனை கள்ளம் இவைகளைத் தன்னுடைய மனத்தில் வைத்திருக்காதவளாவாள்.

* குறிப்பு:—விவாக காலம்—ஜாதகருக்கு வயது ஷ 23–0–0 முதல் 24–0–0 முடியும் வரையிலும் கேது தசையில் குருபுக்தி சனிபுக்திகள் நடக்கின்றன. கேது புதனுடைய வீட்டில் இருக்கின்றார். போகஸ்தானமும் நாலாவது வீடுமாகிய துலாத்திற்குடைய களத்திரகாரனாகிய சுக்கிரனுடன் புதன் கூடி இருக்கின்றார். புதனை ஒன்பதிற்குடைய குருவும் நாலாவது பாவத்திலிருந்து பார்க்கின்றார். சனி ஏழாவது பாவத்தில் களத்திரஸ்தானாதிபதியாகி போகக்காரனாகிய இராகுவால் பார்க்கப்பட்டிருக்கின்றார். ஆகையால் கேதுதசையில் சனிபுக்தியில் ஜாதகருக்கு விவாகம் நடக்கும் அமைப்பு இருக்கிறது.

13. தோகைபோல் சாய லொக்கும் சொல்லு முன கோபியாவள்
நாகரி கங்க ளுண்டு நாயகன் மனதுக் கேத்தோள்
பாகமாய்ப் பேச வல்லாள் பரிந்துப சாரம் செயவள்
ஊகையாள் பித்த தேகி உண்மையாம் மனத்தா ளாமே.

---

[1] அங்காரகன.

13. மனைவி மயிலைப் போல நடை நொடி பாவனையுள்ளவள். பேசு வதற்கு முன்னமே கோபத்தையுடையவள். நல்ல நாகரிகங்களை யுடையவள். தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற்போல நடந்துகொள்ளுவாள். பக்குவமாகவும் சாமர்த்தியமாகவும் பேசுஞ் சக்தி யும் திறமையுமுடையவ்ள். இவள் முன்னுக்கு வந்து ஆசையுடன் பிறருக்கு உபசரணை உதவி ஊழியம் இவைகளைச் செய்வாள். புத்திசாலி யானவள். பித்தமான தேகத்தையுடையவள். உண்மையாக நடந்து கொள்ளும்படியான மனத்தையுடையவளாவாள்.

14. வந்தபின் யோகம் வாய்க்கும் வயதுமே தீர்க்க மெய்தும்
சந்ததி உதிக்கில் தீதாம் சாற்றுவீ ரந்தச் சங்கை
மைந்தர்தாம் தோன்றி னூலு மதியுடன் ராகு கூட
இந்தவார் தோஷத் தாலே யியம்பினோம் புத்திர தோஷம்.

14. மனைவி புருஷனிடம் வந்து சேர்ந்த பிறகு யோக முண்டா கும். இவளுக்கு நீண்ட ஆயுளுண்டு. குழந்தைகள் பிறந்தால் அவை களுக்குக் கெடுதி உண்டாகும். இதற்குக் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்க, புத்திரஸ்தானாதிபதியாகிய அங்காரகன் ஆறுவது வீட்டி லும், சந்திரன் ராகுவுடன் கூடியும் இருப்பதால் புத்திர தோஷம் உண்டு என்று சொல்லுகிறோம்.

15. அத்திரி தடுத்துச் சொல்வார் அவனுக்குத் தாரம் ரண்டு
சுத்தமாய் நேரு மென்றோம் செப்புவீ ரந்தச் சங்கை
சத்தமன் சனியே யாகி சரத்தினி லிருப்ப தாலும்
வித்தகன் தனக்குத் தாரம் மேவிடு மிரண்டே யாக.

15. அத்திரி மகரிஷியானவர் மறுத்துச் சொல்லுகின்றார். ஜாதக ருக்கு இரண்டு மனைவிமார்கள் உண்டு. இந்த இரண்டு மனைவிகளும் நிச்சயமாய் வந்து சம்பவிப்பார்கள் என்று சொல்லுகிறோம். இதற்குக் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்க, ஏழிற்குடையவர் சனியாகி சர ராசி லிருப்பதால் ஜாதகருக்கு இரண்டு தாரங்கள் உண்டாகும்.

16. குறுமுனி புகலு கின்றார் கூறினோம் தாரம் ஒன்று
பிருகுக்கு அஞ்சில் பொன்னோன் பிறையது தசமம் தங்கக்
கரியவ னாட்சியாகக் கவிக்கேழில் சேயும் தங்க
மருவாது வேறு தாரம் மாமுனி தோஷத் தாலே ;

16. குறுமுனியாகிய அகஸ்திய மகாமுனிவர் சொல்லுகின்றார். ஜாதக ருக்கு ஒரே ஒரு தாரம்தான் என்று சொல்லுகிறோம். சுக்கிரனுக்கு ஐந்தா வது வீட்டில் குருவிருப்பதாலும்,சந்திரன் பத்தாவது வீட்டிலிருப்பதாலும், சனி ஆட்சியாயிருப்பதாலும், சுக்கிரனுக்கு ஏழாவது வீட்டில் அங்காரகன் இருப்பதாலும் இன்னொரு மனைவி வந்து நேராது. ஆனால் பெரிய முனீசுவரருடைய தோஷத்தால் ;

17. பிறக்கும் சேய் நசிக்கும் என்றேம் பேதை முன் ஜென்மம் தன்னில்
மருவிற்று வினைய நேகம் வரைகுவீர் அந்தச் சங்கை
திருமகள் பூர்வம் கேளாய் திருவானைக் காவல் தன்னில்
உறைந்தனள் வன்னிய சேயாய் உயர்வான குடும்பி யாகி ;

17. ஜாதகருக்குப் பிறக்கும் குழந்தைகள் இறந்து போய்விடும். மனைவிக்கு முன் ஜன்மத்தில் அனேக பாவங்கள் வந்து சம்பவித்தன. அந்தக் காரணங்களையும் பாவங்களையும் சொல்லுவீர் என்று கேட்க, மனைவியினுடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறேம். கேட்பீராக, திருவானைக்காவல் என்னும் க்ஷேத்திரத்தில் இவள் வணிகர் குலத்தில் பெண்ணாகப் பிறந்து மேன்மையான குடும்பஸ்தையாகி ;

18. வினையதைப் புகலக் கேண்மோ வித்தகி கொல்லை தன்னில்
சினமுள கருப்பன் வாசம் தொழுவராம் முன்னோ ரெல்லாம்
வனிதையும் பூசிக் காமல் மருமமாய் நின்ற ளென்றேம்
வினையான முனியின் சாபம் புக்கிற்றுப் பாவைக்கே தான்.

18. மனைவி வாழுகின்ற காலத்தில் இவளுக்கு வந்து சம்பவித்தப் பாவத்தைக் கேட்பீராக. இவள் தன்னுடைய வீட்டுப் புழக்கடையில் ஒரு கோபமுள்ளதும் கருவுகளைக்கலைக்கின்றதுமான முனீசுவரன் வாசஞ் செய்து கொண்டிருந்தார். இவளுடைய பெரியோர்களெல்லாம் அவரைத் தொழுது பூஜைசெய்து வந்தார்கள். இவள் இந்த முனீசுவரனைப் பூஜை செய்யாமல் கபடமாக இருந்து விட்டாள் என்று சொல்லுகிறேம். அதன் மேல் இந்த முனீசுவரன் சாபத்தைக் கொடுக்கவே இந்தச் சாபம் இவளை வந்து அடைந்தது.

19. கன்றுக்குப் பால்விடாமல் கறந்தன ளது வோர் தோஷம்
முன்னோர்க்குக் மகவு பாலை யுதவாத சாபம் ஒன்று
இன்னவார் தோஷம் தானுமி லகிடும் பாவைக் கேதான்
குன்றிய மனத்த ளாகிக் குழவிகள் முனியால் மாண்டு ;

19. இவள் கன்றுக்குட்டிக்குப் பாலைவிடாமல் எல்லாப் பாலையும் கறந்து விட்டாள். இது ஒரு தோஷமாக ஏற்பட்டுவிட்டது. முதல் குலத்தோராகிய பிராமணருடைய குழந்தைக்குப் பாலைக் கொடுக்காமல் இவள் இருந்து விட்டாள், இதுவுமொரு சாபமாக நேரிட்டு விட்டது இவ்விதமான தோஷங்கள் எல்லாம் இவளை வந்து அடைந்தன. இவள் நொந்தும், துன்பமுள்ளதுமான மனத்தையுடையவளானாள். இவளுடைய குழந்தைகள் முனீசுவரருடைய செயலால் இறந்து ;

20. மனமது வருத்த முற்று மறலியின் பதிக்குச் சென்று
வினையுள செக்கான் வமிசம் மேவுவா ளிந்த மாது
முனிசாப மிச் சென்மத்தில் மேவிடும் சுதர்கள் தோஷம்
சினமுள முனியின் சாபம் தீரவே கிரியை சொல்வீர்.

20. இவள் தன்னுடைய மனது நொந்து, இறந்து எமபட்டணத் திற்குப்போய் முன் ஜன்மத்திய பாவங்களுடன் செக்காடும் வைசியர் குலத்தில் வந்து பிறந்தாள். முன் ஜென்மத்திய முனீசுவரருடைய சாபம் இந்த ஜன்மத்தில் இவளை வந்து அடையும், அதனால் குழந்தைகளுக்குத் தோஷம் உண்டாகும், அந்தக் கோபமுள்ள முனீசுவரருடைய சாபத்தை நிவர்த்தி செய்ய ஒரு சாந்தியைச் சொல்லுவீர்.

21. கரும சாந்திகளும் செய்து காதலி பீஜம் தன்னை
இரணிய ரேக்கில் கீறியிவளுமே அணிவாளாகில்
திருகான பூமியின் சாபம் தீர்ந்திடும் சுதர்கள் விருத்தி
குறை யென்று செய்யாளாகில் குழவிகள் விருத்தி சேதம்.

21. இவள் கர்மசாந்திகளைச் செய்து பீஜாக்ஷரங்களை ஒரு பொன் ரேக்கில் எழுதித் தன் தேகத்தில் தரித்துக் கொள்வாளாகில் இந்தப் பூமியில் உண்டான வஞ்சனையான சாபம் நீங்கிவிடும். குழந்தை களும் பிறந்து விருத்தியடைவார்கள், இதில் ஒன்றும் பிரயோஜனம் இருக்காது என்று எண்ணி இதைச் செய்யாமல் இருந்துவிட்டால் குழந்தைகள் விருத்தியாகா.

22. சாந்தியின் விவரம் தன்னைச் சாற்றுவீர் முனியே நீர் தாம்
யேந்திய கலச மொன்பான் இருபிம்பம் சமித்து தானியம்
கூர்ந்துமே ஆடை சாற்றி கோமளி மூலம் தன்னை
யேந்திழைக் காடை சாத்தி இசைகுவாய் சாஸ்திரம் தான்.

22. சாந்தியைச் செய்கின்ற விவரங்களை முனிவே ! நீங்கள் சொல்லு வீர் என்று கேட்க, ஒன்பது கலசங்களைத் தயாரித்து சமித்துக்களையும் தான்யங்களையும் உபயோகப்படுத்தி இரண்டு பிம்பங்களை ஆடையுடன் அலங்கரித்து இவள் நல்ல ஆடைகளை உடுத்திக்கொண்டு மூலாதாரத்தை உபயோகித்துச் சாஸ்திரங்கள் பிரகாரம்

23. அக்கினி வளத்தி யேதான் சத்தியை அபிஷேகித்து
தக்க பின்னுளில் சத்தி பூசையால் சகஸ்திரம் சொல்லி
மைக்குழல் மாதணிந்து மங்கள வார நோன்பு
முக்கிய மாண்டு கொள்ள முனிதோஷம் விலகியேதான்.

23. அக்கினிகுண்டம் ஒன்றை வளர்த்தி அபிஷேகம் செய்து பிறகு சக்தியைப் பூஜை செய்து சகஸ்திரநாமங்களைச் சொல்லி அணிந்து கொள்ளுவாளாகில் செவ்வாய்க்கிழமை விரதம் ஒரு வருஷம் இருந்தால் அந்த மூனீசுவரருடைய சாபம் நீங்கி.

24. சுதர்களும் வினையால்ஆணொன்று தோகையு மிரண்டு தீர்க்கம்
இது நிற்க உதித்தோன் பூர்வம் யியம்புவோ மினிமேலாக
பதியினிலுயர்வதான பர்வத குன்ற நாட்டிலே தான்
நதிகுல மதனி லுதித்து நாயகி மதலை யுண்டாய்.

24. ஒரு ஆண்குழந்தையும் இரண்டு பெண் குழந்தைகளும் இவள் செய்த சாந்தியால் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள், இது இப்படி இருக்க, இனிமேல் ஜாதகருடைய முன் சென்மத்தைப்பற்றி சொல்லுகிறோம், பூமியில் உயரமாயிருக்கின்ற மலைகளும் குன்றுகளும் உள்ள தேசத்தில் கங்கைகுலம் என்கிற வேளாளர் குலத்திற் பிறந்து மனைவியையும் மக்களையும் உடையவராகி

25. வாழ் நாளில் வினையைக் கேண்மோ வளவது துணைக்குப் பாகம்
தாழ்படயீன்றுனென்றோம் சாற்றுவான் துணைவர் தானும்
ஆழியில் பின் சென்மத்தில் அனுகாது துணை ஆணும் தானும்
வாழிடம் விட்டு நீங்கி மறு நகர் வன வாசங்கள்.

25. ஜாதகர் வாழுகின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்தப் பாவத்தைக் கேட்பீராக. இவர் தன்னுடைய சகோதரனுக்குப் பங்கு பாகத்தில் பாகத்தைக் குறைவாகக் கொடுத்தார் என்று சொல்லுகிறோம், அதன் பேரில் சகோதரன் சொல்லுகின்றான், உனக்குப் பின் ஜென்மத்தில் ஆண் சகோதரம் இருக்காது. வசிக்கின்ற விடத்தை நீ விட்டுவிட்டு இன்னொரு பட்டணத்திற்கு சென்று

26. செல்லு வாயிதுவுமன்றிச் சுதர்களும் தோஷ மெய்தும்
நில்லாது துணைமனைக்கு நின் சாதி உதவி யின்றி
அல்லலாய் வாழ்வாய் நீயும் அறிவித்தான் துணைவனுந்தான்
புல்கிற்று அந்தத் தோஷம் புதல்வனு மந்தியத்தில்.

26. போய்விடுவாய், இதுவுமல்லாமல் உன்னுடைய குழந்தைகளுக்குத் தோஷங்கள் நேரிடும், உன்னுடைய மனைவிக்கும் சகோதரன் உயிருடன் இருக்கமாட்டார் *"உன்னுடைய ஜாதியார் உனக்கு உபகாரஞ் செய்யமாட்டார்கள், நீ கஷ்டத்துடன் வாழக்கடவாய்" என்று சகோதரன் முன் ஜென்மத்தில சொன்னார், அந்தச் சாபம் இவரை வந்த அனுகியது, இவர் முன் ஜென்மத்தின் கடைசி காலத்தில்

* குறிப்பு :—மனைவிக்குக் கூட சகோதரர்கள் இருக்கமாட்டார்கள் என்று இருபத்தெட்டாவது பாடலிலும் சொல்லி இருப்பதைக் கவனிக்கவும்.

27. குடும்பமும் குறைவு நேர்ந்து அந்தகன் பதிக்குச் சென்று
அடவுடன் பிரமன் லக்கம் அணுகுவானிந்த பாலன்
விடம்போலே ஞாதி சாபம் மேவிடு மிச்சென் மத்தில்
தடமது விட்டு நீங்கும் தனமது காணு ருகும்.

27. இவருடைய குடும்பத்தில் குறைவுகளும் கஷ்டங்களும் உண்டாகி இறந்து எமப்பட்டணத்திற்குப் போய் பிரமதேவனால் பிரம லிபியுடன் எழுதப்பட்டு இவர் இந்த ஜென்மத்தில் வந்து பிறப்பார். விஷத்தைப் போலப் பங்காளியின் சாபம் இந்த ஜென்மத்தில் இவரை வந்து அடையும். இவர் தன்னுடைய வீட்டையும் இடத்தையும் விட்டு வெளியே போய்விடுவார். இவருக்குத் தனமும் இருக்காது.

28. பாரியும் துணைகள் காணுள் பாலர்கள் தோஷ மெய்தும்
வேறூரில் வாச மெய்தும் விளம்புவோ மிவன்தாய்ச் சேதி
கூறுவாள் சுகமாய் வார்த்தை குலமதிப் புடைய ளாகும்
காரிழை பாட்டாளி யாகும் கனத்தபுத் திகளு மேற்பள்.

28. ஜாதகருடைய மனைவிக்கும் சகோதரர்கள் இருக்கமாட்டார் கள். குழந்தைகளுக்கும் தோஷங்கள் உண்டாகும். ஜாதகர் வெளியூரில் வாசஞ் செய்வார். இனிமேல் ஜாதகருடைய தாயாரின் விஷயங்களைப் பற்றிச் சொல்லுகிறோம். அவள் இனிமையாக வார்த்தைகளைச் சொல்லுவாள். பந்துக்கள் இவளை மதிக்கும்படியான நிலையிலிருப்பாள். இவள் கஷ்டப்பட்டு வேலை செய்யக்கூடியவள். மேண்மையான உயர்ந்த புத்தியையும் அறிவை யும் உடையவள்.

29. தன்துணை ஆண்பால் ரண்டு தையலு மொன்றே யாகும்
பிந்தியும் சிலது துன்பம் பேசுவோ மிவன்தன் பூர்வம்
கந்தன்வாழ் தோகை தன்னில் கலந்தனள் ரெட்டி வமிசம்
நிந்தைக ளில்லா தாகிநீத்தோர்க்கு அன்ன மீந்து.

29. தாயாரின் சகோதரர்களில் ஆண் இருவரும், பெண் ஒருத்தியும் ஆகும். இவளுக்குப் பின்னுல் கொஞ்சங் கஷ்டங்கள் உண்டாகும். இவ ளுடைய முன்ஜன்மத்தைப்பற்றி சொல்லுகிறோம். முருகக்கடவுள் தோன்றி யுள்ள மயில் என்ற மைலத்தில் ரெட்டியாருடைய குலத்தில் பிறந்தாள். பாவம், பழி, அபவாதம் இவைகளில்லாதவளாக விருந்து உலகப்பற்றை விட்டுவிட்டவர்களாகிய பரதேசிகளுக்குச் சாப்பாடு போட்டு;

30. மறலியின் பதிக்குச் சென்று மறையவன் வரையப் பட்டுத்
திருகான செக்கான் வமிசம் செனித்தன ளென்று சொல்வோம்
வரும்சென்மம் புலியூர் தன்னில் வருகுவாள் சைவச் சேயாய்க்
கரிமத வானை பெற்றக் காதலி கேட்டி டாயே.

30. இறந்து எமப்பட்டணத்திற்குப் போய் பிரமதேவனுல் பிரம லிபியுடன் எழுதப்பட்டுச் செக்காடும் செட்டியார் குலத்தில் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்தாள் என்று சொல்லுகிறோம். இவள் மறு ஜன்மத்தில் புலியூரில் சைவகுலத்தில் பிறப்பாள். கறுப்பான மத யானையின் முகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதி யம்மையே! கேட்பீராக.

31. பூர்வமாம் தந்தைக் கேதான் புகலுவோம் பட்சி தன்னில்
தீரமாய் வன்னிய சேயாய் ஜெனித்துமே வாழுந் நாளில்
காரிழை ஏழை பேரில் கலக்கமாய் வார்த்தை சொல்லி
ஊரைவிட் டோட்ட லுற்றுன் உரைக்கிறுள் மாது தானும்.

31. ஜாதகருடைய தகப்பனுரின் முன் ஜென்மத்தைப் பற்றிச் சொல்லு கிறோம். இவர் பட்சி ஸ்தலமாகிய திருக்கழுக்குன்றத்தில் வலுவான

ஒரு வன்னியர் குலத்தில் ஆணாகப் பிறந்து வாழ்கின்ற காலத்தில் இவர் ஓர் வழை ஸ்திரீயின் மேல் பழியான வார்த்தைகளைச் சொல்லி அவளை ஊரைவிட்டுத் துரத்திவிட்டார். அதன்மேல் அவள் சொல்லியதாவது.

32. மறுஜன்மம் தோன்றியேதான் அண்ணன்தம் பிகளு மின்றி
அரிவையர் துணைவரி ன்றி அலைச்சலாய் குடும்பியாகித்
திருகாக வாழ்வாய் நீயும் செப்பிளு ளந்த மாது
உறைந்தது அந்தத் தோஷம் உத்த மனந்தியத்தில்;

32. நீ மறு ஜன்மத்தில் பிறந்து உனக்கு அண்ணனும் தம்பிகளும் இல்லாமலும் பெண் சகோதரங்களும் இல்லாமலும் திரிச்சலும் கஷ்டங்களும் உடைய குடும்பஸ்தராகி துன்பத்துடனும் நீ வாழக்கடவாய். என்று அந்த ஸ்திரீ சொன்னாள். அவளுடைய அந்தத் தோஷமானது தகப்பனாரை வந்து அடைந்தது. இவர் தன்னுடைய கடைசி காலத்தில்.

33. தந்தமும் பிணியு மாகிச் சண்டன்தன் பதிக்குச் சென்று
முந்திய பிரமன் லக்கம் மேவிளு னிக்கு லத்தில்
தன்துணை தோஷ மெய்தும் சலிப்பாக வாழ்வா ளுகும்
பிந்திய ஜன்மம் சொல்வோம் பேதையே கேட்டி டாயே.

33. பல் நோய் உடையவனாகி இறந்து எமபட்டனத்திற்குப் போய் மேன்மையான பிரமதேவனால் பிரம லிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜாதியில் வந்து பிறந்திருக்கின்றார். இவருக்குச் சகோதரர்கள் தோஷத்தை யுடையவர்களாவார்கள். அஃதாவது இறந்துவிடுவார்கள். துக்கத்துடன் வாழ்வாராகும். இவருடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறோம். பார்வதியம்மையே! கேட்பீராக.

34. ஆலங்கா டதற்குக் கீழ்ப்பால் அணுகிய பேரூர் தன்னில்
ஏலவே யிக்கு லத்தில் லெய்துவா னென்று சொல்வோம்
ஞாலம் மேல் பதின்மூன் றுண்டுள் நமன்பதி செல்வா ளுகும்.
சாலவே யிருபா னென்பான் தாயவள் மரிப்பாளாமே

34. தகப்பனார் திருவாலங்காட்டிற்குக் கிழக்குத் திக்கிலுள்ள ஒரு பெரிய ஊரில் இந்த ஜன்மத்தில் உதித்த குலத்திலேயே, அஃதாவது வைசியர் ஜாதியிலேயே பிறப்பார் என்று சொல்லுகின்றோம். இவர் ஜாதகருக்குப் பதின்மூன்றுவது வயதிற்குள்ளாகவே* இறந்து எமபட்டணத்திற்குப்போய் விடுவார். தாயானவள் ஜாதகருக்கு இருபத்தொன்பதாவது வயதில் † இறந்து விடுவாள்.

* குறிப்பு.—தகப்பனார் மரணம்—ஜாதகருக்கு வயது ஷ 12–0–0 முதல் ஷ 13–0–0 முடியும் வரையிலும் புதன்தசையில் ராகு புக்தி நடக்கின்றது. பிதுர்லக்கினம் மீனம். இதற்கு பராசரஹோரை ஜாதக சந்திரிகை இவைகளின் பிரகாரம் புதன் மாரகாதிபதி. இவர் மீனத்திற்கு எட்டிற்குடையவராகிய சுக்கிர னுடன் கூடியிருக்கின்றார். ஆகையால் ஜாதக சந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரமும் துய்யகேரளம் எட்டாவது பாவம்

20-ஆவது பாடல் பிரகாரமும் புதன் மாரகாதிபதி ஆகின்றார். ராகு பிதுர் ஸ்தானத்திலேயே இருக்கின்றார். ஆகையால் புதன்தசையில் ராகு புக்தி யில் பிதாவுக்கு மாரகஞ் செய்ய அமைப்பு இருக்கின்றது.

† (2) **மாதுர் மரணம்** .—மாதுர் லக்கினமாகிய துலாத்திற்குச் சூரியனும் குருவும் மாரகாதிபதிகள். வயது ஷூ 28-0-0 முதல் ஷூ 29-0- முடியும் வரையிலும் சுக்கிரதசையில் சுக்கிர சூரிய புக்திகள் நடக்கின்றன. துய்யகேரளம் எட்டாம் பாவம் 14-ஆவது பாடல் பிரகாரம் சுக்கிரன் எட்டிற்குடையவரானதால் மாரகாதிபதியாகிறார். ஆகையால் சுக்கிரதசை யில் சூரியபுக்தியில் மாதாவுக்கு மரணமேற்படும்.

35 அறுபது எட்டு ஆண்டில் ஐப்பசி மாதம் தன்னில்
திருமக னுடலம் ஏகும் செப்புவோ மிவன்பின் ஜன்மம்
உரையூரில் சைவச் சேயாய் உதிப்பானு மென்று சொல்வோம்
பெருவயி றோனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

35. ஜாதகருக்கு அறுபத்தெட்டாவது வயதில் ஐப்பசி மாதத் தில் * மரணம் நேரிட்டு அவருடைய தேகம் அழிந்துவிடும். இவருடைய மறு ஜன்மத்தைச் சொல்லுகிறோம். இவர் உரையூரில் சைவ குலத்தில் ஆண் குழந்தையாகப் பிறப்பார் என்று சொல்லுகிறோம். பெரிய வயிற்றை யுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்தப் பார்வதியம்மையே ! கேட்பீராக.

* **குறிப்பு.—ஜாதகர் மரண விஷயம்**—ஜாதகருக்கு வயது ஷூ 67-0-0 முதல் ஷூ 68-0-0 முடியும் வரையிலும் அங்காரக தசை யில், சூரிய புக்தியும் சந்திர புக்தியும் நடக்கின்றன. ஐப்பசி மாதத்தில் சூரிய புக்தி நடக்கிறது. கடக லக்கினத் திற்குப் புதன் சுக்கிரன் சனி இவர்கள் பராசர ஹோரை ஜாதக சந்திரிகை பிரகாரம் மாரகாதிபதி ஆகின்றார்கள். அங்காரகன் ஆறுவது பாவத்தில் இருந்து கொண்டு லக்கினாதிபதியாகிய சந்திரனைப் பார்க்கின்றார். இவரே பத்திற் குடையவருமாக இருக்கின்றார். மேலும் மாரகாதிபதிகளாகிய புதன் சுக்கிரன் இவர்களைப் பார்க்கின்றார். துய்யகேரளம் எட்டாம் பாவம் 14-ஆவது பாடல் பிரகாரமும் ஜாதக சந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரமும் அங்காரகன் மாரகாதிபதி ஆகின்றார். சூரியன் இரண்டிற்குடையவராய் லக்கினத்தில் இருந்துகொண்டு எட்டிற்குடைய சனியைப் பார்க்கின்றார். ஆகையால் சூரியனுக்கும் மாரகஞ் செய்ய அமைப்பு இருக்கிறது. (மார காதிபதியுடன் சம்மந்தப்பட்டவர் கொல்லுவார் என்பதில் " சம்மந்தம் " என்பது கூடுவதும் பார்ப்பதும் ஆகும்.)

36. பாரியுமிவன்பின் னாலே பகருவோ மார கங்கள்
கூறுவோ மிவன்பின் ஜன்மம் குற்றால நகரம் தன்னில்
காரிழை க்ஷத்திரிய சேயாய்க் கலப்பளா மென்று சொல்வோம்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

36. ஜாதகருடைய மனைவிக்கு இவருக்குப் பின்னாலே மரணம் நேரிடும். இவளுடைய மறுஜென்மத்தைப் பற்றிச் சொல்லுகிறோம்.

குற்றுலம் என்ற பட்டணத்தில் இவள் க்ஷத்திரிய குலத்தில் பெண் குழந்தையாய்ப் பிறப்பாள் என்று சொல்லுகிறேம். ஆறு பெரிய முகங்களை யுடைய முருகக்கடவுளைப் பெற்றெடுத்தப் பார்வதியம்மையே! கேட்பீராக.

37. ஜாதகன் பொதுயோ கத்தைச் சாற்றுவோம் வணிபம் செய்வன்
காதியும் பின்னு லேற்பன் களைத்தோர்க்கு அன்ன மீவன்
பாதியின் வயது மேலாய்ப் பாக்கியம் சேர்ப்பா னாகும்
தீதிலாக் குணத்தானுகும் சேர்ந்தவர் தம்மை காப்பன்.

37. ஜாதகருடைய பொதுவான யோகத்தைப் பற்றிச் சொல்லுகிறேம். இவர் வியாபாரம் செய்வார். பின் வயதில் பெருமையை அடைவார். இளைப்பை அடைந்தவர்களுக்குச் சாப்பாடு போடுவார். பாதி வயது சென்ற பிறகு தனத்தைச் சேகரிப்பார். குற்றமில்லாததும், கெடுதலைச் செய்யாததுமான, குணத்தையுடையவராவார். தன்னை வந்தடைந்தவர்களைக் காப்பாற்றுவார்.

38. வறுமைபின் வயதில் காணுன் வணிபங்கள் பெருக்கம் செய்வன்
திருமகன் ஜனன காலம் சனிதிசை ஆண்டு ஒன்றும்
மருவிடும் திங்கள் ரண்டும் வரைந்தனம் பூர்வ பாகம்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

38. ஜாதகர் தன்னுடைய ஆயுளின் பின் பாகத்தில் கஷ்டங்களையும் தரித்திரத்தையும் அடையமாட்டார். வியாபாரங்களை அதிகமாகச் செய்து விருத்தியாக்குவார். இவர் பிறந்த காலத்தில் சனி மகா தசை இருப்பு வருஷம் ஒன்றும் மாதங்கள் இரண்டும் ஆகும். இவ்விதமாகப் பூர்வபாகமாகிய முதல் பாகத்தைச் சொன்னேம். அருமையான வேதங்களின் முடிவு என்கிற உபநிஷத்துக்களில் விளங்குகின்ற பார்வதிம்மையே! கேட்பீராக.

## ஜாதகம் 79

1. சந்திரன் மேட மாகச் சனிகேது சாடி[1] யாக
மந்திரி[2] நந்தி[3] யாக மங்கலன்[4] தேள[5] தாகப்
புந்தியும்[6] ராகு சீயம்[7] புகர்[8] வண்டி[9] பானு[10] கன்னி
வந்தது பரணி ரண்டாம் பாதமும் கடகம் ஜன்மம்,

| | சந்திரன் | குரு | |
|---|---|---|---|
| சனி கேது | இராசி சக்கரம் | | லக்கினம் சுக்கிரன் |
| | | | புதன் ராகு |
| | அங்காரகன் | | சூரியன் |

பரணி 2-ஆம் பாதம். சுக்கிர தசை ஞூ 13-8-0.

1. சந்திரன் மேஷத்திலும், சனி கேது கும்பத்திலும், குரு ரிஷபத்திலும், அங்காரகன் விருச்சிகத்திலும், புதன் ராகு சிம்மத்திலும், சுக்கிரன் கடகத்திலும், சூரியன் கன்னியிலும், ஜன்ம லக்கினம் கடகமாகவும் இருந்து ஜன்ம நட்சத்திரம் பரணி இரண்டாம் பாதமாகவிருக்கப், பிறந்த ஜாதகருக்கு ;

**குறிப்பு.**—இந்த ராசிச் சக்கர அமைப்பிற்குப் பின் வரும் அம்சைச் சக்கர கிரகநிலை பொருத்த முடையதாகும். ரிஷபத்தில் குருவும், மிதுனத்தில் ராகுவும், கன்னியில் சந்திரனும் புதனும், துலாத்தில் சனியும், தனுசில் கேதுவும், மகரத்தில் சூரியனும், மீனத்தில் அங்காரகனும் சுக்கிரனும் ஆகும். சனி வக்கிரமாக விருக்கின்றார்.

2. சொல்லுவீர் பலனை யென்று சுந்தரி கேட்கும் போது
புல்குவார் பராசர் தாமும் புறந்திடு மாண்பால் ஜன்மம்
இல்லமும் வடதென் வீதி இந்திரன் வாடை யாகும்
செல்லது பூர்வ இல்லம் சேத்திரம் வாடை யாகும்.

---

[1] கும்பம். [2] குரு. [3] ரிஷபம். [4] அங்காரகன். [5] விருச்சிகம். [6] புதன். [7] சிம்மம். [8] சுக்கிரன். [9] கடகம். [10] சூரியன்.

2. பலாபலன்களைச் சொல்லுவீரென்று பார்வதியம்மையார் கேட்கும் போது பராசர முனிவர் சொல்லுகின்றார். பிறக்குங் குழந்தை ஆண் குழந்தையாகப் பிறக்கும். பிறந்த வீடு வடக்குத் தெற்குத் தெருவில் கிழக்கு வாடையில் இருக்கும். அது பழைய வீடாகும். அது வீடுகள் வாடையாக விருப்பதில் இருக்கும்.

3. இந்திர நகர மொப்பா மிப்பாலன் சேஷ்ட னாகும்
தந்தையின் தாயின் யோகம் சகோதரர் களத்திர புத்திரர்
முந்திய ஜன்மம் யாவும் உரைக்கிறே மிந்நூல் தன்னில்
தந்தியை வளர்த்த எங்கள் தயாபரி கேட்டி டாயே.

3. பிறந்த ஊர் தேவேந்திரப் பட்டணத்தைப் போல விருக்கும். ஜாதகர் ஜேஷ்ட குமாரனாக விருப்பார். தகப்பனார் தாயார் இவர்களுடைய யோகங்களையும், சகோதரர்கள் மனைவி குழந்தைகள் இவர்களுடைய யோகங்களையும், முன் ஜன்மம் ஆகிய இவைகளைப்பற்றியும் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகிறோம். யானை முகத்தையுடைய விநாயக கடவுளை வளர்த்துக் காப்பாற்றிய கிருபையுடைய எங்களுடைய கடவுளாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

4. தந்தையின் துணையாண் நான்கு சத்திமார் மூவ ராகும்
தந்தையின் சேதி கேளாய் சிவந்தமெய் யூக சாலி
தன்மனை தன்னால் யோகம் தடமது மில்லா னாகும்
தன்தனம் சேர்ப்பா னாகும் தைரிய மனத்தா னாகும்.

4. ஜாதகருடைய தகப்பனாரின் சகோதரர்களில் நான்கு ஆண் சகோதரங்களும் மூன்று பெண் சகோதரங்களும் இருப்பார்கள். தகப்பனாருடைய விஷயங்களைப்பற்றிச் சொல்லுகிறோம் கேட்பீராக. இவர் சிவப்பு நிறமுள்ள தேகத்தை யுடையவர். நுட்பமான அறிவுடையவர். தன்னுடைய மனைவியால் இவருக்கு யோகமுண்டாகும். இவர் வீடு இல்லாதவராவார். தான் சுயார்ஜிதமான தனத்தைச் சேகரிப்பார். தைரியமான மனதை யுடையவராவார்.

5. இருவிதக் கல்வி கற்ப னிடரென்றோர்க் குதவி செய்வன்
பெரும்புத்தி யுடைய னாகும் பிதுராஸ்தி காணா னாகும்
தரைபின்னால் சேர்ப்பா னாகும் சலத்தொழில் வணிபம் செய்வன்
அறுமுகன் பத்தி கொள்வன் அல்பபுத் திகளும் கொஞ்சம்.

5. தகப்பனார் இரண்டு விதமான வித்தையைப்படிப்பார். கஷ்டத்தை அனுபவிக்கின்றோம் என்று சொல்லுகிறவர்களுக்கு உபகாரஞ் செய்வார். மேன்மையான புத்தியையும் பெருந்தன்மையையும் உடையவர். பிதுர் சொத்து இல்லாதவராவார். இவர் நிலங்களைப் பின்னால் சம்பாதித்துச் சேகரிப்பார். ஜலசம்மந்தமானத் தொழிலையும் வியாபாரத்தையுஞ் செய்வார். ஆறுமுகக் கடவுளாகிய முருகக் கடவுளின் பேரில் பக்தியை யுடையவர். கொஞ்சம் அற்பமான புத்தியும் இருக்கும்.

6 லாகிரித் தொழிலும் செய்வன் நல்லோர்க்கு நல்ல னுவன்
தோகையின் வர்க்கத் தாரால் சுதனுமே ஜீவிப் பானும்
பாகமாய்ப் பேசு வானும் பாரபட் சங்களும் பேசான்
நாகம்போல் கோபம் சாந்தம் நற்சுக புசிப்பு முள்ளான்.

6. வெறியை உண்டுபண்ணக் கூடிய வஸ்துக்களாகிய கள், சாராயம், பிராந்தி, கஞ்சா, பீர் இவைகள் சம்பந்தமானத் தொழிலைச் செய்வார். நல்லவர்களுக்கு நல்லவராகவிருப்பார். தன்னுடைய மனைவியின் பந்துக்கள் மூலமாக இவர் ஜீவனஞ் செய்வார். பக்குவமாகவும் சாமர்த்தியமாகவும் பேசுவார். பாரபட்சங்களுடையவராய் ஒருவர் பக்கமாகவும் ஒருவர் சார்பாக வும் மற்றொருவருக்குப் பிரதிகூலமாகவும் பேசமாட்டார். பாம்பைப்போல் இவருக்குக் கோபம் சீறிவரும். உடனே அஃது அடங்கித் தணிந்துவிடும். நல்ல சுகமான போஜனங்களைச் சாப்பிடுபவராவார்.

குறிப்பு.—5-ஆவது பாடலில் "சலத் தொழில்வணிபம்" என்று சொல்லி இருப்பதால் ஜலரூபமான லாகிரி வஸ்துக்களில் முக்கியமாக வியா பாரம் செய்வார். ஆகையால் அபினி இராது.

7. முன்னவ னிருந்த ஜன்மம் மொழிகிறேம் பனங்காட் டூரில்
துன்மதி வைசியச் சேயாய் ஜனித்துமே செட்டுச் செய்து
தன்மனை மதலை யுண்டாய்த் தான்வாழ்நாள் வினையைக்கேண்மோ
பின்னோர்க்குப் பொருளைத் தந்து பூமியைப் பறித்துக் கொண்
டான்.]

7. தகப்பனாரின் முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறேன். இவர் பனங்காட்டூரில் நிந்தையையுடைய வைசியராகப் பிறந்து வியாபாரஞ் செய்து தனக்கு மனைவி மக்கள் இவர்களை உடையவராகி வாழுகின்ற காலத் தில் இவருக்கு வந்து சம்பவித்தப் பாவத்தைச் சொல்லுகிறேம். கேட்பீராக. இவர் தாழ்ந்த ஜாதியாருக்குக் கொஞ்சமாகப் பணத்தைக் கொடுத்து அவர் களுடைய நிலங்களை அபகரித்துக்கொண்டார்.

8. தனமிலா ஏழை யோர்கள் சாற்றுவார் சாபம் தானும்
தனமது அல்ப மீந்தும் தனமதைப் பறித்த பாவி
இனிவரும் ஜன்மம் தன்னி லில்லமு மில்லா தாகி
வனவாச மாக வாழ்வாய் வரைந்துமே தெருத்தூள் விட்டாள்.

8. பணமில்லாத ஏழைமக்கள் சாபத்தை இவருக்குக் கொடுக் கின்றூர்கள். கொஞ்சமாகப் பணத்தைக் கொடுத்து மிகுதியான பணத்தை அபகரித்துக் கொண்ட பாவியாகிய உனக்கு மறுஜன்மத்தில் வீடு இல்லாமல் வனவாசமாகவிருந்து வாழ்வாய் என்று சொல்லித் தெருவிலுள்ள மண்ணை எடுத்துத் தூவினூர்கள்.

9. அந்ததோர் சாபம் தானும் அணுகிற்று அவனுக் கேதான்
அந்திய காலம் தன்னில் அறுமுகன் பத்தி யாகித்
துன்காலன் நாடு சென்று சிரநான்கோன் வரையப் பட்டு
வந்தவ னென்று சொல்வோம் மருவிடு முன்னூழ்ச்சாபம்.

9. ஜாதகருடைய தகப்பனுரை அந்தச் சாபம் வந்து அணுகிற்று. முன் ஜன்மத்தில் தனக்குக் கடைசி காலத்தில் இவர் ஆறுமுகங்களையுடைய முருகக் கடவுளின் மேல் பக்தியையுடையவராகி இறந்து கெட்ட எம பட்டணத்திற்குப் போய் நான்கு சிரசுகளை யுடையவரான பிரமதேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இவர் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றார் என்று சொல்லுகிறோம். முன் ஜன்மத்திய சாபமும் பாவமும் இவரை இந்த ஜன்மத்தில் வந்து அடையும்.

10. இல்லமு மில்லா னுகும் இவன்பாரி வர்க்கத் தாரால்
வல்லவன் வாழ்வா னுகும் வறுமையெப் போதும் காணுன்
சொல்லிய குணத்தா னுக்குத் தோன்றினு னிந்தப் பாலன்
புல்குவோ மிவன்கு ணத்தைப் பேதையே கேட்டி டாயே.

10. தகப்பனுர் வீடு இல்லாதவராவார். இவர் தன்னுடைய மனைவியின் பந்துக்களின் உதவியால் ஜீவனஞ் செய்வார். கஷ்டங்களையும் தரித்திரத்தையும் ஒருபொழுதும் அடையமாட்டார். இப்படிப்பட்ட குணங்களையுடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகர் வந்து பிறந்து இருக்கின்றார். இவருடைய குணதிசயங்களைச் சொல்லுகிறோம். பார்வதியம்மையே ! கேட்பீராக.

11. மாந்தளிர் மேனி யாவன் வர்ணித்தோர்க் குதவி செய்வன்
காந்தம்போல் புத்தி யுண்டு கண்முகம் வசிய முண்டு
சாந்தமும் கோப மேற்பன் தக்கோர்கள் நேசம் கொள்வன்
சேர்ந்தவர் தம்மைக் காப்பன் சீலம்போல் வெளிம யக்கன்.

11. மாமரத்தின் துளிரின் நிறத்தைப்போல ஒரு விதமான சிவப்பு நிறமான தேகத்தையுடையவராவார். தன்னைப்பற்றிப் பெருமையாகவும் புகழ்ந்தும் பேசுகின்றவர்களுக்கு உபகாரஞ் செய்வார். காந்தக்கல்லைப் போலப் பிறரைத் தன்வசப்படுத்திக் கொள்ளுகின்ற புத்தியையும் குணத்தையு முடையவர். பிறரைத் தன்னுடைய அழகான கண்களாலும் முகத்தாலும் தன்வசப்படுத்திக் கொள்ளும் தன்மை யுடையவர். சாந்தமும் கோபமுமாகிய இரண்டுமுடையவர். தகுதியான பெரிய மனுஷர்களுடைய சிநேகத்தையு மடைவார். தன்னிடம் வந்து சேர்ந்தவர்களைக் காப்பாற்றுவார். நல்லொழுக்கமும் நல்ல நடவடிக்கையு முடையவர்போல வெளிக்குக் காட்டிக்கொண்டு பிறரை மயக்கித் தன் வசப்படுத்திக் கொள்ளும் சக்தியை உடையவர்.

12. வித்தையு மிரண்டு கற்பன் விவேகியா மெவர்க்கு நல்லன்
பத்தினிக் கிஷ்ட னுகும் பரவுப கார னுகும்
வெத்திச் சொல் லுடையா னுகும் மேலவர் பத்தி கொள்வன்
சத்தியம் கூறு வானுகும் சகராசர் பேட்டி கொள்வன்.

12. இரண்டு விதமான கல்வியைப் படிப்பார். புத்தியுள்ளவர். எல்லோருக்கும் நல்லவராவார். மனைவிக்குப் பிரியமுள்ளவராவார். பிறருக்கு உதவியைச் செய்பவராவார். தான் சொல்லுகின்ற வார்த்தை

ஜயத்தை அடையக் கூடியனவாக விருக்கும். பெரியோர்களின் மேலும் வானோர்களின் மேலும் பக்தியையுடையவர். உண்மையைப் பேசுவார். பெரிய அரசர்களுடைய தரிசனத்தை அடைவார்.

13. அன்னியப் பாஷை யாலே அரசுமே செய்வா னாகும்
பொன்பணி யேற்பா னாகும் பெரிதான குடும்பி யாவன்
மன்னர்க்கு மிவன்சொல் மேன்மை வளமான தலங்கள் செல்வன்
கன்னியர் மோக னவன் கனத்தபுத் திகளு மேற்பன்.

13. அன்னிய பாஷையாகிய ஆங்கிலம் முதலிய பாஷைகளைப் படித்து அதனாலேயே அரசாங்கத்தில் வேலையில் இருந்து அதிகாரத்தைச் செலுத்துவார். தனம் ஆபரணம் இவைகளை அடைவார். பெரிய குடும்பி யாவார். அரசர்களுக்கு இவருடைய வார்த்தை மேன்மையாக விருக்கும். சிறந்த நல்ல பெரிய ஸ்தலங்களுக்கு செல்வாக்குடன் போவார். ஸ்த்ரீ களின்மேல் காம ஆசையையுடையவராவார். பெரியதானதும் உயர்ந்தது மான புத்தி யுடையவராவர்.

14. எந்தக்கா லத்தில் ராஜயோகமு மெய்தும் சொல்வாய்
சந்திரன் தசையில் நேரும் சேய்தசை அந்தம் நீங்கும்
பிந்தியும் அரசர் மூலம் பெரிதான செட்டுச் செய்தல்
அந்தவன் மரண மட்டும் அசைவிலாச் செட்டுச் செய்வன்.

14. ஜாதகருக்கு எந்தக் காலத்தில் இராஜயோக முண்டாகும் என்பதைச் சொல்லுவீர். இது சந்திரனுடைய தசைக் காலத்தில் உண்டாகும். அங்காரகனுடைய தசையின் முடிவில் அஃது இவரை விட்டு விலகிவிடும். அதன்பிறகு இராஜாக்கள் மூலமாகப் பெரிய வியாபாரஞ் செய்வார். இவர் தன்னுடைய மரணகாலம் வரையில் தொடர்ச்சியாகவும் குறைவில்லாமலும் வியாபாரஞ் செய்வார்.

குறிப்பு.—இவருக்கு வயது ஷ்ரீ 19-8-0-ல் சந்திரதசை ஆரம்பித்து ஷ்ரீ 36-8-0 வரையிலும் அங்காரகதசை இருக்கிறது.

15. யோகமெவ் விதமாய்ச் சொன்னீர் உரைப்பீர்க ளந்தச் சங்கை
பாகமாய்த் தர்ம கர்மர் பார்வையா யிருப்ப தொன்று
பாகனும் [1] சனியும் பார்வை பஞ்சமம் சேயும் [2] ஆட்சி
தோகையே தர்ம கர்ம்மர் யோகமென் றுரைக்க லாகும்.

15. ஜாதகருக்கு யோகம் எந்தக் காரணங்களினால் சொன்னீர்? அவைகளைச் சொல்லுவீர் என்று கேட்க பக்குவமாகத் தர்மகர்மாதிபர் களாகியக் குருவும் அங்காரகனும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொள்ளு வது ஒரு காரணமாகும். புதனும் சனியும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொள்வதாலும், அங்காரகன் ஐந்தாவது வீட்டில் ஆட்சியாய் இருப்பதாலும், இதர காரணங்களாலும், தர்ம கர்மயோகம் உண்டு என்று பார்வதி யம்மையே! சொல்லக்கூடும்.

---

[1] புதன் [2] அங்காரகன்

**குறிப்பு.—தர்ம கர்மயோக விஷயம் :—**தர்மாதிபதியாகிய ஒன்பதிற்கு டையவரும் (இங்கு குருவும்) கர்மாதிபதியாகிய பத்திற்குடையவரும் (இங்கு அங்காரகனும்) ஒருவருடன் மற்றொருவர் கூடியிருந்தாலும், ஒருவரை மற்றொருவர் பார்த்தாலும் (இங்கு பார்க்கின்றார்கள்), ஒருவர் வீட்டில் மற்றொருவர் இருந்தாலும் " தர்மகர்ம " யோகம் என்று சொல்லப்படும். இது விஷயமாய்ப் பராசரஹோரை, ஜாதகசந்திரிகை, தாண்டவமாலை, சந்திர காவ்யம் இவைகளில் யோக அத்தியாயத்தில் பார்க்கவும். ஆறு எட்டு பன்னிரண்டிற்குடையவர் ஒருவருடன் மற்றொருவர் கூடியிருப்பதும், ஒருவரை மற்றொருவர் பார்ப்பதும் யோகத்திற்கு அனுகூலமானது. இங்கு எட்டிற்குடையவரான சனியும் பன்னிரண்டிற்குடையவரான புதனும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொள்ளுகின்றார்கள். பத்திற்குடையவர் (இங்கு அங்காரகன்) ஐந்தில் இருப்பது விசேஷமானது. பத்தும் ஐந்தும் ராஜ்ய ஸ்தானங்கள் என்று சொல்லப்படும்.

16. இதுவின்றிப் பத்ம யோக மியம்புவோ மிருவி தத்தால்
அதிகாரம் சிலநாள் செய்வன் அதின்பின்பு செட்டுச் செய்வன்
நிதியது பெருக்கம் செய்வன் நேர்ந்திடு மில்ல மென்றோம்
எதுகாலம் இல்லம் நேரு மெட்டாண்டில் நேரு மென்றோம்.

16. இந்த யோகமும் அல்லாமல் "பத்ம" யோகம் என்ற இன்னொரு யோகத்தையும் சொல்லுகிறோம். இந்த இரண்டுவித யோகத்தாலே ஜாதகர் சில காலம் இராஜாங்கத்தில் அதிகாரஞ் செலுத்தும் வேலையில் இருப்பார். அதற்குப் பிறகு வியாபாரஞ் செய்வார். செல்வத்தை அதிகமாக ஆக்கிக்கொள்ளுவார். இவருக்கு வீடும் வந்து சேரும். எந்தக் காலத்தில் வீடு வந்து இவருக்குச் சம்பவிக்கும் என்பதைச் சொலலுவீர் என்று கேட்க, எட்டாவது வயதில் வந்து சேரும் என்று சொல்லுகிறோம்.

**குறிப்பு.—பத்மயோக விஷயம்—**பத்மம் அல்லது கமலம் என்ற தாமரையாகும். பத்மயோகம் என்றாலும் கமலயோகம் என்றாலும் ஒரே யோகமாகும். இவைகளைப் பற்றி ஜாதகாலங்காரம் 343-ஆவது பாடல், சாராவளி அத்தியாயம் 21,14,28-ஆம் சுலோகங்கள், பிருஹஜ்ஜாதகம் 12-ஆவது அத்தியாயம் 5-ஆவது 14-ஆவது சுலோகம், ஜாதக சிந்தாமணி 2035-2135 முதல் 2143-ஆவது பாடல்கள் வரையிலுள்ள பாடல்கள், ஜாதகபாரிஜாதம் 7-ஆவது அத்தியாயம் 199-ஆவது 176-ஆவது சுலோகங்கள் இவற்றைப் பார்க்கவும். நான்கு கேந்திரங்களில் கிரகங்கள் இருந்தால் பத்ம யோகமுண்டு. இங்கு இரண்டு கேந்திரங்களில்தான் சுக்கிரனும் சந்திரனும் இருக்கின்றார்கள்.

17. தன்துணை யாண்பால் ஒன்று தங்கிடும் கன்னி ரண்டு
இன்னவர் தீர்க்கம் சொன்னோ மேகிடும் மற்ற வெல்லாம்
பின்பாக மவர்கள் சேதி பேசுவோம் விவர மாக
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே.

17. ஜாதகருக்குச் சகோதரர்களில் ஆண் ஒன்றும் பெண் இரண்டும் நீண்ட ஆயுளை யுடைகவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகிறோம். மற்ற சகோதரர்கள் எல்லாம் இறந்து போய்விடுவர். இந்தச் சகோதரர்களின்

விஷயங்களைப்பற்றி பின்பாகத்தில் விவரமாகச் சொல்லுகிறோம். மேன்மை யான யானை முகத்தை யுடைய விநாயகக் கடவுளைப்பெற்றெடுத்த பார்வதி யம்மையே ! கேட்பீராக.

18. மாதுரு குணத்தைச் சொல்வேன் மால்மனை யொப்ப தாகும்
காதலி சுகமாய் வார்த்தை கல்விமான் பொறுமை சாலி
சூதுளாள் நடையும் நன்மை சோர்வோர்க்குத் தாக மீவள்
வேதனை யொருவர்க் கெண்ணாள் வித்தகி வயது தீர்க்கம்.

18. ஜாதகருடைய தாயாரின் குணதிசயங்களைப்பற்றிச் சொல்லுகிறேன். இவள் லக்ஷ்மியைப் போல விருப்பாள். இவள் இனிமையான வார்த்தைகளைச் சொல்லுவாள். கல்வியறிவுள்ளவளாவள். பொறுமையையுடையவள். வஞ்சனை சூது இவைகள் இல்லாதவள். நல்லொழுக்கமும் நன்னடக்கையும் உள்ளவள். களைத்துப் போனவர்களுக்குத் தாகவிடாய் தீர நீர் மோர்களைக் கொடுப்பாள். யாருக்குந் தீங்குகளைச் செய்ய எண்ணமாட்டாள். இவள் நீண்ட ஆயுளையுடையவளாவாள்.

19. மங்கையால் வரனுக் கேதான் மருவிடும் யோகம் தானும்
எங்கள்போல அதிதிக் கன்ன மீவளாம் பொறுமை சாலி
சங்கையென் றுரைச் சாராள் தன்துணை ஆண்பால் ஐந்து
நங்கைமார் நால்வ ராகும் நாயகி கேட்டி டாயே.

19. இவளால் தன்னுடைய புருஷனுக்கு யோகங்கள் உண்டாகும். இவள் எங்களைப் போன்ற முனிவர்களுக்கும் பரதேசிகளுக்கும் சாப்பாடு போடுவாள். பொறுமையையுடையவள். அச்சம் ஐயம் சந்தேகம் இவை களையுடையவர்களுடன் சேரமாட்டாள். இவளுடன் கூடப்பிறந்த ஆண் சகோதரங்கள் ஐந்து பேரும் பெண் சகோதரங்கள் நால்வரும் ஆகும். பார்வதியம்மையே ! கேட்பீராக.

20. மாதுலர் யோக வான்கள் வடதிசை அரசன் போலே
மேதினில் வாழ்வா ராகும் மேன்மையாய்க் குடும்பி யாவர்
போதன முடையா ராகும் புகலுவோம் பின்பால் சேதி
ஓதுவேன் பின்பா கத்தில் உத்தமி கேட்டி டாயே.

20. ஜாதகருடைய அம்மான்மார்கள் யோக முள்ளவர்களாக விருப்பார்கள். வடக்குத்திக்கு அரசனாகிய குபேரனைப் போல் பூமியில் செல்வ வான்களாகவிருந்துவாழ்வார்கள். மேன்மையானதும் பெருமையுள்ள துமான குடும்பஸ்தர்களாகவும் அறிவுடையவர்களாகவும் விருப்பார்கள். அவர்களுடைய விஷயங்களைப்பற்றிப் பின்னால் சொல்லுகிறோம். பின் பாகத்தில் சொல்லுகிறேன். பார்வதியம்மையே ! கேட்பீராக.

21. அன்னையின் முன்ஜன் மத்தை அறிவிப்போம் பேரூர் தன்னில்
கர்ணமாம் குலமு தித்துக் கௌரவ குடும்பி யாகித்
தன்சுத ரதிக முண்டாய் ஷண்முகன் பத்தி யாகிப்
பின்னோர்க்குத் தாக மீந்து புண்ணிய மனத் தாளாகி ;

21. ஜாதகருடைய தாயின் பூர்வஜன்மத்தைப் பற்றிச் சொல்லு கிறோம். ஒரு பெரிய ஊரில் கருணீகர் குலத்தில் பிறந்து பெருமையுள்ள குடும்பினியாகித் தனக்கு அநேகக் குழந்தைகளையுடையவளாகி முருகக் கடவுளின் மேல் பக்தியை யுடையவளாகி ஏழைகளுக்குத் தாகவிடாய் தீர நீர் மோர்களைக் கொடுத்துப் புண்ணியமானகாரியங்களைச் செய்யும் மனத்தை யுடையவளாகி ;

22. வினையது மில்லா ளாகி மேவினள் காலன் றூடு
கனமுள பிரமன் லக்கம் கலந்தன ளிக்கு லத்தில்
சினமிலா முப்பான் ஒன்றில் செல்லுவாள் காலன் றூடு
அனையவே தவங்கள் செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

22. பாவம் ஒன்றும் இல்லாதவளாகவிருந்து இறந்து எமபட்டினத் திற்குப் போய் மேன்மை தங்கிய பிரமதேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இவள் இந்த ஜன்மத்தில் இந்தக்குலத்தில் வந்து பிறந்திருக்கின்றாள். இவள் ஜாதகருக்கு முப்பத் தோராவது வயதில் இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேருவாள். விடாமல் தவங்களைச் செய்துகொண்டிருக்கின்ற பார்வதியம்மையே ! கேட்பீராக.

**குறிப்பு.—மாதுர் மாரக விஷயம்**—ஜாதகருக்கு வயது ஷ 30–0–0 முதல் ஷ 31–0–0 முடியும் வரையிலும் அங்காரக தசையில் அங்காரகபுக்தி ராகு புக்திகள் நடக்கின்றன. மாதுருலக்கினம் துலாம். இதற்குப் பராசர ஹோரையின் சில பதிப்புக்கள் ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் அங்கா ரகனும் சூரியனும் குருவும் மாரகராகின்றார்கள். அங்காரகன் துலாத்திற்கு இரண்டு ஏழிற்குடைய மாரகராய் இரண்டில் இருக்கின்றார். எட்டாம் வீடாகிய ரிஷபத்தையும் பார்க்கின்றார். ஆகையால், இவருக்குத் தாயாரை மாரகஞ் செய்ய அமைப்பு இருக்கின்றது. இராகு மாரகராகிய சூரியன் வீட்டில் மாரக ஸ்தானமாகிய இரண்டில் இருந்து கொண்டு மாதுருலக்கினமாகிய துலாத்தையும் பார்க்கின்றார். ஆகையால் ஜாதகசந்திரிகை 12-ஆவது, 23-ஆவது சுலோகப் பிரகாரம் இராகுக்கு தன் புக்தியில் மாதாவை மாரகஞ் செய்ய அமைப்பு இருக்கின்றது.

23. பின்ஜன்மம் வேலங் காட்டில் பிறப்பளாம் க்ஷத்திரிய சேயாய்ப்
பொன்பொரு ளுடைய ளாகிப் பூவையும் வாழ்வா ளென்றோம்
மன்னவன் தந்தைக் கேதான் மடிவுண்டு முப்பா றுறில்
கன்னல்போல் மொழியி னாளே கழறுவோ மிவன்பின் ஜன்மம்.

23. தாயார் மறு ஜன்மத்தில் திருவாலங்காட்டில் க்ஷத்திரிய குலத்தில் பெண்ணாகப் பிறந்து தனம் சொத்து இவைகளையுடையவளாகி இவள் வாழ்வாள் என்று சொல்லுகிறோம். ஜாதகருடைய தகப்பனாருக்கு ஜாதகருடைய முப்பத்தாறுவது * வயதில் மரணம் நேரிடும். சர்க்கரையைப் போல இனிமையான வார்த்தைகளை உபயோகிக்கின்ற பார்வதியம்மையே ! இவருடைய பின் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம்.

குறிப்பு.—தகப்பனர் மரண விஷயம்—ஜாதகருக்கு வயது ஷூ 35-0-0 முதல் 36-0-0 முடியும் வரையிலும் அங்காரகனுடைய தசையில் சுக்கிர புக்தி சூரியபுக்தி இவைகள் நடக்கின்றன. பிதுர்லக்கினமாகிய மீன லக்கினத்திற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் சனி புதன் சுக்கிரன் சூரியன் இவர்கள் மாரகாதிபதிகள் ஆகின்றூர்கள். அங்காரகன் மீனத்திற்கு மாரகஸ்தானமாகிய இரண்டாம் வீடாகிய மேஷத்திற்கு உடையவராகி லக்கினத்திற்கும் பத்திற்கும் உடையவரான குருவைப் பார்க்கின்றூர். சனி அங்காரகனைப் பார்க்கின்றூர். ஆகையால் துய்ய கேரளம் எட்டாம் பாவம் 14-ஆவது பாடல் பிரகாரம் அங்காரகனுக்குப் பிதாவை மாரகஞ்செய்ய அமைப்பு இருக்கின்றது. சூரியன் மாரகாதிபதியாகிய புதனுடைய வீட்டில் இருந்துகொண்டு மீனத்தைப்பார்ப்பதால் தன் புக்தியில் பிதாவுக்கு மாரகஞ் செய்ய அமைப்பு இருக்கிறது.

24. உத்தரம் கோகர் ணத்தில் உதிப்பனும் சைவச் சேயாய்
மெத்தன குடும்பி யாகி வித்தகன் வாழ்வா னுகும்
சத்தியே ஜாத கர்க்குச் செப்புவோ மணத்தின் காலம்
பத்தொன்ப தாண்டு தன்னில் பாவையு மன்னே வர்க்கம் ;

24. ஜாதகருடைய தகப்பனர் வடக்குத்திக்கிலுள்ள கோகர்ணம் என்ற ஓர் ஊரில் மறு ஜன்மத்தில் வைசிய குலத்தில் ஆண் குழந்தையாய்ப் பிறப்பார். மேன்மையான குடும்பஸ்தராகியே வாழ்வாராகும். பார்வதி யம்மையே ! ஜாதகருக்கு விவாகம் நேரிடும் காலத்தைச் சொல்லுகிறேம். இவருக்குப் பத்தொன்பதாவது * வயதில் மனேவி தாயார் பந்துவிலிருந்து ;

*குறிப்பு.—விவாக விஷயம்—ஜாதகருக்கு வயது ஷூ 18-0-0 முதல் ஷூ 19-0-0 முடியும் வரையிலும் சூரிய தசையில் புதன் கேது சுக்கிரன் இவர்களுடைய புக்திகள் நடக்கின்றன. களத்திர விஷயமான பாவங்களில் ஒன்ருகிய இரண்டாவது பாவத்திற்குடையவரான சூரியன் ஒன்பதாவது பாவத்தைப் பார்ப்பதுடன் ஒன்பதாவது பாவாதிபதியாகிய குருவால் பார்க்கப் பட்டிருக்கின்றூர். மேலும் போககாரகனுகிய ராகு சூரியன் வீட்டில் இரண்டில் இருக்கின்றூர். சுக்கிரன் போகஸ்தானமாகிய நான்கிற்குடையவராகி லக்கினத் திலிருந்து கொண்டு களத்திரஸ்தானத்தைப் பார்க்கின்றூர். ஆகையால் சூரியதசையில் சுக்கிர புக்தியில் விவாக அமைப்பு இருக்கிறது.

25. வருகுவாள் குணத்தைச் சொல்வோம் மாந்தளிர் மேனி யாகும்
திருகிலாள் நற்கு ணத்தாள் சீலமு முடையா ளாகும்
பெரும்புத்தி கல்வி மானும் பிழையதை ஒருவர்க் கெண்ணுள்
நரைமல ரிஷ்டம் கொள்வாள் நாயகன் மனத்துக் கேத்தோள்.

25. வந்து நேருவாள். இவளுடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகிறேம். இவள் மாமரத்தின் துளிரினுடைய நிறத்தைப் போன்ற ஒரு விதமான சிவப்பு நிறமுள்ள தேகத்தை யுடையவளாவாள். கள்ளம் கபடம் வஞ்சனே இவைகளே உடையவளல்லள். நல்ல குணத்தை யுடையவள். நல்லொழுக்கமும் நன்னடக்கையு முடையவளாவாள், மேன்மையானதும்

பெரியதுமான புத்தியை யுடையவள். வித்தையை யுடையவள். யாருக்குங் கெடுதியைச்செய்ய நினைக்கமாட்டாள். வாசனையுள்ள புஷ்பங்களின்மேல் ஆசையுடையவள். தன்னுடைய புருஷனுடைய மனதிற்குத் தகுந்தபடி நடந்துகொள்ளும் தன்மை யுடையவளாவாள்.

26. அன்னம்போல் வடிவு மொக்கும் யாவர்க்கும் நல்லோ ளாவள்
கன்னிகை தீர்க்க ஜீவி கருதிடாள் கட்டு வார்த்தை
தன்சுதர் முதலில் நஷ்டம் தீர்க்கமா மதன் பின்னாக
மன்னன்போல் ஆண்பா லொன்று மங்கைமார் அவ்வாறு தீர்க்கம்.

26. ஜாதகருடைய மனைவி அன்னத்தைப் போல அழகான உருவமுடையவள். எல்லாருக்கும் நல்லவளாகவிருப்பாள். இவள் நீண்ட ஆயுளை உடையவள். பொய்யான வார்த்தைகளையும் புனைந்த வார்த்தைகளையும் உபயோகிக்க எண்ணமாட்டாள். இவளுக்கு முதலில் பிறக்குங் குழந்தைகள் நஷ்டமாகும். அதற்குப் பின்னால் பிறக்குங் குழந்தைகள் நீண்ட ஆயுளை உடையனவாகவிருக்கும். அரசனைப் போல ஓர் ஆண் குழந்தையும் ஒரு பெண் குழந்தையும் நீண்ட ஆயுளை உடையவர்களாகவிருப்பார்கள்.

27. பாலகன்முன் ஜன்மந் தன்னைப் பகருவோம் திருவ லத்தில்
சீலமாம் மறைக் குலத்தில் ஜனித்துமே கிருஷி செய்து
பாலிகை மதலை யுண்டாய்ப் பகரமாம் குடும்பி யாகிக்
காலன்தன் நாடு சென்று கஞ்சனால் வரையப் பட்டு ;

27. ஜாதகருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறோம். இவர் திருவலம் என்ற ஊரில் நல்லொழுக்கமும் நல்ல நடவடிக்கையுமுள்ள ஒரு பிராமணர் குலத்தில் பிறந்து விவசாயத் தொழிலைச் செய்து மனைவி மக்களையுடையவராகிப் பிரகாசமானதும் மேன்மையானதுமான குடும்பஸ்தராகி வாழ்ந்து பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய்ப் பிரமதேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு ;

28. உதிப்பனு மென்று சொல்வோம் உரைக்கிறார் அத்திரி தாமும்
முதற்குல முதித்தோன் தானும் மேவுமிச் சென்மம் தன்னில்
நதிகுல முதிக்கும் வண்ணம் நவிலுவீர் முனியே நீர்தாம்
சதுர்வேதம் விரும்பாததாலே ஜனித்தன னென்று சொல்வோம்.

28. இந்த ஜாதகர் இந்த ஜன்மத்தில் பிறப்பார் என்று சொல்லுகிறோம். அதன் மேல் அத்திரி மகரிஷி கேட்கின்றார். முன் ஜன்மத்தில் முதல் குலமாகிய பிராமணர் குலத்திற் பிறந்தவரான இந்த ஜாதகர் இந்த ஜன்மத்தில் கங்கை குலம் என்ற வேளாளர் குலத்திற் பிறப்பதற்குக் காரணத்தை, முனிவரே! நீரே சொல்லுவீர் என்று கேட்க, நான்கு வேதங்களையும் ஜாதகர் கற்க விரும்பாமல் இருந்ததால் இந்த ஜன்மத்தில் இவ்விதமாகப் பிறந்தார் என்று சொல்லுகிறோம்.

29. அறுபது ஐந்து ஆண்டில் அணுகிய தேளின் மாதம்
திருமகனுடலம் ஏகும் ஜயமுனி மறித்துச் சொல்வார்
குருவுக்கீராறில் திங்கள் குலவினுல் சகடை தோஷம்
அறுரண்டு ஆண்டுக் குள்ளே அணுகிடும் கண்டம் தானே.

29. ஜாதகருக்கு அறுபத்தைந்தாவது வயதில் தேள் மாதமென்ற கார்த்திகை மாதத்தில் மரணம் நேரிட்டு அவருடைய தேகம் அழிந்து விடும். இவ்விதமாகச் சொல்ல ஜய முனிவர் தடுத்துச் சொல்லுகின்ருர். குருவுக்குப் பன்னிரண்டில் சந்திரன் இருப்பதால் சகட யோகத்தோஷம் ஏற்படுகிறது. அதனுல் ஜாதகருக்குப் பன்னிரண்டு வயதிற் குள்ளவே மரண கண்டம் நேரிடுமல்லவா.

† குறிப்பு.—சகடயோகம்—இது விஷயமாக ஜாதகாலங்காரம் 263-ஆவது பாடலேயும், பலதீபிகை 6-ஆவது அத்தியாயம் 10 அல்லது 14-ஆவது சுலோகத்தையும், ஜாதகபாரிஜாதம் 7-ஆவது அத்தியாயம் 108-ஆவது சுலோகத்தையும், பிருஹஜ்ஜாதகம் 12-ஆவது அத்தியாயம் 3-ஆவது சுலோகத்தையும், சாராவளி 21-ஆவது அத்தியாயம் 15-ஆவது சுலோகத்தையும் பார்க்கவும். குருவிற்கு 6, 8, 12-இல் சந்திரன் இருந்தால் சகடயோகம் உண்டாகின்றது என்று சொல்லி இருக்கின்றது. இவ்விதமாக விருக்கும் போது சந்திரன் லக்கினத்திற்குக் கேந்திரத்தில் இருந்தாலும், சிலர் குரு லக்கினத்திற்குக் கேந்திரத்திலிருந்தாலும், இந்தச் சகடயோகத்திற்குப் பங்கம் உண்டாகி விடுகிறது என்று சொல்லுகிருர்கள். இன்னுஞ் சிலர் சந்திரன் பிரகாசமில்லாத சந்திரனுக விருந்து 6, 8, 12-இல் இருந்தால் சகடயோகம் என்கிருர்கள். இங்குச் சந்திரன் தேய்பிறையாக இருந்த போதிலும் பிரகாசமுடையவராயும் கேந்திரத்திலிருப்பவராயும் இருக்கின்ருர். (பராசரரும் வராஹமிஹிரரும்) எல்லாக்கிரகங்களும் லக்கினத்திலும் ஏழிலும் இருந்தால் சகடயோகம் உண்டாகிறது என்று சொல்லி இருக்கிருர்கள். இ∴து இன்னொரு மதமாகும்.

30. புகருமே[1] ஜன்மம் தங்கப் பேசொணு மார கங்கள்
வரும்வினே அதிக மாக மரலியைக் காணு ருகும்
அறுபது ஐந்து ஆண்டும் அப்பாலன் உய்வாளுகும்
கரிமத வானே பெற்ற காதலி கேட்டி டாயே

30. சுக்கிரன் லக்கினத்தில் இருப்பதால் மாரகங்கள் சொல்லக்கூடாது. ஆனுல் அதிகமாகக் கஷ்டங்களும் நோய்களும் உண்டாகும். தவிர ஜாதகருக்கு எமதரிசனம் நேரிடாது. ஜாதகர் தனது அறுபத்தைந்து வருஷம் வரையிலும் ஜீவித்திருப்பார். கறுப்பு மதயானே முகத்தையுடைய விநாயகக் கடவுளேப் பெற்றெடுத்த பார்வதியம்மையே ! கேட்பீராக.

† குறிப்பு—ஜாதகர் மரணவிஷயம்—ஜாதகருக்கு வயது ௵ 64—0—0 முதல் ௵ 65—0—0 முடியும் வரையிலும் குரு தசையில் சுக்கிர புக்தி நடக்கின்றது. கடக லக்கினத்திற்குப் புதன் சுக்கிரன் சனி இவர்கள் பராசர

---

[1] சுக்கிரன்.

ஹோரை, ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் மாரகாதிபதிளாகின் றார்கள். குரு மாரகாதியாகிய சுக்கிரன் வீட்டில் மாரகஸ்தானமாகிய பதினொன்றில் இருக்கின்றார். குருதசை ஆறாவது தசையாகவும் வந்து நேரிடுகின்றது. ஆகையால் ஜாதகாலங்காரம் 975-ஆவது பாடல் பிரகாரமும் ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரமும் குரு மாரகாதிபதி ஆகின்றார். கடக லக்கினத்தில் பிறந்த இந்திரஜித்துக்கும் சுக்கிரன் மாரகாதிபதி ஆனார் என்று சொல்லப்படுகிறது. ஆகையால் குரு தசையில் சுக்கிர புக்தியில் ஜாதகருக்கு மாரகம் நேரிட அமைப்பு இருக் கிறது.

31. பாலகன் ஜனிக்கும் காலே பரணியி னிரண்டாம் பாதம்
சாலவே புகரி[1] ருப்புச் சாற்றுவோம் பதின்மூன் றாண்டும்
ஏலவே திங்கள் எட்டு மெய்திடும் பூர்வ பாகம்
ஆலத்தை யுண்டோன் தேவி அறைந்தனம் மொழி குன்றாது

31. ஜாதகர் ஜனன மாகுங் காலத்தில் ஜன்ம நட்சத்திரம் பரணி யில் இரண்டாவது பாதமாகும். இதற்குரிய சுக்கிர மகாதசை வருஷம் 20-க்கு இருப்பு நின்ற வருஷம் பதின்மூன்றும், மாதங்கள் எட்டும் ஆகும். இது வரையிலும் பூர்வபாகமான முதல் பாகமாகும். ஆலகாலவிஷத்தை உண்ட பரமசிவனுடைய மனைவியாகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல் லிய வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும்.

[1] சுக்கிரன்.

# ஜாதகம் 80

1. மதி[1] துலாம் சேயும் [2] மேரு [3] மந்தனும் [4] மீன மாக
புதன்பானு [5] நந்தி [6] யாகப் புகர் [7] மேடம் குருவும் வீணை[8]
ததிகயிர் [9] கடக மாகச் சிகி [10] மானில் [11] அலவன் [12] ஜன்மம்
இதுபலன் எவ்வா றென்று ஈச்வரி கேட்கும் போது

| | | | |
|---|---|---|---|
| சனி | சுக்கிரன் | சூரியன் புதன் | குரு |
| | இராசி சக்கரம் | | லக்கினம் ராகு |
| கேது | | | |
| அங்காரகன் | | சந்திரன் | |

விசாகம் 1-ஆம் பாதம். குருதசை ஷ்ரீ 12-7-0

1. சந்திரன் துலாத்திலும், அங்காரகன் தனுசிலும், சனி மீனத்தி லும், புதனும் சூரியனும் ரிஷபத்திலும், சுக்கிரன் மேஷத்திலும், குரு மிதுனத்திலும், இராகு கடகத்திலும், கேது மகரத்திலும், ஜன்மலக் கினம் கடகமாகவும் இருந்தால் பலாபலன்கள் எவ்விதமாகவிருக்கும் என்று பார்வதியம்மையார் கேட்கும் போது ;

**குறிப்பு.**—இந்த ராசிசக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும். மேஷத்தில் சூரியனும், சந்திரனும் குருவும், ரிஷபத்தில் புதனும், கடகத்தில் சனியும் சுக்கிரனும், சிம்மத் தில் ராகுவும், தனுசில் அங்காரகனும், கும்பத்தில் கேதுவும் ஆகும்.

2. அத்திரி முனிவர் சொல்வார் ஆணது ஜனன மாகும்
வித்தக னில்லம் சொல்வேன் மேல்வாடை வடதென் வீதி
அத்தலை மாரி மேற்கில் அதன்கீழ்ப் பால் தீபாஞ் சாலி
சத்திவேல் மாயோ னுத்தரம் விளங்கிடும் வடகீழ் தந்தி.

2. அத்திரி மகரிஷியானவர் சொல்லுகின்றார். பிறந்த குழந்தை ஆண் குழந்தையாகும். இவர் பிறந்த வீட்டைப் பற்றிச் சொல்லுகிறேன். வடக் குத் தெற்குத் தெருவில் மேலண்டை வாடையில் ஜாதகனது வீடு இருக்கும்.

---

[1] சந்திரன் [2] அங்காரகன் [3] தனுசு
[4] சனி [5] சூரியன் [6] ரிஷபம்
[7] சுக்கிரன் [8] மிதுனம் [9] ராகு
[10] கேது [11] மகரம் [12] கடகம்

மாரியம்மன் கோயில் மேற்குத் திக்கிலும். இதற்குக் கிழக்குத் திக்கில் நெருப்பில் பிறந்தவளாகிய திரௌபதியம்மன் கோயிலும், பார்வதியம்மன் முருகக்கடவுள் மகாவிஷ்ணு ஆகிய இவர்களுடைய கோயில்கள் வடக்குத் திக்கிலும், வடகிழக்குத் திக்கில் விநாயகக் கடவுளின் கோயிலும் இருக்கும்.

3. இன்னமும் பலதே வாசமில்கிய பேரூ ராகும்
மன்னர்கள் வாச மாகும் மாரன்செங் குந்தச் சேயாய்
அன்னவ னிரண்டாம் ஜன்மம் வருவனென்று சொல்வோம்
தன்னிலே குடும்பச் சேதி சாற்றுவோ மினிமேலாக

3. ஜாதகர் பிறந்த ஊரில் பல தேவர்கள் தேசத்தார் வாசஞ் செய்வார்கள். இந்த ஊர் பெரிய நகரமாகும், இதில் அரசர்கள் வசித்துக் கொண்டிருப்பார்கள். ஜாதகர் செங்குந்தர் குலம் என்ற கைக்கோளர் குலத்தில் இரண்டாவது கர்ப்பத்தில் வந்து பிறப்பார் என்று சொல்லுகிறோம். இனி மேல் இவருடைய குடும்ப விஷயத்தைப்பற்றிச் சொல்லுகிறோம்.

4. தந்தையின் துணை ஆண் மூன்று சத்தியு மொருத்தி என்றோம்
இந்தவ னுதிக்கா முன்னமிவர்களும் வேறாய்ச் செல்வர்
அந்தவர் குற்ற மேற்பர் அயல்சுக முடையா ராகும்
நிந்தைக ளேற்கா ராகும் நவிலுவோம் பிதாகுணத்தை

4. தகப்பனுரோடு கூடப் பிறந்தவர்களில் மூன்று ஆண் சகோதரங்களும் ஒரு பெண் சகோதரமும் உண்டு என்று சொல்லுகிறோம். இவர் பிறப்பதற்கு முன்னமே இவர்கள் வேறு குடும்பமாகப் போய் விடுவார்கள். இவர்கள் குற்றத்தை யுடையவராவர். பிறருடைய உதவியால் சுகத்தை அடைவார். பழி பாவங்களை இவர் அடையமாட்டார். தகப்பனுருடைய குணதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம்.

5. தந்தையின் குணத்தைச் சொல்வேன் தரணியைப் பரிபா லிப்பன்
தன்குலத் தொழிலும் செய்வன் சகலர்க்கு நல்லோ னவன்
தந்தமும் தரள மொக்கும் சாதமும் குறைவு ருதான்
தந்தியையொத்த தேகன் தன்மனம் கபடு மில்லான்.

5. தகப்பனுருடைய குணதிசயங்களைப் பற்றிச் சொல்லுகிறோம். நிலங்களைப் பயிரிடுவார். தன்னுடைய குலத்துத் தொழிலையும் செய்வார். எல்லோருக்கும் நல்லவராக நடந்து கொள்வார். இவருடைய பற்கள் முத்தைப் போல வெண்மையாகவும் அழகாகவும் இருக்கும், சாப்பாடு விஷயத்தில் யாதொரு கஷ்டமும் இல்லாதவர். யானையைப்போலக் கறுத்ததும் பருத்ததுமான தேகத்தையுடையவர். இவர் தன்னுடைய மனத்தில் கள்ளம் வஞ்சனை இவைகள் இல்லாதவராவர்.

6. கடன் கொள்வன் நிவிர்த்தி செய்வன் கட்டுவார்த்தைகளைச் [சொல்லான்
உடன்படான் பிழைகளுக்கு உண்மையை வெளிக்காட்டாதான்
படையின்முன் செல்லா னாகும் பலவிதச் செட்டுச் செய்வன்
திடமதாய்க் குடும்பத் தில்தான் துணைவியாலவமா னத்தான்.

6. தகப்பனுர் கடன்வாங்குவார், அதனைக் கொடுத்து விடுவார். பொய்யான வார்த்தைகளையும் புனைந்த வார்த்தைகளையுஞ் சொல்லமாட்டார். தவறுகளைச் செய்ய இஷ்டப்படமாட்டார். உண்மையான ரகசியத்தைப் பிறர் தெரிந்து கொள்ளும்படியாக நடந்து கொள்ளமாட்டார். சண்டையில் முன்னே பரிந்து போகமாட்டார். அநேக விதமான வியாபாரங்களைச் செய்வார். தன்னுடைய சகோதரியால் குடும்பத்தில் ஒரு பெரிய அவமானத்தை அடைபவராவர்,

7. மாமிக ளிரண்டே யாகும் வஸ்திரச் சொத்துச் செய்வன்
பூமியும் சேர்ப்பா ஞகும் புது இல்லம் பின்ஞல் செய்வன்
தாமத குணமும் கொஞ்சம் ஜனித்தநாள் வறுமை யுண்டு
நியமங்க ளில்லா னென்ஞேம் நீத்தோர்க ளுறவு கொள்ளான்.

7. தகப்பனுருக்கு இரண்டு மாமியார்கள் இருப்பார்கள். இவர் வஸ்திரம் முதலிய வஸ்துக்களை உண்டாக்குவார். நிலங்களைச் சேகரிப்பாராகும். புதிய ஒரு வீட்டைப் பிற்காலத்தில் கட்டுவார். கொஞ்சம் தாமதமானதும் நிதானமானதுமான குணத்தையுடையவர். பிறந்த காலத்தில் கஷ்டங்களையும் தரித்திரத்தையுமுடையவர், கடவுளை வழிபடுதல் முதலியவைகள் இல்லாதவர் என்று சொல்லுகிஞேம். உலகப்பற்றை விட்டுவிட்டவர்களுடையவும் பரதேசிகளுடையவும் சினேகத்தை அடையமாட்டார்.

8. நல்லவன் நல்ல வர்க்கு நாகம்போல் கோபம் கொஞ்சம்
வெல்லுவான் எதிரி தன்னை வீண்வழக் கோரம் பேசான்
எல்லைமேல் புகழு மேற்பன் இதிகாச மறியா ஞகும்
அல்லல்கள் அடையா ஞகும் அம்பிகை யாளே கேளாய்.

8. தகப்பனுர் நல்லவர்களுக்கு நல்லவராக நடந்து கொள்ளுவார். இவருக்கு நல்ல பாம்பிற்குச் சீறிவரும் கோபத்தைப் போலக்கொஞ்சம் கோபமுண்டு. சத்துருக்களை ஜயித்து விடுவார். வழக்கிலும் தகராறுகளிலும் விணுகவும் பக்ஷபாதமாகவும் ஒரு பக்கமாகவே பேசமாட்டார். பூமியில் இவருக்குக் கீர்த்தியும் பெருமையும் உண்டாகும். இதிகாசம் என்று சொல்லப்பட்ட கலைஞானமாகிய அறுபத்து நான்குள் ஒன்றையும் தெரிந்து கொள்ளாதவராவர். புறக்கஷ்டங்களையும் அகத்துன்பங்களையும் அடையமாட்டார், பார்வதியம்மையே! கேட்பீராக.

9. சொன்னஇக் குணத்தா னுக்குத் தோகைமா ரிருவர் தம்மில்
பின்மனை யாளுக் கின்ஞேன் பிறப்பனு மிந்தப் பாலன்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அரிமக னொப்ப தாகும்
கன்னியர் மோக ஞவன் கஞ்சமா நிறத்தனுகும்.

9. இங்குச் சொல்லப்பட்ட குணங்களையுடைய தகப்பனுருக்கு இரண்டு மனைவிமார்களில் * இரண்டாவது மனைவிக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய குணுகுணங்களைப் பற்றிச் சொல்லுகிறேன். மகாவிஷ்ணு

வின் மகனாகிய பிரமனுக்குச் சமானமானவர். ஸ்திரீகளின் மேல் காம ஆசையை யுடையவராவார். தாமரை மலரைப்போன்ற ஒரு வித சிகப்பான நிறமுடைய தேகத்தை யுடையவராவார்.

* குறிப்பு.—தகப்பனுருடைய லக்கினம் ஒன்பதாவது வீடாகிய மீனம். இதற்குக் களத்திர ஸ்தானமாகிய கன்னிக் குடையவரான புதன் ஆறுக் குடையவரான சூரியனுடன் கூடி மூன்ருவது வீட்டில் இருந்துகொண்டு சனியாலும் ராகுவாலும் பார்க்கப்பட்டிருக்கின்ருர். ஏழாமிடம் சனியாலும் ராகுவாலும் பார்க்கப்பட்டிருக்கின்றது. சனி பதினென்றிற்குடைய வராய்ப் புதனைப் பார்ப்பதால் ஜாதகாலங்காரம் 689-ஆவது பாடல் பிரகாரம் ஒன்றிற்கு மேற்பட்ட களத்திரமுண்டு. இவ்விதக் காரணங் களால் இரண்டு தாரமுண்டு.

10. கல்வியு மிரண்டு கற்பன் கசடர்க ளுறவு கொள்ளான்
எல்லையை விருத்தி செய்வ லேவலா ளுடையனாகும்
இல்லையென் றுரைக்க மாட்டா னெடுத்த காரியமு டிப்பன்
சொல்லது அதிக மேற்பன் சோம்பிடான் காரி யத்தில்.

10. ஜாதகர் இரண்டுவிதமான வித்தைகளைப் படிப்பார். கீழ் மக்களுடைய சினேகத்தை அடையமாட்டார். நிலங்களைப் பயிரிடுவார் வேலையாட்களை யுடையவராவார். தன்னைவந்து கேட்பவர்களுக்கு இல்லை என்று சொல்லாமல் உபகாரஞ் செய்வார். தான் செய்ய ஆரம்பித்த காரியத்தை முடிக்குஞ் சக்தியை யுடையவர். தனது வார்த்தை மேன்மை யானதாக விருக்கும். அதிகமாகவும் பேசுவார். தான் செய்கிற காரியத்தில் தளர்ச்சியையும் சோம்பலையும் காண்பிக்கமாட்டார்.

11. தந்தைக்கு மேலாய் வாழ்வன் தனம்வீணாய்ச் செலவு செய்யான்
வந்தவர்க் கன்ன மீவன் வணிபங்கள் செய்வா னாகும்
விந்தையாய்ப் பேசு வானும் வேலன்மேல் பத்தி கொள்வன்
நந்தியா விருத்தி யுண்டு நற்றல வாசம் செய்வன்

11. ஜாதகர் தன்னுடைய தகப்பனாரின் அந்தஸ்திற்கு மேலான அந்தஸ்தை யுடையவராகவிருந்து வாழ்வார். பணத்தை அனாவசியமாகச் செலவு செய்யமாட்டார். தன்னிடம் வந்தவர்களுக்குச் சாப்பாடு போடுவார். வியாபாரங்களைச் செய்பவராவார். ஆச்சரியமாகப் பேசுவார். முருகக் கடவுளின் மேல் பக்தியை யுடையவர். எருதுகளும் பசுக்களும் விருத்தி யாகும். இவர் நல்ல புண்ணிய ஸ்தலங்களுக்குப் போவார்.

12. தன்துணை யாண்பா லொன்று தங்கும்பின் தீர்க்க மாகக்
கன்னிமார் மூவர் தீர்க்கம் கணக்காவே மற்றவெல்லாம்
முன்மாதா ஒன்று என்றீர் மொழிகுவீர் அவட்குப் புத்திரர்
சந்திர வதனம் போன்ற தையலு மொருத்தி தீர்க்கம்.

12. ஜாதகருடைய சகோதரங்களில் இளைய ஆண் சகோதரமும் மூன்று பெண் சகோதரங்களும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். மற்றச் சகோதரிகளெல்லாம் இறந்துவிடுவார்கள். பெரியதாயார் ஒன்றுண்டு என்று சொன்னீரே ! அவளுடைய புத்திரர்களைப் பற்றிச் சொல்லுவீர் என்று கேட்க, அவளுக்குச் சந்திரனைப்போல அழகான முகத்தையுடைய ஒரு பெண் குழந்தை நீண்ட ஆயுளை யுடையதாக விருக்கும்.

13. மங்கையின் குணத்தைச் சொல்வேன் மாநிறம் சமதே கத்தாள்
பொங்கின குடும்பி யாவள் புண்ணிய மனத்தா ளாகும்
நங்கைக்கு வரனு முள்ளூர் நல்கிடு மிரண்டா மாதாய்
அங்கவள் தனக்குப் புத்திரர் ஆணொன்று கன்னி அவ்வாறு ;

13. இவளுடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகிறேன். இவள் மாநிற முள்ளதும் சமமானதுமான தேகத்தை யுடையவள். மேன்மையானதும் உயர்ந்ததுமான குடும்பஸ்தையாக விருப்பாள். புண்ணியமான காரியங்களைச் செய்யும் மனத்தை யுடையவளாவாள். இவளுக்குப் புருஷன் உள்ளூரிலேயே இருந்து வருவான். இவள் இரண்டாவது மனைவியாக வாய்ப்பாள். இவளுக்குக் குழந்தைகளில் ஆண் குழந்தை ஒன்றும் பெண்குழந்தை ஒன்றும் ;

14. தீர்க்கமா மென்று சொல்வோம் சீலியாம் தெய்வ பக்தி
ஏற்கவே யோக சாலி எப்போதும் வறுமை காணுள்
சாக்கிரதை உடையா ளாகும் சர்ப்பம்போல் கோபம் கொஞ்சம்
ஆர்க்கவே தவங்கள் செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

14. ஆகிய இவர்கள் நீண்ட ஆயுளை யுடையவர்களாய் இருப்பார்கள் என்று சொல்லுகிறோம். நல்லொழுக்கமும் நன்னடக்கையும் உடையவளாவாள். தெய்வ பக்தியுடையவள். ஏற்கனவே யோகசாலியாக விருப்பாள். ஒருபோதும் கஷ்டங்களையும் தரித்திரத்தையும் அடையமாட்டாள். ஜாக்கிரதையுடன் இருப்பாள். நாகப்பாம்பிற்கு வருவதுபோலச் சீறிவருகிற கோபத்தை கொஞ்சமாக உடையவள். அதிக ஆவலுடன் தவங்களைச் செய்கின்ற பார்வதியம்மையே ! கேட்பீராக.

15. இன்னமும் விவரமாக இயம்புவோம் பின்பா கத்தில்
அன்னையின் குணத்தைச் சொல்வேன் அரவுபோல் கோப மேற்பள்
மன்னவன் மனத்துக் கேத்தோள் வருவோரை ஆதரிப்பள்
பின்னமில் லாத தேகி பொருத்தமாய்ப் பேசு வாளாம்.

15. இவளுடைய குணங்களைப் பற்றி விவரமாகப் பின் பாகத்தில் சொல்லுகிறோம். ஜாதகருடைய தாயாரின் குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகிறேன். நாகப்பாம்பிற்கு வருவதுபோலச் சீறிவருகின்ற கோபத்தை யுடையவள். தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற்போல நடந்துகொள்ளுந் தன்மையை யுடையவள். தன்னிடம் வருகிறவர்களைக் காப்பாற்றுவாள். அவயவ பங்க ஒன்றும் இல்லாத தேகத்தை யுடையவள் நியாயமாகவும் ஒழுங்காகவும் தகுதியாகவும் பேசுபவளாவாள்.

16. மாதுவும் வந்த பின்பு விளைவுமே பெரிய தாகும்
காதலி நடையும் நன்மை கண்முகம் வசிய முண்டு
பாதக மனமில் லாதாள் பலருக்கு நல்லோ ளாவள்
கோதறும் குணத்தா ளாகும் குலமதிப் பாக வாழ்வள்.

16. தாயார் தன்னுடைய புருஷனிடம் வந்துசேர்ந்த பிறகு விளைவுகள் அதிகப்படும். இவளுடைய நடவடிக்கை நல்லதாக விருக்கும். இவளுடைய கண்களும் முகமும் பிறரைத் தன் வசப்படுத்திக்கொள்ளும்படியான அழகிய தன்மை யுடையனவாக விருக்கும். கெட்ட மனமில்லாதவளாவாள். பலருக்கு நல்லவளாக விருப்பாள். குற்றமில்லாதக் குணத்தை யுடையவளாவாள். தன்னுடைய பந்துக்கள் இவளை மதிக்குந் தன்மையில் இருந்துகொண்டு வாழ்வாள்.

17. இல்லமும் அருகில் தென்பால் இவள்துணை ஆண்பால் ஒன்று
வல்லிமார் நால்வ ரென்றேம் மடிவுண்டு சிலவே பின்பால்
சொல்லுவோ மன்னே பூர்வம் சீவக நாட்டி லேதான்
புல்கினுள் வன்னிய சேயாய்ப் புத்திர ருள்ளாளாகி ;

17. தாயாருடைய வீடு தெற்குத் திக்கில் அருகில் இருக்கும். இவளுடன் கூடப்பிறந்தவர்களில் ஆண் சகோதரம் ஒருவரும், பெண் சகோதரங்கள் நான்கும் ஆம் என்று சொல்லுகிறேம். பின்னல் சில சகோதரர்கள் இறந்துவிடுவார்கள். தாயாருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறேம். இவள் ஜீவக நாட்டில் வன்னிய குலத்தில் பெண்ணுகப் பிறந்து குழந்தைகளை யுடையவளாகி ;

18. அரசர்பால் தொழிலும் செய்து அச்சென்ம வினையில் லாமல்
குறைதீர்க்கும் சேதுச் சென்று கோதையும் பேதி யால்
மரலியின் நாடு சென்று மலரயன் வரையப் பட்டு
அருமுக னடிமை வர்க்கம் அருளினு ளிந்த மாது.

18. அரசாங்கத்தில் வேலை செய்து முன் ஜன்மத்தில் பாவம் ஒன்றும் இல்லாதவளாகிக் குறைகளையும் பாவங்களையும் நீக்குகின்ற சேது மகாஸ்தலத்திற்குப் போய் இவள் பேதிகண்டு இறந்து எமபட்டிணத்திற்குப் போய் பிரமதேவனல் பிரமலிபியுடன் எழுதப்பட்டு ஆறுமுகங்களை யுடைய முருகக் கடவுளின் பக்தர்களின் குலத்திற் பிறந்தாள்.

19. மங்கையும் வறுமை காணுள் வரைகிறே மிவள்பின் ஜன்மம்
துங்கமாம் காஞ்சி தன்னில் ஜனிப்பளா மிக்கு லத்தில்
பொங்கின குடும்ப மேற்பள் புகன்றது தப்பா தாகும்
ஐங்கரன் தனைவ ளர்த்த அம்பிகை யாளே கேளாய்.

19. தாயார் கஷ்டங்களும் தரித்திரமும் இல்லாதவள். இவளுடைய ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறேம். மேன்மையானதும் உன்னதமானதுமான நிலையிலுள்ள காஞ்சீரபுத்தில் இந்த ஜன்மத்தில் முன் பிறந்த குலமாகிய செங்குந்தர் குலத்தில் பிறப்பாள். மேன்மையானதும்

வளமானதுமான குடும்பத்தை உடையவளாக விருப்பாள். நாங்கள் சொல்லியது தவருமல் நடக்கும். ஐந்து கைகளேயுடைய விநாயகக் கடவுளேப் பெற்று வளர்த்த பார்வதியம்மையே ! கேட்பீராக.

20. தந்தைமுன் ஜன்மம் சொல்வேன் தாமிர பரணி தன்னில்
பிந்தின வேளாளனுகும் பிறந்துமே கிருஷி செய்து
அந்தவன் வாழுந் நாளில் அணுகின வினையைக் கேண்மோ
முந்துமால் தமக்குத் தந்த மலர்களே மனைக்குத் தந்தான்.

20. ஜாதகருடைய தகப்பனரின் பூர்வ ஜன்மத்தைப் பற்றிச் சொல்லு கிறேன். தாமிரபரணியில் ஓர் ஏழை வேளாளனுகப் பிறந்து விவசாயத் தொழிலைச் செய்துகொண்டு இவர் வாழுகின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்த பாவத்தைக் கேட்பீராக. முந்திய வழக்கம்போல மகாவிஷ்ணுவிற்குக் கொடுத்துவந்த புஷபங்களே வழக்கம்போல் மகா விஷ்ணுவிற்கே கொடுக்காமல் தன்னுடைய மனைவிக்குக் கொடுத்தார்.

21. பாரியை போகம் துய்த்தான் பற்றிற்று அதுவோர் தோஷம்
வேறொரு மாதின் பேரில் வியர்த்தமாய் வார்த்தை சொல்ல
நாரியும் மனது வாடி நவின்றசா பத்தைக் கேண்மோ
கூறினுய் வீணுய் வார்த்தை குலவும்பின் ஜன்மம் தன்னில் ;

21. இவ்விதமாகத் தகப்பனர் செய்து பிறகு தன்னுடைய மனைவி யுடன் சம்போகஞ் செய்தார். இப்படிச் செய்தது ஒரு தோஷமாகும். இன்னெரு ஸ்திரீயின் மேல் இவர் தப்பிதமானதும் நிந்தையானதும் பழியானது மான வார்த்தைகளைச் சொல்ல அவள் தன்னுடைய மனம் நொந்து கொடுத்தச் சாபத்தைக் கேட்பீராக. என்மேல் நீ அனுவசியமாகவும் காரணமில்லாமலும் அபாண்டமானதுமான வார்த்தைகளைச் சொன்னுய். உன்னுடைய மறு ஜன்மத்தில் ;

22. உன்துணை யாலே நிந்தை உலகினில் வசையு மேற்பாய்
பின்னையும் பாரி ரண்டாய்ப் புக்கிடு மென்று சொல்லி
இன்னமும் விசேஷம் சொன்னு னெய்திற்று அந்தச் சாபம்
மன்னனு மந்தி யத்தி லறுமுகன் தொண்டு பூண்டு ;

22. உன்னுடைய சகோதரியாலே உனக்கு அவமானமும் பழியும் வந்து சேர்ந்து அதனுல் நீ பூமியில் இகழ்ச்சிச் சொல்லை அடையக் கடவாய். பின்னுல் உனக்கு இரண்டு மனைவிமார்கள் வந்து சம்பவிப்பார்கள், என்று அந்த ஸ்திரீ சொல்லி இன்னும் பலவிதமாகச் சொல்லி சாபங்கொடுத்தாள். அவளுடைய சாபம் இவரை வந்து அடைந்தது. இவர் முன் ஜன்மத்தின் கடைசி காலத்தில் ஆறுமுகங்களையுடைய முருகக் கடவுளுக்குத் தொண்டு தொழில்களைச் செய்து ;

23. சேதுவின் பதிக்குச் சென்று சென்றனன் காலன் னுடு
மாதவன் வரையப்பட்டு வந்தவ னென்று சொல்வோம்
காதலி சாபம் போலே கலந்திடும் பாரி ரண்டு
தீதுண்டு துணைவிக்கேதான் செல்லுவாள் வேறூர் பக்கல்.

23. சேது ஸ்தலத்திற்குப்போய்ப் பிறகு இறந்து எமபட்டணத் திற்குப் போனார். பிறகு பிரமதேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்தார் என்று சொல்லுகிறோம். அந்த ஸ்திரீயி னுடைய சாபத்தைப் போலவே தகப்பனாருக்கு இரண்டு மனைவிகள் நேரிடு வார்கள். தன்னுடைய சகோதரிக்குக் கெடுதல் நேரிடும். இவள் இன்னோர் ஊருக்குப் போய்விடுவாள்.

24. ஆதியில் வறுமை யுண்டு அழகான குடும்பம் பின்னால்
ஓதுவே னிவன்பின் ஜன்மம் உயர்வதாம் அருணை தன்னில்
மாதவர் குலமு திப்பன் மறுத்துமே பிருகு சொல்வர்
சூதான செட்டுச் செய்தான் சுருதியி னில்லம் எவ்வாறு ;

24. தகப்பனாருக்கு இளம் பிராயத்தில் கஷ்டங்களும் தரித்திர மும் உண்டாகும். பிற்காலத்தில் மேன்மையான குடும்பம் ஏற்படும். அஃதா வது பின்னால் குடும்பம் நல்ல அந்தஸ்தை அடையும். இவருடைய மறு ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன். சிறப்புள்ள திருவண்ணாமலையில் பிராமணர் குலத்திற் பிறப்பார். இப்படிச் சொல்ல, பிருகு மகரிஷியான வர் தடுத்துக் கேட்கின்றார். கபடமாகவும் வஞ்சனையாகவும் வியாபாரஞ் செய்து வந்த இவருக்கு வேதங்கள் தங்கியிருக்கும் படியான பிராமணர் குலத்தில் எவ்விதமாக ;

25. பிறக்கும்கா ரணங்கள் சொல்வாய்ப் புனிதனிச் ஜன்மம் தன்னில்
அறுமுகன் பத்தி யாயும் ஆபத்தைச் சிலர்க்குக் காத்தும்
பெரிதான தலங்கள் சென்றும் பேச்சதைக் காத்த லாலும்
உறைகுவான் மறைக் குலத்தில் உத்தமி கேட்டி டாயே

25. இவர் பிறப்பார், இதற்குக் காரணங்களைச் சொல்லுவீர் என்று கேட்க ; புண்ணியவானாகிய தகப்பனார் இந்த ஜன்மத்தில் ஆறு முகங்களையுடைய முருகக் கடவுளின்மேல் பக்தியுடையவராகியும், ஆபத்துக் காலத்தில் சிலரைக் காப்பாற்றியும், பெரிய புண்ணிய ஸ்தலங்களுக்குப் போயும், தன்னுடைய சொல்லைத் தவறாமல் காப்பாற்றியதாலும் பிரா மணர் குலத்திற் பிறப்பார். பார்வதியம்மையே ! கேட்பீராக.

26. பாலகன் மணத்தின் காலம் பகருவோம் பதினே ழாண்டில்
நீலியும் உள்ளூர் நேரும் நிமலியும் அன்னை வர்க்கம்
பாலிகை குணத்தைச் சொல்வேன் பதர்குண மில்லா ளாகும்
மால்மனை யொப்ப தாகும் வருவோரை ஆத ரிப்பள்

26. ஜாதகருடைய விவாக காலத்தைப்பற்றிச் சொல்லுகிறோம். இவருக்குப் பதினேழாவது வயதில் மனைவி உள்ளூரில் தாயாருடைய பந்துக் களிலிருந்து வந்து சம்பவிப்பாள். இவளுடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகிறேன். அறிவீனமானதும் அற்பமானதும் உபயோக மில்லாதது மான குணத்தையுடையவளல்ல, மகாவிஷ்ணுவின் மனைவியாகிய லட்சுமிக்குச் சமானமானவள். தன்னிடம் வருபவர்களைக் காப்பாற்றுவாள்.

குறிப்பு.—விவாகக்காலம் :—ஜாதகருக்கு வயது ஷ 16–0–0 முதல் ஷ 17–0–0 வரையிலும் சனி தசையில் புதபுக்தி நடக்கின்றது. முதல் மனைவி சம்மந்தமான கிரகங்கள் ஏழிற்குடைய சனியும் இரண்டிற்குடைய சூரியனும் களத்திர காரகனுகிய சுக்கிரனும் ஆகும். சனிக்குத் தன் தசையில் விவாகஞ் செய்ய அமைப்பு இருக்கிறது. புதன் இரண்டிற்குடைய சூரியனுடன் சம்மந்தப்பட்டுக் களத்திரஸ்தானுதிபதியாகிய சனியாலும் போககாரகனுகிய ராகுவாலும் பார்க்கப்பட்டிருப்பதால் புதனுக்குத் தன்னுடைய புத்தியில் விவாகம் செய்துவைக்க அமைப்பு இருக்கின்றது.

27 கன்னிகை யோக சாலி கணவனுக் கினிய ளாகும்
மன்னவன் மனத்துக் கேத்தோள் வஞ்சக மனமில் லாதாள்
அன்னவள் யோக சாலி அற்புத வார்த்தை சொல்வள்
முன்கோப முடைய ளாகும் மொழிவராம் பிருகு தாமும்.

27. மனைவி யோகத்தை யுடையவளாவாள். தன்னுடைய புருஷனுக்கு இஷ்டமானவள். புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற் போல நடந்துகொள்ளுந் தன்மையுடையவளாவாள். கபடமானதும் கள்ளமானதுமான மனத்தை உடையவளல்லள். இவள் யோகத்தை யுடையவள். ஆச்சரியமான வார்த்தைகளைச் சொல்லுவாள். முன்கோபத்தை யுடையவளாவாள். பிருகு மகரிஷியானவர் இதற்குமேல் சொல்லுகின்றார்.

28. இருமனை ஜாதகற்கு எய்திடு மென்று சொல்வோம்
வருமாறு புகலு மென்ன மைந்தனு[1] மேழோ னுகி
உறையிடம் உபய மாக ஒரேழில் கேது தங்கத்
திருமகன் தனக்குத் தாரம் செப்பினே மிரண்டு மாக.

28. ஜாதகருக்கு இரண்டு மனைவிமார்கள் நேரிடுவார்கள் என்று சொல்லுகிறோம். இவர் இவ்விதமாகச் சொல்ல, காரணங்களைச் சொல்லுவீர் என்று கேட்க, சனி ஏழுக்குடையவராகி உபய † ராசியாகிய மீனத்திலிருப்பதாலும், ஏழாவது வீட்டில் கேது இருப்பதாலும் ஜாதகருக்கு இரண்டு மனைவிமார்கள் நேரிடுவார்கள் என்று சொல்லுகிறோம்.

† குறிப்பு.—உபயராசி விஷயம் :—ஏழாம் வீட்டிற்கதிபதி சரராசி உபய ராசி இவைகளில் இருந்தால் ஜாதகருக்கு ஒன்றிற்கு மேற்பட்ட மனைவிகள் ஏற்படுகிற யோகம் உண்டு என்று ஜாதகாலங்காரம் 648-ஆவது பாடலில் சொல்லியிருப்பதைக் கவனிக்கவும். இரண்டாவது மனைவி வீடு ஒன்பதாவது வீடாகும். ஒன்பதிற்குடையவராகிய குரு லக்கினுதிபதியாகிய சந்திரனைப் பார்த்திருப்பதால் இரண்டாவது மனைவி வரும் யோக அமைப்பு ஜாதகருக்கு இருக்கிறது. ஜாதகருடைய தகப்பனுரது லக்கினம் மீனம். இதற்கு இரண்டாவது மனைவி வீடு ஒன்பதாவது வீடாகிய விருச்சிகம். இதற்கு அதிபதியாகிய அங்காரகன் பிதுர்லக்கினுதிபதியாகிய குருவைப் பார்க்கின்றார். ஆகையால் தகப்பனுருக்குக்கூட இரண்டாவது மனைவி இதனுல் வருகிற

[1] சனி

யோகம் இருக்கின்றது. இன்னுஞ் சில காரணங்களால் தகப்பனுருக்கு இரண்டு மனைவி உண்டு என்று இந்த ஜாதகத்தின் ஒன்பதாவது பாடலில் கண்டிருப்பதையுங் கவனிக்கவும்.

29. தென்முனி புகலு கின்றார் செப்பினேம் தாரம் ஒன்று
மர்மத்தைச் சொல்லு மென்ன மார்த்தாண்டன்[1] லாபம் தங்கக்
கன்மத்தில் புகரு[2]ம் நிற்கக் காதலி ஒன்றே தீர்க்கம்
துன்சனி தோஷத் தாலே யிவர்தந்தை மனைவி ரண்டாம்

29. இதன்மேல் தென்திசை முனிவராகிய அகஸ்திய மகரிஷி சொல்லுகின்றார், ஒரே தாரம் என்று சொல்லுகிறோம். அதற்குக் காரணம் சொல்லுவீர் என்று கேட்க, சூரியன் பதினோராவது வீட்டில் இருப்பதாலும், பத்தாவது வீட்டில் சுக்கிரன் இருப்பதாலும் ஒரே மனைவி தான் உண்டு. அவள் நீண்ட ஆயுளையுடையவளாவாள், கெடுதியான சனியினுடைய தோஷத்தினுல் இவருடைய தகப்பனுருக்கு இரண்டு மனைவிகள் உண்டு.

30. ஆகையால் பால னுக்கு அணுகாது தாரம் ரண்டு
பாகமாய்ப் புத்திர பாவம் பகருவோ மாறு தோன்றும்
தோகைய ிருவ ராகும் சுதர்களு மவ்வா றென்றோம்
எகிடு மற்ற வெல்லாம் மீச்வரி கேட்டி டாயே.

30. இவ்வித காரணங்களால் ஜாதகருக்கு இரண்டு மனைவிமார் கள் நேரிட மாட்டார்கள். பக்குவமாகப் புத்திர பாவத்தைப் பற்றிச் சொல்லு கிறோம். இவருக்கு ஆறு குழந்தைகள் பிறப்பார்கள். இரண்டு பெண்களும் இரண்டு ஆண்களும் உயிருடன் இருப்பார்கள். மற்றக் குழந்தைகள் இறந்து விடுவார்கள் என்று சொல்லுகிறோம். பார்வதியம்மையே! கேட்பீராக

31. முன்னிவ னிருந் ஜன்மம் மொழிகிறோம் கொச்சி தன்னில்
துன்மதி வைசிய னுகச் ஜனித்துமே செட்டுச் செய்து
அன்னையும் தந்தை மிக்க அறமதி லிச்சை யுண்டாய்
உன்னத தலங்கள் சென்று ஊழது மில்லானுகி ;

31. ஜாதகருடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறோம். இவர் கொச்சியில் வைசிய குலத்தில் ஆண் குழந்தையாகப் பிறந்து, வியாபாரஞ் செய்து, தன்னுடைய தாயார் தந்தையார் இவர்களைவிட அதிக மாகத் தருமஞ் செய்வதில் ஆசையுடையவராகி மேன்மையான சிறந்த தெய்வீக ஸ்தலங்களுக்குப்போய் பாவம் ஒன்றும் இல்லாதவராகி,

32. மாலியின் பதிக்குப் புக்கி மால்மகன் வரையப் பட்டுத்
திருமக னுதிப்பா னுகும் செப்புவோ மிவனின் யோகம்
பொருளது பெருக்கம் செய்வன் பெருமையாய்க் குடும்பி யாவன்
தரையதை விருத்தி செய்வன் ஜாதகன் ஏழைக் கீவன்.

---

[1] சூரியன் [2] சுக்கிரன்

32. இறந்து எமபட்டணத்திற்குப் போய்ப் பிறகு மகாவிஷ்ணுவின் குமாரராகிய பிரமதேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு ஜாதகர் பிறந்தார் என்று சொல்லுகின்றோம். இவருடைய யோக விஷயங்களைப் பற்றிச் சொல்லுகிறோம். இவர் செல்வத்தையும் சொத்தையும் அதிகப் படுத்துவார். பெருமையுள்ளதும் மேன்மையானதுமான குடும்பஸ்தராவார். நிலங்களைப் பயிரிட்டு விருத்தியாக்குவார். இவர் ஏழைகளுக்குக் கொடுத்து உதவி செய்வார்.

33. விதவித வணிபம் செய்வன் பெரியோரை உறவு கொள்வன்
பதியது மூன்று மாகும் பகருவீர் யோகம் எவ்வாறு
[1]மதிக்கேழில் புகரும்[2] தங்க மங்கலன்[3] குருவும் பார்வை
புதன்பரி யோனும்[4] லாபம் புகன்றதால் யோகம் சொன்னோம்.

33. ஜாதகர் பலவிதமான வியாபாரங்களைச் செய்வார். பெரிய மனிதர்களுடைய சினேகத்தை அடைவார். மூன்று வீடுகள் நேரிடும். இருப்பிடம் மூன்றாகவிருக்கும். எவ்விதமாக யோகத்தைச் சொன்னீர் என்று கேட்கச் சந்திரனுக்கு ஏழில் சுக்கிரன் இருப்பதாலும், அங்காரகனும் குருவும் (கர்மாதிபதியும் தர்மாதிபதியுமாக, அஃதாவது தர்மகர்மாதிபதிகளாகி) ஒருவரை யொருவர் பார்த்துக்கொள்ளுவதாலும்,புதனும் சூரியனும் பதினோராவது வீட்டில் இருப்பதாலும் யோகம் சொல்லுகிறோம்.

34. லக்கினம் நாலு ஏழு பத்தினில் கிரகம் நின்றும்
லக்குமி போன்று எழில் பருவத யோகங் நேரும்
சிக்கெனப் பொருளும் சேர்ப்பன் செட்டுக்கள் பலவாய்ச் செய்வன்
நக்கன்மேல் பத்தி பூண்பன் நற்புக ழேற்பா னென்றோம்.

34. லக்னத்திற்கு முதலாவது நான்காவது ஏழாவது பத்தாவது வீடுகளில் கிரகங்கள் இருப்பதாலும் லட்சுமியோகத்தைப் * போலவும் அழகிய பர்வத ‡ யோகங்களைப் போலவும் யோகங்கள் இருக்கின்றன. ஆகையால் ஜாதகர் சிக்கனமாகவிருந்து சொத்துக்களைச் சேகரிப்பார். பலவிதமான வியாபாரங்களைச் செய்வார். சிவபெருமானின்மேல் பக்தியுடையவர். நல்ல கீர்த்தியை அடைபவராவார்.

* **குறிப்பு.—இலட்சுமியோக விஷயம்**—இலட்சுமி யோகத்தைப்பற்றிச் ஜாதகசிந்தாமணி 2068-ஆவது பாடல், ஜாதக அலங்கராம் 359-ஆவது பாடல், பலதீபிகை 6-ஆவது அத்தியாயம், 17-ஆவது அல்லது 21-ஆவது சுலோகம், ஜாதக பாரிஜாதம் 7-வது அத்தியாயம்,152-ஆவது சுலோகம் இவைகளைப் பார்க்கவும். ‡ பர்வதயோகத்தைப்பற்றி ஜாதகாலங்காரம் 297,303, 304, 344-ஆவது பாடல்கள், ஜாதகபாரிஜாதம் 7-ஆவது அத்தியாயம் 128-ஆவது சுலோகம், ஜாதகசிந்தாமணி 2150, 2151, 2152 பாடல்கள், பலதீபிகை 6-ஆவது அத்தியாயம் 31,32 அல்லது 35,36-ஆவது சுலோகங்கள், ஜாதக சாரதீபிகை 62-ஆவது அத்தியாயம் 23-ஆவது சுலோகம் ஆகிய இவைகளைப் பார்க்கவும். இந்த ஜாதகத்திற்குப் பர்வதயோகமும் லட்சுமியோகமும்

[1] சந்திரன் [2] சுக்கிரன் [3] அங்காரகன் [4] சூரியன்

அமைந்திருக்கின்றன. நான்கு கேந்திரங்களிலும் கிரகங்கள் இருப்பதாலும் லக்கினாதிபதியாகிய சந்திரன் இருக்கும் வீட்டிற்குடையவராகியச் சுக்கிரன் லக்கினத்திற்குக் கேந்திரத்திலிருப்பதாலும் பர்வதயோகம் இருக்கின்றது. லக்கினாதிபதியாகிய சந்திரன் கேந்திரத்திலிருப்பதால் ஜாதகசிந்தாமணி 2068-ஆவது பாடல் பிரகாரம் ஒருவித லட்சுமியோகம் ஏற்படுகிறது. மேலும் லக்கினராசிக்கு முன் பின ராசிகளுக்குடையவர்களாகிய சூரியனும் புதனும் கூடி பதினொன்றில் இருப்பதையுங் கவனிக்கவும்.

35. இருபது நாலு ஆண்டி லியம்புவோம் தாதை கண்டம்
திருவிலா முப்பா ணுண்டில் செல்லுவான் அன்னை தாமும்
அறுபது ஆண்டு தன்னில் ஐப்பசி மாத மாகும்
மரலியின் பதியை யின்னோன் வாங்குவானென்று சொல்வோம்.

35. ஜாதகருக்கு இருபத்து நான்காவது † வயதில் தகப்பனார் இறந்துவிடுவார். ஜாதகருக்கு முப்பாதவது ‡ வயதில் தாயார் இறந்து விடுவாள். அறுபதாவது * வயதில் ஐப்பசி மாதத்தில் ஜாதகர் இறந்து எமபட்டணத்திற்குப் போவார் என்று சொல்லுகிறோம்.

† குறிப்பு.—**தகப்பனார் மரணம்** :—ஜாதகருக்கு வயது ஷை 23–0–0 முதல் ஷை 24–0–0 முடியும்வரையிலும் சனிதசையில் சூரியபுக்தி சந்திரபுக்திகள் நடக்கின்றன. பிதுர்லக்கினமாகிய மீனத்திற்குச் சனி புதன் சுக்கிரன் சூரியன், இவர்கள், பராசரஹோரை ஜாதகசந்திரிகை தாண்டவமாலை சந்திர காவியம் ஆகிய இவைகளின் பிரகாரம் மாரகாதிபதிகளாகின்றார்கள். சனி மீனத்திற்குப் பதினொன்றிற்கும் பன்னிரண்டிற்கும் உடையவராகி லக்னத்தி லிருந்துகொண்டு ஆயுள் விஷயத்தில் சம்மந்தப்பட்ட பத்தாம் வீட்டை யும் பார்க்கின்றார். சூரியன் மாரகாதிபதியும் ஆறுக்குடையவருமாகி மூன்றில் மாரகாதிபதியாகிய புதனுடன் கூடி இருக்கின்றார். ஆகையால் சனிதசையில் சூரியபுக்தியில் பிதாவுக்கு மாரக அமைப்பு இருக்கிறது.

‡ **மாதுர் மாரகம்.**—ஜாதகருக்கு வயது ஷை 29–0–0 முதல் ஷை 30–0–0 முடியும் வரையிலும் சனிதசையில் ராகு புக்தி, குரு புக்தி இவைகள் நடக்கின்றன. மாதுரு லக்கினமாகிய துலாத்திற்குச் சூரியன் குரு இவர்கள் பராசரஹோரை ஜாதக சந்திரிகை இவைகளின் பிரகாரம் மாராகாதிபதிகளா கின்றார்கள். சனி மாரகாதிபதியாகிய குருவினுடைய வீட்டில் இருந்து கொண்டு துலாத்திற்கு ஆறில் இருக்கின்றா. ஆயுள் விஷயத்தில் சம்மந்த முள்ள துலாத்திற்கு எட்டாவது வீடாகிய ரிஷபத்தையும் பார்க்கின்றார். ஆகையால் ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரம் சனி மாரகாதிபதி யாகின்றார். குரு எற்கனவே மாரகாதிபதியாகி லக்கினத்தைப்பார்க்கின்றார். ஆகையால் குரு தன்புக்தியில் மாதாவுக்கு மாரகஞ்செய்ய அமைப்பு இருக்கின்றது.

* **ஜாதகர் மாரகம்.**—ஜாதகருக்கு வயது ஷை 59–0–0 முதல் ஷை 60–0–0 முடியும் வரையிலும் சுக்கிரதசையில் சூரிய புக்தி சந்திரபுக்தி இவை கள் நடக்கின்றன. கடகலக்கினத்திற்குச் சுக்கிரன் புதன் சனி இவர்கள் மார காதிபதிகள். சுக்கிரன் லக்கினாதிபதியாகிய சந்திரனைப் பார்த்திருக்கின்றார்.

ஆகையால் சுக்கிரன் பராசரஹோரை ஜாதகசந்திரிகை துய்யகேரளம் எட்டாம் பாவம் 20-ஆவது பாடல் இவைகளின் பிரகாரம் மாரகாதிபதியாகின்ருர். சூரிய்ன் மாரகஸ்தானமாகிய இரண்டிற்குடையவராகி மாரகாதிபதியாகிய புதனுடன் கூடி மாரகஸ்தானத்தில் இருக்கின்ருர். ஆகையால் ஜாதக சந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரம் மாரகம் செய்வார்.

36. பிருகுவும் புகலு கின்ருர் புதல்வனும் தீர்க்க மென்றீர்
குருதசை ஆதி காலம் குழவிக்குக் கண்ட மெய்தும்
பிறை[1] புகர்[2] கேந்திர மாகப் போய்விடும் பிணிகள் யாவும்
வரும் ஜன்மம் காஞ்சி தன்னில் வருகுவனும் சைவச் சேயாய்.

36. பிருகு மகரிஷியானவர் தடுத்துக் கேட்கின்ருர். ஜாதகருக்கு வயது தீர்க்கம் என்று சொன்னீரே! குருதசையின் முதல் பாகத்தில் ஜாதகருக்குக் கண்டம் நேரிடும் என்கிறேன். இப்படிச் சொல்லவே, சந்திரனும் சுக்கிரனும் கேந்திரத்தில் இருப்பதால் எல்லா நோய்களும் நிவிர்த்தியாகிவிடும். ஜாதகர் மறுஜன்மத்தில் காஞ்சீபுரத்தில் சைவ குலத்தில் ஆண் குழந்தையாகப் பிறப்பார்.

37. பிறந்திடுங் காலம் தன்னில் பொன்தசை யீரா றண்டும்
உறைந்திடும் திங்க ளேழும் உரைக்கிறேம் பலனை யாங்கள்
வரவுக்குச் செலவ னேகம் மாரனும் பிணியால் வாடும்
வருவதாம் துணைபின் னுக வரைகிறேம் பின்பால் சேதி.

37. ஜாதகர் ஜனனமான காலத்தில் குருமகாதசையில் இருப்பு நின்ற வருஷம் பன்னிரண்டும் மாதங்கள் ஏழும் ஆகும். இக்காலத்திய பலாபலன் களை நாங்கள் சொல்லுகிறேம். வரும்படிக்கு மேல் அதிகமான செலவு ஏற்படும். ஜாதகர் ரோகத்தால் கஷ்டப்படுவார். இவருக்குப் பின்னுல் சகோதரர்கள் உண்டாவார்கள். மற்ற விஷயங்களைப் பின்னுல் பின்பாகத்தில் சொல்லுகிறேம்.

---

[1] சந்திரன் [2] சுக்கிரன்

# ஜாதகம் 81

1. திங்களும் [1]சீய [2]மாகச் சிகி[3]கன்னி குருவும் தேளில்[4]
மங்கலன்[5] வீணை [6]யாக மால்[7] பானு [8] நந்தி [9] புக்கப்
பங்கய மகனும்[10] சாடி [11] பணி[12]மீனம் அலவன் [13] ஜன்மம்
சுங்கனும் [14] கடக மாகச் செப்புவீர் பலனைத் தானே.

| | | | |
|---|---|---|---|
| ராகு | | சூரியன் புதன் | அங்கா ரகன் |
| சனி | இராசி சக்கரம் | | லக்கினம் சுக்கிரன் |
| | | | சந்திரன் |
| | குரு | | கேது |

மகம் 2-ம் பாதம், கேது தசை ஷ 4–9–0

1. சந்திரன் சிம்மத்திலும், கேது கன்னியிலும், குரு விருச்சிகத்திலும், அங்காரகன் மிதுனத்திலும், புதனும் சூரியனும் ரிஷபத்திலும், சனி கும்பத்திலும், ராகு மீனத்திலும், சுக்கிரன் கடகத்திலும், ஜன்ம லக்கினம் கடகத்திலும் இருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று ;

2. உமையவள் கேட்கும் போது உரைக்கிறார் பராசர் தாமும்
அந்தவாண்பால் ஜன்மம் அவன் தந்தை யில்லம் சொல்வேன்
எமனுத்திரம் வீதி யாகும் இந்திரன் வாடையாகும்
ஜமதக்கினி வடகீ ழாகும் சிங்கவாக னத்தாள் கீழ்ப்பால்

2. பார்வதியம்மையார் கேட்கும்போது பராசர மகரிஷியானவர் சொல்லுகின்றார். ஆண் குழந்தை பிறக்கும். இவருடைய தகப்பனாரின் வீட்டைப்பற்றிச் சொல்லுகிறேன். வீடு வடக்குத் தெற்குத் தெருவில் கிழக்கு வாடையில் இருக்கும். ஜமதக்கினி என்ற ஒரு முனிவருடைய ஆச்ரமம் வடகிழக்குத் திக்கில் இருக்கும். காளியம்மன் கோயில் கிழக்குத்திக்கில் இருக்கும்.

---

[1] சந்திரன் [2] சிம்மம் [3] கேது [4] விருச்சிகம்
[5] அங்காரகன் [6] மிதுனம் [7] புதன் [8] சூரியன்
[9] ரிஷபம் [10] சனி [11] கும்பம் [12] இராகு
[13] கடகம் [14] சுக்கிரன்

3. அறுமுகன் கோஷ்டம் தென்பால் அணுகிய சிறுவூராகும்
வருவனும் சேஷ்ட னுகை வடுகர்தன் குலமே தோன்றும்
பெறுமன்னே தந்தை யோகம் பேதையர் புத்திர யோகம்
திருமகன் முன்பின் சென்மம் செப்புவோ மிந்நூல் தன்னில்.

3. ஆறுமுகங்களையுடைய முருகக்கடவுளின் கோயில் தெற்குத் திக்கில் இருக்கும். பிறந்த ஊர் ஒரு சிறிய கிராமமாகும். ஜாதகர் தெலுங்கருடைய ஒரு குலத்தில் ஜேஷ்டகுமாரகனுகப் பிறப்பார். இவருடைய பெற்ற தாயார் தகப்பனுர் இவர்களுடைய யோகங்களையும், மனைவி மக்கள் இவர்களுடைய யோகங்களையும், இவருடைய முன்ஜன்மம் பின்ஜன்மம் ஆகிய இவைகளையும் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகிறேம்.

4. தந்தையின் துணையாண் மூன்று சத்திமார் தோஷ மெய்தும்
அந்தஆண் மத்தில் சேதம் அறைகிறேம் பின்பால் சேதி
இந்தவன் தந்தை சேதி யியம்புவோ மிருநி றத்தான்
சிந்தையில் கபடு மில்லான் செட்டுக்கள் சிலவே செய்வன்.

4. தகப்பனுருடைய ஆண் சகோதரங்கள் மூன்று பேர் ஆகும். பெண் சகோதரங்கள் இறந்துவிடுவார்கள். இந்த ஆண் சகோதரங்கள் கூட மத்திமவயதில் இறந்து விடுவார்கள். இவர்களுடைய விஷயங்களைப் பற்றிப் பின்னுல் சொல்லுகிறேன். ஜாதகருடைய தகப்பனுரின் விஷயங்களைப் பற்றிச் சொல்லுகிறேன். இவர் இரண்டு நிறங்கள் கலந்துள்ள நிறமாகிய மா நிறத்தையுடையவர். மனத்தில் கள்ளம் வஞ்சனை கவடு இவைகள் இல்லாதவர். சில வியாபாரங்களைச் செய்வார்.

5. தரணியை விருத்தி செய்வன் சதுஷ்பாத முடைய னுகும்
அரிபத்தி கொஞ்ச முண்டு அறமதி லிச்சையில்லான்
இருசொல்லு முடைய னுகுமீகையும் கொஞ்ச முண்டு
விரைவினில் நடக்க வல்லான் வீண்வம்பில் செல்லா னுகும்.

5. தகப்பனுர் நிலங்களைப் பயிரிட்டு விருத்தியாக்குவார். கால்நடைகளையுடையவராவார். மகாவிஷ்ணுவின்மேல் கொஞ்சம் பக்தியை யுடையவர். தருமம் செய்வதில் ஆசையில்லாதவர். இரண்டுவிதமான சொற்களையுடையவர். அஃதாவது உண்மையையும் பொய்யையுங்கலந்து பேசுவார். பிறருக்குக் கொடுக்கின்ற குணத்தையுங் கொஞ்சம் உடையவர். வேகமாக நடக்கின்ற சக்தியையுடையவர். வீண்சண்டை சச்சரவுகளில் பிரவேசிக்க மாட்டார்.

6. சுகதுக்கம் கலந்து வாழ்வன் துணைப் பெண்பால் தோஷ மென் [றிர்
வகையதைப் புகலு மென்னப் பரிதியும் [1] லாபம் தங்கத்
தகைமையாய்ப் பெண்பால் தோஷம் சாருமே வினையால் தாயே
உரிமையாயந்தச் சங்கை உரைகுவீர் முனியே நீர்தாம்.

---

[1] சூரியன்

6. சுகங்களையும் துக்கங்களையும் கலந்தாற்போல அனுபவித்து வாழ்வார். இவருக்குப் பெண் சகோதர தோஷம் உண்டு என்று சொன்னீரே! அதனுடைய விவரத்தைச் சொல்லுவீர் என்று கேட்க சூரியன் பதினோராவது * வீட்டில் இருப்பதால் பெண் சகோதரங்களுக்குத் தோஷமுண்டாகும். இது பூர்வ ஜென்மத்தின் பாவத்தால் உண்டாகும் என்று சொல்ல, அந்த விஷயத்தை, முனிவரே! நீரே சொல்லுவீராக.

*குறிப்பு.—பதினோராவது வீடானது தகப்பனார் பாவத்தின் ராசியாகிய மீனத்திற்குச் சகோதரஸ்தானமாகிய மூன்றாவது வீடாகும். இந்த வீடு பெண் ராசியாய் இருப்பதைக் கவனிக்கவும். மூன்றில் சூரியன் இருந்தால் எத்தனை சகோதரர் பிறக்குமோ அத்தனைபேரும் இறந்துவிடுவார்கள் என்று சம்பு ஹோராபிரகாசிகாவில் சகோதரபாவத்தில் 57, 58-ஆவது சுலோகங்களில் சொல்லி இருக்கிறது.

7. முன்னவன் ஜன்மம் சொல்வேன் முக்கூடல் தன்னி லேதான்
வன்னிய குலமு தித்து மனைவிமைந் தருமுண் டாகி
அன்னவன் வாழுந் நாளில் அணுகின வினையைக் கேண்மோ
கன்னிகை யொருத்தி பேரில் கழறினன் சிலேடை வார்த்தை.

7. தகப்பனாருடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறேன். இவர் முக்கூடல் என்ற ஊரில் வன்னியர் குலத்திற் பிறந்து மனைவி மக்களை உடையவராகி வாழ்கின்றகாலத்தில் இவருக்கு வந்து சம்பவித்தப் பாவத்தைக் கேட்பீராக. ஒரு ஸ்திரீயின்மேல் அலங்காரமாகவும் இரண்டு அர்த்தங்கள் உண்டாகும்படியாகவும் சில குற்றமான வார்த்தைகளைச் சொன்னார்.

8. மாதுவும் மனம்க லங்கி வரைகிறாள் சாபம் தானும்
தீதான வார்த்தை யென்மேல் செப்பின பாவிக் கேதான்
போதவே பின்ஜன் மத்தில் பெண்துணை யில்லா தாயும்
மேதினில் வாழ்வா யென்று விளம்பியே தெருத்தூள் விட்டாள்.

8. அந்த ஸ்திரீ மனம் நொந்து கவலைப்பட்டுச் சாபத்தைக் கொடுக்கின்றாள். குற்றமான வார்த்தைகளை என்மேல் சொல்லிய பாவியாகிய உனக்கு, பின்ஜென்மத்தில் பெண் சகோதரம் இல்லாமல் பூமியில் வாழக்கடவாய் என்று சொல்லித் தெருவிலுள்ள மண்தூளை வாரித் தூற்றினாள்.

9. மங்கையின் சாபம் தானும் மருவிடு மிச் ஜன் மத்தில்
சங்கையாய்த் துணைப் பெண் தோஷம் சார்ந்திடும் வாயு பாதை
அங்கவன் பின்ஜன் மங்கேள் அருணைமா நகரி லேதான்
தங்கங்கள் வேலை செய்யும் ஜனிப்ப னுமிக்கு லத்தில்.

9. அந்த ஸ்ரீதியினுடைய சாபமானது தகப்பனாரை இந்த ஜன்மத்தில் வந்து அடையும். இந்தக்காரணத்தினால் இவருடைய சகோதரிக்குத்

தோஷமுண்டாகும். வாயு பாதையும் உண்டாகும். இவருடைய மறு ஜன்மத்தைப் பற்றிக் கேட்பீராக. திருவண்ணுமலை என்ற பெரியப் பட்டணத்தில் தங்க வேலைசெய்யும் கம்மாளர் குலத்தில் பிறப்பார்.

10. சொல்லிய குணத்தா னுக்குத் தோன்றுவா னிந்தப் பாலன்
புல்குவோ மிவன்கு ணத்தைப் புகழ்ந்தோரை ஆத ரிப்பன்
தல்லிதந் தைக்குக் கர்மம் தான்செய்வன் இருசி வப்பன்
வல்லியர் மோக வானும் மாநிலம் கிருஷி செய்வன்.

10. இவ்விதமாகச் சொல்லப்பட்டக் குணங்களையுடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகிறேம். இவர் தன்னைப்பற்றிப் புகழ்ந்து பேசுகின்றவர்களைக் காப்பாற்றுவார். இவர் தன்னுடைய தாயார் தகப்பனுர் இவர்களுக்குக் ஈமக்கிரியைகளைச் செய்வார். மாநிறமுள்ள தேகத்தையுடையவர். பெண்களின்மேல் காம ஆசையை உடையவராவார். பெரிய பூமிகளைப் பயிரிடுவார்.

11. முகமதில் வடிவும் காணும் முனிவுண்டு உடனே தாழ்வு
அகமது புதிதாய்ச் செய்வன் அஞ்சின வார்த்தை கூறுவன்
பகையென்று மனத்தில் வையான் பலதொழில் புரிவா னுகும்
ஜகமதில் நல்லோ னுவன் சீக்கிர நடையு மாவன்.

11. ஜாதகருடைய முகத்தில் அழகானக் குறிகள் இருக்கும். இவருக்குக் கோபம் வரும். அஃது உடனே தணிந்தும் குறைந்தும் போய்விடும். இவர் ஒரு வீட்டைப் புதியதாகக் கட்டுவார். பயப்படும்படியான கெட்டவார்த்தைகளைச் சொல்லுவார். தன்னுடைய மனத்தில் விரோதம் அல்லது குரோதத்தை வைத்துக்கொண்டிருக்கமாட்டார். அநேகவிதமான வேலைகளைச் செய்வார். பூமியில் நல்லவரென்று பெயரெடுப்பார். வேகமாக நடக்கக்கூடியவராவார்.

12. சொல்லிடும் வசன மெல்லாம் சுத்தமாம் சொகுசா யுண்பன்
வெல்லுவான் எதிரி தன்னை வீண்வழக் கோரம் சொல்லான்
சல்லிய மென்ரு லச்சம் தனத்தின்மே லிச்சை யுண்டு
மல்லில்முன் செல்லா னுகும் மருவிடும் சகடு தானே.

12. ஜாதகர் சுத்தமான நல்ல வார்த்தைகளைச் சொல்லுவார். நாகரிகம் உள்ளவராகவும் ஒழுங்காகவும் நேர்த்தியாகவும் சாப்பிடுவார். எதிரிகளை ஜயித்துவிடுவார். வழக்கு விவகாரம் தகராறு இவைகளில் அநியாயமாகவும் ஒருபக்கமாகவும் பேச மாட்டார். கடன் என்ருல் பயப்படக்கூடியவர். பணத்தின்மேல் ஆசையுடையவர். சண்டை சச்சரவுகளில் முன்னே போய் நிற்காதவராவார். வண்டி இவருக்கு வந்து சேரும்.

13. தந்தைக்கு மேலாய் வாழ்வன் தனமிக பெருக்கம் செய்வன்
முந்துமால் பத்தி கொஞ்சம் முண்டக ரேகை யுண்டு
வந்தவர்க் கன்ன மீவன் வளமையாய்க் குடும்ப மேற்பன்
பந்துவும் மதிக்க வாழ்வன் பார்வதி கேட்டி டாயே.

13. ஜாதகர் தன்னுடைய தகப்பனுருடைய அந்தஸ்தைவிட அதிக மான அந்தஸ்தில் இருந்து வாழ்வார். பணத்தை அதிகமாக விருத்தி செய்வார். முதலில் மகாவிஷ்ணுவின்மேல் கொஞ்சம் பக்தியை யுடைய வர். இவருடைய உள்ளங்கையில் தாமரைரேகை உண்டு. தன்னிடம் வந்தவர்களுக்குச் சாப்பாடு போடுவார். மேன்மையானதும் வளமானது மான குடும்பத்தையுடையவர். தன்னுடைய பந்துக்கள் தன்னை மதிக்கும்படி யான அந்தஸ்திலிருந்து வாழ்வார். பார்வதியம்மையே ! கேட்பீராக.

[குறிப்பு.—இதுவரையிலுந்தான் ஓலை ஏடுகள் இருக்கின்றன. 14 முதல் 27 வரையிலுமுள்ள பாடல்கள் உள்ள ஏடுகள் கிடைக்கவில்லை.]

28. மாரனும் ஜனிக்கும் காலை மகமது இரண்டாம் பாதம்
தீரமாய்க் கேது யிருப்புச் செப்புவோம் ஆண்டு நாலும்
நேரிடும் நவமாம் திங்கள் நிகழ்த்தினேம் பூர்வ பாகம்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

28. ஜாதகர் பிறக்குங்காலத்தில் ஜன்மநட்சத்திரம் மகத்தில் இரண்டாவது பாதமாகும். இதற்குரிய கேதுமகாதசையில் இருப்பு நான்கு வருஷங்களும் ஒன்பது மாதங்களும் ஆகும். இவ்விதமாக முன்பாகத்தைச் சொன்னேம். ஆறு பெருமை பொருந்திய முகங்களையுடைய முருகக்கடவுளைப் பெற்றெடுத்தப் பார்வதியம்மையே ! கேட்பீராக.

## ஜாதகம் 82

1. கடகலக் கினமதாகக் கரும்பாம்பு[1] அதிலே தங்கச்
சுடரவன்[2] புந்தி[3] வெள்ளி[4] சிகி[5] யுமே ஏழில் தங்க
முடவனு[6] மெட்டி லாக மங்கலன்[7] நவத்தி லேற
அடல்குரு லாப மாக அம்புலி[8] யீரா றுக.

| | | | |
|---|---|---|---|
| அங்கா ரகன் | | குரு | சந்திரன் |
| சனி | இராசி சக்கரம் | | லக்கினம் ராகு |
| சூரியன் புதன் சுக்கிரன் கேது | | | |
| | | | |

புனர்பூசம் 1-ஆம் பாதம் குருதசை ஷ 15-5-0.

1. ஜன்மலக்கினம் கடகமாகி அதில் இராகு இருந்து சூரியனும் புதனும் சுக்கிரனும் கேதுவும் ஏழாவது வீட்டிலும், சனி எட்டாவது வீட்டிலும், அங்காரகன் ஒன்பதாவது வீட்டிலும், குரு பதினொன்றாவது வீட்டிலும், சந்திரன் பன்னிரண்டாவது வீட்டிலும் இருந்தால் ;

குறிப்பு.—இந்த ராசிச்சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரகநிலை பொருத்தமுடையதாகும் :—மேஷத்தில் சந்திரனும், மிதுனத்தில் புதனும், கடகத்தில் சுக்கிரனும், சிம்மத்தில் சூரியனும், கன்னியில் அங்காரகனும் கேதுவும், தனுசில் சனியும், கும்பத்தில் குருவும், மீனத்தில் ராகுவும் ஆகும்.

2. பலன்தனைச் சொல்லு மென்று சுந்தரி கேட்கும் போது
வல்லவர் வசிஷ்டர் சொல்வார் வாணது ஜனன மாகும்
இல்லமும் வடதென் வீதி இந்திர நோக்கம் வாசல்
கல்மலே கீழ்ப் பா லாகும் கெடியுண்டு அரசர் வாசம்.

2. பலாபலன்களைச் சொல்லுவீரென்று பார்வதியம்மையார் கேட்கும் போது, மிகவும் அறிஞராகிய வசிஷ்டமகாமுனிவர் சொல்லுகிறார். பிறந்த குழந்தை ஆண் குழந்தையாகும். பிறந்த வீடு வடக்குத் தெற்குத்

---

[1] இராகு [2] சூரியன் [3] புதன் [4] சுக்கிரன்
[5] கேது [6] சனி [7] அங்காரகன் [8] சந்திரன்

தெருவில் கிழக்குத்திக்கைப் பார்த்த வாயிற்படியுடைய வீடாகும். பிறந்த ஊரில் கல்மலை கிழக்குத்திக்கில் இருக்கும். இந்த ஊரில் ஒரு கோட்டையு முண்டு. அங்கே அரசர்களும் வாசஞ் செய்வார்கள்.

3. பலவித செட்டுச் ஓங்கும் பெருத்ததோர் நகர மாகும்
சொல்லுமிவ் வடையா ளத்துள் சுதனுமே சேஷ்ட னாகும்
தலைவனும் சகஸ்ர கோத்திரம் ஜனிப்பனு மென்று சொல்வோம்
நிலைமையாய்க் குடும்பச் சேதி நிகழ்த்துவோம் கேளும் தாயே.

3. பிறந்த ஊரில் அநேக விதமான வியாபாரங்கள் ஓங்கி வளரும். இந்த ஊர் ஒரு பெரிய பட்டணமாகும். இவ்விதமான அடையாளங்களுள்ள ஊரில் ஜாதகர் ஜேஷ்ட குமாரனுகப் பிறப்பார். இவர் சகஸ்ர கோத்திரத்தில் வந்து பிறப்பார் என்று சொல்லுகிறோம். குடும்பத்தின் நிலையான விஷயங் களைப்பற்றிச் சொல்லுகிறோம். எங்களுடைய தாயாராகிய பார்வதியம்மையே ! கேட்பீராக.

4. தந்தையின் துணை யாண் ஒன்று சத்திமா ரிருவ ராகும்
நொந்திடு மற்ற வெல்லாம் நுகர்ந்தஆண் யிளையோ னாகும்
அந்தவன் வேருய்ச் செல்வன் அணுகிடும் தாரம் ரண்டு
பிந்திய பாகம் தன்னில் பேசுவோம் விவர மாக.

4. ஜாதகருடைய தகப்பனுரின் சகோதரர்களில் ஓர் ஆண் சகோதரரும். இரண்டு பெண் சகோதரங்களும் நீடித்த ஆயுளுடையவர்களாக இருப் பார்கள். மற்ற சகோதரர்களெல்லாம் இறந்து விடுவார்கள். ஆண் சகோதரர் ஜாதகருக்கு இளைய சகோதரராவார். இவர் வேறு குடும்பமாக விருந்து வாழ் வார். இவருக்கு இரண்டு மனைவிகள் வந்து சம்பவிப்பார்கள். இவருடைய விஷயங்களைப் பற்றி விவரமாகப் பின் பாகத்தில் சொல்லுகிறோம்.

5. இவன்பிதா குணத்தைச் சொல்வே னீகைவான் சிவந்த மெய்யன்
பவமன மில்லா னாகும் பரவுப கார னுவன்
நவனிகள் சேர்க்கா னாகும் நற்றந்தை யில்லம் காணுன்
தவசிக ளுறவு கொள்ளான் சஞ்சல மனத்த னாகும்.

5. ஜாதகருடைய தகப்பனுரின் குணங்களைப் பற்றிச்சொல்லுகிறேன். இவர் கொடையாளியா யிருப்பார். சிவப்பு நிறமான தேகத்தை யுடையவ ராவர். பாபமான மனத்தை யுடையவரல்ல. பிறருக்கு உதவியைச் செய் வார். பூமிகளைச் சேகரிக்கமாட்டார். தன்னுடைய தகப்பனுருடைய வீடு இவருக்குக் கிடைக்காது. முனிவர்கள், பரதேசிகள் ஆகிய இவர்களுடைய சினேகிதத்தை அடையமாட்டார். சஞ்சலமுள்ள மனத்தை யுடையவராவர்.

6. இல்லமும் அலைதலாகும் யாவர்க்கும் நல்லோ னுவன்
அல்லல்கள் மத்தி யில்தான் அவன்துணை பகையு மாகும்
நல்லதோர் பொருளும் காணுன் நன்னடை மிருது வார்த்தை
சொல்லதைக் காப்பா னாகும் சோதியும் சாயல் கொஞ்சம்.

6. ஜாதகருடைய தகப்பனரின் குடும்பம் தொந்தரவை யுடையதாக விருக்கும். இவர் எல்லோருக்கும் நல்லவராக விருப்பார். கஷ்டங்கள் மத்திய வயதில் இவருக்குண்டு. இவருடைய சகோதரர் இவருக்கு விரோதி யாகவிருப்பார். இவருக்கு நல்ல சொத்துக்கள் கிடையா. நல்ல நடவடிக் கையும் ஒழுக்கமும் உடையவர். மெதுவானதும் இன்பமானதுமான வார்த் தைகளைச் சொல்லுவார். தான் சொல்லிய சொல்லைத் தவருமல் காப்பாற்று வார். கண்பார்வை கொஞ்சஞ் சாய்ந்திருக்கும் அஃதாவது கண் கொஞ்சம் சாயலாக விருக்கும்.

7. மரமாட்டும் தொழிலு மேற்பன் மானிலம் சல்லியம் கொள்வன்
விரைவினில் நடக்க வல்லான் விகடங்கள் கூறு ளுகும்
கரமதில் விஷ்ணு ரேகை கல்வியு மல்ப மாகும்
பெருமையாய்க் குடும்பம் பின்னுல் பெறுவனு மூக சாலி.

7. ஜாதகருடைய தகப்பனர் மரத்தைக் (கடாய்கின்ற) செதுக்குகின்ற வேலையை யுடையவர். பூமியில் கடன் படுவார். பூமியை வாங்குவார். வேகமாய் நடக்கக்கூடியவர். வேடிக்கையாகப் பேசமாட்டார். இவருடைய உள்ளங்கையில் விஷ்ணு ரேகை என்ற ஒரு விதமான ரேகை யுண்டு. இவருக்குப் படிப்பு கொஞ்சமாக விருக்கும். இவருடைய குடும்பம் பிற் காலத்தில் மேன்மையாக விருக்கும். நுட்பமான புத்தியை உடையவர். நுட்பமாய் யோசிப்பவர், ஆராய்பவரும் ஆவார்.

8. சொன்ன இக்குணத் தானுக்குத் தோன்றுவா னிந்தப் பாலன்
அன்னவன் சிவந்த மேனி அரிமக னொப்ப தாகும்
முன்கோப முடனே தாழ்வு மொழியது சுருக்க மாகும்
பொன்பணி சேர்ப்பா னுகும் புகழ்ந்தோரை ஆதரிப்பன்.

8. இங்கு சொல்லப்பட்ட குணங்களையுடைய தகப்பனருக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவர் சிவப்பு நிறமுள்ள தேகத்தையுடையவர். இவர் மகாவிஷ்ணுவின் குமாரராகிய மன்மதனுக்குச் சமானமான ரூபத்தையும் அழகையு முடையவராவர். இவருக்கு முன் கோபம் வரும். ஆனல் அஃது உடனே தணிந்தும் அடங்கியும் போகும். இவர் சுருக்கமாகவும் கொஞ்ச மாகவும் பேசுவார், தனம் ஆபரணங்கள் இவைகளைச் சேகரித்து வைப்பார். தன்னைப் பற்றிப் புகழ்ச்சியாகவும் மேன்மையாகவும் பேசுகிறவர்களை இவர் காப்பாற்றுவார்.

9. காரியச் சமர்த்த னுகும் கல்விமான் கணக்கி னுகி
நாரியர் மோக னுவன் நல்ல இல்லங்கள் செய்வன்
மாறிடான் பெரியோர் வார்த்தை மரமாட்டும் தொழிலு மேற்பன்
ஆறுமா முகத்தோன் பத்தி அவனுமே கொள்வா னுகும்.

9. ஜாதகர் காரியங்களைச் செய்து முடிப்பதில் சமர்த்திய முடையவராவர். படித்தவர். கணிதத்தில் நுட்பமாய் ஆராய்ச்சி செய்யும் புத்தியை யுடைய வர். வல்லவர். பெண்களின்மேல் காம ஆசையை யுடையவர். நல்ல

அழகான வீடுகளைக்கட்டுவார். பெரிய மனிதர்களுடைய வார்த்தைகளுக்குத தவருக நடந்து கொள்ளமாட்டார். மரத்தைக் (கடாய்கின்ற) செதுக்குகின்ற வேலையைச் செய்வார். ஆறு பெருமை பொருந்திய முகங்களையுடைய முருகக்கடவுளின்மேல் பக்தியும் அன்பும் உள்ளவராவார்.

10. பொன்பணி சேர்ப்பா னாகும் புயபல முடைய னாகும்
தன்பந்து மேலாய் வாழ்வன் சாராள்கள் சேர்ப்பா னாகும்
அன்னியர் மதிக்க வாழ்வன் ஆண்மையாய்க் குடும்ப மேற்பன்
கன்னியர் மோக னாவன் காதலி கேட்டி டாயே.

10. ஜாதகர் தனம் ஆபரணம் ஆகிய இவைகளைச் சேகரித்து வைப்பவ ராவார். தோள்வலிமை யுடையவராவார். தனக்கு உதவியாயுள்ள வேலை யாட்களைச் சேர்த்துக் கொள்ளுவார். பிறர் இவரை மதிக்கும்படியாகவும் கௌரவஞ் செய்யும் படியாகவும் வாழ்வார். வலிவுள்ளதும் மேன்மை யானதுமான குடும்பத்தை அடைவார். பெண்களின்மேல் காமஆசையை யுடையவராவார். பார்வதியம்மையே ! கேட்பீராக.

11. இன்னவன் துணைவர் தம்மை யியம்புவோ மாண்பா லொன்று
கன்னிகை யிருவர் தீர்க்கம் கனக்காவே மற்ற வெல்லாம்
பின்பாகம் விவரமாகப் பேசுவோம் துணைவன் சேதி
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே.

11. ஜாதகருடைய சகோதரர்களைப் பற்றிச் சொல்லுகிறேம். இவருக்கு ஆண் சகோதரர் ஒருவரும், பெண் சகோதரங்கள் இருவரும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். மற்ற சகோதரர்களெல்லாரும் அதிகமான ஆயுளில்லாமல் இறந்து போய் விடுவார்கள். இந்தச் சகோதரருடைய விஷயங்களைப் பற்றி விவரமாக அடுத்த பாகத்தில் செல்லுகிறேம். மேன்மையான யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்தப் பார்வதியம்மையே ! கேட்பீராக.

12. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அன்புள மனத்த ளாகும்
அன்னியர் குற்றம் சொல்லாள் அடாவடி கூறு ளாகும்
அன்னமு மன்பாய் யீவள் ஆளன்தன் மனத்துக் கேத்தோள்
அன்னவள் சமயோ கத்தாள் அன்னம்போல் சாய லொக்கும்.

12. ஜாதகருடைய தாயின் குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லு கிறேன். இவள் நல்ல மனதையுடையவள். பிறர்மேல் கருணையுடைய வளாவாள். பிறர்மேல் கெடுதியானதைச் சொல்ல மாட்டாள். அனியாய மாகவும் முரட்டுத்தனமாகவும் பேசமாட்டாள். பிறருக்குச் சாப்பாட்டைப் பிரியத்துடனும் ஆசையுடனும் போடுவாள். தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தபடி நடந்து கொள்ளக்கூடியவள். இவள் சமமான அளவு உள்ள யோகத்தை உடையவளாவள், அன்னப்பட்சியைப் போல அழகான ரூபமுடையவளாவாள்.

13. மாந்தளிர் மேனி யரகும் வருவோரை ஆத ரிப்பள்
கூர்ந்துமே வார்த்தை சொல்வள் கூறுமுன் கோபம் கொஞ்சம்
சாந்தவாள் பித்த தேகி சலித்தோர்க்கு உதவி செய்வாள்
காந்தம்போல் புத்தி யுண்டு காதலி தீர்க்க ஜீவி.

13. ஜாதகருடைய தாயார் மாமரத்தின் துளிரினுடைய நிறத்தைப் போல் ஒருவிதமான சிவப்பு நிறமான தேகத்தை யுடையவளாவள். இவள் தன்னிடத்திற்கு வருகின்றவர்களைக் காப்பாற்றுவாள். அதிகமாகப் பேசுவாள். பேசுவதற்கு முன்னே கோபம் கொஞ்சம் உள்ளவள். அஃதாவது முன்கோபியாயிருப்பாள். இவள் பித்தமுள்ள தேகத்தையுடையவள். இளைத்தவர்களுக்கும் துக்கமுள்ளவர்களுக்கும் உபகாரஞ் செய்வாள். பிறரைத் தன்வசம் இழுக்கும் படியானதும் வசப்படுத்திக் கொள்ளும்படி யானதுமான புத்தியும் குணமுமுள்ளவள். இவள் நீண்ட வயதுடையவளாவாள்.

14. இல்லமும் மேல்பா லாகு மிவள்துணை ஆண்பால் மூன்று
வல்லிமார் அவ்வாறு தீர்க்கம் மாதுரு பூர்வம் சொல்வேன்
எல்லையி லுயர்வ தான எழில்கொங்கு நாட்டி லேதான்
புல்கினுள் கர்ண சேயாய்ப் புகழான குடும்பி யாகி.

14. ஜாதகரின் தாயாருடைய வீடு மேற்குத் திக்கிலிருக்கும், இவளுடைய ஆண்சகோதரர்கள் மூன்று பேரும் பெண் சகோதரர்கள் மூன்று பேரும் நீண்ட ஆயுளை உடையவர்களாவார்கள். தாயாருடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறேன். பூமியில் உயரமானதும் மேன்மை யானதுமான அழகிய கொங்கு தேசத்தில் கருணீகர் குலத்தில் பிறந்து மேன்மையுடைய ஒரு குடும்பஸ்தையாகி ;

15. முன்வினை யில்லா தாகி மொதுங்கினுள் கால ன்னுடு
பொன்னவன் வரையப் பட்டுப் பிறந்தவ ளென்று சொல்வோம்
பின்ஜன்மம் விரிஞ்சி மேல்பால் பிறப்பளாம் கங்கைசே யாய்
அன்னவள் வறுமை யின்றி அன்புடன் வாழ்வா ளாகும்.

15. முன் ஜன்மத்திய பாவம் ஒன்றும் இல்லாமல் எம பட்டணத்திற்குப் போய் பிரம தேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றாள் என்று சொல்லுகிறோம். இவள் மறுஜன்மத்தில் விரிஞ்சிபுரத்திற்கு மேற்கில் வேளாளர் குலத்திற் போய்ப் பிறப்பாள். இவள் தரித்திரமும் கஷ்டங்களும் இல்லாமல் வாழ்வளாகும்,

16. தந்தையின் பூர்வம் தன்னைச் சாற்றுவேரம் சோழ நாட்டில்
வந்தனன் கங்கை சேயாய் வளமுள குடும்பி யாகி
அந்தவன் வாழுந் நாளில் அணுகின வினையை கேண்மோ
முந்தினோர் தமக்குப் பொன்னை முதவியே முரியும் திட்டி.

16. ஜாதகருடைய தகப்பனாரின் முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறோம். இவர் சோழதேசத்தில் வேளாளர் குலத்திற்பிறந்து செழிப்பானதும் மேன்மையானதுமான குடும்பஸ்தராகி வாழுகின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்தப் பாவத்தைச் சொல்லுகிறோம், கேட்பீராக. இவர் முதல் குலத்தோராகிய பிராமணர் சிலருக்குப் பணத்தைக் கடனாகக் கொடுத்து உதவிசெய்து ஓர் அடைமானப் பத்திரத்தை எழுதி வாங்கிக் கொண்டார்.

17. பின்சில நாட்கள் சென்று பொருளதைக் கேட்கும் போது
இன்னமும் சிலநாள் சென்று பாரென்று அவரும் சொல்ல
மன்னர்பால் முரியும் காட்டி மாநிலம் தன்கைக் கொண்டான்
அன்னவர் மனவெ றுப்பால் அறைந்திட்ட சாபம் கேண்மோ.

17. ஜாதகருடைய தகப்பனார் கொஞ்சகாலம் பொறுத்துத் தான் கடனாகக் கொடுத்தப் பணத்தைத் திரும்பிக்கொடு என்று கேட்டபோது இன்னம் சில நாட்கள் சென்ற பிறகு பாருங்கள் என்று கடன் வாங்கினவர்களுக்குப் பதில் சொல்ல, இவர் இராஜாங்கத்தாரிடம் போய் அடைமானப் பத்திரத்தையும் நடவடிக்கைச் செலவையும் கட்டி அதிகமான அடைமான நிலங்களைத் தன் கைவசமாக்கிக் கொண்டார். கடன்காரர்கள் மனம் நொந்து வருத்தப்பட்டுக் கொடுத்தச் சாபத்தைச் சொல்லுகிறோம் கேட்பீராக.

18. மற்றொரு ஜன்மம் தன்னில் வனவாசம் சிலது நாட்கள்
பெற்றதோர் தந்தை யில்லம் போய்விடும் துணைவி ரோதம
சுற்றத்தார் மதிப்பில் லாமல் தொல்புவி தன்னில் வாழ்வாய்
இத்தகை சொல்லும் போது எய்திடும் அந்தச் சாபம.

18. "நீ உன்னுடைய மறு ஜன்மத்தில் கொஞ்சகாலம் வனவாசமாக வேறோர் ஊரில் இருந்து வாழக்கடவாய். உன்னுடைய தகப்பனார் வீடு உனக்குக் கிடைக்காமல் போய்விடக் கடவது. உன்னுடைய சகோதரன் உனக்கு விரோதியாகக் கடவது. உன்னுடைய பந்துக்கள் உன்னை மதிக்காவண்ணம் இருந்து நீ இந்தப் பழைமையான உலகத்தில் வாழக்கடவாய்" என்று இவ்விதமாகக் கடன்பட்டவர்கள் சொல்லிச் சாபங் கொடுதார்கள். இந்தச் சாபம் ஜாதகனுடைய தகப்பனாரை வந்து அடையும்.

19. அந்திய காலம் தன்னில் அவன்செல்வம் குறைவு நேர்ந்து
தென்திசை காலன் னூடு சென்றுமே பிரமன் லக்கம்
வந்தவ னென்று சொல்வோம் மறையவர் சாபம் போலே
தந்தையி னில்லம் காணான் தான்வன வாசம் சின்னாள் ;

19. தகப்பனார் முன் ஜன்மத்தில் கடைசி காலத்தில் தன்னுடைய செல்வம் குறைந்து போய்ப் பிறகு தெற்குத் திக்கிலுள்ள எமபட்டணத்திற்குப் போய் பிரமதேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றார் என்று சொல்லுகிறோம். பிராமணர்கள் கொடுத்த சாபப் பிரகாரம் இவர் தன்னுடைய தகப்பனாருடைய வீட்டை அடையமாட்டார். சிலகாலம் வனவாசம் செய்து ;

20. சஞ்சல மனமாய் வாழ்வன் சாற்றுவோ மிவன் பின்ஜன்மம
மிஞ்சிய வேங்கடத்தில் விளங்குவான் வைவ ஞக
தஞ்சமாய் வணிபம் செய்து தரணியில் வாழ்வா ஞகும்
அஞ்சிஞேர் தம்மை காக்கும் அம்பிகை யாளே கேளாய்.

20. தன்னுடைய மனத்தில் துக்கமும் கஷ்டமுடையவராகி வாழ வார். இவருடைய பின் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறேம், சிறப்புற் றேங்கிய திருவேங்கடம் என்று சொல்லப்பட்ட திருப்பதி ஸ்தலத்தில் வைஷ்ணவராகப் பிறப்பார். எளிமையாகவும் தாழ்மையாகவும் வியாபாரம் செய்தும் பூமியில்வாழ்வாராகும். பயப்பட்டவர்களைக் காப்பாற்றும்படியான பார்வதியம்மையே ! கேட்பீராக.

21. இன்னவன் மணத்தின் கால மியம்புவோ மிருப தாண்டில
கன்னிகை மேல்பால் நேரும் காதலி வர்க்கம் தன்னில்
அன்னவள் வருவா ளாகும் அறைகிறே மவள்குணத்தை
நன்னடை மிருது வார்த்தை நவின்றிடாள் கட்டு வார்த்தை.

21. ஜாதகருடைய விவாகம் நடக்குங் காலத்தைப் பற்றிச் சொல லுகிறேம். இவருக்கு இருபதாவது வயதில்* மனைவி மேற்குத் திக்கிலி ருந்து வந்துநேரிடுவாள். தாயாருடைய வர்க்கத்திலிருந்து இவள் வருவாள். இவளுடைய குணதிசயங்களைப்பற்றிச்சொல்லுகிறேம். இவள் நல்ல நட வடிக்கையும் நல்லொழுக்கமும் உடையவள். மெதுவாகவும் இனிப்பாகவும் வார்த்தைகளைச் சொல்லுவாள். இவள் பொய்யான வார்த்தைகளையும் புனைந்த வார்த்தைகளையும் சொல்லமாட்டாள்.

* குறிப்பு.—விவாக விஷயம்:—ஜாதகருக்கு வயது ஷ்ரீ 19—0—0 முதல ஷ்ரீ 20—0—0 முடியும் வரையிலும் சனி தசையில் புதபுக்தி நடக்கின் றது. சனி களத்திரஸ்தானமாகிய ஏழாவது வீடாகிய மகரத்திற்கு அதிபதி யாகி சந்திரனுக்கு ஒன்பதாவது வீட்டில் இருக்கின்றுன். புதன் சந்திர னுக்குப் போகஸ்தானமாகிய நான்காவது வீடாகிய கன்னியா ராசிக்கு அதி பதியாகி லக்கினத்திற்கு ஏழாவது பாவத்தில் குடும்பாதிபதியாகிய சூரியனு டனும் லக்கினத்திற்குப் போகஸ்தானமாகிய நான்காவது வீடாகிய துலாத திற்கு அதிபதியும் களத்திரகாரகனுமாகிய சுக்கிரனுடனும் கூடிப் போகக் காரணுகிய இராகுவால் பார்க்கப்பட்டிருக்கின்றுர். ஆகையால் சனி தசையில் புதபுக்தியில் ஜாதகருக்கு விவாகம் நடக்க அமைப்பு இருக்கின்றது.

22. இருசிவப் புடையா ளாகு மிடருன புத்தி யில்லாள்
அரிவையும் தீர்க்க ஜீவி அத்திரி தடுத்துச் சொல்வார்
திருகாகு முதல்ம ணைதான் சேருவா ளிரண்டாம் பாரி
அறிவிப்பீ ரந்தச் சங்கை மால் [1] புகர் [2] கேது பானு [3].

22. ஜாதகருடைய மனைவி இரண்டு நிறங்கள் கலந்துள்ள மாநிற முள்ள தேகத்தையுடையவள். கெடுதியான புத்தியும் குணமும் இல்லா தவள். இவள் நீண்ட ஆயுளை உடையவள். இவ்விதமாகச் சொல்ல, அத்திரி மகரிஷியானவர் மறுத்துச் சொல்லுகின்றுர். முதல் மனைவிக்குக

[1] புதன். [2] சுக்கிரன். [3] சூரியன்

கெடுதி நேரிடும் * அதன்பேரில் இரண்டாவது மனைவி ஜாதகருக்கு வந்து சம்பவிப்பாள் என்று சொல்ல, இதற்குக் காரணங்களைச் சொல்வீரென்று கேட்க, புதனும் சுக்கிரனும் கேதுவும் சூரியனும்.

*குறிப்பு.—மனைவி விஷயம்:—22-23-ஆவது பாடல்களிலிருந்து முதல் மனைவி இறந்து விடுவாள் என்று தெரிகிறது. முதல் மனைவி விஷயமாகக் கவனிக்கவேண்டிய அமசங்கள் 7-2 ஆவது பாவங்களும், இந்தப் பாவாதிபதி களும், சுக்கிரனும் ஆகும். சூரியனும் புதனும் சுக்கிரனும் கூடி ஏழாவது பாவத்தில் இருந்தால் ஜாதகர் கெட்டப் பத்தினியை உடையவர் என்று கர்க ஹோரையிலும் பலபத்திரரது ஹோராரத்தினத்திலும் சொல்லி இருப்ப தால் ஜாதகருக்குப் பத்தினிசுகமில்லை என்று ஊகிக்கவேண்டியதாயிருக்கின் றது. ஏழாவது பாவத்தில் பன்னிரண்டாவது பாவத்திற்குடையவர் (இங்கு புதன்) இருந்தால் பார்யாசுகம் கிடையாதென்று ராமதயாளு என்பவருடைய சங்கேதநிதி என்ற கிரந்தத்தில் ஆருவது சங்கேதத்தில் 97 ஆவது சுலோகத் தில் லோமசரிஷி வசனம் என்றும் மனைவிக்குக் கஷ்டம் நேரிடும் என்று பிருகுசம்ஹிதையிலும் சொல்லியிருக்கின்றது. இங்குப் புதனும் சுக்கிரனும் அஸ்தமடைந்து இருப்பதால் இவர்கள் சுபபலன் கொடுப்பதற்கு அருகராகவில்லை. இரண்டாவது பாவத்தைச் சனி அஷ்டமாதிபதியாகிப் பார்க்கின்றது தோஷமாகும். இரண்டாவது பாவாதிபதி (இங்குச் சூரியன்) பாபியாகி ஏழாவது பாவத்தில் இருந்தால் மனைவியால் ஜாதகருககுச் சுகங் கிடையாது என்று பிருகுசம்ஹிதையிலிருந்து தெரிய வருகிறது. மேலும் சந்திர லக்கின ரீதியாய்ச் சந்திரனுக்குக் களத்திர ஸ்தானாதிபதியாகிய ஏழாவது பாவத்திற்குடைய குரு சந்திரனுக்குப் பன்னிரண்டிலும் தன் பாவத்திற்கு ஆருவது வீட்டிலும் இருப்பது தோஷமானது. சந்திரனுக்குக் எட்டில் களத்திரகாரனாகிய சுக்கிரனும், போகஸ்தானாதிபதியாகிய புதனும் இருப்பது தோஷமானது. சந்திரனுக்கு இரண்டில் ராகு இருப்பது தோஷ மானது. இரண்டாவது மனைவி ஸ்தானமாகிய ஒன்பதிற்குடைய குரு லக்கி னத்திற்கு ஏழாவது பாவத்தைப் பார்ப்பதால் இரண்டாவது மனைவி வருகிற அமைப்பும் இருக்கிறது. இங்குச் சொல்லிய காரணங்களாலும் 22, 23-ஆவது பாடல்களில் சொல்லியுள்ள காரணங்களாலும் ஜாதகருக்கு இரண்டு மனைவி யோகம் இருக்கிறது.

23. சத்தம மதனில் தங்கச் சத்தமத் தோனு மெட்டில்
குத்த மாயிருப்ப தாலே கூறினேம் தாரம் ரண்டு
சத்திமா ரிருவர் என்றீர் தீர்க்கமோ விரய மோசொல்
செத்திடும் முதல்மனை விதான் செப்புவீர் காலம் தன்னை.

23. ஏழாவது பாவத்தில் இருப்பதாலும் ஏழுக்குடையவர் எட்டாவது பாவத்தில் கெட்டுப்போயிருப்பதாலும் இரண்டு தாரம் என்று சொல்லு கிறோம். மனைவிகள் இரண்டு பேர்கள் என்று சொன்னீர். இவர்கள் இரு வரும் நீண்ட ஆயுளை உடையவர்களோ இறந்துபோய் விடுவார்களோ என்ற விவரத்தைச் சொல்வீர் என்று கேட்க, முதல் மனைவி இறந்து விடுவாள் என்று பதில் சொல்ல, அப்படி இறந்து போகும் காலத்தைச் சொல்லுவீர் என்று கேட்க,

24. இருபது ஒன்ப தாண்டி வீன்றதோர் சுதரி னாலே
மாலியன் பதிக்குச் சேர்வள் மறுஆண்டில் வேறு மாது
உறைவளாம் குடகு தன்னில் உத்தமி தீர்க்க ஜீவி
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

24. ஜாதகருக்கு இருபத்தொன்பதாவது வயதில்* மனைவி பிரசவத்தினால் இறந்து எமபட்டணம் போய்ச்சேருவாள். அடுத்த வருஷத்தில் இரண்டாவது மனைவி மேற்குத் திக்கிலிருந்து வந்து சம்பவிப்பாள். இந்த மனைவி நீண்ட ஆயுளை உடையவள். அருமையான வேதங்களின் முடிவில் விளங்குகின்ற பார்வதி அம்மையே ! கேட்பீராக.

*குறிப்பு.—முதல் மனைவி மரிக்குங் காலம்.—ஜாதகருக்கு வயது 28-0-0 முதல் வரை 29-0-0 முடியும் வரையிலும் சனி தசையில் அங்காரக புத்தி நடக்கின்றது. ஒரு ஜாதகத்தில் லக்கின பாவம் தவிர மற்ற பாவங்களை ஆராய்ச்சி செய்யும்போது அந்த பாவத்தையோ அல்லது ஒரு காரகாதிபதியையோ லக்கினமாகப் பாவித்து அந்த பாவத்தால் அறியவேண்டிய விஷயங்களையும் அந்தகாரகாதிபதியால் அறியவேண்டிய விஷயங்களையும் ஆராய்ச்சி செய்து தெரிந்துகொள்ளவேண்டும் என்று சில ஜோதிடக் கிரந்தங்களில் சொல்லி இருக்கின்றது. இவ்விதமாகவே சுக்கிரநாடி முதலிய சில நாடிகளில் ஆராய்ச்சி செய்து பலன்களைச் சொல்லியிருப்பதாகத் தெரியவருகிறது. மேலும் இந்த நாடிகளிலிருந்தே ஒரு பாவஅதிபதியும் அந்த பாவகாரகனும் தன்னுடைய தசாபுத்தி காலங்களில் அந்த பாவத்தினால் அல்லது அந்த காரகாதிபதியினால் அறிந்து கொள்ளக்கூடிய மானிடப் பிறவிக்கு மாரகத்தைச் செய்து விடுகிறார்கள் என்று தெரியவருகிறது. அஃதாவது ஒன்பதிற்குடையவரும் சூரியனும் தன் தசாபுத்தி காலங்களில் பிதுர்மாரகத்தையும், நான்கிற்குடையவரும் சந்திரனும் தன் தசாபுத்தி காலங்களில் மாதுரு மாரகத்தையும், ஏழிற்குடையவரும் சுக்கிரனும் தன் தசாபுக்தி காலங்களில் களத்திர மாரகத்தையும் உண்டுபண்ணிவிடுகிறார்கள் என்று தெரியவருகிறது. ஆகையால் சில லக்கினங்களுக்கு மாரகாதிபதியாய்ச் சில கிரகங்கள் நேரிட்டாலும் அவர்கள் மாரகஞ் செய்யமாட்டார்கள் என்று பராசர ஹோரையிலும், இதைத் தழுவி எழுதியுள்ள ஜாதகச்சந்திரிகை தாண்டவ மாலை சந்திரகாவியம் முதலிய கிரந்தங்களிலும் சொல்லி இருப்பது பெரும்பாலும் ஜாதகருக்கு மாத்திரமே தவிர மற்ற பாவங்களை லக்கினமாகப் பாவித்து ஆராய்ச்சி செய்யும் பாவ லக்கினங்களுக்குப் பொருந்தாது என்று சுக்கிரநாடி முதலிய சில நாடிகளிலிருந்தும், இந்தச் சப்தரிஷிநாடியிலிருந்துட் ஊகிக்கவேண்டியதாக இருக்கின்றது. இந்த ஜாதகத்தில் களத்திர பாவமாகிய எழிற்குடைய சனி தன்தசையிலேயே களததிரத்திற்கு மாரகஞ் செய்து விடுவார் என்று கண்டிருக்கின்றதையும் கவனிக்கவும். ஆனால், பராசரஹோரையில் (இங்கு களத்திர லக்கினமாகிய) மகரத்திற்குச் சனி மாரகஞ் செய்யமாட்டார் என்று கண்டிருக்கின்றது. மகரலக்கினத்திற்கு அங்காரகன் மாரகாதிபதி என்று பராசரஹோரை ஜாதகச்சந்திரிகை இவைகளில் சொல்லியிருப்பதாலும், அங்காரகன் மாரகஸ்தானமாகிய மூன்றில் இருப்பதாலும், களத்திரத்திற்குத் தன்புக்தியில் மாரகஞ்செய்ய அமைப்பு இருக்கிறது.

25. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோ மெழுவர் தோன்றும்
சுத்தமா யாண்பால் மூன்றும் தோகையு மொருத்தி தீர்க்கம்
செத்திடும் மற்ற வெல்லாம் ஜயமுனி தடுத்துச் சொல்வார்
எத்தனை பாரிக் கேதான் னியம்பினீர் புத்திர சங்கை.

**25.** ஜாதகருக்குச் சந்ததியைப் பற்றிச் சொல்லுகிறோம். மொத்த தில் ஏழு குழந்தைகள் பிறக்கும். இவர்களில் மூன்று ஆண் குழந்தை களும் ஒரு பெண் குழந்தையும் நீண்ட ஆயுளையுடையவர்களாக இருப்பார் கள். மற்றக் குழந்தைகள் எல்லாம் இறந்துபோய்விடும். இவ்விதமாகச் சொல்ல ஜய முனிவர் மறுத்துக் கேட்கின்றார். எந்த மனைவிக்கு நீர் இந்தப் புத்திரப் பாக்கியத்தைச் சொன்னீர்.

26. முதல் மனை தனக்குப் பெண்பால் மேவிடு மொன்றே தீர்க்கம்
அதிபதி இளையா ளுக்கு மைந்தர்கள விருத்தி யென்றோம்
இதுநிற்க இவனின் பூர்வ மியம்புவோ மினிமே லாக
அதிதிவாழ் காளாத்தி தன்னில் அணுகினான் வடுக னாக.

**26.** முதல் மனைவிக்கு ஒரே பெண் குழந்தை நீண்ட ஆயுளுடை யதாக விருக்கும்.* இரண்டாவது மனைவிக்கு மூன்று ஆண் குழந்தைகள் நீண்ட ஆயுளை உடையவர்களாக இருப்பார்கள்.* இஃது இப்படி இருக்க, இனி மேல் ஜாதகருடைய பூர்வ ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறோம். ரிஷிகள் வாசஞ் செய்கின்ற காளஹஸ்தி க்ஷேத்திரத்தில் இவர் முன் ஜன்மத்தில் தெலுங்கராகப் பிறந்தார்.

***குறிப்பு.—சந்ததி விவரம்.**—முதல் மனைவி லக்கினம் ஏழாவது பாவ மாகிய மகரம். இதற்குப் புத்திர ஸ்தானமாகிய ரிஷபத்திற்குடையராகிய சுக்கிரன் சூரியனுடன் அஸ்தமனம் அடைந்திருப்பது புத்திர தோஷமாகும். புதனுடன் சேர்ந்திருப்பது புத்திரதோஷமாகும். கேதுவுடன் சேர்ந்திருப்பது புத்திர தோஷமாகும். ரிஷபத்தை ராகு பார்ப்பது புத்திர தோஷமாகும். ரிஷபத்தில் குரு மகரத்திற்குப் பன்னிரண்டிற்குடையவராகி இருப்பது புத்திர தோஷமாகும். மகரத்திற்கு ஒன்பதிற்குடைய புதன் சூரியனுடன் அஸ்தமன மாகிக் கேதுவுடன் இருப்பதும், இந்த ஒன்பதாவது பாவத்தை அங்காரகனும் ராகுவும் பார்ப்பதும் புத்திர தோஷமாகும். ஆகையால், முதல் மனைவிக் குப் புத்திர தோஷம் அதிகமாகவிருக்கின்றது. இரண்டாவது மனைவி லக்கி னம் ஒன்பதாவது பாவமாகிய மீனம் ஆகும். இதற்குத் புத்திரபாவமாகிய கடகத்தில் இராகு இருக்கின்றார். புத்திர ஸ்தானாதிபதியாகிய சந்திரன் மீனத்திற்கு நான்கில் இருக்கின்றார். கடகத்தைப் புதன் பார்ப்பது புத்திர தோஷமாகும். புத்திரகாரனாகிய குரு மீனத்திற்கு மூன்றில் இருப்பது கொஞ் சம் புத்திர தோஷமாகும். மீனத்திற்கு ஒன்பதாம் வீடாகிய விருச்சிகத்தைக் குரு பார்ப்பதும் அவ்வீட்டிற்கதிபதியாகிய அங்காரகன் லக்கினத்திலேயே இருப்பது அனுகூலமாகும். ஆகையால் இரண்டாவது மனைவிக்கும் புத்திர தோஷம் இருக்கிறது. ஆனால் இந்த இரண்டாவது மனைவிக்கு இருக்கிற இந்தப் புத்திரதோஷம் முதல் மனைவிக்கு இருக்கிற புத்திரதோஷத்தைவிட குறை

வாக இருக்கிறது. ஆகையால் முதல் மனேவியைவிட இரண்டாவது மனேவிக்கு அதிக சந்ததி இந்த ஜாதகத்திற்குச் சொல்லி இருக்கிறது. மேலும் முதல் மனேவி சீக்கிரம் இறந்து விடுவதால் சந்ததி குறைவு ஏற்படுகிறது.

27. அரசர்பால் தொழிலும் பெற்று அவனுமே வாழுந் நாளில்
வரனின்றி விதவை மாதை வரனுமே போகம் துய்த்துக்
கருவுமே தங்கும் போது கலேத்தனன் பண்டி தத்தால்
மரலியின் பதிக்குச் சேர்ந்தாள் மாதுவு மென்று சொல்வோம்.

27. ஜாதகர் முன் ஜன்மத்தில் இராஜாங்கத்தில் ஒரு வேலேயிலிருந்து கொண்டு வாழ்கின்ற காலத்தில் புருஷனில்லாத ஒரு விதவை ஸ்திரீ யினிடம் சம்போகஞ் செய்து அவள் கர்ப்பவதியானபோது அவளுக்கு வைத்தியஞ் செய்து அந்தக் கர்ப்பத்தைக் கலேத்துவிட, அதனுல் அவள் இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச்சேர்ந்து விட்டாள் என்று சொல்லு கிருேம்.

28. வேறுதோ ஷங்க ளின்றி வித்தகன் வாழ்ந்து மேதான்
தீரமாய்க் காலன் ஞடு சென்றுமே பிரமன் லக்கம்
பாரினில் செக்கான் வம்சம் பிறப்பனு மிந்தப் பாலன்
காரிழை கருவின் சாபம் கலந்திடு மிச்ஜன் மத்தில்.

28. ஜாதகர் வேறே எவ்விதமான பாவங்களும் இல்லாமல் முன் ஜன்மத்தில் வாழ்ந்து இறந்து எமபட்டணத்திற்குப்போய் பிரம்மதேவனுல் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்தப் பூமியில் செக்காடுகின்ற செட்டியார் குலத்தில் வந்து பிறந்தார். இவருக்கு இந்த ஜன்மத்தில் முன் ஜன்மத்தில் கர்ப்பத்தைக் கலேத்த தோஷ சாபம் வந்து சம்பவிக்கும்.

29. முதல்மனே தோஷ மெய்தும் மொழிகுவீர் சாந்தி ஒன்று
ஏது சாந்தி செய்தாலும் தானிலகாது என்று சொல்வோம்
அதிபன்தன் யோகச் செய்தி வரைகிருே மினிமே லாக
உதித்தநாள் முதலாமாக உறைக்கிருே மிரண்டாண் டிற்கும்.

29. ஆகையால் ஜாதகருக்கு முதல் மனேவி தோஷத்தால் இறந்து போய் விடுவாள். இந்தத் தோஷத்தை நிவிர்த்தி செய்ய ஒரு சாந்தி சொல் வீர் என்று கேட்க, எந்தவிதமான சாந்தி செய்தாலும் அந்தத் தோஷம் நிவிர்த்தியாகாது என்று சொல்லுகிருேம். இனிமேல் ஜாதகருடைய யோக விஷயங்களேப்பற்றிச் சொல்லுகிருேம். பிறந்தது முதல் இரண்டு வருஷம் வரையிலுமுள்ள பலா பலன்களேச் சொல்லுகிருேம்.

30. வனவாசம் தரித்தி ரங்கள் மாரனும் பிணிய னேகம்
பிணமதால் பகையு மெய்தும் இடுக்கமாம் குடும்பம் எய்தும்
தனமதால் தரித்தி ரங்கள் சல்லியப் பாதை நேரல்
நினேப்பது முடியா தாகும் நிகழ்த்துவோ மதின்மே லாக.

30. வனவாசங்கள் நேரிடும். தரித்திரம் உண்டு. அனேகவிதமான ரோகம் ஜாதகருக்கு ஏற்படும். சாவால் விரோதங்கள் ஏற்படும். குடும்பத்தில் கஷ்டங்கள் உண்டாகும். பணம் விஷயமாகத் தரித்திரமும் கடன் தொந்தரவுகளும் ஏற்படும். நினைத்த காரியங்கள் முடிவு பெறாது. இதற்கு மேல் பலன்களைச் சொல்லுகிறோம்.

குறிப்பு.—இங்குச் சொல்லியுள்ள பலன்களில் ஜாதகருக்குப் பொருந்தக் கூடிய பலன்களும் அவருடைய தகப்பனாருக்குப் பொருந்தக்கூடிய பலன்களும் அடங்கி இருக்கின்றன.

31. பிறைபோலே செல்வ மோங்கும் பொருள்சில ராலே நேரும்
குறையது நிவிர்த்தி யாகும் குலமதிப் புடனே வாழ்வன்
திருமகள் வாச மெய்தும் செய்தொழில் மென்மேல் விருத்தி
அறுமுக னருளு மோங்கும் அணுகிடும் சகடு தானும்.

31. வளர்பிறைச் சந்திரனைப்போல செல்வம் வளர்ந்து அதிகரிக்கும். சில மனிதர்களாலே பொருள் வந்து சேரும். கஷ்டங்கள் விலகிவிடும். இந்த ஜாதகர் பந்துக்கள் மதிக்கும்படியான நிலையிலிருந்து வாழ்வார். இலட்சுமீ இவரிடம் வாசஞ் செய்வாள். தான் செய்கின்ற ஜீவனத்துக்கான தொழில் நாளுக்கு நாள் விருத்தியை அடையும். ஆறுமுகங்களையுடைய முருகக் கடவுளின் கிருபையும் அநுக்கிரகமும் அதிகப்படும். வண்டியும் வந்து நேரிடும்.

32. சொல்லமு மந்தஆண் டின்மே லெய்திடும் துன்பம் நீங்கும்
நல்லவெண் கலங்கள் செம்பொன் நல்கிடும் பணியும் கூவல்
அல்லல்கள தன்மேல் காணன் அஞ்சிடான் எதிரிக் கேதான்
எல்லைகள் சேர்ப்பா ளுகு மெய்துமே ஏழாயி ரம்பொன்.

32. சொல்லிய வருஷத்திற்குப் பிறகு வீடு வந்து சம்பவிக்கும். கஷ்டங்களும் உபத்திரவங்களும் விலகிவிடும். நல்ல வெண்கலப் பாத்திரங்களும் பொன்னுகிய தனமும் ஆபரணங்களும் பெரிய கிணறுகளும் ஆகிய இவைகளை ஜாதகர் அடைவார். இதற்குப் பிறகு ஜாதகர் கஷ்டங்களை அடைய மாட்டார். தன்னுடைய சத்துருவுக்குப் பயப்படமாட்டார். இவர் நிலங்களைச் சேகரிப்பார். ஏழாயிரம் பொன்பெறக்கூடிய சொத்து இவருக்குக் கிடைக்கும்.

33. எப்படி யோகம் சொன்னீ ரியம்புவீ ரந்தச் சங்கை
ஒப்புடன் தர்ம கர்மன் ஒன்பதும் லாபம் தங்க
அப்பணி[1] கடக மாக அலரியும்[2] புகரு[3] மேழில்
தப்பித மின்றி நிற்கத் தனபதி யோக மென்னோம்.

33. எவ்விதமாக யோகத்தைச் சொன்னீர் ? அதற்குக் காரணத்தை சொல்வீர் என்று கேட்க, தர்மாதிபதியும் கர்மாதிபதியும் (ஆகிய குருவும் அங்காரகனும்) பதினோராவது பாவத்திலும் ஒன்பதாவது பாவத்திலும் முறையே இருப்பதாலும், இராகு கடகத்தில் இருப்பதாலும், சூரியனும்

[1] ராகு. [2] சூரியன். [3] சுக்கிரன்.

சுக்கிரனும் ஏழாவது பாவத்தில் குற்றமில்லாமல் இருப்பதாலும் தனபதி (குபேரன்)† என்ற யோகம் உண்டு என்று சொல்லுகிறோம்.

†குறிப்பு.—குபேர யோகம் :—லாபாதிபதியாவது நான்காமாதியாவது 1, 4, 9-இல் இருந்தாலும் மற்றைய பாபக் கிரகங்கள் 2, 9-இல் இருந்தாலும் குபேரயோகம் ஏற்படுகிறது என்று பிருகு சம்ஹிதையில் சொல்லி இருக்கின்றது.

34. வடதிசை அரசன் போலே வாழ்வனு மிந்தப் பாலன்
சடைமுனி புகலு கின்றுர் தாய்தந்தை கர்மம் சொல்வாய்
முடவன்[1]தன் தசையந் தத்தில் வித்தகன் முப்பான் ரண்டில்
திடமதாய்த் தந்தை கண்டம் செப்பின மொழிகுன் றுது.

34. வடக்குத் திக்கிற்கு அரசனுகிய குபேரனைப்போல இந்த ஜாதகர் வாழ்வாராகும். ஜாதகருடைய தாயார் தகப்பனுர் இவர்களுடைய கர்ம காலங்களைச் சொல்லுவீர் என்று ஜடைமுனி கேட்கின்றுர். சனி தசையின் முடிவில் ஜாதகரது முப்பத்திரண்டாவது வயதில் தகப்பனுர் இறந்து போவார். நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும்.

குறிப்பு.—பிதுர்மாரகம்:—ஜாதகருக்கு வயது வருஷம் 31முதல் வருஷம் 32 முடியும் வரையிலும் சனி தசையில் ராகு குரு இவர்களுடைய புக்திகள் நடக்கின்றன. பிதுர் லக்கினம் ஒன்பதாவது வீடாகிய மீனமாகும். மீனத்திற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் சனி புதன் சுக்கிரன் சூரியன் இவர்கள் மாரகாதிபதிகளாகின்றுர்கள். சனி மீனத்திற்குப் பன்னிரண்டிற்குடையவராகிப் பன்னிரண்டிலேயே மாரகஸ்தானத்தில் இருக்கின்றுர். குரு ஒன்பதாம் பாவாதிபதியாகி, அஃதாவது பிதுர்பாவாதிபதியாகி அதற்கு மூன்ருவது மாரகஸ்தானத்தில் இருக்கின்றதால் ராகுவை விட பிதாவை மாரகஞ் செய்ய அதிக அதிகாரமுடையவராய் இருக்கின்றுர். ஆகையால் சனி தசையில் குருபுக்தியில் பிதாவுக்கு மாரகஞ் செய்ய அமைப்பு இருக்கிறது.

35. அதற்குபின் நாலா மாண்டில் அன்னைக்குக் கண்ட மெய்தும்
அதிபனுக் கறுப தாண்டில் மாசிமா தத்தி லேதான்
சதியான காலன் ளுடு சாருவா னென்று சொல்வோம்
துதிசெய்யும் பராசர் சொல்வார் தீர்க்கமாம் வயது என்றீர்.

35. அதற்குப் பின்னுல் நான்காவது வருஷத்தில், அஃதாவது முப்பத்தாருவது வயதில் ஜாதகருடைய தாயாருக்கு மரணம் நேரிடும். ஜாதகருக்கு அறுபதாவது வயதில் மாசி மாதத்தில் மரணம் நேரிட்டு இவர் எமபட்டணத்திற்குப் போய்ச் சேருவார் என்று சொல்லுகிறேம். இதைப் பராசரமகாரிஷி தடுத்து கேட்கின்றுர். ஜாதகருக்கு வயது தீர்க்கம் என்றீரே.

குறிப்பு.—மாதுர் மாரகம்:—ஜாதகருக்கு வயது வருஷம் 35 முதல் வருஷம் 36 முடியும் வரையிலும் புததசையில் புதபுக்தி நடக்கின்றது. மாதுர் லக்கினம் நான்காவது பாவமாகிய துலாமாகும். துலாத்திற்கு பராசர

[1] சனி.

ஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் சூரியனும் குருவும் மாரகாதிபதிகளாகின்றார்கள். புதன் துலாத்திற்குப் பன்னிரண்டாவது பாவமாகிய மாரகஸ்தானத்திற்கு அதிபதியாகி, மாரகாதிபதியாகிய சூரியனுடன் சம்மந்தப்பட்டும், லக்கின அஷ்டமாதிபதியாகிய சுக்கிரனுடன் கூடியும் இருக்கின்றார். ஆகையால் ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரமும் துய்யகேரளம் எட்டாவது பாவம் 20-ஆவது பாடல் பிரகாரமும் புதன் மாரகாதிபதியாகின்றார்.

(2) **ஜாதகர் மாரக விஷயம்.**—ஜாதகருக்கு வயது வருஷம் 59 முதல் வருஷம் 60 முடியும் வரையிலும் சுக்கிரதசையில் சுக்கிரபுக்தி நடக்கின்றது. கடக லக்கினத்திற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் புதன் சுக்கிரன் சனி இவர்கள் மாரகாதிபதிகள் ஆவார்கள். இவர்களில் சுக்கிரன் பதினொன்றிற்கு உடையவராய் இருப்பதால் இவர் பெரிய மாரகராவார். மேலும் இவர் ஏழில் மாரகஸ்தானத்தில் சந்திர லக்கினாதிபதியாகிய புதனுடன்கூடி இருக்கின்றார். ஆகையால் சுக்கிரன் தன்தசையில் சுயபுக்தியில் மாரகஞ் செய்ய அதிகாரமுடையவராகவிருக்கின்றார்.

36. குருதசை சுயபுக்தியாம் கூடிடு ஆதிகாலம்
உறையாதோ மார கங்கள் உயர்சனி ஆட்சி யாக
வருவினை கண்ட மொன்று விலகிடும் தீர்க்க மெய்தும்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

36. குருதசையில் குருபுக்தி ஜாதகர் பிறந்த காலத்திலேயே நடப்பதால் அக்காலத்தில் ஜாதகருக்கு மாரகம் நேரிடாதோ என்று பராசர முனிவர் கேட்க, மேன்மையான சனி ஆட்சியாய் இருப்பதால் ஒரு கண்டம் வினையால் வந்து அது நிவிர்த்தியாகி ஜாதகர் நீண்ட ஆயுளை உடையவராக விருப்பார். அருமையான வேதங்களின் முடிவில் விளங்குகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

37. மறுஜன்மம் காஞ்சி தன்னில் வருவானும் சௌராஷ்ட்ர வமிசம்
திருமகன் ஜனன காலம் செம்பொன்னின் தசையி ருப்பு
மருவிடும் மூவைந் தாண்டும் மாதமோ ரைந்து மாகும்
குறையிலாப் பூர்வம் சொன்னோம் கொம்பனையாளே கேளாய்.

37. ஜாதகர் அடுத்த ஜன்மத்தில் காஞ்சீபுரத்தில் சௌராஷ்டிர வம்சம் என்ற பட்டுநூல்காரர் குலத்தில் பிறப்பார். ஜாதகர் இந்த ஜன்மத்தில் பிறந்த காலத்தில் குரு பகவானுடைய தசையில் இருப்பு பதினைந்து வருஷமும் ஐந்து மாதமும் ஆகும். குறைவு இல்லாமல் பூர்வ பாகத்தைச் சொன்னோம். பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகம் 83

1. கடகலக் கினம தாகக் கரும்பாம்பு[1] ரண்டி லாகச்
சுடரவன்[2] சேய்[3] நவத்தில் செம்பாம்பு[4] புதனு மெட்டில்
உடுபதி[5] புகரும்[6] பத்தில் உத்தம குருவும் நாலில்
முடவனு[7] மீரா ருக மொழிகுவீர் பலனே என்று ;

| அங்காரகன் சூரியன் | சுக்கிரன் சந்திரன் | | சனி |
|---|---|---|---|
| புதன் கேது | இராசி சக்கரம் | | லக்கினம் |
| | | | ராகு |
| | | குரு | |

பரணி 1-ஆம் பாதம். சுக்கிர தசை வருஷம் 18-4-0.

1. ஜன்ம லக்கினம் கடகமாகவும், இராகு இரண்டிலும், சூரியன் அங்காரகன் ஒன்பதிலும், கேது புதன் எட்டிலும், சந்திரன் சுக்கிரன் பத்திலும், குரு நான்கிலும், சனி பன்னிரண்டிலும் இருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று ;

**குறிப்பு.**—இந்த ராசிச் சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரகநிலை பொருத்தமுடையதாகும்:—மேஷத்தில் சனியும் ராகுவும், ரிஷபத்தில் புதனும், மிதுனத்தில் சுக்கிரனும், சிம்மத்தில் சந்திரனும், துலாத்தில் கேதுவும், விருச்சிகத்தில் சூரியனும், மகரத்தில் அங்காரகனும் குருவும் ஆகும்.

2. அந்தரி கேட்கும் போது அத்திரி முனிவர் சொல்வார்
இந்தசேய் ஆணும் ஜன்மம் இல்லமும் வடபால் நோக்கம
அந்தஇல் கூறையாகும் அவனியில் மூத்தோன் மேற்கில்
நத்திலா மனத்தோள் உத்தரம் நரிவாக ளத்தோள் தங்கும்.

2. பார்வதியம்மையார் கேட்கும்போது அத்திரிமா முனிவர் சொல்லுகின்றார். பிறந்த இந்தக் குழந்தை ஆண் குழந்தையாகும். பிறந்த

---

[1] இராகு. [2] சூரியன். [3] அங்காரகன். [4] கேது. [5] சந்திரன். [6] சுக்கிரன். [7] சனி.

வீடு வடக்குத் திக்கைப் பார்த்திருக்கும், கூறை வீடாகவிருக்கும், விநாயக் கடவுளின் கோவில் மேற்கிலிருக்கும், பார்வதியம்மன் கோயிலும் காளியம் மன் கோயிலும் வடக்குத் திக்கில் இருக்கும்.

3. சிரமற்றேன தீபாஞ் சாலி தங்கிடும் குடசி லேதான்
உரைந்தஇவ் வடையா ளத்துள் உத்தமன் நான்காம் ஜன்மம்
வருவனும் முத்திரிய சேயாய் வரைகிறோம் யோக சேதி
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

3. சிவபெருமானுடைய கோவிலும் திரௌபதியம்மன் கோயிலும் மேற்குத் திக்கில் இருக்கும். சொன்ன இந்த அடையாளங்களுக்குள்ளே ஜாதகர் நான்காவது கர்ப்பத்தில் பிறப்பார். முத்திரிய ஜாதியில் வந் ஆண் குழந்தையாகப் பிறப்பார். இவருடைய யோக விஷயங்களைப்பற்றி சொல்லுகிறோம். கருப்பு மதயானை முகத்தையுடைய விநாயகக் கடவுளை பெற்றெடுத்த பார்வதியம்மையே! கேட்பீராக.

4. தந்தையின் துணைய னேகம் தங்காவே யாவும் தாமே
விந்தையாய்க் கன்னி ஒன்று விளங்கிடும் தீர்க்க மாக
எந்தக்கா ரணத்தி னலே இவன்துணை தோஷம் சொன்னீர்
ஒன்பதில் ரவிசேய் தங்க உரைத்தனம் மங்கை சங்கை.

4. ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரர்கள் அனேகம் பேராகும். அவர்கள் எல்லோரும் உயிருடன் இருக்கமாட்டார்கள். ஆச்சரியமாக ஒரு பெண் சகோதரி மாத்திரம் நீண்ட ஆயுளை உடையவளாக விருப்பாள். எந்தக் காரணத்தினல் இவருக்குச் சகோதர தோஷத்தைச் சொன்னீர். ஒன்பதில் சூரியனும் அங்காரகனும் இருப்பதால் இவ்விதமான தோஷத்தையும் பெண்ணின் விஷயத்தையும் சொன்னேம். (எ-று).

5. குணமதைப் புகலக் கேண்மோ கொடுமையை யெவர்க்கு [மெண்ணுன்
தணிவுள குணத்தா னுகும் சகலர்க்கும் நல்லோ னுவன்
கனமிலாக் குடும்ப மெய்தும் கல்வியு மில்லா னுகும்
சினமதை வெளிக்காட் டாதான் சிவந்தமெய் உயர மில்லான்.

5. தகப்பனுரின் குணதிசையங்களைப்பற்றிச் சொல்லுகிறோம் கேட்பீராக. இவர் எவருக்கும் தீங்கு நினைக்கமாட்டார். சாந்தமான கிருபை யான குணத்தையுடையவர். எல்லோருக்கும் நல்லவராக விருப்பார். இவருடைய குடும்பம் சிறப்பில்லாமலிருக்கும். இவருக்கு வித்தை கிடையாது. கோபத்தை வெளியே பிறருக்குத் தெரியும்படியாகக் காட்டிக் கொள்ளா தவராவார். சிவப்பான நிறமுடைய தேகத்தை உடையவர். உயரமாக வில்லாதவர் ஆவரர்.

6. சொல்லது அடக்க முண்டு தோகைசொல் கடவா னுகும்
நல்லவ னுகி வாழ்வன் நாற்காலி விருத்தி யற்பம்
அல்லலு முடையா னுகும் அதிகாரத் தொழிலு மேற்பன்
சில்லரைப் புத்தி யில்லான் தெய்வம் பாஞ் சாலி யென்றேம்.

6. அமைதியாகவும் சாந்தமாகவும் சுறுக்கமாகவும் பேசுவார். தன்னுடைய பாரியையுடைய சொல்லைமீறி நடக்கமாட்டார். நல்லவராக விருந்து வாழ்வார். கால்நடைகளின் விருத்தி குறைவாகும். கஷ்டங்களும் அலைச்சலும் உடையவராகும். அதிகாரஞ் செய்யக்கூடிய வேலையை உடையவர். தாழ்ந்ததும் கேவலமானதும் அற்பமானதுமான புத்தியில்லாதவர். இவருக்குக் குலதெய்வம் திரௌபதியம்மன் என்று சொல்லுகிறோம்.

7. முன்னவ னிருந்த ஜன்மம் மொழிகிறோம் திருவலத்தில்
அன்னவன் வன்னிய சேயாய் அணுகியே குலமு தித்து
முன்னோர்க்குத் தொண்டு பூண்டு மேதினில் வாழுந் நாளில்
தன்குலத் தொருவன் பேரில் சதியான வார்த்தை சொல்லி.

7. தகப்பனுருடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறோம். திருவலம் என்ற ஊரில் இவர் வன்னியர் குலத்தில் ஆணுகப் பிறந்து பிராமணர்களுக்கும் பழையோர்களுக்கும் பணி விடைகளைச் செய்து பூமியில் வாழ்கின்ற காலத்தில் தன் ஜாதியைச் சேர்ந்த ஒருவன் மேல் வஞ்சனையானதும் குற்றமானதுமான வார்த்தைகளைச் சொல்லி.

8. அரசர்பா லவமானங்கள அவனுமே செய்யும் போது
குறைவுள மனத்தா னுகிக் கூறுவான் சாபம் தானும்
வரும் ஜன்மம் துணையு மின்றி வளமிலாக் குடும்பி யாகி
உறைகுவா யென்று சொல்ல உறைந்தது அந்தச் சாபம்.

8. அரசர் முன்னிலையில் அவனை அவமானப்படுத்தவே, அவன் மனம் நொந்து துக்கமடைந்து சாபத்தைக் கொடுத்தான். "நீ உன்னுடைய மறு ஜன்மத்தில் சகோதரர்கள் இல்லாமலும், மேன்மையான குடும்பஸ்தனுகவில்லாமலும் இருந்து வாழக்கடவாய்" என்று சொல்ல அந்தச் சாபம் தகப்பனுரை அடைந்தது.

9. மாரனு மந்தி யத்தில் வறுமைக ளுடைய னுகிப்
பாரினில் மரண மாகிப் பிரமனுல் வரையப் பட்டுத்
தீரமா யிக்கு லத்தில் ஜனித்தவ னென்று சொல்வோம்
நேரிடு முன்னூழ்ச் சாபம் நிலைக்காரே துணைவர் தாமும்.

9. தகப்பனுர் தன்னுடைய முன் ஜென்மத்தில் கடைசி காலத்தில் கஷ்டங்களையும் தரித்திரத்தையும் அடைந்து பூமியில் இறந்து பிரமதேவனுல் பிரம லிபியுடன் எழுதப்பட்டுத் இந்த ஜன்மத்தில் (முத்திரிய ஜாதியாகிய) இந்தக் குலத்தில் பிறந்திருக்கின்றுர் என்று சொல்லுகின்றோம். முன் ஜன்மத்திய சாபம் இவரை வந்து அடையும். இவருக்குச் சகோதரர்கள் உயிருடன் நிலைத்திருக்க மாட்டார்கள்.

10. தனியனுய் வாழ்வா னம்மா தரித்திர குடும்ப மெய்தும்
இனமதிப் பில்லா வாழ்வ னியம்பின குணத்தா னுக்குச்
சினமிலாப் பாலன் தானும் ஜனிப்பனு மென்று சொல்வோம்
அனையவே தவங்கள் செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

10. தகப்பனுர் ஒண்டியாகவும் தனியாகவும் இருந்து வாழ் வார் என்று சொல்லுகிறோம். பார்வதியம்மையே! இவருடைய குடும்பம் தரித்திரத்தை அடைந்திருக்கும். இவர் தன்னுடைய இனத்தார்களுடைய மதிப்பும் கௌரவமும் இல்லாமல் வாழ்வார். இங்குச் சொல்லப்பட்ட இவ் வித குணங்களையுடைய தகப்பனுருக்குக் கோபமில்லாத இந்த ஜாதகர் பிறப் பார் என்று சொல்லுகிறோம். தவங்களைச் செய்கின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

11. பாலகன் நிறம்கு ணத்தைப் பகருவோம் சிவந்த மேனி
ஞாலங்கள் சேர்ப்பா னுகும் நாகம்போல் கோப மேற்பன்
சீலம்போல் வெளிம யக்கன் தேவதா பத்தி பூண்பன்
காலத்தை அறிந்து வாழ்வன் கண்முகம் வசியமுண்டு.

11. ஜாதகருடைய நிறம் குணதிசயங்கள் ஆகிய இவைகளைப் பற்றிச் சொல்லுகிறோம். இவர் சிவந்த நிறமுடைய தேகமுடையவர். நிலங்களைச் சேகரிப்பார். நல்லப் பாம்பு கோபத்துடன் சீறுவதுபோல இவரும் கோபத்துடன் சீறுவார். வெளியாருக்கு நல்ல குணமும் நல்லொழுக்கமும் உடையவர்போலக் காணப்பட்டு அவர்களை மயக்குவார். தெய்வபக்தியை யுடையவர். காலத்தின் நோக்கங்களைத் தெரிந்துகொண்டு அவை களுக்குத் தகுந்தபடி நடந்துகொண்டு காலங்கழிப்பார். அழகிய கண்களா லும் முகத்தாலும் பிறரைத் தன்வசப்படுத்திக் கொள்ளுகின்ற தன்மையை யுடையவராவார்.

12. கல்வியு மற்ப மாகும் கனமிலாக் குடும்பம் பூர்வம்
சொல்லது மிரண்டு மாகும் சோம்பலும் கொஞ்ச முண்டு
எல்லைகள் அற்ப மாகும் மேவல்கள் செய்து உய்வன்
வல்லியின் வர்க்கத் தாரால் மாரனுக் குதவி யுண்டு.

12. ஜாதகருக்கு வித்தை கொஞ்சமாகவிருக்கும். முதலில் சிறப்பும் மேன்மையும் இல்லாத குடும்பமாக இவருடைய குடும்பம் இருக்கும். இரண்டு விதமாக இவருடைய வார்த்தை பொய்யும் உண்மையும் கலந்த தாகவிருக்கும். இவர் கொஞ்சம் சோம்பலையுடையவராவர். இவருக்கு நிலங் கள் கொஞ்சமாகவிருக்கும். பிறர் கட்டளையிடும் வேலையை செய்து ஜீவனஞ் செய்வார். இவருக்குத் தன்னுடைய மனைவியின் பந்துக்களால் சகாயங்கள் ஏற்படும்.

13. பிறந்தநாள் முதலாமாகப் பேசவோ மூவெட் டாண்டும்
குறைபிறை போலே யோகம் குழவிக்கு அனேக கண்டம்
வரவுக்குச் செலவே யுண்டு மனமது அலைச்ச லாகும்
பொருளது காணு னுகும் போசன மல்ப மெய்தும்

13. ஜாதகர் பிறந்த காலம் முதற்கொண்டு அவருக்கு இரு பத்து நான்கு வயது வரைக்கும் தேய் பிறைச் சந்திரன் குறைந்து கொண்டு போவதைப் போலவே யோகமும் குறைந்து கொண்டே போய்விடும்.

ஜாதகருக்கு அனேக கண்டங்கள் நேரிடும். வரவிற்குத் தகுந்தாற் போல செலவும் சமமாகவிருக்கும். மனதில் கஷ்டங்களும் துன்பங்களும் உண்டு. தன வரும்படி கிடையாது. சாப்பாட்டுச் சுகங்களும் குறைந்துவிடும்.

14. சொல்லிய ஆண்டின் மேலாய்ச் சுகமுறும் வறுமை நீங்கும்
நல்லவர் நேசம் செய்தல் நாற்காலி பலித முண்டு
இல்லறம் கொஞ்சம் செய்த லிவனுமே யோகம் காணுன்
அல்லலாம் குடும்ப மென்றேம் அவன்சுதர் தோன்றிப் பின்பு

14. இங்கு மேலே சொல்லப்பட்ட (இருபத்து நான்கு) வயதிற்கு மேலே சுகங்கள் உண்டாகும். கஷ்டங்களும் தரித்திரமும் நிவிர்த்தியாகும். நல்லவர்களுடன் ஜாதகர் சினேகஞ் செய்து கொள்ளுவார். கால்நடைகள் விருத்தியை அடையும். இல்லற தர்மங்களைக் கொஞ்சமாக நடத்திக் கொண்டு வருவார். இவருக்கு யோகம் கிடையாது. இவருடைய குடும்பம் கஷ்டத்தை அடைந்து கொண்டிருக்கும் என்று சொல்லுகிறேம். இவருக்கு குழந்தைகள் பிறந்த பிறகு ;

15. சுகமிலாக் குடும்ப மென்றேம் சூரியன் தசையி லேதான்
தகமையாய் மேல்பால் வேறூர் தரணிகள் சேர்த லுண்டு
வகையாகப் பலிதம் காணுன் சந்திரன் தசைவி சேஷம்
மிகுதான்யம் பலிதம் லாபம் வளர்பிறை போலே யோகம்.

15. இவருடைய குடும்பம் சுகமில்லாமல் இருந்து கொண்டிருக்கும் என்று சொல்லுகிறேம். சூரியனுடைய தசையில் மேற்குத் திக்கிலுள்ள ஓர் ஊரில் பூமிகள் சேரும். ஆனால் நல்ல பலன்கள் கிடைக்கா. சந்திரனுடைய தசையில் விசேஷ பலன்கள் உண்டாகும். அதிக தானியப் பலிதம் கிடைக்கும். லாபமு முண்டாகும். வளர்பிறைச் சந்திரன் வளர்ந்து கொண்டே போவதைப் போலவே ஜாதகருடைய யோகமும் வளர்ந்து கொண்டே அதிகமாகிக் கொண்டு வரும்.

16. இன்னமும் விவரம் கேட்கில் இயம்புவோம் பின் பாகத்தில்
தன்துணை ஆண்பால் மூன்று சத்திமா ரிருவர் தீர்க்கம்
பின்னமாம் ஒன்று என்றேம் பேசின கன்னி தன்னில்
நன்மையாய் ஒருத்தி தானும் நசிப்பரா மென்று சொன்னேம்

16. இன்னமும் விவரங்களைக் கேட்டால் அவைகளை அடுத்தப் பாகத்தில் சொல்லுகிறேம். ஜாதகருக்கு ஆண் சகோதரர்கள் மூன்று பேரும் பெண் சகோதரங்கள் இரண்டு பேரும் நீண்ட ஆயுளை உடையவர்களாகவிருப்பார்கள். ஒரு சகோதரர் இறந்து போய்விடுவார் என்று சொல்லுகிறேம். மேலே சொல்லிய சகோதரிகளில் ஒரு நல்ல சகோதரி இறந்து விடுவாள் என்று சொல்லுகிறேம்.

17. பாலகன் மணத்தின காலம் பகருவோ மிருபான் ரண்டில்
நீலியும் அன்னை வர்க்கம் நேர்ந்திடும் மேல்பால் திக்கில்
பாலிகை குணத்தைச் சொல்வேன் பதரான வார்த்தை யில்லாள்
சீலமும் கொஞ்ச முண்டு சிந்தையும் நல்ல தாகும்

17. ஜாதகருடைய விவாகம் நடக்கும் காலத்தைப்பற்றிச் சொல்லு கிறோம். இவருக்கு இருபத்திரண்டாவது *வயதில் மனைவி தாயா ருடைய பாத்தியத்திலிருந்தும் மேற்கு திக்கிலிருந்தும் வந்து நேரிடுவாள். இவளுடைய குணாதிசியங்களைப் பற்றிச் சொல்லுகிறேன். இவள் அவசரப் பட்டுத் துன்பம் விளைவிக்கக் கூடிய வார்த்தைகளைச் சொல்லமாட்டாள். நல்ல நடவடிக்கையும் நல்லொழுக்கமும் கொஞ்சம்உடையவள். நல்ல மன முடையவளாவாள்.

* **குறிப்பு.—விவாக விஷயம் :**—மனைவி விஷயத்தில் சம்மந்தப்பட்ட அம்சங் கள் ஏழாவது இரண்டாவது நான்காவது பாவங்களும், இவைகளின் அதிபதிகளும் சுக்கிரனும் ஆகும். சூரியன் இரண்டாவது பாவாதி பதியாகி ஒன்பதாவது பாவத்தில் இருந்து கொண்டு ஏழாவது பாவாதி பதியாகிய சனியால் பார்க்கப்படுகிறார். ஆகையால் சூரிய தசையில் விவாகம் நடக்க அமைப்பு இருக்கின்றது. குரு ஒன்பதிற்குடையவராகி போகஸ்தான மாகிய நான்கில் இருந்து கொண்டு களத்திரகாரகனாகிய சுக்கிரனையும் களத் திரஸ்தானாதிபதியாகிய சனியையும் லக்னாதிபதியாகிய சந்திரனையும் பார்க் கின்றார். போககாரனாகிய ராகுவும் குருவைப் பார்க்கின்றார். ஜாதகருக்கு வயது ஷூ 21–0–0 முதல் ஷூ 22–0–0 முடியும் வரையிலும் சூரிய தசை யில் குரு புக்தியும் சனி புக்தியும் நடக்கின்றன. இங்குச் சொல்லிய கார ணங்களால் சூரிய தசையிற் குரு புக்தியில் ஜாதகருக்கு விவாகம் நடக்க அமைப்பு இருக்கின்றது.

18. மாரன்தன் மனம்போல் வாழ்வள் வஞ்சக மனமில் லதாள்
தீரமாம் குணத்தா ளாகும் தேகமாந் தளிரை யொக்கும்
காரிழை யோக சாலி காதலி தீர்க்க ஜீவி
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

18. மனைவி தன்னுடைய புருஷனுடைய மனதிற்குத் தகுந்தாற் போல ஒற்றுமையாயிருந்து வாழ்வாள். கபடு கள்ளம் வஞ்சனை இவைகள் இல்லாத மனத்தையுடையவளாவாள். தைரியமான குணமுள்ளவளாகும். இவளுடைய தேகத்தினுடைய நிறமானது மாமரத்தின் துளிரின் ஒரு வித மான சிவப்பு நிறத்தைப் போலவிருக்கும். இவள் யோகமுடையவள். இவள் நீண்ட ஆயுளை உடையவள். ஆறு பெருமை பொருந்திய முகங்களை யுடைய முருகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே ! கேட்பீராக.

19. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோ மாண்பால் மூன்று
சத்திமார் அவ்வாறு தீர்க்கம் தீரமாம் முதலி லென்றோம்
வித்தகன் முன்ஜன்மத்தை விளம்புவோம் புதுவை தன்னில்
சுத்தமாய்க் குலால வமிசம் தோன்றியே சுகமாய் வாழ்ந்து ;

19. ஜாதகருக்குப் புத்திர பாவத்தைப்பற்றிச் சொல்லுகிறோம். இவருக்கு மூன்று ஆண் குழந்தைகளும், மூன்று பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளை உடையவர்களாகவிருப்பார்கள். முதலில் பிறக்கும் குழந் தைகள் வலுவாகவிருக்கும் என்று சொல்லுகிறோம். ஜாதகருடைய பூர்வ

ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறோம். இவர் புதுவை என்ற ஊரில் (புதுச் சேரியில்) பரிசுத்தமான குயவர் குலத்தில் பிறந்து சுகத்துடன் வாழ்ந்து கொண்டு ;

20. அதிபனும் நன்னடை யாகி வருவோரை ஆத ரித்து
விதியது முடிந்து இன்னோன் வேதியன் வரையப் பட்டு
இதுகுலம் தனிலு திப்பான் இருபது நாலாண் டின்மேல்
நிதிதானியம் பெருகு மென்றோம் நேராது அதன்மேல் துன்பம்.

20. ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தில் நல்ல நடவடிக்கையும் நல்லொழுக்கமும் உடையவராகித் தன்னிடத்திற்கு வருகின்றவர்களைக் காப்பாற்றிக் கொண்டிருந்து, பிறகு ஆயுள் முடிந்து இறந்து பிரம தேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்தக் குலத்தில் இந்த ஜன்மத் தில் வந்து பிறந்தார் என்று சொல்லுகிறோம். இவருக்கு இருபத்து நான்கு வயதிற்கு மேலே தனம் தானியம் அதிகரிக்கும் என்று சொல்லுகிறோம். இந்த வயதிற்கு மேல் இவருக்குக் கஷ்டங்கள் உண்டாகா.

21. மாதுரு குணத்தைச் சொல்வேன் மாஞ்சிவப் புடையா ளாகும்
சூதிலாள் கபட வார்த்தை சொல்லது சுருக்க மாகும்
வேதனை மனமில் லாதாள் அண்டினோர்க் குதவி செய்வள்
காதலி யோக மில்லாள் கட்டுரைப் பகரா ளாகும்.

21. ஜாதகருடைய தாயாரின் குணதிசயங்களைப் பற்றிச் சொல்லுகிறோம். இவள் மாமரத்தின் துளிரின் நிறமாகிய ஒரு விதமான சிவப்பு நிறமு டைய தேகத்தையுடையவளாவாள். கபடு கள்ளம் வஞ்சனை இவைகளில் லாதவள். வஞ்சனையான வார்த்தைகளைச் சொல்லமாட்டாள். இவள் சுருக்கமாகவும் கொஞ்சமாகவும் பேசுவாள். கஷ்டமுள்ள மனத்தை உடையவளல்லள். தன்னிடம் வந்து சேர்ந்தவர்களுக்கு உபகாரஞ் செய் வாள், இவள் யோகத்தை உடையவளல்லள். பொய் வார்த்தைகளையும் புனைந்த வார்த்தைகளையுஞ் சொல்லமாட்டாள்.

22. தோகைபோல் சாய லொக்கும் துணைஆண்ஐவராகும்
பாகமாய்க் கன்னி ரண்டு பகருவோம் பாவைக் கேதான்
தாகமென் றோர்க்கு ஈவள் தறிபடக் கூறு ளாகும்
போதக வானை பெற்ற புண்ணிய சாலி! கேளாய்.

22. இவள் மயிலைப் போன்ற ரூபத்தை உடையவள். இவளுக்கு ஆண் சகோதரர்கள் ஐந்து பேர் ஆகும் என்றும் பெண் சகோதரங்கள் இரண்டு பேர் ஆகும் என்றும் சொல்லுகிறோம். தாகமாய் இருக்கிறதென்று சொல்லுகிறவர்களுக்குத் தாகவிடாயைத் தீர்ப்பாள். வெட்டும்படியானதும் கடினமானதுமான வார்த்தைகளைச் சொல்லமாட்டாள். மதயானை முகத்தை யுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த புண்ணியவதியாகிய பார்வதி யம்மையே! கேட்பீராக.

23. முன்னவ ளிருந்த ஜன்மம் மொழிகிரேரும் மயிலே மேற்கில்
சின்னவூர் தன்னி லேதான் ஜனித்தனள் கவரைச் சேயாய்
கன்னியும் வறுமை யின்றிக் கௌரவ குடும்பி யாகி
அன்னவள் அறமில் லாமல் அந்தகன் நகரம் சென்று ;

23. ஜாதகரின் தாயாருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லு கிரேரும். இவள் மயிலாபூருக்கு மேற்குத் திக்கிலுள்ள ஒரு சிறிய கிராமத்தில் கவரை ஜாதியில் பிறந்து கஷ்டங்களும் தரித்திரமும் இல்லாத ஒரு கௌரவமான குடும்பஸ்தையாக வாழ்ந்து தருமம் ஒன்றும் செய்யாமல் இருந்து இறந்து எமபட்டணத்திற்குப் போய் ;

24. சிரநான்கோன் வரையப் பட்டு ஜனித்தவ ளென்று சொல்வோம்
வறுமையும் சுகமு மேற்பள் வரைகிரேருமிவள் பின்ஜன்மம்
பெருமையாய் அவ்வூர் தன்னில் பிறப்பளாம் வேளாள வமிசம்
கரிமத வானே பெற்ற காதலி கேட்டி டாயே

24. நான்கு தலைகளையுடையவரான பிரம தேவனுல் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்தாள் என்று சொல்லுகிரேரும். இவள் கஷ்டத்தையும் தரித்திரத்தையும் சுகத்தையும் மாறி மாறி அடைவாள். இவளுடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிரேரும். இவள் இந்த ஊரிலேயே மேன்மையான ஒரு வேளாளர் குலத்தில் பெருமையாய் வந்து பிறப்பாள். கருப்பு மதயானை முகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே ! கேட்பீராக.

25. முப்பது மூன்று ஆண்டில் விளம்புவோம் தந்தை கண்டம்
செப்புவோமி வன்பின் ஜன்மம் சேழம்பனே பட்டி தன்னில்
ஒப்புடன் பெண்ணை ஓரம் உதிப்பனும் வைசியச் சேயாய்
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழிகுன் ருது.

25. ஜாதகருக்கு முப்பத்து மூன்ருவது வயதில் † தகப்பனர் மரணம் அடைவார் என்று சொல்லுகிரேரும். இவருடைய மறு ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிரேரும். இவர் சேழம்பனைப்பட்டி என்ற கிராமத்தில் நீர்நிலை குளம் இவைகளின் ஓரத்தில் வைசிய ஜாதியில் ஆண் குழந்தையாகப் பிறப்பார். தன்னுடைய சடையில் கங்கையை அணிந்துள்ள பரமசிவனுடைய மனைவியாகிய பார்வதியம்மையே ! நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவருமல் நடக்கும்.

† குறிப்பு.—தகப்பனர் மரண விஷயம் :—ஜாதகருக்கு வயது ஷூ 32–0–0 முதல் ஷூ 33–0–0 முடியும் வரையிலும் சந்திர தசையில் கேது சுக்கிரன் இவர்களுடைய புக்திகள் நடக்கின்றன. பிதுர் லக்கினமாகிய மீனத்திற்குச் சனி புதன் சுக்கிரன் சூரியன் இவர்கள் மாரகாதிபதிகள் ஆகின்ருர்கள். சந்திரன் மாரக ஸ்தானமாகிய இரண்டில் மாரகாதிபதியாகிய சுக்கிரனுடன் கூடியிருப்பதுடன் லக்கினதிபதியாகிய குருவையும் பார்க்கின்ருர். சுக்கிரன் பிதுர் லக்கினத்திற்கு 3,8க்குடையவராகவும் இருக்கின்ருர். ஆகையால் ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரமும் துய்ய கேரளம்

எட்டாவது பாவம், 20-ஆவது பாடல் பிரகாரமும் சந்திரன் தன் தசையில் பிதாவுக்கு மாரகஞ் செய்ய அமைப்புள்ளவராக விருக்கின்றார். சுக்கிரன் மாரகாதிபதியாயிருப்பதுடன் எட்டிற்குடையவராகி லக்கினாதிபதியாகிய குருவையும் பார்க்கின்றார். மேற் கண்ட துய்ய கேரளம் 20-ஆவது பாடல் பிரகாரமுங்கூடச் சுக்கிரன் தன் புக்தியில் மாரகஞ் செய்ய அமைப்புள்ளவராக விருக்கின்றார்.

26. இதற்குமேல் ஆறு ஆண்டில் அன்னைக்குக் கண்ட மெய்தும்
இதுநிற்க உதித்தோ னுக்கு இயம்வோம் மரண காலம்
ததிகயிறு தசையிலேதான் சார்ந்திடு மிரண்டு கண்டம்
எதுவிதப் பிணிகள் வந்தும் இரவி முன்ப னிபோல் நீங்கும்.

26. ஜாதகருக்கு முப்பத்து மூன்று வயதிற்கு மேல் ஆறுவது வருஷத்தில், அஃதாவது முப்பத்தொன்பதாவது வயதில் தாயாருக்கு மரணம் ஏற்படும். இஃது இப்படியிருக்க, ஜாதகருக்கு மரண காலத்தைச் சொல்லுவோம். இராகு தசையில் ஜாதகருக்கு இரண்டு கண்டங்கள் வந்து சம்பவிக்கும். எந்த நோய் வந்தபோதும் சூரியனைக் கண்ட பனி கலைந்து மறைந்து நிவிர்த்தியாகி விடுவது போல நிவிர்த்தியாகி விடும்.

**குறிப்பு.—தாயார் மரணகாலம்** :—ஜாதகருக்கு வயது ஷ 38–0–0 முதல் ஷ 39–0–0 முடியும் வரையிலும் அங்காரக தசையில் புதன் கேது இவர்களுடைய புக்திகள் நடக்கின்றன. மாதுர் லக்கினம் துலாம். பராசரஹோரை சில பதிப்பு பிரகாரம் அங்காரகன் மாரகாதிபதி யாகின்றார். சூரியனும் குருவும் இந்த பதிப்புக்கள் பிரகாரமும் ஜாதகசந்திரிகை பிரகாரமும் மாரகாதிபதிகளாகின்றார்கள். அங்காரகன் மாரக ஸ்தானங்களாகிய இரண்டு ஏழுக்குடையவராகி மாரகாதிபதியாகிய சூரியனுடன் கூடி இருப்பதாலும் மாதுரு லக்கினத்தைப் பார்ப்பதாலும் ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரம் அங்காரகன் தன் தசையில் மாரகஞ் செய்ய அமைப்புள்ளவராக இருக்கின்றார். மேலும் மாதுர் லக்கினாதிபதியும் அஷ்டமாதிபதியுமாகிய சுக்கிரனைக் கேது பார்க்கின்றார். ஆகையால் துய்ய கேரளம் எட்டாவது பாவம் 20-ஆவது பாடல் பிரகாரம் கேது மாதாவைத் தன்புக்தியில் மாரகஞ் செய்ய அதிகார முடையவராக இருக்கின்றார். இந்தக் கேது சந்திர லக்கினத்திற்கு மாதுரு ஸ்தானமாகிய கடகத்திற்கு மாரக ஸ்தானமாகிய எட்டில் கடகத்திற்கு மாரகாதிபதியாகிய சனி வீட்டில் இருந்து கொண்டு சந்திரன் ரீதியாய் மாதுர் லக்கினாதிபதியாகிய சந்திரனையே பார்ப்பதால் துய்யகேரளம்பிரகாரம் புதனைவிட அதிக மாரகாதிபதியாகின்றார். ஜாதக சந்திரிகை 12–23-ஆவது சுலோகம் பார்க்கவும்.

27. குருதசை காலம் தன்னில் குழவிக்கு அறுபான் மூன்றில்
மருவிய களத்திரங்கள் மந்தனு மரிப்பா ருகும்
வரும்ஜன்மம் தவனை கீழ்ப்பால் வளமுள பேரூர் தன்னில்
உறைகுவான் வைசிய சேயாய்ச் உயர்வான குடும்பி யாவன்

27. ஜாதகருக்குக் குரு தசைக் காலத்தில் அறுபத்து மூன்றாவது வயதில் மனைவியர்களும் ஜாதகரும் இறந்து விடுவார். இவர் பின்

ஜன்மத்தில் தவளை என்ற ஊருக்குக் கிழக்கிலுள்ள ஒரு பெரிய ஊரில் வைசியர் குலத்தில் ஆண் குழந்தையாகப் பிறந்து மேன்மையான குடும்பஸ்தராகி வாழ்வார்.

† **குறிப்பு.—ஜாதகர் மரண விஷயம்** :—ஜாதகருக்கு வயது ஷ்ப 62–0–0 முதல் ஷ்ப 63–0–0 முடியும் வரையிலும் குரு தசையில் குரு புக்தி சனி புக்தி இவைகள் நடக்கின்றன. பராசரஹோரை, ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் கடகலக்கினத்திற்கு புதன், சுக்கிரன், சனி இவர்கள் மாரகாதிபதிகள் ஆகின்றார். குரு ஆறுக்குடையவராகி மாரகாதிபதிகளாகிய புதன், சுக்கிரன், சனி இவர்களைப் பார்க்கின்றார். ஆறும்பாவங்கூட மாரக ஸ்தானம் என்று சில கிரந்தங்களிலும் ஜாதக சந்திரிகை 26-ஆவது சுலோகத்திலும் கண்டிருக்கின்றது. மேலும் குரு லக்கினாதிபதியாகிய சந்திரனையும் அஷ்டமாதிபதியாகிய சனியையும் பார்த்திருக்கின்றார். குரு தசை ஆறுவது தசையாகவும் வருகின்றது. ஆகையால் ஜாதகசந்திரிகை 26-ஆவது சுலோகம் பிரகாரமும், துய்ய கேரளம் எட்டாம் பாவம் 20-வது பாடல் பிரகாரமும் குருதசை வரிசைக்கிரமத்தில் ஆறுவது தசையாய் வருவதால் ஜாதகாலங்காரம் 975-ஆவது பாடல் பிரகாரமும், குமாரசுவாமீயம் மகாதசைப் படலம் 4-ஆவது பாடல் பிரகாரமும் குரு மாரகாதிபதியாகின்றார். ஆகையால் குருவிற்குத் தன் தசையில் மாரகஞ் செய்ய அதிகாரம் இருக்கின்றது. சனி மாரகாதிபதி என்று மேலே சொல்லி இருக்கிறோம். இவர் மாரக ஸ்தானமாகிய பன்னிரண்டாமிடத்திலும் இருக்கின்றார். ஆகையால் சனிக்குத் தன்புக்தியில் ஜாதகருக்கு மாரகத்தைச் செய்ய அதிகாரம் இருக்கின்றது. ஆகையால் குரு தசையில் சனி புக்தியில் ஜாதகருக்கு மரணம் நேரிட அமைப்பு இருக்கிறது.

28. பாலன்பின் மனைவி கண்டம் பகருவோம் தாயே யாங்கள்
சேயனு முதிக்கும் காலை வெள்ளியின் தசை யிருப்புச்
சாலவே பதினெட் டாண்டும் சார்ந்திடும் திங்கள் நாலும்
ஏலவே பூர்வம் சொன்னோம் பார்வதி கேட்டி டாயே

28. ஜாதகருடைய மனைவி இவருக்குப் பின்னால் இறந்து விடுவாள் என்று நாங்கள் சொல்லுகிறோம். எங்கள் தாயாராகிய பார்வதியம்மையே! ஜாதகர் பிறக்கின்றபோது சுக்கிர மகாதசையில் இருப்பு பதினெட்டு வருஷமும் நான்கு மாதமும் ஆகும். முன்னே பூர்வபாகத்தை நாங்கள் சொன்னோம். பார்வதியம்மையே! கேட்பீராக.

# ஜாதகம் 84.

1. கடகமு முதய மாகக் கதிர்[1] புதன் ஜன்மம் தங்க
முடவனு[2] கேது மூன்றில் முழுமதி[3] நாலி லாக
வட[4] மொன்பான் சேயும்[5] பத்தில் வேந்தனும்[6] புகர்[7] வியத்தில்[8]
அடைவுடன் பலன்கள் எவ்வாறு அறிவிப்பீர் முனியே நீர்தாம்

| | | | |
|---|---|---|---|
| ராகு | அங்கா ரகன் | | குரு சுக்கிரன் |
| | இராசி சக்கரம் | | லக்கினம் புதன் சூரியன் |
| | | | |
| | | சந்திரன் | கேது சனி |

சுவாதி 3ஆம் பாதம், இராகு தசை இருப்பு 5–10–0

1. ஜன்ம லக்கினம் கடகமாகிச் சூரியனும் புதனும் ஜன்ம லக்கினத்திலும், சனியும் கேதுவும் மூன்றிலும், வளர் பிறைச் சந்திரன் நான்கிலும், இராகு ஒன்பதிலும், அங்காரகன் பத்திலும், குருவும் சுக்கிரனும் பன்னிரண்டிலும் இருந்தால் பலாபலன்கள் எவ்விதமாக விருக்கும் என்பதை, முனிவரே! நீர் சொல்லுவீராக.

குறிப்பு.—இந்த ராசிச்சக்கர அமைப்பிற்குப்பின்வரும் அம்சைச் சக்கிர கிரகநிலை பொருத்த முடையதாகும் :—மேஷத்தில் அங்காரகனும் கேதுவும் ரிஷபத்தில் சுக்கிரனும், கன்னியில் புதனும் சனியும், துலாத்தில் இராகுவும், தனுசில் குருவும், மகரத்தில் சூரியனும், கும்பத்தில் சந்திரனும் ஆகும்.

2. இந்தசேய் பெண்பா லாகும் மில்லமும் மேல்பால் நோக்கம்
தென்வட வீதி யாகும் துருவச க்கரமும் கீழ்ப்பால்
நொந்ததோர் கெடியும் தென்பால் நீரணி கடவுள் மேல்பால்
அந்தரி உத்தர மாகும் அணிகிய பேரூராகும்.

2. ஜனனமான இந்தக் குழந்தை பெண் குழந்தை ஆகும். இவள் பிறந்த வீடு வடக்குத் தெற்குத் தெருவில் மேற்குத் திக்கைப்பார்த் திருக்கும். மஹாவிஷ்ணுவின் கோயில் கிழக்குத்திக்கில் இருக்கும்.

---

[1] சூரியன் [2] சனி [3] சந்திரன்
[4] இராகு [5] அங்காரகன் [6] குரு
[7] சுக்கிரன் [8] பன்னிரண்டில்

பாழடைந்த கோட்டை தெற்குத்திக்கிலும், கங்கையைத் தன் ஜடையில் அணிந்திருக்கும் சிவபெருமானுடைய கோவில் மேற்குத்திக்கிலும், துர்க்கை யம்மன் கோயில் வடக்குத்திக்கிலும் இருக்கும். பிறந்த ஊர் ஒரு பெரிய பட்டணமாகும்.

3. உதிப்பளாம் கங்கை சேயாய் உரைக்கிறே மிவளின் யோகம்
சதியிலாத் தந்தை யோகம் தாய்யோகம் துணைவர் யோகம்
அதிபதி வரனின் யோகம் வரைகிறே மிந்நூல் தன்னில்
அதிதியை ஆத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

3. ஜாதகி வேளாளர் குலத்தில் வந்து பிறப்பாள். இவளுடைய யோகத்தையும், தகப்பனாருடைய யோகத்தையும், தாயாருடைய யோகத்தையும், சகோதரர்களுடைய யோகங்களையும், இவளுடைய புருஷனுடைய யோகத்தையும் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகிறோம், பரதேசிகளைக் காப்பாற்றுகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

### வேறு

4. தன்தைகுணம் கூறுகிறோம் மாஞ்சிவப்பன்
சரசமாய் வார்த்தையுண்டு தைரியத்தன்
தந்தமது தரளமொக்கு மூகை சாலி தரணிவிருத்தி
தானியத்தில் செட்டுத்தானும் செய்வனுவன்
தந்தைமொழிக் கிடருரையான் உள்ளன்போடும்
சகடுடையன் ஆள்சேர்க்கை சான்றோர்நேயன்
தன்தனங்கள் சேர்த்திடுவான் செலவுசெய்வன்
சாப்பாட்டுச் சுகியனெனச் சாற்ற லாகும்.

4. ஜாதகியினுடைய தகப்பனாரின் குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகிறோம். இவர் மாமரத்தின் துளிரின் நிறம் போன்ற ஒரு விதமான சிகப்பு நிறமுடைய தேகத்தை யுடையவர். இனிமையானதும், சுகமானதுமான வார்த்தைகளையே உபயோகப்படுத்துவார். தைரிய முடையவர். இவருடைய பற்கள் முத்தைப்போல வெண்மையாகவும் அழகாகவும் இருக்கும். நுட்பமான அறிவையுடையவர். நிலங்களைப் பயிரிட்டு விருத்தி செய்வார். தானியங்களில் வியாபாரஞ் செய்வார். தன்னுடைய தகப்பனாருடைய வார்த்தைக்கு இடைஞ்சலாகப் பேசமாட்டார். மனதிற்குள்ளே அன்பும் ஆசையும் உடையவர். வண்டியை உடையவர். வேலையாட்களைச் சேர்த்து வைப்பார். நல்லவர்களுக்குச் சிநேகிதராக விருப்பார். சுகமானதும் இன்பமானதுமான போஜனத்தைச் சாப்பிட்டுச் சுகத்தை அடையக்கூடியவர் என்று சொல்லக் கூடும்.

### வேறு

5. ஈட்டிநாள் குடத்தின் ராசி இறங்குவான் உயர மில்லான்
வாட்டமா மன்னர் சேர்க்கை மறுமொழி அதிகம் கூறுன்
நாட்டினில் நல்லோ னுவன் நல்கிடும் பித்த வாயு
தாட்டியாய் வார்த்தை யுண்டு தனவான்தம் நேசங் கொள்வன்.

5. ஜாதகியினுடைய தகப்பனார் ஈட்டியைப் போலுள்ள கேட்டை நட்சத்திரத்தில் கும்பலக்கினத்தில் பிறந்தவராவார். உயர மில்லாதவர். அழகுள்ளவர். அரசர்களுடைய சினேகத்தை யுடையவர். அதிகமாகப் பேசி பதில் சொல்ல மாட்டார். பூமியில் நல்லவரென்று பெயரெடுப்பார். இவருக்குப் பித்தவாயு இருக்கும். அகங்காரம்தொனிக்கும் வார்த்தைகளைச் சொல்லுவார். பணக்காரருடைய சினேகத்தை அடைவார்.

6. கடன்கொள்வன் நிவிர்த்தி செய்வன் காகுத்தன் நாமம் கொண்
[டோன்
உடன்துணை ஆண்பால் ரண்டு உத்தமி மார்கள் மூன்று
திடமுறும் மற்றோர் சேதம் செப்பின ஆண்பால் குன்றும்
அடைவுட னிவனின் பூர்வம் அறிவிப்போம் தாயே கேளும்.

6. ஜாதகியினுடைய தகப்பனார் கடன் வாங்குவார். அதைத் திருப்பிக் கொடுத்து விடுவார். இவர் இராமன் என்ற பெயரை உடையவராவார். இவருடன் கூடப் பிறந்தவர்கள் ஆண்கள் இரண்டு பேர்களும் பெண்கள் மூன்று பேர்களும் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள். மற்றச் சகோதரர்கள் இறந்து விடுவார்கள். சொல்லப்பட்ட ஆண் சகோதரர்கள் குன்றிவிடுவார்கள். தகப்பனாருடைய முன்ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறோம், எங்கள் தாயாராகிய பார்வதியம்மையே ! கேட்பீராக.

7. மதுரைமா நகரி லேதான் மயன்குல மதனி லுதித்து
விதவித பணிகள் செய்து மேதினில் நல்லோ னாகி
நதிசேது பதிக்குச் சென்று நலிந்தோர்க்கு அன்ன மீந்து
விதியது முடிந்த பின்பு வேதியன் வரையப் பட்டு ;

7. தகப்பனார் முன்ஜன்மத்தில் மதுரை என்ற பெரியபட்டணத்தில் தச்சன் குலத்திற் பிறந்து பல விதமான வேலைகளைச் செய்து பூமியில் நல்லவனென்று பெயரெடுத்துச் சேது ஸ்தலத்திலுள்ள தீர்த்தத்திற்குப் போய் ஏழைகளுக்குச் சாப்பாடு போட்டுப் பிறகு ஆயுள்முடிந்து இறந்து பிறகு பிரமதேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு.

8 வந்தவ னென்று சொல்வோம் வரமதி லிச்சை யுள்ளான்
பத்தினிக் கிஷ்ட னுவன் பலசகா யங்கள் செய்வன்
பின்துணை பகையு மாகும் பேச்சதைக் காப்பா னாகும்
முந்தின தலங்கள் செல்வன் விசித்திரஇல்லம் செய்வன்.

8. இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றார் என்று சொல்லுகிறோம். தகப்பனார் அவர் தன்னுடைய மனைவிக்கு இஷ்டமானவர். பலவித உபகாரங்களைச் செய்வார். தன்னுடைய இளைய சகோதரர் தனக்கு விரோதியாயிருப்பார். இவர் தன்னுடைய வார்த்தைகளைக் காப்பாற்றுவார். சிறந்த க்ஷேத்திரங்களுக்குப் போவார். விசித்திரமானதும் அழகியதுமான வீட்டைக் கட்டுவார்.

9. இந்நெறி யுடையா னுக்கு இப்பாவை யுதிப்பா ளாகும்
அன்னவள் குணத்தைச் சொல்வேன் அழகுளாள் உணைச்சல்தேகி
பன்னியே பேசு வாளாம் பதர்குண மில்லா ளாகும்
தன்சொலே மேன்மை யாகச் சாதிப்பாள் பித்த தேகி.

9. இப்படிப்பட்ட குணங்களையுடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகி பிறப்பாள். இவளுடைய குண குணங்களைப் பற்றிச் சொல்லுகிறேன். இவள் அழகுள்ளவள். ஒல்லியான தேகத்தையுடையவள். திறமையாகவும் சாமர்த்தியமாகவும் பேசுவாள். தாழ்ந்ததும் இழிவானதுமான குணமில்லாதவளாவாள். இவள் தான் சொன்ன வார்த்தைகளே உயர்ந்தவை என்றும் மேன்மையானவை என்றும் சொல்லி ஜயிக்கக் கூடியவள். பித்த தேகத்தை யுடையவள்.

10. ஊகவாள் நுணுக்கம் தேர்வள் உற்றோர்கள் மதிக்க வாழ்வள்
ஆகம முணர்ந்தோருக்கு அன்னமு மீய வல்லாள்
நாகரிகங் களுண்டு நல்லோர்க்கு நல்லோளாவள்
போகபாக் கியங்கள் பின்னல் பெறுவளா மென்று சொல்வோம்.

10. ஜாதகி நுட்பமான அறிவை யுடையவள். இவள் சூட்சுமமானதையும் அறியக் கூடியவள். பந்துக்கள் இவளை மதிக்கும்படி வாழ்வாள். நல்லவர் ஆகமசாஸ்திரம் முதலியவைகளைத் தெரிந்த பெரியோர்களுக்குச் சாப்பாடு போடுவதில் விருப்பமுள்ளவள். நாகரிகங்களை உடையவள். நல்லவர்களுக்கு நல்லவளாக இருப்பாள். இவள் தன்னுடைய பிற்காலத்தில் செல்வத்தையும் சுகங்களையும் அடைவாள் என்று சொல்லுகிறோம்.

11. அரவுபோல் கோப மேற்பள் அற்பபுத் திகளு மில்லாள்
வறுமைக ளுடையா ளாகும் வஞ்சனை எண்ணு நெஞ்சம்
நெறியுளாள் விரதமேற்பள் நிருபனுக் கிவளால் யோகம்
மர்மமும் கொஞ்ச முண்டு வந்தவர் தம்மைக் காப்பள்.

11. ஜாதகி நல்லபாம்பைப்போலக் கோபித்துக்கொள்ளுவாள். தாழ்ந்த புத்திகளையுடையவளல்ல, கஷ்டங்களையும் தரித்திரத்தையும் உடையவளாவாள். பிறருக்குக் கள்ளம் கபடம் வஞ்சனை இவைகளை நினைக்காத மனதையுடையவள். சன்மார்க்கத்தை யுடையவள். இவளுடைய புருஷனுக்கு இவளால் யோகம்வந்து சம்பவிக்கும். கொஞ்சம் ரகசியத்தையும் உடையவள். தன்னிடத்திற்கு வந்தவர்களைக் காப்பாற்றுவாள்.

12. தன்துணை முன்பெண் ஒன்று தங்கும்பின் ஆண்பால் ரண்டு
கன்னியு மொருத்தி யாகும் கழறின நான்கும் தீர்க்கம்
பின்னமாம் மூன்று என்றேரும் பேசுவோம் பின்பால் சேதி
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே.

12. ஜாதகியுடன் கூடப்பிறந்தவர்களில் மூத்தசகோதரி ஒருத்தியும் இளையசகோதரர்கள் இருவரும் இளையசகோதரி ஒருத்தியும் ஆகும். சொல்லப்பட்ட இந்த நான்கு சகோதரங்களும் நீண்ட ஆயுளை உடையவர்களாவார்கள்.

மூன்று சகோதரங்கள் இறந்துபோய்விடும் என்று சொல்லுகிறோம். இவர்களுடைய விஷயங்களைப்பற்றிப் பின்னால் சொல்லுகிறோம். மேன்மையான யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே ! கேட்பீராக.

13. அத்திரி மறித்துச் சொல்வார் அறைந்நீரே துணைவர் முன்னோள்
வித்தகி குணமெவ்வாறு விளம்புவீர் முனியே நீர்தாம்
சுத்தவாள் அடக்க வார்த்தை சொல்லுமுன் கோபம் கொஞ்சம்
நந்தினோர்க் குதவிசெய்வள் நயப்புறு வார்த்தை யுண்டு.

13. அத்திரி மகரிஷி தடுத்து கேட்கின்றார். ஜாதகிக்கு முன்னே ஒரு சகோதரி உண்டு என்று சொன்னீரே ! அவளுடைய குணங்கள் எவ்விதமானவை என்று, முனிவரே ! நீர் சொல்லுவீராக. அவள் சுத்தமானவள். வார்த்தைகளை அடக்கமாகவும் பொறுமையாகவும் சொல்லுவாள். பேசுவதற்கு முன்னமே கொஞ்சங் கோபம் உடையவள். தனக்குக் கெடுதியைச் செய்தவர்களுக்குங்கூட உபகாரஞ் செய்வாள். இனிமையாகவும் நயப்பாகவும் வார்த்தைகளை உபயோகப்படுத்துவாள்.

14. வரனுமே தென்பால் நேரும் மாதுரு வர்க்கம் தன்னில்
பொறுமையும் பெருமை யேற்பள் புண்ணிய மனத்தா ளாகும்
மறுமமில் லாதா ளாகும் வயதுமே தீர்க்க மெய்தும்
பெரும்சுதர் ஆண்பால் ரண்டு பேதையு மூவர் நீர்க்கம்.

14. இவளுக்குப் புருஷன் தெற்குத் திக்கிலிருந்து வருவார். அவளுடைய தாயார் வர்க்கத்திலிருந்து அவர் வருவார். அவள் பொறுமையையுடையவள். பெருமையையும் உடையவள். புண்ணியங்களைச் செய்கின்ற நல்ல மனத்தை யுடையவள். ரகசியமான மனமில்லாதவள். வஞ்சகமில்லாதவள். அவளுக்கு ஆயுள் அதிகமாகவிருக்கும். அவளுக்கு உண்டாகுங் குழந்தைகளில் ஆண் குழந்தைகள் இரண்டுபேரும் பெண் குழந்தைகள் மூன்றுபேரும் நீண்ட ஆயுளை யுடையவர்களாகவிருப்பார்கள்.

15. சுகமுள குடும்பி யாவள் சோர்வோர்க்குத் தாக மீவள்
பகையென்று மனத்தில் வையாள் பாரினில் வறுமை காணாள்
உகமையாய்ப் பேசு வாளாம் உண்மையா மனத்தாளாகும்
மிகுதவம் புரியு மெங்கள் வித்தகி கேட்டிடாயே.

15. அவள் சௌக்கியமுள்ள குடும்பஸ்தளாக விருப்பாள். களைத்துப்போனவர்களுக்குத் தாகவிடாய் தீரத் தண்ணீரைக் கொடுப்பாள். குரோதமானதைத் தன்னுடைய மனத்தில் வைத்துக்கொள்ள மாட்டாள். பூமியில் அவளுக்குக் கஷ்டங்களும் தரித்திரமும் கிடையா. இரண்டு அர்த்தங்கள் ஏற்படும்படியாகச் சிலேடையாகப் பேசுவாள். உண்மையான மனத்தையுடையவள். விசேஷமானதும் அதிகமானதுமான தவங்களைச் செய்கின்ற ஞானமும் செல்வமும் உடைய எங்களுடைய பார்வதியம்மையே ! கேட்பீராக.

16. இவள்துணைச் சேதி யாவும் பேசுவோம் பின்பா கத்தில்
இன்னவள் மணத்தின் கால மியம்புவோம் மூவைந் தாண்டுள்
அன்னவன் வடமேல் நேரும் மாதுரு ளையா லேயே
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அழகுளான் மாஞ்சி வப்பன்.

16. ஜாதகியினுடைய சகோதரர்களின் விஷயங்களைப்பற்றிப் பின்பாகத்தில் பூர்த்தியாகச் சொல்லுகின்றோம். ஜாதகியினுடைய விவாக காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவளுக்குப் பதினைந்து வயதிற்குள் புருஷன் தாயாருடைய பந்துவிலிருந்து வடமேற்குத் திக்கிலிருந்து வருவார். இவருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகிறேன். இவர் அழகுள்ளவராகவிருப்பார். மாமரத்தின்துளிரின் நிறத்தைப்போன்ற ஒருவித மான சிவப்பு நிறமுள்ள தேகமுடையவராவர்.

* குறிப்பு.—விவாககால விஷயம்:—ஜாதகிக்கு வயது ஷ 14-0-0 முதல் ஷ 15-0-0 முடியும் வரையிலும் குரு தசையில் சுக்கிர புக்தி நடக்கின்றது. குரு ஒன்பதிற்குடையவராகிக் களத்திர காரகனாகிய (பர்த்திருகாரகனாகிய) சுக்கிரனுடன் கூடியிருக்கின்றார். போகஸ்தானமாகிய நான்காம் பாவத்திற்குச் சுக்கிரன் அதிபதியாகவிருக்கின்றார். போகஸ்தானமாகிய துலாத்தைக் குருவும் பார்க்கின்றார். ஆகையால் குருதசையில் சுக்கிர புக்தியில் ஜாதகிக்கு விவாகம் நடக்கும் அமைப்பு இருக்கின்றது.

17. ஒருவர்பா லணுகி யேதான் உத்தியோகம் செய்வா னாகும்
இருவிதக் கல்வி ஏற்பன் எதிரிக்குப் பிணக்கம் சொல்லான்
பொருள்கடன் கொள்ளா னாகும் போஜன வறுமை காணான்
பெருமையாய்ப் புகழும் பின்னால் பெறுவனாமென்று
சொல்வோம்.

17. ஜாதகியினுடைய புருஷன் ஒருவரை அண்டி ஜீவனஞ் செய்வர். இரண்டுவித வித்தையையுடையவர். எதிரியிடஞ் சண்டைபோடும் படியாக நெருங்க மாட்டார். பணத்தைக் கடனாக வாங்கமாட்டார். சாப்பாட்டு விஷயத்தில் கஷ்டங்கள் இல்லாதவர். பெருமையையும் கீர்த்தியையும் அடையக்கூடியவரென்று சொல்லுகிறோம்.

18. மாதுவும் போன பின்பு வளர்பிறை போலே யோகம்
ஓதுவோம் தாயே யாங்கள் உண்டான பிழைக ளுக்குச்
சாதிப்பான் சிலவே சங்கை சந்தேக மனத்த னாகும்
கியாதியும் ஏற்பா னாகும் கனத்தவர் நேசம் கொள்வன்.

18. ஜாதகியின் புருஷனுக்கு! இவள் இவனிடம் வந்துசேர்ந்த பிறகு வளர்பிறைச் சந்திரன் விருத்தியாவது போல யோகம் விருத்தியாகும் என்று பார்வதியம்மையே! நாங்கள் சொல்லுகிறோம். தான் செய்ததால், நேரிட்ட குற்றங்களுக்குச் சில காரணங்களைச் சொல்லுவார். சந்தேகமான மனத்தையுடையவராவார். பெருமையையும் புகழையும் அடைவார். பெரிய மனுஷாளுடைய சினேகத்தை அடைவார்.

19. சுதர்களு மாண்பா லொன்று தோகையர் நால்வ ராகும்
அதிபதி பூர்வம் சொல்வேன் மாயூரம் நாட்டி லேதான்
சதிசெயும் வைசியர் சேயாய்ச் ஜனித்துமே செட்டு செய்து
அதிதிகட் கன்ன மீந்து அறமதி லிச்சை யுண்டாய்.

19. ஜாதகிக்கு ஓர் ஆண் குழந்தையும் நான்கு பெண் குழந்தைகளும் உண்டு. இவளுடைய பூர்வ ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறேன், மாயவரம் என்ற பட்டணத்தில் ஒரு வைசிய குலத்தில் ஜாதகி பெண்ணாகப் பிறந்து வியாபாரஞ் செய்து பரதேசிகளுக்குச் சாப்பாடு போட்டுத் தருமத்தில் ஆசையுடையவளாய்;

20. வரன்முன்னே மரண மாகி மால்மகன் வரைய ப்பட்டு
அரிவையு முதிப்பா ளாகும் அறைகிறோ மிவளின் யோகம்
குறைவுறு தன்னமென்றோம் குவலயம் சல்லியம் காணுள்
இரைபணி சேர்ப்பா ளாகும் இடுக்கமே காணு ளாகும்.

20. தன்னுடைய புருஷனுகுகு முன்னே இறந்து மகாவிஷ்ணுவின் மகனுகிய பிரமாவினல் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் பெண்ணுக வந்து பிறந்தாள். இவளுடைய யோகத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவளுக்கு எப்போதும் சாப்பாடு குறைவுபடாது. பூமியில் கடன் வாங்கமாட்டாள். ஆபரணங்களைச் சேர்த்து வைப்பாள். கஷ்டங்களை அனுபவிக்கமாட்டாள்.

21. ஈரொன்ப தாண்டு மட்டும் இவள் தந்தை சல்லிய பாதை
கூறுவோம் தாயே யாங்கள் குறைமனம் உடையா னுகும்
மாறிடு மதன்மே லாக மனமது துயரம் நீங்கும்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

21. ஜாதகிக்குப் பதினெட்டு வயது வரையிலும் இவளுடைய தகப்பனுருக்குக் கடனுல் உபத்திரவம் உண்டு என்று எங்களுடைய தாயாராகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லுகிறோம். தகப்பனுர் மனக் கஷ்டம் உடையவராகவிருப்பார். அதற்குமேல் நிலைமை மாறி மனக் கஷ்டம் நிவிர்த்தியாகும். ஆறு மஹிமை பொருந்திய முகங்களையுடைய முருகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! கேட்பீராக.

22. விலகிடும் சல்லியம் மென்றீர் விளம்புவீ ரந்தச் சங்கை
நலமுள தானியச் செட்டால் ரசவர்க்கத் தாலே நீங்கும்
தலைவியாம் அன்னை சேதி சாற்றுவோம் சிவந்த மேனி
பலருக்கு நல்லோ ளாவள் பல்வலி உடை யளாமே.

22. கடன் நிவிர்த்தியாகிவிடும் என்று சொன்னீரே! அஃது எவ்விதமாக நேரிடும் என்பதைச் சொல்லுவீராக. நன்மையைத் தரக்கூடிய தான்ய வியாபாரத்தினுலும் ரசவர்க்க வஸ்துக்களினுலும் கடன் நிவிர்த்தியாகும். ஜாதகியின் தாயாருடைய விஷயங்களைப்பற்றிச் சொல்லுகிறோம். இவள் சிகப்பு நிறமான தேகத்தையுடையவள். அநேகருக்கு நல்லவளாக விருப்பாள். இவளுக்குப் பல்நோய் இருக்கும்.

23. அன்னம்போல் வடிவு மொக்கும் ஆளன்தன் மனம்போல் வாழ்வள்
அன்னியர் குற்றம் சொல்லாள் அடைந்தோரை ஆதரிப்பள்
அன்னமு மன்பா யீவள் அடிசலுக் கினிய ளாகும்
அன்னவள் துணை ஆண் இரண்டு அறைகிறோம் தீர்க்க மாக.

23. ஜாதகியின் தாயார் அன்னத்தைப்போன்ற அழகான ரூபமுடைய வளாவள். தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தபடி நடந்து கொள்ளுவாள். பிறருடைய பேரில் குற்றமானதைச் சொல்லமாட்டாள். தன்னிடம் வந்து சேர்ந்தவர்களைக் காப்பாற்றுவாள். சாப்பாட்டை ஆசை யுடன் கொடுப்பாள். சமையல் நன்ருகவும் இனிப்பாகவும் இருக்கும்படியாய்ச் செய்வாள். இவளுடைய ஆண் சகோதரர்கள் இரண்டுபேர் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகிறோம்.

24. தென்கீழ்ப் பால் தாயினில்லம் செப்புவோம் பாவைக்கே தான்
அன்னைபோல் ஆதரிப்பள் அடாவடி கூரு ளாகும்
முன்ஜன்மம் அருணை தன்னி லுதித்தனள் முதல்கு லத்தில்
உன்னத குடும் பியாகி உதித்துமே வாழ்ந்து மேதான் ;

24. ஜாதகியின் தாயாருடைய தாய்வீடு தென்கிழக்குத் திக்கில் இருக்கும் என்று சொல்லுகிறோம். தாயைப்போல இவள் காப்பாற்றுவாள், அநியாயமாகவும் முரட்டுத்தனமாகவும் பேசமாட்டாள். இவள் தன்னுடைய முன்ஜன்மத்தில் அருணை என்று சொல்லப்பட்ட அருணசல க்ஷேத்திர மாகிய திருவண்ணமலை ஸ்தலத்தில் முதல் குலமாகிய பிராமணர் குலத்தில் பிறந்தாள். மேன்மையான குடும்பஸ்தையாகி வாழ்ந்துகொண்டு ;

25. காலன்தன் பதிக்குச் சென்று கஞ்சனல் வரையப் பட்டு
சீலமில் லாத கங்கை குலமதி லுதித்தா ளென்றோம்
வேல்விழி முன் ஜன்மத்தில் வேதத்தின் குலமு தித்து
ஞாலமேல் குலம்தாழ் வாக நாயகி வந்த தென்ன.

25. பிறகு இறந்து எமபட்டணத்திற்குப்போய் பிரமதேவனல் பிரமலிபியுடன் எழுதப்பட்டுச் சுத்தமில்லாத ஒரு வேளாளர் குலத்தில் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்தாள் என்று சொல்லுகிறோம். இவள் பூமியில் இந்த ஜென்மத்தில் பிராமணர் குலத்தைவிட தாழ்ந்த குலமாகிய வேளாளர் குலத்திற் பிறந்ததற்குக் காரணம் என்ன ?

26. மங்கையும் முன்ஜன் மத்தில் விரதங்கள் கெடுதி செய்தாள்
சங்கையா லுதித்தாளென்றோம் சாற்றுவோம் பின் ஜன்மத்தைத்
துங்கமாம் திருமால் தன்னில் தோன்றுவாள் பிரம்ம சேயாய்
அதிதிகள் தம்மைவ ளர்க்கும் அம்பிகை யாளே கேளாய்.

26. ஜாதகியினுடைய தாயார் முன்ஜன்மத்தில் விரதங்களில் கெடுதியைச் செய்து பாபத்துடன் பிறந்தாள் என்று சொல்லுகிறோம்.

இவளுடைய மறு ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறோம். இவள் மகா விஷ்ணுவின் ஸ்தலத்தில் பிராமணர் குலத்தில் பெண்ணாகப் பிறப்பாள், பரதேசிகளைக் காப்பாற்றுகின்ற பார்வதி யம்மையே ! கேட்பீராக.

27. நாற்பது ஒன்று ஆண்டில் நற்றனுர் மாதம் தனனில்
கூப்பிடு வானும் காலன் குறித் தோ ரன்னே தன்னே
ஏற்கவே முப்பா னெட்டில்யியம்புவோம் தந்தை கெண்டம்
ஆற்கவே யிவன்பின் ஜன்மம் அறிவிப்போம் தாயே யாங்கள்.

27. ஜாதகிக்கு நாற்பத்தோராவது வயதில் மார்கழி மாதத்தில் இவளுடைய தாயாரை எமன் கூப்பிடவே தாயார் இறந்து போவாள். ஜாதகிக்கு முப்பத்தெட்டாவது வயதில் இவளுடைய தகப்பனார் இறநது போவார். தகப்பனாருடைய மறு ஜன்மத்தைப் பற்றி எங்களுடைய தாயாராகிய பார்வதியம்மையே ! நாங்கள் சொல்லுகிறோம்.

**குறிப்பு.—தாய்மாரக விஷயம் :—**ஜாதகிக்கு வயது ஷூ 40–0–0 முதல் ஷூ 41–0–0 வரையிலும் சனி தசையில் குரு புக்தியும், புத தசையில் புத புக்தியும் நடக்கின்றன. மாதுர்லக்கினம் துலாம். துலாலக்கினத்திற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் சூரியனும் குருவும் மாரகாதிபதிகள் ஆவார்கள். சனி புதன் இவர்களில் புதன் தான் மாரகாதிபதியுடன், அஃதாவது சூரியனுடன் சேர்ந்திருக்கின்றார். மேலும் புதன் சந்திரனுக்குக் கர்ம ஸ்தானத்தில் இருக்கின்றார். ஆகையால் ஜாதக சந்திரிகை 23-ஆவது சுலோகம் பிரகாரம் சனியைவிட புதன் தாயாருக்கு மாரகஞ் செய்ய அதிக அமைப்புள்ளவராகத் தோற்றுகிறார். ஆனால் நாற்பத்தோராவது வயதில் மார்கழி மாதத்தில் சனி தசையில் குரு புக்திதான் நடப்பதாகத் தெரிகிறது. சனி பன்னிரண்டாவது மாரகஸ்தானமாகிய கன்னியில் புதனுடைய வீட்டில் இருக்கின்றார். மராகாதிபதியாகிய குருவையும் பார்க்கின்றார். குரு மாதுர் ஸ்தானமாகிய துலாத்தையும் பார்த்திருக்கின்றார். சனி புதனுடைய வீட்டிலும் இருக்கிறார். ஜாதகசந்திரிகை 27-ஆவது சுலோகப் பிரகாரம் சனி தனக்கு முந்திச் செல்லுகின்ற குருவினுடைய மாரகத்தையும் தனக்குப் பிந்தி வருகின்ற புதனுடைய மாரகத்தையும் கிரகித்துக்கொண்டு குரு புதன் இவர்கள் இருவரையும் மீறி இவர்களை நிராகரித்துவிட்டுத் தானே மாரகஞ்செய்ய அதிகாரத்தை அடைகின்றார். ஆகையால் சனி தசையில் குருபுக்தியில் மாரகஞ் செய்ய அமைப்பு ஏற்படுகிறது. (சௌரமான வருஷமல்லாமல் சாவன வருஷத்தை அங்கீகரித்தால் தனுர் மாதத்திற்குப் புததசையில் புதபுக்திவரக்கூடும். ஆனால் இது சந்தேகமான தாகும்.)

**குறிப்பு.—தகப்பன் மரணம் :—**ஜாதகருக்கு வயது ஷூ 37–0–0 முதல் ஷூ 38–0–0 முடியும் வரையிலும் சனி தசையில் ராகு புக்தி நடக்கின்றது. பிதுர் லக்கினமாகிய மீனத்திற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகைகளின் பிரகாரம் சனி புதன் சுக்கிரன் சூரியன் இவர்கள் மாரகாதிபதிகள். சனி ஏழில் மாரகஸ்தானத்தில் இருந்துகொண்டு மீன லக்கினத்தையும் பிதுர்

ஸ்தானாதிபதியாகிய குருவையும் பார்க்கின்றார். பிதுருக்கு எட்டாவது பாவாதிபதியாகிய சுக்கிரனையும் பார்க்கின்றார். ஆகையால் துய்யகேரளம் எட்டாம் பாவம் 20-ஆவது பாடல் பிரகாரம்கூட சனி மாரகாதிபதியாகின்றார். ராகு பிதுர்பாவத்தில் இருப்பதால் தன் புத்தியில் மாரகஞ் செய்ய அதிகார முடையவராகின்றார்.

28. வாரியி னோரம் தன்னில் மாபலி நகரி லேதான்
சேருவான் பிரம்ம சேயாய் ஜயமுனி தடுத்துச் சொல்வார்
மாரனுக் கிச்சென் மத்தில் மருவின புண்ணிய மென்ன
கூறுவீர் விவரம் தன்னைக் குமரனு மிச்சென் மத்தில் ;

28. ஜாதகியின் தகப்பனார் மஹாபலிபுரம் என்ற பட்டணத்தில் சமுத்திரக்கரை ஓரத்தில் பிராமணர் குலத்தில் ஆண் குழந்தையாய் மறு ஜன்மத்தில் பிறப்பார். ஜயமுனிவர் தடுத்துக் கேட்கின்றார். இவருக்கு இந்த ஜன்மத்தில் ஏற்பட்ட புண்ணியம் என்ன என்பதைப்பற்றி விபர மாகச் சொல்லுவீர் என்று கேட்க, இவர் இந்த ஜன்மத்தில் ;

29. அறமதி லிச்சை யாயும் ஆபத்தைச் சிலர்க்குக் காத்தும்
பெருமையாய்த் தலங்கள் சென்றும் பூமியில் வாழ்வ தாலே
மறைக்குல முதிப்பா னாகும் வரைந்தன மொழி குன்றாது
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

29. தருமத்தில் ஆசையுடையவராகி இருந்ததாலும், ஆபத்துக் காலத் தில் சிலபேர்களைக் காப்பாற்றியதாலும், மேன்மையாய் க்ஷேத்திரங் களுக்குப் போய் பூமியில் வாழ்ந்ததாலும் பிராமணர் குலத்தில் பிறப்பார். நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும்.

30. அன்பது நாலு ஆண்டில் ஐப்பசி மாதம் தன்னில்
இன்னவ ளுடலம் ஏகும் யியம்புவோ மிவள்பின் ஜன்மம்
கன்னியா குமரி தன்னில் கலப்பளாம் சைவ சேயாய்
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே.

30. ஜாதகி தனக்கு ஐம்பத்துநான்காவது வயதில் ஐப்பசி மாதத் தில் இருந்து இவளுடைய தேகம் மறைந்து போய்விடும். இவளுடைய மறு ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறோம். கன்னியாகுமரி பட்டணத்தில் சைவர் குலத்தில் பெண்ணாய்ப் பிறப்பாள். மேன்மை தங்கிய யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்தப் பார்வதியம்மையே ! கேட்பீராக.

**குறிப்பு.**—ஜாதகிக்கு வயது ௵ 53-0-0 முதல் ௵ 54-0-0 முடியும் வரையிலும் புதன் தசையில் குரு புக்தி நடக்கின்றது. பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் கடக லக்கினத்திற்குப் புதன் சுக்கிரன் சனி இவர்கள் மாரகாதிபதிகள் ஆகின்றார்கள். புதன் லக்கினத் தில் இருக்கின்றார். குரு ஆறுக்குடையவராய் மாரகாதிபதியாகிய சுக்கிர

னுடன் கூடி அஷ்டமத்தைப் பார்க்கின்றூர். ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரமும் துய்யகேரளம் எட்டாம் பாவம் 20-ஆவது பாடல் பிரகாரமும் புத தசையில் குரு புக்தியில் மாரகம் நேரிட அமைப்பு உண்டு.

31. மங்கையின் மாரன் கண்டம் வரைகுவீர் அவன் முன் ஜன்மம்
துங்கமாம் பத்திரி தன்னில் ஜனித்தனன் மஸ்தான் வமிசம்
பொங்கின குடும் பியாகிப் பிறர்பொரு ளிச்சை யின்றி
அங்கவன் வினையில் லாமல் அணுகினன் காலனூடு.

31. ஜாதகியினுடைய புருஷனின் கண்டத்தைப் பற்றிச்சொல்லு வீர் என்று கேட்க, சொல்லுகின்றூர். மேன்மை தங்கிய பத்திரி என்ற ஊரில் முஸ்லிம் குலத்தில் பிறந்து சிறப்பான குடும்பஸ்தராகி அன்னியருடைய பொருளின்மேல் ஆசையில்லாதவராகிப் பாவம் ஒன்றும் இல்லாதவராகி இறந்து எமபட்டணத்திற்குப் போனூர்.

32. சிரநான்கோன் வரையப் பட்டு செனித்தவ னென்று சொல்வோம்
வரும்ஜன்மம் மலைநா டன்னில் வருகுவான் சைவச் சேயாய்
அரிவையும் ஜனிக்கும் காலை அரவுதன் தசையைந் தாண்டும்
உறைந்திடு திங்கள் பத்தும் உரைத்தனம் பூர்வ பாகம்.

32. நான்கு சிரசுகளையுடைய பிரமதேவனூல் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றூர் என்று சொல்லுவோம். மறு ஜன்மத்தில் இவர் மலை நாட்டில் சைவனூகப் பிறப்பார். ஜாதகி பிறக்குங்காலத்தில் ராகு தெசையில் இருப்பு ஐந்து வருஷமும் பத்து மாதமும் ஆகும். இவ்விதமாக முன்பாகத்தைச் சொன்னேம்.

## ஜாதகம் 85

1. கடகலக் கினம தாகக் கரும்பாம்பு [1] நாலி லாக
முடவனும் [2] குருவு மேழில் வெள்ளியும் [3] நவத்தி லாகச்
சுடரவன் [4] கேது பத்தில் சேய் [5] புதன் மதியும் [6] லாபம்
உடன்பலன் எவ்வா றென்று உத்தமி கேட்கும் போது ;

| | | | |
|---|---|---|---|
| சுக்கிரன் | சூரியன் கேது | சந்திரன் அங்காரகன் புதன் | |
| | இராசி | சக்கரம் | லக்கினம் |
| குரு சனி | | | |
| | | ராகு | |

ரோகிணி 1-ஆம் பாதம். சந்திரதசை 8-9-0.

1. ஜன்ம லக்கினம் கடகமாகி, இராகு நான்கிலும், சனியும் குருவும் ஏழிலும், சுக்கிரன் ஒன்பதிலும், சூரியனும் கேதுவும் பத்திலும், அங்காரகனும் புதனும் சந்திரனும் லாபமாகிய பதினொன்றிலும் இருந்தால் பலாபலன்கள் எவ்விதமாக விருக்கும் என்று பார்வதியம்மையார் கேட்கும்போது ;

**குறிப்பு.**—இந்த ராசிக் சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்த முடையதாகும் :—மேஷத்தில் சந்திரனும், கடகத்தில் கேதுவும், சிம்மத்தில் குருவும், கன்னியில் சுக்கிரனும், விருச்சிகத்தில் சூரியனும், மகரத்தில் அங்காரகன் புதன் ராகு சனி இவர்களும் ஆகும்.

2. பிருகுமே புகலு கின்றார் பிறந்திடு மாண்பால் ஜன்மம்
பெறுந்தந்தை யில்லம் சொல்வேன் புரந்தரன் குடக்கு வீதி
தெருவாசல் வடபா லாகும் சிவன்கோஷ்டம் தென்மே லாகும்
நரிவாக னத்தாள் மீனம் நல்கிடு மேல்பால் மாயோன்.

2. பிருகுமகரிஷியானவர் சொல்லுகின்றார், பிறந்த குழந்தை ஆண் குழந்தையாக ஜனிக்கும். பெற்ற தகப்பனுருடைய வீட்டைப்பற்றிச் சொல்லுகிறேன். வீதி இந்திரனுடைய திக்காகிய கிழக்குத்திக்கிலிருந்து

---

[1] இராகு. [2] சனி. [3] சுக்கிரன். [4] அங்காரகன். [5] சூரியன். [6] சந்திரன்.

குடக்குத் திக்காகிய மேற்குத் திக்கிற்குப் போகும், கிழக்கு மேற்கு வீதியாகும். அது வீட்டின் தெருவாயிற்படி வடக்குத் திக்கிலிருக்கும். சிவபெருமானுடைய கோவில் தென்மேற்கில் இருக்கும். காளிதேவியின் கோவில் வடக்குத் திக்கிலும் மகாவிஷ்ணுவின் கோயில் மேற்குத் திக்கிலும் இருக்கும்.

3. புதிதாக இல்ல முத்திரம் செப்வோம் சமலூ ராகும்
நதிகுலம் சேஷ்ட ளுக நவிலுவோம் பாலன் தானும்
அதிபன்தன் குடும்ப சேதி வரைகிறோ மிந்நூல் தன்னில்
அதிதியை ஆத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

3. புதியதாகக் கட்டப்பட்ட வீடு வடக்குத் திக்கிலிருக்கும். பிறந்த ஊர் நடுத்தரமான ஊராகும் என்று சொல்லுவோம். வேளாளர் குலத்தில் ஜேஷ்ட குழந்தையாக ஜாதகர் வந்து பிறப்பார். இவருடைய குடும்ப விஷயங்களை இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகிறோம். பரதேசிகளைக் காப்பாற்றுகின்ற பார்வதியம்மையே ! கேட்பீராக.

குறிப்பு.—ஜேஷ்டனுகப் பிறக்கும் விஷயம் :—மூத்தோர் ஸ்தானம் ரிஷபம். இதற்குடைய சுக்கிரன் சனியினுடைய காலாகிய உத்தரட்டாதியில் இருந்துகொண்டு சனியால் பார்க்கப்படுகின்றார். இது தோஷமாகும். மூத்தோர்காரகராகிய குரு நீசமடைந்து சனியுடன் இருப்பது தோஷம். குரு ஆறுக்குடையவராய்ப் பதினொன்றைப் பார்ப்பது தோஷமாகும். புதன் விரயாதிபதியாகிப் பதினொன்றில் இருப்பது தோஷம். அங்காரகன் பதினொன்றில் இருப்பது தோஷம். ஆகையால் ஜாதகருக்கு மூத்தோர் கிடையாது.

4. தந்தையின் வர்க்கம் தன்னைச் சாற்றஆண் பலமு ருது
வந்திடும் கன்னி ஒன்று வரைகிறோம்தீர்க்க மாக
அந்தவள் சுகமே வாழ்வள் ஆளனும் வடமே லாகும்
சந்ததி தோன்றும் தீதாம் சடைமுனி தோஷத் தாலே.

4. தகப்பனுருடைய பந்துக்களைப்பற்றி சொல்லுகிறோம். இவருக்கு ஆண் சகோதர பலம் கிடையாது. இவருக்கு ஒரு சகோதரி நீண்ட ஆயுளை உடையவளாக விருப்பாள். இவள் சுகஜீவியாக வாழ்வாள். இவளுடைய புருஷன் வடமேற்குத் திக்கிலிருந்து வருவார். குழைந்தைகள் பிறக்கும். ஜடைமுனி என்ற ஒரு முனியேஸ்வரனுடைய தோஷத்தாலே அவை இறந்து போய்விடும்.

5. சடைமுனி தோஷம் தீரச் சாற்றுவீர் கிரியையொன்று
அடைவுடன் கிரக சாந்தி அவளுக்குச் செய்து மேலும்
உரைரேக்கில் அம்மன் பீஜம் உரைத்துமே அணிவா ளாகில்
விடமுனி சாபம் நீங்கி விளங்கிடும் சுதர்கள் விருத்தி.

5. இந்த ஜடைமுனிவருடைய தோஷம் நிவிர்த்தியாகச் சாந்தி ஒன்றை சொல்வீராக. நவக்கிரக சாந்தி ஒன்றைச் செய்து, அதற்கு மேல் ஒரு ரேக்கில் பார்வதி அம்மனுடைய பீஜத்தை எழுதி அதை இவள் அணிந்துகொள்ளுவாளாகில் விஷமுள்ள முனீசுவரருடைய சாபம், அதனுலேற்பட்ட தோஷம் விலகிச் சந்ததிகள் விருத்தியாகும்.

6. கன்னிமா ரிருவ ராகும் காளையு மொன்றே தீர்க்கம்
சொன்னது போலே சேய்யில் தீர்க்கமா மூன்று என்றோம்
இன்னவன் தந்தைச் சேதியி யம்புவோம் மால்நி றத்தன்
தன்மனம் கபடு மில்லான் தரணியால் ஜீவிப்பா னும்.

6. இவளுக்கு இரண்டு பெண் குழந்தைகளும், ஓர் ஆண் குழந்தையும் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள். நாம் சொல்லிய சாந்தியைச் செய்தால் இந்த மூன்று குழந்தைகளும் நீடித்திருக்கும் என்று சொல்லுகிறோம். ஜாதகருடைய தகப்பனாரின் விஷயங்களைப்பற்றிச் சொல்லுகிறோம். இவர் மகாவிஷ்ணுவின் நிறமாகிய நீலமேக வர்ணம் என்ற ஒரு விதமான நிறத்தையுடையவர். தன்னுடைய மனத்தில் கள்ளம் வஞ்சனை கபடம் இவைகள் இல்லாதவராவார். நிலங்களால் ஜீவனஞ் செய்வாராகும்.

7. கொஞ்சமாம் பூமி யென்றோம் இன்சொலும் கொஞ்ச முண்டு
அஞ்சின வார்த்தை கூறுவன் அடாமொழி கூறு னும்
வஞ்சக ரிஷ்ட னுவன் வளவும் செய்வா னும்
கஞ்சமாம் ரேகை யுண்டு காசுகள் அதிக மில்லான்.

7. தகப்பனுருக்கு நிலங்கள் கொஞ்சமாக விருக்கும் என்று சொல்லுகிறோம். இனிமையான வார்த்தைகளைக் கொஞ்சமாக இவர் உபயோகப்படுத்துவார். பயப்பட்டு கடினமில்லாத வார்த்தைகளைச் சொல்லுவார். அநியாயமானதும் முரட்டுதனமானதுமான வார்தைகளைச் சொல்ல மாட்டார். வஞ்சனை செய்பவர்கள் கபடமாயுள்ளவர்கள் ஆகிய இவர்களிடத்தில் பிரியமாயிருப்பார். ஒரு அழகிய வீட்டைக் கட்டுவார். இவருடைய கையில் கமலரேகை என்ற தாமரைரேகை இருக்கிறது. தனம் அதிகமாக வில்லாதவர்.

8. முன்னவ னிருந்த ஜன்மம் மொழிகிறோம் தக்கோ லத்தில்
நன்னயச் சேடர் வமிசம் நல்கியே வாழுந் நாளில்
அன்னிய மாது பேரில் அற்புத வார்த்தை சொல்லக்
கன்னிகை திகில டைந்து கழறின சொல்லைக் கேண்மோ.

8. ஜாதகரின் தகப்பனுருடைய முன் ஜென்மத்தைப்பற்றிச் சொல்லுகிறோம். ஒரு நல்ல நெசவுக்காரருடைய குலத்தில் பிறந்து வாழுகின்ற காலத்தில் ஓர் அயலாருடைய ஸ்திரீயின்மேல் ஆச்சரியமான வார்த்தைகளைச் சொல்ல, அவள் பயத்தை அடைந்து சொல்லிய வார்த்தைகளைக் கேட்பீராக.

9. பெண்பழி சொன்ன பாவி பிறக்கும் பின் ஜன்மம் தன்னில்
அண்ணன்தம் பிகளு மின்றி ஆண்மையாய்க் குடும்ப மின்றிக்
குன்னிய வார்த்தை தெத்து குவலயம் தன்னில் வாழ்வாய்த்
திண்ணமாய் அந்தச் சாபம் சேர்ந்தது என்று சொல்வோம்.

9. ஒரு பெண்ணின் மேல் பழியைச் சொல்லிய பாவியாகிய நீ உன்னுடைய மறு ஜன்மத்தில் உனக்கு அண்ணனும் தம்பியும் இல்லாமலும், வலுவானதும் மேன்மையானதுமான குடும்பமும் இல்லாமலும், குறைவான வார்த்தைகளைச் சொல்லுகின்ற தெத்வாயனுகவும் இருந்து வாழக்கடவாய் என்று அந்த ஸ்திரீ சொல்ல அவளுடைய அந்தச் சாபமானது உண்மையாய் இவனை வந்து அடைந்தது என்று சொல்லுகிறோம்.

10. மாரனு மந்தி யத்தில் மஹாதேவர் பூசை செய்து
வேறொரு வினையில் லாமல் மேவினன் காலன் றூடு
சூரியன் வரையப் பட்டு அணுகினு னிவனே என்றோம்
நேரிடும் மாது சாபம் நுவல்வதில் தெத்தல் கொஞ்சம்.

10. தகப்பனுர் தன்னுடைய முன் ஜன்மத்தின் கடைசி காலத்தில் சிவபெருமானைப் பூஜை செய்து, வேறு யாதொரு பாபமும் இல்லாமல் இறந்து எமபட்டணத்திற்குப் போனுர், பிறகு பிரம தேவனுல் பிரம லிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் இவர் வந்து பிறந்து இருக்கின்றுர் என்று சொல்லுகிறோம். முன் ஜென்மத்திய ஸ்திரீயின் சாபம் இவரை வந்து அடையும். பேசுவதில் இவருக்குக் கொஞ்சம் தெத்துதல் ஏற்படும்.

குறிப்பு.—தெத்துதல் விஷயம் :—ஐந்திற்குடையவரும் இரண்டிற்குடையவரும் மறைந்திருந்தால் தெத்துதல் ஏற்படும் என்று ஜோதிட சாஸ்திரங்களில் சொல்லி இருக்கிறது. இங்குப் பிதுர் லக்கினம் ஒன்பதாமிடமாகிய மீனம் ஆகும். இதற்கு ஐந்திற்குடையவராகிய சந்திரனும், இரண்டிற்குடையவராகிய அங்காரகனும் சேர்ந்து கொஞ்சம் மறைவிடமாகிய மூன்றில் இருப்பதைக் கவனிக்கவும்.

11. ஜாதகன் குணத்தை யாங்கள் சாற்றுவோ மிருநி றத்தான்
மேதினில் வாத தேகி விளைபுலம் சேர்ப்பா ஞகும்
தீதிதுகள் எண்ணு ஞகும் சொன்மொழி குன்ரு னென்றோம்
மாதவர் பத்தி மானும் அரமதி லிச்சை யுண்டு.

11. ஜாதகருடைய குண குணங்களைப் பற்றி நாங்கள் சொல்லுகின்றோம். இவர் இரண்டு நிறங்களும் கலந்த நிறமாகிய மா நிறமுள்ள தேகத்தை யுடையவர். இவர் பூமியில் வாத தேகத்தை யுடையவர். பயிரிடுதற்குரிய நிலங்களைச் சேகரிப்பார். தீங்கு முதலியவைகளை நினைக்கமாட்டார். தான் சொல்லுகின்ற வார்த்தைகளைத் தவறி நடக்கமாட்டார் என்று சொல்லுகின்றோம். முனிவர்கள் பேரில் பக்தியும் அன்பும் உடையவராவார். தருமஞ் செய்வதில் இவர் ஆசையை உடையவர்.

12. கல்விமான் கணக்கில் வல்லன் கருதிடான் கட்டு வார்த்தை
நல்லவன் நல்லவர்க்கு நாற்காலி விருத்தி யுண்டு
சொல்வது மேன்மையாகும் சொர்ணமும் சேர்ப்பா ஞகும்
அல்லலில் லாமல் வாழ்வன் அம்பிகை யாளே கேளாய்.

12. ஜாதகர் படித்தவர், கணக்குப் போடுவதில் கெட்டிக்காரர். பொய்யானவையும் புனைந்தவைகளுமான வார்த்தைகளை உபயோகிக்க எண்ண மாட்டார். நல்லவர்களுக்கு நல்லவராக நடந்து கொள்ளுவார். கால் நடைகள் விருத்தியுண்டு. இவருடைய சொற்கள் மேன்மையுடையனவாக விருக்கும் மதிக்கத்தக்கனவாகவுமிருக்கும். பொன்னைச் சேகரித்து வைப்பார். கஷ்டங்களும் அலைச்சலும் இல்லாமல் வாழ்வார். பார்வதி யம்மையே ! கேட்பீராக.

13. தன்துணை ஆண்பால் ரண்டு தங்கிடும் கன்னி மார்கள்
பின்னமாம் தன்பின் னுகப்பேசுவோ மாண்பால் ஒன்று
கன்னியு மவ்வாறு தீர்க்கம் கழறின நான்கும் தீர்க்கம்
அன்னவர் சேதி பின்பால் அறிவிப்போம் தாயே யாங்கள்.

13. ஜாதகருடன் கூடப் பிறந்தவர்களில் இரண்டு மூத்த சகோதரர்களும் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள். மூத்த சகோதரிகள் பிறந்து இறந்து விடுவார்கள். இவர்களுக்குப் பின்னால் ஓர் ஆண் சகோதரமும் ஒரு பெண் சகோதரமும் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள். ஆகையால் மொத்தம் நான்கு சகோதரங்கள் நீண்ட ஆயுளை உடைய வர்களாக விருப்பார்கள்.

குறிப்பு.—ஜாதகர் ஜேஷ்டர் என்று மூன்றுவது பாடலில் சொல்லி இருப்பதால் இங்குச் சொல்லப்பட்ட எல்லாச் சகோதரர்களும் இவருக்கு இளையவர்கள் என்று எண்ணவேண்டும்.

14. பாலகன் மணத்தின் காலம் பகருவோம் பதினெட் டாண்டில்
வேல்விழி தென்பால் நேரும் விளம்புவோ மவள்கு ணத்தைச்
சீலியா மிருசி வப்பள் சிந்தையும் நல்ல தாகும்
மால்மனை யொப்ப தாகும் வருவோரை ஆத ரிப்பள்.

14. ஜாதகருடைய விவாக காலத்தைப் பற்றிச் சொல்லுகிறோம். இவருக்குப் பதினெட்டாவது வயதில் †வேலைப்போல் அழகிய கண்களை யுடைய மனைவி தெற்குத் திக்கிலிருந்து வந்து நேரிடுவாள். இவளுடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகிறோம். நல்ல நடவடிக்கையும் நல்லொ ழுக்கத்தையும் உடையவளாவாள். இரண்டு நிறங்கள் கலந்துள்ள மாநிற முள்ள தேகத்தையுடையவள். நல்ல மனத்தை உடையவளாவாள். மகா விஷ்ணுவின் மனைவியாகிய இலட்சுமிக்குச் சமானமானவளாக விருப்பாள். தன்னிடம் வருகின்றவர்களைக் காப்பாற்றுவாள்.

குறிப்பு.—விவாக கால விஷயம் :—ஜாதகருக்கு வயது ஷ 17–0–0 முதல் ஷ 18–0–0 முடியும் வரையிலும் ராகு தசையில் ராகுபுத்தி நடக் கின்றது. முதல் தாரம் சம்பந்தமான அம்சங்கள் ஏழாவது இரண்டாவது நான்காவது பாவங்களும் இந்த பாவாதிபதிகளும், சுக்கிரனும் ஆகும். ராகு போக ஸ்தானமாகிய நான்காவது பாவத்தில் இருந்துகொண்டு ஏழுக் குடைய சனியாலும், இரண்டிற்குடைய சூரியனாலும் பார்க்கப்பட்டிருக்கின் றார். மேலும் ராகுவே போககாரகன் ஆகிறார். ஆகையால் ராகு தசை யில் ராகு புக்தியில் ஜாதகருக்கு விவாகம் நடக்க அமைப்பு இருக்கின்றது.

15. மங்கைபாட் டாளி யாகும் வர்ணித்தோர்க் குதவி செய்வள்
அங்கவள் வந்த பின்பு ஆளனுக் கதிக யோகம்
எங்கள்போ லதிதிக் கன்ன மீவளாம் பொறுமை சாலி
தங்கமும் பணிகள் சேர்ப்பள் சாதமு மன்பா யீவள்.

15. ஜாதகருடைய மனைவி கஷ்டப்பட்டு வேலை செய்யக்கூடியவ ளாவாள். இவள் புருஷனுடன் வந்து சேர்ந்த பிறகு புருஷனுக்கு அதிக யோகம் ஏற்படும். எங்களைப்போன்றவர்களுக்கும் பரதேசிகளுக்கும் சாப் பாடு போடுவாள். பொறுமையையுடையவளாவள். பொன்னும் ஆபரணங் களும் ஆகிய இவைகளைச் சேகரித்து வைப்பாள். அன்னத்தை ஆசையுட னும் அன்புடனும் கொடுப்பாள்.

16. மாதுவும் தீர்க்க ஜீவி மைந்தர்கள் பலத்தைக் கேண்மின்
ஆதவன் போலாண் ரண்டு அம்பிகை மார்க ளவ்வாறு
ஓதின நான்கும் தீர்க்கம் உரைத்த இம் மொழிகுன் றுது
போதக வானை பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

16. ஜாதகருடைய மனைவி நீண்ட ஆயுளை உடையவள். புத்திர பலத்தைப் பற்றிக் கேட்பீராக. சூரியனைப்போல இரண்டு ஆண் குழந்தை களும் இரண்டு பெண் குழந்தைகளும் ஆக மொத்தம் நான்கு குழந்தை களும் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள். நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும். இளமையான மதயானை முகத்தை யுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த புண்ணியவதியாகிய பார்வதியம் மையே ! கேட்பீராக.

17. ஜாதகன் முன்ஜன் மத்தைச் சாற்றுவோம் மதுரை கீழ்ப்பால்
மேதினில் சிறுவூர் தன்னில் விளங்கினன் வைசியச் சேயாய்
மாதவர் பக்தி பூண்டு வளமுள தலங்கள் சென்று
தீதென்றோர்க் குதவி செய்து தீவினை யில்லா தாகி ;

17. ஜாதகருடைய பூர்வஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறோம். பூமியில் மதுரைமா நகரத்திற்குக் கிழக்குத் திக்கிலுள்ள ஒரு சிறிய கிராமத்தில் வைசியர் குலத்தில் ஆண் குழந்தையாகப் பிறந்து, முனிவர் களின்மேல் பக்தியும் அன்பும் உடையவராகி நல்ல செழிப்பான திவ்விய க்ஷேத்திரங்களுக்குப் போய், கெட்டுப்போயும் நொந்துபோயும் இருக்கின் றோம் என்று சொல்லியவர்களுக்கு உபகாரஞ் செய்து, பாவம் ஒன்றும் இல்லாதவராகி ;

18. காலன்தன் நாடு சென்று சஞ்சனுல் வரையப் பட்டு
சீலமாம் கங்கை சேயாய் செனிப்பனு மிந்தப் பாலன்
ஞாலங்கள் சேர்ப்பா னுகும் ஞாதியின் பூமி சேர்க்கை
பால்பாக்கியம் விருத்தி யுண்டு பாரினில் சல்லியம் காணுன்.

18. இறந்து எமபட்டணத்திற்குப் போய் பிரமதேவனுல் பிரமலிபியுடன் எழுதப்பட்டு நல்லொழுக்க முடைய வேளாளர் குலத்தில் இந்த ஜன்மத்தில்

வந்து ஜாதகர் பிறந்தார். இவர் நிலங்களைச் சேகரித்துவைப்பார். தாயாதிகளினுடைய நிலங்கள்கூட இவருக்கு வந்துசேரும். பால் பாக்கியம் விருத்தியாகும். பூமியில் இவர் கடன் வாங்கமாட்டார்.

19. பாலகன் தனக்கு யோகம் பகர்ந்தகா ரணங்கள் சொல்வாய்
ஆலோனும் பரிதி வெள்ளி அவர்மூவர் உச்ச மாக
நீலனு மாட்சி யாக நின்றதால் வேசி யோகம்
சாலவே பர்வத யோகங்கள் சாற்றினேம் பால னுக்கு.

19. ஜாதகருக்கு யோகத்தைச் சொன்னதற்குக் காரணத்தைச் சொல்லுவீர்.. சந்திரனும் சூரியனும் சுக்கிரனும் ஆக இவர்கள் மூன்று பேரும் உச்சமாக விருப்பதாலும், சனியும் ஆட்சியாக விருப்பதாலும் வேசி யோகம் என்ற ஒரு யோகமும், நல்லதாகிய ஒரு பர்வத யோகமும் † ஆக இவ்விரண்டு யோகங்களையும் ஜாதகருக்குச் சொல்லுகின்றேம்.

†குறிப்பு.—பர்வத யோகம் :—இந்தயோக விஷயமாக ஜாதகாலங்காரம் 297-303-304-344-ஆவது பாடல்களையும், ஜாதகபாரிஜாதம் ஏழாவது அத்தியாயம் 128-ஆவது சுலோகத்தையும், ஜாதக சிந்தாமணி 2150-2151-2152-ஆவது பாடல்களையும், பலதீபிகை ஆறுவது அத்தியாயம் 31-32-ஆவது சுலோகங்களையும், ஜாதக சாரதீபிகை 62 (அறுபத்திரண்டாவது) அத்தியாயம் 23-ஆவது சுலோகத்தையும் பார்க்கவும். (1) நான்கு கேந்திரங்களிலும் இடைவிடாமல் கிரகங்கள் இருப்பது பர்வதயோகமாகும். ஜாதகாலங்காரம் 297-ஆவது பாடல் ஆகும். இங்கு மூன்று கேந்திரங் களில்தான் கிரகங்கள் இருக்கின்றன. (2) லக்கினதிபதி இருக்கின்ற வீட்டிற்குடையவராகிய சுக்கிரன், உச்சத்தில் அல்லது கேந்திரத்தில் இருப்பது பர்வத யோகமாகும். ஜாதகாலங்காரம் 303-ஆவது, 344-ஆவது பாடல்கள். (3) லக்கினதிபதியும் பன்னிரண்டிற் குடையவரும் ஒருவருக் கொருவர் கேந்திரத்திலிருந்து மித்திர கிரகங்களால் பார்க் கப்பட்டால் பர்வதயோகமுண்டு. ஜாதகபாரிஜாதம் ஆறுவது அத்தியாயம் 128-ஆவது சுலோகம். இங்குச் சந்திரனும் புதனும் கூடி இருக்கின்றார்கள். அங்காரகன் சந்திரனுக்கும் புதனுக்கும் சமக்கிரகமாகும். சந்திரனும் புதனும் கூடியிருப்பதால், ஒருவருக்கொருவர் கேந்திரத்திலிருக்கின்றார். சாதகசிந்தாமணி 2150-ஆவது பாடல். (4) தனதிபதியும் லாபாதிபதியும் உச்சத்திலிருப்பதும் பருவதயோகமாகும். இங்குச் சூரியனும் சுக்கிரனும் உச்சம். சாதக சிந்தாமணி 2151-ஆவது பாடலைப் பார்க்கவும்.

20. இருவகை யோகத் தாலே யிவனுமே வறுமை காணன்
தரையதை நாட்கு நாளாய்ச் சேர்ப்பானு மிந்தப் பாலன்
திருமாளி செய்வா னுகும் தேவதா தலங்கள் செல்வன்
அறுமுகன் பக்தி பூண்பன் அரன்தொண்டு புரிவா னுகும்.

20. இந்த இரண்டுவித யோகங்களினாலே ஜாதகர் கஷ்டங்களையும் தரித் திரத்தையும் அடையமாட்டார். இவர் நிலங்களை நாளடைவில் சேகரித் துக்கொண்டே வருவார். ஓர் அழகிய மாளிகைபோன்ற வீட்டைக் கட்டுவார்,

தெய்வ ஸ்தலங்களுக்குப் போவார். ஆறு முகங்களையுடைய முருகக் கடவுளின்பேரில் பக்தியும் அன்பும் உடையவர். சிவபெருமானுக்குத் திருத்தொண்டு பூஜை இவைகளைச் செய்வார்.

21. பந்துவு மதிக்க வாழ்வன் பத்தாண்டு முதலாம் யோகம்
அந்தவன் மரண மட்டும் அம்புலி போலே செல்வம்
தன்தனம் கொடுக்கல் வாங்கல் சதுஷ்பாதம் விருத்தி யென்றேம்
இந்திரன் போலே வாழ்வ னிடுக்கமென் றேரைக் காப்பன்.

21. ஜாதகர் பந்துக்கள் தன்னை மதிக்கும்படியான நிலைமையிலிருந்து வாழ்வார். இவருக்குப் பத்துவயது முதற்கொண்டு யோகமுண்டாகும். இந்த யோகம் இது முதற்கொண்டு இவருடைய மரணகாலம் வரையிலும் வளர்பிறைச் சந்திரனைப்போல வளர்ந்துகொண்டேபோகும். இவர் தன்னுடைய பணத்தைப் பிறருக்குக்கொடுத்து மறுபடியும் திருப்பி வாங்கிக் கொள்ளுவார். கால்நடைகள் இவருக்கு விருத்தியாகும் என்று சொல்லுகிறேம். இவர் இந்திரனுக்குச் சமமாக விருந்து வாழ்வார். கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கின்றேம் என்று சொல்லுகிறவர்களை இவர் காப்பாற்றுவார்.

22. மாதுரு குணத்தைச் சொல்வேன் மாநிறம் சமதே கத்தாள்
சூதிலாள் கோபம் கொஞ்சம் சொல்லது அதிக முண்டு
சாதிப்பாள் சிலது சேதி சகலர்க்கும் நல்லோ ளாவள்
பாதக மனமில் லாதாள் பண்போர்க்கு அன்ன மீவள்.

22. ஜாதகருடைய தாயாருடைய குணதிசயங்களைப் பற்றிச் சொல்லுகிறேன். இவள் மாநிறமுள்ளதும் சம அளவுள்ளதுமான தேகத்தையுடையவள். சூது கள்ளம் கபடம் இவைகள் இல்லாதவள். கொஞ்சம் கோபமுடையவள். அதிகமாகப் பேசுவாள். சில விஷயங்களைச் சொல்லி அவைகளை நிலை நாட்டுவாள். எல்லோருக்கும் நல்லவளாக விருப்பாள். கெடுதியான மனத்தையுடையவளல்லள். தகுந்தவர்களுக்குச் சாப்பாடு போடுவாள்.

23. இல்லமும் தென்பா லாகும் இவள்துணை ஆண்பால் ரண்டு
வல்லிமார் நால்வ ராகும் வரைகிறேம் பின்பால் சேதி
தல்லியின் முன்ஜன் மத்தைச் சாற்றுவோம் வேலங் காட்டில்
நல்லதோர் பேரூர் தன்னில் நாயகி செங்குந்த சேயாய் ;

23. ஜாதகரின் தாயார் வீடு தெற்குத்திக்கிலிருக்கும். இவளுடன் கூடப் பிறந்தவர்கள் ஆண்கள் இரண்டு பேரும் பெண்கள் நான்கு பேரும் ஆக அறுவர் ஆகும் என்று சொல்லுகிறேம். இவர்களுடைய விஷயங்களைப் பற்றிப் பின்னால் சொல்லுகிறேம். இவளுடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறேம். வேலங்காட்டில் ஒரு நல்ல பெரிய செங்குந்தர் என்ற கைக்கோளர் ஜாதியில் பெண்ணாகப் பிறந்து ;

24. பிறந்துமே காஞ்சி தன்னில் புருடன்பா லணுகி யேதான்
சிறந்திடும் சுதர்க ளுண்டாய்த் தீவினை யில்லா தாகி
மறலியின் நாடு சென்று மறையவன் வரையப் பட்டு
உறைந்தனள் இக்கு லத்தில் உத்தமி கேட்டி டாயே.

**24.** பிறந்து காஞ்சீபுரத்தில் புருஷனுடைய வீட்டிற்குச் சென்று அவனுடன் வாழ்ந்து நல்ல குழந்தைகளைப் பெற்றுப் பாவம் ஒன்றும் இல்லாமல் இறந்து எம பட்டணத்திற்குப் போய்ப் பிரமதேவனால் பிரம லிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் இந்தக் குலத்தில் வந்து பிறந்திருக்கின்றாள். பார்வதியம்மையே ! கேட்பீராக.

**25.** மறுஜன்மம் தில்லை தன்னில் வருவளாம் பிரம்ம சேயாய்த்
திருமக ளிச்சென் மத்தில் செய்தபுண் ணியங்க ளென்ன
வரன்மனம் போலே வாழ்ந்தும் வருவோரை ஆத ரித்தும்
குறையென்றோர்க் குதவி செய்தும் கோதையும் வாழ்ந்த தாலே ;

**25.** ஜாதகரின் தாயார் அடுத்த ஜன்மத்தில் தில்லை என்று சொல்லப்பட்ட சிதம்பர க்ஷேத்திரத்தில் பிராமணர் குலத்தில் வந்து பெண்ணாகப் பிறப்பாள். இவள் இந்த ஜன்மத்தில் செய்த புண்ணியங்கள் என்ன என்று கேட்கவே சொல்லுகின்றார். இவள் தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தபடியே நடந்துகொண்டு வாழ்ந்ததாலும், தன்னிடத்திற்கு வந்தவர்களைக் காப்பாற்றிக்கொண்டும், நாங்கள் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கின்றோம் என்று சொல்லிக் கொண்டவர்களுக்கும்; உபகாரஞ் செய்து கொண்டும் இவள் வாழ்ந்து வந்ததாலே ;

**26.** பிறப்பளா மென்று சொல்வோம் பேசுவீர் கரும காலம்
திருகிலா முப்பா னைந்தில் சேல்மாதம் தந்தை கண்டம்
வரும்ஜன்மம் காஞ்சி தன்னில் வருவனும் க்ஷத்திரி சேயாய்
நிதியது பெருக்க மாகி நேமியில் செட்டுச் செய்வன்.

**26.** இவள் பிராமணர் ஜாதியில் பிறப்பாள் என்று சொல்லுகிறோம். தாய்தந்தை இவர்களுடைய மரண காலத்தைச் சொல்லுவீர் என்று கேட்க, ஜாதகருக்கு முப்பத்தைந்தாவது வயதில் பங்குனி மாதத்தில் † தகப்பனார் இறந்து விடுவார். இவர் மறு ஜன்மத்தில் காஞ்சீபுரத்தில் க்ஷத்திரிய குலத்தில் ஆணாகப் பிறந்து அதிகச் செல்வமுடையவராகிப் பூமியில் வர்த்தகஞ் செய்வார்.

† **குறிப்பு.—தகப்பனார் மரண காலம் :**—ஜாதகருக்கு வயது ஷ 34-0-0 முதல் ஷ 35-0-0 முடியும் வரையிலும் குருதசையில் குரு புக்தி நடக்கின்றது. பிதுர்லக்கினம் மீனம். மீன லக்கினத்திற்குப் பராசரஹோரை ஜாதக சந்திரிகை இவைகளின் பிரகாரம் சனி சுக்கிரன் புதன் சூரியன் இவர்கள் மாரகாதிபதிகள் ஆகின்றார்கள். பிதுர்ஸ்தானாதிபத்தியம் பெற்ற குருவுக்கே தசை வந்து குரு நீசமாய் இருப்பதால் பிதாவை மாரகஞ் செய்ய இவருக்கு அமைப்பு இருக்கின்றது. இவர் வீடாகிய மீனத்தில் மாரகா திபதியும் அஷ்டமாதிபதியுமாகிய சுக்கிரனும் இருக்கின்றார். மேலும் மாரகாதிபதியாகிய சனியுடன் குரு கூடியிருப்பதுமன்றி மாரகாதிபதியாகிய புதனையும் குரு பார்க்கின்றார். ஆகையால் ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரம் பிதாவை மாரகஞ் செய்ய குருவுக்கு அமைப்பு உண்டாகின்றது.

27. அன்னைக்கு முப்பத் தெட்டில் ஐப்பசி மாதம் தன்னில்
துன்மையாய்க் காலன் றூடு செல்லுவா னென்று சொல்வோம்
மன்னனு மறுப தாண்டில் மார்கழி மாதம் தன்னில்
இன்னவ னுடலம் ஏகும் ஈச்வரி கேட்டி டாயே.

27. ஜாதகரின் தாயாருக்கு இவரது முப்பத்தெட்டாவது வயதில் ஐப்பசி மாதத்தில் *மரணம் நேரிட்டு இவள் எம பட்டணத்திற்குப்போய்ச் சேருவாள் என்று சொல்லுகிறோம். ஜாதகருக்குத் தனது அறுபதாவது வயதில் மார்கழி மாதத்தில் † மரணம் நேரிட்டு இவருடைய தேகம் அழிந்து போய் விடும். பார்வதியம்மையே! கேட்பீராக.

* குறிப்பு.—(1) தாயார் மரண விஷயம் :—ஜாதகருக்கு வயது ஷூ 37–0–0 முதல் ஷூ 38–0–0 முடியும் வரையில் குருதசையில் சனி புக்தி நடக்கின்றது. தாயாருடைய லக்கினம் துலாம். பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் குருசந்திரன் அங்காரகன் சூரியன் இவர்கள் மாரகாதிபதிகளாகின்றார்கள். குரு நீசமாகித் துலாத்திற்கு ஆறுக்குடையவராகி அஷ்டமாகிய ரிஷபத்தைப் பார்க்கின்றார். ஆகையால் தாயாரை மாரகஞ் செய்ய இவருக்கு அமைப்பு ஏற்படுகின்றது. சனி மாரகாதிபதியாகிய குருவுடன் சம்மந்தப்பட்டு மாதுர்ஸ்தானத்தைப் பார்க்கின்றார். மேலும் மாதுர்ஸ்தானத்திற்கு அஷ்டமாதிபதியாகிய சுக்கிரனையும் பார்க்கின்றார். ஆகையால் ஜாதக சந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரமும் துய்யகேரளம் எட்டாம்பாவம் 20-ஆவது பாடலைஅனுசரித்தும் மாதாவுக்கு மாரகஞ் செய்யச் சனிக்கு அமைப்பு இருக்கிறது. ஆகையால், குரு தசையில் சனி புக்தியில் மாதாவுக்கு மரணம் நேரிட அமைப்பு இருக்கின்றது.

(2) †ஜாதகர் மாரக விஷயம் :—ஜாதகருக்கு அறுபதாவது வயதில் மார்கழி மாதம் முடியும் வரையில் வயது ஷூ 59 மீ 8 நாள் 7 ஆகிறது. இவருக்குச் சனி தசையில் சுக்கிரபுத்தி வயது ஷூ 56–6–21 முதல் வயது ஷூ 59–8–21 வரையிலும் இருக்கிறது. கடகலக்கினத்திற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் சனி சுக்கிரன் புதன் இவர்கள் மாரகாதிபதிகள் ஆகின்றார்கள். சனி ஏழாவது பாவத்திற்கும் எட்டாவது பாவத்திற்கும் உடையவராகி ஆறுக்குடையவராகிய குருவுடன் கூடி மாரகஸ்தானமாகிய ஏழாவது வீட்டில் இருக்கின்றார். ஆகையால் துய்யகேரளம், எட்டாவது பாவம், 14-ஆவது 20-ஆவது பாடல்களின் பிரகாரமும் பராசரஹோரை ஜாதகசந்திரிகை ஆகிய இவைகளின் பிரகாரமும் மாரகஞ் செய்ய அமைப்பு உள்ளவராகவிருக்கின்றார். கடக லக்கினத்திற்குச் சுக்கிரன் பதினொன்றிற்கு உடையவராய் இருப்பதாலே இந்திரஜித்திற்கு மாரகஞ் செய்ததைப்போல மாரகஞ்செய்ய அதிக அதிகாரமுடையவராகவிருக்கின்றார். ஆகையால் சுக்கிரனுக்குத்தன் புக்தியில் மாரகஞ் செய்ய சூரியனைவிட அதிக அமைப்பு உண்டு.

28. பாலன்பின் ஜன்மம் சொல்வேன் பரங்குன்ற நகரிலே தான்
சீலமா மிக்குலத்தில் ஜனித்துமே அரசு செய்து
ஞாலங்க ளதிக முண்டாய் நாயகன் வாழ்வா னுகும்
ஆலத்தை யுண்டோன் தேவி அறைந்தஇம் மொழிகுன் றுது.

**28.** ஜாதகருடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறேன். இவர் திருப்பரங்குன்றம் என்ற நகரத்தில் நல்லொழுக்கமுள்ள இந்த ஜன்மத்திற் பிறந்த குலத்திலேயே ஆணாகப் பிறந்து அரசாட்சி செய்து நிலங்களும் பூமி களும் அதிகமாக உடையவராகி வாழ்பவராவார். ஆலகால விஷத்தை உண்டவராகிய பரமசிவனுடைய பாரியையாகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும்.

29. உதித்திடுங் காலம் தன்னில் ரோகிணி முதல்பா தத்தில்
மதிதசை ஆண்டு எட்டும் மாதமும் நவமே யாகும்
பதியது வேறு செய்தல் பாருகள் சேர்த்த லுண்டு
இதுமுதல் பாகம் சொன்னோம் ஈச்வரி கேட்டி டாயே.

**29.** ஜாதகர் பிறக்கும்போது ரோகிணி நட்சத்திரம் முதல் பாதத்தில் இதற்குரிய சந்திரமகா தசையில் இருப்பு எட்டு வருஷங்களும் ஒன்பது மாதங்களும் ஆகும். இந்தத் தசைக்காலத்தில் வேறு வீடு உண்டாகும். நிலங்கள் சேரும். இது வரையிலும் முதலாவது பாகத்தைச் சொன்னோம். பார்வதியம்மையே! கேட்பீராக.

# ஜாதகம் 86

1. சந்திரன் குருவும் தேளில் [1] சனிராகு கடகம் புக்கப்
புந்தியும் [2] புகிர்ரவி [3] சுங்கன் [4] புல்லினில் [5] சேயும் [6] கன்னிப்
பின்சிகி [7] மானா [8] தாகும் பேசுவோம் நண்டு [9] ஜன்மம்
இந்தவாறு கிரகம் நின்று லியம்புவீர் பலனைத் தானே.

| | | சூரியன் புதன் சுக்கிரன் | |
|---|---|---|---|
| | இராசி சக்கரம் | | லக்கனம் சனி ராகு |
| கேது | | | |
| | சந்திரன் குரு | | செவ்வாய் |

அநுஷம் 1-ஆம் பாதம். சனிதசை ௵ 14-10-0.

1. சந்திரனும் குருவும் விருச்சிகத்திலும், சனியும் ராகுவும் கடகத்திலும், புதனும் சூரியனும் சுக்கிரனும் ரிஷபத்திலும், அங்காரகன் கன்னியிலும், கேது மகரத்திலும், ஜன்ம லக்கினம் கடகமாகவும் இருந்து இவ்விதமாகக் கிரகங்கள் இருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர்.

குறிப்பு.—இந்த ராசிச் சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரகநிலை பொருத்தமுடையதாகும் :—மேஷத்தில் சூரியனும், கேதுவும், கடகத்தில் அங்காரகனும், சிம்மத்தில் சந்திரனும் புதனும், துலாத்தில் குருவும் சனியும் ராகுவும், மகரத்தில் சுக்கிரனும் ஆகும்.

2. காதலி கேட்கும் போது கௌசிகர் கூறு கின்றார்
மேதினிலா ண்பால் ஜன்மம் விளம்புவோ மில்லம் தானும்
ஓதுவேன் வடதென்வீதி உயர்மேற்கு வாடை யாகும்
போதக வானை கோஷ்டம் பொருந்திடும் தெற்கி லேதான்.

2. பார்வதியம்மையார் கேட்கும்போது கௌசிக மகரிஷியானவர் சொல்லுகின்றார். பூமியில் இந்த ஜாதகர் ஆண் குழந்தையாகப் பிறப்பார்.

---

[1] விருச்சிகம். [2] புதன். [3] சூரியன்.
[4] சுக்கிரன். [5] ரிஷபம். [6] அங்காரகன்.
[7] கேது. [8] மகரம். [9] கடகம்.

பிறந்த வீட்டைப்பற்றிச் சொல்லுகிறேம். வடக்குத் தெற்கு வீதியில் பிறந்த மேற்கு வாடையாகும் என்று சொல்லுகிறேன். இளமையான மதயானை முகத்தையுடைய விநாயகக் கடவுளின் கோயில் தெற்குத் திக்கிலே இருக்கும்.

3. அருகினில் மேற்கில் சந்தி அறுபட்ட கன்னி வாசம்
நரிவாகன த்தாள் மீனம் நாட்டின சிறுவூர் தன்னில்
வருவனுமிந்தப் பாலன் வர்க்கமோ ரெட்டியாகும்
உரைக்கிறேம் யோகச் சேதி உத்தமி கேட்டி டாயே.

3. அருகில் மேற்குத்திக்கில் பகவதியம்மன் கோயில் இருக்கும். காளியம்மன் கோவில் வடகிழக்குத் திக்கில் இருக்கும். இந்த அடையாளங்கள் உள்ள ஒரு சிறிய கிராமத்தில் இந்தக் குழந்தையாகிய ஜாதகர் வந்து பிறப்பார். இவர் ரெட்டியாருடைய குலத்தில் பிறப்பார். இவருடைய யோக விஷயங்களைப் பற்றிச் சொல்லுகிறேம் உத்தமியாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

4. வித்தையு முடையா னுகும் வீண்வார்த்தை வம்பில் செல்லான்
புத்தியில் பெரியோர் நேயன் புகலுவே னற்ப கோபி
சுற்றத்தார் சேர்கை யுள்ளான் சுகமிகு குடும்பி யாவன்
உற்றநற் றுணைவரோடு உயர்ச்சி யாய் வாழ்வா னுமே.

4. ஜாதகருடைய தகப்பனர் இரண்டு வித வித்தைகளை உடையவராவர். அனுவசியமான வார்த்தைகளைச் சொல்லமாட்டார். வலுசண்டைக்குப் போகமாட்டார். புத்திசாலிகளாயுள்ள பெரிய மனுஷர்களுடைய சினேகத்தை யுடையவர். கொஞ்சங் கோபத்தையுடையவர் என்று சொல்லுகிறேன். பந்துக்களுடன் கூடியிருப்பார். அதிக சுகமுள்ள குடும்பஸதராக இருப்பார். நல்ல சகோதரர்களுடன் கூடி மேன்மையாயிருந்து வாழ்பவராவார்.

5. சொல்லிடும் வசனம் மேலாய்ச் சுத்தவான் சொகுசா யுண்பான்
வெல்லுவா னெதிரி தன்னை வீண்வழக் கோரம் சொல்லான்
அல்லல்கள் ஆதியில்தான் அடைவானும் அல்ப உண்டி
எல்லைக ளதிக மில்லா னிடுக்கமாய் வாழ்வா னுமே.

5. தகப்பனர் சொல்லுகின்ற வார்த்தைகள் மேன்மையானவைகளாகவிருக்கும். சுத்தமாகவுமிருக்கும். இவரும் சுத்தமாகவிருப்பார். நேர்த்தியானதும் சுகமாகனதுமான சாப்பாட்டைச் சாப்பிடுவார். இவர் தன்னுடைய சத்துருக்களை ஜயித்துவிடுவார். வீண் சண்டையில் ஒரு பட்சமாகப் பேசமாட்டார். வயதின் முதல் பாகத்தில் கொஞ்சங் கஷ்டங்களை அனுபவிப்பார். நிலங்கள் அதிகமாகவில்லாதவர். கஷ்டத்துடனே வாழ்பவராவார்.

6. கைமுதல் பின்னு ளுள்ளான் கனத்திடும் பணையோர் விருத்தி
பொய்யது வழுத்தா நெஞ்சம் பரவிய கீர்த்தி எற்பன்
தையலால் யோக முண்டு தன்துணை மூத்தோ னுலும்
செய்காலி தன தானியங்கள் சேர்க்கையா மிவனுக் கேதான்.

6. அதற்குப் பிறகு தகப்பனுர் தன்னுடைய கையில் சொத்துடைய வராவார். நிலங்களும் ஏர்களும் விருத்தியாகி அதிகப்படும். இவர் பொய் சொல்லாத மனத்தையுடையவர். சொல்லிக்கொள்ளக்கூடிய பெரிய புகழை அடைவார். ஸ்திரீகளால் பெரும் யோகத்தை அடைவார். இவருடைய சகோ தரர்களில் இவருக்கு மூத்தவராக விருப்பவரால் செய்கால் நிலங்களும் தனமும் தானியங்களும் இவருக்கு வந்து சேரும்.

7. மனதினில் கபடு வையான் மடையரை வசியம் கொள்வன்
இனத்தோர்கள் மதிக்க வாழ்வ னிடரென்றோர் தம்மைக்
[காப்பன்
கனத்திருப் பணியும் செய்வன் கடவுளர் பத்தி பூண்பன்
வினையிலா கிராமச் செட்டு வித்தகன் சிலநாள் செய்வன்.

7. ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய மனத்தில் கள்ளம் வஞ்சனை கபடம் இவைகள் இல்லாதவராக இருப்பார். புத்தியில்லாதவர்களைத் தன் பக்கமாக வசப்படுத்திக்கொள்ளுவார். பந்துக்கள் தன்னை மதிக்கும்படியான நிலைமையிலிருந்து வாழ்ந்து வருவார். கஷ்டங்களை அனுபவிக்கின்ருேம் என்று சொல்லுகிறவர்களைக் காப்பாற்றுவார். மேன்மையான பெரிய கோயில் வேலைகளைச் செய்வார். கடவுள்களின்பேரில் பக்தியும் அன்பும் உடையவர். இவர் பாபமில்லாத கிராம வியாபரத்தைக் கொஞ்ச காலஞ் செய்வார்.

8. தந்தையின் முன்சோதர சேயில்லாமல் தமையனுல் பூமி
[கொள்வன்
வந்தவர்க் கன்ன மீவன் மங்கையர் மோகம் கொள்வன்
சுந்தரன் கட்டில் மெத்தை சுகம்பெற அனுப விப்பன்
வந்திடும் துணைஆண் நான்கும் மங்கையும் மூவர் தீர்க்கம்.

8. தகப்பனுரின் தமையனுருக்குப் பிள்ளை இல்லாத காரணத்தினுல் ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய மூத்த சகோதரனுடைய நிலங்களை அடைவார். இவர் தன்னிடம் வந்து சேர்ந்தவர்களுக்குச் சாப்பாடு போடுவார். ஸ்திரீகளின்மேல் காம ஆசையை யுடையவராவார். கட்டில் மெத்தை இவை களின்மேல் சயனித்துத் தூங்குகின்ற சயன சுகத்தை அனுபவிப்பார். இவருக்கு நான்கு ஆண் சகோதரங்களும் மூன்று பெண் சகோதரங்களும் நீண்ட ஆயுளை உடையவர்களாக இருப்பார்கள்.

9. துணைவரில் ஒருவன் தன்பால் சேர்ந்துமே ஜீவிப்பா னுகும்
பிணையிலா மூவர் வேருய்ப் புக்குவார் வெளியூர் தன்னில்
சினமிலா ஒன்ருய் வாழ்வர் சேதியை யிரண்டில் சொல்வேன்
அணையஇக் குணத்தா னுக்கு அருளுவா னிந்தப் பாலன்.

9. தகப்பனுரின் சகோதரர்களில் ஒருவர் இவருடன்கூட இருந்து ஜீவிப்பார். இவருடன்கூட இல்லாத மூன்று பேர்களும் வெளியூருக்குப்போய் அவ்விடத்தில் வேறு குடும்பமாகவிருந்து வருவார்கள். இவர்கள் கோப மில்லாமல் ஒன்ருகவிருந்து வாழ்வார்கள். இவர்களுடைய விஷயங்களைப் பற்றிப் பின்னுல் இரண்டாவதுபாகத்தில் சொல்லுகிறேன். இங்குச் சொல்லப் பட்ட குணங்களையுடைய தகப்பனுருக்கு இந்தக் குழந்தை பிறப்பார்.

10. மால்நிறம் சமதே கத்தன் மனமது கபடு கொஞ்சம்
சீலவான் கல்வி யுள்ளான் ஜனசகா யங்கள் செய்வன்
பால்பாக்கிய முடையா னாகும் பகைவரை வெல்வா னாகும்
மால்பத்தி கொஞ்ச முள்ளான் மானிலம் விருத்தி செய்வன்.

10. ஜாதகர் மகாவிஷ்ணுவினுடைய நீலமேக வர்ணம் போன்ற ஒரு வித நிறத்தையுடையவர். சம அளவுள்ள தேகத்தையுடையவர். இவருடைய மனமானது கொஞ்சம் கள்ளம் வஞ்சனை கபடம் இவைகளையுடையதாகும். இவர் நல்லொழுக்க முடையவர். வாசித்தவர். ஜனங்களுக்கு உபகாரத் தைச் செய்வார். பசு எருமை முதலியவைகளின் பால் பாக்கிய முடையவ ராகும். இவர் தன்னுடைய சத்துருக்களை ஜயித்துவிடுவார். மகாவிஷ்ணுவின் மேல் கொஞ்சம் பக்தியுடையவராவர். பெரிய நிலங்களைப் பயிரிட்டு விருத்தி யாக்குவார்.

11. நல்லவன் நல்ல வர்க்கு லண்டர்க்கு மிண்டனுவன்
புல்லர்க்கு விரோத மாவன் புத்திமான் கணக்கி னாகி
சொல்லதைக் காப்பானாகும் துருசான கோப முள்ளான்
மல்லுரை தனக்கு அஞ்சான் மன்னர்கள் பேட்டி கொள்வன்.

11. ஜாதகர் நல்லவர்களுக்கு நல்லவராக நடந்து கொள்ளுவார். முரடர்களுக்குத் திண்ணியராக இருப்பார். கீழ்மக்களுக்கு விரோதியாக இருப்பார். புத்தியுள்ளவர். கணக்கில் கெட்டிக்காரர். நுட்பமான அறிவுடையவர். தான் சொல்லுகின்ற வார்த்தைகளைக் காப்பாற்றுபவ ராவார். சீக்கிரத்தில் கோபத்தை அடையக்கூடியவர். சண்டை போடும் படியான பேச்சுவார்த்தைகளைச் சொல்ல பயப்படமாட்டார். அரசர்களுடைய வரவையுங் காணுதலையும் உடையவர் ஆவார்.

12. பணையொடு யேர்பெ ருக்கம் பாக்கியம் பசுநாற் காலி
இணைசுகம் சயன மெத்தை யிகமுறு பணிதி கூடும்
பணைதுயில் புதைய லுண்டாம் பெரிதான குடும்பி யாவன்
துணைவரை ஆத ரிப்பன் தொல்புவி செட்டுச் செய்வன்.

12. ஜாதகருக்குப் பயிரிடும் நிலங்களும் ஏர்களும் அதிகப்படும். நாற்கால் ஜந்துக்களின் பாக்கியத்தையுடையவர். மெத்தையின்பேரில் சயனித் துத் தூங்கும் சயன சுகத்தையுடையவர். வலுவான ஆபரணங்கள் வந்து சேரும். ஒரு மரக் கட்டிலின் மேல் நித்திரை செய்வார். இவருக்குப் புதையல் கிடைக்கும். பெரிய குடும்பஸ்தராக இருப்பார். தன்னுடைய சகோ தரர்களைக் காப்பாற்றுவார். இந்தப் பழமையான பூமியில் வியாபாரஞ் செய் வார்.

13. தன்துணை ஆண்பா லொன்று தையலர் மூன்று மாகும்
சொன்னது நான்கும் தீர்க்கம் சோர்வுறும் மூன்று என்றேம்
அன்னவர் மூத்தோ ராக அறைகிறோ மாண்பால் சேதி
நன்னய வார்த்தை சொல்வன் நாயக னிருநி றத்தன்.

13. ஜாதகருக்குக் கூடப்பிறந்த ஆண் ஒன்றும் பெண்கள் மூன்று பேர்களும் ஆக இந்த நான்கு பேர்களும் நீண்ட ஆயுளை உடையவர் களாகவிருப்பார்கள். மூன்று சகோதரங்கள் இறந்துவிடுவார்கள். சொல்லப்பட்ட நான்கு பேர்களும் மூத்தவர்களாவார்கள். இவர்களில் ஆண் சகோதரரின் விஷயங்களைப் பற்றிச் சொல்லுகிறேன். இந்தத் தமயன் நல்லவைகளுமான நயமானவைகளுமான வார்த்தைகளைச் சொல்லுவார். இவர் இரண்டு நிறங்கள் கலந்துள்ள நிறமாகிய மா நிறமுள்ள தேகத்தையுடையவராவார்.

14. அடக்கமும் பெருமை பூண்பன் அன்புள மனத்தா னாகும்
துடுக்கெனக் கூறு னாகும் சொல்லதைக் காப்பா னாகும்
இடக்குகள் ஒருவர்க் கெண்ணனிளமன முடைய னாகும்
நடக்கையும் நல்ல தாகும் நாதனுர் பத்தி பூண்பன்.

14. ஜாதகருடைய தமயனுர் அடக்கமும் கீர்த்தியும் உடையவர். பிரியமான மனத்தையுடையவர். கடினமாகவும் விரைவாகவும் குறும்பாகவும் பேசமாட்டார். தான் சொன்ன வார்த்தையைக் காப்பாற்றுபவராவார். பிறருக்குக் கெடுதிகளைச் செய்ய நினைக்கமாட்டார். இளகிய மனத்தையுடையவர். நல்ல நடவடிக்கையும் ஒழுக்கமும் உடையவர். கடவுளின் மேல் பக்தியும் அன்பும் உடையவர்.

15. மனைவியு மொன்றே யாகும் மாதுரு வர்க்கம் கீழ்ப்பால்
கனமுள சுதராண் ஒன்று கன்னிகை யிரண்டு மாகும்
துணைவன்செய் தவத்தி னாலே சந்ததி தோன்று மென்றோம்
வினையிலா வயது தீர்க்கம் வித்தக னுடனே வாழ்வன்.

15. ஜாதகருடைய தமயனுருக்கு மனைவி ஒன்றேயாகும். இவள் கிழக்குத் திக்கிலிருந்து தாயாருடைய வம்சத்திலிருந்து வந்து நேரிடுவாள். இவருக்கு மேன்மையான ஓர் ஆண் குழந்தையும், இரண்டு பெண் குழந்தைகளும் உண்டாகும். இவருடைய சகோதரர் செய்கின்ற புண்ணியத்தினாலே இவருக்குக் குழந்தைகள் பிறக்கும் என்று சொல்லுகிறோம். இவருக்குப் பாவமில்லாமல் நீண்ட ஆயுள் உண்டு. இவர் ஜாதகருடன் கூட ஒன்றுயிருந்து வாழ்வார்.

16. தானியச் செட்டுச் செய்வன் தரணியில் விருத்தி யுள்ளான்
ஆனவர் நேசம் கொள்வன் ஆசாரன் கிருஷி செய்வன்
கனதன முடையவ னவன் கடவுளின் பக்தி பூண்பன்
சினமதை வெளிக்காட் டாதான் சிறப்புள குடும்பி யாவன்.

16. ஜாதகருடைய தமயனுர் தானியங்களில் வியாபாரஞ் செய்வார். நிலங்களைப் பயிரிட்டு விருத்தியாக்குவார். அரசாளுகின்றவர்களுடைய சினேகிதத்தை அடைவார். நல்ல ஒழுக்கங்களுடையவர். விவசாய வேலையைச் செய்வார். அதிக தனமுடையவர். கடவுளின் மேல் அன்பும் ஆசையும் உடையவர். கோபத்தைப் பிறர் அறியும்படியாக வெளியே காட்டிக் கொள்ளமாட்டார். மேன்மையான குடும்பஸ்தராவார்.

17. மாதுரு குணத்தைச் சொல்வேன் மாஞ்சிவப் புடைய ளாகும்
நீதிவாள் நடக்கை நன்மை நிமலியும் யோக சாலி
மாதவர்க் கன்ன மீவள் வரன்மனம் விரோதம் செய்யாள்
சூதிலாள் வறுமை காணுள் துணையாண்பா லொன்றே யாகும்.

17. ஜாதகரின் தாயாருடைய குணதிசயங்களைப் பற்றிச் சொல்லுகிறேன். மாந்துளிரின் நிறத்தைப் போன்ற ஒருவிதமான சிகப்பு நிறத்தையுடைய வளாவாள். நெறிதவருத நல்ல நெறியையும் உடையவள். நல்லொழுக் கத்தை உடையவள். இவள் யோகத்தை யுடையவள். முனிவர்களுக்குச் சாப்பாடு போடுவாள். தன்னுடைய புருஷனுடைய மனத்திற்கு விரோதமாக நடந்து கொள்ளமாட்டாள். கபடம் வஞ்சனை கள்ளம் இவைகள் இல்லாதவ ளாவாள். கஷ்டத்தையும் தரித்திரத்தையும் அனுபவிக்கமாட்டாள். இவ ளுடன் கூடப்பிறந்தவர் ஒரே ஒரு ஆண் சகோதரராகும்.

18. கன்னிகை மூன்று என்றேம் கனத்ததோர் குடும்பி யாவாள்
மன்னுமாசார முள்ளாள் மத்தியில் தந்தம் நீங்கும்
அன்னமு மன்பா யீவள் அணுகிடும் பித்த வாயு
தன்தன மிச்சை யுள்ளாள் சான்றோர்கள் பக்தி பூண்பள்.

18. பெண் சகோதரங்கள் மூன்று பேர் என்று சொல்லு கிரேம். இவள் பெரிய குடும்பஸ்தையாவாள். நல்ல ஆச்சாரங்களையும் நெறியையும் உடையவள். இவளுக்கு நடு வயதில் பற்கள் விழுந்துவிடும். இவள் பிறருக்குச் சாப்பாட்டை ஆசையுடன் போடுவாள். இவளுக்குப் பித்த வாயுநோய் உண்டு. தன்னுடைய பணத்தில் மிக்க ஆசையுடையவள். நல்லி வர்கள் அறிஞர்கள் இவர்களுடைய சிநேகத்தை யுடையவள். இவர் களிடத்தில் தானும் அன்பாகவிருப்பாள்.

19. அன்னைமுன் ஜன்மம் சொல்வேன் ஆகாச தலத்துக் கீழ்ப்பால்
சின்னவூர் வைசியச் சேயாய் ஜனித்துமே வறுமை யின்றிப்
பொன்பணி அதிக முண்டாய்ப் புத்திரன் வரனு முண்டாய்த்
தன்பந்து மெச்ச வாழ்ந்து சான்றோர்கள் பத்தி கொண்டு ;

19. ஜாதகரின் தாயாருடைய பூர்வ ஜென்மத்தைப் பற்றிச் சொல்லுகிறேன். ஆகாச ஸ்தலமாகிய சிதம்பரத்திற்குக் கிழக்குத் திக்கி லுள்ள ஒரு சிறிய கிராமத்தில் வைசியர் குலத்தில் பெண்ணகைப் பிறந்து கஷ்டங்களும் தரித்திரமும் இல்லாமலும், தனமும் பொனுபரணங் களும் அதிகமாக வுடையவளாகியும், புத்திரர்களும் புருஷனும் உடையவ ளாகியும், தன்னுடைய பந்துக்கள் இவளை மதிக்கும்படியான தன்மையி லிருந்தும் வாழ்ந்து, நல்லவர்கள் அறிஞர்கள் இவர்களுடைய சினேகிதத்தை யுடையவளாயும், இவர்களிடத்தில் தானும் அன்புள்ளவ ளாயும் இருந்து கொண்டு ;

20. மங்கையும் வாழுந் நாளில் மரவுரி தரித்த ஞானி
துங்கமா மனத்தன் மாலை தோகைபால் அன்னம் கேட்க
மங்கையு மன்ன மீந்து வளவினில் சரகை தந்தாள்
அங்கவர் சயனம் கொள்ள அயலவன் இவர்பால் சென்று ;

20. இவள் வாழ்ந்து கொண்டு இருக்கின்ற காலத்தில் மரவுரி ஆடையாக அணிந்து கொண்டிருந்த ஒரு முனிவர் நல்ல பரிசுத்தமானதும் மேன்மையானதுமான மனத்தையுடையவராகி ஒருநாள் மாலையில் இவளிடஞ் சென்று சாப்பாட்டைக் கொடு என்று கேட்க, இவள் அவருக்குச் சாப்பாடு கொடுத்து வீட்டிறைப் பின் கீழே (வீட்டு இறவாணத்தின் கீழே) தங்கி இருக்க இடம் கொடுத்தாள். அதன் மேல் அவர் அவ்விடத்தில் படுத்துக் கொண்டு இருக்கும்போது அண்டை வீட்டுக்காரன் ஒருவன் இவரிடஞ் சென்று ;

21. தர்க்கங்கள் பேசும் போது சான்றோர்க்குக் கோப மூண்டாய்
துக்கமாம் வார்த்தை சொல்லத் தோகையும் அதிதி பேரில்
மிக்கவே கோபங் கொண்டாள் வித்தகர் வேறிடஞ் சென்று
நக்கன்தன் னடியார் பேரில் நாயகி கோபங் கொண்டாய் ;

21. நியாய வாதங்களைப் பேசிக் கொண்டிருக்கும்போது அந்த அறிஞராகிய ஞானிக்குக் கோபமுண்டாகி வருத்தமான வார்த்தைகளைச் சொல்லவே இவள் அந்த ஞானியின் மேல் அதிகக் கோபத்தை அடைந்தாள். அதன் மேல் அந்த அறிஞர் வேறே ஒருவிடத்திற்குப் போய்ச் சிவனுடைய அடியார் மேல், அம்மா! நீ கோபித்துக் கொண்டாய் ;

22. மறுஜன்மம் மகவாய்த் தோன்றி மத்தியில் தந்தம் தாழ்ந்து
உறைகுவா யென்று சொல்லி ஓதினர் அதிதி தானும்
விரைவினில் அந்தத் தோஷம் மேவிற்று இவளுக் கேதான்
திருமகள் வேறு காணாள் தீங்கான காலன் பக்கல் ;

22. உன்னுடைய மறு ஜென்மத்தில் நீ பெண்ணாகப் பிறந்து உன்னுடைய மத்திய வயதில் பற்கள் விழுந்து வாழக்கடவாய் என்றும் அந்த ஞானி சொல்லிச் சாபித்தார். அந்தச் சாபமானது இவளை உடனே வந்து அணுகிற்று. இவளுக்கு வேறே எந்த விதமான தோஷங்களும் கிடையா. இவள் பிறகு இறந்து கெடுதியான எம பட்டணத்திற்கு எமனிடம் ;

23. சென்றுமே பிரமன் லக்கம் தேவியா யுதித்தா ளென்றோம்
முன்ஜன்மம் அதிதி சொன்ன மொழியது யிச்சென் மத்தில்
தந்தங்கள் மத்தி யத்தில் தாழ்த்திடு மிவளுக் கேதான்
பிந்தியும் வேறு குற்றம் புகலொணா தென்று செப்பே.

23. போய்ப் பிறகு பிரம தேவனால் பிரம லிபியுடன் எழுதப் பட்டுப் பெண்ணாக இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றாள். இவளுடைய முன் ஜன்மத்தில் அந்த ஞானியாகிய பரதேசி கொடுத்த சாபத்தின் பயனாக இந்த ஜன்மத்தில் இவளுடைய நடுவயதில் பற்கள் விழுந்துவிடும். மறுபடியும் பின்னால் வேறே கெடுதிகள் நேரிடா என்று சொல்லுகிறோம்.

24. மறு ஜன்மம் வாயு தன்னில் மாதுவும் சத்திரிய சேயாய்
உறைவளாம் சுகமுண்டாகி உயர்வான குடும்பி யாவள்
திருமகன் தந்தை பூர்வம் செப்புவோ மயிலம் தெற்கில்
வரும்கங்கை குலமே தோன்றி மானில மதிசு முண்டாய் ;

24. ஜாதகருடைய தாயார் தன்னுடைய மறு ஜன்மத்தில் வாயு ஸ்தலமாகிய காளஹஸ்தி க்ஷேத்திரத்தில் சத்திரிய குலத்தில் இவள் பெண்ணாகப் பிறந்து சுகமாக வாழ்வாள். மேன்மையான குடும்பஸ்தையாவாள். ஜாதகருடைய தகப்பனாரின் முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறோம். இவர் மைலம் என்ற ஸ்தலதிற்குத் தெற்கில் ஒரு வேளாளர் குலத்தில் ஆண் குழந்தையாகப் பிறந்து பெரிய நிலங்களை அதிகமாக வடைந்து.

25. கிராமாதி காரம் செய்து கெண்ணிய குடும்பி யாகி
அறுமுகன் பத்தி கொண்டு அறமதி லிச்சை வைத்து
மறையவன் தமக்குக் குற்றம் மைந்தனும் செய்தா னென்றோம்
உறைகுவார் மறையோன் தாமும் உத்தம னென்றி ருந்தேன்.

25. கிராமத்தில் அதிகாரமுள்ள உத்தியோகஸ்தனின் தொழிலைஅடைந்து கௌரவமான குடும்பஸ்தராக விருந்து ஆறுமுகங்களையுடைய முருகக் கடவுளின் மேல் பக்தியும் அன்பும் உடையவராகி தருமத்தின்மேல் ஆசையையுடையவராயிருந்தும், ஒரு பிராமணருக்குக் கெடுதியை இவர் செய்துவிட்டார் என்று சொல்லுகிறோம். இந்தப்பிராமணர் சொல்லுகின்றார். " நீ சற்குணமுள்ள ஒரு நல்ல பெரியவர் என்று எண்ணி இருந்தேன்.

26. வினையது எனக்குச் செய்தாய் விலகிடு மரசு தானும்
கனமுள பின்ஜன்மத்தில் கிராமாதி காரம் செய்து
பினையாகு மத்தி யத்தில் பிறந்தநாள் வறுமை யுண்டாம்
தனையனும் வாழ்வா யென்று சாற்றினர் மறையோர் தாமும்.

26. நீ எனக்கு ஒரு கெடுதியைச் செய்து விட்டாய். நீ அரசு செய் கின்ற இராஜாங்க வேலை உன்னை விட்டு நீங்கிவிடக் கடவது, மேலும் உன்னுடைய மறு ஜன்மத்தில் நீ அதிகாரம் உள்ள ஒரு கிராம உத்தி யோகஸ்தருடைய வேலையைச் செய்து அது நடுவயதில் உன்னை விட்டு விலகி விடக் கடவது, பிறந்த காலம் முதற்கொண்டு நீ கஷ்டத்துடனும் தரித்திரத் துடனும் வாழக் கடவாய்" என்று அந்தப் பிராமணர் சொல்லிச் சாபத்தைக் கொடுத்தார்.

27. மறையவன் மொழிபோல் தானும் மத்தியில் அரசு நீங்கி
உறைந்தனன் காலன் பக்கல் மலரயன் வரையப் பட்டுத்
தரையினில் ரெட்டி வமிசம் ஜனித்தவ னிவனே யென்றோம்
வறுமைகள் ஆதி யில்தான் வந்திடு மிவனுக் கேதான்.

27. அந்தப் பிராமணருடைய சாபத்தைப் போலவே நடுவயதில் அரசு செய்யும்படியான கிராம உத்தியோகஸ்தருடைய வேலை விலகிப் பின் எமனிடம் போய்ப் பிறகு பிரமதேவனால் பிரமலிபியுடன்

எழுதப்பட்டுப் பூமியில் இந்த ஜன்மத்தில் ரெட்டியாருடைய குலத்தில் இவர் வந்து பிறந்திருக்கின்றார் என்று சொல்லுகின்றோம். இவருக்கு இளம் பிராயத்தில் கஷ்டங்களும் தரித்திரமும் வந்து சம்பவிக்கும்.

28. அதிகாரம் சில நாள் செய்வன் அந்தணர் தம்மால் நீங்கும்
பதிபூமி காலி யென்றும் படைப்பனு முன்னோ னாலே
அதிபன்தன் மரண மட்டும் வறுமை களடையா னாகும்
சதியான யிருபது னலில் சுறுமாதம் கண்ட மெய்தும்.

28. ஜாதகரின் தகப்பனார் சில காலம் கிராமாதிகார வேலையைச் செய்வார். இந்த வேலை பிராமணருடைய சாபத்தாலே பிராமணராலேயே இவரை விட்டு விலகிவிடும். இவர் தன்னுடைய மூத்த சகோதரனால் வீடு நிலங்கள் கால் நடைகள் ஆகிய இவைகளை எப்போதும் அடைவார். இவருடைய மரண கால பரியந்தம் கஷ்டங்களையும் தரித்திரத்தையும் அடைய மாட்டார். கெடுதியை விளைவிக்கக்கூடிய ஜாதகருடைய இருபத்து நான்காவது * வயதில் தை மாதத்தில் இவர் இறந்துவிடுவார்.

* குறிப்பு.—பிதுர் மாரக விஷயம்—ஜாதகருக்கு வயது ஷ் 23-0-0 முதல் ஷ் 24-0-0 முடியும் வரையிலும் புததசையில் சந்திரன் புக்தி அங்காரக புக்தி இவைகள் நடக்கின்றன. ஆனால் தை மாதத்தில் அங்காரக புக்தி மாத்திரம் நடக்கின்றது. பிதுர் லக்கினம் மீனம். மீனத்திற்குப் பராசர ஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் புதன் சனி சூரியன் சுக்கிரன் இவர்கள் மாரகராகின்றார்கள். புதன் மீனத்திற்கு ஏழுக்குடையவராதலால் மாரகாதிபத்திபம் பெற்று மாரகஸ்தானமாகிய மூன்றில் மாரகாதிபதிகளாகிய சூரியன் சுக்கிரன் இவர்களுடன் கூடி மேலும் அஷ்டமாதிபதியாகிய சுக்கிரனுடனும் கூடி லக்கினாதிபதியாகிய குருவையும் பார்க்கின்றார். ஆகையால் பராசரஹோரை ஜாதகசந்திரிகை 66–23 ஆவது சுலோகங்களின் பிரகாரமும் துய்யகேரளம் எட்டாம்பாவம் 20ஆவது பாடல்பிரகாரமும் பிதுரை மாரகஞ் செய்யப் புதனுக்கு அதிகாரம் ஏற்படுகிறது. அங்காரகன் மாரகஸ்தானமாகிய இரண்டிற்குடையவராய் மாரகஸ்தானமாகிய ஏழாவதுபாவத்திலிருந்து கொண்டு லக்கினத்தைப் பார்க்கின்றார். ஆகையால் அங்காரகனுக்குத் தன்னுடைய புக்தியில் பிதாவை மாரகஞ்செய்ய அமைப்பு இருக்கின்றது. (பராசரஹோரையிலும் ஜாதகசந்திரிகையிலும் அங்காரகன் கொல்ல மாட்டார் என்று சொல்லி இருக்கும் விஷயத்தைப்பற்றி நாம் முன்னமே 82 ஆவது ஜாதகத்தில் 24 ஆவது பாடலின் கீழ் சொல்லியுள்ளதை இங்கும் வாசிக்கவும்.)

29. மறுஜன்மம் அரங்கம் தன்னில் மறைக்குல முதித்து இன்னோன்
திருமாலின் பூஜை செய்து தேவனுய்ச் செல்வா னாகும்
பராசரும் கேட்க லுற்றார் பாலக னிச்சென் மத்தில்
உறைந்தபுண்ணியங்க ளென்ன உரைப்பீர்கள் முனியே நீர்தாம்.

29. ஜாதகருடைய தகப்பனார் பின் ஜன்மத்தில் அரங்கம் என்ற ஸ்ரீரங்கத்தில் பிராமணர் குலத்தில் ஆணாகப் பிறந்து மகாவிஷ்ணுவைப்

பூஜை செய்து தேவனாய்ப் போய்விடுவார், இப்படிச் சொல்லவே பராசர முனிவர் கேட்கின்றார். இவர் இந்த ஜன்மத்தில் செய்தபுண்ணியங்கள் என்ன ? அவைகளை, முனிவரே ! நீரே சொல்லுவீர்.

30. திருப்பணி செய்வ தாலும் தேவதா பக்தி கொண்டும்
வருவோர்க்கு அன்ன மீந்தும் மனமது தளர்ச்சியாயும்
குறையோரை ஆதரித்து குவலய நல்லோனாயும்
வருவதால் மறு பிறப்பு மறைக் குல முதிப்பா னாகும்.

30. ஜாதகருடைய தப்பனார் கோயில் பூஜைகளையும் வேலைகளையும் செய்ததாலும், தெய்வத்தின் மேல் அன்பும் ஆசையும் உடையவராகித் தன்னிடம் வருகின்றவர்களுக்குச் சாப்பாடு போட்டும் இளகிய மனமுடையவராகிக் கஷ்டப்பட்டுக் கொண்டிருப்பவரைக் காப்பாற்றியும், பூமியில் நல்லவராக விருந்து வந்ததாலும் மறு ஜன்மத்தில் இவர் பிராமணர் குலத்திற் போய்ப் பிறப்பவராவார்.

31. ஜாதகன் மணத்தின் காலம் சாற்று வோம் பதினே ழாண்டில்
காதலி வடகீழ் தன்னில் கலப்பளா மென்று சொல்வோம்
ஓதுவே னவள்குணத்தை உணச்சலாம் சிவந்த மேனி
தீதுகள் ஒருவர்க் கெண்ணாள் தேவதா பத்தி பூண்பள்.

31. ஜாதகருடைய விவாக காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்குப் பதினேழாவது * வயதில் மனைவி வடகிழக்குத் திக்கிலிருந்து வந்து சம்பவிப்பாள் என்று சொல்லுகின்றோம். இவளுடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். உடைந்த மெல்லிய தேகத்தையுடையவள். சிவப்பு நிறமுடைய தேகத்தையுடையவள், கெடுதிகள் முதலியவைகளை யாருக்கும்நினைக்கமாட்டாள். தெய்வத்தின்மேல் அன்பும் ஆசையும் உடையவள்.

* குறிப்பு.—விவாக கால விஷயம்—ஜாதகருக்கு வயது ஷை 16–0–0 முதல் ஷை 17–0–0 முடியும் வரையிலும் புத தசையில் புத புக்தி நடக்கின்றது. விவாக சம்பந்தமான அம்சங்கள் ஏழாவது பாவம், இரண்டாவது பாவமு மாகும். இந்தப் பாவாதி பதிகள் சுக்கிரன் ஆகிய இவைகளும் ஆகும். இங்குப் புதன் இரண்டிற்குடைய சூரியனுடனும் களத்திர காரகராகிய சுக்கிரனுடனும் போகஸ்தானமாகிய நான்காவது வீட்டிற்குடைய சுக்கிரனுடனும் கூடி போககாரக னாகிய ராகுவால் பார்க்கப் பட்டிருப்பதால் ஜாதகருக்கு விவாகஞ் செய்துவைக்க புதனுக்கு அமைப்பு நேரிடுகின்றது.

32. வருவோரை ஆத ரிப்பள் மனமது கபடு கொஞ்சம்
திருகான புத்தி யில்லாள் தேவியும் யோக சாலி
பெரும்புத்தி அடக்க முள்ளாள் பால்பாக்கிய மதிக முண்டு
உறைந்திடும் நாபி சூடு உரைக்கிறோம் புத்திர பாவம்,

32. ஜாதகருடைய மனைவி தன்னிடத்திற்கு வருகின்றவர்களைக் காப்பாற்றுவாள். தன்னுடைய மனத்தில் கொஞ்சம் கள்ளம் வஞ்சனை இவைகளை உடையவள். கெட்ட புத்தியில்லாதவள். இவள் யோகத்தை யுடையவள். பெரிய புத்தியை யுடையவள், பொறுமை யுள்ளவள் அமைதி யுள்ளவள். இவளுக்குப் பால் பாக்கியம் அதிகமாகவிருக்கும். வயிற்றில் பித்தச்சூட்டு நோயை உடையவள். இவளுடைய சந்ததி விஷயத்தைப்பற்றிச் சொல்லுகிறோம்.

33. புத்திர ராண்பால் ரண்டு பெண்ணது அவ்வா றுகும்
சுத்தமாம் நான்கும் தீர்க்கம் சோர்வுறு மூன்று என்றோம்
சித்தசன பூர்வம் சொல்வேன் தில்லையில் வைசியச் சேயாய்ப்
பத்தினி மதலே யுண்டாய், பலவித வணிபம் செய்து.

33. ஜாதகருக்கு இரண்டு ஆண் குழந்தைகளும், இரண்டு பெண் குழந்தைகளும் ஆக மொத்தம் நான்கு குழந்தைகளும் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள். மூன்று குழந்தைகள் இறந்து போய்விடும் என்று சொல்லுகிறோம். இவருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லு கிறோம். சிதம்பரக்ஷேத்திரத்தில் வைசியர் குலத்தில் ஆணுகப் பிறந்து மனைவி மக்களை உடையவராகிப் பலவிதமான வியாபாரங்களைச் செய்து கொண்டும் ;

34. மால்அரன் பாதம் போற்றி மறையவர் நேசம் கொண்டு
காலன்தன் பதிக்குச் சென்று கஞ்சனுல் வரையப்பட்டு
ஞாலம்மே லுதித்தா னென்றோம் நாயகன் யோகம் சொல்வேன்
பால்பாக்கியம் பூமி சேர்ப்பான் பணிதிகளதிகம் சேர்ப்ப.

34. மகாவிஷ்ணுவையும் சிவபெருமானையும் பூஜை செய்து கொண்டும் பிராமணர் சிநேகத்தை அடைந்து கொண்டும் வாழ்ந்து பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய்ப் பிரமதேவனுல் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த பூமியில் வந்து பிறந்தார் என்று சொல்லுகிறோம். இவரு டைய யோகத்தைப்பற்றிச் சொல்லுகிறோம். இவர் பால் பாக்கியம் உடைய வர். நிலங்களைச் சேகரித்து வைப்பார். ஆபரணங்களை அதிகமாகச் சேர்த்து வைப்பார்.

35. தந்தைக்குத் தாழ்வுறுதான் சல்லியம் கொள்ளா ணுகும்
விந்தையாய் வார்த்தை சொல்வன் விப்பிரர் பத்தி கொள்வன்
முந்திய கீர்த்தி யேற்ப னெய்துவான் சித்திரயில்லம்
வந்தவன் நாலைந் தாண்டி லமைப்பனும் மேலுங்கேளே.

35. ஜாதகர் தன்னுடைய தகப்பனுருடைய அந்தஸ்திற்குக் குறைவு படாத அந்தஸ்தையுடையவராவார். கடன் வாங்கமாட்டார். ஆச்சரிய மாக வார்த்தைகளைச் சொல்லுவார். பிராமணர்களுடைய அன்பை அடை வார். மேன்மையான புகழை அடைவார். அழகான சித்திரங்களுள்ள வீட்டை அடைவார். இவர் தனக்கு இருபதாவது வயதில்* இந்த வீட்டைக் கட்டுவார், இன்னும் நாங்கள் அதிகமாகச் சொல்வதைக் கேட்பீராக,

* குறிப்பு.—வீடுகட்டும் விஷயம்—ஜாதகருக்கு வயது ரூ 19-0-0 முதல ரூ 20-0-0 முடியும் வரையிலும் புத தசையில் சுக்கிர புக்தி நடக்கின்றது. வீடு சம்பந்தமான அம்சங்கள் நான்காவது பாவமும், இந்தப் பாவாதிபதி சுக்கிரனும் ஆகும். இங்குப் புதன் நான்காவது பாவத்திற்கு அதிபதியும் வீடுகாரகனுமாகிய சுக்கிரனுடன் கூடித் தனதிபதியாகிய சூரியனுடனுங் கூடி லாபஸ்தானத்தில் இருக்கின்றார். ஆகையால் புத தசையில் வீட்டைக் கட்ட அமைப்பு இருக்கின்றது. மேலும் சுக்கிரனே நான்கிற்குடையவராகவும் வீட்டுக்காரனாகவும் இருப்பதால் தன் புக்தியில் வீட்டைக் கட்டிவைக்கச் சுக்கிரனுக்கு அமைப்பு இருக்கின்றது.

36. அன்னிய ரார்ச்ஜிதங்கள் அனுகிடும் விசேஷ பூமி
பொன்னது கொடுக்கல் வாங்கல் பிரபல குடும்பி யாவன்
உன்னத மூன்று ஊரில் உறைந்திடும் பூமி தானும்
முன்துணை தன்னேடொத்து மேவுவனிந்தப் பாலன்.

36. ஜாதகருக்குப் பிறருடைய சொத்துக்களும் அநேக நிலங்களும் வந்து சேரும். இவர் பணத்தைக் கொடுப்பதும் திரும்பி வாங்குவதுமான லேவாதேவி உடையவர். மேன்மையானதும் பிரக்யாதி பெற்றதுமான குடும்பஸ்தராக விருப்பார். சிறந்த மூன்று கிராமங்களில் இவருக்கு நிலங்கள் உண்டாகும். இவர் தன்னுடைய மூத்த சகோதரனுடன் ஒத்து வாழ்வார்.

37. இருபது மூன்று ஆண்டில் ஆவணி மாதம் தன்னில்
வரும்அன்னை கண்டமெய்தும் அறுபது ஐந்து ஆண்டில்
மறுமமாய்த் தேளின் மாதம் வாதசூலை யினல் மாள்வன்
அருமறை முடிவிலாடும் அம்பிகை புகன்றிட் டோமே.

37. ஜாதகருடைய தாயாருக்கு இவருடைய இருபத்து மூன்ருவது வயதில் * ஆவணி மாதத்தில் மரணம் நேரிடும். ஜாதகர் தனக்கு அறுபத்தைந்தாவது வயதில் கார்த்திகை மாதத்தில் † வாதசூலை நோயினுல் மரணம் அடைவார். அருமையான வேதங்களின் முடிவில் விளங்குகின்ற பார்வதியம்மையே! நாங்கள் இவ்விதமாகச் சொல்லிவிட்டோம்.

* குறிப்பு.—(1) தாயார் மரண விஷயம்—ஜாதகருக்கு வயது ரூ 22-0-0 முதல் ரூ 23-0-0 முடியும் வரையிலும் புத தசையில் சந்திர புக்தி நடக்கின்றது. மாதுரு லக்கினம் துலாம். துலாத்திற்குச் சூரியனும் குருவும் பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் மாரகாதிபதிகளாகின்றார்கள். புதன் துலாத்திற்குப் பன்னிரண்டிற்குடையவராய் லக்கினுஷ்டமாதிபதியாகிய சுக்கிரனுடன் கூடியும் மாரகாதிபதியாகிய சூரியனுடன் கூடியும் மாரகஸ்தானமாகிய எட்டில் இருந்து கொண்டு மாதுருகாரகனாகிய சந்திரனையும் பார்க்கின்றார். ஆகையால் ஜாதகசந்திரிகை 23 ஆவது சுலோகப் பிரகாரமும் துய்யகேரளம் எட்டாம் பாவம் 20 ஆவது பாடல் பிரகாரமும் புதன் தன்னுடைய தசையில் தாயாருக்கு மாரகஞ் செய்ய அமைப்பு உடையவராக விருக்கின்றார். சந்திரன் துலாத்திற்கு இரண்டாவது வீட்டு மாரகஸ்தானத்தில் மாரகாதிபதியாகிய குருவுடன் கூடி நீசத்தி

லிருந்து கொண்டு தானே மாதுருகாரகனுகவும் இருப்பதால் ஜாதகசந்திரிகை 23 ஆவது சுலோகம் பிரகாரமும் 82 ஆவது ஜாதகம் 24 ஆவது பாடலின்கீழ் வியாக்கியானத்தில் ஒரு காரகாதிபதி தன்னுடைய காரக நபருக்குத் தன்னுடைய தசாபுக்தி காலங்களில் மாரகஞ் செய்து விடுவாரென்று நாடிகளில் சொல்லி இருக்கின்றது என்று கண்ட முறைப்படியும் சந்திரன் தன்னுடைய புக்தியில் தாயாருக்கு மாரகஞ் செய்ய அமைப்பு உடையவராகின்ருர்.

† (2) **ஜாதகர் மரண விஷயம்.**—கடக லக்கின ஜாதகத்திற்குச் சுக்கிரன் சனி புதன் இவர்கள் மாரகர்கள் என்று பராசரஹோரையிலும் ஜாதகசந்திரிகையிலும் சொல்லி இருக்கின்றது. பராசரஹோரை ஜாதக சந்திரிகை இவைகளின் சில பதிப்புக்களிலிருந்து சூரியன்கூட மாரகாதிபதியாகின்ருர் என்று தெரிய வருகின்றது. இந்த ஜாதகருக்கு வயது 65 இல் கார்த்திகை மாதம் வரையிலும் வயது 64-7-0 ஆகிறது. அப்போது சூரிய தசையில் சுக்கிரபுக்தி நடக்கின்றது. சூரியன் மாரகஸ்தானமாகிய இரண்டிற்குடையவராகிப் பதினேராவது மாரகஸ்தானத்தில் மாரகாதிபதிகளாகிய சுக்கிரன் புதன் இவர்களுடன் கூடி லக்கினதிபதியாகிய சந்திரனையும் பார்க்கின்ருர். ஆகையால் சூரியன் ஜாதகசந்திரிகை 23 ஆவது சுலோகப் பிரகாரம் ஜாதகருக்கு மாரகத்தைச் செய்ய அமைப்பு உடையவராக விருக்கின்ருர். சுக்கிரன் ஏற்கனவே கடக லக்கினத்திற்குப் பெரிய மாரகாதிபதியாகின்ருர். இவர் லக்கினதிபதியையும் பார்க்கின்ருர். ஆகையால் சுக்கிரனுக்குத் தன் புக்தியில் மாரகஞ் செய்ய அமைப்பு உண்டு.

38. பின்ஜன்மம் காஞ்சி தன்னில் பிறப்பனும் கங்கை சேயாய்
உன்னதச் செட்டுச் செய்து உயர்வான குடும்பி யாகி
அன்னவன் வாழ்வா னுகும் அறைந்தது தப்பா தாகும்
கன்னென மொழியை யொக்கும் காதலி கேட்டிடா யே.

38. ஜாதகர் தன்னுடைய மறு ஜன்மத்தில் காஞ்சீபுரத்தில் வேளாளர் குலத்தில் ஆணுகப் பிறப்பார். மேன்மையான வியாபாரஞ் செய்து சிறந்த குடும்பஸ்தராக விருந்து வாழ்வார். நாங்கள் சொல்லிய பலன்கள் தவறிடாமல் நடக்கும். சர்க்கரையைப் போல இனிமையான வார்த்தைகளையுடைய பார்வதியம்மையே ! கேட்பீராக.

39. ஜாதகன் ஜனிக்கும் காலே தசை சனியிலி ருப்பு
ஓதுவேன் பதினு லாண்டும் உயர்திங்க ளீரைந்த தாகும்
தீதிதுகள் தந்தை வர்க்கம் சேத்திரம் பிரித லாகும்
மேதினில் முன்துணைக்குமே விடும் சாபந் தாமே.

39. ஜாதகர் பிறக்கும்போது சனி மகாதசையில் இருப்பு பதினன்கு வருஷமும் பத்து மாதமும் ஆகும் என்று சொல்லுகிருேம். இந்தக் காலத்தில் தகப்பனுருடைய பந்துக்களுக்குக் கெடுதிகள் நேரிடும். இடத்தை விட்டுப் பிரிந்து போகவும் நேரிடும். மூத்த சகோதரனுக்குச் சாபத்தால் கெடுதிகள் ஏற்படும்.

40. காலிகளதிகம் விருத்தி கனத்திடும் பூமி தானும்
ஞாலம்மேல் தலங்கள் செல்லல் நற்றிரு பணியும் செய்தல்
மேலாகும் கிராமச் செட்டுப் பூமிபால் விரோதம் நேரும்
ஏலவே பின்பா கத்திலியம்புவோம் தாயே யாங்கள்.

40. கால் நடைகள் அதிகமாக விருத்தியாகும். நிலங்களும் அதிகப்படும். அதிகப் பலனையும் கொடுக்கும். பூமியில் நல்ல ஸ்தலங்களுக்குப் போதல் நல்ல கோயில் வேலைகளைச் செய்தல் ஆகிய இவைகள் உண்டு. மேன்மையாக கிராம வியாபாரம் நடந்து வரும். நிலம் விஷயமாக விரோதம் உண்டாகும். எங்களுடைய தாயாராகிய பார்வதியம்மையே! மற்ற விஷயங்களை அடுத்தப் பாகத்தில் நாங்கள் சொல்லுகிறோம்.

41. அன்பது ஆறு ஆண்டில் அவன்முன்னோன் கண்ட மெய்தும்
பின்புதன் குடும்பம் வேறும் பேசுவோ அறுபா னுண்டில்
பொன்பூமி தன்னால் நேரும் பின்பாகம் விவரம் சொல்வோம்
இந்திர நிறைஞ்சு மாதே யியம்பின மொழிகுன்றாது.

41. ஜாதகருக்கு ஐம்பத்தாறுவது வயதில்* இவருடை மூத்த சகோதரா இறந்து விடுவார். அதன் பிறகு தன்னுடைய குடும்பம் அறுபதாவது வயதில் பிரிந்து போய் விடும். இவ்விதமாகத் தனம் பூமி இவைகள் மூலமாக மனஸ்தாபம் நேரிடும். மற்ற விஷயங்களைப் பின் பாகத்தில் சொல்லுகிறோம். தேவேந்திரன் வணங்கிப் பூஜை செய்கின்ற பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும்.

* குறிப்பு.—தமயன் மாரகம்.—ஜாதகருக்கு வயது 55 முதல் 56 முடியும் வரையிலும் சுக்கிரதசையில் புதபுக்தி நடக்கின்றது. மூத்த சகோதர ஸ்தானம் பதினோராவது வீடாகிய ரிஷபமாகும். ரிஷபத்திற்குச் சுக்கிரன சந்திரன் குரு புதன் அங்காரகன் இவர்கள் மாரகராகின்றார்கள். சுக்கிரன் மூத்தச் சகோதர பாவாதிபதியாகின்றார். மேலும் இவரே பராசர ஹோரை ஜாதக சந்திரிகைகளின் பிரகாரமும் மாரகராகின்றார். ஆகையால் சுக்கிரன் தன் தசையில் தமயனுக்கு மாரகஞ் செய்ய அமைப்பு உடையவராகின்றார். புதனும் மாரகாதிபதி யாகின்றார். லக்கினாதிபதியாகிய சுக்கிரனுடன் கூடி அஷ்டமாதிபதியாகிய குருவையும் பார்க்கின்றார். ஆகையால் துய்யகேரளம் எட்டாம் பாவம் 20 ஆவது பாடல் பிரகாரமும் மாரகாதிபதி யாகின்றார். ஆகையால் புதனுக்குத் தன்னுடைய புக்தியில் தமயனரை மாரகஞ்செய்ய அமைப்பு இருக்கின்றது.

# ஜாதகம் 87

| | | | |
|---|---|---|---|
| கேது | | அங்காரகன் | |
| | இராசி சக்கரம் | | லக்கினம் சூரியன் புதன் |
| குரு | | | |
| | | சனி | சந்திரன் சுக்கிரன் ராகு |

**உத்தரம் 4-ஆம் பாதம்**
சூரியதசை ஷை 0—2—6

1. மதி[1]புகர்[2] ராகு கன்னி மால்[3] ரவி[4]கடக மாக
நிதிகுரு மான[5] தாக நீலனு[6] கோல[7]தாகச்
சதியிலாச் சேயும்[8] நந்தி[9] செம்பாம்பு[10] மீனமாக
இதுவிதக் கோளும் நின்று லக்கினம் வளைய[11] லாக.

1. சந்திரனும் சுக்கிரனும் இராகுவும் கன்னியிலும், புதனுஞ் சூரியனும் கடகத்திலும், செல்வத்தைத் தருகின்ற குரு மகரத்திலும், சனி துலாத்திலும், கெடுதியாக வில்லாத அங்காரகன் ரிஷபத்திலும், கேது மீனத்திலும் இருந்து இவ்விதமாகக் கிரகங்கள் இருந்து ஜன்ம லக்கினம் கடகமாக விருந்தால் ;

குறிப்பு.—இந்த ராசிச் சக்கர அமைப்பிற்குப் பின் வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும்:—மேஷத்தில் ராகுவும், கடகத்தில் அங்காரகனும், துலாத்தில் கேதுவும், தனுசில் புதனும், மகரத்தில் குருவும் சனியும், மீனத்தில் சூரியனும் சந்திரனும், சுக்கிரனும் ஆகும்.

2. சொல்லுவீர் பலனை யென்று சுந்தரி கேட்கும் போது
வல்லவர் பராசர் சொல்வா ராணது ஜனன மாகும்
சொல்லுவேன் ஜனிக்கு மில்லம் சுதன் தந்தை தாய்வீடல்ல
நல்லதோர் நகர மாகும் நமனுத்திர வாடையாமே.

---

[1] சந்திரன் [2] சுக்கிரன் [3] புதன் [4] சூரியன்
[5] மகரம் [6] சனி [7] துலாம் [8] அங்காரகன்
[9] ரிஷபம் [10] கேது [11] கடகம்

2. பலாபலன்களைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்கும்போது அறிஞரும் கெட்டிக்காரருமான பராசர முனிவர் சொல்லு கிறார். பிறந்த குழந்தை ஆண் குழந்தையாகும். பிறந்த வீட்டைப்பற்றிச் சொல்லுகின்றேன். பிறந்த வீடு ஜாதகருடைய தாய் தந்தை இவர்களு டைய வீடு அல்ல. பிறந்த ஊர் ஒரு நல்ல பட்டணமாக விருக்கும், பிறந்த வீடுள்ள வீதி வடக்குத் தெற்குத் தெருவாகும்.

வேறு

3. உத்தரம் நதியும் கிரியுமே உண்டு
ஓங்கிடும் மேற்கில் நந்தி
சத்தியும் கீழ்ப்பால் பலவிதகோஷ்டம்
தவசிகள் அக்கினி வாசம்
இத்தகை உரைத்தோம் செனித்திடு மென்றோம்
இவன் தந்தையின் யோகத்தை
வித்தகன் களத்திர புத்திர யோகம்
விளம்புவோ முன்பின் சென்மங்கள்

3. ஒரு நதியும் மலையும் வடக்குத் திக்கில் இருக்கும் நந்தி தேவருடைய கோவில் மேற்குத்திக்கிலும், பார்வதியம்மன் கோயில் கிழக்குத் திக்கிலும், இன்னும் பலவிதமான கோயில்களும் தவஞ் செய்கிற வர்களும், பண்டாரர்களும் தென் கிழக்குத் திக்கிலும் உண்டு. பிறந்த விடம் இப்படிப்பட்ட அடையாளங்களை உடையதாகும் என்று சொல்லுகிறோம். ஜாதகரின் தகப்பனுருடைய யோகத்தையும் ஜாதகருடைய மனைவி சந்ததி இவர்களுடைய யோகங்களையும், முன்பின் ஜன்மங்களையும் சொல்லுகிறோம்.

வேறு

4. தந்தை குணம் கூறுகிறோமுகை சாலி
செகராசர் பேட்டியுளன் கல்வி மானும்
வந்தவர்க் கன்னமீவன் மாமி ரண்டு
மர்மத்தை வெளிக்காட் டாதான் துணைகா ணுகும்
நொந்தவரை ஆதரிப்பன் தலங்கள் செல்வன்
நேமியின்மேல் வாச முள்ளான் செலவும் செய்வன்
சந்ததம ரசரால் ஜீவிப்பானும் தன்பந்து புகழ்ந்திடவே
சரச வார்த்தை.

4. ஜாதகரின் தகப்பனுருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லு கிறோம். இவர் நுட்பமான அறிவையுடையவர். பெரிய அரசர்களுடைய தரி சனத்தையுடையவர், வாசித்தறிந்தவராவார், தன்னிடத்திற்கு வந்தவர் களுக்குச் சாப்பாடு போடுவார். இவருக்கு இரண்டு மாமியார்கள் உண்டு. தன்னுடைய மனத்திலுள்ள ரகசியத்தைப் பிறருக்குத் தெரியும்படியாக வெளியே காண்பித்துக் கொள்ளமாட்டார். இவருக்குச் சகோதரர்கள் கிடையா. வறுமையால் கெட்டுப் போய்க் கஷ்டத்தை அனுபவிப்பவர்களைக் காப்பாற்றுவார். தெய்வ ஸ்தலங்களுக்குப் போவார். பூமியில் வசிக்கும் படி வீட்டைக்கட்டுவார். செலவுகளைச் செய்வார். எப்போதும் இராஜாங்கத் தாரால் ஜீவனஞ் செய்வார். தன்னுடைய பந்துக்கள் இவரைப் போற்றும் படியாக இனிமையான நல்ல வார்த்தைகளைச் சொல்லுவார்.

5. வார்த்தை தப்பான் தையரித்தன் சுகபுசிப்பன்
மருவிடுமே பித்தவாயு தெய்வ பத்தி
நீத்தோர்க ளுறவு கொள்ளான் தந்தைஆஸ்தி
நீக்கிடுவன் பலருக்கும் சகாயம்செய்வன்
நாற்றிசையும் புகழேற்ப னிக்குணத்தானுக்கு
நாயகிமா ரிருவரிலே இளையாளுக்குப்
பூர்த்தியா யுதிப்பானும் துணைகாணுனுகும்
புகலுவோ மிவன்குணத்தைப் பொருந்துநேயன்

5. ஜாதகருடைய தகப்பனுர் தான் சொல்லிய வார்த்தையைத் தவறிடாமல் காப்பாற்றுவான். தைரியமுள்ளவர், சுகமான போஜனத்தைச் சாப்பிடக் கூடியவர். இவருக்குப் பித்தவாயு உண்டு. இவர் தெய்வங்களின் மேல் பக்தியும் அன்பும் உடையவர். உலகப்பற்றை ஒழித்து விட்டவர்களான பரதேசிகளுடைய சினேகத்தை அடைய் விரும்பமாட்டார். தகப்பனுருடைய சொத்தை விட்டு விடுவார். அனேகருக்கு உபகாரஞ் செய்வார். நான்கு திக்குகளிலு பெருமையையும் கீர்த்தியையும் அடைவார். இந்த குணங்களையுடைய தகப்பனுருக்கு உள்ள இரண்டு மனைவிமார்களில் இளைய மனைவிக்கு இந்த ஜாதகர் தன் தகப்பனுருக்குப் பூர்ண திருப்த்தியை விளைவிக்கும் படியாய்ப் பிறப்பவராவார். இவருக்குச் சகோதரர்கள் கிடையா. இவருடைய குணகுணங்களைப்பற்றிச் சொல்லுவோம். இவர் பொருத்தமானச் சினேகிதராக விருப்பார்.

6. கல்வியது இரண்டுகற்பன் இருநி றத்தன்
கத்தரிரே கையுமுடையான் நன்மனத்தான்
சொல்லிரண்டு முடையவனும் சுகமாய்வார்த்தை
சூஷ்மபுத்தி தந்தையில்லம் தொலைப்பானுகும்
அல்லல்கள் மத்தியத்தில் அடைவானுகும்
அணுகிடுமே காரகங்கள் அலைச்சலெய்தும்
மல்லுக்குச் செல்லானும் மாமனில்லம்
வாழ்குவான் மத்தியத்தில் மாதேகேளாய்.

6. ஜாதகர் இரண்டுவித வித்தையைப் படிப்பார், இரண்டு நிறங்களும் கலந்துள்ள நிறமாகிய மாநிறமுள்ள தேகத்தையுடையவர். தன்னுடைய உள்ளங்கையில் கத்தரிரேகை என்று சொல்லப்பட்ட ஒருவிதமான ரேகையையுடையவர். மேன்மையான மனத்தையுடையவர். இரண்டு விதமானவார்த்தைகளை உடையவர், அஃதாவது உண்மையையும் பொய்யையும் கலந்து பேசுவார். இன்பமான வார்த்தையை உபயோகப்படுத்துவார். நுட்பமான அறிவுள்ளவர். தன்னுடைய தகப்பனுருடைய வீட்டைப் போக்கடித்துக் கொள்ளுவார். இவருக்கு மத்தியவயதில் கஷ்டங்கள் உண்டு. இவருக்குக்காரக நோய்கள் † வந்து சம்பவிக்கும். தொந்தரவுகளும் வந்து நேரிடும். சண்டைபோடப் போகமாட்டார். இவர் தன்னுடைய மாமனுடைய வீட்டில் மத்தியவயதுகாலத்தில் வாழ்வார், பார்வதியம்மையே ! கேட்பீராக.

† குறிப்பு.—காரகநோய் விஷயம்—லக்கினாதிபதியும் ராகு கேதுக்களும் ஆறுவது வீட்டிற்குடையவரும் ஒன்றாகக்கூடி ஒரு வீட்டிலிருந்தால் ஜாதகர் தேகசுகமில்லாமல் வியாதியஸ்தராக விருப்பார் என்று துய்ய கேரளம் இலக்கின பாவம் 16-ஆவது பாடலில் சொல்லி இருக்கின்றது. இந்த ஜாதகத்தில் லக்கினாதிபதியாகிய சந்திரனும் ராகுவும் கூடி மூன்றாவது பாவத்தில் இருப்பதுடன் ஆறுவது பாவாதிபதியாகிய குருவால் பார்க்கப்பட்டிருப்பதைக் கவனிக்கவும்.

வேறு

7. உரோமங்க ளதிக மில்லான் றுவலுப தேசம் கொள்ளான்
காமனை விருபங் கொள்ளான் காமதில் கத்தரி ரேகை
தாமதகுணத் தானும் தந்தையில் லடையா ளுகும்
பூமியும் விரயம் செய்வன் புண்ணிய வதியே கேளாய்.

7. ஜாதகர் தன்னுடைய தேகத்தில் மயிர் அதிகமாகவில்லாதவர், உபதேசம் பெற்றுக் கொள்ளமாட்டார். ஸ்திரீகளின் மேல் காம ஆசையை உடையவரல்லர். நிலங்களை விற்று ஒழித்து விடுவார் †. பார்வதியம்மையே ! கேட்பீராக

† குறிப்பு.—நிலத்தை ஒழிக்கும் விஷயம்—பூமிஸ்தானம் நான்காவது வீடாகிய துலாம். இதற்குடைய சுக்கிரன் லக்கினத்திற்கு மூன்றில் நீசமாகி ராகுவுடன் கூடி துலாத்திற்குப் பன்னிரண்டில் மறைந்து இருக்கின்றார், துலாத்தில் ஜென்ம லக்கினத்திற்கு அஷ்டமாதிபதியாகிய சனி இருக்கிறார். பூமிகாரகராகிய அங்காரகன் துலாத்திற்கு எட்டில் மறைந்து இருக்கிறார். ஆகையால் நிலங்கள் இவரைவிட்டுப் போய்விடுவதற்கு அமைப்பு இருக்கின்றது.

8. துணைவர்கள் காணு ளுகும் சுந்தரி கேட்க லுற்றாள்
அணையவே முதல்தா யொன்று அறைந்தீரே அவட்குப் புத்திரர்
சினமிலாச் சொல்லு மென்ன தேவியும் சுதர்கள் காணுள்
கனமுடன் வயது தீர்க்கம் காலையோ டொத்து வாழ்வள்.

8. ஜாதகருக்குச் சகோதரர்கள் கிடையா. இவ்விதமாகச் சொல்லவே பார்வதியம்மையார் கேட்கின்றார். ஜாதகருக்குப் பெரிய தாயார் ஒருத்தி உண்டு என்று சொன்னீரே. அவளுடைய சந்ததியைப் பற்றிக் கோபிக்காமல் சொல்லுவீர் என்று கேட்க ! அவளுக்குக் குழந்தைகள் கிடையா. † அவள் நீண்ட ஆயுளை உடையவள். அவள் ஜாதகருடன் கூட ஒற்றுமையாக விருந்து வாழ்வாள்.

† குறிப்பு.—மாற்றாந்தாய் ஸ்தானம் ஆறுவது வீடாகும். இங்கு ஆறுவது வீடாகிய தனுசு மாற்றாந்தாயாரின் லக்கினமாகும். இதற்குப் புத்திரஸ்தானம் மேஷமாகும். இந்த மேஷத்திற்குடைய அங்காரகன் தனுர் லக்கினத்திற்கு ஆறில் மறைந்துபோய்க் கேதுவால் பார்க்கப்பட்டிருப்பது புத்திர தோஷமாகும். புத்திரஸ்தானமாகிய மேஷத்தைச் சனி பார்ப்பது புத்திர தோஷமாகும். புத்திரகாரகனாகிய குரு நீசமாக விருப்பதும் இந்தக் குருவைக்

கேது பார்ப்பதும் புத்திரதோஷமாகும். மேலும் தனுசிற்கு ஒன்பதிற்குடைய சூரியன் தனுசிற்கு எட்டில் இருப்பதும் புதனுடன்கூடி இருப்பதும் புத்திரதோஷமாகும். ஆகையால் மாற்றுந்தாயாருக்குப் புத்திர தோஷம் மிகவும் அதிகமாக விருக்கின்றது. குரு நீசமாக விருந்து அங்காரகனைப் பார்ப்பது புத்திரபாவத்திற்கு அனுகூலமானதல்ல என்பதைக் கவனிக்கவும்.

9. இன்னவன் மணத்தின் கால மியம்புவோ மீரொன் [பாண்டுள்
கன்னிகை கிழக்குத் திக்கில் கழறுவோ மவள்குணத்தைப்
பின்னமில் லாத தேகி பொய்யது வழுத்தா நெஞ்சம்
தன்சொல்லுமடக்க முள்ளாள் தன்வரன் மனம்போல் வாழ்வள்.

9. ஜாதகருடைய விவாக காலத்தைப் பற்றிச் சொல்லுகிறோம். இவருக்குப் பதினெட்டுவயதிற்குள் † மனைவி கிழக்குத்திக்கிலிருந்து வந்து சம்பவிப்பாள். இவளுடைய குணதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவள் அவயவபங்கம் ஒன்றும் இல்லாத தேகத்தை யுடையவள். பொய்யைச் சொல்லாத மனத்தையுடையவள். அடக்கமாகவும் பொறுமையுடனும் பேசக் கூடியவள். தன்னுடைய புருஷனுடைய மனதிற்குத் தகுந்தபடி ஒற்றுமையாய் இருந்து வாழ்வாள்.

† குறிப்பு.—**விவாக காலவிஷயம்**—ஜாதகருக்கு வயது ஷை 17-0-0 முதல் ஷை 18-0-0 முடியும் வரையிலும் அங்காரக தசையில் சந்திரபுக்தி ராகு தசையில் ராகு புக்தி இவை நடக்கின்றன. லக்கினத்திற்குக் கேந்திரத்தில் புதனும் குருவும் இருப்பதாலும், இரண்டிற்குடையவரான சூரியனை ஏழுக்குடையவரான சனி பார்ப்பதாலும் ஜாதகசிந்தாமணி ஏழாவதும் பாவம் 973-ஆவது 974-ஆவது பாடல்களின் பிரகாரம் ஜாதகருக்கு வாலிபத்தில் விவாகம் நடக்கும் அமைப்பு இருக்கின்றது. விவாகசம்மந்தமான அம்சங்கள் ஏழாம்வீடும் இரண்டாம்வீடும், இந்தவீடுகளுக்கு அதிபரும் சுக்கிரனும் ஆகும். அங்காரகன் ஐந்து பத்து ஆகிய இவ் வீடுகளுக்கு அதிபதியாகி இரண்டாவது வீட்டைப் பார்க்கின்றார். பத்தாவது பாவாதிபதியினுடைய தசையில் கூட விவாகம் நடக்கும் என்று ஜாதகபாரிஜாதம் ஏழாவது அத்தியாயம் 29-ஆவது சுலோகத்தில் சொல்லி இருக்கின்றது. ஆகையால் அங்காரகன் தன்தசையில் ஜாதருக்கு விவாகஞ் செய்யது வைக்க அமைப்பு உடையவராக விருக்கின்றார். சுக்கிரன் களத்திரகாரகராகிப்போகஸ்தானமாகிய நான்காவது வீடாகிய துலாத்திற்கு அதிபதியாகிப் போக காரகனுகிய ராகுவுடன் கூடி இருக்கின்றார். ஏழுக்குடைய சனியும் சுக்கிரனுடைய வீட்டில் இருக்கின்றார். அஃதாவது சுக்கிரனுக்குக் களத்திரஸ்தானதிபதியாகி சனியுடன் இவ்விதமான ஒருவித சம்மந்தம் ஏற்பட்டிருக்கின்றது. இந்தக்காரணங்களாலும் சனிக்கும் சுக்கிரனுக்கும் உண்டான சம்மந்தத்தாலும் மேற்கண்ட 29-ஆவது சுலோகப் பிராகாரமும் சுக்கிரனுக்குத் தன்னுடைய புக்தியில் ஜாதகருக்கு விவாகஞ் செய்துவைக்க அமைப்பு இருக்கிறது. இப்படிப்பட்ட

சுக்கிரனுடன் கூடிய சந்திரன் லக்கினுதிபதியாகிப் போககாரகனுன ராகு வுடன்கூடி இருப்பதாலும் இரண்டிற்குடைய சூரியனுடைய காலாகிய உத்தரத்தில் இருப்பதாலும் ராகுவைவிடச் சந்திரனுக்குத் தன் புக்தியில் ஜாதகருக்கு விவாகஞ் செய்துவைக்க அதிக அமைப்பு இருக்கிறது.

10. சுதராண்பால் காணு ருகும் தோகையு மொன்று தீர்க்கம்
அதமாகும் மனைவி தானும் அத்திரி மறித்துச் சொல்வார்
அதிபதி மரண மெய்தும் வகைதனைச் சொல்லு மென்ன
நிதிகுரு யேழில் நீசம் நீலனும்[1] சரத்தில்[2] நிற்க ;

10. ஜாதகருடைய முதல் மனைவிக்கு ஆண் குழந்தை பிறக்காது, பிறந்தாலும் இருக்காது. ஒரே ஒரு பெண் குழந்தைதான் நீண்ட ஆயுளை உடையதாகும். மனைவியும் இறந்துவிடுவாள். அத்திரிமகரிஷி தடுத்துக் கேட்கின்றார். முதல் மனைவி இறந்து போவதற்குக் காரணத்தைச் சொல் வீர் என்று கேட்க, செல்வத்திற்குக் காரகராகிய குருபகவான் ஏழாவது வீட்டில் நீசமாக விருப்பதாலும், சனி சரராசியில் இருப்பதாலும் ;

11. முதல்மனை மரண மெய்தும் மேவிடு மிரண்டாம் மாது
சதியிலா முப்பான் ரண்டில் தென்திசை நேரு மென்றோம்
அதிபதி பகைமுன் னுலே வந்திடும் பின்பால் நேசம்
சதியிலா மனத்தா ளாகும் சமயோகம் நன் னடக்கை.

11. முதல் மனைவி இறந்து விடுவாள்†. இரண்டாவது மனைவி வந்து நேரிடுவாள். இவள் ஜாதகருக்கு முப்பத்திரண்டாவது வயதில் தெற்குத் திக்கிலிருந்து வந்து நேரிடுவாள். இந்த இரண்டாவது மனைவி முதலில் விரோதியாகவிருந்து பின்னுல் சினேகமாக விருப்பாள். இவள் கெடுதியில்லாத மன முடையவளாவாள். சமமான யோகத்தையுடையவள். நல்ல நடவடிக்கையும் உடையவள்.

†குறிப்பு.—முதல் மனைவி மரண விஷயம் :—முதல் மனைவி ஸ்தானம் ஏழாவது வீடாகிய மகரம் ஆகும். இரண்டாவது மனைவி ஸ்தானம் மீனம் ஆகும். ஏழாவது வீட்டிற்குடைய சனி துலாத்தில் உச்சமாகிப் போகஸ்தான மாகிய நான்கில் இருக்கின்றார். இவர் சரராசியில் இருக்கின்றார். ஆகையால் ஜாதகாலங்காரம் 648-ஆவது பாடல் பிரகாரம் ஜாதகருக்கு இரண்டு மனைவி நேரும் அமைப்பு உண்டு. ஒன்பதிற்குடைய குரு நீசமாகி ஆறுக்குடைய வராகி ஏழாவது வீட்டில் இருப்பதாலும், இரண்டாவது மனைவி ஸ்தானத் திற்கு அதிபதியாகி ஏழாவது வீட்டிலிருப்பதாலும், லக்கினுதிபதியாகியச் சந்திரனைக் குரு பார்ப்பதாலும், முதல் மனைவி சம்மந்தமான இரண்டிற் குடைய சூரியன் விரயாதிபதியாகிய புதனுடன் கூடியிருப்பதாலும் முதல் தாரத்திற்குக் கெடுதியை விளைவித்து இரண்டாந்தாரத்தைக் கொடுக் கும் அமைப்புடையவராக விருக்கின்றார். ஏழாவது வீட்டைக் கேதுவும் சூரிய னும் பார்ப்பது முதல் தாரத்திற்குத் தோஷமாகும். புதன் ஏழைப் பார்ப்ப தாலும் சுக்கிரன் நீசமானதாலும் ஜாதகருக்கு ஒன்றிற்கு மேற்பட்ட ஸ்திரீ ஸ்னேகம் உண்டு. இக்காரணங்களால் ஜாதகருக்கு இரண்டு மனைவி

---

[1] சனி. [2] சரராசியாகிய துலாம்.

உண்டு. முதல் மனைவி இறந்து விடுவாள். ஜாதகருக்கு வயது ஷூ 31-0-0 முதல் ஷூ 32-0-0 முடியும் வரையிலும் ராகு தசையில் சுக்கிர புக்தியும் சூரிய புக்தியும் நடக்கின்றன. முதல்தார லக்கினமாகிய மகரத்திற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் சந்திரன் அங்காரகன் குரு இவர்கள் மாரகாதிபதிகள் ஆவார்கள். ராகு சுக்கிரனுடன் கூடி இருப்பதால் களத்திரத்திற்குக் கெடுதியைச் செய்யக் கூடியவராகின்றார், மேலும் மாரகாதிபதியாகிய சந்திரனுடன் கூடி இருப்பதால் ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகம் பிரகாரம் மனைவிக்கு மாரகஞ் செய்ய அமைப்புடையவராய் இருக்கின்றார். மகரத்திற்கு எட்டிற்குடைய சூரியனைப் பார்ப்பதால் துய்யகேரளம் எட்டாம் பாவம் 20-ஆவது பாடல்படி (எட்டிற்குடையவருடன் பார்வையான சம்மந்தத்தால்) மாரகஞ் செய்ய அமைப்புடையவராகின்றார். இவ்விதகாரணங்களால் ராகு தன் தசையில் முதல் மனைவியை மாரகஞ்செய்ய அதிக அமைப்புடையவராகின்றார். சுக்கிரன் நீசனானதாலும் களத்திரகாரகனானதாலும் ஒன்பதைப் பார்ப்பதாலும் முதல் களத்திரத்தை மாரகஞ்செய்து விட்டு மறுகளத்திரத்தைக் கொடுக்கச் சூரியனை விட அதிக அதிகாரமுடையவராகிறார்.

12. அன்மைபோல் சாய லுள்ளாள் அறமதி லிச்சை யுண்டு
முன்கோபம் பின்பு சாந்தம் முதல்வியும் கேட்க லுற்றான்
என்னகா ரணத்தி னாலே யிருமனை பகையு மெய்தும்
பண்ணிய புகரும்[1] நீசம் பணி[2] மதி[3] கூடி நிற்க.

12. இரண்டாவது மனைவி அன்னத்தைப்போல ரூபமும் அழகும் உள்ளவள். தருமம் செய்வதில் ஆசையுள்ளவள். முன்கோபம் உள்ளவள். உடனே அந்தக் கோபம் சாந்தமடையுந் தன்மை யுடையவள். தலைமைவகித்தப் பார்வதியம்மையார் அதன்மேல் எந்தக்காரணத்தினால் இரண்டாவது மனைவி விரோதமாக விருப்பாள் என்று கேட்க, சுக்கிரன் நீசனாக விருப்பதாலும் இவருடன் இராகுவும், சந்திரனும் கூடி இருப்பதாலும்.

13. பணி[2] தசை காலம் தன்னில் பத்தினி மரண மெய்தித்
துணிவாக இரண்டாம் மாது சேர்ந்திடும் வெறுப்பு முண்டாம்
தணிவுண்டு மாம னாலே சந்ததி கூறக் கேளாய்க்
கனமுள ஆண்பா லொன்று கன்னிகை அவ்வாறென்றோம்.

13. இராகு தசை காலத்தில் முதல் மனைவி மரணமாகி இரண்டாவது மனைவி வந்து அவள் புருஷனிடம் இஷ்டம் இல்லாமல் வெறுப்புடையவளாகிப் பின்னால் மாமனால் கோபத்தைத் தொலைத்துச் சினேகம் செய்விக்கப்பட்டவளாவாள். இவளது புத்திரபாவத்தைச் சொல்லுகிறேன் கேட்பீராக. மேன்மையான ஆண் குழந்தை ஒன்றும் பெண் குழந்தை ஒன்றும் உண்டு என்று சொல்லுகிறோம்.

---

[1] சுக்கிரன். [2] இராகு. [3] சந்திரன்.

14. முனிவரிவ் விதமாய்க் கூற மொழிவளா மம்மன் தாமும்
கனமுடன் தந்தை ஆஸ்தி காணுது யென்று சொன்னீர்
பிணையாக மாம னில்லம் பேணுவா னென்று சொன்னீர்
விணையதைச் சொல்லு மென்ன வித்தகன் பூர்வம் தன்னில் ;

14. முனிவரானவர் இவ்விதமாகச் சொல்ல, பார்வதியம்மையார் கேட்கின்றார். ஜாதகருக்குத் தன்னுடைய தகப்பனுருடைய சொத்து கிடைக்காது என்று சொன்னீரே ! இவர் தன்னுடைய மாமனுடைய வீட்டிற்குப்போய் விடுவார் என்றும் சொன்னீரே ! இவைகளுக்குக் காரணங்களைச் சொல்லுவீர் என்று கேட்க, இவர் தன்னுடைய முன்ஜன்மத்தில் ;

15. பலவிதத் துன்பம் செய்தான் பரவிற்று அந்தத் தோஷம்
தலைவன்செய் வினைக ளெவ்வாறு சாற்றுவீர் விவர மாகத்
தலமது தேயு தன்னில் ஜனித்தனன் வைசியச் சேயாய்
உலகினில் செட்டுச் செய்து உத்தமி மதலை உண்டாய்.

15. அனேகவிதமான கெடுதிகளைச் செய்து துன்பத்தை உண்டு பண்ணினுர். அவைகளினுல் தோஷம் உண்டாயிற்று என்று முனிவர் சொல்ல, ஜாதகர் செய்த கெட்ட காரியங்களை விவரமாகச் சொல்லுவீர் என்று பார்வதி கேட்க, முனிவர் சொல்லுகிறுர். தேயுஸ்தலமாகியத் திருவண்ணுமலை க்ஷேத்திரத்தில் ஜாதகர் வைசியர் குலத்தில் ஆணுகப் பிறந்து பூமியில் வியாபாரஞ் செய்து மனைவியும் மக்களும் உடையவராகி ;

16. சுகமுள குடும்பி யாகிச் சுந்தரன் வாழுந் நாளில்
பகையதை சொல்லக் கேளாய்ப் பஞ்சைகள் ஏழை யோனும்
தகைமையாய் அன்னம் கேட்கச் சாந்தமாம் வார்த்தை யின்றி
முகவெறு கொண்டு இன்னேன் முடிக்கினுன் அதிதி தன்னை.

16. சௌக்கியமுள்ள ஒரு குடும்பஸ்தராகி இவர் வாழுகின்ற காலத்தில் நேர்ந்த விரோதமான சம்பவத்தைச் சொல்லுகின்றேன் கேட்பீராக. கருப்பை அடைந்த மக்களும் ஓர் ஏழையும் இவரைத் தகுந்த மரியாதையுடன் சாப்பாடுகொடு என்று கேட்க, இவர் சாந்தமான வார்த்தைகளைச் சொல்லாமல் முகக்கடுப்புடனும் கோபத்துடனும் அந்த ஏழை மக்களையும் பரதேசிகளையும் மிரட்டினுர் ;

17. பரமனும் மனம்க லங்கிப் பகருவான் சாபம் தானும்
குரம்பாட வந்தோ னென்னைக் கூற்றன் போல் சீறியேச
வரும்ஜன்மம் துணைகா ணுமல் மாண்டிடும் தந்தை ஆஸ்தி
குறைபடும் செல்வம் யாவும் குவலய மீதில் செல்வாய்.

17. பரதேசியானவர் தன்னுடைய மனம் நொந்து சாபத்தை கொடுக்கின்றுர். வேகமாக வந்தவனுன என்மேல் ஓர் எமனைப்போலச் சீறித் திட்டிய பாபியாகிய உனக்கு, பின்ஜன்மத்தில் சகோதரர்கள்

இல்லாமலும் தகப்பனுடைய சொத்து இல்லாமலும் எல்லா சம்பத்துக்களும குறைவுபட்டும், பூமியில் இருந்து ;

18. அன்னமும் வறுமை யாகி அயலார்பால் அடைந்து வாழ்வாய்
மன்னிய தொழில் லாமல் மனமது வருத்த மாயும்
தன்னிலே வாழ்வா யென்று சாற்றியே சென்று ரென்றோம்
இன்னமும் வேறு ஒன்று இயம்புவோம் தாயே கேளும்.

18. சாப்பாட்டிற்கும் கஷ்டமும் தரித்திரமும் ஏற்பட்டு, நீ பிறரிடம் போய் வாழக்கடவாய். ஜீவனம் ஒன்றும் இல்லாமலும் மனத்தில் கஷ்டமுடையவனுயும் இருந்து நீ வாழக்கடவாய் என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார் என்று சொல்லுகிறோம். இதுவுமல்லாமல் இன்னொரு வினை இருக்கின்றது. அதைச் சொல்லுகின்றோம். எங்களுடைய தாயாராகிய பார்வதியம்மையே ! கேட்பீராக.

19. மறையவன் வெகுநா ளாக வைசிய னுடனே நேசம்
பொருளது கொடுக்கல் வாங்கல் புகுத்தினன் கணக்கில் மோசம்
மறையவன் திகில டைந்து வரைகிறான் சாபம் தானும்
பரம்பரை யில்லம் நீங்கிப் பாரினில் நிந்தை யாயும் ;

19. ஒரு பிராமணர் வெகுகாலமாக வைசியரான ஜாதகருடன் முன் ஜன்மத்தில் சினேகிதராகவிருந்து பணத்தைக் கொடுத்தும் மறுபடியும் திருப்பி வாங்கிக்கொண்டும் இருந்ததில் ஜாதகர் கணக்கில் மோசஞ் செய்ய, பிராமணர் மனத்தில் திகிலும் பயமும் ஏற்பட்டுச் சாபத்தைக் கொடுத்தார். பரம்பரையாக வந்தப் புராதனமான வீட்டை நீ விட்டுவிட்டுப் பூமியில் பலவித நிந்தைகளையுமடைந்து ;

20. எத்தொழில் கத்திரி யாயும் மிடுக்கமா மனம தாயும்
பத்தினி யிரண்டு மாயும் பாரினில் வாழ்வா யென்று
சத்தமா மறையோன் சொல்லிச் சேர்த்தனன் பொன்னைத் [தானும்
குத்தமாம் சாபம் தானும் குலவிற்று இவனுக் கேதான்.

20. எந்த வேலையை நீ செய்தாலும் அது கத்தரித்துப்போய் அதனால் நீ கஷ்டமுள்ள மனத்தை யுடையவனுயும், இரண்டு மனைவிகளை அடைந்தும் பூமியில் நீ வாழக்கடவாய் என்று அந்தப் பிராமணர் சொல்லிவிட்டுப் பணத்தைச் செலுத்திவிட்டுப் போய்விட்டார். அந்தக் கெட்ட சாபமானது ஜாதகரை வந்து அணுகிற்று.

21. இன்னமும் சிலபேர் சாப மெய்திற்று அந்தி யத்தில்
துன்னிய பொருளும் போகிச் சென்றனன் காலன் பக்கல்
முன்னவன் வரையப் பட்டு உதித்தனன் வடுகர் வமிசம்
மன்னிய அதிதி சாபம் மறையவர் சாபத் தாலே

**21.** இன்னும் சிலருடைய சாபமும் ஜாதகரை அணுகிற்று. இவர் முன்ஜன்மத்தில் கடைசிக்காலத்தில் தன்னுடைய சொத்துக்களை இழந்தும் செலவு செய்துவிட்டும் இறந்து எமனிடத்திற்குப்போய்ப் பிரம தேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டுத் தெலுங்கர் குலத்தில் இந்த ஜாதகர் வந்து பிறந்திருக்கின்றார். முன்ஜன்மத்திய பரதேசியின் சாபத் தாலும், பிராமணருடைய சாபத்தாலும் ;

**22.** இல்லமும் விட்டு ஏகு மெய்திடும் மனைவி ரண்டு
அல்லல்க ளதிக மெய்தும் அணுகிடு மேக ரோகம்
எல்லைகள் திரிவா ருகு மெத்தொழில் பலிதம் காணன்
வல்லியும் கேட்க ளுற்றாள் மாரனும் மெந்தக் காலம்

**22.** ஜாதகர் வீட்டை விட்டுப் போய்விடுவார். இவருக்கு இரண்டு மனைவிகள் ஏற்படுவார்கள். இவருக்குக் கஷ்டங்கள் அதிகமாக உண்டாகும். இவருக்கு மேகரோகம் வந்து சம்பவிக்கும். இவர் ஊர் ஊராய்த் திரிவார். எந்த வேலையை இவர் செய்தாலும் அதில் லாபங் கிடைக்காது என்று சொல்லவே, பார்வதியம்மையார் கேட்கின்றார். ஜாதகர் எந்தக் காலத்தில் ;

**23.** வறுமைக ளடைவான் சொல்வாய் அறுமூன்று ஆண்டு மேலாய்க்
குறைவுண்டு ஆறு ரண்டும் குறித்தசொல் போலே வாழ்வன்
நெறியது தப்பா தாகும் நிகழ்த்துவோ மினிமே லாகப்
பிறையது போலே செல்வம் பொருந்திடும் பூமி சேர்ப்பன்.

**23.** கஷ்டங்களும் தரித்திரமும் அனுபவிப்பார் என்பதைச் சொல்லு வீராக. ஜாதகர் தனக்குப் பதினெட்டாவது வயது முதல் கஷ்டத்தை அனுபவிப்பார். இது முதற்கொண்டு முப்பத்தாறுவது வயது வரையிலும் நாங்கள் இப்போது சொல்லியது போலவே கஷ்டங்களை அடைந்து வாழ்வார். நாங்கள் சொல்லியது தவறிடாமல் நடக்கும். அதற்குமேல் நடக்கும் பலா பலன்களை நாங்கள் சொல்லுகிறோம். அதற்குமேல் வளர்பிறைச் சந்திரன் வளருவது போல இவருக்கு யோகம் விருத்தியாகும். செல்வம் இவருக்கு வந்து கிடைக்கும். இவர் நிலங்களைச் சேகரிப்பார்.

**24.** பலவித வணிபம் செய்வன் பகையோர்க ளுறவே யாகும்
நவமுள குடும்ப மெய்தும் நன்மாமன் தன்னால் யோகம்
அலைமனம் நிவிர்த்தி யாகும் அறைந்தனம் வடகீழ் தன்னில்
நிலைமையாய் ஒருவர் மூல நிருபனும் கணக்கை நாட்டி ;

**24.** ஜாதகர் அநேகவிதமான வியாபாரங்களைச் செய்வார். எதிரிகள் இவருக்குச் சிநேகிதர்களாகி விடுவார்கள். நல்ல புதிய குடும்பம் ஏற்படும். தன்னுடைய நல்ல மாமனால் இவருக்கு யோகம் உண்டாகும். இவருடைய கஷ்டப்பட்டு அலைந்த மனமானது நிம்மதியை அடையும். இவர் வடகிழக்குத் திக்கில் ஒருவர் மூலமாக நிலையாக கணக்குகள் எழுதிவைக்கின்ற குமஸ்தாவாக வேலையில் அமர்ந்து ;

25. சீவிப்பா னென்று சொல்வோம் செப்புவோ மன்னை சேதி
தாவிய பேரைக் காப்பள் தன்மனம் வெகுளி யாகும்
கோபத்தை வெளிக்காட் டாதாள் குவலய நல்லோ ளாவள்
பாவத்தில் மனம்வைய் யாதாள் பரவிடும் பித்த வாயு.

25. ஜாதகர் ஜீவிப்பவராவார் என்று சொல்லுகிறோம். இவருடைய தாயாரின் விஷயங்களைப் பற்றிச் சொல்லுகிறோம். தன்னிடம் வந்து அடைந்த பேர்களைக் காப்பாற்றுவாள். இவளுடைய மனமானது கோப முடையதாகவிருக்கும். ஆனால் இவள் தன்னுடைய கோபத்தைப் பிறர் தெரிந்து கொள்ளும்படியாக வெளியே காட்டிக்கொள்ளாமல் ரகசியமாக வைத்துக் கொண்டிருப்பாள். பூமியில் நல்லவளாக விருப்பாள். பாபமான காரியங்களைச் செய்வதில் ஆசையில்லாதவள். இவளுக்குப் பித்தவாயு தேகமெல்லாம் வியாபித்திருக்கும்.

26. தன்துணை ஆண்பால் மூன்று தையலர் இரண்டு மாகும்
மன்னிய வடகீ ழில்லம் வரைந்தனம் ஒருவன் தீர்க்கம்
அன்னவன் சேதி பின்பால் அறிவிப்போம் விவர மாக
முன்ஜன்மம் சொல்லு கின்றோம் முக்கூடல் தன்னி லேதான் ;

26. ஜாதகரின் தாயாருடைய சகோதரர்களில் மூன்று ஆண் சகோதரர்களும் இரண்டு பெண் சகோதரங்களும் ஆகும். இவளுடைய வீடு வடகிழக்குத் திக்கில் இருக்கும் என்று சொல்லுகிறோம். சகோதரர் களில் ஒரு சகோதரன் நீண்ட ஆயுளையுடையவன். அவனுடைய விஷயங் களைப்பற்றி விவரமாகப் பின்னால் சொல்லுகிறோம். தாயாருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் முக்கூடல் என்ற திரு முக்கூடல் கிராமத்தில் ;

27. வன்னிய குலமு தித்து மதலைக ளதிக முண்டாய்
இன்னவள் வாழுந் நாளி லியம்புவோ மூழி தானும்
கன்னிகை கணவ னோடு கனத்தவள் ளூரு சென்று
துன்னுமால் தெரிசித் தேதான் சென்றனள் கடைவீ திக்கே.

27. வன்னியர் ஜாதியில் பெண்ணாகப் பிறந்து அனேகக் குழந்தை களைப் பெற்று வாழுகின்ற காலத்தில் இவளுக்கு வந்து சம்பவித்த வினையைச் சொல்லுகிறோம். இவள் தன்னுடைய புருஷனுடனே மேன்மையான சிறந்த வள்ளூருக்குப் போய் அவ்விடத்தில் மகா விஷ்ணுவைத் தரிசனஞ் செய்துவிட்டுப் பிறகு கடைத்தெருவிற்குப் போனாள்.

28. குங்குமம் மஞ்சள் சீப்புக் கோதையும் வாங்கிக் கொண்டு
நங்கையும் பொருளீ யாமல் நடந்தனள் மானைப் போலத்
துங்கமாம் வைசியன் பார்த்துத் தோகையைக் காணா னுசிச்
சிங்கம்போல் கோப முற்றுச் செப்புவான் வைசியன் தானும்.

**28.** தாயார் குங்குமம் மஞ்சள் சீப்பு இவைகளை ஒரு கடையில் வாங்கிக்கொண்டு கிரயத்தைக் கொடுக்காமல் திருட்டுத்தனமாக மானைப் போல வேகமாக நடந்து மாயமாக மறைந்துவிட்டாள். பெருமை, பரிசுத்தம் இவைகளமைந்த செட்டியாராகிய வியாபாரி பார்த்துத் தேடியும் இவள் காணுமல் போய்விடவே அவர் ஒரு சிங்கத்தைப் போலக் கோபம் அடைந்து சொல்லுகின்றார்.

**29.** மஞ்சள்கள் கரையா முன்னம் மன்னனும் மரண மாகித்
தஞ்சமாய்ப் பின்ஜன் மத்தில் தன்வரன் மத்தி யத்தில்
துஞ்சிடும் இல்லம் நீங்கும் தாயில்லம் வாழ்வா ளாகும்
நஞ்சாகச் சொல்லி யேதான் நடுத்தெருத் தூளைத் தூற்றி ;

29. இவள் தான் திருட்டுத்தனமாய் வாங்கிக் கொண்டுபோன மஞ்சள் பூராகவும் கரைந்து செலவாகிப் போய் விடுவதற்கு முந்தியே இவளுடைய புருஷன் இறந்து, இவளும் இறந்து, இவள் தன்னுடைய மறு ஜன்மத்தில் மத்திய வயதில் புருஷனை இழந்து, பிறகு புருஷனுடைய வீட்டை விட்டுத் தன்னுடைய தாயாருடைய வீட்டிற்குப் போய் வாழக் கடவது என்று அந்த வைசியன் விஷவாக்காகச் சொல்லி நடுத்தெருவிலுள்ள மண் தூளை எடுத்துத் தூற்றினார்.

**30.** வருத்தமாய்ச் சென்ரு னென்ரேம் மருவிற்று அந்தத் தோஷ
திருமக னந்த ஆண்டில் செல்வனு மரண மாகி
வறுமைகள் மிகவே கொண்டு மரலியின் பதிக்குச் சென்று
பிரமனுல் வரையப் பட்டுப் பிறந்தன ளிந்த மாது.

**30.** அந்த வைசியர் மனக் கஷ்டத்துடன் போய் விட்டார் என்று சொல்லுகிரேம். அந்தச் சாபம் இவளை வந்து அணுகிற்று. இவளுடைய புருஷனும் அதே வருஷத்தில் இறந்து அதனால் இவள் அதிகமான கஷ்டங்களையும் தரித்திரத்தையும் அனுபவித்து இறந்து எமபட்டணத்திற்குப்போய்ப் பிரமதேவனுல் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இவள் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்தவளாவாள்.

**31.** மாதுரு மத்தி யத்தில் வரனுமே மரண மாகி
நீதியால் தாயில் லத்தில் நேருவ ளென்று சொன்னேம்
கோதிலா நாற்ப தாண்டில் கும்பமா தத்தி லேதான்
காதலி மரண மாவள் கழறுவோ மிவள்பின் ஜன்மம்

**31.** ஜாதகருடைய தாயாரின் புருஷன் இவளுக்கு மத்திய வயதில் இறந்துவிட இவள் தன்னுடைய தாயாரின் வீட்டிற்குப் போய்ச் சேர்ந்து விடுவாள் என்று சொல்லி இருக்கிரேம். ஜாதகருக்கு நாற்பதாவது வயதில் † குற்றமில்லாத மாசி மாதத்தில் இவள் இறந்து விடுவாள். இவளுடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிரேம்.

† **குறிப்பு.—மாதுர் மரண விஷயம் :**—ஜாதகருக்கு வயது ளு 39–0–0 முதல் ளு 40–0–0 முடியும் வரையிலும் குரு தசையில் சனி புக்தி புதன் புக்தி இவைகள் நடக்கின்றன. மாசி மாதத்தில் சனி புக்தி தான் நடக்

கின்றது. மாதுரு லக்கினமாகிய நான்காவது பாவமாகிய துலாத்திற்குக் குருவும் சூரியனும் பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் மாரகாதிபதிகளாகின்றார்கள். குரு துலாத்திற்கு ஆறுவது வீட்டிற்கும் மூன்றுவது வீட்டிற்கும் உடைய மாரகாதிபதியாகிய நீசமாகித் துலாத்திற்கு எட்டாவது வீட்டையும் எட்டிற்கும் லக்கினத்திற்கும் உடையவராகிய சுக்கிரனைப் பார்க்கின்றார். ஆகையால் பராசரஹோரை, ஜாதகசந்திரிகை துய்யகேரளம் எட்டாவது பாவம் 20-ஆவது பாடல் பிரகாரமும் குரு மாரகாதிபதியாகித் தன் தசையில் மாதாவுக்கு மாரகஞ் செய்யும் அமைப்பு உடையவராகவிருக்கின்றார். ஜன்மலக்கினமாகிய கடகத்திற்கு அஷ்டமாதிபதியாகிய சனி மாதுரு லக்கினத்திலேயே வலுவாக இருக்கின்றார். மாதாவுக்கு மாரகாதிபதியாகிய சூரியனையும் பன்னிரண்டிற்குடைய புதனையும் பார்க்கின்றார். ஆகையால் சனி ஜாதகசந்திரிகை 27-ஆவது சுலோகம் பிரகாரம் புதனைத் தள்ளி விட்டுத் தானே சுடுதியில் தன்புக்தியில் தாயாருக்கு மாரகஞ் செய்யும் அமைப்பு உள்ளவராக விருக்கின்றார். ஆகையால் தாயாருக்குக் குரு தசையில் சனி புக்தியில் மாரகம் நேரிடும் அமைப்பு இருக்கின்றது.

**32.** விரிஞ்சிநா டதனி லேதான் விளம்புவா னிக்கு லத்தில்
பெருமையும் புகழு முண்டாம் பதினேரு ஆண்டு தன்னில்
திருமகன் தந்தை கண்டம் செப்புவோ மன்பா நாலில்
தருமேட மாதம் தன்னில் ஜாதக னுடலம் வாடும்.

**32.** தாயார் விரிஞ்சி புரத்தில் இந்த ஜன்மத்திய குலமாகிய வடுகர் குலத்திலேயே பிறந்து மேன்மையும் கீர்த்தியும் உடையவளாகி வாழ்வாள். இவருக்குப் பதினோராவது வயதில் † இவருடைய தகப்பனார் இறந்து விடுவார். ஜாதகர் தனக்கு ஐம்பத்துநான்காவது வயதில் ‡ சித்திரை மாதத்தில் இறந்து இவருடைய தேகம் வாடி மறைந்து போய் விடும்.

**குறிப்பு.—(1) தகப்பனாருடைய மரண விஷயம்:**—பிதுர் லக்கினம் ஒன்பதாமிடமாகிய மீனம் ஆகும். இதற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் சுக்கிரன் சனி புதன் சூரியன் இவர்கள் மாரகாதிபதிகள் ஆகின்றார்கள். ஜாதகருக்கு வயது ௵ 10-0-0 முதல் ௵ 11-0-0 முடியும் வரையிலும் சந்திர தசையில் சூரிய புக்தியும், அங்காரக தசையில் அங்காரகபுக்தி இராகு புக்தி ஆகிய இவைகளும் நடக்கின்றன. மீனத்திற்கு மாரக ஸ்தான மாகிய ஏழில் கன்னியில் சந்திரன் மாரகாதிபதியாகிய சுக்கிரனுடன் கூடி பிதுர் லக்கினத்தையே பார்க்கின்றார். சுக்கிரன் பிதுர் லக்கினத்திற்கு எட்டிற்குடையவராகவும் ஆகின்றார். ஆகையால் ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகம், துய்யகேரளம் எட்டாம் பாவம் 20-ஆவது பாடல் ஆகிய இவைகளின் பிரகாரம் சந்திரன் பிதாவை மாரகஞ் செய்ய அங்காரகனைவிட அதிக அமைப்புடையவராக இருக்கின்றார். சூரியன் மாரகாதிபதியாகி குருவைப் பார்க்கின்றார். ஆகையால் மேற்கண்ட கிரந்தங்களின் பிரகாரம் சூரியன் தன் புக்தியில் பிதாவை மாரகஞ் செய்ய அமைப்பு உடையவராக விருக்கின்றார்.

‡ (2) **ஜாதகர் மரண விஷயம்.**—ஜாதகருக்கு வயது ஷூ 53–0–0 முதல் ஷூ 54–0–0 முடியும் வரையிலும் சனி தசையில் சனி புக்தி நடக்கின்றது. கடக லக்கினத்திற்குச் சனி பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் மாரகராகின்றார். சனி கடகலக்கினத்திற்கு மாரக ஸ்தானங்களாகிய ஏழு எட்டிற்கு அதிபதியாகி லக்கினத்தையும் பார்க்கின்றார். ஆகையால் சனி தன் தசையில் தன் புக்தியில் மாரகஞ் செய்ய அமைப்பு உள்ளவராக விருக்கின்றார்.

33. பின் ஜன்மம் அருணை நாட்டில் பிறப்பனும் வன்னிய சேயாய்
அன்னையும் கேட்க லுற்றாள் அருளுவீர் செயல்கள் தம்மை
தன்சொலும் கபட முண்டாய்த் தனமது இச்சை யாயும்
முன்கோபம் கடவுள் பத்தி முதல்வனும் கொள்ளாத தாலே ;

33. ஜாதகர் தன்னுடைய மறு ஜன்மத்தில் அருணை என்று சொல்லப் பட்ட அருணாசலமாகிய திருவண்ணாமலை க்ஷேத்திரத்தில் வன்னிய குலத்தில் ஆணாகப் பிறப்பார். இப்படிப் பிறப்பதற்கு ஜாதகர் செய்த காரி யங்களைச் சொல்லுவீர் என்று தாயாராகிய பார்வதியம்மையார் கேட்க, முனிவர் பதில் சொல்லுகின்றார். ஜாதகர் தான்சொல்லும் வார்த்தைகளில் கபடமும் வஞ்சனையும் வைத்துச் சொன்னதாலும், பணத்தின் மேல் ஆசையை வைத்துக்கொண்டு முன்கோபத்தை உடையவராகிக் கடவுளின் மேல் பக்தியும் அன்பும் இல்லாதவராய் இருந்ததாலும் ;

34. பிறப்பனும் வன்னிய சேயாய்ப் பிறந்திடுங் காலம் தன்னில்
புரவியி லிருப்புத் திங்கள் இரண்டுமே நாட்கள் ஆறும்
உரைக்கிறோம் பலனை யாங்கள் உத்தமி தனக்கு ரோகம்
அருமறை முடிவி லாடும் அம்பிகை புகன்றிட் டோமே.

34. ஜாதகர் மறு பிறப்பில் வன்னிய குலத்தில் ஆணாகப் பிறப்பார். இவர் பிறந்த காலத்தில் ஏழு குதிரைகளின் மேல் தேரில் சவாரி செய்கின்ற சூரியனுடைய தசையில் இருப்பு இரண்டு மாதங்களும் ஆறு நாட்களும் ஆகும். இந்தக் காலத்தின் பலாபலன்களைச் சொல்லுகிறோம். ஜாதகருக்கும் அவருடைய தாயாருக்கும் நோய் உண்டாகும். அருமையான வேதங்களின் முடிவில் விளங்குகின்ற பார்வதியம்மையே ! நாங்கள் பலனை இவ்விதமாகச் சொல்லிவிட்டோம்.

# ஜாதகம் 88

கலை[1]கடகம் ரவி[2]புதனும் சீயமாகக்[3]
காரி[4] குரு சேல்[5] கன்னி புகரும்[6] சேயும்[7]
மலை[8] ராகு ஞானத் தோன்[9] வீணை[10] புக்க
நண்டு[11] ராசி ஜன்மமதாய் மருவி நிற்க
பலனெவ்வாறு சொல்லு மென்னப் பராசர்சொல்வார்
பகருவோ மாண்ஜனன மில்லம் சொல்வேன்
நிலைமையாய்க் கீழ்மேற்கு வீதியாகும்
நிகர்வாசல் தக்ஷிணமாம் சந்திமேற்கில்.

| குரு சனி | | | கேது |
|---|---|---|---|
| | இராசி | சக்கரம் | லக்கினம் சந்திரன் |
| | | | சூரியன் புதன் |
| ராகு | | | அங்காரகன் சுக்கிரன் |

பூசம் 4-ஆம் பாதம், சனிதசை ஞூ 2–9–0

1. சந்திரன் கடகத்திலும், சூரியனும் புதனும் சிம்மத்திலும், சனியும் குருவும் மீனத்திலும், சுக்கிரனும் அங்காரகனும் கன்னியிலும், ராகு தனுசிலும், கேது மிதுனத்திலும் இருந்து ஜன்ம லக்கினம் கடகமாக விருந்தால் பலாபலன்கள் எவ்விதமாக விருக்கும் என்பதைச் சொல்லுவீர் என்று கேட்க, பராசரமகரிஷி குழந்தை பிறந்த வீட்டைப்பற்றிச் சொல்லுகின்றார். தெரு கிழக்கு மேற்குத் தெருவாக விருக்கும். தெரு வாயிற்கால் தெற்கில் இருக்கும். தெருக்கள் கூடுகின்ற விடம் மேற்குத் திக்கில் இருக்கும்.

**குறிப்பு.**—இந்த ராசிச்சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்த முடையதாகும். மிதுனத்தில் ராகுவும், கடகத்தில் புதனும், கன்னியில் சூரியனும், விருச்சிகத்தில் சந்திரனும், தனுசில் கேதுவும், கும்பத்தில் அங்காரகனும் குருவும் சுக்கிரனும், மீனத்தில் சனியும் ஆகும். புதன் அஸ்தத்திலும், குருவும் சனியும் வக்கிர கதியிலும் இருக்கின்றார்கள்.

---

[1] சந்திரன். [2] சூரியன். [3] சிம்மம். [4] சனி.
[5] மீனம். [6] சுக்கிரன். [7] அங்காரகன். [8] தனுசு.
[9] கேது. [10] மிதுனம். [11] கடகம்

2. மாரியுடன் காளிகுடி வடகீழாகும்
அருகருமே வாயுதிக்கில் தென்மேல் மாயோன்
வீறுது உத்தரத்தில் கணேசனுண்டு
விளங்காத அக்குடியிவ் வடை யாளத்துள்
கூரையில்லம் சிறுஊரில் இந்தப் பாலன்
குலவுவான் இருமூன்று ஜனன மாகும்
மாரன்துணை களத்திரபுத்திரர் அன்னை தந்தை
வந்தவனின் ஜன்மம் வரைகிறோம் யாமதனை.

2. மாரியம்மன் கோயிலும் காளியம்மன் கோயிலும் வடகிழக்குத் திக்கில் இருக்கும். சமணர்களுடைய தேவதையின் கோயில் வடமேற்குத் திக்கிலும் மகாவிஷ்ணுவின் கோயில் தென் மேற்கிலும் இருக்கும். பெருமை யில்லாத ஒரு விநாயகக் கடவுளின் கோயில் வடக்குத் திக்கில் இருக்கும். இவ்விதமான அடையாளங்கள் உள்ள விடத்தில் ஒரு சிறிய கிராமத்தில் ஒரு கூரை வீட்டில் இந்த ஜாதகர் ஆருவது கர்ப்பத்தில் வந்து பிறப்பார். இவருடைய சகோதரங்கள் மனைவி மக்கள் தாயார் தகப்பனர் இவர்களுடைய முன்பின் ஜன்மங்கள் ஆகிய இவைகளைப் பற்றி நாங்கள் சொல்லுகிறோம்.

3. ஆகுமே தந்தைதுணை ஆண்பாலொன்று
அம்பிகைகள் நான்காக அறையலாகும்
போகுமே மற்றவெல்லாம் தந்தை சேதி
புகலுவோம் மால்நிறத்தான் உயரமில்லான்
பாகமாய்ப் பேசிடுவான் சமமாம் கல்வி
பார்விருத்தி தெய்வ பத்தி பதரு நெஞ்சம்
நாகரிகங்களுள்ளான் தந்தை நேயன்
நாட்டினிலே கிருஷிசெய்வன் உணச்சல் தேகி.

3. ஜாதகரின் தகப்பனருடைய சகோதரர்களில் ஆண் ஒன்றும் பெண்கள் நான்கு பேர் என்றும் சொல்லக்கூடும். மற்றைச் சகோதரர்கள் எல்லாம் இறந்து போய் விடும். தகப்பனருடைய விஷயத்தைப் பற்றி சொல்லுகின்றோம். இவர் மஹாவிஷ்ணுவின் நிறமாகிய நீலமேகவர்ணம் என்ற ஒருவிதமான நிறத்தையுடைய தேகத்தையுடையவர். உயரமாக விருக்கமாட்டார். பக்குவமாகப் பேசுந்திறமை யுடையவர். நடுத்தரமான வித்தையை யுடையவர். பூமியைப் பயிரிட்டு விருத்தி செய்வார். தெய்வபக்தியும் அன்பும் உடையவர். அவசரப்படாத மனத்தை யுடையவர். நாகரிகங்களை யுடையவராவார். தன்னுடைய தகப்பனருக்கு இஷ்டமானவர். ஊரில் விவசாயத் தொழிலைச் செய்வார். ஒல்லியான மெலிந்த தேகத்தை யுடையவர்.

4. உண்மையதை வெளிக்காட்டாதான் செலவுசெய்வன்
உறுதியில் லாதநெஞ்சம் உவமைசொல்வன்
தண்மைகுணம் முன்துணைபின் காணுகும்
சாற்றுமிந்தக் குணத்தானுக்கு இந்தப்பாலன்
கண்ணியமாய்த் தானுதிப்பன் முன்பெண்ஒன்று
இணைத்திடுமே பின்துணைஆண் இரண்டே தோன்றும்
வண்ணமுடன் பெண்சேதி வரைகிறோம்யாம்
மாஞ்சிவப்பள் உயரமில்லாள் மருமமில்லாள்.

4. ஜாதகரின் தகப்பனார் உண்மையானதைப் பிறர் அறியும் படியாக வெளிக்குக் காட்டாமல் ரகசியமாக வைத்து கொண்டிருப்பார். செலவு செய்வார். திடமான மனமில்லாதவர். உபமானம் உபமேயம் இவைகளுடன் பேசுவார். சாந்தமானதும் பெருந்தன்மையானதும் குளிர்ந்ததுமான குணமுடையவர். முன் சகோதரங்களை உடையவர். பின் சகோதரர்கள் இல்லாதவராவார். இப்படிப்பட்ட குணங்களையுடைய தகப்பனு ருக்கு இந்த ஜாதகர் மேன்மையாகப் பிறப்பார். இவருக்கு முன்னே ஒரு பெண் நீண்ட ஆயுளுடன் ஓங்கி வளருவாள். இவருக்குப் பின் சகோதரர்க ளாக இரண்டு ஆண் சகோதரர்கள் பிறப்பார்கள். இவருடைய மூத்த சகோதரியினுடைய விஷயங்களை நாங்கள் அழகாகவும் சிறப்பாகவும் சொல்லுகிறோம். இவள் மாமரத்தின் துளிரைப் போன்ற ஒரு விதமான சிகப்பு நிறத்தையுடையவள். உயரமானவளல்லள். தன்னுடைய மனத்தில் ரகசியத்தை வைத்துக் கொண்டிருக்காதவள் ஆவாள்.

5. மாதுலன்தன் மகனைமணம் புரிவாளாகும்
மானிலத்தில் வறுமையிலாள் மாமிரண்டு
நீதியாய்ச் சுதரெட்டு நேருமென்றோம்
நிலைத்தசுதர் ஆணிரண்டு பெண்பால்மூன்று
ஓதுவேன் வடக்கில்வரன் சுகமாய்வாழ்வள்
உரைத்திட்டோ மவன்குணத்தை ஆண்பால்சேதி
மேதினில் கடகஜன்மம் தேங்காய் நாளாம்
விளங்கிடுவான் சுத்தமாம் ஜனன மென்றோம்.

5. ஜாதகருடைய மூத்த சகோதரி தன்னுடைப் அம்மான் பிள்ளையை விவாகஞ் செய்து கொள்ளுபவளாவாள். இந்தப் பெரிய பூமி யில் கஷ்டங்களையும் தரித்திரத்தையும் அடையமாட்டாள். இவளுக்கு இரண்டு மாமியார்கள் உண்டு. இவளுக்கு நியாயமாய் எட்டுக் குழந்தை கள் பிறப்பார்கள் என்று சொல்லுகிறோம். இரண்டு ஆண் குழந்தை களும் மூன்று பெண் குழந்தைகளும் நிலைத்து நீண்ட ஆயுளுடன் இருப் பார்கள். இவளுக்கு வடக்கு திக்கிலிருந்து புருஷன் வந்து நேரிடுவான். இவள் சுகத்துடன் வாழ்வாள். இதுவரையிலும் இவளுடைய குணதிசயங் களைப் பற்றிச் சொல்லிவிட்டோம். இனிமேல் ஜாதகருடைய ஆண் சகோதரர் களின் விஷயங்களைச் சொல்லுகிறோம். ஓர் ஆண் சகோதரன் கடக ஜன்ம லக்கினத்தில் தேங்காய் என்ற மிருக சீர்ஷ நட்சத்திரத்தில் பிறந்திடுவார். பின்னமில்லாத ஜனனத்தை யுடையவர் என்று சொல்லுகிறோம்.

6. ஜனனமது மால்நிறத்தன் கல்விகொஞ்சம்
செல்லுவான் துணைவிபக்கல் தீரநெஞ்சன்
வினைசெய்யான் கிருஷிசெய்வன் நீட்சியுள்ளான்
வீண்வம்பில் செல்லானும் குறைவுறுதான்
தனையன்தம்பி சொல்கடவான் மனைவி ஒன்று
சாற்றுவோம் சுதரெட்டு ஜனிக்குமம்மா
வினையாகு மூன்றுஎன்றோம் ஆண் பால்மூன்று
வித்தகிமா ரிருவர்ஐந்தும் விருத்திதானே.

**6.** ஜாதகரின் இளைய சகோதரன் மகா விஷ்ணுவினுடைய நிற மாகிய நீல மேக வர்ணம் என்று சொல்லப்பட்ட ஒரு விதமான நிறத்தை யுடைய தேகத்தையுடையவர். இவருக்குப் படிப்பு கொஞ்சமாகவிருக்கும். இவர் தன்னுடைய சகோதரியிடம் போய் விடுவார். இவர் தைரியமான மனத்தையுடையவர். பரப காரியங்களையும் கெட்ட செயல்களையும் செய்ய மாட்டார். நிலத்தில் பயிரிடுந் தொழிலைச் செய்வார். நீண்ட தேகத்தை யுடையவர். வீணை சண்டைக்குப் போகமாட்டார். சௌக்கியக் குறைவும் செல்வக் குறைவும் இல்லாதவராவார். பிள்ளை தம்பி இவர்களுடைய வார்த் தைகளுக்கு மீறி நடக்காதவர். இவருக்கு ஒரே மனைவி தான் உண்டு. பார் வதியம்மையே ! இவருக்கு எட்டுக் குழந்தைகள் பிறக்கும் என்று சொல்லு கிறோம். இவைகளில் மூன்று குழந்தைகள் இறந்துவிடும் என்று சொல்லு கிறோம். ஆண் குழந்தைகள் மூன்றும் பெண் குழந்தைகள் இரண்டும் ஆக மொத்தம் ஐந்து குழந்தைகள் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள்.

**7.** தனவானும் தந்தையில்லம் சாரானுகும்
சாற்றுகிறே மவன்சேதி விவரம் ரண்டில்
ஆளவன்தன் நவஜனனம் அரியாம்ராசி
அதுவின்றி ஓணநாள் அருளுவோமே
ஈனமிலான் கல்வியுண்டு கிருஷிசெய்வன்
இடர்என்றோர் தமைக்காப்ப னீகை யாளன்
தேன்மொழிபோ லுரைத்திடுவான் தந்திரவாதி
திகம்பரன்மேல் பத்தியுள்ளான் தீரநெஞ்சன்.

**7.** ஜாதகரின் இளைய சகோதரன் தனமுள்ளவனுவான். தன் னுடைய தகப்பனுருடைய வீட்டை அடையமாட்டான். இவருடைய மற்ற விஷயங்களை இரண்டாவது பாகத்தில் சொல்லுகிறோம். இன்னொரு இளைய சகோதரனுடைய ஜன்ம லக்கினம் சிம்ம ராசியாகும். இதுவுமன்றி இவ ருடைய ஜன்ம நக்ஷத்திரம் திருவோணம் என்று சொல்லுகிறோம். இவர் குற்றமில்லாதவர். வித்தையுடையவர். விவசாயத் தொழிலைச் செய்வார். தங்களுக்குக் கஷ்டங்கள் இருக்கின்றன என்று சொல்லுகின்றவர்களைக் காப்பாற்றுவார். கொடுக்கும் தன்மையுடையவர். தேனைப் போல இனி மையான வார்த்தைகளைச் சொல்லுவார். தந்திரமுள்ளவர். சிவபெருமான் மேல் பக்தியும் அன்பும் உடையவர். தைரியமான மனதை உடையவர்.

**8.** நெஞ்சிரகன் மனைவிஒன்று சுதராண்ஒன்று
நிமலிரண்டு தீர்க்கமுறும் அவ்வாறுசேதம்
வஞ்சிகள் மோகமுளான் தந்தைமேலாய்
வாழ்குவான் ஒன்ருக வயதும்தீர்க்கம்
தஞ்சமதாய் ஜாதகன்தன் குணத்தைச் சொல்வேன்
சாந்தவான் மால்நிறத்தன் சமமாம்கல்வி
வந்தவரை ஆதரிப்பன் மர்ம்மனுவன்
மானிலத்தில் கிருஷிசெய்வன் மறுத்துக் கூறன்.

8. இவர் இரக்கமுள்ள மனத்தை யுடையவர். இவருக்கு ஒரே ஒரு மனைவி உண்டு. ஓர் ஆண் குழந்தையும் இரண்டு பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளை உடையவர்களாய் இருப்பார்கள். மூன்று குழந்தைகள் இறந்து விடுவார்கள். பெண்களின் மேல் காம ஆசையை யுடையவர். தன்னுடைய தகப்பனுருக்கு மேலான அந்தஸ்தை யுடையவராகவும் ஒன்றுகவும் இருந்து வாழ்வார். இவர் நீண்ட ஆயுளை உடையவர். இனிமேல் ஜாதகருடைய குணுதிசயங்களைப்பற்றிச் சொல்லுகிறேன். இவர் சாந்த குணமுள்ளவர். மகாவிஷ்ணுவின் நிறமாகிய நீலமேக வர்ணத்தைப் போன்ற ஒரு விதமான நிறத்தையுடைய தேகத்தை யுடையவர். நடுத்தரமான வித்தையை யுடையவர். தன்னிடம் வந்தவர்களைக் காப்பாற்றுவார். ரகசியமான மனத்தை யுடையவராவர். இந்தப் பெரிய பூமியில் அல்லது பெரிய நிலங்களில் விவசாயத் தொழிலைச் செய்வார். தடுத்துச் சொல்லமாட்டார்.

9. உண்டி சுகம்வறுமையிலான் பணையேர்விருத்தி
உலகினிலே சல்யமிலான் உண்மைகூறுவன்
குண்டுணிகள் கூறுனும் கடவுள்பக்தி
கொள்ளவும் விற்கவும்வல்லன் குணவானுகும்
பண்டுநாள் பூமிதனை விருத்திசெய்வன்
பதித்திடுவான் சித்திரயில்லம் பாரிதானும்
கண்டிதமாய் மூவேழில் உள்ளூர்மேற்கில்
கனத்ததந்தை துணைவி புத்திரி கருதினேமே.

9. ஜாதகர் சௌக்கியமான சாப்பாட்டை உடையவர். கஷ்டங்களையும் தரித்திரத்தையும் அடையமாட்டார். பயிரிடும் நிலங்களும் ஏர்களும் இவருக்கு விருத்தியாகும். பூமியில் கடன் இல்லாதவர். மெய்யையே பேசுவார். பிறர்மேல் கோள்களைச் சொல்ல மாட்டார். கடவுளின்மேல் பக்தியும் அன்பும் உள்ளவர். வாங்குவதிலும், விற்பதிலும் சாமர்த்திய முள்ளவர். நல்ல குணங்களை உடையவராவார். புராதனமான நிலங்களைப் பயிரிட்டு விருத்தியாக்குவார். அழகான சித்திரங்களுடைய வீட்டைக் கட்டுவார். இவருக்கு இருபத்தோராவது வயதில் * உள்ளூரிலேயே மேற்குத் திக்கிலிருந்து தன்னுடைய தகப்பனுரின் சகோதரியினுடைய பெண் மனைவியாக வந்து சம்பவிப்பாள் என்று சொல்லுகிறேம்.

* **குறிப்பு.—விவாக விஷயம்** :—ஜாதகருக்கு வயது ஷூ 20–0–0 முதல் ஷூ 21–0–0 முடியும் வரையிலும் கேது தசையில் கேது புக்தியும் சுக்கிர புக்தியும் நடக்கின்றன. களத்திரம் சம்மந்தமான அம்சங்கள் ஏழாவது வீடு, இரண்டாவது வீடு, இவ்வீடுகளுக்குடையவர்கள், சுக்கிரன் ஆகிய இவைகளாகும். கேது இரண்டையும் இரண்டிற்குடைய சூரியனையும் பார்க்கின்றுர். இவர் புதனுடைய வீட்டில் இருக்கின்றுர். புதன் இரண்டில் இரண்டிற்குடைய சூரியனுடன் கூடி இருக்கின்றுர். ஆகையால் கேது ஜாதகசந்திரிகை 12-ஆவது சுலோகப் பிரகாரம் புதனுடைய பலனைக் கொடுக்கவேண்டும். ஆகையால் கேது தன் தசையில்

ஜாதகருக்கு விவாகஞ் செய்துவைக்க அமைப்பு உள்ளவராக விருக்கின்றுர். சுக்கிரன் போகஸ்தானமாகிய நான்காவது வீடாகிய துலாத்திற்கு அதிபதியாகவும் களத்திரக்காரகனுமாகியும் களத்திர ஸ்தாஞதிபதியாகிய சனியையும் பார்த்திருக்கின்றுர். ஆகையால் இவருக்குத் தன் புக்தியில் ஜாதகருக்கு விவாகஞ் செய்துவைக்க அமைப்பு இருக்கின்றது. மேலும் களத்திர ஸ்தாஞதிபதியாகிய சனி பிதுர்ஸ்தாஞதிபதியாகிய குருவுடன் சம்மந்தமாகிப் பிதுர் ஸ்தானத்திற்குச் சகோதர ஸ்தானமாகிய மூன்ருவது வீடாகிய ரிஷபத்தைப் பார்ப்பதுடன் அந்த ரிஷபத்தின் அதிபதியாகிய சுக்கிரனையே பார்ப்பதால் தகப்பஞரின் சகோதரியின் பெண் மனைவியாக நேரிடுவதற்கு அமைப்பு இருக்கின்றது.

**10.** கருதுவோ மவள்கு ணத்தை இருநிறத்தாள்
கனத்தபுத்தி உயரமிலாள் கருதாள் பொய்யும்
திருகுசொல்லாள் பாட்டாளி தீரநெஞ்சம்
செல்விதுணை ஆண்காணுள் முன்பெண் ஒன்று
பெரும்தந்தை யிலாளாகும் யோகசாலி
பூமிபொருள் அவள்வழியால் பொருந்துமென்றேம்
உரைக்கிறேம் புத்திரர்கள் ஆண்பால் ரண்டு
உத்தமியு மவ்வாருய் உரைப்பேன் கேளாய்.

**10.** ஜாதகரின் மனைவியினுடைய குண குணங்களைப் பற்றிச் சொல்லுகின்றேம். இரண்டு நிறங்கள் கலந்த நிறமாகிய மாநிறமான தேகத்தை யுடையவள். உயரமானவளல்லள். பொய்யை நினைக்கமாட்டாள். கபடம் கள்ளம் வஞ்சனை இவைகளையுடைய வார்த்தைகளைச் சொல்ல மாட்டாள். கஷ்டப்பட்டு உழைக்கக் கூடியவள். தைரியமுள்ள மனதை யுடையவள். இவளுக்கு ஆண் சகோதரர்கள் கிடையா. இவளுக்கு மூத்த சகோதரி ஒருத்தி உண்டு. இவளுக்கு விவாக காலத்தில் இவளுடைய தகப்பஞர் உயிருடன் இருக்கமாட்டார்*. இவள் யோகத்தை யுடையவள். நிலங்களும் தனமும் இவளுடைய மூலமாக ஜாதகருக்கு வந்துசேரும் என்று சொல்லுகிறேம். இவளுடைய சந்ததியைப் பற்றிச் சொல்லுகிறேம். ஆண் குழந்தைகள் இருவரும் பெண் குழந்தைகள் இருவரும் உண்டு என்று சொல்லுகிறேன். பார்வதியம்மையே! கேட்பீராக.

* **குறிப்பு.—பிதுர் விஷயம் :—**களத்திர ஸ்தானம் ஏழாமிடமாகிய மகர மாகும். இதற்குப் பிதுர் ஸ்தானம் மகரத்திற்குஒன்பதாமிடமாகிய கன்னி. இதற்குடைய புதன் பிதுர்ஸ்தாஞதிபதியாகிப் பிதுர்காரகஞகிய சூரியனுடன் கூடி எட்டில் மறைந்திருப்பது பிதாவுக்குத் தோஷமாகும். பிதுர்ஸ்தானத்தில் அங்காரகனிருப்பதும், அதைச் சனி பார்ப்பதும் தோஷத்தைப் பிதாவுக்கு உண்டுபண்ணக் கூடியதாகும்.

**11.** உரைக்கக்கேள் அன்னைகுணம் மாஞ்சிவப்பள்
உணச்சலுள்ளாள் பெருமையுண்டு உறவோர்க் கன்பள்
குறையில்லாள் சுகஜீவி வறுமைகாணுள்
கோதையும் அயலார்குற்றம் கூருளாகும்

வரும்துணைவர் ஆணென்று தீர்க்க மெய்தும்
மத்தியத்தில் மரணமுறும் மனைவிதோஷம்
திருமகளின் முன்ஜன்மம் செப்பக்கேளாய்
செழிப்புடைய சிறுபாக்காம் கீழ்ப்பால் சிற்றூர்.

**11.** ஜாதகருடைய தாயாரின் குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லு கிறேன் கேட்பீராக. இவள் மாமரத்தின் துளிரின் நிறமாகிய ஒருவித சிகப்பு நிறத்தையுடைய தேகத்தையுடையவள். ஒல்லியான மெலிந்த தேகத்தையுடையவள். மேன்மையையுடையவள். பந்துக்களுக்குப் பிரிய மானவளாய் இருப்பாள். யாதொரு குறைவுகளும் கஷ்டமும் இல்லாதவள். சௌக்கியமாக ஜீவித்திருப்பவள். கஷ்டத்தையும் தரித் திரத்தையும் அடையமாட்டாள். இவள் பிறர்மேல் குற்றங் குறைவு களைச் சொல்லமாட்டாள். இவளுக்கு ஓர் ஆண் சகோதரன் நீண்ட ஆயுளை உடையவன். இந்த ஆண் சகோதரத்தினுடைய மனைவி தோஷத்தினாலே மத்திய வயதில் இறந்துவிடுவாள். ஜாதகரின் தாயா ருடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன், கேட்பீராக. செழிப்புற்றோங்கிய சிறுப்பாக்கம் என்ற ஊருக்குக் கிழக்குத் திக்கிலுள்ள ஒரு சிறிய கிராமத்தில்

**12.** ஊரினிலே கங்கைகுல முதித்துமேலும்
உயர் வான பூமியுண்டாய்ச் சுதர்களுண்டாய்
நாரியாக சுக குடும்பி வாழுந்நாளில்
நாட்டுவோம் வந்தவினை அவ்வூர் தன்னில்
காரிழையின் குலத்துதித்தோள் மாதுபேரில்
காணமல் பதர் வார்த்தைக் கருதினளாம்
போர்புரிந்து இருவருமே யேழைமாது
புகலுகின்றார் மனவெறுப்பால் பின்ஜன்மத்தில்

**12.** ஜாதகரின் தாயார் இந்தச் சிறிய கிராமத்தில் வேளாளர் குலத்தில் பிறந்து நல்ல விலையுள்ள நிலங்களை உடையவளாகவும், குழந்தைகளை உடையவளாகவும், சுகமான குடும்பஸ்தையாகவும் இருந்து வாழுகின்ற காலத்தில் இவளுக்கு வந்து சம்பவித்தப் பாவத்தைப் பற்றிச் சொல்லுகிறோம். இவளுடைய குலத்தில் பிறந்த ஒருவனுடைய ஸ்திரீயின் மேல் தான் பார்க்காத ஓர் இழிவான வார்த்தையை சொல்லி விட்டாளாம். அதன்மேல் இரண்டு ஸ்திரீகளும் சண்டை போடவே, அந்த ஏழை ஸ்திரீ தன்னுடைய மனக்கஷ்டத்தால் சொல்லுகின்றாள் மறு ஜென்மத்தில் ;

**வேறு**

**13.** துணைவிகள் காணு தாயும் சுதற்களும் முதலில் பீடை
பிணையான வார்த்தை உன்மேல் பிறர்சொல்ல வாழ்வா யென்று
துணிவுடன் சொல்லிச் சென்றாள் தொடந்தது அந்தத் தோஷம்
கணிகையு மந்தி யத்தில் கனத்ததோர் தலங்கள் சென்று ;

13. உனக்குச் சகோதரிகள் இல்லாமலும், உன்னுடைய குழந்தைகளுக்கு முதலில் பீடைகள் உண்டாகியும், உன்மேல் பிறர் பொய்யானவும் இழிவானவுமான கட்டுவார்த்தைகளைச் சொல்லும்படியான நிலையில் இருந்தும் நீ வாழக்கடவாய் என்று அந்த ஸ்திரீ துணிந்து தைரியத்துடன் சொல்லிவிட்டுப் போய்விட்டாள். அவள் சொன்ன சாபமான தோஷம் தாயாரை வந்து அடைந்தது. இவள் கடைசிக் காலத்தில் மேன்மையான பெரிய ஸ்தலங்களுக்குப் போய்.

14. காலன்தன் பதிச்குச் சென்று கஞ்சனால் வரையப் பட்டுச்
சீலமாம் குலத்தி லேதான் ஜனித்தன ளிந்த மாது
வேல்விழி மாது சாபம் மேவிற்று இச்சென் மத்தில்
சாலவே துணைப் பெண்காணாள் சந்ததி முதலில் பீடை.

14. பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய் பிரமதேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு நல்லொழுக்க முள்ள குலத்திலே வந்து இவள் பிறந்திருக்கின்றாள். இவளுக்கு இந்த ஜன்மத்தில் சென்ற ஜன்மத்தில் ஏழை ஸ்திரீ கொடுத்தச் சாபம் வந்து அடைந்தது. ஆகையால் இவளுக்குச் சகோதரி கிடையாது. குழந்தைகளுக்கு முதலில் கஷ்டங்கள் உண்டாகும்.

15. துணைவனு மந்தி யத்தில் சோர்ந்திடு மென்று சொல்வோம்
கனமுட னிவள்பின் ஜன்மம் கழறுவோம் காஞ்சி தன்னில்
வினையிலா இக்கு லத்தில் மேவுவாள் வறுமை யின்றிச்
சினமிலா வாழ்வாளாகும் தேவியே மேலுங் கேளே.

15. இவளுடைய சகோதரனும் தன்னுடைய கடைசி காலத்தில் இறந்து விடுவார் என்று சொல்லுகிறோம். இவளுடைய மறு ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். காஞ்சீபுரத்தில் பாபமில்லாத இந்த ஜன்மத்தில் இவள் பிறந்த குலத்தில் (அஃதாவது அருகர் என்ற சமணர் குலத்தில்) பிறப்பாள். கஷ்டங்களும் தரித்திரமும் இல்லாமலும் கோபமில்லாமலும் வாழ்வாள். பார்வதியம்மையே ! இன்னும் நாங்கள் சொல்லுவதைக் கேட்பீராக.

16. தந்தையின் பூர்வம் சொல்வோம் தேயுவின் கீழ்ப்பா லாக
முந்திய பேரூர் தன்னி லுதித்தனன் கங்கை சேயாய்ச்
சந்ததம் பூமி யாலும் தனமது பெருக்க முண்டாய்
வந்திடு மனைவி மைந்தர் வறுமைக ளில்லா வாழ்ந்து ;

16. ஜாதகரின் தகப்பனுருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறோம், தேயுஸ்தலமாகிய திருவண்ணாமலைக்குக் கிழக்குத் திக்கில் உள்ள மேன்மையான ஒரு பெரிய கிராமத்தில் வேளாளர் குலத்தில் ஆணாகப் பிறந்து எப்போதும் நிலங்களினால் செல்வம் அதிகரித்துக் கொண்டு மனைவி மக்களை உடையவராகிக் கஷ்டங்களும் தரித்திரமும் இல்லாமல் வாழ்ந்துகொண்டும்.

17. குருவுப தேசங் கொண்டு கோதையும் தானு மாகப்
பெருநதி தலங்கள் சென்று புக்கின காலன் பக்கல்
பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தன னிக்கு லத்தில்
வறுமைகள் காணு ளுகும் வரைகிறேம் மிவன்பின் ஜன்மம

17. தன்னுடைய ஆசாரியாரிடத்தில் உபதேசங்களைப் பெற்றுக் கொண்டு தானும் தன்னுடைய மனைவியுமாகப் பெரிய நதி தீரங்களுக்கும் ஸ்தலங்களுக்கும் போய பிறகு இறந்து எமபட்டணத்திற்குச் சென்று பிரம தேவனால் பிரம லிபியுடன் எழுதப்பட்டு இந்தக் குலத்தில் வந்து பிறந்திருக் கின்றார். இவருக்குக் கஷ்டங்களும் தரித்திரமும் கிடையா. இவருடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறும்.

18. குடகினில் நதியின் பக்கல் குலவுவா னிக்கு லத்தில்
திடமதாய்க் குடும்பி யாகிச் செல்வனு வாழ்வ ளுகும்
அடைவுட னிவனின் பூர்வ மறைகிறேம் தாயே கேளும்
வடதிசை காஞ்சி தன்னில் வைசிய குலமே தோன்றி ;

18. ஜாதகரின் தகப்பனா குடகு தேசத்தில் ஒரு நதிக்கு அருகில் இந்த ஜன்மத்தில் பிறந்துள்ள குலத்திலேயே பிறந்து ஒரு வலிவான மேன்மையான குடும்பஸ்தராக விருந்து இவர் வாழ்வார். இனிமேல் ஜாத கருடைய முன் ஜென்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். எங்கள் தாயா ரரகிய பார்வதியம்மையே ! கேட்பீராக. வடக்குத் திக்கிலுள்ள காஞ்சீபுரத் தில் வைசிய குலத்தில் பிறந்து ;

19. பலவிதச் செட்டுச் செய்து பாலர்கள் மனைவி யுண்டாய்த்
தலமது தீர்த்தம் தோய்ந்து சங்கரன் தொண்டு செய்து
நிலையிலா ஏழை யோர்க்கு நிமலனு மன்ன மீந்து
உலவினுன் காலன் பக்கல் ஊழ்வினை யில்லா தாகி ;

19. பலவிதமான வியாபாரங்களை ஜாதகர் செய்து மனைவி மக்களை உடையவராகித் திவ்ய ஸ்தலங்களுக்குப் போய்த் தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்து சிவபெருமானுக்குப் பணிகளும் வேலைகளும் செய்து யாதொரு அந்தஸ்துமில்லாத ஏழை ஜனங்களுக்கு இவர் போஜனம் அளித்துப் பிறகு இறந்து எமனிடத்திற்குப் போய் முன் ஜன்மத்திய பாவங்கள் இல்லாத வராகி ;

20. வேதனால் வரையப் பட்டு விளங்கினுன் அருகர் வமிசம்
ஓதுவே னிவனின் யோகம் ஒருபத்து ஆண்டு மேலாய்ச்
சீதள பிறைபோல் யோகம் செழிப்புறும் வறுமை காணுன்
மேதினில் மரண மட்டும் விளங்கிடு மென்று சொன்னேம்.

20. பிரமதேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு அருகர் என்ற சமணர் குலத்தில் பிறந்தார். இவருடைய யோகங்களைப் பற்றிச் சொல்லு கிறேன். இவருக்குப் பத்து வயதிற்கு மேலே வளர்பிறைச் சந்திரனைப் போல

யோகம் அதிகமாகிக் கொண்டே வரும். இவருக்குக் கஷ்டங்களும் தரித்திர மும் கிடையா. பூமியில் இவருக்குத் தன்னுடைய மரணகாலம் பரியந்தம் யோகம் விருத்தியாகும் என்று சொல்லுகிறோம்.

21. தந்தைபின் துணைவர் வேறு சாற்றுவோம் நாலா மாண்டில்
விந்தையாய் யிருபான் மூன்றில் மேவிடு மில்லம் தானும்
வந்தவர்க் கன்ன மீவன் மாநிலம் விருத்தி செய்வன்
கந்தனை யீன்ற மாதே கழறின மொழிகுன் றுது.

21. ஜாதகருக்கு நான்காவது வயதில் இவருடைய தகப்பனு ரின் பின் சகோதரர் வேறு குடும்பமாகப் போய் விடுவார் என்று சொல்லு கிறோம். ஜாதகருக்குத் தனக்கு இருபத்துமூன்றாவது வயதில் ஆச்சரிய மாக ஒரு வீடு வந்து கிடைக்கும். இவர் தன்னிடத்திற்கு வந்தவர்களுக்குச் சாப்பாடு போடுவார். பெரிய நிலங்களைப் பயிரிட்டு விருத்தியாக்குவார். முரு கக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே ! நாங்கள் சொல்லிய வார் த்தைகள் தவறிடாமல் நடக்கும்.

22. முப்பது ஒன்று ஆண்டில் மீனமா தத்தி லேதான்
செப்புவோம் தந்தை கண்டம் சுக்கிரன் தசைகா லத்தில்
ஒப்புடன் ரவியின் புக்தி உறைந்திடும் அந்தக் காலம்
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழிகுன் றுது

22. ஜாதகருக்கு முப்பத்தோராவது வயதில் பங்குனி மாதத்தில் இவருடைய தகப்பனார் இறந்து விடுவார் என்று சொல்லுகிறோம். இவர் இறந்து போகுங் காலத்தில் சுக்கிரதசையில் சூரிய புக்தி நடந்து கொண்டி ருக்கும். நாகப் பாம்பைத் தன்னுடைய சடையில் தரித்துக் கொண்டிருக் கின்ற சிவபெருமானுடைய மனைவியாகிய பார்வதியம்மையே ! நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவருமல் நடக்கும்.

**குறிப்பு.—பிதுர் மாரக விஷயம் :—**பிதுர் லக்கினம் ஒன்பதாம் பாவமா கிய மீனமாகும. மீனத்திற்குச் சனி புதன் சுக்கிரன் சூரியன இவர்கள் பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் மாரகாதிபதிகளா கின்றார்கள். மீனத்திற்குச் சுக்கிரன் எட்டிற்குடையவராகி மாரகஸ்தான மாகிய ஏழாவது வீட்டில் நீசமாகிப் பிதுர்லக்கினாதிபதியாகிய குருவைப் பார்க்கின்றார். ஆகையால் துய்யகேரளம் எட்டாம் பாவம் 14-ஆவது பாடல் பிரகாரமுங் கூட சுக்கிரன் மாரகாதிபதி யாகின்றார். சூரியன் ஏற்கனவே மாரகாதிபதியாகிய புதனுடன் கூடி மீனத்திற்கு ஆறுவது பாவத்தில் இருக் கின்றார். ஆகையால் சுக்கிர தசையில் சூரிய புக்தியில் ஜாதகருடைய பிது ருக்கு மாராகம் நேரிட அமைப்பு இருக்கின்றது.

23. அன்னைக்கு முப்பா னிலில் ஐப்பசி மாதம் தன்னில்
மன்புகர்[1] தசையி லேதான் நிலமகன்[2] புசிப்பில் கண்டம்
இன்னவன் தனக்குக் கண்ட மியம்புவோ மன்பா னறில்
தன்னிலே சாடி மாதம் சாற்றுவோம் கண்டம் தானே.

---

[1] சுக்கிரன். [2] அங்காரகன்.

**23.** ஜாதகருடைய தாயாருக்கு முப்பத்துநான்காவது வயதில் ஐப்பசி மாதத்தில் * சுக்கிர தசையில் அங்காரகனுடைய புக்தியில் மாரகம் நேரிடும். ஜாதகருக்கு ஐம்பத்தாறுவது வயதில் † மாசிமாதத்தில் மரணம் நேரிடும் என்று சொல்லுகின்றோம்.

* **குறிப்பு.—தாய் மாரக விஷயம்**:—மாதுர் லக்கினம் துலாம். பராசர ஹோரை ஜாதக சந்திரிகை இவைகளின் பிரகாரம் சூரியனும் குருவும் மார காதிபதிகள் ஆவார்கள். சுக்கிரன் துலாத்திற்கு ஒன்று எட்டிற்குடையவ ராகி மாரகஸ்தானமாகிய பன்னிரண்டில் நீசமாகி மாரகாதிபதியாகிய குருவையும் பார்த்திருக்கின்றார். மேலும் இவர் மாதுர்ஸ்தானாதிபதி யாகவேவந்து இவருடைய தசை நடக்கின்றது. ஆகையால் துய்யகேரளம் எட்டாம்பாவம் 14-ஆவது பாடல் பிரகாரமும், 82-ஆவது ஜாதகம் 24-ஆவது பாடலின்கீழ் கொடுத்துள்ள வியாக்கியானப் பிரகாரமும் சுக்கிரன் தன் னுடைய தசையில் மாதாவை மாரகஞ்செய்ய அமைப்பு உள்ளவராகவிருக் கின்றார். மேலும் பராசரஹோரையின் சிலபதிப்புக்களில் அங்காரகன்கூட மாரகாதிபதி என்று சொல்லி இருக்கின்றது. அங்காரகன் துலாத்திற்கு ஏழிற்குடைய மாரகாதிபதியாகிப் பன்னிரண்டில் மாரகஸ்தானத்தில் லக்கின அஷ்டமாதிபதியாகிய சுக்கிரனுடன்கூடி இருக்கின்றார். ஆகையால் துய்ய கேரளம் எட்டாம்பாவம் 20-ஆவது பாடல் பிரகாரம் அங்காரகன் தன்னுடைய புத்தியில் மாதாவுக்கு மாரகஞ்செய்ய அமைப்பு உடையவராக விருக்கின்றார்.

† **ஜாதகருடைய மரண விஷயம்.**—இவருக்கு 56-வது வயதில் மாசி மாதத் தில் சந்திரதசையில் ராகுபுக்தி நடக்கின்றது. இங்கு லக்கினாதிபதியின் தசையில் மாரகம் என்று சொல்லி இருப்பது முக்கியமாகக் கவனிக்கவேண் டிய ஒரு விசேஷ அம்சம் ஆகும். பராசரஹோரை, ஜாதகசந்திரிகை இவை களின் பிரகாரம் கடகலக்கினத்திற்குப் புதன் சுக்கிரன் சனி இவர்கள்தான் மாரகாதிபதிகள் ஆகின்றார்கள். சந்திரன் சனியின்காலாகிய பூசநட்சத்திரத் தில் இருக்கின்ற சம்மந்தம் ஒன்றுதவிர மாரகர்களுடன் வேறே எந்த சம்மந் தமும் இல்லை. ஆனால் துய்யகேரளம் எட்டாம் பாவம் 14-ஆவது பாடலில் லக்கினாதிபதிகூட மாரகஞ் செய்துவிடுவார் என்று சொல்லி இருக்கின்றது. மேலும் அந்தஅந்த பாவாதிபதிகூட தன்தசையில் தன் பாவத்திற்குரிய நபருக்கு மாரகத்தை உண்டுபண்ணிவிடுவர் என்று நாம் முன்னமே 82-ஆவது ஜாதகத்தில் 24-ஆவது பாடலின்கீழ் வியாக்கியானத்தில் சொல்லி இருப் பதையும் கவனிக்கவும். ஆகையால் சந்திரன் ஜாதகரைத்தன் தசையில் மாரகம் செய்ய அமைப்பு உள்ளவராகின்றார். ஜாதகசந்திரிகை 12-ஆவது சுலோகப் பிரகாரம் ராகு குருவின் வீட்டில் இருப்பதால் குருவின் பலனைக் கொடுக்கவேண்டும். குரு மாரகாதிபதியாகிய சனியுடன் கூடி இருப்பதால் ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகம். 12-ஆவது சுலோகப் பிரகாரம் ராகு மாரகாதிபதி யாகின்றார். மேலும் ராகு ஆறுவது பாவத்தில் இருக்கின்றார். ஆகையால் ராகு தன் புக்தியில் மாரகஞ்செய்ய அமைப்பு உள்ளவராகின்றார்.

**24.** மறுஜன்மம் இல்லை கீழ்ப்பால் வள்முள பேரூர் தன்னில்
மறையவர் குலமு தித்து மாநில மதிக முண்டாய்
உறைவனு மென்று சொன்னேம் உயரில்லம் நாற்ப தாண்டில்
பிரிதலாம் மொழிதப் பாது புண்ணிய வதியே கேளாய்.

24. ஜாதகர் பின் ஜன்மத்தில் சிதம்பரத்திற்குக் கிழக்குத் திக்கில் உள்ள செழிப்பான ஒரு பெரிய கிராமத்தில் பிராமணருடைய குலத்தில் பிறந்து பெரிய நிலங்களை அதிகமாக உடையவராகி வாழ்வார் என்று சொல்லுகிறோம். மேன்மையான தன்னுடைய வீடு நாற்பதாவது வயதில் * பாகம்செய்யப்படும். நாங்கள் சொல்லியது தவறிடாமல் நடக்கும். பார்வதியம்மையே ! கேட்பீராக.

* குறிப்பு.—வீட்டைப்பாகிக்கும் விஷயம் :—ஜாதகருக்கு வயது ஷ 39-0-0 முதல் ஷ 40-0-0 முடியும் வரையிலும் சுக்கிரதசையில் குரு சனிபுக்தி நடக்கின்றது. வீட்டிற்குரிய நான்காவது பாவத்திற்கு வீட்டிற்குக் காரகராகிய சுக்கிரன் அதிபதியாகி நான்கிற்குப் பன்னிரண்டில் நீசமாகி அங்காரகனுடன்கூடி ஆறுக்குடைய குருவாலும், ஏழு எட்டிற்குடைய சனியாலும் பார்க்கபபட்டிருப்பதால் சுக்கிரதசையில் சனிபுக்தியில் வீட்டைப் பாகித்துக் கொள்ள அமைப்பு இருக்கின்றது.

25. காவலன் ஜனிக்கும் காலே காரியின்[1] தசையி லேதான்
தாவிய ஆண்டு ரண்டும் திங்களு மொன்ப தாகும்
மேவிய ஜாத கர்க்கு விஷரோகம் போலே காணும்
ஆவலாய் விவரம் ரண்டில் அறைகிறோம் கேட்டி டாயே.

25. ஜாதகர் பிறக்கும்போது சனிதசையில் இருப்பு இரண்டு வருஷங்களும் ஒன்பது மாதங்களும் ஆகும். இந்தக்காலத்தில் இவருக்கு விஷரோகம்போல ஒருவித நோய் உண்டாகும். இதனுடைய விவரத்தை நாங்கள் இரண்டாவது பாகத்தில் ஆசையுடன் சொல்லுகிறோம். பார்வதியம்மையே நீர் கேட்பீராக.

26. ஆயமுனி சொல்லுகின்றார் சனிகுரு ஒன்பான் நிற்க
தயையு டனந்தச் சங்கை சாற்றுவீர் முனியே நீர்தாம்
பயமிலாச் சொல்லு கின்றேன் பாலகன் சிறிய தந்தை
வியமாகும் பதினெட் டாண்டில் வாயுவின் பாதை யாலே.

26. ஜயமுனிவர் கேட்கின்றார். சனியும் குருவும் ஒன்பதில் இருப்பதால் உண்டாகும் பலன்களை, முனிவரே ! நீர் சொல்லுவீர் என்று கேட்க, பயப்படாமல் நான் சொல்லுகின்றேன். ஜாதகருடைய சிறிய தகப்பனார் ஜாதகருக்குப் பதினெட்டாவது வயதில் * வாயு நோயால் இறந்து போவார்.

* குறிப்பு.—சிறிய தகப்பனார் விஷயம் :—ஜாதகருக்கு வயது ஷ 17-0-0 முதல் ஷ 18-0-0 முடியும் வரையிலும் புதன் தசையில் குருபுக்தியும் சனிபுக்தியும் நடக்கின்றன. ஜாதகரின் தகப்பனார் ஸ்தானம் மீனம் ஆகும். இதற்கு இளைய சகோதர ஸ்தானம் மீனத்திற்கு மூன்றாவது பாவமாகிய ரிஷபம் ஆகும். ஆகையால் ஜாதகரின் சிறிய தகப்பனாரின் லக்கினம் ரிஷபம் ஆகும். இதற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் சந்திரன் குரு சுக்கிரன் புதன் அங்காரகன் இவர்கள் மாரகாதி

[1] சனி.

பதிகளாகின்றார்கள். புதன் ரிஷபத்திற்கு இரண்டிற்குடைய மாரகாதிபதி யாக விருக்கின்றார்கள். சனி ரிஷபத்தைப் பார்ப்பதுடன் ரிஷபத்திற்கு எட்டிற்குடைய குருவுடன் கூடியும் இருக்கின்றார். ரிஷப லக்கினாதிபதியாகிய சுக்கிரனையும் பார்க்கின்றார். ஆகையால் துய்யகேரளம் எட்டாம்பாவம் 20-ஆவது பாடல் பிரகாரம் சனி தன்புக்தியில் சிறிய தகப்பனாரை மாரகஞ் செய்யும் அமைப்பு உடையவராக விருக்கின்றார்.

27. சுதர்களு மவருக் குண்டோ செப்புவீர் முனியே நீர்தாம்
சதியிலா மூன்றும் தோன்றும் ஷண்முகன் போலா னொன்று
மதிமுகப் பெண்பால் ரண்டு வரைகிறே மவனுக் கேதான்
அதிபன்தன் ஆண்பால் சேதி மான்[1]மகம் தோன்று வானும்.

27. சிறிய தகப்பனாருக்குக் குழந்தைகள் உண்டோ இல்லையோ என்பதை, முனிவரே ! நீரே சொல்லுவீராக. இவருக்கு மூன்று குழந்தை கள் உண்டாகும். ஓர் ஆண்குழந்தை முருகக்கடவுளைப்போலவும், சந்திரனைப் போல அழகான முகங்களை உடைய இரண்டு பெண் குழந்தைகளும் இவருக்கு இருப்பார்கள். இவருடைய ஆண் குழந்தையின் விஷயத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன். இந்த ஆண்குழந்தை மகரலக்கினத்தில் மகநட்சத் திரத்தில் பிறக்கும்.

28. அதுகளில் சங்கை யுண்டு அப்பலன் இரண்டில் சொல்வேன்
இதுவன்றித் துணைவன் ஒன்று ஏகுவான் துணைவி பக்கல்
அதிபனும் தந்தை ஆஸ்தி யடையாதான் பின்பால் சொல்வேன்
நதிசடை அணிந்தோன் நங்கை நாயகி கேட்டி டாயே.

28. இந்தக் குழந்தைகளைப்பற்றிச் சில சந்தேகமான அச்சமான விஷயங்கள் இருக்கின்றன. அந்தப் பலன்களைப்பற்றி இரண்டாவது பாகத் தில் சொல்லுகிறேன். இவைகளுமன்றி, ஜாதகருடைய சகோதரன் ஒருவன் தன்னுடைய சகோதரியிடம் போய்ச் சேர்ந்துவிடுவான். இவர் தன்னுடைய தகப்பனாருடைய சொத்துக்களை அடையமாட்டார். இந்த விஷயத்தைப்பற்றிப் பின்னால் சொல்லுகிறேன். கங்கையைத் தன்னுடைய சடையில் தரித்துக் கொண்டுள்ள சிவபெருமானுடைய மனைவியாகிய பார்வதியம்மையே ! கேட்பீராக.

---

[1] மகரம்.

1. மதி[1]புதன் வீணை[2]யாக மறை[3]சனி கேது நந்தி[4]
உதயனும்[5] வளையலாக[6] உயர்புகர்[7] சேயும்[8] சீயம்[9]
ததிகபிறு[10] தேள[11] தாக ஜன்மமும் அலவன்[12] புக்க
இதுவிதக் கோளும் நின்று லியம்புவீர் பலனைத் தானே.

| | | | |
|---|---|---|---|
| | | குரு சனி கேது | சந்திரன் புதன் |
| | இராசி சக்கரம் | | லக்கினம் சூரியன் |
| | இராசி சக்கரம் | | சுக்கிரன் அங்காரகன் |
| | ராகு | | |

புனர்பூசம் 2-ஆம் பாதம். குருதசை வரு 6-6-0.

1. சந்திரனும் புதனும் மிதுனத்திலும், குருவும் சனியும். கேதுவும் ரிஷபத்திலும், சூரியன் கடகத்திலும், மேன்மையான சுக்கிரனும் அங்காரகனும் சிம்மத்திலும், இராகு விருச்சிகத்திலும், ஜன்மலக்கினம் கடகத்திலும் இருந்து இவ்விதமாகக் கிரகநிலைகள் இருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று ;

குறிப்பு.—இந்த ராசிச்சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச்சக்கர கிரகநிலை பொருத்தமுடையதாகும் :— ரிஷபத்தில் சந்திரனும் சுக்கிரனும் கடகத்தில் சூரியனும், சிம்மத்தில் அங்காரகனும், கன்னியில் குருவும் ராகுவும், மகரத்தில் புதனும் சனியும், கும்பத்தில் கேதுவும் ஆகும்.

2. சுந்தரி கேட்கும் போது சுரர்குரு புகலு கின்றார்
வந்தசேய் ஆணும் ஜன்மம் வடதெற்கு வீதி யாகும்
இந்திரன் வாடை யாகு மீசனு மாயோன் தந்தி
தென்மேலே தங்கு மென்றேம் தீபாஞ்சாலி வடகீ ழாமே.

2. பார்வதியம்மையார் கேட்கும்போது தேவகுருவானவர் சொல்லுகின்றார். பிறந்த குழந்தை ஆண் குழந்தையாக ஜெனனமாகும் பிறந்தவீடு வடக்குத் தெற்கு வீதியில் கிழக்குவாடையில் இருக்கும். சிவ

[1] சந்திரன். [2] மிதுனம். [3] குரு. [4] ரிஷபம்.
[5] சூரிான். [6] கடகம். [7] சுக்கிரன். [8] அங்காரகன்.
[9] சிம்மம். [10] இராகு. [11] விருச்சிகம். [12] கடகம்.

பெருமானுடைய கோயிலும் மகாவிஷ்ணுவினுடைய கோயிலும் விநாயகக் கடவுளின் கோயிலும் தென் மேற்குத்திக்கில் இருக்கும் என்று சொல்லுகிறோம். நெருப்பில் பிறந்த திரௌபதியம்மன் கோயில் வடகிழக்குத் திக்கில் இருக்கும்.

3. குடகினில் மாரி காளி கெடியது உத்தர மாகும்
இடிபடு மனேக மஸ்தான் ஏந்திடும் பேரூ ராகும்
அடைவுடன் செட்டு ஓங்கும் அனேகஜாதிகளும் வாசம்
இடமது கெட்டி யாகும் இவ்வித அடையா ளத்துள்.

3. மேற்குத்திக்கில் மாரியம்மன் கோயிலும் காளியம்மன் கோயிலும் இருக்கும். ஒரு கோட்டை வடக்குத்திக்கில் இருக்கும். அநேக மசூதிகளும் இருக்கும். அஃது ஒரு பெரிய ஊராகும். வியாபாரங்கள் அந்த ஊரில் சிறப்பாக நடந்துவரும். அநேக ஜாதியார் வாசஞ்செய்வார்கள். வலுவானதும் மேன்மையானதுமான ஊராகும் அது. இவ்விதமான அடையாளங்கள் உள்ள ஊரில்;

4. சுந்திர னஞ்சாம் ஜன்மம் தோன்றுவா னிந்தப் பாலன்
தந்தைபின்து ஊணவன் யோகம் சகோதிர களத்தர புத்திரர்
வந்தவன் யோகச் சேதி வளமையாய் முன்பின் ஜன்மம்
முந்திய நவக்கோ ளாலே உரைக்கிறோம் தாயே கேளும்.

4. ஜாதகர் ஐந்தாவது கெர்ப்பத்தில் பிறப்பார். இவருடைய தகப்பனாரின் இளைய சகோதரனுடைய யோகம், சகோதரர், மனைவி, புத்திரர் ஜாதகர் ஆகிய இவர்களுடைய யோகங்களைப் பற்றியும், முன்ஜென்மம் பின் ஜன்மம் ஆகிய இவைகளைப் பற்றியும் முன்சொன்ன ஒன்பது கிரகங்களின் நிலையைக்கொண்டு சொல்லுகிறோம். எங்களுடைய தாயாராகிய பார்வதியம்மையே ! கேட்பீராக.

5. தந்தையின் துணைவ ரெட்டில் ஆண்இரண்டு கன்னி யொன்று
சந்ததம் விருத்தி யென்றோம் தங்காவே மற்ற வெல்லாம்
முந்தின துணையாண் ஒன்று மேவிடும் பின்னாண் ஒன்று
எந்தையே ஆளும் ஜன்ம மியம்புவோம் தந்தை தானே.

5. ஜாதகரின் தகப்பனாருடைய சகோதரர்கள் எட்டுபேரில் இரண்டு ஆண் சகோதரர்களும் ஒரு சகோதரியும் நீண்ட ஆயுளையுடையவர்கள் என்று சொல்லுகிறோம். மற்றைச் சகோதரர்களெல்லாம் நிலைக்காமல் இறந்து போய்விடுவார்கள். தகப்பனாருக்கு ஒரு மூத்த சகோதரனும் ஒரு இளைய சகோதரனும் உண்டு. எங்களை ஆளுகின்ற பார்வதியம்மையே ! ஜனனமானவருடைய தகப்பனாரின் விஷயத்தைச் சொல்லுகிறோம்.

6. செயலதைக் கூறக் கேளாய்த் தீரனும் மால்நி றத்தான்
நயமுள வார்த்தை கூறுவன் நல்லோர்க்கு நல்ல னவன்
பயமிலான் எதிரிக் கஞ்சான் பாருகள் விருத்தி செய்வன்
ஜயம்செய்வ னெடுத்த வேலை சுகபுசிப் புடைய னாமே.

**6.** தகப்பனாரின் செயல்களைச் சொல்லுகிறோம். கேட்பீராக. இவர் தைரியமுள்ளவர். மகாவிஷ்ணுவின் நிறமாகிய நீலமேக வர்ணம் என்று சொல்லப்பட்ட ஒருவிதமான நிறமுடைய தேகத்தையுடையவர். இனிய வார்த்தைகளைச் சொல்லுவார். நல்லவர்களுக்கு நல்லவராக விருப்பார். பயப்படாதவர். சத்துருவுக்குப் பயப்படமாட்டார். நிலங்களைப் பயிரிட்டு விருத்தியாக்குவார். தான் ஆரம்பித்த வேலையைப் பூர்த்திசெய்து ஜயத்தை அடைவார். சுகமான நல்ல போஜனத்தைச் சாப்பிடுவார்.

7. ஈகையும் கொஞ்ச முள்ளா னிருமாமி யென்று சொல்வோம்
நாகரிகங்க ளுள்ளான் நாரணன் பத்தி கொள்வன்
பாகமாய்ப் பேச வல்லன் பணியோர்கள் விருத்தி செய்வன்
போகபாக் கியமு முள்ளான பூமியில் சல்லியம் கொள்ளான்.

**7.** தகப்பனார் கொடுக்குந் தன்மையைக் கொஞ்சமாக உடையவர். இவருக்கு இரண்டு மாமியார்கள் உண்டு என்று சொல்லுகிறோம். இவர் நாகரிகங்கள் உடையவர். மகாவிஷ்ணுவின்மேல் பக்தியும் அன்பும் உடையவர். பக்குவமாகவும் தந்திரமாகவும் பேசுந்திறமையையுடையவர். நிலம், ஏர் இவைகளை விருத்தியாக்குவார். போகமும் சுகமும் செல்வமும் உடையவராவார். பூமியில் இவர் கடன் வாங்கமாட்டார்.

8. அறமதி லிச்சை யில்லான் ஆகாத்தியம் சிலர்க்குச் செய்வன்
மறையவர் மன்னர் நேசன் வாக்குச்சொல் லிரண்டு முண்டு
பொறைசொல்வ னூகசாலி பொருளின்மே லிச்சை யுள்ளான்
நெறியுளான் வசியம் கொள்வன் நிமலியர் மோக வானும்.

**8.** தகப்பனார் தருமஞ்செய்வதில் ஆசையில்லாதவர். இவர் சிலருக்குப் பொல்லாங்கு கெடுதி இவைகளைச் செய்வார். பிராமணர்கள், அரசர்கள் ஆகிய இவர்களிடத்தில் சிநேகமாய் இருப்பார். இரண்டுவிதமான பேச்சுகளைச் சொல்லுவார், அஃதாவது உண்மையையும் பொய்யையும் கலந்து சொல்லுவார். பொறுமையுடன் பேசுவார், நுட்பமான அறிவும் புத்தியுடையவர். பணத்தின்மேல் ஆசையையுடையவர். நன்மார்க்கத்தையுடையவர். பிறரைத் தன்வசமாகச் செய்துகொள்ளுவார். ஸ்திரீகளின்மேல் காம ஆசையையுடையவராவார்.

9. தோத்திரப் பிரிய னாகும் சொல்லினில் கபடு முண்டு
பாத்திர மறிவா னாகும் பலசகாயங்கள் செய்வன்
குத்திரம் செய்வா னாகும் சொன்னஇக் குணத்தா னுக்குச்
சாற்றினம் தாரம் ரண்டில் துதீயமா மாதுக்கேதான்.

9. தகப்பனார் தன்னைப்பற்றிப் புகழ்ந்து பேசுவதில் ஆசையுடையவராவர். தான் சொல்லுகிற வார்த்தைகளில் கள்ளம் வஞ்சனை கபடம் இவைகளை வைத்துப்பேசுவார். இது தகுதியானது, இது தகுதி யில்லாதது என்பதைத் தெரிந்துகொள்ளக்கூடியவர். பலவிதமான உபகாரங்களைச் செய்வார். நூல்களைச் செய்யக்கூடியவர். உபாயம் அறிந்தவர். இயந்திரங்களைச் செய்யக்கூடியவர். இங்குச் சொல்லப்பட்ட குணங்களையுடையவருக்கு ஏற்பட்ட இரண்டு மனைவிகளில் இரண்டாவது பாரியைக்கு ;

10. உதிப்பனு மிவனே யென்றேம் உரைக்கிறேம் துணைவர் தம்மைச்
சதியிலா நவமே தோன்றும் சங்கையாம் நான்கு என்றேம்
மதிநுதல் பெண்பால் ரண்டு வாணது மூன்று தீர்க்கம்
இதுவிதம் முனிவர் கூற ஈச்வரி கேட்க லுற்ருள்.

10. இந்த ஜாதகர் பிறப்பார் என்று சொல்லுகின்றேம். இவருடைய சகோதரர்களைப்பற்றிச் சொல்லுகிறேம். மொத்தம் ஒன்பது சகோதரங்கள் பிறப்பார்கள். இவர்களில் நான்குபேர்கள் சந்தேகமான ஆயுளை உடையவர்கள், அஃதாவது இவர்கள் நான்குபேரும் இறந்துவிடுவார்கள். சந்திரனைப் போன்ற அழகான நெற்றிகளையுடைய இரண்டு பெண்களும், மூன்று ஆண்களும் நீண்ட ஆயுளை உடையவர்களாக இருப்பார்கள். இவ்விதமாக முனிவர் சொல்லவே, பார்வதியம்மையார் கேட்கின்றுர்.

11. முதல்மாதா ஒன்று என்றீர் மொழிகுவீர் அவட்குப் புத்திரர்
அதிகமாய்த் தோன்றிச் சேத மடைந்திடும் ஒருவன் தீர்க்கம்
அதிபனும் சிலநாள் ஒன்ருய் வாழ்ந்துபின் வேருய்ச் செல்வன்
சதியினு லீரே ழாண்டில் சாறுவான் வேற தாக.

11. ஜாதகருக்கு முதல் தாயார் ஒருத்தி உண்டு என்று சொன்னீர், அதத்தாயாருக்குப் பிறக்கும் குழந்தைகளைப் பற்றிச் சொல்லுவிராக. இவளுக்குக் குழந்தைகள் அநேகம் பிறந்து இறந்துவிடும். ஆனல் ஒரு புத்திரன் நீண்ட ஆயுளை உடையவனுக விருப்பான். இவன் சில காலம் ஒன்ருக வாசஞ் செய்து கொண்டிருந்து பின்னல் வேறு குடும்பஸ்தனுகப் பிரிந்து போய்விடுவான். இவ்விதமாகப் பெண் ஜாதியால் ஜாதகருக்குப் பதினன்காவது வயதில் அவன் வேறே குடும்பமாகப் பிரிந்து போய்விடுவான்.

12. வஞ்சனை யில்லா னுகும் மறுமொழி கூறு னுகும்
அஞ்சிடான் எதிரிக் கேதான் யாவர்க்கு நல்லோ னுவன்
பஞ்சுபோல் மனத்தானுகும் பாருகள் விருத்திசெய்வன்
வஞ்சியும் தென்கீ ழாகும் மாதுரு வர்க்க மென்றேம்.

12. ஜாதகர் கள்ளம் கபடு வஞ்சனை இவைகள் இல்லாதவராவர். மறுத்துக்கூறும் வார்த்தைகளைச் சொல்லமாட்டார். சத்துருக்களுக்குப் பயப்படமாட்டார். எல்லோருக்கும் நல்லவனுகவே யிருப்பார். இளகிய மனமுடையவர். நிலங்களை பயிரிட்டு விருத்தியாக்குவார். இவருக்குத் தென் கிழக்குத்திக்கிலிருந்தும் தாய் வழி பந்துவிலிருந்தும் மனைவி வந்து நேருவாள் என்று சொல்லுகிறேம்.

13. சமயோகம் வறுமை காணுன் தன் பணி அதிக மில்லான்
நிமங்களும் வீணு யேற்பன் நிகர்தந்தை பகையுமாவன்
பவமது அதிக முண்டு பாலராண் காணு னுகும்
தவசிபோல் பெண்பா லொன்று சாற்றுவோம் நேத்ர மீனம்.

**13.** ஜாதகர் சமமான நடுத்தரமான யோகத்தையுடையவர். கஷ்டங்களை யும் தரித்திரத்தையும் அடைய மாட்டார். தன்னுடைய ஆடை ஆபரணங் களும் வேலையும் அதிகமாக வில்லாதவர். இவரைப் பற்றிப் பிறர் வீணாகக் கோள் சொல்லுவார்கள். இவருக்குச்சமான தகப்பனும் இவருக்கு எதிரியா கவும விரோதமாகவும் இருப்பார். அதிகமான பாவத்தையுடையவர். இவரு க்கு ஆண் குழந்தை கிடையாது. பண்டாரச்சியைப் போல ஒரு பெண் குழந் தை இருக்கும். இதற்குக் கண் ஊனமாக விருக்கும் என்று சொல்லுகிறோம்.

**14.** பின்சுதர் உதிக்கும் தீதாம் பேசுவோம் விவரம் ரண்டில்
இன்னவன் முன்னுண் ஒன்று இயம்புவோம் தீர்க்க மாக
அன்னவன் குணத்தைச் சொல்வேன் யானையின் நிறத்தா னாகும்,
பின்னமில் லாத தேகம் பித்தச் சூடுடைய னாமே.

**14.** இவருக்குப் பிள்ளைகள் பிறந்தாலும் இறந்து போய்விடும். இதனுடைய விவரங்களை இரண்டாவது பாகத்தில் சொல்லுகிறோம். இவருக்கு முன்னே ஓர் ஆண் சகோதரர் நீண்ட ஆயுளை உடையவனாக விருப்பார். இவருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகிறேன். இவர் யானையின் நிறத்தைப் போலக் கறுத்த நிறமுடைய தேகத்தையுடையவர். ஊனமில்லாத தேகத்தையுடையவர், பித்தசூட்டை உடையவராவார்.

**குறிப்பு.—புத்திரபாவம்:**—புத்திரபாவம் ஐந்தாவது பாவமாகிய விருச்சிக மாகும். அதில் இராகு இருக்கின்றார். அந்த வீட்டைச் சனி ஏழிற்குடைய வராகவும் அஷ்டமாதிபதியாகவும் இருந்து பார்க்கின்றார். சனி ஐந்திற்குடைய வராகிய அங்காரகனுக்கு ஆண்கிரக சம்மந்தம் ஒன்றுங்கிடையாது. ஒன்ப திற்குடையவரும் புத்திரகாரகனுமான குருவும் சனி கேது இவர்களுடன் கூடிப் பெண்ராசியில் இருக்கின்றார். ஆகையால் ஆண் சந்ததிக்கு அதிக தோஷம் இருக்கின்றது.

**15.** பலர்நேயன் செட்டுச் செய்வன் பயிர்த்தொழில் செய்வா னாகும்
பலமாதர் மோக முண்டு பஞ்சைமே லிரக்க மாவன்
கலகத்தில் மனம்வை யாதான் காரியச் சமர்த்த னாகும்
கலவர புத்தி யாவன் கண்முகம் வசிய முள்ளான்.

**15.** ஜாதகருடைய தமயனார் அநேகரிடத்தில் சிநேகமாக விருப்பார். வியாபாரஞ் செய்வார். விவசாயத் தொழிலையுஞ் செய்வாராவர். இவர் அனேக ஸ்திரீகளின்மேல் காம ஆசையை யுடையவர். ஏழைகளிடத்தில் இரக்கமுடையவர். கலகஞ் செய்வதிலும் சண்டை மூட்டுவதிலும் விருப்பமில் லாதவர். காரியங்களைச் செய்து முடிப்பதில் திறமை யுடையவர். இவர் கலவரமானதும் நிலையில்லாததுமான புத்தியை யுடையவர். இவருடைய கண்களும் முகமும் பிறரை வசியப் படுத்திக் கொள்ளுந் தன்மையுடையன வாகும்.

**16.** வித்தையும் சமம தாகும் விவேகியா மிளம னத்தன்
சுத்தவான் அடக்க முள்ளான் சுகதுக்கம் கலந்து வாழ்வன்
பத்தினி நேய னாகும் பாரினில் வறுமை காணன்
புத்தியில் பெரியோ னவன் புராதனம் விருத்தி செய்வன்,

16. ஜாதகருடைய தமயனுருக்குப் படிப்பு நடுத்தரமாக விருக்கும். இவர் புத்தியுள்ளவர். இளகிய மனத்தையுடையவர். பரிசுத்தமானவர். அடக்கமும் பொறுமையும் உடையவர். சௌக்கியமும் கஷ்டமும் இரண்டும் கலந்து அனுபவித்து வாழக்கூடியவர். மனைவியிடத்தில் பிரிய முள்ளவர். பூமியில் தரித்திரத்தை அடையாதவர். அறிவில் பெரியவனுகவும் மேலோனுகவும் இருப்பார். பழைய தனத்தையும் சொத்தையும் விருத்தி யாக்குவார்.

17. பாரியும் வடமே லாகும் பகருவோ மன்னே வர்க்கம்
நாரிக்குச் சுதராண் ரண்டு நாயகி அவ்வாறு தீர்க்கம்
சிரியோர்க் குதவி செய்வன் துணைவரோ டொத்து வாழ்வன்
தீரமாய்ச் சல்லியம் கொள்ளான் ஜனவுப காரி யாகும்.

17. ஜாதகருடைய தமயனுருக்கு மனைவி வடமேற்குத்திக்கிலிருந் தும் தாயாருடைய பந்துக்களிலிருந்தும் வந்து நேரிடுவாள் என்று செல்லு கிறேம். இவளுக்கு இரண்டு ஆண் குழந்தைகளும் இரண்டு பெண் குழந்தை களும் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள். இவர் அறிஞர் களுக்கும் நல்லவர்களுக்கும் உபகாரஞ் செய்வார். தன்னுடைய சகோதரர் களுடன் ஒற்றுமையாக விருந்து வாழ்வார். தைரியமாகக் கடன் வாங்க மாட்டார். ஜனங்களுக்கு உபகாரஞ் செய்பவராக விருப்பார்.

18. பின்துணைப் பெண்பால் சேதி பேசுவோ மிருநி றத்தாள்
முன்கோபம் பின்பு சாந்தம் மூர்க்கத்தை மனதில் வையாள்
தன்வரன் வடமேல் தன்னில் தாய்பிற மகனைச் சேர்வள்
அன்னவள் வறுமை காணுள் அதிகபூ ஷணமு மேற்பள்

18. ஜாதகருடைய இளைய சகோதரியின் குணகுணங்களைப் பற்றிச் சொல்லுகிறேம். இவள் இரண்டு நிறங்கள் கலந்த நிறமாகிய மாநிறமான தேகத்தையுடையவள். முன்னே கோபத்தையடைந்து பின்னுல் சாந்த மாகக் கூடியவள். பிடிவாதத்தையும் கோபத்தையும் தன் மனத்தில் வைத்திருக்கமாட்டாள். இவளுடைய தாயாருடன் பிறந்த அம்மான் இவளுக்குப் புருஷனுக வடமேற்குத்திக்கிலிருந்து வந்து நேருவான். இவள் கஷ்டத்தையும் தரித்திரத்தையும் அடையமாட்டாள். ஆபரணங்களை அதிகமாக உடையவள்.

19. வருவோரை ஆத ரிப்பள் மைந்தர்க ளிருநான் காகும்
பெருமையாய் ஆண்பால் மூன்று பெண்ணது அவ்வாறு தீர்க்கம்
திருகான குணமில் லாதாள் சிறப்புடன் வாழ்வா ளாகும்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

19. ஜாதகருடைய இளைய சகோதரி தன்னிடத்திற்கு வருகின்றவர்களைக் காப்பாற்றுவாள். இவளுக்கு எட்டு குழந்தைகள் பிறக்கும். மேன்மையான சிறந்த ஆண் குழந்தைகள் மூன்றும் பெண் குழந்தைகள் மூன்றும் நீண்ட ஆயுளை உடையவர்களாகவிருப்பார்கள். இவள் கபடமான குணத்தை யுடையவளல்லள். இவள் மேன்மையாகவிருந்து வாழ்வாளாவள். அருமை யான வேதங்களின் முடிவில் விளங்குகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக

20. பின்துணை ஆண்பால் சேதி பேசுவோ மிருநி றத்தான்
தன்சொலே மேன்மை யாகச் சாதிப்பன் வணிபம் செய்வன்
அன்னியர் மெச்ச வாழ்வன் அவனியை விருத்தி செய்வன்
பன்னியே பேச வல்லான் பரவுப காரி யாமே.

20. ஜாதகருடைய இளைய சகோதரருடைய விஷயங்களைப் பற்றிச் சொல்லுகிறோம். இவர் இரண்டு நிறங்கள் கலந்த நிறமாகிய மாநிறமான தேகத்தையுடையவர். தான் சொல்லுகின்ற வார்த்தைகளை உண்மை யானவை என்று வாதித்து ஜயிப்பவராவர். வியாபாரம் செய்வார். பிறர் இவரைப் பெருமையாகப் பாராட்டும் படியாகவிருந்து வாழ்வார். நிலங்களைப் பயிரிட்டுத் தானியங்களை விருத்தியாக்குவார். திறமையாகவும் மிகவும் தேர்ச்சியடைந்தவரைப் போலவும் பேசுஞ் சக்தியை உடையவர். பிறருக்குச் சகாயங்களைச் செய்பவராவார்.

21. தேவதா பத்தி கொள்வன் திருப்பணி செய்வா னுகும்
பாதக மனம்வை யாதான் பலபல செட்டுச் செய்வன்
ஆவலாய் அடுத்தோர் தம்மை ஆதரிப் பானும் சொன்னேம்
நாவுச்சொல் தவரு னுகும் நாட்டுவோ மனைவி யொன்றும்.

21. ஜாதகரின் இளைய சகோதரர் தெய்வபக்தியை யுடையவர். கோயில்களில் வேலைகளைச் செய்பவராவார். பாவமான கெட்ட மனம் இல்லாதவர். அநேகவிதமான வியாபாரங்களைச் செய்வார். தன்னிடம் ஆசையுடன் வந்து சேர்ந்தவர்களைக் காப்பாற்றுவார் என்று சொல்லுகிறோம். தன்னுடைய வாயிலிருந்து வருகின்ற வார்த்தைகளைத் தவருமல் காப்பாற்று வார். இவருக்கு ஒரே மனைவிதான் உண்டு என்று சொல்லுகிறோம்.

22. வடமேல்பால் அணுகு மென்றேம் மைந்தர்க ளாண்பால் ஒன்று
மடமயில் கன்னி ரண்டு மருவிடும் தீர்க்க மாகத்
திடமான குடும்பி யாவன் தந்தைக்குத் தாழ்வு ருதான்
விடவாக்கு அரச ரிஷ்டன் வெற்றியாம் தொடுவ ழக்கு.

22. ஜாதகருடைய இளைய சகோதரருடைய மனைவி வடமேற்குத் திக்கிலிருந்து வந்து நேரிடுவாள். இவருக்கு ஆண் குழந்தை ஒன்றும் பெண் குழந்தைகள் இரண்டும் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள். மேன்மையான குடும்பஸ்தராகவிருப்பார். தன்னுடைய தகப்பனுருடைய அந்தஸ்திற்குத் தாழ்ந்த அந்தஸ்தை அடையமாட்டார். பலிக்கும்படியான கெட்ட வாக்கை உடையவர். அரசர்களுடைய சினேகித ராவார். தான் செய்யும் தொடர்ந்து கொண்டே போகின்ற வியாஜ்யத்தில் ஜயத்தை அடைவார்.

23. கடையவன் சேதி சொல்வேன் காவலர் நேசம் கொள்வன்
படபட நடையு மாவன் பாருகள் விருத்தி செய்வன்
உடன்பிறந் தோர்மே லிஷ்டன் உறுதியாம் மனத்தா னுகும்
நடமிகு காலி விருத்தி நற்சக டுகளு முண்டு.

23. ஜாதகருடைய கடைசியான இளைய சகோதரருடைய விஷயங்களைச் சொல்லுகிறேன். இவர் அரசர்களுடைய சினேகத்தை அடைவார் படபடவென்று வேகமாகவும் சுறுசுறுப்பாகவும் நடப்பார். நிலங்களைப் பயிரிட்டுத் தானியங்களை விருத்தியாக்குவார். தன்னுடன் கூடப்பிறந்தவர்களின்மேல் ஆசை அன்பு இவைகளை உடையவர். வலுவான மனத்தையுடையவராவார். அதிகமான கால்நடைகளை உடையவர். நல்ல வாகன வண்டிகளையும் உடையவர்.

24. பலகலை படிக்க வல்லன் பலமுளை செட்டு ஓங்கும்
விலைமாதர் மோகம் கொள்வன் வீண்வழக் கோரம் சொல்லான்
நலமுளோர் நேசங் கொள்வன் நாதனுர் பத்தி கொள்வன்
உலவிடு நாபிச் சூடு உறுதியா மனத்தா னென்றோம்.

24. ஜாதகரின் கடைசியான இளைய சகோதரர் அநேக விதமான வித்தைகளைப் படித்தறியுஞ் சக்தியை உடையவர். வலுவான பெரிய வியாபாரத்தைச் செய்வார். இந்த வியாபாரம் நாளுக்குநாள் விருத்தியாகும். தாசிகளின்மேல் காம ஆசையை உடையவர். அனுவசியமான வம்பு வழக்குகளில் ஒரு பக்கமாகவிருந்து பொய்ச்சாட்சி சொல்லமாட்டார். நல்லவர்களுடைய சினேகத்தை அடைவார். சிவபெருமானிடத்தில் பக்தியும் அன்பும் உடையவர். வயிற்றில் கர்பச்சூட்டை உடையவர். தைரியமான மனத்தை உடையவர் என்று சொல்லுகிறோம்.

25. துணைவர்க்கு மேலாய் வாழ்வன் சொல்லது மேன்மை யாகும்
மனைவி யுமொன்றே யாகும் மைந்தர்கள் தவத்தி னுலே
கனமுட னுதிக்கு மென்றோம் காளையு மொருவ னுகும்
சினமிலாப் பெண்பால் நான்கு செப்புவோம் தீர்க்க மாக.

25. ஜாதகரின் கடைசியான இளைய சகோதரர் தன்னுடைய சகோதரர்களைவிட மேன்மையான அந்தஸ்திலிருந்து வாழ்வார். இவருடைய வார்த்தைகள் மேன்மையை உடையனவாக விருக்கும். இவருக்கு ஒரே மனைவிதான் உண்டு. இவருக்குக் குழந்தைகள் இவர் செய்யுந் தவத்தின் பயனுகப் பிறப்பார்கள். இவருக்கு ஓர் ஆண் குழந்தையும் நான்கு பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளை உடையவர்கள் என்று சொல்லுகிறோம்.

26. புத்திரி தன்னுல் யோகம் பொருந்திடு மிவனுக் கேதான்
எத்திசைக் கீர்த்தி கொள்வன் எழிலுள தீர்த்தம் தோய்வன்
நித்தியம் சீல னுவன் நுணுக்கமாம் புத்தியாவன்
பத்தினி யோக மென்றோம் பாரியு முள்ளூ ராமே.

26. ஜாதகரின் கடைசியான இளைய சகோதரருக்குத் தன்னுடைய புத்திரியினுல் யோகமுண்டாகும். எல்லாத்திக்குகளிலும் இவருக்குப் புகழும் பெருமையும் உண்டாகும். அழகிய திவ்வியத் தீர்த்தங்களுக்கும் ஸ்தலங்களுக்கும் போய்த் தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்வார். எப்போதும் நல்ல ஒழுக்க

முடையவராவார். நுட்பமான அறிவை உடையவர். மனைவியால் யோக முடையவர் என்று சொல்லுகிறோம். இருவருக்கு மனைவி உள்ளூரிலிருந்தே வந்து நேருவாள்.

27. கடைதுணைப் பெண்பால் சேதி கழறுவோ மூகசாலி
மடமயில் மால்நி றத்தாள் வளமுள குடும்பி யாவள்
அடைவுடன் கல்வி மானும் அகசிய வார்த்தை சொல்வள்
குடதிசை வரனு மெய்தும் குழவிகள் ஆண்பால் மூன்று ;

27. ஜாதகரின் கடைசியான சகோதரியின் விஷயங்களைப்பற்றிச் சொல்லுகிறோம். இவள் நுட்பமான புத்தி உடையவள். இவள் மகாவிஷ்ணுவின் நிறமாகிய நீலமேகவர்ணம் என்ற ஒரு நிறத்தைப் போன்ற நிறத்தையுடைய தேகத்தையுடையவள். சிறந்த குடும்பஸ்தையாக விருப்பாள். வித்தையையுடையவள். வேடிக்கையை உண்டு பண்ணக்கூடிய வார்த்தைகளைச் சொல்லுவாள். இவளுக்குப் புருஷன் மேற்குத் திக்கி லிருந்து வந்து நேரிடுவான். இவளுக்குக் குழந்தைகள் மூன்று ஆண்களும் ;

28. பெண்ணது ஒன்றே யாகும் பிரியமாய் வார்த்தை சொல்வள்
வணணமாய்ப் பணிகள் பூண்பள் வரன்மனம் போல வாழ்வள்
தண்மையாம் குணத்தா ளாகும் சாதமு மன்பா யீவள்
விணணவர் பத்தி பூண்பள் மேதினியில்நன் னடக்கை யுள்ளாள்.

28. ஒரு பெண்ணும் இருக்கும். இவள் ஆசையாக வார்ததைகளைச் சொல்லுவாள். அழகான ஆபரணங்களையும் ஆடைகளையும் அணிந்து கொள்ளுவாள். தன்னுடைய புருஷனின் மனத்திற்குத் தகுந்தபடி ஒற்றுமையாயிருந்து வாழ்வாள். சாந்தமான நல்ல குணத்தையுடைய வளாவாள். பிறருக்குச் சாப்பாட்டை ஆசையுடன் கொடுப்பாள். தேவர் களின்மேல் பக்தியும் அன்பும் உள்ளவள். பூமியில் நல்ல நடவடிக்கை உடையவளாவாள்.

29. வரன்முன்னே மரண மாவள் மைந்தரால் பெருமை பூண்பள்
திருமகள் யோக சாலி செல்வியால் வரனின் யோகம்
பிறையது போலே காணும் பூமியில் நல்லோ ளாவள்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

29. ஜாதகரின் கடைசித் தங்கை தன்னுடைய புருஷனுக்கு முன்னே இறந்து விடுவாள். இவள் தன்னுடைய பிள்ளைகளால் மேன்மை யான அந்தஸ்தை அடைவாள். இவள் யோகத்தை உடையவள். இவளால் இவளுடைய புருஷனுக்கும் யோகம் வளர்பிறைச் சந்திரன் வளருவது போல வளர்ந்து வரும். இவள் பூமியில் நல்லவளாக விருப்பாள். கருப்பு மதயானை முகத்தையுடைய விநாயகக்கடவுளைப் பெற்றெடுத்த பார்வதி யம்மையே ! கேட்பீராக.

30. ஜாதகர் நிறம்கு ணத்தைச் சாற்றுவோ மூக சாலி
பாதக மில்லா னாகும் பயிர்த்தொழில் உடைய னாகும்
மேதினி விருத்தி செய்வன் மேன்மையாய்க் குடும்பி யாவன்
சூதிலான் பெருமை யுண்டு சொல்லிலே கபடு முண்டு.

30. ஜாதகருடைய நிறத்தையும் குணாதிசயங்களையும் பற்றிச் சொல்லு கிறோம். இவர் நுட்பமான புத்தி உடையவர். கபடம் கள்ளம் வஞ்சனை இவைகள் இல்லாதவராவார். விவசாயத் தொழிலை உடையவராவார். நிலங்களைப் பயிரிட்டுத் தானியங்களை விருத்தியாக்குவார். மேன்மையான குடும்பஸ்தராக விருப்பார். உபாயம் இல்லாதவர் மேன்மையான அந்தஸ்தையுடையவர். தான்சொல்லும் வார்த்தைகளில் வஞ்சனை இருக்கும்.

31. பெருமையும் புகழு மூண்டு பிதாவுக்குச் சமமாம் யோகம்
கிருஷியால் மேன்மை யாவன் கௌரவ குடும்பி யாவன்
பறைபள்ளு முடைய னுயன் பாட்டாளி பணையோர் விருத்தி
குறையிலான் பாக்கிய வானும் கல்வியும் சமமா மென்றோம்.

31. ஜாதகர் மேன்மையையும் கீர்த்தியையும் உடையவர். இவருக்குத் தன்னுடைய தகப்பனாருக்குச் சமமான யோகம் உண்டு. விவசாயத்தால் சிறப்பை யடைவார். கௌரவமான அந்தஸ்தையுடைய குடும்பஸ்தராக விருப்பார். மேளவாத்தியமும் ஆள்படைகளும் உடையவராவர். கஷ்டப்பட்டு உழைக்கக்கூடியவர். நிலங்களும் ஏர்களும் விருத்தியாகும். தனக்குச் சௌக்கியக் குறைவும் கஷ்டங்களும் இல்லாதவர். செல்வமுடையவ ராவார். நடுத்தரமான படிப்பை உடையவர் என்று சொல்லுகிறோம்.

32. பாரியும் குடகு திக்குப் பத்தொன்ப தாண்டு தன்னில்
சீரியே பராசர் சொல்வார் சுபமது இருபா னொன்றில்
நாரியும் வாய்க்கு மென்றோம் நல்காது முன்சொல் காலம்
கூறுவோ மவள்கு ணத்தைப் புன்சிரிப் புடைய ளாகும்.

32. ஜாதகருக்குப் பத்தொன்பதாவது வயதில் மனைவி மேற்குத் திக்கிலிருந்து வந்து நேரிடுவாள். இவ்விதமாகச் சொல்ல, பராசரமுனி வர் கோபத்துடன் மறுத்துச் சொல்லுகின்றார். ஜாதகருக்கு இருபத் தோராவது வயதில் விவாகம் நடக்கும். மனைவியும் வந்து சேருவாள் என்று சொல்லுகிறோம். முன்னே சொல்லப்பட்ட காலமாகிய பத்தொன்ப தாவதாண்டில் விவாகம் நடக்காது. மனைவியினுடைய குணாதிசயங்களைச் சொல்லுகிறோம். இவள் புன்சிரிப்புத் தவழும் முகத்தை உடையவளாவாள்.

**குறிப்பு.—ஜாதகருடைய விவாக விஷயம்** :—ஜாதகருக்கு வயது ஷ்ட் 20–0–0 முதல் ஷ்ட் 21–0–0 முடியும் வரையிலும் சனி தசையில் அங்காரக புக்தியும் இராகு புக்தியும் நடக்கின்றன. சனி களத்திர ஸ்தான மாகிய ஏழாம் பாவமாகிய மகரத்திற்கு உடையவராகிப் பதினொன்றில் பாக்கியாதிபதியாகிய குருவுடன்கூடி போகக்காரகனாகிய இராகுவால் பார்க்கப் பட்டு லக்கினத்தைப் பார்க்கின்றார். ஆகையால் சனி தன்னுடைய தசையில் ஜாதகருக்கு விவாகஞ்செய்து வைக்க அதிகாரமுடையவராக விருக்கின்றார். அங்காரகன் பத்திற்குடையவராகி மனைவி விஷயமாகச் சம்மந்தமுள்ள குடும்பஸ்தானமாகிய இரண்டாவது வீட்டில் களத்திரகாரகனும் போக

ஸ்தானமாகிய நான்கிற்குடையவருமான சுக்கிரனுடன் கூடி போககாரக ளுகிய ராகுவையும் பார்க்கின்ருர். ஜாதகபாரிஜாதம் 14-ஆவது அத்தியாயம் 29-ஆவது சுலோகப் பிரகாரம் அங்காரகன் பத்தாவது பாவாதிபதியாய் இருப்பதால் இவருக்குத் தன் புக்தி காலத்தில் ராகுவைவிடவும் சந்திரனே விடவும் விவாகம் செய்துவைக்க அதிகமான பலமும் அமைப்பும் இருக் கின்றது. பத்தொன்பதாவது வயதில் சந்திர புக்தி நடக்கின்றது.

33. மான்விழி மூர்க்கம் கொஞ்சம் வரன் மனம் போலே வாழ்வள்
தேன்மொழி யூக சாலி ஜனபந்து மெச்ச வாழ்வள்
தானமும் தருமம் கொஞ்சம் சந்தேக மனத்தா ளாகும்
ஊனமில் லாதா ளென்ருேம் உரைக்கிருேம் புத்திர பாவம்.

33. ஜாதகருடைய மனைவி மானின் கண்களைப் போன்ற அழகான கண் களை உடையவள். இவளுக்குக் கொஞ்சம் முரட்டுத்தனமானதும், அறிவில் லாததுமான குணம் உண்டு. தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற்போல் விருந்து வாழ்வாள். கொஞ்சம் தானதருமத்தையும் செய் வாள். சந்தேகமான மனத்தை உடையவளாவாள். அங்கஹீனம் ஒன்றும் இல்லாதவள் என்று சொல்லுகிருேம். சந்ததியைப்பற்றிச் சொல்லுகிருேம்.

34. புத்திர விருத்தி தன்னைப் புகலவே பலத்தைக் காணேம்
சித்தமா யுதித்தா லுந்தான் தீங்காகு மென்று சொல்வோம்
இத்தகர் முனிவர் கூற ஈச்வரி கேட்க லுற்ருள்
வித்தகன் தனக்குப் புத்திரர் விளங்காத கார ணம்சொல்.

34. ஜாதகருக்குப் புத்திரர்கள் பிறப்பார்கள் என்று சொல்ல யாதொரு வலுவும் கிடையாது. ஒரு சமயம் குழந்தைகள் பிறந்தாலும் அவர்கள் இறந்து விடுவார்கள் என்று சொல்லுகிருேம். இவ்விதமாக முனி வா சொல்ல, ஜாதகருக்குக் குழந்தைகள் பிறந்து உயிருடன் இல்லாமல் இருப்பதற்குக் காரணங்களைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்கின்ருர்.

35. அஞ்சினில் ராகு நிற்க அந்தணன்[1] காரி[2] பார்க்கத்
துஞ்சிடும் மதலை யென்ருேம் ஜயமுனி கூறு கின்ருர்
மிஞ்சிய பத்தோன் லாபோன் விருவரும் குடும்பம் தங்கத்
தஞ்சமாய் குடும்ப விருத்தி சாற்றினே மிவனுக் கேதான்.

35. ஐந்தாவது பாவத்தில் இராகு இருப்பதாலும், இந்த ஐந்தா வது வீட்டைக் குருவும் சனியும் பார்ப்பதாலும் குழந்தைகள் இறந்துவிடும் என்று சொல்லுகிருேம். ஜயமுனிவர் தடுத்துச் சொல்லுகின்ருர். பத்திற் குடையவராகிய அங்காரகனும், பதினென்றிற்குடையவராகிய சுக்கிரனும் குடும்பஸ்தானமாகிய இரண்டாவது வீட்டில் இருப்பதால் ஜாதகருக்குக் குடும்பம் விருத்தியாகக்கூடிய குழந்தைகள் உண்டு என்று சொல்லுகிருேம்.

---

[1] குரு [2] சனி.

36. மரித்தவர் கூறு கின்ருர் மாரன்முன் செய்பாவத்தால்
உரைத்திட்டோம் புத்திர தோஷம் உரைப்பீர்கள் பலத்தை நீங்கள்
திருமகள் பூர்வம் கேளாய்த் திருவள்ளூர் தன்னிலேதான்
பெருமையாய் வடுகர் வமிசம் பிறந்தவ னிவனே யம்மா.

36. இதன்மேல் முன் சொல்லிவந்த முனிவர் சொல்லுகின்ருர். ஜாதகர் முன் ஜன்மத்தில் செய்த பாவத்தின் பலஞக இவருக்குப் புத்திர தோஷம் உண்டு என்று சொல்லிஞேம் என்று சொல்ல, அந்தப் பாவத்தைப் பற்றிய விவரங்களை நீங்கள் சொல்லுவீர்கள் என்று பார்வதியம்மையார் கேட்க, ஜாதகருடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன், பார்வதியம்மையே ! கேட்பீராக என்று முனிவர் சொல்லுகின்ருர். திருவள்ளூரில் மேன்மையான தெலுங்கர் குலத்தில் ஜாதகர் பிறந்தார் என்று சொல்லுகிருேம். பார்வதியம்மையே ! கேட்பீராக.

37. செட்டுகள் பலவாய்ச் செய்து சேயிழை மதலை யுண்டாய்க்
கட்டமில் லாமல் வாழுங் காலத்தில் ஊழைச் சொல்வேன்
துட்டமாம் மனைநா கம்தான் தோன்றிற்று வெளியில் ஓர்நாள்
மட்டமாம் புத்தி யாலே வாட்டிஞன் கழியி ஞலே.

37. ஜாதகர் முன் ஜன்மத்தில் அநேகவிதமான வியாபாரங்களைச் செய்து மனைவி மக்களை உடையவராகிக் கஷ்டங்கள் ஒன்றும் இல்லாமல் வாழ்ந்துக்கொண்டிருக்கின்ற காலத்தில் இவருக்கு உண்டான வினையைச் சொல்லுகிறேன். ஒரு தினத்தில் ஒரு மனையில் வாசஞ் செய்து கொண்டு வந்த கொடுமையான ஒரு நாகப்பாம்பு மனையைவிட்டு வெளியே வந்தது. அதை ஜாதகர் மந்த புத்தியிஞல் தடியால் அடித்தார்.

38. காலன்தன் பதிக்குச் செல்லக் கலந்தது அந்தத் தோஷம்
ஞாலம்மே லின்னு மொன்று நவிலுவோம் கேளும் தாயே
வேல்விழி விதவை தன்னை யிரவினில் அரசின் கீழே
சாலவே நாகம் நிற்கும் சத்தியை போகம் செய்தான்.

38. அடிபட்ட அந்தச் சர்ப்பம் இறந்து எமபட்டணத்திற்குப்போய் விட்டது. அதஞல் அந்தத் தோஷம் ஜாதகருக்கு வந்து சம்பவித்தது. பூமியில் இன்னெருசாபம் இவருக்கு நேர்ந்தது. அதைச் சொல்லுகிருேம். பார்வதியம்மையே ! கேட்பீராக. அரசமரத்தின்கீழே நாகப்பிரதிஷ்டை செய்யப்பட்டு இருந்தவிடத்தில் ஒரு நாள் இரவில் ஜாதகர் ஒரு விதவை ஸ்திரீயுடன் சம்போகஞ் செய்தார்.

39. அதுவொரு தோஷ மாச்சு அகதியோர் சாப மொன்று
அதிபனுக் கடைந்ததென்ருேம் அந்திய காலம் தன்னில்
சுதர்களும் விரோத முற்றுத் திருமாலின் தொண்டு பூண்டு
விதியது முடியும் காலை பேதியால் மரண மாகி ;

39. அதுவும் ஒரு தோஷமாக நேர்ந்தது. இதுவுமன்றி ஒரு திக்கற்ற வணுகிய தரித்திரனுடைய சாபமும் ஜாதகரை வந்து அடைந்தது என்று சொல்லுகிருேம். தன்னுடைய கடைசி காலத்தில் தன்னுடைய பிள்ளைகளும்

தனக்கு விரோதிகளாகிப் பிறகு மகாவிஷ்ணுவிற்கு வேலைகளைச் செய்து அவரிடத்தில் பக்தியுடையவராகித் தனக்கு ஆயுள் முடியுங் காலத்தில் பேதியால் இறந்து ;

40. வேதனால் வரையப் பட்டு விளங்கின னிந்தப் பாலன்
நீதியாய் நாக சாபம் நேர்ந்தது இவனுக் கேதான்
ஓதுவேன் சாந்தி தானும் உயரமாம் அரசின் கீழே
ஆதிசே டனையே செய்து அந்தணர் முப்பானோர்க்கு ;

40. பிரமதேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் ஜாதகர் வந்து பிறந்திருக்கின்றார். நியாயமாக நாகப்பாம்பின் சாபதோஷம் ஜாதகருக்கு வந்து சம்பவித்தது. அதற்கு ஒரு சாந்தியைச் சொல்லுகின்றேன். ஒரு சிரேஷ்டமானதும் உயரமானதுமான அரசமரத்தின் கீழே ஆதிசேஷனைப் பிரதிஷ்டை செய்து முப்பது பிராமணர்களுக்கு ;

41. அன்னமு மன்பா யீந்து ஆதிமால் வள்ளூ ருக்கு
இன்னவன் மனைவி யோடு யேகியே அபிஷே கித்துக்
கண்ணனின் பாதத்திற்கே கமலத்தால் அர்ச்சித் தேத்தித்
தன்நகர டைந்த யின்னோர் திங்களில் ஏகா தசி ;

41. ஆசையுடனும் அன்புடனும் போஜனம் கொடுத்து மகாவிஷ்ணு உள்ள முன் சொல்லிய திருவள்ளூருக்குத் தன்னுடைய் மனைவியுடன்போய் அவருக்கு அபிஷேகஞ் செய்வித்துத் திருமாலினுடைய பாதங்களுக்குத் தாமரைப் புஷபத்தால் அர்ச்சித்துத் தொழுது பிறகு தன்னுடைய பட்டணத்திற்குத் திரும்பிப்போய் ஒவ்வொரு மாதத்திலும் ஏகாதசியில் ;

42. விரதமூ வாண்டு சொன்ன வினைநீங்கிச் சுதர்க ளெய்தும்
மருமமாய்ச் செய்யா னாகில் மதலைகள் தோஷ மெய்தும்
முறைபோலே செய்வா னாகி லுதித்திடு மாண்பால் ஒன்று
திருமக ளொப்ப தாகச் செல்வதி யிரண்டும் தீர்க்கம்.

42. மூன்று வருஷகாலம் விரதம் அனுஷ்டித்து வந்தால் முன் ஜன்மத்திய சாபதோஷம் விலகி குழந்தைகள் பிறந்து வளரும். இந்தச் சாந்தியைச் செய்யாமல் இரகசியமாய் இருந்துவிட்டால் குழந்தைகள் தோஷத்தை அடைந்து இறந்துவிடும். நாம் சொல்லிய வழிப் பிரகாரம் சாந்தியைச் செய்தால் ஓர் ஆண் குழந்தையும் இலட்சுமியைப் போன்ற இரண்டு பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளை உடையனளாக விருப்பார்கள்.

43. அன்னையின் குணத்தைச் சொல்வே னழகுளா ளுணைச்சல்தேகி
முன்கோபம் சாந்த முண்டு உண்மையாம் மனத்தா ளாகும்
தன்தேகம் பித்தச் சூடு தானவள யோகசாலி
அன்னியர் மதிக்க வாழ்வள் அவளில்லம் வடமே லாகும்.

43. ஜாதகரின் தாயாருடைய குணதிசயங்களைப் பற்றிச் சொல்லு கிறேன். இவள் அழகானவள். மெல்லிய தேகத்தை யுடையவள். முன்கோபத்தை உடையவள். இந்த முன்கோபம் உடனே சாந்தமாகி விடும். உண்மையான நல்ல மனத்தை உடையவள். இவள் பித்தச்சூட்டுத் தேகத்தை உடையவள். யோகமுடையவள். பிறர் இவளை மதிக்கும்படியான நிலையிலிருந்து வாழ்வாள். இவளுடைய தாயின் வீடு வடமேற்குத் திக்கில் இருக்கும்.

44. ஆண் துணை யிரண்டு தீர்க்கம் அவ்வாறே பெண்பா லாகும்
பூணுவோ மன்னை பூர்வம் பிருதிவி தலத்தி லேதான்
காணவே வன்னிய வமிசம் காதலி யுதித்து மேலும்
வாணிபம் காய் கிழங்கு வறுமைக ளில்லா வாழ்ந்து ;

44. ஜாதகரின் தாயாருடைய சகோதரர்களில் இரண்டு ஆண் களும் இரண்டு பெண்களும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். தாயாருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறோம். பிருதிவி ஸ்தலம் என்று சொல்லப்பட்ட காஞ்சீபுரத்தில் வன்னியர் குலத்தில் இவள் பிறந்து காய் கிழங்கு இவைகளில் வியாபாரஞ் செய்து தரித்திரமும் கஷ்டமு மில்லாமல் வாழ்ந்து ;

45. அறமதி லிச்சை யுண்டாய் அதிதிகட் கன்ன மீந்து
மறலியின் பதிக்குச் சென்று மால்மகன் வரையப் பட்டுத்
திருக்காஞ்சி மேல்பா லாக ஜனித்தனள் சீல மின்றி
வருங்கங்கைக் குலமாமென்றோம் மறு ஜன்மம் புகலு வோமே.

45. தருமஞ் செய்வதில் ஆசையுடையவளாகிப் பரதேசிகளுக்குச் சாப்பாடு போட்டு இறந்து எமபட்டணத்திற்குப்போய் மகாவிஷ்ணுவின் மகனாகிய பிரமதேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு அழகிய காஞ்சீபுரத் தின் மேற்குப் பாகத்தில் நல்லொழுக்கமில்லாத ஒரு வேளாளர்குலத்தில் பிறந்தாள் என்று சொல்லுகிறோம். இவளுடைய பின் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம்.

46. உத்தரம் தணிகை தன்னில் உதிப்பளாம் ரெட்டி வமிசம்
சித்திரப் பணி களுண்டாய்ச் சிறப்பான குடும்பி யாவள்
குத்தமில் லாமல் வாழ்வள் கூறின மொழி குன்றாது
வித்தகன் தந்தை பூர்வம் விளம்புவோம் கேட்டி டாயே.

46. வடக்குத் திக்கில் திருத்தணியில் ரெட்டியாருடைய குலத்தில் ஜாதகருடைய தாயார் பிறப்பாள். அழகான ஆபரணங்களும் ஆடைகளும் உடையவளாகி மேன்மையான குடும்பஸ்தையாகி எவ்விதப் பாபமும் குறைவும் இல்லாமல் வாழ்வாள். நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறாமல் நடக்கும். ஜாதகரின் தகப்பனாருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறோம். பார்வதியம்மையே ! கேட்பீராக.

47. தில்லையின் மேல்பா லாக சிறுவூரில் முத்திரிய வமிசம்
எல்லைக ளதிக முண்டா யிவன் பந்து புகழ வாழ்ந்து
எல்லையை அளந்தோன் பத்தி யிவனுமே வாழுந் நாளில்
அல்லலைச் சொல்லு கின்றேன் அம்பிகை யாளே கேளாய்.

47. ஜாதகரின் தகப்பனார் தில்லை என்று சொல்லப்பட்ட சிதம்பரத்தின் மேற்குத் திக்கிலுள்ள ஒரு சிறிய கிராமத்தில் முத்திரியர் குலத்தில் ஆணாகப் பிறந்து அனேக நிலங்களை உடையவராகிப் பந்துக்கள் தன்னைப் புகழ்ந்து பேசும்படியான நிலையிலிருந்து வாழ்ந்து மகாவிஷ்ணுவின் மேல் பக்தியும் அன்பும் உடையவராகி வாழுகின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்தக் கெடுதியைச் சொல்லுகின்றேன். பார்வதியம்மையே! கேட்பீராக.

48. மனைவியின் வார்த்தை கேட்டு வரும்துணை விரோதம் பேசிப்
பிணையாக ஒட்டி விட்டான் புக்கிற்று அதுவோர் தோஷம்
தமையனை மோசம் செய்தான் தாய் தந்தை விரோதம் செய்தான்
கனமுள அந்தத் தோஷம் கழறுவோம் தாயே கேளும்.

48. தகப்பனார் தன்னுடைய மனைவியின் பேச்சைக் கேட்டுத் தன்னுடன் கூடப்பிறந்த சகோதரனிடத்தில் விரோதத்துடன் பேசி அவனைத் தன் இஷ்டம்போல் வீட்டைவிட்டு வெளியே போகும்படியாக ஓட்டிவிட்டார். அதனால் ஒரு தோஷம் வந்து நேர்ந்தது. தன்னுடைய மூத்த சகோதரனை ஏமாற்றி விட்டார். தாய் தகப்பனார்களுக்கு விரோதமாக நடந்துகொண்டார். வலுவான அந்தத் தோஷம் உண்டாயிற்று. எங்கள் தாயாராகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லுகிறோம். கேட்பீராக.

49. மரலியின் பதிக்குச் சென்று மால்மகன் வரையப்பட்டு
பெருமையில்லாத கங்கை சேயாய்ப் பிறந்தன னிவனே யம்மா
உரைந்தது முன்னூழ்ச் சாபம் உரைக்கிறோம் மனைவி ரண்டு
திருமகள் யோக மெய்தும் செப்புவோம் பின்ஜன் மத்தை.

49. ஜாதகரின் தகப்பனார் இறந்து எமபட்டணத்திற்குப்போய் மகாவிஷ்ணுவினுடைய மகனாகிய பிரமதேவனால் பிரமலிபியுடன் எழுதப் பட்டு மேன்மையில்லாத ஒரு வேளாளர் குலத்தில் ஆண் குழந்தையாகப் பிறந்தார் இந்தத் தகப்பனார். பார்வதியம்மையே! இவருக்கு முன் ஜன்மத்திய சாபம் வந்து நேர்ந்தது. இவருக்கு இரண்டு தாரம் உண்டாகும். மனைவியின் யோகம் இவருக்கு உண்டாகும். இவருடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறோம்.

50. அரங்கமா நகரம் தன்னில் அந்தணர் குலமு திப்பான்
பராசரும் கேட்க லுற்றார் பாலக னிச்சென் மத்தில்
அறமதி லிச்சை யின்றி அவன்பொரு ளாசை வைத்து
இடரான குணத்த னுக்கு முன்குலம் உதிக்கும் வண்மை.

50. ஜாதகருடைய தகப்பனார் ஸ்ரீரங்கத்தில் பிராமணர் குலத்தில் மறு ஜன்மத்தில் பிறப்பார். அதன் மேல் பராசரமகரிஷி கேட்கின்றார். இவர் இந்த ஜன்மத்தில் தருமத்தில் ஆசையில்லாமல் இருந்தும் பணத்தின் மேல் ஆசையுடையவராயிருந்தும் கெட்ட குணங்களை உடையவராக விருந்தும் இவருக்கு முதல் குலமாகிய பிராமணர் குலத்தில் பிறக்கும் பாக்கியம் ;

51. எப்படிச் சொல்லு மென்ன இடருக ளனந்தம் செய்தும்
அப்பணி துயில்வோனுக்கும் அர்ச்சிப் பதாலே நேரும்
முப்பது ஆண்டு தன்னில் மேடமா தத்திலேதான்
செப்புவோம் தந்தைகண்டம் செல்வதி மேலுங் கேளே.

51. எந்தக் காரணத்தினால் ஏற்பட்டது என்பதைச் சொல்லுவீர் என்று கேட்க, இவர் அனேக கெட்டக் காரியங்களைச் செய்திருந்தும் இவர் ஆதிசேஷனின் மேல் படுத்துத் தூங்குகின்ற மகாவிஷ்ணுவிற்கு அர்ச்சனை செய்ததாலே இவருக்குப் பிராமணர் குலத்தில் ஜனனம் ஏற்படும். இவருக்கு முப்பதாவது வயதில் * சித்திரை மாதத்தில் இவருடைய தகப்பனார் இறந்து போய்விடுவார் என்று சொல்லுகிறோம். பார்வதியம்மையே நாங்கள் இன்னும் சொல்லுவதைக் கேட்பீராக.

* குறிப்பு.—பிதுர் மாரகம்:—ஜாதகருக்கு வயது ஞூ 29–0–0 முதல் ஞூ 30–0–0 முடியும் வரையிலும் புதன் தசையில் சுக்கிர புக்தி நடக்கின்றது. பிதுர் லக்கின பாவமாகிய ஒன்பதாம் வீடாகிய மீனத்திற்குப் புதன் சுக்கிரன் சனி சூரியன் இவர்கள் பராசரஹோரை, ஜாதக சந்திரிகை இவைகளின் பிரகாரம் மாரகாதிபதிகள் ஆகின்றார்கள். மேலும் புதன் மாரகஸ்தானமாகிய ஏழிற்குடையவராகி சுகஸ்தானத்தில் சந்திரனுடன் கூடி இருக்கின்றார். சுக்கிரன் மாரக ஸ்தானங்களாகிய மூன்று எட்டிற்குடையவராகி ரோக ஸ்தானத்தில் இருக்கின்றார். ஆகையால் துய்யகேரளம் எட்டாம் பாவம் 14-ஆவது பாடல் பிரகாரம் சுக்கிரன் தன் புத்தியில் பிதாவை மாரகஞ்செய்ய அதிகார முடையவராகி விருக்கின்றார். ஆகையால் புததசையில் சுக்கிர புக்தியில் பிதுர்மாரகம் நேரிட அமைப்பு இருக்கின்றது.

52. அன்னைக்கு முப்பானலில் ஆவணி மாதம் தன்னில்
துன்னிய காலன் பக்கல் செல்லுவ ளென்று சொன்னோம்
இன்னவன் தனக்கு மேதானியம்புவோ மறுப்பான் மூன்றில்
மன்னிய மகர மாதம் வளர்பிறை ஷட்டி தன்னில் ;

52. ஜாதகருடைய தாயார் (ஜாதகருக்கு) முப்பத்து நானகாவது வயதில்* ஆவணி மாதத்தில் இறந்து எமனிடத்திற்குப் போய்ச் சேருவாள் என்று சொல்லுகிறோம். ஜாதகருக்கு அறுபத்துமூன்றாவது வயதில் † தை மாதத்தில் வளர் பிறையில் சஷ்டி திதியில் ;

* குறிப்பு.—தாய் மாரக விஷயம்:—மாதுரு லக்கினம் நான்காவது பாவமாகிய துலாமாகும். துலா லக்கினத்திற்குப் பராசரஹோரை ஜாதக சந்திரிகை இவைகளின் பிரகாரம் சூரியனும் குருவும் மாரகாதிபதிகள் ஆகின்

ருர்கள். குரு மிருகசீர்ஷத்திலும் புதன் திருவாதிரையிலும் சூரியன் புனர்பூசத்திலும் இருப்பதால் புதன் இரண்டு மாரகர்களாகிய சூரியனுக்கும் குருவுக்கும் இடையில் இவர்களுக்கு நெருங்கி மாதுர்காரகனுகிய சந்திரனுடன் கூடி இருக்கின்ருர். புதன் துலாத்திற்குப் பன்னிரண்டிற்குடையவரானபடியால் மாரகருமாகின்ருர். ஆகையால் புதன் தன் தசையில் மாதாளவை மாரகஞ் செய்ய அதிகாரமுடையவராகின்ருர். ஜாதகருக்கு வயது ௵ 33-0-0 முதல் ௵ 34-0-0 முடியும் வகையிலும் புத தசையில் சந்திர புக்தி நடக்கின்றது. சந்திரன் புனர்பூசம் இரண்டிலும் சூரியன் புனர்பூசம் நான்கிலும் குரு மிருக சீர்ஷம் இரண்டிலும் இருப்பதால் சந்திரன் இரண்டு மாரகாதிபதிகளாகிய குருவிற்கும் சூரியனுக்கும் இடையில் இருப்பதுடன் சூரியனுக்கு மிகவும் நெருங்கியஇடத்தில் இருக்கின்ருர். மேலும் இவர் தசாநாதராகிய புதனுடன் கூடி மாதுருகாரகனுகவிருக்கின்ருர். ஆகையால் 82-ஆவது ஜாதகத்தின் 24-ஆவது பாடலின் கீழ்ச் சொல்லியுள்ள வியாக்கியானம் பிரகாரம் சந்திரன் மாதுருகாரகனுன படியாலும், தன்னுடைய புக்தியில் மாதாவை மாரகஞ் செய்ய அமைப்பு உடையவராகின்ருர்.

† ஜாதகர் மாரக விஷயம்.—ஜாதகருக்கு வயது ௵ 62-0-0 முதல் 63-0-0 முடியும் வரையிலும் சுக்கிர தசையில் குரு புக்தி சனி புக்தி இவைகள் நடக்கின்றன. ஆனுல் தை மாதத்தில் சனி புக்தி தான் நடக்கின்றது. கடக லக்கினத்திற்குச் சுக்கிரன் சனி புதன் இவர்கள் பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் மாரகாதிபதிகளாவார்கள். இந்திரஜித்தின் ஜாதகத்திற்குப் போல கடக லக்கினத்திற்குச் சுக்கிரன் பெரிய மாரகர். இவர் மாரகஸ்தானமாகிய இரண்டில் இருக்கின்ருர். சனி மாரகஸ்தானமாகிய எட்டிற்குடையவராகி மாரகஸ்தானமாகிய பதினொன்றில் இருந்து கொண்டு லக்கினத்தைப் பார்க்கின்ருர். ஆகையால் ஜாதகருக்குச் சுக்கிர தசையில் சனி புக்தியில் மாரகம் நேரிட அமைப்பு இருக்கின்றது.

53. மாரகம் நேரு மென்ருேம் மறு ஜன்மம் அவ்வூர் தன்னில்
தீரனும் வைசியச் சேயாய்ச் ஜனித்துமே பெருமை பூண்டு
பாரிய செட்டுச் செய்வன் பகர்ந்தது தப்பாதாகும்.
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை புகன்றிட் டோமே.

53. மாரகம் உண்டாகும் என்று சொல்லுகிருேம். ஜாதகர் தன்னுடைய பின் ஜன்மத்தில் இந்த ஜன்மத்தில் பிறந்த ஊரிலேயே வைசியகுலத்தில் ஆணுகப் பிறந்து மேன்மையை அடைந்து ஒரு பெரிய வியாபாரத்தைச் செய்வார். நாங்கள் சொல்லிய பலன்கள் தவறிப் போகாமல் நடக்கும். ஆறு மிக்கபெருமை பொருந்திய முகங்களையுடைய முருகக் கடவுளைப் பெற்றெடுத்தப் பார்வதியம்மையே! நாங்கள் பலன்களைச் சொல்லி விட்டோம்.

## யோகம்.

54. இன்னவன் பொதுயோ கத்தை யியம்புவோம் வறுமை காணுன்
தந்தையி னுஸ்தி தன்னைத் தானவன் விருத்தி செய்வன்
பந்தமாய்க் குடும்ப மொன்ருய்ப் பாவித்து நாற்ப தாண்டில்
தன்துணை பாகம் நான்காய்ச் சார்ந்திடு மென்று சொல்வோம்.

54. ஜாதகருடைய பொதுவான யோகத்தைப்பற்றிச் சொல்லு கிறேரம். இவர் தரித்திரத்தையும் கஷ்டத்தையும் அடையமாட்டார். தன்னு டைய பிதுரார்ஜித சொத்துக்களை இவர் விருத்தியாக்குவார். இவருடைய குடும்பமானது பிரகாசமுடைய தாகவும் மேன்மையுடையதாகவும் ஒன்றுகவு மிருக்கும், பிறகு குடும்பம் தன்னுடைய சகோதரர்களுக்குள்ளே நான்கு பாகமாக நாற்பதாவது வயதில் பங்கிடப்படும் என்று சொல்லுகிறேரம்.

55. துணைவரில் கடையோ னுக்குச் செப்புவோம் விசேஷ மாக
அணையவே அவர்கள் கண்டம் அறைகிறே மிரண்டி லேதான்
பிணையிலா இரண்டு இல்லம் பெறுவனும் வேறே ராஸ்தி
கனமுடன் வந்து சேரும் காதலி மேலுங் கேளே.

55. ஜாதகருடைய சகோதரர்களில் கடைசி சகோதரனுக்குப் பலனை விசேஷமாகச் சொல்லப்போகிறேரம். இவர்களுடைய மாரகங்களைப் பற்றி இரண்டாவது பாகத்தில் சொல்லுகிறேரம். ஒன்றுகவிராத இரண்டு வீடுகள் வந்து சேரும். இனுெரு சொத்தும் அதிகமாக வந்து நேரிடும். பார்வதியம்மையே ! இனனும் நாங்கள் சொல்வதைக் கேட்பீராக.

56. பிறந்திடுங் காலம் தன்னில் பொன்தசை தனிலி ருப்புச்
சிறந்திடு ஆண்டு ஆறும் திங்களு மாற தாகும்
உரைந்திடும் துணைவர் விருத்தி உயர்பூமி சேருமென்றேரம்
நிறைந்திடும் தானி யங்கள் நிகழ்த்துவோம் விவரம் ரண்டில்.

56. ஜாதகர் பிறந்த காலத்தில் குரு மகா தசையில் இருப்பு மேன்மை யான ஆறு வருஷங்களும் ஆறு மாதங்களும் ஆகும். இந்தக் காலத்தில் சகோதரர்கள் விருத்தியாவார்கள். விலையுயர்ந்த நிலங்கள் வந்து சேரும் என்று சொல்லுகிறேரம். தானியங்கள் நிறைய வந்து சேரும். மற்றும் விவரங்களை இரண்டாவது பாகத்தில் சொல்லுகிறேரம்.

# ஜாதகம் 90

1. சந்திரன் மான[1] தாகச் சனிமேடம் புகரும்[2] வண்டி[3]
புந்தியு[4] மிரவி[5] சீயம்[6] பொன்[7]குஜன்[8] கேது நந்தி[9]
முந்திய கயிறு[10] தேளில்[11] முதயமும் வளைய லாக[12]
இந்தவாறு கிரகம் நின்றால் லியம்புவீர் பலனைத் தானே.

| | | | |
|---|---|---|---|
| | சனி | அங்கார கன் குரு கேது | |
| | இராசி சக்கரம் | | லக்கினம் சுக்கிரன் |
| சந்திரன் | | | சூரியன் புதன் |
| | ராகு | | |

உத்திராடம் 4-ஆம் பாதம், சூரிய தசை ஷ்ரீ 1-1-0.

1. சந்திரன் மகரத்திலும், சனி மேஷத்திலும், சுக்கிரன் கடகத்திலும், புதனும் சூரியனும் சிம்மத்திலும், குருவும் அங்காரகனும், கேதுவும் ரிஷபத்திலும், இராகு விருச்சிகத்திலும் ஜன்மலக்கினம் கடகமாகவும் இருந்து இவ்விதமாகக் கிரகங்கள் இருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீராக என்று;

**குறிப்பு.**—இந்த ராசிச் சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரகநிலை பொருத்தமுடையதாகும்:—கடகத்தில் கேதுவும், கன்னியில் அங்காரகனும், துலாத்தில் சூரியனும், புதனும், சுக்கிரனும், சனியும், மகரத்தில் குருவும் ராகுவும், மீனத்தி சந்திரனும் ஆகும்.

2. அம்பிகை கேட் கும்போது அத்திரி சொல்லு கின்றார்
அம்பிகை ஜனன மாகும் அவள்தந்தை யில்லம் சொல்வேன்
செம்மையாய்க் கீழ்மேல் வீதி தென்வாடை தெற்கில் காளி
துன்மையா யெதிர்வீ டில்லை தென்மேற்கில் அருகர் கோட்டம்.

2. பார்வதியம்மையார் கேட்கும்போது அத்திரிமகரிஷி சொல்லுகின்றார். பெண் குழந்தை பிறக்கும். இவளுடைய தகப்பனாரின் வீட்டைப் பற்றிச் சொல்லுகின்றேன். அது செழுமையானதும் அழகானதுமான கிழக்கு மேற்குத் தெருவில் தென்னண்டை வாடையில்இருக்கும். மேற்குத் திக்கில்

---

1. மகரம். 2. சுக்கிரன். 3. கடகம். 4. புதன்
5. சூரியன். 6. சிம்மம். 7. குரு. 8. அங்காரகன்.
9. ரிஷபம். 10. இராகு. 11. விருச்சிகம். 12. கடகம்.

காளியம்மன் கோயில் இருக்கும். பிறந்த வீட்டிற்கு எதிரில் வீடில்லாமல் கெடுதியாகவிருக்கும். தென் மேற்குத் திக்கில் சமணர்களுடைய கோயில் இருக்கும்.

3. உத்தரம் கிரியு முண்டு உமையவ ளீசன் மீனங்
குத்தம மருகில் குண்டம் குணக்கினில் மஸ்தான் கோஷ்டம்
இத்தகை யடையா ளத்துள் இணங்கிய சிற்றூர் தன்னில்
சுத்தமாய்க் கங்கை சேயாய்ச் செப்புவோ மிந்த மாது.

3. வடக்குத் திக்கில் மலை இருக்கும். பார்வதியினுடைய ஈசனாகிய சிவபெருமானுடைய கோயில் வடக்குத் திக்கில் இருக்கும். அருகாமையில் குளம் இருக்கும். கிழக்குத் திக்கில் முஸ்லிம் மசூதி இருக்கும். இப்படிப் பட்ட அடையாளங்கள் உள்ள ஒரு சிறிய கிராமத்தில் சுத்தமான ஒரு வேளாள குலத்தில் ஒரு குழந்தையாக இந்த ஜாதகி பிறப்பாள் என்று சொல்லுகின்றோம்.

4. மாதுரு தந்தை யோகம் வரும்துணை புத்திர யோகம்
நீதியாய் வரனின் யோகம் நிகழ்த்துவோ முன்பின் ஜன்மம்
மாதிவள் யோக மெல்லாம் வரைகிறோம் மிந்நூல் தன்னில்
ஆதியைப் பூசை செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

4. ஜாதகியினுடைய தாயார் தகப்பனார் இவர்களுடைய யோகங் ௧ள், கூடப் பிறந்தவர்கள். சந்ததிகள். இவர்களுடைய யோகங்கள், நியாயமாய்ப் புருஷனுடைய யோகம் ஆகிய இவைகளைச் சொல்லுகின்றோம். முன் ஜன்மம் பின் ஜன்மம் ஜாதகியினுடைய யோகம் ஆகிய இவைகளை எல்லாம் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகிறோம். ஆதிக் கடவுளாகிய சிவ பெருமானைப் பூசை செய்கின்ற பார்வதியம்மையே ! கேட்பீராக.

5. தந்தையின் குணத்தைச் சொல்வேன் சாந்தவான் மாஞ்சி வப்பன்
சிந்தையில் கவடு மில்லான் தீரமில்லாத நெஞ்சன்
நொந்திடும் பேரைக் காப்பன் நேமியில் கிருஷி செய்வன்
தன்தனமதிக மில்லான் தானிள மனத்தா னாகும்.

5. ஜாதகியின் தகப்பனாருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லு கின்றேன். இவர் சாந்தமான குணத்தை யுடையவர். மாந்துளிரின் நிறத் தைப் போன்ற ஒரு விதமான சிகப்பு நிறமுடைய தேகத்தையுடையவர். மனத்தில் வஞ்சனை கள்ளம் கபடம் இவைகள் இல்லாதவர். தைரியமில்லாத மனத்தை யுடையவர். நொந்து போனவர்களையும் கஷ்டங்களை அனுபவிப் பவர்களையும் காப்பாற்றுவார், பூமியில் விவசாயத் தொழிலைச் செய்வார். தன்னுடைய சுயார்ஜிதமான தனத்தை அதிகமாக உடையவரல்லா. இவர் இளகிய மனதையுடையவர். தயாளகுண முடையவராவார்.

6. பொறுமையும் கல்வி கொஞ்சம் பொய்யாது வழுத்தா நெஞ்சம்
உறைந்திடும் கார கங்கள் உதாசீனம் சொல்லா னாகும்
வறுமைக ளடையா னாகும் மாடுகள் விருத்தி யுள்ளான்
அறமதிலிச்சை யுள்ளான் அவன்முக வடுவு காணும்.

6. ஜாதகியின் தகப்பனார் பொறுமை யுள்ளவர். கொஞ்சமான வித்தை உடையவர். பொய்யைச் சொல்லாத மனத்தை உடையவர். இவருக்குக் காரக ரோகங்கள் உண்டு. இவர் தூஷணமானதும், வெறுக்கத்தக்கதுமான வார்த்தைகளைச் சொல்லமாட்டார். கஷ்டங்களையும் தரித்திரத்தையும் அடையமாட்டார். கால்நடைகள் விருத்தியையுடையவராவார். தருமம் செய்வதில் ஆசையுடையவர். இவருடைய முகத்தில் வடிவுகளும் அடையாளங்களும் இருக்கும்.

7. குருவுப தேசம் கொள்வன் குறையான மனத்தா னுகும்
திருகுகள் செய்யா னுகும் துணேவர்கள் ஆண்பா லொன்று
வரும்கன்னி ஒன்றே யாகும் வரைந்தன மிரண்டு தீர்க்கம்
உரைக்கிருேம் துணேவன் சேதி உத்தமி கேட்டிடாயே

7. ஜாதகியின் தகப்பனார் குருவிடத்தில் உபதேசத்தைப் பெற்றுக் கொள்வார். சங்கடமான, துன்பமுள்ள மனத்தையுடையவர், கபடமானவும் வஞ்சனேயானவுமான காரியங்களைச் செய்யமாட்டார், இவருடைய சகோதரர்கள் ஆண் ஒன்றும் பெண் ஒன்றும் ஆகும், சொல்லப்பட்ட இவர்கள் இருவரும் நீண்ட ஆயுளை உடையவர்களாவார், சகோதரனுடைய விஷயங்களைச் சொல்லுகிறேம். பார்வதியம்மையே ! கேட்பீராக.

8. முன்கோபம் பின்பு சாந்தம் மூலச்சூடுடைய னுகும்
தன்சொலே மேன்மை யாகச் சாதிப்பான் தந்திர வாதி
அன்னவன் கிருஷி செய்வன் அவனில்ல அதிகா ரத்தின்
சொன்னசொல் லிரண்டு முள்ளான் துணேவனே டொத்து வாழ்வன்.

8. ஜாதகியின் தகப்பனருடைய சகோதரர் முன் கோபத்தை உடையவர். பின்னுல் சாந்தத்தை அடையக் கூடியவர். இவர் மூலச் சூட்டை உடையவர். தான் சொல்லுகிற வார்த்தையே மேன்மையான தென்றும் உண்மையானதென்றும் சொல்லி வாதித்து ஜயிக்கக் கூடியவர், உபாயங்களையுடையவர். இவர் விவசாயத் தொழிலைச் செய்வார். இவர் தன்னுடைய வீட்டில் அதிகாரத்தைச் செலுத்தக் கூடியவர். இரண்டு விதமான சொற்களையும் சொல்லுவார், அஃதாவது உண்மையையும் பொய்யையும் சொல்லுவார். தன்னுடைய சகோதரனுடன் ஒத்திருந்து ஒன்றுய் வாழ்வார்.

9. மாநிறம் சமதே கத்தன் மனேவியு மொன்றே யாகும்
ஈனமாம் குணங்க ளில்லானி யம்புவோம் புத்திர பாவம்
ஊனமா முதலில் மூன்று உரைக்கிருேம் எழுவர் தோன்றும்
ஆனதில் லாண்பா லொன்று அம்பிகை யிருவர் தீர்க்கம்.

9. ஜாதிகியின் தகப்பனரின் சகோதரர் மாநிறமான தேகத்தையுடையவர். நடுத்தரமான தேகத்தையுடயவர். இவருக்கு ஒரே மனேவி தான் உண்டாகும். தாழ்ந்த குணங்கள் இல்லாதவர். இவருடைய புத்திர பாவத்தைப்பற்றிச் சொல்லுகிறேம். முதலில் மூன்று குழந்தைகள் நஷ்ட

மாகிவிடும். ஏழு குழந்தைகள் பிறப்பார்கள் என்று சொல்லுகிறோம். இவர்களில் ஓர் ஆண் குழந்தையும் இரண்டு பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளை உடையவர்களாக இருப்பார்கள்.

10. மூவரும் தீர்க்க மெய்து முறங்கிடும் நான்கு என்றோம்
ஓவிய மனைவி தன்னால் உயர்ந்திடும் செல்வ மென்றோம்
சேவலன் கொடியோன் பத்தி செய்தவனு மிவனே யம்மா
தாவிய பேரைக் காப்பன் சங்கரி மேலுங் கேளே.

10. இந்த மூன்று பேர்களும் நீடித்திருப்பார்கள். மற்ற நான்கு பேர்களும் இறந்து விடுவார்கள் என்று சொல்லுகிறோம். இவருக்குத் தன்னுடைய மனைவியால் செல்வம் விருத்தியாகும் என்று சொல்லுகிறோம். ஜாதகர் சேவல் கொடியை உடையவரான முருகப் பெருமானுடைய பக்தியை உடையவராவார். பார்வதியம்மையே ! இவர் தன்னிடம் வந்து அடைந்தபேர்களைக் காப்பாற்றுவார். பார்வதியம்மையே ! இன்னும் நாங்கள் சொல்லுவதைக் கேட்பீராக.

11. இன்னமு மவர்கள் பூர்வ மியம்புயோம் விவரம் ரண்டில்
கன்னிகை துணைவி சேதி கழறுவோம் பின்பா கத்தில்
சொன்னஇக் குணத்தா னுக்குச் சுந்தரி யிரண்டாம் ஜன்மம்
அன்னவ ளுதிப்பா ளாகும் அறைகிறோ மவள்கு ணத்தை.

11. அவர்களுடைய பூர்வ விஷயங்களைப்பற்றி இன்னமும் இரண்டாவது பாகத்தில் விவரமாகச் சொல்லுகிறோம். தகப்பனாரின் சகோதரியினுடைய விஷயங்களைப் பின்பாகத்தில் சொல்லுகின்றோம். இது வரையிலும் சொல்லப்பட்ட குணங்களையுடைய தகப்பனாருக்கு இந்த ஜாதகி இரண்டாவது கர்ப்பத்தில் பிறப்பவளாவாள். இவளுடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகிறோம்.

12. சிவந்திடும் மேனி யாவள் தீரமில் லாத நெஞ்சம்
தவசிகட் கன்ன மீவள் தானிள மனத்தா ளாகும்
நவனியில் பொய்கள் சொல்லாள் நற்புத்தி யூக சாலி
பவமுள யோக சாலி பால்பாக்கிய முடையா ளாகும்

12. ஜாதகி சிவப்பு நிறமுள்ள தேகத்தையுடையவளாவாள். தைரியமில்லாத மனத்தையுடையவள். தவம் செய்பவர்களுக்கும் பரதேசிகளுக்கும் சாப்பாடு போடுவாள். இளகிய மனதையுடையவள். தயாளமான குணமுடையவள். பூமியில் பொய்யானவைகளைச் சொல்லமாட்டாள். நல்ல புத்தியையுடையவள். நுட்பமான அறிவையுடையவள். மேன்மையான யோகத்தையுடையவள், பால் பாக்கியம் உடையவளாவாள்.

13. அன்னம் போல்சாய லொக்கும் யாவர்க்கு நல்லோ ளாவள்
கன்னென மொழியே சொல்வள் கஞ்சமாம் ரேகை யுள்ளாள்
தன்துணை முன்பின் காணுள் சாற்றுவோம் பின்பெண் மூன்று
சொன்னேனே மூன்றும் தீர்க்கம் சேர்ந்திடும் நான்கும் என்றோம்.

13. ஜாதகி அன்னப் பட்சியைப் போல அழகான ரூபமுள்ளவள். எல்லோருக்கும் நல்லவளாகவிருப்பாள். சர்க்கரையைப் போன்ற இனிமையான வார்த்தைகளையே சொல்லுவாள். தன்னுடைய உள்ளங்கையில் கஞ்சரேகை என்ற தாமரை ரேகையை யுடையவளாவாள். இவளுக்கு முன்னேயும் பின்னேயும் ஆண் சகோதரர்கள் கிடையா. இவளுக்கு இளைய சகோதரிகள் மூன்று பேர் உண்டு, இந்த மூன்று சகோதரிகளும் நீண்ட ஆயுளை உடையவர்களாவார்கள், நான்கு சகோதரங்கள் இறந்து போய்விடுவார்கள் என்று சொல்லுகிறோம்.

*** குறிப்பு ஆண் சகோதர விஷயம்.**—சூரியனுடன் மூன்றிற்குடைய புதன் கூடி இருப்பதால் ஜாதகிக்குப் பின் ஆண் சகோதரம் மணிகண்டகோளம் சகோதரகாண்டம் 6ஆவது பாடல் பிரகாரம் கிடையாது. மூத்த ஆண்சகோதர காரகராகிய குரு மூத்த சகோதர ஸ்தானமாகிய பதினோராம் பாவத்தில் பகையாக இருப்பதும், சகோதரகாரராகிய அங்காரகன் சகோதர ஸ்தானத்திலேயே இருப்பதும், பதினொன்றில் கேது இருப்பதும், மூத்த ஆண் சகோதரங்களுக்கு அதிக தோஷத்தை உண்டு பண்ணும்.

14. இன்னவள் மணத்தின் கால மியம்புவோ மீரைஞ் சாண்டுள்
மன்னவ ளருகில் தெற்கில் மாதுரு துணையைச் சேர்வள்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அழகுள்ளான் உணச்சல்
தன்முக வடிவு முள்ளான் தைரிய மில்லா னென்றோம். [நீட்சி

14. ஜாதகியினுடை விவாக காலத்தைச் சொல்லுகிறோம். இவளுடைய தாயாரின் சகோதரன் தெற்குத் திக்கில் சமீபத்தில் இருந்து இவளுக்குப் புருஷனைப் பத்து வயதிற்குள்ளே * வந்து நேர்டுவான். புருஷனுடைய குணாதிசயங்களைப்பற்றிச் சொல்லுகிறேன். அவர் அழகுள்ளவராக விருப்பார். நீண்டு, ஒல்லியாகவிருப்பார், முகத்தில் அழகுள்ளவர், தைரியமில்லாதவர், என்று சொல்லுகிறோம்.

**குறிப்பு.—விவாக விஷயம் :**—ஜாதகிக்கு வயது ஞ 9-0-0 முதல் 10-0-0 முடியும் வரையிலும் சந்திரதசையில் சுக்கிரபுக்தி நடக்கின்றது. சுக்கிரன் லக்கின கேந்திரந்திலிருப்பதாலும், சந்திரன் ஏழாவது கேந்திரத்திலிருப்பதாலும், ஜாதகசிந்தாமணி 975 ஆவது பாடல் பிரகாரம் ஜாதகிக்கு பால்ய விவாகம் நடக்க அமைப்பு இருக்கின்றது. சந்திரன் பர்த்திரு ஸ்தானமாகிய ஏழாவது வீட்டில் இருப்பதால் ஜாதகபாரிஜாதம் பதினான்காவது அத்தியாயம் இருபத்தொன்பதாவது சுலோகப் பிரகாரம் தன் தசையில் ஜாதகிக்கு விவாகம் செய்து வைக்க அமைப்பு உள்ளவராக இருக்கின்றார். இந்தச் சந்திரனை பத்தாவது பாவத்திலிருந்து ஏழிற்குடைய சனியும் மேலும், ஒன்பதிற்குடைய குருவும் பார்க்கின்றார்கள். மேற்படி சுலோகத்தில், ஏழிற்கும் பத்திற்கும், ஒன்பதிற்கு முடையவர்கள் ஆகிய இவர்களேயும் பற்றிச் சொல்லி இருப்பதையும் கவனிக்கவும். சுக்கிரன் பர்த்திருகாரகனுகியும் நான்கிற்குடையவராகவும் இருந்து லக்கினத்தில் இருந்து சந்திரனைப் பார்ப்பதால் தன் புத்தியில் விவாகம் செய்து, வைக்க அமைப்புடைவராகின்றார்.

15. தேவதா பக்தி கொள்வன் சிறப்பான குடும்பி யாவன்
தாவியே பேரைக் காப்பன் தரணிக ளதிகம் சேர்ப்பன்
கோவலர் மெச்ச வாழ்வன் கோள்குற்றம் சொல்லா னாகும்
நிலையது தவரு னாகும் நற்சுக போஜனத்தான்.

15. ஜாதகியினுடைய புருஷன் தெய்வபக்தியுடையவரா யிருப்பார். மேன்மையான குடும்பஸ்தராக விருப்பார். தன்னிடம் வந்து அணுகிய பேர்களைக் காப்பாற்றுவார். நிலங்களை அதிகமாகச் சேர்த்து வைப்பார். அரசர்கள் இவரை மெச்சும்படியாக விருந்து வாழ்வார். பிறர் பேரில் குற்றங்களையும் கோள்களையும் சொல்லாதவராவார். நெறியும் அந்தஸ்தும் தவருதவராகவிருப்பார், நல்ல சுகமான சாப்பாட்டைச் சாப்பிடக் கூடியவராவார்.

16. அவன்துணை ஆண்பாலொன்று அழகிய கன்னி நான்கு
இவைகளும் தீர்க்க மென்றே மிடராகு மிரண்டு என்றேம்
பவமுள புத்திர பாவம் பகருவோம் காணு ளாகும்
நவனியில் தோன்றி னாலும் நசித்திடு மென்று சொல்வோம்.

16. ஜாதகியின் புருஷனுடைய சகோதரர்களில் ஆண் ஒன்றும் அழகான நான்கு பெண்களும் ஆகும். இந்த ஐந்து சகோதரர்களும் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகிறேம், இரண்டு சகோதரர்கள் இறந்து போய்விடும் என்று சொல்லுகிறேம், மேன்மையான புத்திர பாவத்தைப்பற்றிச் சொல்லுகிறேம், இவளுக்குப் புத்திரர் கிடையாது. பூமியில் பிள்ளைகள் பிறந்தாலும் இறந்துவிடும் என்று சொல்லுகிறேம்.

17. ஏதுகா ரணத்தி னாலே யிவளுக்குச் சுதர்கள் தோஷம்
ஓதுவீர் முனியே நீர்தாம் உரகனு[1] மைந்தில் நிற்கத்
தீதுண்டு சுதர் களுக்குச் ஜயமுனி கூறு கின்றார்
மாதவன் [2] குஜனு [3] மைந்தை மருவியே பார்த்த தாலே.

17. என்ன காரணத்தினுல் ஜாதகிக்குப் பிள்ளைகள் தோஷத்தை அடையும் என்பதை முனிவரே! நீரே சொல்லுவீராக. இராகு ஐந்தாவது பாவத்தில் இருப்பதால் பிள்ளைகளுக்குச் கெடுதி ஏற்படும். இவ்விதமாகச் சொல்ல, ஜயமுனிவர் மறுத்துச் சொல்லுகின்றார். குருவும் அங்காரகனும் ஐந்தாவது பாவத்தைப் பார்த்திருப்பதால் ;

18. சுதர்களும் விருத்தி யென்றேம் சனிதச மத்தில் நிற்க
அதிபதி முன்செய் தோஷ வசத்தால் மதலை காணுள்
அதுவினை சொல்லு மென்ன அத்திரி சொல்லுகின்றார்
மதிநுதல் பூர்வம் சொல்வேன் மாயூர மருகில் சிற்றூர் ;

18. பிள்ளைகள் பிறந்து விருத்தியாவார்கள் என்று சொல்லுகிறேம். சனி பத்தாவது பாவத்தில் இருப்பதால், ஜாதகி தான் முன் ஜன்மத்தில் செய்த பாபத்தின் தோஷத்தால் பிள்ளையை அடையமாட்

---

[1] இராகு [2] குரு [3] அங்காரகன்

டாள். அந்தத் தோஷத்தைச் சொல்லுவீர் என்று கேட்க, அத்திரி மக ரிஷியானவர் சொல்லுகின்றார். சந்திரனைப் போல அழகான நெற்றியை யுடைய ஜாதகியினுடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறேன். இவள் மாயவரத்துக்குச் சமீபத்தில் ஒரு சிறிய கிராமத்தில் ;

19. உதித்தனள் வைசியச் சேயாய் உலகிற்கு நல்லோ ளாகி
பதியினில் திருவு முண்டாய்ப் பாலரு முடையளாகி
அதிபதி வாழுந் நாளில் வந்தவூழ் தன்னைச் சொல்வேன்
அதிதியும் ஓர்நாள் தன்னில் அந்தியில் அன்னம் கேட்க ;

19. வைசியப் பெண்ணாகப் பிறந்தாள். ஜனங்களுக்கு நல்ல வளாகிப் புருஷனும் பிள்ளைகளும் செல்வமும் அழகும் உடையவளாகி இவள் வாழுகின்ற காலத்தில் இவளுக்கு வந்து சம்பவித்த வினையைப் பாவத்தைச் சொல்லுகிறேன். ஒரு பரதேசி ஒரு நாள் சாயந்திரம் அந்திக் காலத்தில் இவளிடம் வந்து சாதம் கொடு என்று கேட்க ;

20. முகவெறி கொண்டு இன்னாள் முடுக்கினாள் அதிதி தம்மை
இகபர னன்பு பூண்டோ னிளைப்புகள் தீர்ப்பாய்த் தாயே
பகையான வார்த்தை வேண்டாம் பகருவா யன்ன மென்னத்
தகைமையாய் வார்த்தை யின்றிச் சலிப்பாக உரைத்தாள் மாது.

20. ஜாதகி தன்னுடைய முகத்தில் கோபத்தைக் காண்பித்து வெறி கொண்டு பரதேசியின் மேல் தன்னுடைய கோபத்தால் மூடதனமாக முடுக்கினாள். பரலோகத்ததிலுள்ள கடவுளின்மேல் பக்தியும் அன்பும் உள்ளவராகிய பரதேசியின் களைப்பைத் தீர்க்கக் கடவாய். அம்மையே ! என்று ஜாதகியைப் பார்த்துச் சொல்லிவிட்டு, கோபமான வார்த்தையை இனிச் சொல்லவேண்டாம், சாப்பாடு கொடுங்கள் என்று பரதேசி கேட்கவே, இவள் சாந்தமானதும் தகுதியானதுமான வார்த்தைகளைச் சொல்லாமல் வெறுப்பாகவும் கோபமாகவும் சலித்துக்கொண்டு பதில் சொன்னாள்.

21. பரமனும் மனவெ றுப்பால் பகருவார் சாபம் தானும்
வரும்ஜன்மம் மதலை யின்றி வரும்துணை ஆணில் லாமல்
குறைமன தாக வாழ்வாய்க் கூறிவே றில்லம் சென்றார்
உறைந்தது அந்தத் தோஷம் உரைக்கிறே மின்னு மொன்று.

21. பெரியவரான அந்தப் பரதேசி மனத்தில் துன்பத்தை அடைந்து கோபத்தால் இவளுக்கு ஒரு சாபத்தைக் கொடுக்கின்றார்.

" நீ உன்னுடைய அடுத்த ஜன்மத்தில் உனக்கு ஆண் குழந்தையும் ஆண் சகோதரனும் இல்லாமல் மனத்தில் கஷ்டத்துடன் இருந்து வாழக் கடவாய் " என்று சொல்லிவிட்டு அந்தப் பரதேசி இன்னொரு வீட்டிற்குப் போய்விட்டார். அந்தச் சாபதோஷம் இவளை வந்து அணுகிற்று, இதுவு மல்லாமல் இன்னொரு தோஷத்தைச் சொல்லுகிறோம்.

22. மனைதனில் வெகுநாளாக மருவிற்று நாக மொன்று
வினையாக மகுடத் தாலே மேவிற்று வெளியில் ஓர்நாள்
கணையினால் தன்னை வாட்டி காலன்தன் பதிக்குச் செல்லப்
பிணையாக அதுஓர் தோஷம் புக்கிற்று இவளுக் கேதான்

22. ஜாதகியினுடைய வீட்டில் ஒரு நாகப் பாம்பு வெகு காலமாக வாசஞ் செய்து கொண்டிருந்தது. அது மோடி வாத்தியத்தினாலே வெளியே ஒரு நாள் வந்தது. அதை இவள் தடியால் அடித்துக் கொன்று எமபட்டிணத்திற்கு அனுப்பிவிடவே அந்தச் செய்கை ஒரு தோஷமாக இவளை வந்து அணுகிற்று.

23. இன்னமும் பலவாய்த் தோஷ மிசைந்தது இவளுக் கேதான்
கன்னிகை அந்தி யத்தில் காளைக ளில்லா தாகித்
துன்னிய காலன் பக்கல் சேர்ந்துபின் மறையோன் லக்கம்
தன்னிலே வரையப் பட்டு செனித்தவ ளிவளே யென்றோம்.

23. ஜாதகிக்கு இன்னம் பலவிதமாகத் தோஷங்கள் வந்து சம்பவித்தன. இவள் தன்னுடைய கடைசிக்காலத்தில் ஆண் குழந்தைகள் இல்லாதவளாகி இறந்து எமனிடத்திற்குப் போய்ச் சேர்ந்து பிறகு பிரம தேவனால் பிரம லிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் இவள் வந்து பிறந்திருக்கின்றாள் என்று சொல்லுகின்றோம்.

24. இதுவன்றி வரனால் குற்ற மெய்திற்றுச் சிலவே யென்றோம்
அதுவினை சொல்லு மென்ன அவனுடைப் பூர்வம் கேளாய்
மதிசடை அணிந்த ஈசர் வாழ்புலி யூரிலே தான்
சதியிலா வன்னிய வமிசம் ஜனித்தன னிவனே யென்றோம்.

24. ஜாதகியி னுடைய தோஷங்களு மல்லாமல் இவளுடைய புருஷனாலும் சில தோஷங்கள் ஏற்பட்டன வென்று சொல்லுகிறோம். அந்த விஷயத்தைச் சொல்லுவீரென்று கேட்கவ, அவருடைய பூர்வ ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறோம். கேட்பீராக. தன்னுடைய ஜடையில் சந்திரனை அணிந்து கொண்டிருக்கின்ற சிவபெருமான் வாழ்கின்ற புலியூரில் குற்றமில்லாத வன்னிய குலத்தில் இவர் பிறந்தார் என்று சொல்லுகிறோம்.

25. சுகமுள குடும்பி யாகிச் சுந்தரன் வாழுந் நாளில்
பகைவந்த காரணம்கேள் பஞ்சையாய்ப் பெண்ணும் ஓர்நாள்
மகவுசோ றிவனைக் கேழ்க விரட்டினன் மாதைத் தானும்
தகவிலா வார்த்தை சொன்னாய்ச் சுதர்தோஷ மாக வாழ்வாய்.

25. ஜாதகினுடைய புருஷன் முன் ஜன்மத்தில் சௌக்கியமான குடும்பஸ்தராகவிருந்து வாழுகின்ற காலத்தில் விரோதம் கெடுதி இவைகள் வந்து சம்பவித்த காரணத்தைக் கேட்பீராக. ஒரு நாள் ஓர் ஏழை ஸ்திரீ இவரைத் தன்னுடைய குழந்தைக்காகச் சாதம் கேட்டபோது

இவர் அவளைப் பயப்படுத்தித் துரத்தி விட்டார். "நீ தகுதியற்ற வார்த்தைகளைச் சொன்னாய். ஆகையால் உனக்கு ஆண் குழந்தைகள் தோஷத்தை அடைந்து நீ வாழக்கடவாய்" என்று ;

26. சொல்லியே சென்றாளென்றோம் சேர்ந்தது அதுஓர் தோஷம்
இல்லமும் நாகம் தன்னை யெமபுரிக் கவனும் சேர்த்தான்
புல்கிற்று அதஓர் தோஷம் புனிதனு மந்தி யத்தில்
நில்லாமல் சுதர்கள் யாவும் நேர்ந்தனன் காலன் பக்கல்.

26. சொல்லிவிட்டு அந்த ஸ்திரீ போய்விட்டாளாம் என்று சொல்லுகிறோம். அந்தத் தோஷமும் இவரை வந்து அணுகியது. மேலும் இவர் தன்னுடைய வீட்டில் வாசஞ் செய்து கொண்டிருந்த ஒரு நாகப் பாம்பைக் கொன்று எமபட்டணத்திற்கு அனுப்பிவிட்டார். அதனாலே ஒரு தோஷம் ஏற்பட்டது. அதனால் இவருக்குத் தன்னுடைய கடைசிக் காலத்தில் எல்லா பிள்ளைகளும் உயிருடன் நிலைத்திராமல் இறந்து இவரும் இறந்து எமனிடம் போய்ச் சேர்ந்து விட்டார்.

27. கஞ்சனால் வரையப் பட்டு கங்கையின் குலமு தித்தான்
தஞ்சமாய் இச்சென் மத்தில் சந்ததி தோஷ மெய்தும்
மிஞ்சன தோஷம் தீர விளம்புவோம் சாந்தி தானும்
கொஞ்சிய மனைவி யோடு குமாரனு மருணைக் கேகி ;

27. ஜாதகியின் புருஷன் பின்னால் பிரமதேவனால் பிரம லிபியுடன் எழுதப்பட்டு வேளாளர் குலத்தில் ஆண் குழந்தையாகப் பிறந்திருக்கின்றார். ஆகையால் இந்த ஜன்மத்தில் குழந்தைகளுக்குத் தோஷ முண்டாகும். இந்தத் தோஷங்கள் நிவிர்த்தியாவதற்குச் சாந்திகளைச் சொல்லுகிறோம். இவர் ஆசையுள்ள மனைவியுடன் அருணை என்று சொல்லப்பட்ட திருவண்ணாமலைக்குப் போய் ;

28. அங்குள தீர்த்தம் தோய்ந்து அரனுக்கு அர்ச்சித் தேத்திச்
சங்கர னடியாருக்குச் சாஸ்திர மைவருக்கு
மங்கையு மன்ன மீந்து வளமுள நகரம் சென்று
துங்கமாம் கணேச னுக்கும் திருப்பணி தீபம் வைத்து ;

28. அவ்விடத்திலுள்ள தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து சிவபெருமானுக்கு அர்ச்சனை செய்து தொழுது சிவபெருமானுடைய அடியார்களாகிய ஐந்து பேருக்கு அஃதாவது பரதேசிகளுக்குச் சாஸ்திர ரீதியாய் இவருடைய மனைவி சாப்பாடு போட்டுச் செழிப்பான பட்டணத்திற்கு போய் மேன்மையான சிறந்த விநாயகருடைய கோயிலுக்குப் போய் கோவில் வேலைகளைச் செய்து அங்கே விளக்கு ஏற்றி வைத்து ;

29. வெள்ளியால் நாகம் செய்து வித்தகி பூசை செய்யக்
கள்ளங்கள் நிவிர்த்தி யாகிக் காளைகள் விருத்தி யாகும்
உள்ளத்தை உரைத்தே னம்மா உண்மையாய்ச் செய்வானாகில்
தள்ளொணா ஆண்பா லொன்றும் சத்தியு மிரண்டும் தீர்க்கம்.

29. வெள்ளியால் ஒரு நாகப்பதுமை செய்து அதை ஜாதகி பூஜை செய்து வரவே தோஷங்களும் சாபங்களும் விலகி ஆண் குழந்தைகள் பிறந்து விருத்தியடையும். உள்ளதை உள்ளபடியே சொன்னேன். பார்வதியம் மையே! இவர்கள் நான் சொன்ன பிரகாரம் உண்மையாகவும் மனப் பூர்த்தியாகவும் செய்வாராகில் நிவிர்த்தி செய்யக்கூடாத, அஃதாவது சிறந்த ஓர் ஆண் குழந்தையும், இரண்டு பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள்.

30. வரனுடை பின்ஜன்மத்தை வரைகிறோ மவ்வூர் தன்னில்
திருமகள் விலாசம் பெற்ற செட்டியின் குலமு தித்துப்
பெருமையாய்ச் செட்டுச் செய்து புண்ணியன் வாழ்வா னாகும்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

30. ஜாதகியின் புருஷனுடைய மறு பிறப்பைப் பற்றிச் சொல்லுகிறோம். அந்த ஊரிலேயே லக்ஷ்மி வாசஞ் செய்யும்படியான ஒரு செட்டியாருடைய குலத்தில் இவர் ஆண் குழந்தையாகப் பிறந்து மேன்மையாக வியாபாரஞ் செய்து புண்ணியசாலியாக விருந்து வாழ்வார். அருமையான வேதங்களின் முடிவில் விளங்குகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

31. மாதுரு குணத்தைச் சொல்வேன் மறுமமில்லா தாளாகும்
தீதிலாள் நற்குணத்தாள் சிவந்திடு மேனியாவள்
பாதக மில்லாதாள் பஞ்சை மேலிரக்க மாவள்
சூதிலாள் பொறுமைசாலி துணைகள் முன் காணுளாகும்

31. ஜாதகியின் தாயாருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லு கிறேன். இவள் இரகசியத்தை உடையவளல்லள். கெடுதியைச் செய்யாத வள். நல்ல குணங்களை உடையவள். சிவப்பு நிறமான தேகத்தை உடையவள். கெடுதியான மனத்தை உடையவளல்லள். ஏழைகளின்மேல் இரக்கமும் கிருபையும் உடையவள். கள்ளம் கபடு வஞ்சனை இவைகள் இல்லாதவள். பொறுமையான குணத்தையுடையவள். இவளுக்கு மூத்தச் சகோதரர்கள் கிடையாது.

32. அயல்குற்றம் சொல்லா ளாகும் அன்னம்போல் சாய லுள்ளாள்
நயமுள வார்த்தை சொல்வள் நாயகன் மனம்போல் வாழ்வள்
கயவரைச் சேரா ளாகும் கனத்தபுத் திகளு முள்ளாள்
தயையுட னன்ன மீவள் தன்துணை பின்னேழாகும்.

32. ஜாதகியின் தாயார் பிறர்மேல் குற்றமான விஷயங்களைச் சொல்லாதவளாக விருப்பாள். அன்னப் பட்சியைப் போன்ற அழகான ரூபத்தை உடையவளாவாள். இனிமையான வார்த்தைகளைச் சொல்லு வாள். தன்னுடைய புருஷனுடைய மனதிற்குத் தகுந்தாப்போல ஒற்றுமையாக விருந்து வாழ்வாள். கீழ் மக்களுடன் சேரமாட்டாள். மேன்மையான புத்தியை உடையவள். கிருபையுடனும், ஆசையுடனும் சாதத்தைக் கொடுப்பவளாவாள். இவளுக்கு இளைய சகோதரங்கள் ஏழுபேர் ஆகும்.

33. அவைகளில் சிலவே சேதம் அவள் தாயின் குடும்ப மேன்மை
அதிபதி பூர்வம் சொல்வேன் னருணையின் கீழ்ப்பாலாக
நதிகரை அருகில் சிற்றூர் நல்லிறைள் மறைக் குலத்தில்
பதியினில் திருவு முண்டாய்ப் பாலர்க ளாதிக மாகி ;

33. இந்த ஏழு சகோதரர்களில் சிலர் இறந்து விடுவார்கள். ஜாதகியின் தாயாரின் தாயாருடைய குடும்பமானது மேன்மையுடையதாகும். ஜாதகியின் தாயாருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறேன். அருணை என்று சொல்லப்பட்ட திருவண்ணாமலை ஸ்தலத்திற்குக் கிழக்குத் திக்கில் ஒரு நதியின் கரையிலுள்ள ஒரு சிறிய கிராமத்தில் பிராமணர் குலத்தில் இவள் பிறந்தாள். இவள் புருஷனும், வீட்டில் செல்வமும், அதிகமான குழந்தைகளும் உடையவளாகி ;

34. சுகமுடன் வாழுந் நாளில் செய்தவைழ் தன்னைச் சொல்வேன்
தகமையாய் வேதத் தோரை தான் வணங்காமல் நின்றாள்
அகமதில் கருவம் கொண்டு அரன்பணி செய்யா நின்றாள்
இகபரன் பக்தியோர்க்கு இடைஞ்சல்க ளனந்தம் செய்தாள்.

34. சுகத்துடன் வாழுகின்ற காலத்தில் இவள் செய்த பாவத்தைப் பற்றிச் சொல்லுகிறேன். இவள் ஒழுங்காக வேதங்களை ஓதுகின்ற பிராமணர்களை வணங்காமல் இருந்தாள். மனதில் கர்வ முண்டான வளாகிச் சிவபெருமானுக்கு வேலைகளைச் செய்யாமலும், அவரைத் தொழாமலும் இருந்து விட்டாள். சிவபெருமான்பேரில் பக்தியுள்ள தொண்டர்களுக்குக் கெடுதிகளையும் இடையூறுகளையும் அநேகமாகச் செய்தாள்.

35. அந்திம காலம் தன்னில் அதிகமாய் வாயு நோயால்
அந்தகன் பக்கல் சென்று அயனுமே வரையப் பட்டு
வந்தவ ளிவளே யென்றோம் மாதுவும் கேட்க லுற்றாள்
முந்திய ஜன்மம் தன்னில் முதல்குல முதித்தா ளென்றீர்.

35. ஜாதகியின் தாயார், தன்னுடைய கடைசிக் காலத்தில் ஒரு பெரிய வாயு ரோகத்தால் இறந்து, எமனிடத்திற்குப் போய்ப் பிறகு பிரமதேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து இவள் பிறந்திருக்கின்றாள் என்று சொல்லுகிறோம். அதன்பேரில் பார்வதியம்மையார் கேட்கின்றார். இவள் முன் ஜன்மத்தில் முதல் குலமாகிய பிராமணர் குலத்தில் பிறந்தாள் என்று சொன்னீரே !

36. இந்தவோர் ஜன்மம் தன்னி லிக்குல முதிப்ப தென்ன
முந்திய ஜன்மம் தன்னில் மூர்க்கமாய் மனத்தா ளாகிச்
சந்ததம் கடவுள் பக்திச் சான்றோர்கள் இச்சை யின்றி
வந்ததால் கங்கை சேயாய் வரைந்தன மென்று சொன்னோம்.

36. அப்படி யிருந்தும் இவள் இந்த ஜன்மத்தில் இந்த வேளாளர் குலத்தில் பிறக்க வேண்டிய காரணம் என்ன என்பதைச் சொல்லுவீராக. இவள் முன் ஜன்மத்தில் பிடிவாதமானதும் அறிவில்லாமலுமான மூடத்தன

மான குணத்தையும் உடையவளாகி எப்போதும் கடவுளின்மேல் பக்தியும் அன்பும் உடைய பெரியோர்களிடத்திலும் நல்ல குணங்களையுடைய அறிஞர்களிடத்திலும் ஆசையும் அன்பும் இல்லாமல் இருந்து வந்ததால் வேளாளர் வம்சத்தில் குழந்தையாய்ப் போய்ப் பிறப்பாள் என்று சொன்னோம்.

37. மறுஜனமம் பூமி தன்னில் மறைக் குல முதிப்பா ளாகும்
பெருமையாய்க் குடும்பி யாகிப் புத்திர ரதிக முண்டாய்
இருவினை யில்லாளாகி யிவளுமே வாழ்வா ளாகும்
பெருவயி றோனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

37. ஜாதகியின் தாயார் தன்னுடைய பின்ஜன்மத்தில் பிராமணர் குலத்திற் பிறப்பவளாவாள். மேன்மையான குடும்பஸ்தையாகியும் புத்திரர்களை அதிகமாக உடையவளாகியும் இரண்டு வினைகளாகிய புண்ணியமும் பாவமும் இல்லாதவளாகியும் மறுஜன்மத்தில் இவள் வாழ்பவளாவாள். பெரிய வயிற்றை உடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த புண்ணியவதியாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

38. தந்தையின் பூர்வம் சொல்வேன் ஜம்புகேச்வரத்தி லேதான்
வந்தனன் சதுர்த்த ஜாதி வளமுள தனவா னுக்கு
முந்திய கடவுள் பத்தி முயற்சியைத் தலங்கள் சென்று
நொந்தவர்க் கன்ன மீந்து நேமியில் நல்லோ னாகி ;

38. ஜாதகியின் தகப்பனுருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் ஜம்புகேச்வரம் என்ற ஸ்தலத்தில் நான்காவது ஜாதியாகிய சூத்திர ஜாதியில் ஒரு செழிப்பான பணக்காரனுக்கு ஆண் குழந்தையாய்ப்பிறந்தார். முதற் கடவுளாகிய சிவபெருமான் மேல் பக்தியும் அன்பும் பூண்டு அவருக்குத் தொண்டுகளைச் செய்து ஸ்தலங்களுக்குப்போய் ஏழைகளுக்கும் நொந்துபோய்க் கஷ்டப்படுகின்றவர்களுக்கும் சாப்பாடு போட்டுப் பூமியில் இவர் நல்லவராக இருந்து ;

39. காலன்தன் பதிக்குச் சென்று கஞ்சனால் வரையப் பட்டுச்
சீலமாம் கங்கை சேயாய் ஜனித்தவ னிவனே யென்றோம்
சாலவே மனைவி யாலே சார்ந்திடும் யோகம் தானும்
கோலமாய்ப் பின்ஜன் மத்தைக் கூறுவோம் தாயே கேளும்.

39. இறந்து எமபட்டணத்திற்குப் போய்ப் பிறகு பிரமதேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு நல்லொழுக்கமுள்ள ஒரு வேளாளனாக இவர் பிறந்தார் என்று சொல்லுகிறோம். இவருக்குத் தன்னுடைய மனைவியால் யோகம் உண்டாகும். இவருடைய பின்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். பரர்வதியம்மையே! கேட்பீராக.

40. கம்பையில் பிரம்ம சேயாய்க் கடவுளர் பூசை பூண்பன்
அம்பிகை கேட்க லுற்றாள் அவனுமிச் ஜென்மந் தன்னில்
நன்மைகள் செய்த தென்ன நவிலுவீர் முனியே நீர்தாம்
இம்மையில் நல்லோ னாயு மிளமனதாக வும்தான் ;

**40.** ஜாதகியின் தகப்பனுர் கம்பை என்று சொல்லப்பட்ட காஞ்சீபுரத்திற்குக் அருகிலுள்ள ஓர் ஆற்றின் கரையோரத்தில் பிராமணர் குலத்தில் ஆண் குழந்தையாகப் பிறந்து கடவுளுக்குப் பூஜை செய்வர். இதன் மேல் பார்வதியம்மையார் கேட்கின்றுர். இவர் இந்தப் பிறப்பில் என்ன நன்மைகளைச் செய்தார் என்பதை, முனிவரே ! நீரே சொல்லுவீராக. இவர் இந்த ஜன்மத்தில் நல்லவராகவும், தயாளமான மனத்தை உடையவராகவும்.

**41.** சூதிலா மனத்தா னுயும் துருசிலா வார்த்தை யாயும்
மேதினில் வாழ்வ தாலே மேவுவான் மறையோ னுக
ஒதுவேன் முப்பத் தாறில் உயர்கும்ப மாதம் தன்னில்
மாதவர் பதத்தைச் சேர்வன் மலையிறை மகளே கேளாய்.

(பாக்கி செய்யுட்கள் ஓலை ஏட்டில் காணப்பட வில்லை).

**41.** கள்ளம் கபடு வஞ்சனை இவைகள் இல்லாத மனத்தை உடையவராயும் குற்றமில்லாத வார்த்தைகளை உபயோகிப்பவராயும் இருந்து பூமியில் வாழ்ந்து வந்ததாலே பிராமணராகப் பிறப்பார். இவர் ஜாதகிக்கு முப்பத்தாறுவது வயதில் † மேன்மையான மாசி மாதத்தில் கடவுளுடைய பதவியை அடைவார். இமயமலையின் அரசனுகிய பர்வதராஜனுடைய புத்திரியாகிய பார்வதியம்மையே ! கேட்பீராக.

**குறிப்பு.**—இதன் தொடர்ச்சியாயுள்ள ஓலை ஏடுகள் கிடைக்கவில்லை. மேலும் ஜனன காலத்திய தசை இருப்பு ஜனன லக்கின காலத்திலிருந்து ஊகித்துத் தோராயமாக ஹூ 1–1–0 என்று கொடுக்கப்பட்டிருக்கின்றது.

† **பிதுர் மாரகம்.**—ஜாதகிக்கு வயது ஹூ 35–0–0 முதல் ஹூ 36–0–0 முடியும் வரையிலும் இராகு தசையில் சந்திரபுக்தியும் அங்காரக புக்தியும் நடக்கின்றன. ஆனுல் மாசிமாதத்தில் ராகுதசையில் அங்காரக புக்தி நடக்கின்றது. பிதுர் லக்கினம் ஒன்பதாவது பாவமாகிய மீனம் ஆகும். மீன லக்கினத்திற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் சனி புதன் சுக்கிரன் சூரியன் இவர்கள் மாரகாதிபதிகளாகின்றுர்கள். இராகு அங்காரகனுடைய வீட்டில் இருக்கின்றுர். ஆகையால் இவர் ஜாதக சந்திரிகை 12-ஆவது சுலோகப் பிரகாரம் அங்காரகனுடைய பலனைக் கொடுக்க வேண்டும். அங்காரகன் லக்கினுதிபதியாகிய குருவுடன் கூடி மாரகஸ்தானமாகிய மூன்றுவது வீட்டில் இருக்கின்றுர். ஆகையால் ஜாதகபாரிஜாதம் பதினுன்காவது அத்தியாயம் அறுபதாவது சுலோகத்தை அனுசரித்து எழுதப்பட்டுள்ள துய்யகோளம் எட்டாவது பாவம் இருபதாவது பாடல் பிரகாரம் அங்காரகன் பிதாவுக்கு மாரகஞ் செய்ய அதிகாரம் உடையவராகின்றுர். ஆகையால் இவருடைய பலனைக் கொடுக்க வேண்டிய ராகுவும் தன் தசையில் பிதாவை மாரகஞ் செய்ய அதிகாரம் பெற்றவராகின்றுர். ஆகையால் இராகு தசையில் அங்காரக புக்தியில் பிதாவுக்கு மாரகம் நேரிட அமைப்பு இருக்கின்றது.

# ஜாதகம் 91

1. [1]மதிபுதன் நண்டில்[2] சனிதுலாம்
வெள்ளி[3]மாட் டினி[4]லிரவியும்[5] விலை
நதிகுரு கேது சாடியில்[7] ராகு
நிலமகன்[8] அரியினில்[9] நின்று
பதியது கடகம்பலன் யெவ்வாறு புகல்வீர்
பகருவோ மாண்சு தராகும்
அதிபனு மில்லம் வடக்கு தென்வீதி
வாசலு குடகு நோக்காமே.

| | | | |
|---|---|---|---|
| | | சுக்கிரன் | சூரியன் |
| குரு கேது | இராசி சக்கரம் | | லக்கினம் சந்திரன் புதன் |
| | | | அங்காரகன் ராகு |
| | | சனி | |

பூசம் 1-ஆம் பாதம், சனிதசை ஷ 17-0-0

1. சந்திரனும் புதனும் கடகத்திலும், சனி துலாத்திலும், சுக்கிரன் ரிஷபத்திலும், சூரியன் மிதுனத்திலும், குருவும் கேதுவும் கும்பத்திலும், ராகுவும் அங்காரகனும் சிம்மத்திலும் இருந்து ஜன்ம லக்கினம் கடக மானல் பலா பலன்களை எவ்விதமாகச் சொல்லுவீர் என்று கேட்க, பிறக்கும் குழந்தை ஆண் குழந்தையாகும் என்று சொல்லுகிறோம். ஜாதகருடைய வீடு வடக்குத் தெற்குத் தெருவில் மேற்குத் திக்கைப்பார்த்த தெருவாயில் உடைய தாகும்.

**குறிப்பு.**—இந்த ராசிச்சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்த முடைய தாகும் :—மேஷத்தில் சனியும், ரிஷபத்தில் கேதுவும், சிம்மத்தில் சந்திரனும் அங்காரகனும் சுக்கிரனும், துலாத்தில் புதனும், விருச்சிகத்தில் ராகுவும், கும்பத்தில் குருவும், மீனத்தில் சூரியனும் ஆகும். குருவும் சனியும் வக்கிரமாக விருக்கின்றார்கள்.

---

[1] சந்திரன் [2] கடகம் [3] சுக்கிரன் [4] ரிஷபம்
[5] சூரியன் [6] மிதுனம் [7] கும்பம் [8] அங்காரகன்
[9] சிம்மம்

2. நோக்கிடு மருகில் சந்துமே யுண்டாம்
நிமலிமாகாளியு மீனம்
ஏற்கவோ மாயோன் மேற்கினில் தோன்று
மிடிபடும் அருகரும் வாயும்
ஆர்க்கவே சிறுவூர் அற்பமா மில்லம்
அறைந்தனம் தாய்தந்தை யோகம்
தாக்கியே யோகம் முன்பின் ஜன் மங்கள்
சாற்றுவோம் விவரமே யாங்கள்.

2. ஜாதகர் பிறந்த வீட்டிற்குச் சமீபத்தில் ஒரு சந்து இருக்கும். பெரிய காளியம்மன் கோயில் வடகிழக்குத் திக்கிலும், ஏற்கனவே மகாவிஷ்ணுவின் கோயில் மேற்கிலும் இருக்கும், இடிந்துபோன சமணருடைய கோயில் வடமேற்குத் திக்கில் இருக்கும். ஒரு சிறிய கிராமத்தில் பிறந்தவீடு ஒரு மிகவும் சிறியதானதும், விலை மதிப்பில்லாததுமான வீடாகவிருக்கும் என்று சொல்லுகிறோம். ஜாதகருடைய தாயார் தகப்பனர் இவர்களுடைய யோகங்களைப்பற்றியும் இவருடைய யோகங்களைப்பற்றியும் முன்ஜன்மம் பின்ஜன்மம் ஆகிய இவைகளைப் பற்றியும் விவரமாக நாங்கள் சொல்லுகிறோம்.

3. மாய்ந்திடும் தந்தை வர்க்கமே யென்றோம்
மன்னனும் தனிபனுய் வாழ்வன்
சார்ந்திடும் தன்னோ டுற்றவர் முன்னோர்
ஜனித்தவன் தனக்குப்பின் காணன்
ஏந்திடும் தந்தை சேதிகள் பிறர்க்கு
இடுவனு மிளமன முண்டு
ஆயந்திடும் வித்தையில் லாதவனுகம்
அதிகமா மிருநிறம் உணச்சல்.

3. ஜாதகருடைய தகப்பனருடைய வர்க்கத்தார்கள் இறந்துவிடுவாகள் என்று சொல்லுகிறோம். ஜாதகர் தனியாக விருந்து வாழ்வார். இவருக்கு மூத்த சகோதரர்களும் இளைய சகோதரர்களும் கிடையா. இவருடைய தகப்பனரின் விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் பிறருக்குக் கொடுக்குந் தன்மையுடையவர். இளகிய மனத்தை உடையவர். தீர்க்கமாக ஆராய்ச்சி செய்யும் படிப்பு இல்லாதவர், நுட்பமான புத்தி அதிகமாக உடையவர். இரண்டு நிறங்கள் கலந்துள்ள நிறமாகிய மாதநிறமான தேகத்தை யுடையவர், ஒல்லியான தேகத்தை உடையவர்.

4. சல்லிய மில்லான் தந்தையார்ச் சிதத்தைச்
சார்ந்திடான் தக்ஷிணம் வாழ்வன்
இல்லறம் செய்யான் கிருஷியாம் தொழிலே
எப்போதும் சஞ்சல புத்தி
அல்லல்க ளதிகம் அருகர்தம் பத்தி
யாவர்க்கு நல்ல வனுவன்
மல்லினில் செல்லான் வார்த்தையும் பிசகான்
மறுமமு முடையவ னுமே.

4. ஜாதகருடைய தகப்பனார் கடன் இல்லாதவர். இவர் பிதுரார்ஜித சொத்தை அடைய மாட்டார். தெற்குத் திக்கில் குடியிருப்பார். தருமங்களை அடையமாட்டார். விவசாயத் தொழிலைச் செய்வார். எப்போதும் இவருக்குச் சங்கடமான புத்தியே இருக்கும். தொந்திரவுகள் அதிகமாக விருக்கும். சமண தெய்வத்தின்மேல் பக்தியுடையவர். எல்லோருக்கும் நல்லவராக விருப்பார். சண்டைக்குப் போக மாட்டார். தான் சொல்லிய வார்த்தைகளைத் தவறி நடந்து கொள்ள மாட்டார். இரகசியத்தை மனதிலேயே உடையவராவார்.

வேறு

5. ஆமே யிந்தப் பாலன்குணம் அறையக் கேளாய் இருநிறத்தன்
தீமை ஒருவர்க் கெண்ணு தான் சிறப்பாய்க் குடும்ப மில்லா தான்
பூமி தன்னால் ஜீவிப்பன் பொருளு மில்லான் சல்லிய வான்
தாமே வேறு இல்லம்வாழ் சரச வார்த்தை தரித்திர வான்.

5. ஜாதகருடைய குணாதிசயங்களைப்பற்றிச் சொல்லுகிறோம். கேட்பீராக. இவர் இரண்டு நிறங்கள் கலந்த மாநிறமான நிறத்தை உடைய தேகத்தை உடையவராவர். கெடுதியை ஒருவருக்குஞ் செய்ய நினைக்க மாட்டார். மேன்மையான குடும்பத்தை உடையவரல்லர். நிலங்களைப் பயிரிட்டு ஜீவனஞ் செய்வார். சொத்தில்லாதவர். கடன்படுவார். தான் வேறொரு வீட்டில் வாழ்வார். இனிமையான வார்த்தைகளைச் சொல்லுவார். தரித்திரத்தை உடையவராவார்.

6. வானே உலகில் சஞ்சரிப் பன் மனைவி மைந்தர் தான்கா ணான்
ஈனமி லாதான் எதிரி யிலானி யிருக்கும் குடும்பம் கோள்புகல்வன்
மானேர் விழியார் மோக முளன் மரும நூலைத் தானறி யான்
தேனே கல்வி யற்ப முறும் சேரும் காரக வாயு குணம்.

6. ஜாதகர் ஊர் ஊராய்த் திரிந்து கொண்டிருப்பார். இவருக்கு மனைவியும் குழந்தைகளும்கூட இருக்கமாட்டார்கள், அல்லது கிடையா. இவருக்குப் பந்துக்கள் கிடையா. சத்துரு கிடையாது. குடும்பம் கஷ்டத்தை அநுபவிக்கத்தக்கதாகும். † இவர் கோள் சொல்லமாட்டார். மானைப்போன்ற கண்களை யுடைய ஸ்திரீகளின்பேரில் காம ஆசையை உடையவர். மர்ம சாஸ்திரத்தையும் காம நூலையும் அறியாதவராவார். கொஞ்சமான படிப்பை உடையவர். காரக நோய் இவரை வந்து அணுகும். இவருக்குத் தேகம் வாயுகுண முள்ளதாகும்.

* குறிப்பு.—ஏழிற்கும் எட்டிற்கும் உடையவரான சனி லக்கினத்தையும் சந்திரனையும் பார்ப்பதாலும், மூன்றிற்கும் பன்னிரண்டிற்கும் உடையவரான புதன் லக்கினத்தில் சந்திரனுடன் கூடி இருப்பதாலும் ஜாதகர் ஊர் ஊராய்த்திரிந்து கொண்டிருக்கும் அமைப்பு உடையவராவார்.

* இரண்டில் இரண்டு நைசர்க்கிக பாபிகளாகிய அங்காரகனும் இராகுவும் இருப்பதாலும் குடும்பஸ்தானாதிபதியாகிய இரண்டிற்குடைய சூரியன் லக்கினத்திற்குப் பன்னிரண்டில் இருந்துகொண்டு ஆறுக்குடைய குருவால்

பார்க்கப்படுவதாலும் ஆறுக்குடைய குரு இரண்டைப் பார்ப்பதாலும் குடும்பம் க்ஷீணித்துப் போகும். கஷ்டத்தை அடையும். ஜாதகாலங்காரம் 647-ஆவது பாடலைப் பார்க்கவும்.

7. குணத்தா னுக்கு மனைவிமைந் தர் சுகம் வண்ணம் தானுரைப் பீர்
அணைத்தா னிரண்டில் சேய்[1] ராகு அருக்கன்[2] விரயம்[3] தானிருக்க
கனத்தைச் சொன்னோம் ஏழிடத் தோன் சனியுச்சமுமாயிருக்க
மணந்தா னெவ்வாறு நடந்தது மரித்துச் சொல்வார் மாமுனியும்;

7. ஜாதகருக்கு மனைவியும் குழந்தைகளும் ஆகிய இவர்களுடைய சுகத்தைச் சொல்லாததற்குக் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்க, இரண்டாவது பாவத்தில் அங்காரகனும் ராகுவும் விரையஸ்தானமாகிய பன்னிரண்டாவது வீட்டில் சூரியனும் இருப்பதாலும் கெடுதியைச் சொன்னோம் என்று பதில் சொல்ல, மாமுனியாகிய வசிஷ்டர் தடுத்துக் கேட்கின்றார் ஏழிற்குடையவராகிய சனியானவர் உச்சமாயிருப்பதால் எவ்விதமாகக் கலியாணம் நடந்தது என்பதைச் சொல்லுவீர் என்று கேட்கவே ;

குறிப்பு.—"மணந்தானெவ்வாறு நடந்தது" என்பது "மணந்தா னெவ்வாறு நடவாது" என்று இருந்தால் அதிகப் பொருத்தமுடையதாகும்.

8. முனியே பொன்னோ[4] னிருநான் கில் முயன்று சனியைத் தான் [பார்க்க
வனிதை சேரான் சுதர் காணான் மன்னன் பூர்வ வினை யாலே
தனியே வாழ்வன் முன்வினை யைச் சாற்றும் விவரம் ஜயமுனி யே
கனமாம் சோலை வளர் காஞ்சி காம னுதித்தான் சௌராஷ்டிரம்;

8. முனிவரே! குருவானவர் எட்டில் இருந்துகொண்டு சனியைப் பார்ப்பதால் ஜாதகருக்கு மனைவி வந்து சேரமாட்டாள். குழந்தைகள் கிடையா. இவர் முன் ஜன்மத்திய பாவத்தினாலே தனியாகவிருந்து வாழ்வார் என்று சொல்லவே ஜயமுனிவரே முன் ஜன்மத்திய பாவத்தை விவரமாகச் சொல்லுவீர் என்று கேட்டார். அதன் மேல் சொல்லுகின்றார். ஜாதகர் பெரிய சோலைகளும் வளமும் உள்ள காஞ்சீபுரத்தில் சௌராஷ்டிர குலம் என்ற பட்டுநூல்காரர் குலத்தில் ;

9. உதித்து வறுமை யில்லாமல் உயர்வாய்த் தராசு செட்டுச்செய்து
மதித்தோர் நேசம்தான் செய்து மனைவி மைந்தர் தானுண்டாய்
அதிகத் துணைவர் தானுட னேஅணுகி வாழுங் காலத்தில்
சதியாய்ச் செய்தான் தம்பாக்கி சாற்றுன்பாகம் பொருள் யில்லம்.

9. பிறந்து கஷ்டங்களும் தரித்திரமும் இல்லாமல் மேன்மையாகத் தராசுகொண்டு வியாபாரஞ் செய்து தன்னை மதித்தவர்களுடன் சினேகஞ் செய்துகொண்டு மனைவியும் மக்களும் உடையவராகி அநேக

---

[1] அங்காரகன் [2] சூரியன் [3] பன்னிரண்டாமிடம் [4] குரு

சகோதரர்களுடனும் உதவியாளர்களுடனும் இருந்து வாழ்கின்ற காலத்தில் இவர் தன்னுடைய சகோதரனுக்குச் சேரவேண்டிய பாகமாகிய சொத்து வீடு இவைகளையும் தான் கொடுக்கவேண்டிய பாக்கிகளையும் கொடுக்காமல் ஏமாற்றினன்.

10. இல்லம் வீடுநீக் கிடவே யிளையோன் வறுமை மிககொண்டு
சொல்லும் சாபம் யாதெனிலே தோன்றும் பின்ஜன் மங்களிலே
அல்லல் மிகவே தானுண்டா யனுகார் துணைவர்மனைவி
[மைந்தர்
எல்லை யெல்லாம் தான் திரிவா யெய்தும் மேகரோ கமுமே ;

10. ஜாதகருடைய இளைய சகோதரன் வசிக்கின்ற வீடு போய் விடவே தரித்திரத்தை அதிகமாக அடைந்து சொல்லுகின்ற சாபம் என்ன வென்றால் நீ இனிமேல் பிறக்கும் ஜன்மங்களில் அதிக கஷ்டங்களை அடைந்து சகோதரர்களும், மனைவியும், மக்களும் இல்லாதவனாய் இருந்து ஊரெல்லாம் திரியக்கடவாய். உனக்கு மேகரோகமும் ;

11. எய்து மில்லம் தான் விட்டு வேறு இல்லம் தான் வாழ்வாய்
ஐயமனதாய்ச் சல்லியமாய் அயலால் பாரி யிச்சைய தாய்ச்
சொல்லா லவமானங்க ளுண்டாய்த் துறவிபோலே தான் வாழ்வாய்
புல்லோர் மதிப்பு இல்லாமல் நீயும்பூமி தன்னில் பொருந்திடுவாய் ;

11. வந்து சம்பவிக்கக்கடவது. தன் வீட்டைவிட்டு வேறு வீட்டிற் குப் போய் வாழக்கடவாய். துன்பமான மனமுடையவனும். கடன் காரனாகவும் பிறருடைய மனைவியின்மேல் காம ஆசையுடையவனாகியும் தன்னுடைய வார்த்தைகளால் அவமானங்களை அடைந்தும் சந்நியாசியைப் போல ஒண்டியாய் இருந்தும் வாழக்கடவாய். கீழ் மக்களுடைய மதிப்புக்கூட இல்லாமல் நீ பூமியில் இருந்து வாழக்கடவாய் என்று சொல்லியதுமன்றி ;

12. இன்னும் பலவாய்ச் சொல்லியே யிளையோ னிறைத்தான்
[தூள்தம்மை
அன்னவன் தனக்கு அப்பாவம் சேர்ந்து அடைந்தது இதுயன்றி
முன்குலத் தோனும் தன்னி டம் நேசமா யுதவிப் பொருள்
[இன்னோன்
பின்முறி தட்டி நந்துன் னமறையோன் பின்சில நாட் சென்று ;

12. இன்னம் பலவாறாகச் சொல்லி இளைய சகோதரன் தெருத்தூளை எடுத்து இறைத்தான். ஜாதகருக்கு இந்த சாப பாவம் வந்து சம்பவித்தது. இதுவுமல்லாமல். இவர் முதல் குலமாகிய பிராமணர் குலத்திற் பிறந்த ஒருவருடன் சினேகஞ் செய்து கொண்டு, பிறகு அவருக்குப் பணத்தைக் கொடுத்து உதவி செய்து, பின்னால் அவரிடமிருந்து எழுதி வாங்கிக்கொண்டு பிறகு மொத்தத்தையும் வாங்கச் சிலநாள்களாக அவருடைய வீட்டிற்குப் போய்க்கொண்டிருந்து ;

13. சென்றுன் தனவான் மறையவ னில்லம் தேவி மேல்கா தல்
கொண்டு
நன்று நன்மொழி நயப்புடனே யுரைத்தான் நாயகி அதற்கிசையா
[மல்
குன்றிய மனத்தாள் மறுமொழி கூறமாறனும் கோப மாய்மீண்டு
வென்றி சேர ரசர்பக்கல் சென்று விளம்பி னுன்முறி தன்னை
[யின்னேன்.

13. போய் இவர் செல்வவந்தனுனபடியால் பிராமணருடைய வீட்டிலுள்ள அவருடைய மனைவியின்மேல் காம ஆசையை யுடையவராகி நல்ல வார்த்தைகளை இனிமையாக அவளிடத்தில் சொன்னர். அந்த ஸ்திரீ அதற்கு இணங்காமல் துன்பமான மனத்தையுடையவளாகிப் பதில் சொல்லி விடவே இவர் கோபத்துடன் திரும்பிவந்து பிறகு இராஜாங்கத்தாரிடம் போய் இவர் தான் கடன் கொடுத்திருக்கும் விஷயத்தை அவர்களிடத்தில் சொன்னர்.

14. இன்னவன் முறியை ராசரும றிந்து இயம்பினுர்மறையவர் நீயும்
பொன்தர வேண்டு மென்று மே புகன்றுர் பிராமணன் தரசத்
[தியற்று
அன்னவன் வீடு யாவும்தன் பொருளுக் கடக்கி னுன் இவனே
முன்குலத் தோனே யில்லம்விட் டோட்டடி மொழிகுவான் மறை
[ப்பாரி.

14. இவருடைய பிரியாதை அரசாங்க மனிதரும் தெரிந்து கொண்டு பிராமணரைப் பார்த்து நீ பணத்தைக் கொடுக்கவேண்டும் என்று சொன்னர். அதன்மேல் பிராமணர் பணத்தைக் கொடுக்கச் சக்தி இல்லை என்று சொல்லவே சௌராஷ்டிர வம்சத்திற் பிறந்த இந்த ஜாதகர் பிராமணருடைய வீடு முதலிய, எல்லாவற்றையும் தன்னுடைய பணத்திற்காகப் பிடுங்கிக்கொண்டு அந்தப் பிராமணரை வீட்டைவிட்டு அப்புறப்படுத்தி ஓட்டிவிட, பிராமணருடைய மனைவி பின்வருமாறு சொல்லுகின்றுள்.

15. பாரியா யென்னை வேண்டி வந்த பாவி அந்த வெஞ்சினத் தால்
தூறியே அரசர் பக்கல் சென்று துரத்தினுய் இல்லத்தை விட்டு
வேறுஜன்மத் தில்துணை வர் மனைவிவீருத் தந்தையி லும்
சீரிய குடும்பம் சிதைந்திடுமே செல்வம் சிதறிடும் தேசம் எல்லே.

15. மனைவியாக என்னை உபயோகப்படுத்த எண்ணங் கொண்டு என்னிடத்திற்கு வந்த பாவியாகிய நீ அரசாங்கத்தாரிடம் போய் எங்களை எங்களுடைய வீட்டிலிருந்து துரத்திவிட்டாய். ஆகையால் உனக்கு மறு ஜன்மத்தில் சகோதரர்களும் மனைவியும் விளங்கா. நீ உன்னுடைய தகப்பனுருடைய வீட்டைவிட்டு வெளியேபோவாய். சிறப்பான உன்னுடைய குடும்பம் அழிந்து போகக்கடவது. உன்னுடைய செல்வமும் அழிந்து போகக்கடவது. நீயும் பிறர் சிறிக்கும்படியாக ஊரைவிட்டு வெளி தேசம் தேசமாகப் போய் ;

16. அலேவா யென்று அம்மறைமா தருளி ளுள்கர்ப்புடையோளும்
குலவி வினையும் அந்திய காலங் குறித்துச் செல்வங்களும்
பலவித வறுமை படர்ந்தது இவனும் பலவித தீர்த்தங்கள்
[தோய்ந்து
உலவி ளுன்கா லன்பக்க லிவனே உந்தியிலுதித்தவனருளால்.

16. திரியக்கடவது என்று பதிவிரதையான அந்தப் பிராமண ஸ்திரீ ஜாதகரைப் பார்த்துச் சொன்னுள். அந்தச் சாபம் ஜாதகரை வந்து அடைந்தது. ஜாதகர் தன்னுடைய கடைசி காலத்தில் தன்னுடைய செல்வங்கள் எல்லாம் அழிந்துபோய் பலவிதமான கஷ்டங்களேயும் தரித் திரத்தையும் அடைந்து பிறகு இவர் அநேக விதமான ஸ்தல தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்து இறந்து எமனிடத்திற்குப் போய் மகாவிஷ்ணுவினுடைய தொப்புளிலிருந்து பிறந்தவராகிய பிரமதேவனுடைய கிருபையால் ;

17. அருளினுல் அரக்கர் வர்க்கத்தில் உதித்தான்
அம்மறை மாது சாபம் போல்
திரிந்து பின்தி செரிந்திடு மென்றேம்
சேயிழை மணமுமே யில்லான்
வருகினும் தீதே காரகம் உண்டு
மறுதேசம் தன்னிலே சென்று
குருவருள் பெற்றுக் குலவுவா னென்றேம்
குறிக்கிறே மன்னேயின் குணத்தை.

17. கிருபையால் சமணருடைய குலத்தில் வந்து பிறந்திருக்கின் றூர். அந்தப் பிராமண ஸ்திரீயினுடைய சாபத்தைப் போலவே ஜாதகர் திரிந்து அலேந்து பிறகு ஏங்கிப் போய் விடுவார் என்று சொல்லுகிறேம். இவருக்கு விவாகமான மனேவி கிடையாது. ஒரு சமயம் கலியாண மான மனேவி நேர்ந்தாலும் அதனுல் கெடுதியே உண்டாகும். இவருக்குக் காரக நோய் ஏற்படும். அன்னிய தேசத்திற்கு இவர் போய் ஒரு குருவினுடைய கிருபையை அடைந்து வாழ்குவார் என்று சொல்லுகிறேம். இனிமேல் இவ ருடைய தாயாரின் குணுதிசயங்களேப் பற்றிச் சொல்லுகிறேம்.

18. தைய்யலிரு நிறமாகும் சமயோகத்தாள்
சாந்தவாள் பொறுமை யுண்டு தவரு வார்த்தை
ஐயமனம் வடகீழா யில்ல மாகும்
அபய மென்றேர் தமைக் காப்பள் அருகர் பத்தி
மெய் தனிலே பித்த வாயு அந்தியத்தில்
மேவிடுமே சோதிகுற்றம் அபவாத மேற்பள்
நையவே கூருளாம் வர்க்கம் நாஸ்தி நாயகியும்
துணே ஒன்று நவிலுவோமே.

18. ஜாதகரின் தாயார் இரண்டு நிறங்கள் கலந்த மாநிறமான தேகத்தை யுடையவள். நடுத்தரமான யோகத்தையுடையவள். சாந்தமானவள். பொறு மையை உடையவள். தான் சொன்ன வார்த்தையைத் தவறிடாமல் நிறை

வேற்றக் கூடியவள். அச்சமானதும் சந்தேகமானதுமான மனத்தை உடையவள். இவளுடைய வீடு வடகிழக்குத் திக்கில் இருக்கும். தன்னிடம் வந்து அடைக்கலம் புகுந்தவர்களைக் காப்பாற்றுவாள். சமணருடைய தெய்வத்தின் மேல் பக்தியும் அன்பும் உடையவள். இவளுடைய உடம்பில் பித்த வாயு இருக்கும். இவளுக்குக் கடைசி காலத்தில் நாக்குப்பூச்சியால் ரோகம் உண்டாகும் குற்றச் சாட்டையும், பழியையும் அடைவாள். துன்பமான வார்த்தைகளைச் சொல்லமாட்டாள். இவளுடைய பந்துக்களும் நாசமடைவார்கள். இவளுக்கு ஒரே சகோதரன் என்று சொல்லுகிறோம்.

19. நவிலுவோம் தாய்பூர்வம் பட்சி மேற்கில்
நலமான பேரூரில் வடுகர் வமிசம்
இவள்பந்து வறுமை யின்றி சுதர்களுண்டா
யெய்தும் கால்வினையைச் சொல்வேன் நாத்தித்தன் மேல்
பாவமான வார்த்தை சொல்லிப் பறக்க விட்டாள்
பாவைமனம் திகலடைந்து பகருவாள்பின்
அவனியிலே நிந்தை சொல்லியே அலைய விட்டாய்
அணுகிடுமே மறுசென்மம் எனைப்போல் நீயும்

19. ஜாதகரின் தாயாருடைய முன்ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறோம். பக்ஷிஸ்தலமாகிய திருக்கழுக்குன்றத்திற்கு மேற்கில் ஒரு நல்ல சிறந்த பெரிய ஊரில் தெலுங்கர் குலத்தில் பிறந்து பந்துக்களுடைய கஷ்டமில்லாமலும் அதிக பந்துக்களை உடையவளாயும் குழந்தைகளை உடையவளாயும் வாழ்கின்ற காலத்தில் சம்பவித்தப் பாவத்தைச் சொன்லுகிறேன். இவள் தன்னுடைய நாத்துணங்கையின் மேல் பாவமானதும் அபவாதமானதுமான வார்த்தைகளைச் சொல்லி அவளை வெளியே போய் அலையும் படியாயும் தவிக்கும் படியாயும் செய்து விட்டாள். அந்த நாத்தனர் மனத்தில் பயத்தை உடையவளாய்ச் சொல்லுகின்ருள். நீ பூமியில் என்மேல் அபவாதங்களைச் சொல்லி என்னை அலைந்து தவிக்கும் படியாகச் செய்து விட்டாய். உன்னுடைய மறு ஜன்மத்தில் நீ என்னைப் போல ;

20. நீங்குமே சுதர் துணைகள் தாயில்லம் போம்
நேமியினில் நிந்தையது அதிக முண்டாய்
ஓங்காது குடும்ப மென்றும் அந்தியத்தில்
ஒளிமாரும் இவ்வாறுய்ச சொல்லிச் சென்ருள்
தீங்காக அப்பாவம் சேர்ந்த தென்றும்
தேவியுமே அந்தியத்தில் கடவுள் பத்தி
பாங்காகப் பூசை செய்து காலன் பக்கல்
பறந்தனள் காண் நரகத்தில் பன்னுள் மூழ்கி ;

20. அலைந்து தவித்து பிள்ளை சகோதரர்கள் இவர்களை விட்டுப் பிரிந்து உன்னுடைய தாயாருடைய வீட்டிற்குப் போகக்கடவாய். பூமியில் நீ அதிகமான பழிகளை அடைந்து உன்னுடைய குடும்பம் அழிந்து போகக் கடவது என்று நான் சொல்லுகிறேன். மேலும் உன்னுடைய கடைசி காலத்

தில் உன்னுடைய தேகத்தின் தேஜஸ் குறைந்து விடக்கடவது என்று இவ் விதமாகச் சொல்லி விட்டு நாத்தனூர் போய்விட்டாள். அந்தச் சாபம் கெடுதியாக இவளை வந்து அடைந்தது என்று சொல்லுகிறோம். இவள் தன்னுடைய கடைசி காலத்தில் கடவுள் மேல் பக்தியும் அன்பும் உடையவளாகி ஒழுங்காகவும் நல்ல முறையாகவும் அவரைப் பூஜை செய்து இறந்து எமனிடத்திற்குப் போய் அநேக நாட்களாக நரகத்தில் அமிழ்ந்து கிடந்து ;

21. மூழ்கியே பிரமன் லக்கம் இக்குலத்தி
 லுதித்தனள் காண் முன்சாபம் சேர்ந்ததாலே
தாழ்வுண்டு தன்குடும்பம் தாயில் லம்பாழாம்
 தனிவாழ்வாள் சுதர்தோஷம் தரித்திர முண்டு
ஊழ்வினையால் அந்தியத்தில் விழிக்கு ஊனம்
 உண்டாகும் குடும்பமது உரங்கு மென்றோம்
பாழான நாத்தி பழியிவ் வாருகும்
 பகருவோம் பின்ஜன்மம் பாவையர்க்கே.

21. பிரமதேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் இக் குலத்தில் வந்து பிறந்தாள். இவளுக்கு இவளுடைய முன் ஜன்மத்திய சாபம் வந்து அடைந்ததால் குறைவுகள் நேர்ந்தன. இவளுடைய குடும்பமும் தாய் வீடும் பாழாய்ப போய் விட்டன. இவள் தனியாக விருந்து வாழ்வாள். இவளுக்குச் சந்ததி தோஷம் முண்டு. தரித்திரமும் உண்டு. முன் ஜன்மத்திய பாவத்தால் இவளுடைய கண்களுக்குக் கடைசி காலத்தில் கெடுதல் எற்படும். இவளுடைய குடும்பம் நொந்து போய் அழிந்து விடும் என்று சொல்லுகிறோம். இவைகள் எல்லாம் கெடுதியான நாத்தனூருடைய சாபத்தால் உண்டாயினவாகும். இவளுடைய மறுஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறோம்.

22. பாவையின்தன் மறுஜன்மம் மதுரை பக்கல்
 பிறப்பளாம் க்ஷத்திரிய குலம் பணிகளுண்டாய்
தாவிய போக்குதவி செய்வள் முப்பா னெட்டில்
 சாருவாள் காலன்பதி தவர்தலில்லை
மேவியதோர் தந்தையின் தன்பூர்வம் சொல்லுவேன்
 விளங்கிறு னவ்வூரில் வடுகனாக
ஆவலாய் மதுத்தொழிலைச் செய்து இன்னோன்
 அதிதிகள்மேல் பத்திகொண்டு அடைந்தான் பாலன்.

22. ஜாதகரின் தாயார் தன்னுடைல் பின் ஜன்மத்தில் மதுரைக்கு அருகில் க்ஷத்திரிய குலத்திற் போய் பிறப்பாள். ஆடை ஆபரணங்கள் இவைகளை உடையவளாகித் தன்னிடத்திற்கு வருபவர்களுக்கு உபகாரத்தைச் செய்வாள். இவள் ஜாதகருக்கு முப்பத்தெட்டாவது வயதில் * இறந்து எமனிடம் போய்ச் சேருவாள். இது தவறாது. ஜதகரின் தகப்பனாருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறேன். அதே ஊரில் தெலுங்கராகப் பிறந்தார். ஆசையுடன் மதுபானத் தொழிலை செய்து இவர் பரதேசிகளின்மேல் பக்தியும் அன்பும் உடையவராகி இறந்தார்.

* **குறிப்பு.—தாயார் மரண விஷயம்.**—ஜாதகருக்கு வயது ஹு 37-0-0 முதல் 38-0-0 முடியும் வரையிலும் கேது தசையில் இராகு புக்தியும் குரு புக்தியும் நடக்கின்றது. மாதுரு லக்கினம் நான்காம் பாவமாகிய துலாமாகும். துலா லக்கினத்திற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் குருவும் சூரியனும் மாரகாதிபதிகளாகின்றார்கள். கேது மாரகாதிபதியாகிய குருவுடன் சம்மந்தப்பட்டு இருக்கின்றார். மேலும் இவர் கடகத்திற்கு நான்காவது வீட்டிலுள்ள சனியினுடைய வீட்டில் இருக்கின்றார். ஆகையால் இவர் ஜாதகசந்திரிகை 12-ஆவது சுலோகப் பிரகாரம் குரு சனி இவர்களுடைய பலாபலன்களைக் கொடுக்கக் கூடியவராகின்றார். மேலும் இவர் ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகம் பிரகாரம் தன்னுடைய தசையில் மாதாவுக்கு மாரகஞ் செய்யும் அமைப்பு உடையவராகின்றார். குரு ஏற்கனவே மாதாவுக்கு மாரகாதிபதி யாகின்றார். மேலும் இவர் மாதுருஸ்தானத்தைப் பார்ப்பதுடன் மாதுருகாரகனுகிய சந்திரனுக்கு எட்டில் இருக்கின்றார். இவர் தன் புக்தியில் ராகுவைவிட தாயாருக்கு மாரகம் செய்ய அதிக அமைப்பு உடையவராக விருக்கின்றார்.

**23.** பாலனுமே மிச்சென்மம் அருகர் வமிசம்
பிறந்தனன்கா ணிருமூன்று ஆண்டு தன்னில்
காலன் பதி செல்லுவான் மறுஜன் மத்தைக்
கழறுவோம் தோகையின்மேல் ரெட்டி வமிசம்
சீருடன் முருகர்பக்தி சிறப்பாய்க் கொள்வன்
தேவிமரித் தோதுகிருள் தீரன் தானும்
ஞாலவே அருகர்குல மிச்சென் மத்தி
லீன்றவர் மறு ஜன்மம் ரெட்டி வமிசம் ;

**23.** ஜாதகருடைய தகப்பனர் இந்த ஜன்மத்தில் சமணர் குலத்தில் வந்து பிறந்திருக்கின்றார். இவர் ஜாதகருக்கு ஆருவது வயதில் † இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச்சேருவார். இவருடைய பின் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறோம். தோகை என்று சொல்லக்கூடிய மைலத்திற்கு மேற்குத்திக்கில் ஒரு ரெட்டியார் குலத்தில் பிறந்து நல்லொழுக்கத்துடன் முருகக்கடவுளின் மேல் பக்தியும் அன்பும் உடையவராய் இருப்பார். அதன்மேல் பார்வதியம்மையார் தடுத்துக் கேட்கின்றார். இந்த ஜென்மத்தில் சமணர் குலத்தில் பிறந்த இவர் மறு ஜன்மத்தில் ரெட்டியாருடைய வமிசத்தில் ;

† **குறிப்பு.—தகப்பனர் மரண விஷயம்.**—ஜாதகருடைய வயது ஹு 5-0-0 முதல் ஹு 6-0-0 முடியும்வரையிலும் சனிதசையில் சுக்கிர புக்தி நடக்கின்றது. பிதுர் லக்கினம் ஒன்பதாவது பாவமாகிய மீனம் ஆகும். மீன லக்கினத்திற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் சனி புதன் சுக்கிரன் சூரியன் இவர்கள் மாரகாதிபதிகளாகின்றார்கள். சனி மீனத்திற்கு மாரகஸ்தானங்களாகிய பதினோராவது பன்னிரண்டாவது பாவங்களுக்கு அதிபதியாகி எட்டாவது வீட்டில் இருக்கின்றார். ஆகையால் சனி தன்தசையில் பிதாவுக்கு மாரகஞ் செய்ய அமைப்புடையவராகின்றார். சுக்கி

ரன் ஏற்கனவே மாரகாதிபதியாகி மாரகஸ்தானங்களாகிய எட்டிற்கும் மூன்றிற்கும் உடையவராகி இருக்கின்றார். ஆகையால் சுக்கிரன் தன்னுடைய புக்தியில் மாரகஞ்செய்ய அமைப்பு உடையவராகின்றார்.

24. வமிசத்தி லுதிக்கும் வண்ணம் புகல் வீரையா
மாரனுமே யிச்சென்மம் விரதமின்றி
அம்சகுறைவாய் வாழ்ந்த பலத்தினாலே
அணுகிடுவான் மறுஜன்மம் தாழ்வா கத்தான்
இம்சையுள ஜாதகர்க்கு அறுபா னெட்டில்
எழிலாடி மாதமதில் ஏகுவானும்
அம்சையாய் மறுஜன்மம் காசிபக்கல்
நல்குவா னிக்கு லத்தில் நாட்டி னேமே.

24. வம்சத்தில் பிறக்கவேண்டி காரணத்தைச் சொல்லுவீர். இவர் இந்த ஜன்மத்தில் விரதங்களை அனுஷ்டிக்காமல் குறைவுகளைச் செய்து வாழ்ந்து வந்ததாலே மறு ஜன்மத்தில் தாழ்வாகத்தான் பிறப்பார். கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கின்ற ஜாதகருக்கு அறுபத்தெட்டாவது வயதில் * அழகிய ஆடிமாதத்தில் மரணம் நேரிடும். இவர் பின் ஜன்மத்தில் காசி க்ஷேத்திரத்திற்கு அருகில் இந்தப் பிறப்பின் குலத்திலேயே பிறப்பார் என்று சொல்லுகிறோம்.

* **குறிப்பு.—ஜாதகர் மரண விஷயம்.**—ஜாதகருக்கு வயது ஷு 67–0–0 முதல் ஷு 68–0–0 முடியும் வரையிலும் சந்திர தசையில் சந்திர புக்தியும் அங்காரக புக்தியும் நடக்கின்றன. ஆனால் ஆடி மாதத்தில் சந்திர புக்திதான் நடக்கின்றது. பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் கடகலக்கின ஜாதகருக்குப் புதன் சுக்கிரன் சனி இவர்கள் மாரகாதிபதிகள் ஆகின்றார்கள். சந்திரன் மாரகாதிபதியாகிய புதனுடன் கூடி லக்கினத்தில் இருந்துகொண்டு லக்கினாதிபதியாகிச் சத்தம அஷ்டம மாரகாதிபதியாகிய சனியாலும் பார்க்கப்பட்டிருக்கின்றார். லக்கினாதிபதிக்குச் சனி சம்மந்தம் ஏற்படுவது ஆயுளுக்குப் பிரதிகூலமானது என்று ஜாதக பாரிஜாதம் பதினான்காவது அத்தியாயம் ஐம்பதாவது சுலோகத்திலிருந்து ஏற்படுகிறது. இங்குச் சனி சந்திரனைப் பார்ப்பது ஆயுளுக்குப் பிரதிகூலமானதாகும். சனியினுடைய பலனையும் புதனுடைய பலனையும் சேர்த்துச் சந்திரன் பலன் கொடுக்கவேண்டியவராகவிருக்கின்றார். சனியும் புதனும் கடக லக்கினத்திற்கு மாரகாதிபதிகள் என்று மேலே சொல்லி இருக்கின்றோம். சந்திரன் லக்கினாதிபதியாய் இருந்தபோதிலுங்கூட துய்யகேரளம் எட்டாம் பாவம் பதினான்காவது பாடல் பிரகாரமும் எண்பத்து இரண்டாவது ஜாதகத்தின் இருபத்தி நான்காவது பாடலின் கீழ் கொடுத்துள்ள வியாக்கியானப் பிரகாரமும் சந்திரனே தன் தசையில் தன் புக்தியில் ஜாதகருக்கு மாரகஞ்செய்ய அமைப்பு உள்ளவராகின்றார். மேலும் அஷ்டமாதிபதியாகிய சனி நான்கில் உச்சமாகி வலுத்திருப்பதால் ஜாதகபாரிஜாதம் பதினான்காவது அத்தியாயம் ஐம்பத்தேழாவது சுலோகத்தின் கடைசிவரி பிரகாரம் லக்கினாதிபதியாகிய சந்திரனே ஜாதகருக்கு மாரகஞ்செய்ய அமைப்பு உடையவராகவிருக்கின்றார்.

25. நாட்டுவோ மிச்சென்மம் பொது யோகத்தை
நாயகிமார் யோகமுளன் சல்லியம் கொள்வன்
ஓட்டை விழும் பூமியது விருத்தி செய்யான்
உலகத்தில் நிந்தை யுண்டு உள்கபடு முண்டு
கூட்டுறவு நீடிக்கா அலேச்சல் எய்தும்
குடும்பமது குறைவாகும் நாற்பான் மேலே
வாட்டமுடன் குருபத்தி வெளியூர் செல்வன்
மருவிடுமே மேகப் பிடை மன்னனுக்கு.

25. இந்த ஜன்மத்தில் ஜாதகருக்கு உண்டாகும் பொதுவான யோகத்தைச் சொல்லுகிறோம். இவர் ஸ்திரீகளின் மேல் காம ஆசையை உடையவர். கடன் படுவார். பரஸ்திரீகமனத்தினால் சரீரம் கெட்டுப்போய் அதில் சில்லியும் துவாரமும் ஏற்படும். இவர் நிலங்களைப் பயிரிட்டுத் தான்யங்களை விருத்தி செய்யமாட்டார். பூமியில் பழியை ஏற்றுக்கொள்ளுவார். மனத்தில் கள்ளம் வஞ்சனை கபடம் இவைகளை உடையவர். கூடுகின்ற சினேகிதம் நாள்பட்டு இருக்காது. திரிதல் ஏற்படும். குடும்பம் நாளுக்குநாள் க்ஷீணித்துப் போய் விடும். நாற்பது வயதிற்குமேலே இவர் கஷ்டத்துடன் குருவினுடைய அன்பையும் பக்தியையும் அடைய வெளி ஊருக்குப் போய்விடுவார். இவருக்கு மேகரோகம் வந்து சம்பவிக்கும்.

26. இன்னமும் சிலது சேதி யியம்புவோம் விபரம் பின்பால்
அன்னவன் ஜனன காலம் அலரியின் மகன்கா லங்கள்
தன்னிலே பதினே ழாண்டும் தந்தையும் கண்ட மெய்தும்
பன்னு நாற்காலி பீடை பலபல நட்ட மெய்தும்.

26. பின்னால் இன்னும் சில விஷயங்களை விவரமாகச் சொல்லுவோம். ஜாதகருடைய ஜனன காலத்தில் சூரியனுடைய பிள்ளையாகிய சனியினுடைய மகாதசையில் பதினேழு வருஷம் இருப்பு ஆகும். இந்தக் காலத்தில் இவருடைய தகப்பனாருக்கு மரணம் நேரிடும். கால் நடைகளுக்கு நோய்கள் உண்டாகும். அநேகவிதமான நஷ்டங்கள் உண்டாகும்.

## ஜாதகம் 92

1. சந்திர னிரவி[1] நந்தி[2] சனிமீனம் புகரு[3] வீணை[4]
மந்திரி[5] சேயும்[6] சாடி[7] மந்தரக் கயிறு[8] மானில்[9]
புந்தியு[10] மேட மாகப் பிணிசிகி[11] கடகம் புக்க
இந்தவாறு கோள்கள் நின்று இடமது வளைய[12]லாக;

| சனி | புதன் | சூரியன் சந்திரன் | சுக்கிரன் |
|---|---|---|---|
| குரு அங்காரகன் | இராசி சக்கரம் | | லக்கினம் கேது |
| ராகு | | | |
| | | | |

கார்த்திகை 4-ஆம்பாதம். சூரியதசை வரு 1-5-6.

1. சந்திரனும் சூரியனும் ரிஷபத்திலும், சனி மீனத்திலும், சுக்கிரன் மிதுனத்திலும், குருவும் அங்காரகனும் கும்பத்திலும், இராகு மகரத்திலும், புதன் மேஷத்திலும், கேது கடகத்திலும் இவ்விதமாகக் கிரகங்கள் இருந்து ஜன்ம லக்கினம் கடகமாக விருந்தால் ;

**குறிப்பு.**—இந்த ராசிசக்கிர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரகநிலை பொருத்தமுடையதாகும்.—ரிஷபத்தில் அங்காரகனும், சிம்மத்தில் கேதுவும், கன்னியில் புதனும், கும்பத்தில் சுக்கிரனும் சனியும் ராகுவும், மீனத்தில் சூரியனும் சந்திரனும் குருவும் ஆகும்.

2. இப்பலன் சொல்லு மென்ன இயம்புவார் பராசர் தாமும்
ஒப்புடன் ஆண்பால் ஜன்மம் உரைக்கிறே மில்லம் தானும்
மெய்ப்புடன் கீழ்மேல் வீதி விளங்கிடும் தெற்கு வாடை
அப்பணி சடையோன் கோஷ்டம் அணுகிடும் வட கீழ் தன்னில்.

2. இந்த ஜாதகத்தின் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று கேட்கப் பராசர முனிவர் சொல்லுகின்றார். இந்தக் குழந்தை ஆண் குழந்தையாகப் பிறக்கும். பிறந்த வீட்டைப்பற்றிச் சொல்லுகிறேம். பிறந்த வீடு உண்மை யாகக் கிழக்கு மேற்குத் தெருவில் தென்னண்டை வாடையில் இருக்கும். சற்பத்தைச் சடையில் தரித்துள்ள சிவபெருமானுடைய கோயில் வடகிழக்குத் திக்கில் இருக்கும்.

---

[1] சூரியன் [2] ரிஷபம் [3] சுக்கிரன் [4] மிதுனம்
[5] குரு [6] அங்காரகன் [7] கும்பம் [8] இராகு.
[9] மகரம் [10] புதன் [11] கேது [12] கடகம்.

3. குணக்கினில் மஸ்தான் கோஷ்டம் கூறுவோம் இரியு முத்தரம்
வணக்கமாய் அருகர் தென்மேல் மாகாளி மேற்கே தங்கும்
இணக்கமாய்க் கம்மா னுண்டு எதிரிலில்ல மில்லாதாகும்மே
மணக்கமழ் மேலே சிற்றூர் வரைந்தன மிந்த பாலன்.

3. கிழக்குத் திக்கில் முஸ்லிம் மசூதி இருக்கும். வடக்குத் திக்கில் மலையும் இருக்கும் என்று சொல்லுகிறோம். சமணருடைய கோயில் தென் மேற்குத் திக்கிலும், பெரிய காளியம்மன் கோயில் மேற்குத் திக்கிலும் இருக்கும். சேர்மானமாக ஒரு கம்மானுமுண்டு. எதிரில் வீடு இல்லாமல் இருக்கும். வாசனையை வீசுகின்ற ஒரு சிறந்த சிறிய கிராமத்தில் இந்த ஜாதகர் பிறந்தார் என்று சொல்லுகின்றோம்.

4. பாலகன் ஜனன யோகம் பற்றிய அன்னை யோகம்
சாலவே தந்தை யோகம் தன்துணை களத்திர புத்திரர்
ஏலவே முன்பின் ஜன்ம மியம்புவோ மிந்நூல் தன்னில்
ஆலத்தை யுண்டோன் தேவி அருளுவோம் கேட் டிடாயே.

4. ஜாதகருடைய ஜன்ம காலத்திய யோகம் இவருடைய தாயாருடைய யோகம், தகப்பனுருடைய யோகம், இவருடைய சகோதரர்கள் மனைவி, மக்கள் இவர்களுடைய யோகங்கள், முன் ஜன்மம் பின் ஜன்மம் ஆகிய இவைகளை எல்லாம் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகிறோம். ஆலகால விஷத்தை உண்ட சிவபெருமானுடைய மனைவியாகிய பார்வதி யம்மையே! சொல்லுகிறோம். கேட்பீராக.

5. இவன்பிதா இருநி றத்தா னீகைவான் சமதே கத்தான்
கவர்ந்திடான் அயலார் பொன்னைக் கண்முகம் வசிய முள்ளானை
தவசிகள் அன்பு பூண்பன் சத்தான வேலை செய்வன்
நவனியில் விரயம் செய்வன் நாட்டினில் சல்லிய முள்ளான்.

5. ஜாதகருடைய தகப்பனுர் இரண்டு நிறங்கள் கலந்துள்ள நிறமாகிய மாநிறமுள்ள தேகத்தையுடையவர். தயாளகுணமுடையவர். கொடுக்குந் தன்மையை உடையவர். நடுத்தரமான தேகத்தை உடையவர். பிறருடைய சொத்தையும் பணத்தையும் அபகரிக்கமாட்டார். இவருடைய கண்களும் முகமும் பிறரை தன்வசப் படுத்திக்கொள்ளும்படியான தன்மை உடையனவாகும். முனிவர்களிடத்திலும் தவஞ் செய்கிறவர்களிடத்திலும் ஆசையுள்ளவர். நிலையான உயர்ந்த வேலைகளைச் செய்வார். பூமியில் அதிகம் செலவு செய்வார். கிராமத்தில் கடன் வாங்குவார்.

6. சுகதுக்க மிரண்டு முள்ளான் துணைவர்கள் ஐந்தே தோன்றும்
பகையொன்றும் மனத்தி லெண்ணுன் பரஉப காரியாவன்
இகபரன் அன்பு பூண்ப னேழைமேல் பிரிய னுகும்
ஜகமதில் நல்லோ னுவன் சிந்தையில் மர்ம மில்லான்.

6. இவர் சுகத்தையும் துக்கத்தையும் இரண்டையுமே அனுபவிப் பார், அஃதாவது சிலகாலம் சௌக்கியத்தையும் சிலகாலம் கஷ்டத்தை யும் அனுபவிப்பார். இவருக்கு ஐந்து சகோதரர்களே உண்டாவார்கள்.

தன்னுடைய மனத்தில் பகையானதை, அஃதாவது கெடுதியானதை நினைக்க மாட்டார். பிறருக்கு உபகாரத்தைச் செய்வார், பரமசிவத்தின் பேரில் பக்தியும் ஆசையும் உடையவர். ஏழைகளிடத்தில் ஆசையாகவும பிரியமாக வும் இருப்பார். பூமியில் நல்லவராவார். தன்னுடைய மனத்தில் இரகசி யத்தை வைத்திருக்காதவராவார்.

7. தோத்திரப் பிரிய னாகும் துராசையு மில்லா னென்றும்
பாத்திர மறிய வல்லன் பத்தினி நேய னாகும்
ஆத்தவர்க் குதவி செய்வன் உரைந்திடும் பித்த சூடு
குத்திரம் செய்வா னாகும் சுந்தரி மேலும் கேளே.

7. ஜாதகர் தன்னைப் பிறர் புகழ்ந்து பேசுவதில் ஆசையுடையவர். கெட்ட ஆசையை உடையவரல்ல என்று சொல்லுகிறோம். தகுதி யுள்ளதைப் பகுத்தறியும் சக்தியில் கெட்டிக்காரர். மனைவிக்கு இஷ்டமான வர். தன்னைத் துதிப்பவர்களுக்கும் வணங்குபவர்களுக்கும் உபகாரத்தைச் செய்வார். இவருக்குப் பித்தச்சூடு இருக்கும். சாஸ்திரங்களையும் இயந்திரங் களையும் செய்யும் சக்தியுடையவர். இன்னும் நாங்கள் சொல்லுவதைப் பார்வதியம்மையே ! கேட்பீராக.

8. சொன்னஇக் குணத்தா னுக்குச் சுந்தர னுதிப்பா னாகும்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அன்புள மனத்தா னாகும்
பன்னியே பேச வல்லன் பலசகா யங்கள் செய்வன்
கன்னென மொழியு முள்ளான் கண்சாயல் கல்வி மானும்.

8. இது வரையிலும் சொல்லப்பட்ட குணங்களையுடைய தகப்பனுக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய குண குணங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் பிறர்மேல் பிரியமுள்ள மனத்தை யுடையவரா வார். திறமையாகவும் சாமர்த்தியமாகவும் பேசுவதில் கெட்டிக்காரர். பிறருக்குப் பலவிதமான உதவிகளைச் செய்வார். சர்க்கரையைப் போல இனிமையான வார்த்தைகளையும் உடையவர். இவருடைய கண் கொஞ்சம் சாய்ந்த பார்வையை உடையதாயிருக்கும். இவர் படித்தவராவார்.

9. கல்விபோ தனையும் செய்வன் காமதில் ருத்திர ரேகை
சொல்வதைக் காப்பா னாகும் சுத்தவான் பலபேர் நேயன்
இல்லையென் றுரைக்க மாட்டானீசன் பூசிதனு மாவன்
புல்லிய புத்தி யில்லான் புறஞ்சொலான் மாநிறத் தன்.

9. வித்தையைப் பிறருக்குக் கற்றுக்கொடுக்குந் தொழிலையுஞ் செய்வார். இவர் உள்ளங்கையில் ருத்திரரேகை என்ற ஒரு விதமான ரேகையை உடையவர். தான் சொல்லுகின்ற வார்த்தையைத் தவறாமல் காப் பாற்றுவார். சுத்தமாய் இருப்பார். அநேகரிடம் சிநேகமாக விருப்பார். தன்னிடத்தில் வந்து யாசிப்பவர்கட்கு இல்லை என்று சொல்லமாட்டார். சிவபெருமானைப் பூஜை செய்வார். தாழ்ந்த புத்தியை உடையவரல்ல. கோள் சொல்லமாட்டார். மாநிறமான தேகத்தை உடையவராவார்.

10. உரோமங்கள் நீட்சி யுள்ளான் நுண்ணிய புத்தி யுள்ளான்
சேமமாம் குடும்பி யாவன் செய்நன்றி மறவா னாகும்
காமினி விருப்பம் கொள்வன் காலாள்க ளுடைய னாகும்
தீமையோர் வசியம் கொள்வன் ஜயம் செய்வ னெடுத்த வேலை.

10. ஜாதகருக்கு தேகத்தில் மயிர்கள் நீண்டிருக்கும். நுட்ப மான புத்தியை உடையவர். சௌக்கியமான குடும்பஸ்தராக விருப்பார். பிறர் தனக்குச் செய்த உபகாரத்தை மறக்காதவராவார். காமாக்கினியை உடையவர். நடந்து செல்லுகின்ற வேலைக்காரர்களை உடையவராவார். கெட்ட வர்களைத் தன் பக்கமாக்கிக் கொள்ளுவார். தான் செய்ய ஆரம்பித்த வேலை யைப் பூர்த்தியாகச் செய்து முடித்து ஜெயத்தை அடைவார்.

11. சல்லியம் கொள்ளா னாகும் தந்தையார் ஜிதமும் விருத்தி
நல்லவன் நல்ல வர்க்கு நற்கல் வியால் புகழ்ச்சி
தொல்லைக ளாதியில் தான் தரித்திர மாக வாழ்வன்
மல்லுக்குச் செலலா னாகும் வாக்குகள் சுத்த முள்ளான்.

11. ஜாதகர் கடன் வாங்க மாட்டார். தகப்பனாருடைய சொத்துக் களை விருத்தியாக்குவார். நல்லவர்களுக்கு நல்லவராக விருப்பார். விசேஷ கல்வியால் இவருக்குப் புகழும் பெருமையும் ஏற்படும். இளம் பிராயத்தில் இவருக்குக் கஷ்டங்களும் வறுமையும் உண்டு. தரித்திரராக விருந்து வாழ்வார். சண்டைக்குப் போகமாட்டார். சுத்தமான வாக்கை உடையவ ராவார்.

12. இன்னவன் துணைவர் தம்மை யியம்பஆண் பலத்தைக் காணோம்
கன்னிகை ஒருத்தி தீர்க்கம் கழறுவோம் முத்தோ ளரகப்
பின்துணை காணா னாகும் பிறக்கினும் தீதே யாகும்
முன்துணைச் சேதி சொல்வேன் முதல்வியே கேட்டி டாயே.

12. ஜாதகருடைய சகோதரங்களைப் பற்றிச் சொல்லுகிறோம். இவருக்கு ஆண் சகோதர பலம் கிடையாது. ஒரே ஒரு பெண் சகோதரம் தான் இருக்கும். அவளும் மூத்த சகோதரியாவாள். பின் சகோதரங்கள் கிடையா. ஒரு சமயம் பிறந்தாலும் இறந்து விடுவார்கள். மூத்த சகோ தரியின் விஷயங்களைப் பற்றிச் சொல்லுகிறேன். பார்வதியம்மையே! கேட்பீராக.

13. சிவந்தமெய்வாத தேகி சிந்தையும் கலக்க முள்ளாள்
தவசி போல் வாழ்வா ளாகும் தன்வரன் வடமே லாகும்
நவனியில் பொய்கள் சொல்லாள் நற்புத்தி நன்நடக்கை
அவள் வரன் சூது மில்லான் அணுகாது மதலை யென்றோம்.

13. ஜாதகரின் மூத்த சகோதரி சிவப்பு நிறமான தேகத்தை உடையவள். வாயுவான தேகத்தை உடையவள். மனத்தில் கலக்க முள்ள வளாவாள். தவஞ் செய்கிறவளைப் போல வாழ்கின்றவளாவாள். இவளு டைய புருஷன் வடமேற்குத் திக்கிலிருந்து வந்து நேரிடுவான். இவள்

பூமியில் பொய்களைச் சொல்ல மாட்டாள். நல்ல புத்தியை உடையவள். நல்ல நடவடிக்கைகளையும் ஒழுக்கத்தையும் உடையவள். இவளுடைய புருஷன் கள்ளம் கபடு வஞ்சனை இவைகள் இல்லாதவன். இவளுக்குக் குழந்தைகள் பிறக்காது † என்று சொல்லுகிறோம்.

† குறிப்பு.—சந்ததி விஷயமாய் ஜாதக பாரிஜாதம் 31-ஆவது அத்தியாயம் 29-ஆவது சுலோகத்தைப் பார்க்கவும், ஜாதகருக்கு மூத்த சகோதரி ஸ்தானம் பதினோராவது வீடாகிய ரிஷபமாகும். இந்த ரிஷப லக்கினத்திற்குப் புத்திரபாவமாகிய ஐந்தாவது வீடு கன்னி. இந்தக் கன்னியைச் சனி கேது அங்காரகன் இவர்கள் பார்த்திருக்கின்றார்கள். கன்னிக்குடைய புதன் ரிஷபத்திற்குப் பன்னிரண்டிலும் தன் பாவத்திற்கு எட்டிலும் மறைந்து விழுந்து இருக்கின்றார். புத்திரகாரகராகிய குரு ரிஷபத்திற்கு ஏழிற்கும் பன்னிரண்டிற்கும் அதிபதியாகிய அங்காரகனுடன் கூடி இரண்டு பாபிகளாகிய இராகு சனி இவர்களுக்கு இடையில் இருக்கின்றார். ஒன்பதில் இராகு இருந்து கொண்டு ஏழாவது வீட்டையும் ஒன்பதிற்குடைய சனியையும் பார்க்கின்றார். "எருது கும்பம் வித்தகையோரையார்க்கு மகவில்லை." என்ற ஜாதகாலங்காரம் 592-ஆவது பாடல் பிரகாரமும் புத்திர தோஷமுண்டு. ஆகையால் மூத்த சகோதரிக்குப் புத்திரதோஷம் மிகவும் அதிகமாக விருக்கின்றது.

14. முனிவரிவ் விதமாய்க் கூற மொழிவரா மத்திரி தாமும்
அனையவே மூத்தோள் சேதி அற்பமாய்ச் சொன்னீரைய்யா
வினையதைச் சொல்லு மென்ன விளம்புவேன் புகர்வி யத்தில்
சினமுட னிருப்ப தாலே செப்பினோம் அற்ப மாக.

14. பராசர முனிவர் இந்த விதமாய்ச் சொல்ல அத்திரி ரிஷியானவர் கேட்கின்றார். ஜாதகரின் மூத்த சகோதரியினுடைய விஷயத்தைக் கெடுதியாகச் சொல்லிவிட்டீரே. முனிவரே! காரணத்தையும் அவள் செய்த பாவத்தையும் சொல்லுவீர் என்று கேட்க, பராசரும் சொல்லுகின்றேன் என்கின்றார். சுக்கிரன் லக்கினத்திற்கு விரயஸ்தானமாகிய பன்னிரண்டில் மறைந்திருப்பதால் பலனைக் கெடுதியாகச் சொன்னோம்.

15. இதுவன்றிப் பூர்வம் தன்னி லெய்திற்று அந்தத் தோஷம்
இதுவினை சொல்லு மென்ன அறைகிறார் பராசர் தாமும்
அதிபதி பூர்வம் சொல்வேன் மாபலி நகர்க்கு மேல்பால்
சதியிலாச் சிற்றூர் தன்னில் ஜனித்தனள் பிரம்ம சேயாய்.

15. இதுவும் அல்லாமல் அவளுடைய முன் ஜன்மத்தில் தோஷம் ஏற்பட்டிருக்கின்றது. இந்தத் தோஷத்தைச் சொல்லுவீர் என்று கேட்க, பராசர முனிவர் சொல்லுகின்றார். இவளுடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். மகாபலிபுரத்திற்கு (பலிச் சக்கர வர்த்தி இறந்த நகரத்திற்கு) மேற்கில் தீங்கில்லாத ஒரு சிறிய கிராமத்தில் இவள் பிராமணர் குலத்தில் பெண்ணாகப் பிறந்தாள்.

16. அருகினில் பேரூர் தன்னில் அவள்வரன் சுதருண் டாகித்
திருமகள் விலாசம் போன்று செல்வதி வாழுந் நாளில்
வரும்வினை தன்னைச் சொல்வேன் மாரனும் தானு மாகப்
பிரமனார்ப் பூசை செய்யும் பட்சியின் தலத்தில் சென்று ;

16. இவளுக்கு அந்தக் கிராமத்திற்குச் சமீபத்திலுள்ள ஒரு பெரிய ஊரிலிருந்து புருஷன் வந்து குழந்தைகளைப் பெற்று லக்ஷ்மியினுடைய கிருபையையும் வாசஞ் செய்வதையும் அடைந்து செல்வமுடையவளாகி வாழ்கின்ற காலத்தில் இவளுக்கு வந்து சம்பவித்தப் பாவத்தைச் சொல்லுகின்றேன். இவளும் இவளுடைய புருஷனுமாக இருவரும் பிரமதேவன் பூஜை செய்கின்ற பட்சிஸ்தலம் என்று சொல்லப்பட்ட திருக்கழுக்குன்றத்திற்குப் போய் ;

17. கடவுளைத் தரிசித் தேதான் கடைவீதி சென்ற மாது
அடைவுடன் மஞ்சள் சீப்பு அழகு குங்கும ங்கள் வாங்கி
நடந்தனள் பொருளீ யாமல் நற்கூட்டத் தாலே யம்மா
உடன்செட்டி யெழுந்தி ருந்து உத்தமி தன்னைப் பார்க்க ;

17. கடவுளை அங்குத் தரிசித்துப் பிறகு இவள் கடைத்தெருவிற்குப் போய் மஞ்சள் சீப்பு அழகான குங்குமங்கள் ஆகிய இவைகளை எல்லாம் ஒழுங்காக வாங்கிக்கொண்டு இவைகளின் கிரயத்தைக் கொடுக்காமல் பெரிய கூட்டத்தில் இவள் திருட்டுத்தனமாய்ப் போய் விட்டாள். பார்வதியம்மையே ! உடனே கடைக்காரனாகிய செட்டி எழுந்து இவளைப் பார்க்க ;

18. மானது மறைந்தாப் போலே மங்கையும் செல்லும் போது
ஆனதோர் செட்டி பார்த்து அறைகுவான் மனவெ றுப்பால்
பான்மையாய் வார்த்தை பேசிப் பசைப்புக் குங் குமங்கள் சீப்பு
வேணது வாங்கிக் கொண்டு விடம்போலே சென்ற பாவி ;

18. இவள் ஒரு மான் வேகமாய் ஓடுவது போல வேகமாய்ப் போவதை அந்தச் செட்டி பார்த்து மனக்கஷ்டத்தினால் சொல்லுகின்றான். நல்ல தன்மையாக வார்த்தைகளைச் சொல்லி மஞ்சள் குங்குமம் சீப்பு இவைகளை வேண்டிய வரையிலும் வாங்கிக் கொண்டு சர்ப்பத்தை போல நழுவிப் போய்விட்ட பாவியானவளாகிய நீ ;

19. மத்திம வயதிலே தான் மாரனும் மரண மாகிச்
சித்தமாய் மறுஜன் மத்தில் சேய்களு மில்லா தாகி
வித்தகன் சுகமில் லாமல் விதைவையாய் வாழ்வா யென்று
வர்த்தகன் சொல்லி யேதான் இறைத்தனன் தெருதூள் தானும்.

19. உனக்கு மத்திய வயதிலேயே உன்னுடைய புருஷனும் இறந்து உன்னுடைய மறு ஜன்மத்தில் உனக்குக் குழந்தைகள் இல்லாமலும் புருஷனுடைய சுகம் இல்லாமலும் விதவையாகி நீ வாழக்கடவாய் என்று அந்த வர்த்தகனாகிய செட்டி சொல்லித் தெருவிலுள்ள மண் தூளை வாரி எடுத்துத் தூவினான்.

20. அதுஒரு தோஷமாச்சு அதுவின்றி வேறு சொல்வேன்
சுசிசெய்தாள் பந்தி தன்னில் சார்ந்தது அந்தத் தோஷம்
அதிபதி அந்தியத்தில் வாயுவால் மரணமாகி
விதியவன் வரையப் பட்டு விளங்கினு ளிவளே யென்றோம்.

20. அஃது ஒரு தோஷமாயிற்று. அதுவுமல்லாமல் இன்னொரு தோஷத்தைப் பற்றிச் சொல்லுகிறேன். போஜனபந்தியில் மோசஞ் செய்தாள். அந்தத் தோஷமும் வந்து சம்பவித்தது. இவள் தன்னுடைய கடைசி காலத்தில் வாயு ரோகத்தினால் இறந்து, பிரமதேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இவள் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றாள் என்று சொல்லுகிறோம்.

21. அத்தரி சொல்லு கின்றார் அவளுமுன் ஜன்மம் தன்னில்
சுத்தமாய் மறைக் குலத்தில் தோன்றினு ளிச்சென்மத்தில்
வித்தகி கங்கை வமிசம் மேவின காரணஞ் சொல்
பத்தினி முன்ஜன் மத்தில் பந்திவஞ் சனை செய்தும்

21. அத்திரிமக ரிஷியானவர் கேட்கின்றார். அவள் முன் ஜன்மத்தில் சுத்தமான பிராமணர் குலத்தில் பிறந்து இருந்தும் இந்த ஜன்மத்தில் வேளாளர் வம்சத்தில் பிறந்ததற்குக் காரணத்தைச் சொல்லுவீர். அவள் தன்னுடைய முன் பிறப்பில் சாப்பாட்டுப் பந்தியில் வஞ்சனை செய்தாள்.

22. வணிபன்தன் சாப மொன்று வந்தத ாலுதித்தா ளென்றோம்
கணிகைக்கு இச் ஜன் மத்தில் கணவனின் சுகமில் லாதாள்
பணிகளு மில்லா ளாகும் பரதேசி போலே வாழ்வள்
துணிவிலா மனத்தா ளாகும் செப்புவோ மிவள்பின் ஜன்மம்.

22. வியாபாரியினுடைய சாபம் ஒன்றும் இவளை வந்து அடையும் படியாய் இவள் பிறந்திருக்கின்றாள் என்று சொல்லுகிறோம். இவளுக்கு இந்தப் பிறப்பில் தன்னுடைய புருஷனுடைய சுகம் இல்லாதவளாவாள். ஆடையும் ஆபரணங்களும் இல்லாதவளாவாள். பரதேசியைப்போல இருந்து வாழ்பவளாவாள். தைரியமான மனத்தை உடையவளல்லள். இவளுடையபின் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறோம்.

23. ஆலங்காட் டதற்கு உத்தரம் அருகினில் சிற்றூர் தன்னில்
சாலவே யிக்கு லத்தில் சாருவா ளிவளே யென்றோம்
கோலமாயத் தந்தை பூர்வம் கூறுவோம் காஞ்சி தன்னில்
ஏலவே சூத்திர னாக எய்தினு னென்று சொன்னோம்.

23. திருவாலங்காட்டிற்குச் சமீபத்தில் வடக்கில் உள்ள ஒரு சிறிய கிராமத்தில் இந்த ஜன்மத்தில் பிறந்த குலத்திலேயே மறு ஜன்மத்திலும் ஜாதகருடைய மூத்த சகோதரி பிறப்பாள் என்று சொல்லுகிறோம். ஜாதகனின் தகப்பனருடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறோம். இவர் காஞ்சீபுரத்தில் சூத்திரராக முன் ஜன்மத்தில் பிறந்தார் என்று சொல்லுகிறோம்.

24. காய்கறி கிழங்கு விற்றும் கடவுளர் பூசை செய்தும்
தீயதாங் குணங்க ளின்றித் தென்திசைத் தலங்கள் தோய்ந்து
பழவினை விலக்குஞ் சேது பதிக்குமே சென்று இன்னோன
ஞாயமாய் உள்ளூர் சென்று நமன்பதிக் காளா யினனேன்.

24. ஜாதகருடைய தகப்பனார் காய் கறி கிழங்கு இவைகளை விற்பனை செய்தும் கடவுள்களைப் பூஜை செய்தும் கெட்ட குணங்கள் இல்லாமலும் தெற்குத்திக்கிலுள்ள ஸ்தலங்களுக்குப்போயும் அவ்விடத்தில் தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்தும் பழைய பாவங்களை நிவிர்த்தி செய்யக்கூடிய சேது ஸ்தலத்திற்கும்போயும் இவர் தன்னுடைய ஊருக்குத்திரும்பிவந்தும் இறந்தும் எமபட்டணத்திற்குப் போய்ச்சேர்ந்தார்.

25. வேதனால் வரையப் பட்டு விளங்கினன் கங்கை சேயாய்
மேதினில் இருநான் கான வில்மாதம் தந்தை கண்டம்
சீதள மதிபன் காலம் செப்புவோம் தந்தைக் கேதான்
போதக வானை பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

25. பிறகு ஜாதகருடைய தகப்பனார் பிரமதேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வேளாளர் குலத்தில் ஆண் குழந்தையாய்ப் பிறந்தார். பூமியில் ஜாதகருக்கு எட்டாவது வயதில் † மார்கழி மாதத்தில் இவருடைய தகப்பனார் இறந்துவிடுவார். இளம்யானையின் முகத்தை யுடைய விநாயக்கடவுளைப் பெற்றெடுத்த புண்ணிய மாதாவாகிய பார்வதியம்மையே ! கேட்பீராக.

† **குறிப்பு.—தகப்பனார் மரண விஷயம்.**—ஜாதகருக்கு வயது ஞூ 7-0-0 முதல் ஞூ 8-0-0 முடியும் வரையிலும் சந்திரதசையில் சனி புக்தியும் புதன் புக்தியும் நடக்கின்றன. பிதுர்லக்கினம் ஒன்பதாவது பாவமாகிய மீனம் ஆகும். இந்த மீனலக்கினத்திற்குப் பாராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் சனி புதன் சூரியன் சுக்கிரன் இவர்கள் மாரகாதிபதிகளாகின்றார்கள். சந்திரன் மீனத்திற்கு ஆறுக்குடையவரும் மாரகாதிபதியும் பிதுர்காரகருமாகிய சூரியனுடன் கூடி மாரகஸ்தானமாகிய மூன்றில் இருந்துகொண்டு மாரகாதிபதியாகிய சனியால் பார்க்கப்பட்டிருக்கின்றார். ஆகையால் ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரம் சந்திரன் தன்னுடைய தசையில் பிதாவை மாரகஞ் செய்யும் அமைப்பு உடையவராகவிருக்கின்றார். சனி மாரகாதிபதியாகி பிதுர்ஸ்தானத்திலேயே இருந்துகொண்டு பிதுர்காரகனாகிய சூரியனையும் பார்ப்பதால் சனி புதனைவிட பிதாவைத் தன் புக்தியில் மாரகஞ்செய்ய அதிக அமைப்பு உடையவராக விருக்கின்றார்.

26. இன்னவன் பின்ஜன்மத்தை யியம்புவோம் காஞ்சி தன்னில்
முன்குல முதிப்பா னுகு முயர்வான குடும்பி யாவன்
மன்னரால் ஜீவிப் பானும் வரைந்தது தப்பா தாகும்
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே.

26. ஜாதகருடைய தகப்பனாரின் பின ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறோம். இவர் காஞ்சீபுரத்தில் முதல் குலமாகிய பிராமணர் குலத்தில் பிறப்பார். மேன்மையாளர் குடும்பஸ்தராவார். அரசர்களால் ஜீவனஞ்

செய்வார். நாங்கள் சொன்னது தவறிடாமல் நடக்கும். மேன்மையான யானைமுகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த உத்தமியாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

27. உதித்தவன் மணத்தின் காலம் உரைக்கிறோம் மீரெட் டாண்டில்
அதிபதி உத்தரத்தில் மாதுரு கிளையா லேதான்
சதியிலா மனத்தா ளாகும் தன்வரன் மனம்போல் வாழ்வள்
துதிசெய்தோர்க் கன்ப ளாகும் துருசான நடையு மாவள்.

27. ஜாதகருடைய விவாக காலத்தைப் பற்றிச் சொல்லுகிறோம். இவருக்குப் பதினாறுவது வயதில் மனைவி வடக்குத்திக்கிலிருந்து மாதாவினுடைய பந்துவிலிருந்துவந்து நேருவாள். இவள் கெடுதியில்லாத மனத்தை உடையவளாவாள். தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற்போல ஒற்றுமையாய் இருந்து வாழ்வாள். இவளைப் பற்றி பெருமையாயும் இவளைப் புகழாயும் பேசினவர்களுக்குச் சினேகத்துடனும் ஆசையுடனும் இருப்பாள். மாசு மறு குற்றம் இவைகள் உள்ள கெட்ட நடவடிக்கையையும் உடையவளாவாள்.

28. சுகமுள வார்த்தை சொல்வள் சொல்லுமுன் கோபி யாவள்
தகைமையாய்க் குடும்பி யாவள் தைரிய மனத்தா ளாகும்
நகையது யிச்சை யுள்ளாள் நாயகி சிவந்த மேனி
இகபரன் பத்தி கொள்வள் இன்பமாய் வார்த்தை சொல்வள்.

28. ஜாதகருடைய மனைவி சுகமானதும் அன்பு நிறைந்ததுமான வர்த்தைகளைச் சொல்லுவாள். இவள் பேசுவதற்கு முன்னே கோபத்தை உடையவளாவாள். தகுதியானதும் பெருமையுள்ளதுமான குடும்பஸ்தையாக விருப்பாள். தைரியமுள்ள மனத்தை உடையவளாவாள். ஆபரணத்தின்மேல் ஆசையுள்ளவள். இவள் சிவப்பு நிறமான தேகத்தை உடையவள். பரமசிவத்தின் மேல் பக்தியும் அன்பும் உடையவள். இனிப்பான வார்த்தைகளைச் சொல்லுவாள்.

29. புத்திமான் உயர மில்லான் பந்துவும் புகழ வாழ்வள்
சுத்தமு முடையா ளாகும் துருசான நடையு மாவள்
பத்தினி மானவர்க்கு அன்னம் படைப்பளாம் யோகசாலி
அத்தியைப் பெற்ற மாதே அறைகிறோம் புத்திர பாவம்.

29. ஜாதகருடைய மனைவி அறிவுள்ளவள். உயரமில்லாதவள். பந்துக்கள் இவளைப் போற்றும்படி இருந்து வாழ்வாள். சுத்தத்தை உடையவளாவாள். மாசு மறு இவைகளை உடைய நடவடிக்கை உள்ளவளாவாள். இவள் மனிதர்களுக்கும் மானமுடையோர்களுக்கும் சாப்பாடுபோடுவாள். யோகமுடையவள். யானைமுகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! இனிமேல் புத்திரபாவத்தைப் பறறிச் சொல்லுகிறோம்.

30. சுதர்களு மறுவர் தோன்றும் தோகை யரிருவ ராகும்
சதமுள ஆண்பால் ரெண்டு சாற்றுவோம் தீர்க்க மாக
விதியது முடியும் ரண்டு விளம்பின மொழிகுன் றுது
அதிதியை ஆத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

30. ஜாதகருக்கு ஆறு குழந்தைகள் பிறப்பார்கள். இவர்களில் பெண் குழந்தைகள் இரண்டுபேர் ஆகும். ஆண் குழந்தைகள் இரண்டுபேர் ஆகும். ஆக மொத்தம் நான்கு குழந்தைகளும் நீண்ட ஆயுளை உடையவர் களாகவிருப்பார்கள் என்று சொல்லுகிறோம். இரண்டு குழந்தைகள் ஆயுள் முடிந்து இறந்து போய்விடும். நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறுமல் நடக்கும். பரதேசிகளைக் காப்பாற்றுகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

31. அன்னைமால் நிறத்தா ளாகும் அன்புள மனத்தா ளாகும்
மன்னிய உணச்சல் தேகி மறுமொழி அதிகம் கூருள்
தன்மனச் சஞ்ச லத்தாள் தர்மமும் குணத்தா ளாகும்
பின்னமில் லாத தேகி பிணிகளும் சேர்க்கா ளென்றேம்.

31. ஜாதகருடைய தாயார் மகாவிஷ்ணுவின் நிறமான நீலமேகவர்ணம் என்று சொல்லப்பட்ட ஒரு விதமான நிறத்தையுடையவளாகும். ஆசை யுள்ள மனத்தை உடையவளாவாள். மிகவும் மெல்லிய தேகமுடையவள். அதிகமாகப் பதில் சொல்லாதவள். தன்னுடைய மனத்தில் துக்கத்தை உடையவள். தருமஞ்செய்யுங் குணத்தை உடையவளாவாள். அங்கவீனம் ஒன்றுமில்லாத தேகத்தை உடையவள். நோய்களும் இல்லாதவள் என்று சொல்லுகிறேம்.

32. அவள்துணை ஆண்டாலொன்று அம்பிகை மார்கள் மூன்று
இவர்களும் தீர்க்க மெய்து மிடராகு மற்ற வெல்லாம்
தவசியே மாமன் சேதி சாற்றுவோ மிரண்டி லேதான்
நவனியில் இவள்தன் பூர்வம் நாட்டுவோம் கேளும் தாயே.

32. ஜாதகரின் தாயாருடைய சகோதரங்களில் ஓர் ஆணும், மூன்று பெண் களுமாக நான்கு பேரும் ஆவார்கள். இந் நான்கு பேர்களும் நீண்ட ஆயுளை உடையவர்களாவார்கள். மற்றைச் சகோதரங்கள் எல்லாரும் இறந்துபோய் விடுவார்கள். பார்வதியம்மையே! ஜாதகரின் அம்மானுடைய விஷயத்தை இரண்டாவது பாகத்திற் சொல்லுகின்றேம். பூமியில் ஜாதகரின் தாயா ருடைய முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறேம். எங்களுடைய தாயா ராகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

33. பனங்காட்டுக் கருகில் தெற்கில் பிறந்தனள் அருகர் வமிசம்
தனமிக உடையா ளாகித் தன்சுதர் தீர்க்க முண்டாய்
வினையதைச் சொல்லக் கேளாய் விரதகா லங்கள் தம்மில்
தினமாக இச்சை யின்றிச் செய்தனள் அதுஓர் தோஷம்.

33. ஜாதகருடைய தாயார் பனங்காட்டூருக்குச் சமீபத்தில் தெற்குத் திக்கிலுள்ள ஓர் ஊரில் சமணருடைய குலத்திற் பிறந்தாள். அதிகப் பணம் உடையவளாகியும் தன் குழந்தைகள் நீண்ட ஆயுளை உடையவளாயும் வாழுங்காலத்தில் இவளுக்கு வந்து சம்பவித்த பாவத்தைச் சொல்லுகிறேன். கேட்பீராக. விரதங்களைச் செய்யுங்காலத்தில் இந்த விரதங்களின்மேல் ஆசையில்லாமலும் கோபமாயும் செய்தாள். அதனால் ஒரு தோஷம் ஏற்பட்டது.

34. மைத்துனன் மனைவி பேரில் அதிகமாய் நிந்தை சொல்லிச்
சுத்தர்தா ருடனே சொல்லிக் தோகையை விலக்க லுற்றாள்
வித்தகி மனவெ றுப்பால் விளம்புவாள் சாபம் தானும்
குத்தமில் லாமல் என்மேல் குறைகளைச் சொன்ன பாவி ;

34. ஜாதகருடைய தயார் தன்னுடைய மைத்துனனுடைய மனைவியின்மேல் அதிகமாகக் குற்றங்களையும் பழிகளையுஞ் சொல்லி இவைகளைப் பந்துக்களிடத்திலுஞ் சொல்லி அந்த ஸ்திரீயை குடும்பத்திலிருந்து விலக்கிவிடும்படியாய்ச் செய்து விட்டாள். விலக்கப்பட்ட அந்த ஸ்திரீ மனம் நொந்து சாபத்தைக் கொடுக்கின்றாள். "யாதொரு குற்றமும் செய்யாத என்மேல் குற்றங்களைச் சாட்டிச் சொல்லிய பாவியாகிய நீ ;

35. மறு ஜன்மம் தோன்றி யேதான் மத்திம வயதி லேதான்
வரனுமே மரண மாகி மாநிலம் நிந்தை யாகி
உறை யென்று சொல்லி உத்தமி தெருத் தூள் வாரி
இறைத்துப் பின் சென்று ளென்றே மிசைந்தது அது ஓர் தோஷம்.

35. அடுத்த ஜன்மத்தில் பெண்ணாகப் பிறந்து உன்னுடைய நடு வயதில் உன்னுடைய புருஷனும் இறந்து பூமியில் பழியை அடைந்து வாழக்கடவாய் என்று அந்த ஸ்திரீ சொல்லித் தெருவிலிருந்த மண்ணை எடுத்து இறைத்துவிட்டுப் போய்விட்டாள் என்று சொல்லுகிறோம். அந்த ஒரு தோஷமும் இவளுக்கு வந்து சம்பவித்தது.

36. அந்திய காலம் தன்னில் அவள்குன்ம ரோகத் தாலே
அந்தகன் பக்கல் சென்று அயனுமே வரையப் பட்டு
வந்தவ ளிவளே யென்றோம் மங்கையின் சாபம் போலே
இந்தவள் தனக்கு நேரும் ஈச்வரி கேட்டி டாயே.

36. ஜாதகரின் தாயார் தன்னுடைய கடைசி காலத்தில் குன்ம நோயால் இறந்து எமனிடத்திற்குப் போய்ப் பிறகு பிரமதேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றாள் என்று சொல்லுகிறோம். அந்த முன் ஜன்மத்திய ஸ்திரீயினுடைய சாபம் போல இந்த ஜன்மத்தில் இவளுக்குத் தோஷங்கள் சம்பவிக்கும். பார்வதியம்மையே ! கேட்பீராக.

37. பின்ஜன்மம் அவனூர் தன்னில் பிறப்பளே யிக்குலத்தில்
அன்னவள் வறுமை யில்லாள் அரன்பூஜை செய்வா ளென்றோம்
இன்னவன் பூர்வம் தன்னை யியம்புவோ மினிமே லாக
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே.

37. ஜாதாகருடைய தாயார் தன்னுடைய மறு ஜன்மத்தில் அவனூரில் இந்த ஜன்மத்தில் பிறந்த ஜாதியிலேயே பிறப்பாள். இவள் கஷ்டங்களையும் தரித்திரத்தையும் அடையமாட்டாள். சிவபெருமானைப் பூஜை செய்வாள் என்று சொல்லுகிறோம். ஜாதகருடைய முன் ஜன்மத்தைப் பற்றி இனிமேல் சொல்லுகிறோம். மேன்மையான யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த உத்தமியாகிய பார்வதியம்மையே ! கேட்பீராக.

38. பிருதிவி மேற்பா லாகப் பேரூரில் செங்குந்த வமிசம்
அரன்மத மிவனு தித்து அணுகியே மனைவி மைந்தர்
திருமகள் விலாசம் பெற்றுச் சிறப்பான குடும்பி யாகி
வருவோர்க்கு அன்ன மீந்து மார்க்கத்தில் தாகப் பந்தல் ;

38. ஜாதகர் பிருதிவி ஸ்தலமாகிய காஞ்சீ புரத்திற்குக் கிழக்கு திக்கிலுள்ள ஒரு பெரிய ஊரில் செங்குந்தர் என்று சொல்லப்பட்ட கைக்கோளர் குலத்தில் சிவமதத்தில் முன் ஜன்மத்திற் பிறந்து மனைவி மக்கள் இவர்களை உடையவராகி இலக்ஷ்மியினுடைய குடியிருப்பையும் கிருபையையும் அடைந்து செல்வவானாகி மேன்மையான ஒரு குடும்பஸ்தாரகித் தன்னிடத்திற்கு வருகின்றவர்களுக்குச் சாப்பாடு போட்டும் போக்கு வரவு வழியில் தாகவிடாயைத் தீர்க்க நீர் மோர் பந்தல் ஒன்றை

39. வைத்துமே கடவுள் பக்தி வளமுள தலங்கள் சென்று
சித்திஇல்லம் நீங்கிச் சேவலன் கொடியோன் பத்தி
உத்தமன் கொண்டு மேதான் உறைந்தனன் மறலி பக்கல்
வித்தகன் பிரமன் லக்கம் மேதினில் வரையப் பட்டு ;

39. வைத்துக் கடவுளின்மேல் பக்தியும் அன்பும் உடைவராகிச் செழிப்புற்றோங்கிய நல்ல ஸ்தலங்களுக்குப் போய்ப் பிறகு அழகான சித்திரங்களை உடைய தன்னுடைய வீட்டை விட்டுப் போய்ச் சேவல் கொடியை உடையவராகிய முருகக்கடவுளின்மேல் ஜாதகர் பக்தியும் அன்பும் உடையவராகிப் பிறகு இறந்து எமனிடத்திற்குப் போய்ப் பிறகு பிரம தேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்தப் பூமியில் ;

40. வந்தவ னிவனே யென்றோம் வரைகிறோ மிவனின் யோகம்
முந்திநாள் வறுமை யுண்டு மேதினில் குறைவாழ் வுண்டு
எந்தையே சல்லியமுண்டு இவன்பாரி வந்த பின்பு
சிந்தையும் கலக்கம் நீங்கும் சந்திரன் பிறைபோல் யோகம்.

40. வந்து ஜாதகர் இந்த ஜன்மத்தில் பிறந்திருக்கின்றார் என்று சொல்லுகிறோம். இனிமேல் இவருடைய யோகத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு இளம் பிராயத்தில் கஷ்டங்களும் தரித்திரமும்

உண்டு. பூமியில் இவருடைய வாழ்க்கை குறைவுகளை உடையதாக விருக்கும். எங்கள் தாயாராகிய பார்வதியம்மையே! இவனுக்குக் கடன் வந்து நேரிடும், இவருடைய மனைவி இவரிடத்திற்கு வந்து சேர்ந்த பிறகு இவருடைய மனக் கவலையும் துன்பங்களும் நீங்கிப் போய்விடும். இவருக்கு வளர்பிறைச் சந்திரனைப் போல யோகம் அதிகரிக்கும்.

41. கல்வியால் ஜீவிப் பானும் கனத்ததோர் பூமி சேர்ப்பன்
நல்லவர் பலர்களாலே நயப்புறும் பூமிசேர்ப்பன்
சுவல்பசல் லியங்களுள்ளான் சுகதுக்க மிரண்டு முள்ளான்
மல்லுக்குச் செல்லா னுகும் மால்திருப்பணியும் செய்வன்.

41. ஜாதகர் தன்னுடைய வித்தையால் ஜீவனஞ் செய்பவராவார். மேன்மையான நிலங்களைச் சேர்த்து வைப்பார். அநேக நல்லவர்களால் கீர்த்தியையும் நிலங்களையும் அடைவார். இவருக்குக் கொஞ்சம் கடன் இருக்கும், சுகத்தையும் துக்கத்தையும் மாறி மாறி அனுபவிப்பார். சண்டைக்குப் போகமாட்டார். மகா விஷ்ணுவினுடைய கோயிலில் வேலைகளைச் செய்வார்.

42. எப்படி யோகம் சொன்னீர் இயம்புவீர் முனியே நீர்தாம்
செப்புவேன் தர்ம கர்மன் சேர்ந்துமே யிருப்பதாலும்
ஒப்புடன் ஜன்மத் தானு முச்ச மொளி லாபம் நிற்க
மெய்ப்புடன் கேசரி யோகம் விளம்புவோ மிவனுக் கேதான்.

42. ஜாதகருக்கு எந்தக் காரணங்களினுல் யோகமுண்டாகும் என்பதை முனிவரே! நீரே சொல்லுவீராக. நான் காரணத்தைச் சொல்லுகின்றேன். தர்மாதிபதியாகிய குருவும் கர்மாதிபதியாகிய அங்காரகனும் ஒன்ருய்க்கூடி இருப்பதாலும், ஜன்மாதிபதியாகிய சந்திரன் உச்சமாயிருப்பதாலும் ஒளியுடையவராகிய சூரியன் லாபமாகிய பதினென்றில் இருப்பதாலும உண்மையாக இவருக்குக் கேசரியோகம் உண்டு என்று சொல்லுகிருேம்.

**குறிப்பு.**—யோகங்கள் விஷயம் ஒன்பதிற்குடையவரும் பத்திற்குடையவரும் இங்கு கூடி இருப்பது தர்ம கர்மாதிபதி யோகம் என்று சொல்லப்படும். இங்கு சந்திரனுக்குப்பத்தில் குரு இருப்பதால் கேசரியோகம் இருக்கின்றது. கேசரியோகத்தைப்பற்றி ஜாதகபாரிஜாதம் ஏழாவது அத்தியாயம் 116-ஆவது சுலோகத்தையும், ஜாதக அலங்காரம் 274, 276-ஆவது பாடல்களையும், ஜாதக சிந்தாமணி 2192-ஆவது பாடலையும், பலதீபிகை 6-ஆவது அத்தியாயம் 10-ஆவது சுலோகத்தையும் பார்க்கவும். மேலும் இந்த ஜாதகத்தில் சூரியனுக்குப் பன்னிரண்டிலும்இரண்டிலும் கிரகங்கள்இருப்பதால் ஜாதக பாரிஜாதம் 7-ஆவது அத்தியாம் 121-ஆவது சுலோகம் பிரகாரமும், ஜாதக சிந்தாமணி 2949, 2950, 2951-ஆவது பாடல்கள் பிரகாரமும் வேசியோகம் வாசியோகம் இவைகள் அடங்கியுள்ள உபயசரியோகம் என்ற யோகமும் இருக்கின்றது. ஜாதகசாரதீபிகை, பலதீபிகை இவைகளையும் பார்க்கவும். மேலும் சந்திரனுக்கு இரண்டு பக்கங்களிலும் சூரியன் தவிர, மற்றக்

கிரகங்களில் இரண்டு கிரகங்கள் இருப்பதால் ஜாதக பாரிஜாதம் 7-ஆவது அத்தியாயம் 72, 73-ஆவது சுலோகங்களின் பிரகாரம் அனபாயோகம் சுனபாயோகம் இவைகள் அடங்கியுள்ள துருதுராயோகமும் இருக்கின்றது. இது விஷயமாய் ஜாதகாலங்காரம், பலதீபிகை, ஜாதகசாரதீபிகை இவைகளை யும் பார்க்கவும்.

43. மூவேமு ஆண்டின் மேலாய் விளம்புவோம் விசேஷ யோகும்
கோவலர் நேச மாகும் குறைமன நிவிர்த்தியாகும்
தாவினோர்க்கு தவியாகும் சல்லியம் நிவிர்த்தியெய்தும்
நாவது மேன்மை யாகும் நற்பல தீர்த்தம் நேரும்.

43. ஜாதகருக்கு இருபத்தோராம் வயதிற்கு மேலே அதிகமான யோகத்தைச் சொல்லுகிறோம். இவருக்கு அரசர்களுடைய சினேகம் உண்டாகும். மனக்கவலை நீங்கிவிடும். தன்னிடத்திற்கு வந்து சேர்ந்தவர் களுக்கு இவர் சகாயங்களைச் செய்வார். கடன் நிவிர்த்தியாகி விடும். இவருடைய வாக்குகள் மேன்மை யுடையனவாகப் பாவிக்கப்படும். அநேக நல்ல தீர்த்தங்களுக்கும் போவார்;

44. முப்பது மூன்று ஆண்டில் முயலாடி மாதம் தன்னில்
செப்புவோ மன்னை கண்டம் சேஷடற்கு நாற்பதாண்டில்
ஒப்புடன் கூனி மாதம் உரைக்கிறோம் மார கங்கள்
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழிகுன் றுது.

44. ஜாதகருக்கு முப்பத்து மூன்றுவது வயதில் ஆடி மாதத்தில் இவருடைய தாயார் இறந்து போய்விடுவாள். மூத்த சகோதரிக்கு இவருடைய நாற்பதாவது வயதில் பங்குனி மாதத்தில் மரணம் நேரிடும் என்று சொல்லு கிறோம். சர்பத்தைத் தன்னுடைய ஜடையில் தரித்துக் கொண்டிருக் கின்ற சிவபெருமானுடைய மனைவியாகிய பார்வதியம்மையே : நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும்.

**குறிப்பு.—மாதுர் மாரகம்.**—ஜாதகருக்கு வயது ஷ 32–0–0 முதல் ஷ 33–0–0 முடியும் வரையிலும் ராகு தசையில் சுக்கிர புத்தியும் சூரிய புக்தியும் நடக்கின்றன. ஆனால் ஆடி மாதத்தில் சுக்கிரபுக்தியே நடக்கின்றது. மாதுரு லக்கினம் நான்காவது பாவமாகிய துலா மாகும். துலாலக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை பராசரஹோரை இவைகளின் பிரகாரம் சூரியனும் குருவும் மாரகாதிபதிகள் ஆகின்றார்கள். சனி சூரியனையும் மாதுருகாரகனாகிய சந்திரனையும் பார்க்கின்றார். மேலும் இவர் துலாத்திற்கு ஆறில் இருக்கின்றார். ராகு, சனியினுடைய வீட்டில் இருந்து கொண்டு சனியைப் பார்க்கின்றார். இராகு சூரியனுடைய காலாகிய உத்தராட நட்சத்திரத்தில் இருக்கின்றார். ஜாதகசந்திரிகை 23, 26-ஆவது சுலோகங் களின் பிரகாரம் சனி மாதாவுக்கு மாரகாதிபதியாகச் சனிக்கு மேற் சொல்லிய காரணங்களால் ஏற்படுகின்றார். ஜாதகசந்திரிகை 12-ஆவது சுலோகப் பிர காரம் இராகு சனியினுடைய பலனைக் கொடுக்க வேண்டியவராக விருப்பதால் மாதாவுக்குத் தன் தசையில் மாரகத்தைக் கொடுக்க அமைப்பு உள்ளவரா

இன்ருர். சுக்கிரன் துலாலக்கினத்திற்கு ஒன்றிற்கும் எட்டிற்கும் உடையவராகி இருப்பதால் துய்யகேரளம் எட்டாவதுபாவம் 14-ஆவது பாடல் பிரகாரம் சுக்கிரன் தன்புக்தியில் மாதாவுக்கு மாரகஞ்செய்ய அமைப்பு உள்ளவராக விருக்கின்ருர்.

**மூத்த சகோதரி மாரக விஷயம்.**—ஜாதகருக்கு வயது ஸு 39-0-0 முதல் 40-0-0 முடியும் வரையில் குருதசையில் சனிபுக்தி நடக்கின்றது. மூத்த சகோதரியின் லக்கினம் பதினேராவது பாவமாகிய ரிஷபம் ஆகும். ரிஷப லக்கினத்திற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் குரு சந்திரன் சுக்கிரன் புதன் அங்காரகன் இவர்கள் மாரகாதிபதிகளாகின் ருர்கள். குரு ரிஷபத்திற்கு எட்டிற்கும் பதினென்றிற்கு உடைய மாரகராய் இருக்கின்ருர். லக்கினபதியாகிய சுக்கிரனையும் பார்க்கின்ருர். ஆகையால் இவருக்குத் தன் தசையில் மூத்த சகோதரியை மாரகஞ் செய்ய அமைப்பு இருக்கின்றது. சனி ரிஷபத்திற்குப் பதினென்றில் இருந்து கொண்டு ரிஷபத்தையும் மாரகாதிபதியாகிய சந்திரனையும் பார்ப்பதால் இவருக்கு மூத்த சகோதரியை மாரகஞ் செய்ய அமைப்பு உண்டு.

45. இன்னவன் மரணகால மியம்புவோ மறுபா னெட்டில்
தன்தனுர் மாதம் தன்னில் சாற்றினே மேகா தசி
அன்னவ னுடலம் ஏகும் அம்மொழி பராசர் சொல்ல
துன்மையை விலக்கு கின்ற ஜயமுனி கூறு கின்ருர்.

45. ஜாதகருடைய மரண காலத்தைப் பற்றிச் சொல்லுகிருேம். இவருக்கு அறுபத்தெட்டாவது வயதில் மார்கழி மாதத்தில் ஏகாதசி திதியில் மரணம் நேரிட்டு இவருடைய தேகம் மறைந்துபோய் விடும். இவ்வித மாகப் பராசர முனிவர் சொல்ல, கெடுதியை நீவிர்த்தி செய்கிற ஜய முனிவர் தடுத்துச் சொல்லுகின்ருர்.

46. ஆதியி லிரண்டாண் டுக்குள் அணுகிடும் கண்ட மென்றேம்
நீதியா யிருநான் காண்டு நிகழ்த்தவா மீரொணபானில்
வேதனை யுண்டு என்றேம் விளம்பின மொழியைக் கேட்டு
ஏதுநோய் வந்த போதுமிரவிமுன்பனிபோ லாகும்.

46. ஜாதகருக்கு முதலில் இரண்டு வயதிற்குள்ளே அதிகமான கண்டங்கள் நேரிடும் என்று சொல்லுகிருேம். எட்டாவது வயதிலும் பதினெட்டாவது வயதிலும் கஷ்டங்களும் நோய்களும் நேரிடும் என்று சொல்லுகிருேம் என்று ஜெய முனிவர் சொல்ல இதைக் கேட்ட பராசரர் எந்த நோய் வந்த போதிலும் அது சூரியன் முன்னே பனியானது விலகி மறைந்து போவது போல விலகி நிவிர்த்தியாகிவிடும் என்று சொன்னுர்.

47. காரணம் யாது என்னக் கலைமதி[1] தனக்குப் பத்தில்
பார்[2]மகன்[3] பொன்னேன்[3] நிற்க பாலகன் வயது தீர்க்கம்
காரி[4] பான்[5] தசை காலத்தில் கழறுவைம் கண்டம் தானே
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

---

[1] வளர்பிறைக்சந்திரன். [2] அங்காரகன். [3] குரு. [4] சனி. [5] சூரியன்.

47. காரணம் என்ன வென்று முனிவர் கேட்க, பராசரமுனிவர் சொல்லுகின்றார். வளர்பிறைச் சந்திரனுக்குப் பத்தில் அங்காரகனும் குருவும் இருப்பதால் ஜாதகருக்கு நீண்ட ஆயுள் உண்டு. சனி, சூரியன் இவர்களுடைய தசைக்காலங்களில் கெண்டங்கள் நேரிடும் என்று சொல்லு கிறோம். * ஆறு பெருமை பொருத்திய முகங்களையுடைய முருகக்கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே ! கேட்பீராக.

**குறிப்பு.—ஜாதகருக்குக் கண்டங்கள் மாரகம் இவைகளின் விஷயம்.—** கடகலக்கினத்திற்குச் சூரியன் இரண்டிற்குடையவர். சனி ஏழிற்குடையவர். ஜாதகசந்திரிகை 22-ஆவது சுலோகப் பிரகாரம் 2, 7-க்குடையவர்கள் பெரிய மாரகாதிபதிகள் ஆவார்கள். மேலும் இதர நாடிகளிலும் ஏழிற் குடையவர்களுடைய தசையிலும் ஒவ்வொருதசையிலும் வருகின்ற இவர் களுடைய புக்திகளிலும் கெண்டங்கள் ஜாதகருக்கு ஏற்படும் என்று சொல்லி இருக்கின்றது, ஆகையால் இவ்விடத்திலும் சனி தசையிலும் சூரியதசையிலும் கெண்டங்கள் நேரிடும் என்று சொல்லி இருக்கின்றது. மேலும் ஜாதகருக்கு வயது ஷூ 67–0–0 முதல் ஷூ 68–0–0 வரையிலும் சனிதசையில் ராகுபுக்தி நடக்கிறது. 45-ஆவது பாடலில் ஜாதகருக்கு 68-ஆவது வயதில் தனுர்மாத த்தில் மாரகம் என்று சொல்லிஇருக்கின்றது. பரசாஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் கடகலக்கினத்திற்குச் சனி சுக்கிரன் புதன் இவர்கள் மாராகாதிபதிகள் ஆகும். சனி ஏழு எட்டிற்குடையவராகி லக்கினாதிபதி யாகிய சந்திரனைப் பார்க்கின்றார். துய்யகேரளம் எட்டாம் பாகம் 14-ஆவது பாடல் பிரகாரமும் சனி ஜாதகருக்கு மாரகஞ் செய்ய அமைப்புடையவராய் இருக்கின்றார். ராகு சனியினுடைய வீட்டில் இருந்து கொண்டு சனியைப் பார்ப்பதால் ஜாதகசந்திரிகை 12-ஆவது சுலோகப் பிரகாரம் இராகு தன் புக்தியில் ஜாதகருக்கு மாரகஞ் செய்ய அமைப்புள்ள வராக விருக்கின்றார்.

48. பாலகன் ஜனன காலம் பரிதியின் தசையிலேதான்
கோலமா யாண்டு ஒன்று கூடிய திங்களைந்தும்
சாலவே பிணியு மெய்தும் சல்லிய மதிகம் நேரும்
ஏலவே காலி பீடை யியம்புவோம் விவரம் ரெண்டில்.

48. ஜாதகர் பிறக்குங் காலத்தில் சூரிய மகா தசையில் இருப்பு ஒரு வருஷமும் ஐந்து மாதமும் ஆகும். இந்தக் காலத்தில் ஜாதகருக்கு நோய்கள் வரும். கடன்கள் அதிகமாக ஏற்படும். கால் நடைகளுக்கு நோய்கள் உண்டாகும். விவரங்களை இரண்டாவது பாகத்திற் சொல்லுகிறோம்.

49. இன்னமும் சிலது சேதி யியம்பு வோ மிரண்டி லேதான்
அன்னவன் பூமி வீடு ஆபரண ங்களெ ல்லாம்
சொன்னேனே பதினுயி ரம்பொன் சுதனுமே அடைவா னாகும்
இந்திர னிறைஞ்சு மாதே யிம்மொழி தப்பா தாமே.

49. இன்னும் சில விஷயங்களை இரண்டாவது பாகத்தில் சொல்லு கிறோம். ஜாதகர் நிலம் வீடு ஆபரணங்கள் ஆகிய இவைகள் எல்லாம்

சேர்ந்து பத்தாயிரம் பொன் பெறக்கூடிய சொத்தை அடைவார் என்று சொல்லுகின்றோம். இந்திரன் வணங்குகின்ற பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய இந்த வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும்.

50. பின்ஜன்மம் தில்லை தன்னில் பிறப்பனும் பிரம்ம சேயாய்
அன்னியர்க் குபதே சித்து ஆந்தோளியுடைய னாகி
இன்னவன் வாழ்வா னாகும் இயல்செய முனிவர் கூறுவர்
மன்னவன் இப்பி றப்பி லறிவிப்பீர் செயல்கள் தாமே.

50. ஜாதகர் மறு ஜன்மத்தில் தில்லை என்ற சிதம்பரத்தில் பிராமணர் குலத்தில் ஆண் குழந்தையாகப் பிறப்பார். பிறருக்கு உபதேசங்களைச் செய்து பல்லக்கு உடையவராகி வாழ்வார் என்று பராசாமுனிவர் சொல்ல, ஜயமுனிவர் கேட்கின்றார், ஜாதகர் இந்த ஜன்மத்தில் செய்த காரியங்களைச் சொல்லுவீர்.

51. திருப்பணி செய்வா னாகும் சிந்தையும் கலக்க மின்றிக்
குருபாதம் பெற்ற தாலும் காலனை உதைத்தோன் பத்தி
பெருமையாய்க் கொண்ட தாலும் பிறப்பனே பிரம்ம சேயாய்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

51. ஜாதகர் கோயில் வேலைகளைச் செய்வார். தன் மனத்தில் குற்றங்கள் இல்லாமல் குருவினுடைய அருளையும் அடைந்த தாலும் எமனையுதைத்த சிவபெருமான்மேல் பக்தியும் அன்பும் பெருமையாக உடையவராய் இருந்ததாலும் மறு ஜன்மத்தில் பிராமணர் குலத்தில் ஆண் குழந்தை யாகப் பிறப்பார். அருமையான வேதங்களின் முடிவு என்ற உபநிஷத்துக் களில் விளங்குகின்ற பார்வதி யம்மையே! கேட்பீராக.

# ஜாதகம் 93

1. சந்திரன் கேது வண்டி[1] சனிதேளில்[2] ராகு மானில்[3]
புந்தியும்[4] ரவி சேய்[6] மன்னன்[7] பெண்ணினில்[8] புகரும்[9] சீயம்[10]
இந்தவாறு சேர்ந்து நின்று இடமது வளை[11] யலாக
அந்ததோர் பலன்கள் எவ்வாறு அறிவிப்பீர் விபரமாக.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசி சக்கரம் | | லக்கினம் சந்திரன் கேது |
| ராகு | | | சுக்கிரன் |
| | சனி | | சூரியன் அங்காரகன் புதன் குரு |

பூசம் 3-ஆம்பாதம், சனிதசை ஷ 6-6-0.

1. சந்திரனும் கேதுவும் கடகத்திலும், சனி விருச்சிகத்திலும், ராகு மகரத்திலும், புதனும் சூரியனும் அங்காரகனும் குருவும் கன்னியிலும், சுக்கிரன் சிம்மத்திலும், இவ்விதமாகக் கிரகங்கள் இருந்து ஜன்ம லக்கினம் கடகமானல் இந்த ஜாதகத்தினுடைய பலாபலன்களை விவரமாக சொல்லுவீர்.

**குறிப்பு.**—இந்த ராசிச்சக்கர அமைப்பிற்குப் பின் வரும் அம்சைச் சக்கர கிரகநிலை பொருத்தமுடையதாகும்:—மேஷத்தில் சுக்கிரனும் ராகுவும், கடகத்தில் சனியும், சிம்மத்தில் அங்காரகனும், துலாத்தில் சந்திரனும் கேதுவும், மகரத்தில் புதனும் குருவும், கும்பத்தில் சூரியனும் ஆகும்.

2. தானது ஆணும் ஜன்மம் தந்தையில் கீழ்மேல் வீதி
மானமாய் உத்தர வாசல் மாகாளி வடமே லாகும்
ஆனதோர் தந்தி மேற்கில் அருகினில் தடாக முண்டு
பாண்மையாய்ச் சிற்றூர் தன்னில் பிறப்பனும் நான்காம் ஜன்மம.

2. ஜனனமான குழந்தை ஆண் குழந்தையாகப் பிறக்கும், ஜாதகரின் தகப்பனுருடைய வீடு கிழக்கு மேற்குத் தெருவில் வடவண்டை வாடையில் தெருவாயிற்காலை உடையதாக விருக்கும். பெரிய காளிகோயில்

[1] கடகம்
[2] விருச்சிகம்.
[3] மகரம்.
[4] புதன்.
[5] சூரியன்.
[6] அங்காரகன்.
[7] குரு.
[8] கன்னி.
[9] சுக்கிரன்.
[10] சிம்மம்.
[11] கடகம்

வடமேற்குத்திக்கில் இருக்கும். விநாயகக்கடவுளின் கோயில் மேற்குத்திக்கில் இருக்கும். சமீபத்தில் ஒரு குளம் இருக்கும். தகுதியான ஒரு சிறிய கிராமத்தில் நான்காவது கர்ப்பத்தில் ஜாதகர் பிறப்பார்.

3. இன்னவன் ஜனன யோகம் எழில்பெரு தந்தை யோகம்
மன்னிய அன்னை யோகம் வரும்துணை களத்திர புத்திரர்
தன்னிலே முன்பின் ஜன்மம் சாற்றுவோ மிந்நூல் தன்னில்
அன்னையே யாங்கள் சொல்லு மருள்மொழி குன்ற தென்றோம்.

3. ஜாதகருடைய ஜனன காலத்திய யோகம், தகப்பனருடைய யோகம், தாயாருடைய யோகம், கூடப்பிறந்தவர்கள் மனைவி மக்கள் முன் ஜன்மம் பின் ஜன்மம் ஆகிய இவைகள் எல்லாவற்றையும் இந்தச் சாஸ்திரத்தில் நாங்கள் சொல்லுகிறோம். எங்கள் தாயாராகிய பார்வதியம்மையே! நாங்கள் உங்களுடைய கிருபையாலே சொல்லும் அருள் வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும் என்று சொல்லுகிறோம்.

**வேறு.**

4. தந்தைகுணம் கூறுகின்றோம் அரியாம்ராசி
சகடுநாள் தோன்றிடுவனிரு நிறத்தன்
வந்தவர்தமக் கன்னமீவ னூகசாலி
மர்மநூல் தனையறிவான் கல்விமானும்
சிந்தைமர்ம மில்லாதான் கிருஷி செய்வன்
தீரனும் அற்பவஸ்து சேர்ப்பானுகும்
முந்துமால் பத்தியுளன் பணையோர்விருத்தி
உயர்வான குடும்பியென்றோம் எய்தும்பூமி.

4. ஜாதகரின் தகப்பனருடைய குணாதிசயங்களைச் சொல்லுகின்றோம். இவர் சிம்ம ராசியில் ரோகிணி நட்சத்திரத்தில் பிறந்திருப்பார். இரண்டு நிறங்கள் கலந்த நிறமாகிய மாநிறமுள்ள தேகத்தை உடையவர். தன்னிடத்திற்கு வந்தவர்களுக்குச் சாப்பாடு போடுவார். நுட்பமான புத்தியை உடையவர். மர்ம சாஸ்திரத்தை அஃதாவது காமநூலை யறிந்தவர். தனனுடைய மனத்தில் இரகசியத்தை உடையவரல்லர். விவசாயத் தொழிலைச் செய்வார். தைரியமுடையவர். அற்பமான வஸ்துக்களைச் சேர்த்து வைப்பார். முதல்வராம்மகாவிஷ்ணுவின் மேல் பக்தியும் அன்பும் உடையவராவார். நிலங்களும் ஏர்களும் இவருக்கு விருத்தியடையும். இவர் மேன்மையான குடும்பஸ்தராகவிருப்பார் என்று சொல்லுகிறோம். நிலங்கள் வந்து சேரும்.

5. பூமியது விருத்திசெய்வன் கூவல்செய்வன்
பெண்துணைவி தன்னாலே நிந்தையுண்டு
ஆவுகளும் விருத்தியுண்டு மூலச்சூடு
அணுகிடுமே யேழைபட்டவன் அறிவோர்நேயன்

நாதவருன் துணையாண்மூன் றேயாகும்
நாரியு மவ்வாருய் நவிலுவோமே
பாவையொருத்தி யால் லவமான முண்டு துணைவர்
வேருய்ப் பகருவோ மவர்சேதி பின்பால் சொல்லுவோம்

5. ஜாதகருடைய தகப்பனர் நிலங்களைப் பயிரிட்டுத் தான்யங்களை விருத்தியாக்குவார். கிணறுகளைத் தோண்டுவார். இவருக்கு இவருடைய சகோதரியால் அவமானம் ஏற்படும். பசுக்கள் விருத்தியாகும். இவருக்கு மூலச்சூடு உண்டாகும். ஏழையானவர். புத்திசாலிகளுக்கும் வாசித்தவர்களுக்கும் சிநேகிதராக விருப்பார். தான் சொல்லும் வார்த்தைகளைத தவருமல் காப்பாற்றுவார். இவருடன் கூடப்பிறந்தவர்கள் ஆண்கள் மூன்று பேரும் பெண்கள் மூன்று பேரும் உண்டு என்று சொல்லுகிறேம். இவருக்கு ஒரு சகோதரியால் அவமானம் நேரிடும். சகோதரர்கள் வெவ்வேறு குடும்பமாக விருப்பார்கள். அவருடைய விஷயங்களைப் பின்னல் சொல்லுகின்றேம்.

6. சொல்லிய யிக் குணத்தானுக்கு இந்தப் பாலன்
தோன்றுவான் துணைஆண்பால் முன்னேனென்று
புல்குவோ மவன்குணத்தை மானுஜ்ஜன்மம்
பொருந்துமுத் தரட்டாதி நாளேயாகும்
வல்லவனு மிருநிறத்தன் உணச்சல்நீட்சி
மர்மவான் கல்விகொஞ்சம் வார்த்தைதப்பான்
இல்லறமும் புதிதாக யெய்து வானும்
இடர்செய்யான் நிலம்விருத்தி யீகைவானும்

6. இங்குச் சொல்லப்பட்ட குணங்களையுடைய தகப்பனருக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவருக்குச் சகோதரரான ஓர் ஆண் இருக்கும். இந்த ஆண் சகோதரர் மூத்த சகோதரர் ஆவார். இவருடைய குண குணங்களைப் பற்றிச் சொல்லுகிறேம். இவர் மகரராசியில் பிறப்பார். இவருடைய நட்சத்திரம் உத்தரட்டாதியாகும். இவர் இரண்டு நிறங்கள் கலந்துள்ள நிறமாகிய மாநிறமுள்ள தேகத்தை உடையவர். வரண்டு, நீண்டு உள்ள மெல்லிய தேகத்தை உடையவர். ரகசியமான மனத்தை உடையவர். கொஞ்சமான படிப்பை உடையவர். தான் சொல்லிய வார்த்தைகளைத் தவறிப்போக விடாமல் காப்பாற்றுவார். இல்லற தர்மத்தைப் புதியதாக நடத்துவார். பிறருக்குக் கெடுதிகளைச் செய்யமாட்டார். நிலத்தை விருத்தியாக்குவார். கொடுக்குந் தன்மையை உடையவர்.

7. வானர்தோழர் மால்பத்தி கொள்வானுகும்
வண்டிவாகன முடையன் மறுத்துக்கூறுன்
ஈனமிலான் சுகபுசிப்பன் கமலரேகையெய்தும்
மந்தச் சூடுடையன் யிடர்களில்லான்
மான்விழியாள் மனைவியொன்று வடகீழாகும்
மாதுலன்தன் வர்க்கத்தில் வருகுமென்றேம்
ஆணிரண்டு பெண்பாலா மொன்று மாகும்
அதுமூன்றும் தீர்க்கமென்றேம் அறைந்தேன் பாரே ;

7. ஜாதகரின் மூத்த சகோதரர் தேவர்களுக்கு இஷ்டமானவர். மகா விஷ்ணுவின்மேல் பக்தியும் அன்பும் உடையவர். சவாரி வண்டியும் வாகனமும் உடையவர். தடுத்துச்சொல்லமாட்டார். ஈனமான குணமில்லாதவர். சுகமான போஜனத்தைச் சாப்பிடுவார். இவருடைய உள்ளங்கையில் கமலரேகை என்று சொல்லப்பட்ட தாமரை ரேகை என்ற ஒருவித ரேகை உண்டு. மந்தச் சூட்டை உடையவன். கஷ்டங்கள் இல்லாதவர். மானைப் போன்ற அழகிய கண்களை உடைய ஒரு மனைவி வட கிழக்குத் திக்கிலிருந்து வருவாள். இந்த மனைவி தன்னுடைய அம்மானுடைய வம்சத்திலிருந்து வந்து நேரிடுவாள் என்று சொல்லுகிறோம். இவருக்கு இரண்டு ஆண் குழந்தைகளும் ஒரு பெண் குழந்தையும் உண்டு. இந்த மூன்று குழந்தைகளும் நீண்ட ஆயுளை உடையவர்கள் என்று சொல்லுகின்றோம். நாங்கள் சொன்ன முத்த சகோதரனைத் தவிர ;

8. பார்தனிலே அதுவின்றி வேறோர்காணன்
   பாவையுமே அவ்வாறுய்ப் பகரலாகும்
மாரனுடைய சேதிசொல்வேன் மாஞ்சிவப்பன்
   மருமவான் உணைச்சலுளான் மரித்துக்கூறுவன்
தீரநெஞ்சன் கல்விமான் சூடாம்தேகம்
   செய்நன்றி மறவாதான் சிறப்பாய்வாழ்வன்
காரியத்தில் கண்ணுவன் சல்லியம்கொள்ளான்
   கட்டுவார்த்தை களுரைப்பன் காலாள்விருத்தி.

8. பூமியில் வேறொரு சகோதரன் ஜாதகருக்குக் கிடையாது. ஜாதகருக்கு அவ்விதமாகவே ஒரு சகோதரி உண்டு. இனிமேல் ஜாதகருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகிறேன். இவர் மாமரத்தின் துளிரினுடைய நிறத்தைப் போன்ற ஒருவிதமான சிவப்பு நிறத்தையுடையவர். இரகசியத்தை உடையவர். வரண்ட மெலிந்த தேகத்தை உடையவர். தடுத்துப் பேசுவார். தைரியமான மனத்தை உடையவர். வாசித்தவர். சூட்டுத் தேகத்தை உடையவர். பிறர் தனக்குச் செய்த உதவியை மறக்காதவர். மேன்மையாய் வாழுவார். காரியங்களிலே கண்ணுங் கருத்துமாக விருப்பார். கடன் வாங்க மாட்டார். பொய்வார்த்தைகளையும் புனைந்த வார்த்தைகளையுஞ் சொல்லுவார். கால்நடை வேலைக்காரர்கள் அதிகமாகிக் கொண்டு வருவார்கள்.

9. காலத்தை அறிந்துரைப்பன் சகடுமுள்ளான்
   கன்னியர்கள் நேயமுளான் கடுநடப்பன்
சீலவான் கோவுவிருத்தி சித்திரயில்லம்
   செய்குவான் ஜயமுனியும் மறுத்துச்சொல்வார்
பாலனுக்கு எக்கால மில்லம்நேரும்
   பகருவாயா முருண்டில் படைப்பனென்றோம்
சாலவே யிதற்குமுன் னிடுக்கமாகச்
   சார்ந்திடுமே கிருகமென்றோம் சாத்திரேமே.

9. ஜாதகர் அந்த அந்தக் காலத்திற்குத் தகுந்தாற்போல பேசுவார். வண்டியை உடையவர். ஸ்திரீகளினுடைய சினேகத்தை உடையவர். நடை விரைவாக உடையவர். ஒழுக்கமுடையவர். பசுக்களின் விருத்தியையுடையவர். அழகான சித்திரங்களை உடைய வீட்டைக் கட்டுவார். இவ்விதமாகச் சொல்ல, ஜயமுனிவர் தடுத்துக் கேட்கின்றார். ஜாதகருக்கு எந்த வயதில் வீடு கிடைக்கும் என்பதைச் சொல்லுவீர். இவருக்கு முப்பத்தாறுவது வயதில் இவர் வீட்டை அடைவார் என்று சொல்லுகினறோம். இதற்கு முன்னே இவருடைய வீடு போதுமான இடம் இல்லாமல் சிறியதாக இருக்கும் என்று சொல்லுகின்றோம். இவ்விதமாகப் பலன்களைச் சொன்னோம்.

10. சாற்றினீர் எந்தத்திக்கில் யில்லம்நேரும்
சனிதிக்கு அருகிலே சாருமென்றோம்
போற்றுவோம் மூற்காலம் செய்தஇல்லம்
பொருந்தாது இவனுக்குப் புகலுவோமே
குத்திரத்தால் சிலதுநிலம் சேர்ப்பானாகும்
துறவுசெய்வன் சோலைசெய்வன் துன்பமிலான் துறவோர்
[ம்நயன்
ஆத்திரங்கள் பொருள்மீதில் அடியாள்சேர்ப்பன்
அண்டினருக் குதவிசெய்வன் அம்மையேகேள்.

10. எந்தத் திக்கில் வீடு கிடைக்கும் என்பதைச் சொல்லுவீர், என்று கேட்க, மேற்குத் திக்கிற்கருகில் உண்டாகும் என்று சொல்லுகிறோம். முற்காலத்தில் பெரியோர்கள் கட்டின வீடு இவருக்கு வந்து நேரிடாது என்று சொல்லுகின்றோம். உபாயத்தாலும் தந்திரத்தாலும் சில நிலங்களைச் சேர்த்து வைப்பார். கிணறு வெட்டுவார். சோலைகளையும் தோப்புகளையும் உண்டாக்குவார். கஷ்டப்படாமல் இருப்பார். சன்னியாசிகள், பரதேசிகள் இவர்களிடத்தில் சினேகமாக விருப்பார். சொத்துக்களின்மேல் அதிக ஆசையை உடையவர். வேலைக்காரர்களையும் தொண்டர்களையும் சேர்ப்பார். தன்னிடம் வந்தவர்களுக்கு உபகாரத்தைச் செய்வார். பார்வதியம்மையே! கேட்பீராக.

11. கேளுமம்மா தந்தைபோல் தலங்கள்செல்வன்
கெருவமுளன் கடினசித்தன் சீதமிஷ்டன்
நாளுக்குநாள் பிறைபோல் யோகம்வாய்க்குத்
நல்கினீர் யோகம்எவ்வாறு நவிலுவீர்கள்
காளைசெம்மல் தர்ம்மகர்ம்மம் ஒன்றாய்மூன்றில்
கலந்ததால் யோகமெய்தும் துணைக்கு அவ்வாறு
வேலவனைப் பெற்றவள்தன் கிருபையாலே
மென்மேலும் சுகமெய்தும் விளம்பக்கேளாய்.

11. ஜாதகர் தன்னுடைய தகப்பனாரைப் போலவே திவ்ய தலங்களுக்குப் போவார். அகங்காரம் உடையவர். கடுமையான நெஞ்சை உடையவர். குளிர்ச்சியான வஸ்துக்களின் மேல் ஆசையை

யுடையவர். இவருக்கு நாளடைவில் வளர் பிறைச் சந்திரன் வளருவதுபோலவே யோகம் விருத்தியாகிக்கொண்டு வரும். இவருக்கு எந்தக் காரணங்களினுல் யோகத்தைச் சொன்னீர்? அவைகளைத் தெரிவிப்பீராக. இவருக்கு ஈசனுடைய அருளால் தாமாதிபதியாகிய குருவும் கர்மாதிபதியாகிய அங்காரகனும் ஒன்ருய்ச் சேர்ந்து மூன்ருவது பாவத்தில் இருப்பதால் யோக முண்டாகும். சகோதரர்களுக்கும் இவ்வித மாகவே யோக முண்டு. முருகக்கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மை யாரின் அருளாலே ஜாதகருக்கு மேலும் மேலும் சௌக்கியங்கள் அதிகப் பட்டுக்கொண்டே வரும் என்று சொல்லுகிறதை, பார்வதியம்மையே! கேட்பீராக.

12. விளம்புவோ மீரேழில் வடகீழ் தன்னில்
மெல்லியால் தனைவாய்க்கும் அன்னைவர்க்கம்
விளம்புவோ மவள்குணத்தைச் சிவந்தமேனி
வீண்வம்பில் செல்லாளாம் விருந்தோர்நேயள்
விளம்பாதாள் பொய்களுமே விரதம்பூண்பள்
வரன்மனம்போல் நடந்திடுவள் வயதுதீர்க்கம்
விளம்பியதைச் ஜய முனியும் மறுத்துச்சொல்வீர்
மேழிடத்தில் புயங்கனுமே யிருப்பதாலே;

12. ஜாதகருக்குப் பதினுன்காவது வயதில் * வட கிழக்குத் திக்கில் இருந்தும் தாயாருடைய பந்துக்களிடத்திலிருந்தும் மனைவி வந்து நேருவாள். இவளுடைய குணதிசயங்களைப் பற்றிச் சொல்லுகிறேம். இவள் சிவப்பான நிறத்தையுடைய தேகத்தை உடையவள். வீண் சண்டையில் தலையிடமாட்டாள். விருந்தாளிகளிடத்தில் சினேகமாகவும் அன்புடனும் இருப்பாள். பொய்களைச் சொல்லமாட்டாள். நோன்புகளை அநுசரிப்பாள். தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தபடியே நடந்து கொள்ளுவாள். இவள் நீண்ட ஆயுளை உடையவள். இவ் விதமாகச் சொல்லுவதை ஜயமுனிவர் தடுத்துச் சொல்லுகின்ருர். ஏழாவது பாவத்தில் புயங்கன் என்ற ராகு இருப்பதாலும்;

* குறிப்பு —: விவாக விஷயம்:—ஜாதகருக்கு வயது ஹு 13–0–0 முதல் ஹு 14–0–0 முடியும் வரையிலும் புதன் தசையில் சூரிய புக்தியும் சந்திர புக்தியும் நடக்கின்றன. இரண்டாவது பாவாதிபதியாகிய சூரியன் இருக்கின்ற ராசியதிபதியாகிய புதன் தன்னுடைய தசைக் காலத்தில் ஜாதகபாரிஜாதம் பதினுன்காவது அத்தியாயம் இருபத்தொன்பதாவது சுலோகப் பிரகாரம் ஜாதகருக்கு விவாகத்தைச் செய்து வைக்க அமைப்பு உடையவராகின்ருர். சூரியன் இரண்டிற்குடையவராய்ப் பத்திற்கும் ஒன்பதிற்கும் உடையவராகிய அங்காரகனுடனும் குருவுடனும் கூடியிருப்பதால் மேற்சொல்லிய 29-ஆவது சுலோகப் பிரகாரம் தன் புக்தியில் விவாகம் செய்து வைக்க அமைப்பு உடையவராகின்ருர்.

வேறு

13. தானே காரி[1] திஷ்டி பெறத் தார மிரண்டு தானெய் தும்
வான் குருவும் தான் பார்க்க மனைவி ஒன்று தீர்க்கமு றும்
ஆன மனைவி தனக்குத் தான் அன்னை யிரண்டு தானுரைப்பாம்
பான்மை யாக அபிமானம் பகர்வோம் பால னுக்கு மே.

13. ஏழாமிடத்தையும் ராகுவையும் சனி பார்ப்பதாலும் ஜாதக ருக்கு இரண்டு மனைவிகள் நேரிடுவார்கள். இவ்விதமாக ஜயமுனிவர் சொல்ல இது வரையிலும் சொல்லிவந்த முனிவர் சொல்லுகின்றார். இந்த ஏழாவது வீட்டையும் ராகுவையும் ஆகாயத்தில் சஞ்சரிக்கின்ற குரு பார்ப்பதால் மனைவி ஒன்றே ஆகும். அவள் நீண்ட ஆயுளை உடையவளாவாள். இந்த மனைவிக்கு இரண்டு தாய்மார்கள் உண்டு என்று சொல்லுகின்றோம். ஜாதகருக்குத் தகுதியாக அபிமான ஸ்திரீ ஒருத்தி வந்து நேருவாள்.

14. பாலன் தனக்கு யெக்கா லம் பாவை அபிமா னமாவாள்
சால முப்பான் ஆண்டின் மேல் சாரும் கங்கை குல மாது
நீலி தனக்குச் சுதர் காணன் நேரும் பணிகள் அதிகம தாய்க்
காலன் திக்கில் வருவ ளெனக் கழறினோமே காதலி யே.

14. ஜாதகருக்கு எந்த வயதில் அபிமான களத்திரம் வந்து நேரிடும் என்பதைச் சொல்லுவீர் என்று ஜயமுனிவர் கேட்க, முப்பதாவது வயதிற்கு மேல் ஒரு வேளாள குலத்திற் பிறந்த ஸ்திரீ அபிமானமாக வந்தடைவாள்*. இவளுக்குக் குழந்தைகள் கிடையா. ஆடை ஆபாரணங்கள் அதிகமாக வந்து சேரும். இவள் தெற்குத் திக்கிலிருந்து வருவாள் என்று சொல்லுகிறோம். பார்வதியம்மையே!

* குறிப்பு.—அபிமான ஸ்திரீ விஷயம்:—ஏழில் இராகு இருப்பதும் ஏழைச் சனிபார்ப்பதும் தோஷ மானது என்றும் ஏழைக் குரு பார்ப்பதும் அநுகூல மானது என்றும் மேலே சொல்லி இருக்கின்றது. மேலும் குருஇரண்டாவது மனைவி ஸ்தானமாகிய ஒன்பதாவது பாவமாகிய மீனத்திற்கு உடையவராகி ஏழாவது பாவத்தைப் பார்ப்பதால் இரண்டாவது தாரம் கொடுக்குத் தன்மை உடையவராகின்றார். சுக்கிரனைச் சனி பார்ப்பதும் தாரதோஷமாகும். குருவுக்கு ஆறுவது வீட்டு ஆதிபத்தியமும் வந்திருப்பதால் குருவுக்குப் பங்கமுள்ள தாரம் அஃதாவது அபிமானதாரம் கொடுக்க அமைப்பு ஏற்படுகிறது. ஜாதகருக்கு வயது முப்பதிற்கு மேல் சுக்கிரதசை வருகிறது. சுக்கிரனைச் சனியும் ராகுவும் பார்த்திருப்பதாலும் சுக்கிரன் குடும்பஸ்தானத்திலிருப்ப தாலும் சுக்கிரன் பதினொன்றிற்குடையவராகி ஏழுக்குடைய சனியால் பார்க்கப்படுவதாலும் ஜாதகா லங்காரம் 689-ஆவது பாடல், ஜாதகசிந்தாமணி 984-ஆவது பாடல் இவைகளின் பிரகாரம் சுக்கிரன் இன்னொரு ஸ்திரீயை ஜாதகருக்கு அமைத்துவைக்க அதிகாரமுடையவராகவாகின்றார்.

[1] சனி.

**வேறு**

15. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோம் மெழுவர் தோன்றும்
சித்தமாய் ஆண்பால் ரண்டு சேல்விழி பெண்பா லவ்வாறு
சுத்தமாய் நான்கும் தீர்க்கம் சோர்வுறும் மூன்று என்றோம்
அதிதியைப் பெற்ற மாதே அறைகிறோம் விவரம் ரண்டில்.

15. ஜாதகருக்குப் புத்திர பாவத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். மொத்தத்தில் எழு குழந்தைகள் பிறக்கும். ஆண் குழந்தைகள் இரண்டு பேரும், பெண் குழந்தைகள் இரண்டு பேரும் ஆக இந்த நான்கு குழந்தைகளும் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள். மீதி மூன்று குழந்தைகளும் இறந்துவிடுவார்கள் என்று சொல்லுகிறோம். தேவரையீன்றுளைப் பெற்ற பார்வதியம்மையே! மற்ற விவரங்களை இரண்டாவது பாகத்திற் சொல்லுகிறோம்.

**குறிப்பு.—புத்திர தோஷம் விஷயம்,—**புத்திர ஸ்தானமாகிய ஐந்தாவது பாவமாகிய விருச்சிகத்தில் ஏழிற்குடைய பாபியாகிய சனி இருக்கின்றது. ஜாதகாலங்காரம் 596ஆவது பாடல் பிரகாரம் புத்திர தோஷத்தை விளைவிக்கக் கூடியதாகும். ஐந்திற்குடையவராகிய அங்காரகன் புதனுடைய வீடாகிய கன்னியில் இருப்பது ஜாதகாலங்காரம் 592-ஆவது பாடல் பிரகாரம் புத்திர தோஷத்தை விளைவிக்கும். ராகு 5-ஆவது பாவத்தைப் பார்ப்பது புத்திர தோஷத்தை விளைவிக்கும். ஏழிற்குடைய சனி ஐந்தில் இருப்பதைப் பற்றி ஜாதகபாரிஜாதம் பதின்மூன்றுவது அத்தியாயம் பன்னிரண்டாவது சுலோகத்தையும் பார்க்கவும். அங்காரகனும் குருவும் மூன்றிலிருப்பதும் தோஷமாகும்.

16. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அழகுளாள் சிவந்த மேனி
தன் சொல்லு மடக்க முள்ளாள் தன்வரன் மனம்போல் வாழ்வள்
மன்னிய பித்த தேகி மறுத்தவார்த் தைகளும் கூறாள்
கன்னென மொழியே சொல்வள் கவடுண்டு வெளிக்காட் டாதாள்.

16. ஜாதகரின் தாயாருடைய குணகுணங்களைப்பற்றிச் சொல்லுகின்றேன். இவள் அழகுள்ளவளாவாள், சிவப்பு நிறமுள்ள தேகத்தை உடையவள் சாந்தமாகவும் நிதானமாகவும் பேசக்கூடியவள். தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற்போல இருந்து வாழ்வாள். நிலையான பித்த தேகத்தை உடையவள். தடுத்து வார்த்தைகளைச் சொல்லமாட்டாள். சர்க்கரையைப்போல இனிமையதாயுள்ள வார்த்தைகளையே பேசுவாள். மனதில் கள்ளம் கபடம் வஞ்சனை இவைகளை உடையவள். ஆனால் இவைகளை வெளியே தெரியும்படியாகக் காட்டிக்கொண்டு நடந்து கொள்ளமாட்டாள்.

17. இல்லமும் வடகீ ழாகும் இவன்துணை ஆண்பால் நான்கு
வல்லியு மொன்றே யாகு மவர்களும் வேறாய்ச் செல்வர்
தல்லியின் பூர்வம் சொல்வேன் சலகண்ட ஈசர் வாழும்
நல்லதோர் தலத்தி லதான் நாயகி கர்ண வமிசம்.

17. ஜாதகரின் தாயாருவுடை வீடு வடகிழக்குத் திக்கிலிருக்கும். இவளுடன்கூடப் பிறந்த சகோதரர்கள் நான்கு பேரும், பெண் சகோதரி,

ஒருத்தியும் ஆகும். இவர்கள் வேறு குடும்பமாகப் போய்விடுவார்கள் இவளுடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். ஒரு நல்ல க்ஷேத்திரத்தில் இவள் கருணீகா குலத்தில்;

18. உதித்துமே பெருமை பூண்டு உலகிற்கு நல்லோ ளாகிச்
சுதர்களு மதிக முண்டாய்த் தொல்புவி வறுமை யின்றிச்
சதியான காலன் பக்கல் சார்ந்தன ளிந்த மாது
விதியவன் வரையப் பட்டு விளங்கினு ளென்று சொன்னோம்.

18. பிறந்து பெருமையை அடைந்து பூமியிலுள்ளவர்களுக்கு நல்லவளாக விருந்து குழந்தைகளை அதிகமாகப் பெற்றடைந்து இந்தப் பழைமையான பூமியில் கஷ்டங்களும் தரித்திரமும் இல்லாமலிருந்து கெடுதி யான எமனிடத்திற்குப் போய்ச் சேர்ந்தாள். பிறகு பிரமதேவனால் பிரம லிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றாள் என்று சொல்லுகின்றோம்.

19. சொன்னோம் முப்பான் மூன்றினிலே
துலாமா தத்தில் புகர்காலம்
பன்னும் சுயசக் கரம்! தன்னில்
பகரு மன்னை கண்டமென்றோம்
பின்னும் ஜன்ம பட்சிதனில்
பொருந்தும் வைசிய குலம்தோன்றித்
தன்பந் துகளும் மதிக்க உய்வள்
சாற்று மொழிகுன் றுதென்றோம்.

19. ஜாதகருடைய தாயார் ஜாதகருக்கு முப்பத்து மூன்றுவது வயதில் ஐப்பசி மாதத்தில் சுக்கிர தசையில் சுய புத்தியாகிய சுக்கிர புத்தியில் இறந்து விடுவாள். இவள் மறு ஜன்மத்தில் பட்சிஸ்தலம் என்று சொல்லப்பட்ட திருக்கழுக்குன்றத்தில் வைசியருடைய ஜாதியில் பிறந்து இவளுடைய பந்துக் கள் இவளைப் பெருமையாகப் பாராட்டும் நிலையிலிருந்து வாழ்வாள். நாங்கள் சொல்லுகின்ற வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும் என்று சொல்லுகிறோம்.

**குறிப்பு.—மாதுர் மரண விஷயம்:**—இங்கு சுக்கிர தசையில் சுய புக்தியில் தாயாருக்கு மாரகம் என்று கண்டிருக்கின்றது. தாயாருடைய லக்கினம் நான்காவது பாவமாகிய துலாமாகும். துலா லக்கினத்திற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் சூரியனும் குருவும் மாரகாதிபதிகள் ஆகின்றார்கள். சுக்கிரன் துலாத்திற்கு ஒன்று எட்டு ஆகிய இந்தப் பாவங் களுக்கு அதிபதியாகி மாரகாதிபதியாகிய சூரியனுடைய வீட்டில் இருக் கின்றார். ஆகையால் ஜாதகசந்திரிகை இருபத்து மூன்றுவது சுலோகப் பிர காரமும், துய்யகேரளம் எட்டாம் பாவம் பதினான்காவது பாடல் பிரகாரமும், எண்பத்திரண்டாவது ஜாதகம் இருபத்து நான்காவது பாடலின் கீழ் கொடுத்துள்ள வியாக்கியானம் பிரகாரமும் சுக்கிரன் தாயாரை மாரகஞ் செய் யும் அமைப்பு உடையவராகின்றார்.

---

F.N. 1. புக்தி ' காலசக்கரம் அல்ல.

20. என்ற பிதுரின் பூர்வமதை யியம்பக் கேளாய் தில்லைதனில்
அன்றே வைசிய குலமுதித்து அதிகச் செட்டு தான் செய்து
குன்று போலே தனமுண் டாய்க் கோதை சுதர்கள் தானுண் டாய்
என்று மறத்தி லிச்சை யதா யேழை தனக்கு அன்னமீது ;

20. ஜாதகரின் தகப்பனுருடைய முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லு கின்றோம். கேட்பீராக. தில்லை என்று சொல்லப்பட்ட சிதம்பர க்ஷேத் திரத்தில் வைசியருடைய ஜாதியிற் பிறந்து வியாபாரம் அதிகமாகச் செய்து ஒரு குன்றைப்போல அதிகமான தனத்தைச் சம்பாதித்து மனைவி மக்களை உடையவராகி எப்போதும் தருமஞ் செய்வதில் ஆசை உடையவராகி ஏழை களுக்குச் சாப்பாடு போட்டு ;

21. காலன் பதிக்குச் சென்றுமே கஞ்சன் தன்னுல் வரைய வந்தான்
சீலன் வறுமை காணுதான் சிறுத்தோர் நேயன் தலம் செல்வன்
கோல முடனே பின் ஜன்மம் கூறக் கேளாய் துவரை பக்கல்
சால மறையோன் தன்குலத் தில் சார்வா னென்றோம் சங்கரி யே.

21. இறந்து எமபட்டணத்திற்குப் போய் பிரம தேவனுல் பிரம லிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றுர். இவர் நல்லொழுக்கமுடையவர். கஷ்டங்களையும் தரித்திரத்தையும் அடையாதவர். ஏழைகளிடத்தில் பிரியமாய் இருப்பார். புண்ணிய ஸ்தலங்களுக்குப் போவார். இவருடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். கேட்பீராக. துவரை என்று சொல்லப்பட்ட துவாரகா-புரி பட்டணத்திற்கு அருகில் ஒரு நல்ல பிராமணர் குலத்தில் போய்ப் பிறப்பார் என்று சொல்லுகிறோம். பார்வதி யம்மையே !

22. அறியே யிவனு மிச்ஜென் மம் ஆசை யதிகம் பூமியின் மேல்
நெறிகள் தவறி நடப்பதனுல் நேரும் விபரம் தானுரைப் பீர்
மறையோர் நேசம் தெய்வ பத்தி அறுதி நேயம் தலம் செல் லல்
முறையென் றோர்க்கு தவியதால் குறித்தேன் பிரம்ம குல
[மென்றோம்.

22. ஜாதகருடைய தகப்பனுர் இந்த ஜன்மத்தில் எல்லோருக்கும் தெரியும்படி இந்த பூமியில் அதிக ஆசையையுடையவராகி நல்ல மார்க்கங்களை விட்டு நழுவி நடந்து கொள்ளுவதால் இவருக்கு உயர்ந்த குலமாகிய பிரா மண குலத்தில் ஜனனம் நேரிடுவதற்குக் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்க, இவர் பிராமணர்களிடத்தில் விசுவாசமும், தெய்வத்தின்பேரில் பக்தி யும் அன்பும் மோக்ஷத்தில் ஆசையும் ஆகிய இவைகளை உடையவராகித் திவ்விய ஸ்தலங்களுக்குப் போய் ஏழைகளுக்கும் தரித்திரத்தை உடைய வர்களுக்கும் உபகாரம் முதலியவைகளைச் செய்ததால் பிராமணர் குலத் தில் பிறப்பார் என்று சொன்னோம்.

23. ஜாதகனின் பூர்வமதைச் சாற்றக் கேண்மோ
தக்கோலம் நகரில்செங் குந்தவமிசம்
நீதியாய்த் தா னுதித்து வறுமை யின்றி
நேமியில் தூசுச் செட்டு நிகழ்ந்துங் காலே

பாதசியாம் பெண்ணொருத்தி ஏழை மாது
பணிசெய்வே னில்லதில் பகர்ந்தபோது
சூதிலா செங்குந்த னதற்கி சைந்து
தாய்போலே யென்னில்லம் வாழ்வாயென்ன ;

**23.** ஜாதகருடைய முன் ஜென்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன், கேட்பீராக, தக்கோலம் என்ற பட்டணத்தில் செங்குந்தர் ஜாதி என்று சொல்லப்பட்ட கைக்கோளர் ஜாதியில் நியாயமாக இவர் பிறந்து கஷ்டங்களும் தரித்திரமும் இல்லாமல் பூமியில் சீலை, வஸ்திரம் இவைகளில் வியாபாரஞ் செய்துகொண்டு வாழுகின்ற காலத்தில், கெட்டவளாயும், ஏழையாயும் உள்ள ஒரு ஸ்திரீ இவரிடம் வந்து இவருடைய வீட்டில் வேலை செய்கிறேன் என்று சொல்லும்போது, கள்ளங்கபடில்லாத செகுந்தராகிய இவர் அதற்குச் சம்மதித்துத் தன்னுடைய தாயாரைப் போலத் தன்னுடைய வீட்டில் வாழவேணும் என்று சொல்லவே ;

**24.** என்னவே இல்லத்தில் சிலநாள் நின்று
என்னின போலோத்து இவளும் வாழ்ந்து
அன்னவனும் இல்லாத வேளை பார்த்து
அணிபணியும் தூசு கொண்டு அயலூர் சென்றாள்
பின்னுமறு நாள் வந்து கேட்கப்பட்டுப் பொற்பணியும்
காணுமல் திகில டைந்து
கன்னிகையைத் தேடிச்சென்று காணுதாகி
கழறுவான் யானையின்தன் கோஷ்டமுன்பாய்.

**24.** அதன்மேல் அந்த ஸதிரீ இவருடைய வீட்டில் கொஞ்சம் நாள் இவருடைய தாயாரைப்போலவே இருந்து வாழ்ந்து இவர் வீட்டில் இல்லாத ஒரு வேளை பார்த்து அந்த சமயத்தில் அணிந்துகொள்ளுகின்ற ஆடை ஆபரணங்களையும் வியாபார வஸ்திரங்களையும் எடுத்துக்கொண்டு பக்கத்திலுள்ள ஒரு கிராமத்திற்குப் போய்விட்டாள். பிறகு மறுதினம் இவர் திரும்பி வந்து நடந்த சம்பவத்தைத் தெரிந்துகொண்டு பணத்தையும் ஆடை ஆபரணங்களையும் காணுமல் இருப்பதை அறிந்துகொண்டு பயமும் துக்கமுமுடையவராகி அந்த ஸ்திரீயைத் தேடிப்போய்ப் பார்த்து அவள் காணுமல்போனபடியால் யானை முகத்தையுடைய விநாயகக்கடவுளின் கோயிலின் முன்னே நின்றுகொண்டு இவர் சொல்லுகின்றுர்.

**25.** அன்னமென்று வந்தவளை ஆதரித்தேன்
அவள்செய்த கொடுமையைநான் சொல்லொணுது
முன்கடனே பின்கடனே அறியே னென்று
உதரினுன் தெருத்தூளை உலகம் காண
கன்னிகைக்கு இத்தோஷம் சேர்ந்த தென்றேம்
காளையு முருகர் பத்தி கழறியேதான்
பின்னமுள காலன்பதி கடந்து இன்னேன்
பிரமனும் வரையவந்தான் புதல்வன் தானே.

25. "சாப்பாடு வேண்டும் என்று சொல்லி வந்த ஒரு ஸ்திரீயை நான் காப்பாற்றி வந்தேன். அவள் நான் சொல்லிக்கொள்ள முடியாத ஒரு கெட்ட காரியத்தைச் செய்து விட்டாள். நான் முன் ஜன்மத்தில் அவளுக்குக் கடன்பட்டிருந்தேனே! அல்லது அவள் எனக்குப் பின் ஜன்மத்தில் கடனைத் தீரப்பாளோ! என்னமோ! எனக்கு ஒன்றும் தெரியவில்லையே! என்று சொல்லிப் பூமியில் உள்ள ஜனங்கள் தெரிந்து கொள்ளும்படியாகத் தெருவிலிருந்த மண் தூளைவாரி இறைத்தான். அந்த ஸ்திரீயை இந்தச் சாபம் போய் அடைந்தது என்று சொல்லுகிறேம். இவர் முருகக் கடவுளின் மேல் பக்தியும் அன்பும் உடையவராகி விருந்து பிறகு இறந்து கெடுதியையுடைய எம பட்டணத்திற்குப் போய்ப் பிரமதேவனுல் பிரமலிபியுடன் எழுதப் பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருர்.

26. தான்பொருளை எடுத்துக்கொண்டு போனமாது
சலகுலத்தில் தானுதித்து முப்பாண் டின்மேல்
பான்மையாய் மொழிகூறிச் சேருவாளாம்
பாலகனிச் சென்மம்யோகம் சொல்லுவேனே
ஆனநிலம் மூன்றூரில் சேர்ப்பானுகும்
அவன்தாதை போல்யோகம் அவனியோர்க்கு
மானமாய் உதவிசெய்வனினத்தோர் மெச்ச
பகரமாம் குடும்பமதாய் மருவிவாழ்வன்.

26. முன் ஜன்மத்தில் ஜாதகருடைய சொத்துக்களை எடுத்துக் கொண்டு போய்விட்ட ஸ்திரீயானவள் இந்த ஜன்மத்தில் வேளார் குலத்திற் பிறந்து ஜாதகருக்கு முப்பதாவது வயதிற்குமேலே தகுதியாயும் பக்குவமாயும் வார்த்தைகளைச் சொல்லி இவரிடம் வந்து அபிமானமனைவியாகச் சேர்ந்து விடுவாள் என்று சொல்லுகிறேம். இவருக்கு இந்த ஜன்மத்திய யோகத்தைப்பற்றிச் சொல்லுகிறேன். இவர் மூன்று கிராமங்களில் நிலங்களைச் சேகரிப்பார். இவருடைய தகப்பனுரைப்போலவே இவரும் யோகத்தை அனுபவிப்பார். பூமியிலுள்ளவர்களுக்கு இவர் மானத்துடன் உபகாரத்தைச் செய்வார். இவரைப் பந்துக்கள் மெச்சும்படியாக பிரகாசமான ஒரு குடும்பத்தை உடையவராய் இருந்து வாழ்வார்.

27. மருவுவான் அரசர்பக்கல் பெருமை யேற்பன்
வரும்துணையை ஆதரிப்பன் திருப்பணியும்செய்வன்
அறம்செய்வன் கிணறுசோலை அன்னமீவன்
அழகாக இரண்டில்லம் அமைப்பானென்றேம்
பரிவண்டி ஆவுவிருத்தி பகைநாசங்கள்
பழையபொருள் நேருமென்றேம் புகரிஞலே
பறைபள்ளு அதிகமுளன் சேதுதீர்த்தம்
பண்ணுவார்பலனைப் பகர்ந்தோம் தாயே.

27. ஜாதகர் அரசர்களிடத்திற்குப் போவார். அவர்களிடமிருந்து கீர்த்தியையும் புகழையும் அடைவார். தன்னுடன் கூடப்பிறந்த சகோதரர்களைக் காப்பாற்றுவார். கோயில்களில் வேலைகளையும் திவ்விய தொண்டுகளையும்

செய்வார். தருமம் செய்வார். கிணறு வெட்டுவார். சோலைகளையும் தோப்புக்களையும் ஏற்படுத்துவார். சாப்பாடு போடுவார். அஃதாவது அன்ன தானஞ் செய்வார். அழகான இரண்டு வீடுகளைக் கட்டுவார் என்று சொல்லு கிறோம். குதிரை வண்டியை உடையவர். பசுக்கள் விருத்தியாகும். சத்து ருக்கள் நாசமாவார்கள். பழையபொருள், பெரியோர்களுடைய சொத்து இவைகள் சுக்கிரனால் வந்து சேரும் என்று சொல்லுகிறோம். மேள வாத்தியங்களும் ஆள்படைகளும் அதிகமாக விருத்தியாகும். சேதுஸ்தலத் திற்குப்போய் அவ்விடத்திலுள்ள தீர்த்தத்தில் ஸ்நானம் செய்வார். இங்கு சொல்லப்பட்ட இந்தப் பலன்களை எல்லாம் நாங்கள் சொன்னோம். எங்கள் தாயாராகிய பார்வதியம்மையே !

வேறு.

28. அன்பது ஆறு ஆண்டில் அணுகிய கும்ப மாதம்
துன்பமா மிரவி காலம் சுந்தர னுடலம் வகும்
பின்ஜன்மம் பாண்டி நாட்டில் பிறப்பனே சைவச் சேயாய்த்
தன்பொரு ளதிக முண்டாய்த் தரணியில் வாழ்வா னுமே.

**28.** ஜாதகருக்கு ஐம்பத்தாறுவது வயதில் மாசி மாதத்தில் கெடுதியை விளைவிக்கக் கூடிய சூரியதசையில் இவர் இறந்து இவருடைய தேகம் மறைந்து போய்விடும். இவர் மறுபிறப்பில் பாண்டிய தேசத்தில் சைவ குலத்தில் ஆண் குழந்தையாய்ப் பிறப்பார். தன்னுடைய சொத்து அதிகமாக உடையவராகி இவர் பூமியில் வாழ்பவராவர்.

* **குறிப்பு.—ஜாதகருடைய மாரக விஷயம்:**—ஜாதகருக்கு ஐம்பத்தாறும் வயதில் மாசிமாதத்தில் சூரியதசையில் கேதுபுக்தி நடக்கின்றது. பாராசர ஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் கடகலக்கினத்திற்குச் சூரி யன் புதன் சுக்கிரன் சனி இவர்கள் மாரகாதிபதிகளாக வாகின் றார்கள். சூரியன் மாரகஸ்தானமாகிய இரண்டிற்குடையவராய் மாரக ஸ்தானமாகிய மூன்றில் மாரகாதிபதியாகிய புதன் ஆறுக்குடையவராகிய குரு பத்திற்குடையவராகிய அங்காரகன் இவர்களுடன் கூடி இருக்கின்றார். துய்யகேரளம் எட்டாம் பாவம் பதினான்காவது பாடல், ஜாதகசந்திரிகை இரு பத்துமூன்றுவது சுலோகம் இவைகளை அனுசரித்து சூரியன் மாரகாதிபதி ஆகின்றார். கேது லக்கினத்தில் சந்திரனுடன் கூடி இருக்கின்றார். இவர் துய்யகேரளம் எட்டாம் பாவம் இருபதாவது பாடல் பிரகாரம் தன் புக்தியில் மாரகஞ் செய்ய அமைப்பு உடையவராகின்றார்.

29. ஜனித்திடுங் காலம் தன்னில் சனிதசை ஆண்டு ஆறும்
குனித்திடுந் திங்க ளாறும் கூறுவோம் பலனை யாங்கள்
வினையுண்டு பலித நஷ்ட மிக்கநாற் காலி பீடை
துணைவிருத்தி சேத மெய்தும் சுதனுக்குப் பிணியுங் காணும்.

**29.** ஜாதகர் பிறக்கின்ற காலத்தில் சனி மகாதசையில் இருப்பு ஆறு வருஷங்களும் கணிதம் பிரகாரம் ஆறு மாதங்களும் ஆகும் என்று சொல்லுகிறோம். இந்தக்காலத்தில் நடக்கும் பலாபலன்களையுஞ் சொல்லு

கின்றோம். கெடுதிகள் நேரிடும். துன்பம் உண்டாகும். நஷ்டமான பலன்கள் உண்டாகும். நாற்கால் ஜீவன்களுக்கு அதிகமான நோய் கஷ்டம் இவைகள் உண்டாகும். சகோதரர்கள் உண்டாகி இறந்து விடுவார்கள். ஜாதகருக்கும் நோய் உண்டாகும்.

**குறிப்பு.**—பாடல்கள் பத்தொன்பது இருபத்தெட்டு இவைகளைக் கவனிக்கும்போது இருபத்தொன்பதாவது பாடலில் சொல்லியபடியே சனி தசை இருப்பு வருஷங்கள் ஆறு மாதங்கள் ஆறு என்றே கருதி பலாபலன் களைச் சொல்லி இருப்பதாகத் தோற்றுகிறது.

30. நினைத்தகா ரியங்க ளாகா நிகரனை வர்க்கம் சூதம்
வினையுண்டு முன்து ணைக்கு மிகத்திருப் பணியுஞ் செய்தல்
கனமுள சிறிய தந்தை காளைகள் விருத்தி யாகும்
சினமிலா இல்லம் செய்தல் செப்புவோம் விவரம் ரண்டில்.

30. செய்ய வேண்டும் என்று எண்ணிய காரியங்கள் முடிவு அடையாமல் இருக்கும். தாயாருடைய வமிசத்தில் சூதகங்கள் உண்டாகும். கெடுதிகளும் துன்பங்களும் ஏற்படும். மூத்த சகோதரருக்காகக் கோயிலுக்குப் போய் அவ்விடத்தில் அதிக கோவில் வேலைகளும் அர்ச்சனை பூஜை முதலிய சாந்திகளைச் செய்வதும் நேரிடும். மேன்மையான சிறிய தகப்பனுருக்குப் பிள்ளைக்ள் பிறந்து விருத்தியாகும். கோபமில்லாமல் வீட்டைக் கட்டுதல் முதலிய பலன்கள் நேரிடும். மற்ற விவரங்களை இரண்டாவது பாகத்தில் சொல்லுகிறோம்.

# ஜாதகம் 94

| | | | |
|---|---|---|---|
| | அங்காரகன் குரு சுக்கிரன் சனி | சந்திரன் கேது | சூரியன் |
| | இராசி சக்கரம் | | லக்கினம் புதன் |
| | | | |
| | ராகு | | |

கிருத்திகை 2-ஆம் பாதம்
சூரியதசை ஸ்ரீ 4–5–0

1. திங்களும்[1] சிகியும்[2] நந்தி [3] சேய் [4] குரு காரி[5] வெள்ளி[6]
பொங்கிய மேடம் புக்கப் புதன் வண்டி [7] ராகு தேளில்[8]
செங்கதிர் [9] வீணை [10] யாக ஜன்மமும் வளைய [11] லாக
இங்கிவை கிரகம் நின்று லியம்பூர் பலனைத் தானே ;

1. சந்திரனும் கேதுவும் ரிஷபத்திலும், அங்காரகனும் குருவும் சனியும் சுக்கிரனும் மேஷத்திலும், புதன் கடகத்திலும், ராகு விருச்சிகத்திலும், சூரியன் மிதுனத்திலும், ஜன்ம லக்கினம் கடகமாகவும், இவ்விதமாகக் கிரகங்கள் இருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று ;

**குறிப்பு.**—இந்த ராசிச் சக்கர அமைப்பிற்குப் பின் வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும். மிதுனத்தில் அங்காரகனும், சிம்மத்தில் புதனும் கேதுவும், கன்னியில் சனியும், விருச்சிகத்தில் குருவும் சுக்கிரனும், தனுசில் சூரியனும், மகரத்தில் சந்திரனும், கும்பத்தில் ராகுவும் ஆகும்.

2. பார்வதி கேட்கும் போது பராசரும் புகலு கின்றார்
சீர்புக ழாண்பால் ஜன்மம் செப்புவோ மில்லம் தானும்
சேர்புகழ் கீழ் மேல் வீதி தென்வாசல் மேற்கில் நந்தி
மாரனை யெரித்தோன் தெற்கில் மாகாளி கீழ்ப்பா லாகும் ;

---

1 சந்திரன் 2 கேது 3 ரிஷபம் 4 அங்காரகன்
5 சனி 6 சுக்கிரன 7 கடகம் 8 விருச்சிகம்
9 சூரியன் 10 மிதுனம் 11 கடகம்

2. பார்வதியம்மையார் கேட்கும்போது பராசர முனிவர் சொல்லுகின்றார். ஜனனமான இந்தக் குழந்தை ஆண் குழந்தை ஆகும். பிறந்த வீட்டைப்பற்றிச் சொல்லுகின்றோம், கிழக்கு மேற்குத் தெருவில் தென்னண்டை வாடையில் வீடு இருக்கும். மேற்குத் திக்கில் நந்திதேவர் இருப்பார். காமனை எரித்த சிவபெருமானுடைய கோயில் தெற்குத் திக்கிலும் பெரிய காளியம்மன் கோயில் கிழக்குத் திக்கிலும் இருக்கும்.

3. அரனவ னுத்தர மாகும் அந்தரி மீனத் திக்கில்
சரிபட ஊரே யாகும் சாற்றுவோ மிவ்வடையா ளத்துள்
வருகுவா னிந்தப் பால னறுமுக ரடியார் வர்க்கம்
திருமகள் விலாசம் போன்ற செங்குந்த மரபே யாகும்.

3. சிவன் கோயிலும் விபீஷணரும் வடக்குத் திக்கில் இருக்கும் துர்க்கையம்மன் கோயில் வடகிழக்குத் திக்கில் இருக்கும். பிறந்த ஊர் சமமான ஊராகும். இவ்வித அடையாளங்கள் உள்ளவிடத்தில் ஆறு முகங்களை உடைய முருகக் கடவுளைத் தொழுகின்ற குலமாகிய லக்ஷ்மீபொருந்திய செழிப்பாயுள்ள ஒரு செங்குந்த ஜாதி என்று சொல்லப்படுகின்ற கைக்கோளர் ஜாதியில் ஜாதகர் பிறப்பார்.

4. இன்னவன் ஜனன யோகம் எழில்பெரும் தந்தை யோகம்
மன்னிய அன்னை யோகம் வரும்துணை களத்திர புத்திரர்
அன்னவர் யோகம் தானும் அவன்முன் ஜனன தோஷம்
பின்ஜன்மம் விவர மாகப் பேசுவோம் தாயே யாங்கள்.

4. ஜாதகருடைய ஜனன காலத்திய யோகமும், அழகிய தகப்பனுடைய யோகமும், நிலையான தாயாருடைய யோகமும், கூடப்பிறந்தவர்கள் மனைவி மக்கள் ஆகிய இவர்களுடைய யோகமும் ; ஜாதகருடைய முன் ஜன்மத்திய தோஷம், பின் ஜன்மம் ஆகிய இவைகள் எல்லாவற்றையும், பார்வதியம்மையே ! நாங்கள் விவரமாகச் சொல்லுவோம்.

5. தந்தையின் வர்க்க மெட்டில் ஆண்துணை காணு னாகும்
விந்தையாய்க் கன்னி ஒன்று மேவிடும் தீர்க்க மாகச்
சந்ததம் பிதாகு ணத்தைச் சாற்றுவோம் உணச்சல் நீட்சி
கந்தன்மேல் பத்தி கொள்வன் காலாள்க ளுடைய னாமே.

5. ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரர்கள் எட்டுபேர் ஆகும். இவர்களில் ஆண் சகோதரர் கிடையாது. ஆச்சரியமாக ஒரு சகோதரி நீண்ட ஆயுளை உடையவளாக விருப்பாள். தகப்பனுருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் வரண்டு மெலிந்து நீண்டிருக்குந் தேகத்தையுடையவர். முருகக் கடவுளின்மேல் பக்தியும் அன்பும் உடையவர். கால்நடை வேலையாட்களை உடையவராவர்.

6. வித்தையும் புத்தி மானும் வீண்வம்பு புகலா னாகும்
பத்தினி நேய னாகும் பலவிதச் செட்டுச் செய்வன்
சித்தினி ஜாதி யாவன் செய்நிலம் சேர்ப்பா னும்
நந்திஞேர்க் குதவி செய்வன் நாட்டினில் சல்லியம் கொள்ளான்.

6. தகப்பனார் கல்வியை உடையவர், புத்திசாலியாக இருப்பார். வீணான கெட்ட வார்த்தைகளையும் பொய்யையும் சண்டை உண்டாக்கும் படியாய்ச் சொல்லமாட்டார். தன்னுடைய மனைவிக்குப் பிரியமானவராவார். அநேக விதமான வியாபாரங்களைச் செய்வார். இவர் சித்தினி ஜாதி என்ற நால்வகைப் பெண்களுள் ஒருவகைப் பெண்களினுடைய குணத்தை உடையவராவார். செய்கால் நிலங்களைச் சேர்த்து வைப்பார், கெட்டுப் போய் விட்டவர்களுக்கும் பகைவர்களுக்கும் கூட உபகாரத்தைச் செய்வார். பூமியில் கடன் வாங்கமாட்டார்.

* சித்தினி ஜாதி என்பதைப் பற்றி 58 ஆவது நம்பர் ஜாதகம் 33 ஆவது பாடல், 56 ஆவது நம்பர் ஜாதகம் 7-ஆவது பாடல் இவைகளின் கீழ் கொடுத்துள்ள வியாக்கியானத்தை வாசிக்கவும்.

7. பந்துவும் புகழ வாழ்வன் பரிந்து பசாரம் செய்வன்
முந்தையில் மர்ம மில்லான் சிந்தையாய் வார்த்தை சொல்வன்
முந்தின கோபம் பின்னால் முறைப்படி சாந்த முண்டு
வநதவர்க் கன்ன மீவன் மார்கரம் பத்ம ரேகை.

7. தகப்பனார் தன்னுடைய பந்துக்கள் தன்னைப் போற்றும்படியான நிலையிலிருந்து வாழ்வார். பிறருக்கு முன் வந்து உதவி செய்வார். தன்னுடைய மனத்தில் ரகசிய மானது இல்லாதவர். யோசனை செய்து வார்த்தைகளைப் பேசுவார், முன் கோப முடையவர். அந்தக் கோபம் பின்னால் ஒழுங்காய்த் தணிந்து விடும். தன்னிடம் வந்தவர்களுக்குச் சாப்பாடு போடுவார். இவர் மார்பிலும் கையிலும் பத்மரேகை என்ற தாமரை ரேகையாகிய ஒருவித ரேகையை உடையவராவர்.

8. யோசனை பலவும் செய்வன் உருதியில் லாதா னுகும்
நேசர்க னதிக முள்ளான் நேமியில் சீல னுவான்
பாசமாய் எவர்க்கு நண்பன் பலகாசு தொழிலும் செய்வன்
போசனசுகியா னுகும் பெரிதான தலங்கள் செல்வன்.

8. தகப்பனார் பலவித யோசனைகளைப் பண்ணுவார். திடமானதும் தைரியமானதுமான மனத்தை உடையவரல்ல. அநேக சிநேகிதர்களை உடையவர், பூமியில் நல்ல நடவடிக்கையும் நல்லொழுக்கமும் உடையவராவார். எல்லோருக்கும் பிரியமுள்ள சினேகிதனுவார். பலவிதமான நாணயம் பொன்மணிப்பொது மாதரணிவடம் ஒட்டியாணம் இவைகளில் வியாபாரஞ் செய்வார். சுகமான சாப்பாட்டைச் சாப்பிட்டுச் சௌக்கியத்தை அடையக் கூடியவர். பெரிய க்ஷேத்திரங்களுக்குப் போவார்.

9. ஆதியில் வறுமை கொஞ்சம் அலைச்சலாம் சமயோ கத்தன்
மாதிவள் வந்த பின்பு மதியது போலே யோங்கும்
பாதக மனமில் லாதான் பஞ்சைமே லிரக்க மாவன்
சாதிப்பான் சிலது சங்கை சந்தேக மானத்தா னுமே.

9. தகப்பனுருக்கு இளம் பிராயத்தில் கொஞ்சம் தரித்திரமும் கஷ்டமும் உண்டு. அலேச்சலும் உபத்திரவமும் உண்டு. நடுத்தரமான யோகத்தை உடையவராவார், இவருக்கு மனேவி வந்து சேர்ந்த பிறகு வளர்பிறைச் சந்திரனைப் போல யோகம் அதிகப்படும். கெட்ட மனமில்லாத வராவார். ஏழைகளின் மேல் இரக்கமும் உடையவர், சிலசெயல்களேச் செய்துமுடிப்பார். சந்தேகமான மனத்தை உடையவராவார்.

10. சொன்னஇக் குணத்தா னுக்குச் சுதனுமே உதிப்பா னுகும்
மன்னன் முன்துணேகள் காணுன் மருவிடும் பின்னுல் விருத்திக்
கன்னிகை யிரண்டே தீர்க்கம் காளேயு மொருவன் தீர்க்கம்
பின்னமாம் ஏழே யென்றேம் பேசுவோம் துணேவன் சேதி.

10. இங்கு இதுவரையிலும் சொல்லப்பட்டக் குணுகுணங்களே உடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவருக்கு மூத்த சகோ தரர்கள் கிடையா, இளேய சகோதரர்கள் விருத்தியடைவார்கள். இரண்டு இளேய சகோதரிகளும் ஒரு இளேய சகோதரனும் நீண்ட ஆயுளே உடையவர் களாவார்கள். ஏழு சகோதரர்கள் இறந்து விடுவார்கள் என்று சொல்லு கின்றேம். இளேய சகோதரனுடைய விஷயங்களேப்பற்றிச் சொல்லுகின்றேம்.

**குறிப்பு—மூத்த சகோதரர் விஷயம்.**—மூத்த சகோதர ஸ்தானமாகிய பதி னென்றில் கேது இருக்கின்றுர். மூத்த சகோதர ஸ்தானுபதியாகிய சுக்கிர னும்மூத்த ஆண் சகோதரகாரராகிய குருவும் சகோதரகாரகராகிய அங்காரக னும் சனியுடன் கூடி மூத்த சகோதரபாவத்திற்குப் பன்னிரண்டில் இருக்கின் றுர். ஆகையால் அதிக தோஷம் இருக்கின்றது. அங்காரகன் இளேய சகோதர ஸ்தானமாகிய மூன்றுவது பாவமாகிய கன்னிக்கு எட்டில் சனியுடன் கூடி இருப்பதும் இளேய சகோதரத்திற்கும் கொஞ்சம் தோஷத்தை விளேவிக்கும்.

11. மாந்தலே மேட ராசி வருகுவான் பித்த தேகி
கூர்ந்துமே வார்த்தை சொல்வன் புன் சிரிப்பு டைய னுகும்.
சேர்ந்தவர் தம்மைக் காப்பன் சேயிழைப் பிரிய னுகும்.
சார்ந்தவர் பத்தி பூணுன் தன் தீரத்தைச் சொல்வேன்.

11. ஜாதகருடைய இளேய சகோதரர் மிருகசீர்ஷ நட்சத்திரத்தில் மேஷராசியில் ஜனனமாவார், இவர் பித்த முள்ள தேகத்தை உடையவர். அதிகமாகவும் கோபமாகவும் வார்த்தைகளேச் சொல்லுவார். புன்சிரிப்பை உடையவராவார், தன்னிடம் வந்து அடைந்தவர்களேக் காப்பாற்று வார். பெண்களின் மேல் ஆசையை உடையவராவார். தன்னிடம் சேர்ந்தவர்களிடத்திலும் பந்துக்களிடத்திலும் பிரியமில் லாதவர், இவருடைய தைரியத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன்.

12. கல்விமான் கணக்கி லூகன் கண்முகம் வசிய முள்ளான்
சொல்லிலே கபடு முண்டு தோகைவா கனத்தோன் பத்தி
வல்லியர் மோக வானும் மனிதரை வசித்தே வெல்வன்
மல்லுக்குச் செல்லா னுகும் மர்மத்தை வெளிகாட் டாதான்.

12. ஜாதகருடைய இளைய சகோதரர் வித்தையையுடையவர், கணக்குப் போடுவதில் நுட்பமான அறிவுடையவர், இவருடைய கண்களும் முகமும் பிறரை வசியப்படுத்திக் கொள்ளுந் தன்மை உடையனவாக விருக்கும், தான் சொல்லுகின்ற வார்த்தைகளில் கள்ளம் வஞ்சனை கபடம் இவைகள் இருக்கும். மயில்வாகனத்தையுடையராகிய முருகக்கடவுளின் மேல் பக்தியும் அன்பும் உடையவர். ஸ்தரீகளின்மேல் காம ஆசையை யுடையவராவார். மானிடர்களைத் தன்வசப்படுத்திக் கொண்டு அவர்களை ஜயிப்பார், சண்டைக்குப் போகமாட்டார், தன்னுடைய மனத்திலுள்ள ரகசி யத்தைப் பிறருக்குத் தெரியும்படியாய்க் காண்பித்துக் கொள்ளாதவரா வார்.

13. பாரியும் உள்ளூர் நேரும் பாவையு மொன்றே யாகும்
தீரமாய்ச் சுதராண் மூன்று சேயிழை மார் களவ்வாறு
கூ றுவோம் தீர்க்க மாகக் குமாரன் தன் னுடனே வாழ்வன்
மாரன்தன் துணைஆண் எவ்வாறு வயதுமே தீர்க்கமெய்தும்.

13. ஜாதகருடைய இளைய சகோதரருக்கு மனைவி உள்ளூரிலி ருந்தே வந்து சம்பவிப்பாள். இவருக்கு ஒரே மனைவிதான் உண்டு. மூன்று ஆண் குழந்தைகளும் மூன்று பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளை உடை யவர்களாக இவருக்கு இருப்பார்கள். இவர் தன்னுடைய அண்ணனாகிய ஜாதகருடன் கூடவிருந்து வாழ்வார். ஜாதகருடைய சகோதரர் நீண்ட ஆயுளை உடையவராக எவ்விதமாக ஆவார்.

14. எப்படிச் சொல்லு மென்ன ராகுமஞ்சி னிலே நிற்க
ஒப்புடன் காரி யோடு உயரஞ் சோன் சேர்ந்த தாலே
தப்பிதம் துணைவ ருக்குத் தடுத்துமே பராசர் சொல்வார்
மெய்ப்புடன் ராகு உச்சம் வக்கிர னுட்சி யாக ;

14. அஃது எந்தக் காரணங்களினால் நேரிடும். அதைச் சொல்லு வீர், இராகு ஐந்தாவது பாவத்தில் இருப்பதாலும், சனியுடன் ஐந்தாவது பாவத்திற்குடைய அங்காரகனும் சேர்ந்திருப்பதாலும் சகோதரருக்குக் கெடுதி நேரிடும் என்று சொல்ல, பராசர முனிவர் மறுத்துச் சொல்லுகின் றார், இராகு உண்மையிலே உச்சமாக விருப்பதாலும், அங்காரகன் ஆட்சி யாகத் தன் வீட்டிலேயே உச்சமாக விருப்பதாலும்.

**குறிப்பு.—இளைய ஆண் சகோதர விஷயம் :**—இளைய சகோதர லக்கினம் மூன்றாவது பாவமாகிய கன்னியாகும். இதற்கு அஷ்டமஸ்தானம் மேஷம். இதற்கு அதிபதியான அங்காரகன் ஆறுக்குடையவரும் நீசமாயுமுள்ள சனி யுடன் கூடி இருக்கின்றார். இவ்விதமாக எட்டிற்குடையவர் சனியுடன் கூடி இருப்பது ஜாதகபாரிஜாதம் பதினான்காவது அத்தியாயம் ஐம்பதா வது சுலோகம் பிரகாரம் ஆயுளுக்குக் கெடுதியை உண்டு பண்ணும். மேலும் எட்டிற்கு எட்டாவது ஸ்தானமாகிய மூன்றாவது ஸ்தானமும் ஆயுளுக்குச் சம்மதமான பாவமாகும். இதில் இராகு இருந்துகொண்டு

லக்கினமாகிய கன்னியைப் பார்க்கின்றார். இதுவும் தோஷத்தை உண்டு பண்ணக் கூடியதாகும். இந்த மூன்றிற்குடையவராகிய அங்காரகனும் சனி யுடன் கூடியிருப்பது தோஷமாகும். இவைகள் எல்லாம் இளைய சகோ தரனுடைய ஆயுளுக்குத் தோஷத்தை விளைவிக்கக் கூடியனவாகும். பாபக் கிரகங்கள் உச்சமாயிருந்தால் கெடுதியைச் செய்யமாட்டார்கள் என்று சொல்லி இருப்பதாலும், இராகு உச்சமாய் இருப்பதாலும் இவர் நன்மை யைத் தருவார் என்றும், அங்காரகன் ஆட்சியாய் இருப்பதால் நன்மைத் தருவார் என்றும் பராசரமுனிவர் மறுத்து பதில் சொல்லுகின்றார்.

15. அந்தியில் துணை ஆண் ஒன்று அனுகிடும் வயது தீர்க்கம்
இந்திர ஜாலம் செய்வன் மெழில்பெரும் வணிப முள்ளான்
தந்தையி னூர் ஜிதத்தைத் தான்விருத்தி செய்வா னாகும்
தந்தியின் தியானம் செய்வன் சங்கரி மேலும் கேளே.

15. கடைசியில் ஓர் ஆண் சகோதரன் உண்டாகும். அந்த சகோதரன் நீண்ட ஆயுளை உடையவராவார். அற்புதங்களைக் காட்டுகின்ற வித்தையைச் செய்து காண்பிப்பார். அழகிய பெரிய வியாபாரத்தையுடைய வர். இவர் தன்னுடைய தகப்பனாரின் சொத்துக்களை விருத்தி செய்பவரா வார். யானை முகத்தை உடைய விநாயகக்கடவுளைத் துதிப்பார். பார்வதி யம்மையே ! நாங்கள் இன்னும் சொல்லுவதைக் கேட்பீராக.

16. ஜாதக நிறங்கு ணத்தைச் சாற்றுவோ மூணைச்சல் நீட்சி
மேதினி லிருநி ரத்தான் வித்தையு முடை யானாகும்
சீதளகுணத் தானாகும் செய்நன்றி மறவானாகும்
பாதக மனம்செல் லாதான் பாரது விருத்தி செய்வன்.

16. ஜாதகருடைய நிறம், குணநிசயங்கள் ஆகிய இவைகளைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் வரண்டு மெலிந்து நீண்டு உள்ள தேகத்தை உடையவர். இரண்டு நிறங்கள் கலந்துள்ள நிறமான மாநிறம் உடைய தேகத்தை உடையவர். படிப்பை உடையவராவார். சீதளமான தேகத்தை உடையவ ராவார். பிறர் தனக்குச் செய்த உபகாரங் களை மறக்காதவ ராவார். கெட்ட வழிகளில் இவருடைய மனது போகாது. நிலங்களைப் பயிராட்டுத் தான்யங்களை விருத்தி யாக்குவார்.

17. முகமதில் வடிவு காணும் முன்கோபம் பின்பு தாழ்வு
பகையோரை உறவு கொள்வன் பாரினில் வணிபம் செய்வன்
உகமையாய்ப் பேச வல்லான் உண்மையாம் மனத்தா னாகும்
தகமையாய்க் குடும்பி யாவன் தரித் தொழில் செய்வா னாமே.

17. ஜாதகருடைய முகத்தில் அழகு நிரம்பி இருக்கும். முன்னே கோபம் உண்டாகும். பின்னால் அது தணிந்து போகும். எதிரி களைச் சிநேகஞ் செய்து கொள்ளுவார். பூமியில் வியாபாரஞ் செய்வார். உப மானம் உபமேயம் இவைகளை உபயோகப்படுத்தி அலங்காரமாகப் பேசுவதில்

சாமர்த்திய முள்ளவர். உண்மையாய் நடந்து கொள்ளும்படியான மனத்தை உடையவர். மேன்மையான குடும்பஸ்தராவார். தரித்தொழிலையுஞ் செய்ப வராவார்.

18. அக்கினி வடிவ முள்ளான் அவனியில் சல்லியம் கொள்ளான்
சிக்கன குணமில் லாதான் சிறுத்தோர்க்கு உதவி செய்வன்
மைக்கண்ணி மார்கள் மோகன் வலப்புறம் வடுவு காணும்
முக்கியம் பித்தச் சூடு மேவிடு மென்று சொல்வோம்.

18. ஜாதகர் அக்கினியைப் போல சிவந்தரூப முடையவர். பூமியில் கடன் வாங்க மாட்டார். சிக்கனமான குணம் இல்லாதவர். ஏழைகளுக்கு உபகாரஞ்செய்வார். மையைக் கண்ணில் தடவிக்கொண்டுள்ள ஸ்திரீகளிடத்தில் காம ஆசையை உடையவர். வலது பக்கத்தில் அடையாளம் இருக்கும். இவருக்குத் தேகத்தில் விசேஷமாகப் பித்தச்சூடு இருக்கும் என்று சொல்லுகிறோம்.

19. மறுமநூ லறிவா னாகும் மலர்க்கரம் சங்கு சக்கரம்
பெருகுமே கோதுமை ரேகை பிறர்பொரு ளிச்சை வையான்
திருமகள் வாச முள்ளான் சதுஷ்பாதம் விருத்தி செய்வன்
பறைபள் ளு உடையனாகும் பகவானின் பத்தி பூண்பன்.

19. ஜாதகர் மர்ம சாஸ்திரமாகிய காமநூலை அறிந்தவராவர். தன்னுடைய விரிந்த அழகிய உள்ளங்கையில் சங்குச் சக்கரரேகை என்ற ஒருவித ரேகை இருக்கும். கோதுமைரேகை என்ற இன்னொரு வித ரேகையும் இருக்கும். பிறருடைய சொத்துக்களின் மேல் ஆசை இல்லாதவர். லக்ஷ்மி இவருடைய வீட்டில் குடி இருப்பாள். கால்நடைகளை விருத்தியாக்குவார். மேளவாத்தியங்களும் ஆள்படைகளும் உள்ளவராவர். கடவுளின் மேல் பக்தியும் அன்பும் உடையவர்.

20. அத்திரி சொல்லு கின்றார் அவனுக்கு யோகம் எவ்வாறு
பத்தினுக் குடையோன் ஒன்பான் பரிந்துமே தசமம் நிற்கப்
பெத்திடும் தர்மம் கர்மம் யோகமே பிரபல மாகும்
சுத்தவான் திருப்பணி செய்வன் சோலைகள் துறவு செய்வன்.

20. ஜாதகருக்கு எவ்விதமாக யோகம் உண்டாகும் என்று அத்திரி மகரிஷி கேட்கின்றார். பத்திற்குடையவரான அங்காரகனும் ஒன்பதிற்குடையவரான குருவும் கூடிப் பத்தில் இருப்பதால் தர்ம கர்ம யோகம் என்ற ஒருவித யோகம் விசேஷமானதாக விருக்கும். ஜாதகர் சுத்தமுள்ளவர். நல்ல நடவடிக்கை உடையவர். கோயில்களில் வேலைகளையும் தொண்டுகளையுஞ் செய்வார். சோலைகளையும், தோப்புகளையும், கிணறுகளையும் உண்டாக்குவார்.

21. தந்தைக்கு மேலாய் வாழ்வன் தையலாள் வந்த பின்பு
இந்திர யோக முள்ளா னிடரென்றோர் தம்மைக் காப்பன்
வந்தவர்க் கன்ன மீவன் மாநிலம் நல்லோ னவன்
எந்திடம் பெருமை யேற்பனி ரவிக்கு இருபக் கத்தில் ;

21. ஜாதகர் மனைவி தன்னிடத்திற்கு வந்த பிறகு தன்னுடைய தகப்பனாருடைய அந்தஸ்திற்கு அதிகமான அந்தஸ்திலிருந்து வாழ்வார். இவர் இந்திரயோகம் என்ற ஒரு விதமான யோகத்தை உடையவர். கஷ்டத்தை அடைந்திருக்கின்றோம் என்று சொல்லுகிறவர்களைக் காப்பாற்றுவார். தன்னிடத்திற்கு வந்தவர்களுக்குச் சாப்பாடு போடுவார். இந்தப் பெரிய பூமியில் நல்லவராக விருப்பார். எவ்விடத்திற்குப் போனாலும் பெருமையை யுடையவராவார். சூரியனுக்கு இரண்டு பக்கங்களிலும் ;

**குறிப்பு.**—இந்திரயோகம் :—இந்திரயோகத்தைப்பற்றி ஜாதக பாரிஜாதம் ஏழாவது அத்தியாயம் 68-ஆவது சுலோகம், ஜாதகலங்காரம் 333-ஆவது, 362-ஆவது பாடல்கள், ஜாதகசிந்தாமணி 1987, 1994-ஆவது பாடல்கள் ஆகிய இவைகளைப் பார்க்கவும். இங்கு லக்கினாதிபதியாகிய சந்திரன் பதினொன்றில் உச்சமாக விருக்கின்றார். அங்காரகன் பத்தில் ஆட்சியாக விருக்கின்றார்.

22. சுபருமே யிருப்பதாலே சாமர யோகம் வாய்க்கும்
தவசிக ளுறவு கொள்வன் தந்திர மந்திரங்கள் கற்பன்
நிபமிலான் பொய்கள் பேசான் நீத்தார்போல் வார்த்தை சொல்வன்
அபலமாம் தொழிலில் செல்லான் அறுமுகன் தனைப்பூசிப்பன்.

22. சுபக்கிரகங்களாகிய புதனும் சந்திரனும் இருப்பதால் சாமர யோகம் என்று சொல்லப்பட்ட ஒரு விதமான யோகம் உண்டாகும். ஜாதகர் தவம் செய்கின்றவர்கள், பரதேசிகள் ஆகிய இவர்களுடைய சினேகத்தை அடைவார். தந்திர வித்தைகள், மந்திர வித்தைகள் ஆகிய இவைகளைப் படிப்பார். கபடம், கோள்சொல்லுதல் இவைகள் இல்லாதவர். பொய்களைச் சொல்லமாட்டார். ஆறுமுகங்களையுடைய முருகக் கடவுளைப் பூஜை செய்வார்.

**குறிப்பு.**—சாமர யோகம் :—சாமர யோகத்தைப்பற்றி ஜாதகபாரிஜாதம் ஏழாவது அத்தியாயம் 136-ஆவது சுலோகம், பலதீபிகை ஆறாவது அத்தியாயம் நாற்பத்தொன்றாவது சுலோகம் (சிலபதிப்புக்களில் 44-ஆவது 45-ஆவது சுலோகம்), ஜாதகசிந்தாமணி 2024-ஆவது பாடல் இவைகளைப் பார்க்கவும். இங்கு இரண்டு சுபகிரகங்களாகிய குருவும் சுக்கிரனும் பத்தாவது பாவத்தில் இருக்கின்றார்கள். மேலும் இங்கு லக்கினாதிபதியாகிய சந்திரன் பதினொன்றில் உச்சமாக விருக்கின்றார். ஆகையால் இரண்டு விதங்களிலும் சாமரையோகம் உண்டாகி யிருக்கின்றது. சூரியனுக்கு இரண்டு பக்கத்திலும் சுபக்கிரகங்கள் இருப்பதால் ஜாதகபாரிஜாதம் ஏழாவது அத்தியாயம் 121-ஆவது சுலோகப் பிரகாரம் உபயசரியோகம் என்ற ஒருவித யோகம் உண்டாகின்றது. (இந்த உபயசரியோகத்தைப்பற்றி பலதீபிகை ஆறாவது அத்தியாயம் எட்டாவது சுலோகத்தையும் பார்க்கவும். இங்கு சந்திரனை நீக்கி மற்றச் சுபக்கிரகங்களைத் தான் எடுத்திருக்கின்றது.)

23. பாரியு மிருபான் ரண்டில் பகரன்னே வர்க்கம் தன்னில்
தீரமாய் வடமேல் திக்கில் சேருவா ளந்த மாது
கூறுவோ மவள்கு ணத்தைக் குற்றமில் லாதா ளாகும்
சீறிடாள் வரனுக் கன்பள் திருமக ளொப் பதாகும்.

23. ஜாதகருக்கு தனது இருபத்திரண்டாவது வயதில் தாயாருடைய பந்துக்களிலிருந்தும் வடமேற்குத் திக்கிலிருந்தும் மனைவி வந்து நேரிடுவாள். இவளுடைய குணாதிசயங்களைப்பற்றிச் சொல்லுகிறோம். யாதொரு குறைவும் தோஷமும் இல்லாதவளாவள். கோப மில்லாதவள். புருஷனுக்குப் பிரியமானவள். இலட்சுமிக்குச் சமான மானவளாகும்.

**குறிப்பு.—விவாக விஷயம் :—**ஜாதகருக்கு வயது ஷ 21-0-0 முதல் ஷ 22-0-0 முடியும் வரையிலும் அங்காரக தசையில் சந்திர புக்தியும் இராகு தசையில் இராகு புக்தியும் நடக்கின்றன. அங்காரகன் பத்திற்குடையவராகிப் பத்தில் ஏழிற்குடைய சனியுடன் கூடி இருப்பதாலும் சனி இருக்கும் ராசிக்குடையவராகி இருப்பதாலும் ஜாதக பாரிஜாதம் 7-ஆவது அத்தியாயம் 28-ஆவது 29-ஆவது சுலோகங்கள் பிரகாரம் தன் தசையில் சந்திர புக்தியில் விவாகம் செய்து வைக்கும் அமைப்பு உள்ளவராகிறார்.

24. அன்னம்போல் சாய லுள்ளாள் அவளுமாஞ் சிவப்ப ளாகும்
தன்சொலு மடக்க முண்டு தானவள் யோக சாலி
பொன்பணி யுடைய ளாகும் பித்ததே கத்தா ளென்றோம்
அன்னியர் குற்றம் சொல்லாள் அவசர மனத்தா ளாகும்.

24. ஜாதகருடைய மனைவி அன்னப்பட்சியைப் போல அழகான ரூபம் உள்ளவளாவாள். இவள் மாந்துளிரின் நிறம்போல ஒரு விதமான சிவப்பு நிறத்தையுடைய தேகத்தை உடையவளாவாள். இவள் அடக்கமாகவும் அமைதியாகவும் பேசுவாள். இவள் யோகத்தை யுடையவள். தனமும் ஆடை ஆபரணங்களும் உடையவளாவள். பித்தமான தேகத்தை உடையவள் என்று சொல்லுகின்றோம். பிறர்மேல் குற்றங்களைச் சாட்டமாட்டாள். அவசரமான குணத்தை உடையவளாவாள்.

25. சுதர்களும் காணு ளாகும் தோன்றினும் தீதே யாகும்
அதிபதி வயது தீர்க்கம் அத்திரி மறித்துச் சொல்வார்
மதிநுதல் மனைவி ரண்டு மருவிடு மிவனுக் கேதான்
எதுவிதக் கார ணத்தா லியம்பினீ ரந்தச் சங்கை.

25. ஜாதகருடைய மனைவிக்குக் குழந்தைகள் பிறக்கமாட்டார்கள். பிறந்தாலும் இறந்து விடுவார்கள். இவளுக்கு நீண்ட ஆயுள் உண்டு. இவ்விதமாகப் பராசரமகரிஷி சொல்ல, அத்திரி மகரிஷியானவர் தடுத்துச் சொல்லுகின்றார். ஜாதகருக்குச் சந்திரனைப்போன்ற அழகிய நெற்றியையுடைய இரண்டு மனைவிமார்கள் வந்து சம்பவிப்பார்கள் என்று அத்திரிரிஷி சொல்ல, எந்தக் காரணத்தினால் இவ்விதமான விஷயத்தை நீர் சொன்னீர் என்று பராசர மகரிஷி கேட்க ;

26. சத்தமத் தோன்சு ரத்தில் தங்கினார் நீச மாகக்
குத்தமாய்ப் புகரும் சேரக் கூறினேம் தாரம் ரண்டு
அத்திரி யிவ்வாறு சொல்ல அறைகுவார் பராசர் தாமும்
குத்தமாய்ச் சொல்லலொ ணாது குசனாட்சி குருவினோடு ;

26. ஏழிற்குடையவராகிய சனி சரராசியாகிய மேஷராசியில் நீச மாக விருக்கின்றார். சுக்கிரனும் சனியுடன் கூடிக் கெடுதியாய் இருக்கின்றார். ஆகையால் இரண்டு மனைவிகள் உண்டு என்று சொன்னோம் என்று அத்திரி மகரிஷியானவர் சொல்ல, பராசரமகரிஷி சொல்லுகின்றார். குற்றமாக ஒன்றுஞ் சொல்லக்கூடாது. அங்காரகன் ஆட்சியாக விருக்கின்றார். குருவுடன்;

27. காரியும் [1] சேர்ந்த தாலே கவி [2] வாக்கில் [3] பாலு [4] மொன்று
நீரமா யிருப்ப தாலே சேயிழை யிருவர் காணான்
நாரியு மொன்றே தீர்க்கம் நற்சுதர் காணா தாகும்
கூறுவீ ரந்தச் சங்கை குழவியின் தானம் தன்னில்;

27. சனியும்கூடி இருப்பதாலும், சுக்கிரனுக்கு இரண்டில் சந்திரனும் வலிவுடன் இருப்பதாலும் ஜாதகருக்கு இரண்டு மனைவிகள் இல்லை. ஒரே மனைவிதான், தீர்க்கமான ஆயுளை இவள் உடையவளாக விருப்பாள். ஆனால், ஆண் குழந்தைகள் பிறக்க மாட்டார்கள் என்று சொல்ல, அதற்குக் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்க, புத்திரஸ்தானத்தில்;

28. அரவுமே யிருப்ப தாலே அறைந்தனம் புத்திர தோஷம்
திருமகன் பூர்வம் தன்னில் செய்தனன் அதிகத் துன்பம்
குறையது என்ன செய்தான் கூறுவீர் விவர மாக
வரைகிறோம் பூர்வம் தன்னில் வளர் பாண்டி நகரம் கீழ்ப்பால்.

28. இராகு இருப்பதால் சந்ததிக்குத் தோஷத்தைச் சொன்னோம். ஜாதகர் தன்னுடைய முன்ஜன்மத்தில் அதிகமான கெடுதிகளைச் செய்திருக்கின்றார் என்று சொல்ல, இவர் எப்படிப்பட்ட குற்றங்களைச் செய் திருக்கின்றார், அவைகளை விவரமாகச் சொல்லுவீர் என்று கேட்க, அவை களைச் சொல்லுகின்றோம் என்றார். இவர் முன்ஜன்மத்தில் வளம் பொருந்திய பாண்டிய தேசத்தில் ஒரு பட்டணத்திற்கு (அல்லது புதுச்சேரிப் பட்டணத்திற்கு)க் கிழக்குத் திக்கில்;

29. அருகினில் பேரூர் தன்னில் அந்தணர் குலமு தித்து
வறுமைக ளில்லா தாகி மந்திரம் கற்றுக் கொண்டு
கருவுக ளழித்தா னென்றோம் காதலி மார்கள் மோகம்
அரவுகள் தமை யழைத்தும் அவைகளை அவஸ்தை செய்தும்;

29. சமீபத்திலுள்ள ஒரு பெரிய ஊரில் பிராமணருடைய குலத் தில் பிறந்து கஷ்டங்களும் தரித்திரமும் இல்லாமலிருந்து மந்திர வித்தையைக் கற்றுக்கொண்டு கருவுகளை அழித்தார் என்று சொல்லுகிறோம். ஸ்திரீகளின்மேல் காம ஆசையை உடையவராகி இவ்விதமாகக் கருவுகளைக் கெடுத்தார். பாம்புகளைத் தன்னுடைய மந்திர சக்தியினால் வரவழைத்து அவைகளைத் துன்பப்படுத்தினார்.

[1] சனி [2] சுக்கிரன் [3] இரண்டு [4] சந்திரன்

30. தடைசெய்து விடாமல் செய்தான் சார்ந்தது அது ஓர் தோஷம்
விடமது யில்லம் தன்னில் வெகுநாளாய் வாச மாகும்
படநாகம் மகுடத் தாலே பரவிற்று வெளியில் ஓர்நாள்
அடவுடன் சத்தம் காட்ட அங்கதே மயங்கி நிற்க ;

30. பாம்புகளைத் தடைசெய்து அவைகளைப் போகாமல் இருக்கும்படி செய்துவிட்டார். இந்த ஒரு தோஷமும் இவரை வந்து அடைந்தது. இவருடைய வீட்டில் ஒரு சர்ப்பம் வெகுகாலமாக வாசஞ் செய்துகொண்டிருந்தது. அது மகுடத்தால் † ஒரு நாள் வெளியேவந்து உலாவிக்கொண்டிருந்தது. ஒரு விதமான சப்தத்தை உண்டுபண்ணவே அது மயக்கங் கொண்டு திகைத்து நிற்கவே ;

குறிப்பு.—இந்த மகுடம் என்பதன் அர்த்தம் சரியாய் விளங்கவில்லை. மகுடம் எனறால் சாதாரணமாய்க், கிரீடம் சிரசு என்று அர்த்தம். அந்த அர்த்தம் இங்குப் பொருந்தவில்லை. படம் எடுத்து ஆடுதல் என்பதும் பொருந்தாது. மகுடம் என்பது புல்லாங்குழலால் உண்டாகும் மோடி ராகம் என்பது பொருத்த முடையதாகும். அஃதாவது புல்லாங்குழலால் பாடவே நாகம் வெளியே கிளம்பி வந்தது என்னும் பொருள் பொருத்த முடையதாகும்.

31. காலன்தன் பதிக்குச் செல்லக் கழியி னலதனை வாட்டச்
சாலவே அந்தத் தோஷம் சார்ந்தது யிவனுக் கேதான்
வேலனு மந்தி யத்தில் விழியது குறைவு நேர்ந்து
பாலகர்கள் பகையு மாகிப் பாசுரம் தனைமறந்து ;

31. ஜாதகர் அதைத் தடியால் அடித்துக் கொன்று எமபட்டணத்திற்கு அனுப்பிவிட்டார். இந்தத் தோஷமும் இவரை வந்து அணுகியது. இவர் தன்னுடைய கடைசிகாலத்தில் பார்வைகுறைந்து தன்னுடைய சந்ததிகளும் தனக்கு விரோதமாகிக் கடவுள்களின்மேல் பாடுகின்ற பாடல்களையும் தோத்திரங்களையும் மறந்து ;

32. அந்தகன் பக்கல் சென்று அருநகர ரினிலே புக்கி
வந்தன னிந்தப் பாலன் விடங்களின் தோஷத் தாலும்
முந்தின கருவின் தோஷம் மேவிற்று இச்சென மத்தில்
சந்ததம் குழவி காணான் ஜனிக்கினும் தீதே யாகும்.

32. இறந்து எமனிடத்திற்குப் போய் நரகத்தில் இருந்து பிறகு ஜாதகர் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றார். இவரை முன் ஜன்மத்திய பாம்பின் தோஷங்களும் கருக்களை அழித்த தோஷமும் இந்த ஜென்மத்தில் வந்து அடைந்தன. ஆகையால் இவருக்கு எப்போதும் ஆண் குழந்தை கிடையாது. † ஒரு சமயம் பிறந்தாலும் அஃது இறந்து போய் விடும்.

குறிப்பு.—புத்திர விஷயம்:—புத்திர பாவத்தைப்பற்றி ஐந்தாவது பாவம், குரு, பிறகு ஒன்பதாவது பாவம், பிறகு ஏழாவது பாவம், பிறகு லக்கினதிபதி ஆகிய இவைகளை வரிசையாகக் கவனிப்பது சாதாரணமான வழியாகும். ஐந்தாவது பாவமாகிய விருச்சிகத்தில் ராகு இருப்பது புத்திர

தோஷத்தை உண்டுபண்ணும் என்று 28-ஆவது பாடலில் முன்னமே சொல்லி இருக்கின்றது. ஆறுவது பாவத்திற்குடைய குருவும், ஏழாவது பாவத்திற் குடைய சனியும், ஐந்தாவது பாவத்திற்குடைய அங்காரகனும் சேர்ந்து பத் தாவது கேந்திரத்தில் இருப்பதால் ஜாதகாலங்காரம் 628-ஆவது பாடலில் சொல்லிய பிரகாரம் புதல்வரில்லை என்று சொல்லவேண்டும். ஐந்திற் குடையவருக்கும் ஏழிற்குடையவருக்கும் ஒருவிதமான சம்மந்தம் ஏற்பட்டா லும் ஆண்குழந்தைகளுக்குத் தோஷம் ஏற்படும் என்று ஜாதகாலங்காரம் 596-ஆவது பாடலிலிருந்து ஊகிக்கலாம். மேலும் சந்திர லக்கின ரீதியாய் ஐந்திற் குடைய புதன் மூன்றில் மறைந்துவிட்டார். ஐந்தாம் வீடு புதன் வீடா கின்றது. மேலும், சந்திரனுக்கு ஒன்பதிற்குடையவராகிய சனியும் ஏழிற்குடை யவராகிய அங்காரகனும் புத்திரகாரகனாகிய குருவும் ஆறுக்குடையவரான சுக்கிரனுடன் கூடிச் சந்திரனுக்குப் பன்னிரண்டில் மறைந்திருப்பது புத்திர பாவத்திற்குப் பெரிய தோஷமாகும். சந்திரனுக்குப் புத்திர ஸ்தானம் புதன் வீடாய் இருப்பதைப்பற்றி ஜாதபாரிஜாதம் 13-ஆவது அத்தியாயம் 29-ஆவது சுலோகம், ஜாதகாலங்காரம் 592-ஆவது பாடல் இவைகளைப் பார்க்க வும். அங்காரகனும் குருவும் லக்கினத்திற்குப் பத்தில் இருப்பது சந்தான பாவத்திற்குக் கொஞ்சம் வலிவுடையதாகும். பெண் குழந்தைகள் விஷய மாக அனுகூல மானதாகும்.

33. கன்னிகை யிருவர் தீர்க்கம் கழறுவோ மிவனுக் கேதான்
அன்னையும் கேட்க லுற்றாள் அவர்தர்மம் குணவா னென்றீர்
தன்கர்மம் செய்ய மைந்தர் தங்காது யென்று சொன்னீர்
முன்வினை நிவிர்த்தி எவ்வாறு மொழிகுவீர் பராச ரேநீர்.

33. ஜாதகருக்கு இரண்டு பெண் குழந்தைகள் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகிறோம். இவ்விதமாகச் சொல்ல, பார்வதியம்மையார் கேட்கின்றார். ஜாதகர் தர்ம குணங்களை உடையவர் என்று நீர் சொன்னீர். இவருக்குக் கர்மங்களைச் செய்ய ஆண் குழந்தை கிடையாது என்றும் சொன்னீர். பராசர முனிவரே! ஜாதகருடைய முன்ஜன்மத்திய பாவங்களை எவ்விதமாக விலக்குவது என்பதைப் பற்றிச் சொல்லுவீராக.

34. தன்னகர் உத்த ரத்தில் சலகரை யீசர் வாசம்
அந்திடம் அரசு நிற்கும் அப்பணி சிலையில் செய்து
இந்தவன் பிரதிட்டை பண்ணி இருபத்தேழ் மறையோர்க் கன்னம்
சிந்தையும் களிப்பாய் வைத்துத் தோகைமா மலைக்கு மேதான் ;

34. ஜாதகருடைய பட்டணத்திற்கு வடக்கிலுள்ள நீர்க்கரையில் இருக்கும் சிவபெருமானுடைய கோவிலண்டை ஓர் அரசமரம் இருக்கும். சர்ப்பத்தினுடைய சிலை ஒன்றைச் செய்து இந்த மரத்தண்டை பிரதிஷ்டை செய்து இருபத்தோரு பிராமணர்களுக்குச் சாப்பாட்டை மனத்தில் சந்தோஷத் துடன் போட்டு மயில்களை உடைய பெரிய மலையாகிய பழனி ஸ்தலத்திற்குப் போய் ;

35. ஒரேழு கார்த்தி சென்று ஓராறு முகத்தோன் பாதம்
சீருட னர்ச்சித் தேத்திச் சேயிழை தன்னூ டுற்று
ஊரினில் சென்று சஷ்டி உறுதியாய் விரதம் கொள்ள
ஆறுமா முகனைப் போலே அணுகிடும் சுதரான் ஒன்று.

35. ஏழு கிருத்திகை தினங்களில் போய் ஆறுமுகங்களை உடைய முருகக் கடவுளுடைய பாதங்களைச் சிறப்புடனும் அழகுடனும் அலங்கரித்து அர்ச்சனை செய்து துதித்துப் பிறகு மனைவி தன் பட்டணத்திற்குப் போய் அந்த ஊரில் பன்னிரண்டு சஷ்டி தினங்களில் விரதத்தை மனத்திடத்துடன் அனுஷ்டித்து வந்தால் ஆறு பெரிய முகங்களை உடைய முருகக் கடவுளைப்போல ஓர் ஆண் குழந்தை பிறக்கும்.

36. ஆறுாறு ஆண்டு மேலாய் அணுகிடும் ஆண்பா லுந்தான்
மாரனைப் போலே தோன்றும் மன்னர் போல்வாழ்வா னாகும்
கூறுவோ மன்னை சேதி குணமது நல்ல தாகும்
பாரிய புத்தி யுண்டு பகருமுன் கோபி யாவள்.

36. ஜாதகருக்கு முப்பத்தாறுவது வயதிற்குமேலே ஆண் குழந்தை பிறக்கும். அது மாரன் என்ற மன்மதனைப் போல அழகுடையதாகக் காணப்படும். அந்த ஆண் குழந்தை அரசனைப்போல யோகமுடையவனாகி வாழ்வான். இனிமேல் ஜாதகருடைய தாயாரின் விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவள் நல்ல குணத்தை உடையவள். நல்ல புத்தியை யுடையவள். எல்லோரிடமும் பிரிய முள்ளவளாய் இருப்பாள். பேசுவதற்கு முன்னமே கோபத்தை யுடையவளாவாள்.

37. வறுமை களுடையா ளாகும் வரன்மனம் போல வாழ்வள்
திருமக ளொப்ப தாகும் செல்வியின் துணை யந்தத்தில்
பெருமையாய் ஆண்பா லொன்று பேசுவோம் தீர்க்க மாக
மருமமாய்ப் பெண்பா லொன்று வரைகிறோ மத்தி யத்தில் ;

37. ஜாதகரின் தாயார் கஷ்டங்களையும் தரித்திரத்தையும் உடையவளாவாள். இவள் தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற்போல ஒத்திருந்து வாழ்வாள். இலக்ஷ்மிக்குச் சமானமானவளாக விருப்பாள். இவளுடன் கூடப்பிறந்தவர்களில் ஓர் ஆண் சகோதரர் மேன்மையாகவும் நீண்ட ஆயுளை உடையவராகவும் இருப்பார் என்று சொல்லுகிறோம். ஒரு சகோதரியும் உண்டு என்று சொல்லுகிறோம். இந்தச் சகோதரி மத்திய வயதில் ;

38. ஏகுவாள் காலன் பக்க லில்லமும் வடமே லாகும்
தோகையின் பூர்வம் சொல்வேன் திருகடை யூர்கீழ்ப்பாலில்
பாகமாய் வைசியச் சேயாய்ப் பிறந்தனள் வறுமை யின்றிப்
போகபா க்கியங்க ளுண்டாய்ப் புத்திரர் வரனுண் டாகி ;

38. இறந்து எமனிடத்திற்குப் போய்ச் சேருவாள். தன் தாயாருடைய வீடு வடமேற்குத் திக்கில் இருக்கும். ஜாதகரின் தாயாருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். திருக்கடையூருக்குக் கிழக்குத்திக்

இல் தகுதியான ஒரு வைசிய குலத்துப் பெண்ணுகப் பிறந்தாள். இவள் கஷ்டங்களும் தரித்திரமும் இல்லாமல் சுகபோகங்களும் சகல செல்வமும் புருஷனும் மக்களும் ஆகிய இவைகளை உடையவளாகி ;

39. அறமதி லிச்சை யுண்டாய் அச்சென்ம பவமில் லாமல்
மறலியின் பதிக்குச் சென்று மால்மகன் வரையப் பட்டு
உரைந்தன ளிக்கு லத்தில் உலகிற்கு நல்லோ ளாவள்
மருமமாய் நாற்பா னென்றில் மகரமா தத்தி லேதான் ;

39. தருமத்தில் ஆசை உடையவளாகி அந்த முன் ஜன்மத்தில் யாதொரு பாபமும் இல்லாமல் இறந்து எமபட்டணத்திற்குப் போய் மகா விஷ்ணுவின் குமாரராகிய பிரமதேவனுல் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் இந்தக் குலத்தில் வந்து பிறந்திருக்கின்றுள். பூமியிலுள்ளவர்களுக்கு இவள் நல்லவளாவாள். இவள் ஜாதகருக்கு நாற்பத்தொன்றுவது வயதில் † தை மாதத்தில் ;

† குறிப்பு.—தாயார் மாரக விஷயம்.—ஜாதகருக்கு வயது ஃ 40–0–0 முதல் ஃ 41–0–0 முடியும் வரையிலும் குரு தசையில் குரு புக்தி நடக்கின்றது. மாதுர் லக்கினம் நான்காவது பாவமாகிய துலாமாகும். துலா லக்கினத்திற்குப் பராசரஹோரை, ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் குருவும் சூரியனும் மாரகாதிபதிகள் ஆவார்கள். மேலும், குரு துலாத்திற்கு ஒன்று எட்டிற்குடையவராகிய சுக்கிரனுடன் கூடியிருக்கின்றுர். ஆகையால் துய்யகேரளம் எட்டாம் பாவம் 20-ஆவது பாடல் பிரகாரம் குரு தாயாருக்கு மரணத்தை தன் தசா புக்திகாலத்தில் செய்ய அமைப்பு உள்ளவராகின்றுர். கார்க்கேயர்நாடி 12000 என்ற கார்க்கேயர் ஜோதிடம் முதற் காண்டம் 680-ஆவது பாடலையும் பார்க்கவும்.

40. மறையவன் கயமு டுத்தி மாதாவுக் கரிட்ட மாகும்
வரும்ஜன்மம் தணிகை தன்னில் மறைக்குல முதிப்பா ளாகும்
பெரும்தந்தை பூர்வம் சொல்வேன் பழனியின் மேற்குத் திக்கில்
அருகர்தன் குலமு தித்து அதிதிபோல் உடைமை கொண்டு ;

40. குருவிற்குச் சம்மந்தமான ஒருவித நோயால் தேய்வு அடைந்து மரணமாகிவிடுவாள். இவளுடைய மறுஜன்மத்தில் தணிகை என்று சொல்லப்பட்ட திருத்தணி ஸ்தலத்தில் பிராமணர் குலத்திற் பிறப்பாள். ஜாதகருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். பழனிக்கு மேற்குத்திக்கில் சமணருடைய குலத்திற் பிறந்து பரதேசிகளைப் போல வஸ்திரம் தரித்துக் கொண்டு ;

41. வினையது யில்லா தாகி மேவினன் காலன் பக்கல்
கனமுள பிரமன் லக்கம் காளையும் வந்தானென்றேம்
சினமிலா முப்பா னென்பான் சீர்பணி [1] தசையிலேதான்
அனையசேய் [2] புத்தி மாசி அறைந்தனம் தந்தைக் கேதான்.

---

[1] ராகு. [2] அங்காரகன்

41. யாதொரு பாபமும் இல்லாமல் இறந்து எமனிடத்திற்குப் போய் மேன்மையான பிரமதேவனுடைய பிரமலிபியுடன் இவர் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றார் என்று சொல்லுகின்றோம். ஜாதகருக்கு முப்பத்தொன்பதாவது வயதில் † சிறந்த இராகுதசையில் அங்காரகனுடைய புக்தியில் மாசி மாதத்தில் தகப்பனார் இறந்து போய் விடுவார் என்று சொல்லுகின்றோம்.

† **குறிப்பு.—தகப்பனார் மாரக விஷயம்:**—ஜாதகருக்கு வயது ஷ்ஷ 38–0–0 முதல் ஷ்ஷ 39–0–0 முடியும் வரையிலும் இராகு தசையில் சந்திர புக்தி அங்காரக புக்தி இவைகள் நடக்கின்றன. மாசி மாதத்தில் அங்காரக புக்தி மாத்திரம் நடக்கின்றது. பிதுர் லக்கினம் ஒன்பதாவது பாவமாகிய மீனம் ஆகும். மீன லக்கினத்திற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் சனி புதன் சுக்கிரன் சூரியன் இவர்கள் மாரகாதிபதிகளாகின்றார்கள். இராகு அங்காரகனுடைய வீட்டில் இருப்பதால் ஜாதகசந்திரிகை 12-ஆவது சுலோகப் பிரகாரம் அங்காரகனுடைய பலாபலன்களைக் கொடுக்க வேண்டும். அங்காரகன் மாரகாதிபதிகளாகிய சனி சுக்கிரன் இவர்களுடன் கூடி இரண்டாவது மாரகஸ்தானத்தில் இருக்கின்றார். மேலும் இந்த அங்காரகன் லக்கினாதிபதியாகிய குருவுடனும் அஷ்டமாதிபதியாகிய சுக்கிரனுடனும் கூடி இருக்கின்றார். ஆகையால் துய்யகேரளம் எட்டாம் பாவம் 20-ஆவது பாடல், கார்க்யர்ஜோதிடம் முதற்காண்டம் 680-ஆவது பாடல், ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகம் ஆகிய இவைகளின் பிரகாரம் அங்காரகன் பிதாவுக்கு மாரகஞ் செய்ய அமைப்பு உடையவராகின்றார். இவர் வீட்டிலுள்ள இராகு மேற் சொல்லிய 12-ஆவது சுலோகப் பிரகாரம் தன் தசையில் அங்காரகனுடைய புக்தியில் மாரகஞ் செய்ய அமைப்பு உடையவராகின்றார்.

42. பின்ஜன்மம் பரன்கு ன்றத்தில் பிறப்பனும் பிரம்ம சேயாய்
அன்னையும் கேட்க வுற்றாள் அவனுமிச் சென்மம் தன்னில்
என்னபுண் ணியங்கள் செய்தானி யம்புவீர் முனியே நீர்தாம்
கன்மன மில்லா தாயும் கனத்தோருக் குதவி பூண்டும்;

42. ஜாதகருடைய தகப்பனார் தன்னுடைய மறு ஜன்மத்தில் பரன்குன்றம் என்ற திருப்பரங்குன்றத்தில் பிராமணர் குலத்தில் ஆண் குழந்தையாகப் பிறப்பார். இவர் இந்த ஜன்மத்தில் என்ன புண்ணிய காரியங்களைச் செய்தார் அவைகளைச் சொல்லுவீர், முனிவரே! என்று பார்வதியம்மையார் கேட்டார், இவர் கடினமான மனமில்லாதவராகி இளைப்படைந்தவர்களுக்கு உபகாரஞ் செய்து;

43. நல்லதோர் தலங்கள் சென்றும் நாயகன் வாழ்வ தாலே
சொல்லினோம் மறுபி றப்புச் சுரர்குலம் ஜாதகர்க்கு
இல்லத்தில் அறுபா னெட்டு மிருந்துமே தனசு மாதம்
செல்லுவான் காலனை பக்கல் தேவியே மேலுங் கேளே.

43. நல்ல ஸ்தலங்களுக்குப் போயும் இவர் வாழ்வதாலே இவருக்கு மறு ஜன்மத்தில் பிராமணர் குலத்தில் ஜனனம் நேரிடும் என்று சொன்னோம். ஜாதகர் தன்னுடைய வீட்டில் அறுபத்தெட்டு வயது † வரையிலும் வசித்திருந்து மார்கழி மாதத்தில் இறந்து சிவனிடம் போய்ச் சேருவார். பார்வதியம்மையே ! இன்னும் நாங்கள் சொல்லுவதைக் கேட்பீராக.

† **குறிப்பு.—ஜாதகர் மாரக விஷயம்** :—ஜாதகருக்கு வயது ௵ 67-0-0 முதல் ௵ 68-0-0 முடியும் வரையிலும் சனி தசையில் சந்திர புக்தி அங்காரக புக்தி இவைகள் நடக்கின்றன. மார்கழி மாதத்தில் சந்திரனுடைய புக்தி தான் நடக்கின்றது. கடக லக்கினத்திற்குப் பராசரஹோரை, ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் சனி சுக்கிரன் புதன் இவர்கள் மாரகாதிபதிகள் ஆகின்றார்கள். சனி மாரக ஸ்தானங்களாகிய ஏழிற்கும் எட்டிற்கும் உடையவராகி மாரகாதிபதியாகிய சுக்கிரனுடன் கூடி நீசமாக விருக்கின்றார். ஆகையால் தூய்யகேரளம் எட்டாம் பாவம் 14-ஆவது 20-ஆவது பாடல்கள் பிரகாரமும், ஜாதகசந்திரிகை 27-ஆவது சுலோகம் பிரகாரமும் மாரகாதிபதிகளாகிய புதனையும் சுக்கிரனையும் தள்ளி விட்டுத் தானே தன் தசையில் ஜாதகருக்கு மாரகஞ் செய்யும் அமைப் புடையவ ராகின்றார். சந்திரன் மாரகஸ்தானமாகிய பதினொன்றில் மாரகாதிபதியாகிய சுக்கிரனுடைய வீட்டில் இருக்கின்றார். ஆகையால் மேற் சொல்லிய 14-ஆவது பாடல் பிரகாரமும் கார்க்கேயர்ஜோதிடம் முதற் காண்டம் 674-ஆவது பாடல் பிரகாரமும் 82-ஆவது ஜாதகம் 24-ஆவது பாடலின் கீழ்கொடுத்துள்ள நமது வியாக்கியானம் பிரகாரமும் சந்திரன் தன்னுடைய புக்தியில் ஜாதகருக்கு மாரகத்தைச் செய்யும் அமைப்பு உடையவராகின்றார்.

44. மறுஜன்மம் காஞ்சி தன்னில் மாரனும் பிரம்ம சேயாய்
உறைந்துமே அரசர் மூல முத்தமன் ஜீவிப் பானும்
உறைகிறே மிவனின் யோகம் உதித்தநாள் முதலா மாக
பிறையது போலே யோகம் பொருந்திடு மரண மட்டும்.

44. ஜாதகர் தன்னுடைய பின் ஜென்மத்தில் காஞ்சீபுரத்தில் பிராமணர் குலத்தில் ஆண் குழந்தையாகப் பிறந்து அரசாங்கம் மூலமாக ஜீவிப்பவராவார். இவருடைய யோகத்தைச் சொல்லுகின்றோம். பிறந்த காலம் முதற் கொண்டு மரணகாலம் வரையிலும் வளர் பிறைச் சந்திரனைப் போலவே யோகம் விருத்தியாகிக் கொண்டுவரும்.

## வேறு

45. ஆகிலும் பாரி அணுகிய பின்னால்
போகபாக்கியங்கள் பொருந்திடு மென்றோம்
பாகமாய்ப் பூமி பணிகள்செம் பொன்னும்
மாகநா லாயிரம் சாற்றினோம் யாங்கள்.

45. இப்படியாக விருந்த போதிலும் ஜாதகருக்கு மனைவி வந்து சம்பவித்தப் பிறகு சுகபோகங்களும் செல்வமும் உண்டாகும் என்று

சொல்லுகிறோம். தகுதியான நிலங்கள் ஆடை ஆபரணங்கள் தனம் இவை கள் எல்லாம் மொத்தம் நாலாயிரம் பொன் பெறக்கூடிய சொத்து ஜாத கருக்கு உண்டு என்று நாங்கள் சொல்லுகின்றோம்.

### வேறு

46. காவலன் ஜனிக்கும் காலே கதிர்த்தசை ஆண்டு நாலும்
தாவிய திங்களைந்தும் சாற்று வோம் பலனை யாங்கள்
மேவிடும் துணைவர் விருத்தி வித்தகன் தனக்கு ரோகம்
நேமியில் நேத்திர பீடை நீங்கிடும் தந்தை நோயும்

46. ஜாதகர் பிறக்கும் போது சூரிய மகாதசையில் இருப்பு நான்கு வருஷங்களும் ஐந்து மாதங்களும் ஆகும். இக்காலத்தில் நடக்கும் பலா பலன்களை நாங்கள் சொல்லுகிறோம். ஜாதகருக்குச் சகோதரர்கள் உற்பத்து யாகி விருத்தி யடைவார்கள். இவருக்கு நோய் உண்டாகும். கண் நோயும் உண்டாகும். தகப்பனுருக்கும் ரோகம் உண்டாகும். ஆனால் இவைகள் விலகி சௌக்கியமு முண்டாகும்.

# ஜாதகம் 95

1. மதி[1]புகர்[2] புந்தி[3] பானுவும்[4] நந்தி[5]மரை[6]வண்டி[7] கேதுவும் சீயம்[8]
விதி[9]துலை[10] சேயும்[11] மீனம் விடமது[12] சாடி[13]யாகப்
பதியது கடகம் பகருவீர் பலனைப் பராசரும் புகலுவார்
ஆண்பாலிது ஜெனனங்கள் தந்தையில் சொல்வேன் எமன்
[உத்திர வாடை யாகும்.

| | | | |
|---|---|---|---|
| அங்காரகன் | | சூரியன் சந்திரன் புதன் சுக்கிரன் | |
| ராகு | இராசி | | லக்கனம் குரு |
| | சக்கரம் | | கேது |
| | | சனி | |

மிருகசீர்ஷம் 1-ஆம் பாதம், அங்காரகதசை வரு 5-5-0

1. சந்திரன் சுக்கிரன் புதன் சூரியன் ரிஷபத்திலும், குரு கடகத்திலும், கேது சிம்மத்திலும், சனி துலாத்திலும், அங்காரகன் மீனத்திலும், ராகு கும்பத்திலும் ஜன்ம லக்கினம் கடகமாகவும் இருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்க, பராசரமகரிஷி சொல்லுகின்றார். பிறந்த குழந்தை ஆண் குழந்தை ஆகும். தகப்பனுருடைய வீட்டைப்பற்றிச் சொல்லுகின்றேன். அது வடக்குத் தெற்கு வீதியில் இருக்கும்.

**குறிப்பு.**—இந்த ராசிச்சக்கர அமைப்பிற்குப் பின் வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்த முடையதாகும் :—ரிஷபத்தில் கேதுவும், கடகத்தில் புதனும் சுக்கிரனும், சிம்மத்தில் சந்திரனும், கன்னியில் சூரியனும், விருச்சிகத்தில் குருவும் ராகுவும், மகரத்தில் அங்காரகனும், மீனத்தில் சனியும் ஆகும்.

2. ஆகுமே குடகு வாசல் சந்து அருகினில் உத்தர மாகும்
ஏகமா மூர்த்தி யிடிபெரும் தென் மேல்
யானையின் கோஷ்டமும் மேற்கில்
தோகையு மாரி அருகில் வாயு

[1] சந்திரன் [2] சுக்கிரன் [3] புதன் [4] சூரியன்
[5] ரிஷபம் [6] குரு [7] கடகம் [8] சிம்மம்
[9] சனி [10] துலாம் [11] அங்காரகன் [12] இராகு
[13] கும்பம்

சிம்மவா கனத்தாளுத்தரம்
பாகமாய்ச் சிற்றூர் புகன்றனம் யாங்கள்
பாலகன் சேஷ்டனு மென்றோம்.

2. மேற்குத்திக்கில் தெரு வாயிற்காலும் வடக்குத் திக்கில் சமீபத்தில் ஒரு சந்தும் இருக்கும். சிவபெருமானுடைய கோயில் தென் மேற்குத்திக்கிலும், யானைத் தொழுவம் மேற்குத்திக்கிலும், தோரணத்தை யுடைய மாரியம்மன் கோயில் சமீபத்திலும் வடமேற்குத்திக்கிலும், சிம்ம வாகனத்தையுடைய காளியம்மன் கோயில் வடக்குத்திக்கிலும் உள்ள ஒரு தகுதியான சிறிய கிராமத்தில் ஜாதகர் பிறப்பார் என்று நாங்கள் சொல்லுகின்றோம். இவர் ஜேஷ்டனாக விருப்பார் என்று சொல்லுகிறோம்.

3. இயன்றதோர் தந்தை தாய் துணை புத்திரர்
இசைந்திடு பாரியின் யோகம்
அன்றவன் யோகம் முன்பின் ஜன்மங்கள்
அறைகிறோம் நூல்களை யாய்ந்து
ஈன்றவன் தந்தை துணைநவ மதில்
ஏகிடும் சிலருமே யென்றோம்
நின்றது நான்கு ஆணது மிரண்டு
நிமலிகள் அவ்வித முரைப்போம்.

3. ஜாதகருடைய தகப்பனார் தாயார் சகோதரர்கள் சந்ததிகள் சம்பவிக்கப்போகின்ற மனைவி ஆகிய இவர்களுடைய யோகத்தையும் ஜாதகருடைய யோகத்தையும் முன் ஜன்மங்கள் பின் ஜன்மங்கள் ஆகிய இவைகளையும் சாஸ்திரங்களை ஆராய்ச்சி செய்து சொல்லுகிறோம். பெற்றெடுத்த தகப்பனாரின் சகோதரர்கள் ஒன்பது பேர்களில் சிலர் இறந்து போய் விடுவார்கள் என்று சொல்லுகிறோம். நிலையாகத் தங்கின பேர்கள் நான்கு பேர்களாவார்கள். இவர்களில் இரண்டு சகோதரர்களும் இரண்டு சகோதரிகளும் ஆகும் என்று சொல்லுகிறோம்.

4. உரைத்திடக் கேண்மோ தந்தையின் குணத்தை
உணச்சலும் நீட்சியு முடையான்
பொரை சொல்லா னாகி புத்திமான் ஈகை
பொருந்திடுங் கிருஷியே செய்வன்
நரைமல ரிஷ்டன் மாந்தலை மீனம்
நல்குவான் மாநிற முடையான்
குறையென்றோர்க் குதவி கூறுஞ்சொல் சுகமாம்
குறிப்பினில் கொடுமையே தோன்றும்.

4. ஜாதகரின் தகப்பனாருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். கேட்பீராக. வரண்டு மெலிந்து நீண்டு உள்ள தேகத்தை உடையவராவார். குற்றமானதைச் சொல்லமாட்டார். நுட்பமாக வறியுந்தன்மையை உடையவர். புத்தியுள்ளவர். கொடுக்குந் தன்மையை யுடையவர். விவசாயத் தொழிலைச் செய்வார். வாசனையை யுடைய

புஷ்பங்களின்மேல் ஆசையை யுடையவர். மிருகசீர்ஷ நட்சத்திரத்தில் மீன ராசியில் பிறந்திருப்பார். இவர் மாநிறமுள்ள தேகத்தை யுடையவராவார். கஷ்டப்படுகின்றோம், தரித்திரத்தை அடைந்திருக்கின்றோம் என்று சொல்லுகின்றவர்களுக்கு உபகாரத்தைச் செய்வார். இன்பமான வார்த்தைகளைச் சொல்லுவார். இவர் தோற்றத்தில் கெட்டவரைப்போலக் காணப்படுவார்.

5. கொடுமையை எண்ணுன் புன்சிரிப்புடையன்
குலவிடும் பித்த சூடு என்றோம்
திடமுள குடும்பி மத்தியில் தாழ்வு
சல்லியம் கொஞ்சமே யுடையோன்
படையினில் செல்லான் பதரிவார்த்தை பேசான்
பரஉப காரமே புரிவன்
நடையது துருசன் நாபிச்சூ டுடையன்
நற்பூமி சேர்த்திடு வானும்.

5. ஜாதகருடைய தகப்பனுர் கெடுதியை நினைக்க மாட்டார். புன் சிறிப்பை உடையவராவார். இவர் பித்தச் சூடான தேகத்தை யுடையவரென்று சொல்லுகிறோம். மேன்மையான குடும்பஸ்தராக விருப்பார். மத்திய வயதில் தாழ்ந்த அந்தஸ்தை யுடையவராவார். கொஞ்சம் கடன் உள்ளவராவார். சண்டைக்குப் போகமாட்டார். அவசரப்பட்டு கெட்ட வார்த்தைகளைச் சொல்லமாட்டார். பிறருக்கு உதவியையே செய்வார். கெட்ட நடவடிக்கை உடையவர். வயிற்றில் நாபிச் சூட்டை உடையவாவார். நல்ல நிலங்களைச் சேகரிப்பார் என்று சொல்லுகின்றோம்.

6. தன்துணை தன்னை ஆதரிப் பானும்
சலிப்புளோர்க் கன்னமு மீவன்
பொன் பணி அதிகமில் லாதவன் கூவல்
புரப்பனும் பெரியவ ருறவு
சொன்னமிக் குணத்தா னுக்குமே யிவனும்
தோன்றுவான் இவன் குணம் கேண்மோ
பன்னியே சொல்வன் பலகலை யுணர்வன்
பாருகள் அதிகமே சேர்ப்பன்.

6. ஜாதகரின் தகப்பனுர் தன் சகோதரர்களைக் காப்பாற்றுவார். இளைப்பை அடைந்தவர்களுக்குச் சாப்பாடு போடுவார். தனமும் ஆடை ஆபரணங்களும் அதிகமாக உடையவரல்லர். தான் சொல்லும் வார்த்தைகளைக் காப்பாற்றுவார். பெரிய மனிதர்களுடைய சிநேகிதத்தை யுடையவர். இங்குச் சொல்லப்பட்ட குணங்களையுடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய குணகுணங்களைப்பற்றிச் சொல்லுகின்றோம். கேட்பீராக. இவர் சுருக்கமாகவும் திறமையாகவும் பேசுவார். அநேக சாஸ்திரங்களைப் படிப்பார். அதிகமான நிலங்களைச் சேர்த்து வைப்பார்.

7. மன்னர்கள் பேட்டி மங்கையர் மோகன்
மாடுஆ டுகளுமே சேர்ப்பன்
கன்னென மொழியு மீகைவான் கோபி
கதித்ததோர் குடும்ப மதாவன்
பின்புயில் லங்கள் மாடமா ளிகையும்
பொருந்திடும் கைமுத லுள்ளான்
அன்னியர் மதிக்க வாழ்குவான் இவனே
அரசரால் செட்டுகள் செய்வன்.

7. ஜாதகர் அரசர்களுடைய தரிசனத்தை உடையவர். ஸ்திரீகளின் மேல் காம ஆசையை யுடையவர். ஆடு மாடுகளைச் சேர்த்து வைப்பார். சர்க்கரையைப் போல இனிமையான வார்த்தைகளைச் சொல்லுவார். பிறருக்குக் கொடுக்குந் தயாள குணத்தையுடையவர். கோபத்தையுடையவர், சிறந்த மேன்மையான குடும்பத்தை உடையவராவார். பிறகு வீடுகளையும். மாட மாளிகைகளையும் அடைவார். கையில் (பொருளின்) இருப்புள்ளவரா வார். பிறர் இவரைப் பெருமையாகப் பாராட்டும்படியான அந்தஸ்தி லிருந்து வாழ்வார். அரசர்களிடத்தில் அவர்கள் உதவியால் வியாபாரஞ் செய்வார்.

8. அறமதி லிச்சை ஆலய பத்தி
அண்டினோர் ஆதரிப் பானும்
பறைபள்ளு முடையன் பரஉப
காரிபாரினில் வறுமையே காணன்
விருத்தரும் கேட்பார் யோகமெவ் விதமாய்
விளம்பினீர் காரணம் புகல்வாய்
மறை[1] சனி மதியு[2] முச்சமாயிருக்க
மால்[3] புகர்[4] பானு[5] மே லாபம்[6].

8. ஜாதகர் தருமஞ் செய்வதில் ஆசையுடையவர். கோயில்களுக்குப் போய் கடவுளைத் தொழுவார். தன்னிடத்திற்கு வந்தவர்களைக் காப்பாற்று வார். தான்னியங்களையும் பழ வர்க்கங்களையும் உடையவர். பிறருக்கு உதவியைச் செய்வார். பூமியில் கஷ்டங்களையும் தரித்திரத்தையும் அடையமாட்டார் என்று சொல்ல, விருத்தர் என்ற ரிஷியானவர் கேட்கின்றார். ஜாதகருக்கு எவ்விதமாக யோகத்தைச் சொன்னீர்? காரணங்களைச் சொல்லுவீர் என்று கேட்க, குருவும் சனியும் சந்திரனும் உச்சமாய் இருப்பதாலும், புதனும் சுக்கிரனும் சூரியனும் லாபமாகிய பதினோராவது பாவத்தில்.

9. இருப்பதால் புகன்றோ மெந்தக் காலத்தி
லெய்திடும் யோகமே புகல்வாய்
திருமகன் தனக்குச் தசஆண்டின் மேலே
செப்புவோம் பிரபல யோகம்

[1] குரு [2] சந்திரன் [3] புதன்
[4] சுக்கிரன் [5] சூரியன் [6] பதினொன்று

வருகும்கா ரணங்கள் பூமியில் பொருளும்
மருவிடும் அது முத லாகத்
தரையது சேரும் பந்துவு மேன்மை
சகலரும் வசியமா மென்ன.

9. இருப்பதாலும் யோகத்தைச் சொன்னோம் என்று சொல்ல, எந்தக் காலத்தில் இந்த யோகம் சம்பவிக்கும் என்பதைச் சொல்லுவீர் என்று கேட்க, ஜாதகருக்குப் பத்து வயதிற்கு மேலே பிரபலமான பெரிய யோகம் வந்து நேரிடும். இந்த யோகத்தின் காரணமாகப் பூமியிலிருந்து சொத்துக்கள் வந்து சேரும். இந்தக்காலம் தொடர்ந்து நிலங்கள் வந்து சேரும். ஜாதகர் பந்துக்களிடத்தில் மேன்மையாகவும் மதிப்புடனும் இருப்பார். எல்லோரும் இவருக்கு வசியப்பட்டு இருப்பார்கள் என்று சொல்லுகிறோம்.

10 நேரிடும் பொருளி னளவுமே சொல்வாய்
நிகழ்த்துவோம் மூவாயிரம் கிடைக்கும்
கூறுவீர் இடங்கள் கொல்லையில் நேரும்
குறித்தனம் கீழ்த் திசை யாகும்
மாறிடா திந்த வார்த்தையு மம்மா
மாலணிபணி தசை தன்னில்
சூரியன் புத்தி தன்னிலே நேரும்
கோமளி கேட்டி டுவாயே.

10. ஜாதகருக்கு வந்து சம்பவிக்கக் கூடிய சொத்துக்களின் மதிப்பைச் சொல்லுவீர் என்று கேட்க, மூவாயிரம் பொன் பெறக்கூடிய சொத்துக்கள் வந்து நேரிடும். எந்த விடத்தில் இருந்து கிடைக்கும் என்பதைச் சொல்லுவீர் என்று கேட்க, கிழக்குத் திக்கிலுள்ள ஒரு கொல்லையாகிய நிலத்திலிருந்து கிடைக்கும். பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய இந்த வார்த்தை தவறாமல் நடக்கும். மகா விஷ்ணு அணிந்து கொள்ளுகின்ற சர்ப்பமாகிய இராகு தசையில் சூரியன் என்று சொல்லப்படுகின்ற புதனுடைய புக்தியில் * கிடைக்கும். பார்வதியம்மையே! நாங்கள் சொல்லுவதைக் கேட்பீராக.

* **குறிப்பு.**—ஜாதகருக்கு வயது ௵ 13–4–13 நாள் முதற்கொண்டு வயது ௵ 15–11–0 நாள் முடியும் வரையிலும் இராகு தசையில் புத புக்தி நடக்கின்றது. இந்த ஜாதகத்தில் சந்திரனுக்குப் பதினொன் றிற்கு உடையவரான குரு லக்கினத்தில் உச்சமாகிச் சந்திரனுக்கு ஒன்பதிற் குடையவரான உச்சமான சனியால் பார்க்கப்பட்டிருக்கின்றார். மேலும், லக்கினத்திற்குப் பத்திற்குடைய அங்காரகன் ஒன்பதில் குருவினுடைய மனையில் இருக்கின்றார். ஆகையால் ஜாதகாலங்காரம் 501-ஆவது பாடல் பிரகாரம் பழைய தனம் வந்து சேரும். அல்லது ஜாதகர் பிரயாசமில்லா மல் நிதியாம், செல்வம் படைப்பர். இராகு சந்திரனுக்கு யோககாரக ராகிய சனி வீட்டில் லக்கினத்திற்கு யோககாரகராகிய அங்காரகனுடைய நட்சத்திரக் காலாகிய அவிட்டத்தில் இருக்கின்றார். புதன் நான்கிற்கும்

பதினொன்றிற்கும் உடைய சுக்கிரனுடனும், இரண்டிற்குடைய சூரியனும் கூடி பதினொன்றில் சந்திரனுடன் இருப்பதால் ஜாதகருக்கு ராகு தசையில் புத புக்தியில் தனம் கிடைக்கின்ற அமைப்பு இருக்கிறது.

11. இன்னவன் துணைவர் தன் பல முரைப்பேன்
 ஏழது ஜனனமே யாகும்
வந்ததில் ஆண்பா லொன்றுமே யென்றோம்
 மங்கையு மிருவர்கள் தீர்க்கம்
சொன்னது மூன்றும் தீர்க்கமாம் பின்பெண்
 சோர்ந்திடும் அதற்குப்பின் விருத்தி
மன்னவன் சேதி வரைகிறோம் யாங்கள்
 மாஞ்சிவப் புடையவ னாமே.

11. ஜாதகருடைய சகோதர பலத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன். ஏழு சகோதரர்கள் பிறப்பார்கள். இவர்களில் சகோதரர் ஒன்று தான் என்று சொல்லுகின்றோம். இரண்டு சகோதரிகள் நீண்ட ஆயுளை உடையவர்கள். இங்கு சொல்லப்பட்ட ஒரு சகோதரரும் இரண்டு சகோதரிகளுமாகிய மூன்று சகோதரர்களும் நீண்ட ஆயுளை உடையவர்களாவார்கள். ஜாதகருக்குப் பின்னால் பெண் இறந்து விடும். இதற்குப் பிறகு பெண் ஆயுளுள்ளதாக விருக்கும். இந்த சகோதரரின் சங்கதிகளைப் பற்றி நாங்கள் சொல்லுகின்றோம். இவர் மாந்துளிரின் நிறத்தைப் போன்ற ஒருவிதமான சிகப்பு நிறமுள்ள தேகத்தையுடையவராவார்.

12. பரணியும் தனுசு பிறப்பனு மூகி
 பலகலை படிக்கவே வல்லன்
பொறைசொல்வன் கபடன் தந்திர வார்த்தை
 பொய்யது வழுத்து நெஞ் சுடையன்
தரையுமே லாசை தையலர் காமி
 சல்லிய மில்லாதவ னென்றோம்
விரைவினில் நடப்பன் துணைவனோ டொத்து
 வித்தகன் வாழ்வானென் றுரைப்போம்.

12. ஜாதகருடைய சகோதரர் பரணி நட்சத்திரத்தில் தனுர் லக்கினத்தில் பிறப்பார். நுட்பமான அறிவுடையவர். அநேக சாஸ்திரங்களைப் படிக்குஞ் சாமர்த்திய முடையவர். பிறர் மேல் குற்றங்களைச் சொல்லமாட்டார். கள்ளம்கபடம் வஞ்சனை இவைகளைத் தன்னுடைய மனத்தில் உள்ளவர். தந்திரமானதும் பக்குவமானதுமான வார்த்தைகளை உபயோகிப்பார். பொய்யைச் சொல்லக் கூடிய மனத்தை யுடையவர். பூமியின் மேல் ஆசையை யுடையவர். தைரியமுள்ளவர். காம ஆசையை யுடையவர். கடன் இல்லாதவர் என்று சொல்லுகின்றோம். வேகமாய் நடக்கக்கூடியவர். இவர் தன்னுடைய சகோதரனுடன் ஒற்றுமையாக விருந்து வாழ்வார் என்று சொல்லுகின்றோம்.

13. பாரியும் ஒன்று பாலராண் மூன்று
பங்கய வதனம் போல்பெண் பால்
கூறுவோ மிரண்டு தீர்க்கமாம் அந்தக்
கோதையும் தெனதிசை நேரும்
வீரியன் மணத்தின் காலத்தை யுரைப்பேன்
வெற்றிசெய் யீரொன்ப தாண்டில்
நாரியும் தென்பால் அன்னை யின் வர்க்கம்
நல்கிடும் குணமதை நவில்வோம்

13. ஜாதகருடைய சகோதரனுக்கு ஒரே மனைவி தான் ஏற்படும். ஆண் குழந்தைகள் மூன்றும் தாமரையைப் போல அழகான முகங்களை உடைய இரண்டு பெண்களும் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள். இந்த மனைவியும் தெற்குத் திக்கிலிருந்து வந்து நேரிடுவாள். ஜாதகருடைய விவாக காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவருக்கு பத்தொன்பதாவது வயதில் * மனைவி தெற்குத் திக்கிலிருந்தும் தாயாருடைய வம்சத்திலிருந்தும் வந்து நேரிடுவாள். இவளுடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம்.

* குறிப்பு.—மனைவி விஷயம் :—ஜாதகருக்கு வயது ஹூ 18–0–0 முதல் ஹூ 19–0–0 முடியும் வரையிலும் இராகு தசையில் சுக்கிர புக்தி நடக்கின்றது. இராகு சனியினுடைய வீட்டில் இருப்பதால் ஜாதகசந்திரிகை 12-ஆவது சுலோகப் பிரகாரம் சனியினுடைய பலனைக் கொடுக்க வேண்டும். சனி களத்திரஸ்தானமாகிய ஏழிற்குடையவராகிப் போகஸ்தானமாகிய நான்காவது பாவத்தில் இருக்கின்றார். ஆகையால் சனிக்கு விவாகஞ் செய்து வைக்கும் அதிகாரம் ஏற்படுகிறது. இந்த அதிகாரப் பலனை இராகு கொடுக்கவேணும். மேலும் இந்த ராகு அங்காரகனுடைய நட்சத்திரக்காலில் இருப்பதால் அங்காரகனுடைய பலனையுங் கொடுக்க வேண்டும். அங்காரகன் பததிற் குடையவராய் இருப்பதால் ஜாதகபாரிஜாதம் பதினொன்காவது அத்தியாயம் இருபத்தொன்பதாவது சுலோகப பிரகாரம் அங்காரகனுக்கும் விவாகம் செய்து வைக்க அதிகாரம் ஏற்படுகின்றது. ஆகையால், இராகு தன் தசையில் ஜாதகருக்கு விவாகம் செய்து வைக்கும் அமைப்பு உடையவராகின்றார். சுக்கிரன் களத்திரகாரகனுகிப் போகஸ்தானமாகிய நான்கிற்கு அதிபதியாயும் இரண்டாம் வீட்டிற்கு அதிபதியாகிய சூரியன் இருக்கின்ற வீட்டிற்கு அதிபதியாகியும் இருப்பதால் மேற்சொல்லிய இருபத்தொன்பதாவது சுலோகப் பிரகாரம் தன்புக்தியில் விவாகம் செய்து வைப்பார்.

14. மாநிறம் உணச்சல் மருமமில்லா தாள்
மறுத்துரை கூறிடா ளாகும்
தேன்மொழி யுரைப்பள் திருமக ளொப்பாம்
சீலமாம் யோக சாலியாம்
ஊனமில்லாதாள் அறமதி லிச்சை
யுடையாளாம் வயதுமே தீர்க்கம்
ஆனதோர் பராசர் இவ்வித முரைக்க
அத்திரி மறித்துச் சொல்லுவார்.

**14.** ஜாதகருடைய மனைவி மாநிறமுள்ள தேகத்தை உடையவள். வரண்டு மெலிந்த தேகத்தை உடையவள். மனத்தில் ரகசியமானதை வைத்துக் கொண்டிருக்காதவளாவாள். எதிர்த்துப் பேசாதவளாக விருப்பாள். தேனைப்போன்ற இனிமையான வார்த்தைகளைச் சொல்லுவாள். இலட்சுமிக்குச் சமானமானவளாக விருப்பாள். நல்லொழுக்கமும் உள்ளவள். யோகசாலியாகவும் இருப்பாள். தேகத்தில் யாதொரு அங்க வீனமும் இல்லாதவளாவாள். தருமஞ் செய்வதில் ஆசையை உடையவளாகும். இவள நீண்ட ஆயுளை உடையவளாவாள். இவ் விதமாகப் பராசர மகரிஷியானவர் சொல்ல, அத்திரி மகரிஷியானவர் தடுத்துச் சொல்லுகின்றார்.

**15.** எப்படி மனைவி தீர்க்கமா யுரைத்தீர்
யியம்புவீர் காரணம் விவரம்
ஒப்புடனேழோனுச்சமா யிருக்க
உயர் குரு சத்தமம் பார்க்க
செப்பினோம் தாரம் ஒன்றென யாங்கள்
செயமுனி தடுத்துமே சொல்வார்
தப்பித மாகு முதல்மனை என்றோம்
சார்ந்திடு மறுமனை தானே.

**15.** எவ்விதமாக ஜாதகருடைய மனைவிக்கு நீண்ட ஆயுளைச் சொன்னீர்! அதற்குக் காரணங்களை விவரமாகச் சொலலுவீர் என்று அத்திரி மகரிஷி கேட்க, ஏழிற்குடையவரான சனி உச்சமாய் இருப்பதாலும், பெருமை பொருந்திய உச்சனுகிய குரு ஏழாமிடத்தைப் பார்ப்பதாலும் நாங்கள் ஒரே தாரம் என்று சொன்னோம் என்று பராசர மகரிஷி சொல்ல, ஜயமுனி என்ற மகரிஷி மறுத்துச் சொல்லுகின்றார். முதல் மனைவி இறந்து விடுவாள். இரண்டாவது மனைவி வந்து நேரிடுவாள் என்று சொல்லுகிறோம்.

**16.** அனுகுர்காரணங்கள் அறிவிப்பீர் முனியே
அந்தேழோன் சரத்தினி லிருந்தும்
பிணையாக இரண்டினில் கேதுவு நிற்கப்
புகர்புதன் கூடியே லாபம்
வினையுட னிருக்க மெல்லிய ரிரண்டு
மேவிடும் இதுமொழி குன்று
அனையவே இதற்கு நேரிடையாக
சாதக சுருதியா நூலில்.

**16.** இவ்விதமாக நேரிடுவதற்குக் காரணங்களைச் சொல்லு வீர் என்று பராசர முனிவர் கேட்க, அந்த ஏழிற்குடையவரான சனி சர ராசியில் இருப்பதாலும் அதற்குத் தகுந்தாற் போல இரண்டாவது பாவத்தில் கேது இருப்பதாலும் சுக்கிரனும் புதனும் கூடி லாபம் என்ற

பதினோராவது பாவத்தில் கெடுதியாய் இருப்பதாலும் மனைவிமார் * இரண்டு பேர் ஏற்படுவார்கள். இந்த வார்த்தை தவறாமல் நடைபெறும். இதற்குச் சரியான ஜாதகச்சுருதி என்ற பிரமாணங்களைப் பார்ப்பீராக.

* **குறிப்பு மனைவி விஷயம்.**—களத்திர ஸ்தானாதிபதியாகிய சனி சரத்திலிருப்பது ஜாதகலங்காரம் 648-ஆவது பாடல் பிரகாரம் களத்திர தோஷத்தை உண்டு பண்ணும். களத்திர ஸ்தானாதிபதியாகிய சனி துலாத்தில் உச்சமாகி கேந்திரத்தில் இருந்துகொண்டு பத்திற்குடையவராகிய அங்காரகனால் பார்க்கப்படுவதால் ஜாதகபாரிஜாதம் பதினான்காவது அத்தியாயம் இருபத்தோராவது சுலோகப் பிரகாரம் ஜாதகருக்கு அநேக மனைவிகள் ஏற்படுவார்கள். இரண்டாவது பாவத்தில் கேது இருப்பதும் ஏழிற்குடையவர் பாபியாகிய அங்காரகனாலும் கேதுவாலும் பார்க்கப்படுவதும் ஜாதக பாரிஜாதம் பதினான்காவது அத்தியாயம் இருபதாவது சுலோகப் பிரகாரம் அநேக மனைவிகளை உண்டாக்க கூடியதாகும். களத்திரகாரகனாகிய சுக்கிரன் விரயாதிபதியாகிய புதனுடன் கூடியிருப்பதும் தோஷத்தை உண்டுபண்ணக் கூடியதாகும்.

17. முதல்மனை எவ்வாறு மொழிகுவீர் முனியே
யுதித்திடும் சுதர்களு மொன்று
அதிபதி கர்ப்ப பாதையால் மாண்டு
மறுமனை நேரிடு மென்றோம்
எதுகாலம் புகல்வாய் முப்பது ஆண்டி லேகுவாள்
காலன் தன் நாடு
அதுஆண்டில் மாது அணுகிடும் தென்கீழ்
அவள் வயதீர்க்கமே யாகும்.

17. ஜாதகருடைய முதல் மனைவி எவ்விதமாக இறந்து விடுவாள் என்பதை, முனிவரே! நீர் சொல்லுவீர் என்று கேட்க, முதல் மனைவிக்கு ஒரு குழந்தை பிறக்கும். இவள் பிரசவ வேதனையினால் இறந்துவிடுவாள். பிறகு ஜாதகருக்கு இன்னொரு மனைவி வந்து நேரிடுவாள் என்று சொல்லுகிறோம். எந்தக் காலத்தில் இவ்விதமாக நடக்கும் என்பதை கேட்க, ஜாதகருக்கு முப்பதாவது வயதில் * முதல் மனைவி இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேருவாள். அந்த வருஷத்தில் தென் கிழக்குத் திக்கிலிருந்து இரண்டாவது மனைவி வந்து நேரிடுவாள். இவள் நீண்ட ஆயுளை உடையவளாவாள்.

* **குறிப்பு.—முதல் மனைவியின் மரணம்:**—ஜாதகருக்கு வயது ஷ 29-0-0 முதல் ஷ 30-0-0 முடியும் வரையிலும் குருதசையில் புத புக்தி நடக்கின்றது. இவருக்கு முதல் மனைவி ஸ்தானமும் ஏழாவது பாவமுமாகிய மகர லக்கினத்திற்குப் பாரசாரஹோரை ஜாதகபாரிஜாதம் இவைகளின் பிரகாரம் குரு சந்திரன் அங்காரகன் இவர்கள் மாரகாதிபதிகளாகின்றார்கள். இரண்டாவது களத்திர ஸ்தானமானதும் ஒன்பதாவது பாவ

மூமாகிய மீனத்திற்கு அதிபதி குருவாகி இவரே மாரகாதிபதியுமாகி மகரத் திற்கு ஏழில் உச்சமாக விருந்து கொண்டு மகரத்தையே பார்ப்பதுடன் மீனத்தையும் அதிலுள்ள புத்திரஸ்தானாதிபதியாகிய அங்காரகனையும் பார்க்கின்றார். ஆனகயால் குரு தன் தசையில் முதல் மனைவிக்குப் பிரசவ மூலமாக மரணத்தைக் கொடுத்து இரண்டாவது மனைவியையுங் கொடுக்கும் அமைப்பு உடையவராகின்றார். புதன் மகரத்திற்கு ஆறுக் குடையவராகி மாரகாதிபதியாகிய சந்திரனுடனும், மகரத்திற்கு எட்டிற் குடைய சூரியனுடனும் கூடி இருக்கின்றார். ஆகையால் இவர் தன் புக்தியில் ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரமும் துய்யகேரளம் எட்டாம் பாவம் 20-ஆவது பாடல் அல்லது கார்க்கேயர்நாடி என்ற கார்க்கேயர் ஜோதிடம் முதற் காண்டம் 680-ஆவது பாடல் அல்லது ஜாதக பாரிஜாதம் 14-ஆவது அத்தியாயப் 60-ஆவது சுலோகப் பிரகாரமும் மனை விக்கு மாரகஞ் செய்ய அமைப் புடையவராகின்றார். மேலும் இவர் சுக்கிரனுடன் கூடிப் பதினோராவது பாவத்தில் இருப்பதால் களத்திர எண் ணிக்கையை அதிகப்படுத்துந் தன்மை உடையவராகின்றார். இவர் களத்திர காரகனும் போகஸ்தானாதிபதியுமாகிய சுக்கிரனுடன் கூடி இருப்பதால் இன் னொரு மனைவியைக் கொடுக்கும் அமைப்பு உடையவராகின்றார்.

18. சுதர்களும் நவமாய்த் தோன்றிடு மென்றேம்
சோர்வுறும் சிலவுமே என்றேம்
சதமுடன் ஆண்பா லிரண்டென உரைப்போம்
சத்திமார் மூன்றெனச் சாற்றும்
இதுவந்தும் தீர்க்கம் இருமனை தனக்கு
எகிடும் முதல்மனை சுதர்கள்
அதிதியே பின்பால் விபரம் யாங்கள்
அறிவிப்போம் அம்பிகாய் கேளாய்.

18. ஜாதருக்கு ஒன்பது குழந்தைகள் பிறக்கும் என்று சொல்லு கின்றோம். இவைகளில் சில குழந்தைகள் இறந்துவிடும் என்று சொல்லுகின்றோம். ஆண் குழந்தைகள் இரண்டு என்று சொல்லுகின் றோம், பெண் குழந்தைகள் மூன்று என்று சொல்லுகின்றோம். இந்த ஐந்து குழந்தைகளும் நீண்ட ஆயுளை உடையவர்களாவார்கள். இவர் கள் இரண்டாவது மனைவிக்குப் பிறப்பார்கள். முதல் தாரத்திற்கு உண்டா கின்ற குழந்தைகளைப்பற்றிப் பார்வதியம்மையே கேட்பீராக.

**குறிப்பு.— புத்திர பாவம்:**—ஜாதகருக்கு இரண்டு மனைவிகள் என்று சொல்லிவிட்டார். முதல் மனைவியின் லக்கினம் கடக லக்கினத்திற்கு ஏழாவது பாவமாகிய மகரம் ஆகும். இதற்குப் புத்திர பாவமும் ஐந்தாவது வீடாகிய ரிஷபம் புத்திர ஸ்தானமாகும். சந்திரன் ஐந்தாவது பாவத்தில் இருந்தால் ஜாதகாலங்காரம் 625-ஆவது பாடலில் ஒரு பிள்ளை

தான் உயிருடன் இருக்கும்; மற்றவை முதல் மனைவிக்கு இறந்து போய் விடும் என்று கண்டிருக்கின்றது. மேலும் மகர லக்கினத்திற்குப் புத்திர ஸ்தானதிபதியாகிய சுக்கிரன் ஆட்சியாயும், ஏழிற்குடையவராகிய சந்திரன் உச்சமாகி சுக்கிரனுடன் கூடி ஐந்தில் கோணத்தில் இருப்பதாலும், இவர்களுடன் ஆறுவது வீட்டிற்கு அதிபதியாகிய புதன்கூடி இருப்பதாலும் ஜாதகாலங்காரம் 628-ஆவது பாடல் பிரகாரம் சுத்தமாய்ப் புதல்வர் இல்லை என்று ஏற்படுகின்றது. புத்திரஸ்தானத்தில் அஷ்டமாதிபாகிய சூரியனும் இருக்கின்றார். ஆகையால் முதல் மனைவிக்குப் புத்திர தோஷம் அதிகமாகவிருக்கின்றது. இரண்டாவது மனைவி லக்கினம் ஒன்பதாவது பாவமாகிய மீனம் ஆகும். இதற்குப் புத்திரஸ்தானம் கடகமாகும். மீனலக்கினத்திற்கு ஐந்தில் குரு உச்சமாகவிருப்பதால் இரண்டாவது மனைவிக்கு ஜாதகாலங்காரம் 602-ஆவது பாடல் பிரகாரம் ஆண் குழைந்தைகளுக்குத் தோஷம் உண்டு. பெண்களே பிறக்கும் அமைப்பு உண்டு. ஐந்திற்குடையவர் சந்திரனாகிப் பெண் கிரகம் அலிகிரகமாகிய சுக்கிரன் புதன் இவர்களுடன் கூடி பெண் ராசியாகிய ரிஷபத்தில் மீனத்திற்கு மூன்றில் ஆறிற்குடைய சூரியனுடன் கூடி இருப்பதாலும், மீனத்திற்கு ஐந்திற்குடையவரும் ஏழிற்குடையவரும் கூடி இருப்பதாலும் சந்ததிக்குத் தோஷமுண்டு. அதிலும் ஆண் சந்ததிகளுக்குப் பெண் சந்ததியைவிட அதிகத் தோஷம் இருக்கின்றது. ஜாதகருக்குப் புத்திர ஸ்தானம் விருச்சிகம் ஆகும். இதற்குடைய அங்காரகன் இருக்கின்ற பாவம் கோணமாகும். ஐந்தைச் சுக்கிரன், புதன், சூரியன் இவர்கள் பார்க்கின்றார்கள். ஐந்தைச் சூரியன் பார்ப்பது தோஷமாகும். ஐந்தைக் குரு பார்ப்பது பலதீபிகை 15-ஆவது அத்தியாயம் 26-ஆவது சுலோகப் பிரகாரம் தோஷமாகும். மேலும் 9-க்குடைய குருவைச் சனி பார்ப்பதும் சூரியனும் புதனும் கூடியிருப்பது ஜாதகாலங்காரம் 626-ஆவது பாடல் பிரகாரம் தோஷமாகும்.

**19.** யோக ஜாதகராய் உரைத்திட்டீர் முனியே
உத்தமன் தனக்குறுமே யிரண்டு
தோகையர் அணுகும் சேதியைப் புகல்வாய்ச்
சுதனுமுன் பூர்வம் தன்னில்
ஏகமாய் வினைகள் செய்திட்டா னதனால்
யெய்திடும் பாரி யிரண்டு
ஊகமாய்ச் சொல்வாய் முன்ஜன்மம் கேளாய்
உரையூருக் கருகினி லேதான் ;

19. இந்த ஜாதகர் யோகவானாகவிருப்பார் என்று சொன்னீரே! மேலும் இவருக்கு இரண்டுதாரர்கள் உண்டு என்று சொன்னீரே! முனிவரே! இவை இவ்விதமாக நேரிடுவதற்குக் காரணங்களைச் சொல்லுவீராக. ஜாதகர் முன் ஜன்மத்தில் அநேக நல்ல கெட்ட செய்கைகளைச் செய்திருக்கின்றார். அதனால் இவருக்கு இரண்டு மனைவி உண்டாகும். இது விஷயமாக யோசித்து ஊகித்துச் சொல்லுவீர் என்று கேட்க, முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறேன், கேட்பீராக. உரையூருக்குச் சமீபத்தில் ;

**20.** வன்னிய மரபில் தோன்றி மனைவி மைந்தரு முண்டாகிப்
பொன்பொரு ளில்லா தாகிப் பூமியில் சீவித் தேதான்
இன்னவன் வாழுந் நாளி லெய்திய வினையைக் கேண்மோ
தன்பாரி தங்கை தானும் தன் மண மின்றி வாழ்ந்தாள்.

**20.** ஒரு வன்னியருடைய குலத்தில் பிறந்து மனைவி மக்களை உடையவராகிச் செல்வமும் சொத்தும் இல்லாதவராகி ஜாதகர் இந்தப் பூமியில் வாழுகின்ற காலத்தில் இவருக்கு உண்டான பாவத்தைச் சொல்லு கின்றேன், கேட்பீராக. இவருடைய மனைவியின் சகோதரி விவாகம் இல்லாமல் வசித்துக்கொண்டிருந்தாள்.

**21.** மாதுக்கு மயக்கம் தந்து மன்மதக் கலவை செய்தான்
மேதினில் சில நாள் சென்று மேலிற்றுக் கருவு தானும்
தீதுகள் செய்ய வேண்டிச் சிலசில பண்டி தத்தால்
சூதுகள் செய்தா னென்றோம் தோகையும் மாண்டா ளம்மா

**21.** ஜாதகர் இந்த ஸ்திரீக்கு மயக்கந்தரக்கூடிய மருந்தை கொடுத்து அவளிடத்தில் சம்போகஞ் செய்தான். பூமியில் கொஞ்ச காலத் திற்குப்பிறகு அவளுக்குக் கர்ப்பந் தரித்தது. அதைக் கெடுத்துவிட எண் ணங் கொண்டு ஜாதகர் சிற்சில வைத்தியங்களினால் கெடுதியைச் செய் தார் என்று சொல்லுகின்றோம். இவ் விதமாகச் செய்யவே அந்த ஸ்திரி யும் இறந்துவிட்டாள், பார்வதியம்மையே !

**22.** அதுவின்றி வேறு காணன் அந்திய காலம் தன்னில்
விதிமுறை வேதம் சொல்லும் வேதியர் தொண்டு செய்து
சதுர்மறை யோன்தன் னோடு சென்றனன் சேதுக் கேதான்
நதிபல தீர்த்தம் தோய்ந்து நாயக னுள்ளூர் மீண்டு ;

**22.** இந்தப் பாவம் தவிர வேறே எந்தப் பாவத்தையும் ஜாதகர் செய்யவில்லை. இவர் தனது கடைசி காலத்தில் விதிகள் பிர காரம் வேத சாஸ்திரங்களைப் பாராயணஞ் செய்கின்ற பிராமணர்களுக்குப் பணிவிடைகளைச் செய்து நான்கு வேதங்களையும் படித்த ஒரு பிராமணருடன் சேது ஸ்தலத்திற்குப் போய் அனேக புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்து இவர் தன்னுடைய ஊருக்குத் திரும்பி வந்து ;

**23.** மறலியின் நாட டைந்து மறையவன் வரையப் பட்டு
உரமுடன் ரெட்டி வமிசம் உதிப்பனு மிந்தப் பாலன்
கருவதை யழித்த போது காதலி மாண்ட தோஷம்
மருவிடு மிச்சென் மத்தில் மனைவியும் கர்ப்பத் தாலே ;

**23.** பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய்ப் பிறகு பிரம தேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு வலிவான ஒரு ரெட்டியாருடைய குலத்தில் இந்த ஜாதகர் பிறந்தார். முற்பிறப்பில் கர்ப்பத்தை அழிக்கும் போது அந்த ஸ்திரீ இறந்துவிட்டதால் அந்தத் தோஷம் இந்த ஜன்மத்தில் வந்து ஜாதகரை அடையும். அதனால் இவருடைய மனைவி கர்ப்பத்தால் ;

24. ஏகுவா னென்று சொல்வோ மிருமனை நேரும் தாயே
தோகையும் கேட்க லுற்றுள் சுதனுமுன் ஜன்மம் தன்னில்
பாகமாய்ச் சேது சென்ற பலத்தினால் விலகா தோசொல்
போகாது கருவின் தோஷம் புண்ணிய வதியே கேளாய்.

24. இறந்து விடுவாள் என்று சொல்லுகிறோம். ஜாதகருக்கு இரண்டு மனைவிமார்கள் நேரிடுவார்கள், பார்வதியம்மையே! அதன்பேரில் பார்வதியம்மையார் கேட்கின்றார். ஜாதகர் தன்னுடை முன்ஜன்மத்தில் சேது ஸ்தலத்திற்குப் போன புண்ணியத்தால் இந்தத் தோஷம் நிவர்த்தியாகதோ என்பதைச் சொல்லுவீராக. புண்ணியசாலியாகிய பார்வதியம்மையே! கருவினால் ஏற்பட்ட இந்தத் தோஷமானது நிவர்த்தியாகாது.

25. சேதுக்குச் சென்ற புண்ணியம் செழிப்பான குடும்பி யாவன்
மேதினில் வறுமை காணான் மேவிடும் நிதிநிட் சேபம்
காதிக ளதிகம் யேற்பன் காவலாள் உடைய னாகும்
கோதிலா கூவல் சோலை குலவிடும் சகடு தானே.

25. ஜாதகர் சேது ஸ்தலத்திற்குப் போன புண்ணியத்தின் பலனாகச் செழுமையானதும் மேன்மையானதுமான குடும்பஸ்தராக ஜாதகர் ஆவார். பூமியில் கஷ்டத்தையும் தரித்திரத்தையும் அடையமாட்டார். இவருக்குச் செல்வமும் புதையலும் கிடைக்கும். இவர் அதிகப் புகழ் உடையவராவர். வேலைக்காரர்களையும் உடையவராவார். இவருக்குக் குற்றமில்லாத கிணறு சோலைகள் தோப்புகள் வண்டி இவைகள் வந்து நேரும்.

26. இன்னமும் விவரமாக இயம்புவோம் பின்பாக த்தில்
அன்னையின் குணத்தைச் சொல்வேன் அழகுளாள் சிவந்த மேனி
தன்சொல்லு மடக்க முண்டு சமயோகம் பொறுமை சாலி
நன்னடை யிளம னத்தாள் நாயகி யில்லம் தெற்கு.

26. இன்னமும் அதிகமாகவும் விவரமாகவும் பின்பாகத்தில் சொல்லுகிறோம். ஜாதகருடைய தாயாரின் குணகுணங்களைப்பற்றிச் சொல்லுகிறேன். இவள் அழகுள்ளவளாவாள். சிவப்பு நிறமுள்ள தேகத்தையுடையவள். இவள் சாந்தமாகவும் நிதானமாகவும் பேசுவாள். சமமான யோகத்தை உடையவள். பொறுமையுடன் விருப்பவள். நல்ல நடவடிக்கையை யுடையவள். தயாள குணம் நிரம்பிய மனத்தை யுடையவள். இவளுடைய வீடு தெற்குத்திக்கில் இருக்கும்.

27. தன்துணை ஆண்பா லொன்று தங்கிடு மென்று சொல்வோம்
பின்னமா மற்ற வெல்லாம் பேசுவோம் பின்பால் சேதி
இன்னவள் பூர்வம் சொல்வேன் இலங்கையில் தீயின் வமிசம்
கன்னிகை யுதித்தா ளென்றோம் காவலன் சுதர்க ளுண்டாய்;

27. ஜாதகரின் தாயாருடன் கூடப்பிறந்தவர்களில் ஓர் ஆண் சகோதரம் மாத்திரம் நிலைத்திருப்பார். மற்றைச் சகோதரங்கள் எல்லாம் இரந்து விடுவர். இவர்களுடைய விஷயங்களைப் பற்றிப் பின்னால் சொல்லு

இன்றோம். தாயாருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் இலங்கையில் அக்கினி (வன்னியர்) குலத்தில் பெண்ணாகப் பிறந்தாள் என்று சொல்லுகிறோம். இவள் புருஷனையுங் குழந்தைகளையும் உடைய வளாகி ;

28. பவமது யில்லா ளாகிப் பரந்தனள் காலன் றூடு
அவனியோன் வரையப் பட்டு அனுகினு ளிக்கு லத்தில்
நவனியில் வறுமை காணுள் நாயகி சமயோ கத்தாள்
இவளுடைய பின்ஜன் மத்தை யியம்புவோம் தாயே யாங்கள்.

28. பாவம் ஒன்றும் இல்லாமல் இறந்து எமபட்டணத்திற் றுப் போய்ச் சேர்ந்து பிறகு பிரம தேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்தக் குலத்தில் வந்து பிறந்திருக்கின்றாள். இவள் பூமியில் கஷ்டத்தையும் தரித்திரத்தையும் அடைய மாட்டாள். இவள் சமமான யோகத்தை யுடைய வளாவாள். இவளுடைய மறு ஜன்மத்தை, பார்வதியம்மையே! நாங்கள் சொல்லுகின்றோம்.

29. அரங்கமா நகரம் கீழ்ப்பால் அணுகிய பேரூர் தன்னில்
வருங்கங்கை குலமே தோன்றி வறுமைக ளில்லா வாழ்வள்
திருமகன் தந்தை பூர்வம் செம்புவோ மினிமே லாக
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

29. ஜாதகருடைய தாயார் ஸ்ரீரங்கம் என்ற பெரிய பட்டணத் திற்குக் கிழக்குத் திக்கில் உள்ள ஒரு பெரிய ஊரில் வேளாளர் குலத்திற் பிறந்து கஷ்டங்களும் தரித்திரமும் இல்லாமல் வாழ்வாள். இனிமேல் ஜாதகரின் தகப்பனாருடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். அருமையான வேதங்களின் முடிவு என்ற உபநிஷத்துக்களில் ஆனந்த மாக விளங்குகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

30. சேதுவில் கங்கை சேயாய் ஜனித்துமே வணிபம் செய்து
துதிசெய்தோர்க் குதவி செய்து தேவியு மதலை யுண்டாய்
மாதவர் பத்தி கொண்டு மந்தனும் பவமில் லாமல்
சூதான காலன் பக்கல் சேர்ந்தவ னிவனே யம்மா.

30. ஜாதகரின் தகப்பனார் சேது ஸ்தலத்தில் வேளாளர் குலத்தில் ஆண் குழந்தையாகப் பிறந்து வளர்ந்து வியாபாரஞ் செய்து போற்றின வர்களுக்கும் ஏழைகளுக்கும் உதவிசெய்து மனைவியையும் மக்களையும் உடைய வராகி முனிவர்களிடத்திலும் பிராமணர்களிடத்திலும் பக்தியும் அன்பும் உடையவராகி யாதொரு பாவமும் இல்லாமல் இறந்து வஞ்சனையுள்ள எமனிடத்திற்குப் போய்ச் சேர்ந்தார், பார்வதியம்மையே!

31. பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தன னிக்கு லத்தில்
மறுஜன்மம் புகலக் கேண்மோ மலைநாட்டில் க்ஷத்திரியச் சேயாய்
உறைகுவான் வணிபம் செய்வன் உரைத்தது தப்பா தாகும்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

31. பிறகு ஜாதகருடைய தகப்பனார் பிரமதேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்தக் குலத்தில் வந்து பிறந்திருக்கின்றார். இவருடைய பின்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம், கேட்பீராக. மலை தேசத்தில் க்ஷத்திரிய குலத்தில் ஆண் குழந்தையாகப் பிறந்து வளர்ந்து வியாபாரஞ் செய்து ஜீவிப்பார். நாங்கள் சொல்லியது தவறிடாமல் நடக்கும். அருமையான வேதங்களின் முடிவு என்ற உபநிஷத்துக்களில் ஆனந்தமாக விளங்குகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

32. முப்பது ரண்டு ஆண்டில் மிதுனமா தத்தி லேதான்
செப்புவோம் தந்தை கண்டம் சீர்குரு தசையி லேதான்
ஒப்புடன் சிகி[1]பு சிப்பு உறைந்திடு மந்தக் காலம்
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழி குன்றாது.

32. ஜாதகருடைய தகப்பனார் ஜாதகருக்கு முப்பத்திரண்டாவது வயதில் ஆனி மாதத்தில் † இறந்து விடுவார். இக்காலத்தில் மேன்மையான குரு தசையில் கேது † புக்தி நடக்கும் என்று சொல்லுகின்றோம். சர்ப்பத்தைத் தன்னுடைய ஜடையில் தரித்துக் கொண்டிருக்கின்ற சிவபெருமானுடைய மனைவியாகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய அருள் வாக்குத் தவறிடாமல் நடக்கும்.

† குறிப்பு.—ஜாதகருக்கு முப்பத்தோராவது வயது முடிந்து முப்பத்திரண்டாவது வயது நடக்கின்ற காலத்தில் ஆனி மாதத்தில் ஒரு வருஷத்திற்கு 360 நாள் கொண்ட (சாவன) வருஷப் பிரகாரம் கணக்கிட்டால் குரு தசையில் சுக்கிர புக்தி நடக்கின்றது. ஆனால் 365¼ நாள் கொண்ட (ஸௌரமான) வருஷப் பிரகாரம் கணக்கிட்டால் குரு தசையில் கேது புக்தி நடக்கின்றது. இந்தப்பாடலில் கேது புக்தியே சொல்லி இருப்பதால் உடுதசாகணக்கிற்கு ஒரு வருஷத்திற்கு 365¼ நாள் கொண்ட வருஷத்தையே இந்த நாடியில் உபயோகப்படுத்தி இருக்கின்றது என்று ஏற்படுகின்றது. மேலும் பிதுர் லக்கினம் ஒன்பதாவது பாவமாகிய மீனம் ஆகும். துய்ய கேரளம் எட்டாவது பாவம் 14-ஆவது பாடல், கார்க்கேயர்ஜோதிடம் 674-ஆவது பாடல், 82-ஆவது ஜாதகம் 24-ஆவது பாடலின் கீழ் நாம் கொடுத்துள்ள வியாக்கியானம் இவைகள் பிரகாரம் குரு தன்தசையில் பிதாவுக்கு மாரகஞ் செய்ய அமைப்புடையவராகின்றார். பராசரஹோரை ஜாதக சந்திரிகை இவைகளின் பிரகாரம் சூரியன் பிதுர் மாரகாதிபதியாகின்றார். மீனத்திற்கு எட்டிற்குடைய சுக்கிரனுடன் சூரியன் இருப்பதால் துய்யகேரளம் எட்டாம் பாவம் 20-ஆவது பாடல், கார்க்கேயர்ஜோதிடம் 680-ஆவது பாடல் ஆகிய இவைகளின் பிரகாரம் சூரியன் பிதாவுக்கு மாரகராகின்றார். மேலும் சூரியன் மாரக ஸ்தானமாகிய மூன்றில் இருக்கின்றார். சூரியனுடைய வீட்டிலுள்ள கேது ஜாதகசந்திரிகை 12-ஆவது சுலோகப் பிரகாரம் சூரியனுடைய பலனைக் கொடுக்க வேண்டியவராகின்றார். ஆகையால் தன் புக்தியில் பிதாவை மாரகஞ் செய்ய அமைப்பு உடையவராகின்றார்.

[1] கேது

33. ஆருறு ஒன்று ஆண்டில் ஆனிமா தத்தில் தன்னில்
சூறுவோ மன்னே கண்டம் குருதசை மதிபு சிப்புத்
தீரமாய் நடக்கு மென்றேம் செப்பின மொழிகுன் றுது
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

33. ஜாதகருக்கு முப்பத்தேழாவது வயதில் ஆனிமாதத்தில் இவருடைய தாயார் இறந்து விடுவாள் என்று சொல்லுகின்றோம். இது குரு தசையில் சந்திரபுக்தியில் † நடக்கும் என்று உறுதியாய்ச் சொல்லுகிறோம். நாங்கள் சொல்லியவார்த்தைகள் தவருமல் நடக்கும். ஆறு பெரிய முகங்களை உடைய முருகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! கேட்பீராக.

† குறிப்பு.—மாதுர் மாரகம் :—ஜாதகருக்கு முப்பத்தாறுவது வயதில் ஆனி மாதத்துடன் குரு தசையில் சந்திர புக்தி முடிவு பெறுகிறது. மாதுர் லக்கினம் நான்காவது பாவமாகிய துலாம் ஆகும். துலா லக்கினத்திற்கு ஜாதகசந்திரிகை பராசரஹோரை பிரகாரம் குருவும் சூரியனும் மாரகாதி பதிகள் ஆகின்றார்கள். சந்திரன் மாரகாதிபதியாகிய சூரியனுடன் கூடி 1–8-க்குடைய சுக்கிரனுடன் கூடி எட்டில் இருப்பதால் ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகம், துய்யகேரளம் எட்டாம் பாவம் 20-ஆவது பாடல் பிரகாரம் குருதசையில் தன்புக்தியில் சந்திரன் மாதாவுக்கு மாரகஞ் செய்வார்.

34. ஜாதகன் மரண காலம் சாற்றுவோ மன்பான்நாலில்
மேதினில் தனுசு மாதம் விளம்புவோம் கண்டம் தானும்
ஓதுவே னிவன்பின் ஜன்மம் உத்தரம் துவாரை தன்னில்
மாதவர் குலமு திப்பன் மங்கையும் கேட்க லுற்றுள்.

34. ஜாதகருடைய மரண காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு ஐம்பத்துநான்காவது வயதில் மார்கழி மாதத்தில் † மரணம் நேரிடும். இவருடைய மறுஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். வடக்கில் துவாரகா புரியில் பிராமணர் குலத்தில் இவர் பிறப்பார். அதன் மேல் பார்வதியம்மையார் கேட்கின்றார்.

† குறிப்பு.—ஜாதகர் மாரக விஷயம்.—இவருக்கு ஐம்பத்து நான்காவது வயது நடக்கும்போது மார்கழி மாதத்தில் (அதாவது சுமார் வயது ஷெ 53-7 ல், பிராக்கெட் சனி தசையில் ராகு புக்தி நடக்கின்றது. கடக லக்கினத்திற்குப் பராசரஹோரை, ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் சனி சுக்கிரன் புதன் இவர்கள் மாரகர்களாகின்றார்கள். சனி லக்கினத்தைப் பார்க்கின்றார். பத்தையும் பார்க்கின்றார். இவருடைய தசை நான்காவது தசையாய் வருவ தால் ஜாதகாலங்காரம் 975-ஆவது பாடல், குமாரசாமீயம் மகாதசைப்படலம் 4-ஆவது பாடல் இவைகளின் பிரகாரம் சனி தன் தசையில் ஜாதகருக்கு மாரகத்தைச் செய்யும் அமைப்பு உடையவராகின்றார். இராகு எட்டில் மார காதிபதியாகிய சனியினுடைய வீட்டில் இருப்பதால் ஜாதகசந்திரிகை 12-ஆவது சுலோகம் 23-ஆவது சுலோகம் இவைகளின் பிரகாரம் ஜாதகருக்கு ராகுமார கத்தைத் தரும்அமைப்பு உடையவராகின்றார்.

35. இந்த தோர் ஜன்மம் தன்னில் இவன்செய்த புண்ணியம் என்ன
முந்தவே கூறு மென்ன மேலவர் பத்தி யாயும்
நொந்தபேர்க் குதவி யாயும் நிகழ்திருப் பணியும் செய்து
வந்ததால் மறுபி றப்பு வரைந்தனம் பிரம்ம சேயாய்.

35. இந்த ஜன்மத்தில் ஜாதகர் என்ன புண்ணியத்தைச் செய்தார், அதைச் சீக்கிரமாகச் சொல்லுவீர் என்று கேட்கப் பெரியோர் வானோர் தெய்வங்கள் இவர்களிடத்தில் பக்தியுடனும் அன்புடனும் ஏழைகளுக்கு உதவி செய்து கொண்டும், கோவில்களில் வேலைகளைச்செய்து கொண்டும் ஜாதகர் இருந்தால் மறு ஜன்மத்தில் பிராமணர் குலத்தில் ஆண் குழந்தை யாய்ப் பிறப்பார் என்று சொன்னோம்.

36. பாலகன் குடும்பச் சேதி பகருவோம் மினி மேலாகச்
சாலவே தந்தை பாகம் சாற்றுவோம் மூன்ற தாக
ஏலவே ஒன்பாண் டுக்குள் ளேகுகார் என்று சொல்வோம்
ஞாலம்மேல் மரண மட்டும் நற்றுணை ஒன்ருய் வாழ்வன்.

36. இனிமேல் ஜாதகருடைய குடும்பவிஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்ருேம். ஜாதகருக்கு ஒன்பது வயதிற்குள்ளே இவருடைய தகப்பனுர் பிதுரார்ஜிதத்தில் மூன்றில் ஒரு பங்கை அடைவார் என்று சொல்லுகின் ருேம். ஜாதகருடைய சகோதரர் இவருடைய மரண காலம் வரையிலும் இவருடன் ஒன்ருக விருந்து வாழ்வார்.

37. ஜனித்தநாள் முதலா மாக தசஆண்டும் பலன்கள் அற்பம்
குனித்திடும் செலவ னேகம் குறைமனம் பொருள வஸ்தை
கனமிலாக் குடும்பி யாகும் கலவர புத்தி யாகும்
வினையிலா அதன் மேலாக வித்தகன் மரண மட்டும் ;

37. ஜாதகர் பிறந்தது முதற் கொண்டு பத்து வருஷங்கள் வரை யிலும் பலாபலன்கள் அற்பமாக விருக்கும், செலவு அதிகமாக விருக்கும். மனத்தில் சஞ்சலங்கள் உண்டாகும். பொருளால் உபத்திரவம் உண்டாகும். மேன்மையில்லாத குடும்பஸ்தராக விருப்பார். கலவரமான புத்தி உண்டா கும். இதற்கு மேல் ஜாதகருடைய மரண காலம் வரையிலும் ;

38. பலவித யோகம் வாய்க்கும் பரரது அதிகம் நேரும்
நலமுளோர் வசிய மாகு மரசரால் வணிபம் நேரும்
குலவிடும் மாது தானும் குறித்தது தப்பா தாகும்
மலையிரை மகளே யாங்கள் வழுத்தின மொழிகுன் ருது.

38. ஜாதகருக்கு அநேக விதமான யோகங்கள் உண்டாகும். நிலங்கள் அதிகமாக வந்து சேரும். நல்லவர்கள் ஜாதகருக்கு வசியமாகவும் சிநேகிதர்களாகவும் ஆவார்கள். அரசர்களால் வியாபாரம் ஏற்படும். மனைவி யினுடைய சொத்துவந்து சேரும். நாங்கள் சொல்லியது தவருமல் நடக்கும். இமயமலைக்கு அரசனுகிய பர்வதராஜன் பெற்றெடுத்த மகளாகிய பார்வதி யம்மையே ! நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும்.

39. ஜனித்திடுங் காலம் தன்னில் சேய்தசை ஆண்டும் ஐந்தும்
குனித்திடுந் திங்க ளைந்தும் கூறுவோம் பலனை யாங்கள்
துணைவிருத்தி சேத மெய்தும் சுதனுக்குப் பிணியு மாகும்
கனமுள சுபங்கள் நேரும் கழறுவோம் பின்பால் சேதி.

39. ஜாதகர் பிறந்த காலத்தில் அங்காரக மகா தசையில் இருப்பு ஐந்து வருஷங்களும், ஐந்து மாதங்களும் ஆகும். இந்தக் காலத்திய பலாபலன் களை நாங்கள் சொல்லுகின்றோம். ஜாதகருக்குச் சகோதரங்கள் உண்டாகும். நஷ்டமும் ஏற்படும். ஜாதகருக்கு நோயும் உண்டாகும். குடும்பத்தில் சிறந்த சுபகாரியங்களும் நடக்கும். மற்ற விஷயங்களைப் பின்னால் சொல்லு கிறோம்.

## ஜாதகம் 96

1. சந்திரன் பொன்[1] ராகு[2] தேளில் சனிமேரு[3] பான்[4] மேடம்
புந்தி[5] குசன்[6] மீனம் புகர்[7] கேதுநந்தி[8] யினில்
உதையம் கடகம் உரைப்பீர் பலனை
இது ஆண்பால் ஜன்ம மதாயேற்று.

| | | | |
|---|---|---|---|
| அங்காரகன் புதன் | சூரியன் | சுக்கிரன் கேது | |
| | இராசி சக்கரம் | | லக்கினம் |
| | | | |
| சனி | சந்திரன் குரு ராகு | | |

அனுஷம் 4-ம் பாதம், சனிதசை வரு 3-4-0.

1. சந்திரனும் குருவும் ராகுவும் விருச்சிகத்திலும், சனி தனுசிலும், சூரியன் மேஷத்திலும், புதனும் அங்காரகனும் மீனத்திலும், சுக்கிரனும் கேதுவும் ரிஷபத்திலும், ஜன்ம லக்கினம் கடகமாகவும் இருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர்கள் என்று பார்வதியம்மையார் கேட்க, இந்த ஜாதகர் ஆண் குழந்தையாகப் பிறந்திருக்கின்றார் என்று முனிவர் சொல்லுகின்றார்.

**குறிப்பு.**—இந்த ராசிச் சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரகநிலை பொருத்தமுடையதாகும் :—ரிஷபத்தில் சூரியனும், கடகத்தில் சுக்கிரனும், சனியும், கேதுவும், துலாத்தில் புதனும், விருச்சிகத்தில் சந்திரனும், அங்காரகனும், மகரத்தில் குருவும் ராகுவும், ஆகும். குருவும், சனியும் வக்கிரகதியில் இருக்கின்றார்கள்.

2. ஏற்று மில்லம் கீழ்வாடை யெதிரி ல்லம் காணு தாம்
போற்று வேனினி மேல் பெருவயி றன்
தோற்று முத்தரம்ஈசன் குடிபாழா மேழில்
மாடனதின் உத்தரம் வாசமென்றோம் வடதென்பால்வீதி.

2. ஜாதகர் பிறந்தவீடு கீழண்டை வாடையில் இருக்கும். எதிரில் வீடு கிடையாது. துதிக்கப்படுகின்ற பெரிய வயிற்றையுடையவராகிய விநாயக் கடவுளின் கோயில் கிழக்குத் திக்கிலும், மேற்குத் திக்கில் பாழாகவிருக்கின்ற சிவபெருமானுடைய கோவிலும் இருக்கும். இதற்கு வடக்கில் ஒரு பேய் வாசஞ்செய்து கொண்டிருக்கும், என்று சொல்லுகின்றோம். பிறந்த வீதி வடக்குத் தெற்கு வீதியாகும்.

---

[1] குரு [2] விருச்சிகம் [3] தனுசு [4] சூரியன் [5] புதன் [6] அங்காரகன் [7] சுக்கிரன் [8] ரிஷபம்

3. வீதிசிறு வூர்மேவுமந்தாம் ஜனன முறும்
ஓதுஅன்னை தந்தை துணை உறுமனைவி
போதுசுதர் யோகமுன் பின்ஜன்மம் உரைப்போமிந்நூல்
ஆகமத்தால் ஆயந்துரைப் போம் யாம்.

3. ஜாதகர் பிறந்தவூர் ஒரு சிறிய கிராமமாகும். இவர் ஐந்தாவது கர்ப்பத்தில் பிறந்தவராவார். இவருடைய தாயார் தகப்பனார் சகோதரர்கள் மனைவி மக்கள் ஆகிய இவர்களுடைய யோகங்களையும், முன் ஜன்மம் பின்ஜன்மம் ஆகிய இவைகளையும் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுவோம். இவைகளை ஆகம சாஸ்திரங்களை ஆராய்ந்து நாங்கள் சொல்லுவோம்.

4. ஆகுமே தந்தை துணை அஷ்டமி யில் ஆணி ரண்டு
தோகையைந் தென்றுயாம் செப்புவோம் பாலகன்
உதிக்கா முன்செல்வார் உரைப் போமே தந்தை குணம்
துதி செய் தோர்க் கன்ப னெனச் செப்பும்.

4. ஜாதகரின் தகப்பனாருடைய சகோதரர்கள் எட்டுபேர்களில் சகோதரர்கள் இருவரும் சகோதரிகள் ஐந்து பேர்களும் உண்டு என்று நாங்கள் சொல்லுகிறோம். மிகுதியானவர்கள் ஜாதகர் பிறப்பதற்கு முன்பே இறந்து போய் விடுவார்கள். தகப்பனாருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லு கிறோம். இவர் தன்னைப் போற்றுகிறவர்களிடம் ஆசையாக விருப்பார் என்று சொல்லுகின்றோம்.

5. செப்புநிறம் மாலாம் தீரமிலா நெஞ்சம்
தப்புவழி செல்லான் தான்கல்வி ஒப்பிடுவான்.
அன்னைதந்தைக் கிஷ்டன் அவன்கிருஷி தான்செய்வன்
மன்னுள்ளன் ஈகையுள்ளான்.

5. ஜாதகருடைய தகப்பனார் மகாவிஷ்ணுவினுடைய நிறமாகிய நீலமேக வர்ணம் என்ற ஒரு விதமான நிறமுடைய தேகத்தையுடையவராவார். இவர் தைரியமில்லாத மனத்தையுடையவர். கெட்டவழியில் போகமாட்டார் நடந்து கொள்ளவுமாட்டார். சமமான வித்தையை உடையவர். தாய் தகப்பனாருக்கு இஷ்டமானவர். இவர் விவசாயத் தொழிலைச் செய்வார். பெருமை மானம் இவைகளை உடையவர். கொடுக்குந் தன்மை தயாள குணம் இவைகளை உடையவராவார்.

வேறு.

6. வானவர் பத்தி மிகும் மறுயில்லம் தான்வாழ் வன்
தேன்மொழியாம் ரோமம் குட்டம்செம் பொனிலான் ஊனமிலான்
செய்நன்றி மறவாதான் சேயிழைக்கு நேயமுளன்
துய்யமனம் சீலமிலான் தொட்டு.

6. ஜாதகருடைய தகப்பனுருக்குத் தேவர்களின் மேல் பக்தியும் அன்பும் அதிகப்படும். வேறெரு வீட்டில் இவர் வசிப்பார். இனிமை யான வார்த்தைகளை உபயோகப்படுத்துவார். உடம்பில் மயிர் குட்டையாக விருக்கும். தனமில்லாதவர். அவயவக்குறைவு ஒன்றும் இல்லாதவராவார். பிறர் தனக்குச் செய்த உபகாரத்தை மறக்கமாட்டார். மனைவிக்கு இஷ்ட மானவர். பரிசுத்தமான மனத்தை உடையவராவார். நல்ல நடவடிக்கை இல்லாதவர்.

7. இந்நெறி யுடையா னுக்கு இவனுமே ஜனிப்பா னுகும்
அன்னவன் துணையுமூன்று அணுகிடும் ஆண்பா லொன்று
கன்னிகை யிருவர் என்றேம் காளையின் சேதிகேளாய்
குன்னிய வார்த்தை சொல்வன் குளர்வார்த்தை கல்வி யில்லான்.

7. இப்படிப்பட்ட குணங்களை உடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய சகோதரர்கள் மூன்று பேர் ஆகும். இவர்களில் சகோதரன் ஒருவனும், சகோதரிகள் இரண்டுபேரும் ஆகும் என்று சொல்லு கின்றேம். இந்த சகோதரரின் விஷயங்களைச் சொல்லுகின்றேம். கேட்பீராக. இவர் குறைந்த வார்த்தைகளைச் சொல்லுவார். சரியாகப் பேசமுடியாமல் தடுமாறியும் பேசுவா ர். பிதற்றவும்செய்வா. படிப்பில்லா தவராவார்.

8. மால்நிறம் சீலமில்லான் மறுத்துரை அதிகம் கூறுன்
பால்பாக்கிய முடைய னுகும் பயிர்த்தொழில் செய்வா னுகும்
ஞாலம்மேல் துணைசொல் தட்டான் நாயகி கா[illegible] ாகும்
கோலமாம் சாப முள்ளான் கோவின்மேல் பிரிய மாவன்.

8. ஜாதகருடைய சகோதரன் மகாவிஷ்ணுவின் நிறமாகிய நீலமேகவர்ணம் என்ற ஒருவிதமான நிறத்தையுடைய தேகத்தையுடையவர். நல்ல நட வடிக்கை இல்லாதவர். தடுத்து அதிகமாகப் பேசமாட்டார். பால் பாக்யத்தை உடையவராவார். விவசாயத்தொழிலைச் செய்பவராவார். பூமியில் தன்னு டைய சகோதரனுடைய வார்த்தையைத் தவறி நடக்கமாட்டார். இவருக்கு மனைவி கிடையாது. கெட்ட சாபங்களை இவர் உடையவராவார். பசுக்களின் மேல் ஆசை உடையவர்.

9. என்னகா ரணத்தி னுலே இக்குணம் சொன்னீரையா
மன்னிய லாபம் தன்னில் மழைக்கோளும் கேது நிற்க
அன்னவன் குண மிவ்வாறு அதுவின்றிப் பூர்வம் தன்னில்
பின்னமாய் வினைகள் செய்தான் புக்கிற்று அந்தத் தோஷம்.

9. ஜாதகருடைய சகோதரனுக்கு எந்தக் காரணங்களினுல் இவ்விதமான குணுதிசயங்களைச் சொன்னீர். முனிவரே : என்று கேட்க பதில் சொல்லு கின்றுர். பெருமையுள்ள லாபம் என்று சொல்லப்பட்ட பதினேராவது பாவத்தில் மழைக்கோளாகிய சுக்கிரனும் கேதுவும் இருப்பதால் இவருடைய குணுதிசயங்கள் இவ்வாருகும். இந்தக் காரணமும் இவர் தன்னுடைய

முன் ஜன்மத்தில் கெட்ட செய்கைகளைச் செய்து பாவத்தை அடைந்திருக்கின்றார். அந்தப் பாபம் இந்த ஜன்மத்தில் இவரை வந்து அடைந்திருக்கின்றது.

குறிப்பு.—இங்கு மூத்த சகோதர ஸ்தானமாகிய பதினொன்றையும், அதற்கு அதிபதியாகிய சுக்கிரனைப் பற்றியும் பேசுவதால் இந்தச் சகோதரன் மூத்த சகோதரன் என்று தோற்றுகிறது. மூத்த சகோதரனுடைய லக்கினம் ரிஷபம் ஆகும். இதற்கு அதிபதியும் இதற்கு ஆறும் பாவத்திற்குடைய வருமான சுக்கிரன் கேதுவுடன் கூடி இருப்பதால் துய்யகேரளம் இலக்கின பாவம் பதினாறுவது பாடல் பிரகாரம் மூத்த சகோதரன் " தன்னுடல் சுக மில்லாமற் சஞ்சல மனத்த னாகி மின்னனாய் வியாதி யத்த னாமென விளம்ப லாமே ''. மேலும் மூத்த ஆண் சகோதரகாரகனாகிய குருவும் ராகுவுடனும் நீச சந்திரனுடனும் கூடி இருப்பதும் மூத்த சகோதரனுக்குத் தோஷத்தை உண்டு பண்ணக் கூடியதாகும். மேலும் வாக்குச் சம்பந்தமான அம்சங்கள் இரண்டாவது பாவமும், ஐந்தாவது பாவமும், இந்தப் பாவாதிபதிகளும் புதனும் ஆகிய இவைகள் ஆகும். ரிஷபத்திற்கு இரண்டாவது பாவத்தைச் சனி பார்க்கின்றார். ஐந்தாவது பாவத்தைச் சனியும் அங்காரகனும் பார்க்கின்றார்கள். புதனும் அங்காரகனுடன் கூடி நீசமாய் கேதுவால் பார்க்கப்பட்டு இருக்கின்றார். ஆகையால் வாக்கிற்கு அதிகத் தோஷம் இருக்கின்றது. ஆகையால் ஏழாவது பாடலில் இவர் குன்னிய வார்த்தை சொல்வார் என்றும் குளர் வார்த்தையை உடையவரென்றுஞ் சொல்லியிருக்கின்றது. இத்துடன் வித்தியா ஸ்தானமாகிய நான்கிற்கு உடைய சூரியன் ரிஷபத்திற்குப் பன்னிரண்டில் மறைந்திருப்பதால் இவருக்கு வித்தை கிடையாது என்று சொல்லி இருக்கின்றார். ஜாதகாலங்காரம் 477, 478, 479 ஆவது பாடல்களை பார்க்கவும். பின் வரும் 14-ஆ. வது பாடலிலிருந்து இந்தச் சகோதரன் மூத்தவன் என்று ஏற்படுகிறது.

10. வினையுதைப் புகலு மென்ன வேலங்காட தனி லின்னோன்
கனமுள சைவச் சேயாய்க் கலந்துமே வறுமை யின்றித்
தனையனும் வாழுந் நாளில் சங்கரன் வேடம் கொண்ட
கனமுள அதிதி மாலே கலந்தனன் மருயில் லத்தில்.

10. ஜாதகருடைய சகோதரர் முன் ஜன்மத்தில் செய்த பாவங்களைச் சொல்வீர் என்று கேட்க, இவர் வேலங்காட்டில் மேன்மையான சைவ குலத்தில் ஆணாகப் பிறந்து கஷ்டங்களும் தரித்திரமும் இல்லாமல் வாழ்கின்ற காலத்தில் சிவபெருமானைப் போலத் தோற்றமுள்ள சிறந்த ஒரு பரதேசி சாயந்திரத்தில் வேறொரு வீட்டில் வந்து தங்கினார்.

11. அதிதிபா லிவனும் சென்று அடாவடி வார்த்தை பேச
அதிதியும் மனவெறுப்பால் அறைகிறார் சாபம் தானும்
புதுஜன்மம் தாழ்வாய் தோன்றிப் புகல்வது குறைவதாயும்
அதிபதி காணு தாகி மாநிலம் நிந்தை யேற்பாய்.

11. இந்தப் பரதேசியிடம் ஜாதகருடைய சகோதரன் தன்னுடைய முன் ஜன்மத்தில் சென்று முரட்டுத்தனமாகவும் நியாயமில்லாமலும் வார்த்தைகளைச் சொல்ல, அந்தப் பரதேசி தன்னுடைய மனத்தில்

கஷ்டத்தை அடைந்து சாபத்தைக் கொடுத்தார். நீ மறு ஜன்மத்தில் தாழ்ந்த ஜாதியில் பிறந்து பேசுஞ் சக்தியைக் குறைவாய் அடைந்து, மனைவி இல்லாதவனுகிப் பூமியில் பெரிய நிந்தையையும் அபவாதத்தையும் அடைவாய் என்று அந்த அதிதி இவரைப் பார்த்துச் சொன்னர்.

12. இன்னமும் பலவாறு சொல்லி யேசினர் அதிதிதானும்
அன்னவர் சாபம்தானும் அணுகிற்று இவனுக்கேதான்
துன்னிய காலன் னுடு சேர்ந்துமே பிரமன் லக்கம்
தன்னிலே வந்தா னென்றேம் சார்ந்தது அதிதி சாபம்.

12. அந்த அதிதி இன்னும் பலவிதமாகச் சாபத்தைக் கொடுத்து விட்டுப் போய்விட்டார். இவருடைய சாபம் ஜாதகருடைய சகோதரரை முன் ஜன்மத்தில் வந்து அடைந்தது. இவர் இறந்து எமபட்டணத்திற்குப் போய் பிரமதேவனுடைய பிரமலிபியுடன் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்தார் என்று சொல்லுகிறேம். இவரை அந்த அதிதியினுடைய சாபம் இந்த ஜன்மத்திலும் வந்து அடைந்தது.

13. சுகமில்லா வாழ்வா னுகும் செப்புவாரதற்குச் சாந்தி
தகமையாய் வேலன்வாழும் தோகைமா மலைக்குமேதான்
வகையுடன் மூவேழ்கார்த்தி மந்தனும் செல்வானுகில்.
பகையது விலகி யேதான் பாலகன் சுகமே யாகும்.

13. ஜாதகருடைய சகோதரர் சுகமில்லாதவராக விருந்து வாழ்வார். இதற்கு ஒரு சாந்தியைச் சொல்லுகின்றேர். மயில்களுள்ள பெரிய மலையில் உள்ள முருகக்கடவுளின் ஸ்தலத்திற்கு (பழனியிலுள்ள முருகர் ஸ்தலத்திற்கு) இவர் இருபத்தொரு கிருத்திகைதினம் போய்த் தரிசனஞ் செய்தால் பாவங்கள் நீங்கி இவர் சௌக்கியத்தை அடைவார்.

14. மிதுனமும் கடைநாள் தன்னில் மேவுவா னென்று சொல்வோம்
அதிபதி பெண்பால் சேதி வரைகிறேம் பின்பா கத்தில்
இதற்குப்பின் ஆண்பால் ஒன்று எய்திடும் கன்னி அவ்வாறு
அதுவுமே தீர்க்க மெய்து மம்பிகை யாளே கேளாய்.

14. ஜாதகருடைய சகோதரர் மிதுனராசியில் கடைநாள் என்று ரேவதி நட்சத்திரத்திற் பிறந்தவராவார் என்று சொல்லுகிறேம். சகோதரியின் விஷயத்தைப்பற்றிப் பின் பாகமாகிய இரண்டாவது பாகத்திற் சொல்லுகின்றேம். இதற்குப் பின்னல் ஒரு சகோதரரும் ஒரு சகோதரியும் உண்டாகும். இவர்கள் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள். பார்வதியம்மையே ! கேட்பீராக.

**குறிப்பு.**—ஜாதகருடைய சகோதரர்களின் தொகையைப்பற்றி ஏழாவது பாடலைப் பார்க்கவும்.

15. உதித்தவன் குணத்தைச் சொல்வே னுண்மையிலா மனத்தா னாகும்]
சதியுள மனத்தா னாகும் சாதிப்பான் சிலது சங்கை
அதிகமாய் வார்த்தை சொல்வன் அறையுமுன் கோபியாவன்
துதிசெய்தோர்க்கன்ப னுவன் சொல்லது யிரண்டு முண்டு.

15. ஜாதகருடைய குண நிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் உண்மையான மனத்தை யுடையவரல்லர்; அஃதாவது உண்மையாக நடந்து கொள்ளமாட்டார். கெடுதியைச் செய்கின்ற கெட்ட குணமுள்ளதுமான மனத்தையுடையவராவார். சில விஷயங்களை பற்றித் தான் சொல்லுவதே சரியான தென்று வாதாடி வெல்லுவார். அதிகமாகப் பேசுவார். பேசுவதற்கு முன்னே கோபத்தை யுடையவராவார். தன்னைப் பற்றிப் புகழ்ந்து பேசுகிறவர்களுக்குச் சினேகிதமாக விருப்பார். இரண்டு விதமான வார்த்தைகளை அஃதாவது உண்மையையும் பொய்யையும் கலந்து பேசுவார்.

16. நடையது துருசு முள்ளான் நாதனுா பத்தி கொள்வன்
படையினில் செல்லா னுகும் பாரினுல் சீவிப்பானும்
கடன்கொள்வன் நிவிர்த்தி செய்வன் காலிகள் விருத்தி யுள்ளான்
உடன்துணை தனைகாப் பானுகும் உணவுகளதிகம் கொள்வன்.

16. ஜாதகருடைய நடவடிக்கை கெட்டதாக விருக்கும். கடவுளின் மேல் அன்பும் பக்தியும் உடையவர். சண்டைக்குப் போகமாட்டார். நிலத்தின் மூலமாக ஜீவனஞ் செய்வார். கடனை வாங்குவார். அதைக் கொடுத்து விடுவார். கால்நடைகள் இவருக்கு விருத்தியாகும். இவர் தன்னுடைய சகோதரர்களைக் காப்பாற்றுவார். அதிகமான சாப்பாடடைச் சாப்பிடுவார்.

17. பாரியு மீரெட் டாண்டில் பகரன்னை வர்க்கம் தன்னில்
கூறுவோம் கீழ்ப்பா லாகக் கோதையு மிருநிறத்தாள்
பாரிய புத்தி யுண்டு பஞ்சைமே லிரக்க மாவள்
காரிழை யோக சாலி கணவனுக் கினிய ளாகும்.

17. ஜாதகருக்கு மனைவி பதினாருவது * வயதில் தன்னுடைய தாயாரின் பந்துக்களிலிருந்தும் கிழக்குத் திக்கிலிருந்தும் வந்து நேரிடுவாள் என்று சொல்லுகிறேம். இவள் இரண்டு நிறங்கள் கலந்துள்ள மாநிறமுள்ள தேகத்தை உடையவளாவள். பெரிய புத்தியை யுடையவள். எழைகளிடத்தில் இரக்கமாகவும், பட்சமாகவும் இருப்பாள். இவள் யோக முடையவளாவாள். தன்னுடைய புருஷனுக்கு இஷ்டமானவளாவாள்.

* **குறிப்பு —விவாகம்.**—ஜாதகருக்கு வயது ஷ 15–0–0 முதல் ஷ 16–0–0 முடியும் வரையிலும் புதன் தசையில் ராகு குரு இவர்களுடைய புக்திகள் நடக்கின்றன. புதன் பத்திற்குடைய அங்காரகனுடன் கூடி ஒன்பதில் இருப்பதால் ஜாதக பாரிஜாதம் 14-ஆவது அத்தியாயம் 29-ஆவது சுலோகப் பிரகாரம் தன் தசையில் விவாகஞ் செய்து வைக்க

அமைப்பு உடையவராகின்றார். ராகு ஏழைப் பார்க்கின்றார். ஒன்பதிற் குடைய குருவுடன் கூடி சுக்கிரனைப் பார்க்கின்றார். லக்கினாதிபதியுடன் கூடி யுமிருக்கின்றார். இவர் போககாரர். ஆகையால் ஜாதகசந்திரிகை 12-ஆவது சுலோகம், ஜாதக பாரிஜாதம் 14-ஆவது அத்தியாயம் 2 -ஆவது சுலோகப் பிரகாரம் தன் புக்தியில் விவாகஞ் செய்ய அமைப்பு உள்ளவராகின்றார்.

18. சுதர்களும் நவமே தோன்றும் சோர்வுறும் சிலவே யென்றோம்
சதமுட ணண்பால் ரண்டு தையலர் மூன்று தீர்க்கம்
இதுவித முனிவர் கூற யியல் ஜயமுனிவர் சொல்வர்
விதியவன் யேழெட் டோனு யிருமூன்றில் தன்னில் நிற்க.

18. ஜாதகருக்கு ஒன்பது குழந்தைகள் பிறக்கும். இவற்றுள் சில குழந்தைகள் இறந்துவிடும் என்று சொல்லுகின்றோம். இரண்டு ஆண் குழந்தைகளும் மூன்று பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளை உடைபவர்களாக விருப்பார்கள். இவ்விதமாக முனிவர் சொல்ல, ஜயமுனிவர் தடுத்துச் சொல்லுகின்றார். விதியவனாகிய சனி ஏழாவது பாவத்திற்கும் எட்டாவது பாவத்திற்கும் அதிபதியாகி ஆறுவது பாவத்தில் இருப்பதால்;

19. எப்படி மனைவி வாய்க்கும் இவனுக்கு மூன்றுண் டிற்குள்
செப்புவோம் கண்டம் தானும் செம்பொன்னு 1 மஞ்சில நிற்க
ஒப்புட னிரவி 2 பத்தில் உச்சனு யிருப்ப தாலே
மெய்ப்புடன் தாய் தந்தைக் கேவித்தகன் கருமம் செய்வன்.

19. ஜாதகருக்கு எவ்விதமாக மனைவி வந்து நேரிடுவாள்? ஜாதகருக்கு மூன்று வயதிற்குள்ளேயே கண்டத்தை, அஃதாவது மரணத்தைச் சொல்லுவோம் என்றார். அதற்கு முனிவர் பதில் சொல்லு கின்றார். குரு ஐந்தாவது பாவத்தில் இருப்பதாலும், சூரியன் பத்தா வது பாவத்தில் உச்சத்தில் இருப்பதாலும் ஜாதகர் உண்மையாகத் தன்னுடைய தாயாருக்கும் தகப்பனருக்கும் ஈமச்சடங்குகளைச் செய்வார்.

20. ஆகையால் வயது தீர்க்கம அன்னையின் குணத்தைக் கேளாய்ப்
பாகமாய்ப் பேச வல்லாள் பரஉப காரி யாகும்
தோகையு மிருநி றத்தாள் சுந்தரி சமயோ கத்தாள்
பாகமாய்த் துணைஆண் ஒன்று பாவையும் மூன்று என்றோம்.

20. ஆகையால் ஜாதகர் நீண்ட ஆயுளை உடையவராவார். இவருடைய தாயாரின் குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். கேட்பீராக. இவள் பக்குவமாகவும் சாமர்த்தியமாகவும் பேசுகின்ற திறமை யுடையவள். பிறருக்கு உபகாரத்தைச் செய்வாள். இவள் சமமானதும் நடுத்தரமானதுமான யோகத்தை உடையவள். இவளுடன் கூடப்பிறந் தவர்களில் சகோதரன் ஒருவன் என்றும், சகோதரிகள் மூன்று என்றும் சொல்லுகின்றோம்.

---

[1] குரு [2] சூரியன்

21. இல்லமும் கீழ்ப்பாலாகு மியம்புவோ மாமன் சேதி
நல்லவ ளுகி வாழ்வன் நற்கல்வி யூக சாலி
புல்குவான் நவநூல் தன்னை புராதனம் விருத்தி செய்வன்
அல்லல்கள் மத்தி யத்தில் அடைவனுங் கிருஷி செய்வன்.

21. ஜாதகருடைய தாயாரின் வீடு கிழக்குத் திக்கில் இருக்கும். ஜாதகரின் அம்மானுடைய விஷயங்களைப் பற்றிச் சொல்லுகிறோம். இவர் நல்லவராக விருந்து வாழ்வார். நல்ல வித்தையை யுடையவர். நுட்பமான அறிவும் புத்தியும் உடையவர். புதிய நூல்களை உண்டாக்குவார். பூர்வீகமான பழைய சொத்துக்களை விருத்தியாக்குவார். மத்திய வயதில் கஷ்டங்களை அடைவார். விவசாயத்தொழிலைச் செய்வார்.

22. தனமது அதிக மில்லான் தரணியோர் வசியம் கொள்வன்
இனமதற்க் கினிய ளுகு மெய்திடும் மூலச் சூடு
கனமான புத்தி யுண்டு கட்டுவார்த் தைகளும் சொல்வன்
அனையவே மனைவி ஒன்று அதுவின்றிப் பலபெண்மோகன்.

22. ஜாதகரின் அம்மான் அதிகப் பணம் இல்லாதவர். பூமியிலுள்ளவர்களைத் தன்பக்கமாக விருக்கும்படியாய்ச் செய்து கொள்ளுவார். பந்துக்களுக்குப் பிரியமுள்ளவராவார். இவருக்கு மூலச்சூட்டு ரோகம் உண்டு. பெரிய மேன்மையான புத்தியை உடையவர். பொய் வார்த்தைகளையும் புனைந்த வார்த்தைகளையுஞ் சொல்லுவார். இவருக்கு மனைவி ஒருத்தியே ஆகும். இதுவுமில்லாமல் இவர் அநேக ஸ்திரீகளின் மேல் காம ஆசையை யுடையவர்.

23. சுதர்களு மாண்பால் ரண்டு தோகையு நான்கு என்றோம்
அதிபன்பின் சுகமாய் வாழ்வன் மாதுரு பூர்வம் சொல்வேன்
பதிக்குயர் பரங்குன்றத்தில் பாவையுமிக்கு லத்தில்
நிதிமிக உடையா னுக்கு நேர்ந்தன ளென்று சொல்வோம்.

23. ஜாதகரின் அம்மானுக்கு இரண்டு ஆண் குழந்தைகளும், நான்கு பெண்குழந்தைகளும் உண்டு என்று சொல்லுகிறோம். இவர் சௌக்கியமாக விருந்து வாழ்வார். ஜாதகரின் தாயாருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். இடங்களில் சிறந்ததாகிய திருப்பரங்குன்றம் என்ற க்ஷேத்திரத்தில இவள் இந்த ஜன்மத்திற் பிறந்த ஜாதியிலேயே அதிகச் செல்வமுடையவருக்குப் பிறந்தாள் என்று சொல்லுகிறோம்.

24. சுகமுடன் வாழுந் நாளில் தோகையும் விரத மின்றி
அதிதிகள் விருப்ப மின்றி அந்தகன் பக்கல் சென்று
ஜகபதி வரையப் பட்டு ஜெனித்தன ளிந்த மாது
தகைமையாய் யோகம் காணுள் தனம்பணி அதிக மில்லாள்.

24. ஜாதகருடைய தாயார் சுகமாக வாழுகின்ற காலத்தில் விரதங்களை அனுஷ்டிக்காமலும் பரதேசிகளின் மேல் அன்பும் ஆசையும் இல்லாமலும் இருந்து இறந்து எமனிடத்திற்குப் போய்ப் பிரம

தேவனுல் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இவள் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருள். இவளுக்குத் தகுதியான யோகம் கிடையாது. பணமும் ஆடை ஆபரணங்களும் இவளுக்கு அதிகமாகக் கிடையா.

25. மறு ஜன்மம் விரிஞ்சி தன்னில் மாதுவும் கங்கை சேயாய்
உரை குவாள் வறுமை யின்றி உத்தமி வாழ்வா ளாகும்
பெரும்தந்தை பூர்வம் சொல்வேன் பிருதிவி தன்னி லேதான்
தரிதொழில் செங்குந்த வமிசம் ஜனித்தன னிவனே யென்ருேம்.

25. ஜாதகரின் தாயார் தன்னுடைய பின்ஜன்மத்தில் விருஞ்சி புறத்தில் வேளாளர் குலத்தில் பெண் குழந்தையாகப் பிறப்பாள். கஷ்டங்களும் தரித்திரமும் இல்லாமல் வாழ்பவளாவாள். ஜாதகரின் சொந்தத் தகப்பனுருடைய முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின் றேன். இவர் பிருதிவி ஸ்தலமாகிய காஞ்சீபுரத்தில நெசவுத் தொழிலேச் செய்கின்ற செங்குந்தர் ஜாதி என்கிற கைக்கோளர் வம்சத்தில் பிறந்தார் என்று சொல்லுகின்ருேம்.

26. சுகதுக்க முடைய னுகிச் சுந்திரன் மரண மெய்தி
ஜகபதி வரையப்பட்டுஜனித்த னிவனே யென்ருேம்
தகமையாய்ப் பூர்வ யோகம் தரித்திர மத்தி யத்தில்
வகையுடன் பின்னுல் யோகம் வரைகிருே மிவனுக் கேதான்.

26. ஜாதகருடைய தகப்பனர் முன் ஜன்மத்தில் சுகங்களையும் கஷ்டங்களையும் அனுபவித்துப் பிறகு இறந்து பிரமதேவனுல் பிரமலிபி யுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருர் என்று சொல்லுகின்ருேம். இவருக்கு முதலில் தகுதியான யோகமுண்டு. மத்திய வயதில் தரித்திரம் உண்டு. பிந்திய, அஃதாவது கடைசிக்காலத்தில் இவ ருக்கு யோகம் உண்டு என்று சொல்லுகின்ருேம்.

27. பின்ஜன்மம் ஆழி தன்னில் பிறப்பனும் வைசியச் சேயாய்ப்
பொன்பொரு ளுடைய னுகிப் புகழான செட்டுச் செய்வன்
இன்னவன் பூர்வம் சொல்வேன் எழில்பாண்டி நாட்டி லேதான்
பின்குல மதிலுதித்துப் பூமியா ளரசர் பக்கல் ;

27. ஜாதகருடைய தகப்பனர் தன்னுடைய மறு ஜன்மத்தில் சீர்காழியில் வைசியருடைய குலமதில் ஆண் குழந்தையாகப் பிறப்பார் செல்வமும் சொத்தும் உடையவராகிப் பெருமையான வியாபாரஞ் செய் வார். இனிமேல் ஜாதகருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின் றேன். அழகிய பாண்டிய தேசத்தில் தாழ்ந்த குலத்தில் பிறந்து பூமியை யாளுகின்ற அரசர்களிடத்தில், அஃதாவது இராஜாங்கத்தில் ;

28. அணுகியே ஜீவித் தேதான் அந்தகன் பக்கல் சென்று
கனமுள பிரமன் லக்கம் கலப்பனும் தீயின் வர்க்கம்
துணிவுடன் யோகம் சொல்வேன் ஜனித்தநாள் முதலா மாக
அணுகிய நாலாண்டுக்குள் அற்பமாம் யோகம் தானே.

**28.** தொழிலைச் செய்து வாழ்ந்து இறந்து எமனிடத்திற்குப்போய் மேன்மையான பிரமதேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு அக்கினி குலத்தில் ஜாதகர் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றார். (வன்னியர்) இவரது யோகத்தைப்பற்றி நான் தைரியமாகச் சொல்லுகிறேன். ஜாதகர்பிறந்த காலம் முதல் நான்கு வயதிற்குள்ளே யோகம் அற்பமாக விருக்கும்.

**29.** தானியப் பலித நஷ்டம் தனமது செலவு முண்டு
கன்னமா மனமே யெய்தும் உலகநிந் தைகளு மேற்பன்
பாண்மையாய் அதன்மே லாகப் பாரது பலித மெய்தும்
தேன்மொழி மாது சேர்வன் தீரமா நெஞ்சு மெய்தும்.

**29.** தானியங்களின் பலிதம் குறைவாகி நஷ்டத்தை உண்டு பண்ணும். பணம் அதிகமாகச் செலவாகும். களவு செய்யும் மனத்தையே உடையவர். உலகத்தாருடைய அபவாதங்கள் வந்து நேரும். இதற்கு மேல் நிலங்கள் நல்ல பலனைக் கொடுக்கும். ஜாதகருக்கு இனிமையான வார்த்தைகளையுடைய மனைவி வந்து சேருவாள். இவருக்குத் தைரியமான மனம் உண்டு.

* **குறிப்பு.**—இந்தப் பாடலில் குடும்பத்தின் பலனையும் ஜாதகருடைய குடும்பத்தாரின் குணங்களையும் ஜாதகரின் பலனையும் கலந்து சொல்லி இருக்கின்றார்.

**30.** தாதைபோல் வாழ்வா னாகும் சாற்றுவீ ரவன்கு ணத்தை
மேதினில் நல்லோனவன் வீண்வம்பு 'செல்லா னாகும்
சூதிலான் பொறுமை சாலி சொல்லது தவறா னாகும்
வேதனை யொருவர்க் கெண்ணான் விளைபுலம் விருத்தி செய்வன்.

**30.** ஜாதகர் தன்னுடைய பிதுர் வழிப்பாட்டனாரைப் போல வாழ்பவராவார் என்று சொல்ல, பாட்டனாருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுவீர் என்று கேட்க, அவர் பூமியில் நல்லவராக விருப்பார். வீணான சண்டைக்குப் போகமாட்டார். கள்ளம் கபடு வஞ்சனை இவைகள் இல்லாதவராவர். பொறுமையாகவும் சாந்தமாகவும் இருப்பார். தான் சொல்லிய வார்த்தைகளுக்குத் தவறாமல் நடந்து கொள்ளுந் தன்மையுடையவர். யாருக்கும் கெடுதியை நினைக்கமாட்டார். செய்கால் நிலங்களைப் பயிரிட்டுத் தான்யங்களை விருத்தியாக்குவார் என்று முனிவர் சொல்லுகின்றார்.

**31.** கூவல்கள் மூன்று செய்வன் குலத்துளோர் மதிக்க வாழ்வன்
தாவின பேரைக் காப்பன் தர்மமாம் குணத்தா னாகும்
மேவிடு மந்தி யத்தில் மேகம்போல் படரு மென்றேம்
நோவது காணா னாகும் நேருங்கா லங்கள் சொல்வாய்.

**31.** இவர் மூன்று கிணறுகளைச் செய்வார். தன்னுடைய பந்துக்கள் தன்னை மதிக்கும்படியான அந்தஸ்திலிருந்து வாழ்வார். தன்னை வந்து அண்டினபேர்களைக் காப்பாற்றுவார். தருமஞ் செய்கின்ற குணத்தையுடையவ

ராவார். இவருடைய தேகத்தில் மேகரோகத்தைப் போலக் கடைசிக் காலத்தில் காரகநோய் படரும் என்று சொல்லுகின்றோம். ஆனால் நோயானது வெளிக்குத் தெரியாததாக விருக்கும். இவ்விதமாக முனிவர் சொல்ல, எந்தக் காலத்தில் இந்த ரோகம் உண்டாகும் என்பதைச் சொல்லுவீராக.

32. ஜாதக னுதித்த பின்பு சார்ந்திடு மந்த ரோகம்
ஏதுகா ரணத்தி னாலே யிவன்பூர்வ வினையா மென்றோம்
பாதகம் தனையே சொல்வாய் பட்சியா மிக் குலத்தில்
நீதியா யுதித்து யின்னோன் நேமியில் வாழுந்நாளில்;

32. ஜாதகர் பிறந்த பிறகு இந்த ரோகம் உண்டாகும். இந்த நோய் எந்தக் காரணத்தினால் நேரிடும் என்று கேட்க, இது முன் ஜன்மத்திய பாபத்தினால் நேரிடும் என்று சொல்லுகின்றோம். அந்தப் பாவத்தைச் சொல்லுவீர் என்று கேட்க, இவர் பட்சி ஸ்தலம் என்ற திருக்கழுக்குன்றத்தில் இப்பொழுது பிறந்திருக்கும் ஜாதியிலேயே நியாய மாகப் பிறந்து பூமியில் வாழுகின்ற காலத்தில்.

33. வினையதை புகலக் கேண்மோ மார்ஜாலம் கொடுமை செய்ய,
இனையான்வெந் நீரைத் தூற்றப் பொங்கிற்றுத் தேக மெல்லாம்
கனமுட னந்தத் தோஷம் காதலன் தன்னைப் பற்றிச்
சினமுட னிச்ஜன் மத்தில் சேர்ந்தது அந்தந் தன்னில்

33. இவருக்கு வந்து நேர்ந்த பாவத்தைச் சொல்லுகின்றோம் கேட்பீராக. மார்ஜாலம், அஃதாவது ஒரு பூனை தனக்குக் கெடுதியைச் செய்ய, இவர் கொதிக்கின்ற ஜலத்தை அதன்மேல் ஊற்ற, அதனுடைய தேகமெல்லாம் வெந்து போய்விட்டது. அந்தப் பெரிய தோஷம் இவரை முன் ஜன்மத்திலேயே அடைந்து இந்த ஜன்மத்தில்கூட இவரைக் கடைசிக் காலத்தில் வலிவுடன் வந்து அடைந்தது.

34. அதற்கு ஓர்சாந்தி சொல்வாய் அறையவே மாட்டோம் யாங்கள்
அதிபன்பின் ஜன்மம் சொல்வேன் மாயூரம் தன்னி லேதான்
விதவிதச் செட்டுச் செய்யும் வைசியர் குலமு திப்பான்
அதுகாலம் நிரியா ணங்க ளியம்புவீர் விவர மாக.

34. அதற்காக ஒரு சாந்தியைச் சொல்லுவீர் என்று கேட்க, அதற்குச் சாந்தியை நாங்கள் சொல்லமாட்டோம். இவருடைய மறு ஜன் மத்தைப்பற்றிச் சொல்லுகிறேன். மாயவரத்தில் அநேக விதமான வியாபா ரங்களைச் செய்கின்ற வைசியருடைய குலத்தில் பிறப்பார். இவருக்கு எப்போது மரணம் நேரிடுமென்பதை விவரமாகச் சொல்லுவீராக.

35. இருநான்கு ஆண்டில் மாசி யேகுவான் தாதை தாமும்
மறுஆண்டில் தந்தை அன்னை மாளுவா ளென்று சொல்வோம்
ஆறஞ்சு ஆண்டு தன்னில் ஆனிமா தத்தி லேதான்
கூறுவோம் தந்தை கண்டம் குறித்தது தப்பா தாகும்.

35. ஜாதகருக்கு எட்டாவது வயதில் மாசி மாதத்தில் *பிதுர்வழிப் பாட்டனார் இறந்துபோவார். இதற்கு அடுத்த வருஷத்தில் தகப்பனருடைய தாயாராகிய பிதுர்வழி பாட்டியார்* இறந்துபோவாள் என்று சொல்லு கிறோம். ஜாதகருக்குப் முப்பதாவது வயதில்* ஆனி மாதத்தில் இவருடைய தகப்பனார் இறந்து போவார் என்று சொல்லுகிறோம். நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும்.

***குறிப்பு.—பிதுர் பாட்டன் மாரகம் :—**பிதுர் லக்கினம் மீனம். இதற்குப் பிதுர் லக்கினம் விருச்சிகம். விருச்சிக லக்கினத்திற்குப் பராசரஹோரை ஜாதக சந்திரிகை இவைகளின் பிரகாரம் அங்காரகன் புதன் சுக்கிரன் சனி இவர்கள் மாரகாதிபதிகள் ஆகும். விருச்சிகத்திற்கு மாரகன் ஸ்தானங்களாகிய எட்டு பதினொன்றிற்குடையவராகிய புதன் லக்னுதிபதியாகிய அங்காரகனுடன்கூடி ஐந்தில் நீசமாகி இருக்கின்றார். ஜாதகருக்கு வயது ஹு 7-0-0 முதல் ஹு 8-0-0 முடியும் வரையில் புத தசையில் சுக்கிர புக்தி நடக்கின்றது. துய்யகேரளம் எட்டாம் பாவம் 20-ஆவது பாடல் பிரகாரம் புத தசை பிதுர் பாட்டனுக்கு மாரகஞ்செய்யும். சுக்கிரன் விருச்சிகத்திற்கு 7-12-க்குடையவராய் ஏழில் இருப்பதாலும் பிதுர் பாட்டன் காரகனுகிய ராகுவைப் பார்ப்பதாலும் சுக்கிரன் தன் புக்தியில் பாட்டனுருக்கு மாரகஞ்செய்ய அமைப்பு உடையவ ராகின்றார்.

**பிதுர்பாட்டி மாரகம்.—**பிதுர் லக்கினம் மீனம். இதற்கு மாதுர் லக்கினம் மிதுனம். மிதுனத்திற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் அங்காரகன் சூரியன் குரு இவர்கள் மாரகாதிபதிகள் ஆகும். மறு வருஷத்தில்கூட புத தசையில் சுக்கிர புக்தியே நடக்கின்றது. புதன் மாரகாதிபதியாகிய அங்காரகனுடன்கூடி இருப்பதாலும் பிதுர் பாட்டி பாவாதி பதியாய் இருப்பதாலும் 82-ஆவது நம்பர் ஜாதகம் 24-ஆவது பாடலின் கீழ்ச் சொல்லியுள்ள வியாக்கியானம், ஜாதகசந்திரிகை 12-ஆவது சுலோகப் பிரகாரம் புதன் பிதுர்பாட்டிக்கு மாரகஞ்செய்ய அமைப்பு உடையவரா கின்றார். சுக்கிரன் மிதுனத்திற்குப் பன்னிரண்டிற்குடையவராகி பன்னி ரண்டில் இருப்பதால் தன் புக்தியில் மாரகஞ்செய்ய அமைப்பு உடையவ ராகின்றார்.

**பிதுர் மாரகம்.—**ஜாதகருக்கு வயது வருஷம் 29-0-0 முதல் வருஷம் 30-0-0 முடியும் வரையிலும் சுக்கிரதசையில் சுக்கிர புக்தி நடக் கின்றது. பிதுர் லக்கினம் மீனம். இதற்கு ஜாதகசந்திரிகை பராசரஹோரை இவைகளின் பிரகாரம் சனி புதன் சுக்கிரன் சூரியன் இவர்கள் மாரகாதிபதி கள் ஆவார்கள். சுக்கிரன் மீனத்திற்கு மாரகஸ்தானங்களாகிய மூன்று எட்டிற்குடையவராகி மூன்றில் இருந்துகொண்டு பிதுர் லக்கினதிபதியாகிய குருவைப் பார்ப்பதால் துய்யகேரளம் எட்டாம் பாவம் 14-ஆவது பாடல் பிரகாரம் சுக்கிரன் தன்னுடைய தசா புத்தியில் பிதாவை மாரகஞ்செய்ய அமைப்பு உடையவராகிறார்.

36. நாற்பது ஆண்டி லேதான் நற்றனுர் மாதம் தன்னில்
கூறுவோ மன்னே கண்டம் குழவிக்கு எழுப தாண்டில்
ஏற்கவே தேளின் மாதம் யெய்திடும் மார கங்கள்
தீர்ப்பாக முனிவர் கூற தேவியும் கேட்க லுற்றாள்.

**36.** ஜாதகருக்கு நாற்பதாவது வயதில் மார்கழி மாதத்தில் இவருடைய நல்ல தாயார் இறந்துபோவாள் என்று சொல்லுகிறேம். ஜாதகருக்கு எழுபதாவது வயதில் கார்த்திகை மாதத்தில் மரணம் நேரிடும். இவ்விதம் தீர்மானத்துடன் முடிவாக முனிவர் சொல்லவே, பார்வதியம்மையார் கேட்கின்ருர்.

**குறிப்பு.**—தாயார் மாரகம் :—ஜாதகருக்கு வயது வருஷம் 39–0–0 முதல் வருஷம் 40–0–0 முடியும் வரையிலும் சுக்கிர தசையில் குரு புக்தி நடக்கின்றது. மாதுர் லக்கினமாகிய துலாத்திற்குப் பராசரஹோரை, ஜாதக சந்திரிகை இவைகளின் பிரகாரம் சூரியனும் குருவும் மாரகாதிபதிகள் ஆவர். சுக்கிரன் துலாத்திற்கு மாரகஸ்தானமாகிய எட்டிற்குடையவராய் எட்டிலேயே இருக்கின்ருர். இவர் மாதுர் பாவாதிபதியாகின்ருர். மேலும் மாதுர் காரகனுகிய சந்திரனைப் பார்த்திருக்கின்ருர். துய்யகேரளம் எட்டாம் பாவம் 14-ஆவது பாடல் பிரகாரமும் 82-ஆவது நெம்பர் ஜாதகம் 24-ஆவது பாடலின் கீழுள்ள வியாக்கியானப் பிரகாரமும் மாதுருக்குத் தன் தசையில் மாரகஞ் செய்ய அமைப்புள்ளவராகின்ருர். குரு ஏற்கெனவே மாரகாதிபதியாகி மாதுர் பாவாதிபதியாகிய சுக்கிரனையும் துலாத்திற்கு எட்டையும் பார்ப்பதுடன் மாதுர்காரகனுகிய சந்திரனுடன் கூடி இருப்பதால் தன் புக்தியில் மாதாவுக்கு மாரகஞ்செய்ய அமைப்புடையவராகின்ருர்.

**ஜாதகர் மாரக விஷயம்.**—ஜாதகருக்கு வயது வருஷம் 69–0–0 முடிந்து 70-ஆவது வயதில் கார்த்திகை மாதத்தில் அங்காரகத் தசையில் சூரிய புக்தி நடக்கின்றது. கடக லக்கினத்திற்குப் பராசஹோரை, ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் புதன், சுக்கிரன், சனி இவர்கள் மாரகாதிபதிகள் ஆகின்ருர்கள். அங்காரகன் பத்திற்குடையவராய் மாரகாதிபதியாகிய புதனுடன்கூடி இருப்பதால் ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரமும் துய்யகேரளம் 14-ஆவது பாடல் பிரகாரமும் தன் தசையில் மாரகஞ்செய்ய அமைப்புள்ளவராகின்ருர். சூரியன் ஏற்கெனவே மாரகாதிபதியாகிய இரண்டாவது மாரகஸ்தானத்திற்குடையவராகிப் பத்தில் இருப்பதால் துய்யகேரளம் எட்டாம் பாவம் 14-ஆவது பாடல் பிரகாரம் ஜாதகருக்குத் தன்னுடைய புக்தியில் மாரகஞ்செய்ய அமைப்பு உடையவராகின்ருர்.

**37.** இதற்குமுன் மார கங்க ளெய்தாதோ ஜாத கற்கு
குதர்க்கமாய் மூன்று ஏழு குலவிய பின்னொன் பானில்
அதிகமூ வெட்டு அன்பான் அநேகமாய்ப் பிணியுமெய்தும்
எதுவித ரோகம் வந்தும் இலகிடும் வயது தீர்க்கம்.

**37.** ஜாதகருக்கு இந்த எழுபது வயதிற்கு முன்னமே மாரகங்கள் நேரிடாதோ என்று கேட்க தவறிடாமல் மூன்று, ஏழு, பிறகு ஒன்பதாவது நீண்ட காலம் சென்று இருபத்து நான்காவது, ஐம்பதாவது ஆகிய இந்த வயதுகளில் நோய் அதிகமாக நேரிடும். எப்படிப்பட்ட நோய் வந்த போதும் அது நிவிர்த்தியாகி ஜாதகர் தீர்க்க ஆயுளை உடையவராக இருப்பார்.

38. மறுஜன்மம் மலைநா டன்னில் மாரனும் வைசியச் சேயாய்
உறைகுவான் செட்டுச் செய்வன் உதித்தவன் ஜனன காலம்
கரியவன் தசையி ருப்புக் கழறுவோ மாண்டு மூன்றும்
உறைந்திடும் திங்கள் நாலும் உறைக்கிரும் பலனை யாங்கள்.

38. ஜாதகர் தன்னுடைய பின் ஜன்மத்தில் மலைகளுள்ள தேசத்தில் வைசிய குலத்தில் ஆண் குழந்தையாகப் பிறப்பார். வியாபாரஞ் செய்வார். இவர் பிறந்த காலத்தில் கரியவன் என்ற சனியினுடைய மகா தசையில் இருப்பு மூன்று வருஷங்களும் நான்கு மாதங்களும் ஆகுமென்று சொல்லுகிரும். இந்தக் காலத்தில் நடக்கும் பலாபலன்களை நாங்கள் சொல்லுகின்ரும்.

39. செலவுக ளதிகம் நேரும் செலவுண்டு தானியஞ் சேதம்
நலமுளோர் விரோத மெய்து மரசர்பால் செல்லு வார்கள்
நிலமதால் பகையு மெய்தும் நேர்பகை சமம தாகும்
பலவினை ஜாத கர்க்குப் பரவிப்பின் நிவிர்த்தி யாகும்

39. செலவுகள் அதிகமாக ஏற்படும். தானியங்கள் செலவாகிவிடும். நஷ்டமாகிவிடும். கெட்டுப்போய்விடும். நல்லவர்கள் விரோதிகளாவதோடு வழக்கிட்டு அரசர்களிடமும் போவார்கள். நிலத்தால் விரோதமும் வழக்கும் ஏற்படும். தன்னுடைய எதிரி தனக்குச் சமானமானவனுக விருப்பான். ஜாதகருக்கு அநேக விதமான கெடுதிகள் நேரிட்டுப் பின்னல் நிவிர்த்தியாகிவிடும்.

40. ஏந்தக்கா லத்திலில்லம் எய்துவான் விபரம் சொல்வாய்
பிந்தியு மிருபா னைந்தில் புரப்பனு மில்லம் தானும்
தன்ஜாதி மேலாய் வாழ்வன் சாற்றுவோம் பின்பா கத்தில்
இந்திர னிறைஞ்சு மாதே யியம்பின மொழி குன்ருது.

40. எந்தக் காலத்தில் ஜாதகருக்கு வீடு கிடைக்கும் என்பதைப் பற்றி விவரமாகச் சொல்லுவீர். இருபத்தைந்தாவது வயதில் ஜாதகர் வீட்டை அடைவார். இவர் தன்னுடைய பங்காளியினுடைய அந்தஸ்திற்கு மேலான அந்தஸ்திலிருந்து வாழ்வார். மற்றவைகளை அடுத்த பாகத்தில் சொல்லுகிரும். இந்திரன் வணங்கித் தொழுகின்ற பார்வதியம்மையே ! நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும்.

# ஜாதகம் 97

| சுக்கிரன் புதன் | | கேது | |
|---|---|---|---|
| சூரியன் சந்திரன் அங்காரகன் | இராசி | | லக்கினம் |
| | சக்கரம் | | |
| சனி | குரு ராகு | | |

சதயம் மூன்றும் பாதம் இராகுதசை வருஷம் 4—9—0.

1. கலை[1]குஜன்[2] ரவி[3] சாடி[4] கனகனு[5] ராகு தேளில்[6]
புலவனும்[7] புகரும்[8] மீனம் பின்சிகி[9] நந்தி[10] யாக
மலையினில்[11] காரி[12] புக்க வரும் ஜன்மம் கடக மாகப்
பலனதைச் சொல்லு மென்னப் பராசரும் புகலு கின்றார்.

1. சந்திரனும் அங்காரகனும் சூரியனும் கும்பத்திலும், குருவும் ராகுவும் விருச்சிகத்திலும், புதனும் சுக்கிரனும் மீனத்திலும், கேது ரிஷபத்திலும், தனுசில் சனியும், ஜன்ம லக்கினம் கடகமாகவும் இருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீரென்று கேட்க பராசர மகரிஷி சொல்லுகின்றார்.

**குறிப்பு.**—இந்த ராசிச் சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்மைச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும்:—மிதுனத்தில் சனியும், கடகத்தில் புதனும், சிம்மத்தில் கேதுவும், விருச்சிகத்தில் அங்காரகனும், மகரத்தில் குருவும், கும்பத்தில் சந்திரனும் சுக்கிரனும் ராகுவும், மீனத்தில் சூரியனும் ஆகும். அங்காரகன் அஸ்தமனத்தில் இருக்கின்றது.

2. இந்தசே யாணும் ஜன்ம மில்லமும் கீழ்மேல் வீதி
தென்வாடை தந்தி மேற்கில் தீபாஞ்சாலி வடமேல் தங்கும்
சந்ததம் அருகர் மீனம் சத்தியும் அதின்கீழ்த் தங்கும்
இந்தநல் லடையா ளத்து லிறங்குவான் கங்கை சேயாய்.

2. பிறந்த இந்தக் குழந்தை ஆண் குழந்தையாகும். பிறந்த வீடு கிழக்கு மேற்குத் திக்கில் தென்னண்டை வாடையில் இருக்கும். யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளின் கோயில் மேற்குத்திக்கிலும் அக்கினி

---

[1] சந்திரன். [2] அங்காரகன். [3] சூரியன். [4] கும்பம். [5] குரு. [6] விருச்சிகம். [7] புதன். [8] சுக்கிரன். [9] கேது. [10] ரிஷபம். [11] தனுசு. [12] சனி.

யிற் பிறந்த திரௌபதியம்மன் கோயில் வட மேற்குத்திக்கிலும் இருக்கும். சமணருடைய தேவதையின் கோவில் வடக்குத் திக்கிலும், அதற்குக் கிழக் குத்திக்கில் பார்வதியம்மன் கோவிலும் இருக்கும். இவ்விதமான அடை யாளங்கள் உள்ள ஊரில் வேளாளர் குலத்தில் ஜாதகர் பிறப்பார்.

3. இத்தகை மாடி சூழ்ந்த இலகிய சிற்றூர் தன்னில்
வித்தக னைந்தாம் ஜன்மம் விளங்கின பால னுக்குப்
பெற்றதாய் தந்தை யோகம் பேதையர் புத்திர யோகம்
சித்தமாய் முன்பின் ஜன்மம் செப்புவோம் கேளும் தாயே.

3. இவ்வித அடையாளங்களுடன்கூடிய மெத்தை வீடுகள் உள்ள ஒரு சிறிய கிராமத்தில் ஜாதகர் ஐந்தாவது கர்ப்பத்தில் பிறப்பார். இவரைப் பெற்றெடுத்த தாயார் தகப்பனுர் இவர்களுடைய யோகம், மனைவி மக்கள் ஆகிய இவர்களுடைய யோகம், முன் ஜன்மம், பின் ஜன்மம் ஆகிய இவைகளை எல்லாம் உண்மையாய் சொல்லுகின்றோம். எங்களுடைய தாயாராகிய பார்வதியம்மையே ! கேட்பீராக.

4. தந்தையின் துணைபதி னொன்றில் ஆணொன்று கன்னி ரண்டு
சந்ததம் விருத்தி யென்றோம் தங்காவே மற்ற வெல்லாம்
அந்தவன் வேறாய்ச் செல்வன் அறைகிறோம் பின்பால் சேதி
வந்தவன் தந்தை சேதி வரைகிறோ மினிமே லாக.

4. ஜாதகரின் தகப்பனாருடைய சகோதரங்கள் பதினொன்று பேர் களில் ஒரு ஆண் சகோதரரும் இரண்டு பெண் சகோதரங்களும் நீண்ட ஆயுளை உடையவராகி விருத்தியாவார்கள். மற்ற சகோதரங்கள் எல்லாம் நிலைத்திராமல் இறந்துபோய் விடுவார்கள். இந்த ஒரு சகோதரனும் வேறு குடும்பமாக வாழ்வார். இவருடைய விஷயங்களைப் பின்னால் சொல்லுகின் றோம். இனிமேலாக நாங்கள் ஜாதகரின் தகப்பனாருடைய விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம்.

5. மா நிறம் உணச்சல் தேகி மா நிலம் கிருஷி செய்வன்
ஊனமாம் தந்த மென்றோம் உறுதியான் தீர நெஞ்சம்
பான்மையாய்ப் பேச வல்லன் பரஉப காரம் கொஞ்சம்
ஈனரின் உறவு கொள்ளான் னெய்திடும் நாபி சூடு.

5. ஜாதகருடைய தகப்பனார் மாநிறமுள்ள தேகத்தையுடையவர். பெரிய நிலங்களைப் பயிரிடுவார். இவருக்குப் பற்கள் கெட்டுப்போய் அல்லது இல்லாமலும் இருக்கும். வலிவுள்ளவர். தைரியமான மனதையுடையவர். தகுதியாகவும் சாமர்த்தியமாகவும் பேசுகின்ற திறமையையுடையவர். பிறருக்குக் கொஞ்சம் உதவியைச் செய்வார். தாழ்ந்தவர்களின் உறவைக் கொள்ளாதவர். நாபிச்சூடு என்ற நோயையுடையவர்.

6. உரோமங்கள் நீட்சி யில்லான் துவலுப தேசம் கொள்வன்
தீமையை வெளிக்காட் டாதான் செய்நன்றி மறவா னுகும்
தாமத குணத்தா னுகும் சந்தேக மனத்தா னுகும்
பூமியை விருத்தி செய்வன் பிறர்பொரு ளிச்சை வையான்.

6. ஜாதகருடைய தகப்பனூர் தன்னுடைய தேகத்தில் நீண்ட மயிரில்லாதவர். குருவினுடைய உபதேசங்களைப் பெற்றுக்கொள்ளுவார். கெடுதியை வெளியே பிறருக்குத் தெரியும்படியாகக் காண்பித்துக்கொள்ளமாட்டார். பிறர் தனக்குச் செய்த உதவியை மறக்காதவராவார். தாமதமானதும் சாந்தமானதுமான குணத்தையுடையவராவார். சந்தேகமான மனத்தை உடையவர். நிலங்களைப் பயிரிட்டுத் தானியங்களை விருத்தியாக்குவார். பிறருடைய சொத்தின்பேரில் ஆசை இல்லாதவர்.

7. பால்பாக்கிய முடைய னுகும் பதறிய வார்த்தை சொல்லான்
சீலவான் அடக்க வார்த்தை சீக்கிர நடையு மாவன்
வேலுடைக் கடவுள் பக்தி விரும்புவன் பணைவர் விருத்தி
காலத்தை அறிந்து ரைப்பன் காசினில் சல்லியம் கொள்ளான்.

7. ஜாதகருடைய தகப்பனூர் பால் பாக்கியம் உடையவராவார். அவசரப்பட்டு நடுங்கும்படியான வார்த்தைகளைச் சொல்லமாட்டார். நல்லொழுக்கம் உடையவர். அடக்கமாகவும் சாந்தமாவும் வார்த்தைகளைச் சொல்லுவார். வேகமாக நடக்கக்கூடியவர். வேலையுடைய கடவுளாகிய முருகக் கடவுளின் மேல் பக்தியும் அன்பும் உடையவராவார். பண்ணை நிலம் ஏர் விருத்தியாகும். காலத்திற்குத் தகுந்தாற்போல பேசுவார். பூமியில் கடன் வாங்கமாட்டார்.

8. இந்நெறி யுடையா னுக்கு இருதார மினையா ளுக்கு
அன்னவ னுதிப்பா னுகும் அறைகிறே மவன்கு ணத்தைச்
சொன்ன சொல்காப்பா னுகும் செய்நன்றி மறவா னுகும்
அன்னிய ருறவு கொள்வன் அதிகம்கல் விகளும் கற்பன்.

8. இவ்விதமான குணங்களையுடைய தகப்பனூருக்கு இரண்டு தாரங்களில் இரண்டாவது மனைவிக்கு இந்த ஜாதகர் பிறப்பவராவார், இவருடைய குணதிசயங்களைச் சொல்லுகிறோம். இவர் தான் சொன்ன வார்த்தைகளைக் காப்பாற்றுபவராவார். பிறர் தனக்குச் செய்த உபகாரத்தை மறக்கமாட்டார். பிறருடைய சினேகத்தை அடைவார். படிப்பை அதிகமாகக் கற்றுக்கொள்பவராவார்.

9. ஊகை வான் நுணுக்கம் தேர்வன் உறுதிவான் சுகபு சிப்பன்
நாகரி கங்க ளுள்ளான் நல்லோர்க்கு நல்ல னுவன்
போகபாக் கியங்க ளுள்ளான் புகழான குடிம்பி யாவன்
தோகையர் மோகம் கொள்வன் சுந்தர முடையனுமே.

9. ஜாதகர் நுட்பமான புத்தியை உடையவர். சூட்சமமானவைகளை அறியும்படியான கூர்மையான புத்தியை உடையவர். உறுதியாக சொல்லக் கூடியவர். வலிவான தேகத்தை உடையவர். சுகமான போஜனத்தைச் சாப்பிடக் கூடியவர். நாகரிகங்களை உடையவராவார். நல்லவர்களுக்கு நல்லவராக விருப்பார். சுகபோகங்களையும் செல்வத்தையும் உடையவர். மேன்மையான கீர்த்தியையுடைய குடும்பஸ்தராவார். ஸ்திரீளின் மேல் காம ஆசையை உடையவர். அழகுள்ளவராக விருப்பவராவார்

10. தந்தைநாள் பூமி மேலாய்த் தானவன் சேர்ப்பா னாகும்
கந்தன்தன் அருளு மோங்கும் கரமதில் விஷ்ணு ரேகை
வந்தவர்க் கன்ன மீவன் மருமவான் கோப வானும்
நொந்திடும் பேரைக் காப்பன் நேமியோர்க் குதவி செய்வன்.

10. ஜாதகர் தன்னுடைய தகப்பனாருடைய காலத்திலிருந்த நிலங்களை விட அதிகமான நிலங்களைச் சேர்ப்பவராவார். முருகக்கடவுளின் அருளும் பக்தியும் அதிகப்பட்டுக் கொண்டேவரும். இவருடைய உள்ளங்கையில் விஷ்ணு ரேகை என்ற ஒருவிதமான ரேகை உண்டு. இவர் தன்னிடம் வந்தவர்களுக்குச் சாப்பாடு போடுவார். ரகசியமான மனத்தை உடையவர். கோபத்தை உடையவராவர். ஏழைகளையும் கஷ்டப்பட்டுக் கொண்டிருப்பவர்களையும் காப்பாற்றுவார். பூமியிலுள்ளவர்களுக்கு உபகாரங்களைச் செய்பவராவார்.

11. பந்துவும் புகழ வாழ்வன் பலகலை யுணர்வா னாகும்
தன்தனம் கொடுக்கல் வாங்கல் தருமமே லைகளும் செய்வன்
முந்தின துணைகள் தோஷம் விருத்தியாம் பெண்பா லொன்று
அந்தவள் சேதி கேளாய் அவளுமா நிறத்தா ளாகும்.

11. ஜாதகர் தன்னுடைய பந்துக்கள் தன்னைப் புகழும் படியான அந்தஸ்தில் இருந்து வாழ்வார். அநேக சாஸ்திரங்களை யறிந்தவராவார்; தன்னுடைய பணத்தைப் பிறருக்குக் கொடுத்து மறுபடியும் திருப்பிவாங்கிக் கொள்ளுவார், அஃதாவது பணத்தைக் கொடுத்து வாங்குந் தொழிலையும் உடையவர். தருமமான காரியங்களையும் செய்வார். இவருக்கு மூத்த சகோதரர்கள் தோஷ முடையவர்களாக விருப்பார்கள். ஒரு சகோதரி நீண்ட ஆயுளை உடையவராக விருப்பாள். இவளுடைய விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம், கேட்பீராக, இவள் மாநிறமுள்ள தேகத்தை உடையவளாவாள்.

12. சுகமுள வார்த்தை சொல்வள் சோம்பிடாள் காரி யத்தில்
பகையென்று மனத்தில் வையாள் பால்பாக்கிய முடைய ளாகும்
உகமையாய்ப் பேச வல்லாள் உறுதியில் லாதாளாகும்
இகபரன் பத்தி கொள்வள் இடரென்றோர்க் குதவி செய்வள்.

12. ஜாதகருடைய சகோதரி இனிமையான வார்த்தைகளைச் சொல்லுவாள். தான் செய்கின்ற வேலையில் சோம்பல் இல்லாதவளாவாள் தன்னுடைய மனத்தில் யாதொரு பகையையும் குரோதத்தையும் வைத்துக் கொள்ளாமல் இருப்பாள். இவள் பால் பாக்கியம் உடையவளாக விருப்பாள். உபமான உபமேயங்களை உபயோகப்படுத்தி அலங்காரமாகப் பேசுகின்ற சாமர்த்தியத்தை உடையவளாவாள். வலிவான தேகத்தையும் மனத்தையும் உடையவள். கடவுளின்மேல் அன்பும் பக்தியும் உடையவளாவள். கஷ்டத்தை அடைந்திருக்கின்றோம் என்று சொல்லுகின்றவர்களுக்கு, உபகாரத்தைச் செய்வாள்,

13. முன்கோபம் பித்தச் சூடு மேவிடும் வறுமை காணுள்
தன்வரன் வடபா லாகும் சந்ததி ஆண்பால் ரண்டு
கன்னிகை மூன்று என்றேம் கழறின வைந்தும் தீர்க்கம்
அன்னவள் தீர்க்க ஜீவி ஆளனுக் கினிய ளாகும்.

13. ஜாதகருடைய சகோதரி முன்கோபத்தை உடையவள். பித்தச் சூடான தேகத்தை உடையவள். இவள் கஷ்டங்களேயும் தரித்திரத்தையும் அடைய மாட்டாள். இவளுடைய புருஷன் வடக்குத்திக்கில் இருந்து நேரிடுவார். இவளுக்குக் குழந்தைகளில் ஆண் இரண்டும், பெண் மூன்றும் ஆகும் என்று சொல்லுகின்றேம். சொல்லிய இந்த ஐந்த குழந்தைகளும் நீண்ட ஆயுளே உடையவர்களாவார்கள். இவளும் நீண்ட ஆயுளே உடையவள். தன்னுடைய புருஷனுக்கு இஷ்டமாய் இருப்பவளாவாள்.

14. அந்தியில் விதவை யாவள் அறுமுகன் பத்தி பூண்பள்
பிந்திமுன் துணைகள் தோஷம் பேசுவோ மிவளுக் கேதான்
பந்தினர் குற்றம் சொல்லாள் பணிதிக ளிச்சை யுண்டு
இந்திர னிறைஞ்சு மாதே யியம்புவோம் பின்பால் சேதி.

14. ஜாதகருடைய சகோதரி தன்னுடைய கடைசிக் காலத்தில் விதவையாகி விடுவாள். ஆறு முகங்களேயுடைய முருகக் கடவுளின் மேல் அன்பும் பக்தியும் உடையவளாவள். இவளுக்குப் பின்னுலும் முன்னுலும் பிறந்தவர்கள் தோஷத்தை உடையவர்களாக விருப்பார்கள். சீக்கிரம் இறந்து விடுவார்கள் என்றும் சொல்லுகின்றேம். இவள் பந்துக்களின் மேல் குற்றத்தையும் பழிகளேயும் சொல்ல மாட்டாள். ஆடை ஆபரணங்களின் மேலும் கோயில் வேலைகளிலும் ஆசையை யுடையவளாவள். இந்திரன் வணங்கிப் பூஜை செய்கின்ற பார்வதியம்மையே! மற்ற விஷயங்களேப் பின்னுல் சொல்லுகிறேம்.

15. உதித்தவன் துணைபின் ஆண்பால் ஓங்காது என்று சொல்வோம்
மதிநுதல் பெண்பா லொன்று வரைகிறேம் தீர்க்க மாக
அதிபதி குணத்தைச் சொல்வேன் மாஞ்சிவப் புடைய ளாகும்
சதியிலா மனத்தா ளாகும் சரசமாய்ப் பேச வல்லாள்.

15. ஜாதகருக்கு இளேய ஆண் சகோதரம் ஓங்கி நீடித்திருக்காது † என்று சொல்லுகின்றேம். சந்திரனைப் போல் அழகான முகத்தை உடைய ஒரு பெண் நீண்ட ஆயுளே உடையவள் என்று சொல்லுகின்றேம். இந்த இளேய சகோதரியின் குணதிசயங்களேப் பற்றிச் சொல்லுகின்றேம். மாமரத்தின் துளிரின் நிறத்தைப் போன்ற ஒரு விதமான சிவப்பு நிறத்தையுடைய தேகத்தை யுடையவளாவள். கெடுதியில்லாத மனத்தையுடையவளாவாள். இன்பமாகவும் ஒழுங்காகவும் பேசுகின்ற சாமர்த்தியத்தை உடையவளாவாள்

† குறிப்பு.—ஆண் சகோதர தோஷம்:—இளேய சகோதர ஸ்தானம் மூன்றும் பாவமாகிய கன்னியாகும். இதைச் சனி அங்காரகன் ராகு இவர்கள் பார்ப்பது தோஷமாகும். மூன்றிற்குடையவராகிய புதன் நீசமாகிப்

பெண் கிரகமாகிய சுக்கிரனுடன் கூடித் தன்னுடைய பாவத்தையே பார்க்கின்றார். ஆகையால் ஆண் சகோதரருக்குத் தோஷமுண்டு. சகோதர காரகனாகிய அங்காரகன் சூரியனுடன் கூடி அஸ்தமடைந்திருக்கின்றார். ஆகையால் இளைய ஆண் சகோதரருக்கு அதிகத் தோஷம் இருக்கின்றது.

16. தரித்திர மடையா ளாகும் தன்வரன் கீழ்ப்பா லாகும்
திருமக ளொப்ப தாகும் செனித்திடும் பெண்பால் ரண்டு
பெரிதான குடும்பி யாவள் பூவைக்குத் தீர்க்க மெய்தும்
அறந்தனை வளர்க்கு மெங்கள் ஆத்துமத் தாயே கேளாய்.

16. ஜாதகருடைய இளைய சகோதரி தரித்திரத்தை அடைய மாட்டாள். இவளுக்குப் புருஷன் கிழக்குத்திக்கிலிருந்து வருவார். இவள் லக்ஷ்மிக்குச் சமானமானவளாகவிருப்பாள். இவளுக்கு இரண்டு பெண் குழந்தைகள் பிறக்கும். இவள் பெரிய குடும்பஸ்தையாவாள். இவள் நீண்ட ஆயுளை உடையவளாவாள். தருமத்தை வளர்க்கின்ற எங்களுடைய உயிரைப் போன்ற பிரியமான தாயாராகிய பார்வதியம்மையே ! கேட்பீராக.

17. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அழகுளா ளிருநி றத்தாள்
தன்சொல்லே மேன்மை யாகச் சாதிப்பாள் முன்கோ பத்தள்
அன்னையு மிரண்டு மாகும் அவள்துணை ஆண்பால் மூன்று
கன்னிகை யிரண்டு என்றேம் காதலி யில்லம் உள்ளூர்.

17. ஜாதகருடைய தாயின் குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் அழகுள்ளவளாக விருப்பாள். இரண்டு நிறங்கள் கலந்துள்ள நிறமாகிய மாநிறம் என்ற நிறத்தை உடைய தேகத்தை யுடையவளாவாள். தான் சொல்லுகின்ற வார்த்தைகளே உண்மையானவை என்றும் மேன்மையானவை என்றும் சொல்லி வாதாடி நிலைக்கச்செய்கின்ற சாமர்த்திய முடையவளாவாள். இவள் முன்கோபத்தை உடையவள். இவளுக்கு இரண்டு தாயார்கள் உண்டு. இவளுடைய சகோதரர்களில், மூன்று சகோதரர்களும், இரண்டு சகோதரிகளும் உண்டு என்று சொல்லுகிறோம். இவளுடைய வீடு உள்ளூரிலேயே இருக்கும்.

18. மாதுலர் வேறுய்ச் செல்வர் வளமிலாக் குடும்பி யாவள்
தீதுண்டு யிரண்டா மாண்டில் செப்பினேம் பிணியு மெய்தும்
ஏதுகா ரணத்தால் சொன்னீர் வமத்தின் குற்றத்தாலே
வேதனை திருஷ்டி யாலே விலகிடு மென்று சொல்வோம்.

18. ஜாதகருடைய அம்மான்மார்கள் வெவ்வேறு குடும்பமாகவிருப்பார்கள். ஜாதகரின் தாயார் சிறப்பில்லாததும் செல்வமில்லாததுமான குடும்பஸ்தையாக விருப்பாள். இவளுக்கு இரண்டாவது வருஷத்தில் கெடுதி நேரிடும். ரோகமும் நேரிடும் என்று சொல்லுகிறோம். எந்தக் காரணத்தினால் இவ்விதமாகச் சொன்னீர் என்று கேட்க, பராசர முனிவர் சொல்லுகின்றார். மன்மதாவஸ்தையினாலும் கெட்டபார்வையாலும் உபத்திரவம் நேரிட்டு அவை நிவிர்த்தியாகி விடும் என்று சொல்லுகிறோம்.

19. இன்னமும் விபர மாக யியம்புவோம் பின்பா கத்தில்
அன்னையின் பூர்வம் சொல்வேன் அருணைக்கு மேல்பா லாகச்
சின்னஊர் தன்னி லேதான் ஜனித்தன ளிக்கு லத்தில்
தன்சுத ரதிக முண்டாய்த் தரணியில் தோஷ மின்றி ;

19. ஜாதகரின் தாயாருடைய விஷயங்களைப் பற்றி விபரமாகப் பின்பாகத்தில் சொல்லுகின்றோம். இவளுடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன். அருணை என்ற திருவண்ணாமலை க்ஷேத்திரத்திற்கு மேற்குத்திக்கில் ஒரு சிறிய கிராமத்தில் இந்த ஜன்மத்தில் பிறந்த குலத்திலேயே ஒரு பெண்ணாகப் பிறந்து அதிக குழந்தைகளை உடையவளாகிப் பூமியில் யாதொரு தோஷமும் பாபமும் இல்லாமல் வாழ்ந்து ;

20. காலன்தன் பதிக்குப் புக்கிக் கஞ்சனால் வரையப் பட்டுச்
சீலமா மிக்கு லத்தில் ஜனித்தவ ளிவளே யென்றோம்
ஆலவே வறுமை காணாள் இவள்மறு பாரி யாவள்
காரணத்தைச் சொல்லு மென்னக் கூறுவார் முனிவர் தாமே.

20. இறந்து எமபட்டணத்திற்குப் போய் பிரமதேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு நல்லொழுக்கமுள்ள இந்தக் குலத்தில் இந்த ஜன்மத்தில் பிறந்தாள் என்று சொல்லுகின்றோம். இவள் கஷ்டங்களையும் தரித்திரத்தையும் அடையமாட்டாள். இரண்டாவது மனைவியாக நேரிடுவாள், இதற்குக் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்க, பராசர முனிவர் சொல்லுகின்றார்.

21. முன்ஜன்மம் வரன்சொல் லுக்கு மேன்மையா யுரைத்த தாலும்
துன்னிய விரதம் தன்னைத் தோகையும் குற்றம் செய்தாள்
தன்வரன் தாயின் சாபம் சார்ந்தது இவளுக் கேதான்
கன்னிகை யிரண்டா மாதாய்க் கலந்தன ளென்று சொல்வோம்.

21. ஜாதகருடைய தாயார் தன்னுடைய முன் ஜன்மத்தில் தன்னுடைய புருஷனுடைய வார்த்தைக்கு அதிகமாக அத்து மீறிச் சொன்னதாலும், சிறந்த விரதங்களை இவள் பங்கத்துடனும் தப்பிதமாகவும் செய்ததாலும் இவளுடைய புருஷனின் தாயாருடைய சாபம் இவளுக்கு வந்து சம்பவித்தது. ஆகையால் இரண்டாவது மனைவியாக வந்து நேரிட்டாள் என்று சொல்லுகிறோம்.

22. மறுஜன்மம் தவளை உத்தரம் வருவளா மிக்குலத்தில்
குறைவிலாக் குடும்பி யாவள் கூறுவோம் தந்தை பூர்வம்
திருகாஞ்சி தன்னி லேதான் ஜனித்தனன் வைசியச் சேயாய்ப்
பெருமையாய்ச் செட்டுச் செய்து புத்திரர் மனைவி யுண்டாய் ;

22. ஜாதகருடைய தாயார் தன்னுடைய அடுத்த ஜன்மத்தில் தவளை என்ற க்ஷேத்திரத்திற்கு வடக்கில் இந்த ஜாதியிலேயே பெண் குழந்தையாகப் பிறப்பாள். கஷ்டங்களில்லாத, அஃதாவது சௌக்கியங்களையுடைய குடும்பஸ்தையாக விருப்பாள். இனிமேல் ஜாதகருடைய தகப்பனாரின்

முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறேம். அழகிய காஞ்சீபுரத்தில் வைசிய குலத்தில் இவர் ஆண் குழந்தையாய்ப் பிறந்தார். இவர் பெரு மையுடன் வியாபாரத்தைச் செய்து மனைவி மக்கள் இவர்களை உடையவராகி ;

23. வினையதைப் புகலக் கேண்மோ வேதியன் மனைவி தன்பால்
கனமுள பொருளும் பெற்றுக் கள்ளமா யீயா விட்டான்
சினங்கொண்டு மறைமா தும்தான் செப்புவான் மனவெ றுப்பால்
துணைவன்போல் வார்த்தை சொல்லிச் செய்பொன்னைக் கொண்ட [பாவி ;

23. வாழுகின்ற காலத்தில் ஜாதகருடைய தகப்பனுருக்கு வந்து சம்பவித்தப் பாவத்தை சொல்லுகின்றேன். கேட்பீராக, இவர் ஒரு பிரா மணருடைய மனைவியினிடத்தில் இருந்து அதிகமான பணத்தைப் பெற்றுக் கொண்டு திருட்டுத் தனமாய்க் கொடுக்காமல் ஏமாற்றி விட்டார். அதன் மேல் அந்தப் பிராமண ஸ்திரீ கோபத்தை உடையவளாகி மனத்தில் வெறுப் புடன் சாபத்தைக் கொடுக்கின்றுள். என்னுடன் கூடப்பிறந்த சகோ தரனைப்போல வார்த்தைகளைச் சொல்லி என்னுடைய பணத்தை வாங்கிக் கொண்ட பாவியாகிய நீ ;

24. விகாதமாய் வார்த்தை சொன்னுய் விளங்காது குடும்பம் தானும்
தகமையாய்ப் பின்ஜன் மத்தில் சத்திமா ரிருவ ராயும்
அகமது விளங்கா தாயும் அவனியில் வாழ்வா யென்று
முகவெறி யாகச் சொன்னுள் மேவிற்று அந்தத் தோஷம்.

24. எனக்கு விரோதமானதும் கெடுதியை விளைவிக்கக் கூடியதுமான வார்த்தைகளைச் சொல்லி விட்டாய். அதனுல் உன்னுடைய குடும்பம் ஓங்கி வளராமல் இருக்கக் கடவது. உனக்கு மறு ஜன்மத்தில் இந்தப்பாவத் திற்குத் தகுந்தபடி இரண்டு மனைவிமார்கள் நேரிடக்கடவது. உன்னு டைய வீடு விளங்காமல் போகக் கடவது. இவ்விதமாக விருந்து நீ வாழக் கடவது, என்று முகத்தில் கோபத்தையுடையவளாகிச் சொன்னுள். இந்தத் தோஷமானது இவரை வந்து அணுகிற்று.

25. தந்தையின் சாபம் ஒன்று சார்ந்தது யிவனுக் கேதான்
அந்திய காலம் தன்னில் அவன்தொழில் குறைவு நேர்ந்து
வந்திடும் மனைவி மாண்டு மனமது சஞ்ச லத்தால்
அந்தகன் நகரைச் சேர்ந்து அயனுமே வரையப் பட்டு ;

25. இவருடைய தகப்பனரின் சாபங்கூட ஒன்று வந்து இவரை அணுகிற்று. இவருக்குக் கடைசிக் காலத்தில் தன்னுடைய வேலையில் பங்கம் அல்லது குறைவு நேரிட்டு, மனைவியும் இறந்து, மனத்தில் கஷ்டத்தை உடையவராகி இறந்து எமபட்டணத்திற்குப் போய்ப் பிரமதேவனுல் பிமர லிபியுடன் எழுதப்பட்டு ;

26. வந்தவ னிவனே யென்றேம் மனைவியு மிரண்டு நேரும்
முந்திய மனைமா ண்டு மே விடுமறு மனைதான் நேரும்
தன்சுதர் முதலில் தோன்றும் சாராவே நசிக்கு மென்றேம்
பிந்தின ஜன்மம் சொல்வேன் பிருதிவி இக்கு லத்தில் ;

26. ஜாதகனுடைய தகப்பனூர் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றூர் என்று சொல்லுகிறேம். இவருக்கு இரண்டு மனைவிமார்கள் உண்டாவார்கள். முதல் மனைவி இறந்து போய் இரண்டாவது மனைவி வந்து நேரிடுவாள். இவருக்கு முதலில் பிறக்கும் குழந்தைகள் பிழைத்திராமல் நசித்துப் போய்விடும் என்று சொல்லுகிறேம். இவருடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறேம். பிருதிவி ஸ்தலமாகிய காஞ்சீபுரத்தில் இந்த ஜன்மத்திய குலத்தில் ;

27. வருவனும் செட்டுச் செய்வன் மாரன்தன் மணத்தின் காலம்
இருஒன்ப தாண்டு தன்னி லெய்திடும் பாரி தானும்
திருமக ளன்னை வர்க்கம் சேயிழை மாஞ்சி வப்பள்
பெரும்புத்தி சமயோ கத்தாள் பூமியில் வறுமை காணுள்

27. ஜாதகருடைய தகப்பனூர் ஆண் குழந்தையாக வந்து பிறப்பார். வியாபாரஞ் செய்வார். ஜாதகருடைய விவாக காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவருக்குப் பதினெட்டாவது வயதில் மனைவி வந்து நேரிடுவாள். இவள் தாயாருடைய பந்துவிலிருந்து வருவாள். இவள் மாமரத்தின் துளிரின் நிறமாகிய ஒருவிதமான சிகப்பு நிறத்தையுடைய தேகத்தை யுடையவள். பெரிய புத்தியை உடையவள். நடுத்தரமான யோகத்தை யுடையவள். பூமியில் இவளுக்குக் கஷ்டங்களும் தரித்திரமும் கிடையா.

**குறிப்பு.—விவாக விஷயம் :—**ஜாதகருக்கு வயது ஷ்ப 17–0–0 முதல் ஷ்ப 18–0–0 முடியும் வரையிலும் குரு தசையில் சந்திர புக்தி அங்காரக புக்தி இவைநடக்கின்றன. குரு ஒன்பதிற்குடையவராகிப் போக காரகனுகிய இராகுவுடன் கூடி லக்கினத்தைப் பார்க்கின்றூர். ஆகையால் ஜாதகபாரிஜாதம் பதினுன்காவது அத்தியாயம் இருபத்தொன்பதாவது சுலோகப் பிரகாரம் குரு தன் தசையில் ஜாதகருக்கு விவாகஞ் செய்துவைக்கும் அமைப்பு உள்ளவராகின்றூர். அங்காரகன் பத்திற்குடையவராய் இரண்டிற்குடையவரான சூரியனுடனும் லக்கினுதிபதியாகிய சந்திரனுடம் கூடி இரண்டைப் பார்ப்பதால் மேற்கண்ட இருபத்தொன்பதாவது சுலோகம் பிரகாரம் அங்காரகன் தனது புக்தியில் ஜாதகருக்கு விவாகஞ் செய்துவைக்கச் சந்திரனைவிட அதிகமான அமைப்பு உள்ளவராக விருக்கின்றூர்.

28. அன்னம்போல் சாய லொக்கும் அழகுளாள் சுதர்கள் காணுள்
பின்மனை ஒன்று வாய்க்கும் புத்திரர் ஆண்பா லொன்று
கன்னிகை மூன்று தீர்க்கம் கௌசிகர் கேட்க லுற்றூர்
என்னகா ரணத்தி னுலே இருபாரி விவரம் சொல்வாய்.

28. ஜாதகருடைய மனைவி அன்னப்பட்சியைப் போல ரூபத்தை உடையவள். அழகாகவிருப்பாள். இவளுக்குக் குழந்தைகள் கிடையா. இவள் வந்த பிறகு ஜாதகருக்கு இன்னெரு மனைவி வந்து நேரிடுவாள். ஜாதகருக்கு ஓர் ஆண் குழந்தையும் மூன்று பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள். கௌசிக முனிவர்

கேட்கின்றார். எவ்விதமான காரணத்தினால் இவருக்கு இரண்டு மனைவிகள் நேரிடுவார்கள் என்று சொன்னீர்? அதனுடைய விவரத்தைச் சொல்லுவீர்.

29. சந்திர னிரவி[1] கூடிச் சாடி[2]யி லிருப்ப தாலே
பாரியு மிரண்டு மாகும் பாவையர் தீர்க்க மெய்தும்
இராகுவும் ஐந்தில் நிற்க நற்சுதர் தோஷ மெய்தும்
வீறுது முதல்மனைக்கு வித்தகன் பூர்வம் தன்னில்
பாரிய வினைகள் செய்தான் பகர்ந்தது அந்தத் தோஷம்.

29. சந்திரனும் சூரியனும் ஒன்றாய்க் கூடிக்கொண்டு கும்பத்தில் இருப்பதால் ஜாதகருக்கு இரண்டு மனைவிமார்கள்† ஏற்படுவார்கள். இவ்விருவரும் நீண்ட ஆயுளை உடையவர்களாவார்கள். இராகு ஐந்தாவது பாவத்தில் இருப்பதால் சந்ததிகளுக்குத் தோஷமுண்டாகும். முதல் மனைவிக்குக் குழந்தைகள் பிறக்கா. இவ்விதமாக இவருடைய முன் ஜன்மத்தின் பலன்கள் நேரிடும்.

**குறிப்பு.**—இப்பாடலில் ஓரடி மிகுந்திருக்கிறது.

† **குறிப்பு.—மனைவி விஷயம் :**—முதல் மனைவி ஸ்தானமாகிய ஏழிற்குடைய சனி லக்கினத்திற்கு ஆறிலும் இரண்டிற்குடைய சூரியன் எட்டிலும் மறைந்திருப்பதாலும், சனி உபயராசியிலிருப்பதாலும், லக்கினாதிபதியும் இரண்டிற்குடைய சூரியனும் எட்டில் இருப்பதாலும், ஐந்திற்குடையவரான அங்காரகன் சூரியர் சந்திரர்களுடன் கூடி இருப்பதாலும் ஐந்திற்குடையவரான அங்காரகனைச் சனி பார்த்திருப்பதாலும் சந்தான விஷயமாக ஜாதகருக்கு இரண்டு விவாகங்கள் நேரிட அமைப்பு இருக்கின்றது. இரண்டாந்தார பாவமாகிய ஒன்பதிற்குடைய குரு புத்திர ஸ்தானத்தில் இராகுவுடன் இருந்துகொண்டு ஒன்பதையும் லக்கினத்தையும் பார்ப்பதாலும் இரண்டாந் தாரத்தைக் கொடுக்க அமைப்பு இருக்கின்றது. சனி உபயத்தில் இருப்பதைப் பற்றி ஜாதகாலங்காரம் ஏழாம்பாவம் 648-ஆவது பாடலையும், ஐந்தாம் பாவம் 590ஆ-வது பாடலையும், குரு ஐந்தில் இருப்பதைப் பற்றியும், ஐந்திற் குடையவர் எட்டில் இருப்பதைப்பற்றியும் 600-ஆவது பாடலையும், ஏழிற் குடைய சனிக்கும் ஐந்திற்குடைய அங்காரகனுக்கும் ஒரு விதமான சம்மந்தம் இருப்பதைப்பற்றி 596-ஆவது பாடலையும் பார்த்து அவைகளிலிருந்தும் ஊகிக்கவேண்டும்.

30. முன்வினை சொல்லு மென்ன முக்கூடல் தன்னி லேதான்
முன்குலம் தனிலு தித்து முயர்வான குடும்பி யாகித்
தன்னில்லம் நாகம் கொன்றான் தவசிகட் கிடைஞ்சல் செய்தான்
மன்னர்பால் கட்டு வார்த்தை வகுத்தன னிவனே யென்றோம்.

30. ஜாதகருடைய முன் ஜன்மத்திய பாபத்தைப்பற்றிச் சொல்லுவீர் என்று கேட்க, சொல்லுகின்றார். திருமுக்கூடல் என்ற ஊரில் பிராமணர் குலத்தில் இவர் ஆண் குழந்தையாகப் பிறந்து மேன்மையான

[1] சூரியன் [2] கும்பம்

குடும்பஸ்தராகி வாழ்கின்ற காலத்தில் தன்னுடைய வீட்டில் வசித்துக் கொண்டிருந்தஒரு மணிப்பாம்பைக் கொன்றுவிட்டார். மேலும் தவத்தைச் செய்கின்றவர்களுக்கு இடையூறு செய்தார். மேலும் இவர் அரசாங்கத்தார் முன்பாகப் பொய்யானதும், புனைந்ததுமான வார்த்தைகளைச் சொன்னார் என்று சொல்லுகிறோம்.

31. சொல்லினால் சிலர்க்குத் தோஷம் தோன்றியே சாபம் சொல்வார்
பின்வரும் ஜன்மம் தன்னில் புத்திர தோஷ மாயும்
கன்னிகை யிரண்டு மாயும் காளைகள் துணைஆ ணின்றி
இன்னவார் சொல்லி யேதா னேகினர் ஏழை தாமும்.

31. ஜாதகர் இவ்விதமாகச் சொல்லவே அதனால் சிலருக்குக் கெடுதி நேரிட்டு அவர்கள் சாபத்தைக் கொடுக்கின்றார்கள். நீ உன்னுடைய மறு ஜன்மத்தில் புத்திர தோஷத்தையுடையவராகியும், இரண்டு மனைவி களை உடையவராகியும், ஆண் சகோதரங்கள் இல்லாதவராகியும், இருக்கக் கடவது என்று சாபங்கொடுத்துவிட்டு இந்த ஏழை ஜனங்கள் போய் விட்டார்கள்,

32. அந்திய காலம் தன்னில் அவன்சுதர் பகையு மாகி
அந்தகன் நகர டைந்து அருநர கினிலே புக்கி
வந்தவ னிவனே யென்றோம் மனைவியு மிரண்டு மாகும்
சந்ததம் புத்திர தோஷம் சார்ந்திடு மென்று சொல்வோம்.

32. ஜாதகர் தன்னுடைய கடைசிக் காலத்தில் தன்னுடைய பிள்ளைகளும் தனக்கு விரோதிகளாகிப் பிறகு இறந்து எமனுடைய பட்டணத்திற்குப் போய் கொடிய நகரத்திலிருந்து பிறகு இந்த ஜன்மத்தில் இவர் வந்து பிறந்திருக்கின்றார் என்று சொல்லுகின்றோம். ஆகையால் இவருக்கு இரண்டு மனைவிகள் நேரிடுவார்கள். இவருக்குச் சந்ததி தோஷம் உண்டாகும் என்று சொல்லுகிறோம்.

33. மறுமனை எந்தக் காலம் வந்திடும் விவரம் சொல்வாய்ப்
பெருமையாய் முப்பா னேழில் பேதையும் வருவா ளாகும்
உறைந்திடும் சுதர்கள் தாமும் உரைத்தது தப்பா தாகும்
மறைக்குல முதித்தோன் தானும் வரநதி குலமு திக்கும் ;

33. ஜாதகருக்கு எந்த வயதில் இரண்டாவது தாரம் வந்து சம்ப விக்கும் என்ற விவரத்தைச் சொல்லுவீராக. மேன்மையாக முப்பத்தேழா வது வயதில் † இரண்டாவது மனைவி வந்து நேரிடுவாள். சில குழந்தை கள் இறந்து போய் விடும். நாங்கள் சொல்லியது தவறாமல் நடக்கும். முன் ஜன்மத்தில் பிராமணர் குலத்தில் பிறந்தவராகிய இந்த ஜாதகர் இந்த ஜன் மத்தில் கங்கைகுலமாகிய வேளாளர் ஜாதியில் பிறக்கும் ;

† **குறிப்பு.—இரண்டாவது மனைவி :—** ஜாதகருக்கு வயது ஷ 36-0-0 முதல் ஷ 37-0-0 முடியும் வரையிலும் சனி தசையில் ராகு புக்தி நடக் கின்றது. 29-ஆவது பாடலின்கீழ் வியாக்கியானத்திற் சொன்ன பிரகாரம்

சனி உபயராசியில் இருப்பதால் ஜாதகாலங்காரம் 648-ஆவது பாடல் பிரகாரம் முதல் மனைவியின் சாவில்லாமலே இரண்டாவது மனைவியைக் கொடுக்கச் சனிக்குத் தன் தசையில் அமைப்பு ஏற்படுகின்றது. இரண்டாந்தாரத்திற்கு அதிபதி ஒன்பதாம் பாவத்திற்குரிய குரு ஆகும். இவருடன் ராகு சம்மந்தப்பட்டிருப்பதால் ஜாதகசந்திரிகை 12-ஆவது சுலோகப் பிரகாரம் குருவுடைய பலனை ராகு கொடுக்க அதிகாரம் பெற்றுக்கொண்டு ராகு தன் புக்தியில் இரண்டாவது தாரத்தைக் கொடுக்கும் அமைப்பை அடைகிறார்.

34. காரணம் யாது என்னக் காளையு முன்ஜன் மத்தில்
சூறுமல் மறைகள் தம்மைக் குமரனும் வாழ்ந்த தாலே
பாரினி லிக்கு லத்தில் பிறந்தன னென்று சொல்வோம்
தீரமா யிவனின் யோகம் செப்புவோம் தாயே கேளும்.

34. காரணம் என்ன என்று கேட்க, சொல்லுகின்றார். ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தில் வேதங்களை ஓதாமல் வாழ்ந்ததால் பூமியில் இந்தக்குலத்தில் வந்து பிறந்திருக்கின்றார் என்று சொல்லுகிறோம். இனிமேல் இவருடைய யோகங்களைப்பற்றித் தைரியமாய்ச் சொல்லுகின்றோம். பார்வதியம்மையே ! கேட்பீராக.

35. வறுமையெப் போதும் காணான் மாநிலம் விருத்தி செய்வன்
பெறுமவர் நேசம் கொள்வன் புகழான குடும்பி யாவன்
அறுமுக னருளு மோங்கும் அடிமையா ளதிகம் சேர்ப்பன்
இருஇல்லம் செய்வா னாகும் இராசபூ சிதனு மாவன்.

35. ஜாதகர் எப்போதும் கஷ்டங்களையும் தரித்திரத்தையும் அனுபவிக்கமாட்டார். பெரிய நிலங்களைப் பயிரிட்டுத் தான்யங்களை விருத்தி செய்வார். பெரிய மனுஷாளுடைய சினேகத்தை அடைவார். கீர்த்தியுள்ள சிறந்த குடும்பஸ்தராவார். ஆறு முகங்களையுடைய முருகக் கடவுளினுடைய அருளும் கிருபையும் அதிகரிக்கும். அடிமை ஆட்களை அதிகமாகச் சேர்த்து வைப்பார். இரண்டு வீடுகளைக் கட்டுவார். அரசர்களால் போற்றப்படுபவராவார்.

36. இருபதா மாண்டி லேதான் எழில்கன்னி மாதம் தன்னில்
உரைக்கிறோம் தந்தை கண்டம் உயர்முப்ப தாண்டு தன்னில்
பெருஆடி மாதம் தன்னில் பேசுவோ மன்னை கண்டம்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

36. ஜாதகருக்கு இருபதாவது † வயதில் புரட்டாசி மாதத்தில் இவருடைய தகப்பனார் இறந்துவிடுவார் என்று சொல்லுகிறோம். முப்பதாவது வயதில் ‡ ஆடி மாதத்தில் ஜாதகருடைய தாயார் இறந்து போய்விடுவாள். அருமையான வேதங்களின் முடிவு என்ற உபநிஷத்துக்களில் ஆனந்தமாக விளங்குகின்ற பார்வதியம்மையே ! கேட்பீராக.

† குறிப்பு.—(1) தகப்பனார் மரணம் :—ஜாதகருக்கு வயது ஷ 19-0-0 முதல் ஷ 20-0-0 முடிவும்வரையிலும் குரு தசையில் இராகு புக்தி நடக்கின்றது. பிதுர் லக்கினம் ஒன்பதாமிடமாகிய மீனம் ஆகும். மீன

லக்கினத்திற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் சனி புதன் சுக்கிரன் சூரியன் இவர்கள் மாரகாதிபதிகள் ஆகின்றார்கள். ஒரு பாவாதிபதியே தன்னுடைய தசாபுக்தி காலங்களில் அந்தப் பாவத்திற்குடையவருக்கு மாரகத்தைக் கொடுத்து விடுவார் என்று இதர நாடிகளிலுங்கூட சொல்லி இருக்கின்றது. இது விஷயமாக 82-ஆவது ஜாதகம் 24-ஆவது பாடலின்கீழ் கொடுத்துள்ள வியாக்கியானத்தையும் படிக்கவும். குரு கடகத்திற்குப் பிதுர்பாவாதிபதியாகிச் சந்திரனுக்குக் கர்ம ஸ்தானத்தில் ராகுவுடன் கூடி இருப்பதால் பிதாவுக்கு மாரகஞ் செய்யக் குருவுக்கு அமைப்பு இருக்கின்றது. ராகு பிதுர் லக்கினாதிபதியான குருவுடன் கூடிச் சந்திரனுக்குக் கர்ம ஸ்தானத்தில் இருப்பதால் ராகு தன்னுடைய புக்தியில் பிதாவுக்கு மாரகஞ் செய்யும் அமைப்பை ஜாதகசந்திரிகை 12-ஆவது சுலோகப் பிரகாரமும் துய்யகேரளம் எட்டாம் பாவம் 20-ஆவது பாடல், ஜாதக பாரிஜாதம் 14-ஆவது அத்தியாயம் 60-ஆவது சுலோகம் இவைகளின் பிரகாரமும் உடையவராகின்றார்.

‡ (2) **தாயார் மரண விஷயம்** —ஜாதகருக்கு வயது ஷூ 29–0–0 முதல் ஷூ 30–0–0 முடியும்வரையிலும் சனி தசையில் சுக்கிர புக்தி நடக்கின்றது. மாதுர் லக்கினம் நான்காவது பாவமாகிய துலாமாகும். துலா லக்கினத்திற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் சூரியனும் குருவும் மாரகாதிபதிகள் ஆகின்றார்கள். சனி மாரகாதிபதியாகிய குருவினுடைய வீட்டில் துலாத்திற்கு மூன்றுவதான மாரக வீட்டில் இருந்து கொண்டு மாதுருகாரகனாகிய சந்திரனைப் பார்க்கின்றார். ஆகையால் ஜாதக சந்திரிகை 12-ஆவது சுலோகப் பிரகாரம் சனி தன் தசையில் மாதாவுக்கு மாரகஞ் செய்ய அமைப்பு உடையவராகவிருக்கின்றார். சுக்கிரன் துலாத்திற்கு லக்கின அஷடமாதிபதியாகி மாரகாதிபதியாகிய குரு வீட்டில் இருப்பதுடன் மாதுரு பாவாதிபதியாகவே இருக்கின்றார். ஆகையால் ஜாதகசந்திரிகை 12-ஆவது சுலோகம், துய்யகேரளம் எட்டாம் பாவம் 14-ஆவது பாடல், 82-ஆவது நம்பர் ஜாதகம் 24-ஆவது பாடலின்கீழ் கொடுத்துள்ள வியாக்கியானம் ஆகிய இவைகளின் பிரகாரம் சுக்கிரன் தன்னுடைய புக்தியில் மாதாவுக்கு மரணத்தைக் கொடுக்கும் அமைப்பை உடையவராகின்றார்.

37. அறுபது ஒன்ப தாண்டில் ஐப்பசி மாதம் தன்னில்
திருமக னுடலம் ஏகும் செப்புவோம் பின் ஜன் மத்தைக்
கரியூரில் பிரம்ம சேய்ாய்க் கலப்பனு மிந்தப் பாலன்
பெருவயி றோனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

37. அறுபத்தொன்பதாவது வயதில் † ஐப்பசி மாதத்தில் ஜாதகர் இறந்து இவருடைய தேகம் மறைந்துபோய்விடும். இவருடைய மறு ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவர் கரூரில் பிராமணர் குலத்தில் ஆண் குழந்தையாகப் பிறப்பார். பெரிய வயிற்றையுடைய விநாயகக்கடவுளைப் பெற்றெடுத்தப் புண்ணியவதியாகிய பார்வதியம்மையே ! கேட்பீராக.

† **குறிப்பு.—ஜாதகர் மாரகம் :**—ஜாதகருக்கு வயது ஷூ 68 முடிந்து 9-ஆவது வயதில் ஐப்பசி மாத காலத்தில் சுக்கிர தசையில் சந்திர புக்தி

நடக்கின்றது. கடக லக்கினத்திற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் சுக்கிரன் சனி சூரியன் புதன் இவர்கள் மாரகரா கின்றார்கள். சுக்கிரன் உச்சமாகி மாரகாதிபதியாகிய புதனுடன் கூடி இருக் கின்றார். ஆகையால் சுக்கிரன் தன் தசையில் மாரகஞ்செய்யும் அமைப் புடையவராகின்றார். சந்திரன் லக்கினாதிபதியாகி மாரகாதிபதியாகிய சூரிய னுடன் கூடி எட்டில் பலவீனமாகி இருக்கின்றார். லக்கினாதிபதியாகிய சந்திரனைவிடச் சனி இங்கு வலிவாயிருக்கின்றார். ஆகையால் ஜாதக சந்திரிகை 23-ஆவது சுலோகம், துய்யகேரளம் எட்டாம் பாவம் 14-ஆவது பாடல், ஜாதகபாரிஜாதம் 14-ஆவது அத்தியாயம் 57-ஆவது சுலோகம், 82-ஆவது நெம்பர் ஜாதகம் 24-ஆவது பாடலின் கீழ் கொடுத்துள்ள வியாக்கி யானம் இவைகளின் பிரகாரம் சந்திரன் தன்னுடைய புக்தியில் மாரகஞ் செய்ய அமைப்பு உடையவராகின்றார்.

38. பாலகன் ஜனிக்கும் காலே பணிதசை ஆண்டு நாலும்
சாலவே திங்க ளொன்பான் சாற்றுவோம் பலனை யாங்கள்
பாலகன் தனக்கு ரோகம் பருகி பின் நிவிர்த்தி யாகும்
கோலமாய்த் துணைவர் விருத்தி குறித்தனம் சுபங்கள் தாமே.

38. ஜாதகர் பிறந்த போது இராகு மகாதசை இருப்பு நான்கு வருஷ ங்களும் ஒன்பது மாதங்களும் ஆகும். இந்தக் காலத்தில் நடக்கும் பலா பலன்களை நாங்கள் சொல்லுகின்றோம். ஜாதகருக்கு நோய் வந்து பின்னால் நீங்கிவிடும். சகோதரர்கள் உண்டாவார்கள். சுபகாரியங்கள் நடைபெறும் என்று சொல்லுகின்றோம்.

39. அன்னையின் துணைவர் நோயும் ஆவுகள் சேத மெய்தும்
தந்தைக்குப் பிணியு மெய்தும் சாந்தமாம் பூமி சேர்க்கை
இன்னமும் விவர மாக வியம்புவோம் இரண்டி லேதான்
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே.

39. ஜாதகரின் தாயாருடைய சகோதரர்களுக்கு ரோகமும், பசுக்கள் நஷ்டமும் உண்டாகும். ஜாதகருடைய தகப்பனருக்கு நோய் உண்டாகி அது சாந்தமுமாகிவிடும். நிலங்கள் வந்து சேரும். இன்னமும் மற்ற விஷயங்களை விவரமாக இரண்டாவது பாகத்தில் சொல்லுகிறோம். மேன்மை யானதும், சிறந்ததுமான யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே ! கேட்பீராக.

# ஜாதகம் 98

1. பிரை[1]சாடி[2] ராகு மேடம் பொன்[3]நந்தி[4] கேது கோலாம்
தரைமகன்[6] புகர்[7]பான்[8] புந்தி[9] தங்கிய சீயம்[10] தன்னில்
கரியவன்[11] கன்னி யாகக் கடகமும் ஜன்ம மாக
உரைகுவீர் பலனை யென்று உத்தமி கேட்க லுற்ருள்.

| | | | |
|---|---|---|---|
| | ராகு | குரு | |
| சந்திரன் | இராசி சக்கரம் | | லக்கினம் |
| | | | சூரியன் அங்காரகன் புதன் சுக்கிரன் |
| | | கேது | சனி |

அவிட்டம் 4-ஆம் பாகம்.
அங்காரகதசை ஞ 0—5—0.

1. சந்திரன் கும்பத்திலும், ராகு மேஷத்திலும், குரு ரிஷபத்திலும், கேது துலாத்திலும், அங்காரகன் சுக்கிரன், சூரியன், புதன் சிம்மத்திலும், சனி கன்னியிலும், ஜன்ம லக்கினம் கடகமாகவும் இருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று உத்தமியாகிய பார்வதியம்மையார் கேட்கின்ருர்.

**குறிப்பு.**—இந்த ராசிச் சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரகநிலை பொருத்தமுடையதாகும் :—மேஷத்தில் புதனும் குருவும் ராகுவும், மிதுனத்தில் சனியும், கடகத்தில் சூரியனும், சிம்மத்தில் அங்காரகனும், துலாத்தில் கேதுவும், விருச்சிகத்தில் சந்திரனும், தனுசில் சுக்கிரனும் ஆகும். அங்காரகனும் புதனும் அஸ்தமனம் அடைந்திருக்கின்ருர்கள்.

2. அத்திரி சொல்லு கின்ருர் ஆணது ஜனன மாகும்
வித்தக னில்லஞ் சொல்வேன் விளங்கிடுந் தென்பால் வாசல்
சுத்தமாய்க் கீழ்மேல் வீதி தென்திசை காளி வாசம்
அத்திமா முகனு மேற்கில் அருகினில நதியு முண்டு.

---

[1] சந்திரன் [2] கும்பம் [3] குரு [4] ரிஷபம்
[5] துலாம் [6] அங்காரகன் [7] சுக்கிரன் [8] சூரியன்
[9] புதன் [10] சிம்மம் [11] சனி

**2.** அத்திரி மகரிஷி சொல்லுகின்றார். ஜனனமான குழந்தை ஆண் குழந்தையாகும். ஜாதகர் பிறந்த வீட்டைப்பற்றிச் சொல்லுகின் றேன். இந்த வீடு கிழக்கு-மேற்குத் தெருவில் தெற்குத் திக்கில் வாயிற் படியை உடைய தாகும். தெற்குத் திக்கில் காளியம்மன் கோயில் இருக் கும். யானை முகத்தையுடைய விநாயகக்கடவுளுடைய கோவில் மேற்குத் திக்கில் இருக்கும். சமீபத்தில் ஓர் ஆறும் உண்டு.

**3.** வடமேல்பால் அனுமான் மாரி மருவிடுஞ் சிற்றூர் தன்னில்
இடமது கூரை யாகும் இவ்வகை அடையா ளத்துள்
மடமயில் வடுக ளுகும் மாரனுங் கங்கை வமிசம்
அடைவுட னிந்தப் பாலன் அருளுவானென்று சொல்வோம்.

**3.** வடமேற்குத் திக்கில் அனுமாருடைய கோயிலும், மாரியம்மன் கோயிலும் இருக்கும். பிறந்த ஊர் சிறிய கிராமமாகும். வீடு கூரைவீடாக விருக்கும். இவ்விதமான அடையாளங்கள் உள்ளவிடத்தில் கங்கை குலம் என்ற வேளாளர் குலத்தில் தெலுங்கராக இந்த ஜாதகர் பிறப்பார் என்று சொல்லுகிறோம்.

**4.** தந்தையோ கங்கை வமிசந் தன்துணை எழுவர் தோன்றுஞ்
சந்ததம் ஆண்பால் மூன்று தையலு மொருத்தி தீர்க்கம்
விந்தையாய்த் தந்தை சேதி விளம்புவோ மாநி றத்தன்
நிந்தையு முடைய ளுகும் நேமியில் கிருஷி செய்வன்.

**4.** ஜாதகருடைய தகப்பனார் வேளாளர் குலத்திற் பிறந்தவ ராவார். இவருடன் கூடப்பிறந்தவர்கள் எழுபேர் ஆவார்கள். இவர்களில் மூன்று ஆண்களும் ஒரு பெண்ணும் நீண்ட ஆயுளை உடையவர்கள் ஆவார்கள். ஜாதகரின் தகப்பனாருடைய விஷயங்களை ஆச்சரியமாகச் சொல்லுகின்றோம். இவர் மாநிறமுள்ள தேகத்தை உடையவர். இவர் அபவாதம், மானக்கேடு இவைகளை உடையவர். நிலங்களைப் பயிரிடும் விவசாயத் தொழிலை உடையவ ராவார்.

**5.** பூரமுந் தேளின் ராசி பிறப்பனுங் கல்வி மானும்
ஆறுமாமுகத்தோன் பக்தி யவனுமே கொள்வா னுகுஞ்
சீரிய குணங்காட் டாதான் சிறுத்தவர்க் குதவி செய்வன்
காரிழை மோகனுவன் கடுநடை பகல்புசிப்பன்.

**5.** ஜாதகருடைய தகப்பனார் விருச்சிக ராசியில் பூர நட்சத்திரத் தில் பிறந்திருப்பார். இவர் வாசித்தவராவார். ஆறு பெரிய முகங்களை உடைய முருகக்கடவுளின்மேல் அன்பும் பக்தியும் உடையவராவார். கோப குணத்தைக் காட்டிக்கொள்ளமாட்டார். ஏழைகளுக்கும் நொந்து போனவர்களுக்கும் உபகாரஞ்செய்வார். ஸ்திரீகளின் பேரில் காம ஆசையை உடையவர். நடைச்சுருக்கு, அஃதாவது மெதுவான நடையை உடையவர். மத்தியான்னத்திற் சாப்பிடுவார்.

6. அன்னிய தேசந் தன்னில் அவன்சில நாள்கள் வாசந்
தன்மனங் கபடமிலான் சாந்தவான் வறுமை காணுன்
பின்னமில் லாத தேகன் பேதையும் பகையு மாகும்
அன்னவன் பீஷ்ம முள்ளான் அயலார்பொன் னிச்சை யில்லான்.

6. ஜாதகருடைய தகப்பனுர் வெளிதேசத்தில் கொஞ்சகாலம் வாசஞ் செய்வார். இவர் தன்னுடைய மனத்தில் கள்ளம், கவடு, வஞ்சனை இவைகள் இல்லாதவர். சாந்தமான குணத்தை உடையவர். கஷ்டங்களும் தரித்திரமும் இல்லாதவர். அவயவக் குறைவு ஒன்றும் இல்லாதவர், இவருக்கு மனைவி விரோதியாக விருப்பாள். இவர் பார்க்க பயங்கரமாக விருப்பார். பிறருடைய பணத்தில் ஆசையில்லாதவராவார்.

7. சொல்லிய குணத்தா னுக்குத் தோன்றுவா னிந்தப் பாலன்
வல்லவன் குணத்தைச் சொல்வேன் வாக்கது சுத்த முள்ளான்
நல்லவ னுகி வாழ்வன் நற்புத்தி தைரி யத்தன்
அல்லலென் றோரைக் காப்பன் அதிகாரி நேசங் கொள்வன்.

7. இங்குச் சொல்லப்பட்ட குணங்களையுடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய குணதிசயங்களைப் பற்றிச் சொல்லு கின்றேன். இவர் சுத்தமான வாக்கை உடையவர். சுத்தமான நல்ல வார்த்தைகளை உபயோகப்படுத்துவார். நல்லவராகவிருந்து வாழ்வார். நல்ல புத்தியை உடையவர். தைரியமுடையவர். கஷ்டத்தை அடைந்திருக் கின்றோம் என்று சொல்லுகின்றவர்களைக் காப்பாற்றுவார். அதிகாரம் உள்ளவர்களுடைய சிநேகத்தை உடையவராவார்.

8. பலவிதச் செட்டுச் செய்வன் பாருகள திகஞ் சேர்ப்பன்
தலமது தீர்த்தந் தோய்வன் சகடுவா கனமு முள்ளான்
விலைமாதர் மோகங் கொள்வன் வித்தையு முடைய னுகுங்
கலகத்திற் கிடங்கொ டாதான் கரமதில் கமல ரேகை.

8. ஜாதகர் அநேக விதமான வியாபாரங்களைச் செய்வார். அநேக நிலங்களைச் சேர்த்து வைப்பார். புண்ணிய க்ஷேத்திரங்களுக்குப் போய் நல்ல தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்வார். வண்டி, முதலிய வாகனங் களை உடையவராவார். போகஸ்திரீகளின் மேல் காம ஆசையை உடையவர். படிப்பு உள்ளவராவார். கலகஞ் செய்வதில் இஷ்டமில்லாதவர். இவர் தன்னுடைய உள்ளங்கையில் கமல ரேகை என்ற ஒருவிதமான தாமரை ரேகையை உடையவராவார்.

9. உண்டியுஞ் சுகமாய்க் கொள்வன் உண்மையாம் மனத்தா னுகும்
பண்டிபண் டார முள்ளான் பால்பாக்கிய மதிகஞ் சேர்ப்பன்
துண்டமாப் பேச மாட்டான் தொடுத்ததை வெல்வா னுகும்
அண்டினோர் தம்மைக் காப்பன் அகசிய வார்த்தை சொல்வன்.

9. ஜாதகர் சுகமானதும் நல்லதுமான ஆகாரத்தைச் சாப்பிடுவார். உண்மையானதும் நல்லதுமான மனத்தை உடையவர். பழமையான துரைத்தனம், பல பண்டங்கள், பொக்கிஷம், சிவனடியார் ஆகிய இவர்களை

உடையவராவார். பால் பாக்கியம் அதிகமாக உடையவராவர். கண்டிப்பாயும் கடினமாயும் பேசமாட்டார். தான் எடுத்தக் காரியத்தைச் செய்து முடிக்குஞ் சாமர்த்தியம் உள்ளவராவார். தன்னிடம் வந்து சேர்ந்தவர்களைக் காப்பாற்றுவார். சிறிப்பையும் சந்தோஷத்தையும் உண்டு பண்ணக் கூடிய வேடிக்கையான வார்த்தைகளைச் சொல்லுவார்.

10. நல்லவன் நல்லவர்க்கு நற்புத்தி பெருமை யேற்பன்
புல்லிய புத்தி கொள்ளான் பந்துவும் புகழ வாழ்வன்
இல்லறஞ் சித்திரஞ் செய்வன் எந்தக்கா லத்தில் சொல்வாய்
கல்வீடு சித்திர மாகக் கட்டுவன் பதினு றுண்டில்.

10. ஜாதகர் நல்லவர்களுக்கு நல்லவராக விருப்பார். நல்ல புத்தியை உடையவர். பெருமையை யடைவார். தாழ்ந்த புத்தியை உடையவ ரல்லர். பந்துக்கள் இவரை மெச்சும்படியான அந்தஸ்திலிருந்து வாழ்வார். இவர் அழகான சித்திரங்களையுடைய இல்லறத்திற்குத் தகுந்த வீட்டைக் கட்டுவார். இவ்விதமாக அவர் எந்த வயதில் செய்வார் என்று கேட்க, பதினுறுவது வயதில் கல் வீட்டை அழகாகக் கட்டுவார்.

11. இனங்களை வசியங் கொள்வன் எதிரியை நசிக்க வைப்பான்
கனமான குடும்பி யாவன் கனத்த பூஷணங்கள் சேர்ப்பன்
துணைவர்கள் ஆண்பால் காணுன் தோன்றினுந் தீதே யாகும்
வினையிலாப் பெண்பால் ரண்டு மேவிடுந் தீர்க்க மாக.

11. ஜாதகர் தன்னுடைய பந்துக்களைத் தன்பக்கமாக்கிக் கொள்ளுவார். சத்துருக்களைக் கெடுத்து விடும்படியான சாமர்த்தியத்தை உடையவர். மேன்மையான சிறந்த குடும்பஸ்தராக விருப்பார். பெரியனவும் விலையுயர்ந்தனவுமான ஆபரணங்களைச் சேர்த்துவைப்பார். இவருக்கு ஆண் சகோதரங்கள் கிடையா. ஒரு சமயம் பிறந்தாலும் அவர்கள் இறந்து போய்விடுவார்கள். பாவமில்லாத இரண்டு பெண் சகோதரங்கள் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள்.

குறிப்பு. ஆண்சகோதர தோஷம் :—மூன்றிற்குடைய புதனும் அங்காரகனும் அஸ்தமனம் அடைந்திருக்கின்றுர்கள். ஆறுக்குடையவரான குரு பதினென்றில் இருக்கின்றுர். எட்டிற்குடைய சனி மூன்றில் இருக்கின்றுர். ஆகையால் சம்புஹோரா பிரகாசிகா சகோதர பாவம் 58-ஆவது 51-ஆவது சுலோகங்கள் பிரகாரம் ஆண் சகோதரங்களுக்குத் தோஷமுண்டு.

12. பின்துணை யாகச் சொல்வோம்பேசுவோம் மூத்தோள் சேதி
நன்சொல்லு மடக்க முண்டு தர்மமாங் குணத்தாளாகும்
உன்னத சிவந்த மேனி உள்மனங் கபடு மில்லாள்
அன்னவள் வறுமை காணுள் அழகுளாள் வரனும் உத்தரம்.

12. இந்த இரண்டு சகோதரிகளும் ஜாதகருடைய இளைய சகோதரிகளாவார்கள். இவர்களில் மூத்த சகோதரியின் விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேம். இவள் சாந்தமாகப் பேசுபவள். தர்ம

குணத்தையுடையவளாவள். உயரமானதும் சிவப்பு நிறமுள்ளதுமான தேகத்தை யுடையவள். தன்னுடைய மனத்தில் கள்ளம் கவடு வஞ்சனை இவைகள் இல்லாதவளாவாள். இவளுக்குக் கஷ்டங்களும் தரித்திரமும் கிடையா. இவள் அழகாக விருப்பாள். இவளுக்குப் புருஷன் வடக்குத் திக்கில் இருந்து வந்து நேரிடுவான்.

13. சுதர்களு மாண்பால் ரண்டு தோகையு மொருத்தி யாகும்
இதுமூன்றுந் தீர்க்க மெய்தும் இடறின்றிச் சுகமாய் வாழ்வள்
அதன்பின்னோள் சிவந்த மேனி அழகுண்டு முன்கோ பத்தள்
சதியான மனத்தா ளாகுஞ் சாதிப்பாள் சிலவே சங்கை.

13. ஜாதகருடைய இளைய முதல் சகோதரிக்கு இரண்டு ஆண் குழந்தைகளும் ஒரு பெண் குழந்தையும் ஆக மொத்தத்தில் மூன்று குழந்தைகள் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள். இவள் கஷ்டமில்லாமல் சௌக்கியமாக விருந்து வாழ்வாள். ஜாதகருடைய இளைய இரண்டாவது சகோதரி சிவப்பு நிறமுள்ள தேகத்தை யுடையவள். அழகுள்ளவள். முன்கோபத்தை உடையவள். கெட்ட மனத்தை உடையவளாவாள். சில விஷயங்களைப் பற்றித் தான் சொன்னதே சரி என்று சொல்லி வாதாடி நிலைக்கப்பண்ணுவாள்.

14. வரனுமே தென்மேல் திக்கில் வருவனும் சிலநாள் வாழ்வன்
பரவச முடைய ளாகும் பதியினில் வாழ்வா ளாகுங்
கருவுமே காணு ளாகுங் கழறுவோம் பின்பால் சேதி
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

14. ஜாதகருடைய இளைய இரண்டாவது சகோதரிக்குப் புருஷன் தென்மேற்குத் திக்கிலிருந்து வந்து நேரிடுவான். இவள் இவனுடன் கொஞ்ச காலம் இருந்து வாழ்வாள். பிறகு இவள் இன்னொருவரிடம்போய்ச் சேர்ந்து பூமியில் வாழ்ந்து கொண்டும் இருப்பாள். இவளுக்குக் கர்ப்பமே தரிக்காது. இவளுடைய இதர விஷயங்களைப்பற்றிப் பின்னால் சொல்லு கிறோம். அருமையான வேதங்களின் முடிவு என்ற உபநிஷத்துக்களில் ஆனந்தமாக விளங்குகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

15. ஜாதகன் மணத்தின் காலஞ் சாற்றுவோ மிருப தாண்டில்
காதலி மேற்கு திக்கில் கலப்பளாஞ் சிவந்த மேனி
ஓதுவே னவள்குணத்தை உறுதியில் லாத நெஞ்சந்
தீதுகள் ஒருவர் கெண்ணுள் செல்வியும் யோக சாலீ.

15. ஜாதகருடைய விவாக காலத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு இருபதாவது வயதில் † மனைவி மேற்குத் திக்கிலிருந்து வந்துநேரிடு வாள். இவள் சிவப்பு நிறமான தேகத்தையுடையவள். இவளுடைய குண திசயங்களைப்பற்றிச் சொல்லுகின்றேன். இவள் தைரியமில்லாததும் வலிவில் லாததுமான மனத்தை உடையவள். ஒருவருக்குங் கெடுதியைச் செய்ய எண்ணமாட்டாள். இவள் யோகத்தை உடையவளாவாள்.

† குறிப்பு. விவாக விஷயம் :—சாமி என்ற லக்கினாதிபதியாகிய சந்திர கு ஏழில் தனஸ்தானாதிபதியாகிய சூரியன் இருப்பதாலும், சாமியாகிய

லக்கினாதிபதியாகிய சந்திரனும், பத்திற்குடைய அங்காரகனும் இரண்டிற்குரிய சூரியனும் நான்கிற்குடைய சுக்கிரனும் ஒன்றாய்க் கூடியும் பார்த்துக் கொண்டும் இருப்பதாலும், கீர்த்திஸ்தானம் என்ற பத்திற்குடைய அங்காரகனும் சனியும் லக்கினத்திலிருந்து நான்கு ராசிக்குள்ளே இருப்பதாலும், ஜாதகசிந்தாமணி ஏழாவது பாவம் 973, 974-ஆவது பாடல் பிரகாரம் ஜாதகருக்கு வாலிபத்தில் விவாகம் நடக்கும் அமைப்பு இருக்கின்றது. ஜாதகருக்கு வயது ஹூ 19-0-0 முதல் ஹூ 20-0-0 முடியும் வரையிலும் குரு தசையில் குருபுக்தி நடக்கிறது. குரு ஒன்பதிற்குடையவராகி களத்திரஸ்தானமாகிய மகரத்தையும் அதற்கு அதிபதியாகிய சனியையும் பார்க்கிறார். ஆகையால் ஜாதகபாரிஜாதம் பதினான்காவது அத்தியாயம் இருபத்தொன்பதாவது சுலோகப் பிரகாரம் ஒன்பதாம் பாவாதிபதியாகிய குரு தன் தசையில் தன்னுடைய புக்தியில் விவாகஞ் செய்துவைக்கும் அமைப்பு உடையவாரக விருக்கின்றார்.

16. அன்னம்போல் சாய லுள்ளாள் ஆளனுக் கினிய ளாகும்
அன்னமு மன்பா யீவள் அற்பபுத் திகளு மில்லாள்
அன்னியர்க் குதவி செய்வள் அவள்தெய்வ பத்தி பூண்பள்
கன்னென மொழியு முள்ளாள் கபடிலிலாள் வறுமை காணாள்.

16. ஜாதகருடைய மனைவி அன்னப்பட்சிவைப்போல் அழகான ரூபத்தை உடையவள். இவள் தன்னுடைய புருஷனுக்கு இஷ்டமானவள். பிறருக்குச் சாப்பாட்டை ஆசையுடன் போடுவாள். தாழ்ந்த புத்திகள் இல்லாதவள். பிறருக்கு உபகாரத்தைச் செய்வாள். இவள் தெய்வத்தின் மேல் பக்தியும் அன்பும் உள்ளவள். சர்க்கரையைப்போல இனிமையான வார்த்தைகளைச் சொல்லுவாள். கள்ளம் வஞ்சனை கபடம் இவைகளை உடையவளல்ல. கஷ்டங்களையும் தரித்திரத்தையும் அடையமாட்டாள்.

17. புத்திரர் நவமே தோன்றும் போகிடுஞ் சிலவே என்றோம்
சுத்தமா யாண்பால் மூன்று தோகையு மவ்வாறுகும்
புத்திரரி யிவன்மேலாக பொருந்திடும் யோகம் தானும்
அதிதியைப் பெற்ற மாதே அறைகிறோ மன்னே சேதி.

17. ஜாதகருக்கு மொத்தத்தில் ஒன்பது குழந்தைகள் பிறக்கும், இவைகளில் சில குழந்தைகள் இறந்துபோய்விடும் என்று சொல்லுகின்றோம். மூன்று ஆண் குழந்தைகளும் மூன்று பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள். இவருடைய புத்திரர்கள் இவருக்கு மேலான அந்தஸ்தையும் யோகத்தையும் உடையவர்களாவார்கள். தேவர்களைப் பெற்றவளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! இனிமேல் ஜாதகருடைய தாயாரின் விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம்.

18. அன்னையும் சிவந்த மேனி அழகுளாள் உயர மில்லாள்
தன்சொல்லே மேன்மை யாகச் சாதிப்பாள் முன்கோ பத்தாள்
பின்னமில் லாத தேகி பிறர்வான் சுகமே யுள்ளாள்
தன்னினம் சேரா ளாகுந் தனியளாய் வாழ்வா ளாமே.

18. ஜாதகருடைய தாயார் சிவப்பான நிறத்தையுடைய தேகத்தை உடையவாளாள். அழகுள்ளவள். உயரமாகவிருக்கமாட்டாள், தான்சொல்லுகின்ற வார்த்தைகளே மேன்மையானவை எனவும் சிறந்தவை எனவும் சொல்லி அவைகளை நிலைநாட்டுகின்ற சாமர்த்தியத்தை உடையவள். முன்கோபத்தை உடையவள். அவயவக் குறைவில்லாத தேகத்தை உடையவள். பிற புருஷனுடைய சுகபோகங்களை அனுபவிப்பாள். இவள் தன்னுடைய பந்துக்களுடன் இருந்து வாழமாட்டாள். தனியாக விருந்து வாழ்பவளாவாள்.

19. தன்துணை ஆண்பா லொன்று தையலு மவ்வா றுகும்
அன்னவர் தன்போல் வாழ்வர் அவள்பூர்வஞ் சொல்லக் கேளாய்
மன்னிய ஆலங் காட்டில் மறைக் குல முதித்து மேலும்
பொன்பணி அதிக முண்டாய்ப் புத்திரர் வரனு மாகி;

19. ஜாதகரின் தாயாருடைய சகோதரங்களில் ஆண் ஒன்றும் பெண் ஒன்றும் ஆகும். இவர்கள் இவளைப்போலவே வாழ்வார்கள். தாயாருடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன், கேட்பீராக. சிறந்த ஆலங்காடு என்ற திருவாலங்காடு என்னும் க்ஷேத்திரத்தில் இவள் பிராமணர் குலத்திற் பிறந்து தனத்தையும் ஆடை ஆபரணங்களையும் அதிகமாக வடைந்து. புருஷனும் மக்களும் உடையவாளாகி;

20. வாழ்நாளில் வினையைச் சொல்வேன் வரனுமே சிலது பொன்னைத்
தாழ்வான நதிகு லத்தோன் தன்னிடம் வைத்து யின்னோன்
ஆழியி லுயர்வ தான அக்காசி தன்னில் சென்றான்
பாழான பேதி யாலே பறந்தனன் காலன் பக்கல்.

20. வாழ்கின்ற காலத்தில் நேர்ந்த பாவத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன். இவளுடைய புருஷன் சிறிது தனத்தைத் தாழ்ந்த குலமாகிய கங்கை குலமென்ற வேளாள குலத்திற் பிறந்த ஒருவனிடம் கொடுத்து சமுத்திரத்தினால் சூழப்பட்ட இந்தப் பூமியிலுள்ள மேன்மையான சிறந்த காசி க்ஷேத்திரத்திற்குப் போனார். இவர் கொடிய பேதி வியாதியால் இறந்து எமனிடத்திற்குப் போய்ச் சேர்ந்து விட்டார்.

21. மாரனு மாண்ட சேதி மங்கையு லிகித மூலந்
தீரமாய்க் கேட்டுப் பின்பு செல்வதி வருத்த முற்றுப்
பாரினில் வேளான் பக்கல் புகன்றனள் வரன்தன் சேதி
தேரிய மனத்தா ளாகிச் செம்பொன்னை வினவும் போது;

21. இவர் இறந்துபோய்விட்ட சங்கதியை இவருடைய மனைவி காகித மூலமாகத் தைரியத்துடன் தெரிந்துகொண்டு பிறகு வருத்தத்தை அடைந்து பூமியில் இந்த வேளாளனிடம் போய்த் தன்னுடைய புருஷனுடைய சங்கதியைச் அவனிடம் சொல்லித் தைரிய முடையவளாகித் தனத்தைப்பற்றி கேட்கும்போது;

22. இன்னமுஞ் சிலநாள் சென்று யீகுவேனென்று சொல்ல
அன்னவள் மனந்தா ளாமல் ஆகாத்திய மிகவே செய்து
மன்னர்பால் சொல்லி யேதான் சாந்தமாய் பேதி யாலே
துன்னிய காலன் பக்கல் சென்றனை ளிந்த மாது.

22. அந்த வேளாளன் இன்னும் சில நாட்கள் கழித்துத் தருகிறேன் என்று சொல்ல, இவள் மனத்தால் சகிக்கமுடியாதவளாகி எதிரிடையாகப் பொல்லாங்கு அதிகமாகச் செய்து அரசாங்கத்தார் சமாதானம் சொல்லிய பிறகு இவள் இரத்த பேதியால் இறந்து எமனிடத்திற்குப் போய்ச் சேர்ந்தாள்.

23. பிரமனுல் வரையப் பட்டுப் பிறந்தனள் செட்டி வமிசம்
வரனுண்டாய்ச் சிலநாள் வாழ்ந்து மரித்துமுன் கடனுக் காக
உறைந்தனள் கங்கை வர்க்கம் வருகுவாள் அவனில் சென்று
. . . . . . . மங்கையும் வாழ்வாளாமே.

23. பிரமதேவனுல் பிரமலிபியுடன் எழுதப்பட்டுச் செட்டியாருடைய குலத்தில் ஒரு பெண்ணுக இவள் பிறந்தாள். இவள் புருஷனை அடைந்து அவனுடன் கொஞ்சகாலம் வாழ்ந்திருந்து பிறகு இறந்து முன் ஜன்மத்திய கடனுக்காக வேளாளர் குலத்திற் பிறந்தாள். தனக்கு வந்து சம்பவிக்கின்ற புருஷனுடைய வீட்டிற்குப்போய் இவள் அவனுடன் வாழ்பவளாவாள்.

**வேறு**

24. சேரும் தோஷம் தனக்குச் சுதர்செப்பு முனியே விவர மதாய்
பாரில் சுதராண் ஒன்றேயாம் பாலன் தீர்க்கம் வேறு காணுள்
நாரி தனக்குப் பகையாகும் நங்கை தன்னு லிவ்விதியே
பாரி லிவள்தன் பின்ஜன்மம் பகரக் கேண்மோ பைங்கொடியே.

24. இவளுடைய பிள்ளைகளுக்கு உண்டாகின்ற தோஷத்தைப் பற்றி விவரமாகச் சொல்லுவீர், முனிவரே! என்று கேட்கச் சொல்லுகின்றுர். இவளுக்குப் பூமியில் ஒரே ஒரு பிள்ளைதான் நீண்ட ஆயுளை உடையவனுக விருப்பான். வேறு பிள்ளைகள் இவளுக்குக் கிடையா. இந்தப் பிள்ளையும் இவளுக்கு விரோதியாக விருப்பான். அவ்விதமாக நடப்பதற்கு இவளுடைய விதியே காரணமாகும். பூமியில் இவளுடைய மறு ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன். பார்வதியம்மையே! கேட்பீராக.

25. கொடியே தோகை கீழ்ப்பாலில் குதிப்பாள் வைசிய குலமதனில்
அடைவாய்ப் பணிகள் தானுண்டாய் ஆறுமா முகத்தோன் பத்திய [தாய்த்
துடிநே ரிடையாள் வாழ்வாளாம் செப்பும் மிவனின் தன் பூர்வங்
கெடிலந் தென்பால் சிறுஊரில் குதித்தான் கர்ண குலமதனில்.

25. ஜாதகருடைய தாயார் தோகை என்ற ஸ்தலத்திற்குக் கிழக்குத் திக்கில் உள்ள ஊரில் வைசியருடைய ஜாதியில் போய்ப் பிறப்பாள். இவள் ஆடை ஆபரணங்களை உடையவளாகி ஆறு பெரிய முகங்களை உடைய முருகக்கடவுளின்மேல் பக்தியும் அன்பும் உடையவளாகி

வாழ்பவளாவாள். ஜாதகருடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லு கிறேன். கெடிலத்திற்குத் தெற்கிலுள்ள ஒரு சிறிய கிராமத்தில் கணக்கர் என்ற கருணீர் குலத்தில் ஆண் குழந்தையாய்ப் பிறந்தார்.

26. குலத்துத் தொழிலே தான்செய்து குலவு நாளில் வினை சொல் [வேன்
பிலமி லாத ஏழைதனைப் புலம்ப வைத்தான் இதுவன்றிப்
புலையர் சாபம் தான் சேர்ந்து புகல்வார் ஏழை மனவெறுப் பால்
நலஞ்சேர் பின் ஜன் மங்களிலே நவில்வார் குலத்தில் பழிப்பாக ;

26. ஜாதகர் தன்னுடைய ஜாதித்தொழிலையே செய்துகொண்டு வாழுகின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்த பாவத்தைச் சொல்லுகின்றேன். இவர் பலமில்லாத ஓர் ஏழையை அழும்படியாகச் செய்துவிட்டார். இதுவு மல்லாமல் புலையர்களுடைய சாபம் வந்து சேர்ந்தது. ஏழைகள் தங்க ளுடைய மனத்திலுள்ள துக்கத்தினால் சொல்லுவார்கள். "உன்னுடைய மறு ஜன்மங்களில் பழிப்புள்ளதும், குற்றமுள்ளதுமான குலத்தில் பிறந்து ;"

27. பாக துணைஆண் காணுமல் பறவைகுலம்போல் தான் வாழ்வாய்த்
தோகை அன்னை நிந்தையுமாய்ச் சுயபந்துகளும் காணுமல்
ஏக ருகை வாழ்ந்திடுவா யென்று சொல்லித் தெரு தூளை
மோக முடனே தானிரைத் தார் மூண்ட தந்த வினைதானே.

27. உனக்கு ஆண் சகோதரர்கள் இல்லாமல் பட்சி ஜாதியைப்போல வாழ்வாய். உன்னுடைய மனைவி தாயார் இவர்களுடைய நிந்தையை அடைந்து, உன்னுடைய பந்துக்கள் இல்லாமல் நீ தனியாக விருந்து வாழக்கடவாய் என்று சொல்லித் தெருவிலுள்ள மண் தூளை எடுத்துத் தூவினார்கள் ஏழைகள். அவர்களுடைய சாபம் இவரை வந்து அடைந்தது.

28. தானே அந்திய காலத்தில் க்ஷயரோ கத்தால் மறலி பதி
போனான் நரகம் தான்புக்கிப் பிரமன் லக்கம் வரைய வந்தான்
ஊனமில் லாமல் யோக மதை உரைப்பக் கேண்மோ கேசரியும்
ஆன கேதாரயோகம் அடைவா னிந்தப் பாலனுமே.

28. ஜாதகர் தன்னுடைய கடைசி காலத்தில் க்ஷய ரோகத்தினால் பாதிக்கப்பட்டு இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்தார். பிறகு நர கத்தில் இருந்து பிறகு பிரமதேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றார். பங்கமில்லாத யோகத்தைச் சொல்லுகின்றேன். இதைக் கேட்பீராக. இந்த ஜாதகருக்கு கேசரி யோகம் என்ற ஒருவித யோகமும், கேதாரயோகம் என்ற ஒருவித யோகமும் † உண்டாகும்.

† **குறிப்பு.**—கேசரியோகம் என்பது சந்திரனும் குருவும் ஒருவருக்கொரு வர் கேந்திரத்தில் இருப்பதாகும். இது விஷயமாய் ஜாதகாலங்காரம் 274, 276-ஆவது பாடல்கள், ஜாதக சிந்தாமணி 2192-ஆவது பாடல், ஜாதக பாரிஜாதம் 7-ஆவது அத்தியாயம் 116-ஆவது சுலோகம், பலதீபிகை 6-ஆவது அத்தியாயம் 10-ஆவது சுலோகம் ஆகிய இவைகளைப் பார்க்கவும்.

கேதாரயோகம் என்பது ராகு கேதுக்கள் தவிர மற்ற ஏழு கிரகங்களும் நான்கு ராசியில் இருப்பதாகும். இந்த ஜாதகத்தில் இந்த ஏழு கிரகங்களும் நான்கு ராசியில் இருக்கின்றன. இ·து ஒரு வகை கேதார யோக மாகும். பொதுவாய்க் கேதார யோகம் விஷயமாய் ஜாதகாலங்காரம் 321, 372, 376-ஆவது பாடல்கள், ஜாதக சிந்தாமணி 1970, 2042-ஆவது பாடல்கள், பலதீபிகை 6-ஆவது அத்தியாயம் 35-ஆவது சுலோகம், பிருஹஜ் ஜாதகம் 12-ஆவது அத்தியாயம் 10-ஆவது சுலோகம், ஜாதக கணிதம் 2-ஆவது பாகம் 6-ஆவது அத்தியாயம் 88-ஆவது அயிட்டம், சாராவளி 21-ஆவது அத்தியாயம் 19, 49-ஆவது சுலோகங்கள் ஆகிய இவைகளைப் பார்க்கவும்.

29. பாலன் வறுமை காணுதான் பாரு மதிகஞ் சேர்த்திடுவன்
சீலனுவன் செட்டு செய்வன் சகடு வாகன முடையவனே
வேலன் பத்தி சுகபுசிப்பன் மேலோர்க் கன்னந் தானளிப்பன்
சோலை துறவு செய்திடுவன் சிறுத்தோர்க் குதவி யாகுவனே.

29. ஜாதகர் கஷ்டத்தையும் தரித்திரத்தையும் அடையாதவராக விருப்பார். நிலங்களை அதிகமாகச் சேர்த்துவைப்பார். நல்லொழுக்க முடையவராவார். வியாபாரஞ் செய்வார். வண்டி முதலிய சவாரிக்குரிய வாகனம் உடையவராவார். முருகக் கடவுளின்மேல் பக்தியும் அன்பும் உடையவர். சுகமானதும் நல்லதுமான ஆகாரத்தைச் சாப்பிடுபவராவார். மேன்மை தங்கிய பரதேசி களுக்குச் சாப்பாடு போடுவார். சோலைகளும் தோப்புகளும் இணறுகளும் ஆகிய இவைகளை உண்டு பண்ணுவார். ஏழைகளுக்கு உபகாரஞ் செய்பவராகவிருப்பார்.

30. ஆகும் பனைவர் உடையவனும் அதிதிக் கன்னம் தான் தருவன்
ஏகு மன்னை முப்பதிலே எழிலாய் மேட மாதத்தில்
போகும் பித்த பாண்டாலே பிறந்தோன் அறுபா னிரண்டினிலே
சாகு மாதஞ் சாடியதாந் தசமி குறைபக் கமுமாமே.

30. ஜாதகர் பண்ணை நிலங்களையும் ஏர்களையும் உடையவராவார். பரதேசிகளுக்கு அன்னதானஞ் செய்வார். இவரது முப்பதாவது வயதில் சித்திரை மாதத்தில் * இவருடைய தாயார் இறந்துவிடுவாள். இவர் தனக்கு அறுபத்திரண்டாவது வயதில் பித்தபாண்டு ரோகத்தினுல் மாசிமாதத்தில் தேய்பிறைச் தசமி திதியில் இறந்துவிடுவார்.

* **குறிப்பு. தாயார் மரண விஷயம் :—**ஜாதகருக்கு வயது ௵ 29-0-0 பூர்த்தியாகி முப்பதாவது நடக்கும்போது சித்திரை மாதத்தில் குரு தசையில் சூரிய புக்தி நடக்கின்றது. மாதுரு லக்கினம் நான்காவது பாவமாகிய துலாம் ஆகும். துலாலக்கினத்திற்குப் பராசரஹோரை, ஜாதகசிந்தாமணி இவைகளின்பிரகாரம் குருவும் சூரியனும் மாரகாதிபதிகள் ஆவார்கள். குரு துலாத்திற்கு மூன்று ஆறுக்குடையவராய் எட்டாவதான மாரகஸ்தானத்தில் இருக்கின்றுர். ஆகையால் குரு தன் தசையில் மாதாவுக்கு மாரகஞ்செய்ய அமைப்பு உடையவராக விருக்கின்றுர். சூரியன் ஏற்கனவே மாரகாதிபதியாகித் துலாத்திற்குப் பதினோராவதான மாரக ஸ்தானத்தில் மாதுர்லக்கின அஷ்டமாதிபதியாகிய சுக்கிரனுடன் கூடி மாதுருகாரகனுகிய சந்திரனைப் பார்த்து இருப்பதால்

துய்யகேரளம் எட்டாம் பாவம் 20-ஆவது பாடல், கார்க்கேயர் ஜோதிடம் முதற்காண்டம் 680-ஆவது பாடல், ஜாதகபாரிஜாதம் 14-ஆவது அத்தியாயம் 60-ஆவது சுலோகம் இவற்றின் பிரகாரம் சூரியன் தன்னுடைய புக்தியில் மாதாவுக்கு மாரகஞ்செய்ய அமைப்பு உள்ளவராக விருக்கின்றார்.

†**ஜாதகர் மரண விஷயம்.**—ஜாதகருக்கு வயது ஸு 61 ஆகி 62-ஆவ வயதில் மாசி மாதத்தில் புத தசையில் சந்திரபுக்தி நடக்கின்றது. கடக லக்கினத்திற்குப் பராசரஹோரை ஜாதக சந்திரிகை இவைகளின் பிரகாரம் புதன் சனி சுக்கிரன் சூரியன் இவர்கள் மாரகாதிபதிகள் ஆகின்றார்கள். புதன் மாரக ஸ்தானங்களாகிய மூன்று பதினொன்றிற்குடையவராகி இரண்டாவது மாரக ஸ்தானத்தில் மாரகாதிபதிகளாகிய சுக்கிரன், சூரியன் இவர்களுடன் கூடி லக்கினாதிபதியையும் அஷ்டமத்தையும் பார்க்கின்றார். ஆகையால் துய்ய கேரளம் எட்டாம் பாவம் 20-ஆவது பாடல் பிரகாரம் புதன் தன் தசையில் ஜாதகருக்கு மாரகஞ்செய்ய அமைப்பு உள்ளவராகின்றார். சந்திரன் லக்கினாதிபதியாகி மாரக ஸ்தானமாகிய எட்டில் மாரகாதிபதியாகிய சனி வீட்டில் இருக்கின்றார். ஆகையால் துய்ய கேரளம் எட்டாம் பாவம் 14-வது பாடல். ஜாதக சந்திரிகை 23-ஆவது சுலோகம் இவற்றின் பிரகாரம் சந்திரன் தன்னுடைய புக்தியில் மாரகஞ்செய்ய அமைப்பு உடையவராகின்றார். லக்கினாதிபதி மாரகஞ் செய்யும் விஷயமாய் 82-ஆவது ஜாதகம் 24-ஆவது பாடல் வியாக்கியானத்தைப் பார்க்கவும்.

**வேறு**

31. மறுஜன்மம் புதுவை தன்னில் வைசிய குல முதித்து
பெருமையாய்ச் செட்டுச் செய்து பிரபல கீர்த்தி யாவன்
இருமனை பாரி தானுந் தீரம்பின் கண்ட மென்றோம்
அருமறை முடிவிலாடும் அம்பிகை யாளே கேளாய்.

**31.** ஜாதகர் பின் ஜன்மத்தில் புதுச்சேரியில் வைசியர் குலத்தில் பிறந்து மேன்மையான வியாபாரத்தைச் செய்து மிகவும் அதிகமான புகழை அடைவார். இரண்டு மனைவிகளை அடைவார். இவர்கள் தீர்க்காயுள் உள்ளவர்களாக விருப்பார். பின்னால் இறந்து போய்விடுவார் என்று சொல்லுகிறோம். அருமையான வேதங்களின் முடிவு என்ற உபநிஷத்துக்களில் ஆனந்தமாக விளங்குகின்ற பார்வதியம்மையே ! கேட்பீராக.

32. பொன்பணி பூமி வீடு புரப்பன்நா லாயி ரம்பொன்
அன்னவன் ஜனன காலம் அவிட்டம்நா லாம்பா தத்தில்
தன்னிலே திங்க ளைந்துஞ் ஜாதகன் தனக்கு நோயாம்
அன்னையும் பிணியு மெய்தும் அம்பிகை யாளே கேளாய்.

**32.** ஜாதகர் தனம் ஆடை ஆபரணங்கள் நிலம் வீடு இவைகள் எல்லாம் மொத்தம் நாலாயிரம் பொன் பெறக்கூடியதான சொத்தை யுடையவராவார். இவர் பிறந்த காலத்தில் நட்சத்திரம் அவிட்டம் நான்காவது பாதம் ஆகும். அங்காரக மகாதசையில் இருப்பு ஐந்து மாதமாகும். இந்தக் காலத்தில் ஜாதகருக்கு ரோகம் உண்டாகும். தாயாருக்கும் நோய் ஏற்படும். பார்வதியம்மையே ! கேட்பீராக.

## ஜாதகம் 99

1. கலை[1] கேது அரியில்[2] புக்கக் கதிர்[3] புதன் கோல தாக[4]
நிலமகன்[5] காரி[6] ராகு நின்றிடச் சாடி[7] தன்னில்
சலக்கோளுந்[8] தேளதாக[9]த்தனூர்[10] குரு ஜன்மம் நண்டு[11]
பலனதைச் சொல்லுமென்று பார்வதி கேட்கும் போது ;

| | | | |
|---|---|---|---|
| | | | |
| சனி அங் காரகன் ராகு | இராசி சக்கரம் | | லக்கினம் |
| | | | சந்திரன் கேது |
| குரு | சுக்கிரன் | சூரியன் புதன் | |

உத்தரம் 1-பாதம். சூரிய தசை இருப்பு 4—7—0

1. சந்திரனும் கேதுவும் சிம்மத்திலும், சூரியனும் புதனும் துலாத்தி லும், அங்காரகனும் சனியும் ராகுவும் கும்பத்திலும், சுக்கிரன் விருச்சிகத் திலும், குரு தனுசிலும், ஜன்ம லக்கினம் கடகமாகவும் இருந்தால் பலா பலன்களைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்கும்போது.

குறிப்பு.—இந்த ராசிச் சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரகநிலை பொருத்தமுடையதாகும்—மேஷத்தில் அங்காரகனும் சனியும், ரிஷபத்தில் கேதுவும், மிதுனத்தில் குருவும், விருச்சிகத்தில் ராகுவும், தனு சில் சந்திரனும், மகரத்தில் புதனும், மீனத்தில் சூரியனும் சுக்கிரனும் ஆகும். புதன் அஸ்தமனத்திலும் சனி வக்கிரகதியிலும் இருக்கின்றார்கள்.

2. குறுமுனி புகலு கின்றார் குறித்தது ஆண்பால் ஜன்மந்
தலமது வடதேன் வீதி சனிவாசல் நகர மாகும்
வருமில்லம் வடதென் வீதி வாசலுங் குடக்கு நோக்கம்
பெரியதோர் நகர மாகும் பலமுள செட்டு ஓங்கும்.

2. அகஸ்திய மகா முனிவர் சொல்லுகின்றார், பிறந்த குழந்தை ஆண் குழந்தையாகும். பிறந்த இடம் வடக்குத் தெற்கு வீதியில் மேற்கு வாடை யாகும். பிறந்த வீடு வடக்குத் தெற்கு வீதியில் மேற்குத்

---

[1] சந்திரன் [2] சிம்மம் [3] சூரியன் [4] துலாம்
[5] அங்காரகன் [6] சனி [7] கும்பம் [8] சுக்கிரன்
[9] விருச்சிகம் [10] தனுசு [11] கடகம்

திக்கைப் பார்த்ததாகும். பிறந்த ஊர் பெரிய பட்டணமாக விருக்கும். அவ்விடத்தில் பெரிய பெரிய வியாபாரங்கள் நடந்துகொண்டும் விருத்தியாகிக் கொண்டும்வரும்.

குறிப்பு.—பிறந்த இடத்தைப்பற்றிச் சொல்லும்போது வீதியைப்பற்றி இரண்டு தரம் சொல்லி இருப்பதால் வீடு மேலண்டை வாடையில் கடைசி வீடாகி மேற்குப்பார்த்த வாயிலையுடைய வீடாக விருக்கலாம்.

3. அரசர்கள் வாச மாகும் அலைகடல் கீழ்ப்பால் தங்குந்
துருவமும் மேல்பா லோடுந் துர்க்கையுந் தந்தி தங்கும்
உரைத்தயிவ் வடையா ளத்துள் உயர்மறைக் குலமே தோன்றுந்
திருமகன் குடும்பச் சேதி செப்புவோ மிந்நூல் தன்னில்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

3. இந்தப் பட்டணத்தில் இராஜாக்கள் வாசஞ் செய்வார்கள். கிழக்குத் திக்கில் அலைகளை உடைய சமுத்திரம் இருக்கும். மேற்கில் ஓர் ஒடுக்கமான வழி போகும். காளி கோயிலும் யானை முகத்தையுடைய விநயகர் கோவிலும் மேற்குத் திக்கில் இருக்கும். இங்குச் சொல்லப்பட்ட அடையாளங்களை உடைய விடத்தில் மேன்மையான சிறந்த பிராமணர் குலத்தில் ஜாதகர் பிறப்பார். இவருடைய குடும்பத்தின் விஷயங்களைப்பற்றி இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகிறோம். அருமையான வேதங்களின் முடிவு என்ற உபநிஷத்துக்களில் ஆனந்தமாக விளங்குகின்ற பார்வதி யம்மையே! கேட்பீராக.

குறிப்பு.— இப்பாட்டில் ஓரடி மிகுந்துள்ளதைக் கவனிக்க.

4. தந்தையின் துணைவ ராறு தங்காது யாவும் தானே
அந்தவன் தனியாய் வாழ்வன் அறைகிறே மவன்கு ணத்தைக்
கந்தன்தன் பக்தி கொள்வன் கனராசர் பேட்டி கொள்வன்
முந்தின கல்வி ரண்டு முயர் வோர் நேசம் கொள்வன்.

4. ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரர்கள் ஆறுபேராவார்கள். இவர்களில் எல்லோரும் இறந்து விடுவார்கள். இவர் மாத்திரம் உயிருடன் இருந்துகொண்டு ஒண்டியாக விருப்பார். இவருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். முருகக் கடவுளின்மேல் பக்தியும் அன்பும் இவர் உடையவராவார். பெரிய அரசர்களுடைய தரிசனத்தை அடைவார். இவர் மேன்மை யானதும் விசேஷமானதுமான இரண்டு வித வித்தைகளை உடையவராவார். உயர்ந்தவர்களுடைய சினேகத்தை உடையவராவார்.

5. பூமியும் பரிபா லிப்பன் புதிதாகக் கிருகஞ் செய்வன்
சேமமாங் குடும்பி யாவன் செய் நன்றி மறவா னுகுந்
தாமத குணத்தா னுகுஞ் சரசமாய் வார்த்தை சொல்வன்
காமனை விருப்பங் கொள்வன் கஞ்சமா நிறத்தா னுமே.

5. ஜாதகருடைய தகப்பனுர் நிலங்களை உடையவராவார். அவற்றைத் தானே பயிரிடுவார். புதிய வீட்டைக்கட்டுவார். சௌக்கியமான குடும்பஸ்தராக விருப்பார். பிறர் செய்த உபகாரத்தை மறக்காதவர். தாமதமானதும்

சாந்தமானதுமான குணத்தை யுடையவராவார். சௌகரியமாகவும் இன்பமாகவும் வார்த்தைகளைச் சொல்லுவார். காம ஆசையை உடையவரா வார். சிகப்பு தாமரைப் பூவைப் போன்ற சிவந்த நிறமுள்ள தேகத்தை உடையவராவார்.

6. உத்தரம் ராசி யாகும் உதிப்பனும் வாத தேகி
வெத்திச் சொல் லுடையனுகும் மேலவர் பத்தி பூண்பன்
சுத்தவான் மரண மட்டுந் துரைராசர் தம்மால் உய்வன்
வித்தகன் காது மந்தம் மேவிடு மந்தந் தன்னில்.

6. ஜாதகருடைய தகப்பனுர் உத்தர நட்சத்திரத்தையுடைய ராசியில் பிறப்பவராவார். வாத தேகத்தை யுடையவர், தான் சொல்லுகின்ற வார்த்தை ஜயத்தை அடையக்கூடியதாக விருக்கும், மேன்மையை யடையக் கூடியதாக விருக்கும். இவர் பெரியோர், வானேர் இவர்களிடத்தில் பக்தியும் ஆசையும் உடையவராவார். சுத்தமாகவிருப்பார். தன்னுடைய மரணகால பரியந்தம் இராஜாக்கள் மூலமாக ஜீவனஞ் செய்வார். இவருக்குக் கடைசிக் காலத்தில் தன்னுடைய காது மந்தமாகிக் காது கேட்காமல்போய்விடும்.

7. ஊகவான் பலபேர் நேயன் உறுதிவான் ஞானஞ் சொல்வன்
பாகமாய்ப் பேச வல்லான் பஞ்சைமே லிரக்க முண்டு
தோகைய ரிஷ்டங் கொள்வன் சோம்பிடான் காரி யத்தில்
போகபாக் கியங்க ளுள்ளான் புராந்தகன் பூசை பூண்பன்.

7. ஜாதகருடைய தகப்பனுர் நுட்பமான அறிவை உடையவர். இவருக்கு அநேகம்பேர் நண்பர்களாக விருப்பார்கள். வலிவுள்ளவர் நல்ல புத்தியையும் அறிவையும் பிறருக்கு ஊட்டுவார். தகுதியாகவும் சாமர்த்திய மாகவும் பேசுஞ் சக்தியை உடையவர். ஏழைகளிடத்தில் இரக்கமும் தயாள குணமும் உடையவர். பெண்களின்மேல் ஆசையை அடைபவராவார். தான் செய்கின்ற காரியங்களில் சோம்பல் இல்லாமல் இருக்கக்கூடியவர். போகங்களை யும் செல்வங்களையும் சௌகரியங்களையும் அனுபவிப்பார். புராந்தகன் என்ற சிவபெருமானைப் பூஜை செய்வார்.

8. சொன்னயிக் குணத்தானுக்குச் சுதனுமே யுதிப்பா னுகும்
அன்னவன் துணைவ ரஞ்சில் அணுகாது யாவுந் தானே
இன்னவன் தனியாய் வாழ்வன் இயம்புவோ மிவன் குணத்தைக்
கன்னெனன மொழியே சொல்வன் கல்விமான் சிவந்த மேனி.

8. இங்குச் சொல்லப்பட்ட குணங்களை உடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகர் பிறப்பார். ஜாதகருடன் கூடப் பிறந்தவர்கள் ஐந்து பேர்கள் ஆவார்கள். இவர்கள் எல்லோரும் இறந்துபோய்விடுவார்கள். ஆகவே இவர் தனியாக விருந்து வாழ்பவராவார். இவருடைய குணுதிச யங்களைப் பற்றிச் சொல்லுகின்ருேம். சர்க்கரையைப் போன்ற இனிமையான வார்த்தைகளைச் சொல்லுவார். வாசித்தவர். இவர் சிவப்பு நிறமான தேகத்தையுடையவராவர்.

9. கல்வியால் பெருமை யேற்பன் கதித்ததோர் புத்தி மானும்
இல்லையென் றுரைக்க மாட்டான் யாரையு முறவு கொள்வன்
நல்லவன் நல்லவர்க்கு லண்டர்க்கு மிண்ட ருவன்
வல்லியோர் மோகங் கொள்வன் மன்னர்பா லரசு செய்வன்.

9. ஜாதகர் தன்னுடைய வித்தையினாலே பெருமையையும் மேன்மையையும் அடைவார். சிறந்தவராவர். புத்தியுள்ளவராவர். தன்னிடத்தில் வந்த எவருக்கும் இல்லை என்று சொல்லமாட்டார். எவரையும் சிநேகஞ் செய்து கொள்ளுவார். நல்லவர்களுக்கு நல்லவனுகவிருந்து நடந்துகொள்ளுவார். முரடர்களுக்கு வலிவுடைய சரியான எதிரியாக விருப்பார். ஸ்திரீகளின்மேல் காம ஆசையை உடையவராவர். இராஜாக்களிடத்தில் இராஜாங்க வேலையைச் செய்வார்.

10. கடன் கொள்ளானிடுக்க மில்லான் காரிய மறிந்து செய்வன்
விடவுரை பகரா னுகும் வீண்வம்பு புகலா னுகுந்
தடைசொல்லான் தாய்தந் தைக்கே சன்மார்கன் மனைவி நேயன்
மடையரை யுறவு கொள்ளான் மருவிடும் பித்த தேகி.

10. ஜாதகர் கடன் வாங்கமாட்டார். கஷ்டத்தை அடையமாட்டார். காரியங்களை நன்றாக அறிந்து யோசித்துச் செய்வார். விஷம்போல் கெட்ட வார்த்தைகளைச் சொல்லமாட்டார். வீண் சண்டையை விளைவிக்கக் கூடிய வார்த்தைகளைச் சொல்லமாட்டார். தாய் தந்தையருடைய வார்த்தைகளை மறுத்துச் சொல்லமாட்டார். நல்ல வழியை உடையவர். நல்ல குணங்களை உடையவர். தன்னுடைய மனைவிக்கு இஷ்டமானவர். புத்தியில்லாதவர்களுடன் சினேகஞ் செய்துகொள்ளமாட்டார். இவர் பித்தமுள்ள தேகத்தை உடையவராவர்.

11. சொல்லிடு வசன மெல்லாந் சுத்தமாம் விநோத மாகும்
வெல்லுவான் எதிரி தன்னை வீண்வழக் கோரந் சொல்லான்
அல்லலென் றேரைக் காப்பன் அரசர்பூ சிதமு மாவன்
நல்லவனுகி வாழ்வன் நாதனுர் பத்தி பூண்பன்.

11. ஜாதகர் சொல்லுகின்ற வார்த்தைகள் எல்லாம் சுத்தமானவையாகவும் ஆச்சரியத்தையும் சந்தோஷத்தையும் உண்டு பண்ணக்கூடியவையாகவும். அழகானவையாவும் இருக்கும். இவர் தன்னுடைய சத்துருக்களை ஜயித்துவிடுவார். வீணான வியாஜ்யத்தில் ஒரு பக்கமாக சாட்சி சொல்லமாட்டார். கஷ்டத்தை அடைந்திருக்கின்றேம் என்று சொல்லுகின்றவர்களைக் காப்பாற்றுவார். இராஜாங்கத்தாரால் பெருமை பாராட்டப் பட்டவராகவும் போற்றப்பட்டராகவுமிருப்பார். நல்லவராகவிருந்து வாழ்வார். கடவுளின் மேல் பக்தியும் அன்பும் உடையவராவார்.

12. தந்தைநாள் பூமி தன்னைத் தானவன் விருத்தி செய்வன்
நிந்தையு மில்லா னுகும் நீத்தோர்கள் உறவு கொள்ளான்
கந்தன்தன் அருளி னுலே காவலன் தனக்கு யோகம்
இந்திர போக மேற்பன் இரணிய மதிகஞ் சேர்ப்பன்

12. ஜாதகர் தன்னுடைய தகப்பனுருடைய காலம் முதல் இருந்து வருகின்ற நிலங்களைப் பயிரிட்டுத் தான்யங்களை விருத்தியாக்குவார். பழி குற்றச்சாட்டு அபவாதம் இவைகள் இல்லாதவராவார். உலகப் பற்றை விட்டுவிட்டவர்கள் பரதேசிகள் இவர்களுடைய சிநேகத்தை அடைய மாட்டார். முருகக் கடவுளின் கிருபையால் இவருக்கு யோகம் உண்டாகும். இந்திரன் அனுபவிக்கின்ற போகங்களைப் போன்ற சுகபோகங்களை இவர் அனுபவிப்பார், பணத்தை அதிகமாகச் சேகரித்து வைப்பார்.

13. கைமுத லுடைய ளுகுங் கன த்திடுங் கல்வி தானும்
உய்வகை அரசர் தம்மால் உயர்ச்சியாந் தொழிலு மேற்பன்
பொய்யுரை பகரான் மிஞ்சிய புத்திமான் புகழு முண்டு
வையமேல் சகடு மாவும் வந்திடு மிவனுக் கேதான்.

13. ஜாதகர் தன்னிடத்தில் கையிருப்புப் பொருள் உள்ளவராவர், அஃதாவது இவரிடம் பணம் இருந்துகொண்டேயிருக்கும். இவருக்கு வித்தை அதிகப்படும். மேன்மையானதாகவு மிருக்கும். அரசர்கள் மூலம் ஜீவனஞ் செய்வார். சிறந்ததும் பெரியதுமான வேலையில் இருப்பார். பொய்யான வார்த்தைகளைச்சொல்லமாட்டார். அதிகமான அறிவை உடையவர். பெருமையும் கீர்த்தியும் உடையவர். பூமியில் வண்டியும் பசுக்களும் இவருக்கு வந்து சேரும்.

14. அத்தரி சொல்லு கின்றார் அவனுக்குத் துணைவர் தோஷம்
பெத்தகா ரணங்கள் அத்தைப் பேசுவீர் முனியே நீர்தாம்
குத்தமா யாறில் பொன்னேன் குசனுமே யெட்டில் நிற்கப்
பத்திய மூன்றோ னேடு பரிதியுங் கூடி நிற்க;

14. அத்திரி மகரிஷியானவர் கேட்கின்றார். ஜாதகருடைய சகோதரர்களுக்கு உண்டான தோஷத்தைப்பற்றிய காரணங்களை, முனிவரே! நீர் சொல்லுவீராக. குரு ஆறுவது வீட்டில் மறைந்திருப்பதாலும், அங்காரகன் எட்டாவது வீட்டில் இருப்பதாலும், மூன்றிற்குடையவராகிய புதனுடன் சூரியன் கூடி இருப்பதாலும்;

குறிப்பு.—மூத்த ஆண் சகோதரகாரகனுகிய குரு ஆறில் மறைந்திருப்பது ஆட்சியாய் இருந்தபோதிலும் சகோதரத்திற்குத் தோஷத்தை விளைவிக்கக் கூடியதாகும். சகோதரகாரகனுகிய அங்காரகன் எட்டில் சனி ராகுகளுடன் இருப்பது சகோதர தோஷத்தை உண்டுபண்ணக் கூடியதாகும். இங்கு மூன்றிற்குடையவராகிய புதன் சூரியனுடன் கூடி இருப்பது.

"பரிதியும் மூன்றோன் கூடில் பாலன் பின்னில்லை மாதே"

என்ற மணி கண்ட கேரளம் சகோதர காண்டம் ஆறுவது பாடல் பிரகாரம் சகோதர தோஷத்தை விளைவிக்கக்கூடியதாகும்.

15. துணைவர்கள் தோன்றித் தீதாஞ் சுதனுமே பூர்வஞ், தன்னில்
வினைகளு மதிகஞ் செய்தான் மேவிற்று அந்தத் தோஷம்
வினையதைச் சொல்லு மென்னப் பூர்வமே புலியூர் தன்னில்
கனமுள் கங்கை சேயாய்க் காவல னுதித்தா னென்றோம்.

15. ஜாதகருக்குச் சகோதரர்கள் உண்டாகிப் பிறகு இறந்துபோய் விடுவார்கள். ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தில் அதிகமான பாவங்களைச் செய்திருக்கின்றார். அந்தப் பாவங்கள் இவரை வந்து அடைந்திருக்கின்றனவென்று சொல்ல, அவைகளைச் சொல்லுவீர் என்று அத்திரி மகரிஷி கேட்க அகஸ்தியர் சொல்லுகின்றார். ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தில் புலியூரில் மேன்மையான வேளாளராகப் பிறந்தார் என்று சொல்லுகின்றோம்.

16. சுகமுள குடும்பி யாகித் தொகையர் மதலை யுண்டாய்த்
தகமையாய்க் கிராமச் செட்டுத் தானவன் செய்யு நாளில்
பகையதைப் புகல கேண்மோ பஞ்சையாய் ஏழை மாது
ஜகமதில் வரனு மின்றித் தாயில்லம் வாழும் போது ;

16. ஜாதகர் முன் ஜன்மத்தில் சுகமான குடும்பஸ்தராகி மனைவி மக்களை உடையவராகித் தகுதியாகத் தன்னுடைய கிராமத்திய வியாபாரத்தைச் செய்துகொண்டு இருக்கின்ற காலத்தில் சம்பவித்தப் பாவத்தைச் சொல்லுகின்றேன், கேட்பீராக. ஓர் ஏழை ஸ்திரீயானவள் மிகவும் நொந்து போய்ப் பூமியில் புருஷனுமில்லாமல் தன்னுடைய தாயாருடைய வீட்டில் வசித்துக் கொண்டிருக்கும்போது ;

17. அன்னியன் அவள்மேல் மோகம் ஆசையாய் வார்த்தை சொல்லக்
கன்னிகை யிசையா ளாகிக் கடூரமாய் வார்த்தை சொல்லச்
சொன்னசொல் மறித்து யின்னோன் தோகையைப் பலவந்தத்தால்
பின்னமே செய்தா னென்றோம் பேதையுந் திகல டைந்து ;

17. ஓர் அன்னிய மனிதன் அவள்மேல் காம ஆசையையுடையவனாகி ஆசையுடன் அவளுடன் வார்த்தைகளைச்சொல்ல அவள் அதற்கு இசையாதவளாகி சம்மதிக்காதவளாகிக் கோபமாக வார்த்தைகளைச் சொல்ல, அதற்கு மேல் அந்த அன்னிய மனிதன் அவளுடைய பேச்சைத்தடுத்துப் பலவந்தமாக அவளைக் கெடுத்துவிட்டான் என்று சொல்லுகின்றோம். அதன்மேல் அந்த ஸ்திரீ பயத்தை உடையவளாகி ;

18. அதிகாரி தன்பால் செல்ல அக்கிரமஞ் செய்தோன் தன்னைத்
துரிதமா யழைத்துக் கேழ்கச் செய்தது நிசமென் றெண்ணிச்
சதியாகச் செய்தோன் தன்பால் தனமதைப் பெற்றுக் கொண்டு
அதிபதி தன்மேல் தோஷம் வருவித்தான் அதிகாரி தானும்.

18. அதிகாரமுடைய ஒருவரிடம் (அஃதாவது இந்த ஜாதகரிடம்) போய்ச் சொல்லவே, இவர் அக்கிரமத்தைச் செய்த மனிதனை உடனே வரவழைத்து விசாரித்து அந்த மனிதன் உண்மையிலே இந்தக் காரியத்தைச் செய்துவிட்டானென்று தெரிந்துகொண்டபோதிலும் குற்றத்தைச் செய்த அந்த மனிதனிடமிருந்து பணத்தைக் கைக்கூலியாக வாங்கிக் கொண்டு அந்தஸ்திரீயின் மேலேயே குற்றத்தை சாட்டிவிட்டான்.

19. மாதுவும் மனங்க லங்கி வரைகிருள் சாபந் தானும்
பாதகன் தன்பால் பொன்னைப் பற்றியே குற்றஞ் சொன்னுய்
மேதினில் பின்ஜன்ம த்தில் விளங்காரே துணைவர் தாமும்
காதலி சொல்லி யேதான் கரத்திஞல் தெருத்தூள் விட்டாள்.

19. அதன் மேல் ஏழை ஸ்திரீ மனத்தில் கலக்கமுற்றுத் திகிலடைத்து சாபத்தைக் கொடுக்கின்ருள். "பாவஞ் செய்தவனிடமிருந்து பணந்தைப் பிடுங்கிகொண்டு என்பேரில் நீ குற்றத்தைச் சாட்டி விட்டாய். பூமியில் மறுஜன்மத்தில் உனக்குச் சகோதரங்கள் விருத்தியாகமாட்டார்கள்" என்று இவள் சாபத்தைக் கொடுத்துத் தெருவிலிருந்த மண் தூளைத் தன்னுடைய கைகளிஞல் எடுத்துத் தூற்றினுள்.

20. அந்ததோர் தோஷந் தானும் அணுகிற்று யிவனுக் கேதான்
தென்திசை தலங்கள் சென்று சேதுவின் பதிக்குப் புக்கி
முன்னோர்க்கு வன்ன மீந்து மேவினுன் காலந் நாடு
பொன்னவன் வரையப் பட்டுப் பிறந்தனன் பிரம்ம சேயாய்.

20. இந்த ஜாதகருக்கு அந்தத் தோஷம் இந்த ஜன்மத்தில் வந்து சம்பவித்தது. இவர் தெற்குத் திக்கிலுள்ள க்ஷேத்திரங்களுக்குப் போய்ப் பிறகு சேதுஸ்தலத்திற்கும் போய்ப் பெரியோர்களுக்கும் வயது சென்றவர்களுக்கும் சாப்பாடு போட்டு இறந்து எமபட்டணததிற்குப் போனுர். பிறகு பிரமதேவனுல் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் பிராமண குலத்தில் ஆண்குழந்தையாகப் பிறந்திருக்கின்றுர்.

21. முன்ஜன்மங் கங்கை சேயா யுதித்தவ னிச்சென் மத்தில்
உன்னத மறையோன் வம்சம் உதித்தகாரணங்க ளென்ன
முன்ஜன்மஞ் சேதுதீர்த்த முயன்றதா லுதித்தா னென்றேம்.
தன்துணை தோஷ மெய்துங் சங்கரி கேட்டி டாயே.

21. முன் ஜன்மத்தில் வேளார் குலத்திற் பிறந்த இந்த ஜாதகர் இந்த ஜன்மத்தில் மேன்மையான பிராமணர் குலத்திற் பிறந்ததற்குக் காரணங்கள் என்ன என்று கேட்க, இவர் தன்னுடைய முன் ஜன்மத்தில் சேதுஸ்தலத்திற்குப் போய் அவ்விடத்திலுள்ளத் தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்த புண்ணியத்திஞல் இந்த ஜன்மத்தில் பிராமணராகப் பிறந்திருக்கின்றுர். இவருடைய சகோதரர்களுக்குத் தோஷம் உண்டாகும் பார்வதியம்மையே ! கேட்பீராக.

22. சேதுக்குச் சென்றதாலே தீராதோ முற்ப வங்கள்
மாதுவுந் திகில டைந்து வரைந்ததோ ஷங்கள் நீங்கா
ஓதுவேன் மணத்தின் காலம் பனிரண்டாம் ஆண்டு தன்னில்
காதலி தென்மேல் திக்கில் கலப்பளாம் என்று சொல்வோம்.

22. இந்த ஜாதகர் முன் ஜன்மத்தில் செய்த பாவங்கள் சேது ஸ்தலத்திற்குப்போய்த் தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்த புண்ணியத்திஞல் தீராதோ என்று கேட்க, முன் ஜன்மத்தில் ஸ்திரீ பயந்து கொடுத்தச் சாபங்கள்

விலகா என்று சொன்னார். இனிமேல் ஜாதகருக்கு விவாகம் நடக்குங் காலத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன். இவருக்குப் பன்னிரண்டாவது வெ தில் தென்மேற்குத் திக்கில் இருந்து வந்து நேரிடுவாள்.

23. மாதுவின் குணத்தைச் சொல்வேன் மாந்தளிர் மேனி யாவள்
சூதிலாள் வறுமை காணாள் சொல்சுகம் யோக சாலி
தீதுகள் ஒருவர்க் கெண்ணாள் திருமக ளொப்ப தாகும்
மாதவர் பத்தி பூண்பள் மால்மனை போலே வாழ்வள்.

**23.** ஜாதகருடைய மனைவியின் குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின் றேன். இவள் மாந்துளிரின் நிறத்தைப்போன்ற ஒருவிதமான சிவப்பு நிற முடைய தேகத்தை உடையவள். இவள் கள்ளம் கபடு வஞ்சனை இவை கள் இல்லாதவள். கஷ்டங்களையும் தரித்திரத்தையும் அடையமாட்டாள். சுகமானதும் இனிமையானதுமான வார்த்தைகளை உபயோகிப்பாள். யோகத்தைஉடையவள். எவருக்குங் கெடுதிகளைச் செய்ய எண்ணங் கொள்ள மாட்டாள். இலக்ஷிமிக்குச் சமானமானவளாகவிருப்பாள். முனிவர்களின் மேல் பக்தியும் அன்பும் உடையவளாவாள். மகாவிஷ்ணுவின் மனைவியாகிய இலட்சுமியைப் போல இருந்து வாழ்வாள்.

24. பந்துவும் புகழ வாழ்வள் பரிந்துப சாரஞ் செய்வள்
வந்தவர்க் கன்ன மீவள் வளமுள குடும்பி யாவள்
அந்தவள் துணையாண் நான்கு அம்பிகை யொருத்தி தீர்க்கம்
விந்தையாய் அவள்தன் பூர்வம் விளம்புவோந் தாயே கேளும்.

**24.** ஜாதகருடைய மனைவி தன்னுடைய பந்துக்கள் தன்னைப் புகழக் கூடிய நிலையில் இருந்து வாழ்வாள். முன்னே பரிந்துவந்து ஆசையுடன் ஜனங்களுக்கு உதவியைச் செய்வாள். தன்னிடத்திற்கு வந்தவர்களுக்குச் சாப்பாடு போடுவாள். செழிப்பான குடும்பஸ்தையாவாள். இவளுடைய சகோதரங்களில் ஆண் சகோதரங்கள் நான்கு பேரும், பெண் சகோதரம் ஒருத்தியும் நீண்ட ஆயுளை உடையவராவார்கள். ஆச்சரியமாக இவளுடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். எங்களுடைய தாயாராகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

25. அருணைக்குக் கீழ்ப்பா லாக அணுகிய சிற்றூர் தன்னில்
திருமக ளிக்கு லத்தில் சனித்துமே வறுமை யின்றி
அரன்பக்தி மிகவே கொண்டு அடைந்தனள் காலந் நாடு
பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தவ ளிவளே யென்றோம்.

**25.** ஜாதகருடைய மனைவி அருணை என்ற திருவண்ணாமலை க்ஷேத்திரத் திற்குக் கிழக்குத் திக்கில் அருகிலுள்ள ஒரு சிறிய கிராமத்தில் இந்த ஜன்மத்திய குலமாகிய பிராமண ஜாதியிற் பிறந்து தரித்திரமும் கஷ்டங் களும் இல்லாமலிருந்து சிவபெருமான்மேல் அதிக பக்தியும் அன்பும் உடையவளாகி இருந்து பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேர்ந் தாள். பிறகு பிரமதேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத் தில் இவள் வந்து பிறந்திருக்கின்றாள் என்று சொல்லுகின்றோம்.

26. மறு ஜன்மங் காளாத்தி தன்னில் வருவளா மிக்குலத்தில்
திருமகள் விலாசம் போன்று செல்வதி வாழ்வா ளாகும்
பெருந்தாயின் குணத்தைச் சொல்லுவேன் புண்ணிய மனத்தாளா [கும்
பெரும்புத்தி யடக்க முள்ளாள் பிறர்குற்றஞ் சொல்லா லாகும்.

26. ஜாதகருடைய மனைவி தன்னுடைய பின் ஜன்மத்தில் காளஹஸ்தி க்ஷேத்திரத்தில் இந்த ஜன்மத்தில் பிறந்த குலமாகிய பிராமணர் குலத்திலேயே போய்ப் பிறப்பாள். இவளிடத்தில் இலட்சுமி வாசஞ் செய்து கொண்டு இருக்கும்படியான நிலையிலிருந்து வாழ்வாள். இனிமேல் ஜாதகரைப் பெற்றெடுத்தத் தாயாருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் புண்ணியமானதும் நல்லதுமான மனத்தை உடையவளாவாள். பெரிய புத்தியை உடையவள். அடக்கமும் சாந்தமும் உடையவள். அன்னியர் மேல் குற்றங்களையும் குறைகளையும் சொல்லமாட்டாள்.

27. வறுமைக ளில்லா ளாகும் மாஞ்சிவப் புடைய ளாகும்
உறைந்து பின் யோகம் வாய்க்கும் உறன் முறைக் கினிய ளாகும்
திருமகள் துணைவர் நான்கு ஜனித்திடுஞ் சிலவே சேதம்
மறுமமாய் வாதபீடை வந்திடும் பின்னு லேதான்.

27. ஜாதகருடைய தாயார் கஷ்டங்களையும் தரித்திரத்தையும் அடையமாட்டாள். இவள் மாமரத்தின் துளிரின் நிறத்தைப் போன்ற ஒருவிதமான சிவப்பு நிறமுள்ள தேகத்தையுடையவளாவாள். இவளுக்கு விவாகம் நடந்த பிறகு யோகம் வந்து நேரிடும். இவள் தன்னுடைய பந்துக்களுக்கு இஷ்டமானவளாக விருப்பாள். இவளுடன் கூடப்பிறந்தவர்கள் நான்கு பேர் ஆகும். இவர்களில் சிலர் இறந்து விடுவார்கள். இவளுக்குப் பிற்காலத்தில் ரகசியமாய் வாயு ரோகம் வந்து சம்பவிக்கும்.

28. இல்லமும் தென்மே லாகும் இவள்பூர்வஞ் சொல்லக் கேண்மோ
தில்லையில் கங்கை சேயாய் ஜனித்து வறுமை யின்றி
வல்லியும் வாழுந் நாளில் மருவின ஊழைக் கேளாய்ப் ;
புல்லிய ஏழைந் மாது புதல்வருக் கன்னங் கேட்க ;

28. ஜாதகரின் தாயாருடைய வீடு தென் மேற்குத் திக்கில் இருக்கும். இவளுடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன், கேட்பீராக. இவள் தில்லை என்ற சிதம்பரத்தில் வேளாளர் குலத்திற் பெண் குழந்தையாகப் பிறந்து கஷ்டங்களும் தரித்திரமும் இல்லாமல் இருந்து வாழ்கின்ற காலத்தில் இவளுக்குச் சம்பவித்தப் பாவத்தைச் சொல்லுகிறேன், கேட்பீராக. தாழ்ந்த குலத்தைச் சார்ந்த ஒர் ஏழை ஸ்திரீ தன்னுடைய குழந்தைகளுக்காக இவளைச் சாதம் கேட்க ;

29. முகவெறி கொண்டு இன்னேள் முடுக்கினுள் ஏழை தன்னைத்
தகமையாய் ஏழை சொல்வாள் சாரும்பின் ஜன்மந் தன்னில்
மகவுக ளில்லா தாகி வாழ்குவா யென்று சொன்னாள்
பகையாக அந்தத் தோஷம் பரவிற்று இவளுக் கேதான்.

29. ஜாதகருடைய தாயார் தன்னுடைய முகத்தில் கோபத்தை உடையவளாகி இந்த ஏழை ஸ்திரீயை மிரட்டி பயப்படுத்தினுள். அதன் மேல் இந்த ஏழை ஸ்திரீ தகுதியாக நீ உனக்கு நேரிடப்போகின்ற மறு ஜன்மத்தில் குழந்தைகள் இல்லாதவளாகி இருந்து வாழக் கடவாய் என்று சொன்னுள். இந்தச் சாபம் இவளுக்கு விரோதமாக வந்து இவளை அடைந்தது.

30. இன்னமும் சிலவே தோஷ மெய்திற்று யிவளுக்கே தான்
தன் வரன் மரணமாகித் தனியளாய்ச் சிலநாள் வாழ்ந்து
தந்தியின் கோஷ்டத்திற்குத் தானவன் தீபம் வைத்து
முன்னோர்கள் பத்தி பூண்டு மேவினுள் காலந் நாடு

30. ஜாதகருடைய தயாருக்கு இன்னும் சில பாவங்கள் வந்து சம்பவித்தன. இவளுடைய புருஷன் இறந்து பிறகு கொஞ்ச காலம் தனியாக விருந்து வாழ்ந்து, யானைமுகத்தையுடைய விநாயகக் கடவுளின் கோயிலுக்குத் தீபங்களை ஏற்றி வைத்து, பெரியோர்களேயும் வயது சென்றவர்களையும் பக்தியுடனும் அன்புடனும் பூசித்து இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்தாள்.

31. பிரமனுல் வரையப் பட்டுப் பிறந்தவ ளிவளே யென்றோம்
மருவிடும் முன் னூழ் சாபம் மந்தர்கள் தோஷ மெய்துந்
திருமகன் ஒருவர் தானுந் தீர்க்கமாம் காரணஞ் சொல்
அருமையாய் முன் ஜன்மத்தில் யானையின் கோஷ்டத்திற்கு ;

31. ஜாதகருடைய தாயார் பிறகு பிரமதேவனுல் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றுள் என்று சொல்லுகிறோம். இவளை முன் ஜன்மத்திய சாபம் வந்து அடையும். இவளுக்குப் புத்திர தோஷம் உண்டாகும். ஒரே ஒரு ஆண் குழந்தையாகிய இந்த ஜாதகர் நீண்ட ஆயுளை உடையவராவார். இதற்குக் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்க, சொல்லுகின்றுர். இவள் தன்னுடைய முன் ஜன்மத்தில் அருமையாக யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளின் கோயிலுக்கு ;

32. மணிவிளக் கிட்ட புண்ணியம் வரைந்தனம் ஒருவன் தீர்க்கம்
பிணையாக வலக்கால் தன்னில் புக்கிடும் வாத பீடை
கனமுட னிவள்பின் ஜன்மங் கழறுவோங் காஞ்சி தன்னில்
வினையிலா இக்கு லத்தில் மேவுவா ளென்று சொல்வோம்.

32. மணி விளக்கு வைத்து ஏற்றிய புண்ணியத்தினுல் ஓர் ஆண் குழந்தை தீர்க்க வயதை உடையதாகும் என்று சொல்லுகின்றோம். இவளுக்குத் தன்னுடைய வலது காலில் காலைக் கட்டிப் போட்டது போல் தோற்றும்படியான வாத ரோகம் உண்டாகும். இவளுடைய மறு ஜன மத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். காஞ்சீபுரத்தில் பாவஞ் செய்யாத இந்த ஜன்மத்திய குலமாகிய பிராமணர் குலத்தில் போய்ப் பிறப்பாள் என்று சொல்லுவோம்.

33. தாதையின் பூர்வஞ் சொல்வேன் சட்ட நாதீசர் வாழும்
முந்தின ஊரிலே தானு முதித்தன னிக்கு லத்தில்
விந்தையாய்ச் செட்டுச் செய்து மேலவர் பத்தி கொண்டு
நொந்திடும் பேரைக் கார்த்து நீங்கினுன் காலந் நாடு.

33. ஜாதகருடைய தகப்பனாின் முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லு கின்றேன். சட்டநாதீஸ்வரர் வாழுகின்ற மேன்மையான சிறந்த கிராமத்தில் இந்த ஜன்மத்திய குலமாகிய பிராமணர் குலத்திற் பிறந்தார். ஆச்சரியமாக வியாபாரங்களைச் செய்து பெரியோர் வானோர் இவர்களின் மேல் பக்தியும் அன்பும் உடையவராகி கெட்டு போனவர் களையும் ஏழைகளையும் காப்பாற்றிப் பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய் ;

34. கஞ்சனுல் வரையப் பட்டுக் காவலன் உதித்தா னென்றோம்
தஞ்சமாய்ப் பின் ஜன்மத்தைச் சாற்றுவோம் விருஞ்சி தன்னில்
மிஞ்சிய குலமு திப்பன் விளம்புவோ மிருபா னெட்டில்
வஞ்சியின் மாதம் தன்னில் வரைந்தனந் தந்தை கண்டம்.

34. பிரமதேவனுல் பிரமலிபியுடன் எழுதப்பட்டு ஜாதகருடைய தகப்பனுர இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றார் என்று சொல்லு கின்றோம். இவருடைய பெருமையானபின் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லு கின்றோம். விரிஞ்சிபுரத்தில் மேன்மையானபின் குலமாகிய பிராமணர் குலத்திற் பிறப்பார். இவர் ஜாதகருக்கு இருபத்தெட்டாவது வயதில் புரட்டாசி மாதத்தில் * இறந்துவிடுவார் என்று சொல்லுகிறோம்.

***குறிப்பு.—தகப்பனுருடைய மரண விஷயம்:**—ஜாதகருக்குவயதுஷு 27-0-0 முதல் ஷு 28–0–0 முடியும் வரையிலும் இராகு தசையில் சனிபுத்தி பின் வரும் 35-வது பாடலில் கண்டுள்ளபடி நடக்கின்றது. பிதுர்லக்கி னம் ஒன்பதாவது பாவமாகிய மீனம் ஆகும். மீனலக்கினத்திற்குப் பரா சரஹோரை ஜாதக சந்திரிகைகளின் பிரகாரம் சனி புதன் சுக்கிரன் சூரியன் இவர்கள் மாரகாதிபதிகள் ஆகின்றார்கள். இராகு மீனத்திற்குப் பன்னி ரண்டில் மாரகாதிபதியாகிய சனியுடன் கூடி மீன லக்கினுதிபதியாகிய குருவைப் பார்க்கின்றார். ஆகையால் ஜாதகசந்திரிகை 12, 23-ஆவது சுலோ கங்கள், தூய்ய கேரளம் எட்டாம் பாவம் 20-ஆவது பாடல், ஜாதக பாரிஜாதம் 14-ஆவது அத்தியாயம் 60-ஆவது சுலோகம் ஆகிய இவைகளின் பிரகாரம் இராகு தன் தசையில் பிதாவுக்கு மாரகஞ் செய்ய அமைப்புடையவரா கின்றார். சனி மாரகாதிபதியாகிப் பன்னிரண்டில் இருந்து கொண்டு ஐந்திற் குடைய சந்திரனைப் பார்க்கின்றார். மேற்கண்ட காரணங்களால் சனி தன் புத்தியில் மாரகஞ் செய்ய அமைப்பு உடையவராக விருக்கின்றார்.

35. கரும் பாம்பு[1] தசையிலேதான்[2] காரியின்[3] புத்தி தன்னில்
உறைந்திடும் தந்தை கர்மம் உரைத்தது தப்பா தாகும்
மறுமமாய் முப்பாந் நாளில் வைகாசி மாதம் தன்னில்
திருமக ளன்னை கண்டஞ் செப்பின மொழிகுன்றுது.

---

[1]. இராகு. [3]. சனி

35. இராகுவினுடைய தசையில் சனியினுடைய புத்தியில் ஜாதகருடைய தகப்பனருக்குக் கர்மம், அஃதாவது மரணம் நேரிடும். நாங்கள் சொல்லியது தவறிடாமல் நடைபெறும். இரகசியமாய் ஜாதகருக்கு முப்பத்து நான்காவது வயதில் வைகாசி மாதத்தில்* இவருடைய தாயார் இறந்து போய்விடுவாள். நாங்கள் சொல்லிய வார்த்தை தவறுமல் நடக்கும்.

* குறிப்பு.—தாயாருடைய மரண விஷயம்:—ஜாதகருக்கு வயது ஷூ 33–0–0 முதல் ஷூ 34–0–0 முடியும் வரையிலும் இராகு தசையில் புகர் என்ற சுக்கிர புத்தி பின் வரும் 36-ஆவது பாடலில் கண்டுள்ளபடி நடக்கின்றது. மாதுர் லக்கினம் நான்காவது பாவமாகிய துலாம் ஆகும். இதற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகைகளின் பிரகாரம் சூரியனும், குருவும் மாரகாதிபதிகள் ஆகின்றுர்கள். பராசரஹோரை சில பதிப்பு பிரகாரம் அங்காரகன் கூட மாரகாதிபதியாகின்றுர். ராகு மாரக ஸ்தானங்களாகிய துலாத்திற்கு இரண்டு ஏழிற்குடையவரும் மகராதிபதியுமாகிய அங்காரகனுடன் கூடி இருப்பதால், ஜாதகசந்திரிகை 12, 23-ஆவது சுலோகங்களின் பிரகாரம் தன் தசையில் மாதாவுக்கு மாரகஞ் செய்ய அமைப்புடையவராக விருக்கின்றுர். சுக்கிரன் மாரகாதிபதியாகிய அங்காரகனுடைய வீட்டில் லக்கினத்திற்கும் எட்டிற்கும் உடையவராகி இருந்து எட்டைப் பார்க்கின்றுர். ஆகையால் துய்யகேரளம் எட்டாம் பாவம் 14-ஆவது பாடல் 82-ஆவது நம்பர் ஜாதகம் 24-ஆவது பாடல் வியாக்கியானம் இவைகளின் பிரகாரம் சுக்கிரன் தன் புத்தியில் மாதாவுக்கு மாரகஞ் செய்ய அமைப்பு உடையவராகின்றுர்.

36. அந்ததோர் காலந் தன்னில் அரவினில்[1] புகர்[2] புசிப்புச்
சந்ததம் நடக்கு மென்றேஞ் சாற்றிய மொழி குன்றுது
வந்தவன் தனக்குப் புத்திரர் வரைகிறே மாண்பால் ரண்டு
விந்தையாய்ப் பெண்பால் நான்கு மேவிடுந் தீர்க்க மாக.

36. ஜாதகருடைய தாயார் இறந்து போகின்ற காலத்தில் இராகுவினுடைய தசையில் சுக்கிரனுடைய புத்தி நடக்கும் என்று சொல்லுகின்றேம். நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறிப் போகாமல் நடக்கும். ஜாதகருக்குப் புத்திர பாவத்தைப்பற்றிச் சொல்லுகின்றேம். இவருக்கு இரண்டு ஆண் குழந்தைகளும் ஆச்சரியமாக நான்கு பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளை உடையவர்களாகப் பிறந்திருப்பார்கள்.

37. உதித்தவன் மரண காலம் உரைகிறே மறுபா னுறில்
சதியிலாச் சிம்ம மாதஞ் சத்தமி வளர் பக் கத்தில்
அதிபன்தன் உடலம் ஏகும் வரைகிறேம் பின்ஜன் மத்தைக்
கதிதருங் காளாத்தி தன்னில் கலப்பனும் க்ஷத்திரிய சேயாய்.

37. ஜாதகருடைய மரண காலத்தைப்பற்றிச் சொல்லுகின்றேம், இவர் தனக்கு அறுபத்தாருவது வயதில்* ஆவணி மாதத்தில் வளர்பிறையில் சத்தமி திதியில் இறந்து இவருடைய தேகம் மறைந்துவிடும். இவருடைய

1. இராகு 2. சுக்கிரன்

மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகிறேம். மோக்ஷத்தைத் தருகின்ற காளஹஸ்தி என்னும் க்ஷேத்திரத்தில் க்ஷத்திரிய குலத்தில் ஆண் குழந்தையாகப் பிறப்பார்.

* குறிப்பு.—ஜாதகர் மரண விஷயம் :—ஜாதகருக்கு வயது ஞூ 65–0–0 முதல் 66–0–0 முடியும் வரையிலும் சனி தசையில் சுக்கிரபுத்தி சூரியபுத்தி இவைகள் நடக்கின்றன. சிம்மமாதம் என்ற ஆவணி மாதத்தில் சூரிய புத்தி நடக்கின்றது. கடகலக்கினத்திற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகைகளின் பிரகாரம் சனி சுக்கிரன் புதன் சூரியன் இவர்கள் மாரகாதிபதிகள் ஆகின்றார்கள். சனி, மாரகஸ்தானங்களாகிய ஏழு எட்டிற்குடையவராகி எட்டில் இருந்துகொண்டு லக்கினதிபதியாகிய சந்திரனையும் பத்தாவது பாவத்தையும் பார்ப்பதுடன் பத்திற்குடைய அங்காரகனுடன் கூடி இருக்கின்றார். ஆகையால் துய்யகேரளம் எட்டாவது பாவம் 14-ஆவது 20-ஆவது பாடல்களின் பிரகாரம் சனி தன் தசையில் ஜாதகருக்கு மாரகஞ் செய்யும் அமைப்புடையவராகின்றார். சூரியன் ஏற்கனவே மாரகாதிபதியாகி மாரகஸ்தானமாகிய இரண்டிற்குடையவராகி மாரகாதிபதியாகிய புதனுடன் கூடி மாரகாதிபதியாகிய சுக்கிரனுடைய வீட்டில் இருக்கின்றார். ஆகையால் ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரம் சூரியன் தன் புத்தியில் மாரகஞ் செய்ய அமைப்பு உடையவராகவிருக்கின்றார்.

38. வந்தவன் பொதுயோ கத்தை வரைகிறேஞ் ஜனனந் தொட்டு
அந்தவன் மரண மட்டும் அன்னமுங் குறைவு றுதான்
தன்தனஞ் சேர்ப்பா னுகுஞ் ஜகராசர் தன்பால் சென்று
இந்தவன் ஜீவிப்பா னும் ஈச்வரி கேட்டி டாயே.

38. ஜாதகருடைய பொதுவான யோகத்தைப் பற்றிச் சொல்லுகின்றேம். இவர் தன்னுடைய ஜனன காலம் முதற்கொண்டு மரண காலம் வரையிலும் சாப்பாட்டிற்குக் குறைவும் கஷ்டமும் இல்லாதவராவார். இவர் தன்னுடைய சுயார்ஜித பணத்தைச் சேர்த்துவைப்பார். பூமிக்குடைய பெரிய அரசர்களிடம் போய் இவர் ஜீவனஞ் செய்வார். பார்வதியம்மையே ! கேட்பீராக.

39. எப்போது ராஜ யோகம் எய்திடும் விவரஞ் சொல்வாய்ச்
செப்புவே னிருபா னேழில் ஜகராசர் பக்கல் சேர்ந்து
ஒப்புவா னதிகா ரங்கள் உயர்வான தொழிலு மேற்பன்
மெய்ப்புடன் கல்வி யாலே விளம்புவோ மரசு தானே.

39. ஜாதகருக்கு எந்தக் காலத்தில் இராஜ யோகம் நேரிடும், அதனுடைய விவரத்தைச் சொல்லுவீராக என்று கேட்க, சொல்லுகின்றார். இருபத்தேழாவது வயதில் இவர் பூமிக்குடைய பெரிய அரசர்களிடம் போய் மேன்மையானத் தொழிலை ஏற்றுக்கொண்டு அதிகாரங்களை அடைவார். இவர், தன்னுடைய வித்தையின் பலனாக அரசு செய்யுந் தொழிலை அடைவார்.

**குறிப்பு.—பர்வத யோக விஷயம் :—**இந்த ஜாதகத்தில் இரண்டிற்குடைய சூரியனும் பன்னிரண்டிற்குடைய புதனும் கூடி நான்கில் கேந்திரத்தில் இருப்பதால் ஜாதகாலங்காரம் 304-ஆவது பாடல் பிரகாரம் பர்வதயோகம் இருக்கிறது லக்னாதிபதியான சந்திரன் இருக்கின்ற வீட்டிற்குடையவனை சூரியன் கேந்திரத்தில் இருப்பதால்கூட ஜாதகாலங்காரம் 344-வது பாடல் பிரகாரம் பர்வதயோகம் உண்டாகினறது. மேலும் சூரியனும் புதனும் கூடி நான்கில் இருப்பதால் ஜாதகாலங்காரம் யோகபலனில் முதலாவது பாடலாகிய இருநூற்றுப்பதினான்காவது பாடல் பிரகாரமும் யோகம் உண்டாகின்றது. சூரியன் நீசனாகி இருக்கின்ற ராசி அதிபதியாகிய சுக்கிரனும் இந்த ராசியில் உச்சமாகிற சனியும் சந்திரனுக்குக் கேந்திரத்தில் இருப்பதால் ஜாதகாலங்காரம் 294-ஆவது பாடல் பிரகாரம் சூரியனுடைய நீசத்திற்குப் பங்கம் ஏற்பட்டுவிடுகிறது.

40. பாலகன் ஜனன காலம் பருதியின் தசையிருப்புச்
சாலவே ஆண்டு நாலுந் தங்கிடுந் திங்க ளேழும்
ஏலவே பிணியு மெய்தும் இவன்துணை விருத்தி சேதங்
கோலமா யன்னை வர்க்கங் கூறுவோஞ் சூதகங்கள்.

40. ஜாதகர் பிறந்த காலத்தில் சூரிய மகா தசையில் இருப்பு நான்கு வருஷமும் ஏழு மாதமும் ஆகும். இந்தக் காலத்தில் ஜாதகருக்கு நோய் வந்து சம்பவிக்கும். இவருக்குச் சகோதரர்கள் உற்பத்தியாகி இறந்து விடுவார்கள். இவருடைய தாயாருடைய பந்துக்களில் சூதகங்கள் நேரிடும் என்று சொல்லுகின்றோம்.

41. இன்னமும் விவர மாக யியம்புவோம் பின்பால் சேதி
தன்மனை யிவன்பின் னாலே சாருவான் காலந் நாடு
அன்னவன் தேடும் செம்பொன் அறுரண்டு ஆயி ரந்தான்
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே.

41. இன்னமும் விவரமாக விஷயங்களைப் பின்பாகத்தில் சொல்லுகின்றோம். ஜாதகருடைய மனைவி இவருக்குப் பின்னால் இறந்து எமப்பட்டணத்திற்குப் போய்ச் சேருவாள். ஜாதகர் சம்பாதிக்கும்படியான தனம் மொத்தம் பன்னிரண்டாயிரம் பொன் ஆகும் என்று சொல்லுகின்றோம். மேன்மையான சிறந்த யானைமுகத்தை உடைய விநாயகக்கடவுளைப் பெற்றெடுத்தப் பார்வதியம்மையே ! கேட்பீராக.

---

[1]. சூரியன்.

## ஜாதகம் 100.

1. கடகலக் கின மதாகக் கதிர் 1 புதன் எழில் தங்க
முடவனும் 2 குருவும் பத்தில் அருச்சிகன் 3 புகரு 4 மாறில்
விட 5 மந்தில் சேயீ 6 ராறில் மெய்ஞ்ஞானி 7 லாப 8 மேற
உடன்பலன் சொல்லு மென்று உத்தமி கேட்க லுற்ருள்.

| | | | |
|---|---|---|---|
| | குரு சனி | கேது | அங்கா ரகன் |
| | இராசி சக்கரம் | | லக்கினம் |
| சூரியன் புதன் | | | |
| சுக்கிரன் சந்திரன் | ராகு | | |

மூலம் 3-ஆம் பாதம் : கேது தசை சுமார் ஷ்ூ 3-3-0.

1. ஜன்ம லக்கினம் கடகமாகிச் சூரியனும் புதனும் அதற்கு ஏழாவது ஸ்தானத்திலும், சனியும் குருவும் பத்திலும், சந்திரனும் சுக்கிரனும் ஆறிலும், இராகு ஐந்திலும், அங்காரகன் பன்னிரண்டிலும், கேது பதினொன்றிலும் இருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்டார்.

**குறிப்பு.**—இந்த ராசிச் சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரகநிலை பொருத்தமுடையதாகும் :—மேஷத்தில் கேதுவும், மிதுனத்தில் சந்திரனும் சனியும், கடகத்தில் புதனும், துலாத்தில் ராகுவும், விருச்சிகத்தில் குருவும் சுக்கிரனும், தனுசில் அங்காரகனும் கும்பத்தில சூரியனும் ஆகும். அங்காரகன் வக்கிரகதியில் இருக்கின்ருர்.

2. தென்முனி புகலு கின்ருர் ஜனித்திடு மாண்பால் ஜன்மம்
வந்தயில் வடக்கு வாசல் யானையின் கோஷ்டங் கீழ்ப்பால்
அந்தரி காளி உத்தரம் அரன்கோஷ்டம் வடகீ ழாகும்
முந்துமால் வடமே லாகும் முசல்மானின் கோஷ்டந் தென்மேல்.

2. அகஸ்திய மக ரிஷியானவர் சொல்லுகின்ருர். பிறந்த குழந்தை ஆண் குழந்தையாகும். பிறந்த வீடு வடக்கு வாசலை உடையதாகும். கிழக்குத் திக்கில் யானைத் தொழுவம் அல்லது விநாயகர் கோவில் இருக்

---

1. சூரியன் 2. சனி 3. சந்திரன்
4. சுக்கிரன் 5. இராகு 6. அங்காரகன்
7. கேது 8. பதினொன்று

கும். பார்வதியம்மன் கோயிலும் காளியம்மன் கோவிலும் வடக்குத் திக்கி லும் சிவபெருமானுடைய கோவில் வடகிழக்குத் திக்கிலும் இருக்கும். மகா விஷ்ணுவின் கோயில் வடமேற்குத் திக்கில் இருக்கும். முஸ்லிம்களுடைய மசூதி தென் மேற்குத் திக்கில் இருக்கும்.

3. இந்தநல் லடையா ளத்து ளிறங்குவான் சேஷ்ட னாகத்
தந்தைதாய்த் துணைவர் யோகந்தன்மனைப் புத்திர யோகம்
முன்பின் ஜன் மங்கள் யாவும் உரைக்கிறோ மிந்நூல் தன்னில்
கந்தனை யீன்ற மாதே கழறுவோங் கேட்டி டாயே.

3. இப்படிப்பட்ட நல்ல அடையாளங்களையுடைய விடத்தில் ஜாதகர் மூத்த குழந்தையாகப் பிறப்பார். இவருடைய தகப்பனார், தாயார், சகோதரர்கள் ஆகிய இவர்களுடைய யோகங்கள், ஜாதகருடைய மனைவி, மக்கள் ஆகிய இவர்களுடைய யோகங்கள், முன் ஜன்மம், மறு ஜன்மம் ஆகிய இவைகள் எல்லாவற்றையும் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகின்றோம், முருகக் கடவுளைப் பெற்றெடுத்தப் பார்வதியம்மையே ! கேட்பீராக.

வேறு

4. தந்தைகுண மாஞ்சி வப்பன் சமதேககத்தான்
சரசமாய் வார்த்தையுள்ளான் சாந்தவானும்
கந்தன்மேல் பத்தி யுள்ளான் கல்விமானும்
கடந்தபேர்க் கன்னமீவன் கபடில்லாதான்
நிந்தைபெரு னீகை யுள்ளான் நீதமுஞ்சீலன்
நேமியதை விருத்தி செய்வன் நிருபரிஷ்டன்
அந்தவனும் பூசநாள் மீனராசி, அவதரிப்பன்
கணக்குத்தொழில் அறிவித்தோம் யாம்.

4. ஜாதகருடைய தகப்பனார் மாந்துளிரின் நிறத்தைப் போன்ற ஒரு வித மான சிவப்பு நிறத்தை உடையவர். நடுத்தரமான தேகத்தை உடையவர். இனிமைமானதும், சுகமானதுமான வார்த்தைகளை உடையவராவார். சாந்த மான குணத்தை உடையவராவார். முருகக் கடவுளின்மேல் பக்தியும் அன்பும் உடையவராவார். வித்தையை உடையவராவார். உலகப்பற்றைக் கடந்து அதனை விட்டுவிட்டவர்களாகிய பரதேசிகளுக்குச் சாப்பாடு போடுவார். கள்ளம் கபடு வஞ்சனை இவைகள் இல்லாதவர். அபவாதம் பழி இவைகளை அடைய மாட்டார். கொடுக்கும் தன்மை தயாளகுணம் இவைகளை உடையவராவார். நன்னெறியும் நீதியும் நல்லொழுக்கமும் உடையவராவார். நிலங்களைப் பயிரிட்டுத் தானியங்களை உற்பத்திச் செய்வரர். அழகுள்ளவராவார். இவர் பூசம் நட்சத்திரத்தில் மீன லக்கினத்தில் பிறந்திருப்பார். இவருக்குக் கணக்கு வேலை என்று நாங்கள் சொல்லுகின்றோம்.

5. வித்தையுளன் கிருஷி செய்வன் பூமிவிருத்தி
மேன்மக்க ளுறவு கொள்வன் விருந்தோர்நேயன்
புத்தியினில் மதிமந்திரி செலவு செய்வான்
பொய்பகரான் தொழில்மூலம் பகர்வான் கொஞ்சம்

குத்தமதை மனதில்லையான் கொடுமை காட்டான்
குருஉபதேசம் பெருமை நற்குண வானுவன்
பத்திவரும் துணைஒன்று பதரேயாகும
பாரின்மிசை தனியாகப் பாலன் வாழ்வன்.

5. ஜாதகருடைய தகப்பனுர் கல்வியை உடையவர். விவசாயத் தொழிலையும் செய்வார். நிலங்களைப் பயிரிட்டுத் தானியங்களை உற்பத்தி செய்வார். மேலோர்களுடைய சிநேகிதத்தை அடைவார். விருந்தினர்களுக்குச் சிநேகிதராக விருப்பார். அறிவில் மந்திரியைப் போல புத்தி உடையவர். செலவைச் செய்வார். பொய்யைச் சொல்லமாட்டார். ஆனுல் தான் செய்யும் வேலை நிமித்தம் கொஞ்சம் பொய்யைச் சொல்லுவார், தன்னுடைய மனத்தில் கெட்டதை வைத்துக் கொண்டிருக்கமாட்டார். கெட்ட விஷயங்களைக் காண்பித்துக்கொள்ளமாட்டார். குருவினுடைய உபதேசம் பெருமை நல்ல குணம் இவைகளை உடையவராவார். இவருக்குச் சகோதரம் ஒன்றே, அதுவும் உபயோகமில்லாததாகப் போய்விடும். இறந்துவிடும். ஆகையால் இவர் பூமியில் தனியாக விருந்து வாழ்வார்.

6. துன்பம் துணையென்று ரைத்தீர் விவரஞ்சொல்வரய்
தந்தையின் தானத்து திரியத்தில்
நன்னை யில்லா கேது நிற்கத் துணைவர் தோஷம்
நாயகனு பூர்வவினை நவின்ரேம் யாங்கள்
என்னவினை தான்செய்தான் யியம்பு வீர்கள்
இருடிகள் வாழ்தண்ட காவனத்திலேதான்
முன்குலத்தில் தானுதித்து கிராமச் செட்டு
மேதினியை விருத்திசெய்துவாழுந் நாளில் ;

6. ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரம் இறந்துவிடும் என்று சொன்னீர். அதனுடைய விவரத்தைச் சொல்லுவீர் என்று கேட்க முனிவர் சொல்லுகின்றுர், தகப்பனுருடைய ஸ்தானமாகிய ஒன்பதாவது வீட்டிற்கு மூன்றுவது ஸ்தானத்தில், அஃதாவது பதினேராவது பாவத்தில் நன்மையாகவில்லாத கேது இருப்பதால் சகோதர தோஷம் உண்டாகும். இது இவருடைய முன் ஜன்மத்திய பாவத்திஞல் உண்டானது என்று நாங்கள் சொல்லுகின்றேம். இவர் என்ன பாவங்களைச் செய்தார் என்பதைச் சொல்லுகின்றுர். ரிஷிகள் வாசஞ் செய்கின்ற தண்டகாவனத்தில் இவர் முதல் குலமாகிய பிராமணர் குலத்திற் பிறந்து, தன்னுடைய கிராமத்திய வியாபாரம் செய்து கொண்டும், நிலங்களைப் பயிரிட்டுத் தானியங்களை உற்பத்தி செய்துகொண்டும் வாழுகின்ற காலத்தில்.

* குறிப்பு.—தகப்பனுருக்குச் சகோதர தோஷ விஷயம் :—தகப்பனுருக்கு இளைய சகோதர ஸ்தானம் ஒன்பதாவது வீட்டிற்கு மூன்றுவது வீடாகிய ரிஷபம் ஆகும். இதில் கேது இருப்பது தோஷமாகும். இதற்குடைய சுக்கிரன் திருதியாதிபதியாகிய சந்திரனுடன் கூடி ரிஷபத்திற்கு எட்டில் மறைந்திருப்பது தோஷமாகும். மேலும் தகப்பனுருக்கு மூத்த சகோதர

ஸ்தானம் ஒன்பதிற்குப் பதிேனாராவது வீடாகிய மகரம் ஆகும். இதற்குடைய சனி திருதிய விரயாதிபதியாகிய குருவுடன் கூடி நீசமாகவிருப்பது தோஷமாகும். இதை ராகுவும் அங்காரகனும் பார்ப்பதும் தோஷமாகும்.

7. வாழ்நாளில் வினையை சொல்வேன் வேறுமாது
வரனின்றித் தாயில்லம் வாசம்செய்யத்
தாழ்வானேன் அவள்பேரில் மோகங் கொண்டு
சரசமாய் வார்த்தைசொல்ல யிசையாளாகி
தோழிசின்னாள் சென்றுதனி யாகச் செல்லத்
தூதவனும் அவன்பின்னால் தொடர்ந்துமேதான்
பாழான காமத்தால் பலவந்தத்தால்
பாவைதனைப் போகமுற்றான் பைங்கொடித் தான

7. ஜாதகருடைய தகப்பனாருக்குச் சம்பவித்த பாவத்தை பற்றிச் சொல்லுகின்றேன். வேறே ஒரு ஸ்திரீயானவள் தனக்குப் புருஷனில்லாமல் தன்னுடைய தாயாருடைய வீட்டில் வாசஞ் செய்து கொண்டிருக்கும்போது ஒரு தாழ்ந்த குலத்திற் பிறந்தவன் அவள்மேல் காம ஆசையை உடையவனாகி இன்பமான வார்த்தைகளை அவளிடம் சொல்ல அவள் அதற்குச் சம்மதப் படாததால், சில நாட்கள் சென்ற பிறகு அவள் தனியாகப் போய்க்கொண்டிருக்கையில் அவன் அவள் பின்னாலேயே போய்க் கெட்ட காம ஆசையினால் அவளை பலவந்தப்படுத்தி அவளிடத்தில் சம்போகஞ் செய்தான். அதற்கு மேல் அவள் ;

8. மனவருத்தமுடன் துணைவரோ டிவ்வாறு சொல்ல
வரிபோலே கோபமுற்று மறையோன் பக்கல்
வினையதனைத் தான்புகலத் தூதன் தன்னால்
வீண்வம்பு செய்தவனை அழைத்துக் கேட்கத்
தனமவனால் பெற்றுப்பெண் மேல் குற்றஞ்
சாற்றினான் அம்மாது தயங்கி யேதான்
தனமாசை யாகையினால் என்மேல் தோஷஞ்
செப்பியதோர் பாவிக்கு மறுஜன்மத்தில் ;

8. தன்னுடைய மனத்தில் வருத்தமுண்டாகித் தன்னுடைய சகோதரனிடம் நடந்த இந்தச் சங்கதியைச் சொல்ல அவன் வண்டைப் போலக் கோபத்தை உடையவனாகிப் பிராமணரிடம், அஃதாவது ஜாதகருடைய தகப்பனாரிடம் போய் நடந்த கெட்ட செய்கையைச் சொல்ல, அவர் தன்னுடைய வேலையாளை அனுப்பிக் குற்றத்தைச் செய்தவனை வரவழைத்து அவனைக் கேட்டுப் பிறகு அவனிடமிருந்து பணத்தைக் கைக்கூலியாக வாங்கிக் கொண்டு அந்த ஸ்திரீயின் மேலேயே குற்றத்தைச் சாட்டிவிட்டார். அதன் மேரில் அந்த ஸ்திரீ திகைத்துக் கலங்கி பணத்தின் மேல் ஆசை மேலிட்டு என் மேல் குற்றத்தைச் சொல்லிவிட்ட பாவியாகிய நீ உன்னுடைய பின் ஜன்மத்தில் ;

9. என்போலே துணையின்றி மகவு மின்றி
இரணியமுந் தானின்றி வாழ்வாய் நீயுந்
துன்பமதாய் மாதுசொல்லி தெருத் தூள் விட்டாள்
சேர்ந்ததந்த வினை தானுந் தீரானுக்கு
என்னவனு மந்தியத்தில் வாய்ப் புண்கண்டு
அந்தகன்தன் நாடடைந்து அயனும் லக்கம்
வந்தவனும் மாதுவின்தன் சாபம் போலே
வனுகாது துணையென்று வசிஷ்டர் சொல்வார்.

9. உனக்கு என்னைப் போல சகோதரி இல்லாமலும் குழந்தைகள் உனக்கு இல்லாமலும், தனமும் இல்லாமலும் நீ வாழக்கடவாய் என்று சாபங்கொடுத்துவிட்டு மனம் நொந்து தெருவிலுள்ள மண்தூளை வாரி தூவினாள். ஜாதகருடைய தகப்பனுருக்கு அந்தச் சாபம் வந்து அடைந்தது. இவர் தன்னுடைய கடைசிக் காலத்தில் தன்னுடைய வாயில் புண் உண்டாகி இறந்து எமபட்டணத்திற்குப் போய்ப் பிறகு பிரம தேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றார். முன் ஜன்மத்தின் ஸ்திரீயின் சாபத்தைப் போலவே இவருக்குச் சகோதரர் கிடையாது என்று அகஸ்தியர் சொன்னார். அதன் மேல் வசிஷ்டர் கேட்கின்றார்.

### வேறு

10. வேதத்தோன் குலமுன் ஜன்மம் விளங்கினு னிச்சென் மத்தில்
தீதாகக் கர்ண சேயாய் ஜனித்தகா ரணங்கள் சொல்வாய்
மாதவர் பத்தி யின்றி மறைகளை விரும்பா தாகி
வேதியன் வாழ்வ தாலே விளங்கினு னிவனே யென்றோம்.

10. முன் ஜன்மத்தில் வேதங்களை ஓதுகின்ற பிராமணர் குலத்தில் பிறந்த ஜாதகருடைய தகப்பனுருக்கு இந்த ஜன்மத்தில் கெடுதியாகக் கருணீகர் குலத்தில் பிறவி நேரிட வேண்டிய காரணம் என்ன? அதைச் சொல்லுவீர் என்று கேட்க, தவஞ் செய்கின்றவர்கள் முனிவர்கள் ஆகிய இவர்களிடத்தில் பக்தியும் அன்பும் இல்லாமல் வேதங்களையும் விரும்பாமல் அந்த முன் ஜன்மத்திய இந்தப் பிராமணர் வாழ்ந்து வந்தால் இந்த ஜன்மத்தில் இவ்விதமாகப் பிறந்தார் என்று சொல்லுகிறோம்.

11. சொன்னயிக் குணத்தா னுக்கு சுதனுமே சேஷ்ட னுக
அன்னவ னுதிப்பா னுகும் அவன்குணங் கூறக் கேண்மோ
தன்னினத் தவரைக் காப்பான் சாந்தவான் கிருஷி செய்வன்
கன்னெனன மொழியு முண்டு கல்விமா னுக சாலி.

11. இங்குச் சொல்லப்பட்டக் குணங்களையுடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகர் ஜேஷ்ட குமாரனுகப் பிறப்பார். இவருடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம், கேட்பீராக. இவர் தன்னுடைய பந்துக்களைக் காப்பாற்றுவார். சாந்தமுடையவர். விவசாயத் தொழிலைச் செய்வார். சர்க்கரையைப் போன்ற இனிமையான வார்த்தைகளையுடையவர், இவர் படித்தவராவார். நுட்பமான புத்தியையும், அறிவையும் உடையவராவார்.

12. குலத்தொழில் புரிவா ருைங் குவலயம் விருத்தி செய்வன்
நிலையதைக் காப்பா ருைம் நீத்தோர்க்கு அன்ன மீவன்
தலைவாசஞ் செய்வா ருைந் தக்கோர்கள் நேயங் கொள்வன்
விலைமாதர் மோகங் கொள்வன் வீண்வம்பு புகலா ருைமே.

12. ஜாதகர் தன்னுடைய குலாசாரத்தை அநுஷ்டிப்பவராவார். நிலங்களைப் பயிரிட்டுத் தானியங்களை உற்பத்தி செய்வார். தன்னுடைய தொழிலையும் அந்தஸ்தையும் காப்பாற்றிக் கொள்ளுவார். உலகப்பற்றைவிட்டு விட்டவர்களுக்கும் பரதேசிகளுக்கும் சாப்பாடு போடுவார். புண்ணிய க்ஷேத்திரங்களுக்குப் போவார். நல்ல மனிதர்களுடையவும் மேலோர்களுடையவும் சிநேகத்தை அடைவார். தாசிகளிடத்தில் காம ஆசையை உடையவராவார். வீணுகச் சண்டையை விளைவிக்கக்கூடிய வார்த்தைகளைச் சொல்லமாட்டார்.

13. வறுமையெப் போதுங் காணு னறுமுகன் பத்தி பூண்பன்
சிறுமையோர்க் குதவி செய்வன் சகடுவா கனமு மேற்பன்
கருவினேர் நசிக்க வைப்பன் கரமதில் சங்கு சக்கரம்
பருவத ரேகை யுண்டு பணையோர்க ளுடைய ருமே.

13. ஜாதகர் கஷ்டங்களையும் தரித்திரத்தையும் எப்போதும் அடைய மாட்டார். ஆறுமுகங்களை உடைய முருகக் கடவுளின் மேல் பத்தியும் அன்பும் உடையவராவார். ஏழைகளுக்கும் கஷ்டப்படுபவர்களுக்கும் உபகாரஞ் செய்வார். வண்டி முதலிய சவாரி வாகனமும் உடையவராவார். கர்வம் இறுமாப்பு அகங்காரம் இவைகளை உடையவனை நாசஞ் செய்து விடுவார். இவருடைய உள்ளங்கையில் சங்கு சக்கர ரேகை என்ற ஒருவித ரேகை உண்டு. பர்வத ரேகை என்ற ஒருவித ரேகையும் உண்டு. பயிரிடும் நிலங்களும் ஏர்களும் இவருக்கு உண்டு.

14. தன்துணை காணு ருகுஞ் சாற்று வீரந்தச் சங்கை
மன்னுசேய் விரயம் புக்க மதியுமே ஆறில் தங்க
அன்னவன் துணைகள் தோஷம் அன்னைக்கு மவ்வா றென்றேருங்
கன்னிகை வருகுங் காலங் கழறுவோ மிருப தாண்டில்;

14. ஜாதகருக்குச் சகோதரர்கள் கிடையா. இதற்குக் காரணங்களைச் சொல்லுவீர் என்று கேட்க, சொல்லுகின்றார். அங்காரகன் விரயம் என்ற பன்னிரண்டாவது பாவத்தில் இருப்பதாலும், சந்திரனும் ஆறுவது வீட்டில் இருப்பதாலும் ஜாதகருக்குச் சகோதரதோஷம்† இருக்கின்றது. தாயாருக்கும் இவ்விதமாகவே தோஷம் இருக்கின்றது என்று சொல்லுகின்றோம். இவருக்கு மனைவி வந்து நேரிடுகிற காலத்தைப் ‡ பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு இருபதாவது வயதில்;

† குறிப்பு.—(1) சகோதர தோஷ விஷயம்:—இளைய சகோதர ஸ்தானம் மூன்றுவது வீடாகிய கன்னியாகும். இதற்குடைய புதன் சூரியனுடன் கூடி இருப்பதால் மணிகண்டகேரளம் சகோதரகாண்டம் ஆறுவது பாடலில்

"பருதியும் மூன்றோன் கூடில் பாலன்பின் இல்லைமாதே"

என்ற பிரகாரம் சகோதரதோஷ முண்டு. புதனைச் சனியும் அங்காரகனும் ராகுவும் பார்ப்பது தோஷமாகும். மூன்ருவது பாவத்தை ராகுவும் அங்காரகனும் பார்ப்பதும் தோஷமாகும். அங்காரகனைச் சனி பார்ப்பதும் தோஷமாகும். மூத்த சகோதர ஸ்தானமாகிய பதிருென்றில் கேது இருப்பதும் தோஷமாகும். இதற்குரிய சுக்கிரன் லக்கினத்திற்கு ஆறிலும் தன் வீட்டிற்கு, அஃதாவது தன் பாவத்திற்கு எட்டிலிருப்பதும் தோஷமாகும். மூத்த ஆண் சகோதரகாரகனுகிய குரு சனியுடன் கூடியிருப்பதும் தோஷமாகும். லக்கினுதிபதியாகிய சந்திரன் ஆறில் மறைந்து அங்காரகனுல் பார்க்கப்பட்டுக் கேது காலாகிய மூல நட்சத்திரத்தில் இருப்பதும் தோஷமாகும். குடும்பஸ்தானமாகிய இரண்டாம் வீட்டிற்குடைய சூரியனை அங்காரகனும் சனியும் ராகுவும் பார்த்திருப்பது, இரண்டைக் குரு பார்த்திருந்தபோதிலும், சூரியனுடன், புதன் சம்மந்தப்பட்டிருந்தபோதிலும் மொத்தத்தில் தோஷத்தை விளைக்கக்கூடியதாகும், ஆகையால் ஜாதகருடைய சகோதரபாவத்திற்கு அதிக தோஷம் இருக்கின்றது.

‡ (2) **விவாக விஷயம் :**—லக்கினத்திற்குக் கேந்திரத்தில் புதனும் குருவும் இருப்பதாலும், லக்கினத்திற்கு ஒருபுறமாக நான்கு ராசிக்குள்ளேயே கீர்த்திஸ்தானுதிபதி என்ற பத்திற்குடைய அங்காரகனும் சனியும் இருப்பதாலும் ஜாதகசிந்தாமணி ஏழாம்பாவம் 973, 974-ஆவது பாடல்களின் பிரகாரம் வாலிபத்தில் ஜாதகருக்கு விவாகம் நடக்கும்.

15. மாதுமே கீழ்ப் பால் நேரும் வரைகிறே மவன்கு ணத்தைச்
சூதிலாள் மாஞ்சி வப்பள் துரிசான கோப மேற்பள்
காதலி யோக சாலி கணவன்தன் மனதுக் கேத்தோள்
வேதனை நாபிச் சூடு மேவிடும் நடையும் நன்மை.

15. மனைவி கிழக்குத்திக்கில் இருந்து வருவாள் என்று சொல்லுகிறேம், இவளுடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேம். இவள் கள்ளம் கபடு வஞ்சனை இவைகள் இல்லாதவளாவாள். மாந்துளிரின் நிறத்தைப் போன்ற ஒருவிதமான சிகப்பு நிறமுள்ளதேகத்தை உடையவள். கெட்ட கோபத்தை உடையவள். யோகத்தை உடையவள், இவள் தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தபடி நடந்து கொள்ளக்கூடியவளாவள். இவளுடைய வயிற்றில் நாபிச்சூட்டால் உபத்திரவம் உண்டாகும். இவள் நல்ல நடவடிக்கை உடையவள்.

16. புத்திர விருத்தி தன்னைப் புகலவே பலத்தைக் காணேஞ்
சுத்தமா யுதித்தா லுந்தான் தீங்காகு மென்று சொல்வோங்
குத்தத்தைச் சொல்லு மென்னக் கொடுவிஷ மஞ்சில் தங்க
வித்தகர் சேய்வி யத்தில் மேவின பலத்தி ஞலே

16. ஜாதகருக்குக் குழந்தைகள் பிறந்து விருத்தியாகும் விஷயத்தைப் பற்றிச் சொல்ல யாதொரு வலிவும் கிடையாது. குழந்தைகள் ஒரு சமயம் பிறந்தாலும் அவைகள் இறந்துபோய் விடும் † என்று சொல்லுகின்றேம். கெடுதியை விளைவிக்கின்ற காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவேபதில்

சொல்லுகின்றார். கொடிய விஷமாகிய ராகு ஐந்தாவது பாவத்திலிருப்ப தாலும் அங்காரகன் வியமாகிய பன்னிரண்டாவது பாவத்தில் இருப்பதாலும் இந்தக் கெட்ட பலங்களால் ;

† குறிப்பு.—புத்திரதோஷ விஷயம் :—புத்திர பாவங்களாகிய ஐந்தாவது வீடு, ஒன்பதாவது வீடு, இந்த வீடுகளுக்கு அதிபதிகள் குரு ஆகிய இந்த அம்சங்களைப் புத்திர விஷயமாகக் கவனிக்கவேண்டும். லக்கினுதிபதி, ஏழாம் வீடு, ஏழாம் வீட்டிற்குடையவர் ஆகிய இந்த மூன்று அம்சங்களையுங் கூடப் புத்திர விஷயமாகக் கவனிப்பதுண்டு. இங்கு ஐந்தாவது பாவத்தில் இராகு இருப்பது தோஷமாகும். ஐந்திற்குடைய அங்காரகன் லக்கினத்திற்குப் பன்னிரண்டிலும் ஐந்திற்கு எட்டிலும் மறைந்திருப்பது தோஷமாகும். புத்திரகாரகனுகிய குரு சனியுடன் கூடி இருப்பது தோஷமாகும். இன்னொரு புத்திரஸ்தானமாகிய ஒன்பதாவது பாவத்திற்குடைய குரு சனியுடன் கூடி இருப்பது தோஷமாகும். இந்த ஒன்பதைக் கேது பார்ப்பதும் தோஷமாகும். ஏழிற்குடைய சனி நீச்சனுகி விட்டார். ஏழில் சூரியன் இருப்பதும் ஏழில் ஞானியாகிய புதன் இருப்பதும் புத்திர தோஷமாகும். ஏழிற்குடைய சனி ஐந்திற்குடைய அங்காரகனைப் பார்ப்பதும் புத்திர தோஷத்தை விளைவிக்கும். ஆகையால் புத்திரதோஷம் அதிகமாக விருக்கின்றது.

17. சுதர்தோஷ மென்று சொல்வோஞ் சேயின் முன்ஜன் மந்தன்னில்
அதிகமாய் வினைகள் செய்தான் அடைந்தது அந்தத் தோஷம்
அதிபன்செய் வினைக ளென்ன வறிவிப்பீர் விவரந் தன்னைக்
சுதிதருந் திருச்செந் தூரில் கலந்தனன் ரெட்டி வமிசம்.

17. புத்திரதோஷம் உண்டு என்று சொல்லுகின்ளேம். மேலும் ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தில் அதிகமான பாவங்களைச் செய்திருக்கின்றார். அந்தத் தோஷங்கள் எல்லாம் இவரை இந்த ஜன்மத்தில் வந்து அடைந்திருக்கின்றன. இவர் செய்த பாவங்கள் என்ன என்பதை விவரமாகச் சொல்லுவீர் என்று கேட்க, பதில் சொல்லுகின்றார். மோக்ஷத்தைக் கொடுக்கின்ற திருச்செந்தூர் என்னும் ஸ்தலத்தில் ரெட்டியாருடைய குலத்தில் ஜாதகர் பிறந்தார்.

18. பாரியும் மதலை யுண்டாய்ப் பாரினுல் சீவித் தேதான்
மாரனும் வாழுந் நாளில் வந்தவூழ் தன்னைக் கேண்மோ
கார்க்கோடனில்லம் வாசங் கனமுள தெய்வ மென்று
கோருவார் முன்னோ ரெல்லாங் குமரனு மவ்வாறு செய்தான்.

18. ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தில் மனைவியையும் மக்களையும் உடையவராகி நிலங்களினுல் ஜீவனம் செய்து கொண்டு வாழ்கின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்தப் பாவத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். கேட்பீராக. அஷ்ட நாகத்தில் ஒன்ருகிய கார்க்கோடனது ஜாதியைச் சேர்ந்த ஒரு நாகம் அவருடைய வீட்டில் வாசஞ் செய்து கொண்டிருந்தது. அதை ஒரு சிறந்த தெய்வம் என்று பெரியோர்களும் முன்னோர்களும் எண்ணிப் பூசித்து வந்தார்கள். இந்த ஜாதகரும் அவ்விதமாகவே செய்து வந்தார்.

19. மருடத்தால் வெளியில் ஓர்நாள் வாசலில் தியங்கும் போது
நகைமயா யரங்கஞ் செய்து சண்டன்தன் பதிக்குச் சேர்த்தான்
பகையாக அந்த தோஷம் பரவிற்று பால னுக்கு
அகமதில் அதிதி ஓர்நாள் அந்தியில் அன்னம் கேட்க ;

19. இந்த நாகம் ஒருநாள் மோடி வாத்தியத்தால் வெளியேவந்து வாசலில் நடனஞ் செய்து திகைத்து நிற்கும் போது போர்களத்திற் சண்டை செய்வதுபோல அதைக்கொன்று எமபட்டணத்திற்கு இந்த ஜாதகர் அனுப்பி விட்டார். இந்தத் தோஷமானது இப்பிறவியில் ஜாதகருக்கு விரோதமாக வந்து சம்பவித்தது. ஒருநாள் மாலைவேளையில் ஒரு பரதேசி இவருடைய வீட்டிற்கு வந்து சாப்பாட்டைக் கேட்கவே ;

20. அரிபோலே கோப முற்று அனுகாதே அன்ன மென்னப்
பரதேசி மனவெ றுப்பால் பகருவார் சாபந் தானும்
வருஞ் ஜன்மம் சுதர்கள் தோஷம் வருந்துணை காணு தாயும்
உறைகுவா யென்று சொன்னர் உறைந்தது அதுஓர் தோஷம்.

20. சிங்கத்தைப் போலவும் பாம்பைப் போலவும் ஜாதகர் கோபம் உடையவராகிப் பரதேசியின்மேல் சீறி சாதம் கிடையாது என்று சொல்ல, அவர் தன்னுடைய மனது நொந்து துக்கத்துடன் சாபத்தைக்கொடுத்தார். உனக்கு உண்டாகும் அடுத்தப் பிறவியில் சந்ததி தோஷம் உண்டாகிச் சகோதர தோஷமும் உண்டாகி நீ வாழக்கடவாய் என்று சொன்னர். இந்த ஒரு தோஷமும் ஜாதகரை வந்து அடைந்தது.

21. மாரனு மந்தி யத்தில் மலர்ஜோதி ஊன மாயும்
ஆறுமா முகத்தோ னுக்கு அவனுமே தொண்டு பூண்டு
வீரியன் காலந் நாடு மேவியே பிரமன் லக்கம்
பாரினிலு திப்பானுகும் பணிதோஷம் அதிதி தோஷம் ;

21. ஜாதகர் முன் ஜன்மத்தில் கடைசி காலத்தில் உணர்வு கண்ணொளி இவைகள் சேதப்பட்டு ஆறு பெரிய முகங்களை உடைய முருகக் கடவுளுக்குத் திருப்பணி முதலியவைச் செய்து இறந்து எமபட்டணத்துத்திற்குச் சென்று பிரமதேவனுல் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த பூமியில் இந்த ஜென் மத்தில் வந்து பிறந்திருக்கின்றூர். பாம்பின் தோஷம் பரதேசியின் சாபம் ஆகிய இந்த தோஷங்களால் ;

22. துணைத் தோஷஞ் சுதரின் தோஷம் செப்புவீ ரதற்குச் சாந்தி
______________
______________
______________

22. ஜாதகருக்குச் சகோதர தோஷமும் புத்திர தோஷமும் ஏற்படும். இந்தத் தோஷங்கள் நிவிர்த்தியாவதற்கு ஒரு சாந்தியைச் சொல்லுவீர் என்று கேட்க ;

குறிப்பு.—இதற்கு மேல் உள்ள விஷயங்கள் அடங்கிய ஓலை கிடைக்காத தால் ஜாதகத்தைப் பூர்த்திசெய்ய சாத்தியப்படவில்லை.

## ஜாதகம் 101.

1. மதியு [1] மேடஞ் சனிமீனம்
மறையோன் [2] ராகு மானதா கும் [3]
உதயன் [4] சேயுஞ் [5] சீய [6] முற
ஒருகண் ணுேனும் [7] கேதுமலவன் [8]
புதனுங் கன்னி கோளிவ்வாறு
பொருந்திக் கடகஞ் சென்மமுடன்
அரிய பலன்கள் எவ்வாறு
அறிவிப் பீர்கள் தவமுனியே ;

| | | | |
|---|---|---|---|
| சனி | சந்திரன் | | |
| | இராசி சக்கரம் | | லக்கனம் சுக்கிரன் கேது |
| குரு ராகு | | | சூரியன் அங்கா ரகன் |
| | | | புதன் |

அசுவணி 4-ம் பாதம்

கேதுதசை ஞு 1-4-0

1. சந்திரன் மேஷத்திலும், சனி மீனத்திலும், குருவும் ராகுவும் மகரத் திலும், சூரியனும் அங்காரகனும் சிம்மத்திலும், சுக்கிரனும் கேதுவும் கடகத்திலும், புதன் கன்னியிலும் இருந்து ஜன்மலக்கினமும் கடகமானுல் பலன்கள் எவ்விதமாக இருக்கும் என்பதைத் தவத்தைச் செய்கின்ற முனி வர்களே! சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்க ;

குறிப்பு.—இந்தராசிச் சக்கிர அமைப்பிற்குப் பின்வரும் அம்மனைச்சக்கர கிரகநிலை பொருத்தமுடையதாகும்.—ரிஷபத்தில் சூரியனும், கடகத்தில் சந் திரனும் ராகுவும், சிம்மத்தில் அங்காரகனும் சுக்கிரனும், கன்னியில் சனியும், மகரத்தில் புதனும் கேதுவும், மீனத்தில் குருவும் ஆகும். அங்காரகன் அஸ்தமனத்திலும் குரு வக்கிரகதியிலும் இருக்கின்றுர்.

---

[1] சந்திரன். [2] குரு. [3] மகரம். [4] சூரியன்.
[5] அங்காரகன். [6] சிம்மம். [7] சுக்கிரன். [8] கடகம்.

2. பிருகு புகல்வார் ஆண்ஜனனம் பேசு மில்லங் கீழ்மேற்குத்
தெருவா சலுமே வடபார்வை தந்திமு கத்தான் வடபாலில்
நரிவாக னத்தாள் மேல்பாலில் நல்குஞ் சிறுவூர் வணிகர்குலம்
வருவான் சேஷ்ட னுகவுமே வரைவோஞ் குடும்பச் சேதிதனே.

2. பிருகுமகரிஷி சொல்லுகின்றார். பிறந்த குழந்தை ஆண் குழந்தை யாகும். பிறந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் வடக்குப் பார்த்த வாயிற் காலை உடையதாகும். யானை முகத்தையுடைய விநாயக் கடவுளின் கோவில் வடக்குத் திக்கிலும், காளியம்மன் கோயில் மேற்குத் திக்கிலும் இருக்கும். இந்த அடையாளங்கள் உள்ள ஒரு சிறிய கிராமத்தில் வணிகர் குலத்தில், இந்த ஜாதகர் ஜேஷ்ட குமாரனுக வந்து பிறப்பார். இவருடைய குடும்ப விஷயங்களைப்பற்றிச் சொல்லுகின்றோம்.

3. தந்தை துணைகள் சிலதோன்றுந் தங்கா திதிலே பாதியுமே
விந்தை யாக ஆணென்று மெல்லியு மவ்வார் தீர்க்க முறும்
முன்துணை ஆண்சே யுமே முதிக்கா முன்ன மேகுவானும்
மைந்த ராண்பால் கன்னிஒன்று மருவு வானு மாரனுக்கு.

3. ஜாதகருடைய தகப்பனுருடன் சில சகோதரர்கள் உண்டாவார்கள். இதில் பாதிபேர் இறந்து விடுவார்கள். ஓர் ஆண் சகோதரமும் ஒரு பெண் சகோதரமும் ஆச்சரியமாக நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள். தகப்பனுருக்கு ஒரு மூத்த ஆண் சகோதரம் உண்டாகி இவர் ஜாதகர் பிறப்பதற்கு முன்னமே இறந்து விடுவார். இவருக்கு ஓர் ஆண் குழந்தை யும் ஒரு பெண் குழந்தையும் இருக்கும்.

4. மணங்க ளுண்டாய் மதலையின்றி வாழ்வாள் பின்னேள் மாதரசே
அணங்கு தீர்க்கம் பகைகொஞ்சம் அவள்பின் சேதி அறிவிப்போம்
பிணக்காய்க் கொங்கின் மேல்செல்வன் பிலமேயின்றி புகுவானுன் [னுர்
மணங்க ளுண்டாய் மதலைக ளில்லாது மாது ரெண்டு தோன்றும்.

4. ஜாதகரின் தகப்பனுருடைய இளைய சகோதரி தனக்கு விவாகம் நடந்து ஆண் குழந்தை இல்லாமல் இருந்து வாழ்வாள். பார்வதியம்மையே! இவள் நீண்ட வயதை உடையவள். இவள் ஜாதகரின் தகப்பனுருக்குச் சிறிது விரோதியாகவிருப்பாள். இவளுக்குப் பின்னுல் பிறந்தவனுடைய விஷயத்தைச் சொல்லுகின்றோம். இவன் சண்டை போட்டுவிட்டுக் கொங்கு தேசத்திற்குப் போயிருந்து அவ்விடத்தில் விருத்தியடையாமல் மறுபடியும் தன் ஊருக்குத் திரும்பி வந்து விவாகஞ் செய்து கொண்டு ஆண் குழந்தை இல்லாமல் இரண்டு பெண் குழந்தைகளை மட்டும் அடைவான்.

5. உடனே கூடி வாழ்ந்திடுவன் உலகத் தோர்க்கு நல்லவனுய்
விடம்போல் அற்ப வஸ்துவுமே விரும்பு வானும் வினைசெய்யான்
படையில் செல்லான் சுகசீவி பகவான் பத்தி கொண்டிடுவன்
அடைவாய்த் தீர்க்க வயதென்றேம் அறிவிப்போமே பின் சேதி.

5. இந்த இளைய சகோதரர் ஜாதகருடைய தகப்பனாருடன் கூடி இருந்து வாழ்வார். பூமியிலுள்ளவர்களுக்கு நல்லவனாக விருப்பார். இவர் பாம்பைப்போல அற்பமான வஸ்துக்களின்மேல் ஆசை உடையவராயிருப்பார். பாவங்களைச் செய்யமாட்டார், சண்டைக்குப் போகமாட்டார். சுகமாக ஜீவிப்பார். கடவுளின் மேல் பக்தியும் அன்பும் உடையவராக விருப்பார். இவர் நீண்ட ஆயுளை உடையவராவார் என்று சொல்லுகின்றோம். மற்ற விஷயங்களைப் பின்னால் சொல்லுகின்றோம்.

6. சேதி யுரைப்பேன் தந்தைக்குத் தீர மனத்தன் தயையுடையன்
காதி அதிகங் காலாள்கள் கனக்கும் பலவூர் பூமிவிருத்தி
தீதென் றோர்க்கு உதவிடுவன் செகரா சர்கள் பேட்டிமிகும்
ஓது வானுஞ் சுகவார்த்தை உயர்வாங் குடும்பி உத்தமனே.

6. இனிமேல் ஜாதகரின் தகப்பனாருடைய விஷயங்களைச் சொல்லுகின்றேன். இவர் தைரியமான மனத்தை உடையவர். தயையுடையவர். கீர்த்தியை அதிகமாக உடையவர். கால்நடை வேலைக்காரர்கள் அதிகமாக ஏற்படுவார்கள். பல கிராமங்களில் நிலங்கள் விருத்தியாகும். கெட்டுப் போய் இருக்கின்றோம் என்று சொல்லுகின்றவர்களுக்கு உபகாரஞ் செய்வார். பூமியிலுள்ள பெரிய அரசர்களின் பேட்டியை அதிகமாக உடையவர். இனிமையான வார்த்தைகளை உபயோகப்படுத்துவார். மேன்மையான குடும்பஸ்தராக விருப்பார். இவர் நல்ல குணங்களை உடையவராக விருப்பார்.

7. உத்தம மனத்தன் உயர்புத்தி உறையும் மாமி யிரண்டாகச்
சித்தங் கறுப்பு மில்லாதான் ஜயமே செய்வன் நினைத்த [வெல்லாம்
பத்து மதிலும் அதிகாரம் பஞ்சைமீ திரக்க முள்ளானே
சுத்தத்தார்கள் மதிக்க உய்வன் சூதும் வாதுங் கொள்ளாதான்.

7. ஜாதகருடைய தகப்பனார் நல்ல மனத்தை யுடையவர். உயர்ந்த புத்தியை உடையவர். இவருக்கு இரண்டு மாமியார்கள் உண்டு. மனதில் கபடம் கள்ளம் வஞ்சனை கோபம் மனக்குறைவு இவை இல்லாதவராவார். தான் நினைத்த காரியங்களை எல்லாம் செய்து முடித்து ஜயத்தை அடைவார். அதிகாரத்தை உடையவர். ஏழைகளின் மேல் இரக்கமும் தயாள குணமும் உடையவர். இவர் தன்னைப் பந்துக்கள் மதிக்கும்படியான அந்தஸ்திலிருந்து வாழ்வார். சூது மார்க்கமும் வஞ்சனையும் கபடமும் இல்லாதவராவார்.

8. சொல்லுவோ மிவனின் பூர்வமதைத் தக்கோ லத்தில் பின் [குலத்தில்
நல்ல வணிபம் தான்செய்து நடக்குந் நாளில் வினையைச் சொல்
வேன் புலவர் தமக்கு மணம்வேண்டி பொன்முத் திரையுந் தான்
கேட்க வல்லுனன் அதற்கு வாய்கொடுத்து மருவா தென்று னன்
நாளில் ;

8. ஜாதகரின் தகப்பனாருடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவர் தக்கோலத்தில் தாழ்ந்த ஜாதியில் பிறந்து நல்ல வியாபாரஞ் செய்து கொண்டு வாழ்ந்த காலத்தில் சம்பவித்தப் பாவத்தைச்

சொல்லுகின்றேன். ஒரு பண்டிதர் தனக்கு விவாகஞ் செய்துகொள்ள எண்ணங்கொண்டு இவரைப் பொன்னால் செய்த ஒரு தாலியைக் கேட்க இவர் அதற்குச் சம்மதித்துவிட்டு அந்த நல்ல நாளாகிய விவாக காலத்தில் இல்லை என்று சொல்லிவிடவே ;

9. பஞ்சை மனமும் தான்வாடி பகர்ந்த சாபம் பகர்ந்தனரை
முந்திய ஜன்ம மிருமனையாய் மேவு மென்று தான்சொல்ல
நஞ்சு போலச் சாபந்தான் நல்கு மென்றேம் மங்கையரை
தஞ்ச மாக அந்தியத்தில் சாறும் அடியார்களையடைந்து ;

9. அந்த ஏழையாகிய புலவர் தன்னுடைய மனம் நொந்து துன்ப மடைந்து சாபத்தைக் கொடுத்துவிட்டார். உனக்கு மறு ஜன்மத்தில் இரண்டு மனைவி நேரிடக் கடவது என்று சொல்ல, அந்தச் சாபம் விஷத்தைப்போல இவருடைய மனைவியை வந்து அடையும் என்று சொல்லுவோம். இவர் கடைசி காலத்தில் பரதேசிகளுடைய துணையையும் அடைக்கலத்தையும் பெற்று ;

10. காலன் பதிக்குத் தான் சென்று கஞ்ச னாலேதான்வரைய
சீலமில் லாத இக்குலத்தில் ஜனித்தான் முன்னும் சேர்ந்ததனால்
சீல மனையா ளிரண்டாகுஞ் செல்வ முடனே மனைவாழ்வன்
பாலிகை ரண்டில் பின் னோட்குப் பிறப்பனு மிந்தபாலனுமே.

10. இறந்து எமபட்டணத்திற்குப்போய்ப் பிரமதேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு நல்லொழுக்கமும் நல்லநடத்தையும் இல்லாத இந்தக் குலத்தில் ஜாதகருடைய தகப்பனார் பிறந்தார். இவருக்கு முன் ஜன்மத்திய சாபம் வந்து நேர்ந்ததால் நல்லொழுக்கமுள்ள மனைவிமார்கள் இருவர்கள் வந்து சம்பவிப்பார்கள். மனைவிமார்கள் பாக்கியவதிகளாகவிருக்க இவர் வாழ்வார். இரண்டு மனைவிமார்களில் இளைய மனைவிக்கு இந்த ஜாதகர் பிறப்பார்.

11. பாலன் குணத்தைத் தான்புகல்வேன் பதரில் செல்லான் [பலமுடையன்
சீலம் போலே வெளிமயக்கன் சிவந்த மெய்யன் சிறப்புள்ளான்
கால மறிந்து தான்புகல்வன் கருதான் கட்டு வார்த்தைகளை
வேலன் பத்தி கொண்டிடுவன் விளைவால் பெருமை வித்தகியே.

11. ஜாதகருடைய குணாதிசயங்களைப்பற்றிச் சொல்லுகின்றேன். அற்பமான உபயோகமில்லாத விஷயங்களில் தலையிடமாட்டார். வலிவுடையவர். நல்லொழுக்கத்தையையும் நல்ல நடத்தையையும் உள்ளவரைப்போல வெளிக்குக் காண்பித்துக்கொண்டு பிறரை மயக்குவார். சிவப்பான தேகத்தை யுடையவர். பெருமையை உடையவர். சமயத்திற்குத் தகுந்தாற்போலப் பேசுஞ் சாமர்த்தியம் உடையவர். இவர் பொய்யான வார்த்தைகளையும் புனைந்த வார்த்தைகளையுஞ் சொல்லமாட்டார்; முருகக் கடவுளின் மேல் பக்தியும் அன்பும் உடையவராவார். இவருக்கு நிலங்களுடைய பலிதத்தால் மேன்மை உண்டாகும். பார்வதியம்மையே !

12. தகைவாய்ச் செய்வன் கூவலுமே சகடு முடையன் சாராள்கள்
பகையை மனத்தில் வையாதான் பணிவோர் நேயன் அதிதீரம்
ஜகமே வெற்றி கொண்டிடுவன் தீர மனத்தன் சல்லியமில்லான்
சுகமே செய்வன் சிலருக்கும் அற்பக் கல்வி அறிவித்தோம்.

12. ஜாதகர் கொடி செடி முதலிய வகையருக்களுள்ளத் தோப்பு களும் கிணறுகளும் வண்டியும் உள்ளவராவார். இவர் தனக்குதவியாக விருக்கின்றவர்களுடைய விரோதத்தைத் தன்னுடைய மனத்தில் வைத்துக் கொள்ளாதராவார். தனக்கு வேலையைச் செய்கின்றவர்களிடத்தில் விசுவாசத்தை உடையவர். அதிகமான தைரியத்தை உடையவர். பூமியில் ஜயத்தை அடைவார். தைரியசாலி. கடன்படமாட்டார். சில ஜனங் களுக்கு நன்மையையே செய்வார். இவருக்குப் படிப்பு சிறிதாகவிருக்கும் என்று சொல்லுகிறோம்.

13. அறிவாய்த் துணைவராளென்று அதன்மேல் காணன் அம்பிகையே
தெரிய உரைப்போம் அவன்சேதி தீர்க்க வயது உள்ளவனே
பரிவண் டிகளுந் தான்பெறுவன் பணிந்தோர் நேயன் பார்விருத்தி
நெறியைக் காப்பன் கிராமச்செட்டு நேமிக் குதவி செய்திடுவன்.

13. ஜாதகருக்கு ஒரேஒரு சகோதரன் தான் உண்டு, பார்வதி யம்மையே! அதற்கு மேல் சகோதரர்கள் கிடையா.* இந்த ஆண் சகோதரமுடைய விஷயங்களைச் சொல்லுகின்றோம். இவர் நீண்ட ஆயுளை உடையவர். இவர் குதிரை வண்டிகளை உடையவர். வேலை செய்பவர் களிடத்தில் இவர் பிரியமாய் இருப்பார், நிலங்கள் விருத்தியாகும், நல்ல மார்க்கத்தையுடையவர், அதைக்காப்பாற்றுவார். கிராமத்தில் வியாபாரத் தைச்செய்வார். பூமியிலுள்ளவர்களுக்கு உபகாரஞ் செய்வார்.

* குறிப்பு.—சகோதர விஷயம்.—இளைய சகோதர ஸ்தானம் மூன்றும் பாவமாகிய கன்னியாகும். இதற்குடையவராகிய புதன் ஆட்சியாகி அஷ்ட மாதிபதியாகிய சனியாலும் கேதுவாலும் சஷ்டமாதிபதியாகிய குருவாலும் பார்க்கப்பட்டிருப்பதுடன் இந்த ஸ்தானமும் இவ்விதமாகவே பார்க்கப் பட்டிருக்கின்றது. ஆகையால் சகோதரதோஷம் இருக்கின்றது. மேலும் மூத்த சகோதரன் ஸ்தானமாகிய பதினொன்றிற்குடைய சுக்கிரன் கேதுவுடன் கூடி அந்தப் பாவத்திற்கு மூன்றில் இருந்துகொண்டு அந்தப் பாவத்திற்கு எட்டிற்குடைய குருவால் பார்க்கப்பட்டிருக்கின்றார். சனியும் கேதுவும் பதினோராம் பாவத்தைப் பார்க்கின்றார்கள். அங்காரகன் சூரியனுடன்கூடி அஸ்தமடைந்திருக்கின்றார். ஆகையால் சகோதர தோஷம் அதிகமாக விருக்கின்றது.

14. இடுவன் ஏழை கட்கன்னம் யோம வாமக்கண் எனவுரைத்தோந்
திரமாங் குடும்பி தானவன் ஜகத்தோர் மதிப்புக் கொண்டிடுவன்
உடன்வந் தோரை ஆதரிப்பன் உருமம் நான்கு செய்திடுவன்
மடைய ருறவு கொள்ளாதான் மனைவிக் கிஷ்டன் மாதரசே.

14. ஜாதகரின் சகோதரர் ஏழைகளுக்குச் சாப்பாடு போடுவார். அப்பிரகம்போன்ற பளபளப்பான அழகிய கண்களை உடையவராவார் என்று சொல்லுகிறோம். மேன்மையானதும் வலிவானதுமான குடும்பஸ்தராக விருப்பார். பூமியிலுள்ளவர்களுடைய மதிப்பை இவர் அடைவார், தன்னுடன்கூட வந்தவர்களைக் காப்பாற்றுவார், நான்கு கர்மங்களைச் செய்வார். புத்தியில்லாதவர்களுடைய சினேகத்தை விரும்பமாட்டார். தன்னுடைய மனைவிக்கு இஷ்டமானவராக விருப்பார், பார்வதியம்மையே !

15. கும்ப ராசி மூலத்தில் குதிப்பான் என்றோங் கோதையரே
வம்பில் செல்லான் மருவலருண்டு மாற்றான் தன்னை வென்றிடுவன்
உம்பர் பூசை கொள்ளாதான் உறையும் பாரி ஒன்றேயாம்
செம்பாய் வடபால் தான்நேரும் மறையோ சுதர்கள் தான்தோன்
[றும்.

15. ஜாதகருடைய சகோதரர் கும்பராசியில் மூல நட்சத்திரத்தில் பிறந்திருப்பார் என்று சொல்லுகின்றோம். பார்வதியம்மையே ! சண்டைக்குப் போகமாட்டார், இவருக்குப் பகைவர்கள் இருப்பார்கள், தன்னுடைய எதிரியை வென்று விடுவார். வானோர்களைப் பூஜை செய்யமாட்டார். இவருக்கு ஒரேஒரு மனைவிதான் வந்து வாய்ப்பாள், அவளும் வடக்குத்திக்கிலிருந்து வருவாள், அறிவுள்ள இவருக்குக் குழந்தைகள் பிறக்கும்.

வேறு

16. அத்திரி மறித்துச் சொல்வார் அறைந்தினீர் கருமம் நான்கு
சுத்தமாய்ச் சொல்லு மென்ன தந்தைபின் முன்னோன் புத்திரர்
வித்தகர் தனக்குச் செய்வான் விரோதங்கள் பூர்வம் நேரும்
நித்தியம் உறவு பின்னால் நிமலியே கேட்டி டாயே.

16. அத்திரிமகரிஷி தடுத்துக் கேட்கின்றார். இவர் நான்கு கர்மங்களைச் செய்வார் என்று சொன்னீரே ! அவைகளை விவரமாகச் சொல்லுவீர் என்று கேட்டார். இவர் தன்னுடைய தகப்பனுருக்கும், தகப்பனுருடைய முன்பின் சகோதரர்களுக்கும் புத்திரருக்கும் கர்மத்தைச் செய்வார். விரோதங்கள் முன்வயதில் உண்டாகும். பிறகு நட்பும் சினேகமும் உண்டாகி விடும். பார்வதியம்மையே ! கேட்பீராக.

17. சுதர்களு மாண்பா லொன்று தோகையு மிரண்டு என்றோம்
இதுமூன்றுந் தீர்க்க மெய்தும் எழில்த வத்தனால் நேருந்
ததிபாக்கிய முடைய னுகுந் சகலசம்பத் தாய் வாழ்வன்
அதிதியை ஆதரிக்கும் அம்பிகையாளே கேளாய்.

17. குழந்தைகளில் ஓர் ஆண் குழந்தையும் இரண்டு பெண் குழந்தைகளும் உண்டு என்று சொல்லுகிறோம். இந்த மூன்று குழந்தைகளும் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள். இவைகள் அழகிய தவத்தின் பயனாக உண்டாகும். இவர் தயிர் பாக்கிய முடையவராவர். எல்லா சம்பத்துக்களுடனும் கூடி வாழ்வார். தேவர்களைப் பெற்றவனையும் பரதேசிகளையும் காப்பாற்றுகின்ற பார்வதியம்மையே ! கேட்பீராக.

18. ஜாதகன் மணத்தின் காலஞ் சாற்றுவோ மீராருண்டுள்
காதலி வடபால் நேருங் கழறுவோ மவள்கு ணத்தைச்
சூதிலாள் சிவந்தமேனி சொல்லது சுகமே யாகும்
பாதக மனமில்லாதாள் பணிந்தோரை ஆத ரிப்பள்.

18. ஜாதகருடைய விவாக காலத்தைப்பற்றிச் சொல்லுகிறோம். இவருக்குப் பன்னிரண்டு வயதிற்குள் † மனைவி வடக்குத்திக்கிலிருந்து வந்து நேருவாள். இவளுடைய குணத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம், இவள் கள்ளம் கபடம் வஞ்சனை இவை இல்லாதவளாவாள். சிவப்பு நிறமுள்ள தேகத்தை உடையவள். இவள் இனிமையான வார்த்தைகளைச் சொல்லுவாள். கெட்ட மனத்தை உடையவள் அல்லள். தன்னை வணங்கின வர்களைக் காப்பாற்றுவாள்.

† **குறிப்பு.—விவாக விஷயம்.**—லக்கினத்தில் சுக்கிரனும் ஏழில் குருவும் புதன் தன் வீட்டிலும் இருப்பதாலும், கீர்த்தி ஸ்தானம் என்ற பத்திற்குடைய அங்காரகன் லக்கினத்திலிருந்து நான்கு வீட்டிற்குள்ளே இருப்பதாலும், சுக்கிரனும் சாமி என்று சொல்லப்பட்ட லக்கினாதிபதியாகிய சந்திரனும் லக்கினத்திற்குக் கேந்திரத்தில் இருப்பதாலும் ஜாதக சிந்தாமணி 973, 974, 975-ஆவது பாடல்களின் பிரகாரம் ஜாதகருக்கு வாலிபத்திலேயே விவாகம் நடக்கும்.

19. விரதங்கள் பூண்பா ளாகும் வீண்பழி ஏற்கா ளாகும்
அரிமனை யொப்ப தாகும் அன்னமு மன்பா யீவள்
பெரும்புத்தி யோக சாலி புருடன்தன் மனத்துக் கேத்தோள்
வருந்துணை காணு ளாகும் மாதுவுந் தனியே யென்றோம்.

19. ஜாதகருடைய மனைவி விரதங்களையும் நோன்புகளையும் அநுஷ்டிப்பாள். வீணான அபாவத்தையும் குற்றங்களையும் அடைய மாட்டாள். மகாவிஷ்ணுவினுடைய மனைவியாகிய லக்ஷ்மிக்குச் சமானமானவளாக விருப்பாள். சாதத்தை ஆசையுடன் கொடுப்பாள். பெரிய புத்தியை யுடையவள். யோகத்தை உடையவள். தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற் போல நடந்து கொள்ளுவாள். இவளுக்குச் சகோதரர்கள் † கிடையா. இவள் ஒருத்தியாக விருப்பாள். என்று சொல்லுகின்றோம்.

† **குறிப்பு.—மனைவியின் சகோதர விஷயம்.**—மனைவியின் லக்கினம் ஏழாவது பாவமாகிய மகரம். இதற்கு இளைய சகோதர ஸ்தானமாகிய மீனத்திற்குடைய குரு ராகுவுடன்கூடி நீசமாக விருக்கின்றார். மீனத்தில் சனி இருக்கின்றார். மீனத்தை ராகுவும் அங்காரகனும் பார்க்கின்றார்கள். மகரத்திற்கு எட்டில் அங்காரகன் மறைந்திருக்கின்றார். ஆகையால் இளைய சகோதரனுக்கு அதிக தோஷமிருக்கின்றது. மூத்த சகோதர ஸ்தானம் மகரத்திற்குப் பதினோராவது வீடாகிய விருச்சிகம் ஆகும். இதற்குடைய அங்காரகன் எட்டில் சூரியனுடன் கூடி மறைந்தும் அஸ்தமனத்திலும் இருக்கின்றார். விருச்சிகத்தை இராகுவும் பார்க்கின்றார். மூத்த ஆண் சகோதர காரகனாகிய குரு மகரத்தில் ராகுவுடன்கூடி நீசமாக விருக்கின்றார். ஆகையால் மூத்த சகோதர தோஷமுமிருக்கின்றது.

20. முன்கோப முடளே தாழ்வு மூலச்சூ டுடைய ளாகும்
பொன்பணி யிச்சை யுண்டு புகழான குடும்ப மேற்பள்
அன்னியர் குற்றம் சொல்லாள் அடிசிலுக் கினிய ளாகுங்
கன்னிகை வயது தீர்க்கங் கௌவுசிகர் மறித்துச் சொல்வார்.

20. ஜாதகருடைய மனைவிக்கு முன் கோபம் உண்டாகும். ஆனால் அஃது உடனே தணிந்து போகும். இவளுக்கு மூலச் சூட்டுரோகம் உண்டு. தனம் ஆபரணம் ஆடை இவைகளின்மேல் ஆசை உடையவளாவாள். கீர்த்தியையுடைய குடும்பத்தை அடைபவளாவாள். பிறர்மேல் அபவாதத்தையும் பழியையும் சொல்லமாட்டாள். சமையல் செய்வதில் கெட்டிக்காரியாக விருப்பாள். இவள் நீண்ட வயதை உடையவளாவள் என்று சொல்ல, கௌசிக முனிவர் தடுத்துச் சொல்லுகின்றார்.

21. தாரமு மிரண்டு நேருஞ் ஜாதகன் தனக்கு மேதான்
கூறுவீர் விவரந் தன்னைக் குருராகு வழில் தங்கக்
காரியு [1] மேமோ னுகிக் கெண்டையி [2] லிருப்ப தாலே
பாரியு மிரண்டு என்றேம் பாரசரும் மறித்துச் சொல்வார்.

21. ஜாதகருக்கு இரண்டு மனைவிகள் உண்டு என்று கௌசிகர் சொல்ல, காரணத்தைச் சொல்வீர் என்று அவர் கேட்க, குருவும் * இராகுவும் ஏழில் இருப்பதாலும், சனி மீனத்தில் இருப்பதாலும் ஜாதகருக்கு இரண்டு மனைவி மார்கள் நேரிடுவார்கள் என்று சொல்லுகின்றேம். அதன்மேல் பராசர முனிவர் தடுத்துச் சொல்லுகின்றார்.

* குறிப்பு.—குரு நீசத்தை அடைந்து ஏழில் இருந்தால் தாரத்திற்குத் தோஷ முண்டாகும் என்று ஜாதகபாரிஜாதம் ஏழாவது அத்தியாயம் பதினேழாவது சுலோகத்தில் கண்டிருப்பதையும் பார்க்கவும்.

22. தனத்துளோ னுட்சி யாயுஞ் சத்தமத் தோன்ந வத்தில்
கனமுட னிருப்ப தாலே காதலி ஒன்றே தீர்க்கஞ்
சினமிலா வேறு சொல்வேன் சுக்கிரன் தனக்குப் பத்தில்
பனமதி[3] யிருப்ப தாலே பகரொணுத் தாரம் ரண்டு.

22. இரண்டிற்குடையவராகிய சூரியன் ஆட்சியாய்த் தன் வீட்டி லேயே இருப்பதாலும், ஏழிற்குடையவராகிய சனி ஒன்பதில் வலிவாயிருப் பதாலும் ஒரே மனைவிதான் உண்டு. அவள் தீர்க்கமாக விருப்பாள். கோப மில்லாமல் இன்னொரு காரணத்தைச் சொல்லுகின்றேன். சுக்கிரனுக்குப் பத்தாவது பாவத்தில் சந்திரன் † இருப்பதால் இரண்டு தாரம் நேரிடும் என்று சொல்லக் கூடாது.

† குறிப்பு.—இங்குச் சந்திர லக்கின ரீதியாகக்கூட களத்திர பாவத்தை ஆராய்ச்சி செய்கின்றார். சந்திரனுக்குக் களத்திர ஸ்தானுதிபதி குடும்பாதி பதி களத்திரகாரகன் ஆகிய சுக்கிரன் மூன்று அம்சங்களை உடையவராகிச் சந்திரனுக்குக் கேந்திரத்தில் இருப்பதால் தாரதோஷம் இல்லை என் கின்றார்.

---

[1] சனி. [2] மீனம். [3] சந்திரன்.

### வேறு

23. இதற்கு நேரிடையாய் ஜாதக சுருதியிதி லேழாம் பாவத்தில் பாரு
அதில் சொல்லும் விவரம் இரண்டே ழோன்
கேந்திரமாகிலும் கோணத்தி லிருக்கச்
சதியிலா ஆட்சி யாகியே யிருக்கத்
தாரமு மொன்றென மொழிவோம்
கதிதரும் வாக்கில் பானுவு மொன்று
கலந்ததால் புகன்றனம் முனியே.

23. இதற்கு ஆதார பிரமாண விஷயமாக ஜாதக சுருதியில் ஏழாம் பாவத்தைப் பார். அதில் சொல்லுகின்ற விவரம் என்னவென்றால் இரண்டாவது பாவத்திற்குடையவரும் ஏழாவது பாவத்திற்குடையவரும் கேந்திரகோணங்களில் இருந்தாலும் குற்றமில்லாமல் ஆட்சியாகவிருந்தாலும் தாரம் ஒன்று என்று சொல்லுவோம். இங்கு வாக்கு ஸ்தானமாகிய இரண்டாவது பாவத்தில் சூரியன் இருப்பதால் ஒரு தாரந்தான் என்று சொன்னோம் முனிவரே !

### வேறு.

24. புத்திர விருத்தி புகலுவோ மினிமேல்
பிறவாது பிறக்கினுந் தீதாங்
குத்தத்தைப் புகல்வார் குஜனுமே யிரண்டில்
குருவுமே நீசனுயிருக்கச்
சத்தமத் தோனுஞ் சனியனேயாகித்
தனியனுய் நவத்தினில் தங்க
வித்தகன் தனக்கு மதலைகள் தோஷம்
விளம்பினோம் முனிவரே யாங்கள்.

24. இனிமேல் ஜாதகருக்குச் சந்ததி விருத்தியைப் பற்றிச் சொல்லுகின்றோம். குழந்தைகள் பிறக்கா, ஒரு சமயம் குழந்தை பிறந்தாலும் அஃது இறந்து போய்விடும். இதற்குண்டான தோஷத்தைச் சொல்லுகின்றார். அங்காரகன் இரண்டாவது பாவத்தில் இருப்பதாலும் குரு நீசனுகவிருப்பதாலும் ஏழுக்குடையவர் சனியாகித் தனியாக ஒன்பதாவது பாவத்தில் இருப்பதாலும் ஜாதகருக்குப் புத்திரதோஷம் உண்டு என்று நாங்கள் சொன்னோம், முனிவரே !

குறிப்பு.—புத்திர விஷயம்.—மேலே சொல்லப்பட்டக் காரணங்களும் அல்லாமல் இன்னும் சில காரணங்களும் இருக்கின்றன. ஜன்ம லக்கினத்திற்குப் புத்திர ஸ்தானமாகிய ஐந்தாவது பாவத்திற்குடையவரான அங்காரகன் சூரியனுடன் கூடி இருப்பதும், அஸ்தமனம் அடைந்திருப்பதும் தோஷமாகும். ஐந்தாவது பாவத்தை ராகு பார்ப்பதும் குரு ராகுவுடன் சேர்ந்திருப்பதும் தோஷமாகும். இன்னொரு புத்திர ஸ்தானமாகிய ஒன்பதாவது பாவத்திற்குடையவரான குரு நீசமாகி இருப்பதும் தோஷமாகும். இந்த ஒன்பதை ராகு பார்ப்பதும், ஞானியாகிய புதன் பார்ப்பதும், அங்காரகன் பார்ப்பதும் தோஷமாகும். மேலும் சந்திர லக்கின ரீதியாய் ஐந்தில் அங்காரகன் அஸ்தமனம் அடைந்திருப்பதும் தோஷமாகும்.

சந்திரனுக்கு ஒன்பதாம் பாவத்தைச் சனி பார்ப்பதும் தோஷமாகும். இந்த ஒன்பதிற்குடைய குரு நீசமாகி ராகுவுடன் கூடி இருப்பதும் தோஷமாகும். சந்திரனுக்கு ஐந்தில் சூரியன் புத்திர ஸ்தானாதிபதியாகி இருப்பது கொஞ்சம் வலிவாகும். சந்திரனுக்கு ஏழிற்குடைய சுக்கிரன் சதுர்த்த கேந்திரத்தில் இருப்பது, கேதுவுடன் கூடியிருந்த போதிலும், கொஞ்சம் வலிவாகும். மொத்தத்தில் புத்திர தோஷம் வலிவைவிட மிகவும் அதிகமாகவிருக்கின்றது.

### வேறு.

**25.** இதுவின்றிப் பூர்வஞ் செய்வினையாலே
யெய்திடும் மதலைகள் தோஷம்
இது விவரங்கள் அறிவிப்பீர் முனியே
அவனுடைப் பூர்வங் கேளாய்
கதிதரும் அருணை மாநகர் தன்னில்
கலந்தனன் அருகர்தங் குலத்தில்
அதிகாரம் செய்து அவன்வாழ்நாள் வினையை
அறிவிப்போம் முனிவரே கேளாய்.

**25.** இந்தக் கிரகதோஷம் அல்லாமலும் ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தில் செய்த பாவங்களாலே புத்திர தோஷம் உண்டாகும். இந்த விவரங்களைச் சொல்லுவீர், முனிவரே! என்று கேட்க, சொல்லுகின்றார். இவருடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறேன். கேட்பீராக. மோக்ஷத்தைக் கொடுக்கின்ற அருணை என்ற திருவண்ணாமலை என்னும் பெரிய பட்டணத்தில் ஜாதகர் சமணர்களுடைய குலத்திற் பிறந்தார். இவர் தன்னுடைய உத்தியோக மூலமான அதிகாரங்களைச் செலுத்திக் கொண்டு வாழ்ந்த காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்த பாவத்தைச் சொல்லுகின்றோம், முனிவரே! கேட்பீராக.

### வேறு.

**26.** வரனின்றி மாது தானும் மாதுரு யில்லம் வாழ
அரிவைமேல் வேறொ ருத்தன் அணையவே காதல் கொண்டு
திருகான வார்த்தைச் சொல்லத் தேவியு மிசையா ளாகிக்
குறையான வார்த்தைச் சொன்னாள் கோதையே கேட்டி டாயே.

**26.** புருஷன் இல்லாமல் ஒரு ஸ்திரீ தன்னுடைய தாயாருடைய வீட்டில் வந்து வசித்துக் கொண்டிருக்கும் போது வேறொருவன் இவளிடத்திற் சம்போகஞ் செய்ய ஆசையை உடையவனாகிக் கள்ளம் கபடம் வஞ்சனை இவைகளை உடைய வார்த்தைகளைச் சொல்ல, அதற்கு அவள் சம்மதிக்காதவளாகிக் குற்றமான வார்த்தைகளையுடைய பதிலைச் சொன்னாள். பார்வதியம்மையே! கேட்பீராக.

**27.** பின்சில நாட்கள் சென்று பேதையுந் தனியாய்ச் செல்ல
அன்னவன் பின்தொடர்ந்து அணைந்தனன் பலவந் தத்தால்
கன்னிகை மனது வாடிக் கழறினாள் துணைவ னோடு
முன்கோப முடையா னாகி மொழிந்தன னதிகாரி பக்கல்.

27. பின்னல் சில நாள் பொறுத்து அந்த ஸ்திரீ ஒண்டியாய்ப் போகும்போது அவன் அவளைப் பின் தொடர்ந்து போய் அவளோடு பலவந்தத்தால் சம்போகஞ் செய்தான். அதன்மேல் அந்த ஸ்திரீ மனம் நொந்து நடந்த சங்கதியைத் தன்னுடைய சகோதரனிடத்தில் சொன்னாள். சகோதரன் உடனே கோபமுடையவராகி இதை அதிகாரி இடத்தில் சொன்னான்.

28. வினைசெய்தோன் தனைய ழைத்து வினவவும் அவனால் பொன்னைத்
தனையனும் பெற்றுக் கொண்டு தையல்மேல் விரோதம் சொல்ல
வனிதையும் மனது வாடி வரைந்திட்ட சாபஞ் கேண்மோ
துணைவிபோல் எனையெண் ணமல் சொர்ணத்தால் சொன்ன பாவி ;

28. குற்றத்தைச் செய்தவனை ஜாதகராகிய இந்த அதிகாரி வரவழைத்து அவனிடமிருந்து பணத்தைக் கைக்கூலியாக வாங்கிக்கொண்டு அந்த ஸ்திரீக்கு விரோதமாக அவள் மேலேயே குற்றத்தைச் சாட்ட, அவள் தன்னுடைய மனம் நொந்து கொடுத்த சாபத்தைச் சொல்லுகின்றேன், கேட்பீராக. நீ என்னை உன்னுடைய சகோதரியைப்போல நினைக்காமல் பணத்தைக் கைக்கூலியாக வாங்கிக் கொண்டதால் என்மேல் குற்றத்தைச் சொன்ன பாபியாகிய நீ ;

29. மறுஜன்மம் துணைப் பெணின்றி மதலைக ளில்லா தாயுந்
திருகாகச் சொல்லி யேதான் துரத்தினாள் தெருத்தூள் தானும்
உறைந்தது அந்தச்சாபம் உத்தம னந்தி யத்தில்
மருவிற்று வாயில் ரோகம் மறலியின் பதிக்குச் சென்று ;

29. உன்னுடைய பின் ஜன்மத்தில் சகோதரியில்லாமலும் குழந்தைகள், இல்லாமலும் வாழக்கடவாய் என்று வஞ்சனையாகவும் கபடமாகவும் சொல்லிவிட்டுத் தெருவிலுள்ள மண்தூளை வாரித் தூற்றினாள். அந்தச் சாபம் ஜாதகரை வந்து அடைந்தது. இவர் தன்னுடைய கடைசி காலத்தில் தன் வாயில் ரோகமுண்டாகி இறந்து எமபட்டணத்திற்குப் போய் ;

30. நரகத்தில் பன்னாள் மூழ்கி நாற்றலைக் கஞ்சன் தம்மால்
உரமுடன் வரையப் பட்டு உதிப்பனு மிந்தப் பாலன்
அரிவையின் சாபத் தாலே அனுகாது துணைப் பெண் ணுந்தான்
பிறவார்கள் சுதர்கள் என்றோம் பேதையை கேட்டி டாயே.

30. நரகத்தில் அநேக நாட்களாக மூழ்கிக் கிடந்து பிறகு நான்கு தலைகளை உடைய பிரம தேவனால் பிரமலிபியுடன் வலிவாக எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றார். முன் ஜன்மத்திய ஸ்திரீயின் சாபத்தினால் இவருக்குச் சகோதரி கிடையாது. பிள்ளைகளும் பிறக்க மாட்டார்கள் என்று சொல்லுகின்றோம், பார்வதியம்மையே ! கேட்பீராக.

31. பாரியால் சிலது தோஷம் பகருவோம் முனியே கேளும்
நாரிமுன் ஜன்மஞ் சொல்வேன் நரசிம்மன் வாழு மூரில்
காரிகை பிரம சேயாய்க் கலந்துமே மதலை யுண்டாய்த்
தீரமாய் வாழுந் நாளில் செய்ததோர் வினையைக் கேண்மோ.

31. ஜாதகருடைய மனைவியால் சிலதோஷங்கள் உண்டாகி இருக்கின்றன. அவைகளைச் சொல்லுகின்றோம், முனிவரே ! கேட்பீராக. இவளுடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன். நரசிம்மமூர்த்தி வாழுகின்ற ஊரில் இவள் பிராமணர் குலத்தில் பிறந்து குழந்தைகள் உண்டாகித் தைரியத்துடன் வாழ்ந்து கொண்டிருந்த காலத்தில் இவள் செய்தப் பாவத்தைக் கேட்பீராக.

32. பஞ்சையாய் ஏழை மாது பாலர்க்கு அன்னம் வேண்டிக்
கெஞ்சினல் மாது பக்கல் கிளிமொழி வார்த்தை யின்றி
மிஞ்சிப வார்த்தை சொல்லி விரட்டினாள் ஏழை தன்னை
வஞ்சியும் மனவெ றுப்பால் வரைந்தசா பத்தைக் கேண்மோ.

32. திக்கில்லாத ஓர் ஏழை ஸ்திரீ குழந்தைக்காகச் சாதம்வேண்டியவளாகி ஜாதகருடைய மனைவி யிடத்திற்குப் போய் அவளை வருந்திக்கேட்டாள். அதற்கு அவள் இனிமையான வார்த்தைகளைச் சொல்லாமல் கடுமையான அத்து மீறிய வார்த்தைகளைச் சொல்லி அந்த ஏழை ஸ்திரீயை விரட்டி விட்டாள். அந்த ஏழை ஸ்திரீ தன்னுடைய மனத்தில் துக்கத்தை அடைந்து கொடுத்த சாபத்தைச் சொல்லுகின்றேன், கேட்பீராக.

33. சுதரன்னந் தராத பாவி தோன்றும்பின் ஜன்மந் தன்னில்
மதலைகள் தோஷ மெய்தும் வருந்துணை காணு ளாகும்
விதவிதஞ் சொல்லிச் சென்றாள் மேவிற்று அதுவோர் தோஷம்
அதிதியும் அந்தி வேளை அன்னமுங் கேட்கும்போது ;

33. குழந்தைக்காகச் சாதம் கொடுக்காத பாவியாகிய நீ பிறக்கும் மறு ஜன்மத்தில் உனக்குக் குழந்தைகள் இறந்து விடக்கடவர். உனக்குச் சகோதரர் இல்லாமல் இருக்கக்கடவது என்றும் இன்னும் பலவிதமாகவும் அந்த ஏழை ஸ்திரீ சொல்லிவிட்டுப் போய்விட்டாள். இந்த ஒரு தோஷம் இவளை வந்து அடைந்தது. மேலும் ஒரு நாள் மாலை வேளையில் ஒரு பரதேசி வந்து ஜாதகருடைய மனைவியைச் சாதம் கேட்கும்போது ;

34. இருமையின் மனத்தா ளாகி யிடரான வார்த்தை சொன்னாள்
மருவிற்று அதுஓர் தோஷம் மகுடத்தால் நாகம் ஒன்று
உறைந்தது முற்றந் தன்னில் உத்தமி கழியால் வாட்ட
மறலியின் நாடு சேர மருவிற்று அதுஓர் தோஷம்.

34. ஜாதகருடைய மனைவி பெருமை, கர்வம் இவைகளையுடைய மனத்தை உடையவளாகிக் கெட்ட வார்த்தைகளை உபயோகித்துப் பதில் சொன்னாள். இந்த ஒரு தோஷமும் இவளை வந்து அணுகிற்று. மோடி வாத்தியத்தால் ஒரு நல்ல பாம்பு வாசலில் வரவே அதனை இவள் தடியால் அடித்து இம்சைசெய்ய அஃது இறந்து எமபட்டணத்திற்குப்போய்ச் சேர்ந்தது. இந்த ஒரு தோஷமும் இவளை வந்து அடைந்தது.

35. மங்கையு மந்தி யத்தில் மைந்தனால் மனது வாடிச்
சங்கையாய்க் காலன் நாடு சென்றுமே பிரமன் லக்கம்
நங்கையு முதிப்பா ளாகும் நல்கிடும் முன்னூழ்ச் சாபம்
மங்கிடுந் துணையும் புத்திரர் மாமுனி தடுத்துச் சொல்வார்.

**35.** ஜாதகருடைய மனைவி தன்னுடைய கடைசி காலத்தில் தன்னுடைய பிள்ளையினால் மனத்தில் துக்கத்தையும் கஷ்டத்தையும் அடைந்து இறந்து கஷ்டத்துடன் எமபட்டணத்திற்குப்போய் பிரமதேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறப்பவளாவாள். முன்ஜன்மத்திய வினைகளும் சாபங்களும் இவளை வந்து அணுகும். இவளுடைய சகோதரர்களும் புத்திரர்களும் இறந்து விடுவார்கள் என்று சொல்ல, மகரிஷியான வஸிஷ்டர் மறுத்துக் கேட்கின்றார்.

**36.** முன்ஜன்மம் மறைக்கு லத்தி லுதித்தவ ளிச்சென் மத்தில்
தன் குலம் தாழ்வாய் வந்த சங்கையைச் சொல்லு மென்ன
முன்ஜன்மம் விரதந் தன்னை முட்டுக்கள் செய்த தாலே
அன்னவ ளுதித்தா ளென்றோம் அம்பிகை யாளே கேளாய்.

**36.** முற் பிறப்பில் பிராமணர் குலத்திற் பிறந்த ஜாதகருடைய மனைவி இந்த ஜன்மத்தில் அதற்குத் தாழ்ந்த குலத்தில் வந்து பிறப்பதற்குக் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்க, இவள் தன்னுடைய முன் ஜன்மத்தில் விரதங்களைச் செய்யாததால் இவள் இவ்விதமாகப் பிறந்தாள் என்று சொல்லுகின்றோம். பார்வதியம்மையே ! கேட்பீராக.

**37.** புத்திரர் தோன்ற வேண்டிப் புகலுவீர் கிரியை யொன்று
சத்தியும் வரனுங் கூடி ஸ்ரீரங்கந் தன்னில் சென்று
அத்தியை ஆதரித் தோர்க்கு ஆயிரம் அர்ச்சித் தேத்தி
முத்தினோர் மூவேழ் பேர்க்கு உண்டியுந் தந்து யின்னோர் ;

**37.** ஜாதகருக்கும் இவருடைய மனைவிக்கும் குழந்தைகள் உண்டாவதற்காக ஒரு சாந்தியைச் சொல்லுவீர் என்று கேட்க, பதில் சொல்லுகின்றார். புருஷனும் மனைவியுமாக இருவரும் கூடி ஸ்ரீரங்க க்ஷேத்திரத்திற்குப் போய்க் கடலைக் காப்பாற்றுகின்றவருக்கு அலரிப்பூவினால் அர்ச்சனை பூஜை இவைகளைச் செய்து இருபத்தொன்று பரதேசிகளுக்குச் சாப்பாடு போட்டு ;

**38.** விடங்கந்தம் பொருளு மீந்து வித்தகர் உள்ளூர் சென்று
வடதிசை தடாகம் பக்கல் அரசாண்டு மண்டலந்தான்
உடன்பிர திட்டை செய்ய உதித்திடுஞ் சுதராண் ஒன்று
தடவரை மகளே யாங்கள் சாற்றின மொழிகுன் றுது.

**38.** தாமரை நூலும் சந்தனக் குழம்பும் வாசனைத் திரவியமும் பணமும் கொடுத்துப் பிறகு இவர்கள் தங்களுடைய ஊருக்குப் போய் வடக்குத் திக்கில் உள்ள ஒரு குளத்தின் பக்கத்தில் இருக்கின்ற ஓர் அரச மரத்தை ஒரு மண்டலம் வரையிலும் சுற்றி அதைப் பிரதிஷ்டை செய்து வைத்தால் ஓர் ஆண் குழந்தை பிறக்கும். விசாலமான மலைக்கு அதிபதியாகிய பர்வதராஜனுடைய மகளாகிய பார்வதியம்மையே ! நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும்.

**39.** அன்னையின் குணத்தைச் சொல்வேன் அழகுளா ளிருநி றத்தாள்
உன்னத வார்த்தை யுண்டு உயர்வான புத்தி யேற்பள்
பின்னமில் லாத தேகி பொய்யது புகலா ளாகும்
முன்கோப முடனே தாழ்வு உலகினில் நல்லோ ளாகும்.

39. ஜாதகருடைய தாயாரின் குணாதிசயங்களைப்பற்றிச் சொல்லுகின்றேன். இவள் அழகுள்ளவள். இரண்டு நிறங்கள் கலந்துள்ள நிறமாகிய மாநிற மான தேகத்தை உடையவள். மேன்மையான வார்த்தைகளைச் சொல்லு வாள். சிறந்த புத்தியை உடையவளாவாள். இவள் அங்க குறைவில்லாத தேகத்தை உடையவள். பொய்யைச் சொல்லமாட்டாள். முன் கோபத்தை உடையவள். இந்தக் கோபம் உடனே தணிந்து விடும். பூமியில் நல்ல வளாக விருப்பாள்.

40. மாதுவும் வந்த பின்பு வரனுக்கு அதிக யோகங்
காதலி துணைஆண் ஒன்று கழறுவோம் வேறு காணுள்
ஓதுவேன் அவன்கு ணத்தை உறுதியில் லாத நெஞ்சம்
மாதுயில் சின்னுள் வாழ்வான் மனைவியு மொன்றே யாகும்.

40. ஜாதகரின் தாயார் வந்து சேர்ந்த பிறகு அவளுடைய புருஷனுக்கு அதிக யோகம் உண்டாகும். இவளுக்கு ஒரே ஒரு சகோதரன்தான் உண்டு. வேறு சகோதரர்கள் கிடையா. இந்தச் சகோதரனுடைய குணத்தைச் சொல்லுகின்றேன். இவர் திடமானது நிலையானதுமான மனத்தை உடைய வரல்லர். இவர் சகோதரியின் வீட்டில் சிறிது காலம் வாசஞ் செய்து கொண் டிருப்பார். இவருக்கு ஒரே மனைவிதான் உண்டு.

41. சுதராண்பால் காணு ளுகுந் தோகையர் இருவ ராகும்
அதிபனு மத்தில் மாள்வன் வடதிசை யில்ல மாகும்
அதிதியே தாயின் பூர்வம் அறிவிப்போ மினிமே லாகச்
கதிதரும் அருணை தன்னில் கலந்தனள் தீயின் வமிசம்.

41. ஜாதகரின் அம்மானுக்கு ஆண் குழந்தை கிடையாது. இரண்டு பெண் குழந்தைகள் உண்டு. இவர் தனது மத்திய வயதில் இறந்து விடுவார். இவருக்கு வடக்குத் திக்கில் வீடு இருக்கும், பார்வதியம்மையே! இனிமேல் ஜாதகரின் தாயாருடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லு கின்றோம். மோக்ஷத்தைக் கொடுக்கின்ற அருணை என்று சொல்லப்பட்ட திருவண்ணாமலை க்ஷேத்திரத்தில் வன்னியர் குலத்தில் இவள் பிறந்தாள்.

42. சுகமுள குடும்பி யாகித் தோகையும் வாழுந் நாளில்
ஜகமதி லுயர்வ தான திருவிழாத் தன்னில் சென்று
தகமையாய் மஞ்சள் சீப்பு ஒண்டோடி வாங்கிக் கொண்டு
தகமையாய்ப் பொருளீயாமல் சென்றனள் மானைப் போலே.

42. ஜாதகரின் தாயார் சௌக்கியமுள்ள குடும்பஸ்தையாகி வாழுகின்ற காலத்தில் உலகத்தில் மேன்மையான சிறந்த ஒரு திருவிழாவிற்குப் போய்த் தகுதியாகவும் ஒழுங்காகவும் மஞ்சள் சீப்பு இவைகளை இவள் வாங்கிக் கொண்டு ஒழுங்காக அவைகளின் கிரயத்தைக் கொடுக்காமல் ஒரு மானைப் போல வேகமாக ஓடிப்போய் மறைந்துவிட்டாள்.

43. ஏழையோன் வருத்த முற்று யியம்பின சாபங் கேண்மோ
தோழியும் பொருளீயாமல் சென்றதோர் பா விக்கேதான்
ஆழியில் வ்ரனு மாளும அனுகிய பின்ஜன் மத்தில்
பாழாகு மத்தில் மாரன் பகர்ந்துமே தெருத்தூள் விட்டான்.

43. ஏழையாகிய வியாபாரி மனத்தில் துக்கத்தை அடைந்து கொடுத்தச் சாபத்தைச் சொல்லுகின்றேன், கேட்பீராக. கிரயப் பணத்தைக் கொடுக்காமல் போய்விட்ட பாவியாகிய இவளுக்குச் சமுத்திரத்திஞல் சூழப்பட்ட இந்த உலகத்தில் புருஷன் இறந்துவிடக் கடவது, இவளுடைய மறு ஜன்மத்தில இவளுக்குப் புருஷன் மத்திய வயதில் இறந்துவிடக் கடவது என்று சொல்லித் தெருவிலுள்ள மண் தூளை வாரி எடுத்துத் தூவிஞன்.

44. அந்ததோர் சாபந்தானும் அனு கிடும் பாவைக் கேதான்
அந்த ஓராண்டி லேதான் அவள்வரன் மரண மாகிப்
பந்தணி மனது வாடி பரவினன் காலந் நாடு
முந்திஞேன் வரையப் பட்டு வுதித்தவ ளென்று சொல்வோம்.

44. அந்தச் சாபம் ஜாதகருடைய தாயாரை வந்து அடையும். அந்த ஒரு வருஷத்திலேயே அவளுடைய புருஷன் இறந்து அவள் மனத்தில் துக்கத்தை அடைந்து இறந்து எமப்பட்டணத்திற்குச் சென்று பிரமதேவஞல் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருள் என்று சொல்லுகின்ரேம்.

45. நாற்ப திரண்டு ஆண்டில் நவிலுவோ மன்னே கண்டம்
ஏற்கவே யிவள்பின் ஜன்மமி யம்புவோங் காளாத்தி தன்னில்
தீர்ப்பாகச் சைவ சேயாய் ஜனிப்பாளா மென்று சொல்வோம்
ஆர்க்கவே யெட்டா மாண்டில் அணிகிடுந் தந்தை கண்டம்.

45. ஜாதகருக்கு நாற்பத்திரண்டாவது * வயதில் இவளுடைய தாயார் இறந்து விடுவாள் என்று சொல்லுகின்ரேம். இவள் காளஹஸ்தி க்ஷேத்திரத்தில் சைவர் குலத்தில் பெண் குழந்தையாகப் பிறப்பாள் என்று சொல்லுகின்ரேம். ஜாதகருக்கு எட்டாவது † வயதில் இவருடைய தகப்பஞர் இறந்துவிடுவார்.

* குறிப்பு.—தாயார் மரண விஷயம்.—ஜாதகருக்கு வயது ஷு 41–0–0 முதல் ஷு 42–0–0 வரையிலும், அங்காரக தசையில் புத புத்தி கேது புக்தி இவைகள் நடக்கின்றன. பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் மாதுர் லக்கினமாகிய நாலாம் பாவமாகிய துலாத்திற்குச் சூரியனும் குருவும் மாரகாதிபதிகள். பராசரஹோரையின் சில பதிப்புப் பிரகாரம் அங்காரகனும் மாரகாதிபதியாகின்ருர். அங்காரகன் விஷயமாக 82-ஆவது நம்பர் ஜாதகம் 24-ஆவது பாடலின் கீழ்க் கொடுத்துள்ள வியாக்கியானத்தையும் பார்க்கவும். அங்காரகன் துலாத்திற்கு இரண்டு ஏழு என்கிற மாரக ஸ்தானங்களுக்கு அதிபதியாகி பதிஞேராவது மாரக ஸ்தானத்தில் மாரகாதிபதியாகிய சூரியனுடன் கூடி இருக்கின்ருர். ஆகை

யால் ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரங்கூட மாதாவைத் தன்னுடைய தசையில் மாரகஞ் செய்யும் அமைப்பு உடையவராகவிருக் கின்றார். கேது மாதுர் லக்கினுதிபதியும் அஷ்டமாதிபதியுமாகிய சுக்கிரனுடன் கூடி மாரகாதிபதியாகிய குருவால் பார்க்கப்பட்டிருப்பதால் ஜாதகசந்திரிகை 12-ஆவது சுலோகம், ஜாதக பாரிஜாதம் பதினுன்காவது அத்தியாயம் 60-ஆவது சுலோகம், துய்யகேரளம் எட்டாம் பாவம் 20-ஆவது பாடல் கார்க் கேயர் ஜோதிடம் முதற்காண்டம் 680-ஆவது பாடல் இவைகளின் பிரகாரம் புதனைவிட கேது தன் புக்தியில் மாரகஞ் செய்ய அதிக அமைப்பு உடைய வராகின்றார்.

† **தகப்பனார் மரண விஷயம்.**—பிதுர்பாவமாகிய ஒன்பதாவது வீடு மீனம் பிதுர் லக்கினமாகும். இதற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவை களின் பிரகாரம் சனி, புதன், சுக்கிரன், சூரியன் இவர்கள் மாரகாதிபதிகளா கின்றார்கள். பிதுர் ஸ்தானத்தில் சனி இருப்பதும், பிதுர் லக்கினுதிபதி யாகிய குரு நீசமாகி ராகுவுடன் இருப்பதும், அங்காரகன் பிதுர் பாவத்தைப் பார்ப்பதும், பிதுர் காரகனுகிய சூரியனுடன் கூடி இருப்பதும், பிதுர் லக்கினத்தை ராகு பார்ப்பதும், பிதுர் ஸ்தானத்திற்கு ஆயுஸ் ஸ்தானுதிபதி யாகிய சுக்கிரன் கேதுவுடன் கூடியிருப்பதும் பிதாவுக்குத் தோஷமாகும். ஜாதகருக்கு வயது ௵ 7-0-0 முதல் ௵ 8-0-0 முடியும் வரையிலும் சுக்கிர தசையில் சந்திர புத்தி அங்காரகன் புக்தி இவைகள் நடக்கின்றன. சுக்கிரன் மாரகாதிபதியும் எட்டிற்குடையவருமாகி லக்கினுதிபதியாகிய குருவைப் பார்க்கின்றார். ஆகையால் தன் தசையில் மாரகஞ் செய்ய அமைப்புடையவராகின்றார். அங்காரகன் இரண்டாவது மாரக ஸ்தானுதி பதியாகி மாரகாதிபதியும் பிதுர்காரகனுமாகிய சூரியனுடன் கூடிப் பிதுர் ஸ்தானத்தைப் பார்க்கின்றார். ஆகையால் ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகம், 82-ஆவது நம்பர் ஜாதகம் 24-ஆவது பாடலின் கீழ் கண்டுள்ள வியாக்கியானப் பிரகாரம் அங்காரகன் தன் புத்தியில் மாரகஞ் செய்ய அமைப்புள்ளவராகின்றார்.

46. பின்ஜன்மங் குடகு தன்னில் பிறப்பனும் க்ஷத்திரிய சேயாய்
இன்னவன் பாரிக் கேதானியம்புவோ மன்பா னேழில்
நன்பதஞ் சேர்வா ளாகும் நவிலுவோம் பின்ஜன்மத்தைக்
கன்னியா குமரி தன்னில் கலப்பளாம் பிரம சேயாய்.

46. ஜாதகருடைய தகப்பனார் தன்னுடைய மறு ஜன்மத்தில் குடகு தேசத்தில் க்ஷத்திரிய குலத்தில் ஆண் குழந்தையாய்ப் பிறப்பார். ஜாதக ருடைய மனைவிக்கு இவருடைய ஐம்பத்தேழாவது வயதில் * மரணம் ஏற் படும். நல்ல பதவியை அடைவாள். இவளுடைய மறு ஜன்மத்தைச் சொல்லுகின்றோம். இவள் கன்னியாகுமரியில் பிராமணர் குலத்தில் பெண் குழந்தையாகப் பிறப்பாள்.

* **குறிப்பு.**—**மனைவி மரண விஷயம்** :—ஜாதகருக்கு வயது ௵ 56-0-0 முதல் ௵ 57-0-0 முடியும் வரையிலும் ராகு தசையில் சுக்கிர புக்தி நடக் கின்றது. களத்திர லக்கினம் ஏழாவது பாவமாகிய மகரம் ஆகும்.

இதற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் குரு அங்காரகன் சந்திரன் இவர்கள் மாரகாதிபதிகளாகின்றார்கள். ராகு மாரகாதிபதியாகிய குருவுடன் கூடி களத்திர ஸ்தானமாகிய ஏழில் இருந்து கொண்டு களத்திர ஸ்தானாதிபதியாகிய சனியையும், களத்திரகாரகனாகிய சுக்கிரனையும் பார்க்கின்றார். ஆகையால் ஜாதகசந்திரிகை 12, 23-ஆவது சுலோகங்களின் பிரகாரம் களத்திரத்திற்கு மாரகஞ் செய்ய அமைப்புடையவராகின்றார். சுக்கிரன் மகரத்திற்கு ஏழில் மாரகாதிபதியாகிய சந்திரனுடைய வீட்டில் மாரக ஸ்தானத்தில் இருப்பதால் ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரம் தன் புக்தியில் மாரகஞ் செய்வார்.

47. மாரனுக் கறுபா னெட்டில் மேடமா தத்தி லேதான்
கூறுவோம் மாரகங்கள் குலவும்பின் ஜன்மங் கேளாய்ப்
பார்புகழ் வள்ளூர் தன்னில் பிறப்பனும் மறைக்கு லத்தில்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

47. ஜாதகருக்கு அறுபத்தெட்டாவது வயதில் * சித்திரை மாதத்தில் மரணம் நேரிடும் என்று சொல்லுகின்றேம். இவருக்கு நேரிடும் மறு பிறப்பைச் சொல்லுகின்றேன், கேட்பீராக. பூமியில் புகழப்பட்ட வள்ளூரில் பிராமணர் குலத்தில் இவர் ஆண் குழந்தையாகப் பிறப்பார். ஆறு பெருமைபொருந்திய முகங்களை உடைய முருகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே ! கேட்பீராக.

* குறிப்பு.—ஜாதகர் மரண விஷயம் :—ஜாதகருக்கு வயது ஷ்ை 67-0-0 முதல் ஷ்ை 68-0-0 முடியும் வரையிலும் குரு தசையில் புத புக்தி நடக்கின்றது. கடக லக்னத்திற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் சனி சுக்கிரன் புதன் இவர்கள் மாரகாதிபதிகள் ஆகின்றார்கள். குரு ஆறுக்குடையவராய் நீசமடைந்து ராகுவுடன் கூடி மாரகாதிபதியாகிய சனி வீட்டில் இருந்துகொண்டு லக்கினத்தைப் பார்ப்பதால் ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரம் குரு தன் தசையில் மாரகஞ் செய்யும் அமைப்புள்ளவராகின்றார். புதன் மாரகாதிபதியாகி மாரக ஸ்தானத்தில் இருந்துகொண்டு அஷ்டமாதிபதியாகிய சனியைப் பார்ப்பதால் துய்யகேரளம் எட்டாம் பாவம் 20-ஆவது பாடல் பிரகாரம் தன் புக்தியில் மாரகஞ் செய்ய அமைப்புள்ளவராகின்றார்.

48. இந்ததோர் ஜன்மந் தன்னில் இவன்செய்த புண்ணிய மென்ன
முந்தவே கூறு மென்ன வுயர்வான தலங்கள் சென்றும்
விந்தையாய் வார்த்தை யின்றி விகடங்கள் கூறாததாலும்
அந்தவ னுதிப்பா னாகும் அம்பிகை யாளே கேளாய்.

48. ஜாதகர் இந்த ஜன்மத்தில் என்ன புண்ணியங்களைச் செய்தார் ? இவைகளை உடனே சொல்லுவீர் என்று கேட்க பதில் சொல்லுகின்றார். மேன்மையானவும், சிறந்தவையுமான ஸ்தலங்களுக்குப் போயும், ஆச்சரியமானவார்த்தைகள் இல்லாமலும், சிறிப்பையும் வேடிக்கையை உண்டுபண்ணக்கூடிய வார்த்தைகளைச் சொல்லாமல் இருந்ததாலும் இவர் பிராமணகுலத்திற் பிறப்பார். பார்வதியம்மையே ! கேட்பீராக.

49. அன்னவ னுதிக்கும் காலே அசுவினி கடைப்பா தத்தில்
துன்கேது தசை யோராண்டுந் திங்களும் நான்கு மாகும்
முன்பாகம் விவரஞ் சொன்னேம் மொழிகிறேம் பின்பால் சேதி
உன்னத வானே பெற்ற உத்தமி கேட்டி டாயே.

49. ஜாதகர் பிறக்குங் காலத்தில் அசுவினி நட்சத்திரத்தில் நான்காவது பாதத்தில் துன்பத்தை விளைவிக்கின்ற கேது மகா தசையில் ஒரு வருஷமும் நான்கு மாதங்களும் இருப்பு ஆகும். இவ்விதமாக முதல்பாகத்தின் விவரங்களைச் சொல்லிவிட்டோம். பின்னல் மற்ற விஷயங்களைச் சொல்லுகின்றோம். மேன்மையான சிறந்த யானைமுகத்தை உடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! கேட்பீராக.

---

## ஜாதகம் 102.

1. மதி[1] புதன் நண்டில்[2] சனிதுலாம் வெள்ளி[3] மாட்டினி[4]
[லிரவியும்[5] வீணை[6]
நிதிகுரு கேது சாடியில்[7] ராகு நில மகன்[8] அரியினில்[9] நின்று
பதியது கடகம் பலன் எவ்வாறு புகல்வீர் பகருவோ மாண்
[சுதராகும்
அதிபனு மில்லம் வடவாசல் கீழ்மேல் வாயுவில் இருக்கும்.

| | | சுக்கிரன் | சூரியன் |
|---|---|---|---|
| குரு கேது | இராசி | | லக்கினம் சந்திரன் புதன் |
| | சக்கரம் | | அங்காரகன் ராகு |
| | | சனி | |

பூசம் 1-ஆம் பாதம். சனி தசை இரு 17-0-0.

2. சந்திரனும் புதனும் கடகத்திலும், சனி துலாத்திலும், சுக்கிரன் ரிஷபத்திலும், சூரியன் மிதுனத்திலும், திரவியத்தைக் கொடுக்கக் கூடிய குருவும் கேதுவும் கும்பத்திலும், ராகுவும் அங்காரகனும் சிம்மத்திலும், ஜன்ம லக்கினம் கடகமாகவும் இருந்தால் பலாபலன்கள் எவ்விதமாக விருக்கும் என்பதைச் சொல்லுவீர் என்று கேட்க, பிறந்த குழந்தை ஆண் குழந்தை என்று சொல்லுகிறோம் என்றார். ஜாதகர் பிறந்த வீடு வடக்கு நோக்கிய வாசலை உடையதாகும். அது கிழக்கு மேற்கு வீதியில் வட மேற்குத் திக்கில் இருக்கும்.

**குறிப்பு.**—இந்த ராசிச் சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்த முடையதாகும் :—மேஷத்தில் சனியும், ரிஷபத்தில் கேதுவும், சிம்மத்தில் சந்திரனும் அங்காரகனும் சுக்கிரனும், துலாத்தில் புதனும், விருச்சிகத்தில் ராகுவும், கும்பத்தில் குருவும், மீனத்தில் சூரியனும் ஆகும். குருவும் சனியும் வக்கிரகதியில் இருக்கின்றார்கள்.

இந்த ஜாதகம் இராசிச் சக்கரத்திலும், அம்சைச் சக்கரத்திலும், நட்சத்திரத்திலும், தசை இருப்புத் தொகையிலும் முந்தியே சொல்லியுள்ள 91-வது ஜாதகத்தைப் போலவே இருக்கின்றது.

---

[1] சந்திரன். [2] கடகம். [3] சுக்கிரன்.
[4] ரிஷபம். [5] சூரியன். [6] மிதுனம்.
[7] கும்பம். [8] அங்காரகன். [9] சிம்மம்.

# ஜாதகம் 103

1. மதி[1] மேடம் பொன்னும்[2] சாடி[3] மார்த்தாண்டன்[4] புகரும்[5] கோலில்[6]
புதன்சனி குருதி[7] கன்னி பணி[8] நந்தி[9] கேது தேளில்[10]
இதுவிதக் கோளும் நின்று லக்கினம் கடக மாக
அதுபலன் விபர மாக அறிவிப்பீர் முனிவ ரேநீர்.

| | | | |
|---|---|---|---|
| | சந்திரன் | ராகு | |
| குரு | இராசி சக்கரம் | | லக்கினம் |
| | | | |
| | கேது | சூரியன் சுக்கிரன் | புதன் அங்காரகன் சனி |

பரணி 2-ம் பாதம். சுக்கிரதசை இருப்பு 12–5–0.

1. சந்திரன் மேஷத்திலும், குரு கும்பத்திலும், சூரியனும் சுக்கிரனும் துலாத்திலும், புதனும் சனியும் அங்காரகனும் கன்னியிலும், இராகு ரிஷபத்திலும், கேது துலாத்திலும் இருந்து ஜன்ம லக்கினம் கடகமானால் பலாபலன்களை, முனிவரே! நீர், விவரமாகத் தெரிவிப்பீராக.

**குறிப்பு.**—இந்த ராசிச் சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரகநிலை பொருத்தமுடையதாகும்:—சிம்மத்தில் கேதுவும், கன்னியில் சந்திரனும் புதனும், துலாத்தில் சூரியனும், மகரத்தில் சுக்கிரனும் சனியும், கும்பத்தில் அங்காரகனும் ராகுவும், மீனத்தில் குருவும் ஆகும். புதனும் சுக்கிரனும் சனியும் அஸ்தங்கதர்களாக விருக்கின்றார்கள்.

2. இந்தச்சே யாணுஞ் ஜன்ம மில்லமும் வடதென் வீதி
எந்தையே மேற்கு வாசலில்லமுங் கெட்டி யாகும்
அந்தரி மாரி யீசன் அருகரும் உத்தர மாகுந்
தென்திசை கிரியும் வேலோன் தங்கிடும் புறவா கத்தான்.

2. ஜெனனமான இந்தக் குழந்தை ஆண் குழந்தையாகும். பிறந்த வீடு வடக்குத் தெற்குத் தெருவில் மேற்கு நோக்கிய வாயிலை உடைய வலிவான வீடாகும். பார்வதியம்மன் கோயிலும் மாரியம்மன் கோயிலும் சிவ

---

[1] சந்திரன். [2] குரு. [3] கும்பம். [4] சூரியன். [6] சுக்கிரன். [6] துலாம். [7] அங்காரன். [8] இராகு. [9] ரிஷபம். [10] விருச்சிகம்.

பெருமானுடைய கோவிலும் சமணருடைய கோவிலும் வடக்குத் திக்கில இருக்கும். தெற்குத் திக்கில் ஒரு மலையும் முருகருடைய கோவிலும் ஒரு பக்கமாக விருக்கும்.

3. குடகினில் மலையு முண்டு குஞ்சர முகத்தோன் வாசம்
அடைவுடன் சிற்றூர் தன்னில் அறைந்தனம் அருகர் சேயாய்த்
திடமுள குடும்ப மென்றேஞ் சப்தமஞ் ஜனன மாகும்
விடமுடி தரித்த புத்தர் விளம்பலா மிந்தப் பாலன்.

3. மேற்குத் திக்கில் ஒரு மலையும் இருக்கும். யானை முகத்தை யுடைய விநாயகக் கடவுளின் கோவிலும் மேற்கில் இருக்கும். இவ்விதமான அடையாளங்கள் உள்ள ஒரு சிறிய கிராமத்தில் ஜாதகர் ஜைனருடைய குலத்தில் பிறப்பார் என்று சொல்லுகின்றோம். இவர் பிறந்த குடும்பம் வலி வாகவும் வளமாகவும் இருக்கும் என்று சொல்லுகின்றோம். இவர் ஏழாவது கர்ப்பத்தில் பிறப்பார். முடிதரித்த புத்த மதத்தில் இவர் பிறந் தார் என்று சொல்லலாம்.

4. தந்தையின் துணைஆண் ஒன்று சாற்றுவோந் தீர்க்க மாக
அந்தவ னிளை யோனுக அறைகிறேந் தாயே கேளும்
பிந்தியுஞ் சிலநாள் சென்று பிரிகுவான் துணைவன் தானும்
எந்தக் காலங்கள் செல்லுவா னியம்புவீர் விவர மாக.

4. ஜாதகரின் தகப்பனுருக்கு ஓர்ஆண் சகோதரனும். இந்தச் சகோ தரன் நீண்ட ஆயுளை உடையவர் என்று சொல்லுகிறோம். இவர் இளைய சகோதரன் என்று சொல்லுகின்றோம். பார்வதியம்மையே! கேட்பீ ராக. சிறிது காலம் பொறுத்து இவர் தன்னுடைய சகோதரனிடமிருந்து பிரிந்து போய்விடுவார். இவர் எந்தக் காலத்தில் வேறுகப் பிரிந்து போய் விடுவார் என்ற விஷயத்தை விவரமாகச் சொல்லுவீராக.

5. இருநான்கு ஆண்டு தன்னி லியம்பினே மந்தச் சங்கை
திருமகன் சேதி தன்னைச் செப்புவோ மிரண்டி லேதான்
வருங்கன்னி யைந்தே யாகும் வளமிலா மற்ற வல்லாங்
குறைவுண்டு சிலது நாளில் கோதையர் சிலரே என்றேம்.

5. தகப்பனுரின் இளைய சகோதரர் ஜாதகருக்கு எட்டாவது வயதில் பிரிந்து போய்விடுவார் என்று சொல்லுகின்றோம். இவருடைய மற்ற விஷயங்களை இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றோம். தகப்பனுருடன் பிறந்த சகோதரிகள் ஐந்து பேராவார்கள். மற்றச் சகோதரங்கள் எல்லாரும் இறந்து போய்விடுவர். சில சகோதரிகளுக்குச் சில காலம் பொருத்து தோஷம் உண்டாகும் என்று சொல்லுகின்றோம்.

6. மானிலம் விருத்தி செய்வன் வளமுள குடும் பியாவன்
ஆணவர் நேசங் கொள்வன் ஆசாரன் யாவர்க்கும் உதவி செய்வன்
தானமுந் தருமமுஞ் செய்வன் திருப்பணி வேலை பூண்பன்
மானனை யார்க்கு நேயன் மானிலம் நல்லோ னுவன்.

6. ஜாதகருடைய தகப்பனார் பெரிய நிலங்களைப் பயிரிட்டுத் தானியங்களை விருத்தியாக்குவார். மேன்மையான சிறந்த குடும்பஸ்தராவார். பெரிய மனிதர்களுடைய சினேகத்தை உடையவர். நல்லொழுக்கம் உடையவர் எல்லோருக்கும் உபகாரஞ் செய்வார். தானமும் தருமமுஞ் செய்வார். கோவில் வேலைகளைச் செய்வார் மானைப்போல அழகான கண்களை உடைய ஸ்திரீகளுக்குப் பிரியமானவர். இந்தப் பெரிய பூமியில் நல்லவராக விருப்பார்.

7. சொல்லதைக் காப்பா னுகுஞ் சுத்தநன் மனத்தா னுகும்
புல்லியர் நேசங் கொள்ளான் புதிதான கிரகஞ் செய்வன்
அல்லல்க ளடையா னுகும் அரவச மனத்த னென்றேம்
வெல்லுவான் எதிரி தன்னை வீண்வழக் கோரம் சொல்லான்.

7. ஜாதகருடைய தகப்பனார் தான் சொன்ன வார்த்தைகளைத் தவறாமல் காப்பாற்றுவார். பரிசுத்தமான நல்ல மனத்தை உடையவராவர். கீழ்மக்களுடைய சினேகத்தை விரும்பமாட்டார். புதிய வீட்டைக் கட்டுவார். கஷ்டங்களை அடையமாட்டார். தருமஞ் செய்கின்ற குணத்தை உடையவர் என்று சொல்லுகின்றேம். தன்னுடைய சத்துருக்களை ஜயித்துவிடுவார். வீணான சண்டையில் ஒரு பக்கமாகப் பொய்ச்சாட்சி சொல்லமாட்டார்.

8. பூமியு மதிகஞ் சேர்ப்பன் பொருந்தவே உரைப்பா னுகுந்
தீமையை வெளிக்காட் டாதான் தோத்திரப் பிரிய னுகும்
நேமியில் சல்லியஞ் கொள்ளான் நிகரிலா பணை ஏர் விருத்தி
காமனை விருப்பங் கொள்வன் கண்முகம் பெரிதாய்க் காட்டும்.

8. ஜாதகருடைய தகப்பனார் அதிக நிலங்களைச் சேர்த்து வைப்பார். பொருத்தமாகப் பேசுவார். கஷ்டங்களை வெளியே பிறருக்குத்தெரியும் படியாகக் காண்பித்துக் கொள்ளமாட்டார். தன்னைப் பிறர்புகழ்வதில் ஆசையுள்ளவர். பூமியில் கடன் வாங்க மாட்டார். ஒப்பற்ற சிறந்த நிலங்களும் ஏர்களும் இவருக்கு விருத்தியாகும்.

9. வித்தையும் புத்தி மானும் மேதினில் கிருஷி செய்வன்
சுத்தவா னன்ன மீவன் தோகையி னுஸ்தி யெய்தும்
பெத்திடும் புத்திரியாலும் பிரபலமாய்ப் பூமி காணும்
இத்தகை இரண்டி லேதானி யம்புவோம் விபர மாக.

9. ஜாதகருடைய தகப்பனார் கல்வி உடையவர். புத்திசாலியாக விருப்பார். பூமியில் நிலங்களைப் பயிரிடுவார். சுத்தமாக விருப்பார். சாப்பாடு போடுவார். இவருக்கு ஸ்திரீயினுடைய சொத்து வந்துசேரும். அவருக்குத் தன்னுடைய புத்திரி மூலமாக விசேஷமான நிலம் வந்துசேரும். இந்த விஷயத்தைப்பற்றி இரண்டாவது பாகத்தில் விவரமாகச் சொல்லுகின்றேம்.

10. சொன்னயிக் குணத்தானுக்குச் சுந்தரனுதிப்பா னுகும்
அன்னவன் சேதி சொல்வேன் யானையின் நிறத்தா னுகும்
உன்னதக் கல்வி கற்பன் உள்மனங் கபடு மில்லான்
அன்னியர் மதிக்க வாழ்வன் அடக்கவான் பொறுமை சாலி.

10. இங்குச் சொல்லப்பட்ட இவ்விதமான குணாதிசயங்களை உடைய தகப்பனாருக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் யானையின் நிறத்தைப் போன்ற ஒரு விதமான கறுப்பு நிறமுடைய தேகத்தை உடையவர். மேன்மையான சிறந்த வித்தையை அடைவார். தனது மனத்தில் கள்ளம் கபடம் வஞ்சனை இவைகள் இல்லாதவராவார். பிறர் இவரை மதிக்கும்படியான அந்தஸ்தி லிருந்து வாழ்வார். அடக்கமாக விருப்பார். பொறுமையை உடையவ ராவார்.

11. தனம்பணி பூமி யுண்டு தை யலர் மோக வானும்
இனங்கட்கு மேலாய் வாழ்வன் இருவிதக் கல்வி யுண்டு
வினைசெய்யான் யாவருக்கும் விண்ணவர் பூசை செய்யான்
சினமுள்ளான் பின்பு தாழ்வன் சென்றிடம் பெருமை பூண்பன்.

11. ஜாதகர் பணம் ஆடை ஆபரணங்கள் நிலம் இவைகளை உடையவரா வார். ஸ்திரீகளின்மேல் காம ஆசையை உடையவர். பந்துக்களைவிட அதிகமான அந்தஸ்திலிருந்து வாழ்வார். இவருக்கு இரண்டு விதமான வித்தை உண்டு. யாருக்கும் கெடுதியையும் பாவத்தையுஞ் செய்யமாட்டார். தேவர்களைப் பூஜை செய்வார். முதலில் கோபத்தை உடையவர். பின்னால் இத்தக் கோபம் தணிந்து விடும். போனவிடங்களில் இவருக்கு மரியாதையும் பெருமையும் உண்டு.

12 வண்டிவா கனமு முள்ளான் மன்னர்க ளிஷ்டங் கொள்வன்
அண்டினோர்க் குதவி செய்வன் அவனியில் கீர்த்தி யேற்பன்
பண்டுநாள் பூமி விருத்தி பலபாவை மோகங் கொள்வன்
குண்டுணி கொஞ்ச முண்டு கார்முக வடிவு காணும்.

12. ஜாதகர் வண்டியும் சவாரிவாகனமும் உடையவராவார். அரசர் களுடைய விசுவாசத்தை உடையவர். தன்னை வந்து அடைந்தவர்களுக்கு உபகாரஞ் செய்வார். பூமியில் கீர்த்தியையும் புகழையும் அடைவார். பழைய காலத்திய நிலங்களை விருத்தியாக்குவார். அநேக ஸ்திரீகளின்மேல் காம ஆசையை உடையவராவார். சிறிது கோள் சொல்லுவார். நீர்மேகக் குறிப்பு முகத்தில் தோன்றும்.

13. இவன்துணை எழுவ ராகும் இவன் முன்ஆண் பானு மொன்று
அவனியில் தீர்க்க மெய்தும் அதற்குமுன் பெண்பால் ரண்டு
கவனமாய்ச் சொன்னேன் தீர்க்கங் காதலி மூத்தோள் தானும்
பவமதா மிரண்டாமா தாய்ப் பாலிப்பாள் உள்ளூர் தன்னில்.

13. ஜாதகருடன் கூடப் பிறந்தவர்கள் எழு பேராவார்கள். இவருக்கு முன்னே ஓர் ஆண் சகோதரம் உண்டு. இந்தச் சகோதரர் பூமியில் நீண்ட வயதை உடையவராக விருப்பார். இவருக்கு முன்னே இரண்டு பெண் சகோதரங்கள் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள் என்று ஞாபகத்துடன் குறிப்பாகச் சொல்லுகின்றேன். இவர்களில் பெரிய சகோதரி யானவள் பாபவசத்தினால் உள்ளூரிலேயே இரண்டாவது மனைவியாக நேரிடுவாள்.

14. சுதர்தோ ஷமாகி வாழ்வாள் சுந்தரி யோக சாலி
பதர்குண மில்லா ளாகும் பஞ்சைகட் கன்ன மீவள்
துதிசெய்தோர் தம்மைக் கார்பள் தோகைபோல் நிறத்தா ளாகும்
அதிபதி வறுமை காணுள் மாதுருசொல் முன்கோ பத்தாள்.

14. ஜாதகருடைய மூத்த சகோதரி புத்திர தோஷத்தை உடையவளாக விருந்து வாழ்வாள். இவள் யோகத்தை உடையவளாவாள். தாழ்ந்த குணத்தை உடையவளல்லள். ஏழைகளுக்கும் திக்கற்றவர்களுக்கும் சாப்பாடு போடுவாள். தன்னைப் பற்றிப் புகழ்ந்து பேசுகின்றவர்களைக் காப்பாற்றுபவளாவாள். மயிலைப்போன்ற ஒருவிதமான மினுமினுப்பான நிறத்தையுடையதேகத்தை உடையவள். இவள் கஷ்டத்தையும் தரித்திரத் யும் அடையமாட்டாள். இவள் பேசுவதற்கு முன்னமே கோபத்தை உடையவளாவாள்.

15. குத்தமில் லாதா ளாகுங் குலத்துளோர் மதிக்கவாழ்வள்
பத்தியுஞ் சீல முண்டு பால்பாக்கியம் உடையா ளாகும்
வித்தகி விவரந் தன்னை விளம்புவோம் விவரம் ரண்டில்
சத்தியி னிளை யோர் சேதி சாற்றுவோங் கேளும் தாயே.

15. ஜாதகருடைய மூத்த சகோதரி கெட்ட குணங்கள் இல்லாதவளாவாள். தன்னுடைய பந்துக்கள் தன்னை மதிக்கும்படியான அந்தஸ்தில் இருந்து வாழ்வாள். தெய்வ பக்தியும் அன்பும் உடையவளாவாள். நல்ல நடவடிக்கை உள்ளவள். பால் பாக்கியம் உடையவளாவாள். இவளுடைய வயது முதலிய மற்ற விஷயங்களைப் பற்றி இரண்டாவது பாகத்தில் விவரமாகச் சொல்லுகின்றோம். இவளுடைய இளைய சகோதரியினுடைய விஷயங்களைப்பற்றிச் சொல்லுகின்றோம். எங்களுடைய தாயாராகிய பார்வதி யம்மையே ! கேட்பீராக.

16. சொல்லது சுகமே யுண்டு சோம்பலுங் கொஞ்ச முண்டு
வல்லியுங் கொடிபோலாவாள் வரன்மனம் போலே நோாள்
புல்லிய புத்தி யில்லாள் பிலமிலாக் குடும்பி யாவள்
வல்லியின் மாமிரண்டு வரைந்தனம் உத்தரத் தில்.

16. ஜாதகருடைய இளைய மூத்த சகோதரி சுகமான இனிமையான வார்த்தைகளையே சொல்லுவாள். கொஞ்சம் சோம்பலுள்ளவளாவாள். தன்னுடைய புருஷனுடைய மனதிற்குத்தகுந்தபடி நடந்துகொள்ள மாட்டாள். கெட்ட தாழ்ந்த புத்தி இல்லாதவள். வலிவில்லாத மேன்மை இல்லாத குடும்பஸ்தையாவாள். இவளுக்கு இரண்டு மாமியார்கள் உண்டு. இவர்கள் வடக்குத் திக்கில் இருந்து வந்து நேரிடுவார்கள்.

17. வரனுண்டாம் போன பின்பு வளமான குடும்ப மாகுந்
திருமகள் விலாச மெய்துஞ் சித்திர மில்ல மாகுந்
தரையினில் வறுமை காணுள் சந்ததி ஆண்பா லொன்று
பிறைமுக மொத்த பெண்பால் பேசுவோம் அவ்வா றுக.

17. ஜாதகருடைய இளைய மூத்த சகோதரிக்குப் புருஷன் வந்துநேர்ந்த பிறகு இவள் செழிப்பான குடும்பத்தை உடையவளாவாள். இவளிடத்தில் இலட்சுமி வாசஞ்செய்வாள். அழகான சித்திரங்கள் உடைய வீடு உண்டாகும். பூமியில் இவள் கஷ்டங்களையும் தரித்திரத்தையும் அடைய மாட்டாள். இவளுக்குச் சந்ததிகளில் ஓர் ஆண் குழந்தையும் சந்திரனைப் போல அழகான முகத்தை உடைய ஒரு பெண் குழந்தையும் உண்டு.

18. மங்கையும் கேட்க லுற்றுள் மாதுக்கெவ் விதத்தால் செல்வம்
பொங்கிய குடும்ப மெய்தும் புகலு"வீரந்தச் சங்கை
நங்கையே பூமி மூலம் நல்கிடும் நிதிநிட் சேபம்
இங்கிவன் பொன்மூன் றுண்டில் எய்துமாம் அந்தச் சேதி.

18. பார்வதி யம்மையார் கேட்கின்றார். இவளுக்கு எவ்விதத்தில் குடும்பம் க்ஷேமமாக விருக்கும். அந்த விஷயத்தைச் சொல்லுவீராக. பார்வதி யம்மையே! இவளுக்கு நிலத்தின் மூலமாகத் தனமும் புதையலும் கிடைக்கும். இவருக்கு மூன்றுவது வயதில் தனம் வந்து சேரும். இது விஷயமாய்

19. இன்னமும் விவர மாக இயம்புவோ மிரண்டிலே தான்
பின்துணை ஆண்பால் சேதி பேசுவோந் தாயே கேளும்
தன் சொல்லே மேன்மை யாகச் சாதிப்பான் கல்வி கொஞ்சஞ்
சொன்னசொல் இரண்டு முள்ளான் தோகையர் வசியங்
[கொள்வன்.

19. இன்னம் அதிகமான விவரங்களை இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றோம். இவளுக்குப்பிந்திய ஆண் சகோதரத்தின் விஷயத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். எங்கள் தாயாராகிய பார்வதி யம்மையே! கேட்பீராக. இவர் தான் சொல்லுகின்ற வார்த்தைகளே உண்மையானவை, சிறந்தவை என்று சொல்லி வாதித்து நிலை நாட்டக்கூடியவராவார். இவருக்கு வித்தை கொஞ்சமாக விருக்கும். இவர் இரண்டுவிதமான சொற்களை, அஃதாவது உண்மையையும் பொய்யையும் கலந்து பேசுவார். ஸ்திரீகளைத் தன் வசம் செய்துகொள்ளுவார்.

20. நடையது துருசு முள்ளான் நவிலுவான் நயமாய் வார்த்தை
தடமது செய்கை யுள்ளான் தாய்வர்க்கம் பூமி சேருந்
திடமதாய் மூன்று யில்லஞ் செய்வனு மரசரிஷ்டன்
உடன்பிறந் தோர்கள் பட்சன் யுண்மையை யுரைக்கா னென்றோம்.

20. ஜாதகருடைய மூத்த சகோதரன் கெட்ட நடவடிக்கை உடையவராவார். இனிமையானவும் இதமானவுமான வார்த்தைகளைச் சொல்லுவார். வீட்டைக் கட்டுஞ் சாமர்த்தியுமுடையவர். தன்னுடைய தாய் வர்க்கத்தாருடைய மூலம் நிலங்கள் இவருக்கு வந்துசேரும். வலிவான மூன்று வீடுகளைக் கட்டுவார். இவர் அரசர்களுக்குப் பிரியமானவராக விருப்பார். தன்னுடன் கூடப் பிறந்தவர்களிடம் அன்புடையவராய் இருப்பார். உண்மையைச் சொல்லமாட்டார் என்று சொல்லுகின்றோம்.

21. தந்தைநாள் பூமி மேலாய்த் தானவன் சேர்ப்பா னுகும்
பந்துக்கள் மதிக்க வாழ்வன் பால்பாக்கிய முடையனுவன்
வந்திடும் மாமிரண்டு மனைவியுமொன்றே யாகும்
நொந்திடும் பேரைக் காப்பன் நிமலன்மேல் பத்தி கொள்வன்.

21. ஜாதகருடைய மூத்த சகோதரர் தன்னுடைய தகப்பனுருடைய காலத்திலிருந்த நிலங்களைவிட அதிகமான நிலங்களைச் சேர்த்து வைப்பார். தன்னுடைய பந்துக்கள் இவரை மதிக்கும்படியான அந்தஸ்திலிருந்து வாழ்வார். பால் பாக்கியமுள்ளவராவார். இவருக்கு இரண்டு மாமியார்கள் உண்டு. ஆனுல் மனைவி மாத்திரம் ஒருத்தியேயாவள். கஷ்டப் பட்டுக்கொண்டிருப்பவர்களையும் ஏழைகளையும் காப்பாற்றுவார். கடவுளின் பேரில் பக்தியும் அன்பும் உடையவராவார்.

22. வடதிசை தந்தை வர்க்கம் மனைவியும் நேரு மென்ருேந்
திடமாய்ப் புத்திர வர்க்கந் தீட்டுவோ மினிமே லாக
அடைவுடன் நவம மாகும் வளமையாயைந்துந் தீர்க்கம்
உடன்கூடி சிலநாள் சென்று உத்தமன் வேருய்ச் செல்வன்.

22. ஜாதகருடைய மூத்த சகோதருக்கு வடக்குத் திக்கிலிருந்தும் தன்னுடைய தகப்பனுருடைய பந்துக்களில் இருந்தும் மனைவி வந்து நேரிடுவாள் என்று சொல்லுகின்ருேம். புத்திர பாகத்தைப்பற்றி இனிமேல் உறுதியாகச் சொல்லுகின்ருேம். ஒன்பது குழந்தைகள் பிறப்பார்கள். இவர்களில் ஐந்து குழந்தைகள் நீண்ட ஆயுளை உடையவர்களாக இருப்பார்கள். இவர் குடும்பத்தில் கொஞ்சகாலம் ஒன்ருகக்கூடி இருந்து பிறகு வேறு குடும்பமாகப் பிரிந்து போய் விடுவார்.

23. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அவளிரு நிறத்தாளாகுந்
தன்சொல்லு மடக்க முண்டு தந்தமுந் தரள மொக்கும்
பொன்பொரு ளுடைய ளாகும் பாவையும் பொறுமை சாலி
சொன்னதைக் காப்பா ளாகுந் தேவதா பத்தி பூண்பன்.

23. ஜாதகருடைய தாயாருடைய குணுதிசயங்களைப்பற்றிச் சொல்லுகின்றேன். இவள் இரண்டு நிறங்கள் கலந்த மாநிறமான தேகத்தை உடையவளாவாள். இவள் கொஞ்சமாகவும் நிதானமாகவும் பேசக்கூடியவள். இவள் முத்தைப்போன்ற அழகான பற்களை உடையவள். இவள் தனமும் சொத்தும் உடையவளாவள். இவள் பொறுமையுடனும் சாந்தமாகவும் இருப்பாள். தான் சொல்லிய வார்த்தைகளைத் தவருமல் காப்பாற்றுவாள். தெய்வங்களின்மேல் பக்தியும் அன்பும் உடையவளாவாள்.

24. பித்தமாம் வாயு ரோகம் பொருந்திடுஞ் சொல்பமாக
வித்தகி துணையாண் ரண்டு மெல்லியு மவ்வாறு தீர்க்கம்
அத்தலம் உள்ளு ராகும் ஆண்துணை மூத்தோ னுக்கு
அத்தையை மணமே கொள்வன் அனுகாரே சுதர்கள் தாமே.

24. ஜாதகருடைய தாயார் பித்யுவாயு ரோகத்தைக் கொஞ்சமாக உடையவளாவாள். இவளுக்கு இரண்டு ஆண் சகோதரங்களும் இரண்டு பெண் சகோதரங்களும் நீண்ட ஆயுளை உடையவர்களாகவிருப்பார்கள். இவளுடைய வீடு உள்ளூரிலேயேவிருக்கும். ஆண் சகோதரர்களில் மூத்த வனுக்கு ஜாதகருடைய அத்தை மனைவியாகப் போய் வாய்ப்பாள். ஆனால் இவர்களுக்குக் குழந்தைகள் கிடையா.

25. வறுமை களடையா னுகும் அருகன்தன் பத்தி கொள்வன்
பெருமையும் புகழு மேற்பன்......................
.....................................வன்
சிறுவன் தனக்குப் பாரி செப்பினே மிரண்டே யாக.

25. ஜாதகரின் தாயாருடைய சகோதரருள் மூத்தவன் கஷ்டங்களையும் தரித்திரத்தையும் அடையமாட்டார். சமணர்களின் தேவ குருவின்மேல் பக்தியையும் அன்பையும் உடையவராவர். இவர் பெருமையையும் கீர்த் தியையும் அடைவார். தாயாருடைய சகோதரருள் இளையவனுக்கு இரண்டு மனைவிகள் உண்டாவார்கள் என்று சொல்லுகின்றோம்.

26. முதல் மனை தந்தை பின்னோள் முடிவற்ற தன்மூத் தோளை
அதிபனும் மணமே கொள்வன் தேவியாண் காணு ளாகும்
அதிபதி பெண்பால் ரண்டு வரைகிறேந்தீர்க்க மாக
........................................மே.

26. ஜாதகரின் தாயாருடைய சகோதரர்களில் இளைய சகோதரனுக்கு ஜாதகருடைய தகப்பனாரின் இளைய சகோதரி முதல் மனைவியாக அமைவாள். இவள் இறந்தபிறகு ஜாதகருடைய மூத்த சகோதரி இரண்டாவது மனைவி யாக நேரிடுவாள். இவளுக்கு ஆண் குழந்தை கிடையாது. இரண்டு பெண் குழந்தைகள் நீண்ட ஆயுளை உடையவராகவிருப்பார்கள்.

27. ஏகமாங் குடும்பி யாவன் இரண்டிலே விவரஞ் சொல்வேன்
தோகையின் பூர்வஞ் சொல்வேன் சீகாழி தெற்கி லேதான்
நாகரிகங்க ளுள்ள நற்றவ குலமு தித்து நாயகியு வாழ்வா ளாகும்
நல்லதோர் நாயகனும் நன்னிய மதலைகளுண்டாய்.

27. இவன் ஏக குடும்பமாக இருந்து வாழ்வான். மற்ற விவரங்களை இரண்டாவது பாகத்திற் சொல்லுகின்றேன். ஜாதகரின் தாயாருடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன். சீகாழி க்ஷேத்திரத்திற்குத் தெற்குத் திக்கில் நாகரிகமான ஒரு நல்ல தவஞ் செய்த குலத்திற் பிறந்து இவள் வாழ்வாள். இவளுக்கு நல்ல புருஷனும் குழந்தைகளும் உண்டாகி ;

28. வரன்மனம் போலே வாழ்வாள் வனிதையும் வாழுந் நாளில்
வரும்பெரி யோர்கட் கன்ன மீந்து வினையில் லாளாகி
மரலியின் பதிக்குச் சென்று மறையவன் வரையப் பட்டு
அருகர்தங் குலமு தித்தாள் அம்பிகை யாளே கேளாய்,

28. இவள் தன்னுடைய புருஷனுடைய மனதிற்குத் தருந்தபடி இருந்து வாழ்கின்ற காலத்தில் இவளிடம் வருகின்ற பெரியோர்களுக்குச் சாப்பாடு போட்டு யாதொரு பாவமும் இல்லாதவளாகி இறந்து எம பட்டணத்திற்குப் போய்ப் பிரமதேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு ஜைனர்களின் குலத்தில் வந்து பிறந்திருக்கின்றாள். பார்வதியம்மையே ! கேட்பீராக.

29. வந்தவன்பின் ஜன்மமத்தை வரைகிறேந் துவரை பக்கல்
இந்ததோர் குலமு தித்து இடருகள் இல்லா வாழ்வாள்
தந்தையின் பூர்வஞ் சொல்வேன் தண்டகா வனத்தி லேதான்
இந்ததோர் குலமு தித்து யாவர்க்கும் நல்லோ னாயும் ;

29. ஜாதகரின் தாயாருடைய மறு ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன். இவள் துவாரகாபுரிக்கு அருகிலுள்ள ஓர் ஊரில் இந்தச் சமணர் குலத்திலேயே பிறந்து கஷ்டங்கள் இல்லாமல் வாழ்வாள். இனி மேல் ஜாதகரின் தகப்பனுருடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன். இவர் தண்டகாவனத்தில் இந்தச் சமணருடைய குலத்திற் பிறந்து எல்லோருக்கும் நல்லவராகியும் ;

30. தேவதா பத்தி கொண்டு சென்றனன் காலன் பக்கல்
பூவினில் பிறந்தோ னாலே பூமியில் வரையப் பட்டு
மேவினு னிக்குலத்தில் விளைபுல மதிக முண்டாய்த்
தாவிய பேரைக் காத்துத் தகமையாய் வாழ்வா னாமே.

30. தெய்வங்களின்மேல் பக்தியும் அன்பும் உடையவராகி இறந்து எமனிடத்திற்குப் போய்ப் பிரமதேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்தப் பூமியில் இந்த ஜைன குலத்திலேயே பிறந்தார். பயிரிடும் பூமிகள் அதிக முடையவராகி இவர் தன்னை வந்து அணுகியவர்களைக் காப்பாற்றிப் பெருமையுடன் வாழ்பவராவார்.

31. இருபது ஒன்ப தாண்டில் ஆவணி மாதந் தன்னில்
உறைகுவான் மறலியின் பக்கல் உரைக்கிறோம் பின்ஜன்மத்தைப்
பெருங்காசி யருகில் தெற்கில் பிறப்பனே பிரம சேயாய்க்
குறுமுனி சொல்லும் போது கோதையுங் கேட்க லுற்றாள்.

31. ஜாதகருக்கு இருபத்தொன்பதாவது வயதில் * ஆவணி மாதத்தில் இவருடைய தகப்பனார் இறந்து எமனிடத்திற்குப் போய்ச் சேருவார். இவருடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் பெருமை வாய்ந்த காசி க்ஷேத்திரத்திற்குச் சமீபத்திலும் தெற்கிலும் பிராமணர் குலத்தில் ஆண் குழந்தையாய்ப் பிறப்பார் என்று குறுகிய முனிவராகிய அகஸ்தியர் சொல்லும்போது பார்வதியம்மையார் கேட்கின்றார்.

குறிப்பு.—பிதுர் மரணவிஷயம்:—ஜாதகருக்கு வயது ௵ 28-0-0 முதல் ௵ 29-0-0 முடியும் வரையிலும் சந்திர தசையில் சூரிய புக்தியும் அங்காரக தசையில் ராகு புக்தியும் நடக்கின்றன. ஆனால் ஆவணி மாதத்தில் அங்காரக தசையில் ராகு புக்தி நடக்கின்றது. பிதுர்லக்கினம்

ஒன்பதாமிடமாகிய மீனம் ஆகும். மீன லக்கினத்திற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் சனி புதன் சுக்கிரன் சூரியன் இவர்கள் மாரகாதிபதிகள். அங்காரகன் ஏழாவது வீடாகிய மாரகஸ்தானத்தில் சனி புதனுடன் கூடி முதலாவது பாவத்தையும் பத்தாவது பாவமாகிய தனுசையும் பார்த்திருக்கின்றார். ஆகையால் ஜாதக சந்திரிகை 23-ஆவது சுலோகம், தூய்யகேரளம் எட்டாம் பாவம் 14-ஆவது பாடல், 82-ஆவது நம்பர் ஜாதகம் 24-ஆவது பாடலின் கீழ் கொடுத்துள்ள வியாக்கியானம் ஆகிய இவைகளின் பிரகாரம் அங்காரகன் தன் தசையில் பிதாவுக்கு மாரகம் செய்ய அமைப்புடைவராகின்றார். ராகு சுக்கிரன் வீடும் மாரகஸ்தானமுமாகிய மூன்றாவது வீட்டில் இருப்பதால் ஜாதகசந்திரிகை 12, 23-ஆவது சுலோகங்கள் பிரகாரம் தன் புக்தியில் பிதாவுக்கு மாராகஞ் செய்ய அமைப்பு உள்ளவராகின்றார்.

32. இந்தோர் ஜன்மந் தன்னில் இவன்சில கொடுமை செய்தான்
கந்தன மிச்சை யுண்டாய்ச் சதியான குணத்தா னாகி
வந்ததால் மறுபிறப்பும் மறை குல முதிப்பா னென்றீர்
அந்ததோர் சேதி சொல்வீர் அவனுமிச் சென்மம் தன்னில்

32' இந்த ஜன்மத்தில் இவர் சில கெட்ட காரியங்களைச் செய்திருக்கின்றார். பணத்தின்மேல் இவர் ஆசையை உடையவராகியும் கெட்ட குணங்களையுடையவராகியும் இருந்தும் மறு ஜன்மத்தில் பிராமணர் குலத்திற் பிறப்பார் என்று நீர் சொன்னீரே! அதற்குக் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்க, சொல்லுகின்றார். இவன் இந்த ஜென்மத்தில்

33. பலவிதக் குற்றஞ் செய்தும் பகவானின் தொண்டு பூண்டு
அதிதியை ஆதரித்தும் அவனிள மனத்தா னுயுங்
குலவியே வாழ்வ தாலே குறித்தனம் பிரம்ம சேயாய்
மலையிரை மகளே யாங்கள் வரைந்தது தப்பா தாமே.

33. பலவிதமான கெட்டகாரியங்களைச் செய்திருந்தும் கடவுளின் வேலைகளைச் செய்து அவரிடத்தில் அன்பும் பக்தியும் உடையவராகிப் பரதேசிகளை ஆதரித்தும், இளகிய குணமுள்ள மனத்தை யுடையவராகியும் வாழ்ந்ததால் பிராமணர் குலத்தில் ஆண் குழந்தையாய்ப் பிறப்பார் என்று சொன்னோம். இமயமலைக்கு மகளாகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறிடாமல் நடக்கும்.

34. ஜாதகன் மணத்தின் காலம் சாற்றுவோ மீரே ழாண்டில்
மேதினில் உள்ளூர் தன்னில் வித்தகன் துணைவி புத்திரி
அதிபற்கு மதனில் வாய்ப்பா ளாகும் அவள்குணம் மாஞ்சி வப்பள்
பாதக மனமில் லாதாள் பரவுப காரி யாவள்.

34. ஜாதகருடைய விவாக காலத்தைச் சொல்லுகின்றோம். இவருக்குப் பதினான்காவது வயதில் பூமியில் உள்ளூரில் இருந்தே இவருடைய சகோதரியின் புத்திரி மனைவியாக வந்து நேரிடுவாளாகும். அவளு

டைய குணத்தைச் சொல்லுகின்றோம். அவள் மாந்துளிரைப் போன்ற ஒரு விதமான சிகப்பு நிறத்தை உடைய தேகத்தை உடையவளாகும். அவள் கெட்ட குணமில்லாதவளாகும். பிறருக்கு உபகாரத்தைச் செய்வாள்.

35. சொல்லது சுகமே யாகுஞ் சுத்தமாஞ் குணத்தா ளாகும்
அல்லல்க ளடையா ளாகும் அவள்சுதர் காணு ளாகும்
நல்லதோர் பராசர் சொல்வார் நவின்றினீர் புத்திர தோஷம்
அல்லலைச் சொல்லு மென்ன அந்தினி லரவந் தங்க ;

35. ஜாதகருடைய மனைவியின் வார்த்தைகள் இனிமையாகவிருக்கும், இவள் பரிசுத்தமான நல்ல குணங்களை உடையவளாவாள். கஷ்டங்களை அனுபவிக்கமாட்டாள். இவளுக்குப் பிள்ளைகள் கிடையா. இதன்மேல் பராசர முனிவர் கேட்கின்றார். இவருக்குப் புத்திரதோஷத்தைச் சொன்னீர். அதற்கு உண்டான கெடுதியைச் சொல்லுவீரென்று கேட்க, பதில் சொல்லுகின்றார். ஐந்தாவது பாவத்தில் பாம்பின் வாலாகிய கேது இருப்பதாலும் ;

36. நீலனும் ஐந்தைப் பார்க்க நியமித்தோ மந்தச் சங்கை
சாலவே முன்னுழ்த் தோஷந் தங்கிற்றுச் சுதர்தோ ஷங்கள்
பாலன்செய் வினைக ளென்ன விளம்புவீர் முனியே நீர்தாம்
பாலனும் முன்ஜன் மத்தில் பெண்ணை யினுத்த ரத்தில் ;

36. நீலன் என்ற சனி ஐந்தைப் பார்ப்பதாலும் இவ்விதமான விஷயத்தைச் சொன்னோம். ஜாதகருடைய முன் ஜன்மத்திய பாவத்தினாலும் தோஷத்தினாலும் புத்திர தோஷங்கள் நேர்ந்தன. ஜாதகர் செய்த பாவங்கள் என்ன ? அவைகளின் விவரத்தை, முனிவரே ! நீரே சொல்லுவீராக. ஜாதகர் தன்னுடைய முன் பிறப்பில் பெண்ணை நதிக்கு வடக்கில் ;

37. அருணைக்குத் தென்பா லாக அணுகினன் சமவூர் தன்னில்
அவனுமே மதலை யுண்டாய்ச் சிறப்பான குடும்பி யாகிப்
பெருமையாய் வாமுந் நாளில் பேசுவோ மூழி தானும்
பெருந்தலை மணியின் கோவில் அணுகினன் ஓர்நாள் தன்னில்.

37. திருவண்ணாமலை க்ஷேத்திரத்திற்கு தெற்கில் ஒரு சமமான அளவுள்ள நடுத்தரமான ஊரில் பிறந்தார். இவர் மனைவி மக்களையுடையவராகியும் மேன்மையான குடும்பஸ்தராகியும் சிறப்புடன் வாழ்கின்ற காலத்தில் இவருக்கு நேர்ந்த வினையைச் சொல்லுகின்றோம். இவர் ஒரு நாள் தலையில் மாணிக்கத்தையுடைய நாகப் பாம்புள்ள கோவிலுக்குப் போனார்.

38. குடினியினில் நாக மொன்று குலவிற்று மகுடத் தாலே
தடியினு லின்னோன் வாட்டிச் சண்டன்தன் பதிக்குச் செல்லப்
படியினி லந்தத் தோஷம் பரவிற்று இவனுக் கேதான்
விடதோஷ மச்சென் மத்தில் விளங்கிய சுதர்க ளற்று ;

38. அந்தக் கோவிலுள்ள ஒரு சர்ப்பம் மோடிராகத்தாலே வெளி வந்தது. இந்த ஜாதகர் அதைத் தடியால் அடித்துக் கொல்ல, அ∴து எமனிடத்திற்குப்போய்ச் சேர்ந்தது. இவ்விதமாக வந்த சம்பவித்த

இந்தப் பாம்பின் தோஷமானது இவரை அணுகிற்று. இந்தப் பாம்பின் தோஷத்தினாலே அந்த ஜென்மத்திலேயே இவருக்குப் பிறந்த பிள்ளைகள் இறந்து ;

39. நேத்திரத் துன்ப மாயும் நேர்ந்தனன் காலன் பக்கல்
சாத்திர விதிபோல் வாழுஞ் சமணர்தங் குலமு தித்தான்
நீத்தோர்கள் சொல்லும் போது நிமலியுங் கேட்க லுற்றாள்
பார்த்திபன் கங்கை சேயாய்ப் பிறந்தன னென்று சொன்னீர்.

39. ஜாதகர் தன்னுடைய கண்களில் ரோக முண்டாகி இறந்து எமனிடத்திற்குப்போய்ச் சேர்ந்தார். சாஸ்திரங்களில் சொல்லிய முறைகள் போல வாழ்கின்ற சமணர் குலத்தில் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்தார். இவ்விதமாக உலகப்பற்றை விட்டுவிட்ட முனிவர்கள் சொல்லும்போது பார்வதியம்மையார் கேட்க வாரம்பித்தார். இவர் வேளாளர் குலத்திற் பிறந்தார் என்று சொன்னீரே.

40. பரிசுத்தக் கடவுள் வமிசம் பிறந்தகா ரணங் களென்ன
அறிவிப்பீர் முனியே நீர்தாம் அவனுமுன் ஜன்மந் தன்னில்
அருணையில் மடங்கள் செய்து மன்னங்கள் அதிதிக் கீந்தும்
நெறியுடன் கடவுள் பக்தி நேர்ந்ததால் வந்தா னென்றோம்

40. இவ்விதமாகவிருந்தும் இவர் இந்த ஜன்மத்தில் பரிசுத்தராயிருந்து கடவுளைத் தொழுகின்ற வமிசமாகிய சமணருடைய குலத்திற் பிறந்தற்குக் காரணங்கள் என்ன என்பதை முனிவரே ! நீரே சொல்லுவீராக. ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தில் மடங்களை உண்டுபண்ணியும், பரதேசிகளுக்குச் சாப்பாடுபோட்டும், நியமங்களுடன் இருந்து கடவுளின்மேல் பக்தியும் அன்பும் உள்ளவராய் இருந்ததாலும் இவ்விதமாகச் சமணர் குலத்தில் பிறந்தார் என்று சொல்லுகின்றோம்.

41. மாரியா மம்மன் கோயில் வளர்நாகங் கொன்ற தோஷம்
கூறுவோ மிச்சென் மத்தில் குழவிகள் தோஷ மெய்துந்
தீரவே சாந்தி ஒன்று செப்புவோம் கேளுந் தாயே
பாரினில் தாமிரத்தால் பணிசெய்து கடவு ளர்க்கு ;

41. ஜாதகர் மாரியம்மன் கோயிலிலுள்ள ஒரு நல்லப் பாம்பைக் கொன்ற தோஷத்தினால் இந்த ஜன்மத்தில் குழந்தைகளுக்குத் தோஷம் நேரிடும். இந்தத் தோஷம் நிவிர்த்தியாவதற்கு ஒரு சாந்தியைச் சொல்லுகின்றோம். எங்கள் தாயாராகிய பார்வதி யம்மையே ! கேட்பீராக. பூமியில் தாமிரத்தில் பாம்பு போன்ற அணியைச் செய்து கடவுளுக்கு ;

42. அணிந்துமுக் குடையுஞ் செய்ய அணுகிய தோஷம் நீங்கிப்
பிணியிலா வமிசம் பேசும் ஆண்ஒன்றே தீர்க்க மெய்துங்
கன்னியர் இரண்டு மாகுங் கழறுவோ முப்பா றுறில்
துணிவான சாடி[1] மாதஞ் சேய்தசை[2] மதி[3] புத்தி ;

---

[1] கும்பம். [2] அங்காரகன். [3] சந்திரன்.

42. போட்டு, சந்திர வட்டம் அல்லது மூன்று குடைகளாகிய முத்துக் குடை, பொற்குடை, மணிக்குடை ஆகிய இவைகளையும் செய்துவைக்க சம்பவித்த தோஷம் விலகிவிடும். குற்றமில்லாமல் வமிசம் விளங்குவதற்காக ஓர் ஆண் குழந்தையும் இரண்டு பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகின்றோம். ஜாதகருக்கு முப்பத்தாறுவது வயதில் மாசி மாதத்தில் † அங்காரக தசையில் சந்திர புக்தியில் ;

* **குறிப்பு.—தாயார் மரண விஷயம்:**—ஜாதகருக்கு வயது முப்பத்தைந்து முடிந்து முப்பத்தாருவது வயது நடக்கும்போது மாசிமாதம் முடியும் வரையிலும் வயது ஷூ 35, மாதம் ஐந்திற்குள்ளாகவே ஆகிறது. அங்கார தசையில் சந்திர புக்தி வயது ஷூ 35–5–0 வரையிலுந்தான் இருக்கிறது. பாட்டில் அங்கார தசையில் சந்திர புக்தியில் மாதுர் மரணம் என்று சொல்லி இருக்கின்றது. ஒரு வருஷத்திற்கு $5\frac{1}{4}$ நாள் விகிதம் 35 வருஷத்திற்குக் கூட்டிச் சாவன வருஷப் பிரகாரம கணக்கிடுவோ மானல் அங்காரக தசை சென்று போய் இராகு தசை வந்துவிடுகிறது. ஆகையால் இந்தப் பாடலினல் சாவன வருஷத்தை இந்த நாடியில் உபயோகப்படுத்தி யிருக்கவில்லை என்பதும் சௌரமான வருஷத்தையே தசாபுக்தி கணக்குகளில் உபயோகப்படுத்தி இருக்கிறது என்பதும் தெரியவருகிறது. மேலும் மாதுரு லக்கினம் துலாம் பராசரஹோரை ஜாதகசந்திரிகை ஆகிய இவைகளில் துலா லக்கினத்திற்கு குருவும் சூரியனும், பராசரஹோரையின் சில பதிப்பில் அங்காரகனும் மாரகாதிபதி என்றும் சொல்லி இருக்கின்றது. அங்காரகன் மாரகனுகவரும் விஷயமாக 82-ஆவது நம்பர் ஜாதகம் 24-ஆவது பாடலின் கீழ் கொடுத்துள்ள வியாக்கியானத்தையும் பார்க்கவும். அங்காரகன் மாரக ஸ்தானங்களாகிய 2–7-க்குடையவராய்ப் பண்ணிரண்டாவது மாரக ஸ்தானத்தில் இருப்பதால் மாரகாதிபதியாகின்றார். சந்திரன் ஏழாவது மாரக ஸ்தானத்திலிருந்து கொண்டு லக்கின அஷ்டமாதிபதியாகிய சுக்கிரனையும் பார்க்கின்றார். ஆகையால் சந்திரன் தனதுபுக்தியில் மாதாவை மாரகஞ் செய்ய அமைப்புள்ளவராகின்றார்.

43. அன்னையுங் கண்ட மெய்தும் அறுபது நாலா மாண்டில்
மன்னிய தனசு மாதம் வளர்பிறை ஏகா தசி
இன்னவ னுடலம் வாடும் இனிவருஞ் ஜன்மங்கள் சொல்வேன்
முன்குலந் துவாரை தன்னில் உதிப்பனு மென்று சொல்வோம்.

43. ஜாதகருடைய தாயாருக்கு மரணம் நேரிடும். ஜாதகர் தனக்கு அறுபத்து நான்காவது வயதில் மார்கழி மாதத்தில் † வளர் பிறையில் ஏகாதசி திதியில் இறந்து இவருடைய தேகம் மறைந்துவிடும். இவரது பின் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். துவாரகாபுரியில் முதல் குலமாகிய பிராமணர் குலத்தில் ஜாதகர் பிறப்பார் என்று சொல்லுகிறோம்.

† **குறிப்பு.—ஜாதகர் மரண விஷயம்:**—ஜாதகருக்கு வயது ஷூ 63–0–0 முதல் ஷூ 64–0–0 முடியும் வரையிலும் தனுர்மாதம் என்ற மார்கழி மாதத்திலும் குரு தசையில் சுக்கிரபுக்தி நடக்கின்றது. கடக லக்கினத்திற்குப்

பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் புதன் சுக்கிரன் சனி இவர்கள் மாரகாதிபதிகளாக ஆகின்றார்கள். குரு ஆறுக் குடையவராகி மார காதிபதியாகிய சனியினுடைய வீட்டில் எட்டாவது மாரக ஸ்தானத்தில் இருப்ப தால் ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரம் குரு ஜாதகருக்கு மாரகஞ் செய்யும் அமைப்புடையவராகின்றார். சுக்கிரன் ஏற்கனவே மாரகாதிபதி என்று இங்குச் சொல்லி இருக்கின்றோம். சுக்கிரன் மாரக ஸ்தானமாகிய பதினொன் றிற் குடையவராகி லக்கினாதிபதியாகிய சந்திரனைப் பார்த்திருக்கின்றார். ஆகையால் இவருக்குத் தன் புக்தியில் மாரகஞ் செய்ய அமைப்பு இருக் கின்றது. குமாரசாமியம் பிரகாரங்கூட ஆறுக்குடையவர் மாரகர்.

44. பொதுயோகம் பூமி விருத்தி பொருளது கொடுக்கல் வாங்கல்
நதிபல தீர்த்தந் தோய்வன் நாட்டினில் கீர்த்தி யேற்பன்
ததிநெய்பால் விருத்தி யுள்ளான் சத்தான வேலை யுள்ளான்
பதிபணி யாவும் பதினெண் ணாயிரம் பொன் என்றோம்.

44. ஜாதகருடைய பொதுவான யோகத்தைச் சொல்லுகின்றோம். இவருக்கு நிலங்கள் விருத்தியடையும். இவர் பணத்தைக் கொடுப்பார், மறு படியும் வாங்கிக்கொள்ளுவார், அஃதாவது பணலேவாதேவி உடையவர். அநேக நதிகளில் ஸ்நானஞ் செய்வார். பூமியில் புகழையும் பெருமை யையும் அடைவார். தயிர் நெய் பால் இவைகளின் விருத்தியையுடையவ ராவார். வலிவான பலன் தரக்கூடிய வேலையை உடையவர். நிலம், வீடு, ஆடை, ஆபரணங்கள் இவைகள் எல்லாம் மொத்தம் பதினெட்டாயிரம் பெறக்கூடிய சொத்தை உடையவராவார் என்று சொல்லுகிறோம்.

45. புறந்திடு காலந் தன்னில் புகர்தசை யீரா றுண்டுஞ்
சிறந்திடு திங்க ளைந்துஞ் செப்புவோம் பலனை யாங்கள்
வருந்துணை பின்னால் விருத்தி மங்கைமுன் சுபங்க ளெய்தும்
உரைத்திட்டோம் யோகந் தானும் உயர்பூமி சேரு மென்றோம்.

45. ஜாதகர் பிறக்கின்ற காலத்தில் சுக்கிரமகா தசையில் பன்னிரண்டு வருஷமும் ஐந்து மாதங்களும் இருப்பு ஆகும். இந்தக் காலத்திய பலா பலன்களை நாங்கள் சொல்லுகின்றோம். இவருக்குப் பின்னால் சகோதரர்கள் பிறந்து விருத்தியடைவார்கள். மூத்த சகோதரிகளுக்கு விவாகம் நடக்கும் நல்ல யோகமான பலன்கள் நடக்கும் என்று சொல்லுகின்றோம். மேன்மை யான சிறந்த நிலங்களும் வந்துசேரும் என்று சொல்லுகின்றோம்.

46. தந்தைக்கு சிலவே ரோகஞ் சார்ந்துபின் நிவிர்த்தி யாகுந்
தந்தைக்குக் கீர்த்தி யெய்துஞ் சண்டாள னொருவ னாலே
நிந்தையு மிகவு முண்டு நிருபரால் தண்டம் நேரும்
எந்தக் காலத்தி லேதா னிவ்வினை நடக்குஞ் சொல்வீர்.

46. ஜாதகருடைய தகப்பனாருக்குச் சில நோய்கள் உண்டாகிப் பிறகு அவை கள் நிவிர்த்தியாகும். தகப்பனாருக்குப் புகழும் பெருமையும் உண்டாகும். ஒரு கெட்டவனாலே அதிகப் பழியும் அபவாதமும் ஏற்படும். அரசர்களால் நஷ்டமும் அபராதமும் நேரிடும் என்று சொல்ல, இவ்விதம் எந்தக் காலத் தில் கெடுதிகள் உண்டாகும் என்பதைச் சொல்லுவீர் என்று கேட்டார்.

47. பத்தாண்டில் புதன் புசிப்பில் பகையுண்டு ராசர் மூலம்
குத்தமாந் தனமுஞ் சேதங் குமரன்தன் உடனே பந்து
சுத்தத்தார்க் கவ்வா றுகும் நேர்ந்துபின் ஜயமே யாகும்
வெத்திசெய் போகர் வர்க்கம் வித்தினுல் நிவிர்த்தி யென்றேம்.

47. ஜாதகருக்குப் பத்தாவது வயதில் புதனுடைய புக்தியில் அரசர் மூலமாக விரோதங்கள் ஏற்படும். குற்றங்கள் ஏற்பட்டுப் பணமும் செலவாகும். ஜாதகருடைய பந்துக்களுக்கும் இவ்விதமாகவே நேரிடும். அதன் பிறகு ஜயமுண்டாகும். வெற்றியை உண்டாக்குகின்ற போகர் என்ற வெள்ளையர் மூலமாய், தனத்தினுல் இது நிவிர்த்தியாகும் என்று சொல்லுகின்றேம்.

48. இதுமறை யோரால் நீங்கும் மங்களம் பின்னே யுண்டாம்
பதியது வேறு செய்வன் பந்துவில் சுபமு மெய்தும்
அதிகமாம் பலன்கள் யாவும் அறைகிறேம் விவரம் ரண்டில்
நதிசடை யணிந்தோன் தேவி நங்கையே மேலுங் கேளே.

48. இந்தக் கெடுதி பிராமணர்களால் நிவிர்த்தியாகும். சுபங்களும் பின்னுல் நடக்கும். வேறு வீட்டையுங் கட்டுவார். பந்துக்களில் சுபகாரியங் களும் நடக்கும், இன்னம் அதிகமாக நடக்கக்கூடிய பலன்கள் எல்லாவற் றையும் விவரமாக இரண்டாவது பாகத்தில் சொல்லுகிறேம். கங்கை நதியை ஜடையில் தரித்துக் கொண்டிருக்கின்றவராகிய சிவபெருமானுடைய மனைவி யாகிய பார்வதியம்மையே! இன்னும் சொல்லுகிறேம். இனிமேல் கேட்பீராக.

## ஜாதகம் 104

1. சந்திரன் சிய[1] மாகச் சனிகன்னி கேது கோலாம்[2]
புந்தி[3]பான் [4] புகருஞ்[5] சாடி [6] பூமகன் [7] பொன்னேன் [8] ராகு
வந்திடம் மேட மாக வண்டியுஞ் [9] ஜனனம் புக்க
இந்தவாறு கோளும் நின்ரு லியம்புவீர் பலனைத் தானே.

| | | | |
|---|---|---|---|
| | குரு அங்காரகன் ராகு | | |
| சூரியன் புதன் சுக்கிரன் | இராசி சக்கரம் | | லக்கனம் |
| | | | சந்திரன் |
| | | கேது | சனி |

மகம் 2–ஆம் பாதம் : கேது தசை இருப்பு 4-11-0

1. சந்திரன் சிம்மத்திலும், சனி கன்னியிலும், கேது துலாத்திலும், புதனும் சூரியனும் சுக்கிரனும் கும்பத்திலும், அங்காரகன் குரு ராகு மேஷத்திலும், ஜன்மலக்கினம் கடகமாகவும் இருந்து இவ்விதமாகக் கிரகங்கள் அமைந்திருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர்.

குறிப்பு.—இந்தராசிக் சக்கர அமைப்பிற்குப் பின்வரும் அட்சைச் சக்கர கிரக நிலை பொருத்த முடையதாகும்:—மேஷத்தில் குருவும், ரிஷபத்தில் சந்திரனும், மிதுனத்தில் புதனும் ராகுவும், கடகத்தில் சனியும், துலாத்தில் அங்காரகனும் சுக்கிரனும், தனுசில் கேதுவும், மீனத்தில் சூரியனும் ஆகும். சனி வக்கிரகதியில் இருக்கின்ருர்.

2. பார்வதி கேட்கும் போது பராசரும் புகலு கின்ருர்
சீர்புகழ் ஆண்பால் ஜன்மஞ் ஜனித்தயில் வடதென் வீதி
கூறுவோங் கீழ்ப்பால் வாடை குடகினில் மாயோன் தங்குந்
தீரமாய் அருகர் வாயு தென்திசை காளி வாசம்.

2. பார்வதியம்மையார் கேட்கும் போது பராசர முனிவர் சொல்லுகின்ருர். செல்வமும் புகழும் உள்ள ஆண் குழந்தை ஜனனமாகும். ஜாதகர் பிறந்த வீடு வடக்குத் தெற்குத் தெருவில் கீழண்டை வாடையில் இருக்கும் என்று

[1] சிம்மம். [2] துலாம். [3] புதன்.
[4] சூரியன். [5] சுக்கிரன். [6] கும்பம்.
[7] அங்காரகன். [8] குரு. [9] கடகம்.

சொல்லுகின்றோம். மேற்குத் திக்கில் மாவிஷ்ணுவின் கோயில் இருக்கும். வலிவான சமணருடைய கோயில் வடமேற்குத் திக்கிலும், காளியம்மன் கோயில் தெற்குத்திக்கிலும் இருக்கும்.

3. இத்தகை மாடி சூழ்ந்த இலகிய சிற்றூர் தன்னில்
வித்தக னருகர் வர்க்க மேவுவா னிந்தப் பாலன்
பெற்றதாய் தந்தை யோகம் பேதையர் புத்திர யோகஞ்
சுத்தமாய் முன்பின் ஜன்மஞ் செப்புவோ மிந்நூல் தன்னில்.

3. இப்படிப்பட்ட அடையாளங்களுள்ளதும் மெத்தை வீடுகளை அதிகமாயுடையதுமான ஒரு சிறிய கிராமத்தில் ஜாதகர் சமணருடைய குலத்தில் பிறப்பார். இவரைப் பெற்றெடுத்தத் தாயார் தகப்பனார் இவர்களுடைய யோகத்தையும் மனைவி மக்கள் இவர்களுடைய யோகத்தையும், முன் ஜன்மம் பின் ஜன்மம் ஆகிய இவைகளையும் பரிசுத்தமாக இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகிறோம்.

4. தந்தையுந் துணையாண் காணுன் சத்திமார் நான்கு என்றோம்
அந்தவர் ஒருத்தி தானும் அணுகுவா னில்லம் தன்னில்
வந்தவள் குணத்தைச் சொல்வேன் மாநிறஞ் சுகமாய் வார்த்தை
தன்வரன் வடபா லாகுஞ் சம்பத்தா மில்லம் வாழ்வள்.

4. ஜாதகருடைய தகப்பனருக்கு ஆண் சகோதரர் கிடையாது. இவருக்குச் சகோதரிகள் நான்குபேர் என்று சொல்லுகின்றோம். இவர்களில் ஒரு சகோதரி வீட்டிற்குத் திரும்பி வந்து விடுவாள். இவளுடைய குணதிசங்களைச் சொல்லுகிறேன். இவள் மாநிறமான தேகத்தை உடையவள். இனிமையாக வார்த்தைகளைச் சொல்லுவாள். இவளுக்குப் புருஷன் வடக்குத் திக்கிலிருந்து வருவான். இவள் தன்னுடைய வீட்டிலேயே சம்பத்துடன் இருந்து வாழ்வாள்.

5. மத்தியில் விதவை யாகி வரனில்லம் விட்டு நீங்கிப்
பெற்றதா யில்லம் வாழ்வள் புத்திரர் காணு ளாகுஞ்
சத்திக்குச் சுதர்கள் தோஷந் தாயில்லஞ் சேரும்சேதி
குத்தத்தைச் சொல்லு மென்னக் கோதையும் பூர்வம் தன்னில்

5. ஜாதகரின் தகப்பனருடைய சகோதரி மத்திய வயதில் விதவையாகித் தன்னுடைய புருஷனுடைய வீட்டை விட்டுப் பிரிந்து தன்னைப் பெற்றெடுத்தத் தாயாருடைய வீட்டிற்குப் போய் அவ்விடத்தில் வாழ்வாள் இவளுக்குக் குழந்தைகள் கிடையா. இவளுக்குப் புத்திரதோஷம் உண்டாகுதல் இவள் தாயாருடைய வீட்டிற்குப் போய்ச் சேர்தல் ஆகிய இந்தத் தோஷங்கள் உண்டாகுவதற்குக் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்க, சொல்லுகின்றார். இவள் தன்னுடைய முன் ஜன்மத்தில்,

6. வினையதை அதிகம் செய்தாள் விளம்புவீர் சங்கை தன்னைச்
சினமிலாப் பட்சி தன்னில் ஜனித்தனள் கங்கை சேயாய்
அணையவே வரனு முண்டாய் அவனியோர் மதிக்க வாழ்ந்து
பிணையதைப் புகலக் கேண்மோ பெம்மானின் உற்சவத்தில் ;

6. அதிகமான பாவங்களைச் செய்திருக்கின்றாள் என்று பதில் சொல்லவே அந்தப் பாவங்களைச் சொல்லுவீர் என்று கேட்டார். இவள் பட்சிஸ்தலமாகிய திருக்கழுக் குன்றத்தில் வேளார் குலத்தில் பெண் குழந்தையாகப் பிறந்தாள். இவள் புருஷனை அடைந்து பூமியில் உள்ளவர்கள் இவளை மதிக்கும் படியான அந்தஸ்திலிருந்து வாழ்ந்து வருகிற காலத்தில் இவளுக்கு வந்து நேர்ந்த பாவத்தைச் சொல்லுகிறேன். கேட்பீராக. சிவபெருமானுடைய உற்சவகாலத்தில் ;

7. வரனுடன் சென்று யின்னேள் மஹாதேவ ரடிபணிந்து
விரைவினில் கடைவீ திக்கு மேவியே சிவப்பு சீப்பு
உரைமஞ்சள் வாங்கிக் கொண்டு உத்தமி மான்போல் சென்றாள்
பொருளது யீயாளாகிப் பின்வணி கனுமே பார்த்து ;

7. தகப்பனுருடைய சகோதரியானவள் தன்னுடைய புருஷனுடன் போய்ப் பெரிய கடவுளாகிய சிவபெருமானைத் தொழுது தரிசித்து வணங்கிப் பிறகு சீக்கிரத்தில் கடைத் தெருவிற்குப் போய்ச் சிவப்பு நிறமுள்ள குங்குமம், சீப்பு, உரைக்கின்ற மஞ்சள் ஆகிய இவைகளை வாங்கிக் கொண்டு அவைகளின் கிரயத்தைக் கொடுக்காமல் மானைப் போலச் சீக்கிரத்தில் மறைந்து போய்விட்டாள். பிறகு வியாபாரியும் இவளைத் தேடிப் பார்த்து

8. மங்கையைக் காணுகி வரைகிறன் சாபந் தானுங்
குங்கும மஞ்சள் சீப்புக் கோதையும் வாங்கிக் கொண்டு
தங்கமு மீயாச் சென்றாள் சிவப்பு களாகா முன்னம்
பங்கமாய் வரனு மாண்டு பாலர்க ளில்லா தாகி

8. இவள் காணாமற்போனதால் சாபத்தைக் கொடுக்கின்றார். குங்குமம், மஞ்சள், சீப்பு இவைகளை இந்த ஸ்திரீ வாங்கிக் கொண்டு பணத்தைக் கொடுக்காமல் மறைந்து போய்விட்டாள். சிவப்பு வஸ்துவாகிய குங்குமம் செலவாவதற்கு முன்னமே இந்த ஸ்திரீக்கு பங்கம் உண்டாகும்படியாக இவளுடைய புருஷன் இறந்தும் இவளுக்குக் குழந்தைகள் இல்லாமலும் ;

9. மறுஜன்மம் மங்கை தோன்றி மணமாகி வரனு மாண்டு
சிறையாகித் தாயில் லத்தில் சேருவா யென்று சொல்லித்
தெருதூளைத் தூற்றிச் சென்றார் சேர்ந்தது அந்தத் தோஷம்
குறைவுண்டாய் அந்த ஆண்டில் கொழுநனு மரண மாகி ;

9. மறுபிறப்பில் இவள் பெண்ணுகப் பிறந்து விவாகத்தை அடைந்து இவளுடைய புருஷன் இறந்து சிறையில் இருப்பதைப் போல இவள் தன்னுடைய தாயாருடைய வீட்டிற்குப் போய்ச் சேரக் கடவது என்று சொல்லி அந்த வியாபாரி தெருவிலுள்ள மண்ணை வாரி எடுத்துத் தூற்றி விட்டுப் போய் விட்டார். அந்தத் தோஷமானது இவளை வந்து அடைந்தது. முன் ஜன்மத்தில் அதே வருஷத்தில் கெடுதிகள் சம்பவித்துப் புருஷனும் இறந்து ;

10. சிறையாகச் சிலநாள் சென்று தேவியும் மாண மாகிப்
பிரமனுல் வரையப் பட்டுப் பிறந்தன ளிந்த மாது
அரிவைக்கு வணிபன் சாபம் அணுகிற்று இச்சென் மத்தில்
குறையாக மத்தி யில்தான் கொழுநனு மரண மாகி ;

10. சிறிதுகாலம் சிறையிலிருப்பது போல விருந்து இவள் இறந்து பிரம தேவனுல் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து இவள் பிறந்திருக்கின்றுள். இவளுக்கு இந்த ஜன்மத்தில் அந்த வியாபாரியினுடைய சாபம் வந்து அடைந்தது. இவளுக்கு பங்கமாக மத்திய வயதில் புருஷனும் இறந்து;

11. சஞ்சல மனத்தா ளாகித் தாயில்லம் வாழ்வா ளாகும்
வஞ்சிபின் ஜன்மஞ் சொல்வேன் மலைநாட்டில் பெரும டத்தில்
தஞ்சமாய் இக்குலத்தில் சாறுவா ளென்று சொல்வோம்
கொஞ்சியே யிருபதாண்டில் குலவுவாள் காலந் நாடு.

11. இவள்துக்கத்தை அடைந்த மனத்தைஉடையவளாகித் தன்னுடைய தாயார் வீட்டில் வசிப்பவளாவாள். இவளுடைய பின் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் மலை தேசத்தில் பெருமடத்தில் இந்த ஜென்மத்திற் பிறந்த குலத்திலேயே பிறப்பாள் என்று சொல்லுகின்றேம். இவள் ஜாதகருக்கு இருபதாவது வயதில் இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேருவாள்.

12. பின்பாகம் மற்றோர் சேதி பேசுவோந் தாயே யாங்கள்
தந்தையின் குணத்தைச் சொல்வேன் சாந்தவா னுாகசாலி
முந்தின கல்வி கற்பன் மால்நிறம் தேவ பத்தி
சந்ததம் வறுமை காணன் ஜனஉப காரி யாமே.

12. தகப்பனுருடைய சகோதரர்களில் மற்றவர்களுடைய விஷயங்களைப் பற்றிப் பின் பாகத்தில் நாங்கள் சொல்லுகின்றேம். எங்களுடைய தயாராகிய பார்வதியம்மையே ! ஜாதகரின் தகப்பனுருடைய குணதிசயங்களைப் பற்றிச் சொல்லுகிறேன். இவர் சாந்த குணமுடையவர். நுட்பமான அறிவும் புத்தியும் உடையவர். மேன்மையான முதல் தரமான வித்தையை உடையவர். மகா விஷ்ணுவின் நிறமாகிய நீலமேக வர்ணம் என்ற ஒரு விதமான நிறமுள்ள தேகத்தை உடையவர். தெய்வ பக்தியும் அன்பும் உடையவர். ஒருபோதும் கஷ்டத்தையும் தரித்திரத்தையும் அனுபவிக்கமாட்டார், ஜனங்களுக்கு உபகாரஞ் செய்பவராவார்

13. பாக்கிய முடையா னுக்குப் பாரினில் சல்லிய முள்ளான்
யோக்கிய ஞகி வாழ்வான் உண்மையா மனத்தா னுகும்
வாக்கது சுத்த முள்ளான் மாநில மதிகஞ் சேர்ப்பன்
நீக்குவான் அற்பர் தம்மை நேமியோர் மெச்ச வாழ்வன்.

13. ஜாதகருடைய தகப்பனுர் செல்வத்தை உடையவரிடத்தில் கடன் பட்டிருப்பார். நல்லகுணங்களை உடையவராகவிருந்து வாழ்வார். உண்மையான மனத்தை உடையவராவார். சுத்தமான நல்ல வார்த்தைகளை உப

யோகப்படுத்துவார். பெரிய நிலங்களை அதிகமாகச் சேகரிப்பார். தாழ்ந்த வர்களையும் அற்பமான குணமுடையவர்களையும் விலக்கிவிடுவார். பூமி யிலுள்ளவர்கள் இவரை மெச்சும்படியான அந்தஸ்திலிருந்து வாழ் வார்.

14. உரோமங்கள் நீட்சி யுள்ளான் நுவலுப தேசங் கொள்வன்
சேமமாங் குடும்பி யாவன் ஜன சகாயங்கள் செய்வன்
காமனை விருப்பங் கொள்வன் கரமதில் சங்கு சக்கரம்
தீமையை யொருவர்க் கெண்ணுன் சொல்லுமுன் கோபி யாவன்.

14. ஜாதகருடைய தகப்பனார் தன்னுடைய தேகத்தில் நீண்ட மயிரை உடையவர். குருவினிடத்தில் உபதேசத்தை அடைவார். சௌக்கியமான நல்ல குடும்பஸ்தராவார். ஜனங்களுக்கு உபகாரங்களைச் செய்வார். அதிகமான காம ஆசையை உடையவர், இவருடைய உள் ளங் கையில் சங்கு சக்கர ரேகை என்ற ஒரு விதமான ரேகை இருக்கும். எவருக்குங் கெடுதியை நினைக்கமாட்டார். பேசுவதற்கு முன்னே கோபத்தை அடைபவராவார்.

15. இந்நெறி யுடையானுக்கு யிருதார மிளையா ளுக்கு
அன்னவ னுதிப்பா னாகும் அவன்துணை ஆண்பால் காணுன்
கன்னிமார் மூவர் தீர்க்கங் கழறினீர் முன்தா யொன்று
அன்னவள் தீர்க்கமோசொல் அழியுமோ விவரஞ் சொல்வாய்.

15. இவ்விதமான குணாதிசயங்களை உடைய தகப்பனாருக்கு இரண்டு மனைவி களில் இளைய மனைவியிடம் இந்த ஜாதகர் பிறப்பார். இவருக்கு ஆண் சகோ தரர் கிடையாது †. மூன்று சகோதரிகள் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள். இவருக்கு ஒரு பெரிய தாயார் உண்டு என்று சொன்னீர். இந்தப் பெரிய தாயார் நீண்ட ஆயுளை உடையவளோ ? அல்லது இறந்து விடுவாளோ? என்பதை விவரமாகச் சொல்லுவீர்.

† **குறிப்பு.—ஆண் சகோதர விஷயம் :—**சகோதர ஸ்தானங்கள் மூன் றும் பதினொன்றும் ஆகும். மூன்றாவது பாவத்தில் சனி இருப்பதால் சம்பு ஹோராபிரகாசா சகோதரபாவம் 58-ஆவது சுலோகப் பிரகாரம் முன்பின் சகோதரர்களுக்குத் தோஷமுண்டு. மூன்றிற்குடையவரான புதனுடன் சூரியன் கூடி எட்டில் இருப்பதால் மணிகண்டகோளம் சகோதரகாண்டம் ஆறாவது பாடல் பிரகாரம் பின் சகோதரனுக்குத் தோஷம் இருக்கின்றது. பதினோராம் வீட்டிற்குடையவராகிய சுக்கிரன் எட்டில் மறைந்து சூரியனுடன் கூடி திருதீய விரயாதிபதியாகிய புதனுடன் கூடி இருப்பது மூத்த சகோதரதோஷமாகும். மூத்த ஆண் சகோதரகாரகனாகிய குரு பதினொன் றிற்குப் பன்னிரண்டில் ராகுவுடனும் அங்காரகனுடனும் கூடி மறைந்திருப் பது மூத்த ஆண் சகோதரதோஷம் ஆகும்.

16. முன்மாதா தீர்க்கமெய்தும் உதித்தயில் அயலூர் தெற்குத்
தன்துணை ஆண்பால் மூன்று சத்தியும் ஒன்றே யாகும்
அன்னவன் சுதர்கள் நான்கு அணுகிடுஞ் சிலவே சேதம்
கன்னிகை ஒன்று தீர்க்கங் கடைமாதாய்ப் புகல லாமே.

16. ஜாதகருடைய பெரிய தாயார் நீண்ட ஆயுளை உடையவளாவாள். இவள் பிறந்த வீடு அடுத்த ஊரில் தெற்குத்திக்கில் இருக்கும். இவளுடன் கூடப் பிறந்தவர்களில் ஆண் சகோதரங்கள் மூன்று பேரும், ஒரு பெண் சகோதரமும் உண்டு. இவளுக்கு நான்கு குழந்தைகள் பிறக்கும். இந்தக் குழந்தைகளில் சில குழந்தைகள் இறந்து விடுவார்கள். ஒரு பெண் குழந்தை நீண்ட ஆயுளை உடையதாக விருக்கும். இந்தப் பெண் குழந்தையும் கடைசி யில் பிறந்த குழந்தை என்று சொல்லலாம்.

17. அது நிற்க இவன்தாய் சேர்ந்த ஆச்சர்யஞ் சொல்லு மென்ன
அதிபதி கேயத் தாலும் மாதுவின் மோகத் தாலுஞ்
சதியாக நேர்ந்த தென்றேஞ் சாற்றுவோம் பின்பால் சேதி
விதியது பூர்வ மென்றேஞ் வித்தகி கேட்டி டாயே.

17. அந்த விஷயம் அவ்விதமாகயிருக்க, ஜாதகருடைய தாயார் வந்து சேர்ந்த ஆச்சரியமான விஷயத்தைச் சொலுவீர் என்று கேட்க, சொல்லு லுகின்றுர். தகப்பனுருடைய இசைப்பாட்டாலும் இதை மெச்சின தாயா ருடைய காம ஆசையாலும் இவ்விதமாக, இவர்கள் இருவருக்கும் சினேகம் நேர்ந்தது என்று சொல்லுகின்றேம். இந்த விஷயத்தைப் பற்றிப் பின்னுல் சொல்லுகின்றேம். இவ்விதமாக நேர்ந்தது பூர்வ ஜன்மத்திய வினை என்று நாங்கள் சொல்லுகின்றேம். பார்வதியம்மையே! கேட் பீராக.

18. உதித்தவன் துணைமுன் சேதி உரைக்கிறேம் மால்நிறத்தாள்
சதியிலா மனத்தா ளாகும் சாயல் நேத்திரமு மாவள்
கதிதர விந்தம் பூண்பள் கணவனும் உள்ளூர் தெற்கு
விதியினுல் மாமன் தன்னை வித்தகி மாலை பூண்பள்.

18. ஜாதகருடைய மூத்த சகோதரியினுடைய விஷயங்களைச் சொல்லுகின் றேம். இவள் மகாவிஷ்ணுவின் நிறமாகிய நீல மேகவர்ணம் என்ற ஒருவிதமான நிற முடைய தேகத்தை உடையவளாவள். கெடுதியான மனம் இல்லாதவளாவாள். சாய்ந்த பார்வையை உடைய கண்களை உடையவளா வாள். அதிர்ஷ்டத்தையும் ஐசுவரியத்தையுங் கொடுக்கின்ற மாணிக்கங்கள் அமைந்த ஆபரணங்களை அணிந்துகொள்ளுவாள். இவளுக்குப் புருஷனுக உள்ளூரிலேயே தெற்கிலிருந்து முன்ஜன்மத்தின் பயனுக அம்மான் வந்து நேரிடுவான்.

19. சுதர்களு மிருநான் காகத் தோன்றிடும் ஆண்பால் மூன்று
தோகையு மொன்று என்றேம் பதராகு மற்ற வெல்லாம்
பாவையுஞ் சுகமாய் வாழ்வன் அதிபன்தன் சேதி கேளாய்
மாநிறம் கல்வி மானுந் ததி நெய்பா லிஷ்டம் சகலர்க்கு நல்
[லோனுவன்.

19. ஜாதகருடைய சகோதரர்களில் மூத்தவளுக்கு எட்டுக் குழந்தைகள் உண்டாகும். இவர்களில் மூன்று ஆண் குழந்தைகளும் ஒரு பெண் குழந்தை யும் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லு

கின்றோம். மற்றக் குழந்தைகள் உபயோகமில்லாமல் இறந்துபோய் விடுவார்கள். இந்தச் சகோதரி சௌக்கியத்துடனிருந்து வாழ்வாள். இனிமேல் ஜாதகருடைய விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். கேட்பீராக. இவர் மாநிறமுள்ள தேகத்தை உடையவர். வித்தையை உடையவராவார். தயிர் நெய் பால் இவைகளின்மேல் பிரியம் உள்ளவர். எல்லோருக்கும் நல்லவராக விருப்பார்.

20. உண்டியுஞ் சுகமாய்க் கொள்வன் உறைப்பொடு புளிப்பி லிச்சை
கண்டித முடை யானுகுங் காலாள்களுடைய னுகுந்
துண்டமாய் வார்த்தை கூருன் தொடுத்ததை வெல்வா னுகும்
பண்டுபண் டார முள்ளான் பணியோர்கள் விருத்தி செய்வன்.

20. ஜாதகர் சுகத்தைக் கொடுக்கக்கூடிய நல்ல ஆகாரத்தைச் சாப்பிடுவார். இவருக்குக் காரத்திலும் புளிப்பிலும் ஆசை உண்டு. கண்டிப்பான பேச்சுகளை உடையவராவார். கால்நடை வேலையாட்களை உடையவராவார். அறை குறையான, வார்த்தைகளைத் துடிப்புடன் அவசரப்பட்டுச் சொல்லமாட்டார். தான் செய்ய ஆரம்பித்த காரியங்களைப் பூர்த்தி செய்து ஜயத்தை அடைபவராவார். இவர் பழைமையான பொக்கிஷத்தையும் துரைத் தனத்தையும் உடையவராவர். செய்கால் நிலங்களையும் ஏர்களையும் விருத்தி யாக்குவார்.

21. நல்லோர்க்கு நல்லவ னுவன் நயம்படக் கூறு நெஞ்சம்
இல்லையென் றுரைக்க மாட்டான் இடரென்றோர்க் குதவி செய்வன்
சொல்லதைக் காப்பா னுகுந் துரை ராசர் பேட்டி கொள்வன்
மல்லுக்கு முன்செல் லாதான் மாநிலம் விருத்தி செய்வன்.

21. ஜாதகர் நல்லவர்களுக்கு நல்லவராக விருப்பார். இனிமையாகவும் நப்பாகவும் பேசும்படியான மனத்தை உடையவர். யாருக்கும் தன்னிடம் ஒன்றும் கிடையாது என்று சொல்லமாட்டார். கஷ்டத்தையும் தரித்திரத்தையும் அடைந்திருக்கின்றோம் என்று சொல்லுகின்றவர்களுக்கு உபகாரத்தைச் செய்வார். தான் சொல்லியவார்த்தைகளைத் தவறிடாமல் காப்பாற்றுவார். அரசர்களுடைய தரிசனத்தை அடைவார். சண்டையில் முன்னே போகாதவராவார். பெரிய நிலங்களைப் பயிரிட்டுத் தானியங்களை விருத்தியாக்குவார்.

22. குருவுப தேசங் கொள்வன் குவலய நல்லோ னுவன்
திருமகள் வாச முண்டு தந்தைக்குத் தாழுவு றுதான்
பொய்சொல்லான் மணத்தின் காலம் புகலுவோம் பதினைந்
[தாண்டில்
வருமனை வடபால் நேரும் வரைகிறே மவள்கு ணத்தை.

22. ஜாதகர் தன்னுடைய குருவினிடத்தில் உபதேசத்தைப் பெற்றுக் கொள்ளுவார். பூமியில் நல்லவராகவிருப்பார். இவரிடத்தில் லட்சுமி குடி கொண்டிருப்பாள். இவர் தன்னுடைய தகப்பனுருடைய அந்தஸ்திற்குத் தாழ்ந்த அந்தஸ்தில் இருக்கமாட்டார், பொய்யைச் சொல்லமாட்டார்.

இவருடைய விவாகத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்குப் பதினைந் தாவது †வயதில், வடக்குத் திக்கிலிருந்து மனைவி வந்து நேரிடுவாள். அவளுடைய குணநிசயங்களைப் பற்றிச் சொல்லுகிறோம்.

† குறிப்பு.—ஜாதகரின் விவாகவிஷயம் :—ஜாதகருக்கு வயது ஞூ 14 முதல் ஞூ 15 முடியும் வரையிலும் சுக்கிர தசையில் ராகு புக்தி நடக்கின்றது. சுக்கிரன் களத்திரகாரகனுகிப் போக ஸ்தானமாகிய நான்காவது பாவமாகிய துலாத்திற்கு அதிபதியுமாகிக் குடும்பாதிபதியுமாகிய சூரியனுடன் கூடிப் போககாரகனுகிய ராகுவால் பார்க்கப்பட்டிருக்கின்றுர். ஆகையால் இவருக்குத் தன் தசையில் விவாகஞ் செய்துவைக்க அமைப்பு இருக்கின்றது. மேலும் கீர்த்தி ஸ்தானம் என்ற பத்தாம் வீட்டிற்குடைய அங்காரகனும் சனியும் லக்கி னத்திலிருந்து இருபக்கமாக நான்கு ராசிகளுக்குள்ளிருப்பதால் ஜாதகசிந்தா மணி ஏழாவது பாவம் 974 ஆவது பாடல் பிரகாரம் வாலிபவிவாகஅமைப்பு இருக்கின்றது. ராகு போககாரகனுகி ஒன்பது பத்திற்குடையவர்களாகிய குரு வுடனும் அங்காரனுடனுங் கூடி இருப்பதால் ஜாதகசந்திரிகா 12ஆவது சுலோ கம் ஜாதகபாரிஜாதம் 14 ஆவது அத்தியாயம் 29 ஆவது சுலோகம் ஆகிய இவைகள் பிரகாரம் தன் புக்தியில் விவாகம் செய்துவைக்கும் அமைப்பு உடையவராகின்றுர்.

23. மாநிறஞ் சமதேகத்தாள் மாரன்தன் மனம்போல் வாழவள்
தேன்மொழி கூறு வாளாஞ் சீக்கிர நடையு மாகும்
ஈனமாங் குணமில் லாதா ளிடரென்றோர்க் குதவி செய்வள்
மேன்மையாய் விரதம் பூண்பள் மெல்லிநன் நடக்கை யுண்டு.

23. ஜாதகருடைய மனைவி மாநிறமுள்ள தேகத்தை உடையவள். நடுத் தரமான தேகத்தை உடையவள். தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தபடி ஒத்துவாழ்வாள். தேனைப்போல இனிமையான வார்த்தைகளைச் சொல்லுபவளாவள். சீக்கிரமாகவும் வேகமாகவும் நடக்கக்கூடிய வளாகும். தாழ்ந்த கெட்ட குணங்களை உடையவளல்லள். கஷ்டத்தை யும் தரித்திரத்தையும் அடைந்திருக்கின்றோம் என்று சொல்லுகிறவர் களுக்கு உபகாரத்தைச் செய்வாள். விரதங்களை மேன்மையுடனும் சிறப்புட னும் அனுஷ்டிப்பாள். இவள் நல்லொழுக்கத்தையும் நல்ல நடக்கையை யும் உடையவளாவாள்.

24. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோ மாண்பால் ரண்டு
சத்தியு மவ்வாறு தீர்க்கஞ் சேரண மவ்வா றென்றோங்
குத்தமா முதலி லேதான் கூறுவோம் பின்பால் சேதி
அத்தியைப் பெற்ற மாதே அறைகிறோ மன்னை சேதி.

24. ஜாதகரது புத்திர பாவத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு இரண்டு ஆண் குழந்தைகளும் இரண்டு பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள். இரண்டு ஆண் குழந்தை களும் இரண்டு பெண் குழந்தைகளும் இறந்து விடுவார்கள் என்று சொல்லு கின்றோம். முதலில் பிறக்கும் குழந்தைகள் இறந்து விடுவார்கள். இந்த விஷயத்தைப் பற்றிப் பின்னால் சொல்லுகின்றோம். தேவர்களின் தாயா ரைப் பெற்றெடுத்தப் பார்வதியம்மையே! ஜாதகருடைய தாயாரின் விஷயங் களைப் பற்றிச் சொல்லுகின்றோம்.

25. மால்நிறம் உணச்சல் தேகி மருமுங் கொஞ்ச முண்டு
தேன்மொழி யீகை கொஞ்சஞ் செப்புமுன் கோபி யாவள்
ஊனமில் லாத தேகி உள்ளூரா மன்னை யில்லம்
மான்விழி துணைஆண் ரண்டு மங்கையும் மூன்று தீர்க்கம்.

25. ஜாதகருடைய தாயார் மகாவிஷ்ணுவின் நிறமாகிய நீலமேகவர்ணம் என்ற ஒருவிதமான நிறமுடைய தேகத்தை உடையவளாவள். வரண்ட மெல்லிய தேகத்தை உடையவள். கொஞ்சம் ரகசியத்தையுடைய மனத்தை உடையவள். தேனைப்போன்ற இனிமையான வார்த்தைகளை உடையவள். கொஞ்சம் கொடுக்கின்ற தயாள குணத்தை உடையவள். பேசுவ தற்கு முன்னே கொஞ்சம் கோபத்தை உடையவள். அவயவ பங்கம் இல்லாத தேகத்தை உடையவள். இவளுடைய தாயாருடைய வீடு உள்ளூ ரிலேயே இருக்கும். மானுடைய கண்களைப்போல அழகான கண்களை உடைய தாயாருக்கு இரண்டு ஆண் சகோதரர்களும் மூன்று சகோதரிகளும் நீண்ட ஆயுளை உடையவர்களாகவிருப்பார்கள்.

26. அன்னையின் பூர்வஞ் சொல்லுவேன் அச்சிறு பாக்கம் பக்கல்
சின்னஊர் தன்னி லேதான் ஜனித்தனள் வைசியச் சேயாய்ப்
பொன்பணி யுடையாளாகிப் புகழான குடும்ப மேற்றுத்
தன்வரன் மதலை யுண்டாய்த் தானவள் வினையு மின்றிற்றுத்

26. ஜாதகரின் தாயாருடைய முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின் றேன். இவள் அச்சிறுபாக்கத்திற்குப் பக்கத்தில் உள்ள ஒரு சிறிய கிராமத் தில் வைசியர் குலத்தில் பெண்குழந்தையாகப் பிறந்தாள். தனம் ஆடை ஆபரணங்கள் ஆகிய இவைகளை உடையவளாகிப் பெருமையும கீர்த்தியும் உடைய குடும்பத்தை அடைந்து புருஷன் மக்கள் இவர்களை உடையவளாகி யாதொரு பாபமும் இல்லாமல் ;

27. காலன்தன் பதிக்குச் சென்று கஞ்ஜனால் வரையப் பட்டுச்
சீலமா மருகர் வர்க்கஞ் ஜனித்தவளிவளே யென்றோம்
ஏலவே யிவள்பின் ஜன்ம மியம்புவோந் தொண்டை நாட்டில்
சாலவே வைசியச் சேயாய்ச் சார்வளர மென்று சொல்வோம்.

27. இறந்து எமபட்டணத்திற்குப் போய்ப் பிரமதேவனால் பிரமலிபி யுடன் எழுதப்பட்டு நல்லொழுக்கமும் நல்ல நடவடிக்கையும் உடைய சமண ருடைய குலத்திற் பிறந்தாள் என்று சொல்லுகிறோம். இவளுடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவள் தொண்டை நாட்டில் நல்ல வைசிய ஜாதியில் பெண் குழந்தையாய்ப் பிறப்பாள் என்று சொல்லு கின்றோம்.

28. சேனையு முடைய ளென்று செப்புவோம் பின்ஜன் மத்தில்
வினைசெய்யும் வைசியச் சேயாய் மேவுங்கா ரணங்க ளென்னச்
சினமது அதிக மாயுஞ் சொல்லது அதிக மாயுங்
கனமுள விரத மின்றிக் கன்னிகை வாழ்ந்த தாலே ;

28. ஜாதகருடைய தாயார் தன்னுடைய மறுபிறப்பில் பந்துக்களை உடையவளென்று சொல்லுகின்றேம். மறுஜன்மத்தில் பாவங்களைச் செய்கின்ற வைசிய ஜாதியில் பிறப்பதற்குக் காரணங்களைச் சொல்லுவீர் என்றுகேட்க, சொல்லுகின்ருர். அதிக கோபமுடையவளாயும் அதிகமாகப் பேசுபவளாயும் மேன்மையான சிறந்த விரதங்களை அனுஷ்டிக்காதவளாயும் இவன் இருந்து வாழ்ந்ததால் ;

29. உதிப்பளா மென்று சொல்வோம் உரைக்கிறேந் தந்தை பூர்வம்
முதல்தலந் தன்னி லேதான் உதித்தனன் பிரம்ம சேயாய்
அதிதிகட் கன்ன மீந்து அறமதி லிச்சை யுண்டாய்
நதிபல தேசஞ் சென்று நமன்பதிக் காளா யின்னேன் ;

29. இவ்விதமாகப் பிறப்பாளென்று சொல்லுவோம். ஜாதகருடைய தகப்பனுரின் முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேம். முதன்மையான ஸ்தலத்தில், அ∴தாவது பஞ்சபூதஸ்தலங்களாகிய பஞ்சஸ்தலங்களில் முதன்மையான ஸ்தலமாகிய சிதம்பரத்தில் தகப்பனுர் பிராமணர் குலத்தில் ஆண்குழந்தையாய்ப் பிறந்தார். பரதேசிகளுக்குச் சாப்பாடுபோட்டுத் தருமஞ் செய்வதில் ஆசை உடையவராய்ப் புண்ணிய நதிகளை உடைய அநேக தேசங்களுக்குப் போய்ப் பிறகு இறந்து எமபட்டணத்திற்குச் சென்று;

30. கஞ்சனுல் வரையப் பட்டுக் கலந்தன ணிக்கு லத்தில்
மிஞ்சிய ஜன்மஞ் சொல்வேன் வடமேல்பால் பெருமத் துரில்
தஞ்சமா யிக்கு லத்தில் ஜனித்துமே அருகர் பூசை
கொஞ்சியே செய்வா ணுகுங் குறையின்றி வாழ்வ.ா ணுமே.

30. பிரமதேவனுல் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் இந்தச் சமணர் குலத்தில் வந்து பிறந்திருக்கின்ருர். மிகுதியான, அ∴தாவது மறுஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். வடமேற்குத் திக்கில் உள்ள பெருமத்தூரில் இந்த ஜன்மத்திய குலமாகிய சமணர் குலத்திற் பிறந்து சமணருடைய தேவரைப் பூஜை செய்பவராவார். கஷ்டங்கள் இல்லாமலும் வாழ்பவராவார்.

31. பாலகன் பூர்வ வமிசம் பட்சியின் வடபால் தன்னில்
சீலமாங் கங்கை சேயாய் ஜனித்துமே கிருஷி செய்து
மால்பூசை அதிக முண்டாய் மனைவிமைந் தருமுண் டாகிச்
சாலவே வினைக ளின்றிச் சண்டன்தன் பதிக்குப் புக்கி;

31. ஜாதகருடைய முன் ஜன்மத்திய குலத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன். பட்சி ஸ்தலமாகிய திருக்கழுக்குன்றத்தில் நல்ல ஒழுக்கங்களையுடைய வேளாளர் குலத்தில் இவர் பிறந்து விவசாயத் தொழிலைச் செய்துகொண்டு மகாவிஷ்ணுவை அதிகமாகப் பூஜைசெய்துகொண்டு மனைவி மக்கள் ஆகிய இவர்களை உடையவராகிப் பாவங்கள் அதிகமாக வில்லாதவராகி இறந்து எமனிடத்திற்குச் சென்று;

32. சினகுல முதிப்பா ருகுஞ் செப்புவோ மிவனின் யோகங்
கனமுள குடும்பி யாவன் கனதன தானிய முள்ளான்
இன்மது மெச்ச வாழ்வன் இடரென் றோர்க் குதவி செய்வன்
பணையோர்கள் விருத்தி செய்வன் பார்வதி கேட்டி டாயே.

32. இந்தச் சமணருடைய குலத்தில் வந்து இந்த ஜன்மத்தில் ஜாதகர் பிறப்பார். இவருடைய யோகங்களைப்பற்றிச் சொல்லுகின்றோம். மேன்மை யானதும் சிறந்ததுமான குடும்பஸ்தராக ஜாதகர் இருப்பார். அதிக தனத்தையும் தானியங்களையும் உடையவராவார். இவர் தன்னுடைய பந்துக்கள் தன்னை மெச்சும்படியான அந்தஸ்திலிருந்து வாழ்வார். கஷ்டத்தையும் தரித்திரத்தையும் அடைந்திருக்கின்றோம் என்று சொல்லுகிறவர்களுக்கு உபகாரஞ் செய்வார். பயிரிடும் பூமிகளையும் ஏர்களையும் விருத்தியாக்குவார், அதிகப்படுத்துவார், பார்வதியம்மையே ! கேட்பீராக

33. தருமகர் மாதி யோகஞ் சாற்றுவோம் பலனை யாங்கள்
திருப்பணி செய்வா ருகுந் திகம்பரன் பூசை பூண்பன்
வருவோரை ஆத ரிப்பன் அரசர்கள் பேட்டி கொள்வன்
பெருமையாய்ப் புகழு மேற்பன் பூடஷஞ் சேர்ப்பா ருகும்.

33. தர்மகர்மாதியோகம் என்ற ஒருவித யோகத்தின் பலாபலன்களை நாங்கள் சொல்லுகின்றோம். ஜாதகர் கோயில்களில் கோயில் வேலைகளை செய்வார். சிவபெருமானைப் பூஜை செய்வார். தன்னிடத்திற்கு வருகின்றவர்களைக் காப்பாற்றுவார். அரசர்களுடைய தரிசனத்தைப் பெறுவார். பெருமையையும் மேன்மையையும் கீர்த்தியையும் அடைவார். ஆபரணங்களைச் சேர்த்து வைப்பவராவார்.

**வேறு**

34. இரவிக்கு [1] மூன்றில் குசனி[2]ருக்க நவில்வீர்
முனியே தந்தைக்குப்
பவமாய்க் கர்ணந் தானடைப்பு
பகர்வோமன்றித் துணை காணுன்
நவமே விருத்திதான் செய்வன்
நல்கும் வேறு யில்லமுமே
தவமே புரிவன் துரைராஜர்
தானு மறிவன் சங்கரியே.

34. சூரியனுக்கு மூன்ருவது வீட்டில் அங்காரகன் இருப்பதால், முனிவரே ! தகப்பனுருடைய பலனைச் சொல்லுவீராக. தகப்பனுருக்குப் பாபத்தால் காது கேட்காது என்று சொல்லுகிறேம். இதுவுமல்லாமல் இவருக்கு (ஆண்) * சகோதரர்கள் கிடையாது. பூமியை விருத்தி செய்வார். இவருக்கு வேறு ஒரு வீடும் கிடைக்கும். இவர் தவங்களைச் செய்பவர். அரசர் களைத் தரிசிக்கக் கூடியவராவார். பார்வதியம்மையே !

* **குறிப்பு**.—நான்காவது பாடலில் ஆண் சகோதரர் கிடையாது என்று சொல்லி இருப்பதைக் கவனிக்கவும். பிதுர் லக்கினம் ஒன்பதாவது பாவ

[1] சூரியன். [2] அங்காரகன்.

மாகிய மீனம் ஆகும். இதற்கு இளைய சகோதர ஸ்தானாதிபதியாகிய மூன்றிற்குடைய சுக்கிரன் சூரியனுடன்கூடி மீனத்திற்குப் பன்னிரண்டில் மறைந்திருக்கின்றார். மணிகண்டகேரளம் சகோதரபாவம் ஆறுவது பாடல் பிரகாரம் பின் ஆண் சகோதரனுக்குத் தோஷம் இருக்கின்றது. மூத்த ஆண் சகோதரகாரனாகிய குரு இராகுவுடனும் அங்காரகனுடனும் கூடி இருப்பது மூத்த ஆண் சகோதரனுக்குத் தோஷமாக இருக்கின்றது. இங்குச் சூரியனைப் பிதுர் லக்கினமாக வைத்துக்கொண்டு பிதாவின் காதின் பலனைச் சொல்லு கின்றார். இதற்கு ஆதாரமாகப் பலதீபிகை பதினைந்தாவது அத்தியாயம் இருபத்திரண்டாவது சுலோகத்தைப் பார்க்கவும். காது ஸ்தானம் மூன்று மிடமும் பதினோராமிடமும் ஆகும். இங்குச் சூரியனுக்கு மூன்றிற்குடைய அங்காரகனும், பதினொன்றிற்குடைய குருவும் சூரியனுக்கு மூன்றில் இராகு வுடன்கூடி இருப்பதால் காது தோஷத்தைச் சொல்லி இருக்கின்றார்.

35. இருபது எழு ஆண்டில் இவன்தந்தை கண்டம் நேரும்
மறலியைக் காணு தாகும் வாறஞ்சு மூன்று ஆண்டில்
பெருங்கன்னி மாதந் தன்னில் பூரண கண்ட மென்றோம்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

35. ஜாதகருக்கு இருபத்தேழாவது வயதில் ‡ இவருடைய தகப்பனாருக்குக் கண்டம் நேரிடும். ஆனால் அப்போது அவர் எமனைத் தரிசிக்க மாட்டார். முப்பத்துமூன்றாவது வயதில் புரட்டாசி மாதத்தில் இவருக்கு மரணம் நேரிடும் என்று சொல்லுகின்றோம். அருமையான வேதங்களின் முடிவு என்ற உபநிஷத்துக்களில் ஆனந்தமாக விளங்குகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

‡ குறிப்பு.—தகப்பனார் மரண விஷயம் :—ஜாதகருக்கு வயது ஷூ 26—0—0 முதல் ஷூ 27—0—0 முடியும் வரையிலும் சூரிய தசை நடக் கின்றது. பிதுர் லக்கினம் ஒன்பதாவது பாவமாகிய மீனமாகும். இதற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவற்றின்பிரகாரம் சனி புதன் சுக்கிரன் சூரியன் மாரகாதிபதிகள் ஆகின்றார்கள். சூரியனுக்குச் சந்திர லக்கினாதி பத்தியம் வந்துவிட்டதால் சூரியனுக்குப் பிதாவை மாரகஞ் செய்யும் அமைப் பைச் சந்திரன் கொடுக்கமாட்டார். அவர் வீட்டிலுள்ளச் சந்திரன் அந்த அமைப்பை ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரம் தானே பெற்றுக் கொள்ளுவார். ஜாதகருக்கு வயது ஷூ 32—0—0 முதல் ஷூ 33—0—0 முடியும் வரையில் சந்திரதசையில் அங்காரகன் ராகு இவர்களுடைய புக்திகள் நடக்கின்றன. புரட்டாசி மாதத்தில் இராகு புக்தி நடக்கின்றது. சந்திரன் முன்னமே சொல்லிய காரணத்தினால் பிதாவுக்கு மாரகஞ் செய்ய அமைப் புடையவராகின்றார். ராகு பிதுர்லக்கினாதிபதி பத்திற்குடையவராகிய குரு அங்காரகனுடன் சம்மந்தப்பட்டுப் பிதுர்லக்கினத்திற்கு எட்டிற்குடைய சுக்கிரனைப் பார்த்திருப்பதால் ஜாதகசந்திரிகை 12-ஆவது சுலோகம் தூய்ய கேரளம் எட்டாம் பாவம் 14-ஆவது 20-ஆவது பாடல் பிரகாரம் இராகு பிதாவுக்கு மாரகஞ் செய்ய அமைப்புடையவராகின்றார்.

36. எண்ணஞ்சு ஒன்று ஆண்டி லிடபமா தத்தி லேதான்
திண்ணமா யன்னை கண்டஞ் செப்புவோ முப்பா னுண்டில்
வண்ணமாய் முன்தரய் கண்டம் மருவிடு மென்று சொன்னோம்
அண்ணலைப் பூசை செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

36. ஜாதகருக்கு நாற்பத்தோராவது* வயதில் வைகாசி மாதத்தில் உண்மையாகத் தாயாருக்கு மரணம் நேரிடும் என்று சொல்லுகிறோம். ஜாதகருக்கு முப்பதாவது வயதில் இவருடைய பெரிய தாயார் இறந்து விடுவாள் என்று சொல்லுகின்றோம். சிவபெருமானைப் பூசை செய்யும் பார்வதியம்மையே ! கேட்பீராக.

* குறிப்பு.—தாயாருடைய மரணவிஷயம் :—ஜாதகருக்கு வயது ஷூ 40—0—0 முதல் ஷூ 41—0—0 வரையிலும் சந்திர தசையில் சுக்கிர—சூரிய—புக்திகளும் அங்காரக தசையில் அங்காரக புக்தியும் நடக்கின்றன. ஆனால் வைகாசி மாதத்தில் சந்திர தசையில் சுக்கிர புக்திதான் நடக்கின்றது. மாதுருலக்கினம் நான்காவது பாவமாகிய துலாம் ஆகும். இதற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் சூரியனும் குருவும் மாரகராகின்றார்கள். சந்திரன் சூரியனுடைய வீட்டில் இருந்துகொண்டு துலாத்திற்குப் பதினோராவதான மாரகஸ்தானத்திலிருப்பதாலும் ஒன்று எட்டிற்குடைய சுக்கிரனைப் பார்ப்பதாலும் ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரமும் துய்யகேரளம் எட்டாம் பாவம் 20-ஆவது பாடல் பிரகாரமும் சந்திரன் மாதாவுக்கு மாரகஞ் செய்யும் அமைப்பு உடையவராகின்றார். சுக்கிரன் மாரகாதிபதியாகிய சூரியனுடன் கூடி ஒன்று எட்டிற்குடையவராய் இருப்பதால் ஜாதக சந்திரிகை 23-ஆவது சுலோகம், துய்ய கேரளம் எட்டாம் பாவம் 14-ஆவது பாடல் இவற்றின் பிரகாரம் மாதாவுக்கு மாரகஞ் செய்யும் அமைப்பு உடையவராகின்றார்.

37. ஈரஞ்சு ஒன்று ஆண்டில் இவன்தந்தை அன்னை கண்டங்
கூறுவோ மெழுப தாண்டில் கூனிமா தத்தி லேதான்
மாரன்தன் உடலம் ஏகும் மொழிகிறோம் மறுஜன் மத்தை
வாரிசூழ் வான்மி யூரில் மருவுவானிக்கு லத்தில்.

37. ஜாதகருக்குப் பதினோராவது வயதில்‡ இவருடைய தகப்பனாரின் தாயார் இறந்து விடுவாள் என்று சொல்லுகின்றோம். எழுபதாவது வயதில் பங்குனி மாதத்தில்‡ ஜாதகர் இறந்து இவருடைய தேகம் மறைந்துவிடும். இவருடைய பின் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். கடலால் சூழப்பட்ட திருவான்மியூரில் இந்த ஜன்மத்தின் குலமாகிய சமணர் குலத்திலேயே பிறப்பார்.

‡ குறிப்பு.—பிதாவின் பாட்டியின் மரண விஷயம் :—ஜாதகருக்கு வயது ஷூ 10—0—0 முதல் ஷூ 11—0—0 வரையிலும் சுக்கிர தசையில் சந்திர புக்தி அங்காரகபுக்தி ஆகிய இவை நடக்கின்றன. பிதுர் லக்கினம் ஒன்பதாவது வீடாகிய மீனம் ஆகும். இதற்கு மாதுர் லக்கினம் நான்காவது வீடாகிய மிதுனமாகும். ஆகையால் பிதாவின் பாட்டியினுடைய லக்கினம்

மிதுனமாகும். இதற்குப் பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் குரு அங்காரகன் சூரியன் இவர்கள் மாரகாதிபதிகள் ஆகின்றார்கள். சுக்கிரன் பன்னிரண்டிற்குடையவராகி லக்கினாதிபதியுடனும் சூரியனுடனும் கூடி இருக்கின்றார். ஆகையால் ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகம் துய்யகோளம்எட்டாவது பாவம் 20-ஆவது பாடல் பிரகாரம் சுக்கிரன் பிதாவின் பாட்டிக்கு மாரகஞ் செய்ய அமைப்புடையவராகின்றார். அங்காரகன் மிதுனத்திற்கு ஆறு பதினொன்றிற்குடையவராகி மாரகாதிபதியாகிய குருவுடன் கூடிபதினொன்றில் இருக்கின்றார். ஆகையால் இவர் ஜாதக சந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரம் பிதாவின் பாட்டிக்கு மாரகத்தை தன்னுடைய புக்தியில் செய்யும் அமைப்பு உடையவராக விருக்கின்றார்.

‡ (2) **ஜாதகர் மரண விஷயம்** :—ஜாதகருக்கு வயது ஷூ 69—0—0 முதல் ஷூ 70—0—0 வரையிலும் குரு தசையில் சனி புக்தி நடக்கின்றது. பராசரஹோரை ஜாதகசந்திரிகை இவைகளின் பிரகாரம் கடக லக்கினத்திற்குப் புதன் சுக்கிரன் சனி இவர்கள் மாரகாதிபதிகள் ஆவார்கள். இங்கு குரு பத்திற்குடைய அங்காரகனுடன் கூடி லக்கினாதிபதியாகிய சந்திரனைப் பார்க்கின்றார். ஆறிற்குடையவராகவுமிருக்கின்றார். ஜாதகபாரிஜாதம் 14-ஆவது அத்தியாம் 56-ஆவது சுலோகத்தையும் குமாரசாமியம் மகாதசைப் பலப்படலம் நான்காவது பாடலையும் அனுசரித்து குரு மாரகாதிபதி ஆகின்றார். சனி ஏற்கனவே மாரகாதிபதியாக இருக்கின்றார். ஆகையால் குருதசை சனிபுக்தியில் மரணம் நேரிடும்.

38. ஐந்தாண்டுள் ஜாத கர்க்கு அணுகிடுங் கண்டம் ஒன்று
பொன்னவன் தசமம் நிற்கப் புதல்வனுந் தீர்க்க ஜீவி
மன்னவன் ஜனன காலம் மகமது இரண்டாம் பாதம்
மன்னிய கேது தன்னில் ஆண்டுமே நாலு மாகும்.

38. ஜாதகருக்கு ஐந்து வயதிற்குள்ளேயே ஒரு கண்டம் வந்துசம்பவிக்கும். குரு பத்தாவது பாவத்தில் இருப்பதால் ஜாதகர் நீண்ட ஆயுளை உடையவராவார். இவர் பிறந்த காலத்தில் மகநட்சத்திரத்தில் இரண்டாவது பாதத்தில் கேது தசையில் இருப்பு நான்கு வருஷங்களும் ;

39. துன்னிய பதினோர் திங்கள் செப்புவோம் பலனை யாங்கள்
இன்னவன் தனக்கு ரோக மெய்திடும் வினையனேகம்
பின்துணை விருத்தி யாகும் பெருகிடும் கன்று காலி
தந்தைதாய் ரோகம் வாய்க்குஞ் சாற்றுவோம் பின்பால் சேதி.

39. பதினொன்று மாதங்களும் ஆகும். இக்காலத்திய பலாபலன்களைச் சொல்லுகின்றோம். ஜாதகருக்கு நோய் உண்டாகும். அநேக துன்பங்கள் நேரிடும். பின் சகோதரர் உண்டாகி விருத்தியாவர். கன்றுகளும் கால் நடைகளும் விருத்தியாகும். தாயாருக்கும் தகப்பனருக்கும் வியாதி நேரிடும். மற்ற விஷயங்களைப் பின்னால் சொல்லுவோம்,

# ஜாதகம் 105

1. சனிராகு மேட மாக வெண்மதி[1] குடம தாக[2]
உதயன்[3]சேய்[4] புந்தி[5] பொன்னும்[6] ஒருகண்ணேன்[7] கேது [கோலாம்[8]
சதயமுங் கடைப் பா தத்தில் ஜனனமுங் கடக மாக
அநுபலன் எவ்வா றென்று அம்பிகை கேட்கும் போது ;

| | | | |
|---|---|---|---|
| | சனி ராகு | | |
| சந்திரன் | இராசி சக்கரம் | | லக்கினம். |
| | | | |
| | | சூ. பு.அ. குரு. சு. கேது | |

சதயம் 4-ஆம் பாதம். ராகுதசை 3–5–0.

1. சனியும் ராகுவும் மேஷத்திலும், சந்திரன் கும்பத்திலும், சூரியனும் அங்காரகனும் புதனும் குருவும் சுக்கிரனும் கேதுவும் துலாத்திலும், ஜன்ம லக்கினம் கடகமுமாக இருந்து சதயம் நான்காவது பாவத்தில் ஜனனம் நேரிட்டால் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்கும்போது ;

**குறிப்பு.**—இந்த ராசிச் சக்கர அமைப்பிற்குப் பின் வரும் அம்சைச் சக்கிர கிரக நிலை பொருத்தமுடையதாகும் :—மேஷத்தில் சுக்கிரனும், ரிஷபத்தில் சூரியனும், புதனும், மிதுனத்தில் சனியும் கேதுவும், தனுசில் குருவும் ராகுவும், மகரத்தில் அங்காரகனும் மீனத்தில் சந்திரனும் ஆகும். அங்காரகன் புதன் குரு சுக்கிரன் இவர்கள் அஸ்தமனத்திலும், சனி வக்கிர கதியிலும் இருக்கின்றார்கள்.

2. தென்முனி புகலு கின்றார் ஜனித்திடும் ஆண்பால் ஜன்மம்
வந்தயில் கீழ்மேல் வீதி வாசலும் வடபால் நோக்கம்
முந்தின ஊரே யாகும் வாடையா மில்லம் என்றேம்
உன்னத துருவங் கீழ்ப்பா லோடிடும் என்று சொல்வோம்.

[1] சந்திரன் [2] கும்பம் [3] சூரியன் [4] அங்காரகன். [5] புதன் [6] குரு [7] சுக்கிரன் [8] துலாம்

2. தெற்குத் திக்கிற் கதிபதியாய் இருக்கின்ற முனிவராகிய அகஸ்திய மகா முனிவர் சொல்லுகின்ருர். ஜனனமான குழந்தை ஆண் குழந்தை யாகும். பிறந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் வடக்குத் திக்கு பார்த்த வாயிற்காலை உடையதாக இருக்கும். பிறந்த ஊர் மேன்மையான முதல்தர மான ஊராகும். வீடுகள் வாடை வாடையாகவும் வரிசை வரிசையாகவும் இருக்கும். ஓர் உயரமான சிறந்த மலை கிழக்குத் திக்கை நோக்கிச் செல்லும் என்று சொல்லுகிறோம்.

3. பலஜாதி யவ்வூர் வாசம் பாலகன் பிரம சேயாய்க்
குலவுவான் ஜேஷ்ட ளுகக் கூறுவோ மிவனின் யோகம்
நிலைமையாய்க் குடும்பச் சேதி நிகழ்த்துவோம் முன்பின் ஜன்மம்
மலையிறை மகளே ! தந்தை வர்க்கத்தைப் புகலக் கேண்மோ.

3. பிறந்த ஊரில் பலவிதமான ஜாதியர்கள் வாசஞ் செய்வார்கள். பிராமணர் குலத்தில் ஜேஷ்ட குமாரராக இவர் பிறப்பார். இவருடைய யோகத்தைப்பற்றிச் சொல்லுகின்ருேம். இவருடைய நிலையான குடும்பத்தின் விஷயங்களையும் முன் ஜன்மம், பின் ஜன்மம் ஆகிய இவைகளைப்பற்றியுஞ் சொல்லுகின்ருேம். இமயமலைக்கு அரசனுகிய பர்வதராஜனுடைய மகளாகிய பார்வதியம்மையே ! நாங்கள் ஜாதகருடைய தகப்பஞரின் பந்துக்களைப் பற்றிச் சொல்லுகின்ருேம், கேட்பீராக.

4. தாதைக்குத் தார மிரண்டில் தரித்திடு மிளையா ளீன்ற
நீதியாய் மைந்தன் தானும் நிகழ்த்துவோ மிவனின் தந்தை
ஒதுவோந் துணைவர் காணுன் ஒண்டியாய் வாழ்வா னம்மா
போதவே வவன் குணத்தைப் புகலுவோ மினிமே லாக.

4. ஜாதகருடைய பாட்டஞரின் இரண்டாவது மனைவி நியாயமாய்ப் பெற்றெடுத்தக் குழந்தையே ஜாதகருடைய தகப்பஞர் ஆகுமென்று சொல்லுகின்ருேம். ஜாதகருடைய தகப்பஞருக்குக் கூடப் பிறந்த சகோதரர் கள் இல்லை. இவர் ஒருவராக விருந்து தன்னுடைய காலத்தைக் கழிப் பார். பார்வதியம்மையே ! இனிமேல் இவருடைய குணுதிசயங்களைப்பற்றிச் சொல்லுகின்ருேம்.

5. ஓட[1]நாள் தேளின் [2] ராசி யுதிப்பஞ மால்நி றத்தன்
வாடுவான் மனது பூர்வம் மாதுரு சுகமில் லாதான்
கேடில்லாத் தலங்கள் செல்வான் கிராமாதி காரஞ் செய்வன்
போடுவான் பெரியோர்க் கன்னம் பூமியைப் பரிபா லிப்பான்.

5. ஜாதகருடைய தகப்பஞர் புனர்பூச நட்சத்திரத்தில் விருச்சிக லக்கி னத்தில் பிறந்திருப்பார். இவர் மகாவிஷ்ணுவின் நிறமாகிய நீலமேக வர்ணம் என்ற ஒருவிதமான நிறமுடைய தேகத்தை உடையவர். வயதின் முதல் பாகத்தில் இவர் மனக் கஷ்டத்தை அடைவார். இவருக்குத் தாயாருடைய சுகம் கிடையாது. குற்றமற்றதான நல்ல புண்ணிய ஸ்தலங் களுக்கு இவர் போவார். இவர் கிராம அதிகாரத்தையுடைய வேலையைச்

---

1 புனர்பூசம் எழும் ஓடம்போல இருக்கும். [2] விருச்சிகம்,

செய்வார். அஃதாவது இராம உத்தியோகஸ்தராக இருப்பார். பெரியவர்களுக்கும் பரதேசி முதலிய பெரிய மனுஷர்களுக்கும் சாப்பாடு போடுவார். இவர் பூமியை ஆளுவார், காப்பாற்றுவார்.

6. தந்தைக்குத் தாழ்வாய் வாழ்வன் சல்லியப் பாதை யேற்பன்
சுந்தர முடைய னுவன் சூட்சும புத்தி யேற்பன்
விந்தையா யில்லஞ் செய்வன் வேந்தர்க ளிஷ்டம் கொள்வன்
[1]மந்திரி தசையி லேதான் வளர்ந்திடும் யோக மென்றேரும்.

6. ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய தகப்பனுரைவிடத் தாழ்ந்த அந்தஸ்தையுடையவராயிருந்து வாழ்வார். கடனுல் ஏற்படும் உபத்திரவத்தை அடைவார். அழகான தேகத்தை உடையவராவார். கூர்மையான புத்தியை உடையவராவார். ஆச்சரியமாக வீட்டைக் கட்டுவார். அரசர்களுடைய பிரியத்தையும் சிநேகிதத்தையும் அடைந்திருப்பார். இவருக்குக் குரு தசை காலத்தில் நல்ல யோகம் உண்டாகி அஃது அதிகப்பட்டுக்கொண்டே போகுமென்று சொல்லுகின்றேம்.

குறிப்பு.—(1) ஜாதகருடைய பிதிரு ஸ்தானம் அல்லது பிதிரு லக்கினம் மீனமாகும். மீன லக்கினுதிபதியாகிய குரு மீனத்திற்கு ஆறிற்குடைய சூரியனுடனும் எட்டிற்குடைய சுக்கிரனுடனும் கூடி பன்னிரண்டிற்குடையவராகிய சனியால் பார்க்கப்பட்டிருப்பதால் ஜாதகருடைய தகப்பனுருக்குக் கடனுல் உபத்திரவம் ஏற்படும்.

(2) **குருதசை யோக விஷயம் :**—பிதிரு லக்கினமாகிய மீனத்திற்குக் கர்மாதிபதியாகிய குரு தர்மாதியாகிய அங்காரகனுடன் கூடி இருப்பதால் தர்ம கர்மாதியோகம் இருக்கிறது. மேலும், புதன் குரு சுக்கிரன் இவர்கள் மீன லக்கினத்திற்கு எட்டில் இருப்பதால் லக்கின அதியோகம் (அஃதாவது லக்கினுதியோகம்)கூட சிறிது இருக்கின்றது. மேலும், குரு சந்திரனுக்கு இரண்டு பதினென்றிற்குடையவராகிச் சந்திரனுக்குப் பாக்கிய ஸ்தானமாகிய ஒன்பதில் இருக்கின்ருர். ஆகையால் குரு ஜாதகருடைய பிதாவுக்குத் தனது தசையில் யோகத்தைக் கொடுக்கும் அமைப்பு உடையவராக விருக்கின்ருர்.

7. பலருக்கு நல்லோ னுவன் பலசகா யங்கள் செய்வன்
திலதமாம் பந்துக் கட்குத் தேரினேர் தொண்டு பூண்பன்
கலகத்தை நாடா னுகும் காதலி தன்னுல் லாபம்
அலைகடல் துயின்றேன் பக்தி யாபத்தைச் சிலர்க்குக் காப்பன்.

7. ஜாதகருடைய தகப்பனுர் பலருக்கு நல்லவராக விருப்பார். இவர் பலவிதமான உபகாரங்களைச் செய்வார். இவர் தன்னுடைய பந்துக்களுக்குள் நெற்றியிலுள்ள பொட்டைப்போலச் சிறந்தவராகவும் மேலானவராகவுமிருப்பார். மனத்திலும் அறிவிலும் தேர்ச்சியடைந்த பெரியோர்களுக்குப் பணிவிடை செய்வார். கலகத்தை உண்டுபண்ணக்கூடிய காரியங்களைச் செய்ய மாட்டார். இவருக்குத் தன்னுடைய மனைவியால் லாபமும் சௌக்கியமும்

[1] குரு

உண்டாகும்*. அலைகளையுடைய கடலில் சயனித்திருக்கும் மகாவிஷ்ணுவின் மேல் இவர் பக்தி உடையவராவர். ஆபத்துக் காலத்தில் சிலருக்கு இவர் உதவி செய்து அவர்களைக் காப்பாற்றுவார்.

***குறிப்பு:—பிதாவுக்குத் தன் மனைவியால் லாபம் ஏற்படும் விஷயம்.—** பிதிரு லக்கினமாகிய மீனத்திற்கு மனைவி ஸ்தானமாகிய கன்னிக்கு அதிபதியாகிய புதன் மீனத்திற்குத் தர்மகர்மாதிபதிகளாகிய அங்காரகன் குரு இவர்களுடன் சேர்ந்துகொண்டு மீனத்திற்கு லாபாதிபதியாகிய சனியால் பார்க்கப்பட்டிருப்பதால் பிதாவுக்குத் தன் மனைவி மூலமாக யோகம் ஏற்படக் கூடிய அமைப்பு இருக்கிறது.

8. முன்னிவ ணிருந்த ஜன்ம மொழிகிறோம் பெருமுக்கல் தன்னில்
அன்னவன் ரெட்டி வம்ச மணுகியே பெருமை பூண்டு
பொன்பூமி யுடையனாகிப் புகழுடன் வாழுந் நாளில்
கன்னிகை யொருத்தி பேரில் களவான வார்த்தை சொல்லி ;

8. ஜாதகருடைய தகப்பனாரின் முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறோம். இவர் பெருமுக்கல் என்ற கிராமத்தில் ரெட்டியார் ஜாதியில் பெருமையை யடைந்து, தனமும் நிலங்களும் உடையவராகிக் கீர்த்தியுடன் வாழ்ந்து கொண்டிருக்கின்ற காலத்தில் ஒரு கலியாணமாகாத பெண்ணின் மேல் அபவாதமானச் சொற்களைச் சொல்லி அவள் மேல் பழியைச் சாட்டி;

9. மாதுவை யவமா னங்கள் மாரனுஞ் செய்யும் போது
ஓதுவா ளந்த மாது உதாசீனஞ் செய்த பாவி
மேதினில் மறுஜன் மத்தில் விளங்கா துணைவர் தாமும்
ஆதியிலன்னை மாண்டு அலைமீது துரும்பு வாவாய்.

9. ஜாதகருடைய தகப்பனார் அந்தக் கன்னிகையை மேற் சொல்லியபடி அவமானங்கள் செய்தபோது அந்தப் பெண் பின்வருமாறு சொல்கின்றாள். "என் மேல் தூஷணமான வார்த்தைகளைச்சொல்லிய பாவியாகிய நீ உன்னுடைய மறு பிறப்பில் சகோதர சகோதரிகள் ஆயுளுடன் இராமலும் இளம் பிராயத்தில் உன்னுடைய தாயார் இறந்தும் அலையில் அகப்பட்டுக்கொண்டு தவிக்கின்ற ஒரு துரும்பு அல்லது குப்பையைப் போல யாரும் திக்கில்லாமல் அலையக்கடவாய்.

10. சிலகாலம் பந்து மூலஞ் சேர்ந்துமே வாழ்வாய் நீயுஞ்
கலவர புத்தி யாகிக் காதலி சொல்லும் போது
குலவிற்று வந்தச் சாபங் கூறுவோம் வேறு வொன்று
உலகினிலினத்தா ருக்கு வொருபொய்யை யரசர் மூலம்;

10. "நீ இவ்விதமாக அலைந்து திரிந்து உன்னுடைய பந்துக்களை அண்டி அவர்களிடம் சில காலம் வாழக்கடவாய்" என்று அந்தத் திகிலடைந்த பெண் தன்னுடைய புத்திக் கலக்கத்துடன் ஜாதகருடைய தகப்பனாரைப் பார்த்துச் சொல்லவே அந்தச் சாபம் ஜாதகருடைய தகப்பனாரை

வந்து இப்பொழுது அடைந்தது. மேலும் இவரை அடைந்த இன்னொரு சாபத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவர் இந்தப்பூமியில் தன்னுடைய பந்துக்களுக்காக ஒரு பொய்யான விஷயத்தை இராஜாங்கத்தில் சொன்னார்.

11. சொல்லினது வோர் தோஷஞ் சுதனுமே அந்தி யத்தில்
நல்லதோர் சேது சென்று நமன்பதி யடைந்தா னின்னேன்
எல்லையை யளந்தோன் மைந்தன் எழுதவும் முதித்தா
புல்கிடும் பூர்வ சாபம் பெற்றதாய் பூர்வ நாசம். [னென்றோம்

11. ஜாதகருடைய தகப்பனர் மேற்கண்ட விதமாகச் சொல்லவே அது தனக்கு ஒரு தோஷமாகவும் சாபமாகவும் நேர்ந்தது. இவர் முன்ஜன்மத்தில் தன்னுடைய கடைசி காலத்தில் நன்மையை உண்டாக்குகின்ற சேது ஸ்தலம் என்ற திவ்விய ஸ்தலத்திற்கு யாத்திரை செய்து பிறகு இறந்து எமனுடைய பட்டணத்திற்குப் போய்ப் பிறகு பூமியைத் தன் கால்களால் அளந்த மகா விஷ்ணுவினுடைய குமாரராகிய பிரம்மாவினல் பிரமலியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து இவர் பிறந்திருக்கின்றார் என்று சொல்லுகின்றோம். இவருக்கு இவருடைய முன் ஜன்மத்திய சாபங்கள் வந்து சம்பவிக்கும். அவைகளல் இவரைப் பெற்றெடுத்த தாயார் இவருடைய இளம் வயதிலேயே இறந்து விடுவாள்.

12. வனவாசஞ் சிலநாள் செய்வன் வரைந்தயிக் குணத்தா னுக்குச்
சிலமிலா பாலன் தோன்றுஞ் செப்புவோ மிவன் குணத்தை
வினைமன மில்லா னுவன் வித்தையு மிரண்டு கற்பன்
கனமான புத்தி யேற்பன் கசடரை யுறவு கொள்ளான்.

12. ஜாதகருடைய தகப்பனர் தன்னுடைய முன் ஜன்மத்திய சாபத்தின் பயனுகச்சில காலம் தனக்கு நிலையான ஓரிடமும் இல்லாமல் காட்டில் திரிவதைப்போல அலைந்து திரிந்து கொண்டிருப்பார். இங்குச் சொல்லப்பட்ட குணங்களையுடைய தகப்பனருக்குச் சீக்கிரத்தில் கோபத்தை யடையாத இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய குணங்களை இனிமேல் சொல்லுகிறோம். இவர் கள்ளம்,கபடம், வஞ்சனை, பொல்லாங்கு ஆகிய இவைகளை நினைக்காத மனத்தை உடையவராவார். இவர் இரண்டு விதமான பாஷைகளைப் படிப்பார். மேன்மையானதும் பெருந்தன்மையானதுமான புத்தியையும் குணத்தையும் உடையவராவார். இவர் கீழ்மக்களுடன் அதாவது கெட்ட குணங்களை யுடையவர்களுடன் சிநேகதஞ் செய்து கொள்ள மாட்டார்.

13. நல்லவன் நல்ல வர்க்கு லண்டர்க்கு மிண்ட னுவன்
எல்லையை விருத்தி செய்வனேவலா ளுடை யானுவன்
தல்லிபோ லாத ரிப்பன் சல்லிய பாதை யேற்கான்
சொல்லதைக் காப்பா னுவன் சோம்பிடான் காரி யத்தில்.

13. ஜாதகர் நல்லவர்களுக்கு நல்லவராக நடந்து கொள்ளுவார். முரடர்களுக்குத் திண்ணியராகவும் வலிவுடையவராகவும் இருப்பார், அதாவது

இளைக்காமல் இருப்பார். நிலங்களைப் பயிரிட்டு விருத்தியாக்குவார். இவர் வேலைக்காரர்களை உடையவராக விருப்பார். இவர் தன்னிடத்தில் இருப்பவர்களைத் தாயானவள் காப்பாற்றுவதைப்போலக் காப்பாற்றுவார். இவர் கடனால் துன்பத்தை அடையமாட்டார். தான் சொல்லுகின்ற வார்த்தைகளைத் தவறாமல் காப்பாற்றி நிறைவேற்றுவார். இவர்தான் செய்கின்ற வேலைகளில் இளைத்துப்போகாமல் இருப்பார்.

14. மன்னரால் தொழிலு மேற்பன் மறுநகர் வாசஞ் செய்வன்
தன்பந்தை யாத ரிப்பன் சகடுவா கனமு மேற்பன்
உன்னத தலங்கள் செல்வன் உய்வோர்கள் நேசங் கொள்வன்
கன்னியர் மோக னுவன் கஞ்சமா நிறத்த னுவன்.

14. ஜாதகர் இராஜாங்கத்தில்* வேலையிலிருப்பார். இவர் இன்னொரு பட்டணத்தில் வசித்துக்கொண்டிருப்பார். தன்னுடைய பந்துக்களைக் காப்பாற்றுவார். வண்டி முதலிய வாகனங்களை உடையவராவார். மேன்மையான புண்ணியக்ஷேத்திரங்களுக்குப் போவார். நல்ல வாழ்வை அடையக்கூடிய வழியைக்காட்டுகின்ற பெரியோர்களுடைய சிநேகத்தை அடைவார். இளம் பெண்களின்மேல் காம ஆசையை உடையவராவர். பிரமா அல்லது மகாவிஷ்ணுவின் நிறத்தைப்போல மாநிறமான தேகத்தை உடையவராவார்.

*குறிப்பு:—ஜாதகருக்கு இராஜாங்கத்தில் வேலை விஷயம்.—ஜீவனஸ்தானமாகிய பத்திற்குடைய அங்காரகன் நான்கில் இராஜாங்க கிரகமும் ஒன்பதிற்குடையவருமாகிய குருவுடன் கூடி மற்ற கிரகங்களைவிட குருவிற்கு அதிக நெருக்கமாக விருப்பதாலும் பத்தில் சனி இருப்பதாலும் ஜாதகருக்கு இராஜாங்க வேலை ஏற்படக்கூடிய அமைப்பு இருக்கின்றது. ஒருவரிடத்தில் வேலைக்காரராக விருப்பதற்குத் தேவையான கிரக யோகத்தைப்பற்றி பிருஹஜ் ஜாதகம் இருபத்துமூன்றுவது அத்தியாயம் பதினுன்காவது பதினேழாவது சுலோகங்களைப் பார்க்கவும்.

15. சொல்லிடும் வசனமெல்லாஞ் சுத்தமாய்ச் சொகுச னுவன்
வெல்லுவான் எதிரி தம்மை வீணவழக் கதனில் செல்லான்
அல்லலெப்போதுங் காணன் அகசிய வார்த்தை சொலவன
வல்லவ னுகி வாழ்வன் வர்ணித்தோர்க் குதவி செய்வன்.

15. ஜாதகர் தான் சொல்லுகின்ற வார்த்தைகள் எல்லாம் பரிசுத்தமாகவும் அழகாகவும் நேர்த்தியாகவு மிருக்கும்படி உபயோகப்படுத்துவார். இவர் தன்னுடைய சத்துருக்களை ஜயித்துவிடுவார். வீணன வியாஜ்யங்களிலும் உபத்திரவத்தை உண்டுபண்ணக்கூடிய காரியங்களிலும் பிரவேசிக்கமாட்டார். கஷ்டங்களையும் துன்பங்களையும் எக்காலத்திலும் அனுபவிக்கமாட்டார். வேடிக்கையான சிரிப்பை உண்டுபண்ணக்கூடிய வார்த்தைகளைச் சொல்லுவார். சாமார்த்தியவானுகவும் கெட்டிக்காரனுகவுமிருந்து வாழ்வார். இவர் இவரைப் புகழ்ந்து பேசுபவர்களுக்கு உபகாரஞ் செய்வார்.

16. ஜாதகன் தனக்கு யோகஞ் செப்பின கார ணஞ் சொல்
மாதவன்[1] சேயும்[2] நாலில் மருவின யோக மொன்று
ஆதவன்[3] புகரும்[4] புந்தி[5] யணுகின யோக மொன்று
சீதள மதிக்கு[6] மூன்றில் சனியுமே யிருப்ப தாலே

16. இதுவரையிலும் பலாபலன்களைச் சொல்லிக்கொண்டு வந்த அகஸ்திய மகா முனிவரைப் பார்த்துப் பார்வதியம்மையார் ஜாதகருக்கு யோகத்தை சொல்லியதற்குக் காரணங்களைச் சொல்லுவீரென்று கேட்டார். அதற்கு அகஸ்தியர் பின்வருமாறு சொல்லுகின்றார் :—குருவும் அங்காரகனும் நான்கில் இருப்பதால் ஒருவிதமான யோகம் உண்டாகின்றது. சூரியனும் சுக்கிரனும் புதனும் கூடி இருப்பதால் இன்னொருவிதமான யோகம் உண்டாகின்றது. குளிர்ச்சியை உண்டுபண்ணக்கூடிய சந்திரனுக்கு மூன்றில் சனி இருப்பதும் ஒருவிதமான யோகமாகும்.

1. மாதவன் " தவம் " என்றால் ஒன்பதாமிடம் " மா " என்றால் பெரியது ; பெருமையையுடையது. மாதவன் என்றால் பெருமையையுடைய ஒன்பதாமிடத்ததிபன் என்ற அர்த்தம், இங்குப், பொருந்தும் ; ஒன்பதாபதி குருவாவார்,

குறிப்பு.—† மாதவன் அதாவது குருவும் சேயும் அஃதாவது அங்காரகனும் முறையே ஒன்பதிற்கும் பத்திற்கும் உடையவராகிக் கூடி இருப்பது தர்மகர்மயோகம் என்ற ஒருவித யோகமாகும். ஜாதகாலங்காரம் 302-ஆவது பாடலையும், தாண்டவ மாலை 14-15-ஆவது பாடல்களையும், சந்திர காவியம் 15–18-வது பாடல்களையும், ஜாதக சந்திரிகை 14-16-ஆவது ச்லோகங்களையும் வாசிக்கவும். † ஆதவனும் அஃதாவது சூரியனும், புகரும் அஃதாவது சுக்கிரனும், புந்தியும் அஃதாவது புதனும் ஒன்றுய்க்கூடி இருப்பதால் சாமரை யோகங்கள் என்ற பலவித யோகங்களில் ஒருவிதமான சாமரை யோகம் ஏற்படுகிறது. ஜாதக சிந்தாமணி 2029-ஆவது பாடலில் மூன்றுவது நான்காவது வரிகளை வாசிக்கவும். இது விஷயமாகச் சதயோகமஞ்ஜரி என்ற கிரந்தத்தையும் வாசிக்கவும்.

17. தர்மகர்மாதி யோகங் தடவரை யோக மொன்று
கனமுள சண்ட யோகம் கழறுவோம் பால னுக்குப்
பெருமையும் புகழு மெய்தும் போஜன சுகிய னுவன்
அரசரால் தொழிலில் மேன்மை அஞ்சிடா நெஞ்ச னுவன்.

17. ஜாதகருக்குத் தர்மகர்மாதியோகம் † என்ற ஒருவகை யோகம் இருக்கின்றது. மேலும் தடவரை யோகம் * என்ற இன்னொரு யோகமும் இருக்கின்றது. மேலும் ஜாதகருக்கு மேன்மையான வலிவான சண்ட யோகம் ‡ என்ற இன்னொரு யோகமும்கூட இருக்கின்றதென்று நாங்கள் சொல்லுகின்றோம். இவைகளாலே ஜாதகர் மேன்மையையும் கீர்த்தியையும் அடைவார். இவர் சுகமான நல்ல போஜனத்தைச் சாப்பிட்டுச் சுகத்தை

---

[1] குரு. [2] அங்காரகன். [3] சூரியன். [4] சுக்கிரன். [5] புதன் [6] சந்திர

அனுபவிப்பவராவார் ; இவருக்கு இராஜாங்கத்தில் கௌரவமான பெருமையையுண்டு பண்ணத்தக்க உத்தியோகம் கிடைக்கும் ; இவர் யாருக்கும் பயப்படாத மனத்தை உடையவராவார்.

குறிப்பு.—(1) † தர்ம கர்மாதியோகம் :—இந்த யோகத்தைப் பற்றி நாம் 16-ஆவது பாடலின்கீழ் கொடுத்துள்ள குறிப்பை வாசிக்கவும். (2) *தடவரை யோக விஷயம் : " தடவரை " என்ற பெயருடைய யோகம் ஒன்றுளதா என் நமக்குப் புலப்படவில்லை. ஆனால் " வரை " என்றால் " மலை, பர்வதம் " என்ற அர்த்தம் இருக்கின்றது. " தடவரை " என்றால் விசாலமான மலை அல்லது பர்வதம் என்று அர்த்தம் சொல்லக்கூடும். மேலும் இந்த சப்த ரிஷி நாடி புஸ்தகத்தில் இமயமலைக்கு அரசனாகிய பர்வதராஜனுடைய மகளாகிய பார்வதி யம்மையாரைக் குறிக்கத் " தடவரை மகளே " என்ற சொற்றொடர் அடிக்கடி உபயோகப்படுத்தப் பட்டிருக்கின்றது. ஆகையால் " தடவரை யோகம் " என்பதைப் " பர்வதயோகம் " என்று அர்த்தம் கொள்வது பொருத்தமுடையதாகும் என்று தோற்றுகிறது. ஜாதகாலங்காரம் என்ற புத்தகம் 303-ஆவது 344-ஆவது பாடல்களின் பிரகாரம் லக்கினாதிபதி இருந்த வீட்டிற்குடையவர் கேந்திரத்தில் இருந்தால் பர்வதயோகம் ஏற்படுகின்றது. இந்த ஜாதகத்தில் லக்கினாதிபதியாகிய சந்திரன் இருக்கின்ற ராசி அதிபதியாகிய சனி லக்கினத்திற்குத் தசம நேந்திரத்தில் இருக்கின்றார். ஆகையால் பர்வத யோகம் ஏற்பட்டிருக்கின்றது. (ஆனால் சனி நீசனாகி நீசபங்கமடைந்திருக்கின்றார்.) மேலும் ஜாதகாலங்காரம் 304 ஆவது செய்யுளில் ஜன்ம லக்கினத்திற்கு முன் பின் ராசிகளுக்குடையவர், அஃதாவது இரண்டாவது பன்னிரண்டாவது ராசிகளுக் குடையவர்கள் ஒன்றுகூடி லக்கினத்திற்குக் கேந்திரத்தில் இருந்தால் பர்வதயோகம் ஏற்படுகின்றது. இந்த ஜாதகத்தில் இரண்டிற்குடைய சூரியனும். பன்னிரண்டிற்குடைய புதனும் கூடிச் சதுர்த்த கேந்திரத்தில் இருக்கின்றார்கள். ஆகையால் பர்வத யோகம் ஏற்பட்டிருக்கின்றது. மேலும் ஜாதகாலங்காரம் 264-ஆவது பாடலில்

> " வினையும் புதனுஞ் சூரியனும் விரும்பி யெட்டில்
> நான்கு ஒன்றில் வளையக்கூடின் மன்னவனும் "

என்று சொல்லி இருப்பதையுங் கவனிக்கவும். பர்வதயோகவிஷயமாய், ஜாதக சிந்தாமணி என்ற புத்தகம் 2150-ஆவது பாடலையும் சதயோக மஞ்சரி என்ற புத்தகத்தையும் பார்க்கவும். மேலும் ஜாதக பாரிஜாதம் ஏழாவது அத்தியாயம் 128-ஆவது சுலோகத்தில் சுபக்கிரகங்கள் கேந்திரங்களில் இருந்தாலும் ஆறுவது எட்டாவது பாவங்களில் சுபக் கிரகங்கள் இருந்தாலும் இல்லாமல் இருந்தாலும் பர்வதயோகம் எற்படுகின்றது என்று கண்டிருக்கின்றது. இந்த ஜாதகத்தில் குரு சுக்கிரன் புதன் இவர்கள் நான்கிலும் சந்திரன் எட்டிலும் இருப்பதால் பர்வதயோகம் ஏற்படுகிறது. சனியினுடைய நீச பங்க விஷயமாகப் பலதீபிகை ஏழாவது அத்தியாயம் 26-ஆவது முதல் 30-ஆவது சுலோகம் வரையிலும் பார்க்கவும். இவைகளின் பிரகாரம் சனி நீசமாக விருந்தபோதிலும் நீச பங்கத்தை அடைந்துவிட்டார். ‡ (3) சண்டையோக விஷயம் :—ஜாதக சிந்தா

மணி என்ற புத்தகம் 2000 நம்பருள்ள பாடலில் சனியும் ராகுவும் பத்தாவது வீட்டிற்குடையவரும் கூடி யிருந்தால் '' சண்டயோகம் '' என்ற ஒருவித யோகம் உண்டாகின்றது என்று கண்டிருக்கின்றது. இந்த ஜாதகத்தில் சனியும் ராகுவும் பத்தில் இருக்கின்றார்கள். பத்திற்குடைய அங்காரகன் இவர்களுடன் கூடாமல் இருந்தபோதிலும் இவர்களை நான்கி லிருந்து ஏழாவது பார்வையுடன் பார்க்கின்றார். கூடியிருப்பதும் பார்ப் பதும் சம்மந்தம் என்று சொல்லப்பட்டிருப்பதால் சனியும் ராகுவும் பத்திற்குடையவராகிய அங்காரகனுடன் பத்தில் சம்மந்தப்பட்டிருக்கின்றார்கள் என்று கருதி சண்டயோகமும் இந்த ஜாதகத்தில் இருப்பதாக எண்ணக் கூடும். இது விஷயமாக சதயோகமஞ்ஜரியையும் பார்க்கவும். மேலும் இந்த ஜாதகத்தில் இரண்டிற்குடைய சூரியனும் ஒன்பதிற்குடைய குருவும் கேந்திரத்தில் இருந்துகொண்டு சுக்கிரனுடைய சம்மந்தத்தை அடைந் திருப்பதால் ஜாதகசிந்தாமணி 2072-ஆவது பாடல் பிரகாரம் லக்ஷ்மி யோகம் என்ற ஒருவிதயோகமும் இருக்கின்றது. மேலும் வாகனாதிபதியாகிய நான்கிற்குடைய சுக்கிரனும், கோணாதிபதிகளாகிய அங்காரகனும் குருவுங் கூடி இருப்பதால் ஜாதகாலங்காரம் 397-ஆவது பாடல் பிரகாரம் இன்னொரு விதமான லக்ஷ்மி யோகங்கூட இந்த ஜாதகத்தில் இருக்கின்றதைக் கவனிக்க வும். (மேலும் எட்டுக் கிரகங்கள் கேந்திரங்களில் இருப்பதால் ஜாதகபாரி ஜாதம் ஏழாவது அத்தியாயம் 169-ஆவது சுலோகப் பிரகாரம் கமலயோகங் கூட பெரும்பாலும் இருக்கின்றது. இந்தக் கமலயோகம் விஷயமாய் ஜாதகசிந்தாமணி 2035-ஆவது பாடலையும் பார்க்கவும்.)

18. தன்துணை யாண்பாலொன்று சத்திமா ரிருவர் தீர்க்கம்
பின்னமா மூன்று வென்றும் பேசுவோம் பின்பால் சேதி
அன்னையின் குணத்தைச் சொல்வேனழ குளாள் பொறுமை [சாலி
மன்னவன் மனத்திற் கேற்றோள் வருவோரை யாத ரிப்பாள்.

18. ஜாதகருடன் கூடப்பிறந்தவர்களில் ஓர் ஆண் சகோதரமும் இரண்டு பெண் சகோதரங்களும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். மூன்று சகோதரர்கள் நீண்ட ஆயுள் இல்லாமல் இறந்து விடுவார்கள் என்று சொல்லுகிறோம். அவர்களுடைய விஷயங்களைப்பற்றிப் பின்னால் விவர மாகச் சொல்லுகின்றோம். ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்களைப்பற்றி இனிமேல் சொல்லுகின்றேன். இவள் அழகாக விருப்பாள். பொறுமையை யுடையவளாக விருப்பாள். இவள் ஜாதகருடைய மனத்திற்குத் தகுந்தாற் போல நடந்து கொள்ளுவாள். இவள் தன்னிடம் வருகின்றவர்களை நெருங்கி ஆதரிப்பாள், காப்பாற்றவுஞ்செயவாள்.

19. சீலமும் விரத மேற்பள் சிறுத்தோர்மேல் பிரிய மாவள்
ஞாலம்மேல் நல்லோ ளாவள் நன்னடை யோக சாலி
பால்பாக்கிய முடையவளாகும் பதர்குண மில்லா ளாவாள்
மால்மனை யொப்பளாவள் வஞ்சனை மனமில் லாதாள்.

**19.** ஜாதகருடைய தாயார் நல்ல குணத்தையும் நல்ல ஒழுக்கத்தையு முடையவள். விரதங்களை அனுசரிப்பாள். ஏழைகளிடத்தில் அன்புள்ளவளாக விருப்பாள். பூமியில் நல்லவளாக விருப்பாள். நல்ல நடவடிக்கையை யுடையவள். யோகத்தை யுடையவளாக விருப்பாள். இவள் பால் பாக்கி யத்தை யுடையவளாவாள். அற்பமானவும் இழிவானவுமான குணங்கள் இல்லாதவளாக விருப்பாள். மகாவிஷ்ணுவின் மனைவியாகிய லட்சுமிக்குச் சமானமாக விருப்பாள். கள்ளம் கபடு வஞ்சனை இவை இல்லாத மனத்தை யுடையவளாக விருப்பாள்.

**20.** மங்கைக்குத் துணையாண் மூன்று மாதுவு மிருவர் தீர்க்கம்
அங்கவர் சேதி யாவும் அறிவிப்போம் பின்பா கத்தில்
இங்கிவை பூர்வந் தன்னை யியம்புவேன் இனிமே லாகத்
துங்கமாந் தணிகை தன்னில் தோன்றினாள் சைவச் சேயாய்.

**20.** ஜாதகரின் தாயாருடைய ஆண் சகோதரங்கள் மூன்று பேரும் பெண் சகோதரங்கள் இரண்டுபேரும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். இவர்களுடைய விஷயங்கள் எல்லாவற்றையும் அடுத்த பாகத்தில் தெரிவிக்கின்றோம். இனிமேல் ஜாதகரின் தாயாருடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன். இவள் உன்னதமான திருத்தணி என்ற க்ஷேத்திரத்தில் சைவ குலத்தில் ஒரு ஸ்திரீயாகப் பிறந்தாள்.

**21.** அறமதி லிச்சை யுண்டா யறுமுகன் பக்தி யாகிக்
குறையென்றோர்க் குதவி செய்து கூத்தன்தன் பதிக்குச் சென்று
பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தவ ளென்று சொல்வோம்
வறுமையில் லாமல் வாழ்வள் வரைகிறே மிவள்பின் ஜன்மம்.

**21.** ஜாதகருடைய தாயார் தன்னுடைய முன் ஜன்மத்தில் தர்மஞ் செய்வதில் ஆசை யுடையவளாகவிருந்து ஆறுமுகங்களையுடைய முருகக் கடவுளின்மேல் பக்தியும் அன்பும் உடையவளாக விருந்து தரித்திரத்தினால் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கின்றோம் என்று சொன்னவர்களுக்கு உபகாரஞ் செய்துகொண்டு வாழ்ந்து பிறகு இறந்து எமபட்டணத்திற்குப்போய்ப் பிரமதேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றாள் என்று சொல்லுகின்றோம். இவள் இந்த ஜன்மத்தில் தரித்திரமும் கஷ்டமும் இல்லாமல் வாழ்வாள். இவளுடைய மறு ஜன்மத்தைப் பற்றி இனிமேல் சொல்லுகின்றோம்.

**22.** உத்தரம் கோகர் ணத்தில் உதிப்பளா மிக்கு லத்தில்
மெத்தெனப் பொருள்ப டைத்து வித்தகி வாழ்வா ளாவள்
சுத்தமாய்க் கர்ம காலஞ் செப்புவீர் முனியே நீர்தாம்
வித்தகன் தனக்கு முப்பான் மூன்றினில் தந்தை கண்டம்.

**22.** ஜாதகருடைய தாயார் வடதிக்கிலுள்ள கோகர்ணம் என்ற ஊரில் இந்த ஜன்மத்தில் பிறந்த குலமாகிய பிராமண குலத்திலேயே மறு ஜன்மத்திலும் பிறப்பாள். இவள் அதிகமான செல்வத்தைப் படைத்துப்

பணக்காரியாக விருந்து வாழ்பவளாவாள் என்று முனிவர் சொல்லவே, பார்வதி யம்மையார் முனிவரைப்பார்த்து நீர் இனிமேல் ஜாதகருடைய தாய் தகப்பனார்களுக்குக் கர்ம காலத்தை, அஃதாவது மரணகாலத்தைச் சரியாகச் சொல்லுவீர் என்று கேட்டார். அதற்குத் தனவானாகிய ஜாதகருக்கு முப்பத்து மூன்றாவது வயதில் † இவருடைய தகப்பனார் இறந்து விடுவார் என்று முனிவர் பதில் சொன்னார்.

† குறிப்பு.—ஜாதகரின் தகப்பனாருடைய மரண விஷயம் :—ஜாதகருக்கு வயது ஷ்ரீ 32–0–0 முதல் வயது ஷ்ரீ 33–0–0 முடியும் வரையிலும் சனி மகா தசையில் அங்காரக புக்தி நடக்கின்றது. பிதாவுடைய லக்கினம் ஒன்பதாவது பாவமாகிய மீனம் ஆகும். மீனலக்கினத்திற்குச் சனி சூரியன் புதன் சுக்கிரன் இவர்கள் ஜாதக சந்திரிகை 66-ஆவது 67-ஆவது சுலோகங்களின் பிரகாரமும் பராசரஹோரை பிரகாரமும் மாரகராகின்றார்கள். மேலும் ஜாதக பாரிஜாதம் பதினான்காவது அத்தியாயம் 56-ஆவது சுலோகம் பிரகாரமும், துய்யகேரளம் எட்டாம் பாவம் 20-ஆவது பாடல் பிரகாரமும் கார்க்கேயர் நாடி 12000 பாடல் என்ற கார்க்கேயர் ஜோதிடம் முதற் காண்டம் என்ற புத்தகம் 674-ஆவது பாடல் பிரகாரமும் 1-ஆவது 8-ஆவது 10-ஆவது பாவாதி பதிகள், சனி இவர்களில் மிகவும் பலவீனமான (நீசம்பெற்று நீச பங்கமடைந்த) சனி ஒருவர்தான் ராகுவுடன் சம்மந்தப்பட்டிருப்பதாலும், மிகவும் பலவீனமான கிரகமாய் இருப்பதாலும் சனியே மாரகராகின்றார். மேலும் சனி மீனத்திற்கு மாரகஸ்தானமாகிய இரண்டாவது வீடாகிய மேஷத்தில் இருக்கின்றார். இந்த வீடே ஜாதகருக்குக் கர்ம ஸ்தானமாகவும் இருக்கின்றது. ஆகையால் ஜாதகருடைய தகப்பனாருக்குச் சனி தன் தசையில் மாரகஞ் செய்ய அமைப்பு உடையவராக விருக்கின்றார். அங்காரகன் மீன லக்கினத்திற்கு மாரகஸ்தானமாகிய இரண்டாம் பாவத்திற்குடையவராய் மாரகஸ்தானமாகிய எட்டாவது பாவத்தில் இருக்கின்றார். இவர் லக்கினாதிபதியாகிய குருவுடனும் எட்டிற்குடையவராகிய சுக்கிரனுடனும் கூடி இருக்கின்றார். மீன லக்கினத்திற்கு மாரகாதிபதிகளாகிய சூரியன் புதன் சுக்கிரன் இவர்களுடன் கூடி இருக்கின்றார். ஜாதக பாரிஜாதம் 14-ஆவது அத்தியாயம் 55-ஆவது சுலோகத்தில் லக்கினாதிபதி எட்டாவது பாவத்தில் கேதுவுடன் கூடி இருந்தால், லக்கினாதிபதியுடனாவது அஷ்டமாதிபதியுடனாவது கூடி இருக்கின்ற கிரகத்தின் தசாகாலத்தில் மரணம் என்று சொல்லி இருக்கின்றது. இங்கு அஷ்டமாதிபதி லக்கினாதிபதிகளாகிய சுக்கிரன் குரு இவர்களுடன் கூடி இருக்கின்ற கிரகங்களாகிய சூரியன் புதன், அங்காரகன் கேது இவர்களில் அங்காரகன் ஒருவராகின்றார். அங்காரகன் லக்கினாதிபதியாகிய குருவுக்கு மற்றக் கிரகங்களைவிட மிகவும் அருகில் இருக்கின்றார். மேலும் மீன லக்கினத்திற்குச் சனி பன்னிரண்டிற் குடையவராகவும் அங்காரகன் இரண்டிற் குடையவராகவும் இருப்பதாலும், பன்னிரண்டிற்குடையவரது தசையில் இரண்டிற்குடையவருடைய புக்தியில் மரணம் என்று "ஜம்புரிஷி வாக்கியம்" என்ற புத்தகத்தில் "மாரகதசா புக்தி அறிய" என்ற தலைப்பின் கீழ் இரண்டாவது விஷயமாகச் சொல்லி இருப்பதாலும் சனி தசையில் அங்காரகன் தனது புக்தியில் மாரகஞ் செய்ய அமைப்பு உடையவராக விருக்கின்றார். ஜாதக சந்திரிகை 66-ஆவது 67-ஆவது

சுலோகங்களிலும் பராசரஹோரையிலும் அங்காரகன் மீனலக்னத்திற்கு மாரகன் அல்லனென்று சொல்லியிருந்த போதிலும் 82-ஆவது நம்பர் ஜாதகத்தின் 24-ஆவது பாடலின் கீழ்க் கொடுத்துள்ள வியாக்யானத்தில் கண்டுள்ள காரணத்தினுலும் இங்கு மேலே முன்னமே சொல்லப்பட்டக் காரணங்களினுலும் சனி தசையில் அங்காரகன் தன்னுடைய புக்தியில் ஜாதகருடைய பிதாவுக்கு மாரகஞ் செய்ய அதிக அமைப்பு உடையவராக விருக்கின்ருர்.

23. மறுஜன்மம் சிறுபாக் கத்தில் வருவனு மிக்குலத்தில்
அரிவையாம் அன்னைக் கேதான் அறைகிரேம் நாற்பான் மூன்றில்
திருமகன் மணத்தின் காலஞ் செப்புவோ மினிமே லோக
இருபது வாண்டு தன்னில் எய்திடும் பாரி யென்ரேம்.

23. ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய மறு ஜன்மத்தில் சிறுபாக்கம் என்ற ஊரில் இந்த ஜன்மத்திற் பிறந்த குலமாகிய பிராமண குலத்திலேயே பிறப்பார். ஜாதகருடைய தாயாருக்கு ஜாதகருடைய நாற்பத்து மூன்ருவது வயதில் மரண முண்டாகும் † என்று சொல்லுகிரேம். இனிமேல் ஜாதகருடைய விவாக காலத்தைப் ‡ பற்றிச் சொல்லுகிரேம். இவருக்கு இருபதாவது வயதில் மனைவி நேரிடுவாள் என்று சொல்லுகிரேம்.

† குறிப்பு.—(1) ஜாதகரின் தாயாருடைய மரண விஷயம் :—ஜாதகருக்கு வயது ௵ 42–0 0 முதல் வயது ௵ 43–0–0 முடியும் வரையில் கேது தசையில் இராகு, குரு இவர்களுடைய புக்திகள் நடக்கின்றன. ஜாதகரின் மாதாவினுடைய லக்கினம் நான்காவது பாவமாகிய துலாராசியாகும். துலா லக்கினத்திற்குக் குருவும் சூரியனும் ஜாதக சந்திரிகை 56-வது சுலோகம், பராசர ஹோரை இவைகளின் பிரகாரம் மாரகராகின்ருர்கள். கேது மாரகர்களாகிய குரு சூரியன் இவர்களுடன் சம்பந்தப்பட்டிருப்பதால் ஜாதக சந்திரிகை 12-ஆவது 23-ஆவது சுலோகங்கள், தாண்டவ மாலை 22-ஆவது பாடல் சந்திர காவியம் 9-வது பாடல் ஆகிய இவைகளின் பிரகாரம் கேது மாரகராகின்ருர். மேலும் கேது லக்கினத்தில் லக்கின அஷ்ட மாதிபதியாகிய சுக்கிரனுடம் கூடி இருக்கின்ருர். ஆகையால் ஜாதகபாரிஜாதம் 14-ஆவது அத்தியாயம் 59-ஆவது சுலோகம், துய்ய கேரளம் எட்டாம் பாவம் 20-ஆவது பாடல் இவற்றின் பிரகாரம் கேதுவுக்கு மாரகஞ் செய்யும் அமைப்பு ஒருவாறு ஏற்படுகின்றது. மேலும் பாபியாகிய கேது ஜாதகருடைய லக்கினத்திற்கு மாதுரு பாவத்தில் இருப்பதால் மாதாவுக்குத் தோஷத்தைச் செய்யும் தன்மை உடையவராகிருர். ஆகையால் கேது தன்னுடைய தசையில் தாயாருக்கு மாரகஞ் செய்ய அமைப்புள்ளவராகின்ருர். குரு துலாலக்கினத்திற்கு மேற் சொல்லியபடி மாரகராகி இன்னொரு மாரகராகிய சூரியனுடன் கூடி இருக்கின்ருர். மேலும் லக்கின அஷ்டமாதி பதியாகிய சுக்கிரனுடனும் கூடி இருக்கின்ருர். ஆகையால் ஜாதக சந்திரிகை 56-ஆவது சுலோகம், துய்ய கேரளம் எட்டாம் பாவம் 20-அவது பாடல் இவற்றின் பிரகாரம் குரு மாரகஞ் செய்ய அமைப்புடையவராக விருக்கின்ருர். மேலும் லக்கினத்திற்கு ஒன்றுக் குடையவனேடு

(இங்கு சுக்கிரனோடு) சம்பந்தப்பட்டவனது (இங்குக் கேது) தசையில் ஏழுக் குடையவனோடு (இங்கு அங்காரகனோடு) சம்பந்தப்பட்டவனது (இங்குக் குரு) புக்தியில் மரணம் என்று ஜம்புரிஷி வாக்கியம் என்ற புத்தகத்தில் "மாரகதசா புக்தி அறிய" என்ற தலைப்பின் கீழ் 45-ஆவது விஷயத்தில் சொல்லி இருக் கின்றது. ஏழிற் குடையவராகிய அங்காரகனுடன் சம்பந்தப்பட்ட புதன் சூரியன் குரு இம் மூவரில் குருதான் அங்காரகனுக்கு மிகவும் அருகில் நெருங்கி இருக்கின்றார். இராகு குரு இவ்விரண்டு கிரகங்களில் இராகுவைவிட குருவே தனது புக்தியில் மாரகஞ் செய்ய அதிக அமைப்புஉடையவராக இருப் பதால் கேது தசையில் இராகு புக்தியிலில்லாமல் குருபுக்தியிலேயே ஜாத கருடைய தாயாருக்கு மரணம் நேரிட அதிக அமைப்பு இருக்கின்றது. ‡ (2) **ஜாதகருடையவிவாக கால விஷயம்.**—ஜாதகருக்கு வயது ஞூ19-0-0 முதல் வயது ஞூ 20-0-0 வரையிலும் குரு தசையில் ராகு புக்தியும் சனி தசையில் சனி புக்தியும் நடக்கின்றன. சனி களத்திர ஸ்தானமாகிய ஏழாவது பாவ மாகிய மகர ராசிக்குடையவராகிப் பத்தாவது பாவத்தில் போக காரகனாகிய இராகுவுடன்கூடி (நீசபங்கம் முந்தியே சொன்ன பிரகாரம் அடைந்து) இருப் பதுடன் களத்திரகாரகனாகிய சுக்கிரனுடைய பார்வையாகிய சம்மந்தத்தை அடைந்திருக்கின்றார். ஆகையால் ஜாதக பாரிஜாதம் 14-ஆவது அத்தியாயம் 29-ஆ-வது சுலோகப் பிரகாரம் குரு தசையைவிட சனி தசையில் சனி புக்தியில் விவாகம் நடக்க அதிக அமைப்பு இருக்கின்றது.

* * * *

24\. மாதுவும் வடபால் நேரும் வரைகிறேந் தந்தை வர்க்கம்
ஓதுவேன் அவள்கு ணத்தை யுயர்வான புத்தி யேற்பள்
சீதள குணத்தா ளாவள் சீலமும் விரத சாலி
காதலி வயது தீர்க்கங் கௌசிகன் மறுத்துச் சொல்வார்.

24\. ஜாதகருடைய மனைவி இவருடைய தகப்பனாருடைய பந்துக்களி லிருந்தும் வடக்குத் திக்கிலிருந்தும் சம்பவிப்பாள் என்று சொல்லு கிறோம். இவளுடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் மேன்மையான புத்தியை உடையவளாவாள். இவள் சீதளமான தேகத்தை யுடையவள். நல்ல குணத்தையும் நல்ல ஒழுக்கத்தையும் உடையவளா வள். விரதங்களை அனுசரிப்பாள். இவளுக்குப் பூர்ணாயுள் உண்டு. இவ்வித மாக இதுவரையிலுஞ் சொல்லிக்கொண்டுவந்த அகஸ்திய முனிவர் சொல்லவே கௌசிக முனிவர் தடுத்துப் பின்வருமாறு சொல்லுகின்றார்.

25\. பரலனுக் கிரண்டு தாரம் பகருவேன் என் கருத்துக்
கோலத்தைச் சொல்லு மென்னக் கொடும் விஷ கார்[1]பத்தில்
சாலவே சரத்தில்[2] தங்கச் செப்பினேந் தார மிரண்டு
ஏலவே பராசர் சொல்வார் இயலாது தார மிரண்டு.

25\. ஜாதகருக்கு இரண்டு மனைவிகள் நேரிடுவார்கள் என்று என்னு டைய அபிப்பிராயத்தைச் சொல்லுகின்றேன் என்று கௌசிக முனிவர் சொல்லவே, அதற்குக் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவே,

[1] சனி. [2] சரம்=மேஷம், கடகம், துலாம், மகரம்: இங்கு மேஷம்.

இராகுவும் சனியும் பத்தாவது பாவமும், சரராசியுமான மேஷத்தில் இருப்பதால் இரண்டு மனைவிகள் ஏற்படுவார்கள் என்று சொல்லுகிறேம் என்று கௌசிக முனிவர் சொன்னார்†. இதற்குப் பராசர முனிவர் பின்வருமாறு சொல்லுகின்றார். இரண்டு மனைவிகள் நேரிட மாட்டார்கள்.

† குறிப்பு.—ஜாதகருக்கு இரண்டு தார விஷயம்:—ஜாதகருக்குக் களத்திர பாவம் ஏழாவது வீடாகிய மகராசியாகும். இதற்குடைய சனி இராகுவுடன் சேர்ந்து சூரியன் அங்காரகன் இவர்களால் பார்க்கப்படுவது ஒரு தோஷமாகும். களத்திரகாரகராகிய சுக்கிரன் கேதுவுடனும் அங்காரகனுடனும் சம்மந்தப்பட்டு ஆட்சியாயிருந்தபோதிலும் அஸ்தமனம் அடைந்து இருப்பது தோஷமாகும். குடும்பாதி பதியாகிய இரண்டிற்குடைய சூரியன் (பலதீபிகை ஏழாவது அத்தியாயம் 26 முதல் 30 வரையிலுமுள்ள சுலோகங்களின் பிரகாரம் நீசபங்க மடைந்து) அங்காரகன் கேது இவர்களுடன் கூடிச் சனியால் பார்க்கப்பட்டிருப்பது தோஷமாகும். மேலும் அங்காரகன் ஏழாவது பாவத்தைப் பார்ப்பதும் தோஷமாகும். கேது இரண்டாவது பாவத்தைப் பார்ப்பதும் தோஷமாகும். மேலும் லக்கினாதிபதியாகிய சந்திரனை இரண்டாவது களத்திர பாவமாகிய ஒன்பதாவது பாவத்திற்குடைய குரு பார்ப்பது இரண்டாவது தாரம் நேரிட ஒரு காரணமாகும். மேலும் ஜாதகாலங்காரம் 648-ஆவது பாடல் பிரகாரம் களத்திர ஸ்தானாதிபதியாகிய சனி சரராசியாகிய மேஷத்தில் இருப்பது இரண்டாவது தாரம் ஏற்பட ஒரு காரணமாகும். ஏழிற்குடைய சனியும் பதினொன்றிற்குடைய சுக்கிரனும் ஒருவரையொருவர் பார்ப்பதால் ஜாதகாலங்காரம் 689-ஆவது, 681-ஆவது பாடல்களின், பிரகாரமும் ஜாதக சிந்தாமணி 984-ஆவது பாடல் பிரகாரமும் ஒன்றுக்கு மேற்பட்ட தாரம் ஏற்பட ஒரு காரணமாகிறது. ஆனல் அனுகூலமான காரணங்கள் கீழே சொல்லப்படும்.

26. காரணம் புகல்வீ ரையா கனகனும்[1] புகரும்[2] நாலில்
தீரமா யிருப்ப தாலே செப்பினேந் தார மொன்று
பாரியு மொன்றே தீர்க்கம் பாவையும் பாலன் முன்னே
நேருவாள் காலன் நாடு நுகலுவோ மந்தந் தன்னில்.

26. ஜாதகருக்கு இரண்டு மனைவிகள் நேரிடமாட்டார்கள் என்று பாரசர முனிவர் சொல்லவே, இதற்குக் காரணத்தைச் சொல்லுவீரென்று பராசர முனிவரைக் கேட்கவே, இவர், குருவும் சுக்கிரனும் நான்கில் வலிவாயிருப்பதால் † ஒரே தாரம் தான் என்றும் இந்த ஒரு தாரம் நீண்ட வயதுடையவளென்றும் சொல்லுகிறேம். ஆனல் இவள் ஜாதகருக்குக் கடைசி காலத்தில் ஜாதகருக்கு முன்னமே இறந்து எமபட்டணம் போய்ச் சேருவாள் என்று சொல்லுகிறேம்.

† குறிப்பு. களத்திர விஷயம்:—களத்திர காரகனும் போகஸ்தானமாகிய நான்காவது பாவத்திற்குடையவருமான சுக்கிரன் ஆட்சியாகி நான்காவது கேந்திரத்தில் குரு புதன் இவர்களுடன் கூடிச் சனியைப்பார்ப்பது ஓர் அனுகூலமான விஷயம். போகஸ்தானமாகிய நான்கில் குருவும்

[1] கனகன் = குரு. [2] புகர்—சுக்கிரன்.

புதனும் இருப்பது அனுகூலமானது. ஆறுவது பாவத்திற்குடைய குருவும் பன்னிரண்டாவது பாவத்திற்குடைய புதனும் சனியைப்பார்ப்பது அனுகூலமும் பிரதிகூலமுமான விஷயம். களத்திர பாவாதிபதியாகிய சனி தன் பாவத்தையே பார்ப்பது அனுக்கூலமானது. இரண்டிற்குடைய சூரியனும் பத்திற்குடைய அங்காரகனும் சுபகேந்திரமும் சுக்கிரனுடைய வீடுமாகிய துலாத்தில் இருந்துகொண்டு சுபர்களாகிய குரு சுக்கிரன் புதன் இவர்களுடன் சம்மந்தப்பட்டிருப்பதால் ஜாதக சிந்தாமணி 894-ஆவது பாடலின் முதல் இரண்டு அடிகளின் பிரகாரம் ஜாதகருக்கு பலகளத்திரயோகமிருக்கின்றது. இவ்விதமாக 25-ஆவது 26-ஆவது பாடல்களின் கீழ் விவரித்துள்ள பிரகாரம் களத்திர விஷயமாய்த் தோஷங்களும் பரிகாரங்களும் இருப்பதால் ஜாதகருக்குப் பரிகார காரணங்களால் ஒரே தாரம் என்றும் ஆனால் இந்த ஒரே தாரம் தோஷகாரணங்களால் ஜாதகருக்கு முன்னே இறந்துவிடும் என்றும் இங்கு முடிவாகச் சொல்லி இருக்கின்றது.

27. சுதர்களில் ஆண்பா லொன்று தோகையர் நால்வர் தீர்க்கம்
இதுநிற்க உதித்தோன் பூர்வம் இயம்புவோம் புதுவை தன்னில்
நிதிமிக வுடையா னுக்கு நேர்ந்தனன் சத்திரிய சேயாய்
அதிகமாய்ச் செட்டுச் செய்து யாவர்க்கும் நல்லோ னாகி.

**27.** ஜாதகருக்கு ஓர் ஆண் குழந்தையும் நான்கு பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள். இந்த விஷயம் இப்படியிருக்க இனிமேல் ஜாதகருடைய பூர்வ ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகிறோம். இவர் புதுவை என்ற புதுச்சேரியில் ஒரு க்ஷத்திரிய தன்வந்தனுக்கு குழந்தையாய்ப் பிறந்தார். இவர் முன்ஜன்மத்தில் விசேஷமாக வியாபாரஞ் செய்து எல்லோருக்கும் நல்லவனாக விருந்தார்.

28. தேவதா தலங்கள் சென்று தேரினோர்தொண்டு பூண்டு
பாவத்தில் மனமில் லாமல் பறந்தனன் காலன் நாடு
பூவயன் வரையப் பட்டுப் பிறப்பனும் இந்தப் பாலன்
கோவலர் போலே வாழ்வன் குவலயம் அதிகஞ் சேர்ப்பன்

**28.** ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தில் தெய்வ ஸ்தலங்களுக்குப்போய் மனத்திலும் அறிவிலும் தேர்ச்சியை யடைந்த பெரியோர்களுக்குப் பணிவிடை செய்து பாவமான காரியங்களைச் செய்வதில் ஆசையில்லாமல் இருந்து பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போனார். பிறகு பிரமதேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் பிறந்தார். இவர் இந்த ஜன்மத்தில் கிருஷ்ண பரமாத்மாவைப் போலவும் ஓர் அரசனைப் போலவும் இருந்து வாழ்வார். இவர் நிலங்களை அதிகமாகச் சேர்ப்பார்.

29. திருப்பணி வேலை செய்வன் ஜகராஜர் பேட்டி கொள்வன்
பாருள்பூமி பணிபொன் இல்லம் பெறுவன்முப் பாயிரம் [பொன்
அறுபது எட்டு ஆண்டில் அணுகிய கன்னி மாதங்
குறைபக்கம் ஏகா தசி குழவியி னுடல மேகும்.

**29.** ஜாதகர் கோயில் வேலைகளையும் திவ்வியத் தொண்டுகளையுஞ் செய்வார். இவர் பெரிய பெரிய இராஜாக்களின் தரிசனத்தை அடைவார். இவர் முப்பதாயிரம் பெறக்கூடிய சொத்து நிலம் ஆபரணம் வீடு இவைகளைச் சம்பாதிப்பார். இவர் தனது அறுபத்தொட்டாவது வயதில் புரட்டாசி மாதத்தில் தேய்பிறை ஏகாதசி திதியில் † இறந்து மறைந்து போய்விடுவார்.

† குறிப்பு —ஜாதகருடைய மரண விஷயம்:—ஜாதகருக்கு வயது ஞூ67-0-0 முதல் வயது வருஷம் 68-0-0 வரையிலும் சுக்கிர தசையில் சந்திர புக்தி நடக்கின்றது. கடகலக்கினத்திற் ஜாதக சந்திரிகை பராசர ஹோரை இவைகளின் பிராகரம் சுக்கிரன் புதன் சூரியன் சனி இவர்கள் மாரகராகின்றார்கள். துய்ய கேரளம் எட்டாம் பாவம் 14-ஆவது பாடல் பிரகாரம் சந்திரன் சனி அங்காரகன் சனி மறுபடியும் இவர்கள் மாரகராகின்றார்கள். கடகலக்கினத்திற்குப் பதினொன்றிற்குடையவராகிய சுக்கிரன் இந்திரஜித்திற்கு மாரகஞ் செய்ததுபோல மாரகஞ் செய்ய அதிக பலமுள்ளவர். இவர் எட்டிற்குடையவராகிய சனியையும் பார்த்திருக்கின்றார். மாரகாதிபதிகளாகிய சூரியன் புதன் இவர்களுடன் சம்மந்தப்பட்டுமிருக்கின்றார். இவருடைய தசை ஆறுவது தசையாகவும் வருகின்றது. ஆகையால் ஜாதக சந்திரிகை 23-ஆவது, 50-ஆவது சுலோகங்களின் பிரகாரம் சுக்கிரன் தன்னுடைய தசையில் ஜாதகருக்கு மாரகஞ்செய்ய அதிகாரமுடையவராகின்றார். சந்திரன் லக்கினாதிபதியாகி எட்டில் இருக்கின்றார். மாரகாதிபதியாகிய சனி வீட்டிலும் இருக்கின்றார். ஆகையால் துய்ய கேரளம் எட்டாம் பாவம் 14-ஆவது பாடல் பிரகாரமும், ஜாதகசந்திரிகை 23-ஆவது சுலோகப் பிரகாரமும் ஜாதக பாரிஜாதம் 14-ஆவது அத்தியாயம் 57ஆவது 58-ஆவது சுலோகங்களின் பிரகாரமும் சந்திரன் தன்னுடைய புக்தியில் ஜாதகருக்கு மாரகஞ் செய்ய அமைப்பு உடையவராக விருக்கின்றார்.

**30.** அத்திரி மறுத்துச் சொல்வார் அஷ்டமத் தோனும் பத்தில்
வித்தகர் ராகு கூட விளம்பினீர் வயது தீர்க்கங்
குற்றமாய் மூன்றுண் டுள்ளே குழவிக்குக் கண்ட மெய்துஞ்
சுத்தமாய்ப் பிருகு சொல்வார் சுரகுரு[1] புகரும் [2]நாலில்.

**30.** அஷ்டமாதிபதியாகிய சனி பததாவது பாவத்தில் இராகுவுடன் கூடியிருக்கும் போது நீர் எப்படி ஜாதகருக்கு நீண்டவயது உண்டு என்று சொன்னீர் என்று அத்திரி மகாரிஷி அகஸ்திய மகாரிஷியைத் தடுத்துக் கேட்டு ஜாதகருக்கு மூன்று வயதிற்குள்ளே மரண கண்டம் நேரிடும் என்று சொல்லவே பிருகு மகரிஷி பின்வருமாறு சொல்லுகின்றார். குருவும் சுக்கிரனும் நான்காவது பாவத்தில் இருக்கின்றார்கள்.

**31.** இருப்பதால் பாலன் தீர்க்கம் இவனுக்குப் பிணிய நேகம்
வருகினும் பனிபோல் நீங்கும் மனைவிக்கு ஐம்பா னைன்பான்
பெருமையா யாண்டு தன்னில் பேசுவோம் மாரகத்தைக்
கறுமத யானை பெற்ற காதலி புகன்றிட்டோம் யாம்.

---

[1] சுரருகு—குரு. [2] புகர்—சுக்கிரன்.

31. குருவும் சுக்கிரனும் நான்காவது பாவத்தில் இருப்பதால் ஜாதகர் நீண்ட ஆயுளை உடையவராவர். இவருக்கு அநேக நோய்கள் வந்த போதிலும் அவைகள் சூரியனுக்கு முன்னே பனி நீங்கிப்போவது போல நீங்கி விடும். இவருடைய மனைவிக்கு இவருக்கு ஐம்பத் தொன்பதாவது வயதில் மரணம் நேரிடும் † என்று சொல்லுகிறோம். கறுப்பான மதயானையின் முகத்தை யுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! நாங்கள் இவ்விதமாகச் சொன்னோம்.

† குறிப்பு.—மனைவியின் மரண விஷயம்:—ஜாதகருக்கு வயது ஷு 58-0-0 முதல் வயது ஷு 59-0-0 முடியும் வரையிலும் கேது தசையில் அங்காரகன் ராகு இவர்களுடைய புக்திகள் நடக்கின்றன. ஜாதகரின் களத்திர பாவம் ஏழாவது பாவமாகிய மகரம் ஆகும். இந்த மகரமே களத் திரத்தின் லக்கினமாகும். ஜாதக சந்திரிகை 61, 62, 63ஆவது சுலோகங் களின் பிரகாரமும் பராசரஹோரை பிரகாரமும் அங்காரகன் குரு சந்திரன் இவர்கள் மாரகராகின்றார்கள். கேது களத்திரகாரகனாகிய சுக்கிரனுடனும் ஜாதகருக்குக் குடும்பாதிபதியாகிய சூரியனுடனும் கூடி ஜாதகருக்குக் களத்திர ஸ்தானாதிபதியாகிய சனியைப் பார்க்கின்றார். இவர் ஜாதகருக்குப் போகஸ்தானமாகிய நான்காவது பாவத்தில் இருக்கின்றார். மேலும் கேது மகர லக்கினத்திற்கு மாரகாதிபதிகளாகிய அங்காரகன் குரு அஷ்டமாதி பதியாகிய சூரியன் இவர்களுடன் கூடி இருக்கின்றார். ஜாதகருடைய குடும்பஸ்தானமாகிய இரண்டையும் சந்திரனுக்கு ஏழாவது ஸ்தானமாகிய சிம்மத்தையும் பார்க்கின்றார். ஆகையால் ஜாதக சந்திரிகை 12, 23-துஆவ சுலோகங்களின் பிரகாரம் கேது மனைவிக்குத் தனது தசையில் மார கஞ்செய்ய அமைப்பு உடையவராக விருக்கின்றார். இராகு மகர லக்கினத் திற்கு லக்கினாதிபதியாகிய சனியுடன்கூடி இருக்கின்றார். இவர் மகர லக்கினத் திற்கு மாரகாதிபதியாகிய அங்காரகனுடைய வீட்டில் இருந்துகொண்டு அங்காரகனையும் பார்க்கின்றார். மேலும் மகர லக்கினத்திற்குச் சனி, 1, 8, 10-க் குடையவர்களில் ஒருவராகிய சனியுடன் ராகு சம்மந்தப்பட்டிருக் கின்றார். ஆகையால் ஜாதக சந்திரிகை 12ஆவது, 23ஆவது சுலோகங்களின் பிரகாரமும் ஜாதக பாரிஜாதம் 14ஆவது அத்தியாயம் 56ஆவது சுலோகம் பிரகாரமும் இராகு அங்காரகனைவிடத் தனது புக்தியில் மாரகஞ்செய்ய அதிக அமைப்பு உடையவராக விருக்கின்றார். ஆகையால் ஜாதகருடைய மனைவிக்குக் கேது தசையில் இராகு புக்தியில் மரணம் நேரிட அமைப்பு இருக்கிறது.

32. பாலகன்பின் ஜன்மங் கேளாய் பசுமாத்தூர் தன்னி லேதான்
சீலமாய் இக் குலத்தில் ஜனிப்பனு மென்று சொல்வோஞ்
சாலவே ஜனன காலஞ் சதயத்தின் நான்காம் பாதம்
ஆலத்தின் தசைமூன் றுண்டு அனுகிடுந் திங்க ளைந்தும்.

32. ஜாதகருடைய மறு ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். கேட்பீராக. இவர் பசுமாத்தூர் என்ற ஊரில் நல்லொழுக்கமுள்ள இந்த ஜன்மத்தில் பிறந்த குலத்தில் அஃதாவது பிராமண குலத்தில்

பிறப்பார் என்று சொல்லுகின்றோம். இவர் பிறந்த காலத்தில் ஜன்ம நட்சத்திரம் சதயத்தின் நான்காவது பாதம் ஆகும். இதற்குரிய ராகு மகா தசையில் இருப்பு வருஷம் மூன்றும் மாதம் ஐந்தும் ஆகும்.

**33.** சத்தம முனிவர் சுத்தமாய்ச் சொன்னோம்
குற்றங்கள் யாவும் வித்தகி பொறுப்பாய்.

**33.** சப்த ரிஷிகளாகிய நாங்கள் தவறுகள் ஒன்றும் இல்லாமல் சரியாய்ச் சொல்லி இருக்கின்றோம். ஆயினும் ஏதாவது குற்றங்கள் குறைகள் ஏற்பட்டிருந்தால் செல்வவதியும் அறிவும் ஞானமும் உடைய வராகிய எங்கள் தலைவியாகிய பார்வதியம்மையே! நீர் அவைகளைப் பொறுத்துக்கொண்டு எங்களை ரட்சிப்பீராக.

ஸப்தரிஷிநாடி கடக லக்னம் முற்றும்

